# சிறப்புப் பெயர் அகராதி

தொகுப்பாசிரியர் :

கருப்பக்கிளர்

திரு சு அ இராமசாமிப் புலவர்

விற்பனையாளர்கள் :

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

சென்னை - 1    மதுரை - 1    திருநெல்வேலி - 6

1970

[illegible]மண்ணிய அருட்டிரு சதாசிவ இராமசாமிப் புலவர் (1907)



Ed 1 January 1970

Published with financial assistance from the
Ministry of Education, Government of India.

தென்னிந்திய தமிழ்ச் சங்க வெளியீடு

SIRAPPUPPEYAR AGARATHI

Thiruvaranganar Achakam, Madras - 13. (I-6)

# பதிப்புரை

மொழிவளர்ச்சிக்கு இலக்கியம், இலக்கணம் போன்ற முதல் நூல்கள் எவ்வளவு இன்றியமையாதனவோ அவ்வளவு அகரவரிசை, சொற் குறிப்பு, நிகண்டு, பல்பொருட் களஞ்சியம் போன்ற கருவி நூல்களும் இன்றியமையாதனவேயாம். தமிழ் மொழியில் பலதுறைகளிலும் மூல நூல்கள் எழுந்தனவேயன்றிக் கருவிநூல்கள் மிகக் குறைவாகவே தோன்றியுள்ளன. சொற்பொருள் கூறும் நிகண்டுகள் இடைக்காலத் திலேதான் தோன்றின எனினும் அவையும் மிகச் சிலவே. அவற் றுள்ளும் பெரும்பான்மையன மொழித்துறையைச் சார்ந்தே எழுந் துள்ளன. சோதிடம், மருத்துவம் போன்ற ஒன்றிரண்டு துறை கட்கே தனித்தனி அகரவரிசைகள் தோன்றியுள்ளன.

பலதுறைகளையும்பற்றிக் குறிப்பாகப் பெயர்கூறிப் பொருள் விளக் கும் நூல்கள் தமிழ்மொழியில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தான் எழுந்தன. முதன் முதலாக யாழ்ப்பாணத்தைச் சார்ந்த ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை 1902 இல் 'அபிதான கோசம்' என்னும் நூலை வெளியிட்டார். ஈக்காடு இரத்தினவேலு முதலியார் தொகுத்த 'சிறப்புப் பெயரகராதி' 1908 இல் வெளிவந்தது. விரிந்த அளவில் ஆ. சிங்காரவேலு முதலியார் முயற்சியில் தோன்றிய 'அபிதான சிந் தாமணி' 1910 இல் வெளிவந்தது. இவையனைத்தும் இலக்கியம், சமயம், வரலாறு போன்ற சில துறைப்பெயர்களையே தொகுத்தளித் தன. எல்லாத் துறைப்பெயர்களையும் தொகுத்து, பெரிய அளவில் வெளிவந்தது 'கலைக்களஞ்சியம்' ஆகும்.

ஒரேதொகுதியில் முக்கியமான பெயர்கள் அனைத்திற்கும் விளக்கம் கொடுக்கும் நூல் ஒன்று தற்பொழுது மிகமிக இன்றியமையாததாக உள்ளது. அந் நோக்கத்துடன்தான் இந்நூல் வெளியிடப்படுகின் றது. சில சிறப்புப் பெயர்களின் இன்றியமையாமை குறித்து அவை பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூல் வெளியாவதற்குப் பொருளுதவி செய்த இந்திய அரசின் கல்வியமைச்சகத்துக்கும் அதற்குப் பரிந்துரை தந்த தமிழக அரசிற்கும் எம் நன்றி உரியது. இதனைத் தொகுத்தளித்த திரு. சு. அ. இராம சாமிப் புலவரவர்கட்கும் எம் நன்றி. இதனைத் தமிழகம் விரும்பியேற்கு மென்ற எண்ணமுடையேம்.

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார்

# முன்னுரை

சிறப்புப் பெயர் அகராதி எனின் ஏதேனும் சிறப்பாய் அமைந்த பெயர்களை அகரவரிசைப்படுத்தி விளக்கம் எழுதுதல் என்பதாம். அகராதி சொல்லின் பொருளை அகரவரிசையிற் கூறுவது. சிறப்புப் பெயர் அகராதிக்கும் மொழி அகராதிக்கும் வேறுபாடுண்டு.

தமிழ்மொழியில் அகராதி தோன்றத் தொடங்கியதே அண்மைக் காலத்தில்தான்; எனினும் இந்நாளில் அது பலவகையாக வளர்ச்சியடைந்து விளங்குகின்றது. ஆங்கில மொழியில் காரணப் பெயர்கட்கு விளக்கங் கூறியும் விளக்க வேண்டிய சொற்பொருள்களை விளக்கியும் அகராதிகள் எழுந்தன. அம் முறையைப் பின்பற்றித் தமிழ் மொழியிலும் அகராதிகள் தோன்றின. 1902 ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் ஆ. முத்துத் தம்பிப்பிள்ளை என்பவர் புராணம், இதிகாசம், இலக்கியம் முதலியவைகளில் இருந்து சிறப்பான சொற்களைத் திரட்டி அகரவரிசைப் படுத்தி 'அபிதான கோசம்' என்னும் பெயருடன் சிறிய புத்தகம் ஒன்றை வெளிப்படுத்தினர்.

1908 ஆம் ஆண்டில் ஈக்காடு இரத்தினவேலு முதலியார் என்பவர் சில சிறப்புப்பெயர்களுக்கு விளக்கங் கூறிச் 'சிறப்புப்பெயர் அகராதி' என்னும் பெயரோடு வெளியிட்டார்.

1910 ஆம் ஆண்டில் ஆ. சிங்காரவேலு முதலியார் என்பவர் தமிழ் மொழியில் உள்ள பெரும்பாலான சிறப்புச் சொற்களுக்கு விளக்கம் எழுதியும் சுருக்கமாகப் பொருள் கூறியும் 'அபிதான சிந்தாமணி' என்னும் பெயரோடு வெளிப்படுத்தினர். அபிதான சிந்தாமணி எனின் வேண்டிய பொருள்களைத் தரும் சிந்தாமணி போன்ற நூல் என்பதாம். இந்நூலில் புராணேதிகாசங்களில் உள்ள சிறப்புப் பெயர்கள், பெரிய புராணத்தில் உள்ள சிறப்புப் பெயர்கள், திருவிளையாடற் புராணத்தில் உள்ள சிறப்புப் பெயர்கள், சங்ககாலப் புலவர்களின் பெயர்கள், அப்புலவர்கட்குப் பிற்பட்ட காலப் புலவர்கள் பெயர்கள் முதலியன சேர்க்கப்பட்டிருத்தலோடு அரசர்கள் பெயர்கள், சிவப்பதிப் பெயர்கள், நூல்களின் பெயர்கள், திருமால் திருப்பதியின் பெயர்கள் எல்லாஞ் சேர்க்கப்பட்டு வெளியிடப்பட்டது. தமிழ் மொழியில் முதன் முதல் வெளிவந்த கலைக்களஞ்சியம் இதுவே என்பர். இது மக்களுக்குப் பயனளிக்கக் கூடிய தன்மையிலேயே அமைந்து விளங்குகிறது. இஃது அச்சிடப்பட்டு அறுபதாண்டுகள் ஆகப் போகின்றமையின் இந்நாளில் கிடைப்பதற்கு அருமையாக உள்ளது.

இதன் பிறகு சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் 'கலைக் களஞ்சியம்' திரு. தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியாரின் பெருமுயற்சியினால் வெளிவரத் தொடங்கியது. அவர் கல்வியமைச்சராக இருந்த பொழுது தொடங்கிய வேலையாதலின் மிகச் சிறப்பாகவே நடந்து பத்துத் தொகுதிகள் வெளியாயின. இக்கலைக் களஞ்சியத் தொகுதிக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் பேர்கள் வரை விளக்கம் எழுதியுள்ளனர். மேனாட்டுக் கலைக்களஞ்சிய முறையைப் பின்பற்றிய இக்கலைக் களஞ்சியமும் மிகுந்த பயனுடையதே. தனிப்பட்ட ஒருவர் இக்கலைக் களஞ்சியத் தொகுதிகள் பத்தையும் பெற்றுப் படித்துணர்வதென்பது அருமையான காரியம். இக் கலைக்களஞ்சியமும் புராணேதிகாசப் பெயர்கள் புலவர்கள் பெயர், பொருள்களின் பெயர் முதலிய யாவற்றுக்கும் விளக்கங் கூறுகிறது.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப் பொறுப்பாளரும், திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் செயலாளருமான தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் முதன்மையான இன்றியமையாத சிறப்புப் பெயர்கட்கு மட்டும் விளக்கம் எழுதி ஒரு சிறப்புப் பெயர் அகராதியை வெளியிட வேண்டும் என்று தமது விருப்பத்தைத் தெரிவித்தனர். நானும் இச்சிறப்புப் பெயர் அகராதியைத் தொகுக்கத் தொடங்கி ஒருவாறு தொகுத்து முடித்தேன்.

கழக வாயிலாகப் பெரியபுராண உரைநடை, திருவிளையாடற் புராண உரைநடை சங்ககாலப் புலவர்கள் வரலாறு, சங்ககால அரசர்கள் வரலாறு, தமிழ்ப்புலவர்களின் வரலாறுஇருபத்தெட்டுப் புத்தகங்கள், மேற்கோள் விளக்கக் கதைகள் ஆகியன வெளிவந்துள்ளன. கழக வாயிலாக வெளி வந்துள்ள நூல்களின் பெயர்களைப் பெரும்பாலும் இந்நூலில் சேர்க்கவில்லை. மிகுதியும் பயன்படத்தக்க மிகச் சில சொற்களை மட்டும் இதனில் சேர்த்திருக்கிறேன். பெயர்களில் சிறப்புத் தன்மையுள்ள பெயர்கள் பெரும்பான்மையாக இவ்வகராதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்நூலைத் தொகுப்பதற்கு அகத்தியர்கள், அபிதான சிந்தாமணி, அபிதான கோசம், ஆத்திசூடி வெண்பா, ஆரியமத உபாக்கியானம், இராமாயணம், இந்திய சரித்திரம், உதயணன் கதை, கலைக் களஞ்சியத் தொகுதிகள், கந்தபுராணம், காசிகாண்டம், கொங்குநாட்டுக் கோயில்கள், கொங்குதேச இராசாக்கள், குமரிக் கண்டம், காஞ்சிப்புராணம், மாவட்டவரலாறுகள், தொண்டை மண்டலசதகம், சோழ மண்டலசதகம், சிலப்பதிகாரம், பாண்டியர் வரலாறு, தமிழகவரலாறு, வேளிர் வரலாறு, துளுவ வேளாளர் வரலாறு, தமிழ்ச் சாசனங்கள், மூன்றாங் குலோத், துங்கன், தமிழ் வளர்த்த நகரங்கள், தேவார ஒளிநெறிக் கட்டுரைகள், சீவக சிந்தாமணி, மணிமேகலை, நரசிம்மவர்மன், மகேந்திரவர்மன் பெருங்கதை, வேங்கடம் முதல் குமரி வரை, விநாயக புராணம், சிவப்

பதி விளக்கம், பாரதம், தனிப்பாடல் திரட்டு, சங்கரவிசயம், சூளாமணி வசவ புராணம், திருவாரூர்ப் புராணம், பதினெண் சித்தர்கள் ஞானக் கோவை, பாஞ்சாலங்குறிச்சி வீரச் சரித்திரம், திருக்குறட் குமரேச வெண்பா, நல்லோர்கள் சென்றவழி, சோழர் வரலாறு, சேரர் வரலாறு முதலிய பல நூல்களைப் பார்த்து ஆராய்ந்தேன். சிறந்த சொற்களைத் தேர்ந்தெடுப்பதில் மிகுந்த கருத்துச் செலுத்தியிருக் கிறேன் என்பது இதனைப் பயன்படுத்துபவர்கட்கு நன்கு புலனாகும். பல ஊர்களின் பெயர்க்காரணம் இவ்வகராதியில் நன்கு விளக்கப்பட்டிருக் கிறது. முன்னர் வெளியிடப்பட்ட அபிதான கோசம், அபிதான சிந்தா மணி, சிறப்புப் பெயர் அகராதி ஆகிய மூன்றிலும் இல்லாத ஆயிரக்கணக் கான சிறப்புப்பெயர்கள் இதன்கண் தொகுக்கப் பெற்றிருக்கின்றமையால் இஃது ஆராய்ச்சியாளர்க்கும் அறிஞர்கட்கும் மிகுபயன் தருவதாகும்.

இச் சிறப்புப் பெயர் அகராதியைக் கற்பவர்கள் பல வரலாற்றுச் செய்திகளையும் காலப் போக்கிற்குத் தக்க சொற்கள் தொகுக்கப்பட்டிருத் தலையும் நன்குணரலாம். அனைவரும் இவ்வகராதியைப் பயன்படுத்தி என்முயற்சி நல்ல பலனை அடையுமாறு செய்வார்கள் என்று நம்பு கிறேன்.

*கருப்பக்கிளர்*
*15-12-1969*

சு. அ. இராமசாமிப் புலவர்

# சிறப்புப் பெயர் அகராதி



**அகட்டுத்தே**-ஆனைமுகக் கடவுள்; ஆனைமுகக் கடவுள் பெருவயிற்றினையுடையவராகையால் அவருக்கு இப்பெயர் காரணம் பற்றிச் சிறப்பாக அமைந்துள்ளது.

**அகண்டகாவிரி** - மைசூர்ப் பீடபூமியில் இருந்து இறங்கிக் கொங்கு நாட்டைக் கடந்து சோழநாட்டையடையும்காவிரியாறு, திருச்சிராப்பள்ளிக்கு அண்மையில் திருவரங்கத்தைச் சுற்றிக் காவிரி கொள்ளிடம் என்று இரு ஆறுகளாகப் பிரிகின்றது. அவ்வாறு பிரிவதற்கு முன்பு ஒன்றாகவரும் ஆற்றை அகண்ட காவிரி என்பர். அகண்டம் என்னுஞ் சொல் இரண்டுபடாமல் ஒன்றாக இருப்பது என்று பொருள்படும்.

**அகண்டதரன்** - துரியோதனனோடு கூடப்பிறந்தவர்களில் ஒருவன்.

**அகண்டாநந்தர்** - (க) இவர் பௌத்த முனிவர்களில் ஒருவர்; பொதிய மலையில் நீண்ட நாள் தவஞ்செய்து கொண்டிருந்தவர்; இவர் பலருக்குப் பௌத்தமத உண்மைகளைக் கற்பித்துக் கொண்டிருந்தார்.

**அகண்டாநந்தர்** - (உ) வடமொழிப் புலவர்களில் ஒருவர். இவர் இலக்குமிதோத்திரம்முதலிய வடமொழி நூல்களைச் செய்திருக்கிறார்.

**அகத்தியக் குடும்பன்** - இவன் அண்மைக் காலத்தில் வாழ்ந்திருந்தவன். பள்ளர் வகுப்பைச் சேர்ந்தவன். ஆயினும் கல்வியை நன்கு கற்றுச் செய்யுள்கள் பாடவும் பழகிக் கொண்டான். சித்தர்களுடைய மருத்துவ நூல்களையெல்லாங் கற்றான். தன்னுடைய செய்முறையில் அறிந்த முடிபுகளையெல்லாம் திரட்டி மருத்துவ நூல் ஒன்றைச் செய்தான். அகத்தியன் என்று தன்னுடைய நூலில் தன்னைக் கூறிக்கொண்ட படியால் இவனும் அகத்தியன் என்று பிற்காலத்தவர்களால் எண்ணப்பட்டான்.

**அகத்திய நட்சத்திரம்** - இது விண்ணகத்தே இயங்கும் உடுக்களில் ஒன்று. இது கண்ணுக்குக் காணப்படுமாயின் கடலலைகள் நிற்குமென்பது நூன் முடிபு.

**அகத்தியபட்டர்** - இவர் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் தமிழ் நாட்டில் இருந்தார்; அந்தணர் குலத்தினர். வடமொழி தென்மொழிகளை நன்கு பயின்று சிறந்த புலமையுடையவராகத் திகழ்ந்தார். வியாச பாரதத்தை நன்கு பயின்று தேர்ந்தார். அது விரிவாக இருக்கிறபடியால் எல்லாராலுங் கற்றுணர முடியாமல் இருக்கிறது என்று எண்ணி அதனுடைய சுருக்கமாகக் பாலபார

தம் என்னும் பெயரோடு வட மொழியில் ஒரு நூல் இயற்றினார். வில்லிபுத்தூராரும் பிறரும் இப்பாரதத்தையே அடிப்படையாகக் கொண்டு தங்களுடைய மொழிபெயர்ப்புக்களைச் செய்தார்கள்.

**அகத்தியர்** - ஒரு முனிவர். ஏழு முனிவர்களில் ஒருவராக எண்ணப் பெறுகிறார். இவருடைய பிறப்பைப்பற்றிப் பல வாறுகதைகள்வழங்குகின்றன. "ஒரு காலத்தில் கடற்கரையில் மித்திரா என்பவரும் வருணர் என்பவருந் தங்கியிருந்தார்கள். அப்பொழுது ஊர்வசி என்னுந் தேவமாது அங்கே வந்தாள். அவளைக் கண்டவுடன் முற்கூறிய இருவரும் காமங் கைம்மிகப் பெற்றனர். ஒருவர் தம்முடைய வீரியத்தைக் குடத்தில் விட்டார். ஒருவர் தண்ணீரில் விட்டார். குடத்திலிருந்து அகத்தியர் பிறந்தார். தண்ணீரில் இருந்து வசிட்டர் பிறந்தார்" என்பது அக்கதைகளில் ஒன்று. இதனால் அகத்தியர் கும்பயோனி, குடமுனி என்னும் பெயர்களைப் பெற்றார்.

இவ்வகத்தியர் நகுடன் என்பவன் பாம்பாகுமாறு வசவுரை வழங்கினார். உமாதேவியைச் சிவபெருமான் திருமணஞ் செய்து கொண்டகாலத்தில் சிவபெருமானுடைய கட்டளைப் படி பொதியமலையை அடைந்து அங்குத் தங்கி அதனால் வடதிசைதாழ்ந்து தென்திசை உயர்ந்ததைச் சமப்படுத்தினார். பொதியமலையை நோக்கிச் செல்லும் பொழுது விந்தமலையின் ஆணவத்தை அடக்கினார். வாதாவி வில்வலன் என்பவர்கள் முனிவர்கட்குச் செய்து கொண்டிருந்த அல்லலை அகற்றினார். உலோபாமுத்திரையைத் திருமணம் புரிந்து தென்புலத்தார் கடனைத்தீர்த்தார். முருகக்கடவுள்பால் தமிழ் மொழியை ஓதியுணர்ந்து திரணதூமாக்கினி என்னும் இயற்பெயரையுடைய தொல்காப்பியர் முதலிய மாணவர்கட்குத் தமிழைக் கற்பித்தார். திருக்குற்றாலத்தில் திருமாலைச் சிவபிரானாகச் செய்தார். தேவேந்திரனுடைய வேண்டுகோளின்படி கடலை உழுந்தளவாக்கி யுண்டார். இராமபிரானுக்குச் சிவ கீதையைப் போதித்தார். சுவேதன் என்பவன் பிணந்தின்னுமாறு பெற்றிருந்த வசவுரையை (சாபத்தை)ப் போக்கினார். தமக்கு வந்தனை வழிபாடு செய்யாது யோகத்தில் அமர்ந்திருந்த இந்திரத்துய்மன் என்பவன் யானையாகுமாறு சபித்தார். தாடகையை அரக்கியாக்கினார். இராவணனோடு இசைப்போர் செய்து அவனைத் தமிழ் நாட்டை விட்டுத் துரத்தினார்.

தமிழ் மொழிக்கு முதன் முதலாக இலக்கண நூல் செய்யத் தொடங்கித் தம்முடைய பெயரால் அகத்தியம் என்னும் இலக்கண நூலைச் செய்தார். மற்றும் காலக் கணித நூல், மருத்துவ நூல் முதலியவைகளையும் இயற்றினார். அகத்தியர் என்னும் பெயருடையோர் பலர் இருந்திருத்தல் வேண்டுமெனவும், அகத்தியம் என்னும் இலக்கணத்தைச் செய்த அகத்தியரும், காலக்கணிதம் மருத்துவம் முதலியவைகளைச் செய்த அகத்தியரும் வெவ்வேறுவரெனவும் ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

அகத்தியர் என்னும் பெயருடையவர் பலர் இருந்தனர் என்பதைக் கீழ்வரும் பெயர்கள் குறிக்கின்றன. பொதியமலை அகத்தியர், முத்தூர் அகத்தியர், வாதாபி அகத்தியர், உலோபா

முத்திரை அகத்தியர், மைத்திராவருண அகத்தியர், மானிய அகத்தியர், கும்பஅகத்தியர், ஆவிர்பூ புத்திரர் அகத்தியர், கந்தருவன்புத்திரர் அகத்தியர், ஏழு இருடிகளில் ஒருவராகிய அகத்தியர், புரோகித அகத்தியர், தொடித்தோள் செம்பியன் காலத்து அகத்தியர், குடகு மலை அகத்தியர், உலோபா முத்திரை அகத்தியர் - II கோசல நாட்டு அகத்தியர், பஞ்சவடி அகத்தியர், மலைய மலை அகத்தியர், குஞ்சரகிரி அகத்தியர், புரோகித அகத்தியர் -II குஞ்சரகிரி அகத்தியர்- II துவராபதி அகத்தியர் - யசோமதி அகத்தியர், புரோகித அகத்தியர்-III கானரத்தீவு அகத்தியர், போதலகிரி அகத்தியர், திலோத்தமை அகத்தியர், பாவநாசமலை அகத்தியர் - I பாவநாசமலை அகத்தியர் II சித்த அகத்தியர், தேவார அகத்தியர், நூல் எழுதிய அகத்தியர், திருமாலைச் சிவனுக்கிய அகத்தியர், அகத்தியபட்டர், பள்ள அகத்தியர்.

**அகத்தியமலை** - இதனை அகத்திய கூடம் என்றுங் கூறுவர். திருவிதாங்கூரில் நெய்யாற்றங் கரைப் பிரிவில் உள்ளது. சு௨00 அடி உயரம். திருவிதாங்கூருக்கும் திருநெல்வேலிக்கும் இடையில் உள்ள எல்லைக் கோடு இதன் வழியாகச் செல்லுகிறது. சென்ற நூற்றாண்டில் இங்கு வானவியல் நிலையம் இருந்தது. இதில் தாமிர பரணியும் நெய்யாறுந் தோன்றுகின்றன. அகத்திய முனிவர் இம்மலையில் தவஞ் செய்து கொண்டு இருக்கிறார் என்றும், அவ்விடத்தை மனிதர்களால் அடைய முடியாது என்றுங் கூறுகின்றனர்.

**அகத்தியபக்தவிலாசம்** - ஒரு வடமொழி நூல்; அறுபத்துமூன்று திருத்தொண்டர்களுடைய வரலாற்றைக் கூறுவது. பெரிய புராணத்தைப் போன்றது. உபமந்யுபக்தவிலாசம் என்பது இதனுடைய வழிநூலாகக் கருதப் படுகிறது.

**அகத்திய பண்டிதர்** - வடமொழிப் புலவர்களில் ஒருவர். இவர் பாலபாரதம் என்னும் நூலை வடமொழியிற் செய்திருக்கிறார். அகத்தியப்பட்டர் இவரே.

**அகத்தியம்** - அகத்திய முனிவர் இயற்றிய ஒரு தமிழ் இலக்கண நூல். இந்நூல் மறைந்து போய்விட்டது. இதனுடைய சூத்திரங்கள் பல ஒன்று சேர்க்கப்பட்டுப் 'பேரகத்தியத் திரட்டு' என்னும் பெயரோடு வழங்கிக் கொண்டிருக்கிறது.

**அகத்தியவேளாளன்** - வேளாள மரபில் தோன்றிய இவன் அகத்தியர் இயற்றிய மருத்துவ நூல்களை உலகிற்பரவச் செய்தான் என்று கூறுகின்றனர்.

**அகத்தியான்பள்ளி** - சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் திருமறைக் காட்டிற்குத் தெற்கே ஒரு கல் தொலைவில் உள்ள பாடல் பெற்ற சிவப்பதி. அகத்தியர் இங்குத் தங்கி இதனை அமைத்துப் பூசித்தார் எனவும், சிலகாலம் வசித்திருந்தார் எனவுங் கூறுவர். கோயிலில் அவருடைய உருவச்சிலை இருக்கிறது. சுவாமியின்பெயர் அகத்தீசுரர். அம்மன் பெயர் பாகம் பிரியாநாயகி.

**அகத்தியாச்சிரமம்** - வடநாட்டில் பஞ்சவடிக்கு அண்மையில் உள்ள புண்ணியப்பதி. நாசிக் என்னும் இடத்தில் இருந்து இருபத்து நான்கு கல்தொலைவில் உள்ளது. இப்பொழுது இந்த இடத்தின் பெயர் சத்திய புரி என்று மாறியிருக்கிறது.

**அகத்தீசுவரர்** - திருவகத்தியான் பள்ளி என்னும் சிவப்பதியில் எழுந்தருளிய சிவபெருமானுடைய பெயர். அகத்தியரால் அமைக்கப்பட்டமையின் இப் பெயர் உண்டாகியது.

**அகப்பேய்ச்சித்தர்** - பதினெட்டுச் சித்தர்களில் ஒருவர். பிறசித்தர்களைப் போலவே இவரும் மெய்யறிவுச் செய்திகளைத் தம்முடைய பாடலில் அமைத்துப் பாடியுள்ளார். அகத்தை - (மனத்தை)ப் பேயாக உருவகித்துப்பாடினமையின் இவர் இப் பெயர் பெற்ருர் என்பர்.

**அகம்பன்** - சுமாலியின் மகனுகத் தோன்றிய அரக்கன். கரன், தூடணன், திரிசிரன் முதலியோரை இராமபிரான் கொன்றளிருய காலத்தில் இராவணனுக்குச் செய்தி அறிவித்தவன். இராமபிரான் இலங்கையை வளைத்துக் கொண்ட காலத்தில் அநுமானுல் கொல்லப்பட்டவன்.

**அகராதி** - ஒரு மொழியில் உள்ள சொற்கள் எல்லாவற்றையும் அகரம் முதலிய எழுத்து வரிசையில் அமையுமாறு தொகுத்து அவற்றின் பொருள்களையும் நேருக்கு நேராக இறுதிவரையில் விளக்கிக் கொண்டு போகும் நூல் அகராதி என்பர்.

**அகலிகை** - கௌதம முனிவருடைய மனைவி. முற்கல முனிவருடையமகள். இந்திரனுடைய வஞ்சனையினுல் கற்பிழந்த காரணத்திற்காகக் கௌதம முனிவரால் கல்லாகுமாறு வசவுரை பெற்றுக் கல்லானவள். இராமபிரான் திருவடி பட்டபொழுது பழையவடிவம் பெற்றவள். வேறு சிலரும் அகல்கை என்னும் பெயரோடிருந்ததாகத் தெரிகிறது.

**அகலியாநந்தனன்** - சதாநந்தர் என்னும் பெயரையுடைய இவர் அகலிகையின் புதல்வர்; சனகனுக்கு குருவாக இருந்தவர்.

**அகவர்** - அழைத்துப்பாடுவோர். அகவல் - அழைத்தல். குலத்தோர்கள் எல்லோரையும் அழைத்துப் பாடுகிறவர்கள். அகவன் மாக்கள் எனவுங் கூறப்பெறுவர்.

**அகன்** - வசுக்கள் எண்மரில் ஒருவன். இவனுடைய மகன் பெயர் சோதி. இவனுக்கு ஆபச்சைவன் எனவும் பெயர் வழங்கியது.

**அகாசூரன்** - இவன் பகாசுரனேடு கூடப் பிறந்தவன்; கஞ்சனுடைய ஏவலால் பிருந்தாவனத்தில் இருந்த கண்ணனை விழுங்கும் பொருட்டுப் பாம்பு வடிவம் எடுத்துக் கொண்டு வந்து விழுங்கிக் கண்ணனுற் கொல்லப்பட்டான்.

**அகிர்ப்புத்தநீயன்** - உருளைப் படையை விரும்பித் தவஞ் செய்து பெற்றவன்; இவன் உண்டாக்கிய புனிதநீர் சுதரிசன தீர்த்தம் எனப்பெறும்.

**அகிர்ப்புத்தி** – திருவேங்கட மலையில் தவஞ் செய்து சித்தி பெற்ற ஒரு முனிவர்.

**அகிர்ப்புத்தியன்** - பூதனுக்குச் சுரபியிடந் தோன்றியவன். பதினொரு உருத்திரர்களில்ஒருவன்.

**அகினகு** - கதிரவன் வழி முறையில் தோன்றிய ஓர் அரசன்; இராமபிரானுக்குப் பின்னிருந்தவன்.

**அகுதை** - மதுரையில் இருந்த ஒரு வள்ளல். கோசர்களுடைய ஆதரவு பெற்றவன். கபிலராலும் வெள்ளெருக்கிலையாராலும் பாடப் பெற்றவன். அஃதை எனவும் கூறப்பெறுவான்.

**அகோபிலம்** - கர்நூல் மாவட்டத்தில் சிரவேல் தாலுகாவில் உள்ள ஊர். பெரிய மலைகள் இரண்டுக் கிடையில் பள்ளத்தாக்கில் அமைந்த படியால் இப்பெயர் பெற்றது என்பர். பெரிய திருமால் கோயில் இங்கு உள்ளது. மலை உச்சியிலும் சரிவிலும் அடியிலுமாக மூன்று கோயில்கள் உள்ளன. அடியில் உள்ள கோயிற் சுவரில் தீட்டப் பெற்றுள்ள இராமாயணக்காட்சிகள் மிகச்சிறந்தவை. மண்டபத்தின் தூண்கள் எட்டடி சுற்றளவு உடையன. கோயிலைச் சேர்ந்த அகோபில மடம் சடகோபாச்சாரியார் என்பவரால் அகோபிலம் என்னும் ஊரில் நிறுவப்பெற்றது. இஃது அழகிய சிங்கர் மடம் எனவும் வழங்கப் பெறும். இதன் கிளை மடங்கள் தென்னாட்டில் திருவரங்கம் காஞ்சி முதலிய இடங்களில் உள்ளன.

**அகோரசிவா சாரியர்** - ஆதிசைவர்; பதினெண்பத்ததி செய்தவர்களில் ஒருவர். இவர் திருத்தில்லையில் வாழ்ந்திருந்ததாகக் கூறுவர். இவர் செய்த பத்ததி அகோரபத்ததி என்று பெயர் பெறும்.

**அகோரமூர்த்தி** - இவர் வெண்மை கலந்த நிறமுடையவராய், காதிற் குண்டலம், மீசை, சிகை கோரப்பல், அஞ்சத்தக்கமுகம், மண்டையோட்டு மாலை, கேடயம், சூலம், கோடரி, கத்தி, தடி முதலியவைகளை யுடையவராய் எட்டுத் தோள்களோடு விளங்குவார்.

**அகோரம்** - சதாசிவமூர்த்தியினுடைய திருமுகங்களில் ஒன்று. நீல கற்பத்தில் நான்முகன் நினைக்க அவன் முன்தோன்றி அருள்புரிந்து நான்கு முனிவர்களைப் படைத்துக் காட்டியவர்.

**அக்கபாதமுனிவர்** - கௌதமர்: இவர் காலிலே கண்ணுடையவராக இருந்த படியால் இப்பெயர் பெற்றார். இவர் நியாய நூல் இயற்றியுள்ளார்.

**அக்கமாதேவி** - உடுதடை என்னும் ஊரில் நின்மலன் என்பவனுக்கும் சுமதி என்பவளுக்கும் பிறந்து மாதேவி எனப் பெயரிடப் பெற்று அழகிற் சிறந்தவளாக விளங்கியிருந்தாள். இவளை விச்சலன் என்னும் அரசன் கண்டு காமுற்று மணஞ்செய்ய எண்ணினான். அவன் சமண சமயத்தவன். அவன் தன்னை வலிந்து தொடாதிருப்பதற்கு உறுதி மொழியை முன்னே பெற்றுக் கொண்டு பிறகு அவனை வீரசைவனாகச் சொன்னாள். அவன்மறுத்தான். ஆகவே இவள் துறவு பூண்டு குருவைத் தேடினாள். அல்லமரைக்கண்டு அருளுரைபெற்று அறிதுயிலில் அமர்ந்தாள்.

**அக்களநிம்மதி** - தந்தி வர்மன் என்பவனுடைய மனைவி; தெள்ளாறெறிந்த நந்திவர்மன் எனவும் மூன்றாம் நந்தி வர்மன் எனவும் பெயர் பெற்ற நந்திவர்மனுடைய தாய்.

**அக்கன்** - இராவணனுடைய மக்களில் ஒருவன்.

**அக்கிரேசுரன்**-இவன் ஓர் அசுரன். மூவாயிரம் அண்டங்கட்கு அரசனாய், மூவாயிரம் திருமால்களும் மூவாயிரம் நான்முகர்களும் மூவாயிரம் இந்திரர்களும் தனக்கு ஏவல் செய்ய அரசாண்டான். சிவபெருமான் இராசசேகரர் என்னும் பெயரோடு வந்து இவனைக் கொன்றார்.

**அக்கினிகோத்திரன்** - பரத்துவாச முனிவரோடு கூடப் பிறந்தவர். அக்கினிவேசியர் என்றும் இவருடைய பெயர் வழங்கும். பாஞ்சாலன், துரோணர் ஆகியவர்களுக்கு இம் முனிவர் வில்லாசிரியர்.

**அக்கிநிகேது** - இராவணனுடைய படைத்தலைவன்.

**அக்கிநிகோத்திரபட்டர்** - ஒரு வட நூற்புலவர்.

**அக்கிநிசருமன்** - நருமதையாற்றுக் கரையில் வாழ்ந்திருந்த விட்டுணுசருமன் என்னும் அந்தணனுடைய மக்களில் ஒருவன். அக்கிநி சருமனுக்கு சோம சருமா என்னும் பெயருடைய உடன் பிறந்தான் ஒருவனும் இருந்தான். இவர்களில் சோமசருமா காசியை அடைந்து தவஞ்செய்து எண்வகைச் சித்திகளையும் பெற்று வீடு பேற்றையடைந்தான். சோமசருமன் அக்கிநிசருமனைப் போல்நல்வினையைச் செய்யாது தெய்வங்களை இகழ்ந்தும் தீவினைகளைச் செய்தும் இறந்தான். மறுபிறப்பில் மிலேச்சனாகப் பிறந்து நிரயத்தையடைந்தான். நிரயத் துன்பத்தை நுகரும் போது காசியின் எண்ணம் உண்டாயிற்று. அதனால் மீண்டும் மறையவனாகப் பிறந்துகங்கையாடி வீடு பேற்றையடைந்தான்.

**அக்கிநிதுருவன்** - பிரியவிரதன் என்பவனுடைய மகன். இவனுடைய தாய்பெயர் சுகன்னி. மனைவியின் பெயர் பூர்வசித்தி. இவன் சம்புத்தீவை அரசாட்சி செய்தான். இவனுக்கு ஒன்பது மக்கள் தோன்றினர். அவர்களுடைய பெயர், நாபி, கிம்புருடன், அரி, இளாவிருதன், இரம்யன், இரண்யவந்தன், குரு, பத்ராசுவன், கேதுமாலி என்பன. இவர்கட்கு அக்கிநி துருவன் தன்னுடைய நாட்டைப் பிரித்துக் கொடுத்தான். நாபி பரத கண்டத்தையும், கிம்புருடன் ஏமகூடத்திற்குத் தெற்கில் உள்ள இடத்தினையும், அரி நிடதத்தையும், இளாவிருதன் இளாவிருத கண்டத்தையும், இரம்யன் இளாவிருதத்திற்கும் நீலா சலத்திற்கும் நடுவிடத்தையும், இரண்யவந்தன் சுவேத கண்டத்தையும், குரு சிருங்க வந்தத்தால் சுற்றப்பட்ட இடத்தையும், பத்திராசுவன் மேருவுக்குக் கிழக்கில் இருக்கும் இடத்தையும் கேதுமாலி மேருவுக்கு மேற்கில் இருக்கும் இடத்தையும் ஆண்டனர். இவைகளே நவகண்டம் என வழங்கலாயின.

**அக்கிநிமித்திரன்** - மகத நாட்டு மன்னனாகிய புட்பமித்திரன் என்பவனுடைய மகன்.

**அக்கிநிமுகன்** - சூரபன்மனுடைய மகன். இவனுக்கு முகங்கள் இரண்டு. இவன் வீரவாகு தேவரோடு பிறந்தவர்களைக்கொன்ற பின் வீரவாகு தேவரோடு போரிட்டான். போர் செய்ய முடியாமல் தேர்மீது விழுந்தான். தன்னுடைய குலதேவதையாகிய காளியை ஏவினான். அவள் போரிடப் பின்னிட்டாள். பிறகு வீரவாகு தேவராற் கொல்லப்பட்டான்.

**அக்கிநித்துயோதன்** - திருமணத்தின் பொருட்டுக் கண்ணபிரானிடம் உருக்குமணி தேவியால் அனுப்பப் பட்ட ஒரு தூதன்.

**அக்கிநி வர்ணன்** - இவன் இராமருடைய வழி முறையில் இருபத்தாறாவது அரசன். இவனுடைய தந்தையின் பெயர் சுதரிசனன்.

**அக்கிநிவிந்து** - திருமாலை வழிபட்டு அவரைக் காசியில் பஞ்சநதத்தில் எழுந்தருளச் செய்தவன்; இதனால் அங்கு எழுந்தருளியுள்ள திருமாலுக்கு விந்துமாதவன் என்று பெயர்.

**அக்கிநிவேசன்** - இட்சுவாகுவின் உடன் பிறந்தானும் நரிஷ்யந்தன் வழி முறையினனுமாகிய தேவதத்தன் என்பவனுடைய மகன். இவன் கன்னியினால்

பெறப்பட்டவன் என்பர். சாதுகர்ணன் என்னும் பெயருடைய முனிவனுனன். இவனுடைய வழி முறையில் தான் அக்கிநிவேசர் தோன்றினர்.

**அக்கிநிஸ்தோமன்** - நான்முகனல் வசுக்களுக்கு வேள்விசெய்விக்க ஏற்படுத்தப் பட்ட ஒரு முனிவன்.

**அக்குரூரர்** - இவர் யதுவின் வழி முறையில் தோன்றியவர். சுவபல்கன் என்பவருடைய மகன். தாய் பெயர் காந்தினி. இவர் கம்சனுக்கு அமைச்சராக இருந்தவர். இவர் கம்சனுடைய வேண்டுகோளால் நந்தகோபரிடம் போய்த் தனுர் வேள்விச் செய்தியைக் கூறிப் பலராம கிருட்டிணர்களை அழைத்துக் கொண்டு யமுனைக் கரையை அடைந்தார். தாம் தனித்து நீரில் மூழ்கினர். இவர் பலராம கிருட்டிணர்களிடத்திலே உள்ளன்புடையவராகையால் அவர்களிருவரும் நீருக்குள்ளே தேரோடு காட்சி தரக்கண்டு திடுக்கிட்டு வெளியில் வந்தார். அவர்களைக் கண்டு களித்து மீண்டும் நீராடினர். அப்பொழுது பாம்பணையில் திருமாலை நீரில்கண்டு வணங்கினர். இராமகிருட்டிணர்களை அழைத்துக்கொண்டு போய்க் கம்சனிடஞ் செய்தி கூறினர். சததன்வா இடத்தில் இருந்த சியமந்தக மணியைஅவனிடமிருந்து கவரச் செய்து கண்ணபிரான் அறியா திருக்கக் கங்கைக்குப் பயணம் போய் மீண்டும் கண்ணனல் வெளியிடப்பட்டவர். இவருடைய மனைவியின் பெயர் சித்திரரதை.

**அங்கணமாமுனி** - இவர் கடுமையான தவஞ் செய்தார். அதனல் தவத்தீ தேவருலகை வருத்தியது. தேவர்கள் சிவபிரானை வேண்டினர். சிவபிரான் இவரிடம் எழுந்தருளி, ''எழுக'' என்று கூறினர். இவர் எழாமல் இருந்தார். ஆகவே, சிவபிரான் அங்கிருந்த ஒரு பாறையை விரலால் தட்டினர். அதிலிருந்து தீ யுண்டாகி இவருடைய தவத்தைக் குலைத்தது. எதிரில் சிவபிரானைக் கண்ட இவர் தம்முடைய பிழையைப் பொறுக்குமாறு வேண்டிக் கொண்டார்.

**அங்கதபுரம்** - இலக்குமணனுடைய மகனுகிய அங்கதன் ஆண்டநகரம். இஃது இமயமலைக்கு அண்மையில் இருந்தது.

**அங்கதபூபதி** - இவன் வடநாட்டில் இருந்தவன். இவனுக்கு இராயசிங்கு என்னும் பெயருடைய உடன் பிறந்தான் ஒருவன் இருந்தான். அங்கதபூபதியின் மனைவி திருமாலடியார்களிடம் அன்புடையவளாக இருந்தாள். அவளுக்கு அருளுரை கூறிய ஆச்சாரியார் ஒரு நாள் அவளுடைய இல்லத்திற்கு வந்தார். அங்கதபூபதியின் மனைவி தன்னுடைய ஆச்சாரியாருக்குச் சிறப்பான வகையில் உணவிடுதலுக்கு ஏற்பாடு செய்தாள். இதனைக் கண்டு அங்கதபூபதி பொருமை கொண்டான். தன்னுடைய மனைவியைப் பார்த்துக், ''கற்புடைய பெண்களுக்குக் கணவனைப் பார்க்கினுஞ் சிறந்த தெய்வம் வேறு இருக்கிறதோ? இருந்தாற் காட்டு. நான் ஒருவன் இருக்கும் போது நீ இவ்வாறெல்லாஞ் செய்கிருயே?'' என்று கேட்டான்.

அங்கதபூபதி கூறியதைக் கேட்டதும் அவனுடைய மனைவிக்கு மிகுந்த மனவருத்தம் உண்டாகியது. உணவு முதலியன கொள்ளாமல் மூன்று நாள் வரை திருமாலை எண்ணிக் கொண்டிருந்தாள். திருமால்

அங்கதபூபதியின் கனவில் தோன்றினர். "நீ உன்னுடைய மனைவியைக் காட்டுமாறு கேட்ட தெய்வம் நான்தான்". என்று கூறி மறைந்தருளினர்' அங்கதபூபதி திடுக்கிட்டு விழித்தான். தன் மனைவியிடம் போய், "நான் உன்மீது வீணே சினங்கொண்டேன். நீ உன்னுடைய விருப்பம் போல் திருமாலையும் அவனடியார்களையும் போற்றி வழிபடுவாயாக" என்று சொன்னன். மனைவியானவள் தன் ஆச்சாரியாரைக் கொண்டு கணவனுக்கும் அருளுரை வழங்கச் செய்தாள். அதன் பிறகு கணவன் மனைவியிருவருமே திருமாலிடத்தில் பெருமாலுடையவர்களாய் விளங்கியிருந்தனர். இவ்வாறிருக்கையில் அங்கதபூபதியின் அண்ணனுகிய இராயசிங்கன் தன்பகைவர்கள்மீது தம்பியாகிய அங்கதபூபதியைப் படையெடுத்துச் செல்லச் செய்தான். அங்கதபூபதியும் அவ்வாறே போய்ப் பகைவர்களை வென்று அவர்களுடைய பொருள்களைக் கைப்பற்றினன். அப்பொழுது பெரியவயிரமணி யொன்று கிடைத்தது. அஃது அழகியதாகவும் அருமையானதாகவும் இருந்தபடியால் அதனைச் சகநாதத்தில் எழுந்தருளிய கடவுளுக்கு அணிய வேண்டும் என்று எண்ணியவனுய்ப் பாதுகாத்து வைத்திருந்தான். இராயசிங்கு இச்செய்தியை அறிந்தான். அம்மணியை எவ்வாறேனுங்கைப் பற்றிவிட வேண்டும் என்று பெருமுயற்சி செய்தான். முடியாமற் போகவே தம்பியைக் கொலை செய்து கைப்பற்றுவதென்று முடிவு செய்தான்.

தன் தங்கையினிடம் நஞ்சினைக் கொடுத்து "இதனை உணவிற்கலந்து கொடுப்பாயாக" என்று கட்டளையிட்டான். அண்ணனுக்கஞ்சிய அணங்கு அவ்வாறே செய்தாள். அங்கதபூபதி இதனை அறிந்தும் அதனைக் கடவுளுக்குப் படைத்து உண்டான். அதனுல் அவனுக்கு எத்தகைய ஊறும் உண்டாகவில்லை. பிறகு அங்கிருத்தற்கு விருப்பமில்லாதவனுய் மனைவியோடு சகநாதத்தை நோக்கிப் புறப்பட்டான்.

இராயசிங்கு இதனையறிந்தான், வழிமறித்து; "அவ்வயிரமணியைக் கைப்பற்றி வருக" என்று அமைச்சனைப் படையோடு அனுப்பிவைத்தான். அமைச்சன் சென்று வழிமறித்து வயிரமணியைக் கைப்பற்ற எண்ணினன். அங்கதபூபதி அவ்வயிரமணியை அண்மையில் இருந்த ஆற்றில் எறிந்து, "இது சகநாதருக்குரியதாகக்கடவது" என்று சொன்னன். அங்கதபூபதி வைரமணியை ஆற்றில் எறிந்துவிட்டதைக் கண்ட அமைச்சன் தன்னுடைய படைகளைப் பார்த்து "அதனைத்தேடிக் கண்டெடுத்து வாருங்கள்" என்று சொன்னன். படையிலிருந்தவர்கள் நெடுநேரந்தேடி முயன்றும் அதனைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அங்கதபூபதி அமைச்சனையும் தேடுபவர்களையும் பார்த்து, "நீங்களேன் வீணுக வருந்துகிறீர்கள்? என்னேடு வந்தால் அது சகநாதர் மீது இருத்தலைக் காட்டுகிறேன்" என்முன்.

எல்லோரும் சகநாதத்தையடைந்து சகநாதரைப் போற்றிவழிபட்டனர். அப்பொழுது அம்மணி சகநாதர் மார்பில் இருத்தலை அங்கதபூபதி அமைச்சனுக்குக் காட்டினன். அமைச்சன் கோயில் பூசகர்களைப் பார்த்து, "இம்மணி இங்கு எவ்வாறு வந்தது?"

என்று கேட்டான். பூசகர்கள் மூன்று நாட்களுக்கு முன்பு அங்கதபூபதி இதனை எம்மிடம் கொடுத்தனர். சகநாதர் "இதனைப் பதக்கத்திற் பதித்து எமக்கு அணிக" என்று கட்டளையிட்டனர். அவ்வாறே செய்துள்ளோம்" என்று கூறினர்.

அமைச்சன் இச் செய்திகளை இராயசிங்கனுக்குத் தெரியப் படுத்தினன். இராயசிங்கன் தன்னுடைய தம்பி சகநாதனுக் குத் தொண்டனைதை அறிந்து மகிழ்ந்தான். அவனிடத்திலே பேரன்பு கொண்டான். "உடனே திரும்பி இங்கு வந்து விடுக சகநாதன்மீது ஆணை" என்று கடிதம் எழுதினன். அங்கதபூபதியும் திரும்பி ஊரை யடைந்து திருமாலைப் போற்றி வழிபாடு செய்து கொண்டிருந் தான்.

**அங்கதன்**-வாலியின் மகன்; இலக் குமணனுடைய மூத்தமகன்; இப்பெயருடைய காலக்கணி தன் ஒருவனும் புகழ் பெற்ற வனுக விளங்கியிருந்தான்.

**அங்கவை** - பாரியினுடைய பெண் களில் ஒருத்தி. பாரியிறந்த பின் கபிலரால் ஆதரிக்கப் பெற் றவள். கல்வியறிவிற் சிறந்த தவள். ஔவையாருக்கு விருந் திட்டுப் புகழ்ப்பாடல் பெற்ற வள். ஔவையார் சொல்படி சேரன் இவளுக்குப் பொன்னுடு வழங்கினன்.

**அங்கன்** - யயாதியின் நான்காம் மகன்; உன் முகன் உன்பவ னுடைய மூத்த மகன்; உசீநரன் என்பவன் மகன்; மற்றும் பலர் அங்கன் என்னும் பெயருடைய வர்களாக விளங்கியிருந்தனர்.

**அங்காடி** - கடைத் தெருவுக்கும் கடைக்கும் இப் பெயர் வழங் கும். அங்காடி, நாளங்காடி, அல்லங்காடி என இருவகைப் படும். நாளங்காடி காலைப் பொழுதிற் கூடும். அல்லங் காடி மாலைப் பொழுதிற் கூடும். இவ்வங்காடிகளைப் பற்றிச் சங்க நூல்கள் கூறு கின்றன.

**அங்காடிப்பூதம்** - இப்பூதம் காவி ரிப்பூம்பட்டினத்தில் முன்னு ளில் இருந்தது. இந்திர விழாவை மறந்தாரை வருந்துந் தன்மையுடையது.

**அங்காரகன்** - உமையவள் நீங்கச் சிவபெருமான் யோகத்தில் இருந்தார். நெற்றிக் கண்ணில் வியர்வையுண்டாகி நிலத்தில் விழுந்தது. அவ்வியர்வைத் துளி அங்காரகனுகியது. இக் குழந்தையை நிலமகள் வளர்த் தாள். இவன் தவஞ் செய்தான். யோகத் தீ இவனுடைய உட லில் உண்டாயிற்று. அதனுல் அங்காரகனுய் வீட்டு நிலைய டைந்தான்: "பாரத்துவாச முனிவர் நீராடச் சென்றபோது ஒரு பெண்ணைக் கண்டு விரும்ப அவருடைய வீரியம் நிலத்தில் விழுந்து குழந்தையாயிற்று. நிலமகள் வளர்த்துப் பாரத்து வாசரிடம் அனுப்பினள். அவரி டம் எல்லாக் கலைகளையுங் கற் ருன். பிறகு தவஞ் செய்து வீட்டு நிலையை அடைந்தான்" என்று இவ்வாறுங் கூறுவர். இவனுக்குக் குசன், பௌமன், மங்கலன், ஆரல், குருதி, வக்கி ரன் எனப் பல பெயர்கள் வழங்கும்.

**அங்காரகை**-இவள் கிருதாசியென் னும்பெயரையுடைய அரம்பை. அகத்தியருக்குச் செய்த தீமை யினுல் அரக்கியாகிச் சுவேத முனிவரை வருத்திக் கொண்டி ருந்தாள். அவர் இவள் மீது ஏவிய பாறை இவளைப் பின் தொடர்ந்தது. அதனைக்கண்டு அஞ்சிய இவள் சேதுவில் விழுந்து தன் வடிவம் பெற்ருள்.

**அங்காரதாரை**-இவள் ஓர் அரக்கி. அநுமான் சீதாபிராட்டியைத் தேடிக்கொண்டு இலங்கைக்குச் சென்ற காலத்தில் அநுமானை வழிமறித்து வாயினுள் புகுமாறு கூறினாள். அநுமான் அவ்வாறே புகுந்து குடல் கொண்டு வெளிப்பட்டான். அதனால் இவள் இறந்தாள்.

**அங்காரவருணன்** - அருச்சுனனுடன் போர்செய்து அவனுடைய தீக்கணையினால் எரிக்கப்பட்டுச் சித்திரரதன் என்னும் பெயரோடு எழுந்து அருச்சுனனை நட்புக் கொண்டு பாண்டவர்க்குத் தௌமியரைவேள்வியாசிரியராக இருக்கச் செய்தவன். இவனுடைய மனைவியின் பெயர் கும்பீநசி.

**அங்காளம்மன்** - சிவபிரானிடமிருந்து தோன்றிய வீரபத்திரனும் பத்திரகாளியும் தனித்தனியே உலாவித் தக்கனுடைய வேள்வியை அழித்தனர். அவ்வாறு தோன்றிய பத்திரகாளியே அங்காளம்மன் என்பர். அங்காளம்மனிடம் வீரபத்திரருடைய கூறும் உண்டு. ஆகவே அங்காளம்மன் அர்த்த நாரீசுவரரைப் போன்றவர்.

**அங்கிசுமான்** - அஞ்சுமான் எனவும் வழங்கப் பெறுவன். கதிரவகுலத்து அசமஞ்சனுடைய மகன். சகரனுக்குப் பேரன். இவன் சகரனால் ஏவப்பட்ட குதிரையைக் கபிலரிடம் இருந்து பெற்றுச் சகரனிடம் கொடுத்து வேள்வியை நிறைவேற்றியவன். இவன் கங்கை நிலவுலகிற்கு வரத்தவஞ்செய்து பயன் பெறாமல் இறந்தான். இவனுடைய மகன் திலீபன்.

**அங்கிரன்** - ஒரு வேடன்; பெருந் தீவினையாளன். மேலைச் சிதம்பரம் என்னும் பேரூரில் நற்கதியடைந்தான்.

**அங்கீரசன்**-இவனுக்கு அங்கீரன், அங்கிரா, அங்கீரசன் எனவும் பெயர்கள் வழங்கின. இவன் நான்முகனுடைய மக்களுள்ஒருவன். இவனுக்கு உதத்தியன் அல்லது சம்வர்த்தனன், பிருகற்பதி என்னும்பெயர்களையுடைய இரண்டு மக்களும் யோகசித்தி என்னும் பெயரினையுடைய ஒரு மகளும் இருந்தனர். தீக்கடவுள் ஒரு முறை தேவருணவாகிய அவியைச் சுமக்க வலியற்றுக் காட்டிற்குச் சென்றான். அக்காலத்தில் தேவர்கள் இவனைத் தீக்கடவுளின் இடத்தில் இருத்தினர். பிறகு தீக்கடவுள் வர இவன் தீக்கடவுளை முதலாக வைத்துத் தான் இரண்டாவதாக மகனானான். இவனுடையமனைவி சிவை இவளிடத்தில் இவனுக்குப்பிரகச்சோதி, பிரகத்கீர்த்தி, பிருகன் முகன், பிருகன்மதி, பிருகத்பானன், பிருகஸ்பதி, பிருகற் பிரமன் என்னும் ஆண்களும், அநுமதி, இராகை, சினிவாலி, குகு, அர்ச்சிஷ்மதி, அவிஷ்மதி, மகாமதி என்னும் பெண்களும் பிறந்தனர். மக்களெல்லாரும்அக்கினிகளாயினர். மகளாகிய யோகசித்தி பிரபாவசுவென்னும் வசுவை மணந்து விசுவகர்மனைப் பெற்றாள்.

**அங்குலன்** - இவன் திருவோமாம்புலியூரில் இருந்த ஒரு வேடன். இவனைக் காட்டிற் புலி துரத்தியது. இவன் அப்புலிக்கஞ்சி ஒரு வில்வமரத்தில் ஏறிக் கொண்டான்.மரத்தில் ஏறமுடியாத புலி அடியிற் படுத்துக் கொண்டது. இரவு முழுவதும் உறக்கம்வராதிருத்தற்காகமரத்தில் இருந்த வில்வ இலையைப் பறித்துக் கீழே போட்டுக் கொண்டிருந்தான். இலைகள் அடியிலிருந்த சிவலிங்கத்தின் மேல் விழுந்தன. அதனால் சிவபிரான் இவனுக்குக் காட்சி தந்து வீடுபேற்றையருளினார்.

**அசகணார்**-ஒரு வீரசைவர்; வசவ தேவர் காலத்தில் இருந்தவர்.

**அசகரன்** - (1) இவன் ஓர் அசுரன். இவன் மலைப்பாம்பு வடிவங் கொண்டு பால விநாயகரை விழுங்கினன். அவர் இவனுடைய உடலைப்பிளந்துகொண்டு வெளியே வந்தனர்.

**அசகரன்** - (2) இவன் ஒரு முனிவன். இவன் நாம் தவஞ்செய்தலை மேற்கொண்டால் நம்மைக் காப்பவர் யார் என்று எண்ணிக் கொண்டு காட்டிற் சென்றான். அங்கு ஒருமலைப் பாம்பு எப்பொழுதும் இடம் விட்டுப் பெயராமல் படுத்திருந்தது. அதனைக்கண்ட இவன் இப்பாம்பினைக் காப்பவன் நம்மையுங் காப்பான் என்று தவத்தினை மேற்கொண்டான். சிறந்த அறங்களைப் பிரகலாதனுக்கு உரைத்தவன்.

**அசகன்** - புரூரரவமன்னனுடைய வழிமுறையில் தோன்றிய சந்நு என்பவனுக்குப் பேரன்.

**அசங்கன்** - பிளயோகன் என்பவனுடைய வழிமுறையில் தோன்றியவன். இவனுடைய மனைவியின் பெயர் சரசுவதி. இவன் பெண்ணாக மாற்றப் பட்டுப் பிறகு மேதையதிதி என்பவளுடைய முயற்சியால் ஆணாக மாற்றப் பட்டான்.

**அசக்கிரீவன்** - கத்துரு குமாரன். இவனுக்கு அயக்கிரீவன் என்றும் பெயர்.

**அசதி**-ஔவையாரைப் போற்றிப் பாராட்டி அவரால் கோவை பாடப் பெற்றவன். இடையர் மரபினன். இவன் ஐவேலி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தபடியால் இவனுடைய பெயர் ஐவேல் அசதி என்றும் வழங்கியது.

**அசமஞ்சன்** - சகரனுடைய மகன். இவனுடைய தாய் பெயர் கேசினி. இவன்முதற் பிறப்பில் யோகியாக இருந்தான். அப்பொழுது அதனினின்றுந்தவறியதால் கேசினியிடம் பிறந்து பழம்பிறப்பின் அறிவோடு இல்லறத்தில் இருந்தான். இல்லறத்தை விட்டு நீங்க எண்ணினன். தெருவில் விளையாடும் பிள்ளைகளைச் சரயு ஆற்றில் தூக்கியெறிந்தான். தந்தை சினமடைந்து இவனைக் காட்டிற்குத் துரத்தினன். அதனால் இவன் மகிழ்ந்து ஆற்றில் தள்ளிய பிள்ளைகளைக் கரையேற்றிக் காடடைந்து தவஞ் செய்தலை மேற் கொண்டான்.

**அசமாதி** - இட்சுவாகுவின் வழிமுறையில் தோன்றியவன். இவன் தன்னுடைய பழைய ஆசிரியர்களை விட்டு வேறு ஆசிரியர்களைக் கொண்டதால் அவர்கள் இவனிடத்திலே சினங்கொண்டு அரசன் கெடுமாறு மந்திரம் உரைத்தனர். இவனுடைய புதிய ஆசிரியர்கள் எதிராக வேறுமந்திரத்தைச் செபித்து அவர்களில் ஒருவனை மாளச் செய்தனர்.

**அசமீடன்** - பௌரவ வமிசத்தவனாகிய அத்தியின் மகன். இவனுக்குப் பிருக திட்சன், நீலன், இருடன் என்னும் பெயர்களையுடைய மக்கள் இருந்தனர்.

**அசமுகன்** - ஓர் அரக்கன். மது என்னும் பெயரினையுடைய பூத கணத்தலைவன் மீது நாராயணக் கணையைச் செலுத்தி அதனால் மாண்டவன்.

**அசமுகி** - இவள் ஆட்டு முகம் உடையவள்; மாயை என்னும் அசுரப்பெண் நான்காஞ்சாமத்தில் ஆட்டின் வடிவங் கொண்டு காசிபரைப் புணர்ந்து பிறந்தவள். துர்வாசரை வலிதிற் புணர்ந்து வாதாபி வில்வலனைப் பெற்றாள். இந்திராணிதனித்திருக்கும் போது கண்டு தன்

னுடைய அண்ணனுக் காவாள் என்று இழுத்துச்சென்ருள்.அப் பொழுது மகாகாளர் இவளு டைய கைகளை அறுத்துத் தள்ளி ஞர். இவள் சூரனிடஞ் சென்று தனக்கு நேரிட்ட துன்பத்தைச் சொன்னுள்.பிறகுநான்முகனுல் இவளுடைய கைகள் வளர்ந் தன.

**அசரீரி** - அசரீரி என்பதற்கு நேர் பொருள் உடலற்றது என்பது. அசரீரி பேசுவதாகப் பலவிடங் களினும் வழங்குதலைக் காண் கிரும். உடலற்றது எவ்வாறு பேசுதல் கூடும் என்னுங் கேள்வி எழுதல் கூடும். இவ் வசரீரிக்கு ஆகாயவாணி என வும், அறக்கடவுள் எனவும், தருமதேவதை எனவும் பெயர் கள் வழங்கும். கடைச்சங்க காலத்தில் திருக்குறள் அரங் கேற்றம்நடைபெற்ற பொழுது கடைச் சங்கப் புலவர்கள் அனைவருஞ் சாற்றுக்கவி பாடி யுள்ளனர். அச்சமயத்தில் எல் லோருக்கும் முற்பட்டு அறக் கடவுள், "திருத்தகு தெய்வத் திருவள்ளுவரோ- டுருத்தகு நற் பலகையொக்க - இருக்க, உருத்திர சன்மர் எனவுரைத்து வானில், ஒருக்கவோ என்ற தோர் சொல்" என்னும் பாடலைப் பாடியதாகவும் வழங் குகின்றது. யாண்டும் நிறைந் துள்ள அறக்கடவுள் தக்காரின் தகுதியறிந்துஅவர்கட்கு நிகழப் போகும் நன்மை தீமைகளைப் பிறர்வாக்கிற் பொருந்தி நின்று உரைக்கின்ற தென்பது சான் ரேூர் முடிபு. உருவமுடைய பிறர் வாக்கிலிருந்து அவ்வுரை வெளிவரினும் ஆண்டு அறக் கடவுள்அமைந்து நிற்றல் கருதி அசரீரி என வழங்கலாயிற்று. சில விடங்களில் பிறர்வாயி லிருந்துசொற்கள்புறப்படாமல் விண்ணிலிருந்து உண்டா தலும் உண்டு. அதனுல் தான் ஆகாயவாணி எனவும் பெயர் வழங்குகின்றது.

**அசலகீர்த்தி** - கனகமாலையின் உடன்பிறந்தார்களுள் ஒருவன்.

**அசலமுனி** - யானையினிடம் பிறந்த ஒரு முனிவன்.

**அசனிதேவர்** - இவர் ஒரு சிவ யோகி. இவர் சிவபெருமானை எண்ணி யோகத்திருக்கையில் ஆற்று நீர் பெருகிவந்தது. அத னைக் கண்ட இவர் சினங் கொண்டார். அச்சினத்தால் ஆறு வடிந்தது.

**அசன்** - இரகுவின் மகன். இவன் மகன் தசரதன். இவன் விதர்ப்ப நாட்டரசனுகிய போசன் மகள் இந்துமதியின் சுயம் வரத்திற் குச் செல்லும் போது வழியில் முன்னுளில் முனிவர் ஒருவர் கொடுத்த வசவுரையினுல் யானையுருவைப் பெற்று உலா விக் கொண்டிருந்த பிரியம்பதன் என்னும் காந்தருவனுகிய யானையைக்கண்டு அம்பெறிந்து கொல்லச் சென்ருன். யானை யுருப்பெற்ற காந்தருவன் அச னைப் பார்த்து, "நான் மதங்க முனிவருடைய வசவுரையினுல் இவ்வுருவத்தை யடைந்தேன்" என்று அவனுக்கு முன்னுல் தோன்றி வில் வித்தைகள் பல வற்றைக் கற்பித்தான். அதன் உதவியினுல் அசன் சுயம் வரத்தில் எதிர்த்த அரசர்களை வென்று இந்துமதியை மணம் புரிந்தான். இவன் ஒரு நாள் மனைவியோடிருந்தபோது விண் ணில் இருந்து மாலையொன்று இந்துமதியின் மீது விழுந்தது. அதனுல் அவள் விண்ணுல கடைந்தாள். அசன் வருந்தி னுன். வசிட்டர் அசனிடஞ் சென்று, "இந்துமதி மானிடப் பெண் அல்லள். திரண பிந்து செய்த வேள்வியைத் தடுக்கத் தேவர்கள் அரினி என்பவளை ஏவினுர்கள். அவள் அவ்வாறே

சென்று வேள்விக்கு இடையூறு செய்தாள். அதனால் முனிவர் சினமடைந்து நீ மானிடவுருவத்தையடைவாயாக என்று வசவுரை கூறினர். அவளே இந்துமதியாகப் பிறந்து உன்னை மணந்தாள். மானிட வடிவத்தோடு அவள் இருக்கவேண்டிய கால எல்லை தீர்ந்த படியால் அவள் மானிட உரு நீத்து விண்ணுடைந்தாள்'' என்று தெளிவுரை கூறினர். அசன் தன்மகனுக்கு முடி சூட்டித் தானும் மேனுடடைந்தான். அசன் என்னும் பெயரோடு வேறு சிலரும் இருந்தனர்.

**அசாதசத்துரு - (1)** இவன் பிம்பிசாரனுடைய மக்களில் ஒருவன். இவன் சம்பா என்னும் நகரில் இளவரசனுக ஆட்சி புரிந்து கொண்டிருந்தான். இவன் தன்னுடைய தந்தை நீண்ட காலம் அரசாட்சி செய்து கொண்டிருந்ததைப் பொருதவனுய்த் தந்தையைக் கொன்று அரசாட்சியை மேற்கொண்டான் என்பர். இவனுக்குக் கூனிகா என்று மற்ருெரு பெயரும் வழங்கியது. இவன் சிறந்த வெற்றி யுடையவனுக விளங்கினுன். காசி, கோசலம், வைசாலி முதலிய நாடுகள் மகதத்தோடு இணைக்கப் பெற்றன.

**அசாதசத்துரு - (2)** பாண்டவர்களில் தருமருக்கு அசாதசத்துரு என்னும் பெயர் வழங்கியது. மகதநாட்டு மன்னனுக இருந்து பின்னர் சாக்யர் என்னும் முனிவனுனவனும் அசாதசத்துரு என்று வழங்கப் பெற்ருன். இப்பெயரை வேறு சிலரும் பெற்றிருந்தனர்.

**அசாமீடன் -** திங்கட் குலத்தரசர்களில் ஒருவன். இவனுடைய தந்தை அத்தி. மக்கள் பிரகதிஷன், நீலன், ருட்சன் என்போர். இவனல் பார்கதிஷ பாஞ்சால, கௌரவ வழி முறைகள் உண்டாயின.

**அசாமீளன்-**இவன் கான்யகுப்சம் என்னும் நகரத்தில் அந்தணர் குலத்தில் தோன்றினுன். நல்லொழுக்க மற்றவனுகி ஓர் இழிகுலப் பெண்ணேடு வாழ்க்கை நடத்தினுன். சூதாடுதல், வழிப்பறிசெய்தல் முதலிய தீதான வழிகளிலே பொருள் தேடி வாழ்க்கையை நடத்திஞன். உயிர்த்தொகைகளைக் கொன்று அவைகளின் ஊனைத் தின்ருன். இழிகுலப் பெண்ணிடத்தில் இவனுக்குப் பத்துப் பிள்ளைகள் தோன்றினுர்கள். கடைசிப்பையனுக்கு நாராயணன் என்று பெயர் வைத்து அவனிடத்தில் மிகுந்த அன்பு செலுத்தினுன். இம்மைக்கான காரியங்களைச் செய்ததன்றி மறுமைக்கான நற்செயல்களை அசாமீளன் சிறிதுஞ் செய்யவில்லை. அவனுக்கு அகவை எண்பத்தெட்டாகியது. இறக்குஞ்சமயம் நெருங்கியது. அசாமீளன்தன்னுடைய கடைசி மகன்நாராயணனை நினைத்தான். எமனுடைய தூதர்கள் பாசக் கயிற்ருேடு அசாமீளனுக்கு முன்வந்தார்கள். மனங்குழம்பிய அசாமீளன் வெளியில் விளையாடிக் கொண்டிருந்த தன்னுடைய கடைசிப் பிள்ளையைப் பெருங்குரலெடுத்து அழைத்தான். திருமாலினுடைய தூதர்கள் அவ்விடத்திற்கு விரைந்தோடி வந்தார்கள். எமதூதர்களை விலக்கி விட்டு அசாமீளனை விமானத்திலேற்றி வைகுண்டத்திற்கு அழைத்துக் கொண்டு சென்ருர்கள். இவ்வாறு அசாமீளன் நாராயண நாமப்பெருமையால் நற்கதியை அடைந்தான்.

**அசிபத்திரவநம் -** இரும்பினலாகிய வாளைப் போன்ற செடிகள் நிறைந்த காடு. இது தீவினை

யாளர்கள் நிரயத்திற்குச் செல்லும் வழியில் உள்ளது. ஆயிரம் யோசனைகளுள்ளது. மிகுந்த சூடுள்ள கதிரவனுடைய ஒளி நிறைந்தது. இக் காட்டில் தீவினையாளர்கள் முட் செடிகளாலும் தீய விலங்குகளாலும் துன்புறுவர் என்று கருட புராணத்திற் கழறப்பட்டுள்ளது.

**அசிதன்** - (க) திருதராட்டிரனுடைய மக்களில் ஒருவன். (உ) ஒரு முனிவன்; இவன் தருமபுத்திரனுக்கு அறமுரைத்தவன். (ங) கதிரவகுலத்து அரசர்களில் ஒருவன். இவன் அரசாட்சி புரிந்த பிறகு இறந்தான். அப்பொழுது இவனுடைய மனைவி தானும் இறக்கத் துணிந்தாள். அப்பொது அவள் கருவுற்றிருந்தாள். சியவன முனிவர் அம்மாதைப் பார்த்து, "உன் வயிற்றில் நல்ல மகன் பிறந்து வழிமுறை விளங்கச் செய்வான் நீ சாவாமல் இருத்தல் வேண்டும்" என்று சொல்லித் தடுத்தார். அதனால் அவள் உயிரோடிருந்தாள். மாற்றவள் இவளுடைய வயிற்றில் இருந்த கருவை அழிக்க வேண்டுமென்று எண்ணினாள். நஞ்சு கலந்த உணவை உண்பித்தாள். ஆனால் அம்மாது முனிவரின் மேன்மைச் சிறப்பால் நஞ்சுத் தொல்லையில்லாமல் ஒரு மகனைப் பெற்றாள். அவனும் இப்பெயரால்அழைக்கப் பெற்றான். (ச)சைந தீர்த்தங்கரரில் இரண்டாவதாக எண்ணப் பெறுபவர். இவர் சிதசத்துரு மன்னனின் புதல்வர். தாய் விசயசேனை இவர் காலத்து அரசன் சகரச் சக்கிரவர்த்தி. (ரு) அங்க நாட்டு மன்னனுடைய வேள்விக் காரியம் செய்பவர்களில் ஒருவன். இவன் சிவன் கோயில் வாழையைத் தனக்குப் பயன் படுத்தி அதனால்நிரயம் அடைந்தவன்.

**அசித்தன்** - பப்பர நாட்டில் இருந்த சுபநன் என்பவனுடைய மகன். இவன் தீயொழுக்கமுள்ளவனாய் ஒரு பார்ப்பன மாதைக் களவிற் சேருகையில் பூசாகாலம் வந்தது. அப்பொழுது அவளுடைய கொங்கையையே சிவலிங்கமாகப் பூசித்து மறு பிறப்பிற் காமனாகப் பிறந்தான்.

**அசீகிர்தன்** - ஒரு மறையவன்; சுநச்சேபன் என்பவனுடைய தந்தை. இவனை முனிவன் எனவுங் கூறுவர். இவன் அரிச்சந்திரனுக்குச் சுநச்சேபனை வேள்விப் பசுவாக விற்றான். இவன் முதலில் நூறு ஆன்களை (பசுக்களை) வாங்கிக்கொண்டு விற்றும், மீண்டும் நூறு ஆன்களைப் பெற்றுக் கொண்டு வேள்வித் தறியிற் கட்டியும் சுநச்சேபனை எவரும் பலியிட உடன்படாமையின் மேலும் நூறு ஆன்கள் கொடுப்பின் பலியிடுவேன் என்று நூறு ஆன்களைப் பெற்றுக்கொண்டு கையில் கத்தியை எடுத்தபோது சுநச்சேபன் தேவர்களை வணங்கி வேள்வித் தூணினின்றும் விலகி விசுவாமித்திரர் மடியில்இருந்தான். அசீகிருதன் தன்னுடைய மகனைக் கேட்க விசுவாமித்திரர் மறுத்தார். பிறகு சுநச்சேபன் விசுவாமித்திரருக்கு மகனானான்.

**அசுவநேசன்** - தக்கன் குமாரன். காண்ட வனத்தில் தீயில் அகப்பட்டு இந்திரனால் காக்கப்பட்டவன்.அருச்சுனனைக்கொல்லக் கன்னனிடம் பாம்புக் கணையாக இருந்து அருச்சுனன் முடியைக் கவர்ந்தவன். அருச்சுனனால் கொல்லப்பட்டான்.

**அசுவதரன்** - ஒரு நாகராசன். இவனும் கம்பளனும் கலைமகளிடம் இசைக்கலை பயின்று சிவபெரு

மானைப் பாடி வீடுபேற்றை யடைந்தனர். இவர்களுள் அசுவதரன் குவலயாசுவன் மனைவி மதாலசையை வஞ்சமாகக் கொன்ற செய்தியைக் கேள்விப்பட்டுச் சிவபெருமானைப் பாடி அவர் காட்சிதர அவரிடம் குவலயாசுவன் மனைவி மதாலசை இறந்த காலத்தில் எந்த அகவையில் இறந்தாளோ அந்த அகவையுடனும் அப்போதிருந்த நினைவுடனும் தன்னிடம் பிறக்க வரங்கேட்டு அவள் அவ்வாறே பிறக்க அவளைக் குவலயாசுவனுக்குக் கொடுத்தவன்.

**அசுவத்தாமா** - (1) துரோணர் மனைவியாகிய கிருபியின்கற்பை நாரதரால் அறிந்த உருத்திரன் அதனை ஆராய்ந்து பார்த்தற் பொருட்டு ஆடையற்றவராகச் சென்று ஐயமேற்றார், அப்பொழுது அவளுடைய அழகைக்கண்டு வீரியத்தை ஒரு தட்டிலே விட்டார். கிருபி அதனைக் குதிரையிடம் வைத்தாள். குதிரை அதனையுண்டபடியினால் குதிரையின் முதுகைக் கிழித்துச் கொண்டு அசுவத்தாமா பிறந்தான். துரியோதனன் முதலியவர்களோடு சேர்ந்து கொண்டு பாண்டவர்கட்குப் பகைவனானன். இவன் பாண்டவர்களைக் கொலைபுரியமுயன்ற சமயத்திலெல்லாம் கண்ணன் முன்னின்று காத்தருளினார். இளம்பஞ்ச பாண்டவர்களைப் பாசறைப் போரிற் கொன்று வியாசரால் சாபம் பெற்றான். நாராயணக்கணை முதலியவைகளைப் பாண்டவர்கள் மீதுசெலுத்தியும் அவை பயன்படா தொழிந்தமையால் காடு நோக்கிச் சென்றான் தவஞ்செய்தற்கு. அப்பொழுது வழியில் வியாசரைக் கண்டு அவரால் உறுதி மொழியருளப் பெற்று நற்கதி பெற்றான்.

(2) மாளவநாட்டு மன்னனுடைய யானையும் அசுவத்தாமா என்னும் பெயரைப் பெற்றிருந்தது.

**அசுவாரூட மூர்த்தி** - பாண்டியனிடம் மாணிக்கவாசகர் பொருட்டுக் குதிரை விற்க வந்த காலத்தில் மறையைக் குதிரையாக்கி அதன் மீது பரிமேலழகராக வந்தருளினார். அக்காலத்தில் இப்பெயர் அவருக்கு வழங்கியது.

**அசைகபாதன்**-இவன் சிவகணன். இவனுக்கு நான்கு வாய்; ஆயிரம் தோள்; கராள வதனம், சங்கு கர்ணம்; நூறு கால்கள். இவன் ஒருகாலத்தில் சிவபெருமானுக்கு ஊர்தியாக இருந்தான்.

**அசோகன்** - (1) தசரத மன்னனுடையஅமைச்சர்களில் ஒருவன். 2. மகத நாட்டரசனாகிய ஒரு புத்தஅரசன். இவன் சந்திரகுப்தனுக்குப் பேரன்.புத்தமதத்தை எங்கும் பரவச் செய்தவன். இவனுடைய மகனாகிய மாவிந்தன் என்பவன் இலங்கையிற் புத்தமதத்தைப் பரவச் செய்தான்.

**அசோதரன்** - (1) சீவகனுடைய முற்பிறப்புப் பெயர். (2) ஒரு முனிவன்.

**அசோதை**-நந்தகோபன் மனைவி கண்ணன் மண்ணையுண்டபோது வாயைத்திறந்து காட்டுமாறு அவனை அச்சுறுத்தியவள். அவன் வாயைத் திறந்து காட்ட எல்லா உலகங்களையும் வாயிற் கண்டவள்.

**அச்சணந்தி** - சீவகனுடைய ஆசிரியன். வெள்ளிமலையில் வாரணாசியில் உலோகமாபாலன் என்ற பெயருடன் அரசாண்டவன். தன்மகனிடம் அரசாட்சியை ஒப்புவித்து விட்டுத் தவம்புரியச் சென்றபொழுது யானைத்தீயால் தொட

ரப் பட்டவன். அதனால் வருந்திச் சுற்றியலையும் போது சீவகனைக்கண்டதும் அதுமாறியது. அது காரணமாகச் சீவகனுக்கு ஆசிரியனாக அமர்ந்தான். ஒருநாள் சீவகனைத் தனியே அழைத்து, "நீ இந்நகரத்து அரசனுடைய மகன். இப்பொழுது அரசாட்சி செய்து வருங் கட்டியங்காரன் உன்னுடைய தந்தையைக் கொன்றுவிட்டு அரசாட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். உன்னுடைய தாயின் பெயர் விசயை. அவள் உன்னை இடுகாட்டில் இரவிற்பெற்றெடுத்தாள். இக் கந்துக்கடன் உன்னை அங்குக் கண்டு எடுத்துக் கொண்டு வந்தான். தன்னுடைய உரிமை மகனைப்போலவே நினைத்து வளர்த்து வருகிறான். இன்னும் ஓராண்டுக்காலம் வரையில் இவ்வுண்மையை வெளிப்படுத்தாமலிருந்து பிறகு வெளிப்படுத்தி அவனோடு போர் செய்து உன்னுடைய அரசைக் கைப்பற்றிக் கொள்வாயாக" என்ற கூறி விட்டுத் தான்தவஞ் செய்யச் சென்றான்.

**அச்சிறுபாக்கம்** - செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளது. சிவபெருமான் முப்புரத்தை எரித்தற்பொருட்டுத் தேவர்கள் செய்த தேரின் மேல் ஏறினார். அவ்வளவில் அச்சுமுறிந்து போய் விட்டது. அச்சுமுறிந்த இடம் அச்சிறுபாக்கம் எனப்பட்டது. தேவர்கள் ஆனைமுகக் கடவுளைப் போற்றாதபடியால் அச்சு முறிந்தது என்பர். கண்ணுவரும் கௌதமரும் இச் சிவப்பதியில் வழிபட்டனர். சுவாமியின்பெயர் ஆட்சிநாதர். தேவியார் பெயர் இளங்கிளியம்மை. தலத்தின் மரம் கொன்றை. சிம்ம கூபம் என்னுந் தீர்த்தம் வட சுற்றிலே உள்ளது. பாண்டியன் ஒருவன் அமைத்த சிவலிங்கமும் அம்மனும் இருக்கின்றன. இவ்வூர் திருஞான சம்பந்தருடைய தேவாரப்பாடலைப் பெற்றிருக்கிறது.

**அச்சுதகளப்பாளர்** - சந்தான குரவர்களில் முதல்வராகிய மெய்கண்டாருடைய தந்தையார்.

**அச்சுதகளப்பாளன்** - இப்பெயரையுடைய வேந்தன் ஒருவன் தமிழ் நாட்டு மூவேந்தர்களையும் வென்று சிறைப்படுத்தினான் என்று கூறுவர்.

**அச்சுததேவமகாராயர்** - இவர் கிருட்டிண தேவராயருக்குப் பிறகு அரசாட்சி புரிந்தவர். தமிழ்ப் புலவர்களை ஆதரித்தவர். பாகவத புராணம் பாடிய நெல்லிநகர் அருளாளதாசர் என்பவர் இவருடைய உதவியை மிகுதியும் பெற்றவராவர்.

**அச்சுதப் பிரேட்சர்** - மத்துவாசாரியார்க்குத் துறவறங் கொடுத்த ஒரு துறவி. இவர் இதற்கு முன் பிறப்பில் அத்தின புரத்தில்மதுகரவிருத்திசெய்திருந்து திரௌபதி தன்கையாலிட்ட அன்னத் தூய்மைபெற்றவராய்த் துறவியானவர்.

**அச்சுதராசன்** - இவன் விசய நகரத்து அரசர்களில் ஒருவன். திருவள்ளுவர் காலத்தில் இருந்தவனாக எண்ணப் பெறுகிறான்.

**அச்சுவகண்டன்** - மயூர கண்டனுடைய மகன்; இரத்தின பல்லவத்து அரசனாக இருந்தவன்; பிரதிவாசுதேவர்களில்ஒருவன்.

**அச்சுவசேனன்** - தக்கன் என்னும் பாம்பினுடைய மகன்.

**அச்சுவத்த நாராயணன்** - தருப்ப சயனம் என்னும் புல்லாரணியத்தில் தவஞ் செய்து திருமாலுடைய அருளைப் பெற்றவன்.

**அச்சுவத்தன்** - எட்டாம் மனுவின் காலத்தில் இருந்த முனிவர்கள் எழுவர்களில் ஒருவன்.

**அச்சுவநிதேவர்**-விவச்சுவான் என்னுங் கதிரவன் மனைவி அவனை நீங்கிப் பெட்டைக் குதிரை வடிவெடுத்துத் தவஞ் செய்தாள். அதனையறிந்த கதிரவன் ஆண் குதிரை வடிவங்கொண்டு தொடர்ந்தான். பெட்டைக் குதிரையாகிய சஞ்ஞாதேவியின் இரண்டு மூக்கின் தொளைகளிலிருந்து கதிரவனுடைய வீரியத்தாற் பிறந்தவர்கள் இவர்கள். தேவ மருத்துவர்களாகிய இவர்கள் சியவநருக்கு இளமைப் பருவத்தைக் கொடுத்தார்கள். சையாதி வேள்வியில் இவர்கட்குச் சியவநரால் சோம பானங் கொடுக்கப்பட்டது. இதற்காக இந்திரன் சினமடைந்து வச்சிரத்தை யெறிந்தான். அதனால் இந்திரனுக்குக் கையில் வாதமுண்டாயிற்று. அதனை இவர்கள் போக்கியதால் தேவர்களோடு அவி பெறுஞ் சிறப்புப் பெற்றனர். மறைகளில் இவர்களைப்பற்றிப் பலவாறு கூறப்பட்டிருக்கிறது.

**அச்சுவப் பெருமகன்** - இவன் கேகயநாட்டின் அரசன். மிகுந்த வீரமுடையவன். தருசகன் என்பவனிடத்தில் மிகுந்த அன்புடையவன். இவன் பதுமாபதியை மணஞ்செய்துகொள்ள விரும்பினான். கொடுத்தற்குரிய பரிசம் முதலியவற்றோடுவந்து தருசகனைக் கண்டு தன்னுடைய கருத்தைக் கூறினான். அவனுடைய உடன்பாட்டைப் பெற்றுக்கொண்டு உடனிருந்தான். அப்போது அவனோடு போர் செய்தற்கு வந்த பகைவர்களோடு போர் செய்யச் சென்றான். உதயணனுக்கு முன்னதாகத்தானும் உருமண்ணுவாவும் போர் செய்யச் சென்று எலிச் செவியரசனாற் கொல்லப்பட்டான்.

**அச்மகன்** - இவன் கல்மாட பாதனுடைய மகன் மூலகன். இவனுடைய தாய் இவனைப் பெறுங் காலத்தில் மிகுந்த துன்பமடைந்தாள். வசிட்டர் அவளுடைய வயிற்றைக் கல்லாற் கீறிக் குழந்தையை வெளிப்படுத்தினார். கல்லாற் கீறப்பட்டு வெளிவந்தமையால் இவனுக்குக் கல்மாடபாதன் என்று பெயர் உண்டாகியது.

**அச்வமகாராசன்** - இவன் மக்கட்பேறில்லாது வருத்தமடைந்து பிருகு முனிவரைக் கொண்டு மகப்பேற்று வேள்வி செய்தான். வேள்வி நடந்துகொண்டிருக்கையில் நள்ளிரவில் நீர் வேட்கை கொண்டு வேள்விக் குடத்தில் இருந்த நீரைக் குடித்தான். அதனால் வயிற்றில் கருவுண்டாகியது. நூறு ஆண்டுகள் கருவைச் சுமந்து மாந்தாதா என்பவனைப் பெற்று விண்ணுலகடைந்தான்.

**அச்வ மேதன்** - சதாநீகனுக்கு வைதேகியிடம் பிறந்தவன். சநமேசயனுடைய பேரன்.

**அச்சோதை** - இவள் ஒரு புண்ணிய நதி வடிவமான பெண். மரீசி மக்களாகிய பிதுர்களுக்குக் குமரி. இவள் தம் பிதுரரால் அமைக்கப்பட்ட அச்சோதம் என்னும் ஆற்றுக்கரையில் ஆயிரம் ஆண்டுகள் தவஞ் செய்தாள். பிதுர்கள் காட்சி தந்தனர். இவள் அவர்களுள் ஒருவனாகிய மாவசு என்பவனைக் கணவனாக எண்ணினாள். அதனால் விபசாரியாய் விண்ணகத்திலிருந்து தள்ளப்பட்டு நிலத்தில் விழாது அந்தரத்தே நின்று தவஞ் செய்தாள். அவள் வசமாகாத மாவசு இச்செய்தி

நடந்த நாளை அமாவாசையாக்கினன். அவள் மீண்டும் அவர்களை வேண்டினாள். "நீ தேவர்களுடைய கருமத்தைப் புசித்து இருபத்தெட்டாவது துவாபர யுகத்தில் ஒரு மீன் வயிற்றில் சத்தியவதியெனப் பிறந்து, பராசரனைக் கூடி வியாசனைப் பெற்றுப் பிறகு சந்தனுவின் மனைவியாய் இரண்டு மக்களைப் பெற்றுப் பிறகு அச்சோதை என்னும் புண்ணிய நதியாக" என்று அருளிச் சென்றனர். இந்நாளில் பிதுர்க்களை நினைத்துக் கருமஞ் செய்தால் அது மிகுந்த பலனைக் கொடுக்கும்.

**அஞ்சன கிரி** - திருவேங்கட மலை. அஞ்சனை தவஞ்செய்த படியினால் உண்டாகிய பெயர்.

**அஞ்சன குமாரன்**-விராட நாட்டரசன். பாண்டவர் குதிரை வேள்வி செய்த காலத்தில் அருச்சுனனோடு நட்புக் கொண்டவன்.

**அஞ்சனவர்மன்** - கடோற்கசனுடைய மகன்; பாரதப்போரில் அசுவத்தாமனாற் கொல்லப்பட்டவன். இப்பெயர் அஞ்சன பருவன் எனவும் வழங்கியதாகத் தெரிகிறது.

**அஞ்சனாட்சி** - சோழவள நாட்டில் தஞ்சை மாநகரில் இருந்த ஒரு தாசி. இவள் கல்வியறிவிற் சிறந்து புலமையுடையவளாக விளங்கினாள். கம்பர் தம்முடைய இராமாயணத்திற்கு இவளிடமும் ஒரு சாற்றுக்கவி கேட்டார். இவள் வணக்கச் செய்யுளாக ஒன்று பாடிக் கொடுத்தாள்.

**அஞ்சனை** - இவள் ஒரு காந்தருவ மாது. சாபத்தினால் காமரூபிணியென்னும் குரங்காகக் குஞ்சரனென்னும் குரங்கிற்குப் பிறந்து கேசரி என்னும் குரங்கை மணந்தாள். இவள் ஒருநாள் தன்னுடைய உண்மை வடிவத்தோடு உலாவிக் கொண்டிருந்தாள். வாயு இவளைக் கண்டு காமுற்றுச் சேர்ந்தான். அப்பொழுது இவள் வயிற்றில் அநுமன் பிறந்தான். [இவ்வரலாறு திருவேங்கடபுராணத்தில்வேறு விதமாகவுங் கூறப்படும்.]

**அஞ்சுலன்** - இவனுக்கு, சாணக்கியன், கௌடில்லியன், விட்டுணு குப்தன் எனவும் பெயர்கள் வழங்கும். இவன் அர்த்த சாஸ்திரமென வழங்கும் பொருள் நூலை இயற்றினன்.

**அடங்கன் முறை**-மூவர்தேவாரப் பதிகங்கள் முற்றும் இப்பெயரால் வழங்கப்பெறும். இதனுள் திருஞானசம்பந்தர் திருப்பதிகங்கள் ௩அ௪-ம், திருநாவுக்கரசர் திருப்பதிகங்கள் ௩௧௨-ம் சுந்தரமூர்த்தியார் திருப்பதிகங்கள் ௧0௧-ம் அடங்கும்.

**அடிதானவன்** - அந்தகாசுரனுடைய மகன். தன் உண்மை யுருவத்தால் எவரும் வெல்லாதிருக்க வரம் பெற்றவன். இவன் ஒருநாள் பார்வதி தேவியாரின் வடிவத்தைக் கொண்டு சிவபெருமானிடஞ் சென்றான். அவர் இவனைக் கொன்று விட்டார்.

**அடியார்க்குநல்லார்**-கொங்கு வளநாட்டில் நிரம்பை என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவர் மோரூர்க்குச் சென்று பொப்பண காங்கேயன் ஆதரவில் தங்கியிருந்த காலத்தில் அவனுடைய வேண்டுகோளின்படி சிலப்பதிகாரத்திற்கு ஓர் உரை எழுதினர்.

**அடைஞ்சான்** - பழைசை என்னும் ஊரில் இருந்த ஓர் எழுத்தாளன். இவன் உதயணனுடைய கதையை எழுதி வைத்திருந்தான்.

**அடையாறு** - சென்னையின் தென் பகுதியில் உள்ள ஓர் ஊர். அடையாறு என்னும் பெயருடைய ஆறு கடலொடு கலக்குமிடத்தில் இருப்பதால் அவ்வாற்றின் பெயரே ஊருக்கும் அமைந்துள்ளது. அன்னிபெசண்டு அம்மையாருடைய பிரமஞான சங்கத்தின் தலைமையலுவலகம் இங்குள்ளது.

**அட்சய குமாரன்** - இராவணனுடையமக்களில் ஒருவன்; அனுமானால் கொல்லப்பட்டவன். இவனுக்கு அட்சன், அட்சயன் என்ற பெயர்களும் உண்டு.

**அட்சயபாத்திரம்** - புதுமையுள்ள ஓர் ஏனம். இது கதிரவனிடமிருந்து தருமருக்குக் கிடைத்தது. இதில் இடப்பெறும் அன்னம் குறைவற்றதாக விளங்கும்.

**அட்சோப்பியமுனி**- முனிவர்களில் ஒருவர். வித்தியாரணியரோடு சொற்போரிட்டு வேதாந்ததேசிகர் எழுதி யனுப்பிய நியாயத்தாற் களிப்படைந்தவர்.

**அட்டகோணமகருஷி** - இவர் கண்ணுவ ரிஷியின்மகன். இவர் தானவரிடம் மறைமுதலிய கலைகளைக் கற்றுணர்ந்தார். இவர் இருந்த இடத்திற்குத் திருமால், நான்முகன், உரோமரிஷி முதலியோர் வந்து வாணாள் அளவு கேட்டுச் சென்றனர். இவர் யமுனைக் கரையில் தவம் புரிகையில் நீராட வந்த மாந்தாதாவின் பெண்கள் இவருடைய அழகைக் கண்டு மணந்தனர். பிறகு இவருடைய கோணலைக்கண்டு மறுத்தனர். அதனால் சினங்கொண்ட இவர் அப்பெண்கள் கூனிகளாகுமாறுவசவுரை வழங்கினார். சத்திய உலகத்திற்குச் சென்ற இவர் நான்முகனைக் கண்டு தொழுதார். இவருடைய கோணலைப் பார்த்துக் கலைமகள் நகைத்தனள். அதனால் இவர் சினங்கொண்டு பெண்ணாக நிலவுலகிற் பிறக்குமாறு வசவுரை வழங்கினார். அவள் அவ்வாறே காசியரசன் மகளாகப் பிறந்தாள். அரசன் அவளை ஒரு மறையவனுக்கு மகளாகக் கொடுத்தான். அம்மறையவனிடம் வளர்ந்து மற்றொருவனைமணந்துஒருமகனைப் பெற்றாள். அவனுக்குச் சரஸ்வதன் என்று பெயரிட்டு மறைமுதலிய கலைகளை ஓதுவித்தாள். பஞ்சத்தால்வருந்திய இருடிகள் கங்கை நீரையுண்டு சிறிதுநாள் இருப்போம் என்று எண்ணிக் கங்கைக்கரைக்குச் சென்றனர். அங்கு சரஸ்வதன் மறையோதுதலைக் கேட்டு அவன் ஓதுவது தவறு என்றனர். சரஸ்வதன் தவறு அன்று என்றனன். நான்முகனிடஞ் சென்று செய்தியைக் கூறினர். நான்முகன் புல்லாரணியத்திற்கு வந்து அவ்விடமிருந்த அரசமரத்தைக் காட்டி, "நீங்கள் ஓதுவதில் தவறுண்டானால் தவறுண்டாகும் பொழுதெல்லாம் மரம் அசையும். தவறில்லாமலிருந்தால் மரம் அசையாது" என்றனன். இருடிகள் ஓதியபொழுது பலமுறை மரம் அசைந்தது. சரஸ்வதன் ஓதியபொழுதோ மரம்அசையாதிருந்தது. இதனைக் கண்ட இருடிகள் பாடத்தைத் திருத்திக் கொண்டனர். உரோமரிஷி ஒருவர் இறந்தால் இவருக்கு ஒரு கோணல் நிமிரும். இவருடைய தந்தை ஒரு புத்தரோடு சொற்போரிட்டு நீரில் மூழ்குஞ் சமயத்தில் தந்தைக்கு உதவிசெய்த படியினால் தந்தை களிப்புற்று இவரைச் சாமங்க நதியில் மூழ்குவித்துக் கோணலை நிமிர்த்தினார்.

**அட்டசத்திகள்**- சயை, விசையை, சயந்தி, அபராசிதை சித்தை, இரத்தை, அலம்புசை, உற்பலை என்போர். அட்டசத்திகள்

எனப் பெறுவர். வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரிணி, பலவிகரிணி, பலப்பிரமதனி, சர்வபூத தமனி எனவுங் கூறுவர்.

**அட்டலட்சுமிகள்** - தனலட்சுமி, தான்யலட்சுமி, தைரியலட்சுமி, விசயலட்சுமி, வீரலட்சுமி, சந்தான லட்சுமி, கசலட்சுமி, வித்யா லட்சுமி என்போர் அட்டலட்சுமிகள் எனக் கூறப்பெறுவர்.

**அட்டதிக்குப்பாலகர்கள்** - இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்போர். (க) இவர்களில் இந்திரன் வெள்ளை யானையை ஊர்தியாகக் கொண்டவன். தங்கமயமான உடலும் ஆயிரங் கண்களும் உடையவன். வச்சிராயுதத்தைப் படைக்கலமாகக் கொண்டவன்.

(உ) அக்கினி ஏழுபிரிவான சுவாலையுடையவனாய்ச் செபமாலை, கமண்டலம், செந்நிறம், ஒளிமாலை முதலியவைகளை உடையவனாக இருப்பான்.

(ந) யமன் எருமையூர்தி, தடிப்படை, அஞ்சத்தக்க முகம், கயிறு, கறுத்த நிறம் முதலியவைகளை உடையவனாக இருப்பான்.

(ச) நிருதி இரத்தக்கண், பிணவூர்தி, கருநிறம், வாளேந்தியகை, அரக்கப்படை முதலியவைகளை உடையவனாக இருப்பான்.

(ரு) வருணன் நாகபாசத்தைத் தாங்கியவனாய் இரத்த நிறம் மகரவூர்தி முதலியவைகளை உடையவனாக இருப்பான்.

(சு) வாயு, பெருத்தவடிவம், பச்சை நிறம், அசையுங்கொடி, மான் ஊர்தி முதலியவைகளை உடையவனாக இருப்பான்.

(எ) குபேரன் மனித ஊர்தி, வளைந்த வடிவம், பொன்னிறம், கையிற் கதைப் படை முதலியவைகளை உடையவனாக இருப்பான்.

(அ) ஈசானன் காளையூர்தி, மூவிலைச் சூலம், பாம்பணி, திங்கள் நிறம், திங்கள் முடி, முக்கண் முதலியவைகளை உடையவனாக இருப்பான்.

**அட்டாலைச் சேவகர்** - சிவபக்தி நிரம்பிய பாண்டிய மன்னன் ஒருவனைக் கொல்லும் பொருட்டுச் சமணர்கள் வேள்வியில் உண்டாக்கியனுப்பியயானையை அவ்வரசனுடைய வேண்டுகோளின் படி மதுரைச் சோமசுந்தரக் கடவுள் வேட்டுவ வீரராகச் சென்று மதுரையின் கீழ்பால் உள்ள மதில்மேற் கட்டப்பட்டிருந்த அட்டாலை மண்டபத்தில் நின்று எய்து வீழ்த்தினார். பிறகு பாண்டியனுடைய வேண்டுகோளின் படி அவ்வேடக் கோலத்தோடு அவ்விட்மே எழுந்தருளியிருக்கிறார்.

**அணிலாடுமுன்றிலார்** - இவர் குறுந்தொகை சுக ஆம் பாடலைப் பாடியவர். அணிலாடுமுன்றில் என்னுஞ் சொல்லை இவர் தம்முடைய பாட்டில் கையாண்ட படியால் அச்சொல்லின் சிறப்பு நோக்கி அச்சொல்லையே இவருக்குப் பெயராகச் சூட்டினர். அணிலாடுமுன்றில் என்பதற்கு அணில்கள்விளையாடும்வீட்டின் முன்னிடம் என்பது பொருளாம்.

**அண்ணர்** - திருவாய் மொழிப் பிள்ளைக்குத் தந்தை; பிள்ளை லோகா சாரியருடைய திருவடித் தொடர்புடையவர்.

**அண்ணன்** - (பிரதிவாதி பயங்கரம் அண்ணன்) நயனாசாரியாருடைய திருவடித் தொடர்

புடையவர். இவர் திருக்காஞ்சியில் இருக்கையில் ஒருமாய சந்நியாசி இவரோடு சொற்போருக்கு வந்தார். அம்மாய சந்நியாசியைக் கண்டு எல்லாரும் அஞ்சி நின்றனர். அண்ணன் சிறிதும் அஞ்சாது அவரோடு போரிட்டு வெற்றி கொண்டாராகையால் இவருக்குப் பிரதிவாதிபயங்கரம் அண்ணன் என்று பெயருண்டாகியது.

**அதங்கோட்டாசிரியர்** - அகத்திய முனிவருடைய மாணவர்களில் ஒருவர். இடைச் சங்ககாலத்தில் இருந்தவர். தொல்காப்பியத்திற்குக் குற்றங் கூறத் தொடங்கி ஆசிரியர் கூறிய பதிலுரையால் அடங்கியவர்.

**அதமயன்** - அத்திரியினுடைய மகன்; இவன் தன்னுடைய ஆசாரியன் மகனுக்கு இரண்டாயிரம் ஆக்களைத் தானஞ் செய்தான். ஆசாரியருக்குப் பதினாயிரம் தாதிகளையுங் கொடுப்பதாக வாக்களித்தான்.

**அதர்மன்** - இவன் வேதபுரி என்னும் ஊரில் இருந்த திரியம்பகன் என்பவனுடைய மகன். இவன் ஒருநாள் காட்டிற்குச் சென்றான். அங்கு தவமேற்கொண்டு புற்று மூடப்பெற்றிருந்த ஒரு முனிவருடைய கண்களைத் தொளை வழியிற் கண்டான். அவைகளைத் தன்கையில் இருந்த கோலால் குத்தினான். அவரால் காட்டில் தீயனாகத் திரியுமாறு வசவுரை வழங்கப் பெற்றான். பிறகு தன்னுடைய தந்தையிடஞ் சென்றான். தந்தை சில அறிவுரைகளைக் கூறினான். அதர்மன் அவைகளைக் கேளாது அவனைக் கொன்றான். புலைச்சேரிக்குச் சென்று பசிக் கொடுமையால் ஊனருந்தினான். நீர்வேட்கைகொண்டு அங்கிருந்த கள்ளைக் குடித்தான், காமவெறிகொண்டு புலைச்சியைத் தழுவினான். சிலர் கூடி இவனைத் தாக்கத் தொடங்கவே அஞ்சி ஓடினான். சாபால முனிவர் என்பவர் இருக்குமிடத்தையடைய அவர் தம்முடைய நீரேனத்தில் இருந்த நீரை அருளுடன் இவன்மீது இறைத்தார். அதனால் இவனுக்கு நல்லறிவு உண்டாயிற்று. திருப்பெருந்துறையில் இறைவன் திருப்பெயரைக் கூறித் தீவினை நீங்கப் பெற்றான்.

**அதர்வணருஷி** - கர்த்தமப் பிரசாபதியின் குமரியான சாந்தியை மணந்தவர்.

**அதிகண்டன்** - சௌபாக்கியம் என்னும் நகரத்தில் வாழ்ந்திருந்த ஒரு மறையவன். தெருவிற் போம்போது ஒரு சிவமணியைக் கண்டெடுத்து அதனை ஒரு மறையவனுக்குக் கொடுத்து நற்கதிபெற்றவன்.

**அதிகன்**-கொங்கு நாட்டின் மேல் பகுதியில்அரசாட்சிசெய்திருந்த ஒரு குறுநில மன்னன். உறையூரில் இருந்து அரசு புரிந்த சோழமன்னர்கட்கு இவனுடைய வழி முறையினர் திறை செலுத்திக் கொண்டிருந்தனர். இவன் அவ்வாறு திறை செலுத்தாமல் சோழ மன்னர்களை இகழ்ந்து நின்றான். அதனால் பகை வளர்ந்து நின்றது. இவன் காலத்தில் புகழ்ச் சோழன் என்பவன் சோழவள நாட்டில் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் இவ்வதிகன்மீது தன்னுடைய படைகளை யேவினான். படைகள் வந்து தன்னுடைய நகரை வளைத்துக் கொண்ட பிறகு இவன் பதறியெழுந்து போரிட முயன்று தோல்வியடைந்தான். செய்ய வேண்டிய அரசியல் காரியங்களை இவன் முறையாகச் செய்யாத படியால் பிறகு பகைவர்

கட்கு அடிமையாகுமாறு நேர்ந்தது.

**அதிகாயன்** - ஓர் அரக்கன். இராவணனுடையமக்களில் ஒருவன். நான்முகனிடம் கவசம் பெற்றவன். போரில் இலக்குமணரால் நான்முகக் கணை செலுத்திக் கொல்லப் பட்டவன். இவன் முன் பிறவியில் கைடவன் என்னும் அசுரன். சிவபெருமானிடம் பெற்ற வில்லுடையவன். பேராற்றல் உடையவன்.

**அதிசூரன்** - சூரன் முதலிய பதினெண்மரில் முதல்வன். நீதிநெறிச் சோழன் காலத்தில் வல்லான் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் அரசர் முதலியவர்களைக் கொலை புரிந்து வருத்திக் கொண்டிருந்தான். அவனை வெல்வதற்கு இந்த அதிசூரன் சென்றான். எளிதாக வெல்ல முடியவில்லை. தன்னொடு கூட்டிச் சென்ற படை முதலியவைகளைப் பறிகொடுத்தான். பிறகு முயன்று தான் ஒருவனே அவனுடைய தலையை வெட்டி மீண்டான். அவ்வல்லானுடைய குதிரை, படைக்கலம் முதலியவைகளைக் கவர்ந்து கொண்டு வந்து அரசனுக்குக் காட்டினான். அரசன் மிகுந்த வியப்படைந்து, "நீ எவ்வாறு அவ்வல்லானுடைய தலையை வெட்டினாய்?" என்று கேட்டான். உடனே இவன், "இப்படித்தான் வெட்டினேன்" என்று தன்னுடைய தலையை வெட்டிக் கொண்டு இறந்தான்.

**அதிருட்டி பூதனை** - இஃதொரு குருட்டுப் பெண் பேய்; குழந்தைகளை வருத்தும் ஏழு பெண் பேய்களுள் ஒன்று.

**அதிவீரராமு** - கட்டபொம்மு வழி முறையில் பதினான்காவதாக வீரமல்லு என்பவனுக்குப் புதல்வனாகத் தோன்றியவன். தன்னுடைய தந்தையின் போக்கிற்கு முற்றிலும் மாறுபட்டவனாய் நல்ல முறையில் நடந்து தந்தையின் காலத்தில் சீர்குலைந்திருந்த ஆட்சி முறையை ஒழுங்குபடுத்தினான். முப்பதாண்டுகள் நேரிய முறையில் பாஞ்சாலன்குறிச்சியில் அரசாட்சி செய்தான். மகப்பேறு வாய்க்காதபடியினால் உறவின் முறையிலிருந்து தத்துப்பிள்ளையெடுத்துக் கொண்டான்.

**அதிவிடன்** - இவன் ஓர் அந்தணச் சிறுவன். காமக்காழ்ப்பால் இரவில் ஒரு பெண்ணைச் சேர்ந்தான். இரவில் நீர் வேட்கையுண்டாகியது. தண்ணீர் கேட்டான். அப் பெண் கள்ளுண்டிருந்தபடியால் கள்ளை நீரென்று கொடுத்தாள். அதிவிடன் அதனைப் பெற்றுக் குடித்த பிறகு கள்ளென்றறிந்தான். மறையவர்களிடம் நிகழ்ந்ததைக் கூறிக் கழுவாய் கேட்டான். மறையவர்கள் நெய்யைஉருக்கி வாயில்விட வேண்டுமென்று சொன்னார்கள். அதிவிடனுடைய தாய் தந்தையர்கள் இதனைக் கேட்டு உள்ளங் கலங்கினர். இதனையறிந்த சாண்டில்ய முனிவர் புனித நீராடச் செய்துஅதிவிடனுடையதீவினையைப் போக்கினார்.

**அதீர்க்கன்** - திருதராட்டிரன் மக்களில் ஒருவன்.

**அதீனன்** - சகாதேவனுடைய மகன்.

**அதுல கீர்த்தி பாண்டியன்**-அதுல விக்கிரம பாண்டியனுடைய மகன்.

**அத்தாமலகன்** - இவன் ஒரு மறையவன். இவனுடைய மகன் ஆக்கினவர்க்கன். இவன் பதினாறுவது அகவையில் அவதூத ஆச்சிரமத்தையடைந்தான்.

**அத்தாமலகாசாரியார்** - இவர் ஒரு சித்தர். யமுனையாற்றங்கரையில் தவஞ் செய்து கொண்டிருந்தார். இவருடைய தவ நிலையை அறியாத ஒரு பெண் தன்னுடைய குழந்தையை இவரிடம் விட்டுவிட்டு நீராடச் சென்றாள். குழந்தை தவழ்ந்து சென்று யமுனையாற்றில் விழுந்து இறந்தது. இதனைக் கூக்குரலால் அறிந்த சித்தர் அக் குழந்தையின் உடலிற் புகுந்து சங்கராச்சாரியாரை அடுத்தார்.

**அத்தி** - இவன் ஒரு சிவகணத் தலைவன். இவன் திருக்கைலையில் சிவபெருமான் தனிமையாக இருக்கும்போது வாயிற் காவலர் தடுக்கவுங் கேட்காமல் உள்ளே சென்றான். பார்வதியார் சினங்கொண்டு யானையாகுமாறு வசவுரை வழங்கினார். பிறகு பார்வதி தேவியாரை வேண்டிக் கொள்ள அவர் இரக்கமுற்று, "நீ யானைக் காட்டில் சிவபூசை செய்து, முன்பே அவ்விடத்தில் பூசை செய்து கொண்டிருக்கும் காளனோடு மாறுபட்டு இறந்து வீடு பேற்றையடைக" என்ற உரைப்படி சிவபூசை செய்து வீடு பேற்றையடைந்தான். இவர்கள் இருவருஞ் சிவபூசை செய்து வழிபட்டு வீடு பேற்றையடைந்த சிவப்பதியே இந்நாளில் திருக்காளத்தி என்னும் பெயரோடு விளங்குகிறது.

**அத்திகன்** - (க) இவன் சலற்காரன் என்பவனுடைய மகன். தாய் பெயர் சலற்காரை. ஆதிசேடன் முதலிய மாதுலரைக் காக்கச் சனமேசயன் செய்த பாம்புவேள்வியை நிறுத்தியவன். இவன் தாய் தன்னைவிட்டுப் பிரியுங் கணவனை, "எனக்கு என்ன கதி?" யென்று கேட்க, "ருஷி அத்தி" என்று சொல்லிச் சென்ற பிறகு இவன் பிறந்ததால் இவனுக்கு இப்பெயர் இடப்பட்டது.

(உ) பூருவம்சத்து அகோத்ரன் என்பவனுடைய மகன். இவனுண்ட காரணத்தால் இவன் பட்டணத்திற்கு அத்தினபுரம் என்று பெயருண்டாகியது. அசமீளன், தவிமீளன், புருமீளன் என்போர் இவனுடைய மக்கள்.

(ங) வசுதேவனுக்கு உரோசனையிடம் தோன்றிய மகனும் அத்திகன் எனப்பெறுவான்.

**அத்திகிரி** - காஞ்சிபுரத்தில் உள்ள திருமால்பதிகள் எட்டனுள் ஒன்று. அது வெள்ளையானை தன்னுடைய கூறு ஒன்றினாலே திருமாலைத் தாங்கப் பெற்ற காரணத்தினாலே உண்டான பெயர். கோயிலைச் சேர்ந்த இடங்கள் முன் காலத்தில் அத்தியூர் என்று வழங்கப் பெற்றது.

**அத்திபதி** - காந்தார நாட்டிலுள்ள பூருவதேசத்தரசன்; நீலபதியினுடைய கணவன். இராகுலனுடைய தந்தை; இவனுடைய தலைநகர் இடவயமென்பது; தன்னுடைய மைத்துனனும் துறவு பூண்டோனுமான பிரம தருமன் என்பவனது கட்டளையால் அந்நகரை நீங்கிப் பிறகு அதன் வடக்கேயுள்ள அவந்தி நகரைத் தலைநகராகக் கொண்டவன்.

**அத்திரதேவர்** - திருவிழாக்காலங்களில் சுவாமி புறப்படுவதற்கு முன்பு தெருவைச் சுற்றிக் கொண்டுவரும்படைக்கலவடிவமான மூர்த்தி, படைகளுக்குரிய தேவர்கள்.

**அத்திரி** -அகரம் ஈசுவரனைத் தெரிவிக்கும் ஒலி. திரி என்பது முக்குணத்தோடு கூடிய பிரகிருதியைத் தெரிவிக்கும். இவ்விரண்டினும் ஒரே அளவான அன்

பிணைவைத்தவராகையால் இவர் இப்பெயர் பெற்றார். நான்முகனுடைய கண்ணிற்பிறந்தவர். மும்மூர்த்திகளும் மக்களாய் வரத் தவஞ் செய்தவர். இவருடைய மனைவியின் பெயர் அநசூயை. அவள் பிறர் மீது அழுக்காறற்றவளாக இருந்தபடியால் இவ்வாறு பெயர்பெற்றாள். அத்திரி முனிவர் காமக்குறிப்போடு இவளைப் பார்க்க வீரியம் வெளிப்பட்டது. அதை வாயுதிரட்டி விண்ணில் இட அது திங்களாயிற்று. இவருடைய உடலில் திருமால் புகுந்து அந்தணனாகப் பிறந்து அநசூயையின் பாலுண்டு தத்தாத்திரேயர் ஆனார். ஏகயன் என்பவன் சினங்கொண்டு இவரைக் கொல்ல வந்தான். துருவாசரிடம் ஏழுநாட்களிற் பிறந்து அவனை எரித்தார். இவருடைய இருப்பிடத்தில் இராமபிரான் தங்கியிருந்து பிறகு காட்டிற்குச் சென்றார். தேவர்கட்கும் அசுரர்கட்கும் போர் நேரிட்டபொழுதுஅச்சமடைந்த கதிரவனுடைய அச்சத்தையுந் திங்களுடைய அச்சத்தையும் போக்கி அசுரரை ஒரு சொல்லில் வென்றவர். அருந்ததிக்குத் தந்தை; இருக்குமறையின் ஐந்தாவது காண்டத்திற்கு உரியவர். ஏழுமுனிவர்களில் ஒருவர்.பிரசாபதிகளில் ஒருவர். நான்முகனுடைய மானத புத்திரருள் ஒருவர். சோமன், துருவாசன், தத்தாத்திரேயன், இவர்களைப் பெற்றவர். இராமரைத் தண்டகாரணியத்திற் கண்டு தம்முடைய இருப்பிடத்திற்குக் கொண்டு போய்ப் போற்றியவர். திங்கள் இம்முனிவருடைய கண்ணிலும் பிறந்தான் என்பது, "அத்திரிப் பெயர் அந்தணன் அம்பகந்தனிலும்" என்னும் பாரதச் செய்யுளால் தெரிகிறது.

(2) ஓர் அந்தணனும் அத்திரி என்னும் பெயரோடு வாழ்ந்திருந்தான். அவன் தயிரியமகாராசனிடம் போய்ச் செல்வம் பெற்றுப் பிள்ளைகளுக்குக் கொடுத்து விட்டுத் தவஞ்செய்யக் காட்டிற்குச் சென்றவன்.

**அத்திரிகை** - இவள் ஒரு கந்தருவமாது. இவள் கங்கையில் நீராடிக்கொண்டிருந்த ஒரு முனிவரின் காலைப் பற்றியிழுத்தாள். முனிவர் யோகப்பார்வையால் இவள் கந்தருவமாது என்றுணர்ந்தார். மீன் போல் என்னை இழுத்து என்னுடைய நாட்கடன்களைத் தடுத்த படியால் மீனாகக் கடவை என்று வசவுரை வழங்கப் பெற்றாள். பிறகுஅவள்முனிவரைவணங்கி அருள் செய்ய வேண்டுமென்று வேண்டினாள். அவர், "நீ சில காலஞ்சென்று இரண்டு குழந்தைகளைப் பெறுவாய் அதன் பிறகு விண்ணுலகத்தையடைவாய்" என்று கூறிச் சென்றார். பிறகு இவள் உபரிசரவசுவின் வீரியத்தை விழுங்கி வலையன் வலையில் அகப்பட்டாள். அவன் மீனாகக் கிடந்த இவளுடைய வயிற்றை அறுத்துப் பார்த்தான். அதில் ஆணும் பெண்ணுமான இரண்டு குழந்தைகள் இருந்தனர். அரசன் ஆண் குழந்தையைத் தான் எடுத்துக் கொண்டு பெண் குழந்தையை வலையனுக்கே கொடுத்தான். அவ்வலையன் அப்பெண்ணை வளர்த்தான். அவளே மச்சகந்தி.

**அத்திரிலோசனன்** - திருதராட்டிரனுடைய மக்களில் ஒருவன். துரியோதனனுக்குத் தம்பி.

**அத்தினபுரம்** -அத்திமன்னன் அரசாண்டதால் இப்பெயர் பெற்றது. பாண்டவர்களுக்கு இது தலைநகர்.

**அநசூயை** - தக்கனுடைய பெண். அத்திரிக்கு மனைவி. ஐந்து கன்னிகைகளில் ஒருத்தி. கௌசிகன் தேவியிடஞ் சென்று பொழுது விடிய வேண்டிய நன்மைக்கு முத்தேவர்களையும் மக்களாகப் பெற்று அத்தேவர்களிடம் வரம் பெற்று அவர்களைத் துருவாசர், தத்தாத்திரேயர், சோமர் முதலிய மக்களாகப் பெற்றவள். சீதா பிராட்டி காட்டிற்குச் சென்றபோது அறங் கூறியவள். அத்திரி முனிவர் தவஞ் செய்யும்பொழுது தானுங் கூடச் சிவபூஜையில் இருந்து கணவனுக்கு ஆகவேண்டிய உதவிகளைச் செய்தவள். ஐம்பத்து நான்காண்டுகள் மழையில்லாமல் உலகம் வருந்துகையில், முனிவர் எழுந்து மனைவியைப் பார்த்து, "நீர் வேண்டும்" என்றார். அநசூயை நீரேனத்தை எடுத்துக் கொண்டு தண்ணீர்க்குச் செல்லுகையில், பெண்ணுருவத்தோடு கங்கை தோன்றி, "எங்குச் செல்கின்றாய்?" என்று கேட்க அநசூயை அக் கங்கையைப் பார்த்து, "நீர் யாவர்?" என்று உசாவினாள். அதற்குத் 'தான் கங்கை' யென்று கங்கை மறுமொழி கூறினாள். அநசூயை உடனே அவளைப் பார்த்து, "அப்படியாயின், என் கணவருடைய தவம் முடியுமளவும் இங்கிருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள். கங்கை அநசூயைப் பார்த்து, "நீ செய்த தவத்தில் ஒரு திங்களின் பலன் தருக" என்று கேட்டாள். அநசூயை அவ்வாறே கொடுத்துத் தன் கணவனிடம் நடந்தவைகளைக் கூறினாள். இதனால் அங்குத் தண்ணீர் மிகுதியாகி நன்மையேற்பட்டது.

**அநந்தபன்மன்** - கலிங்க நாட்டு அரசன். முதற் குலோத்துங்கன் மகன், அநந்தபத்மன், அநந்தவர்ம சோடகங்கன் எனவும் பெயர் பெறுவான். கி. பி. 1078 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் பதினேழாம் நாள் அரியணையேறினான். 1146 வரை அரசாட்சி புரிந்தான். பரணி கொண்ட கலிங்கப் போர் இவன் பொருட்டு நடைபெற்றதாகும். அப்போரில் இவன் ஒளித்திருந்து பின் வந்து பாட்டனைக் கண்டு மீண்டும் அரசாட்சி பெற்றான்.

**அநந்த சிவாசாரியர்** - சித்தாந்த சாராவளி என்னும் பத்ததிக்கு உரை செய்த ஆதி சைவ சிவாசாரியர்.

**அநந்த சூரிகள்** - புண்டரீகாட்சயச்வாவின் மகன். தோதாரம்மனுக்குக் கணவர். திருவேங்கடமுடையான் கட்டளைப்படி திருவேங்கடஞ் சென்றிருக்கையில் திருவேங்கடமுடையான் அந்தணச் சிறுவனைப் போல் கனவில் வந்து திருமணி தர அதனை வாங்கி மனைவியிடந் தந்து அதனால் வேதாந்த தேசிகரைப் பெற்றவர்.

**அநந்த சோமாசியார்** - எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். புண்டரீ காட்சயச்வர் என்பவர் இவருடைய புதல்வர்.

**அநந்தப்பன்** - நயனாராசாரியர் என்பவருடைய மாணாக்கன்.

**அநந்தநேமி** - உச்சயினியாண்ட புத்த அரசன். இவனுடைய தந்தையின் பெயர் பிரத்தியோதன்.

**அநந்தன்** - இவனை ஆதிசேடன் என்பர். கத்துருவின் மகன். வைசயந்தி மாலையை அணிந்தவன். இவன் தன்னுடைய ஆயிரந் தலைகளைக் கொண்டு நிலத்தைத் தாங்குவான். திருமால் இராமனாகப் பிறந்த

காலத்தில் இவன் இலக்குமண ணுகப் பிறந்தான். கண்ண ணுகப் பிறந்த காலத்தில் பல ராமனுகப் பிறந்தான். திருமால் திருப்பாற் கடலில் இருக்கும் போது அணையாக விளங்கு வான். மேலுங் குடையாகவும் பாதுகையாகவும் பயன்படு வான். இவன் சிவபிரானுடைய திருக்கூத்தைக் காண்பதற்குத் திருமாலின் கட்டளையால் நில வுலகிற் பதஞ்சலி முனிவனுகப் பிறந்து திருத்தில்லையில் தவஞ் செய்து திருக்கூத்துக் கண் டான்.

**அநபாய சோழன்** - சோழ மன்னர் களில் ஒருவன். சேக்கிழார் பெரியபுராணம் பாடுவதற்குக் காரணமாக விருந்தவன்.

**அநலாசுரன்** - அசுரர்களில் ஒரு வன். தேவர்களைத் துன்பப் படுத்திச் சிவபிரானுடைய நெற்றிக் கண்ணுல் எரிந்தவன்.

**அநந்தருஷி** - ஆதிசேடனுடைய பிறப்பாய்ப் புரிகாபுரி என்னும் ஊரில் வித்துருமனென்பவனி டத்தில் அலி வடிவமாகப் பிறந் தனர். இதனுல் வருத்தமடைந்த தந்தைசிவபிரானை நோக்கித் தவஞ்செய்து அலித்தன்மையைப் போக்கினுர். ஆண்மைத் தன் மையை அடைந்த அநந்தருஷி எக்யராதன் மகளாகிய குண வதியை மணந்தார். திருமால் இவருக்கு அருளுரை வழங்கி ஞர். இவர் மனைவியோடு தவம் புரிந்து கொண்டிருக்கையில் பன்னிரண்டாம் ஆண்டுத் துவா தசியில் கடல் நீராடப் போய்க் கடலில் நீராடினுர். தண்ணீரில் இறங்கியவர் கரையேறும் ஆற்றலற்றவராய்த் தண்ணீரிற் கிடந்து நீர் வாழ் உயிர்களால் துன்புற்றுர். விருத்த சர்மா என்னும் அந்தணன் இவரைத் தூக்கிக் காப்பாற்றி வீட்டுக் கழைத்துப் போய்ப் பிள்ளை யைப் போல் காப்பாற்றினுன். இவர் அவனுடைய பெண்ணு கிய அசாருமதி என்பவளைத் திருமணஞ் செய்துகொண்டு சயன், விசயன், கமலன், விம லன், புதன் என்னும் ஐந்து மக்களைப் பெற்றுர்.

**அநந்தனர்** - பதினன்காவது சைந தீர்த்தங்கரர். தந்தை சிம்மசேநமகாராசா.தாய் செய சியாமை. ஆனித்திங்களில் கிருட்டிணபட்ச துவாதசி திதி ரேவதி நாளிற்பிறந்தார்.

**அநாகாலபிருதன்** - வற்கட காலத் திலே தன்னைக் காத்துக் கொள் ளுமாறு ஒருவனுக்கு அடிமை யானவன்.

**அநாகுலன்** - இடைச் சங்ககாலத் தில் இருந்த ஒரு தெய்வப் பாண்டியன். இவன் திலோத்த மையோடு சேர்ந்து சாரகுமா ரன் என்ற பெயருடைய ஒரு புதல்வனைப் பெற்றுன்.

**அநாதிருஷ்யன்** - திருதராட்டிர னுடைய மக்களில் ஒருவன்.

**அநாமித்திரன்** - யதுவமிசத்தில் தோன்றிய யுதாசித்தின் மகன். நிக்நன், சிநி, பிரசுநி என்ப வர்கள் இவனுடைய மக்கள்.

**அநிந்திதையார்** - திருக்கைலையில் உமாதேவியார்க்குத் திருப்பணி செய்து கொண்டிருந்து பின் சங்கிலி நாய்ச்சியாராகப் பிறந் தவள்.

**அநீகன்** -யதுவமிசத்தவனுன வசு தேவனுக்குத் தம்பி.

**அநு** - யயாதிக்குச் சந்மிட்டை யிடம் பிறந்த மகன்.

**அநுக்கிலாதன்** - திதிவம்சத்தவ னுன இரண்யகசிபன் மகன். பிரகலாதனுக்குத் தம்பி.

**அநுகன்** - திருதராட்டிரனுடைய மக்களில் ஒருவன்.

**அநுதாபகன்** - தநுவின் மகன்,

**அநுபமர்** - இவர் ஒரு முனிவர். இவர் தம்மிடம் வந்தஒருநாயை மான், புலி, யானை, சிங்கம், சரபம் முதலிய பிராணிகளாக்கி இறுதியில் நன்றி கெட்ட நாய்ச் சரபத்தை நாயேயாகச் செய்தவர்.

**அநுமான்** - புஞ்சிகஸ்தலை என்னும் அப்சரசு சாபத்தினால் குரங்குப் பெண்ணாகிக் கேசரி என்பவனை மணம் புரிந்திருந்தாள். ஒரு நாள் வாயுபகவான் இவளுடைய உண்மை வடிவத்தைப் பார்த்துக் காதல் கொண்டு சேர்ந்தான். அப்பொழுது இவன் பிறந்தான். இவன் பிறந்து வளருகையில்கதிரவனை இராகு பற்றியது. அதனைப் பழமெனக் கருதிப் பற்றச்சென்றான். இராகு இந்திரனையடைந்தான். இந்திரன் தன்னுடைய வச்சிரப்படையால் தாக்கினான். அதனால் இவன் மூர்ச்சையடைந்தான். இதனால் வாயு சினங்கொண்டு தன் இயக்க உதவியை நிறுத்தினான். நான்முகன் முதலியோர் வந்து அநுமான் எனப்பெயர் கொடுத்துப் பல மேன்மைகள் வழங்கிச் சென்றனர்.

**அநுலோமன்** - உயர் குலத்து ஆணும் இழிகுலப் பெண்ணுங் கூடுதலால் பிறப்பவன்.

**அநுவர்** - சமதக்நியின் மகன்.

**அநுவிந்தன்** - (க) அவந்தி நாட்டரசன் (உ) திருதராட்டிரன் மக்களில் ஒருவன்.

**அநூரு** - அநூரு என்னுஞ் சொல்லுக்குப் பொருள் தொடையில்லாதவன் என்பது. தொடையில்லாதவனாகிய அருணனுக்கு இப்பெயர் வழங்குகிறது.

**அநேகபக்தர்** - இவர் ஒரு முனிவர். இவருடைய மனைவியின் பெயர் சுசாது. இவர் பிள்ளைகளிடம் உள்ள விருப்பத்தினால் மறை முதலியகலைகளைப் போதித்துக் கொண்டிருந்தார். ஒருநாள் ஒரு மாணவன் உறங்கினான். அவனைப் பார்த்து முனிவர் அதட்டினார். இதனைக் கேட்டு இவருடைய மனைவியின் கருப்பத்திலிருந்த கரு, "இராப்பகல் உறக்கமில்லாது ஓதினால் உறக்கம் வராதோ?" என்றது. முனிவர் சினமடைந்து, "நீ என்னை எதிர்த்துப் பேசிய படியால் நிலத்தில்விழும்போது எட்டுக்கோணலாகக் கடவாய்" என்று வசவுரை வழங்கினார். பிறகு மனைவியின் பிள்ளைப் பேற்றின் பொருட்டு மருந்துகள் தொகுக்க மிதிலைக்குச்சென்றார். அங்கு நடந்த சொற்போரில் தோல்வியுற்றுக் கடுந்தவமியற்றக் கடலுக்குச் சென்றார்.

**அந்தி இளங்கீரனார்** - அகநானூற்றில் உள்ள எக-ஆம் பாடலைப் பாடியவர். இவர் அந்திக் காலத்தின் அழகைச் சிறப்பித்துப் பாடியபடியால் அந்தியென்னும் அடைமொழியைப் பெற்றார் என்பர்.

**அந்தி காவலன்** - மாலைக் காலத்தில் தெருக்களில் காவலாகத் திரியும் ஒரு தேவதை.

**அந்திதேவன்** - ஓர் அரசன். ஆ(பசு)க்கள் இவனிடம் வந்து வேள்வி செய்யக் கேட்டுக் கொண்ட பிறகு இவன் வேள்வி செய்தான். அப்பொழுது ஒரு பசு தன்னுடைய கன்றை விட்டுப் பிரிதலைப் பொறுக்க முடியாமல் வருந்த வேள்வியை நிறுத்தினான். இவன் நாள் தோறும் இருபத்தையாயிரம் அந்தணர்களுக்கு உணவிட்டு வேள்வி முடித்து அரசாண்டு நல்வினையுலகஞ் சென்றான்.

**அபஞ்சிகன்** - காசி நகரத்து மறையவன்; சாலியென்பவளுக்குக் கணவன்,

**அபமார்வன்** - இவன் ஓர் அரக்கன். சிவபிரானை எதிர்க்கத் துள்ளி வந்தான். நன்கு அடிபட்டு முதுகு முறிந்து இறந்தான்.

**அபயகுல சோழ மகாராசன்** - சோழ மன்னர்களில் ஒருவன். தேவாரத் திருமுறைகளை வெளிப்படுத்தி உலகில் விளங்கச் செய்தவன்.

**அபயன்** - திருதராட்டிரன் மக்களில் ஒருவன்.

**அபயருசி**-இவர் அவந்திநாட்டிலே உச்சைனி என்னும் நகரில் இருந்தவர். யசோமதி என்னும் அரசனுடைய மகன். இவருடைய தாய் பெயர் புட்பாவலி. இவர் அரச குடும்பத்திற் பிறந்தும் அரச வாழ்க்கையை ஒரு சிறிதும் மதியாமல் துறவற வாழ்க்கையை மேற் கொண்டிருந்தார். எல்லா உயிர்த் தொகைகளிடத்தினும் அருளுடையவராக ஒழுகினர். ஓரிடத்தினும் தங்காது உலகம் முழுவதுஞ் சுற்றி வந்தார். அவ்வாறு சுற்றி வரும்போது இராசமாபுரம் என்னும் ஊர் அருகே ஒரு பொழிலில் வந்து அமர்ந்திருந்தார். அப்பொழுது அவ்வூர் அரசனுடைய காவலர்கள் இவரைக் கண்டனர். அவர்கள் காளிதேவிக்குப் பலியிடுவதற்குத் தகுதியான ஆளைத் தேடிக் கொண்டிருந்தனர். இவருடைய தோற்றம் அவர்கட்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. இவரை அழைத்துக்கொண்டுபோய் அரசனிடம் விட்டனர். இவரைக் கண்ட அரசனும் மகிழ்ச்சியடைந்தான். சண்டமாரி என்னுந் தேவிக்குப் பலியிட ஏற்பாடு செய்தான். ஊரார் அனைவரும் கோயிலுக்கு வந்து திரண்டனர். காளிக்கு முன்னர் இவரை நிறுத்திப் பலி கொடுப்பதற்கு முன் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்தனர். மாரிதத்தன் என்னும் பெயரையுடையஅரசன் கூரிய வாளைக் கையிலெடுத்துக் கொண்டு இவரை வெட்டுவதற்கு வந்தான். இவர் சிறிதும் அஞ்சாமல் நகைத்தார். அவருடைய நிலையைக் கண்ட அரசன் கலங்கினன்; நகைத்ததற்குக் காரணம் யாது என்று உசாவினன். இவர் "நீ என்னைக் கொல்வதாக எண்ணிக்கொண்டு உன்னையே கொன்று கொள்ளுகிறாய். கொலைத் தீவினை பழிக்குப்பழி வாங்காமல் விடாது இதனை நீ நன்றாக உணர்ந்து கொள்" என்றார். அரசன் வாளைக் கீழே யெறிந்தான். இவரிடம் அருளுரை பெற்றுத் திருந்திய பண்புடையவனானன்.

**அபரமந்திரேசுவரர்** - சிரீகண்டர், வீரபத்திரர் முதலிய அபரமுத்த சிவ கணங்கள். இவர்கள் பிரளயாகலருட் பரிபக்குவமுடையவர்களாய்ச் சிவபிரான் அருள் பெற்றுப் பதிபதார்த்தங்களாய் நின்று விளங்குவார்கள்.

**அபராசிகன்** - திருதராட்டிரன் மக்களில் ஒருவன்.

**அபராசிதன்** - காஞ்சியில் நிருபதுங்கனுக்குப் பிறகு அரசனாக இருந்தவன்.

**அபர்ணை** - மேனையின் மகள். தளிர் முதலியனவும் உண்ணாமல் சிவபிரானை எண்ணித் தவமியற்றியபடியால் இப் பெயர் பெற்றாள்.

**அபிநந்தனர்** - நான்காவது சைந தீர்த்தங்கரர். இட்சுவாகு வழி முறை சுயம்வர மகாராசாவின் புதல்வர். தாய் சித்தார்த்தா தேவி. இவர் மாசி மாதம் சுக்கில பட்சம் துவாதசி புனர்பூச நாளில் பிறந்தார்.

**அபிநந்தனன்** - இவன் இந்திர பதம் பெறும் பொருட்டு வேள்வி செய்தான். இந்திரன் இதனை உணர்ந்து காலநேமி

என்பவனை அழைத்து அவனைக் கொண்டு அந்த வேள்வியை அழிக்கச் செய்து விட்டான்.

**அபிநவகுத்தன்** - மந்திர ஆற்றலால் சங்கராச்சாரியாருக்கு மூல நோயை ஏவியவன்.

**அபிமன்னன்** - இவன் அருச்சுனனுடைய மகன். கண்ணன் தங்கையாகிய சுபத்திரையிடம் பிறந்தவனுகையால் கண்ணனுக்கு மருமகன். விராடன் மகளாகிய உத்தரை இவனுடைய மனைவியாவாள். வில்லாண்மையில் இவன் தன்னுடைய தந்தையினுஞ் சிறந்து நின்முன். பாரதப் போரில் பதின் மூன்ரும் நாளில் இவன் துரியோதனன் மகனுகிய இலக்கண குமாரனைத் தன்னுடைய வில் தொழிலாற் கொன்முன். இதனுல் துரியோதனன் உளங் கொதித்து வருந்தினன். துரோணர், அசுவத்தாமா, கன்னன், கிருபன், கிருதவன்மன் முதலிய பெரிய வீரர்களோடு பெரும் படையையும் அனுப்பி இவனை எப்படியாவது கொன்றுவிட வேண்டுமென்முன். பல பெரு வீரர்கள் மிக முயன்று வெகு நேரம் இவனேடு கடும் போர் செய்தார்கள். முடிவில் சயத்திரதன் என்பவன் இவனைக் கொன்முன். மறுநாட் போரில் இச்சயத்திரதனும் அருச்சுனனுற் கொல்லப்பட்டான்.

**அப்சரர்** - இவர்கள் ஒரு தேவசாதியார். அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை கிருதாசி முதலியோர் இக்குலத்தினராவர்.

**அப்பாசி** - இவன் வேலூராண்ட கிருட்டிண தேவராயனுடைய அமைச்சன். இவன் இளமையில் தாய்தந்தையரை இழந்து கல்வியறிவில்லாமல் தன் மனப் போக்கில் திரிந்துகொண்டிருந்தான். இவன் ஒரு நாள் ஒரு காட்டுவழியில் தன்னையறியாது உறங்கிக் கொண்டிருந்தான். அப்பொழுது பாம்பு ஒன்று இவனுடைய முகத்தில் வெய்யில் படாமல் படத்தால் மூடிக் கொண்டிருந்தது; அப்பொழுது அந்த வழியாகச் சென்று கொண்டிருந்த ஒரு வழிப்போக்கன் அதனைக் கண்டு வியப்படைந்தான். அவன் எதிர் கால உணர்ச்சியுடையவன். அவன் அச்சிறுவன் விழித்தெழும் வரையில் காத்திருந்தான். விழித்தெழுந்த பின் அவனைப் பார்த்து, "அப்பா! உனக்கு இன்னுஞ் சில காலத்தில் அரசாட்சிச் செல்வம் உண்டாகும். அப்பொழுது எனக்கு உதவி செய்கிருயா?" என்று கேட்டான். அப்பாசி அம்மனிதனைப் பார்த்து, "எழுத்து வாசனை அறியாத எனக்கு அரசாட்சிச் செல்வம் எவ்வாறு உண்டாகப் போகிறது? அவ்வாறு உண்டாகுங் காலத்தில் வேண்டிய உதவி செய்கிறேன்" என்று சொன்னன். சில நாட்களில் அப்பாசி அரசியல் அலுவலிற் சேர்ந்து தன்னுடைய நுண்ணறிவினுல் படிப்படியாக உயர்ந்து அமைச்சனுகிப் பின் அரசனே ஆனன். அப்பொழுது இவனுக்கு அரசாட்சிச் செல்வம் உண்டாகும் என்று கூறியவன் வர அவனுக்கு வேண்டிய உதவிகள் செய்தான்.

**அப்பாலும் அடிசார்ந்தார்** - தமிழ் நாட்டுக்கு அப்பாற்பட்ட நாடுகளிலுள்ள சிவனடியார்களும், சுந்தரமூர்த்தி நாயனுர் திருத்தொண்டத் தொகையிற் கூறும் அடியார்களுடைய காலத்திற்கு முன்னும் பின்னும் சிவபிரானடியைச் சேர்ந்தவர்களும் அப்பாலுமடிசார்ந்தார் எனப் பெறுவர்.

**அப்பிரமேயன்**-இவன் இராசராச னுடைய படைத் தலைவன்; சிறந்த வீரன். எதற்கும் அஞ் சாத நெஞ்சு படைத்தவன். போரில் பகைவர்களை எளிதிற் புறங்காட்டி ஓடும்படி செய் தான்.

**அப்பைய தீட்சித சுவாமிகள்** - ஆரணிக்கு அண்மையில் உள்ள அடைப்பாலம் என்ற ஊரில் பிறந்தவர். பல நூல்களைக் கற்றுப் புலமை பெற்றிருந்தார். வேலூரிலிருந்து அரசாட்சி செய்த பொம்மன் என்ற சிற்றரசன் இவருக்கு கனகா பிடேகம் செய்தான். இவர் நூல்கள் பல எழுதியதோடு சிவபெருமானிடத்தில் பேரன் பும் நிரம்பப் பெற்றவர். காஞ்சியில் இருந்த தாதாசாரி யார் என்பவர் தீட்சிதரிடத்தில் உட்பகை கொண்டார். தீட்சி தரைக் கொல்வதற்கு வழி தேடினர். தீட்சிதரைப் பார்த்துச், "சிவபெருமான் நஞ்சுண்டதைப் போல் நீரும் உண்ணும் பார்ப்போம்" என்று சொல்லி நஞ்சைக் கொடுத்தார். தீட்சிதர் அதனை வாங்கிச், "சிவ பிரானுக்குரியது" என்று கூறி உண்டு அதனால் எத்தகைய தீங்கும் நேரிடாமல் இருந்தார். அரசன் தீட்சிதருக்கும் தாதா சாரியாருக்கும் விலை உயர்ந்த சால்வைகளைப் பரிசாக வழங் கினன். தாதாசாரியார் அதனை வாங்கித் தாம் அணிந்துகொண் டார். தீட்சிதர் சிவத் தீ வளர்த்தி அதனில் போட்டார். இதனையறிந்த தாதாசாரியார் அரசனிடம், "நீர் தீட்சிதருக் குக் கொடுத்த சால்வையை அவர் நெருப்பிலிட்டுக் கொளுத்தி விட்டார்" என்று அரசனுக்குச் சினமுண்டாகு மாறு கோட் சொன்னர். அரசன் தீட்சிதரைப் பார்த்து, "நான் உமக்குக் கொடுத்த சால்வை எங்கே?" என்று உசாவினன். தீட்சிதர், "நாம் அதனைச் சிவபிரானுக்கணிந்து விட்டோம்" என்று கூறினர். அரசன் அதனைத் தான் பார்க்க வேண்டுமென்று சொன்னன். தீட்சிதர் அரசனைச் சிவபிரான் கோயிலுக்கு அழைத்துக் கொண்டுபோய் அரசன் அளித்த சால்வை இறைவன் மீதிருத் தலைக் காட்டினர். அரசன் தீட்சிதரிடத்தில் முன்னிலும் மிகுந்த அன்புடையவனுக இருந்தான். இதனை உணர்ந்த தாதாசாரியார் தீட்சிதரைச் சொற் போருக்கு அழைத்தார். தீட்சிதர் நடுநிலையாளர் வேண்டுமென்றார். வியாசபட் டர் பராசபட்டர் என்னும் இருவர் நடுநிலை நவில்பவர்க ளாக ஏற்படுத்தப் பட்டனர். தாதாசாரியார் தீட்சிதரோடு ஏழுநாட்கள் சொற்போரிட்டுத் தோற்றுப் போனர். சொற் போரைக் கேட்டுக் கொண்டு நடுநிலையாளர்களாக இருந்த மார்த்தவரிருவரும் சைவர்களா யினர். பிறகு தீட்சிதர், "இன்னும் எவரேனுஞ் சொற் போர் செய்ய வருகின் றனரோ?" என்று உசாவினர். வரநந்தி என்னும் புத்தன் சொற்போரிட்டுத் தோற்றுப் போனன். தோற்றதனல் மிகுந்த நாணமடைந்த தாதா சாரியார் தீட்சிதரைக் கொல் வதற்கு வழிதேடினர். தீட்சிதர் ஒரு நாள் நீராடுதற் பொருட்டு ஆற்றிற்குச் சென்றார். தாதா சாரியர் இச் சமயத்தில் சிலரை யனுப்பித் தீட்சிதரைக் கொலை செய்யக் கட்டளையிட் டார். தீட்சிதரைக் கொலை செய்யச் சென்றோர் தீட்சி தரைச் சூழ்ந்து சூலமேந்திய கையினராய்ப் பலர் நிற்கக் கண்டு அச்சமடைந்தனர். தாங் கள் வந்த காரியத்தைத் தீட்சி

தரிடம் சொன்னார்கள். தீட்சிதர் சிவனடியார்கட்குத் தீமை செய்ய எண்ணும் பொல்லாதவர்களைக் குறித்துச் சிவபிரானிடம் முறையிட்டார். அவ்வளவில் தாதாசாரியாருடைய தலையில் இடி விழுந்தது. அவர் மாண்டார்.

**அமணமலை** - மதுரைக்கு மேற்கே சைநர்கள் முன்காலத்தில் தங்கியிருந்த மலை. அவர்கள் தங்கியிருந்தகுகை இன்றும் உள்ளது.

**அமணன்** - இவன் குமணனுடைய இளவல். முன்னர்ப் பகை கொண்டு தன்னுடைய தமயனாகிய குமணனைக் கொலை செய்ய எண்ணினானாயினும் பிறகு நல்லறிவு பெற்றுத்திருந்தினான்.

**அமரகன்**-ஓர் அரசன். இவனுடைய உயிர் நீங்கிய உடலில் சங்கராசாரியார் புகுந்து, இவனுடைய மனைவியிடம் காமகலை பயின்று அமரகம் என்னும் நூலை இயற்றினார்.

**அமரகுந்தி**-இவ்வூர் சேலம் மாவட்டத்தில் தாரமங்கலத்திற்குப் பக்கத்தில் உள்ளது. வணங்காமுடிக்கட்டி என்போர் இவ்வூரில் வாழ்ந்திருந்தனர்.

**அமரசிங்கன்** - விக்கிரமார்க்கன் காலத்தில் இருந்த சைன பண்டிதன். வடமொழி நிகண்டாகிய அமரத்தைத் தன்னுடைய பெயரால் இயற்றியவன்.

**அமரசிங்கமகாராசா** - இவன் தஞ்சாவூர் அரசன் என்பர். இவன் தன்னுடைய பெண்கள் இருவரையும் திருவரங்கத்தில் அரங்கநாயகருக்குத் திருவிளக்கெடுக்கச் செய்தான்.

**அமரசுந்தரி** - பூமிசந்திரன் என்னும் அரசனுடைய மனைவி. புண்ணியராசனை வளர்த்தவள்.

**அமரபுயங்கன்** - கி.பி. 998 இல் இருந்த ஒரு பாண்டிய மன்னன். மும்முடிச்சோழன் என்ற முதல் இராசராசனால் வெல்லப் பட்டவன்.

**அமராவதி** - தேவர் தலைவனாகிய இந்திரன் முப்பத்து முக்கோடி தேவர்கள் புடைசூழ, அரம்பை முதலிய தேவமாதர்கள் ஏவல் செய்யக் கற்பகதரு, சந்தானம், பாரிசாதம், காமதேனு, நவநிதி, தன்வந்திரி, சசி, உச்சைச்சிரவம், ஐராவதம், தேவவிமானம் முதலிய செல்வங்களோடு அரசாளுமிடம். நிலவுலகில் நல்வினை புரிந்தோர் இவ்வுலகினை அடைவர் என்று நூல்கள் கூறும்.

**அமராவதி யாறு** - இஃதோராறு. மேற்குத் தொடர்ச்சி மலையில் உள்ள மூணாறு என்னுமிடத்திற்கு அண்மையில் தோன்றி நெருங்கிய காடுகளுக்கிடையே பாய்ந்து ஆனைமலை வழியே உடுமலைப் பேட்டை வட்டத்தில் நுழைந்து தாராபுரம் வழியாகத் திருச்சி மாவட்டத்தையடைந்து காவிரியொடு கலக்கிறது.

**அமித்திரன்**-இவன் ஒரு முனிவன் காட்டில் தவஞ்செய்து கொண்டிருந்தான். இவன் பொருட்டு ஆண்டிற்கு ஒரு முறை பழுக்கும் நெல்லிக்கனியை அருச்சுனன் திரௌபதியின் சொற்கேட்டுப் பறித்து விட்டான். பிறகு கண்ணபிரான் இப்பழம் மரத்திற் பொருந்துமாறு செய்தார்.

**அமிர்தபிரபை** - சுயம்பிரபை என்பவளுடைய தோழி.

**அமுதசுரபி** - தென் மதுரையிற் கலாநியமத்துள்ள சிந்தாதேவியால் ஆபுத்திரனுக்குக் கொடுக்கப்பட்ட தெய்வத் தன்மையுள்ள ஓர் ஏனம். இது தன்னுட் பெய்த உணவை எடுக்க எடுக்கக் குறையாது மேன்மேலும் வளரச் செய்யுந் தன்மையை உடையது. சில காலம் ஆபுத்திரனுடைய கையிலிருந்து பலவுயிர்களுடைய

பசித்துன்பத்தையும் போக்கியது. மணிபல்லவத்திலுள்ள கோமுகி என்னும் பொய்கையில் அவனால் இடப்பெற்று அதிற் சில காலங் கிடந்தது. பிறகு மணிமேகலையினுடைய கையை அடைந்து பலவுயிர்களினுடைய பசித் துன்பத்தைப் போக்கியது. காயசண்டிகையென்னும் ஒரு வித்தியாதர மங்கையின் தீராப் பசியையும் போக்கியது.

**அமுதந்தி** - ஒரு முனிவன் மான் வடிவங் கொண்டு மனைவியோடு சேருகையில் பாண்டுவால் அம்புவிடப்பட்டவன். உயிர் நீங்கும்போது, 'நீ உன்னுடைய மனைவியோடு சேர்கையில் மாளக் கடவாய்' என்று வசவுரை வழங்கியவன்.

**அமுதபதி**-இரவிவன்மன் மனைவி. தாரை, வீரை, இலக்குமி என்பவர்கட்குத் தாய்.

**அமோக வருடன்** - தொண்டை மண்டலத்தில் அரசாட்சி செய்திருந்த ஒரு சைந அரசன்.

**அம்சி** - ஓர் அரசன். அம்சர் எனப்படும் யோகியரை வசப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தபடியால் இவனுக்கு இப்பெயர் உண்டாகியது.

**அம்சுமாலி** - ஒரு கதிரவன். இவனுக்கு ஆறுமுகம். பன்னிரண்டு கைகள். சிவப்பு நிறம். இரண்டு கைகளில் இரண்டு கமலங்கள், தோமரம், வாள், பட்டயம், கேடயம், பாசம், அங்குசம், சத்தி, வேதாளம், அபயம், வரதம் இவற்றை வல இடக்கைகளில் கொண்டிருப்பவன்.

**அம்சுமான்** - அசுமஞ்சனுடைய மகன். இவனுடைய மகன் திலீபன்.

**அம்பரீடன்** - இவன் நாபாகன் என்பவனுடைய மகன். இந்த அம்பரீடன் அரசாட்சியை மேற்கொண்டிருந்தும் உலகப் பற்றில்லாமல் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தான். திருமாலிடத்தில் பெருமால் கொண்டு அம்மால் தாளையே நாள்தோறும் போற்றி வழிபட்டான். இவனுடைய பேரன்புக்கு மகிழ்ந்த திருமால் தம்முடைய ஆழிப் படையை இவனுக்குக் கொடுத்தார். இவன் துவாதசி நோன்பைக் கடைப்பிடித்தான். நோன்பின் இறுதியில் மூன்று நாட்கள் உண்ணாவிரதம் இருந்தான். பிறகு யமுனையில் நீராடினான். ஆற்றின் கரையில் திருமாலை வழிபட்டான். அந்தணர்கட்கு அன்னதானமும் கோதானமும் மிகுதியாகச் செய்தான். அதன் பிறகு தான் உணவு கொள்வதற்கு ஏற்பாடு செய்தான். அப்பொழுது துருவாசர் அங்கு வந்தார். அவரைத் தன்னோடு உணவு கொள்ளுமாறு அம்பரீடன் வேண்டினான். முனிவர் நீராடி வருவதாகக் கூறி ஆற்றுக்குச் சென்றார். அப்பொழுது நண்பகற் போது நெருங்கி விட்டது. துவாதசி முடிவதற்குச் சிறிது நேரமே எஞ்சியிருந்தது. அதற்குள் நோன்பை முடித்து உணவு கொள்ள வேண்டும். இன்றேல் நோன்புக்குப் பலனில்லாமற் போய்விடும். உண்டு விட்டாலோ சினமே யுருவான துருவாசர் வசவுரை வழங்கி விடுவார். அரசன் இருதலைக் கொள்ளி எறும்பதைப் போல உள்ளம் வருந்தினான். தன்னுடைய ஆசிரியர்களைக் கலந்து எண்ணினான். அவர்கள் நீரை மட்டும் உண்டால் உணவு கொண்ட பலன் கிடைக்குமென்றார்கள். அதற்கிணங்கிய அரசன் சிறிது நீரை அருந்தி விட்டு முனிவருடைய

வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

நீராடித் திரும்பிய துருவாசர் தம்முடைய யோகவுணர்வால் அம்பரீடன் தண்ணீர் குடித்ததைத் தெரிந்து கொண்டார். அதனால் மிகுந்த சினங் கொண்டு பல வசவுரைகளை வழங்கினார். தமது சடையிலிருந்து ஒரு பிடியைப் பிடுங்கினார். அதிலிருந்து ஒரு பெண் பேய் தோன்றியது. அது நெருப்பைக் கக்கிக் கொண்டு வந்தது. அதனைக் கண்ட அம்பரீடன் சிறிதும் அஞ்சவில்லை. அரசனிடத்திலிருந்த திருமாலின் ஆழிப்படை அப்பேயைச் சுட்டெரித்துவிட்டது. பிறகு அப்படை துருவாசர்மீது திரும்பியது. தம் முயிருக்கு முடிவு வந்து விட்டதென்பதையுணர்ந்த துருவாசர் இங்கும் அங்கும் ஓடினார். ஆழிப்படையும் அவரைத் துரத்திக் கொண்டோடியது. அஞ்சி நடுங்கிய துருவாசர் நான்முகனிடம் அடைக்கலம் புகுந்தார். நான்முகன் அவரைக் காப்பது தன்னால் இயலாது என்று கூறி மறுத்து விட்டான். பிறகு சிவனை அண்டினார். சிவபிரான் திருமாலிடம் அடைக்கலம் புகுவதுதான் நல்லது என்று கூறி விட்டார். துருவாசர் திருமாலிடம் ஓடினார். திருமாலோ என்னுடைய அன்பர்களின் நோக்கத்தை நான் தடை செய்யக் கூடாது. அந்த அம்பரீடனிடமே அடைக்கலம் புகுவீராக என்று கூறிவிட்டார். துருவாசர் அம்பரீடனிடம் ஓடி அவனுடைய கால்களைப் பிடித்துக் கொண்டார். அம்பரீடன் முனிவர் தன் கால்களைத் தொட்டதும் துன்பமுற்று உள்ளம் இரங்கினான். திருமாலினுடைய ஆழிப்படையைப் போற்றிப் புகழ்ந்தான். முனிவரைக் கொன்ற பழி தனக்கு உண்டாகாமலிருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். தீயெனச் சுடர் விட்டுக் கொண்டிருந்த ஆழிப்படை அம்பரீடனுடைய வேண்டுகோளுக்கிணங்கித் தணிந்து விட்டது. துருவாசர் அம்பரீடனுடைய பெருந்தன்மையைப் பாராட்டினார். அது வரையில் சாப்பிடாமலிருந்த அரசன் துருவாசருக்கு உணவளித்து விட்டுத் தானும் உண்டான். பிறகு இம் மன்னன் அரசாட்சியைத் தன்மகனிடங்கொடுத்து விட்டுத் தான் தவஞ்செய்து வீடு பேற்றை யடைந்தான்.

**அம்பர்** - தஞ்சை மாவட்டத்தில் பூந்தோட்டம் புகை வண்டி நிலையத்திற்குத் தென் கிழக்கே இரண்டு கல் தொலைவில் உள்ளது. இது சோமாசிமாற நாயனார் வீடு பெற்ற சிவப்பதி. இங்குள்ள கோயிலுக்குப் பெருந்திருக்கோயில் என்று பெயர். கோவில் கோச்செங்கட் சோழர் கட்டியது. இதற்கு முக்கால் மைல் தொலைவில் அம்பர்மாகாளம் என்னுஞ் சிவப்பதி இருக்கிறது. அம்பருக்குத் திருஞான சம்பந்தர் தேவாரம் பாடியிருக்கிறார். பெரும் புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை தலபுராணம் பாடியிருக்கிறார்.

**அம்பர் மாகாளம்**-அம்பன், அம்பாசுரன் என்ற அரக்கர்களைக் கொன்ற பழி நீங்குமாறு காளி வழி பட்ட காரணத்தால் இச் சிவப்பதி இப்பெயர் பெற்றதென்பர். மகாகாளர் என்ற இருடி வழிபட்டதாகவுங் கூறுவர். சோமாசி மாற நாயனார் வேள்வி செய்த பதி.

**அயவந்தி** - திருச் சாத்த மங்கையில் உள்ள சிவபெருமானுடைய திருக்கோயிலின் பெயர்.

**அம்பர்கிழானருவந்தை** - கல்லாடரால் பாடல் பெற்ற வள்ளல். திவாகரரால் திவாகரத்துள் புகழப்பட்டவன். இவனுக்கு அருவந்தை எனவும் பெயர்.

**அம்பிகை** - காசியரசன் மகள். அம்பாலிகையின் உடன் பிறந்தவள். விசித்திர வீரியனுடைய மனைவி.

**அம்பை, விருத்தை** - இவர்களிருவரும் சமற்காரன் என்னும் அரசனுடைய பெண்கள். இவர்கள் மணப் பருவம் அடைந்து இரண்டு அரசர்களை மணந்தனர். அரசர்கள் இருவரும் யவன தேசத்தாரோடு போரிட்டு மாண்டனர். அதனால் இந்த இரண்டு பேரும் சத்தியை எண்ணித் தவஞ் செய்து அவளுடைய அருளால் பகைவர்களை வென்று சித்தியடைந்தனர்.

**அம்பை** - காசியரசன் மகள். அம்பிகையும் அம்பாலிகையும் இவளோடு கூடப் பிறந்தவர்கள். இவர்களுடைய பருவ காலத்தில் தந்தை தானே மணாளர்களைத் தேர்ந்தெடுக்கும் திருமணம் (சுயம்வரம்) ஏற்படுத்தினான். வீடுமர் பிற அரசர்களைப் போரில் வென்று மூவரையும் கைப்பற்றிச் சென்றார். மூவரையும் விசித்திர வீரியனுக்கு மணஞ் செய்விக்க முயன்றார். இவள்தான் முன்னரே சாளுவ மன்னனை உள்ளத்தில் காதலித்திருப்பதாகக் கூறினாள். ஆகவே இவளை வீடுமர் சாளுவனிடம் அனுப்பினார். அவன் பகைவர்கள் கைப்பற்றிய உன்னை நான் மணஞ் செய்து கொள்ள முடியாதென்று மறுத்தான். அதனால் வீடுமர்மீது சினங்கொண்ட இவள் துருபத மன்னனிடம் சிகண்டியாகப் பிறந்து பாரதப் போரின் பத்தாவது நாளில் வீடுமரைக் கொன்றாள்.

**அம்மங்கா தேவி** - இராசராசன் என்ற கங்கை கொண்ட சோழனுடைய மகள், சாளுக்கிய ராசனுடைய மனைவி. இவள் கி. பி. 1043 இல் குலோத்துங்க சோழனைப் பெற்றாள்.

**அம்மங்கிப் பெருமாள்** - எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவராகிய வைணவ ஆசிரியர்.

**அம்மங்கியாண்டான்** - சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். உடையவர்க்குப் பாலமுது காய்ச்சுந் திருப்பணியை மேற்கொண்டிருந்தவர்.

**அம்மூவனார்** - சங்கப் புலவர்களில் கபிலருக்கு அடுத்தபடியாக அதிகப் பாடல்களைப் பாடியவர் இவர். இவர் கஉஎ பாடல்கள் வரை பாடியுள்ளார். நூறு பாடல்கள் ஐங்குறு நூற்றில் நெய்தல் திணையாக அமைந்துள்ளன.

**அயக்கிரீவன்** - மதுகைடவர்கள் மறைகளைக் களவு செய்து கொண்டுபோன காலத்தில் குதிரையின் கழுத்துள்ள வடிவத்தை மேற்கொண்டு சென்று அவர்களைக் கொலை புரிந்து அவற்றைக் கொண்டு வந்து உதவிய திருமாலின் திருவடிவம்.

**அயத்திரி முனிவர்** - இவர் துரியோதனனுக்கு அறநெறிகள் கூறிப் பாண்டவர்கட்குப் பாகந் தரச் சொன்னார். அவன் மறுத்தபடியினால் வீமனால் தொடை முறியுமாறு வசவுரை வழங்கினார்.

**அயாசித தீட்சிதர்** - சங்கராசாரியாருக்கு நெல்லிக் கனி தந்த பெண்மணியின் கணவன்.

**அயா** - பல வேள்விகள் செய்த ஓர் அரசன்.

**அயாதி** - இவன் திங்கட் குல மன்னனாகிய நகுடனுடைய மகன். இவனுடைய தாய் பெயர் பிரியம்வதை. இவன் அழகிலும் அறிவிலுஞ் சிறந்து விளங்கினான். இந்திரபத மடைந்த காலையில் அகத்தியரை மதிக்காமல் தன்னுடைய தந்தை பாம்பானதை எண்ணி எண்ணி இவன் நெடிது நாள் வருந்தி யிருந்தான். சுக்கிரன் மகளாகிய தெய்வயானையை இவன் மணந்து வாழ்ந்து வருகையில் சன்மிட்டை யென்பவளைச் சேர்ந்து பூருவென்பவனைப் பெற்றுச் சுக்கிரனுடைய வசவுரையைப் பெற்ற இவன், வசவுரைப் பலனால் நேர்ந்த முதுமையைத் தன் மகன் பூருவிடங் கொடுத்து விட்டு அவனுடைய இளமையைப் பெற்றுச் சிறிது நாள் இன்பத்தை நுகர்ந்திருந்தான்.

**அயிந்தவர்** - இவர் காசிப குலத்தில் தோன்றிய சிந்து என்பவனது மறுபிறவியாய்ப் பிரம பட்டம் அடைந்து நான்முகனுக்குப் பதில் உலகத்தைப் படைத்தவர்.

**அயிரா மகாதேவி** - சாந்தி தீர்த்தங்களுக்குத் தாய்.

**அயிராவணம்**- கைலாயத்திலுள்ள இரண்டாயிரங் கொம்புகளையுடைய வெள்ளை யானை. இது சிவபிரானுக்குரியது.

**அயிராவதம் - ஐராவதம்** - நான்கு கொம்புகளையுடைய வெள்ளை யானை, கிழக்குத் திக்கு யானை; இஃது இந்திரனுக்குரியது.

**அயோத்தி** - முத்தியளிக்கும் பதிகள் ஏழனுள் ஒன்று. இது பகைவரால் போரில் கைப்பற்றுவதற்கு அரியது. இது முன்னாளில் பரமபதத்தில் இருந்து சுவாயம்பு மநுவால் பெறப்பட்டு நில்வுலகிற்குக் கொண்டு வரப்பட்டது. இப்பட்டணம் பெண் வடிவங் கொண்டு குசலவதியை ஆண்ட குசனிடத்திற்குப் போய்த் தன்னை ஆளும்படி வேண்டியது. கதிரவன் வழி முறையில் தோன்றிய அரசர்கட்கு இது தலைநகர். தசரதன் இராமபிரான் முதலியோர் அரசாட்சி செய்த இடம்.

**அயோமுகி** - தண்டகக் காட்டில் இருந்த ஓர் அரக்கி. இராம லட்சுமணர் சீதையைப் பிரிந்து காட்டில் இருக்கையில் இலட்சுமணரைக் கண்டு மோகித்து அவரால் மூக்குங் காதும் அறுப்புண்டவள்.

**அரங்கதாசன்** - திருவேங்கடத்தில் திருமலர்ப்பணி செய்த படியினால் மறுபிறப்பில் தொண்டைமானாகப் பிறந்தவன்.

**அரசகேசரி** - நாகையில் சிவன் கோயிலைப்புதுக்கியவோர் அரசன். இப்பெயரோடு ஈழவள நாட்டிலும் ஓர் அரசன் இருந்தனன்.

**அரசர்சூளாமணிச்சோழன்** - சநாத சோழனுக்குமகன். இவன் திரிசிராமலையை அடைந்து இறைவனை வணங்கி மீண்டு செல்கையில் கோழியொன்று இவனுடைய படைகள் மீதும் இவன்மீதுங் குதித்துத் தடுத்தது. அரசன் இவ்விடத்தில் ஏதோ சிறப்பு இருக்கிறது என்று எண்ணி அவ்விடத்தில் ஒரு பட்டணத்தை உண்டாக்கினான். அந்நகர்க்குக் கோழி யென்று காரணப் பெயர் உண்டாகியது. இந்நாளில் உறையூர் எனக் கூறப்படும் ஊர் இதுவே யாகும்.

**அரசை** - சுக்கிரனுடைய மகள். கண்டகனாற் கெடுக்கப் பெற்றுத் தந்தையால்உண்டாக்கப்பட்ட சோலையில் இருந்தவள்.

**அரட்டன்** - கோவலனுக்குங் கண்ணகிக்கும் நேர்ந்த துன்பத்தை மாடலன் உரைக்கக்கேட்டு இறந்த பெருமனைக் கிழத்தியும் கண்ணகியின் தாயும் தனக்கு மகளாக வந்து பிறக்கப் பெற்ற சேரனுட்டானுகிய ஒருசெட்டி.

**அரபத்தர்** - ஓர் இருடி. இவர் ஒரு கர்ப்பத்தில் மறைக்குப் பொருளுணரா திருந்த இருடிகளை மதுரையில் சிவவிரதம் கடைப்பிடிக்கச் செய்ய அவர்களுக்குச் சிவமூர்த்தி ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளி வந்து மறைக்குப் பொருள் அருளிச் செய்தனர்.

**அரம்பை** - தேவதாசிகளில் ஒருத்தி. பரத்துவாசரை ஒரு முறை மயக்கியவள். விசுவாமித்திரருடைய தவத்தை யழிக்கச் சென்று அவருடைய வசவுரையால் கல்லாகிக் காவிரிக்கரையில் கிடந்து அதனுல் தூய்மை யடைந்தவள்.

**அரம்பையர் உலகம்** - இவ்வுலகில் பாற்கடலிற் பிறந்த அலம்புசை, மனேகரை, உருப்பசி, உமாவதி, கிருது, திலோத்தமை சந்திரகலை, சுநகை, மேனகை, கலாவதி, காந்திமதி முதலிய அறுபதினுயிரம் தெய்வப்பெண்களிருப்பர்.

**அரம்மியாசுவன்** - அரதன் மகன். இவனுடைய மகன் முற்கலன். இவன் பிள்ளைகள் ஐவரும் ஐந்துகாரியஞ் செய்யப் பாஞ்சாலர் எனப்பட்டனர்.

**அரவான்** - அருச்சுனனுக்கு நாககன்னிகையாகிய உலூபியிடந் தோன்றிய மகன். பாரதப் போரில் முதற் பலியாக உதிரந்தந்தவன். எதிர் உரோமம் உள்ளவன். பாரதப் போரில் துரியோதனன் தனக்கு முதற் பலியாக இருக்குமாறு வேண்ட அதற்கு உடன்பட்டவன். பிறகு பாண்டவர்கட்கும் உடன்பட்டுக் களப் பலியானுன்.

**அரி ஆனந்தவைணவர்** - இவர் இராமாநந்தருடைய மாணவர். இவருடைய மாணுக்கரில் ஒருவர் மாப்பிச்சை கொண்டு பலருக்கும்உணவருத்தி வருவர். இவ்வாறிருக்கையில் இராமாநந்தரை இம்மாணவர் காண, இராமாநந்தர் இவரைப் பார்த்து, "நாளை நீ இறப்பாய்" என்று கூறினுர். இதனைக் கேட்ட மாணவர் தம் ஆசிரியரிடங் கூறினுர். ஆசிரியர் மாணவரைச் சகுனேபாசனை செய்யச் சொல்லித் தாம் யோகத்தில் இருந்தனர். மாணவர் சங்கு முதலிய ஐந்து படைக் கலங்களைக் கொண்டவராய்த் திருமாலை எண்ணினுர். காலன் அஞ்சி நீங்கினுன்.

**அரிகண்டம்** - கழுத்திற் பூட்டிக் கொண்டு நினைத்தது முடியுமளவும் கழற்ருதிருக்கும் ஓர் இருப்பு வட்டம். இஃது அறுக்கும் முட்களையுடையது. திருமலைராயன் பட்டினத்தில் காளமேகப்புலவர்இதனைக்கழுத்தில் மாட்டிக் கொண்டு புலவர்கள் பாடுமாறு கேட்டவைகளையெல்லாம் பாடினுர்.

**அரிகண்டன்** - கீதமா நகரத்து இளவரசன்.

**அரிகரபுத்திரன்** - இவர் ஐயனுர் என்னும் பெயருடையவர். திருமால் மோகினியுருக் கொண்ட காலத்தில் சிவவீரியத்தால் தோன்றியவர். சூரபதுமனுல் இடையூறடைந்த இந்திரன் தேவியாகிய இந்திராணி தன்னைக் காக்குமாறு வேண்டிக் கொள்ள மகாகாளரைக் கொண்டு காக்கச் செய்தவர். இவருக்குப் படைக்கலம்

செண்டு. ஊர்தி யானை. தேவி மார்கள் பூரணை, புட்கலை.

**அரிகரன்** -ஒரு பாதி சிவபிரானாக வும் ஒரு பாதி திருமாலாகவும் நிற்கும் வடிவம். இவ்வடிவமே சங்கர நாராயணன் என்று கூறப்பெறுகிறது.

**அரிகேசன்** - பூரணபத்திரன் என் னும் யக்கனுடைய மகன். இவன் சிவசிந்தனையுடன் இருத் தலைக்கண்ட தந்தை வெறுப் புற்று இவனை நீக்கினான். இவன் காசியை அடைந்து தவஞ் செய்து சிவபெருமானு டைய அருள் பெற்றுக் காசிப் பதிக்காவலனாகவிளங்கலானான்.

**அரிகேது** - ஒரு வித்தியாதரன். மாயா சிங்கமாகத் திவிட்ட னிடம் அரிமஞ்சுவால் அனுப் பப் பெற்றவன்.

**அரிசகன்**-உருசுகன்மகன். இவனு டைய மனைவி தட்சகன் மகளா கிய சுவாலாதேவி.

**அரிசேநன்** - ஒருவித்யாதரன். அச்சுவகண்டனுக்கு நண்பன்.

**ரிசேகர சக்கரவர்த்தி** - இவன் இந்நாளில் மகாபலிபுரம் என்று வழங்கும் மல்லவரத்தில் முன் னாளில் அரசனாக விருந்தான். இவனும் இவனுடைய தாயுஞ் சிறந்த திருமாலடியார்கள். இவர்கள் நாள்தோறுந் தவறாமல் தொலைவிலுள்ள திரு விடவெந்தை என்னும் பதிக்குச் சென்று அங்குள்ள பூவராகப் பெருமாளைப் போற்றி வழி பட்டுவிட்டுத் திரும்பித் தம்மு டைய ஊர்க்கு வந்து நாலா யிரம் அந்தணர்கட்கு உணவிடு வார்கள். இவர்களுடைய அன் பைக் கண்டு வராகப் பெரு மாள் மகிழ்ந்தார். தம்முடைய அன்பர்களை அலையவைக்காமல் அவ்விடமே காட்சி கொடுக்க வேண்டுமென்று எண்ணினார். தாம் ஒரு கிழ வைணவ அந்தண னாக உருவமெடுத்தார். திரு மகளை ஒரு சிறுபெண்ணாகச் செய்து தம்முடைய கையிலே பிடித்துக் கொண்டு தண்டூன் றித் தள்ளாடி நடந்து அரி சேகர மன்னனுடைய அரண் மனைக்கு வந்தார். அரசனும் அரசனுடையதாயும் இவர்கள் இருவரையுங் கண்டு மகிழ்ந் தார்கள். வரவேற்றுப் போற்றி னார்கள். வழக்கம் போல் திரு விடவெந்தைக்குப் போகப் புறப்பட்டார்கள்.

கிழக்கோலம் பூண்டிருந்த கடவுள் அரசனையும் அவனு டைய தாயையும் பார்த்து, "நான் முதுமையுடையவன்; அதிகத் தொலை நடந்து வந்த படியால்பசியால் வாடுகிறேன். இச்சிறுபெண்ணும் பசியால் வருந்துகிறாள். எங்களுக்கு ஏதேனும் உணவு கொடுத்து விட்டுத்தான் வேறு வேலை பார்க்க வேண்டும் என்று கூறினார். அரசன் தன்னுடைய வழக்கப்படி பூவராகப் பெரு மாளை வழிபட்டபிறகு திரும்பி வந்து உணவிடுவதாகவும் தன் னுடைய உறுதிக்குப் பழுது நேராமல் போய் வருவதற்கு உடன்பாடு கொடுக்க வேண்டு மென்றுங் கேட்டான். எவ் வளவு கூறியும் கிழஅந்தண ராக வந்த பெருமாள் கேட்க வில்லை. தங்களிருவருக்கும் உணவளிக்காமற் சென்றால் திரும்பி வருவதற்குள் உயிர் போய்விடுமென்று கூறினார். அரசன் வேறுவழி யில்லாமல் இருவரையும் உள்ளே அழைத் துக் கொண்டு போய்ச் சிறந்த இருக்கைகளில் உட்கார வைத்து இனிய உணவு களைப் படைத்தான். அவர்கள் உண்ணத் தொடங்கினார்கள். அரசன் தன்னுடைய கண்களை மூடிக் கொண்டு பூவராகப் பெருமாளை யெண்ணினான்.

கீழே விழுந்து வணங்கிக் கண்களைத் திறந்து பார்த்தான். கிழவருஞ் சிறுபெண்ணும் உட்கார்ந்திருந்த விடத்தில் பூவராகப் பெருமானையுந் திருமகளையுங் கண்டான். அரசனுக்குப் பெருமகிழ்ச்சியுண்டாகியது. அவர்களைப் பன்முறைவணங்கினான். மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியவனாய் மெய்ம் மறந்து நின்றான். உண்பதற்காக வெளியிற் கூடியிருந்த அந்தணர்கட்கெல்லாம் விருந்து சாப்பிட்டதைப் போன்ற மனநிறைவுஉண்டாகியது. அவர்கள் அரண்மனைக்குள் நுழைந்தார்கள். அரியணையில் பூவராகப் பெருமானுந் திருமகளும் வீற்றிருப்பதைக் கண்டார்கள். அந்த இடமே மல்லவரமாயிற்று.

**அரிச்சந்திரன்** - திரிசங்குவின் மகன். இவனைப் பற்றிய செய்தியைஅரிச்சந்திரபுராணம் விளக்கமாகக் கூறும்.

**அரிச்சிதர்** - ஓர் இருடி. இவரை ஆய்மங்கையர்வழிபட்டு மக்கட் பேற்றையடைந்தனர். இதனை இப்பெண்களின் கணவர்கள் தவறாக எண்ணி அரசனிடம் முறையிட்டனர். ஆய்ச்சியர் கற்புடையர் என்பதை அரசன் ஆயர்க்கு அப்பெண்களைக் கொண்டு அறிவித்தான்.

**அரிஞ்சயேச்சுரம்** - அரிஞ்சயன் என்பவன் கண்டராதித்தனுடைய தம்பி. இவன் அரியணையேறிச் சில காலம் அரசாண்டான்.பாண்டியனோடு நிகழ்ந்த போரில் இறந்தான். இவனுடைய உயிர் நற்கதியடையுமாறு இராசராசனால் அமைக்கப் பட்டகோயில் அரிஞ்சயேச்சுரம் என்று வழங்கலாயிற்று.

**அரிட்டகாமன்** - அடமானன் என்பவனுடைய மகன். இவனுடைய மகன் ஆலயன்.

**அரிட்டநேமி** - ஓர் பிரசாபதி. சகரனுக்குப் பல அறங்களைக் கூறியவன்.

**அரிட்டன்** - கண்ணனாகத் தோன்றிய காலத்தில் கம்சனால் ஏவப் பட்டுக் கண்ணனைக் கொலை புரியக் காளையாக வந்து கோபாலர்களை வருத்திக் கண்ணனால் கொம்பிழந்து மாய்ந்த அசுரன்.

**அரிணி** -(1) காசிபருடைய மகள். குரங்குகளைப் பெற்றவள்.

(2) நான்முகனுடைய மகன் நைட்டிகப் பிரமசரியத்தைக் கடைப்பிடித்து நின்ற ஓர் இருடி. இவர் பிறந்த காலத்தில் அருணனைப் போல் விளங்கியதால்இப்பெயர் பெற்றனர்.

**ரிதாசு** - வடமதுரைக் கண்மையில் உள்ள கோகுலம் என்னுஞ் சிற்றூரில் சநந்தனன் என்னும் பெயரையுடைய மறையவன் ஒருவன் கண்ணன் திருவுருவை ஊரில் நிலை பெறுத்தினான். இவனுக்கு விக்கிரமசகம் கசசுக இல் ஓராண் குழந்தை பிறந்தது. இவனுக்கு அரிதாசன் என்று பெயர். இவன் கல்வியில் வல்லவனாகித் தவத்தை மேற் கொண்டிருந்தான். இவனிடத்திற்குத் தயாளுதாஸ் என்பவன் வந்து தான் பெற்ற பொன் செய்யுங் கல்லை இழந்ததைக் கூறினான். இவன், 'யமுனையில் உள்ள ஒரு கல்லை எடுத்துப்பார்' என்று கூறினான். தயாளுதாஸ் எடுத்துப் பார்த்தான். அது பொற் கட்டியாக இருந்ததோடு, தான் இழந்த கல்லாகவும் இருக்கக் கண்டு வியப்புற்றான். இதனால் அரிதாசினுடைய பெருமையை உணர்ந்துஅவனுக்கு மாணவன் ஆயினான். இவன் பல புதுமைகளைச் செய்யப் பலரும் இவனிடம்மோகங்கொண்டு மாணவர் களாயினர்.

**அரித்துவாரம்** - வீடுபேறளிக்கும் பதிகள் ஏழனுள் ஒன்று. இது தக்கப் பிரசாதிபதி வேள்வி செய்த இடம். மதுவைக் கொன்ற திருமாலை மது "இஃது இனி எக்காலத்தினும் சிறப்புள்ள பதியாக விளங்க வேண்டு," மென்று வேண்டிக் கொண்டபடி திருமால் சிறப்பளித்த இடம். மாயாபுரி என்பதும் இதுவே.

**அரிபாததாசர்** - இவர் மிகுந்த செல்வம் படைத்தவராய்த் திருமாலின் மீது அன்பு கொண்டு திருமாலின் அடியார்கட்கு உணவளிக்கும் பணியை மேற்கொண்டிருந்தார். இதனால் இவருடைய செல்வமெல்லாங் கரைந்து விட்டது. திருமாலடியார்கட்கு உணவிடப் பொருளின்மையால் களவுத் தொழிலை மேற்கொண்டு காட்டிற்குச் சென்று வழிப்பறி செய்து வந்து உணவிடும் பணியைநடத்திக் கொண்டிருந்தார். ஒருநாள் பொருளில்லாமல் வருந்திக் காட்டு வழியில் அம்புங்கையுமாக நின்றார். வெகு நேரமாகியும் யாரும் வரவும் பொருள் அகப்படவும் இல்லை. காலந்தாழ்த்தலைப் பார்த்து மாலடியார்கள் பசியினால்மனங்கலங்குவரேஎன்று உள்ளம் வருந்தினார். பெருமாள் தேவியாரோடு வணிகவுருக்கொண்டு அவ்வழியே வந்தார். இவர் அவர் எதிரே சென்று மறித்துப் பொருள் பறித்தார். இதனைக்கண்ட தேவியார் பெருமாளைப் பார்த்து, "உங்களுடைய அடியார் பெருமை இப்படி இருக்கிறது" என்று சொல்லி நகைத்தாள். பெருமாள் "உனக்கு இவனுடைய பெருமையைக் காட்டுகிறேம் வருவாயாக" என்று சொல்லி அழைத்துக் கொண்டு மாறுகோலத்துடன் இவருடைய இல்லத்திற்குச் சென்றார். தாசர் எதிர் கொண்டுபோற்றிஉணவிட்டுப் பாராட்டினார். மேலும் அவர்களைப் பார்த்து "உங்களுக்கு வேண்டியது யாது? என்று கேட்டார். பெருமாள் தாசரைப் பார்த்து, "நாங்கள் வணிகர்கள். காட்டு வழியாக வருகையில் கள்ளன் ஒருவன் எங்களை வழி பறித்தான். அதனால் வருந்திவந்தோம்" என்று கூறி வணிகவடிவத்தை மேற்கொண்டார். தாசர் இவர் பெருமாள் என்று உணர்ந்தார். பெருமாளுக்குத் தீமை செய்தேனே என்று உள்ளம் வருந்தினார். பெருமாள் தாசருக்குக் காட்சி கொடுத்தார். "இனிமேல் வழிப்பறி செய்ய வேண்டாம் உனக்கு எல்லாவகையான சித்திகளும்உண்டாகும்" என்று கூறி மறைந்தார். அன்றுமுதல் தாசருக்கு எல்லாவகையான நன்மைகளும் உண்டாயின. அடியார்கள் திருப்பணியைச் சிறப்பாகச் செய்து கொண்டிருந்தார்.

**அரிபுரம்** - ஒரு வித்யாதர நகரம்.

**அரிமஞ்சு** - அச்சுவக்கிரீவனுடைய அமைச்சன்.

**அரிமர்த்தனபாண்டியன்** - மாணிக்கவாசகருடைய வரலாற்று நிகழ்ச்சிகள் இப்பாண்டியன் காலத்தில் நடந்தன.

**அரிமித்திரன்** - திருமாலடியவர்களில் ஒருவன். புவனேசனால் செல்வம் முதலியன இழந்து திருமாலடியைச் சேர்ந்தவன்.

**அரியசுவாசர்** - இவர்கள் பதினயிரவராவர். இவர்கள் தட்சனுக்கு அசக்கினியிடத்தில் தோன்றிய மக்கள். இவர்கள் நாரதரால் அறிவுரை கூறப்பெற்று மெய்யறிவடைந்தனர்.

**அரிப்பிரியன்** - மல்லவரத்தில் முன்னுளில் அரசாட்சி செய்து கொண்டிருந்த அரசர்களில் ஒருவன். இவன் அரசாட்சி செய்து கொண்டிருக்குங் காலத்தில் ஒருநாள் திருமாலடியவனுகிய ஓர் அந்தணன் தனக்கு நாடோறும் உணவளிக்க வேண்டுமென்று வேண்டினுன். அரசன் ஆணவத்தினுல் அவன் கூறியதை ஒருபொருட்படுத்தாமல் இகழ்ந்தான். இதனைக் கண்ட அந்தணன் அரசன் முதலையாகுமாறு வசவுரை வழங்கினுன். அரசன் வசவுரையைக் கேட்டுத் திடுக்கிட்டான். அதற்கு ஒழிவுகாலங் குறிப்பிட வேண்டுமென்று அந்தணனை வேண்டிக் கொண்டான். அவ்வந்தணன், ''மிகச் சிறந்த திருமாலடியான் ஒருவன் ஒருசமயம் உன்னை அருளுடன் பார்ப்பான். அப்பொழுது உனக்கு முதலை வடிவு நீங்கும்'' என்று கூறினுன். இவ்வரச முதலையைத் தாமரைமலர் பறித்தபோது புண்டரீகமுனிவர் அருளுடன் பார்த்தபடியால் முதலை வடிவம் ஒழிந்தது.

**அரியமாரையர்** - இவர் சிவனடியவர்களில் ஒருவர். இவரிடம் ஒருவன் பிச்சைக்கு வந்தான். இவர் அவனுக்கு உணவிட்டார். அப்போது சிறிது உணவுஇலத்திற் சிந்தியது. அப்போது பிச்சைக்கு வந்தவன் சிவபிரான் பெயரைக் கூருது, வேறு ஒரு பெயரைக் கூறினுன். அதனுல் சினங்கொண்ட இவர் பிச்சைக்கு வந்தவனைச் சட்டுவத்தால் தலையிலடித்தார். அதனுல் அவன் கீழே விழுந்தான். இதனை அரசன் உணர்ந்து அரியமாரையரை அழைப்பிக்கக் கட்டளையிட்டான். இவர் சிவபிரான் திருமுன்பு போய் ''நான் அரசன் முன்போகவோ?'' என்று கூறிச் சிவ வடிவம் பெற்ருர்.

**அரிவியாசர்**-இவர் பரமபாகவதர். வடமதுரையில் வாழ்ந்திருந்தவர். இவர் சகநாதம் போவதற்காகப் பயணஞ் சென்ருர். வழியில் ஒரு பொழிலையடைந்து அங்கிருந்த ஒரு காளிகோயிலில் தங்கினுர். அக்காளிக்கு ஒருவன் ஆட்டைப் பலியிட்டான். இதனைக்கண்ட அவர் மனம் வருந்தி வேருெரு பொழிலிற் சென்று அங்கு தங்கியிருந்தார். காளி அங்கு போய்த்தன்னிடம் விருந்துண்டு செல்லுமாறு வேண்டினுள். இவர், ''நீ இனிமேல் உயிர்ப் பலியை விரும்பா திருப்பின் உடன்படுவேன்'' என்று கூறினுர். காளி அதற்கு உடன்பட்டாள். இவர் விருந்துண்டு சென்ருர். காளி அரசன் கனவிற் சென்று தனக்குப் பலியிடலை நிறுத்தக் கட்டளையிட்டாள். அரசனும்அவ்வாறே செய்தான்.

**அரினி** - இவள் ஒரு தெய்வப் பெண். தேவர்களுடைய ஏவலால் திரணபிந்துவின் தவத்தையழிக்கச் சென்று அவரால் மானிட உருப்பெற்று போசன் மகளாய் இந்துமதி யெனப் பெயரடைந்தவள். அசனை மணந்து நாரதர் விழச் செய்த பூமாலை காரணமாக முன் வடிவங் கொண்டு தேவருலகத்தை யடைந்தவள்.

**அருகதாசன்** - இவன் ஒரு சைநப் புலவன். இவன் சுக்தி முக்தாவலி என்னும் நூலைச் செய்திருக்கிருன்.

**அருக்ககீர்த்தி** - சடியரசனுடைய மகன். திவிட்டனுக்கு மைத்துனன்.

**அருசி** - பிருது சக்கரவர்த்தியின் மனைவி.

**அருச்சுனன்** - பாண்டவர்களில் ஒருவனாகிய இவன் முன்னாளில் நரன் என்னும் பெயருடைய ஒரு முனிவனாக இருந்தான். நிலச்சுமை யொழித்தற் பொருட்டுத் தேவர் கட்டளை யால் உலகிற் பிறந்தான். பாரதத்தில் இவனுடைய செய்தி விரிவாகக் கூறப்படும்.

**அருணபுரத்தாழ்வான்** - எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். வைணவ ஆசாரியார்.

**அருணபுரத்து நம்பி** - எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். வைணவ ஆசாரியார்.

**அருணமச்சிவாயதேவர்** - உமாபதி சிவாசாரியாருடைய மாணவர். சித்தாந்த சைவாசாரியர்களில் ஒருவர்.

**அருணன்** - (1) காசிபருக்கும் விநதைக்கும் பிறந்தவன். இவன் தாய் தன் மாற்றாளாகியகத்துரு முதலில் பிள்ளைகளைப் பெற்றாள் என்று பொறாமை கொண்டு தான் அடைகாத்திருந்த முட்டையைப் பருவம் அடைவதற்கு முன் உடைத்தாள். அதிலிருந்து காலில்லாத வனாக இவன் பிறந்தான். தன் தாயைப் பார்த்து என்னைக் காலில்லாதவனாகச் செய்தபடியால் நீ மாற்றவளுக்கு அடிமையாகிப் பிறகு என்னுடைய உடன் பிறந்தானாகிய கருடனால் நீங்குக என்று வசவுரை வழங்கினான். இவனுடைய மனைவியின் பெயர் சயேனி. மக்கள் சம்பாதியும் சடாயுவும். தம்பி கருடன். இவன் கதிரவனுக்குத் தேரோட்டியானான்.

(2) இவன் இந்திரன் கொலுவினுடைய புதுமைகளைக் காணும் பொருட்டுப் பெண்ணுருக் கொண்டு சென்றான். இவனை இந்திரன் கண்டு மோகித்துத் தழுவினான். அதனால் வாலி பிறந்தான். பிறகு கதிரவன் இவன் காலந் தாழ்த்ததைப் பற்றி உசாவியறிந்து அவ்வாறு பெண்ணுருக் கொளச் செய்து சேர்ந்தான். அப்பொழுது சுக்கிரீவன் பிறந்தான்.

**அருணாசுவன்** - இட்சுவாகு வழி முறையிற் பிறந்தவனான பர்கிணாசுவனுடைய இரண்டாம் மகன்.

**அருண்மொழித்தேவர்** - சேக்கிழார்க்கு முதலில் வழங்கிய பெயர்.

**அருந்ததி** - கருத்தம முனிவர் மகள்: வசிட்டருடைய மனைவி. இவள் சிறந்த கற்புடையவள். இவள் தன்னுடைய தலைவனிடம் ஐயமுற்றதால் கருநிறஞ் சேர்ந்த செந்நிறம் உள்ளவளாய் யாவருங் காண விண்மீன் நிலையை அடையுமாறு வசவுரை பெற்றாள். சத்தியமுனிவர் முதலிய நூறுபேர் இவளுடைய மக்கள். ஐந்து கன்னிகைகளில் இவள் ஒருத்தி. உலகத்தார் திருமணஞ் செய்து கொள்ளும் பொழுது இவளைப் போற் கற்புடையவளாக விளங்க வேண்டுமென்று தம் மனைவியர்க்குஇவ்வருந்ததியைக் காட்டுதல் வழக்கம். துருவ மண்டலத்திற்கு அண்மையில் சப்தரிஷி மண்டலம் உள்ளது. ஏழுவிண்மீன்கட்கிடையே வசிட்டர் இருப்பர். அவர்க்கு அண்மையில் அருந்ததியிருப்பள். சிவபிரான் முன்னாளில் பாலகோலத்தோடெழுந்தருளிய காலத்தில் நிலைகலங்காத பதிவிரதை.

**அருவாநாடு** - தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த பல ஊர்கள் இப்பெயரால் முன்னாளில் வழங்கியது.

**அர்க்கன்** - வசுக்களில் ஒருவன். தருமனுக்கு வசுவிடந்தோன்றிய மகன். இவனுடைய மனைவியின் பெயர் அசனை.

**அர்ச்சசு** - வேனன் தோளைக் கடைந்ததனுல் உண்டான பெண்ணுரு. இவள் திருமகளுடைய கூறுகத் தோன்றிப் பிருதுவை மணந்தவள்.

**அர்ச்சிசு** - தக்கன் குமரி. கிரிசாசுவின் மனைவி. இவளுடைய மகன் தூம்ரகேசன்.

**அர்த்தன்** - யமனுக்குப் புத்தியிடந் தோன்றிய மகன்.

**அர்த்த நாரீசன்** - மலைமகள் கௌதமருடைய இருப்பிடத்தில் தவஞ் செய்து சிவபிரானுனுடைய திருவடிவத்தில் பாதி பெற்ருள். அவ்வாறு பெறப்பட்ட வடிவமே அர்த்த நாரீசன்என்று கூறப்படுகிறது.

**அர்த்தஹாரி** - இவள் தெய்வத்தோடு சேர்த்து எண்ணப் பெறுவாள். தூய்மையற்றவர்களைச் சேர்ந்து அவர்கட்குத் தீமை செய்வாள்.

**அர்த்தாசுரன்** - இந்த அசுரன் அர்த்த வீரனுடன் கூடித் தேவரை வருத்தினுன். தேவர்கள் தமது குறைகளை முனிவர்களிடம் முறையிட்டனர். முனிவர்கள் அசுரர்களைக் கொல்ல வேள்வி செய்தனர். அவ்விடத்திற்கு அசுரர்கள் முனிவர்களை விழுங்குவதற்கு வந்தனர். முனிவர்கள் அஞ்சிச் சிவபிரானிடம் அடைக்கலம் புகுந்தனர். சிவபிரான் கௌரியை நோக்கினர். சக்தி அவ்வசுரரோடு போரிட்டாள். அவர்களுடையஉதிரஞ்சிந்தியஇடங்களிலெல்லாம் அசுரர்கள் தோன்றிப் போரிடத்தொடங்கினுர்கள். இறைவி சினமடைந்து விழித்தனள். அப்பொழுது காளிதோன்றி அசுரர்களுடைய உதிரம் நிலத்தில் விழாமல் உறிஞ்சி அசுரர்களுடைய உயிரைப் போக்கினள்.

**அர்த்தோதயம்** - இஃதொரு சிறந்த நாள். அறுபதாண்டு கட்கொருமுறை தைத்திங்களில் ஒரு ஞாயிற்றுக்கிழமையில் கதிரவன் மகரத்திலும், திங்கள்விதிபாத யோகங்கூடிய திருவோணநாளிலும் இருந்து ஒன்ருகத் தோன்றுதல். இந்நாளில் கடல்முதலிய புனிதநீர்களில் நீராடல் தானதருமஞ் செய்தல் முதலியன மிகுந்த பலனைக் கொடுக்கும்.

**அர்ப்புதமணி** - மேகவாகனன் என்னும் பெயருள்ள அரசன். இவன் தலையிற் சிறந்த ஒரு மாணிக்கமிருந்தபடியினுல் இவன் இப்பெயரையடைந்தான்.

**அர்ப்புதம்** - இந்திரப் பிரத்தத்தின் வழியில் உள்ள ஒருமலை. இஃது ஆநர்த்த நாட்டில் இருக்கிறது என்பர்.

**அர்ஷவர்த்தனன்** - இவன் மகேந்திரவர்மன் காலத்தில் வட இந்தியாவை அரசாண்டான். கன்னேசி நாட்டின் அரசனுகிய இவன் கி. பி. 606 முதல் 647 வரையில் அரசாண்டான். இவன் ஆட்சிக்கு வந்தவுடன் ஆறு ஆண்டுகள் போர்செய்து பதினெட்டு அரசர்களைவென்ருன். அவர்களுடைய நாடுகளைத்தன்னுடைய நாட்டோடு சேர்த்துக் கொண்டான். அஸ்ஸாம் நாட்டின் அரசனுகவிருந்த குமாரன் என்பவனும் குசராத் நாட்டின் அரசனுகவிருந்த துருவபட்டன் என்பவனும் இவனுக்கு அடங்கிக் கப்பங் கட்டிவந்தனர். இவன் தென்னுட்டையுங் கைப்பற்ற வெண்ணிச் சளுக்கிய நாட்டின்

மேற் படை யெடுத்துவந்தான். சளுக்கியமன்னனுன இரண்டாம்புலிகேசி நருமதையாற்றங்கரையில் அர்ஷவர்த்தனனை எதிர்த்துப் போர்செய்து தோற்கடித்தான். இவனுடைய ஆட்சி தெற்கே நருமதையாறு தொடங்கி வடக்கே இமயமலை வரையில் வட இந்தியா முழுமையும் பரவி யிருந்தது.

**அர்ஷன்** - தருமனுக்குச் சிரத்தையிடம் பிறந்த மூன்ருவது மகன். இவனுடைய மனைவியின் பெயர் நந்தை. உடன் பிறந்தவர்கள்சமநுங் காமனும்.

**அலகநந்தா** - கங்கையினுடைய கிளை நதிகளில் ஒன்று.

**அலங்காரமாலை** - இலக்கணையின் தோழி.

**அலம்பன்** - அலாயுதன் என்னும் அரக்கனேடிருந்த மற்ருேர் அரக்கன்.

**அலம்பலை** - விசாலன் என்பவனுக்குத்தாய். இட்சுவாகுவின் வழிமுறையில் தோன்றிய வனுன திரணபிந்து என்பவனுடைய மனைவி.

**அலர்க்கன்**-தியுமான் மகன்.இவன் அறுபத்தாருயிரம் ஆண்டுகள் அரசாட்சிசெய்தான். இவனுடைய மகன் சந்நிதி. இவன் தத்தாத்திரேயரால் அருளுரை பெற்ருன்.

**அலர்மேல்மங்கை** - வியன் என்பவன்மித்திரவருமன் என்பவனுடைய மகள். இவன் தரணி யென்பவளை மணந்து இல்லறம் நடத்தினுன். ஒரு வேள்வி செய்யும் பொருட்டு நிலத்தை யுழுதான். உழுபடையில் பெண்குழந்தை யொன்று தோன்றிற்று. அக்குழந்தையைத் தன்னுடைய மனைவியிடங்கொடுத்து வளர்க்கச் செய்தான். அப்பொழுது மகன் ஒருவன் பிறந்தான். அம்மகனுக்கு வசுதாசன் என்று பெயரிட்டான். பெண்ணுக்குப் பதுமினி யென்று பெயரிட்டான். பதுமினி ஒருநாள் தன்னுடையதோழியர்களோடு பூஞ்சோலைக்குச் சென்ருள். அச் சோலையில் விளையாடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அங்குவந்த பெருமாள் பதுமினியைக்கண்டு மயல் கொண்டார். வகுள மாலிகை என்னுந் தோழியைத் தூது விட்டு அவளை மணஞ் செய்துகொண்டார். இவளே அலர்மேல் மங்கை.

**அலாசுரன்** - மலைமகள் வேண்டச் சிவபிரானுற் கொல்லப்பட்ட அசுரன்.

**அலாதனிகஞ்சமபிரசாபதி** - சோழநாட்டில் திருவாலி நகரத்தில் திருமாலால் வீடுபேறடைந்தவர்.

**அலாயுதர்** - ஒரு வீரசைவர்; சிறுத்தொண்ட நாயனுர் தம் புதல்வரைக் கொன்ருரென்றும் சிவபெருமான் அவ்வூனைப் புசித்தாரென்றும் இருவரையும் புறக்கணித்தவர்.

**அலாயுதன்** - (க) பலராமன். (உ) அரக்கன் ஒருவனும் அலாயுதன் என்று பெயர் பெற்றிருந்தான். அவன் பதினுன்காம்நாள் இராப் போரில் வீமார்ச்சுநர்களோடு போர் செய்து முடிவிற் கடோற்கசனுல் மாண்டான். இவன் ஒருகாலத்தில் இராவணனையுந் தோற்கடித்ததாகத் தெரிகிறது. சிவனடியார் ஒருவரும் இப்பெயர் பெற்றிருந்தனர்.

**அலோலகன்** - திருதராட்டிரனுடைய மக்களில் ஒருவன்.

**அல்லமதேவர்** - இவர் வள்ளி காவை என்னும் ஊரில் கிராங் காரன் சுஞ்ஞானி இருவருஞ் செய்த தவத்தாற் பிறந்தவர்; சிவபிரானுடைய கூறுருக அமைந் தவர்; எல்லாருடைய மனத்தை யும் அறிந்தவர். கையில் இலிங் கம் உள்ளவர். இவர் சுற்றித் திரியுங்காலத்தில் தருக்கள், காடுகள், மலைகள் முதலிய யாவும் இவரைப் பணியும். இத்தன்மை யமையப் பெற்ற இவர் வச்சலபுரம் என்னும் ஊருக்கு எழுந்தருளினர். வசவதேவர் என்பவர் இவரு டைய திருவடியைப் பணிந்து அரியணையில் இருத்தி உணவு கொள்ளற்கு எழுந்தருளச் செய்தார். இவர், வசவர் லட்சத்து எண்பதினாயிரம் பெயர்களுக்கு அமைத்திருந்த உணவு முழுவதையும் உண்டு விட்டார். இதனைக் கண்டு வசவர் அஞ்சினர். இவர் உணவு முழுவதையும் உண்ட படியினால் அங்கு வந்திருந்த சங்கமர் எல்லோருடைய பசி யுந் தீர்ந்தது. மாயை என்பவள் இவரை மயக்க வந்தாள். ஆனால் இவர் அவளை மயக் கினர். கொக்கிதேவர் முத் தாயிஅம்மை வேடன் ஆகி யோர்க்கு அருளுரை வழங்கி வசவதேவரிட்ட சூனிய அரி யணையில் எழுந்தருளி வசவ ருக்கு அருள் புரிந்தார். இவர் காயகற்பஞ் செய்திருந்த கோரக்கரிடஞ் சென்று அவர் தம்மை வாள் கொண்டு வெட் டச் சொல்ல வெட்டி அறுதது கண்டு வியந்தார். தம்மை அவரை வெட்டச்செய்து வாள் உடலில் நுழைந்துவரக்கண்டு அவர் பணிய அவருக்கு அருள் புரிந்தார்.

**அல்லமையர்** - வசவர் காலத்தில் இருந்த ஒரு சங்கமர்.

**அல்லாளன் இளையான்** - கொங்கு நாட்டு வடகரை ஆற்றூரிலே வேட்டுவரில் இம்முடித்திருமலை அல்லாள இளையாநாயக்கன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் திருச்செங்கோட்டில் மாதொருபாகன் கோயிலில் அர்த்த மண்டபம் மகாமண்ட பம் முதலிய திருப்பணிகள் செய்தான்.

**அல்லையர், மதுவையர்** - இவர்கள் இருவரையும் விச்சலராசன் கண்ணைப் பிடுங்கினன். வசவர் இவனைச் சினந்து ஊரை விட்டு நீங்கினர். இதனை யறிந்த மொல்லையர் பொம்மை யர் சகதேவர் மூவரும் அரச னைச் சினந்து அவனுடைய படைகளைக் கொன்றனர். பிறகு அரசனும் இறந்தான்.

**அவகிரீதன்** - பரத்துவாச முனி வருடைய மகன். தவத்தினல் மறைகளையுணர்ந்து கர்வித்து ரைப்பியன் சினத்திற் பிறந்த அரக்கனால் கொல்லப் பட் டான். பிறகு ரைப்பியன் மகனா கியஅர்த்தவசு என்பவனால் மீள வும் உயிர் பெற்றான்.

**அவதூதன்** - புரஞ்சயனுக்கு உற்பநாட்டைக் காட்டினவன்.

**அவந்தி** - வீடுபேறளிக்கும் பதிகள் ஏழனுள் ஒன்று. இதில் ஆடகேசுரர், தாரகேசுரர், மாகாளர் எழுந்தருளியிருப்பர். இதில் ஓர் ஆலமரம் இருக் கிறது. அதற்கு அண்மையில் இருக்கும் புனிதநீரில் நீராடி அவ்விடம்எழுந்தருளியிருக்குஞ் சிவபிரானை வழிபட்டவர் வீடு பேறடைவர். இதனை விக்கிர மார்க்கன் ஆண்ட உச்சயினி பட்டணம் என்பர். இது நருமதையாற்றுக்கும் பேராற் றுக்கும் இடையில் உள்ள மாளவநாடு.

**அவலோக முனிவர்** - இவர் சைனர். இவரை அகத்திய ருக்குத் தமிழாசிரியர் என்பர். இவர் பொதிகை மலையில் வாழ்ந்திருந்தவர். இவர் பெயரை அவலோகிதர் எனவுங் கூறுவர். "ஆயுங்குணத் தவ லோகிதன்பக்கல் அகத்தியன் கேட்டு" என்பது பாடல்.

**அவனிநாரணன்** - தெள்ளா றெறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**அவனிநாராயணசதுர்வேதி மங்கலம்** - வடார்க்காடுமாவட்டத்தைச் சேர்ந்த காவேரிப் பாக்கத்தின் பழைய பெயர். இப்பெயர் நந்திவர்மனுடைய சிறப்புப் பெயரினால் ஏற்பட்டது.

**அவிமுத்தம்**-சிவமூர்த்திஉமையை மணந்து காசியை அடைந்து ஒரு சிவலிங்கம் அமைத்து உமைக்குக் காட்டிய பதி. சிவமூர்த்தி யாவரும் உணராவகை எழுந்தருளி யிருத்தலாலும் உலகம் அழிந்த காலத்தில் சிவ பெருமான் காசியை மஞ்சமாகக் கொண்டிருத்தலாலும் இப் பெயர் பெற்றது.

**அவியர்** - சேலம் மாவட்டத்தில் இந்நாளில் தருமபுரி என வழங்கப் பெறும் தகடூரின் பகுதிகளில் முன்னாளில் இவர்கள் வாழ்ந்திருந்தனர்.

**அவிர்த்தானன்** - அந்தர்த்தானன் என்னும் விசயாஸ்வனுக்கு நபஸ்வதியினிடத்திற் பிறந்த பிள்ளை. இவனுக்குப் பிராசீன பர்கி, கயன், சுக்கிலன், கிருஷ்ணன், சத்தியன் என்று அறுவர் மக்கள். பிராசீனபர்கி என்பவனுக்குப் பதினான்கு மக்கள் பிறந்தனர். அவர்கள் பிரசேதசர் எனப்பெறுவர். இவன் மனைவி அவிர்த்தானி.

**அவிநயனார்** - அகத்தியருடைய மாணவர்கள் பன்னிருவரில் ஒருவர். இவர் தம்பெயரால் ஒரு நூல் செய்தனர் எனவும் அந்நூல் மறைந்து விட்டதெனவுங் கூறுகின்றனர். ஆயினுஞ் சில நூல்களில் மேற்கோளாக எடுத்தாளப் பட்ட சூத்திரங்கள் மட்டும் மறையாது வழங்குகின்றன.

**அவீட்சித்து** - யயாதியின் வழி முறையில்தோன்றியகரந்தமன் என்பவனுடைய மகன். இவன் மகன் மருத்துச் சக்கரவர்த்தி. இவன் பிறந்த காலத்திலே கோள்கள் தீயவீட்சண்யமில்லாமையால் அவீட்சித்து என்று பெயர். இவன் ஏமவர்ணன் என்னும் அரசன் மகளின் சுயம்வரத்தைக் கேட்டுச் சென்று அரசர்களை வென்று அவளை மணந்தான். அவ்வாறே சுயம் வரம் நடைபெறுகிற இடங்களுக்கெல்லாம் போய் அவ்விடத்துப் பெண்களை வலுக் கட்டாயமாகக் கொண்டு வருவான். இவன் ஒருமுறை சுபத்திரைகௌரி என்னும் கன்னியரையும் வலுக்கட்டாயமாகக் கொண்டு வந்தான். இவ்விதஞ் செய்து கொண்டிருக்கும்போது விசிதபுரத்து அரசன் மகளாகிய வைசாலினி என்பவளுடைய சுயம்வரத்தைக் கேட்டு அங்கு சென்றுஅவளையுங்கைப்பற்றத் தொடங்கினான். அரசர்களனைவரும் ஒன்று கூடி அவீட்சித்தைப் பிடித்துக் கட்டிவிசாலனிடம் விட்டார்கள். விசாலன் அவீட்சித்தை வைசாலினிக்குக் காட்டினான். வைசாலினி அவீட்சித்தைத் தவிரவேறு எவரையுந் தான் மணக்க முடியாது என்று கூறி விட்டாள். அவீட்சித்து விசாலனிடமே சிறைப் பட்டவன் போலிருந்தான்.

அவீட்சித்தின் தந்தையாகிய கரந்தமன் தன் மகன் விசாலனிடம் இருப்பதை யறிந்தான். படையெடுத்துக் கொண்டு வந்து அவீட்சித்தை மீட்டான். பிறகு விசாலன் தன்னுடைய மகளை மணந்து கொள்ளுமாறு அவீட்சித்தை வேண்டினன். அவீட்சித்து நான் கன்னியரெதிரில் இழிவடைந்த படியினல்இவளேயே யல்லாமல் இனிமேல் எந்தப் பெண்ணையும் மணந்து கொள்ள மாட்டேன் என்று கூறினன். இதனை வைசாலினி கேட்டு இவனைத் தவிர மற்றவர்களை மணந்து கொள்ள முடியாது என்று கூறித்தவஞ் செய்யச் சென்ருள். இது நிற்க. ஒரு நாள் அவீட்சித்து வேட்டையாடச் சென்ருன். அங்கே ஓரிடத்தில் "அந்தோ நான் அவீட்சித்தின் மனைவி; என்னை முறையில்லாமல் இந்தத் திருடகேசி என்னும் அரக்கன் எடுத்துக் கொண்டு போகின்ருன்" என்னும் பேரொலியுண்டாகியது. உடனே அவீட்சித்து அவ்விடத்திற்கு ஓடி அவ்வரக்கனைக் கொன்று அவளை விடுவித்தான். பிறகு அவளை, "நீ யார்?" என்று உசாவினன். அதற்கு அவள் கூறிய மறுமொழியால் அவள் வைசாலினி என்று அவீட்சித்து அறிந்து கொண்டான். பிறகு அவ்விடம் விட்டு நீங்கத் தொடங்கினன். அப்பொழுது தேவர்கள் வெளிப்பட்டு "உனக்கு யாது வரம் வேண்டும்?" என்று கேட்டார்கள் அவீட்சித்து "எனக்குஒருமகன் வேண்டும்" என்று சொன்னன். தேவர்கள் அவீட்சித்தைப் பார்த்து, "உனக்கு இந்த வைசாலினியிடத்தில் ஒரு மகன் பிறப்பான்" என்று வரங்கொடுத்துச் சென்ருர்கள். அவீட்சித்து வைசாலினியைப் பார்த்து, "நீ இவ்விடத்திற்கு எவ்வாறு வந்தாய்?" என்று உசாவினன். அதற்கு அவள், "நீர் என்னை விட்டுப் பிரிந்தவுடன் நான் தவத்தினை மேற்கொண்டுதவஞ் செய்தேன். தவஞ்செய்து கொண்டிருக்கும்போது நாகன் ஒருவன் என்னை நாகலோகத்திற்கு வௌவிச் சென்ருன். அங்கிருந்த நாகர்கள் எனக்கு இளமை கொடுத்து என்னல் அவர்களுடைய குடும்பத்திற்கு இடையூறு நேராதிருக்க என்னிடம் வரம் பெற்றுக்கொண்டு என்னைவௌவிச் சென்ற நாகனேடு என்னை நிலவுலகத்திற்கு அனுப்பிவைத்தார்கள். இவ்விவிடம் வந்து தவஞ்செய்து கொண்டிருக்கையில்இத்தகைய இடையூறு நேரிட்டது. உம்மால் மீண்டேன்" என்று கூறினள். இதனைக் கேட்டு அவீட்சித்து மகிழ்ச்சியடைந்தான். வைசாலினியைப் பார்த்து, "என்னுடைய தந்தை தமக்குப் பெயரன் வேண்டும் என்பதால் உன்னை இப்பொழுதே மணக்கிறேன்" என்று சொன்னன். அந்தச் சமயத்தில் சுனையன் என்னும் பெயருடைய காந்தருவன் ஒருவன் அங்கு தோன்றி, "இவள் முன்பிறப்பில் மதியநந்தை என்னும் பெயருடையவள். அப்பிறப்பில் அகத்திய முனிவருக்குச் சினம் உண்டாக்கிய படியால் அவர் வசவுரை வழங்கி இவ்வாறு மானிடப் பெண்ணகப் பிறக்குமாறு செய்தார். நீ தடையில்லாமல் மணந்து கொள்ளலாம்" என்று சொன்னன். அவீட்சித்து வைசாலினியை மணந்தான். இருவருக்கும் மருத்து என்பவன் பிறந்தான். அவனைத் தன் தந்தையிடங் கொடுத்து விட்டுத்தான் பட்டமேற்காமல் மகிழ்ந்திருந்தான் அவீட்சித்து.

**அவுரவமகருஷி**- இவர் ஓர் இருடி. இவருடைய மனைவி தன்னுடைய வல்லமையால் தீக்கடவுளைத் தொடையில் அடக்கி வைத்திருந்தாள். சகரனுடைய தாய் கணவனுடன் இறவாமல் தடுத்து அவள் வயிற்றிலிருந்த கருப்பத்தைக் கலைக்குமாறு மாற்றாந்தாய் ஊட்டிய நஞ்சினால் சகரன் இறவாமற் காத்தவர். இவரைச் சவநர் என்றுங் கூறுவர்.

**அவுரவர்** - நந்திகோத்திர முனிவர் என்பவருடைய மகன். இவருடைய மனைவியின் பெயர் சுமேதை. இவர்கள் இருவருக்கும் சமி (வன்னி) என்பவள் மகளாகப் பிறந்தாள்.

**அழகர்மலை** - இது பாண்டிய நாட்டில் உள்ள மலைகளில் ஒன்று. இதனைத் திருமாலிருஞ்சோலைமலை என்பர். இது முதலில் முருகக்கடவுளுக்கு இருப்பிடமாக இருந்த தென்றும் பின்னர்த்திருமாலுக் கிருப்பிடமாயிற் றென்றும் கூறுவர். இக்கோயிலின் வாயிற்படியில் பதினெட்டாம் படிக்கருப்பன் என்னுந்தேவதையின் கோயில் இருக்கிறது. மலையின் மீது இப்போது முருகக் கடவுளின் திருக்கோயிலையும் அமைத்து வழிபாடு செய்து வருகின்றனர்.

**அழகாநந்தர்** - இவர் ஏலேல சிங்கருக்கு மகன். இவர் அரசர் நினைத்த போது மடியில் வந்திருந்தாராம்.

**அழகியமணவாளப் பெருமாணயினர்** - பிள்ளை லோகாசாரியருடைய தம்பி. தேசிகரிடத்தில் பகைகொண்டு தேசிகர் வீட்டிலிருந்து புறப்படுகையில் அவர் தலையிற் படுமாறு செருப்புக் கட்டிவைத்துத் தேசிகருடைய பொறுமையைக் கண்டு குற்றம் பொறுக்குமாறு வேண்டிக் கொண்டவர்.

**அழகியமணவாளன்**- திருவரங்கத்தில் திருக்கோயில் கொண்டிருக்கும் பெருமாளுடைய திருப்பெயர்களில் ஒன்று.

**அழும்பில்**-சேர நாட்டுக் குறுநில மன்னனுடைய ஊர்.

**அழும்பில்வேள்** - செங்குட்டுவனுடைய நண்பனாகிய ஒரு குறுநில மன்னன்.

**அளகநந்தை** – பதரிகாச்சிரமத்தில் உள்ள ஒரு புனித நீர். இதுமிக்க கொடிய தீவினைகளை யெல்லாம் போக்கக் கூடியது.

**அளகை** – குபேரனுடைய பட்டணம்.

**அறந்தாங்கியார்** - திருவழுதி வளநாடர்க்கு மகன். இவருடைய மகன் சக்கிரபாணியார். இவர் நம்மாழ்வாருக்கு நான்காம் பாட்டர்.

**அறம்வளர்த்த முதலியார்** - இவர் அம்பி என்னும் ஊரில் இருந்தவர். கிருட்டிணதேவராயருக்கு அமைச்சர். ஞானப்பிரகாச சுவாமிகளுக்குமுதலில் மடம் உண்டாக்கி வேளாளருக்கு அவரைக் குருவாக்கினவர். இம்மடம் நாட்டு மடம் எனப்பெயர்பெறும். முதலியாரிடம் பகை கொண்ட சிலர் வேளாளப் பெண்களைப் போலக் கோலம் பூண்டு நடிக்கச் செய்தனர். முதலியார் அவர்களை ஒறுத்து விரட்டினர். இவரைப் புகழ்ந்து பல புலவர்கள் பாடியுள்ளனர்.

**அறவணவடிகள்** - காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த புத்த சங்கத்துமுனிவர்களில் ஒருவர். கோவலன் கொலையுண்டதைக் கேட்டு வருந்தித் தம்பால்

வந்த மாதவிக்கு அறவுரை கூறித் துறவு பூணச்செய்தவர். பாதபங்கயமலையைத் தாம் கண்டு வழிபட்டதன்றித் துச்சயன் என்னும் அரசனையும் மனைவியரோடு சென்று வழிபடச் செய்தவர். மணிமேகலைக்கு ஆபுத்திரன் வரலாற்றையும் அமுத சுரபியின் பெருமையையும் உண்வளித்தலின் சிறப்பையும் எடுத்துக் கூறிப் பலருடைய பசித்துன்பத்தைப் போக்குமாறு செய்தவர். அவளை நல்வழிப்படுத்திய ஆசிரியரும் இவரே. இவர் தீவதிலகையினாலும் கந்திற்பாவைத் தெய்வத்தினாலும் மிகுதியாகப்புகழப் பெற்றிருக்கிறார். காவிரிப்பூம் பட்டினத்தைக்கடல் கொண்ட பிறகு வஞ்சிநகரத்தை யடைந்து அங்கே துறவு பூண்டிருந்த கோவலன் தந்தையோடு கலந்துரையாடியிருந்தவர். பிறகு காஞ்சி மாநகரத்தை யடைந்து அங்கே தவஞ்செய்து கொண்டிருந்தவர். தம்மை வணங்குவோர்க்கு இவர் வாழ்த்துரை கூறுதலைக் கட்டாயவழக்கமாகக்கொண்டிருந்தார். அவ்வாழ்த்துரை, ''அறிவுண்டாகுக'' என்பதாகவே அமைந்திருந்தது; இதனால் இவர் எல்லோரும் மெய்யறிவைப் பெற வேண்டுமென்பதில் கருத்துடையவராக இருந்தார் என்று தெரிகிறது. இவர் மிகுதியாக அகவை முதிரப் பெற்றிருந்தும் வாக்கு வன்மையில் சிறிதும் குறைவு படாதவராய்த் திடமான வாக்குடையவராக விளங்கினார். இக்காரணத்தினால் இவர் ''நரைமுதிர்யாக்கை நடுங்கா நாவின் உரைமூதாளன்'' எனவும், ''நாத்தொலைவில்லாயாயினுந் தளர்ந்து மூத்தவிவ் யாக்கை வாழ்க பல்லாண்டு'' என்றும் பாராட்டப் பெற்றார். மேலும் இவரைப் பற்றிப் புகழுரைகள் பல மணிமேகலையிற் காணப் பெறும்; அவைகள், ''பழுதறு மாதவன்'' ''துணி பொருள் மாதவன்,'' ''நன்றறி மாதவன்'' ''மறவண நீத்தமாசறு வேள்வி அறவண வடிகள்'' ''அல்லவை கடிந்த அறவண வடிகள்,'' ''அறந்திகழ் நாவின் அறவணன்'' என்பன முதலியவாம்.

**அறவணன்சேரி** - காஞ்சிமாநகரில் உள்ள இவ்வூர் இப்பொழுது அறப்பணஞ் சேரி என்று மருவி வழங்குகின்றது. இவ்வூரில் புத்த சமயத்தைச் சார்ந்தவராகிய அறவணவடிகள் தங்கித் தவம்புரிந்தார். மணிமேகலையும் இச்சேரியில் சில காலம் தங்கியிருந்தாள்.

**அறிவனார்** - இவர் ஒரு தமிழறிஞர். பஞ்சமரபு என்னும் நூலை இயற்றியுள்ளார்.

**அறிவுடைநம்பி** - இவன் வள்ளல்களில் ஒருவன். இவனைப் பிசிராந்தையார் பாடியிருக்கிறார்.

**அறுகை** - இவன் ஒரு குறுநிலமன்னன்.

**அறைப்பள்ளி** - இப்பதி கொங்கு நாட்டின் கிழக்கெல்லையில் உள்ள கொல்லிமலையின்மேல் இருக்கிறது. தேவாரவைப்புத் தலங்களில் இதுவும் ஒன்று. இக் கோயிலில் எழுந்தருளிய இறைவன் மீது அம்பலவாணக் கவிராயர் என்பவர் சதகம் ஒன்று பாடியுள்ளார். அச்சதகம் ''அறப்பளீசுர சதகம்'' என்னும் பெயருடையது. கொல்லிமலை நாலாயிரம் அடி உயரம் உள்ளது. இம்மலைத் தொடரில் வரலூர்க்கோம்பை, மூலைக் குறிச்சி, பெரியகோம்பை, வாழைக் கோம்பை என்னும்

பெயர்கொண்ட நான்கு தொடர்களுண்டு. இந்நான்கையுஞ் சதுரகிரி என்பர். கொல்லிமலை முன்னுளில் சோழமன்னருக்குரிய மலையாக இருந்தது. அந்நாளில் இம்மலையின் மீது கொல்லிப்பாவை என்னும் பாவை யொன்றும் இருந்ததாக நூல்கள் கூறுகின்றன.

**அற்புதமணி** - இவன் ஓர் அரசன். இவனுடைய பெயர் மேகவாகனன். இவன் தலையில் ஒரு மாணிக்கம் இருந்தபடியினுல் இவனுக்கு இப்பெயர் உண்டாகியது.

**அனங்கனி**-இவளுடைய பெயரை அலங்காரி எனவுங் கூறுவர். இவள் நல்லண்ணன் என்னுங் குறுநில மன்னனுடைய மனைவி. இவளுடைய உள்ளத்தில் நல்லியல்புகள் ஒன்றுமில்லை. எல்லாந் தீக்குணங்களாகவே அமைந்திருந்தன. நல்லண்ணன் செல்வ நிலையிற் சிறந்திருந்தாலும் மனைவி கொடியவளாகஅமைந்து நின்றபடியால் அவனுடைய வாழ்வு சிறப்படையாமல் தாழ்வாகவே நின்றது. நல்லண்ணனுடைய உடன் பிறந்தவளாகிய நல்லதங்கையை இக்கொடியவள் வரவேற்றுப் போற்ருமையால் அவள் தன் மக்களோடு கிணற்றில் விழுந்து மாண்டொழிந்தாள். அதனுல் இவளுக்கு இவ்வுலகில் என்றும் பழி நிலைபெற்று நின்றது. நல்லதங்காள் கதை என்பது இக்கொடியவளுடைய கொடுமையை விளக்குதற்கு எழுந்ததாகும்.

**அனந்தபாலன்** - இவன் விக்கிரம சோழன் காலத்திலிருந்த தலைவர்களுள் ஒருவன். இவன் கி. பி. 1121 இல் திருவாவடுதுறையில், சங்கர தேவன் அறச்சாலை, அனந்தபாலர்ப் பெருந்திருவாட்டி அறச்சாலை என்னும் பெயர்களுடன் அறச்சாலைகளை அமைத்துத் தவத்தினர்க்கும், அந்தணர்க்கும், திக்கற்றவர்கட்கும் உணவளித்தற் பொருட்டு நிலம் வழங்கியிருந்தான் என்று கல்வெட்டுக்களால் அறியப்படுகிறது. மருத்துவம், இலக்கணம் முதலிய நூல்களைக்கற்பவர் கட்கும் உணவிடும் படியாக இவன் ஏற்பாடு செய்திருந்தான் என்றுந் தெரிகிறது. இவனுடைய அறச் செயல் ஒட்டக் கூத்தரால் விக்கிரம சோழன் உலாவிலும் பாராட்டப்பெற்றுள்ளது.

**அனந்தாழ்வான்** - இராமானுசருடைய மாணவர் எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். தம்முடைய ஆசிரியர் கட்டளைப்படி திருமலைக்குச் சென்று அங்கு ஓர் ஏரியை வெட்டினுர்.அதற்கு இராமானுசன் புத்தேரி என்று பெயரிட்டார். பூம்பொழில் ஒன்றை அமைத்து அதிலிருந்து மலர்கள் பறித்துத் திருவேங்கடமுடையானுக்குத் திருமலர்ப்பணி செய்து கொண்டிருந்தார். ஒருநாள் மலர் பறிக்கும் பொழுது நல்லபாம்பு ஒன்று இவருடைய கையிலே கடித்து விட்டது. இவர் அதற்குப் பரிகாரம் ஒன்றுஞ் செய்ய வில்லை. மீண்டும் நீராடி மலர்கள் பறித்து மாலை தொடுத்துத் திருவேங்கட முடையானைப் போற்றச் சென்ருர். திருவேங்கடமுடையானுடைய திருவருளால் நல்லபாம்பு நஞ்சு இவரைக் கொல்லவில்லை.

**அனரண்ணியன்**-கதிரவ குலத்து மன்னர்களில் ஒருவன். வசுதன் என்பவனுடைய மகன். இவன் விரத வொழுக்கங்களிற் சிறந்

தவன். இசை நூற் பயிற்சியி லும் சிறந்தவன். இவனுடைய மனைவியின் பெயர் மதனசேனை. இவன் அறநெறி முறையோடு அரசாட்சி செய்திருந்தான். இராவணன் வந்து போர்செய்த போது வலியழிந்து அவனுக்கு வசவுரை வழங்கினான்.

**அனலாசுரன்** - இயமன் தன் னுடைய அவையில் கூத்தி யற்றிய திலோத்தமையைக் கண்டு காமுற்று வீரியத்தை வெளிப்படுத்த அவ்வீரியத்தி லிருந்து தோன்றியவன்; மக்க ளுக்குந் தேவர்கட்குந் தீமை செய்து கொண்டு திரிந்த இவனை ஆனைமுகக்கடவுள் விழுங்கி எல்லாருடைய துன்பத்தையும் போக்கியருளி னார்.

**அனவரததான நாயகர்** - முகமது அலியின் தானாதிபதி அன்வர்டி கான் என்பவனுடைய மனைவி தீராத வயிற்றுவலியினால் துன் புற்றாள். தன் மனைவியின் நோயைத் தீர்த்து வைத்தால் திருப்பணிகள் பல செய்வதாக அன்வர்டிகான் நெல்லையப்பரை வேண்டிக் கொண்டான். நெல்லையப்பரும் அவன் வேண்டுகோட் கிணங்கி அவன் மனைவியினுடைய நோயைத் தீர்த்தருளினார்; அதனால் மன மகிழ்ந்த அன்வர்டிகான் திருப் பணிகள் பல செய்ததோடு கோவிலின் ஒருபக்கத்தில் தன் பெயரால் இலிங்க மொன்றும் பதித்தான். அன்வர்டிகானால் அமைத்த லிங்கம் முதலில் அவன் பெயரால் வழங்கி நாளடைவில் அனவரததான நாயகர் என்று திரிந்து போய் விட்டது.

**அனவர்த்தி** - விருத்தாசல புரா ணத்தை நாதசன்மாவிடம் கேட்டவர்.

**அன்றகன்** - தத்தாத்திரேயரிடம் தத்துவ அறிவுரை பெற்றவன்

**அன்னிமிஞிலி** - தன் தந்தையின் கண்களைப் பிடுங்கிக் குருடாக் கிய கோசர்களை எவ்வகையே னும் அழித்தொழிக்க வேண்டு மென்னும் உறுதி பூண்டு அழுந் தூர்த் திதியனிடம் தன்குறை யைக் கூறி அவனைக் கொண்டு கோசர்களை அழித்தொழித்த ஒரு பெண்.

**ஆகண்டிதன்** - துரியோதன னுடைய தம்பிகளில் ஒருவன்.

**ஆகன்** - யாதவ வழிமுறையினர் களுள் இறுதியாகப் பிறந்து சீர்த்தியை அடைந்த ஒருவன்.

**ஆகா** - இவன் ஒரு கந்தருவன்.

**ஆகாசராசன்** - அரசர்களில் ஒரு வன். இவன் பூசைக்குத் தாமரை மலர் பறித்தபொழுது திருமகளைத் தாமரை மலரில் குழந்தையுருவாகக் கண்டெ டுத்து வேங்கடேசுரருக்குத் திருமணஞ் செய்து கொடுத் தவன்.

**ஆக்கினீத்திரன்** - இவன் மனுவி னுடைய மரபில் தோன்றிய வன். நாவலந்தீவிற்கு அரச னாக விளங்கிய இவன் இத் தீவினைத் தன்னுடைய மக்களா கிய பரதன் முதலிய ஒன்பது பேருக்கும் பங்கிட்டளித்தான். பரதனுக்கு அளிக்கப்பட்ட கண் டம் பரதகண்டம் என்றுபரதன் பெயரால்வழங்கப்பெறுகிறது.

**ஆசவபரண்டேசுவரன்** - காசியில் இருக்கும் ஒரு சிறு தெய்வம். இதனை ஒரு சான்றோனும் அவன் மனைவியும் வழிபட்டு வந்தனர். அது கட்குடத்தில் தோன்றி அவர்கட்கு அருள் செய்தது.

**ஆசிரியை** - கௌண்டினியர் என் பவருடைய மனைவி. தன்னு டைய கணவன் தந்த அறுகம் புல்லை இந்திரன் குபேரன்முதலி

யவர்களுக்குக் காட்டி அவ்வறு கம்புல்லின் நிறைக்குத் தக்க பொன் கேட்டவள். அவர்களுடைய செல்வங்கள் முழுவதும் அவ்வறுகின் நிறைக்கு ஒத்திராமையால் ஆனைமுகக் கடவுளை அறுகம் புல்லைக் கொண்டு வழிபடுதலின் பெருமையை உணர்ந்தவள்.

**ஆடகசௌந்தரி** - கலிங்க நாட்டு மன்னனாகிய அசோக சுந்தரனுடைய மகள். இவள் கலிங்க நாட்டிற் பிறந்த போது காலக் கணிதர்கள் இப்பெண்ணால் இந் நாட்டிற்கும் மன்னனுக்குங் கேடுண்டாம் என்று கூறினர். ஆகவே அரசன் அக்குழந்தையைப் பேழையொன்றில் வைத்துக் கடலில் தள்ளிவிடக் கட்டளையிட்டான். கடலிலே மிதந்த பேழை இலங்கைக் கரையை அடைந்தது. அப்பொழுது இலங்கை மன்னனாகவிருந்த மனுநேயகயவாகு என்பான் பேழையை எடுத்துத் திறந்து பார்த்தான். அக் குழந்தை பொற்பதுமை போற் சிறந்த அழகோடு திகழ்ந்தமையின் ஆடகசௌந்தரி என்று பெயரிட்டுத் தன்னுடைய மகளாக வளர்த்தான். மனுநேயகயவாகுவுக்கு வேறு பிள்ளைகளில்லாமையால் ஆடகசௌந்தரி இலங்கையின் அரசியாக முடிசூடிக்கொண்டாள்.

**ஆடவல்லான்** - சிவபாதசேகரனான ராசராசன் தில்லைக் கூத்தப்பிரானிடத்திலே தான் கொண்ட பேரன்பின் காரணமாக இவ்வாறு பெயர் வைத்திருந்தான்.

**ஆடி** - இவன் ஓர் அசுரன். உமாதேவி சிவபிரானை நீங்கியிருக்குஞ் சமயம் பார்த்துப் பாம்பு வடிவம் எடுத்துக் கொண்டு சிவபிரான் இருக்குமிடத்தையடைந்து உமாதேவியின் வடிவத்தையெடுத்துக் கொண்டு காமக்குறி காட்டினான். அசுரனுடைய செய்கையை உணர்ந்த சிவபிரான், அவ்வசுரனோடு லீலை செய்பவரைப் போல் நடித்து அவனைக்கொன்றொழித்தார்.

**ஆட்கொண்டான்** - சோழவள நாட்டில் வக்கபாகை என்னும் நகரிற் சீர்த்தியோடு விளங்கியிருந்தவன். வேளாண் மரபில் தோன்றியவன். இவன் கலைகள் பலவற்றையும் நன்கு கற்று அருங்கலைவிநோதனாகத் திகழ்ந்தான். இவனுடைய அறிவாற்றலை மதித்த அரசன் ஒருவன் இவனைத் தனக்கு அமைச்சனாகக் கொண்டான். அந்நாளில் வில்லிபுத்தூரார் கல்வியறிவிற் சிறந்தவராய் விளங்கியிருந்தார். இவ்வாட்கொண்டான் அவரைக் கொண்டு பாரதத்தைத் தமிழில் இயற்றச் செய்ய வேண்டுமென்று எண்ணினான். தன்னுடைய எண்ணத்தை அவருக்குத்தெரியப்படுத்தினான். அவரும் மனமுவந்து பாரதத்தைத் தமிழிற் பாடினார். அது வில்லிபுத்தூரார் பாரதம்என்று வழங்குகின்றது.

**ஆட்டன் அத்தி** - இவன் வஞ்சி நகரில் இருந்து அரசு புரிந்த சேரமன்னர்களில் ஒருவன். அழகும் ஆண்மையும் உடையவன். இவன் பரதநாட்டியமாடுவதிலும் வல்லவன். ஆதலால் இவனுடைய பெயர் ஆட்டன் அத்தி என்று அழைக்கப்பட்டது. கரிகாலனுடைய மகளாகிய ஆதிமந்தி என்பவளை மணந்து இல்வாழ்க்கையை இனிது நடத்திக் கொண்டிருந்தான். இடர் அதிகம் நேரினும் இவன் சிறிதும் உள்ளங்கலங்கான். கழார் நகரினையடுத்த காவிரித் துறையில் ஒரு சமயம் விழா ஒன்று நிகழ்ந்தது. இவன்

தன்னுடைய மனைவியோடு அங்கு சென்று நீராடினான். விரைவாகவும் மிகுதியாகவும் வந்தவெள்ளம் இவனை இழுத்துக் கொண்டு சென்றது. இவன் சிறிதுங் கலங்காமல் கடல் வரை நீந்திக் கொண்டு சென்றான். பிறகு ஒருவாறு கரை சேர்ந்து சிலருடைய உதவியால் தன்னுடைய மனைவியிடம் வந்து சேர்ந்தான். இவன் காவிரிக் கிரையானான் என்று கலங்கியிருந்த மனைவி இவனைக் கண்டதும் கரைகாணாத மகிழ்ச்சியை அடைந்தாள்.

**ஆணிமாண்டவியர்** -இவர் பெருந் தவம் புரிந்த ஓர் அருந்தவ முனிவர். இவர் தவஞ் செய்து கொண்டிருக்கையில் ஒரு நாள் சிலகள்ளர்கள் அரண்மனையிற் களவு செய்து விட்டு ஓடினர். ஓடியவர்கள் காட்டையடைந்து இவர் தவஞ் செய்துகொண்டிருந்த இருப்பிடத்திற்குள் மறைந்தனர். துரத்திவந்த அரச சேவகர்கள் முனிவரின் இருப்பிடத்திற்குள் புகுந்து கள்ளர்களைப் பிடித்துக் கொண்டதுமல்லாமல் மாண்டவியருடைய தன்மையை உணர்ந்து கொள்ளாமல் இவரையும் பிடித்து இழுத்துக் கொண்டுபோய் அரசன்முன் நிறுத்தினர். அரசன் எல்லாரையுங் கழுவி லேற்றுமாறு கட்டளையிட்டான். அவ்வாறே கள்ளர்களோடு இவருங் கழுவி லேற்றப்பட்டார். ஆயினுஞ் சிறிதும் மனங் கலங்காமல் அறிதுயிலில் கழுவிலிருந்த படியே இருந்தார். இந்தச் சமயத்தில்தான் நளாயனிக்கு வசவுரை வழங்கினார். சில காலஞ்சென்ற பிறகு அரசன் இவருடைய தன்மையை உணர்ந்து உள்ளம்வருந்தினான். கழுவிலிருந்து நீக்கத்தொடங்கினால் துன்பம் மிகுதிப்படக் கூடும் என்று எண்ணி மேலும் கீழும் அரத்தால் அராவி இவரை விடுவித்தான். ஆணியானது அப்படியே உடலில் அமைந்து நின்றது. அதன் பிறகு தான் இவருடைய மாண்டவியர் என்னும் பெயருக்கு முன்னால் ஆணி என்பதுஞ் சேர்ந்து ஆணி மாண்டவியர் எனப் பெயர் நீண்டு நின்றது.

முனிவர் மேலுந் தவஞ் செய்து தவத்தை நிறைவேற்றி எல்லாவுலகங்களினுஞ் சுற்றிக் கொண்டிருந்தார். ஒருநாள் இயமலோகத்தை யடைந்து இயமனைக் கண்டார். "தரும நெறியில் தவறாமல் நடந்து தவம் புரிந்து கொண்டிருந்த எனக்குக் கொடிய தண்டனை எவ்வாறு நேரிட்டது?" என்று உசாவினார்.

நமன் முனிவரைப் பார்த்து, "நீர் உம்முடைய இளமைப் பருவத்தில் தும்பியைப் பிடித்து அதனுடையவாலில் ஈர்க்கியைப் புகுத்தி விளையாடினீர்; அதனால் உமக்குக்கழுவேறும் படியான தொல்லை நேரிட்டது" என்று கூறினான். இதனைக் கேட்ட முனிவர் சினங்கொண்டார். நமனைப் பார்த்து, "பிறந்தது முதல் பன்னீராண்டு வரையும் இளம்பருவமாகையால் அவன் செய்வனயாவும் அறியாமற் செய்வனவாகும், அதனால் அவனுக்குத்தீவினை எவ்வாறு உண்டாகலாம்? இதனைச் சிறிதும் எண்ணாமல் எனக்குக் கொடிய தண்டனை கிடைக்குமாறு நீ செய்த படியால் நிலவுலகத்தில் மனிதனாகப் பிறக்கக் கடவாய்" என்று தீமொழி வழங்கினார். இதனால் நமன் விதுரனாகத்தோன்றினான். உயிர்கள் செய்யுந் தீவினைகட்குப் பலனளிப்பவன் நமன்

என்பது நூற்றுணிபாகையால் இவ்வாறு முனிவர் நமனுக்கு வசவுரை வழங்கினார்.

**ஆனூர்ச்சர்க்கரை** - கொங்குவள நாட்டில் நொய்யலாற்றை யடுத்து ஆனூர் என்னும் ஊர் உள்ளது. அவ்வூரில் சர்க்கரை என்னும் பெயருடைய புகழமைந்த வள்ளலாகிய இவர் வாழ்ந்திருந்தார். அறிஞர்களைப் பாராட்டிச்சிறப்புச் செய்தலில் இவர் புகழ் பெற்றவர். இவர் காலத்தில் வீரபத்திரன் என்னும் பெயரமைந்த புலவர் ஒருவர் இருந்தார். இப்புலவர் ஒருநாள் ஆனூர்ச்சர்க்கரையைப் பார்த்து வரும் பொருட்டு ஆனூருக்குச் சென்றார். இப்புலவர் ஏகாலி மரபினர். ஆனூர்ச்சர்க்கரை புலவரை வரவேற்றுப் பாராட்டி உரையாடிக் கொண்டிருந்தார். உணவு கொள்ளும் நேரமானவுடன் சாப்பாட்டிற் கேற்பாடு செய்யுமாறு உள்ளே சென்றார். சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார். அச்சமயத்தில் உள்ளேயிருந்து வெளியே வந்த ஒரு மனிதன் புலவரைப் பார்த்து, "நீங்கள் சாப்பிடுவதற்கு இன்னுஞ் சிறிது நேரமாகலாம் என்று நினைக்கிறேன்" என்று கூறி விட்டுப் போய்விட்டான். வீரபத்திரப் புலவர் நாம் ஏகாலியாகையால் உடன் வைத்துண்ண விரும்பாமல் சர்க்கரையார் மட்டுஞ் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார் போல் தெரிகிறது. அவர் சாப்பிட்ட பிறகுதான் நம்மைச் சாப்பிடக் கூப்பிடுவார்கள். அறிஞர் என்று பாராமல் குலத்தையே நோக்கும் இவ்விடத்தில் நாம் உண்ணுதல் மதிப்பாகாது என்று முடிவு செய்தவராய் வீட்டை விட்டுப் புறப்பட்டுத் தம் வழியே சென்றார். உள்ளே இலை போட்டு விட்டு வந்த சர்க்கரையார் வீட்டிற் புலவரைக் காணாமல் தேடினார். புறப்பட்டுச் செல்வதனை யுணர்ந்து எதிரேபோய் வழியை மறைத்தார். "நான் இலை போட்டு விட்டு வருவதற்குள் புறப்பட்டு விட்டீர்களே என்ன காரணம்? யாது தவறு நேர்ந்து விட்டது?" என்று கேட்டார். புலவர் சர்க்கரையைப்பார்த்து, "விருந்தினனாக வந்த நானிருக்கும் போது நீர்மட்டும் உள்ளே போய்ச் சாப்பிட்டு விட்டுப் பிறகு எனக்கு இலைபோட்டு விட்டு வருகிறீர் போலத் தெரிகிறது. "விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவாமருந்தெனி, னும் வேண்டற்பாற் றன்று" என்னும் தெய்வத்திருமறையை நீர் அறியீரா?" என்று சினத்துடன் வினவினார். சர்க்கரையார், "அடியேன் அவ்வாறு செய்வேனோ? புலவர்களுடைய அறிவுடைமையைத்தான் பார்ப்பேனே தவிரக் குலம் முதலியவைகளை யான் பாரேன். உள்ளே சென்றவன் இலை போடச் செய்துவிட்டு வருகிறேனேயல்லாமல் சாப்பிட்டு விட்டு வரவில்லை. இதனை நீங்கள் நன்றாக நம்பலாம். இனிமேல்தான் அடியேனும் தங்களோடிருந்து சாப்பிடப் போகிறேன்" என்று தெளிவுரைகள் பல கூறி அவரையழைத்து வந்து உண்ணச் செய்தார். அவருடைய எச்சில் வாயையும் கழுவினார். தகுந்த நன்கொடைகள் கொடுத்துப் பாராட்டினார். சர்க்கரையின் தன்மையை உணர்ந்து மகிழ்ந்த புலவர் அவர் மீது காதற் பிரபந்த மொன்று இயற்றிச் சர்க்கரையாரையும் அவர் குடும்பத்தாரையும் மகிழ்வடையச் செய்தார்.

**ஆண்டளக்கும் ஐயன்** - ஆதனூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்குந் திருமால்.

**ஆண்டிப்பந்தல்** - திருவாரூர்க்கு வடக்கே ஐந்துகல்தொலைவில் உள்ள ஓர் ஊர். சிவபிராஞேடு மாறுபட்ட விறன்மிண்ட நாயஞர் இனிமேல் திருவாரூர் எல்லையை மிதிப்பதில்லை என்னும் உறுதி மேற்கொண்டவராய் இந்த இடத்தை அடைந்து அடியார்களுக்கு மகேசுரபூசைசெய்து கொண்டிருந்தார். ''திருவாரூர்'' என்று சொல்பவர்களுடைய காலையும் வெட்டுபவராக இருந்தார்.

**ஆதன் ஓரி** - இவன் கொல்லி மலையையும் அதனைச் சூழ்ந்திருந்த நாடுகளையும் முன்னாளில் ஆண்டிருந்தான். இவன் விற்போரில் வல்லவன். அதனுல் இவனுடைய பெயர் வல்வில் ஓரி எனவழங்கியது. இவன் ஏழு வள்ளல்களில் ஒருவன்.

**ஆதித்தன்** - அபராசிதன் சோழ நாட்டை ஆதித்தனுக்கு அளித்து விட்டுக் காஞ்சிக்குச் சென்ருன். ஆதித்தன் கி பி. 871 முதல் 907 வரை அரசாண்டான். இவனுடைய காலத்தில் தொண்டை நாடும் இவனுடைய ஆட்சிக்குவந்தது. தொண்டை நாட்டில் திருக்கழுக்குன்றம் முதலிய ஊர்களில் இவனுடைய கல்வெட்டுகள் இருக்கின்றன. கொங்கு நாடும் இவனுடைய ஆட்சியின் கீழ் இருந்தது என்பர். இவன் பல கோயில்களைக் கட்டினன். இவனுடைய பட்டத்தரசியின் பெயர் திரிபுவனமாதேவி. இவள் பல்லவகுலத்தில் பிறந்தவள். இவள் கோயில்களுக்குப் பலவகைத் தானங்களைச் செய்தாள். ஆதித்தனுக்கும் திரிபுவன மாதேவிக்கும் பராந்தகன், கன்னரதேவன் என்னும் இரண்டு மக்கள் தோன்றினர். தமிழ் நாட்டினுடைய வடவெல்லை வரையில் ஆதித்தனுடைய ஆட்சி பரவியிருந்தது. காளத்திக்கு அண்மையில் உள்ள தொண்டைமான் பேராற்றில் கி. பி. 907 இல் ஆதித்தன் காலமாஞன்.

**ஆதிராமு** - கட்டபொம்முவினுடைய ஐந்தாவது வழி முறையினன். இவன்பாஞ்சாலன் குறிச்சியில் இருபத்து நான்கு ஆண்டுகள் அரசாட்சி செய்தான். இவனுக்கு மக்கள் இருவர். மூத்தவன் இளமையிலேயே இறந்துபோஞன். இளையவனை சின்ன பொம்மு என்பவன் பட்டத்திற்கு வந்தான்.

**ஆதிரை**-சாதுவனுடைய மனைவி. ஒப்புயர்வற்ற கற்புநலமுடையவள்; இவள் தன்னுடைய கணவன் இறந்தான் என்று கேட்டு உயிரை விடுதற்குத் தீயிற்பாய்ந்தாள். தீச்சுடாதபடியினுல் வருத்தமுற்றிருந்தாள். ''உன் கணவன் வருவான்'' என்று கூறிய உருவிலி வாக்கைக் கேட்டு நோன்பு நோற்றிருந்தாள். பிறகு கணவன் வந்து சேர அவனேடு கூடி வாழ்ந்திருந்தாள். மணிமேகலை முதன் முதலில் இவளுடைய இல்லத்திற்குத்தான் ஐயமேற்கச் சென்ருள். அப்பொழுது அவளுடைய ஐயக்கடிஞையில், ''பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுக'' என்று முதலில் ஐயமிட்டாள். இவளுடைய கற்பின் திண்மையைப் பலரும் பாராட்டிப் போற்றினர்.

**ஆத்திரேயன்** - சோழ நாட்டில் வேதிமங்கலம் என்னும் ஊரில் இருந்தவன். அந்தணர் குலத்தில் தோன்றியவன். இவனுடைய தந்தையின் பெயர் அத்திரி.

இவன் அந்தணர் குலத்தில் பிறந்தும் அறிவும் ஒழுக்கமும் இல்லாமல் தீவினைகள் பல வற்றைச் செய்து இறுதியில் அழிந்தொழிந்தான்.

**ஆநந்தகிரி** - சாலிவாகன சகாப்தம் எண்ணூற்றுக்குமேலிருந்த ஒரு வடமொழிப் புலவர். இவர் ஆதிசங்கராச்சாரியருடைய காலத்தை யொட்டியிருந்தவர். சங்கராச்சாரியாருடைய வரலாற்றைச் சங்கர திக்குவிசயம் என்னும் பெயரோடு நூலாகச் செய்துள்ளார். சங்கராச்சாரியாரின் மாணவராகிய ஆநந்தகிரியும் இவரும் ஒருவரா வேருனவர்களா என்பது விளங்கவில்லை.

**ஆநந்தன்**-புத்தருடைய மாணவர்களில் தலைமை மாணவனுக விளங்கி இறுதிக்காலம் வரையில் புத்தரோடிருந்தவன். புத்தர் தம்முடைய இறுதிக் காலத்தில் உடனிருந்த மற்றவர்களைப் பார்த்து ''நான் அறிந்தவைகளை யெல்லாம் அறிந்து கொண்டவன் ஆனந்தன். ஆகவே என்னுல் அறிய வேண்டியவைகளை அவனிடமிருந்து அறிந்து கொள்ளுங்களென்ருர்.

**ஆபுத்திரன்**- சாலியின் புதல்வன்; பிறந்த நாள் தொடங்கி ஏழு நாள் அளவும் ஒரு பசு பாலூட்டி வளர்க்க வளர்ந்த படியினுல் ஆபுத்திரன் என்று பெயர் பெற்ருன். அன்பும் அருளும் உடையவன்; தென் மதுரையில் கலாநியமத்துள்ள சிந்தாதேவியால் அமுதசுரபி என்னும் பாத்திரம் பெற்றுப் பல வுயிர்களுக்கும் உணவளித்துப் பாதுகாத்து மணிபல்லவத்தில் இறந்து பிறகு சாவக நாட்டிலுள்ள நாகபுரத்தில் பசு வயிற்றில் பொன் முட்டையில் தங்கிப் பிறந்து புண்ணிய ராசன் என்று பெயர் பெற்றவன்.

**ஆப்பியாயினி**- பதுமையினுடைய பார்ப்பனத் தோழி. அவளோடு ஒன்ருக வளர்ந்தாள். அவளுக்கு உசாத்துணையாக அமைந்திருந்தாள். இவள் உதயணனுடைய பார்ப்பனத் தோழனுகிய இசைச்சன் என்பவனுல் மணஞ்செய்து கொள்ளப்பட்டாள். இவளுடைய பெயர் யாப்பியாயினி எனவுங் கூறப் பெற்றது.

**ஆய்க்குடி**— ஆய் என்னும் வள்ளல் அரசாட்சி செய்திருந்த ஊர். பழனிக்குப் பக்கத்தில் ஆய்க்குடி என்னும் ஓர் ஊர் இருக்கிறது. வேறு சில இடங்களிலும் இப்பெயரோடு ஊர்கள் இருக்கின்றன.

**ஆரஞ்சாத்து சோழன்** - இவன் சோழ மன்னர்களில் ஒருவன். கோடை வெப்பம் நீங்கும் பொருட்டுச் சிவன்கோவில்கட்குத் திருமுழுக்குச் செய்து கொண்டு வந்தான். அவ்வாறு செய்து கொண்டு வருகையில் திருவானைக்காவில் எழுந்தருளிய சிவபெருமானுக்கு அணியுமாறு முத்துமாலை கொண்டு சென்ருன். அம்முத்து மாலை சோழன் நீராடும் போது ஆற்றில் விழுந்து விட்டது. அதனுல் மிகுந்த வருத்தமடைந்து தன்னுடைய சிவபூசை முதலியவைகளை முடித்துக் கொண்டு இறைவழிபாட்டிற்காகத் திருக்கோயிலுக்குச் சென்ருன். அரசன் இழந்து விட்ட முத்துமாலை திருமுழுக்கின் பொருட்டுக் கொண்டு வந்த நீரோடு குடத்தில் வந்து இறைவன் மீதிருத்தலைக் கண்டான். அதனுல் வருத்தம் நீங்கி மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். அது முதல் அச்சோழனுடையபெயர்

ஆரஞ்சாத்து சோழன் என்று மாறியது.

**ஆரியபட்டர்** - இவர் வான நூலில் வல்லவர். வான நூல் முறைகளான ஐந்து சித்தாந்தங்களைப்பற்றி நூல் எழுதினார். ஐந்து சித்தாந்தங்களில் ஒன்றாகிய சூரியசித்தாந்தத்தை இவர் பின்பற்றினார். நில உலகம் அதனுடைய நடு அச்சின்மீது ஒவ்வொரு நாளுஞ் சுழல்வதையும் ஞாயிறு திங்கள்களின் மறைவுகளுக்கு விஞ்ஞான முறையில் விளக்கத்தையும் பிறவற்றையும் இந் நூல் குறிப்பிடுகின்றது.

**ஆரியமாலை** - காத்தவராயன் என்னுஞ் சிறு தெய்வத்தின் மனைவியின் பெயர்.

**ஆரியன்** - மணவூர் என்னும் ஊரிலிருந்து அரசு புரிந்த வீர பாண்டியன் என்பவனுடைய மகன். இவன் ஒரு காரணத்தை முன்னிட்டுக் களாமரங்கள் நெருங்கிய ஒரு காட்டிற்புகுந்து மறைந்திருந்தான். பக்கங்களில் வாழ்ந்திருந்த பல குறும்பர்களை ஒன்றுசேர்த்துக் கொண்டு அக்காட்டை வெட்டி நாடாக்க முற்பட்டான். ஓரிடத்தில் சிவலிங்கம் ஒன்றுதோன்றியது. அதற்குத் திருக்கோயில் ஒன்று அமைத்தான். மக்கள் பலரை அங்குக் குடியேற்றினன். அந் நகருக்கரசனாக அமர்ந்து அரசாட்சி செய்தான். கோயிலில் எழுந்தருளிய கடவுளுக்குப் பால்வண்ணநாதர் எனவும் இறைவிக்கு ஒப்பனையாள் எனவும் பெயரிட்டான். அவ்வூரை யானையொன்று வலஞ்செய்து நற்பேறெய்தியபடியால் அவ்வூர் பின்னாளில் கரிவலம் வந்த நல்லூர் என்னும் பெயரையடைந்தது.

**ஆரியாவர்த்தம்** - கீழ்கடல், மேல்கடல், இமயமலை, விந்தமலை ஆகியவைகட்கிடைப்பட்ட நாட்டை ஆரியா வர்த்தம் என வழங்குவர்.

**ஆரியை** - பதுமையினுடைய தோழி. அவளுடைய மனக்குறிப்பறிந்து நடந்தவள். பந்தடிப்பதில் வல்லவள். இவள் பந்தடிக்கத் தொடங்கி மூவாயிரங்கை அடித்த பிறகு நிறுத்தினாள்.

**ஆரின்மாலையர்** - சோழமன்னர்கள் ஆத்திப் பூமாலையை அணிந்தபடியினால் இப்பெயர் அவர்கட்குக் காரணப் பெயராக உண்டாகியது.

**ஆருணியரசன்** - இவன் பாஞ்சால நாட்டு மன்னன். மிகுந்த பேராற்றலும் ஆண்மையுமுடைய படையை உடையவன். கோசலநாட்டு மன்னனை வென்று அவனுடைய ஊரையழித்தான். அவனுடைய மகள் வாசவதத்தை முதலியவர்களைப் பிடித்துக்கொண்டு வந்து தன்னுடைய உரிமை மகளிர்களுக்குத் தோழிகளாக அமைத்தான். இவனுடைய பட்டத்து யானைக்கு மந்தரம் என்று பெயர். ஏயர் குலத்தாரோடு குலப்பகைஞன். அக்குல அரசாட்சிக்கு உரியவனான உதயணன் சிறைப்பட்ட பொழுது பெரும்படையோடு சென்று கோசாம்பி நகரத்தைக் கைப்பற்றிக் கொண்டு முரசடிப்பித்துத்தன்னுடையவெற்றியை எல்லாருக்குந் தெரிவித்தவன். அந்நகரையே தன்னுடைய தலைநகராகக்கொண்டு பிறகு ஆட்சிபுரிந்தான். காளமயிடன் என்னும் ஒற்றனைக் கொண்டு பகையரசர்களுடைய செய்தியை அறிந்துகொண்டே வந்தான். பூரணகுண்டலன் என்பவன் இவனுக்கு முதன்மையான அமைச்சன். பிறகு உதயணனோடு ஏற்பட்ட

பெரும் போரில் அவனாற் கொல்லப்பட்டான்.

**ஆரூரன்** - சுந்தரமூர்த்திகளின் பிள்ளைப்பெயர் இது. சுந்தரமூர்த்தியாரின் வழி முறையினர் திருவாரூரில் எழுந்தருளிய சிவபிரானை வழிபடுதலை வழி வழியாக மேற்கொண்டிருந்தனராகலின் சுந்தரமூர்த்தியாருக்கு இவ்வாறு பெயர் வைத்தனர். சுந்தரர் பின்னாளில் திருவாரூரிலேயே நிலைத்திருந்த காரணம் பற்றியேற்பட்ட காரணப் பெயர்அன்று.

**ஆலாலசுந்தரர்** - சிவபெருமான் ஒரு காலத்தில் தம்முடைய திருவுருவைக் கண்ணாடியிற் பார்த்தார். சுந்தரம் என்று எண்ணினார். அதனால் ஓர் உருவந் தோன்றியது.அவ்வுருவமேசுந்தரர் என்று பெயரடைந்து சிவபிரானுடைய திருப்பணிகளைச் செய்து கொண்டிருந்தது. இவ்வாறு தோன்றிய சுந்தரர்தாம் சமயாசாரியர்களில் ஒருவராகத் தோன்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகள். இச்சுந்தரர் திருக்கைலையிற் பணிசெய்து கொண்டிருந்தபோது தேவர்களும் அசுரர்களும் கடலைக்கடைய அப்பொழுது நஞ்சு தோன்றித் தேவர்களையும் அசுரர்களையும் வருத்தத் தொடங்கியது. சிவபெருமான் தம்மிடம் பணி செய்து கொண்டிருந்த சுந்தரரைப்பார்த்து, "அந்நஞ்சினை இங்குக்கொண்டு வருவாயாக" என்று கட்டளையிட்டார். சுந்தரரும் அவ்வாறே சென்று நஞ்சினைக் கொண்டு வந்து கொடுத்தார். அதுமுதல் அவருடைய பெயர்ஆலால சுந்தரர் என்று வழங்கலாயிற்று.

**ஆவியர்** - பழனிமலையையும் அதனைச் சூழ்ந்த நாட்டையும் முன்னாளில் அரசாட்சி செய்தவர்கள் ஆவியர் என்னும் பெயருடையவர்களாகத் திகழ்ந்திருந்தனர்.

**ஆளவந்தார்**-இவர் திருத்தில்லைக் கடுத்த காட்டுமன்னார் கோவிலிலே ஆடித்திங்களில் உத்திராட நாளில் ஈசுவரமுனி என்பவருக்குப் புதல்வராகத்தோன்றினார். மணக்கால் நம்பிகள் தம் ஆசாரியாருடைய கட்டளையின் படியே சென்று இவர் பிறந்த பன்னிரண்டாம் நாள் இவருக்குச் செய்ய வேண்டியவைகளைச் செய்து, "யமுனைத் துறைவர்" என்று பெயரிட்டார். இவர் இளமைப் பருவத்தில் மாபாடியபட்டர் என்பவரிடத்தில் கல்வி கற்றார். அந்நாளில் அரசபுரோகிதனும் மாபெரும் புலவனுமான ஆக்கியாழ்வானோடு சொற்போர் செய்யத் தொடங்கினார். அரசனுடைய மனைவியானவள், "இவர் தோற்கமாட்டார்" என்று உறுதி கூறினாள். அரசன் "நம்முடைய ஆக்கியாழ்வான் தோற்றால் நம்முடைய நாட்டில் பாதியை இவருக்குக் கொடுப்பேன்" என்று உறுதிமொழி கூறினான். அங்கு நடந்த பலவகையான சொற்போர்களிலும் யமுனைத் துறைவர் வெற்றி யடைந்தார். இதனைக் கண்ட அரசன் மனைவி, "இவர் என்னை ஆளவந்தாரோ?"என்று கூறிப் பாராட்டினாள். அது முதல் இவருக்கு ஆளவந்தார் என்று பெயர் ஏற்பட்டது. மணக்கால் நம்பிகளுடைய அருளுரையால் அரச வாழ்வில் வெறுப்புக் கொண்டார். அதனைத் துறந்து துறவறத்தை மேற்கொண்டார். திருவரங்கத்திலே வசித்திருந்தார். திருமாலையாண்டான், திருக்கோட்டிநம்பி, திருவரங்கப் பெருமாளரையர், திருமலை நம்பி,பெரியநம்பி என்பவர்கள் இவருடைய மாணவர்களிற்

சிறந்தவர்களாவர். ஞான வாசிட்ட நூலியற்றியவரும் இப்பெயருடையவரே. இவருடைய ஊர் சேது நாட்டிலுள்ள வீரசோழன் என்பது. அதனால் இவருடைய பெயர். 'வீரை ஆளவந்தார்' என வழங்கும்.

**ஆறைஇளையா நாயக்கன்** - இவன் கொங்குவளநாட்டில் முன்னாளில் வாழ்ந்திருந்தான். மைசூரில் பெருங் கலகக்காரனும் கொள்ளைக் காரனுமாக விருந்த நஞ்சையுடையான் என்பவன் திருச்செங்கோட்டுக் கோவிலிற் புகுந்து கொள்ளையடித்துக் கொண்டு சென்றான். இவ்விளையா நாயக்கன் பெரும் படையுடன் சென்று அக்கொள்ளைக்காரனை மடக்கி அவன் கொள்ளையிட்ட பொருள்களையெல்லாம் மீட்டுக்கொண்டு வந்தான்.

**ஆனந்தநாதர்** - இவர் புதுச்சேரியில் வாழ்ந்திருந்தவர். சிறந்த வள்ளல். சரவணப் பெருமாட் கவிராயர் புதுச்சேரிக்குச் சென்ற போது அவரைப் பாராட்டிப் போற்றியதோடு அவரைக் கொண்டு அவதானஞ் செய்யச் செய்து அவர்க்குப் பல வகையான பரிசுகள் வழங்கியவர். கவிராயர் இவரைத் தம் முடைய பாட்டிலே புகழ்ந்து பாடியிருக்கிறார்.

**ஆனைமடு** - கானையார் கோயில் என்னும் திருக்கானப்பேரூரில் உள்ள ஒரு பெரிய தடாகம். இந்திரனுடைய வெள்ளையானை திருக்கைலைக்குச் சென்ற பொழுது திருநந்திதேவருடைய வாலைப்பிடித்து இழுக்க நந்திதேவர் இந்திரனுடைய வெள்ளையானை காட்டானையாகுமாறு சாபங்கொடுத்தார். காட்டானையாகித் திரிந்த வெள்ளையானை கானப்பேரையடைந்து தன்கோட்டால் குத்திக்குத்தி ஒருபெரியமடுவை உண்டாக்கியது. ஆனையினால் உண்டாக்கப்பட்ட அம்மடு இவ்வாறு ஆனைமடு என்னும் பெயரையடைந்தது.

**இக்குவாகு**-இவன் மனுவினுடைய பேரன். இச்சுஎன்பவனுடைய மகன். இவன் நான்முகனை நோக்கித்தவஞ் செய்து உயரிய பதவிகளைப் பெற்றான். வாகுவலயம் என்னுஞ் சிறந்த தோளணிஇவனிடம் பொருந்தியிருந்தது. இவனுடைய மனைவியின் பெயர் அலம்புசை. விசாலன், விகுச்சி, நிமி யென்னும்பெயர்களையுடையபுதல்வர்கள் இவனுக்கிருந்தனர்.சுமுகன் நரபாலன், சுசீலன் என்போர் இவனுக்கு அமைச்சர்களாக அமைந்திருந்தார்கள். இவனுடைய அரசாட்சியை வசிட்டர்,போதாயனர் முதலிய முனிவர்களும் வியந்து புகழ்ந்தனர். திருமாலைத் திருவரங்கன் என்னும் பெயரோடு நிலவுலகிற் கொண்டு வந்தவனும் இவனே. இவனைக்கம்பர், "பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி, மணியரங்க நெடுமுடியாய்மலரயனைவழிபட்டுப், பணியரங்கப் பெரும்பாயல் பரஞ்சுடரை யாங்காண, அணியரங்கந் தந்தானை அறியாதார் அறியாதார்" என்றுபாராட்டிப் பாடியுள்ளார்.

**இசைச்சன்** - இவன் உதயணனுடைய பார்ப்பன நண்பன். அவனுடைய அமைச்சனாகவுங் கூறப்பெறுவான். இளமையில் தாய் தந்தையரையிழந்தான். வாசவதத்தையையும் யூகியையும் இழந்தபடியினால் மிகுந்த கவலை கொண்டு மெலிந்த உதயணனைப் பார்த்து "இறந்த வாசவதத்தை பிறந்த இடத்தை யறிந்து பழைய

உடலோடு அவனைத் தருதற்குரிய மந்திரவித்தையில் வல்லவராகிய பெரியவர் ஒருவர் இராசகிரிநகரின் பக்கத்திலேயிருக்கின்றார். அவரையடைந்து வழிபட்டால் வாசவதத்தையையும் யூகியையும் நாம் பெற்று வருதல் எளிது'' என்று கூறி அவனைத் தெளிவித்து வேறு வடிவங் கொள்ளச் செய்து பிற தோழர்களோடு அந்நகரத்திற்கு அழைத்துச் சென்றான். சென்ற விடத்திற் காமன் கோட்டத்தின் வாயிலிற் காணப்பட்டபதுமாபதி தன்னை விரும்பினாளென்று வேட்கையுற்ற உதயணனுக்கு மகத நாட்டு மகளிருடைய நிறையுடைமையைக் கூறி அவனுடைய காமவேகத்தைத் தணிவித்தான். அவன் பதுமாபதியின் கன்னிமாடத்தில் வேற்று வடிவங் கொண்டு மறைந்திருந்த காலத்தில் பிறதோழர்களோடு தானும் வேற்று வடிவங் கொண்டு வேறிடத்திலிருந்து அவனைப் பாதுகாத்து வந்தான். தருசகனோடு பெரும்போர் புரியவந்த பகைவர்களோடு போர் செய்தற்குச் சென்ற உதயணனுக்குத் துணையாகச் சென்றான். 'பதுமாபதியை நீ மணஞ் செய்து கொள்ள வேண்டு' மென்று தருசகன் உதயணனை வற்புறுத்திய பொழுது முதலில் ஆப்பியாயினி என்பவளை மணஞ்செய்து கொண்டவன். மிகுந்த வருவாய் உடையபல ஊர்களை உதயணன் பால் நன்கொடையாகப்பெற்றவன். இவனுடைய நல்லியற்கையைப் பலரும் பாராட்டியுள்ளனர்.

**இடபதீர்த்தங்கரர்** - இவர்சைன தீர்த்தங்கரரில் முதல்வர். இவர் இத்தீர்த்தங்கரராதற்கு முன் பத்துப்பிறவிகள் எடுத்தார். இவருக்குத்தாய் மருதேவி; தந்தை நாபிம்காராசா; இவர் கருவையடைந்தவுடன் தாய் பதினாறுகனுக்கண்டனள். இவர் பிறந்தவுடன் தேவர்கள் இவரைத் தாய் தந்தையரறியாது எடுத்துக் கொண்டு போய் மேருமலை முடியிலுள்ள பாண்டுக சிலையில் வைத்துப் பாற்கடல் நீரால் திருமுழுக்குச் செய்து மீளவுந் தந்தையிடங் கொண்டு வந்து விட்டனர். இவருக்கு மனைவியர் இருவர். அவர்களுடையபெயர் எசசுதி, சுநந்தையென்பன. எசசுதிக்குத் தொண்ணூற்றொன்பது ஆண் மக்களும் பிராமி யென்னும் பெண்மகளும் பிறந்தனர். சுநந்தைக்குப் பாகுபலி யென்னும் ஒரு குமாரனும் சுந்தரி யென்னும் ஒருபெண்ணும் பிறந்தனர். இவர் சில காலம் அரசு செய்த பிறகு தீக்கை பெற்றுத் தீர்த்தங்கரரானார்.

**இடபாசுரன்**-திருமால் ஒரு காலத்தில் வேட்டைக்குச் சென்றார். அப்போது இவன் திருமாலையெதிர்த்தான். திருமால் ஆழிப்படையைச் செலுத்தினார். வேட்டைக்கு வந்துள்ளவர் மாலெனவுணர்ந்த அசுரன் அவரைப் போற்றி வணங்கினான். தான் வாழ்ந்து வரும் மலை தன் பெயரால் வழங்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். திருமாலும் அவ்வாறே யருள்புரிந்தார். அது முதல் அவனிருந்த மலை இடபமலை யென்று பெயர் பெற்றது.

**இடவகன்**-இப்பெயரை இடபகன் எனவும் கூறுப. இவன் உதயணனுடைய அமைச்சர்களில் ஒருவன். அவனுடைய உயிர்த்தோழன். உதயணனுக்கு எத்தகைய இடையூறும் நேராதபடி கண்ணையிமை காப்பது போல் அவனைக் காத்துக் கொண்டிருந்தான்,

உதயணனையும் வாசவதத்தையையும் புளிஞர்களும் சவரர்களும் வளைத்துக் கொண்டு போரிட்ட பொழுது இவன் படைகளோடு விரைந்து சென்று உதயணனுக்கு உதவி செய்து அவர்களிடமிருந்து மீட்டான். தருசகன் பொருட்டுப் பகைவரோடு போர் செய்தற்கு உதயணன் சென்ற பொழுது அவனுக்குத் துணையாகப் பல வீரர்களோடு சென்று போர் செய்து வெற்றியடையுமாறுசெய்தான்.ஆருணியரசனைக் கொன்று கோசாம்பியைக் கைப்பற்றுதற்கு வருடகாரனுடன் ஆராய்ந்து பல உதவிகளைச் செய்தான். உதயணனிடமிருந்து இவன் பல நாடுகளை நன்கொடையாகப் பெற்ருன். புட்பகம் என்னும் ஊரைத் தலைநகராகக்கொண்டு அரசாட்சி செய்தான். உதயணன் விரும்பிய போதெல்லாம் அவனுடைய உதவிக்குச் சென்ருன். பலநாடுகளையும் எளிதிற் பார்த்து வருவதற்கு வாசவதத்தையோடு உதயணன் ஏறிச் சென்ற விமானத்தில் உடன் சென்றவர்களில் இவனும் ஒருவன்.

**இடிசிகன்** - இவன் சராசந்தனுக்கு நண்பன். அம்சன் என்பவனும் இவர்கட்குத் துணைவனுவான். இவர்கள் மூவருமே படைக்கலங்களால் இறவா வரம் பெற்றிருந்தனர். இடிசிகனும் அம்சனும் கண்ணனோடு போர் செய்தார்கள். அப்பொழுது அம்சன் இறந்தான் என்று ஒலியுண்டாகியது. இவ்வொலியைக் கேட்டு இடிசிகன் இறந்தான். இடிசிகன் இறந்தான் என்னுஞ் செய்தியைக் கேட்டு அம்சனும் இறந்தான்.

**இடும்பன்** - இவன் அசுரர் குலத்திற்குத் தலைவன். சூரபன்மன் முதலியவர்கட்கு வில்வித்தை கற்பித்தவன். சூரபன்மன் அழிந்த பிறகு தன்மனைவியாகிய இடும்பியோடு பல விடங்களினுஞ் சுற்றிக் கொண்டு இறுதியிற் பொதிய மலைக்கு வந்தான். அங்கிருந்த அகத்தியரைக் கண்டு வணங்கினன். அவர் இடும்பனைப் பார்த்து, "திருக்கேதாரத்திற்குப் பக்கத்தில் உள்ள பூர்ச்சவனத்திலே சக்தி சிகரம், சிவசிகரம் என்று இருமலைகள் உள்ளன. அவைகளை இவ்விடத்திற்குக் கொண்டு வருவாயானல் உனக்கு எல்லாவகையான நன்மைகளும் உண்டாகும்" என்று கூறியதோடு முருகப் பெருமானுடைய மூல மந்திரத்தையும் உரைத்தருளினர்.இடும்பன் வடநாட்டிற்குப் போய் அகத்தியர் கூறிய இரண்டு மலைகளையுங் காவடியாகத் தூக்கிக் கொண்டு வந்தான். இடையில் பழநியை அடைந்த போது முருகனருட்டிறத்தால் இடும்பனுக்குக் காவடி கனமாகியது. இடும்பன் காவடியை இறக்கிவைத்து விட்டுத் தனக்குண்டாகிய களைப்பைப் போக்கிக்கொண்டு பிறகு மலைக் காவடியைத் தூக்கத் தொடங்கினன். முருகன் திருவருளால் மலைக் காவடிகளைத் திரும்பத் தூக்க முடியவில்லை. என்ன காரணம் என்று மலையின் முடியைப் பார்த்தான். அங்கே முருகக் கடவுள் அழகிய திருக்கோலத்தோடு நின்று கொண்டிருத்தலைக் கண்டான். "மலையை விட்டுக் கீழே இறங்குவாயாக" என்று கூறி அதட்டினன். முருகக்கடவுள் இறங்கமறுத்தார். "உனக்கு ஆற்றலுள தாயின் மலைகளைத் தூக்கிக் கொண்டு செல்வாயாக" என்று கூறினர். இடும்பன் சினந்து

முருகன் மேற்பாய்ந்தான். வேற்படை அவனைக் கொன்றது. இடும்பி முருகனை வேண்டிக் கொண்டாள். முருகன் அருளால் இடும்பன் உயிர் பெற்றெழுந்தான். முருகக் கடவுளுக்கு அடிமையானான்.

**இடும்பாசுரன்** - ஆனை முகக் கடவுள் தோன்றியவிடத்தில் மலையுருக் கொண்டிருந்து ஆனை முகக்கடவுளுடைய பெரு மூச்சால் இறந்தவன்.

**இடும்பி** - இடும்பனோடு கூடப் பிறந்தவள். அரக்க குலத்தினள். பாண்டவர்கள் அரக்கு மாளிகையிலிருந்து உயிர் பிழைத்து வந்து இடும்பனுடைய வனத்திலிருந்தனர். அப்போது இடும்பன்வீமனோடு போர் செய்து மாண்டான். இடும்பி வீமனுடைய பேராற்றலை யெண்ணி அவனிடங் காதல் கொண்டாள். வீமன் தன்னுடைய தாயின் உடன் பாட்டையும் உடன் பிறந்தார்களுடைய உடன் பாட்டையும் பெற்று இடும்பியைத் திருமணஞ் செய்து கொண்டான். இவர்களிருவருக்குங் கடோற்கசன் பிள்ளையாகப் பிறந்தான். இடும்பிக்குக் கமலக்கன்னியெனவும் பெயருண்டு. காலக் கணிதத்தில் வல்லவள்.

**இடைக்காடர்** - இவரை இடைக்காட்டுச் சித்தர் எனவும் வழங்குவர். இவர் திருமாலின் ஒரு கூறாக உலகில் தோன்றியவர் என்பது சிலருடைய கொள்கை. இவர் தொண்டை வளநாட்டில் இடையன் திட்டு என்னும் ஊரில் இடையர்கள் குலத்தில் தோன்றியவர். இவர் பல விடங்களினுஞ் சுற்றிப் பாண்டி நாட்டை யடைந்து அவ்விடமே தங்கியிருந்தார். ஆடுகள் பலவற்றைத் திரட்டி ஆடுமேய்க்குந் தொழிலில் ஈடுபட்டிருந்தார். சித்தர்களில் ஒருவர் ஒருநாள் இவரிடம் வந்து பால் கேட்டார். இவர் பால் கொடுத்து அவரைப் போற்றிப் பாராட்டினார். அதனால் மனமகிழ்ந்த சித்தர் இடைக்காடருக்குஞானோபதேசஞ் செய்து சென்றார். அது முதல் இடைக்காடர் தெய்வத் தன்மை அமையப் பெற்றவராய்ச் சிறந்து விளங்கினார். ஒருகாலத்தில் மழைபெய்யாமல் பெரும் பஞ்சத்திற்குள் உலகம் அகப்படும் என்பதை இவர் தம்முடைய மெய்யறிவுப் பார்வையால் உணர்ந்தார். தம்முடைய ஆடுகளுக்கு எருக்கிலை முதலியவைகளை உண்ணக் கொடுத்துப் பழக்கினார். வரகில் ஒருவகை வரகு பன்னிரண்டு ஆண்டுகள் வரை கெடாமல் இருக்கும். இவர் அவ்வரகைத் தொகுத்து மண்ணோடு சேர்த்துச் சுவர் வைத்துக் குடிசையொன்றைக் கட்டினார்.

இடைக்காடர் எதிர் பார்த்தபடி பெரும் பஞ்சம் உண்டாகியது. உயிர்த்தொகைகள் பெரும்பான்மையும் மாண்டொழிந்தன. புல்பூண்டுகளும் அற்றுப் போயின. எருக்கிலை முதலியவை அழிந்தொழியாமல் இருந்தன. இடைக்காடருடைய ஆடுகள் எருக்கிலையைத் தின்று உயிர் வாழ்ந்தன. எருக்கிலையால் ஏற்படுந்தினவைப் போக்கிக் கொள்வதற்கு ஆடுகள் சுவரில் தேய்க்கும்; அப்பொழுது உதிரும் வரகைத் திரட்டி ஆட்டின் பாலில் காய்ச்சி உண்டு இடைக்காடர் உயிர் வாழ்ந்து வந்தார்.

பெரும் பஞ்சத்தால் உயிர்த் தொகைகளெல்லாம் அழிந்தொழிய இடைக்காடரும் இவருடைய ஆடுகளும் உயிர் வாழ்ந்திருத்தலை அறிந்த

ஒன்பது வகைக் கோள்களும் வியப்படைந்து இவரிடம் வந்தன. இவர் கோள்களை எதிர் கொண்டு போற்றினார். ஆட்டின் பாலில் வரகைச் சமைத்து விருந்தினருக்கிட்டார். கோள்கள் உண்டு மயக்கத்தால் உறங்கின. அப்பொழுது சித்தர் ஒன்றுடன் ஒன்று மாறுபட்டு உலகத்தை வருத்திய கோள்களை மழை பெய்வதற்கு வேண்டியபடி அமைத்தார். உடனே நல்ல மழை பெய்தது. கோள்கள் விழித்துத் தம்முடைய இருப்பிடத்தை யடைந்தன.

இவர் நெடுங்காலம் உலகில் வாழ்ந்திருந்தார். வருடாதி நூல் முதலிய காலக்கணித நூல்களையும் சில மருத்துவ நூல்களையும் இயற்றினார். அறிவினால் தருக்கியிருந்த சங்கப் புலவர்கள் ஏகசந்தக்கிராகி துவிசந்தக் கிராகி என்பவர்களைக்கொண்டு புலவர்கள் நூல்களை யெல்லாம் பழையன வெனப்புறக்கணித்து வந்ததை இவர் ஊசிமுறி சங்கப்பாட்டு என்னும் நூலை இயற்றித் தோற்கடித்தார். இவரைப் பாண்டியன் மதித்துப் போற்றாதிருந்த காரணத்தால் மதுரைக் கடவுளும் வேறு இடம் சென்றதும் பிறகு இவருடைய பிணக்குத் தீர்ந்ததும் திருவிளையாடற் புராணத்தில் பெறப்படும்.

**இடைச்சுரம்** - தொண்டை நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. பலமலைகளுக்கு இடையிலே கற்சுரமாகிய காட்டின் பகுதியில் இருப்பதால் இவ்வாறு பெயர் பெற்றது. காட்டுவிலங்குகள் திரிதல் இன்றுங்காணப்பெறும் என்பர். சுவாமியின் பெயர் இடைச்சுரநாதர். செங்கற்பட்டுக்குக் கிழக்குப்பக்கத்தில் உள்ளது.

**இடைஞானி** - கொங்குவளநாட்டில் ஆம்பிராநதியின் தென்கரை நாட்டுக்கொற்றவனூரில் முன்காலத்தில் இடையன் ஒருவன் வாழ்ந்திருந்தான். அவனுடையமகன்ஆநிரைமேய்க்கச் சென்றான். இடையன் தன்னுடைய மகனைப் பார்த்து, "ஊதியூர் மலைமேற் கொடிய விலங்கினங்களிருப்பதால் அங்குச் செல்ல வேண்டா" மென்று முன்னறிவிப்புக் கொடுத்திருந்தான். ஒரு நாள் சிறுவன் மாலை நேரத்தில் ஆடுகள் சென்ற வழியே சென்றான். பொழுது போய் விட்டது. இரவில் காட்டிலேயே தங்கினான். மறுநாட் காலையில் நிலத்திற் பதிந்து காணப்பட்ட ஒரு கல்லின் மேல் ஒரு கொட்டையை வைத்து மற்றொரு கல்லினால் அதனையுடைத்தான். அடிக்கல்லில் இருந்து இரத்தம் பெருகியது. அடிக்கல்லாக விளங்கியது ஒரு சிவலிங்கம்; அதனைப் பிடித்துக் கொண்டு செயலற்றிருந்தான். முதனாள் மாலையில் மகன் வீட்டிற்கு வந்து சேராததைக் கண்ட தந்தை மகனைத் தேடிக் கொண்டு சென்றான். மகனிருக்கும் நிலைமையைக் கண்டு உள்ளம் வருந்தினான். தெய்வச் செயல் என்று உள்ளந்தேறினான். அந்த இடத்தில் பந்தல் முதலியன அமைத்துச் சிவலிங்கத்திற்குவழிபாடு செய்யத் தொடங்கினான். வழிபாடு தொடர்ந்து நடைபெற்றது. தந்தை இறைவனடியைச் சேர்ந்தான். மகன் திருநீறு சிவகண்மணி முதலியன புனைந்து திருவைந் தெழுத்தோதிப் பணிவிடை செய்து கொண்டிருந்தான். சிவ

பெருமான் திருவருள் சுரந்து சிறுவனுக்குச் சிவஞானத்தைப் புகட்டினர். அதுமுதல் அவனுடைய பெயர் இடைஞானி என்று வழங்கலாகியது. கொற்றவனூர்த் திருக்கோயிலில் இடைஞானியின் உருவச் சிலை உளதென்பர். இடையனுக விருந்தவன் ஞானியானமையின் இடைஞானி எனப் பெற்ருன்.

**இடையாலத்து முதலியார்** - இவர் தொண்டைவள நாட்டில் இடையாலம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார்; சிறந்த வள்ளல். புலவர்களைப் பாராட்டிப் போற்றிப் புகழ் பெற்ருர். இவருடைய வள்ளன்மையைப் புலவர்கள் புகழ்ந்து பாராட்டியுள்ளனர்.

**இணையாரமார்பன்** - இவன் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப முதலியாருடைய தம்பி. சோழ மன்னன் கம்பர் மீது வெறுப்புற்றிருந்த காலத்தில் கம்பர் பாண்டிய நாட்டையடைந்து பாண்டியமன்னனிடந் தங்கியிருந்தார். கம்பரை அழைத்துக் கொண்டு வருதற்குத் தகுதியானவன் இவனே என்று எண்ணிய சோழன் இவனைப் பாண்டி நாட்டிற்கு அனுப்பிவைத்தான். இவனைக் கண்ட பாண்டியன் "இவன் யாவன்?" என்று உசாவினுன். அப்பொழுது கம்பர், "என்னுடைய தம்பி சரராம னுக்கிளையான், கன்னன் மதயானைக் கண்டன்மகன்-துன்னு, பணையார் நீர் வேலிப் பழனஞ்சூழ் சோணுட், டிணையார மார்பன் இவன்" என்னுஞ் செய்யுளைப் பாடினுர்.

**இதிகாசம்** - இராமாயண மகாபாரதங்கட்கு இதிகாசம் என்று பெயர். புராணங்கள் கடவுளர்களைப் பற்றிய கதைகளையும் வரலாறுகளையும் கூறுவதைப் போல் இதிகாசங்கள் பழங் காலத்தில் மனிதர்களிடம் நிகழ்ந்த செய்திகளை விரித்துரைக்கின்றன. நளன், சிபி முதலியோருடைய செய்திகளைக் கூறும் நூல்களும் இதிகாசத்தின் பாற்பட்டனவே யாகும்.

**இதோபதேசம்** - இதோபதேசம் எனின் நன்மை பயக்கும் நல்லுரைகள் என்று பொருள். பஞ்சதந்திரக் கதைகளில் இருந்து நீதி புகட்டுங் கதைகள் பலவற்றை எடுத்துத் தொகுத்துள்ள வடமொழி நூலுக்கு இதோபதேசம் என்று பெயர்.

**இந்தியா** - இமயமலைக்குத்தெற்கிலும் இந்துமகா சமுத்திரத்திற்கு வடக்கிலும் உள்ள நமது பரதகண்டம் இந்தியாவென்னும் பெயரால் குறிக்கப்படுகிறது. இந்நாட்டில் முன்னுளில் வேறு மதத்தவர் எவருமில்லாமல் இந்து மதத்தவரே நிறைந்திருந்தனர். அதனுல் இந்நாட்டைக் கண்ட பிற நாட்டினர் இந்நாட்டிற்கு இந்தியா வென்று பெயர் சூட்டினர். முகமதியர்கள் அரேபியா முதலிய வெளி நாடுகளில் இருந்து பிற்காலத்தில் குடியேறினர். பெளத்தம் முதலிய சமயங்கள் அண்மைக் காலத்தில் தோன்றின. பெரும்பான்மையான மக்கள் இந்துக்களேயாதலால் இந்தியா என்னும் பெயரே என்றும் ஓங்கி நிற்கிறது.

**இந்திரசித்து** - இவன் இராவணனுடைய மகன். இந்திரனையும் வென்றபடியால் இந்திரசித்து என்னும் பெயரையடைந்தான். பிறந்தவுடன் மேகம் போல் முழங்கியபடியால் மேகநாதன் என்னும் பெயரும் இவனுக்குண்டு. இவன் சிவபிரானை

நோக்கிப் பெருந் தவஞ்செய்து எங்குஞ் சுற்றித்திரியக்கூடிய தேரையும் மறைந்து நின்று போர் செய்யத்தக்க மாயத் தன்மையையும் மற்றும் பல சிறப்புக்களையும் பெற்றிருந் தான். மாயங்கள் செய்வதில் கைதேர்ந்தவன். இவனுக்கு இராவணி எனவும் ஒருபெயர் உண்டு. பதினன்கு ஆண்டுகள் உணவும் உறக்கமும் இல்லாத வர்களால் இறக்க வேண்டும் என்று வரம் பெற்றிருந்தான். அனுமானை நான்முகக் கணை யால் பிணித்துத் தன்னுடைய தந்தைக்கு முன் கொண்டு சென்றவன். இராமாயணப் போரில் பெரும் பங்கு கொண்டான். இறுதியில் இலக்குமணரோடு போர் செய்து பாதிப்பிறை முகக்கணை யால் மாண்டொழிந்தான். இவனுடைய உடலை இராவணன் தைலத்தில் போட்டுவைத்தான். இலக் குமணன் இராமன் காட்டு வாழ்க்கையை மேற் கொண்ட பிறகு உறக்கமில்லாமலும் சரியான உணவில்லாமலும் இராமனைக் காத்துத் திரிந்த படியால் இந்திரசித்தின் சாவுக்குக் காரணஞனன்.

**இந்திரப்பிரத்தம்**-இந்திரனுடைய கட்டளையால் விசுவகருமனல் அமைக்கப்பட்ட பட்டணம். இது பாண்டவர்கட்கு இருப் பிடமாக இருந்தது. இதற்குக் காண்டவப் பிரத்தமெனவும் பெயர் உண்டு. இது டில்லிக்கு அண்மையில் உள்ளது.

**இந்திரவிகாரம்** - இது முன் ஞளில் காவிரிப்பூம்பட்டினத் தில் இருந்தது. இதனைக் கட்டி யவன் மகேந்திரன் என்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணு கின்றனர். இது பௌத்தசமய வளர்ச்சியின் பொருட்டுக் கட்டப் பட்டதாகக் கருதப்படு கின்றது.

**இந்திரவிகாரம் ஏழு** - காவிரிப்பூம் பட்டினத்துள்ள புத்தாலயத் தில் இந்திரனல் அமைக்கப் பட்ட ஏழரங்குகள். புத்த சங்கத்தார் இருப்பதற்கு இவை இடமாக இருந்தன. சாரணர் கள் இவைகளில் அமர்ந்து பௌத்த சமய நூல்களை மக்கட்கு அறிவுறுத்திஞர்கள்.

**இந்திரவிழா** - அகத்திய முனிவர் கட்டளைப்படி தூங்கெயி லெறிந்த தொடித்தோட்செம்பி யன் என்னும் அரசனல் தொடங்கப் பட்டு ஆண்டு தோறும் காவிரிப்பூம்பட்டினத் தில் சோழ வழிமுறையினரால் இந்திரனுக்கு நடத்தப்பட்டு வந்த திருவிழா. இதனை நெடு முடிக்கிள்ளி என்னும் அரசன் செய்யாதொழிந்த படியினலே தான் காவிரிப்பூம்பட்டினம் கடலாற் கொள்ளப்பட்டது. இஃது ஆயிரங்கண்ணேன்விழா வெனவும், இந்திர கோடணை எனவும், இந்திரகோடணை விழாவெனவும், தீவகச்சாந்தி எனவுங் கூறப்பட்டன.

**இந்திரன்** - இவன் தேவர்களுக்கு அரசன். காசியபமுனிவருக்கு அதிதிதேவியிடம் பிறந்தவன். இவனுடைய தலைநகர் அமரா வதி. இவனுடைய படைக்கலம் வச்சிரம். இவனுடைய மனைவி இந்திராணி. இவனுடைய ஊர்தி ஐராவதம் என்னும் வெள்ளையானை. குதிரை உச்சைச் சிரவம் என்னும் வெள்ளைக் குதிரை. இவ னுடைய அவையின் பெயர் சுதர்மை. ஐந்து தருக்கள் இவ னுக்குரியன. இவனுடைய மகன் சயந்தன். இவன் நூறு குதிரை வேள்விகளைச் செய்து இந்திர பதவியை அடைந்தான்.

கிழக்குத் திக்கிற்கு இவன் திக்குப்பாலகன்.

இவன் துருவாசருடைய சாபத்தால் தன்னுடைய செல்வங்களையெல்லாம்கடலில் இழந்து பிறகு கடல் கடையும் போது அச்செல்வங்களை அடைந்தான். ஒரு முறை பிரகஸ்பதியாகியகுரு அவைக்கு வந்த போது அவரைப்போற்றாதிருந்தபடியால் பலவகையான தொல்லைகளுக்கு உள்ளானன். மலைகள் சிறகுகளைப் பெற்று நகரங்களின் மீது பறந்தமர்ந்து நகரங்களை அழித்த போது இவன் அம்மலைகளின் சிறகையரிந்தான். அகலிகையிடத்தில் மையல் கொண்டு அவளை வஞ்சகமாகச் சேர்ந்து சாபம்பெற்றான்.அகத்தியரிடம் இருந்து காவிரியைப் பெற்றுத் தன்னுடைய பூஞ்சோலையைப் பாதுகாத்தான். முசுகுந்தன் உதவியால் வலனைக் கொன்று தான்திருமாலிடம் பெற்று வழி பட்டு வந்த சோமாஸ்கந்த மூர்த்தியை அவன் கேட்கக் கொடுக்க மனமில்லாது வேறு ஆறு மூர்த்திகளைச் செய்து கொடுக்கவும் அவன் மறுத்தது கண்டு பிறகு உண்மையான மூர்த்தத்தையே கொடுத்தான். துருவாசர் தந்த மலரை யானையின்மீது வைத்து அவருடைய சினத்திற்கு ஆளாகிப் பல அல்லல்களையடைந்தான். இவனைப் பற்றிய விரிவான செய்திகள் புராணங்களிலும் இதிகாசங்களிலும் காணப்படும்.

**இந்திராணி** - பாற் கடலிற் பிறந்து இந்திரனைமணந்தவள். சிவபிரானிடம் சூரன் முதலியோருடைய துன்பத்தைக் குறித்துமுறையிடச்சென்றஇந்திரன் இவளுடைய தனிமைக்கு அஞ்சி மகாசாத்தாவைக் காவல் வைத்துச் சென்றான். இவள் தன்னுடைய கணவன் விரைந்து வரும் பொருட்டுத் தவஞ்செய்து கொண்டிருந்தாள். இவளை அசமுகி என்னும் அரக்கி கண்டு தமையன் சூரனிடங் கொண்டு போய்ச் சேர்க்கவேண்டு மென்று இவளுடைய கையைப்பற்றி இழுத்தாள்.மகாகாளர் அசமுகியின் கையை வெட்டி இந்திராணியை விடுவித்தார்.

**இந்தீவராட்சன்**-இவன் கந்தர்வர்களில் ஒருவன். நளநாபன் என்பவனுடையமகன். வரூதினிக்கு இளவல். இவன் ஓர் இருடியை அடைந்து ஆயுள்வேதத்தை நன்கு கற்றுணர்ந்தான். பிறகு அவ்விருடியை இகழ்ந்தான். அதனால் சாபமடைந்து அரக்கனானன்.

**இமயமலை** - உலகிலுள்ள மலைகளிலெல்லாம் பெரியமலை. இஃது இந்திய நாடாகியபரதகண்டத்தின் வடக்கு எல்லையாக அமைந்துள்ளது. இம்மலையை மலையரசன் என்பர். இம்மலையிற் பல முனிவர்களும் சித்தர்களும் வசிக்கிறார்கள். சேரன் செங்குட்டுவன் பத்தினிக்கடவுளாகியகண்ணகியின் சிலையமைக்கும் பொருட்டு இம்மலையில் இருந்து கல்லெடுத்தான். திருக்கேதாரம் பத்ரிநாராயணம் முதலிய தலங்கள் இம்மலையில் இருப்பதோடு பூலோக கைலாயமும் இம்மலையில் அமைந்துள்ளது. சென்ற பல ஆண்டுகளாகப் பூலோக கைலாயத்திற்கு மக்கள் பயணஞ் சென்று மலையை வலஞ் செய்து வணங்கித் திரும்புகிறார்கள்.

**இமயவரம்பன்நெடுஞ்சேரலாதன்**- சேரமன்னர்களில் ஒருவன்; இவன் வட நாட்டரசர்களை வென்று இமயமலையில் தன்

குலத்து முத்திரையாகிய விற் பொறியைப் பொறித்தபடியி னால் இப்பெயர் பெற்றான்.

**இமவான்** - இமயமலைக்கு அரசன். மேருமலை மன்னனுக்கு உறவி னன். இவன் மேனை என்பவளை மணந்தான். கங்கையும் உமா தேவியும் இவர்கட்குப் பெண் களாகத் தோன்றினார்கள்.

**இம்முடிச் சோழியாண்டான்** - இவன் கொங்குவள நாட்டில் வட பரிசார நாட்டுப் பால வேளாளரில் தோன்றினான். அவிநாசியப்பருடைய கொடி மண்டபம் முதலிய திருப் பணிகள் செய்தான். இவன் மங்கலத்துக்கு அண்மையில் நொய்யலாற்றில் அணை யொன்று கட்டினான். நிற்க வில்லை. அடிக்கடி உடையலா யிற்று. ஒரு சிறுமி மீது ஆவே சம் வந்தது. ஒரு தலைக்கன்னி கையைப் பலி கொடுத்தால் அணை உடையாது நிற்கும் என்றது. பல காலம் பல உயிர்கள் பிழைப்பதற்காக ஒரு பெண்ணைப் பலி கொடுப்பது அரிதோ என்று உறுதி கொண்டு தன்னுடைய அருமை யான கன்னிகையைப் பலி கொடுத்துக் கட்டினான். அணை நின்றது.அதனால்அவன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். இவனு டைய கல்வெட்டு அவிநாசியி லும் முகுந்தை என்னுங் குரக்குத் தளியிலுமிருக்கிறது.

**இயக்கர்**-பதினெண் கணங்களுள் ஒருவகையினர். நான்முகன் படைப்பில்உண்டானவர்களுள் நான்முகனைப் பட்சிக்க வேண்டு மென்றவர்இராக்கதர் எனவும், இரட்சிக்க வேண்டு மென்றவர் இயக்கர் எனவும் பெயர் பெற்றனராம். இயக்கர் குபேர னுடைய கணங்கள்.

**இயமன்** - இவன் கதிரவனுடைய மகன். யமுனையோடு இரட்டை யாகப் பிறந்தவன். தென் திசைக்கு இறைவன். இவனு டைய ஊர்தி எருமைக்கடா. படைக்கலம் தண்டு கயிறு முதலியன. உலகித்திலுள்ள உயிர்த்தொகைகளை வினைக்கும் வாணாள் முடிவுக்கும் ஏற்பக் கவர்பவன். காலன் சித்திரபுத் திரன் தூதர்கள் முதலியோர் இவனுடைய பணியாளர்கள். கரிய மலையைப் போன்ற வடிவ மும் பதினெட்டுக் கைகளும் பிறைத் திங்கள் போன்ற பற் களும் தீப்பொறி சிந்துகிறவிழி களும் உடையவன். தீவினை செய்து நிரயத்தை யடைபவர் இவன் முன்பு கொண்டு போய் நிறுத்தப் படுவர். நல்வினை யாளர்கள் இவனைக் காணார்.

இவன் சிவேதன்பொருட்டும் மார்க்கண்டர் பொருட்டுஞ் சிவ பெருமானுடைய சினத்துக் காளானான். சாவித்திரியின் கற்புடைமைக்கு மகிழ்ந்து அவளுடைய கணவன் சத்திய வான் உயிரைத் திருப்பித் தந்தான்.சிபிச்சக்கரவர்த்தியின் தன்மையை அறிய வல்லூறாய்ச் சென்றான். ஆணிமாண்டவியரு டைய சாபத்தால் இவனுடைய கூறு ஒன்று விதுரனாகப் பிறந்தது. இராவணன் திக்கு கள் தோறுந் திரிந்து கொண்டிருக்கையில் அவனு டன் எதிர்த்துப் போரிட்டான். தன்னுடைய படைக் கலங்களை யெல்லாம் இழந்து கடைசியில் தன்னுடைய கால தண்டத்தை ஏவத் தொடங்கினான். அத் தண்டம் சென்றால் உயிர் வாங்காமல் திரும்பாது என் பதை யுணர்ந்த நான்முகன் இவனுக்கு அறிவுரைகள்கூறித் தண்டத்தை ஏவாமல் தடுத் தான். அப்பிராப்தி, சாமளை, இரி என்பவர்கள் இவனுடைய மனைவியர்.

**இயசோதரை** - கௌதம புத்தரின் மனைவி.

**இயாங்கர்** - இவர் வேதகாலத்தின் முடிவில் வாழ்ந்திருந்தார். இவர் எழுதிய நிருக்தம் சொல்லிலக்கணத்திற்கும் பொருளிலக்கணத்திற்கும் சிறந்தது. இவர் கி.மு. ௫00 இல் வாழ்ந்தவர் என்பர்.

**இயேசு கிறித்து** - இவர் பாலஸ்தீனத்தின் தென் பகுதியிலுள்ள பெத்லகேம் என்னும் ஊரில் பிறந்து நாசரேத்து என்னும் பட்டணத்தில் வளர்ந்தவர். தந்தை, யோசேப்பு; தாய், கன்னி மரியாள். இவருடைய வாழ்க்கை வரலாற்றைக் கூறுவன விவிலிய நூலிலுள்ள நான்கு சுவிசேஷங்களும் அப்போஸ்தலர் நடபடிகளும் ஆம். கி. பி. 28 ஆம் ஆண்டையடுத்த காலத்தில் பாலஸ்தீன நாட்டில் யோவான் ஸ்நானகன் (John the Baptist) என்னும் தீர்க்கதரிசி ஒருவர் தோன்றி, யூதமக்கள் நீண்ட காலமாக எதிர்பார்த்த கடவுளுடைய இராச்சியம் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது என்று அறிவித்து மக்கள் உளம் திரும்புமாறு அறிவுரை நல்கினார். அவருடைய உரையைக் கேட்டவர்களுள் இயேசுவும் ஒருவர். இவருடைய அருள் மொழிகளும் வியத்தகு செயல்களும் மக்களிடையே பெருங் கிளர்ச்சியை உண்டாக்கின. இவர் பன்னிருவர் சீடர்களை நாடெங்கும் அனுப்பிக் கடவுளுடையஇராச்சியத்தைப் பற்றி விளக்கினார். மக்கள் இயேசுவையே அரசராக்க முயன்றார்கள். அதிகாரிகளும் சமயத் தலைவர்களும் வெறுத்தனர். செரியா நாட்டுக்குச் சென்று, கி. பி. 33 இல் தம் சீடர்களுடன் எருசலேமுக்கு வெற்றி மிடுக்குடன் மீண்டு வந்து தேவாலயத்தைத் தம் வயப்படுத்தி மக்களுக்கு மெய்யறிவுரை நல்கினார். சமயத் தலைவர்கள் இவரை வஞ்சகமாகச் சிறை செய்தனர். யூதர் நீதிமன்றத்தில் குற்றவாளியென்று கொடுமையான தீர்ப்பளித்துச்சிலுவையில்அறையப் பட்டார். பிற்காலக் கிறித்தவர்களும் இவருடன் வாழ்ந்த மக்களும் இவரிடம் ஒரு தனி ஆன்ம ஒளியைக் கண்டனர். இவருடைய வாழ்க்கை அற்புதத்தில் தொடங்கி அற்புதத்தில் முடிந்ததாகும்.

**இயோக லட்சுமி** - அட்டலட்சுமிகளில் தைரியலட்சுமியை நீக்கி யோகலட்சுமி என்று கூறுவதும் உண்டு. இரண்டுகைகளில் தாமரைமலர்களிருக்கும். ஒருகை சின்முத்திரையாகவும் ஒருகை அபயமாகவும் விளங்கும். இவளைப் போற்றுவோர் யோக வாழ்வு பெறுவர்.

**இரகுகுணன்** - சவ்வீர நாட்டில் அரசாட்சி செய்துகொண்டிருந்தவன். இவனுடைய பல்லக்குச் சுமப்போர் சடபரதரைப் பிடித்துப் பல்லக்குச் சுமக்கச் செய்தபடியால் உண்மையை உணர்ந்த இவன் அவரிடம் அருளுரை பெற்றான்.

**இரகுநாத நாயுடுகாரு**-அச்சுதப்ப நாயுடு என்பவனுக்குப் பிறகு தஞ்சை மாநகருக்கு அரசனாகவிருந்தவன். இவன் கல்வியில் மிகுந்த பற்றுடையவன். இவன் முடிசூடிய காலத்தில் தன்னிறைக்குத் தக்க பொன்னை நிறுத்து அதனை அந்தணர்கட்குத் தானமாக வழங்கியதோடு மேலும் பலவகையான அறங்களைச் செய்தான். திருக்குடந்தை, விசயராகவபுரம், சீரங்கம்,இராமசேது முதலான இடங்களில் திருமால் கோயில்

முதலியவைகளைக் கட்டினான். உணவிடும் அறச்சாலை ஒன்று அமைத்து அதில் நாள்தோறும் பலருக்கு உணவிட்டு வந்தான். பாண்டியனும் வேறொருமன்னனுஞ் சேர்ந்து காவிரியாற்றின் கல்லணையை உடைத்து விட்டனர். இதனாற் சினமடைந்த இவன் பாண்டியன் மீது படையெடுத்துச்சென்று போரிட்டுத் தோற்கடித்தான். பாண்டியன் அஞ்சித் தன்னுடைய மகளை இவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். சிறந்த அறிவாளியாகத் திகழ்ந்த இவன் பல புலவர்களை ஆதரித்தான். இவன் கி. பி. 1614முதல் 1630 வரையில் அரசாண்டதாகத் தெரிகிறது.

**இரகுநாதன்** - கட்டபொம்முவினுடைய வழிமுறையில் பதினேழாவதாகப் பட்டத்திற்குவந்தவன். கல்வியில் கருத்தைச்செலுத்தி நன்கு கற்றுத் தேறியவன். புலவர்களைப் பாராட்டிப் போற்றினான். பன்னிரண்டு ஆண்டுகள் பாஞ்சாலன் குறிச்சியை ஆட்சி செய்தான். இவனுக்குச் சிவத்தையா, செகவீர பொம்மு என்று இரண்டு புதல்வர்கள் தோன்றினார்கள்.

**இரகுவீரணன்** - கட்டபொம்மு வழி முறையில் ௩௧ ஆவது பட்டத்தை யடைந்து பாஞ்சாலன் குறிச்சியை ஐந்தாண்டுகள் ஆட்சி புரிந்தான். தந்தையின் காலத்தில் ஒழுங்காகக் காக்கப்படாமலிருந்த நாட்டை இவன் நன்குபேணிக்காத்தான். தந்தையினுடைய பெயர் பால்ராச பொம்மு.

**இரகுவீரபாண்டியன்** - கட்டபொம்மு வழி முறையில் பாஞ்சாலன் குறிச்சிக்கு ௨௨ ஆவது அரசனானவன். தந்தையினுடைய பெயர் இராச சூடாமணி. இவன் அஞ்சா நெஞ்சன். அறிவு ஈகை முதலிய நற்பண்புகளெல்லாம் இவனிடம் சிறந்து விளங்கின. இவனுக்கு ஆண் மக்களிருவரும் பெண்மகளொருத்தியும் மக்கட் செல்வமாகத்தோன்றினர். இவன் ௨௭ ஆண்டுகள் அரசாட்சி செய்தான்.

**இரகுவீரராமன்** - கட்டபொம்முவின் வழிமுறையில் பாஞ்சாலன் குறிச்சிக்கு ௩௭ஆவது அரசனாக அரியணையேறியவன். சிறந்த கொடையாளியாகவும் முன் சினமுடையவனாகவும் இருந்தான். தன்னையடைந்தவர்களை இவன் ஆதரித்தான். இவனுடைய ஆட்சி பதினேராண்டுகள் நடைபெற்றது.

**இரக்கப்பள்ளி சோமப்பா** - நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னிருந்த தெலுங்குப் புலவர். அனகபல்லி மன்னனுடைய அவைக்களப் புலவராக இருந்தார். இவர் உருக்மாவதி பரிணயம் முதலிய தெலுங்கு நூல்களை இயற்றியுள்ளார்.

**இரணவீரசின்னு** - அதிவீரராமுவினுடைய வளர்ப்புப் பிள்ளை. கட்டபொம்முவின் வழிமுறையில் பதினைந்தாவதாகப்பட்டத்திற்கு வந்து பாஞ்சாலன் குறிச்சியைப் பதின்மூன்றாண்டுகள் அரசாட்சி செய்திருந்தான். இவனுக்கு வீரசேகரன் என்னும் பெயருடைய மகன் ஒருவன் தோன்றினான்.

**இரணவீரராமு** - கட்டபொம்மு வழிமுறையில் பாஞ்சாலன் குறிச்சிக்கு ௩௯ ஆவது அரசனாக விருந்தவன். இவனுடைய தந்தையின்பெயர் குமாரவீரன். போராற்றலிலும் ஆட்சித்திறத்திலுஞ் சிறந்து விளங்கினான். இவனுடைய காலத்தில் நாடு பலவகையினுஞ் சிறப்படைந்து விளங்கியது. இவன் ஆறு

ஆண்டுகள் அரசாட்சி செய்தான்.

**இரணியகசிபன்** - காசிப முனிவர் திதி என்னுந் தம்முடைய மனைவியை மாலைக்காலத்தில் கூடியபடியால் தோன்றிய அசுரன். இவன் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து பல படைக்கலங்களைப் பெற்றான். உள்ளிலும் வெளியிலும், மண்ணிலும், விண்ணிலும், இரவிலும், பகலிலும் உயர்திணையாலும் அஃறிணையாலும் தனக்குச் சாவுநேராமல் இருக்குமாறு வரம் பெற்றிருந்தான். சூழ்ச்சித் திறமுடைய இவனைக் கொன்றொழிக்க எண்ணிய திருமால் மாலைப்பொழுதில் நரமடங்கலாய்த் தோன்றி வாயிற்படியில் வைத்து நகங்களால் வயிற்றைக் கிழித்துக் கொன்றார்.

**இரணியவர்மன்** - கௌட நாட்டு அரசர்களில் ஒருவன். இவன் முன் பிறப்புத் தீவினையால் வெண்குட்ட மடைந்து சிங்கவன்மனென்னுங் காரணப் பெயரையடைந்தான். எதனாலும் அந்நோய் நீங்கப்பெறவில்லை. உலகவின்பங்களில் வெறுப்புக் கொண்டு புனித நீர்ப்பயணஞ் செய்யத் தொடங்கினான். தன்னுடைய உறுதிச் சுற்றத்தினரோடு புறப்பட்டுப் பற்பல யாறுகளினும் பொய்கைகளினும் நீராடிக்கொண்டு, திருத்தில்லையை அடைந்தான். ஆங்குள்ள சிவகங்கையில் மூழ்கியவுடன் தன்னுடலின் வெண்ணிறம் நீங்கிப் பொன்னிறம் பெற்றான். இதனால் இரணியவர்மன் என்று பெயருண்டாகியது. இரணியம் - பொன், வர்மன் - சத்திரியன். திருத்தில்லையிலேயே இருந்து திருப்பணிகள் செய்து வீடுபேற்றையடைந்தான்.

**இரணியன்** - இவன் சூரபன்மனுடைய மகன். அறநெறியாளன். முருகக் கடவுளோடு போர் செய்யாதிருக்குமாறு தன்னுடைய தந்தைக்கு அறிவுரைகள் கூறினான். தந்தையின் சினத்திற்கஞ்சிப் போர் செய்தான். தம்மவரனைவரும் மாண்டொழிதல் திண்ணமென்பதை யுணர்ந்த இவன் தான் மட்டுமாவது பிழைத்திருந்து தந்தை முதலியோர்க்கு நீர்க்கடன் செய்யவேண்டுமென்று மீனுருக்கொண்டு கடலில் மறைந்திருந்தான். தந்தை யிறந்த பிறகு வெளிப்பட்டு நீர்க்கடன் முதலியவைகளைச் செய்து பிறகு தவத்தை மேற்கொண்டான்.

**இரண்டாம் பராந்தகன்** - பராந்தகன் என்னும் பெயரையுடையவன். முன்னர் ஒருவன் இருந்தபடியால் இவன் இரண்டாம் பராந்தகன் என்னப் பெற்றான். இவனுடையபெயர் சுந்தர சோழன் எனவும் வழங்கும்.

**இரண்டாம் பிரதாபருத்திரன்** - இவன் நெல்லூரில் ஏற்பட்ட ஒரு கலகத்தை அடக்கினான். முஸ்லீம் தாக்குதல்களால் இவனுடைய ஆட்சி நிலை குலைந்து போயிற்று. மாலிக் - பகர் உதீனின் பயனற்ற சில முயற்சிகளுக்குப் பிறகு 1309 இல் மாலிக்காபூர் வாரங்கல்லை எதிர்த்து முற்றுகையிட்டான். எதிர்ப்பைக் கைவிட்டுக் கீழ்ப்படிய நேரிட்டது. தான் தொகுத்திருந்த பொருட் குவியலையும் தந்து ஆண்டு தோறும் திறையும் தருவதாக ஏற்பாடு செய்து கொண்டான். முகமதியப் படைத்தலைவன் முந்நூறு யானைகளையும் ஏழாயிரங் குதிரைகளையும் ஆயிரம் ஒட்டகங்களின் மீது

ஏற்றப் பட்ட பொருள்களை யும் பெற்றான். இவன் சில போர்களில் வெற்றிகளையும் சில போர்களில் தோல்வியை யும் அடைந்தான்.

**இரதசப்தமி**-இது தைத் திங்களில் சுக்கில பட்சம் ஏழாவது நாளில் பகலவனைக் குறித்துக் கொண்டாடப்படும் நோன்பு. காலையில் நீராடிச்சிறுவிளக்குக் களை ஏற்றி நீரில் மிதக்க விட வேண்டுமென்றும், தேரில் கதிரவன் செல்வது போல் இரதமொன்று செய்து, அதில் கதிரவன் வடிவத்தை வைத்து வழிபாடு ஆற்ற வேண்டும் என்றும் புராணங்கள் புகலு கின்றன. இப்போது ஏழு எருக்கிலைகளைத் தலையில் வைத்துக் கொண்டு கதிரவன் தோற்றத்தில் நீராடும் முறை இருந்து வருகிறது. எருக்கில் மந்தாரம் என்னும் ஒருவகை உண்டு. அதைக் கொண்டு இந்நோன்பிற்கு 'மந்தார சப்தமி' என்ற பெயரும் உண்டு. பாரதப் போரில் விழுந்த பீஷ்மர், தம்தந்தை யிடம்பெற்றயதேச்சைமரணம் என்ற வரத்தின்படி உத்தரா யண புண்ணியகாலம் வந்த பிறகே தமது ஆவியை விட்டார். பிரமசரிய நோன் பால் மக்கட் பேறின்றி மறைந்த இப்பெரியாருக்கு இந்துக்களாகிய அனைவருமே மக்களாயிருந்து தர்ப்பணம் செய்து வருகின்றனர். இதற் குப் "பீஷ்மதர்ப்பணம்"என்று பெயர். பீஷ்மாஷ்டமி என்று இரதசப்தமியின் மறுநாளாகிய அட்டமியன்று இந்தத் தர்ப் பணம் செய்ய வேண்டும். இப் போது "பீஷ்மதர்ப்பண"மும் இரதசப்தமி யன்றே செய்யப் பட்டு வருகிறது.

**இரதி** - இவள் காமனுடைய மனைவி. இவள் இல்லாத இடத் தில் மகிழ்ச்சியும் இல்லாத படி யினால் இவளுக்கு இப்பெயர் உண்டாகியது. அமுதங் கடையும் போது பாற்கடலிற் பிறந்தவள். மனுவின் மக ளெனவும் கூறுவர். காமன் தேவர்களுடைய ஏவலால் தன் னுடைய ஆற்றலைச் சிவபிரானி டஞ் சென்று காட்டி அப்பெரு மானுடைய விழித்தீயால் எரிந் தொழிந்தான். இவள் சிவ பெருமானிடத்தில் முறையிட்டு வேண்டிக்கொண்டாள். அப் பெருமான் உன் கணவன் உனக்கு மட்டும் உருவத்தோடு காணப் பெறுவான் என்று அருள் புரிந்தார்.

**இரதையன்** - திருதராட்டிரனுக் குத் தேரோட்டியாக இருந்த வன். கங்கையில் மிதந்துவந்த பேழையை எடுத்து அதனில் குழந்தையைக் கண்டு வளர்த்து விண்ணெலியால் கன்னன் என்று பெயரிட்டவன்.

**இரத்தினதீவம்** - மணிமேகலையில் கூறப்படும் ஒரு தீவு. இது காவிரிப்பூம் பட்டினத்திற்கு ஆறைந்து யோசனையில் (மணி. 6 : 211 - 3) உள்ள மணிபல்ல வம் என்னும் தீவிற்கு அருகில் உள்ளது. இத்தீவில் சமந்தம் என்னும் மலையின் உச்சியில் புத்தபாத பீடிகை இருக்கிறது. (மணி 11 : 21 - 25). "இலங் கா தீவத்துச் சமனொளி என் னும் சிலம்பு"(மணி 28:107-8) இக்குறிப்புக்களைக் கொண்டு இரத்தினத் தீவமும் இலங்கா தீவமும் ஒன்று என்றும், சமந் தம் என்பதே சமனொளி என் னும் மலையென்றும் உறுதி செய்தால், இப்போது இலங் கையில் கொழும்புக்குத் தென் கிழக்கில் உள்ள இரத்தினபுரம் (த. க.) என்ற இடத்தையே இத்தீவு குறிப்பதாகக் கொள் ளலாம். முற்காலத்திலிருந்து

இரத்தினக் கற்கள் மிகுதியாக இலங்கையிலே கிடைக்கின் றன என்று இலங்கை வரலாறு கூறுவதால் இக்கூற்று உறுதி யாகலாம். சமனொளி மலை என்பது சிவனொளிபாத மலை யாகமருவிவழங்கி யிருக்கலாம். சிவனொளி பாதமலை ஆங்கிலத் தில் 'ஆடம்ஸ்பீக்' (Adam's Peak) எனப்படும்.

**இரத்தின பீசன்**-இவன் ஓர் அரக் கன். சும்பநிசும்பருக்கு மருகன். இவனுடைய உதிரம் எவ்வளவு நிலத்தில் 'விழுமோ அவ்வளவு கோடிஅரக்கர்கள்பிறந்து பகை வரைக் கொல்லும்படி வரம் பெற்றவன். காளிதேவி இவ னுடைய உதிரத்தில் ஒருதுளி யும்நிலத்தில்விழாதபடி கொன் ருள்.இரத்தபீசனுமிவனே

**இரத்தினபுரம்** - இலங்கையில் சபரமுகவாஎன்னும் மாகாணத் தின் முக்கிய நகரம் இது. இரத்தினங்களிற் பல இனங் களை வெட்டியெடுக்குந் தொழில்நீண்டகாலமாக இங்கு நடைபெற்று வருகிறது. தேயிலை, ரப்பர்த் தோட்டங் கள் பல உள்ளன. நெல்லும் பழவகைகளும் பயிராகின்றன. கொழும்புக்குச் செல்லக் கூடிய இருப்புப் பாதையும் நல்ல சாலையும் இங்கு உண்டு.

**இரத்தினவலி** - முன் பிறப்பில் இவள் கலாவதி என்னும் விலை மகளாக இருந்தாள். சிவபூசை செய்ததன் பலனால் வசுபூதி என்னுங் காந்தருவனுக்கு மக ளாகப் பிறந்தாள். இரத்தினே சன் என்னுஞ் சிவபிரானைப் பூசித்துவந்தாள். சிவபிரான், "உன்பெயர் கொண்ட ஆட வன் உன்னை மணப்பான்" என்று அருள் புரிந்தனர். இரத் தினசூடன் என்பவன் நாகராச னுடைய மகன். அவன் அரக் கன் கைப்பட்ட இவளை அவ் வரக்கனிடமிருந்து மீட்டு மணந்தான்.

**இரந்திட்டவீசுரர்** - இப்பெயரு டையசிவலிங்கம் திருக்கச்சூரில் உள்ளது. சுந்தரர் பசியால் வருந்தி வந்தபொழுது இறை வர் அந்தணக் கோலத்தோடு அந்தணர் இல்லங்கட்குச் சென்று உணவை இரந்து வந்து அளித்த படியால் இவ்வாறு பெயர் உண்டாகியது.

**இரவிவர்மா** - இவர் கேரள நாட்டுச் சிறந்த ஓவியர்களுள் ஒருவர். தந்தை பெயர் பட்டா திரி; தாய்பெயர் உமா அம்பா பாய். கிளிமானூர் அரண்மனை யில் 29-4-1848 இல் பிறந்தார். தாய் தந்தையர் இவரை வட மொழிப் புலவராக்க விழைந்த னர். ஆனால் இவர் உள்ளம் ஓவியத் துறையில் சென்றது. ஆகையால் இவருடைய தாய் மாமனார் இராஜராஜவர்மா இவருடைய ஆர்வத்தைப்பேணி வளர்த்தார். பின்பு, திருவி தாங்கூர் மன்னர் பணித்த வண் ணம், அரண்மனையிலிருந்த மேனாட்டுக் கலைஞர் ஜேன்ஸனி டம் ஓவியக்கலை பயின்றார். 25 ஆம் அகவையில் மணம் புரிந்து கொண்டார். 1873 இல் சென்னையில் நடந்த கலைக் காட்சியில் "நாயர் நங்கை" என்ற படத்திற்குக் கவர்னரின் தங்கப் பதக்கம் பரி சாகப் பெற்றார். அப்படம் வியன்னாக் காட்சியிலும் தங்கப் பதக்கம் பெற்றது. 1874 இல் சென்னையில் நடந்த காட்சியில் "தமிழ் நங்கை" யின் படம் பெரும் மதிப்புப் பெற்றது. 1892இல் இவருடைய படங்கள் சிக்காகோ கலைக்காட்சியில் இரண்டு தங்கப்பதக்கங்கள் பெற்றன. மேனாட்டு ஓவிய மரபைத் தழுவிப் புராண ஓவி யங்களையும் உயிரோவியங்களை

யும் பண்போவியங்களையும் தீட்டுவதில் தேர்ச்சி மிக்கவரா யிருந்தார். 1906 அக்டோபர் 6 ஆம் நாள் (58 ஆம் அகவை யில்) இறையடி எய்திஞர்.

**இரவீந்திரநாததடாகூர்** - 1861இல் கல்கத்தாவில் பிறந்தவர். இவர் போல்பூர் என்ற ஊரின் அருகே இருந்த ஆசிரமத்தில் சமக்கிருதமும் ஆங்கிலமும் பயின்ருர். பதினைந்தாவது அகவையில் ஒரு தேசீயப் பாடலும் நீண்ட கவிதையும் எழுதிஞர். பானுசிங் என்ற பெயர் வைத்து "பானுசிங் பதாவளி" என்பதை இயற்றி ஞர். பானுசிங் இவர் தாம் என்றறிந்த மக்கள் வியப் பெய்தினர். 1878 இல் இலண்டன் பல்கலைக்கழகத்தில் ஹென்ரி ஜேம்ஸ் என்னும் பேராசிரியரிடம் கல்வி பயின் ருர். பயிற்சி முடியுமுன் இந்தியா வந்து விட்டார். 1881 இல் சட்டம் பயில வேண்டும் என்று இங்கிலாந்து சென்ருர். சட்டம் பயிலாமல் மீண்டார். அதன்பின் எழுது வதிலேயே முனைந்தார். இவ ருடைய மாலைப்பாடல்கள் (சந்தியா சங்கீதம்) 1882 இல் வெளியானதும் இவருடைய புகழ் ஒளி வீசத்தொடங்கி விட்டது. இவருடைய இருபத் திரண்டாவது அகவையில் மிருணளினிதேவி என்னும் பெண்மணி இவருடைய இல்லறத்துணைவியானர். 1902 இல் மிருணளினி தேவியார் ஐந்து குழந்தைகளை விட்டு விட்டு மறைந்தார். 1911 திசம்பரில் கல்கத்தாவில் கூடிய இந்திய தேசீயக்காங்கிரஸ் மாநாட்டில் பாடியஇவருடைய "ஜனகணமன" என்னும் பாடலே 1950-இல் சுதந்திர இந்தியாவின் நாட்டுப்பாட லாக ஆக்கப் பெற்றுள்ளது. 1913 ஜூன் திங்கள் "கீதாஞ் சலி" என்னும் இவருடைய நூலுக்கு நோபெல் பரிசு வழங்கப் பெற்றது. கலை, கவிதை, சிறுகதை, நாவல், நாடகம், கட்டுரை முதலிய எல்லாத்துறைகளிலும் சிறந்து விளங்கிய இவருடைய புகழ் கீழ் நாட்டிலும் மேனாட்டிலும் பரவியது. 7-8-1941 இல் காலமானர். காந்தியடிகள் இரவீந்திரரை மகாகாவலர் (The Great Sentinal) என்று அழைத்தார்.

**இராகு** - இவன் விப்பிரசித்தென் னுந் தானவன் மகன். சிங்கிகை என்பவளிடம் பிறந்தவன். இவனுக்குப் பின் பிறந்தவன் கேது. திருமால் மோகினி வடிவங் கொண்டு பாற்கடலில் தோன்றியஅமுதத்தைப்பங்கிடு கையில் இவர்கள் இருவரும் தேவர்களின் வடிவத்தை எடுத் துக் கொண்டு தேவர்களோடு கலந்திருந்து அமுதை வாங்கி யுண்டனர். இவர்களைக் கண்டு விட்ட ஞாயிறும் திங்களும் திருமாலுக்குக் குறிப்பாகத் தெரியப்படுத்திஞர்கள். திரு மால் தம்முடைய கையில் இருந்த அகப்பையால் இருவ ருடைய தலையிலும் வெட்டி ஞர். ஆயினும் இறவாத் தன்மையை ஈயும் அமுதத்தை அருந்தியபடியால் இறவாமல் தவஞ் செய்து கிரகநிலையை அடைந்தனர்.

**இராகுலன்** - இவன் காந்தார நாட்டு மன்னன். இவனுடைய தந்தையின் பெயர் அத்திபதி. தாய் பெயர் நீலபதி. இவன் அறிவிலும் ஆண்மையிலுஞ் சிறந்தவஞக விளங்கிஞன். இவனுடைய மனைவியின் பெயர் இலக்குமி. ஒருநாள் பிரமதருமர் என்னும் பெய ருடைய முனிவர் ஒருவர்

இவனுடைய அரண்மனைக்கு வந்தார். இராகுலன் அம்முனிவருக்குச் சிறந்த விருந்து செய்ய எண்ணினான். மடைத்தொழிலாளனிடம் சீரியஉணவு வகைகளை உரியகாலத்தில் செய்து முடிக்க வேண்டுமென்று கட்டளை யிட்டான். அம்மடையன் விரைந்து வேலைகளைச் செய்து சமையலை முடிக்காமல் மெதுவாகச் செய்து கொண்டிருந்தான். இவன் அவன் மீது சினங் கொண்டுபேசினான். மடையன் அஞ்சித் தடுமாறினான். நடு நடுங்கிக் கீழேவிழுந்தான். அதனால் பல பொருள்கள் கெட்டொழிந்தன. இராகுலனுக்குச் சினம் மேலும் மிகுதியாகியது. வாளைவீசி அம் மடையனைக் கொன்று விட்டான். பிறகு பாம்பு ஒன்றினால் கடிக்கப்பட்டு இராகுலனும் மாண்டான்.

இராகுலன் சிறிது நல்வினை செய்திருந்த படியால் மறு பிறப்பில் சோழ வளநாட்டிற் சோழமன்னனுக்கு மகனாகப் பிறந்து உதயகுமரன் என்னும் பெயரடைந்து விளங்கினான். முன்பிறப்பில் மடையனைக் கொன்ற தீவினை இவனைச் சூழ்ந்து நின்றது. காயசண்டிகையின் வடிவத்தைக் கொண்டிருந்தமணிமேகலையிடஞ் சென்ற போது காயசண்டிகையின் கணவனாகிய காஞ்சனனால் வெட்டி வீழ்த்தப் பட்டான்.

**இராசகிரியம்** - இது புகழ் பெற்ற ஒரு பழைமையான நகரம். மகதநாட்டிற்குத் தலைநகராக அமைந்து விளங்கியது. இதன் புறத்தே யவனச் சேரிகள் நூறும், எறிபடைப் பாடிகள் நூற்றறுபதும், தமிழவீரர்களின் சேரிகள் ஆயிரமும், கொல்லர் சேரிகள் பலவும், மிலச்சச் சேரிகள் பலவும், ஓவியச் சாலைகள் முதலிய பல வகை இடங்களும், தண்ணீர்ப் பந்தல் முதலிய பல தரும தானங்களும், பலவகைக் கோயில்களும் இருந்தன. அழகிய அகழிகளாலும், பல உறுப்புக்கள் வாய்ந்த மதில்களாலுஞ் சூழப்பெற்ற இதன் அகநகரில் பெரும்படைச் சேரி, போகச்சேரி, உழவர்சேரி, வணிகர் சேரி, அந்தணர்சேரி முதலிய பலவகைச் சேரிகளும் இருந்தன. தருசகன் என்பவன் இந்நகரத்தின் அரசனாக விருந்தான்.

**இராசசிம்மன்** - பரமேச்சுரன் என்பவனுக்குப்பின் பட்டத்திற்கு வந்தவன் இவன். இவன் கி.பி. 666 முதல் 705 வரை அரசாண்டதாகத் தெரிகிறது. இவனுடைய ஆட்சிக்காலத்தில் போரோடு பஞ்சமுங் கூத்தாடியது. இவன் தன்னுடைய அறிவுத் திறமையால் அவைகளுக்கு ஈடு கொடுத்தான். இவன் சிறந்த சிவனடியான். பல கல்விச் சாலைகளை உண்டாக்கினான். பலகோயில்களைக் கட்டினான். காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயில் இவனால்கட்டப் பட்டது. மாமல்லபுரத்தில் பெருமாள் கோயில் ஒன்றையும் இவன் கட்டினான். இக்கோயிலின் அமைப்புக் கயிலைக் கோயிலை ஒத்ததென்பர். இவன் சிறந்த சிவனடியானகையால் சிவபிரானே இவனுடைய உள்ளத்தில் நின்று திருப்பணி செய்யவேண்டிய வகையை வகுத்துக் காட்ட அவ்வாறே இவன் செய்யச் செய்தான் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். திருநின்றவூரில் பூசலார் நாயனார் மனக் கோயில்கட்டிக் குடமுழுக்குக் காலம் பார்த்திருந்த அதேவேளையில் திருப்பணிசெய்து கோயில்

அமைத்துக் குடமுழுக்குச் செய்தற்கு நாள் பார்த்திருந்து சிவபிரானல் வேறுநாள் பார்த்துக் கொள்ளுமாறு அருள் செய்யப் பெற்றவனும் இவனே என்பர். தண்டியலங்கார நூலை முதலில் வடமொழிக்கண் செய்த தண்டி என்னும் வடமொழிப் புலவனை இவன் ஆதரித்தான். இவன் வடமொழி தென்மொழியிலும் வல்லவனாக விளங்கினன்.

**இராச சூடாமணி** - பாஞ்சாலன் குறிச்சியில் கட்டபொம்முவின் வழிமுறையில் ௬ஆவது பட்டத்தையடைந்து ஒன்பதாண்டுகள் ஆட்சி புரிந்தவன். தந்தையினுடைய பெயர் சகவீரராமக் குமாரசாமி. இவன் நல்ல அழகன். ஆண்மையும் திண்மையும் உடையவன். நல்ல கொடையாளி. கல்வியறிவும் இவனிடஞ் சிறந்து விளங்கியது.

**இராசசூடாமணி தீட்சிதர்** - வடார்க்காடு மாவட்டத்தில் வேலூர் பிரிவைச் சேர்ந்த சத்திய மங்கலம் என்னுஞ் சிற்றூரில் சீநிவாச தீட்சிதர் என்பவருடைய புதல்வராகத் தோன்றினர். சிறந்த கல்வியறிவு பெற்றுத் திகழ்ந்த இவர் அந்நாளில் தஞ்சை மன்னனாக விருந்த இரகுநாத நாயுடுகாரு என்பவனிடம் அவைக்களப் புலவராக இருந்தார். ஒருநாள் அம்மன்னனுடைய முன்னிலையில் வானத்தின் காட்சியைப் பற்றிச் சிறந்த சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினர். மன்னன் வியந்து இரத்தின கேட தீட்சிதர் என்று சிறப்புப் பெயர் வழங்கினன். இவர் இளம் பருவத்தில் வடநாடு சென்று கல்விகற்றவரென்று தெரிகிறது. இவர் ருக்மணிபரிணயம், கம்ஸதுவம்ஸனம், காந்திமத்தியுபயம், இரத்னகேட விசயம், சித்திரமஞ்சரி, சிங்கார சர்வஸ்வம், காவிய தர்ப்பணம், அலங்கார சூடாமணி, சாகித்ய சமாராசியம், தந்திர சிகாமணி, சங்கர்ஷ முக்தாவளி, நியாய சூடாமணி தர்ப்பணம், சாகித்ய சஞ்சீவினி, பாவோத்பேதம், இரசாஸ்ரவம், வேதாந்தரத்தினவளி, வாததாராளாவளி, மணிதருப்பணம், அத்வைத கவுஸ்தபம், விதிநிர்ணயம், சர்வ சமயசர்வஸ்வம், ஸ்மிருதிரத்ன பிரதீபம், சஷ்டபங்கம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவைகள் இசை நாடகம் வேதாந்தம் தருக்கம் முதலிய எல்லாவகைகளையும் சார்ந்தவை. இவர் செஞ்சிக் கோட்டைக் கரசனாக விருந்த சூரப்ப நாயுடுவினல் ஆதரிக்கப் பெற்றவரென்றுந் தெரிகிறது.

**இராசசூய யாகம்** - வேள்வி வகைகளில் இஃதொன்று. இராசா என்னும் பெயருள்ள சோமலதையைப்பிழிந்துசெய்யப்படுவதாகலின் இவ்வாறு பெயர் பெற்றதென்பர். இஃது அரசர்கள் அனைவரையும் வென்று அவர்களிடமிருந்து திறையாகப் பெற்ற பொருளைக் கொண்டு செய்யப் படுவது. பாண்டுமன்னன் பிதுர்களின் உலகத்திலிருந்து நாரதமுனிவர் மூலமாகச் சொல்லி யனுப்பிய படி தருமபுத்திரன் இவ்வேள்வியைச் செய்து முடித்தான்.

**இராசசேகர பாண்டியன்** - மதுரையை அரசு புரிந்த எட்டாவது பாண்டியமன்னன். மாறியாடிய திருவிளையாடல் இவனுடைய வேண்டுகோளால் நிகழ்ந்தது. இவன் கரிகாற் சோழன் காலத்தில் இருந்தவன்.

**இராசபாண்டியன்** - கட்டபொம்மு வழி முறையில் செக வீர பொம்முவின் மகனாகத் தோன்றியவன். விசயராகவன் என்பவன் இவனுடைய தமையன்,

தன் தமையனுக்குப் பின் இருபதாவது பட்டமாக இவன் அரியணையேறிப் பாஞ்சாலன் குறிச்சியைப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். நாடு சிறியதாக இருந்தாலும் இவன் நன்முறையில் பேரரசனைப் போல் அரசாட்சி புரிந்தான்.

**இராசபுரந்தர பாண்டியன்** - மதுரையை அரசாண்ட பன்னிரண்டாவது பாண்டியன். தண்ணீர்ப்பந்தல் வைத்த திருவிளையாடலும் இரசவாதஞ் செய்த திருவிளையாடலும் இவன் காலத்திலே நிகழ்ந்தன.

**இராசபொம்மு**-பாஞ்சாலன் குறிச்சிக் கட்டபொம்மு வழிமுறையில் உஅ ஆவதாகப் பட்டத்தையடைந்தவன். இவனுடைய தந்தையின் பெயர் விசயரகுராமன். இவன் நல்ல போர் வீரன். இவன் ஒன்பதாண்டுகள் அரசாட்சி புரிந்தான். இவனுக்குப் பிள்ளைகளில்லை. இவனுக்குப்பின் இவனுடைய தம்பி ஆட்சிக்கு வந்தான்.

**இராசமன்னார் கோயில்** - இவ்வூர் இந்நாளில் மன்னார்குடி என்று வழங்குகிறது. மன்னனார்குடி நாளடைவில் மன்னார் குடியாயிற்று. இது திருமால்பதி. திருமால் இராசகோபாலப் பெருமாள் என்னும் பெயரோடும் தேவியார் செங்கமல வல்லித் தாயார் என்னும் பெயரோடும் எழுந்தருளியுள்ளனர். சுவாமிக்குச் செண்டலங்காரர் என்றும் பெயருண்டு. திருவாரூர்க் கமலாலயத்தைப் போன்ற பெரிய தடாகம் ஒன்றும் இங்குண்டு. இக்கோவிலுக்கும் தஞ்சை அரண்மனைக்கும் முன்னாளில் சுரங்கப்பாதை இருந்ததென்றும் அஃது இந்நாளில் அடைக்கப்பட்டிருக்கிறதென்றுங் கூறுகின்றனர்.

**இராசமாதேவி**-நெடுமுடிக்கிள்ளியின் மனைவி; உதய குமரனுடைய தாய்; மணிமேகலை கூறிய அறமொழிகளைக் கேட்டு மகனையிழந்த வருத்தந் தீர்ந்தவள். இவளுடைய இயற்பெயர் சீர்த்தி என்பர். இவள் மாவலி வழிமுறையிற் பிறந்தவள்.

**இராசராசமகதை நாடாழ்வான்** - இவன் மகத நாட்டை அரசாண்ட வாணர் வழி முறையில் தோன்றியவன். குலோத்துங்கனுடைய ஆட்சிக் காலத்தில் தென்னார்க்காடு மாவட்டத்தின் ஒருபகுதியில் நாடுகாக்கும் அதிகாரியாக விளங்கினன். இவன் திட்டகுடித் தேவதான நிலங்களிலிருந்து தனக்குக் கிடைக்க வேண்டிய வரியை அவ்வூர்க் கோயிலுக்குக் கொடுத்தானென்று அங்குள்ள கல்வெட்டால் அறியப்படுகின்றது.

**இராசவர்மன்** - வெகுகாலத்திற்கு முன்னிருந்த இவன் கதிரவகுல வழிமுறையிற் றோன்றியவன். அறிவு, அழகு, ஆற்றல் முதலிய எல்லாப்பண்புகளும் இவனிடத்தில் இயைந்திருந்தன. இவனுடைய மனைவியின்பெயர் மானினி. இவனுக்கு உறவினர்கள் மிகுதியாக விருந்தனர். இவன் நெடுங்காலம் அரசு புரிந்தான். ஒருநாள் இவனுடைய மனைவி இவனுக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது கணவனுடைய தலைமயிர்களில் ஒன்று நரைத்திருத்தலைக் கண்டாள். அதனால் கலங்கினள். கண்ணீர்த் துளியொன்று அரசனுடைய தலையில் விழுந்தது. அரசன் உற்றதை உசாவியுணர்ந்தான். தவஞ்செய்வதென்று முடிவு செய்தான். இவனுடைய உறவினர்கள் இவன்

பொருட்டுக் காட்டிற்குச் சென்று தவஞ் செய்து இவனுக்கு நீண்ட வாணுளைப் பெற்று வந்தனர். செய்தியை உணர்ந்த அரசன் உறவினர்களும் நீண்ட நாள் வாழ வேண்டுமென்று தவஞ் செய்து அவர்கட்கும் வாணுள் பெற்ருன்.

**இராசனை** - பதுமையின் தோழி. மிகுந்த அழகுடையவள். உதயணனுடைய விருப்பத்தின்படி இவளை உருமண்ணுவா திருமணஞ் செய்து கொண்டான். இவள் பந்தாடுதலில் வல்லவள்.

**இராசீபுரம்** - சேலம் - நாமக்கல் சாலையில் சேலத்துக்குக் கிழக்கே சேலத்திலிருந்து 15 ஆவது கல்லில் உள்ளது. இங்கே சுவர்ண வரதராச சுவாமி கோவில் இருப்பதால் ஆதியில் "சுவர்ண வரதராஜ புரம்" என்று வழங்கி வந்து, நாளடைவில் "இராசீபுரம்" என்று ஆகிவிட்டது. இங்குள்ள கைலாச நாதர் கோவில் மேற்குப் பார்த்துள்ளது. கோவிலின் திறவு கோலைப் பைரவர் கோவிலின் முன் இரவில் வைத்துச் சென்ருல் அவருடைய வாகனமாகிய நாய் அதனைக் காத்துத் தரும் என்பது ஐதிகம்.

**இராதை** - அதிரதனுடைய மனைவி. கன்னனை வளர்த்தவள்.

**இராமகிரி** - தொண்டைவள நாட்டில் திருவள்ளூரில் இருந்து திருக்காளத்திக்குப் போகும் வழியில் ஒருமலையடிவாரத்தில் பாடல் பெற்ற சிவன் கோயில் ஒன்று இருக்கிறது. அஃது உள்ள இடம் இராமகிரி என்று கூறப்பெறும். கோவிலில் உள்ள சிவபெருமான் காரிக்கரை உடைய நாயகனுர் என்று கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளார்.

**இராமகிருட்டிண பரம ஹம்சர்** - இந்து சமயம் ஒளி குன்றியிருந்த சூழ்நிலையில் இந்து சமயத்தில் தோன்றியவர் இப்பெரியார். வங்காளத்தில் கமார்புக்கூர் கிராமத்தில் ஓர் ஏழை அந்தணர் குடும்பத்தில் பிறந்தார். இளமையிலேயே கல்வியில் கருத்தற்றவராகவும் மெய்ப்பொருளைநேரேகாணும்விருப்பமுள்ளவ ராகவும் இருந்தார். தட்சணேசுரத்தில் காளி கோவில் பூசாரியாக இருந்து விரைவில் தேவியின் காட்சி எய்திஞர். இந்து மதத்திற்குரிய கருமம், பக்தி, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகளின் முடிவு கண்டார். மலரிடை மொய்க்கும் வண்டுகள் எனப் பலவகை மக்கள் இவரை நாடி, அவரவர் முதிர் நிலைகளுக்குத் தக நன்னெறியுற்றனர். இவர்களில் தலைமணியாகத் திகழ்ந்தவர் சுவாமி விவேகானந்தராவர். உலகமெங்கணும் மன்னுயிரைஉய்வித்தற்கெனவே வாழ வேண்டுமென ஆணையிட்டார். அன்றே இராமகிருட்டிணமடமும் சங்கமும் தோன்றின. இந்துமத மறுமலர்ச்சிக்கும் உலக ஞான முன்னேற்றத்திற்கும் அடிகோலிய முதன்மையர். இருந்த இடத்திலிருந்தே உலக மனத்திற்கும் ஞான எழுச்சியை உண்டு பண்ணியவர்.

**இராமகுடம்** - எலிமலைக்குப் பக்கத்திலே முன்னுளில் இப்பெயரொடு கூடிய நாடு ஒன்று இருந்தது. அவ்விடத்தில் அரசாட்சி செய்த அரசர்கள் பெருச்சாளி வழிமுறையைச் சேர்ந்தவர்கள். அவர்களில் கண்டார் கார்வர்மன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு இராமகுட மூவர் திருவடி என்று மற்ருெரு பெயரும் வழங்கியது. அவனேடு முத

லாம் இராசாதி ராசன் போர் செய்து அவனை அழித்தான்.

**இராமக்கோன்** - இவன் ஓர் இடையன், திருநெல்வேலியில் இருந்தவன். மூங்கிலடியில் மறைந்திருந்த நெல்லையப்பரைவெளிப்படுத்தியவன் இவனே.

**இராமச்சந்திர பட்டர்** - இவர் வைணவ பக்தர்களில் ஒருவர். இவருடைய பெருமையை உணர்ந்த அரசன் இவருக்குப் பொன் மணி முதலியவைகளை நன்கொடையாக அனுப்பினான். அவைகளின் மீது பற்றுவைப்பது தமது தெய்வவழிபாட்டிற்கு இடையூருகும் என எண்ணிய இவர் அவைகளைத் தீயிலிட்டு அழித்தார். இதனையுணர்ந்த அரசன் தான் கொடுத்தபொருள்களை வீணுக்கிவிட்டதாகச் சினங்கொண்டான். தான் கொடுத்தவைகளை மீளவுங் கேட்டான். இவர் திருமாலை வேண்டித் தாம் தீயிலிட்ட பொருள்களைத் திரும்ப அழைத்து அரசனிடங் கொடுத்தார். அரசன், "நான் கொடுத்ததைத் திரும்பவும் வாங்க மாட்டேன்'' என்று கூறினான். பட்டர் அப்பொருள்களைத் தாம் வைத்துக் கொள்ளாமல் மற்றவர்கட்கு வழங்கிவிட்டுக் கடவுளன்பிலேயே ஈடுபட்டார்.

**இராமதத்தர்** - இப்பெயர் இராமாநந்தர் எனவும் வழங்கியது. இவர் அலகாபாத்தில் வாழ்ந்திருந்த ஓர் அந்தணர். சிலர் இவர் மைசூரிற் பிறந்தவர் என்று எண்ணினர். இவர் வாழ்ந்திருந்த காலந் திட்டமாகத் தெரியவில்லை. இவர் முதலில் அத்வைதியாக இருந்து பிறகு வைணவரானார். சீதை இராமர் வழிபாட்டு முறையை விளக்கிப் பலரும் பின்பற்றச் செய்தார். சாதிமுறை இவரால் வெறுக்கப்பட்டது. மற்றவர்களுடைய குலம் முதலியவைகளைப் பற்றிக் கேட்கக் கூடாது என்பது இவருடைய முடிவு. பல வகுப்பினரும்இவருடையமாணவர்களாக இருந்தனர். கபீர் என்பவரும் இவருடைய மாணவரே. இவருடைய கொள்கைகளைப் பின்பற்றியவர்கள் இராமானந்தியர் என்று பெயர் பெற்றனர்.

**இராமதேவர்** - பதினெண் சித்தர்களில் ஒருவர். இவர் நாகபட்டினத்தில் சிவபூசை செய்து கொண்டிருந்து அதனுல் எல்லா வகையான சித்திகளையும் அடைந்தார் எனவும் மருத்துவ நூல்கள் சில செய்திருக்கிருர் என்றுங் கூறுவர்.

**இராமபாலன்** - இவன் விக்கிரக பாலன் என்பவனுடைய மக்களில் ஒருவன். கைவர்த்தர் என்பவர்கள் போரில் இவனுல் அடக்கப்பெற்றனர். இவன் தன்னுடைய வெற்றியைக் கொண்டாடும் பொருட்டு இராமாவதி என்னும் நகரத்தை உண்டாக்கினுன். சந்தியாக்கிர நந்தி என்பவன் இயற்றிய இராமசரிதத்தில் இம்மன்னனுடையஅருஞ்செயல்கள்கூறப் படுகின்றன. இவன் இறுதிக் காலத்தில் அரசிருக்கையைத் துறந்து கங்கையாற்றில் விழுந்து இறந்தான் என்பர்.

**இராமராச பூடண கவி** - பெனுகொண்டாவை ஆண்டு வந்த திருமலை தேவராயரின் அவைக்களப் புலவர்; தெலுங்குப் புலவர். இசைப் பயிற்சி மிக்கவர். இசைப் பாக்களும் இயற்றுவார். காவியாலங்கார சங்கிரகம், வசுசரித்திரம், அரிச்சந்திர நளோபாக்கியானம் ஆகிய மூன்று நூல்கள் இயற்றியிருக்கின்றுர். இம் மூன்று நூல்களும் தெலுங்கில் புகழ் பெற்ற இலக்

கியங்களாகப் போற்றப் பெறு கின்றன. தெலுங்கில் உள்ள வசுசரித்திரத்தைப் பின்பற்றித் தமிழிலும் அதே பெயரால் ஒரு நூல் உள்ளது. அரிச்சந்திர நளோபாக்கியானத்தில் அரிச் சந்திரன் கதைக்கும் நளன் கதைக்கும் பொருந்தும்படிச் சிலேடையாகச் சொற்றொடர் கள் அமைந்துள்ளன. இவரு டைய இயற்பெயர் பட்டு மூர்த்தி என்பது. இராமராசா வின் அவைக்களப் புலவராக விளங்கியிருந்த படியால் இராம ராச பூடணன் என்று வழக்கில் ஏற்பட்டு விட்டது. இவர் இயற்றிய இசை நூல்கள் இப் பொழுது கிடைக்கவில்லை.

**இராமலிங்க முதலியார்** - வெள்ளை யர்களிடம் இருமொழி பேசு பவராக இருந்து பாஞ்சாலன் குறிச்சிக்கு வீரபாண்டியக் கட்டபொம்மனிடம் தூது சென்றவர்.

**இராமலிங்கம்** - இராம பிரான் இலங்கைக்குச் சென்று இராவணன் முதலியோரைக் கொன்ற தீவினை நீங்குதற் பொருட்டுச் சேதுவில் அமைத்து வழிபட்ட சிவ லிங்கம் இராமலிங்கம் எனப் பெறும். இவ்விலிங்கம் அமைக் கப் பட்ட இடமுங் கோயிலும் இராமேசுரம் எனப்படும்.

**இராமனதீச்சுரம்**- தஞ்சை மாவட் டத்தைச் சார்ந்த நன்னிலத் துக்கு ஐந்து கல்லில் உள்ளது. இராமன் சிவபெருமானை வழி பட்ட இடம். திருஞான சம் பந்தப் பெருமானின் பாடற் பெறும் பேறு பெற்றது.

**இராமன் பிள்ளை சீ.வீ** - (1858 - 1922) மலையாள எழுத்தாளர். திருவனந்தபுரத்தில் பிறந்தவர். அங்கேயே கல்வியும் பயின்றார். இளமையிலேயே தெளிந்த சிந் தனையாளராகவும் பலதுறை களிலும் திறமையாக எழுதும் ஆற்றல் பெற்ற எழுத்தாள ராகவும் விளங்கினார். சர். வால்ட்டர் ஸ்காட்டின் நாவல் களை அடிப்படையாகக் கொண்டுவரலாற்றுநாவல்களை மலையாள மொழியில் இவரே முதன் முதல் எழுதினார். மார்த்தாண்டவர்மா (1891), தர்மராசா (1913), ராமராச பஹதூர் (1920) முதலிய நூல் களும் எழுதியுள்ளார். இவர் எழுதிய சமூகநாவல் "பிரேமா மிருதம்" என்பது. மலையாள உரைநடைஇலக்கியம் இவரால் சிறப்படைந்தது.

**இராமாயணசம்பு** - பதின்மூன்றும் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்திருந்த பாஸ்கரன் என் பார் வடமொழியில் எழுதிய ஒரு நூல்.

**இருக்குவேளிர்** - புதுக்கோட்டை யை அடுத்த கொடும்பாளூர், அன்னவாசல், ஒல்லையூர் ஆகிய மூன்று கூற்றங்கள் அடங்கிய நாட்டையாண்டவர்கள். இவர் களுடைய தலைநகரம் கொடும் பாளூர்.

**இருங்கோவேள்** - துவாராபதியை ஆண்டவேளிருள் ஒருவன். ஒரு பெரியவர் தவஞ் செய்து கொண்டிருந்த காலத்தில் அவருக்குத் தொல்லைகொடுத்து வந்த புலியை அவருடைய கட் டளைப் படி கொன்று புலிகடி மால் என்னுஞ் சிறப்புப்பெயர் பெற்றவன். பாரியின் பெண் களை மணந்து கொள்ளுமாறு கூறிய கபிலரின் சொல்லை மறுத்து அவரால் வெறுக்கப் பட்டவன்.

**இருசியசிருங்க முனிவர்** -விபாண் டகர் என்பவர் நீராடுகையில் வெகுதொலைவில் வந்த அப்சர சைக் கண்டு மோகித்துச் சுக்கி லத்தை நீரில் விட்டார். சுக்கி லங் கலந்த நீரை ஒரு பெண்

மான் பருகியது. அதனிடமாகப் பிறந்தவர் இவர். கலைக்கோட்டு முனிவர் எனப் பெறுபவரு மிவரே. அங்கநாட்டில் நெடுங் காலம் மழையின்மையால் மக் கள் வருந்தினர். வேள்வி முத லியன செய்தும் மழைபெய்ய வில்லை. இம்முனிவர் வந்தால் மழை பெய்யுமென்றுணர்ந்து அரசன்இவரைத்தன்னாட்டிற்கு அழைத்து வருமாறு சிலமாதர் களை அனுப்பினான். அவர்கள் இம்முனிவரைக் கண்டு அழைத் தார்கள். இவர் எப்பொழுதும் பெண்களைப் பார்த்திராதவ ராகையால் இப்பெண்களை இரண்டு கொம்புடைய முனி வர்கள் என்று எண்ணிக்கொண் டார். "உங்களுடைய ஆசிர மம் எங்கேயிருக்கிறது?"என்று கேட்டுக் கொண்டே மாதர் களைப் பின் தொடர்ந்தார். மாதர்கள், "இதோ அண்மை யில் தான் உள்ளது" என்று கூறிக்கொண்டே இறுதியில் அங்கநாட்டை யடைந்தனர். அவ்வளவில் பெருமழை பொழிந்தது. அரசன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான். முனி வரைப் பணிந்து தன்னுடைய பெண்களைத் திருமணஞ் செய்து கொள்ளுமாறு வேண்டினான். முனிவரும் அவ்வாறே செய்து கொண்டு சென்றார்.

**இருசியமுகம்** - கிட்கிந்தைக்கு அண்மையில் இருந்த ஒருமலை. சுக்கிரீவன் வாலிக்கு அஞ்சித் தன் துணைவர்களாகிய அநு மான் முதலியவர்களோடு இம் மலையில் வசித்திருந்தான்.

**இருட்சவிருசன்** - ஒரு காலத்தில் நான்முகன் யோகத்திலிருந் தான். அப்பொழுது அவனு டைய கண்ணில் இருந்து ஒரு துளி நீர் நிலத்தில் விழுந்தது. அந்நீர் ஓர் ஆண்குரங்காகி இருட்சவிரசன் என்னும் பெய ரோடு காடு முழுவதுஞ் சுற்றிக் கொண்டு திரிந்தது. பார்வதிதேவியிருந்த வனத்தில் ஒரு தடாகத்தில் மூழ்கியது. அவ்வளவில் அழகிய பெண் குரங்காகியது. இக்குரங்கை இந்திரனும் கதிரவனுங்கண்டு மோகித்தார்கள். கதிரவ னுடைய சுக்கிலம் குரங்கின் கழுத்தில் விழுந்தது. அதி லிருந்து சுக்கிரீவன் பிறந்தான். இந்திரனுடைய சுக்கிலம் வாலில் விழுந்தது. அதிலிருந்து வாலி பிறந்தான்.

**இருதவாக்கு** - ஓர் அரசரிஷி, இவன் தனக்கு ரேவதி நட்சத் திரத்து நாலாம் பாதத்தில் பிறந்தமகன் மிகவும் தீயவனாக இருந்த படியால் ரேவதியை நிலத்தில் விழுமாறு சாப மிட்டான்.

**இருதுபன்னன்** - அயோத்தியில் இருந்து அரசுபுரிந்தகதிரவகுல மன்னனாகிய அயுதாவினுடைய மகன். அறிவுமுதலிய நலன் களெல்லாம் நன்கு அமையப் பெற்றவன். கணிதக்கலையை நன்கு கற்றுத் தேறியவன். எவ்வளவுதொகையினையுடைய தாயினும் நோக்கியவுடனே அஃது இவ்வளவு என்று முடி விட்டு உறுதியாகக் கூறக் கூடியவன். இவனுடையமனைவி யின் பெயர் மாலினி. நளன் கலி வசத்தினால் சூதாடி நா டிழந்து காடடைந்த போது இவனிடம் வந்து மூன்றாண்டு கள் தேரோட்டியாக அமர்ந் திருந்தான். தமயந்திக்கு மறு முறை சுயம்வரம் என்று வீமன் இருதுபன்னனுக்குச் செய்தி யனுப்பிய போது நளன் தேரோட்டிச் சென்றான். அப் பொழுது இவன் தான் அரிதாகப் பெற்றிருந்த கணக் கறிவித்தையை நளனுக்குக் கூறி நளன் அறிந்திருந்த

அசுவதீயம் என்னும் அரிய வித்தையைத் தான் பெற்ருன்.

**இருத்தை** - இவள் ஒருபெண் தெய்வம். இவள் நன்மைகள் எல்லாவற்றையுங் கெடுப்பாள். நெஞ்சில் சிறிதும் இரக்கமில்லாதவள். இவள் சிறப்பற்ற ஆடையையும் சிவந்த கண்ணையும் நெருங்கிய வெண்பல்லையும் முழ அளவு நீண்ட நகத்தினையும் உடையவள்.

**இருந்தவள முடையார்** - திருமால் அழகாக அமர்ந்திருக்குந்திருக் கோலத்தைக் குறிப்பிட்டு முன்னோர் வழங்கிய ஒரு பெயர்.

**இருந்தையூர்** - திருமால் திருக் கோயில் கொண்டு அமர்ந்தருளிய திருப்பதிகளில் ஒன்று. நின்றவூர் என்பதைப் போல் இருந்தவூர் என வழங்கிய இப்பெயர் நாளடைவில் இருந்தையூரென, மருவியது. இவ்வூர் மதுரையை ஒட்டிய தென்பர்.

**இரும்பிடர்த்தலையார்** - புறநானூற்றின் ௩ஆம் பாடலைப் பாடிய ஆசிரியர். "இரும்பிடர்த்தலை" என்னுஞ் சொற்ருடரைத் தம்முடைய பாடலிற் சேர்த்தபடியால் அதுவே இவருக்குப் பெயராக அமைந்து நின்றது.

**இருளர்**-கோயம்புத்தூர், நீலகிரி, செங்கற்பட்டு, வடார்க்காடு மாவட்டங்களில் காணப்படும் ஒருவகைப் பழங்குடிகள். இவர்கள் மிகுதியாக இருப்பது கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள அட்டப்பாடி மலையாகும். இதன் உயரம் ஐயாயிரம் அடி. இவர்களுடைய தொகை பதினையாயிரம். இவர்களுடைய நிறம் கருமையாகையால் இவர்கள் இருளர் என்று பெயர் பெற்றனர் என்பர்.

**இலக்குமணசேனன்** - இவன் வல்லாள சேனன் என்பவனுடைய மகன். 1185 முதல் - 1206 வரை அரசாட்சி செய்தான். கலிங்கம், அஸ்ஸாம், காசி, அலகாபாத் முதலிய இடங்களில் தன் வெற்றிக்கு அடையாளமாகத் தூண்களை நாட்டினன். கல்வியில் இவன் மிகுந்தகருத்துச்செலுத்தினன். இவனுடைய அவையில் ஐந்து மணிகள் என்று புகழப்பெற்ற ஐந்து சிறந்தபுலவர்கள் இருந்தனர். இவன் தன்னுடைய தந்தையால் முடிக்கப் பெருத அற்புதசாகரம் என்னும் நூலை முடித்தான்.

**இலக்குமணை**- இவள் துரியோதனனுடைய மகள். இவளுக்குத் துரியோதனன் சுயம்வரம் ஏற்படுத்தினன். அப்பொழுது பலராமன் மகனுகிய சாம்பன் வலுக்கட்டாயமாகத் தூக்கிக் கொண்டு போய்த் திருமணஞ் செய்து கொண்டான். இதனுல் கௌரவர்கள் சினமடைந்து போருக்குச் சென்ருர்கள். பலராமர் கௌரவர்களையும் அவர்களுடைய பட்டணத்தையும் கலப்பையால் பெயர்த்துக் கங்கையில் தள்ளத் தொடங்கினுர். கௌரவர்கள் நடுங்கிப் பலராமரைப் பணிந்து அவருடைய சினத்தை மாற்றினர்.

**இலக்குமி** - இரவிவன்மனுக்கு அமுதபதி வயிற்றிற் பிறந்தவள். தாரை வீரை என்பவர்களுடைய தங்கை. இராகுலனுடைய மனைவி. திட்டிவிடத்தாற் கணவன் இறந்தவுடன் தீப்பாய்ந்து உயிரை விட்டவள். சாதுசக்கரன் என்னும்முனிவனுக்கு உணவளித்த நல்வினையினுல் இவளே மணிமேகலையாக வந்து பிறந்து பௌத்த தருமங் கேட்டாள்.

**இலங்கணி** - நான்முகனுடைய ஏவலால் இலங்காபுரியைக் காத்துக் கொண்டிருந்து அநுமான் வந்த காலத்தில் அவனைத் தடை செய்து அவனால் இறந்த ஓர் அரக்கி.

**இலங்கை** - இத்தீவு இந்தியாவுக்குத் தெற்கில் இருபதுமைல் தொலைவில் இருக்கிறது. இத்தீவின் நீளம் 270 மைல்; அகலம் 140 மைல்; இலங்கை மக்களில் நாற்பது இலட்சத்திற்கு மேற்பட்டவர்கள் பௌத்தர்கள். அவர்களில் பெரும்பான்மையோர் சிங்களவர். மொத்த மக்கள்தொகையில் ஐந்திலொருபங்கு இந்துக்கள். இராவணன் முன் காலத்தில் இங்கு வாழ்ந்திருந்தான். இந்நாடு பெரும்பாலும் பொட்டல்காடாகவிளங்கியது. இந்திய மக்களைக் கொண்டு வந்து நாட்டை வளப்படுத்தினர். இந்தியா உரிமை பெற்ற பொழுது இலங்கையும் உரிமை பெற்றது.

**இலஞ்சிமன்றம்** - காவிரிப்பூம் பட்டினத்தில் முன்னாளில் இருந்த ஒரு மன்றம். இங்கு ஒரு பொய்கை யுண்டு. அப்பொய்கையில் முழுகுவோர் ஊமைத் தன்மை, குறட்டன்மை, செவிட்டுத் தன்மை முதலிய உடற் குற்றங்கள் ஒழியப் பெறுவர்.

**இலட்சத்தீவு** - துளுநாட்டிற்குஞ் சேர நாட்டிற்கும் மேற்கே அரபிக் கடலில் நூறுமைலுக்கு அப்பால் இலட்சத்தீவு என்னும் பெயருடைய தீவுகள் இருக்கின்றன. கடல் மட்டத்திற்கு மேல் பத்து அல்லது பதினைந்து அடி உயரம் உள்ளவை. தெற்கு வடக்காக இத்தீவுகள் ஒரு மைல் முதல் ஆறுமைல் நீளமும் ஏறத்தாழ ஒருமைல் அகலமும் உள்ளவை. இத்தீவுகள் கப்பல்கள் தங்குவதற்கு ஏற்றவைகளாக இருக்கின்றன. இத்தீவுகள் துளுநாட்டோடு சேர்ந்தவை. சங்கநூல்களிற் கூறப்படுகிற கடல் துருத்தி என்பது இத்தீவுகளாக இருத்தல்கூடும் என்று ஆராய்ச்சியறிஞர்கள் எண்ணுகின்றனர்.

**இலவணன்** - அசுரவீரனாகிய மதுவின் மகன். சிறந்த மேன்மைகளைப் பெற்றவன். விற்போர் வாட்போர் முதலியவைகளில் வல்லவன். மாபெரு வீரனாகிய மாந்தாதாவும் இவனோடு போர் செய்து மாண்டான். இவன் உலகிற்குத் தீமைகள் பலவற்றைச் செய்து தருக்கியிருந்தான். இவனைக் கொன்றொழித்தால்தான் உலகிற்கு நன்மையேற்படு மென்பதை யுணர்ந்த இராமபிரான் சத்துருக்கனனையனுப்பி இவனைக் கொன்றொழித்தார்.

**இலாமயன்** - இவன் ஓர் அந்தணன். இனிமையாகப் பேசுவதில் வல்லவன். மந்திரவித்தையிலுஞ் சிறந்து விளங்கினான். உதயணன்இவனிடத்தில் மிகுந்த மதிப்பு வைத்திருந்தான். இவன் இருந்த இடம் காளவனம் என்பர். வாசவதத்தை தீக்கிரையானதைக் கேட்டு வருந்திய உதயணன் இவன் இருந்த இடமுந் தீக்கிரையாயிற்றென்றுதோழர்களால் உணர்ந்து எப்பொருளுக்கும் அழிவுண்டு என்று சிறிது உள்ளந்தேறி யிருந்தான்.

**இலாவாணகம்** - இஃது உதயணனுக்குரிய பெரிய நகரங்களுள் ஒன்று. பகைவர் வருவதற்கு மிகவும் அஞ்சும் பேரரண்கள் முதலியவைகளையும் இடையே ஓர் அழகிய அரண்மனையையும் உடையது. இதன் பக்கத்தே

பலவகை வளங்களமைந்த ஒரு மலை இருந்தது. அதனுடைய சாரல் மிகுந்த இன்பந்தரத் தக்கதாக விளங்கியது. முனிவர் இருப்பிடங்களும் கோயில் களும் இருந்தன. அங்கே தவஞ் செய்து கொண்டிருந்த ஓர் அரசமுனிவருடைய மகளாகிய விரிசிகை என்பவளை உதயணன் மணம் புரிந்தான்.

**இலீலாவதி** - விதர்ப்ப நாட்டில் போகபுரி என்னும் ஊரில் இருந்தவள். காளிதாசனுடைய காமக்கிழத்தி. காளிதாசனுக் கும் போசமன்னனுக்குஞ் சிறிது கருத்து வேறுபாடு நிகழ்ந்த காலத்தில் அரசன் கூறிய சமுத்தியை இவள் காளிதாசனிடங் கூறி அவனைக் கொண்டு அதனை முடிப்பித்துக் கொண்டு அவனைக் கொலை செய்து விட்டு அரசனிடம் போய்த் தானே அச்சமுத்தியை முடித்ததாய்க் கூறியவள்.

**இலைவேல்** - சிகண்டி என்னும் முனிவர் செந்தமிழை நன்கு அறிய எண்ணினார். திருவேங் கடமலையிலே செவ்வேட் பெரு மானைப் போற்றி வழிபட்டுக் கொண்டிருந்தார். செவ்வேட் பரமன் வெளிப்பட்டு, "நம் மாணவனாகிய அகத்தியனிடஞ் சென்று அறிக" என்று அறிவுறுத்தினார். சிகண்டி அகத்தியரிடம் முத்தமிழ்கற் றுச் சயந்தன் என்பவனுக்காக "இசை நுணுக்கம்" என்னும் ஒரு நூலை இயற்றினார். பிறகு அகத்தியருடைய கட்டளைப் படி கதிர்காம வழிபாட்டிற்குச் சென்றார். அப்பொழுது யானை யொன்று வழி மறித்தது. சிகண்டியினுடைய மாணவர் களும் பிறரும் அஞ்சினர். சிகண்டி ஒரு வெற்றிலையை எடுத்து, "இது வேலாகச் சென்று யானையை வெல்லுக" என்று கூறிவிடுத்தார். வெற் றிலை வேலாகச் சென்று தைத்தது. இறந்த யானையில் இருந்து ஒருகந்தருவன் வெளிப் பட்டான். அவன் சிகண்டியைப் பார்த்து, "என்னுடைய பெயர் ஐராவசு. வியாழனுடைய சாபத்தால் யானையானேன். முருகன் திருவருளால் பழைய வடிவத்தையடைந்தேன்" என்று சொன்னான். அதுமுதல் முருகக்கடவுள் இலைவேற் கடவுளானார்.

**இளங்கோவடிகள்** - சிலப்பதிகார நூலாசிரியர்; இவர்மலை நாட் டில் வஞ்சிநகரத்திருந்து அரசு செய்த சேரலாதன் என்னும் அரசனுடைய புதல்வர். சேரன் செங்குட்டுவனுடைய தம்பி. இதனால் இவர் முதலில் இளங்கோ வேந்தன் என்றும் இளங்கோ வென்றும் துறவு பூண்டமையாற் பிறகு இளங் கோவடிகளென்றும் பெயர் பெற்றார்; மதுரைக் கூலவாணி கன் சாத்தனார் மணிமேகலையை இயற்றி இவரைக் கேட்பித்தா ரென்று கூறுவர்.

**இளவெளிமான்** - இவன் வெளி மான் என்னுங் குறுநிலமன்ன னுடைய தம்பி. பிறருக்கியாது மீயான். இவனுடைய தன் மையை உணராத பெருஞ் சித்திரனார் என்னும் புலவர் இவனிடம் பரிசில் பெறச் சென்று யாதும் பெறமுடியா மற் சென்றார். பிறகு பிறரிடம் பெற்ற பரிசிலில் ஒருபகுதியை இவனிடங் கொடுத்து வசை பாடிச் சென்றார். அதனால் இவன் மிகுந்த இழிவடைந் தான்.

**இளை** - மனுவினுடைய புதல்வனா கிய இளன் என்பவன் ஒரு நாள் தேரின்மீது ஏறிக் கொண்டு காட்டுக்குச் சென் றான். "இங்கு வருபவர்

பெண்ணுருக" என்று உமா தேவி விதித்திருந்த ஓரிடத்தில் அச்செய்தியை அறியாமற் சென்றான். உமாதேவியின் விதிப்படி இளனுக்குப் பெண்ணுருவம் உண்டாகியது. ஆகவே இளனை அனைவரும் இளையென்று பெண்பாற் பெயரால் அழைக்கலாயினர்.

**இறவாப்பனை** - திருப்பேரூர் என்னும் மேலைச் சிதம்பரத்தில் தலமரமாக உள்ளது. இப்பனை எப்பொழுதும் அழியாது வளருஞ் சிறப்புடையது. இம் மரம் நெடுங்காலமாக இருப்பது. பிற பனைமரங்களைப் போலவே இது பார்வைக்குக் காணப்பெறும். தசையைப் பற்றிய நோய்களை இம்மரத்தின் மேற்பட்டை போக்குகின்றதாம்.

**இறையனார்** - சங்ககாலப் புலவர். இவர் அகப்பொருள் நூல் ஒன்றைச் செய்திருக்கிறார். அந் நூல் இவருடைய பெயரால் இறையனார் அகப்பொருள் என்று வழங்குகின்றது. சிவபெருமானே இறையனார் என்னும் பெயர் தாங்கிப் புலவராக விளங்கினார் என்று கூறுவாரும் உண்டு. திருவள்ளுவமாலை இயற்றிய புலவர்களின் பெயர்களில் இவருடைய பெயருங் காணப்படும். இவர் இயற்றிய அகப்பொருளுக்கு நக்கீரனார் சிறந்த விரிவுரை எழுதியிருக்கிறார்.

**ஈசாண்டான்** - வைணவ சிங்காதனாதிபதிகள் எழுபத்து நால்வரில் ஒருவர்.

**ஈசானம்** -சிவபிரானுடைய ஐந்து திருமுகங்களில் ஒன்று. இஃது உச்சிமுகமும் தென் கீழ்த் திக்கை நோக்குவதும் வெண்ணிறம் உடையதும் ஆகும்.

**ஈசுவர குப்தா** - பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய வங்காளி எழுத்தாளர்களுள் தலைமையானவர். மேல் நாட்டுக் கருத்துக்கள் இவர் காலத்திலேயே வங்காளி இலக்கியத்துள் இடம் பெறத் துவங்கின. பழைய முறையில் எழுதிய இறுதிப் புலவரும் இவரேயாவர். கவிஞர் என்ற புகழை விடப் பத்திரிகாசிரியர் என்ற புகழே இவருக்கு உச்சநிலையில் இருந்தது. வங்காளிப் பத்திரிகைத் தொழிலுக்கு இவர் தந்தையாவார். வங்காள மொழி, இலக்கியம், பண்பாடு இவைகளில் இளைஞர்க்குப் பற்றுண்டாகச் செய்தார். வங்காளி மொழியில் வாழ்க்கை வரலாறு முதன்முதல் எழுதியவரும் இவரே. இவர் நடத்திய பத்திரிகைகளில் "பிரபாகர்" புகழ் பெற்றது.

**ஈசுவர சந்திர வித்தியாசாகரர்** - (1820 - 91) இலக்கியங்கள் எழுதுவதற்கு வங்காளி உரைநடையைத் தோற்றுவித்தவர். இவருடைய இயற் பெயர் ஈசுவர சந்திர சர்மா என்பது. ஏழைக்குடும்பத்தில்பிறந்தவர்; கல்கத்தா சமஸ்கிருதக் கல்லூரியில் படித்துத் தேறி "வித்யாசாகர்" என்ற பட்டம் பெற்றார். போர்ட் வில்லியம் கல்லூரியில் தலைமைப் புலவராக இருந்து, பின்பு சமஸ்கிருதக்கல்லூரியின் தலைவராகி, பின்பு பாடசாலை இன்ஸ்பெக்டராக இருந்து, கல்வித்துறையில் பல சீர்திருத்தங்கள் செய்தார். கைம்பெண் மணத்தை ஏற்கவும் பலதார மணத்தைத் தடுக்கவும் சட்டம் செய்ய இயக்கம் தோற்றுவித்தார். நவீனவங்காளத்தைஏற்படுத்தியவர்களுள் இவர் ஒருவர். பண்டை நூல்களில் பெரும் புலமை வாய்ந்தவர்.

**ஈசுவரமுனிகள்** - இவர் நாதமுனிகளுடைய திருமகன். ஆளவந்தாருக்குத் தந்தையார். திருவாய்மொழிக்குத், "திருவழுதிநாடென்றும்" என்னுந் தனியனைப் பாடியவர்.

**ஈசுவரன்**-இச்சொல்லின் பொருள் கடவுள் என்பது. இஃது இந்து சமயத்தில் மிகுதியாக வழங்கப் படுகிறது. ஈசுவரன் என்பதற்கு நேர் பொருள் செல்வமுடையவன் என்பது. இப் பொருளை நோக்கியே கோடீசுவரன் என்னுஞ் சொல்லும் எழுந்தது.

**ஈந்தூர்க்கிழான்தோயன் மாறன்**- இவன் ஈந்தூர் என்னும் ஊரினன். ஈகைப் பண்பு மிகுந்தவன். பெருஞ்செல்வம் படையாமலிருந்தும் தன்னை நாடி வந்தவர்கட்குத் தன்னால் இயன்றதைக் கொடுத்தான். தன்னுடைய அரசனுக்கு வந்த துன்பங்களை யெல்லாம் இவன் போக்கினன். இவனைப்புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர்.

**ஈயுண்ணியாண்டான்** - எழுபத்து நான்கு சிங்காதனாதிபதிகளில் ஒருவர்.

**ஈழவளநாடு** - இந்தியாவுக்குத் தென் கீழ்த் திக்கில் உள்ள இலங்கையே ஈழவளநாடு எனப்பெறும். இதன் பரப்பு 25,332 சதுரமைல். நீளம் 270 மைல். அகலம் 140 மைல். சுற்றளவு 760 மைல். இந்நாடு முன்னாளில் விரிந்து பரந்த நாடாகத் திகழ்ந்தது; பின்னாளிற் கடல் கோளால் சுருங்கி விட்டது.

**உக்கலம்மாள்** - வைணவ சிங்காதனாதிபதிகள் எழுபத்து நால்வர்களில் ஒருவர்.

**உக்கிரசிங்க மன்னன்** - இவன் முன்னாளில் கதிரை மலையில் (ஈழவளநாட்டில்) இருந்தான். நகுலேசர் கோவிலில் இறை வழிபாடு செய்வதற்காகக் கீரிமலைக்குச் சென்றான். அங்குத் தங்கியிருந்த மாருதப்பிரவல்லி என்னும் பெயருடைய சோழ மன்னனுடைய மகளைக் கண்டு அவளுடைய அழகிலே மயங்கிக் காதல் கொண்டான். அவளைத் திருமணஞ் செய்து கொள்ள வேண்டுமென்று முடிவு செய்தான். ஒருநாள் இரவில் மாருதப்பிரவல்லி திருக்கோயில் திருப்பணியைப் பற்றிப் படுக்கையிற் சாய்ந்த படியே எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள். அந்த நள்ளிரவில் உக்கிரசிங்க மன்னன் எவ்வாறே கட்டுக் காவல்களை யெல்லாங் கடந்து உள்ளே சென்று அவளையெடுத்துக் கொண்டு போய்த் தான் தங்கியிருந்த இடத்திலே வைத்துக் கொண்டான்.

பிறகு அவன் கதிரை மலைக்குப் புறப்படத் தொடங்கினான். மாருதப்பிரவல்லி, "கந்தசாமி கோயில் திருப்பணியை நிறைவேற்றி முதலாவது திருவிழாவையுங் கண்டாலல்லாமல் அவ்விடத்தை விட்டுப் புறப்பட முடியா" தென்றாள். ஆகவே இவன் பயணத்தை நிறுத்தித் திருப்பணியைத் தானும் உடனிருந்து கொண்டு நிறைவேற்றிக் குடமுழுக்குத் திருவிழா முதலியவைகளைச் செய்தான். பிறகு கதிரைமலையை அடைந்து திருமணத்தையும் முடித்து மாருதப்பிரவல்லியோடுஇனிதுவாழ்ந்திருந்தான். இவனுக்கு நரசிங்கன் என்னும் ஆணும் சண்பகாவதி என்னும் பெண்ணும் பிறந்தனர்.

**உக்கிரசிரவன்** - இவன் சூத குலத்தில் தோன்றிய உரோமகர்ஷணன் என்பவனுடைய மகன். சௌனகாதி முனிவர்

களுக்கு எல்லாப் புராணங்களையும் உரைத்தவன். இவன் புராணஞ்சொல்லிக் கொண்டிருக்கையில் பலராமர் அங்குச் சென்றார். அவரைக்கண்டு இவன் போற்றவில்லை. அதனாற் சினங் கொண்ட பலராமர் தம்முடைய கையில் இருந்த தருப்பையால் இவனைக் கொன்றார். பிறகு முனிவர்கள் வேண்டிக் கொள்ள உயிர்ப்பித்தார்.

**உக்கிரகுமாரபாண்டியர்** - தடாதகைப் பிராட்டியார் புதல்வர். மதுரையில் அரசு புரிந்த நான்காவது பாண்டியர். இவர் சோமசுந்தரக் கடவுளால் வேல் வளைசெண்டு கொடுக்கப்பட்டவர். இந்திரன் முடிமேல் வளையை எறிந்தவர்; கடல் சுவற வேல்விட்டவர். மேருவைச் செண்டால் அடித்துப் பொருள் பெற்றவர். முகில்களைத் தளையிட்டு இந்திரன் வேண்டுகோட்படி வேளாளரைப் பிணை கொண்டு விடுவித்தவர். (இதனால் அவ்வேளாளர் கார்காத்தார் என்னும் பெயரைப் பெற்றனர்.) இந்திரன் வஞ்சகத்தோடு அணிந்த அணிகலனைத் தாங்கி அதனால் ஆரந்தாங்கு பாண்டியன் என்று பெயர் பெற்றவர். இவருடைய மனைவி கதிரவன் குலத்துச் சோமசேகரன் மகள் காந்திமதி. இப்பாண்டியர் முருகக் கடவுளுடைய ஒரு கூறாக உலகில் தோன்றியவர்.

**உக்கிரமகோபன்** - தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**உக்கிரவீரன்** - பாண்டியமன்னர்களில் ஒருவன். சிறந்த அறிவு நலம் அமையப்பெற்று விளங்கிய இவன் புலவர்கள் பலரைத் தன்பால் வைத்து ஆதரித்தான். அந்நாளில் மழையில்லாமல் துன்பம் உண்டாகிய படியால் இவன்தன்னிடமிருந்த புலவர்களை யெல்லாம் வேறு நாடு சென்று வற்கடந் தீர்ந்தபின் வருமாறு சொல்லி அனுப்பினான். வற்கடந் தீர்ந்தபின் தன்னிடம் அழைத்துக் கொண்டான்.

**உச்சயினி** - இஃது உஞ்சேனை எனவும் வழங்கப்பெறும். இந்தியாவின் நடுப்பகுதியில் உள்ள பட்டணம். ஆமதாபாத்திலிருந்து இருநூறு மைல் கிழக்கே இருக்கிறது. முன்னாளில் அவந்தி நாட்டின் தலைநகராக இருந்தது. வடமொழி நூல்களிலும் தமிழ் நூல்களிலும் இவ்வூர் கூறப்படுகிறது. இதனை அவந்தி என்றுங் கூறுவதுண்டு. இஃது இந்தியாவின் புகழ்பெற்ற ஏழு புண்ணியத் தலங்களில் ஒன்றாகும். விக்கிரமாதித்தன் காலத்தில் மாளவத்தின் தலைநகராக இருந்தது;வடமொழிக்கலையிலும் பெயர் பெற்றுவிளங்கியது. பதினெட்டாம் நூற்றாண்டில் மராட்டியர்களின் ஆட்சியில் இருந்தது. பெருங்கதையில் பிரச்சோதனனுடைய தலைநகராகக் கூறப்படுகிறது. வஞ்சனையினால் உதயணன் சிறையிருந்தது முதலாக அவன் வாசவதத்தையைப் பிடிமேல் ஏற்றிக்கொண்டு சென்றது வரையில் உள்ள நிகழ்ச்சிகள் அந்நகரில் நிகழ்ந்தன. படை முதலிய அரண்களாலும் சிற்பவேலைகளாலும் செல்வநிறைவினாலும் மேம்பட்டதென்றும் அகநகர் புறநகர் என்னும் பிரிவுகளை உடையதென்றும் அந்நகரத்தார் முருகக்கடவுளை வழிபடுவரென்றும்பெருங்கதை கூறுகின்றது. இந் நகரின் அண்மையில் மகாகாளவனம் என்னும் ஒரு காடும் அதில் காளி கோவிலும் இருந்தன. உச்சயினி

மகாகாளம் என்னும் சிவ பெருமான் திருக்கோயில் ஒன்றும் உள்ளது.

**உச்சைச்சிரவம்** – திருப்பாற்கடல் கடைந்தபொழுது அதில் தோன்றிய ஒரு வெள்ளைக் குதிரை. இக்குதிரை இந்திரனுக்குக் கொடுக்கப்பட்டது.

**உடுப்பி** - மொழிவழி மாநில அமைப்புக்கு முன்னுள்ள சென்னை மாகாணத்தில் தென் கன்னட மாவட்டத்தின் தாலூகாவும் தாலூகா பட்டணமுமாகும். இங்கு அரிசியும் தேங்காயும் முக்கியமான விளை பொருள்கள். இப்பட்டணத்திலுள்ள கிருட்டிணன் கோவில் மத்துவாசாரியாரால் 13 ஆம் நூற்றாண்டில் நிறுவப்பட்டதென்பர். எட்டு மடங்கள் இருக்கின்றன. இவற்றின் தலைவர்கள் ஒவ்வொருவரும் இரண்டு ஆண்டுகள் கோயிலதிகாரியாக இருப்பர். கல்லூரி ஒன்றும் இங்கு உண்டு.

**உண்டவல்லி** – குண்டூர் மாவட்டத்தில் கிருட்டிணா நதிக் கரையில் விசயவாடாவுக்கு எதிர்ப்புறத்தில் அமைந்துள்ள ஊர். இங்கே அனந்தசயனரின் குகைக் கோவில் இருக்கிறது. இது தாடப்பள்ளி புகைவண்டி நிலயத்திற்கு வடக்கே இரண்டுமைல் தொலைவில் உள்ள குன்றின் பாறைகளைக் குடைந்து அமைக்கப்பட்டது. பதினைன்காம் நூற்றாண்டில் இக்கோவில் நல்ல நிலையில் இருந்ததாகவும் பதினாறும் நூற்றாண்டில் விசயநகர மன்னர் கிருட்டிணதேவராயர் இதற்குப் பல மானியங்கள் வழங்கியதாகவும் கோயில் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இங்குள்ள கோவிலின் சுவர்களில் திருமாலின்அவதார உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

குகைக்கோயில் ஒரே கோயிலன்று. ஒன்றின்மேல் ஒன்றாகக் குடையப்பட்ட மூன்று தனிக் கோயில்கள். அனந்தசயனர் சிலையும் மற்றைய வைணவ உருவச்சிற்பங்களும் இக் கோயிலில் இருப்பதால் இது முதலில் திருமாலுக்கு என்று அமைக்கப்பட்ட கோயில் என்று சிலர் எண்ணுகின்றனர். ஆனால் பல்லவர்களின் சிவன் கோவில்களில் திருமாலின் சிலைகளுங் காணப்பெறுகின்றன. முற்காலத்திய அரசர் முதலானோர் அரியுஞ் சிவனும் ஒன்று என்று நன்குணர்ந்தவர்கள் என்பதை நாம் கருத்திற் கொள்ள வேண்டும்.

**உண்ணாயீவாரியர்**-கி. பி. 1675 க்கும் 1775 க்கும் இடையில் தோன்றியவர். இவர் தோன்றிய இடம் திருவிதாங்கூர்-கொச்சி சமஸ்தானத்தைச் சேர்ந்த இரஞ்ஞாலகுடா என்னும் கிராமத்தில் அகத்தூட்டு வாரியத் (இல்லத்தில்) தில் ஆகும். மலையாளக் கவிஞர்களுள் சிறப்பு வாய்ந்தவர். கதகளி இலக்கியத்திலும் பொதுவாக உள்ள மலையாள இலக்கியத்திலும் புகழ் எய்தியவர். இவருடைய இயற்பெயர் உண்ணிராமன் என்பது. உண்ணிராமவாரியர் என்பது பின்பு உண்ணாயீவாரியர் என்று மருவிற்று. கோயிலில் மாலை கட்டுவது இவருடைய குலத்தொழில். இளமையிலேயே சமஸ்கிருதம், மலையாளம், தமிழ் முதலிய மொழிகளில் பெரும் புலமையுடையவரென்றும் "கவி" என்றும் போற்றப்பட்டார். திருவிதாங்கூரை ஆண்ட மார்த்தாண்டவர்மனின் அரசவைக் கவிஞராக விளங்கி

ஞர். பாண்டி நாட்டுக் களக்காட்டு மண்டபத்தும் வாதிற்கல்லில்காட்டு நிலம், அரசரால் இவருக்கு வழங்கப்பட்டது. நளசரிதம் ஆட்டக்கதை (கதகளி) என்னும் நூல் இவரால் இயற்றப்பட்டது.

**உதகமண்டலம்** - தமிழ்நாட்டில் நீலகிரி மாவட்டத்தின் தலைநகரம். ஒத்தகமந்து என்னும் தொதவர் மொழிச் சொல் திரிந்து உதகமண்டலம் என ஆயிற்றென்பர். இது நீலகிரி மலையில் ஏழாயிரத்து ஐந்நூறு அடிக்குமேல் அமைந்துள்ளது. சென்னையில் இருந்து முந்நூற்றுஐம்பத்தாறு கல்தொலைவில் உள்ளதாகிய மேட்டுப்பாளையம் என்னும் ஊருடன் புகைவண்டிப் பாதையாலும் நடைவழிச்சாலையாலும்இணைக்கப்பட்டுள்ளது. மலைச்சரிவைச் செதுக்கியும் பாறைகளைக் குடைந்தும் புகைவண்டிப் பாதை அமைக்கப்பட்டுள்ளது. சாலை வளைந்து வளைந்து மேல் நோக்கிச் செல்லுகிறது. கோடைகாலத்திற்கு ஏற்ற இருப்பிடம்.

**உதங்கன்** - இவன் பிருகுமுனிவருடைய வழிமுறையில் வந்தவன். இவனுடைய தந்தையின் பெயர் தீரசருமன். இவன் பயிலவர் என்னும் முனிவரிடம் பணிபுரிந்து கல்வியை நன்கு கற்ருன். ஆசிரியருடைய இல்லப் பணிகளையும் அன்போடுசெய்தான். இவனுடைய அன்புடைமையையும் பண்புடைமையையுங் கண்ட முனிவர் தம்முடைய மகளை இவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தார்.

**உதத்தன் துந்துரன்** - இவர்கள் இருவரும் அசுரர்கள்; ஆனைமுகக் கடவுள் குழந்தைப் பருவத்தினராய் இருக்கும்போதே அவரைக் கொன்றுவிடவேண்டுமென்று முடிவு செய்தனர். கிளியுருக்கொண்டு ஆனைமுகக் கடவுள்முன் சென்றனர். ஆனைமுகக் கடவுள் பருந்தின் வடிவத்தையெடுத்துக்கொண்டு அக் கிளிகளைக் கொன்றனர்.

**உதயகுமரன்** - காவிரிப்பூம்பட்டினத்தரசனுகிய நெடுமுடிக்கிள்ளியின் மகன்; மணிமேகலையை விரும்பி அவளிடம் பன்முறை சென்று இரந்து பின்னின்றவன். இறுதியில் மணிமேகலை காயசண்டிகை என்னும் வித்தியாதர மங்கையின் வடிவங்கொண்டு நிற்ப அப்பொழுது அவ்விடத்திற்கு வந்த காயசண்டிகையின் கணவனுகிய வித்தியாதரனுடைய வாளால் வெட்டுண்டிறந்தவன்.

**உதயணன்** - இவன் குருகுலத்திற் பிறந்தவன். தந்தையின் பெயர் சதானிகன்; தாய்பெயர் மிருகாவதி. இவனுடைய நாடு வத்தவநாடு. தலைநகர் கோசம்பி நகர். பெருங்கதையினுடைய கதைத் தலைவன் இவனே. இவன் கதிரவன் தோன்றும்போது (உதயம்) பிறந்ததுபற்றி இப்பெயர் பெற்ருன். இவனுடைய தாய் மரபு, தந்தை மரபு இரண்டும் மிகப் புகழ் பெற்றவை. இவன் மிகு இளமைப் பருவத்திலேயே பலவகைக் கலைகளையும் நன்கு கற்றுத் தேர்ந்தான். விற்படை முதலியவற்றிலும், யானையேற்றம் முதலியவற்றிலும் யாழ் வித்தையிலும்வல்லவன்.யாழிற்குரிய மரங்களினியல்பையும் நரம்புகளின் இலக்கணங்களையும் இவன் நன்கு அறிந்திருந்தான். மிகப் புதுமையான மாலைகள்தொடுப்பதிலும் வல்லவன். இவன் ஒவ்வொரு காரியத்தையும் நன்கு ஆராய்ந்து தெளிந்த பிறகே செய்வான். இடவகன்

உருமண்ணுவா, யூகி, வயந்த கன் என்னுஞ் சிறந்த அமைச்சர்கள் நால்வர் இவனுக்கிருந்தனர்.

**உதயன்** - இவன் பாடலிபுத்திரத்தைத் தலைநகராகக்கொண்டு அரசாட்சி செய்திருந்தான். இவன் அசாதசத்துருவுக்கு இளவல் என்பர்.

**உதயையோடை** - இவள் பதுமாபதியினுடைய நற்றாய்; சிவமதியின் உடன் பிறந்தாள். காசியரசனுக்கு மனைவி.

**உத்தமச் சோழன்** - கொங்குவள நாட்டில் தாராபுரம் கூற்றம் காங்கேயம் பிரிவில் நத்தக் காரையூர் என்னும் ஊருக்கும் ஆனூருக்குந் தலைமை பெற்றவர்கள் சர்க்கரை என்னும் பெயர்க் குடியினர். அவ்வழி முறையில் ஒருவன் உத்தமச் சோழ சக்கரவர்த்தியிடத்திலே படைத்தலைவனாக இருந்தான். படையை நடத்தி வெற்றி பெற்றான். மகிழ்ச்சியடைந்த உத்தமச்சோழன் தன்னுடைய பெயரையே அப் படைத்தலைவனுக்குச் சிறப்புப் பெயராக வழங்கினான்.

**உத்தரகுரு** — போக பூமியில் ஒன்றாகிய தபோவனம். கதிரவனுடைய உடல் வெம்மை யாற்றாத அவன் மனைவி சஞ்ஞிகை அசுவினி தேவரைப் பெற்றவிடம். சஞ்ஞிகை துவட்டாவினுடைய மகள்.

**உத்தரகீதை**-இந்நூல் வேதாந்தச் செய்திகளைக் கூறுவது. பாரதத்தில் ஒரு கூறாக உள்ளது. பகவத் கீதையைக் கேட்ட அருச்சுனன் மீண்டும் மெய்யறிவு பெறுமாறு கண்ணனால் அருளிச் செய்யப்பட்டது.

**உத்தரகோச மங்கை** - பாண்டிய நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள ஒரு சிவத் தலம். சத்திரகுடி இரயில் நிலையத்துக்கு ஆறு கல் தொலைவிலுள்ளது. மணிவாசகப் பெருமானுக்குச் சிவபெருமான் தம் திருஉருக் காட்டிய இடம். அடிகளின் நீத்தல் விண்ணப்பம் முதலிய பாடல்கள் பெற்ற பெருமை வாய்ந்தது. இங்கு இறைவன் இறைவியினுடைய ஐயங்கட்கு மறுமொழி (உத்தரம்) கூறியபடியால் இப்பதி இப்பெயரைப் பெற்றது.

**உத்தரமேரூர்** - தமிழ் நாட்டில் செங்கல்பட்டு மாவட்டத்தில் மதுராந்தகம் வட்டத்திலுள்ள ஊர். இங்குப் பண்டைநகரம் ஒன்று புதையுண்டு கிடக்கின்றதாகச் செப்புவர். செய்யாறு நீர்வந்து பாயும் மிகப்பெரிய ஏரி யொன்றுளது. வாரச் சந்தை பிரசித்தி பெற்றது.

**உத்தரமோசன்** - துருபத மன்னனுடைய மகன். திட்டத் துய்மனுக்குத் தம்பி. பாரதப்போர் பதினெட்டாம் நாள் இரவில் அசுவத்தாமனால் உறக்க காலத்தில் கொலை செய்யப்பட்டான்.

**உத்தரன்** - மச்சநாட்டு வேந்தனாகிய விராடனுடைய மகன். இவனுடைய தமையன் பெயர் சுவேதன். தங்கை பெயர் உத்தரை. இவன் உருவுந் திருவும் உடையவனாகவிருந்தும் ஆண்மையுந் திண்மையும் இல்லாதவனாகவும் தொடை நடுங்கியாகவும் இருந்தான். இவன் இளவரசனாயிருந்த காலத்தில் துரியோதனன் படைகளோடு வந்து இவனுடைய ஆநிரைகளைக் கவர்ந்து கொண்டான். அவைகளை மீட்கும் பொருட்டு அரசன் தெற்குத்திக்கிற் சென்று போராடினான். பகைவர்கள் வடக்குத்திக்கு வழியாக வந்து நகரத்தை வளைத்துக் கொண்டார்கள். அரசனுடைய மனைவி உள்ளங் கலங்கினாள்,

அங்குப்பேடியாகவிருந்த அருச்சுனன் தேர்விட இவன் போர் மேற் சென்றான். படைகளைக் கண்டு நடுங்கி ஓடத்தொடங்கிய இவனை ஓட விடாமல் தேர்க்காலோடு பிடித்து அருச்சுனன் கட்டிவிட்டுத் தானே போராடிப் பகைவர்களை வென்றான்.

**உத்தரை** - விராடராசனுடைய மகள். உத்தரனுக்கு இளையவள். அருச்சுனன் பேடிரூபந்தாங்கிப் பிருகந்நளை என்னும் பெயரோடு அஞ்ஞாதவாசஞ் செய்து கொண்டிருந்த பொழுது அவனிடம் நாட்டியங் கற்றவள். அபிமன்யு மனைவி. பரீட்சித்துவின் தாய். கருப்பமுற்றிருக்கையில் அசுவத்தாமன் விடுத்தகணை அக்கருவைச் சிதைக்காமல் கண்ணபிரான் பாதுகாத்தார். இக்காரணத்தால் அக்குழந்தைக்குப் பரீட்சித்தென்று பெயரிடப்பட்டது.

**உத்தவசித்கனர்** - தாரூர் என்னுஞ் சிற்றூரில் இருந்த மறையவர். இவர் இராமபசனை செய்து கொண்டிருக்கும் நாட்களில் இராமநவமியன்று பிதரு பட்டணமடைந்து திருவிழாக் கொண்டாடினார். திருவீதி வலம் வருகையில் அவ்விடமிருந்தமுகமதியர்கள் தொல்லை கொடுத்தனர். திருவீதி வலம் வந்தவர்கள் உத்தவசித்கனரிடங் கூறினார்கள். அவர் பெருமாளிடம் முறையிட்டார். பெருமாள் அநுமனை யனுப்பினார். அநுமன் சினங்கொண்டு அங்கிருந்த பள்ளிவாசலை யிடித்துத் தள்ளினான். இதனையறிந்த முகமதிய மன்னன் சினங் கொண்டான். அவனுக்கு வயிற்றுவலியுண்டாகியது. அவன் அங்கிருந்த பக்கிரிகளிடங்கூறினான். பக்கிரிகள் உண்மையை உணர்ந்து உத்தவசித்கனரைப் போற்ற அரசனுடைய வயிற்றுவலி நீங்கியது.

**உத்தவர்** - இவர் வசுதேவன் தம்பியாகிய தேவபாகனுடைய புதல்வர். வடமதுரையில் இருந்தவர். அருளுள்ளம் உடையவர். இவருக்குச் செல்வம் மிகுதியாக இருந்தது. ஆயினும் உலக இன்பங்களில் உள்ளத்தைச் செலுத்தாமல் பரமனுடைய திருவடிகளையே பற்றி நின்றார். இவருடைய மெய்யறிவின் மேன்மையை உணர்ந்து விதுரர் முதலியோர் இவரைப் பாராட்டியதோடு இவரிடம் அருளுரையும் பெற்றனர்.

**உபபாண்டவர்கள்** - பாண்டவர்கள் ஐவருக்குந் திரௌபதியிடந் தோன்றியவர்கள். பாசறைப் போரில் அசுவத்தாமன் இவர்களைப் பாண்டவர்கள் என்று எண்ணிக் கொன்றுவிட்டான். இதனையுணர்ந்து துரியோதனனும் உள்ளம் வருந்தினான்.

**உபமந்யு**-வியாக்கிரபாத முனிவர் வசிட்டரின் தங்கையைத் திருமணஞ் செய்து இல்லறத்தை நடத்திக் கொண்டிருந்தார். அப்பொழுது அவருக்கு மகன் ஒருவர் பிறந்தார். வசிட்ட முனிவர் தம்முடைய தங்கையின் மகனுக்கு உபமந்யு என்று பெயரிட்டுத் தம்முடைய இருப்பிடத்திற்குக் கூட்டிக்கொண்டு சென்றார். அங்குக் காமதேனுவின் பாலைக் கொடுத்துக் குழந்தையை வளர்த்தார். பிறகு வியாக்கிரபாதர் தம்முடைய மகனைத் தம்முடைய இருப்பிடத்திற்கு அழைத்துக் கொண்டு வந்தார். உபமந்யு தம்முடைய மாமனாகிய வசிட்டரின் இருப்பிடத்தில் காம

தேனுவின் பாலைக்குடித்துப் பழகியவராகலின் இங்குங் காமதேனுவின் பாலே வேண்டுமென்று பிடிவாதஞ் செய்தார். வியாக்கிரபாதர் இதற்கு யாது செய்வதென்று உள்ளங் கலங்கினார். திருமூல நாதரிடத்தில் முறையிட்டார். திருமூலநாதர் திருப்பாற்கடலைத் திருத்தில்லைக்கு வரச்செய்தார். உபமந்யு அதனையுண்டு தம்முடைய குறை நீங்கப் பெற்றார்.

**உப்யாசமுனிவன்** - இவன் ஒரு முனிவன். மன்னர்கட்கு வேள்விகள் செய்து அவர்களுடைய மனவிருப்பத்தை நிறைவேற்றுதலில் வல்லவன். துருபதன் இம்முனிவனைக் கொண்டு வேள்வி செய்து திட்டத்துய்மனையும் திரௌபதியையும் பெற்றான்.

**உபேந்திரன்** - திருமாலின் திருப்பெயர்களில் ஒன்றாகிய உபேந்திரன் என்பது இந்திரனுக்குத் தம்பியாகச் சேர்ந்தவன் என்று பொருள்படும். ஒருகாலத்தில் இந்திரன் அசுரர்களால் வருந்தித் தேவர்களோடு திருமாலிடஞ் சென்று "தேவரீர் எப்பொழுதும் எங்களுடைய உலகத்திலிருந்து எங்களைப் பாதுகாத்தருள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். திருமாலும் அதற்கு இணங்கிக் காசிப முனிவருடைய மனைவியாகிய அதிதிதேவியின் வயிற்றில் அவ்விந்திரனுக்குத் தம்பியாகத்தோன்றி இந்திரனுடைய உலகத்திலேயே இருந்து காத்தருளினார். அப்பொழுது உபேந்திரன் என்னும் பெயர் வழங்கியது.

**உமர்கையாம்** - இவர் பாரசீக நாட்டில் உள்ள நைஷாப்பூர் என்ற நகரத்திற் பிறந்தார். இவர் புகழ் பெற்ற அறிஞர். தத்துவம், உளவியல், விஞ்ஞானம், கணிதம், வானவியல் முதலிய பல கலைகளினும் வல்லுநர். இவர் ருபையாத் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அந்நூல் உலகப் புகழ் பெற்றது. இதைத்தவிர வேறு பல நூல்களும் செய்துள்ளார். இவருடைய தத்துவக் கருத்துக்கள் ருபையாத் என்னும் நூலில் அடங்கியுள்ளன. இந்நூலில் மனித இயல்பு, இன்பத்தின் நிலையாமை முதலிய பல செய்திகள் கூறப்பட்டுள்ளன. இந்நூல் தமிழில் பலரால் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

**உமாபதி தேவர்** - இவருடைய பெயர் ஞான சிவ தேவர் எனவும் வழங்கியது. இவர் கௌட நாட்டிலிருந்து தென்னிந்தியாவுக்கு வந்தார். அப்பொழுது பாண்டி நாட்டில் கலகம் ஏற்பட்டு அதனால்மிகுந்த தொல்லை விளைந்து கொண்டிருந்தது. அரசன் பாண்டிநாட்டுக் கலகம் அடங்குமாறு செபம் செய்யுமாறு இவரை வேண்டிக் கொண்டான். இவரும் அவ்வாறே செய்தார். இதனால் பாண்டி நாட்டுக் கலகம் அடங்கியது. அதனால் ஆரம்பாக்கம் என்னுஞ் சிற்றூரில் அரசன் அந்தணர்கட்குப் பல தானங்கள் செய்தான்.

**உய்யக்கொண்டார்** - இவருடைய இயற்பெயர் புண்டரீகாட்சர் என்பது. ஊர் தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள காட்டுமன்னார் கோயில். வைணவ ஆசாரிய வழி முறைக்கு முதல்வராகிய நாதமுனிகளால் உய்வுபெற ஆட்கொள்ளப் பட்டவராதலின் உய்யக் கொண்டார் என்று காரணப் பெயர் பெற்றாரெனக் கூறுவர். மற்றும் மணக்கால் நம்பி முதலிய பலரையும் உய்யுமாறு ஆட்கொண்டவராதலின் இவ்

வாறு பெயர் பெற்றார் எனவுங் கூறுவர்.

**உருக்குமணி** - பீஷ்மன் என்னும் ஓர் அரசனுடைய மகள். இவளுடைய தமயனாகிய உருக்குமி என்பவன் இவளைச் சிசுபாலனுக்குத் திருமணஞ் செய்ய முடிவு செய்திருந்தான்; இவளோ கண்ணனுடைய சிறப்பையுணர்ந்து அவனிடத்தில் காதல் கொண்டிருந்தாள். ஓர் அந்தணன் மூலமாகத் தன்னுடைய எண்ணத்தைக் கண்ணனுக்குத்தெரியப்படுத்தினாள். கண்ணனும் இவள் மீது எண்ணங் கொண்டிருந்தான். திருமணகாலத்தில் வந்தான். உருக்குமணி கோவிலுக்குச் சென்று திரும்பும் போது அங்குக் கூடியிருந்த எல்லா அரசர்களும்பார்த்துக்கொண்டிருக்கக் கண்ணன் இவளைத் தேரிலேற்றிக் கொண்டு தன்னுடைய நாட்டிற்குச் சென்றான். இவளுடைய தமயனாகிய உருக்குமி கண்ணனை எதிர்த்துப் போரிட்டான். இறுதியில் அவனைக் கொல்லுவதற்குக் கண்ணன் படைக்கலத்தை யெடுத்தார். தன்னுடைய தமயனைக் கொல்லவேண்டாமென்று இவள் கண்ணனை வேண்டிக் கொண்டாள். கண்ணனும் உருக்குமியைக் கொல்லாதுவிட்டார். இவளுக்குப் பிரத்துயும்நன் முதலிய பத்து மக்கள் தோன்றினர்.

**உருக்குமாங்கதன்** - விதர்ப்ப நாட்டு மன்னனாகிய வீமன் என்பவனுடைய மகன். இவன் சிறந்த அழகும் நிறைந்த அறிவு முடையவன். இவனுடைய அமைச்சன் பெயர் சத்துருசிங்கன். இவன் ஒரு நாள் மாலையில் மலர்ச்சோலையொன்றுக்குச் சென்ற போது முகுந்தை என்னும் பெயருடைய அழகியமாது ஒருத்தி இவனைக்கண்டு காமுற்றாள். தழுவமுயன்றாள். இவன்மறுத்தான். அவள் வரபலமுடையவளாகையால் வசவுரை வழங்குவேனென அச்சுறுத்தினாள். அவ்வாறு வழங்கினும் வழங்குக; நான் உன்னுடைய தீயொழுக்கத்திற்கு ஒரு போதும் இசையேனென்றான். அவள் வசவுரை வழங்கினாள். இவன் அதனையேற்றுக் கொண்டான். இவனுடைய மனத்திண்மையையும் பிறன் தாரத்தை விரும்பாத பேராண்மையையும் அனைவரும் பாராட்டினார்கள்.

**உருத்திரசன்மர்** - இவரையூமைப் பிள்ளையார் எனவுங் கூறுவர். இவர் முருகக்கடவுளுடைய கூறாக உலகத்தில் தோன்றியவர். கடைச் சங்கப் புலவர்கள் தம்முள் மாறுபட்டு உயர்வு தாழ்வுகளை உணர்த்துமாறு சொக்கநாதப் பெருமானை வேண்டினர். அவர் இவ்வுருத்திரசன்மரிடம் வந்தால் உண்மையுணரலாம் என்று கூறியருளினார். அவ்வாறே சங்கப்புலவர்களிவரிடம் வந்து தங்களுடைய செய்யுட்களைக் கூறி உயர்வு தாழ்வுகளை உணர்ந்தனர். முருகக்கடவுள் இவ்வாறு ஊமைப் பிள்ளையாகப் பிறக்கக் காரணம் சிவபெருமானுடைய வசவுரை யென்பர்.

**உருத்திரசுவாமி** - இவன் ஒரு மறையவன். இவனுடைய மனைவி, அதிதிக்கு உணவிட மறுத்தாள். அதனால் சினங் கொண்ட இவன் அவளைக் கொன்று கிணற்றில் போட்டு விட்டான். இதனால் தீவினைக் கோட்குட்பட்டு இருபத்தைந்தாண்டுகள் துன்பமடைந்தான், பிறகு திருவாலங்

காட்டுப் புனித நீரில் மூழ்கித் தூய்மை பெற்றான்.

**உருத்திரதத்தன்** - ஏமாங்கத நாட்டில் இராசமாபுரியில் இருந்தவன். சச்சந்தனுடைய அமைச்சன். அறிவிலும் ஒழுக்கத்திலும் இவன் மிகச் சிறந்தவன். தன்னுடைய அரசன் விசயையின் இன்பத்திலாழ்ந்து அரசைக் கட்டியங்காரன்பால் கொடுக்கத் துணிந்தபொழுது இவன் கொடுத்தல் தீதாமெனத் தடுத்து அரசனுக்கு அறிவுரைகள் பல கூறினன். ஆயினும் அரசன் விதிவழியே மதியிழந்து இவன் சொல்லைக் கேளாமல் அழிந்தொழிந்தான்.

**உருத்திராட்சம்** - இதனைச் சிவ் கண்மணி என்பர். முப்புர சங்காரத்தின் பொருட்டு எழுந்தருளிய உருத்திரமூர்த்தியின் சினக் கண்ணில் உண்டான ஒரு விதையினின்று முளைத்த மரத்தின் மணி. இஃது உருத்திரன் கண்ணிற் பிறந்தபடியினல் உருத்திராட்சம் என்னும் பெயரை அடைந்தது. இதனைச் சிவாகமத்தில் கூறிய முறைப்படி தலை முதலிய உறுப்புக்களில் அணிபவர் எல்லாவகையான தீவினைகளிலிருந்தும் விடுபடுவர். இம்மணியை அணிந்து வீடுபேற்றையடைந்தவர்களுடையவரலாற்றை உபதேச காண்டம் முதலிய நூல்கள் உரைக்கும்.

**உருத்திராம்பாள்** - இவள் கணபதி என்பவனுடைய மகள். தந்தையினுடைய விருப்பத்தின்படி "மகாராச அம்மையார்" என்னும்பட்டத்தைச் சூடினள். இவளுடைய ஆட்சியில் அமைதியும் செழிப்பும்நிலவின. மார்கோபோலோ என்பவன் இவளுடைய ஆட்சிச்சிறப்பைப் போற்றியுள்ளான். பிரதாபருத்திரன் என்பவன் இவளுடைய பெயரன். இவனுக்கு அகவை வந்தவுடன்உருத்திராம்பாள் அரசைத் துறந்தாள்.

**உருமண்ணுவா** - இவன் பெருமை வாய்ந்த உயர்குடியிற் பிறந்தவன். உதயணனுடைய அமைச்சர்கள் நால்வருள் ஒருவன். யூகிக்கு அடுத்தபடியாக இவன் உதயணனுக்கு இன்றியமையாதவனக விளங்கினன். போர்க்களத்தில் படைகளைத் திறமையாகச் செலுத்துவதில் வல்லவன். எச்சமயத்திலும் இவன் சிறிதும் அச்சங் கொள்ளான். இராசகிரியநகரத்தில் உதயணன் மறைந்திருந்த பொழுது தானும் மறைந்திருந்துஅவனைப் பாதுகாத்தவர்களில் இவனும் ஒருவன். உதயணனுடைய நல்வாழ்வைக் கருதித்தன்னுடைய உயிருக்குச் சிறிதும் இரங்காமல் போரில் அவனுக்கு முன் சென்று பகைவராற் சிறைப்படுத்தப்பட்டான். மிகவுஞ் சிக்கலான வழக்குகளைத் தீர்ப்பதில் வல்லவன். உதயணனுடைய விருப்பத்தின்படி பதுமாபதியின் தோழியாகிய இராசனை என்பவளைத் திருமணஞ்செய்துகொண்டான். துறவறம் பூண்டு தவஞ்செய்து கொண்டிருந்த தன்னுடைய தந்தைக்கு யாதொரு துன்பமும் நேராதவாறு வேண்டியவற்றையளித்து ஒழுகினன். கருவுற்ற வாசவதத்தையோடு விமான மேறி விண்வழியே சென்ற உதயணனோடு உடன் சென்றவர்களில் இவனும் ஒருவன். இவனுடைய மகன் பெயர் பூதி.

**உருளைக்கிழங்கு** - ஊனுண்பவர்களாகிய அசுரர்களோடு நெடு நாள் போர்செய்த தேவர்கள் அசுரர்க்காற்றாது போரில் தோல்வியடைந்தனர். இதனல்

தேவர்கள் ஊனுணவை யொத்த ஆற்றலுள்ள பொருள் யாதென்று தன்வந்திரியிடங் கேட்டனர். தன்வந்திரி உருளைக்கிழங்கு ஊனுணவைப் போன்ற சத்துள்ளது என்று தேவர்கட்குரைத்தார். தேவர்கள் பிறகு இதனையுண்டு அதிக ஆற்றலையடைந்து அசுரரை வென்றார்கள்.

**உரோகிதாசர்** - இவர் தோல் வேலை செய்யுஞ் சக்கிலிய குலத்தில்தோன்றியவர். பிறருக்குப் பலவகையினும் உதவி செய்து பேரருளாளராகப் பிறங்கியிருந்தார். திருமாலிடத்துப் பெருமால் கொண்டு அம்மாலை வழிபட்டார். அதிகாலையில் எழுந்து நீராடல் முதலியவைகளை முடித்துக் கொண்டு தோலினால் இருக்கை முதலியன அமைத்துத் துளசிப் பொழிலுக்குச் சென்று சாளக்கிராமமாகிய திருமால்வடிவைத் தோலிருக்கையின் மீது வைத்து வழிபட்டுவந்தார். இதனை அங்கு வந்த மறையவன் ஒருவன் கண்டான். "தோலின் மேல் சாளக்கிராமத்தைவைத்து வழிபடுதல் தூய்மையாகுமா?" என்று உசாவினான். தாசர் அவனைப் பார்த்து, "எக்காலத்தினும் எப்பொருளினும்நிறைந்திருக்குந் திருமாலை எண்ணும் மனம் தோலன்றோ? பூசிக்குங் கை தோலன்றோ? போற்றுகின்ற நா தோலன்றோ?" என்று மறுமொழி கூறினார். இதனைக் கேட்ட மறையவன், "பூணூல் புனைந்த மறையவர்களே பூசை புரிதற்குத் தகுதியுடையவர்கள். நீ பூசை செய்யாதே" என்று கூறினான். இதனைக் கேட்ட தாசர், "என்னிடத்தும்பூணூல்இருக்கிறது" என்று கூறித் தம்முடைய மார்பைப் பிளந்து அங்கு விளங்கியபூணூலைக்காட்டினார். மனத்தூய்மை யுடையோர் யாது செய்யினும் அதுகுற்றமாகாதென அம்மறையவனுணர்ந்து தாசரை வணங்கிச் சென்றான்.

**உலகசாரங்கமாமுனி**- திருவரங்கத்தில் வசித்திருந்த சிறந்த பக்தர். பெருமாளுடைய கட்டளையின்படி திருப்பாணாழ்வாரைத் தோளில் தூக்கிக் கொண்டு வந்து பெருமாள் திருமுன்பு விட்டவர்.

**உலகமாதேவீச்சுரம்** - தஞ்சையம் பதியை அரசாண்டிருந்த இராசராசன் மனைவி திருவையாற்றுத் திருக்கோயிலின் வடக்குத் திருச்சுற்றிலே ஒரு திருக்கோவிலைக் கட்டினாள். அவளுடைய பெயர் உலகமாதேவி. அவள் கட்டிய கோயில் அவளுடைய பெயரால் உலகமாதேவீச்சுரம் என்று பெயர் பெற்றது.

**உலகவறவி**-ஊரம்பலம்; காவிரிப்பூம்பட்டினத்தில் சக்கரவாளக் கோட்டத்துள்ள சம்பாபதி கோயிலின் முன்புள்ளது; பலரும் வந்து தங்குவதற்குரிய தருமசாலை. அம்பலப் பீடிகையென்றும், பொதியிலென்றும், மன்றமென்றும் மன்றப் பொதியில் என்றுங் கூறப்பெறும். கந்திற்பாவை இருந்த இடமும் இதுவே.

**உலகளந்த பெருமாள்** - காஞ்சிபுரத்தில் திருக்கோயில் கொண்டுள்ள ஒரு பெருமாளுடைய திருப்பெயர். மாபலிச் சக்கரவர்த்தியிடம் தானம் வாங்கச் சென்றபொழுது உலகப் பெரு வடிவங் கொண்டு விண்ணுலகத்தையும் ஓரடியால் அளந்த திருக்கோலத்தை இத் திருக்கோயிலில் மிக உயரமாக அமைத்து வைத்துள்ளமையின் இப் பெயர் உண்டாகியது. திருக்குறளுக்கு உரை எழுதிய

பரிமேலழகர் இத் திருக்கோயி லில் பூசை செய்து கொண் டிருந்ததாகக் கூறுவர்.

**உலும்பினிவனம்** - கோசல நாட் டில் கபிலவத்துவில் சாக்கிய சக்கரவர்த்தியாகிய சுத்தோ தனனுடைய பட்டத்தரசியான மாயாதேவியின் வயிற்றில் இருந்து அவள் வலமருங்குல் வழியே கௌதம புத்தர் பிறந்த இடம்.

**உலூகன்** - இவன் பாண்டவர்கள் காலத்தில் உபலாவியம் என் னும் ஊரில் இருந்தவன். அந்தணர் குலத்தினன். பல நூல்களையும் நன்கு கற்றுச் சிறந்த அறிவாளியாகத் திகழ்ந் திருந்தான். இவனுடைய வழி முறையினர் அரசர்கட்கு அமைச்சர்களாகவும் உசாத் துணைவர்களாகவும் விளங்கி யிருந்தனர். பாண்டவர்கள் காட்டு வாழ்க்கை முடிந்த பிறகு நாட்டைத் தந்து விடு மாறு துரியோதனனிடம் தூதனுப்ப எண்ணினர். அதற் குத் தகுதியானவன் இவனே என்று முடிவு செய்து இவனை அனுப்பினர். இவன் சென்ற காரியம் வெற்றி பெறவில்லை யாயினும் துரியோதனனுக்குத் தக்கவாறு இடித்துரைத்து அறி வுரை கூறிவிட்டு மீண்டான். இவன் சகுனியின் மகனென்றுந் தந்தையின் போக்குப் பிடிக்கா மல் துறவியாகித் தவஞ் செய் தான் என்றுங் கூறுவர்.

**உலூபி** - நாகலோக வேந்த னுடைய மகள். அருச்சுனன் தீர்த்த யாத்திரை சென்ற பொழுது நீராடுமிடத்தில் இவளைக் கண்டு நாகலோகஞ் சென்று மணம் புரிந்தான்.

**உலோகமாபாலன்** - இவன் ஒரு குறுநில மன்னன். வாரணவாசி யில் இருந்து அரசு புரிந்தவன். அறிவுந் திருவும் உடைய இவனுக்கு ஊழ்வினையினால் யானைத் தீ என்னும் கொடிய பசி நோய் உண்டாகியது. அதனால் வருந்தி அரசியலைத் துறந்து சென்றான்.

**உலோபாமுத்திரை அகத்தியர்** - இவர் தமிழரல்லர். இவர் தமிழ் நாட்டிற்கு வரவும் இல்லை. தமிழ் மொழியை எழுதவோ பேசவோ இவருக் குத் தெரியாது. இவர் ஆரிய மொழியில் வல்லவர். உலோபா முத்திரை என்பவளை மணம் புரிந்துகொண்டபடியால் இவர் இப் பெயர் பெற்றார். இவர் இசையில் வல்லவர். பிறர் பாடும் இசையில் தவறு ஏற் பட்டால் இவர் அதனைப் பொறார்.

**உவவனம்** - காவிரிப்பூம்பட்டி னத்தைச் சார்ந்த ஒரு பூஞ் சோலை; புத்த பாத பீடிகை யுள்ள ஒரு பளிக்கறையை உடையது. மணிமேகலை பூப் பறிப்பதற்குச் சென்றாள் என்று கேட்டு உதயகுமரன் மணிமேக லையைக் கைப்பற்றுவதற்கு முத லில் வந்த இடம். மணிமேகலா தெய்வம் மணிமேகலைக்குக் காட்சி கொடுத்து அவளை மணி பல்லவத்திற்குக் கொண்டு சென்ற இடமும் இதுவே.

**உள்ளங்கைக் கொணர்ந்த நயினார்** - இவர் கமல நயன பட்டரின் புதல்வர். யாதவப் பிரகாசருடைய சூழ்ச்சியால் உடையவரிடமிருந்து பிரிக்கப் பட்டுக் கங்கையாடச் சென்றார். அங்குத் தெய்வீகமாகத் தம் கையை அடைந்த இலிங்கத் தால் உள்ளங்கைக் கொணர்ந்த நயினாரெனப் பெயரடைந்தார். பிறகு அவ்விலிங்கத்தைக் காளத்தியில் அமைத்துச் சைவ சமயத்தை மேற்கொண்டொழு கினார். அதன் பின் திருமலை நம்பியால் வைணவராக்கப்

பட்டு எம்பாரெனும் பெயரை அடைந்தார். கோவிந்த பட்டர் என்பது இவருக்கு வைக்கப் பட்ட பிள்ளைப் பெயர்.

**உற்படர்** - இவர் ஒரு வீர சைவர்; பெருமையிற் சிறந்து விளங் கியவர். இவரிடத்திற் பொறாமை கொண்ட அந்தணர் கள் இவர் சேரத்தகாத மாதைச் சேர்ந்தவரென்று குற்றஞ் சுமத்திப் பேசினார்கள். உற் படருடைய பெருமையை உணர்ந்திருந்த அரசன் அதனை அந்தணர்கட்குத் தெரிவிக்க எண்ணினான். மறுநாள் அவை கூட்டினான். அவைக்கு அண்மை யிலிருந்த ஓரால மரத்தில் பேரொலி யுண்டாகியது. அர சன் அவ்வொலி யாதென்று கேட்டான். ஒரு பூதம், "என் னுடன் கூடிய எழுநூறு பூதங் கள் பன்னிரண்டு ஆண்டுகளாய் உற்படர் மூலம் கைலையை அடையக் காத்திருந்தன. அவை கள் உற்படர் உடம்பில் உண் டான புகையால் கைலையை அடைந்தன. நான் பசியினால் இங்கில்லாமல் அயலூருக்குப் போயிருந்தபடியினால் கைலை யை அடையவில்லை. இப்போது நீ அவருடைய எலும்பைப் புகைத்தால் கைலையை அடை வேன்" என்று கூறியது. அரசன் அவ்வாறே புகைத்து அப் பூதத்தைக் கைலைக்கனுப் பியதோடு தானும் தன் சுற்றத் தினருடன் திருக் கைலையை அடைந்தான்.

**உற்பலாங்கி** - இவள் ஒரு பார்ப் பனி. துங்கபத்திரை நதிக் கரையில் இருந்த கோபால ஐயன் என்பவனுடைய மகள். இவளுடைய தந்தை இவளுக் குத் திருமண உறுதி செய்த ஒவ்வொரு கணவரும் திரு மணத்திற்கு முன்னரே இறந் தொழிந்தனர். இறுதியில் தந்தையும் இறந்தான். இவள் இது நாம் செய்த தீவினையின் பலன் என்று முடிவு செய்து சிவப்பதிப் பயணம் சென்று சிவ வழிபாடு செய்தாள். பிறகு திருப்பூவணத்தை யடைந்து மணிகன்னிகையில் நீராடிக் கால முனிவர் என்பவ ரைக் கண்டு வணங்கினாள். அம் முனிவர் இவளுடைய செய்தியை உணர்ந்தார். "நீ கௌரி விரதத்தைக் கடைப் பிடித்துச் செய்யாததால் இவ் வாறு துன்பம் நேர்ந்தது. இப் புனித நீராட்டினால் தீவினை நீங்கப் பெற்றாய். இனிமேல் கௌரி பூசனை செய்து விர தத்தை மேற்கொள்வாயாக" என்று கூற இவள் அவ்வாறே செய்து தீவினை நீங்கி நன்மை பெற்றாள்.

**ஊகூ** - இவன் ஒரு வித்தியா தரன். இவன் தண்ணீருக்குள் மறைந்து கொண்டு நீராடிக் கொண்டிருந்த ஒரு முனி வருடைய காலைப் பற்றியிழுத் தான். அதனால் சினங்கொண்ட அம் முனிவர் "முதலையாகுக" என்று தீ மொழி வழங்கினார். அவன் அவ்வாறே முதலையாகிக் கிடந்து கசேந்திரனுடைய காலைப் பற்றி யிழுத்தான். அப் பொழுது யானையின் வேண்டு கோளைக் கேட்டுத் திருமால் தோன்றித் தம் கையிலிருந்த உருளைப் படையால் அவனைச் சங்கரித்தார். அவன் வசவுரைப் பலன் நீங்கி முன்னைய வடிவ மடைந்து வீடு பேறுற்றான்.

**ஊங்கனூர்** - சேர நாட்டில் கடற் கரையில் உள்ள ஓர் ஊர். இதன் அண்மையில் கடலில் வஞ்சனை யாக முளைத்த கடப்பமரம் ஒன்றைச் சேரன் வெட்டினான்.

**ஊட்டியார்** - இவர் அகநானூற்றி லுள்ள, 68, 388 ஆம் பாடல்களைப் பாடியுள்ளார்.

மேற்படி பாடல்களிரண்டிலும் ஊட்டி யென்னுஞ் சொல் வருகின்றது. அச் சொல்லின் நயத்தை உணர்ந்த அறிஞர்கள் உயர்வு சிறப்பைத் தரும் ஆர் என்னும் விகுதியையும் சேர்த்துப் புலவருக்குச் சிறப்புப் பெயராக வழங்கி விட்டனர்.

**ஊத்துக்குழி** - கோயம்புத்தூர் மாவட்டத்தில் பொள்ளாச்சிக் கருகிலுள்ள ஒரு சிறு பாளையப் பட்டு. மாதுளம் பழங்கள் இங்கு அதிகமாகக் கிடைக்கும். ஒரு சிறு கோட்டையும் இரண்டு கல்வெட்டுக்களும் இங்கு உண்டு. குளிர்ந்த தட்ப வெப்ப நிலை வாய்ந்த இடம்.

**ஊமைத்துரை** - பாஞ்சாலங் குறிச்சியை ஆண்டு வந்த வீரபாண்டியக் கட்டபொம்முவின் இளவல். இயற்பெயர் தளவாய்க் குமாரசாமி. நாக்குழறிப் பேசியதால் ஊமைத்துரை என அழைக்கப்பட்டார். ஆங்கிலேயர் கட்டபொம்முவைத் தூக்கிலிட்டுக் கொன்று, ஊமைத்துரை முதலிய பாளையக்காரர்களைச் சிறையில் அடைத்திருந்தபொழுது இவர்கள் சிறையைத் தகர்த்து வெளியேறிப் பாஞ்சாலங் குறிச்சியை அடைந்து பாழாகியிருந்த கோட்டையிருந்த இடத்தில் களிமண்ணால் வலிய அரண்களமைத்து, ஊமைத்துரை செல்வாக்குடன் ஆட்சி புரிந்து வந்ததை அறிந்த கிழக்கிந்தியக் கம்பெனியார் பெரும் படையுடன் இவர் வீரத்தை அழிக்க முயன்றனர். இவர் ஆங்கிலேயரின் படைகளை விரட்டித் தம் அண்ணன் ஆட்சியிலிருந்து பகைவர் வயப்பட்ட பல இடங்களை வென்று, தூத்துக்குடியைக் கைப்பற்றி அங்குத் தலைமை பூண்டிருந்த வெள்ளையனுகிய சேனைத் தலைவனைச் சிறைப்படுத்தி, அவன் மனைவி வேண்டுதலால் விடுதலை செய்தார் ஊமைத்துரை உயிருடனிருந்தால் தம் ஆட்சி நிலைக்காதென்பதுணர்ந்த கம்பெனியார் பீரங்கிப் படை கொண்டு நடத்திய பெரும் போரில் ஊமைத்துரை காட்டிய தீரத்தைப் பகைவரும் வியந்தனர். பகைவர் சதியால் ஊரைவிட்டு வெளியேறியபோது ஆங்கிலேயர் வளைத்துத் துரத்திப் பிடித்துத் தூக்கிலிட்டனர்.

**ஊர்மிளை** - சனக மன்னனுடைய வளர்ப்பு மகள். இலட்சுமணனுக்கு மனைவி. இவள் தன்னுடைய கணவன் இராமபிரானோடு காட்டு வாழ்க்கையை முடித்துக்கொண்டு திரும்பி வருமளவும் உறங்கிக் கொண்டிருந்ததாகவும் இலட்சுமணன் உறக்கமில்லாதிருந்ததாகவுங் கூறுவர்.

**ஊர்வசி** - இவளை உருப்பசி என்றுங் கூறுவர். இவள் இந்திரனுடைய அந்தப்புரத்து மங்கையர்களில் ஒருத்தி. இவள் நாராயணமுனிவர் என்பவருடைய தொடையில் தோன்றிய படியால் ஊர்வசியென்று பெயரடைந்தாள். இவள் சோலையில் உலவிக் கொண்டிருக்கும் பொழுது அசுரர்கள் சிலர் இவளைப் பற்றிச் சென்றனர். ஊர்வசி அபயக் குரலிட்டாள். தேவர்கள் அசுரரோடு போர்புரிய அஞ்சினர். புரூரவா அசுரர்களோடு போரிட்டு ஊர்வசியை மீட்டான். இந்திரன் கட்டளைப்படி புரூரவாவிடம் இருந்த இவளிடம் ஆயு என்னும் மகன் தோன்றினன்.

**ஊர்வன்** - இவன் கடுமையான தவஞ்செய்து கொண்டிருந்தான். அப்பொழுது நாரதர் முதலிய தேவஇருடிகளும் பிரம

இருடிகளும் இவனிடம் வந்து ஒருமகனை உண்டாக்கித் தருக வென்று வேண்டினர். இவன் ஒரு நாணற்புல்லைக் கையி லெடுத்துத் தனது தொடையை ஓமாக்கினியின்மேலே நிறுத்தித் தொடையைக் குடைந்தான். அவ்வளவில் சுவாலாமாலி என் னும் மகன் பிறந்தான். அச் சமயத்தில் நான்முகன் தோன்றி, அப்புதல்வனைக் கடலின் நடுவில் வடவாமுகரூப மாக இருக்குமாறு செய்ய வேண்டுமென்று சொன்னான். ஊர்வனும் அவ்வாறே செய் தான். சுவாலாமாலிக்கு ஔர வன் எனவும் பெயர் உண்டு. இவனுக்கு உணவு தண்ணீர் தான். இவன் நடுக்கடலில் இருந்து எப்பொழுதுந் தண் ணீரை அருந்திக் கொண்டே யிருப்பதால் தண்ணீர் மிகுந்து உலகத்தை யழிக்காமல் கடல் என்றும் ஓரளவாகவே இருந்து கொண்டிருக்கிறது.

**எகிப்து நாகரிகம்** - ஆப்பிரிக்கா வின் வடபகுதியில் நீல ஆறு பாயும் மருத நிலவெளியே எகிப்து என்பது. உலகத்தில் எங்குமே காணப் பெறாத மிகவுயர்ந்த நாகரிகம் அங்கே யிருந்த தென்பதற்குரிய அறி குறிகள் பலவுள்ளன. அவை ஏறக்குறைய நூறாண்டுகட்கு முன்புவரை கவனிக்கப்பட வில்லை. கெய்ரோ முதல் லக்சர் வரையுள்ள அறுநூறுகல் தொலைவுவரை பழுதுபட்ட பண்டைக் காலத்துச் சின்னங் கள் காணப்படுகின்றன.

**எங்கராயன்** - இவன் கலிங்க நாட்டு மன்னனாகிய அநந்த பன்மனுடைய தலைமையமைச் சன். கலிங்கத்து மீது படை யெடுத்துச் சென்ற கருணாகர னுடைய படையைக் கண்ட இவன் அரசனுக்கு அறிவுரை கள் பல கூறினான்.

**எச்சதத்தன்** - சோழவளநாட்டில் திருச்சேய்ஞலூரில் இருந்த அந்தணன். காசிப கோத்திரத் தான். நல்வினை தீவினை இரண்டும் ஒருங்கே அமையப் பெற்ற இவன் சண்டேசுரரைப் புதல்வராகப் பெறும் பேறு பெற்றவன்.

**எஞ்ஞநாராயண தீட்சிதர்** - இரகு நாத நாயுடு காலத்தில் தஞ்சை மாநகரிற் பெரும் புலவராகச் சிறந்து விளங்கிய கோவிந்த தீட்சதருடைய மகன். இவருஞ் சிறந்த புலவராகத் திகழ்ந் தார். சாகித்ய ரத்னாகர காவி யம், இரகுநாத பூபவிசயம், இரகுநாத விலாச நாடகம் முதலியன இவர் இயற்றிய நூல்கள்.

**எதிர்கொள்பாடி** - சோழவள நாட் டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்றாகிய இது மேலைத் திருமணஞ்சேரி என வும் வழங்கப் பெறும். வேள்விக் குடியில் திருமணஞ் செய்து கொண்ட ஓர் இராச குமாரன் மனைவியோடு தன் னுடைய நகருக்குச் செல்லும் பொழுது சிவபெருமான் இராச குமாரனுடைய அம்மானைப் போலக் கோலங் கொண்டு அவனை எதிர்கொண்டபடியால் இவ்வாறு பெயர் உண்டா யிற்று.

**எமனேரி** - விருத்தாசலம் வட் டத்தில் இவ்வேரி உள்ளது. சென்னை மாகாணத்தின் கவர்ன ராகவிருந்த வெலிங்டன் என் னும் பெயருடைய வெள்ளைக் காரர் பெயர் இவ்வேரிக்கு இடப்பட்டது. ஏரியை வெட் டும்பொழுது சில உயிர்களுக்கு அழிவேற்பட்டதோடு சில ஊர் களும் அழிந்தபடியினால் பொது மக்கள் இவ்வேரிக்கு எமனேரி

என்று பெயர் வைத்தனர். தொழுதூர் அணைக்கட்டி லிருந்து எழுதூர், ஆலம்பாடி ஓடைகள் வழியாக இவ்வேரிக்குத் தண்ணீர்வரக் கால்வாய் வெட்டப்பட்டிருக்கிறது.

**எம்பார்** - திருப்பெரும்பூதூருக்கு அண்மையில் உள்ள மழலைமங்கலம் என்னும் ஊரில் இராமாநுசருடைய சிறிய தாயாகிய பெரிய பிராட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். பெரிய திருமலை நம்பிகட்கு மருகர். கோவிந்தப் பெருமாள் என்பது இவருக்கு இடப்பட்ட பிள்ளைப் பெயர். இளமைக் காலத்தில் இராமாநுசரோடு சேர்ந்து வேதாந்த பாடங் கேட்டவர். திருக்காளத்தியில் உள்ள சிவபெருமானுக்குச் சில காலம் அணுக்கத் தொண்டராக இருந்தவர். பிறகு பெரிய திருமலை நம்பியால் திருப்பப்பட்டவர். இராமாநுசருக்கு மாணவராகி அவரைச் சார்ந்து நின்றவர். இராமாநுசர் இவருடைய மன வுறுதியைக் கண்டு இவருக்குத் துறவற நிலையைக் கொடுத்தார். தம்முடைய திருப் பெயர்களில் ஒன்றாகிய எம்பெருமானார் என்னும் பெயரையும் இவருக்கு வழங்கினார். இவர் அப் பெரும் பெயரைத் தாங்க விரும்பாதவராய்த், "தேவரீருடைய அடிமையாக விருக்கும் எனக்குத் தேவரீருடைய பெயரின் சாயையே போதும்" என்று முறையிட்டுக் கொண்டார். இராமாநுசர் அப் பெயரைச் சிதைத்து, "எம்பார்" என்னும் பெயர் வழங்கினார். அது முதல் 'எம்பார்' என்னுந் திருப் பெயரே இவருக்கு வழங்கலாயிற்று. இராமாநுசருடைய கட்டளைப்படி மாணவர் பலருக்கு அருளுரை வழங்கி அவர்களை யாட்கொண்டார்.

**எம்பெருமானார்** - திருப்பெரும்பூதூரிலே ஆசூரி வழி முறையிலே சித்திரைத் திங்களிலே கேசவப் பெருமாள் தீட்சிதருக்கும் பூமிப் பிராட்டியார் என்னுங் காந்திமதியம்மைக்கும் புதல்வராகத் தோன்றினார். இவர் பிறந்த பன்னிரண்டாவது நாள் பெரிய திருமலை நம்பிகள் இவருக்கு இளையாழ்வார் என்று திருப் பெயர் சூட்டினார். எம்பெருமானார் என்பது ஆசாரியரான திருக்கோட்டியூர் நம்பிகளால் வைக்கப்பட்ட பெயர். இவர் இளமைப் பருவத்தில் யாதவப் பிரகாசர் என்னும் ஒற்றைத் தடித் துறவியிடம் வேதாந்த பாடங் கேட்டனர். பிறகு அந்த யாதவப் பிரகாசரே இவரிடம் முத்தடித் துறவு களைப் பெற்றுக் கோவிந்த ஜீயர் என்னும் பெயரோடு இவருக்கு மாணவரானார். ஆளவந்தாருடைய மாணவர்களான பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப் பெருமாளரையர், திருமலை நம்பி என்னும் ஐவரும் இவருக்கு ஆசாரியார்கள். இவர் அருளிச் செய்த நூல்கள் சீ பாடியம், வேதாந்த சாரம், வேதாந்த தீபம், வேதார்த்த சங்கிரகம், கத்யத் திரயம், உடையவர் நித்யம், கீதா பாடியம் என்பன. இவர் இந்நிலவுலகில் தம் பூதவுடலோடு நூற்றிருபதாண்டுகள் வாழ்ந்திருந்தார்.

**எயினனூர்**- கும்பகோணம் புகைவண்டி நிலையத்தில் இருந்து தென் கிழக்கில் கற்சாலையில் 4 கல் தொலை சென்று ஆற்றின் கரைமீது மேலும் ஒரு நாழிகை வழி நடந்தால் இத் தலத்தை

அடையலாம். இஃது இந் நாளில் ஏனநல்லூர் என்று கூறப்படுகிறது. இஃது ஏநாதி நாயனார் வாழ்ந்திருந்த சிவப் பதி. ஏனாதியார் அதிசூரனோடு போர் செய்த இடம் இந் நாளில் சாலைக்கரை என வழங் கப்படுகிறது. ஊரின் பெயர் ஏனனூர் எனவுஞ் சிலர் கூறு வர். இதன் கிழக்கே திருநறை யூர்ச்சித்தீச்சுரமும், வடக்கே அரிசிற்கரைப் புத்தூரும் மேற்கே திருக்கருக்குடியும் ஒவ்வொரு நாழிகை வழியள வில் உள்ளன.

**எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார்-** சங்க காலப் புலவர்களில் ஒருவர். எருக்காட்டூர் என்பது தஞ்சை மாவட்டத்தில் திருவா ரூர்க்கு அண்மையில் உள்ளது. எருக்காட்டூர் அக்காலத்திய மன்னர்களால் இவருக்குத் தாய மாகக் கிடைத்தது. தாயம் என்பதன் பொருள் உரிமை என்பதாகும். சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை இவர் பாடியிருக் கிறார்.

**எருசலேம் -** பாலஸ்தீன் நாட்டின் தலைநகர். யூதர்களுக்கும் கிறித் தவர்களுக்கும் முகமதியர்களுக் கும் யாத்திரை செய்யுமிடம். முற்காலத்திய யூதர்கள் தங்க ளுடைய கோயிலை இவ்வூரில் கட்டினார்கள். இது கிறித்து வைச் சிலுவையில் அறைந்த இடம். முகமதியர்களுக்கு மக்கா மதீனா ஆகிய இடங் கட்கு அடுத்தபடியில் விளங்கு கின்றது. இந் நகரம் இரண் டாயிரத்து ஐந்நூறடி உயர முள்ள மலைகள்மீது அமைந் திருக்கிறது. இஃது இரு நகரங் களால் அமைந்தது. பழங் காலத்து நகரம் சுவர்கள் சூழ்ந்து உயர்ந்த சுவர்களை யுடைய கட்டிடங்களையும் பண்டைய நாகரிகச் சின்னங் களையும் கொண்டது. பழைய நகரத்தின் வெளிப்புறத்தில் புதிய வசதிகளோடு புதிய நகரம் அமைந்துள்ளது. இந் நகரிலுள்ள மக்களில் மூன்றில் இரண்டு பகுதியினர் யூதர்கள். இந் நகரில் இருபத்தொன்பது மொழிகள் பேசப்படுகின்றன. யாத்ரீகர்களின் வருவாயால் கிடைக்கும் பணமே வருவாய். இவ்வூரின் பழைய பெயர் ஊர்சலிம் என்பது.

**எல்லப்பன் -** தொண்டை வள நாட்டில் குன்றத்தூரில் வாழ்ந் திருந்த ஒரு சிறந்த கொடை யாளி. இவனுடைய அவைக் களப் புலவர்கள் தாம் கொங்கு நாட்டுக்குப் போய்ச் சர்க்கரை மன்றாடியார் என்னும் வள்ள லின் கொடைப் பண்பையும் பொறுமைப் பண்பையும் ஆராய்ந்து வந்தவர்.

**எல்லையம்மன் -** இவ்வம்மன் மாரியே. மழை பெய்யச் செய் வதால் மாரியம்மன் எனவும்; ஊர் எல்லையி லிருப்பதால் எல்லையம்மன் எனவும்; தெருவி லிருப்பதால் தெரு வீதியம் மன் எனவும்; சந்தியில் இருப் பதால் சந்தியம்மன் எனவும்; சோலையில் இருப்பதால் சோலை யம்மன் எனவும்; பனையடியில் இருப்பதால் கருக் காத்தாள் எனவும்; வேம்படியில் இருப் பதால் வேப்படியம்மை என வும்; ஆலடியில் இருப்பதால் ஆலடியம்மை எனவும்; எட்டி மரத்தடியில் இருப்பதால் எட்டி யம்மை எனவும் பெயர் பெறுவள்.

**எல்லையோடி -** கிராம தேவதை யின் கோயிலுக்கு முன்னே சில சடங்குகளைச் செய்து பிறகு எல்லையைக் காட்டி வழக்குத் தீர்ப்பவன். இரண்டு ஊரார்கட்குள் எல்லைத் தகராறு

ஏற்படும்போது அதனைத் தீர்ப்பதற்கு முன்னுளில் இத்தகைய எல்லையோடிகள் தமிழ் நாட்டில் இருந்தனர்.

**எல்லோரா** - இந்தியாவில் பாறையிலேயே குடையப்பட்ட மிகப் பெரிய கோயில்கள் இங்குத்தான் காணப்படுகின்றன. இவை சிறந்த கலைச் செல்வங்களாக மதிக்கப் பெறுகின்றன. ஒரு செங்குத்தான பாறையின் முகத்தில் குகைகள் ஒரு மைல் நீளத்திற்கும் அதிகமாக இருக்கின்றன. இந்தக் குகைக் கோயில்கள் 4 ஆம் நூற்றுண்டு முதல் 10 ஆம் நூற்றுண்டு வரையுள்ள காலத்தில் மூன்று சமயத்தவர்களால் ஆக்கப்பட்டன. மிகவும்பழைமையானவை பௌத்தக் கோயில்கள்; நடுக் காலத்தவை இந்துக் கோயில்கள்; இறுதியில் அமைக்கப் பெற்றவை சைனக் கோயில்கள். இங்குள்ள கைலாசக் கோயிலில் காணப்படும் இராவணன் கைலை மலையை எடுத்து எறிய முயல்வதாகக் காட்டும் சிற்பம் மிகவும் அற்புதம் வாய்ந்தது. இக் கோயிலில் சில உயர் சிற்பங்கள் கவி காளிதாசரது வருணனைக்கு ஏற்ப ஏற்பட்டுள்ளன.

**எவரெஸ்ட்டு (Mount Everest)**- இமயமலையின் சிகரங்களுள் ஒன்று. உலகில் மிகவும் உயர்ந்த மலை உச்சி இதுதான். இது திபேத்து, நேபாளம் ஆகிய நாடுகளின் எல்லையில் உள்ளது. 1841இல் சர் ஜார்ஜ் எவரெஸ்ட்டு என்பவரின் தலைமையில் இந்தியச் சர்வேக் குழுவினர் இமயமலைச் சிகரங்களின் உயரங்களையும் இட அமைப்பையும் காணும் பணியில் முனைந்தபோது 1843 இல் புதிய சிகரம் ஒன்றைக் கண்டனர். 1852 இல் [illegible] சிக்தார் என்ற தலைமைக் கணக்கர் அச் சிகரத்தின் உயரம் 29,002 அடி யென்று முடிவு செய்தார். ஏற்றுக் கொள்ளத்தக்க உள்நாட்டுப் பெயர் தோதாக அகப்படாதபடியால் சர் ஜார்ஜ் எவரெஸ்ட்டின் நினைவாக அச் சிகரத்திற்கு எவரெஸ்ட்டு என்று பெயர் சூட்டினர். 1954 நவம்பரில் சர்வேயர்கள் சிகரத்தின் சரியான உயரம் 29,028 அடி என்று முடிவு கட்டியுள்ளனர். 29-5-1953-இல் காலை 11-30 மணிக்கு நியூஜிலாந்து நாட்டவரான ஹில்லரியும் நேபாளத்தைச் சேர்ந்த டென்சிங்கும் கடு முயற்சியால், இதன் உச்சியைக் கண்டனர்.

**எழுத்தச்சன்** - (16 ஆம் நூ. முற்பகுதி) இவர் இயற்பெயர் தெளிவாகத் தெரியவில்லை. துஞ்சத்து என்பது இவருடைய குடும்பப் பெயர். எழுத்தச்சன் என்று இவர் பட்டம் பெற்றுர். தென்மலையாளவட்டத்திலுள்ள திருக்கண்டியூர் இவர் பிறக்கும் பெருமை பெற்ற ஊர். சமஸ்கிருதம், தமிழ் முதலிய பல மொழிகளில் புலமை வாய்ந்தவர். மலையாள மொழியில் இருந்த சமஸ்கிருத வழி, தமிழ் வழி என்ற இரண்டு முறைகளையும் இணைத்து இரண்டிலும் இருக்கின்ற நல்ல சொற்களைக் கையாண்டு நவீன மலையாள மொழியை முதன் முதலில் அமைத்தவர் இவரே. ஆகையால் இவரை "நவீன மலையாள மொழியின் தந்தை" என்று கூறுப. இவர் இராமாயணம், மகாபாரதம், பாகவதம் முதலிய நூல்களை இலக்கியச் சுவை, பக்திச் சுவை, தத்துவச் சுவை முதலிய சுவைகள் ஒன்றுக் [illegible]ன்று மிஞ்சக்கூடிய முறை

யில் அழகு கனியப் பாடியுள்ளார். அரிநாம கீர்த்தனம், சிந்தாரத்தினம், கைவல்லிய நவநீதம் முதலியனவும் இயற்றியுள்ளார்.

**எழுத்தறியும் பெருமான்** - மாந்தாதாவென்னும் அரசன் மிகுந்த தான தருமங்களைச் செய்து கொண்டிருந்தான். முதுமையடைந்தும் இறப்பில்லாமல் வருந்தினன். தருமங்களைக் குறைத்தால் சாவுண்டாதல் கூடுமெனச் சிலர் கூறக் கேட்டுத் தருமங்களைக் குறைக்க எண்ணினன். கணக்கர்களை யழைத்துத் தருமங்களையெல்லாம் குறைத்தெழுதுக என்று கட்டளையிட்டான். கணக்கன் எழுதிக் கொண்டு வந்ததைத் தான் பார்த்த பொழுது, "திருவொற்றியூர் நீங்கலாக" என்று எழுதியிருத்தலைக் கண்டான். கணக்கனே அவ்வாறு எழுதியிருப்பதாக எண்ணி அதனை அடித்துக் கிறுக்கி விடுமாறு கட்டளையிட்டான். மறுநாள் திரும்பவும் பார்த்தபொழுது அவ்வாறே எழுதியிருத்தலைக் கண்டான். பிறகு அது திருவொற்றியூர்க் கடவுளின் திருவிளையாடல் என்று உணர்ந்து திருவொற்றியூரையடைந்து திருப்பணிகள் செய்து நற்கதி பெற்றான். இக்காரணத்தால் திருவொற்றியூர் இறைவனுக்கு எழுத்தறியும் பெருமான் என்று காரணப் பெயர் ஒன்று வழங்குவதாயிற்று.

**எழுநூற்று மங்கலம்** - பாண்டிநாட்டில் உள்ள ஓர் ஊர். சிவபெருமான் எழுநூறு நரிகளைக் குதிரைகளாக்கிய இடம் என்பர்.

**எறிச்சலூர்** - சங்கப் புலவர்களில் எறிச்சலூர் மலாடனார் வாழ்ந்திருந்த ஊர். இவ்வூர் சோழ வளநாட்டிலே அறந்தாங்கிக்கும் குளகாப்பட்டிக்கும் இடையில் உள்ளது.

**ஏகசக்கரபுரம்** - இஃதொரு பார்ப்பனச் சேரி. அரக்கு மாளிகையிலிருந்து தப்பிய பாண்டவர்களும் குந்தியும் அந்தணக் கோலந் தாங்கிச் சென்று தங்கியிருந்தவிடம். பகாசுரனை வீமன் கொன்றொழித்ததும் இங்குத் தங்கியிருந்த பொழுது தான்.

**ஏகலைவன்** - இவன் வேடர் குலத்தில் தோன்றியவன். இவன் துரோணசாரியாரிடம் போய்த் தனக்கு வில்வித்தை கற்பிக்குமாறு வேண்டிக்கொண்டான். அவர் இவன் இழிகுலத்தான் என்று எண்ணிக் கற்பிக்க முடியாதென மறுத்து விட்டார். இவன் அதனால் மனந்தளராமல் துரோணரைப் போல் ஒரு வடிவஞ் செய்வித்து அதனையே தனக்கு ஆசிரியராக எண்ணி அதன் முன்னர்வில் வித்தைகளையெல்லாங் கற்றுணர்ந்தான். காட்டிற்கு அருச்சுனன் வேட்டைக்கு வந்தபோது அருச்சுனனுக்கும் இவனுக்கும் சொற்போர் மூண்டது. இவனுடைய வலதுகைப் பெருவிரலைக் குருகாணிக்கையாக வாங்குமாறு அருச்சுனனால் தூண்டப்பட்ட துரோணர் அவ்வாறே இவனிடங் கேட்க இவன் உடனே தன்னுடைய வலதுகைப் பெருவிரலை யறுத்துக் காணிக்கையாகக் கொடுத்தான்.

**ஏகாந்த ராமேசுவரம்** - இது பாம்பனிலிருந்து இராமேசுவரத்திற்குப் போகும் வழியில் மங்கள தீர்த்தத்திற்கு அண்மையில் உள்ளது. சேது கட்டப்படுவதற்கு முன் இராமபிரான் தம்முடைய துணைவர்

களோடு இங்கு அமர்ந்து கடலைக் கடந்து இலங்கைக்குச் சென்று இராவணனை வென்று சீதையை மீட்டு வருவதற்கான வழிகளைக் குறித்துக் கலந் தெண்ணினர். கடலினுடைய பேரிரைச்சலால் ஒருவர் பேசியது ஒருவருக்குக் கேட்கவில்லை. இதனால் சினங் கொண்ட இராமர் புருவத்தை நெரித்தார். வருணன் இராமபிரானுடைய சினத்தைக் கண்டு அஞ்சினன். தன்னுடைய அலைகளையெல்லாம் அடக்கிக் கொண்டு இருந்தான். பிறகு இராமபிரான் துணைவர்களோடு கலந்து பேசுதலைச் செய்து முடித்தார். இதனால் அவ்விடத்திற்கு ஏகாந்த ராமேசுவரமென்று பெயருண்டாகியது. இக் காரணத்தினால் இவ்விடம் இப்பொழுதும் பேரிரைச்சலின்றி அமைதியாக வுள்ளது.

**ஏகாந்த ராமையர்** - இவர் ஒரு சிவனடியார். இவர் சிவ யோகத்தில் வல்லவர். நாள் தோறுந் திருக்கைலையில் எழுந்தருளிய சிவபிரானை வழிபட்டவர். வசவருடைய பெருமையை உணர்ந்து அவரிடம் அன்பு பூண்டிருந்தார். ஒரு சொற்போரில் அரசன் காணுமாறு தம் தலையை அரிந்து சிவத் தியானஞ் செய்யச் செய்தவர். நிலவுலக உருத்திரர் என எல்லாராலும் மதிக்கப் பட்டவர். வீர சைவ சமயத்தினர்.

**ஏகாம்பரநாதர்** - காஞ்சிபுரத்தில் இறைவன் மாமரத்தின் கீழ் எழுந்தருளியுள்ளபடியால் இவ்வாறு பெயர் பெற்றார். ஆம்பரம்-மாமரம். ஏகம்-ஒன்று. அஃதாவது தனக்கு இணையாக வேறொன்றும் இல்லாதது. இம் மாமரமும் மிக்க புகழுடையதாய்ப் பெரிதாக அமைந்துள்ளமையின் ஏகம் எனப்பட்டு - ஏகாம்பரமாக முடிந்தது. ஏகம்பன் என்பது வேறு பொருளில் அமைந்தது.

**ஏமசந்திரன்** - இவர் வடமொழி அறிஞர்களில் ஒருவர். அறுபத்து மூன்று சமணப் பெரியார்களைப் பற்றி இவர் ஒரு பெரிய நூலை எழுதியுள்ளார். மேலும் இவர் பல நூல்களை எழுதினர். அவைகளுள் யோக சாத்திரம் என்பது சமண சமய தத்துவங்களை விளக்குவது.

**ஏமாங்கதன்** - இவன் பாக்லிக நாட்டரசனாகிய சலன் என்பவனுடைய மகன். மகப்பேற்று வேள்வியாற் பிறந்தவன். இவனுடைய தந்தை இவனுக்குப் பெயரிட எண்ணும்பொழுது சிந்து நாட்டரசனால் அனுப்பப் பட்ட பொன் தோள்வளை வந்தது. அதனால் இவனுக்கு ஏமாங்கதன் என்று பெயரிட்டனர். இவன் வளர்ந்து பெரியவனான பிறகு காட்டின் வளங்களைக் காண எண்ணினன். அமைச்சன் மகனாகிய மதிவிசாலன் என்பவனோடு புறப்பட்டுப் போய்க் காட்டில் தங்கியிருந்தான். அப்பொழுது காளிக்குப் பலியிடும்படி வேடர்களால் பிடிக்கப்பட்டான். அங்கிருந்த ஒரு சுரங்கத்தின் வழியாக நுழைந்து அங்கு ஒரு காடு தோன்றக் கண்டான். அங்கு கந்த மூர்த்தியைப் போற்றி முன் பிறப்புச் செய்தியை உணர்ந்தான். அக் கடவுளால் படைக்கலங்கள் பெற்று விலங்கு முதலியவைகளை வென்றான். பிறகு இமயமலைச் சாரலுக்குச் சென்றான். அங்கு தன் தந்தையால் விரட்டப் பட்ட அரச குடும்பத்தினர் அரசனுக்கு அஞ்சி வசித்தலைக் கண்டான். அங்கிருந்த மலை

யுச்சிக்குச் சென்று இளைப் பாறினான். அங்கிருந்த அரச குமாரிகள் இருவரால் போற்றப் பெற்றான். அவர்கள் காசுமீர நாட்டு மன்னன் புதல்வியர் எனவும் தந்தையால் நீக்கப் பட்டவர்கள் எனவும் உணர்ந் தான். பிறகு தன்னுடைய நாட்டிற்கு வந்து தந்தையோடு போரிட்டு வென்றான். தான் காட்டிற் கண்டவைகளைக் கூறினான். தான் மலையிற் கண்ட இரு பெண்களில் ஒருத்தியை மணந்து கொண்டான். தன் னுடைய அமைச்சனுக்கு மற் றொருத்தியை மணஞ் செய் வித்து அரசாண்டிருந்தான். அரசனால் விரட்டப்பட்டிருந்த உறவினர்களுடைய துன்பத் தையும் போக்கினான்.

**ஏரண்டமுனிவர்** - இம் முனிவர் கொட்டையூரில் தவஞ் செய்து கொண்டிருந்தார். இவர் காலத் தில் செய சோழன் மகனாகிய கனக சோழன் என்பவன் அரசாட்சி செய்து கொண் டிருந்தான். இவனுடைய மனைவியின் பெயர் செண்ப காங்கி. இவன் காலத்தில் காவிரி திருவலஞ் சுழியிலிருந்த ஆனைமுகக் கடவுளை வலஞ் செய்து பாதலத்தில் புகுந் தனள். இதனால் நாடு செழிக் காமல் மிகுந்த வறுமை நிலையை அடைந்தது. இதனை யுணர்ந்த அரசன் இதற்கு யாது செய்ய லாம் என்று எண்ணமுற்று வருந்தினான். இம் முனிவரிடம் வந்து செய்தியைக் கூறினான். இவர் அரசனைப் பார்த்து, "ஒரு முனிவனாவது அரசனா வது அதில் வீழ்ந்திறந்தால் அஃது அடைபட்டு நீர் நில மிசைப் பாய்ந்து நாடு செழிப் படையும்" என்று கூறினார். அரசன் தானே அவ்வாறு இறந்து தன் நாட்டு மக்களுக்கு நன்மை செய்வதென்று முடிவு செய்தான். தன்னுடைய மக னுக்கு முடி சூட்டினான். அரசனுடைய மனைவி முனிவ ரிடஞ் சென்று பணிந்தாள். முனிவர் அரசியைப் பார்த்து, "நீ தீர்க்க சுமங்கலியாக இரு" என்று வாழ்த்துரை கூறினார். இதனைக் கேட்ட அரசி முனிவ ரைப் பார்த்துத் தன் கணவன் செய்தியைக் கூறினாள். "தங்க ளுடைய திருவாக்குப் பொய் யாகப் போய்விடும் போலிருக் கிறதே" என்று கூறினாள். இதனைக் கேட்ட முனிவர் தாம் அரசனுக்குக்கூறியதை எண்ணி னார். தாமே அவ்வாறு செய்வ தாகவும் தமக்காக நான்கு திருக்கோயில்கள் அமைக்க வேண்டும் என்றுங் கூறினார். தாம் திருவலஞ் சுழியை அடைந்து நீர்ச்சுழியில் வீழ்ந்து இறந்தார். இதன் பிறகு காவிரி சோழ நாட்டிற் பாய்ந் தது. அதனால் வளஞ் சிறந் தோங்கலாயிற்று. இவருடைய வேண்டுகோளுக்காகவே கனக சோழன், தஞ்சை ராசராசேச் சுரம், கங்கை கொண்ட சோழேச்சுரம் முதலிய திருக் கோயில்களைக் கட்டினான்.

**ஏரி காத்த பெருமாள்** - மதுராந்த கத்தில் திருக்கோயில் கொண் டுள்ள பெருமாளுடைய பெயர். அவ்வூரிலுள்ள ஏரியொன்று பெரு மழையில் உடையும் நிலையில் இருந்தபோது ஆங்கி லேயர் ஒருவர் ஏரியின் கரை உடையாமலிருந்தால் திருமால் கோயிலுக்குத் திருப்பணிகள் செய்வதாக வேண்டிக் கொண் டார். பெருமாள் ஏரியின் கரை உடையாமல் காத்தருளினார். அது முதல் அப் பெருமாளுக்கு ஏரி காத்த பெருமாள் என்று பெயர் உண்டாகியது.

**ஏலேல சிங்கர்** - திருவள்ளுவர் காலத்தில் சென்னையில் வாழ்ந்

திருந்த ஒரு கப்பல் வாணிகர். திருவள்ளுவர் இவரிடம் நூல் வாங்கி நெய்தற்றொழிலைச் செய்து கொண்டிருந்தார். ஒரு நாள் நூல் வாங்குவதற்குத் திருவள்ளுவர் இவருடைய இல்லத்திற்கு வந்தார். இல்லத்தில் இருந்தவர்களைப் பார்த்து, ''ஏலேல சிங்கர் எங்கே?'' என்று கேட்டார். அதற்கு அவர்கள், ''அவர் சிவ பூசை செய்து கொண்டிருக்கிறார்'' என்று கூறினார்கள். இதனைக் கேட்ட திருவள்ளுவர், ஏலேல சிங்கர் மனவொருமையோடு பூசை செய்கிறாரா என்று தம்முடைய அறிவுப் பார்வையால் பார்த்தார். குப்பத்திலுள்ள எதைப் பற்றியோ அவர் எண்ணமிட்டுக் கொண்டு வெறும் பூசை செய்து கொண்டிருப்பதைக் கண்டார். உடனே, ''ஏலேல சிங்கர் குப்பத்திலா பூசை செய்கிறார்?'' என்று கேட்டார். இதனைக் கேட்ட ஏலேல சிங்கர் எழுந்தோடி வந்தார். திருவள்ளுவரைப் பணிந்தார். அவர் தெய்வத் தன்மை பொருந்தியவர் என்பதை ஏலேல சிங்கர் அன்றுதான் உணர்ந்தார். தம்மையாட் கொள்ள வேண்டுமென்று திருவள்ளுவரை வேண்டிக் கொண்டார். திருவள்ளுவர் பலவாறு ஆராய்ந்து பார்த்துப் பிறகு ஏலேல சிங்கரை மாணவராக ஏற்று அறிவுரை வழங்கினார். அது முதல் ஏலேல சிங்கருக்கு நன்மைகள் மிகுதியாக உண்டாயின. ஆசிரியர் சொற்படியே நடந்தார். வற்கட காலத்தில் குறைந்த விலையில் நெல்லை விற்றார். அதனால் கிடைத்த பொருளைத் தங்கமாக்கித் திருவள்ளுவர் உரைப்படி கடலில் எறிந்தார். அதனை மீன் விழுங்கியது. மீன் பிடிபட்டபோது அத் தங்கமும் திரும்பி ஏலேல சிங்கரிடமே வந்தது. அது முதல் ''ஏலேலசிங்கன் பொருள் ஏழு கடல் போனாலும் திரும்பும்'' என்னும் பழமொழி ஒன்றும் உண்டாகியது.

**ஏலேல சிங்கன்** - இவன் சோழ மன்னர்களில் ஒருவன். சிறந்த ஆண்மையும் படை வலியும் படைத்திருந்த இவன் கி. பி. 200 இல் ஈழத்தின்மீது படையெடுத்துச் சென்றான்.

**ஏழிசை மோகன் ஆட்கொள்ளியான குலோத்துங்க சோழ காடவராயன்** - இவன் பல்லவர் குலத்தில் தோன்றியவன். கி.பி. 1136 இல்தென்னார்க்காடு மாவட்டத்தில் திருமாணிகுழியைச் சார்ந்த கிலப்பரப்பில் நாட்டைக் காவல் செய்யும் அரசாங்க அதிகாரியாயிருந்தான். அரசனால் அளிக்கப்பட்ட குலோத்துங்க சோழ காடவராயன், கச்சிராயன் என்னுஞ் சிறப்புப் பெயர்களைப் பெற்றவன். திருநாவலூர், திருவதிகை, திருமுதுகுன்றம் ஆகிய ஊர்களிலுள்ள திருக்கோயில்கட்குக் கட்டளைகள் அமைத்தும் அணிகலன்கள் வழங்கியும், திருப்பணிகள் புரிந்துந் தொண்டு செய்திருத்தலால் இவன் சிறந்த சிவனடியான் என்பது பெறப்படுகின்றது. இவன் தன்னுடைய அறிவாற்றல்களாற் படிப்படியாக உயர்ந்து தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள திருமுனைப்பாடி நாட்டில் ஒரு சிற்றரசனாக விளங்கினான் என்பது கல்வெட்டுக்களாற் பெறப்படுகின்றது.

**ஏழிசை வல்லபி** - இவள் முதற் குலோத்துங்கனுடைய மனைவி. ஏழிசைகளினும் வல்லவளா

கையால் ஏழிசைவல்லபி என்று காரணப் பெயர் பெற்றாள்.

**ஏழிருக்கை** - திருவிசைப்பாப் பெற்ற திருச்சாட்டியக் குடியில் உள்ள திருக்கோயில் இப் பெயரால் வழங்கப் பெறுகிறது. சுரநோய் என்னும் வெப்ப நோய்க்குத் தெய்வமாகிய தீக் கடவுளை இங்கு இறைவருடைய திருவுருவமேயாக வைத்து வழிபடப் படுகிறது.

**ஏழில் மலை** - துளு நாட்டில் உள்ள மலைகளில் ஒன்று. இது துளு நாட்டின் தெற்கேயுள்ளது. இதனை ஏழில் நெடுவரை என்றும், ஏழிற் குன்று என்றுங் கூறுவர். இதனுடைய ஒரு பிரிவு பாழி மலை என்று பெயர் பெற்றிருந்தது. அங்குப் பாழி என்னும் பெயருடைய ஊர் ஒன்றும் இருந்தது. ஏழில் மலை மேற்குக் கடற்கரையோரமாகக் கண்ணனூருக்கு வடமேற்கே பதினறு கல் தொலைவில் இருக்கிறது. கடற்கரைக்குக் கிழக்கே ஒரு மைல் தொலைவில் இருக்கிறது. இம்மலை அரபிக்கடலில் இருபத்தேழு மைல் தொலைவரையில் தெரிந்தது.வாஸ்கோடிகாமா என்னும் போர்த்துகீசியன் முதல் முதல் இந்தியாவுக்கு வந்தபோது அவனுக்குக் கடலில் முதன் முதலாகக் காணப்பட்ட மலை இதுவே என்பர்.

**ஏனுதி சாத்தஞ் சாத்தன்** - (8-ஆம் நூ.) கல்வெட்டின் உதவியால் துலங்கப்படும் புலவர் சு. 767-ல் பட்டம் பெற்றவனும், ஆனைமாமலை, சீவரமங்கலம் முதலான இடங்களிலுள்ள கல்வெட்டுக்களுக்கு உரியவனுமான பராந்தகன் நெடுஞ்சடையனெனும் பாண்டியனைப் பற்றிய வேள்விக் குடிச் செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியைப் பாடியவர் இவர். இச்செப்பேடுகளில், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியால் கொற்கைக் கிழான் காமக்காணி நற்கொற்றன் என்ற அந்தணனுக்குக் கொடுக்கப் பெற்றுப் பின்பு களப்பிரர் என்ற வேற்றரசர் ஆட்சியிலே அரசாங்கத்துடன் சேர்க்கப் பெற்றிருந்த வேள்விக்குடி என்ற ஊரை முதலில் தானம் பெற்றவன் மரபினனை காமக்காணி நற்சிங்கன் என்பவனுடைய வேண்டுகோளின்படி பராந்தகன் நெடுஞ்செழியன் மறுமுறை தானமாக வழங்கியது குறித்துள்ளது. காமக் காணி என்பது கிராமக் காணி என்பதன் திரிபாக இருக்கலாம். காமக் கிழவு என்றும் வழங்குகின்றனர். இவர் பாடியிருக்கும் செய்யுட்கள் வடமொழிக் கலப்பு மிக்கவை.

**ஐஹயர்** - இவர்கள் கார்த்த வீரியார்ச்சுனனுடைய வழிமுறையில் தோன்றிய அரசர்கள். இவர்கள் வறுமையினால் துன்பமடைந்தார்கள். தங்களுடைய முன்னோரிடம் தானம் வாங்கிய அந்தணர்கள் செல்வமுடையவர்களாக இருத்தலையுணர்ந்து அவர்களிடம் போய்மிகுதியான வட்டி தருவதாகவும் தங்களுக்குக் கடனுகப்பொருள் வேண்டுமென்றுங் கேட்டார்கள். அவர்களோ இவர்களிடம் கடன் கொடுத்தால் பொருள் மீளாது என்று எண்ணியவர்களாய்த் தங்களிடமிருந்த பொருளை நிலத்திற் புதைத்து வைத்து விட்டுக் காட்டிற் சென்று வசித்தார்கள். ஐஹயர்கள் நிலத்தைத் தோண்டிப் பார்க்கப் பொருள் கிடைத்தது. அவ்வந்தணர்கள்வஞ்சகர்களென்று அவர்களுடைய குலத்தைஅழித்தொழிக்கத் தொடங்கினார்கள். அந்தணப் பெண்களைக் கொலை

செய்ய எண்ணி அவர்களைத் தேடிச் சென்றார்கள். அப்பொழுது அப்பெண்களில் ஒருத்தியின் தொடையில் பிருகு முனிவர் தோன்றி ஐஹயர்களுடைய கண்களைப் போக்கினார். ஐஹயர்கள் முனிவரைப் போற்றி செய்து கண்ணைப் பெற்றார்கள்.

**ஐங்கலக்காசு விநாயகர்** - திருவாரூர்த்திருக்கோயிலில் உள்ள ஒரு விநாயகருடைய பெயர். சோழமன்னன் ஒருவன் ஐந்து கலம் பொற்காசுகளைக் கொண்டு இவ்விநாயகரைச் செய்வித்தபடியால் இவ்விநாயகருக்கு இவ்வாறு பெயர் வழங்கலாயிற்று.

**ஐந்தாம்படை** - ஒரு நாட்டிலே உள்ளவர்கள் அந்நாட்டிற்கு எதிராக வேலை செய்யவும், பகைவர்களுக்கு உதவி செய்யவும் முன்வரின் அவர்களை ஐந்தாம் படையினர் என்று குறிப்பிடுகின்றனர். இப்பெயர் 1936 ஆம் ஆண்டில்தான் முதன் முதலாகத் தோன்றியது. ஐந்தாம் படையினர் பலவகைகளில் வேலை செய்து நாட்டில் குழப்பம், துன்பம், பயம் முதலியவைகளை உண்டாக்கியும் பகைவர்களுடைய சார்பில் பேசி அவர்களுக்கு ஆதரவு தேடியும் தமது நோக்கத்தை நிறைவேற்ற முயல்வர். இரண்டாம் உலகப் போரின்பொழுது இத்தகைய ஐந்தாம் படைகள் மிகுந்த திறமையுடன் வேலை செய்தன.

**ஐந்திரம்** - வடமொழி இலக்கண நூல்களில் ஒன்று. இஃது இந்திரனால் செய்யப்பட்டபடியினால் இப்பெயர் பெற்றது என்று இயம்புகின்றனர். தொல்காப்பியர் வடமொழியிலும் புலமைபெற்றவர் என்பதை விளக்கத் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தில், ''ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்'' என்று சிறப்பித்துக் கூறப் பெறுகிறார். இந்திரன் இவ்வாறு இலக்கண நூல் செய்த கதையை நம்புவார் சிலரும் நம்பாதவர் சிலரும் உள்ளனர்.

**ஐம்படைத்தாலி** - முன் காலத்தில் குழந்தைகளுக்கு அணிந்துவந்த ஓர் அணிகலம் ஐம்படைத்தாலி என்னும் பெயரால் வழங்கப் பட்டது. காத்தற் கடவுளாகிய திருமாலின் சங்கு, சக்கரம், கதை, வாள், வில் ஆகிய ஐம் படைகளையும் சிறிய அணிகலன்களாகச் செய்து அணிவது இவ் வணிகலமாகும். இதனைப் பற்றிச் சங்ககால நூல்களும் ஆங்காங்கு குறிப்பிட்டுள்ளன.

**ஐம்பெருங் காப்பியம்**- சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் பழந்தமிழ் நூல்கள் ஐந்தும் ஐம்பெருங் காப்பியங்கள் என்று வழங்கப் பெறுகின்றன. இவற்றுள் முதல் மூன்றுமே இந்நாளில் முற்றும் உள்ளன. இறுதி இரண்டும் இறந்தொழிய நூல்களில்மேற்கோள்களாகச் சென்ற சில பாடல்கள் மட்டும் மறைந்தொழியாமல் வழங்கிக் கொண்டிருக்கின்றன.

**ஐயனார்**- இவருடைய பெயர் சாத்தனார் எனவும் வழங்கும். தாருகாவனத்து முனிவர்களுடைய ஆணவத்தை அடக்கும் பொருட்டுச் சிவபெருமான் பிட்சாடனராக நிர்வாணகோலத்துடனும் திருமால் மோகினி வடிவத்துடனும் எழுந்தருளிய காலத்தில் இருவருக்கும் புதல்வராக இவர் தோன்றினார் எனவும் இதனால் இவருக்கு அரிகர புத்திரர் என்று பெயர் எனவுங் கூறுவர். இவருடைய திருக்கோயில் ஊருக்குப் புறம்பான

இடத்திலேதான் அமைந்திருக்கும்.

**ஐராபதம்** - இஃது ஒரு மலை. இம்மலையில் சிங்கச் சுவணம் என்னும் உயர்ந்த பொன் உண்டாகியது.

**ஐராபதி** - இவள் பதுமாபதியின் செவிலித் தாயின் மகள். கூனிய உருவமுடையவளாக இருந்த படியினால் கூன் மகளெனவும் கூனியெனவுங் கூறப் பெற்றாள். இராசகிரியத்தில் காமன் கோட்டத்துக்குப் பக்கத்தில் பதுமாபதியைக் கண்டு மயங்கி வினவிய உதயணனுக்கு அவளுடைய வரலாறுகளை யெல்லாங் கூறி அவனுக்கும் அவளுக்கும் இடையே நின்று இருவர் கருத்தையும் நிறைவேற்றியவள். கூரிய மதியினள். எக் காரியத்தையும் மறைமுகமாகச் செய்து முடிப்பதில் வல்லவள். பந்தடிப்பதினுங் கெட்டிக்காரி. இப்பெயர் அயிராவதி எனவும் வழங்கும்.

**ஐராவசு**-இவன் ஒரு காந்தருவன். இவன் தேவ குருவினுடைய சாபத்தால் யானையுருப் பெற்றுக் கதிர்காம வேலரை வழிபட்டு நல்லுருப்பெற்றவன்.

**ஐராவதேசர்** - துருவாசருடைய வசவுரையைப் பெற்றுக் காட்டானையாக மாறிய ஐராவதம் மதுரையின் மேற்கில் ஓரிடத்தில் ஒரு சிவலிங்கத்தை அமைத்து வழிபாடு செய்தது. அவ்விலிங்கம் ஐராவதத்தால் அமைக்கப்பட்டமையின் ஐராவதேசர் என்று பெயர் பெற்றது.

**ஐவேலி** - கொங்கு வள நாட்டில் சங்ககிரிக்குக் கிழக்கே இரண்டு மைல் தொலைவில் இவ்வூர் முன்னாளில் இருந்தது. இவ்வூரில் ஔவையாரிடங் கோவை கொண்ட அசதி என்பவன் வாழ்ந்திருந்தான். ஐவேல் அசதி பாண்டி நாட்டினன் என்பாருமுளர்.

**ஐனு** - சப்பான் நாட்டில் வரலாற்றுக் காலத்துக்கு முன் இச்சாதியார் வாழ்ந்து வந்தனர். இப்பொழுது சப்பான் தீவுக் கூட்டத்தில் ஒன்றாகிய ஹொக்கெய்டோவினும் மற்றொன்றாகிய "சக்காலின்" என்பதின் ஒரு பகுதியிலும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுடைய எண்ணிக்கை பதினேழாயிரம். கனமான எலும்புகளும், குறுகிய தலையும், வெளுப்பான பழுப்பு நிறமேனியும், உடலில் மிகுதியான மயிரும் உடையவர்களாகவும், மேல் இமையின் உட்புறத்தில்மடிப்பில்லாதவர்களாகவும் இருப்பதால் மங்கொலாயிடு இனத்தைச் சேர்ந்தவர்களாகார்; காக்கசாயிடு இனத்தைச் சேர்ந்தவர்களாகலாம். தென்இந்தியமலைச்சாதியாரைச் சேர்ந்தவர்களாகக் கொள்வதே பொருந்தும். வேறு எந்த மொழியையும் சாராத தனி மொழியுடையவர்கள். இவர்களில் சிலர் சப்பானியரிடமிருந்து வேளாண்மைத் தொழில் கற்று அதனைச் செய்து வருகிறார்கள். பெரும்பாலோர் மீன் பிடித்தல், வேட்டையாடுதல் முதலிய தொழில்களின் வாயிலாகவே வாழ்க்கையை நடத்துகின்றார்கள்.

**ஒக்கிலியன்** - தமிழ் நாட்டிற் குடியேறிக் கோயமுத்தூரில் வசிக்கும் ஒரு கன்னடச் சாதியான்.

**ஒட்டிய முனி** - இம் முனிவர் மாந்திரிக வித்தையிற் சிறந்தவர்; இவர் தம்முடைய பெயரால் ஒட்டிய மென்னும் நூல் செய்திருப்பதாகக் கூறப்படுகிறது.

**ஒய்சளர்** - மைசூரிலும் அதன் அண்மையிலுள்ள நாட்டிலும் கங்கர்கள் இழந்த பதவியை ஒய்சளர் கைப்பற்றிக் கொண்டனர். முதலில் ஒய்சளத் தளபதிகள் மேலைச் சாளுக்கிய மன்னர்களுடைய ஆணைக்குள் வாழ்ந்த சிற்றரசர்களாவார். விட்ணுவர்த்தனர் என்ற ஒய்சளத் தலைவர் தனியே ஆட்சியை அமைத்தார். பெரும் போர் வீரராக இருந்த இவர் தலைக்காடு, கங்கவாடி, சேலம், கோயம்புத்தூர் முதலிய இடங்களைக் கைப்பற்றினார். விக்கிரமாதித்திய சாளுக்கியன் என்பவன் இவரைத் தோற்கடித்தான். சமணராக விருந்த இவரை இராமாநுசர் வைணவராக்கியதாகத் தெரிகிறது.

**ஒலோகமாதேவி** - இவள் கி. பி. 985 முதல் 1013 வரையில் தஞ்சையின்கண் அரசாட்சி செய்திருந்த முதலாவது இராசராசனது பட்டத்தரசியாவாள். திருவையாற்றில் உள்ள ஐயாறப்பர் கோயிலில் தன் பெயரால் ஒலோகமாதேவீச்சுரம் என்னுங் கோயிலைக் கட்டியிருக்கிறாள்.

**ஒழுந்தியாப்பட்டு** - இப் பெயரோடு இந்நாளில் வழங்கும் இவ்வூர் தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்றாகும். இது முன்னாளில் அரசிலி என்னும் பெயரோடு வழங்கியது. இவ்வூர் தென்னார்க்காடு மாவட்டத்தில் புதுச்சேரியில் இருந்து திண்டிவனம் போகும் வழியில் ஐந்து மைலில் இருக்கும் இரும்பைமாகாளஞ் சென்று அங்கிருந்து ஒட்டன்பாளையம் வழியில் வட கிழக்கில் மூன்று மைலில் இருக்கிறது. வாமதேவ முனிவர் வழிபாடு செய்த சிவப்பதி. சுவாமியினுடைய பெயர் அரசிலி நாதர். அம்மனுடைய பெயர் பெரிய நாயகியார்.

**ஒளிச்செங்கோ** - இவன் பேரரசர்களில் ஒருவன். கி. மு. பதினொலாயிரத்தைந் நூற்று ஐம்பதாவதாண்டில் மகேந்திர மலையின் ஒரு பகுதியாக மணி மலையில் தமிழ்ச் சங்கம் ஒன்றை நிறுவி, பேராற்று நெடுந்துறையன், இடைகழிச் செங்கோடன், தனியூர்ச் சேந்தன் முதலிய புலவர்களைக் கொண்டு தமிழ் ஆராய்ச்சி செய்வித்தான் என்று தெரிகிறது.

**ஒற்றியூர்** - நான்முகனுடைய தவத்தில் அவனுடைய யோகத் தீயின் நடுவுள் இறைவர் தோன்றி அத் தீயையே கோயிலாகக் கொண்டு எழுந்தருளி ஊழி வெள்ளம் மேலெழும்பாது சுவறுமாறு செய்தபடியால் ஒற்றியூர், எனப்பட்டது. ஒற்றுதல் சுவறச் செய்தல். இதுவே திருவொற்றியூர்.

**ஓசூர்** - தமிழ்நாட்டில் சேலம் மாவட்டத்தின் வடதாலுகா. இது மாவட்டத்தின் மிகவும் பெரிய தாலூகாவாகும். பரப்பு: 1,168 சதுர மைல். மக்கள் தொகை: 2,70,687 (1951). வடக்கே மைசூர் இராச்சியத்தைச் சேர்ந்த கோலார் மாவட்டமும், மேற்கே பெங்களூர் மாவட்டமும், கிழக்கே கிருஷ்ணகிரியும், தருமபுரியும், தெற்கே கோயம்புத்தூர் மாவட்டமும் இதற்கு எல்லைகளாக அமைந்துள்ளன. தென் எல்லையோரமாகக் காவிரியாறு செல்கின்றது. வட பாகமும் மேற்குப் பாகமும் பீடபூமி; வறண்டவெளி. தெற்குப் பாகமும் கிழக்குப் பாகமும் இயற்கை அழகு மிகுந்தவை. இப் பக்கங்களில்காடு நிறைந்த குன்றுகளும் பசுமையான பள்ளத்தாக்குகளும் உள்ளன. கால்நடை வளர்த்தல், நெசவு, பாய்

பின்னுதல், மரம்வெட்டுதல் முக்கியத் தொழில்களாயுள்ளன.

**ஓணகாந்தன்** - ஓணன் எனவும் காந்தன் எனவும் பெயருடைய இரண்டு அசுரர்கள். எப்பொழுதும் பிரியாமல் ஒன்ருகவே திரிந்தபடியால் ஒருமைப் பெயராக ஓணகாந்தன் என வழங்கப்பட்டார்கள். இவர்கள் காஞ்சி நகரத்தில் இறை வழிபாடு செய்து பேறு பெற்ருர்கள். இவர்களால் பூசிக்கப்பட்ட இடம் திருவோண காந்தன் தளி என்னும் பெயரால் வழங்குகிறது. காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலுக்கண்மையிலுள்ள இந்த இடம் சுந்தர மூர்த்தி சுவாமிகளால் தேவாரம் பாடப் பெற்றது.

**ஓதவுருகீசுரர்** - திருக்கச்சி மேற்றளியில் திருமால் வடிவமாக விருந்தவர். இவர் சிவசாரூபம் பெறும் பொருட்டுத் தவஞ் செய்து கொண்டிருந்தார். திருஞான சம்பந்தர் இப்பதியை அடைந்து தேவாரப் பதிகம் பாடியபொழுது அதனைக் கேட்டு உருகிச் சிவலிங்கமானுர். அதனுல் இவ்வாறு ஓதவுருகீசுரர் என்று பெயர் உண்டாயிற்று.

**ஓத்தூர்** - தொண்டை நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப் பதியாகிய திருவோத்தூர். ஓத்து - வேதம். இறைவன் மறைகளைத் தேவர்களுக்கு ஓதுவித்த பதியாகையால் ஓத்தூர் என வழங்கப் பெற்றது. திருஞான சம்பந்தப் பிள்ளையார் ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கிக் காய்க்குமாறு நிகழ்த்திப் புதுமை செய்தது இத் திருவோத்தூரிலேதான். எழுதப்படாமல் வழி வழியாக ஓதப்பட்டே வருதலின் ஒத்தெனப்பட்டது. இறைவன் பெயர் வேதநாதர்.

**ஓரிருக்கை** - தொண்டை வள நாட்டில் திருமழிசை என்னும் ஊரில் ஆழ்வார் ஒருவர் பிறந்தார். அவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரிந்திலது. திருமழிசையில் இருந்தபடியால் திருமழிசையாழ்வார் என்று பெயர் பெற்ருர். இளமையில் நன்கு கல்வி கற்றுப் பல சமய நூல்களையும் ஆராய்ச்சி செய்தார். சில காலம் பௌத்தராகவுஞ் சில காலம் சமணராகவும் இருந்தார். பிறகு சைவ சமயத்திற் சேர்ந்து சில காலம் சைவராக இருந்தார். அப்பொழுது பேயாழ்வார் என்பவர் இவரை வைணவராக்கிஞர். இவருக்குப் பத்திசாரர் என்று வேருரு பெயரும் உண்டு. இவர் காஞ்சிபுரத்திற்குப் போய்த் திருவெஃகா என்னுந் திருப்பதியில் தங்கிப் பெருமாளை வழிபட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது கணிகண்ணர் என்பவர் இவருடைய மாணவராகித் தொண்டு செய்து கொண்டிருந்தார். அம் மாணவருடைய குருபத்தியைக் கண்டு இவர் அவரிடத்தில் மிகுந்த அன்பு பாராட்டியிருந்தார். அக் கணிகண்ணர் ஒருநாள் பல்லவ மன்னனுடைய மாளிகைக்குப் பிச்சை எடுக்கச் சென்ருர். பல்லவமன்னன் இவரை அழைத்துத் தன்மீது ஒரு செய்யுள் இயற்றச் சொன்ஞன். கணிகண்ணர் அரசனைப் பாடாமல் காஞ்சி நகரத்தைப் பாடிஞர். சினங் கொண்ட அரசன் கணிகண்ணரை ஊரை விட்டுப் போகுமாறு கூறிஞன். கணிகண்ணர் தம்முடைய ஆசிரியரிடம் வந்து நடந்ததைக் கூறித் தமக்கு விடை கொடுக்குமாறு கேட்டார். ஆழ்வார் தாமும் அவரோடு வருவதாகக் கூறிக்

"கணிகண்ணன் போகின்றான்" என்னுஞ் செய்யுளைப் பாடிப் பெருமாளையும் உடன் அழைத்துக்கொண்டு புறப்பட்டார். மூவரும் நகரத்தை விட்டுப் போய்விட்ட செய்தியை மன்னன் அறிந்தான். உடனே ஆழ்வாரிடஞ் சென்று அவரை வணங்கினான். தன்னுடைய குற்றத்தைப் பொறுத்து நகரத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். ஆழ்வாரும் அரசனுடைய வேண்டுகோளுக்கிணங்கித் திரும்பினார். மூவரும் ஓர் இரவு தங்கியிருந்த இடம் ஓர் இருக்கை என்று பெயர் பெற்றது. அஃது இந்நாளில் திரிந்து ஓரிக்கை என மாறி விட்டது.

**ஓவாத கூத்தர்** - இவர் கவிச் சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தருடைய பேரர். கூத்தர் என்னும் பெயர் ஒட்டக்கூத்தருக்குப் பின்னும் பலருக்கு வழங்கத் தொடங்கியபடியால் இவருங் கூத்தர் என்னப்பட்டார். ஒட்டக்கூத்தருக்குத் தானமாக அளிக்கப்பட்ட நிலமும் கூத்தனூர் என்று பெயர் பெற்றது. கூத்தனூர் என்பது தஞ்சை மாவட்டத்தில் நன்னிலந் தாலுகா பூந்தோட்டம் என்னும் ஊருக்கு அண்மையில் காவிரிக் கரையில் உள்ளது. மலரி என்பது சோழ வள நாட்டிலேயுள்ள திருவெறும்பியூரின் பழைய பெயர்.

பாண்டிய நாட்டிலும் மலரி என்னும் பெயருடைய ஊர் உள்ளது. மலரி ஒட்டக் கூத்தரின் ஊர் என்பதை 'மலரி வருங் கூத்தன் தன் வாக்கு' என்னும் செய்யுள் இறுதித் தொடரும் உறுதிப்படுத்தும். இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள முதுகுளத்தூர்த் தாலுகா திருமாலுகந்தான் கோட்டையில் உள்ள சிவன் கோயிற் கல்வெட்டிலே குலசேகர தேவன் என்ற பாண்டியன் காலத்திலே ஓவாதகூத்தர் அறம் பல புரிந்தமை பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் திருநெல்வேலி மாவட்டத்தில் கோவிற்பட்டி தாலுகா ஆதனூரில் உள்ள சிவன் கோயில் கல்வெட்டில், "இனியன் கூத்தனை ஓவாத கூத்தன் ஒரு தூண் உதவி செய்த" செய்தி குறிக்கப் பட்டுள்ளது. மேற்கூறிய குறிப்புக்களால் இவர் ஒரு சிறந்த அறவாணர் என்பது அறியப்படுகிறது. ஓவாத கூத்தர் என்பது சிவபிரானுடைய பெயர்களில் ஒன்று. ஒழிவில்லாமல் கூத்தியற்றுபவர் என்பது பொருள். மேற்கூறிய கூற்றுக்களால் ஓவாத கூத்தரின் ஊர் இன்னதென்று அறியப்படாமலே போயிற்று.

**ஓவியர்** - தென்னார்க்காடு மாவட்டத்தில் திண்டிவனத்தைச் சூழ்ந்த நாடு ஓய்மானாடு என்று வழங்கப்படுகிறது. ஓய்மானாட்டில்வாழ்ந்தோர் ஓவியர் ஆவர். ஓவியம் என்பது அழகிய கலைகள் பலவற்றையுங் குறிக்கும். இந்நாட்டில் வாழ்ந்தோர் சித்திரம் வரைதல் முதலிய அழகிய வேலைகள் பலவற்றையுஞ் செய்தலில் வல்லவர்களாக இருந்தமையின் ஓவியர் என்று பெயர் பெற்றனர். இவர்கள் வாழ்ந்த நாடு ஓய்மானாடு என்று பெயர் பெற்றதோடு இந் நாட்டை ஆண்ட நல்லியக்கோடன் என்னும் மன்னனும் ஓய்மானாட்டு நல்லியக்கோடன் என்று பெயர் பெற்றனன்.

**ககந்தன்** - காந்தன் என்னும் அரசனுடைய காதற் கணிகையின்

புதல்வன். போர் செய்ய வந்த பரசுராமருக்கு முன்னே அவ்வரசன் தோன்ருது மறைந்து கொண்டபொழுது காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து செங்கோல் செலுத்தியவன். தன் மக்கள் இருவருள் இளையோன் பார்ப்பனி மருதியையும் மூத்தோன் வணிக மாதாகிய விசாகையையும் விரும்பித் திங்கு செய்ய முயன்ருர் என்பதைக் கேள்வியுற்றபொழுது அவர்களை வாளாற் கொன்றவன்; இவனால் பாதுகாக்கப்பட்டமையின் காவிரிப்பூம்பட்டினம் காகந்தி என்னும் பெயரைப் பெற்றது.

**கங்கர்** - எட்டாம் நூற்ருண்டின் இடைக்காலத்தில் தென்னிந்தியாவில் அரசாட்சி செய்த அரச வமிசங்களில் ஒன்றைச் சேர்ந்தவர்கள் இவர்கள். இவர்களில் மேலைக் கங்கர் கீழைக் கங்கர் என இரு பிரிவினர் இருக்கின்றனர். இவர்கள் முன்னுளில் ஆண்ட நாடு கங்கபாடி என்னும் பெயரோடு வழங்கியது. இந்நாடு மைசூருக்குத் தென் பக்கத்தில் இருந்ததாகக் கூறுவர்.

**கங்கன்** - தருமன் அந்தணக் கோலத்தோடு விராட நகரத்தில் கரந்துறைந்தபோது மேற்கொண்டிருந்த பெயர்.

**கங்காதேவி** - விசயநகரப் படைத் தலைவனுன கம்பணனுடைய வாழ்க்கைத் துணைவி. இவள் சமஸ்கிருதத்தில் பெரும் புலமை பெற்றுத் திகழ்ந்தாள். தன்னுடைய கணவன் தென்னுட்டில் ஆற்றிய வீரச் செயல்களை இவள் "மதுரா விசயம்" என்னும் பெயரோடு அரும் பெரும் வீர காவியமாகச் செய்தாள். இக் காவியச் சிறப்பு அறிஞர்களுடைய உள்ளத்தைக் கவரத்தக்க ஒப்பற்ற காவியமாக அமைந்தது.

**கங்கை** - இமயமலையின் தென் பள்ளத்தாக்குகளில் இருந்து புறப்படும் பாகீரதி அலகநந்தா என்னும் இரண்டு சிற்ருறுகளின் கலப்பே கங்கையாருகும். அலகாபாத்தில் யமுனையாறு கங்கையில் கலக்கிறது. அங்கிருந்து கங்கையாறு ஐக்கிய மண்டிலத்திலும் வங்காள மண்டிலத்திலும் பாய்ந்து வங்காளக் குடாக் கடலிற் கலக்கின்றது. இதனுடைய நீளம் கருஉ கல்களாகும். சர்தா, இராம் கங்கா, கும்டி, கோக்ரா, சோனே, கண்டகி முதலிய ஆறுகள் இதிற் கலக்கின்றன. வடமதுரை, கௌசாம்பி, பிரயாகை, வாரணசி என்னும் நகரங்கள் கங்கைக் கரையில் இருக்கின்றன.

**கங்கை கொண்ட சோழபுரம்** - இவ்வூர் இந்நாளில் திருச்சிராப்பள்ளிமாவட்டத்தில் உடையார் பாளையம்வட்டத்தில்ஒருசிற்றூராக விளங்குகிறது. கங்கை கொண்ட சோழன் என்று பெயர் பெற்ற முதலாம் இராசேந்திரன் காலத்தில் அமைக்கப்பட்டது இவ்வூர். இச்சோழ மன்னன் பெரும் படையோடு வடநாடு சென்று கங்கை பாயும் நாடுகளையும் வென்று கைப்பற்றியபடியால் இப் பெயர் இவனுக்குச் சிறப்புப் பெயராக அறிஞர்களால் அளிக்கப்பட்டது. இவ்வூர் 'கங்காபுரி' என்று வடமொழி நூல்களிலும் குறிப்பிடப்படுகிறது. இந் நாளில் கங்கை கொண்டான் என்னும் பெயரால் சிற்றூராக விளங்கும் இவ்வூர் முன்னுளில் ஏறக்குறைய நான்கு மைல் சதுர அமைப்புடையதாய்ப் பெரிய மதில்களால் சூழப் பெற்றுச்

சிறந்து விளங்கியதென்பது இவ்வூரின் அமைப்பைப் பார்ப்பவர்கட்கு நன்கு விளங்கும். இவ்வூரின் தென் கிழக்கில் இன்று காணப்படும் செங்கல் மேடுகளும், திட்டுக்களும் அகழியின் சிதைவுகளும் இந் நகரின் வெளிப்புரிசையின் அறிகுறிகளாகும். இங்குக் கிடைக்குஞ் செங்கற்கள் பண்டைக் காலத்துக் கற்களைப் போல மிகவும் பெரியவை. இவ்வூரின் மேற்கில் ஒரு மைல் தொலைவில் காணப்படும் பதினாறு மைல் நீளமுள்ள இடிந்த கரையே சோழர் காலத்தில் விளங்கிய, "சோழ கங்கன்" என்ற பொன்னேரியின் கரையாகும். கரை இடிந்து படுகை தூர்ந்து மேடிட்டுக் காடு மண்டிக் கிடங்கும் இவ்வேரிக்கு அந் நாளில் கொள்ளிடத்திலிருந்து தண்ணீர் வருவதற்கு வழியமைக்கப்பட்டிருந்தது.

இவ்வூரில் உள்ள பிருகதீச்சுரம் அல்லது கங்கை கொண்ட சோழேச்சுரம் என்று பெயர் பெற்ற இப் பெருங் கோயிலின் சுற்றமைப்புக்கள் இந் நாளில் பெரும்பாலும் அழிந்துவிட்டன. இங்கிருந்து சுமார் பத்து மைல் தொலைவிலுள்ள கொள்ளிடம் அணையைக் கட்டிய காலத்தில் அங்குத் தலைமை தாங்கி வேலை செய்த அதிகாரிகள் இக் கோயிலின் அருமை பெருமையை எண்ணிப் பாராமல் கோயிலின் கற் கோபுரத்தை வெடி வைத்து இடித்து வேலைக்கு வேண்டிய கற்களைக் கொண்டு போய்விட்டனர்.

திருமதிலின் உள்ளே பரந்த முற்றத்தின் நடுவே வானளாவி நிற்பது பிருகதீசுவரர் கோயிலின் பெரிய விமானமாகும். அதன் முன்னர் மண்டபங்களும், விமானத்தின் வடக்கிலும் தெற்கிலும் சண்டிகேசுவரர் கோயில் உட்பட ஐந்து சிறிய கோயில்களும் உள்ளன. விமானத்திற்குச் சற்று விலகி, வடக்கிலும் தெற்கிலும் வட கயிலாயம் தென் கயிலாயம் என்னும் சிறு கோயில்களும் வட கயிலாயத்தின் முன்னர் அம்மன் கோயிலும், தென் கயிலாயத்தின் பின்னர்க் கணபதி கோயிலும் இப் பெருங் கோயிலின் உறுப்புக்களாக நிற்கின்றன. இக் கோயிலின் அமைப்புப்பெரும்பாலும்இராசராசன் அமைப்பித்த தஞ்சைப் பெரிய கோவில் அமைப்பைப் போன்றிருக்கிறது.

மகா மண்டபத்தினுள் பல அரிய சிற்பங்கள் உள்ளன. அவைகளில் திருஞான சம்பந்தர் உருவமும் கதிரவன் பீடமுங் குறிப்பிடத்தக்கன. கதிரவன் பீடம் ஒரு தேர் வடிவமாக உள்ளது. இங்குள்ள செப்பு வடிவங்கள் மிகச் சிறந்தவை. சோழர் காலத்து வார்ப்பு வேலையின் மேம்பாட்டைக் காட்டுபவை. விமானத்தின் புறச் சுவர்களிலும், மேல் தளங்களிலும், இடைகழியின் வாயிற் புறங்களிலும் உள்ள சிற்பங்களெல்லாம் மிகுந்த அழகு வாய்ந்தவை. திரிபுர சங்காரர், கூத்தப்பிரான், கங்காதரர், காலசம்மாரர், திருமால், நான்முகன், இலிங்கோற்பவர், சந்திரசேகரர், சண்டேசானுக்கிரகர், திருமகள், கலைமகள், காளி முதலிய ஒவ்வொரு சிற்பமும் சோழர் காலச் சிற்பக் கலையின் உயர்வைப் புலப்படுத்துபவை.

**கங்கையம்மன்** - புராணங்களில் தீர்த்த தேவதை எனக் கூறப் படுபவள். இமயத்தில் தோன்றிக் கங்கை யென்னும் பெய

ருடன் சென்று கடலில் கலக்கும் நதியை, வெண்ணிறமும், வலக்கையில் கரு நெய்தலும், இடக்கையில் நிறை குடமும் ஏந்திய தெய்வமாகப் புராணம் புகலும். முதலை வாகனம், வானுலகிலே மந்தாகினி, நில வுலகிலே கங்கை, பாதாளத்திலே போகவதி என்னும் பெயருடன் இவளைப் போற்றுகின்றனர். இவள் உலகிலுள்ள மூன்றரைக் கோடி தீர்த்தங்களின் பயனையும் தர வல்லவள் என்று கூறுப.

**கசலட்சுமி** - இரண்டு கைகளில் தாமரை மலர்களேந்தி இரண்டு கைகளை அபயவரதமாகக் கொண்டிருப்பாள். இரு புறங்களினும் இரண்டு யானைகள் நின்றிருக்கும். எல்லா இலட்சுமிகளின் ஆற்றலும் இவளிடம் பொருந்தி மகா லட்சுமியாக விளங்குவாள். இவளைப் போற்றுவோர் எல்லா வகையான நன்மைகளையும் பெறுவர்.

**கசேந்திரன்** - இந்திரத் துய்மனன் என்னும் அரசன் அகத்திய முனிவரைக் கண்டு பணியாதிருந்தான். அவர் சினங்கொண்டு, "யானையாகுக" என்று வசவுரை வழங்கினர். அவ்வாறே இவன் யானையானன். தன்னுடைய இயற்கையான திருமாலன்போடு யானைகட்கு அரசாய் விளங்கினன். ஒரு நாள் தண்ணீரில் இறங்கியபோது, வசவுரையின் பலனால் தண்ணீரில் முதலையாகக் கிடந்த ஊகூ என்னுங் கந்தர்வன் இந்த யானையின் காலைப் பற்றி யிழுத்தான். இரண்டும் போராடின. அப்பொழுது இந்த யானை, "ஆதி மூலமே" என்று திருமாலையெண்ணிக்கூவியது. திருமால்தோன்றி முதலையைக் கொன்று இதனைக் காத்து வீடுபேற்றைத் தந்தார்.



**கச்சி அநேகதங்காவதம்** - காஞ்சீபுரத்தில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. அநேகதம்-யானை. ஆனைமுகக் கடவுள் வழிபட்ட பதியாதலின் இவ்வாறு பெயர் அடைந்தது. இங்குக் குபேரன் முதலியோர் வழிபாடு செய்து பேறு பெற்றனர்.

**கச்சித் தருமதவனம்** - காவிரிப் பூம் பட்டினத்தை விட்டு நீங்கிய மணிமேகலை கச்சியை அடைந்த காலத்தில் அந் நகரில் அரசாட்சி செய்துகொண்டிருந்த அரசன், மணிமேகலை தங்கியிருத்தற்கு மணி பல்லவப் பீடிகை போன்ற பீடிகையும் வழிபடற்கேற்ற புத்த சைத்தியமும் அமைத்து அவ்விடத்தே தங்கியிருக்கச் செய்தான். மணிமேகலை தங்கியிருந்த அந்த விடம் தருமங் கூறல் முதலிய வைகளைச் செய்து கொண்டிருந்தபடியால் தருமதவனம் என்னும் பெயரைப் பெற்றது.

**கச்சிநெறிக் காரைக் காடு** - காஞ்சீபுரத்தில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. காரை மரங்கள் அடர்ந்த காடு முன்னுளில் இருந்தபடியாலும் கச்சியோடு சேர்ந்திருப்பதாலும் கச்சி நெறிக் காரைக்காடு என்று கழற நின்றது. பிரம கற்பத்தின் ஆருவது மன்வந்தரத்தில் சிவி என்ற இந்திரன் வியாழனுகிய குருவின் அருளுரைப்படி இங்கு வந்து வழிபட்டு வீடு பேற்றை யடைந்தபடியினுல் இதற்கு இந்திரபுரம் என்றும் ஒரு பெயர் உண்டு. இஃது இந்நாளில் திருக்காலீசுரன் கோயில் என்று வழங்குகின்றது.

**கச்சியப்ப முதலியார்** - தொண்டைவள நாட்டில் வல்லம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த சிறந்த வள்ளல். நிறைந்த செல்வ

முடைய இவர் ஒரு நாள் பல்லக்கிலேறிச் சென்று கொண்டிருந்தார். அப்பொழுது எதிரே வந்த கவி வீரன் என்னும் புலவர் தம்மைக் கண்டதும் விரைவாகக் கீழே யிறங்கித் தம்மை வணங்கவில்லை யென்று சினங்கொண்டு முதலியாரை உதைத்தார். முதலியார் சிறிதும் வருந்தாமல் ''அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத் தருளுங்கள். இனிமேல் இவ்வாறு தவறு செய்ய மாட்டேன்'' என்று கூறித் தம்முடைய பல்லக்கு முதலியவைகளைப் புலவருக்குக் கொடுத்து அவரைப் போற்றினார். முதலியாருடைய இனிய பண்பைக் கண்ட புலவர் இத்தகைய நன்மனமுடைய வள்ளலை உதைத்தோமே என்று உள்ளம் வருந்தி, வள்ளல் மீது செய்யுள் பாடிப் பாராட்டிச் சென்றார். இவருடைய பண்பைத் தொண்டை மண்டல சதகக்காரரும் பாராட்டியுள்ளார்.

**கஞ்சன் சங்கா** - இமயமலையில் டார்சிலிங்குக்கு வடக்கே சிக்கிம் எல்லைப்புறத்திலுள்ள ஒரு மலை முடி. இதன் உயரம் 28,225 அடி. தென் இமயத்தில் இருப்பதால் உறைபனியில்லாமல் பனிக்கட்டியே மிகுதியாகக் காணப்படும் இடம். மிகுந்த அழகுள்ளது. முடி செங்குத்தாக இருப்பதால் ஏறுவது கடினம். உலகத்தில் மூன்றாவது உயரமான சிகரம். எவரெஸ்ட் சிகரத்திலிருந்து கிழக்கே நூறு மைல் தொலைவில் இருக்கிறது. 1955 ஆம் ஆண்டில் வெள்ளைக்காரர்கள் இதன் முடியை அடைவதில் வெற்றி பெற்றனர்.

**கஞ்சாறன் பஞ்சநதி முடி கொண்டானை வத்தராயன்** - இவன் சோழ வள நாட்டில் திருவிந்தளூர் பிரிவைச் சேர்ந்த கஞ்சாறு என்னும் ஊரையுடையவன். இவனுடைய தந்தையின் பெயர் பஞ்சநதிவாணன். இவனுடைய இயற்பெயர் முடிகொண்டான் என்பது. குலோத்துங்க சோழனுடைய படைத் தலைவர்களில் ஒருவன். குலோத்துங்கனால் அளிக்கப் பெற்ற வத்தராயன் என்னுஞ் சிறப்புப் பெயரையுடையவன். இப் பெயர் வச்சராயன், வத்சராசன் எனவும் வழங்கியது. வச்சத் தொள்ளாயிரம் என்னும் நூல் இவன்மீது பாடப்பட்ட நூலாக இருத்தல் வேண்டுமென்பது ஆராய்ச்சியாளர்களுடைய முடிபு. இவன் பங்களூர் மாவட்டம் நிலமங்கலம் பிரிவில் உள்ள மண்ணையில் குலோத்துங்கனுடைய பகைவர்களாகிய மேலைச் சாளுக்கியர்களைப் போரில் வென்று வெற்றி மாலை சூடியவன். கோதாவரி மாவட்டத்திலுள்ள இராமச்சந்திரபுரம் பிரிவைச் சேர்ந்த திராட்சாராமம் என்னும் ஊரிலுள்ள பீமேசுவரமுடைய மகாதேவர்க்குக் குலோத்துங்கனுடைய ஆட்சியின் உடு ஆம் ஆண்டில் இவன் ஒரு நந்தா விளக்கு வைத்தானென்று அங்குச் செய்யுள் வடிவத்திலுள்ள ஒரு கல்வெட்டினால் அறியப் பெறுகின்றது.

**கஞ்சாறூர்** - மயூரத்திற் கண்மையில் உள்ள ஆனந்த தாண்டவபுரம் புகை வண்டி நிலையம் உள்ள ஊரே கஞ்சாறூர் என்கின்றனர். இவ்வூரில் மானக்கஞ்சாற நாயனார் வாழ்ந்திருந்தார். இவர் தம்முடைய மகளின் கூந்தலைத் திருமணத்தன்று அரிந்து முனிவராக வந்த சிவபிரானுக்களித்து வீடு பேறு பெற்றவர். இப்பதியில் எழுந்

தருளிய இறைவன் பெயர் பஞ்சவடீசுவரர் என்பர்.

**கடம்பின் பெருவாயில்** - இவ்வூர் துளு நாட்டில் உள்ளது. இவ் வூரில் நடந்த போரில் களங் காய்க்கண்ணிநார்முடிச்சேரல் நன்னனை வென்முன்.

**கடலுள் மாய்ந்த இளம் பெரு வழுதி** - இவன் கடைச்சங்க நாளில் விளங்கிய பாண்டியர் களில் ஒருவனுவான். இவன் இளம் பருவத்திலேயே சிறந்த அறிவாளனுகத் திகழ்ந்தபடி யால் அக்காலத்திய பெரியோர் கள் இவனை இளம் பெருவழுதி என்று குறிப்பிட்டனர். இவன் மரக்கலமேறிச் சென்றபோது மரக்கலங் கவிழ்ந்து விட அதனுல் கடலில் மாண்டான். இம் மன்னனிடமும் புலமைத் திறஞ் சிறந்து திகழ்ந்தது. இவன் இயற்றிய இரண்டு பாடல்கள் பரிபாடலிலும் புறநானூற்றிலும் உள்ளன. அப் பாடல்களால் இவனு டைய புலமை நலத்தை நன் குணரலாம்.

**கடவூராரியன் திருக்கோட்டி நம்பி**- சூடாமணி உள்ளமுடையான் என்னும் நூல் செய்தவர்.

**கடிகாசலம்** - தொண்டை வள நாட்டில் சோளிங்கர் என வழங்கப் பெறும் சோழசிங்க புரம் என்னும் ஊரே கடிகாசல மாகும். இது வைணவத் திருப் பதிகளில் ஒன்று.

**கடிகையார்** - இப் பெயருடைய வர்கள் முன்னுளில் அரசர் களிடம் இருந்தனர். அரசர் கட்கு வாழ்த்துக் கவி மங்கலக் கவி முதலியன பாடுதலும் நேரத்தை அறிவித்தலும் இவர் களுடைய வேலை. இதன் பொருட்டு இவர்கள் அரசர் களிடம் மானியம் பெற்று வாழ்ந்திருந்தனர். இவர்களில் பலர் புதிதாகச் செய்யுள் இயற்றி அரசனை வாழ்த்தத் தக்க அறிவாற்றலுடையவர் களாகத் திகழ்ந்தனர்.

**கடுக்காய்ப் பிள்ளையார்** - இப் பெயருடைய பிள்ளையார் திருக்காரயில் என்னுஞ் சிவப் பதியில் குளத்தின் வடகரை யில் வீற்றிருக்கின்ருர். சாதிக் காய் மூட்டைகளைக் கொண்டு சென்ற ஒரு வணிகன் அம் மூட்டைகள் கடுக்காய் மூட்டை கள் என்று பொய் புகன்றனன். பிறகு சாதிக் காய்களைப் பார்க்க அவைகள் உண்மையில் கடுக்காய்களாகவே ஆயின. வணிகன் தன் பிழை பொறுக்கு மாறு இப் பிள்ளையாரை வேண்டிக்கொண்டனன். கடுக் காய் மூட்டைகள் மீண்டுஞ் சாதிக்காய்களாயின. அதனுல் இப் பெயர் அப் பிள்ளையாருக்கு உண்டாயிற்று.

**கடோற்கசன்** - இடும்பியிடம் வீமனுக்குப் பிறந்தவன். மிகுந்த உடற்பலம் உடையவன். எதற் கும் அஞ்சாதவன். இவனைத் தருமர் ஒரு முறை துரியோ தனனிடம் தூது அனுப்பினுர். இவன் அவனிடஞ் சென்று தருமர் கூறிய செய்தியைச் சொன்னுன். துரியோதனன் வாயடங்கியிராமல் ''போடா அரக்கி மகனே'' என்று இழி வாகப் பேசினுன். இதனைக் கேட்ட இவன் மிகுந்த சினங் கொண்டு, ''நான் அரக்கி மகனுக இருந்தாலும் உறவினர் கட்கு நஞ்சிட மாட்டேன், கழுவில் குதிக்கச் சொல்ல மாட்டேன். அரக்கு மாளிகை கட்டி அதில் நெருப்பு வைக்க மாட்டேன், கொழுந்தியின் துகிலை உரிய மாட்டேன். இவைகளெல்லாம் அடிகளுக் குத்தான் உரிய செயல்களாக விருக்கின்றன'' என்று கூறி

அரசவையில் எள்ளி நகையாடினான். அவையில் இருந்தவர்கள் இவன் உள்ளதையே உரைத்தான் என்று உள்ளுக்குள்ளே மகிழ்ந்தார்கள்.

**கட்டபொம்மு நாய்க்கன்** - இவன் தெலுங்கு நாட்டிலே பல்லாரியைச் சேர்ந்த வாடிக்கோட்டை என்னும் ஊரிலே பால் ராசா என்னும் சிற்றரசனுக்குப் புதல்வனாகத் தோன்றியவன். இவனுடைய தாய் பெயர் வீரலக்கம்மாள். இவர்களுடைய குலம் தோக்கலவார் என்னுங் கம்பள சாதி. இவனுடைய தந்தை இவன் இளைஞனாக விருக்கும் போதே தென்னாட்டையடைந்து சாலிகுளம்என்னும் ஊரில்தங்கியிருந்தான். மகனாகிய கட்டபொம்மு இளம் பருவத்திலேயே கம்புச் சிலம்பம், மற்போர் முதலியவைகளில் தேர்ச்சி பெற்று அஞ்சாமையும் ஆண்மையும் உடையவனாகத் திகழ்ந்தான். ஒரு நாள் நள்ளிரவில் வீட்டிற்கு வெளியே ஆள் நடமாட்டத்தைக் கண்டு வெளியே வந்தான். அப்பொழுது இவனுக்கு அகவை இருபதுக்குள் என்பர். அப்பொழுது கள்ளர்கள் சிலர் யாண்டோ கொள்ளையிட்டுக் கொண்டு அவ்வழியே சென்றனர். இவ்விளைஞன் அவர்கட்கு நேரே சென்று, "நீங்கள் யார் ?" என்று கேட்டான். முதலில் அவர்கள் அஞ்சினரேனும் பிறகு துணிவடைந்து உற்று நோக்கி ஓர் இளைஞன் என உணர்ந்து கையிலிருந்த தடியால் தலையில் ஒன்று போட்டனர். அவ்வளவில் கட்டபொம்முவுக்குச் சினம் உண்டாகியது. அவர்கள் கையிலிருந்த தடியைப் பறித்துக் கொண்டு தன்னுடைய சிலம்ப வித்தையைக் காட்டத் தொடங்கினான். கள்ளர்கள் பன்னிருவராக விருந்தும் ஈடு கொடுக்க முடியாமல் எல்லோரும் அடியுண்டு வீழ்ந்தனர். வெளியே பேராரவாரமாக விருத்தலைக் கண்டு உறங்கியிருந்த மக்கள் வெளியே வந்தனர். நிகழ்ந்ததை யுணர்ந்து கள்ளர்களைப் பிடித்துக் கட்டினர். மறுநாள் அக் கள்ளர்கள் அனைவரும் நல்லுரை கூறி யனுப்பப்பெற்றனர். அவர்கள் கவர்ந்திருந்த பொருளோ உரியவர்களிடம் சேர்ப்பிக்கப்பட்டது. இந் நிகழ்ச்சிக்குப் பின் கட்டபொம்முவினுடைய புகழ் யாண்டும் பரவியது. அந் நாளில் அழகிய பாண்டியபுரம் என்னும் ஊரில் சகவீர பாண்டியன் என்னும் ஓர் அரசன் அரசு புரிந்திருந்தான். அவன் பாண்டியர்களுடைய வழிமுறையைச் சேர்ந்தவன். அவனுக்குப்பகைவர்கள் சிலர் உண்டாகித் தொல்லை கொடுத்தனர். சகவீர பாண்டியனுடைய அமைச்சனாகிய சங்கர சிங்கு என்பவன் சாலி குளத்தில் இருக்கும் கட்டபொம்முவினுடைய பேராண்மையை நன்குணர்ந்திருந்தானாகையால் அவனைப் படைத் தலைவனாக்க வேண்டும் என்று தன் அரசனுக்கு அறிவுரை கூறினான். அவ்வரசனும் இவனைப் படைத் தலைவனாக்கினான். இவன் மிகு விரைவில் பகைவர்களை வென்று தன்னுடைய அரசனுக்கு வெற்றியை உண்டாக்கினான். சகவீர பாண்டியனுக்கு வழிமுறையில்லை. ஆகவே அவன் தன்னுடைய இறுதிக் காலத்தில் அரசை இவனுக்கு வழங்கினான். இவன் ஆட்சியை மாட்சியாக நடத்தியதோடு ஒரு முயல் பல வேட்டை நாய்களை எதிர்த்து விரட்டிய விடத்தில் நகரம் ஒன்றை உண்டாக்கி அந்

நகருக்குத் தன்னுடைய பாட்டனாகிய பாஞ்சாலனுடைய பெயரை யிட்டு அந் நகரைப் பாஞ்சாலன் குறிச்சி என வழங்கினான். இவனுடைய காலம் ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் என்ப. இவனுடைய வழிமுறையினர் அனைவரும் கட்ட பொம்மு என்னும் பெயரைத் தம் பெயரோடு ஒட்டியே வழங்கினர். முதலாவது கட்ட பொம்மு இவனே. இவனுக்குப் பின்னால் ஐம்பது தலைமுறை வரை தோன்றி விளங்கின.

**கட்டியங்காரன்** - இவன் சச்சந்தன் என்னும் மன்னனுடைய அமைச்சர்களில் ஒருவன். மிகுந்த வஞ்ச நெஞ்சமுடையவன். சச்சந்தன் தன்னுடைய ஆட்சியை இவனுடைய பொறுப்பில் விட்டு விட்டுத் தான் சிற்றின்பத்தில் மூழ்கியிருந்தான். கட்டியங்காரனுடைய மனம் நாளடைவில் மாறியது. அரசனை வஞ்சித்து ஆட்சியைத் தானே கைப்பற்றிக் கொள்ள எண்ணினான். படைகளைத் தன் வழிப்படுத்திக் கொண்டு சச்சந்தனை எதிர்த்துக் கொன்றான்.

**கட்வாங்கன்** - இவன் ஓர் அரசன். இவன் தேவர்களுக்காக அசுரர்களோடு போர் செய்து அசுரர்களை வென்றான். தேவர்கள் மகிழ்ச்சியடைந்து உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் தருகிறோம் என்று சொன்னார்கள். இவன் தேவர்களைப் பார்த்து "என்னுடைய வாணாள் இன்னும் எவ்வளவு இருக்கிறது? கூறுங்கள்" என்று கேட்டான். அவர்கள் "உன்னுடைய வாணாள் இன்னும் ஒரு முகூர்த்த காலந்தான் மீதியிருக்கிறது" என்று சொன்னார்கள். கட்வாங்கன் உடனே நிலவுலகை அடைந்தான். திருமாலிடம் அடைக்கலம் புகுந்தான். அந்தச் சிறிது நேரத்தில் அவன் செய்த திருமாலன்பு அவனுக்கு வீடு பேற்றைக் கொடுத்தது.

**கணபதீச்சரம்** - திருச்செங் காட்டங்குடியில் உள்ள திருக்கோயில் இப் பெயரால் வழங்கப்பெறும். ஆனைமுகக் கடவுள் கயமுகாசுரனைக் கொன்றபொழுது இரத்த வெள்ளம் பெருகிய காரணத்தால் செங்காட்டங்குடி என்னும் பெயரும், கணபதியினால் சிவலிங்கம் அமைத்து வழிபடப் பெற்றமையினாலே கணபதீச்சுரம் என்று கோயிலின் பெயரும் அமைந்தன.

**கணன்** - இவன் அபிசித்து என்னும் அரசனுடைய மகன். தாய் பெயர் குணவதி. இவன் ஒரு நாள் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். பசியினால் களைத்துக் கபிலமுனிவருடைய இருப்பிடத்தை அடைந்தான். முனிவர் தாம் வைத்திருந்த சிந்தாமணியின் உதவியினால் அரசனுடைய படைகட்கும் அரசனுக்கும் நல்ல விருந்தளித்தார். சிந்தாமணியின் சிறப்பையுணர்ந்த கணன் அம்மணியைத் தனக்குக் கொடுத்துவிடுமாறு கேட்டான். முனிவர் மறுத்தார். அரசன் வலுக்கட்டாயமாக அம்மணியைப் பறித்துக் கொண்டு சென்றான். முனிவர் ஆனைமுகக்கடவுளிடத்தில் முறையிட்டார். ஆனைமுகக் கடவுள் கணனை அச்சுறுத்தினார். இதனால் சினங்கொண்ட கணன் முனிவரைக் கொன்றுவிட எண்ணினான். ஆனைமுகக் கடவுள் கணனைக் கொன்றார். முனிவர் அம்மணியை ஆனைமுகக்கடவுளே அணிந்து கொள்ளவேண்டுமென்று

வேண்டினார். ஆனைமுகக் கடவுளுஞ் சிந்தாமணியை அணிந்துகொண்டார். அது முதல் அவருக்குச் சிந்தாமணி விநாயகர் என்று பெயர் உண்டாகியது.

**கணிகண்ணர்** - இவர்முன்னாளிற் காஞ்சீபுரத்திலே வாழ்ந்திருந்தார். இவர் பல நூல்களையும் நன்கு கற்றுச் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். திருமழிசை யாழ்வார் இவருடைய ஆசிரியராவார். கணிகண்ணர் வறுமையுடைய வராகவிருந்தும் மாலடியையே மனத்திலெண்ணிப் பிறிதொன்றனையும் பொருட்படுத்தாதவராக விருந்தார். காஞ்சியை அந்நாளில் அரசாட்சி செய்திருந்தகாவலன் கணிகண்ணர் பெருமையை உணர்ந்து தன் மீது ஒருசெய்யுள்பாடவேண்டுமென்று கேட்டான். இவர் தாம் மனிதர்களைப் பாடுவதில்லையென்றார். இதனைக் கேட்ட அரசன் சினங்கொண்டான். அப்படியாயின் என்னுடைய நகரைவிட்டு வெளியேறுவீராக என்றான். இவர் அப்படியே வெளியேறினார். இதனையுணர்ந்த ஆழ்வார் தாமும் வெளியேறத் தொடங்கினார். கச்சித்திருமாலையும் புறப்படச் செய்தார். நிலைமை நெருக்கடியாயிற்று. காஞ்சி நகர் பாழ்பட்டாற் போன்று காணப்பட்டது. அரசன் தன்னுடைய குற்றத்தை யுணர்ந்து மன்னிக்க வேண்டினான். வெளியேறியவர்களும் உள்ளேறினார்கள்.

**கண்டகசேதனன்** - பாண்டிநாட்டில் வரகுணமங்கை என்னும் ஊரில் இருந்தவன். இவனுடைய தந்தை கனகதத்தன் என்னும் வணிகன். அறிவற்றவனாகிய இவன் பொருள் மீது அதிகப்பற்றுக்கொண்டு தீய வழிகள்பலவற்றினும்நுழைந்து பெரும்பொருள் திரட்டினான். அதனை நன்னெறியிற் செலவிடவில்லை. ஒருநாள் நள்ளிரவிற் கள்ளர்கள் பலர் இவனுடைய இல்லிற் புகுந்து இவனுடைய பொருளைக் கவர்ந்து சென்றதன்றி இவனையும் நன்கு புடைத்துச் சென்றனர்.

**கண்டதேவி** - செட்டிமார்நாட்டில் உள்ள ஓர் ஊர். தேவர்கள் தேவியைக் கண்டுவணங்கித் தம்முடைய குறையைக் கூறிக் கொண்ட இடமாகையால் கண்டதேவியென்று பெயர் பெற்றது.

**கண்டராதித்தர்** - இவர் தஞ்சையில் இருந்தும் உறையூரிலிருந்தும் அரசாண்ட சோழமன்னர்களில் ஒருவர். இவர்காவிரியின் வடகரையில், 'கண்டராதித்த சதுர்வேதமங்கலம்' என்னும் ஓர் ஊரைத் தம்முடைய பெயரால் அமைத்திருக்கிறார். இவருடைய உருவம் கோனேரிராசபுரத்தின் கோவிலில் இருக்கிறது. ஒன்பதாந் திருமுறையிலேஉள்ள திருவிசைப்பாவைப் பாடியவர் இவரே. 'வெங்கோல் வேந்தன் தென்னன்நாடும் ஈழமுங் கொண்ட திறற்செங்கோல் சோழன் கோழி வேந்தன் செம்பியன்' என்று தம்மைக் குறிப்பிட்டிருக்கிறார்.

**கண்டன்மாதவன்** - இவன் தொண்டை நாட்டில் உள்ள குளத்தூரில் கி. பி. பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆட்சி புரிந்திருந்தவன். சிறந்த தமிழ்த் தொண்டனாக விளங்கியதோடு சிவனடித் தொண்டனாகவுந் திகழ்ந்தான். தஞ்சைமாவட்டத்தில் உள்ள திருநீடூர்த் திருக்கோயில் இவனால் திருப்பணி செய்யப்பட்டது. மற்றும் இவன் அமுதசாகர முனிவர் என்பவ

ரைக்கொண்டு யாப்பருங்கலக் காரிகை என்னும் நூலை இயற்றச் செய்து அவர்க்குத் தக்கவாறு நன்கொடையும் வழங்கினான்.

**கண்டாகர்ணன்** - இவன் திருக் கைலை மலையில் சிவபிரானுக்குத் தொண்டுபூண்டிருந்தான். பூதக் கூட்டங்கட்குத் தலைவனாக இருந்த இவன் சிவபிரானிடத்தில் மிகுந்த அன்புடையவனாக விருந்தான். இதற்குத் தக்க வாறு திருமாலிடத்தில் கடுமை யான பகையுங் கொண்டான். திருமாலுடைய பெயரைப் பிறர் கூறுவது தன்னுடைய காதுகளில் விழாமலிருக்குமாறு சிறிய மணிகளைக் காதிற்கட்டி அவைகளை எப்பொழுதும் ஆட்டிக்கொண்டேயிருந்தான். இதனால் இவனுக்கு இப்பெயர் காரணப் பெயராக உண்டாகியது. திருமால்பெயர் காதுகளில் விழக்கூடாது என்று எப்பொழுதுந் திருமாலையே எண்ணிக் கொண்டிருந்தபடியால் சிவபிரானைப் பெரும்பாலும் மறந்துவிட்டான். இவன் எப்பொழுதுந் தன்னையே எண்ணிக் கொண்டிருத்தலை யுணர்ந்த திருமால் இவனிடத்தில் அருள்கொண்டு தம்முடைய பரமபத வாழ்வை இவனுக்கு வழங்கினார்.

**கண்டியூர்** - சிவபிரான் எட்டு வீரத்தனங்களைச் செய்த சிவப் பதிகளில் ஒன்று. தஞ்சைக்கு வடக்கே ஆறுகல் தொலைவில் திருவையாறு செல்லும் வழியில்உள்ளது. இது நான்முகனுடைய தலை கொய்யப்பட்ட இடமாகும். சதாநந்தமுனிவர் என்பவர் இங்குத் தவஞ்செய்திருந்ததாகக் கூறுவர். நான்முகன் உருவமும் கலைமகள் உருவமும் முனிவர் உருவமும் கோயிலில் இருக்கின்றன. இக் கோயில் மேற்குப்பார்த்த வாயிலை உடையது. மாசித் திங்கள் 13, 14, 15 ஆம் நாட்களில் இங்குக் கதிரவவழிபாடு நடக்கிறதாகத் தெரிகிறது.

**கண்ணகி** - கோவலன் மனைவி. இவளுடைய கற்புநலன் முதலியவைகளை விரித்துக் கூறுதற் பொருட்டே சிலப்பதிகாரம் இயற்றப்பெற்றது. இவளை மறக்கற்புடையாள் என்பர். திருமாபத்தினி, பத்தினிக் கடவுள், மங்கலமடந்தை, மாபெரும் பத்தினி, வீரபத்தினி என்பன இவளுடைய பெயர்கள். வஞ்சிநகர்ப் புறத்துள்ளதாகிய தன் கோயிலையடைந்து தன்னை வினவிய மணிமேகலைக்குத் தான் மதுரையை அழித்தது முதலியவற்றையும் தன்னுடைய பிற்காலச் செய்தியையும் கூறினாள். இவள் புத்த சமயச் சார்புடையவள் என்று எண்ணுவர். இவளுடைய முழு வரலாற்றையும் சிலப்பதிகாரம் விளக்கமாகக் கூறும்.

**கண்ணம்பாடி அணை** - மைசூர் நகருக்கு மேற்கில் பத்துக்கல் தொலைவில் கண்ணம்பாடி என்னுமிடத்தில் காவிரியின் குறுக்கே கட்டப்பட்ட அணை கண்ணம்பாடி அணை எனப் பெறும். உலகத்திலுள்ள பெரிய அணைகளில் இதுவும் ஒன்று. இதனுடைய நீளம் 8600 அடி; ($1\frac{3}{4}$ மைல்) உயரம் 130 அடி. அதன் அண்மையிலுள்ள தேக்கத்தின் பரப்பு ஐம்பது சதுர மைல். ஆழம் 124 அடி, அது 49,934 மில்லியன் கனஅடி அளவுள்ள தண்ணீரைக்கொள்ளும். பார்ப்பதற்கு இஃதொரு சிறிய கடல் போற் காணப் பெறும்.

**கண்ணன்** - வசுதேவருடைய மகனாகத் தோன்றிய இவர் ஆயர்பாடியில் கோகுலத்தரச

ளுகிய நந்தகோபன் இல்லில் யசோதைப் பிராட்டியால் வளர்க்கப்பட்டார். இவரைக் கொன்றுவிடக் கம்சன் எவ் வளவோ முயன்றும் முடிய வில்லை. தம்மைக் கொல்லக் கம்சனால் ஏவப்பட்ட அனை வரையும் இவர் கொன்றொழித்த தோடு இறுதியில் கம்சனையுங் கொன்ருர். திருமாலின் ஒரு கூருகிய இவர் அறநெறியாளர் கட்குத் துணையாக நின்று அவர் களைப் பாதுகாத்தார். இவர் அருச்சுனனை மூலமாக வைத் துக் கொண்டு கூறிய மெய் யறிவுரையாகிய பகவத் கீதை அறிவு நூல்க ளனைத்தினுஞ் சிறந்து விளங்குகின்றது. மக் கட் பிறப்பினை யெடுத்து வினைகளைச் செய்வோர் அவற் றின் பயன்களை நுகராமல் தப்ப முடியாதென்பதனை இவர் நன்கு விளக்கியுள்ளார்.

**கண்ணார் கோயில்** - சோழ வள நாட்டில் வைத்தீசுவரன் கோயி லுக்கு அண்மையில் உள்ள ஒரு தேவாரம் பெற்ற சிவப் பதி திருக்கண்ணார் கோயில் என வழங்கும். தேவேந்திரன் தன்னுடைய சாபம் நீங்கி ஆயிரங் கண் பெற்ற ஊர். சாமியின் பெயர் கண்ணாயிரேசு வரர்.

**கதம்ப முனிவர்** - திருக்கோட்டி யூரில் தவஞ் செய்து முத்தேவர் களையும் அவ்வூரில் அமரச் செய்த ஒரு முனிவர்.

**கதம்பர்** - இப்போது மைசூரி லுள்ள ஷிமோகா மாவட்டத் தின் பெரும் பகுதி முன்பு கதம்ப நாடாயிருந்தது. நாட் டின் தலைநகரம் வைஜயந்தி என வழங்கிய வனவாசி. சமுத்திரகுப்தன் தென்னாட்டுப் படையெடுப்பின் விளைவால் பல்லவ ராச்சியத்தில் ஏற்பட்ட குழப்பம் காரணமாகத் தோன் றியதே வனவாசி இராச்சியம். மயூரவர்மன் என்ற அந்தணன் வேதக் கல்வி பயின்று வரும் போது பல்லவக் குதிரை வீரன் ஒருவனால் தனக்கு ஏற்பட்ட அவமானம் தாங்காமல், கையில் வாளேந்தித் திருச் சைலத்தைச் சார்ந்த சாமந்தர்களான பாணர் களை வென்று மேற்கில் கதம்ப அரசை நிறுவினான். மயூர வர்மன் வாழ்க்கையில் கதம்ப மரத்துக்கு எவ்விதத்திலோ தொடர்பு ஏற்பட்டபடியால் அஃது இக்குலத்துக்குப் புண் ணிய மரமாகக் கருதப்பட்டுக், குலமும் "கதம்ப குலம்" என வழங்கப்பட்டது.

**கதாயுதம்** - கதை யென்னும் பெயருள்ள படைக்கலம். இதற் குச் சத்துருகாதினி எனவும் பெயருண்டு. இக்கதைப்படை யும், தேவதத்தம் என்னும் பெயருள்ளதும் வருணனுடை யதுமான பெரிய சிறந்த சங்க மும் விருடபருவா என்னும் பெயருடைய அசுரனுக்குரியன. அவ்வசுரன் பகைவர்களைப் போரிலழித்த பிறகு இவை களைப் பிந்துசரசு என்னுமிடத் தில் வைத்திருந்தான். தேவத் தச்சனுகிய மயன் அங்கு சென்று இரத்தினப் பொதியை எடுத்துக் கொண்டு வந்த பொழுது இவைகளையும் எடுத் துக்கொண்டு வந்து கதையை வீமனுக்கும் சங்கை அருச்சுன னுக்குங் கொடுத்தான்.

**கதிரவன்** - இவ்வண்டத்திற்கு ஆதாரமாகவும், தனக்குத் துரு வனை ஆதாரமாகவுங் கொண்டு நிற்பவன். ஒன்பது வீட்டு நிலை களில் ஒரு வீட்டு நிலையாக நிற் பவன். காசிபர்க்கும் அதிதிக் கும் பிறந்தவன். இவனுடைய மனைவியர் துவட்டாவின் மகள் சஞ்ஞிகை, சாயை என்போர். சஞ்ஞிகையிடம் வைவசுவத

மநு இயமன் ஆகிய இரண்டு புதல்வர்கள் தோன்றினர்; மேலும் யமுனை யென்னும் புதல்வியுந் தோன்றினாள். சாயையிடம் சாவர்ணிமநு சனி என்னும் புதல்வர்களும் பத்திரி என்னும் பெண்ணும் பிறந்தனர். காலை நேரத்தில் பிரம வடிவமாகவும், நண்பகலில் சிவ வடிவமாகவும் மாலையில் திருமால் வடிவமாகவும் எண்ணப் பெறுவான். இவனுடைய தேர் ஓர் உருளையையும் ஏழு குதிரைகளையும் உடையது.

**கதிர்காமம்** - இஃது இலங்கையின் தென் பகுதியில் உள்ள ஓர் ஊர். முருகக்கடவுளின் வழிபாட்டுக்குரிய புகழ் பெற்ற ஊர்களில் ஒன்று. 'கதிர்காமம்' என்னுஞ்சொல் கதிரு கிராமம் என்னுஞ் சிங்கள மொழியின் திரிபென்றும்; அன்று தமிழ்ச் சொல்லே என்றுங் கூறுவர். கதிரு கிராமம் என்பது நச்சுமரம் நிறைந்த ஊர் எனப் பொருள் படும். கதிர் காமம் என்பது கடவுள் தன்மையுடைய ஒளியும் அன்பும் நிறைந்த இடம் என்று பொருள்படும்.

இவ்வூர் சமய வரலாற்றுச் சிறப்பு மிகுந்தது. சீதையைத் தேடி வந்த அநுமான் கதிர்காமப் பெருமானை வணங்கிச் சென்றான் என்று கூறுகின்றார்கள். சிங்களவர்களுடைய நூலாகிய மகா வமிசத்தில் தேவனாம்பியதீசன் ஆட்சிக் காலத்தில் அசோக மன்னனின் மகள் சங்கமித்திரை அநுராதபுரத்திற்குக் கொண்டு வந்த அரசமரத்தின் கிளையொன்றைக் கதிர்காமச் செல்வர் வாங்கி வந்து இங்குள்ள கோயிலில் நட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது. மகாநாகன் என்னும் அரசன் கதிர் காமக் கோயிலுக்குப் பக்கத்தில் கிரிவிகாரை என்னும் பௌத்த மடத்தைக் கட்டினான். இப்பொழுதுள்ள கோயில் பதினாறும் நூற்றாண்டின் பிற் பகுதியிலாவது பதினேழாம் நூற்றாண்டின் முற் பகுதியிலாவது கட்டப்பட்டிருக்க வேண்டுமென்று வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

**கத்தூரிபா காந்தி** - மகாத்மா காந்தியடிகளின் வாழ்க்கைத் துணைவியாராகிய இவர் 1869 ஆம் ஆண்டில் குசராத்தில் கத்தியவார் என்னும் பகுதியில் உள்ள போர்பந்தர் என்னும் ஊரில் பிறந்தவர். இவருடைய தந்தையார் பெயர் கோகுல் தாஸ். காந்தியடிகளுக்கும் அம்மையாருக்கும் 1882 இல் திருமணம் நடை பெற்றது. அம்மையார் காந்தியடிகளின் தேசத்தொண்டுக்கு உதவியாக அமைந்து வாழ்க்கையை நடத்தினார். வெகு விரைவாகவே மகாத்மா காந்திக்கு ஏற்ற மனைவிதான் என்பதை உலகிற்குப் புலப்படுத்தினார். 1935ஆம் ஆண்டில் புதிய ஆசிரமம் ஒன்று சேவாக் கிராமத்தில் தொடங்கிய போது அம்மையாரே அதன் பொறுப்பாளராக அமைந்து பணிபுரிந்தார். 1944 ஆம் ஆண்டில் சிறையிலிருந்த போது இவ்வுலக வாழ்க்கையை நீத்து இறைவனடியைச் சேர்ந்தார்.

**கந்தகிரி** - முருகக் கடவுள் எழுந்தருளியிருக்குமிடம். இது கைலைமலைக்கு அண்மையில் உள்ளது என்பர். முருகக் கடவுள் திருவிளையாடல் புரிந்து நான்முகனைச் சிறையிட்டது இங்குதான்.

**கந்த குப்தன்** - இவன் குமார குப்தனுடைய மக்களில் ஒருவன். இவன் கி. பி. 467ஆம்

ஆண்டில் அரியணை யேறினன் என்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர். இவன் சில ஆண்டுகள் அரசாட்சி செய்து இளம் பருவத்திலேயே காலமானன் என்பர்.

**கந்தழி** - கந்து - பற்றுக்கோடு. கந்தழி - பற்றுக் கோடில்லாதது. கண்ணபிரான் வாணசுரனுடைய "சோ" என்னும் மதிலை (கந்தை) அழித்த வீரத்தைக் கந்தழி என்ற சொல்லால்குறிப்பிடுவதுண்டு. கந்தழி என்ற சொல் முருகக் கடவுளையும் குறிக்கும்.

**கந்தாடை லட்சுமணாசாரியார்** - இவர் ஆசார்யர்களில் ஒருவர். இவர் தேசிகர் என்னும் பெரியவர் அரிகதைச் சொற்பொழிவு செய்யும் பொழுது அவ்வழியே சென்றனர். இவருடைய மாணவர்கள் தம்முடைய ஆசாரியருக்குத் தேசிகர் வழிபாடு செய்யவில்லையென்று தேசிகருடைய காலைப் பிடித்திழுத்துத் துன்புறுத்தினர். இதனைத் தேசிகர் பொறுத்துக் கொண்டிருந்தார். மாணவர்கள் செய்தது ஆசாரியரை அடையுமென்றதற் கேற்பச் சில நாட்களில் லட்சுமணாசாரியாருக்குஉடலில் நோயுண்டாகியது. இதன் காரணத்தை உணர்ந்து தேசிகரை அடைக்கலம் புகுந்து அவருடைய திருவடிப் புனிதநீர் பெற்று அதனையுண்டு நோய் நீங்கப்பெற்றனர். அப்புனித நீர்ப் பெருமையால் ஒரு மகவையும் அடைந்து அம்மகவுக்குத் தீர்த்தப்பிள்ளை யென்று பெயரிட்டார்.

**கந்தியார்** - சைனப் பெண் துறவியாகிய இவர் கல்வி கேள்விகளிலுஞ் செய்யுளியற்றுவதிலும் சிறந்தவராகத்திகழ்ந்தார். சீவக சிந்தாமணி முதலிய நூல்களில் போலியாகப் பல பாடல்களை இயற்றி இவர் இடைச் செருகலாகச் சேர்த்தார். ஆனால் அறிஞர்கள் இப்போலிப் பாட்டின் தன்மையை அறிந்து அவைகளை நீக்கலாயினர்.

**கந்திற்பாவை** - காவிரிப் பூம்பட்டினத்தில் சக்கரவாளக் கோட்டத்திலே சம்பாபதி கோயிலின் தூணில் மயனுல் அமைக்கப் பட்ட ஒரு பதுமை. துவதிகன் என்னும் ஒரு தெய்வத்தின் வடிவாக உள்ளது. இப்பதுமையை வழிபடுவார்க்கு முக்காலச் செய்திகளையும் துவதிகன் கூறுவான். ஆகையால் இது நாவுடைப் பாவை எனவுங் கூறப் பெறும். கந்து - தூண். தூணில் அமைந்த படியினுல் இப்பாவை இவ்வாறு பெயர் பெற்றது.

**கந்துக்கடன்** - இவன் இராசமாபுரத்திலிருந்த ஒரு வணிகன். இறந்து போன தன்னுடைய குழந்தையைப் புதைப்பதற்காக இடுகாட்டிற்குச் சென்ற இவன் அங்கு பிறந்து கிடந்த சீவகனைத் தன்னுடைய இல்லத்துக்கு எடுத்துக் கொண்டு போய் வளர்த்தான்.

**கபாடபுரம்** - பாண்டிய நாட்டின் தலைநகராய்இடைச்சங்கமிருந்த இடம். இந்நகர் கடல்கோளில் மூழ்கிவிட்டது. வால்மீகி இராமாயணத்தில் சீதையைத் தேடச் சென்ற அநுமான்முதலியோர்க்குத் தென் திசையில் இருந்த இக் கபாடபுரத்தைப் பற்றிக் கூறப்பட்டிருத்தலால் இராமாயணகாலத்தில் இந்நகர் சிறந்து விளங்கியிருந்ததாகத் தெரிகிறது.

**கபாலப்பள்ளி** - இஃதோர் அறக் கூடம். உஞ்சை நகரத்தின் வெளிப்புறத்தே காளவனத்தில் அமைந்திருந்தது. புனிதநீர்ப் பயணம்(திருத்த நீர் ஆடற்குச்) செல்வோர் தங்குவதற்காக அமைக்கப் பட்டிருந்தது.

**கபாலி** - நான்முகனுடைய மண்டையோட்டைக் கையிற் கொண்ட படியால் சிவபிரானுக்கு இவ்வாறு ஒரு பெயர் உண்டாகியது.

**கபிலவாத்து - கபிலநகர்;** கபில முனிவர் தங்கியிருந்தமையின் இப்பெயர் பெற்றதென்பர். இதற்குச் சிவந்த இடம் என்றும் பொருளுண்டு. கௌதம புத்தர் பிறந்து வளர்ந்தது இந் நகரில்தான். இது மகத நாட்டில் உள்ளது. கபிலையெனவுங் கூறப்பெறும்.

**கபிலேசுவரர்கோயில்**-திருப்பதிக்கு வடக்கில் இரண்டு கல் தொலைவில் மலைச் சார்பில் கபில தீர்த்தம் என்னும் புனிதநீர் ஒன்றும், அதற்கு எதிரில் கிழக்குத் திக்கில் கபிலேசுவர சுவாமி கோயிலும் விளங்குகின்றன. திருப்பதிக்கு வரும் அன்பர்கள் யாவரும் இக்கபில தீர்த்தத்தில் முறைப்படிநீராடிக்கபிலேசுவர மூர்த்தியைப் போற்றி வழிபட்ட பிறகே ஏழு மலையின் மேல் ஏறிச் செல்லவேண்டும். காஞ்சிப் பல்லவ மன்னர்களும் சில சோழ மன்னர்களும் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் இக்கோயிலில் பல திருப்பணிகள் செய்தார்கள். விசய நகர மன்னர்களில் ஒருவராகிய சதாசிவராய மகராயன் அரசு செய்யுங் காலத்தில் இக் கோயில் இடைவிடாத மழையினுல் அழிந்து போய் விட்டது. அந்த அரசனும் அவனுடைய அன்பர்களும் அக்கோயிலை அப்பொழுதே பழைய முறைப்படியமைத்து நாள் வழிபாடு முதலியவைகளுக்கு ஏற்பாடு செய்தார்கள். இக் கோயிலுக்குச் செய்யுந்திருப்பணி தானம் முதலியவைகளை வைணவர்கள் தடுத்துப் பார்த்தார்களாயினும் அறிவாளிகளாக விருந்தோர் அவர்களுடைய பொறுமைப் போக்கிற்குஇடங்கொடாமலே செய்தார்கள். ஆயினும் அச்சுதராய மகாராயன் என்பவன் தன்னுடையமனைவிமக்களோடு இங்கு வந்தபோது சில வைணவர்களின் ஏவுதலால் கபில தீர்த்தத்திற்கு ஆழ்வார் தீர்த்தம் என்று பெயர் வைத்தான். தடாகத்தின் நான்குபக்கங்களினும் வைணவ சமயத்தைக் குறிப்பிடத்தக்க சக்கரவடிவத்தை நாட்டி வைத்தான். ஆயினும் வடமொழித் திருவேங்கட புராணத்தில் கபில தீர்த்தம் என்னும் பெயரே வழங்குகின்றது. கபிலருக்கு அருள்புரியும் பொருட்டுச் சிவபெருமான் இங்கு லிங்கவடிவமாகத் தோன்றியருளினுர் என்பது புராண வரலாறு.

**கபிலை** - இது தெய்வப் பசு. இஃது ஒருசமயத்திலே தீக்கடவுளுக்குத் தன்னுடைய தேகத்திலே இடங்கொடுத்துத்தேவர்களால் நல்வினைப் பயனை அடைந்தது. இது தோன்றிய இடம் திருப்பாற்கடல் என்பர். இது நந்தி தேவரை விரும்பியிருக்கும்.

**கமடாசுரன்** - இவன் அசுரர்களில் ஒருவன். ஆனைமுகக் கடவுளைக் குழந்தைப் பருவத்திற் கொல்ல வேண்டி ஆமைவடிவமெடுத்துக் கொண்டு சென்று கொல்ல முயன்று அக்கடவுளால் இறந்தான்.

**கமலாலயம்** - திருவாரூரில் உள்ள திருக்குளம். இது திருமகளால் உண்டாக்கப்பட்ட படியால் இப்பெயர் பெற்றது. திருவாரூர்ப் பூங்கோயிலுக்கு மேல்புறத்தில் அமைந்தது. திருமுதுகுன்றில் மணிமுத்தா நதியிலிட்ட பொன்னை ஆரூர்ச் சிவ பெருமான் திருவருளினுலே குளத்தின் வடகிழக்கு மூலையில் எடுத்துப் பரவை நாச்சியாருக்குச் சுந்தரர் கொடுத்தனர்.

**கமலினி** - திருக் கைலையில் உமா தேவிக்கு மலர் தொடுத்துச் சாத்துந் தோழியருள் ஒருத்தி. இவள் ஆலால சுந்தரரிடத்தில் காதல் கொண்டு நிலவுலகில் திருவாரூரில் பரவை நாய்ச்சியாராகப் பிறந்து சுந்தரராகத் தோன்றிய ஆலால சுந்தரரை மணந்து களித்தவள்.

**கம்சன்** - கண்ணனுடைய அன்னையாகிய தேவகியின் அண்ணன் இவன். யதுவமிசத்தில் போச குலத்தில் உக்கிரசேனனுடைய மகனாகத் தோன்றியவன். இவன் தன்னுடைய தங்கை வயிற்றில் பிறக்கும் எட்டாவது பிள்ளையால் தனக்கு அழிவு நேரிடும் என்பதை உருவிலி வாக்கால் உணர்ந்தான். உடனே தேவகியையும் அவளுடைய கணவராகிய வசுதேவரையுஞ் சிறையிலிட்டான். பிறகு அவர்கட்குப் பிறந்த ஏழு குழந்தைகளையுங் கொன்றான். எட்டாவது குழந்தை பிறந்தவுடன் திருமால் அருளால் வசுதேவர் அக்குழந்தையைக் கொண்டு போய் நந்தகோபன் மனையிலே யசோதையிடம் விட்டு விட்டு யசோதையின் பக்கத்திலே பெண் வடிவத்தோடு கிடந்த மாயையைக் கொண்டு வந்து தேவகியின் அண்மையிலே விட்டு விட்டார். கம்சன் அம்மாயையாகிய குழந்தையைக் கொல்லப் புகுந்த பொழுது அது விண்ணிலே சென்று நின்று "மூடா! உன்னைக்கொல்வதற்குக் கண்ணன் ஆயர் பாடியிலே வளருகிறான். அவனால் நீ அழிந்தொழிவது திண்ணம். இதனால் நீ உன்னுடைய சாவைப் போக்கிக் கொள்ள முடியாது" என்று கூறி விட்டு மறைந்து போய் விட்டது. கண்ணனைக் கொலை புரியுமாறு கம்சன் பல அசுரர்களை ஏவினான். அவர்களனைவருங் கண்ணனால் கொன்றொழிக்கப் பட்டனர். பிறகு மதுராவிலே நடந்த இந்திரவிழாவுக்குக் கண்ணன் சென்று கம்சனைக் கொன்றான். கம்சன் முன் பிறவியிலே காலநேமி என்னும் அசுரனாக இருந்தவன் என்று கூறுவர்.

**கம்பணன்** - விசய நகரப் பேரரசின் படைத்தலைவர்களுள் இவன் ஒருவன். இவன் சிறந்த போர் வீரன். தமிழ்நாட்டிற்கு இவன் ஒரு சிறந்த தேசிய வீரனாகவும் நாட்டுக் காவலனாகவும் திகழ்ந்தான். இவன்செய்த வீரச்செயல்களை இவனுடைய மனைவி வடமொழியில் வீரகாவியமாகச் செய்திருக்கிறாள்.

**கம்பத்திளையனார்** - திருவண்ணாமலையில் அருணகிரி நாதர் கோபுரத்தின் உச்சியில் இருந்து குதித்து உயிரை மாய்த்துக் கொள்ள எண்ணிக் குதித்த போது அவரைத் தாங்கி உயிரைக் காத்த முருகக் கடவுள் இவர். இப்பெருமான் ஒரு தூணில் இருப்பதால் கம்பத்திளையனார் என்று பெயர் பெற்றார்.

**கம்பர்** - கம்பராமாயணத்தைப் பாடிய கம்பருடைய பெயர் இது. இவருடைய இடுகுறிப் பெயர் மறைந்துவிட்டது. இப்பெயர் ஆசிரியருடைய கம்புக் கொல்லையைக் காத்திருந்த படியால் உண்டானதென்று சிலரும்; கையில் கழியோடு (கம்பு) அரசனிடஞ் சென்று நின்றதனால் உண்டானதென்று சிலரும்; இவர் பிறந்தவுடன் ஒரு தூண் (கம்பம்) அடியில் கிடந்த படியினால் உண்டானதென்று வேறுசிலருங் கூறுவர்.

**கம்பளசெட்டி** - ஒருவணிகன்; கப்பல் பயணஞ் சென்றவன். பீலிவளை என்பவள் நெடுமுடிக் கிள்ளிக்குத் தான் பெற்ற குழந்

தையை அவனிடஞ் சேர்ப்பிக்குமாறு இவனிடத்தே தான் கொடுத்தாள்.

**கம்பையாறு** - இது காஞ்சி மாநகரின் ஆறு. இதன் கரையில் உமாதேவியார் சிவபூசைசெய்த பொழுது சிவபெருமானுடைய திருவிளையாட்டாலே ஆறு பெருக உமாதேவியார் இறைவனைத் தழுவிக் கொண்டனர். அதனால் அம்மையாருடைய முலைத் தழும்பும் வளைத் தழும்பும் இறைவன் கொண்டனர். கம்பையாறு இப்பொழுது நிலத்தின் கீழ் ஓடுவதாகக் கூறுகின்றனர்.

**கயமுகன்** - இவன் ஓர் அசுர குல வேந்தன். விபுதை யென்னும் அசுரமங்கைக்கும் மாகதர் என்னும் முனிவருக்கும் இவன் மகனாகத் தோன்றினன். இவனுடைய உடல் பருத்திருந்தது. தலை பெரும்பாலும் யானைத் தலையைப் போன்றிருந்தது. அதனால் இவன் கயமுகன் என்னும் பெயர் பெற்றான். நாவலந் தீவின் தெற்குப் பகுதியில் மதங்கபுரி என்னும் அழகிய நகரையமைத்து அரசு புரிந்தான். இவனுடைய மனைவியின் பெயர் விசித்திர காந்தி. இவன் அசுரவழியினனாகையால் நல்லவர்கட்குத் தொல்லை புரிதலையே பெரும்பாலும் மேற்கொண்டிருந்தான். இவனுடைய கொடுமையை எண்ணித் தேவர்கள் முதலிய யாவரும் அஞ்சி நடுங்கினர். தேவர்கட்குத் துன்பஞ் செய்யும் பொருட்டு ஒருநாள் இவன் விண்ணுலகத்திற்குச் சென்றான். ஆனைமுகக்கடவுள் இவனுக்கு முன்னே வந்தார். இவன் அக்கடவுளையும் மதிக்காமல் எதிர்த்தான். அவர் நல்லுரைகள் கூறியும் இவன் அவைகளைச் செவியிலேற்றுக் கொள்ளவில்லை. ஆகவே அக்கடவுள் இவனை அழித்தொழித்தார்.

**கயன்**-இவன் சதமன் என்னும் ஓர் அசுரவீரனுடைய மகன். இறைவனை நோக்கித் தவம் புரிந்து உயர்ந்த நிலையை அடைந்தான். தேவர்கள்இவனிடம்பொறாமை கொண்டார்கள். இவனைவஞ்சிக்குமாறு நான்முகனை வேண்டிக் கொண்டார்கள். நான்முகன் வேறுவடிவத்தோடு இவனிடம் வந்தான். "ஒன்று தருதல் வேண்டும்" என்று கரவாக வேண்டினான். இவன், "தருகிறேன்" என்றான். வந்தவன், "உன்னுடைய உடலே வேண்டும்" என்றான். இவன், "அப்படியே தந்தேன்" என்றான். இவனுடைய உடம்பிலிருந்த நடு எலும்பை நீக்கிச் சிலையுருவாய் நின்ற தருமதேவதையைச் சேர்த்தனர். தென்புலத்தார்களை யெண்ணிப் பிண்டமிடுங்கால் அதனையேசிலையாகக்கருதி இக்காலத்தில்கொண்டாடுகின்றனர். இவனுடைய பெயரால் கங்கையின் பிரிவில் புனிதநீர் ஒன்று உள்ளது. அதுகயா தீர்த்தம் எனப்படும். தேவர்கள் தன்னைவஞ்சித்ததைக் கயன் பின்னரே உணர்ந்தான்.

**கரம்பனூர்** - இது நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இஃது உத்தியோக விமானம் அமைந்தது; சோழ நாட்டில் உள்ளது. இதற்கு உத்தமர் கோயில் என்றும் ஒரு பெயர் உண்டு.

**கரவடநூல்** - களவைப் பற்றிக் கூறுவது. சிலப்பதிகாரத்தில் (16 : 180) தந்திர கரணம் என்பதற்குக் கரவடநூல் என்று அரும்பத உரையாசிரியர் உரை வரைந்திருக்கின்றார். இந்நூல் வடமொழியில் கர்ணிசுதர் என்பவரால் இயற்றப்பட்டது. இவருக்குக் கரவடர் என்றும் ஒரு பெய

ருண்டு. களவு நூல் வடமொழியில் "ஸ்தேய சாஸ்திரம்" என வழங்குவதாகவும், இந்நூல் இயற்றிய கர்ணிசுதர் என்பவர் கசர் என்பவரின் ஆசிரியர் என்றும் கூறுவர்.

**கரிகாலன்** - கருகிய காலைப் பெற்றிருந்தபடியால் இவன் கரிகாலன் என்று பெயர் பெற்ருன். இவனுடைய தலைநகர் உறையூர். காவிரிப்பூம்பட்டினத்தையும் தன்னுடைய தங்குமிடமாகக் கொண்டிருந்தான். சைவசமயத்தவனுகிய இவன் இளமை தொட்டே சிறந்த அறிவுடையவனுகத் திகழ்ந்தான். வரலாற்று நூல்கள் இவனுடைய வரலாற்றை விரிவாகக் கூறும்.

**கருணுகரத் தொண்டைமான்** - இவன் பல்லவர் குலத்தில் தோன்றியவன். இவனுடைய தந்தையின் பெயர் சீரிளங்கோ. இவனுக்கு இடப்பட்ட பிள்ளைப் பெயர் திருவரங்கன். இவன் திருமாலிடத்திற் பெருமாலுடையவன். அறிவாற்றல்களிற் சிறந்து விளங்கியபடியால் குலோத்துங்கனுடைய அரசியலில் அலுவல்பெற்ருன். நாளுந் திறமை வளர்ந்து கொண்டிருந்தபடியால் பதவியும் உயர்ந்து கொண்டே போயது. இறுதியில் படைத் தலைவர்களுள் முதல்வனுனன். வடகலிங்கப் போர்க்குத் தலைவனுகச் சென்று போர் நடத்தி அந்நாட்டு மன்னவனுகிய அனந்தவர்மசோடகங்கனை வென்று குலோத்துங்க சோழனுக்கு வெற்றியுண்டாக்கினுன். இவனுடைய புகழைச் சயங்கொண்டார் பலவாறுபுகழ்ந்து பாடியுள்ளார். இவன் பிறந்த ஊர் சோழ வளநாட்டில் தஞ்சை மாவட்டத்திலுள்ள வண்டு வாஞ்சேரி என்னும் ஊராக இருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

**கருநாடகம்** - கன்னட மொழி பேசப் பெறும் மைசூர்நாடும் அதனைச் சூழ்ந்த விடங்களும் கருநாடகம் என்று பெயர் பெறும். இங்கு முன்னுளில் வாழ்ந்திருந்தவர்களின் பழக்க வழக்கங்களை இக்காலத்திய மக்களும் பலவிடங்களிற் பின்பற்றுகிருர்கள். ஆனுல் புதுமையை விரும்புபவர்களோ அதனை வெறுக்கிருர்கள்.

**கருமாணிக்கன்** - இவன் ஒரு சிற்றரசன். பாண்டி நாட்டில் கப்பலூரில் இருந்து அரசாட்சி செய்தவன் எனவும் இவன் மீது கப்பற் கோவை என்னும் நூல் பாடப்பட்டது எனவும், பாண்டிய மன்னர்களிடம் அமைச்சனுகவும் படைத் தலைவனுகவும் இருந்தவன் எனவுங் கூறுகின்றனர்.

**கருமாறிப் பாய்ச்சல்** - காஞ்சீபுரத்திலுள்ள காமாட்சியம்மன் கோயில் குளத்துக்குள் இரண்டு கழுக்கள் நாட்டப்பட்டிருந்தன வென்றும் உயரமான இடத்திலிருந்து குறி தவருமல் அக்கழுக்களுக்கிடையே குதித்துத் தம் ஆற்றலைச் சிலர் காட்டின ரெனவும் அதுவே கருமாறிப் பாய்ச்சல் என வழங்கியதாகவுங் கூறப்படுகிறது. கழுமாறிப் பாய்ச்சல் என்பது நாளடைவில் கருமாறிப்பாய்ச்சல் எனத் திரிந்தது.

**கரும்பன்** - இவன் முன்னுளில் ஈகையிற் சிறந்து வள்ளலாக விளங்கினுன். இவன் வாழ்ந்திருந்த நாடு தொண்டை மண்டலம்; இவனுடைய இடுகுறிப் பெயர் இன்னதெனத் தெரியவில்லை. இவனுடைய கரும்புக் கொல்லையுட் சிலர் களவாகப் புகுந்து கரும்புகளை முறித்துத்

தின்றனர். அவ்வாறு தின்ற வர்களை வேலையாட்கள் பிடித்துக்கொண்டு போய்க் கரும்பனிடம் விட்டனர்; கரும்பன், "நீர் ஏன் கரும்புகளைக் களவு செய்தீர்?" என்று கள்ளர்களைக் கேட்டனன். கள்ளர்கள் பசிக் கொடுமையால் இவ்வாறு செய்தனம் என்றார்கள், கரும்பன் அவ்வளவில் தன் கரும்புக் கொல்லையின் வேலியைத் திறந்து விட்டுத் தன்னுடைய கரும்புக் கொல்லையுட்புகுந்து எல்லோரும் கரும்பினை விரும்பியவாறு புசிக்கலாமென்று பறையறைவித்தனன். சிலர் மறுத்தனர். கரும்பு தின்ன வராத சிலருக்குக் கைக்கூலி கொடுத்து அவர்களும் கரும்பைத் தின்னுமாறு வேண்டிக் கொண்டான். அது முதல் தான் "கரும்பு தின்னக் கைக் கூலியா?" என்று ஒரு பழமொழியுந் தோன்றியது. இக் காரணத்தினால் இவனுக்குக் கரும்பன் என்னுங் காரணப் பெயர் தோன்ற அது முதல் இடுகுறிப் பெயர் மறைந்து போயது.

**கருவூர் ஆனிலை** - இப்பொழுது கரூர் என்று வழங்கும் கருவூரிலுள்ள சிவபெருமான் திருக்கோயில் இப்பெயரால் வழங்கப்பட்டது. காமதேனு வழிபாடு செய்த காரணத்தினால் இறைவருக்குப் பசுபதி என்றும் கோயிலுக்கு ஆனிலை என்றும் பெயர். மற்றும் காமதேனு இறைவழிபாட்டின் சிறப்பினால் உலகைப் படைத்த காரணத்தால் கருவூர் என்று பெயர் பெற்றதென்றும் நான்முகன் இறைவனை வழிபட்டு முதல் முதல் உலகைப் படைக்கத் தொடங்கிய படியால் கருவூர் என்று பெயர் பெற்றதென்றும் பலவாறு கூறுப. இலிங்கம் வடபுறம் சாய்ந்துள்ளது. கோயிலும் கோபுரமும் பெரியவை. கிருபா நாயகி என்னும் பெயருடைய இறைவியின் கோயில்கள் இரண்டுள்ளன. இவ்வூர் புகழ்ச் சோழருடைய தலைநகராக இருந்ததென்று பெரிய புராணம் கூறும். எறிபத்த நாயனாரும் சிவகாமியாண்டாரும் இவ்வூரில் வாழ்ந்திருந்தனர். கருவூர்த் தேவர் இவ்வூரில் தங்கியிருந்த படியால் தான் 'கருவூர்த் தேவர்' என்று பெயர் பெற்றார்.

**கரையேற விட்ட நல்லூர்** - திருப்பாதிரிப் புலியூருக்கு அண்மையில் கெடில நதிக்கரையில் உள்ள ஓர் ஊர். திருநாவுக்கரசரைச் சமணர்கள் கடலில் இட்டபொழுது அவரைச் சிவபிரான் கரையேறச் செய்த இடம் இந்த இடமே என்பர்.

**கலிகைமாநகர்** – இது தக்கோலம் திருவூறல் என வழங்கப் பெறும் தொண்டை நாட்டுத் தேவாரத் தலங்களுள் ஒன்று.

**கலிங்கசேனை** - கோசம்பிநகரில் தலைக் கோற் பட்டம் பெற்ற இரண்டாயிரத்தைந் நூறு கணிகை மாதர்களுள் ஒருத்தி. சிறந்த கற்புடையவள். மதன மஞ்சிகையினுடைய தாய்.

**கலிங்கத்தரசன்**- யூகியோடுபோர் செய்தவன். இவனுடைய யானைக் கொம்பு குத்தியபடியால் யூகியினுடைய மார்பில் காயமுண்டாகிப் பின் தழும் புண்டாகியது. யூகி உச்சைனியில் மாறுகோலம் பூண்டு திரிந்த போது தன்னைப்பிறர் அத்தழும்பின்மூலம் அறிந்து கொள்ளாதவாறுஅவன் அதனை மூடிக்கொண்டு திரிந்தான்.

**கலிங்கம்**-இது தென்னிந்தியாவில் கிழக்குக் கடற்கரையை அடுத்திருந்த பண்டைய நாடுகளுள் ஒன்று. இது கிழக்குத்

தொடர்ச்சி மலைக்கும் கடலுக்கும் இடையே தெற்கில் கோதாவரி ஆறுமுதல் வடக்கில் ஒரிசா வரையிற் பரவியிருந்தது. இஃது இக்கால ஒரிசாவும் கஞ்சமும் சேர்ந்த ஒரு நாடாகும். கஞ்சம் மாவட்டத்தில் உள்ள முகலிங்கம் என்ற நகரம் இதன் தலை நகராக விருந்தது. கலிங்கம் என்னும் பெயர் இப்பொழுது வழக்கொழிந்தது.

**கலிபுருடன்** - இவன் தீவினையையே உடம்பாகப் பெற்றவன். மிகவும் வெறுக்கத்தக்க நிலையில் இழிந்த செயல்களை மேற்கொண்டவனுய்ப்புறம்பே பார்க்கின்ற கண்களும் பேய் முகமும் உடையவனுக இருப்பான். இவனுல் பீடிக்கப் பட்டோர் பல வகையான தொல்லைகட்கு உள்ளாவர். நளன் தருமன் முதலியோர் தீவினைப் பயனுல் இவனுற் பிடிக்கப்பட்டுப் பல வகையான தொல்லைகட்கு உள்ளாயினர்.

**கலியாணசாமி மாணவர்** - இவர் அரித்துவாரம் என்னும் இடத்தில் இருந்த கலியாணசாமி என்பவருடைய மாணவர். கலியாணசாமி புனித நீர்ப் பயணஞ் செய்த காலத்தில் தம்முடைய மாணவராகிய இவரையும் உடனழைத்துக் கொண்டு சென்ருர். இருவரும் மதுராபுரியை அடைந்து கண்ணனை வழிபட்டு அங்குத் தங்கியிருந்தனர். அப்போது கலியாணசாமிக்குக் காய்ச்சல் நோய் உண்டாகியது. உடனிருந்த மாணவராகிய இவர் ஆசிரியரை விட்டு நீங்காமல் அவருக்கு வேண்டிய மருத்துவ உதவி பணிவிடை முதலியவைகளைச் செய்து கொண்டு ஆறு திங்கள் உடனிருந்தார். இவருடைய தொண்டுக்கு மகிழ்ந்த கலியாணசாமி "என்னுடைய மகளை உனக்கே திருமணஞ் செய்து கொடுக்கிறேன்"என்று கூறிஞர். மாணவர் ஆகிய இவர், "தாங்கள் இவ்வாறு கூறினும் தங்கள் உறவினர் ஒப்புவரோ?" என்று உசாவினுர். ஆசிரியர் தம்முடைய மாணவரைப் பெருமாள் திருமுன்பு அழைத்துக் கொண்டு போய்த் தானநீர் வார்த்தார். பிறகு மாணவரோடு தம்முடைய ஊரையடைந்தார். தாம் தம்முடைய மகளை மாணவருக்குத் திருமணஞ் செய்து கொடுப்பதாக வாக்குறுதி யளித்திருப்பதைத் தம்முடைய மனைவி மக்கள் முதலிய உறவினருக்குக் கூறினுர். அவர்கள் அவ்வாறு பெண் கொடுப்பதற்கு ஒத்துக் கொள்ள வில்லை. ஆகவே கலியாணசாமி தம்முடைய மாணவரைஅரசனிடம் அழைத்துக் கொண்டு போய்த் தாம் பெண்கொடுப்பதாகத் தானநீர் வார்த்ததையும் உறவினர்கள் மறுத்தலையும் கூறிஞர். அரசன் கலியாணசாமியைப் பார்த்துத், "தான நீர் வார்த்ததற்கு யாரேனும் சான்றுளரோ? என்று உசாவினுன்" "கண்ணனே சான்று" என்று கலியாணசாமி கழறினுர், "பெருமாள் வந்து சான்று கூறிஞல் நான் நம்புவேன்" என்ருன் அரசன். மாணவர் பெருமாளிடம் போய் "நீர் அரசனிடம் சான்றுவர வேண்டும்" என்று கூறி வேண்டினுர். பெருமாள் மாணவரைப் பார்த்து, "நாம் வருகிறேம் நீர் திரும்பிப் பார்க்காமல் செல்ல வேண்டும்; திரும்பிப் பார்த்தால் அவ்விடமே நின்று விடுவோம்" என்று கூறிப் பாதச்சிலம்பொலிக்க மாணவரைப் பின்

பற்றிச் சென்றார். மாணவர் அரித்துவாரத்திற்கு அண்மையிற் செல்லுகையில் சிலம்பொலி கேட்கவில்லை. உடனே மாணவர் திரும்பிப் பார்த்தார். பெருமாள், "நீ திரும்பிப் பார்த்தபடியால் நாம் வரமாட்டோம்" என்று கூறி அவ்விடமே நின்று விட்டார். மாணவர் அரசனிடஞ் சென்று செய்தியைக் கூறினார். அரசன் வந்து பார்த்து அச்சமடைந்தான். மாணவருக்குக் கலியாணசாமியின் பெண்ணைத் திருமணஞ் செய்து கொடுக்க ஏற்பாடு செய்தான்.

**கலியாண சோழன்** - இவன் கால கால சோழனுக்கு மகன். இவனுடைய மனைவி பாண்டியன் மகள் கலியாணி. இவன் பல திருப்பணிகள் செய்து மண்ணியாறு என்னும் பெயருடைய ஆறு ஒன்றை உண்டாக்கினான். திருத்தில்லையில் கோபுரமும் ஆயிரக்கால் மண்டபமுங் கட்டி அறுபத்தேழு ஆண்டுகள் அரசாண்டான். பத்திர சோழனை மகனாகப் பெற்றுச் சிவபத மடைந்தான்.

**கலுழ வேகன்** - இவன் ஒரு விஞ்சையர் மன்னன். வெள்ளி மலையை ஒட்டியிருந்த காந்தார நாட்டிலே விச்சாலோகம் என்னும் நகரத்திலிருந்து அரசு புரிந்தவன். இவன் பெருஞ் செல்வமும் நல்லவர்களிடத்தில் மிகுந்த அன்பும் உடையவனாக விருந்தான். இராசமாபுரத்திலிருந்த சீதத்தன்என்னும் நல்வணிகன் ஒருவனை இவன் ஒரு முறை தன் நகரத்திற்கு அழைத்துப் பெருமைப் படுத்தினான்.

**கலைக் கோட்டு முனிவர்** - இம் முனிவருடைய தலையில் கலைமான் கொம்பைப் போன்ற கொம்பு இருந்ததென்றும் அதனால் இவர் இவ்வாறு பெயர் பெற்றார் என்றுங்கூறுவர். மழையில்லாத காலத்தில் உரோமபதன் இம் முனிவரைத் தன்னுடைய நாட்டிற்குஅழைத்தான். உடனே பெருமழை பெய்தது.

**கலைநியமம்** — தென் மதுரையிலிருந்த சிந்தாதேவியின் கோயில் எல்லாச் சமயத்தாராலும் போற்றப்பட்டது. கலை வடிவினளாகிய சிந்தாதேவிக்கு இடமாயிருந்தது பற்றி இப் பெயர் பெற்றது. பலரும் வந்து தங்குதற்குரிய அம்பலமொன்று இக் கோயிலின் முன்னேயிருந்தது. இஃது அம்பலப் பீடிகை என்றுங் கூறப் பெறும். இதிலிருந்த பொழுது தான் ஆபுத்திரன் அமுதசுரபியைப் பெற்றான்.

**கல்லணை** - திருச்சி மாவட்டத்தில் கரிகால சோழனால் இவ்வணை ஆயிரத்தறுநூறு ஆண்டுகளுக்கு முன் காவிரியாற்றின் மீதுகட்டப்பட்டு இன்று வரையில் நல்ல நிலையில் இருக்கிறது. 1080 அடி நீளமுள்ளது. சோழ மன்னர்கள் இலங்கையை வென்ற பொழுது அங்கிருந்து பன்னீராயிரம் பேர் சிறை பிடிக்கப் பட்டனர். அவர்களைக் கொண்டு இவ்வணை கட்டப் பட்டது.

**கவசை** — கோயமுத்தூருக்குப் பக்கத்தில் கோவை சத்திய மங்கலம் வழியில் கோவைக்கு வடக்கே ஏறக்குறையப் பத்துக் கல்தொலைவில் உள்ளது. இப் பொழுது கவசை என்னும் பெயர் மறைந்து கோயிற் பாளையம் என வழங்குகின்றது.

**கவிச் சக்கரவர்த்தி** - செய்யுள் பாடுதலில். பெரும் புலமை பெற்று, "இம்மெனும் முன் எழுநூறும் எண்ணூறும் அம்

மென்றால் ஆயிரமும்'' பாடக் கூடிய நிலையில் உயர்ந்து விளங்கிய சில புலவர்கள் கவிச் சக்கரவர்த்தி என்னும் பெயர் பெற்றிருந்தார்கள். அவர்களுட் சிலர் கம்பர் ஒட்டக் கூத்தர் ஆகியோராவர்.

**கவிதார்க்கிக கேசரி** - வேதாந்த தேசிகர் பெற்ற சிறப்புப் பெயர்களுள் ஒன்று. மற்றும் சர்வதந்திர சுவதந்திரர் என்றும், சமஸ்யா சகஸ்ரீ என்றும் பட்டப் பெயர்கள் உண்டு. சமஸ்யைகள் கொடுப்பதிலும் பிறர்கொடுக்கும் சமஸ்யைகளை நிறைவேற்றுவதிலும் வல்லவராக இருந்தபடியால் சமஸ்யா சகஸ்ரீ என்ற பெயர் அமைவதாயிற்று.

**கவிராட்சசன்** - செய்யுள்பாடுதலில் சிறந்து விளங்கிய சிலர் கவிராட்சசன் என்று பாராட்டப் பெற்றனர். முன்னாளில் ஒட்டக்கூத்தர் இப்பட்டத்தைப் பெற்றிருந்தார். ஒட்டக் கூத்தருக்கு இச் சிறப்புப் பெயுரை வழங்கியவன் காங்கேயன் என்னும் ஒரு வள்ளல் என்பர். திருவாவடுதுறை ஆதீனம் கச்சியப்ப முனிவரும் பின்னாளில் இப்பெயரால் பாராட்டப் பெற்றார்.

**கவுண்டின்னிய முனிவர்** - தாபரம் என்கிற நகரத்தில் ஒரு பனந் தோப்பில் ஆசிரமம் இயற்றித் தம்முடைய மனைவியோடு ஆனைமுகக்கடவுளை வழிபட்டுக் கொண்டிருந்தவர். நாள் ஒன்றுக்குப் பதினாயிரம் அறுகு கொண்டு ஆனைமுகக் கடவுளைப் போற்றியவர்.

**கவுந்தியடிகள்** - சமண சமயத் துறவியாக விளங்கிய ஒரு முதியபெண்மணி. கோவலனுங் கண்ணகியும் மதுரைக்குச் சென்ற போது வழித்துணையாகச் சென்றவர். ஒருபொழில் தங்கியிருக்கும் பொழுது கோவலனையும் கண்ணகியையும் எள்ளி நகையாடிய இருவரை நரிகளாகுமாறு வசவுரை வழங்கினார். கண்ணகி வேண்டிக் கொண்டபடி சில காலத்தில் சாபம் நீங்கவுங் கூறினார். இதனால் இவர் தவப் பெருமையில் சிறந்தவர் என்பது பெறப்படும். கோவலன் வெட்டுண்டிறந்ததை யறிந்ததும் உண்ணாவிரத மிருந்து உயிரை விட்டார்.

**கவுற்சன்** - தொண்டைவள நாட்டிற் காஞ்சீபுரத்தில் வாழ்ந்திருந்தவன். குற்சன் என்னும் பெயருடைய அந்தணன் மகன். இவன் தன் குலவொழுக்கத்தை மேற்கொள்ளாமல் மனம் போன போக்கில் நடந்தபடியினால் நாளடைவில் கெட்டொழிந்தான்.

**கவேர வனம்** - கவேரன் என்பவன் தவஞ் செய்துகொண்டிருந்த வனம். இது காவிரிப்பூம் பட்டினத்திற்குப் பக்கத்திலிருந்தது.

**கவைமகனார்** - இவர் சங்கப் புலவர்களில் ஒருவர். தலைவன் வரையாதொழுகுவதால் தலைவிக்கு வருந்துன்பங்களைக் குறித்து வருந்துந்தோழி, கவை மகவுகள் நஞ்சுண்டதற்கு வருந்துந் தாயை உவமையாகக் கூறியதால் கவைமகனார் எனப் பெயர் பெற்றார். கவைமகவு-இரட்டைப் பிள்ளைகள்.

**கழறிற்றறிவார்** - இவர் சேர மன்னர்; சேரமான் பெருமாள் எனவும் பெருமாக் கோதையார் எனவும் பெயர் பெற்றவர். அரசியலை அதிகம் பாராட்டாமல் இறைவன் திருவடிகளில் பேரன்பு செலுத்தி வாழ்க்கை நடத்தியவர். சுந்தரமூர்த்தியடிகளும் இவருக்கு நண்பராக

விளங்கினார். எந்த உயிர்த் தொகை பேசுவதையும் உணர்ந்து கொள்ளும் ஆற்றலை இவர் பெற்றிருந்தபடியால் இவருக்குக் கழறிற்றறிவார் என்று சிறப்புப் பெயர் உண்டாயிற்று. சிவபிரானிடத்தன்றிச் சிவசின்னங்களையணிந்தவர்களையும் பாராட்டிப் போற்றினார். சுந்தரர் கயிலைக்குச் சென்ற பொழுது இவரும் பக்கத்தில் நின்ற குதிரையின் காதில் திருவைந்தெழுத்தை யோதி அக்குதிரை விண்வழியே பறந்து செல்லக் கயிலையை அடைந்தார்.

**கழற்சிங்கன்** - தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**கழாரம்பர்** - அகத்தியரிடம் இலக்கண இலக்கியங்கள் கற்ற மாணவர்கள் பன்னிரண்டுபேர். அவர்களில் இவர் ஒருவர். அகத்தியர் காலத்தவராகலின் இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை.

**கழார்** - இது கழாஅர் எனவும் வழங்கும். இது காவிரிக் கரையில் உள்ள ஒரு துறையின் பெயர். இத்துறை உறையூருக்குக் கிழக்கேயிருந்தது. இங்கு நீராடியபோதுதான் ஆட்டனத்தி யென்பவனைக் காவிரி நீர்ப்பெருக்கு இழுத்துக் கொண்டு சென்றது.

**கழுகுமலை** - தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் ஓட்டப்பிடாரம் வட்டத்தில் சங்கர நயினார் கோயிலில் இருந்து 12 கல் தொலைவிலுள்ள முருகன் தலம். ஆண்டு தோறும் மாசித் திங்களில் விழாவும் கால் நடைச் சந்தையும் நடைபெறுகின்றன. இங்குள்ள வெட்டுவான்கோயில் புகழ் பெற்றது. இக் கோயிலில் ஜைனச் சிற்பங்களும் கல்வெட்டுக்களும் இருக்கின்றன. பஞ்சாயத்துப் போர்டு உண்டு. வெட்டுவான் கோயில் எல்லோராவிலுள்ள கைலாசநாதர் கோயில் போன்றது. ஒரே கல்லிற் செதுக்கப்பட்டது.

**கழுக்காணி** - இப்பெயருடையவள் முன்னாளில் சோழவள நாட்டில் மாயூரத்திற்கு அண்மையில் இருந்த ஒரு சிற்றூரில் வாழ்ந்திருந்தாள். இவள் முக்கட் பரமனிடத்தில் பேரன்புடையவள். அடியார்களைக் காணின் அவர்கட்கு உணவிடுவது இவளுடைய வழக்கம். எக்காரணத்தினாலேனும் உண்ணேன் என்பாரைத் தடி கொண்டு அச்சுறுத்தியேனும் உண்ணச் செய்வது இவளுடைய குணம். சிறுத்தொண்ட நாயனார் இவள் காலத்தில் தான் வாழ்திருந்தார். இவர் தாம் தம்முடைய பிள்ளையையறுத்துச் சிவபெருமானுக்குணவிட்டதனால் தம்மைப் போல் சிறந்த சிவ அன்பர்கள் இல்லையென்று உள்ளத்திலே ஆணவங் கொண்டிருந்தார். சிவ பிரான் இவருடைய ஆணவத்தைப் போக்க எண்ணினார். தாம் ஓர் அடியவராகத் திருக்கோலம் பூண்டு சிறுத்தொண்டரிடம் எழுந்தருளினார். அவரையும் அழைத்துக் கொண்டு கழுக்காணியின் திருமடத்திற்கு வந்தார். கழுக்காணி இருவருக்கும் உணவிட்டாள். சிவபிரான், "நாம் பிள்ளையில்லாத வீட்டில் உண்ணோம்" என்றார். அவ்வளவில் கழுக்காணி சினமடைந்து அங்குச் சார்த்திவைத்திருந்த ஓர் உலக்கையைத் தூக்கிக் கொண்டு புடைப்பதாக அச்சுறுத்தினாள். சிவ பிரான் மறைந்து அவளுக்குக் காட்சி கொடுத்து வீடு பேற்றை நல்கினார். கழுக்

காணியின் செயல்களை எவரா லும் அடக்க முடியாமல் இருந்த படியினால் அவனுக்கு "அடக்கு வாரற்ற கழுக்காணி" என்று பெயர் வழங்கியது.

**கழுவடியான் -** மனிதர்களைக் கழு வேற்றும் வழக்க மிருந்த அந் நாளில் கழுமரத்தின் பக்கத்தில் ஒரு சிலை மனிதனளவு உயர முடையதாக அமைக்கப் பட்டி ருந்தது. அச்சிலையை மக்கள் கழுவடியான் எனவழங்கினர்.

**கழுவர் படைவீடு -** பாண்டி நாட் டில் உள்ள ஓர் ஊர். இவ் வூரில்தான் சமணர்கள் கழு வேற்றப்பட்டனர் என்று கூறப்படுகிறது. திருப்பூவணத் தின் பக்கத்தில் இருக்கும் இவ் வூர் இந்நாளில் கழுவேறுகடை யெனவும் கழுவேறு மடை யெனவும் வழங்கப்படுகிறது.

**களக்காடு -** இது பாண்டிய நாட் டில் திருநெல்வேலி மாவட்டத் தில் உள்ளது. இங்கெழுந் தருளியுள்ள சுவாமியின் பெயர் சத்தியவாகீசர் என்பது. இவ் வூர் முன்காலத்தில் களாமரங் கள் நிறைந்த காடாக விளங் கியமையின் களக்காடு என்று பெயர் பெற்றது. இப்பெயர் சிதைந்து மரூஉப் பெயராகக் களந்தையெனவும் வழங்கும். இவ்வூர்ச் சுவாமியின் மீது களந்தை இரட்டை மணிமாலை என்னும் நூலும் பாடப்பெற் றுள்ளது. தொண்டை நாட் டிலுள்ள களத்தூரும் களந்தை என்று வழங்குகிறது.

**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் -** இவன் சேர மன்னர்களில் ஒருவன். இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனுடைய மகன். இவன் முடிசூடுங் காலத்தில் முடித் தற்குரிய கண்ணியும் முடியும் பகைவர்களால் கைப்பற்றப் பட்டமையின் உதவாமற் போயின. ஆகவே அவை களுக்குப் பதிலாகக் களங் காய்க் கண்ணியும் நார்முடியுஞ் செய்து அவைகளை அணிந்து பட்டம் பெற்றபடியினால் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்று பெயர் உண்டா கியது. இவனுக்குப் பகை வனாகி இவனுடைய நாட்டைக் கவர்ந்தவன் கடம்பின் பெரு வாயில் என்னும் ஊரில் இருந் தவனாகிய நன்னன். அந் நன்னனை இவன் மேற்குத் திக் கிலுள்ள வாகைப் பெருந்துறை என்னும் ஊரில் கொன்று தான் இழந்த நாட்டைக் கைப்பற்றிய துடன் நன்னனுடைய காவல் மரமாகிய வாகையையும் வெட்டித் தள்ளினான். இவனைக் காப்பியாற்றுக் காப்பியனார் என்பவர் பாடியிருக்கிறார்.

**களப்பிரர் -** இவர்கள் நான்காம் நூற்றாண்டு முதல் மூன்று நூற்றாண்டுக்காலம் பாண்டிய நாட்டிலும் சோழ நாட்டிலும் அரசாட்சி செய்தனர் என்று சில செப்பேடுகள் செப்பு கின்றன. ஆனால் இவர்கள் யார் என்பது பற்றி உறுதி யாகத் தெரியவில்லை. இவர்கள் தொண்டை மண்டலத்தின் வட எல்லையில் வசித்த கொள்ளைக் கூட்டத்தாராகிய கள்வரே என்று சில ஆராய்ச்சி யாளர்கள் எண்ணுகின்றனர். இவர்கள் முதலில் பாண்டி நாட்டையும் பிறகு சோழ நாட்டையும் வென்றதாகத் தெரிகிறது. இவர்கள் சைவ சமயத்தினரல்லர். பௌத்த சமயத்தினர். சோழ நாட்டில் இருந்த அச்சுதவிக்கந்தன் என்னுங் களப்பிர மன்னன் சேர சோழ பாண்டியர் களாகிய முடியுடை வேந்தர் மூவரையும் தளையிட்டிருந்த தாகப் பிற்காலச் செய்தி யொன்று கூறுகிறது.

**களரியாவிரை** - உயிர்த்தொகைகள் மெய்யறிவு வழியை உணர்ந்து வீடுபேற்றினை யடையுமாறு செய்யப்பட்ட மெய்யறிவு நூல். அந்நூல் இந்நாளில் இல்லை. இறந்தழிந்த நூல்களில் ஒன்றாகியது.

**களாவதி** - பாரன் என்னும் இருடிக்குப் புஞ்சிகஸ்தலை என்னும் அப்சரமாதிடத்துப் பிறந்த பெண். இவளுடைய அழகைக் கண்ட பார்வதி வியந்து இவளுக்குப் பதுமினி வித்தையை அருளிச் செய்தாள். இவள் அவ்வித்தையைக்கொண்டு சுவரோசி என்பவனை வசியஞ் செய்து மணம் புரிந்தாள். பதுமினி வித்தையென்பது விரும்பியதைக் கொடுக்கும் ஒரு மந்திரம்.

**களிற்றியானை நிரை** - பல களிறுகள் வரிசையாக நடந்து செல்வதைப்போல உள்ளத்தைக் கவரும் பெருமிதமான நடையுஞ் சிறப்புமுள்ள நூற்றிருபது பாடல்களைக் கொண்ட அகநானூற்றின் முதற்பகுதி இப்பெயரால் வழங்கப்படுகிறது.

**கள்ளப்பிரான்** - திருவைகுண்டத்தில் திருக்கோயில் கொண்டுள்ள திருமாலின் பெயர். காலதூடகன் என்னும் பெயருடைய கள்ளனின் நண்பர்களைக் காத்தற் பொருட்டுப் பரந்தாமன் தாம் கால தூடகனைப்போலவே கோலந்தாங்கி அரசனிடஞ் சென்று தம் உண்மை வடிவத்தைக் காட்டி அவ்வரசனை நல்வழிப்படுத்தினார். கள்ளனாகிய காலதூடகனுடைய வேடத்தைத் தாங்கிச் சென்றமையால் தாமும் கள்ளப்பிரான் என்று பெயர் பெற்றார்.

**கறுப்பண்ணன்** - இவன் மலையாளத்திலிருந்த ஒரு கள்ளன். அழகர் மலையில் உள்ள பெருமாள் கோயிலில் அணிகலன்கள் மிகுதியாக விருத்தலைக் கேள்வியுற்று அவைகளைக் களவு செய்யும் பொருட்டுத் தன் கூட்டாளிகளாகிய பதினேழு பேர்களோடு அழகர் மலைக்கு வந்தான். அழகர்மலைப் பெருமாள் இக்கறுப்பண்ணன் களவு செய்ய இடங் கொடுக்கவில்லை. இவனோடு வந்த கள்ளர்கள் பதினேழு பேரையும் பதினேழு படிகளில் பலியிட்டார். கறுப்பண்ணனைப் பலியிடாமல் பதினெட்டாம் படியில் இருந்து தம்முடைய கோயிலைக் காவல் காக்குமாறு செய்தார். அவனே அழகர் மலையில் இன்று பதினெட்டாம் படிக் கறுப்பனாக விருந்து மலையைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறான்.

**கனகசபாபதி சிவாச்சாரியார்** - பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியில் இருந்தவர். வடமொழியில் வல்லவர். இலக்கணக் கொத்துச் செய்த சாமிநாத தேசிகர், பிரயோக விவேகம் செய்த சுப்பிரமணிய தீட்சிதர் முதலியோர் இவரிடம் வடமொழி கற்றனர்.

**கனகசோழன்** - இவன் செயசோழனுடைய மகன். இவனுடையமனைவியின்பெயர்செண்பகாங்கி. இவன் காலத்தில் காவிரி திருவலஞ் சுழியிலிருந்த ஆனைமுகக் கடவுளை வலஞ் செய்து பாதாளத்தில் புகுந்தது. இதனால் மக்கள் வருந்தினர். இதனை அரசன் உணர்ந்து கலங்கினான். அப்பொழுது உருவிலிவாக்கு, "அரசனே! நீயாவது அல்லது உன் மனைவியாவது அல்லது ஒரு முனியாவது அப்பிலத்துட் புகுந்தால் காவிரி திரும்புவள்" என்றது. அரசன் தன் மனைவியோடு பிலத்துள்ளே புகத்

துணிந்தான். அமைச்சர்கள், "திருக்கோடீச்சுரத்தில் ஏரண்ட முனிவர் தவஞ் செய்கிறார், அவருடைய உடன்பாடு பெற்றுப் போகலாம் என்றனர். அதற்கிசைந்த அரசன் மனைவியோடு போய் முனிவரைப் பணிந்தான். முனிவர் அரசன் மனைவியைப் பார்த்துத் தீர்க்க சுமங்கலியாக விருக்குமாறு வாழ்த்துரை கூறினார். பிறகு அமைச்சர்கள் நிகழ்ந்த செய்தியைக் கூறினர். முனிவர் தாமே பிலத்துட் புகுந்தார். உடனே காவிரி நாட்டிற் பாய்ந்தது. அரசன் மேலும் பல ஆண்டுகள் அரசாட்சி செய்திருந்தான்.

**கனகவன்மன்** - பாண்டியன் நெடுஞ்செழியன் மதுரையில் அரசாட்சி செய்து கொண்டிருந்தபோது இவன் அரண்மனைப் பொற்கொல்லர்கட்குத் தலைவனாக நெடுஞ்செழியனிடம் இருந்தான். கோவலன் மீது பொய்யாகக் குற்றங் கூறிக் கோவலனைக் கொலை செய்யத்தூண்டியவன் இவனே. அரண்மனைச் சிலம்பைத் தான் களவு செய்த குற்றத்தை மறைப்பதற்காகவே கோவலனைப் பிடித்துத் தன் குற்றத்தை அவன்மீது ஏற்றினான். பழவினையின் தொடர்பே இதற்குக் காரணம்.

**கனக விசயர்கள்** - கனகன் எனவும் விசயன் எனவும் பெயருடைய இவர்கள் இருவரும் உடன் பிறந்தவர்கள். ஆரிய நாட்டு அரசனாகிய பாலகுமரன் என்பவனுடைய மக்கள். கல்வி செல்வம் படை முதலியன இவர்களிடம் நன்கு அமைந்திருந்தபடியால் எவரையும் மதியாமல் தருக்கியிருந்தார்கள். மற்றைய அரசர்களை இகழ்ந்தும் பேசினார்கள். தமிழ் நாட்டையும் தமிழ் மொழியையும் இகழ்ந்து பேசுவது இவர்களுடைய வழக்கம். இவர்களுடைய தன்மையை உணர்ந்த சேரன் செங்குட்டுவன் கண்ணகி தேவிக்குச் சிலையமைக்கக் கல்லெடுத்தற்கு வடநாடு சென்றபோது இவர்களைத் தோற்கடித்துக் கல்லை இவர்களுடைய தலையிலேற்றி இவர்களுடைய ஆணவத்தைப் போக்கினான்.

**கனிஷ்கன்** - இவன் காந்தார நாட்டின்மன்னனாக இருந்தான். இவனுடைய ஆட்சி யமுனையாறு வரையிலும் பரவியிருந்தது.

**கன்மாடபாதன்** - இவன் இட்சுவாகுவின்வழிமுறையில்தோன்றிய மித்திரசகன் என்பவனுவன். இவன் வேட்டையாடுதற்குச் சென்ற போது ஓர் அரக்கனைக் கொன்றான். அவ்வரக்கனுடைய தம்பி பழிக்குப் பழி வாங்க எண்ணினான். மனத்தில் வஞ்சனையை எண்ணிக்கொண்டு மித்திரசகனிடம் வந்து சமையல்காரனாக அமர்ந்திருந்தான். ஒரு நாள் வசிட்டமுனிவர் அரசனுடைய மாளிகைக்கு வந்து உணவு கொண்டார். பழி வாங்குவதற்குத் தக்க சமயம் இது தான் என்று எண்ணிய அரக்கன் மனித ஊனைச் சமைத்துப் படைத்தான். வசிட்டர் உணர்ந்து சினங்கொண்டார். அரசன் அரக்கனுகுமாறு வசவுரை வழங்கினார். அரசன் நான் குற்ற மற்றவனாக இருக்கையில் எனக்கு வசவுரை வழங்கியது தகுதியன்று என்று தானுங் கையில் நீரையெடுத்துக் கொண்டு வசிட்டருக்கு வசவுரை வழங்கத் தொடங்கினான். அரசனுடைய மனைவி ஆசிரியராக இருக்கும் முனிவருக்கு வசவுரை வழங்குதல்

தக்கதன்று என்று தடுக்க அந்நீரைக் காலின் மேல்விட்டு விடக் கன்மாட பாதனுனவன்.

**கன்னடம்** - பாரத நாட்டு இலக்கிய அமைப்புள்ள பழைய மொழிகளில் கன்னடமும் ஒன்று. இம்மொழி தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு என்னும் மொழிகள் கூடிய திராவிடக் குடும்பத்தைச் சேர்ந்தது. இது கர்நாடக என்னும் சமக்கிருதச் சொல்லின் தற்பவம் என்பர்.

**கன்னிகாப்பு** - காஞ்சி மாநகருக்குள்ள பெயர்கள் பதின்மூன்றனுள் ஒன்று. பராசத்தி காளியாக மாறித்தவஞ் செய்ய இறைவன் திருவருள் புரிந்தார். இறைவன் கட்டளைப்படியே காஞ்சியைக் காவல் செய்யத் தொடங்கியமையின் இப்பெயர் உண்டாகியது.

**கன்னிடையர்** - இவர் கன்னட தேசத்திலிருந்து வந்தவர்கள். இவர்கள் ஆடுமாடு மேய்த்தல் முதலிய பல தொழில்களைச் செய்து கொண்டிருப்பர்.

**கன்னியாகுமரி** - இந்தியாவின் தென்கோடி முனை. திருவநந்தபுரத்திலிருந்துஐம்பத்து மூன்று கல் தொலைவில் உள்ளது. இந்துமாக் கடல், வங்காள விரிகுடா அரபிக் கடல் மூன்றும் ஒருங்கு சேரும் அழகிய இடம். பழங்காலம் முதல் இந்துக்களின் ஐந்து புனித நீர்களுள் ஒன்றுக இருந்து வருகிறது. முனையில் கன்னியாகுமரி அம்மன் கோவிலும் கோவிலுக்குப் பின்னுல் கன்னியாகுமரி என்னும் ஊரும் உள்ளன. உமாதேவி கன்னியாகவே இருந்து சிவபிரானை எண்ணித் தவஞ் செய்யும் இடமாகையால் கன்னியாகுமரி எனப் பெயர் பெற்றதென்பர். கதிரவன் காலையில் கடலில் கிழக்குத் திக்கில் தோன்றுவதையும் மாலையில் மேற்குத் திக்கில் கடலில் மறைவதையும் ஒரே இடத்தில் இருந்து பார்க்கக் கூடியதாக உள்ள ஊர்களில் இதுவும் ஒன்று. புனித நீராடுவதற்கு மக்கள் இங்கு எல்லாக் காலங்களினும் வருகின்றனர். கடலோரத்தில் படித்துறை இருக்கிறது. கடற்கரை மணல் அரிசி போன்ற உருவத்தில் பல நிறங்களில் காணப்படுகின்றது.

குமரிக்கோயில் திராவிடக் கட்டிடச் சிற்ப முறைப்படி அமைந்தது. கோவிலில் உள்ள கருங்கல் தூண்களும் சிலைகளும் மிகுந்த அழகோடு விளங்குகின்றன. தூண்களைத் தட்டினுல் பலவகையான இசையொலிகள் எழும்புகின்றன. கோயிலைச் சுற்றியிருக்கிற மதில் கோட்டைச் சுவரைப் போல் பெரிதாக விளங்குகின்றது. கடலை நோக்கியுள்ள வாயில் நீண்ட காலமாக மூடப்பட்டிருக்கிறது. மூடப்பட்டிருக்கிறதற்குக்காரணம் அம்மனுடைய அணிகலன்களில் உள்ள ஒரு மணியின்பேரொளி கடலில் சென்றமரக்கலம் ஒன்றைத் திசைமாறச் செய்து விட்டது தான் என்று கூறுகின்றனர்.

**காகதீயர்கள்** - இவர்கள் ஒரு சிற்றரச குலத்தைச் சேர்ந்தவர்கள். யாதவர்களுடைய பழம் பகைவர்கள். மேலைச் சாளுக்கியர்களுடைய ஊக்கங் குறைந்தபின் இவர்கள் தலை தூக்கினர். தெலிங்கானு நாட்டில் ஓர் அரசை அமைத்தனர். பிரதாபருத்திரதேவர் என்பவருடைய மருமகன் கணபதி என்பவர் காகதீய மன்னர்களில் தலை சிறந்தவர். இவருடைய

ஆட்சி வெகு காலம் வரையில் நீடித்தது. இவர் யாதவர், சோழர், தெலுங்குச் சோடா காயத்தர் ஆகியோரைப் போரில் தோற்கடித்தார். காடவர் தலைவனாகிய கோப்பெருஞ் சிங்கனை அடக்கினார். சடைய வர்மன் சுந்தர பாண்டியனோடு நெடுங் காலம் பயனற்ற போர் புரிந்தார். அரசியலை நன்முறையில் நடத்தும் ஆற்றலும் இவரிடத்தில் இருந்தது. வாணிகம் கைத்தொழில் முதலியவைகளும் இவர் காலத்தில் சிறந்து விளங்கின. இவருக்குப்பின் இவருடைய மகள் அரசாட்சியை மேற்கொண்டாள்.

**காகதுண்டகன்** - இராசகிரிய நகரின் வெளிப்புறச் சோலையொன்றிலிருந்த ஒரு பெரியவன். தோற்றப் பொலிவுடையவன். வாசவதத்தை இறந்துவிட்டது குறித்துக் கவலைக் கடலில் அழுந்திச் செயலற்றிருந்த உதயணனை எப்படியேனுங் காப்பாற்ற வேண்டுமென்று தனியே வந்திருந்த அமைச்சனுடைய வேண்டுகோளின்படி அவனைப்பார்த்து, "இரண்டு திங்கள் நான் சொல்கிற நோன்பை மேற்கொள்வாயானால் வாசவதத்தையைப் பழைய வடிவத்தோடேயே பார்க்கலாம்" என்று சொல்லி அந்நோன்பு முறையையுங்கூறி அவனுடைய கவலையை மாற்றியவன்.

**காகந்தி** - காந்தன் பூம்புகாரைக் ககந்தனிடம் பாதுகாக்குமாறு விட்டுவிட்டுச் சென்றபொழுது ககந்தன் அரசாட்சி செய்த புகார் காகந்தி என்னும் பெயரைப் பெற்றது. காகந்தி நாடு என்னும் பெயருடைய நாடு ஒன்றும் அந்நாளில் தெலுங்கு நாட்டில் இருந்ததாகத் தெரிகிறது.

**காக்கைபாடினியார் நச்செள்ளையார்** - சங்க காலத்துப் பெண்பாற் புலவர்களில் ஒருவர். காக்கை கரைந்தமையை இவர் வியந்து பாடிய படியால் இவ்வாறுபெயர் பெற்றார். இவர் ஆடுகோட் பாட்டுச் சேரலாதனைப் பாடி ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் பொற் காசும் பரிசு பெற்றார். காக்கைப் பாடினியம் என்னும் பெயரோடு நூல் ஒன்று முன்னாளில் வழங்கியது. அந்நூல் இவர் செய்ததா அன்றி வேறு யாரேனுஞ் செய்ததா என்பது விளங்கவில்லை. அந்நூல் இப்பொழுது இல்லை;அது மறைந்து போய்விட்டது.

**காக்கைமடு** - குரங்கணில் முட்டத்தில் உள்ள பொய்கையின் பெயர். இப் பொய்கையைக் காக்கை தன்னுடைய மூக்கினால் கீறியுண்டாக்கியபடியால் இப் பெயர் உண்டாகியது.

**காங்கிரி குருகுலப் பல்கலைக்கழகம்**- அரித்துவாரத்தில் கங்கைக் கரையில் சுவாமி சித்தானந்தரால் 1902 இல் ஒரு கல்வி நிலையம் நிறுவப் பெற்றது. ஆறுவயது முதல் குழந்தைகள் சேர்க்கப் பெற்று அப்போதிருந்தே வைதிகக் கிரியைகளில் பயிற்றப் படுகின்றனர். 14 ஆண்டுகள் கல்வி கற்று, 'ஸ்நாதகர்' என்னும் பட்டம் பெறும் வரை வீட்டுக்குச் செல்வதில்லை. இவர்கள் ஆசிரியர் பார்வையிலேயே எல்லாச் செயல்களையும் செய்கின்றனர். 14 ஆண்டுகளில் 10 ஆண்டுகள் பாடசாலையிலும் 4 ஆண்டுகள் கல்லூரியிலும் பயில்வர். கலைக் கல்லூரி, வேதக் கல்லூரி இவற்றுடன் ஆயுர்வேதக் கல்லூரியும் உள்ளது. இவை யாவற்றையும் சேர்த்துப் பல்கலைக் கழகமாக 1921இல்

ஆக்கியுள்ளனர். இந்தக் குரு குலப் பல்கலைக் கழகம் வழங்கும் பட்டங்களை இந்திய அரசாங்கம் தன் அலுவல்களுக்குத் தக்கவை என்று ஏற்றுக் கொண்டுள்ளது.

**காங்கேயன்துறை** - ஈழவள நாட்டிலுள்ள இத்துறை முன்னுளில் காசாத்துறை யென்னும் பெயருடையதாக வழங்கிக்கொண்டிருந்தது. மாவிட்டபுரத்தில் கட்டிய கோவிலில் அமைக்குமாறு இந்திய நாட்டிலிருந்து முருகக் கடவுளின் சிலை இத்துறையில் வந்து இறங்கிய பிறகு இத்துறையின் பெயர் முருகக் கடவுளின் பெயர்களுள் ஒன்ருகிய காங்கேயன் என்னும் பெயரைப் பெற்றதாய்க் காங்கேயன் துறை யென்று வழங்கப் படுவதாயிற்று.

**காசி** - சைவசமயத்தினரால் பெரிதும் போற்றிப் பாராட்டப் பெறும் சிவப்பதியாகிய இது கங்கையாற்றைத்தன்னிடத்தே கொண்டிருப்பதால் மிகுந்த புகழ் பெற்று விளங்குகிறது. இதனுடைய பழைய பெயர் வாரணுசி; இப்பொழுது மீண்டும் வாரணுசி யென்னும் பழைய பெயரையே வழங்கத் தொடங்கியிருக்கிருர்கள். இது காசி மாவட்டத்தின் தலைநகர். கங்கையுடன் கலக்கும் வருணை, அசி ஆகிய இரு துணையாறுகளின் இடையில் உள்ளது. இஃது உத்தரப் பிரதேசத்தின் இரண்டாவது பெரிய நகரம். கல்கத்தாவிற்கு வடமேற்கில் நானூறு கல் தொலைவில் உள்ளது. இஃது இந்துக்களுக்கும் சீக்கியர்கட்கும் பௌத்தர்கட்கும் புண்ணியப்பதி. சிறந்த வாணிக நகரமாகவும் விளங்குகின்றது. பித்தளைப் பாத்திரஞ் செய்தல், பட்டு நெசவு செய்தல், சரிகை வேலை முதலியவைகட்குப் பெயர்பெற்றது. வேத காலத்தின் பிற்பகுதியில் இருந்தே இது புகழ் பெற்ற நகரமாக விளங்குகிறது. மகாபாரதம், இராமாயணம் முதலிய பழைய நூல்களிலும் காசி புகழ்ந்து கூறப்பட்டிருக்கிறது. காசியில் நூற்றுக்கணக்கான கோவில்கள் உள்ளன. அவைகளில் புகழ் பெற்றவை விசுவநாதர் கோயில்,அன்னபூரணிகோயில், விசாலாட்சி கோயில், துர்க்கை கோயில், பிந்து மாதவர் கோயில், கேதாரேசுவரர் கோயில்முதலியன.இவைகளில் பெரும்பான்மையானவை இராசபுத்திர வீரர் மான் சிங் என்பவரால் கட்டப் பெற்றவை. ஔரங்கசீபு காலத்தில் இடிக்கப் பட்ட விசுவநாதரின் கோயிலை இந்தூர் மகாராணி அகல்யாபாயும் மற்றவைகளை மகாராட்டிர அரசர்களுஞ் செல்வர்களும் புதுப்பித்தார்கள். காசியின் யாத்திரைவழி முப்பத்தாறு மைல் சுற்றளவு கொண்டது. இதனைப் பஞ்சக்குரோச யாத்திரை என்பர். கங்கையின் எல்லாத்துறைகளும் நீராடுதற்கு மிகப்புனிதமானவை. இங்கு நாட்டுக்கோட்டையாரின் நகரச் சத்திரம், திருப்பனந்தாள் காசி மட மேற்பார்வையில் உள்ள குமாரசாமி மடம் முதலிய பல அறநிலையங்கள் உள்ளன. கங்கையின் மறுகரையில் காசியரசரின் அரண்மனை இருக்கிறது.

**காசிக்கலியன் கவிராயர்** - பதினுரும் நூற்ருண்டில் வாழ்ந்திருந்தவர். வரதுங்க ராமன் என்னும் வீரபாண்டியனுடைய அவைக்களப் புலவராக இருந்தவர். அவன் பட்டம் பெற்ற காலத்தில் இவர்

இயற்றிய பஞ்சரத்தினமாலை யாகிய வெண்பாக்கள் தென் காசி விசுவநாதர் திருக்கோவி லில் உள்ள கல்வெட்டிற் காணப்படுகின்றன. வெகு காலமாகி விட்டபடியால் இவர் செய்த நூல்கள் மறைந் தொழிந்ததுடன் இவருடைய விரிவான வரலாறும் அறிய முடியவில்லை. கல்வெட்டுக் குறிப்புச் செய்திகளை விட வேறு செய்திகள் அகப்பட வில்லை.

**காசிபர்** - புராணங்களில் கூறப் படும் முனிவர். மரீசி என்பவ ருடைய புதல்வர். தக்க னுடைய பெண்கள் பதின் மூவரை மணந்தவர். சுரர், அசுரர், தானவர், தைத்தியர், அரக்கர், இயக்கர், நாகர் முதலானோர் மரபுகட்கும், கருடன், அருணன், பர்வதன், விபாண்டகர் முதலி யவர்கட்கும் இவரே தந்தை. பரசுராமரிடம் நிலயாகிய காசி னியை இவர் தானமாகப் பெற்றபடியால் இவருக்கு இவ் வாறு பெயர் அமைந்தது. இவருடைய பெயரே நிலத் திற்கு அமைந்த தெனினுமாம். மாயையைமணந்து சூரபன்மன் முதலியவர்களைப் பெற்றவர்.

**காசிபன்** - இவன் அந்தணர் குலத்தினன். ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இந்திரப் பிரத்தத்திற்கும் அத்தினபுரத் திற்கும் இடையே யிருந்த சகளாபுரி என்னும் ஊரில் இருந்தவன். காலக் கணிதம் மந்திரதந்திரம் முதலியவை களில் வல்லவன். எவ்வளவு கொடிய பாம்புநஞ்சாயினும் அதனை ஒரு நொடியில் போக்கி விடும் ஆற்றல் இவனிட மிருந்தது. மந்திர தந்திரங் களில் இவன் வல்லவனாக விருந்தும் இவனிடம் நல்ல மனமில்லை. இவன் பரீச்சித்து மன்னனுக்குநண்பன். பரீச்சித்து பாம்புக்கடியால் இறக்குமாறு வசவுரை பெற்றதை இவன் உணர்ந்தான். இப்பொழுது அரசனிடஞ் சென்றால் பாம்பு நஞ்சைப் போக்கித் தக்கவாறு பரிசில்பெறலாம் என்று அரச னிடஞ் சென்று கொண்டிருந் தான். வழியில் இவனை அரசனைக் கடிக்கச்செல்லுந் தக்ககன் கண் டான். இவனுடைய நிலையை அறிந்தான். "நான் உனக்கு வேண்டியபொருள் தருகிறேன். அரசனுடைய நஞ்சைப்போக்கி உயிர் பிழைக்கச்செய்யாதே" என்று கூறினான். காசிபன் நட்புடைமையைச் சிறிதும் எண்ணிப்பார்க்காமல் கிடைத் ததைப் பெறுவோம் அரசன் தான் என்ன அள்ளிக் கொடுத்து விடப்போகிறான் என்று எண் ணித் தக்ககன் தந்ததை வாங்கிக் கொண்டுசென்றான். இப்பார்ப் பான் இத்தகைய புன்மைக்குண முடையவன் என்பதை முன்னர் அறியாமற் போனோமே என்று அனைவரும் மனம் வருந்தினர்.

**காசிராம்தாஸ்** - பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியி லிருந்த வங்காளமொழிக் கவிஞர். சிறந்த கவித்திறமை வாய்ந்தவர். மகாபாரதத்தைப் பலர் வங்காளமொழியில் மொழி பெயர்த்துள்ளார்கள். ஆனாலும் இவர் பாடிய மகா பாரதமேமிகச்சிறந்தது எனப் புகழ் பெற்றது. இந்நூல் வெறும் மொழி பெயர்ப்பாக இராமல் இவருடைய கற்பனைத் திறத்திற்கேற்ப ஆங்காங்கு மாற்றப்பட்டு ஒளிரும் சிறப்பு வாய்ந்தது.

**காசினி** - கார்த்த வீரியனுடைய குமாரர் சமதக்கினி முனிவரைக் கொன்றனர். முனிவருடைய மனைவியாகிய இரேணுகை இரு

பத்தொரு முறை மார்பிலடித்துக்கொண்டு அழுதனள். இதனால் பரசுராமர் இருபத்தொரு தலைமுறை அரசர்களை வென்று கொன்று அவர்களுடைய குருதியால் நீர்க்கடன் செய்தார். பிறகு நிலவுலகைக் காசிபமுனிவருக்குத் தானமாக வழங்கினார். நிலவுலகு காசிபமுனிவருக்கு உரிய பொருளாகவே அவருடைய பெயரால் காசினி என்று வழங்குவதாயிற்று.

**காஞ்சனமாலை** - இவள் வாசவதத்தையினுடைய உயிர்த்தோழி. சிறந்த பேரழகினள். இனிமையாகப் பேசுவதில் வல்லவள். வாசவதத்தையின் கருத்தை நன்குணர்ந்து அதற்குத் தக்கவாறு நடந்து கொண்டவள். அவளுடைய இன்பகாலத்திலும் துன்பகாலத்திலும் பிரியாதவள். பந்தாடுவதிலும் சிறந்த புகழ்பெற்றவள்.

**காஞ்சனன்** - ஒரு வித்தியாதரன்; காயசண்டிகையின் கணவன். இவனுடைய நகரம் காஞ்சனபுரம். உலகவறவியில் உதயகுமரனுக்கு அஞ்சிக் காயசண்டிகையினுடைய வடிவமெய்திய மணிமேகலையை உதயகுமரன் தொடர்ந்தது கண்டு காயசண்டிகையினுடைய கள்ளக்கணவன் என்று எண்ணி அவனை வாளால் வெட்டி வீழ்த்தியவன்.

**காஞ்சிமாநதி** - இவ்வாறு திருப்பேரூருக்கு மேற்கே பன்னிரண்டு மைல் தொலைவிலுள்ள வெள்ளியங்கிரியில் பிறந்து கிழக்கு நோக்கிப் பேரூரையடைந்து அங்கு எலும்பைக் கல்லுருவாக்கிக் கோயமுத்தூர் வழியே கிழக்குத் திக்கை நோக்கிப் பல காததூரஞ் சென்று கருவூருக்கருகில் காவிரியோடு கலக்கிறது. மேலும் இவ்வாற்றிற்கு நொய்யல், சிலாநதி, அமிர்தவுந்தி, தட்சிண கங்கை, ஆதிகங்கை, ஞானதோயை, பிப்பில நதி, பிறவாநெறி, கலிகன்மநாசினி, விருத்தகங்கை, பிரயாகை என்னும் பெயர்களும் உண்டு. நொய்யல் என்றால் நோயைப் போக்கவல்லது என்பது பொருள். சிலாநதி என்னும் பெயருள்ளமையால் தன்னிலமிழ்ந்த எப்பொருளையும் கல்லாகச் செய்யும் ஆற்றல் பொருந்தியதாம். வெள்ளிமலையிலுள்ள சோதி மரத்தைச் சுற்றிப் பாய்ந்து வெளியேறுவதால் இதற்கு இவ்வாற்றல் உண்டாயிற்றென்பர். இவ்வாற்றில் மூழ்கியபடியால் முசுகுந்தனுக்குக் குரங்கு முகம் நீங்கிற்றாம்.

**காஞ்சீபுரம்** - தமிழ் நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்தில் புகழ் பெற்ற பழைய நகரம். காசிக்கு இணையான புண்ணியப் பதி. இது தமிழ் நூல்களில் கச்சிமாநகர் எனவும், பாகவத புராணத்தில் சத்தியவிரத நகரம் என்றுஞ் சொல்லப்படுகிறது. வீடுபேறளிக்கும் ஏழு நகரங்களில் முதன்மையானது. இந்நகருக்குப் பல பெயர்கள் உண்டு. முன்னாளில் இங்கு வேகவதி என்னுஞ் சிற்றாறு ஓடிக் கொண்டிருந்தது. காஞ்சி மரங்கள் மிகுந்திருந்தபடியினால் இந்நகருக்குக் காஞ்சி என்று பெயர் வந்திருக்கலாம் என்று எண்ணுகின்றனர். பண்டைக் காலத்தில் இது தொண்டை மண்டலத்தின் தலைநகரமாகவிருந்தது. காஞ்சியை ஆண்ட மன்னர்களில் மிகுந்த புகழ் பெற்றவன் தொண்டைமான் இளந்திரையன். அரசர்கள் ஆட்சி செய்து கொண்டிருந்த அந்நாளில் காஞ்சீபுரத்

தைச் சுற்றிலும் பலத்த கோட்டையும் ஆழ்ந்த அகழியும் அமைந்து ஏழு மைல் சுற்றளவுள்ள பெரிய நகரமாக இருந்தது. பத்தாவது நூற்றுண்டு வரை பல்லவப் பேரரசின் தலை நகரமாக இருந்தது.

இவ்வூரில் ஏகாம்பரேசுரர் கோயில், திருவெஃகா, திருமேற்றளி, கச்சபேசுவரம், கைலாசநாதர் கோயில், இராசசிம்மேசுவரம், வைகுந்தப் பெருமாள் கோயில், முக்தேசுவரம், மாதங்கேசுவரம், வாலீசுரம், இறவாத்தானம், அயிராவதேச்சுரம், திரிபுராந்த கேச்சுரம், சலந்தரேச்சுரம், சொக்கீச்சுரம் அநேகதங்காவதம், சுரகரேச்சுரம், குமரகோட்டம், காமக்கோட்டம், வரதராசர்கோயில் முதலிய பல கோயில்கள் இருக்கின்றன. திருவோணகாந்தன் தளி, ஏகாம்பரநாதர் கோயில், திருக்கச்சிமேற்றளி, கச்சியநேகதங்காவதம், திருக்கச்சி நெறிக்காரைக்காடு ஆகியவை இவ்வூரில் தேவாரம் பெற்ற சிவப்பதிகளாகும். கந்த புராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியர் வழிபாடு செய்த குமரகோட்டம் முதலிய திருக்கோவில்கள் இந்நாளில் மிகுந்த சிறப்புடன் திகழுகின்றன. இவ்வூருக்குள்ள வேறுபெயர்கள் பிரளயசித்து, சிவபுரம், விண்டுபுரம், திரிமூர்த்திவாசம், பிரமபுரம், காமபீடம், தபோவனம், சகச்சாரம், சகலசித்தி, கன்னிகாப்பு, தொண்டீரபுரம், தண்டகபுரம் என்பன. இப்பெயர்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரணத்தை முன்னிட்டு உண்டாகியவை.

**காடர்** - கொச்சியின் கிழக்குக் கோடியில் உள்ள ஏலமலை, நெல்லியம்பதி ஆகியவற்றின் வளம் பொருந்திய காடுகளிலும் கோயமுத்தூர் தென்மலையாள மாவட்டங்களிலுள்ள மலைகளிலும் வாழும் ஒருமலைச் சாதியினர். இவர்கள் தமிழர்களைச் சேர்ந்தவர்களே. இவர்களுடைய தொகை மிகக் குறைவு.

**காடவராயர்** - தமிழ் நாட்டிலே சோழ நாட்டையுந்தொண்டை நாட்டையும் ஆண்ட அரச மரபினர்; சம்புவராயர் என்ற பல்லவ குலத்தினர். இவர்கள் முதலில் சோழர்களுக்குப் படைத்தலைவராகவும் சாமந்தராயும் வாழ்ந்தனர். பிறகு சோழராட்சி நிலைகுலைந்த பொழுது அரசர்களாயினர். இவர்களுக்குத் தலைவன் கோப்பெருஞ்சிங்கன். இவன் சோழ மன்னனைச் சிறைப்படுத்திய செய்தி வடார்க்காடு மாவட்டம் வந்தவாசி வட்டம் வாயலூரில் காணப்படும் கல்வெட்டுப் பாடல்களிற் காணப்படுகிறது. சொக்கசீயப் புலவர் என்பவர் இவனுடைய வெற்றியைப் பாடினுர். இம்மன்னனுஞ் சிறந்த தமிழ்ப்புலமை பெற்றவன். திருவண்ணுமலை அருணுசலேசுரர் கோவிலிற் காணப்படும் கல்வெட்டு இவனையும் இவன் மகன் ஆட்கொண்டானையும் பற்றிக் கூறுகிறது. இவர்கள் காலத்துக் கல்வெட்டுகள் தமிழ் நாட்டிற் பல விடங்களினுங் காணப்படுகின்றன.

**காடவர் கோன்** - இராச சிம்மன் என்னும் பல்லவச் சோழன். திருக்கைலையின் அமைப்போடு விளங்குவதாகிய காஞ்சிபுரத்துக் கைலாசநாதர் கோயிலைக் கட்டுவித்தவன்.

**காடையூர்க் காங்கேயன்** - கொங்குவள நாட்டில் காடையூரில் கொங்குவேளாளரில் சேட குலத் தலைவனுக்கு ஒரு வெண்ணிறப்பெண் பிறந்தது. அவ்

வெள்ளைப்பெண்ணைக்கீழ்கரைப் பூந்துறை நாட்டுக் கருமாபுரத்திலிருந்து வந்திருந்த பொருளந்தைக் குலத்து இளைஞன்ஒருவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தார்கள். திருமணத்தின்போது செய்துகொண்ட முடிவுப்படிக்குக் காடையூர்க் காணி முதலிய உரிமைகளை அவ்வெள்ளைப் பெண்ணினுடைய உடன்பிறந்தவர்கள் கொடுக்க மறுத்தனர். கூடிய அவையின் முடிவுப்படி நட்டகழுவில்அப்பெண்கையறைந்து உறுதிமொழி கூறித் தன்னுடைய உரிமைகளைப் பெற்ருள். அப்பெண்ணினுடைய குழந்தைக்குக் கல்விகற்பிக்கும் பொருட்டுச்சில சிறந்த தமிழ்ப் புலவர்களை அப்பெண்மணி ஒன்று சேர்த்து ஒரு சங்கமாக்கினுள். கல்வி கற்ற சிறுவன் பாண்டிய மன்னனுடைய போர் வீரனுகச்சேர்ந்து போரில் வெற்றிபெற்ருன். அரசன் மகிழ்ந்து காங்கேயன் என்னும் பட்டமும் மாலை முதலியனவுங் கொடுத்தான். அவனுடைய பெயர் காடையூர்க் காங்கேயன் என வழங்கிகின்றது.

**காட்டக் கோட்டையார்** - ஆயர் குலத்தில் தோன்றிய ஒரு வீர சைவர். தாம் மேய்த்துவந்த ஆட்டின் சாணத்தைக் குவித்து வேதிகையாக்கி அதன்மேல் சிவ லிங்கத்தை வைத்து, தாம் மேய்க்கும் ஆட்டின் பாலை முழுக்காட்டி வந்தார். அதனைக் கண்ட அவருடைய தந்தை பாற்குடத்தை உதைக்க அண்மையிலிருந்த கோடரியால் அவருடைய தலையைத் துண்டித்து வீடு பேற்றையடைந்தார்.

**காண்டவன்** - காண்டவன் என்பது இந்திரனுடைய பெயர்களில் ஒன்று. பாண்டவர்கள் நிலவுலகில் வாழ்ந்திருந்த காலத்தில் மண்ணுலகில்இந்திரனுக்கு உரியதாகக் காடு ஒன்று இருந்தது.இக்காடு இந்திரனுக்குரிய தென்பதைக்குறிக்கக் காண்டவ வனம் என்றே வழங்கப்பட்டு வந்தது.இதில் பல அசுரர்களும் கொடியோர்களும் வாழ்ந்திருந்தனர். இக் கடவுள் அந்தண வடிவத்தோடு கிருட்டிணர்ச் சுனர்களிடத்தில் போய் அக் காட்டைத் தனக்கு உணவாக அளிக்க வேண்டுமென்று கேட்டுப் பெற்று எரித்துண்டு தீர்த்தான். இதனைக்காப்பாற்ற இந்திரன் செய்த முயற்சிகள் பலனளிக்க வில்லை.

**காதம்பரி** - ஒரு வடநூல். கந்தருவக் கன்னிகையாகிய காதம்பரி என்பவளை உச்சயினி நகரத்தரசனுகிய சந்திராபீடன் என்பவன் மணம் புரிந்த வரலாறு இதில் விரித்துக் கூறப்படுகிறது. இது பூர்வகாதம்பரியென்றும், உத்தர காதம்பரியென்றும் இருவகைப்படுமெனவும்; அவற்றுள் பூர்வகாதம்பரி பாண கவியாலும் உத்தர காதம்பரி அவருடைய மகனுலும் செய்யப்பட்டன எனவும், இந்நூல் பன்னீராயிரங் கிரந்த முடைய தெனவும் கூறுவர்; "காதம்பரியின் சுவையை உணர்ந்தவர்கட்கு உணவுகூட இனியாது" என்று கூறுவர்.

**காத்தவராயன்** - உமாதேவி சிவ பிரான் உலகங்களை யெல்லாம் காப்பவர் என்பதிற் சங்கை கொண்டு ஓர் எறும்பைப் பிடித்து ஒருசிமிழில் அடைத்து வைத்தனள். மறுநாள் சிமிழைத் திறந்து பார்க்கும்போது அதிலிருந்த எறும்பு ஓர் அரிசியைவாயிற்பற்றியிருந்தது. உமாதேவி தான் செய்த செய்கையைச் சிவபிரானிடந் தெரிவித்தாள். சிவபிரான் உமா தேவியைப் பார்த்து, "நீ அவ்

வெறும்புக்குத் துன்பஞ் செய்த மைக்காக ஒரு பூம்பொழிலை வைத்து அத் தீ வினையைப் போக்கிக் கொள்ளுவாயாக" என்றுரைத்தனர். உமாதேவியார் அவ்வாறே ஒரு பூம்பொழில் வைத்து அதனைக்காக்கும்பொருட்டு வீரன் ஒருவனைச் சிவபிரானிடம் பெற்று அவனுக்குக் காத்தான் என்று பெயரிட்டாள். இவன் மலையாளத்துக்குப் போய்த் தொட்டியத் துச்சின்னன் என்று சொல்லப்படும் ஒரு மந்திரவாதியை வென்று தனக்கு அமைச்சனாக்கினான். ஆரியமாலை, வண்ணாரவல்லி, கந்தழகி, கறுப்பழகி முதலிய பெண்களைமணந்தான்.

**காத்தான்** - இவன் சோழவள நாட்டில் நாகபட்டினத்தில் கடல் வாணிகத்தில் ஈடுபட்டுப் பெருஞ் செல்வஞ் சேர்த்துப் புகழோடு விளங்கினான். இவன் அறச்சாலை யொன்றைத் தன் பெயரால் அமைத்து அதில் ஏழை எளியவர்கட்கு உணவிடச் செய்தான். காளமேகப் புலவர் இவன் காலத்தினர். இவர் நாகபட்டினத்திற்கு வந்தபோது உணவின் பொருட்டுக் காத்தான் சத்திரத்திற்குச் சென்றார். வெகுநேரம் பொறுத்துத்தான் உணவு கிடைத்தது. பசியால் வருந்திய காளமேகப் புலவர், "கத்துகடல் சூழ் நாகை" என்று தொடங்கி வசைப் பாடல் ஒன்றைப் பாடிச் சென்றார்.

**காத்தியாயனர்** - ஒரு முனிவர். யாஞ்ஞுவற்கியன், வரருசிமுனி, சுகமுனிவர் கோத்திரத்திலே சோமதத்தருக்கு வசுதத்தையிடத்திற் பிறந்தவர். உபநிடதங்களை நன்கு கற்றுத் தேறியவர்.

**காந்தக் கோட்டை** - ஈழவள நாட்டில் மாந்தையில் முன்னாளில் இருந்து அரசாண்ட மாந்தையரசர்களுடைய கோட்டை காந்தக்கோட்டையென்று பல நாட்டவர்களாலும் புகழப்பெற்றது. தூங்கெயில் என்று பழந்தமிழ் நூல்களில் கூறப்பட்ட கோட்டை இந்தக் காந்தக் கோட்டைகளாக இருக்கலாமென்பது ஆராய்ச்சியாளர்களுடைய முடிபு.

**காந்தபுராணம்** - வடமொழியில் உள்ள பதினெண் புராணங்களில் ஒன்று. இஃது இலட்சம் கிரந்தமுடையது. கந்தப் பெருமானின் தோற்றம், சூரன் முதலானோரின் ஒழுக்கம் முதலியவைகளையும் விரிவாகக் கூறும் இப்புராணத்தின் ஒரு பிரிவாகிய சங்கர சங்கிதையைக் கச்சியப்ப சிவாசாரியார் கந்த புராணம் என்னும் பெயரோடு மொழி பெயர்த்துப் பாடினார்.

**காந்தருவதத்தை** - இவள் வெள்ளி மலையில் உள்ள வித்தியாதர மன்னனாகிய கலுழவேகன் என்பவனுடைய மகள். கலுழவேகன் தன்னுடைய மகள் காந்தருவ தத்தைக்குத் திருமணம் இராசமாபுரத்திலே நிகழும் என்பதைக் காலக் கணிதரால் உணர்ந்தான். இராசமாபுரத்து வணிகனாகிய சீதத்தன் என்பவன் வாணிகத்தின் பொருட்டுக் கடல்வழி சென்றுமீண்டசமயத்தில்கலுழவேகன் சில சூழ்ச்சிகளால் சீதத்தனை யழைத்து வேண்டிய சிறப்புக்கள் செய்து, "என் மகள் காந்தருவதத்தைக்குத் திருமணம் இராசமாபுரத்திலே நிகழ்தல் வேண்டு மென்று காலக் கணிதர்கள் இயம்பியுள்ளனர். இவளை நீ அழைத்துக் கொண்டுபோய் இசையில் இவளை வென்றவனுக்குத் திரு

மணஞ் செய்விப்பாயாக" என்று கூறி மிகுந்த பொருளும் வழங்கினான். வீணாபதி என் னுந் தோழியையும் உடனனுப் பினான். சீதத்தன் காந்தருவதத் தையை அழைத்து வந்து ஒரு கன்னி மாடங்கட்டி அவளை அதிலிருத்தி இசையில் அவளை வெல்வோரே மணஞ் செய்தற் குரியர் என்னுஞ் செய்தியையும் எங்குந் தெரியப் படுத்தினான். பலருங் காந்தருவதத்தையை வெல்ல முடியாமல் தோற்றுப் போயினர். சீவகன் அவ ளோடு இசைபாடி அவளைத் தோற்கடித்தான். ஆகவே இவள் சீவகனுக்கு மாலையிட்டு மனைவியாயினள். கட்டியங் காரனுடைய சூழ்ச்சியால் அரசர் பலர் சீவகனோடு போரிட்டனர். அவர்களை யெல் லாஞ் சீவகன் வென்று தோற் றோடச் செய்தான்.

**காந்தன்** - ஒரு சோழன்; அகத்திய முனிவர் பால் பேரன்புடைய வன். இவனுடைய வேண்டு கோளுக்கிரங்கியே அவர் தம்மு டைய நீரேனத்திலிருந்த காவிரி யை ஆறுவடிவாக நிலத்திற் பெருகச் செய்து சோழ நாட்டை நீர்வளம் உள்ளதாகச் செய்தார். பரசுராமர் போர் செய்வதற்கு வந்த பொழுது துர்க்கையின் கட்டளையால் அவருக்கு முன்னே செல்லாது வேற்றுருவங் கொண்டு இவன் சில நாள் வேறிடத்தில் இருந் தான். அதனால் இவன் பரசுராம ருடைய காலத்தவன் என்று தெரிகிறது. இவன் பெயர் காந்த மன்னவன் எனவும் வழங் கும்.

**காந்தாரகன்** - இவன் பாஞ்சால அரசனுடைய பெரும் படைத் தலைவர்களில் ஒருவன்; இவன் பிங்கல கடகராற் போரிற் கொலை செய்யப்பட்டான்.

**காந்தாரம்** - இந்தியாவில் வட மேற்கெல்லைப் புறத்தில் காபுல் நதி பாயும் தாழ்வான பள்ளத் தாக்கில் இருந்த நாடு. பண் டைய ஐம்பத்தாறு நாடுகளில் இதுவும் ஒன்று. இஃது இன் றைய பாகிஸ்தானிலுள்ள பிஷாவார் (புருஷபுரம்) ராவல் பின்டி ஆகிய மாவட்டங்கள் சேர்ந்த பகுதியாகும். காந்தார ஆடும் உரோமமும் புகழ் பெற் றவை என்று ரிக்வேதம் கூறு கின்றது. காந்தாரம் இசைக்கும் நாட்டியத்திற்கும் புகழ்பெற்ற நாடாய் விளங்கியது. இந் நாட்டைப்பற்றி வால்மீகி இராமாயணத்திலும் குறிப்புக் கள் உள்ளன.

**காந்தாரி** - காந்தார நாட்டு மன்ன னாகிய சுபலன் என்பவனுடைய மகள். திருதராட்டிரனுடைய மனைவி. தன் கணவனாகிய திருத ராட்டிரன் குருடன் என்பதைக் கேள்விப்பட்டவுடனேயே தனக்குங் கண்பார்வை வேண்டாமென்று தன்னுடைய கண்களைத் துணியால் கட்டி மறைத்துக்கொண்டு எப் பொருளையும் பாராதிருந்தவள். குந்தி மக்கட் பேற்றினையடைந் தாள் என்று கேள்விப்பட்ட வுடன் பொறாமை கொண்டு தன்னுடைய வயிற்றைக் கல்லா லிடித்துக் கொண்டவள். துரி யோதனன் முதலிய நூற்று வரைப் பெற்றவள். என் குலத்தையழித்த உன்னுடைய குலமும் அழியக் கடவது என்று கண்ணபிரானுக்கு வசவுரை வழங்கியவள்.

**காந்தியடிகள்** - (1869 - 1948) வரலாற்றுக்கு எட்டாத காலத் திலிருந்து இந்திய நாட்டில் இருந்து வருகின்ற மெய்ஞ் ஞான முயற்சிகளின் ஒரு தோற்றமே காந்தியடிகளின் வாழ்க்கை வரலாறு. போர்

பந்தரில் பிறந்து அங்கும் பின் இராசகோட்டையிலும் உயர் நிலைப் பள்ளி வரை பயின்றார். மூன்றாண்டுகள் இலண்டனில் தங்கி 1891 ஜூன் 10 ஆம் நாள் பாரிஸ்டர் பட்டம் பெற்றார். இவருடைய பதின்மூன்றாம் அகவையில் கஸ்தூரிபா என் னும் பெண்மணியை வாழ்க் கைத் துணைவியாக்கினர். இவ ருடை அயரா உழைப்பினாலும் சத்திய உறுதியாலும் இந்திய நாடு 1947 ஆகஸ்ட்டு 15 ஆம் நாள் உரிமை பெற்றது. 1948 சனவரி 30 ஆம் நாள் மாலையில் கோட்சே என்னும் கொடியவ னால் சுட்டுக் கொல்லப்பட் டார். இதுவரையில் உலகம் கண்டறியாத ஒப்பரியசிறப்புப் பண்புகள் நிரம்பிய அற்புதப் பெரியாராகிய இவர் மரணத் தைக் கேட்டுஉலகெங்குமுள்ள மக்கள் கண்ணீர் விட்டனர். அவருடைய மெய்ஞ்ஞான ஒளி உலகெங்கும் பரவுகின்றது.

**காபாலிகர்** - இவர்கள் பைரவரை வணங்கினர். மண்டையோடு களை மாலையாக்கி அணிந்து கொண்டனர். மனிதர் உட்பட எல்லா உயிர்களையும் பைரவர்க் குப் பலியிட்டனர். பலியிட்ட உடலிறைச்சியையும் மதுவை யும் உண்டனர். பெண்களை ஆதிசத்தியின் கூறு என்று வணங்கினார்கள். சிவ வழி பாட்டில் எல்லாச் சமயத்த வரும் ஒப்பானவர்களே என் னுங் கொள்கையுடையவர்கள். இவர்களுடைய முயற்சியால் சக்தி வணக்கம் மிகுதியாகியது. இவர்களுட் பெண்பாலார் களுஞ் சிலர் இருந்தனர் என்று தெரிகின்றது.

**காப்பியக்குடி** - சோழவள நாட் டில் சீர்காழிக்கு அண்மையில் உள்ள ஒரு சிற்றூர். தேவனும் தேவந்தியின் கணவனுமாகிய சாத்தன் மனிதனாகி இவ்வூரில் வளர்ந்தான் என்று சிலப்பதி காரம் கூறும். காப்பியக்குடி என்பது ஒருகுடிப் பெயராக வும் வழங்கியிருப்பதாகத் தெரி கிறது. தொல்காப்பியனார், வெள்ளூர்க் காப்பியனார், பல் காப்பியனார் முதலியோர் இக் குடியிற் பிறந்தவர்களாக இருக்கலாம் என்று ஆராய்ச்சி யாளர்கள் எண்ணுகின்றனர்.

**காப்பு** - வளை என்னுஞ்சொல் சங்கை உணர்த்தும். சங்கை அறுத்துச் செய்யப்பட்ட வளை யமும் வளை எனப்பட்டது. இதனை முற்காலத்து மக்கள் கையில் அணிந்தனர். இவ்வளை பேய் பிசாசுகளினின்றும் மக்களைக் காக்கின்றது என்னும் நம்பிக்கை முற்காலத்தில் உண் டாயிற்று. ஆகவே வளைக்குக் காப்பு என்னும் பெயரும் உண் டாகியது.

**காமக்கோட்டம்** - காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மையார் எழுந் தருளியுள்ள திருக்கோயில் இப்பெயரால் வழங்கப் பெறு கிறது. காஞ்சிபுரத்திலுள்ள சிவாலயங்களில் இறைவியின் திருவுருவங்கள் இல்லை. இந்த ஒருகோவிலில் மட்டுமே உள் ளது.

**காமசாரிகள்** - தம்முடைய விருப் பப்படி எங்குஞ் சுற்றித் திரிய வல்ல ஒரு தேவசாதியார். "வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்" என்றதற் கேற்ப உலாவும் வன்மை இவர் களுக்குண்டு என்பர். இவர்கள் சம்புத் தீவுக்கப்பால் கிம்புருட வர்க்கத்தில் உள்ள ஒரு கூட்டத்தினர். கண்காணாதுல வுஞ் சித்தைத் தவிர வேறு பல சித்துக்களிலும் இவர்கள் வல்லவர்கள் என்பர்.

**காமந்தகர்** - இவர் கௌடில்யரின் பொருள் நூலைப் போன்ற நீதி

சாரம் என்னும் நூலை வட மொழியில் இயற்றினார்.

**காமபீடம்** - காஞ்சிபுரத்திற்குரிய பதின்மூன்று பெயர்களில் ஒன்று. வீடுபேறு முதலியவை களை விரும்பித் தவ வழிபாடு களைச் செய்தவர்கட்கு அவர் களுடைய விருப்பங்களை நிறை வேற்றுந் தன்மையினால் உண் டாகிய காரணப் பெயர்.

**காமன்** - உயிர்த் தொகைகட்கு உண்டாகும்காமவிருப்பத்திற்கு அதிதேவதையாக உள்ளவன். மன்மதன், வேனிலான் முதலிய வேறு பெயர்களும் இவனுக் குண்டு.இவன் திருமாலினுடைய மனத்திற் பிறந்தவனாகையால் திருமாலுக்கு மகன் என்று கூறப்பெறுவான். இவனுடைய மனைவியின் பெயர் இரதி. இவ னுடைய படைவீரர்கள் மங்கை யர்; தேர் தென்றல்; கொடி மீன்; குதிரைகிளி; யானை இருள்; காளாஞ்சி மல்லிகை மலர்; வாள்தாழைமடல்; வில் கரும்பு;நாண் சுரும்பு; அம்புகள் தாமரை, அசோகு, மா, முல்லை, நீலம் என்னும் ஐந்து மலர்கள்;இதனால் பஞ்சபாணன் என்னும் பெயரும் உண்டு. இவனுடைய பாசறை மலர்ப் பொழில்.

இவன் தேவர்களுடைய வேண்டுகோளின்படி சிவ பிரான் மீது மலர்க்கணை எய்யச் சென்று அப்பெருமானுடைய நெற்றிக் கண்ணால் நீறானான். இரதியின் வேண்டுகோள்படி அவளுக்கு மட்டும் தெரியும் படியான தன்மை பெற்று இதனால் அநங்கன் எனவும் பெயர் பெற்றான். இவனுடைய தம்பியின்பெயர் சாமன் என்பர்.

**காமன் கோட்டம்** - காமனுடைய கோயில், இராசகிரியின் புற நகரில் இருந்த ஒரு பொழிலில் இக்கோயில் இருந்தது. இக் கோயிலில் தலைவன் தலைவியர் இருப்பதற்குரிய மணவறைக ளிருந்தன. இதிலிருந்த காம னுக்குத் திருவிழா ஏழுநாள் நடைபெற்றது. உதயணன் பதுமாபதியை முதலிற் கண்டு களித்தது இக்கோயிலின் வாச லிலேதான். தலைவன் தலைவிகள் தம்முடைய எண்ணம் பலிப்ப தற்காக இக்கோயிலில் தங்கித் தவஞ் செய்தனர்.

**காமாட்சி** - காஞ்சிமாநகரில் காமக் கோட்டத்தில் எழுந்தருளிய அம்மையார் பெயர். காமாட்சி என்பதன் பொருள் விரும்பத் தக்க திருக்கண்களை உடையவள் என்பது. காஞ்சிபுரத்தில் பல சிவாலயங்கள் இருப்பினும் அவைகளிலெல்லாம்(ஏகாம்பர நாதர் திருக்கோயில் உட்பட) அம்மன் கோயில்கள் இல்லை. காஞ்சியில் உமாதேவியார் திருக்கோயில் இஃதொன்று மட்டுமே. இங்கு எழுந்தருளிய பிராட்டி அமர்ந்த திருக்கோலத் துடன் விளங்குகிறாள். பிற விடங்களில் நின்ற திருக்கோ லத்தைத் தவிர அமர்ந்த திருக் கோலத்தைப்பார்க்கமுடியாது.

**காம்பிலு** - இவ்வூர் பல்லாரி மா வட்டத்தில் உள்ள காம்பிலி என்பதாம். இஃது அறுபத்து மூன்று திருத்தொண்டர்களில் ஒருவராகிய நேசநாயனார் பிறந்த ஊராகும். இவர் தஞ்சைமாவட்டத்தில் மாயூரத் தில் உள்ள கூறை நாட்டில் வாழ்ந்திருந்தார் என்றும் இங்கே சிவாலயத்தில் காம்பிலி யில் இருந்து கொண்டுவந்த ஆனைமுகக் கடவுள் முதலிய மூர்த்திகளின் சிலைகளை அமைத்துவழிபட்டவர்என்றுங் கூறப்படுகிறது.

**காயங்கரை** - ஓர் ஆறு; பிரம தருமன் எனப் பெயரிய ஒரு பௌத்த முனிவன் இதன்

கரையில் தங்கித் தவஞ் செய்தான். அத்திபதி என்னும் அரசன் இடவயமென்னும் நகரத்திலிருந்து நீங்கி அவந்திக்குச் செல்லும்போது நால் வகைப் படைகளோடும் இதன் பக்கத்திலுள்ள சோலையில் தங்கியிருந்தான்.

**காயசண்டிகை** - ஒருவித்தியாதர மங்கை; காஞ்சனனுடைய மனைவி. இவள் அவனோடு பொதியமலையின் வளங்களைக் காணச் சென்றாள். உண்டவர்கட்குப் பன்னிரண்டு ஆண்டு அளவும் பசியை ஒழிக்கும் ஒரு நாவற்கனியைக் காலாற் சிதைத்தாள். அக்கனியை உண்ணுதற்கு வந்த பட்டினி நோன்பியாகிய விருச்சிகன் என்னும் ஒரு முனிவனுடைய வசவுரையினால் பன்னிரண்டு ஆண்டு வரையிலும் யானைத்தீ என்னும் பெரும்பசி நோயால் வருந்தி மணிமேகலை கொடுத்த உணவால் அப்பசி முழுவதும் ஒழியப் பெற்றுத் தன்னுடைய நகரஞ் செல்லுகையில் இடையேயுள்ள விந்தமலையைப் பாதுகாக்கும் விந்தா கடிகை என்பவள் சாயையால் இழுக்க அவள் வயிற்றிற் சென்று அடங்கினள்.

**காயற்பட்டினம்** - திருநெல்வேலி மாவட்டத்தில் திருச்செந்தூருக்கு வடக்கே கடற்கரையில் உள்ள பட்டினம். காயல் என்பதற்குக் கழிமுகம் என்று பொருள். தாமிரவருணியாறு கடலிற் சேருமிடத்திலிருந்த காயல்களின் அண்மையில் இருந்தபடியால் இவ்வாறு பெயர் பெற்றது. முகமதிய வள்ளலாகிய சீதக்காதி இவ்வூரிலேதான் வாழ்ந்திருந்தார். இவ்வூரில் இப்பொழுதும் முகமதியர்கள் மிகுதியாக வசிக்கிறார்கள். இதனைச் சோனகாப்பட்டினம் எனவுஞ் சொல்லுவர். இவ்வூரிலே உப்பு வாணிகஞ் சிறப்பாக நடைபெறுகிறது.

**காரணைவிழுப்பரையர்** - கல்வெட்டுகளால் அறியப்படும் புலவர்களில் இவர் ஒருவர். மாறவர்மன் சுந்தரபாண்டியனுடைய அவைக்களப் புலவராக இருந்தவர் என்று பாண்டி நாட்டில் பெரிச்சி கோயில் என்ற ஊரிலுள்ளகல்வெட்டுக்கூறுகிறது. பெரியான் ஆதிச்ச தேவன் என்ற புலவரும் இவரும் நண்பர்கள் என்று அக்கல்வெட்டுக் கூறுகின்றது. இவருடைய பெயரால் காரணை விழுப்பரையன் மடல் என்னும் பெயருடைய நூல் ஒன்று இருந்ததாகவுந் தெரிகிறது. ஆனால் அந்நூல் இந்நாளில் இல்லை.

**காரவேலர்** - அசோகருக்குப் பின் கலிங்க நாட்டில் சுய ஆட்சியை நிறுவின "சேத" வமிசத்தின் புகழ் பெற்ற மன்னர். கி.மு. 2 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். ஆந்திர இராச்சியத்தின்மேல் இருமுறை படையெடுத்துச் சென்று சாமந்த மன்னர்களை வென்றார். இராசகிரிக்குச் சென்று அதன் பக்கத்திலுள்ள கோரதகிரிக் கோட்டையைத் தாக்கி மகதமன்னரை வெற்றி கொண்டார். பாடலிபுத்திரம் வரையிலும் தம் படைகளை வெற்றியுடன் நடத்தி வந்த டிமீட்ரியஸ் என்ற கிரேக்க மன்னரைக் காரவேலர் புறங் கண்டார். அங்க நாட்டைக் கைப்பற்றினார். சிறந்த அழகு வாய்ந்தவர். கல்வியில் தேர்ந்தவர். மக்களுக்குப் பல நன்மைகள் புரிந்தவர்.

**காரியாறு** - காரியாறு என்பது ஓர் ஊருக்கும் ஓர் ஆற்றுக்கும்

பெயர். இது தமிழ் நாட்டின் வடபகுதியில் திருவள்ளூரிலிருந்து திருக்காளத்திக்குச் செல்லும் வழியில் இருக்கிறது. இவ்வூர் இப்பொழுது 'இராமகிரி' என்று இயம்பப் பெறுகிறது. இது தேவாரம் பெற்ற சிவப்பதிகளுள் ஒன்றென்பர்.

**காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி** - இவன் சங்ககாலச் சோழ மன்னன். காரியாறு என்னுமிடத்தில் இவன் இறந்தபடியினால் பிற்காலத்தார் இவனை இவ்வாறு காரியாற்றுத்துஞ்சிய என்று குறிப்பிடலாயினர். இவன் உறையூரில் இருந்தவன். நலங்கிள்ளியின் பகைவன். நலங்கிள்ளியிடமிருந்து வந்த இளந்தத்தர் என்னும் புலவரை ஒற்றர் என்று கொல்லத்துணிந்தான். பிறகு கோவூர்கிழாரால் அறிவுபெற்று விடுதலை செய்தான். நலங்கிள்ளி உறையூரை முற்றுகை யிட்ட பொழுது கோட்டைக் கதவை அடைத்திருந்தவன்.

**காரியுண்டிக் கடவுள்** - சிவபிரான் நஞ்சை (நஞ்சுகாரி) உண்டமையால் அவருக்கு இவ்வாறு ஒரு பெயர் உண்டாகியது.

**காரைத்தீவு அகத்தியர்** - இவ்வகத்தியர் ஆரியாவர்த்தத்தில் கன்னோசி நாட்டில் ஒரு செல்வக் குடியிற்பிறந்தார். மிகுஇன்பங்களை நுகர்ந்தபிறகு வாழ்க்கையில் வெறுப்புற்றுத் துறவு பூண்டார். பவுத்தத்துறவியாகிக் கயாவில் சிலகாலம் வசித்துக் கொண்டிருந்தார். தெற்கே யாழ்ப்பாணத்திலுள்ள காரைத் தீவுக்குப்போய்த் தனியாக ஓர் இருப்பிடம் அமைத்துக் கொண்டு தவஞ் செய்தார். இவர் வடமொழியோடு தென்மொழியையும் நன்கு கற்றுணர்ந்தார். தம்பெயரால் ஒரு நூலும் இயற்றினார். ஆனால் அந்நூல் இந்நாளில் முழுதுங் கிடைக்கவில்லை. உரையாசிரியர்கள் சில சூத்திரங்களை இங்கொன்று அங்கொன்று மேற்கோளாக எடுத்துக் காட்டியன மட்டும் உள்ளன.

**காரையூர்ச்சர்க்கரை** - இப்பெயர் நல்லதம்பிச் சர்க்கரையெனவும் வழங்கும். காரையூர் என்பது கொங்குவள நாட்டில் நொய்யலாற்றின் கரையில் உள்ளது. இவ்வூரில் நல்லதம்பிச் சர்க்கரையார் வாழ்ந்திருந்தார். இவர் சிறந்த வள்ளல். புகழ்பெற்ற புலவர் ஒருவர் ஒருநாள் நல்லதம்பிச் சர்க்கரையின் இல்லத்திற்கு வந்தார். நல்லதம்பிச் சர்க்கரையைப் பார்த்தார். சர்க்கரையார் இனிமையாகப் பேசிப் புலவருக்குணவிட்டார். பிறகு தட்டு ஒன்றில் நல்லாடை பொருள் முதலியவைகளை வைத்து இரு கைகளாலும் எடுத்துப் புலவரிடம் நீட்டினார். புலவர் அதனைப் பெற்றுக்கொள்ளவில்லை. பக்கத்திலிருந்த குதிரைச் சவுக்கு ஒன்றையெடுத்துப் பளீர் பளீர் என்று சர்க்கரை வள்ளலைத் தாக்கினார். அடியுண்ட வள்ளல் புலவருடைய கையைப் பிடித்துக் கொண்டார். "ஐயா! நான் எத்தகையதவறுஞ் செய்யவில்லையே, ஏன் என்னை அடிக்கிறீர்கள்?" என்று கேட்டார். புலவர், "நாம் உமக்கு அறமொழிகள்பலவற்றைஉரைத்து உமக்கு நல்லறிவுச் சுடர்கொளுத்தலாம் என்று வந்தோம். நீரோ எம்மை இரவலனாக எண்ணிக்கொண்டு பொருளைக் கொடுக்கத் தொடங்கினீர். இதைவிட வேறு என்ன தவறு வேண்டும்?" என்று கூறிச் சீறினார். சர்க்கரையார் புலவரைப் பார்த்து, "என்னுடைய விருப்பமும் புலவர்கள் கூறும் பொன்மொழியைக் கேட்டல்

வேண்டுமென்பதுதான். ஆனால் இன்று ஒரு முதன்மையான காரியத்தை முன்னிட்டுவேறோர் ஊருக்குச் செல்ல வேண்டியவனாக விருக்கிறேன். சிலநாள் என்னுடைய இல்லத்தில் தங்கியிருங்கள். நான் விரைவில் திரும்பி வந்து தங்களுடைய அறிவுரையைக்'' கேட்கிறேன் என்று சொன்னார். புலவர்தம்முடைய தவற்றினை யுணர்ந்து வள்ளலைப் புகழ்ந்து பலவாறு பாராட்டிச் சென்றார். இதன் பிறகு காரையூர்ச்சர்க்கரையின் புகழ் யாண்டும் மிகுதியாகப் பரவியது.

**கார்த்தவீரியன்** - இவன் கிருதவீரியன் என்பவனுக்கும் சுகந்தை என்பவளுக்கும் மகனாகத் தோன்றினான். தோன்றிய பொழுது மிகுந்த அழகோடு விளங்கினானாயினும் கைகளுங் கால்களும் இல்லை. பிறகு ஆனைமுகக் கடவுளை நோக்கித் தவஞ்செய்து கால்களையும் ஆயிரங் கைகளையும் பெற்றான். இவனுடைய பெயர் கார்த்த வீரியார்ச்சுனன் எனவும் வழங்கும். முதலில் நல்லவனாக இருந்த இவன் பிறகு பொல்லாதவனாக மாறினான். தனக்கும் தன்னுடைய படைகட்கும் விருந்தளித்த சமதக்கினி முனிவருடைய காமதேனுவைப் பிடிக்கப்போய்த் தோல்வியடைந்தான். பிறகு வஞ்சகமாகச் சமதக்கினி முனிவரையும் இரேணுகையையுங் கொன்றான். இச்செய்தியை அறிந்த பரசுராமர் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுப் பேராற்றல் பெற்றுக் கார்த்த வீரியார்ச்சுனனை மட்டுமல்லாமல் அரசர் மரபை இருபத்தொரு தலைமுறை கருவறுக்கும் சூளுரையையுங் கொண்டு அப்படியே செய்தார்.

**காலகண்டன்** - காசியில் இருந்த ஓர் அந்தணன். அரிச்சந்திரனுடைய மனைவியை விலைக்கு வாங்கிக் கொள்ளுமாறு கலிபகவான் விசுவாமித்திரருடைய உடன்பாட்டால் கிரக நிலை பெற்றவராகலின் அவரேவலால் இவ்வந்தணனாகக் காசியில் தோன்றியிருந்தவர். சந்திரமதியையும் லோகிதாசனையும் விலைக்கு வாங்கிக் கொடுமைப்படுத்தியவர். இவருடைய பெயர் காலகௌசிகன் எனவும் கூறப்பட்டது.

**காலயவனன்** - இவன் யவந நாட்டிற்குத் தலைவனாக இருந்தவன். கண்ணனோடு போர் செய்து அவனை வெல்லவேண்டும் என்னும் எண்ணத்தோடு நால்வகைப் படைகளையுந் திரட்டிக் கொண்டு வந்து மதுராபுரியை முற்றுகை யிட்டான். இவன் படையெடுத்து வருதலை முன்னரே உணர்ந்த கண்ணன் துவாரகையை உண்டாக்கி மதுரையிலுள்ளவர்கள் அனைவரையும் அங்கே அனுப்பி விட்டுத் தாம் மட்டும் மதுரையில் தனித்திருந்தார். யவனன் மதுரையை அடைந்தபொழுது கண்ணன் அஞ்சியோடுகிறாற்போல் போக்குக்காட்டியோடி ஒருமலை முழைஞ்சினுள் நுழைந்தார். காலயவனனும் பின் தொடர்ந்தோடி அதனுள் நுழைந்தான். அங்கே தேவாசுரப்போரில் களைப்படைந்த முசுகுந்தன் உறங்கிக் கொண்டிருந்தான். அவனைக்கண்ட யவனன் கண்ணன்தான் பொய்யுறக்கங் கொண்டிருப்பதாக எண்ணி அவனைக் காலால் உதைத்தான். உடனே முசுகுந்தன் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்து காலயவனனைப் பார்த்தான். அவ்வளவில் காலயவனன் எரிந்து சாம்பரானான்.

**காலாசோகன்** - இவனுடைய பெயர் காகவர்ணன் எனவும் வழங்கியது. இவன் பாடலிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு அரசாட்சி செய்தான். இவன் ஒருநாள் இரவில் கோட்டையின் புறத்தில் திடீரென்று குத்தப்பட்டு மாண்டான்.

**காலானலப்பிரசமர்** - காலனுடைய வீரியத்திலிருந்து பிறந்த அனலாசுரன் என்பவனை விழுங்கியபடியால் ஆனைமுகக் கடவுளுக்கு ஏற்பட்ட ஒரு பெயர்.

**காலிங்கராயன்** - இவனுடைய முழுப்பெயர் மணவிற் கூத்தனான காலிங்கராயன் என்பது. இவன் படைத்தலைவனாக இருந்தான். தொண்டைமண்டலத்து இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்றான மணவில் என்னும் ஊரின் தலைவன். இவன் குலோத்துங்கனுடைய படைத்தலைவனாகவிருந்து பாண்டிநாடு வேணாடு, மலைநாடு முதலிய நாடுகளோடு போர் நடத்திப் புகழ் பெற்றான். இவனாற் சோழனுக்குப் பெரும் புகழ் உண்டாகியது. இவனுடைய ஆண்மையைப் பாராட்டிய குலோத்துங்கன் இவனுக்குக் காலிங்கராயன் என்னும் பெயர் கொடுத்துச் சிறப்புச் செய்தான். இவன் சீரிய சிவனடியான். திருத்தில்லையில் பொன்னம்பலத்தின்கண் சிற்சபை பொலியத் திருநடம் புரியும் அற்புதக் கூத்தனிடத்திற் பேரன்பு கொண்டவன். தில்லையிற் பல திருப்பணிகளைச் செய்தான். அம்பலத்திற்குப் பொன் வேய்ந்து பொன்னம்பலமாக்கினான். பலமண்டபங்களைக் கட்டினான். மூவருடைய தேவாரத் திருப்பதிகங்களைச் செப்பேடுகளில் எழுதுவித்துத் தில்லைக்கோயிலிற் பாதுகாத்து வைத்தான். மேலும் பல விடங்களிற் பல திருப்பணிகள் செய்தான்.

**கால்டுவெல் ஐயர்** - (*1814-1891*) அயர்லாந்தில் கிளாடி ஆற்றின் கரையிலுள்ள சிற்றூர் ஒன்றிற் பிறந்தவர். பத்தாம் அகவை முதல் ஸ்காட்லாந்து நாட்டில் கிளாஸ்கோ நகரில் வாழ்ந்தார். சமயத் தொண்டர் சங்கச்சார்பில் கிளாஸ்கோ கல்லூரியில் கற்றார். அச்சங்கச் சார்பிலே கிறித்தவத் தொண்டாற்றத் தமிழ் நாட்டிற்கு 1838 இல் வந்தார். சென்னையில் 1841 வரைத் தங்கித் தமிழ்பயின்றார். 1877 இல் திருநெல்வேலியில் 'பிஷப்'ஆகப் பட்டம்பெற்றார். ஆங்கிலத்தில் "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்," "திருநெல்வேலிச் சரித்திரம்" என்னும் சிறந்த நூல்களையும், தமிழில் "தியான மாலை" "தாமரைத்தடாகம்" என்னும் நூல்களும் சிலகட்டுரைகளும் வரைந்துள்ளார். 1891 ஆகஸ்ட் 28 இல் காலமானார். இடையன் குடியிலே இவரால் கட்டப்பட்ட கோயிலிலே இவரை அடக்கம் செய்துள்ளார்கள்.

**காவிரி** - தென்னிந்தியாவில் ஓடும் ஆறுகளில் தலை சிறந்தது. காவிரி குடகு நாட்டில் மேற்குத் தொடர்ச்சிமலையில் தோன்றி மைசூர், சேலம், கோயம்புத்தூர், திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்களின் வழியாக ஏறக்குறைய நானூற்று எண்பது மைல் தொலை ஓடி வங்காளக் குடாக் கடலிற் கலக்கிறது. இவ்வாறு தென்னாட்டுக் கங்கை யெனப் போற்றப்படுகிறது. காவிரிப் புராணம் என்னும் புராணமும் இவ்வாற்றுக்குண்டு. இவ்வாற்றின் தோற்றத்தைப் பற்றிப் பல கதைகள் வழங்கும்.

**காவிரிக்கரை கண்ட சோழன்** - சோழ மன்னர்களில் ஒருவன். இவன்கீழ்ப் பல சிற்றரசர்களிருந்தனர். ஒரு காலத்தில் காவிரியின் கரை மிகவும் தணிவாகவும் வெள்ளப் பெருக்கால் உடைந்து போகக் கூடியதாகவும் இருந்தது. கரையைப் பலப்படுத்த எண்ணிய இவன் தன் கீழ்ச் சிற்றரசர்கள் பலரையும் அழைத்துக் கரையைப் பலப்படுத்துமாறு திட்டஞ் செய்து எல்லாருக்கும் அளந்து விட்டான். எல்லாருந் தத்தம் பங்குக் கரைகளைக் கட்டி முடித்தனர். ஒரு சிற்றரசன் மட்டுந் தன்னுடைய கரையைக் கட்டிமுடிக்காமல் இருந்தான். சோழ மன்னன் கரைகட்டப் பட்டிருத்தலைப் பார்வையிட்டுக் கொண்டு வந்தான். செப்பனிடப் பெறுதிருக்குமிடத்தைக் கண்டான். அந்தப் பங்கு எவருடையது என்று உசாவினான். அலுவலாளர்கள், ''இதுபிரதாபருத்திரன் என்பவனுடைய பங்கு'' என்று கூறியதோடு அவனுடைய படத்தையுங்காட்டினார்கள். சோழன் படத்தைப் பார்த்தான். அவனுக்கு மூன்று கண்கள் இருத்தலைக்கண்டான். ''சிவபெருமானுக்கும் மூன்று கண்கள். இவனுக்கும் மூன்று கண்களா?'' என்று கூறிச் சினங் கொண்டான். வேலினால் படத்தின்கண் ஒன்றைக் குத்தி விட்டான். அவ்வளவிற்பிரதாபருத்திரனுடைய கண்ணும் மறைந்து விட்டது. பிரதாபருத்திரன் சோழனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டதோடு உடனே தன்னுடைய பங்குக் கரையைக் கட்டி முடித்தான்.

**காளகண்டன்** - இவன் ஒருபார்ப்பான். நல்லொழுக்க மற்றவனைத் திரிந்து கொண்டிருந்த இவனை இவனுடைய தந்தை மறையோதும் படி கூறினான். அதனால் சினங் கொண்ட இவன் தன்னுடைய தந்தையைக் கொன்று விட்டான். அதனால் பெருந் தீவினை இவனைப் பின்தொடர்ந்தது. வசிட்டரைப் போற்றி வழிபட்டு அத் தீவினையைப் போக்கிக் கொண்டான்.

**காளகவி** - இவனோர் அசுரன். விரோசனன் என்பவனுடைய மகன். பலியின் உடன்பிறந்தான். இவன் கஞ்சனேவலாற் கண்ணனைக் கொல்ல முயன்றான். விளாமர வடிவுகொண்டு நின்றான். உண்மையை உணர்ந்து கொண்ட கண்ணன் விளையாட்டாக அம்மரத்தை முறித் தொழித்தான்.

**காளக்கடவுள்** - உச்சயினியில் எழுந்தருளிய மகாகாளேசுவரர் என்னும் பெயருடைய சிவலிங்கம்.

**காளசமணன்** - இவன் சாங்கிய சமயவாதி. பிரச்சோதனனுடைய அவைக்களத்தில் ஐவகைச் சமயவாதிகளை வென்று ஒரு காலத்தில் சாங்கிய சமயத்தை நிலைநாட்டினான்.

**காளத்திமுதலியார்** - இவர் தொண்டை வளநாட்டில் நின்றை(திருநின்றவூர்)என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். கொடையினால் இவருடைய புகழ் எல்லாவிடங்களிலும் பரவி நின்றது. காலவேற்றுமையினால் இவருடைய பொருள் வருவாய் சுருங்கியது. வறுமை அணைந்தது. வழக்கம்போல் இரவலாளர்கட்கு உதவி செய்ய முடியாமல் உள்ளம் வருந்தினார். பிறருக்கு உதவி செய்ய இயலாத நிலையில் ஊரில் இருப்பது வீண். ஆகவே யாண்டேனும் சென்று விடலாம்

என்று ஊரை விட்டுப்புறப் பட்டார். அன்று இரவு வழியில் இருந்த ஓர் அறச்சாலையில் தங்கினர். அந்த அறச்சாலையில் புலவர் ஒருவர் அன்றிரவு தங்கியிருந்தார். அவர்காளத்தி முதலியாரிடம் பரிசில் நாடி வந்தவர். அவர் தமக்குத்தாமே நாளைக்கு நின்றைக் காளத்தி முதலியாரைக் கண்டால் நம்முடைய வறுமைத் துன்பம் அடியோடு ஒழிந்து போகுமென்று எண்ணியவராய்த் தம்முடைய கருத்தை ஒருபாடலில் அமைத்துப் பாடினர். பாட்டைக் கேட்ட காளத்தி முதலியார் புலவர் நிலைக்குப் பெரிதும் வருந்தினர். இரவோடிரவாக ஊரையடைந்து வீட்டில் தங்கினர். மறுநாள் புலவரை வரவேற்றுப் போற்றினர். பிறகு பாம்புப்புற்றில் கையை விட்டு உயிரைப் போக்கிக் கொள்வது என்று முடிவு செய்து பாம்புப்புற்றில் தம்முடைய கையை விட்டார். பாம்பு இவரைக் கடிக்கவில்லை. தன்னுடைய நாகரத்தினத்தை இவர் கையில் கக்கியது. அதனைப் புலவருக்குக் கொடுத்து மகிழ்ந்தார். அதன் பிறகு இவருடைய புகழ் யாண்டும் பரவியது. இவருடைய பெருமை தொண்டைமண்டல சதகத்தில் இடம் பெற்றது.

அறச்சாலையில் தங்கியிருந்த புலவர் தமக்குத்தாமே பாடிக்கொண்ட பாட்டு, "நீளத் திரிந்துழன்ருய் நீங்கா நிழல்போல,நாளைக்கிருப்பையோ நல்குரவே-காளத்தி, நின்றைக்கே சென்றக்கால் நீயெங்கே நனெங்கே,இன்றைக்கேசற்றே யிரு" என்பது. இவர் மீது பல பட்டடைச் சொக்கநாதப் புலவர் படிக்காசுப் புலவர் முதலிய புலவர்கள் செய்யுள் பாடிப் பரிசு பெற்றுள்ளனர். இவர் திருவல்லம் என்னும் ஊரிலும் தங்கியிருந்தாராகையால்"வல்ல மாநகர்க் காளத்தி" எனவுங் கூறப்பெறுவார். இவர் மீது படிக்காசுப் புலவர் பாடிய பாட்டு,

"பெற்ருளொருபிள்ளை யென்மனை
யாட்டியப் பிள்ளைக்குப்பால்,
பற்ருது கஞ்சி குடிக்குந் தரமல்ல
பாவிரக்கச்,
சிற்ருளு மில்லையில் வெல்லா
வருத்தமுந் தீரவொரு,
கற்ருத ல்லை யாவல்ல
மாந ர்க் காளத்தியே"

என்பது.

**காளமயிடன்** - இவன் ஒற்றுவேலையில் வல்லவன். ஆருணியரசன் பால் அன்புடையவனய் அவனுடைய ஒற்றனக அமைந்து நின்று பகைவர்கள்பால் நிகழ்ந்தசெய்திகளை யெல்லாம் உடனுக்குடன் தெரியப்படுத்திக் கொண்டிருந்தான்.

**காளன்** - இவன் மகத நாட்டில் பிலவம் என்னும் நகரில் இருந்தவன். அழகிற் சிறந்தவனக இவன்விளங்கினன். தீயொழுக்கங்கள் பல இவனிடத்தில் பொருந்தியிருந்தன. அரசன் இவனைக் கொலை செய்யுமாறு கட்டளையிட்டான். இவனுடைய அழகைக் கண்டு குண்டலகேசி என்னும் மங்கையொருத்தி இவனிடங் காதல் கொண்டாள். தன்னுடைய தந்தையிடங்கூறி அவனை எவ்வாறேனுங் கொலைத் தண்டனையிலிருந்து விடுவிக்க வேண்டுமென்ருள். தந்தை சிறந்த செல்வனகையால் அரசனுக்குப் பெரும் பொருள் கொடுத்து அவ்விளைஞனை மீட்டான். தன்னுடைய மகள் விரும்பியவாறு அவளைக் காளனுக்கே திரு

மணஞ் செய்து கொடுத்தான். காளன் இல்வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தபோது ஏற்பட்டபிணக்கினால் உயிர் காத்த மனைவியினாலேயே உயிர் போக்கவும் பெற்றான்.

**காளாமுகர்** - இவர்கள் பெரும் படிப்பாளிகள். சிறந்த ஒழுக்கம் உடையவர்கள். பக்தித் துறையை மேற்கொண்டவர்கள். மணல்மீது படுத்தல், மந்திரம் ஓதல், பதிகங்கள் பாடல், இறைவனைப் பற்றிப் பாடியாடுதல், உழவாரப் பணி புரிதல் முதலியவைகளில் ஈடுபட்டிருந்தனர். இவர்களை எந்நேரமும் பலர் சூழ்ந்து கொண்டிருப்பர். இவர்கள் எண்வகை யோகங்களினும் வல்லவர். இவர்கள் மடங்கட்குத் தலைவராகவும், கோவில்களுக்குக் கண்காணிப்பாளர்களாகவும், குருமார்களாகவும், சமயக் கல்வி போதிப்பவர்களாகவும் இருந்தார்கள். இவர்கள் தங்களுடைய கல்விச் சிறப்பு முதலியவைகளால் நாட்டிற் சிறந்த செல்வாக்குப் பெற்றிருந்தனர். இவர்களுக்குப் பேரரசர்கள் பலர் மாணவர்களாகவும் இருந்தனர். இவர்களிற் சிலர் மணமானவர்களாகவும் சிலர் ஆகாதவர்களாகவும் இருந்தனர். மணமாகாதவர்களே மக்களால் மிகுதியாகப் பாராட்டப் பெற்றனர்.

**காளமாமுனி** – துரியோதனன் எண்ணப்படி சாவு வேள்வியொன்றினைச் செய்து அதிலிருந்து தோன்றிய பூதத்தைப் பாண்டவர்களைக் கொல்லுமாறு ஏவியவர். கண்ணனருளால் பாண்டவர்கள் மூர்ச்சையுற்றவர்களாய் மாண்டார் போற் கிடக்கப் பூதம் அவர்கள் மாண்டு போனவர்களென்று சினங்கொண்டு திரும்பிச் சென்று, ''மாண்டவர் பின்னும் பின்னும் மாள்வரோ மதியிலாதாய்'' என்று கூறித் தாக்க அதனால் உயிரிழந்தவர்.

**காளிந்தியாறு** - இவ்வாறு யமுனையெனப்படும். . களிந்தம் என்னும் மலையில் தோன்றுவதால் காளிந்தியெனப் பெயரடைந்தது.

**காளிங்கராயன் அணை** - கொங்குவள நாட்டில் மேல்கரைப் பூந்துறை வெள்ளோட்டில் கொங்கு வேளாள மரபில் சாத்தந்தை குலத்தில் ஓர் இளைஞன் இருந்தான். அவன் தன்னுடைய முயற்சியால் வீர பாண்டியனுடைய படைத் தலைவன் ஆனான். தமிழரசர்கள் தம்முடைய அமைச்சர் படைத் தலைவர் முதலியவர்களுக்குக் காளிங்கராயன் என்னும் பட்டங் கொடுப்பதுண்டு. இவ் விளைஞனும் காளிங்கராயன் என்னும் பட்டத்தையடைந்தான். பேரும் புகழும் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்திருந்தான். தான் பிறந்த நாட்டிற்குந் தன்னுடையகுலத்துக்கும் தனக்கும் பெரும்புகழும் நல்வினையும் உண்டாகுமாறு பவானியாறுங் காவிரி நதியுங் கூடுமிடத்தில் அணையொன்றைக் கட்டினான். அவ்வணை இன்றும் அவனுடைய பெயரால்காளிங்கராயன் அணை என்னும் பெயருடன் விளங்குகின்றது.

**காளிங்கன்** - ஒருநாகன்; இவன் யமுனை மடுவில் இருந்து கொண்டு அந்நீரை நஞ்சாக்கி அதிலிறங்குவோரைக் கொன்று வந்தான். கண்ணன் அங்கு சென்று அவனுடைய தலைமிசைத் தாளூன்றித் திருக்கூத்தியற்றி அவனைக் கொல்லக் கருதினான். அவன் மனைவியர் உயிர்ப் பிச்சையளிக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்ளக் கொல்லாது விட்டான்,

**காளிம்பன்** - தொண்டை வள நாட்டில் திருவேங்கடத்திற்கு அண்மையிலிருந்த ஒரு செல்வன். இவன் புலவர்கட்கும் எளியவர்கட்கும் பேருதவி செய்து வள்ளலெனப் புகழ் பெற்று விளங்கியிருந்தான். இவன் மீது புலவர்கள் பலர் செய்யுள் பாடியுள்ளனர். அவற்றுள் ஒன்று ;

"விடங்குமுரவின் இடைநுடங்க
மின்வாள் வீசி விரையார் வேங்
கடஞ்சூழ் நாடன் காளிம்பன்
கதிர்வேல் பாடும் மாதங்கி
வடஞ்சேர் கொங்கை மலைதாந்தாம்
வடிக்கண் நீல மலர்தாந்தாம்
தடந்தோ ளிரண்டும் வேய்தாந்தாம்
என்னுந் தன்கைத் தண்ணுமையே.

என்பது.

**காளீசுவரர்** - காளையார் கோயில் என்று இந்நாளில் வழங்கப் பெறும் திருக்கானப் பேரில் எழுந்தருளிய இறைவனுடைய பெயர். காளியாகவிருந்த இறைவியை இறைவன் திருமணஞ்செய்து கொண்டபடியால் இப்பெயர் உண்டாகியது.

**கானப்பேர் எயில்** - பாண்டி நாட்டில் முன்னாளில் விளங்கிய ஒரு வலிமை வாய்ந்த கோட்டை. கானப்பேர் என்பது இந்நாளில் காளையார் கோயில் என வழங்குகிறது. இக்கோட்டை மதில்கள் வெல்ல முடியாதவை என்று அந்நாளில் கருதப்பட்டிருந்தன. அதன் தலைவனான வேங்கை மார்பன் இது குறித்துப் பெருந்தருக்குடையவனாக விளங்கினான். பாண்டியன் உக்கிரப் பெருவழுதி அதனை வென்று அவனுடைய செருக்கையடக்கினான். இதனால் அவனுடைய பெயர் "கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி" என்று வழங்கியது.

**கிடங்கன்பெருமாள் முதலியார்** - இவர்சிறந்த அறிவுநலமமையப் பெற்றவர். தமிழ்நாட்டு அரசன் ஒருவனுடைய அவைக்களத்திலிருந்தார். அந்த அரசன் ஒருநாள் இவரைப்பார்த்து, "முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப்போர் யாவர்?" என்று உசாவினான். முதலியார், "வேளாளரே முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப்பவர்கள்" என்று கூறினார். அரசன், "முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப்பவர்கள் அரசர்களல்லரோ?" என்று உசாவினான். முதலியார் யாதும் மறுமொழி கூறாதிருந்தார். இதனால் அரசன் முதலியார்மீது உட்பகை கொண்டான். முதலியாரைக் கொலை செய்யுமாறு கட்டளையிட்டான். முதலியாருங் கொலை செய்யப்பட்டார். ஒருநாள் இந்த அரசனுடைய மகனைப்பகைவர்கள் துரத்திவந்தனர். அவர்கள் கையிற் சிக்கிக் கொள்ளாமலிருப்பதற்காக அரசனுடைய மகன் கிடங்கன்பெருமாள்முதலியாருடைய வீட்டிற்குள் நுழைந்தான். கிடங்கன்பெருமாள் முதலியாருடைய மகன் அரசன் தன்னுடைய தந்தையைக்கொலைபுரிந்த தீமையைச் சிறிதும் மனத்தில் வைத்துக்கொள்ளாமல் மறைவதற்கு இடங்கொடுத்ததோடு தன்னுடைய மகனை இவன்தான் அரசனுடையமகன் என்று கூறிப் பகைவர்களிடம் ஒப்படைத்தான். இச்செய்திகளையுணர்ந்த அரசன் முதலியார் மகன் பகைபாராட்டாமல் தன்னுடைய மகனுயிரைப்பாதுகாத்ததை யெண்ணிப் பெரிதும் வியந்து மகிழ்ந்தான். வேளாளர்களே முப்பத்திரண்டு அறமும் வளர்ப்பவர்கள் என்று முடிவு செய்து முதலியார்மக

னுக்குப் பெருஞ்சிறப்புச் செய்தான்.

**கிட்கிந்தை** - துங்கபத்திரை நதியருகிலுள்ள ஹம்பி நகரை அடுத்து ரிசிய முக மலையின் தெற்கிலும், நீலகிரிகுடகுமலைத் தொடர்களுக்கு வடக்குமாக வுள்ள மேற்குத் தொடர்ச்சிமலை வெளி. இது முதலில் வாலியும் பின்பு சுக்கிரீவனும் ஆண்ட இடம். இதன் தலை நகரமும் கிட்கிந்தை என்றேவழங்கியது. இது குகை போல மலையிடை இருந்ததாம். இப்பொழுது துங்கபத்திரையின் வடகரையில் ஹம்பியின் அருகே ஒரு சிற்றூராக இருக்கின்றது.

**கிந்தமன்** - இவன் ஒரு முனிவன். இவன் இன்பநலத்தை விரும்பி மான் வடிவங்கொண்டு மான் வடிவங்கொண்ட மனைவியைத் தழுவியிருந்தபோது, பாண்டு மன்னன் முனிவன் என்று உணராமல் உண்மையான மான் என்றே எண்ணி அம்பினை யெய்து இம்முனிவனுடைய சாபத்தைப் பெற்றான். இம் முனிவன் பெயர் அமுதந்தி எனவும் வழங்கும்.

**கிப்பிரப்பிரசாதன்** - பிரியவிரதன் என்னும் அரசனுக்குக் கீர்த்தி யென்னும் மனைவியினிடத்தில் ஆனை முகக்கடவுளுடைய அருளால் பிறந்தவன். மாற்றாந் தாயாகிய பிரபை யென்பவள் நான்காம் ஆண்டில் உணவில் நஞ்சைக் கலந்திட அதனால் மாண்டு பிறகு கிருச்சமத முனிவர் என்பவரால் உயிர் பெற்றவன். ஆனைமுகக் கடவுளை வழிபட்டு அவருடைய அருளால் நெடுங்காலம் வாழ்ந் திருந்தான்.

**கிரிவிரசம்** - மகததேச ராசதானி. இதைச்சுற்றி மலைக்கோட்டை யிருப்பதால் கிரிவிரசம் என்று பெயர் பெற்றது. கேகய இராசதானி. இது குசன் மக்களுள் நான்காம் புத்திரன் வசுவினால் உண்டாக்கப்பட்டது. இது தருமாரணியத்துக்கு அண்மையில் உள்ளது.

**கிருச்சமத முனிவர்** - இவர் காடு ஒன்றில் தவஞ்செய்து கொண்டிருந்தார். இறந்து போன கீர்த்தியின் மகனைப் பிழைப்பித்தவர்.

**கிருட்டிணதாஸ்கவிராயர்** - வங்காள நூலாசிரியர். புலமை மிகுந்தவர். சைதன்னியர் காலமான நூறு ஆண்டுகளுக்குள் அவருடைய வாழ்க்கையைப் பற்றி இவர் எழுதிய "சைதன்னிய நூலே சரித்திராமிர்தம்" என்றவங்காளிமொழியிலுள்ள சைதன்னியர் வாழ்க்கை வரலாறுகளுள் மிகவும் சிறந்தது. அப்பொழுது இவருக்கு (அந் நூல் எழுதும் போது) எண்பது வயதிருக்கலாம். பல ஆண்டுகள் பொறுமையோடு எழுதி அந் நூலை முடித்த பிறகு அது கள்ளர்களால் களவாடப்பட்டு விட்டதாம். இவர் அந்த மன வருத்தத்தாலேயே காலமானார். அவர் இறப்புக்குப் பின் நூல் கிடைத்து விட்டது.

**கிருட்டிணதேவராயர்** - (ஆ.: கா 1509-1529) விசயநகரமன்னர்களுள் பெருமை வாய்ந்தவர். விசயநகரராச்சியத்தை ஆண்ட துளுவ வமிசத்தைச் சேர்ந்தவர். இவர் 1509 இல் பட்டம் பெற்றார். இருபது ஆண்டுகள் ஆண்டார். சீர்குலைந்திருந்த அந்த நாட்டின் முற்போக்குக்காக அரும்பாடு பட்டார். அடிக்கடி மதக்கலகம் செய்து வந்த மகமதியர்களை அடக்கினார். இவர் வைணவமதப் பற்றுடையவர். தம் தலைநகரில் கிருட்டிணனுக்கு ஒரு கோவில் நிறுவினார். நரசிங்க மூர்த்திக்கு மிகப் பெரிய கற்

சிலை அமைத்தார். வடமொழியிலும் தெலுங்கிலும் கவிதைகள் இயற்றினார். **ஆமுக்த மாலியதை** இவருடைய புலமைக்குச் சிறந்த எடுத்துக் காட்டு. இது தெலுங்கிலுள்ள ஐம் பெருங்காவியங்களுள் ஒன்று.

**கிருதகோடி** - ஒருமுனிவர்; பிரமாணவாத நூலாசிரியர்களுள் ஒருவர். பிரத்தியட்சம் முதலிய பிரமாணம் பத்தனுள் இவராற் கொள்ளப்பட்ட பிரமாணங்கள் எட்டே.

**கிருத்திராசுரன்** - இவன் ஓர் அசுரன். ஆனைமுகக்கடவுள் சிறு குழந்தையாக இருந்த போது அவரைக் கொல்லவெண்ணிப் பெருங் கழுகு வடிவெடுத்துத் தூக்கிச் சென்று அக்கடவுளாற் கொல்லப்பட்டவன்.

**கிருபன்** - கோதமன் என்னும் முனிவனுடைய மகனும் சரத்வான் என்றுபெயர் பெற்றவனுமான ஒருமுனிவன் மறை முதலியவைகளை ஓதித்தேர்ந்த பிறகு பெருந்தவஞ் செய்து கொண்டிருந்தான். அம்முனிவனுடைய தவத்தைக் கெடுக்கும் பொருட்டு இந்திரன் சாங்மதி என்னுந் தேவகன்னிகையை ஏவினான். அவளை முனிவன் கண்டு காமுற்றுத் தழுவினான். அப்பொழுது ஓராண் மகவும் பெண்மகவும் உண்டாயின. தன் தவநிலை குலைந்ததைக் கண்டு வருந்திய முனிவன் வேறிடஞ் சென்றான். தேவகன்னிகையும் மறைந்தாள். குழந்தைகளிரண்டுங் கதியற்றவைகளாய்த் தனிமையில் கிடந்தன. அப்பொழுது வேட்டைக்குச் சென்ற சந்தனு மன்னன் அக்குழந்தைகளை யெடுத்து வந்து மிகுந்த கிருபையோடு வளர்த்தான். அதனால் அக்குழந்தைகட்குக் கிருபன் என்றும் கிருபி என்றும் பெயர்கள் உண்டாயின.

**கிழவன் சேதுபதி** - சேது நாட்டை யாண்ட சேதுபதிகளில் ஒருவன். இவனுடைய இடுகுறிப்பெயர் இரகுநாத தேவன் என்பது. அஞ்சாமையிலும் சூழ்ச்சித்திறத்திலும் பேர்பெற்றவன். பல்லவராயன் என்ற புதுக்கோட்டை மன்னனை அரியணையிலிருந் தகற்றித் தன்னுடைய காதற் கிழத்தி ஒருத்தியின் உடன் பிறந்தவனான இரகுநாத தொண்டைமான் என்பவனைப் புதுக்கோட்டை மன்னனாக்கினான். மதுரையின் மீது படையெடுத்து வந்த ருஸ்தம் கான் என்பவனோடு போர் செய்து தோற்கடித்தான். 1702ஆம் ஆண்டில் மதுரை மன்னனோடு தனக்கிருந்த எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக் கொண்டு தனியாட்சி நடத்தினான். தஞ்சை மன்னன் 1709ஆம் ஆண்டில் கிழவன் சேதுபதி மீது படையெடுத்து வந்தபோது கிழவன் சேதுபதி தஞ்சை மன்னனைத் தோற் கடித்ததோடு தஞ்சை மன்னனின் பலம்வாய்ந்த அறந்தாங்கிக் கோட்டையையுங் கைப்பற்றிக் கொண்டான். சிறந்த புகழ் வாய்ந்து விளங்கிய இவன் 1710 ஆம் ஆண்டிற் காலமானான். இவனுடைய ஆட்சி முப்பதாண்டுகள் வரை நடைபெற்றது.

**கின்னப் பிரமையர்** - இவர் ஒரு வீரசைவர். நெற்றியில் மாயப் பொட்டிட்டுக் கொண்டு கன்னக்கோல் தாங்கிச் சிவனடியாரல்லாதார் வீட்டில் கன்னமிட்டுக் களவுசெய்து அப்பொருளால் சிவனடியார்கட்கு அமுது செய்வித்தவர்.

**கின்னரர்** - கின்னரம் என்னும் ஒருவகை வாத்தியத்தை எப்பொழுதுங் கையில் வைத்துக் கொண்டு பாடித்திரியும் ஒரு வகுப்பினர் கின்னரர் என்று கூறப்பெறுகின்றனர்.

**கீசகர்** - இவர்கள் நூற்றுநால்வர்; விராடனுடைய மனைவியாகிய சுதேட்சணை என்பவளோடு கூடப்பிறந்தவர்கள். இவர்கள் நூற்றுநால்வரும் தங்கள்உடன் பிறந்தாள் இல்லத்தில் இருந்து நன்கு உண்டு கொழுத்துப் பலருக்கும் பலவகையான தீமைகளைச் செய்துகொண்டு திரிந்தனர். எல்லோருக்கும் மூத்தவனுகிய முதற் கீசகன் பாண்டவர்கள் கரந்துறை வாழ்க்கையை மேற்கொண்டு விராட நகரத்தில் இருந்தபோது அங்கு மாற்றுருவில் இருந்த திரௌபதையைக் கண்டு அவள்மீது காதல் கொண்டான். அவளைக் கட்டாயப்படுத்தினுன். இச்செய்தி திரௌபதியினுல் வீமனுக்குத் தெரிந்தது. வீமன் தானே திரௌபதியாகக் கோலம் பூண்டு குறிப்பிட்ட இடத்துக்குப்போய்க் கீசகர்கள் எல்லோருடனும் போரிட்டு அனைவரையுங் கொன்றொழித்தான்.

**கீதநாதபண்டிதன்** - நாரத முனிவர் இசை பாடுதலில் வல்லவர். சிறந்த இசைப் புலமையுடையர். ஆகவே இம்முனிவரை வில்லிபுத்தூரார் தம்முடைய பாரதத்தில் கீதநாத பண்டிதன் என்று கூறியுள்ளார். "பண்ணுடைக் கீதநாத பண்டிதன் விசும்பிற்போனுன்" என்பது பாட்டு.

**கீரந்தை** - இவனோர் அந்தணன். பொற்கைப் பாண்டியன் காலத்தில் மதுரையில் வாழ்ந்திருந்தவன். இவன் தன்னுடைய மனைவியைத் தனியே விட்டு விட்டுக் காசிக்குச் சென்றபொழுது பாண்டியன் இவன் வீடிருந்த தெருமுழுவதற்கும் உணவுப் பொருளளித்தான். அவ்வாறளித்தது இவனுடைய மனைவிக்குக் கெட்ட பெயர் உண்டாகாமல் காத்தலுக்கே.

**கீர்த்தி** - பிரியவிரதன் என்னும் அரசனுடைய மூத்த மனைவி. பிரியவிரதன் தன்னுடைய இளைய மனைவியிடம் மோகங் கொண்டு அவளுடைய மையலில் தாழ்ந்திருந்தான். இவள் கற்புநிலை தவருமல் கணவனுக்குச்செய்யவேண்டிய பணிகளையெல்லாஞ் செய்திருந்தாள். ஒருநாள் பிரியவிரதன் இளைய மனைவியோடிருக்குமிடத்திற்குச் சென்றுள். அவள் இவளைக் காலால் உதைத்தாள். அதனுல் மனம் வருந்திய இவள் அந்தணன் ஒருவனுல் ஆனைமுகக்கடவுளுடைய வழிபாட்டின் பெருமையையும் முறைமையையும் உணர்ந்து அக்கடவுளைப் போற்றி வழிபட்டாள். ஆனைமுகக்கடவுள் தோன்றி இவளுக்குக் கணவனுடைய அன்பு மக்கட்பேறு முதலிய நலங்களையெல்லாம் வழங்கியருளினுர். ஆனைமுகக் கடவுளை ஒருநாள் வன்னி கொண்டு வழிபட்டாள். இறந்துபோன தன்னுடைய மகனைக் கிருச்ச மத முனிவர் என்னும் முனிவருடைய உதவியால் பிழைப்பித்தாள்.

**குகவேளாளர்** - இராமபிரான் கங்கை கடப்பதற்குத் துணைபுரிந்த குகனது வழி முறையில் தோன்றியவராகக் கூறிக் கொள்ளும் சில செம்படவர்கள் தங்களைக் குகவேளாளர்கள் என்று கூறிக் கொள்ளுகின்றனர்.

**குசலவர்**-குசன் + லவன் என்னும் இவர்களிருவரும் இராமபிரா

னுடைய மக்கள். சீதை கருப் பிணியாக இருக்கையில் இராவணனிடம் பத்துத்திங்கள் இருந்தவளை இராமன் திரும்பவுஞ் சேர்த்துக் கொண்டான் என்று பழிச்சொல் உண்டாக அதனால் வான்மீகி யாசிரமத்தில் விட்டுவிட அங்கு இவர்கள் பிறந்து எல்லாக் கலைகளினுஞ் சிறந்து விளங்கினார்கள்.

**குசைத்தலை** - ஓர் ஆறு. வடார்க்காட்டிலுள்ளகாவேரிப்பாக்கத்தில் தோன்றிச் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள திருவள்ளூர் பொன்னேரித் தாலுக்காக்களிற் பாய்ந்து வங்காளக் குடாக் கடலில் கலக்கிறது.

**குச்சகர்** - இவர் கடகம் என்னும் ஊரில் இருந்தவர். அந்தண மரபினர். கலைகளை நன்கு கற்றுத் தேறியபின் புலன்களை அடக்கித் தவஞ் செய்தார். இல்லறத்தில் நின்று இல் வாழ்க்கையை நடத்தினர். மார்க்கண்டேயர் இவருடைய கொள்ளுப் பேரராவார்.

**குஞ்சரகிரி அகத்தியர்** - இலங்கைத் தீவின் தென் பாகத்தில் குஞ்சரமலையில் இவர் இருந்தார். தசரதனுடைய ஆணையைப் பெற்று ஆரியசமயத்தை ஈழநாட்டில் பரப்புவதற்காகவும் இராவணனுடைய அரசியல் செய்திகளை அவ்வப்போது தசரதனுக்குத் தெரியப்படுத்துவதற்காகவும் இவர் அங்கு தங்கியிருந்தார். இராவணன் இவர் அங்கு தங்கியிருப்பதற்கு உடன்பாடு வழங்கியிருந்தான். இவ்வகத்தியருக்குப் பின் வேறொரு அகத்தியர் இப்பெயரோடு தங்கியிருந்ததாகத் தெரிகிறது.

**குடகுமலை அகத்தியர்**-இவ்வகத்தியர். குடகுநாட்டில் வாழ்ந்திருந்தவர். இவர் அடிக்கடி வட நாட்டிற்குச் சென்று வரும் வழக்கம் உடையவர். ஆரிய நாட்டு அரசர்கள் அனைவரும் இவ்வகத்தியருக்கு நண்பர்கள். இவர் ஒரு காலத்தில் அயோத்திக்குப் போய் விட்டுத் திரும்பும் போது நைமிசவனத்தின் வழியாக வந்தார். அங்கே முனிவர்கள் பலர் அசமேதஞ் செய்தற் பொருட்டு ஓர் ஆட்டை வேள்வித்தூணில் கட்டியிருத்தலை இவர் பார்த்தார். அவ்வாட்டின் நிலைமையைக் கண்டு உள்ளம் இரங்கினர். வேள்வி செய்யும் முனிவர்களிடம் அவ்வாட்டைக் கட்டவிழ்த்து விட்டு விடுமாறு கூறினர். அம்முனிவர்கள் ''அசம் பெய்தவி சொரிந்தாற்றின் வானோர் - வசம்பெய்தருளின் மாநிலஞ் செழிக்கும்'' என்று கூறி மறுத்தார்கள். அகத்தியர் அம்முனிவர்களுடைய அறியாமைக்குஇரங்கினர். ''அசம் என்னும் சொல்லுக்குப் பொருள் என்ன ?'' என்று கேட்டார். அவர்கள், ''ஆடு'' என்று கூறினர்கள், அகத்தியர்,''அது பொருளன்று; அசம் என்றால் மூவாட்டை நெல்'' என்று பொருள் கூறினர். அவ்வேள்விக்குத் தாம் தலைமை தாங்கினர். குடகு மலையில் இருந்து மூன்றாண்டுகள் கடந்த நெல்லைக் கொணர்ந்து தமிழர் முறையில் வேள்வியை முடித்துக் காட்டினர். இந்திரன் முதலில் இதனை ஒப்பாமல் இருந்தான். அகத்தியர் அவனுக்கு வேள்வியைப் பற்றி விளக்கமாகக் கூறியபின் அவனும் ஒப்புக் கொண்டான். வேள்வி நிறைவேறியது. குடகிற் கரசனாக விருந்த கவேரன் என்னும் சிற்றரசன் தன்னுடைய மகள் காவேரியை அகத்தியருக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான்.

அவரையே தன்னுடைய முத லமைச்சராகவும் வைத்துக் கொண்டான். இவ்வகத்தியர் காவேரியைத் திருமணஞ் செய்து கொண்டபடியினால் இவருடைய பெயர் காவேரி அகத்தியர் என்றும் வழங்கும்.

**குடப்பாம்பிற்கையிடுதல்** - அஃதாவது பாம்பு அடைக்கப் பட்ட குடத்தினுள் கையை விடுதல். பொய்யை மெய்யைத் தெளிய வேண்டிய விடத்தில் ஒருகுடத்தில் நாகப் பாம்பை அடைத்துக் குடத்தின் வாயைமூடிக் கட்டி நீதி மன்றத்திற்குக் கொண்டு வருவர். குற்றஞ் சுமத்தப் பெற்றவர் தாம் அக் குற்றத்தைச் செய்யவில்லை. யென்று பாம்புக் குடத்திற்குள் கையை விடுவர். அவ்வாறு கை விட்டவர் குற்றவாளியாயின் குடத்தினுள் உள்ள பாம்பு கையிலே கடித்து விடும்; குற்றவாளி அல்லராகில் பாம்பு ஒன்றும் செய்யாது. இதனால் அக்காலத்தினர் உண்மை தெளிந்தனர்.

**குடுமியாமலை** - தமிழ் நாட்டில் புதுக்கோட்டை வட்டத்தில் குளத்தூர் தாலுக்காவின் தென் மேற்கிலுள்ள ஊர். புதுக்கோட்டையிலிருந்து 12 கல் தொலைவிலுள்ளது. இது முற்காலக் கல்வெட்டுக்களில் 'திருநற்குன்றம்' என்றும், பிற்காலக் கல்வெட்டுக்களில் 'சிகாநல்லூர்' என்றும் வழங்கப் பட்டுள்ளது. குடுமியா மலையின் உச்சியில் முருகப் பெருமான் கோயில் உள்ளது. ஏறும் வழியின் ஒரு பக்கத்தில் இயற்கையாக அமைந்த குகை ஒன்று இருக்கின்றது. அக்குகையில் முற்காலத்தில் மனிதர்கள் குடியிருந்திருக்க வேண்டும் என்று தெரிகின்றது. குன்றின் அடியில் கிழக்குப் பக்கத்தில் சிகானந்தர் கோயில் இருக்கின்றது. இக்கோயில் புகழ் வாய்ந்தது. கோயிலின் முன் பக்கத்தில் ஆயிரக்கால் மண்டபம் இருக்கின்றது. அதன் நடு வழியில் அணியொட்டிக்கால்கள் உள்ளன. அவைகளில் இராமாயண வானர வீரர்கள், இராவணன், கடவுளர் ஆகியவர்களின் படிமங்களும், மானியம் வழங்கியவர்களின் உருவப் படிமங்களும் செதுக்கப்பட்டுள்ளன. அடுத்துள்ள சபா மண்டபம் பாண்டியக் கட்டிடச் சிற்பத்தைத் தழுவியது. இதில் கூத்தப் பெருமான் முதலிய வெண்கலச் சிலைகள் வைக்கப் பட்டுள்ளன. அடுத்துள்ள மாமண்டபம்பிற்காலச் சோழர்களால் கட்டப்பட்டது. அடுத்துள்ள கருப்பக் கிருகம் பல முறை புதுப்பிக்கப் பட்டது. மூன்று பிராகாரங்கள் உள்ளன. இங்குள்ள குகைக் கோயிலுக்குப் பின்புறத்தில் உள்ள இரண்டு பிள்ளையார் கற்சிலைகளுக்கு இடையிலே இசைக் கலைக் கல்வெட்டு இருக்கின்றது. இது 78 ஆம் ஆண்டில் வெட்டப் பட்டது. 4 ஆம் நூற்றாண்டுக்கும் 13ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்திய இசைபற்றிய குறிப்புக்களில் இன்றும் இருப்பது இக்கல் வெட்டு ஒன்றே. குடுமியாமலையில் 120 கல் வெட்டுக்கள் உள்ளன. இவைகளினால் புதுக்கோட்டை வரலாறு விளங்குகின்றது.

**குடைக்கூத்து** - இது பதினொரு கூத்துக்களுள் ஒன்று. இது வெற்றி கொண்ட வீரன் ஆடுவதாகும். போர்க்களத்தில் அவுணர்களனைவரும், முருகனும் அவனுடைய படைத் தலைவர்களுஞ் செய்யும் போருக்கு ஆற்றாமல் தங்கள் தங்கள் கையிலிருந்த படைக்

கலங்களை யெல்லாம் எறிந்து விட்டுச் சோர்ந்து நிற்கிறார்கள். இதனைக்கண்ட முருகனுக்கு வெற்றிக் களிப்பு மிகுதி யாகிறது. வீரக்கூத்தியற்றத் தொடங்குகிறார். தம்கையில் உள்ள குடையை முன்னே சாய்த்துக் கொண்டு கூத்தாடு கிறார். குடையைச் சாய்த்து ஆடுங் கூத்தாகையால் குடைக்கூத்து என்னும் பெயரை யடைகிறது.

**குட்டநாடு** - திருவாங்கூர் நாட்டைச் சேர்ந்ததும் கோட்டயம்,கொல்லம் என்று வழங்கு கின்ற நகரங்களைக் கொண்டதும் ஏரிகளை மிகுதியாக உடையதுமாகிய ஆலப்புழை என்னும் கொடுந் தமிழ் நாடே குட்டநாடு என்று பெயர் பெறும்.

**குணவாயில்** - துறவறத்தை மேற் கொண்டிருந்தவரும் சிலப் பதிகாரம் என்னும் சீரிய நூலினைச் செய்தவருமாகிய இளங்கோவடிகள் தங்கியிருந்த இடம் திரு என்னும் அடை யடுத்துத் திருக்குணவாயில் எனவும் வழங்கும். இது வஞ்சி நகரத்துக்குக் கிழக்குத் திக்கிலிருந்த கோயிலிட மென்பர்.

**குணசீலன்** - நிடதமன்னனாகிய நளனுடைய அமைச்சர்களில் ஒருவன். நூல்களை நன்கு கற்றுச் சிறந்த அமைச்சனாகத் திகழ்ந்தான். புட்கரனோடு சூதாடுதல் தீதாடுதலாம் என இவன் நளனுக்குப் பன்முறை யுரைத்தான். தீக்கோள்வயத் தனாகிய நளன் இவனுடைய உரையைக் கேளாமல் சூதாடிப் பல தொல்லைகட்குள்ளானான்.

**குணநிதி** - முன்னொரு காலத்தில் பாண்டி நாட்டை அரசாண்ட இவன் அகவை முதிர்ந்த பிறகு நாட்டைத் தன்னுடைய மக னிடம் ஒப்புவித்து விட்டுத் தான் தன்னுடைய மனைவி யோடும் உறுதிச் சுற்றத்தின ரோடும் சிவப்பதி கட்குப் பயணஞ் சென்று இறைவழி பாடு செய்துகொண்டிருந்தான். பலவிடங்கட்குஞ் சென்ற பிறகு இராமேசுவரத்தை யடைந்தான். அந்த இடம் இவனுடைய மனதிற்கு மகிழ்ச்சியை அளித்தது. அவ் விடமே தங்கி இராமநாதரைப் போற்றி வழிபட்டுக் கொண் டிருந்தான். ஒருசமயம் திரு மாலைக் குறித்து வேள்வி யொன்று செய்தான். திரு மகள் இவனுக்கு மகளாகத் தோன்றினாள். திருமால் வட நாட்டு அந்தணனைப் போல் வந்து திருமகளைத் திருமணஞ் செய்துகொண்டு இக்குண நிதிக்கு அருள்புரிந்தார்.

**குணபத்திரர்** - இவர் சூடாமணி நிகண்டியற்றிய மண்டல புருடருக்கு ஞானாசிரியர். திரு நறுங்குன்றை என்னும் ஊரில் சைனகுரு பீடத்தில் விளங்கி யவர். தமிழ்மொழியினுங் காலக் கணிதத்திலும் வல்லவர். புலவர்களாற் பாமாலை சூட்டிப் புகழப் பெற்றவர். இவர் கிருட்டிணராயர் காலத்தில் இருந்தவர் என்றும் அவரால் பாராட்டப்பெற்றவர் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறு கின்றனர்.

**குணபர வீச்சரம்** - பாடலிபுத் திரத்தில் இருந்த சமண்பள்ளி களையும் பாழிகளையும் இடித் துக்கொண்டு வந்து மகேந்திர வர்மன் என்னும் பல்லவஅரசன் சைவச் சார்பு பெற்றபிறகு திருவதிகையில் கட்டிய கோயில் இப்பெயருடன் வழங்குகிறது.

**குணமாலை** - குபேரமித்திர னுடைய மகள். இயல்பாகவே

சீவகனிடத்தில் காதல் கொண்டிருந்த இவள் அசனி வேக மென்னும் யானையின் மதத்தை யடக்கித் தன்னைக் காத்தது கண்டு அவனிடம் முறுகிய காதலுடையவளாய்த் தந்தை முதலியோரால் சீவகனை மணம் புரிந்தவள்.

**குணாட்டியர்** - இவர் பிருகத் கதை என வழங்கும் ஒரு பெரிய கதைக் களஞ்சியத்தை எழுதி இருக்கிறார். பிற்காலத்தில் பலர் இதிலிருந்து தம்முடைய நூல்களுக்கும் நாடகங்களுக்கும் வேண்டிய மூலக்கதைகளை எடுத்துக் கொண்டனர். இக் காரணத்தினால் இஃது இலக்கியத் துறையில் இராமாயண மகாபாரதங்களுக்கு ஒப்பான சிறப்பைப் பெற்றிருக்கிறது. இதில் உதயணன் கதையோடு அவனுடைய மகன் நரவாண தத்தனுடைய காதற் கதைகள் பல கிளைக்கதைகளுடன் தரப்பட்டிருக்கின்றன. இவர் இந்நூலைப் பைசாசம் என்ற பிராகிருத மொழியில் எழுதியதாகக் கூறப்படுகிறது. தமிழில் உள்ள கொங்கு வேளிரின் பெருங்கதைக்கும் முதல் நூல் இதுவேயாகும். குணாட்டியர் பிரதிட்டானபுரம் என்னும் ஊரில் கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்திருந்ததாக எண்ணப்படுகிறார்.

**குண்டலகேசி** - நாதகுப்தனார் என்பவரால் இயற்றப் பெற்ற ஒரு தமிழ் நூல். சீவகசிந்தாமணி முதலிய ஐம்பெருங் காப்பியங்களுள் நான்காவது. பௌத்த சமயத்தைப் புகழ்ந்து கூறுவது. குண்டலகேசியென்னும் ஒரு வணிகமாதின் வரலாற்றைக் கூறுவதால் இப் பெயர் பெற்றது. இந்நூல் முழுவடிவத்தோடிருந்த காலத்தில் உரையாசிரியர்கள் புலர் இந்நூலின் செய்யுட்களை மேற்கோளாக எடுத்தாண்டனர். இக்காலத்தில் அந்த மேற்கோள் செய்யுட்களைத் தவிர நூல் முழுவதுங் கிடைக்க வில்லை.

**குண்டையூர்க் கிழவர்** - இவர் ஒரு வேளாளர். சுந்தரர்க்கு நாடோறும் நெல்லளிக்குந் திருப்பணியைச் செய்தவர். இடையில் பஞ்சத்தால் நெல்லளிக்குந் திருப்பணிக்குத் தடையுண்டாகியது. அதனால் மனங் கலங்கி வருந்தினார். சிவபிரான் குண்டையூர்க் கிழவருக்கு நெல்லளிக்குமாறு குபேரனுக்குக் கட்டளையிட்டார். அதனால் குண்டையூர்க் கிழவருடைய இல்லம் முழுதும் நெல்லால் நிறைந்தது. அந் நெல்லைக் கிழவர் சுந்தரருக்குத் தெரிவித்து எடுத்துக் கொள்ளுமாறு செய்தார்.

**குதிரைமலை** - கொங்கு நாட்டில் உடுமலைப் பேட்டைப் பிரிவில் கொழுமம் என்னும் ஊரை யடுத்து இம்மலை உள்ளது. இது முன்னாளில் முதிரமலை என வழங்கியது. பெருந் தலைச் சாத்தனாருக்குத் தலையைக் கொடுக்க முன் வந்த குமணன் இம்மலையை ஆண்டிருந்தான்.

**குந்திதேவி**-குந்திபோசன்எடுத்து வளர்த்த அபிமானபுத்திரி. தேவமீடனுக்கு மாரிஷையிடத் துப்பிறந்தமகள். வசுதேவனுக் குத்தங்கை.இவளுக்குப் பிருதை என்றும் பெயர் உண்டு. இவள் தன்தந்தையினுடையகட்டளைப் படி துருவாச முனிவருக்குத் தொண்டுசெய்து அம்முனிவரால் மந்திரப்பேறு பெற்றாள். அதனால் இவளுக்கு மக்கட்பேற்றுத்திறம் உண்டாகியது. கன்னனையும் பாண்டவர்களையும் பெற்றவள்.

**குதுப்மினர்**-இது தில்லியில்உள்ள ஓர் அழகிய பழைமையான முஸ்லிம் கோபுரம். குத்புதீன் மன்னர் (ஆ. கா. 1206 - 1210 இல்) தூத்மிஷ் உதவியைக் கொண்டு கட்டத் தொடங்கி, முதல் தளத்தை முடித்த பின் இறந்துவிட்டபிறகு, அவருக் குப்பின் ஆட்சிசெய்த இல்தூத் மிஷ் கட்டிடத்தின் எஞ்சிய பகுதிகளைக் கட்டி முடித்தார். இந்துக்கலையைத் தழுவி முக மதியர்கள் கட்டிய அழகிய கட் டிடங்களுள் இதுவுமொன்று. அன்பர்கள் வழிபாட்டுக்காக ஒன்றுபடும் பொருட்டுக் கட் டப்பட்ட இது பின்பு வெற்றித் தூபியாகக் கருதப்பட்டது. பீருஸ்ஷா துக்ளக் காலத்தில் மின்னல் தாக்கி மேற்பகுதி சிதைவுண்டது. நான்காவது தளத்தை மணற்கல்லால் கட்டிப் புதுப்பித்தனர். இதற் குப்பின் 234 அடியாக உயர்ந் தது. 1503 இல் சிக்கந்தர் லோடி என்னும் அரசர் மேல் தளங்களைச் சீர்திருத்தினர். இதன் அருகில் புகழ் வாய்ந்த துருப்பிடியாத இரும்புத்தூண் உள்ளது.

**குபன்** - இவன் கதிரவ குலத்து மன்னன். இவனுடைய பெயர் சுபன் எனவும் வழங்கும். இவன் நான்முகனை நோக்கி நற்றவம்புரிந்து நலங்கள் பல பெற்றுச் சிறந்து விளங்கினன். இந்திரனும் இவனுக்கு நண்ப னுக இருந்தான். இவன் ஒரு நாள் ததீசிமுனிவரைக் கண் டான். தன்னேடு தங்கியிருக்கு மாறு வேண்டிக் கொண்டான். அவரும் இணங்கி இவனேடு தங்கினர். மன்னனுடைய நன் மையை மனத்திற் கொண்டு காரியங்கள் பலவற்றைச் செய் தார். அரசன் முனிவர்பால் அன்புகொண்டிருத்தல் சிலருக் குப்பொருமையை உண்டாக்கி யது. அவர்கள் அரசனிடம் ஒன்றுமில்லாத இம்முனிவ னிடம் ஏன் அன்பு கொண்டிருக் கிருய் அதனுல் யாது பலன்? என்று இவனுடைய மனதைக் கலைத்தார்கள். அதனுல் இவன் உளந்திரிந்து நின்ருன். ஒருநாள் அரசன் முனிவரைப் பார்த்து, "அரசர்கள் பெரியவர்களா? முனிவர்கள் பெரியவர்களா?" என்று முனிவரோடு சொற் போரிட்டான். முனிவர், "முனிவர்களே பெரியவர்கள்" என்று மொழிந்தார். முனிவர் மொழியால் முனிவு கொண்ட மன்னன் ஒரு தடியால் அடித் தான். அவர் இவனுடைய மடமைக் கிரங்கி இவனைப் பிரிந்து சென்ருர். இவனுடைய மடமையையும் முரட்டுத்தனத் தையுங் கண்ட நல்லவர்கள் சிலரும் இவனைப் பிரிந்து சென்றனர். அதன் பிறகு இவனுக்கு அல்லல்கள் பல உண்டாயின.

**குபேரதத்தன்** - சுரமஞ்சரியின் தந்தை, சுமதி என்பவளுடைய கணவன்.

**குபேரமித்திரன்**- இவன்ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரியிலே வாழ்ந்திருந்தவன். இவனிடம் பெருந்திரு அமைந்திருந்தது. வணிகர்குலத்தினனுகிய இவன் சிறந்த பண்புடையானுகத் திகழ்ந்திருந்தான். இவனுடைய மனைவியின் பெயர் வினயமாலை. இவன் தன்னுடைய செல்வம் பலருக்கும் பயன் படுமாறு செய்து கொண்டிருந்தான். பேரழகு பொருந்திய தன் னுடைய மகளாகிய குணமாலை யைச் சீவகனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்து அவளுக்குச் சீதனமாகக் கோடிப்பொன்னை யும் எழுநூறு இளமங்கை

யரையும் சிறந்த ஐந்து ஊர்களையுங் கொடுத்தான்.

**குப்புசாமி சாத்திரி. எஸ்** - தென்னிந்தியாவில் சமக்கிருதப் பேராசிரியராக இருந்து கல்வித் துறையிலும் ஆராய்ச்சித் துறையிலும் பலரை மேல்நிலைக்குக் கொண்டு வந்த சீரியர். 1906இல் சென்னை மயிலாப்பூர் சமக்கிருதக் கல்லூரி முதல்வராகவும், 1910இல் திருவையாறு அரசர் கல்லூரி முதல்வராகவும் திகழ்ந்தார். 1913 முதல் பல ஆண்டுகள் சென்னை மாகாணக் கல்லூரியில் சமக்கிருதப் பேராசிரியராக இருந்தார். 1937இல் அரசாங்கத்தால் "மகாமகோபாத்தியாய" என்ற பட்டம் இவருக்குக் கிடைத்தது. 1936இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சமக்கிருதப் பேராசிரியரானார். சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்தின் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். பின்பு சென்னை நூல் நிலையத்தில் சமக்கிருத திராவிட இலக்கியச் சுவடிகளைத் தேடிச் சேர்த்தார். 5-9-1943இல் காலமானார்.

**குமரகோட்டம்** - காஞ்சிபுரத்தில் முருகக் கடவுள் எழுந்தருளியுள்ள கோயில் குமரகோட்டம் என வழங்குகிறது. கந்த புராணம் பாடிய கச்சியப்ப சிவாச்சாரியார் பூசை புரிந்து கொண்டிருந்த திருக்கோயில்.

**குமரிக்கண்டம்** — இந்தியாவுக்குத் தெற்குப் பக்கத்தில்முன்னாளில் திகழ்ந்த ஒரு கண்டம். இக் கண்டத்திலே குமரிமலையும், குமரியாறும், பஃறுளியாறும் தமிழ் வளர்த்த சங்கங்களும் பழமதுரையாகிய தென்மதுரையும் கபாடபுரமும் இருந்தன. இக்கண்டத்தை இலெமூரியா என்றுங் கூறுவர். இந்நாட்டைப்பற்றிய பல செய்திகள் குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு என்னும் ஆராய்ச்சி நூலில் விளக்கமாகக் கூறப்படுகிறது. தமிழ் மொழி நன்கு வளர்ந்தோங்குதற் கிடமாக விருந்த இக்கண்டம் நாளடைவில் கடலுக்கிரையாகியது.

**குமரியாறு** - கடல்கோளால் அழிவுற்ற ஏழ்மதுரை நாட்டில் தென் மதுரைக் கணித்தாக வோடிய ஓர் ஆறு. அஃது இப்பொழுது குமரிக் கோவில் இருக்குமிடத்திற்குத் தெற்கே முப்பது கல் தொலைவில் ஓடியிருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

**குமாரகம்பணன்** - இவன் முதலாம் புக்கராயருடைய மகன். சிறந்த போர் வீரன்; படைத்தலைவன்; பெரும் படையுடன் தெற்கு நோக்கிச் சென்று சிற்றரசர் பலரை வென்றான். மதுரையில் நிலை பெற்றிருந்த முகமதியராட்சியை ஒழித்தான். பாண்டிய நாட்டில் அமைதியை நிலை நிறுத்தி மீண்டான். இவனுடைய மனைவியின் பெயர் கங்காதேவி. இவள் நல்ல அறிவாளி. தன்னுடைய கணவன் தென்னாட்டிற்குச் சென்று போர் செய்ததைக் குறித்து "மதுராவினு" என்னும் பெயருடன் வடமொழியில் நூல் ஒன்றை இயற்றினாள்.

**குமார குப்தன்** - இவன் சந்திர குப்த விக்கிரமாதித்தனுடைய மகன். இவன் கி. பி. 414இல் அரியணை ஏறினான். இவன் குதிரை வேள்வி ஒன்று செய்ததோடு அதையொட்டிக் காசு ஒன்றும் வெளியிட்டான் என்பர்.

**குமார தந்திரம்** - குமாரதந்திரம் என்பது எண்ணாயிரந்

சுலோகங்களையுடைய இலளிதம் என்னும் ஆகமத்தின் முப்பிரிவினுள் ஒன்று. இது குமாராகமம்எனவும் கௌமாரதந்திரம் எனவும் வழங்கப்படும். கௌமாரதந்திரம் என்னும் உபாகமம் இக்காலத்தில் இல்லையெனவும் இப்போதுள்ளது குமாரவிதி பற்றிய சாரதா திலகம் முதலிய பல நூல்களின் திரட்டென்றுங் கூறுவர்.

**குமாரதாதா சாரியர்** - சோழவள நாட்டில் தஞ்சையிலிருந்த சிறந்த வடமொழிப் புலவர்களில் ஒருவர். இவருடைய தந்தையின் பெயர் வேங்கடேசாசாரியர். இவர் பாரிசாதாபகரணம் என்னும் வடமொழிநாடகநூலையியற்றினர். அந்நாடகத்தில் அந்நாளில் தஞ்சைக் கரசனாக விருந்த இரகுநாதநாயுடு என்பவனுடைய பெருமையைப்பற்றிப் புகழ்ந்துள்ளார்.

**குமார வியாசர்** - இவர் புகழ் பெற்ற கன்னடக் கவிஞர். கன்னட பாரதம் இவரால் இயற்றப் பெற்றது. விசயநகர மன்னன் பிரபுடதேவராயர் (1419 - 1446) காலத்தவர். ‘கதகு’ மாவட்டத்திலுள்ள ‘கோலிவாடு’ கிராமத்தைச் சேர்ந்தவர். இலட்சுமண தேவரின் புதல்வர். இவரியற் பெயர் “நாரணப்பா” என்பது. “குமார வியாசர்” என்பது பட்டப் பெயர். இவர் பள்ளியிற் கல்வி பயிலா விட்டாலும் கன்னடத்திலும் வடமொழியிலும் மிகுந்த தேர்ச்சி பெற்றவர். பாரசிகம், அரபு, மராத்தி முதலிய மொழிகளிலிருந்து ஏராளமான சொற்களைத் தம் நூலில் எடுத்தாண்டுள்ளார். ‘கதகு’ என்னும் ஊரில் கோயில் கொண்டுள்ள வீரநாராயண சுவாமி இவருடைய குலதெய்வம். இவரது நடை எளிதாகவும் அழகாகவும் இருப்பதால் பொது மக்கள் இவருடைய நூலை விழைந்து படிப்பர். பழமொழிகளும், கற்பனையும், உருவகமும் இவர் நூலில் மலிந்துள்ளன.

**குமாரசாமிக் காங்கேயன்** - இவன் கொங்குவள நாட்டில் மோரூரில் இருந்தவன். படிக்காசுப் புலவர் கொங்கு நாட்டிற்கு வந்து கொங்குப் புலவர்களிடந் தோல்வி யடைந்து தம்முடைய பொருள்களையெல்லாம் இழந்து வருந்திய போது இவனிடஞ் சென்றார். பாம்பலங்காரர் மீது வருக்கக் கோவைபாடி இவன் முன் அரங்கேற்றினர். இவன் தக்கபடி நன்கொடை வழங்கிப் போற்றினன். இவனுக்கு இம்முடிமசக்காளி மன்றாடி என்னுஞ் சிறப்புப் பெயர் உண்டு. இவன் புகழ்ப் பாடல்கள் பல பெற்றிருக்கிறான்.

**குமாரவீரன்** - கட்டபொம்முவின் வழி முறையில் பாஞ்சாலன் குறிச்சிக்கு ரூ ஆவது பட்டத்தரசனாக விருந்தவன். இவனுடைய தந்தையின் பெயர் விசயரகுநாதன். குதிரை யேற்றம் முதலியவைகளிற் சிறந்து விளங்கிய இவன் எல்லோரிடத்திலும் இரக்க முடையவனாக விருந்தான். கல்வியறிவுஞ் சொல்வன்மையும் இவனிடம் சிறந்து விளங்கின. குடிகளைப் பேரன்போடு காத்தான். இவனுடைய ஆட்சி ஐந்தாண்டுகளே நீடித்தன.

**குமாரன் ஆசான்** (1871 - 1924) இவர் மலையாள மொழிக் கவிஞர். திருவிதாங்கூரைச் சார்ந்த “சிறையின் கீழ” தாலுக்காவில், கடைக்காவூரில் பிறந்தவர். இவரியற் பெயர்

குமாரு. சமக்கிருதமும் தமிழும் கற்ற இவர் சிறிது காலம் மாணவர்களுக்குச் சமக்கிருதம் கற்றுக் கொடுத்து வந்தமையால், இவரைக் "குமாரன் ஆசான்" என மக்கள் அழைத்தனர். தமது முப்பதாவது அகவையில் சமூக ஊழியரானார். 'விவேகோதயம்'' என்ற பத்திரிகையை நடத்தினார். நாராயணகுரு என்ற அருட்பெரியாரின் தொடர்பினால் கவிதைத் துறையில் நாட்டம் எழுந்தது. பெரிய தத்துவ ஞானியானார். ஈழவர் குலத்தவரான இவர் சாதி இந்துக்கள் தம் குலத்தவரைப் படுத்தி வந்த சமூகக் கொடுமைகளைக் கண்ட போது ஏற்பட்ட உணர்ச்சி வெள்ளத்தை யெல்லாம் தம் கவிதைகளில் தேக்கி வைத்தார். தொன்மை மரபின் படி வளர்ந்து வந்த மலையாளக் கவிதையைப் புதிய முன்னேற்றத் துறையில் செலுத்தினார். ஆகையால் முதல் மறுமலர்ச்சி எழுத்தாளராக இவர் கருதப்படுகின்றார். இவர் எழுதிய நூல்களில் முதன்மையானவை **வீணபூவு, சண்டாள பிக்ஷுகி, நளினி, லீலா, கருணை, துரவஸ்தா, சீதா** என்பவை.

**குமாராங்குசன்** - இவன் நந்திவர்மனுக்குக்கீழ் அடங்கிய சிற்றரசன்; சோழர் குலத்தைச் சேர்ந்தவன்.

**குமாரிலபட்டர்**-இவர் மறைகளின் சிறப்பை மறுத்த பௌத்த சமயத்தை முழு ஆற்றலுடன் எதிர்த்தார். பௌத்த சமயத்தை அடக்கிச் சைவ சமயத்தைப் பரப்புவதில் சங்கரரை விட மிகுதியாகத் தொண்டு செய்தார். இவர் பலமொழிகளிலும் வல்லவர். மீமாம்ச முறையில் புதிய பிரிவை இவர் உண்டாக்கினார். தம்மை ஒரு பௌத்தர் என்று உண்மையை மறைத்துக்கூறிப் பௌத்த ஆசிரியர்களிடமிருந்து அச்சமயக் கருத்துக்களை உணர்ந்தார் என்றும் பிறகு முதுமைப் பருவத்தில் குருத்துரோகக் குற்றத்திற்காகத் தம்மைத் தாமே தீக்கிரையாக்கிக் கொண்டார் என்றுங் கூறப்படுகிறது. இவர் பௌத்த அறிஞர்களை வாதில் வென்று மறைகளின் உயர்வை நிலைநிறுத்திப் புத்தசமய வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்தார்.

**குமாருப்பிள்ளை** - பாண்டிவள நாட்டில் பாஞ்சாலன் குறிச்சியில் சகஆவது பட்டத்தையடைந்து நாட்டையாண்டிருந்த செகவீரக்கட்டபொம்முவிடம் அமைச்சராகவிருந்தவர். வேளாளகுலத்தினர்.

**கும்பகன்** - விதேகபுரி என்னும் ஊரில் இருந்த ஓர் இடையன். இப்பெயரைக் கும்பாண்டன் எனவுங் கூறுவர். இவனுடைய வீட்டில் தாரகப் போரிலிறந்த காலநேமி புத்திரர் ஏழுபேரும் இடபங்களாகப் பிறந்தனர். அக் காளைகளைக் கண்ணன் தழுவிக் கொன்று அவனுடைய மகளை மணந்தனன்.

**கும்மந்தான்கான்சாகிபு** - இவன் இராமநாதபுரத்திலுள்ள பனையூரில் இந்து வேளாளனாகப் பிறந்தான். இவனுடைய பிள்ளைப்பெயர் மருதநாயகம் பிள்ளை என்பது. இவன் சிறுவனாகவிருந்தபோது பெற்றோர்கட்கு அடங்காதவனாகவிருந்தான். வீட்டைவிட்டோடிப் பலவிடங்களினுஞ் சுற்றினான். முகமதியர் சிலர் இவனை முகமதிய மதத்தைத் தழுவச் செய்தனர். முகமது கான் சாகிபு என்னும் பெயரடைந்த இவன் புதுச்

சேரிக்குச் சென்றான். அங்கே படகோட்டியாகவுந் தையற் காரனாகவுஞ் சிலகாலமிருந் தான். பிறகு ஓர் ஐரோப்பிய னிடம் வேலைபார்த்தான். ஆங் கிலம், பிரெஞ்சு, போர்த்துகீஸ் முதலிய பிறமொழிகளையும் தென்னிந்திய மொழிகளையும் ஓரளவு கற்றுக்கொண்டான். பிறகு ஆங்கிலேயருடைய போர்ப்படையிற் சேர்ந்தான். தன்னுடைய ஆற்றலாலும் சூழ்ச்சித்திறத்தாலும் வெள்ளை யர்களுடைய நன்மதிப்பைப் பெற்றான். கான்சாகிப்புக்கு மேலதிகாரியாக இருந்தவன் ஆங்கில ஆட்சி இந்தியாவில் ஏற்படுவதற்குக் காரணமாக விருந்த கிளைவுதான். இந்தக் கிளைவு கான்சாகிப்பைப் புகழ்ந்து மேலதிகாரிகட்குக் கடிதம் எழுதினான். கிளைவை யன்றி அச்சமயத்தில் ஆங்கிலப் படைகட்குத் தலைமை தாங்கிய லாரென்ஸ் என்பவனும் "கான் சாகிப் சிறந்த தளபதி; நாட் டின் நிலையை நன்குணர்ந்தவன். உறுதியும் வீரமும் நிறைந் தவன். போரிடுங் காலங்களில் அமைதியோடும் அறிவோடுங் காரியங்களைச் செய்வான். ஒரு கணமும் ஓய்வு கொள்ளாமல் எல்லா வேலைகளையுந் தானே ஏற்றுச் செய்வான்" என்றும் பாராட்டிக் கூறியுள்ளான். பரங்கிமலையிலும் சதுரங்க பட்டினத்திலும் நிலைபெற் றிருந்த டச்சுக்காரர்களின் கோட்டைகளைப் பிடிக்கக் கான்சாகிபு ஆங்கிலேயருக்குத் துணைசெய்தான். தென்னாட்டை யடக்குவதற்கு ஆங்கிலேயர் கள் இவனையே அனுப்பி வைத் தனர். பல ஆண்டுகள் முயற்சி செய்து தென்னாட்டுப் பாளையக் காரர்களை யடக்கினான். வீரனாக விளங்கிய பூலுத்தேவனும் இவ னுடைய ஆண்மையைக் கண்டு அஞ்சினான். பல கொடுமை களைச் செய்து ஆங்கிலேயரு டைய ஆட்சியைத் தென்னாட் டில் நிலை நிறுத்தினான். ஆனால் ஆங்கிலேயர் இவனை ஒழித்துக் கட்ட முடிவு செய்தனர். இவன் பாளையக்காரர்களைப் போலத் தானுந் தென்னாட்டில் அரசை நிறுவ முடிவு செய்து மதுரையில் முடி சூட்டிக் கொண்டான். பாளையக்காரர் பகையையும் ஆங்கிலேயர்பகை யையுந் தேடிக்கொண்ட இவ னுக்கு இருபுறத்தினுந்தொல்லை யேற்பட்டது. பகைவர்கள் கையிற் பிடிபட்டு, 1764ஆம் ஆண்டுஅக்டோபர் 15ஆம் நாள் மாலை 5 மணிக்குத் திண்டுக்கல் செல்லும் வழியில் ஒரு பெரிய மா மரத்தில் தூக்கிலிடப்பட் டான். அவனுடைய தலை முத லிய உறுப்புக்கள் கூறு கூறாக வெட்டப்பட்டுப் பலவிடங் கட்கும் அனுப்பப்பட்டன.

**குயக்கோடன்** - கடைச் சங்கப் புலவர் காலத்தில் மதுரையில் இருந்த ஒரு வடமொழிப் புலவன். இவனுடைய இயற் பெயர் கோடன். குயவர் குலத்தினனாதலால் குலப் பெயரையுஞ் சேர்த்துக் குயக் கோடன் என வழங்கப் பெற் றான். தமிழனாக விருந்தும் வடமொழியைக் கற்ற அளவில் அதனிடத்துப் பெரும் பற்றுக் கொண்டு தமிழ் மொழியை இகழ்ந்துரைத்து நக்கீரரால் வசைபாடப்பெற்றவன். வசைப் பாட்டால் மாண்டவனைப் பின் புலவர்கள் வேண்டுகோளின் படி நக்கீரர் உயிர் பெற்றெழு மாறுஞ் செய்தார். இவன் உயிர் பெற்றெழுமாறு நக்கீரர் பாடிய பாட்டு :-

"ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தால் காலக்கோள் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால்
செந்தமிழே தீர்க்கசுவா கா."

என்பது

முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—அரணிலா
ஆனந்த வேட்கையான் வேட்கோக்
குயக்கொண்டான்
ஆனந்தஞ் சேர்கசுவா கா.

என்பது முதலில் மாளுமாறு பாடிய பாட்டு.

**குரக்குத்தளி** - இக்கோயில் கொங்குவள நாட்டில் பெரிய பாளையம் என்னும் ஊரில் இருக்கிறது. இவ்வூர் திருப்பூர் இருப்புப் பாதை நிலையத்தில் இருந்து கிழக்கே ஐந்து கல் தொலைவிலும் கூளிப்பாளையம் நிலையத்திலிருந்து தெற்கே இரண்டு கல் தொலைவிலும் உள்ளது. இவ்வூர் தேவார வைப்புத் தலம். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைச் சுக்கிரீவன் வழிபட்டனன். அதனால் இறைவனுடைய பெயர் சுக்கிரீசுவரர் என்று வழங்குகின்றது. குரக்குத்தளி என்னில் குரங்கினால் வழிபடப்பெற்ற கோயில் என்பது பொருள். இவ்வூருக்கு முன்னாளில் முகுந்தபுரி என்று பெயர் வழங்கியதாம். குரக்குத்தளி என்னும் பெயர் இந்நாளில் மறைந்து விட்டது.

**குரங்கணில் முட்டம்** - தொண்டை வளநாட்டில் காஞ்சிபுரத்திற்குத் தெற்கே ஆறு நாழிகை வழித்தொலைவில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதி. குரங்கும் அணிலும் காக்கையும் வழிபட்ட ஊராகையால் இவ்வாறு பெயர் பெற்றது. குரங்கு - வாலி. முட்டம் - காக்கை. வாலி பூசித்தபடியால் இறைவருடைய பெயர் வாலீசுரர் என வழங்குகிறது.

**குரவைக்கூத்து** - இது முருகக் கடவுள் திருவுளம் மகிழுமாறு ஆடப்படுங் கூத்தாகும். பெண்கள் எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கை கோத்துக் கொண்டு ஆடுவது. இக்கூத்தை முல்லை நில மக்களாகிய இடைச்சியர்களும் குறிஞ்சி நிலமக்களாகிய குறத்தியர்களும் ஆடினார்கள். இடைச்சியர் ஆடுவது ஆச்சியர் குரவை எனப் பெறும். இது கண்ணனை நோக்கி ஆடியது. முருகனை நோக்கிக் குறத்தியர் ஆடியது குன்றக் குரவை எனப் பெறும்.

**குருகூர்** - பறவை வழிபாடு செய்தபடியால் வைத்தீசுவரன் கோயிலுக்கு உண்டாகிய காரணப் பெயர். குருகு பறவை; சண்டுச் சடாயு.

**குருகோவிந்த சிங்கு** - (*1666 - 1708*) இவர் சீக்கியக் குருமார்களில் கடைசியானவர். இந்திய வரலாற்றுப் பெரியார்களில் சிறந்த ஒருவர். *1675*இல் மொகலாயரால் கொல்லப்பட்டு இறந்த ஒன்பதாவது குரு டெக் பகதூர் சிங் (Teg Bahadur) என்பவரின் புதல்வர். தம் தந்தையைத் தாக்கிவிட்ட மொகலாயரைப் பழிக்குப்பழி வாங்க, சீக்கியரை ஒன்று படுத்தி, சீக்கியர்களின் போர் வலிமையைப் பெருக்கினார். இவர் வாழ்ந்துவந்த ஆனந்த புரக் கோட்டை ஐந்துமுறை தாக்கப்பட்டும் இவர் வலிமை குன்றவில்லை. இவர் தொகுத்த "கிரந்த்" என்ற பாடல் தொகுதியைச் சீக்கியர்கள் தங்கள் பாராயண நூலாகக் கருதி வருகின்றனர்.

**குருவாயூர்** - இது மலபார் மாவட்டத்தில் பொன்னானித் தாலுக்காவிலுள்ள கிராமம். இங்குள்ள பழைமையான கிருட்டிணன் கோவில் மிகவும் புகழ் வாய்ந்தது. கோவில் சுவரில் பாகவதத்திலுள்ள கதைகளை விளக்குங் காட்சிகள் சித்திரிக்கப் பட்டுள்ளன.

1931 இல் கேரள மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவரா யிருந்த கேளப்பனும் காந்தியடிகளும் முயன்றும் அரிசனங்களுக்குத் திறந்துவிடமறுக்கப் பட்ட இக்கோயிலில் இப்பொழுது சென்னை சட்டசபை 1947 இல் நிறைவேற்றிய சென்னை ஆலயப்பிரவேச அனுமதிச் சட்டப்படி இந்துக்கள் அனைவரும் வழிபாடு செய்து வருகின்றனர்.

**குருநானக்**-இவர் சீக்கிய மதத்தை நிலை நாட்டியவர். இவர் பஞ்சாபில் இருந்தார். நல்லொழுக்கம், சாதி பேதமின்மை,கடவுள் ஒருவரே என்னுங் கொள்கை ஆகியவைகளைக் குருநானக் பரப்பினர். முகம்மதியர்களையும் இந்துக்களையும் ஒன்றுபடுத்த முயன்றார். இவருக்குப் பின்வந்த சீக்கிய குருமார்களும் சீக்கிய மதத்தைப் பரவச் செய்யப் பெரிதும் முயன்றார்கள். இராமதாஸ் என்பவர் இந்நாளில் அமிர்தசரசு என வழங்கும் ஓர் இடத்தைப் பெற்று ஓர் ஏரியை வெட்டி அதன் நடுவே புகழ் பெற்ற பொற்கோயிலைக் கட்டினார். அமிர்தசரசிலுள்ள சீக்கியர்கள் ஒன்று சேரவும் வழிபாடு செய்யவும் அந்த இடம் தகுதி வாய்ந்ததாயிற்று.

**குரூராசுரன்** - ஆனைமுகக்கடவுளைக் கொலை செய்ய எண்ணிய அசுரர்களில் ஒருவன். இவன் பூனை வடிவமெடுத்து ஆனைமுகக் குழந்தையை அது படுத்திருந்த கட்டிலோடு தூக்கிக் கொண்டு விண்ணிற்பறந்தான். கட்டிலைக் கவிழ்த்தால் ஆனைமுகக்கடவுள் கீழே விழுந்து இறந்து போவார் என்று எண்ணிக் கவிழ்த்தான். ஆனால் ஆனைமுகக்கடவுள் அவனுடைய காதுகளைப் பிடித்துக் கொண்டு தொங்கினார். காலால் உதைகள் கொடுத்தார். இதனால் அசுரன் மாண்டொழிந்தான்.

**குலைவணங்கு நாதர்** - திருவட குரங்காடு துறையில் எழுந்தருளிய சுவாமியின் பெயர். நிறைந்த கருப்பத்தோடும் வழி வருத்தத்தோடும் நீர் வேட்கையோடும் வந்த ஒரு பெண்ணுக்குத் தென்னங்குலையை வளைத்துக் கொடுத்தருளிய காரணத்தால் இவ்வாறு பெயர் அமைந்ததென்பர்.

**குலோத்துங்க சோழகடம்பராயன்**-இவன் புதுக்கோட்டையைச் சேர்ந்த நிலப்பரப்பில் இராசராசன் காலத்திலிருந்த ஓர் அரசியல் அதிகாரியாவன். இவன் குடுமியான் மலையிலுள்ள திருநலக்குன்றமுடையார் கோயிலில் நாள்தோறும் இரண்டு திருவிளக்கு வைப்பதற்குக் கட்டளை யேற்படுத்தினன் என்பது அவ்வூர்க் கல்வெட்டொன்றால் அறியப்படுகின்றது.

**குலோத்துங்க சோழயாதவராயன்**-இவன் திருக்காளத்தியைச் சூழ்ந்த நிலப்பகுதியை அரசாண்ட ஒரு யதுகுலச் சிற்றரசன். கட்டிதேவன் என்னும் பெயரும் இவனுக்கு வழங்கியது. திருக்காளத்திக் கோயிலில் துறவிகட்கும் அந்தணர்கட்கும் பிறருக்கும் உணவிடும் பொருட்டு வீரமங்கலம் என்னும் ஊரை இவன் கி. பி. 1139 இல் அக்கோயிலுக்குத் தானமாக வழங்கினன்.

**குவலயமார்த்தாண்டன்**-தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**குவலயாசுவன்** - இவன் சத்துருசித்துவினுடைய மகன். இவனுக்குக் காலமுனிவர் நீரினும் மலையினும் காட்டினும் நினைத்தபடி சுற்றித் திரியக்கூடிய ஒரு

குதிரையைக் கொடுத்தார். அது காரணமாகக் குவலயாசுவன் என்னும் பெயர் உண்டாகியது.

**குழகர் கோயில்** - இது கோடியக் கரை என வழங்கும். தேவர்கள் பாற்கடல் கடைந்து பெற்ற அமுதத்தில் எஞ்சியதை வாயுவின் கையில் கொடுத்தனர். அவன் அதனை வான வீதியிற் கொண்டு செல்லும்போது அது கீழேவிழுந்து சிவலிங்க உருவமாக அமைந்தது. பிறகு தேவர்கள் வந்து வழிபட்டு அமுதம் பெற்றனர். இதனுல் சுவாமிக்கு அமுதகடேசர் என்று பெயர் உண்டாகியது. கோடியக்கரைப் புகை வண்டி நிலையத்திற்கு வடக்கே ஒரு மைல் தொலைவில் உள்ள இப்பதி தேவாரம் பெற்ற சிறப்புடையது.

**குழந்தைவேலப்பர்** - பழநியிலே சுவணகுத்தன் என்னும் பெயருடைய செட்டி ஒருவன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் மகேசை. அவர்களிருவரும்பிள்ளைப் பேறில்லாமல் வருந்தித் திருமாலை நோக்கித் தவஞ் செய்தார்கள். திருமாலுடைய திருவருளால் அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தை ஐந்தாம் ஆண்டில் நீராடச் சென்றது. நீருள் மூழ்கிய குழந்தை திருமாலுடைய கைக்குச் சங்காகியது. நீராடச் சென்ற குழந்தை வராமற் போகவே குழந்தையின் பெற்ருேர் வருந்தி முருகக்கடவுளை வேண்டினர். முருகன் குழந்தை வேலப்பனுக வெளிப்பட்டார். செட்டியாரும் அவருடைய மனைவியும் குழந்தையைப் பெற்றதால் மிகுந்த மகிழ்ச்சியடைந்தனர். முருகன் செட்டியாருக்கு உண்மையை உணர்த்தத் திருவுளங் கொண்டார். தம்முடைய உண்மை வடிவத்தை அவர்களுக்குக் காட்டினுர். "நீங்கள் எமக்கு வழிவழித் தொண்டு பூண்டமையால் மகனுக வந்தோம். உங்களுடைய மகன் திருமாலுடைய திருக்கையிலுள்ள பாஞ்சசன்னியம் ஆவான். நீங்கள் துன்பமடைந்ததைக் கண்டு நாம் உங்களுக்கு மகனுக வந்தோம்" என்று கூறிமறைந்தருளினுர். வணிகனும்அவனுடைய மனைவியுஞ் சிலகாலம் முருகனை வழிபட்டுக் கொண்டிருந்து வீடு பெற்றனர்.

**குளக்கோடன்** - சோழ மன்னர்களில் ஒருவன். கி. பி. நான்காம் நூற்ருண்டில் சோழ நாட்டை ஆட்சி செய்திருந்தான். ஈழத்தின் மீதுபடையெடுத்துச் சென்ற சோழ மன்னர்களில் இவன் ஒருவன். இலங்கையின் ஒரு பகுதியைக் கைப்பற்றிய இவன் திருக்கோணமலைக் கோயிலைக் கட்டியதன்றிக் கோட்டையுங் கட்டினுன். வன்னியர் என்னுஞ் சிற்றரசர் எழுவரைக் கொண்டு சிறிது நாள் ஆட்சி புரிந்தான். இவனுலுந் தமிழர்கள் பலர் ஈழத்தில் குடியேற்றப்பட்டனர்.

**குறிஞ்சிப்பாட்டு** - பத்துப்பாட்டினுள் எட்டாவது பாட்டு. ௨௬௧ அடிகளையுடைய அகவற் பாவால் அமைந்தது. தலைவியின் வேற்றுமை கண்டு வருந்திய செவிலிக்கு அறத்தொடு நிற்கும் பாங்கி கூற்ருக ஆரிய வரசன் பிரகத்தனைத் தமிழறிவுறுத்தற்குக் கபிலர் பாடியது. இது மலை வளங்களையும் இல்லற முறைமையையும் தலைவனுந் தலைவியுந் தம்முள் வைக்கத்தகும் அன்புடைமையையும் கற்பின் இன்றியமையாமையையுங் கூறும்,

**குறும்பலா** - திருக்குற்றாலத்தினுள்ள ஒரு கோயில். அகத்திய முனிவரால் திருமாலினுடைய உருவத்தைச் சிவனுருவாக ஆக்கப் பட்ட இடம். குற்றாலங் குறும்பலா என்று ஒன்றாகவே சேர்த்துக் கூறப்படும்.

**குற்றம்பொறுத்த நாதர்** - திருக்கருப்பறியலூரில் எழுந்தருளிய இறைவனுடைய பெயர். இவ்வூர் தேவாரப் பதிகம் பெற்ற சிறப்புடையது. இந்திரன் அமைத்து வழிபட்டது. இந்திரன் ஒரு நாள் மிகுந்த ஆணவத்தோடு திருக்கைலைக்குச் சென்றான். இந்திரனுடைய ஆணவத்தைப் போக்க எண்ணிய இறைவர் ஓர் இயக்கனைப் போல இந்திரனுக்கு முன்னே வந்தார். இந்திரன் அவர் இறைவர் என்பதை உணராமல் அவர்மீது தனது வச்சிரப் படையை ஏவினான். பிறகு தன்னுடைய தவற்றினை உணர்ந்தான். அக்குற்றம் நீங்குமாறு இவ்வூருக்கு வந்து வழிபட்டுத் தன்னுடைய குற்றத்தைப் போக்கினான். அதனால் சுவாமிக்கு இவ்வாறு பெயர் உண்டாகியது.

**குற்றால அகத்தியர்** - இவர் பொதிய மலையில் குற்றால அருவிக்கு மேற்குப் பக்கத்தில் இருப்பிடம் ஒன்று அமைத்துக் கொண்டு அதில் வாழ்ந்திருந்தார். அந்நாளில் குற்றால அருவிக்கண்மையில் இருந்த திருக்கோயில் திருமால் திருக்கோயிலாக இருந்தது. ஒருநாள் குற்றால அகத்தியர் திருமால் கோயிலுக்குச் சென்றார். அங்கிருந்த வீரவைணவர்கள் குற்றால அகத்தியருடைய சிவக்கோலத்தைக் கண்டு வெறுத்தார்கள். கோயிலுக்கு வரக்கூடாது என்று தடுத்து விரட்டினார்கள். குற்றால அகத்தியர் தம்முடைய இருப்பிடத்திற்குப் போய் வைணவக் கோலம் பூண்டு மீண்டுங் கோயிலுக்குச் சென்றார். வைணவர்கள் அகத்தியரை வரவேற்றுப் போற்றினார்கள். அகத்தியர் திருமாலைச் சிவபிரானாக எண்ணி வணங்கியதுடன் சிவபிரானாகக் காட்சியளிக்க வேண்டுமென்று மனங்குழைந்து வேண்டிக் கொண்டார். அன்று முதல் அப்பெருமாள் கோயில் சிவன் கோயிலாகியது. ஆங்கிருந்த வைணவர்கள் திகைத்து வேறிடஞ் சென்றனர்.

**குன்றன் திருச்சிற்றம்பல முடையார்** - (11-ஆம் நூ.) இவர் கல்வெட்டினால் அறியப் பெறும் புலவர். புதுக்கோட்டையைச் சார்ந்த குளத்தூர்த் தாலுக்கா நாங்குப்பட்டி மடத்துக் கோயில்பிராகாரமுகப்பில் இராச கேசரிவர்மனை திரிபுவன சக்கரவர்த்தி குலோத்துங்கசோழனது 13 ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டொன்றுளது. அதனில், சோழ நாட்டிலுள்ள உறத்தூர்க் கூற்றத்துப் பையூருடையான்என்ற தலைவனைப் பாடிப் புகழ்ந்த புலவர் செயங்கொண்டசோழ மண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்து மருதத் தூரரான் "குன்றன் திருச்சிற்றம்பல முடையார்" என்பவர் என்று விளங்குகிறது.

**குன்றை எல்லையப்பன்** - இப்பெயரையுடையவர் தொண்டைமண்டலத்தில் குன்றத்தூரில் வாழ்ந்திருந்தார். சிறந்த கொடையாளி. இவருடைய புகழ் நாடு முழுவதும் நன்குபரவிநின்றது. எல்லையப்பன் என்னும் இடுகுறிப் பெயரோடு ஊரின் மரூஉப் பெயரும் சேர்ந்து குன்றையெல்லையப்பன் என வழங்கியது. வேளாண்மையாற்

பெரும் பொருளீட்டிய இவர் செல்வத்துப் பயன்ஈதலேஎனத் துணிந்து தமது செல்வத்தை ஈந்து வந்தார். அதனால் இவருடைய பெயரும் புகழும் என்றும் நிலை பெறுவதாயிற்று.

**கூச்மாண்டன்** - இவன்ஓர் அசுரன். இவன் தேவர்களுக்குத் துன்பஞ் செய்து கொண்டிருந்தபடியால் இவனைத் திருமால் கொலை செய்தார். இவனுடைய உடலின் மயிரில் இருந்து கூச்மாண்டமென்னுங் கல்யாணப் பூசனிக் கொடியுண்டாயிற்று. இதனைத் தென்புலத்தார் பொருட்டுத் தானஞ் செய்யின் மிகுந்த பலனுண்டாம்.

**கூடற்கோமான்** - கூடல் என்பது மதுரைமாநகரின் பெயர்களில் ஒன்று. பாண்டியன் மதுரைக்குத் தலைவனாக விளங்கியபடியால் இச்சிறப்புப் பெயர் உண்டாகியது.

**கூத்தச் சாக்கையர்** - தமிழ் நாட்டுப் பழங்குடி மக்களுள் ஒரு வகையினர். இவர்கள் கூத்துக்கள் நிகழ்த்துவதில் வல்லவர்களாகையால் கூத்தச்சாக்கையர் என்று காரணப் பெயர் பெற்றனர்.

**கூத்தனூரப்பன்** - இவர் ஒரு சிறந்த தமிழறிஞர். இவர் கிருட்டிண தேவராயர் காலத்தில் இருந்தார். பாடுவதில் வல்லவர். இவரைப் பற்றிய வரலாறு மறைந்தொழிந்தது.

**கூத்தன் சேதுபதி** - சடையக்கத் தேவன் என்பவனுடைய மகனாகத்தோன்றிய இவன் இரண்டாவது சேதுபதியாகப் பதின்மூன்றுண்டுகள் சேதுநாட்டை அரசாட்சி செய்தான்.

**கூப்பிடு விநாயகர்** - இப்பெயருடைய விநாயகர் கோவில் திருமுருகன் பூண்டிக்கு வடக்கில் அரைநாழிகை வழித்தொலைவில் உள்ளது. சேரமான் பெருமாளிடம் சுந்தரர் பெற்றுவந்த பொருளை இறைவன் திருவுளப்படிபூதகணங்கள் வேடுவராகிப் பறித்த சமயத்தில் அங்குவந்து சேர்ந்த சுந்தரருக்கு இவ்விநாயகர் "கூ கூ" என்று கூவி இறைவர் இருக்குமிடத்தைக் காட்டியருளிய படியால் இவ்விநாயகர் இவ்வாறு பெயர் பெற்றார்.

**கூரகுலோத்தமதாசர்** - இவர் திருவரங்கத்தில் அந்தணர் வகுப்பில் ஐப்பசித் திருவாதிரையில் தோன்றியவர். பஞ்சசம்ஸ்காரம் செய்த ஆசிரியர். வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாசாரியரிடம் ஈடுமுதலிய வியாக்கியானங்களும், சிரீபாஷ்யமும், சுருதப்பிரகாசிகையும், அவர் திருத்தம்பியார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரிடத்தில் தத்துவத்திரயம் முதலிய சகல மெய்யுணர்வுகளையும் அருளக் கேட்டவர். திருவரங்கத்தில் வதிந்தவர்.

**கூரத்தாழ்வார்** - காஞ்சீபுரத்திற்கு அண்மையில் உள்ள கூரம் என்னும் ஊரிற் பிறந்தவர். அப்பதியில் எழுந்தருளிய பெருமாளுடைய பெயராகிய ஆழ்வார் என்பதை மேற்கொண்டவராகையால் கூரத்தாழ்வார் என்று பெயர்பெற்றார். திருமறுமார்பன் எனவும் இவருக்குப் பெயருண்டு. கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் அருட் செல்வமும் ஒருங்கே அமையப் பெற்றவர். செல்வத்தைத் துறந்து திருவரங்கத்தையடைந்து ஆசாரியரான இராமாநுசருடைய ஆதரவில் இருந்தவர். இராமாநுசர் பிரமசூத்திரத்திற்குப் பாடியஞ் செய்த பொழுது துணையாக அமைந்து நின்றவர். சோழவரசனுடைய அவையிலே சிவத்துக்குமேல்

பதக்கு உண்டு என்று கூறியவர்.

**கூலவாணிகன் சாத்தனர்** - இவர் மணிமேகலை நூலை இயற்றியவர். சிலப்பதிகார நூலாசிரியராகிய இளங்கோவடிகட்கும் அவர் தமையன் சேரன் செங்குட்டுவனுக்கும்நெருங்கிய நண்பினர். இவர் மதுரைக்கூலவாணிகன் சாத்தனரெனவும் சீத்தலைச் சாத்தனரெனவும் வழங்கப் பெறுவர். இவர் மதுரையில் கூலவாணிகஞ் செய்தவர். சீத்தலை என்பது ஓர் ஊர். அதில் எழுந்தருளிய ஐயனர் பெயரை இவருக்கு வைத்தனர். இதனல் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனர் என்று பெயர் அமைந்தது.

**கூலன்** - அவந்திக்கு அண்மையில் இருந்த தீவகம் என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் இவன் பிறந்தான். வறுமையால் வாடினன். ஒரு கோவிலுக்குள் நுழைந்து அங்கிருந்த உண்டியற்பொருளைக் களவாடிக் கொண்டு சென்றன். பிறகு அரசனுடைய காவலர்களால் பிடிக்கப்பட்டுத் தண்டனையடைந்தான். பிறகு பலபிறவிகளையெடுத்தான். ஒவ்வொரு பிறவியிலும் வறுமைத் துன்பத்தால் வாடினன். இறுதியிற் புலைக்குலம் ஒன்றிற்பிறந்தான். ஒருநாள் பிரமசீலர் என்னும் பெயருடைய முனிவர் ஒருவர் கங்கையில் நீராடிவிட்டு இவன் இருந்த வழியே சென்றர். அப்பொழுது அவருடைய சடையில் இருந்து ஒருதுளிநீர் இவனுடைய உடலிலே விழுந்தது. அதனல் தீவினைகள் நீங்கி நற்கதியடைந்தான்.

**கூழாண்டார்** - இவர் தொண்டைவளநாட்டிலே பழையனூரிலே முன்னளில் இருந்தார். இவர் தம்முடைய வயலில் விளைகிற நெல்லையெல்லாம் இறைவனுடைய திருவமுதுக்குக் கொடுத்துவிட்டுத் தாம் கேழ்வரகுக் கூழையே உண்டு மனவுறுதியோடிருந்தார். இதனல் இவருக்குக் கூழாண்டார் என்று பெயர் உண்டாகியது.

**கூன்பாண்டியன்** - இவன்மதுரையில் அரசு செய்திருந்த பாண்டிய மன்னர்களில் ஒருவன். இவனுடைய முதுகில் கூன் ஒன்று இருந்த படியால் இவன் கூன் பாண்டியன் என்று காரணப்பெயர் பெற்றன். இவனுடைய மனைவியின் பெயர் மங்கையர்க்கரசி. அமைச்சர் பெயர் குலச்சிறையார். இவன் சேரனையுஞ் சோழனையும் ஒருங்கே வென்றவன். இவன் மதுரையில் அரசாட்சி செய்து கொண்டிருக்கும் போது சமணர்கள் சிலர் மதுரைக்கு வந்து இவனுக்குத்தஞ் சமய போதனை செய்து இவனைச் சமணனக்கி விட்டனர். நாட்டார்களும் சமணசமயத்தைப் பின்பற்றுமாறு இவன் செய்தான். இவனுடைய மனைவியும் அமைச்சரும் சைவர்களாகவே மறைந்தொழுகித் திருஞானசம்பந்தரை மதுரைக் கழைத்தனர். சமணர்கள் சம்பந்தருக்குச் செய்த தீமை இம்மன்னனுக்கு வெப்பு நோயாக வந்து சேர்ந்தது. பிறகு சம்பந்தர் இவனுடைய வெப்பு நோயைப் போக்கிச் சைவனக்கினர். சமணர்கள் கழுவேறினர்கள். திருஞானசம்பந்தர் தாம்பாடிய தேவாரப் பதிகத்தில் 'வேந்தனும் ஓங்குக' என்று பாடிய படியால் இவனுடைய கூன் ஒழிந்து முதுகு நேராகியது.

**கெடிவெட்டூர் நாயக்கர்** - வீரபாண்டியக் கட்ட பொம்மனுடைய தாயுடன் கூடப் பிறந்தவர். வீரபாண்டியக் கட்ட

பொம்மு விடம் வெள்ளையர்கள் இவரை ஒருமுறையழைத்துத் தூது செல்லப் பயன்படுத்தினர்.

**கெட்டிதளவாய்** - பாஞ்சாலன் குறிச்சிக் கட்டபொம்மு வழி முறையில் உ௬ஆவது அரசனாக ஆட்சி புரிந்தவன். எல்லாரும் உவந்து கொள்ளுமாறு ஆட்சியை இவன் சிறப்பாக நடத்தினான். இவனுடைய ஆட்சி ஐந்தாண்டுகளே நிகழ்ந்தது.

**கெட்டி பொம்மு** - கட்டபொம்முவினுடைய நான்காவது வழிமுறையினன். இவன் இருபத்தொன்பதாண்டுகள் பாஞ்சாலன் குறிச்சியில் அரசாட்சி செய்தவன். இவன் மகன் பெயர் ஆதிராமு.

**கேகயன்** - கேகயம் என்னும் நாட்டை அரசாட்சி செய்தவன். இவனுடைய பெயர் அசுவபதி என வழங்கும். இவன் அஃறிணைகள் உரையாடுதலை அறியுந் திறம் பெற்றிருந்தான். கைகேயியின் தந்தையாகிய இவன் தசரதன் தன்னிடம் வந்து பெண் கேட்டபொழுது "என்னுடைய மகளின் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைக்கே அரசு கொடுப்பதாகத் துணிந்து கூறினால் தருகிறேன்'! என்று அவ்வாறே உறுதிமொழி பெற்றான்.

**கேமசரி** - தக்கநாட்டில் கேமமாபுரத்தில் இருந்த வேதவணிகனாகிய சுபத்திரன் என்பவனுடைய மகள். இவளைச் சீவகன் திருமணம் புரிந்தான்.

**கேமசருமன்** - சோழவள நாட்டில் திருவாரூரில் அந்தணர் குலத்தில் பாரத்துவாச கோத்திரத்தில் தோன்றியவன்.தந்தையினுடைய பெயர் சண்டதருமன். இவன் கணிகையரின் கூட்டுறவை மேற்கொண்டிருந்தான். ஒருநாள் இரவு தான் தங்கியிருந்த வீட்டுக் கணிகையிடங் குடிப்பதற்குத் தண்ணீர் வேண்டுமென்று கேட்டான். இருளில் தண்ணீர் கொண்டு வருவதற்குச் சென்ற அவள் தவறுதலாகக் கள்ளை ஊற்றிக் கொண்டு வந்து இவனிடங் கொடுத்து விட்டாள். இவன் சிறிது குடித்த பிறகு கள்ளென்றுணர்ந்தான். பலவாறு வருந்தினான். அறங்கூறும் அந்தணர்பாற் சென்று இதற்குக் கழுவாய் யாது என்று உசாவினான். அவர்கள் வெண்ணெயை நன்கு கொதிக்க வைத்துக் கள்ளுண்ட அளவுக்கு உண்ண வேண்டுமென்று சொன்னார்கள். இதனைக்கேட்டுத் தந்தை முதலியோர் வருந்தினார்கள். அப்போது அங்கு வந்த முனிவர் ஒருவர் இச்சிவப்பதியில் உள்ள தேவதீர்த்தத்தில் முழுகினால் எத்தகைய தீவினையுந் தீர்ந்து போகுமென்றார். கேமசருமன் அவ்வாறே மூழ்கினான். வானொலியொன்று, "கேமசருமனுடைய தீவினை நீங்கி விட்டது" என்று கூறியது. இதனைக் கேட்டு அனைவரும் மகிழ்ந்தனர்.

**கேரளகேசரி அதிராசாதிராசதேவன்** - இவன் கொங்கு மண்டலத்தில் ஆட்சி புரிந்துகொண்டிருந்த ஒரு சிற்றரசன். சேரர் வழி முறையில் தோன்றியவன். வீரகேரளன்,கேரளகேசரி என்னுஞ் சிறப்புப் பெயர்கள் உடையவன். இவன் தஞ்சை மாவட்டத்தில் திருக்கண்ணபுரத்திலுள்ள திருமால் கோயிலுக்கு விளக்குகள் அமைத்த செய்தி அவ்வூரிலுள்ள கல்வெட்டுகளில் எழுதப்பட்டிருக்கிறது. இவன் குலோத்துங்க சோழனுக்குக் கீழ்ப்பட்ட ஒரு சிற்றரசனாவான்.

**கைச்சின்னம்** - இவ்வூர் இந்நாளில் கச்சினம் என வழங்கப் பெறுகிறது. தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இந்திரன் இங்கு மணலால் சிவலிங்கத் திருவுருவமைத்து வழிபட்ட பிறகு அதனை விதிப்படி ஒடுக்கி எடுக்க முயற்சி செய்தான். ஆனால் எடுக்க முடியவில்லை. இந்திரனுடைய கையடையாளம் (கைச் சின்னம்) திருவுருவத்தில் பதிந்துவிட்ட காரணத்தால் இவ்வாறு பெயர் பெற்றது. இப்பதியில் திருணபிந்து முனிவர் வழிபட்டு அருள் பெற்றார். சுவாமியின் பெயர் கைச்சினநாதர்.

**கொக்கட்டிச்சோலை** - ஈழ வளநாட்டில் மட்டக்களப்பில் உள்ள ஓர் ஊர். இங்குக் கோயில் கொண்டுள்ள இறைவன் திருப்பெயர் தான்தோன்றீசுவரர் என்பர். இக்கோவிலில் இக் கோவில் போல் சிற்ப வேலைப்பாடமைந்ததேர்உண்டு. மிகப் பழைமையானதென்பது கல்வெட்டால் உணரப்படும்.

**கொங்கக்குயவன்**-இவன் கொங்கு வள நாட்டில் கற்றுங்காணி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தான். குறிப்பிட்ட பொருளில் உருச்செய்து அவ்வுருவத்தின் உறுப்பில் ஊசி முதலியவற்றால் குத்தல் சுடல் முதலியவைகளைச் செய்து உள்ள நோயை நீக்கவும் இல்லாத நோயை உண்டாக்கவும் வல்லவன். இம்முறைகளைக் கூறும் ஒட்டியம் சல்லியம் என்னும் நூல்களிலும் பயிற்சியுடையவன். சோழ மன்னன் ஒருவனுடைய பெண்ணுக்கு வலிப்பு நோய் உண்டாகியது. பலவகையான மருத்துவங்கள் செய்தும் நோய் நீங்கவில்லை. சிலர் இந்தக் கொங்கக் குயவனுடைய திறமையைப்பற்றி அரசனிடங் கூறினார்கள். அரசன் இவனையழைத்து, ''நீ இந்நோயைச் சூடுபோட்டு நீக்குவாய் என்று கேள்விப்படுகிறேன். என்னுடைய இளங் குழந்தை சூட்டைப் பொறுதே'' என்று சொன்னான். பெண்ணின் உறுப்பில் படாமற் சூடு போட்டு நீக்குகிறேன் என்றான். ''அப்படியானல் செய்'' என்றான் அரசன். குயவன் அப்பெண்ணைப்போல் ஒரு பாவையைச் செய்தான். அரசனுடைய பெண்ணுக்கு வலி எங்கிருக்கிறதென்பதைத் தெரிந்துகொண்டு பாவையின் உறுப்பில் பழுக்கக் காய்ச்சிய இருப்புக் கோலாற் சூடு போட்டான். அரசனுடைய பெண்ணுக்கு வலி நீங்கியது. அரசன் மகிழ்ந்து கொங்கக் குயவனுக்கு நன்கொடை வழங்கிப் பாராட்டினான்.

**கொங்கணர்** - இவர் அணிமா முதலிய எண்வகைச் சித்திகளையும் பெற்றிருந்தார். போகர் முதலிய சித்தர்களும் இவருடைய சித்திகளைக் கண்டு உள்ளம் வியந்திருந்தனர். இவர் ஐம்பொறிகளையும் அடக்கிக் காட்டில் இருந்து தவஞ் செய்து கொண்டிருந்தார். ஒரு நாள் தலைக்குமேல் அமர்ந்திருந்த கொக்கு ஒன்று இவருடைய தலையிலே எச்சமிட்டது. இவர் உடனே கனன்று அதனை விழித்து நோக்கினார். அவ்வளவில் அக்கொக்கு எரிந்து சாம்பராகியது. பிறகு இவர் ஒருநாள் திருவள்ளுவருடைய இல்லத்திற்குப் பிச்சையின் பொருட்டு வந்தார். அப்பொழுது அம்மையார் கணவருக்கு உணவு படைத்துக் கொண்டிருந்தமையால் தம்முடைய வேலை முடிந்த பிறகே உணவு எடுத்துக் கொண்டு பிச்சையிட வந்தார். உடனே

கொங்கணர், "மாதே! என்னை இவ்வளவு நேரம் காக்க வைத்தாயன்றோ?" என்று கூறி விழித்து நோக்கினார். அவ்வம்மையார் உடனே எரிந்து சாம்பராகப் போய்விடவில்லை. "கொக் கென்று நினைத்தீரோ கொங்கணரே"? என்று கேட்டார். கொங்கணர் தருக் கடங்கி அம்மையாரிடம் மன்னிப்பும் அறிவுரையும் பெற்றுச் சென்றார்.

**கொங்கிளங்கோசர்** - வீரத்திற்குப் பேர் போனவர்கள். மிகவும் பழையமரபினர். இவர்கள் சிற்றரசர்களாகவும் தமிழரசர்களுடைய படை வீரர்களாகவும் இருந்தார்கள். இவர்கள் ஒற்றுமை யுடையவர்களாகவும் சொல் தவறாதவர்களாகவும் விளங்கினார்கள்.

**கொங்குநாட்டுத் தொண்டைமான்** - கொங்குவள நாட்டில் முன்னாளில் ஓர் இளைஞன் இருந்தான். இவன் அரசனுடைய படையிற் சேர்ந்து பகைவன் மேற் போருக்குச் சென்றான். போரில் வெற்றி பெற்றான். அத்தொண்டைமான் அரசன் இவனுக்குத் தன்னுடைய பெயரையும் மாலையையும் விருதாகக் கொடுத்தான். அதனால் இவனுக்குந் தொண்டைமான் என்று பெயருண்டாகியது. இவனுடைய வழிமுறையினரும் தொண்டைமான் என்னும் பெயரைத்தாம் வைத்துக் கொள்ளுகிறார்கள்.

**கொங்குநாடு** - பண்டைத் தமிழகத்திலிருந்த நாடுகளில் ஒன்று. இன்றைய கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்களடங்கிய நிலவெளியாகும். இதைப்பற்றிய தனிப் பாடல்களையும் கொங்குமண்டல சதகத்தையும் கொண்டு நோக்கும்போது, கொங்குநாடு என்பது மேற்கே வெள்ளிமலை, நீலகிரிமலைகளுக்கும், வடக்கே தலைமலை, பிளிகிரி ரங்கன்மலை, மாதேசுவரன்மலை, தொப்பூர்மலை என்ற மலைகளுக்கும், தெற்கே பழனிமலைகளுக்கும், கிழக்கே சேர்வராயன் மலை, பச்சைமலை, கொல்லிமலை என்ற மலைகளுக்கும் இடையிலுள்ள சமநிலமாகும்.

**கொங்குவேள்** - கொங்குவள நாட்டில் விசயமங்கலத்தில் இருந்தவர். உதயணன் கதையெனவும் கொங்குவேள் மாக்கதையெனவும் வழங்கும் பெருங்கதையை இயற்றியவர்.

**கொச்சைவயம்** - சீகாழி. ஒரு காலத்தில் பராசரமுனிவர் ஏழு முனிவர்களைப் பார்த்து, "நீங்கள் இல்லறத்தார்கள்" என்று இகழ்ந்தார். இவரை அம்முனிவர்கள், "நீ மச்சகந்தியைப் புணர்ந்து நாற்றத்தோடிருப்பாயாக" என்றுசாபமிட்டனர். இதனால் பராசர முனிவர் மச்சகந்தியைப் புணர்ந்து வியாசரைப்பெற்ற பிறகு நாற்றமுடையவராக விருந்தார். அந் நாற்றம் நீங்கி நன்மணம் பெறுமாறு சீகாழியிற் சிவபெருமானைப்பூசித்து வழிபட்டு நன்மணம் பெற்றார். இதனால் சீகாழிக்குக் "கொச்சைவயம்" என்று ஒரு பெயர் உண்டாகியது.

**கொடுங்குன்றேசர்** - பிரான்மலை என்னும் கொடுங்குன்றத்தில் எழுந்தருளிய சிவபெருமானுடைய திருப்பெயர்.

**கொடுங்கோளூர் அஞ்சைக்களம்** - கொடுங்கோளூர் மகோதை எனவும் வழங்கும். சேரமான் தலைநகராகிய கொடுங்கோளூரும் திருவஞ்சைக் களமும் ஒன்று சேர்த்து வழங்கப்படுவதுமரபு. இவ்வூர்கள் மலையாள நாட்டில் மேற்குக் கடற்கரையில் அமைந்துள்ளன. சுந்தர

மூர்த்திகள் திருக்கைலையை அடையச் சிவபெருமானிடம் விண்ணப்பஞ் செய்து வெள்ளை யானை வரப்பெற்றவிடம்.

**கொடும்பாளூர்** - புதுக்கோட்டை நாட்டில் மணற்பாறைப் புகை வண்டி நிலையத்தில் இருந்து தென்கிழக்காகப் புதுக்கோட்டை போகுங் கற்சாலையில் 10 நாழிகை வழித்தொலைவில் உள்ள ஊர். இவ்வூரில் வேளிர் குல அரசரும் பொன்னம்பல முகட்டினைப் பொன்னால் வேய்ந்த ஆதித்தச் சோழரது குலமுதல்வருமாகிய இடங்கழி யார் என்னும் மன்னவர் வசித் திருந்தார்.

**கொடைநம்பிகள்** - ஆளவந்தாருடைய திருக்குமாரர் என்னுச் சான் என்பவருக்குத்தகப்பனார். எழுபத்துநான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். இவர் திருவாய்மொழிக்கு மனத்தாலும் வாயாலும் என்னுந்தனியனைப் பாடியிருக்கிறார்.

**கொல்லங்கொண்ட பாண்டியன்** - குலசேகர பாண்டியன் என்பவன் கி. பி. 1274-இல் சேர நாட்டின்மேற்படையெடுத்துச் சென்று அதனைக் கைப்பற்றிக் கொண்டான். அதனால் குலசேகரபாண்டியனுக்கு இவ்வாறு கொல்லங்கொண்ட பாண்டியன் என்று காரணப் பெயர் உண்டாகியது.

**கொல்லிமலை** - தமிழ்நாட்டில் சேலம்மாவட்டத்தில்நாமக்கல், ஆத்தூர் தாலுக்காக்களிலுள்ள குன்றுத் தொடர். நீளம் பதினேழு கல். இடையிடையே ஆழமான பள்ளத் தாக்குகள் இருக்கின்றன. இங்கே "கொல்லிமலையர்" என்ற மலைச்சாதியினர்வாழ்கின்றனர். கொல்லிமலை தேனுக்குப்பெயர் பெற்ற இடம் என்று சங்கப் பாடல்கள் கூறுகின்றன. கடையெழு வள்ளல்களில் ஒருவரான வல்வில் ஓரிக்கு உரியதாகஇருந்தஇம்மலையில் "கொல்லிப்பாவை" என ஒரு பாவை இருந்ததாகத் தமிழ்நூல்கள் செப்பும்.

**கொல்லிமழவன்** - கொல்லிமலைத் தொடர் பொருந்திய நாட்டை யாண்டபடியால் இவ்வாறு பெயர்பெற்றான். இவனுடைய மகளுக்குண்டாகிய முயலக நோயைத் திருஞானசம்பந்தர் போக்கியருளினார்.

**கொள்ளிக்காடு**- தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தீக்கடவுள் பூசித்து வழிப்பட்டமையால் இவ்வாறு பெயர் பெற்றது. இங்கு எழுந்தருளிய சுவாமியின் பெயர் அக்கினியீச்சுரர். திருநெல்லிக்காவில் இருந்து இரண்டு நாழிகை வழித்தொலைவில் உள்ள ஊர்.

**கொற்கை** - பாண்டியர்களின் பழைய தலைநகர். இதற்கு ஒருகாத தொலைக்கு அப்பாலுள்ள இடைச்சேரியிலே சாலி ஆபுத்திரனைப் பெற்றாள்.

**கொற்றியார்** - தலை மொட்டையடித்துத் திருநீறு முதலிய சின்னங்களை அணிந்து சூலம் முதலிய படைக்கலங்களைக் கையில் தாங்கித் துர்க்கா தேவியை வழிபட்டுக் கொண்டு ஊர்தோறும் ஐயமெடுத்துண்ணும் ஒருவகைச் சாதியார்.

**கோகரணம்** - துளுவநாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதி. ஆளுடைய பிள்ளையாராலும் ஆளுடைய அரசுகளாலும் பாடப்பெற்ற சிறப்புடையது. மேலைக்கடற்கரையில் உள்ளது. இராவணன் இலங்கையில் அமைத்து வழிபடும் பொருட்டு இலிங்கமூர்த்தியைச் சிவபெருமானிடம் இருந்து பெற்றுக் கொண்டு வந்தான். அதனை

இராவணன் இலங்கையிற் கொண்டு போய்ச் சேர்த்து வழிபடத் தொடங்கி விடுவானாயின் பிறகு அவனை எவராலும் வெல்ல இயலாது என்று எண்ணிய தேவர்கள் ஆனைமுகக் கடவுளை வேண்டினார்கள். ஆனைமுகக் கடவுள் அவ்விலிங்கத்தை வாங்கி நிலத்தில் வைத்து விட்டார். பிறகு இராவணன் அதனைப் பெயர்த்தெடுக்க எண்ணினான். முழுவன்மையையுங் கொண்டு எடுக்க முயன்றான். இறைவர் வேரூன்றி விட்டபடியால் இலிங்கம் பசுவின் காதைப் போல் வளைந்து குழைந்தது. அதனால் சுவாமிக்குக் கோ கருணேசுவரர், மகாபலேசுவரர் எனப் பெயர்கள் உண்டாயின.

**கோகருணர்** - சோழவள நாட்டில் ஆரூரில் இருந்த இருமறையவர்கள். ஒருவனுக்கு வாணாள் முடிந்தது. அவனைப் பற்றி வாருங்கள் என்று நமன் தன்னுடைய தூதர்களுக்குக் கட்டளையிட்டான். தூதர்கள் வாணாள் முடிந்தவனை விட்டு விட்டு வாணாள் முடியாதவனைத் தவறாகக் கொண்டு போய் நமனிடம் விட்டனர். நமன் இவனைப் பார்த்து விட்டு நான் கொண்டு வருமாறு குறிப்பிட்டது இவனையன்று என்று கூறித் திரும்பிச் செல்லுக என்று கட்டளையிட்டனன். ஆனால் அந்தக் கோகருணனோ, "நான் உலகில் மிகத் துன்புறுகிறேன். ஆகவே மீண்டும் உலகத்திற்குச் செல்ல மாட்டேன்" என்றனன். எமன் அவனுக்குப் பொருள்கள் அளித்து அவன் விரும்பியவாறு நிரயங்களையெல்லாம் அவனுக்குக் காண்பித்து அனுப்பினான். பிறகு மற்றவன் செல்ல அவனைப்பார்த்து, "நான் கூறிய காலம் தவறியதாகையால் நீயும் போகலாம்" என்றனன். இருவரும் புனித நீர்களாடி நற்கதி பெற்றனர்.

**கோக்கருநந்தடக்கன்** - இவன் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் காலத்திலும் வரகுண பாண்டியன் மகனான சீமாறன் காலத்திலும் சேரநாட்டின் தென்பகுதியை அரசாண்டிருந்தவன்.

**கோக்கலே** - (1866 - 1915) கோபாலகிருட்டிண கோகலே இந்திய மறுமலர்ச்சிக்காகப் பாடுபட்ட பெரியோர்களில் ஒருவர். பம்பாய் மாகாணத்தில் கோலாப்பூரில் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். தம் பன்னிரண்டாம் அகவையில் தந்தையை இழந்து தமையனார் கோவிந்தராவின் ஆதரவில் வளர்ந்து வந்தார். 1884இல் பி. ஏ. பட்டம் பெற்றார். மேலும் கல்வி கற்றுப் பொறியியல் வல்லுநராகவோ, வழக்கறிஞராகவோ வரவேண்டும் என்னும் இவர் விருப்பம் வறுமைநிலையால் ஈடேறவில்லை. கல்வி கற்கும்போதே தம் வேலைகளை ஒழுங்குறச் செய்து வரும் பயிற்சி இவருக்கு ஏற்பட்டிருந்தது. தக்காணக் கல்விச்சங்கத்தில் 1885இல் கோக்கலே ஆயுட்கால உறுப்பினராகச் சேர்ந்து சங்கத்தின் கல்லூரியான "பர்குசன் கல்லூரி"யில் குறைந்த ஊதியத்தில், நிறைந்த பண்பும் ஆற்றலும் வாய்ந்த ஆசிரியராக நன்மதிப்புப் பெற்றார். திலகர் நடத்திய 'கேசரி', 'மராட்டா', இதழ்களின் வாயிலாகத் தம் சீர்திருத்தத் துறையில் உழைத்தார். 1888இல் பழைமைப்பற்றுமிக்க திலகரின் கட்சியாரோடு கருத்து வேற்றுமை ஏற்படவே, ரானடேயும்

கோக்கலேயும் ''சார்வஜனிக் சபா'' என்ற சங்கத்தை நிறுவினர். 1866-67 ஆம் ஆண்டுகளில் பம்பாய் மாகாணத்தில் வற்கடம் ஏற்பட்ட போது கோக்கலே வற்கடநீக்க வழிவகைகளை எடுத்துக் கூறினர். உப்புவரி உயர்வை எதிர்த்த இயக்கத்தில் ஈடுபட்டுழைத்தார். இந்திய அரசாங்கச் செல்வாதார நிலையை ஆராய 1897 இல் பிரிட்டிசு அரசாங்கத்தால் நிறுவப் பெற்ற 'வெல்பி கமிசன்' முன் இங்கிலாந்து சென்று, இந்தியர் சார்பாகச் சான்று பகர்ந்து, இந்தியப் பணம் இந்தியருக்குச் சிறிதும் பயனற்ற துறைகளில் அரசாங்கத்தால் செலவழிக்கப்படுவதையும், உயர்ந்த அரசாங்கப் பதவிகளில் இந்தியர் நியமிக்கப் படாமலிருப்பதையும் கண்டித்துக்குறைகளைய அரசியல் சீர்திருத் தங்களைக் கூறினர். 1905 இல்தென்னப்பிரிக்கா சென்று காந்தியடிகளின் பேராட்டத்திற்குத் துணை புரிந்தார். ஆங்கில அரசாங்கம் இவருக்கு அளிக்க விரும்பிய கே. ஸி. ஐ. ஈ என்ற உயர்ந்த பட்டத்தை இவர் தாம் சாதாரணக் குடியாகவே இருக்க விரும்புவதாகக் கூறி மறுத்துவிட்டார். காந்தியடிகளால் தம் அரசியல் குரு என்று போற்றப்பட்டவர்.

**கோசம்பி** - (கௌசாம்பி நகரம்) முதலில் இது குசாம்பன் என்னும் அரசனல் உண்டாக்கப்பட்டது. வத்தவ நாட்டின் தலைநகர். யமுனையாற்றைத் தன்பாற் பெற்றது. உதயணனுடைய தலைநகர். அகழியாலும், கொடிகள் கட்டிய பல உறுப்புக்களையுடைய அழியாத மதிலாலும், பலநாட்டினர் வந்து குழுமிய பெருமுழக்கத்தையுடைய கடைத் தெருக்களாலும், பல வகைச் செல்வத்தாலும் விளங்கியது. உதயணனுடைய நகரங்களுள் முதன்மையானது, இந் நகரின் வெளிப்புறத்தே மதுகாம்பீரவனம் என்ற ஒரு வனமும் பிறநாட்டு மன்னர்கள் தங்குவதற்கு ஒருபூங்காவும் இருந்தன.



**கோசல நாட்டு அகத்தியர்** - இவர் தமிழர் அல்லர். தமிழ் நாட்டிற்கு வந்தவரும் அல்லர். இவர் வட நாட்டில் வாழ்ந்திருந்தவர். வடநாட்டில் ஆரியசமயத்தைப் பரப்பிவந்ததோடுதென்னட்டுத் தமிழர்களை ஆரிய சமயத்தில் சேர்த்தும் வந்தார். கோசலநாட்டில் தவஞ் செய்திருந்த நான்காம் வருணத்தவனுகிய சம்புகனை இராமர் கொன்றவுடன் இவ் வகத்தியரைக் கண்டு உரையாடியதாக வால்மீகி இராமாயணம் கூறும்.

**கோசர்** - பண்டைத் தமிழ் நாட்டில் வீரரும் குறுநில மன்னருமாக இருந்த ஒரு குழுவினர். செங்குட்டுவன் கண்ணகிக்கு விழாச் செய்த போது இவர்களும்வந்திருந்தனரென்பதைச் சிலப்பதிகாரம் உரைபெறு கட்டுரை உணர்த்தும். கிள்ளி வளவன் இவர்களை வென்ருன் என்பது, " வளங்கெழு கோசர் விளங்கு படை நூறி, நிலங் கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி''(அகம். உ0௫) என்னும் தொடரால் விளங்கும். திதியன் குறும்பியன், என்போராலும் இவர்கள் சிதறஅடிக்கப்பட்டனர். (அகம் ௬௬௧, ௧௬௬) கைக் கோட்படையாயும், கைக்கோட்படைத்தலைவர்களாயும் தமிழ் மூவேந்தருக்கு அகப்பரிவாரத்துக் காவல் துணைவராயும், போர்த்துணைவராயும்விளங்கிய இவர்கள் தம்படை வீரத்துக்கு இடம் இல்லாது போன

காலத்தில் நூல் நூற்றுத் துகில் நெய்யும் தொழிலை மேற் கொண்டனர் என்று சாசனக் குறிப்புக்கள் குறிக்கின்றன.

**கோசிகன் -(1)** இவன் கோசம்பி நக ரத்திலிருந்த ஒரு காலக் கணி தன். வருங்காலச் செய்திகளை அறிந்து சொல்வதில் மிகுந்த ஆற்றல் வாய்ந்தவன். சேனைக் கணிமகன் என்னுஞ் சிறப்புப் பட்டத்தை இவன் பெற்றிருந் தான். யமுனையில் தள்ளுவதற் குக் கொண்டு போகப்பட்ட சாங்கியத் தாயைக் காப்பாற்ற எண்ணிய உதயணன் அவளு டைய எதிர்காலச் செய்தியைக் கேட்டபொழுது விளங்கக்கூறி யவன்.

**கோசிகன் - (2)** இவன் ஓர் அந்த ணன். கோவலன் காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்திருந்தவன். கோவலன் மாதவிமுதலியயாவருக்கும்அறி முகமானவன். கோவலனைப் பிரிந்த மாதவி பிரிவுத் துயர் பொறுமல் இவனிடம் ஓலை ஒன்று எழுதிக் கொடுத்துக் கோவலனைத்தேடிக்கண்டுபிடித் துக் கொடுக்கும்படி அனுப்பி னாள். இவனும் கோவலன் சென்றவழியை உசாவியறிந்து பின் தொடர்ந்து சென்று உறை யூர்ச் சோலையிற் கண்டு பிடித்து ஓலை கொடுத்துச் செய்தியுங் கூறினான்.

**கோச்சடையன்ரணதீரன் -** இவன் மாறவர்மன் அரிகேசரியி னுடைய மகன். இவனுக்குத் தென்னவானவன், செம்பியன், சோழன், மதுர கருநாடகன் முதலிய சிறப்புப்பெயர்களி ருந்தன. மேலைச்சாளுக்கியமன்ன னாகிய முதல்விக்கிரமாதித்தனை திருச்சிராப்பள்ளிக்கு அண்மை யிலுள்ள மருதூரிலும் மங்கல புரத்திலும் போரில் வென்று புறங்காட்டியோடச் செய்த புகழுடையவன்.

**கோச் செங்கணான் -** இவன்காலம் கி.பி.உ00முதல்உஉரு வரை என் பர். இவன் சிறந்தசிவனடியான். திருத்தில்லையைச்செப்பனிட்டுத் திருக்கோயிலைச் செம்மை செய் தவன் இவனே என்பர்.

**கோடபதி -** இஃது உதயண னுடைய யாழ். யாழ் வகையிற் பேரியாழின் பாற்படும். பிரம சுந்தரர் என்னும் முனிவர் இதனை உதயணனுக்குநல்கினார். இது தெய்வத் தன்மையும், அழகும் வாய்ந்தது. உதயணன் வாசவதத்தையின் அன்பைப் பெறுவதற்கு இந்த யாழ்தான் காரணமாக அமைந்து நின்றது.

**கோடிபஞ்சாக்கரம் -** இஃதொரு நூல். ஐந்து தொகுதிகளாக விளங்குகிறது. ஒவ்வொரு தொகுதியிலும் "நமசிவாய" என்னுந் திருவைந்தெழுத்து இருபது லட்சம் அடங்கியது. ஒருநூற்றாண்டிற்குமுன் வெளி யிடப்பட்டது. இது திருவாவடு துறை ஆதீன நூல் நிலையத்தில் உள்ளது.

**கோடியக்காடு -** தஞ்சை மாவட் டத்தில் திருத்தருப்பூண்டி வட் டத்தில் திருமறைக்காட்டிற்குத் தெற்கே இக்காடு இருக்கிறது. இஃது இருபக்கங்களினுங் கட லாற் சூழப் பட்டிருக்கிறது. மழை மிகக் குறைவாதலால் இக் காட்டில் பெரிய மரங்கள் வளருவதில்லை. பாலைப்பழம், துவரம் பழம், கொழுஞ்சிப் பழம் போன்ற சில காட்டுப் பழங்கள் இக் காட்டில் மிகுதி யாக உண்டு.

**கோட்கூச்சவ்வை -** இவள் சிவ தேவ சரணர் என்பவருடைய மகள். இவளுடைய தந்தை வேற்றூர்க்குச் செல்லுஞ் சம யத்தில் தம்முடைய மகளைப்

பார்த்துத் தாம் நாடோறுஞ் செய்யும் பால் நிவேதனத்தைச் சிவபிரானுக்குச் செய்யுமாறு கூறி விட்டுச் சென்றனர். ஔவை பாலை நாள்தோறும் கறந்துசிவபிரானிடம்கொண்டு போய் வைத்து உண்ணுமாறு செய்து கொண்டிருந்தனள். ஔவையின் அன்புக்கிரங்கிய சிவபிரான் அவள் வேண்டுகோளாகிய அன்புக்கிரங்கிப் பாலையுண்டு வந்தார். இவ்வாறு நாடோறும் நடந்து கொண்டிருக்கும்போதுவெளியூர் சென்றிருந்த தந்தை திரும்பினுர். மகள் சிவபிரான் வழிபாட்டிற்குச்சென்று வெறுங்கலத்துடன் திரும்பி வருதலைக் கண்டதந்தை வழிபாடு செய்த பால் எங்கே? என்று உசாவினுர். மகள் சிவமூர்த்தி யுண்டனர் என்றனள். வியப்படைந்த தந்தை மறுநாள் பாலை மகளிடங் கொடுத்து அனுப்பிவிட்டுத் தாம் மறைந்திருந்து நோக்கினர். இறைவன் பாலைஅமுதுசெய்யாதிருத்தலைக் கண்டு மகள் பொய்யுரைத்தனள் என எண்ணித் தாக்கச் சென்றனர். சிவமூர்த்தி பாலையமுது செய்து ஔவையை மார்பில் அணைத்தனர். அந்த இலிங்கத்தைக் கொப்பிலிங்கமென்பர்.

**கோட்டைமேடு**-இது கொள்ளிடம் ஆறு கடலுடன் கலக்குமிடத்தில் இருக்கிறது. கோட்டைமேட்டைத் தீவுக் கோட்டை எனவுங் கூறுவர். கொள்ளிடம் ஆற்றினுல் ஏற்பட்ட தீவின் நடுவே சோழர்களால் பதினேழாம் நூற்ருண்டின்நடுவில் ஒரு கோட்டை கட்டப்பட்டது கோட்டையைச் சுற்றி அகழி அமைக்கப்பட்டிருந்தது. படையெடுப்பவர்களை அச்சுறுத்துவதற்காக அகழியில் முதலைகள் வளர்க்கப்பட்டன. 1742 ஆம் ஆண்டில் இக்கோட்டையை ஆங்கிலேயர் கைப்பற்றினர். கொள்ளிடத்தின் அரிப்பால் கோட்டை அழிந்து விட்டது. இப்பொழுது அதுஇருந்த மேடு மட்டுமே தெரிவதால் தீவுக் கோட்டை, கோட்டைமேடு ஆகிவிட்டது. கோட்டைக்குள் இருந்த கோதண்ட ராமசாமி மகேந்திரப் பள்ளி என்னுமிடத்தில் ஒரு கோயிலில் இருக்கிருர்.

**கோதமி** - இவள் முன்னுளில் மகத நாட்டில் உதகம் என்னும் ஊரில் இருந்தாள். இவளுடைய கணவன் பெயர் பரிணிதரன். இவள் கல்வி யறிவற்றவளாயினும் நல்ல மனப்பண்புடையவள். இவளுக்கு மகன் ஒருவன் பிறந்தான். மகனுக்கு ஓராண்டு நிறைவதற்கு முன்னரே கணவனுகிய பரிணிதரன் மாண்டான். அகவைஐந்து நிறையுமுன்னரே அம் மகனும் மாண்டான். கோதமியின் வருத்தம் எல்லையற்றதாகியது. எவ்வாறேனும் இறந்த மகனைப் பிழைப்பித்து விட வேண்டுமென்று பலரிடமுஞ் சென்ருள். இவள் காலத்தில்தான் புத்தரும் வாழ்ந்திருந்தார். இறுதியில் கோதமி புத்தரிடஞ் சென்று எவ்வாறேனுந் தன்னுடைய மகனைப் பிழைப்பித்துத் தர வேண்டுமென்று மன்ருடினுள். சாவு நேராத இல்லத்திலிருந்து சிறிது கடுகு வாங்கி வருவாயாக என்று புத்தர் அவளை அனுப்பினுர். அவள் பல விடங்களினுஞ் சுற்றிப் பார்த்து விட்டுச் சாவு நேராத இல்லம்எங்கும் இல்லை யென்று புத்தரிடம்வந்து கூறினுள். புத்தர் அவளுக்கு மெய்யறிவு தோன்றுமாறு நல்லுரைகள் பல நவின்ருர். அதனுல் அவளுடையஉள்ளந்தெளிந்தது.கவலைகளை யெல்லாம் விட்டு விட்டுப் புத்தருடைய நெறியைப் பின்பற்றினுள்.

**கோதாவரி** - இந்தியாவில் மேற்கு மலைத் தொடரில் நாசிக் என்ற இடத்துக்கு அருகில் திரியம்பகம் என்றஇடத்தில்தோன்றித் தக்காணத்தில் தென் கிழக்காக ஓடி, ஐதராபாத்தைக் கடந்து ஆந்திரத்தில் ஓடி வங்காள விரிகுடாவில் கலக்கும் ஆறு. இது வால்மீகி இராமாயணத்தில் ''கோதாவண்டு'' என்று வழங்கப்பட்டுள்ளது. இது இந்துக்களுக்குப்புண்ணியஆறு.கோதாவரியின் குறுக்கே தவளேசுவரம்என்ற இடத்தில், ஆர்தர் காட்டன் என்பவரின் யோசனையின்படி அரசாங்கம் ஓர் அணையைக் கட்டி முடித்தது. இது நான்கு பிரிவுகளைக் கொண்டது. நான்கும் முறையே 4,839 அடி, 2,859 அடி, 1,560 அடி, 2,601 அடி நீளமுள்ளவை. இதற்கு மூன்று பெரிய கால்வாய்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு கழிமுகவெளியின் வழியாகச் செல்லுகின்றது. இரண்டு கட்டுக் கால்வாய்களும் இருக்கின்றன. இக் கால்வாயமைப்பால் கோதாவரி மாவட்டம் செழிப்பு மிக்க பூமியாகத் திகழ்கின்றது. இது ௯00 மைல் நீளமுடையது.

**கோபாலகன்** - பிரச்சோதனனுடைய பட்டத்துத் தேவிமாருள் ஒருத்தியினுடைய மகன். உதயணனுடைய பகைவர்களாகிய இருபதின்மரை இவன் ஒருங்கே கொன்றான்.

**கோமதியம்மை** - சங்கரன் கோயிலில் திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவியின் பெயர்.

**கோமுகன்** - இவன் கௌசாம்பி நகரில் இருந்த இடவகனுடைய மகன். பல கலைகளையும் நன்கு கற்றுத் தேறியவன். நுண்ணுணர்வு முதலிய நல்லறிவுகள் இவனிடம் மிகுதியாக அமைந்திருந்தன. ஒருவரை நேரில் பார்க்காமலே அவர்களுடைய கழிந்த நகம், உதிர்ந்த மயிர் முதலிய ஏதேனும் ஒன்றைக் கொண்டு அவர்களுடைய குணம், செயல், பருவம், உருவம், அழகு முதலிய எல்லாவற்றையும் வழுவற எழுதிக் காட்ட வல்லவன். நரவாணனுக்கு இவன் நண்பனாகவும், அமைச்சனாகவும் அமைந்திருந்தான். மதனமஞ்சிகையின் கையிலிருந்து வீழ்ந்த ஒரு பந்தை வைத்துக் கொண்டு அவளுடைய அழகிய வடிவத்தை எழுதிக் காட்டிக் குணத்தையும் உரைத்தவன்.

**கோமேதகத் தீவு**-இத்தீவு முப்பத்திரண்டு நூறாயிரம் யோசனைப் பரப்புடையது. மநுமரபில் தோன்றிய கோபதி என்னும் அரசன் கோசவம் என்னும் வேள்வியைச் செய்யத் தொடங்கினான். இக்கோபதிக்குக் குரு உசத்தியன் மரபில் தோன்றிய கவுதமனாவான். இக்கவுதமன் வாசவன் வேள்வியை முடித்து வந்து இவன் வேள்வியைமுடிப்பதாகக் கூறிச் சென்றான். ஆனால் கோபதி மன்னனோ பிருகு என்பவனைத் தன்னாசிரியனாகக் கொண்டு வேள்வியைத் தொடங்கினான். இச்செய்தியை அறிந்த கவுதமன் சினந்துவந்து சாபமிட்டான். சாபத் தீயினால் வேள்விச் சாலையில் நின்ற கோக்களெல்லாம் வெந்தொழிய அவற்றின் மேதை அந்நிலம் முழுவதும் பரவியது. அதனால் அத்தீவு கோமேதகத் தீவு என்று பெயர் வழங்கலாகியது.

**கோயர்** -- இவர்கள் கொண்டர், கோண்டுகள் ஆகியோருடன் தொடர்புடையவர்கள் என்றும், இருநூறு ஆண்டுகட்கு முன் மத்தியப் பிரதேசத்திலிருந்து துரத்தப்பட்டு,மல்கான

கரி வட்டத்திலும் கோதாவரி மாவட்ட வடபகுதியிலும் குடியேறியவர்கள் என்றும் கருதப் பெறுகின்றூர்கள். இப்போது கோதாவரி மாவட்டத்தின் அருகிலுள்ள கோராப்புட்டி மாவட்டத்தின் தென்மேற்குப் பகுதியில் உள்ளனர். இவர்கள் தனித் தனிக் குடிசைகளில் வசிக்கிறூர்கள். இளைஞருக்கு மணமானதும் மணமக்களுக்குந் தனித்தனிக் குடிசை தருகின்றூர்கள். பெண்கள் ஆடையே இல்லாமலும் இருப்பர். உடம்பின் இடைப் பகுதியைக் கோணியைக் கொண்டு மறைத்துக் கொள்வதும் உண்டு. குளிர்காலத்தில் கோணிகள் கொண்டு போர்த்திக் கொள்வர்.

**கோரக்கர்** - மச்சேந்திரருடைய மாணவர். மெய்யறிவில் தம்முடைய ஆசிரியரையும் விஞ்சினின்றூர். இவருடைய பிறப்பு வளர்ப்பு முதலிய செய்திகளை மச்சேந்திர நாதரிற் காண்க.

**கோரன்** - கொங்குவள நாட்டிலே வல்லம் என்னும் ஊரில் இருந்தவன். கொலை களவு முதலிய தீத் தொழில்களைச் செய்து கொண்டிருந்தஇவன்மெய்ம்மை பேசுதல் ஒன்றைக் கடைப் பிடித்து அதனுல் தன்னுடைய தீத்தொழில்கள் எல்லாவற்றையும் போக்கிக் கொண்டான்.

**கோரைக் காலாழ்வான்** - இவன் சோழவள நாட்டில் கோரைக் கால் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தான். இவனுடைய இயற்பெயர் ஆழ்வான் என்பது. இவனிடஞ் செல்வ நலம் அமையப் பெற்றிருந்தும் பொய்ம்மை பேசுதலாகிய புன்மைத்தொழிலை மேற் கொண்டான். அதனுல் ஔவையாரால் இகழ்ந்துபாடப்பெற்றுன். அவ்வாறு பாடப் பெற்ற பிறகு இவனுடைய செல்வ நலமெல்லாம் அழிந்தொழிந்ததென்பர்.

**கோவலன்** - இப் பெயரினர் இருவர். (1) மணிமேகலையினுடைய தந்தை; கண்ணகியின் கணவன்; சிலப்பதிகாரக் கதா நாயகன். வஞ்சி நகரப் புறத்தே இருந்த கண்ணகி கோயிலில் இவன் வடிவமும் பூசிக்கப்பட்டு வந்தது.

**கோவலன் (2)** முன் கூறிய சிலப்பதிகாரக் கோவலனுக்கு ஒன்பது தலைமுறை முன்னுலிருந்தவன்; இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குக் காதற்பாங்கன்; அவ் வேந்தனுக்குச் சாரணர் கூறிய உபதேச மொழியைத் தானுங் கேட்டுத் தான் தேடிய பொருளையுந்தன் முன்னோர் தேடிய பொருளையும் ஏழுநாளில் தானஞ் செய்து பிறகு தவம் புரிந்தவன். வஞ்சி நகரத்தில் புத்தனுக்குக் கோயிலொன்று கட்டுவித்தவன்.

**கோவிந்த தீட்சிதர்** - இரகுநாத நாயுடு காலத்தில் தஞ்சையிலிருந்த சிறந்த அறிஞர். இவர் இருபத்து மூன்று பிரிவுகளுடைய அரிவமிசசார சரித்திரம் என்னும் நூலை இயற்றியதோடு, இசையைப் பற்றிச், "சங்கீதசுதாநிதி" என்னும் நூலையும் இயற்றினுர். இரகுநாத நாயுடுவுக்கும், அவனுடைய தந்தைக்கும் அமைச்சராகவும் இருந்தார்.

**கோவிந்த சந்திரன்** - இவன் வடநாட்டில் பதினொன்றும் நூற்றுண்டில் அரசு புரிந்திருந்தவன். துருக்கதண்டம் என்னும் வரியை இவன் ஏற்படுத்தினுன். இவ்வரி முகமதியர்களின் வளர்ச்சியைத் தடுப்பதற்காக ஏற்படுத்தப் பெற்றது. இவன் தன்னுடைய நாணயங்களின் ஒரு புறத்தில் தன்னுடைய பெயரையும்

மற்றொரு புறத்தில் முத்தலைச் சூலத்தையும் வெளியிட்டான். இவனுக்கு நான்கு மனைவியர் இருந்தனர். அவர்களில் ஒருத்தியான குமார தேவி என்பவள் பௌத்த சமயத்தவள்.

**கோவிந்தயோகி** - இவர் நருமதையாற்றுக் கரையிலே வசித்திருந்தார். ஆதிசங்கராச்சாரியர்க்கு இவரே குரு ஆவர்.

**கோவிந்தன்** - விதய நாட்டில் சீவகன் காலத்தில் வாழ்ந்திருந்தவன். சீவகனுக்குத் தாய்மாமன். கட்டியங்காரன் தான் சச்சந்தனைக் கொல்லவில்லையென்று இவனிடம் பன்முறை வற்புறுத்திக் கூறினன். ஆனல் கொடியவனுகிய கட்டியங்காரனுடைய பேச்சை இவன் நம்பவில்லை. தனக்கும் ஏதேனும் தீமை செய்வானென்று கண்ணுங் கருத்துமாக இருந்தான். கட்டியங்காரனை ஒழித்துக் கட்டிய பிறகே இவனுடைய உள்ளந் தெளிவடைந்தது.

**கோவிந்தை**-இவள் இடையர் தலைவனுகிய நந்தகோபனுடைய மகள். நந்தகோபன் வேடர்களாற் பற்றப்பட்ட நிரையை மீட்டுத் தருவார்க்கு இவளைத் திருமணஞ் செய்து தருவதாக அறிவித்தான். சீவகன் நிரையை மீட்டு இவளைத் தன்னுடைய தோழனுகிய பதுமுகனுக்குத் திருமணஞ் செய்வித்தனன்.

**கோழியூர்** - உறையூர்; கோழியொன்று யானையை எதிர்த்துப் போரிட்டு வென்றமையால் அக்கோழியின் பெயரால் கோழியூர் எனப்பட்டது.

**கோழிப்பாம்பு**-இதற்குக் குக்குட சருப்பம், பறவைநாகம் என்னும் பெயர்களும் வழங்கும். பொதுவாக ஒருவகைப் பாம்பானது வாணுள் நீடித்தலால் நீளங் கோழியளவாகக் குறுகுகிறது. அப்பொழுது அதுசில சமயங்களில் அஃதாவது தான் விரும்புஞ் சமயத்தில் பறக்குந் தன்மையை அடைகிறது. இதுவே கோழிப் பாம்பாகும்.

**கோனேரிக்குப்பம்** - காஞ்சியில் ஏகாம்பர நாதர் கோயிலுக்கு அண்மையில் உள்ள ஓர் ஊர். சாக்கிய நாயனுர் வீடுபெற்றது இங்கு தான்.

**கௌடில்யர்** - இவர் கி.மு. நான்காம் நூற்றுண்டில் வாழ்ந்திருந்தவர். இவர் வாழ்ந்திருந்த இடம் காஞ்சீபுரம் என்கின்றனர். இவர் வடமொழியில் வல்லவர். அம்மொழியில் அர்த்தசாத்திரம் என்னும் பொருள் நூலை இயற்றியிருக்கிருர். இவருடைய பொருள் நூலின் கருத்துக்கள் சில திருக்குறளிற் காணப்படுவதால் திருவள்ளுவர் கௌடில்யருடைய அர்த்த சாஸ்திரத்தைப் படித்திருக்கலாம் என்று சிலர் எண்ணுகின்றனர். கௌடில்யர் திருவள்ளுவருடைய திருக்குறளைப் படித்திருக்கலாம் என்பது வேறு சிலருடைய எண்ணம். காலத்தால் முற்பட்டவர் திருவள்ளுவரா கௌடில்யரா என்பது விளக்கமாகவில்லை.

**கௌதமகட்டம்** - புத்தர் தம்முடைய மாணவர்களோடு கங்கையை விண்வழியாகக் கடந்து சென்ற இடம்.

**கௌதமன்பசு**- கௌதம முனிவர் இராசமகேந்திரத்திற்கு அண்மையில்கோதாவரியாற்றிற்குத் தெற்கேயுள்ள கோவூரில் இருந்து தவஞ் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது பன்னிரண்டு ஆண்டுகள் மழை பெய்யாமல் கொடிய பஞ்சம் நேரிட்டது. அப்பஞ்சத்திற் கஞ்சிய முனிவர்கள் பலர் கௌதமரிடத்திற்குச் சென்றுர்கள். கௌதமர் ஒரு பிடிநெல்லை

யெடுத்துத் தமக்குஅண்மையில் உள்ள மணல் மேட்டில் விதைத்து விட்டுத் தாம் நாட்கடன்களைச் செய்தார். நாட்கடன்களை முடித்துக் கொண்டு எழுந்தபோது நெல்லெல்லாம் முளைத்து வளர்ந்து கதிரீன்று விளைந்திருத்தலைக் கண்டு அவைகளை யறுத்துக் குற்றி அரிசியாக்கிச் சமைத்து வந்திருந்த முனிவர்கட்கெல்லாம் உணவிட்டார். அவ்வாறே நாள்தோறும் செய்து கொண்டிருந்தார். பன்னீராண்டுகட்குப் பிறகு மழைபொழிந்து நாடு செழித்தது. கௌதமர் முனிவர்களைப் பார்த்து, "இனிமேல் நீங்கள் உங்களுடைய இருப்பிடத்திற்குச் செல்லலாம்" என்றார். முனிவர்கள் கௌதமரைப்பார்த்து, "நீர் எம்மோடு வரவேண்டு" மென்று வேண்டிக் கொண்டார்கள். கௌதமர் மறுத்தார். அதனால் வந்திருந்த முனிவர்கள் பொறாமையுஞ் சினமுங் கொண்டார்கள். ஒரு மாயப்பசுவை உண்டாக்கினார்கள். கௌதமர் விதைக்கும் பயிர்களை மேய்ந்து அழிக்கும்படி செய்தார்கள். கௌதமர் தருப்பைப்புல்லைக் கையிலெடுத்துக் கொண்டு பசுவை விரட்டினார். பசு வீழ்ந்திறந்தது. முனிவர்கள் கௌதமரைப் பார்த்து, "நீர் பசுவைக் கொன்றீர் ஆகையால் சாந்திராயண விரதம் அனுட்டிக்கக் கடவீர்" என்று சாபங் கொடுத்து விட்டுச் சென்றார்கள். நன்றிமறந்த முனிவர்களுடையசெய்கையைக் கண்ட உலகத்தார்கள் மோசமான செயல்கட்கு உபமானங் காட்டிப் பேசும் போது "இது கௌதமன் பசு நியாயமாக இருக்கிறது" என்று பேசுகிறார்கள்.

**கௌமாரம்**-குமாரக் கடவுளாகிய முருகனை முழு முதற் பொருளாகக் கொண்டு வழிபடும் சமயம் கௌமாரம் என்று வழங்கப்படுகின்றது. வேறு வேறு பயன் வேண்டுவோர் வேறுவேறாக எண்ணி வழிபடுதற்கு உரியவையாய் ஞானசத்திதரன் முதலாகப் பதினாறு மூர்த்தங்கள் குமாரக் கடவுளுக்குச் சொல்லப் படுகின்றன. அவை "குமார தந்திரம்" வடமொழி ஆகமத்து, மந்திரோத்தாரப் படலத்தின் கண்ணும், தணிகைப்புராணம் அகத்தியன் அருள் பெறு படலத்தின் கண்ணும் விளக்கப்பட்டுள்ளன.

**சகச்சாரம்** - இப்பெயர் காஞ்சிமாநகரின் சிறப்புப் பெயர்கள் பதின்மூன்றனுள் ஒன்று. மூவுலகங்களினும் நிலவுலகஞ் சிறந்ததாகுமென்பதனாலும், நிலவுலகத்தில் உள்ள பல சிவப்பதிகளினும் இப்பதியானது அறம் பொருளின்பத்தை யளிப்பதில் சீர்த்திமிக்கதென்னுங் காரணத்தினாலும் உண்டாகியது.

**சகடாசுரன்** - கண்ணபிரான்ஆயர் பாடியில் வளர்ந்து கொண்டிருந்தபோது கண்ணனை எவ்வாறேனுங் கொன்று தீர்த்துவிட வேண்டுமென்று எண்ணிய கஞ்சன் ஒரு நாள் ஓர் அசுரனை அனுப்பினான். அவன் ஆயர்பாடியைஅடைந்துதன்னுடைய ஆற்றலை ஒரு வண்டியிற் புகுத்திச் சமயம் பார்த்திருந்தான். கண்ணன் அவ்வண்டியைக் காலால்உதைத்துஅவ்வசுரனைக் கொன்றருளினான்.

**சகந்நாதம்**-ஒரு திருமால் பதி. இது கிழக்குக் கடற்கரையில் உள்ளது. இதனைப் பூரி சகந்நாதம் என்பர். திருமால், பலபத்திரர், சுபத்திராதேவி, யோகநரசிம்மர் முதலிய மூர்த்திகள் இங்குள்ளன.

**சகமித்திரர்** - இவர் வட நாட்டில் பரளி என்னும் ஊரில் மறையவர் குலத்தில் தோன்றியவர். திருமாலிடத்தில் மிகுந்த அன்புடையவர். இவர் வறியவராக விருந்தும்நல்லொழுக்கமுடையவராகச் சிறந்து நின்ருர். இவருடைய வாழ்க்கைக்குப் பலர் உதவி செய்தனர். இவரிடத்திற் பொருமை கொண்ட சிலர் ஒருநாள் இரவில் இவருடைய இல்லத்தில் தீயை வைத்து விட்டனர். இல்லம் அடியோடு எரிந்து இல்லாது ஒழிந்தது. அப்பொழுது இவர் மனைவி மக்களோடு உள்ளே உறங்கிக் கொண்டிருந்தார். நல்லவராகிய இவர் மனைவி மக்களோடு மாண்டொழிந்தார் என்றே அனைவரும் எண்ணினர். தீயானது எரிந்து தணிந்த பின் எல்லோரும் உள்ளே போய்ப்பார்த்தார்கள். சகமித்திரர்தம்முடைய குடும்பத்தாரோடு அப்பொழுதும் உறங்கிக் கொண்டுதான் இருந்தார். அனைவரும் மிகுந்த வியப்படைந்தார்கள். அந் நாட்டு மன்னனும் இவருடைய பெருமையை உணர்ந்து பாராட்டினன். அது முதல் இவருக்குச் சகமித்திரர் என்று பெயருண்டாகியது.

**சகரன்** - இவன் கதிரவன் குலத்து மன்னன். இவனுடைய தந்தையின் பெயர் வாகுகன். தாய் வயிற்றில் இவன் கருவுற்றிருக்கையில்தந்தைமாண்டுபோனன். தாயும் தீப்பாய்ந்து உயிர்விடத் துணிந்தாள். அப்பொழுது ஊரு என்னும் முனிவர் ஒருவர் தோன்றி, " உன் வயிற்றிலே அரிய மகன் ஒருவன் இருக்கின்ருன். அவனல் உனக்கு எல்லா நன்மையும் உண்டாம். ஆகவே உயிர் விடாதொழிவாயாக" என்று உரைத்தார். இவளும் உயிர் தாங்கியிருந்தாள். இவள் கருவுற்றிருத்தலையுணர்ந்து மாற்ருள் பொருமை கொண்டாள். உண்ணும் உணவில் நஞ்சைக் கலந்து வைத்தாள். ஆயினும் இறைவனருளால் தீமையொன்றும் உண்டாகவில்லை. உரிய காலத்தில் மகன் ஒருவன் பிறந்தான். நஞ்சு (கரம்) கலந்தும் ஊறின்றிப் பிறந்த படியால் அவனுடைய பெயர் சகரன் என்று ஆகியது. கல்வி கற்றுத் திருமணம் புரிந்து உரிய காலத்தில் அரசாட்சியை மேற்கொண்டான். இவனுடைய ஆற்றல் தேவர்களும் வியந்து பாராட்டற்குரியதாக விருந்தது. இந்திரனும் இவனெதிர் நின்று போர் புரிய முடியவில்லை. இவன் கொடை நலத்தினுஞ்சிறந்து விளங்கினுகையால் இவனை அனைவரும் முதல் வள்ளலென்று போற்றலாயினர். இவனுடைய இரண்டாவதுமனைவி அறுபதினுயிரம் பிள்ளைகளைப் பெற்ருள். அவர்கள் எல்லோருக்கும் ஒரு சேரச் சகரர் என்றே பெயர் வழங்கலாகியது. முதல் மனைவி ஒருமகனைப்பெற்ருள். அவனுக்கு அசமஞ்சதன் என்றுபெயர். சகரன் தன்னுடைய மக்களையும்சுற்றத்தினரையும் உடன் வைத்து ஆதரித்துப் பேரும் புகழும் பெற்ருன். இந்தச் சகரர்களே கடலைத் தோண்டிக் கொண்டு பாதலஞ்சென்றவர்களென்றும் அதனல் கடல் சாகரம் என்று பெயர் பெற்றதென்றுங் கூறுவர்.

**சகலசித்தி** - காஞ்சி மாநகருக்குள்ள பெயர்கள் பதின்மூன்றனுள் ஒன்று. எண்வகைச்சித்திகளையும் தவத்தினருக்கு அருளுந் தன்மையினுல் உண்டாகிய காரணப் பெயர்.

**சகலாகம பண்டிதர்** - திருத்துறையூரில் எழுந்தருளியிருந்த அருணந்தி சிவாச்சாரியார் எல்லாக்

கலைகளினுஞ் சிறந்து விளங்கிய படியால் சகலாகம பாண்டி தர் என்னுஞ்சிறப்புப் பெயரால் கூறப்பெற்ருர்.

**சகவீரபாண்டியக் கட்ட பொம்மு** - *1148-1171*. இவன் முதலாவது கட்டபொம்முவினுடைய மகன். தனக்கு அரசாட்சி யளித்த சகவீரபாண்டிய னுடைய பெருந்தன்மையைப் பாராட்டும் பொருட்டு அவன் பெயரை இவனுக்குத் தந்தை யிட்டிருந்தான்.

**சகவீரராகவன்** - பாஞ்சாலன் குறிச்சிக் கட்டபொம்மு வழி முறையில் ௬0 ஆவது பட்டத் தை யடைந்து எட்டாண்டுகள் ஆட்சி புரிந்தவன். தந்தையின் பெயர் இரகு வீரணன். இவன் படையிலுங் கொடையிலுஞ் சிறந்தவன். இவன் காலத்தில் சாலி குளம் நன்னிலையை அடைந்தது.

**சகவீரராமக் குமாரசாமி** - இவன் சின்ன பொம்மேந்திரன் என் பவனுடைய மகன். கட்ட பொம்மு வழி முறையில் பாஞ்சாலன் குறிச்சியின் ௬௨ ஆவது பட்டத்தை யடைந் தவன். இவன் தன்னுடைய ஆட்சியில் நாட்டைப் பல வகையினும் வளமுறச் செய் தான். இவனுடைய ஆட்சி ஆறு ஆண்டுகள் நடைபெற் றது.

**சகளேசமாதிராசையர்** - இவர் ஓர் அரசர். சிவபூசை செய்தவர். இவர் மல்லிராசையர் என்பவ ரைக் காண விரும்பி அரசு முத லியவைகளைத் துறந்து அவரி டஞ் சென்ருர். இவருடைய வரவு கண்ட மல்லிராசையர். ஒரு பேருருக்கொண்டு நின்ருர். அவ்வுருவைப் பார்த்துத் தொழுது எழாமல் கிடந்த இவரை மல்லிராசர் தூக்கி யணைத்து அருள் செய்தார். அல்லமரிடம் போகச் செய் தார். இவர் பிரியமனமில்லாமல் வணங்கி நின்ருர். ஆனுல் மறு கணம் கலியாணபுரத்தில் அல்லமர் திருமுன் நின்ருர்.

**சகாதேவன்** - பஞ்சபாண்டவர் களில்ஒருவன். பாண்டவர்களில் எல்லாருக்கும் இளையவன். மத்திராதேவிக்கும் அசுவினி தேவர்கட்கும் பிறந்தஇரட்டை யர்களில் ஒருவன். இவன் காலக் கணிதத்தில் வல்லவன். நேர்மை சிறிதும் தவருதவன். இவ னுடைய காலக் கணித வல்ல மையையும் கோடாத குண முடைமையையும் நன்குணர்ந் திருந்த துரியோதனன் பாரதப் போர் தொடங்க நன்னுள் கேட்டு இவனிடம்வர இவனும் துரியோதனனுக்கு வெற்றி யேற்பட நாள் குறித்துக் கொடுத்தான். ஆனுல் மாய வன் அந்நாளைப் பாண்டவர் கட்கே உரியதாக்கினுன்.

**சகுந்தலை** - விசுவாமித்திர முனி வருக்கும் மேனகைக்கும் பிறந் தவள். சகுந்தம்என்ருல் பறவை என்று பொருள். மேனகை விட்டு விட்டுப் போனதும் பறவைகளாற் பாதுகாக்கப் பட்டவளாகையால் சகுந்தலை எனப் பெயர் பெற்ருள். கண்ணுவ முனிவரிடத்தில் வளர்ந்து சந்திர குல மன்னனு கிய துஷ்யந்தனை மணந்தாள். இவளுடைய மகன் பரதன். பரதனுடைய சிறப்பினுல் சந் திர குலத்தவர் பாரதர் என்று பெயர் பெற்றனர். வடமொழி யில் காளிதாசர் பாடிய சாகுந் தலம் என்னும் நூல் சகுந்தலை யினுடைய வரலாற்றைக் கூறு கிறது.

**சகுனி** - இவன் காந்தார நாட்டு மன்னனுடைய மகன். திருத ராட்டிரன் காந்தாரியை மணந்து அத்தினபுரஞ் செல்லு

கையில் இவனும் இவனுடைய தம்பியர் தொண்ணூற்றொன்பதின்மரும் உடன் சென்றனர். இவர்களால் தனக்கு ஒருகாலத்தில் தீமையேற்படக் கூடும் என்று எண்ணிய திருதராட்டிரன் இவர்களனைவரையுஞ் சிறையிலடைத்ததோடு போதிய உணவுங் கொடுக்காமல் ஒருவருக்குமட்டும்போதிய உணவை எல்லோருக்குமாகக் கொடுக்கச் செய்தான். சகுனியுந் தம்பிமாருங் கலங்கெண்ணினார்கள். எல்லோரும் மாண்டொழியாமல் உணவை ஒருவர் மட்டும் உண்டு பிழைத்துப் பிறகு பழிக்குப் பழிவாங்குகிறதென்று முடிவு செய்தார்கள். அம்முடிவுப்படி உணவைச் சகுனி யொருவனே உண்டு பிழைத்துப் பிறகு துரியோதனனைத் தீயவழியிற் செலுத்தி நூற்றொருவரையுங் கொன்றொழித்தான். தன்னுடைய தம்பியரைச் சிறையிற் கொன்றொழித்ததற்குப் பழிக்குப் பழி வாங்கினான்.

**சகுனிகௌசிகன்** - ஆருணியரசனைச் சேர்ந்த வீரர்களில் ஒருவன். எண்ணியதைத் திண்ணமாக முடிக்கும் ஆற்றலுடையவன். மிகுந்த நூலறிவுடையவன். ஒற்றாக ஆருணியரசனால் அனுப்பப் பட்ட மூன்று வீரர்களுள் ஒருவனாகச் சென்றான். உதயணனுடைய வீரர்களால் கொலை செய்யப் பட்டான்.

**சக்கரவாளகிரி** - இஃது ஒரு மலை. இதனை ஆழியங் குன்றம் என்று மணிமேகலை கூறுகிறது. மேருமலையும் அதனைச் சூழ்ந்து ஏழுகுலமலைகளும் அக்குலமலைகள் ஒவ்வொன்றனையுஞ் சூழ்ந்த ஏழுகடல்களும் இக்கடல்களையும் மலைகளையுஞ் சுற்றிய பெரும் புறக்கடலும் ஆகிய இவைகளைச் சூழ்ந்து வளைந்துள்ள பெரியமலையே சக்கரவாள கிரியாகும்.

**சக்கரவாளக்கோட்டம்** - மகனையிழந்த துன்பத்தால் வருந்திய கோதமையின் துன்பத்தைப் போக்குவதற்காகச் சக்கரவாளத்திலிருந்த எல்லாத் தேவர்களையும் சம்பாபதி வருவித்துக் காட்டிய விடத்து அக்காட்சியை எக்காலத்தும் யாவருங் காணும் வண்ணம் மயனால் அமைக்கப் பட்டது பற்றி இஃது இப்பெயர் பெற்றது. காவிரிப்பூம் பட்டினத்தின் புறத்தேயுள்ள மயானத்தின் பக்கத்திலுள்ளது. இதனால் இது சுடுகாட்டுக் கோட்டம் எனவுங் கூறப்பெறும். இதில் முனிவர்கள் பலர் இருந்து தவஞ் செய்தனர். சம்பாபதி கோயில், கந்திற்பாவை, உலக வறவி என்னும் இம்மூன்றும் இதைச் சார்ந்திருந்தன.

**சக்கரன்** - பண்டைக் காலத்தில் இருந்த பெருந்தமிழ்ப் புலவர்களில் ஒருவர். இவர் மணிமலைத்தமிழ்ச் சங்கத்தில் தலைமைப் புலவராக இருந்து தமிழாராய்ச்சி செய்தார். இவரோடு உடனிருந்த புலவர்கள் பேராற்று நெடுந்துறையன் இடைகழிச் செங்கோடன் தனியூர்ச் சேந்தன். பஃறுளியாற்றுத் தலைப் பாய்ச்சல் முத்தூர் அகத்தியன் முதலியோர்.

**சக்தி கணபதி** - இவர் செவ்வந்தி வானம் போன்ற நிறமுடையவராய்ப் பச்சை நிறமேனியுடைய தேவியைத் தழுவிக் கொண்டிருப்பார். கையில் பாசம், பூமாலை முதலியவைகள் விளங்கும்.

**சங்கன்னன்**-மறையவனாகஇருந்து பல தீமைகளைச் செய்த இவன் மறுபிறப்பில் வேடனானான்.

சிவப்பதிப் பயணஞ் செல்வாரோடு சிவக்கோலம் பூண்டு சென்ருன். அவிநாசித்தலத்தில் கூத்தப் பிரானுடைய திருவடியில் அணிந்திருந்த சிலம்பைக் களவு செய்யக் காலம் பார்த்திருந்தான். தகுந்த காலம் அமையவில்லை. அத் திருவடியையேஎண்ணிக்கொண்டிருந்து வீடு பேற்றையடைந்தான்.

**சங்ககிரிதுர்க்கம்** - கொங்குவள நாட்டில் திருச்செங்கோடு தாலுகாவில் உள்ள ஓர் ஊர். மலைப்பாறைகள் வெண்மைநிறமமைந்த படியால் சங்ககிரி என்று பெயர் பெற்றது. மலைமேல் அமைந்த கோட்டையினைத் துர்க்கம் என்பர். ஈண்டும் மலைக்கோட்டை அமைந்துள்ளது.இம்மலையின் மேற்குப் பக்கம் செங்குத்தாக அமைந்துள்ளது. கிழக்குப் பக்கத்தில் மட்டும்ஏறமுடியும்.பத்துமதில்கள் கட்டப் பட்டிருக்கின்றன. மூன்ருவது தலை வாசலில் வரதராசப் பெருமாள் கோவிலும் ஒரு குளமும் உள்ளன. பத்து மதில்களையுந் தாண்டி மேலே சென்ருல் அங்கே சென்னகேசவப் பெருமாள் கோயிலைப் பார்க்கலாம். இம்மலை கடல் மட்டத்திற்கு மேல் 2345 அடி உயரத்தில் உள்ளது. மலைமேல் ஒரு சுனை உள்ளது.அச்சுனைக்கு மான்சுனை என்று பெயர். இச்சுனையின் நீர் நோய்களைப் போக்குங் குணமுடையது. அடி மலையில் ஒரு குண்டுப் பாறை இருக்கிறது. அதனைக் "கெட்டி முதலியார் குண்டு" என்பார்கள். தாரமங்கலம் கோயில்கட்டியபொழுதுவேலை செய்யாத சோம்பேறிகளை இக்குண்டின் மீது நிறுத்தித் தண்டிப்பது வழக்கமாம். இத் துர்க்கத்தின் பழைய பெயர் குன்னத்தூர்த் துர்க்கம் என்பது. 1588இல் சிக்கதேவராயர் என்பவர் இதனைப் பிடித்து மைசூரோடு சேர்த்ததாகக் கூறுவர்.

**சங்கசூடன்** - இவன் ஓர் அசுரன். இவனுடைய தந்தையின் பெயர் சுதாமன். இவன் தவஞ் செய்து பல மேன்மைகளையடைந்தான். தெய்வத்தன்மை பொருந்திய மணிமாலை ஒன்று இவனிடம் இருந்தது. அம் மாலையை இவன் அணிந்து கொள்வாஞயின் இவனை எவரும் வெல்ல முடியாது. இவஞல் தேவர்கட்குப் பல தொல்லைகள் நிகழ்ந்தன. ஆகவே தேவர்கள் இவனை எவ்வாறேனும் கொன்ருெழிக்க வேண்டுமென்று முடிவு செய்தார்கள். மணிமாலை இவனை விட்டு நீங்கிஞல் தான் இவனை யொழிக்க முடியும் என்பதை யறிந்திருந்த தேவர்கள் அம்மாலையைக் கவருமாறு திருமாலை வேண்டிஞர்கள். திருமால் ஒரு முனிவரைப் போல் இவனிடம் வந்தார். இவனைப் பலவாறு புகழ்ந்து பேசிஞர். அதஞல் மகிழ்ச்சியடைந்த இவன் மாயனைப் பார்த்துத், தங்கட்கு "வேண்டியது யாது?" என்று உசாவிஞன். அவர், "உன்னுடைய மணிமாலையைத் தருக" என்று கேட்டார். அம்மாலையின் பெருமையை எண்ணிப்பாராமல் உடனே கழற்றி மாயனிடங் கொடுத்து விட்டான். பிறகு தேவர்கள் இவனை எளிதில் வென்றனர்.

**சங்கபோதி** - இலங்கையை அரசாண்ட இரண்டாம் சேனன். இவன் அரசாட்சிக்கு வந்ததும் தன்னுடைய படைத்தலைவஞகிய குட்டகன் என்பவனைப் பெரும் படையோடு மதுரைக்கனுப்பிப்பாண்டியனை வென்று முன்பு பாண்டியன் இலங்கை

யில் இருந்து கைப்பற்றிக் கொண்ட பொருள்களை யெல்லாம் மீட்டுக் கொண்டான்.

**சங்கமங்கை**-இது தொண்டைவள நாட்டில் காஞ்சியை அடுத்த ஊர். சாக்கிய நாயனார் பிறந்த ஊர்.

**சங்கமன்** - ஒருவணிகன். நீலியின் கணவன். முற்பிறப்பிற் காரணமில்லாமல் இவனைக் கொல்வித்த காரணத்தினாலேயே கோவலன் கொலையுண்டிறந்தான்.

**சங்கமுனிவர்** - இவர் முன்னாளில் சோழவள நாட்டில் ஒரு காட்டில் தவஞ் செய்து கொண்டிருந்தார். இவருடைய முன்னவர் பெயர் இலிகிதர். இருவரும் தனியே தவஞ்செய்து கொண்டிருந்தனர். ஒருநாள் சங்க முனிவர் தம்முடைய அண்ணனாகிய இலிகித முனிவரைப் பார்க்கச் சென்றார். அப்பொழுது இலிகித முனிவர் வெளியே சென்றிருந்தார். தம்பியாகிய சங்க முனிவருக்குப் பசி மிகுதியாக இருந்தது. தம்முடைய முன்னவர் உண்பதற்கு வைத்திருந்த கனி கிழங்கு முதலியவைகளைக் கண்டார். அவைகளை எடுத்து உண்டார். இந்தச் சமயத்தில் முன்னவர் வந்து சேர்ந்தார். நிகழ்ந்ததைஅறிந்தார். "உடையவருக்குத் தெரியாமல் ஒரு பொருளைக் கவர்ந்து விடின் அது களவாகும்" என்று சொன்னார். இதனைக் கேட்ட சங்க முனிவர் வருந்தினார். தம்முடைய தீவினைக்குத் தக்க கழுவாய் செய்யுமாறு தம்முடைய அண்ணனை வேண்டிக் கொண்டார். இலிகித முனிவர் கத்தி யொன்றை யெடுத்துத் தம்பியாகிய சங்க முனிவருடைய இரண்டு கைகளையும் வெட்டி விட்டார். சங்கமுனிவர் திருவாரூரை யடைந்து ஒரு புனித நீரில் மூழ்கிக் கைவளரப் பெற்றார். அன்று முதல் அப் புனிதநீர் சங்க தீர்த்தம் என்று பெயர் பெற்றது.

**சங்கரதாசையர்** - இவர் ஒரு சிவனடியவர். இவர் சிவனடியார்களுடைய கிழிந்த உடைகளைத் தைத்துத் தருதலைத் தம்முடைய கடமையாகக் கொண்டிருந்தார். சிவபிரான் காட்சி தர நெற்றிக் கண் பெற்று ஆணவங் கொண்ட தேவர் முதலியோர்களை எரித்தழித்தார். ஒருநாள் சகதேவ மல்லன் என்னும் திருமாலடியான் "எம்முடைய நாராயணனை இவர் எரிக்கவல்லரோ?" என்று இறுமாந்து கூறினான். இவர் தம்முடைய நெற்றிக் கண்ணினால் அவன் வழிபட்டு வந்த நரசிங்க உருவத்தை நோக்கினார். அவ்வளவில் அது நீறாயிற்று. இவரைச் சேட தாசையர் என்பவர் கண்டு போற்றினார். இவருடைய திரு மடத்தில் நெல் முதலியன இல்லாமையைப் பார்த்து ஒரு வேலைக்காரனிடம் நெல் கொடுத்து அனுப்பினார். இதனால் சேடதாசையருடைய செல்வங் குன்றியது. சேட தாசையர் இவரிடம் வந்து தாம் வேலைக்காரனிடத்தில் நெல் கொடுத்து அனுப்பிய குற்றத்தைப் பொறுத்தருள வேண்டு மென்று வேண்டிக் கொண்டார். இவரும் அவ்வாறே பொறுத்தார்.

**சங்கரவரசன்** - துவாராபதி என்னும் நகரத்திற்குத் தலைவன். பல அரசர்களை வென்றவன். தருசகனோடு போர் செய்தற்கு வந்த அரசர்களில் ஒருவன். மிகுந்த ஆண்மையுந் திண்மையும் அமையப் பெற்றவன்.

**சங்கரன் சீதரன்** - இவன் பாண்டி நாட்டிலே கொழுவூரிலே

பிறந்தவன். பராந்தகனுடைய யானைப் படைக்குத் தலைவனாக விருந்தான். "பாண்டி இளங்கோ மங்கலப் பேரரையன்" என்னுஞ் சிறப்புப் பெயரைப் பாண்டியன் இவனுக்கு வழங்கினான்.

**சங்கராச்சாரியார்** - இவர் ஆதிசங்கரர் என்று கூறப்பெறுவார். மலையாளத்தில்காலடி என்னுஞ் சிற்றூரில் நம்பூதிரி வகுப்பில் இவர் பிறந்தார். இவருடைய தந்தையின் பெயர் சிவகுரு. தாயின் பெயர் ஆரியாம்பிகை. சங்கரர் தம்முடைய சிறு பருவத்திலேயே கல்வி கேள்விகளிற்சிறந்துவிளங்கினார் மறை முதலிய நூல்களை நன்கு பயின்றார். துறவறத்தை மேற்கொள்ள விரும்பினார். தாயின் உடன்பாடு கிடைக்கவில்லை. சில சூழ்ச்சிகளைச் செய்து உடன் பாட்டைப் பெற்றார். பிறகு துறவியாகி வெளியேறினார். வடக்கு நோக்கிச் சென்று நருமதையாற்றுக் கரையில் எழுந்தருளியிருந்த கோவிந்த பகவத் பாதர் என்பவரைக் குருவாகக் கொண்டார். அவருடைய கட்டளைப்படி காசிக்குச் சென்றார். காசியில் சிலகாலம் தங்கிப் பிரம சூத்திரம் முதலிய நூல்களுக்குப் பேருரைகள் எழுதினார். மற்றைச் சமயவாதிகளோடு சொற்போர் செய்து அத்வைதசமயச்சொற்பொழிவுகள் செய்தார்.

மீமாம்சக் கொள்கையைக் கண்டித்து அறிவே வீட்டிற்கு வழி என்னுங் கொள்கையை நிலை நாட்டினார். மண்டனமிசிரர் என்பவரோடு பல நாட்கள்சொற்போர்செய்து அவரை வென்றார். அவர் இவருடைய மாணவரானார். சங்கராச்சாரியாருக்கு முதன்மையான மாணவர்கள் நால்வர் இருந்தனர். அவர்களுடைய பெயர் சுரேச்வரர், பத்மபாதர், அஸ்தாமலகர், தோடகர் என வழங்கின. சங்கரர் தம்முடைய மாணவர்களோடு இந்தியாவின் பல பகுதிகட்குஞ் சென்றார். பௌத்தம், சைனம் முதலிய சமயங்களைக் கண்டித்தார். இந்துசமயத்தின் பெயரால் நடந்து வந்த பலகெட்டபழக்க வழக்கங்களை விலக்கினார். ஆறு சமயங்களையும் காப்பாற்றியவர் என்று பொருளுள்ள,"சண்மதஸ்தாபனாசாரியார்" என்னும் பெயரும் இவருக்கு வழங்கியது.

இந்தியாவின் நான்கு திக்குகளினும் அத்வைத மடங்களை ஏற்படுத்தினார். சிருங்கேரி மடம் காமகோடி மடம் முதலியன இவரால் ஏற்படுத்தப் பெற்றன. இவர் தம்முடைய முப்பத்திரண்டாம்ஆண்டில்வீடு பேற்றை யடைந்தார். இவர் பதரிகாச்சிரமத்தில் ஒரு குகைக்குட் சென்று மறைந்தார் எனவும் காஞ்சியில் உடலை நீத்தார் எனவும் பலவாறு கதைகள் வழங்கும்.காஞ்சியில் காமாட்சியம்மனின் கோவிலில் இவருடைய உருவச்சிலையிருக்கிறது. தென்னாட்டில் இக்காலத்தில் உள்ள வேதாந்தமடாலயங்கள் சங்கரருடைய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டவை."பலவாகக்காணப்படும் உயிர்களெல்லாம் உண்மையில் பிரமத்தினின்றும் வேறுபட்டவைகளல்ல. இதையே மறைகளின் முடிவுப் பகுதிகளாகிய உபநிடதங்கள் கூறுகின்றன. பிரமமும் ஆன்மாவும் ஒன்று என்ற ஞானத்தினால் பிறப்பு இறப்பு என்னும் துன்பத்திலிருந்து விடுபடுகிறோம் என்பதே இவருடைய வேதாந்த மதத்தின் முடிவு.

**சங்கிலிமண்டபம்** - திருநெல்வேலியில் காந்திமதியம்மை கோயிலையும் நெல்லையப்பர் கோயிலையும் இணைத்து நிற்கும் மண்டபம்.

**சங்கிலியார்** - உமாதேவியின் சேடியர்களில் அநிந்திதையார்; தொண்டைவள நாட்டில் ஞாயிறு என்னும் ஊரில் தோன்றிச் சங்கிலியார் என்னும் பெயரை யடைந்து திருவொற்றியூரில் திருப்பணி செய்திருந்து சுந்தரரை மணந்தவர்.

**சங்கோசன்** – இவன் ஒரு புலையன். இவன் அரசனுடைய அரண்மனையில் களவு செய்தான். காவலர் பிடித்துக் கொலைக் களம் கொண்டு போய்க் கொலைசெய்யத் தொடங்கினர். அப்பொழுது சிவனை எண்ணினன். வாள்வெட்டு மலர்மாலையாகக் கழுத்தில் விழுந்தது.

**சசித்துவசன்** - இவன் முன்னாளில் பல்லவ நாட்டில் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். இவன் மனைவியின் பெயர் சுசாந்தை. இவர்கள் இருவருங் கணவனும் மனைவியுமாய்ப் பல உடலில் தோன்றினார்கள். நல்வினையைப் புரிந்து இறுதியில் வீடு பேற்றை யடைந்தார்கள்.

**சசிவர்ணத்தேவன்** - இவன் சேது நாட்டில் செல்வாக்கு வாய்ந்த குறுநிலத் தலைவனாகவிருந்தவன். கிழவன் சேது பதியின் காதற் கிழத்திமகனான பவானி சங்கரன் என்பவன் இவனுடைய செல்வத்தைக் கைப் பற்றிக் கொண்டு நாட்டை விட்டுத் துரத்தி விட்டான். இவன் தஞ்சையை அடைந்து தஞ்சை மன்னனிடம் அடைக்கலம் புகுந்தான். தன்னுடைய பேராற்றலைத் தஞ்சை மன்னனுக்குக் காட்டினான். ஒரு முறை கொடிய புலியொன் ரோடு தன்னந் தனியாகப் போரிட்டு அதனைக் கொன்றான். தஞ்சை மன்னனைக் கொல்லுவதற்காகப் பகைவர்களால் அனுப்பப்பட்ட பெரிய காளையொன்றைத் தகுந்த சமயத்தில் அடக்கி அதன் கொம்புகளை முறித்து அரசனைக் காப்பாற்றினன். பிறகு தஞ்சை மன்னனுடைய உதவியால் பவானி சங்கரனைத் தொலைத்து இராமநாதபுரம் நாட்டில் ஒரு பகுதியாகிய சிவகங்கையைப் பெற்று அதற்கு அரசனானன். இவனே சிவகங்கையின் முதல் அரசன் என்பர்.

**சசிவர்ணன்** - இவன் பாகஎக்கியன் என்னும் ஓர் அந்தணனுடைய மகன். இவன் சிறந்த அழகனாகத் திகழ்ந்தும் நல்லொழுக்கமில்லாதவனாக விருந்தான். காமக்களிப்பில் மூழ்கினன். புலைமாதை மனைவியாகக் கொண்டான். இவனுடைய தந்தை இவனுடைய ஒழுக்கத்தைக் கண்டு உள்ளம் வருந்தினன். நந்திபாராயணர் என்னும் பெரியவரிடத்திற்கு அழைத்துக் கொண்டு போய்க் கடைத் தேற்ற வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். அப்பெரியவர் மெய்யறிவு கைவரப்பெற்றவர். தம்முடைய அருட்பெருக்கினல் இவனுடைய உடற்பிணியையும் பிறவிப் பிணியையும் போக்கி அருள் புரிந்தார். அதனல் இவன் மெய்யறிவு கைவரப்பெற்றவனாய் நன்னிலையை அடைந்து இறுதியில் வீடு பேற்றையு மடைந்தான். இவனுடைய உடலில் வெண்ணிற நோய் பற்றியபடியால் இவன் சசிவர்ண னென்று பெயர் பெற்றான் என்பர்.

**சச்சந்தன்** - இவன் ஏமாங்கத நாட்டிற்குத் தலை நகராகிய

இராசமாபுரத்தில் இருந்து அரசு செலுத்தினன். சீவக னுடைய தந்தை இவனே. இவனுடைய மனைவியின் பெயர் விசையை. அரசன் சிற்றின்பத்தில் மிகுந்த பற்றுடையனாய் அரசாட்சியைத் தன்னுடைய அமைச்சர்களில் ஒருவனாகிய கட்டியங்காரன் என்பவனிடத்தில் விட்டுவிட்டுத் தான் இன்பத்தில் மூழ்கியிருந்தான். தீயவனாகிய அமைச்சன் அரசாட்சியைத் தன் வழிப்படுத்திக் கொண்டு இவனைத் தொலைக்க முடிவு செய்தான். காரியம் மிஞ்சிப்போன பிறகு செய்தியை உணர்ந்த இவன் கருப்பமுடையவளாக இருந்த தன் மனைவியை விமானம் ஒன்றில் ஏற்றி வெளியே அனுப்பி விட்டுத் தான்கட்டியங்காரனோடு போரிட்டு மாண்டான்.

**சஞ்சயன்** - திருதராட்டிரனுக்கு நெருங்கிய நண்பன். திருதராட்டிரனுடைய தேர்ப்பாகர்களில் ஒருவனுடைய மகனாகையால் சில சமயங்களில்தேரோட்டுவதும் உண்டு. சஞ்சயன் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் ஐம்பொறிகளையும் நன்றாக வென்றவனென்று கூறுவர். இவனுடைய தந்தையின் பெயர் காவல்கணன் என்பதாகையால் இவனுக்குக் காவல்கணி என்னும் பெயரும் வழங்கி வந்தது. பாரதப்போர் நிகழ்ந்த காலத்தில் ஒவ்வொரு நாளும் போர்க் களத்தில் நிகழ்ந்த செய்தியை இவன் இரவில் திருதராட்டிரனுக்குக் கூறிக்கொண்டிருந்தான். இவன் மெய்யறிவு கைவரப் பெற்றவனுய்த் தெய்வத்திருவருளும் அமைந்து நின்ற படியால் போர்க்கள நிகழ்ச்சியை அறிவுப் பார்வையால் உணர்ந்து கொள்வது இவனுக்கு எளிதாக இருந்தது. நான்மறைகளையும் இவன் நன்குணர்ந்திருந்த படியால் இவனுக்கு வேதமுனி என்னும் பெயரும் வழங்கியது.

**சஞ்சீவிமலை** - இஃது இராமாயணத்தில் குறிப்பிடப் பெறும் ஒருமலை. மேருமலைக்கப்புறம் நீலமலையைக்கடந்தால் காணப் பெறும் கரியமலை சஞ்சீவிமலையாகும். இது மருந்துமலை எனவும் பெயர் பெறும். சஞ்சீவி என்பது ஒருவகை மருந்துச் செடி. இம்மலையில் இறந்தவர்களைப் பிழைப்பிக்கும் சஞ்சீவகரணி பிளவுபட்ட உடம்பை ஒன்றாக்கும் சந்தானகரணி, படைக் கலங்களை உடம்பிலேயிருந்து வெளிப்படுத்தும் விசல்யகரணி,மாறிய உருவை முன்போலச் செய்யும் சாவருணிய கரணி முதலியன உண்டு. இராமாயணப் போரிலே மாண்டவர்களைப் பிழைப்பிப்பதற்கு அனுமான் இம்மலையின் ஒரு பகுதியைக் கொண்டு வந்தான். அப்பொழுது மலையின் மூலிகைகள் பல விடத்திலும் பரவின.

**சடங்கவி சிவாசாரியார்** - சிவமறையவர். இவருடைய ஊர் புத்தூர். இவர் தம்முடைய மகளைச் சுந்தரருக்குத் திருமணஞ் செய்து கொடுத்தற்கு இசைந்தார். திருமண ஏற்பாடு நடக்கும் பொழுது சிவபெருமான் சுந்தரரைத் தடுத்தாட் கொண்டபடியினுல் மணம் தடைபட்டுப்போயிற்று. அது முதல் ஊரின் பெயரும் மணந் தவிர்ந்த புத்தூர் என் மாறியதென்பர்.

**சடபரதர்** - இவர் இருடபர் என்னும் முனிவருக்குச் சயந்தியென்னும்பெயருடைய மனைவியிடத்தில் தோன்றினர். முதலில் இவருக்குப் பரதர் என்று பெயர் வழங்கியது. இவர்

பஞ்சசேசி என்பவளை மணந்து இப்பரத கண்டத்தைக் கோடி யாண்டுகள் வரை அரசாட்சி செய்தார். பிறகு புலகருடைய இருப்பிடத்தை யடைந்து யோகத்தில் இருந்தார். அவ் வாறிருக்குங் காலத்தில் ஒரு நாள் கண்டகியாற்றுக்கு நீராடச்சென்ருர்.அப்பொழுது பெண்மான் ஒன்று அரிமாவின் முழக்கத்தைக் கேட்டு அஞ்சி உடனே குட்டியை ஈன்று விட்டு மாண்டு போயது. இதனைக்கண்டதும் அரசமுனி வராகிய பரதர் அம்மான் குட்டி யிடம் இரக்கங் கொண்டார். அதனைத்தம்முடைய இருப் பிடத்திற்கு எடுத்துக் கொண்டு போய் வளர்த்தார். எப்பொழு தும் முனிவருக்கு அம்மான் குட்டியின் நினைவு இருந்து கொண்டிருந்தது. இறுதிக் காலத்தில் அம்மானை எண் ணிக் கொண்டே உயிர் விட் டார். அதனல் மறுபிறப்பில் மானுகப் பிறந்தார். பிறகு அந்தண குலத்தில் தோன்றி வளர்ந்து பித்தனைப் போல் திரிந்தார். பெயர் சடபரதர் என வழங்கியது. ஒருநாள் இவர் காட்டில் திரிந்து கொண் டிருக்கும் போது, பிள்ளைப் பேற்றின் பொருட்டு நரபலி கொடுக்க எண்ணிய ஒருவன் இவரைக் காளிகோயிலுக்குப் பிடித்துக் கொண்டு சென்ருன். இவர் மீது இரக்கங் கொண்ட காளி பலி கொடுக்க வந்த வனைக் கொன்ருள். மேலும் இவர் வழக்கம் போல் திரிந்து கொண்டிருக்கையில் சவ்வீர நாட்டு மன்னனுகிய இரகு குணனுடைய பல்லக்குச் சுமப்போர் இவரையும் பிடித் துப் பல்லக்குச் சுமக்கச் செய்தனர். இவர் மெதுவாகச் செல்வதைக் கண்ட அரசன் இவர்மீது சினங் கொண்டான். இவர் ஒரு மெய்யறிவாளர் என் பதை யுணர்ந்து இவரிடம் அருளுரை பெற்றுக் கடைத் தேறினன்.

**சடாநாதர்** - ஆநந்ததாண்டவ புரம் என்னும் ஊரில் திருக் கோயில் கொண்டருளிய சிவ பிரான் இப்பெயரால் கூறப் பெறுகிருர். இவ்வூரில் மானக் கஞ்சாற நாயனர் வாழ்ந்திருந் தார். அவருக்கு ஒரு பெண் மகள் இருந்தாள். மானக் கஞ்சாறர் சிவனடியார்களிடத் தில் பேரன்புடையவர்.சிவனடி யார்கட்கு உணவிடும்அறத்தை மேற் கொண்டிருந்தார். மானக் கஞ்சாறருடைய மகளுக்கு மறு நாள் திருமணம் நடைபெறு வதாக இருந்தது. சிவபெரு மான் மானக்கஞ்சாறர் இல்லத் துக்குச் சிவனடியாராக எழுந் தருளினர். மானக்கஞ்சாறர் மகள் தம்மை வணங்கிய போது அவளுடைய கூந்தலைப் பார்த்து விரும்பினர். அக் கூந்தல் தமக்குப் பயன் படு மென்றும் ஆகவே அதனைத் தமக்குக் கொடுக்க வேண்டு மென்றுங் கேட்டார். மானக் கஞ்சாறர் மறுநாள் திருமண மாயிற்றே என்பதையும் எண் ணிப் பாராமல் மகளுடைய கூந்தலை உடனே கத்தரித்து அடியவர் கோலப் பெருமா னிடம் அளித்தார். மறுநாள் மணமகனுக முடிவு செய்யப் பட்ட கலிக்காமர் திருமணத் திற்கு வந்து சேர்ந்தார். நடந்த செய்தியை அறிந்தார். சிவ பிரானே இவ்வாறு வந்திருக் கிருக்கிருர் என்பதை ஒரு வாறு ஊகித்துக் கொண்டார். சிவபிரான் அறுபட்ட கூந்தல் வளருமாறு திருவருள் செய் தார். இவ்வாறு கூந்தல் அறுக்கவும் வளரவும் செய்த படியால் இப்பெருமானுக்குச்

சடாநாதர் என்று பெயர் உண்டாகியது.

**சடாயு** - இவன் அருணனுடைய புதல்வன்; சம்பாதிக்கு இளையவன். இவனுடைய தாயின் பெயர் சேதி. இவன் ஐம்பதினாயிரம் ஆண்டுகள் உயிருடன் வாழ்ந்திருந்தவன் என்பர். இவன் ஒரு நாள் காட்டில் ஒரு மரத்தின் மீது அமர்ந்திருந்தான். அப்பொழுது அயோத்தி மன்னனாகிய தசரதன் வேட்டையாடுவதற்குக் காட்டிற்குச் சென்றிருந்தான். வேட்டையாடிக் களைப்படைந்த சமயத்தில் தன்னுடைய படைகளைத் தொலைவாக இருக்கச் செய்துவிட்டுத் தான் ஒரு மரத்தடியிற் படுத்து உறங்கினான். தசரதனுடைய காற்பக்கத்தில் ஒரு புற்றிருந்தது. தசரத மன்னன் உறக்கக் கலக்கத்தில் அப்புற்றின் மீது காலைப் போட்டுவிட்டான். அதனால் அப்புற்று உடைந்தது. அதனால் உள்ளிருந்த பாம்பு ஒன்று மிகுந்த சினமடைந்தது. அது வெளியே தலைநீட்டிப் பார்த்தது. தசரதன் படுத்திருத்தலைக் கண்டு அவனைக்கடிக்கப் போயிற்று. மரத்தின் மீது அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்த சடாயு திடீரென்று பறந்து வந்து பாம்பைக் குத்திக் கொன்றனன். சடாயு பாய்ந்து வந்த விரைவினால் தசரத மன்னன் விழித்துக்கொண்டான். சடாயுவைப் பார்த்துத் தன்னைக் கொல்ல வந்ததாக எண்ணினான். வில்லை வளைத்துக் கொண்டு சடாயுவோடு போர் தொடுக்கத் தொடங்கினான்.

அரசனுடைய செய்கையைப் பார்த்த சடாயு அரசனிடம் வந்து பாம்பு அவனைக் கடிக்க வந்ததையும் அதைத்தான் கொன்று அரசனைக் காப்பாற்றியதையுங் கூறினான். அரசனுடைய களைப்பு நீங்குமாறு பழம் தண்ணீர் கிழங்கு முதலியவைகளைக் கொண்டு வந்து கொடுத்தான். தன்னுடைய வரலாற்றையுங் கூறினான். சடாயுவினுடைய நற்குணங்களைக் கண்ட தசரதன், "இன்று முதல் நீ எனக்கு உடன் பிறந்தவனாக இருக்கக் கடவாய்'' என்று சொல்லித் தான் சடாயுவைத் தழுவிக் கொண்டான். அன்று முதல் சடாயுவுக்கும் தசரத மன்னனுக்கும் நட்பேற்பட்டு வளர்ந்தது. பிறகு தசரதன் இறந்தான். இராமன் காட்டுக்கு வந்த போது இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றான். சீதையின் குரலால் அவள் தசரத மன்னனுடைய மருமகள் என்பதை யுணர்ந்த இவன் இராவணனோடு எதிர்த்துப் போரிட்டு மாண்டான்.

**சடாயுபுரம்** - சடாயு வழிபாடு செய்த காரணத்தினால் வைத்தீசுவரன் கோயிலுக்கு உண்டாகிய காரணப் பெயர்.

**சடாவதானி** - ஒரே சமயத்தில் ஆறு பொருள்களை உள்ளத்தில் பற்றி அவதானஞ் செய்தவர்கள் சடாவதானிகள் எனப் பெயர் பெற்றனர். அவதானி எனின் நினைவாற்றலால் உள்ளத்தில் பற்றுவோன் என்பது பொருள்.

**சடையக்கத் தேவன்** - கி. பி. 1605 முதல் 1621 வரை சேது நாட்டையரசாட்சி செய்தவன். இவனுடைய பெயர் உடையன் சேதுபதி எனவும் வழங்கப் பட்டது. இவனே முதலாவது சேதுபதி என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

**சட்டை நாதர்** - இரணியனைச் சங்கரித் தெழுந்த நரசிம்மத்தைத் தடிந்து அதன் தோலைச்

சட்டையாக அணிந்தமையால் சட்டை நாதர் என்று பெயருண்டாகியது. இச்சட்டை நாதர் சீகாழித் திருக்கோவிலில் எழுந்தருளியுள்ளார்.

**சண்டன்** - இவன் ஒரு வேடன். இவன் காட்டில் சிவலிங்கம் ஒன்றைக் கண்டான். அதனிடம் அன்பு கொண்டான். அப்பொழுது அங்கு வேட்டைக்கு வந்திருந்த சிங்ககேது என்னும் அரசனைக்கண்டு இச்சிவலிங்கத்தை எப்படிப்பூசிப்பதென்று வினவினான். அவ்வரசன் இவ்வேடனுவது பூசிப்பதாவது என்று கேலியாக, "நீ தண்ணீரை இச்சிவலிங்கத்தின் மீது ஊற்றிச்சுடலையின் வெந்த சாம்பலை அதன் மேற் பூசிப் பூக்களைச் சூட்டி உணவைப் படைத்துத் தூபதீபங்காட்டுவாயாக" என்று கூறிவிட்டுச் சென்றான். அரசன் கூறியதை வேடன் உறுதியாக நம்பினான். அரசன் கூறியவாறே வழிபாடு நடத்திக் கொண்டிருந்தான். ஒரு நாள் சுடலையின் நீறு அகப்படவில்லை. இதைக் குறித்துக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தான். இதனை அவ்வேடனுடைய கற்புள்ள மனைவி அறிந்தாள். கணவனைப் பார்த்து, "நமது குடிசையைக் கொளுத்தி விட்டால் நான் அதில் விழுந்து சாகிறேன். நீர் அந்தச் சாம்பலை எடுத்துப் பூசை செய்யலாம்" என்று சொன்னாள். வேடன் உடனே தன்னுடைய குடிசையைக் கொளுத்தி விட்டான். அவனுடைய மனைவிஅதில் விழுந்து இறந்தாள். வேடன் சாம்பலை எடுத்துக் கொண்டு போய்ப் பூசையை முடித்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்பினான். தன் வீடுமுன் போல் இருக்கவும் தன் மனைவி வழக்கம் போல் எதிர் கொள்ளவுங் கண்டான். இறுதியில் இவ்வேடன் வீடு பேற்றை யடைந்தான்.

**சண்பகம்** - இவள் முன்னாளிற் சோழ நாட்டில் உறையூரில் மரகதவடிவு என்பவளுடைய மகளாகத் தோன்றியிருந்தாள். பேரழகியாகத் தோன்றிய இவள் பல நூல்களையும் இளமையிலேயே பயின்று புலமை நலம் நிரம்பியவளாய் விளங்கி யிருந்தாள். அறிவு நலமும் அழகு நலமும் ஒருங்கே அமையப் பெற்ற இவளை மணந்து மகிழ அனைவரும் விரும்பினர். ஆயினும் இவள் கல்வியறி வில்லாதவர்களை மணக்க விரும்பவில்லை. கல்வி நலம் நன்கு அமையப் பெற்ற ஒருவனையே இறுதியில் மணந்தாள்.

**ண்பைநகர்** - அங்க நாட்டிலுள்ள ஒரு பெரிய நகரம். எல்லா வளத்திலும் மிகச் சிறந்து விளங்கியது. உக்கிர குலத்தரசனாகிய விசையவரன் என்பவனால் ஆளப்பட்டது. இந்நகரத்தில் இருந்த மித்திர காமன் என்னும் ஒரு வணிகனுடைய வீட்டில் பூகியும், வாசவதத்தையும், காஞ்சன மாலையும், சாங்கியத்தாயும் தம்மைப் பிறர் அறிந்து கொள்ளாதவாறு வேற்று வடிவங் கொண்டு தங்கி அவ்வணிகனாற் பாதுகாக்கப் பட்டனர்.

**சண்முகநாதன்** - சட் என்னும் வடசொல் ஆறு என்று பொருள் படும். முருகக் கடவுள் ஆறு திருமுகங்கள் அமையப் பெற்ற தலைவராகையால் இவ்வாறு வடமொழியில் பெயர் உண்டாகியது.

**சதகத்துல்லாவலி** - இவர் சிறந்த கல்வியறிவுடைய முகமதியர். காயற்பதியில் இருந்த சீதக்காதியின் நண்பர். இவர்

அந்நாளில் டெல்லியில் ஆட்சி புரிந்த ஔரங்கசீபுக்கும் நண்பர். சீதக்காதியின் கல்வி யறிவு கொடை நலம் முதலி யவைகளை ஔரங்கசீபுக்குத் தெரியப்படுத்தினர். ஔரங்க சீபு சீதக்காதியை வங்காளத் தின் தலைவராக ஏற்படுத்தினர். ஆயினும் சீதக்காதி அப் பதவியை மேற் கொண்டிருக்க வில்லை.

**சதகர்ணி** - இவன் ஓர் அரசன். இவனிடத்தில் நூறு ஒற்றர் கள் இருந்தபடியால் இஃது இவனுக்குக் காரணப் பெய ராக அமைந்தது. இவனுக்கு இடுகுறிப் பெயர் வேறு உண்டு.

**சததன்வா** - இவன் யதுகுல வேந்தனுகிய இருதிகன் என் பவனுடைய மகன். தாய் பெயர் சவுமதி. தேவமீடன், கிருதவன்மன் என்னும் இரு வரும் இவனுடன் பிறந்தவர். இவன் ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தவன். இவனிடம் அழகு இருந்ததே தவிர அறிவு இல்லை. ஆண்மை யற்றவனுகவிருந்தும் துடுக்கு களை மிடுக்காகச் செய்து கொண்டிருந்தான். வட மதுரையை அடுத்திருந்த நிலப் பகுதிக்கு இவன் அரசனுக விருந்தான். சத்திராசித்து என்பவனுடைய மகள் சத்தியபாமை என்பவள் அழகிற் சிறந்தவளாக விளங்கி ஞள். இவன் அம்மாதரசியை மணந்துகொள்ள விழைந்தான். அம்மன்னனே இவ்வறிவிலிக்கு அவளைத் தராமல் கண்ணனுக் குக் கடிமணஞ் செய்து கொடுத்தான். அதனுல் சினங் கொண்ட இத்தீயோன் அவ னைக் கொன்று விட்டான். சத்திராசித்திடம் சமந்தகம் என்னும் பெயருடை ய அரிய மணி ஒன்று இருந்தது. அது மிகுந்த சிறப்புடையது. அம் மணி கதிரவனுல் சத்திரா சித்திற்குக் கொடுக்கப் பட் டிருந்தது. அம்மணி தன்னை யணிந்து கொண்டவர்கட்கு எல்லா நலங்களையும் இனி துதவ வல்லது. மணிக்குடைய வன் விரும்பினுல் ஒரே சமயத் தில் நூற்றறுபது துலாம் பொன்னைக் கொடுக்கக் கூடி யது. சத்திராசித்துவைக் கொன்றதும் இம்மணியைக் கைப்பற்றினுன். பெண்மணி கிடைக்காவிட்டாலும் இக்கண் மணி கிடைத்ததேஎன்று இவன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான். தந்தை இறந்ததைச் சத்திய பாமை யுணர்ந்து பெரிதும் வருந்தினுள். திருமணமான சில நாட்களுக்குள்ளேயே இவ் வாறு தந்தையை இழக்குமாறு நேரிட்டதே என்று பெரிதும் உள்ளம் வருந்தினுள். இச் செய்தியைத் தன்னுடைய கணவனுகிய கண்ணனுக்குத் தெரியப்படுத்தினுள். செய்தியை உணர்ந்த கண்ணன் மிகுந்த சீற்றங் கொண்டான். இவனைக் கொன்று தொலைத்து விடுவதென்று புறப்பட்டான். சததன்வா தன்னுயிரைக் காப் பாற்றிக் கொள்ள முயன்று பார்த்தான் முடியவில்லை. கண்ணனுடைய பேராற்றலை யுணர்ந்திருந்த அனைவரும் இவ னைக் கைவிட்டனர். இவன் தன்னுடைய உயிரைக் காப் பாற்றிக் கொள்வதற்காக விதர்ப்ப நாட்டிற்குச் சென் ருன். ஆனுல் கண்ணனுடைய ஆழிப்படை அங்குஞ் சென்று இவனுடைய தலையை அறுத் துக் கொன்ருழித்தது.

**சதமகிடபட்சணி** - சதமகிட பட்சணி எனின் நூறு எருமை களைத் தின்பவள் என்பது பொருள். இவள் ஓர் அரக்கி;

நாடோறும் நூறு எருமைகளைத் தின்னும் வழக்கமுடையவளாக விருந்த படியால் இவள் இவ்வாறு பெயர் பெற்ருள். குழந்தையாகப் பிறந்திருந்த ஆனைமுகக் கடவுளைக் கொலை செய்ய முயன்ற அரக்கர்களில் இவளும் ஒருத்தி. இவள் உமாதேவியிடஞ்சென்று தான் இந்திராணி யென்றும் தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்றும் வேண்டிக் கொண்டாள். உமாதேவி இவ்வரக்கியினுடைய உண்மையை உணர்ந்துகொள்ளாமல் உணவு முதலியன வளித்துப் பாராட்டினுள். இவள் சிறந்த அழகோடு சென்றிருந்தபடியினுல் உமாதேவி இவ்வரக்கி யிடத்தில் ஐயங் கொள்ளவில்லை. சமயம் பார்த்திருந்த அரக்கி ஆனைமுகக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஓடுவதற்குச் சமயம் பார்த்தாள். ஆனைமுகக் குழந்தை அரக்கியின் வஞ்ச நெஞ்சத்தை நன்கு உணர்ந்து கொண்டமையின் அவ்வரக்கியின் இருகாதுகளையும் இரண்டு கைகளாலும், மூக்கை மற்றிரண்டு கைகளாலும் அழுத்தமாகப் பற்றிக் கொண்டு, அவளால் சுமக்க முடியாத பாரமுடையதாய்க் கனங் காட்டித் தொங்கலாடியது. இதனை அரக்கியால் பொறுக்க முடியவில்லை. தன்னைவிட்டு விடுமாறு கூவியலறினுள். ஆயினும் ஆனைமுகக் குழந்தை அவளை விடவில்லை. சில உதைகள் கொடுத்துக் கீழே தள்ளிக் கொன்றருளியது. அரக்கி தன்னுடைய உண்மை வடிவத்தோடு விழுந்து இறந்தாள். இதன் பின்னரே உமாதேவி முதலியோர் வந்தவள் அரக்கி யென்பதை யுணர்ந்தனர்.

**சதமுகன்** – இவன் ஓர் அசுரன். வீரவாகு தேவர் சூரபதுமனிடம் தூதாக வந்து திரும்பிச் செல்கையில் அவரைப் பிடிக்கச் சென்று அவரால் இறந்தொழிந்தான்.

**சதவிந்து** - சுரமை நாட்டில் போதனபுரம் என்னும் நகரில் இருந்தவன். அந்தணர் குலத்தினன். உலக நூல்களையும் அறிவு நூல்களையும் நன்கு கற்றுத் தேறியவன். அச்சுவகண்டன் என்னும் மன்னன் இவனைத் தனக்கு அமைச்சனுகவுங் குருவாகவுங் கொண்டு நடந்தான். இவன் கூறிய அறிவுரைகளை யெல்லாம் பொன்மொழியெனக் கொண்டு போற்றினுன்.

**சதாவதானிகள்** - ஒரே சமயத்தில் நூறு வகையான பொருள்களை உள்ளத்தில் பற்றிக் கொண்டு அவதானஞ் செய்பவர்கள் சதாவதானிகள் என்று அழைக்கப் பெற்றனர். சதம்-நூறு.

**சதானந்தர்** - இவர் கௌதமருடைய மகன். மறை முதலிய கலைகளை ஓதியுணர்ந்து சிறப்புடன் விளங்கியவர். இவருடைய சீரிய நலங்களையுணர்ந்த மிதிலை மன்னனுகிய சனகன் இவரையழைத்துத் தன் பக்கத்தில் வைத்திருந்தான். இவர் அங்கு அமைச்சராகவும் அரசனுடைய ஆசிரியராகவும் விளங்கினுர். தருமசீலை யென்னும் பெண்ணை மணந்து இல்வாழ்க்கையையும் நடத்தினுர். சத்தியரதன் என்னும் மகனையும் பெற்ருர். விசுவாமித்திரர் இராமபிரானையும் இலக்குமணனையும் மிதிலைக்கு அழைத்துக் கொண்டு சென்ற போது இவர் அரசனுடைய நோக்கப்படி சீதையைப் பற்றிய செய்தியை முனிவருக்

கும் இராம லக்குமணர்கட்கும் தெளிவாக எடுத்துரைத்தார்.

**சதானிகன்**-குருகுலத்திற் பிறந்த அரசன். உதயணன் இவனுடைய மகனே. இவனுடைய மனைவியின் பெயர் மிருகாபதி. ''செருமிகு சீற்றத்துக் குருகுலத்தரசன், சாயாச் செங்கோற் சதானிகன்'' என்று இவன் பாராட்டப் பெற்முன்.

**சதுக்கப்பூதம்** - பொய் வேடத்தினர் முதலியோரைத் தன்கைப் பாசத்தாற்கட்டி அடித்துண்ணும் ஒருபூதம். இப்பூதம் முன்னுளில் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்தது. இப்பூதத்தைக் குறித்து மணிமேகலை, ''தவமறைந்தொழுகுந் தன்மையிலாளர், அவமறைந்தொழுகும் அலகைப் பெண்டிர், அறைபோகமைச்சர் பிறர்மனை நயப்போர், பொய்க்கரியாளர் புறங்கூற்முளரென், கைக்கொள் பாசத்துக் கைப்படுவோரெனக், காதநான்கினுங் கடுங்குர லெழுப்பிப், பூதம் புடைத்துணும் பூதசதுக்கமும்'' என்று குறிப்பிடுகிறது.

**சதுரகராதி** - பெயர், பொருள், தொகை, தொடை என்னும் நால்வகைச் சொற் பொருள் கொண்ட அகராதி சதுரகராதி என்று பெயர் பெற்றது. இவ்வாறு பெயர் கொடுத்து முதன் முதலாக அகராதியை எழுதியவர் வீரமாமுனிவர். இவ்வகராதி 1732 ஆம் ஆண்டில் எழுதப் பெற்றதென்பர்.

**சத்திய காயன்** - இவன் தருசகனுடைய அமைச்சர்களில் ஒருவன். ஆருணியரசனேடு போர் செய்வதற்கு உதயணன் புறப்பட்ட காலத்தில் அவனுக்குத் துணையாகத் தருசகனுல் அனுப்பப்பட்ட வீரர்களில் ஒருவன். அப்போரில் இவன் இறந்துபோனுன். இவனுடைய மக்களுக்கு உதயணன் தக்கவாறு உதவி செய்து காப்பாற்றினுன்.

**சத்திய சீலன்** - இவன் மனுநீதிச் சோழனுடைய அமைச்சர்களில் ஒருவன். ஆவின் கன்றைக் கொன்றதற்காகத் தன்னுடைய மகனைத் தேர்க்காலில்இட்டு அரைத்துவிடுமாறு மனுநீதிச் சோழன் இவ்வமைச்சனுக்குக் கட்டளையிட்டான். அப்பொல்லாத செயலைச் செய்தற்கு உள்ளம் வருந்திய இவன் தன்னுடைய உயிரைப் போக்கிக் கொண்டான்.

**சத்தியபாமை** - இவள் சத்திராசித்துவினுடைய மகள். கண்ணனுடைய மனைவி; சததன்வா தன் தந்தையைக் கொன்றதைத் தன் கணவனுக்குச் சொல்லி அச் சததன்வாவைக் கொல்வித்தவள். இந்திராணி தன்னை நன்கு மதிக்காமல் தாழ்வாக நினைத்ததற்காகப் பாரிசாத மரத்தைத்தன்னுடைய இல்லத்துக்குக் கொண்டுவரச் செய்தவள். நரகாசுரனேடு கண்ணன் போர் புரிந்த சமயத்தில் இவள் வேண்டிய உதவிகளைச் செய்தாள்.

**சத்திய மூர்த்தி** - திருமெய்யத்தில் திருக்கோயில் கொண்டுள்ள திருமாலின் திருப்பெயர்.

**சத்தியவான்** - சாளுவமன்னனுகிய தியுமத் சேனனுடைய மகன். நல்லியல்புகளுடையவன். அழகிலும் ஆண்மையிலும் மேம்பட்டவன். இவன் இளவரசனுக இருக்கும்பொழுதே இவனுடைய தாய்தந்தையர் நாட்டைப் பகைவனிடமிழந்ததோடு கண்களையும் இழந்து காட்டில் வாழுமாறு நேரிட்டது. அசுவபதி அரசனுடைய மகளான சாவித்திரி சத்தியவானையே மணக்க எண்ணியிருந்தாள்,

மணந்த மறு ஆண்டிலேயே இவன் இறப்பான் என்று நாரதர் வாயிலாக அறிந்தும் அவள் இவனையே மணந்தாள். மறு ஆண்டில் இவன் இறந்தபடியினால் எமன் இவனுடைய உயிரைக் கொண்டுசென்றான். சாவித்திரி தன்னுடைய கற்புச் சிறப்பால் எமனோடு சொற்போராடி இவனுடைய உயிரை மீட்டு வந்தாள். பிறகு அரசாட்சி முதலியவைகளை இவனடைந்து நலம்பெற்றான்.

**சத்தியவிரதன்** - கோசலநாட்டில் இருந்த தேவதத்தன் என்னும் ஒரு மறையவன். பிள்ளைப் பேற்றை விரும்பி முனிவர் ஒருவரைக் கொண்டு ஒரு வேள்வியைச் செய்தான். அம்முனிவர் அடிக்கடி மூச்சுவிட்டு அபசுரமாகச் சாமகானஞ்செய்தார். இதனைப் பார்த்த அந்தணன் முனிவரைச் சினந்தான். முனிவர் மறையவனைப் பார்த்து, "நீ என் மீது சினங்கொண்டபடியால் உனக்குப் பிறக்கும் புதல்வன் ஊமையாகவும் அறிவற்றவனாகவும் இருப்பான்" என்று வசவுரை கூறினார். இதனைக் கேட்ட மறையவன் தன் மீது இரங்கி அருள் புரிய வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். முனிவர் மறையவனைப் பார்த்து, "உன்பிள்ளை என் சாபப்படி பிறந்தாலும் சில காலம் அறிவில்லாதவனாகவிருந்து பிறகு சிறந்த அறிஞனாவான்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

முனிவருடைய வசவுரைப் படி அந்தணனுடைய மனைவி அறிவற்ற ஊமைப்பிள்ளையைப் பெற்றாள். இவனுக்கு உதத்தியன் என்று பெயரிட்டு வளர்த்தனர். இவனுடைய தன்மையைப் பார்த்துநாணங்கொண்டு வருந்திய தாய்தந்தையர்இவனை வீட்டை விட்டு வெளியேவிடாமல் வீட்டிற்குள்ளேயே அடைத்து வைத்திருந்தனர். இவன் ஒரு நாள் வீட்டைவிட்டு வெளியேறிக் கங்கைக்கரையை அடைந்து ஓர் இருப்பிடத்தை ஏற்படுத்திக் கொண்டு அதில் தங்கியிருந்தான். எக்காரணத்தை முன்னிட்டும் பொய் பேசுவதில்லையென்று உறுதி செய்து அதன்படியே நடந்து வந்தான். அதனால் இவனுக்குச் சத்தியவிரதன் என்று பெயருண்டாகியது. ஒருநாள் ஒரு பன்றியானது வேடனால் அடிபட்டு இவனிருந்த பக்கமாக வந்து ஓடி மறைந்தது. பன்றியைத் தேடிவந்த வேடன் சத்திய விரதனைப் பார்த்து, "இப்பக்கமாக ஒருபன்றி ஓடி வந்ததே பார்த்தீரா?" என்று உசாவினான். அது சென்ற பக்கத்தைக்காட்டினால் அப்பக்கமாகப் போய்ப் பன்றியைத் தேடிக் கொன்று விடுவானே என்று எண்ணிய இவன், "ஹ்ரு ஹ்ரு" என்று ஒலி செய்தான். இது தேவியினுடைய மூலமந்திரமாகையால் தேவி காட்சி தந்து இவனுக்குக் கல்வியறிவைக் கொடுத்துச் சென்றாள். அதன் பின் இவன் பேரறிவுடையவனானான்.

**சத்தியாதனன்** - இவன் விதர்ப்ப நாட்டில் தாலபுரம் என்னும் நகரத்தில் இருந்து அரசு புரிந்தவன். இவனுடைய காலம் ஏறக்குறையமூவாயிரம் ஆண்டுகட்கு முன்னராகும். இவன் அரசாட்சியை நேரியமுறையிற் புரியாமல் சிற்றின்பத்தில் ஆழ்ந்து நின்றபடியாற் பகைவர்கள் சமயம் பார்த்து இவனுடைய நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர்.

**சத்தியூதி** - தருசகனுடைய நண்பன். பாட்டகம் என்னும் ஊருக்குத் தலைவன். மறைந்

திருந்த யூகி முதலியவர்களைப் பார்க்கச் சென்ற உருமண்ணுவாவுக்கு உதவி செய்தவன்.

**சத்தியை** - இவளுக்கு நப்பின்னை என்றும் பெயருண்டு. இவள் நக்கினசித்து என்பவனுடைய மகள். இவளுடைய தந்தை ஏழு காளைகளை வளர்த்து அவைகளைத் தழுவியவர்களுக்கே இவளைக் கொடுப்பதாகச் சொன்னான். அந்த ஏழுகாளைகளையுங் கண்ணன் தழுவி இவளை மணந்தான்.

**சத்திரபந்து** - இவன் கதிரவ குலத்து மன்னன். தந்தையினுடைய பெயர் விசுவநாதன். சோம்பலும் அறிவின்மையும் இவனிடத்தில் மிகுதியாகக் குடி கொண்டிருந்தன. நல்லவர்கள் பலர் இவனுக்கு அறிவுரை கூறினார்கள். ஆயினும் இவன் அவ்வறிவுரைகளைக் கொள்ளவில்லை. சமயம் பார்த்து நாட்டைப் பகைவர்கள் கைப்பற்றினர். இவன் காட்டையடைந்து வேட்டைத் தொழிலை மேற்கொண்டு வேடனாகவே மாறி விட்டான்.

**சத்திராசித்து** - இவன் சத்தியபாமையினுடைய தந்தை. சூரியனிடத்தில் சியமந்தக மணியைப் பெற்றவன். அம்மணியைப் பிரசேனனிடம் கொடுத்தான். அவனிடமிருந்து ஒரு சிங்கங் கவர்ந்தது. அதனிடமிருந்து சாம்பவந்தன் என்னுங் கரடியரசன் கவர்ந்தான். இவன் அதனைத் தன்னுடைய மகள் தூங்குமிடத்தில் வைத்தான். பிறகு கண்ணன் கவர்ந்தான் என்று பழி கூறினான். கண்ணன் அப்பழிக்கு அஞ்சினான். சாம்பவந்தனோடு போர்செய்து வெற்றி பெற்றான். அம்மணியைக் கவர்ந்து கொடுக்க வாங்கியவன். பிறகு தன் மகளாகிய சத்தியபாமையையும் அம்மணியையும் கண்ணனுக்கே கொடுத்தவன். கண்ணன் அம்மணியை மீண்டுந் தரப்பெற்றுக் கொண்டான். சததன்வா என்பவன் சத்தியபாமையைத் தனக்கு மணஞ் செய்து கொடுக்குமாறு கேட்க மறுத்தவன். மறுத்த காரணத்தால் அச்சததன்வாவினால் இவன் கொல்லப்பட்டான்.

**சந்தன விநாயகர்** - செஞ்சேரிமலை என இந்நாளில் வழங்கும்தென் சேரிகிரிமலையின் அடிவாரத்தில் எழுந்தருளிய பிள்ளையாரின் பெயர். இம்மலை கொங்குவள நாட்டில் உள்ளது.

**சந்தனன்** - பாடலிபுரத்து மன்னனுடைய மகன். இவன் கண்கவர் அழகனாக இருந்துங் கல்வியறிவற்றவனாக இருந்தான். இவனுடைய அழகில் மயங்கிய ஏலங்குழலாள் என்பவள் இவன் எழுதப்படிக்கத் தெரியாதவன் என்பதையுணராமல் தன்னுடைய காதலை ஓர் ஓலையில் எழுதி இவனுக்கு அனுப்பினாள். கல்வியறிவற்றிருந்த இவன் அவளுடைய ஓலையை வேறொருவனிடங் காட்டி அதில் எழுதப்பட்டுள்ள செய்தியாதென்று உசாவினான். அத்தீயோன் பொய்யான செய்தியை இவனுக்குக் கூறி அச்சுறுத்தித் துரத்தி விட்டுத்தான் ஏலங்குழலாள் குறிப்பிட்ட இடத்திற்குப் போய் அவளை வஞ்சித்தான். செய்தியை உணர்ந்த ஏலங்குழலாள் அவனை மாய்த்ததுடன் தானும் மாய்ந்தாள். இவனும் மாண்டு பேயானான்.

**சந்தனு** - பிரதீயன் என்கிற அரசன் சிபிவமிசத்தில் தோன்றிய சுகந்தி என்பவளை மணந்தான். இவர்களுக்குத் தேவாபி, சந்தனு, பாகுலிகன் என்று மூன்று மக்கள் தோன்றி

னர். தேவாபி சிறுவனாக இருக்கும்போதே காட்டுக்குச் சென்றுவிட்டான். இதனால் சந்தனு குல முதல்வனானான். இவன் வயது முதிர்ந்தவர்களைத் தன் கையால் தொடுவானாகில் அவர்கள் இளமைப் பருவத்தை யடைந்து இன்பமனுபவிப்பர். அதனால் இம்மன்னனுக்குச் சந்தனு என்று பெயர் உண்டாகியது. இவன் குருகுல வழி முறையைச் சேர்ந்தவன்.

**சந்தானலட்சுமி** - இரண்டு கைகளில் தாமரை மலர்களிருக்கும். இரண்டு கைகளில் குழந்தைகளை வைத்திருப்பாள். இவளைப் போற்றுவோர் விரும்பிய அளவு மக்கட் செல்வத்தை யடைவர்.

**சந்திரசர்மா** - விக்கிரமாதித்தனுடைய தந்தை. இவன் நான்கு வருணங்களினும் நான்கு பெண்களை மணந்து பார்ப்பனப் பெண்ணிடம் வரருசியையும் சத்திரியப் பெண்ணிடம் விக்கிரமாதித்தனையும் வைசியப் பெண்ணிடம் பட்டியையும் சூத்திரப் பெண்ணிடம் பர்த்துருகரியையும் பெற்றான். இவர்கள் நால்வரும் விக்கிரமாதித்தனுக்கு அமைச்சர்களாயினர்.

**சந்திரசூடாமணி** - இறைவன் ஆடிய திருக்கூத்துக்கள் பலவற்றில் ஒன்றன் பெயர். முனிவர்களுடைய விருப்பப்படி இறைவன் இத்திருக்கூத்தைத் திருத்தருப்பூண்டியென்னும் வில்வாரணியச் சிவப்பதியில் செய்தருளினார். இதற்குச் சுந்தரதாண்டவம் எனவும் பெயருண்டு. இத்தாண்டவத்தைக் கண்டு போற்றிய முனிவர்கள் சாயுச்சிய பதவியை அடைந்தார்கள். இத்தாண்டவத்தைக் காண்டற்கு முனிவர்கள் உருத்திர பாசுபதம்என்னும் வேள்வி செய்து ஆயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தனர்.

**சந்திரசேகரபாண்டியன்** - பதினைந்தாம் நூற்றாண்டின் இடையில் மதுரைமா நகரை அரசாட்சி செய்திருந்தவன். தஞ்சையில் அரசாட்சி செய்துகொண்டிருந்த வீரசேகரசோழன் இவனை வென்று நாட்டை விட்டுத் துரத்தினான்.

**சந்திரசேகரவாணன்** - தொண்டை வளநாட்டில் சேறையென்னும் ஊரில் முன்னாளில் வாழ்ந்திருந்தவன். பெருஞ் செல்வன். செல்வச் சிறப்போடு மக்களின் அன்பையும் இவன் பெற்றிருந்தான். இவனுடைய கொடை நலம் எல்லாராலும் பாராட்டப் பெற்றது. இச் சந்திரசேகரவாணனைக் காணச் சோழ குலத்தரசன் ஒருவன் ஒருநாள் வந்தான். வந்தவனை இவன் எதிர் கொள்ளவில்லை. அதனாற் சினங்கொண்ட சோழன்வேளாளர்கள் மிகுந்த செருக்குடையவர்களாக இருக்கிறார்கள்என்று சினங்கொண்டான். பல வேளாளர்களை விலங்கிட்டுச் சிறையிலடைத்தான். இதனையறிந்த சந்திரசேகரவாணன் அந்தச் சோழ குலத்தரசனைப் பிடித்துச் சிறையிலடைக்கச் செய்தான். பாண்டி நாட்டில் இருந்து பாண்டிய குலத்தரசன் ஒருவனைக் கொண்டுவந்து அவனுக்கு முடிசூட்டினான். இச் சந்திரசேகரவாணனுடைய கீர்த்தி தொண்டை மண்டல சதகத்தினும் இடம் பெற்றுள்ளது.

**சந்திர தத்தன்** - கப்பலிற்சென்று வாணிகஞ்செய்த ஒரு வணிகன். சாதுவனை நாகர் மலையிலிருந்து காவிரிப்பூம் பட்டினத்திற்குக் கப்பலில் ஏற்றி அழைத்துக் கொண்டு வந்தவன் இவனே.

**சந்திரநாகூர்** - மேற்கு வங்காளத்தில் உக்ளி ஆற்றங் கரையில் கல்கத்தாவுக்கு வடக்கே இருபத்திரண்டு மைல் தொலைவில் உள்ள ஊர். இஃது 1688 ஆம் ஆண்டில் ஔரங்கசீபால் பிரெஞ்சுக்காரர்களுக்கு வழங்கப் பட்டது. பலமுறை ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்டு 1816 முதல் பிரெஞ்சுக் காரர்களிடம் நிலைபெற்றது. முன்னாளில் இவ்வூரில் கடல்வாணிகம் பெரும் புகழுடன் நடைபெற்றது.

**சந்திரமதி** - உண்மைக்குப் புகழ் பெற்ற அரிச்சந்திரனுடைய மனைவி. மதிதயன் என்னும் மன்னனுடைய மகள். கற்பிற் சிறந்தவள். இவளுடன் இவள் கழுத்தில் தாலியும் பிறந்த தென்றும்இவளை மணப்பவனே அத்தாலியைக் காணமுடியும் என்றுங் கூறுவர். அரிச்சந்திரனைப் பொய்யனாக்குவதற்கு விசுவாமித்திரர் எடுத்துக் கொண்ட முயற்சிகளெல்லாம் தோல்வியடைந்தன வேனும் அரிச்சந்திரன்மிகுந்ததொல்லைக் குள்ளானான். சந்திரமதியும் மிகுந்த துன்பத்தை யடைந்தாள்.

**சந்திரவாணன்** - நடு நாட்டில் விழுப்புரத்திற்கு மேற்கே யுள்ள அனந்தபுரம் என்னுஞ் சிற்றூரில் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவன். தமிழைப் பயின்று தமிழறிஞனாக விளங்கியதோடு தமிழ்ப் புலவர்களைப் பாதுகாத்துப் பரிசுகள் வழங்குவதினுஞ் சிறந்து விளங்கினான். இவன் காலத்தில் அந்தகக்கவி வீரராகவ முதலியார் சிறந்து விளங்கியிருந்தார். அவர் சந்திரவாணன்மீது கோவையொன்று பாடினார். அக்கோவை சந்திரவாணன்கோவை என்னும் பெயரோடுசிறந்து விளங்கியது. அக்கோவை அரங்கேற்றிய அவையில் அம்மைச்சி என்னும் புலமைநிறைந்த தாசியொருத்தி இரண்டொரு தடைகளைநிகழ்த்தினாள். கவிராயர் அதற்குத் தக்கவாறு மறுமொழியும்வழங்கினார். கோவை அரங்கேற்றம் முடிந்தவுடன் சந்திரவாணன் கவிராயருக்குச் சிறந்தபரிசுகள் வழங்கிப் பெருமைப் படுத்தினான். இவன் சிற்றரசர்களில் ஒருவனாய்ச் சிறந்து விளங்கியிருந்தான்.

**சந்திரன்சுவர்க்கி** - இவன் ஒரு சிற்றரசன். இவன் மள்ளுவ நாட்டில் உள்ள முரணைநகரில் அரசாட்சி செய்திருந்தான். புகழேந்திப் புலவரைக் கொண்டு நளவெண்பாவைப் பாடச் செய்தவன் இவனே. இவனைப் புகழேந்தி நளவெண்பாவிற் குறிப்பிட்டுள்ளார்.

**சந்திராபீடன்** - உச்சயினி நகரத்தரசன். இவன் தாராபீடன் என்னும் அரசனுடைய மகன். காதம்பரி என்பவளுடைய கணவன். காதம்பரி என்னும் வடமொழி நூலின் கதைத் தலைவன்.

**சந்துமேனன்** - (1847 - 1900) வட மலபாரிலுள்ள குரும்பற நாடு தாலுக்காவில் பிறந்தமலையாள எழுத்தாளர். பத்தாவது வரை படித்து விட்டு அரசாங்க அலுவலில் நுழைந்தார். தமது வாழ்க்கையின் இறுதியில் சில காலம் துணை நடுவராக இருந்தார். மலையாளத்தில் முதன் முதல் சமூகநாவல் எழுதி வெற்றியடைந்தவர் இவரே. இந்துலேகா என்ற இவருடைய முதல் நாவல் தெளிந்த நடையுடன் கூடியது. பலராலும் பாராட்டப் பெற்றது. இவர் எழுதிய மற்றொரு நாவலாகிய

சாரதா என்பது முற்றுப் பெற வில்லை.

**சபரி** - இவள் வேடர் குடியிற் பிறந்தவள். சபரர்-வேடர். இவள் மதங்க முனிவருடைய இருப்பிடத்தில் இருந்து கொண்டு அவருடைய மாணவர்களைப் பாதுகாத்தாள். இவள் இராமபிரானுடைய வருகையைத் தன்னுடைய அறிவுப்பார்வையால்உணர்ந்து பலவகையான பழங்களைத் தொகுத்துப் பக்குவப்படுத்திப் பாதுகாத்துக் கொடுத்தாள். இவள் தவஞ் செய்து பல சித்திகளைப் பெற்றிருந்தாள்.

**சப்தரிஷிமண்டலம்** - விண்ணின் வடபாகத்தில் ஒரு பெரிய கலப்பை வடிவத்தில் அமைந்துள்ள ஏழு விண்மீன்களையே இப்பெயரால் அழைப்பர். பிப்ரவரி மாதத்தில் இருந்து இரண்டு மூன்று மாதங்கள் வரை முன்னிரவில் விண்ணில் வடக்கில் இவை நன்கு தெரியும். ஏழுமுனிவர்கள் இம் மண்டலத்தில் இருப்பதால் இவ்வாறு பெயர் ஏற்பட்டதென்பர்.

**சமணர்மலை**- மதுரைக்கு மேற்கே ஐந்துகல் தொலைவில் கம்பம் போகும் வழியில் அமைந்துள்ளது. இது முன் காலந் தொட்டே அறவோர் பள்ளியாகவும் கலைக்கோயிலாகவும் விளங்கி வரும் வரலாற்றுப் பெருமலையாகும். இங்குப் பல குன்றுகள் சூழ்ந்துள்ளன. இம் மலைப் பகுதிகளில் சமண சமயத்தைப் போற்றும் தீர்த்தங்கரர்களின் உருவச்சிலைகளும் குகைகளும் முனிவர்களின் படுக்கைகளும் கல்வெட்டுக்களும் காணப்படுவதால் இம்மலை இப்பெயரால் அழைக்கப்பட்டு வருகிறது. வரலாற்றுச் சிறப்படைந்த இம்மலையின் கிழக்குக் கோடி மதுரை நகரை நோக்கிய வண்ணங் காட்சி யளிக்கிறது. இம்மலையின் அடிவாரத்திலிருந்து ஏறக்குறைய நூறுகச தொலை மேலே ஏறியதும் காணப்படும் பரவிய வெளியிடத்தின் எதிரே உள்ள பாறையில் ஆதிபகவன், நேமிநாதர், பார்சுவநாதர், மகாவீரர் ஆகிய ஒன்பது தீர்த்தங்கரர்களின் உருவச் சிலைகளும் வரிசையாக அமைக்கப் பட்டுள்ளன. இஃது அமணர்மலை எனவும் வழங்கியது.

**சமதக்கினி** -பிருகு முனிவருடைய புதல்வர். இருசிகருக்குச் சத்தியவதியிடம் பிறந்தவர் எனவுங் கூறுவர். இரேணுகை இவருடைய மனைவி. பரசுராமர் முதலிய நால்வர் இவருடைய பிள்ளைகள். வேட்டையாடச் சென்ற கார்த்தவீரியனை இவர் காமதேனுவைக்கொண்டு விருந்தளித்துப் பாராட்டினார். இவனோ நன்றி மறந்து காமதேனுவைக் கவர எண்ணினான். பரசுராமர் கார்த்தவீரியனையும் அவனுடைய படையையும் கொன்றொழித்தார். கார்த்தவீரியனுடைய பிள்ளைகளுட் சிலர் சமதக்கினியைக் கொன்றனர். இதனால் சினமடைந்த சமதக்கினி புதல்வராகிய பரசுராமர் சத்திரிய வழி முறையைக் கருவறுத்தார்.

**சமந்தகூடம்** - இலங்கைத் தீவிலுள்ள ஒருமலை. சமனொளியென்றும் சமந்தமென்றும் பெயர்பெறும் புத்தர்களுடைய பதிகளுள் ஒன்று.

**சமந்தபஞ்சகம்**-திரேதாயுக துவாபரயுக இடையிலே பரசுராமர் க்ஷத்திரியரைக் கொன்று அவர் ருதிரத்தை ஐந்து தடாகங்

களில் நிரப்பிஅதனைக்கொண்டு தென்புலத்தார் கடன் செய்த படியினால்அவ்விடம் சமந்தபஞ் சகம் எனப் பெயர்பெற்றது. இந்த இடம் பிற்காலத்தில் கௌரவர்க்கும் பாண்டவர்க் கும் போர்புரியும்இடமாகியது. குருக்ஷேத்திரமென்று கூறப் படுவது இந்த இடமே.

**சமரபுரி** - திருப்போரூர். சமரம்- போர்,புரி - ஊர். போரூர் என் னும் அழகிய தமிழ்ச் சொல்லை இவ்வாறுவடமொழியில்மொழி பெயர்த்துச்சமரபுரியாக்கியிருக் கிறார்கள். சூரபதுமனுடைய துணைவர்களான அசுரர்கள் போருக்கு எழுந்தபோது அவர் களை இங்குமுருகன்போர் புரிந்து வென்றார் என்பது வரலாறு.

**சமரை** - இவள் சைலூடன் என் னுங் காந்தருவனுடையபெண். விபீடணனுக்கு மனைவி. திரி சடை இவளுடைய மகளே. இவர்கள் இருவரும் சீதா பிராட்டி அசோகவனத்தில் சிறையிருக்கையில் அன்பும் ஆதரவுங் காட்டிச் சீதா பிராட்டியின் துன்பத்தை ஒரு வாறு போக்கினார்கள்.

**சமி** - அவுரவ முனிவருடைய மகள். தாய் பெயர் சுமேதை. இவள் மந்தாரன் என்பவனை மணந்தாள். கணவனோடு சென்றுகொண்டிருக்கும் போது புருசுண்டி என்னும் முனிவர் எதிர்ப்பட அவரை வணங்கா மல் அவருடைய உருவத்தைப் பார்த்து நகைத்த படியினால் அவரால் வன்னிமர மாகுமாறு வசவுரை பெற்றாள்.

**சமிதன்** - மகத தேசத்தில் வசவ புரம் என்னும் ஊரில் இருந்த வன். இசை நூற்பயிற்சியில் வல்லவன். தன்னிடம் இசைப் பயிற்சி பெற்ற குணவதி என்னும் அரசிளங்குமரியை விழைந்து அவள்மீது பொய் யான குற்றத்தைச் சுமத்திப் பேழையிலடைத்து ஆற்றில் விடச் செய்து புலியால் அடி பட்டு மாண்டவன்.

**சம்பந்தச் சர்க்கரை** - பழைய கோட்டைச் சர்க்கரை மரபில் தோன்றியவர். சிறந்த தமிழறி வும் கொடைக் குணமும் படைத்தவர். நில வரி செலுத் தாமைக்காகத் தளவாய் இராமப் பையனால் சிறையில் அடைக்கப் பெற்றுச் சங்ககிரிக் கோட்டைச் சிறையில் இருக்கும்பொழுது தம்மைப் பாடிவந்த புலவர் ஒரு வருக்குத் தம் மனைவியின் தாலியை வழங்கியவர். தம்மைச் சிறையில்இருந்துவிடுதலைசெய்த பொழுது பிற பாளையக்காரர் முதலானவர்களையுஞ் சிறையி லிருந்து வெளிவிடச் செய்தவர்.

**சம்பந்தாண்டான்** - ஏறக்குறைய நானூறு ஆண்டுகட்கு முன்பு திருவண்ணாமலையில் இருந்தவன். இவன்பால் ஆணவம் மிகுதியாக விருந்தது. கல்வியைக் கற்றிருந் துஞ் சிறிதும் அடங்கியிராமல் பெருமிதங் கொண்டு புலவர் களைச் சிறிதும் மதியாமல் நடந் தான். அதனால் புலவர்கள் சிலர் இவன் மீது வசைகலந்த பாடல் களைப் பாடி இவனை எள்ளி நகை யாடினர். இறுதிவரையில் இவ னுடைய ஆணவம் இவனை விட்டு ஒழியவில்லை. பிரபுட தேவன் என்னும் அரசன் அருண கிரிநாதர் முதலியோர் இவன் காலத்தினர் என்பர்.

**சம்பரன்** - தண்டக வனத்தை யடுத்த வைசயந்தி என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவன். அசுரவேந்தன். இவனுக்குத் திமித்துவசன் எனவும் பெயர் உண்டு. இவன் சிறந்த போர் வீரன். நினைத்த இடங்களுக் கெல்லாம் நினைத்தபடி சென்று மீளவும் எவரோடும் எதிர்த்து நின்று போர்செய்து வெற்றி

பெறவும் வல்லவன். விசாலன், சண்டன், வேகன் என்னும் அசுர வீரர்கள் மூவரும் இவனுக்கு அமைச்சர்களாகவிருந்தார்கள். இவனுடைய மனைவியின் பெயர் காமகலை. இச் சம்பரன் மக்களுக்கும் தேவர்கட்குந் தீங்கு புரிவதிற் றன்னுடைய ஆற்றலை யெல்லாங் காட்டினான். உலகத்திலிருந்த அரிய பொருள்கள் எல்லாவற்றையும் இவன் தனக்கே உரியதாகக் கைப்பற்றிக் கொடுமை செய்தான். இவனுடைய கொடுமையால் இந்திரனும் அரசிழந்து தசரத மன்னனிடம் முறையிட்டான். தசரதன் சம்பரனோடு போரிட்டு வென்றான். இப்போரின் சமயத்தில் கைகேசி தேரோட்டினாள்.

**சம்பாதிவனம்** - முன்னாளிற் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த ஒரு சோலை. மேலே பறந்து சென்றபொழுது கதிரவன் ஒளியால் சிறகையிழந்து விழுந்த சம்பாதி என்னும் பறவை தங்கியிருந்ததுபற்றி இப்பெயர் பெற்றது.

**சம்பாபதி** - சம்புத் தீவத்தின் அதி தேவதை. இஃது இவளுக்கு இயற்பெயர். சம்புமரத்தின் கீழிருந்து தவஞ் செய்தமையின் இவள் சம்புவெனவும் பெயர் பெறுவாள். சிவந்த நிறமுஞ் சடையும் உடையவள். இவளிருந்த காரணம்பற்றி முன்னாளில் சம்பாபதி என்று பெயர் பெற்றிருந்த நகரம், காவேரி ஆற்றின் தொடர்பால் பிறகு காவிரிப்பூம்பட்டினம் என்று பெயர்பெற்றது. மகனையிழந்து வருந்திய கோதமைக்குச் சக்கரவாளத்தில் இருந்த எல்லாத் தேவர்களையும் வரவழைத்துக் காட்டி அவளுடைய வருத்தத்தை மாற்றித்தெளிவித்தவள். இவளுடைய கோயில் குச்சரக் குடிகை என்று கூறப்பெறும். அருந்தவ முதியோள், கன்னி, குச்சரக்குடிகைக் குமரி, சம்பு, சம்புத்தீவக் காவற்றெய்வம், சம்புத் தீவத் தெய்வம், தொன் மூதாட்டி, பொன்னிற் பொலிந்த நிறத்தாள் முந்தை முதல்வி, முதியாள் முது மூதாட்டி என்னும் பல பெயர்களை யுடையவள்.

**சம்புபாதாசிரியர்** - பாண்டிநாட்டில் திருவாதவூரில் அந்தணர் குலத்தில் அமாத்தியர் மரபில் தோன்றியவர். இவருடைய மனைவியின் பெயர் சிவஞானவதியார். திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகர்க்கு இவர் தந்தை.

**சம்புமுனிவர்** - இம் முனிவர் ஆற்றில் நீராடிக்கொண்டிருந்த பொழுது ஆற்றில் மிதந்துவந்த நாவல்பழத்தை எடுத்துக் கொட்டையோடு விழுங்கினார். அக்கொட்டை வயிற்றில் முளைத்து அவருடைய மண்டையோட்டைக் கிழித்துக்கொண்டு மரமாக வளர்ந்தோங்கியது. மரத்தின் பாரத்தைப் பொருத முனிவர் சிவபெருமானிடம் முறையிட்டுக்கொண்டார். சிவபெருமான் முனிவரை ஓரிடத்தில் இருக்கச் செய்து தாமும் அங்கே எழுந்தருளினார். அந்த இடமே சம்புகேசுவரம் (திருவானைக்கா) ஆயிற்று.

**சம்புவராயன்** - இவனுடைய பெயர் "ஏகாம்பரநாத சம்புவராயன் எனவும்", வென்று மண்கொண்ட சம்புவராயன் எனவும் கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றது. கி.பி. 1331 முதல் 1383 வரை காஞ்சிபுரத்திலிருந்து ஆட்சி செய்திருந்தான். இவன் தமிழ்க் கல்வியையும் நன்கு கற்றுச் செய்யுள்பாடுந் திறம் பெற்றிருந்தான். இவன்

சிறந்த கொடையாளியாக விளங்கியமையால் புலவர்கள் பலரால் புகழ்ந்து பாடப் பெற்றான். இவனுக்குக் கூவ ராயன் என்னும் பெயருடைய அண்ணன் ஒருவன் இருந்தான். அவன் கொடையளிப்பதிற் புகழ்பெற்றவன். இரட்டையர் கள் இவனிடம் பரிசில்நாடி வந்து புகழ்ந்துபாடினர். இவன் தக்கவாறு பரிசிலளித்தான். இரட்டையர் அதனை இடது கையை நீட்டி வாங்கினர். இதனைக் கண்டு சினங்கொண்ட சம்புவராயன் இரட்டையர் களைப் பார்த்து, "பதிவீர சம்பு வென்று பாராமல் கல்விக் கித முடைய ரெட்டையரே யீகை-உதவில் வலக்கைத் தலத்திற் கொண்டு களிக்காம லும்மிடது கைத்தலத்திற் கொள்ளுவதேன் காண்" என்று கேட்டான். இரட்டையர்கள், "கூவரா யன்தியாகங் கொள்வோம் வலக்கைமுடி, யாவர் தரினு மிடக் கைகொள்வோம் — பூவுலகில், மின்பணியி னர் மதனே வீரசம்பு வேயினிநாம், அன்பெவர்பால் காண்போ மடுத்து" என்று மறுமொழி கூறினர். இரட்டையர்கள் இவன் விருப்பப்படி ஏகாம்பர நாதர் உலாவைப் பாடி அரங் கேற்றஞ் செய்தனர்.

**சம்யுக்தை** - கன்னோசி நாட்டரச னாகிய இராசபுத்திர சயசந்திர னுடைய மகள். இவளும் அஜ் மீர் அரசன் பிருதிவிராசனும் ஒருவரையொருவர் காதலித் தனர். சயசந்திரனும் பிருதிவி ராசனும் பகைவர்களாக இருந் தனர். சயசந்திரன் தன் மகளை வேறு எவருக்கேனும் மணஞ் செய்து கொடுப்பதற்குச் சுயம் வரம் ஏற்படுத்தினான். சுயம் வரத்திற்குப் பிருதிவிராசனை அழைக்கவில்லை. பிருதிவிராசன் மாறுகோலத்தோடு சுயம்வரத் திற்குச் சென்று சம்யுக்தையைக் கவர்ந்து கொண்டுபோய்த் திரு மணஞ் செய்து கொண்டான். இவ்வரலாற்றைக் குறித்து இந்தியில் ஒரு புராணம் இயற் றப்பட்டுள்ளது.

**சயகீய சவ்வியன்** - இவன் ஒரு முனிவன். தன் மாணவன் ஒரு வன் மறைகளில் வல்லவனாக விருந்தும் கொலைகளவு முதலிய கொடிய செயல்களைச் செய் வதைப் பார்த்துக், "காசிப் பதியை விட்டு நீங்குக" என்று கூறிப் போக்கியவன். இவனால் நீக்கப்பட்ட மாணவன் விந்த மலை கோதாவிரி நதி, வீமாநதி முதலிய இடங்களிற் சுற்றித் திரிந்து முடிவில் சீசைல மடைந்து முருகக் கடவுளை நோக்கித் தவஞ்செய்தான். அப் பொழுது அவ்வழிவந்த அகத் திய முனிவர் "காசி காசி" என்று கூறியது கேட்டுத் தீவினை நீங்கப் பெற்றான்.

**சயங்கொண்ட சோழ மண்டலம்** - இது தொண்டை மண்டலத் தைக் குறிக்கின்றது. முதல் இராச இராச சோழன் காலத் தில் அவன் சிறப்புப் பெயர் களில் ஒன்றான சயங்கொண்ட சோழன் என்னும் பெயரை அப்போது தொண்டை மண் டலத்திற்கு வழங்கினர். இது சயங்கொண்ட மண்டலம் என வும் வழங்கப் பெறும்.

**சயந்தி** - உதயணனுடைய ஆளு கைக்குட்பட்டிருந்த ஒரு பெரிய நகரம். இதனை உருமண்ணுவா பாதுகாத்து வந்தான். உதயண னுக்கும் வாசவதத்தைக்கும் இந் நகரத்திலேதான் திருமணம் நடைபெற்றது. இது மருத நிலவளமுடையதாகச் சிறந்து விளங்கியது. இதன் பக்கத்தே அழகிய மலை ஒன்றுண்டு. இந் நகரிற் பலநாள் உதயணன் வாசவதத்தையோடு வாழ்ந்

திருந்தான். இந்நகரமும் வேறு சில இடங்களும் உருமண்ணு வாவுக்கு நன்கொடையாக வழங்கப் பெற்றன.

**சயிலோதகம்**-சயிலோதகம் எனின் மலைநீர் என்று பொருள். தென் சேரிகிரி என்னும் மந்திரமலை கொங்கு நாட்டில் உள்ளது. அம்மலையில் உள்ள இச்சுனை நீர் மிக மதுரமானது. நாள் தோறும் இச்சுனையில் நீராடி இறைவனின் வழிபாட்டுண்டியை ஒருவேளை மட்டும் உண்டு மந்திரகிரியை வலம்வரும் பித்தர்கள் 45 நாட்களில் பித்தந் தொலையப் பெறுவர்.

**சரசுவதி மகால் நூல் நிலையம்** - இது தமிழ் நாட்டிலே தஞ்சையிலுள்ள சிறந்த நூல் நிலையம். இந்தியாவிலுள்ள அரிய நூல் நிலையங்களுள் ஒன்று. இங்குத் தமிழ், தெலுங்கு, சமக்கிருதம், மராத்தி, ஆங்கிலம், பிரெஞ்சு, செர்மன், டச்சு, லத்தின், கிரேக்க மொழி முதலிய பல மொழிகளிலுள்ள அச்சுப்படிகளும், கையெழுத்துப்படிகளும், ஓலைச் சுவடிகளும் உள்ளன. வரலாறு, மருத்துவம், விஞ்ஞானம், இசை, நாட்டியம், சிற்பம், சமயம், தத்துவம் முதலிய பல கலைகளிலும் சிறந்த நூல்கள் உள்ளன. 16, 17ஆம் நூற்றுண்டுகளில் தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்கள் சமக்கிருதம், தமிழ், தெலுங்கு மொழிகளிலுள்ள பல நூல்களைச் சேர்த்தார்கள். மகாராட்டிர மன்னர்கள்மேலும் பல நூல்களைச் சேர்த்து நூல் நிலையமாக்கி வளர்க்க உறுதியெடுத்துக்கொண்டனர். அவர்களில் சிறந்தவர் மகாராட்டிர மன்னரான சரபோஜியாவார். இவர் 1820 இல் காசி சென்றபோது ஏராளமான சமக்கிருத நூல்களைச் சேகரித்து வந்தார். இவர் காலத்தில் சுமார் 5,000 அச்சுப் புத்தகங்களும் பல சிறந்த ஓவியங்களும் சேர்க்கப் பட்டன. ஆகையால் இந்த நூல் நிலையம் ''சரபோஜி சரசுவதி மகால் நூல் நிலையம்'' என்று வழங்கப் பெறுகின்றது. இந்த நூல் நிலையத்திற்கு வெளியே, நாயக்க மன்னரின் கொலு மண்டபமாக இருந்த ஒரு மண்டபத்திலே 1807இல் கிழக்கிந்தியக் கம்பெனியாரால் நிறுவப்பெற்ற சரபோஜி மன்னரின் உருவச்சிலை அழகாக அமைந்துள்ளது. 1871இல் அரசாங்கத்தார் நூல் நிலையத்திலுள்ள நூல்களின் பட்டியொன்று தயாரிக்குமாறு டாக்டர் பர்னெல் என்னும் நடுவருக்குப் பணித்தனர். அவர் ''இந்த நூல் நிலையமே உலக முழுவதிலும் மிகப் பெரியதும் மிக முக்கியமானதுமாகும்'' என்று கூறினர்.

**சரபங்கயாறு** - சேர்வராயன் மலையில் தோன்றிக் காவிரியில் கலக்கும் ஒரு சிற்ருறு.

**சரபங்கர்** - தண்டகக் காட்டில் இருந்து தவஞ் செய்தவர். காமன் கணையை இவர்வென்று பங்கப் படுத்தியபடியினுல் இவருடைய பெயர் சரபங்கர் என்று காரணப் பெயராயிற்று. இவர் இந்திரனுடைய உலகு முதலிய வைகளையும் விரும்பாமல் அந்தமிலின்பப் பேருகிய வீடு பேற்றினையே அடைந்தார்.

**சரபமூர்த்தி** - சிவபிரானுடைய அறுபத்து நான்கு மூர்த்தங்களில் ஒன்று. எட்டுக் காலும் நெடிய வாலும் இருமுகமும் சிறகும் உருத்திரமும் பேரார்ப்புங் கொண்ட புள் வடிவமாக நரசிங்கத்தின் வீறடக்கியவர். இம் மூர்த்தத்தைக் காஞ்சிப் புராணம், ''நன்று லிரண்டு திருவடியு நனிநீள்வாலு முக

மிரண்டுங், கொன்ஞர் சிறகு முருத்திரமுங் கொடும் போரார்ப்பு மெதிர்தோற்றச், செங்கீர்பருகிச் செருக்குநர மடங்கலாவி செகுத்துரி கொண் டொன்ஞர் குலங்கண் முழுதளித்த உடையான் சரபத் திருவுருவம்'' என்று குறிப்பிடு கிறது.

**சரபோசி** - தஞ்சையில் அரசாண் டவர். தஞ்சை சரசுவதிமால் நூல் நிலேயத்தை விரிவாக்கிய வர்.

**சரயு** - அயோத்தியில் ஓடும் ஓர் ஆறு. இமயமலேயில் உள்ள மானச சரசில் தோன்றியதால் சரயு என்று பெயர் பெற்றது. நான்முகன் திருமாலே நோக் கித் தவம் இயற்றிய பொழுது திருமால் எதிர் தோன்றி நான் முகனேத் தழுவிக்கொண்டுஇன் பக் கண்ணீர் பெருக்கிஞர்.நான் முகன் அவ்வின்பக் கண்ணீரை யேற்று மானச சரசில் விடுத் தான். இட்சுவாகு என்னும் அரசன் கதிரவன் குலத்தில் பிறந்து அயோத்தியில் அர சாட்சி செய்தபொழுது வசிட் டர் ஆதரவிஞல் சரயுவைத்தன் ஞட்டிற்குக் கொண்டுவந்தான். சரயுவுக்கு இராமகங்கை என் ருெரு பெயரும் உண்டு.

**சரராமர்** -கம்பரையாதரித்த சடை யப்ப வள்ளலும் அவருடைய முன்னேர்களும் இராமபிரானி டத்தில் அன்புடையவர்களாம். இதஞல் சடையப்பருக்கும் அவர் குலத்தினர் சிலருக்கும் சரராமர் என்று பெயர் வழங் கியதாம்.

**சரவணபவன்**-சரம் என்ருல் புல்; வணம் என்ருல் நீர்; பவன் என் ருல் பிறந்தவன்.முருகக்கடவுள் நாணற்புல் அமைந்த பொய் கையில் தோன்றிய படியால் இப்பெயர் அக்கடவுளுக்குச் சிறப்புப் பெயராக அமைந்தது. முருகக்கடவுளின் மூலமந்திர மாக விளங்குவதும் இதுவே.

**சராசந்தன்** - இவன் மகதநாட்டு மன்னஞகிய பிருகத்ரதன் என் பவனுடைய மகன். இவன் காலம் ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னராகும். மன்னன் மகப்பேறின்றிவருந்தி யிருந்தான். முடிவில் சண்ட கௌசிகன் என்னும் முனிவரை யடுத்து அவருடைய மனம் மகி ழுமாறு நடந்தான். அவர் இவ னுடைய விருப்பத்தை யறிந்து மாங்கனியொன்றைக் கொடுத் தார். அதனே அரசன் தன் மனேவிக்குக் கொடுத்தால் மகப் பேறுண்டாகும் என்று கூறி ஞர். அரசன் அவ்வாறே தன் மனேவியிடங் கொடுத்தான். அரசன் மனேவி அதனேத் தான் பாதியுண்டதோடு தன்தங்கைக் குப் பாதியைக் கொடுத்தாள். இருவருங் கருப்பமடைந்தனர். காலப்போக்கில் இருவருக்கும் பாதிப் பாதிக் குழந்தை பிறந் தன. இதனேக் கண்ட அரசன் நாணமுஞ் சினமுங் கொண் டான். ஊர்ப்புறத்தே வீசி யெறியச் சொன்ஞன். நள்ளிர வில்சரையென்னும் அரக்கி ஊரைச் சுற்றிக் கொண்டு வந் தாள். ஓரிடத்தில் அரை அரைக் குழந்தைகள் கிடத்தலேக் கண்டு கையிலெடுத்தாள். இரண்டை யும் ஒன்ருகச்சேர்த்துப்பொருத் திப் பார்த்தாள். ஒன்ருய் இணேந்து உயிர் பெற்றது. அத னேக் கண்டுவியந்து அரக்கி அதனே அரசனிடங் கொடுத்து விட்டுப் போஞள். சரையென் னும் அரக்கி ஒன்ருகப் பொருத் தியபடியால் சராசந்தன் என்று பேரிட்டு அரசன் வளர்த்தான். இவன் பலமுறை கண்ணனேடு போர்க்குச் சென்று தோல்வி யடைந்தான். இறுதியில் வீமஞற் கொல்லப்பட்டு மாண் டான்.

**சருவக்ஞகவி** - ஒட்டக் கூத்தர் செந்தமிழ் மொழியிலே யல்லாமல் வடமொழியிலும் நல்ல புலமை பெற்றிருந்தார். எத்தகைய செய்யுட்களையும் நினைத்த அளவில் பாடும் படியான பேராற்றல் பெற்றிருந்தார். இதனால் இவருக்குச் சருவக்ஞகவி என்னுஞ் சிறப்புப்பெயர் உண்டாயிற்று.

**சரோசினிதேவி** - (1879-1950) இந்தியாவின் கவிக்கோகிலம் என்றும், கவியரசி என்றும் புகழ் பெற்ற சிறந்த தேசபக்தப் பெண்மணி. இவர் ஐதராபாத் நகரில் 1879 பிப்ரவரி 13 ஆம் நாள் பிறந்தார். இவருடைய தந்தை அகோரநாத் என்பவர். சட்டோபாத்தியாயா என்ற பட்டப் பெயருடைய வங்காள அந்தண குலத்தினர். சரோசினிதேவி தம் பதினொன்ரும் அகவையில் இயற்கணிதக் கணக்கு ஒன்று போட இயலாமல், அதற்குப் பதிலாக ஒருகவிதையையே இயற்ற வந்ததாம். தம் 12 ஆம் அகவையில் சென்னைப் பல்கலைக் கழகத்தில்மெட்ரிக் குலேஷன்தேர்வில்மாகாண முதல்வராகத் தேறினர். 13 ஆம் அகவையில் ஆறு நாளில் 1,300 வரிகள் கொண்ட ஆங்கிலக்கவிதை ஒன்றை "ஏரி மங்கை" (Lady of the Lake) என்ற புகழ் பெற்ற ஆங்கிலக் காவியத்தைப்போன்று இயற்றினர். அந்த ஆண்டில் இவர் நோயுற்றிருந்த போது 1,000 வரிகள் கொண்ட நாடகம் ஒன்று இயற்றினர். 1898 செப்டம்பரில் ஐதராபாத்துச் சமஸ்தான டாக்டராக இருந்த எம். கோவிந்தராசு நாயுடுவை சாதிக்கட்டுப் பாடுகளை மீறி மணந்தார். 1931இல் காந்தியடிகளுடன் வட்ட மேசை மாநாட்டுக்குப் போய் வந்தார்.

**சர்வசிவ பண்டிதர்** - இவர் தஞ்சைப் பெரிய கோயிலிற் பூசை செய்து கொண்டிருந்தவர். முதலாம் இராசேந்திரனுக்குக் குருவாகவும் இருந்தார். இவரும் இவருடைய மாணவர்களும்எந் நாட்டில் இருந்தாலும் அவர்கட்கு ஆண்டு தோறும் ஆசாரிய போகமாய் இரண்டாயிரக் கலம் நெல் அளப்பதற்கு அரசன் ஏற்பாடு செய்திருந்தான் என்பர்.

**சர்வதீர்த்தம்** - காஞ்சிமா நகரிலுள்ள ஒரு புனித நீர் கங்காதேவியானவள் உமாதேவியினால் வசவுரைபெற்று அதனைப் போக்கிக் கொள்ளுமாறு காஞ்சியை அடைந்து தவஞ் செய்தபோது அக்கங்கையினிடத்திற் பற்றுள்ள உலகத்துப் புனித நீர்கள் யாவும் கங்கையைத் தூய்மையாக்க வேண்டுமென்று காஞ்சிக்கு வந்து தங்கின. அத் தீர்த்தஞ் சர்வ தீர்த்தமெனப்பட்டது.

**சலகண்டேசுரர்** - வேலூர்க்கோட்டைக்குள் உள்ள கோயிலில் முன்புஎழுந்தருளியிருந்தஇறைவனுடைய திருப்பெயர். இப்பொழுது இவ்விலிங்கம் அக் கோயிலில் இல்லை. வேலூருக்குப் பக்கத்திலே உள்ள சத்துவாச்சேரி என்னுஞ் சிற்றூரிலே இருப்பதாகச் சொல்லுகிருர்கள்.

**சலநாதேசுவரர்** - தொண்டை நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்ருகிய தக்கோலம் என்னும் ஊரில் திருவூறலில் எழுந்தருளிய இறைவர் இப்பெயர் பெறுகிருர். ஓர் இடபத்தின் வாயில் இருந்து எப்பொழுதும் நீர் வந்து கொண்டிருக்கிறது. இப்பதியில் எழுந்தருளிய இறைவனைத் தேவகுருவாகிய வியாழனுடைய தம்பி சம்வர்த்

தனமுனிவர் என்பவர் வழி பட்டனர் என்ப. இவ்வூர் தக்கோலம் என்னும் புகை வண்டி நிலையத்துக்கு வட கிழக்கே மூன்று கல்தொலைவில் உள்ளது.

**சலந்தரன்** - இந்திரன் ஒருகாலத்தில் கைலைக்குச் சென்ருன். சிவபெருமான் ஓர் உருத்திர வடிவங் கொண்டு வழியில் நின்ருர். இந்திரன் சினந்து தன்கையிலிருந்த வச்சிரத்தால் தாக்கினுன். அதுபொடியாகியது. சிவபெருமான் சினங் கொண்டமையின் உடலில் வியர்வை யுண்டாகியது. அவ் வியர்வையை வழித்தெறிந்தார். அவ்வியர்வை கடலில் வீழ்ந்து புத்திரவடிவத்தை யடைந்தது. கடலரசன் மகன்மை முறை கொண்டு வளர்த்தான். இவன் சலத்தில் தோன்றிய படியால் இவனுக்குச் சலந்தரன் என்று பெயர் உண்டாகியது. இவன் மயனைக் கொண்டு ஒரு நகரம் அமைத்துக் கொண்டு காலநேமியின் மகளாகிய பிருந்தையை மணஞ்செய்து கொண்டு வாழ்ந்தான். தேவர்களை யெல்லாம் வருத்தி வென்ருன். சிவபிரானையும் வெல்வேனென்று படைகளுடன் புறப்பட்டுக் கைலைக்குச் சென்ருன். அங்கு அடைக்கலம் புகுந்திருந்த முனிவர்கள் இவனைக் கண்டு அஞ்சினுர்கள். சிவபிரான் ஒரு முதிய மறையவர் போல் சலந்தரனிடஞ் சென்று அவன் அங்கு வந்ததைக் குறித்து உசாவினுர். தான் சிவபிரானை வெல்ல வந்திருத்தலை அவன் கூறினுன். சிவபிரான் சலந்தரனைப் பார்த்து "நீ சிவபிரானை எதிர்த்து வெல்வது உறுதியானுல் இவ்வுருளைப் படையை எடுப்பாயாக" என்றுகூறி நிலத்தில் ஒரு பெரிய உருளைப் படையைக் காற்பெருவிரலாற் கீறினுர். சலந்தரன், "எனக்கு இது தானு பெரிது" என்று கூறி அவ்வுருளைப் படையை எடுத்துமார்பிலுந் தோளிலுந்தலையிலும் வைத்துக்கொண்டான். அப்படை அவனை இருபிளவாகப் பிளந்து கொன்று சிவபெருமானுடைய திருக்கையை அடைந்தது. சலந்தரனேடு வந்தபடைகள் இறைவனுடைய விழித்தீயால் எரிந்தொழிந்தன.

**சல்லமாதேவி** - திருவண்ணுமலையில் பிள்ளைப்பேறு இல்லாது இருந்த வல்லாள மன்னனுடைய இளையமனைவி. சங்கமராக வந்த சிவபிரான் தம்முடன் ஓர் இரவு தங்க ஒரு பெண் வேண்டுமென்று கேட்டபோது கணிகையர் எவரும் அகப்படாத நிலையில் கலங்கிய கணவனின் கலக்கத்தைத் தீர்க்குமாறுசங்கமரோடு தங்க ஒப்பியவள். சங்கமர் குழந்தையாகி வல்லாளனுடைய பிள்ளைக்கலியைத் தீர்த்தார்.

**சல்லிகை**-இவள் ஓர் அரக்கமாது. இவள் இறந்துபோன தன்னுடைய கணவனை வில்வாரணியம் என்னும் திருத்தருப்பூண்டிச் சிவப்பதிக்குக் கொண்டு வந்து அவனை எழுப்பிக் கொடுக்குமாறு இறைவனையும் இறைவியையும் வேண்டிக் கொண்டாள். இறைவியினுடைய திருவருளால் அவன் உயிர் பெற்றெழுந்தான். அவள் விரும்பியவாறு வில்வாரணியம் சல்லிகாரணியமெனவும், இறைவர் பெயர் சல்லிகேசுவரர் எனவும் வழங்கலாயின.

**சல்லிக்கட்டு** - முன்னுளில் சல்லி என்ற பெயருடைய யாதவ வீரன் ஒருவன் இருந்தான்.

அவன் ஏறுதழுவல் என்னும் காளை பிடிக்கும் விளையாட்டை நடத்தினன். அவ்விளையாட்டு வெகு காலமாக மாடு பிடி, எருது பிடி, காளைப்போர், மஞ்சி விரட்டு என்னும் பல பெயர்களோடுந் தொடங்கிய வணங்கிய அவனுடைய பெயரோடும் வழங்கி வருகிறது.

**சல்லியன்** - இவன் மத்திர நாட்டு மன்னன். நகுல சகாதேவர் கட்கு மாமன். பேராண்மை யுடையவன். பாரதப் போர் தொடங்கிய காலத்தில் இவன் பாண்டவர்கட்கு உதவி செய்யும் பொருட்டு வந்தான். இவனைத் தன் பக்கத்திற் சேர்த்துக் கொள்ள எண்ணிய துரி யோதனன் இவன் வரும் வழியில் தண்ணீர்ப் பந்தல் ஒன்றை வைத்து இவனை அப்பந்தலில் தண்ணீர் குடிக்கச் செய்ய வேண்டு மென்னும் நோக்கத் தோடு, ''பாண்டவர்களுடைய தண்ணீர்ப் பந்தல்'' என்று அறிக்கைப் பலகையும் மாட்டி யிருந்தான். துரியோதன னுடைய வஞ்சகத்தை அறியாத இவன் அப்பந்தலில் தண்ணீர் பருகினன். பிறகு அது துரி யோதனனுடையது என்று அறிந்தான். தண்ணீர் குடித் தமைக்காகத் துரியோதனன் பக்கஞ் சேர்ந்து போரிட்டான்.

**சவுபரி** - இவர் வேதமித்திரர் என் பவருடைய மாணவர். இவருடைய மனைவியின் பெயர் மனோமயை. இவர் கிரௌஞ் சனைப் பெருச்சாளியாகுமாறு வசவுரை வழங்கினர். இவர் வெகுகாலமாக யமுனையாற்றுக் கரையில் தவஞ் செய்தார். இவர் ஒருநாள் யமுனைக்கு நீராடச் சென்றார். அங்கு இரண்டு மீன்கள் இன்ப விளையாடல் புரிவதைக் கண்டார். தாமும் அவ்வாறு விளையாடல் புரிய வேண்டுமென்று விருப்பங் கொண்டார். அந்நாளில் கதிர வன் வழிமுறையில் தோன்றிய மாந்தாதா என்னும் மன்ன னுக்கு நூறு பெண்கள் இருந் தனர். முனிவரர் அவ்வரச னிடஞ் சென்று அவனுடைய நூறு பெண்களையும் (ஐம்பது பெண்கள் என்றுங் கூறுவர்) தமக்குத் திருமணஞ் செய்து தரவேண்டும் என்று கேட்டார். முனிவருடைய தவச்சிறப்பை யறிந்திருந்த மன்னன் மாறு ரைப்பின் வசவுரைக்காளாக நேரினும் நேருமென்று அஞ்சி முனிவர் விரும்பியபடியே திரு மணஞ் செய்து கொடுத்தான். (திருமணஞ் செய்து கொள் வதற்கு முன்னரே முனிவர் இளமைக் கோலத்தோடு சென்று திருமணஞ் செய்து கொண்டார் என்றும் வரலாறு வழங்குகின்றது.)

முனிவர் தம்முடைய யோக வலிமையால் போக நலத்திற் கான பொருள்கள் யாவற்றை யும் உண்டாக்கினர். வேலை யாட்களும் சேடியரும் நிறைந்த மாளிகைகளை அமைத்தார். ஒவ்வொரு பெண்ணிடமும் இருக்கு மாறு தம்முடைய உருவத்தை யும் பலவாகச் செய்து கொண்டு எல்லாப் பெண்களிடமும் ஒரே சமயத்தில் தங்கி மகிழ்ச்சியளித் தார். தன்னுடைய பெண்களைக் காணவந்த மாந்தாதா முனிவ ருடைய திருவிளையாடல்களைக் கண்டுகளித்துச் சென்றான். இம்முனிவர் ரிக்வேதத்தை நன்கு பயின்றவர். ஒருநாள் தம்முடைய நிலைமையை எண்ணிப்பார்த்தார். தம் முடைய மனம் மீன்களின் விளையாடல் மீது சென்றதால் நேர்ந்த விளைவைக் கண்டார். எல்லாவற்றையும் வெறுத்துச் சென்று மீண்டுந் தவத்தைத் தொடங்கினர். மனதைச் சிதற

விடாமல் உறுதியான தவத்தைச் செய்து வீடு பேற்றையடைந்தார்.

**சனகன்** - சீதையின் தந்தை. விதேக நாட்டை மிதிலையில் இருந்து அரசாட்சி செய்தவன். இம்மன்னன் தக்க அறிஞர்கள் பால் மெய்யறிவு நூல்களைப் பயின்று மெய்யறிவு கைவரப் பெற்றுச் சிறந்த தத்துவ ஞானியாக விளங்கினான். இம்மன்னனை இராசரிஷி என்று அனைவரும் வியந்தோதினார்கள். உபநிடதத்தில் ஆத்ம ஞானத்தைப்பற்றி இவனுக்கும் யாஞ்ஞவல்கியருக்கும் நடந்த சொற்போர்கள் காணப்பெறும். இம்மன்னன் சுகமுனிவருக்கும் மெய்யறிவைப் போதித்தான். வேள்வியில் சீதையையும் சிவவில்லையும் பெற்றவன்.

**சனமித்திரன்** - புண்ணியராசனுடைய அமைச்சர்களுள் ஒருவன். அவ்வரசன் புத்தபீடிகையைப் போற்றி வழிபடுவதற்கு மணிபல்லவஞ் சென்றபொழுது நாகபுரத்தை ஒரு திங்கள் வரையிற் பாதுகாத்துக் கொண்டிருந்தவன்.

**சன்னுமுனிவர்** - இவர் ஒரு பெரிய முனிவர். பகீரதன் பெருமுயற்சி செய்து கொண்டுவந்த விண்ணகக் கங்கை தம் இருப்பிடத்தின் வழியாக வருதலைக் கண்டதும் தம்முடைய வேள்வி அழியுமென்று அதனைப்பருகி விட்டார். பிறகு பகீரதன் பலவாறு வேண்டிக்கொண்டு வணங்கக் காது வழியே வெளிப்படுத்தினார்.

**சாக்தர்கள்** - சக்தியையே முதன்மையாக வழிபடுபவர்கள் சாக்தர்கள் என்று கூறப்பெறுவர். நூல்களிலே கூறிய மந்திரங்களைத் தாமாகக் கற்றால் எவ்விதமான பலனுங் கிடைக்காது எனக் குருவின் உபதேச வாயிலாகத் தீட்சை பெற்று அதற்கு வேண்டிய சாதனங்களையும் அமைத்துக் கொண்டு சக்தியை வழிபடுவதொன்றே பிறசமயங்களைப் பார்க்கினும் சாலச்சிறந்ததென்பது இவர்களுடைய முடிபு. இவர்கள் தங்களுடைய விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வதற்குப் பலவிதமான ஓமம் சபம் தர்ப்பணம் பலி முதலியவைகளை மேற்கொள்ளுகின்றனர்.

**சாங்கியத்தாய்** - இவளுடைய இடுகுறிப்பெயர் இன்னதென்று தெரிய வில்லை. கோசம்பி நகரத்தில் பார்ப்பன குலத்திற் பிறந்தாள். இவளை மணந்த கணவன் இவளை இளமையில் நீங்கினான். ஒருசமயத்தில் இவள் ஒழுக்கத் தவறுடையவளானாள். இதனையுணர்ந்த அதிகாரிகள் இவளை யமுனையில் வீழ்த்திக்கொலை செய்ய முடிவு செய்தனர். யமுனைக்குக் கொண்டு செல்கையில் இவளைக் கண்ட உதயணன் இவளுடைய உயிரைக் காப்பாற்றிப்புனித நீர்ப்பயணஞ் செல்லுமாறு செய்தான். இவள் கங்கையாடிய பிறகு இமயமலைக்குச் சென்றாள். அங்கு இரண்டு ஆண்டுகள் தங்கிப் பெரியோர்களிடஞ் சமயச் செய்திகளையுணர்ந்து கொண்டாள். பிறகு கன்னியாகுமரியில் நீராடுவதற்கு வந்தாள். உஞ்சை நகருக்கு வந்தபொழுது இவளுடைய கல்வியறிவு முதலியவைகளைப் பிரச்சோதனன் அறிந்தான். தன்னுடைய பட்டத்துத் தேவியாகிய சிமதிக்கு அறவுரைகள் கூறுமாறு இவளை ஏற்படுத்தினான். இவள் அங்கிருக்கையில் ஓராண்டுக் குழவியாக இருந்த

வாசவதத்தை இவளிடத்தில் அன்புவைத்ததைக் கண்ட பட்டத்துத்தேவி வாசவதத்தைக்குச் செவிலித்தாயாக இருக்குமாறு கேட்டுக் கொண்டாள். இவளும் அவ்வாறே இருந்து வந்தாள். சாங்கிய சமயத்தை மேற்கொண்டபடியினாலும் வாசவதத்தைக்குச் செவிலித்தாயாக இருந்த படியினாலும் சாங்கியத்தாய் என்று பெயர் பெற்றாள். வாசவதத்தையிடத்தில் மிகுந்த அன்பு கொண்டிருந்தாள். தன்னுடைய உயிரைக் காப்பாற்றியது பற்றி உதயணனிடத்திலும் இவளுக்கு மிகுந்த அன்புண்டு. வாசவதத்தை உதயணன் முதலியவர்களைக் காப்பாற்றுவதற்காகத் தன்னுடைய வருத்தத்தையும் பொருட்படுத்தாமல் இவள் பல முறை முயன்றாள். உதயணன் இவளைத் தாயினும் பன்மடங்கு மதிப்பு வைத்துக் காப்பாற்றினான்.

**சாங்கியமுனி** - இவன் சாங்கிய சமயத்து முனிவனாக விளங்கினான். பல மாணவர்களோடு புனித நீர்ப் பயணஞ் செய்தான். பல சமயக் கொள்கைகளையும் நன்குணர்ந்தவன். சாங்கியத் தாய்க்குப் பல சமயக் கொள்கைகளையும் அறிவுறுத்தியவன் இவனே.

**சாஞ்சி** - நடு இந்தியாவில் போபால் பகுதியில் பம்பாயிலிருந்து டில்லிக்குச் செல்லும் புகை வண்டிப் பாதையில் போபாலில் இருந்து இருபத்தெட்டு மைல் தொலைவில் இருக்கிறது. இங்குப் பௌத்தக் கலையின் சிறந்த சின்னங்கள் இருக்கின்றன. இந்தியாவில் பௌத்தச் சின்னங்கள் பெயரளவில் அழியாமல் இன்றும் உள்ள இடங்களில் இதுவே முதன்மையானது. இங்கிருந்து அசோகரின் புதல்வர் மகேந்திரன் பௌத்த சமயப் பிரச்சாரத்திற்காக இலங்கைக்குச் சென்றாராம். சாஞ்சிச் சின்னங்களில் பெரும் பாலானவை மலையுச்சியின் தட்டையான பாகத்தில் இருக்கின்றன. அதைச்சுற்றி மதில் சுவர் கட்டப்பட்டுள்ளது.

**சாட்சிக் கிணறு** - மதுரைக் கோவிலில் உள்ள ஒரு கிணறு. திருமணச் சாட்சியாகவிருந்த வன்னி இலிங்கம் கிணறு ஆகிய மூன்றனுள் ஒன்று. இஃது இன்றும் மதுரைக் கோவிலில் இருக்கிறது.

**சாணக்கியன்** - இவன் முன்னாளில் மகதநாட்டில்வாழ்ந்திருந்தான். நூல்கள் பலவற்றைப் பயின்று அறிவுநலமுஞ் சூழ்ச்சித்திறமும் உடையவனாகத் திகழ்ந்தான். முரட்டுத்தனமுடையவன். தான் எண்ணிய காரியத்தை எண்ணியவாறு திண்ணமாக முடித்தே தீருவான். இவனுடைய புகழ் அந்நாளில் யாண்டும் பரவியிருந்தது.

**சாண்டியன்** - காந்தார நாட்டிலுள்ள இரத்தினபுரத்தில் இருந்த ஓர் அந்தணன். உதயணன் அந்தண வடிவங்கொண்டு மாணகன் என்னும் பெயரோடு இராசகிரியத்திலிருந்தபொழுது தன்னை இவ்வந்தணனுடைய மகன் என்று கூறிக்கொண்டான்.

**சாணூரன்** -ஓர் அரக்கன். கம்சன் ஏவலால் கண்ணனைக்கொல்லப் போர்தொடங்கிக் கண்ணனால் மாண்டொழிந்தவன்.

**சாதகன்** - இவனுடைய ஊர் கோசம்பி நகரம்; குயவர் குலத்தில் தோன்றியவன். உதயணன் சிறைப்பட்டுச் சென்றபொழுது அதனைப் பொறாமல் வேறு கோலங்

கொண்டு தானும் உடன் சென்று உஞ்சை நகரின் பக்கத்திலிருந்த ஓர் ஊரில் ஓர் இல்லத்தில் இருந்து உதயணனுக்கு வேண்டிய உதவிகளைப் பிறர் அறியாமற் செய்தவன். மறைந்திருந்த யூகிக்கு உயிர் நண்பர்களாகவிருந்த பதின்மர்களில் ஒருவன். வாசவதத்தையைப் பிடிமீதேற்றிக் கொண்டு உதயணன் புறப்பட்ட பிறகு சாங்கியத்தாய் இவனுடைய இல்லத்திலேயிருந்து தான் யூகியைக் கண்டு பேசினாள். யூகிக்கும் உருமண்ணுவாவுக்கும் இவனே தூதுவனாக அமைந்து நின்று காரியங்களைச் செய்து முடித்தான். ஆருணியைக் கொன்று வெற்றியடைந்த பிறகு உதயணன் இவனுக்குப் பெருங்குயம் என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கியதோடு சிலஊர்களையும் நன்கொடையாக வழங்கினான்.

**சாதுசக்கரன்** - இவன் ஒரு முனிவன். விண்வழியாகப் போக்கு வரத்தினை மேற்கொண்டிருந்தவன். தன்னுடைய முற்பிறப்பில் ஒரு பொழுது இம்முனிவனுக்கு உணவிட்ட நல்வினைதான் பிற்பிறப்பில் மணிமேகலையை நல்வழிப்படுத்தியது.

**சாதுவன்** – வணிகர் மரபில் முன்னாளில் தோன்றிய இவன் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்திருந்தான். இவனுடைய மனைவியின் பெயர் ஆதிரை. சிறந்த கற்பரசி; சாதுவன் பொருள் தேடக் கலமேறிச் சென்றபோது கலங்கவிழ, அதனால் ஒரு தீவை யடைந்து தன்னுடைய அறிவுநலத்தால் நாகர்களிடம் நலமுடன் தங்கியிருந்து பிறகு ஊரையடைந்தான்.

**சாத்தகி** - இவன் தோன்றியது யதுகுலம், வசுதேவருக்கு ஒரு வகையில் தம்பியான சத்தியகன் என்பவனுடைய மகன். கண்ணனுக்கு ஒன்று விட்ட தம்பியாக அமைந்து நின்ற இவன் அருச்சுனனிடத்தில் வில் வித்தை கற்றுத்தேறிப் பாண்டவர்கட்கு உறுதுணையாக அமைந்திருந்தான். கண்ணன் துரியோதனனிடம் தூதுசென்றதை இவன் விரும்பாமல் தடுத்தான். பாண்டவர்கள் கண்ணனுக்கு அடுத்த நிலையில் இவனை வைத்துப் பாராட்டினர்.

**சாத்தன் கணபதி** - இவன் கரவந்தபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த சாத்தன் என்பவனுடைய மகன். பராந்தக பாண்டியனுடைய ஆட்சியின் முன் பகுதியில் எல்லாப்படைகட்கும் மாசாமந்தனாக விளங்கினான். இவனுக்கு அரசன் பாண்டி அமிர்த மங்கல வரையன் என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கினான். இவன் திருப்பரங்குன்றத்திலுள்ள திருக்கோயிலுக்குத் திருப்பணி செய்ததோடு அங்குள்ள குளத்தையும் வெட்டினான். இவனுடைய மனைவியின் பெயர் நக்கன்கொற்றி.

**சாத்தன் பழியிலி** - நந்திவர்மனுக்குக்கீழ் அடங்கிய ஒரு சிற்றரசன்; முத்தரையர்மரபைச் சேர்ந்தவன்; சோழ நாட்டின் தென் பகுதியை அரசாண்டு கொண்டிருந்தான். தஞ்சாவூர் இவனுக்குத் தலைநகரமாக இருந்தது. இவன் விடேல்விடுகு முத்தரையனுடைய மகன் என்பர். இவன் நார்த்தாமலை என இக்காலத்தில் வழங்கும் நார்தர் மலையைக் குடைந்து ஒரு குகைக்கோயிலை அமைத்தான்.

**சாந்தி** - இவன் விசிகன் என்னும் அந்தணனுடைய மகன். இவன் கல்வியை நன்கு பயில விரும்பி

ஆங்கிரசர் என்பவருடைய மகனாகிய பூதி என்பவரிடஞ் சென்று கற்றான். இப்பூதி பெருஞ்சினமும் முன் சினமும் உடையவர். இவரிடம் எத்தகையோரும் ஒரு நாள்கூடத் தங்கியிருக்க மாட்டார்கள். ஆனால் இவன் தன்னுடைய ஆசிரியனின் சினத்தை ஒரு பொருட் படுத்தாமல் தங்கியிருந்து கற்றான். பூதி ஒரு வேள்வியைச் செய்தார். அவ்வேள்வியின் தீ அணைந்து போகாமல் பார்த்துக் கொள்ளுமாறு இவனிடங் கூறிவிட்டுப் பூதி வெளியே போனார். அச்சமயத்தில்வேள்வித்தீ யணைந்து போயது. ஆசிரியர் வந்தால் யாது செய்வாரோ என்று இவன் பெரிதும் அஞ்சி நடுங்கினான். தீக்கடவுள் இவனுடைய அச்சத்தைப் போக்கியருள் புரிந்தகன்றார்.

**சாந்திகன்** - இவன் ஓர் அந்தணச் சிறுவன். இளமை முதல் சிவகண்மணி அணிந்திருந்தான். இவனுடைய தந்தை சுபுத்தனென்பவன் இவனை ஓர் அரசனுக்கு விற்றான். அவ்வரசன் இவனைக் காளிக்குப் பலியிடக் கொண்டு போனான். காளி இவன் சிவகண்மணி அணிந்திருத்தலைக் கண்டு அஞ்சினாள். அரசனை நோக்கி "உன்னுடைய பெண்ணை இவனுக்குத் திருமணஞ் செய்து கொடுப்பாயாக" என்று கூற அதனால் இவன் நலம் பெற்றான்.

**சாந்திநிகேதனம்** - இஃது 1863 ஆம் ஆண்டில் இரவீந்திரநாத தாகூரின் தந்தையார் மகரிஷி தேவேந்திரநாததாகூர்அமைத்த ஆசிரமமாகும். இது கல்கத்தாவில் இருந்து 93 மைல் தொலைவில்இருக்கிறது.மகரிஷி அப்பகுதியில் பயணஞ் செய்தபொழுது வெட்ட வெளியில் மூன்று மரங்கள் இருத்தலைக் கண்டார். அந்த இடம் அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தது. அங்கு அடிக்கடி சென்று தியானஞ் செய்து வந்தார். அவ்விடத்தில் ஓர் இல்லம், தோட்டம், கோயில், நூல் நிலையம் முதலியன கொண்ட ஓர் ஆசிரமம் அமைத்தார். பலர் அங்கு சென்று அமைதியான சூழ்நிலையில் தியானஞ் செய்து வந்தனர். அவ்விடத்திற்குச் சாந்தியின் உறைவிடம் என்று பொருள் படுமாறு சாந்திநிகேதனம் என்று பெயரிடப் பட்டது. இரவீந்திரநாத தாகூர் 1901 இல் சாந்திநிகேதனத்தில் ஒரு பாடசாலையை ஏற்படுத்தினார். நாளடைவில் அது வளர்ந்து விசுவபாரதி பல்கலைக் கழகமாக மாறியது.

**சாந்தியர்** - இவர் ஒரு முனிவர். கண்ணபிரானுக்கும் பலராமருக்கும் கற்பிக்கும் ஆசிரியராக இருந்து கலைகளைக் கற்பித்தவர். அவர்கள் விடை பெற்றபொழுது "குரு காணிக்கையாக யாது வேண்டும்"? என்று கேட்கத் தம்மனைவியோடு கலந்தெண்ணிச் சில காலத்திற்கு முன்பு முதலை வாய்ப்பட்டு மாண்ட என் மதலையை உயிர்ப்பித்துக் கொடுக்கவெனக் கேட்டவர். கண்ணன் இவருடையவிருப்பத்தை நிறைவேற்றத் தேரேறிக் கடலிற் சென்று பாஞ்சனனைக்கொன்று அவனிடமிருந்த சங்கினைக் கவர்ந்து சென்று எமலோகத்தில் முழக்கி நமனால் அச்சிறுவனைப் பெற்று வந்து கொடுக்கப் பெற்றுக் கொண்டவர்.

**சாமகன்** - உருசகன் என்பவனுடைய மகன். இவனுடைய மனைவியின் பெயர் சயிப்பை. இவன் பகைவர்களோடு போர்

புரிந்து அவர்களை வென்று பகைவர்களின்பெண்ணொருத்தியைக் கொண்டு சென்றான். இவனுடைய மனைவி, "இப்பெண் யார்?" என்று கேட்டாள். மனைவிக்கஞ்சிய இவன் "இவள் உன்னுடைய மருமகள்" என்று சொன்னான். இதனைக் கேட்ட அவள், "இன்னும் மகனே பிறவாதிருக்கும் போது மருமகள் எங்கிருந்து வந்தாள்" என்று சீறினாள். இனி உன் வயிற்றில் பிறக்கும் மகனுக்கு என்றான். இதனைக் கேட்ட பிதிரர் மகப்பேறளித்து அப்பெண்ணை மணக்கச் செய்தனர்.

**சாமந்தன்** - குலபூடண பாண்டியனுடைய படைத் தலைவனாகிய இவனுடைய முழுப் பெயர் சுந்தர சாமந்தன் என்பது. படை திரட்டப் பணித்த அரசனுடைய ஏவலைச் செய்வான் போன்று அரசனுடைய பொருள்களை அறவழியிற் செலவிட்ட இவன் பொருட்டு மதுரைக் கடவுள் மெய்க்காட்டிட்ட திருவிளையாடலை நடத்தியருளினார்.

**சாமிநாதன்** - முருகக் கடவுளுடைய பெயர்களில் ஒன்று. சிவபெருமானாகிய சாமிக்குங் குருவாகிப் பிரணவப் பொருளைக் கூறியபடியால் இப்பெயர் உண்டாகியது.

**சாமுண்டீசுவரி** - இறைவியின் கூறுகளில் ஒன்று. சாமுண்டன் என்பவனைக் கொன்றபடியினால் இப்பெயர் உண்டாகியது. இவள் நீண்ட நாக்கு, நீண்ட மயிர், நீண்ட மூக்கு உடையவளாயும் வளைந்த கோரப் பல், தலைமாலை, ஊன் நிறைந்த கபாலம், சூலம் முதலியவைகளைத் தாங்கியவளாகவும் இருப்பாள்.

**சாம்பவான்** - ஒரு கரடியரசன். இவன் சிரஞ்சீவிகளில் ஒருவன் என்று புராணங் கூறும். இவன் நான்முகனுடைய மகன். வாமனர் மாவலியிடம் மூவடி மண்கொண்ட காலத்திலும் தேவர்கள் அமுதங் கடைந்த காலத்திலும் இவன் இருந்ததாகக் கூறுவர். மேலுந் திருமாலுடைய இராமாவதார காலத்திலும் கிருட்டிணாவதார காலத்திலும் இருந்தான். இராமன்இராவணனோடுபோர்செய்யச் சென்றபொழுது இவன் கரடிப் படைக்குத் தலைவனாக இருந்தான். போரில் வானரப் படைகள் மூர்ச்சையடைந்த பொழுது சஞ்சீவி மலையைக் கொண்டு வருமாறு அனுமானுக்குக் கூறினான். இவனிடமிருந்த சியமந்தக மணியின் பொருட்டுப் போர் செய்யவந்த கண்ணனோடு இருபத்தெட்டு நாட்கள் போர் செய்தான். கண்ணன் திருமாலின் கூறு என்று அறிந்தவுடன் அம்மணியையும் தன் மகள் சாம்பவதியையும் அவனுக்குக் கொடுத்தான்.

**சாம்பன்** - கண்ணனுக்குச் சாம்பவதியிடம் பிறந்தவன். இவன் சிறந்த உடல் நலமும் அழகும் அமையப் பெற்றவன். துரியோதனனுடைய மகளாகிய இலக்கணை என்பவளை இவன் மணம்புரிந்திருந்தான். யாதுங் கவலையற்றிருந்த இவன் விருதமன், வேதன், நந்தனன், நவநீதன் என்னும் வீரர்களோடு கூடி விளையாடித் திரிந்தான். ஒருநாள் மாலையில் இவர்கள் விளையாடிக் கொண்டிருக்கும்போது துணைவர்கள் இவனுக்குக் கருப்பவதிக் கோலம் போட்டு, அப்போது அங்கு தவஞ் செய்திருந்த கண்ணுவ முனிவரிடம் அழைத்துக் கொண்டு போய் அம்முனிவரிடங் காட்டி, "இந்தப் பெண்ணுக்கு ஆண்குழந்தை

பிறக்குமா? பெண்குழந்தை பிறக்குமா?'' என்று உசாவினர். உண்மையை உணர்ந்து கொண்ட அவர், "உங்கள் குலத்தைக் கெடுப்பதற்கு ஓர் இருப்புலக்கை பிறக்கும்'' என்று கூறினர். அவ்வாறே இருப்புலக்கை பிறந்தது. அவ்வுலக்கையைத் தூளாக்கியும் அதிலிருந்து கோரைகள் தோன்றி யாதவகுல அழிவுக்குக் காரணமாயது.

**சாய்ந்த கோபுரம்** - இக் கோபுரம் இத்தாலி நாட்டில் உள்ள பைசா என்னும் நகரத்தில் உள்ளது. சாய்ந்துள்ள இக் கோபுரம் விழுந்து விடுவது போலவே தோன்றும். ஆனல் பல நூற்ருண்டுகளாக விழாமல் நிற்கிறது. 1174 இல் இதைக்கட்டத்தொடங்கி 1350 இல்கட்டி முடித்தனர். இதனைத் திட்டமிட்டுச் சாய்ந்த கோபுரமாகக் கட்டவில்லை. பொதுவான கோபுரம் போலவே மூன்றடுக்கு வரையில் கட்டினர். இந்நிலையில் கட்டிடம் அடிவாங்கத் தொடங்கியது. அதனல் சாய்வு ஏற்பட்டு $16\frac{1}{2}$ அடி வரை சாய்ந்தது. பார்ப்பதற்கு விழுந்து விடுவது போலவே தோன்றியது. இத்தாலிய அரசினர் இதன் அடிப்படையை வலுப்படுத்தியுள்ளனர்.

**சாரகுமாரன்** - அநாகுலனுக்குத் திலோத்தமையிடத்தில் பிறந்தவன். இவனுடையபெயர் சயந்தகுமாரன் எனவும் வழங்கும். இவன் இசையறிதற் பொருட்டுச் சிகண்டி என்னும் முனிவரால் இசைநுணுக்கம் என்னும் நூல் இயற்றப்பட்டது.

**சாரங்கதரன்** - இவன் ஓர் அரசனுடையமகன். இவன்தன்னுடைய நண்பனேடு புருவிட்டு விளையாடிக் கொண்டிருந்தான். ஒரு புரு இவனுடைய சிற்றன்னையின் மாளிகையில் நுழைந்தது. அதனைக் கொண்டு வரும் பொருட்டு இவன் சிற்றன்னை இல்லத்திற்குச் சென்ருன். இவனுடைய அழகைக் கண்ட சிற்றன்னை இவனைத் தழுவ எண்ணினுள். தன்னுடைய கருத்தையவனிடங் கூறினுள். வலுக் கட்டாயஞ் செய்யத் தொடங்கினுள். இவன்அவளுக்கிணங்காது ஓடிவிட்டான். இதனல் பகைகொண்ட சிற்றன்னை இவன் தன்னை வலுக்கட்டாயஞ் செய்ததாக அரசனிடங் கூறினுள். தந்தை தன்னுடைய மகனின் கை கால்களை வெட்டிவிடுமாறு கொலைஞர்கட்குக் கட்டளையிட்டான். அவர்களும் அவ்வாறே செய்தனர். பிறகு தெய்வத் திருவருளால் இவனுடைய கை கால்கள் வளர்ந்தன.

**சாரதாண்டாயினி** - இவன் கேகய நாட்டு மன்னன். இவன் சுருதசேனை என்பவளை மணந்து கொண்டான். நெடுங்காலமாக மக்கட் பேறில்லை. தன் மனைவியிடம் வேறுவகையில் மக்கட் பேற்றையடையுமாறு கூறினன். மனைவியாகிய சுருதசேனை அந்தணன் ஒருவனைக் கூடித் துர்சயன் முதலிய மூன்று மகாரதர்களைப் பெற்ருள். இந்தச் சுருதசேனை குந்திதேவியின் உடன் பிறந்தாள்.

**சாரதாதேவியார்** - இவர் இராமகிருஷ்ண பரமஹம்சருடைய மனைவியார். மெய்ஞ்ஞானச் செல்வராக விளங்கிய இராமகிருட்டிணர் அம்மையாரையுந் தெய்வத் தன்மைபெறச் செய்தார். பதினன்கு வயதுள்ள சாரதாதேவியாரோடு காமார்புகூரில் முதன் முறையாகவும் பிறகு பதினெட்டாவது வயதில்

தட்சிணேசுவரத்தில் இரண்டாவது முறையாகவும் உடனுறைந்த பொழுது தமது தூய தந்நலமற்ற அன்பை அம்மையாரிடங் காட்டினர். உலகியல் வாழ்க்கைக்கும் ஞான வாழ்க்கைக்கும் உரிய பயிற்சியையும் உபதேசத்தையும் இராம கிருட்டிணர் தம் மனைவியார்க்கு அளித்திருந்தார். அம்மையார் தம்முடைய கணவரை வழிபடு தெய்வமாகவே போற்றி வந்தார். இதனால் சாரதாதேவியாருக்குத் தூய அம்மையார் என்னும் காரணப் பெயரும் உண்டாயிற்று. சாரதாதேவியார் தம் கணவரோடு நெருங்கிப் பழகியும் ஒரே படுக்கையிற் படுத்தும் வாழ்ந்து வந்தனரேனும் உடலுறவற்று ஆன்ம உறவு கொண்டே ஒழுகுவாராயினர்.

**சாரநாத்** - வட இந்தியாவில் காசிக்கு வடக்கே நான்கு மைல் தொலைவில் உள்ள இடம். இங்கு புகைவண்டி நிலையம் இருக்கிறது. இங்கிருந்து ஒரு மைல் தொலைவில் பௌத்தச் சின்னங்கள் இருக்கின்றன. சாரநாத் பௌத்த சமயம் தொடங்கிய இடமாகும். இது பௌத்த நூல்களில் 'ரிஷிபதன்' அல்லது 'இசிபதன்' என்றும் 'மான் காடு' என்றும் வழங்கப் பெறுகிறது. புத்தர் ஞானோதயம் பெற்ற பிறகு சாரநாத்தில் மான் தோட்டத்தில் தம் பழைய தோழர்கள் ஐவரோடு அமர்ந்து அவர்கட்கு முதல் உபதேசமான தர்மசக்கரப் பிரவர்த்தனம் என்ற சூத்திரத்தை மொழிந்தார். முதல்முதலாகத் தாம் பெற்றஞானத்தைப் போதித்தார். இதனால் இது புண்ணியத் தலமாயிற்று.

**சாரமாமுனிவர்** - சிவபெருமானுக்குத் திருமலர்ப் பணி செய்து கொண்டிருந்தவர். ஒரு காலத்தில் பராந்தகச் சோழன் இவருடைய திருத்தொண்டிற்கு இடையூறு செய்தபடியால் அவனுடைய நாடு மண் மாரி பெய்து அழியச் செய்தவர்.

**சார்ங்கலன்** - கோதமையினுடைய மகன். இவன் மயானத்திற் பேய் மகளாடியதைக் கண்டு அஞ்சி உயிரை விட்டான்.

**சார்வாகன்** - இவன் பாண்டவர்கள் காலத்தில் அத்தின புரிக்குப் பக்கத்திலிருந்த உத்தரகிரி என்னும் ஊரில் வசித்திருந்தான். துரியோதனனுக்கு நண்பன். அசுரமரபினனாகிய இவன் பல மாயங்களினுந் தேர்ந்து நின்றான். துரியோதனன் மாண்டதை யெண்ணி வருந்தியிருந்த இவன் பாண்டவர்கள் குதிரை வேள்வி செய்த போது அங்குப் போய் வஞ்சஞ் செய்து அதனால் தொல்லைக் குள்ளானான்.

**சாலங்காயன்** - இவன் பிரச்சோதனனுடைய பதினாறாயிரம் அமைச்சர்களில் முதல்வன். எவராலுந்தணிக்க முடியாத அரசனுடைய சினம் இவனுடைய சொற்களால் தணியும். பேரமைச்சன் என்றும் இவன் கூறப்பெற்றான். பிரச்சோதனனுடைய கட்டளைப்படி மாய யானையைக் காட்டி உதயணனை வஞ்சகமாகப் பிடித்து உஞ்சை நகரிற் சிறையிலிட்டவன். தருக்க நூல் முதலியவைகளில் மிகுந்த தேர்ச்சியுடையவன். வாசவதத்தையை உதயணன் பிடிமீதேற்றிக் கொண்டு தன்னகர் சென்றான் என்றதைக் கேட்டுக் கடுஞ்சினங் கொண்டு அவனைப் பிடித்து வருமாறுபிரச்சோதனன் படை

களை அனுப்பத் தொடங்கிய பொழுது சில நியாயங்களை இவன் காட்டிய படியால் அவன்படையனுப்பத் தொடங் கியதை நிறுத்திக்கொண்டான். தன்னகருக்கு வந்த யூகியோடு சொற்போர் செய்யத் தொடங்கி அவனிடந் தோல்வி யடைந்தான். அரசனுடைய விருப்பப்படி தன்னுடைய தங்கை ஆப்பியை என்பவளை யூகிக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான்.

**சாலிகோத்திரர்** - இடும்பனுடைய வனத்தருகே ஆசிரமம் அமைத் துக் கொண்டிருந்தவர். பாண்ட வர்கள் அரக்கு மாளிகையி லிருந்து தப்பி வெளிப் பட்ட வுடன் இவருடைய ஆசிர மத்தை யடைந்து இவரிடம் சில தினங்கள் தங்கியிருந் தனர்.

**சாலிவாகனன்** - விக்கிரமார்க் கனைப் போரில் வென்று கொன்றவன். இவன் அசுவ சாத்திரம், அலங்கார சாத் திரம், நவரத்தின சாத்திரம் முதலிய நூல்களை இயற்றி யிருக்கிறான். சுலோசனன் என்னும் அந்தணனுடைய மகளாகிய சுமித்திரை யென் பவள் மணப்பருவ மடைந்திருந் தாள். ஆதிசேடன் மனித வடி வத்தோடு வந்தான். அவனைக் கண்டு அவள் காமுற்றாள். இருவரும் பன்னாள் இனிது மகிழ்ந்திருந்தனர். அவள் கருப்பவதியானாள். அதனால் உள்ளங் கலங்கிய அவள், "என்னுடைய குலவொழுக்கங் கெட்டுவிட்டது" என்று அவனிடங் கூறி வருந்தினாள்.

ஆதிசேடன் அவளைப்பார்த் துப், "பெண்ணே! என்னை மனிதன் என்று எண்ணாதே; நான் ஆதிசேடன்" என்று கூறித் தன்னுடைய உண்மை வடிவத்தை அவளுக்குக் காட்டி னான். அவளைப்பார்த்து, "நின் பாற்பிறக்கும் மகன் பெரும் புகழ் பெற்ற அரசனாவான்; அவனாலே உன்னுடைய குலஞ் சிறந்து விளங்கும்" என்று இயம்பி மறைந்து விட்டான். சுமித்திரை இச்செய்தியைத் தன்னுடைய தந்தைக்குத் தெரியப்படுத்தினாள். அவன் எல்லாந் தெய்வச்செயல் என்று எண்ணிப் பேசாமலிருந்தான். சுமித்திரை களவுப்புணர்ச்சியி னால் கருவுற்றமையைக் கண்ட மக்கள் காவலனுக்குக் காரிகை யின் கருப்பத்தைப்பற்றிக் கழறினார்கள். மன்னன் மறை யவனாகிய சுலோசனனை அழைத்து, "உன்னுடைய மகளை ஊரைவிட்டு விரட்டி விடுக" என்று கட்டளையிட் டனன். சுலோசனன் காவலன் கட்டளைப்படியே தன்னுடைய மகளை நகரைவிட்டு வெளிப் படுத்தினான். அவள் நகருக்கு வெளியேயிருந்த ஒரு குயவன் இல்லத்தில் குயவனால் பாது காக்கப்பட்டுத் தங்கியிருந் தனள். தகுந்த காலத்தில் அவள் ஒருமகனைப் பெற்றாள்.

சுமித்திரையின் மகன் ஐந் தாண்டுச் சிறுவனாக காலையில் சேரியிலிருந்த குயச்சிறார் களுடன் விளையாடிக் காலங் கழித்தான். அவனுடைய விளையாட்டுப் பெரும்பாலும் அரசாட்சியைப் பற்றிய தாகவே இருந்தது. தான் அரச னாகவும் மற்றவர்கள் அமைச் சர்கள் குடிகள் முதலானவர் களாகவும் அமைத்துக் கொண் டான். அரியணைக்குப் பதிலாகச் சால் (பெருங்குடம்) ஒன்றைப் பயன் படுத்தினான். இதனால் இவனுக்குச் சாலிவாகனன் என்று காரணப்பெயர் உண்டா கியது. இவனுடைய விளை யாட்டைப் பார்த்த குயவன்

மண்ணினாலேயே யானை, குதிரை, படை, அரியணை, தேர் முதலியவைகளையுஞ் செய்து கொடுத்தான். இவன் இவ்வாறு அரசாட்சி விளையாட்டு விளையாடிக்கொண்டிருக்குங் காலத்தில் அந்தணன் ஒருவன் இவனுடைய அவைக்கு வந்து பஞ்சாங்கம் படித்தான். சாலிவாகனன் தன் அமைச்சன் ஒருவனைப்பார்த்து "இவ்வந்தணனுக்குக் குடம் ஒன்று கொடுப்பாயாக" என்று கட்டளையிட்டான். அந்தணன் அவ்வாறே ஒரு மட்குடத்தை வாங்கிக்கொண்டு போய் வீட்டில் வைத்தான். மறுநாள் பார்த்தபொழுது அம்மட்குடம் பொற்குடமாக இருந்ததைக் கண்டு அப்புதுமையைப் பலருக்குஞ் சொன்னான்.

பக்கத்து ஊரிலிருந்த ஒரு வணிகன் இறந்து போனான். அவன் இறக்கும்போது தன்னுடைய மக்கள் நால்வரையும் பார்த்துக், "கட்டிலின் கால்கள் நான்கின் கீழும் புதைத்து வைக்கப்பட்டுள்ள பொருளைப் பங்கிட்டுக் கொள்வீர்களாக" என்று கூறியிருந்தான். அவனுடைய மக்கள் தந்தைக்குச் செய்ய வேண்டிய கடன்களையெல்லாஞ் செய்து முடித்த பிறகு கட்டிலின் கால்களின் கீழே தோண்டிப்பார்த்தார்கள். நான்கு கால்களின் கீழும் நான்கு பைகள் அகப்பட்டன. அப்பைகளை அவிழ்த்துப் பார்த்தபோது' ஒன்றில் மண் இருந்தது, ஒன்றில் உமியிருந்தது, ஒன்றில் பொன்னிருந்தது, ஒன்றில் சாணமிருந்தது. இதனைப் பார்த்த பிள்ளைகளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. பல பெரியோர்களிடம் போய் இச்செய்தியை இயம்பினார்கள். அப்பெரியவர்கட்கும் இதனைப்பற்றிய முடிவு புலனாகவில்லை. பிறகு அரசனாகிய விக்கிரமார்க்கனிடம் போய்ச் சொன்னார்கள். அவன் அமைச்சர்களையுஞ் சேர்த்துக் கொண்டு நன்றாக ஆராய்ந்து பார்த்தான். ஒன்றும் விளங்காமற் போகவே முடிவுகூற முடியாமல் விட்டுவிட்டான்.

அவ்வணிகச் சிறுவர்கள் அரசனிடமிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். சாலிவாகனன் அவர்களைப் பார்த்து, என்ன செய்தி என்று கேட்டுத் தெரிந்து கொண்டு "அப்பைகளைக் காட்டினால் யான் முடிவு கூறுகிறேன்" என்று சொல்லி அவைகளைப் பார்த்தான். பிறகு அவர்களைப்பார்த்து, "ஒருவன் நிலத்தையும், ஒருவன் தானியத்தையும், ஒருவன் அணிகலன்களையும், ஒருவன் கால்நடைகளையும் எடுத்துக்கொள்வீர்களாக" என்று கூறினான். அந்நால்வரும் அவ்வாறே ஒப்புக்கொண்டு சாலிவாகனனைப் பாராட்டிச் சென்றார்கள்.

அரசன் விக்கிரமார்க்கன் இச்செய்தியைக் கேள்வியுற்றான். தன்னுடைய புகழ் குறைவதைக் கண்டு பொறாமை கொண்டான். அவனைக்கொன்றுவிட வேண்டுமென்று படையெடுத்துக் கொண்டு சென்றான். சாலிவாகனன் தன்னிடமிருந்த மண்ணாலான படைகளை உயிருள்ளதாகச் செய்து கொண்டு போர்க்கோலம் பூண்டு போர்க்களத்திற்குப் புறப்பட்டான். விக்கிரமார்க்கனோடு போரிட்டு அவனை வென்றான். நருமதையாறு வரையிலுள்ள நாடுகளைக் கைப்பற்றிக் கொண்டு அரசனானான். மைசூர் அரசர்கள் இவனுடைய வழிமுறையில் வந்தவர்கள் என்பர். சாலிவாகன சகம் என்னும் ஆண்டு

இவனுடைய ஆட்சிக்காலத்தி லிருந்து தோன்றியதே.

**சாலினி** - கோவலன் கண்ணகி கவுந்தியடிகள் ஆகியோர் மதுரைக்குச் சென்றபோது வழியில் ஐயை கோயிலில் வழிபாடு செய்து கொண்டிருந்தவள். இவள்மீது தெய்வவெறி ஏறும். அப்பொழுது ஐயையை வழிபடும் மக்களுக்குச் செய்திகள் பலவற்றைக் கூறுவாள்.

**சாவகம்** - இஃதொரு தீவு. இலங்கைக்குக் கிழக்கே யிருந்தது. நாகபுரம் என்பது அந்நாளில் இத்தீவின் தலைநகராக விளங்கியது. இத்தீவு இந்நாளில் சுமத்ரா சாவாத் தீவுகளில் ஒன்ருக இருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

**சாவித்திரி** - மத்திரநாட்டு மன்னனுகிய அசுவபதி என்பவனுடைய மகள் இவள். இவளுடைய தாயின் பெயர் மாளவி. கலைமகளருளால் இவள் பிறந்தமையின் இவளுக்குச் சாவித்திரி யென்று பெயரிட்டனர். இவள் கல்விகற்று அறிவுநலம் பொருந்தி மணப் பருவத்தையடைந்திருந்தாள். சாளுவ நாட்டு மன்னன் மகனுகிய சத்தியவான் மிக நல்லவன் என்று இவள் கேள்விப்பட்டிருந்தபடியால் அவனையே மணம் புரியவேண்டுமென்று இவள் தன்னுடைய உள்ளத்திலே முடிவு செய்திருந்தாள். ஆனல் அவன் வாணுள் மிகுதி பெறவில்லை யென்பதை முனிவர் ஒருவர் மொழிந்தார். ஆயினும் சாவித்திரி தன்னுடைய முடிவை மாற்றிக் கொள்ளவில்லை. அரசினையும் இழந்து வனத்திலிருந்த அவனையே இவள் மணந்தாள். இறுதி நாளில் காலன்வந்து கணவனுயிர் கவர்ந்து செல்லுதலைக் காரிகை கண்டாள். அவனைத் தொடர்ந்து சென்ருள். அவன் இவளைப் பார்த்து, "உனக்கு வேண்டியது யாது?" என்று உசாவினன். இவள் தனக்கு வேண்டிய மேன்மைகளை யெல்லாங் காலனிடம்பெற்றதோடு தன் கணவனுயிரையும் மீட்டிச் சிறப்புடன் வாழ்ந்திருந்தாள்.

**சாளுவ திருமலைராயன்** - விசயநகர மன்னராட்சியில் அவர்களுடைய ஆணை பெற்றவனுகத் தமிழ் நாட்டை யாண்டவன். தமிழ்ப் புலவர்களை இவன் பெரிதும் பாராட்டிப் போற்றினன். இவனைக் காளமேகப் புலவர் " இயலிசை தெரிந்த திருமலைராயன்" எனவும் வேறு பலவாருகவும் பாராட்டியுள்ளார்.

**சிகண்டி (க)** ஒரு முனிவர். இவர் அகத்தியர் மாணுக்கர் பன்னிருவருள் ஒருவர். இசை நுணுக்கம் என்னும் இசைத்தமிழ் நூல் இவரால் இயற்றப்பட்டது.

**சிகண்டி (உ)** இவள் முன்பிறவியில் காசிராசனுடைய மகளாகவிருந்து வீடுமரைக் கொல்லும் பொருட்டுக் காளியிடம் வரம் பெற்று யாகசேனனிடம் பிறந்து தூல கர்ணனல் ஆணுகி வீடுமரைக் கொன்ருள்.

**சிகாநாதர்** - புதுக்கோட்டைக்கு மேற்கேயுள்ள குடுமியான் மலையில் எழுந்தருளிய சுவாமியின் பெயர். கோயில் பூசகர் ஒருவர் நள்ளிரவு வழிபாட்டிற்குப் பின் இறைவனுக்குச் சார்த்திய மாலையைத் தம் காதற்கிழத்திக்குக் கொடுத்து விட்டார். சிறிது நேரத்திற்கெல்லாம், மதுரையில் இருந்து அரசாட்சி செய்த சுந்தரபாண்டியன் கோயிலுக்கு வந்தான். அரசனுக்குக் கொடுக்க மாலையில்லாமற் போகவே பூசகர் தம்காதற்கிழத்தியிடம் ஓடி அவள் சூடி

யிருந்த மாலையை வாங்கி வந்து மன்னனிடம் கொடுத்தார். அதில் ஒரு மயிர் இருந்ததைக் கண்ட பாண்டியன் பூசகரை ஒறுக்கத்தொடங்கினன். பூசகர் இறைவனுக்குச் சிகையுண்டு என்று கூறினர். பாண்டியன் அதனைப் பார்க்கச் சென்ற பொழுது பூசகர்வேண்டுகோட்கிரங்கிய பரமன் தலைமுடியுடன் விளங்கியருளினர். அதனால் அன்று முதல் அக்கடவுளுக்குச் சிகாநாதர் என்று பெயர் உண்டாகியது. சுவாமிக்குக் குடுமியிருந்தபடியால் மலையும் குடுமியான் மலை என்று பெயர் பெற்றது.

**சிகித்துவசன்** - இவன் மாளவ நாட்டு மன்னன். இவனுடைய மனைவியின் பெயர் சூடாலை. இவர்களிருவரும்அரசத்திருவையடைந்தும் அதனில் உள்ளத்தைச் செலுத்தாது அறிவு நூல்களைப் பயின்று திருந்திய மெய்யறிவுடையராய் இவ்வுலகில் சிறந்த புகழோடு விளங்கினர். ஞானவாசிட்டம் என்னும் நூல் இவர்களைப் பற்றிக் கூறும்.

**சிக்கமாதையர்** – இவர் ஒரு சிவனடியார். சிவபூசை செய்து யோகத் திருக்கையில் இறந்தார். இவருடைய மனைவி இவரை அடக்கஞ் செய்வதற்கு ஏற்பாடு செய்து குழி வெட்டினள். சிறுவராக இருந்த இவருடைய மகன் வாலலிங்கையர் குருவாகிய மாதிராசையரிடஞ் சென்று தம் தந்தை எழுந்திராமல் இருப்பதையும் தாயார் செய்யும் வேலையையுங் கூறினர். குரு வந்து பார்த்தார். இறைவனை உள்ளத்திலே வணங்கினர். ஒரு பாடலைக் கூறினர். அவ்வளவில் சிக்கமாதையர் எழுந்து சிவபூசையை முடித்தார்.

**சிங்கடியப்பன்** - திருநாட்டியத்தான் குடிக்குச் சுந்தரர் எழுந்தருளிய போதுஅவரைப்போற்றி வழிப்பட்ட கோட்புலியார் தாம் பெற்ற புதல்வியராகிய சிங்கடி வனப்பகை என்னும் இருவரையும் ஏற்றருள வேண்டுமென்று சுந்தரரிடம் சேர்த்தார். சுந்தரர் அவ்விருவரையும் தம்முடைய புதல்வியராகப் பாராட்டிக் கூறியதோடு அவ்வூர் இறைவன் திருமுன்பு சென்று பதிகம் பாடிய போது தம்மைச் சிங்கடியாருடைய அப்பன் என்று குறிப்பிட்டுப் பதிகத்திலே பாடினர். அதனால் சுந்தரருக்குச் சிங்கடியப்பன் என்று ஒரு பெயர் உண்டாகியது.

**சிங்கணர்** - இவர் யாதவ மன்னர்களிற் சிறந்தவர். பெரும் போர் வீரராக இருந்த இவர் குசரத் நாட்டின் மீது பன்முறை படையெடுத்தார். காகதீயர் கோலாப்பூர் அரசர் மாளவ மன்னர் முதலியோரோடு போர்புரிந்தார். சாளுக்கிய மன்னர்கள் இவருடைய அதிகாரத்தை ஒப்புக் கொண்டனர்.

**சிங்கமலை** - இலங்கையில் அநுராத புரத்திற்குத் தெற்கே இம்மலை உள்ளது. இதற்குச் சிகிரியா எனவும் பெயர்உண்டு. இங்கு ஒரு பெரிய மலை குடையப்பட்டு அழகிய மாளிகையாகச் செய்யப் பட்டிருக்கிறது. இஃதேறக்குறைய 1500ஆண்டுகட்கு முன்னால் அமைக்கப்பட்டிருக்கலாம் என்று எண்ணுகின்றனர். அந்நாளில் அங்கு அரசனாகவிருந்த காசியப்ப மன்னன் என்பவன் தந்தையைக் கொன்று அரசாட்சியைக் கைப்பற்றினன் எனவும், மக்கட்குத் தன் மீதுள்ள வெறுப்பைப் போக்கிக்கொள்வதற்குஇவ்வழகிய மாளிகையை உண்டாக்கி

ஞன் எனவும் மக்கள் எண்ணு கின்றனர். இம் மாளிகைக்குச் செல்வது மிகக்கடினம் என்று கூறப்படுகிறது.

**சிங்கமுகன்** - இவன் சூரபன்ம னுடைய தம்பி. தாரகனுக்கு மூத்தவன். இவன் ஆயிரம் தலைகளும் இரண்டாயிரங்கை களும் உடையவன் என்பர். இவனும் இவனுடைய துணை வர்களும் ஆலவனம் என்னும் இடத்தை யடைந்து கண் ணுதற்பரமனை எண்ணிப் பதின யிரம் ஆண்டுகள் அருந்தவம் புரிந்தனர். ஆயினும் அப்பெரு மான் தோன்றவில்லை. ஆத லால் சூரபன்மன் வேள்விக் குண்டத்தில் வீழ்ந்து இறந்து போனுன். இவன் மேலும் பல ஆண்டுகள் தவஞ் செய்து விண்ணவர் போற்றும் பண்ண வனைக் கண்ணிற் கண்டான். தன் முன்னவன் உயிர் பெற் றெழ வேண்டு மென்று வேண்டியதோடு ஆயிரத் தெட்டு அண்டங்களையும் அர சாள வேண்டு மென்றும் வேண்டிக் கொண்டான். இறை வனும், அவ்வாறே ஈந்தருளி ஞர்.

**சிங்கவேள்குன்றம்** - திருமால் திருப்பதிகளில் ஒன்று. இங்குக் கோயில் கொண்ட திருமால் நரசிங்கப் பெருமான். அம்மை இலக்குமி நாச்சியார். தீர்த் தங்கள் நரசிங்கதீர்த்தம் பாப நாச தீர்த்தம். நரசிங்கப் பெரு மான் கிழக்குநோக்கி வீற்றிருக் கின்ருர். இரணியனைக் கொன்று பிரகலாதனுக்கு அருள் செய்தார். கமலாபுரம் அல்லது கடப்பை இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 50 கல் தொலைவில் உள்ளது. இதற்கு, அழகிய சிங்கர் மடம் எனவும், அகோபிலம் எனவும் பெயர்கள் வழங்குகின்றன. திருமங்கையாழ்வாரால் பாடப் பெற்றது.

**சிங்களம்** - இலங்கை. இஃது ஈழ மெனவும் கூறப்பெறும். இலங்கை இராவணன் காலத் தில் எழுநூறு யோசனை அகலம் இருந்தது. இதில் ஒரு கூறே இப்போதுள்ளது. எஞ் சிய பாகத்தைக் கடல் விழுங்கி விட்டது. ஆயிரக் கணக்கான ஆண்டுகட்கு முன்னர் அங்குக் குடியேறிய ஆரியரும் பழைய அரக்கர் மரபினரும் கூடிப் பிறந்தவர்களே இப்பொழுது அங்கு வசிப்பவர்களென்று அங்குள்ளார் கூறுவர். அங்கு சிங்கள மொழியும் தமிழ் மொழியும் பேசப்படுகிறது. ஒரு காலத்தில் பௌத்தமதம் மிகுதியாக விளங்கிய இடம். இங்கு புத்தபீடிகையும் ஒன்று உண்டு என்பர்.

**சிங்களாந்தகன்** - சிங்களத்தை வென்ற சோழமன்னனுடைய காரணப் பெயர்களில் ஒன்று. இவனுடைய இயற்பெயர் பராந்தகன்; மேலும் இவனுக் குச் சங்கிராமராகவன் என வும் மதுரையும் ஈழமுங் கொண்டபரகேசரிவர்மன் என வும் காரணப் பெயர்கள் வழங் கின. மதுராந்தகன் என்னுங் காரணப் பெயரும் இவனு டைய தேயாம்.

**சிங்கையாரியர்**-யாழ்ப்பாணத்தை யாண்ட தமிழரசர்கள். இவர் களைப்பற்றிய தனிப் பாடல்கள் பல இருக்கின்றன. இரகு வமிசம் இயற்றிய அரசகேசரி யும் தட்சிணகைலாச புராணம் பாடிய செகராச சேகரனும் இவன் தமையனும் அந்தகக்கவி வீரராகவ முதலியாரால் புகழப் பெற்றவனுமாகிய பரராசசேகரனும் சிங்கை யாரியர் மரபினனே.

**சிசுநாகன்** - இவன் ஆமாத்திய குலத்தினன் என்பர். இவன் முதலில் இராச கிருகத்தையும் பிறகு வைசாலியையும் தலை நகராகக் கொண்டு அரசாட்சி செய்தான். இவன் காலத்தில் அவந்திப் போர் நிகழ்ந்தது.

**சிசுபாலன்** - வசுதேவனுக்கு உடன் பிறந்தவளும் அதனால் கண்ணனுக்கு அத்தையும் சேதி நாட்டு அரசனாகிய தமகோடன் என்பவனுக்கு மனைவியுமான சுருதசிரவை என்பவளுடைய மகன் இவன். இவன் பிறந்த பொழுது மூன்று கண்களையும் நான்கு கைகளையும் உடையவனாய்க் கழுதைக் குரலாற் புலம்பி ஆரவாரஞ் செய்தான். தாய் தந்தையர் இவனுடைய மாறுபட்ட வடிவத்தையும் குரலையுங் கண்டு அஞ்சி இவனைக் கைவிட்டு விடலாமா என்று எண்ணினர். அப்பொழுது உருவிலியாகிய விண் வாக்கு, "அரசனே! இப்புதல்வனைக் கைவிடாதே; இவன் மிகுந்த சிறப்புடையவன் பேராற்றலுடையவன், இவனிடத்தில் சிறிதும் அஞ்ச வேண்டியதில்லை. இவனை நன்றாகக் காப்பாற்று. இவன் இப்பொழுது இறக்கமாட்டான். இவனைக் கொல்வதற்கு வேறொருவன்பிறந்திருக்கிறான். அவன் தன்னுடைய ஆழிப் படையினால் இவனைக் கொல்வான்" என்று கூறியது. இதனைக் கேட்டு இவனுடைய தாய், "இவனைக் கொல்பவன் யார்?" என்று வினவினாள். அதற்கு உருவிலிவாக்கு, "இவன் யாருடைய மடியில் அமருகிற பொழுது இவனுடைய இரண்டு கைகளும் நெற்றிக் கண்ணும் மறைகின்றனவோ அவர்களுடைய கையால் இவனுக்குச் சாவு" என்று கூறியது. அதுமுதல் சுருதசிரவை தன்னுடைய மகனைப் பலருடைய மடியிலும் வைத்து வைத்துப் பார்த்தாள். கைகளும் கண்ணொன்றும் மறையவில்லை. கண்ணபிரானுடைய மடியில் வைத்த அளவில் அதிகப்படியான இரண்டு கைகளும் நெற்றிக் கண்ணும் மறைந்தன. அதனால் கண்ணனே இவனைக் கொல்பவன் என்பதைத் தாயாகிய சுருதசிரவை உணர்ந்து கொண்டாள். கண்ணனைப் பார்த்து, "என்னுடைய மகன் யாது தவறு செய்யினும் அவனைக் கொல்லக் கூடாது" என்று வேண்டிக் கொண்டாள். அத்தையின் மொழிகளைக் கேட்ட கண்ணன் "இவன் எனக்குச் செய்யும் நூறுபிழைகளைப் பொறுப்பேன்" என்று சொன்னான்.

சிசுபாலன் கண்ணன் தனக்குப் பகைவன் என்பதை இளம் பருவத்திலேயே உணர்ந்து கொண்டான். பழம்பிறப்புப் பகையுந் தொடர்ந்து வந்தது. எப்பொழுதும் கண்ணனை இகழ்ந்துரைப்பதையே தன்னுடைய தொழிலாகக் கொண்டான். இவனுக்கு மணஞ் செய்து கொடுப்பதென்று உறுதி செய்யப்பட்டிருந்த உருக்குமணியைக் கண்ணன் வலுக்கட்டாயமாகக் கவர்ந்து மணஞ் செய்து கொண்டது முதல் இவன் கண்ணனிடத்தில் அளவற்ற பகை கொண்டிருந்தான். இராயசூயவேள்வியில் இவன் கண்ணனை அளவு கடந்து இகழ்ந்த படியால் கண்ணன் இவன் மீது ஆழிப் படையைச் செலுத்தி இவனைக் கொன்றான்.

**சிட்டினன்** - அருச்சுனன் தன்னையும் தன்வில்லையும் தன்

தமையனையும் இகழ்ந்து கூறியோர் எத்தகையோராயினும் அவர்களுடைய தலையைக் கொய்து அழிப்பேனென்று சூளுரை கூறியிருந்தமையின் அருச்சுனனுக்கு இவ்வாறு ஒரு பெயர் வழங்கியது.

**சிதம்பரம்** - சோழவள நாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஒரு சிவப்பதி. பூலோக கைலாசமென்று புகழ் பெற்றது. ஐந்து இலிங்கத்தலங்களில் ஆகாயலிங்கத்தலம். ஐந்து அம்பலங்களில் பொன்னம்பலம். சிதம்பரம் என்பது கோவிலின் பெயர். தில்லை, புலியூர், வியாக்கிரபாத புரம் முதலியன ஊரின் பெயர். சிதம்பர புராணம், கோயிற்புராணம் புலியூர்ப் புராணம் முதலியன இவ்வூரின் சிறப்பைக் கூறும். இப்பதி கோயில் எனவழங்கும். காண்போருக்கு வீடு பேற்றையளிப்பது. பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலியோர் இறைவனைப்போற்றி அவருடைய கூத்தைக்கண்ட இப்பதியின் சிறப்பு அளவிடற்கரியது.

**சித்த அகத்தியர்** - இவ்வகத்தியருக்குத் தென்முனி என்றும் பெயர் உண்டு. இவர் பதினெட்டுச் சித்தர்களில் ஒருவர். இவ்வகத்தியர் ஏறக்குறைய நூறு நூல்கள்வரை செய்துள்ளார். இந்நூல்களில் பாதி மருத்துவமும் பாதி மெய்யறிவு புகட்டும் நூல்களுமாகும். இவர் மருத்துவத்திலுஞ் சிறந்தவர். சித்துக்களும் கைவரப் பெற்றவர்.

**சித்தநதி** - கங்கையின் கரையில் சித்தர்கள் தங்கித் தவம்புரிந்து வீடுபேற்றையடைதலால் கங்கைக்குச் சித்தநதி என்னும் சிறப்புப் பெயர் வழங்குகிறது.

**சித்த ராமையர்** - சொன்னலாபுரம் என்னும் ஊரில் இருந்த ஒரு வீரசைவர். வசவர் காலத்தில் இருந்தவர். இவருடைய ஆட்கள் குளம் வெட்டிக் கொண்டிருக்கையில் அல்லமதேவர் அவ்விடம் வந்து சித்தராமையரைப் பலவாறு இகழ்ந்து பேசினார். இதனைக் கேள்வியுற்ற சித்தராமையர் நெற்றிக்கண்ணைத் திறந்து அல்லமரை எரித்துவிட முயன்றார். சித்தராமையருடைய சினத்தீ அல்லமரை ஒன்றுஞ் செய்யாமல் அவ்வூரை எரிக்கத் தொடங்கியது, சித்தராமையர் அல்லமதேவருடைய உண்மையை உணர்ந்து அருளுரை பெற்றார்.

**சித்தர்கள்** - சித்துக்கள் செய்பவர்கள் சித்தர்கள். சித்தாவது எல்லாவற்றையும் உணர்ந்து கொள்ளுந்தன்மை. பழநியில் எழுந்தருளிய பழநியாண்டவனுக்குச் சித்தர் என்று பெயருண்டு. மதுரையில் எழுந்தருளிய கடவுள் எல்லாம் வல்ல சித்தராகத் திருவிளையாடல் புரிந்தார். கடவுளைக் காண முயல்பவர்கள் பக்தர்கள். கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள்.

**சித்தவடமடம்** - திருவதிகைக்கு வடமேற்கில் மூன்று நாழிகையளவில் உள்ள ஒரு பழமையாகிய பொதுத் திருமடம். இம்மடத்தில் படுத்திருந்த போதுதான் இறைவன் தமது திருவடியைச் சுந்தரருடைய தலையின் மீது நீட்டியருளினார்.

**சித்தன் வாழ்வு** - முருகக்கடவுள் ஒரு சித்தர்போல் எழுந்தருளியிருத்தலின் பழனி சித்தன் வாழ்வு என்று ஒரு சிறப்புப் பெயர் பெற்றது. ஔவையாருந் தம்முடைய பாடல் ஒன்றில் பழநியைச் சித்தன் வாழ்வு என்று கூறியிருக்கின்றார்.

**சித்தா சிரமம்** - விசுவாமித்திர முனிவர் தவஞ் செய்த இடம். அம்முனிவர் இங்கு செய்த வேள்வியைக் காப்பதற்காகவே தசரதராமனை அழைத்துச் சென்ருர். இங்குத் தவஞ்செய்தோர் சித்தியைப் பெறுவது உண்மையாகலின் சித்தாசிரமம் என்னும் பெயரையடைந்தது.

**சித்திகணபதி** - இவர் மாம்பழம், பூங்கொத்து, கரும்புத்துண்டு, எள்ளுருண்டை, பரசு ஆகிய வைகளைத் துதிக்கையுட்பட ஐந்து கைகளிலும் ஏந்திய வராக விளங்குவார்.

**சித்திர குப்தன்** - இவன் நமனுடைய கணக்கன். உலகில் தோன்றிய உயிர்த் தொகைகள் செய்யும் நல்வினை தீவினைகளைக் கணக்கெழுதி வைத்து நமனுக்குக் கூறுவது இவனுடைய வேலை.

**சித்திர கூடம்** - வான்மீகிமுனிவர் தங்கியிருந்த இடம். சிருங்கிவேரபுரத்தின் தென்மேற்கிலுள்ளது. இஃது இக்காலத்தில் பண்டல் கண்டு என வழங்கும்; இஃதொரு மலை.

**சித்திர சபை** - சிவபிரான் கூத்தியற்றும் ஐந்து சபைகளில் இஃதொன்று; இச்சபை திருக்குற்றலத்தில் உள்ளது.

**சித்திரமேகத்தடாகம்** - மகேந்திரவர்மன் மாமண்டூரில் உண்டாக்கிய ஓர் ஏரி இப்பெயர் பெற்றது.

**சித்திர ரதன்** - இவன் ஒரு காந்தருவன். அமராவதிக்கருகிலுள்ள காட்டில் வாழ்ந்து கொண்டிருந்தான். இவன் வாழ்ந்து கொண்டிருந்தபடியால் அக்காட்டிற்குச் சைத்ரரதம் என்று பெயருண்டாகியது. இவன் விமானத்திலேறி உலகத்தைச் சுற்றிக்கொண்டு திரிந்தான். கைலாயமலையை அடைந்தபொழுது அங்கு உமாதேவியை இடப்பாகத்திற் கொண்ட சிவபெருமானைப் பார்த்து, எல்லோராலும் போற்றப்படுஞ் சிவபிரான் இவ்வாறு உமையோடு பிரியாதிருத்தல் பொருந்துமோ வென்று எள்ளிநகையாடினன். உமாதேவியானவள் சினந்து, "பரம்பொருளின் உண்மை நிலையை நீ உணராமல் இவ்வாறு எள்ளி நகையாடியபடியால் அசுரயோனியில் விருத்திராசுரனைப் பிறக்கக் கடவாய்" என்று வசவுரை வழங்கினள்.

**சித்திரன்** - இவன் ஒரு கந்தருவன். இவனுடைய மனையில் திருமணச் சடங்கு ஒன்று நிகழ்ந்தது. அப்பொழுது அங்கு வந்த பிருகு முனிவருக்கு இவன் வணக்க வழிபாடுகள் செய்யவில்லை. சினங்கொண்ட முனிவர் இவனை முதலையாகும்படி வசவுரை வழங்கினர். பிறகு ஆனைமுகக் கடவுளை விழுங்க முயன்ற காலத்தில் வசவுரை நீங்கியது.

**சித்திராங்கதன்** - (க) இவன் இராவணனுடைய வீணையைத் தான் வாசித்துப் பார்க்க வேண்டுமென்று விருப்பங் கொண்டிருந்தான். இராவணனே தன்னுடைய வீணையை மற்றவர்கள் கையால்தொடவுங் கூடாதென்று கண்டிப்பான கட்டளை செய்திருந்தான். ஆகவே இக்கந்தருவனுக்கு இராவணன் உயிரோடிருந்த வரையிலும் அவனுடைய வீணையை வாசித்து மகிழ்வதற்குச் சமயங் கிடைக்கவில்லை. சமயத்தை எதிர் நோக்கியிருந்த இவன் இராமபிரானல் இராவணன் கொல்லப்

பட்டதை யறிந்ததும் அவ் வீணையை எடுத்துக்கொண்டு கிரிமலைக்கு வந்து அவ்வியாழை வாசித்து மகிழ்ந்தான். அதனால் அவ்விடம் காந்தருவ நகரம் என்று பெயர் பெற்றது.

**சித்திராங்கதன்** - (உ) இவன் எலிச்செவி யரசனுடைய தம்பி; தருசகனுக்குப் பகைவன். மகத நாட்டில் நடந்த போரிற்பிடி பட்டு உதயணனாற் சிறையிடப் பட்ட இவன் சிலநாள் சென்ற பிறகு தருசகனால் விடுவிக்கப் பட்டான்.

**சித்திராங்கதன்** - (ங) சந்தனு மன்னனுடைய மக்களில் ஒருவன். கந்தருவர்களில் ஒருவனை சித்திராங்கதன் என்பவன் ஒரு மனிதனும் நம்முடைய பெயரைக் கொண்டிருக்கிறானே என்று பொறாமை கொண்டு இரவில் வந்து இவனைக் கொன்று மறைந்தான்.

**சித்திராங்கதை** - சித்திரவாகனனுடைய மகள். அருச்சுனனுடைய மனைவியர்களில் ஒருத்தி. பப்புருவாகனனைப் பெற்றவள். இவளுக்கு அல்லி என்றும் பெயருண்டு. சித்திரவாகனன் மதுரையில்அரசாட்சி செய்திருந்தான். அருச்சுனன் தீர்த்த யாத்திரை சென்ற பொழுது இவளைத் திருமணஞ் செய்தான்.

**சித்திராபதி** - மாதவியின் தாயாகிய இவள் தன்னுடைய பெயர்த்தியாகிய மணிமேகலையைக் குலத் தொழிலாகிய விபசாரத்திலீடுபடுத்தி விட வேண்டுமென்று மிகு முயற்சி செய்தாள். அரசகுமரனாகிய உதயகுமரனை யேவி விட்டுப் பெரு முயற்சி செய்தாள். தன்னுடைய முயற்சிகள் யாவும் வீணானதைக் கண்டு ஒடுங்கினாள்.

**சிந்தாமணி** - திருப்புகலூரில் இருந்த ஒரு கணிகை. கல்வியறிவில் மிக்கவள். இவள் நெற்குன்றவாணரைக் கொண்டு திருப்புகலூரந்தாதியைப் பாடச் செய்தாள்.

(உ) வேண்டுவார் வேண்டுவதை ஈயுமோர் தெய்வமணி.

(ங) சீவகசிந்தாமணி என்னுஞ் சைன நூல்.

**சிந்துர விநாயகர்** - வடநாட்டில் பல விடங்களில் செந்நிற ஆனைமுகக் கடவுள் எழுந்தருளியிருத்தலைக் காணலாம். இவ்விநாயகரையே சிந்துர விநாயகர் என்கின்றனர். நான்முகன் கொட்டாவி விட்டான். அதினின்றும் ஓர் அசுரன் தோன்றினான். நான் எவரைத் தழுவினும் அவர் இறக்க வேண்டுமென்று தந்தையாகிய நான்முகனிடம் வரங்கேட்டான். நான்முகனும் அவ்வாறே கொடுத்தான். அவ்வளவில் தந்தையாகிய நான்முகனையே தழுவச் சென்றான். நான்முகன் அஞ்சிச் சிவபிரானிடம் அடைக்கலம் புகுந்தான். பிறகு ஆனைமுகக்கடவுள் தோன்றிச் சிந்துரனைக் கலக்கி உதிரத்தை உடலிற் பூசிக் கொண்டனர். இதனால் விநாயகருடைய நிறம் செந்நிறமாயிற்று.

**சிபி** - இவன் ஓர் அரசன். தேவர்கள் இவனுடைய அருட்டன்மையை ஆராய்ந்து பார்க்க எண்ணினார்கள். இந்திரன் வேடனாகவும் தீக்கடவுள் (அக்கினிதேவன்) புறாவாகவும் உருவடைந்தனர். சிபி மன்னன் பார்க்குமாறு வேடன் புறாவைத் துரத்திக் கொண்டு வந்தான். புறா சிபி மன்னனிடம் வந்து அடைக்கலம் புகுந்தது. அரசனிடம் இந்திரனாகிய வேடன்

வந்து புருவைக் கொடுத்து விடுமாறும் அது தன்னுடைய உணவுக்கு வேண்டும் என்றுங் கேட்டான். அரசன் வேடனை நோக்கி, "வேறு இறைச்சி தரு கிறேன். இப் புருவைக் கேட் காதே'' என்று கூறினன். வேடனே வேறு இறைச்சி வேண்டாம். வேறு இறைச்சி கள் புரு விறைச்சியைப் போல் அவ்வளவு இனிமையாக இரா என்று கூறினன். நீண்ட நேரச் சொற்போருக்குப் பின் வேடன் "இப்புருவைத்தராதொழியின் இதனுடைய நிறைக்குச் சரி யாக உன்னுடைய உடலில் இருந்து தசையைத் தருதல் வேண்டும். இவ்வாறு தர உடன் பட்டால் புருவைக் கேட்பதை விட்டு விடுகிறேன்'' என்று சொன்னன். சிபி வேடனுடைய விருப்பத்துக்கு இணங்கினன். ஒரு நிறைகோலைக் கொண்டு வந்து நாட்டச் செய்தான். தன் னுடலின் இறைச்சியை அறுத்து ஒரு தட்டிலிட்டான்; புருவை ஒரு தட்டிலிட்டான். எவ்வளவு தசையை அறுத்து இட்டபோதி னும் தசையிடப்பட்ட தட்டு மேலோங்கியே நின்றது. பிறகு சிபி தானே துலையிலேறத் தட்டு கள் இரண்டுஞ் சரியாக நின் றன. சிபியின் அருளுடைமை யைக் கண்ட தேவர்கள் சிபிக்கு அருள் புரிந்தனர். இவ்வரலாறு சிலமாறுபாடுகளோடு கூறவும் பெறும். சிபியின் செயலைக் கம்பரும் "புறவொன்றின் பொருட்டாகத் துலை புக்க பெருந்தகை தன் புகழிற் பூத்த'' என்று குறிப்பிட்டுள்ளார்.

**சிமந்தபஞ்சகம்** - இதனைச் சமந்த பஞ்சகம் என்றும் வழங்கினர். பரசுராமர் அரசவழி முறை யைக் கருவறுத்த காலத்தில் ஏற்படுத்திய இடம். இதில் ஐந்து மடுக்கள் இருப்பதால் பஞ்சகம் என்று பெயரை யடைந்தது. பரசுராமர் இங்கு அரசர்களுடைய உதிரத்தால் பிதுர் தர்ப்பணம் (நீத்தார் கடன்) செய்தார். பாரதப் போர் இந்த இடத்தில் தான் நடைபெற்றது.

**சிம்மவிட்டுணு** - இவன் மகேந்திர வர்மனுடைய தகப்பன். காஞ்சீ புரத்தைத் தலைநகராகக் கொண்டு பல்லவராச்சியத்தை அரசாண்டவன். இவன் அர சாட்சியை ஏற்றுக்கொண்ட போது பல்லவராச்சியம் ஆந்திர நாட்டையும் தொண்டைமண் டலத்தையுங் கொண்டதாக இருந்தது. பிறகு இவன் சோழ நாட்டை வென்று பல்லவ ராச்சியத்தோடு சேர்த்துக் கொண்டான்.

**சிரச்சிங்கா தனுதிபதிகள்** - இச் சொல்லின் பொருள் தலையாகிய அரியணையில் அமர்ந்திருந்தவர் கள் என்பது. தலையாகிய அரி யணையில் அமர்ந்திருந்தவர் ஒட் டக் கூத்தர். அவர் செங்குந்தர் குலத்தினராகையால் அச் சிறப்புப் பெயர் செங்குந்தர் களுக்குச் சிறப்புப் பெயராக வழங்கி வருகிறது. செங்குந்தர் கள் தங்குலப் புலவராகிய ஒட் டக் கூத்தரிடம் நம்முடைய குலத்தின் புகழ் என்றும் நிலை பெற்று நிற்குமாறு ஒரு நூல் பாடியருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். இதன் பொருட்டு எவ்வளவு பொருள் வேண்டுமாயினுந் தருவதாகக் கூறினர். ஒட்டக்கூத்தர், "நான் நூல் பாடுகிறேன். ஆனல் இதன் பொருட்டுப் பொருள் பெறமாட்டேன். ஒரு தாய்க்கு ஒரு மகனாகவுள்ளவர்களில் எழுபது பேர்களுடைய தலை யைப் பரிசளிப்பீர்களாகில் அவ் வாறு ஒரு நூலைப் பாடுவேன்'' என்றார்.

ஒட்டக்கூத்தர் உரைத்தவைகளைக் கேட்ட செங்குந்தர்கள் தங்குலத்தினர் வாழும் ஊர்தோறும் ஓலை போக்கினர். ஓலையின் செய்தியை அனைவரும் உணர்ந்தனர். ஒரு தாய்க்குஒரு பிள்ளையாக இருந்தவர்கள் எப்படியாவது நூல் பெற்ருல் சரி என்று தம்முடைய தலையை வெட்டிக் கொண்டனர். எழுபது தலைகளும் ஒட்டக்கூத்தரிடங் கொண்டு வந்து சேர்க்கப் பட்டன.

ஒட்டக்கூத்தர் தலைகளைக் குலோத்துங்க சோழனுடைய சபைக்குக் கொண்டு போகுமாறு கட்டளையிட்டார். அத் தலைகளை அரியணைபோற் குவித்து அதன் மீது தாம் அமர்ந்துகொண்டு தம்முடைய கையிலிருந்த ஈட்டியை முன்னிலைப்படுத்திச் செங்குந்த குலத்தைச் சிறப்பித்து எழுபது பாடல்களைப் பாடினுர். அப்பாடல்கட்கு ஈட்டியெழுபது என்னும் பெயர் அமைந்தது.

அதன் பிறகு எழுப் பெழுபது என்னும் பெயரோடு எழுபது செய்யுட்களைப் பாடினுர். ஒவ்வொரு பாடலும் முடியும் போதும் ஒவ்வொரு தலையும் தத்தமக்குரிய உடல்களோடு ஒட்டி உயிர் பெற்றன. ஒட்டக்கூத்தருக்கு முதலில் வழங்கிய பெயர் கூத்தர் என்பது. இந் நிகழ்ச்சிக்குப் பிறகுதான் ஒட்ட என்னுஞ் சொல் அவருடைய பெயரோடு ஒட்டியது.

'எழுப்பெழுபது' என்னும் நூல் கிடைக்கவில்லையாயினும் அதனைச் சேர்ந்ததென்று,

"கலைவாணி யுலகில் இருப்பதுவுங்
கல்வியுணர் கவிவல் லோரைத்
தலையாகக் காப்பதுவும் அவர் நாவில்
வாழ்வதுஞ்சத் தியமே யன்ரு?
சிலைவாண னுவிருந்தா யிரம்புயங்கள்
துணிந்துமுய்ர் சேவ னுற்ருன்
தலையாவி கொடுத்திடுசெங் குந்தருயிர்
பெற்றிடாதவையெய் வாயே,"

என்னும்பாடல்மட்டும் வழங்குகின்றது.

**சிரம்பை** - இவள் தூமாக்கன் என்னும் அசுரனுடைய மனைவி. இவள் தன்னுடைய கணவனை மகோற்கடர் (பிள்ளையார்) கொன்றதற்குப் பழி தீர்க்க எண்ணினுள். காசிப்புரோகிதனுடைய உறவினளைப் போல வடிவங் கொண்டு நஞ்சைக் கலந்து பரிமள தைலமென்று மகோற்கடர் மீது பூசினுள். அந்நஞ்சுஇவளையே கொன்றது.

**சிரவண பெள்குள** - தென்னிந்தியாவில்மைசூர் நாட்டில்மைசூருக்கு வடக்கே 62 மைல் தொலைவில் தொட்ட பெட்டா, சிக்க பெட்டா என்ற இரண்டுகுன்றுகளுக்கு நடுவே உள்ள ஊர். சைனக் கோயில்களுக்கு இது புகழ் பெற்றது. இங்கிருக்கும் கோமட்டேசுவரர் சிலை மிகுந்த புகழ்பெற்றது. இந்தியாவில் இதுவே மிக உயரமானசிலையாகும். இதன் உயரம் 57 அடி. தோளுக்குத்தோள்26அடி அகலமுடையது. சைனர்கள் இதை மிகுந்த பக்தியோடு போற்றுகிருர்கள். இஃது ஒரே கல்லால் ஆனது. இங்கு சைன மடம் ஒன்றும் இருக்கிறது.

**சிரீமதி** - இவள் அம்பரீடன் என்பவனுடைய மகள். மிகுந்த அழகுள்ளவள். இவளைவிரும்பிப் பருவதரிஷி என்பவரும் நாரதரிஷியும் அம்பரீடனிடங் கேட்டனர். அம்பரீடன், "நீங்கள் இரண்டு பேருங் கேட்கிறீர்கள் நான் யாருக்குக் கொடுப்பது? கன்னிகை யாரை விரும்பி மணமாலை சூட்டுகின்ருளோ அவர்களே அடையுங்கள்" என்றனன். நாரதர் தாமே அவளை அடைய வேண்டும் என்னும் எண்ணத்தோடு பருவதருக்குத் தெரியாமல் திருமாலை நோக்கிப் பருவதனுக்குக் குரங்கு முகம்

உண்டாக வேண்டும் என்று வேண்டினார். பருவதரோ நாரதருக்குத் தெரியாமல் நாரதருக்குக் குரங்குமுகம் உண்டாகவேண்டுமென்று வேண்டினார். திருமால் இவர்கள் கேட்டவாறே இருவருக்கும் குரங்கு முகம் உண்டாகச் செய்தார். மணமண்டபத்தில் திருமால் தாம் அவர்கள் இருவருக்கும் நடுவில் நின்றார். மண மண்டபத்திற்கு வந்த சிரீமதி இரண்டு குரங்குமுகங்களுக்கும் நடுவில் நின்ற திருமாலுக்கு மாலை சூட்டினாள். ஒருவரையொருவர் ஏமாற்ற முயன்ற இருவரும் ஏமாந்தனர்.

**சிருகாலவாசுதேவன்** - வடமதுராபுரிக்கு அண்மையில் இருந்த கரவீரபுரம் என்னும் நகரத்து அரசன். இவன் வாசுதேவனுடைய பகையைத் தேடி மாண்டொழிந்தான்.

**சிருங்கி** - இவன் சமீகமுனிவருடைய மகன். தந்தையைப் போல் தவஞ்செய்து வரபலங்களைப் பெற்றவன். தன்னுடைய தந்தையின் கழுத்தில் பரீட்சித்து மன்னன் செத்த பாம்பையெடுத்து மாலையாகப் போட்டுவிட்டுச் சென்றான் என்பதைக் கேள்விப் பட்டு அம்மன்னன் பாம்பாற்கடியுண்டு இறக்கவேண்டுமென்று வசவுரை வழங்கியவன்.

**சிருங்கேரி** - மைசூர் இராச்சியத்தில் கடூர் மாவட்டத்தில் கொப்பாதாலுக்காவில் துங்காநதிக்கரையில் உள்ள பட்டணம். ஆதிசங்கராசாரியார் மடங்கள் நிறுவிய நான்கு முக்கிய இடங்களில் இது முக்கியமானது. இம்மடம் சாரதாபீடம் எனப்படும். இங்குள்ள தலைவரே சுமார்த்தருக்கு சகத்குரு ஆவர். 14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இங்குத் தலைவராக விளங்கிய மாதவர் என்னும் வித்யாரண்ய சுவாமிகளே 1336இல் விசயநகர சாம்ராஜ்யத்தைநிறுவ உதவினவர். இங்குள்ள சிருங்ககிரி என்ற குன்றின் மேல் மல்லிகார்ச்சுனர் கோயில் இருக்கின்றது. இராமாயணத்தில் வரும் கலைக்கோட்டு முனிவர் என்னும் ரிசியசிருங்கர் இங்குப் பிறந்தவர் என்பது ஐதிகம்.

**சிருங்கேரிமடம்** - ஆதி சங்கராசாரியார் அத்வைத மதத்தையும் வைதிக நெறியையும் மக்களுக்கு எப்பொழுதும் போதிப்பதற்காகப் பாரத நாட்டின் நான்கு திக்குகளிலும் நான்கு மடங்களை நிறுவினார். அவற்றுள் தென்னிந்தியாவில் மைசூர் நாட்டில் துங்காநதியின் கரையில் உள்ள சிருங்கேரியில் நிறுவிய மடம் ஒன்று. நான்கு மடங்களுக்கும் தேவதை, மகாவாக்கியம் முதலியன வேறு வேறாகும். சிருங்கேரி மடத்தின் தேவதை சாரதா (சரஸ்வதி); மகாவாக்கியம் 'அகம் பிரம்மாஸ்மி'. இம்மடத்தில் பல கோயில்கள் உள்ளன. அவற்றுள் சாரதா கோயில் தலை சிறந்தது. அதனால் இப்பீடம் சாரதா பீடம் எனவும் வழங்குகின்றது. மடத்தில் தம் மாணவர்களில் ஒருவரான சுரேசுவராசாரியாரை முதல் தலைவராக ஏற்படுத்தினார். இப்பீடத்தில் பல மகான்கள் தலைவராயிருந்தனர். இம்மடத்தின் நிருவாகம் தலைவரின் ஆணைக்குட்பட்டது. வேதங்கள், சாத்திரங்கள் முதலிய கல்விகளைக் கற்பிக்கும் பொருட்டுச் சிருங்கேரியிலும், காலடியிலும் பழைய முறையிற் பாடசாலைகள் நடத்தப் படுகின்றன. அனைவர் நலனையும் கருதிப் பல அறங்கள் நாடொறும்

நடைபெறுவதோடு கலைமகள் விழாமுதலிய சிறப்பு வேளைகளில் சிறப்பு வழிபாடுகளும் நடைபெறுகின்றன.

**சிலம்பாறு** - அழகர் மலையிலுள்ள ஓராறு. இதற்கு நூபுரகங்கை யெனவும் பெயருண்டு.

**சிலாதமுனிவர்** - இவருடைய மனைவியின் பெயர் சித்திரவதி. இவர் தம்முடைய மனைவியோடு மக்கட்பேற்றை விரும்பித் தவஞ் செய்தார். கல்லையே உணவாகக் கொண்டிருந்தபடியால் சிலாத முனிவர் என்ற பெயரை அடைந்தார். சிவபிரான் இவரிடந்தோன்றி "நீ மூதியவனுகையால் மனைவியிடம் மக்கட் பேற்றையடைவது அருமை. வேள்வி செய்து மக்கட் பேற்றையடைவாயாக. நீ வேள்வி செய்யும் பொருட்டு நிலத்தையுழும் போது உழுசாலில் ஒரு புதல்வன் தோன்றுவான். அவன் எனக்கு ஒப்பாக இருப்பான்" என்று கூறி மறைந்தருளினுர். பிறகு சிவபெருமான்கூறியவாறே சிலாத முனிவர் வேள்வி செய்யும் பொருட்டு நிலத்தையுழுதார். அப்பொழுது அவ்வுழுசாலில் ஒருபொற் பெட்டியில் நந்திதேவர்இருந்தார்.சிலாதமுனிவர் சிவபிரானுடைய அருளை வியந்து அம்மகவையெடுத்து வளர்த்தார்.

இவர் இளமைப் பருவத்தில் தம் வீட்டிற்கு வந்த ஓர் அதிதிக்கு அவருடைய ஐயக் கடிகையில் விளையாட்டாக ஒருசிறு கல்லைப் போட்டார். அதிதி அக்கல்லை உணவோடு உண்டார். இவ்வாறு அதிதிக்குக் கல்லிட்ட குற்றத்தினுல் பின்னர்க் கல்லை உணவாக உண்ணுமாறு நேரிட்டது.

**சிவகலை** - இவர் சிவசிதம்பரச் செட்டியார் என்பவர்க்குப் புதல்வி. திருவெண்காடராகிய பட்டினத்தடிகட்கு மனைவியார். பட்டினத்தடிகள் எல்லாம் பொய்யென்று துறவறத்தை மேற்கொண்டு சென்ற பின் இவ்வம்மையார் தம் கணவராகிய பட்டினத்தடிகளையே எண்ணியிருந்து வீடுபேற்றை யடைந்தனர்.

**சிவகாமியாண்டார்** - கொங்குவள நாட்டில் கருவூரில் சிவபெருமானுக்குத்திருமாலைத்தொண்டு செய்து கொண்டிருந்தவர். இவருடைய கையிலிருந்த குடலை மலரைப் பறித்துச் சிந்திய யானையையும் பாகர்களையும் எறிபத்த நாயனுர் கொன்றுர்.

**சிவகோசரியார்** - இவர் திருக்காளத்திமலையில் தவஞ் செய்து கொண்டுஞ் சிவபெருமானையே எப்பொழுதும் எண்ணிக் கொண்டும் அம்மலையில் எழுந்தருளிய இறைவனைப் பூசித்து வழிபட்டுக் கொண்டும் இருந்தபடியால் இப்பெயர் பெற்றுர். சிவ-சிவம்; கோசரியார்-அறிவுக்கு விடயமாக்கிக் கொண்டவர். இவர் இறைவன் கட்டளைப்படி மறைந்திருந்து கண்ணப்ப நாயனுரின் அன்பைக் கண்டு பெருவியப் படைந்து மகிழும் படியான பேறு பெற்றவர்.

**சிவசமுத்திரம்** - மைசூர் இராச்சியத்தில் மைசூரையும் பெங்களூரையும் இணைக்கும் இரயில் பாதையில் இருக்கும் மத்தூர் இரயில் நிலையத்திலிருந்து முப்பது கல் தொலையிலிருக்கும் இடம்; காவிரியால் அமைக்கப்பட்ட அரங்கம். இங்குக் காவிரி இரண்டாகப் பிரிந்து இரண்டு நீர் வீழ்ச்சிகளாக விழுகின்றது. ஒவ்வொன்றும் சுமார் 200 அடி உயரத்தி

லிருந்து விழுகின்றது. மேற்கிலுள்ள வீழ்ச்சி "ககன சுக்கி" என்றும், கிழக்கிலுள்ளது "பருசுக்கி" என்றும் வழங்கப் படுகின்றன. காவிரியின் போக்கில் இயற்கையழகு மிகுந்து விளங்கும் இடம் இதுவே. "இதைப் போன்ற அழகு மிக்க அருவியை உலகில் வேறெங்கும் கண்டதில்லை" என்று புக்கனர் என்ற மேனாட்டு யாத்திரிகர் ஒருவர் வியந்திருக்கின்றார். இந்நீர் வீழ்ச்சியின் உதவியால் இவ்விடத்தில் மின்சார உற்பத்தி நிலையம் ஏற்படுத்தப் பட்டுள்ளது. இதில் 34,500 கிலோ வாட்டுக்கள் மின்சாரம் உற்பத்தியாகின்றது. மைசூர் இராச்சியத்தின் தொழில் வளர்ச்சிக்கு இஃது உறுதியான ஆதாரமாக ஒளிர்கின்றது.

**சிவசருமன்** - தொண்டைவள நாட்டில் திருவிரிஞ்சி புரத்தில் இருந்த சிவநாதன் என்னும் ஆதிசைவ மறையவனுடைய மகன். இவனுடைய இளமைக் காலத்தில் தந்தை காலமாயினன். இவனுக்குக் கோயிலில் சிவபூசை முறைவந்தது. இவனைச்சேர்ந்த பங்காளிகள் இவனுடைய முறையை இவனுடைய தாய்க்கு அறிவித்தனர். தாய் சிவபிரான் திருமுன்பு சென்று குழந்தையின் இளமைப் பருவத்தைத் தெரிவித்து முறையிட்டனள். சிவபிரான் இவளுடைய கனவில் தோன்றி, "நாளை உன் மகனைப் புனிதநீரில் நீராடச் செய்க" எனக் கட்டளையிட்டு மறைந்தனர். காலையில் தாய் சிவசருமனைப் புனிதநீரில் நீராடச் செய்தாள். சிறுவன் இருடிவடிவடைந்து சிவபூசை செய்யச்சென்றான். சிவலிங்கம் உயரமாக இருந்தபடியால் திருமுடி எட்டவில்லை. இறைவனை வேண்டினன். இறைவன் தமது திருமுடியை வளைத்துக் காட்டித் திருமுழுக்குக் கொண்டார். சிவலிங்கம் இத்தலத்தில் சாய்ந்தே இருக்கிறது.

**சிவசித்தர்** - இவர் சிவபிரானிடத்தும் அடியவர்களிடத்தும் பேரன்புள்ள ஒரு சித்தர். இவர் ஒரு மறையவனைப் பார்த்து "மறையவர்கள் சிவனடியார்களின் மிதியடிக்கும் ஒப்பாக மாட்டார்கள்" என்று கூறினர். அதனால் அந்த மறையவன் சினங்கொண்டு சொற்போருக்கு வந்தான். சித்தர் சிவனடியவர் ஒருவரின் மிதியடியொன்றைத் துலையில் வைத்து மறையவர் ஒருவரை மற்றொரு தட்டிலேறச் செய்து செருப்பு இருந்த தட்டுத்தாழக் காட்டினார்.

**சிவசுப்பிரமணிய பிள்ளை** - இவன் வேளாள குலத்தினன். கல்வியறிவிலுஞ் செல்வநிலையினுஞ் சிறந்து விளங்கினான். வீர பாண்டியக் கட்ட பொம்மனுடைய அமைச்சனாக அமைந்து நின்று காரியங்கள் புரிந்தவன். இவன் அறிவுடையவனாக இருந்தும் சில சமயங்களில் அறிவின்றி நடந்து கொண்டபடியினால் பாஞ்சாலன் குறிச்சிக்கே அழிவுண்டாகியது. இவனும் கொலையுண்டிறந்தான்.

**சிவஞான தேசிகர்**-இவர் தெய்வத் திருவருள் கைவரப் பெற்ற மெய்ஞ்ஞானச் செல்வர். பால சித்தர் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றவர். பொம்மபுரம் பழமலை முதலிய இடங்களில் தங்கியிருந்தார். தம்மையடைந்த வறியவர் நோயாளர் முடவர் முதலிய எல்லோருடைய குறைகளையும் இவர் போக்கியருளினார். இவருக்குத் தீமை செய்ய முயன்ற மந்திர

வாதியும் பிறகு இவருக்கு அடிமையானன். ஆயினும் செய்த தீவினையினுல் கடலில் மீனுல் அம்மந்திரவாதி மாண்டான்.

**சிவநாகமையர்** - இவர் வசவர் மடத்தில் இருந்த ஒரு சிவனடியார். இவரை வசவர்பல்லக்கி லேற்றிப் பெருமைப் படுத்தினுர். அந்தணர்கள் சாதி சரியல்ல வென்று குறை கூறினுர்கள். வசவர் சிவனடியார்களுடைய பெருமையைக்கூறி அவர்களுடைய வாயை அடக்கினுர். இவர் தமது உடலைக் கிள்ளிப் பால் சொரியச் செய்த பெருமையுடையவர்.

**சிவநாதன்** - திருவிரிஞ்சைப் பதியில் வழித்துணை நாதருக்குப் பூசனை செய்து கொண்டிருந்த ஓர் ஆதிசைவன். இவனுடைய மகன் பொருட்டுத் தான் அப்பதியில் எழுந்தருளிய சிவபெருமான் திருமுடி வளைத்தருளினுர்.

**சிவநேசர்** — சென்னை திருமயிலையில் திருஞானசம்பந்தர் காலத்தில்பெருஞ்செல்வராக விளங்கியிருந்தவர். பூம்பாவையின் தந்தை. தம்மகளையும் பெருஞ்செல்வத்தையும் திருஞான சம்பந்தருக்கு அளிக்க விரும்பியவர்.

**சிவபாதவிருதயர்** - திருஞான சம்பந்தருடைய தந்தையார். சிவபெருமானுடைய திருவடிகளை உள்ளத்திலே கொண்டவர் என்பது இச்சொற்றெடரின் பொருள். இப்பெயர் இவருக்குக் காரணப் பெயராக அமைந்து போலும்.

**சிவபுரம்** - காஞ்சிபுரத்திற்குரிய பதின்மூன்று பெயர்களில் ஒன்று. முன்னுளில் திருக்கைலையில் சிவபெருமானுடைய திருக்கண்களை உமாதேவி மூடிய காரணத்தினுல் உண்டாகிய குற்றம் நீங்குமாறு இப்பதிக்கு எழுந்தருளி மாவடியில் வீற்றிருக்கும் ஏகாம்பரநாதரை வழிபடுஞ் சமயத்தில் சிவபிரானுடைய கட்டளையால் கம்பாநதி பெருகி வரக்கண்டு அஞ்சி இலிங்கத்தைத் தழுவிக்கொள்ள அப்பொழுது சிவபிரான் காட்சி கொடுத்தபடியினுல் உண்டாகிய பெயர்.

**சிவப்பிரகாச சுவாமிகள் (திருவாரூர்)** - இவர் சொரூபாநந்தருக்குக் குருவாக அருளுரை வழங்கியவர். இவர் திருவாரூரில் பிறந்தவர் என்பர். இவர் கோவத்தம் என்னும் ஊரில் அறிதுயிலில் அமர்ந்திருக்கையில்சொரூபாநந்தர் இவரைக் கண்டு போற்றி வழிபட்டு அருளுரை பெற்று மெய்யறிவு கைவரப் பெற்ருர். இச்சொரூபாநந்தர்பிறகு தத்துவராய சுவாமிகட்கு ஆசிரியராக அமைந்து அருளுரைவழங்கினுர்.

**சிவமதி** - இவள் தருசகனுடைய தாய்; உதயையோடையின் உடன்பிறந்தவள். அவளுடைய மகளாகிய பதுமாபதியை மிகுந்த அன்போடு வளர்த்தவள்.

**சிவமலை** - கொங்கு வளநாட்டில் காங்கேயத்திலிருந்து திருப்பூர்ப் பாதையில் மூன்று மைலில் இச்சிவமலை உள்ளது. இஃதொரு சிறு குன்று. மலைமேல் முருகக் கடவுள் கோயில் முதன்மையானது. முருகக் கடவுளோடு சிவபெருமானும் இம்மலையில் எழுந்தருளியிருக்கிருர். அருணகிரி நாதருடைய திருப்புகழ்ப் பாடல்கள் இம்மலைக்கு உண்டு. மலைக்கோயிலில் இருக்கும் பழைய நெய் தீராத நோய்களை யெல்லாந் தீர்க்கக்கூடிய ஆற்றல் பொருந்தியது. புதிய நெய்யை விட்டு

விட்டுப் பழைய நெய்யை அந்த அளவுக்கு எடுத்தல் வேண்டும். இங்கெழுந்தருளியுள்ள முருகப் பெருமான் எதிர்கால நிகழ்ச்சிகளை முன்னதாகவே புலப் படுத்துவதாகக் கூறுகின்றனர்.

**சிவமுனிவர்** - இவர் கண்ணுவருடைய வசவுரையால் நிலவுலகில் தோன்றிய திருமாலினுடைய ஒரு கூறு. இவர் வள்ளிமலையில் தவஞ் செய்து கொண்டிருந்தபொழுது பெண்மான் பெற்ற பெண் குழவியை வள்ளிக் கிழங்ககழ்ந்த குழியில் கண்டெடுத்து வளர்த்தவர்.

**சிவயோகியார்** - இவர்கள் சிவபிராஃனயே எண்ணியிருப்பர். அதனால் பிறவித்தளையை அறுப்பதற்கு முயல்வர். உயிர் நீங்குஞ் சமயத்தில் உடல் முழுவதுந் திருநீறு பூசிச் சிவமந்திரங்களைச் சொல்லிக் கொண்டிருப்பார்கள். இவர்களிற் சிலர் வீர சைவர்களைப்போல் சிவலிங்கத்தை மார்பில் அணிந்திருத்தலும் உண்டு. இத்தகையோர் நாயன்மார்கள் வாழ்ந்த பல்லவர் காலத்தில் தமிழகத்தில் இருந்தனர். சோழமன்னர்கள் காலத்தில் பல சிவயோகியார்கள் தமிழ் நாட்டில் இருந்தனர் என்பது கல்வெட்டுக்களால் அறியப் பெறுகின்றன. திரு எறும்பியூர், திருபுவனை, திருவாரூர் முதலிய ஊர்களில் இருந்த மடங்களில் சிவயோகியார்கட்கு உணவிட நிவந்தங்கள் விடப்பட்டிருந்தன.

**சிவலிங்கசோழன்** - இவனுடைய மனைவியின் பெயர் பத்மவல்லி. தன்மகனைப் பசுவின் கன்றின் பொருட்டுத்தேர்க்காலில்இட்டு அரைத்தவன். இவனுடைய பெயர் மனுநீதிகண்டசோழன், தேரூர்ந்த சோழன் எனவும் வழங்கியது.

**சிவாக்கிரயோகிகள்** - சித்தாந்த தீபிகை, சிவஞானபோத பாடியம், தத்துவ தரிசனம், பாஞ்சராத்திர சயேடிகை முதலிய சிறந்த சைவ நூல்களை இயற்றியவர். இவர் தஞ்சையிலிருந்த சரபோசி மன்னன் முன்பு மணவாளமாமுனிஎன்னும் வைணவரோடெதிர்த்துப் பதினேழு நாள் வரையில் அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் மறுமொழிகூறிச் சிவபரத்துவத்தை நாட்டினர். வைணவர்கள் சிலர் இவர் எழுந்தருளியிருந்த மடத்தில் தீயைக் கொளுத்தினர். மடம் முழுவதும் வெந்தொழிந்தது.செய்தியைஅறிந்த சரபோசி மன்னன் திடுகிட்டஞ்சியோடிப் பார்த்த போது யோகிகள் அறிதுயிலில் அமர்ந்திருக்கக்கண்டு மகிழ்ந்தான். தீக் கொளுத்தியவர்களை ஒறுத்ததோடு இவர் விருப்பம் போல் பிறகு அரசன் நடந்து கொண்டான்.

**சிவாலய முனிவர்** - இவர் திருத்தில்லையில் வாழ்ந்திருந்தார். கல்வி அறிவு ஒழுக்கங்களில் சிறந்தவர். இவர் தேவார அடங்கன் முறையை நாள்தோறும் பாராயணஞ் செய்ய முயன்றார். அவ்வாறு செய்ய முடியவில்லை. சிவபெருமானை நோக்கிப் பன்னெடுநாள் தவம் புரிந்தார் தம்முடைய விருப்பம் நிறைவேற வேண்டுமென்று. ஒருநாள் இவருடைய கனவில் சிவபெருமான் தோன்றி, "நீ பொதிய மலைக்குச் சென்றால் உன்னுடைய எண்ணம் நிறைவேறுமென்று திருவாய் மலர்ந்தருளினர். இவரும் பொதியமலைக்குச் சென்று அப்பொழுது வசித்திருந்த அகத்தியரைக் கண்டு தம்முடைய விருப்பத்தைத் தெரிவித்தார். அவர் தற்பொழுதுள்ள எகூகூ-தேவாரப் பதிகங்களிலிருந்து

உகு பதிகங்களைத் திரட்டிக் கொடுத்து 'இவைகளைப் பாராயணஞ் செய்தால் அடங்கன் முறை முழுவதையும் பாராயணஞ் செய்த பலன் கிடைக்குமென்று கூறினர். இவரும் அவ்வாறே பாராயணஞ் செய்து வீடு பேற்றை யடைந்தார்.

**சிவேதன்** - பிரச்சோதனனுடைய அமைச்சர்களில் ஒருவன். சூழ்ச்சித் திறத்தில் வல்லவன். நளகிரியென்னும் யானை வெறிகொண்டு நகரையழித்த போது பிரச்சோதனனுடைய கட்டளைப்படிசிறையிலிருந்தஉதயணனிடஞ்சென்று இரந்துவேண்டி அவனுடைய மனதையிளக்கி யானையை அடக்குமாறு செய்தவன். பிறகு அரசனுக்கும் உதயணனுக்கும் பழக்கஞ் செய்வித்தான். அரசனுடைய மக்களுக்கும் வாசவதத்தைக்கும் உரிய கல்விகளைக் கற்பிக்குமாறு அரசன் நோக்கப்படி உதயணனை இணங்கச் செய்வித்தவன். பிறகு இவன் உதயணனுடைய பணிகளைச் செய்தான். சிங்கச் சுவணம் என்னும் பொன்னாற் செய்யப்பெற்ற நாணயங்களில் பதினாயிரத்தை உதயணன் இவனுக்கு நன்கொடையாக வழங்கினான்.

**சிறுத்தொண்டர்** -இவர்அறுபத்து மூன்று திருத்தொண்டர்களில் ஒருவர். இவருடைய இயற்பெயர் பரஞ்சோதியார் என்பது. இவர் வாழ்ந்திருந்த ஊர் திருச் செங்காட்டங்குடி. மற்றவர்களைப் பார்க்கினுந் தாம் சிவனடியவர்கட்குச் செய்யுந் தொண்டு சிறிது என்று கொண்டு இவர் தம்முடைய பெயரைச் சிறுத் தொண்டர் என்று வைத்துக் கொண்டார். பைரவராக வந்த கடவுளுக்குப் பிள்ளையை அறுத்துக் கறி சமைத்த செயற்கரும் பெரிய செயலைச் செய்தவர் இவர்தாம்.

**சிறுபாணாற்றுப்படை** - பத்துப் பாட்டினுள் மூன்றுவதுபாட்டு. உசுகூ அடிகளையுடையது. பரிசில் பெறக் கருதிய பாணன் ஒருவனைப்பரிசில்பெற்றான் ஒருவன் ஓய்மாநாட்டு நல்லியக் கோடனிடத்தே ஆற்றுப் படுத்தியதாக அந்நல்லியக் கோடனை இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. இது நல்லியக் கோடனுடைய வள்ளன்மையையும் அவனுடைய நகரங்களாகிய எயிற் பட்டினம் வேலூர்ஆமூர் முதலியவைகளின் இயல்பையும், அவற்றிலுள்ளாருடைய நற்குண நற்செய்கைகளையும் அவனுடைய அரண்மனையின் சிறப்பையும் பல திறத்தினரும் போற்றுமாறு பல குணநலன்களோடு அவன் வீற்றிருத்தலையும் கூறுவதன்றித் தமிழ்நாட்டு மூவேந்தருடைய தலைநகர்களாகிய மதுரை, வஞ்சி, உறையூரென்னும் மூன்று நகரங்களின் நிலைமையையும், பேகன், பாரி, காரி, ஆய், அதிகன், நள்ளி, ஓரி என்னும் வள்ளல்கள் எழுவரும் இன்ன இன்ன கொடையாற் பெயர் பெற்றார்களென்பதையும் கூறும்.

**சிற்றண்ணல் (சித்தன்ன வாசல்) குகைகள்** -தமிழ்நாட்டில் புதுக் கோட்டைப் பக்கம் உள்ளவை. இங்குள்ள ஓவியங்கள் காலத்தால் பிற்பட்டவை. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த மகேந்திரவர்மன் அப்பரால் சைவனாவதற்கு முன் இக்குகைகளைக் குடைந்து அமைக்குமாறு செய்தான். குகைகளில் காணப்படும் மூன்று தூண் ஓவியத்தொகுதிகள் தாம்தலைசிறந்தவை.ஓவியத் தின்வேலைப்பாடு,அஜந்தா,பாக் சிகிலியா முதலிய இடங்களி

லுள்ள ஓவியங்களின் வேலைப் பாட்டை ஒத்திருக்கின்றது. இங்குக் கண்டு பிடிக்கப் பட்டுள்ள ஓவியங்கள்தாம் தென்னிந்தியாவில் காணும் ஓவியங்களில் மிகவும் பழைமை வாய்ந்தவை.

**சிற்றண்ணல்வாயில்** - (சித்தன்ன வாசல்) ; இது தமிழ் நாட்டில் புதுக்கோட்டைப் பகுதியில் புதுக் கோட்டைக்கு மேற்கே 10கல்தொலைவிலுள்ள சிற்றூர். "அண்ணல் வாயில்" என்பது திருநாவுக்கரசர் திருத்தாண்டகத்தில் காணப்படுகின்றது. அன்னவாச லென்னும் அண்ணல் வாயிலும் அதன் பகுதியான சித்தன்ன வாசல் என்னும் சிற்றண்ணல் வாயிலும் சேர்ந்த பழம்பதி இன்றைக்குச் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பது அங்குக் காணும் பல சான்றுகளால் விளங்கும். சிற்றண்ணல் வாயிலின் மலையடிவாரத்தைச் சூழ்ந்த வரை நிலம், பல முதுமக்கள் தாழிகளும், கற்கிடைகளும், குரக்குப்படை வீடுகளும் நடுகற்களும், கற்குவி முட்டங்களும் ஆய பண்டைப் பெருங்கற்படைகள் கொண்ட பரந்த இடுகாடு. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ் நாட்டில் மலையைக் குடைந்து தளியியற்றும் புதுமையைக் கற்பித்த விசித்திர சித்தனை மகேந்திர பல்லவன் காவிரியின் தென் பகுதியையும் ஆண்டதைக் கொண்டும், மற்றும் இங்குக் காணும் சில பல்லவர் திருப்பணி விசேடங்களைக் கொண்டும், இத்தளி இம்மன்னன் திருநாவுக்கரசு சுவாமிகளின்அருள்பெற்றுச்சைவனுகு முன் இயற்றியதாகலாம்.

**சிற்றம்பலக்கோல்** - சிவபாதசேகரனை ராசராசன் தில்லைச்சிற்றம்பலவணிடத்திலேபேரன்புடையவன். அவன் தன் நாட்டில் தான் அளக்கும் அளவுகோலுக்கு இவ்வாறு பெயர்வைத்திருந்தான்.

**சிற்றம்பலம்** - சிறு அம்பலம் சிற்றம்பலம். சிதம்பரத்தில் கூத்தப்பிரான் திருக் கூத்தியற்றும் பொன்னம்பலம் சிற்றம்பலம் என்று பெயர் பெறும். இங்கு பேரம்பலம் ஒன்று இருத்தலின் அதனிலிருந்து வேறுபடுத்தற்கு இதனைச் சிற்றம்பலம் என்று குறிப்பிடலாயினர். சிற்றம்பலத்தினின்று வேறுபடுத்தப் பெறும் பேரம்பலம் சிவபெருமான் தேவர்களோடும் முனிவர்களோடும் எழுந்தருளிய மகா கைலாசமே என்பாரும் உளர்.

**சின்னபொம்மு** - இவன் கட்டபொம்முவினுடைய ஆருவது வழி முறையினன். இருபத்தெட்டாண்டுகள் வரை அரசாட்சி செய்திருந்த இவன் சொல்வன்மையும் வில்வன்மையும் உடையவன்.

**சின்னபொம்மேந்திரன்** - பாஞ்சாலன் குறிச்சிக் கட்டபொம்மு வழிமுறையில் நாற்பத்தோராவது பட்டத்தையடைந்துஐந்தாண்டுகள் அரசாட்சி செய்தவன். இவனுக்கு மக்கட்பேறில்லாதபடியால் இவனுக்குப்பின் இவனுடைய இளவல் ஆட்சிக்கு வந்தான்.

**சீகரமூர்த்தி** - உச்சயினியில் சந்திரசேனன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். அவனிடஞ் சிந்தாமணி என்னுந் தெய்வமணி இருந்தது. அதனைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டுமென்று உலகத்தில் இருந்த பிற அரசர்கள் எண்ணினார்கள். எல்லோரும் ஒன்றுகூடிப் படையெடுத்துக் கொண்டு வந்தார்கள். சந்திரசேனன் அரசர்களைக் குறித்துச் சிறிதும் அஞ்சாமல் மாகாளேசுவரப் பெருமானை வழிபட்டு

வந்தான். அவ்வாறிருக்கையில் அவ்வூரிலிருந்த இடைச்சிறுவன் ஒருவனும் சந்திர சேன மன்னனைப்போல் தானுஞ் சிவலிங்க பூசை செய்ய எண்ணினான். மணலாற் சிவலிங்கஞ் செய்து அதனை வழிபட்டான். அவனுடைய தாய் இவனுடைய செயல் விளையாட்டென்றெண்ணிச் சிவலிங்கத்தை யழித்துச் சென்றாள். இடைச்சிறுவன் மூர்ச்சையானான். தெளிந்து எழுந்ததும் அவ்விடத்தில் சிறந்த திருக்கோயிலும் ஒளி வடிவான சிவலிங்கமும் இருக்கக் கண்டு வழிபட்டான். அவனுடைய தாய் இதனைக்கண்டு வியந்து அரசனுக்கறிவித்தாள். அந்நகரை முற்றுகையிடவந்த பகையரசர்கள் அனைவரும் இதனைக்கண்டு வியந்தார்கள். சந்திரசேனனை மட்டுமின்றிச் சீகரன் என்னும் பெயருடைய அவ்விடைச் சிறுவனையும் வணங்கித் தாங்கள் கொண்டஎண்ணத்தை மாற்றிக் கொண்டு திரும்பிச் சென்றார்கள். இச்சீகரன் முருகனை நோக்கித் தவஞ்செய்து அருள் பெற்றான். இவனுக்கருளியபடியால் முருகக் கடவுளுக்குச் சீகரமூர்த்தி யென்றொரு பெயருண்டாகியது.

**சீகாரம்**-இது மேற்குத் தொடர்ச்சி மலைகளில் காணப்படும் ஒரு பறவை வகை. நீலகிரியில், அதிகமாகக் காணப்படுகின்றது. சேர்வராயன் மலையிலும் உண்டு என்கின்றனர். இது மைனாவை விடஉருவில்பெரிது; புறாவை விடச் சிறிது. கருங்குருவி இனத்தைச் சார்ந்தது. நீலக்கறுப்பு நிறமுடையது. நெற்றியிலும் தோள்களிலும் பளபளப்பான நீலப்பாகங்கள் இருக்கும். இணை கூடும் சமயம் இது மனிதன் சீழ்க்கை யடிப்பது போல் கூவும். பிப்ரவரித் திங்கள் முதல் ஆகஸ்டுத் திங்கள் வரையில் குஞ்சு பொரிக்கும். சிற்றாறுகளின் பக்கத்தில் கூடு கட்டும்.

**சீகாளத்தி** - இதனைத் திருக்காளத்தி எனவுங் கூறுவர். (சீ, காளம் அத்தி) சிலந்தி, பாம்பு, யானை ஆகிய மூன்றும் வழிபட்ட படியால் சீகாளத்தி என்னும் பெயருண்டாகியது. பஞ்சபூதத் தலங்களில் இது வாயுலிங்கம் அமையப்பெற்றது. இவ்வூரை யொட்டிப் பொன்முகரியாறு ஓடுகிறது. கண்ணப்பர் கண்ணைப் பெயர்த்து இறைவனுக்கு அப்பியது இங்குதான். இவ்வூரின் சிறப்பைத் திருக்காளத்திப் புராணம் விரிவாகக் கூறும். இதனைத் தென்கயிலாயம் எனவுங் கூறுவர். நக்கீரர் கயிலைபாதி காளத்தி பாதி அந்தாதியைக் காளத்தியப்பருக்குப் பாடியிருக்கிறார்.

**சீதக்காதி** - திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள காயற் பதியில் முன்னாளில் இருந்த ஒருமுகமதியச் செல்வர். நல்ல கொடையாளர். தம்மை நாடி வந்த இரவலர்க்குப் பெரும் பொருள் வழங்கிச் சிறந்த வள்ளலாக விளங்கினார். இவர் இறந்து சமாதிக் குழியில் இருக்கையில் படிக்காசுப் புலவர் இவர் இறந்து போனதை அறியாமல் நன்கொடை பெறும் பொருட்டுக் காயற்பதிக்குச் சென்றார். சென்ற பிறகு இவர் காலமான செய்தியை உணர்ந்தார். மிகவும் உள்ளம் வருந்திச் சமாதி வைக்கப்பட்டிருந்த இடத்திற்குச் சென்று, "தேட்டாளன் காயல்துரை சீதக்காதி சிறந்த வச்ர, நாட்டான் புகழ்க் கம்பம் நாட்டிவைத்தான் தமிழ் நாவலரை, ஒட்டாண்டியாக்கி அவர்கள் தம் வாயில் ஒரு பிடிமண், போட்டானவனும் ஒளித்தான்

சமாதிக்குழி புகுந்தே" என்று ஒரு செய்யுளைப் பாடினார். அவ்வளவில் சமாதியில் இருந்த பிணம் கைநீட்டியது. விரலில் விலை உயர்ந்த மோதிரம் ஒன்று இருந்தது. புலவர் அதனைக் கழற்றிக் கொண்டு சென்றார். இதன் பிறகு "செத்துங் கொடுத்தான் சீதக்காதி"என்று பழமொழி ஒன்று உண்டாகியது.

**சீதத்தன்** - இவன் முன்னாளில் ஏமாங்கத நாட்டில் இராசமாபுரியில் வாழ்ந்திருந்தான். வணிகர் குலத்தில் தோன்றியவன். இவனுடைய மனைவியின்பெயர் பதுமை. இவன் நூறு மரக்கலங்கட்குரியவனாய் வாணிகஞ் செய்து பெரும் பொருளீட்டி மன்னரும் மதிக்கத்தக்க மாண்பொடு வாழ்ந்திருந்தான். ஒரு சமயத்தில் இவனுடைய மரக்கலங்கள் முற்றும் மா கடலிற் கவிழ்ந்து போயின. அதனால் இவனுடைய பொருள் வளங் குன்றியது. இவனுடைய செல்வச் சிறப்பை நோக்கிப் பொறுமையாற் பகை கொண்டிருந்தவர்கள் இவனுடைய பொருளிழப்பைக்கண்டு மனமகிழ்ந்து இவனைப் பலவாறு இகழ்ந்து திரிந்தனர். இவன் காலம் நோக்கியிருந்து ஒரு மரக்கலந் தேடி மேலும் பொருளீட்டுந் தொழிலில் முயன்றான். பெரும் பொருள் தேடினான். இவனுடைய சீர்மையை மதித்த வித்தியாதர மன்னன் ஒருவன் இவனைத் தன்னாட்டிற் கழைத்துத் தக்க பொருள் வழங்கிப் பெருமைப் படுத்தினான்.பெரும் பொருளோடு திரும்பிய இவனுடைய சிறப்பை இவனை முன்னர் இகழ்ந்தவர்கள் கண்டு அஞ்சி மதிமயங்கி அடங்கியொடுங்கிப் போயினர்.

**சீதநாடு** - செந்தமிழ் நாட்டைச் சுற்றியுள்ள கொடுந்தமிழ்நாடுகள் பன்னிரண்டனுள் ஒன்று. கோயமுத்தூர், நீலகிரி மாவட்டங்களைக் கொண்ட பகுதியே இச்சீதநாடு என்பர்.

**சீதாபண்டிதர்** - இவர் திருமாலிடத்தில் சிறந்த அன்புடையவராகத் திகழ்ந்தார். இவர் தம்முடைய மனைவியாரோடு திருப்பதிப் பயணம் புறப்பட்டார். வழியில் ஒரு சிற்றூரில் பொழுது போயது. மனைவியார் எங்கேனுந் தங்கிவிடுவோம் மேற்கொண்டு செல்லின் கள்ளர்களால் தொல்லையுண்டாகுமென்றனர். ஆண்டு மாறு கோலத்துடன் வந்த சிலகள்ளர் நாங்கள்துணைக்குஉடன் வருகிறோம் எங்குந் தங்காது தொடர்ந்து பயணஞ் செய்யுங்கள் என்றனர். சீதாபண்டிதர் திருமால் துணைவருவார் என்று கூறி மேற்கொண்டு பயணத்தைத்தொடங்கினார்.ஓரிடத்தில் கள்ளர்கள் சீதாபண்டிதரைத் துன்புறுத்திப் பொருள்களைப் பறிக்கத் தொடங்கினார்கள். அப்பொழுதுதிருமால்கோதண்டராமனாக வந்து பண்டிதரைப் பாதுகாத்துக் கள்ளர்களைக் கொன்றார்.

**சீதை** - சீதையென்பது உழுபடைச்சாலைக் குறிக்கும். சனக மன்னன் வேள்வி செய்தற் பொருட்டு வேள்வி நிலத்தை உழுபடை கொண்டு உழுத பொழுது அங்கு ஒரு பேழையில் ஒரு பெண் மகவைக் கண்டெடுத்தான். அப்பெண் உழுபடைச் சாலில் அகப்பட்டமையால் சீதையென்று பெயரிட்டு வளர்த்தான். வேதவல்லி என்பாள் முன் சாபப்படி இராவணனை அழித்தற்கு இலங்கையில் ஒரு தடாகத்தில் ஒரு

தாமரை மலரிற் சிறுபெண் குழந்தையாகத் தோன்றினுள். அதனைக் கண்டோர் எடுத்துச் சென்று இராவணனிடங் கொடுத்தனர். இராவணன் காலக்கணிதர்களைக் கொண்டு அக்குழந்தையின் பலனைப் பார்த்தான். அக்குழந்தையால் தனக்கும் இலங்கைக்கும் அழிவுண்டாகும்என்றுஉணர்ந்தான். அக்குழந்தையை ஒரு பெட்டியில் வைத்துக் கடலில் விட்டு விடச் செய்தான். அப்பெட்டி அலையாலடித்துச்செல்லப்பட்டு மிதிலாபுரிக் கடற் கரையில் ஒதுங்க நாளடைவில்அவ்விடத்தில்மண்மேடிட்டது. அவ்விடத்தில் தான் சனகன் வேள்விக்கு உழத்தொடங்கிப் பெட்டியைக் கண்டெடுத்தான்.

**சீத்தலைச்சாத்தனுர் -** இவருடைய முழுப்பெயர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர் என்பது. சீத்தலை என்பது பாண்டி நாட்டில் உள்ள ஓர் ஊர். சாத்தனுர் என்பது ஐயனுர் பெயர். மதுரை மாநகரில் தங்கிக் கூலவாணிகஞ் செய்து கொண்டிருந்தாராகையால் மதுரைக் கூலவாணிகன் என்னும் அடைமொழியும் பெற்ருர். கூலவாணிகத்தில் இருந்தஇவர் பல நூல்களையும் நன்கு கற்றுச் சிறந்த புலமை நலம் பெற்றுத் திகழ்ந்தார். ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்ருகிய மணிமேகலை என்னும் நூலை இவர் இயற்றினுர்.

**சீந்திவலையர் -** இவர்கள் தஞ்சை மாவட்டத்திலுள்ள கோடியக்காடு முதலிய இடங்களில் வாழ்கின்றனர். காட்டிலுள்ள சீந்திக் கிழங்குகளைத் தோண்டியெடுத்துத் தின்றும் கடல் மீனைத் தின்றும் வாழ்வதால் இவர்கள்இப்பெயர்பெற்றனர். இவர்கள் மிகச் சிறுதொகையினராகவே உள்ளனர். முன்னடியன், வீரன், காளி, தூண்டிக்காரன் என்னுங் கடவுளரை இவர்கள் வழிபடுகின்றனர்.

**சீபுராணம் -** ஒரு சைன நூல். இதில் விருஷபர் முதல் சீவர்த்தமானர் இறுதியாகவுள்ள இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களுடைய வரலாறுகள் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளன. மணிப்பிரவாள நடையாகவுள்ளது. இக்காலத்திலே வழங்காத தமிழ்ச் சொற்கள் பல இந்நூலிற் காணப்படும். இந்நூலைச் சைனர்கள் நாள்தோறும் வழிபட்டுக் கொண்டாடுவர்.

**சீமந்தினி -** இவள் சித்திரவர்மன் என்பவனுடைய மகள். இவளுடைய பிறந்த நாட்குறிப்பை ஆராய்ந்து பார்த்த காலக்கணிதர்கள், "இவள் தன்னுடைய பதினுன்காவது வயதில் மங்கலமிழப்பள்" என்று கூறினர். இதனைக் கேட்டதந்தை மிகுந்த வருத்தத் தோடிருந்தான். இச்செய்தியை உணர்ந்த சீமந்தினி யாஞ்ஞுவல்கிய முனிவரின் மனைவியாகிய மைத்திரியிடஞ் சென்று சொன்னுள். அவள் சீமந்தினிக்குச் சோமவார விரதத்தைக் கடைப் பிடிக்குமாறு அறிவுரை கூறினுள். சீமந்தினி மைத்திரியின் உரைப்படி சோமவார விரதத்தை மேற் கொண்டிருந்தாள். பிறகு நிடத தேச மன்னனுகிய சந்திராங்கதன் என்பவனை மணம் புரிந்தாள். சந்திராங்கதன் ஒரு நாள் நண்பர்களுடன் யமுனையில் தோணியேறிச் சென்ருன். தோணி கவிழ்ந்தது. எல்லாரும் யமுனையில் மூழ்கி மாண்டனர்.

சந்திராங்கதன் மட்டும் தப்பிப் பிலத்தின் வழியே சென்று நாகலோகம் அடைந்

தான். நாகராசனால் காப்பாற்றப் பட்டு அங்கிருந்தான். சீமந்தினியும் அவள் தந்தையும் சந்திராங்கதனுடைய தந்தையாகிய இந்திரசேனனும் சந்திராங்கதன் யமுனையாற்றில் மாண்டான் என்று செய்தி அறிந்தனர். மிகுந்த வருத்தமடைந்து செய்ய வேண்டிய இறுதிக் கடன்களையெல்லாஞ் செய்து முடித்தார்கள். சீமந்தினியின் மங்கலநாண் முதலியவைகளையும் நீக்கினார்கள்.

சந்திராங்கதன் நாகராசனிடம் சில காலம் இருந்துவிட்டு அவனிடம் பலவகையான பரிசுகளைப் பெற்றுக்கொண்டு யமுனைத் துறைக்கு வந்தான். அங்கு சோமவார விரதத்தின் பொருட்டு நீராட வந்த சீமந்தினியைக் கைம்மைக் கோலத்தோடு கண்டான். அவள் தன்னுடைய மனைவி யென்று அறிந்தான். அவளுடைய ஊர் பெயர் முதலியவைகளை வினவினான். அவள் தன் நிலையும் தன்மாமன் முதலியோர் பகையரசரால் சிறைப்பட்டமையையுங் கூறக் கேட்டான். ''இன்னும் இரண்டு நாட்களில் உன்னுடைய கணவன் உன்னிடம் வருவான். நான் அவனுடைய நண்பன்'' என்று கூறி விட்டு அவ்விடமிருந்து நீங்கினான். நிடத நாட்டுக்குப் போய்ப் பகையரசர்களோடு போரிட்டு அவர்களை வென்றான். தன்மாமன் முதலியோருக்குச் செய்தி தெரிவித்துச் சீமந்தனியைஅழைத்து மறுமணங் கொண்டான்.

சீமந்தனிதன்னுடைய கணவனோடு சோமவார விரதத்தைக் கடைப் பிடித்து வருகையில் வேதமித்திரன் என்பவனுடைய மகனாகிய சுமேதா என்பவனும் சதார்சுதன் என்பவனுடைய மகனாகிய சாமவான்என்பவனும் அரசனிடஞ் சென்று,''நாங்கள் இருவருந் திருமணஞ் செய்துகொள்ள எண்ணியிருக்கிறோம். பொருளுதவி செய்யவேண்டும்" என்று கேட்டனர். அரசன் இவர்களைப் பார்த்துச் சீமந்தனி சோமவார விரதங்கடைப்பிடிக்கிறாள். சோமவாரத்தன்று செல்பவர்களுக்கு விரும்பிய அளவு பொருள் கொடுக்கிறாள். நீங்களிருவரும் சோமவாரத்தில் கணவனும் மனைவியுமாகக் கோலம் பூண்டு அவளிடம் போய்ப் பொருள் பெற்றுத் திருமணஞ் செய்துகொள்ளுங்கள். அவ்வாறு போகாமலிருந்தால் உங்களிருவரையுங் கடுமையாகத் தண்டிப்பேன்'' என்று சொன்னான்.

மறையவரிருவரும் கணவனும் மனைவியுமாகக் கோலம் பூண்டு சீமந்தினியிடஞ் சென்றனர். சீமந்தனி இவர்கள் இருவரையும் உமாமகேசுவரராகப் பாவித்துப் பூசித்து இவர்கள் விரும்பிய பொருளை அளித்தாள். இருவருந் திரும்பினர். அப்பொழுது பெண்ணாக நடித்தவனுக்குப் பெண்ணுக்குரிய உறுப்புக்கள் உண்டாயின. இவனுடைய தந்தை தன்னுடைய ஒரே மகன் பெண்ணானதை அறிந்து வருந்தினான். அரசனிடஞ் சென்று என்னுடைய மகன் உன்னால் பெண்ணானான். எனக்கு வேறு ஆண் பிள்ளைகள் இல்லை என்னுடைய உயிரை உன்முன் போக்கிக் கொள்ளுகிறேன்'' என்று சொன்னான். இதைக் கேட்ட அரசன் அஞ்சினான். உமையை நோக்கி வழிபாடு செய்து இவனை மீண்டும் ஆணாக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். உமாதேவி என்னுடைய அன்பர்கள் நோக்கத்திற்கு மாறாக யான்

யாதுஞ் செய்ய முடியாது. ஆகவே வேறு ஆண்மக்கட் பேறு அளிக்கிறேன்" என்று கூறினுள். அரசன் இச் செய்தியை வேதியனுக்குக்கூறி அவனுக்குப் பொருள் வழங்கி யனுப்பினுன். கணவன் மனைவி யாகக் கோலம் பூண்ட இரு வருக்குந் திருமணஞ் செய்து வைத்தான்.

**சீமாலிகன்** - ஓர் இடையன். இவன் கண்ணனுக்கு உசாத்துணையாக உடனிருந்தான். ஒருநாள் கண்ணன் இவனோடு உரை யாடிக்கொண்டு வெளியே சென்றுன். அப்பொழுது கண் ணனுடைய கையிலிருந்த ஆழிப்படையைத் தன்னிடங் கொடுக்குமாறுந் தான் அதனைத் தூக்கிக் கொண்டுவருவதாக வும் சீமாலிகன் கேட்டான். கண்ணன் அவனிடம் அப்படை யைத் தரமுடியாதென்றும் அது அவனுடைய தலையை அறுத்து விடுமென்றுங் கூறினுன். சீமாலிகன் தன்னிடந் தருமாறு மேலும் மேலுங் கண்ணனை வற்புறுத்தினுன். கண்ணன் ஆழிப்படையை அவனிடங் கொடுக்க அஃது அவனுடைய தலையை அறுத்துத் தள்ளியது. அதனுல் சீமாலிகன் நற்கதி பெற்றுன்.

**சீயகங்கன்** - மைசூர் நாட்டைச் சேர்ந்த கோலார் நகரத்தைத் தலை நகராகக்கொண்டு நீண்ட காலம் அரசாட்சி செய்தவர்கள் கங்க வமிசத்து அரசர்கள். இவர்கள் தங்களுடைய மெய்க் கீர்த்திகளில் குவளாலபுர பர மேசுரர்கள் என்றும், நந்திகிரி நாதர் என்றுங் கூறிக்கொள்ளு கிறுர்கள். குவளாலபுரமென் பதே கோலார் எனத் திரிந்து வழங்குகின்றது. அவ்வரசர் களில் இச்சீயகங்கன் ஒருவன். சீயகங்கன் என்பதற்குப் பொருள் சிங்கத்தைப் போன்ற கங்கன் என்பதாம். இவன் சைன முனிவராகிய பவணந்தி முனிவரைக்கொண்டு நன்னூல் என்னுஞ் சிறந்த இலக்கண நூலை இயற்றுவித்தான்.

**சீயமங்கலம்** - வடார்க்காடு மா வட்டத்தில் வந்தவாசி தாலுகா தேசூரில் இருந்து தெற்கே ஒரு கல் தொலைவில் இவ்வூர் உள் ளது. இவ்வூரிலுள்ள பாறைக் குன்றில் மகேந்திரவர்மனுல் குடையப்பட்ட குகைக்கோயில் ஒன்று உள்ளது. இக்கோயி லுக்கு அந்நாளில் அவனி பாசன பல்லவேசுரம் என்று பெயர் வழங்கியது.

**சீரங்கநாத யாதவராயன்** - வீர நரசிங்க யாதவராசனுக்குப் பிறகு அவனுடைய அரியணை யில் ஏறிய சீரங்கநாத யாதவ ராயன்என்பவனும்தன்னுடைய முன்னோர்களைப் போலவே பல திருக்கோயில்களில் திருப்பணி செய்தான். கோவிந்தராசரின் முதற்சுற்றில் ஆண்டாள் என் னுஞ் சூடிக் கொடுத்த நாச்சி யாருக்குக் கிழக்கு முகமாக ஒரு சிறு கோயிலைத் தனியாகக் கட்டி வைத்தான். திருப்பதி அதன் அருகிலுள்ள அவிலாலி முதலான தேவதானச் சிற்றூர் களில் தண்ணீர் வசதியை மிகுதி யாக ஏற்படுத்தித் தேவதான நிலங்கள் மிகுதியான பலன் களைக் கொடுக்கச் செய்தான். இவனுடைய நாட்டில் பெரிய அதிகாரியாகவிருந்த பரமேசு வரமங்கல முடையான் என்பவ னும் திருப்பதி வேங்கடாசலப் பெருமாளுக்கு மலர்த் தோட் டங்களையும் துளசிப் பொழில் களையும் ஏற்படுத்தித் திருப் பணிகள் செய்தான்.

**சீராளன்** - சிறுத்தொண்ட நாய னருடைய மகன். கறிசமைத் தற் பொருட்டுத் தாய் தந்தை

யரால் அரியப் பெற்றுப் பிறகு இறைவன் அருளால் ஓடிவந்தவன்.

**சீவகசிந்தாமணி** - தமிழில் உள்ள பழைய காப்பியங்கள் ஐந்தனுள் ஒன்று. திருத்தக்கதேவர் என்னும் சைன முனிவரால் இயற்றப்பட்டது. சொல்லழகும் பொருளழகும் நிறைந்துள்ளது. சைனமதத்தினனாகிய சீவகன் என்னும் அரசனுடைய வரலாற்றை விரித்துக் கூறி நிற்றலால் இப் பெயர் பெற்றது. சிந்தாமணி யென்னும் இந்நூல் நூற் பயனாகிய நாற்பொருள்களையும் நன்கு விளங்கக் கூறுதலின் முடி பொருட்டொடர் நிலைச் செய்யுளென்றும் இது வழங்கப்படும்.

**சீவகன்** - சீவகசிந்தாமணிக் காப்பியத்திற்குத் தலைவன்; சச்சந்தனுடைய மகன். கந்துக் கடன் என்னும் வணிகனால் வளர்க்கப் பெற்றவன். இடு காட்டில் கந்துக்கடன் இவன் குழந்தையாகக் கிடக்கும் போது கண்டு எடுக்கையில் "சீவ" என்று தும்மியபடியால் சீவகன் என்று பெயர் சூட்டப் பெற்றவன். கந்துக்கடனால் உரியகாலத்தில் கல்விப் பயிற்சி செய்விக்கப் பெற்று அச்சணந்தி யென்னும் ஆசிரியரிடம் வில்வித்தை முதலியவைகளைக் கற்றுத் தெளிந்தவன். தன்னுடைய பிறப்பு வளர்ப்பு முதலியவைகளை உணர்ந்து பிறகு நாட்டைக் கைப்பற்றி அரசாண்டவன். இவன் மங்கையர் பலரை மணந்தான். இவனுடைய வரலாற்றைச் சீவகசிந்தாமணி விரிவாகக் கூறும்.

**சீனக்கர்** - இவர் சோழவள நாட்டில் அரசூரில் வேளாளர் குலத்தில் தோன்றியவர். ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு இருந்தவர். இவர் சோழ மன்னனுக்கு அமைச்சராக இருந்தார். இவர் சிறந்த அறிவாளியாக விளங்கியதோடு சிறந்த செல்வராகவுந் திகழ்ந்திருந்தார். தம்முடைய செல்வத்தை அறிஞர்கட்கும் வறிஞர்கட்கும் வழங்கினார். இவருடைய சீரிய குண நலச்சிறப்பு அந்நாளில் வாழ்ந்திருந்த பொய்யாமொழிப் புலவருக்கு மிகவும் பிடித்திருந்தபடியால் இவரோடு விழுமிய நட்புக் கொண்டிருந்தார். இவர்கள் இருவரும் பெரும்பாலும் ஒன்றாகவே இருப்பார்கள். ஒரு நாள் இரவில் இருவரும் சீனக்கர் படுக்கையில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது சீனக்கர் யாதோ ஒரு வேலையாகப் புறப்பட்டு வெளியே சென்றார். பொய்யாமொழியார்அப்படியே படுக்கையிற் படுத்து உறங்கி விட்டார். சிறிது நேரத்தில் அங்கு வந்த சீனக்கரின் மனைவி உறங்கிக் கொண்டிருப்பவர் தன்னுடைய கணவன் என்று எண்ணித் தானும் ஒருபக்கத்திற் படுத்து உறங்கி விட்டாள். சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கு வந்த சீனக்கர் இருவரும் படுக்கையில் படுத்து உறங்கிக் கொண்டிருத்தலைக் கண்டார். அவர் பொய்யா மொழியாரிடத்தில் சிறிதும் ஐயங் கொள்ளவில்லை. தம் மனைவி அறியாமையினாலேதான் அவ்வாறு வந்து படுத்து உறங்கி விட்டாள் என்று எண்ணினார். "சிறிது தள்ளிப் படுங்கள். யானும் படுக்கிறேன்" என்று கூறினார். இருவரும் விழித்துக் கொண்டனர். சீனக்கர் மனைவி படுத்திருந்தவர் புலவர் என அறிந்து நாணங் கொண்டு அப்பால் ஓடிவிட்டனள். புலவரோ பெரிதும் உள்ளம்வருந்திஇரங்கினார். நிகழ்ந்ததை இறுதிக் காலம்

வரையில் அவரால் மறக்க முடியவில்லை. சினக்கருடைய நட்புடைமையைப் பெரிதும் பாராட்டிய அவர் சினக்கர் காலஞ் சென்றபோது "அன்று நீ செல்லக் கிடவென்ருய்" என்னும் பாட்டைக் கூறி அவரோடு உடன் கட்டையேறித் தம்முடைய உயரிய நட்புடைமையை உலகத்திற்கு நன்கு புலப்படுத்தினர்.

**சீனு** - உலகின் மிகப்பெரிய நாடுகளில் ஒன்று. கிழக்காசியாவில் இருக்கிறது. மக்கட் பெருக்கை மிகுதியாகக் கொண்டது. பழைமை வாய்ந்தது. மஞ்சூரியா, உள்மங்கோலியா, திபெத்து, சின்கியாங் ஆகிய நாடுகளும் அடங்கியுள்ளன. ஆகவேஇந்நாடுமேற்கில் சோவியத் மத்திய ஆசியாவிலிருந்து கிழக்கில் பசிபிக் சமுத்திரம் வரையிலும் வடக்கில் அமூர் ஆற்றிலிருந்து தெற்கில் இந்தோசீனு வரையிலும் பரவியுள்ளது. தெற்கிலே காடுகளும் மேற்கிலே பெரிய மலைகளும், வடக்கில் அகன்ற பாலைவனங்களும் கிழக்கில் பசிபிக் சமுத்திரமும் இதைச் சூழ்ந்துள்ளன. தென் சீனுவில் குன்றுகளும் பள்ளத் தாக்குகளும் மாறி மாறி இருக்கின்றன. பரந்த சமநிலத்தைக் காணமுடியாது. சீனர்கள் சீனுவிலேயே தோன்றியவர்களா அல்லது வெளி நாட்டில் இருந்து வந்து குடியேறியவர்களா என்பது இன்னுந் திட்டமாக முடிவு செய்யப் படவில்லை.

**சீனுபுரம்**-இது கொங்கு நாட்டில் விசய மங்கலத்தை யடுத்துள்ள ஓர் ஊர். நன்னூலை இயற்றிய பவணந்தி முனிவர் இவ்வூரினர் என்பர்.

**சுகர்** - வியாச முனிவருடைய புதல்வர். வியாசர் மகப்பேறு வேண்டிச் சிவபெருமானை நோக்கி வேள்வி செய்த பொழுது கிருதாசி என்னும் தெய்வப் பெண் தோன்றி வியாசருக்குக் காமம் உண்டாக்கினுள். தான்கிளியுருக் கொண்டிருந்தாள். இச்சமயத்தில் சுகர் பிறந்தார். கிளி வடிவத்தோடிருந்தவளிடம் பிறந்தவராகையால் சுகர் என்று பெயர் பெற்ருர். இவர் பிறந்த பொழுதே சிறந்த மெய்யறிவாளராகத் திகழ்ந்தார். மெய்யறிவினுல் தந்தையையும் விட்டு நீங்கினுர். மகப் பிரிவை யாற்ருத வியாசர் 'சுகனே! சுகனே' என்று அழைத்த பொழுது மரஞ்செடி கொடிகளும் "ஓம்" என்று மறுமொழி கூறின. இவர் எதையும் பாராமல் தவஞ்செய்து வீடு பேற்றை யடைந்தார்.

**சுகலன்** - பாண்டிவள நாட்டில் குருவிருந்த துறை என்னும் ஊரில் இருந்தவன். இவனுடைய மனைவியின் பெயர் சுகலை. இவர்களிருவருக்கும் பன்னிரண்டு மக்கள் தோன்றினர். அப் பிள்ளைகள் வியாழ பகவானுடைய தவத்திற்கு இடையூறு செய்தமையின் மறுபிறப்பில் பன்றிக் குட்டிகளாகப் பிறக்குமாறு வசவுரை பெற்றனர்.

**சுகன்** - இராவணனுடைய தூதுவர்களில் ஒருவன். இராமனுடைய குரங்குப் படைகள் கடற்கரையில் தங்கியிருக்கும் பொழுது உளவறிய வந்து விபீடணனுல் பிடிக்கப்பட்டவன்.

**சுகன்னி** - சையாதி மன்னனுடைய மகள். இவள் காட்டிற்குச் சென்றபொழுது அங்கு புற்று மூடுமாறு தவஞ்செய்து கொண்டிருந்த சியவன முனிவருடைய கண்ணைக்குத்தி இம்முனிவருக்கு மனைவியானவள்.

**சுகுணன்** - இவன் ஒரு சிறந்த வள்ளல். தொண்டைவள நாட்டில் வீடூரில் வேளாண்மரபில் தோன்றியவன். தன்னுடைய பெருஞ் செல்வத்தை இரப்பவர்கட்கு வழங்கி மகிழ்ச்சியடைந்து கொண்டிருந்தான். ஒரு நாள் ஒரு புலவர் சுகுணனுடைய கொடைத் தன்மையைத் தாம் ஆராய்ந்து பார்க்க வேண்டுமென்று எண்ணினார். சுகுணனிடம் வந்தார். சுகுணன் புலவரைப்பார்த்துத் ''தங்கட்கு யாது வேண்டும்?'' என்று உசாவினான். புலவர் ''உம்முடைய மனைவியை எனக்குக் கொடும்'' என்று கேட்டார். இவ்வள்ளல், ''அவ்வாறே தந்தேன் அழைத்துக் கொண்டு போம்'' என்று கூறியதுடன் தம்முடைய மனைவியைப் பார்த்து, ''நான் உன்னை இப் புலவருக்குக் கொடுத்து விட்டேன். இவருடனே செல்லுவாயாக'' என்று கூறினான். வள்ளலுடைய உரை புலவருடைய உள்ளத்தை உருக்கி விட்டது. சுகுணனுடைய மனைவியைத் தாயென்று கூறிப்பணிந்தார். இவ்வள்ளலுடைய புகழ் யாண்டும் பரவியது. தொண்டை மண்டல சதகத்திலும் இவன் இடம் பெற்றான்.

**சுகுமாரன்** - இவன் முன்னாளில் விந்திய மலைக்கு வடக்கேயிருந்த குஞ்சரம் என்னும் ஊரில் அந்தணர் குலத்திற் பிறந்தான். அந்தணர்களுடைய தொழில்களில் ஒன்றையேனும் இவன் மேற்கொள்ளவில்லை. ஒழுக்கங் கெட்டவனாக இருந்தான். தக்க பருவத்தையடைந்ததும் புலைச்சியொருத்தியை மணம் புரிந்து களித்தான். பார்ப்பனர்கள் அனைவரும் இவனைத் தம்முடைய கூட்டத்திலிருந்து விலக்கி விட்டனர். அதனால் இவன் புலையனாகவே காலங்கழித்தான்.

**சுகையன்** - ஆனர்த்த நாட்டிற்கு அரசனாக விருந்தவன். இவன் பகைவர்களோடு போர் செய்து இறந்தான். இவனுடைய தலையோட்டை யோகியொருவன் எடுத்து இராக்காலங்களில் கயா தீர்த்தத்தை மொண்டு பயன்படுத்திப் பகலில் ஊற்றி விடுவான். ஆகவே இவ்வரசன் இராக்காலங்களில் அரசு செய்து பகற்காலத்திற் பேயாக அலைந்துதிரிவான். இவ்வாறிருக்கையில்வணிகர்கள் பலர் இவன் திரிந்து கொண்டிருந்தகாட்டில் பகலில் தங்கியிருந்து சென்றார்கள். அவர்களில் ஒருவன் மட்டும் தனித்து அங்கு இரவில் தங்கினான். ஒரு பெரு மாளிகையும் அரசுந் தோன்றியது. வணிகன் உள் சென்று அரசனை வணங்கினான். உண்டு உறங்கினான். பொழுது விடிய அவை கனாப்போல் ஒழிந்தன. வணிகன் மிகுந்த வியப்படைந்தான். மறு நாளிருந்து பார்த்தான். அன்றைக்கும் அவ்வாறே நிகழ்ந்தது. அரசனைக் கண்டு காரணத்தைக் கேட்டான். அரசன் தானிறந்த செய்தியையும் யோகியிடந் தன்னுடைய மண்டையோடு இருக்கும் விதத்தையும் அறிவித்தான். வணிகனைப்பார்த்து, ''நீ போய் யோகியிடம்இருக்கும் மண்டையோட்டை வாங்கி அதனைத் தூளாகச் செய்து கயா தீர்த்தத்திற் போட்டு விடுவாயானால் நான் விண்ணுலகமடைவேன்''என்றுசொன்னான். வணிகனும் அவ்வாறே செய்யச் சுகையன் நல்லுலகடைந்தான்.

**சுக்கிர நீதி** - அறத்தையும் பொருளையும் பற்றிப் பல அரிய செய்திகளைக் கூறுவது.

இந்நூல் சுக்கிராச்சாரியார் இயற்றிய பழைய பொருள் நூலின் சுருக்கம் என்றும் நாளடைவில் பல வேறு பாடுகளை அடைந்து விளங்குகிறதென்றுங் கூறுவர். இதனுள் ஐந்து பெரிய பிரிவுகளும் 2500 சுலோகங்களும் உள்ளன. இதனைக் காலஞ் சென்ற பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் தமிழில்மொழி பெயர்த்திருக்கிறார்.

**சுக்கிரீவன்** - சு-அழகு; கிரீவன் - கழுத்தையுடையவன் "இங்கு வருகிறவர்கள் பெண் வடிவத்தை யடைக" வென்று தடை விதிக்கப் பட்டிருந்த ஒரு வனத்தில் உருட்சரசஸ் என்னுங் குரங்கரசன் அறியாமற் சென்று பெண் வடிவத்தை யடைந்தான். அப்பெண் வானரத்தின் வாலழகைக் கண்டு காதலித்த இந்திரன் கூடியதனால் வாலியும் கழுத்தழகைக் கண்டு காதலித்த கதிரவன் கூடிய படியினால் சுக்கிரீவனும் பிறந்தனர். வாலி கிட்கிந்தைக்கு அரசனானான். வாலியுடன் சுக்கிரீவனும் கிட்கிந்தையில் வாழ்ந்திருந்தான். ஒருமாயாவிக்கும் வாலிக்கும் போர் மூண்டது. அம்மாயாவி ஓர் அரக்கன். அம்மாயாவிக்கும் வாலிக்கும் போர் நடந்து கொண்டிருந்த போது அம் மாயாவி திடீரென்று ஒரு பிலத்துட் புகுந்தான். அங்கும் நெடுங்காலம் போர் நடந்து கொண்டிருந்தது. கிட்கிந்தை வானரர்கள் வாலி மாயாவியினால் இறந்து விட்டான் என்று எண்ணிச் சுக்கிரீவனை அரசனாக்கி விட்டனர். மாயாவி மீண்டும் வரக்கூடும் என்று அஞ்சிப் பிலத்துவார வழியையும் அடைத்து விட்டனர். மாயாவியைக் கொன்று திரும்பிய வாலி பிலத்துவாரத்தை மூடியிருந்த கல்லை ஓர் உதையினால் அப்புறப்படுத்தி விட்டு வெளியே வந்தான். சுக்கிரீவன் அரசனாக இருப்பதைக் கண்டு அவன் தன்னை வஞ்சித்து விட்டான் என்று மாறுபடஎண்ணினான். சுக்கிரீவனுடைய மனைவியையுங் கவர்ந்து கொண்டு சுக்கிரீவனை அடித்து விரட்டினான். சுக்கிரீவன் அநுமான் முதலிய தன் துணைவர்களோடு வாலி வரமுடியாத ஓர் இடத்தில் தங்கியிருந்தான். பிறகு இராமனுடைய துணையைக் கொண்டு வாலியைக் கொன்று கிட்கிந்தைக்கு அரசனானான்.

**சுக்கூர்அணை** - மேற்குப் பாகிஸ்தானில் முன்பு சிந்து மாகாணமாக இருந்த பகுதியில் சிந்துநதியின் குறுக்கே இந்த அணை கட்டப்பட்டுள்ளது. சுக்கூர் என்னும் ஊரில் இந்த அணை இருப்பதால் "சுக்கூர் அணை" என்று வழங்குகின்றது. இதை லாயிடு அணை (Lloyd barrage) என்றும் அழைப்பர். இந்த அணை கட்டுவதற்கான திட்டம் 1919-20 இல் வகுக்கப் பட்டு 1932 இல் அணை கட்டி முடிக்கப் பட்டது. கட்டி முடிக்க 4.04 கோடி ரூபா செலவு ஏற்பட்டது, சுமார் எழுபத்தைந்து இலட்சம் ஏக்கர் நிலம் சாகுபடி செய்ய இந்த அணை பயன்பட்டு வருகின்றது.

**சுசன்மன்** - இமயமலைக்கும் விந்தமலைக்கும் இடையே முன்னளிற் சிறந்து விளங்கிய திரிகர்த்தம் என்னும் நாட்டுக்கு அரசனாக விருந்தவன். பாண்டவர்கட்கும் கௌரவர்களுக்கும் போர் மூண்ட பொழுது துரியோதனனுக்கு இவன் துணையாகி நின்றான். பதினேராம் நாட்போரில் துரியோதனன் மகனாகிய இலக்கண குமாரன்

என்பவனை அருச்சுனனுடைய மகனாகிய அபிமன்னன் பிடித்துச் சிறிது நேரந் தேரிற்கட்டி வைத்திருந்து பிறகு அவிழ்த்து விட்டு ஓடிப்போ என்றான். அதனை எண்ணி எண்ணித் துரியோதனன் உள்ளம் வருந்தினான். இதற்குப் பதிலாகத் தருமரைப் பிடித்துக் கட்டிவிட வேண்டும் என்று துரோணரிடஞ் சொன்னான். துரோணர் தருமரை முன்னும் பின்னுங் காத்து நிற்கும் வீமனையும் அருச்சுனனையுஞ் சிறிது நேரம் விலக்கி வைத்தால் பிடித்துத் தருகிறேன் என்று சொன்னார். அப்பொழுது இச்சுசன்மன், "இதுதானா பெரியகாரியம் நான் விலக்கி வைக்கிறேன்" என்று வீரம் பேசினான். ஆனால் கூறியபடி விலக்கி வைக்க இவனால் முடியவில்லை. இவன் வாய்வீரம் பேசியதைக் குறித்து அனைவரும் இவனை எள்ளி நகையாடினர்.

**சுசாதை** - இவள் ஓரிடைச்சி. தனக்கு மகப்பேறுண்டானால் காட்டுத்தேவதைக்குப் பஞ்சாமிர்தம் படைப்பதாக வேண்டிக் கொண்டாள். விருப்பப்படி மகப்பேறுண்டாகியது. பஞ்சாமிர்தம் படைப்பதற்குக் காட்டிற்குச் சென்றாள். அப்பொழுதுபுத்தர்எதிர்ப்பட்டார். அவரையே காட்டுக் கடவுள் என்று எண்ணிப் பஞ்சாமிர்தத்தைப் படைத்தாள். புத்தர் வாழ்த்துரை கூறிச்சென்றார்.

**சுசீந்திரம்** - கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்த கன்னியாகுமரியின் வடக்கே எட்டுக் கல் தொலைவில் உள்ளது. அங்குத் தாணுமாலயப் பெருமாள் கோவில் என்ற பெயரில் மிகப்பெரிய கோவில் ஒன்று இருக்கின்றது. இக் கோவில் எட்டாம் நூற்றாண்டில் எழுந்ததாகக் கூறுகின்றனர். இந்திரன் கடுமொழி நீக்கம் பெற்றதால் இவ்விடம் சுசீந்திரம் என்ற பெயர் எய்தியதாகக் கூறுப. இங்குள்ள கோபுரம் ஏழடுக்குகள் கொண்டது. கோவிலின் கிழக்கு வாயிலிலுள்ளகோபுரம்1545 ஆம்ஆண்டில் விசய நகர அரசரொருவர் கட்டினார். இங்குத் திருமலை நாயக்க மன்னருடைய சிலையும் விசயநகர அரசர்களின் சிலைகளும் உள்ளன. சுமார் பதினேரடி உயரமுள்ள ஆஞ்சனேயர் சிலை ஒன்று எவரையும் கவரும் தோற்றம் வாய்ந்தது. அருகிலுள்ள தெப்பக்குளமும் மண்டபமும் கோவிலுக்கு அழகு செய்வன.

**சுசீலன்** - இவன் கோசல நாட்டு வைசியர்களில் ஒருவன். இவன் வறுமையினால் துன்பமடைந்தான். வறுமைக் கொடுமையினால் ஒரு பிள்ளையை வீட்டைவிட்டு விரட்டிவிட்டான். ஒரு நாள் ஒரு மறையவர் இவனிடம் வந்தார். இவன் வறுமைக் கொடுமையால் ஒரு பிள்ளையை வீட்டைவிட்டு விரட்டிவிட்டதைக் கூறி வருந்தினான். அவர் இவனுக்கு நவராத்திரிநோன்பைக்கூறி அதனைக் கடைப்பிடிக்குமாறு கூறினார். இவன் அவ்வாறே கடைப்பிடித்துத் தேவியின் அருள் பெற்று நலமடைந்தான்.

**சுதஞ்சணன்** - இராசமாபுரத்தையடுத்த புறநகர்ச் சோலையிலே அந்தணர்களுடைய சோற்றுக் குவியலை நாய்ஒன்று தீண்டியது. அந்தணர்கள் தடியெடுத்துப் புடைத்தனர். அஞ்சிய நாய் ஒரு குளத்தில் வீழ்ந்து வருந்தி நீந்தியது. அதனைக் கண்டு சீவகன் உள்ளம் இரங்கினான். பஞ்ச நமஸ்காரம் என்னும் மறையை அதனுடைய காதில் கூறினான்.

அங்நாய் தன்னுடலை யொழித்து விண்ணிற் சென்று தேவனாகியது. தேவனாகியபின் சுதஞ்சணன் என்னும் பெயரையடைந்தது. பின் இச்சுதஞ்சணன் சீவகனிடம் வந்து தன் வரலாறு கூறி உதவிசெய்வதாகக் கூறினான். சீவகன் வேண்டும்போது அழைத்துக் கொள்வதாகக் கூறி அனுப்பிவைத்தான். பிறகு பல சமயங்களில் இவன் சீவகனுக்கு உதவி செய்தான்.

**சுதட்சணன்** - இவன் பௌண்டரக வாசுதேவன் என்னும் காசிராசனுடைய மகன். தன் தந்தையைக் கொன்ற கண்ணனை வெல்ல எண்ணினான். சிவபிரானை நோக்கித் தவஞ் செய்தான். சிவபிரான் காட்சிதந்து இவனுடைய கருத்தை யறிந்தார். "தட்சணாக் கினியை வளர்த்தால் அதில் ஒரு பூதம் உண்டாகும். அதனை உன் பகைவர் மீது ஏவுக. அதனை என் அன்பர்மீது ஏவினால் ஏவினவனைக் கொல்லும்" என்று கூறி மறைந்தார். சுதட்சணன் தட்சணாக்கினி வளர்த்துப் பூதத்தை உண்டாக்கினான். கண்ணனுடைய மதுரைமேல் ஏவி அதனை எரியச் செய்தான். இதனைக் கண்ணன் அறிந்து ஆழிப் படையை ஏவினார். அஃது இவனையும் இவன் அனுப்பிய பூதத்தையுங் கொன்றது.

**சுதமதி** - கௌசிகன் என்னும் அந்தணனுடைய மகள். மாருதவேகன் என்னும் ஒரு வித்தியாதரனால் முன்பு கவர்ந்து கொண்டு போகப்பட்ட இவள் பிறகு அவனால் காவிரிப்பூம்பட்டினத்தில் இடப்பட்டு மாதவியின் உயிர்த் தோழியாக இருந்தாள். மணிமேகலையினிடத்தில் மிகுந்த அன்புடையவள். சங்க தருமனிடத்திலே தருமங் கேட்டவள்.

**சுதரிசனம்** - திருமாலினுடைய ஆழிப்படை, இது சிவபெருமானால் வழங்கப்பட்டது. சிவபெருமானிடத்தில் இருந்த இதனைப் பெறக் கருதிய திருமால் நாள் ஒன்றுக்கு ஆயிரந் தாமரைமலர்களாற் சிவபெருமானை வழிபட்டுக் கொண்டு வந்தார். சிவபெருமான் திருமாலினுடைய அன்பைப் பலருக்குந் தெரிவிக்க எண்ணினார். ஒரு நாள் ஒரு தாமரை மலரை மறைத்துவிட்டார். ஒரு மறைக்கு மலர் குறைவதுகண்டு தம்முடைய கண் ஒன்றைப் பறித்து மலராக எண்ணிப் பூசனை புரிந்தார். சிவபிரான் திருமாலுடைய செயலுக்கு மகிழ்ந்தார். பறிக்கப் பெற்ற கண் மீண்டும் உண்டாகுமாறு திருவருள் செய்ததன்றி ஆழிப் படையையும் வழங்கியருளினார். இவ்வாறு கண்ணைப் பறித்துப் பூசித்தபடியினால் திருமாலுக்குக் கண்ணன் எனவும் பெயர் உண்டாகியது. இப் படை ஆயிரம் முகங்களுடையது. இரண்டாயிரம் தோள்களுடையது. ஆயிரங்கால்களை உடையது. இரண்டாயிரம்கண்களையுடையது. இப்படை சலந்தரனை வதைப்பதற்காகச் சிவபிரானால் நிலத்தில் வட்டமாகக் கால்களாற் கிழிக்கப்பட்டு உண்டாகியது.

**சுதன்மன்**-(1) இவன் ஓர்அரசன்; இவ்வரசனுக்குப் பதினைந்து பெண்கள் இருந்தார்கள். பட்சீசுவரர் என்னும் ஒரு முனிவர் இவ்வரசனிடஞ் சென்று தமக்கு ஒரு பெண் வேண்டும் என்று கேட்டார். அரசன் இம்முனிவரைப் பார்த்து, "என்னுடைய பெண்களில் எவள் உம்மைத் திருமணஞ் செய்து கொள்ள விரும்புகிறாளோ அவளைத் திருமணஞ்செய்து கொள்ளுங்கள்"

என்று சொன்னான். முனிவர் மிக அழகிய வடிவத்தோடு அந்தபுரத்திற்குச் சென்றார். அரசனுடைய பெண்கள் பதினைந்து பேரும் முனிவரை மணக்க விரும்பினார்கள். இவ் அரசன் அவ்வாறே அப்பெண்கள் எல்லாரையும் அம்முனிவருக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான்.

**சுதன்மன் - (2)** இவன் பிரம தேசத்தை ஆண்ட அரசர்களில் ஒருவன். தவத்தை மேற்கொண்டு அரச முனிவனாக விளங்கியிருந்தான். இவனைப் பிற முனிவர்கள் அணுகாதிருந்தனர். இவன் அம்முனிவர்களைப்பார்த்து, "நீங்கள் ஏன் என்னோடு கலந்து கொள்வதில்லை?" என்று உசாவினான். அதற்குஅவர்கள், "நீஇடையன் ஒருவனுடைய மாட்டுத் தொழுவத்திற் காட்டுப்பூனையை எய்யச்சென்று பசுவினை எய்துதீவினையைத் தேடிக் கொண்டாய். அதனால் உன்னை அணுகாதிருக்கிறோம். நீ பெண்ணையாற்றில் நீராடித் தூய்மையடைந்தால் உன்னோடு கலந்து கொள்வோம்" என்றுகூறினர். இவன் அவ்வாறே பெண்ணையாற்றில் நீராடித் தூய்மை பெற முனிவர்கள் இவனைத் தம்மோடு சேர்த்துக் கொண்டனர்.

**சுதாசுனன் -** இவன் கதிரவ குல வேந்தனாகிய சுதாமன் என்பவனுடைய மகன். இவன் பல நூல்களைக் கற்றிருந்துந் திருந்திய ஒழுக்கமும் மேன்மையும் இல்லாதவனாகவிருந்தான். அரசனாகவிருந்துங் குடிகளின் நலத்தைச் சிறிதும் எண்ணிப் பாராமல் கொடுமையையே மிகுதியாகச் செய்து கொண்டு திரிந்தான். எப்பொழுதுங் கடுத்த முகமும் கடுஞ் சொல்லும் உடையவனாக விருந்தான். நாட்டு மக்கள் பல வழிகளினுந் துன்புறுவதை யுணர்ந்த வசிட்டர் இவனுக்கு அறவுரைகள் பலகூறினார். அவர் இவனுக்குக் குல குருவாக இருந்தும் அவர் கூறியவைகளை இவன் பொருட்படுத்தவில்லை. அவரோடு எதிர்த்துப் பேசினான். "உம்முடைய வேலையைப் பார்த்துக் கொண்டு போம்" என்று சொன்னான். அவர் சினங் கொண்டார். "நீ அரக்கனாக" என்று வசவுரை வழங்கினார். இவன் அவ்வாறே அரக்கனாகிக் கெட்டழிந்தான்.

**சுதீக்கணர் -** இவர் ஒரு முனிவர். இராமபிரான் அகத்தியருடைய இருப்பிடத்திற்குச் செல்கையில் விருந்திட்டுப் போற்றியவர். இம் முனிவரைத் தின்பதற்கு வந்த கார்க்கடன் என்னும் அரக்கனும் அவனுடைய மனைவியும் சாம்பரானார்கள்.

**சுதேட்டிணை-** விராட மன்னனுடைய மனைவி. பாண்டவர்கள் மறைந்துறைதலை மேற்கொண்டிருந்த காலத்தில் திரௌபதி விரத சாரிணி என்னும் பெயரோடு இவளிடம் வண்ண மகளாக அமர்ந்திருந்தாள்.

**சுநந்தமுனிவர் -** இவருடைய பெயர் பிறகு முஞ்சிகேசமுனிவர் எனமாறியது. இவர்சிவபிரானுடைய திருக்கூத்தை விரும்பிக் கயிலையில் தவம் புரிந்தார். சிவபிரான் இவரைப் பார்த்து, "நீ வடவனம் சென்றுதவஞ்செய்க; யாம் அங்கு வருகிறோம்; என்று கூறினார். இவர் அவ்வாறேவடவனத்தில் தவஞ் செய்தார். சடை வளர்ந்து நிலத்தோடு நிலமாய்ப் பொருந்திப் புல்லாகி வளர்ந்தது. இவர் மீது புற்றும் உண்டாகியது. இதனால் இவருடைய பெயர் முஞ்சிகேச முனிவர் என மாறியது.

**சுநந்தை** - கந்துக்கடன் என்னும் வணிகனுடையமனைவி.சீவகனை வளர்த்தவள், நந்தட்டனுடைய தாய்.

**சுந்தர சோழன்** - இவன் கனக சோழனுடைய மகன். இவனுடைய மனைவியின் பெயர் சித்திரவல்லி. இவன் அரசாட்சி செய்து கொண்டிருக்கையில் காசிப்பார்ப்பான் ஒருவன் கங்கை நீரோடு இராமேசுவரத்திற்குச் சென்றான். இவ்வந்தணனுடைய மனைவி கர்ப்பிணியாக இருந்தாள். அவளை அந்தணன் இச்சுந்தர சோழனுடைய பாதுகாப்பில் விட்டுவிட்டுச் சென்றான். அரசன் பார்ப்பனியைத் தன்னுடைய மகள் போல் பாதுகாத்தான். இராமேசுவரஞ் சென்ற அந்தணன் சில காலங் கழித்து மீண்டும் வந்தான். தன் மனைவியின் நிலையை அறியும் பொருட்டு அந்தப்புரத்தில் யாரும் அறியாது மறைந்திருந்தான். நள்ளிரவில் மனைவியின் கையைப் பிடித்தான்.பார்ப்பினி கையைப் பிடித்தவன் கணவன் என்று அறியாது ஓலமிட்டாள். அரசன் விரைந்து வந்தான். ஆய்ந்தோய்ந்து பாராமல் அந்தணனை வெட்டினான். அரசனைப் பிரமகத்தி பற்றியது. அரசன் பல சிவன் கோயில்கள் கட்டிச் சிவலிங்கங்களை அமைத்தான். பிரமகத்தி நீங்கும் பொருட்டுப் பல சிவப்பதிகட்கும் சென்று இறை வழிபாடு செய்தான். திருவிடைமருதூரில் பிரமகத்தி நீங்கியது.

**சுந்தரநாதர்** - இவர் தென்தமிழ் நாட்டிலே பிறந்தவர். இவருடைய காலம் அகத்தியர் தமிழ்ச்சங்கம் அமைத்து நடத்திக்கொண்டிருந்த காலமாகும். சுந்தரநாதர் அகத்தியருடைய தமிழ்ச் சங்கத்திலே சேர்ந்து உலக நூல்களைக் கற்றுச்சிறந்த புலமையடைந்தார். அகத்தியருடைய அருளைப்பெற்று வட கயிலைக்குச் சென்று, சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர், சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய எழுவரோடு வேதாகமங்களை நந்தி தேவரிடத்தில் கற்றுணர்ந்தார். பிறகு கயிலையிலேயே தவஞ்செய்துகொண்டிருந்தார். பிறகு வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் தில்லைக்கு வந்தபோது இவரும் உடன் வந்தார். பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் தில்லையில் தங்கிவிட இவர்மட்டும் அகத்தியரைப் பார்ப்பதற்குப் பொதியமலைக்குப் புறப்பட்டார். திருவாவடுதுறை சென்றபோது அங்கு இறந்துபோன மூலன் என்னும் யாதவனுடைய உடலிற் புகுந்து திருமூலரானார். திருமந்திரம் என்னும் நூலைச் செய்தவர் இவரே.

**சுந்தோபசுந்தர்** - சுந்தன் உபசுந்தன் என்னும் பெயருடைய இருவர் நிகும்பன் என்பவனுடைய மக்களாகத் தோன்றினர்கள். இவ்விருவரும் மனவொற்றுமை யுடையவர்களாய் ஒருவரைவிட்டுஒருவர் பிரியாது இன்பதுன்பங்களை யெல்லாம் சமமாகக்கொண்டு நுகர்ந்திருந்தார்கள். இவர்கள் தங்களுடைய இளமைப் பருவத்தில் மூவுலகத்தையும் வெல்லக் கருதினர்கள். விந்தியமலையை அடைந்து மும்மூர்த்திகளையுங் குறித்து நெடுங்காலம் அரிய பெரிய தவத்தைச்செய்தார்கள். இவர்களுடைய தவத்தின் கடுமையைக் கண்டு அஞ்சிய தேவர்கள் மாயையினால் பலமகளிரை யேவி இவர்களுடைய தவத்திற்கு இடையூறு செய்யப் பெருமுயற்சி செய்தார்கள். ஆயினும் இவர்கள் ஏமாந்து

விடாமல் தவத்தை உறுதியாகச் செய்தார்கள்.

பிறகு மும்மூர்த்திகளும் சுந்தோப சுந்தர்களின் முன்பு தோன்றி இவர்கள் விரும்பிய வரங்களையெல்லாங் கொடுத்தார்கள். அப்பொழுது இவ்வசுரர்கள், "நாங்கள் எப்பொழுதும் மற்றவர்களால் கொல்லப்படாதவர்களாக இருக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்கள். அதற்குக் கடவுளர்கள் "உங்களிருவருக்கும் பிறவுயிர்கள் எவற்றாலும் சாவில்லை" என்று வரமளித்தார்கள்.

பிறகு இவ்வசுரர்கள் இருவரும் மிகுந்த செருக்கடைந்து மூவுலகையும்வெல்லத்தொடங்கினார்கள். இந்திரன் முதலிய தேவர்கட்கும் முனிவர்கட்கும் மனிதர்கட்கும் மற்றவர்கட்கும் மிகுந்த துன்பத்தை விளைத்தார்கள். தேவர்களும் முனிவர்களும் நான்முகனிடம் அடைக்கலம் புகுந்து செய்தியைக் கூறினார்கள். நான்முகன் விசுவகர்மாவைக் கொண்டு திலோத்தமையை உண்டாக்கி அவளைச் சுந்தோப சுந்தர்களிருக்குமிடத்திற்கு அனுப்பிவைத்தான். விந்தியமலையின் அடிப்பாகத்தில் உடன்பிறந்தார்களிருவரும் அமர்ந்து களிப்புடன் உரையாடிக்கொண்டிருக்கையில் திலோத்தமையைக் கண்டு அவளுடைய அழகை வியந்தார்கள். இருவரும் திலோத்தமையிடத்தில்மோகங் கொண்டார்கள். அவளுக்குப் பக்கத்தில் போய்த் திலோத்தமையினுடைய வலக்கையைச் சுந்தன் பிடித்தான். இடக்கையை உபசுந்தன் பிடித்தான். காமக்காழ்ப்பேறிய இருவரும் தமக்குள் மாறுபாடு கொண்டார்கள். அண்ணன் தம்பியைப் பார்த்து, "தமையனாகிய என்னால் விரும்பப்பட்ட இவள் உனக்குத் தாய் முறையன்றோ? இவளை நீ விரும்புதல் தகுதியாகுமா?" என்று கேட்டான். தம்பியோ தமையனைப்பார்த்து "தம்பியாகிய என்றால் காதலிக்கப்பட்டஇவள்உனக்கு மருமகள் முறையன்றோ? இவளை நீ விரும்பலாமா?" என்று கேட்டான். அவ்வளவில் இருவருக்கும் பலமான போருண்டாயிற்று. பிறரால் சாவுநேரிடாமல் இருக்கவரம் பெற்றிருந்த இவர்கள் ஒருவரைஒருவர்அடித்துக்கொண்டு மாண்டொழிந்தார்கள்.

**சுபதிட்டமுனிவர்** - இவர் அகத்திய முனிவருக்குப் பௌத்திரர். சித்தமுனிவர் என்பவர்க்குப் புதல்வர். முக்கால நிகழ்ச்சிகளையும் நன்கு உணர்ந்தவர். இவர்இலங்கையைஆண்டிருந்த பரராச சேகர மன்னனுக்குப் பிற்கால நிகழ்ச்சிகளை விளக்கமாகக் கூறினார்.

**சுபத்திரர்** - இவர் குசீ என்னும் நகரத்தில் புத்தர் காலத்தில் வாழ்ந்திருந்தவர். சிறந்த நூற்பயிற்சியும் நல்லொழுக்கமும் உள்ளவர். அந்தணகுலத்தில் தோன்றியவர். இவர் புத்தருடைய இறுதிக்காலத்தில் அவரைக் காணச் சென்றார். மாணவர்கள் இவர் புத்தரோடு சொற்போர் செய்தற்கு வந்துள்ளாரென்று கருதிப் புத்தரைப் பார்க்க உடன்படவில்லை. புத்தர் தம்முடைய அறிவுப் பார்வையால் இவருடைய வருகையை அறிந்து அழைத்து உரையாடினார்.

**சுபத்திரன்** - தக்கநாட்டில் கேமமாபுரத்தில் இருந்த வேதவணிகன். கேமசரி என்பவள் இவனுடைய மகள். இவன் தனக்கு மகள் பிறந்தபொழுது பிறந்த நாட்குறிப்பையெழுதிய காலக்

கணிதரைப் பார்த்து, "இவளுக்குக் கணவன் யார்?" என்று உசாவினன். அவர்கள் "இவள் எவனைக் கண்டு நாணு கின்றாளோ அவனுக்கே மனைவி யாவள்" என்று கூறினர். இவன் தன்மனைக்கு வந்த சீவகனைக் கண்டு மகள் கேமசரி நாணமும் காதலும் கொண்டமையின் அவளைச் சீவகனுக்கு மணஞ்செய்து கொடுத்தான்.

**சுபத்திரை** - அவந்தி என்னும் பட்டணத்தில் அரசுசெய்திருந்த சுலபன் என்னும் அரசனுடைய மனைவி. தன்னுடைய கணவனை எருதாகச் சாபங்கொடுத்த அந்தணனுக்குத் தானுஞ் சாபங் கொடுத்துக் கழுதையாக்கிய தோடு அவ்வந்தணனுடைய வசவுரையால் தானும் புலைச்சியாகிப் பிறகு ஆனைமுகக் கடவுள் மீது அறுகுவீழ்ந்த நல்வினையினால் விண்ணகம் புகுந்தவள்.

**சுபன்** - இவன் பாண்டிநாட்டில் திருச்செந்தூரிற் செங்குந்தர் குலத்தில் தோன்றியவன். இவன் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்குதலையுணர்ந்த ஆதித்தன் என்னுஞ் சோழ மன்னன் இவனைத் தன்னுடைய படைத்தலைவனாக்கினான். பல போர்முனைகட்கு இவன் சென்று தன்னுடைய அரசனுக்கு வெற்றி கிட்டுமாறு செய்தான்.

**சுபாஷ்சந்திரபோஸ்** - இவர் வங்க நாட்டில் 1897 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 23ஆம் நாள் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சானகிநாத போஸ். அவர் கட்டாக் என்னும் ஊரில் அரசாங்க வழக்கறிஞராகவும், நகராட்சித் தலைவராகவும் இருந்தார். சுபாஷ் சந்திர போஸ் பி.ஏ. வரை கல்விகற்றார். இளமைப்பருவத்திலேயே தாய்நாட்டின் உரிமையில் ஆர்வங்கொண்டார். 1919ஆம் ஆண்டில் இங்கிலாந்திற்குச் சென்று ஐ.சி.எஸ் பரீட்சையில் தேறினார். காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கம் இவருடைய உள்ளத்தைக் கவர்ந்தது. காந்தியடிகளின் வழிமுறையைப் பின்பற்றினார்.

1928 ஆம் ஆண்டில் சென்னையில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் இவர் அச்சபைச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காங்கிரஸ் கட்சியின்கொள்கைகட்கும்இவருடைய போக்கிற்கும் வேறுபாடுகள்பலஇருந்தனவாயினும் இவர்தம்மனப்போக்கின்படியே காரியங்களைச் செய்து கொண்டிருந்தார். பலமுறை சிறைக்குச் சென்றார். 1936 ஆம் ஆண்டில் காங்கிரஸ் தலைவரானார். பிறகு முன்னணிக் கட்சியை நிறுவினார். ஒரு வெள்ளைக்காரரின் சிலையை நீக்குவதற்கு ஓர் இயக்கத்தைத்தோற்றுவித்தார். அதனால் காவலில் வைக்கப்பட்டார். இறக்கும்வரை உண்ணா விரதம் தொடங்கினார். அரசாங்கம் இவரை விடுதலை செய்தது. இவர் விடுதலையடைந்த பிறகு இவருடைய வீட்டைச் சுற்றி அரசாங்கம் பலமான காவலை ஏற்படுத்தியிருந்தது. 26-1-1941 இல் இவர் ஒரு மௌல்வியைப் போலக்கோலம்பூண்டுகாபூலுக்குப் போய்விட்டார். ஆங்கில அரசாங்கம் இவரைக் கண்டு பிடிப்பதற்குச் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. 1941 ஆம் ஆண்டில் கிழக்காசியாவில் போர் மூண்டதும் வெகு சூழ்ச்சியோடு நாட்டை விட்டு வெளியேறினார். டோக்கியோ, சிங்கப்பூர்முதலியஇடங்கட்குச் சென்றார். தென்கிழக்கு ஆசியாவைச் சேர்ந்த முப்பது லட்சம் இந்தியரும் இவரைத் தங்க

ளுடைய தலைவராக ஏற்றுக் கொண்டனர். நாட்டை விடு விப்பதற்கு ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடத் தொடங் கினார்கள். வெளிநாட்டில் ஒரு சுதந்திரப் படையையும் சர்க்காரையும் இவர் அமைத் தார். எல்லாரும் இவரை "நேதாஜி" என்று அழைத்தனர். இவர் வெளிநாட்டில் இருந்த போதிலும் அந்நாட்டு அரசின ருக்கு அடிமைப் பட்டிருக்க வில்லை. இந்திய விடுதலைக்குப் பெரிதும்உழைத்தார்.1945 ஆம் ஆண்டில் இவர் விமானத்தில் டோக்கியோவுக்குச் சென்று கொண்டிருந்தபோது பார்மோசா தீவில் இவருடைய விமா னம் விபத்துக்குள்ளாகியது. இவர் இறந்ததாகச் செய்தி பர வியது. ஆயினும் இவருடைய சாவுபற்றிப்பலருக்கும்ஐயமேற் பட்டது. சிலர் இவர் உயிரோ டிருப்பதாகவுங் கதை கட்டி விட்டனர். ஆயினும் இந்திய அரசாங்கம் விரிவாக உசாவல் செய்து இவருடைய சாவு உண்மையே என்று முடிவு செய்தது.

**சுப்பராய சாத்திரி** - *(1803-1862)* இவருடைய தந்தையார் சியாமா சாத்திரிகள். இவர் அவருக்கு இரண்டாம் மகன் ஆவர். முத லில் தம் தந்தையாரிடத்தும் பிறகு தியாகையரிடத்தும் இசை கற்றார். சாரிந்தா வாத் தியத்தைக் கற்று அதில் நன்கு கத் தேர்ச்சியுற்றார். இவரு டைய சாரிந்தாக் கச்சேரிகளை வித்துவான்களெல்லாம் மிக வும் பாராட்டினர். பல கிருதி களையும் சுரசதிகளையும் யாத் திருக்கின்றார். இவருடைய 'நினு வினுகதிகாண' என்னும் கல்யாணி ராககிருதியைத் தியா கையரேபாராட்டினராம்.இவர் பயன்படுத்தியமுத்திரை குமார என்பது. அம்பிகை மீதே பெரு வாரியாகப் பாடினார்.

**சுப்பராமதீட்சிதர்** - *(1839-1906)* தமிழ், தெலுங்கு, சமக்கிருதம் ஆகிய மும்மொழிப் புலமை வாய்ந்தவர். இவர் முத்துசாமி தீட்சிதருடைய இளவலாகிய பாலு தீட்சிதர் என்பவருடைய வளர்ப்புப் பிள்ளையாவர். தமது பதினேழாம் அகவையில் சுர சதி முதலானவை உண்டாக்கிப் பெருமைபெற்றார். 1863 இல் பாலு தீட்சிதர் காலமானதும் அவருக்குப் பிறகு எட்டைய புரம் சமத்தான வித்துவானாக அலுவல் பெற்றார். இறை வனைப் பற்றிப் பல கீர்த்தனை கள் பாடியுள்ளார். தாளவர் ணங்களும் பதவர்ணங்களும் செய்வதில் இவருக்குத் தனித்த தோர் ஆற்றல் உண்டு.

**சுப்பராமையர் வைத்தீசுவரன் கோயில்** -பத்தொன்பதாம் நூற் றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த இவர் இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் ஏற்றம் வாய்ந்தவர். முத்துக் குமார னையே நாயகனாகக் கொண்டு பதங்கள் யாத்துள்ளார். இசை யரங்குகளிலும் நாட்டிய அரங்குகளிலும் இவர்முத்திரை வைத்தமைந்துள்ள பதங்களைக் கேட்கலாம்.

**சுப்பராயர், தருமபுரி** - பத்தொன் பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி யில் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த தருமபுரியில் இவர் பிறந்தார். இசையில் பெரும் பயிற்சி உடையவர். இருந்தும் குரலினிமை யின்மையால் இசை யரங்குகளில் பெருமை எய்த இயலவில்லை. தெலுங்கில், சாகித்தியம் இயற்றுவதில் கருத்தைச் செலுத்தி, ஜாவளி கள் செய்வதில் தனிச்சிறப்பு எய்தினார். கிட்டத்தட்ட முந் நூறு உருப்படிகள் செய்துள்

ளார். இவர் கொண்டிருந்த முத்திரை, 'தருமபுரி' என்பது.

**சுப்பிரமணிய ஐயர், பட்டணம் -** (1845-1902)தியாகராசசுவாமிகளின் சீடபரம்பரையைச் சேர்ந்த இவர் சிறந்த வாக்கேயகாரராகவும், பல்லவி வித்துவானுகவும் சிறப்பெய்தியவர். இவர் பாட்டனார் பரதம் பஞ்சநத சாத்திரிகள். சரபோசி அரசர் காலத்தில் தஞ்சையில் சமத்தான வித்துவானுக இருந்தார். சுப்பிரமணிய ஐயரின் குரல் கட்டையாக இருந்ததினுல், கடுமையாகப் பயிற்சி செய்து, அதை உயர்ந்த இசைக்குப் பயன் படுத்திக் கொண்டார். விடா முயற்சியினுல் பதப்படுத்தப்பட்டஇவருடைய குரலில் ஒரு கணிப்பும், கம்பீரமும், அழுத்தமும் ஏற்பட்டன. இவர் குரல் வெகு தொலைவரை கேட்கும். முப்பதாவது அகவையில் தொடங்கப் பெற்ற இவருடைய கச்சேரி எங்கும் புகழ் எய்தி, பிரபுக்களாலும், அரசர்களாலும், சமீந்தார்களாலும் உச்ச நிலையை அடைந்தது. இவர் வைத்த முத்திரைகள், 'வெங்கடேசுவரர்' 'வரத வெங்கடேசர்' என்பவைகள்.

**சுப்பிரமணிய ஐயர், ஜீ -** ('1855-1916) திருவையாற்றில் 19-1-1855 இல் பிறந்தவர். பதின்மூன்றும்அகவையிலேயே தந்தையை இழந்தார். பச்சையப்பன் கல்லூரியில் வேலை பார்த்துக் கொண்டே பி. ஏ. படித்துப் பட்டம் பெற்ருர். மறு ஆண்டில் திருவல்லிக்கேணி ஆங்கிலோ வெர்ஞகுலர் பள்ளியில் தலைமை ஆசிரியராக இருந்து பின்னர், திருவல்லிக்கேணியிலேயே 'ஆரியன் உயர்நிலைப் பள்ளியை" நிறுவி, அதில் முஸ்லிம்களையும்தீண்டாதாரையும் சேர்த்துக் கொண்டார். 1878இல் இந்துப்பத்திரிகையையும் 1882 இல் சுதேசமித்திரனையும் துவக்கினுர். 1884 இல் பி. ரங்கைய நாயுடு முதலியோருடன் இணைந்து 'சென்னை மகாசன சபை'யை நிறுவினுர். 1915இல் ஏ. அரங்கசாமி ஐயங்காரிடம் சுதேசமித்திரன் பொறுப்பைக் கொடுத்தார். 18-4-1916 இல் காலமானுர். இவர் சிறந்த தேசப்பற்றுள்ளவர். சீர்திருத்தஉள்ளங்கொண்ட பெருமை வாய்ந்த பத்திரிகையாளர்.

**சுமந்திரன்** - அயோத்தியில்இருந்து அரசு புரிந்த தசரத மன்னனுடைய அமைச்சர்களில் ஒருவன். அமைச்சர்கட்கமைய வேண்டிய இலக்கணங்களெல்லாம் இவனிடத்தில் நன்கு அமைந்திருந்தன.

**சுமித்திரை** - தசரத மன்னனுடைய மனைவியர் மூவரில் இளையவள். இலக்குமணனுக்கும் சத்துருக்கனனுக்கும் தாய். இராமன் சீதையோடு காட்டிற்குச் சென்றபோது உடன் போகவிரும்பிய இலக்குமணனை மகிழ்ச்சியோடு அனுப்பி வைத்தவள்.

**சுமேரியர்** - இவர்கள் பண்டைக் காலத்தில் நாகரிகத்தில்சிறந்து விளங்கினர். எழுபதடி உயரத்தில் செய்குன்றுகள் அமைத்து அவற்றின் மீது சிறிய கோவில்களைக் கட்டினர். தரை மீது பெரிய கோவில்களைக் கட்டினர். இவர்கள் மிகப் பழைய காலத்தில் ஆட்டுத் தோலை உடுத்தனர். கல்லின் மீது செதுக்கும் வேலையில் வல்லவர்களாக இருந்தனர். வீட்டுச் சுவர்களில் ஓவியங்கள் தீட்டுவதற்கு இவர்கள் கற்றிருந்தனர். எருதுகளும் கழுதைகளும் பூட்டப்பட்ட வண்டிகளைப் பயன் படுத்தினர்.

செம்பு முதலிய பொருள்களால் படைக் கலங்கள் செய்து பயன் படுத்தினர். ஒரே அளவுள்ள செங்கற்களைச் செய்தார்கள். இறந்தவர்களைத் தாழிகளில் வைத்துப் புதைத்தார்கள். அவர்கள் வழிபட்ட தெய்வங்கள்பல வாகும். அவர்களுடைய மொழி தமிழைப் போன்றிருந்தது.

**சுரகுரு** - இவன் சோழமன்னர்களுடைய வழி முறையைச் சேர்ந்தவன். இவனுடைய தலை நகர் மகாபலிபுரம். இவன் அரசாட்சி செய்து கொண்டிருக்கையில் திருக்கழுக்குன்றத்து மக்கள் சுரகுருவிடஞ் சென்று காட்டுவிலங்குகளால்தங்கட்கு ஏற்படுந் தொல்லையைக் கூறி அவைகளை வேட்டையாடிக் கொல்லுமாறு வேண்டிக் கொண்டார்கள். சுரகுரு தன்னுடைய அமைச்சன் இரண்ய னுடனும் பல படைகளோடும் வேட்டைக்குச் சென்றான். ஒரு முள்ளம் பன்றியைக் கண்டு அதன் மீது கணையைச் செலுத்தினான். அஃது இறந்து மனித வடிவத்தையடைந்தது. இவ் வேட்டையில் சுரகுரு ஒரு பசுவைக் கொன்று விட்டான். பசுவைக் கொன்றகுற்றம்இவனைப் பிடித்துக் கொண்டது. இவன் தேர்க்காலில் விழுந்து இறக்கத் துணிந்தான். அப்பொழுது ஒரு பசு இவன் முன் தோன்றியது. பிறகு அஃது இளம்பெண்ணாக மாறியது. அவள் தான் திலோத்தமையென்னும் இந்திரனது தூண்டுதலால் நந்தியின் தவத்தைக் கெடுக்க முயன்றபடியால் நந்தியால் சபிக்கப் பட்டு அன்று அவனுடைய அருளால் பழைய உருப்பெற்றதாகவுங் கூறினாள். பிறகு அரசன் தன்னுடைய படைகளோடு மகாபலிபுரத்தை யடைந்தான்.

**சுரசுரீ** - இவள் சுகாநந்தர் என்னும் பாகவதருடைய மனைவி. பாகவதர் வெளியூர்ப் பயணஞ்செய்த பொழுது தம் மனைவியாரைப் பார்த்துப்,'பாகவதர் விரும்பியவைகளையளித்து அவர்களைப் போற்றுக' என்று கூறிச்சென்றார். காமுகன் ஒருவன் இவளிடம் வந்து,''நான் பாகவதன்; என்னுடைய காமஎண்ணத்தை நிறைவேற்ற வேண்டும்'' என்றான். இவள் அதற்குடன் பட்டுப் பகலில் அவனுக்கு உணவு முதலியன இட்டுத் தங்கச் செய்தாள். காமுகன் மகிழ்ச்சியோடிருந்தான். இரவில் சுரசுரீ படுக்கை முதலியன அமைத்துக் கொண்டு கணவனையும் பெருமாளையும் மனதில் எண்ணிக் கொண்டு இவனை அழைத்தனள். வாயிற் படியருகே சென்ற காமுகன் கண்ணுக்கு அம்மையார் பெரும்புலியாகத் தோன்றி உறுத்து நோக்க அவ்வளவில் அக் காமுகன் திருந்தித் தாசனானான்.

**சுரசை** - (க) இவளுடைய பெயர் மாயை எனவும் வழங்கும். அசுரேசனுடைய மகள். காசிப முனிவருடைய மனைவி. இவள் மாயையில் வல்லவள். சூரபன்மன், சிங்கமுகன், தாரகன், அசமுகி ஆகியவர்களைப் பெற்றவள் இவளே.

(உ) நாகர்களுடைய தாய். அநுமான் சீதையைத் தேடிக் கொண்டு இலங்கைக்குச் செல்லும் வழியில் வழியடைத்து நின்றாள். அநுமான் இவளுடைய வயிற்றிலே புகுந்து சென்றான். அதனால் இவள் வயிறு கிழிந்து இறந்தாள்.

**சுருதசிருவை** - வசுதேவனுடைய உடன்பிறந்தாள். கண்ணனுக்கு அத்தை. சேதி நாட்டு மன்னனாகிய தமகோடனுடைய மனைவி; சிசுபாலனுக்குத் தாய்.

**சுரேந்திரநாத பானர்சி** - 1848 ஆம் ஆண்டில் பிறந்தவர். இந்திய தேசிய காங்கிரசின் தொடக்க காலத்தில் விளங்கிய தலைவர். இவருடைய பேச்சுத் திறமை இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் புகழ் பெற்றிருந்தது. இவர் ஆங்கிலமொழியில் நல்ல திறமை பெற்றிருந்தார். புகழ் பெற்ற தலைவர்களில் ஒருவராக விளங்கிய இவர் 1925 ஆம் ஆண்டிற் காலமானார்.

**சுரைக்குடையான்** - இவன் சோழவளநாட்டில் கஞ்சனூரில் வாழ்ந்திருந்தான். இவன் சுரைக்கொடிகளைப் பயிராக்கினன். காய்த்த காய்களைக் கஞ்சனூரில் எழுந்தருளிய கடவுளுக்குப் படைத்துப் புசிக்கும் உறுதியுடையவனாக விருந்தான். சுரைக்கொடி காய்த்தல் ஒழியுஞ் சமயத்தில் விதைக்காக ஒரு காயை விட்டிருந்தான். இறைவன் ஓர் அடியவரைப் போற் கோலம்பூண்டு சுரைக்குடையான் இல்லத்திற்கு எழுந்தருளினர். அச்சமயத்தில் சுரைக்குடையான் வெளியே சென்றிருந்தான். இறைவன் சுரைக்குடையானுடையமனைவியைப் பார்த்துத் தமக்குச்சுரைக் காய் கறியில் மிகுந்தவிருப்பம் என்றும் கொடியிலிருக்குங் காயை அறுத்துக்கறிசமைத்துப் போட வேண்டுமென்றுங் கூறினர். சுரைக்குடையான்மனைவி அந்த ஒரே காய்தான் உள்ளதென்றும் அது விதைக்காக விடப்பட்டிருக்கிறதென்றுங் கணவன் வரட்டுமென்றுங் கூறினள். இதனைக் கேட்ட அடியவர், "அவ்வாருயின் பாதி விதைக்கும்பாதி சிவனடியாருக்கும் ஆகட்டும்" என்று கூறினர். சிவனடியாருடைய வாக்கைத் தட்ட முடியாத மனைவி பாதிக்காயை அறுத்துக் கறி சமைத்துச் சிவனடியாருக்குப் படைத்தாள். சுரைக்குடையான் வீட்டிற்கு வந்தான். பாதிக்காய் அறுக்கப்பட்டிருத்தலைக் கண்டு சினங் கொண்டான். கத்தியை எடுத்து அப்பெண்ணினுடைய கையை அரிந்தான். அவள் யாதுங்கூற முடியாமல் கடவுளையெண்ணினள். கடவுள் இவளுடைய அன்புக்கு மகிழ்ந்து வீடுபேற்றைக் கொடுத்தார். இவளுடைய புகழ் சோழமண்டல சதகத்திலும் ஏறியது.

**சுலபன்** - இவன் அவந்தி என்னும் பட்டணத்தில் அரசு புரிந்திருந்தவன். இவன் தன்னிடத்தில் ஐயமேற்றற்கு வந்தஓர்அந்தணனைக் கண்டு நகைத்து அதனல் வசவுரை பெற்று எருதாகிப் பின் ஆனைமுகக் கடவுள் மீது அறுகு வீழ்ந்த நல்வினையினால் விண்ணுலகடைந்தவன்.

**சுலபை** - இவள் ஒரு பெண்; மேலான மெய்யறிவு பெற்றவள். இவள் சனகராசனுடைய மன நிலையை உணர்ந்துகொள்ளும்பொருட்டுச் சொற்போரிட்டாள்.

**சுலோசன முதலியார்** - இவர் திருநெல்வேலியில் இருந்தவர். தம்முடைய சொந்தப் பொருளைக் கொண்டு திருநெல்வேலியையும் பாளையங்கோட்டையையும் இணைக்கும் பாலத்தை 1843 ஆம் ஆண்டில் கட்டி முடித்தார். இப்பாலத் திறப்பு விழா நடைபெற்ற பொழுது இப்பாலத்தின் மீது முதன்முதலாகச் சென்றது ஒரு யானை என்பர். இப்பாலத்தின் நீளம் ஏறக்குறைய ஆயிரம் அடிகளாகும்.

**சுவர்ணகாளீசுவரர்** - திருக்கானப்பேர் எனப்பெறுங் காளையார் கோயிலில் எழுந்தருளிய இறைவனுடைய பெயர். இப்பெயர் **சுவர்ணகாளியைத்** திருமணஞ்

செய்து கொண்டபடியினால் உண்டான காரணப் பெயர்.

**சுவாகாதேவி** - தீக்கடவுளின் மனைவி. ஒரு காலத்தில் தீக்கடவுள் ஏழு முனிவர்களுடைய மனைவியரையும் விரும்பினான். அதனால் உண்டாகிய காதல் துன்பத்தைப் பொறுக்கமுடியாமல் காட்டுக்குஓடினான். கணவனுடைய கருத்தையுணர்ந்த இவள் அம்முனிமாதரில் அருந்ததியொழியமற்றவர்களுடைய வடிவங்களை யெடுத்துக் கொண்டு வெவ்வேறு காலங்களிற் கலந்து கணவனுடைய வேட்கையைத் தணிவித்தாள். அருந்ததியின் வடிவத்தை எடுக்க முடியாதபடியினால் அவளைப் புகழ்ந்து பல வரங்களைக் கொடுத்தாள்.

**சுவாதன்** - நருமதையாற்றுக் கரையில் கர்ணகிபட்டணத்தில் இருந்த ஓர் அந்தணன் இவன். தன்னுடைய தாய் கேட்டுக் கொண்டபடி அவளிறந்தபிறகு அவளுடைய எலும்பைக்கங்கையில் விடுவதற்காக எடுத்துக் கொண்டு சென்றான். பொழுது போனபடியால் ஒரு வீட்டிற் சென்று தங்கினான். அவ்விடமிருந்த ஒரு பசு தன் கன்றை அடித்தவனுடைய மகனைத்தான் நாளைக்குக் கொன்று அதனாலுண்டான பிரமகத்தியை புனித நீராடலால் போக்கடித்துக் கொள்ளுவேன் என்று கூறியது. இதனைக் கேட்ட அந்தணன் இவ்வுண்மையை அறிவோமென்று மறுநாள் அங்கிருந்தான். அவ்வாறே அப்பசு அவ்வீட்டுச் சிறுவனைக் குத்திக் கொன்று நருமதையாற்றுக் கரையிலுள்ள நந்திகேசுவர தீர்த்தத்தில் சென்று முழுகித் தூய்மையாகியது. அந்தணன் தானும் பின் தொடர்ந்து சென்று அதனில் மூழ்கினான். திரும்பும் போது கங்காதேவி காட்சி தந்து, " நான்தான் கங்கை. இன்று வைசாகசுத்த சப்தமி. இத்திதியில் நான் இத்தலத்திற்கு வருவது வழக்கமாகையால்உன்னுடையதாயின் எலும்புகளை இவ்விடத்தில் விடு " என்று கூறினாள். அந்தணன் அவ்வாறே செய்து நற்கதியடையச் செய்தான்.

**சுவாமி** -இப்பெயருடையவனுக்கு ஓர் அழகிய பெண்ணிருந்தாள். அப்பெண் காசிக்குச் சென்று தவஞ் செய்தாள். அவளை ஓர் அரக்கன் கவர்ந்தான். அதையொரு காந்தருவன் கண்டு அரக்கனை யெதிர்த்துப் போரிட்டு அவனைக்கொன்றான். அப்பொழுது ஏற்பட்ட காயத்தால் காந்தருவனும் இறந்தான். பெண் காந்தருவனிடம் வைத்த சிந்தையோடிறந்தாள். இருவரும் மாலியகேது கலாவதி என்னும் பெயருடையவர்களாகப் பிறந்து அரசு செய்திருந்தார்கள். பிறகு காசியின் நினைவையடைந்து காசிக்குப் போய்க் கங்கையில் நீராடிச் சிவபிரானைப் போற்றி வீடு பேற்றையடைந்தார்கள்.

**சுவாயம்புமனு** - இவர் முதலூழியில் அரசனாகத் தோன்றி உலகினையாண்டார். இவருடைய மனைவியின் பெயர் சதரூபை. இவர் சுநந்தா என்னும்ஆற்றின் கரையிலிருந்து நூறு ஆண்டுகள் அருந்தவஞ் செய்தார். பிரிய விரதன், உத்தானபாதன் என்போர் இவருடைய மக்கள். உலக முழுவதையும் இவர் செம்மையாக அரசாட்சி செய்தார். அசுரர்களை வென்று தேவர்களைக்காத்தார்.தேவர்கள் இவரிடம் வந்து அரசு முறையைத் தெரிந்து கொண்டு சென்றனர். இவர் அரசு முறை சிலவற்றை வகுத்தார்; அவை மனு

முறையென்று பெயர் பெற்றன.

**சுவேதகி** - இவன் ஓர் அரசன். இவன் நாரதரைக் கொண்டு ஒரு வேள்வியைத் தொடங்கினான். அதில் பன்னிரண்டு ஆண்டுகள் தீக்கடவுளுக்கு நெய்யால் ஆகுதி கொடுத்தான். இதனால் தீக்கடவுளுக்கு அக்கிமந்தம் என்னும் நோய் உண்டாகி ஒளியும் நீங்கியது. அந்நோய் நீங்குமாறு தீக்கடவுள் காண்டவ வனத்தை எரிக்கும் படி அருச்சுனனைக் கேட்டுக் கொண்டனன்.

**சுவேதமுனி** - இவர் அகத்தியருடைய மாணவர். இவருக்குஅங்காரகை யென்னும் பெயரையுடைய அரக்கி தீமை செய்தாள். இவர் சினங் கொண்டு விசுவாமித்திரருடைய வசவுரையினால் பக்கத்தில் கல்லாகக் கிடந்த ஊர்வசிப் பாறையை அவள் மீது ஏவினார். பாறை அரக்கியைத் துரத்தியது. அவள் அச்சமடைந்து சேதுவிற் போய் விழுந்தாள். பாறையும் உடன் விழுந்தது. பாறை உடனே உருப்பசியுருப்பெற்றது. அங்காரகை கிருதாசி உருவடைந்தாள். இவர் பூசை செய்த நீர் ஆறுய்ப் பெருகிச் சுவேத நதி என்று பெயர் பெற்றது.

**சுவேதன்** - வெகு காலத்திற்கு முன் விதர்ப்ப நாட்டையாண்டிருந்தவன். இவனுடைய தந்தையின் பெயர் சுதேவன். இவனுடைய மனைவியின் பெயர் காமினி. இவன் செல்வச் சிறப்புடையவனாக இருந்தும் உலோப குணம் இவனைப் பற்றி இருந்தது. அறஞ்செய்தலில் மனமற்றவனாகவிருந்தான். இறுதி நாளில் இவன் தவஞ் செய்து நான்முகன் உலகையடைந்தான்; நான்முகனுலகை யடைந்தும் நன்மை யுண்டாகவில்லை. உலகில் வாழ்ந்திருந்த போது இவனன்மையினால் தருமஞ் செய்யாதிருந்தமையின் கடுமையான பசி நோயினால் துன்புற்றான். பிறகு உலகையடைந்து தன்னுடைய பிணத்தைத் தானே தின்று, அறஞ் செய்யாமையினால் உண்டாகிய தீவினையைப் போக்கிக் கொண்டான்.

**சூடாமணிவிகாரம்** - இராச ராச சோழன் காலத்தில் நாகபட்டினத்திற்கு வந்த பிற நாட்டவர் வழிபடுவதற்காகக் கட்டப்பட்ட ஒரு பௌத்தக் கோவில். இக்கோவிலுக்கு இராச ராச சோழன் ஆனைமங்கலம் என்னும் ஊரையும் அதைச் சேர்ந்த வேறு சில ஊர்களையும் எவ்வித வரியுமில்லாத நன்கொடைக் கிராமமாக வழங்கினான்.

**சூடாலை** - இவள் மெய்யறிவு கைவரப் பெற்றவள். தன் கணவனுக்கு மெய்யறிவு புகட்டி அவனும் வீடுபேறு அடையச் செய்தாள். இவளுடைய கணவன் பெயர் சிகித்துவசன்.

**சூடிக்கொடுத்தாள்** - இவளுடைய பெயர் ஆண்டாள் எனவும் வழங்கும். ஆழ்வார்கள் பன்னிருவரில் ஒருவர். பெரியாழ்வாருக்கு மகளாகத் துளசிச் செடியிடத்திலே பிறந்தவள். பெரியாழ்வார் திருமாலுக்குத் திருமாலைத் திருப்பணி செய்து கொண்டிருந்தார். அவர் கட்டி வைக்கும் மலர் மாலைகளையெல்லாம் இவள் தன் தந்தைக்குத் தெரியாமல் தான் அணிந்து பார்த்துப் பிறகு கழற்றி வைத்து விடுவது வழக்கம். ஒரு நாள் மாலையில் ஒரு மயிர் இருப்பதைக் கண்ட ஆழ்வார் அம்மாலையை நீக்கி விட்டு வேறு மாலைகட்டிக் கொண்டு போய்த் திருமாலுக்குச் சாத்தினார். திருமால் அம்

மாலையை ஏற்றுக் கொள்ளாது விலக்கிவிட்டார். இதனால் சூடிக்கொடுத்தாள் என்று காரணப் பெயர் உண்டாகியது. பிறகு இவள் திருமாலை மணம் புரிந்து அம்மாலோடு ஒன்றுயினாள்.

**சூதசங்கிதை** - சூதமுனிவருடைய பெயரைக் கொண்ட புராணப் பகுதி. இதில் சிவபெருமானுடைய பெருமைசிவப்பதிகள் வழிபாடுகள் முதலியன விரித்துரைக்கப்படுகிறது.

**சூதபுராணிகர்** - நைமிச வனத்திலிருந்து பிறமுனிவர்கட்குப் பதினெண் புராணங்களையும் புகன்றவர். இவர் மெய்யறிவு பெற்றிருந்த படியினால் ஒவ்வொரு தல வரலாறுகளையும் அறிவுப் பார்வையால் உணர்ந்து கூறினார் என்பர்.

**சூதன்** - தேரோட்டுபவன். குந்தி கன்னிகையாகஇருந்தபொழுது தான் பெற்ற குழந்தையைப் பழிக்கஞ்சிப் பேழையில் வைத்து ஆற்றில் விட அப் பேழையைக் கண்டெடுத்துக் கன்னனை வளர்த்தவன். அரசர் கட்குத் தேரோட்டுபவர்கள் சூதர் எனப்பெறுவர். இவர்கள் அரசர்களுடைய பிறகாரியங்களையுஞ் செய்வார்கள்.

**சூத்திரகன்** - இவன் ஓர் அரசன். வடமொழியிற் சிறந்த புலமையுடையவன். மிருச்சகடி என்னும் நாடகத்தை இவன் எழுதியுள்ளான்.

**சூத்திரங்கள்** - செய்ய வேண்டியவைகளையும் விலக்க வேண்டியவைகளையும் கூறும் பதினெட்டு நூல்கள். இவைகளைச் செய்தோர் போதாயனர், ஆபஸ்தம்பர், சத்தியாஷாடர், திராஹ்யாயனர், அகத்தியர், சாகல்யர், ஆசுவலாயனர், சாம்பவர், காத்தியாயனர், வைகானசர், சௌநகீயர், பாரத்துவாசர், அக்கினி வைசியர், சைமினி, வாதூலர், மாத்தியந்தினர், கௌண்டின்னியர், கௌஷீதகர், இரண்ய தேசர் ஆகியோர் இவைகள் செய்தவர்கள் பெயரால் வழங்கும்.

(2) பொருளை மிகுதியாக அடக்கியுள்ள இலக்கண நூற்பாக்களும் சூத்திரங்கள் எனப் பெறும்.

**சூரதாசர்** - இவர் இந்தி இலக்கியத்தின் பக்திக்காலக் கவிகளில் சிறப்பிடம் பெற்றவர். கிருட்டின பக்திப் பிரிவில் இவர் முதலிடம் பெற்றவர். இவர் 15 ஆம் நூற்றாண்டின் இறுதியில் பிறந்து 16 ஆம் நூற்றாண்டில் காலமாயிருப்பார்என்று கருதப் படுகின்றது. இவர் குருடராக இருந்ததாகவும் தெரிகின்றது. ஆனால் பிறவியிலேயே குருடரா, இடையில் ஏற்பட்டதா என்று தெரியவில்லை. வல்லபாசாரியாரின் மாணவர்களில் முதன்மை வாய்ந்தவர். தென்னாட்டில்நான்கு முதன்மையான ஆசாரியர்களில் வல்லபாச்சாரியாரும் ஒருவர். சூரதாசர் கிருட்டின லீலைகளைப் பற்றிச் சுமார் ஒன்றே கால் இலட்சம் பதங்கள் இயற்றியதாகக் கருதப் படுகின்றது. இவருடைய பதங்கள் உள்ளத்தை உருக்கும் தன்மை வாய்ந்தவை.

**சூரபதுமன்**-பேராற்றல் படைத்த அவுணர் தலைவன். காசிபருக்கு மாயையிடம் பிறந்தவன். பெருந்தவம் புரிந்தும் வேள்வியிலே தன்னுடலை ஆகுதி செய்தும் சிவபிரானிடத்தில் வச்சிரவுடலும் இந்திரஞாலமென்னுந் தேரும் அழிவற்ற

வாணும் பெற்றான். திருமால் இந்திரன் நான்முகன் முதலிய எல்லாத்தேவர்களேயும் அடக்கியாண்டான். தேவர்கட்குப் பல தொல்லேகள் உண்டாக்கினன். தனக்கு எந்நாளும் அழிவில்லே யென்று தீமைகளே அஞ்சாது செய்த இவனே முருகக் கடவுள் கொன்றெழித்தார்.

**சூரியகாங்கேயன்** - இவன் கொங்கு வள நாட்டில் இருந்தவன். பேராண்மையுடையவன்; ஆறகழூர் வாணனேச் சூழ்ச்சியாகப் பிடித்துப் பாண்டியன் முன் நிறுத்தி ஆகவராமன் என்னும் சிறப்புப் பெயர் முதலியவைகளேப் பெற்றான்.

**சூரியப்பிரபை** - இவள் சுக்கிரனுடைய மகள். இவளே இட்சுவாகுவழி முறையில் தோன்றிய அரசன் ஒருவன் காந்தருவ மணத்தாற்கலந்தான். சுக்கிராச் சாரியார் எட்டுநாள் அவனோடு போரிட்டு அவனே அவனுடைய நாட்டோடு சுட்டெரித்தார்.

**சூரியனர் கோயில்** - தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திற்குக் கிழக்கே ஏறக்குறைய ஏழு அல்லது எட்டுக்கல் தொலேவில் இவ்வூர் உள்ளது. இவ்வூர்க் கோயில் முதற் குலோத்துங்க சோழனல் கி. பி. 1110 இல் கட்டப்பட்டது. குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயம் என்னும் பெயரும் இக்கோயிலுக்கு உண்டு. கதிரவனுக்கும் அவனுடைய மனேவியரான சாயை உஷா என்பவர்கட்கும் இக்கோவிலிலே உருவங்கள் உள்ளன.

**சூர்ப்பநகை** - இவள் இராவணனுக்குத் தங்கையாகத் தோன்றியவள். இவள் நகைபுரியின் அந்நகை மிகுந்த அச்சத்தை உண்டாக்குவதாக இருக்கும். அதனல் இவளுக்குச் சூர்ப்பநகை என்று பெயருண்டாகியது. இராமாயண காதைக்கு மூலகாரணமாக இருந்தவள் இவளே.

**சூளாமணி** - தமிழில் உள்ள ஐந்து சிறு காப்பியங்களிற் சிறந்தது. ஒரு சமண நூல். இதனே இயற்றியவர் தோலாமொழித் தேவர். இக்காப்பியத்தின் கதை சிபுராணத்தில் உள்ளது.

**செகவீரக்கட்டபொம்மு** - கட்டபொம்மு வழிமுறையில் பாஞ்சாலன் குறிச்சியில் சக ஆவது பட்டத்தை யடைந்து அரசு புரிந்திருந்தவர். இவருடைய ஆட்சி கo ஆண்டுகள் நீட்சியடைந்து விளங்கியது. இவர் முருகப்பெருமானிடத்தில் பேரன்புடையவர். நாடெங்கும் திக்குவிசயஞ் செய்தபடியால் திக்குவிசயத் துரை எனவும் பெயர் வழங்கியது. குமாருப் பிள்ளே என்பவர் இவருக்கு அமைச்சராகஅமைந்து நின்றார். பின்னளில் வெள்ளேயர்களே விரட்டியடித்துக் குலே நடுக்கங் கொள்ளச்செய்த வீரபாண்டியக்கட்டபொம்மன்இவருடைய முதல்மகனே. முருகப் பெருமான் இக்கட்டபொம்முவைக் கொண்டு கந்தசாமிப் புலவருக்குக் கண் தெரியுமாறு செய்தருளினார் எனவும் செய்தி வழங்குகிறது.

**செகவீரபொம்மு** - இரகு நாதன் என்பவருடைய இரண்டாவது மகனகத் தோன்றியவன். முன்னவன் காலமானபடியால் பதினெட்டாவது பட்டத்தினனகப் பாஞ்சாலங் குறிச்சியை ஒன்பதாண்டுகள் அரசாட்சி செய்தான்.

**செகவீர ராமு** - கட்டபொம்மு வழி முறையில் பாஞ்சாலன் குறிச்சியை உச ஆவது பட்டமாக அரசாண்டவன். அறிவிலும் ஆண்மையிலுஞ் சிறந்தவன். புலவர்களிடத்தில்

பேரன்பு கொண்டு அவர்களைப் பாராட்டிப் போற்றினான். இவனுடைய ஆட்சி ஏழு ஆண்டுகளே நடைபெற்றது.

**செங்கண்மா** - திருவண்ணாமலைக்கு மேற்கேயுள்ள ஓர் ஊர். இந்நகரில் முன்னாளில் நன்னன் வேண்மான் என்பவன் அரசு புரிந்திருந்தான். அந்நாளில்இவ்வூர் அகழ், கோட்டை, பெரிய வீதி முதலியவைகளோடு சிறந்து விளங்கியதாக வரலாற்று நூல்கள் கூறும்.

**செங்குட்டுவன்** - சேரலாதன் மகன். இளங்கோவடிகளின் தமையன். கண்ணகி தன்னுட்டையடைந்து கணவனோடு விண்ணகம் புகுந்தாளென்பதைக் கேட்டு, இவன் இமயமலையில் இருந்து சிலை கொணர்ந்து அவள் வடிவமைத்து நிலைபெறுத்திப் பூசையும் விழாவும் நடத்தியவன்.

**செங்கோற்பொறையன்** - சேரமான் பெருமாளுக்கு முன் சேர நாட்டையாண்ட அரசன். இவன் அரசாட்சியை வெறுத்துத் தவஞ் செய்யச் சென்ற பிறகு மலைநாட்டு வழக்கப்படி சேரமான்பெருமாள் அரசுரிமையை அடைந்தார்.

**செங்கோன் தரைச்செலவு** - மறைந்து போன தமிழ் நூல்களில் ஒன்று.

**செஞ்சிக்கோட்டை** - தமிழ் நாட்டைச் சேர்ந்த தென் ஆர்க்காடு மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியில் திண்டிவனத்திலிருந்து திருவண்ணாமலை செல்லும் சாலையில் உள்ள செஞ்சி என்னும் ஊரில் முக்கோண வடிவில் அமைந்த மூன்று மலைகளைக் கொண்டு உருவாகிய ஒரு கோட்டை. மேற்கில் உள்ள இராசகிரி என்னும் மலை, வடக்கில் உள்ள கிருஷ்ணகிரி என்னும் மலை, தெற்கில் உள்ள சந்திரகிரி என்னும் மலை ஆகிய மூன்று மலைகளையும் இணைத்து, அறுபதடி அகலம் உள்ளதாக உயரமான அலங்கம் ஒன்று கட்டப்பட்டுள்ளது. வெளிப்புறத்தில்எண்பதடி அகலமுள்ள அகழியும் இருக்கின்றது. இவ்வாறு மூன்று முக்கியக் கொத்தளங்களைக் கொண்டதாக அமைந்திருக்கும் இந்தக் கோட்டையின் சுற்றளவு ஐந்து கல் ஆகும்.

**செஞ்சியர்கோன் காடவன்** - இவன் செஞ்சியில் வாழ்ந்திருந்த ஒரு சிற்றரசன். பல்லவர் குலத்தினன். இவன் விக்கிரம சோழனுடைய ஆட்சிக்கு உட்பட்டு ஆட்சி நடத்திக் கொண்டிருந்ததோடு விக்கிரம சோழனுக்குச் சிறந்த நண்பனாகவும் விளங்கியிருந்தான்என்று தெரிகிறது.

**செஞ்சேரி மலை** - இவ்வூரின் பழமையான பெயர் தென்சேரி கிரி என்பது. இவ்வூர் பல்லடம் உடுமலைப் பேட்டை வழியில் பதினெட்டுக் கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. மந்திரகிரி என்னும் வேறொரு பெயரும் இம்மலைக்கு உண்டு. மலையடியில் சந்தன விநாயகர் கோயில் இருக்கிறது. மலைஉச்சியில் வேலாயுதசுவாமி கோயில் கிழக்கு நோக்கி உள்ளது. இங்கு வருவோர் தங்களுடைய எதிர்கால பலன்களைத் தெரிந்து கொள்ளப் பன்னிருகைப் பரமனின் ஓரிரு திருக்கைகளில் பூவை வைக்கின்றனர். சிறிது நேரத்துக்குள் வலக்கையில் இருந்து பூவிழுமாயின் நினைத்த காரியம்வெற்றி என்றும்,இடக்கையில் இருந்து விழுமாயின் நிறைவேறாது என்றும் நேரங் கடந்தும் விழவில்லை யெனின்

மேலுங் காலதாமதமாகும் எனவும்உணர்ந்து கொள்ளுகின்றனர். இம்முறைக்குப் "பூக்கேட்டல்" என்று பெயர். இம்மலை அருணகிரிநாதருடைய திருப்புகழ்பெற்றது. வேறுசிலர்இயற்றிய நூல்களும் உள்ளன.

**செட்டிப் பிள்ளையப்பன்** - இவன் கொங்குவள நாட்டில் பாரியூரில் பதின்மூன்றும் நூற்றுண்டில்வாழ்ந்திருந்தவன். கொங்கு வேளாளரில் வடகரைக் கவுண்டர் என்னும் பிரிவைச் சேர்ந்தவன். பெரும் பண்ணைக்காரன். சிறந்த தமிழறிவு அமையப் பெற்றவன். பாரியைப் போல் வரையாது வழங்கிய வள்ளல் தன்மை அமையப் பெற்றவன். இவனுடைய புகழ் தமிழ்நாடு முழுவதும் பரவி யிருந்தது. நாளும் பெருங்கொடை வழங்கியபடியால் நாளடைவில் பொருள் வளங்குறையப் பெற்ருன். ஆயினும் தன்னை நாடி வரும் புலவர்கட்கு இல்லையென்று சொல்லாமல் பொருள் வழங்கினுன்.கையில் எத்தகைய பொருளும் இல்லாதிருந்த சமயத்தில் புலவர் ஒருவர் இவன்பால் வந்து இவனைப் புகழ்ந்து பாடினுர். இவனுடைய நிலை அந்தப்புலவருக்குத் தெரியாது. இவன் தன்னிடம்யாதும் பொருளில்லை யென்பதைப் புலவரிடம் புகலவில்லை. விருந்திட்டுத் தக்கவாறு போற்றினுன். இரவில் கவலை மிகுதியாகியது.இப் புலவர், "நாளைக்குப் போக வேண்டும்" என்று சொன்னுல் கொடுத் தனுப்புவதற்கு யாதுமில்லையே என்ன செய்வது என்றுஏங்கினுன்.யாதும் இல்லையென்று கூறுவதை விடத் தன்னுடைய உயிரைப் போக்கிக்கொள்வது நல்லது என்று முடிவு செய்தான். பாரியூருக்குப் பக்கத்தில் பெரிய காடு ஒன்று இருந்தது. அக்காட்டில் இருந்த பெரிய புதர் ஒன்றில் புலியொன்று இருந்துகொண்டு வழிச் செல்வோரையும் ஆடு மாடுகளையும் அடித்துத் தின்று கொண்டிருந்தது. செட்டிப் பிள்ளையப்பன் அப்புதருக்குப் போய்ப்புலிக்குஇரையாகிவிடுவதென்று முடிவு செய்தான். நள்ளிரவில்எழுந்து அக்காட்டையடைந்து புதார்ப்பக்கம்போனுன். அடுத்த ஊரிற் கொள்ளையிட்ட கள்ளர்கள் தாங்கள் கொள்ளையிட்ட பொருளைப் புதர் மறைவில்வைத்துப்பங்கிட்டுக்கொண்டிருந்தார்கள். அந்தஇடத்திற்கு அந்த நேரத்தில் யாரும்வரமாட்டார்கள் என்பது அவர்களுடைய எண்ணம். திடீரென்று இவரைக் கண்டவுடன் யாரோ தங்களைப் பிடிப்பதற்கு வந்து விட்டார்கள் என்று மருட்சியடைந்த அவர்கள் அப்பொருள்களையெல்லாம் அப்படியே போட்டு விட்டு ஓடி விட்டார்கள். செட்டிப்பிள்ளையப்பன் புதரை நெருங்கியவுடன் அங்குக் கிடந்த பொருட்குவியலைக் கண்டான். எல்லாவற்றையும் வீட்டிற்கு எடுத்துக் கொண்டு சென்ருன். மறுநாள்புலவருக்கு வேண்டிய அளவு பொருள் கொடுத்து அனுப்பினுன். எஞ்சிய பொருள்களை அப்பொருட்குரியவர்கள் யாவரென உசாவியறிந்து அவர்களிடஞ் சேர்த்து விட்டான். இச் செயற்கருஞ் செயலால் இவனுடைய புகழ் என்றும் நின்று நிலவுவதாயிற்று. இவனுடைய பெருமையைக் கொங்கு மண்டல சதகத்தார் "இட்டமான கவி சொல்லும் பாவலர்க் கில்லையென்று சொலற்கஞ்சிக் காட்டில் வாழ், துட்ட வன்புலித் தூற்றிற் புகுந்தவன் தூயவன் கண வாள குலத்தினன், செட்டிப்பிள்ளையப் பன்றினந் தொண்டுசெய். தேவி மாமலை

மாதொரு பங்குள கட்டு செஞ் சடை அமரவிடங்கனுர் கதித்து வாழ் பாரி யூரெங்க ளூரரோ'' என்று பாராட்டி யுள்ளனர்.

**செம்பியன்மாதேவி** - இவ்வூர் சோழவள நாட்டில் நாகைக்கு எட்டுக்கல் தொலைவில் இருக்கிறது. திருக்கோளிலி, வலிவலம் கன்ருப்பூர், சிக்கல், நாகைக் காரோணம், தேவூர், எட்டிகுடி, திருவிசைப்பாப் பெற்ற சாட்டியக்குடி, சோழவித்தியாபுரம் என்னும் பாடல் பெற்ற பலவூர்கள் செம்பியன்மாதேவியைச் சூழ்ந்துள்ளன. இவ்வூர்க் கோவிலினுக்குக் கைலாசநாதர் கோவில் என்று பெயர். இக் கோவிலில் உள்ள கல்வெட்டுக்களால், பத்தாம் நூற்ருண்டு முதல் பதின்மூன்ரும் நூற்ருண்டு வரை ஆண்ட சோழ அரசர்கள் பலரைப் பற்றிய செய்திகள் தெரியலாயின. சோழப் பேரரசியான செம்பியன்மாதேவியார் இக் கோயிலைக் கட்டியதாகவும் அவர் மகனுன உத்தமச் சோழன் இவ்வூரை அமைத்ததாகவும் கல்வெட்டுக்களால் அறியப் படுகிறது. செம்பியன்மாதேவி என்பவள் கண்டராதித்த சோழனுடைய இரண்டாவது மனைவி ஆவள். கணவன் இறந்த பிறகு இவள் நாற்பத்தைந்தாண்டுகள் வரை உயிர் வாழ்ந்திருந்தாள். நாள் வழிபாடு, திருவிழா, தேவாரம் பாடுதல், திருவிளக்குகள் முதலிய பலவற்றிற்கு இவள் நிவந்தங்கள் ஏற்படுத்தினுள்.

**செம்புக்குமாரன்** - இவன் சூர்ப்பநகையினுடைய மகன்; இவன் தன்னை எதிர்த்தவர்களை வெற்றி கொள்ளுமாறு ஒரு வாட்படையைப் பெற வேண்டுமென்று எண்ணினுன். பஞ்சவடியில் கோமதியாற்றின் கரையில் ஓரிடத்தில் அமர்ந்து தவஞ் செய்தான். ஆண்டுகள்பலசென்றன. அவன் மீது ஆலம் விதை ஒன்று விழுந்து முளைத்துப் பெரிய மரமாகி வளர்ந்தது. இறைவன் தோன்றினுர். "உனக்கு வேண்டியது யாது?" என்று உசாவினுர். செம்புக்குமரன் பகைவர்களை வெல்லத்தக்க வாட்படையொன்று தனக்கு வேண்டுமென்று கேட்டான். இறைவர், "உனக்கு நாளை வாட்படையனுப்புகிறேம்." என்று கூறிவிட்டு மறைந்தார். அப்போது இராமபிரான் இலக்குமணரோடு பஞ்சவடியில் தங்கியிருந்தார். இலக்குமணர் மறுநாள் ஆலிலைபறிக்கும் பொருட்டுஆலமரத்தின்மீதுஏறினுர். அச்சமயத்தில் இறைவர் அனுப்பிய வாட்படை விண்ணில் வந்தது. அதனைக் கண்டு இலக்குமணருங் கையை நீட்டினுர். செம்புக்குமரனுங் கையை நீட்டினுன். இலக்குமணர் கை மரத்திலிருந்து நீட்டப் பெற்றபடியால் மேலே நின்றது. வாட்படை இலக்குமணர் கையிற் புகுந்தது. கீழே இறங்கிய இலக்குமணர் வாட்படையின் கூர்மையைப்பார்க்க விரும்பி அடிமரத்தை வாட்படையால் வெட்டினுர்; மரத்தோடு செம்புக்குமரனும் வெட்டுண்டான்.

**செம்புலப்பெயல் நீரார்** - இவர் சங்கப் புலவர்களில் ஒருவர். இவருடையஇயற்பெயர்இன்னதென்று தெரியவில்லை. ஒருவரை ஒருவர் அறியாதிருந்த தலைவனுந் தலைவியும் எதிர்பட்டு உள்ளங் கலந்து அன்புடையவர்களானமையைச், "செம்புலப் பெயல் நீர் போல அன்புடை நெஞ்சந் தாங்கலந்தனவே" என்று பாடியபடியினுல் இவ்வாறு பெயர்பெற்ருர்.

**செம்மனச் செல்வி** - மதுரை மாநகரில் வாணியர் குலத்தில்

தோன்றிய ஒரு மாது. இவள் பிட்டு வாணிகஞ்செய்து வாழ்க்கையை நடத்திஞள். மதுரைப் பெருமானிடத்தில் மட்டற்ற அன்பு கொண்டிருந்தாள். இவளுடைய அன்புக்கு மகிழ்ந்த மதுரைப் பெருமான் இவளுக்கு ஆளாக வந்து வேலை செய்து இவளுடைய பிட்டையும் வாங்கித் தின்று பிரம்படியும் பட்டார். இவளுடைய பெயர்வந்தி யெனவுங் கூறுவர்.

**செய்யான் பல்லவராயன்**-கொங்கு வள நாட்டில் மேல்கரைப் பூந்துறை நாட்டைச் சேர்ந்த அறைச்சலூரில் சுரைய வேட்டுவரில் செய்யான் என்னும் பெயருடையான் ஒருவன் இருந்தான். அவன் போர்த் திறமையுடையவன். அரசன்அவனுடைய போர்த் திறமையை மதித்துப் பல்லவராயன் என்று பட்டப் பெயர் கொடுத்தான். அவன் தன்னுடைய பெயரோடுஅதனையுஞ் சேர்த்துக்கொண்டு பேரும் புகழுந்திகழ வாழ்ந்திருந்தான்.

**செல்விக் கோமான்** - இவனுடைய இயற்பெயர் ஆதன் எழினி என்பது. இவனுடைய ஆட்சியில் பல இளங்கோசர்கள் வாழ்ந்தனர். இவன் ஒரு யானையோடு செய்த போரைச் சிறப்பித்து ஐயூர் முடவனுர் என்னும் புலவர் பாடியுள்ளார்.

**செல்வக் கடுங்கோவாழியாதன்** - இவன் சேர நாட்டினனுகையால் இவனுடைய பெயர் சேரமான் கடுங்கோ வாழியாதன் எனவும் வழங்கியது. இவன் திருமாலிடத்தில் மிகுந்த அன்புடையவன்; இவனைப் பாண்டி நாட்டிற் பிறந்த அந்தணராகிய கபிலர் பாடியுள்ளார். இவன் கபிலருக்கு நூருயிரங் காணம் பொன் தந்து நன்ரு என்னும் குன்றின் மீதேறித் தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் வழங்கிஞன். இவன் இருபத்தைந் தாண்டுகள் அரசாட்சி செய்தான்.

**செவணம்பட்டிக்கரடு** - கோயம்புத்தூரிலிருந்து சத்தியமங்கலம் போகும் வழியில் ஏழாவது மைலில் இவ்வூர் இருக்கிறது. கரடு நூறுஅடி உயரமிருக்கும். அதன் முடியில் முருகக் கடவுள் எழுந்தருளியிருக்கிருர். செவணம்பட்டி செவ்வண்ணன் பட்டி என்பதன் திரிபு. செவ்வண்ணன் என்ருல் சிவந்த நிறத்தையுடையவன் என்பது பொருள். செந்நிறமுடையமுருகக்கடவுள் எழுந்தருளிய குன்ருகையால் இவ்வாறு பெயர் பெற்றது. ஆனுல் இந்நாளில் இப்பெயரைச் சிரவணம் பட்டி என்று வழங்குகிருர்கள். இம்மலை கிருதயுகத்தில் இரத்தின கிரியாகவும் திரேதாயுகத்தில் பொன்மலையாகவும் துவாபர யுகத்தில் வெள்ளிமலையாகவும் கலியுகத்தில் கல்மலையாகவும் இருக்கிறதாம். இக்குன்றில் எழுந்தருளிய முருகக் கடவுள் பல பாமாலை பெற்றிருக்கிருர்.

**செவந்தான்** - தொண்டை வள நாட்டில் மல்லை யென்னும் ஊரில் இவன் முன்னுளில் வாழ்ந்திருந்தான். இவனிடம் செல்வ நலஞ் சிறந்திருந்தது. தன்னுடைய செல்வத்தைத் தான்மட்டும் உண்டு களியாமல் தன்னை யடுத்தவர்களுக்கெல்லாம் உதவிக் களித்தான். புலவர்களிடத்தில் இவன்அளவற்ற அன்பு கொண்டிருந்தான். இவன் காலத்தில்இராமச்சந்திர கவிராயர் என்னும் புலவர் ஒருவர் இருந்தார். அவர் சிறந்த அறிஞர். அவர் பெரும்பாலும் இந்தச் செவந்தானுடனேயே தங்கியிருந்தார். செவந்தான் மீது அரிய செய்யுட்களையும் பாடிஞர். இவன் காலத்தில்

இருந்த சிறந்த வள்ளல்களில் இவன் ஒருவனாகத்திகழ்ந்தான்.

**செவிசாய்த்தவிநாயகர்** - திருஞான சம்பந்தர் அன்பிலாலந் துறை என்னுஞ் சிவப்பதிக்குச் சென்றார். திருக்கோயிலைஅடுத்திருந்த ஆற்றில் வெள்ளம் பெருகிச் சென்றது. ஆற்று வெள்ளத்தைக் கடந்து கோயிலுக்குச் செல்லமுடியவில்லை.மறுகரையிலிருந்தபடியே பதிகம் பாடினார். இக்கரையிலிருந்த ஆனைமுகக்கடவுள் காதைச் சிறிது சாய்த்துக் கொண்டு தேவாரம் பாடுதலைக் கருத்துடன் கேட்டார். இதனால் அவ்விநாயகருக்குச் செவி சாய்த்த விநாயகர் என்று பெயர் உண்டாகியது. இன்றைக்கும் அவ்விநாயகர் அவ்வாறே எழுந்தருளி யுள்ளார்.

**செவ்வாய்ப்பேட்டை** - சேலத்தில் உள்ள ஓர் ஊர். இங்கு செவ்வாய்க்கிழமை தோறுஞ் சந்தை கூடுகிற படியால் இந்த இடம் இவ்வாறு செவ்வாய்ப்பேட்டை என்னும் பெயரைப் பெற்றது.

**செழியன்** - செழுமை மிகுந்த நிலையில் விளங்கியபடியால் பாண்டியனுக்குஏற்பட்ட சிறப்புப் பெயர்.

**செழியன் சேந்தன்** - இவன் மாறவர்மன் அவனி சூளாமணியினுடைய மகன். சடையவர்மன் என்னும் பட்டம் புனைந்து பதினைந்தாண்டுகள் அரசாட்சி செய்தான். இவனுடைய ஆட்சியின் இறுதிக்காலத்திலேதான் சீன நாட்டானாகிய யுவான் சிங் என்பவன் காஞ்சிக்கு வந்தான்.

**சென்னப்ப நாயக்கன்** - சந்திரகிரி அரசனுக்கடங்கிச் செங்கற்பட்டிலிருந்து அரசு புரிந்து வந்த ஒரு சிற்றரசன். வாணிக நிமித்தம்வந்த வெள்ளைக்காரர்கள் கடற்கரையிற் சிறிது இடம் வேண்டுமென்று இச் சிற்றரசனிடந்தான் கடற்கரையில் நிலம் பெற்றுக் கோட்டை முதலியவைகளைக் கட்டினர். சென்னப்ப நாயக்கன் உதவியால் எழுந்த அந்த இடந்தான் பிறகு சென்னையாகி இன்று மாபெரும் பட்டினமாகவிளங்குகிறது.

**சென்னி** - சோழ மன்னர்களில் ஒருவனாகிய இவனுடையமுழுப் பெயர் சோழன்உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி என்பது. இவன் சோழன் கரிகாற் பெருவளத்தானுடைய தந்தையென்பர். "இளஞ்சேட் சென்னி அழுந்தூர் வேளிடை மகட் கொடை கொண்டான்" என்று நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் கூறியிருக்கிறார் இவனைப்பரணர் பாடியுள்ளார்.

**சென்னிமலை** - கொங்குவள நாட்டில் உள்ள முதன்மையான சிவப்பதிகளில் சென்னிமலை ஒன்று. இம்மலைக்குச் சிரகிரி, சிகரகிரி, சென்னியங்கிரி, புட்பகிரி முதலிய வேறு பெயர்களும் உண்டு. எழுந்தருளியுள்ள முருகக்கடவுளின் பெயர் சென்னிமலை நாதர்எனவும்சிரகிரித்தண்டாயுதபாணி எனவும் வழங்கும். இக்கோயிலின் மண்டபத்துத் தூண்களில் ஏழாம் நூற்றாண்டில் வெளித் திருப்பணி செய்த முத்துவசவய்யன், மைசூர் மன்னர் தேவராசஉடையார் முதலியோருடைய உருவச் சிலைகள் உள்ளன. இம்மலையில் முன்னாளில் பிண்ணாக்குச் சித்தர் தங்கியிருந்ததாகக் கூறுவர்.

**சென்னை** - சென்னப்ப நாயக்கர் என்பவரிடமிருந்து ஆங்கிலேயர்கள் விலைக்கு வாங்கிக்கோட்டை முதலியவைகளை அமைத்துக் கொண்டு தங்கியிருந்த இடத்திற்கு ஆங்கிலேயர்கள்

வைத்த பெயர்இது. கடற்கரையை அடுத்த ஊர்கள் பட்டினம் என வழங்கும் முறைப்படி சென்னையும் சென்னைப்பட்டினமாகியது. முதலில் ஒரு சிறிய மீன் பிடிகாரர்களுடைய சேரியாக இருந்த இந்த இடம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து பக்கத்தூர்களாகிய திருவல்லிக்கேணி திருமயிலை திருவொற்றியூர் முதலியவைகளைத் தன்னகப்படுத்தி இன்று பேரூராகத் திகழ்கிறது.

**சேடதாசையர்** - இவர் பல்லவராயன் என்னும் சமண மன்னனுடைய மனைவிக்குக் குருவாக இருந்தார். இதனைச் சமணர்கள் உணர்ந்து வெறுப்படைந்து அரசனிடங் கூறினர். அரசன் தன்னுடைய மனைவியிடம் அவரை நீக்கி விடுமாறு கூறினன். அரசன் மனைவியாகிய சற்குணமாதேவி அரசனைப் பார்த்து, "என்னுடைய ஆசாரியாரை இந்தச் சமணர்கள் வெல்வார்களாயின் அவ்வாறே செய்கிறேன்" என்றுகூறினள். அவ்வாறே வாதிடுமாறுஅரசன் கட்டளையிட்டான். சமணர்கள் ஒரு குடத்தில் நச்சுப் பாம்பை அடைத்து, "இதற்குள் கைவிடுக" என்று கூறினர். இவர், "பதிப்பொருள் சிவனே" யெனக்கையிட்டு அப்பாம்பைச் சிவலிங்கமாக எடுத்துக் காட்டினர். இதனைக் கண்டு அரசனும் சமணர்களுஞ் சைவர்களாயினர். அச்சிவலிங்கத்தை அதே இடத்தில் அமைத்தனர். அந்த இடம் உத்தரேச்சுரம் என்று பெயர் பெற்றது.

**சேட் சென்னி** - இவனுடைய முழுப்பெயர் சோழன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி என்பது. இவன் சோழன் நலங்கிள்ளியினுடையமகனுவான். இவன்இலவந்திகைப் பள்ளி என்னுமிடத்தில் இறந்தான். கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் இவனுடைய அவைக்களப் புலவராக விளங்கியிருந்தார்.

**சேதகாரி**- மகேந்திரவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று. சேதகாரியென்றால்சேதியங்களை அமைப்பவன் என்று பொருள். சேதியம் - கோயில்.

**சேதி**-இஃதொரு சைனக்கோயில். சைத்தியாலயம் என்றுங் கூறப்பெறும். இது வித்தியாதரருடைய உலகத்தில் உள்ளது.

**சேதி நாடு** - (க) இது மிருகாவதியின் தந்தைக்குரிய நாடு. உதயணன் இந்நாட்டிற்குரியவனாக இருந்தான். இந்நாட்டில் தவஞ்செய்தற்குரிய ஓர் அழகிய மலை இருந்தது. இந்நாடு பின்னாளில் யூகிக்கு உதயணனால் நன்கொடையாக வழங்கப்பட்டது.

**சேதி நாடு** - (உ) தமிழ்நாட்டின் ஒரு பகுதி. இது நடுநாடென்றும் மலையமான் நாடு என்றுங் கூறப்பெறும். திருக்கோவலூர் இதன் தலைநகர்.

**சேதிராயர்** (க) - இவர் தில்லைக் கூத்தப்பெருமான் மீது திருவிசைப்பாப் பதிகம் பாடியவர். இப்பதிகம் ஒன்பதாம் திருமுறையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இவர் சேதி நாட்டைச் சேர்ந்தவராக இருக்கலாம் என்று எண்ணுகின்றனர்.

**சேதிராயர்** (உ) - புதுச்சேரியில் சடையனார்என்பவருக்குப்புதல்வராகத் தோன்றியவர். கல்வியை நன்கு கற்றுச்சிறந்த ஒழுக்கத்தை மேற்கொண்டிருந்தவர். சிறந்த புகழோடு விளங்கியிருந்த இவர் மீது வஞ்சிமார்த்தாண்டர் என்பவர் பல பாடல்

கள் பாடியுள்ளார். அப்பாடல்கள் வேலூரில் உள்ள சிவன் கோயிலின் கோபுர வாயிலில் கல்லிற்பொறிக்கப்பட்டுள்ளன என்பர். இவர் கம்பர் இயற்றிய ஏரெழுபது நூல்அரங்கேற்றத் திற்குச்சென்றபொழுது பாம்பினுல் கடிக்கப்பட்டு மாண்டாரெனவும் அவ்வாறு மாண்டவரைக் கம்பர் தம்முடைய பாட்டாற் பிழைப்பித்தார் எனவுங் கூறுவர்.

**சேது** - இராவணனைக் கொலை செய்தமையால் தமக்குற்ற தீவினை நீங்குமாறு இராமபிரானுல் சிவலிங்கம் நிலை நாட்டி நீராடப்பெற்ற இடம். இது மிகச்சிறந்த புனிதநீராகையால் பலர் இங்கு நீராடுவர். இவ்விடம் அண்மையில் கடல் கோளால் மூழ்கியது.

**சேதுமாதவர்** - இராமேசுவரத்தில் திருக்கோயில் கொண்டுள்ள பெருமாளின் பெயர். இராமேசுவர வழிபாட்டிற்கு வருவோர் இச்சேதுமாதவரையும்போற்றி வழிபட்டுத் திரும்பாவிடின் இராமேசுவரப் பயணத்திஞல் பயனேற்படாது என்பர்.

**சேந்தன் (க)** - மகேந்திரவர்மன் காலத்தில் பாண்டிய நாட்டை அரசாண்டவன். பாண்டியன் மாறவர்மனுடைய மகன்.

**சேந்தன் (உ)** - இவன் காவிரிக் கருகில் உள்ள அம்பர் என்னும் நகருக்குத் தலைவனுக இருந்தவன். கல்வி கேள்விகளிற் சிறந்தவன். சிறந்த கொடையாளி இவன் சில நூல்களுஞ் செய்திருக்கிறுன்.

**சேய்** - இவன் சேர மன்னர்களில் ஒருவன். இவனுடைய முழுப் பெயர் சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேர விரும்பொறை என்பது. யானையினுடைய நோக்குப் போன்ற நோக்கையுடையவன் என்பது பற்றி யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரவிரும்பொறை என்னப் பட்டான். இவனுக்கும் பாண்டியன் தலையாலங்கானத்துச்செரு வென்ற நெடுஞ்செழியனுக்கும் நிகழ்ந்த போரில் இச்சேரமான் தோல்வியுற்று அவனுல்சிறைப் படுத்தப்பட்டான். ஆனுல் அச் சிறையினின்றுந் தப்பி வெளியேறி விட்டான். இவனைக் குறுங்கோழியூர் கிழார் பாடியுள்ளார்.

**சேரமண்டலம்** - சேரநாடு. தமிழ் நாட்டின் மேற்குப்பகுதி. பழைய நூல்கள் குடநாடு என்று குறிப்பிடுவது இச்சேர நாட்டைத்தான். இப்போதுள்ள மலையாள நாடு சேரநாடாகும். சில பகுதிகள் தமிழ் நாட்டின் மேலை எல்லையாயாகவும் இருக்கும்.

**சேரமாண்டார்** - இவன் ஒரு சேர மன்னன். மிகுபொறுமையுள்ளவன். எவ்வளவு கொடிய காரியத்தை இவனிடம் ஒருவர் செய்தாலும் இவன் தன்னுடைய பொறுமையை இழப்பதில்லை. சோழ மன்னன் ஒருவன் இச் சேரனுடைய பொறுமையை ஆராய்ந்து பார்க்க எண்ணினுன். தன்னுடைய ஆள் ஒருவனை அனுப்பிச் சேரமாண்டாருடைய அரண்மனைவாசலில் இருந்த காவல் மரத்தை வெட்டச் செய்தான். சேரமாண்டாரின் தாய் வெளியே வந்து, “யாரடா மரத்தை வெட்டுகிறது?” என்று கேட்டாள். அதற்கு மரம் வெட்டியவன், “உங்களுடைய அப்பன்” என்று மறுமொழி சொன்னுன். இதனைக் கேட்ட சேரமாண்டார், “அவன் சொல்வது சரிதான். அதனுல்தான் அவ்வளவு உரிமையாக வந்து மரத்தை வெட்டுகிறுன்” என்றுன். இதனைக் கேட்டுச் சோழனுடைய

ஆள் அரசனை வணங்கி நிகழ்ந்த தைக் கூறிவிட்டுச் சென்றான்.

**சேரமான்கணைக்காலிரும்பொறை** - இவன் கோச்சேரமான் எனவும் கூறப்பெற்றான். இவன் பெரும் படையும் போர் வன்மையும் உடையவன். இவனுடைய தலை நகர் தொண்டி. இந்நகரத்தின் கண் பெரிய கோட்டையிருந் தது. இவன் தன்னோடு போர் செய்த மூவன் என்பவனைக் கொன்று அவனுடைய பல்லைப் பிடுங்கிக் கோட்டை வாசல் கதவில் பதித்து வைத்தான். என்பர். சோழ நாட்டையாண் டிருந்த செங்கணான் என்னும் மன்னனுக்கும் இவனுக்கும் போர் உண்டாயிற்று. இருவ ரும் கழுமலம் என்னுமிடத்தில் பெரும்போர் செய்தனர். போர் நடந்து கொண்டிருந்த காலத் தில் ஒருநாள் இரவு மதங் கொண்ட யானையொன்றை அடக்கி அனைவருடைய அச்சத் தையும் போக்கினான். போரில் இவனுக்குத் தோல்வி உண்டா யிற்று. பகைவர்கள் கைப்பட் டுச் சிறையிலடைக்கப் பெற் றான். சிறையில் மிக இழிவாக நடத்தப் பெற்றமையின் மனம் வருந்தித் தற்கொலை செய்து கொண்டு உயிர் விட்டான். இவன் செய்யுள் பாடுவதிலும் வல்லவன்.

**சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரலிரும் பொறை** - இவன் சேரமன்னன். இரும்பொறையினுடைய குடி யிற்பிறந்தவன். ஒள்வாட்கோப் பெருஞ்சேரல் என்பது இவனு டைய இயற்பெயர். இவன் தன் னுடைய அரசியலைக் கொங்கு நாட்டுக் கருவூர் வரையில் அமையச்செய்து அந்நகர்க்கண் அரசு கட்டிலேறி முடிசூடிக் கொண்டான். இதனால் கருவூ ரேறிய என்னும் அடைமொழி யும் இவனுக்கு அமைந்தது. இவன் சிறந்த தோற்றப் பொலி வுடையவன். தன்னைக் கண்ட வர்கட்குநன்மையைச்செய்வதா கும் இவனுடைய உருவச் சிறப்பு. நரிவெரூஉத் தலையார் என்னும் சங்க காலப் புலவரு டைய விகாரமான தோற்றம் இம்மன்னனைக் கண்டதும்மாறி அழகாகியது என்பர். இவனை மேற்படி புலவர் புகழ்ந்து பாடி யுள்ளார்.

**சேரமான் குட்டுவன் கோதை** - இவன் சேரநாட்டின் ஒருபகுதி யாகிய குட்டநாட்டை ஆட்சி புரிந்தவன். இவன் காலத்தில் சோழ நாட்டில் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னியும் குராப் பள்ளித்துஞ்சிய பெருந்திருமா வளவனும் ஆட்சி புரிந்திருந் தனர். இவனைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியிருக்கிறார்.

**சேரமான் கோக்கோதை மார்பன்** - இவனுடைய தலைநகரம் தொண்டி. இவனுடைய நாடு குறிஞ்சிவளமும் மருதவளமும் நெய்தல்வளமும் அமைந்தது. இவன் பொய்கையார் முதலிய புலவர்களை ஆதரித்து அவர் களாற் பாடப்பெறுஞ் சிறப்பை யடைந்தான்.

**சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை**-கோட்டம் பலம் என்பது சேரநாட்டில் உள்ள ஊர்களில் ஒன்று. இப் பொழுது இக்கோட்டம்பலம் அம்பலப்புழை என்று வழங்கு கின்றது. கடற்கோட்டின் கண் உள்ள அம்பலமாதலின் கோட் டம்பலம் என முன்னாளில் வழங்கி நின்று இந்நாளில் மாறியது. இந்நாளிலும் இது தொன்மைச் சிறப்புடைய தாகவே விளங்குகிறது. சேர நாட்டில் பல கூத்தம்பலங்கள்

உள்ளன. சேரமான் மாக்கோதை தன்னுடைய இறுதிக் காலத்தில் இக்கோட்டம் பலத்தில் இறந்தானுகையால் கோட்டம்பலத்துத் துஞ்சிய என்னும் அடைமொழி இவனுக்கு நிலைபெறுவதாயிற்று. இவன் கல்வியறிவு மிக்கவன். தன் மனைவியிடத்தில் அளப்பருங் காதல் கொண்டிருந்த இவன் அவள் இறந்த பொழுது உள்ளம் வருந்திக் கையறு நிலைப்பா பாடியுள்ளான்.

**சேரமான் தகடுரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை** - இவன் செல்வக் கடுங்கோ வாழியாதனுடைய மகன். இவன் தகடூருக்குரிய அதியமானோடு போர் செய்து அவனுடைய தகடூரைக் கைப்பற்றிக் கொண்டபடியினுல் இவ்வாறு சிறப்பித்துக் கூறப்படுகிறுன். பதிற்றுப்பத்திற் காணப்படும் எட்டாம் பத்தைப் பாடிய அரிசில் கிழாருக்கு இவன் தன் மனைவியோடு அரண்மனையை விட்டு வெளியே வந்து அரண்மனையில் உள்ளவைகளையும் அரசையும் வழங்கினுன். ஆனுல் புலவர் ஏற்றுக் கொள்ளவில்லை. தனியாகக் கொடுத்த ஒன்பது நூருயிரங் காணத்தை மட்டும் பெற்றுக் கொண்டார். தமக்கு இவன் கொடுத்த அரசினை இவனுக்கே கொடுத்துத் தாம் அமைச்சுத் தொழிலை மேற் கொண்டார். இவன் பதினேழு ஆண்டுகள் அரசு செய்தான். இவன் காலத்தில் புலவர்கள் சிறப்புற்று வாழ்ந்தனர். ஒரு சமயம் இவனைப்பார்க்க வந்த மோசிகீரனுர் என்னும் புலவர் வெற்றிமுரசு வைக்கும் கட்டிலின் மேற் படுத்துத் தம்மையும் அறியாது உறங்கி விட்டார். அப்பொழுது அதிலிருக்க வேண்டிய முரசு நீராட்டற் பொருட்டு வேறிடத்திற்குக் கொண்டு போகப் பட்டிருந்தது. அக்கட்டிலின் மேல் ஏறுவதும் படுப்பதும் குற்றமாகும். அதனில் ஏறுவோர் உயிரிழப்பர். புலவர் உறங்கியதை அறிந்த இரும்பொறை அவரைக் கொலைபுரியவில்லை. அவர் விழிக்குமட்டும் கையில் கவரி யெடுத்து வீசினுன். இவனுடைய பெருந்தன்மையைப் புலவர் வியந்து பாடினுர்.

**சேரமான்பறம்பு** - சேரமான் பெருமாள் நாயனுர் இளவரசராக விருந்த போது அரண்மனையில் தங்காது தனித்து வந்து தங்கிச் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்து கொண்டிருந்த இடம். இஃது இப்போது அரசாங்கத்தாரால் நினைவுத்தூண் நிறுவிப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. திருவஞ்சைக்களத்தை யொட்டிய இடம்.

**சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ** - இம்மன்னன் பூவேந்தனுக இருந்ததோடு பாவேந்தனுகவும் இருந்தான். இவன் பாலைத்திணையைப் பற்றிப் பல பாடல்கள் பாடினுன் இதனுல் இவனுக்குப் பாலை பாடிய என்னும் அடைமொழியும் அமைவதாயிற்று. இவனைப்பேய் மகள் இளவெயினியார் பாடியிருக்கிருர்.

**சேரமான் பெருஞ்சேரலாதன்** - இவன் மிகுந்த வீரமும் சான்ருேர் பாடுஞ் சால்பும் உடையவன். இவன் சோழ நாட்டையாண்ட கரிகால் வளவனேடு வெண்ணி யென்னுமிடத்திலே பெரும் போர் செய்தான். இப்போரில் அவன் செலுத்திய நெடுவேல் இச்சேரனுடைய மார்பில் பட்டு முதுகுப் புறத்தில் உருவிப் புண்ணையுண்டாக்கியது. புறத்திற் பட்ட புண்

னுக்கு நாணிய இவன் மிகுந்த நாணங் கொண்டு வடக்கிருந்து உயிர்விட்டான். இவனைக்கழாத் தலையார் என்னும் புலவர் பாடியுள்ளார்.

**சேரலாதன்** - சேரன் செங்குட்டுவனுக்கும் இளங்கோவடிகட்கும் தந்தை. இவனுடைய முழுப் பெயர் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் என்பர்.

**சேரன் குடக்கோச் சேரலிரும்பொறை** - குடநாட்டுக்குத் தலைவனுய்ச்சேரநாடுமுற்றும் தனக் குரித்தாகப் பெற்றுச் சிறப்புற்றிருந்த சேரமான்களில் இக் குடக்கோச் சேரலிரும்பொறை சிறந்தவன். இவனுடைய இளவல் குடக்கோஇளஞ்சேரலிரும் பொறை எனப் பெற்றுன். இவன் பொறையர் நாட்டினனுகையால்இரும்பொறைஎனப் பட்டான். இவன் முடியுடை வேந்தனுகவும் செல்வ நலத்தில் குறைபாடில்லாதவனுகவும் புலவர்களைப் போற்றும் வள்ளலாகவும் விளங்கினுன். இவனைப் பெருங்குன்றூர் கிழார் பாடியுள்ளார்.

**சேரன் செங்குட்டுவன்** - மோகூரில் பழையரால் சிறப்பித்துக் காக்கப்பட்ட வேம்பாகிய காவல் மரத்தைப் படையெடுத்துச் சென்று வெட்டி அம் மோகூர் மன்னர்களின் மேல் அவற்றையேற்றி அப்பழையர் பெண்களின்கூந்தல்களை யரிந்து அவற்றைக்கயிருக்கிக்கொண்டு சென்றவன். வடநாட்டுக்குப் போய்த் தமிழரசர்களைஇகழ்ந்த கனக விசயரையும் அவருக்குப் படைத் துணைவராகியவர்களையும் பதினெட்டு நாழிகைகளில் வென்றுன். அம்மன்னர்களின் தலை மீது கல் கொண்டு வந்து கண்ணகிக்குச் சிலை செய்வித்தான்.

**சேர்வராயன்மலை** - சேலத்திற்குக் கிழக்கே உள்ள மலைத்தொடர். அடிவாரத்தில் இருந்து ஏழு மைல் குறுக்குப் பாதையில் ஏறினுல் ஏற்காட்டையடையலாம். ஏற்காட்டிலிருந்துமூன்று மைல் சென்றுல் சேர்வராயன் மலை உச்சியை அடையலாம். அங்கே ஒரு குகையில் சேர்வராய சுவாமி உருவம் இருக்கிறது. அதற்கு அண்மையில் நான்கு முழச் சதுரமுள்ள ஒரு சிறு தொட்டி போன்ற குளம் இருக்கிறது. அதில் எப்பொழுதும் நீர் வற்ருது. திருவிழாக் காலங்களில் ஆயிரக்கணக்கான வர்கள் நீர் முகந்தாலும் குறைவதில்லை.

**சேனன்** - இவன் இலங்கையில் ஆட்சி செய்திருந்தான். இவன் காலத்தில் வரகுணபாண்டியன் படையெடுத்துச் சென்று இவனை வென்றுன். ஆகவே இவன் வரகுணனுக்கு யானைகளையும் பொன்னையும் பொருளையுங் கொடுத்து ஓர் உடன்பாடு செய்து கொண்டான். இவனுடையபெயர்சிலா மேகன் எனவும் வழங்கியது.

**சேனுதிபதி ஞானமூர்த்திப் பண்டிதனுகிய மதுராந்தக பிரமாதிராசன்** - இவனுடைய இயற் பெயர் மதுராந்தகன் என்பது. இவன் சோழவளநாட்டிலுள்ள நாலூர் என்னும் ஊரினன். குலோத்துங்க சோழனுடைய படைத் தலைவர்களில் ஒருவன். குலோத்துங்கனுல் அளிக்கப் பெற்றபிரமாதிராசன்என்னுஞ் சிறப்புப் பெயரைப் பெற்றவன். ஆகவே இவன் அந்தணன் என்பது தெளிவு. இவன் திருவொற்றியூர்த் திருக்கோயிலில் ஒரு நந்தா விளக்கு வைத்தான் என்று அறியப் பெறுகிறது.

**சேனுவரையர்** - சேனுவரையர் எனில் படைத் தலைவர் என்று

பொருள். இவர் தமிழில் சிறந்த இலக்கண நூலாகிய தொல் காப்பியத்தின் சொல்லதிகாரத் திற்குச் சிறந்த உரைசெய்தார். இவர் வட நூற் புலமையும் பெற்றவர். இவரைப் பற்றிய வரலாறு எதுவுந்தெரியவில்லை. சொல்லதிகார உரையைத்தவிர வேறு நூல்கள் செய்திருப்ப தாகவுந் தெரியவில்லை.

**சைதன்னியர்** - இவருடைய பெயர் கிருட்டிண சைதன்னி யர் என்பது. இவர் வங்காளத் திலுள்ள நதியா நகரத்தில் மாயாப்பூர்ப் பகுதியில் ஏழை வைதிகக் குடும்பத்தில் 1486 ஆம் ஆண்டிற் பிறந்தார். இவரு டைய தந்தையின் பெயர் சக நாதமிசிரர்; தாயின் பெயர் சசிதேவி. இவர்களுக்குப்பத்தா வது குழந்தையாகச் சைதன்னி யர் பிறந்தார். இவருக்குத் தாய் தந்தையர்களிட்ட பெயர் விசு வம்பரன் என்பது. முதலில் பிறந்த எட்டுக் குழந்தைகளும் இறந்து போயின. ஒன்பதாவ தாகப் பிறந்த விசுவரூபர் என் பவர் இளவயதிலேயே துறவி யானார்.

சைதன்னியர் தம்முடைய இளமைப் பருவத்தில் கல்வியில் நன்கு கருத்துச் செலுத்தினார் இலக்கணம் தருக்கம் ஸ்மிருதி நியாயம் முதலியவைகளில் சிறந்த புலமை யுடையவரா னார். பதினைந்தாம் ஆண்டில் வல்லபாசாரியார் என்பவரு டைய மகளாகிய இலட்சுமி தேவி என்பவளைத் திருமணஞ் செய்து கொண்டார். பதி னேழாம் வயதில் காசுமீரத்தி லிருந்து வந்த கேசவமித்திரர் என்னும் அறிஞரைச் சொற் போரில் வென்று புகழ் பெற் றார். பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துப் பலருக்குக் கல்வி புகட்டினார். பிறகு கிழக்கு வங் காளத்திற்குச் சென்று திருமா லின் திருப்பெயரை எங்கும் பரவச் செய்தார். இவருடைய மனைவி பாம்பு கடித்தபடியால் இறந்து போனாள். இரண்டாவ தாக விட்டுணுப்பிரியை என்ப வளை மணஞ் செய்தார். கயைக் குச் சென்று ஈசுவரபுரி என்னும் வைணவ சந்நியாசியிடம் தீட் சை பெற்றுக் கொண்டார். சொற்போர் செய்வதைவிட்டுச் சொற்பொழிவு செய்தலை மேற் கொண்டார். இவருக்கு நாளும் நாளும் திருமாலன்பு வளர்ந்து கொண்டு வந்தது. இவரைப் பார்த்தவர்களும் திருமாலிடத் தில் பெருமால் கொண்டு திரு மாலின்புகழைப் பாடலாயினர். இவர் ஊர்ஊராகச்சென்று திரு மாலின் புகழைப் பரப்பி வந் தார். இருபத்து நான்காம் வய தில் துறவறத்தை மேற்கொண் டார். சில ஆண்டுகள் தென்னிந் தியாமுழுவதிலுஞ் சுற்றுப் பய ணஞ் செய்தார். கன்னியாகுமரி வரை சென்று திருமாலின் பெருமையைப் பரப்பினார். திரும்பி வரும் வழியில் பண்டரி புரஞ் சென்றார். பௌத்தர் சைனர் முதலியவர்களிடம் சமயச் சொற்பொழிவுகள் செய்து பலரை வைணவர்க ளாக்கினார். முப்பதாம் ஆண்டு முதல் எங்கும் போகாமல் பூரி யிலேயே வசித்தார். அறிஞர்க ளும் அடியார்களும் எப்பொழு தும் இவரைச் சூழ்ந்து கொண் டிருந்தனர். இவர் அதிக நேரம் உறங்குவதில்லை. சிறிதுநேரமே உறங்குவார். மற்றைய நேரங் களிலெல்லாம்திருமாலின் பெய ரையும் புகழையும் பாடியபடி யாகவே இருப்பார். குலவேறு பாடுகள் பார்க்கும் பழக்கம் இவரிடமில்லை. எல்லாரையும் சரிசமமாகவே பார்ப்பார். இவ ருடைய நாற்பத்தெட்டாம் அக வையில் 1534 ஆம் ஆண்டில்

திருமாலின் புகழைப் பாடிக் கொண்டிருந்தபொழுதே இவர் திடீரென்று மறைந்து விட்டார். எங்கு போனார் என்ன வானார் என்பது யாருக்குந் தெரியவில்லை.

**சைமினி மகரிஷி** - இவர் பூர்வ மீமாம்சா நூல்களை யியற்றிய வர். தமது நூல்களில்கடவுளைப் பற்றிப் புகழ்ந்து சொல்லாத படியினால் தமக்கு ஏற்பட்ட குற்றத்தைப்போக்கிக்கொள்ள எண்ணித் திருத்தில்லையை அடைந்து பதஞ்சலி வியாக்கிர பாதர் முதலியோருடன்சேர்ந்து இறைவனின் திருக்கூத்தைக் கண்டு வணங்கி, வேதபாதஸ் தவம் முதலியபுகழ் நூல்களால் இறைவனைப் போற்றித் தூய வரானார்.

**சையகிரி** - கொங்குநாட்டின் கண் ணுள்ள ஒரு மலை. இம்மலையே காவிரி தோன்று மிடமென்பர்.

**சைலேந்திரர்** - மலேயா தீபகற் பத்தையும் அதைச் சுற்றியுள்ள சுமத்ரா, சாவா, பாலி, போர் னியோ முதலிய தீவுகளையும் ஏழாம் நூற்றாண்டுமுதல்பதின் மூன்றாம் நூற்றாண்டு வரை யாண்ட இந்தியப் பேரரச வழி முறையினர். சுமத்ராவில் சீவி சயம் என்ற இவர்களுடைய சிறு நாடே பிறகு மிகப்பெரும் பேரரசாகவளர்ந்தது. அராபிய வணிகர்கள் இம் மன்னர்களை மிகவும் பாராட்டியுள்ளனர். இம்மன்னர்கள் செல்வத்திலும் செல்வாக்கிலுஞ் சிறந்து விளங் கினர். சீன மன்னர்களாலும் இந்திய மன்னர்களாலும் பாராட்டப் பெற்றனர். இவர் கள் சீனாவுடனும் இந்தியாவுட னும் நல்லுறவு கொண்டிருந்த னர்.

**சொன்னவண்ணஞ் செய்த பெரு மாள்** - காஞ்சிபுரத்தில் திருக் கோயில்கொண்டுள்ள ஒருபெரு மாளுடைய திருப்பெயர். திரு மழிசையாழ்வார், "கணி கண் ணன் போகின்றான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீ கிடக்க வேண்டாந்—துணிவொன்றிச், செந்நாப்புலவன் யான் செல் கின்றேன் நீயுமுன்றன் பைந் நாகப் பாய் சுருட்டிக் கொள்" என்று சொன்னபடி பெருமாள் பைநாகப் பாயலைச் சுருட்டிக் கொண்டு அன்பராகிய பெரு மாளின் பின்னே சென்றமை யால் இப்பெயர்உண்டாகியது.

**சோடசாவதானிகள்** - ஒரே சமயத்தில் தம்முடைய வினை வாற்றலால் பதினாறு பொருள் களை உள்ளத்தில் பற்றிக் கொண்டு, அவதானஞ் செய் பவர்கள் சோடசாவதானிகள் என்று பெயர் பெற்றனர். சோடசம் -பதினாறு.

**சோதிமான்** - இவன் மகவு வேண்டித் தவமியற்றிப் பெண் மகவு ஒன்றைப் பெற்றான். காலக்கணிதர்கள் இப்பெண் ணின் பிறப்பு நாட்டிற்குத் தீமையென்று கூறினர். சோதிமான் அப்பெண்ணைப் பெட்டியிலிட்டு ஆற்றில் விட் டான். இப்பெட்டியானது மயன் என்பவனுடைய கையில் அகப்பட்டது. மயன் பெட்டி யைத் திறந்து பெண்ணைக் கண்டான். "தீர்க்க சுமங்கலி யாக இருப்பாயாக" என்று வாழ்த்துரை கூறினான். பெண், "நான் கன்னி என்னுடைய பிறப்பு நாட்டிற்கு அழி வென்று என்னுடைய தந்தை என்னை ஆற்றில்விட்டுள்ளான்" என்று கூறினாள். மயன் "என்னுடைய தவத்தால் மாங் கல்யத்துடன் சந்திரமதியாகப் பிறப்பாயாக" என்றான். அச் சிறுபெண் தீக்குளித்து

தயன் மகளாகப் பிறந்து அரிச்சந்திரனை மணந்தனள்.

**சோமகர்** - இவர்கள் பாஞ்சால நாட்டில் இருந்தவர்கள். குந்திதேவிக்கு நெருங்கிய உறவினர். பாண்டவர்கள் அரசிழந்து காட்டிற்குச் சென்றசெய்தியை இவர்கள் உணர்ந்தார்கள். காட்டிற்குப் போய் அவர்களோடு பழைமை பாராட்டித் தங்கியிருந்தார்கள்.

**சோமகன்** - நான்முகன் உறக்கத்தில் இருக்கையில் மறைகளை யெடுத்துக் கொண்டு கடலில் ஒளித்த அசுரன். திருமால் மீனாகப் பிறப்பெடுத்து இவ்வசுரனைக் கொன்று மறைகளை மீட்டார்.

(உ) பாஞ்சால நாட்டுச் சகாதேவனுடைய மகன்.

(௩) ஓர் அரசமுனிவன்.

(௪) சிவகணத் தலைவர்களில் ஒருவன்.

**சோமகாந்தன்** - இவன் வெகு காலத்திற்கு முன் சவுராட்டிரம் என்னும் நாட்டை அரசாட்சி செய்தான். இவனுடைய மனைவியின் பெயர் சுதன்மை. மகனுடைய பெயர் ஏமகண்டன். பழவினைப் பயனால் இவனுக்குத் தொழுநோய் உண்டாகியது. அரசாட்சியை மகனிடங்கொடுத்து விட்டு மனைவியோடும்அமைச்சனோடுங்காட்டிற்குச் சென்றான். அங்கு நல்வினையினால் பிருகு முனிவரைக் கண்டான். அம்முனிவர் இவனுக்கு அருள்புரிந்தார். ஆனைமுகக் கடவுளுடைய புராணத்தைக் கேட்பையாகில் உன்னுடைய உடற்பிணியும் பிறவிப் பிணியும் ஒழிந்து போகு மென்று கூறி அப்புராணத்தை அவனுக்குக் கூறினார். மிகுவிரைவில் உடற்பிணி நீங்கியது. பிறகு தெய்வ விமானமேறி ஆனை முகக்கடவுளுடைய உலகத்தை யடைந்தான்.

**சோமசம்பு சிவாசாரியார்** - சைவ சித்தாந்தத்துக் குரிய சிவாகம கிரியா காண்டப் பொருள்களைத் திரட்டி முறைப்படுத்திப் பத்ததியாகச் செய்தவர். இப்பத்ததியின் பெயர் கிரியா காண்டக் கிரமாவளி. இஃது 1860 சுலோகங்களைக் கொண்டது.

**சோமசன்மா** - பாடலி புரத்து அரசனாகிய சுதரிசனன் என்பவனுடைய மக்கட்குப் பஞ்ச தந்திரக் கதைகளைச் சொல்லி அறிவில்லாதிருந்த அப்பிள்ளைகளை அறிவாளியாகச் செய்த ஓர் அந்தணன். அறிவுஞ் சூழ்ச்சித் திறனும் உடையவன்.

**சோமநந்தி** - உமாதேவி கௌர நிறமடையத் தவஞ் செய்கையில் அங்கு காவல் செய்திருந்த புலி. அதற்கு அருள் செய்யுமாறு உமாதேவி சிவபிரானிடம் வேண்டிக் கொள்ளக் கஞ்சுகம், பொற்பிரம்பு, வாள் ஆகியவைகளைக் கொடுத்துத் திருநந்தி தேவருக்கடங்கிக் காவல் செய்யுமாறு கட்டளையிட்டருளினார். அதுவே சோமநந்தி எனப்படும்.

**சோமநாதபுரம்** - பம்பாய் மாகாணத்தில் கத்தியவார் தீபகற்பத்தின் தென் கரையிலிருக்கும் பட்டினம். வரலாற்றிலும், சமயத்திலும் சிறப்பு மிக்க இடம். இங்குள்ள சிவன் கோவில் புகழ் பெற்றது. இக்கோவில் முதலில் பொன்னாலும், அடுத்து வெள்ளியாலும், பின்னர் மரத்தாலும், அதையடுத்துக் கல்லாலும் கட்டப் பெற்றது என்ப. 1025 இல் கசினிமாமூது இக்கோவிலை அழிக்கவே, பின்னர்ப் பல

முறை புதுப்பிக்கப் பட்டு அழிக்கப்பட்டு, அண்மையில் புதுப்பிக்கப்பட்டுள்ளது.

2) மைசூர் மாகாணத்தில் மைசூர் மாவட்டத்தில் திருமுக் கூடல்-நரசப்பூர் தாலுக்காவில் காவிரிக் கரையில் சிரங்கப் பட்டணத்துக்கு 12-கல் தொலேவிலிருக்கும் சிற்றூர். இங்குள்ள பிரசன்ன சென்ன கேசவ சுவாமி கோவில் 1929 இல் ஹொய்சள அரசன் மூன்றும் நரசிம்மனைச் சார்ந்த சோமன் என்பவரால் கட்டு விக்கப்பட்டது. சாளுக்கியக் கட்டடச் சிற்பத்துக்கு இக் கோவில் நல்லதோர் எடுத்துக் காட்டாகும்.

**சோமமகராசன்** - இவன் ஓர் அரசன். இவனுக்கு நூறு மனைவியர் இருந்தனர். மூத்த மனைவிக்கு மட்டும் குறை நோய் கொண்ட ஒருமகன் இருந்தான். மற்றவர்கட்கு மக்கட்பேறில்லை. இதனல் வருத்த மடைந்த அரசன் ஒரு முனிவரிடஞ் சென்று தன் னுடைய குறையைக் கூறி ஞன். அம்முனிவர் மூத்த மனைவியின் குறை நோய்ப் பிள்ளையை வேள்வியில் கொன்று தேவர்கட்கு அவிதந்த னர். இதனல் நூற்று வருக்குங் கருவுண்டாயிற்று. வேள்வி செய்த முனிவர் குழந்தைக் கொலையின் தீவினையால் நிரய மடைந்தார். அரசனும் இறந்து நிரயத்திற்குச் சென்ருன். ஆனல் விரைவில் அங்கிருந்து நீங்கினுன். அறநெறியில் அரசு செய்த படியால் குழந்தைக் கொலேயின் தீவினை அதிகமாக அரசனை வருத்தவில்லை. அரசன் சுவர்க்கஞ் செல்ல விருக்குஞ் சமயத்தில் தனக்கு வேள்வி செய்து மகப்பேறளித்த முனிவர் நிரயத்தில் கிடந்து வருந்துதலைக் கண்டான். காரணத்தை உசாவி யறிந்து உள்ளம் வருந்தினுன். நமனிடஞ் சென்று தன்னுடைய நல்வினையில் பாதியைக் கொடுத்து முனிவரை நிரயத்தில் இருந்து விடுவித்துச் சுவர்க்கம்புகச் செய்தான்.

**சோமன்** - இவன் புகழ் பெற்ற ஒரு வள்ளல். பன்னிரண்டாம் நூற்ருண்டில் சோழ வள நாட்டில் திரிபுவனம் என்னும் ஊரில் இவன் சிறப்போடு விளங்கியிருந்தவன். ஒட்டக் கூத்தரைச் சிலர் கொலே செய்ய முயன்ற போது அவரைக் காப்பாற்றினுன். இச்சோமன் ஒருகால் சோழ மன்னனைப் பார்த்து வருவதற் காகச் சோழனுடைய அரண் மனைக்குச் சென்ருன். அப் பொழுது அரசனேடு உரை யாடிக் கொண்டிருந்த ஒட்டக் கூத்தர் வெளியே வந்தார். அவரைக் கண்ட சோமன், "அரசன் இருக்குஞ் சமயம் எப்படி?" என்று உசாவினுன். கூத்தர் சோமனைப் பார்த்து, "தன்னுடைய தேவியர்க்குத் தார் வளவன் ருனுரைப்ப துன்னுடைய கீர்த்தி உயர் நலமே,-துன்னுபுகழ்ச் சோமா திரிபுவனத் தோன்றலே நின் புகழை, யாமா ருரைக்க வினி" என்னுஞ் செய்யுளைப்பாடினுர். இச்சோமனுடைய கொடைச் சிறப்பு, 'பழகு தமிழ்ச் சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை, புல்லரிடத் தேயறிமின் போய்" என்பதனுற் பெறப் படும்.

**சோமாஸ்கந்தர் - தென் முகக் கடவுள்** - ஒவ்வொரு சிவன் கோவிலிலும் மூலத்தானத்தி லுள்ள சிவலிங்கத்திற்கு அடுத்த முறையாகப் பல

சிவமூர்த்திகள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் முதன்மையானவை நடராசர், சோமாஸ்கந்தர், தக்கணமூர்த்தி என்றழைக்கப் படுகின்றதென் முகக் கடவுள், பிட்சாடனர், சந்திரசேகரர் இவர்களுடைய திருவுருவங்கள்.

**சோமேசுவரர்** - இவர் நரசிம்மர் என்பவருடைய மகன். திருச்சிக் கருகில் கண்ணனூரில் தம் ஆட்சியை நிறுவி மங்கி வந்த சோழப் பேரரசைக் காத்தார். சம்புகேசுவரம் (திருவானைக்கா) சிவன் கோயில் முன் கோபுரத்தைக் கட்டியவர் இவரே. முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் இவரைப் போரில் முறியடித்துக் கொன்றான்.

**சோவணர்** - இவர் ஒரு வீர சைவர். இவர் சிவ வழிபாடில்லாமல் உணவுகொள்ளாமையை உணர்ந்த சமணர்கள் இவரைத் தங்களுடைய இருப்பிடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய்ச் சினனைச் சிவபிரான் என்று வணங்கச் செய்தனர். இவருடைய பார்வைபட்டதும் சைநஉருவம் தூளாகி விட்டது.

**சோழகேரள மண்டலம்** - சோழ மன்னர்களுடைய ஆட்சிக்குட்பட்ட கேரளநாடு இவ்வாறு பெயர் பெற்றது.

**சோழகோன்** - இவன் விக்கிரம சோழனுடைய படைத் தலைவர்களில் ஒருவன். அரசனால் அளிக்கப் பெற்ற சோழகோன் என்னும் பெயரால் விளங்கியவன். இவனுடைய இடுகுறிப் பெயர் பூபால சுந்தரன் என்பர். இவன் கங்கர், மகாராட்டிரர், கலிங்கர், கொங்கர், குடகர் முதலியவர்களைப் போரில் வென்று வெற்றிமாலை சூடியவன். இவன் முதற்குலோத்துங்கசோழனுடைய ஆட்சியின் பிற்பகுதியில் அரசியல்அதிகாரிகளில் ஒருவனாகச் சிறந்து விளங்கினான்என்றுதெரிகிறது.

**சோழலிங்கபுரம்** - சோழமன்னன் ஒருவன் இலிங்கம் ஒன்றைக் கண்டு அதற்குக் கோயில் கட்டினான்; அது சோழீசர் கோயில் எனப்படுகிறது. சோழர் இலிங்கத்தைக் கண்டபடியால் ஊருக்குச் சோழலிங்கபுரம் என்று பெயர் உண்டாகியது. அது நாளடைவில் திரிந்து சோளிங்கபுரமாயிற்று. இங்குள்ள கடிகாசலம் என்னுங் குன்றின் மேல் நரசிங்கப் பெருமாள்கோயில் இருக்கிறது.

**சோழவந்தான்** - தமிழ் நாட்டில் மதுரைக்குப் பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ள ஓர் ஊர். சோழனை வென்று சோழாந்தகன் என்று விருதுப் பெயர் பூண்ட வீரபாண்டியன் பெயரால் இவ்வூர் ஏற்பட்டதெனவும்சோழாந்தகன்என்பது சோழவந்தான் என மாறியதெனவும் கூறப்படுவதன்றிச், சோழன் தோற்ற இடமாக இருந்து சோழன் வீழ்ந்தான் என முதலில் வழங்கப் பட்டுப் பின்னர் சோழவந்தான் என மருவிய தெனவுங் கூறுவர்.

**சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி**- இச்சோழ மன்னன் காலத்தில் சேர நாட்டில் சேரமான் மாரிவெண்கோவும், சேரமான் மாந்தரஞ் சேர லிரும்பொறையும்பாண்டி நாட்டில் பாண்டியன் கானப் பேர் எயில்தந்த உக்கிரப்பெருவழுதியும் ஆட்சி புரிந்திருந்தனர். இவர்கள் நண்பர்களாகவும் விளங்கியிருந்தனர். ஒரு சமயத்தில் பெருநற்கிள்ளிக்கும் சேரமான்மாந்தரஞ் சேரலிரும்பொறைக்கும் போர் மூண்டது. அப்பொழுது மலை

யன் என்பவன் சோழனுக்குத் துணையாக வந்து இரும்பொறையைவென்று புறங்கண்டான். இப்பெருநற் கிள்ளியைப் பாண்டரங்கண்ணனார் என்னும் புலவர் பாடியிருக்கிறார்.

**சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்** - இவனுடைய இயற்பெயர் கிள்ளி வளவன் என்பது. இவன் இறந்த இடம் குளமுற்றம் என்னும் ஊர். அதனால் குளமுற்றத்துத் துஞ்சிய என்னும் அடைமொழியுஞ் சேர்ந்தது. இவன் சோழமன்னர்களில்சிறந்தவன். இவன் ஒரு சமயம் கருவூரை முற்றுகை யிட்டிருந்தான். அடைபட்டவேந்தன் போர்க்கு வராமல் அஞ்சியிருந்தான். மலையமானோடு போர் செய்த இவன் அவனுடைய மக்களைப் பிடித்துக் கொண்டு வந்து யானையின் காலில் இட்டுக் கொல்ல முயன்றான். கோவூர் கிழார் இவனுக்கு நல்லுரைகள் கூறிச் சிறுவர்களுடைய உயிரைக் காப்பாற்றினார். இவனுடைய கொடைத்திறத்தைப் புலவர் புகழ்ந்து பலவாறு பாடியுள்ளனர். இவன் இறந்த பிறகு மாறோக்கத்து நப்பசலையார், ஆடுதுறை மாசாத்தனார், ஐயூர்முடவனார் முதலியோர் இரங்கிப் பாடியுள்ளனர். மேலும் இவனை ஆலத்தூர் கிழார், வெள்ளைக்குடி நாகனார் எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார் முதலியோரும் பாடியுள்ளனர்.

**சோழன் கோப்பெருஞ் சோழன்** - இச்சோழன் உறையூரில் இருந்து ஆட்சி புரிந்தவன். சிறந்தஅறிஞன்; கொடையாளி. இவன் காலத்தில் பாண்டிவள நாட்டில் பிசிர் என்னும் ஊரில் இருந்த ஆந்தையார் என்னும் புலவர் (பிசிராந்தையார்) கோப்பெருஞ் சோழனுடைய குணநலன்களை யெல்லாம் பிறர் வாயிலாகக் கேட்டறிந்து இவனிடத்தில் சிறந்த நண்பு கொண்டிருந்தார். இருவரும்ஒருவரை ஒருவர் பாராமலே ஆருயிர் நண்பர்களாக விளங்கியிருந்தார்கள். கோப் பெருஞ் சோழனுடைய ஆட்சிக் காலத்திலே இவனுடைய மக்கள் மாறு கொண்டெழுந்து போர் புரிந்து ஆட்சியைக் கைப்பற்ற எண்ணினர். இவனும் அவர்களோடு போர் செய்து அவர்களைத் தோற்கடிக்க முனைந்தான். புலவர் ஒருவர் அரசனுக்கு அறிவுரைகள் கூறி அரசியலை விட்டு விலகிவிடச் செய்தார். இவனும் அவ்வாறே விலகி வடக்கிருந்து உயிர் துறந்தான். பிசிராந்தையாராகிய நண்பரும் இவனிருக்குமிடத்தை யடைந்து இவனோடு வடக்கிருந்து உயிர் துறந்தார் என்பர். இவனைப் பிசிராந்தையார் பாடியுள்ளார்.

**சோழன் நலங் கிள்ளி** - இவன் சோழ மன்னர்களில் ஒருவன். இவனுடைய பெயர் சேட்சென்னி நலங்கிள்ளி எனவும் வழங்கியது. இவனுக்கு உடன் பிறந்தான் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் சோழன் மாவளத்தான் என்பது. இவன் காலத்தில் சோழன் நெடுங்கிள்ளி என்பவன் உறையூரை ஆண்டிருந்தான். இந்நலங் கிள்ளியின் வெற்றி கீழ்கடலுக்கும் மேல் கடலுக்கும் இடையே சோழவள நாட்டில் சிறந்தோங்கியிருந்தது. இவனை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் கோவூர் கிழார் முதலியோர் பாடியுள்ளனர்.

**சோழன் நல்லுருத்திரன்** - சோழ நாட்டில் ஆட்சி செய்திருந்த சோழ மன்னர்களில் ஒருவன்.

காலத்தாற் பிற்பட்டவன். இவன் செய்யுள் பாடுந்திறமும் உடையவனுகச் சிறந்து விளங்கினுன்.

**சோழன் நெடுங்கிள்ளி** - இவன் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி யெனவுங் கூறப்பெறுவான். இவன் அரசியல் முறையில் நல்ல பயிற்சியில்லாதவன். இவனுக்கும் சோழன் நலங்கிள்ளிக்கும் பகையுண்டாயிற்று. அச்சமயத்தில் நலங்கிள்ளிபாற் சென்றிருந்த இளந்தத்தன் என்னும் புலவன் பரிசில் விரும்பி இந்நெடுங்கிள்ளியிடமும் வந்தான். அப்புலவனை நலங்கிள்ளியின் ஒற்றனென்றும் பரிசில் கேட்டு நடிக்கிருன் என்றுந் தவருக முடிவு செய்து கொலை செய்யத் தொடங்கினுன். ஆசிரியர் கோவூர் கிழார் என்பவர் இச்செய்தியை உணர்ந்தார். நெடுங்கிள்ளியிடஞ் சென்று தக்கவாறு அறிவுரைகள் கூறி அப்புலவனுடைய உயிரைக் காப்பாற்றினுர். இவன் பலவிடங்களில் போர் செய்து இறுதியில் காரியாறு என்னுமிடத்தில் இறந்தான். இவனைக் கோவூர் கிழார் பாடியுள்ளார்.

**சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி** - நெய்தலங்கானல் என்பது இச்சோழன் பிறந்தவூர். இவன் தென்னுட்டுப் பரதவரையும் வடநாட்டுப் படுகரையும் வென்று புகழ் பெற்ருன். இரப்போர்க்கு வரை யாது வழங்கும் வண்மையுடையவன். இவன் பாமுளூர் என்னுமிடத்திலும் செருப்பாழி என்னுமிடத்திலும் பகைவரை வென்று புகழ் பெற்ருன். பாமுளூர் சேரர்கட்குரியது. ஊன்பொதி பசுங்குடையார் என்னும் புலவர் இவனைப் பாடிப்பரிசில் பெற்றிருக்கிருர்.

**சோழன் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ் சேட் சென்னி** - இவ்விளஞ்சேட் சென்னியைச் சேரமான் பாமுளூரெறிந்த இளஞ்சேட் சென்னி யென்றும் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி யென்றும் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி யென்றும் கூறுவர். நெய்தலங்கானல் இவன் பிறந்தவூர். இளஞ்சேட் சென்னி யென்பது இவனுக்கு இயற் பெயர். செருப்பாழி சோழர்க்குரியது. பாமுளூர் சேரமான்களுக் குரியது. இச் சென்னி தன்னெடு பகைத்துப் போர் செய்த சேரமன்னனை அவனுக்குரிய பாமுளூரிடத்தே எதிர்த்துப் போர் செய்து வெற்றி பெற்ருன். இவனை ஊன்பொதி பசுங்குடையார் பாடியுள்ளார்.

**சோழன் மாவளத்தான்** - இவன் சோழன்நலங்கிள்ளியின் தம்பி. எளிதில் சினங் கொள்ளுந் தன்மையுடையவன். திருமாவளவன் என்பவன் வேறு இவன் வேறு. ஒருநாள் இவனும் தாமற்பல் கண்ணனுரும்வட்டாடினுர்கள். வட்டுக்களில் ஒன்று தவறுதலாக மறைந்து விட்டது. அதனைப் பின்புணர்ந்த மாவளத்தான் வெகுண்டு அவரை வட்டினுல் தாக்கி விட்டான். உண்மை கூறியபோதும் நம்பாத மாவளத்தானைப் புலவர் தாக்கிப் பேசினுர். பின்பு உண்மையுணர்ந்த மாவளத்தான் புலவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். இவனைத் தாமற்பல் கண்ணனுர் பாடியுள்ளார்.

**சோழாந்தகன்** - சோழ மன்னனை வென்ற பிறமன்னர்கள். அவர்கட்குத் தாங்கள் நமனைப் போன்றவர்கள் என்பது

தோன்றத்தம்முடைய பெயரை இவ்வாறு வைத்துக் கொண்டனர்.

**சோழியவேனதி திருக்கண்ணன்** - இவன் மலையமான் திருமுடிக் காரியின் வழிவந்தோனுகை யால் மலையமான் சோழிய வேனதி திருக்கண்ணன் எனவும் வழங்குவர். இவனைக் காரியின் மக்களுள் ஒருவனுக வும் எண்ணுகின்றனர். சோழ மன்னர்களுக்குத் துணை புரிந்து அதனுல் ஏனதி என்னும் சிறப்புப் பெயர் பெற்றது பற்றி ஏனதி என்னுஞ் சொல்லையும் சான்ருேர் இவன் பெயரோடு சேர்த்தனர். மலைய மான் திருமுடிக்காரி இறந்த பிறகு இவனே அந்நாட்டுக்கு அரசனுனன். இவனைமாருேக் கத்து நப்பசலையார் பாடியிருக் கிருர்.

**சௌந்தர ராசன்** - சௌந்தரம் - சுந்தரம் அழகு. ராசன் - மன்னன். திருமால் அழகிய திருக்கோலத்தோடு பல அணி கலன்களையுந் தாங்கியவராக விளங்குகிறபடியால் இவ்வாறு சௌந்தரராசன் என்று ஒரு பெயரைப் பெறுகிருர். இவ் வாறே திருமகளும் சௌந்தர வல்லித்தாயார் என்று சிறப்புப் பெயரால் குறிக்கப்படுகிருள்.

**ஞாயிறு** - சென்னைக்கு வடமேற் கில் ஏறக்குறையப் பன்னி ரண்டு கல் தொலைவில் உள்ள ஓர் ஊர். சங்கிலி நாச்சியார் இவ் ஊரில் தான் பிறந்து வளர்ந்தார். இங்கு பழமை யான திருக்கோயில் உண்டு. ஒரு சோழமன்னன் காசிப் பயணஞ் சென்ற பொழுது இவ்வழியாக வந்தானும். அப் பொழுது ஒரு குளத்தின் நடுவே அழகிய தாமரை மலர் ஒன்றைக் கண்டு அதனைப் பறிக்க முயன்ருனும். அவ்வள வில் அவனுடைய கண் குரு டாகி விட்டதாம். அரசன் அச்சமடைந்து திரும்பி வந்த பின் திருப்பணி செய்வதாகவும் கண் தெரிய வேண்டும் என் றும் வேண்டிக்கொண்டானும். காசிக்குச் சென்று திரும்பி வந்த பொழுது அத்தாமரை மலர் மேல்இறைவர் பேரொளி யுடன் ஞாயிருகத் தோன்றி ருராம். அவ்விடத்தில் திருக் கோயில் முதலியன அமைத்துத் திருப்பணி செய்த பின் கண் பார்வை நன்கு தெரிந்ததாம். மலரின் மேல் இறைவர்ஞாயிறு போல் விளங்கிய படியால் ஊருக்கு ஞாயிறு என்று பெய ருண்டாகியதாம். இறைவரு டைய பெயர் பூதேரீசுவரர் என்பர்.

**ஞாயிறு கிழார்** - தொண்டை நாட்டுப் புழற் கோட்டத்தில் தோன்றியவர். வேளாள வகுப் பினர். சங்கிலியார் இவரு டைய மகளாவர்.

**ஞான கலாம்பையார்** - இவ்வம்மை யார் திருவெண்காடராகிய பட்டினத்தடிகளின் தாயார்.

**ஞான சக்திதரன்** - அறுமுகப் பெருமானுகிய முருகக் கடவுள் தம்முடைய திருக்கையிலே ஞான சத்தியாகிய வேற் படையை ஏந்தியபடியால் அவருக்கு ஞான சக்திதரன் என்பது ஒரு பெயராகியது.

**ஞானசம்பு** - இவர் சோம சம்பு சிவாசாரியருடைய வழி முறை யில் தோன்றியவர். இவர் ஏழாயிரங் கிரந்தங் கொண்ட ஞான ரத்திநவளியும் சள சுலோகங்கள் கொண்ட சிவ பூசாத்தவம் என்னும் நூலுஞ் செய்திருக்கிருர்.

**ஞான சிவதேவர்** - இவருடைய பெயர் உமாபதி தேவர் என வும் வழங்கியது. எதிரிலி

சோழச் சாம்புவராயன் என்ப வன் இலங்கை மன்னன் கொடுமை செய்தலை இவரிடம் முறையிட்டான். இவர் "ஈழப் படைகள் விரைவில் அழிந்து ஒழியும் கவலை வேண் டாம்" என்று கூறி இருபத் தெட்டு நாட்கள் அகோர பூசை செய்தார். ஈழப் படை தோல்வியடைந்தது. இதனை யறிந்த சாம்புவராயன் ஞான சிவதேவர்க்குத் தொண்டை நாட்டில் உள்ள ஆர்ப்பாக்கம் என்னும் ஊரை நன்கொடை யாக வழங்கினான்.

**தகடூர் அதியமான்** - இவன் கொங்கு நாட்டின் வட பகுதி யையும் கங்க நாட்டின் தென் பகுதியையும் அரசாண்ட ஒரு குறுநில மன்னன். கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த கடையெழு வள்ளல்களில் ஒருவனும் ஔவையாரால் பாடப் பெற்ற வனுமாகிய அதிகமான் நெடு மானஞ்சியின் வழியில் தோன் றியவன். சேலம் மாவட்டத் தில் இந்நாளில் தர்மபுரி என்று வழங்கும் தகடூரைத் தலைநகராகக் கொண்டவன். தர்மபுரியிலுள்ள இரண்டு கோயில்களில் வழிபாட்டிற்குக் குருக்களை இவன் ஏற்படுத் தினான் என்று ஒரு கல்வெட் டினால் அறியப்படுகிறது.

**தக்கணம்** - தென்னிந்தியாவி லுள்ள பீடபூமி. நருமதை யாற்றுக்குத் தென்பாலுள்ள தென்னிந்தியா முழுவதும் தக் கணம் எனப்படும். சிலர் நருமதைக்கும் கிருட்டிண நதிக் கும் இடையிலிருக்கும் மேட்டு நிலத்தைத் தக்கணம் என்கின் றனர். இதில் நடு இந்தியா ஆந்திரம் மைசூர் ஆகிய நாடு களின் சில பகுதிகள் அடங்கும்.

**தக்கர்** - 19 ஆம் நூற்றாண்டுக்கு முன் இந்தியாவில் நாடெங்கும் பரவியிருந்த கொள்ளைக் கூட் டத்தினர். இவர்களில் முகமதி யர்கள் இந்துக்கள் என்னும் இரு வகுப்பினரும் இருந்தனர். இவர்கள் காளியை வழிபட் டனர். இவர்களுக்குப் பெருஞ் செல்வர்கள் முதலியோர் மறை முகமாக ஆதரவு கொடுத்த தாகவுந் தெரிகிறது. இவர்கள் வணிகர்களைப் போலவும் பயணக்காரர்களைப் போலவுங் கோலம் பூண்டு ஆங்காங்கே சென்று வழியில் அகப்பட்ட வர்களின் கழுத்தை முறித்து அவர்களிடம் இருந்த பொருள் களைப் பறித்துச் சென்றனர். இவர்களுடைய கொடுமை பொறுக்க முடியாததாக இருந் தது. மக்கள் வெளியூர்க்குச் செல்ல அஞ்சினர். பெண்டிங் என்னும் வெள்ளைக் கவர்னர் இந்தக் கொள்ளையர்களை ஒழித் துக் கட்டினார்.

**தக்கன்** - (க) நான்முகனுடைய மனவழிப் புதல்வர்களில் ஒருவன். நான்முகனுடைய கட்டை விரல் ஒன்றிற் பிறந்தவ னெனவுங் கூறுவர். இவன் தரணி என்பவளை மணந்து ஆயிரம் புதல்வர்களைப் பெற் றான். அவர்களனைவரும் நாரதர் அருளுரைப்படி துறவிகளா யினர். இதனால் சினங் கொண்ட இவன் நாரதர் நிலை யில்லாமல் திரியுமாறு வசவுரை வழங்கினான். பிறகு அசக்னி என்பவளை மணந்து அறுபது பெண்களைப் பெற்றான். சிவ பெருமானை நோக்கித் தவஞ் செய்து உமையவளை மகளாகப் பெற்றான். அவளை இறை வனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்துத் தான் அக்கடவு ளுக்கு மாமனார் ஆனான். பிறகு ஒரு நாள் திருக்கைலைக்குச் சென்றபோது இறைவன் தன்னை மதிக்கவில்லை என்று பகைகொண்டு சிவபிரானுக்குப்

பகையான காரியங்களைச் செய்து வீரபத்திரரால் அழிந்து ஆட்டுத் தலை பெற்றான். பிறகு சிவ வழிபாடு செய்து சிவ கணத் தலைவனானான். உமா தேவியை வேள்வியின்போது மதியாதிருந்த குற்றத்தால் மனிதப் பிறப்பையும் அடைந்தான்.

**தக்கன்** - (உ) இவன் பானு நகரத்தில் இருந்து அரசு புரிந்த வல்லவன் என்னும் அரசனுக்கு மகனாகத் தோன்றினான். இவனுடைய தாய் பெயர் கமலை. இவன் பழவினைப் பயனால் குறை நோயடைந்து வருந்திய படியால் தந்தை இவனைத் துறந்தான். இவன் ஒரு காட்டிற்குச் சென்று அங்கு முற்கல முனிவர் என்பவரைக் கண்டான். அவரைப் போற்றிப் பணிந்து வழிபட்டான். அவர் இவனுக்கு அருள் புரிந்தார். இவனுடைய நோய் அகன்றது. பிறகு இவன் கவுண்டினியம் என்னும் நகரத்திற்கு அரசனானான். தனக்கு அருள் புரிந்து நோயை அகற்றிய முனிவரை மறந்து விடாமல் என்றும் போற்றிப் பணிந்து அவருடைய அடியவனாக ஒழுகினான்.

**தசகுமார சரித்திரம்** - வடமொழியில் செய்யப்பெற்ற ஓர் உரை நடை நூல். பத்துக் குமாரர்களைப் பற்றிச் செய்யப்பட்டமையின் இவ்வாறு பெயர் பெற்றது. இதனை இயற்றிவர் தண்டியாசிரியர் என்பர். இதனுடைய முதற் பகுதி மறைந்துவிட்டதென்றும் அது சோமதேவபட்டராற் செய்யப்பட்டது என்றுங் கூறப்படுகிறது.

**தசரதன்** - அயோத்தி அரசன். இராமனுக்குத் தந்தை. அசன் என்பவனுக்கு மகன். இவனுடைய தேர் எட்டுத் திசையுடன் வானமும் பாதாளமுமாகிய பத்துத் திசையினுஞ் செல்லத்தக்கது. ஆகையால் தசரதன் என்று பெயர் பெற்றான். இவன் நீண்ட காலம் மகப்பேறில்லாமலிருந்தான். இவனுடைய மனைவியர் பெயர் கோசலை, கைகேயி, சுமித்திரை. கலைக்கோட்டு முனிவரைக் கொண்டு செய்த வேள்வியில் கிடைத்த பாயசத்தை மனைவியர் மூவரிடமுங் கொடுத்தான். அதனால் மூவரிடமும் இராமன் முதலிய நால்வரும் பிறந்தனர்.

**தசாவதாரம்** - நல்லவர்களைக் காக்கவும் தீயவர்களை ஒழிக்கவும் அறத்தை நிலை நிறுத்தவும் திருமால் இவ்வுலகில் பத்துப் பிறப்புக்களை எடுத்தார். இவைகளே தசாவதாரமெனக் கூறப்படுகிறது.

(க) **மச்சாவதாரம்** - நான்முகனிடமிருந்து மறைகளைக் களவு செய்து கடலிற் கொண்டு போய் ஒளித்து வைத்திருந்த மதுகைடபர் என்னும் அசுரர்களை அழிக்கும் பொருட்டு மீனாகத் தோன்றி அவர்களைக் கொன்று அம்மறைகளை மீட்டுச் சுவாயம்புவ மனுவுக்கு உரைத்து அவரைப் பிரளயத்திலிருந்து காப்பாற்றினார்.

(உ) **கூர்மாவதாரம்** - தேவர்களும் அசுரர்களும் அமுதத்திற்காகப் பாற்கடலைக் கடைந்த பொழுது மத்தாக இருந்த மந்தர மலை கீழே அழுந்தியது. அப்பொழுது அஃது அழுந்தாதபடி ஆமை வடிவம் எடுத்து அடியில் இருந்து தாங்கினார்.

(ங) **வராகவதாரம்** - ஊழிக் கால நீரில் நிலத்தைப் பாய் போல் சுருட்டிக் கொண்டு மறைந்த இரணியாக்கனைப் பன்றி வடிவம் எடுத்துக்

கொன்று நிலத்தைத் தமது கொம்பால் தாங்கி முன்னிருந்த நிலையில் கொண்டு வந்து நிறுத்தினார்.

(ச) **நரசிங்காவதாரம்**-எளிதில் சாகாவரம் பெற்ற இரணிய கசிபுவைப் பிரகலாதன் பொருட்டு மனித மடங்கலாய்த் தூணில் தோன்றிக் கொன்றார்.

(ரு) **வாமனாவதாரம்** - மகாபலியிடம் குள்ள வடிவமாகச் சென்று மூன்று அடி மண் இரந்து பெற்ற பிறகு உலகப் பெரு வடிவங்கொண்டு எல்லா வுலகங்களையும் இரண்டடியால் அளந்து மூன்றாவது அடியை மகாபலியின் தலையில் வைத்து அவனைப் பாதாளம் வரையில் அழுத்தினார்.

(சு) அரச தர்மம் நிலைகுலையும் படிச் செய்த க்ஷத்திரியர்களை அழித்தொழிக்குமாறு பரசு ராமாவதாரம் எடுத்து க்ஷத்திரியர்களை இருபத்தொரு முறை அழித்தொழித்தார்.

(எ) **இராமாவதாரம்**-நான்முகன் கொடுத்த வரத்தால் எல்லா உலகங்களையுந் துன்புறுத்தி வந்த இராவணனை அழித்தொழிக்கும் பொருட்டுத் தசரத மன்னன் புதல்வராகத் தோன்றி இலங்கை சென்று இராவணனை அழித்தொழித்தார்.

(அ) **கிருட்டிணாவதாரம்**-பாரதப் போர் செய்து நிலச்சுமை தொலைக்குமாறு கண்ணனாகத் தோன்றித் துரியோதனன் முதலிய தீயோர்களை அழித்தொழித்தார்.

(கூ) **புத்தாவதாரம்**-மக்களுக்குக் கருமங்களில் நம்பிக்கை குறையும்படியாகப் புத்தாவதாரஞ் செய்து பக்குவமடையாத காலத்தில் ஞானோபதேசஞ் செய்தார் (இவ்வவதாரத்தை மாற்றிப் பலராமாவதாரத்தைக் கூறுவர்.)

(க0) **கல்கியவதாரம்** - கலியுக முடிவில் உலகில் அதர்மம் மேலிடும்பொழுது கல்கியவதாரஞ் செய்து குதிரையின் மேல் ஏறிக் கத்தியை மட்டும் படைக்கலமாகக் கொண்டு கொடியவர்களை வெட்டிச் சாய்த்து நிலத்தை வலமாக வந்து மறைந்து விடுவார். இதன் பிறகு சத்திய யுகம் தோன்றும்.

**தசாவதானிகள்** - ஒரே சமயத்தில் பத்துப் பொருள்களைத் தம்முடைய நினைவாற்றலால் உள்ளத்தில் பற்றிக்கொண்டு அவதானஞ் செய்பவர்கள் தசாவதானிகள் எனப் பெயர் பெற்றனர். தசம்-பத்து.

**தஞ்சாக்கூர்** - இது தமிழ்நாட்டில் இராமநாதபுர மாவட்டத்திலுள்ள ஓரூர். 'தஞ்சை' எனவும் மருவி வழங்குகின்றது. இவ்வூரில் இருந்த பாண்டியர் படைத் தலைவன் ஒருவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டே 'தஞ்சைவாணன் கோவை' என்ற நூல் யாக்கப் பெற்றது. இந்த ஊர் 'மாறை நாடு' என்னுஞ் சிறு பகுதிக்குத் தலைநகர்.

**தஞ்சைமாமணிக் கோயில்** - திருமால் பதிகளில் ஒன்று. காவிரிக்குத் தென் கரையில் உள்ளது. பராசர முனிவருக்குக் காட்சிஅளித்தது. பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோருடைய பாடல் பெற்றது. நீலமேகப் பெருமாள்; செங்கமலவல்லி சௌந்தரிய; விமானம் கன்னிபுட்கரணி; அமுத தீர்த்தம் வீற்றிருந்த திருக்கோலம்.

**தஞ்சைவாணன்** - பாண்டி வள நாட்டில் வையை யாற்றின் கரையில் கி. பி. பதின்மூன்றாம்

நூற்ருண்டில் விளங்கிய தஞ்சாக்கூரில் வாழ்ந்திருந்தவன். பாண்டிய மன்னன் ஒருவனுடைய படைத் தலைவனுகச் சிறந்து விளங்கியவன். கல்வியறிவிலும் கற்றவர்கட்கு நன்கொடை வழங்குவதினும் இவன் சிறந்து விளங்கினுன். இவனுடைய மனைவியும் இவனைப் போன்றே பண்பு நலஞ் செறியப் பெற்று விளங்கினுள். பாண்டிய மன்னனுடைய படைத் தலைவனுக விருந்த தஞ்சைவாணன் போர்த் தொழிலை முன்னிட்டுச் சென்றிருந்த காலத்தில் பொய்யாமொழிப் புலவர் என்பவர் தஞ்சைவாணன் மீது கோவையொன்று பாடிக் கொண்டு சென்ருர். தஞ்சைவாணனுடைய மனைவி கோவையை அரங்கேற்றஞ் செய்யச் செய்தாள். பாட்டின் அருமையை உணர்ந்த அவள் ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் பொற்றேங்காய் ஒன்றை உருட்டிக் கொண்டிருந்தாள். புலவர் கோவை யரங்கேற்றத்தை முடித்துவிட்டு நானூறு பொற்றேங்காய்களோடு ஊருக்குச் சென்ருர். போர்த்தொழிற்குச் சென்றிருந்த தஞ்சைவாணன் திரும்பி வந்தான். பொய்யாமொழிப் புலவர் தன் மீது பாடிய கோவையைப் படித்துப் பார்த்தான். தன் மனைவி வழங்கிய பரிசு போதாது என்று முடிவு செய்தான். பொய்யாமொழிப் புலவரை மீண்டுமழைத்துக் கோவையை அரங்கேற்றஞ் செய்யச்செய்து மேலும் பரிசளிக்க வேண்டுமென்று எண்ணினுன். பரிசு பெற்ற தேங்காய்களோடு வருமாறு பொய்யாமொழிப் புலவருக்குச் செய்தியனுப்பினுன். அவரும் வந்தார். வாணன் பொற்றேங்காய்களை வாங்கி வைத்துக் கொண்டு சில நாட்கட்குப் பிறகு கோவையை மீண்டும் அரங்கேற்றஞ் செய்யச் செய்தான். ஒவ்வொரு பொற்றேங்காயின் முக்கண்களிலும் விலை உயர்ந்த மூன்று மணிகளைப் பதிக்கச் செய்து உருட்டினுன். அவையோரும் பிறரும் தஞ்சைவாணன் பொற்றேங்காய்களைத் திரும்ப ஏன் வாங்கினுன் என்பதை இப்பொழுது நன்கு உணர்ந்து கொண்டனர்; தஞ்சைவாணன் கோவை இறவாப் புகழ் படைத்து நின்று விளங்கிக் கொண்டிருக்கிறது.

**தடமித்தன்** - மத்திம நாட்டு மன்னனுகிய இவன் ஏமமாபுரம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தான். செல்வச் சிறப்பிலுங் கொடைப் பண்பிலுஞ் சிறந்து விளங்கினுன். இவனுக்கு விசயன், கதம்பன், கனகன், அசல கீர்த்தி, சேனன் என்னும் ஐந்து ஆண் மக்களும் கனகமாலை என்னும் பெண் மகள் ஒருத்தியும் இருந்தனர். இவர்களில் விசயன் என்பவன் ஒரு நாள் ஒரு பொழிலில் உருமாறுதலோடிருந்த சீவகனை யழைத்து வந்து தன் தந்தையிடம் விட்டான். தந்தை சீவகனுடைய தன்மைகளை ஒருவாறு யூகித்துணர்ந்து கொண்டு தன்னுடையமக்கட்குப்படைக்கலம் கற்பிக்க வேண்டினுன். சீவகனும் அவ்வாறே கற்பித்தான். இவனை நண்பனுக்கிக் கொள்ள எண்ணித் தன் மகளாகிய கனகமாலையைத் திருமணஞ் செய்து கொடுத்தான்.

**தட்சகன்** - கத்ரு புதல்வன். அந்தண வடிவம் பூண்டு பரிச்சித்தின் விடவேகம் மாற்ற வந்த வேதியனைக் கண்டு அவனுக்கு வேண்டிய ஈந்தனுப்பிப் பரிச்சித்தினைப் பாம்

பாகச் சென்று கடித்தவன். வாசுகியின் இளவல். பாம்பு வேள்விக்கு அஞ்சி இந்திரனிடம் அடைக்கலம் புகுந்தவன்.

**தட்சணுதேவி** - எஞ்ஞனுக்கு மனைவி. இவள் தீட்சாரூபிணியாய் எவ்விடத்தும் வழிபாடுகளேற்பவள். இவளில்லாத காரியங்கள் பலனைக் கொடுக்க மாட்டா. இவள் திருமகளின் உடலிற் பிறந்து எல்லாக் காரியங்களும் நிறைவேறுதற் பொருட்டு நான்முகனுல் எஞ்ஞனுக்குக் கொடுக்கப் பட்டவள்.

**தண்காற்பூட் கொல்லனுர்** - சங்க காலப் புலவர்களில் ஒருவர். இப் பெயர் தங்கால்தாட் கோவலனுரெனவும் தங்கால் பூட்கோவலனுரெனவும் மாறு பட்டும் வழங்குகின்றது. தண் கால் என்பது பாண்டி நாட்டில் உள்ளது. இந்நாளில் திருத் தண்காலென வழங்குகிறது. இது திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளில் ஒன்று. தண் காலப்பன் என்பது திருமாலின் திருப்பெயர்களில் ஒன்று. இவ்வூரைத் திருமங்கையாழ் வார் பாடியுள்ளார். பூண் கொல்லர் - பொற் கொல்லர். எனவே இவருக்கு இப்பெயர் ஊராலுந் தொழிலாலும் வந் திருக்கக் கூடும். இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவருடைய பாடல் புற நானூற்றிற் காணப்படுகிறது.

**தண்டகபுரம்**-காஞ்சி நகருக்குள்ள பதின்மூன்று பெயர்களில் ஒன்று. தண்டக மன்னன் இத் தலத்தில் திருமாலை நோக்கித் தவஞ் செய்த காரணத்தால் உண்டாகிய பெயர்.

**தண்டகாரணியம்**-தண்டகன் என்பவன் இட்சுவாகுவினுடைய மகன். இவன் அறநெறி தவறியொழுகியமையின் தந்தையினுல் நகரை விட்டுத் துரத்தப் பட்டான். விந்த மலைக்கு அண்மையில் மதுமந்தம் என்னும் நகரத்தை உண்டு செய்து சுக்கிரனுக்கு மாணவனுக விருந்தான். சுக்கிரனுடைய மகள் அரசையை விரும்பி வலுக்கட்டாயமாகச் சேர்ந்தான். சுக்கிரன் சினந்து தண்டகனையும் அவனுடைய நகரத்தையும் மண்மாரியால் அழித்தான். அந்த இடமும் அதன் தென்புறமும் தண்டகாரணியம் என்று பெயர் பெற்றது.

**தண்டபாணி** - முருகக் கடவுள் தம்முடைய கையில் தடியை ஏந்தியிருத்தலால் உண்டான காரணப் பெயர்.

**தண்டல் நாயகம் காரோ** - இவர் ஓர் ஆங்கிலேயர். ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கோவை மாவட்டத் தண்டல் நாயகமாக இருந்தவர். இவர் தம்முடைய அலுவலை முன்னிட்டு 1868இல் ஒருநாள் பவானிக்கு வந்தார். இரவில் தங்கும் விடுதியில் தங்கியிருந்தார். பணியாளர்கள் தத்தம் இருப்பிடங்கட்குச் சென்று விட்டனர். நள்ளிரவில் இடி மின்னலுடன் பெருமழை பொழியத் தொடங்கியது. அச் சமயத்தில் ஒரு சிறு பெண் விரைவாக ஓடி வந்து காரோவை எழுப்பிற்று. படுக்கையை விட்டு எழுந்த காரோவின் கைகளைப் பிடித்து வெகு விரைவாக வெளியே இழுத்துக் கொண்டு வந்தது. மறுகணம் காரோ படுத்திருந்த கட்டிடம் இடிந்து விழுந்து தரை மட்டமாகியது. மயிரிழையில் காரோ உயிர் தப்பினுர். நிகழ்ந்தது கனவா நனவா என்று அவருக்கு விளங்கவில்லை. தம்முயிர் காத்த சிறுமி கோவிலுக்குட் சென்று

மறைந்ததைக் காரோ கண்டார். தம்முடைய உயிரைக் காத்தது இறைவியே என்று அவர் ஐயமற அறிந்தார். அன்று முதல் இறைவியை வழிபட்டுப் போற்றினுர். தந்தத்தால் ஊஞ்சல் ஒன்று செய்து அம்மைக்குக் காணிக்கையாக்கினுர். இன்றும் அவ்வூஞ்சல் பவானிக் கோயிலில் உள்ளது. தண்டல் நாயகம் காரோ நல்ல மனிதர். ஆகையால் இறைவி இவ்வாறு தோன்றி உயிர் காத்தனள்.

**தண்டி** - வடமொழிப் புலவர்களில் ஒருவன். போசன் காலத்தில் புகழ் பெற்று விளங்கிய ஒன்பதின்மரில் ஒருவன். இவனுற் செய்யப்பட்ட நூல்கள் தசகுமார சரிதம் காவியா தரிசம் என்பன. தமிழிற் புகழுடன் விளங்கும் தண்டியலங்காரம் காவியாதரிச நூலின் மொழிபெயர்ப்பு என்பர்.

**ததிபாண்டன்** - இவன் கண்ணபிரானுடைய இளம்பருவத்தில் ஆயர் பாடியில் வாழ்ந்திருந்த ஓர் இடையன். இவனேக் குலாலன் எனவுங் கூறுவர். கண்ணன் ஒரு நாள் வெண்ணெயைக்களவுசெய்துண்டான் யசோதை கண்ணனே ஒறுக்க எண்ணினுள். அவனேப் பிடிக்கத் தொடங்கினுள். கண்ணன் யசோதையினுடைய கைக்கு அகப்படாமல் ஓடினுன். ஓர் இடையனுடைய இல்லத்திற் புகுந்து மறைந்து கொண்டனன். யசோதை அவனேத் துரத்திச்சென்றனள். யசோதை துரத்தி வருதலே யறிந்த கண்ணன் தான் ஒளிந்து கொண்ட வீட்டுக்குரியவனுகிய ததி பாண்டன் என்பவனேப் பார்த்து என்தாய் என்னே வந்து பிடித்துக் கொள்ளாமல் தயிர்ப்பானேயைக் கொண்டு என்னே மூடி விடுவாயாக'' என்றனன். ததிபாண்டன் அவ்வாறே மூடி மறைத்தான். பிறகு யசோதை அங்கடைந்து, "கண்ணன் எங்கே'' என்று உசாவத், ததிபாண்டன், "அவன் இங்கில்லே'' என்று கூறினுன். அதனேக் கேட்ட யசோதை திரும்பி விட்டனள். அவ்வளவில் ததிபாண்டன் மூடப்பட்டிருந்த தாழியின் மீது ஏறியமர்ந்து அதனே அழுத்திக் கொண்டான். தன்னே வெளியே விடுமாறு கண்ணன் கூறிய போது "எனக்கு வீடு பேறு தருவதாக உறுதி மொழி கூறினலன்றி உன்னே வெளியே விடேன்'' என்ருன். கண்ணன், "வீடு பேறு கொடுத்தேன் இஃதுறுதிஇப்பொழுதுஎன்னே வெளியே விடுவாயாக'' என்று கூற, "எனக்குமட்டும் வீடு பேறு கொடுத்தால் போதாது. இத்தயிர்ப் பானேக்கும் வீடு பேறு கொடுக்கவேண்டும். நான் வீடுபேறு பெறுவதற்குக் காரணமாக விருந்த இதனே மறத்தல் கூடாது" என்று சொன்னுன். கண்ணன் ததிபாண்டனுடைய செய்கைக்கு மகிழ்ந்துஅவனுடையவிருப்பப் படியே தயிர்ப்பானேக்கும் வீடு பேறு வழங்குவதாக உறுதி மொழி கூற இதன் பிறகு ததிபாண்டன் கண்ணனே வெளியே விட்டான்.

**ததீசிமுனிவர்** - இவர் சிறந்த முனிவர்களில்ஒருவர். சிவபிரானிடத்தில் அன்புடையவர். ஒரு காலத்தில் திருமால் ஓர் அரசன் காரணமாகத்தம்மையெதிர்த்து ஆழிப்படையைச் செலுத்த அப்படை தம்முடைய உடலிற் பட்டவுடன் வாய் மழுங்கச் செய்தவர். தம்முடைய ஆற்றலால் தம்காற் பெருவிரலில்

இருந்து பல திருமால் வடிவங்களைப்படைத்து அவரோடு போருக்கு விடத்திருமால் பொறுக்க முடியாமல் போற்றிப் பாராட்டப் பெற்றவர். தக்கன் வேள்வியில் சிவபெருமானுக்கு அவிகொடுக்க வேண்டுமென்று பல வகையான அறிவுரை கூறியுங் கேளாதபடியினால் தக்கன் தலையிழக்குமாறும் பிற தேவர்கள் சூரபதுமனால் தொல்லைக்குள்ளாகுமாறும் அந்தணர்கள் சிவபிரானிடத்தில் அன்பற்றவர்களாகுமாறும் வசவுரை வழங்கியவர். இந்திரன் தன்னுடைய வச்சிரப்படை விருத்திராசுரனைக் கொல்வதற்குத் தகுதியற்றதென்று உணர்ந்து திருமாலிடம் தெரிவித்துத் தகுந்த வச்சிரப்படை வழங்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். அவர், "நாங்கள் பாற்கடல் கடைந்த காலத்தில் படைக்கலங்களைத் ததீசிமுனிவரிடம் வைத்தோம். பிறகு அவரிடம் போய்ப் படைக்கலங்களைக் கேட்கவில்லை. நெடுங்காலமாகியும் யாருங் கேட்காமற்போகவே அவர் தம்முடைய தவப் பெருமையால் அப்படைக் கலங்களையெல்லாம் விழுங்கி விட்டார். அவைகள் ஒன்றாகத் திரண்டு அவருடைய முதுகெலும்பாக அமைந்துள்ளன. அவ்வெலும்பைப் பெற்று அதனால் வச்சிரப் படையைப் புதிதாகச் செய்து கொண்டால் விருத்திராசுரனை எளிதாக வெல்லலாம்" என்று கூறி இம்முனிவரிடம் அவ்வெலும்பைக் கேட்குமாறு செய்தார். திருமால் கூறிய படியே இந்திரன் இவரிடம் வந்து அவ்வெலும்பைத் தனக்கு வழங்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். இவர் தம்முடைய உயிர்க் காற்றையெழுப்பிப் பிரமரந்திரவழியாக உடம்பையகன்று வீடுபேற்றையடைந்தார். அதனால் இவருடைய புகழ் உலகில் என்றும் நின்று நிலவுவதாயிற்று. ஒருகாலத்தில் சரசுவதியாற்றில் இவருடைய வீரியம் விழுந்தது. அதிலிருந்து விகுட்சி என்பவன் தோன்றினான்.

(உ) ஓர் ஆதிசைவ மறையவர். சிவபிரானிடத்தில் மிகுந்த அன்புடையவர். தம்முடைய மகன். சிவபூசையில் குறை செய்து சித்தப்பிரமையால் வருந்துகையில் இறைவனை மிகுதியும் வேண்டி அத்துன்பத்தைப் போக்கியவர்.

**தத்தாத்திரேயர்** - அத்திரி முனிவருடைய புதல்வர். அத்திரி முனிவருக்கு அநசூயையிடம் பிறந்து அறிதுயிலில் அமர்ந்திருக்க விரும்பினார். முனிச் சிறுவர்கள் இவரை விடாமல் பின் பற்றினார்கள். அவர்களை விட்டுத் தனித்துத் தண்ணீரில் இருந்து நூறு ஆண்டுகள் யோகஞ் செய்து வெளிப்பட்டார். அப்பொழுதுஞ் சிறுவர்கள் விடாமலிருந்தனர். ஓர் அழகிய பெண்ணோடு வெளிப்பட்டும் முனிச்சிறுவர்கள் வெறுப்புக் கொள்ளவில்லை. முனிவர் கள்ளருந்தல் முதலிய ஐம்பெருந் தீவினைகளைச் செய்து தீயவராகத் தம்மை முனிவர் புதல்வர்களுக்குக் காட்டினார். அவர்கள் வெறுப்படைந்து நீங்கினர். முனிவர் பற்றற்றவராக யோகத்திலிருந்தார். தேவர்கட்கும் சம்பராசுரனுக்கும் போர் நடந்தது. தேவர்கள் முனிவரிடம் தம்முடைய குறையைக் கூறினர். முனிவர் "எம்முடைய கண்காண அசுரர்கள்

உங்களை வருத்துகையில் அசுரர்கள் அழிவர்'' என்று கூறினார். பிறகு சம்பராசுரன் போருக்கு வந்து தேவர்களை வருத்தினான். தேவர்கள் தத்தாத்திரேயருடைய இருப்பிடத்தில் மறைந்து கொண்டனர். சம்பரன் முதலியோர் தத்தாத்திரேயரிடமிருந்த திருமகளின் கூறாகிய அவருடைய மனைவியைக் கண்டு தூக்கித் தலைமேல் வைத்துக் கொண்டு தேவர்களை வருத்தாமல் முனிவருடைய இருப்பிடத்தில் இருந்து ஏழுடிச் சென்றனர். திருமகள் அவர்களிடமிருந்து மறைந்தாள். முனிவர் தேவர்களைப் பார்த்து, "திருமகள் அசுரர்களிடமிருந்து நீங்கி விட்டாள். இனிமேல் அசுரர்கள் உங்களுக்குத் தோற்பார்கள்," என்று கூறித் தேவர்கட்கு வெற்றியை உண்டாக்கினார். அத்திரி முனிவர் தவஞ்செய்கையில் திருமால் காட்சிதந்து தம்மை அவருக்குத் தத்தஞ் செய்தபடியால்தத்தாத்திரேயர் என்று பெயர் பெற்றார்.

**தநஞ்சயன்** - அருச்சுனன் பெயர்களில் ஒன்று. தருமர் இராசசூய வேள்வி செய்யத் தொடங்கிய போது அருச்சுனன் வடக்குத் திக்கிற்சென்று பல அரசர்களை வென்று அவர்களுடைய செல்வத்தைத் திறை கொணர்ந்தபடியால்இப்பெயர் உண்டாகியது. தநஞ்சயன் என்பதற்கு வெற்றியையே செல்வமாகவுடையவன் என்றும் பொருள் உண்டு.

**தந்திசத்திவிடங்கி** - இவள் இராச ராச சோழனுடைய மனைவி.

**தந்திரி பாலன்** - பாண்டவர்களில் ஒருவனாகிய சகாதேவன் விராட நகரத்திற்குச் சென்று மறைந்துறைதலை மேற்கொண்டிருந்த போது ஆநிரை புரக்கும் ஆயர் தலைவனாகி இப் பெயரை மேற் கொண்டிருந்தான்.

**தந்திவர்மன்** - பல்லவ மல்லனுக்குப் பிறகு பட்டத்திற்கு வந்தவன் இவன். கி. பி. 775 முதல் 825 வரை ஐம்பதாண்டுகள் வரை இவனாட்சி செய்தான் என்பர். இவன் இரட்டர்களோடு பல முறை போர் செய்தான். இவன் காலத்திலும் தமிழ் நாட்டிற் பலவிடங்களிற் கோயில்கள் கட்டப்பட்டன.

**தந்துமாறன்** - இவன் பாண்டிய மன்னர்களின் கீழ் பணியாற்றியவன். மாறன் என்பது பாண்டியர்களுக்குரிய பெயராயினும் பாண்டியர்களை அடுத்திருப்பவர்களும் அப் பெயரை மேற் கொண்டிருந்தனரென்று தெரிகிறது. மன்னர்களிடம் பணியாற்றியபடியால் பெருந் திருவடைந்த இவன் மன்னர்களைப் போன்றே கொடை நலத்திலும் சிறந்தவனாய்ப் பலருக்கும் உதவி செய்து வள்ளல்களில் ஒருவனாய்த் திகழ்ந்திருந்தான். இவனுடைய சால்புகளைச் சங்க வருணர் என்னும் புலவர் பாராட்டிப் பாடியுள்ளார்.

**தந்துவர்த்தனச் சோழன்** - இவன் பவாநி கூடலில் நீராடிச் சங்கமேசுரரை வழிபட்டுத் தல மரமான இலந்தையின் கனியைத் தின்று மக்கட் பேற்றை யடைந்தான்.

**தபோவனம்**-காஞ்சிபுரத்திற்குரிய பதின்மூன்று பெயர்களில் ஒன்று. இந்திரன் முதலிய தேவர்கள் தவஞ் செய்து சிறப் படைந்தபடியினால் உண்டாகிய பெயர்.

**தமகோடன்** - சேதி நாட்டு மன்னன்; சுருதசிரவையி

னுடைய கணவன் சிசுபால னுக்குத் தந்தை.

**தமந முனிவர்** - குண்டினபுரத் தரசனாகிய வீமராசனுக்கு மகப் பேறளித்த முனிவர். இவருடைய அருளாற் பிறந்தபடியால் வீமராசன் தன்னுடைய மகளுக்குத் தமயந்தி யென்று பெயரிட்டான்.

**தமயந்தி** - விதர்ப்ப வேந்தனாகிய வீமனுடைய மகள். சிறந்த அழகுடையவள். நளன் அன்னத்தைத் தூதனுப்பியகாலை அவ்வன்னத்தினால் நளனுடைய பெருமைகளை யெல்லாம் நன்கு உணர்ந்து நளனைக் காதலித்தவள். பிறகு சுயம்வரத்தில் நளனைக் கணவனாக அடைந்து கலியின் கொடுமையால் அல்லல்கள் பலவற்றை யடைந்து பிறகு நலமுற்றவள்.

**தமன்** - தமன் என்னும் அரசனுக்கு இராச்சிய வர்த்தனன் என்னும் பெயருடைய மகன் பிறந்தான். இவன் வளர்ந்து விடூரதன் என்பவனுடைய மகளாகிய மானினியை மணந்து அரசாட்சி செய்திருந்தான். ஒரு நாள் அரசனுடைய மனைவி அரசனுக்கு எண்ணெய் தேய்க்கையில் அவளுடைய கண்ணீர் அரசனுடைய தலையில் விழுந்தது. அரசன், ''ஏன் அழுகிறாய்?'' என்று உசாவினான். ''உமக்கு நரை வந்து விட்டதே'' என்று மனைவி மறுமொழி கூறினாள். அரசன் இனிமேல் தவஞ் செய்தலே தக்கதென்று முடிவு செய்தான். தன் மகனுக்கு முடி சூட்ட எண்ணினான். பட்டணத்து மக்கள் அரசனை நீங்குவதற்கு மனமில்லாமல் கதிரவனை யெண்ணித் தவஞ் செய்து அரசன் பதினாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருக்குமாறு வரம் பெற்றனர். அதனை அரசி அரசனுக்கு அறிவித்தாள். அரசன் முன்னிலும் அதிக வருத்தத்தை யடைந்தான். அரசி அரசன் வருந்துவதற்குக் காரணத்தைக் கேட்டாள். அரசன், ''நான் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கையில் நீயும் உன்னுடைய மகனும் இந்தப் பட்டணத்து மனிதர்களும் இறப்பதைப் பார்த்து வருத்தமுறலாயிற்றே'' என்று சொன்னான். அரசி, ''அதற்கு என்ன செய்யலாம்?'' என்று உசாவினாள். அரசன் அரசியோடு கதிரவனைக் குறித்துத் தவஞ் செய்தான். பட்டண வாசிகளும் மகனும் தன் மனைவியும் சாகாதிருக்க வரம் பெற்றான்.

**தயானந்த சரசுவதி** - ஆரிய சமாசத்தை நிறுவியவரும் சமூகச் சீர்திருத்தவாதியுமாகிய இவர் குசராத்தைச் சேர்ந்த காடியாவாடில் அந்தணர் குலத்தில் 1824 ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் அம்பாசங்கர். இவருக்கு வைக்கப்பட்ட பிள்ளைப் பெயர் மூலசங்கர். தயானந்தர் தம்முடைய 24 ஆம் வயதிலேயே துறவியாகி விட்டார். மதுராவில் இருந்த சுவாமி நிரஞ்சனானந்த சரசுவதி என்னும் பெரியவரிடம் மறைகளையும் மெய்யறிவு நூல்களையும் பயின்றார். 1875 ஆம் ஆண்டில் ஆரிய சமாசத்தை நிறுவினார்.

**தரங்கம்பாடி** - தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்திற்குத் தென் கிழக்கில் 19 மைல் தொலைவிலிருக்கும் பட்டினம். முன்னாளில் இஃதொரு துறைமுகமாக விளங்கியது. இங்குக் கிறித்தவர்கள் பலர் முன்னாளில் தங்கித் தமிழ்த் தொண்டு செய்தனர். தரங்கம் என்பது அலை. கடலில் உண்டாகும் அலைகள் இசையைப் போல்

இனிமையுடையதாக முழங்கிய படியால் இவ்வூருக்குத் தரங்கம் பாடி என்று பெயருண்டா யிற்று என்பர்.

**தராபாலன்** - வைதிசம் என்னும் பட்டணத்து அரசன். இவன் ஒரு காலத்தில் விதஸ்தாவேத் திரவதி சங்கமத்தில் உமைய வளுடைய வசவுரையால் நரி யுருக் கொண்டிருந்து பன்னி ரண்டு ஆண்டுகள் கழித்த பிறகு வசவுரை நீங்கப் பெற்றவன். இவன் வேத்திரவதி சங்கமத் தலத்தில் வசவுரை நீங்கிச் சிறந்த உடல் பெறுதலைக் கண்ட அரசன் அவ்விடத்தில் சிவன் கோவில் கட்டுவித்துப் புராணங் கேட்டுப் புராணி கனுக்குப் பொருளுதவி செய்து விண்ணுலகடைந்தான்.

**தரிசன செட்டி** - திருவாலங் காட்டை யடுத்த பழையனூர் நீலியாற் கொல்லப்பட்டவன். இவன் முன் பிறப்பில் காஞ்சி புரத்தில் புவனமதி என்னும் பெயருடைய அந்தணனாக இருந்தான். இவன் காசிக்குப் போய், சிவஞானி யென்ப வனுக்குத் தங்கையாகிய நவ ஞானி என்பவளை மணஞ் செய்து கொண்டான். அவ ளோடு சில காலம் இருந்த பிறகு தன்னுடைய முதல் மனைவியை நினைத்துக் கொண் டான். சேதுவில் நீராட வேண்டுமென்று சிவஞானி யாகிய மைத்துனனோடும் நவ ஞானியாகிய மனைவியோடும் புறப்பட்டு வழி நடந்து திரு வாலங் காட்டை யடைந்தான். சிவஞானியாகிய மைத்துனன் வெளியே சென்றிருந்த சமயம் பார்த்துப் புது மனைவியையுங் குழந்தையையுங் கொன்று விட் டான். சிவஞானி வந்து பார்த் தான். தங்கை யிறந்து கிடத் தலைக் கண்டு தானும் உயிர் விட்டான். கொலைகார அந் தணன் மறு பிறப்பில் தரிசன செட்டியாகப் பிறந்தான். இவ னுடைய தந்தையாகிய நாகந்தை செட்டி யென்பவன் தன்னுடைய மகனுக்குப் பேயால் சாவுண்டாகும் என்று அறிந்தான். மந்திர வாள் ஒன்றைக் கொடுத்து எப் பொழுதும் அவ்வாளை உடன் வைத்திருக்கச் செய்தான். பெரியவனான பிறகு சிறந்த வணிகனாகத் திகழ்ந்திருந்தான். ஒரு நாள் திருவாலங்காட்டு வழியே சென்றான். முன் பிறப் பில் இவனாற் கொலையுண்ட நவஞானி கொலையுண்ட பின் பேயாகி இவனைப் பழி வாங்கு வதற்குக் காலம் பார்த்துக் கொண்டிருந்தாள். இப் பொழுது பழைய கணவனாகிய தரிசன செட்டியைக் கண்டதும் கொலை செய்ய முயன்றாள். செட்டியிடம் பல வடிவங் களோடு வந்தாள். செட்டி தன்னுடைய கையிலிருந்த மந்திர வாளின் ஆற்றலால் நீலியாகிய பழைய மனைவியின் வஞ்சனைகட்கு உயிர் தப்பித் திருவாலங் காட்டை யடைந் தான். நீலி இவனுடைய மனைவியைப் போல் கோலம் பூண்டு திருவாலங் காட்டை யடைந்தாள். அங்கிருந்த வேளாளர்கள் எழுபதுபேரிடம் முறையிட்டு இறுதியில் இவனைக் கொன்று முடித்தாள்.

**தருசகன்** - இவன் மகத நாட்டு மன்னன். இவனுடைய தலை நகர் இராசகிரியம் என்பது. இவன் பதுமாபதி என்பவளு டைய தமையன். ஆருணியை வெல்வதற்கு இவனுடைய நட்பைப் பெற எண்ணி உருமண்ணுவா முதலிய அமைச் சர்களுடன் உதயணன் அந் நகர்ப் புறச்சோலையில் சில காலம் மறைந்திருந்தான். இவ

னுடைய தந்தையாற் புதைத்து வைக்கப்பட்டிருந்த புதையல்களை உதயணன் இவனுக்கு எடுத்துக் கொடுத்தான். சில நீருற்றுக்களும் உதயணனால் இவனுக்குக் காட்டப்பட்டன. பதுமாபதியைக் கேகய அரசனுக்குக் கொடுக்க இவன் முடிவு செய்திருக்கிறான் என்பதை அறிந்து போர் செய்தற்கு வந்த அரசர் எழுவரையும் அமைச்சர்களோடு சென்று உதயணன் வென்றான் என்பது பற்றி அவனுக்குப் பதுமாபதியைத் திருமணஞ் செய்து கொடுத்தவன். தனக்கு உதயணன் செய்த உதவியை எண்ணி அவனுக்கு உதவியாகத் தன் அமைச்சர்களையும் நால்வகைப் படைகளையும் அனுப்பி வெற்றி யுண்டாகுமாறு செய்தவன். எலிச்செவியரசனால் சிறை வைக்கப்பட்டிருந்த உருமண்ணுவாவை விடுவித்து உதயணன்பால் அனுப்பினான். உதயணனுக்கு இவன்பால் மிகுந்த அன்புண்டு.

**தருண கணபதி** - எட்டுத் திருக்கைகளையும், யானை முகத்தையுமே உடையவர். கைகளில் பாசம், அங்குசம், மோதகம், விளாம்பழம், நாவற்பழம், ஒடிந்த தம் தந்தம், நெற்கதிர், கரும்புத் துண்டு இவைகள் விளங்கும்.

**தருமகுத்தன்** - இவன் கதிரவகுல மன்னனாகிய சத்தியாதனன் என்பவனுடைய மகன். இவனுடைய தாய் பெயர் சதி. தருமகுத்தன் கருவிலிருக்கும் பொழுது போர் ஒன்று மூண்டது. அப்போரில் சத்தியாதனன் மாண்டான். அச்சமுற்றுக் காட்டிற் கோடிய அரசியாகிய சதி காட்டில் இவனைப் பெற்றாள். இவன் குழந்தையாக விருக்கும்போதே தாயாகிய சதி ஒரு நீர்நிலையில் நீரருந்தும்போது முதலை வாயிலகப்பட்டு அவளும் மாண்டாள். இவன் திக்கற்றவனாக ஓரிடத்தே கிடந்தான். உமையென்னும் பெயருடைய ஒரு பார்ப்பனி தருமகுத்தனாகிய சிறுவனைக் கண்டெடுத்துக் கொண்டுபோய்த் தன் மகனோடு சேர்த்து வளர்த்தாள். சாந்தகர் என்னும் முனிவர் ஒருவர் இச்சிறுவனுடைய நிலைமையை மெய்யறிவுப் பார்வையினால் உணர்ந்து அச் செய்தியை அவனுக்குத் தெரியப்படுத்தினார். இவன் தகுந்த பருவத்தை யடைந்ததும் பெரு முயற்சி செய்து தன்னுடைய நாடு நகரம் முதலியவைகளையெல்லாந் திரும்பப் பெற்றான். இவனுடைய முயற்சியையும் அறிவுநலத்தையும் வியந்து திரமிடன் என்னுங் கந்தருவ மன்னன் இவனைத் தன்னுடைய ஊருக்கு அழைத்துச் சென்று தன்னுடைய மகளை இவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். பிறகு இவன் தன்னுடைய நகரத்தை யடைந்து அரசாட்சியை மேற்கொண்டிருந்தான்.

**தருமசாமி** - இவன் பல நூற்றாண்டுகட்கு முன்பு பாண்டி நாட்டில் வாழ்ந்திருந்தான். இவனுடைய தந்தையின் பெயர் சிவசாமி. தாய் பெயர் புனிதவதி. இவன் தோன்றிய குலம் அந்தணர் குலம். இவன் தகுந்த பருவத்தை யடைந்ததும் தந்தை இவனைத் தனியே வாழுமாறு ஏற்பாடு செய்தான். திருமணம் புரிவித்து மிகுந்த பொருளையும் வழங்கினான். தருமசாமி ஒழுங்காக வாழ்க்கையை நடத்தவில்லை. சிற்றினத்தார் சிலரைச் சேர்ந்து நடந்தான். அனங்க மோகினி யென்னும் அழகிய கணிகை

யொருத்தியின் மையலிற் சிக்கினன். தன்னுடைய பொருள்களையெல்லாம் அழித்தொழித்தான். பலரும் இவனை இகழ்ந்தொதுக்கினர்.

**தருமசாவகன்** - நாகபுரத்தின் அயலிடத்ததாகிய ஒரு சோலையில் இருந்த பௌத்த முனிவன். இவன் புண்ணியராசனுக்கு அறவுரை கூறியவன்.

**தருமசேனர்** - சைவ சமயாசாரியர்கள் நால்வரில் ஒருவராகிய திருநாவுக்கரசர் சமண சமயத்தில் இருந்தபொழுது வழங்கிய பெயர்.

**தருமதத்தன்-(க)** காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த ஒருவணிகன். இவன் மதுரைக்குச் சென்று பெரும் பொருளீட்டி எட்டிப் பட்டம் பெற்றவன். இறக்கும் வரையில் திருமணஞ் செய்து கொள்ளாமலிருந்தவன்.

**தருமதத்தன்-(உ)** தருசகனுடைய அமைச்சர்களில் ஒருவன் ஆருணியோடு போர் செய்தற்குச் சென்றபொழுது உதயணனுக்கு உதவியாக அனுப்பப்பட்டு முன்படையில் நின்று போர் செய்தவீரன். ஆருணியை வெல்வதற்குக் காரணமாக இருந்தது பற்றி உதயணனால் பாராட்டப் பெற்றவன்,

**தருமதத்தன் (ங)** - அரிபுரத்தில் இருந்த தேவதத்தன் என்பவனுடைய மகன். இவனுடைய பெயர் தனதத்தன் எனவும் வழங்கியது. இவனுடைய தந்தை இவனுக்குத் தேடி வைத்த பொருளைப் பொன் செய்து தருகிறேன்' என்று கூறிக்கபடத் துறவியொருவன் கவர்ந்து கொண்டு போய் விட்டான். இதனால் ஏக்கமடைந்த இவன் இறந்து நல்வினை சிறிதும் இல்லாதபடியினால் காட்டானையாகப் பிறந்தான். ஒரு நாள் உசத்திய முனிவர் என்பவரைத் தூக்கிச்சென்றான். முனிவர் இவனுடைய முன்னைய நிலையை அறிவுப் பார்வையால் உணர்ந்தார். தம்முடைய நல்வினையில் சிறிதை இவனுக்கு வழங்கினார் அதனால் யானையாக இருந்தவன் தேவ உருப்பெற்றான். இவன் காட்டானையாயிருக்கையில் உசத்திய முனிவர் மகள் இந்த யானையைக்கண்டு அஞ்சி மடுவில் குதித்து உயிர் விட்டாள்.

**தருமநந்தன்** - இவன் திங்கட் குலத்து மன்னனாகிய நந்தன் என்பவனுடைய மகன். இவன் அரசர் குலத்திற் பிறந்தும் வஞ்சகக் குணங்கள் உடையவனாக விருந்தான். ஒருநாள் இவன் வேட்டைக்குச் சென்றான். அடர்ந்த காடொன்றிற் புகுந்தான். உடன் வந்தோரனைவரையும் பிரிந்து விட்டபடியால் தனியனாய்க் கலங்கித் தவித்தான். கொடிய விலங்குகட்கஞ்சி இரவில் ஒருமரத்திலேறி அமர்ந்திருந்தான். கரடி முகமும் மனித உருவமும் உடைய சானகன் என்னும் வேடன் ஒருவன் ஓர் அரிமாவைக் கண்டு அஞ்சி ஓடிவந்து இந்த அரசனிருந்த மரத்தின் மீதே யேறினான். முதலில் அரசன் அஞ்சினான். ஆயினும் பிறகு தேறித் தெளிந்தான். இருவருந் தெளிந்திருந்தனர். ஓடிவந்த அரிமாமரத்தினடியில் வந்து தங்கி நின்றது. அவ்வரிமா முன் பிறப்பில் ஒரு கந்தருவன். ஆகவே அதனிடம் பேசுதல் முதலிய பண்புகள் அமைந்திருந்தன. ஆனால் கொண்டுள்ள வடிவத்திற்குத் தக்க கொடுமையுங்குடி கொண்டிருந்தது. மரத்தின் மேலிருந்த இருவரும் ஒருவருக்கொருவர் துணை புரிந்து கொள்வதெனவும் ஒருவர்

உறங்குங்கால் மற்றவர் விழித்திருப்ப தெனவும் முடிவு செய்து கொண்டனர். முதலில் அரசன் உறங்கினான். சானகன் காவலாக விழித்திருந்தான் ''மந்தன் கொடியவன். அவனைக் கீழே தள்ளிவிடு. நான் அவனை உண்டுவிட்டு உன்னோடு நட்பாக இருக்கிறேன்'' என்று சானகனிடங் கூறியது. ''நம்பியவனுக்குக் கேடு செய்ய மாட்டேன்'' என்று கூறிச் சானகன் மறுத்து விட்டான். பிறகு சானகன் உறங்க அரசன் விழித்துக் கொண்டிருந்தான். அரிமா, ''அவனைக் கீழே தள்ளிவிடு நான் அவனைத் தின்றுவிட்டுப் போய் விடுகிறேன். பிறகு நீ உன்னுடைய விருப்பம் போற் செல்லலாம்'' என்றது. கொடியவனாகிய தருமந்தன் சானகனைக் கீழே தள்ளினான். தான் செய்த காரியத்தால் தருமந்தன் இழிந்தவனானான். சானகனை அரிமா உண்ணவில்லை. அதனுடைய வசவுரை முடிந்து அஃது பழைய உருப்பெற்று அவ்விடம் விட்டுச் சென்றது.

**தருமபாதன்** - இவன் செல்வமுள்ள ஒரு வணிகன். செல்வங்களைத் தருமத்தில் செலவிட்டுக் காசியில் ஒரு குளத்தைத் தோண்டினான். பிறகு இவன் வறியவனானான். ஓர் அந்தணன் இடத்தில் (௩௦௦) பொன்கடன் வாங்கினான். கடனைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. தான் தோண்டிய குளத்தை அவ்வந்தணனுக்குக் கொடுத்தான். அந்தணன் அறநூல் உணர்ந்தவர்களிடம் '' நான் இக்குளத்தை எவ்வளவு காலம் வைத்திருக்கலாம்? என்று உசாவினான். அவர்கள், இக்குளத்தில் ஒரு கல்லைப் போட்டால் அது மிதக்கும் வரையில் வைத்திருக்கலாம்'' என்று கூறினார்கள். உடனே ஒரு கல்லையெடுத்து அக்குளத்திலிட்டனர். ஓர் ஆவுங்கன்றும் வந்துஅக்குளத்தில் நீரருந்தின. குளத்திலிட்டகல் மேலெழுந்து மிதந்தது. குளத்தைவணிகன் வசமாக்கினர்.

**தருமபாலர்** - இவர் காஞ்சி மாநகரிற் பிறந்தவர். சிறந்த மெய்யறிவாளர். இவரை வடநாட்டார் அழைத்து நாளந்தா பல்கலைக்கழகத்தின் தலைவராக்கினார்கள்.

**தருமபுர ஆதீனம்** - தென்னாட்டில் சுத்தாத்துவித சைவசித்தாந்தக் கொள்கையை மேற் கொண்டுள்ள ஆதீனங்களில் இதுவும் ஒன்று. கயிலையில் சிவபிரான் நந்திதேவருக்கு அருளிய மறைமொழி சந்தான குரவர்களின் வழி கமலைஞானப் பிரகாசருக்குக்கிடைக்க, அவர் அதனைக் குருஞான சம்பந்தருக்கு அருளினார். அவர்தம்அறிவாசிரியர்அருளிய அறிவு மறைமொழியைப் பின்பற்றித் தருமையில் அகத்திய முனிவரின் மாணாக்கர்கள் வாழ்ந்த மடத்தில் எழுந்தருளியிருந்து சிவ அனுபவம் துய்த்தார். அருள்வேட்கை கொண்ட மாணவர்களுக்கு அருளுரை வழங்கினார். தம்மைச்சார்ந்தவரனைவரையும் அறிவுநெறி (ஞான மார்க்கம்)யைப் பின்பற்றச் செய்தார். இத்திருக் கயிலாயமரபே தருமையாதினக் குரு மரபாகும். அவர்கள் ''சைவ சமயமே மெய்ச்சமயம்'' என்பதில் தெளிந்த நோக்கங் கொண்டு பன்மொழி அறிவும் வாய்ந்தவர்களாயிருந்தனர். தமிழிலும் வடமொழியிலும் சமய நூல்கள் பல வெளியிட்டனர். இந்த ஆதீனம் 16 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் குருஞான சம்பந்தரால் தோற்றம் பெற்றது.

**தருமி** - முன்னாளில் மதுரையில் இருந்த ஓர் அந்தணன். மதுரையில் எழுந்தருளிய பெருமான் மீது மிகுந்த அன்புடையவன். வமிசசூடாமணிப் பாண்டியனுடைய கருத்துக் கிணங்கச் செய்யுள் ஒன்று செய்து தருமாறு அப்பெருமானை வேண்டிக் கொள்ள அவரும் "கொங்கு தேர் வாழ்க்கை" என்று தொடங்குஞ் செய்யுளை இவனுக்குப்பாடிக்கொடுத்தார்.

**தர்மசுவாமி** - இவனுடைய தந்தை சிவசுவாமி என்பவர். தர்மசுவாமி நன்கு கற்றவன். அங்ஙனமிருந்தும் ஊழ்வலியால் வேசையர் சேர்க்கையாலும் கள்ளுண்ணல் முதலிய தீச்செயல்களாலும் அறிவுதிரிந்தான். அறிவு தெளிந்து பெரியோரிடம் கழுவாய் கேட்க அவர்கள்இவன்வாயில்காய்ச்சிய நெய்யை ஊற்ற முயல்கையில் நாரதர் தோன்றிச் சித்திரா நதியில் குளிக்கச் செய்ய மறம் நீங்கினான்.

**தர்மவாதி** - திரிசங்குவின் மனைவி. நீண்ட நாட்களாக மக்கட்பேறு இல்லாதிருந்து ஒரு நாள் திருமால்இவள்கனவில்எழுந்தருளி, கனி யொன்று கொடுக்க அதனை உண்டமையால் அம்பரீடன் என்றவனை ஈன்றாள்.

**தர்மவியாதன்** - ஒரு வேடன்; மிதிலாநகரத்தில் இருந்தவன். ஆசிரியரிடத்தில் அன்பு முதலிய நல்லியல்புகளுடையவன். ஊன்விற்றலையே தொழிலாகக் கொண்டவன்; மறையவனுக விருந்து வசவுரைப் பலனால் இவ்வாறு பிறந்தான். இவன் மெய்யறிவிற் சிறந்து விளங்கினான். தன்னிடம் வந்த ஒரு மறையவனுக்கு மெய்யறிவைப் போதித்தான்.

**தலசயனம்** - திருமால் திருப்பதிகளில் திருமால் நிலத்திற்பள்ளி கொண்ட திருக்கோலமுள்ள இடங்களுக்குத் தலசயனத் தலங்கள் என்று பெயர். மகாபலிபுரத்தைக் "கடன் மல்லைத் தலசயனம்" என்பர்.

**தலாய்லாமா** - இது திபேத்து நாட்டின் சமயத் தலைவருடைய பட்டப் பெயர். இவரே நாட்டின் ஆட்சிக்குந் தலைவராவார். இவர் கடவுளுடைய அதிகாரம்பெற்றவராக (பிரதிநிதியாக) மக்களால் எண்ணப்படுகிறார். தலைநகரின் புறத்தேயுள்ள குன்றின் மீது கல் அரண்மனையில் வாழ்கிறார். புதிய தலாய்லாமா சமயத்தலைவர்களாலும் அரசியல் தலைவர்களாலும் தெரிந்தெடுக்கப்படுகிறார். தலாய்லாமாவைச் சிறு குழந்தைப் பருவத்திலேயே தெரிந்தெடுப்பது வழக்கம்.

**தலைக்காவிரி** - காவிரியாறு மேற்குத் தொடர்ச்சிமலையில் குடகு நாட்டுச்சையமலையில் தோன்றுகிறது. குடகு நாட்டுமக்கள் காவிரி தோன்றுமிடத்தில் முப்பதடி சதுரமுள்ள ஒரு தடாகத்தை அமைத்துள்ளனர். அக்குளத்தில் எப்பொழுதும் இரண்டரை அடி ஆழமே நீர் நிரம்பியிருக்கும். எஞ்சிய நீரெல்லாம் மடைகளின் வழியாக வழிந்து விடும். அக்குளக் கரையில் காவிரியம்மன் கோயிலும் அமைந்துள்ளது. இந்த இடத்திற்குத் தலைக்காவிரி என்று பெயர் வழங்குகிறது. தலைக்காவிரியில் நீரூற்று என்றும் வற்றாமல் சுரந்து கொண்டேயிருக்கிறது. அது புனித நீராகக் கருதப்படுகிறது. தலைக்காவிரியில் இருந்து பெருகும் நீர் முழுவதும் பல காடுகளைக் கடந்து மலைகளின் வழியாகப் பாகமண்டலம் என்ற இடத்தினை யடைகிறது.

அங்கிருந்து தான் காவிரி ஆறு என்னும் பெயரைப் பெறு கிறது.

**தலைமன்னார்** - ஈழ வள நாட்டில் மன்னார் தீவின் தலைப்பில் இருக்கும் பட்டணம். இலங்கையின் புகை வண்டிப் பாதை இங்கே முடிகிறது. தனுக்கோடியில் முடிவடையும் இந்தியப் புகை வண்டிப் பாதையுடன் நீராவிப் படகுப் போக்குவரத்தால் இணைக்கப்பட்டிருக்கிறது. இடையில் உள்ள தொலை இருபது மைல். இதுவே இந்தியாவுக்கும் இலங்கைக்கும் உள்ள மிகக் குறுகிய வழி. இலங்கைக்கும் இந்தியாவுக்கும் போக்குவரத்து இவ்வழியாகவே நடைபெறுகிறது.

**தலையாலங்கானம்** - தலையாலங்கானம் என்பது சோழ நாட்டில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த நன்னிலம் வட்டத்திலுள்ள ஓர் ஊர். இது பிற்காலத்தில் தலையாலங்காடு என்று வழங்கலாயிற்று. (திருத்தலையாலங்காடு) இஃது அப்பருடைய தேவாரம் பெற்ற திருவூராகும். சங்க இலக்கிய காலப் போர்களிலே பெரும் புகழ் பெற்ற போர் இங்கு நடந்த தலையாலங்கானத்துப் போரேயாகும்.

**தல்பாசுரன்** - இவன் பேராற்றல் படைத்தவன். ஆனைமுகக் கடவுளைக் குழந்தைப் பருவத்திற் கொலை செய்ய வெண்ணிக் கட்டிலோடு விண்ணில் தூக்கிக் கொண்டு பறந்து சென்று அக்கடவுளாற் கொல்லப்பட்டான்.

**தவளகிரி முதலியார்** - கம்பர் தொண்டை நாடு சென்ற போது இவரில்லம் அடைந்தார். விருந்தின்போது இவர் மகன் பாம்பாலிறந்தமை அறிந்து "ஆழியான் பள்ளியணையே" என்ற செய்யுளால் மகனை உயிர் பெறும்படி செய்து, வேளாளர்மீது ஏரெழுபதும் பாடினார். பின்பொருகால் இவர் மகன் ஏரெழுபதின் மெய்ம்மை நாட்ட, காய்ச்சிய நெய்யில் முழுகிக் கையில் மழுவேந்தினார்.

**தவளமலை** - "சாவகம்" என்னும் நாட்டில் உள்ள ஒரு மலை.

**தழும்பன்** - சிறந்த கடற்கரைப் பட்டினமாக விளங்கிய மருங்கூர்ப் பட்டினத்தை யடுத்துத் திகழ்ந்த ஊணூர் என்னும் சிற்றூரில் வாழ்ந்திருந்தவன். செல்வ நலத்தினும் பிறநலத்தினுஞ் சிறந்து விளங்கிய இவன்கொடை நலத்தினும் சிறந்து விளங்கினான். அரசர்கட்குப்போரில் உதவிசெய்வதுஇவனுடைய தொழில். இவன் ஒரு முறை ஒரு யானையால் மிதிக்கப்பட்டுப் பெரும் புண் பெற்றான். இவனுடைய சிறப்பு மன்னர்களுடைய சிறப்பைப் போலவே திகழ்ந்தது. பரணர் நக்கீரர் முதலிய பெரிய புலவர்கள் பலரும் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளனர். இவனுடைய பெயர் தழும்பு பெற்றபடியால் உண்டான காரணப் பெயர். இவனுடைய இயற் பெயர் இன்னதென்று தெரியவில்லை.

**தளவாய் இராமப்பையன்** - மதுரையில் இருந்து தமிழ் நாட்டை யாண்டு கொண்டிருந்த திருமலை நாயக்கரால் கொங்கு நாட்டு அதிகாரியாக ஏற்படுத்தப்பட்டவன். நிலவரி கொடுக்கத் தவறிய பெருநிலக் கிழார்களையெல்லாம் சங்ககிரிக் கோட்டையில் சிறை வைத்தவன். சிறந்த வள்ளலாக விளங்கிய சம்பந்தச் சர்க்கரை ஒரு புலவருக்குத் தன் மனைவியின் தாலியைக் கொடுத்ததைக் கண்டு எல்லோரையுஞ்

சிறையில் இருந்து விடுதலை செய்தவன்.

**தளவாய்க் குமாரசாமி** - கட்டபொம்முவினுடைய வழி முறையில் பன்னிரண்டாவதாக வீர சூடாமணி என்பவனுடைய மகனாகத் தோன்றிய இவன் பாஞ்சாலன் குறிச்சியில் இருபத்து மூன்று ஆண்டுகள் அரசாட்சி செய்திருந்தான். இவனுடைய மகன் பெயர் வீரமல்லு.

**தளவானூர்** - இவ்வூர் தென்னார்க்காடு மாவட்டம் திண்டிவனம் தாலுகாவில் உள்ளது. இவ்வூரில் மகேந்திர பல்லவவர் மனால் குடையப்பட்ட சத்துரு மல்லேசுர்ராலயம் என்னும் பெயருடைய குகைக் கோயில் ஒன்று உள்ளது.

**தன குத்தன்** - ஒரு வாணிகன். திருச்சிராப்பள்ளியில் வசித்தவன். இவனுடைய மனைவியின் பொருட்டு இறைவன் தாயாக வந்து உதவி புரிந்து "தாயுமானவர்" என்ற பெயர் எய்தினார்.

**தனபாலன்** - இவன் இயக்கர் குலத்தில் தோன்றியவன். புகழுஞ் செல்வமும் இவனிடம் பொருந்தியிருந்தன. இவனுடைய மனைவியின் பெயர் பதுமினி. இவனுடைய நுண்ணிய அறிவு நலத்தை நன்கு மதித்த குபேரன் இவனைத் தன்னுடைய அமைச்சனாகக் கொண்டான். இவன் கிருதாசி என்னுந் தேவ கணிகையினிடத்தில் தன்னுடைய உள்ளத்தைச் செலுத்தியபடியால் எல்லா நலன்களையும் இழந்து மிகுந்த துன்பத்தை யடைந்தான்.

**தனலட்சுமி** - இவளுக்கு நான்கு தோள்கள். இவள் இரண்டு கைகளில் தாமரை மலர் வைத்திருப்பாள். ஒரு கையில் பணப் பெட்டி வைத்திருப்பாள். மற்றொரு கை அஞ்சலளித்துக் கொண்டிருக்கும். திருமகளின் எண் கூறுகளில் ஒரு கூறாக விளங்கும் இவளைப் போற்றுவோர் பொருட் செல்வத்தை மிகுதியாகப் பெறுவர்.

**தனுசாடர்** - இவர் ஒரு விட்டுணு அடியார். சில வைணவப் பெரியார்கள் இவர் ஏழு அகவையாக இருக்கும்போது இவர் வீட்டினை எய்திச் சாளக்கிராம வழிபாடு புரிகையில், இவர் தாமும் அவ்வாறு செய்ய அவர்களை வேண்ட அவர்கள் இவன் இளையனென்று ஒரு கல்லை இவரிடமீந்து சென்றனர். இவர் தாம் உண்ணும் உணவை நாள்தோறும் அக்கல்லினுக்குப் படைத்துப் பின்பு தாம் உண்டு வந்தனர். ஒருநாள் கழனியில் நெல்விதைக்கக் கொண்டுபோம் பொழுது அரிதாசர் பசித்து வரத் தாம் கொண்ட நெல்லை அவர்களுக்கு அமுது செய்திட்டனுப்பினார். இவ்வாறு விதைக்க விதையிலாது அடியார்கட்கு உணவூட்டி வரும் பொழுது, விதையின்றிக் கழனியில் பெரு விளைவு செயக்கண்ட அயலார் இவரை அருட்பெரியார் என்று போற்றினர்.

**தனிச்செய்யுட் சிந்தாமணி** - பொருட் டொடர்பின்றித் தனித் தனிச் செய்யுட்களாகப் புலவர் பெருமக்களாற் பாடப்பெற்ற செய்யுட்களின் தொகுப்புத் தனிச் செய்யுட் சிந்தாமணி என்று பெயரிடப்பட்டது. தனிப்பாடல் திரட்டும் புலவர்களின் தனி நிலைச் செய்யுட்களின் தொகுப்பே யாகும். மு. இராகவ ஐயங்காரால் தொகுக்கப்பட்ட பெருந்தொகை என்பதும் தனிப் பாடல்களின் தொகுப்பே

யாகும். தனிச் செய்யுட் சிந்தாமணி தனிப்பாடல் திரட்டின் செய்யுட்களையும் உள்ளடக்கிக் கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலரால் முதலில் தொகுக்கப்பட்டது. பிறகு மு. ரா. கந்தசாமிக் கவிராயர் மேலும் பல பாடல்களைத் தொகுத்து விரிவுபடுத்தினர்.

**தனியூர்ச் சேந்தர்** - இவர் முற்காலத்தில் இருந்த பெருந் தமிழ்ப் புலவர்களில் ஒருவர். இவர் ஒளிச்செங்கோ என்னும் மன்னன் அமைத்த மணிமலைத் தமிழ்ச் சங்கத்தில் ஒரு புலவராக இருந்தவர். ஒளிச்செங்கோ சீனம், கடாரம் முதலிய நாடுகளை வென்று அடிப்படுத்தியதைக் குறித்துச் செங்கோன் தரைச் செலவு என்னும் நூலைப் பாடினர். அந்நூல் தாப் புலிப்பா என்னும் பாவினத்தால் அமைந்தது. இந்நூல் மறைந்து போன தமிழ் நூல்களில் ஒன்று.

**தனு** - ரம்பன், கரம்பன் என்பவர்கள் இவனுடைய புதல்வர்களாயிருந்தார்கள். இவர்களிருவரும் மக்கட் பேற்றுக்காகப் பஞ்சநதமென்னும் ஆற்றின் கரையில்நோன்பாற்றும்போது இந்திரன் முதலையாக வந்து கரம்பனை ஆற்றில் இழுத்துக் கொன்றனன். இது தெரிந்து ரம்பன் உயிர்விட முயலும் போது தீக்கடவுள் தோன்றி என்ன வரம் வேண்டுமெனக் கேட்க, புதல்வன் வேண்டும் என்று ரம்பன் சொல்ல அப்படியே புதல்வர்ப் பேறு பெற்றான்.

**தன்மநிட்டை** - முன் பிறப்பில் இவள் புலைச்சியாகப் பிறந்தவள். ஆவிற்கு நீரூட்டிச் சிவபிரான் கோவிலில் செல்வம் திருடியபடியினுல் விருகன் என்ற மன்னவனின் புதல்வியாகத் தோன்றி, தந்தையின் ஊழ் வலியால் நாட்டினை இழந்து நலியுங்காலை இவள் காட்டில் திரிந்து புண்ணிய நதியின் ஒரு பக்கம் இறைவியை அன்புடன் வழிபட இறைவியருளால் பல வரங்கள் எய்தியவள்.

**தன்வந்திரி** - தேவர்கள் திருப்பாற் கடலைக் கடைந்த காலத்தில் அதிலிருந்து பிறந்தவன்; மருத்துவ நூலில் வல்லவன். ஆயுர்வேதத்தை வெளிப்படுத்த எண்ணித் தீர்க்கதன்மன் என்பவனுடைய மகனாக மீளவும் பிறந்தவன்.

(உ) விக்கிரமார்க்கனுடைய அவையில் விளங்கிய ஒன்பது வடமொழிப் புலவர்களில் ஒருவன். இவன் செய்த வடமொழி நிகண்டு தன்வந்திரி நிகண்டெனப் பெறும்.

**தாக்கர்** - அயன் என்பவனின் புதல்வனாகிய துந்து என்பவனுக்குப் பிரமகத்தி நீங்குவதற்கு அருள் புரிந்த முனிவர்.

**தாசமனு** - இவன் நாலாவது மனு. சுராட்டிரன் என்னும் பெயருடைய மன்னனாகி அரசாட்சி செய்து கொண்டிருந்த இவன் வினைப் பலனால் நாடிழந்து காட்டில் தவமியற்றிக் கொண்டிருக்கையில் பெரு மழை பிடித்து இவனை வெள்ளமடித்துக் கொண்டு செல்லும் பொழுது ஒரு வால் இவன் பிடியுள் சிக்கவே, அதனைப் பற்றிக் கரையேறி, அடுத்த காட்டை அடைந்ததும் தான் பற்றியது மிருகமென்று தெரிந்து அம் மிருகத்தைத் தழுவ விரும்பவே அம் மிருகம் முன் பிறவியில் இவனுடைய முதல் மனைவியும் திருடதன்வன் என்னும் அரசன் புதல்வியுமாக இருந்து ஒரு

முனி புதல்வனின் வசவுரை யால் மிருகமாகி இவன்கைபட்ட தாலேயேகருத்தரித்து, அக் கரு வில்தோன்றி இருடிகளால் தாச மனு என்ற பெயர் எய்தி, பிறகு அகத்தியரால் யானை வடிவு எய்தி விட்டுணுவின் சக்கரத்தால் விடுதலை பெற்ற னன்.

**தாசராசன்** - (1) நயினுசாரியா ரால் வைணவனுக்கப்பட்ட அந்தணன். தாசரதி என்ற மற்றுமொரு பெயரும் இவ னுக்கு உண்டு.

(2) பிரமனின் தீச் சொல்லால் மீன் வடிவு பெற்றிருந்த தெய்வப் பெண்ணின் மீன் வடிவை நீக்கிப் பெண் வடி வாக்கினவன். மச்சகந்தியின் தகப்பன்.

**தாசூரன்** - இவன் சரலோமாவின் புதல்வன். தன் உடலை நீக்கித் தேவ உருக்கொண்டு வேள்வி செய்தவன்.

**தாச்மகால்**-மொகலாயப் பேரரசர் ஷாஜகானுல் தம் இரண்டாம் மனைவியான அர்ஜமத்துபானு (மும்தாஜ்மகால்) தன் பதினுன் காம் பிள்ளைப்பேற்றில் இறந்து போன பொழுது அவள் நினைவுக்கு அறிகுறியாக 'மும் தாஜ் மகால்' என அவள் பெயரமையக் கட்டிய கட் டிடமே 'தாஜ் மகால்' என வழங்கப்படுகின்றது. அழகு வாய்ந்த கட்டிடங்களில் உலகிலேயே இது தலைசிறந்த தாகக் கருதப்படுகின்றது. 'மும்தாஜ் மகால்' என்ற சொல்லுக்கு அரண்மனையின் அணிகலன் என்பது பொருள். மும்தாஜ் மகால் 1631-இல் பர் காம்பூரில் இறந்தாள். அவளைத் தற்காலிகமாகப் பர்காம்பூரில் அடக்கம் செய்து விட்டு, தாஜ் மகால் கட்டி முடித்த பிற்பாடு அவ்விடத்தில் மீண்டும் அடக் கம் செய்தனர். 1632-இல் கட்டிட வேலை தொடங்கி 1653இல் கட்டி முடிக்கப் பட்டது. எந்த நாட்டிலும் ஒரு பெண்ணுக்கு இதுபோன்ற நினைவுச் சின்னம் கிடையாது. விலையுயர்ந்த நவமணிகள் பதித்த பளிங்கினுல் கட்டப் பட்ட இம் மகால் காலையிலும், மாலையிலும், இரவிலும் பல் வேறு வண்ணங்களைக் காட்டு கின்றது. இயற்கையழகும் செயற்கையழகும் வாய்ந்து திகழ்கின்றது.

**தாடகேச்சுரம்** -திருப்பனந்தாளில் உள்ள சிவபிரான் திருக்கோயில் இப் பெயர் பெறும். தாடகை யென்பாள் வழிபாடியற்றிய சிவப்பதியாகலின் இவ்வாறு பெயர் பெற்றது.

**தாடகை** - (1) சுந்தனின் மனைவி. சுகேதுவின் புதல்வி. சுந்தன் அகத்தியரின் சினத்தால் இறந்து விடவே அகத்தியரைச் சென்று துன்புறுத்தினுள். அகத்தியர் இவளையும் இவள் புதல்வர்களையும் அரக்கர்களா கும்படி வசவுரை வழங்கினுர். இவள் அரக்க வடிவுடன்முனி வர் இயற்றும் வேள்விகளைக் கலைத்து வரவே விசுவாமித்திர ரின் ஆணையால் இராமபிரானுல் கொல்லப் பெற்றுள்.

(2) சிவபிரானிடம் அன்பு பூண்டவள். திருப்பனந்தாளில் இருந்தவள். இறைவனுக்குத் திருமஞ்சன முதலிய முடித்து மாலை சாத்தும்போது உடை சரிந்தது கண்டு அவ் ஆடையை முழங்கையால் இடுக்கிக் கொண்டு மாலை சாத்தலுக்குத் தடை ஏற்படுவது கண்டு மிகவும் மனம் வருந்தவும் இறைவன் தமது முடியைச் சாய்த்துக் கொடுக்கும் பேறு பெற்றவள்.

**தாட்சாயணி** - பார்வதி தேவி தக்கன் மகளாய்ப் பிறந்து சிவனை மதிக்காது தகப்பன் செய்த வேள்வியில் வீழ்ந்து உடல் நீத்தவள்.

**தாண்டவ முதலியார்** - இப் பெயருடைய முதலியார் முன்னாளில் ஈரோட்டில் வாழ்ந்திருந்தார். கூலிக்கு நெசவு செய்து வாழ்க்கை நடத்திய கைக்கோளர். இவர் இறைவழி பாட்டில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தார். நாள் தோறும் நெசவுத் தொழில் முடித்து வீடு திரும்பும்போது ஈரோட்டுப் பெருமானை வணங்கிச் செல்லும் வழக்கமுடையவர். ஒரு நாள் இறைவர் முதுமைக் கோலத்தோடு முதலியார் முன் தோன்றித் தமக்கு இரு முழத் துண்டு ஒன்று வேண்டுமென்று இரந்தார். இளகிய மனமுடைய தாண்டவ முதலியார் அடியவர்கட்குச் செய்யும் உதவி ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டு என்று எண்ணினார். தாம் கூலி வேலை செய்யும் முதலாளியிடம் நெசவுக் கூலியில் இருந்து ஒரு துண்டை வாங்கிக் கொடுத்தார். மறுநாட் காலையில் கோயிலைத் திறந்த பூசகர் பரிவட்டம் புதிதாக இருப்பதைக் கண்டார். பரிவட்டத்தின் வேலைப்பாட்டைக் கொண்டு தாண்டவ முதலியார் நெய்தது என்று அறிந்தார். செய்தியைஉணர்ந்த ஊரார்கள் யாருக்குந் தெரிவிக்காமல் இரவில் கோவிலைத் திறந்து தாண்டவ முதலியார் பரிவட்டத்தைத் தாமே சாத்தியது குற்றம் என்று கூறி முதலியாரை நையப் புடைத்தனர். பிறகு உருவிலி வாக்கு விண்ணில் தோன்றி உண்மையை வெளிப்படுத்தியது. அதன் பின்னரே ஊரார்கள் தாண்டவ முதலியாரின் பெருமையை உணர்ந்தனர். இச் செய்தியை, "தாண்டவன் எனும் பெயரான் தனிநாதனை வணங்கி வந்தான், ஆண்டவன் ஆட்கொண்டார் இந்த அன்பினை யார் பெறுவார்" என்னும் பாட்டின் அடிகளும் உறுதிப் படுத்துகின்றன.

**தாண்டவ விநாயகர்** - திருப்பேரூரில் உள்ள ஒரு பிள்ளையாருடைய பெயர். இப் பிள்ளையார் கூத்தாடுங் கோலமாக நின்றிருப்பதால் இவ்வாறு பெயர் பெற்றார்.

**தாதன்**-கம்பர் வாழ்ந்த காலத்தில் சோழனிடம் பரிசு பெற்ற வாணியன். சோழன் பரிசு கொடுப்பதைக் கம்பர் தடுக்கவும், இவன் கம்பரிடம் சினந்து அவர் பாடிய மும்மணிக் கோவையைக் குற்றங் கூறிக் கம்பருக்குவசைமொழியும்வழங்கியவன். இவன் சோழன்பால் பரிசாகப் பெற்ற ஊர் தொண்டை நாட்டிலுள்ள கூவம் என்ப.

**தாதாசாரி** - அப்பைய தீட்சிதருடன் சொற்போ ரிட்டவர். காஞ்சிபுரத்திலிருந்த வைணவ அந்தணர்.

**தாதுகதை** - அபிதர்மபிடகத்தின் பகுதிகளில் ஒன்று. கௌதம புத்தர் நிருவாணமடைந்த பிறகு அவருடைய உடம்பில் இருந்த எலும்பு முதலியவற்றுள் இன்ன இன்ன தாதுவை இன்னார் இன்னார் கொண்டு போனார்களென்பதைக் கூறுவதால் இந்நூல் இப்பெயர் பெற்றது.

**தாமக்கிரந்தி** - பாண்டவர்களில் ஒருவனாகிய நகுலன் 13ஆவது ஆண்டில் கரந்துறைதலை மேற்கொண்டு விராட நகரத்தில் விராட மன்னனுடையகுதிரைக்

காரணை அமைந்திருந்தபோது இப்பெயரை மேற்கொண்டிருந்தான்.

**தாமத்தர்** - திருவள்ளுவரியற்றிய திருக்குறளுக்கு உரை எழுதிய உரையாசிரியர்களுள் ஒருவர்.

**தாமாசி பண்டிதர்** - பேதரி என்ற நகரில் வசித்த அந்தணர். மிலேச்ச மன்னனொருவனுல் மங்களவேடு என்னுங் கிராம அதிகாரியாகி, இறையன்பு மிகுதியால் இறைவனுக்கும் இறையன்பர்களுக்கும் செல விட்ட பின்பு வற்கடம் தோன்றவே ஆங்குள்ள மக்கள் அன்ன நாட்டமுடையராய் மன்னனின் கூலங்களைக் கொள்ளையிட்ட செய்தியை மன்னன் உணர்ந்து இவரைத் தண்டிக்கும் பொருட்டு இவரை வரவழைக்க, பெருமாள் ஒரு வெட்டியானைப் போன்ற வேடம் பூண்டு மன்னனுக்குச் சேர வேண்டிய பொருள் முழுதையும் தாங்கிப் பண்டிதர் கடிதம் போலொரு கடிதம் கொடுத்து மன்னனிடம் பொருள்கொடுத்ததற்குஏற்புச் சீட்டுப் பெற்றுப் பண்டிதர் இருக்குமிடம் வந்தனர். இதற்குள் பண்டிதர் மன்னனிடம் வர, மன்னன் எதிர்கொண்டு வரவேற்று நடந்தவை கூறப், பண்டிதர் தம் பொருட்டுப் பெருமாள் எழுந்தருளியது குறித்து மனம் நொந்து மன்னனை விட்டு நீங்கித் திருத்தொண்டில் தலை நின்றனர்.

**தாமான் தோன்றிக்கோன்** - தோன்றி என்பது ஒரு மலை. அதற்கு இவன் உரியவனுக இருந்தபடியால் தோன்றிக் கோன் எனப்பட்டான். இவனுடைய இயற்பெயர் தாமான் என்பது. இவன் ஒரு சிறந்த வள்ளல். பரிசில் நாடி வந்த அனைவரையும் பாராட்டிப் போற்றிப் பரிசிலளித்தான், இவனை ஐயூர் முடவனர் புகழ்ந்து பாடியுள்ளார்.

**தாமிரவருணி** - மேற்குத் தொடர்ச்சி மலையின் தென் கோடிப் பகுதியான அகத்தியர் மலையில் ஐந்து முடிகளடங்கிய ஓர் இடம் உண்டு. இவ்விடம் பிறவிடங்களினும் மிகவுயர்ந்தது. தாமிரவருணியாறு இந்த முடிகளில் இருந்து தோன்றுகிறது. இந்த ஆற்றினுடைய நீளம் எழுபத்தைந்து மைல். மலையின் முடியில் ஆண்டு தோறும் மூந்நூறு அங்குல மழை பெய்வதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

**தாமோதரன்** - தாமம் என்பது கயிறு. உதரம் என்பது வயிறு. கண்ணன் ஆயர் பாடியில் வளர்ந்த காலத்தில் யசோதைக்குப் பல தொல்லைகள் விளைவித்துக் கொண்டிருந்தான். அதனுல் யசோதை கண்ணனின் வயிற்றில் கயிறென்றைப் போட்டுக் கட்டி அதனை உரலோடு பிணித்திருந்தாள். இதனுல் கண்ணனுக்குத் தாமோதரன் என்று ஒரு பெயர் உண்டாகியது.

**தாயுமானர்** - திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளியிருக்கும் இறைவனின் திருப்பெயர். தனகுத்தன் என்பவனும் அவன் மனைவியும் திருச்சிராப்பள்ளியிலிருக்கும் பொழுது அவன் மனைவிக்கு பிள்ளைப் பேற்றுக் காலம் சமீபிக்க அவளுடைய தாய் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தவள் பெண்ணிற்கு உதவும் பொருட்டு எண்ணி வரும் வழியில் காவிரியின் வெள்ளப்பெருக்கால் மறுகரை சேர்ந்து பெண்ணிடம் வர இயலாது தவித்து நின்றனள். பெண் தாயை நினைந்து வருந்த இறைவன்தாய் வடிவு கொண்டு

பெண்ணிற்கு மருந்தெண்ணெய் முதலிய கொண்டு வந்து அப் பெண்ணுடனிருந்து பிள்ளை பிறந்தபின் ஏழாம் நாள் தொட்டிலில் இடவே ஆற்றில்வெள்ளம் வற்றியது. பெண்ணின் உண்மையான தாய் மகளிடம் வரத், தாய்வடிவில் ஆங்கு முன்பேயிருந்த இறைவன் காட்சி கொடுத்தனர். பெண் "என்தாயும் ஆனுரோ" என்று கூற அப்பெயர் வழங்கியது.

**தாரகன்** - (க) கண்ண பெருமானின் தேரோட்டி.
(உ) முருகப்பெருமானுல் கொல்லப்பட்ட அசுரன். சூரபன்மாவின் உடன் பிறந்தவன். ஒருகால் விட்டுணுவுடன் போர்புரிந்து அவர் ஏவிய சக்கரத்தை மார்பணியாகக் கொண்டவன். யானைமுகங் கொண்டவன். வீரவாகுவினை மாயையால் வஞ்சிப்பதற்காகக் கிரவுஞ்சத்தில் மறைந்து பின் வெளிப்பட்டுப் பூதப்படைகளைக் கொன்று மீண்டும் கிரவுஞ்சன் உதவியால் பல மாயப் போர்களாற்றி இறுதியில் வேலாயுதத்தால் வீரசுவர்க்கம் எய்தியவன். இவன் மனைவியின் பெயர் சவுரி.

**தாரகாந்தகன்** - சுப்பிரமணியக் கடவுளாகிய அறுமுகப்பெருமான் தாரகன் என்னும் அசுரனை அழித்தபடியால் தாரகாந்தகன் என்று பெயர் பெற்ருர்.

**தாரகாரி** - தருசகனுடைய அமைச்சர்களில் ஒருவன். உதயணன் ஆருணியோடு போர் செய்யச் சென்ற காலத்தில் உதவியாகத் தருசகனுல் அனுப்பப்பட்டவன்.

**தாரமங்கலம்** - இவ்வூர் சேலத்திற்கு வடமேற்கில் இருபது கல் தொலைவில் இருக்கிறது. இவ்வூரிலுள்ள கைலாசநாதர் கோவிலின் சிற்பச்சிறப்பு உலகப்புகழ் பெற்றது. இங்குள்ள சிற்பக்கலைத்திறனைப் பார்ப்பதற்கு மேனுட்டார்களும்வந்து செல்லுகின்றனர். கைலாசநாதர் கோவில் மேற்கு நோக்கி இருக்கிறது. மிகப் பெரிய தெப்பக் குளம் ஒன்று கோயிலின் பின்புறம் உள்ளது. இக்கோயிலைத் தவிர இவ்வூரில் உள்ள இளமீசுரர் கோயில் கயிலாச நாதர் கோயிலைப் போல் கருங்கல்லாற் கட்டப்படாமல் சிறுபசுமைநிறமுள்ள சுக்கான் பாறையால் முழுவதும் கட்டப்பட்டுள்ளது.

**தாருகாவனம்** - இந்தப் பெயர் பூண்ட காட்டிலிருந்த முனிவர்கள் இறைநினைவின்றிச் செருக்குக் கொண்டு தம்மனைவியர் கற்பே மிகவுயர்ந்தது என்று இறுமாந்து இருக்கவே, இறைவன் பிட்சாடன உருக் கொண்டு முனிபத்தினியரிடம் விருந்தினராய்ச் செல்ல அவர்கள் மனஉறுதி குலைந்து மனத் தாற்றழிவிக் கற்பழிந்தனர். பிட்சாடனருடன் மோகினி உருவில் சென்ற திருமாலின் பின் முனிவர்கள் சென்று மயங்கினர். இதனுல் பிட்சாடனரிடம் முனிவர்கள் வெகுண்டு தீ வேள்வி ஒன்றியற்றிப் பூதப் படை, பாம்பு, முயலகன் முதலியவைகளைத் தோன்றச் செய்து இறைவன்மீது ஏவினர். அவைகள் அவரை ஒன்றுஞ் செய்யாது அடங்கின. வசவுரை வழங்கினர். அதுவும் பயனில்லாது போகவே அவரை "நீர் யார்?" என்று வினவச் சிவமூர்த்தி "நாம் கைலையிலுள்ளோம்" என்று மறைந்தனர். பின் முனிவர்களை நோய் முதலியன வருத்த இந்திரன் அறிவுரையால் சிவபூசை செய்து பேறு பெற்றனர்

**தாரை** - (க) இவள் விண்ணவர் குருவாகிய வியாழனுடை மனைவி. திங்கள் இவளைக் களவிற் சேர்ந்தான். திங்களுக்குந் தாரைக்கும் புதன் பிறந்தான்.

**தாரை** - (உ) இவள் வாலியினுடைய மனைவி. பாற்கடல் கடைகையில் அமுதத்தோடு பிறந்தவள். தாரைக்கும் வாலிக்கும் அங்கதன் பிறந்தான். சுக்கிரீவனோடு இரண்டாவது முறை போரிட வேண்டாமென்று வாலியை வேண்டிக்கொண்டவள்.

**தாரை** - (ங) இவள் இரவிவன்மன் என்னும் அரசனுடைய மகள். துச்சய மன்னனுடைய மனைவி. வீரை என்பவள் இவளுடைய உடன் பிறந்தாள். வீரை யானையால் இறந்தாள் என்று கேள்வியுற்று மேன்மாடத்தில் இருந்து நிலத்தில் விழுந்து இறந்தவள். மறுபிறப்பிலே இவள் மாதவியாகப் பிறந்தாள். மணிமேகலை இவளுடைய மகள். வீரை சுதமதி என்னும் அந்தணமாதாகப் பிறந்து மாதவியோடு நட்புக் கொண்டிருந்தாள்.

**தார்ட்சி** - கந்தரனுக்குத் தமனகையிடத்துப் பிறந்த கந்தருவப் பெண். துருவாச முனிவரின் சினத்திற்காளாகிப் பறவை உரு எய்தியவள்.

**தார்ட்சிகன்** - இம்முனிவனின் புதல்வன் மான்தோல் போர்த்துத் தவஞ் செய்து கொண்டிருக்கும்போது ஆங்கு வேட்டைக்கு வந்திருந்த துந்துமாரன் என்னும் மன்னன் தவஞ் செய்யும் மன்னனை மான் என்று கருதி அம்பெய்து கொன்றுவிட்டான். புதல்வன் இறந்ததற்காக மனம் வருந்தாத இம்முனிவன் புதல்வனை மீண்டும் உயிர் பெறச்செய்து அருள் சிறந்தவன். இவனுக்குத் தார்க்கிகன் எனவும் ஒரு பெயர் உண்டு.

**தார்த்தாரியர்** - ஐரோப்பியா ரஷ்யா, மத்திய ஆசியா, சைபீரியா ஆகிய இடங்களில் வாழும் கலப்பினத்தவர்கள். பெரும்பாலும் துருக்கி மொழியைப்பேசுபவர்கள். இசுலாமிய சமயத்தைப் பின்பற்றுகிறவர்கள் ஐரோப்பிய ரஷ்யாவில் இருப்பவர்களிற் பெரும்பாலோர் 13ஆம் நூற்றாண்டில் படையெடுத்து வந்த மங்கோலியரின் வழி வந்தவர்கள். சைபீரியத் தார்த்தாரியர் துருக்கிய இனத்திலிருந்து தோன்றியவர்கள். 5ஆம் நூற்றாண்டில் வடகிழக்குக் கோபியில் வாழ்ந்துவந்த தா-தா மங்கோலியரின் பெயரிலிருந்து தார்த்தார் என்ற பெயர் தோன்றியது. செங்கிஸ்கானைச் சேர்ந்த மங்கோலியரும் அவருக்கு முன்பும் பின்பும் ஐரோப்பாவின் மேல் படையெடுத்த பலவேறு துருக்கிய இனத்தவர்களும் தார்த்தாரியர் என்று பெயர் பெற்றனர்.

**தானப்ப முதலியார்** - இவருடைய பெயர் குடிதாங்கி முதலியார் எனவும் வழங்கியது. இவர் தொண்டைவள நாட்டில் களத்தூரில் இருந்தவர். வேளாண் மரபினர். இவருடைய தந்தையின் பெயர் வேதியப்ப முதலியார். இவர் நூல்கள் பலவற்றை நன்கு ஓதியுணர்ந்தார். செல்வ நலம் இவர்பால் சிறந்து திகழ்ந்தது. இவர் தம்முடைய செல்வத்தைப் பலருக்கும் வழங்கிப் பேருதவியாக்கினர். இவருடைய வயலில் ஒரு காலத்தில்

நெற்கதிர்கள் பொற்கதிர்களாகத் திகழ்ந்தன. அதனால் அவ்வூரின் பெயர் பொன் விளைந்த களத்தூர் என்று ஆகியது. இவருடைய இசை நாளடைவில் திசைதொறும் பரவியது. பின்னுளில் தொண்டைமண்டல சதகம் பாடியவராலும் இவர் பாராட்டப் பெற்றூர். இவர் தம்முடைய குடியைத் தளர்ந்து போன காலத்தில் முன்னுக்குக் கொண்டுவந்தபடியினுல் குடிதாங்கி முதலியார் என்று பெயர் பெற்றூர்.

**தானியலட்சுமி** - இவளுக்கு நான்கு தோள்கள். இரண்டுகைகளில் தானியக்கதிரையேந்திக் கொண்டிருப்பாள். மற்றிரண்டு கைகள் அபயவரதமளித்துக் கொண்டிருக்கும். இவளைப் போற்றுவோர் பயிர்த்தொழிலில் விளைச்சல் மிகுதியாகப் பெறுவர்.

**தானீகன்** - இவன் ஒரு மாந்திரீகன். மந்திரதந்திரங்களில் கைதேர்ந்தவன். மெய்யறிவாளராகத் திகழ்ந்தசிவஞான தேசிகர் என்னும் பெரியார்க்கு இவன் இடையூறுகள் பல செய்தான். அத்தீவினையின் பயனுய்க் கடலில் ஒரு சுறாமீனுல் கடியுண்டிறந்தான். இவனுடைய ஊர் கூனிமேடு என்பர்.

**தான்தோன்றியீசுவரர்** - பிறரால் செய்யப்படாமல் சுயமாக உண்டாகிய கடவுள் வடிவம் தான்தோன்றியீசர் எனப் பெறும்.

**திக்கனகவி** - தெலுங்குக் கவிஞர்களில் ஒருவர். இவர் நெல்லூரை ஆண்டுவந்த மனுமசித்தி என்ற அரசருடைய அவைக்களப் புலவராக இருந்தார். இவர் முதன் முதலில் இயற்றிய நூல் நிர்வசன உத்தர ராமாயணம் என்பது. மகாபாரதத்தில் விராட பர்வத்திலிருந்து பதினைந்து பருவங்களைத் தெலுங்கில் மொழி பெயர்த்தார். ஆதி பருவம் முதலியன இவருக்கு முன்பே நன்னயக் கவியாலும் எர்ரண கவியாலும் மொழிபெயர்க்கப் பட்டன. இவர் எளிய நடையில் இலக்கண வழுவில்லாமல் எழுதுவதில் வல்லவர். வீரச்சுவையை நன்ருகக் கூறுவார். இவரைத் தெலுங்கு மொழிக் கம்பர் என்று கூறலாம். இவர் காலத்தில் இவர்தாம் ஒப்புயர்வற்ற புலவராகத் திகழ்ந்தார். இவருடைய கவிதைப் பண்புகள் இவருக்குக் கவிப் பிரமம் என்னும் பட்டத்தை வழங்கின.

**திங்களூர்** - திருநாவுக்கரசரிடத்தில் பேரன்பு பூண்டு ஒழுகிய அப்பூதியடிகளினுடைய ஊர். தேவார வைப்புத்தலம். திருவையாற்றுக்கு அண்மையில் உள்ள திருப்பழனத்தில் இருந்து வடக்கில் ஒரு நாழிகையளவில் உள்ளது.

**திடமதி** - சண்டாளனுகிய இவன் முனிவன் ஆக விரும்பித் தன் நண்பனுகிய சுமதியால் அருளப் பெற்ற மறை மொழியாற்றலால் பல பிறவி எய்திப் பருந்தாய்த் திரிந்து புனித நீர்களின் தோய்வின் ஆற்றலால் வருவோர் தெறித்த நீர்த்துளியால் தூயவனுகித் தெய்வ உலகு எய்தியவன்.

**திடவிரதன்** - மன்னனுகிய இவன் வேட்டைக்குச் சென்ற விடத்தில் விடாய் கொண்டு நஞ்சு கலந்த நீரை உண்டு சிவபூசையால் அதை மாற்றிக் கொண்டவன்.

**திட்டிவிடம்** - கண்ணில் நஞ்சுடைய ஒரு பாம்பு. இதற்கு அழற்கணுகம் எனவும் நஞ்சு விழி நாகம் எனவும் வேறு பெயர்களும் உள்ளன. இதனுடைய பார்வையில் அகப்

பட்டவர்கள் இறந்தொழிவர். இத்தகைய பாம்பு முன்னாளில் இருந்தது. இந்நாளில் இருப்ப தாகத் தெரியவில்லை.

**திண்டி (டிண்டி)** - வேடனாகிய இவன் அயோத்தி எய்தி இருடிகளைக் கண்டு தவம் செய்து கொண்டிருக்கும்போது இவனைப் புற்று மூட, இராமர் உலகில் தோற்றங் கொண்ட பின் லீலையாய் அந்தப் புற்றைக் குத்தவே அதிலிருந்து வேடன் தோன்றி இராமபிரானை வணங்கி முத்தி எய்தியவன்.

**திண்டீச்சுரம்** - தென்னார்க்காடு மாவட்டத்தில் இந் நாளில் திண்டிவனம் என வழங்கும் ஊரே திண்டீச்சுரமாகுமென்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர். இங்குள்ள தலத்தின் மரம் புளியெனவும் முன்னாளில் திந்திருணிவனம் என வழங்கியது. நாளடைவில் திண்டிவனம்என்றுமருவிவிட்ட தென்றுங் கூறுகின்றனர். (திந்திருணி-புளி.)

**திண்டீரன்** — தேவர்களை வருத்திய ஓர் அசுரன். தேவர்களின் வேண்டுதலால் விட்டுணு பூமியின் சந்திரன் என்பவனின் புதல்வனாகத் தோன்றி அவரால் கொல்லப்பட்டவன்.

**திண்ணர்**-கண்ணப்ப நாயனார்க்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர். உடல் திண்மையுடையதாக அமைந்திருந்தமையின் இவ்வாறு பெயரிட்டனர்.

**திதளாசுரன்** - தேவர்களைத் தொல்லைப்படுத்தித் தெய்வ லோகத்தை ஆட்கொண்டிருக்கும்போது சிவமூர்த்தியால் உயிர் துறக்கப்பெற்ற அசுரன்.

**தித்தன்** - (1) இவன் உறையூரில் இருந்து அரசாட்சி செய்தவன். இவனுக்குப் போரவைக் கோப் பெருநற் கிள்ளி என்ற பெயருடைய மகன் ஒருவன் இருந்தான். தித்தன் எக்காரணத்தினாலோ தன் மகன்மீது சினங் கொண்டு அவனை நாட்டை விட்டுத் துரத்தி விட்டான். போரவைக் கோ தந்தையைப் பிரிந்து முக்காவனாட்டு ஆமூரடைந்து அங்குத் தன் மற்போர் வன்மையைக் காட்டி வாழ்ந்திருந்தான். தித்தனை நக்கீரர், பரணர், சாத்தந்தையார் முதலிய பல புலவர்கள் பாடியுள்ளனர்.

**தித்தன்** - (2) கொங்குவள நாட்டில் இராசிபுரத்தில் கொங்கு வேளாளர்களில் விழியர் குலத்தில் தித்தன் என்னும் பெயருடைய இளைஞனொருவனிருந்தான். இவன் மிகுந்த ஆண்மையுடையவனாகையால் போர் வீரனாக எண்ணினான். சோழ மன்னனிடஞ் சென்றான். அப்பொழுது காஞ்சிபுரத்தைக் கம்பணன் என்பவன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் படை வலியுடையவன். சோழ மன்னனுக்கு அடங்காது மீறி நடந்து கொண்டிருந்தான். சோழன் தன்னுடைய படைத்தலைவர்களைப் பார்த்துக், "கம்பணனை வெல்லத் தக்கவர்கள் இங்கே யாரேனும் இல்லையா?" என்று உசாவினான். பொதுவான போர் வீரனாகவிருந்த தித்தன், "அடியேன் அக் கம்பணனை வெல்ல வல்லேன்" என்று கூறினான். சோழன் தித்தனுக்குப் படைத் தலைமைப் பதவி கொடுத்து வேண்டிய படைகளோடு அனுப்பினான். தித்தன் கம்பணனை வென்று மீண்டான். இதனால் மகிழ்ச்சியடைந்த சோழன் தித்தனுக்கு அகளங்கச் சோழன் என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கினான். தித்தன் சுரிகைப் போரில் வல்லவனாகையால், "சுரிகை

முனை வல்லான்" என்னுஞ் சிறப்புப் பெயரும் வழங்கிப் பாராட்டினன். இதன் பிறகு தித்தன் மேலும் பெரும் புகழடைந்ததோடு பலவகையான நலங்களும் பெற்றான்.

**திந்திருணிவனம்** - இந் நாளில் திண்டிவனம் என மருவி வழங்கும் ஊரே திந்திருணிவனமாகும். திந்திருணி என்றால் புளிய மரம். முன்னாளில் ஈண்டு இறைவன் புளிய மரத்தின் கீழ் எழுந்தருளியிருந்தமையாலும் ஊர்புளியங்காடாக இருந்தமையாலும் திந்திருணிவனம் என்று வழங்கப்பட்ட இடம் காலப்போக்கில் மாறியது. ஊர்ப் பெயரின் மாற்றத்தையும் பொருளையும் உணர்ந்தவர்கள் ஒரு சிலரே இருப்பர்.

**திம்மகவி** - இவர் கிழக்குக் கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த பிட்டாபுரத்திற்கு அண்மையில் உள்ள சந்திரம் பாலம் என்னுஞ் சிற்றூரில் 1690 ஆம் ஆண்டில் பிறந்தவர். கவி சார்வபௌமர் என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றவர். தெலுங்கு மொழியில் இவர் ஒப்புயர்வற்றபெரும்புலவராகத் திகழ்ந்தார். இவர் அரசர்களையோ செல்வர்களையோ ஒரு பொருட்படுத்தாத சீரிய மனப்பான்மையுடையவர். இவர் சைவ சமயத்தினர். சமய வெறி இவரிடஞ் சிறிதும் இல்லை. தூய தெலுங்கில் எழுதுவதில் மிக வல்லவர். உருக்குமிணி பரிணயம், இராசசேகர சரித்திரம், சிம்மாசலத்தல மகாத்மியம் முதலிய பல நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

**திம்மராசன்** - விசய நகரத்தில் 1515 இல் அமைச்சுத் தொழில் பூண்டிருந்தவன். விசய நகர மன்னன் ஆணையால் செங்கற்பட்டை யாண்டு தன் பெயரால் ஒரு குளமும் தோண்டுவித்தவன்.

**தியாகராச சுவாமிகள்** - இவர் 1767 ஆம் ஆண்டிலே பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் இராமப் பிரமம். அவர் வடமொழியிலுந் தெலுங்கிலுஞ் சிறந்த புலமை பெற்றவர். வால்மீகி இராமாயணத்தை இருபத்து நான்கு முறை அரசவையிலே வாசித்துப் பொருள் கூறியவர். தியாகராசர் தம்முடைய தகப்பனாரோடு சொற்பொழிவுகட்குச் சென்று வந்தமையால் இராமாயணத்திலே பயிற்சியும் இராம பக்தியும் இவருக்கு இளமையிலேயே நன்கு உண்டாயின. தியாகராசருடைய குரு சொன்டி வேங்கடரமண ஐயர் என்னும் வைணீக இசைப் புலவர். அவர் தஞ்சை அரசவைப் புலவர்.

தியாகராசர் தெலுங்கு வடமொழிகளைத் தவிரத் தமிழ், மகாராட்டிரம், இந்தி முதலிய மொழிகளிலும் புலமை பெற்றிருந்தார். இளமைப் பருவத்திலேயே தியாகராசர் உருப்படிகளை இயற்றத் தொடங்கினார். முதல் முதல் வடமொழியில் திவ்ய நாம கீர்த்தனைகளை இயற்றினார். தம்முடைய சாகித்தியங்களை வீட்டுச் சுவரிலே சுண்ணும்புக் கட்டியால் எழுதினார். தகப்பனார் இந்தச் சாகித்தியங்களைக் கண்டு வியந்தார்; புகழ்ந்தார்; உள்ளம் பூரித்தார். தம்முடைய புதல்வர் பின்னாளிலே புகழ் பெறுவார் என்பது அவருக்கு அப்பொழுதே விளங்கியது. அது முதல் தம்முடைய புதல்வரின் உருப்படிகளைக் கூர்ந்து கவனித்து வந்தார், எழுதியும் வைத்தார்.

தியாகராசர் குருகுல வாழ்க்கை முடிந்த பிறகு சில ஆண்டுகளுக்குள் இராக பாவம் மிகுந்த பல கிருதிகளை இயற்றினார். பலர் இந்த உருப்படிகளைக் கற்றுப் பாடினார்கள். இவருடைய ஆசிரியராகிய வேங்கடரமணையர் இவருடைய இசைகளைக் கேட்டு மகிழ்ந்தார். அவைகள் கூட்டிப் பாடச் செய்தார். சரபோசி மன்னரிடமும் தியாகராசருடைய இசைச் சிறப்பைத் தெரிவித்தார். அரசருடைய அவையிலுஞ் சில கச்சேரிகள் நடைபெற்றன. நாளடைவில் தியாகராசருடைய புகழ் நாடெங்கும் பரவியது. இவருடைய இசையரங்கிற்கு மக்கள் மிகுதியாகக் குழுமினார்கள். பசனைகளில் பாடுவதற்காகப் பல சிறந்த இசைப் பாடல்களையும் திருவிழாப் பாடல்களையும் இயற்றினார். கீர்த்தன சதகம், சதராக ரத்னமாலிகை என்னுங் கொத்துக் கீர்த்தனைகளையும் இவர் இயற்றியுள்ளார். இவர் தம்முடைய கடைசிக் காலத்தில் துறவியானார். அப்பொழுது இவருக்கு நாதப் பிரமாநந்தர் என்னும் பெயர் உண்டாகியது. இவருடைய சமாதி திருவையாற்றில் இருக்கிறது. ஆண்டுதோறும் ஆண்டு விழாச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அப்பொழுது பல இசைப் புலவர்கள் சமாதிக்குச் சென்று இசைக் கச்சேரிகள் நடத்துகிறார்கள்.

**தியாகராசர்** - இவர் திருமாலால் வழிபடப் பெற்ற சோமாஸ்கந்தர். திருமால் மகப்பேற்றை விரும்பிச் சிவபிரானை யெண்ணித் தவஞ் செய்தார். சிவபிரான் ஒரு மகன் உண்டாகுமாறு வரங் கொடுத்தார். இறைவியானவள் திருமால் தன்னைப் போற்றி வழிபடாத படியால் சினங் கொண்டாள். அம் மகன் சில நாட்களில் இறந்தொழிக என்று வசவுரை வழங்கினாள். இதனால் திருமால் இறைவியாரையும் வணங்கிப் பிழை பொறுக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். இறைவியார் நம்முடைய வசவுரைப்பலன் பலனளியாது போகாது என்றாள். பிறகு திருவுளமிரங்கி உன் மகன் பிறந்து இறைவனுடைய நெற்றிக் கண்ணால் இறந்து மீண்டும் எழுந்து உருவிலியாக நெடுங்காலம் இருப்பான் என்று கூறினாள்.

திருமால் அன்று முதல் சோமாஸ்கந்த வடிவத்தை திருப்பாற் கடலில் தாம் துயிலும் அரவணையில் தமது மார்பகத்தே வைத்துக் கொண்டு யோக நித்திரை புரிவாராயினர். சோமாஸ்கந்தர் திருமாலின் நெட்டுயிர்ப் பசைவால் அசைந்தாடி எழுந்தருளியிருந்தார்.

அக்காலத்தில் இந்திரனுடைய தேவலோகம் வளங் குன்றியிருந்தது. திருமாலின் மார்பிலிருக்குஞ் சோமாஸ்கந்தரைத் தேவலோகத்தில் வைத்து வழிபட்டால் தேவலோகம் சிறப்புடன் விளங்கும் என்று எண்ணிய இந்திரன் திருமாலிடமிருந்து அம் மூர்த்தியைப் பெற்றுத் தன்னுடைய உலகத்துக்குக் கொண்டு போய் வைத்து வழிபட்டான். அதனால் அவனுலகுஞ் சிறப்படைந்து விளங்கியது. அந்நாளில் வலன் என்னும் அசுரன் தேவர்களுக்குத் தொல்லை கொடுத்தான். அவனை வெல்ல இந்திரனால் முடியவில்லை. மண்ணுலக மன்னனாகிய முசுகுந்தனைக் கண்டு அவ் வலனை வென்று தன்னுடைய நாட்டைக் காக்க

வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். முசுகுந்தனும் அவ்வாறே அவ்வலனை வென்று தேவருலகைக் காத்தான்.

முசுகுந்தனிடத்தில் மகிழ்ச்சி யடைந்த இந்திரன் முசுகுந்த னுக்கு விருப்பமானதைக் கேட்டால் கொடுப்பதாகக் கூறினன். முசுகுந்தனே இந்திரன் எதிர்பாராதவாறு இந்திரன் வைத்து வழிபடுஞ் சோமாஸ்கந்தரைத் தனக்குத் தர வேண்டும் என்று வேண்டினன். அம் மூர்த்தியைக் கொடுக்க இந்திரனுக்கு மனமில்லை. இவனை ஏமாற்றிவிட வேண்டுமென்று முடிவு செய்தவனய்ச் சோமாஸ்கந்தரைப் போல் வேறு ஒன்று செய்து கொடுத்தான். அது போலி யென்பதை முசுகுந்தன் உணர்ந்துகொண்டு உண்மையான மூர்த்தியைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டான். மேலும் ஆறு முறை போலியாகச் செய்து கொடுத்தும் முசுகுந்தன் மறுத்து விட்டான். இவனை ஏமாற்ற முடியாது என்பதை உணர்ந்து கொண்ட இந்திரன் முடிவில் உண்மையான மூர்த்தியைக் கொடுத்ததோடு போலியாகச் செய்யப்பட்ட மூர்த்திகளையும் முசுகுந்தனிடமே கொடுத்தான்.

முசுகுந்தன் திருமாலிடமிருந்த உண்மையான மூர்த்தியைத் திருவாரூரிலும், மற்றவைகளை நாகை, திருமறைக்காடு முதலியவிடங்களிலும் வைத்து வழிபட்டான். இம் மூர்த்திகள் ஏழும் அமைக்கப்பட்ட இடங்கள் சப்தவிடங்கத் தலம் என்று வழங்குகின்றன.

**திரணபிந்து**(க) இவர் ஒருமுனிவர். இவருடைய தவத்தைக் கெடுப்பதற்குத் தேவர்கள் எண்ணினர்கள். அரணியென்னும் பெயருடைய தேவ மாதை அனுப்பி வைத்தார்கள். அவள் இவரிடம் வந்து மாய வித்தைகள் செய்து மயக்க முயன்றுள். முனிவர் சினமடைந்து 'நீ மானிட மாதாக' என்று வசவுரை வழங்கினர். இதனல் அத்தேவ மாது இந்துமதி என்னும் பெயரோடு போசராசனுடைய மகளாகப் பிறந்தாள்.

**திரணபிந்து** - (உ) பிந்துவின் புதல்வனய்த் தோன்றி, காசிபர்க்கு மாமனராகி, சுத்தியும்னனல்முன் பிறப்புணர்ந்து மகிழ்ந்தவர்.

(ங) மருத் சக்கரவர்த்தியின் குலத்தவனன புதன் புதல்வன்.

(ச) ஜமதக்கினியின் புதல்வராகிய தொல்காப்பியரின் பெயர்களுளொன்று. இவரைத் திரணதூமாக்கினி என்று கூறுவர்.

**திரஞசனன்** - கௌதமி தீரத்தில் இருந்த பன்ஞசனன் என்பவனுடைய மகன். சிவபிரானை வழிபடாமல் இறைவியை வழிபட்ட குற்றத்தினல் அரக்கவுருவடைந்து நாரத முனிவர் உரைப்படி மணி கன்னிகையில் மூழ்கி நல்லுரு வடைந்தவன்.

**திரவிகணன்** - அக்கி என்னும் வசுவிற்கும் வசோற்தாரைக்கும் தோன்றிய புதல்வன்.

**திரவியம்** - மலை, காடு, நாடு, நகர், கடல் இவைகளில் தோன்றும் மிளகு, கோஷ்டம், அகில், தக்கோலம், குங்குமம், இருல், தேன், அரக்கு, நாவி, மயிற்பீலி, செங்நெல், சிறு பயிறு, கரும்பு, வாழை, செவ்விள நீர், அரசன், பித்தன், மந்தி, யானை, கண்ணடி, உப்பு, முத்து, பவளம், சங்கு, முதலியன.

(ங) ஓர் இருடி. சிவபெருமான் ஒருகுடத்தில் காட்சிகொடுத்து இவருடைய தொழு நோயை நீக்கினர்.

**திராசன்** - உரோமகவெற்றி வேந்தரில் கடைசி அரசன். இவன் காலத்தில் உரோமப் பேரரசின் புகழ் உச்சநிலையடைந்து விளங்கியது.

**திராவிடர்கள்** - தென்னிந்தியாவில் தொன்றுதொட்டுவாழ்ந்து வருகிறவர்கள்இவர்கள். இவர்கள் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம்,துளுமுதலிய மொழிகளைப்பேசுகின்றனர். திராவிடர்கள்யாவர். அவர்கள் தென்னிந்தியப்பழங்குடிமக்களா அல்லது வெளிநாட்டிலிருந்துஇங்குவந்தவர்களாஎன்று ஆராய்ச்சியாளர்கள்பலர்பலகாலமாக ஆராய்ச்சிகள்நடத்தினர், ஆனால் எவ்வித முடிவும்உண்டாகவில்லை. தென்னிந்தியர்களாகிய திராவிடர்கள் தென்னிந்தியப் பழங்குடி மக்களேயன்றி வேறுநாட்டிலிருந்து இங்கு வந்தவர்கள் அல்லர் என்னுங் கொள்கையுடையவர்களே மிகுதியாக உள்ளனர். இவர்களுடைய கொள்கைகளே ஒப்புக்கொள்ளக் கூடியனவாகவும் உள்ளன. மக்களினங்கள் முதன்முதலில் தோன்றிய இடமே தென்னிந்தியாதான் என்று முடிவு கட்டும் ஆராய்ச்சியாளர்களும் உள்ளனர். உலகின் பிறவிடங்களில்உள்ளமக்களின் பழக்கவழக்கங்களும் தென்னிந்தியர்களின் பழக்க வழக்கங்களும் ஒன்றாக இருப்பதைக்கொண்டுதென்னிந்தியத்திராவிடர்கள்வெளிநாட்டிலிருந்துவந்தவர்கள் என்று முடிவுகட்டிவிடுவதுபொருந்தாக்கூற்றாகும். ஒவ்வொருநாட்டிலும் பழங்குடிமக்கள் உள்ளனர். அவர்களுடைய பழக்கவழக்கங்களும் ஒருபுடையொத் திருப்பது இயற்கையே.

**திரிகடுகம்**-(க)சங்கமருவிய கீழ்க்கணக்குநூல்கள் பதினெட்டில் ஒன்று. இது நூற்றொரு வெண்பாக்களையுடையது.சுக்கு மிளகு திப்பிலி என்னும் மூன்றும் உடலுக்குநேரும்பிணியை நீக்குதல்போல இந்நூலின் பாடல்களில்அமைந்த மூன்றுநீதிகளும் உயிருக்குஉறுதி பயத்தலின் திரிகடுகம்என்று பெயர் பெற்றது. இந்நூலை இயற்றியவர் நல்லாதனார்.இவர் நூலின்காப்புச்செய்யுளில் திருமாலுக்கு வணக்கம் கூறிஇருத்தலின்வைணவசமயத்தவராகஇருக்கலாம்என்று எண்ணப் பெறுகிறார்.

**திரிகூடமலை** - குற்றாலமலைமூன்று முடிகளையுடைமையால் இவ்வாறு திரிகூடமலை என்று காரணப்பெயர் பெற்றது.

**திரிசங்கு** - இவன் அயோத்தியில் இருந்து அரசுபுரிந்தான். அரிச்சந்திரனுடைய தந்தை. அறிவுந் திருவும் ஒருங்கே பெற்றிருந்த இவன் தன்குல குருவாகியவசிட்டரிடஞ்சென்றுதான்உடலோடு சுவர்க்கம்புகவேண்டுமென்றும் அதற்குரியவேள்வியைச் செய்ய வேண்டுமென்றும்வேண்டினன். அவர் இம்மனித உடலோடுஅங்குப்போகக்கூடாதுஇறந்தபிறகு போகலாம் என்று சொன்னார். ஆனால் இவன் ‘நான் இவ்வுடலோடு சுவர்க்கம் போகத்தான் வேண்டும் நீர் அதற்குரிய ஏற்பாட்டைச் செய்ய வில்லையென்றால் நான்வேறுயாரைக்கொண்டாவதுஏற்பாடுசெய்வேன்’என்றான் இதனைக்கேட்ட வசிட்டர், ‘குருவாகியஎன்னை நீ எதிர்த்துப் பேசினமையால் புலையனாகக்கடவாய்’ என்று வசவுரை வழங்கினார். இவன் அவ்வாறே ஆகி அலைந்துதிரிந்தான்.

**திரிசங்கு** (உ) -இவன் திரையாருணன்என்பவனுடையமகன்.இவனுடைய பெயர்முதலில் சத்திய

வதனன் என்று வழங்கியது. இவன்இளம்பருவத்தில் மிகுந்த தீச் செயல்களைச் செய்பவனாக இருத்தலைக் கண்டு தந்தை இவனைக்காட்டிற்கோட்டிவிட்டான். அங்கு இவன் விசுவாமித்திரருடையகுடும்பத்தைக்காப்பதற்காகத் தீத்தொழில்கள் செய்து கொண்டிருந்தான். இவனுடைய தந்தை வசிட்டரைக் கண்டு நாட்டையாள்வதற்குமகனில்லையென்றுகூறினான். வசிட்டர்இன்னுஞ்சிறிதுகாலத்தில்சத்தியவதனன் அரசாட்சி பெறுவான் என்றுகூறினார், தாம்பன்னிரண்டு ஆண்டுகள் தவத்தில் இருந்தார். அச்சமயத்தில் விசுவாமித்திரருடைய குடும்பத்தைக் காப்பதற்குச் சத்திய வதனனுக்கு உணவுஅகப்படவில்லை. வசிட்டருடைய காமதேனுவைக் கொன்றுவிசுவாமித்திரருடைய குடும்பத்திற்குக் கொடுத்துத் தானும்உண்டிருந்தான். இதனையறிந்த வசிட்டர் சத்தியவதனனைப் பார்த்து, உன்னை இப்பொழுதே கொன்று விடுவேன். உன்னுடைய தந்தைக்கு உன்னை அரசனுக்குகிறேன் என்று வாக்குக் கொடுத்திருப்பதால் கொல்வதற்குமனம்வரவில்லை; ஆயினும் நீ பிறமாதர்களைத் தழுவியதும், உயிர்கட்குத்துன்பஞ் செய்ததும் காமதேனுவைக் கொன்றதுமாகியமூன்றுகுற்றங்களைச்செய்துள்ளாய் உன் குற்றத்திற்காக முன்னமே உன்தலையில் சங்கினையடித்திருக்க வேண்டும்; அவை மூன்றினையும் சேர்த்து அடிக்கிறேன் என்று கூறி அவனுடைய தலையில் சங்கினை யடித்தார். அன்று முதல் அவனுடையசத்தியவதனன்என்னும்பெயர்போய்த் திரிசங்குஎன்னும்பெயர்உண்டாகியது. இவனுடைய மனைவியின் பெயர்சத்தியரதைஎன்பர். சங்கு என்பது மூளையைக் குறிக்கும். குற்றஞ்செய்தவர்களுடையதலையில் முன்காலத்தில் மூளையடிப்பதுவழக்கம்.

**திரிசடை**-விபீடணனுடையமகள். சீதை அசோகவனத்தில் சிறையிருந்தபொழுது சீதைக்குத் தோழியாக இராவணனால் ஏற்படுத்தப் பட்டவள். இவள் மிகநல்லியல்பு அமையப்பெற்றவளாகையால் சீதையினுடைய மனம் வருந்தாமல் நடந்து கொண்டது மட்டுமன்றிச் சீதைக்கு வேண்டிய உதவிகளையெல்லாஞ்செய்து உறுதுணையாகவும் அமைந்திருந்தாள். இராவணன் வீழ்ச்சியையும் சீதையின் மீட்சியையுங் குறிக்குங்கனவொன்றைக் கண்டு அதனைச் சீதைக்குக் கூறிச் சீதையைத்தேற்றியவள்.

**திரிசிரன்** - மிதிலைநகரத்தில் ஆனைமுகக்கடவுளைப் போற்றி வழிபட்டுக்கொண்டிருந்த ஓர் அந்தணன். இவனுடைய மனைவியின் பெயர் விரோசனை. ஆனைமுகக்கடவுள் இந்தத் திரிசிரனிடத்தில்தான் அறுகை இரந்துபெற்றார்.

**திரிசிராமலை** - திரிசிரன் என்பவன் வசித்தமையால் இப்பெயர் பெற்றது. தேவாரப் பாடல் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இங்குள்ள இறைவன் தாயுமானவர். இவ்வூரைப்பற்றிய புராணம் செவ்வந்திப்புராணம் எனவழங்கும்.

**திரிபுரர்** - இவர்கள் மூவராவர்; தாரகாக்கன், கமலாக்கன், வித்யுன்மாலி என்பன இவர்களுடைய பெயர்களாம். இவர்கள் மூவரும் தாருகாசுரனுடைய மக்கள். அருந்தவம் புரிந்து திருந்திய நலன்களை இவர்கள் பெற்றனர். பொன், வெள்ளி, இரும்பு என்னும் மூவகை உலோகங்களாலாகிய நகரங்கள் இவர்கட்கு உரியனவாக இருந்தன. அவைகள் நினைத்த

விடங்கட்குப்பறந்து செல்லுந் தன்மையமைந்தவைகளாக விளங்கின. முதலில் இறைவனிடம் பேரன்புகொண்டிருந்த இவர்கள் பிறகு, செல்வக்களிப்பால் சிந்தைதிரிந்து இறைவனை மறந்து நிந்தைக் குரியவர்களானார்கள். இறைவன் சினங்கொண்டு நகை புரிந்த அளவில் இவர்களுடையஉலோக நகரங்கள் உருகியழிந்து ஒழிந்து போயின.

**திரிபுராந்தகன்** - சிவபிரான் திரிபுரங்களை எரித்தழித்து ஒழித்தமையின் திரிபுராந்தகன் என்று பெயர் பெற்றார்.

**திரிபுவனசக்ரவர்த்திகள்** - பாண்டியமன்னர்களில் சடையவர்மன்குலசேகரதேவன், மாறவர்மன்சுந்தரபாண்டியன்முதலியோர் திரிபுவனசக்ரவர்த்திகள் என்று சிறப்புப்பெயர் பெற்றிருந்தனர்.

**திரிமூர்த்திவாசம்**- காஞ்சிபுரத்திற்குரிய பெயர்களில் ஒன்று. சிவபிரான், திருமால், நான்முகன் ஆகிய முத்தேவர்களுந் தத்தம் பதிகளை வெறுத்து இப்பதியில் வாழ்வதால் இப்பெயர் உண்டாகியது.

**திரிலோசன சிவாசாரியர்** - இவர் ஆமர்த்தக மடத்தில் வியாபக சம்புவின் வழியில் வந்தவர். சித்தாந்தசாராவளி செய்தவர். இஃது 166 சுலோகங்களையுடையது. இதற்கு அனந்த சிவம் என்பவர் உரையெழுதி இருக்கிறார்.

**திரிலோசன தாசர்** - தட்டார் வகுப்பைச் சேர்ந்த இவரிடம் அரசன் "ஜேகிர்" எனும் பணி செய்யப் பொன்மணி முதலிய கொடுத்ததை அடியார் திருவடித் தொண்டில் தம்மை மறந்திருந்து அரசன்சினத்திற்காளாகும் தருணத்தில் பெருமாளால் தம் பெருமை உலகறியப் பெற்றவர்.

**திரிவிக்கிரமன்** - வாமன வடிவு கொண்டு மாவலிச்சக்கரவர்த்திபால் சென்று உலகைமூவடியாலளந்த விட்டுணுவின் திருக்கோலம்.

**திருஅரதத்தாச்சாரியார்** - இவர் சோழவள நாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள கஞ்சபுரத்தில்வைணவ சமயத்தில் வாசுதேவாச்சாரியார் எனவும் மதுசூதனாச்சாரியார் எனவும்பெயர் வழங்கிய ஒருவருக்குப் புதல்வராகத்தோன்றினார். சுதர்சனாச்சாரியார் என்றுபெயரிடப்பெற்றார். தந்தையார் வைணவராக இருக்கவும் தாம் இளமைமுதற் கொண்டேசைவசமயத்தைமேற்கொண்டவராக இருந்தார். திருநீறுசிவகண்மணி ஆகியவைகளில் அன்புகொண்டு அவைகளை அணிந்து வந்தார். சிவபிரான் திருக்கோயிலுக்குச் சென்று சிவவழிபாடு செய்தல் தேவார திருவாசகங்களையோதல் முதலியவைகளையும் மேற்கொண்டிருந்தார். இவருடைய இச்செயல்களைக் கண்ட தந்தையார்இவரிடத்தில்வெறுப்புக்கொண்டார். மகனைப்பார்த்து "நீ சைவர்களுக்குரிய கொள்கைகளை மேற்கொண்டிருக்கிறாய்; இதுகூடாது; நம்முடைய வைணவ சமய வழிபாடுகளைத்தான் மேற்கொள்ள வேண்டும்" என்று கூறிக் கண்டித்தார். ஆனால் மைந்தரோ தந்தையார் கூறிய செய்திகளை ஒரு சிறிதும் கேட்கவில்லை. வழக்கம் போலவே நடந்து வந்தார். தந்தையார் இவரை அடித்து வருத்தியதுடன் இவருக்கு உணவிடக் கூடாது என்று மனைவியிடமும் கண்டித்தார்.

புதல்வர் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனிடம் முறையிட்டார். சிவபிரான் இவருக்குக் காட்சி தந்தார். அருளுரை வழங்கினர். 'அரதத்தர்' என்று பெயருங் கொடுத்தார். அருள் பெற்ற அரதத்தர் இல்லத்தை யடைந்தார். தந்தையார் இவரைஇகழ்ந்து பேசியதுடன் சிவபிரானையும் பலவாறு இகழ்ந்து பேசினர். அரதத்தர் சினங்கொண்டார். சிவபிரானுக்குந் திருமாலுக்கும் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக்கூறி நீண்டசொற்பொழிவுசெய்தார். ஊரில் இருந்த வைணவர்களும் அங்கு வந்து கூடினர். ஊரார்கள் அரதத்தரைப் பார்த்து, "நீங்கள் இருவரும் இவ்வாறு சொற்போரிட்டுக் கொள்வதிற் பயனில்லை. அறிஞர்கள் பலரைக்கூட்டி நடுவர்களையும் அமைத்து வெற்றி தோல்விகளைக் காணவேண்டு" மென்றனர்.அரதத்தர் அவ்வாறேசெய்யலாமென்றார்.அரதத்தர் சிவபரத்துவத்தைப்பற்றிப் பேசுவது குறித்துப்பல நாட்டிலுள்ள அறிஞர்களுக்குஞ் செய்தியனுப்பப்பட்டது. குறிப்பிட்ட நாளிற் பலரும் வந்து கூடினர். திருமால் திருக்கோயிலில் பேரவை கூட்டப் பட்டது. பழுக்கக் காயவைத்த இருப்பு முக்காலிஒன்று கொண்டுவந்து போடப்பட்டது. பலருங்காண அரதத்தர் அம்முக்காலியில் அமர்ந்து சதுர்வேத தாற்பரிய சங்கிரகங்களைக்கூறிச் சிவபரத்துவத்தை நிலை நாட்டினர். இதனைக்கண்டுஅங்குவந்திருந்த வைணவர்களனைவரும் அஞ்சினர். தாங்களும்சைவர்களாகிச் சைவ ஒழுக்கத்தை மேற்கொள்ளலாயினர். தந்தையாரும் அன்றுமுதல் சைவசமய ஒழுக்கத்தை மேற்கொண்டார். மைந்தரிடமே திருவைந்தெழுத்துப்போதனையும் பெற்றார். அரதத்தர் ஒரு மங்கையை மணந்து இல்வாழ்க்கையை மேற்கொண்டார்.

அரதத்தருடைய வியத்தகு செயல்களையெல்லாம் சிவலிங்க பூபதிஎன்னும் அரசன்கேள்விப்பட்டான். இவரிடம் வந்து அடிமைப் பட்டுத் தொண்டு பூண்டொழுகினன். வேண்டிய உதவிகளைச் செய்து போற்றினன். அரதத்தர் நாள்தோறும் நாட்கடன்களை முடித்துக் கொண்டு, அக்கினீசுவரர், திருக்கோடிகா, திருவாலங்காடு, திருவாவடுதுறை முதலிய சிவப்பதிகளை வழிபட்டு வருவார். ஒருநாள் இவர் அக்கினீசுவரர் திருக்கோயிலுக்குச் சென்ற போது அங்கு முதனாள் திருப்பணி செய்யவராத கணிகையர்களைக் கோயிலதிகாரிகள் சவுக்காலடித்து ஒறுத்தனர். அவர்கள் ஒறுக்கப்படுதலுக்குக் காரணத்தை உணர்ந்த இவர் அந்தோ நான் திருப்பணியில் வழுவினல் இவ்வாறு என்னைத் தண்டிப்பாரில்லையே என்று உள்ளம் வருந்தினர்.

அரதத்தர் ஒருநாள் சிவபூசை செய்து கொண்டிருக்கையில் நாய் ஒன்று நீர் வேட்கை கொண்டு இவர் எதிரில் வந்து நின்றது. அரதத்தர் இறைவன் திருமுழுக்குக்கு வைத்திருந்த நீரையெடுத்து அதனிடம் நீட்டினர். அஃது ஒரு பாதியைக் குடித்து விட்டு மறைந்தது. பக்கத்திலிருந்தவர்கள் "நாய் குடித்து எஞ்சிய நீரைத் திருமுழுக்குக்குப் பயன் படுத்தலாமா?" என்று கேட்டனர். அதற்கு இவர், "இறைவன் நாயுருக் கொண்டு வந்தால் அதற்கு நான்யாது செய்வது?" என்று மறுமொழி கூறினர். இவர் இருந்த அந்தணத்தெரு

வில்லூர் அந்தணன் வைக்கோற் சுமைஒன்றை அறியாத்தனமாக ஒரு கன்றின் மீது போட்டு விட்டான். அதனால் அக்கன்று இறந்துவிட்டது. இதனைக் கண்ட அந்தணர்கள் இவன் ஆவதை செய்தவன் என்று தம்முடைய கூட்டதில் இருந்து விலக்கினர். அவ்வந்தணன் ஆவதைசெய்த தீவினைக்குயாது பரிகாரஞ் செய்யலாம் என்று கேட்கும்பொருட்டு அரதத்தர் இல்லத்துக்குவந்து இல்லத்துக்குள் நுழைந்தான். அப்போது வாயிற்படி தலையில் முட்டியது. அவன் ''சிவசிவ'' என்றனன். உள்ளே இருந்த அரதத்தர் யாரோசிவனடியார்நம்முடைய இல்லத்துக்கு வந்துள்ளார் என்று எண்ணிவெளியே வந்து வந்தஅந்தணனைப்போற்றினர். அவ்வந்தணன் நடந்தவைகளைக் கூறிக் கழுவாய் கேட்டான். அரதத்தர் ''நீ கூறிய சிவசிவ ஒலியுள்முதல் ஒலியால்ஆவதை செய்த தீவினை நீங்கிவிட்டது. இரண்டாவது ஒலியால் வீடு பேற்றிற்கும் உரியவனானாய்" என்று கூறி அவனை அனுப்பி வைத்தார். இதனைக் கேட்ட ஊர்வாழ் அந்தணர்கள் எள்ளி நகையாடினர். இதனை அறிந்த அரதத்தர் ஆவதைசெய்த அந்தணனை அழைத்து, ''நீ ஊர் வாழ் அந்தணர்களையும் அழைத்துக் கொண்டு ஒருபிடி அறுகம்புல்லையும் கையிற் கொண்டுபோ. இறைவன் திருமுன் இருக்கும் நந்தி தேவரைப் பார்த்து, ''நான் செய்த தீவினை நீங்கியிருந்தால் தேவரீர் இப்புல்லைத் தின்ன வேண்டுமென்று கூறு; நந்தி தேவர்புல்லைத்தின்றால் நீசெய்த தீவினை நீங்கிவிட்டதென்பதை ஐயமறஅறிந்து கொள்ளலாம்" என்று கூறினர். அந்தணர்களையும் அழைத்துக்கொண்டு கோவிலுக்குபோய் அரதத்தர் கூறியவாறு செய்தான். நந்தி தேவர் அந்தணன் கையிலிருந்த புல்லைப் பிடுங்கித் தின்றார். ஊர்வாழ்அந்தணர்கள்இதனைப் பார்த்து அஞ்சி வாயை மூடிக் கொண்டு அப்பாற் சென்றனர். ஆவதை செய்த அந்தணனோ களிப்புடன் சென்றான்.

மிகுந்த வறுமையுடைய அந்தணர் ஒருவர் தம்முடைய வறுமை எவ்வாறு நீங்கும் என்று ஆராய்ச்சி நடத்தினர். ஒரு சிவயோகிக்கு உணவிட்டால் வறுமை நீங்கும் என்று அவருடைய ஆராய்ச்சியில் தெரிந்தது. அரதத்தரை அழைத்துக் கொண்டு போய் உணவிட்டுப் போற்றினர். அரதத்தர் சாப்பிட்டுவிட்டுத் திருநீறு வழங்கிக் கொண்டிருந்தார். அப்பொழுது அரசனுடைய சேவகர்கள் உணவிட்ட அந்தணரிடம் வந்து அரசன் அழைப்பதாகக் கூறி அழைத்துச் சென்றனர். அரசன் அந்தணரை எதிர் கொண்டு பணிந்தான். வேண்டிய பொருள் உதவி செய்து அந்தணருடைய வறுமையைப் போக்கினன்.

ஒருநாள் அரசன் அரதத்தருக்கு நானூறு நெல் மூட்டைகளை அனுப்பினன். அந் நெல் மூட்டைகள் அரதத்தர் வீட்டிற்கு வந்து கொண்டிருக்கையில் இருநூறு மூட்டைகள் ஆற்றுவெள்ளத்தில் போய் விட்டன. இந்நிகழ்ச்சிக்குச் சிலநாட்கட்குமுன்பு அரதத்தரின் தாய் சிவநிவேதன உணவுக்காக இரண்டு மரக்கால் நெல்லை மற்றோரந்தணரின்இல்லத்திலிருந்து கடனாகப் பெற்று வெய்யிலில் உலர்த்தியிருந்தாள். அதனை ஒரு காளைமாடு வந்து தின்றது. அரதத்தர் அதைப் பார்த்தார். காளையை விரட்ட வில்லை. பரப்

பியிருந்த நெல்லைக் குவித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார். இதனை அரதத்தரின் தாய் பார்த்தாள். அரதத்தரை வைது கொண்டே ஓடிவந்து மாட்டை விரட்டிவிட்டாள். அரதத்தர் தாயைப் பார்த்து "இறைவராகிய கடவுளே மாட்டு வடிவத்தில் இவ்வாறு நெல்லைத் தின்றார். நீ மாட்டை விரட்டியபடியால் உனக்கு வரும் நன்மையில் பாதி ஒழியும்" என்று கூறினார். மறுநாள் அரசனுடைய ஏவலர் வந்து இருநூறு மூட்டைகளை வெள்ளம் அடித்துக்கொண்டு போய் விட்ட செய்தியைக் கூறி இருநூறு மூட்டைகளைக் கொடுத்தனர்.

ஒருநாள் அரதத்தரின் மனைவி அரிசி களைந்து கொண்டிருக்கும் போது நாய் ஒன்று வந்து அரிசியில் வாயை வைத்தது. அவள் அங்கிருந்த அரிவாள் மணையை எடுத்து அதன் மீது எறிந்தாள். அந்நாய் இறந்தது. அதனைக்கண்ட அரதத்தர் வருந்தினார். மனைவி கதவை மூடி வைக்காத குற்றத்தால் இது நேர்ந்தது என்று கூறினார். அந்நாய்க்குத் திருவைந்தெழுத்தை யோதி அது நற்கதி பெறச் செய்தார். தாய் காளையை விரட்டியதற்கும் மனைவி நாயைக் கொன்றதற்கும் கழுவாய் விரும்பி ஒரு சுலோகத்தை எழுதி வைத்துவிட்டு நீராடச் சென்றார். அப்பொழுது சிவபிரான் அரதத்தரைப்போல் வந்து "சிவசிவ" முழக்கமே கழுவாய் என்று எழுதிவைக்கப் பார்த்துச் சிவபிரானுடைய அருளுக்குப் பணிந்தார்.

இவர் ஒருநாள் நீராடுவதற்குக் காவிரிக்குச் சென்றார். அங்கு ஒரு புலையனும் அவன் மனைவியும் உரையாடிக் கொண்டிருந்தனர். புலைச்சி தன் கணவனைப் பார்த்துக் "காவிரியில் நீராடுவது எல்லாத்தீவினைகளையும் போக்கும்" என்று கூறினாள். புலையனோ "கூடாது கூடாது. நாம் காவிரியில் நீராடுதல் கூடாது. காவிரியில் இருக்கும் மணல்களெல்லாம் சிவலிங்கங்கள் அவைகளை நாம் தொடுதற்கும் தகுதியுடையேம் அல்லேம்" என்று கூறிக் கொண்டிருந்தனன். இவ்வுரையாடல்களைக் கேட்ட அரதத்தர் புலையனது மிதியடிகளைத் தலைமீது வைத்துக் கொண்டு கூத்தாடினார். "உலகத்தில் பலர் தெய்வங்களைப் பலவாறு போற்றுகின்றனர். நாமோ சிவனடியாரின் மிதியடிகளைப் போற்றுகிறோம்" என்று கூறினார்.

ஒருநாள் நாய் ஒன்று இவருடைய வீட்டு மடைப்பள்ளியிற் புகுந்து சோற்றை உண்டது. இதனைக்கண்ட அரதத்தர் "சிவபிரானே இவ்வாறு வந்துண்டார். இது சிவநிவேதனம்" என்று கூறி எஞ்சிய சோற்றைப் பலருடனும் உண்டார். ஒருநாள் அரதத்தர் காவிரிக்கு நீராடச் சென்றார். அப்பொழுது சிவபிரான் புலையனைப்போல் எதிரே வந்து உணவு வேண்டினார். அரதத்தர் அப்போலிப் புலையனை இல்லத்திற்கு அழைத்துக் கொண்டுபோய்க் கஞ்சியூற்றினார். சிவைக்கிய சோழமகாராசனுக்கு இறைவன் நாடோறும் கனவில் காட்சி தருவது வழக்கம். அரதத்தரிடம் கஞ்சி குடித்தவன்று சோழன் சிவபிரானுக்குச் சிறப்பான திருமுழுக்குகள் செய்து பல வகையான உணவுகளைப் படைத்தான். வழக்கம்போல் கனவில் காட்சி நல்கும் சிவபிரான் அன்று காட்சி நல்கவில்லை. சோழன் உள்ளம் வருந்

திக்கொண்டிருந்தான். சிவ பிரான் கனவில் தோன்றி ''அரதத்தன் அளித்த கஞ்சிக்கு நிகரல்ல உன்னுடைய உணவு அதனுல்தான் காட்சி தர வில்லை'' என்று கூறியருளினுர். அரசன் மறுநாள் அரதத்தரிடம் வந்து அரதத்தரைப் போற்றி அடிமை பூண்டொழுகினுன். தனக்கு வீடுபேற்றையளிக்க வேண்டுமென்று இவரை வேண்டிக் கொண்டான். இவர் சோழனைப் பார்த்து, ''அரைச் சாமத்தில் அக்கிநீசுரத்திற்கு அண்மையில் உள்ள ஏழுசிவா லயங்களையும் வணங்கி வருவா யாஞல் வீடுபேறு உண்டா கும்'' என்று கூறினுர்.

அரசன் குதிரை மீது ஏறிக் கொண்டான். குடைபிடிக்கும் ஆள் பின்தொடர்ந்து ஓடிவர அரதத்தர் உரைப்படி அரைச் சாமத்தில் ஏழுதலங்களையும் போற்றி வந்தான். அரதத்தரி டம் வந்ததும் குதிரை சிவலோ கஞ் சென்றது. குடைபிடித்த ஆளுஞ் சிவலோகஞ் சென்ருன். சோழன் வருந்தினின்ருன். அரதத்தர் சோழனைப் பார்த்து ''நீயும் கால்நடையாக வணங்கி வருவாயாஞல் சிவலோகஞ் செல்லலாம்'' என்று கூறினுர். அரசன் அவ்வாறே செய்து சிவ லோகஞ் சென்ருன்.

அக்கிநீசுவரருடைய தேர்த் திருவிழா நடைபெற்றது. அரதத்தருடைய பெண்கள் தேர்த்திருவிழாவுக்குச் செல் வதற்கு அணிகலன்கள் வேண்டு மென்றனர். அரதத்தர் ஆவின் காலடிகளின் சுவடுகளில் அணி கலன் காட்டி அவைகளை யெடுத்து அணிந்துகொள்ளச் செய்தார். ஒருநாள் சிவபிரான் இவருக்கு வழித்துணை வந்தார். கழைக்கூத்தியின் மிச்சில் முதலியவைகளை உண்ட ஒருவ ருடைய தீவினையைப் போக்கி ஞர். கங்கைநீராட விரும்பிய உறவினரை அக்கிநி தீர்த்தத் தில் மூழ்கிக் காசி மணிகர்ணிகா கட்டத்தில் எழுந்து அங்கு நீராடச் செய்தார். இவருக்கு இரண்டு பெண் மக்களும் எட்டு ஆண் மக்களும் தோன்றினர். இவர் இல்லறத்திலிருந்தே வீடு பேற்றையடைந்தவர். இவர் வடமொழியில் வல்லவர். வட மொழியில் நூல்கள் பலவற்றை இயற்றியிருக்கிருர். இவர் வீடு பெற்றபோது தம்மோடு சேர்ந்த பதினுன்கு வீட்டினரை யும் தம்முடைய நாயையும்வீடு பெறச் செய்தார்.

**திருக்கச்சி நம்பி** - வைசிய குலத் தில் பிறந்த இவர் ஆளவந்தார் திருவடி சம்பந்தி, சங்குகர்ணும் சம், இளையாழ்வாரைக் காணக் காஞ்சிக்கு எழுந்தருளிய போழ்து உடையவர் முறை தவறித் தம்மை வணங்க முயல் கையில் தடுத்து அவருடைய ஐயங்களைப் பெருமாள் கட் டளைப்படி இளையாழ்வாருக்கு அறிவித்தவர் இவர்அருளாளன் என்னும் சிறுவனை ஒரு நாள் திவட்டி பிடிக்க ஏற்பாடு செய்து சந்நிதிக்குச் சென்ற பின் மழை பிடிக்கவும் அரு ளாளன் வீடு வந்து உறங்கி விடவே, நம்பி சந்நிதியில் பணி முடித்து வெளியில் வர, அருளாளன் வடிவில் பெருமாள் திவட்டி பிடித்ததைப் பின்பு தெரிந்து கொண்டு பேறு பெற்றவர்.

**திருக்கச்சி மயானம்** - தேவார வைப்புத்தலம். ஏகாம்பரநாதர் கோவிலின் முன்புறம் கொடி மரத்தின் எதிரே தென் கீழ்த் திக்கில் உள்ள தனிக் கோயில். ''மைப்படிந்த கண்ணுளுந் தானுங் கச்சி மயானத்தான்''

என்பது அப்பர் திருத்தாண்டகம்.

**திருக்கச்சூர் ஆலக்கோயில்** - தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்ருகிய இவ்வூர் சென்னையை ஒட்டியுள்ள சிங்கப்பெருமாள் கோவிலுக்கு அண்மையில் உள்ளது. திருமால் பாற்கடல் கடையும்போது அமுதந் திரள வேண்டுமென்று வேண்டி ஆமை (கச்சபம்) வடிவம் எடுத்து வழிபட்டபடியால் திருக்கச்சூர் எனவும் தலமரம் ஆலமரமாகையால் ஆலக் கோயில் எனவும் பெயருண்டாகியது. சுந்தரர்க்கு உணவளித்த தலம். அதனுல் கோவிலில் விருந்திட்ட ஈசுரர் என்னும் பெயருடைய சிவலிங்கம் ஒன்றும் இருக்கிறது.

**திருக்கஞ்சனூர்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. நான்முகனுக்குக் கஞ்சன் என்று ஒரு பெயர் உண்டு. கஞ்சன் வழிபட்ட ஊராகையால் கஞ்சனூர் என்று பெயர் பெற்றது. அரதத்த சிவாச்சாரியார் இவ்வூரில் பிறந்து பல புதுமைகளைச் செய்தார். இத் தலத்தில் அக்கினி தேவனும் வழிபட்டாருகையால் சுவாமிக்கு அக்கினீசுவரர் என்று பெயர் அம்மன் பெயர் கற்பகநாயகி.

**திருக்கடம்பந்துறை** - சோழ வள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இது கடம்பர் கோயிலென வழங்குகிறது. குழித்தலைப் புகை வண்டி நிலையத்திற்கு வடமேற்கில் ஒரு மைல் தொலைவில் உள்ளது. வடக்கு நோக்கிய கோயில். கண்ணுவ முனிவருக்கும் தேவர்களுக்குஞ் சிவபெருமான் கடம்ப மரத்தில் தோன்றிக் காட்சி கொடுத்தபடியால் கடம்பந்துறை என்று பெயர் உண்டாகியது. சுவாமி பெயர் கடம்பவன நாதேசுரர்; அம்மன் பெயர் முற்றிலா முலையம்மை.

**திருக்கடவூர்** - சோழவள நாட்டிலுள்ள மூவர் தேவாரமும் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சாவின் அச்சத்தைக் கடக்க அருளும் ஊராகையால் கடவூர் என்று பெயர் பெற்றதென்பர். சுவாமிக்கு அமிர்த கடேசர் என்று பெயர் இருத்தலால் வேறு காரணம் இருத்தல் கூடுமென்று தெரிகிறது. அபிராமி என்பது இங்குள்ள அம்மன் பெயர். அபிராமி பட்டர் என்பவர் அபிராமி மீது அபிராமி யந்தாதி பாடியுள்ளார். அட்டவீரத் தலங்களில் ஒன்று. மார்க்கண்டேயர் பொருட்டுச் சிவபிரான் எமனை வீழ்த்திய தலம். இங்குக் காரி நாயனுரும் குங்கிலியக்கலய நாயனுரும் வாழ்ந்திருந்தனர்.

**திருக்கடவூர் மயானம்** — ஒரு கற்பத்தில் நான்முகனை எரித்து மீள உயிர்ப்பித்துப் படைப்பு வல்லமை பெற அருளிய தலமாதலின் மயானம் என்னும் பெயரை யடைந்தது. நான்முகனுல் வழிபடப் பெற்றது. திருக்கடவூரில் இருந்து கிழக்கே முக்கால் நாழிகை வழிப் பயணத்தில் உள்ளது.

**திருக்கடிக்குளம்** - இவ்வூர் இப்பொழுது கற்பகனூர் கோயில் என்னும் பெயரோடு வழங்குகிறது. சோழ நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தஞ்சை மாவட்டத்தில் திருத்தருப்பூண்டி புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே ஏறக்குறையப் பத்துக் கல் தொலைவில் உள்ளது. இவ்வூரில் கற்பக விநாயகர் சிவபெருமானை வழிபட்டு மாம்பழம் பெற்ருர் என்பர்.

**திருக்கண்ணபுரம்** - சோழ வள நாட்டிலுள்ள திருமால் திருப்பதிகளில் ஒன்று. கண்ணுவர் வழிபட்ட தலமாகையால் கண்ணபுரம் என்று பெயர் பெற்றது. திருமால் பெயர் சௌரிராசப் பெருமாள். தாயார் பெயர் கண்ணபுர நாயகி. நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் முதலியோர் இத் தலத்தைப் பாடியிருக்கின்றனர்.

**திருக்கரபுரம்** - இப் பதி கொங்கு வள நாட்டில் உள்ளது. வேம்படி தாளம் புகை வண்டி நிலையத்திற்கு அண்மையில் உள்ளது. கஞ்சமலை என்னும் மலையும் இவ்வூருக்குப் பக்கத்தில் இருக்கிறது. "கண்ணார் நுதலார் கரபுரமும் காபாலியார் தங் காப்புகளே" என்பது தேவாரம். கரன் என்பவன் வழிபட்ட ஊராகையால் இப் பெயர் பெற்றதென்பர்.

**திருக்கரி வலம் வந்த நல்லூர்** - பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவப்பதி. திக்குப் பாலர்கள் வழிபாடு செய்த இடம். இந்த இடம் காடாக இருக்கையில் குலசேகர பாண்டியன் வேட்டைக்குச் சென்றான். ஒரு யானை புதரை வலம் வந்து சிவகணமாகிச் செல்வதைக் கண்டான். அப் புதரை அழிக்கச் செய்து பார்த்தான். பால் போல் வெள்ளிய சிவலிங்கம் ஒன்று இருந்தது. அதனைக் கண்டு வழிபட்டு வணங்கினான். கோவில் கட்டித் திருப்பணிகள் செய்தான். சுவாமி பால்போல் வெள்ளிய நிறமுடையவராக இருந்தபடியால் பால்வண்ண நாதர் என்று பெயரிட்டான். யானை வலம் வந்தபடியால் ஊர் கரிவலம் வந்த நல்லூர் என்று பெயர் பெற்றது.

**திருக்கருகாவூர்** - சோழ வள நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருக்களாவூர் என வழங்கும். பாபநாசம் புகை வண்டி நிலையத்திற்குத் தெற்கில் நான்கு கல் தொலைவில் உள்ளது. ஆதரவற்ற ஒரு பெண்ணுக்குத் தேவியார் மருத்துவம் பார்த்துக் கருவைக் காத்தபடியால் ஊருக்கு இவ்வாறு பெயர் உண்டாயிற்று. தேவியாருடைய பெயரும் கர்ப்ப ரட்சகி என வழங்கும்.

**திருக்கலயநல்லூர்** - இவ்வூர் சாக்கோட்டை என வழங்குகின்றது. சோழ வள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருக்குடந்தைக்குத் தெற்கே இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. ஊழிக் காலத்தில் உயிர்த் தொகைகளையெல்லாம் அடைத்து வைக்கப்பட்டிருந்த கலயம் வந்து தங்கியபடியால் கலயநல்லூர் என்று பெயர் பெற்றது என்பர். கலயம் என்பது சிறு குடம். சுவாமி பெயர் அமிர்தகலேசுரர். அம்மன் பெயர் அமிர்தவல்லி.

**திருக்கழுக்குன்றம்** - தொண்டை வள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. கழுகுகள் வழிபடுகிறபடியால் கழுக்குன்றம் என்றும் வேதங்கள் வழிபடுகிறபடியால் வேதகிரி என்றும் பெயருடையது. ஈராறு ஆண்டுகட்கு ஒரு முறை இந்திரன் இடிபூசை செய்யும் ஏற்றமுடையது. இங்குள்ள சங்கு தீர்த்தம் என்னும் புனித நீரில் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை சங்கு பிறக்கிறது. சங்கு தீர்த்தத்தில் நீராடி மலை வலஞ் செய்பவர்கட்கு எத்தகைய நோயுந் தீர்ந்து விடுகிறது. மாணிக்கவாசகருக்கு

இங்கு சிவபெருமான் குரு வடிவமாக எழுந்தருளிக் காட்சி கொடுத்தார். மலை வலம் வர வேண்டிய தொலை இரண்டு மைலாகும். கதலி வனம் எனவும் இவ்வூருக்குப் பெயர் உண்டு. அந்தகக்கவி வீரராகவ முதலியார் திருக்கழுக்குன்றப் புராணம் பாடியுள்ளார். சுவாமி பெயர் வேதகிரீசுரர் எனவும் மலைமருந்தீசர் எனவும் வழங்குகின்றன. அம்மன் பெயர் பெண்ணினல்லா ளம்மை. நாள்தோறும் நண் பகற்போதில் இரண்டு கழுகுகள் வந்து கொடுக்கப்படும் உணவை உண்டு செல்லுகின்றன.

**திருக்களிற்றுப்படியார்** - சித்தாந்த சாத்திரம் பதினுன்கனுள் ஒன்று. இதனை இயற்றியவர் திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனுர். நூறு வெண்பாக்களைக் கொண்டது. திருவுந்தியாரின் உட்கருத்துக்களை விரித்துரைப்பது. இந்நூலினிடத்திலே தெய்வீகங் காண விரும்பினர். இந்நூலைத் திருச்சிற்றம்பலவனுடைய வாயிற்படியில் வைக்கப் படியில் அமைந்துள்ள யானை துதிக்கையால் எடுத்து அம்பலவாணரிடம் நீட்டியது. அதனுல் திருக்களிற்றுப்படியார் என்று பெயர் உண்டாகியது.

**திருக்கள்ளம்**-தொண்டை நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சென்னைக்கு வடமேற்கில் உள்ளது. பிருகு முனிவர் வழிபட்ட தலம். அம்முனிவர் பூசைக்கு கொண்டு வந்துவைத்திருந்தபொருள்களை இறைவன் வேறிடத்திற்கு மாற்றிக் கள்ளம் புரிந்தபடியினுல் திருக்கள்ளம் என்று பெயர் பெற்றது. இறைவர் பெயர் சிவாநந்தேசுரர், இறைவி பெயர் ஆநந்த வல்லியம்மை.

**திருக்கன்ருப்பூர்** -சோழவளநாட்டிலுள்ளதேவாரம்பெற்ற சிவப்பதிகளில்ஒன்று.வைணவனுக்கு வாழ்க்கைப்பட்ட சைவப்பெண் ஒருத்தி மாமியார் வீட்டார் காணுதவாறு கன்றுக் குட்டி கட்டியிருந்த முளையையே (ஆப்பு-முளை) சிவலிங்க மாகப் பாவித்து வழிபாடு செய்து கொண்டிருந்தாள். இதனை உணர்ந்த கணவன் அவ்வாப்பைக் கோடரியால் வெட்டினுன். சிவபிரான் அவ்வாப்பில் இருந்து வெளிப்பட்டார். இதனுல் ஊர் கன்ருப்பூர் என்னும்பெயரையடைந்தது. இறைவன் பெயர் நடுதறிநாதர்; இறைவிபெயர் மாதுமையம்மை. கோடரியால் வெட்டப்பட்ட குறிஇலிங்கத்தின்மேல் இன்றும் உள்ளதென்பர்.

**திருக்கிள்ளி** - ஏனுதி திருக் கிள்ளி எனப்பெறுமிவன் சோழநாட்டுக் குறுநில மன்னர்களில் ஒருவன். சோழ வேந்தர்களுக்குப் படைத்துணையாகச் சென்றுபல போர்களைச்செய்துபுகழ்பெற்றவன்.பகைவருடையபடைக்கலங்களால்புண்பட்ட மேனியுடையவன்; இரவலர்க்கு வரையாது வழங்குதலால் இசைபெற்ற வாழ்வுடையவன். ஏனுதி என்பதுமுடிவேந்தர்களால் கொடுக்கப்படுகிறசிறப்புப்பெயர். இவனுடையகாலத்தில் சோழவேந்தன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னியும் சேரமான் குட்டுவன் கோதையுஞ்சிறப்புற்றிருந்தனர். குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவனும் இவன் காலத்தவனே. இவன்காலத்திலிருந்த கோனுட்டுஎறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனுர் இவனுடைய வள்ளன்மை முதலியவை

களைப்பற்றிக் கேள்விப் பட்டு இவனிடம்வந்துபுகழ்ந்துபாடிப் பரிசில்பெற்றுச் சென்ருர்.

**திருக்குடமூக்கு** - கும்பகோணம் எனவழங்குகின்றது. சோழவள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில்ஒன்று. ஏமரிஷி, ஆதிசேடன் முதலியோர் வழி பட்டது. நான்முகன் உலகப் படைப்புக்குஉதவியாகஎல்லாப் பொருள்களாலும் ஒரு குடத்தைஅமைத்து அதனை மகா மேருமலையில் வைத்தான். அப் பொழுதுஒரு பிரமப் பிரளயம் உண்டாகியது. பிரளய நீரால் குடம் அலைக்கழிக்கப்பட்டு இவ் விடத்தில்வந்து ஒதுங்கியது. ஊழிமுடிந்தபிறகு சிவபிரான் உலகைப்படைக்கக்கருதி வேட வடிவங் கொண்டு எழுந்தருளி இங்குவந்து ஒதுங்கிய உலகப் படைப்புக் குடத்தைக் கணை செலுத்தி உடைத்தருளினார். குடம் உடைபடவே உயிர்த் தொகைகளெல்லாம் உண்டா யின. குடத்தில் இருந்த அமுத மும் ஐந்து குரோசஎல்லைவரை யில் பரவியது. அமுதத்தைத் திரட்டிச் சிவலிங்கமாக்கி வேடக் கோலந்தாங்கிய சிவ பெருமானே பூசித்தருளிய படி யால் அவ்விலிங்கத்திற்குக் கும் பேசுரர் என்றுபெயர் உண்டா கியது. அக்காலத்தில் உண்டா கிய மகாமகக்குளம் என்னும் புனிதநீர் இப்பதியில் உள்ளது. பன்னிரண்டு ஆண்டுகட்கொரு முறை சிங்கராசியில் குருவருங் காலத்தில் மாசித் திங்கள் மக நாளில் இதில் காசிக் கங்கை வருகிறது. அந்நாளில் நூறு யிரக்கணக்கான மக்கள் இப் புனிதநீரிற் படிந்து தம்முடைய தீவினையைப் போக்கிக் கொள் வர். இவ்வூர் சோழவளநாட்டில் புகழ்பெற்றது. ஊரில் வேறு பல கோயில்கள் உள்ளன. சுவாமிபெயர் கும்பேசுவரர் அம்மன் பெயர் மங்களநாயகி.

**திருக்குடவாயில்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருண பிந்து முனிவர் வழிபாடு செய் தார். சுவாமி திருக்குடத்தில் இருந்து வெளிப்பட்டு முனி வருடைய குறை நோயைப் போக்கியருளினார். இறைவன் பெயர் கோணேசுரர்; இறைவி பெயர், பெரிய நாயகியம்மை. குடவாயிலால் இறைவன் வெளிப்பட்ட படியால் ஊருக் குக் குடவாயில் அல்லது குட வாசல் என்னும் பெயருண்டா கியது.

**திருக்குருகாவூர்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சீகா ழிக்குக் கிழக்கே நான்கு மைல் தொலைவில் இருக்கிறது. சுந்தரமூர்த்திகட்கும்அவருடன் சென்ற அடியவர்கட்கும் சிவ பிரான் கட்டமுது வழங்கிய தலம். இவ்விழாச் சித்திரைத் திங்கள்முழுத்திங்கள்நாளன்று நடைபெறுகிறது.கோயிலுக்கு வெளியே பாற்கிணறுஎன்னும் புனித நீர் இருக்கிறது. தை அமாவாசை நாளில் சுவாமி தீர்த்தங் கொடுக்கிறசமயத்தில் தீர்த்தம் பால் நிறமாக மாறி விடுகிறதாகக் கூறப்படுகிறது. சுவாமி பெயர் வெள்ளடை யீசுரர்; அம்மன் பெயர்காவியங் கண்ணியம்மை.

**திருக்குருகைப் பிள்ளான்** - இவர் பெரிய திருமலைநம்பியினுடைய புதல்வர். இராமாநுசருடைய மாணுக்கர். திருவாய் மொழிக்கு ஆருயிரப் படி என்னும் விரி வுரையை அருளிச் செய்தவர். பிள்ளான் என்பது இவரதுஇடு குறிப்பெயர். திருக்குருகைப் பிரான் என்பது நம்மாழ்வா ருடைய திருப்பெயர். அவ

ருடைய பெயரை அவருடைய நினைவின் பொருட்டுத் தம் மாணுக்கரும் காதற் சேயுமான இவருக்குவைத்தார். பிறகுஇவர் இப்பெயராலேயே அழைக்கப் பட்டார்.

**திருக்குறள்** - குறள் வெண்பா என்னுஞ் சிறிய வெண்பாக்க ளால் செய்யப்பட்ட படியால் குறள் என்று பெயர் பெற்ற நூல். தன்னுடைய சிறப்பால் திரு என்னும் அடைமொழியும் பெற்றுத் திருக்குறள் என்று கூறப்படுகிறது. இக்காலஉல கத்தில்திருக்குறளைஅறியாதவர் களேஇல்லையென்னலாம். அறத் துப்பால் பொருட்பால் காமத் துப்பால் என்னும் மூன்றுபிரிவு களைப் பெற்றுள்ளமையின் முப் பால் எனவும் தெய்வத் தன்மை அமைந்தபடியால் தெய்வ நூல் எனவும், திருவள்ளுவரால் செய்யப்பட்டபடியால் திரு வள்ளுவர் எனவும் எக்குறளும் உண்மையாகவே விளங்குகிற படியால் பொய்யாமொழி என வும் எல்லா வகுப்பினரும் பொதுவாகப்பாராட்டக்கூடிய நிலையில் இருப்பதால் பொது மறையெனவும் வழங்கப்படு கிறது. இக்குறளைப்பாராட்டிப் பாடப் பெற்ற திருவள்ளுவ மாலை என்னுஞ் சிறுநூல் திருக் குறளின் சிறப்பை நன்கு புலப் படுத்தி நிற்கிறது. "ஆயிரத்து மூந்நூற்று முப்ப தருங் குறளும், பாயிரத்தி னேடு பகர்ந்ததற்பின் போயொருத் தர்வாய்க் கேட்க நூலுளவோ மன்னுதமிழ்ப்புலவ ராய்கேட்க வீற்றிருக்கலாம்" என்னும் வெண்பாவில் எவ்வளவு உண்மை நிறைந்திருக்கிறதென் பதை நூலைப் படிக்கும் ஒவ் வொருவரும் நன்குணர்வர். இந் நூலுக்கு முற்காலத்திற் பலர் உரையியற்றியதன்றிஇக்காலத் திலும் பலர் உரையியற்றிக் கொண்டிருக்கின்றனர். திருக் குறள்மூல நூலும்உரை நூலும் எவ்வளவோ பேர்களால் எவ் வளவோ பதிப்புக்கள் வந்து விட்டன. ஆயினும் இந் நூலுக்கு இன்னுந் தேவை இருந்து கொண்டுதான் இருக் கின்றது. திருக்குறளைப் போன்ற ஒரு சீரிய நூல் திருக் குறளுக்கு முன்னுந் தோன்றிய தில்லை. இனிமேலும் தோன்றப் போவதில்லை.

**திருக்குறுக்கை** - சோழவள நாட் டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தீர்க்க வாகு என்னும் முனிவர் இறை வனுக்குத் திருமுழுக்குச் செய் யத் தம்முடைய நீண்ட கைகளை உயரத் தூக்கினர். அக்கைகள் குறுகின. அதனுல் இப்பதிக்குக் குறுக்கை என்று பெயர் உண் டாகியது. அட்டவீரத் தலங் களில் ஒன்று. காமனை எரித்த தலம். கடுக்காய் மரம் தலமர மாகும். இறைவன் பெயர் வீரட்டேசுரர். இறைவி பெயர் ஞானம்பிகை.

**திருக்குற்றாலம்** - பாண்டி நாட் டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சிவ பெருமான் திருக்கூத்தாடி யருளிய ஐந்து சபைகளில் ஒன் ருகிய சித்திர சபை. குற்றாலம் நீர்வீழ்ச்சிக்கோயிலுக்குப் பக் கத்தில் இருக்கிறது. பொதிய மலையின் அடிவாரம். வடஅருவி, பொங்குமாகடல், சண்பகா டவி, சிவமதுகங்கை, சித்திரா நதி, சித்திரகுளம் முதலிய தீர்த்தங்கள் இருக்கின்றன. வேதவடிவமாகிய குறும்பலா மரமும் இங்கிருக்கிறது. இவ் வூர் இருபத்தொரு திருப்பெயர் களை யுடையது. அகத்தியர் முதலானோர் வழிபட்ட இடம். சுவாமிபெயர் குற்றாலநாதர்

குறும்பலாவீசர். அம்மன்பெயர் குழல் வாய்மொழியம்மை.

**திருக்கேதாரம்** - வட நாட்டில் இமயமலைத் தொடரிலுள்ள புகழ் பெற்ற ஊர். கடல் மட்டத்திற்கு மேல் 11,753 அடி உயரத்தில் உள்ளது. திருக்கேதாரக் கோயில் அமைந்துள்ள இடத்திற்குப் பின்னால் கேதாரநாத மலைச் சிகரம் இருக்கிறது. மலையின் முடி கடல் மட்டத்தில் இருந்து 23,420 அடி உயரத்தில் இருக்கிறது. இக் கேதாரம் பத்ரீ நாராயணத்திற்கு மேற்கே உள்ளது. மலையின் சிகரம் எப்பொழுதும் பனிமூடியவாறு காட்சியளிக்கும். அக் காட்சி பார்ப்பதற்கு இனிமையாக இருக்கும். பக்கத்தில் கங்கையாறு இருக்கிறது. இஃது உறைபனி நாட்டில் இருப்பதால் ஆறு திங்கள்களுக்குக் கோயில் மூடப்பட்டிருக்கும். ஆறு திங்கள் விண்ணகத் தேவர்களும் ஆறு திங்கள் மண்ணக மனிதர்களும் வழிபாடு செய்வதாகக் கூறப்படுகிறது. மனிதர்கள் வழிபாடுசெய்து பூட்டிய பிறகு ஆறு திங்கள் கழித்துத் திருக்கோயிலைத் திறந்து பார்க்கும்பொழுது முதனாள்வழிபாடு செய்யப்பட்டதைப் போன்றே மலர் முதலியன காணப்படுவதாகக் கூறப்படுகிறது.

பிருங்கி முனிவருக்காக இறைவி இறைவனை வழிபட்டு இடப்பாகம் பெற்றது இங்குத்தான் என்பர். இறைவனுடைய பெயர் கேதாரநாதர், இறைவியினுடைய பெயர் கேதார கௌரி. திருஞான சம்பந்தரும் சுந்தரரும் காளத்தியில் இருந்தபடியே இவ்விறைவனைப் பாடியுள்ளனர். கேதார நாதரை முதலில் அமைத்து வழிபட்டவர்கள் சுவர்க்கம் சென்ற பாண்டவர்கள் என்பர். இவ்வூர் சில காலம் பௌத்தர்களிடமிருந்ததாம். ஆதி சங்கரர் இங்கு வந்தபொழுது பௌத்தர்களை விரட்டிக் கோயிலைக் கைப்பற்றி வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்ததன்றி மடம் ஒன்றையும் அமைத்தார். இறைவனுடைய உருவம் பாறையாக விளங்கும். வழிபாடு செய்வதற்குச்சாதி வேறுபாடுகள் இல்லை. யார் வேண்டுமானாலும் தொட்டு வழிபடலாம். இக்கேதாரத்தை அடைவது மிகச் சிரமமானாலும் ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான சிவநேசர்கள் இங்கு வந்து வழிபாடு செய்து செல்லுகின்றனர்.

**திருக்கேதீச்சுரம்** - இராமன் வழிபட்டஇடம் இராமேசுரமானது போல் கேது சிவவழிபாடாற்றிய தலம் கேதீச்சுரம் ஆகியது. திருக்கேதீச்சுரம் எனவழங்கும் இச் சிவப்பதி சுந்தரருடைய தேவாரப் பாடல்களைப் பெற்றுள்ளது. இலங்கையில் தலைமன்னாரிலிருந்து இருபது மைல் தொலைவில் உள்ளது. இக் கோவிலுக்குப் பத்து லட்ச ரூபாய் மதிப்புள்ள சொத்து உண்டு.

**திருக்கைலாசபுரம்** - பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவப்பதி. இஃது இந்நாளில் சிந்துபூந்துறை என்று வழங்குகின்றது. பரத்துவாசர் முதலிய முனிவர்கள், பூசித்துக் கைலாயக் காட்சியைக் கண்ட தலம். சுவாமி பெயர் கைலாசநாதர். அம்மன் பெயர் சிவகாமியம்மை. தாமிரபருணியாறு அண்மையில் உள்ளது.

**திருக்கொடுங் குன்றமுடையான் நிடதராசன்** - பாண்டி வள நாட்டில் பொன்னமராவதியிலிருந்த ஒரு தலைவன். இராம

நாதபுரம் மாவட்டத்திலுள்ள திருக்களாக்குடிக் கோயிலுக்கு இவன் இறையிலி நிலம் கொடுத்தனன் என்பது அங்குள்ள கல்வெட்டொன்றினுல் அறியப்படுகின்றது. இவன் அரசியலில் பங்கு கொண்டிருந்தவனாக இருக்கலாமென்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

**திருக்கோடிகா** - சோழ வள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. மூன்று கோடி முனிவர்கள் வழிபட்ட ஊராகையால் கோடிகா என்று பெயர் பெற்றது. திருவிசைப்பாப் பாடிய கண்டராதித்த சோழருடைய மனைவியாராகிய செம்பியன் மாதேவியாரால் கோயில் திருப்பணி செய்யப்பட்டிருக்கிறது. சுவாமி பெயர் திரிகோடீசுரர். அம்மன் பெயர் வடிவாம்பிகை.

**திருக்கோட்டியூர்** - பாண்டி நாட்டில் உள்ள ஒரு வைணவப்பதி. சிவன், திருமால், நான்முகன் ஆகிய முத்தேவர்களுங் கூட்டங்கூடி இரணியனைத் தொலைத்தற் பொருட்டுக் கலந்தெண்ணியபடியால் இவ்வூர் இவ்வாறு பெயர் பெற்றதென்பர்.

**திருக்கோட்டியூர் நம்பி** - ஆளவந்தாருடைய மாணவர். இராமாநுசருக்கு ஆசாரியர். இராமாநுசர் இவரிடம் திருமந்திரார்த்தத்தையும் சரம சுலோகார்த்தத்தையுங் கேட்டார். திருக்கோட்டியூரில் பிறந்தபடியினுல் திருக்கோட்டியூர் நம்பி என்று பெயர் பெற்ருர். இவருடைய புதல்வர் தெற்காழ்வான். புதல்வி தேவகிப் பிராட்டியார்.

**திருக்கோவையார்** - மணிவாசகப் பெருமானுரால் அகப் பொருளிலக்கணம் அமையச் சிவபெருமானை நாயகனுகவும் தம்மை அடிமையாகவும் கொண்டு கட்டளைக் கலித்துறை யாப்பால் ஆக்கப் பெற்ற நானூறு பாடல்கள் கொண்ட ஒரு நூல். இதைத் திருச்சிற்றம்பலக் கோவையார் எனவும் கூறுவர்.

**திருக்கோழம்பம்** - சோழ வள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சந்தன் என்னும் வித்தியாதரன் இந்திரனுடைய சாபத்தால் அடைந்த குயில் வடிவத்தைப் போக்கிக் கொண்ட ஊர். கோழம்பம் என்பதன் பொருள் கலக்கம். வித்தியாதரன் குயில் வடிவாகவிருந்த காலத்தில் கலங்கிய கலக்கத்தைப் போக்கினமையால் இவ்வாறு பெயர் பெற்றது போலும். சுவாமி பெயர் கோகிலேசர்; அம்மன் பெயர் சௌந்தர நாயகி.

**திருச்சக்கரப்பள்ளி** - ஐயம்பேட்டை புகை வண்டி நிலையத்திலிருந்து மேற்கே முக்கால் நாழிகை வழித் தொலைவில் உள்ள ஒரு தேவாரம் பெற்ற சிவப்பதி. சக்கரவாகப் பறவை வழிபாடு செய்து பூசித்தபடியால் இவ்வாறு பெயர் பெற்றதென்பர் ஒரு சாரார். மற்ருெரு சாரார் திருமால் வழிபட்டுச் சக்கரம் பெற்றபடியினுல் இவ்வாறு பெயர் பெற்றதென்பர். நாதசர்மா என்னும் அந்தணன் தன் மனைவிஅனவித்தியா தேவியுடன் முறையாகத் தேவகாத தீர்த்தத்தில் மூழ்கிப் பேறு பெற்றதும் ஈண்டேயாம்.

**திருச்சானூர்** - திருப்பதிக்குத் தென் கிழக்கில் மூன்று மைல் தொலைவில் உள்ளது. இங்கு பத்மாவதியினுடைய கோயில் இருக்கிறது. இந்தப் பத்மாவதியை வேங்கடநாதனுடைய தேவி என்பர். இங்கு பதும சரோவரம் என்னும் பெயருடைய குளம் ஒன்று இருக்கிறது. இக் குளத்தில் தாமரை

மலரின் மேல் பத்மாவதி தோன்றியதாகக் கூறுவர். இந்தப் பத்மாவதியைப் பற்றியும் திருவேங்கடநாதனைப் பற்றியும் பல கதைகள் வழங்கும். திருப்பதிக்குச் செல்லும் அன்பர்கள் அனைவரும் இங்கும் வந்து அம்மனை வழிபட்டுச் செல்வர்.

**திருச்சிக்கல்** - சோழ வள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் நாகப்பட்டினத்திற்கு மேற்கே மூன்று மைல் தொலைவிலுள்ள சிவப்பதி. கோவில் கட்டு மலை மேல் அமைந்துள்ளது. காமதேனு இங்கே இருந்தது. அதன் பால் பெருகி எங்கும் வெண்ணெயாக உறைந்தது. அவ்வெண்ணெயை வசிட்டர் எடுத்துச் சிவலிங்கமாக அமைத்துச் சிவ வழிபாடு செய்தார். இதனால் இறைவருடைய பெயர் வெண்ணெய் லிங்கேசுரர் என்று வழங்குகிறது. வசிட்டர் சிவலிங்கத்தை வேறிடத்தில் எடுத்து வைக்கமுயன்றார். வராமற் சிக்கிக் கொண்டது. இதனால் சிக்கல் என்று பெயருண்டாகியது. இவ்வூர் தேவாரம் பெற்ற பதிகளில் ஒன்று. இங்கெழுந்தருளியுள்ள சிங்காரவேலவர் புகழ் பெற்றவர். கோயிலுக்குவட பக்கத்தில் பெருமாள் கோயிலும் இருக்கிறது.

**திருச்சித்திரகூடம்** - திருத் தில்லையில் நடராசப் பெருமானுடைய திருக்கோவிலுக்குள் அமைந்துள்ள பெருமாள் கோயிலைத் திருச்சித்திரகூடம் என்னும் பெயரால் வழங்குவர். இங்கெழுந்தருளியுள்ளபெருமாளின் பெயர் கோவிந்தராசர்; தாயார் புண்டரீகவல்லித் தாயார். இப் பெருமாளைக் குலசேகர ஆழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பாடியுள்ளனர்.

**திருச்சிற்றம்பல முடையானான பெருமானம்பிப் பல்லவராயன்** - இவன் இரண்டாம் இராசராச சோழன் ஆட்சியின் பிற்பகுதியில் முதல் அமைச்சனாக இருந்தவன். அவன் இறந்தபோது அவனுடைய இளங் குழந்தைகளையும் அந்தப்புரத்துப் பெண்களையும் இராசராசபுரத்திற்கு அழைத்துக் கொண்டு வந்து பாதுகாத்தவன். அவன் விரும்பியவாறு சோழ நாட்டில் இராசாதி ராச சோழனுக்கு முடி சூட்டி ஆட்சி நன்கு நடைபெறுமாறு உதவி செய்தவன். மன்னனுடைய கட்டளைப்படி மதுரை மாநகரத்திற்குப் படையெடுத்துச் சென்று சிங்களப் படையை வென்று குலசேகர பாண்டியனுக்கு மதுரைமாநகரில் அரசு வழங்கியவன். இவன் கி. பி. 1171இல் இறந்தபோது இவன் மனைவி மக்களுக்கு இராசாதி ராசன் குளத்தூரில் நாற்பது வேலி நிலம் வழங்கினான் என்பது கல்வெட்டினால் அறியப்படுகிறது.

**திருச்சிற்றம்பலமுடையார்** - திருத்தில்லையின்கண் எழுந்தருளிய கூத்தப்பிரானுக்குத் திருச்சிற்பலத்தின்கண் எழுந்தருளினமையால் உண்டான சிறப்புப் பெயர். இப்பெயரை இறைவன் தமக்குத் தாமே சூட்டிக் கொண்டனர்.

**திருச்செங்கோடு**-கொங்கு நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. செந்நிறக் குன்றை உடைமையான் திருச்செங்கோடு எனக் காரணப் பெயர் பெற்றது. இதற்குக் கொடி மாடச் செங்குன்றூர் என்றும் ஒரு பெயர் உண்டு. மலையின் அடியிலேயே ஆனைமுகன் ஆறுமுகன் முதலியோரின் கோவில் உண்டு. நாள் வழிபாடு சிறப்பு வழிபாடு

முதலியன மலையின் மேலுள்ள கோயிலிலேயே நிகழ்வன. ஊருக்குள் கைலாசநாதர் கோயில் இருக்கிறது. மலை மீதுள்ள கோயிலில் மூலத்தான மூர்த்தியாக அர்த்தநாரீசுவர வடிவம் (பாதி மாதுடனை பரமன் உருவம்) வழிபடப்படுகிறது. இக்கோலத்தில் மூலத்தான வழிபாடு வேறு எங்கும் இல்லை. இடப்பால் பெண்ணுருவும் வலப்பால் ஆணுருவுமாகச் சூழியக் கொண்டையோடு நின்ற திருக்கோலமாக அமைந்துள்ளது இறைவன் வடிவம். சுவாமி பெயர் உமையொருபாகமுடையான். அம்மன் பெயர் பாகம் பிரியாள். பாதி வேட்டியும் பாதிப் புடைவையுமாக நெய்யப்பட்ட துணி உடுத்தப்படுகிறது. ஆதிசேடன் வழிபாடு செய்தபடியினால் நாகமலை என்றும் இதற்குப் பெயர் உண்டு. இங்குக் காமதேனுவும் வழிபட்டதாகக் கூறுவர்.

மலையில் ஐவர் படுக்கும்படியான ஒரு குகை உண்டு. இதனை ஐவர் கிடையென்பர். வறடிகல் என்பது மலை உச்சியில் அமைந்துள்ளது. மகப்பேறு விரும்பியவர்கள் இதனை வலம் வருவது வழக்கம். இக்கோயிலில் எழுந்தருளிய முருகனை அருணகிரி நாதர் மிகுதியும் பாராட்டிப் பாடியுள்ளார். மலை பாம்பு வடிவமாக அமைந்தது. திருச்செங்கோட்டுப் புராணம் அச்சிடப்பட்டிருக்கிறது.

**திருச்செந்தில்** - முருகப் பெருமானுக்காக விசுவகர்மன் ஏற்படுத்திய பட்டினம். திருநெல்வேலி மாவட்டத்தில் கடற்கரையில் சிறந்து விளங்குகிற இத் தெய்வத் திருப்பதி ஆறு படை வீடுகளில் இரண்டாவதாகும். முருகக் கடவுள் சூரபதுமனை யழித்தற் பொருட்டுச் சென்றபோது ஈண்டு பாடியமைத்துத் தங்கினார் என்ப. திருக்கோயில் கடலுக்குள்ளிருப்பதொன்றே முருகப் பெருமானின் திருவருட்டன்மையை விளக்குவதற்குப் போதியதொன்றாம். இங்கு நிகழ்ந்த புதுமைகள் பல. கோவிலுக்குள் ஒரு மூலையில் திருமாலும் எழுந்தருளியுள்ளார்.

**திருச்சேய்ஞலூர்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சேய் என்பது முருகக்கடவுளை உணர்த்தும். முருகக்கடவுள் தாம் உறைவதற்கு நல்ல ஊர் என்று கொண்டு மகிழ்ந்தபடியால் சேய்ஞலூர் என்று பெயர் பெற்றது. முருகக்கடவுள் சூரசங்காரஞ் செய்ய எழுந்தருளிய போது சிவபெருமானைப் பூசித்துச் சர்வசங்கார படைக்கலத்தை இங்கு பெற்றருளினார் என்று கூறுவர். சண்டேசுர நாயனார் பிறந்து சிவ வழிபாடு செய்து வீடு பேறடைந்த தாலமும் இதுவேயாம். சுவாமி பெயர் சத்தியகிரீசுரர்; அம்மன் பெயர் சகிதேவியம்மை.

**திருச்சோற்றுத்துறை** - சோழவள நாட்டில் தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருவையாற்றோடு சேர்ந்த ஏழுசிவப் பதிகளில் இதுவும் ஒன்று. தஞ்சாவூரிலிருந்து திருவையாறு செல்லும் வழியில் திருக்கண்டியூருக்குத் தென்கிழக்கே ஒன்றரைமைல் தொலைவில் இருக்கிறது. சிவபெருமானை வழிபட்டுக்கொண்டிருந்த அருளாளன் என்னும் மறையவனுடைய பசிக்கு இறைவன் எடுக்குந்தோறுங் குறையாத சோறளித்த ஊராகையால்

சோற்றுத்துறை என்று ஊருக்குப்பெயர்உண்டாகியது. ஊருக்குத் தெற்கே சோறுடையான் வாய்க்கால் என்னும் பெயருடைய வாய்க்கால் ஒன்று இருக்கிறது. இறைவருடைய பெயர் தொலேயாச் செல்வர் இறைவியுடைய பெயர் ஒப்பிலா அம்மை, இப்பதியை மூவரும் பாடியுள்ளனர்.

**திருட்டத்துய்மன்** - பாரத வீரர்களில் ஒருவன். துருபதனுடைய மகன். துரோணரைக் கொல்வதற்காகவே துருபதன் செய்த வேள்வியில் தேரோடு பிறந்தவன். திரௌபதியின் தமையன். துரோணரிடமே வில்வித்தை கற்றவன். பாரதப்போரில் பாண்டவர்களுக்குத் துணையாக இருந்து போர் செய்தான். பதினைந்தாம் நாட் போரில் துரோணர் செயலற்றிருந்த சமயத்தில்அம்பினுல்துரோணருடைய தலையைக் கொய்து கொன்ருன். பதினெட்டாம் நாள் இரவில் இவன் பாசறையில் படுத்திருந்த போது அசுவத்தாமன் இவனேச் சித்திரவதை செய்து கொன்று விட்டான்.

**திருதராட்டிரன்**-குருகுல அரசன். காந்தருவ மன்னனுகிய அரிட்டனுடைய வழிமுறையில் தோன்றியவன். துரியோதனன் தவிர இவனுடைய மற்றைப் பிள்ளேகளெல்லாம் விசிரவசுகுமரர் வழிமுறை. திருதராட்டிரன் விசித்திர வீரியனுடைய மனேவியாகிய அம்பிகையினிடத்தில் வியாசரால் பிறந்தவன். இவனுடைய மனேவியின் பெயர் காந்தாரி. இவன் மூன்று நாடுகட்குத் தலேவனுக இருந்தபடியால் திரிதராட்டிரன் என்று பெயர் பெற்ருன். இப்பெயர் நாளடைவில் திருதராட்டிரன் என்று மருவி விட்டது இவன் தன்னுடைய தம்பியாகியபாண்டுவை இளவரசனுக்கியிருந்தான். பாண்டு இறந்த பிறகு பாண்டவர்களே வளர்த்தான். கல்விப்பயிற்சி முதலியவைகளேயும் செய்வித்தான். முதலில் தம்பியின் மக்களாகிய பாண்டவர்களிடத்தில் அன்புடையவனுக இருந்த இவன் தீக்குணம் படைத்தவனுகிய மகன் துரியோதனனுடைய பேச்சைக் கேட்டு நாளடைவில் தானுங் கெட்டுப் போனுன். மகனுடைய பேச்சைக் கேட்டுப் பாண்டவர்களே யழைப்பித்துச் சூதுபோருக்கு இடங்கொடுத்த படியால் இவன் தன்னுடைய மக்களின் அழிவுக்கு வழிவகுத்தவன் ஆனுன். பிறகு பாரதப் போர் நடந்தபொழுது சஞ்சயனேக்கொண்டு போர்களத்தில் நிகழ்ந்த செய்திகளே யெல்லாம் உணர்ந்து கொண்டான். பாரதப்போரில் மக்கள் மாண்டொழிந்த பிறகு பாண்டவர்களுடைய பாதுகாப்பிற் சிறிது காலம் இருந்தான். பாண்டவர்கள் போரில் வெற்றியடைந்து இவனே வந்து வணங்கியபோது தன்மக்கள் நூற்றுவரையும் கொன்றெழித்த வீமன் மீது கடுஞ்சினங் கொண்டிருந்தான். வீமனேத் தொலேத்து விட வேண்டுமென்பது இவனுடைய நோக்கம். எல்லோரும் வணங்கியபோது வாழ்த்துரைகள் கூறினுன். வீமன் வணங்கிய போது "அப்பா மகனே, அண்மையில் வா, உன்னேத்தழுவிக் கொள்ள வேண்டும்" என்று கூறினுன். இவனுடைய வஞ்சகக் குணத்தையறிந்திருந்தோர் பக்கத்தில் முன்னேற்பாடாக வைத்திருந்த ஓர் இருப்புப் பாவையை இவன் முன்பு தள்ளினுர்கள். பல யானேகளின் பலத்தைக் கொண்டிருந்த திருதராட்டிரன் அப்பாவையை இறுகத் தழுவினுன், அப்பாவை

தாளாயிற்று. திருதராட்டிரனுடைய வஞ்ச நெஞ்சத்தை உணராமலிருந்த சிலரும் இந்நிகழ்ச்சியைக் கண்டவுடன் உணர்ந்து கொண்டார்கள். சிலகாலஞ் சென்ற பிறகு இவன் காட்டை யடைந்து தவத்தை மேற்கொண்டான். தருமன் முடி சூடிய பிறகு பதினெட்டு ஆண்டுகள் கழித்து இவன் இறந்தான்.

**திருத்தக்க தேவர்** - சீவக சிந்தாமணி என்னும் நூலை இயற்றிய சமணப் பெரியார். இவர் திருத்தகு முனிவர், திருத்தகு மகாமுனிவர், திருத்தக்க மாமுனிவர், தேவர் என்ற பல பெயர்களால் குறிக்கப்படுகிறார். இவரைப் பற்றிய வரலாறு: "இவர் சோழ நாட்டிலே பிறந்து தமிழிலும் வடமொழியிலும் புலமை பெற்றவரானார். சமண சமய நூல்களையெல்லாம் நன்றாகக் கற்றுணர்ந்தார். இளமையிலேயே துறவு பூண்டு ஆசிரியரின் அன்புக்குரியவராக விளங்கினார். ஆசிரியரோடு மதுரையை அடைந்து சில காலந் தங்கியிருந்தார். அப்பொழுது மதுரையிலேயிருந்த புலவர்களோடு நெருங்கிப் பழகினார். அவர்கள் இவருடைய அறிவை வியந்து பாராட்டினார்கள். ஒரு நாள் அப்புலவர்கள் இவரைப் பார்த்துச் "சமணர்கள் துறவைப் பற்றித்தான் பாட அறிந்திருக்கிறார்களே யன்றி இன்பச் சுவையைப் பற்றிப் பாடத் தெரியாதவர்களாக இருக்கின்றனர்" என்று கூறினர். இவர் அப் புலவர்களைப் பார்த்துப், "பாடத் தெரியாமல் இருக்கவில்லை. பாடுதலில் வெறுப்புக்கொண்டு பாடுவதில்லை" என்று கூறினார். அப்புலவர்கள், "அப்படியாயின் இன்பச்சுவை ததும்புமாறு நீர் ஒரு நூல் இயற்ற வேண்டும்" என்று கூறினர். தேவர் தம்முடைய ஆசிரியரின் உடன்பாடு பெற்றுச் சீவக சிந்தாமணியை இன்ப நலந் ததும்புமாறு பாடினார். நூல் பாண்டியனுடைய அவையிலே அரங்கேற்றஞ் செய்யப்பட்டது. காமச்சுவை நூலில் மிகுதியாக இருத்தலைக் கண்ட சிலர் இவருடைய துறவொழுக்கத்தில் ஐயங் கொண்டனர். பழுக்கக் காய்ந்த இரும்பைக் கையிலெடுத்து இவர் தம்முடைய தூய்மையை அனைவரும் அறியும்படி செய்தார்" என்பதேயாம். நரி விருத்தம் என்னும் சிறு நூல் ஒன்றையும் இவர் இயற்றியுள்ளார்.

**திருத்தங்கி** - இவன் ஔவையார் காலத்தில் திருக்குடந்தையில் வாழ்ந்திருந்த ஒரு பிசினன். இவன் இல்லத்துக்கு ஔவையார் சென்றபோது உணவும் இடாமல் அனுப்பினான். அடுத்த வீட்டுக்காரனாகிய மருத்தனோ ஔவையாரைப் பாராட்டி உணவளித்துப் போற்றினான். இரண்டு பேர் இல்லத்திலும் வாழை மரங்கள் இருந்தன. திருத்தங்கியின் வாழை செழித்துக் காய்த்துப் பழுத்திருந்தது. மருத்தன் வாழையோ வீட்டுக்கு வரும் விருந்தாளிகட்கு உணவிடுதற்கு நாள்தோறுங் குருத்தைக் கூட விடாமல் அறுத்துக் கொண்டிருந்தபடியினால் மொட்டையாக நின்றது. இரண்டு வாழைகளையும் பார்த்த ஔவையார் "திருத்தங்கி தன் வாழை தேம்பழுத்து நிற்கும், மருத்தன் திருக்குடந்தை வாழை - குருத்தும், இலையுமில, பூவுமில காயுமில என்றும், உலகில் வரும் விருந்தோ டுண்டு" என்னும் செய்யுளைப் பாடி, திருத்தங்கியை இகழாமல்

இகழ்ந்து விட்டும் மருத்தனைப் புகழாமல் புகழ்ந்து விட்டுஞ் சென்றூர்.

**திருத்தணிகை** - தொண்டை வள நாட்டில் அரக்கோணத்திற்கு வடக்கேயுள்ள ஒரு முருகன் தலம். முருகப் பெருமான் சூரனை வென்ற பிறகு சினந் தணிந்த இடமாகையால் தணிகை என்று பெயர் பெற்றது என்பர். செருத்தணி, உற்பலகிரி, கல்லாரகிரி, கந்தாசலம், கணிகவெற்பு, செங்கல்வகிரி, குருகிரி, சிபரிபூரணகிரி, நீலகிரி என்னும் வேறு பல பெயர்களும் உள்ளன. இந்திரன் முருகனை வழிபடுவதற்கு அமைத்த தீர்த்தம் இந்திர நீலச்சுனையென்றுஞ் செங்கழு நீரோடை என்றும் வழங்குகிறது. இத் தீர்த்த நீரைக் கொண்டே இப்பொழுதும் முருகனுக்குத் திருமுழுக்குச் செய்கிறுர்கள். இத்தணிகைக்கு மேற்கே வள்ளிமலையிருக்கிறது. இங்குத்தான் வள்ளி பிறந்ததாகவும் முருகன் வேட்டுவக் கோலத்தோடு சென்று மணஞ் செய்து கொண்டதாகவுங் கூறுவர். திருத்தணிகையின் சிறப்புக்களைத் தணிகைப் புராணம் விளக்கமாகக் கூறுகிறது.

**திருத்தவத்துறை**-திருச்சி மாவட்டத்தில் இந்நாளில் லால்குடி என வழங்கும் ஊரின் பழைய பெயர் இது. இங்கு வந்த முகமதியர்கள் இங்குள்ள கோயிலின் கோபுரம் அந்நாளில் புதிதாக இருந்தபோது பார்த்து விட்டு லால்குடி என்று பாரசிகப் பெயரை வைத்து விட்டனர். பாரசிக மொழியில் லால்குடி என்பதன் பொருள் செம்பதுமை என்பதாம். இவ்வாறு இப் பெயர் உண்டாகவே பழமையாகிய பெயர் மறைந்து புதுப்பெயரே நிலைபெற்று விட்டது. பெரும்பாலான மக்களுக்கு லால்குடியின் பழைய பெயர் திருத்தவத்துறை என்பது தெரியாது.

**திருத்தாளமுடையார் கோயில்** - சீகாழியில் உள்ள திருக்கோலக்கா என்னுஞ் சிவப்பதிக் கோயிலுக்கு இவ்வாறு ஒரு பெயர் உண்டு. திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு இங்கு எழுந்தருளிய பரமன் தாளம் வழங்கியபடியால் இப் பெயர் உண்டாகியது.

**திருத்தினை நகர்** - நடு நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தீர்த்தனகிரி என்று திரிந்து வழங்குகிறது. ஆலப்பாக்கம் புகை வண்டி நிலையத்திற்கு மேற்கே இருக்கிறது. இங்குள்ள தாமரைக் குளத்தின் நீர் குறை நோயைத் தீர்க்கும் என்று சொல்லப்படுகிறது. பெரியான் என்னும் பெயருடைய பள்ளன் ஒருவன் நிலத்தில் உழுது கொண்டிருந்தான். அவன் சிவபிரானிடத்தில் பேரன்புடையவன். தன்னுடைய குலத் தொழிலைச் செய்து கொண்டிருந்தாலும் அவனுடைய உள்ளம் எப்பொழுதும் இறைவனுடைய திருவடிகளையே பற்றியிருக்கும். பெரியானுடைய மனைவியுஞ் சிவ பக்தியில் சிறந்து விளங்கினுள். இறைவன் இவர்கட்கு வீடு பேற்றைக் கொடுக்க எண்ணிஞர். ஒரு துறவியைப் போலக் கோலம் பூண்டு பெரியானிடம் வந்தார். பசியாக இருக்கிறது சிறிது உணவு கொடு என்று கேட்டார். பெரியான் தன்னுடைய வீட்டுக்குப் போய்க் கொண்டு வருவதாகக் கூறி விட்டு வீட்டிற்குச் சென்றுன். அவன் வருவதற்குள் அவன் உழுது கொண்டிருந்த

நிலத்தில் இறைவன் தினையை விதைத்து அது விளைந்து பழுத்திருக்கும்படி செய்துவிட்டு மறைந்துவிட்டார். பெரியானும் அவன் மனைவியும் வந்து பார்த்துத் தினை விளைந்திருத்தலைக் கண்டு வியந்தார்கள். துறவியைக் காணேமே யென்று தேடினர்கள். இறைவன் காளையூர்தியில் அவர்களுக்குக் காட்சி கொடுத்தார். அவர்களைத் தம்முடைய உலகத்தில் சேர்த்தருளினர். இவ்வாறு தினை விளைந்த காரணத்தினல் இவ்வூர் திருத்தினை நகர் என்று பெயர் பெற்றது. இறைவனுக்குத் தினையுணவு படைக்கப்படுகிறது. சாம்புவர் என்பவர் பூசித்து வழிபட்ட தலம். இறைவன் பெயர் சிவக்கொழுந்தீசுரர். இறைவி பெயர் ஒப்பிலா நாயகி.

**திருத்தெளிச்சேரி** - சோழ வள நாட்டில் காரைக்காலில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதி. திருஞான சம்பந்தருடைய தேவாரத் திருமுறையை எழுதும் அடியவர் புத்த நந்தியின் தலைமீது இடிவிழச்செய்த தலம். பௌத்தர்கள் சாரிபுத்தனைத் தலைவனுகக் கொண்டு சொற்போரிட்டுத் தோல்வி யடைந்து, பிள்ளையாருடைய அருள் பெற்றுச் சைவர்களான தலம். இறைவன் பெயர் பார்வதீசுரர்; இறைவி பெயர் சத்தியம்மை.

**திருத்தூங்கானைமாடம்** - பெண்ணு கடம் திருக்கடந்தை நகர் என்னும் பெயர்களால் அழைக்கப்பெறும் ஊரிலுள்ள திருக்கோயிலின் பெயர். அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகிய கலிக்கம்ப நாயனர் பிறந்து திருவருள் பெற்றதும் திருநாவுக்கரசர் சிவபிரானை வேண்டித் திருப்பதிகம் பாடித் தோள்களில் சூலக்குறியும் இடபக்குறியும் பொறித்தருளப் பெற்றது இத்திருக்கோயிலிலேயாம். பெண்ணுகடம் என்னும் இவ்வூர்திருமுதுகுன்றுஎன்னும் விருத்தாசலத்திற்குத் தென்மேற்கில் பதினெரு கல் தொலைவில் உள்ளது.

**திருத்தென்குடித்திட்டை** - தஞ்சாவூருக்கு வட கிழக்கே ஆறு மைல் தொலைவிலுள்ளது. புகை வண்டி நிலையம் உள்ள ஊர். சோழ நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. வெட்டாற்றுக்கும் விண்ணுற்றுக்கும் இடையில் திட்டான பகுதியாயிருப்பதால் இவ்வூர் திட்டையென்று பெயர் பெற்றது. ஆதிசேடன் காமதேனு ஆகியோர் வழிபட்ட தலம். இறைவன் பெயர் பசுபதீசுரர். இறைவி பெயர் உலகநாயகியம்மை.

**திருத்தொண்டர் புராணம்** - சிவபிரானுடைய திருவருளைப் பெற்ற அடியார்களின் வரலாறு கூறும் புராணம் திருத்தொண்டர் புராணம் என்னும் பெயரோடு வழங்குகின்றது. இப் புராணத்திற்குப் பெரிய புராணம் என்று மற்ருெரு பெயரும் உண்டு. ஒரு புராணத்தில் அறுபத்து மூன்று புராணங்கள் அடங்கப் பெற்றுள்ளமையின் பெரிய புராணம் என்று வழங்கலாகியது.

**திருநணு** - இவ்வூர் இந்நாளில் பவானி என்று வழங்கப் பெறுகிறது. ஈரோடு புகை வண்டி நிலையத்திற்கு வடக்கே ஒன்பது நாழிகை வழித் தொலைவில் உள்ளது. வழிபடுவார்க்குத் தீமைகள் நண்ணுதலூராகையால் நண்ணூர் கடைகுறைந்து திருநணு என்று நின்றது.

**திருநல்லூர்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. தஞ்சை மாவட்டத்தில் சுந்தரப் பெருமாள் கோயில் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. திருநாவுக்கரசருக்குச் சிவபெருமான் திருவடி சூட்டியருளிய சிவப்பதி. அறுபத்து மூன்று திருத்தொண்டர்களில் ஒருவராகிய அமர்நீதி நாயனார் வாழ்ந்திருந்த ஊர். கோவில் ஒரு பெரிய மேட்டில் இருக்கிறது. கோவிலுக்கு முன்னால் சப்தசாகர தீர்த்தம் என்னும் பெயருடைய திருக்குளம் ஒன்று இருக்கிறது. சிவலிங்கம் பொன்னிறமாக இருக்கிறது. ஒரு நாளைக்கு ஐந்து விதமாக மாறுதலையடைகிறதாம் சிவலிங்கத்தின் நிறம். இங்குள்ள கல்வெட்டுக்களில் முதல் இராசராசன் காலத்தில் இவ்வூர் பஞ்சவன்மாதேவி சதுர்வேதி மங்கலம் என்று காணப்படுகிறது. அமர்நீதி நாயனாருக்கும் அவருடைய மனைவி குழந்தைகள் முதலானவர்கட்குங் கோயிலில் சிலைகள் உள்ளன. இறைவர் பெயர் கலியாணசுந்தரேசர்; இறைவி பெயர் கலியாணசுந்தரி.

**திருநல்லூர்ப்பெருமணம்** - சோழநாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இந்நாளில் ஆச்சாபுரம் என வழங்குகின்றது. திருஞானசம்பந்தர் திருமணம் முடிந்தவுடன் மனைவியோடு திருக்கோயிலுக்குச் சென்று அங்கே கோயிலேயே பேரொளிப் பிழம்பாக வகுத்து நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடிக் கொண்டு திருமணத்திற்கு வந்த அவ்வளவு பேர்களையும் பேரொளியிற் செலுத்தித் தாமும் மனைவியோடு சென்று வீடுபேற்றையடைந்த திருவூர். இதனால் ஊருக்குத் திருநல்லூர்ப்பெருமணம் என்று பெயர் உண்டாகியது. இறைவன் பெயர் சிவலோகத்தியாகேசர்; இறைவி பெயர் நங்கையுமையம்மை; திருவெண்ணீற்றுமை.

**திருநன்னாறு** - "நளன்கெழுவி நாளும் வழிபாடு செய் நள்ளாறே" என்று தேவாரத்தில் பாராட்டப் பெற்ற இச்சிவப் பதி மூவர் தேவாரப்பாடல்களும் பெற்ற திருவூர்களில் ஒன்று. காரைக்காலுக்கு மேற்கே மூன்று மைல் தொலைவில் இருக்கிறது. நளச்சக்கிரவர்த்தி வழிபட்டுக் கலியின் தொல்லை நீங்கப்பெற்ற திருவூராகலின் நள்ளாறு என்று பெயர் பெற்றது. சப்தவிடங்கத் தலங்களில் நகரவிடங்கத் தியாகேசர் எழுந்தருளிய இடம். மதுரையில் சமணர்களோடு வாதிட்டபோது தீயிலிட்ட போகமார்த்த பூண்முலையாள் என்னும் பதிகம் இத்தலத்திற்குரியது. இங்கு சனி பகவானுக்குத்தான் அதிகச் சிறப்பு. முன்னாளில் தர்ப்பைக் காடாக விளங்கிய இடமாகையால் தர்ப்பாரணியம் எனவும் பெயர் வழங்கியது. இறைவன் பெயர் தர்ப்பாரண்யேசுரர். இறைவி பெயர் போகமார்த்த பூண்முலையம்மை.

**திருநனிபள்ளி** - திருஞான சம்பந்தருடைய தாயாராகிய பகவதியம்மையார் பிறந்தவூர். மாயூரம் தரங்கம்பாடி இருப்புப் பாதையில் மாயூரத்திற்குக் கிழக்கே எட்டுக்கல் தொலைவில் உள்ளது.

**திருநாகேச்சுரம்** - சோழவள நாட்டிலுள்ள மூவர் தேவாரமும் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. புகை வண்டி நிலையம்

உள்ள ஊர். ஐந்தலை நாகம் பூசித்து வழிபட்டபடியால் நாகேச்சுரம் என்னும் பெயர் உண்டாகியது. பெரிய புராணம் பாடிய சேக்கிழார் இத் தலத்தின் மீது மிகுந்த பற்று வைத்திருந்தார். தாம் பிறந்த குன்றத்தூரில் திருநாகேச்சுரம் என்னுங் கோயில் ஒன்றைக் கட்டினார். சுவாமி பெயர் சண்பகாரணியேசுரர். அம்மன் பெயர் குன்றமுலைநாயகி.

**திருநாரையூர்** - சோழ நாட்டுச் சிவப்பதிகளுள் ஒன்று. நாரை பூசித்த காரணத்தால் இப் பெயர் பெற்றது. நம்பியாண்டார் நம்பி பிறந்து பொல்லாப் பிள்ளையாருடைய திருவருள் பெற்றுத் தெய்வத் திருமுறைகளாகிய தேவாரப் பதிகங்களை வெளிப்படுத்தி உலகுக்குதவிய சிவப்பதி. பொல்லாப் பிள்ளையார் சுயம்பு மூர்த்தி என்பர்.

**திருநாவலூர்** - நடு நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சுந்தரர் பிறந்த ஊர். ஆதியில் இறைவன் நாவல் மரத்தடியில் எழுந்தருளியிருந்தபடியால் நாவலூர் என்று ஊருக்குப் பெயர் உண்டாகியது. சுந்தரர் பிறந்த வீடு இருந்த இடத்தில் இப்பொழுது ஒரு திருமடம் இருக்கிறது. இங்குத் தென்முகக் கடவுள்கின்றதிருக் கோலத்தில் இருக்கிறார். சுவாமி பெயர் பக்தசனேசுவரர். அம்பிகை பெயர் மனோன்மணி.

**திருநாளைப்போவார்** - திருப்புன்கூருக்கு அடுத்த ஆதனூரில் தோன்றிய நந்தனார், பழம் பிறப்பின் நல்வினையினால் சிவபிரானிடத்தில் பேரன்பு கொண்டு திருத்தில்லையாகிய சிதம்பரத்திற்கு "நாளைப் போவேன் நாளைப் போவேன்" என்று ஒவ்வொரு நாளுஞ் சொல்லி நாளைப் போக்கிக் கொண்டிருந்தபடியால் நாளைப் போவார் என்று பெயர் உண்டாகியது.

**திருநின்றவூர்** - தொண்டை நாட்டில் சென்னைக்கு அண்மையில் உள்ள ஓர் ஊர். அறுபத்து மூன்று திருத்தொண்டர்களில் ஒருவராகிய பூசலார் நாயனார் மனக்கோயில் அமைத்து வழிபட்ட ஊர். சுவாமி பெயர் மனக்கோயில் கொண்ட நாதர். அம்மை உமையம்மை.

**திருநெல்லிக்கா** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. ஆதியில் இறைவன் நெல்லி மரத்தடியில் எழுந்தருளியிருந்தபடியால் ஊருக்குத் திருநெல்லிக்கா என்று பெயருண்டாகியது. கதிரவனும் நான்முகனும் வழிபட்ட ஊர். இறைவன் பெயர் நெல்லிவனநாதேசுவரர்; இறைவி பெயர் மங்கள நாயகி.

**திருந்துதேவன்குடி** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. கும்பகோணத்திற்குப் பக்கத்தில் நான்கு மைல் தொலைவில் இருக்கிறது. இங்கு நண்டு பூசை செய்து வீடு பேற்றையடைந்தது. இதனால் சுவாமியினுடைய பெயர் கர்க்கடகேசுரர் என்று வழங்குகிறது. அம்மனுடைய பெயர் அருமருந்தம்மை. ஓரே நிறமுள்ள பசுக்களின் பால் பதின்கலம் திருமுழுக்குச் செய்தால் சிவலிங்கத்தின் முடி மீது பொன்னிறமான ஒரு நண்டு காட்சி கொடுப்பதைக் காணலாம் என்று சொல்லப்படுகிறது. திருந்துதேவன்குடி என்னும் ஊர் இல்லை. கோவில் மட்டும் இருக்கிறது.

**திருப்பந்தணை நல்லூர்** - திருப்பனந்தாளுக்கு வட கிழக்கில் மூன்று நாழிகை வழித் தொலைவில் உள்ள ஒரு சிவப்பதி. அம்மையார் ஆடிய பந்து வந்து அணைந்த காரணத்தால் ஊருக்கு இப் பெயர் வந்ததென்பர்.

**திருப்பராய்த்துறை**-சோழ நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. காவிரியின் தென் கரையில் இருக்கிறது. இங்குக் காவிரி அகண்ட காவிரி என்று சொல்லப் பெறும். திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே பத்து மைல் தொலைவில் இருக்கிறது. இங்கு ஆதியில் இறைவன் பராய் மரத்தின் அடியில் அமைக்கப்பட்ட படியாலும் பராய் மரங்கள் மிகுதியிலுைம் பராய்த்துறை என்று பெயர் பெற்றது. இறைவன் பெயர் பராய்த்துறைநாதர்; இறைவி பெயர் பசும்பொன் மயிலாம்பிகை. ஈண்டு ஆண்டுதோறும் ஐப்பசி முதல் நாளன்று துலா முழுக்கு விழா நடைபெறும். இச் சிவப்பதியைக் குறித்து மாணிக்கவாசகர் "பராய்த் துறை மேவிய பரனே போற்றி" என்று திருவாசகத்தில் பாடியிருக்கிறார்.

**திருப்பருத்திக்குன்றம்** - கி. பி. ஏழாம் நூற்றாண்டில் சமண சமயம் தழைத்திருந்த இடம். அப்பொழுது சீன காஞ்சி என்று சிறப்புடன் விளங்கியது. இன்று ஒரு சிற்றூராய்க் காஞ்சிக்கு அண்மையில் மூன்று கல் தொலைவில் உள்ளது. வேகவதி யாற்றுக்குத் தென் கரையில் நகராண்மைக் கழக எல்லைக்கு அப்பாலிருக்கிறது. பழமையான சமணக் கோயில்கள் இவ்வூரில் உள்ளன. சமண தீர்த்தங்கரர் இருபத்து நான்கு பேர்களில் மூவர் இவ்வூரில் பிறந்தனர். சமய திவாகர முனிவர் இவ்வூரில் இருந்துதான் நீலகேசிக்கு உரையெழுதினர் என்பர். பருத்தித் தோட்டங்கள் மிகுதியாக இருந்த காலத்தில் பருத்திக்குன்றம் என்று பெயர் உண்டாகியது.

**திருப்பருப்பதம்** - இதனைச் சீசைலம் என்பர். தென்னிந்தியாவில்தெலுங்கு நாட்டிலுள்ள சைவத் திருப்பதி. மல்லிகார்ச்சுனம் எனவும் இது வழங்கும். கர்நூல் மாவட்டத்தில் நந்தியால் புகைவண்டி நிலையத்திற்கு வட கிழக்கே அறுபத்தாறு மைல் தொலைவில் உள்ளது. நந்திதேவர் மலை வடிவமாகிச் சிவபெருமானைத் தாங்கிக் கொண்டிருப்பதாகக் கூறுவர். கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் கிருட்டின தேவராயருடைய அமைச்சன் சந்திரசேகரன் என்பவன் கலியாண மண்டபங் கட்டிப் பொற் கலசம் அமைத்தான் என்றும், கோயிலுக்கு முன்புறத்திலே ஒரு மண்டபங் கட்டினன் என்றும் வேறு பல திருப்பணிகள் செய்தான் என்றுங் கூறப்பட்டிருக்கிறது. சுவாமி பெயர் பருப்பத நாதர். அம்மன் பெயர் பருப்பதநாயகி. இத் தலம் மூவர் பாடலும் பெற்றிருக்கிறது.

**திருப்பல்லவனீச்சரம்** - காவிரிப் பூம் பட்டினத்தில் உள்ள திருக்கோவிலின் பெயர். பல்லவ மன்னனுல் கட்டப்பட்டபடியினுல் இவ்வாறு பெயர் பெற்றது.

**திருப்பறியலூர்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தக்கனுடைய வேள்விக்குச் சென்றிருந்த திருமால் நான்முகன் முதலிய விண்ணவர்கள் இங்கு

இறைவனை வழிபட்டுத் தங்களுடைய தீவினையைப் பறித்தார்கள். அதனால் பறியலூர் என்று பெயருண்டாகியது. பறித்தல்-பிடுங்குதல். இஃது அட்டவீரத் தலங்களில் ஒன்று. இறைவன் பெயர் வீரட்டேசுரர்; இறைவி பெயர் இளங்கொடியம்மை.

**திருப்பனந்தாள்** - சோழ வள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. கும்பகோணத்திற்கு வடக்கே பன்னிரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. முன்னாளில் இறைவன் பனை மரத்தின் அடியில் எழுந்தருளியபடியால் இவ்வூர் பனந்தாள் என்று பெயர் பெற்றது. இந் நாளில் கோயிலுக்குள் பனைமரங்கள் இருக்கின்றன. ஊரிலும் பனை மரங்கள் மிகுதியாக இருக்கின்றன. இங்குதாடகைக்காக வளைந்த சிவலிங்கம் குங்குலியக்கலையர்க்காகநிமிர்ந்ததென்பர். இங்குள்ள சிவலிங்கம் தாடகைஎன்பவளால்பூசிக்கப்பட்ட படியால் தாடகேச்சுரம் என்று பெயர் பெற்றது. இறைவனுடைய பெயர் செஞ்சடையப்பர். இறைவியினுடைய பெயர் பெரியநாயகி. இங்கு திருப்பனந்தாள் காசி மடம் இருக்கிறது.

**திருப்பாசூர்** - தொண்டை நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. பாசு என்பது மூங்கில். இறைவன் மூங்கில் மரத்தின் அடியில் ஆதியில் எழுந்தருளியிருந்தபடியால் திருப்பாசூர் என்று பெயர் உண்டாகியது. சுவாமி பெயர் பாசூர் நாதர்; அம்மன் பெயர் பசுபதி நாயகி.

**திருப்பாணாழ்வார்** - சோழ வள நாட்டில் உறையூரில் நெற்பயிரிடையே பிறந்தார். குழந்தையைப் பாணர் குலத்தான் ஒருவன் வளர்த்தான். யாழிசைத்துப் பாடித் திருமாலை வழிபட்டார். இழிகுலத்தவராதலின் திருவரங்கத்தையடையத் துணியாமல் காவிரியின் தென் கரையில் நின்று திக்கு நோக்கித் தொழுது பாடி நின்றார். அரங்கநாதன் உலோக சாரங்கர் என்பவருடைய கனவில் தோன்றிப் பாணப் பெருமாளை இழிவாக நினையாமல் தோளின்மீது எழுந்தருளச் செய்து வாரும் என்று கட்டளையிட்டார். உலோக சாரங்கரும் அவ்வாறே செய்தார். இவர் அரங்கநாதன் திருமுன்பு நின்று "அமலனாதிப்பிரான்" என்னும் பாடலைப் பாடி அரங்கநாதனோடு இரண்டறக் கலந்தார்.

**திருப்பாதிரிப்புலியூர்** - நடு நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தலத்துக்குரிய மரம் பாதிரியாகையாலும் புலிக்கால் முனிவராகிய வியாக்கிர பாதர் வழிபட்டபடியாலும் பாதிரிப்புலியூர் என்று பேர் பெற்றது. இத்தலத்தில் மங்கணர் என்ற முனிவர் திருமலர்ப்பணி செய்து கொண்டிருந்தார். ஒரு நாள் மலர் எடுக்கும்போது காலில் முட் குத்தியது. குத்திய இடத்தில் இருந்து இரத்தம் ஒழுகவில்லை. நன்னீர் ஒழுகியது. இதனைக் கண்டு கண்மண் தெரியாமல் இன்பக் கூத்தாடினார். அங்கே தவஞ் செய்து கொண்டிருந்த தூமப்ப முனிவர் என்பவர்மீது கால் பட்டது. அவர் சினங் கொண்டு மங்கணரை முயலாகுமாறு வசவுரை வழங்கினார். மங்கணரும் முயலாகி மயங்கினார். பிறகு இறைவன் வசவுரைப் பலனைப் போக்கிப் பழைய உருவத்தை அடையச் செய்தார். இறைவன் பெயர் தோன்றாத் துணை நாதர். இறைவி பெயர் பெரியநாயகி.

**திருப்பாம்புரம்** – சோழ நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. பேரளம் புகை வண்டி நிலையத்திற்கு மேற்கே நான்கு மைல் தொலைவில் உள்ளது. நாகராசனாகிய பாம்பு வழிபட்ட தலமாகையால் திருப்பாம்புரம் என்னும் பெயரை யடைந்தது. இறைவன் பெயர் பாம்புரேசர்; இறைவி பெயர் வண்டார் பூங்குழலியம்மை.

**திருப்பார்த்தன்பள்ளி** - சோழ வள நாட்டிலுள்ள ஒரு வைணவப் பதி. பாண்டவர்களில் ஒருவனாகிய அருச்சுனன் வழிபட்டபடியினால் இவ்வாறு பெயர் பெற்றது போலும். தஞ்சை மாவட்டத்தில் சீகாழிக்குக் கிழக்கே ஏழு மைல் தொலைவில் இருக்கிறது. பெருமாளுடைய கோலம் நின்ற திருக்கோலம்; திருமங்கையாழ்வாரும் பொய்கையாழ்வாரும் பாடியுள்ளனர். பெருமாள் பெயர் தாமரையாள்கேள்வன்; தாயார் பெயர் தாமரை நாயகி.

**திருப்பாற்கடல்** - சத்த (ஏழு) பெருங் கடல்களில் ஒன்று. இதில் திருமால் ஆலிலை மீதும் திரு அநந்தாழ்வான் மீதும் எழுந்தருளி அடியவர்க்கு அருள்புரிந்திருக்கின்றார். தேவர் பல முறை கடைந்து சிந்தாமணி முதலிய அரும் பொருள்களைப் பெற்றனர். தேவர் கட்காகக்கார்த்தவீரியன், வாலி முதலியோராலும் கடையப்பட்டது. உபமன்னியுவுக்காக, சிவபெருமானால் பானஞ் செய்ய அளிக்கப்பட்டது. உப்புக் கடல் முதலிய எல்லாக் கடலுக்கும் அப்பால் இருப்பது.

**திருப்பாற்றுறை** - சோழ வள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருவானைக்காவுக்குக் கிழக்கே ஐந்து மைல் தொலைவில் உள்ளது. மார்க்கண்ட முனிவர் இப்பதியில் எழுந்தருளிய பரமனைப் பூசித்து வழிபடும் போது திருமுழுக்கிற்குப் பால் கிடைக்காமல் வருந்தினாராம். சிவபெருமான் பால் பெருகும்படி திருவருள் செய்தாராம். அதனால் இவ்வூர் பாற்றுறை என்னும் பெயரை யடைந்தது. இறைவன் பெயர் மூலநாதர். இறைவி பெயர் மோகநாயகி.

**திருப்பிடவூர்** - இது தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று. திருச்சிராப்பள்ளியிலிருந்து பிரம்பலூருக்குப் போகும் பெரு வழியில் திருச்சிராப் பள்ளியிலிருந்து பதினைந்து நாழிகை வழித்தொலைவிலுள்ள சிறுகனூருக்கு வடமேற்கே இரண்டுநாழிகையில் அடையத் தக்கது. துறையூருக்குக் கிழக்கில் பன்னிரண்டு நாழிகையிலும் அடையலாம். இப்பொழுது திருப்பதட்டூர் என வழங்குகின்றது. இங்குள்ள கோவிலில் பழங்காலக் கல்வெட்டுக்கள்பல இருக்கின்றன. அவைகளால் பிடவூர் நாட்டுப் பிடவூர் என்பது இதன் பெயர் என்று தெரிகின்றது. இங்கு மாசாத்தனார் கோவில் என்னும் ஐயனார் கோவில் முன்பு புகழ் பெற்றதாக விளங்கி இப்பொழுது புகழ் மங்கிய நிலையில் உள்ளது. இக் கோவிலில் எழுந்தருளிய சாத்தனாராகிய ஐயனார் பெயர் அரங்கேற்றிய ஐயனார் என்பது. சேரமான் பெருமாள் திருக்கைலையில் அரங்கேற்றிய ஆதியுலாவாகிய திருக்கைலாய ஞானவுலாவை இவ்வையனார் இங்கு அரங்கேற்றஞ் செய்தபடியால் இவ்வாறு பெயர் பெற்றனர். இவ்வையனாருக்குத் திருவஞ்சைக் களத்திலுங் கோயிலுண்டு.

**திருப்புகலூர்** - சோழ வள நாட்டில் உள்ள மூவர் தேவாரமும் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. நன்னிலம் புகை வண்டி நிலையத்திற்குக் கிழக்கே நான்கு மைல் தொலைவில் இருக்கிறது. இக் கோவிலுக்குள்ளேயே வர்த்த மானீச்சுரம் என்னும் கோயிலும் இருக்கிறது. இத் தலத்தில் சுந்தரர் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்த செங்கல் செம்பொன்னுயிற்று. இத்தலத்தில் சில காலம் வசித்திருந்த அப்பர் வீடு பேற்றை வேண்டினுர். இறைவன் சிங்க வடிவில்தோன்றி அப்பரை விழுங்கி அவருக்கு வீடு பேற்றை யளித்தார். இச் செய்தி "அப்பரையும் விழுங்கியொரு பிள்ளையுந் தின்ருற்ருமல் ஐயோ இன்னும் கப்பரையுங் கையுமாய்ப் புறப்பட்டீரே" என்னுந் தனிப் பாடலிலுங் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இறைவன் பெயர் அக்கினீசுரர்; இறைவி பெயர் கருந்தாழ் குழலியம்மை.

**திருப்புகழ்** - இது முருகக் கடவுளுடைய திருவருளைப் பெற்ற அருணகிரிநாதரால் பாடப் பெற்றது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் மூவரும் சிவப்பதிகள் தோறுஞ் சென்று சிவ வழிபாடு செய்து தேவாரப் பதிகங்களைபாடினுற் போலஅருணகிரிநாதருஞ் சிவப் பதிகள் தோறுஞ் சென்று இறைவனைப் போற்றி வழிபட்டுத் திருப்புகழ்ப் பாடல்களைப் பாடியருளினுர். முருகனுடைய புகழ்களை யெல்லாம் எடுத்துக் கூறும் பாடல்கள் திருப்புகழ் என்னும் பெயரைப் பெற்றது. அருணகிரி நாதர் தம்முடைய திருப்புகழைப் பல வகையான சந்தங்களிலும் அளவினும் இயற்றியுள்ளார். பாடல்களிற் பெரும்பான்மை யானவை எளிதாகப் பொருளுணர்ந்து கொள்ளுந் தன்மையில் அமைந்தவை. அருணகிரி நாதரால் இயற்றப் பெற்ற திருப்புகழ்ப் பாடல்கள் முப்பத்தாருயிரம் என்ப. அருணகிரி நாதர் தம்முடைய திருப்புகழ்ப் பாடல்கள் அவ்வளவும் எழுதப் பெற்ற ஓலைச்சுவடிகளைத் திருச்செந்தூர் முருகப் பெருமான் திருமுன்பு வைத்துப் "பெருமானே! இப் பாடல்கள் முப்பத்தாருயிரத்தையும்ஒரு முறை படித்து முடிப்பவர்கட்கும் அடியேன் அடையும்பேற்றினை அளித்தருள வேண்டும்" என்று கூறி வேண்டிக் கொண்டாராம். அறுமுகப் பரமன் இதற்கு யாதும் மறுமொழி கூறவில்லையாம். இதனுல் மன வருத்தங் கொண்ட அருணகிரியார் "அப்படிப் பலனளிக்க வில்லையெனின் இப் பாடல்கள் இவ்வுலகத்தில் இருப்பதனுல் எத்தகைய பயனும் இல்லை" யென்று கூறி அவ்வளவு பாடல்களையும் கடலிற் போட்டு விட்டாராம். அலையினுல் ஒதுக்கப் பட்டுக் கரையில் வந்து ஒதுங்கிய ஏடுகளை அன்பர்கள் எடுத்து ஒன்றுபடுத்தித் தொகுத்து வைத்தார்களாம். இப்பொழுதிருக்கும் 1250 பாடல்களும் இவ்வாறு அலையினுல் வந்து ஒதுங்கிய பாடல்களேயாம். இவ்வாறு ஒரு செய்தி வழங்குகிறது. இஃது எவ்வளவு தூரம் உண்மையான செய்தி என்று நம்மால் உணர்ந்து கொள்ள முடியாது. திருப்புகழின் பாடல்களைச் சில பெரியோர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர். அப்பாடல்கள் நூல் முகப்பில் அமைக்கப்பட்டுள்ளன.

**திருப்புத்தூர்** - பாண்டி நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகள் பதினுன்கில் ஒன்று. காரைக்குடி புகை வண்டி

நிலையத்திற்கு மேற்கே பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ளது. திருமகள் வழிபட்ட தலம். பிரணவம் கொன்றை மரமாகிப் பூசித்த தலம். திருமாலுக்கும் இங்கு ஒரு சந்நிதி இருக்கிறது. இறைவன் பெயர் சிதளிநாதர்; இறைவி பெயர் சிவகாமியம்மை.

**திருப்புல்லாணி** - இதனைத் தருப்பசயனம் என்பர். இவ்வூர் இராமநாதபுரத்திற்குத் தெற்கில் ஏழுகல் தொலைவில் இருக்கிறது. இராமபிரான் மூன்று நாட்கள் தருப்பைப் புல்லின் மீது படுத்து வருணனை எண்ணினார். அவன் வராமையால் அவன் மீது சினங்கொண்டு கடலைத் தம்முடைய கணையினால் வற்றச் செய்ய எண்ணிக் கணையைக் கையிலெடுத்தார். அஞ்சி நடுநடுங்கினான் வருணன். விரைவாக ஓடிவந்து தான்செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். இராமபிரான் வருணனுக்கு அருள் புரிந்தார். இராமேசுவர வழிபாட்டிற்குச் செல்வோர் இங்கும் வழிபாடு செய்வர்.

**திருப்புள்ளமங்கை** - சோழ நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தேவர்கள் அமுதங்கடைந்த பொழுது தோன்றிய நஞ்சை இறைவன் உட்கொண்டு திருமிடற்றில் அடக்கியருளினாராம். அதனால் இறைவனுடைய பெயர் ஆலந்தரித்த ஈசுரர் என்று வழங்குகிறது. இறைவியின் பெயர் அல்லியங் கோதை.

**திருப்புள்ளிருக்கு வேளூர்**-இதனை வைத்தீசுரன் கோயில் என வழங்குவர். புள்-சடாயு + இருக்கு - (மறை) வேள் - முருகன் ஆகியோர் வழிபட்டபடியால் புள்ளிருக்கு வேளூர் என்று பெயர் உண்டாகியது. இங்குள்ள முருகக்கடவுள் புகழ் பெற்றவர். இங்குள்ள இறைவன் உடற்பிணி பிறவிப் பிணி ஆகியவற்றைத் தீர்ப்பவராகையால் வைத்தியநாதர் என்று பெயர் பெற்றார். இறைவியின் பெயர் தையல் நாயகி. இத்தலத்து முத்துக்குமாரசாமி மீது குமரகுருபர அடிகள் பிள்ளைத்தமிழ் பாடியிருக்கிறார். இத்தலத்தின் பெருமையைத் தலபுராணம் விளக்கமாகக் கூறும்.

**திருப்புறம்பயம்**-சோழவளநாட்டிலுள்ள மூவர் தேவாரமும் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. கும்பகோணம் என்னுந் திருக்குடந்தைக்கு வடக்கேயிருக்கிறது. பிரளயத்திற்குப் புறம்பாய் இருந்தபடியால் புறம்பயம் என்று பெயர் வந்ததென்பர். இவ்வூரை மாணிக்கவாசகரும் "புறம்பய மதனில் அறம் பல அருளியும்" என்று குறிப்பிட்டுள்ளார். செட்டிப் பெண்ணுக்குச் சாட்சி சொன்னபடியால் இறைவனுக்குச் சாட்சிநாதர் என்று பெயர். இறைவி பெயர் கரும்பன்ன சொல்லம்மை என்பர். இங்குள்ள விநாயகர் பிரளயம் உண்டாகிறபோது உலகம் அழியாது காப்பாற்றுகிறாராம். அதனால் பிரளயங்காத்த பிள்ளையார் என்று பெயர் கூறப்படுகிறது.

**திருப்புனவாயில்** - பாண்டி நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகள் பதினான்கில் ஒன்று. அறந்தாங்கி புகைவண்டி நிலயத்திற்குத் தெற்கே முப்பது கல் தொலைவில் உள்ளது. நந்தி மூலலிங்கம் ஆவுடையார் எல்லாம் மிகப் பெரியன. சுவாமிக்கு மூன்று முழ உடை வேண்டும். ஆவுடையாருக்கு முப்பது முழ உடை வேண்டும்.

பாண்டி நாட்டுப் பதினன்கு தலங்களும் இவ்விடத்திலேயே உள்ளன என்பர். பதினன்கு இலிங்கங்களும் உள்ளன. இறைவர் பெயர்பழம்பதிநாதர்; இறைவிபெயர் கருணை நாயகி.

**திருப்புன்கூர்**-நந்தனர் பொருட்டு நந்தி விலகிய சிவப்பதி. வைத்தீசுவரன் கோவிலுக்கு மேற்கே இரண்டு கல் தொலைவில் உள்ளது. ஆதியில் இறைவன் புன்கு என்னும் மரத்தடியில் எழுந்தருளிய படியாலும் புன்க மரங்களே முன்னுளில் மிகுதியாக நிறைந்திருந்த படியாலும் இப் பெயர் உண்டாகியது.

**திருப்பூந்துருத்தி** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சோழ மன்னன் துருத்தியை வைத்துப் பூசிக்கச் செய்த படியால் இவ்வாறு பெயர் உண்டாயிற்றென்பர். திருநாவுக்கரசர் ஒரு திருமடம் அமைத்துக் கொண்டு இங்குச் சிலகாலம் தங்கியிருந்தார். திருவையாறு சப்தஸ் தானங்களில் இஃது ஆருவது தலம். சுவாமி பெயர் புட்பவன நாதர்; இறைவி பெயர் அழகாந்த நாயகி (சௌந்தராம்பிகை).

**திருப்பூவணம்** - பாண்டி நாட்டில் உள்ள மூவர் தேவாரமும் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. பொன்னனையாள் என்னுங் கணிகைக்காக இறைவர் சித்தராய் எழுந்தருளி வந்து இரசவாதஞ் செய்து பொன் கொடுத்து அதனைக் கொண்டு திருவுரு அமைக்கச் செய்த பதி. இவ்வூருக்குப் புட்பவனகாசி எனவும் பெயர் உண்டு. கந்தசாமிப் புலவர் என்பவர் திருப்பூவணபுராணம் பாடியிருக்கிருர். இறைவன் பெயர் பூவணநாதர்; இறைவி பெயர் மின்னனையாளம்மை.

**திருப்பெரும்புலியூர்** - சோழ நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருவையாற்றுக்கு மேற்கில் உள்ளது. வியாக்கிரபாதர் வழிபட்ட தலம் ஆதலால் பெரும்புலியூர் என்று பெயர் பெற்றது. இறைவன் பெயர் வியாக்கிரபுரீசுவரர்; இறைவி பெயர் சௌந்தரநாயகி.

**திருப்பைஞ்ஞீலி** - சோழவள நாட்டிலுள்ள மூவர் தேவாரமும் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. பைஞ்ஞீலி என்ருல் பசியவாழை என்று பொருள். இவ்வாழை கோயிலில் இருக்கிறது. இதை இறைவனுக்குத் தான் பயன் படுத்துகிருர்கள். பைஞ்ஞீலி என்பதற்கு வேறு பொருளுங் கூறுவர். இங்கு யமன்உருவம்இருக்கிறது. இறைவன் பெயர் நீலகண்டர்; இறைவி பெயர் விசாலாட்சியம்மை. மதுரை மெய்ப்பாத புராணிகர் என்பவர் திருப்பைஞ்ஞீலிப் புராணம் பாடியிருக்கிருர்.

**திருமங்கைநகர்**-இவ்வூர் திருநெல்வேலியை ஒட்டியது. இந்நாளில் பாளையங் கோட்டை என்று பெயர் விளங்குகிறது. பாளையன் என்னும் பெயருடைய ஒரு கன்னடியான் மங்கை நகரில் தன் பெயரால் ஒரு கோட்டையைக் கட்டினன். அவன் கோட்டை கட்டிய காலம் முதற்கொண்டு மங்கைநகர் பாளையங்கோட்டையாக மாறி விட்டது. திருமங்கை நகர் என்னும் பெயர் முற்றிலும் அழிந்தொழிந்த தென்றே கூறலாம்.

**திருமங்கை மன்னன்** - இவர் சோழவள நாட்டில் திருவாலியில் குறையல் என்னும் ஊரில் ஆலிமன் என்பவருக்கு மகனுகத் தோன்றினர். இவர் கள்ளர் மரபினர். இவருடைய காலம்

ஏறக்குறைய ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் என்பர். இவரிடம் உள்ளத்திடமும் உடற்றிடமும் ஒருங்கே அமைந்திருந்தன. இவருடைய மனைவியின் பெயர் குமுதவல்லி. இவருடைய வீரத்தையுணர்ந்த சோழன் இவரைத் தன்னுடைய படைத் தலைவராக ஏற்படுத்தினான். இவர் பல போர்முனைகட்குச் சென்று அரசனுக்கு வெற்றியைத் தேடித்தந்தார். இவருடைய பேருதவியைப் பாராட்டிய சோழ மன்னன் ஒரு நிலப் பகுதியை இவருக்கு உரிமையாகத் தந்து இறை செலுத்தி வரும்படி யேற்பாடு செய்தான். அதன் பிறகு இவர் குறுநில மன்னராக விளங்கலானார். திருமாலிடத்தில் பேரன்பு கொண்டு நாளும் அப்பெருமானைப் போற்றிப்பணிந்து பணிகள் பல செய்ததோடு மாலடியார்கட்கு உணவிடுதல் முதலிய செயல்களையும் மேற்கொண்டார்.

பொருளை மிகுதியாகச் செலவு செய்தபடியால் இவருடைய செல்வம் நாளுங் குறைந்து கொண்டு வந்தது. அரசனுக்குச் செலுத்த வேண்டிய இறைப்பொருளையுஞ் செலுத்த வில்லை. அரசன் தனக்குச் சேரவேண்டிய பொருளைச் செலுத்துமாறு இவரை நெருக்கினான். நேரிய முறையில் தேடும் பொருள் இவருடைய செலவுக்குப் போதவில்லையாகையால் வழிப்பறி செய்தல் முதலிய தீய வழிகளிலும் பொருளைத் தேடித் தம்முடைய பணிகளைச் செய்தார். இவரிடம் ஆடல்மா என்னும் அரிய குதிரை யொன்றிருந்தது. அது மிகு விரைவாகச் செல்லுஞ் சிறப்பினையுடையது. மேலும் இவரிடம் நீர்மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான், தாளுதுவான், சாயை பிடிப்பான், தோலாவழகன் என்னும் வல்லவர் ஐவர் துணைவர்களாக அமைந்திருந்தார்கள். கொள்ளையினால் பெரும் பொருள் திரட்டித் திருவரங்கக் கோயிலின் திருமதிலைக் கட்டினார்.

அந்நாளில் நாகப்பட்டினத்தில்இருந்தபௌத்தர்கோயிலில் புத்தருடைய உருவச்சிலையொன்று தங்கத்தினாற் செய்து வைக்கப்பட்டிருந்தது. அக்கோயில் சூடாமணி பதுமமங்கலம் என்னும் பெயருடையது. அக்கோயிலுக்குள் எவரும் புக முடியாதபடி வாயிலில் உருளைப் படையொன்று எக்காலும் கனவிரைவாகச் சுழன்று கொண்டிருந்தது. எவரேனும் அக்கோயிலுட் புக முயன்றால் அவ்வுருளைப் படையால் வெட்டுண்டு மாளும்படியாக நேரிடும். இவர் அக் கோயிலுள் எவ்வாறு புகுந்து அங்குள்ள தங்கச் சிலையைக் கவரலாம் என்று எண்ணினார். அதற்கான சூழ்ச்சி யொன்றுந் தோன்றியது. வாழைத்தண்டுகளை ஒன்றன்பின், ஒன்றாகக் கொடுத்துச் சுழன்று கொண்டிருக்கும் உருளைப்படையின் விரைவைத் தணித்தார். பிறகு உள்ளே புகுந்து பொற்பதுமையைக் கைப்பற்றினார். அதனைத் திருவரங்கத்திற்குக் கொண்டு போய்ப் பெருமாளுக்குப் பல திருப்பணிகள் செய்தார். திருமாலுடைய திருவருளால் இவருக்கு மெய்யறிவு உண்டாகியது. செய்யுட்களைப் புதிதாகப் பாடும் ஆற்றலும் உண்டாகியது. பெருமாள் மீது பெரிய திருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந் தாண்டகம் முதலிய பல பாடல்களைப் பாடினார். இவருடைய பெயர் நீலன், பரகாலன், நாலுகவிப் பெருமான், கலியன், ஆலிநா

டன், திருமங்கையாழ்வார்எனப் பலவாறு வழங்கி நின்றன.

**திருமஞ்சனபண்டாரங்கள்** - இரத்தினகிரி என்னும் வாட்போக்கியில் எழுந்தருளிய இறைவனுக்குத் திருமுழுக்கின் பொருட்டுக் காவிரியில்இருந்து நீர்கொண்டு வரும் பண்டார வகுப்பினர். இவர்கள் மனிதனாக வந்த கடவுளை வாளால் முடியில் வெட்டிய அரசனுடைய வழிமுறையினர் என்று கூறப்பெறுகின்றனர்.

**திருமணஞ்சேரி** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. வைசிய குலத்திற் பிறந்த இரண்டு பெண்கள் உறவினர்கள். அவர்களிருவரும் ஒரேசமயத்தில் சூல்கொண்டிருந்தனர். இருவரும்தங்களுக்குள் ஆண்பெண் பிறந்தால் திருமணஞ்செய்து வைப்பது என்று உறுதிசெய்து கொண்டனர். ஒருத்திக்குப் பெண்பிறந்தது. மற்றொருத்தியோ ஆமையைப்பெற்றனள். பெண்ணைப்பெற்றவள் "நான் என்னுடைய பெண்ணைக் கொடேன்" என்றனள். அந்த ஆமை சிவபெருமானை வழிபட்டு வேண்டிக் கொண்டது. இறைவன் ஆமையுருவைப் போக்கி மனித உருவங் கொடுத்துத் திருமணம் நடக்கச் செய்தார். இதனால் ஊருக்குத் திருமணஞ்சேரி என்று பெயர் உண்யாகியது. இறைவன் பெயர் அருள் வள்ளலுயகேசுரர். இறைவி பெயர் யாழின் மொழியம்மை.

**திருமயிலாடுதுறை** - இவ்வூர் இந்நாளில் மாயூரம் என்னும் பெயரோடு வழங்குகிறது. இறைவி மயில் வடிவத்தோடு இறைவனைப் பூசித்துவழிபட்டபடியால் இவ்வாறுபெயர் உண்டாகியது. "கௌரி மாயூரம்" என்றும் ஒரு பெயர் உண்டு. இவ்வூரின் சிறப்புக்களை மாயூர புராணம் விரிவாகக்கூறும். சுவாமிபெயர்மாயூரநாதேசுரர்; இறைவி பெயர் அபயாம்பிகை.

**திருமயிலை** - தொண்டைநாட்டுத் தேவாரம்பெற்றசிவப்பதிகளில் ஒன்று. சென்னையில் தென் பகுதியில் இருக்கிறது. உமாதேவி மயில் வடிவங்கொண்டு இறைவனைப் பூசித்து வழிபட்டபடியால் ஊருக்கு மயிலாப்பூர் என்று பெயர் உண்டாகியது. சிவநேசச் செட்டியார் மகள் பூம்பாவையின் எலும்பைத் திருஞானசம்பந்தர் பெண்ணாகச் செய்தருளிய இடம். இறைவர் பெயர் கபாலீசுரர்; இறைவி பெயர் கற்பகவல்லியம்மை. திருக்குறள் இயற்றிய திருவள்ளுவ நாயனார் இவ்வூரில் வாழ்ந்திருந்தவர் என்பர். திருவள்ளுவருக்குத் தனியிடத்தில் கோயில் இருக்கிறது.

**திருமறைக்காடு** - இவ்வூர் இந்நாளில்வேதாரணியம் என்னும் வடமொழிப் பெயரோடு விளங்குகிறது. சப்தவிடங்கத் தலங்களில் ஒன்று. மறைகள் பூசித்துத் திருக்காப்புச் செய்த கதவைத் திருநாவுக்கரசர் திறந்தார். திருஞானசம்பந்தர் மூடினார். மறைகள் பூசித்து வழிபட்டபடியாலும் முன்னாளிற் பெருங்காடாக இருந்தபடியாலும் மறைக்காடு என்று பெயர் உண்டாயிற்று. இராமபிரான் இராவணனைக் கொன்றதனால் இராமபிரானைத் தீவினை தொடர்ந்து வந்தது. அதனை இங்குள்ள பிள்ளையார் தீர்த்தருளினார். அதனால் பிள்ளையாருக்கு வீரகத்தி விநாயகர் என்று பெயர் உண்டாகியது. "வேதாரணியம் விளக்கழகு" என்னும் மொழியொன்று நெடுங்காலமாக வழங்கி வரு

கிறது. இங்கெழுந்தருளிய இறைவன் பெயர் மறைக்காட்டீசுரர்; இறைவி பெயர் யாழைப்பழித்தமொழியம்மை. மூவர் பாடலும் பெற்ற பதி. இவ்வூருக்கு இரண்டு புராணங்கள் உள்ளன.

திருமலைநாய்க்கர் – (1623-1659) மதுரையில் அரசாட்சி செய்த நாய்க்கர் வழிமுறை அரசர்களில் இவர் புகழ்பெற்றவர். இவருடைய தமையனார் காலத்தில் நாய்க்கமன்னர்களுக்குத் திருச்சிராப்பள்ளி தலைநகராக இருந்தது. திருமலைநாய்க்கர் தாம் பட்டத்திற்கு வந்ததும் மதுரையைத் தலைநகராக மாற்றிக்கொண்டார். இவருடைய நாட்டைச் சேர்ந்த திண்டுக்கல்லை மைசூர் அரசர் சாமராச உடையாருடைய படைகள் தாக்கின. அப்படைகளைத் திருமலை நாய்க்கருடைய படைகள் புறங்காட்டி யோடச் செய்தபிறகு நாய்க்கருடைய படைகள் மைசூர் மீது படையெடுத்துஅந்நகரத்தைத் தாக்கி விட்டுத் திரும்பின.

திருவிதாங்கூர் நாய்க்கருடைய கப்பத்தைக் கட்டாத படியினால் நாய்க்கருடைய படைகள் திருவிதாங்கூர் மீது படையெடுத்துச்சென்று அதை அடிமைப்படுத்திவிட்டுத்திரும்பின. மதுரை நாய்க்க மன்னர்கள் விசய நகரமன்னர்களுக்கு அடங்கியவர்களாய்க் கப்பங் கட்டிவந்தனர். திருமலைநாய்க்கர் கப்பங் கட்டாத படியால் விசய நகரமன்னர் மதுரைமீது படையெடுத்தார். இதனால் போர் மூண்டுஅழிவுகள்உண்டாயின. திருமலை நாய்க்கர் தெய்வ பக்தியுடையவர். மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரப் பெருமான் மீது கொண்ட அன்பினால்தான் மதுரையைத் தலைநகராகக்கொண்டார். குமர குருபர சுவாமிகள் மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாடி இவருடையமுன்னிலையில் அரங்கேற்றஞ் செய்தபொழுது மதுரைமீனாட்சிஅருச்சகருடைய பெண்ணைப் போல வந்து இவருடைய மடியில் அமர்ந்திருந்ததாகவும் செய்தி உள்ளது. மதுரையில் இவர்அமைத்துள்ள திருமலைநாய்க்கர் மகாலும் தெப்பக்குளமும் புதுமண்டபமும் அம்மண்டபத்திலுள்ள அழகியசிலைகளும் இன்றுநின்று திருமலைநாய்க்கருடைய பெருமையைப்பறைசாற்றிக்கொண்டிருக்கின்றன.

திருமலைபுரம் - திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருமலைபுரத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஓவியங்கள் காலத்தால் பிந்தியவை. இவை கி. பி. 7 - 8ஆம் நூற்றாண்டினஎன்றுகூறலாம். சிற்றண்ணல் வாயில், திருமலைபுரம், காஞ்சீபுரம் முதலிய இடங்களிலுள்ள பண்டைய ஓவியங்களைக் கண்டுபிடித்துக் கொடுத்தவர் புதுச்சேரியிலிருந்த டுப்ரீல் (Dubreuil) என்னும் பிரஞ்சு ஆசிரியராவர். அண்மையில் தென்னார்க்காடு மாவட்டத்தில் பனைமலை என்னுமிடத்தில் பல்லவகாலத்திய ஓவியம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுளது. குடைபிடித்த அரசி அல்லது தேவதையின் உருவம் அது.

திருமலைராயன் - சோழவள நாட்டில் திருமலைராயன் பட்டினத்தில் காளமேகப் புலவர் காலத்தில் அரசாட்சி செய்திருந்த ஒரு குறுநில மன்னன். அதிமதுரகவிமுதலிய பல புலவர்கள் இவனுடைய அவைக்களப்புலவராக இருந்தார்கள். அதிமதுர கவியின் மனங்கோணுமலிருக்க வேண்

டிக் காளமேகப் புலவரைப் போற்றுதிருந்தான். சினங்கொண்ட காளமேகப் புலவர் இவனுடைய நாட்டில் மண்மாரி பெய்ய வேண்டுமென்று பாடிச் சென்றார். நாடு அவ்வாறே மண் மாரியால் அழிந்தது.

**திருமாலையாண்டான்** - ஆளவந்தாருடைய மாணவர். இராமாநுசருடைய ஆசிரியர்கள் ஐந்து பேர்களில் ஒருவர். இராமாநுசர் திருவாய்மொழியை இவரிடந்தான்பாடங்கேட்டார் இவர் பிறந்த ஊர் அழகர் கோவில். வாழ்ந்த ஊர் திருவரங்கம். மாலாதரர், ஞானபூரணர் என்பன இவருடைய வேறுபெயர்கள்.

**திருமாளிகைத்தேவர்** - இவர் போகமுனிவருடைய மாணவர் பலருள்ளுஞ் சிறப்புற்று விளங்கியவர். தூய சைவர். திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்தவர். இவர்ஒருநாள் சிவபூசைசெய்து வழிபாட்டுணவைக் கருவூர்த்தேவருக்குக் கொடுத்தார். கருவூர்த்தேவர் மிகுந்த களிப்புடன் ஏற்றுக் கொண்டார். பிறகு ஒருநாள் கருவூர்த்தேவர் சத்திபூசை செய்து திருமாளிகைத் தேவருக்கு வழிபாட்டுணவு வழங்கினார். திருமாளிகைத் தேவர் இதனை ஏற்றுக்கொள்ள வில்லை. கருவூர்த்தேவர் இச் செய்தியைத் தம்முடைய ஆசிரியரிடங்கூறினார். போகர்கருவூர்த்தேவரை நோக்கித் "திருமாளிகைத் தேவர் கொடுத்தது சிவபிரானுடைய வழிபாட்டுப் பொருள்; அதனை நீ ஏற்றுக் கொள்ளத்தகும். அவர் நல்ல ஆசாரமுடையவர்ஆகவேஅவர் உம்முடைய வழிபாட்டுணவை ஏற்றுக்கொள்ளல் தக்கதன்று" என்று கூறினார். இதனைக் கேட்டுக்கருவூர்த்தேவர் யாதும் மறுமொழி கூறாதிருந்தார்.

தேவர் ஒருமுறை சேந்தனாரோடு திருத்தில்லைக்குச் சென்றார். அங்கு தேர் ஓடாமல் தடைப்பட்டு நின்றது. பதிகமோதித் தேரோடக் கட்டளையிட்டார். இவர் ஒரு நாள் காவிரியில் நீராடிவிட்டுச் சிவ பூசைக்கு மலர் பறித்துக் கொண்டு திரும்பினார். வழியில் பிணம் ஒன்று வந்தது. சிவ பூசைக்குத் தீட்டு நேராதபடி மலரைவிண்ணில்எறிந்துநிற்கச் செய்தார். பிணம் இடுகாடு மட்டும் நடந்து செல்லக் கட்டளையிட்டார்; பிணமும் அவ்வாறே நடந்து சென்றது.

இவரைக் கண்ட மாதர்கள் இவரிடம் மையல்கொண்டனர். இவரைப்போலவே மக்களைப் பெற்றனர். அந்தணர்முதலிய பலரும் அந்நாள் அரசாண்டிருந்த நரசிங்க மன்னனிடம் முறையிட்டனர். அரசன்சினங் கொண்டான். திருமாளிகைத் தேவரைக்கட்டிக் கொண்டு வருமாறு கட்டளையிட்டான். காவலாளிகள் தேவரிடம் சென்றார்கள். தாங்கள் ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு அரசனிடஞ் சென்றார்கள். பிறகு அரசன் படைத்தலைவர்களை அனுப்பித் "திருமாளிகைத் தேவரை வெட்டிக் கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்கள் தம்மையே வெட்டிக்கொண்டு சென்றனர். பிறகு அரசன் படையெடுத்துக் கொண்டு சென்றான். தேவர் அம்பிகையை வேண்டிக்கொண்டார். அம்பிகை மதிலில்இருந்த நந்திகளையேவினாள். அவைகள் சென்று அரசனை முதுகிடச் செய்து திரும்பின. தேவர் மேலுஞ்சிலகாலம் இருந்துவீடு பேறடைந்தார்.

**திருமாற்பேறு** - தொண்டை வள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருமால் பூசித்துப் பேறுபெற்றபடியால் திருமாற்பேறு என்று பெயர் பெற்றது. இவ்வூரில் ஒருகணப் பொழுதுதங்கியிருந்தவர்கட்கும் வீடுபேற்றையளிக்க வேண்டும் என்று திருமால் சிவபிரானை வேண்டிக் கொள்ளச் சிவபிரானும்அவ்வாறேசெய்வதாகக்கூறியருளிய தலம்' இறைவன்பெயர் மணிகண்டேசுரர். இறைவி பெயர்அஞ்சனாட்சியம்மை.நந்தி நின்ற திருக்கோலம். இலிங்கம் பலதலங்களில் அருச்சகர்களாலும் தீண்டப்படுவதில்லை. அவ்வாறு தீண்டப் பெரு இலிங்கங்களைத் தீண்டாத் திருமேனி என்பர். ஈண்டும் இலிங்கந் தீண்டப் பெறுவதில்லை.

**திருமீயச்சூர்** - சோழ வளநாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. பேரளம் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கே ஒருமைல் தொலைவில் இருக்கிறது. கோயிலின் விமானம் யானைமேல் இருப்பதைப் போல் விளங்கும். இறைவரையும் இறைவியையும் யானைமீது வைத்துக் கதிரவன் வழிபட்டானென்பது வரலாறு. திருமீயச்சூர் இளங்கோயில் என்ப தொன்றும் இவ்விடத்தில் இருக்கிறது. சுவாமி பெயர் முயற்சி நாதேசுவரர்; அம்மன் பெயர் சவுந்தர நாயகி.

**திருமுக்கூடல்** - காஞ்சிமாநகருக்கு அண்மையில் உள்ள ஓர் ஊர். கம்பாநதி, வேகநதி, சேயாறு என்னும் மூன்று ஆறுகளும் கூடுமிடத்தில் இருப்பதால் இப்பெயர் பெற்றது.

**திருமுதுகுன்றம்** - இவ்வூர் விருத்தாசலம் என்னும் பெயரோடு வழங்கும். இது விருத்தகாசி எனப்பெறும். இங்கு உயிர் விடும் உயிர்களுக்கெல்லாம் உமாதேவியார் தமது ஆடையினால் வீசி இளைப்பாற்றச் சிவபிரான் திருவைந்தெழுத்தை உபதேசித்து அவ்வுயிர்களைத் தமதுருவாக்கும் பதியாதலால் இது காசியைப் போன்றது. சுவாமி பெயர் பழமலைநாதர் அம்மன் பெயர் பெரியநாயகி. இவ்வூருக்குப் பழமலை எனவும் பெயருண்டு. இவ்வாறு வழங்கினும் ஊரில் மலை இல்லை. கோயிலையொட்டி மணிமுத்தா நதியிருக்கிறது. இவ்வூரின் சிறப்புக்களை விருத்தாசல புராணம் விளக்கமாகக் கூறும்.

**திருமுருகன்பூண்டி** - கொங்கு நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருப்பூர்ப் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே ஐந்து மைல் தொலைவில் உள்ளது. முருகக்கடவுள் பூசித்து வழிபட்ட படியால் இப்பெயரையடைந்தது. சேரமான் சுந்தரர்க்குக் கொடுத்த பொருளைச் சிவபிரானுடைய கட்டளைப்படிப் பூதகணங்கள் பறித்துத் திரும்பக் கொடுத்த இடம். சுவாமி பெயர் முருகநாதேசுரர்; அம்மன் பெயர் முயங்குபூண்முலையம்மை.

**திருமுறை** - வீடுபேற்றுத் திருவுக்கு வழிகாட்டும் உண்மைகளை உரைக்கும்நூல் திருமுறை. இத்திருமுறைகள் திருஞானசம்பந்தப் பிள்ளையாருடைய தேவாரம் முதல் திருத்தொண்டர்புராணம் இறுதியாக முறைப்படுத்தப்பட்ட பன்னிரண்டும் ஆகும். திருமுறை என்று பெயர் கொடுத்தவரும் நூல்களை ஆக முறைப்படுத்தித் தொகுத்தவரும் நம்பியாண்டார் நம்பி என்பவராவர்.

**திருமுறை காட்டிப்பிள்ளையார்** - திருத்தில்லையில் அபயகுல சேகர சோழமன்னன் காலத்

தில் தேவாரத் திருப்பதிகங்கள் உள்ள அறையைக் காட்டிய பிள்ளையார்.

திருமுற்றம் - இந்நாளில் குற்றாலம் குறும்பலாக் கோயில் என வழங்கும்பதி முன்னாளில் இப்பெயரோடு வைணவப்பதியாக விளங்கியது. அகத்தியமுனிவர் சிவத் திருக் கோலத்தினுடன் ஊர்க்குச் சென்றார். அங்கிருந்த வைணவர்கள் அகத்தியரை ஊரினுள் நுழையவிடாமல் தடுத்ததோடு சிவநிந்தனை சிவனடியார்நிந்தனை ஆகியவைகளையுஞ் செய்தனர். அகத்திய முனிவர் அவ்வைணவர்களுடைய ஆணவத்தை அழிக்கும் பொருட்டு வைணவஅடியார் கோலத்தோடு சென்று கோயிலினுள் நுழைந்து திருமாலின் தலையில் கைவைத்து அழுத்திக்குறுகச் செய்து திருமுற்றம் திருக்குற்றாலமாகு மாறு செய்தார்.

திருமெய்யம் - தொண்டைமான் புதுக்கோட்டைக்குத் தெற்கே பதின்மூன்று மைல் தொலைவில் உள்ள ஊர். இவ்வூரில் எழுந்தருளிய இறைவன் பெயர் சத்தியகிரீசுவரர், திருமால் பெயர் சத்திய மூர்த்தி. வைணவர்கள் இவ்வூரைத் திருவரங்கத்திற்கு அடுத்த படியாகப் போற்றுகிறார்கள். புகழ்பெற்ற ஊர்களில் இதுவுமொன்று. இவ்வூர் இந்நாளில் திருமயம் எனத்திரிந்து வழங்குகின்றது.

திருமோகூர் - மதுரைக்கு அண்மையில் உள்ள ஓர் ஊர். திருமால் மோகினி வடிவமெடுத்தது இவ்வூரில் என்பர். இது முன்னாளில் மோகனூர் என்று வழங்கிப் பின்னாளில் மோகூர், திருமோகூர் என்று மருவி விட்டது. பழைய சங்க இலக்கியங்களிலும் மோகூர், என்னும் பெயர் காணப்பெறும்.

திருவகீந்திரபுரம் - தென்னார்க்காடு மாவட்டத்தில் திருப்பாதிரிப்புலியூருக்கு மேற்கே நான்கு மைல் தொலைவில் உள்ள வைணவப்பதி. அகி என்பது பாம்பு. இந்திரன் என்பது தலைவன். ஆதிசேடனாகிய திருவனந்தாழ்வான் வழிபட்ட தலமாகையால் இவ்வாறு பெயர் பெற்றது. இந்நாளில் பெயர் திரிந்து திருவயிந்திரபுரம் என்று வழங்குகின்றது. பெருமாள் பெயர் தெய்வநாயகப் பெருமாள். தாயார் பெயர் வைகுண்டநாயகி. திங்களுக்கும் கருடனுக்கும் காட்சி கொடுத்த இடம். இவ்வூரைத் திருமங்கையாழ்வார்பாடியிருக்கிறார். இங்கு வேதாந்த தேசிகர் பதினைந்து ஆண்டுகள் தங்கியிருந்தார். தேசிகர் தம்முடைய கையாலேயே தோண்டிய கிணறு ஒன்று உண்டு.

திருவடகுரங்காடுதுறை - சோழவள நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. வாலி வழிபட்ட காரணத்தால் இவ்வாறு பெயர் பெற்றது என்பர்.

திருவண்டுதுறை - சோழ வள நாட்டில் இராசமன்னார் குடிக்குக் கிழக்கே ஏழுநாழிகை வழித் தொலைவில் உள்ள ஒரு தேவாரம் பெற்ற சிவப்பதி. பிருங்கி முனிவர் வண்டுரு எடுத்துக் கொண்டு சுவாமிக்கும் அவரைப்பாகம் பிரியாத அம்மைக்கும் இடையே ஊடுருவிச் சென்று தம்முடைய நியதிப்படி சுவாமியை மட்டும் வலம் வந்து வழிபட்ட தலம். வண்டின் பாடலோசை கருவறைக்குள் இந்நாளிலும் கேட்கக் கூடும் என்பர்.

**திருவண்ணமலை** - கிரேதாயுகத்தில் தீவடிவாகவும், திரேதாயுகத்தில் பொன் வடிவாகவும், துவாபரயுகத்தில் தாமிரவடிவாகவும், கலியுகத்தில் கல் வடிவாகவும் விளங்கும் மலை. நான்முகனும் திருமாலும் ''நானே பிரமம் நானே பிரமம்" என்று தருக்கிப்போர் செய்த பொழுது அவர் கட்கிடையே தீத்தூணக எழுந்து அவர்கட்கு அருள் புரிந்தமலை. மூவர் தேவாரப் பாடல் பெற்றது. மாணிக்க வாசகர் திருவெம்பாவையையும், திருவம்மானையையும் இங்கு தான் பாடினர். அருணகிரிநாதர் பிறந்தது இங்கு தான். ''ஞானத் தபோதனரை வா வென்ற ழைக்குமலை அண்ணமலை'' என்பதற்கேற்ப எக்காலத்திலும் இவ்வூரில் மெய்ஞ்ஞானிகள் இருந்து கொண்டேயிருப்பர். இவ்வூரின் சிறப்புக்களை அருணசல புராணம் விளக்கமாகக் கூறும். சுவாமியின் பெயர் அண்ணமலையார் எனவும் அருணசலேசுரர் எனவும் வழங்கும். அம்பிகையின் பெயர் உண்ணமுலை. கிரேதாயுகத்தில் இம் மலை திவடிவமாக இருந்த பொழுது யாரும் நெருங்க-அண்ண - முடியாமலிருந்தபடியால் அண்ணமலை யென்று பெயர் பெற்றது. இவ்வூருக்குரியன 264 தீர்த்தங்கள். இவைகளுட் பல இந்நாளில் மறைந்து போயின.

**திருவதிகை** - மற்றைய சிவப்பதிகளை விடப் பெருமையில் அதிகமுடைய பதியாகையால் திருவதிகை என்று பெயர் பெற்றது என்பர். இஃது அட்டவீரத்தலங்களில் ஒன்று. திருநாவுக்கரசருடைய தமக்கையார் திருத்தொண்டு செய்து கொண்டிருந்த பதி. திருநாவுக்கரசர் சூலைநோய் தீர்ந்து தேவாரம் பாடத் தொடங்கியது இப்பதியில் தான். கோயிலுக்குள்ளே சூலை நோய் தீர்த்த கிணறு இருக்கிறது. மகேந்திரவர்மன் சைவ சமயம் மெய்யெனத் தெளிந்த பிறகு பாடலிபுத்திரத்திலிருந்தசமணர்களுடைய பள்ளிகளையும் பாழிகளையும் இடித்து அவைகளின் கற்களைக் கொண்டு வந்து கட்டிய குணதரேச்சுரம் என்னும் கோயிலும் இவ்வூரில் இருக்கிறது.

**திருவயந்தீசுவரமுடைய நாயனர் கோயில்** - இக்கோயில் குகைக் கோயிலாகும். இது செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள வல்லம் என்னுஞ் சிற்றூரிலே குன்றின் மேற் பாறையிலே அமைக்கப் பட்டிருக்கிறது. மகேந்திரவர்மன் காலத்தில் அவன் கீழ்ச் சிற்றரசனக இருந்து அரசாண்ட வயந்தப் பிரியன் என்னும் சிற்றரசன் தன்னுடைய பெயரால் இக் கோயிலை யமைத்தபடியால் இக்கோயிலுக்கு இப்பெயர் வந்தது.

**திருவரங்கப் பெருமாளரையர்** - ஆளவந்தாருடைய மாணவர். இராமாநுசருக்கு ஆசாரியர். அவருக்கு அருள் புரிந்தவர். திருவரங்கத்திலே வாழ்ந்தவர். திருவரங்கத்துக்கடவுள் முன்பு திவ்யப்பிரபந்தத்தை இசையோடு பாடி நடித்துக் காட்டியவர்களில் தலைமை தாங்கியவர்.

**திருவரங்கம்** - இராமபிரானேடு அயோத்தியை அடைந்து முடிசூட்டு விழாவரை உடனிருந்த விபீடணர் பிறகு இலங்கைக்குத் திரும்பினர். திரும்பும் போது இராமபிரானிடம் இருந்த திருமாலை இலங்கையில் அமைத்து வழிபட வேண்டும்

என்னும் நோக்கத்தோடு பெற்றுக் கொண்டு திரும்பினார். திருச்சியை அடுத்த காவிரிக்கரையை அடைந்ததும் கரையில் வைத்து விட்டு நீராடல் நாட்கடன்கள் முதலியவைகளைச் செய்து முடித்தார். பிறகு திருமாலை யெடுத்தார். எடுக்க முடியவில்லை. அதனால் விபீடணர் உளம் வருந்தி நின்றார். பிறகு அவ்விடமேயிருந்த போது அன்றிரவில் பெருமாள் விபீடணருடைய கனவில் காட்சி தந்து, "இத் தலத்தில் முன்னாளில் அகிலாண்டநாயகி தவஞ் செய்தபடியாலும் திருமகள் நடனஞ் செய்யச் சிவபிரான் அருள் செய்தபடியாலும் சீ அரங்கம் (திரு-அரங்கம்) என்று ஆகியது. ஆகவே நாம் இவ்விடத்திலேயே இருக்க விரும்புகிறோம்" என்று உரைத்தார். விபீடணர், பெருமாளின் நோக்கப்படி அவ்விடமே அமைத்து வழிபாடு செய்து சென்றார். திருக்கோவிலின் திருப்பணிகள் தருமவர்மா என்னும் சோழனால் செய்யப்பட்டன. இங்குச் சந்திரபுட்கரணி, பில்வதீர்த்தம், சம்பு தீர்த்தம் முதலிய புனித நீர்களும்சம்புஅச்வதம்,புன்னாகம், வகுளம், கதம்பம், ஆம்ரம், பலாசம் முதலிய தலமரங்களும் இருக்கின்றன.

திருவரசிலி - தொண்டை வளநாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இஃது இந்நாளில் ஒழிந்தியாப்பட்டு என்று வழங்கப்படுகிறது. இறைவன் அரசமரத்தை இருப்பிடமாகக் கொண்டு தங்கியபடியால் திருவரசிலி யென்னும் பெயர் உண்டாகியது. இறைவனின் பெயர் அரசிலி நாதர். புதுச்சேரிக்கு வடகிழக்கில் பத்துக் கல் தொலைவில் உள்ளது.

திருவருட்பா - திருவருட்பா என்பது கடவுளுடைய அருளைப் பெற்றுப்பாடிய பாடல்களாம். அருள் பெறாமல் கல்வித் திறமையினால் பாடுகிற பாக்களெல்லாம் பொதுவான பாடல்களாம். அருட்பாக்களைப் பாடுபவர்கள் இலக்கண இலக்கியக் கல்விகளைக் கற்காமல் இருப்பினும் அருளைப் பெற்றவுடன் இலக்கண இலக்கியத்திறன் தெய்வத் திருவருளால் அமைந்து விடுகிறது. திருஞான சம்பந்தர் மூன்றாவது ஆண்டிலேயே பாடத் தொடங்கினார். இவ்வாறு தெய்வத் திருவருளைப் பெற்று எவர் பாடினாலும் அவைகளெல்லாம் அருட்பாக்கள் என்று போற்றக்கூடியவைகளே. சமயா சாரியர்கள் பாடிய பாடல்கள் தாம் முதற்கண் திருவருட்பா என்னும் பெயர் பெற்றது. பிறகு திருவருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் பாடிய பாடல்களுக்கும் சுவாமிகளின் மாணவர்கள் அருட்பா என்று பெயர் கொடுத்து வெளியிட்டனர். இது பலருடைய கண்டனத்துக்கு இடமாயிற்று. இந்நாளில் மூவர் தேவாரப் பாடல்களும் இராமலிங்க சுவாமிகள் பாடல்களும் திருவருட்பா என்னும் பெயரோடு வழங்கிக் கொண்டிருக்கின்றன.

திருவலஞ்சுழி - சோழவள நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சுவாமிமலை புகைவண்டி நிலயத்திற்கு அண்மையில் இருக்கிறது. இத் தலத்தில் காவிரி நிலத்திற் புகுந்துபாதலத்திற் பாய்ந்தது. ஏரண்டமுனிவர் தம்மைப்புலி

கொடுத்துப் பிலத்திற் புகுந்தவுடன் காவிரிமேலே வந்து வலமாகச் சுழித்துக் கொண்டு சென்றபடியால் இவ்வூருக்குத் திருவலஞ்சுழி என்று பெயர் உண்டாகியது. ஏரண்ட முனிவருடைய உருவம் கோயிலில் இருக்கிறது. தேவேந்திரன் வழிபட்ட இடம். இங்குள்ள விநாயகரைப் பூசித்தபடியால் அமுதந்திரண்டதாம். சுவாமி பெயர் கற்பக நாதேசுரர். அம்மன் பெயர் பெரிய நாயகி. விநாயகர் தீண்டாத் திருமேனியுடையவர் சிறப்புக்களெல்லாம் இவருக்கே.

**திருவலம்புரம்** - சோழ வள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருமால் சிவபிரானை வழிபட்டு வலம்புரிச்சங்கைப் பெற்ற படியால் திருவலம்புரம் என்று பெயர் உண்டாகியது. சுவாமி பெயர் வலம்புரி நாதர்; இறைவி பெயர் வடுவகிர்க்கண் அம்மை. திருவலஞ்சுழியில் காவிரியில் இறங்கின ஏரண்ட முனிவர் இங்குக்கரையேறியதாகக் கூறுவர். சிவபிரான் திருநாவுக்கரசரைத் தாமே வலிந்தழைத்துக் காட்சி கொடுத்த இடம்.

**திருவல்லம்** - தொண்டைவள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில்ஒன்று. திருவலம் புகைவண்டி நிலையத்திலிருந்து இரண்டுமைல் தொலைவில் உள்ளது. வல்லாளன் என்னும் அரசன் பூசித்த படியினால் திருவல்லம் என்னும் பெயர் பெற்றது. நவக்கிரகங்கள் தீக்காலி என்னும் அவுணன் ஆகியோரும் இங்கு பூசித்ததாகக் கூறுவர். இறைவன் பெயர் வல்லநாதர்; இறைவி பெயர் வல்லாம்பிகை. நந்தி கிழக்குத் திக்கை நோக்கியிருக்கும்.

**திருவழுந்தூர்** - இப்பெயர் தேரழுந்தூர் எனவும் வழங்கும். சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. ஊர்த்துவரதன் என்னும் அரசனுடைய தேர் இங்கு வந்த பொழுது மேலே செல்லாமல்நிலத்தில்அழுந்தினமையால் இவ்வாறு பெயர்உண்டாகியது. மறைகளும் தேவர்களும் அட்டதிக்குப் பாலகர்களும் பூசித்து வழிபட்டதலம்.

**திருவழுந்தூர்த்தாசி** - இவள் கம்பர் பிறந்த திருவழுந்தூரிற் பிறந்து கல்வி கேள்விகளில் வல்லவளாய்ச் செய்யுள் பாடுந் திறமடைந்து விளங்கினாள். இவள் ஒருமுறை சோழமன்னனைக் காணச் சென்றாள். சோழமன்னன் இவளைப் பார்த்து, "எந்த ஊர்?" என்று உசாவினான். அதற்கிவள், "கம்பன் பிறந்தவூர் காவிரி தங்குமூர், கும்பமுனி சாபங் குலைந்தவூர் - செம்பதுமத் தாதகத்து நான்முகனும் தாதையுந்தேடிக்காணு வோதகத்தார்வாழுமழுந்தூர்" என்று செய்யுளினாலேயே மறுமொழி கூறினாள்.

**திருவள்ளுவர்** - திருக்குறளை இயற்றியவராகிய திருவள்ளுவரின் காலம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாகையால் உண்மையான வரலாறு இன்னதெனக் கண்டுபிடிக்க முடியாததாக இருக்கிறது. பழைய திருக்குறள் உரையின் முன்னால் வெளியாகியுள்ள வரலாறு கன்ன பரம்பரையாக வழங்கிவருகிறது. செவிவழிச் செய்தியில் இடையே கட்டுக் கதைகளும் புகுந்து விடுவது இயற்கை. திருவள்ளுவருடைய வரலாற்றிலும் அவ்வாறே கட்டுக்கதை கலந்துள்ளது. திருக்குறள் நூலைக்கொண்டு திருவள்ளுவரின் வரலாற்றை

யோ சமயத்தையோ கண்டு பிடிப்பது முடியாததாக இருக்கிறது. இவர் சென்னை மயிலாப்பூரில் வாழ்ந்ததாகக் கூறுவர். சென்னை திருமயிலையில் திருவள்ளுவருக்குக் கோயில் ஒன்று இருக்கிறது.

திருவறையணிநல்லூர் - நடு நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருக்கோவலூர்ப் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே சிறிது தொலைவில் உள்ளது. பாண்டவர்கள் காட்டுவாழ்க்கையை மேற்கொண்டிருந்தபோது தங்கியிருந்த ஐந்து அழகிய அறைகளைக்கொண்டிருந்த படியால் அறையணிநல்லூர் என்று பெயர் அடைந்தது என்பர்.

திருவனந்தபுரம் - மலைநாட்டில் உள்ள திருமால் பதிகளில் ஒன்று. இங்குள்ள திருமாலின் பெயர் அனந்தபத்மநாபர். இவர்தம்முடையவலக்கையைச் சிவலிங்கத்தின் மீது நீட்டியிருப்பார். நான்முகனை நாபியில் வைத்திருப்பார். துளுவ குலத்தில் உதித்த திவாகரன் என்னும் எதிசுவரன் வழிபட்டு வீடுபேறடைந்த பதி. நம்மாழ்வார், பெரியாழ்வார் ஆகியோர் இப்பதியைப் பாடியிருக்கின்றனர்.

திருவாசகம் இது திருவாதவூரடிகள் என்னும் மாணிக்கசவாசகரால் இயற்றப்பெற்றது. சிவபிரானுடைய திருவருளைப் பெற்ற பிறகு திருவாதவூரடிகள் பாடியருளிய இத்திருவாசகம் கருங்கல் மனத்தையுங் கசிந்துருகச் செய்யும் பான்மையுடையது. இதனை எண்ணியே, ''திருவாசகத்துக் குருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்'' என்று பழைய மொழியொன்றும் வழங்கிவருகிறது. வாசகம் உரைநடையை உணர்த்தும்பத மாயினும்ஈண்டுவாக்கினின்றும் பிறந்த சொல்லடியாக நின்று பாடலை யுணர்த்துகின்றது. அறநூல்களிலே திருக்குறள் சிறந்துவிளங்குதலைப் போலச் சிவபிரானுடைய புகழினையோதும் வணக்கநூல்களிலே இத் திருவாசகம் தலைசிறந்ததாகத் திகழ்கின்றது. எட்டாந் திருமுறையிற் சேர்க்கப்பட்ட இத் திருவாசகத்திற்குப் பலபேர் உரையெழுதியிருக்கின்றனர். ''நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப், பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய், அரிய பொருளே அவிநாசி அப்பா பாண்டி வெள்ளமே, தெரிய வரிய பரஞ்சோதி! செய்வதொன்றும் அறியேனே'' என்னுஞ் செய்யுளிலே ஆலவாய்ப்பரமன் அடிகளுக்காக நரிகளைப் பரிகளாக்கிய செய்தி அகச்சான்றாக அமைந்துள்ளது. நரிகளைப் பரிகளாக்கிய வெல்லாம் கற்பனைக்கதையென்பார். இத்தகைய அகச்சான்றுகளை மறுத்துரைக்கவியலாது. இத் திருவாசகத்தின் சிறப்பினை யுணர்ந்து வெளிநாட்டார் இதனை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்துள்ளனர்.

திருவாஞ்சியம் - சோழவள நாட்டிலுள்ள மூவர் தேவாரமும் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. நன்னிலம் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கே ஆறு மைல் தொலைவில் இருக்கிறது. திருமால் சிவபிரானை வழிபட்டுத் தம்மைப்பிரிந்துபோன திருமகளை அடையப் பெற்ற தலம். திருவைவாஞ்சித்த இடம் திருவாஞ்சியம் என்று பெயர் பெற்றது. குப்தகங்கைஎன்னும் புனிதநீர் கோயிலுக்குவடக்கில் இருக்கிறது. இத்தலத்தில் இறப்பவர்கட்கு யமவாதனை

இல்லை என்பர். காசிக்கு நிக கராகச் சொல்லப்பெறும் தென்னாட்டுச் சிவப்பதிகளில் இதுவும் ஒன்று. இறைவன் பெயர் வாஞ்சிலிங்கேசுவரர்; இறைவி பெயர் மங்களநாயகி.

**திருவாடானை** - பாண்டி நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. ஆடு யானை ஆகியவைகள் வழிபட்டபடியால் திருவாடானை என்று பெயர் உண்டாகியது. இறைவன் பெயர் ஆடானைநாதர்; இறைவி பெயர் அம்பாயிரவல்லி.

**திருவாதவூர்** - பாண்டி நாட்டில் மதுரைக்குக் கிழக்கே பதினைந்து மைல் தொலைவில் உள்ள ஊர். இவ்வூரில் திருவாசகத்தைத் திருவாய்மலர்ந்தருளிய மாணிக்கவாசகர் என்னும் திருவாதவூரடிகள் பிறந்தார். இவருடைய குலம் அமாத்தியப் பிராமணர் வகுப்பு என்பர்.

**திருவாப்பனூர்**-தேவாரம் பெற்ற பாண்டி நாட்டுச் சிவப்பதிகளில் ஒன்று. மதுரையில் வையைக்கு வடகரையில் உள்ளது. சோழாந்தகன் என்னும் பாண்டிய மன்னன் பொருட்டுச் சிவபிரான் ஓர் ஆப்பினிடத்தில் தோன்றியருளிய தலம். இறைவனுக்கு இடப்புரேசர் என்று பெயர். அருச்சகராகிய சைவ வேதியர் உலையிலிட்ட வைகையாற்றுமணலைச் சோறுகச் செய்வித்தபடியால் அன்னவிநோதன் என்னும் பெயரும் உண்டு.

**திருவாப்பாடி** - சோழ நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. இறைவனுடைய பெயர் பாலுகந்த ஈசுரர்; இறைவி பெயர் பெரிய நாயகி. இங்கிருந்த இடையன் ஒருவன் பாலைக் கறந்து வீட்டிற்குக் கொண்டு போகும் பொழுது வழியில் ஓரிடத்தில் கால் தடுக்கிப் பால் நாள் தோறும் கவிழ்ந்து கொண்டே வந்தது. ஒரு நாள் இடையன் கையிலிருந்த வாளால் பால் கவிழ்ந்த இடத்தில் வெட்டினான். அங்கிருந்து இரத்தம் வெளிப்பட்டது. இடையன் மனம் வருந்தி இவர் பாலுகந்த நாதரோ என்று கூறித் தொழுதான். அதனால் இறைவனுக்கு இவ்வாறு பாலுகந்த ஈசுரர் என்று பெயர் உண்டாகியது.

**திருவாய்மொழிப் பிள்ளை** - இவர் அண்ணர் என்பவருடைய திருமகன். இவருக்குத் திருமலையாழ்வான் என்று பிள்ளைப்பெயருண்டு. இவர் பிறந்த ஊர் குந்திநகரம். இவருடைய தாய் பிள்ளை லோகாசாரியார் கோயிலை விட்டு வெளியேறிய படியால் உயிர் விட்டாள். அதனால் இவர் சிறிய தாயாரிடம் வளர்ந்தார். தமக்குக் கூரகுலோத்தமதாசர் திருவிருத்தத்திற்குப் பொருள் சொல்ல முடியாது என்று மறுத்தபடியால் தாம் பிள்ளை லோகாசாரியாரை இளமையில் அடுத்தவர் என்பதைச் சிறிய தாயால் உணர்ந்து அடங்கிக், கூரகுலோத்தமதாசர், விளாஞ்சோலைப்பிள்ளை, நயினாச்சாம் பிள்ளை முதலியவர்களிடம் திருவாய்மொழியெல்லாங் கேட்டுத் திருநகரிக்குப் போய்க் காடுவெட்டி நாடாக்கிக் குடியேற்றி ஆழ்வாரை அமைத்துச் சடகோபதாசர் எனவும், திருவனந்தபுரத்தில் விளாஞ்சோலைப் பிள்ளையிடத்தில் மறைமுகச் சிறப்புப் பொருள்களை யெல்லாங் கேட்டுத் திருவாய்மொழியில் வல்லவரானார். அதனால் திருவாய்மொழிப் பிள்ளை என்று பெயருண்டாகியது. சதுர்வேத மங்கலம் என்னும் ஓர் ஊரைத் திருநகரி

யில்உண்டாக்கிக்கோயில் கட்டு வித்துக் காடுவெட்டியையன் எனவும் பெயரடைந்தார். மணவாள மாமுனிகட்கு ஐவகைச் சடங்குகளுஞ் செய்து திருநாட்டிற் கெழுந்தருளிய வைணவ ஆசாரியார்களில் ஒருவர்.

**திருவாரூர்** - பிறந்தவர்களுக்கு வீடுபேற்றையளிக்குஞ் சிவப் பதி. திருமகள் வழிபட்ட பதி யாகையால் திருவாரூர் என்று பெயர் பெற்றது என்பர். மூவர் தேவாரப்பாடலும் பெற்ற ஊர். சுந்தரர் பரவையாரை மணம் புரிந்து வாழ்க்கை நடத் திய இடம். திருமகளால் உண் டாக்கப்பட்ட கமலாலயம் என் னும் பெரிய தடாகம் இங்கு உண்டு. திருமாலின் மார்பிலே இருந்த சோமாஸ்கந்த மூர்த்தி யாகிய தியாகராசரை முசுகுந் தச் சக்கரவர்த்தி இந்திரனிட மிருந்து பெற்று வந்து எழுந் தருளச்செய்த பதி. இங்கெழுந் தருளிய இறைவனுடைய பெயர் புற்றிடங் கொண்டார். இறைவியார் பெயர் அல்லியங் கோதையம்மை. நமிநந்தியடிக ளுயனூர்நீரினுலேவிளக்கெரித்த பதி. இவ்வூரின் சிறப்புக்களைத் திருவாரூர்ப்புராணம் தியாக ராசர்லீலை ஆகியவைகள்விளக்க மாகக் கூறும்.

**திருவாரூர்ச் சுந்தர தேசிகர்** - இவர் திருவாரூரில் வாழ்ந்திருந் தவர். திருவாத வூரடிகள் திரு வாய் மலர்ந்தருளிய திருக் கோவையாரின் உண்மை ஞானப் பொருளை இவர் திருக் கோவையார் உண்மை என்னும் பெயரோடு நூலாக எழுதி யிருக்கிறார். இந் நூலால் திருக்கோவையாரின் தத்து வார்த்தப் பொருளை உணர்ந்து கொள்ளலாம்.

**திருவாலங்காடு** - தொண்டை நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திரு வாலங்காடு புகை வண்டி நிலையத்திற்கு வடக்கே மூன்று மைல் தொலைவில் உள்ளது. சிவபிரான் திருக்கூத்தாடும் ஐந்து சபைகளில் ஒன்று. இரத்தின சபை என்று பெயர். இங்குச் சிவபிரான் காளியோடு கூத்தாடினார். இவ்வூரை, திருநாவுக்கரசர், சுந்தரர், சம் பந்தர் மூவருமே பாடியுள் ளனர். காரைக்காலம்மையார் பாடிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகமும் உண்டு. காரைக்காலம்மையார் தலை யாலே நடந்த தலம். வாக்கைக் காப்பதற்காக உயிர் துறந்த எழுபது வேளாளர்களின் ஊராகிய பழையனூர் அண்மை யில் உள்ளது.

**திருவாலம் பொழில்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தஞ்சை மாவட்டத்தில் திருவையாற் றுக்கு அண்மையில் உள்ளது. எட்டு வசுக்களும் வழிபட்ட தலம். மேற்குப் பார்த்த கோயில். இறைவர் பெயர் ஆத்மநாதேசுவரர். இறைவி பெயர் ஞானம்பிகை. முன் னுளில் பரமன் ஆலங்காட் டிடையே ஓர் ஆலமரத்தடியில் எழுந்தருளியிருந்த படியால் திருவாலம்பொழில் என்று பெயருண்டாயிற்று.

**திருவாலித் திருநகரி** - சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் சீகாழிக்குக் கிழக்கே ஆறு மைல் தொலைவில் உள்ள திரு மால் திருப்பதி. திருமாலைத் திருமகள் ஆலிங்கனஞ் செய்து கொண்டபடியால் இவ்வூருக் குத் திருவாலி என்று பெயர் வந்தது என்பர். பெருமாள் பெயர் வயவாலி; தாயார் பெயர்

அமிர்தகடவல்லி. இப்பதியைத் திருமங்கையாழ்வார் பாடியிருக்கிறார்.

**திருவாலியமுதனார்** - திருவிசைப்பாப் பாடியவர்களில் இவர் ஒருவர். இவருடைய இயற்பெயர் அமுதனார். சோழவள நாட்டிலுள்ள திருவாலி என்னும் ஊரினராகையால் திருவாலியமுதனார் என்று கூறப்பெற்றார். இவர் அந்தணர் குலத்தினர் என்று தெரிகிறது. இவர் பாடிய பதிகங்கள் நான்கும் சிதம்பரத்தைப்பற்றியவை.

**திருவையாறு** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தஞ்சைக்கு வடக்கே ஏழு கல் தொலைவில் இருக்கிறது. தஞ்சை முதல் திருவையாறு வரையில் வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி என்னும் ஐந்து ஆறுகளையுடைமையால் ஐயாறு என்று பெயர் பெற்றதென்று சிலர் கூறுகின்றனர். மற்றுஞ் சிலர் சூரிய புட்கரிணி, சந்திர புட்கரிணி, கங்கை, பாலாறு, நந்திதீர்த்தம் என்னும் ஐந்து தெய்வீக ஆறுகள் தம்முட் கலப்பதால் ஐயாறென்று பெயர் பெற்றதென்பர்.

திருக்கைலைக்குப் போய் இறைவனை வழிபடவெண்ணிய திருநாவுக்கரசரைச் சிவபிரான் இங்கு வந்து திருக்கைலைக் காட்சியைக் காணுமாறு திருவருள் புரிந்த தலம். சுந்தரரும் சேரமான் பெருமாளும் இத்தல வழிபாட்டிற்கு வந்து ஆற்று வெள்ளப் பெருக்கைத் தாண்டி வர முடியாமல் தென்கரையில் நின்று சுந்தரர் தேவாரம்பாட ஆறு அப்படியே நின்று விலகிவழிவிட்ட இடம். ஐயாறப்பர் ஆதி சைவ அந்தணர் ஒருவர் பொருட்டுத் தாமே அவர் போல் கோலங் கொண்டு நடித்தருளிய பதி. இதனை மாணிக்கவாசகர் "ஐயாறதனில் சைவனாகியும்" என்று திருவாசகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

ஐயாறப்பர் திருக்கோயில் பல்லவ மன்னன் ஒருவனால் கட்டப்பெற்றது. இத் திருக்கோயிலுக்குள்ளே ஐயாறப்பர் கோயில், தென் கயிலைக் கோயில், ஒலோக மாதேவீச்சுரம் ஆகிய மூன்று கோவில்களினுங் கல்வெட்டுக்கள் உள்ளன.

சித்திரைத் திங்களில் இங்கு பெருந் திருவிழா நடைபெறும். ஐந்தாம் நாள் விழாச் சிவபிரான் தம்மைத் தாமே வழிபடுவதென்று புராணம் கூறும். அவ் விழாவின் முடிவில் இறைவர் உமாதேவியோடு திருப்பழனம் முதலிய ஏழூர்கட்கு எழுந்தருள்வர். இதனை ஏழூர் விழா (சப்தஸ்தான உற்சவம்) என்பர்.

**திருவாவடுதுறை** - சோழவள நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இவ்வூருக்கு நவகோடி சித்தபுரம், கோமுத்தி முதலியவேறு பெயர்களும் உண்டு. இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களும் வழிபாடு செய்த பதி. இங்குள்ள படர் அரசின் கீழ் முன்னாளில் போகர் அமர்ந்து பல மாணவர்களுக்கு மெய்யறிவு போதித்தார். திருமூலர் இங்கு யோகத்தில் மூவாயிரம் ஆண்டுகள் அமர்ந்திருந்து ஆண்டுக்கொரு பாடல் வீதம் திருமந்திரத்தைத் திருவாய் மலர்ந்தருளினார். திருஞானசம்பந்தருடையதந்தையார்வேள்வி செய்ய வேண்டுமென்னுங் கருத்தையுணர்த்த, பிள்ளையார் பதிகம்பாடி உலவாக்கிழி

பெற்றதலம். திருமாளிகைத் தேவர் போகரிடம் அருளுரை பெற்றதும் வீடு பெற்றதும் இங்குதான். திருக்கைலாய பரம்பரையைச் சேர்ந்த திருவா வடுதுறையாதீனமடம் இங்கிருக்கிறது. இம்மடத்தில் பல பெரியோர்கள் எழுந்தருளியிருந்தனர். பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களும் இவ்வாதீனத்திலிருந்து பலமாணவர்கட்குக் கல்விகற்பித்தார். தமிழுக்குப் புத்துயிரளித்துக் காலஞ்சென்ற உ.வே. சாமிநாதையரவர்களும் இவ்வாதீனச் சார்பிலேயிருந்து கல்வி கற்றவர்தாம். பசுவடிவத்தோடு (ஆ-) உமாதேவியார் அடுத்துப் பூசித்த இடமாகையால் ஆவடுதுறை என்று பெயருண்டாகியது. இறைவருடைய பெயர் மாசிலாமணியீசுரர்; இறைவியினுடைய பெயர் ஒப்பிலாமுலையம்மை.

திருவாஆர் - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இவ்வூர் பட்டீசுரத்திற்குத் தென்மேற்கில் உள்ளது. இங்குள்ள கோயிலுக்குப் பசுபதீச்சுரம் என்று பெயர். இவ்வூரில் ஆக்கள் (பசுக்கள்) வழிபட்டனவாம். அதனால் ஆவூர் என்று பெயர் பெற்றது. சுவாமி பெயர் பசுபதீசுரர்; தேவியார் பெயர் மங்களநாயகி.

திருவான்மியூர் - தொண்டைவளநாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில்ஒன்று. சென்னை மயிலைக்குத் தெற்கே மூன்று மைல்தொலைவில்கடற்கரையில் உள்ளது. வான்மீகரிஷி வழிபட்ட ஊராகையால் திருவான்மியூர் என்று பெயர் பெற்றது. தேவர்கள் அமுதத்தினால் இலிங்கம் செய்துவழிபட்டபடியால் சுவாமியின் பெயர் மருந்தீசர். அம்மனுடைய பெயர் சொக்கநாயகி. ஊரின் வடமேற்கில் வான்மீக முனிவருக்குக் கோயில் இருக்கிறது.

திருவாளொளிப்புற்றூர் - சோழவளநாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. அருச்சுனனுடைய கைவாளை இறைவன் ஒருபுற்றில் ஒளித்து வைத்தாராம். அதனால் ஊரின் பெயர் இவ்வாறு வாளொளிப் புற்றூர் என்று ஆகியதாம். திருமால்மாணிக்கத்தைவைத்து வழிபட்ட படியினால் ஊருக்கு அரதனபுரம்எனவும் ஒரு பெயருண்டு. பாண்டவர்கள் பூசித்த இலிங்கங்களும் திரௌபதி பூசித்தவிநாயகர் உருவமும் நச்சுப்பொய்கையும் இங்குள்ளன. இறைவன் பெயர் மாணிக்க வண்ணர்; இறைவி பெயர் வண்டார் பூங்குழலம்மை.

திருவிசயமங்கை - இது தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. கும்பகோணத்திற்கு வடமேற்கில் கொள்ளிடக் கரையில் உள்ளது. அருச்சுனனாகிய விசயன் வழிபட்டபடியினால் விசயமங்கை என்று பெயர் பெற்றது. கோ - பசு - வழிபட்டபடியினால் கோவந்தபுத்தூர் என ஊரின் பெயர் வழங்கும். ஆனால் இக்காலத்தினர் இப்பெயரைக் கோக்கறந்தபுத்தூராக்கி விட்டனர். இறைவன் பெயர் விசயநாதர் எனவும் இறைவிபெயர் மங்கை நாயகி எனவும் வழங்கும். தீர்த்தம் அருச்சுன தீர்த்தம்.

திருவிசைப்பா-பன்னிருதிருமுறைகளில் ஒன்பதாவதாக அமைந்த நூல். பாக்கள் நல்ல இசையோடு அமைந்தனவாகலின் திருவிசைப்பா என்று பெயர் பெற்றது. திருவிசைப்பா வைப்பாடிய ஆசிரியர்கள் திருமாளிகைத்தேவர், கருவூர்த்

தேவர், சேந்தனர், பூந்துருத்தி நம்பி, காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மராவர். திருவிசைப்பாப் பெற்ற தலங்கள் கங்கை கொண்ட சோளேச்சுரம், தஞ்சை இராசராசேச்சுரம், திருக்களந்தை ஆதித்தேச்சுரம், திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருச்சாட்டியக்குடி, திருப்பூவணம், திருமுகத்தலை, திருவாரூர், திருவாவடுதுறை, திருவிடைக்கழி, திருவிடைமருதூர், திருவீழிமிழலை, திரைலோக்ய சுந்தரம், சிதம்பரம் என்பனவாம்.

திருவிடவெந்தை - திருமகளை இடப்பாகத்தில் வைத்துள்ள திருமால் இப்பெயரைப் பெற்றுள்ளார். திரு இட எந்தை என்று இச்சொல் பிரியும். இவ்வூர் செங்கற்பட்டு மாவட்டத்தில் கோவளம் என்னும் ஊருக்கு அண்மையில் உள்ளது.

திருவிருந்தான் - இவன் ஒரு வள்ளல். பதினேழாம் நூற்றுண்டில் இருந்தவன். சுந்தர பாண்டியம் பாடிய அனதாரி என்ற புலவரை ஆதரித்தவன். இவனுடைய விருப்பப்படி இந்நூல் இயற்றப்பெற்று இவனுடைய அவையிலேயே அரங்கேற்றப் பெற்றது. இவன் மதுரையை ஆண்ட முத்து வீரப்பநாயக்கரின் படைத்தலைவன். திருவிருந்தானுடைய தமையனார் பெயர் செவ்வந்தி. இந்தச் செவ்வந்தியென்பவர் மதுரையிலே செவ்வந்தியீசருக்குக் கோயில் கட்டினார். இவர்களுடைய தந்தையார் பெயர் கல்லூர்ச்சனிப்பெருமாள். சுந்தரபாண்டியம் என்னும் நூல் மதுரையைப் பற்றியது.

திருவிரும்பூளை - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இவ்வூரில் பூளைச்செடிகள் மிகுதியாக இருந்தமையின் இரும்பூளை என்று பெயர் உண்டாயிற்று. இந்நாளில் ஆலங்குடி என்று பெயர் வழங்குகிறது. பாற்கடலில் தோன்றிய நஞ்சினை (ஆலத்தை) இங்கெழுந்தருளிய சிவபிரான் உண்டு உலகைக் காத்தபடியினால் இவ்வாறு பெயர் உண்டாயிற்றும். இறைவருடைய பெயர் காசியாரணியர்;இறைவியார் பெயர் ஏலவார் குழலி.

திருவிலம்பையங் கோட்டூர் - தொண்டை நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. கூவத்திற்கு அண்மையில் உள்ளது. அரம்பையர்கள் வழிபட்ட தலம். திருவரம்பையங் கோட்டூர் நாளடைவில் இவ்வாறு மாறிவிட்டது. இறைவன் தீண்டாத் திருமேனியுடையவர். சுவாமி பெயர் சந்திரசேகரர்; அம்மன் பெயர் கோடேந்துமுலையம்மை. பாண்டியன் கோநேரின்மை கொண்டான் திரிபுவனச் சக்கரவர்த்தி சடாவர்மன் சுந்தர பாண்டியன் முதலியோருடைய கல்வெட்டுகள் கோயிலில் இருக்கின்றன.

திருவிளக்குப்பிச்சன் - திருவரங்கத்தில் பெருமாளுக்குத் திருவிளக்குப்பணி செய்து கொண்டிருந்தவர். நம்பிள்ளை திருவோலக்கத்தைப் பெருமாள் நின்று காணுமாறு பெருமாளை அரியணையில் இருந்து கேட்கச் செய்தவர்.

திருவிளையாடற் புராணம்-மதுரை மாநகரில் திருக்கோயில் கொண்டுள்ள சிவபிரான் தம்முடைய அடியார்கள் பொருட்டுச்செய்த அறுபத்து நான்கு விளையாடல்

களும் திருவிளையாடல் என்று பெயர் பெற்றன. இப்புராணம் பாட்டாகவும் உரைநடையாக வும் எழுதப்பட்டுள்ளது. இதனைத் தமிழில் மொழி பெயர்த்துப்பாடியவர்கள் வட மொழி நூல்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு இயற்றினர்.

**திருவிற்குடி** - சோழவள நாட்டி லுள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. அட்ட வீரட்டத்தலங்களில் ஒன்று. சலந்தராசுரனைக் கொன் றருளிய இடம். இவ்வூரிலுள்ள புனிதநீருக்குப் பெயர் சக்கர தீர்த்தம். இறைவனுடைய பெயர் வீரட்டானேசுரர்;இறை வியின் பெயர் ஏலவார் குழலி. இத்தலம் விற்குடி புகைவண்டி நிலையத்திலிருந்து மூன்று மைல் வடகிழக்கில் உள்ளது.

**திருவிற்கோலம்** - தொண்டை நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. கடம்பத்தூரில் இருந்து ஏழுகல் தொலைவில் உள்ளது. சுவாமி தீண்டாத்திருமேனி. மிகுதியாக மழை பெய்வதாக இருந்தால் சுவாமிமீதுவெண்மையானநிறம் படருகிறதாம். போர் ஏற்படுவ தாகஇருந்தால் சிவப்பு நிறம் படருகிறதாம். திரிபுரமெரித்த பரமன்திருக்கையில் விற்பிடித்த கோலமாகத் தங்கியபடியால் திருவிற்கோலம் என்று பெயர் உண்டாகியது. சுவாமியின் பெயர் திரிபுராந்தகர். அம்மை யின் பெயர் திரிபுராந்தகி.

**திருவீங்கோய்மலை** - ஈரோடு திருச்சிக் கிளைஇருப்புப்பாதை யில் குழித்தலைப் புகைவண்டி நிலையத்தினின்றும் வடக்கே அகண்ட காவிரியை ஓடத்தி ைற் கடந்து இரண்டு நாழிகை வழித் தொலைவிலுள்ள முசி றியை அடைந்து அங்கிருந்தும் மேற்கே மூன்று நாழிகை நடந்து சென்றடையத் தக்கது. அகத்தியமுனிவர் இறைவழி பாட்டிற்கு வந்தபோது அடி யார் கூட்டம் மிகுதியாக இருந் தது. அகத்தியர் உள்ளே சென்று வழிபட முடியாமல் ஈ உரு எடுத்துச் சென்று வழி பட்டுச் சென்றார். அதனால் ஈங் கோய்மலை யென்னும் பெயர் எய்தியது. இந்நாளில் மனம் போனவாறு மக்கள் இப் பெயரைத் திரித்துத் திருவிங்க நாத மலை என வழங்குகின்ற னர். இவ்வூர் நக்கீரர் பாடிய "திருவீங்கோய் மலை எழுபது" என்னும் நூலைப் பெற்றிருக் கிறது. அந்நூல் பதினோராந் திருமுறையில் சேர்க்கப்பட்ட பெருமையுடையது.

**திருவீழிமிழலை** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. வீழிச் செடிகள் நிறைந்திருப்பதால் இவ்வூருக்குத் திருவீழிமிழலை என்று பெயருண்டாகியது. திரு ஞானசம்பந்தரும் திருநாவுக் கரசரும் இவ்வூரில் தங்கியிருந்த பொழுது பஞ்சம் உண்டா யிற்று. சிவபிரான் இருவருக்கும் படிக்காசு கொடுத்து அவர்கள் மூலமாக அடியார்கட்கும் உண விடச் செய்தார். இறைவன் கட்டளைப்படி பிள்ளையார் காசு கள் வைத்துக் கொண்டிருந் தார். அதனால் இங்கு எழுந் தருளியுள்ள பிள்ளையாருக்குப் படிக்காசுப்பிள்ளையார் என்று பெயர் உண்டாயிற்று. இறை வன் பெயர் நேத்திரார்ப்பணே சுரர்; இறைவி பெயர் சுந்தர குசாம்பிகை. திருமால் தாமரை மலர் குறைந்தபோது தமது கண்ணைப் பிடுங்கியர்ச்சித்து ஆழிப்படையைப் பெற்றது இத்தலத்தில்தான் என்றும் இத னால்தான் இறைவனுக்கு இவ்

வாறு பெயர் உண்டாயிற் றென்றுங் கூறுவர்.

**திருவுசாத்தானம்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. கோயி லூர் என வழங்குகிறது. முன் னளில் மாமரக் காடாக இருந்த படியால் சூதவனம் எனவும் பெயர் உண்டு. இராமபிரான் இலங்கைக்குச் செல்லும்போது இங்கு அருளுரை பெற்ருர். சிவபிரானிடமும் அந்நாளில் இங்கிருந்த முனிவர்களிடமும் பலசெய்திகளை உசாவி யறிந்த படியால் உசாத்தானம் என்று பெயருண்டாயிற்று. இறைவர் பெயர் மந்திரபுரீசர்; இறைவி பெயர் பெரியநாயகி. மூன்ருங் குலோத்துங்கன், விக்கிரம சோழன், மூன்ரும் இராசேந் திரன் ஆகிய சோழ மன்னர் களின் கல்வெட்டுக்கள் கோயி லில் உள்ளன.

**திருவுடையபிரான் தாசர் அண்ணர்** - எழுபத்திரண்டு சிம்மாசனுதிபதிகளில் கோமடத் தாழ்வாருடைய பரம்பரையைச் சார்ந்த இவர் கொல்லிக்காவல் தாசரின் புதல்வியை மணந்து சிக்கலில் கொல்லிக்காவல் தாசர் இல்லத்திலிருந்தார். தம் மாமனர் திருநாட்டுக்கெழுந் தருளிய பின் தம்மனைவியுடன் திருநகருக் கெழுந்தருளியிருந் தவர். மணவாள மாமுனிகளின் தந்தையார்.

**திருவெஞ்சமாக்கூடல்** - கொங்கு நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. வெஞ் சன் என்னும் வேட அரசன் வழிபட்டபடியாலும் குடவ னறு என்னும் ஆற்ருேடு ஒரு காட்டாறு கூடுவதாலும் திரு வெஞ்சமாக்கூடல் என்று பெயர் பெற்றது. சிவபெரு மான் தம்மிடம் அன்புள்ள ஒரு கிழவியிடம் தம் பிள்ளைகளை ஈடுகாட்டிப் பொன் வாங்கிச் சுந்தரருக்குக் கொடுத்த தலம். இறைவன் பெயர் விகிர்தநாதே சுரர்; இறைவி பெயர் விகிர்த நாயகி.

**திருவெண்காட்டு நங்கை** - சிறுத் தொண்ட நாயனருடைய மனை வியார். சிவனடியார்களிடத் தில்பேரன்புடையவர். அடியவர் கட்கு உணவு படைப்பதில் தம் கணவரையும் விஞ்சிய ஆர்வங் கொண்டிருந்தார். தம்முடைய ஒரே மகனை அறுத்துக் கறி சமைத்துச் சிவபிரானுக்குப் படைத்தவர். இவருடைய அன் பின் திறத்தை உலகினர்க் குணர்த்தவே இறைவன் பிள்ளைக்கறியுண்பவராக நடித் தார். கணவருடையகருத்தறிந்து நடப்பதில்இவர் சிறந்து விளங் கினர்.

**திருவெண்ணெய் நல்லூர்** - நடு நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திரு வெண்ணெய் நல்லூர்ப் புகை வண்டி நிலையத்திலிருந்து நான்கு மைல் தொலைவில் உள்ளது. இவ்வூரில் உள்ள கோவிலுக்குத் திருவருட்டுறை என்று பெயர். இங்கு எழுந்தருளிய இறைவர் சுந்தரமூர்த்திகளைத் தடுத்தாட் கொண்டவர். மெய்கண்ட தேவர் என்னுங் காரணப் பெயரையுடைய சுவேதவனப் பெருமாளாகிய சந்தனுசாரியார் எழுந்தருளியிருந்ததும் இவ் வூரில்தான். சுந்தரர் திருமணத் திற்கு உறுதி செய்யப்பட்ட பெண்ணின் ஊராகிய புத்தூர் இவ்வூருக்கு அண்மையில் உள் ளது. அவ்வூரின் பெயர் அந்நாள் முதல் மணந்தவிர்ந்த புத்தூர் என்று வழங்குகிறது. இறைவர் சுந்தரரைத்தடுத்தாட்கொண்ட படியால் தடுத்தாட்கொண்ட நாதர் எனவும் திருவருட்டுறை

யில் இருத்தலால் அருட்டுறை நாதர் எனவுங் கூறப் பெறுகிருர். இறைவியின் பெயர் வேற்கண்ணியம்மை.

**திருவெண்பாக்கம்** - தொண்டை நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. சுந்தரர் திருவொற்றியூரில் சங்கிலியாருக்குச் செய்து கொடுத்த உறுதிமொழியிலிருந்து தவறிக் கண்பார்வையிழந்த நிலையில் இந்தத் தலத்தையடைந்தார். தேவாரமும் பாடினுர். தம் மாட்டுப் பேரன்புள்ள சங்கிலியினிடத்து வைத்த அன்பினுல் சுவாமி சுந்தரருக்குக் கண் பார்வையைக் கொடுக்க வில்லை. ஆனுல் வழியறிந்து ஊன்றிக் கொண்டு போவதற்காகத் தடியொன்று கொடுத்தார். மனம் வருந்திய சுந்தரர் "கோயிலில் இருக்கிறீரா?" என்று கேட்டார். சுவாமி "இருக்கிறேம் போம்" என்று கூறினுர். சுந்தரர் என்னைப் போகச் சொல்லுகிற நீர் இங்கு எவ்வளவு காலத்திற்கு இருக்கப்போகிறீர் என்று கூறிவிட்டு அவ்விடமிருந்து புறப்பட்டார். இதனுல் போலும் இப்பொழுது திருக்கோவில் பூண்டி நீர்த்தேக்கத்தில் மூழ்கிச் சுவாமியும் வேறிடத்திற்குப் போகும் படியாக ஆயிற்று. சுந்தரர் காஞ்சீபுரம் சேரும் வரையில் இறைவி மின்னல்போலத் தோன்றித்தோன்றி மறைந்தாளாம். இதனுல் இறைவிக்கு மின்னலொளியம்மை என்று பெயர் உண்டாகியதாம். இறைவன் சுந்தரருக்கு ஊன்றுகோல் கொடுத்தபடியால் ஊன்றீசுவரர் என்று பெயர் பெற்ருர். இவ்வூர் சென்னை அரக்கோணம் புகைவண்டிப் பாதையில் திருவள்ளூருக்கு வடக்கே உள்ளது.

**திருவேங்கடம்** - புரந்தரன் என்னும் அந்தணனுடைய மகனுகிய மாதவன் என்பவன் ஒழுக்கங் கெட்டவனுய் இழிகுலப் பெண்ணை மணந்து களவு மேற்கொண்டு வாழ்க்கையை நடத்தினுன். இழிகுலமாது இவனைத் தன்னிடமிருந்து விரட்டி விட்டாள். அதனுல் மனம் வருந்திய இவன் சீனிவாசப்பெருமாள் எழுந்தருளியிருக்கும் திருமலையை அடைந்து அதன் மீது ஏறினுன். இவனுடையபாப (கடம்)தேகம் சடசடவென்று நெருப்புப்போல் வேக, இவன் ஒளிவிடுகிற பசும் பொன்னைப் போல் தோன்றினமையால் திருமலைக்கு வேங்கடம் என்று பெயர் உண்டாகியது. இங்குள்ள பெருமாள் கருடாழ்வாருல் வைகுண்டத்திலிருந்து கொண்டுவந்து நிலைநிறுத்தப் பட்டவர்.

**திருவேங்கடயாதவராயன்** - இவன் திருப்பதி திருமலையில் உள்ள வேங்கடாசலபதிக்குத் திருப்பதி என்னுஞ் சிற்றூரைச் சர்வ மானியமாகக் கொடுத்தான். வேங்கடாசலபதியின் முதல் சுற்றின் தென்புறத்தில் அழகு பொருந்திய திருமண மண்டபம் ஒன்றைக் கட்டிவைத்தான்.

**திருவேங்கடன்** - நேரி என்னும் ஊரில் இருந்தவன். இவன் சிறந்த செல்வமுடையவனுக விளங்கியபடியால் பலருக்கும் பொருளுதவி செய்து கொண்டிருந்தான். இவனுடைய அண்ணனுகிய கண்ணுக்கினியானே இவ்வறன்மையுடையவனுய்த்தன் தம்பியும் பிறருக்குப் பொருள் வழங்காதபடி தடை செய்து கொண்டிருந்தான். இரட்டைப் புலவர்கட்குப்பொருள் கொடுத்தபொழுது கண்ணுக்கினியான் தடுத்தபடியால் அவனை இகழ்ந்தும் இவனைப் புகழ்ந்தும் அவ்

விரட்டையர்கள் பாடிச்சென்றனர்.

**திருவேடகம்** - பாண்டிய நாட்டில் திருவாலவாய் என்னும் மதுரைக்கு ஏழுநாழிகை வழித் தொலைவில் உள்ள தேவாரம் பெற்ற ஒரு சிவப்பதி. திருஞானசம்பந்தப்பிள்ளையார் சமணர்களோடு புனல்வாதம் நடத்தியபொழுது விட்ட ஏடு எதிரேறிச் சென்று தங்கிய இடமாகையால் ஏடகம்என்று பெயர் பெற்றது.

**திருவேள்விக்குடி** - இச்சிவப்பதி சோழவளநாட்டிலுள்ள தேவாரம் பெற்ற ஊர்களில் ஒன்று. ஓர் இளவரசனுக்கு மணஞ் செய்வதற்கு உறுதி செய்யப் பட்டிருந்தாள் ஒரு பெண். மணம் முடிவதற்கு முன்னரே அப்பெண்ணினுடைய தாய் தந்தையர் இறந்து விட்டனர். பெண்ணின் உறவினர் இளவரசனுக்குப் பெண்ணைக்கொடுக்க மறுத்தனர். இளவரசன் சிவ பெருமானிடம் முறையிட்டுக் கொண்டான். சிவபெருமான் ஒரு பூதத்தால் அப்பெண்ணைத் தூக்கிவரச் செய்து தாமே முன்னின்று திருமணவேள்வியை முடித்து வைத்தார். அதனால் இவ்வூருக்குத் திருவேள்விக்குடி என்று பெயர் உண்டாகியது. இறைவன் பெயர் கலியாண சுந்தரேசுவரர்; இறைவி பெயர் பரிமளசுகந்த நாயகி.

**திருவையாற்றுச்சைவன்** - முன்னளில் திருவையாற்றிற் சிவ பூசை செய்து கொண்டிருந்த ஆதிசைவர்கள் இருபத்து நால்வரில் ஒருவர் . காசியாத்திரை செய்யத் தொடங்கிப் புறப்பட்டுச் சென்றார். சென்றவர் நெடுங்காலமாகியுந் திரும்பி வரவில்லை. மற்றை இருபத்து மூவரும் காசியாத்திரை சென்றவருடைய காணியாட்சி உரிமைகளைக் கவர்ந்து கொள்ளத் தொடங்கினர். காசியாத்திரை சென்றவருக்கு மனைவி மக்களிருந்தனர். யாத்திரை சென்றவரின் மனைவி உரிமைகளைக் கவரத்தொடங்கியவர்கட்கு நியாயங் கூறினாள். எவ்வளவோ கூறியுங் காணியாட்சிகளைக் கவரத் தொடங்கியவர்கள் காரிகையின் மொழியைக் காதிற் போட்டுக் கொள்ளவில்லை. கவர்வதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தனர். யாத்திரை சென்றவரின் மனைவி ஐயாற்றப்பரிடம் முறையிட்டுக் கொண்டனள். சிவபிரான் காசியாத்திரை சென்ற அந்தணரைப் போல் காசிக் கங்கைக் காவடியோடு அங்கு வந்து சேர்ந்தார். எல்லோரிடமும் நலம் உசாவினார். "என்னுடைய உரிமைகளைக் கவரத் தொடங்கியவர் யாவர்?" என்று உசாவினார். ஆதி சைவர்கள், "நாங்கள் செய்த குற்றத்தைப் பொறுக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர்.

இவ்வாறிருக்கும் போது காசியாத்திரை சென்ற உண்மையான ஆதிசைவர் கங்கைக் காவடியோடு அங்கு வந்து சேர்ந்தார். கண்டவர்கள் அனைவருந் திகைப்படைந்தனர். சிவபிரானாகிய போலியாதி சைவர் அசல்ஆதி சைவரைப் பார்த்து "நீர் யார்?" என்று உசாவினார். இருவருக்கும் சொற்போர் மூண்டது. இருவரும் பூசைக்குரியவர் தாமே என்று தக்க ஆதாரங்காட்டினர். ஆதாரங்களில் போலி ஆதி சைவருடைய ஆதாரமே எடுபட்டது. இச்சமயத்தில் அவர் மறைந்து உருவிலி வாக்காக உண்மையைப் புலப் படுத்தினார். இதனைத் திரு

வாதவூரடிகள்தமதுதிருவாசகத்தில் "ஐயா றதனில் சைவனாகியும்" என்று குறிப்பிட்டுள்ளார்.

**திருவோணகாந்தன்தளி** - ஓணன் என்பவன் வாணாசுரனது படைத்தலைவன். இவனுங் காந்தன் என்பவனுங் காஞ்சி மாநகரில் சிவபெருமானைப் போற்றித் தவஞ் செய்து வீடு பேற்றையடைந்தார்கள். இவர்கள் இருவரும் போற்றி வழிபட்டதலம் திருவோண காந்தன் தளியாகும். இஃது ஏகாம்பர நாதர் கோயிலுக்கு அண்மையில் இருக்கிறது.

**திருவோமாம்புலியூர்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று, அங்குலன் என்னும் வேடனைப் புலி துரத்தியது. புலிக்கு அஞ்சிய வேடன் வில்வமரம் ஒன்றின் மீது ஏறினான். புலியோ மரத்தின் கீழே அமர்ந்து வேடன் செய்கையைப் பார்த்துக் கொண்டிருந்தது. இரவும் வந்து விட்டது. ஆயினும் புலி அகலவில்லை. இரவிலும்மரத்திலேயே அமர்ந்திருந்த வேடன் வில்வமரத்தின் இலைகளைப் பறித்துக் கீழே போட்டுப் பொழுது போக்கினால் உறக்கம் வராமலிருக்குமென்று எண்ணியவனாய் வில்வ இலைகளைப் பறித்துக் கீழே போட்டுக் கொண்டிருந்தான். அவன் போட்ட வில்வம் கீழேயிருந்த சிவலிங்கத்தின் மீது விழுந்தது.தற்செயலாக அன்று சிவராத்திரியாகவும் இருந்தது. ஆகவே வில்வத்தால் சிவலிங்கத்தைப் பூசித்த பலனை வேடனும் அதனைப் பார்த்துக் கொண்டிருந்த பலனைப் புலியும் அடைய நேரிட்டது. இதனால் வேடனுக்கும் புலிக்கும் நற்கதி உண்டாகியது. ஊரின் பெயரும் ஓமாம் புலியூர் என்று மாறியது.

**திரௌபதி** - பாஞ்சால நாட்டு மன்னனாகிய துருபதனுடைய வேள்வியிற் பிறந்தவள். ஆகையால் இவ்வாறு பெயருண்டாகியது. பாஞ்சாலி எனவும் வழங்கும். இவள் இப்பிறப்பிற்கு முன் பிறப்பில் நளாயனன் என்பவனுடைய மகளாகத் தோன்றிநளாயனி எனவும் இந்திரசேனை எனவும் பெயர் பெற்று மௌத்கல்யர் என்னும் முனிவரை மணந்து இன்பம் நுகர்ந்து கற்பரசியாகத் திகழ்ந்தாள். முனிவர் இவளுடைய கற்புடைமையை ஆராய வெண்ணித் தம்மைக் குறை நோய் உடையவராகக் காட்டினார். அவ்வாறிருந்தும் நளாயனி சிறிதும் வெறுப்படையாமல் முனிவருக்கு ஆகவேண்டிய பணிகளையெல்லாஞ் செய்திருந்தாள். இதனால் மகிழ்ச்சி யடைந்த முனிவர், "யாது வரம் வேண்டும்?" என்று உசாவினார். இவள் தனக்குக் காமம் நிரம்பவில்லையென்றும் அதனை முழுதும் நுகர அருள வேண்டும் என்றும் வேண்டினாள். முனிவர் ஐவகைக்கோலம் பூண்டு இவளோடு களித்திருக்கையில் இவளுடைய கணவராகிய முனிவர் வீடுபேற்றை யடைந்தார். இந்திரசேனை கணவனோடு உயிர் விட்டுக் காசிராசனுடைய மகளாகத் தோன்றினாள். சிவபெருமானை எண்ணித் தவஞ் செய்தாள். சிவபெருமான் வெளிப்பட்டு யாது மேன்மை வேண்டு மென்று உசாவினார். இவள், பதி, பதி, பதி, பதி, பதி, என்று ஐந்து முறை கூறினாள். சிவபெருமான் அவ்வாறே அருள் செய்து மறைந்தார். அதனால் திரௌபதனுடைய மகளாக வேள்வி

யில் தோன்றி ஐவருக்குமனைவி யானாள்.

**திலகர் (பாலகங்காதர)** - (1856-1920) இந்தியாவின் விடுதலைக்குப் போராடிய பெருந்தலைவர்களுள் ஒருவர். பம்பாய் மாகாணத்தில் இரத்தினகிரி என்னும் பட்டணத்தில் 23-7-1860 இல் பிறந்து, கல்லூரியில் பயின்று பி. ஏ. எல். எல். பி. பட்டங்கள் பெற்றவர். இவருடைய தந்தை இராமச்சந்திர திலகர் என்பவராவர். 1905இல் வங்காளப்பிரிவினையை எதிர்த்து ஆங்கிலப் பொருட்புறக்கணிப்புப் போராட்டத்தை நடத்திக் காங்கிரசுக்காரர்களிடையே தீவிர வாதியாக விளங்கினார். 1906 இல் கல்கத்தாவில் நடந்த காங்கிரசில் இவர் முயற்சியால் அந்நியப் பொருட்புறக்கணிப்புத் தீர்மானமும், சுதேசிய இயக்க ஆதரவுத்தீர்மானமும் நிறைவேறின. நாட்டின் பல இடங்களில் நடந்த வன்செயல்கட்குக் காரணம் திலகரின் பேச்சேஎன அரசாங்கம் எண்ணி 1908 ஜூன் 24இல் இவரைக் கைது செய்தது. சிறையில் "கீதாரகசியம்" என்ற நூல் எழுதினார். 16-6-1914 இல் விடுதலை அடைந்தார். 1916இல் இவரின் அறுபதாம் ஆண்டு நிறைவு நாள் நினைவாக மக்களால் இவருக்கு இலட்ச ரூபா பணமுடிப்புக் கொடுக்கப்பட்டதை இவர் தம் சொந்தச் செலவுக்குப் பயன் படுத்தாமல் பொதுப் பணிக்கு ஒப்படைத்தமை பெரிதும் பாராட்டற் பாலது. 1916இல் இலட்சுமணபுரியில் கூடிய காங்கிரசில் மிதவாதிகளும் தீவிரவாதிகளும் ஒன்று சேர்ந்து திலகரின் விருப்பப்படி சுயஆட்சித்தீர்மானத்தை நிறைவேற்றினர். திலகர் இங்கிலாந்துசென்றுசுயஆட்சிக்கொள்கையை விளக்கினார். பஞ்சாப் படுகொலை நடந்ததைக் கண்டு ஒத்துழையாமை இயக்கம் தொடங்க வேண்டும் என்று காந்தியடிகள் கூறியதை இவர் ஆமோதித்தாலும்' சட்டசபைகளைப் புறக்கணித்தல் கூடாது என்று இவர் கருதினார். 31-7-1920இல் இறந்தார். அதே நாளில் ஒத்துழையாமை இயக்கம் நாட்டில் தொடங்கியது.

**திலகவதியார்** - திருநாவுக்கரசருடை தமக்கையார். உறுதி செய்யப்பட்ட கணவர் திருமணத்திற்கு முன்னரே இறக்கத் தாம் வேறு மணஞ் செய்து கொள்ளத் துணியாது உயிர் விடத் துணிந்தவர். மருணீக்கியாராகிய தம்பியாருடைய விருப்பத்திற்கிணங்க உயிர் வாழ்ந்தவர். தவ வாழ்க்கையை மேற் கொண்டு கோயில் திருத்தொண்டு செய்தவர். சமண சமயம் புகுந்து தடுமாறிய தம்பியாருக்குத் திருநீறளித்துச் சைவராக்கியவர்.

**திலகவ்வை** - இவள் வீரசைவப் பற்றுள்ளவள். சிவபிரானிடத்தில் மிகுந்த அன்புள்ளவள். இவள் சிவன் கோயில் இல்லாத இடத்திலிருக்கும் தன் கணவனை விட்டு நீங்கினாள். கணவன் இவளைக் கொலை செய்யச் சென்றான். இவள் சிவன் கோயிலில் எழுந்தருளிய சிவபிரானிடம் போய்த் தன் கணவன் காண ஆண்வடிவமடைந்தாள்.

**திலதைப்பதி** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கில் உள்ளது. திங்கள் வழிபாடு செய்த ஊர். தசரதச்சக்கரவர்த்திக்கும் சடாயுவுக்கும்

இராமலட்சுமணர்கள் திலதர்ப்பணஞ் செய்த தலம். இதனால் திலதைப்பதி யென்று பெயர் பெற்றது. காசி சித்தோசிராசா என்பவரும் தர்ப்பணஞ் செய்த தாகச் சொல்லப்படுகிறது. அவருடைய உருவம் கோயிலில் இருக்கிறது. இங்குப் பிதிர்க் கடன் செய்வது சிறந்தது என்று கூறுவர். இறைவன் பெயர் முத்தீசுரர்; இறைவி பெயர் பொற்கொடியம்மை.

**திலீபன்**-இவன் கதிரவ குலத்தில் தோன்றிய அஞ்சுமான் என்னும் அரசனுடைய மகன். அறிவு, அருள், அஞ்சாமை, அறநெறிப்பண்பு முதலிய சீரிய நலன்களெல்லாம் இவனிடம் ஒன்றாகச் செறிந்திருந்தன. இவனுடைய மனைவியின் பெயர் சுதட்சிணை. இவன் அயோத்தியில் இருந்து அரசு செய்து கொண்டிருந்தான். ஒரு நாள் இமயமலைச் சாரலையடைந்து சுற்றித் திரிந்தான். அப்பொழுது தெய்வப்பசு ஒன்று அங்கே வந்தது. அதன்மீது அரிமா ஒன்று பாய்ந்து அதனை அடித்துக்கொன்று தின்னத் தொடங்கியது. உடனே இவன் இடையே புகுந்தான். தன்னுடைய வாளையெடுத்து அவ்வரிமாவை வெட்டத் துணிந்தான். உடனே அவ்வரிமா தன்னுடைய வாயைத் திறந்து, ''நான் பசியினால் இதனைத் தின்னத் தொடங்கினேன். நீ யேன் என்னைக் கொல்ல வருகிறாய்?'' என்று உசாவியது. இதனைக் கேட்ட இவன் இரக்கங் கொண்டான். ''என்னைக் கொன்று தின்று பசியாறு. இதனை விட்டுவிடு'' என்று சொன்னான். இவனுடைய மன நலத்தை ஆராய்ந்தறியும் பொருட்டுக் கும்போதரன் என்னும் சிவகணத்தலைவனே அவ்வாறு அரிமாவாய் வந்தானாகையால் இவனுடைய அருளுடைமையைப் புகழ்ந்து அப்பசுவை விட்டுவிட்டுச் சென்றான்.

**திலோத்தமை** - நான்முகனால் படைக்கப்பட்டவள். நான்முகனே மயல் கொண்டு இவளைத் துரத்தினான். இவள் அழகில் மயங்கிய நான்முகன் நான்கு பக்கமும் பார்த்தபடியால் நான்கு முகங்கள் உண்டாயின. ஒரு முறை இவள் சகத்ராநீகனை மோகித்தாள். அவன் உடன்படாதபடியினால் அவன் பதினான்கு ஆண்டுகள் மனைவியை நீங்கியிருக்குமாறு வசவுரை வழங்கினாள். நான்முகன் கட்டளைப்படி விசுவகர்மன் பல அழகிலிருந்தும் எடுத்து இவளைப் படைத்தான் என்றுங் கூறுவர். இவள் ஒரு காலத்தில் விந்தியமலைக்கு அண்மையிற் சென்றாள். சுந்தன் உபசுந்தன் என்னும் இரண்டு அசுரர்கள் இவளுடைய அழகைக் கண்டு மயங்கி இவளுடைய இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு ''எனக்குரியவள் எனக்குரியவள்'' என்று போர் செய்து மாண்டனர்.

**தில்லை** - திருத்தில்லை எனவழங்குஞ் சிவப்பதி. தில்லைமரங்கள் நிறைந்திருந்தபடியால் முன்னாளில் சிதம்பரத்திற்கு ஏற்பட்ட காரணப் பெயர். சிதம்பரம் என்பது கோயிலின் பெயர். தில்லை என்பது ஊரின் பெயர். இந்நாளில் கோயிலின் பெயரே ஊருக்கும் பெயராகி விட்டது. புலிக்கால் முனிவர் வழிபட்டுத் திருக்கூத்துக் கண்ட இடமாதலின் புலியூர் என்னும் பெயருந் தில்லைக் குண்டு.

**திவாகரமூர்த்தி** - இரண்டு முகம், நான்கு கைகள். இரண்டு கைகளில் வில்வம், இரண்டு கைகளில் இரண்டு தாமரைகள்,

மஞ்சட்பட்டாடை,முத்துமாலை ஆகியவைகளை உடையவராக இருக்கும் கதிரவர்.

**திவிட்டன்**-சுரமை நாட்டு மன்னனுகிய பயாபதியினுடைய மகன். அறிவு, ஆண்மை, வண்மை முதலிய நல்லியல்புகளெல்லாம் இவனிடம் ஒருங்கே பொருந்தியிருந்தன. திருமாலுடைய ஒரு கூருய்த் தோன்றியவன்.

**திவோதானன்** - ஒரு கற்பத்தில் உலகமழிந்தது. அக்காலத்தில் இரிபுவை நான்முகன் பார்த்து, "நீ உலகத்தை ஆளுக. உனக்குச் சேடன் மோகினியை மனைவியாக்குவான். தேவர்கள் வேண்டியவைகளைக் கொடுப்பார்கள். அதனுல் உனக்குத் திவோதானன் என்று பெயருண்டாகும்" என்று கூறினுன். அவ்வாறே திவோதானன் தேவர்களை ஒரு பொருட்படுத்தாமல் அரசாட்சியை நடத்தினுன். தேவர்கள் பொருமை கொண்டார்கள். இவனுடைய தவத்திற்குக் காரணமாகிய தீயைக் கைப்பற்றினுர்கள். அரசன் எல்லாவிடத்திலும் நிறைந்து சலியாதிருந்தான். சிவபிரான் இவனுடைய நிலையை மாற்றுமாறு யோகினிகள், பன்னிருகதிரவர்கள்,நான்முகன், சிவகணங்கள், கணபதி முதலியவர்களை ஏவிக் கலக்கினுர். அவர்களால் முடியாமையைக் கண்ட திருமால் பௌத்த சமயத்தைப் போதித்து மக்களை மயக்கியதைக் கண்ட அரசன் காசியில் சிவபிரானை அமைத்து வழிபட்டு வீடுபேற்றையடைந்தான். இவனுடைய மகன் சயமாஞ்சயன். தேவி அநங்க மோகினி.

**தின்னுகர்** - இவர் ஏறக்குறைய கி.பி. ஐ நூறில்காஞ்சிமாநகரில் அந்தணர் குலத்தில் பிறந்தார். கல்வி கற்றுச் சிறந்த அறிஞராகத் திகழ்ந்த இவர் பௌத்த சமயத்தை மேற்கொண்டார். தத்துவஆராய்ச்சியிலும்வல்லவராகிய இவர் ஆந்திரம் மகாராட்டிரம் முதலிய நாடுகளில் சில காலம் இருந்தார். இறுதியில் நாலந்தா பல்கலைக் கழகத்திற்குச் சென்றுர். இவர் பல நூல்களை இயற்றித் தம் புகழை யாண்டும் பரப்பினுர்.

**தீபாவலி (ளி)**- தீபஆவலிஎனப்பிரியும். இச்சொல்லைத் தமிழ்ப்படுத்தினுல் விளக்கு வரிசை என்று ஆகும். பலவகைச் சிற்றுண்டிகளைச் செய்து விளக்குகளை வரிசையாக வைத்து அவற்றின் முன்வைத்துப் புத்தாடை முதலியவைகளையும் வைத்துப் படைக்கும் விழா தீபாவலி எனப்படுகிறது-ளி-என்னும் எழுத்து அமைந்து தீபாவளி எனகிற்பினும் பொருள் ஒன்றேயாம். இப்பண்டிகை விற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கும் துணிமணிகள் விற்பனையாதற்பொருட்டு ஆரியர்களால் ஏற்படுத்தப் பெற்றது. சிலர் இப்பண்டிகையைக் கொண்டாடாமலும் விட்டு விடுகின்றனர்.

**தீர்க்கதுண்டன்** – இஃதொரு காகம. துருவாசரிட்ட பலியுணவைக் கவர்ந்து செல்லுகையில் வேறொரு காகம் அதனை மறித்தது. அதனுல்அந்த உணவு ஒரு சிவனடியாருடைய ஐயக் கடிஞையில் விழுந்தது. அஃது இரண்டாம் முறை கவர்ந்து செல்லுகையில் அதனை ஒரு வேடன் எய்தான். அதனுல் அக்காகம் உயிர் நீங்கிச் சிவகணமாகியது.

**தீவதிலகை** - மணிபல்லவத்தில் இருந்த புத்த பீடிகையை இந்திரன் கட்டளைப்படி பாது காத்துக்கொண்டிருந்த ஒரு

தெய்வமங்கை. மணிபல்லவத்தில் மணிமேகலையை மணிமேகலா தெய்வம் கொண்டு வந்து வைத்து விட்டுச் சென்ற பிறகு மயக்க நிலையிலிருந்த மணிமேகலை அந்நிலை நீங்கிப் புதிய இடமாக இருக்கின்றதே என்று எண்ணி வருந்துகையில், மணிமேகலையை முதலில் கண்டு உரையாடியவள். புண்ணியராசனுடைய முன்பிறப்புடல் மண்ணிற் புதைந்து கிடந்ததை அவனுக்குக் காட்டியவள்.

**தீனபந்து மித்திரர்** - (1827-1873) வங்காளி மொழியில் எழுதப்பட்ட "நீலதர்ப்பணம்" (நீலக் கண்ணாடி) என்னும் நாடகம் வங்காளத்தில் ஆங்கிலேயர் நடத்திய அவுரித் தொழிலின் கொடுமைகளைத் தொலைக்கப் பெருங்கிளர்ச்சியை மூட்டியது. இதன் ஆங்கில மொழிபெயர்ப்பை வெளியிட்ட லாங் (Rev. Lang) என்ற பாதிரியாரை அரசாங்கம் சிறையில் தள்ளியது. இந்த நாடகத்தை எழுதியவரே தீனபந்து. கிழக்கு வங்காளத்தில் சௌபேடியா கிராமத்தில் பிறந்து, கல்கத்தாவில் கல்வி பயின்று, 1855இல் பாட்னாவில் தபால் நிலையத் தலைவராகப் பதவியில்அமர்ந்து, பல இடங்களில் மாற்றல்களானபடியால் பல இடங்களில் உள்ள மக்களியற்கைகளை நேரில் கண்டறியும் அனுபவம் பெற்றார். இவருடைய வேலையைப் பாராட்டிய அரசாங்கம் இவருக்கு "ராவ் பகதூர்" என்ற பட்டம் வழங்கியது. இவர் கறுப்பு மனிதர் என்பதால் இவருக்குப் "போஸ்டுமாஸ்டர் ஜெனரல்" பதவி கிடைக்கவில்லை. நவீன தபஸ்வினி, பீயே பாக்லா புடோ, சதவரர், ஏகாதசீ, லீலாவதி, ஜாமாயி பாரிக், கமலேகாமினி, வீரதுணி முதலியவை இவரெழுதிய நூல்கள்.

**துச்சகன்** - இவன் சையமலையில் இருந்த ஒரு வேடன். அந்தணர் போல்கோலம்பூண்டுவழிப்பறி செய்து வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தான். திருத்தில்லையில் எழுந்தருளிய கூத்தப் பிரானை வழிபடும் பொருட்டுத் தன்னுடு விட்டுவந்த சேரன் பரிவாரத்திற் களவு செய்ய எண்ணி உடன் சென்றான். காவலாளர்கள் இவனைப்பிடித்துக் காவலோடு சுமைசுமக்கச் செய்தனர். திருத்தில்லையை அடைந்தஇவன்காய்ச்சல்நோய் கண்டு இறந்தான். சிவகணங்கள் இவனைச் சிவலோகத்திற்குக்கொண்டு சென்றன.

**துச்சயன்** - இவன் அநந்தனுடைய மகன். இவனுடைய மனைவி கற்புடையவள். இவன் ஒரு சமயம் யமுனையாற்றுக்குச் சென்றான். அவ்விடத்திலிருந்த ஊர்வசியைச் சேர்ந்துவிட்டு வீட்டிற்கு வந்தான். இதனை மனைவியறிந்தாள். கணவனைப் பார்த்து, "நீ பரத்தையைத் தழுவியபடியால் அத்தீவினை நீங்கக் கண்ணுவரிடம் போய் வேள்வி செய்து வருக" என்று கூறினாள். அவ்வாறே அரசன் இமயமலைப் பக்கமாகச் சென்றான்.அப்பொழுதுஒருகின்னரன் மாலையேந்தி எதிரே வந்தான். அவனோடு போரிட்டு அம்மாலையைப் பறித்துக்கொண்டு சென்றான். யமுனைக்கரையிற் செல்லும் போது முன்னைய எண்ணத்தால் ஊர்வசியை மனத்தில் எண்ணினான். மீண்டும் அவள் அவன்முன் தோன்றினாள். மாலையை அவளுக்கணிந்து அவளோடு கலந்தான். பிறகுஇமயமலையை அடைந்து கண்ணுவரைக் கண்டான். அவருடைய உடன்பாடு பெற்றுக் காசியை அடைந்து தீவினை நீங்கப் பெற்றான். பிறகுபட்டணத்தை

யடைந்து மனைவியோடு வாழ்ந் திருந்தான்.

**துச்சயன் (உ)** இவன் ஒரு மிலேச்சன். காமத்தால் பல பெண்களைத் தழுவிச் சிறையிலடைக்கப்பட்டான். பிறகு இறந்து பேயானான். அதன் பின் இருபத்தைந்து பிறவிகள் விலங்குகளாகப் பிறந்தான். பிறகுஒரு காட்டில்அரக்கனாகத் திரிந்தான். வாமதேவமுனிவர் என்பவரைவிழுங்கச்சென்றான். அவருடைய உடலில் இருந்த திருநீறு இவன் மீது பட்டது. அதனால் வீடுபேற்றையடைந் தான்.

**துச்சேதா** - இவன் மகதநாட்டு அந்தணன். பல நூல்களைக் கற்றான். கற்றவர்களைஇகழ்ந்து இறந்தான். பிரமராட்சசாகிக் காசிக்குப் போகும் வழியில் ஓர் இலவமரத்தில் இருந்து கொண்டு வழிச்செல்வோரை யழைத்துக் கொலை செய்து உண்டு திரிந்தான். ஒரு நாள் காசிக்குச் செல்லும் ஓர் அந்தணனை நன்மொழிகள் கூறி அழைத்தான். அந்தணன் காசியைக் கூறிக்கொண்டுவரக் கேட்டான். அதனால் நல்லறிவு தோன்றியது. அவ்வந்தணனோடு காசிக்குச்சென்று கங்கையாடி நற்கதிபெற்றான்.

**துடிக்கூத்து** - துடியைக்கொட்டிக் கொண்டு ஆடுகிற கூத்து. சூரன் முருகனுடையபோருக்கு ஆற்றாமல் வஞ்சனையால் மறைந்துசென்று கடல்நடுவில் மாமரமாக நிற்கிறான். முருகப் பெருமான் சூரனுடைய வஞ்சக உருவத்தை உணர்ந்துகொள்ளுகிறார். கடலும் கலங்கும் வண்ணம் கடலுக்குட்சென்று பாறைகளெல்லாந்தவிடுபொடி யாகுமாறு வேற்படையை ஏவி வெற்றி கொள்கிறார். தம்முடைய வெற்றிச்சிறப் புத்தோன்றக் கடலலைகளையே திரையாகக் கொண்டுகடலையே அரங்கமாக்கித் துடிகொட்டி யாடுகிறார். துடிகொட்டியாடு வதால் இதுதுடிக்கூத்தாகிறது.

**துட்டியந்தன்** - இவன் கவுரவ குலத்தில் தோன்றியவன். தந்தையினுடைய பெயர் இனிகன். சிறந்த அழகு பொருந்திய இவன் ஒரு நாள் வேட்டைக்குச் சென்றான். கண்ணுவருடைய தவச்சாலை யில் சகுந்தலையைக் கண்டான். காந்தருவமணஞ் செய்துகலந்து மகிழ்ந்தான். இவர்கட்குப் பரதன் என்னும் பெயருடைய மகன் ஒருவன் தோன்றினான். சகுந்தலையை விரைவில் நாட்டுக்கு அழைத்துக்கொள் வதாகக் கூறிச் சென்றான். ஆனால் சகுந்தலைக்குநேர்ந்தஒரு வசவுரைப்பலனால்சகுந்தலையை மறந்தான். பிறகு காலப் போக்கில்அவளுடையநினைவை யடைந்தான். இவனுடையவர லாற்றைக் காளிதாசர் வட மொழியில் சாகுந்தலம் என் னும் நூலாகப் பாடியுள்ளார்.

**துட்பண்ணியன்** - இவன் பாடலி புரத்தில் இருந்த பசுமான் என்னும் வணிகனுடைய மகன். பசுமான் நல்லற வியல்புக ளெல்லாம் நன்கமையப் பெற்ற வனாயினும் அவன் மகனாகிய இத்துட்பண்ணியன் மிகப் பொல்லாதவனாக இருந்தான். சிறுவர்களை அழைத்துக் கொண்டுபோய் நீர்நிலைகளில் தள்ளிக் கொலை செய்துகொண் டிருந்தான். இவனுடைய கொலைத்தொழில் ஊரில் எவருக்குந் தெரியாதாகையால் தங்கள் மக்களை இழந்தவர்கள் மனம் வருந்தித் தவித்துக் கொண்டிருந்தனர். ஒரு நாள் இவன் ஓர் அந்தணச் சிறுவனை

நீர்நிலையில் தள்ளிக்கொல்ல முயன்றபோது பிடிபட்டான். மன்னன் இவனுடைய தந்தையாகிய பசுமானை யழைத்து "ஊர்ச்சிறுவர்களை யெல்லாங் கொலை செய்தவன் உன் மகனாகிய இவன்தான் இவனை யாது செய்யலாம்?" என்று உசாவினான். தந்தையோ சிறிதுங் கண்ணோடாது நீதிமுறை தவறாமல் இவனைத் தண்டிக்க வேண்டுமென்றான். அரசனோ இவனைக் கொல்லாது நாடுகடத்தினான். இவன்சென்ற நாட்டிலும் தீச்செயல்களைச் செய்து இழிந்தொழிந்தான். இவனுடையகாலம்1200ஆண்டுகட்கு முன்னர் என்ப.

**துணையிருந்தபிள்ளையார்** - நன்னிலத்திற்கு அண்மையில் உள்ள திருப்பனையூர் என்னுஞ் சிவப்பதியில் எழுந்தருளிய ஆனைமுகக்கடவுளுக்கு இப்பெயர் வழங்கப் பெறுகிறது. இப்பிள்ளையார்கரிகாற்சோழனுக்கு ஒரு காரியத்தில் துணை செய்தபடியால் இவ்வாறு பெயர் பெற்றனர்.

**துணையிளங்கிள்ளி** - சோழ மன்னர்களில் ஒருவன். காஞ்சிபுரத்திலிருந்துஅரசுசெய்தவன். தொடுகழற்கிள்ளி என்பவனுடைய இளவல். நல்லொழுக்கமும் அருளமைந்த உள்ளமும் உடையவன். இவன் புத்தருக்கு ஒரு கோயில் கட்டினான். இவன் காலத்தில் மழைவளங் குறைந்தது. அதனால் உணவு நலந்தொலைந்தது. மக்கள் பசியால் வாடினர். அக்காலத்தில் இவன் தன்னிடம் வந்தவர்கள் அனைவருக்குந் தக்கவாறு உதவி செய்தான். இவனுடைய பண்புடைமையைப் பலரும்பாராட்டினர்.

**துண்டிவிநாயகர்** - துராசாரன் என்னும் அசுரனைக் கொல்லும் பொருட்டு உமையவள் ஐந்து திருமுகங்களும் பத்துத் திருக்கைகளும் உடையவளாக இருந்தாள். அம்முகங்களில் இருந்து ஐந்து முகங்களும் பத்துக்கைகளும்உடையவிநாயகர் தோன்றித் துராசாரனைக் கொன்றார். இவர் வக்கிரதுண்டர் எனவுங் கூறப்பெறுவார்.

**துத்தமன்** - இவன் விசுவாவசு என்னும் கந்தருவ மன்னன் ஒருவனுடைய மகன். அமரபல்லவம் என்னும் நகரில் இருந்து அரசுசெய்துகொண்டிருந்தான். இவனிடம் அழகுஞ் செல்வமும் அமைந்திருந்தன. சயமதி, விசித்திரலீலை, அநங்கமாலை முதலிய ஆறு மனைவியர்களை மணந்துவாழ்க்கையைநடத்திக் கொண்டிருந்தான். ஒரு நாள் மனைவியரோடு ஒருதடாகத்தில் ஆடையின்றி நீர்விளையாடிக் கொண்டிருந்தான். அவ்விடத்திற்கு வசிட்டர் வந்தார். பெண்களனைவரும் விரைந்து ஆடைகளை யணிந்து கொண்டனர். துத்தமன் மட்டும் ஆடையை அணிந்து கொள்ளாமல் நிர்வாணமாகவே நின்று வசிட்டரை அவமதித்தான். அவர் இவனை அரக்கனாகுமாறு சாபமிட்டுச் சென்றார்.

**துந்துபி** – (1) இவனோர் அரக்கன். இவன் ஒலிசெய்வானாயின் அவ்வொலி துந்துபியென்னும் பெரிய ஒலிக்கருவியின் ஒலியைப்போலிருக்கும். அதனால் இவனுக்குத் துந்துபியென்று காரணப்பெயர் உண்டாகியது. இவன் தன்னுடைய கால்களை நிலத்தில் வைத்து நடந்தாலும், கைகளைக் கீழே மோதினாலும் மண்துகளெழுந்து கதிரவனை மறையச் செய்யும். இவன் ஆனைமுகக் கடவுளைக் கொலை செய்து விடவேண்டும் என்று எண்ணினான். ஒரு சிவபூதமாக

வடிவமெடுத்து ஆல்கால நஞ்சைப்போன்ற சில கொடிய நச்சுக் கனிகளைப் பறித்துக் கொண்டு உமாதேவியின் மாளிகைக்கு வந்தான். ஆனை முகக்கடவுளாகிய குழந்தையைக்கையிலெடுத்துக்கொண்டு அன்புடன் கொஞ்சுபவனைப் போல நடித்தான். தன்னுடைய கையிலிருந்த கனிகளைக் கொடுத்து உண்ணுமாறு வேண்டினன். ஆனைமுகக்கடவுள் அவ்வரக்கனுடைய வஞ்சகத்தைத் தெரிந்துகொண்டார். அவனுடைய தலைமயிரைக் கையிற்பிடித்துக் கொண்டு பலவாறு அடித்து வருத்தினர். அவன்அலறினன். அவனுடைய தலையைத் தம்முடைய கையால் திருகியெடுத்து அவனைக் கொன்றார்.

**துந்துபி - (2)** இவன் மாயாதேவியினுடையஇரண்டாவதுமகன். மதங்கமுனிவர் வாசஞ் செய்த இருடியபூக மலையில் வாலி இவனைக்கொன்று உதிரத்தால் அம்மலையை அசுத்தப்படுத்தினன். மதங்கமுனிவர் வெகுண்டார். அம்மலையில் வாலி வந்தால் இறந்தொழியுமாறு வசவுரை வழங்கினர். வாலி வராத இடத்தைத் தேடிய சுக்கிரீவனுக்கு இம்மலை இருப்பிடமாகியது. இராமனைக் காணும் வரைசுக்கிரீவனும் அவனுடைய நண்பர்களும் இம்மலையில்தங்கி இருந்தனர்.

**துமிரன் -** இவன் இராமர் காலத்தில் வாழ்ந்திருந்த ஓர் அசுர வீரன். நருமதையாற்றுக்கு வடபாலிருந்த பெரிய நிலப்பகுதியை இவன் தனக்கு உரிமையாகக்கொண்டிருந்தான். கருமையானஉருவமும்நெடுமையான வடிவமும் உடையவன். இவனுடைய செயல்கள் யாவும் கொடுமை யுடையனவாகவே இருக்கும். மிகுந்த ஆற்றலுடையவனுகையால்பலவீரர்களோடு போர்புரிந்து அவர்களையெல்லாம் வென்றிருந்தான். இவனிடம்அன்பு,அறிவு, அருள் என்பன ஒரு சிறிதும் இல்லை. எப்பொழுதுங்கொடிய செயல்களையேசெய்துகொண்டு திரிவான். இவனுடைய ஆட்சியிலிருந்த நாட்டுக்குட்புக எவருந் துணிய மாட்டார்கள். அங்கதன் முதலிய வானர வீரர்கள் சீதையைத் தேடிக்கொண்டு தெற்கு நோக்கி வந்தார்கள். இவனுடைய ஊருக்குப் பக்கத்திலிருந்த ஒரு நல்லநீர்நிலையைக் கண்டார்கள். அப்பொழுது பொழுது போய்விட்டது. அந்த இடத்தில் இராப்பொழுதைக் கழிக்கலாம் என்று எண்ணிய வானர வீரர்கள் நீர்நிலையில் நீராடிவிட்டு உணவை முடித்துக் கொண்டு அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். நள்ளிரவில் துமிரன் அங்கு வந்தான். நம்மைக் கேளாமல் இவர்கள் இங்கே வந்து தங்கியிருக்கிறார்களே இவர்கட்கு இவ்வளவு துணிச்சலா என்று சினங்கொண்டான். எவரையும் எழுப்பி ஏதுங் கேளாமல் அங்கதனுடைய மார்பில் ஓங்கி அடித்தான். உறங்கிக் கொண்டிருந்த அவன் திடுக்கிட்டெழுந்தான். அங்கதன் துமிரனிலும் அடல் மிகுந்தவன். உறங்கிக் கொண்டிருந்த நம்மை இப்படித் தாக்கினனே என்று உள்ளங் கொதித்தான். இராவணனே என்று ஐயங்கொண்டான். இருவருக்கும் போர் மூண்டது. அங்கதன் அடித்த அடிகளைத் தாங்க முடியாமல் மாண்டொழிந்தான் துமிரன்.

**துராசதன் -** இவன் பிரமசுரன் என்பவனுடைய மகன். தவம் புரிந்து எல்லாக் காரியங்களும் வெற்றிபெற வரம் பெற்றான்.

நான்முகன், திருமால் முதலியோர்களுடைய பதிகளை வென்று, ஆங்காங்கு அசுரர்களை யேற்படுத்திக் கொடுங்கோலரசு செய்தான். அமைச்சர்கள் இவனைப் பார்த்துத், "தேவர்கள் உனக்கு அஞ்சிக் கரியை அடைந்தனர்" என்று கூறினர். இவன் தன் படைகளோடு காசிக்குச் சென்றான். தேவர்கள் தேவியை வேண்டத் தேவி வக்கிரதுண்டவிநாயகரை உண்டாக்கி இவனைக் கொன்றனள்.

**துரியோதனன்** - திருதராட்டினுக்கும் காந்தாரிக்கும் பிறந்த நூற்றுவரில் முதல்வன். அத்தினபுரத்துக்கு அரசனாக இருந்தவன். இவன் கலியினுடைய கூறாக உலகில் தோன்றியவன் என்பர். முன் பிறப்பில் ஓர் அரக்கனாக இருந்ததாகவுங் கூறுவர். பாண்டவர்கள் தன்னுடைய சிற்றப்பன் மக்களாக இருந்தும் இவன் அவர்களிடத்தில் பெரும் பகை பாராட்டினான். வீமனுடைய உடலாற்றலைக் கண்டு உள்ளம் எரிந்தான். அவனை எவ்வாறாவது ஒழித்துவிட எவ்வளவோ முயன்றான். ஆனால் முடியவில்லை. மாமனாகிய சகுனியைத் துணைகொண்டு சூதாடிப் பாண்டவர்களுடையநாட்டைக் கவர்ந்தான். அவர்களுக்குப் பல அல்லல்களைச் செய்தான். வீடுமன் முதலிய பெரியோர்களாலும் இவனைத் திருத்தி நல் வழிக்குக் கொண்டுவர முடியவில்லை. பாரதப் போரில் வீமன் இவனையும் இவனுடன் பிறந்தவர்களையும் கொன்றொழித்தான்.

**துருபதன்** - பாஞ்சால நாட்டு மன்னன் பிரசதனுடைய மகன். இவனுக்கு அறிவிருந்ததாயினும் நல்லியல்பு இல்லை. இவன் சிறுவனாக இருக்கும்போது துரோணரோடு நெருங்கிய நட்புக் கொண்டிருந்தான். இருவரும் அங்கிவேசர் என்னும் முனிவரிடத்திற் படைக்கலப் பயிற்சி பெற்றனர். துருபதனுக்குத் துரோணர் பலவகையினும் உதவியாயிருந்தார். அவருடைய உதவிக்கு வியந்த இவன் துரோணரைப் பார்த்து, "நான் அரசனானால் என்னுடைய நாட்டில் பாதியை உமக்குத் தருகிறேன்" என்றுசொன்னான். பிற்காலத்தில் வறுமையால் வாடிய துரோணர் கற்றாவொன்று வேண்டி இவனிடஞ் சென்றபோது இவன், "உம்மை யான் அறியேன் போம் போம்" என்று கடுத்து விரட்டினான். சினங்கொண்ட துரோணர் இவனுடைய செருக்கை அடக்கவேண்டுமென்று முடிவு செய்தார். அருச்சுனனுக்குப் படைக்கலப் பயிற்சியை நன்கு அளித்து அவனைக் கொண்டு இவனைத் தோற்கடித்தார். இதனால் இழிவடைந்த இவன் திட்டத் துய்மனையும் திரௌபதியையும் வேள்வியிற் பெற்றான்.

**துருமன்** - பாண்டவர் காலத்தில் வாதுளம் என்னும் நகரத்தில் இருந்து அரசு புரிந்தவன். சிசுபாலனுக்கு நெருங்கிய நண்பன். குறுநில மன்னனாக விளங்கியிருந்த இவன் தீமையான காரியங்கள் பலவற்றைச் செய்துகொண்டு திரிந்தான். அந்நாளில் பாண்டவர்கள் குதிரை வேள்வி செய்தார்கள். இவன் சிசுபாலனிடஞ் சென்று "பாண்டவர்களின்வேள்விக்குக் கண்ணன் செல்கிறான். பாண்டவர்கள் கண்ணனிடம் சிறந்த மதிப்பு வைத்திருக்கிறார்கள். வேள்விமுடிவில் முதல்சிறப்புக் கண்ணனுக்குத்தான் செய்வார்கள். நாம் உடனே அவ்வேள்விக்குச் சென்று கண்ணனுக்குச் செய்யுஞ் சிறப்பைத் தடுக்க

வேண்டும்'' என்று கோள்உரை கள் பல கூறிச் சிசுபாலனைக் கலைத்து விட்டான். சிசுபால னும் உடனே புறப்பட்டு வேள்விக்குச் சென்று வகை தெரியாமல் மாட்டிக் கொண்டு இறந் தொழிந்தான்.

**துருவன்** - உத்தானபாதன் என் னும் அரசனுக்குச் சுநீதி என் னும் மனைவியிடந் தோன்றிய வன். இவன் தந்தையின் மடியிலேற முயன்றபோது மாற்றாந்தாய்கடிந்துரைத்ததைக் கேட்டு வெறுப்படைந்து, தாயிடம் போய் நடந்ததைக் கூறினன். அவள் தவமுடைய வர்கட்கே எல்லாச் சிறப்புக் களும்உண்டாகின்றனஎன்றாள். இவன் முனிவர்களிடம் போய் அருளுரைபெற்றுத் தவஞ்செய் தான். தவஞ் செய்கையில் பேயொன்று தோன்றி அச் சுறுத்தியது. இவன் அஞ்சாது பெருந்தவஞ்செய்து துருவபதம் என்னுஞ் சிறந்த பதத்தைப் பெற்றான். இப்பதம் ஏழு முனிவர்களின் மண்டலத்திற்கு மேல் பதின்மூன்று லட்சம் யோசனை தொலைவில் இருக் கிறது. இவன் தவநிலையில் இருந்து நீங்கித் தாய்தந்தை யரிடஞ் சென்றான். இருபத் தாறாயிரம் ஆண்டுகள் அரசு புரிந்தான். உத்தமன் என்னும் உடன்பிறந்தானைக் கொன்ற இயக்கர்களோடு போரிட்டு வென்றான். இவனுடைய மனைவியரின் பெயர் பிரமி இளை. கல்பன், வற்சரன் என் பவர்கள் இவனுக்கு மக்களாகத் தோன்றினர். வடக்குத்திக்கை யுணர்வதற்கு இரவில் துருவ நட்சத்திரமே ஆதாரமாகவிருக் கிறது.

**துருவாசர்** - இவர் அத்திரிமுனி வருக்கு அநசூயையிடந் தோன்றினர். தம்தந்தையிடமே அருளுரைபெற்றுப்பல்லாண்டு கள் தவம்புரிந்தார். சிவபிரான் காட்சி தந்து, ''யாது வரம் வேண்டு'' மென்று கேட்டார் இவர் வேறு ஒன்றும் வேண்டா மல் ''யான்எவருக்கேனும் சாப மிட்டால் எனது தவங் குறை யக்கூடாது அதிகமாக வேண் டும்'' என்று வரங்கேட்டார். இறைவனும் அவ்வாறே கொடுத்து மறைந்தார். அது முதல் இவர் எவருக்கேனும் சாபங்கொடுத்தால்இவருடைய தவம் வளர்வதாயிற்று. இவருக்குச் சினம். அடிக்கடி வரும் அதிலும் முன் சினம் அதிகம். சிறிய குற்றங்களுக் குக்கூடச் சாபமிடத்தொடங்கி விடுவார். பிறருக்குச் சாபங் கொடுத்தால் தவம் அதிகமாகப் பெருகுமாறு வரம் பெற்றவர் எப்படிச் சாபங்கொடுக்காம லிருக்க முடியும்? ஆகவே இவரைக்காண்பவர்கள் எங்கே சாபங்கொடுத்து விடுகிறரோ என்று மிகுந்தகலக்கமடைவார் கள். இவர் திருக்களர்என்னுஞ் சிவப்பதியில் நெடுங்காலந் தவஞ்செய்துகொண்டிருந்தார். அங்கு இறைவர் தமது திருக் கூத்தை இவருக்கும் பிறமுனி வர்கட்கும் காட்டியருளினர். நாரதரைப் போல் இவரும் அடிக்கடி பலவிடங்கட்குஞ் செல்வதை மேற்கொண்டிருந் தார். இவர் துரியோதன னிடத்திற்குச் சென்றபோது அவன்இவருக்கு நல்லவிருந்திட் டான். காட்டிலிருக்கும் பாண்ட வர்களிடமும் போய் இவ்வாறு விருந்துண்டு வரவேண்டு மென்றுவேண்டினன். துரியோ தனனுடைய தீயநோக்கம் பாண்டவர்களால் விருந்திட முடியாது ஆகவே இவர் அவர் களுக்குச் சாபமிட்டுத் தொலைத்து விடுவார் என்பது. ஆனல் துரியோதனனுடைய

தீயநோக்கம் பலிக்காமல் கண்ணன் காத்தருளினார்.

இவர் துவாரகைக்குச்சென்ற போது கோபாலர்கள் குறும்புத் தனத்தில் இறங்கினார்கள். தங்களில் ஒருவனுக்குக் கர்ப்பிணிக் கோலஞ்செய்து துருவாசர் இருந்த இடத்திற்குஅழைத்துக் கொண்டு சென்றார்கள். துருவாசரைப்பார்த்து, "இப்பெண் சூல் கொண்டிருக்கிறாள். இவள் வயிற்றில் இருப்பது ஆணோ பெண்ணோ?" என்று கேட்டார்கள். துருவாசர் உண்மையை உணர்ந்து கொண்டார். அவர்களைப்பார்த்து, "உங்கள் குலத்தை நாசஞ் செய்ய ஓர் இருப்புலக்கை பிறக்கும்" என்று கூறினார். பொய்க்கர்ப்பம் மெய்க்கர்ப்பமாகி ஓர் இருப்புலக்கை தோன்றிற்று. செய்தியை உணர்ந்த கண்ணபிரான் அவ்விருப்புலக்கையைத் தூளாக அராவிக் கடலில் எறியச்செய்தார். அத்தூள்கள் சம்பங்கோரையாகிவளர்ந்தன. பின்னாளில் யாதவர்கள் அக்கோரையைப்பிடுங்கி ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு மாண்டார்கள்.

தேவதத்தன்என்பவனைநாரையாகுமாறு சபித்தார். இராமர் காலமுனி என்பவரோடு தனிமையில் உரையாடிக்கொண்டிருக்கையில் இவர் அவரிடஞ் சென்று "யான் மிகுந்த பசியோடிருக்கிறேன் உணவிட வேண்டு" மென்று கேட்டார்.

அம்பரீடன் என்னும் அரசனிடம் இவர் சென்று வாலாட்டிய பொழுது அவன் இவருடைய வாலைஒட்ட அறுத்துவிட்டான்.

அசமுகி என்பவள் வலுக்கட்டாயமாக இவரைத் தழுவினாள். அப்பொழுது வாதாபியும் வில்வலனும் பிறந்தார்கள். அவர்கள்இவரைப்பார்த்து, "நீ இதுவரையில் செய்த தவத்தை எங்களுக்குக் கொடு" என்று கேட்டார்கள். இவர்மறுத்தார். அவர்கள் சினங்கொண்டு இவரைக் கொல்லவந்தார்கள். இவர் "நீங்கள் அகத்தியரால் இறந்தொழிக" என்று சாபங் கொடுத்தார். ஒருநாள் இவர் தேவலோகஞ் சென்றார். தம் பூசா வழிபாட்டு மலர் ஒன்றை இந்திரனிடங் கொடுத்தார். பவனிவந்துகொண்டிருந்த இந்திரன் அம்மலரை வாங்கி யானையின் மத்தகத்தில் வைத்தான். யானை அம்மலரை எடுத்துக் காலுக்குக் கீழே போட்டு மிதித்தது. இதனைக்கண்ட துருவாசர் இந்திரனுக்கும் வெள்ளை யானைக்குஞ்சாபங்கொடுத்தார். குந்தி இளம் பருவத்தில் இவருடைய பணிவிடையை மகிழ்ச்சியோடு செய்தமைக்கு மகிழ்ந்து மகப்பேற்றிற்குரிய மறைகள் சிலவற்றை உரைத்தருளினார். குந்தி அம்மறையின் உண்மையை ஆராய்ந்து பார்க்கத் தொடங்கிய போதுதான் கன்னன் பிறந்தான்.

இவர் ஒருநாள் துவாரகை சென்றார்.கண்ணனையும்உருக்குமணியையும் பலவாறு தொல்லைப்படுத்தித் தேர்வுபார்த்தார்.

திரிபுரமெரித்த சிவபிரானின் சினத்தீகுழந்தையுருக்கொண்டு நின்றது. தேவர்கள் சிவபிரானைப் பார்த்து, "இக்குழந்தை யார்?" என்று உசாவினார்கள். சிவபிரான்"இவன் துர்வாசன் இவனை அநசூயை பொருட்டு அருளினோம் அவளிடம் வளர்ந்து முனிவனாவான்" என்று கூறியருளினார். அதனால் தான் துருவாசர் சினமிகுந்தவரானார்.

**துரைச்சிங்கம்** - கட்டபொம்முவின் வழிமுறையில் பாஞ்சாலன் குறிச்சியை இருபத்து மூன்றா

வதுபட்டமாக அரசாண்டான். உடல் வலியிலும் படைக்கலப் பயிற்சியிலும் குதிரையேற்றத் திலுஞ் சிறந்து விளங்கிஞன். இவன் ஒழுங்கான முறையில் தன்னுடைய குடிகளைப் பேணி ஞன். இவன் காலமல்லாத காலத்தில் காலனூர்புகுந்தான்.

**துரைமல்லு** - கட்டபொம்மு வழி முறையில் இராசபாண்டியன் என்பவனுடைய மகனுகத் தோன்றிப் பத்தாண்டுகள் பாஞ் சாலன்குறிச்சியை ஆட்சிபுரிந் தான். இவனுக்குப் பொம்மு துரையென்னும் பெயருடைய தம்பியொருவன் இருந்தான்.

**துரைராசபாண்டியன்**-பாஞ்சாலன் குறிச்சிக் கட்டபொம்முவின் வழிமுறையில் 25 ஆவதுமன் னஞக ஆட்சிபுரிந்தவன். தமிழ் தெலுங்கு வடமொழி என்னும் மும்மொழிகளினும் இவன் வல்லவனுக விளங்கிஞன். இசைப்பயிற்சியினும் வல்ல வன். மிக இனிமையாகப்பாடு வான். எட்டாண்டுகள் அர சாட்சி செய்தபின் இவன்குடல் நோயால் இறந்தான்.

**துரைராசபொம்மு** - பாஞ்சாலன் குறிச்சிக் கட்டபொம்மு வழி முறையில் முப்பத்திரண்டாவ தாசப் பட்டத்தையடைந்தவன். இவன் வேட்டையாடுவதில் விருப்பம்உடையவன்.அடிக்கடி வல்லநாட்டுமலைக்குச் சென்று வேட்டையாடிஞன். நாட்டைப் பாதுகாப்பதில் நன்கு கருத்துச் செலுத்தாத படியால் நாடுசீர் கெட்டது. இவன் ஆறுஆண்டு களே ஆட்சி புரிந்தான்.

**துரைராசன்** - கட்டபொம்முவினு டைய எட்டாவது வழிமுறை யினன். இவன் இருபத்தைந் தாண்டுகள் பாஞ்சாலன்குறிச்சி யில் அரசாட்சி செய்திருந்தான். இவனுடைய மகன்பெயர் நல்ல பொம்மு.

**துரோணர்** - துரோண கும்பத்தி லிருந்து தோன்றியவர். பரத்து வாச முனிவருடைய மைந்தர். கிருபாச்சாரியோடு கூடப்பிறந் தவளாகிய கிருபி என்பவளை மணந்தவர். அசுவத்தாமனுக் குத்தந்தை. எல்லா நூல்களை யும் தம்முடைய தந்தையிடங் கற்றுணர்ந்து வில்வித்தை முதலிய படைக் கலத்தொழிலை யும் பரசுராமரிடம் ஏழுநாட் களில் கற்றுணர்ந்தவர். கௌர வர்கட்கும் பாண்டவர்கட்கும் வில் வித்தைகற்பித்த ஆசிரியர் இவரே.

**துர்க்கை** - துர்க்காசுரன் என்பவன் மிகக் கொடியவன். இவன் மூவுலகங்களையும் அலைத்துத் தன்புறத்திக் கொண்டிருந் தான். இவனுடைய தொல்லை யைப் பொறுக்க முடியாத தேவர்கள் சிவபிரானிடம் முறையிட்டார்கள். சிவபிரான் உமாதேவியைப் பார்த்தார். உமாதேவிதானே அவனை ஒழிப் பதாகக்கூறிஞள். காளராத்திரி என்னும் பாங்கியை ஏவிஞள். காளராத்திரி துர்க்கனிடஞ் சென்று அவனைக்கண்டு அஞ்சி மீண்டாள். தேவி தானே போர்க்குச் சென்று துர்க்க னுடைய படைகளையெல்லாம் கொன்றொழித்தாள். தூர்க்கன் கொண்டயானைவடிவம் எருமை வடிவம் முதலியவைகளையும் அழித்தொழித்தாள். இறுதி யில் துர்க்கன் உண்மையான வடிவத்தோடு வந்தான். தேவி அவனைக்கொன்று தேவர்களு டைய துன்பங்களையெல்லாம் போக்கிஞள். இதனுல் தேவிக் குத்துர்க்கை என்று ஒரு பெயர் உண்டாகியது. காளி, துர்க்கை முதலியன உமாதேவியின் மாற்று வடிவங்களே.

**துலாநாயனுர் கோயில்** - திருவா ரூரில் உள்ள பரவையுண்மண் டளி என்னுந் திருக்கோயில்.

**துலாதாரன்** - இவன் காசியில் இருந்த ஒரு வணிகன். இவன் இல்லறத்திலிருந்துந் தத்துவ ஞானங் கைவரப் பெற்றிருந்தான். சாசிலி என்னும் பெயருடைய முனிவனுக்கு இவன் பிரம கீதையைப் போதித்து மெய்யறிவை உண்டாக்கினுன்.

**துலுக்கநாச்சியார்** டில்லிக்கரசனுக இருந்தமுகமதியமன்னன்பிரதாபருத்திரனை வென்று தொண்டைமண்டலம், சோழமண்டலம் முதலியவைகளையுங் கைப்பற்றித் திருவரங்கத்தில் நுழைந்தான். திருவரங்கங் கோயிலைக் கொள்ளையிட்டான். திருவிழா உருவத்தையுங் கைப்பற்றிக்கொண்டு டில்லிக்குச் சென்முன். மற்றைச்சாமான்களோடு இத்திருவிழா உருவத்தையும் போட்டு வைத்தான். அரங்கநாதரின் சிலையழகைக் கண்ட மன்னன் மகள் அச்சிலையைத் தனக்கு விளையாட்டுப் பொருளாகத் தரவேண்டுமென்று தன் தந்தையிடங் கேட்டு வாங்கிக் கொண்டு போய்த் தன்னுடைய படுக்கையறையில் வைத்துக்கொண்டு அதன்மீது அன்பு செலுத்திக் கொண்டிருந்தாள். திருவரங்கங்கோயிலார் பெருமாள் திருவுருவத்தை எவ்வகையேனும் மீட்டுக்கொண்டு வரவேண்டுமென்று எண்ணி டில்லிக்குப் புறப்பட்டுச் சென்றார்கள். முகமதியமன்னனைக் கண்டு பலவாறு வேண்டிப் பெருமாள் உருவத்தைத் தரவேண்டுமென்று கேட்டார்கள். முகமதியமன்னனும் அதனைத்திருப்பிக்கொடுத்து விடுமாறு கட்டளையிட்டான். கோயிலார் அதனைப்பெற்றுக்கொண்டு திரும்பினார்கள். அரசன்மகள் பெருமாள் உருவத்தைக்காணுமல் வருந்தினுள். அதன்மீது கொண்ட பற்றினுல் அவளுடைய உயிருக்கே முடிவேற்படும் போல் தோன்றியது. செய்தியை உணர்ந்த முகமதிய மன்னன் பெருமாள் சிலையைப் பெற்று வருமாறு தன்னுடைய வீரர்களோடு மகளையும் அனுப்பினுன். முகமதிய வீரர்கள் வருதலையறிந்த கோயிலார் வழியிலேமறைந்துகொண்டார்கள். முகமதியமன்னன் மகள் திருவரங்கத்தையடைந்து இங்கும் பெருமாளுடைய சிலையைக் காணுமல் ஏங்கி மூர்ச்சித்து உயிரைவிட்டாள். அவளுக்குக் கோயிலின் இரண்டாஞ்சுற்றில் கோயில்கட்டி அவளுடைய உருவத்தையும் அமைத்து அதற்குத் துலுக்கநாச்சியார் என்று பெயரிட்டனர். வடநாட்டு முறைப்படி ரொட்டியும்வெண்ணெயும் படைத்து வழிபடலாயினர்.

**துல்யவக்கிரன்**-இவன் பரத்துவாச முனிவருடையமகன். இந்திரனை நோக்கித் தவம்புரிந்து கலைகளையெல்லாம் ஓதாதுணர்ந்தான். தந்தையினிடத்தில் இசைக் கலையைப் பயின்றுன். பராவசுவின் மனைவியிடத்தில் காமங் கொண்டு அவளைப்பிடிக்கச் சென்றுன். அவள் தன்னுடைய மாமனுரிடத்திலே நிகழ்ந்ததைக்கூறினுள். மாமனுராகிய இரப்பியர் இவன்மீதுபூதங்களை யேவினுர். அப்பூதங்களால் இவன் மாண்டான்.

**துல்லியன்** - பல நூற் பயிற்சியை உடைய ஓர் அரசன். பெருவழிகளிடையே தருமத்திற்காக நீர் நிலைகள்பலவற்றை உண்டாக்கியவன்.

**துவதிகன்** - புகார் நகரத்தில் சக்கரவாளக் கோட்டத்திலிருந்த கந்திற் பாவையைப் பொருந்தி நின்று முக்காலச் செய்தியையுங் கூறிய தேவன். சித்திரசேனனுக்கு நண்பன்.

**துவாரகை** - வடநாட்டிலுள்ளது. வீடுபேற்றையளிக்கும் பதிகள் ஏழனுள் ஒன்று. வடமதுரையில் இருந்த யாதவகுல மன்னர்களான கண்ணனும் பலராமனும் சராசந்தன் முதலான பகைவர்களுக்கஞ்சிக் கடல் ஓரத்திலே துவாரகை என்னும் நகரத்தை அமைத்து வாழ்ந்தார்கள். அந்நகர் கடலில் மூழ்கிவிட்டது. பிற்காலத்தார் வேறு துவாரகையை உண்டாக்கி அதில் திருமால்கோயில் அமைத்துள்ளனர்.

**துவாராபதி அகத்தியர்** - இவர் கண்ணபிரான் காலத்தில் துவாரகாபுரியில் இருந்தார். இவர் கண்ணபிரான் வைகுண்டஞ் சென்றபிறகு கண்ணபிரானுடைய வழிமுறையினருக்கு அறிவுரைகள் கூறிக் கொண்டிருந்தார். கண்ணன் வழி வந்த அரசர்பதினெட்டுப் பேர்களையும், பதினெண்கோடி வேளிர்களையும், அருவா நாட்டுக் குடிகள் பலரையும் தமிழ் நாட்டிற்குக் குடியேற்றினார். சளுக்கரும் ஒய்சளரும் இவ் வேளிர்களேயாவர் என்று வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர். இவ்வகத்தியர் கண்ணபிரான் கட்டளைப் படியே வேளிர்களை அவ்வாறு குடியேற்றினர் என்று தெரிகிறது.

**துவிச கணபதி** - இவர் நான்கு யானைமுகங்களையுடையவராய் நான்கு திருக்கைகள் அமையப் பெற்றவராய் விளங்குவார். நான்கு கைகளினும் புத்தகம், அக்கமாலை, தண்டம், கமண்டலம் இவைகளைத் தாங்கியிருப்பார். கைகளிலே மின்னற் கொடி போன்ற வளையங்கள் விளங்கும்.

**துளசி** - தர்மத் துவசன் என்னும் அரசன் தன் மனைவியோடு நூறு ஆண்டுகள் கலந்திருந்தான். அவள் வயிற்றில் கார்த்திகைத் திங்கள் வெள்ளிக் கிழமையில் ஒரு பெண் பிறந்தது. பெண்ணுக்குத் துளசி என்று பெயரிட்டான். பெண் குழந்தைப்பருவத்தில் தானே பதரி வனஞ்சென்று நான்முகனை நோக்கித் தவஞ் செய்தாள். நான்முகன் காட்சி தந்து, "என்னவரம் வேண்டும்?" என்று கேட்டான். அதற்கு அவள், "நான் முன் பிறப்பில் கோவுலகத்தில் இருந்த துளசியென்னுங் கோபிகை இராதைக்குத் தோழி. நான் கண்ணனோடு விளையாடக் கண்ட இராதை நான் நிலவுலகிற்பிறக்குமாறு சாபமிட்டாள். அதனால் நான் நிலவுலகில் பிறந்தேன்" என்று சொன்னாள். நான்முகன் துளசியைப் பார்த்து, "சுதாமன் என்னுங் கோவலன் நிலவுலகில் சங்கசூடனாகப் பிறந்திருக்கிறான். முதலில் அவனை மணந்து பிறகு திருமாலுக்குத் தாவர ரூபமாய் விருப்பம் உடையவளாய்ப்பிருந்தாவனத்தில்பிருந்தை யென்னும் பெயருடன் விளங்குவாயாக" என்றனர்.

துளசிசங்கசூடன் மனைவியானாள். சங்கசூடன் போரில் சிவபிரானால் கொல்லப் பட்டான். திருமால் சங்கசூடனைப் போற் கோலம்பூண்டு துளசியைக் கலந்தார். கலப்பினால் வேறுபாட்டையறிந்த துளசி சாபமிட்டாள். திருமால் துளசியைப் பார்த்து "நீ முன்பிறப்பில் என்னைப் பதியாகப் பெறுதற்குத் தவஞ்செய்த படியினால் இவ்வாறு நிகழ்ந்தது" என்று கூறினார். மேலும் அவளைப் பார்த்து, "நீ இவ்வுடல் விட்டுக் கோலோகம் அடைக. உன்னுடைய உடல் கண்டகி நதியின் வடிவத்தையடைக. உன்னுடைய கேசங்கள் துளசிக

ளாகுக. அத்துளசி மூவுலகங்களினுஞ் சிறந்து விளங்குக. அத் துளசி எனக்கு மிகவும் விருப்பம் உடையதாகுக. துளசி மூலத்தில் எல்லாப்புனித நீர்களும் அமைக. துளசியிலை நீர் மேலேபட்டால் மிகுந்த நல்வினையுண்டாகுக. தேவர்கள் பலரும் அதனடியில் வசிக்குக. சாங்காலத்தில் துளசி நீர் எவன் மீது படுமோ அவன் வைகுண்டத்தையடைக'' என்று பல வகையான மேன்மைகளை வழங்கினர்.

**துளுவம்** - இஃது இந்தியாவில் இருந்த பழைய ஐம்பத்தாறு நாடுகளுள் கன்னடநாட்டிற்குத் தெற்கிலிருந்த நாடு. இந்நாட்டினர் துளுவர் என வழங்கப்பட்டனர். இவர்கள் பேசிய மொழி துளு. இது திராவிட மொழிகளுள் ஒன்று.

**துற்கன்** - ஓர் அசுரன். இவன் தேவர்களை வருத்திச் சிறையிலிட்டான். தேவர்கள் சிவபிரானிடம் முறையிட்டனர். சிவபிரான் தேவியை ஏவினர். தேவி காளராத்திரி என்னுந் தோழியை ஏவித் தேவர்களைச் சிறை விடுக்குமாறு கூறச் செய்தனர். காளராத்திரி அவ்வாறே சென்று கூறினள். அசுரன் இவளுடைய அழகைக் கண்டு மயங்கினன். இவளைப் பிடிக்குமாறு சில அசுரர்களை ஏவினன். காளராத்திரி அவ்வசுரர்களை அதட்டிச் சாம்பராக்கினள். அசுரன் தேவியோடு சென்று போர் புரிந்தான். யானை யுருக் கொண்டு துதிக்கையறுபட்டான். பிறகு எருமை யுருக் கொண்டு வந்து சூலத்தாற் குத்துண்டு மாண்டான்.

**துன்மனன்** - இவன் ஓர் அந்தணன். தீயொழுக்க முடையவனாக இருந்தான். ஒருநாள் அரண்மனையிற் களவு செய்கையில் காவலாளர்கள் துரத்தினர்கள். அஞ்சியோடிய இவன் மணி கன்னிகையில் வீழ்ந்து இறந்து வீடு பேற்றை யடைந்தான்.

**தூங்கெயில் எறிந்த செம்பியன்** - அசைந்து விண்ணில் தொங்கிக் கொண்டிருந்த பகைவர்களுடைய மதில் ஒன்றைச் சோழ மன்னர்களில் ஒருவன் அழித்தொழித்தான். அதனால் அவனுக்குத் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்று பெயர் உண்டாகியது. இவனுடைய செயலைச் சங்க காலப் புலவர்கள் வியந்து பாராட்டியுள்ளனர்.

**தூடணன்** (1) - ஓர் அரக்கன். விச்சிரவசுவினுடைய மகன். கரனோடு கூடப் பிறந்தவன். சனத்தானம் என்னுமிடத்தில் இவன் வாழ்ந்திருந்தான். சூர்ப்பநகை இலட்சுமணர் தன்னை மூக்கறுத்தபோது இவனிடம் போய் முறையிட்டாள். கரனும் இவனும் இராம லட்சுமணர்களை எதிர்த்துப் போரிட்டனர். அப்பொழுது இவன் மாண்டான்.

**தூடணன்** (2) - இரத்தினமாலா கிரியில் இருந்த ஒரு தைத்தியன். இவன் பேராற்றல் படைத்தவன். அறங்களனைத்திற்கும் பகையாக இருந்தவன். நான்முகனிடம் பெற்ற வரத்தால் உலகத்தை மதியாது நல்வினையாளர்களைக் கொன்று திரிந்தான். அவந்தியை அடைந்து அங்குள்ளவர்கள் சிவபூசை செய்யாமல் துன்புறுத்தினன். அங்குச் சிவபூசை செய்பவர்கள் சிவபூசை செய்ய மண் எடுத்த இடம் பெருங் குளமாக இருந்தது. சிவபெருமான் அக்குளத்தில் இருந்து கடுமை மிகுந்த மகாகாளேசுவரராக வெளிப்பட்டு உங்காரஞ் செய்தார். அவ்வுங்கார வொலியினாலேயே

இவன் தன்னுடைய படைகளோடு அழிந்தொழிந்தான்.

**தூத்துக்குடி** - திருநெல்வேலி மாவட்டத்தில் கிழக்குக் கரையோரத்தில் இருக்கும் துறைமுகப்பட்டினம். இங்கிருந்து கொழும்புக்குக் கப்பல் போக்குவரத்துண்டு. கடற்கரையோரத்தில் தோண்டப்பெற்ற நீர் ஊற்றுக்களை அடிக்கடி தூர்த்துவிட்டுக் குடிநீருக்காக மீண்டும் மீண்டுந் தோண்டி முன்னாளில் நீர் எடுத்தார்களாம். அதனால் தூத்துக்குடி என்று பெயர் உண்டாயிற்றும். இதற்குமுன்பு வழங்கிய பெயர் திருமந்திர நகர் என்பதாம்.

**தூமப்ப முனிவர்** - இவர் திருப்பாதிரிப் புலியூரில் தவஞ்செய்து கொண்டிருந்தார். மங்கண முனிவர் என்பவர் களிப்பு மிகுதியால் இன்பக் கூத்தாடியபொழுது கால் இம்முனிவர் மீது பட்டது. இதனால் சினங்கொண்ட இவர் மங்கணரை முயலாகுமாறு சாபமிட்டார். மங்கணரும் முயலாகி வருந்தினார். பிறகு இறைவனை வழிபட்டு முயலுருவத்தைப் போக்கிக் கொண்டார்.

**தூமாக்கன்** - இராவணனுடைய அமைச்சர்களில். ஒருவன் பிணந் தின்பவன். பல அரக்கர்கட்குத் தலைவன். இந்திரசித்திற்குத் துணையாகத் தேரோடு வந்தவன். இவன் அனுமானால் இறந்தான்.

**தூமாசுரன்** - இவன் முன் பிறப்பில் விகுதி யென்னும் பெயருடைய அரசனாக விருந்தான். இவன் இந்திர பதத்தைப் பெற விரும்பித் தொண்ணூற்றொன்பது வேள்விகளைச் செய்து முடித்தான். கடைசி வேள்வியைச் செய்யும்போது இந்திரனால் அனுப்பப்பட்ட நாரதர் இவனிடம் வந்து இவனுடைய மனைவியைக் கேட்டார். இவன் கொடுக்க முடியாது என்று மறுத்தான். அதனாற் சினங்கொண்ட நாரதர் அவனுடைய வேள்வியை அழித்ததோடு மறுபிறப்பில் அசுரனாகுமாறும் வசவுரை வழங்கினார். இவன் அசுரனாகித் தேவர்களையும் முனிவர்களையும் வருத்திக் கொண்டிருந்தான். அப்பொழுது உருவிலி வாக்கு, “சுமுதையிடம் பிறக்கும் குழந்தை உன்னைக் கொல்லும்” என்று கூறக் கேட்டான். சுமுதையையும் அவளுடைய கணவன் மாதவராசனையும் கட்டிலோடு கொண்டு போய்க் காட்டில் விட்டான். அங்கு ஆனைமுகக் கடவுள் குழந்தையுருவாய் இவர்கட்குக் காட்சி கொடுத்து வளர்ந்து கொண்டிருந்தார். வளருங் காலத்திலேயே பல அசுரர்களைக் கொன்றார். இச் செய்தியைத் தூமாசுரன் கேட்டுப் போர் செய்வதற்கு வந்தான். அப்பொழுது ஆனைமுகக் கடவுள் தம்முடைய வாயிற் புகையுண்டாக்கிப் படை முழுவதையுங் கொன்றார். இதனால் ஆனைமுகக் கடவுளுக்குத் தூமகேது என்றொரு பெயர் உண்டாகியது.

**தூலகருணன்** - இவன் ஒரு காந்தருவன். சிகண்டிக்கு ஆண் தன்மை கொடுத்துச் சிகண்டியின் வாணாள் வரையில் தான் பெண்ணுருப் பெற்றிருந்தவன்.

**தெய்வயானை** - இவள் திருமாலின் மகளாகப் பிறந்து சரவணப் பொய்கைக்கரையில் தவஞ்செய்தாள். முருகக் கடவுளை மணம் புரிய வேண்டுமென்பது தவத்தின் நோக்கம். முருகக் கடவுள் இவளுக்குக் காட்சி கொடுத்து, “நீ இந்திரனிடம் வளருக நாம் வந்து உன்னை மணக்

கிறேம்'' என்று கூறி மறைந்தனர். இவள் தவத்திலிருந்து நீங்கிக் குழந்தை வடிவங் கொண்டாள். இவளை வெள்ளை யானை வளர்த்து இந்திரனிடங் கொடுத்தது. இவள் தெய்வ யானையால் வளர்க்கப்பட்ட படியால்தெய்வானைஎனப்பட்டாள். பிறகு சூரசம்மாரம் நிகழ்ந்த பிறகு இந்திரன் தெய்வயானையைத்திருப்பரங்குன்றத்தில் திருமணஞ் செய்து கொடுத்தான்.

**தெய்வீகமன்னன்** - இவனைத் தெய்வீக மகாராசன் என்பர். நடுநாட்டையாண்ட அரசர்களுள் இவன் ஒருவன். இவனுடைய திருமணத்திற்குச் சென்ற ஒளவையார் பாலாறு செய்யாறு, பெண்ணையாறு என்னும் மூன்று ஆறுகளையும் முறையே பால், நெய், வெண்ணெயாக வரும்படி செய்தார். இத்தெய்வீகராசன் பர்வத ராசனுடைய பிறப்பு என்பர். இவன் தெய்வப்புரவி ஒன்றைப் பெற்றிருந்தான். அப்புரவியில் ஏறிக் காசி, திருத்தில்லை, இராமேசுரம் ஆகிய ஊர்களை ஒவ்வொரு நாளும் வழிபட்டு வருவான். தமிழ்நாட்டு வேந்தர்கள் மூவரும் இவனுடைய குதிரையைக் கவர்ந்து கொள்ள எண்ணினர். அமைச்சர்களையனுப்பிக் குதிரையைக் கேட்கச்செய்தனர். அரசன்கொடுக்க மறுத்தான். மூவரசரும் போர்க்கோலங் கொண்டு போர் செய்ய வந்தார்கள். நாங்கள் தோற்றால் எங்களுடைய மணமாகாத பெண்களை மணஞ் செய்து தருகிறோம். நீ தோற்றால் உன்னுடைய குதிரையைக் கொடுக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்து கொண்டு போரிட்டனர். போரில் மூவேந்தர்களும் தோல்வி யடைந்தனர். ஆகவே தங்களுடைய பெண்களைத் திருமணஞ் செய்து கொடுத்தனர். இவன் காரணனுடன் வல்லூரன் என்னும் இரண்டு அசுரர்களை வதைத்தான். பாண்டியன் மகளாகிய காஞ்சன மாலையை மணந்தான். அவளிடம் நரசிங்கமுனையரைய நாயனாரைப் பெற்றான். சோழன் மகளாகிய பொன் மாலையிடம் மெய்ப் பொருள் நாயனாரைப் பெற்றான். சேரன் மகளாகிய பத்மாவதியிடம் சித்திர சேனனைப் பெற்றான். புகழோடு அரசாட்சி செய்திருந்த இவன் இறுதியில் வீடு பேற்றையடைந்தான்.

**தெள்ளாறு** - வடார்க்காடு மாவட்டத்தில் வந்தவாசி தாலுகாவில் காஞ்சிபுரத்திற்குத் தெற்கே பதினைந்துகல் தொலைவில் உள்ள ஓர் ஊர். நந்திவர்மன் என்பவன் இங்கு நடைபெற்ற பெரும் போர் ஒன்றில் வெற்றி பெற்றமையால் அவனுக்குத் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் என்று பெயர் வழங்கலாயிற்று.

**தெள்ளியசிங்கப்பெருமாள்**- சென்னைத்திருவல்லிக்கேணியில் எழுந்தருளிய பெருமாளின் பெயர். பெருமாள் நரசிங்கமாகத் தோன்றிய படியினால் உண்டான பெயர். இப்பெயர் தெளிசிங்கமென மருவி இந்நாளில்துளசிங்கப்பெருமாளாகி விட்டது. பார்த்தசாரதிப் பெருமாள் எனவும் இப் பெருமாளுக்குப் பெயர் உண்டு.

**தெனாலிராமன்** - இவன் தெனாலி என்னும் ஊரில் அந்தணர்குலத்தில் பிறந்தவன். இவனுடைய இடுகுறிப் பெயர் இராமன் என்பது. தெனாலி என்னும் ஊரின் பெயரையுஞ் சேர்த்துத்தெனாலி ராமன் என்று கூறப் பெற்றான். தெனாலி என்பது தெலுங்கு நாட்டில் உள்ள ஓர் ஊர்.

இவன் காளி தேவி தன் முன் தோன்ற வேண்டுமென்று பல நாள் வழிபாடு செய்தான். காளி ஆயிரந் தலைகளோடும் இரண்டு கைகளோடும் அஞ்சத் தக்க ரூபத்தில் இவன் முன் தோன்றினாள். தெனாலிராமன் காளியின் கோர வடிவத்தைக் கண்டு அஞ்சவில்லை. தனக்கு வேண்டிய வரங்களைக் கேட்டுக் கொள்ளாமல் காளியைப் பார்த்து,"எங்களுக்கு ஒரு தலை தான், அப்படியிருந்துஞ் சளிப் பிடித்தால் சிந்துவதற்குத் துன் புறுகிறோம். உனக்கு ஆயிரம் தலைகளிருக்கின்றனவே ஆயிரம் மூக்குகளினுஞ் சளிப்பிடித்தால் இரண்டு கைகளைக் கொண்டு எவ்வாறு சிந்துவாய்?" என்று கேட்டான். காளி இவனுடைய நகைச்சுவைக்கு மகிழ்ந்தாள். "நீ விகடமாகப் பேசத் தொடங்கிய படியால் விகட கவியாகுக" என்று கூறிமறைந் தாள். அது முதல் இராமன் விகட கவியாகி விகடப் பாடல் கள் பலவற்றைப் பாடலானான். பாடல்கள் பல விடங்களினும் பரவின. அக்காலத்தில் அர சாட்சி செய்திருந்த கிருட்டிண தேவராயர் என்பவர் இராம னுடைய செய்திகளையெல்லாம் கேள்வியுற்று இவனைத் தம் முடைய அவைக்களப் புலவ னாக்கினார். இவன் அங்குப் பல விகட விநோதங்களைச் செய் தான். அவைகள் தெனாலிராமன் கதைகள் என்னும் பெயரோடு வழங்கலாயின. இவன் காளி யருள் பெற்ற மகா கவியாகை யால் பல நூல்களைச் செய் திருக்கிறான். கடிகாசலமான் மியம், இலிங்கபுராணம், பாண்டுரங்க மகாத்மியம், உத் படாராத்திய சரிதம் முதலிய தெலுங்கு நூல்கள் இவனால் இயற்றப் பெற்றன.

**தென்பிரயாகை** - அந்தர் வாணி என்ற அமுதநதி மானசீகமாய் ஓடிவந்து பவானி காவிரியுடன் கூடும் இடத்தில் கலப்பதால், திரிவேணிசங்கமமாகிப் பவானி கூடல் தென்பிரயாகை என்று கூறப் பெறும். வட நாட்டில் ஒரு பிரயாகை இருப்பதால் இது தென்பிரயாகை என்று பெயர் பெற்றது.

**தென்மருதூர்** - சிவப்பதிகளாக விளங்கும் மருதூர்கள் மூன்று உள்ளன. அவைகள் வட மரு தூர் இடை மருதூர் தென் மரு தூர் என்பன. வட மருதூர் என்பது மல்லிகார்ச்சுனமெ னவும் திருச்சைலமெனவும் வழங் கும். இது மூவர் தேவாரப்பதி கங்களையும் பெற்ற சிவப்பதி யாகும். இடைமருதூர் என்பது திருவிடை மருதூர் ஆகும். இச்சிவப்பதியும் மூவர் தேவா ரப்பாடல்களையும் பெற்றுள் ளது. தென்மருதூர் என்பது பாண்டிவள நாட்டில் பரமக் குடி புகைவண்டி நிலையத்திற் குக் கிழக்கே எட்டுக்கல் தொலை வில் உள்ளதும் இந்நாளில் நயி னார் கோவில் என வழங்குவது மாகிய ஊராகும். இவ்வூர் முன் னாளில் மருதூர் என வழங்கி யது. இம்மூன்று சிவப்பதி களும் மருது என்னும் மரத்தை யே தலமரமாகக் கொண்டபடி யால்மருதூர் என்றுபெயர்பெற லாயின. இப்பெயர்களை வட மொழியில் உத்தரார்ச் சுனம் (வடமருது) மத்தியார்ச்சுனம் (இடைமருது) தட்சணார்ச்சுனம் (தென்மருது) எனக் கூறுவர்.

தென் மருதூர் ஆகிய நயினார் கோவிலில் எழுந்தருளிய இறை வன் பெயர் நாகநாத சுவாமி. இங்கு ஒரு சித்தர் அடக்கமாகி யிருப்பதால் சித்தர் பெருமான் எனவும் கூறுவர். தென் மரு தூருக்கு நயினார் கோயில்

என்று பெயர் வரக் காரணம் ஊமையாக விருந்த ஒரு முகமதியப் பெண் சுவாமிதிருமுன்பு 'அல்லா! நயினு 'ஆண்டவர்' என்று பேசத் தொடங்கி விட்டாளாம். அதுமுதல் முகமதியர்களும், இவ்வூர்ப் பெருமானிடம் ஈடுபாடு கொண்டு வழிபடத் தொடங்கியதோடு ''நயினர் கோவில்" எனவும் பெயர் கொடுத்து விட்டார்களாம்.

இங்கு எழுந்தருளிய இறைவன் திருவருளால், பிறவிக் குருடராக இருந்த தலைமலை கண்ட தேவர் கண்பார்வை பெற்ருர். மருதூர் அந்தாதி என்னும் அந்தாதி ஒன்றையும் பாடினர். மலட்டு அந்தணன் ஒருவன் மகப்பேறு பெற்ருன். பறைக்குலப் பாவை யொருத்தியின் கண்ணேய் தீர்ந்தது. தீராத வயிற்றுவலியால் வாடிய ஓர் அன்பரின் வயிற்றுவலி தீர்ந்தது. வணிகர் ஒருவருக்குப் பொற்கிழி கிடைத்தது. முல்லா சாயபு என்னும் ஒரு முகமதியனின் மகளும் ஊமை நீங்கிப் பேசலானுள்.

அட்டதிக்குப் பாலகர்கள், ஆயிரம் முனிவர்கள், மணிபத்திரன், அகத்தியர், ஆதிசேடன், தலைமலை கண்ட தேவர் முதலியோர் இப்பெருமானைப் போற்றி அருள் பெற்றவர்களாவர். இக்கோவிலில் சுவாமியினுடைய மூலத்தானத்திற்குப் பின்புறம் உட்சுற்றில் புற்றடி ஒன்று உண்டு. மருதமரத்தடியில் நாகலிங்கப்பெருமான் நாகர் வடிவில் இருந்து அன்பர்களுக்குக் காட்சியளித்த இடமாகையால் இந்த இடம் புற்றடி என்று சொல்லப்படுகிறது. அன்பர்கள் இந்த இடத்திற்கு வந்து காணிக்கைகள் செலுத்திப் புற்றடி மண்ணை அள்ளி நீரில் கரைத்துக் குடித்தும் நோயுற்ற இடங்களில் தடவியும் நோய் நீங்கப் பெறுகிருர்கள். புற்றடி ஈசரை, வணங்கினுலும் அவ்விடத்திய மண்ணை உட்கொண்டாலும் நோய்கள் நீங்குவது இன்றுங் கண்கூடு. இங்கு எழுந்தருளிய இறைவனை வைத்தீசுவரர் என்றும் அழைக்கிருர்கள். புற்றை இன்றும் நல்ல முறையில் பாதுகாத்து வைத்திருக்கிருர்கள்.

**தென்முகக் கடவுள்** - இக்கடவுள் வடமொழியில் தட்சணுமூர்த்தி என்றுகூறப்பெறுகிருர். சனகர், சனந்தனர், சனற்குமரர், சனந்தனர் என்னும் பெயருடைய நால்வரும் சிறந்த மெய்யறிவாளர்கள். அரிய பலகலைகளையும் ஓதியுணர்ந்தவர்கள். இவர்கள் ஒருகாலத்தில் சிவபிரானைப் போற்றி வழிபட்டுத் தங்கட்கு வீடடைதற்குரிய மெய்ஞ்ஞானப் பொருளை உணர்த்தியருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அது போதனையால் உணர்த்தத் தக்கதன்று. செயல் மூலமே விளக்கத்தக்கது. ஆகவே சிவபிரான் தெற்கு நோக்கிய முகத்தினராய்ச் சின்முத்திரை தரித்துத் தத்துவஞானப் பொருளைச் சொல்லாமல் சொல்லியருளினுர். அக்கால் அப்பெருமான் இருந்தநிலையே தென்முகக்கடவுள் என்னும் பெயரைப் பெறுவதாயிற்று.

**தென்னவன்** - பாண்டியன் தென்னுட்டின் தலைவஞக விளங்கிய படியால் அவனுக்குண்டாகிய சிறப்புப் பெயர்.

**தென்னவன் பிரமராயன்** - அரிமர்த்தன பாண்டியன் மாணிக்கவாசகரைத் தன்னிடம் அமைச்சராக அமைத்துக் கொண்ட போது மாணிக்கவாசகருக்கு வழங்கிய சிறப்புப் பெயர்.

**தென்னேரி**- காஞ்சிபுரத்திலிருந்து 24 கிலோ மீட்டர் தொலைவி லுள்ள ஊர். சைவவைணவக் கோயில்களும், பழங்காலக் கோயில்களும் கல்வெட்டுக் களும் இவ்வூரில் மிகுதியாக இருப்பதால் புதைபொருள் துறையின் மேற்பார்வையில் இருக்கிறது. கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் காஞ்சியை ஆண்ட தொண்டைமான் இளந் திரையன் இவ்வூரில் ஓர் ஏரி யை வெட்டினுன். இவ்வூரில் உள்ள கோயில்களில் கல் வெட்டுகள் பல உள்ளன.

**தேசபண்டாரி** - தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**தேசிங்கு ராசன்** - (18ஆம் நூ. முற்பகுதி) மொகலாய மன்னர் ஔரங்கசீபு சிவாசியின் புதல் வரான ராசாராமிடமிருந்து செஞ்சிக் கோட்டையைக் கைப் பற்றச் சுல்பிக்கார்கான் என்ற படைத்தலைவரை 1691இல் அனுப்பினுர். அவர் கோட்டை யைக் கைப்பற்றி 1700இல் கோட்டைக்குச் சரூப்சிங் என்ற இராசபுத்திரரைக் கவர்னராக ஏற்படுத்திவிட்டு, ஆர்க்காட் டைத் தம் படைத்தலைமை இட மாக ஆக்கிக் கொண்டார். இவ் வாறு செஞ்சியின் கவர்னராக ஆன சரூப்சிங்கின் வீரப்புதல் வரே தேசிங்கு எனப் பெறும் தேஜ்சிங் ஆவார். தேசிங்கு தம் தந்தைக்குப் பின் செஞ்சிக் கோட்டைக்குக் கவர்னராக வந்ததும் ஆர்க்காட்டு நவாபின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள வும் கப்பங் கட்டவும் மறுத்து விடவே வெகுண்ட நவாப் 1713 இல் செஞ்சிக்கோட்டை மேல் படையெடுத்தார். முதலில் தே சிங்கு தம் நண்பர் மகமத்கா னின் துணையுடன் வெற்றிகர மாகப் போரிட்டார். ஆனுல் இறுதியில் நவாபின் வீரர்களின் வலிமை ஓங்கி, தேசிங்கும் மக மத்கானும் போரில் மாண்டனர். தேசிங்கின் மனைவி உடன்கட் டை யேறினுள்.

**தேம்பாவணி**- இயேசுகிறித்துவின் வரலாற்றை வீரமாமுனிவர் என்னுங்கிறித்துவர்செய்யுளாக இயற்றியுள்ளார். பெஸ்கி என் னும் பெயருடைய இவர் இத் தாலி தேசத்திலிருந்து வந்தவர்.

**தேரழுந்தூர்** - திருவழுந்தூர் என வும் வழங்கும். சோழவள நாட் டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. ஊர்த்வ ரதன் என்னும் அரசனுடைய தேர் இங்கு அழுந்தியபடியால் தேரழுந்தூர் என்று பெயரா கியது. இங்குள்ள கோயில் மாடக் கோயில்.

**தேவதாருவனம்** - இமயமலைச்சார லில் உள்ள ஒரு வனம். இங்கு முன்னுளிற் பல முனிவர்கள் தவம் புரிந்து கொண்டிருந்தார் கள். அவர்கள் வேள்வி செய் தலே இம்மை மறுமைப் பயன் களை அளிக்குமென்று மயக்கங் கொண்டிருந்தார்கள். சிவ பிரான் அவர்களுடைய மயக் கத்தைப் போக்க எண்ணினுர். தாம் பிச்சைக்கோலம் பூண் டார்; திருமாலை மோகினியாகிப் பின் வரச் செய்தார். இந்த வனத்திற் புகுந்தார். இந்த முனிவர்கள் அனைவருக்கும் மனைவியர் இருந்தனர். பிச்சைக் கோலம் பூண்ட இறைவன் எவ் வித உடையும் இல்லாமல் நிர் வாணமாக இருந்தார். மோகினி யோ கண்டோர் மயங்கத் தக்க கட்டழகியாக விளங்கினுள். முனிவர் மங்கையர் பிச்சைக் கோலப் பெருமானை நச்சிப் பெருமயல் கொண்டு கற்பிழந் தனர். முனிவர்களோ மோகினி மையலில் மூழ்கி அல்லற் பட் டார்கள்.

**தேரையர்** - இவர் தருமசௌமியர் என்பவருடைய மாணுக்கர். அகத்தியருடைய மாணுக்கர் என்றுங் கூறுவர். ஓர் அரசனுக்குப் பெருந்தலைவலியுண்டாகிப் பலகாலம் வருந்தினுன். எத்தகைய மருத்துவர்களாலும் தலைவலியைப் போக்க முடியவில்லை. இறுதியில் இவரிடங் கூறியபோது இவர் பல மூலிகைகளின் உதவியைக் கொண்டு அரசனுடைய கபாலத்தைத் திறந்து பார்த்தார். அங்கொரு தேரையிருந்தது. பாத்திரம் ஒன்றில் தண்ணீரை நிறைத்துத் தேரையின் முன் காட்டினுர். தேரை அந்நீரிற் குதித்தது. பிறகு இவர் கபாலத்தை முன்போல் மூலிகைகளாற் செம்மைப் படுத்தினுர். இம்மருத்துவம் நடைபெற்ற போது அரசனை மயக்கந்தரும் மூலிகையொன்ருல் உணர்விழக்குமாறு செய்திருந்தார். பிறகு அரசன் மயக்கந் தெளிந்து உணர்வடைந்த போது தலைவலி முற்றும் நீங்கியிருந்தது. இதன் பின்னரே இவருக்குத் தேரையர் என்று பெயருண்டாகியது. உலக நன்மையின் பொருட்டு இவர் பதார்த்தகுண சிந்தாமணி, நீர்க்குறி நூல், நெய்க்குறி நூல், தைலவருக்கச் சுருக்கம், வைத்தியயமக வெண்பா, மணிவெண்பா, மருத்துப்பாரதம் முதலிய பல நூல்களை இயற்றினுர். இவரைப் பற்றிய செய்திகள் கற்பனைக்கதை என்று சிலர் கூறுவர். அக்காலத்திய சித்தர்கள் எல்லாவகையான ஆற்றலும் அமையப் பெற்றவர்களாக விளங்கியிருந்தனர் என்பதை நாம் மறந்துவிடுதல் கூடாது.

**தேவகி** - சுவாயம்பு மன்வந்தரத்தில் பிரசன்னி யென்னும் பெயரடைந்தவள். போசகுலத்தவனுகிய தேவகனுக்கு மகளாகப் பிறந்து வசுதேவரை மணந்தாள். இவளுடைய வயிற்றில் தோன்றும் எட்டாவது குழந்தையால் தனக்குச் சாவு நேருமென்பதை உருவிலிவாக்கால் கேள்வியுற்ற கம்சன் இவளையும் இவளுடைய கணவனையுஞ் சிறையிலடைத்து வருத்தினுன். இவளிடந் தோன்றிய குழந்தைகளைக் கொன்ருன். எட்டாவதாகத் தோன்றிய கண்ணன் இடம் விட்டு மாறியிருந்தான். அதனுல் இவளுடைய எட்டாவது குழந்தையைக் கம்சனுல் கொல்ல முடியவில்லை. இரதிவந்தன், சுதேட்சணன்; மித்திரசேனன், உருசு, சமந்தன், பத்திராக்கன், சங்கருடணன், கண்ணன் சுபத்திரை ஆகியோர் இவளுடைய மக்களாவர். இறந்த மைந்தர்களைக் கண்ணனுல் கண்டு மகிழ்ந்தவள்.

**தேவதேவி** - திருக்கரம்பனூரில் இருந்த ஒரு விலைமகள். இவள் தொண்டரடிப் பொடியாழ்வாரைத் தன் வசமாக்க எண்ணி மிகமுயன்று மயக்கினுள். ஆழ்வாரும் மயங்கி அவளோடு தங்கினுர். பெருமாள் பொன் தாம்பாளத்தை ஆழ்வார் கொடுத்ததாக இவளிடங் கொடுத்தார். இவள் வாங்கி வைத்திருக்கையில் கோயில் அதிகாரிகள் வந்து கேட்டனர். ஆழ்வார் கொடுத்ததாக இவள் கூறினுள். அதிகாரிகள் ஆழ்வாரைக் கேட்டனர். பெருமாள் ஆழ்வார் அறியார் என்பதை அருச்சகர் மூலமாகத் தெரியப் படுத்தினுர். இதனுல் தெய்வத் திருவருளின் பெருமையையும் ஆழ்வாருடைய பெருமையையும் நன்குணர்ந்த இவள் தன்னுடைய செல்வம் முழுவதையும் பெருமாளுடைய திருப்பணிக்குச் செலவிட்டுப் பரமபதத்தினை யடைந்தாள்.

**தேவமித்திரன்**-இவன் மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னே பாண்டி வள நாட்டிலே பாடிலி என்னும் ஊரில் இருந்து அரசுபுரிந்து கொண்டிருந்த ஒரு குறுநில மன்னன். இவன் மறுபுல மன்னர்கட்குந் தக்கவாறு உதவி செய்து புகழோடு விளங்கி இருந்தான். நல்ல அழகன். அந்நாளில் சோழவள நாட்டிலே காம திலகம் என்னும் பொது மகள் ஒருத்தி அழகிலும் ஆடல் பாடல்களிலுஞ் சிறந்து விளங்கினாள். அவள் தேவமித்திரனுடைய அழகு ஆண்மை முதலியவைகளைக் கேட்டு அவன் மீது மையல் கொண்டாள். தேவமித்திரனுடைய ஊருக்குச் சென்று பலவகையான சூழ்ச்சிகளாலும் அவனை மயக்க முயன்றாள். அவன் நல்ல ஒழுக்கமுடையவனுகையால் உளம் திரியவில்லை. காமதிலகம் தன்னுடைய முயற்சியில் தோல்வியுற்றுத் திரும்பினாள்.

**தேவந்தி** - கண்ணகியினுடைய தோழி. மாநாய்கனுடைய மனையில் வளர்ந்தவள். மானிடவடிவங் கொண்ட சாத்தனென்னுந் தெய்வத்தின் மனைவி. கண்ணகி தான் கண்ட தீக்கனவை இவளிடங் கூறியபோது, நல்லுரைகள் கூறித் தெளிவித்தவள். கண்ணகிக்குங் கோவலனுக்கும் நேரிட்ட துன்பங்களைக் கேள்வியுற்று மதுரைக்கு வந்து பிறகு வஞ்சி நகரைச் சேர்ந்து அங்கே அமைக்கப்பட்டிருந்த கண்ணகி வடிவத்தைக் கண்டு பூசித்து வழி பட்டவள்.

**தேவராட்டி** - இவள் மிகுதியான தெய்வவழிபாட்டினால் தன்மீது தெய்வ ஆவேசம் உண்டாகுமாறு சிறப்புப் பெற்றிருந்தனள். முற்காலத்தில் இத்தகைய தேவராட்டியர் பலர் இருந்தனர். மக்கள் தெய்வவழிபாட்டிற் கென்றே இவளைப் பயன்படுத்தினர். தெய்வ வெறியேறி இவள் ஆடுஞ் சமயத்தில் கூறு மொழிகளை மக்கள் தெய்வ வாக்காகவே நம்பினர்.

**தேவவிரதன்** - கங்கை வீடுமனுக்கிட்ட பிள்ளைப் பெயர். பரிமள கந்தியின் பொருட்டுச் சூள் மொழி எடுத்துரைப்பதற்கு முன் இப்பெயரே வீடுமருக்கு வழங்கியிருந்தது.

**தேவன் திருவரன் குளமுடையான்** - (13 ஆம் நூ.) கல்வெட்டினால் அறியப் பெறும் புலவர்களுள் இவரும் ஒருவர். புதுக்கோட்டை மாவட்டத்தில் "திருவரன் குளம்" என்ற ஊரில் திருமால் கோவிலின்கண் வரையப் பெற்றிருக்கும் கல்வெட்டில், பாண்டி மண்டலத்துப் பொன்னமராவதி முதலிய நாடுகளில் வாழும் பெரு வீரர்களாகிய மறமாணிக்கர்கள் மேல் தேவன் திருவரன் குளமுடையான் என்னும் பெயருடைய புலவர் 'பேர் வஞ்சி' என்னும் நூலொன்று பாடினாரென்றும், அதற்காக அவர்கள் இவருக்கு "மறச்சக்கரவர்த்தி" என்ற பட்டமும், தூத்துக்குடி என்ற ஊரிற் பாதியையும் அளித்தனர் என்றும் குறிப்புக் காணப் பெறுகின்றது. மறமாணிக்கனார் என்றாலும் மறச்சக்கரவர்த்தி என்றாலும் ஒன்றே. பேர் வஞ்சி என்பது பெரு வஞ்சி என்னும் புறத்துறை நூல். இந் நூல் இப்போது கிடைப்பது அரிதாயிற்று.

**தேவாசிரியன் மண்டபம்** - இது திருவாரூரில் இருக்கிறது. இதற்கு ஆயிரக்கால் மண்டபம் என்றும் பெயருண்டு. இது சிதம்பரத்திலுள்ள ஆயிரக்கால் மண்டபத்தைப் போன்றதன்று. கருங்கல் தூண்கள் மட்டும்

நடப்பட்டுள்ளன. திருவிழாக் காலங்களில் பந்தலாக அமைக்கப்படும்.

**தேவாரம்**-இச்சொல்தேவ+ஆரம் என்று பிரியின் தேவ தேவஞகிய சிவபிரானுக்குப் பாமாலையாகத் திகழ்வது என்று பொருள்படும்; தே+வாரம் என்று பிரிப்பின் தே-தெய்வமாகிய சிவபெருமானுக்கு, வாரம்-உரிமையுடையது என்று பொருள்படும். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்னும் மூவரும் பாடிய பாடல்கள்தாம் தேவாரம் என்னும் பெயருக்குரியவைகளாகத் திகழ்கின்றன. திருவாசகம் என்னுஞ் சொல்லை வேறு புகழ் நூல்கட்குப் பயன்படுத்துவதில்லை. அவ்வாறே தேவாரம் என்னுஞ் சொல்லும் அடங்கன் முறைக்கு மட்டுஞ் சிறப்புப் பெயராக அமைந்து விளங்குகின்றது. திருவாதவூரடிகளுடைய திருவாசகத்திற்குந் தேவாரம் என்னும் பெயர் இல்லை. தேவார திருவாசகங்கள் என்று தான் வழங்கப் பெறும்.

**தேவார அகத்தியர்** - இவர் பொதியமலையில் பாபநாசத்தில் இருப்பிடம் அமைத்துக் கொண்டு அங்கே தங்கியிருந்தார். அப்போது திருத்தில்லையில் இருந்த சிவாலய முனிவர் என்பவர் இறைவன் கட்டளைப் படி இவரிடம் வந்து இறைவன் கட்டளையைக் கூறினர். இவர் மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் 796 இல் இருந்து 25 பதிகங்களைப் பொறுக்கி யெடுத்துத் தாம் திரட்டியபடியினுல் அகத்தியர் தேவாரத் திரட்டு என்று அதற்குப் பெயர் கொடுத்தார்.

**தேவி கோட்டை** - பாண்டி வள நாட்டில் இந் நாளில் தனவணிகர்கள் வாழும் ஓர் ஊர். தேவியானவள் தங்கித் தவஞ்செய்தற் பொருட்டுத் தேவர்கள் அமைத்த கோட்டை இருந்த இடமாகையால் தேவி கோட்டையெனப் பெயர் பெற்றது.

**தேவீ பட்டணம்** - ஒரு காலத்தில் மகிடாசுரன் என்பவன் தேவர்கட்குத் துன்பஞ் செய்துகொண்டிருந்தான். மகா சக்தியானவள் மகிடாசுரனேடு போர் செய்து அவனுடைய படைகளையெல்லாம் அழித்து அவனை விரட்டினுள். அவன் விரைவாக ஓடிச் சேது நாட்டில் கடற்கரையிலிருந்த சக்கர தீர்த்தத்தில் இறங்கி மறைந்து கொண்டான். தேவியானவள் தன்னுடைய ஊர்தியான சிங்கத்தைக் கொண்டு நீர் முழுவதையுங் குடிக்கச் செய்தாள். தண்ணீர் இல்லாமற் போனதும் அசுரன் வெளிக் கிளம்பினுன். உடனே தேவியானவள் அவனைக் கொன்ருள். பிறகு சக்கர தீர்த்தத்தில் தன் கையிலிருந்த அமிருதகலசத்திலிருந்து அமிர்தத்தை விட்டு நிறைத்தாள். அவ்விடத்தில் தன்னுடைய பெயரால் ஒரு பட்டினம் அமையுமாறு செய்தாள். தேவியினுல் அமைக்கப்பட்ட அப் பட்டினம் தேவீ பட்டினம் என்னும் பெயரையடைந்தது.

**தேவேந்திரநாத டாகுர், மகரிஷி** - (1815 - 1905) நோபல் பரிசு பெற்ற கவி இரவீந்திரரின் தந்தையாகும் பேறு பெற்றவர். இவர், வங்காளத்தில் புதிய சமய நெறியைத் தோற்றுவித்த இராசாராம் மோகன்ராயின் நெருங்கியநண்பரான துவாரகாநாத டாகுரின் மூத்த புதல்வராவர். இவருடைய தந்தையார் மிகப் பெரும் செல்வ நிலையினர். இன்ப வாழ்க்கைநடத்த

வசதியிருந்தும் இவர் இளமையிலேயே உலக வாழ்க்கையில் வெறுப்புற்று, மெய்ப்பொருளைக் காணப் பல சமயங்களின் கொள்கைகளை ஆய்வதில் நாட்டஞ் செலுத்தினர். 1829 இல் தத்துவ போதினி சபையை நிறுவித் "தத்துவ போதினி பத்திரிகை" என்ற ஓர் இதழை வெளியிட்டு அதன் வாயிலாக மறையிலும் ஆகமத்திலும் அடங்கியிருக்கும் உயர் கருத்துக்களை மக்களுக்குப் பரப்பி வந்தார். 1850 இல் பிரமதர்மம் என்ற நூல் வெளியிட்டார். 1851 இல் பிரிட்டன் இந்தியக் கழகத்தின் செயலாளராக இருந்து இந்தியர்களிடை ஒற்றுமை உண்டு பண்ண ஒரு பொதுக் கழகத்தின் தேவை குறித்துச் சென்னை அறிஞர்களுக்கு ஒரு கடிதம் வரைந்தார். தம் தந்தையார் காலமாகும்போது கோடிக்கணக்கான பணம் கடன் சுமை இவர் தலையில் விடிந்தபோதும் தம் நேர்மையைக் காக்கச் சொத்துக்களனைத்தையும்விற்று ஈடுகட்டி விட்டார். இவர் தவசி போலவே பெரும்பாலும் இமயமலைச் சாரல்களிலேயே தங்கியமையால் மக்கள் இவரை மகரிஷியெனப் போற்றினர்.

**தேனு** - இஃதொரு தெய்வப் பசு. இதனுடைய முழுப் பெயர் காமதேனு என்பது. தேவர்களும் அசுரர்களும் ஒன்று கூடித் திருமாலுடைய தலைமையில் பாற்கடலைக் கடைந்தபொழுது உண்டான பொருள்களில் இதுவும் ஒன்று. ஒவ்வொரு பொருளும் ஒவ்வொருவருக்குக் கொடுக்கப்பட்டபொழுது இப் பசு தேவேந்திரனுக்குக்கொடுக்கப்பட்டது. இஃது ஒருவர் விரும்பிய பொருள்களை யெல்லாம் கொடுக்கக்கூடியது.

**தேனுகன்** - இவனோர் அரக்கன். ஆயர்பாடியின் அண்மையிலிருந்த காட்டில் வாழ்ந்திருந்தான். மாயங்கள் செய்வதில் தேர்ந்து நின்ற இவன் மக்கட்குத் தொல்லைகள் பல செய்தான். இவனுடைய இன்னல்களைப் பொறுக்க முடியாத மக்கள் கண்ணன்பால் முறையிட்டனர். கண்ணன் இக்கொடியவனைக் கொன்று தொலைத்து அனைவருக்கும் நன்மையை உண்டாக்கினன்.

**தைரியலட்சுமி** - இவள் தன்னுடைய நான்கு கைகளினும் வேல், வில், பலகை, அம்பு ஆகியவைகளைத் தாங்கியிருப்பாள். இவளைப் போற்றுவோர் பேராண்மை பெற்றுப் பகைவர்களை எளிதாகத் தோற்கடிப்பர்.

**தொடித்தலைவிழுத் தண்டினர்** - கடைச் சங்கப் புலவர்களில் ஒருவர். ஒல்லையூர்கிழான்மகன் பெருஞ் சாத்தன் முதலிவர்களைப்பாடியிருக்கிறர். திருவள்ளுவமாலையிலும் இவருடைய பாட்டுஉள்ளது. பூணிட்ட தலை பொருந்திய பெரிய தடியொன்றை இவர் எப்பொழுதுங் கையில் வைத்துக்கொண்டிருந்தபடியினல் இவருக்கு இப் பெயர் உண்டாகியது.

**தொண்டரடிப்பொடி யாழ்வார்** - விப்பிர நாராயணர் என்பது இவருடைய பிள்ளைப் பெயர். இவர் சோழ வள நாட்டில் மண்டங்குடியிற் பிறந்தார். திருமாலுக்குப் பூமாலை கட்டிச் சாத்துந் திருத்தொண்டு செய்தார். அதன் பொருட்டுப் பூம்பொழிலும் அமைத்தார். பிச்சையேற்றுண்டு காலங் கடத்தினர். தேவதேவி என்னும் தாசி விப்பிர நாராயணரிடங் காதல் கொண்டாள். மயக்க முயன்றாள்; விப்பிர

நாராயணர் மயங்கவில்லை. பிறகு எப்படியும் மயக்க வேண்டுமென்று முடிவு செய்து துறவு பூண்டு இவரிடம் வந்து தங்கிப் பணி புரிந்து மயக்கித் தன் வழிப்படுத்தினாள். நாராயணரும் அவளிடம் மயங்கிப் பித்தேறி நின்றார். பிறகு உளந் தெளிந்தது. இதற்குக் கழுவாயாகப் பாகவதர்களின் பாத தீர்த்தத்தை உட்கொண்டு அவர்களது அடித்துகளை முடி மேற்றாங்கி ஒழுகினார். அதனால் விப்பிர நாராயணர் என்னும் பெயர் போய்த் தொண்டரடிப் பொடியாழ்வார் என்று பெயர் உண்டாகியது.

**தொண்டர்சீர் பரவுவார்** - பெரிய புராணம் பாடிய பிறகு சேக்கிழாருக்குச் சோழ மன்னனால் கொடுக்கப்பட்ட சிறப்புப் பெயர். தொண்டர்சீர் என்பது அடியவர்களது பெருமையைக் குறிக்கிறது.

**தொண்டீச்சுரம்** - ஈரோட்டில் சிவபிரான் எழுந்தருளிய திருக்கோயில் இப்பெயரால் வழங்கப் பெறுகிறது. இங்கெழுந்தருளிய இறைவனுடைய பெயர் தொண்ட நாயனார், தொண்டீச்சுர நாயனார், தொண்டியப்பர் என்பனவாக முன்னாளில் வழங்கப்பெற்றன. இந்நாளில் ஈரோடையப்பர், ஈர ஓடையப்பர், ஆர்த்தர கபாலீசுவரர் என வழங்கப் பெறுகிறது.

**தொண்டீரபுரம்** - காஞ்சிமா நகருக்குள்ள பதின்மூன்று பெயர்களுள் ஒன்று. சிவகணங்களில் தொண்டீரன் என்பவன் மாலதி என்பவளைக் காதலித்து நிலவுலகின்கண் இந் நகரில் தோன்றி அரசாட்சி செய்தபடியால் உண்டான காரணப் பெயர்.

**தொண்டைமண்டல சதகம்** - தொண்டை நாட்டின் சிறப்புக்களையும் அந் நாட்டில் இருந்த வேளாண் செல்வர்களுடைய கொடைப் பண்பு முதலிய குணங்களையும் விளக்கிப் படிக்காசுப் புலவரால் பாடப்பட்ட நூல். சதகம் எனில் நூறு பாடல்களைக் கொண்டது என்பது பொருள். இச் சதகத்திலும் நூறு பாடல்கள் உள்ளன.

**தொண்டை மண்டலம்** - இது தமிழ் நாட்டின் வட பகுதி. இதன் பழைய எல்லையாவது: கிழக்கு-கடல், மேற்கு-பவள மலை, வடக்கு-திருவேங்கடம். தெற்கு-தென் பெண்ணையாறு; இம் மண்டலம் முற்காலத்திற் சோழ நாட்டின் ஒரு பகுதியாக இருந்தது. "தொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என்பது ஆன்றோர் அருள்வாக்கு. தொண்டை மண்டல சதகம் என்ற நூல் இம் மண்டலத்தின் சிறப்பை மிக விரிவாகப் புலப்படுத்தும். நேமிநாத ஆசிரியர் குணவீர பண்டிதர், நள வெண்பா ஆசிரியர் புகழேந்தியார், பெரிய புராண ஆசிரியர் சேக்கிழார், திருக்குறள் உரையாசிரியர் பரிமேலழகர், ஆகியவர்களெல்லாம் இம் மண்டலத்தின்பல பகுதிகளில் பிறந்தவர்களே. சுந்தரர் சங்கிலியை மணந்த திருவொற்றியூரும், சம்பந்தர் பூம்பாவையின் என்பைப் பெண்ணாக்கியதும் வள்ளுவர் வாழ்ந்ததுமான மயிலாப்பூரும், தமிழகத்தின் தலைநகராகத்தற்போது விளங்குவதும் வரலாற்றுச் சிறப்பு மிக்கதுமான சென்னையும், மற்றும் வரலாற்றுச் சிறப்புடைய வேலூர், செஞ்சி, காஞ்சிபுரம் போன்ற நகரங்களும், சிற்பச் சிறப்புடைய மாமல்லபுரமும், சைவத் திருப்பதிகள் முப்பத்திரண்டும்,

வைணவத் திருப்பதிகள் இருபத்திரண்டும் இம் மண்டலத்திலேயே உள்ளன. நன்னூலாசிரியராகிய பவணந்தி முனிவரின் இருப்பிடமாக இருந்த சனகாபுரம் என்ற ஊர் இம் மண்டலத்தைச் சார்ந்ததென்பது தொண்டை மண்டல சதக நூலார் கருத்து.

**தொண்டைமான்இளந்திரையன்** - காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட தொண்டை நாட்டு மன்னர்கள் தொண்டைமான் என்று அழைக்கப் பெறுவர். தொண்டையர் என்று கூறுவதுண்டு. தொண்டைமான்களில் இந்த இளந்திரையன் மிகுந்த சிறப்புடையவன். வென்வேற்கிள்ளி என்னுஞ் சோழனுக்கும் நாகநாட்டு வேந்தன் மகளாகிய பீலிவளை என்பவளுக்கும் பிறந்து கடலில் கலமூர்ந்து வருகையில் அது சிதைய இவன் திரையில் மிதந்து கரையடைந்தான். இக்காரணத்தால் திரையன் என்னும் பெயர் உண்டாயிற்று. வேந்தன் மகன் என்பதற்கு அடையாளமாகத் தொண்டைக் கொடி யணிந்திருந்தது பற்றித் தொண்டைமான் ஆனான். அவன் ஆண்ட நாடு தொண்டை நாடாயிற்று. இவன் பூவேந்தனாக இருந்ததன்றிப் பாவேந்தனாகவும் விளங்கினான்.

**தொதவர் (துடவர்)** - இவர்கள் இந்தியாவிலுள்ள ஆதிக்குடிகளில்ஒருவகுப்பினர்.நாடோடிகளாகிய இவர்கள் தங்களை "ஆஹ்ள்" (Ohl) என்று அழைத்துக் கொள்கின்றனர். இந்தத் துடவச்சொல் மக்கள் என்று பொருள்படும். சென்னை மாகாணத்தில் இவர்கள் நீலகிரி மாவட்டத்தில் உதகமண்டலம், கூனூர் தாலுக்காக்களில் வாழ்கின்றனர். இவர்கள் தொகை சுமார் 550. இப்பொழுது சிறிது சிறிதாக இத்தொகை பெருகிவருகின்றது. இவர்களில் ஆண்கள்தாடிவளர்ப்பர்; பெண்கள் தங்கள் தலைமயிர் நீண்டு சுருள் சுருள்களாகத் தொங்குமாறு செய்வர். மணம் வயதுவந்தபிறகேநடைபெறும். பல கணவர் மணம் உடையவர்கள்(அஃதாவது பல சகோதரர்கள் ஒருத்தியைப்பொதுமனைவியாகக் கொள்வர். ஒருத்தி ஒருவனை மணந்தால், அவள் அவனுடைய உயிரோடுள்ள சகோதரர்களுக்கும் இனிப் பிறக்கப்போகும் சகோதரர்களுக்கும் மனைவி ஆகின்றாள்). அனைவரும் எந்தவிதமான மனத்தாங்கலுமின்றி ஒன்றாக வாழ்வர்.

**தொல்காப்பியதேவர்** - இவர் திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம் பாடியிருக்கிறார். இக்கலம்பகம் மிகச் சிறந்தது. இரட்டைப் புலவர்கள் திருப்பாதிரிப்புலியூருக்கு வந்தபோது ஊரார்கள், இரட்டையர்கள் கலம்பகம் பாடுவதில் வல்லவர்கள் (கலம்பகத்திற்கிரட்டையர்கள்) என்பதைக் கேள்விப்பட்டிருந்தபடியால் திருப்பாதிரிப்புலியூர்க்குக் கலம்பகம் பாடவேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். தொல்காப்பிய தேவருடைய கலம்பகச்சுவையை நுகர்ந்திருந்த இவர்கள், "தொல்காப்பியதேவர் சொற்றதமிழ்ப்பாடலன்றி, நல்காத் திருச்செவிக்கு நாமுரைத்த தேறுமோ, மல்காப்புனல் ததும்ப மாநிலத்துக் கண்பிசைந்து, பல்காற் பொருளழற்கும் பாற்கடலோன் நீந்தார்க்கே" என்னுஞ்செய்யுளைப் பாடினார்கள்.

**தொல்காப்பியமுனிவர்**-இவர் அகத்தியருடைய மாணாக்கர்களில் ஒருவர்,சமதக்கினிமுனிவருடைய

புதல்வர். இவருடைய இடு குறிப்பெயர் திரணதூமாக்கினி என்பது. இவர் எழுத்து, சொல் பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்களும் அமைந்த தொல்காப்பியம் என்னும் அரிய இலக்கண நூலை இயற்றினுர். இந்நூல் 1610 சூத்திரங்களைக் கொண்டது. இந்நூல் தோன்றியகாலத்தில் வழங்கிக்கொண்டிருந்த அகத்தியர்செய்த அகத்தியம் முதலிய இலக்கண நூல்களும் வழக்கொழிந்தன. தொல்காப்பியத்தின்சிறப்பே எங்கும்பரவிற்று. இவருடைய இயற்பெயரும் மறைந்து தொல்காப்பியர் என்றே பெயர் உண்டாகியது.

**தொன்னூல்** - இஃதோர் இலக்கண நூல். கிறித்துவராகிய வீரமாமுனிவர் தமிழ்ப்புலமை பெற்ற பிறகு பல நூல்களை இயற்றினுர். இலக்கண நூல் ஒன்றும் நாம்இயற்றவேண்டும் என்றும் முடிவுசெய்து இதனை இயற்றினுர். இதில் ஐந்திலக்கணங்களும் உண்டு. இஃது இந்நாளில் பெயரளவில் இருக்கிறதே தவிர இதனைக் கற்பார் எவருமிலர்.

**தோடகர்** - இவர் ஆதிசங்கராச்சாரியருடைய மாணவர்களில் ஒருவர். சங்கரரிடம் மாணவர்கள்பலர் கல்வி கற்றுக்கொண்டிருந்தனர். அவ்வாறு கற்றுக்கொண்டிருந்த அனைவரினும் இத்தோடகர் மந்தமதியினராகவிருந்தார். மற்றைய மாணவர்கள் பாடங் கேட்கும் போது இவர் ஒருபுறம் அடங்கியிருந்து ஆசிரியர் கூறுபவைகளைக் கருத்துடன்கேட்பார். ஆசிரியர்க்குச் செய்யவேண்டிய பணிகளையெல்லாம் மிகு விழிப்புடன் செய்வார். இதனுல் சங்கரர் இவர்மீது மிகுந்த அன்புவைத்திருந்தார். ஒருநாள் இத்தோடகர் ஆசிரியருடைய ஆடையைத் தோய்க்கும்பொருட்டு ஆற்றுக்குச் சென்றிருந்தார். மற்றைய மாணவர்கள் கல்விபயிலுதற்கு ஆசிரியரிடம் வந்து சூழவிருந்தனர். ஆசிரியர் பாடத்தைத் தொடங்கவில்லை. தோடகர் வரட்டுமென்றுஎண்ணிப்பேசாதிருந்தார். ஆசிரியருடைய எண்ணத்தை யுணர்ந்து கொண்ட பிற மாணவர்கள் மந்தமதியினரான அவருக்காக ஆசிரியர் காலந்தாழ்த்துகிருரே என்று உள்ளத்தில் எண்ணினுர்கள். மாணவர்களுடைய எண்ணத்தை ஆசிரியர் தம்முடைய மெய்யறிவாற்றலால்உணர்ந்து கொண்டார். எல்லா நூல்களின் கருத்துந் தோடகருக்கு நன்கு விளங்கட்டுமென்று உள்ளத்தில் எண்ணினுர். அவ்வளவில் தோடகருக்கு ஞான நூற்பொருள்களெல்லாம் நன்கு விளங்கின. அவர்வரும்போதே தோடகம் என்னும் பாடல்களைப் பாடிக்கொண்டுவந்தார். இதனைக்கண்டு மாணவர்கள் அச்சமும் வியப்புங் கொண்டனர். அப்பொழுது அவர் பாடிய பாடல்கள் தோடகம் என்னும் பெயருடையனவாகையால் அன்றுமுதல் அவருடைய பெயர் தோடகர் என்று ஆகியது.

**தோடர்மால், ராசா** - (16 ஆம் நூ.) அக்பர் சக்கரவர்த்தியின் தலைசிறந்த அதிகாரிகளில் இவர் ஒருவர். அயோத்தியைச்சேர்ந்த இவர், ஷெர்ஷா என்னும் ஆப்கானியர் தில்லியில் ஆட்சி செலுத்தி வந்தபோது, அவர் ஏற்படுத்திய நிலச்சீர்திருத்தங்களை நன்கு கற்றுணர்ந்தவர். ஷெர்ஷாவின் வரிவசூல் பரிபாலன முறைக்கும் அக்பரின் நிலச் சீர்திருத்தங்களுக்கும் முதன்மைத்தொடர்பாக விளங்

கிறர். அக்பருடைய நிதி யமைச்சராகவும், பின்பு முதல் அமைச்சராகவும் விளங்கினர். பீகார், வங்காளம் ஆகிய இரு சுபாக்களையும் மொகலாயப் படைகள் வெல்லுவதற்கு உதவிய இவர், 7000 குதிரை வீரர்களுக்குத் தலைமைபூண்ட "மன்சப்தார்" என்னும் மிக உயர்ந்த பதவியையும் எய்தி ஞர். இவர் மிக்க அரிய பதவி களைப் பெற்றவராயினும், பணப்பேராசையோ அதிகார ஆணவமோ சிறிதும் இல்லா தவர்.

**தோணியப்பர்** - சீகாழியில் திருக் கோயில் கொண்டுள்ள சிவ பெருமானுடைய திருப்பெயர். ஊழிக்காலத்தில் பெருங்கடல் பொங்கியெழுந்து உலகத்தை யழித்தபோது சிவபெருமான் பிரணவத்தையே தோணியாகக் கொண்டு இப்பதிக்கு எழுந் தருளித் தங்கினர். அதனல் அப்பெருமானுக்கு இப்பெயர் உண்டாகியது.

**தோத்தாத்திரிநாதர்**-வானமாமலை என்னும் நான்குநேரியில் திருக் கோயில் கொண்டுள்ள திருமா லின் திருப்பெயர்.

**தோத்திரபூரணி** - திருஞானசம் பந்தர் திருமணஞ் செய்த பெண்ணின்பெயர். ஆச்சாபுரம் என்னும் திருநல்லூர்ப் பெரு மணத்திருக்கோயிலில்சம்பந்தர் உருவச்சிலையோடு இப்பெண் ணின் சிலையும் இருப்பதாகத் தெரிகிறது. இப்பெயர் பெரிய புராணத்திற் கூறப்படவில்லை யாயினும் அம்மையார் பிறந்த ஊரில் வழிவழிச் செய்தியாக வழங்கி வருகிறது.

**தோழப்பர்** - ஒரு வைணவர். இவ ருடையஇயற்பெயர் வேங்கடா சாரியார். வைதிகசார்வ பௌமர் என்றுங்கூறப்படுவர். ஹாரீத கோத்திரத்திற் பிறந் தவர்.அகோபிலமடம் ஆதிவண் சடகோப சுவாமிகளுடைய மாணவர். இவருடைய காலம் ஏறக்குறைய 480 ஆண்டுகட்கு முன்னென்பர். இவருடைய ஊர் மணற்பாக்கம் வடமொழி யில் நூலியற்றுதலினும் உரை யெழுதுதலினும் வல்லவர். வடமொழியிற் பல நூல்களை இயற்றியுள்ளார்.

**தௌமியன்** - இவன் தௌமிய வனத்தில் வசித்திருந்தவன். பாண்டவர்கட்கு வேள்வியா சானுக அமைந்து பாண்டவர் களுடைய வைதிக காரியங்களை யெல்லாம் இவன் முன்னின்று நடத்திஞன்.

**நகுடன்** - ஆயுவிற்குச் சுவர்ப் பானவியிடம் தோன்றியவன். புரூரவசுவினுடைய பேரன். காண்டவப் பிரத்தத்தை ஆண் டவன். செம்படவர்களுடைய வலையில் அகப்பட்ட சௌ நகரை மீட்பதற்காகப் பசுவை விலையாகத் தந்தவன். இவன் நூறு குதிரை வேள்விகள் செய்து இந்திரபதம் பெற்ருன். மிகு விரைவாக இந்திராணி யிடஞ் சென்று அவளுடைய இன்பத்தை நுகர விழைந்தான். ஏழு முனிவர்கள் சிவிகை தாங்கி வர இந்திராணியிடஞ் சென்ருன். விரைவாகச் செல் லுங்கள் என்று கூறும் பொருட்டு முனிவர்களைப் பார்த்துச், "சர்ப்ப சர்ப்ப" என்று கூறிஞன். இவன் கூறியதைக் கேட்ட அகத்திய முனிவருக்குச் சினம் உண்டா கியது. "நீ சர்ப்பமாகக் கடவை" என்று வசவுரை வழங்கிஞர். அவ்வளவில் வேள்வியின் பலனெல்லாம் போய்ப் பாம்பாக நிலத்தில் விழுந்தான். பாம்பாக இருந்த காலத்தில் வீமசேனனைப் பிடித்து விழுங்கிஞன். தான்

கேட்ட ஐயங்களுக்கு மறு மொழி கூறிய தருமபுத்திரரால் சாபம் நீங்கப் பெற்ருன்.

**நகுல முனிவர்** - இவர் ஈழ வள நாட்டில் ஓர் மலைச்சாரலிலே வசித்திருந்தார். இவருடைய முகம் கீரி முகமாக இருந்தது. இவர் அங்குள்ள புனித நீர் களில் நீராடியபடியால் கீரி முகம் நீங்கி மனித முகம் உண் டாகியது. இதனுல் இவர் இந்த இடம் தவஞ் செய்வதற்கேற்ற விடம் என்று முடிவு செய்து அவ்விடமே தங்கித் தவஞ் செய்து கொண்டிருந்தார். கீரி முகம் மாறியபடியால் இவர் தங்கியிருந்த இடம் கீரி மலை யென்று பெயர் பெற்றது. விசயன் இவர் தங்கியிருந்த இடத்தில் கோயில் கட்டினுன். சுவாமிக்கு நகுலேசுரர் என்றும் தேவிக்கு நகுலாம்பிகையம்மன் எனவும் பெயர் உண்டாகியது.

**நகுலன்** - பஞ்ச பாண்டவர்களில் ஒருவன். பாண்டுவின் மனைவி யான மாத்திரியிடம் அசுவினி தேவர்களுக்குப் பிறந்தவன். இவன் குதிரைகளின் இலக் கணங்களை நன்குணர்ந்தவன்.

**நக்கசாரணர்** - இவர்கள் ஆடை யற்றவர்களாய் முன்னுளில் இலங்கைக்குக் கிழக்கேயிருந்த தீவுகளில் வாழ்ந்திருந்தனர். நக்கர் என்பதற்குப் பொருள் ஆடையற்றவர்கள். நாகரிக மற்றிருந்த இவர்கள் உலோ காயதக் கொள்கையினராய்த் தம்மைப் போன்ற பிறமக்களைத் தின்னும் வழக்கத்தை மேற் கொண்டிருந்தனர். ஆதிரை யின் கணவனுகிய சாதுவன் இவர்கள் பேசும் மொழியை அறிந்திருந்தபடியால் இவர்க ளொடு சில நாள் தங்கி இவர் களுக்கு அறிவுரை கூறி நல் வழிப்படுத்தினுன்.

**நக்கண்ணையார்** - சங்க காலத்தில் வாழ்ந்திருந்த பெண்பாற் புல வர்களில் ஒருவர். பெருங் கோழி நாய்கன் மகள் நக்கண்ணை என்பர். இவரு டைய கண்கள் மிக அழகாக விளங்கியபடியால் இவ்வாறு காரணப் பெயர் உண்டாகியது. காரணப் பெயர் தோன்றிய பின் இடுகுறிப்பெயர் மறைந்து விட்டது. இவருடைய பாடல் கள் அகநானூறு புறநானூறு முதலிய நூல்களில் காணப்படு கின்றன.

**நக்கவாரம்** - இது வங்காளக் குடாக் கடலில் உள்ள ஒரு தீவாகும். இக்காலத்தில் நிக்கோபார் என்று வழங்கு கின்றது. இந்தத் தீவானது பல சிறு தீவுகளின் தொகுதி யாகும். இங்கே கிடைக்கும் தென்னைக்கு "நக்கவாரம் பிள்ளை" என்ற பெயர் வழங்கு கின்றது.

**நக்கிராசுரன்** - கந்தருவ மன்ன னுகிய சித்திரன் என்பவன் புதிதாகத் திருமணஞ் செய்து கொண்டான். அந்த மோகத் தால் மதம் பிடித்தவனுனுன். தன்னுடைய அரண்மனைக்கு வந்த பிருகுவாகிய குருவை மதிக்கவில்லை. சினங் கொண்ட அவர் இவனை முதலையாகுமாறு சபித்தார். அவன் முதலையாகி நக்கிராசுரன் என்னும் பெய ரோடு சோமவதி தீர்த்தத்தில் கிடந்தான். நீராட வருகிற வர்கள் அனைவரையுந் துன் புறுத்தினுன். ஒருநாள் அதிதி தன் மகனுகிய பிள்ளையாரோடு நீராடச் சென்ருள். பிள்ளை யாரைக் கரையில் வைத்து விட்டு நீராடினுள். பிள்ளையார் தண்ணீரில் குதித்து விளையாடிக் கொண்டிருந்தார். முதலை பிள்ளையாரைப் பிடித்துக் கொண்டது. இதனைப் பார்த்த

முனி குமாரர்கள் ஓடிவிட்டனர். பிள்ளையார் முதலையி னுடைய வாயிலிருந்து தப்பி முதுகில் ஏறிக் கொண்டார். அதனுடைய கழுத்தை இரு கால்களாலும் அமுக்கினர். குளம் முழுவதுஞ் சுற்றித் திரியுமாறு அம் முதலையை உதைத்து விரட்டினர். பிறகு முதலையோடு கரையில் வந்து குதித்தார். முதலை இறந்தது. சாபம் அகன்று ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டு உய்ந்தது.

நக்கீரர் - கடைச் சங்கப் புலவர்களில் ஒருவர். மதுரைக் கணக்காயனர் மகனர் நக்கீரனர் என்பர். இவர் கல்வியறிவிற் சிறந்து விளங்கியதைப் போலவே செருக்கிலும் மிகுந்து விளங்கினர். திருவாலவாய்க் கடவுளின் திருப்பாட்டுக்குக் கூடக் குற்றங் கூறி அதன் பலனை அனுபவித்தார். தமிழ் தாழ்ந்தது வடமொழி உயர்ந்தது என்று கூறிய குயவன் ஒருவனை வசை பாடி மாளச் செய்த தன்றிப் பலர் வேண்டுகோளுக் கிணங்கி உயிர் பெறவுஞ் செய்தார். பூதத்தின் கையிற் சிக்கி முருகக் கடவுள் மீது முருகாற்றுப்படையைப் பாடி உயிர் தப்பியவரும் இவரே.

நக்னசித் - அயோத்தி நாட்டரசன். இவனுடைய மகள் சௌந்தரியவதி. இவன் கும்பாண்டவனிடத்திலிருக்கிற ஏழு காளைகளை எவன் அடக்குகின்றனோ அவனுக்குத் தன்னுடைய மகளைக் கொடுப்பதாகக் கூறினன். கண்ணன் அவ்வேழு காளைகட்கும் ஏழு வடிவமாகிக் கொம்பைப் பிடித்துக் கீழே தள்ளிக் கட்டிப் போட்டான். இதனைக் கண்ட நக்னசித் தன் மகள் நக்னசித்தையைக் கண்ணனுக்கு மணம் செய்து கொடுத்தான். நக்னசித்தைக்கு அசுவசேனன் முதலிய பதின்மர் மக்களாகத் தோன்றினர்.

நஞ்சீயர் - இவர் பட்டருடைய மாணவர். நம்பிள்ளையின் ஆசாரியர். திருவாய்மொழிக்கு ஒன்பதினுயிரப்படி என்னும் விரிவுரையை அருளிச் செய்தவர். வேதாந்தி என்று சிறப்புப் பெயர் பெற்றவர். இவர் இருவகைச் செல்வங்களாலுஞ் சிறப்புற்றிருந்தார். இவர் திருவாய்மொழிக்கு நூறு பொருள் கூறியதைக் கண்டு அனைவரும் வியப்புற்று இவருடைய பெருமையைப் பாராட்டினர். இவர் எழுந்தருளியிருந்த ஊர் திருவரங்கம். திருப்பாவைக்கு ஈராயிரப்படி, திருவந்தாதிகள், கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருப்பல்லாண்டு இவைகட்கு விரிவுரை முதலியன இவருடைய நூல்கள்.

நஞ்சுண்டான்குடி - இவ்வூர் இந்நாளில் நஞ்சன்குடி எனவழங்குகிறது. நஞ்சையுண்டருளிய சிவபிரான் திருக்கோயில் கொண்டிருத்தலின் இவ்வாறு பெயர் பெற்றது. மைசூரில் இருந்து ஏறக்குறையப் பதினைந்து மைல் தொலைவிலிருக்கிறது.

நடமிண்டி சர்வ மங்களேசுவர சாத்திரி-இவர் விசய நகரத்தில் அரசர் அவைக்களத்தில் வடமொழிப் புலவராக விளங்கியவர். தெலுங்கிலும் வல்லவர். இவர் காளிதாசரைப் போல் மிகுந்த புகழ் படைத்தவராக விளங்கினர். இவர் சமஸ்கிருத நாமாவளி என்னும் வடமொழி இலக்கண நூலை யியற்றியிருக்கிறார்.

நந்தர்கள் - வட இந்தியாவில் கி. மு. நான்காம் நூற்றுண்டில் மகத நாட்டைச் சிசுநாக வம்ச

மகாநந்திக்குப் பின் ஆண்டவர்கள். நந்தவமிச முதலாம் அரசர் மகாபத்மன் அல்லது மகாபத்மாபதி; உக்ரசேனன் என்பது பௌத்த ஆசிரியர்களின் கூற்று. இவ்வமிச அரசர்கள் மொத்தம் ஒன்பது பேர்கள். முதல் நந்த அரசர் சிசுநாக வமிச அரசர் மகா நந்தனுக்கும் தாழ்ந்த குலப் பெண் ஒருத்திக்கும் பிறந்தவரென்று புராணங்கள் புகல்கின்றன. கடைசி நந்த அரசரான தனநந்தரின் படைத் தலைவர் சந்திரகுப்தன் நந்தஅரசரை வென்று மௌரியப் பேரரசை நிறுவினார்.

**நந்தர்கோன்** - யமுனைக் கரையில் இருந்த கோகுலம் என்னும் ஊரில் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்த குறுநில மன்னன். இடையர்கட்குத் தலைவன். வசுதேவருக்கு நண்பன். இவனுடைய மனைவியின் பெயர் யசோதை. வசுதேவர் தம்முடைய புதல்வனாகத் தோன்றிய கண்ணனை இவனிடங் கொண்டு வந்து சேர்த்து வளர்க்கச் செய்தார். கண்ணன் இவனுடைய இல்லத்தில் வளர்ந்து கொண்டிருந்தபோது தான் தம்முடைய இளம் பருவத் திருவிளையாடல்களையெல்லாம் புரிந்தார்.

**நந்தளிகெ லட்சுமீ நாரணப்பா** - (முத்தண 1870-1901) இந்தக் கவிஞர் உடுப்பித் தாலுக்காவைச் சேர்ந்த நந்தளிகெ என்னும் ஊரில் 24-1-1870இல் பிறந்தவர். அக் காலத்தில் கன்னட இலக்கிய உலகில் பரவியிருந்த இருளைத் தம் ஒளியால் நீக்கியவர். உயர்தரப் படிப்புக்கு வசதி இன்மையால் அவ்வூர் உயர்தரப் பாடசாலையில் உடற் பயிற்சி ஆசிரியராக அமர்ந்து, ஓய்வு நேரங்களில் பண்டித கரோடி சுப்பராயர் போன்ற புலமையாளர்களிடம் கன்னட இலக்கியம் கசடறக் கற்றுப் பெரும் புலமை எய்தி, புதிது பொருள்கள் காணும் பேரறிவு வாய்க்கப் பெற்று, 'ரத்னுவதி கல்யாணம்', 'குமார விஜயம்' என்னும் இரண்டு சிறந்த நூல்கள் இயற்றினார். மற்றும் ராம பட்டாபிடேகம் என்னும் காவியமும் அற்புதராமாயணம், ராமாசுவமேதம் என இரண்டு பழங் கன்னட உரைநடை நூல்களும் இயற்றிப் பெரும் புகழுற்று, 15-2-1901 இல் தம் முப்பத்தொன்றும் அகவையில் மறைந்தார்.

**நந்தனார்** - ஆதனூரில் புலையர் குலத்தில் தோன்றிச் சிவபத்தியினால் திருநாளைப் போவாராகித் தில்லையம்பலவனின் திருவடிப்பேறு பெற்றவர்.

**நந்தன்** - இவன் சோழவள நாட்டில் இருந்த ஒரு பெருஞ் செல்வன். தன்னுடைய அறிவு நலத்தால் பெரும் பொருள் திரட்டிக் குறுநில மன்னன் ஆனான். ஆயினும் இயற்கையிலேயே பிசினனாக இருந்த இவன் தன்னுடைய மனப் போக்கை மாற்றிக் கொள்ளவில்லை. ஔவையார் இவன் காலத்தில் இருந்தவர். அவர் ஒருநாள் இவனிடம் வந்தார். இவனுடைய குணத்தை நன்கு தெரிந்திருந்த அவர் இவனையும் இவன் போன்ற வேறு சில பிசினர்களையும் இழித்துப் பாடிச் சென்றார். இவன் தன் மீது ஒரு பாட்டுப்பாடவேண்டுமென்று ஔவையாரைக் கேட்ட பிறகுதான் அவர் பாடினார். அப்பாட்டு, "மூவர் கோவையும் மூவிளங்கோவையும்" என்னும் தலைப்புடையது.

**நந்தாதேவி** - வட இந்தியாவில் உத்தரப் பிரதேசத்தில் டேரீ-கார்வால் மாவட்டத்தின் எல்லையில் இமயமலைத் தொடரில் இருக்கும் சிகரம். 25,645 அடி உயரம். 1936 இல் டில்மானும் (Tilman) ஓடெலும் (Odell) இச் சிகரத்தின் உச்சியை எய்துவதில் வெற்றியுற்றனர்.

**நந்திகோத்திரர்** - ஒரு முனிவர். அவுரவர் என்பவருக்குத் தந்தை.

**நந்திக் கிராமம்** - இராமபிரான் காடு சென்றுமீளும் வரையிலும் அவருடைய திருப்பாதுகையை வைத்துப் பரதன் வழிபட்ட இடம். அயோத்தியை ஒட்டிய இடம். இங்குப் பரதகுண்டம், சத்துருக்கன குண்டம், கயா குண்டம், சடா குண்டம், பிசாச சவிமோசன தீர்த்தம், மான தீர்த்தம் முதலியன உள்ளன.

**நந்திதேவர்** - வீதஹவ்யர் என்னும் சிலாதமுனிவர் தம்முடைய மனைவியார் மக்கட்பேறு வேண்ட முனிவர் சிவபிரானை யெண்ணித் தவஞ் செய்தார். சிவபெருமான் காட்சிதந்து வேள்வி செய்வதற்கு நிலத்தையுழுவாய். அங்கு நம்மைப் போலும் அழகுள்ள புதல்வன் உண்டாவான் என்று கூறி மறைந்தருளினார். அவ்வாறே சிலாதர் வேள்வி செய்வதற்கு நிலத்தை உழுதார். உழுசாலில் ஒரு பொன் பெட்டியில் நந்திதேவர் தோன்றினார். வளர்ந்து எல்லாக் கலைகளையுங் கற்று அவைகளில் வல்லவரானார். சிவபெருமானை யெண்ணி மூன்று முறை தவஞ் செய்தார். வேண்டிய நன்மைகளை யெல்லாம் பெற்றார். பிதுர் தேவர்களின் உள்ளத்தில் தோன்றிய சுயஞ்ஞை என்பவளைத் திருமணஞ் செய்து கொண்டு திருக்கைலையை அடைந்தார்.

**நந்திதேவன்** - இவன் ஒரு நல்வினையாளன். இவன் காட்டிலே நாற்பத்தெட்டுநாள் உணவு அகப்படாமல் தண்ணீரை மட்டும் அருந்திக் கொண்டிருந்தான். ஒரு நாள் சிறிது உணவு கிடைத்தது. அதனைக் குடும்பத்துடன் உண்ணத் தொடங்கினான். அப்பொழுது இந்திரன் பசியுள்ளவன்போல் அங்கு வந்து இரந்தான். நந்திதேவன் உணவை அவனுக்களித்தான். அந்நல்வினையினால் தான் விண்ணுலகடைந்தான்.

**நந்திவர்மப்பல்லவமல்லன்** - இவன் சிறந்த வைணவன்; காஞ்சியில் உள்ள வைகுண்டப் பெருமாள் கோயிலைக்கட்டியவன் இவனே. இக்கோயிலையன்றி வேறு பல கோயில்களையும் இவன் கட்டினான். சைவவைணவக் கோயில்களேயல்லாமல் சமணப்படிமங்களையும் இவன் செய்தான் என்பர். வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லவனாகிய இவன் அம்மொழி வல்லார் பலரையும் ஆதரித்தான். பல மறையவர்கள் இவனால் போற்றி வளர்க்கப் பட்டனர். பல்லவப்பேரரசு இவன் காலம் வரையிலேதான் சிறந்து விளங்கியதென்பர்.

**நந்திவர்மன்** - இவன் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் எனப் பெறுவான். தமிழ்ப்புலமையும் தமிழ்ப்பற்றும் மிகுதியாக உடையவன். பெருவீரனாக விளங்கிய இவனை வெற்றி கொள்ள முடியாமையின் மறம் பாடி வெற்றி கொள்ள வேண்டுமென்று முடிவு செய்த மாற்றான் தன் புலமையைக் காட்டி இவன் மீது கலம்பகம் (நந்திக் கலம்பகம்) என்னும் நூல்பாடி இவனைக் கொன்றான்.

**நப்பின்னை** - கண்ணபிரானுடைய மனைவியரில் ஒருத்தி. மிதிலை

நகரில் வாழ்ந்திருந்த ஆயனுன கும்பகன் என்பவனுடைய மகள். இவள் நீளா தேவியின் கூறு என்பர். கும்பகனுடைய ஆன் கூட்டத்தில் ஏழு முரட்டுக் காளைகள் இருந்தன. காலநேமி என்னும்அரக்கனுடையமக்களே காளைகளாக வந்திருந்தனர். அம்மாயக் காளைகள் ஆக்களுக் கும் மக்களுக்கும் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தன. அந்நகர் மன்னன் அக்காளை களைக் கொல்லுமாறு வீரர்களை ஏவினுன். அவர்களால் இயல வில்லை. கும்பகன் அக்காளை களைக் கொல்வோருக்குத் தன் னுடைய மகள் நப்பின்னையைத் திருமணஞ் செய்து கொடுப்ப தாகத் தெரியப்படுத்தினுன். கண்ணபிரான் பலராமனேடு சென்று அக்காளைகளைக் கொன்று நப்பின்னையை மணந் தார். நப்பின்னை என்னும் பெயர் பின்னை எனவும் வழங்கும். 'ந' என்பது சிறப்பைக் காட்டும் எழுத்து.

**நப்பூதனுர்** - சங்ககாலப் புலவர் களில் ஒருவர். இவருடைய முழுப்பெயர் காவிரிப்பூம் பட்டி னத்துப் பொன் வாணிகனுர் மகனுர் நப்பூதனுர் என்பது. இதனுல் இவருடைய ஊர் காவிரிப்பூம்பட்டினம் என்பதும் இவருடைய தந்தையார் பொன் வாணிகர் என்பதும் பெறப் படுகின்றன. இவர் பத்துப் பாட்டுள் ஒன்ருகிய முல்லைப் பாட்டைப் பாடியிருக்கிருர்.

**நமச்சிவாய தேசிகர்** – இவர் திரு வாவடுதுறையாதீனத்தின்முதல் தலைவர். திருவாவடுதுறைக்கு அண்மையில் உள்ள மூவலூரில் சைவ வேளாளர் குலத்தில் பிறந்தவர். இவருடைய இடு குறிப் பெயர் வைத்தியநாதர்; நமச்சிவாய தேசிகர் என்பது தீட்சைப் பெயர். இவருக்குக் குருவாக இருந்து மெய்யறிவு நூல்களைப் போதித்தவர் சித்தர் சிவப்பிரகாசர். இந்தச் சிவப் பிரகாசர் தெய்வத்திருவருள் கைவரப்பெற்றுச் சிறந்து விளங்கியிருந்தவர்.

**நமித்தண்டி நாயனுர்**-இவர் திருக் கோயில்கள் தோறுஞ் சென்று திருவிழாக்காணும் உறுதி பூண்டவர். இவர் ஒரு திருக் கோயிலில் கூத்தப்பிரானுடைய திருவுருவத்தைப் பார்த்தார். இக்கடவுளுக்கு வாத நோயா கையால் உடல் வளைந்திருக் கிறது. ஒரு கண் சாய்ந்த பார் வையாக விருக்கிறது. திருவடி யும் மேலேயிழுத்துக் கொண் டிருக்கிறது என்று கவலை யடைந்தார். இந்நோய் தீர எம்மருந்தைப் பயன் படுத்த வேண்டுமென்று அருச்சகரைக் கேட்டார். இவர் அறிவற்றவர் என்பதை உணர்ந்து கொண்ட அருச்சகர் இவரிடம் பொருள் பெற்றுக்கொண்டு ஒரு தைலத் தைக் கொடுத்தார். அடியவர் அத்தைலத்தைக் கூத்தப்பிரா னின் திருமேனிமீது சாத்தச் செய்தார். அவ்வாறு சாத்தியுந் தீராமையைக் கண்டு வாட் படையினுல் தம்முடைய சதை யை அரியத் தொடங்கினுர். அப்பொழுது சிவபிரான் தோன்றி யாது வேண்டுமென்று கேட்டார். இவர், "தேவரீ ருடைய திருமேனியின் வாத நோய் தீரவேண்டு" மென்று கேட்டார். சிவபிரான் அதன் உண்மையை இவருக்குரைத்து வீடுபேற்றை யருளினுர்.

**நமுசி** - இவன் விப்பிரசித்தியின் மகன். இவனுடைய மனைவி பிரபை. தேவாசுரப் போரில் இந்திரன் இவன் மீது வச்சிரப் படையை எறிந்தான். அப்படை இவனுடைய தோலைக்கூட அறுக்க வில்லை. அதனைக்கண்ட

இந்திரன் இவன் மீது நனையாமலும் ஈரமாயுமிருந்த நுரையை எறிந்து கொன்றான்.

**நம்பாடுவார்** - பாண்டி நாட்டில் திருநெல்வேலிக்குத் தெற்கே இருபத்தாறு கல்லிலுள்ள திருக்குறுங்குடிக்கருகிலுள்ள முனி என்னும் கிராமத்தில் பிறந்த இவர் பாணர் மரபில் தோன்றிய பாகவதராவர். இவர் பாணராகையால் திருக்குறுங்குடித் திருமாலின் திருக்கோவிலுக்குள் செல்லாமல், ஏகாதசி தோறும் யாழைக் கையிலேந்தி, மதிற்கருகே நின்று இறைவனைப் பாடி வணங்கி வந்தார். ஒருமுறை ஏகாதசியன்று இறைவனை நினைந்துருகி யாழ் இசைத்துக் கொண்டே சென்றவர் தம்மை மறந்து ஒரு காட்டினுட் புகுந்து விட்டார். அங்கிருந்த பிரமராட்சதன் இவரை விழுங்க வரவே இவர் அவனிடம் தாம் பெருமாளை வழிபட்டு மீண்டு வரும்போது தம்மைக் கொடுப்பதாகச் சொல்லி இசைவு பெற்று, பின் திருமாலை வணங்கித் திரும்பி வரும்போது பிரமராட்சதன் இவருடைய சேவையாற் களிப்படைந்து தன்னைக் கடைத்தேற்றும்படி வேண்டி, இவர் தாம் பாடும் கைசிகர் கானத்திலுண்டான புண்ணியத்திற் சிறிதுதவி, அவனைப் பாவத்தினின்றும் நீக்கி, வீடுபேறடைவித்தார். அன்றுமுதல் அந்த ஏகாதசி "கைசிகஏகாதசி" என வழங்குகின்றது.

**நம்பியாண்டார் நம்பி** - சோழவள நாட்டில் தென்னார்க்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திற்கு அண்மையில் உள்ள திருநாரையூரில் ஆதிசைவ குலத்திற் பிறந்தவர். இவருடைய தந்தையார் அவ்வூரிலுள்ள பொல்லாப் பிள்ளையாரைப் பூசித்தவர். அவர் ஒரு நாள் வெளியூருக்குச் சென்றபோது பிள்ளையாருக்குப் பூசை செய்ய இவர் சென்றார். தம்முடைய தந்தையார் கொண்டு செல்லும் உணவினைப் பிள்ளையார் உண்பது வழக்கமென்று எண்ணிக் கொண்டிருந்த இவர் தாமும் திருமுழுக்கு முதலியவைகளைச் செய்து உணவை எதிரே வைத்து உண்ணுமாறு வேண்டினார். பிள்ளையார் உண்ணாமலிருக்கக் கண்டு உள்ளம் வருந்தினார். "நான் யாது தவறு செய்தேன்? ஏன் உண்ண மாட்டேன் என்கிறீர்? என்னுடைய தலையை இக்கல்லில் மோதிக் கொண்டு உயிர் விடுகிறேன்" என்று கூறிக் கல்லில் தலையை மோதிக் கொள்ளச் சென்றார். உடனே பொல்லாப்பிள்ளையார் தம்முடைய துதிக்கையால் இவரைப் பிடித்துத் தடுத்து நிறுத்தினார். உணவையெடுத்து உண்டார். நம்பியாண்டார் பிறகு இப்பிள்ளையாரிடமே கல்வி கற்றுத் தேறினார். இராசராச சோழனுடைய வேண்டுகோட்படி பொல்லாப்பிள்ளையாரின் அருட்டுணைகொண்டு திருத்தில்லையில் இருந்த தேவாரப்பதிகங்களை வெளிப்படுத்தினார். பொல்லாப்பிள்ளையார் மீது திருவந்தாதி பாடினார். சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையை விரித்துத் திருத்தொண்டர் திருவந்தாதி பாடினார். இத்திருவந்தாதி தான் பின்னாளில் சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர்புராணம் பாடுவதற்கு காரணமாக அமைந்தது. இவைகளைத் தவிர வேறு சில நூல்களையும் இவர் இயற்றியிருக்கிறார்.

**நம்பிப்பிள்ளை** - தொண்டை நாட்டுக் குளத்துளார் குடியிற் பிறந்தவர். பல்லவராயன் என்ற

பட்டம் பெற்றவர். இரண்டாம் இராசராசன் காலத்தில் இந்த ஊர் நாட்டுக்குள்த்துளார் கோவிலைக்கட்டி வைத்தவர். அவ்வூர்க்கோட்டை பல்லவ ராயன் கோட்டையென இவர் பெயரால் வழங்குகின்றது. அரசன் நோய்வாய்ப் பட்டிருந்த பொழுதும், அரசன் மக்கள் சிறியவர்களாக இருந்த பொழுதும் இராச்சியத்தைப் பாது காத்தவர். சிறந்த கொடையாளியாகவும் திகழ்ந்தார்.

**நம்பியேறு திருவுடையான் தாசர்** - பட்டர் காலத்தவர். இவர் நாடார் மரபில் தோன்றியவராக இருக்கலாம் என்று எண்ணுகின்றனர்.

**நம்பிள்ளை** - திருவரங்கத்திற்குத் தெற்கேயுள்ள நம்பூர் என்ற பதியிற் பிறந்தவர். வரதராசர் என்பது இவருடைய திருப்பெயர். திருக்கலிகன்றி தாசர் என்பது ஆசாரியரால் இடப்பட்ட பெயர். நஞ்சீயருடைய மாணவர். நஞ்சியர் இவருடைய குணங்களைக் கண்டு மகிழ்ந்து, "நம்பிள்ளையோ?" என்று கூறித் தழுவிக் கொள்ளப் பட்டவர். அதுமுதல் இவருக்கு நம்பிள்ளையென்று பெயர் வழங்கலாயது. தென்மொழி வடமொழி இரண்டின் எல்லையையுங் கண்டவர். தம் ஆசாரியரான நஞ்சீயருக்குச் சதாபிடேகஞ் செய்தவர். பாண்டிய நாட்டில் இருந்து வைணவர்கள் சிலர் வந்து "எங்களுக்குத் தஞ்சமாக விருக்கத்தக்க ஒரு மொழியை அருளிச் செய்ய வேண்டு" மென்றுவிண்ணப்பஞ் செய்யப் புன்முறுவல் செய்து, "கடற்கரை வெளியை நினைத் திருங்கோள்" என்ன அவர்களும் "மணற்குன்றையும் புன்னை மரங்களடர்ந்த காட்டையும் நினைத்திருக்கவோ?" என்று விண்ணப்பஞ் செய்ய, "சக்கரவர்த்தி திருமகன் கடற்கரையிலே ஓரமிர்தக்கடல் போல் பெரிய குரங்குப் படையோடிருக்க, அக்கரையிலே இராவணனிருக்க எழுபது கோடிப்படைகளும் உணர்ந்து பெருமாளைக் குறிக்கொண்டு கண்டு மகிழ்ந்திருக்கச் செய்தவர்.

**நம்மாழ்வார்** - திருக்குருகூரில் வேளாளர் மரபில் தோன்றிய காரி என்பவரும் அவருடைய மனைவியாகிய உடைய நங்கை என்பவளும் திருக்குறுங்குடித் திருமாலைப் போற்றித் தங்கட்கு மக்கட்பேறு வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். திருமால் அசரீரியாக "நாமே உங்கட்கு மகனாக வருவோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். உடைய நங்கை சூல் கொண்டு நம்மாழ்வாரைப் பெற்றெடுத்தாள். மாறன் என்று பெயர் சூட்டப் பெற்றது. ஆழ்வார் பதினாறு வயது வரை கண்திறந்து பாராது மௌனியாக விருந்தார். இவர் ஆயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்றாறு பாடல்கள் பாடினார்; அதற்குத் திருவாய்மொழி என்று பெயர்.

**நம்மாழ்வார் புளியமரம்** - இம்மரம் திருநெல்வேலி மாவட்டம் திருச்செந்தூர் வட்டம் ஆழ்வார் திருநகரியில் ஆதிநாதர் ஆழ்வார் கோயிலுக்குள்ளிருக்கிறது. இது வெளிப்பார்வைக்கு மூன்று மரம் போல் காணப்பட்டாலும் ஒரேமரந்தான். இம்மரத்தின் அடியில் நம்மாழ்வார் அமர்ந்து முப்பத்திரண்டு ஆண்டுகள் தவஞ் செய்து வீடுபேற்றை யடைந்தார். இம்மரத்தின் அடியில் நம்மாழ்வார் தம்முடைய மாணவர் பலருக்கு அறிவுரை வழங்கினார்.

இம்மரம் மற்றைய மரங்களைப்போல் பூப்பதுங் காய்ப்பதுந்தவிரப் பழுப்பதேஇல்லை. மேலும்அம்மரத்தின் எப்பக்கத்தையேனும் தீயிற்படும் படியாகச்செய்தால், உடனே அம்மரம் முழுவதும், மனிதர்களுடையஉடலில்கொப்பளங்கள் உண்டாவதைப் போல உண்டாகி ஒருவகையான கெட்ட மணத்தோடு சிவப்பும் வெண்மையுமான நிறத்தோடு கூடிய தண்ணீர்வடிவதுண்டு.இதற்குச் சந்தனம் அரைத்து அப்பினுல் உடனே நின்று போகும். இம்மரத்தின் வயிரமாகவும் காய்ந்து போயும் இருக்கிற ஒரு துண்டைச் சுத்தமனதுடன் தண்ணீர் விட்டரைத்துக் கொட்டைப் பாக்களவு உட் கொண்டால் எல்லாவகையான நோய்களுங் குணமாகி விடுகின்றன. இம்மரம் வழிபடப் பெற்று வருகிறது. இம்மரம் ஆதிசேடனுடைய கூறு எனவும் இலட்சுமணரே இவ்வாறு மரமாக இருக்கிருர் எனவுங் கூறுவர்.

**நயபரன்** - தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**நயினாராச்சாரியர்** – இவர் தேசிகருடைய குமாரர். இவருக்கு வரதாசாரியர் என்றும் பெயருண்டு. இவர் தந்தையைப் போல் பலரிடத்திற் சொற்போர் செய்து திருப்பதிப்பயணஞ் செய்து வந்தார். தாசராசா என்கிற ஓர் அந்தணனை வைணவனுக்கினுர். தம்மோடு போருக்குவந்த போலித்துறவியை அண்ணனைக் கொண்டு வெல்லச் செய்தார். தம்மையடுத்தவர்கட்குப் பாடியம் முதலியவைகளைப் போதித்து அறுபத்தெட்டு ஆண்டுகள் உலகில் வாழ்ந்திருந்து திருநாட்டிற்குச் சென்ருர்.

**நரகம்**-இவ்வுலகில் நல்வினை செய்பவர்கள் நல்லுலகத்தையும் தீவினை செய்பவர்கள் நரகத்தையும் அடைகிருர்கள் என்பது நான்முடிபு. நரகம் என்பது நிரயம். உடல் நீங்கப் பெறும் உயிர் நிரயத்தையடைந்து அங்கு வேறொரு பொய்யுடலையடைந்து அவ்வுடல் மூலம் தீவினைகளின் பயனை நுகர்கிறதென்பது நூல்களின் முடிவு. திருவள்ளுவர் "உறங்குவது போலுஞ் சாக்காடுறங்கி விழிப்பதுபோலும் பிறப்பு" என்ருர். உடலை விடும் ஓர்உயிர் உடனே வேறு உடலையடைந்து மறுபிறப்பையடைந்து விடுகிறதென்பதும் நான் முடிவு. உயிர்கள் நல்வினைப் பயன்களையுந் தீவினைப் பயன்களையும் இவ்வுலகத்தில் தான்நுகர வேண்டும். நல்வினை செய்தவர்கள் செல்வச் சிறப்புமிக்க உயர் குடும்பத்தில் தோன்றி இன்ப நலன்களை நுகர்கிருர்கள். தீவினை செய்தவர்களோ வறுமைத் துன்பமிக்க குடும்பத்தில் தோன்றி மாடுபோல் உழைத்துத் துன்பப்பட்டுத் தீவினையின் பலனை நுகர்கிருர்கள்.முன் பிறப்பில் தீவினை செய்தவர்கள் மறு பிறப்பில் அதன் பலனை நுகராமல் இருக்க முடியாது. "இலர் பலராகிய காரணம் நோற்பார், சிலர்பலர் நோலாதவர்" என்னும் திருக்குறளும் இதனை வலியுறுத்துகிறது. எனவே மறுபிறப்பில் நிரயத் துன்பத்தை (அஃதாவது துன்ப வாழ்க்கையை) பெருமல் இருக்கவேண்டுமென்று எண்ணுகிறவர் இப்பிறப்பில் நல்வினையையே செய்ய வேண்டியது கடமையாகும்.

**நரகாசுரன்** - கொடிய அசுரனுகிய இவன் சோதிதம் என்னும் நகரில் இருந்து அரசுபுரிந்து கொண்டிருந்தான். உயிர்களுக்

கெல்லாம் மிகுந்த துன்பத்தைச் செய்து கொண்டிருந்தான். இவனுடைய தொல்லையைப் பொறுக்க முடியாமல் மனிதர்களுந் தேவர்களும் மிகுதியும் வருந்தினர். பஞ்சசன், நிசும்பன், அயக்கிரீவன், பிராபணன் என்போர் இவனுக்கு அமைச்சர்களாக அமைந்து நின்றனர். இவர்கள் நரகாசுரனினும் பொல்லாதவர்கள். இவ்வசுரர்களுடைய தொல்லையைப் பொறுக்காத இந்திரன் திருமாலிடம் முறையிட்டுக் கொண்டான். திருமால் சமயம் பார்த்துக்கொண்டிருந்து உரிய சமயம் நேர்ந்தபொழுது இவனை அழித்தொழித்தார். இவனைக் கொன்றொழித்த காலையில் அனைவரும் மகிழ்ந்து எண்ணெய் முழுக்காடிப் புத்தாடை புனைந்து சிற்றுண்டிகளை உண்டு மகிழ்ந்தனர். அந்நாளே இந்நாளில் நரகசதுர்த்தசி என்று ஐப்பசித் திங்களில் கொண்டாடப்படுகிறது.

**நரசிம்மமேத்தா** - (கி. பி. 1414 - 1481) பவநகர் இராச்சியத்தில் தலாஜா என்ற கிராமத்தில் நாகர அந்தண குடும்பத்தில் பிறந்தவர். குதியானாவில் வசித்தவர். இளமையிலேயே கண்ணன் காட்சி பெற்றவர். சிறுவயதிலேயே பெற்றோரை இழந்த இவரை, இவர் உடன் பிறந்தார் பேணிவந்தார். இவர் மனைவி மாணிக்கபாய். இவருக்கு ஒரு மகனும் ஒரு மகளும் பிறந்தார்கள். இவர் மனம் இல்லறத்தில் பற்றாதபடியால் மிக்க வறுமையும் துன்பமும் நேர்ந்தன. மக்களுடைய திருமணம் முதலிய பொறுப்பைக் கண்ணபிரானிடமே ஒப்பித்து விட்டு இரவும் பகலும் கண்ணன் வழிபாட்டிலேயே ஈடுபட்டிருந்த இவருக்குக் கண்ணபிரானும் வியப்பான முறைகளில் உதவிகள் புரிந்து வந்தாரென்ப. கண்ணனுடைய பார்வையில் அனைவரும் சமம் என எண்ணி அரிசனங்களிடையேயும் பசனை செய்தார். அதனால் இவரினத்தார் இவரை விலக்கிய போதிலும் கண்ணபிரானருளால் மீண்டும் சேர்த்துக்கொள்ளப்பட்டார். ஹார்மாலா, சுதாமா சரித்திரம் முதலிய காவியங்களும் ஏறக்குறைய இரண்டாயிரம் பதங்களும் எழுதியிருக்கின்றார். இவருடைய பதங்கள் காலை நேரங்களில் பாடப்படுகின்றபடியால் பிரபாதிகள் என்று கூறுவர். இவைகள் மார்வாடிப் பிரதேசத்தில் அம்மக்களுடைய போக்கில் பாடப்பட்டு வருகின்றன. அவைகளில் காந்தியடிகளால் பாராட்டப்பட்ட "வைஷ்ணவ ஜனதோ" முதலியவை புகழ் எய்தியவை.

**நரசிங்கமுனையரையர்** - இவர் திருமுனைப்பாடி நாட்டில் வாழ்ந்திருந்த ஒரு குறுநில மன்னர். கல்விகேள்விகளிற் சிறந்து விளங்கினர். நல்ல கொடையாளியாகவுந் திகழ்ந்தார். எவர்வந்து எதைக் கேட்பினும் இல்லையென்னாது ஈந்துவந்தார். திருநீற்றினையணிந்து சிவபெருமானுடைய திருவடிகளை முப்போதும் போற்றினர். குடிகளையும் நன்கு பாதுகாத்தார். ஒவ்வொரு திருவாதிரை நாளிலுஞ் சிவனடியவர்கட்கு நல்லவிருந்துசெய்து ஒவ்வொருவருக்கும் நூறுபொன் அளித்தலை வழக்கமாகக் கொண்டிருந்தார். உள்ளநிலையை நோக்காது புறக்கோலத்திற்குநல்லமதிப்பு வைத்திருந்தார். சாரன் என்னும் பெயருடையவன் ஒருவன் இவரிடம்வந்து பொருள் பெற வேண்டுமென்று விரும்பினன். அவன்மனநலஞ்சிறிதுமில்லாதவன். உடல்முழுதுந் திருநீற்றை

யணிந்து புறக்கோலஞ் செய்து உண்மையான சிவனடியார்களோடு கலந்து கொண்டான். நன்கு உண்டான். பிறகு பொருள் அளிக்கும்போது அடியவர்களுள் ஒருவர் நரசிங்க முனையரையரைப் பார்த்து, ''இவர் உண்மையான சிவனடியாரல்லர். திருநீறுபூசி இவ்வாறு கோலஞ்செய்துவந்தால் தாங்கள் பொருள் அளிக்கக் கூடும் என்றே இவ்வாறு வந்துள்ளார்'' என்று சாரனைக் காட்டிக் கூறினர். இதனைக் கேட்ட நரசிங்கமுனையரையர் சாரனைத் தம் அண்மையில் அழைத்தார். ''தங்களுடைய திருக்கோலம் அடியேனுக்கு மிகு மகிழ்ச்சியை அளிக்கிறது. தாங்கள் என்றும் இவ்வாறே திருநீறு பூசவேண்டும்'' என்று கூறி அப்போலியடியவர்க்கு இருநூறு பொன் வழங்கினர். இச்செயலைக் கண்டோர் வியப்படைந்தனர். கோள் மொழி கூறியவரோ நாம் அரசரின் உள்ளக்கிடக்கையை உணர்ந்து கொள்ளாமற்பேசிவிட்டோமே என்று மிகுந்த நாணங் கொண்டார்.

**நர்நாராயணமுனிவர்** - திருமால் நரனுகவும் நாராயணனுகவும் இரண்டுவடிவம் எடுத்துக் கந்தமாதன மலையில் தவஞ் செய்து கொண்டிருந்தார். தேவமாதர்கள் அனைவரும் போய் அம்முனிவர்களை எள்ளி நகையாடினர்கள். அப்பொழுது இம்முனிவர் அந்தத் தேவமாதர்கள் அனைவரும் நாணியோடுமாறு தம்முடைய தொடையில் இருந்து ஊருவசியை உண்டாக்கினர். அதனுல் அவளுக்கு ஊருவசி என்று பெயராகியது. ஊரு - தொடை.

**நரமா** - இதற்குப் புருடா மிருகம் எனவும் பெயர் உண்டு. மனித முகமும் விலங்கு உடலும் அமையப் பெற்றது. இவ்விலங்கு இந்நாளில் இருப்பதாகத் தெரியவில்லை. பாரத காலத்தில் இருந்தது. இத்தகைய விலங்கொன்று வீமனெடு உரையாடி அவனைத் துரத்திப் பிடித்திருக்கிறது; அதனுல் இது மிகுந்த ஆற்றலுடையதாக இருந்திருக்க வேண்டும்.

**நரமுகப்பிள்ளையார்** - மனித முகத்தோடு கூடிய பிள்ளையாரே நரமுகப்பிள்ளையார் என்று வழங்கப்பெறுகிறுர். இத்தகைய பிள்ளையார் திருத்தில்லை, திருச்செங்காட்டங்குடி முதலிய இடங்களில் திருக்கோயில் கொண்டுள்ளார்.

**நரமேதயாகம்** - அசுவமேதயாகம் என்பது குதிரையைக் கொன்று செய்யுமொரு வேள்வி. அதைப் போல் இது மனிதர்களைக் கொன்று செய்வது. சராசந்தன் இவ் வேள்வியைச் செய்ய வேண்டுமென்று பல அரசர்களோடு வலியப் போர் செய்து உயிரோடு பிடித்துக் கொண்டு வந்து விலங்கிட்டுச் சிறையில் அடைத்து வைத்திருந்தான். கண்ணன் வீமனைக் கொண்டு சராசந்தனை அழித்தொழித்தார். தருமர் இராசசூய யாகத்தைத் தொடங்குவதற்கு முன்பு இது நிகழ்ந்தது. சராசந்தன் கொல்லப்பட்ட பிறகு சிறையில் அடைபட்டிருந்த அரசர்கள் விடுபட்டனர்.

**நரவாணதத்தன்** - இவன் கௌசாம்பி நகரில் இருந்து அரசு புரிந்த உதயணனுடைய மகன். இவனுடைய தாய் பெயர் வாசவதத்தை. நிதிக்கிறைவனுகிய குபேரனுடைய அருளால் இவன்பிறந்தபடியால்நரவாணதத்தன் என்று பெயரிடப்பட்டான். இவன் அறிவு நலம்

முதலியவைகளிற் சிறந்து திகழ்ந்தான். இவன் பருவமெய்திய பிறகு மண்ணுலகையன்றி விண்ணுலகையும் ஆளவேண்டும் என்னும் எண்ணங்கொண்டிருந்தான். பேரழகனுகப் பிறங்கிய இவன் மதனமஞ்சிகை என்னும் மாதை மணந்து இன்ப வாழ்க்கையை இனிது நடத்திக்கொண்டிருந்தான். மானசவேகன் என்னும் வித்தியாதரன் நரவாணதத்தனுடைய பெருமைகளையெல்லாங் கேட்டுப் பொருமை கொண்டிருந்தான். ஒருமுறை அவ்வித்தியாதரன் கௌசாம்பி நகரில் நடைபெற்ற விழா ஒன்றைக் காணவந்தான். நரவாணதத்தன் தன்மனைவியோடு உறங்கிக் கொண்டிருந்ததைக் கண்டான். மதனமஞ்சிகையின் அழகைக்கண்டு வியந்தான். தன்னுடைய வித்தை வலியால் மதனமஞ்சிகையை மட்டும் எடுத்துக்கொண்டு விசும்பாறுகத் தன்னுடைய நகரத்தை யடைந்தான்.

அங்கு வித்தியாதரன் மதனமஞ்சிகையைத் தழுவமுயன்ருன். அவள் மானசவேகனை மதியாமல் இகழ்ந்தாள். அவனுடைய விருப்பத்திற்கு இணங்கமுடியாதென்று உறுதிபெற உரைத்து விட்டாள். அம்மானசவேகனுக்குவேகவதி என்னும் பெயருடைய தங்கையொருத்தி இருந்தாள். மானசவேகன் தங்கையை மதனமஞ்சிகையிடம் அனுப்பினுன். அவள் வந்து தன் அண்ணனுடைய பெருமைகளையெல்லாம் விரித்துரைத்து, "என் தமையனுக்கு நீ இணங்கவேண்டும்" என்று கூறினுள்.

வேகவதி விளம்பியதைக் கேட்ட மதனமஞ்சிகை, "உன் அண்ணனுடைய அழகும் ஓர் அழகா? என் கணவனுடைய கால் தூசிக்குக் கூட நிகராக மாட்டானே" என்று இகழ்ந்துரைத்தாள். மதனமஞ்சிகையின் மாற்றங்களைக் கேட்ட வேகவதிக்கு நரவாணதத்தனிடங் காதல் உண்டாகியது. அவனை எப்படியேனுந் தழுவி மகிழவேண்டும் என்று எண்ணினுள். தன்னுடைய வித்தைவலியால் நரவாணதத்தன் இருக்குமிடத்தை யடைந்தாள். அவனுடைய மனைவியாகிய மதனமஞ்சிகையைப்போலக்கோலம் பூண்டு நரவாணதத்தன் முன்பு நின்ருள்.

மனைவியை இழந்து மதிமயங்கியிருந்த இவன் தன்னுடைய மனைவி வந்து விட்டாள் என்று மகிழ்ந்தான். அவளைத் தழுவியின்புற்ருன். நீலவேகன் என்னுங் கந்தருவமன்னன் நரவாணதத்தனுடைய நல்லியல்புகளையெல்லாம் அறிந்து தன்னுடைய மகளாகிய அரங்கவிலாசினி என்பவளை இவனுக்குத் திருமணஞ்செய்துகொடுத்துத் தன் அரசாட்சியையும் நல்கினுன். அங்கு இவன் தங்கி அரசுபுரிந்தான். இவனுடைய அறிவையுந் திருவையுங் கண்ட மானசவேகன் இவனுடைய மனைவியாகிய மதனமஞ்சிகையை இவனிடஞ் சேர்ப்பித்துப்பிழைபொறுக்கக் கேட்டுக் கொண்டான். தன்னுடைய தங்கையையும் இவனுக்கே திருமணஞ்செய்து கொடுத்தான்.

**நரிவேடன்** - வேடன் ஒருவன் திருக்குற்ருலத்தையடுத்த காடுகளில் வேட்டையாடித் திரிந்தான். நரியொன்று ஒருபுதரி லிருந்து புறப்பட்டுக் குற்ருலநாதர் கோயில் வலமாகுமாறு ஓடிற்று. வேட்டைக்காரனும் நரியைத் துரத்திக் கொண்டு பின்தொடர்ந் தோடினுன்.

குற்றுலநாதர் கோவிலை வல மாகச் சுற்றியோடியபடியினுல் வேடன் நற்கதியடைந்தான்.

**நரேந்திரதேவர், ஆச்சாரியா-** (1889-1956) அலகாபாத்நகரி லும்காசிநகரிலும் கல்விகற்முர். 1920 இல்வழக்கறிஞர்தொழிலை விட்டுவிட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்தார். காசி வித்தியா பீடம் என்னும் தேசியக்கல்லூரியில்1921முதல் 1926வரை இந்திய வரலாற்றுப் பேராசிரியராகவும், 1947முதல் 1951 வரை இலட்சுமணபுரிப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகவும், பிறகு காசிப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகவும்பணியாற்றினுர். 1916 ல் இந்திய தேசியக் காங் கிரசில் சேர்ந்து 1936 ல் உத்த ரப் பிரதேசக் காங்கிரஸ் அவை யின் தலைவராகவும்,1936 முதல் 1938 வரைகாங்கிரஸ்நிருவாகக் கமிட்டியில் உறுப்பினராகவும் இருந்தார். 1937 முதல் 1939 வரையிலும், 1946 முதல் 1947 வரையிலும் உத்தரப் பிரதேச சட்டஅவையில் உறுப்பின ராகவுமிருந்தார். நான்கு முறை சிறைசென்றுள்ளார். இறுதியாகச் சென்றது "இந்தி யாவைவிட்டு வெளியேறு" என்ற இயக்கத்தின்போது.இந் திய சுதந்திரத்திற்குப்பின் 1948 இல் காங்கிரசை விட்டுவிலகி, சோசலிஸ்ட்டுக் கட்சி நிறுவி அதன் தலைவராக இருந்தார். இக்கட்சி கிசான்மச்தூர் கட்சி யுடன் இணைந்து பிரஜா சோசலிஸ்ட்டுக் கட்சி என்ற பெயர் எய்தியபோது அதன் தலைவராகி, 1956 இல் கால மானுர்.

**நருமதை -** உஞ்சை நகரிலிருந்த ஐம்பதினுயிரம் நாடகக் கணிகையருள் ஒருத்தியின்மகள் இவள். பிரச்சோதனனுல் நன்கு மதிக்கப் பெற்றவள்.

**நல்லதங்கை -** இவள் மருவூரி லிருந்த குறுநில மன்னனுகிய நல்லண்ணன் என்பவனுடைய தங்கை. நல்லதங்கை மணஞ் செய்யப் பெற்றுக் கணவன் இல்லத்தில் வாழ்க்கை நடத் திக்கொண்டிருந்தாள். கால வேற்றுமையால் நாட்டில் கொடிய பஞ்சமுண்டாயிற்று. நல்லதங்கை தன் பிள்ளைகளை யழைத்துக் கொண்டு தன் னுடைய அண்ணன் இல்லத் துக்கு வந்தாள். அண்ணன் மனைவியாகிய அலங்காரி என்ப வள் மிகக் கொடியவள். அவள் நல்லதங்கையையும் அவளு டைய பிள்ளைகளையும் கவ னித்து உணவளித்துப் போற்ற வில்லை. உணவளிக்காமல் தொல்லைப்படுத்தினுள். அச் சமயத்தில் நல்லண்ணனும் வீட் டில் இல்லை. மனம் வருந்திய நல்லதங்கை தன் மக்களோடு வெளியே புறப்பட்டாள். மக் களைப் பாழுங் கிணறு ஒன்றில் தள்ளி விட்டுத் தானும் அதில் வீழ்ந்து மாண்டு போனுள்.

**நல்லதம்பிக் காங்கேயன்-** கொங்கு வள நாட்டில் கீழ்கரைப் பூந் துறை நாட்டுத் தலைவனுக மோரூரில் இந் நல்லதம்பிக் காங்கேயன் வாழ்ந்திருந்தான். எம்பெருமான் என்னும் புல வரைக் கொண்டு தக்கை ராமாயணம் என்னும் நூலைச் செய்வித்தவன். கொங்கு நாட்டு வள்ளல்களில் இவனுமொரு வன். இவன் பல நூல்களைச் செய்யச் செய்திருத்தலோடு திருச்செங்கோட்டிற் பல திருப் பணிகளுஞ் செய்திருக்கிருன். இவனுடைய முன்னேர்களும் புகழ் பெற்று வாழ்ந்திருந் தனர்.

**நல்லந்துவனர்** - சங்க காலத்துப் புலவர். இவருடைய முழுப் பெயர் மதுரையாசிரியர் நல்லந் துவனர் என்பது. அந்துவன் என்பது இவருடைய இயற் பெயர். நல் என்பது சிறந்த புலவராக விளங்கியபடியால் உண்டான காரணப் பெயர். இவர் கலித்தொகையைத் தொகுத்தார். அதிலுள்ள நெய் தற்கலியைப் பாடியவரும் இவரே. மேலும் இவருடைய பாடல்கள் பரிபாடல், நற்றிணை, அகம் முதலியவை களிலும் உள்ளன.

**நல்லபொம்மு** - கட்டபொம்முவி னுடைய ஒன்பதாவது வழி முறையினன். இவன் அறநெறி தவருமல் தன்னுடைய பெயருக் கேற்ப நல்லவனுய் இருபத் தேழு ஆண்டுகள் பாஞ்சாலன் குறிச்சியில் அரசாட்சி செய் திருந்தான்.

**நல்லாற்றூர்** இவ்வூர் தென்னுர்க் காடு மாவட்டத்தில் விழுப் புரம் புதுச்சேரி ப்பிரிவில்உள்ள கண்டமங்கலம் புகை வண்டி நிலையத்திற்குத் தெற்கே ஐந்து கிலோ மீட்டர் தொலேவில் இருக்கிறது. கற்பனேக் களஞ் சியமாகிய துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகளுடைய சமாதி இவ்வூரில் இருக்கிறது. சமாதிக் கோயிலே வழிபடும் ஊமைகள்பேச்சுத் திறமையை அடைகிருர்கள் எனவும் பொருள் விளங்காத பாடல் களேச் சமாதியிலிருந்து படித் தால் பொருள் விளங்கும் என வுங் கூறப்படுகிறது. புரட் டாசி முழுத் திங்கள் நாளில் சிவப்பிரகாசருடைய குரு வழி பாடு சொற்பொழிவுகளோடு சிறப்பாக நடைபெறும்.

**நல்லியக்கோடன்** - இவன் ஒரு குறுநில மன்னன். தொண்டை வள நாட்டில் மாவிலங்கை என்னும் ஊரிலிருந்து அரசு செய்து கொண்டிருந்தான். சிறந்த வள்ளலாகவும் இவன் திகழ்ந்தான். நல்லூர் நத்தத் தனர் என்னும் புலவர் இவனு டைய சீர்த்திகளேயெல்லாம் அமைத்துச் சிறுபாணுற்றுப் படை யென்னும் செய்யுளேப் பாடியிருக்கிருர்.

**நல்வேட்டனர்** - சங்க காலப் புலவர்களில் ஒருவர். இவர் மிளேயென்னும் ஊரினராகை யால் மிளேகிழான் நல்வேட் டனர் எனவுங் கூறப்பெறு வார். இவர் பாடல்கள் நற்றிணே குறுந்தொகை முத லியவைகளில் உள்ளன.

**நவகேசர்** - தொண்டை மண்டலத் தில் காஞ்சிபுரத்தில் இருந்தவர். இவர்கள் இருவர். ஒருவன் பெயர் நவன்; மற்ருெருவனு டைய பெயர் கேசன். இரு வரும் எப்பொழுதும் ஒன்ரு கவே இருந்தமையின் நவகேசர் என்று ஒருமைப்படுத்திக் கூறப் பெற்றனர்.இவர்கள் இருவருஞ் சூதாடுதலில் மிகவுங் கெட்டிக் காரர்கள். இவர்களுக்குப் பெயர் இவ்வாறிருந்துஞ் சூதாடிகள் என்னுங் காரணப் பெயர் ஒன்றும் அமைந் திருந்தது. சூதாடுதலில் இவர்களே எவராலும் வெல்ல முடியவில்லே. பலர் இவரிடந் தமது செல்வத்தை யிழந்தனர். முதலில் காஞ்சிபுரத்தில் இருந்த இவர்கள் பிறகு திருக்குடந் தைக்குக் குடியேறிஞர்கள். அவ்விடத்தில் தம்முடைய சூதாட்டத் தொழிலே நாளும் நடத்திப் பெரும் பொருள் திரட்டிஞர்கள். தொண்டை நாட்டுத் திருவேற்காட்டில் தோன்றிய மூர்க்கநாயனர் என் பவரும் சூதாட்டத்தில் சீர்த்தி பெற்றிருந்தார். ஆனல் அவர் தாம் பெற்ற பொருளேச்

சிவனடியார்கட்கு உணவிடும் நல்வழியில் பயன்படுத்தினர். அதனால் அவருக்கு நற்சூதர் என்று பெயர் உண்டு. அவரும் திருக்குடந்தைக்கு வந்து சேர்ந்தார். "வல்லவனுக்கும் வல்லவன் வையகத்தில் உண்டு" நற்சூதராகிய மூர்க்கர் கழுகுக்கேற்ற கோமுட்டியாக அமைந்தார். நவகேசர்களுடைய மோசடி மூர்க்கரிடம் சாயவில்லை. மூர்க்கர் விரைவாக நவகேசர்களைத் தோற்கடித்து அவர்களுடைய செல்வத்தைக் கைப்பற்றிக் கொண்டுபோய்த் தம்முடைய திருத்தொண்டுக்குப் பயன்படுத்தி விட்டார்.

**நவகோடி நாராயண செட்டி** - இவன் முதலில் ஒரு மனைவியை மணந்து மீண்டு மற்றொருத்தியை மணந்தான். இதனால் உறவினர் சினங் கொண்டனர். அவன் அவ்விரண்டாவது மனைவியை விட்டு விட்டுக் கப்பலிற் சென்றான். இரண்டாவது மனைவி காளியை வேண்டினாள். காளி மகப்பேற்றை அருளினாள். காளியின் வரத்தாற் பிறந்த புதல்வன் வளர்ந்து கொண்டிருந்தான். இவனுடன் கற்கும் மாணவர்கள் ஒருநாள் இவனைப்பார்த்து, 'உன்னுடைய தந்தை எங்கே?' என்று உசாவினார்கள். சிறுவன் தாயிடம் வந்து இச் செய்தியைக் கூறினான். தாய் வெளியூருக்குப் போய் வந்துள்ள இவனுடைய தந்தையைக்காட்டினாள். மகன் தந்தையிடஞ் சென்றான். தந்தைஇவனை அறியாதவனாகையால் விரட்டினான். சிறுவன் பலரறிய இவனைத் தெருவிற்கிழுத்துத் தான் அவனுடைய மகன் என்றான். காளியைக் கொண்டு சான்று கூறுவித்தான். செல்வம் முதலியன பெற்று வயிரவாணியன் என்று பெயர் பெற்றான்.

**நவக்கிரகபுரம்** - துவாபர யுகத்தில் ஒன்பான் வகைக் கோள்களும் பிரமப் பிரளயத்தினால் தங்கள் கதி தவறின. அதனைத் திருத்தருப்பூண்டியென்னும் வில்வாரணியச்சிவப்பதியை அடைந்து இறைவழிபாடு செய்து போக்கிக் கொண்டன. அக்காரணத்தால் வில்வாரணியத்திற்கு நவக்கிரகபுரம் என்று ஒரு பெயர் உண்டாகியது.

**நவநதிகள்** - கங்கை, யமுனை, நருமதை, சரசுவதி, கோதாவரி, காவிரி, பயோஷ்ணி, சரயு, குமரி என்னும் இவ்வொன்பதும் நவநதிகள் எனப்படும். தம்மில் மூழ்குவோர் தீவினையனைத்தையும் தாம் கவர்ந்து, சுமக்க முடியாமல் பெண்ணுருக் கொண்டு திருக்கைலைசென்று சிவபிரானை வழிபட்டுத் தம்முடைய குறையைப் போக்கி யருளுமாறு வேண்டிக் கொண்டார்கள். சிவபிரான் அந்நதிகளைப் பார்த்துக் "கும்பகோணத்திலே அக்கினி திக்கிலே ஒரு புனித நீர் இருக்கிறது. வியாழன் சிங்க ராசியில் வரும்போது மக நாளிலேநீங்கள்அப்புனித நீரிற் படிந்து உங்களுடைய தீவினையைக் போக்கிக் கொள்ளக் கடவீர்கள்" என்று அருள் புரிந்தார். அந்நாளே பன்னிரண்டு ஆண்டுகட்கொருமுறை திருக்குடந்தையில் நிகழும் புனித நீராட்டு என்பது பெரியோர் முடிபு.

**நவபாடாணம்** - இராமர் இலங்கைக்குச் செல்லுவதற்காகச் சேது கட்டியபோது தேவீபட்டினத்தில் ஒன்பது கல்லுகளில் ஒன்பது கோள்களையும் அமைத்து வழிபட்டார். இந்த ஒன்பது கற்களும் அவ்விடமுண்மையால் அவ்விடம் நவபாடாணம் என்று பெயர் பெற்றது.

**நவரத்தினங்கள்** - வடமொழிப் புலவர்களில் சிறந்தவர்களாகிய ஒன்பது பேர் கவி நவரத்தினங்கள் என்று பாராட்டப் பெறுகின்றனர். இவர்கள் உச்சயினி நகரத்தரசனாகிய விக்கிரமார்க்கனுடைய அவைக் களத்தில் இருந்தவர்கள். இவர்களுடைய பெயர் தன்வந்திரி, க்ஷபணகர், அமரசிம்மர், சங்கு, வேதால பட்டர், கடகர்ப்பரர், காளிதாசர், வராகமிகிரர், வரருசி என்பனவாம். இவர்களில் அமரசிம்மர் காவ்யகல்பலதா, நாமலிங்காநுசாசனம், தேவகோச நிகண்டு முதலிய நூல்களை இயற்றியுள்ளார். வேதால பட்டர் நீதிப்ரதீபம், வேதால பஞ்சவிம்சதி என்பவைகளை இயற்றியுள்ளார்; கடகர்ப்பரர் கடகர்ப்பர காவியம் முதலியவைகளை இயற்றியுள்ளார்; காளிதாசர் சாகுந்தலம், மாளவிகாக்கினிமித்திரம், விக்கிரமோர்வசீயம், இரகுவமிசம், குமார சம்பவம், மேகசந்தேசம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். வராகமிகிரர் பிருஹத் சம்மிதை, பிருகத் சாதகம், இலகு சாதகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

**நவனு நந்தினி** - திருவிரிஞ்சைப் பதியில் இருந்த சிவநாதன் என்னும் ஆதிசைவனுடைய மனைவி. இவளுடைய மகன் பொருட்டுத்தான் இறைவன் திருமுடி சாய்த்தருளினர்.

**நவிரம்** - இம் மலையின் பெயர் இந் நாளில் சவ்வாது மலை என்று வழங்கப்படுகிறதாகத் தெரிகிறது. வட ஆர்க்காடு மாவட்டத்தில் வேலூர், போளூர், செங்கம், திருப்பத்தூர் ஆகிய நான்கு வட்டங்களிலும் வடக்குத் தெற்காக நீண்டு பரவியுள்ளது இம்மலைத் தொடர். இம்மலைத் தொடரின் நீளம் ஏறக்குறைய நாற்பது மைல். அகலம் பத்து மைல். இம் மலையின் மீது காடுகள் நெருங்கியுள்ளன. மலைச் சரிவுகளில் ஏறக்குறைய நூற்றைம்பது சிற்றூர்கள் உள்ளன. இவ்வூர்களில் ஆதிக் குடிகள் என்னும் மலையாளிகள் வாழ்கின்றனர். சங்க காலத்தில் இம்மலை நன்னன் என்பவனால் ஆளப்பட்டது. நன்னன் ஆண்ட நாட்டுத் தலைநகர் செங்கண்மா. அஃது இப்பொழுது செங்கம் என வழங்குகின்றது. பத்துப் பாட்டில் ஒன்ருன மலைபடுகடாம் என்னும் கூத்தராற்றுப் படை இம்மலை நாட்டின் பழைய வளத்தை விளக்குகின்றது. அதில் கூறப்பட்டுள்ள நவிரமலைக் காரியுண்டிக் கடவுள் இந்நாளில் காளகண்டேசுவரர் என்று கூறப்பெறுகிருர். செங்கம் சிவன் கோவில் கல்வெட்டுக்களும் திருவண்ணுமலைக்கோயில் கல்வெட்டு ஒன்றும் நன்னனைப் பற்றியும் நவிர மலையைப் பற்றியும் விளக்கமாகக் கூறுகின்றன.

**நளகிரி** - இது பிரச்சோதனனுடைய பட்டத்து யானை. பேராற்றலுடையது. மதவெறி கொண்டு உஞ்சை நகரைக் கலக்கிய இதனுடைய சினத்தை யடக்கி ஊர்ந்தபடியினுலே தான் உதயணன் சிறையிலிருந்து விடுவிக்கப் பெற்ருன். இது சிறந்த யானைகட்கு உவமை கூறும் பெருமையுடையது.

**நளகூபரன்** - இவனும் மணிக்கிரீவனென்பவனும் குபேரனுடையமக்கள். தெய்வமகளிர்களுடன் ஆடையில்லாமல் நீர் விளையாடல் செய்து கொண்டிருந்தனர். நாரத முனிவர் அங்கு எழுந்தருளினுர். மங்கை

யரனைவரும் நாணி ஆடைகளை யெடுத்து அணிந்து கொண்டனர். குபேரன் மக்களாகிய இவர்களிருவரும் மதுபான மயக்கத்தினால் ஆடையணிந்து கொள்ளாமல் நிர்வாணமாகவே நின்றனர். நாரதர் சினங்கொண்டு, "மரங்களைப் போல நிற்கின்ற நீங்கள் மரங்களாவீர்களாக" என்று வசவுரை வழங்கினார். அவர்கள் வேண்டிக் கொண்டதற்கிணங்கிக் "கண்ணன் உங்களிடம் வரும்போது இவ்வடிவம் ஒழிவீர்களாக" என்று வசவுரை நீக்கமுங் கூறினார். இவர்களிருவரும்யசோதையின் இல்லத்துக் கொல்லையில் மருத மரங்களாகி நின்றனர். வயிற்றுக் கயிற்றோடு கண்ணன் உரலை யிழுத்துக் கொண்டு போய் அம் மரங்களைச் சாய்த்த போது இருவரும் சாப நீக்கம் பெற்றனர்.

**நளர்** - இவர்கள் நளவாடி என்னும் நாட்டினர். இப் பெயருடைய நாடு முன்னாளில் பல்லாரி கர்நூல் மாவட்டங்களில் அடங்கியிருந்தது.

**நளன்** - (க) நிடத நாட்டை யாண்டவனும் தமயந்தியின் கணவனுமாகிய நளன். அறநெறி முறையொடு அரசு புரிந்திருந்த இவன் தீதொடு பொருந்திய சூதினையாடியபடியால் நாடு நகரங்களை யிழந்து பல அல்லல்கட்குள்ளானான். (உ)இராமபிரானுக்குப் படைத் துணைவரா யமைந்திருந்த வானர வீரர்களுள் ஒருவன். இராமன் இலங்கைக்குச் செல்ல வெண்ணியபோது இவன் கடலில் அணையொன்று கட்டினான். இவனுடைய ஆற்றலை இராமபிரானும் புகழ்ந்து பாராட்டினார்.

**நள்ளி** - இவன் வள்ளல்கள் எழுவருள் ஒருவன். இந் நள்ளி கண்டீரக்கோவென்றும், கண்டீரக் கோப்பெருநள்ளியெனவுங் கூறப்படுவான். இளங் கண்டீரக்கோ என்னும் பெயருடையவன் ஒருவன் உள்ளமையின் இவன் பெரு நள்ளியெனப் பட்டான். இவன் அருள் நிறைந்த உள்ளமுடையவனாய் இரவலர் வறுமைத் துன்பத்தைப் போக்கும் வீரனாய் விளங்கினமையின் இவனைச் சான்றோர் பெரிதும் பாராட்டினர். தோட்டி என்னும் மலையைத் தன்னகத்தே கொண்ட நாடு கண்டீர நாடாகும். இவனுடைய கண்டீர நாடு மலை நாடாதலின் இவன் "நளி மலை நாடன் நள்ளி" என்று பாராட்டப்படுகிறான், இவனை வன் பரணர் பாடியுள்ளார்.

**நறவு** - துளு நாட்டில் கடற்கரையில் அமைந்திருந்த துறைமுகப் பட்டினம். கள்ளுக்கு நறவு என்று பெயர் உண்டு. ஆகவே இவ்வூர் துவ்வா நறவு என்று பழந்தமிழ்ப் புலவர்களால் சுட்டியுரைக்கப்பட்டது. துளு நாட்டைச் சேர மன்னன் வென்ற பிறகு இத் துறைமுகப் பட்டினத்தில் சேரன் செங்குட்டுவனுடைய தம்பி தங்கியிருந்தான். துளு மொழியில் இது நாருவி என்று வழங்கப் பட்டது.

**நற்சூதர்** - தொண்டை வள நாட்டில் திருவேற்காட்டில் இருந்த மூர்க்க நாயனார். சூதாடுதலில் நல்ல முறையைக் கையாண்ட படியால் நற்சூதர் என்று ஒரு பெயர் பெற்றார்.

**நன்மாறன்** - இந்திரவர்மன் எனவும் சுந்தர சுகுணன் எனவும் பெயர் பெற்றிருந்த பாண்டியனுடைய மகன் இவன். இவன் சிறந்த வீரனாகத் திகழ்ந்தான். தன்னுடைய பெயருக்கேற்ப நன்மையான குணங்கள் யாவும்

நன்கு அமையப் பெற்று விளங்கினான். நல்ல முறையில் அரசாட்சியைச் செய்தான். இவன் ஒற்றுடல் முதலியவைகளில் வல்லவனாய் நாட்டில் நிகழுஞ் செயல்களை யெல்லாம் உணர்ந்து அதற்குத் தக்க முறையில் அரசாட்சியைச் செய்தான். நக்கீரனார், இடைக்காடனார், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார், பேரி சாத்தனார், ஆலூர் மூலங்கிழார் முதலிய புலவர் பெருமக்கள் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

**நன்னன்** - இவனைப் பெண் கொலை புரிந்த நன்னன் என்பர். இவன் மிகக் கொடியவன். தனக்குரிய மாமரம்' ஒன்றின் காயைத் தின்றதற்காக மங்கை யொருத்தியைக் கொலை செய்யச் செய்தான். அம் மங்கையை ஈன்றோன் அவள் நிறைக்கு ஏற்ற பொன்னும் எண்பத்தொரு யானைகளையும் தருவதாகக் கூறியும் இப் பொல்லாதவன் சிறிதும் உள்ளம் இரங்கவில்லை. அம் மங்கையைக் கொன்றே சினந் தணிந்தான். இவன் வேள்மான் என்பவனுடைய தந்தை என்பர்.

**நன்னைய பட்டர்** - தெலுங்குப் புலவர்களில் ஒருவர். கி. பி. பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர். கண்ணுவ ரிஷி எழுதிய இலக்கணத்தைச் சுருக்கி யெழுதியதுடன் பாரதத்தைத் தெலுங்கிலும் மொழி பெயர்த்தார்.

**நாகபிலம்** - இதனை ஆடகேச்சுரம் எனவுங் கூறுவர். இக் கோயில் திருவாரூரில் புற்றிடங் கொண்டார் கோயிலுக்குத் தென்கீழ்த் திக்கில் இருக்கின்றது. இதனில் எழுந்தருளியுள்ள ஆடகேசுரரை வழிபட்டு நிலவுலகிலுள்ளார் அனைவரும் இங்குள்ள நாகபிலம் என்னும் பிலத் துவாரத்தின் வழியே புகுந்து சுவர்க்கத்தை யடைந்துகொண்டிருந்தார்கள். அவ்வுலகில் இடமில்லாமற் போனதை உணர்ந்த இந்திரன் அரதனசிருங்கம் என்னும் மலையொன்றாற் பிலத்தை அடைத்து விட்டான்.

**நாகம நாய்க்கன்** - இவன் விசய நகர மன்னனுடைய படைத் தலைவனாக இருந்தான். அந் நாளையில் பாண்டி நாட்டைச் சந்திரசேகர பாண்டியன் என்பவன் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். வீரசேகர சோழன் என்பவன் பாண்டி நாட்டின் மீது படையெடுத்துச் சென்று அந் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். பாண்டியனும் அவனுடைய மகனும் விசய நகர மன்னனிடம் போய்த் தங்கட்குதவி புரியுமாறு வேண்டிக் கொண்டனர். விசயநகர மன்னன் தன்னுடைய படைத் தலைவனாகிய இவனிடம் படையையுங் கொடுத்துப் பாண்டிய நாட்டை மீட்டுப் பாண்டியனிடங் கொடுக்குமாறு கட்டளை யிட்டான். ஆனால் பாண்டி நாட்டைச் சோழனிடமிருந்து மீட்ட இவன் தன்னுடைய அரசன் கட்டளைப்படி தானே அரசாட்சி செய்யத் தொடங்கினான்.

**நாகனூர்** - இவர் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்பு சோழவள நாட்டில் வெள்ளைக்குடி என்னும் ஊரில் சிறந்து விளங்கியிருந்தார். அதனால் வெள்ளைக்குடிநாகனார் எனவுங் கூறுவர். இவர் பல நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தவர்; நிறைந்த புலமையுடையவர். இவர் மறவர் மரபினர் என்ப. நல்ல சீலம் உள்ளவர்; சொல் வன்மையிற் சிறந்தவர். யாருக்கும் அறநெறியை இவர் உறுதி

பெறக் கூறுவார். இவர் சிறந்த புலவராகவிருந்தும் பரிசில் வாழ்க்கையை மேற்கொள்ள வில்லை. உழவுத் தொழிலை மேற்கொண்டு வாழ்க்கையை நடத்தினர். ஒரு காலத்தில் மழையில்லாதபடியால் நாட்டிலே நில வளங் குறைந்தது. மக்கள் நிலவரி கொடுக்க முடியாமல் நிலை கலங்கினர். அச்சமயத்தில் அரசு புரிந்திருந்த குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்னும் சோழ மன்னனிடம் இவர் சென்று நாட்டின் நிலையை எடுத்துக் கூறினர். இவர் கூறியதைக் கேட்ட மன்னன் மகிழ்ச்சி கொண்டான். மழை பெய்து நாடு வளம் பெறும் வரையில் நிலவரி வாங்காமல் நிறுத்தினன். இவருடைய அறிவுடைமை அரசனுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தபடியால் இவரையே அமைச்சராகக் கொண்டு ஆட்சியை நடத்தலானன். இவரும் சிறந்த நிலையை அடைந்து விளங்கினர்.

**நாகன்**-பொத்தப்பி நாட்டிலுள்ள உடுப்பூரில் வேடர் குலத்தினருக்குத் தலைவனக இருந்தவன். இவனுடைய மனைவியின் பெயர் தத்தை. கண்ணப்ப நாயனர் இந்த நாகனுக்குப் பிள்ளையாய்த் தோன்றினர்.

**நாகார்ச்சுன கொண்டா** - இக்கிராமம் குண்டூர் மாவட்டத்தில் பல்நாடு தாலுக்காவில் கிருட்டிண ஆற்றின் கரையில் உள்ளது. அங்கு வாழ்ந்திருந்த பௌத்த போதகரான நாகார்ச்சுனருடைய பெயரைப் பெற்றது. ஒரு காலத்தில் இது பௌத்த மத நிலையமாக இருந்திருக்கின்றது. இங்கே பௌத்த தூபிகள், மடங்கள் முதலியவைகளின் சிதைவுகள் உள்ளன. அங்கு பொருந்திய எழுத்துக்களில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இட்சுவாகு அரச அரசிகள் தூபிகளுக்கு நன்கொடை வழங்கிய செய்திகளைக் குறிப்பிடுகின்றன. அவர்கள் வாழ்ந்த அரண்மனையும், ஆற்றில் படகுகள் வந்து தங்கிய துறையும் உள்ளன. அங்குள்ள சிற்பங்கள் (கி. பி. 3 ஆம் நூற்றுண்டு) இட்சுவாகு அரச வமிசத்தாருடைய சிற்பச் சிறப்பை விளக்குவனவாக அமைந்துள்ளன. இந்த இடத்திலுள்ள தொல் பொருளியற் பொருட்களை எடுத்துப் பொருட்காட்சிசாலையில்வைத்து விட்டு, "நாகார்ச்சுன சாகர்" என்ற நீர்த்தேக்கம் அமைக்கும் பணி 1955 இல் துவங்கி நிகழ்ந்து வருகின்றது.

**நாகார்ச்சுனர்** - சாதவாகன அரசர் கௌதம புத்தரின் (166 - 196) சம காலத்தவராகிய இவர் புகழ் மிகவும் வாய்ந்த பௌத்தசமயதத்துவப் பேரறிஞர். மாத்தியாமிக (சூனிய வாதம்) பௌத்த தத்துவத்தையும், பௌத்த தத்துவத் துறையில் புதிய காலத்தையும் உண்டாக்கியவர். இவர் இரண்டாம் நூற்றுண்டின் தலைசிறந்த தத்துவ ஞானியாகவும் பேரறிஞராகவும் கவிஞர் திலகமாவும் விளங்கியவர். தென்னிந்தியாவில் அந்தணர் குலத்தில் தோன்றிய இவர், பௌத்த மறையாகிய திரிபிடகம் முழுவதையும் 90 நாட்களில் பயின்றதாகக் கூறுப. இவரைப் "பிற்கால பௌத்தத்தின் அதிசயங்களில் ஒன்று" என்று டி வாட்டர்ஸ் (T. Watters) என்னும் அறிஞர் குறிப்பிடுகின்றார்.

**நாகானந்தம்** - அருளைப் புலப்படுத்துதலையேபயனக நினைந்து அர்ஷகவி என்பவரால் செய்

யப்பட்ட நாடகக் கிரந்தம். சீமூதவாகனன் என்பவனுடைய வரலாறாகவுள்ளது. இவனுடைய பிறப்பைக் கௌதம புத்தருடைய பழம் பிறப்புக்களுள் ஒன்றென்று கூறுவர்.

**நாகேசுவரர்** - இது சோதிலிங்கங்களில் ஒன்று. தாருகாவனத்தில் இருக்கிறது. சுப்பிரியன் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் கப்பற் பயணஞ் செய்துகொண்டிருக்கும்போது, ஓர் அரக்கன் கப்பலிற் புகுந்தான். எல்லாரையுந் துன்புறுத்திச் சிறையில் வைத்தான். சுப்பிரியன் சிவபக்தன். அவன் சிறையில் இருந்தபடியே சிவபெருமானை எண்ணி வழிபட்டான். சிவபெருமான் சோதிர்லிங்கமாக அவனுக்குக் காட்சி கொடுத்தார். பாசுபதக்கணையைத் தந்து அதனால் அரக்கனை வதைத்து எல்லாரையுங் காப்பாற்றுமாறு கூறினார். அவர் மறைந்ததும் சுப்பிரியன் அரக்கனோடு கடும்போர் செய்தான். அவனைக் கொன்று எல்லோரையுங் காப்பாற்றினான். சிவபெருமானுடைய கட்டளைப்படி அவ்விலிங்கம் நாகேசுவரர் என்னும் பெயரோடு தாருகாவனத்தில் அமைக்கப் பட்டது.

**நாகைக்காத்தான்** - இவன் சோழவளநாட்டிலே நாகபட்டினத்தில் இருந்த ஒரு செல்வன். இவன் வறியவர்கட்கும் புலவர்கட்கும் பொருள் வழங்கியதன்றி உணவிடும் அறச்சாலையொன்றை நாகபட்டினத்தில் அமைத்து அங்கு உணவிடுவதற்கும் ஏற்பாடு செய்திருந்தான். காளமேகப் புலவர் நாகைக்குச் சென்றபொழுது இவனுடைய அறச்சாலைக்குச் சாப்பிடச் சென்றார். உரிய வேளையில் உணவு கிடைக்கவில்லை. மாலைநேரத்தில் சாப்பாடு கிடைத்தது. இதனால் வெறுப்படைந்த காளமேகப் புலவர், "கத்துகடல் சூழ் நாகைக் காத்தான்றன் சத்திரத்தில், அத்தமிக்கும் போதில் அரிசி வரும்-குத்தி, உலையிலிட ஊருறங்கும் ஓரகப்பையன்னம், இலையிலிட வெள்ளியெழும்" என்று ஒரு செய்யுள் பாடினார். இவன்மீது ஒரு பெண்பாற் புலவர் "வருணகுலாதித்தன் மடல்" என்னும் நூல் ஒன்று பாடியிருப்பதாகக் கூறுகின்றனர்.

**நாகைக்காரோணம்** - இந்நாளில் சோழவளநாட்டில் நாகபட்டினம் என வழங்கும் தலமிது. ஆதிசேடனாகிய நாகம் பூசித்தபடியால் நாகபட்டினம் எனப் பெயர் பெற்றது. புண்டரீக முனிவர் என்பவரை இறைவர் தம்முடைய திருமேனியோடு ஒன்றுபடுத்திக் கொண்டபடியால் காயாரோகணம் என்னும் ஒரு பெயரையும் இப்பதி பெற்றுள்ளது. காயம்-உடம்பு. ஆரோகணம்- ஏற்றுக்கொள்ளுதல். இப்பெயர்கள் இரண்டும் ஒன்றுபட்டு நாகைக் காரோணம் என மருவி நிற்கிறது.

**நாஞ்சின்மலை** - மலைநாட்டு மலைகளுள் ஒன்று. சேரனுக்குப் படைத் துணையாக நின்றவனும் மிகுந்த வண்மையுடையவனுமாகிய நாஞ்சில்வள்ளுவன் என்பவன் ஒரு காலத்தில் இம்மலைக்குத் தலைவனாக இருந்தான் என்று புறநானூற்றால் தெரிகிறது.

**நாஞ்சில் வள்ளுவன்** - நாஞ்சில் மலையும் அதன் அடிப்பகுதியில் உள்ள நாஞ்சில் நாடும் இவ்வள்ளுவனுக் குரியவை. இவன் சேரமன்னர்க்குக் கீழிருந்து வாழ்ந்த சிற்றரசன். இவன் முன்னோர் எப்போரினும்

புறங்கொடாமற் புகழ் பெற்றவர்கள். இவனுக்குத் தலைவனாக விருந்த சேரன் இவன்பால் பெருமதிப்பும் பேரன்பும் உடையவனாக இருந்தான். ஒரு கால் ஔவையார் இவன்பாற் சிறிது துவரை கேட்க ஔவையாருடைய பெருமையை உணர்ந்த இவன் தன்னுடைய பெருமைக்கும் ஏற்க யானையின் மீது துவரையை ஏற்றி யனுப்பினான். இவனை ஒரு சிறைப் பெரியனார், மருதனிளநாகனார் ஔவையார் முதலியோர் புகழ்ந்து பாடி யுள்ளனர். இப்பொழுதுள்ள நாகர்கோவிலைச் சூழ்ந்துள்ள நாடு நாஞ்சில் நாடு என வழங்கப் படுகிறது.

**நாதமுனிகள்** - ஆசாரிய வழி முறைக்கு இவரே முதல்வர். நாதன் என்பது இவருடைய இடுகுறிப் பெயர். நம்மாழ்வாரால் தமக்கு அருளிச் செய்யப் பட்ட அர்த்தங்களை எப்பொழுதும் மனனஞ் செய்து கொண்டிருந்த படியினால் நாதமுனிகள் என்று பெயர் பெற்றார். முனி - என்பதற்குப் பொருள் மனனசீலர் என்பது. யோக வழியினால் நம்மாழ்வாரை நேரிற் கண்டு திருவாய்மொழி முதலான திவ்யபிரபந்தங்களை அவரிடம் பெற்று அவற்றை இயலும் இசையுமாக வகுத்து உலகத்தில் பரவச் செய்தவர். திருவாய்மொழிக்குப் "பக்தாம்ருதம்" என்னுந் தனியனை அருளிச் செய்தவர். இவர் காட்டுமன்னார் கோயிலிற் பிறந்தார். நியாய தத்வம், யோக ரகசியம், புருட நிர்ணயம் என்பன இவர் அருளிச் செய்த நூல்கள்.

**நாதன்கோயில்** - இதனுடைய பழைய பெயர் நந்திபுர விண்ணகரம்என்பது. கும்பகோணத்திற்குத் தென்மேற்கில் மூன்று மைல் தொலைவில் திருமலைராசன் வாய்க்காலுக் கருகில் அமைந்திருக்கிறது. இது முன்னாளில் நந்திபுரம் என்ற பெயரில் பல்லவ மன்னர்களின் தலைநகராக இருந்தது. பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகிய திருமங்கை மன்னன் இவ்வூரையும் கடவுளையும் பற்றிப் பத்துப் பாடல்கள் பாடியிருக்கிறார்.

**நார்ந்தகன்** - உறையூரிலிருந்து அரசு புரிந்த ஒரு சோழமன்னன். படைக் கலப் பயிற்சியிலும் குதிரையேற்றத்திலும் இவன் சிறந்து விளங்கினான். இவனிடம் ஆண்மையிருந்ததாயினும் அமைதியும் அறிவும் இல்லை. முன் சினம் உள்ளவன். பல போர் முனைகளிலுஞ் சென்று வெற்றி பெற்றுவந்தவனாகையால் எங்குந் தனக்கு நிகரில்லை யென்று இறுமாந்திருந்தான். அரசனாக இருந்தும் பலரையும்இகழ்ந்துகூறும் புன்மைக் குணம் இவனிடம் மிகுதியாக அமைந்திருந்தது. எதனையும் நன்கு ஆராய்ந்து பாராமல் செய்யத் தொடங்கிப் பிறகு சிக்கிக்கொண்டு விழிப்பான். அறிவுடையவர்களை விட ஆண்மை யுடையவர்களையே இவன் மிகுதியாகப் பாராட்டினான். இவன் காலத்தில் மதுரையில் சுந்தரசேகர பாண்டியன் என்பவன் அரசு செய்து கொண்டிருந்தான். அவன் நல்ல நீதிமான். கல்வியிலும் அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கினான். ஆலவாய்க் கடவுளிடத்தில் பேரன்புடையவனாகப் பிறங்கியிருந்தான். அப்பாண்டியன் போரில் நாட்டங் கொண்டு படைகளை மிகுதியாகத் திரட்டி வைக்காமல் இறைவன் திருப்பணிகளையே மிகுதியாகச் செய்து கொண்டிருந்தான். அவ

னிடம் படைவலி மிகுதியாக இல்லை என்பதை உணர்ந்து கொண்டஇவன் அவனைவெற்றி கொள்ள வேண்டுமென்று முடிவு செய்தான். படைகளைத் திரட்டிக் கொண்டு போருக்குச் சென்றான். இறையருளையே நம்பியிருந்த அவனுக்கு இறைவர் துணைவந்தார். இறைவரே துணைவந்தால் பிறகு எவ்வாறு வெற்றி யுண்டாகும்? அக்கடவுள் இவனை மடுவொன்றில் வீழ்த்திவிட்டார்.

**நாராயண தீர்த்தர்** - பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த கண்ணன் அடியார்களில் ஒருவர். இவர் சமக்கிருதத்தில் இயற்றியுள்ள "கிருட்டிணலீலாதரங்கிணி" என்னும் இசை நாடகம் மிகவும் புகழ்வாய்ந்தது. இதிலுள்ள பாட்டுக்கள் பாட்டுக் கச்சேரிகளிலும் பசனைகளிலும் பாடப்படுகின்றன. இவர் தஞ்சையில் தெலுங்கு அந்தண குலத்தில் பிறந்தவர். பாகவதத்தை ஊக்கமுடன் பயின்று வந்தமையாலும் சயதேவருடைய அட்டபதிகளைப் பாடி வந்தமையாலும் இவருக்குக் கண்ணன்மீது அன்பு வேரூன்றியது. வரகூரில் இருந்து நான்கு கல்லுக்கப்பாலுள்ள திருப்பூந்துருத்தியில் இவர் சித்தியடைந்தார்.

**நாராயணன்**-(1) என்னுஞ் சொல், நார அயந எனப் பிரிந்து படைப்புப் பொருள்களுக்கெல்லாம் இருப்பிடமானவன் என்றும் படைப்புப் பொருள்களைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டவனென்றும் மற்றும் நீரில் (பாற்கடலில்) பள்ளி கொண்டிருப்பவனென்றும் பலவாறு பொருள் படும்.

**நாராயணன்**-(2) நாராயணன்என்பது திருமாலுக்கு ஒரு காரணப் பெயர். பெரும்பிரளயத்தில் எல்லாப் பொருள்களும் நீரிலொடுங்கியபோது அதனையிடமாகக் கொண்டு திருமால் எல்லாவற்றையும் தோற்றுவித்தாரென்பது மறைமுடிவு. ஆகவே திருமாலுக்கு நாராயணன் என்று சிறப்புப் பெயர் உண்டாகியது. நாரம்-நீர்; அயநம்-இடம். இந்த நாராயண பதம் சிவனுக்கும் வழங்கும். உலகம் அப்புவில் ஒடுங்கிய கற்பத்திலே அதனை மீளவுந் தோற்றுவித்த பரப்பிரமத்தினது ஆண் கூறே நாராயணன் எனப் பட்டது.

**நார்த்தாமலை** - தொண்டைமான் புதுக்கோட்டை நாட்டில் உள்ள ஒரு சிறு மலை. காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து புறப்பட்டுத் தெற்கே வந்த நாட்டுக் கோட்டை நகரத்தார் முதலில் தங்கிய இந்த இடம் முதலில் நகரத்தார் மலை என வழங்கிப் பின் நார்த்தாமலையெனத்திரிந்ததென்பர். நாரதர் சிலநாள் தங்கியிருந்த இடமெனவுஞ் சிலர் கூறுவர்.

**நாலை கிழவன் நாகன்** - நாலையென்பது பாண்டி நாட்டிலுள்ள நாலூர். இந்நாலூர் அருப்புக்கோட்டை நாட்டில் உள்ளது. நாலையென்னும் ஊருக்குரியவன் நாலைகிழான் என்று குறிக்கப்பட்டான். இவன் பாண்டி மன்னனுக்குத் துணையாக நின்று படை வேண்டும் பொழுது படைத்துணை புரிந்தும் மற்றும்ஆக வேண்டிய காரியங்களைச் செய்தும் உதவி செய்தான். இதனால் இவனுக்கு மிகுந்த செல்வமுண்டாகியது. அதனைப் பரிசிலர்க்கு நல்கிப் புகழ் பெற்றான். இவன் காலத்தில் இருந்த பாண்டிய மன்னன் பெயர் தெரிய வில்லை. இவனை வடநெடுந்தத்தனார் என்னும் புலவர் பாடியிருக்கிறார்.

**நாளங்காடிப்பூதம்**-முசுகுந்தனுக்கு மெய்க்காவலாகுமாறு இந்திரனால் கொடுக்கப்பட்ட வலிய பூதம். இது பூம்புகார் நகரத்தில் மருவூர்ப்பாக்கம் பட்டினப்பாக்கம் என்ற இரண்டு இடங்கட்கும் இடையே இருந்த பகற்காலக் கடைத்தெருவில் இருந்து தன்னுடைய வேலையைச் செய்து கொண்டிருந்தது. இஃது இருந்த காலம் மணிமேகலை வாழ்ந்த காலமாகும். புகார் நகரில் இந்திர விழாச் செய்யப்படாவிட்டால் இப்பூதம் சினந்து தொல்லையை உண்டு செய்யும் என்று அக்காலத்து மக்கள் நம்பினர்.

**நாளந்தா** - பண்டைக் காலப் புகழ்பெற்ற பௌத்தக் கல்வி மையமாக விளங்கிய இது பீகார் மாகாணத்தில் இராசக்கிருகத்துக்கு எட்டுக்கல் தொலைவில் இருக்கின்றது. நரசிம்மபாலாதித்தியர் (467-473) இதைநிறுவியவர். ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் (630-655)இந்தியாவுக்கு வந்து சென்ற சீனயாத்திரிகர் ஹியூன் சாங்நாளந்தாப்பல்கலைக்கழகத்தையும்விகாரைகளையும்பற்றிப் புகழ்ந்து வரைந்துள்ளார். நரசிம்மபாலாதித்தியஅரசரால் கட்டப் பெற்ற 300 அடி உயரத்திற்கு மேற்பட்ட பெரிய செங்கற் கோவிலைப் பற்றி விளக்கமாக வரைந்துள்ளார். மகாயானபௌத்தத்தின் ஆதரவாளர்களான பால அரசர்களின் (8-12நூ.) கொடையும் ஆதரவுமே நாளந்தாவின் மேன்மைக்கு முதன்மையான காரணம் என்பர். நாளந்தாச் சிற்பங்களும் வெண்கலச் சிலைகளும்பாலமரபைச்சேர்ந்தவை.

**நான்மாடக்கூடல்** - மதுரைமாநகரின் பெயர்களில் ஒன்று. வருணன் சினங்கொண்டு மதுரை நகரின்மீது ஏவிய மேகங்கள் அளவுகடந்து மழை பொழிந்தன. அதனால்நகருக்கு அழிவுண்டாகும்போல் தெரிந்தது. மழையைத் தடுத்தருளுமாறு பாண்டியன் சோமசுந்தரக்கடவுளை வேண்டிக் கொண்டான். சிவபிரான்தம்மிடமிருந்த மூகில்களை நான்கு மூலைகளினும் அனுப்பி நீரைப் பருகி மழையைத் தடுக்க ஏவினார். அதனால் இப்பெயர் உண்டாகியது.

**நிசாகரர்** - விந்தியமலையை இருப்பிடமாகக் கொண்ட ஒரு முனிவர். இவருடைய இருப்பிடத்தில் கதிரவனைக் காணப் பறந்துசென்றசம்பாதிஇறக்கைகள் கருகி விழுந்தான். இவர் கண்டு சம்பாதியிடம் அருள் கொண்டார். இராமதூதனாகிய அநுமானுக்குச்சீதையை இராவணன் கொண்டுசென்ற வழிகூறினால்இறக்கைமுளைக்குமென்று அருள்புரிந்தார்.

**நிசும்பசூதனி** - தஞ்சையைத் தலைநகராகக் கொண்டசோழர்களில் முதல்வனாகிய பரகேசரி வர்மன்விசயாலயசோழதேவன் என்பவன் தஞ்சையிலே துர்க்கைக்கு ஒருகோயில்கட்டினான். அக்கோயிலில் எழுந்தருளிய துர்க்கைக்கு இப்பெயர் வழங்கியது.

**நிடதநாடு**- மேருமலையின்தெற்குப் பக்கத்தில் முன்னாளில் சிறந்து விளங்கியது. குலமலைகள் எட்டனுள் நிடதமலை இதன்கண் நிலைபெற்றுநின்றபடியால் இது நிடதநாடு என்னும் பெயரையடைந்தது. நளனும் அவனுடைய முன்னோர் பின்னோர்களும் இந்நாட்டைத்தான் அரசாட்சி புரிந்தனர். மாவிந்தம் என்பது இந்நாட்டிற்குத் தலைநகராக அமைந்து நின்றது.

**நிதநாசுரன்** - இவன் ஓர் அசுரன். இவன் உலகங்களையெல்லாம்

உண்டு உயிர்களையெல்லாம் வருத்தினான். நான்முகன் முதலியதேவர்கள் இவனுடைய துன்பம் பொறுக்க முடியாமல் சிவபிரானிடம் முறையிட்டனர். சிவபிரான் இவன் மீது ஓர் அம்பைச் செலுத்தினார்; அவ்வம்பு இவனுடைய உயிரை உண்டது.

**நித்தியசூரிகள்**-திருவைகுந்தத்தில் பரமபதநாதனைப்போல் சாரூபமடைந்து நித்தியானந்த வாசிகளாய் எழுந்தருளியிருக்கும் வீடுபேற்றிற்குரியோர். அவர்கள் சேனைமுதலியார், குமுதர், குமுதாட்சர், புண்டரீகர், வாமனர், சங்குகர்ணர், சர்ப்பநேத்திரர், சுமுகர், சுப்பிரதிஷ்டர், சண்டர், பிரசண்டர், பத்திரர், சுபத்திரர், ஜயர், விஜயர், தாத்ரு, விதாத்ரு, பிரப்புருதி முதலியோராவர்.

**நித்தியநாதன்**-இவன்ஓர் அரசன். முக்காலமும் உணர்ந்தவன். அடுத்துவரும் பிறப்பில் தன்னுடைய பிறப்பொழியுமென்றுணர்ந்து தவஞ் செய்தான். அப்பொழுது முருகக்கடவுள், ''குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'' என்றதற்கேற்பக் குருவாக வந்து அருள்புரிந்தார். அதனால் வீடுபேற்றை யடைந்தான்.

**நித்திலக்கோவை** - நல்ல முத்தாற் செய்யப்பட்டமாலையைப்போல் ஒரேதன்மையாகவமைந்த ஓலிநயமும் தெள்ளியநடையோட்டமும் உள்ள அகநானூற்றின் இறுதி நூறுபாடல்கள் இப்பெயரால்வழங்கப்படுகின்றன.

**நிம்பராசு** - தேவதைடணம் என்னுஞ்சிற்றூரில்கணக்கப்பிள்ளையாகவாழ்க்கைநடத்திக்கொண்டிருந்தவர். பிறகு கணக்குவேலையை ஒழித்துவிட்டுக் குடும்பத்தோடு புனித நீர்ப் பயணஞ்செய்தார். தாம்இசைப் பாடல்களை இயற்றுவதற்கு விருப்பங்கொண்டார். பகவான் ஆனைமுகக்கடவுள் வழியாக இவருக்கு அருள்புரிந்தார். அதனால் இவர் பல இசைப்பாடல்களைப்பாடினார். இவருடைய இசைப்பாடல்களைக் கேட்ட மகிழ்ச்சியால் பெருமாள் இவருடைய களைப்பொழித்தற்காகச் சாமரை வீசினார்.

**நிம்மவ்வை** - இவள் வீரசைவ ஒழுக்கத்தை மேற்கொண்டவள். இவள் புதலையென்கிற ஊரில் சிவனடியவர்கட்குப்பணி செய்து கொண்டு தன் மகன் மாடு மேய்ப்பதால் வருங்கூலியைக் கொண்டு சிவனடியவர்கட்கு உணவிட்டு வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தாள். இவ்வாறிருக்குங் காலத்தில் திருக்கைலையில் சிறுத்தொண்ட நாயனார் நாம்செயற்கருஞ் செயலைச்செய்து வீடுபேற்றை யடைந்தோமென்று இறுமாப்புக் கொண்டிருந்தார். இதனையுணர்ந்த சிவபிரான் சிறுத்தொண்டருடைய இறுமாப்பை யடக்க வேண்டுமென்று எண்ணினார். சிறுத்தொண்டரைச் சீடராக்கிக் கொண்டு சிவனடியார் கோலத்தோடு நிம்மவ்வையின் வீட்டிற்கு வந்தார். நிம்மவ்வைஎதிர்கொண்டுபோற்றினாள். உணவளித்தற்பொருட்டுச்சமையல் முதலியவைகளைச் செய்து முடித்து விட்டுத் தண்ணீர்எடுத்துவரச்சென்றாள். சென்றவள் வருவதற்கு முன் இவளுடைய மகன் அங்கிருந்த அதிரசம் ஒன்றைஎடுத்துச்சாப்பிட்டான். இதனையறிந்த தாய் அங்கிருந்தஉலக்கையைஎடுத்து அவனை யடித்தாள். அதனால் அவன் மாண்டான். பிறகு அவன்தொட்ட சிற்றுண்டிகளை யெறிந்துவிட்டு வீடு முதலியவைகளை மெழுகி வேறு சிற்றுண்டிகள் உணவு முதலியனவு

களைச்செய்து முடித்தாள். சிவனடியாரை உணவு கொள்ளக் கூப்பிட்டாள். சங்கமர் "உன்னுடைய மகன் எங்கே?" என்று உசாவினர். இவள் அவன் செய்த தீமையைக் கூறினள். "தாங்கள் உணவருந்த வேண்டும்" என்றுகூறி வேண்டினள். சிவனடியாராகிய சிவபிரான் சிறுவனையெழுப்பித் தாயிடம் அனுப்பினர். இவள் சிவபிரானைப்பார்த்து, "இவன் சிவனடியவர்கட்குத்தீமைசெய்தவன்; நான் இவனுடைய முகத்தைப்பார்க்க மாட்டேன்" என்று கூறிவிட்டாள். இதனைக் கண்டசிறுத்தொண்டர் திகைத்துப்போனர். சிவபிரான் தாய்க்குஞ் சேய்க்கும் வீடுபேற்றை வழங்கினர்.

**நியோசிகை** - இவள் ஒரு தீய தேவதை. பிறன்மனைவி பிறன் பொருள் முதலியவைகளைக் கைப்பற்றுவதற்குத் தூண்டுபவள். இவளுக்கு மத்தை, உன்மத்தை, பிரகிருட்டை, நாரி எனப்பெயர்களுடைய நான்கு பெண்கள் இருக்கிறர்கள். இல்லறத்தார் தம்முடையபாட்டன் பூட்டன் முதலியவர்கட்குப்பலி கொடுக்காவிட்டால் இவர்கள் அவர்களுடைய செல்வங்களைக் கெடுப்பார்கள்.

**நிரம்பை** - கொங்குநாட்டில் விசயமங்கலத்திற்குப் பக்கத்தில் இருந்த ஓர் ஊர். இவ்வூர்சிலப்பதிகார உரையாசிரியரான அடியார்க்கு நல்லாருடைய ஊர் என்பர்.

**நிருகன்** - கதிரவகுல மன்னனாகிய இவன் வெகுகாலத்திற்குமுன்பு அரசுசெய்துகொண்டிருந்தான். இவனுடைய தந்தையின் பெயர் வசுதரன். இவன் கல்வியறிவுடையவனுகவுஞ் சிறந்த கொடையாளனுகவுந் திகழ்ந்தான். இவனுடைய மனைவியின் பெயர் சயமதி. அவள் அழகுடையவளாகத் திகழ்ந்தாள். இவன் அவளுடைய மையலில் அளவுகடந்து படிந்தான். அரசியற் காரியங்களையெல்லாம் ஒழுங்காகச்செய்யாமல் அப்படி அப்படியே விட்டிருந்தான். ஒருநாள் அந்தணர் இருவர் இம்மன்னனிடம்வழக்கு ஒன்றைத் தீர்த்துக்கொள்வதற்காகவந்தனர். அரசனை எப்படியாவது பார்த்து முறையிடுவதென்று சிலநாட்கள் காத்திருந்தனர். எத்தகைய பயனும் ஏற்படவில்லை. சினங்கொண்ட அவர்கள் அரசன் ஓந்தியாகுமாறு வசவுரை வழங்கிவிட்டுச் சென்றனர். அவர்களுடைய வாக்குப் பலிதவாக்காகையால் அரசன் பச்சோந்தியாகி இழிந்தொழிந்தான்.

**நிருபதுங்கவர்மன்**-இராட்டிரகூட அரசன் மகளாகிய சங்கை என்பவளைத்தெள்ளாறெறிந்த நந்திவர்மன் திருமணஞ் செய்துகொண்டான். அச்சங்கை என்னும் மங்கையிடத்தில் தோன்றியவன்.

**நிருபதுங்கன்** - இவன் காஞ்சியில் அரசாண்டிருந்தவன். விசயாலயன் என்பவனும் இவனுஞ் சேர்ந்து பாண்டியன் ஒருவன் மீது படையெடுத்துச் சென்றனர்.

**நிரோட்டகம்** - நிரோட்டகம் என்பது உதடுகளின் முயற்சியாற் பிறக்கும் ப ம வ என்னும் மெய்களும் உயிரெழுத்துக்களும் வராமல் பாடுவது. ஓட்டம் - உதடு. உதடு ஒன்றையொன்று தொடாமல் பாடுவதால் இதழகல் எனவுங் கூறப்பெறும். நிரோட்டகச் செய்யுள் பாடுவது பேரறிஞர்களாக விளங்கும் புலவர்களுக்கே இயல்வதாகும். போலிப்புலவர்கள்

நிரோட்டகம் பாடுவது இய லாது.

**நிர்வாணதூபி** - வடநாட்டில் குசி நகரம் என்னும் பெயருள்ள நகரம் ஒன்று இருக்கிறது. இப் பொழுது இதைக்களியா என்று அழைக்கிறார்கள். இங்குத்தேக்கு மரத்தோப்பு ஒன்றில் புத்தர்தம் முடைய எண்பதாம் ஆண்டில் வீடுபேற்றை யடைந்ததாக எண்ணுகிறார்கள். இந்நிகழ்ச் சியின் நினைவாக இங்குச் செங் கற்களால் கட்டப்பட்ட நிர் வாணதூபி என்று பெயருள்ள பௌத்தத்தூபி ஒன்று அகழ் வாராய்ச்சி மூலம் 1876 இல் வெளியாயிற்று. இங்கு தொடர்ந்து நிகழ்ந்த அகழ் வாராய்ச்சியின் மூலம்தூபியின் உள்ளிருந்து தாமிரத்தகட்டில் செதுக்கப்பட்டும் மையினால் எழுதப்பட்டும் இருந்த 'நிதான சூத்ரம்' என்னும் ஒரு பௌத்த சமய நூலின் பகுதியைக் கண்டு பிடித்தார்கள். இதன்எழுத்து குப்தர்காலத்தது என்று கூற லாம். இங்குப் பல பௌத்த மடாலயங்களும் கண்டு பிடிக் கப்பட்டுள்ளன.

**நிலாத் திங்கள் துண்டம்** - காஞ்சி புரத்தில் ஏகாம்பரநாதர் கோவிலுக்குள் உள்ள திருமால் கோயில். சுவாமிபெயர் நிலாத் திங்கள் துண்டத்தான். பிராட் டியார் பெயர் நேர் ஒருவர் இல்லாவல்லி. மேற்குப்பார்த்த பெருமாள்நின்ற திருக்கோலம். இப்பெருமாளைத் திருமங்கை யாழ்வார் பாடியிருக்கிறார்.

**நிவாதகவசர்** - எப்பொழுதும் நீங்காத கவசத்தைப் பெற்ற வர்கள். இவர்கள் பிரகலாதன் வழிமுறையில் தோன்றிய அசு ரர்கள். இவர்கள் மூன்று கோடிப்பேர். இவர்களுடைய இருப்பிடம் மேற்குக் கடலுக்கு அண்மையில் உள்ள தோயமா புரம். இயமனை நோக்கித் தவம் புரிந்து சிறந்த வரங்களைப் பெற்றவர்கள். இராவணன் திக்குகள்தோறுஞ் சுற்றிக் கொண்டு வருகையில் நான்முக னுடைய சொற்படி இவர்களை நட்புக்கொண்டு இவர் களுடைய பட்டணத்தில் 99 திங்கள் தங்கியிருந்தான். இவர் கள் தேவர்களைத் துன்புறுத்திக் கொண்டிருந்தார்கள். அருச் சுனன் சிவபிரானைக் குறித்துத் தவஞ் செய்து பாசுபதக்கணை பெற்றதையறிந்த தேவர்கள் இந்திரனிடங் கூறினார்கள். இந்திரன் அருச்சுனனிடங் கூறி இவர்களோடு போர் செய்து கொல்லச் செய்தான். அதனால் அனைவரும் மாண்டொழிந்தார் கள்.

**நீகன்** - இவன் திங்கட்குல வேந்த னாகிய சுகுணனுடைய மகன். இவனுக்குக் கிருட்டிணராயன் எனவும் பெயர் உண்டு. இவன் தொண்டை நாட்டைத் தனக்கு உரிமையாகக் கொண்டு அர சாண்டு வந்தான். இவன் அர சாட்சி செய்து கொண்டிருக்கும் காலத்தில் சோமநாதன் என் னும் பெயருடைய வேதியன் ஒருவன் இவனிடம் வந்தான். தன்னுடைய மனைவியையும் புதல்வனையும் இவனுடைய பாதுகாப்பிலே வைத்து விட்டு அவன் புனிதநீராடச் சென்றான். நீகன் பார்ப்பனியையும் அவள் புதல்வனையும் ஓர் இல்லில் இருத்தி உணவுப்பொருள்க ளெல்லாம் வழங்கி வீட்டைப் பூட்டி வைத்தான். சிலநாள் சென்ற பிறகு மறதியினால் நீகன் பார்ப்பனியையும் அவள் மகனையும் முற்றிலும் மறந்து விட்டான். அவர்களிருவரும் உணவின்மையினால் மாண் டொழிந்தார்கள்; அதனால் இந்த நீகன் மிகுந்த தீவினைக் குள்ளானான். பலரும் இவ

னுடைய மறதியை இழித்துரைத்துப் பழித்தார்கள்.

நீடூர் - சோழவள நாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஒரு தேவாரம் பெற்ற சிவப்பதி. ஊழிக்காலத்திலும் அழியாது நீடியிருத்தலால் நீடூர் என்று பெயர் எய்தியது. வகுளாரணியம்,மகிழவனம் என்னும் பெயர்களும் இவ்வூர்க்குண்டு. சுவாமி பெயர் அருட் சோமநாதர்; அம்மையார் பெயர் வேயுறு தோளியம்மை. இவ்வூரில் ஒன்பது தீர்த்தங்கள் உண்டு. நீடூர் புகைவண்டி நிலையத்திலிருந்து ஒரு நாழிகை வழித் தொலைவில் உள்ளது.

நீட்டால வள்ளல் - இவனுடைய இடுகுறிப் பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவன் தொண்டைவள நாட்டில் நீட்டாலம் என்னும் ஊரிற் சிறந்த வள்ளலாக வாழ்ந்திருந்தபடியால் நீட்டாலவள்ளல் என்னுங் காரணப் பெயரே நீண்டு நின்றது. இவன் யார் எதனைக் கேட்டாலும் அதனைக் கொடுக்கிறது என்னும் உறுதி பூண்டு அவ்வாறே கொடுத்துக்கொண்டிருந்தான். ஒரு புலவன் இந் நீட்டால வள்ளலுடைய உண்மையை ஆராய்ந்து பார்க்க வேண்டுமென்று எண்ணினான். நீட்டாலவள்ளலிடம் வந்து சேர்ந்தான். வள்ளல் புலவனைப் பார்த்துத், "தங்கட்கு வேண்டியது யாது? எதனைக் கேட்டாலுங் கொடுக்கிறேன்" என்று சொன்னான். உடனே புலவன், "தங்களுடைய உயிரைத் தர வேண்டும்" என்று சொன்னான். அவ்வளவில் வள்ளலுடைய உயிர் போய் விட்டது. இதனைக் கண்ட புலவன் அந்தோ விளையாட்டு வினையாக முடிந்ததே என்று உள்ளங் கலங்கினான்.

நீமகன்-இவன் பாண்டிவள நாட்டில் வயனங்கோடு என்னும் ஊரில் பார்ப்பனமரபில் தோன்றியவன். செல்வத்தோடு சிறிது கல்வி நலமும் பெற்றிருந்தான். வாயாடுவதிலும் பிறர் குற்றங்களை யெடுத்துத்தூற்றுவதிலும் இவன் மிக வல்லவன். இவனை அறிஞர்கள் மதிப்பதில்லையாயினும் கல்வியறிவில்லாதவர்கள் பாராட்டிப் போற்றினார்கள். இவன் எப்பொழுதும் தன்னுடைய நலம் ஒன்றையே நாடி நிற்பான். தீயநெஞ்சினனாகிய இவன் அவ்வூரில் பூதி என்னும் வேதியன் வீட்டில் வளர்ந்த ஆபுத்திரனிடத்தில் நெருங்கிப் பழகினான். ஆபுத்திரன் மிகுந்த இரக்கமுடையவன். ஒரு சமயம் பார்ப்பனர் சிலர் அவ்வூரில் ஒன்றுகூடி வேள்வி ஒன்றை நடத்தியபொழுது உயிர்க் கொலை செய்யத் தொடங்கினார்கள். ஆபுத்திரன் இடையே புகுந்து "அவிசொரிந்தாயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத் துண்ணாமை நன்று" என்று கூறி வேள்வியில் உயிர்க் கொலை புரிதலைத் தடுத்தான். வேள்வியில் உயிர்க்கொலை செய்து ஊனுண்டு மகிழ்தலை விரும்பிய நீமகன் ஆபுத்திரனை இகழ்ந்து பேசினான். கூடியிருந்த அந்தணர்களைப் பார்த்து, "இவனுடைய தாய் வாரணாசியில் இருந்த ஆரண உவாத்தி என்னும் அந்தணனுடைய மனைவி; அவளுடைய பெயர் சாலி. அவள் ஒழுக்கங் கெட்ட நடத்தையுடையவளாக இருந்தபடியால் அவளுடைய கணவன் அவளை விலக்கி விட்டான். அவளுடைய மகன் தான் இவன்" என்று கூறிப்பலவாறு இகழ்ந்துரைத்தான். இவன் இவ்வளவு பொல்லாதவன் என்பதை ஆபுத்திரன் அன்றுதான் கண்டு தெளிந்தான்.

**நீலகண்ட சிவாச்சாரியார்** - இவர் கோகருணத்தில் பிறந்த தெலுங்கர். சைவ ஆகமமுதலிய நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர். பிரம சூத்திர பாடியத்திற்குச் சைவ விசிட்டாத்வைத பரமாகப் பாடியம் இயற்றியுள்ளார். அதற்கு நீலகண்ட பாடியம் என்று பெயர். இவர் சங்கரர் காலத்தில் வாழ்ந்திருந்தவர் என்று தெரிகிறது.

**நீலகண்ட தீட்சிதர்** - இவர் புகழ்பெற்ற அப்பைய தீட்சிதருடைய உடன் பிறந்தாரான ஆசா தீட்சிதர் என்பவருடைய பெயரர். பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவர். இவர் மதுரையில் திருமலை நாய்க்கரிடத்தில் வெகு காலம் அமைச்சராக இருந்தார். வடமொழியிற் சிறந்த அறிஞர். பல நூல்கள் எழுதியுள்ளார். இவர் திருமலை நாய்க்கரிடத்தில் அமைச்சராக விருந்தபோது திருமலை நாய்க்கர் தம்மைப் போலவும் தம்முடைய மனைவியைப் போலவும் இரண்டு சிலைகள் செய்து கையில் விளக்கு ஏந்திக் கொண்டிருக்கும் மாதிரியாக மீனாட்சிசுந்தரேசுவரருடைய திருக்கோயிலில் வைக்க வேண்டுமென்று நீலகண்ட தீட்சிதரிடஞ் சொன்னார். உடனே நீலகண்ட தீட்சிதர் சிற்பவேலைக்காரனை அழைப்பித்து நாய்க்கர் கூறியவாறே இரண்டு சிலைகளைச் செய்யுமாறு கட்டளையிட்டார். சிற்பவேலைக்காரன் திருமலை நாய்க்கருடைய சிலையை விரைவாகச் செய்து முடித்து விட்டான். அவருடைய மனைவியின் சிலையைச் செய்யும்போது அச்சிலையின் அடித்தொடையில் ஒரு பள்ளம் ஏற்பட்டு விட்டது. உடனே அதனைத் தள்ளி விட்டு வேறொரு சிலையைச் செய்தான். அதிலும் இவ்வாறே பள்ளம் ஏற்பட்டது. இவ்வாறு எத்தனை கற்களை எடுத்துச் செய்த போதினும் அப்பள்ளம் விழுந்துகொண்டேயிருந்தது. இதனால் அந்தச் சிற்பவேலைக்காரன் செய்வதறியாமல் திகைத்தான்.

ஒரு நாள் திருமலை நாய்க்கர் தீட்சிதரைக்கூப்பிட்டுச்சிலைகள் ஆய்விட்டனவா? என்று உசாவினார். தீட்சிதர் பார்த்து வருவதாகக் கூறிச் சிற்பியின் வீட்டிற்குச் சென்றார். சிற்பவேலைக்காரன் இவரைக் கண்டதும் வணங்கினான். தீட்சிதரைப் பார்த்துப், "பெரியீர், அரசருடைய சிலை நன்றாக அமைந்து விட்டது. அவருடைய மனைவியின் சிலையை எவ்வளவு தரஞ் செய்த போதினும் அடித்தொடையில் ஒரு பள்ளம் விழுகிறது. ஆகவே என்ன செய்வதென்று அடியேனுக்குத் தோன்றவில்லை. தாங்கள் எவ்வாறு கட்டளையிட்டாலும் அவ்வாறே செய்கிறேன்" என்று சொன்னான். தான் செய்த உருவங்களையெல்லாந் தீட்சிதருக்குக் காட்டினான். தீட்சிதர் அவைகளையெல்லாம் பார்த்து விட்டுச் சிறிது நேரங் கண்களை மூடி அறிவுப்பார்வையிலிருந்தார். பிறகு கண்களை விழித்து, "நீ எதற்குங் கவலைப்படவேண்டாம். அவருடைய மனைவிக்கு அடித்தொடையில் அவ்வாறுதான் இருக்கிறது. ஆகவே நீ செய்திருக்கிறவைகளில் நல்லதாக ஒன்றை எடுத்து வைத்து விடு. நாளைக்குக் கோயிலில் அமைத்து விடலாம்" என்று கூறினார். பிறகு திருமலை நாய்க்கரிடம் போய், சிலைகள் செய்து முடிக்கப்பட்டு விட்டன வென்றும் மறுநாள் கோயிலில் அமைத்து விடலாம் என்றுஞ் சொன்னார்.

மறுநாள் கோயிலில் திருமலை நாய்க்கருடைய உருவமும் அவ

ருடைய மனைவியின் உருவமும் அமைக்கப் பட்டன. திருமலை நாய்க்கர் தம்முடைய மனைவியையும் அழைத்துக் கொண்டு கோயிலுக்குச் சென்றார். உருவங்களை நன்றாகக் கவனித்துப் பார்த்தார். மனைவி சிலையின் அடித்தொடையில் பள்ளமிருப்பதைக் கண்டார். சிற்பியை அழைத்து அவனை பார்த்துச் சினங் கொண்டார். அதற்கவன் தான் பல உருவங்களைச் செய்ததாகவும் எல்லாவற்றிலும் அந்தப்பள்ளம் விழுந்ததாகவும் பிறகு தீட்சதர் வந்து அந்த அம்மாளுக்கு அவ்வாறே பள்ளமிருக்கிறது ஆகவே சிலையை வைக்கலாமென்று கூறியதாகவும் அதன்மேல் அவ்வாறே வைத்ததாகவுஞ் சொன்னான்.

திருமலை நாய்க்கர் தம்முடைய மனைவியைப் பார்த்தார். அவள் தனக்கு அவ்வாறு பள்ளமிருப்பதாக ஒப்புக் கொண்டாள். அஃதெவ்வாறு தீட்சிதருக்குத் தெரிந்ததென்று தீட்சிதரிடஞ் சினங் கொண்டார். பிறகு வேலைக்காரர்களைக் கூப்பிட்டு, "நீங்கள் போய்த் தீட்சிதருடைய கண்களைப் பிடுங்கிவிட்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டார். வேலையாட்கள் தீட்சிதர் இல்லத்திற்கு வரும்போது தீட்சிதர் சிவபூசையில் இருந்தார். வேலையாட்கள் வந்திருக்கிறதாகத் தீட்சிதரிடந் தெரிவிக்கவே அவர் வேலையாட்கள் வந்திருக்குங் காரணத்தை மெய்யறிவுப் பார்வையினால் தெரிந்து கொண்டார்.

பூசை முடிந்து கற்பூரவொளி காட்டியவுடன் எரிந்து கொண்டிருக்குங் கற்பூரத்தை தம்முடைய கண்ணிலே தாமே போட்டுத் தம்முடைய பார்வையைப் போக்கிக் கொண்டார். பிறகு வெளியே வந்து ஆட்களைப்பார்த்து, "உங்கள் அரசன் சொல்லிய காரியத்தை நாமே செய்து முடித்துக்கொண்டோம். நம்முடைய கண் பார்வை போய் விட்டது. இதனை அந்த அறிவற்றவனிடத்திலே போய்த் தெரிவித்து விடுங்கள். இனிமேல் அவனைப் பார்க்க மாட்டோம்" என்று கூறிவிட்டுத் தம்முடைய மனைவியை அழைத்துக் கொண்டு கோயிலுக்குச் சென்றார். மீனாட்சி திருமுன் நின்று, "ஆநந்தசாகரஸ்தவம்" என்னும் புகழை மிக அருமையாகப்பாடினார். "அம்மையே! அறிவற்றவனை அரசன் என்னுடைய கண்களைப்பிடுங்குமாறுகட்டளையிட்டான். அடியேனே கண்களைப் போக்கிக் கொண்டேன். இனி எந்தக் கண்களால் உன்னைக் கண்டு மகிழ்வேன்" என்று உருக்கமாக வேண்டினார். மீனாட்சி அம்மன் தீட்சிதருக்குத் தோன்றிப் பார்வையைக் கொடுத்து அருள் புரிந்தாள். பிறகு தீட்சிதர் தம்முடைய ஊருக்குப் புறப்பட்டார்.

இச்செய்திகளை யெல்லாந் திருமலை நாய்க்கர் கேள்விப் பட்டார். தீட்சிதரிடம் வந்து வணங்கினார். தாம் செய்தன வெல்லாங் குற்றமென்றும் குற்றங்களைப் பொறுத்துத் தீட்சிதர் மதுரையிலேயே இருக்க வேண்டுமென்றும் பல வாறு வேண்டிக் கொண்டார். தீட்சிதர் எல்லாவற்றையும் புறக்கணித்துவிட்டுத் தம்முடைய ஊருக்குப் போய் விட்டார்.

**நீலன்** - இவன் முன் பிறப்பில் சிவஞ்ஞானி என்னும் பெயரோடு விளங்கியவன். தங்கையாகிய நவஞ்ஞானி இறந்ததைக்

கண்டு தானும் இறந்து மறு பிறப்பில் திருவாலங்காட்டில் பேயாக இருந்தான். இவன் இருந்த வேலமரத்தை வேளாளர்கள் வெட்டிய படியால் அவ் வேளாளர்கள் அனைவரும் இறக் கச் செய்தான். பழையனூர் நீலிக்கு இவன் அண்ணன்.

**நீலிகுளம்** - திருவாலங்காட்டை யடுத்த பழையனூரில் உள்ள ஒரு குளம். நீலியினுடைய வஞ் சனையால் உயிர் இழந்த வணி கனுக்குக் கூறிய உரைப்படி எழுபது வேளாளர்கள் தீப் பாய்ந்து உயிர் கொடுத்த தீக்குழி இப்பொழுது நீலிகுளம் என்னும் பெயருடன் ஒரு குள மாக உள்ளது. குளத்தின் கரை யில் எழுபது பேரின் உருவங் களும் நீலியின் உருவமும் உள் ளன.

**நுங்கன்** - இவனுடைய முழுப் பெயர் ஆதனுங்கன். ஆதன் அழிசி, ஆதன் அவினி என்ப வர்களைப்போல ஆதன் நுங்கனும் ஒரு குறுநிலமன்னன். திருவேங் கடத்தைச் சேர்ந்த மலைநாடு இவனுடையதாகும். திருவேங் கட மலையும் இவனுக்கே உரிய தாக இருந்தது. வேட்டுவர் தலைவனான புல்லி யென்பவனும் இங்கிருந்தவனே. திருவேங் கடத்தில் இப்பொழுது திரு மால் கோயில் இருக்கும் பகுதியே ஆதனுங்கன் புல்லி முதலானோர் வாழ்ந்திருந்த இட மாகும். சங்க காலத்துக்குப் பின்னும் இளங்கோவடிகள் காலத்துக்கு முன்னுமாகிய இடைப்பட்டகாலத்திலேஇங்கு திருமாலுக்குக் கோயில் உண் டாயிற்று. இவனைக் கள்ளில் ஆத்திரையனார் என்னும் புல வர் புகழ்ந்து பாடியிருக்கிறார். கள்ளில் என்பது தொண்டை நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்றாகிய திருக் கள்ளில் என்பதாகும்.

**நுளம்பப் பல்லவர்** - நுளம்பபாடி என்பது மைசூரைச் சேர்ந்த தும்கூர், சித்தல் துர்க்கம் கோட்டங்களும் பெங்களூர், கோலார், பெல்லாரிக் கோட் டங்களும் சேர்ந்த நிலப் பரப் பாகும். இதனை அரசாட்சி செய்தவர் நுளம்பப் பல்லவர் எனப் பெறுவர். இவருடைய அரசாட்சியில் சேலம், வட ஆர்க்காடு கோட்டங்களின் வடபகுதியும் சேர்ந்திருந்தது. இந்நிலப் பகுதி இராச ராச னுடைய பேரரசிற் கலந்து விட்ட பிறகு நுளம்பப் பல்ல வர் சிற்றரசராகவும் சோழர் அரசியலின் அலுவலாளர் களாகவும் பணி புரிந்தனர்.

**நூபுரகங்கை** - இஃதொரு புனித நீர். கள்ளழகர் கோயிலின் வடக்கு வாசல் வழியே மலை மீதேறி இரண்டு மைல் சென் றால் இப்புனித நீரை யடைய லாம். யானைத் துதிக்கையைப் போல் அமைந்திருக்கும் கோமுகியின் வழியாக மாதவி மண்டபத்திற்கு நீர் வருகிறது. இப் புனிதநீரில் இரும்புச் சத் தும் தாமிரச் சத்தும் இருக் கின்றனவாம். இதனில் நீராடு பவர்கட்குத் தீராத நோயெல் லாந் தீர்ந்து விடுகிறதாம். இப் புனித நீர் தெற்கு நோக்கிப் பாயும்போது சிலம்பாறு என் னும் பெயரை யடைகிறது.

**நெடியோன்** - இவன் ஒரு பாண் டிய மன்னன். கி. மு. 3000 ஆண்டில் குமரிநாடு, பெருவள நாடு, ஒளிநாடு முதலியவை களைக் கைப் பற்றிப் பஃறுளி என்னும் ஆற்றை வெட்டி நாட்டை வளப்படுத்தி அர சாட்சி புரிந்தான்.

**நெடுங்கல்மன்றம்** - காவிரிப் பூம் பட்டினத்தில் முன்னாளில்

இருந்த ஒரு மன்றம். இங்கு நீண்ட கல் ஒன்று நாட்டப்பட்டிருந்த தென்றும் அக்கல்லினை வலம் வந்தோர் பித்து, பாம்புக்கடி, பேய் பிடிக்கப்படல் முதலிய தொல்லைகளிலிருந்து விடுபட்டனர் என்றும் சிலப்பதிகாரங் கூறும்.

**நெடுஞ்சடையன் பராந்தகன்** - இவன் அரிகேசரி பராங்குசனுடைய மகன். சடையவர்மன் என்னும் பட்டம் புனைந்தவன். தென்னவானவன், சீவரன், சீமனோகரன், சினச்சோழன், புனப்பூழியன், விநய விச்ருதன், விக்கிரம பாரகன், வீரபுரோகன், மருத்பலன், மானிய சாசனன் முதலிய சிறப்புப் பெயர்கள் இவனுக்கிருந்தன. இவன் காவிரியின் தென்கரையிலுள்ள பெண்ணுகடத்தில் நிகழ்ந்த போரில் பல்லவர்களைவென்றானென்றும் வேணாட்டரசனாகிய ஆய்வேளைப் போரிற் புறங்கண்டான் என்றுந் தெரிகிறது. இவன் கொங்கு நாட்டிலுள்ள காஞ்சிவாய்ப் பேரூர்க்குச் சென்று அங்குத் திருமாலுக்குக் கோயில் கட்டினான். வைணவ சமயப்பெரியாராகிய பெரியாழ்வார் இவன் காலத்தில்தான் வாழ்ந்தார். இம் மன்னன் பெரியாழ்வாரைத் தனக்கு ஆசிரியராகக் கொண்டிருந்தான்.

**நெடுஞ்செழியன் - (1)** மதுரையில் அரசு புரிந்திருந்த பாண்டிய மன்னன். செங்கோல் மன்னனாக விளங்கிய இவன் அரண்மனைப் பொற்கொல்லர் தலைவனாகிய கனகவன்மனுடைய சொல்லைக் கேட்டு யாதும் ஆராய்ந்து பாராமல் கோவலனைக் கொலை புரியச் செய்தான். பின்னர்க் கண்ணகி தன் முன் வந்துஉண்மையை நிலைநாட்டிய போது தன் செங்கோல் கொடுங்கோலாக மாறி விட்டதையுணர்ந்து அப்பொழுதே தன்னுடைய உயிரை விட்டுச் செங்கோலைச் செங்கோலாக்கினான். நீதி மன்னனாக விளங்கிய இவன் இவ்வாறு மாறுபட்டதற்குக் காரணம் மனைவியின் மையலில் தாழ்ந்து அவளுடைய ஊடலைத் தீர்த்தற்கு அந்தப்புரஞ்சென்று கொண்டிருந்த பரபரப்பே என்பர். இவனுடைய மனைவி தன்னுடைய கணவன் இறந்ததைக் கண்டு தானும் அப்பொழுதே தன்னுடைய உயிரை விட்டாள்.

**நெடுஞ்செழியன் - (2)** இவனுடைய பெயர் பின்னுளில் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்என்றுநீண்டுநின்றது. தலையாலங்கானம் என்னுமிடத்தே நிகழ்ந்த போரில் இவன் வெற்றி பெற்றானுகையால் இவ்வாறு பேர் பெற்றான். இவன் மாங்குடி மருதனார் முதலிய புலவர்களிடத்தே சிறந்த அன்பும் மதிப்பும்உடையவன். இவனைக் குறுங்கோழியூர்க் கிழார், குடபுலவியனார், கல்லாடனார். மாங்குடி கிழார், இடைக் குன்றூர்க் கிழார் முதலிய புலவர்கள் பாடியுள்ளனர்.

**நெடுநல்வாடை** - பத்துப் பாட்டினுள் ஏழாவதாக விளங்கும் பாட்டு; 188 - அடிகளைஉடையது. பகை மேற் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து வருந்துந் தலைவிக்கு அவளுடைய வருத்தந் தீருமாறு அவன் பகையை வென்று விரைவில் வருவானாக என்று கொற்றவையைப் பரவுவாள் கூற்றாக அவனை நக்கீரனார் பாடியது. இஃது ஐப்பசி கார்த்திகைத் திங்கள்களாகிய கூதிர்க் காலத்தின் இயல்பை

யும் தனித்திருக்கும் தலைவியி னுடைய வருத்த மிகுதியையும் படை வீட்டில் தலைவன் இருக்கும் இயல்பையும் விரித்துக் கூறுவது.

**நெடுமாறர்** - பாண்டிய அரசன் கூன் பாண்டியனாக இருந்து திருஞான சம்பந்தருடைய திருவருளால் கூன் நிமிரப் பெற்று நெடுமாறர் எனப் பெற்றார். மங்கையர்க்கரசியார் இவருடைய மனைவியார். குலச்சிறையார் இவருடைய அமைச்சர்.

**நெடுமானஞ்சி** - இவனை அதியமான் நெடுமானஞ்சி என்பர். அதியர் என்பவர்களுடைய குடியிற் பிறந்து சிறந்தமை பற்றிஅதியமான்நெடுமானஞ்சி எனப் பட்டான். அதியமான் என்பது அதிகைமான் எனவும் வழங்கும். ஒரு காலத்தில் அதியர் அதிகை என்னும் ஊரில் வாழ்ந்திருந்து பின்னர்ச் சேர நாட்டில் குடியேறியிருத்தல் வேண்டுமென்றும் இதனால் அதியர் என்று பெயரடைந்தனர் என்றும் ஆராய்ச்சியாளர் கருதுவர். நெடுமானஞ்சி ஒரு குறுநில மன்னன். இவனுடைய தலைநகர் இக்காலத்தில் தருமபுரி என வழங்கும் தகடூராகும். இவன் சேரர்க்குரியனாய் அவர்க்குரிய கண்ணியுந் தாரும் தனக்குரியவாகக் கொண்டவன். மழவர் என்னும் ஒருசார் கூட்டத்தார்க்கும் இவன் தலைவன். அதனால் இவனை மழவர் பெருமகன் எனவுங் கூறுவர். இவனுடைய ஆட்சி யெல்லை நடு நாட்டுக் கோவலூரையும் எல்லையாகக் கொண்டிருந்தது. குதிரைமலை இவனுடைய நாட்டிலே இருந்தது. கரும்பை வேறிடத்திலிருந்து தமிழகத்திற்குக் கொண்டு வந்தவர்கள் இவனுடைய முன்னோர்களே என்பர். இவன் ஒரு சமயத்தில் தன்னாட்டு மலையொன்றின் உச்சிப் பிளவின் சரிவில் மிகுந்த முயற்சியின் மீது அருமையாகக் கிடைத்த ஓர் அருநெல்லிக்கனியைப் பெற்றான். அக்கனி தன்னை யுண்டாரை நீண்டநாள் வாழச் செய்யும் பெற்றி யுடையது. இவன் அக்கனியைத் தானுண்டொழியாமல் ஔவையாருக் களித்து அழியாப் புகழ் நிலை பெறக் கொண்டான். இவன் ஔவையாரிடத்தில் பெருமதிப்பும் பேரன்பும் வைத்திருந்தான். ஒருகால் ஔவையாரை இவன் தொண்டைமானிடத்திற்குத் தூது அனுப்பினான். இந்த அதியமான் அஞ்சிக்கு அத்தை மகள் ஒருத்தியிருந்தாள். அவள் நல்ல புலமையும் அழகும் உடையவள். இவன் அவளை மணந்து இல்வாழ்க்கையை இனிது நடத்தினான். சேரமான் பெருஞ்சேரலிரும் பொறை இவனுடைய நாட்டின் மீது படை யெடுத்து முற்றுகை யிட்டான். இவன் தன்னுடைய படையாற்றல் போதியதாக இல்லாமை கண்டு பலநாள் போர் செய்யாது இருந்தான். பிறகு போர் செய்து உயிர் துறந்தான். ஔவையார் இவன்மீது பல பாடல்களைப் பாடியுள்ளார்.

**நெடுவேட்டுவன்** - இவனுடைய முழுப்பெயர் கடிய நெடுவேட்டுவன். கடியமென்பது நெடுவேட்டுவனுடைய ஊர். இது கோடைமலைச்சாரலில் உள்ளது. கடியநன்னியார் என்னும் புலவருடைய ஊரும் இக்கடியமேயாகும். இவன் தன்னுடைய ஆதரவைநாடியவர்கட்கு ஆவன புரிந்தான். கொடை வண்மையும் இவனிடம் சிறந்தோங்கி உரியதாகியது. கோடைமலை இவனுக்கு உரியதாக விளங்கி

யது. இந்நாளில்மதுரை மாவட்டத்தில் கோடைக்கானல் என்னும் பெயருடன் சிறப்புற்று விளங்கும் மலையே இக்கோடை மலையாகும். இக் கோடைமலை கோடைக்காலவாசத்திற்கு மிக இனியதாதலின் இவ்வாறுபெயர் பெற்றது. இந்நெடுவேட்டுவனைப் பெருந்தலைச் சாத்தனார் பாடியுள்ளார்.

**நெறிகாட்டுநாதர்** - திருக்கூடலையாற்றூர் என்னுந் தேவாரம் பெற்ற சிவப்பதியில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயர். ஆளுடையநம்பிகள் திருப்புறம்பயத்திலிருந்துவடக்குநோக்கிப் பலபதிகளையும் வணங்கிக் கொண்டு திருமுதுகுன்றம் ஆகிய பழமலையை நோக்கிச் சென்றார். வழியில் இருந்த கூடலையாற்றூருக்குச் செல்லாது செல்லும் போது இறைவர் மறையவர் கோலத்துடன் நம்பிகட்கு எதிரே வந்தார். நம்பிகள் மறையவர் கோல இறைவரைப் பார்த்துத், "திருமுதுகுன்றத்துக்கு வழிஎது?" என்று கேட்டார். இறைவர் "இவ்வழி திருக்கூடலையாற்றூருக்குச்செல்கின்றது"என்று கூறிவழி(நெறி)காட்டித்தாமும் ஊரெல்லைவரை சென்றுமறைந்தருளினார். இதனால் இறைவர்க்குஇப்பெயர்உண்டாகியது.

**நேரியர்** — நேரிமலைக்குத்தலைவர்களாக இருந்தபடியால் சோழமன்னர்கட்குண்டாகியசிறப்புப் பெயர்.

**நேரூர்** - திருச்சிமாவட்டத்தில் கரூருக்கு வடமேற்கில் ஏழுகல் தொலைவில் காவிரியின் தென் கரையில் இவ்வூர் இருக்கிறது. மெய்யறிவுச் செல்வராகத் திகழ்ந்துவிளங்கியசதாசிவப்பிரமேந்திரர் என்னும் பெரியாருடையஅடக்கவிடம்இவ்விடத்தில் உள்ளது.

**நைமிசவனம்** - இமயமலைக்கு அண்மையில் உள்ள ஒருகாடு. முனிவர்கள் நான்முகனிடம் தாங்கள்தங்கித்தவஞ்செய்தற்கு நல்லஇடம் ஒன்றைக் காட்ட வேண்டும் என்று வேண்டினர். நான்முகன் தருப்பையொன்றையெடுத்து உருளையாகச்செய்து அதனை உருட்டினான். அதன் பின்னே சென்று அது தங்கிய இடத்தில் தவஞ்செய்யுமாறு கூறினான். முனிவர்கள் அவ்வாறே சென்று தங்கினார்கள். அவ்விடமே நைமிசாரணியமாயிற்று.

**நொடித்தான்மலை** - நொடித்தான் மலை என்பது திருக்கயிலைமலையைக்குறிக்கும். நொடித்தல்-அழித்தல். சிவபெருமான் அழித்தற்கடவுளாதலின் அவர் எழுந்தருளிய திருக்கயிலை நொடித்தான்மலை எனவும் பேர் பெறலாயிற்று.

**நொய்யலாறு** - கொங்குநாட்டில் உள்ள வெள்ளிமலையில் தோன்றிக் காவிரியில்கலக்கும் ஒரு சிற்றாறு.

**பஃறுளியாறு** - இப்பெயருடைய ஆறு தென் தமிழ் நாட்டில் இருந்ததெனவுங் கடல் கோளால் அழிந்து போயிற்றெனவும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னனைப் பாடிய நெட்டிமையார் என்னும் புலவர் புறநானூற்றுப் பாடலில் இவ்வாற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

**பகதத்தன்** - இவன் நரகாசுரனுடைய மகன். சோதிதம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தவன். அசுரனாயினும் தீக்குணங்கள் சிறிதும் இல்லாமல் நற்குணங்களே அமைந்தவனாக விளங்கினான். இந்திரனுக்கும் இவன் உதவிகள் பல செய்தா

ளுகையால் இவனுடைய பெயர் சதமகன் சகாயன் எனவும் வழங்கியது. இவனுடைய பேராண்மையை நன்குணர்ந் திருந்த துரியோதனன் பாரதப் போரில் இவனைத் தன் பக்கத் திற் சேர்த்துக் கொண்டுவிட வேண்டுமென்று மிகுந்த முயற்சி செய்தான். துரியோ தனன் மிகப் பொல்லாதவன் என்பதை இந் நல்லவன் உணர்ந்து கொள்ளாதபடியால் துரியோதனன் பக்கத்திற் சேர்ந்து போரிட்டான். பன்னி ரண்டாம் நாட் போரில் இவன் இருபதினாயிரம் யானை வீரர்கள் தன்னைச் சூழப் போருக்கு வந் தான். வீமன் யானைகளை யெல் லாம் அழித்தொழித்தான். இறுதியில் அருச்சுனனோடு செய்த விற்போரில் மாண் டான்.

**பகவதியார்** - சிவபாத இருதய ருடைய மனைவியார். திருஞான சம்பந்தருக்குத் தாயார்.

**பகவத் கீதை** - மெய்யறிவு நூல் களுள் தலை சிறந்து விளங்கு வது. பகவான் கூறியது பகவத் கீதை. பாரதப் போரின் தொடக்கத்தில் உறவினர்களைக் கண்டு மயக்கமடைந்த அருச் சுனனுக்கு மெய்யறிவு உண் டாகுமாறு கண்ணபிரான் போர்க்களத்தில் தேரில் இருந்த படியே கூறி யருளியது. பதி னெட்டு அத்தியாயங்களை உடையது. சேமநகர் பட்டனார் என்பவர் தமிழ்ச் செய்யுளாக மொழி பெயர்த்துப் பாடியிருக் கிறார். வடமொழிக் கீதைக்குப் பலர் விரிவுரைகளும் உரை நடையில் தமிழ் மொழிபெயர்ப் புகளும் செய்திருக்கின்றனர்.

**பகவன்** - இவர் பெருஞ் சாகரன் என்பவருடைய புதல்வர். மாணியாக ஒழுகி நின்ற இவர் காசியை அடைந்து கங்கை யாடப் புறப்பட்டார். தொண்டை மண்டலத்தில் மேலூர் அகரம் என்னும் ஊரில் தங்கினார். இவர் தங்கி யிருந்த இடத்திற்கு ஆதியென் னும் பெயருடைய மாது ஒருத்தி வந்தாள். அவள் புலைச்சி. பகவன் அவளைச் சட்டுவத்தால் அடித்துத் துரத்தினார். காசிக் குப் போய் விட்டு மீண்டும் அவ்வூருக்கு வந்து முன் தங்கிய அதே இடத்தில் தங்கினார். முன்பு வந்த அதே பெண் இப் பொழுதும் வரப் பகவன் அவளுடைய அழகைக் கண்டு மயங்கினார். பிறகு இருவருக் கும் திருமணம் நடைபெற்றது. பிறகு அப் பெண் முன்பு தம்மிடம் அடிவாங்கிய புலைச்சி யென்றுணர்ந்து அவளை நீங்கி யோடினார். அவளும் விடாது பின்தொடர்ந்தாள். பிறகு இருவரும் ஒருவாறு ஒற்றுமைப் பட்டனர். உப்பை, அதிக மான், உறுவை, கபிலர், வள்ளி, திருவள்ளுவர் ஆகிய மக்களைப் பெற்றனர். இப் பகவனுக்கு ஞாளிதத்தன் என வும் பெயர் உண்டு.

**பகன்** - இவன் ஓர் அசுரன். ஏக சக்கிரம் என்னுங் காட்டில் இருந்தான். இவன் விலங்கு களையே யன்றிப் பக்கத்தி லிருந்த வேத்திரகீயம் என்னும் ஊருக்குட் புகுந்து அங்கிருந்த மனிதர்களையுந் தின்றான். வேத்திரகீய நகரத்தார் ஓர் ஏற்பாடு செய்து இவனுக்கு உணவு அனுப்பிக் கொண்டிருந் தார்கள். இறுதியில் இப் பொல்லாதவன் வீமன் கையால் மாண்டொழிந்தான்.

**பகாசுரன் மலை** - இம்மலை கொங்கு வள நாட்டில் கட்டாஞ்சி மலை என வழங்கும் சஞ்சீவி மலைக்கு வடக்கிலே இருக்கிறது. இம் மலைப் பக்கத்தில் இன்றும்

நச்சுக் காற்று வீசுவதாகக் கூறுகின்றனர்.

**பகாட்சன்** - ஓர் அசுரன். இவன் தேவரை வருத்தினன். தேவர்கள் சிவபிரானிடம் முறையிட்டார்கள். சிவபிரான் மறையைத் தேராகவும், உபநிடதத்தைக் குதிரையாகவும், பிரணவத்தைச் சவுக்காகவும், காலச் சக்கரத்தை வில்லாகவும் மாயையை நாணுகவும், பாசுபதத்தை அத்திரமாகவும், உமையைச் சாரதியாகவுங் கொண்டு போர் செய்து கொன்ருர்.

**பகிரம் பட்டர்** - இவர் பைடணபுரி என்னும் ஊரில் இருந்த ஓர் அந்தணர். இவர் மறைகளை யோதி யுணர்ந்து நல்லொழுக்கத்துடன் நடந்து வந்தார். ஒருநாள் உணவு கொள்கையில் உணவுப் பொருளொன்றில் உப்பில்லாததைக் கண்டு தம் மனைவியிடம் உப்பில்லாத செய்தியை உரைத்தார். அவள் இவரைப் பார்த்துத், "தங்கட்கு அகவை அறுபது முடிந்தும் உணவுப் பொருள் ருசி விடவில்லையே" என்று கூறினள். இவருக்கு உலக வாழ்வில் வெறுப்புண்டாயிற்று. ஒரு காசியாரிடஞ் சென்று சுன்னத் முதலிய சடங்குகள் செய்து கொண்டு முகமதியராகச் சில நாள் திரிந்தார். பிறகு அந்தணரிடம் வந்து கழுவாய் தேடிக் கொண்டு இந்துவாகிச் சுற்றினர். அந்நாட்டரசனுகிய முகமதியன் இவரை யழைத்து, "முகமதியனுகிய நீ மீண்டும் ஏன் இந்து சமயத்திற்குச் சென்ருய் ?" என்று உசாவினன். இவர், "நான் முகமதியனுன காலத்திலும் என் இந்து சமய அடையாளமாகிய காதுத் தொளை போகவில்லை. இந்து சமயத்தான் ஆன்காலத்திலும் உங்கள் சமய அடையாளமாகியசுன்னத் போகவில்லை" என்று கூறி விட்டு மேலுந் திரிந்தார். பிறகு நாகநாதருடைய அருள் பெற்று நற்கதி யடைந்தார்.

**பகீரதன்** - கதிரவ குலத்தில் தோன்றியவன். இவனுடைய முன்னேர்கள் அறுபதாயிரம் பேர் கபில முனிவருடைய வசவுரையால் சாம்பராகி நற்கதியை அடையாமற் கிடந்தனர். இவன் அவர்கட்கு நற்கதியைக் கொடுக்க வேண்டுமென்று எண்ணினன். ஆயிரக் கணக்கான ஆண்டுகள் நான்முகனையும் சிவனையும் நோக்கிக் கடுந் தவம் புரிந்தான். பிறகு கங்கையை எண்ணி ஐயாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தான். கங்கை தோன்றவில்லை. மேலும் விடாமல் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் தவஞ் செய்து கங்கையை நிலவுலகிற்குக் கொண்டு வந்து தன்னுடைய முன்னேர்களையெல்லாம் நற்கதியடையச் செய்தான். விடா முயற்சியில் இவன் சிறந்து திகழ்ந்தமையால் இவனுடைய பெயர் பகீரதன் என்று வழங்கலாயது.

**பகுளாசுவன்** - இவன் மிதிலாபுரியின் அரசன். கண்ணபிரானிடம் மிகுந்த அன்புள்ளவன். இவனுடைய பட்டணத்திற்குக் கண்ணபிரான் இருடிகளோடு எழுந்தருள இவன் எதிர் கொண்டு போற்றினன்.

**பக்கிங்காம் கால்வாய்** - ஆந்திர நாட்டில் உள்ள கிருட்டிணை ஆற்றில் இருந்து தொடங்கிச் சென்னையின் குறுக்கே தொண்டையார்ப்பேட்டை, திருவல்லிக்கேணி, மயிலாப்பூர், திருவான்மியூர், கோட்டூர், பாலிப்பட்டு, திருக்கழுக்குன்றம், மரக்காணம் ஆகிய ஊர்களின் வழியே தென்னர்க்காடு மாவட்

டத்தை யடுத்த புதுச்சேரி வரையில் செல்கிறது. சென்னைக் கவர்னராக இருந்த பக்கிங்காம் காலத்தில் இக் கால்வாய் வேலை முற்றுப் பெற்றபடியினால் இக் கால்வாய்க்கு இவருடைய பெயரையிட்டனர். இக் கால்வாய் சென்னைக்கு வடக்கே 195 மைல்களும் தெற்கே 66 மைல்களும் ஆக 261 மைல் நீளம் உள்ளது. தென்னிந்தியாவின் கிழக்குக் கடற்கரையோரமாகக் கடலில் இருந்து மூன்று மைல் தொலைவுக்குள்ளேயே இக் கால்வாய் இருக்கிறது. சாமான்களின் போக்குவரத்திற்கு இந் நாளில் மிகுதியும் பயன்படும் இக் கால்வாய் முன்னாளில் மக்களின் பயணத்திற்கும் பயன்பட்டது.

**பக்குடுக்கை நன்கணியார்** - இவர் ஒரு நீண்ட சட்டையை (மெய்ப்பை) கழுத்திலிருந்து கால் வரை அணிந்திருந்தபடியால் பக்குடுக்கையார் எனவும் காலக் கணிதத்தில் வல்லவராகையால் நன்கணியார் எனவும் பெயர் பெற்றனர். பின்னாளில் இப் பெயர்கள் ஒன்று சேர்ந்து பக்குடுக்கை நன்கணியார் என்று வழங்கலாகியது. இவருடைய பாடல் ஒன்று புறநானூற்றில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**பக்தவத்சலர்** - தொண்டை வள நாட்டில் திருநின்றவூரில் திருக்கோயில் கொண்டுள்ள திருமாலின் பெயர். இத்திருநின்றவூர் இறைவனுக்கு மனக்கோயில் அமைத்த பூசலார் நாயனார் வாழ்ந்திருந்த ஊர். சிறந்த வள்ளலாகிய நின்றைகாளத்தி முதலியாருடைய ஊரும் இஃதே.

**பக்தவிலாச அகத்தியர்** - பெரிய புராணம் பாடிய சேக்கிழார் காலத்திற்குப் பிறகு இருந்தவர் இவ்வகத்தியர். இவர் சோழ நாட்டைச் சேர்ந்த அந்தணர். வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவர். வடமொழியில் மிகுந்த பற்றுடைய ஆரியர். பெரிய புராணத்தின் பெருமையை உணர்ந்த இவர் தம்முடைய தாய்மொழியாகிய வடமொழியில் இத்தகைய நூல் இல்லையே என்று உள்ளம் வருந்தினார். பெரிய புராணத்தை வடமொழியில் மொழி பெயர்த்து விடுவதென்று முடிவு செய்தார். அவ்வாறே மொழிபெயர்த்து முடித்தார். ஆனால் தமிழில் இருந்து மொழிபெயர்த்ததாக யாண்டுங் கூறவில்லை. இதனை ஒரு காரணமாகக் கொண்டு வடமொழியில் பற்றுடையவர்கள் பெரிய புராணத்திற்கு முதல் நூல் இப் பக்த விலாசமே என்று கூறலாயினர். இவ்வகத்தியர் வாழ்ந்திருந்த ஊர் இன்னதென்று தெரியவில்லை.

**பக்தி கணபதி** - யானை முகம் படைத்தவராய் நான்கு திருக்கைகளோடு விளங்குவார். கைகளில் தேங்காய், மாம்பழம், வாழைப்பழம், பாயசரனம் இவைகள் விளங்கும்.

**பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர்**-(1838-1894) முதன் முதல் வங்க மொழியில் நவீனங்களை அளித்தவரும் அம்மொழிக்கு மறுமலர்ச்சி ஏற்படுத்தியவரும் இவரே. இவர் காண்டாலபாரா என்னும் ஊரில் குலீன அந்தண மரபில் 27-6-1838இல் பிறந்தார். கல்கத்தா பல்கலைக் கழகத்தில் முதன் முதல் பட்டம் பெற்ற இருவருள் இவர் ஒருவராவர். 1858 இல் டெபுடி மாசிஸ்டிரேட்டாகப் பதவி ஏற்று, உடனேயே டெபுடி கலெக்டர் பதவிக்கு

உயர்த்தப்பட்டார். இவருடைய இலக்கிய ஆக்கங்கள் பெரும்பாலும் இவர் அலுவலில் இருந்த காலத்தில் தோன்றியவையே. நீதி வழங்குவதில் நேர்மையும் பணியில் கண்டிப்பும் கொண்டிருந்தார். ஆனந்த மடம், ராச சிம்மன், சீதாராம், மிருணாளினி, தேவி சௌதுராணி, சந்திரசேகரன், விஷ விருட்சம், கிருட்ண காந்தன், ரஜனி, ராதா ராணி, யுகலாங்குரீய, இந்திரா முதலியவை இவரியற்றியவைகளில் முதன்மையானவை. இவர் பாடிய வந்தேமாதர கீதம் சுதந்திர உணர்வைத் தந்து, இவர் கனவை இன்று நனவாக்கியுள்ளது.

**பசவண்ணர்** - 1125 முதல் 1165 வரை வாழ்ந்தவர். இவர் இலிங்காயத சமயத்தைப்பரவச் செய்தார். கன்னட நாட்டில் பீசப்பூர் மாவட்டத்தில் இங்களேச்வர் பாகேவாடி என்னும் ஊரில் அந்தணர் குலத்திற் பிறந்தார். சிறு பிராயத்திலேயே சமய ஆராய்ச்சி செய்யத் தொடங்கினார். உபநயனஞ் செய்து கொள்ள மறுத்து வீர சைவக் கொள்கையை மேற்கொண்டார். கலியாண நாட்டை ஆண்ட பிச்சளன் என்னும் சைன அரசனிடம் முதல் அமைச்சராக இருந்த இவருடைய தாய் மாமனான பலதேவர் என்பவருடைய மகள் கங்காம்பிகையை மணஞ் செய்து கொண்டார். பிறகு தம்முடைய மனைவியோடும் உடன்பிறந்தாளோடும் பீசப்பூர் மாவட்டத்தில் உள்ள கூடல சங்கமம் என்னுங் கோயிலுக்குச் சென்று இட்டலிங்க தீட்சை பெற்றுக்கொண்டார். பலதேவர் காலமான பிறகு அரசர் இவரையே முதல் அமைச்சராக ஏற்படுத்தினார். பசவண்ணருடைய பதவியும் செல்வாக்கும் பக்தியும் வன்மையும் வீர சைவக் கொள்கையைப் பரப்புவதற்கு மிகவும் உதவியாக இருந்தன. அதன் காரணமாக அனுபவ மண்டபம் என்னும் சமய சங்கம் அமைக்கப்பட்டது. இச் சங்கத்தில் இருந்தே பொதுமக்கள் இலிங்காயத இயக்கம் தோன்றியது. இக் கொள்கை அரசனுக்குப் பிடிக்கவில்லை. அவன் இவருடைய செல்வாக்கைக் குறைக்க முயன்றான். பிறகு பசவண்ணர் தம்மைக் கடவுளுக்கு அர்ப்பணஞ் செய்து கொண்டார்.

**பசவப்ப சாத்திரி** - (1843-1891) மைசூர் ஆத்தானப் புலவராக ஒளிர்ந்த இவர் கன்னடக் கவி. காளிதாசருடைய சாகுந்தலத்தை இணையற்ற முறையில் கன்னடத்தில் மொழிபெயர்த்ததனால் இவரை "அபிநவ காளிதாசன்" என்ற பட்டம் அளித்துச் சிறப்பித்தனர். இவர் சம்பு காவிய நடையில் சிறந்த நூல்கள் ஆக்கியுள்ளார். தம் பதினெட்டாம் அகவையிலேயே அரசருடைய புரோகிதராகவும் ஆத்தானப் புலவராகவும் அமர்த்தப் பெற்றார். மைசூர் மக்கள் இவரைக் "கன்னட நாடகப் பிதாமகர்" எனக் கொண்டாடுவர். சமக்கிருதப் பெருங் கவிகளின் நூல்களையும், ஷேக்ஸ்பியர் நாடகமாகிய ஒதெல்லோவையும் கன்னடத்தில் மொழிபெயர்த்திருக்கின்றார்.

**பசுமாசுரன்** - இவன் சுகன் என்னும் அசுரனுடைய மகன். இவனை விருகாசுரன் எனவுங் கூறுவர். இவன் சிவபிரானை எண்ணித் தவம் புரிந்தான், சிவபிரான் காட்சி தந்து, "யாது வரம் வேண்டும்?" என்று உசாவினார். இவன்,

"நான் யாருடைய தலையில் கை வைக்கின்றேனே அவர்கள் இறந்தொழிய வேண்டும்" என்று வரங் கேட்டான். சிவபிரான் அவ்வாறே கொடுத்தார். அசுரன் அச் சிவபிரான் தலையிலேயே கை வைத்து வரத்தைப்பரிசோதிக்க எண்ணினன். சிவபிரான் மறைந்தார். அப்போது திருமால் அழகிய பெண்ணுக இவன் எதிரே வந்தார். இவன் கண்டு மோகித்துத் தழுவ எண்ணினன். அவர் "எண்ணெய் தேய்த்து நீராடி வருக" என்ருர். இவன் அவ்வாறே எண்ணெய் தேய்த்து நீராடத் தொடங்கி எண்ணெயை எடுத்துத் தலை மீது வைத்துத் தேய்க்கத் தொடங்கியவுடன் இறந்தொழிந்தான். தன் வினை தன்னைச் சுட்டது.

**பச்சையப்ப முதலியார்** - இவர் சென்னைக்கு வடமேற்கில் பதினைந்து மைல் தொலைவில் உள்ள பெரியபாளையம் என்னும் ஊரில் 1754 ஆம் ஆண்டிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் விசுவநாத முதலியார். தாயார் பெயர் பூச்சியம்மாள். பச்சையப்பர் தாய் வயிற்றில் இருக்குப்போதே தந்தையாராகிய விசுவநாத முதலியார் இறந்து விட்டார். தாயாராகிய பூச்சியம்மாள் குடும்ப நண்பர்களின் ஆதரவில் காலந் தள்ளினர். பிறகு சென்னையில் குடியேறி, பௌனி நாராயண பிள்ளை என்பவருடைய ஆதரவில் மகனை வளர்த்து ஆளாக்கினர். பச்சையப்பர் ஆங்கிலந் தமிழ் முதலியவைகளைக் கற்ருர். மிகு இளம் பருவத்திலேயே வாழ்க்கைக்கு வழி தேடும் முயற்சியில் ஈடுபட்டார். வணிகர்கட்கு உதவி செய்தல் ஆங்கிலேயர்கட்கு மொழிபெயர்ப்பாளராக் உதவி புரிதல் முதலியவைகளில் அமைந்து பெரும் பொருள் தேடினர். மற்றும் செங்கற்பட்டு மாவட்டத்தில் வரி வசூல் செய்தல், நவாபின்அலுவலாளர்கட்குச் சம்பளப் பட்டுவாடா செய்தல் முதலிய ஒப்பந்தத் தொழில், ஆங்கிலக் கம்பெனியாருக்கு வரவேண்டிய மேல்வாரங்கள் எனும் தானிய வரியைப் பணமாக்கித் தரும் குத்தகைத் தொழில், ஆங்கில வணிகர்கட்கும் கருநாடக நவாபு அதிகாரிகளுக்கு மிடையே ஏசெண்டாகக் கொடுக்கல் வாங்கல் செய்தல் முதலிய தொழில் ஆகியவைகளையும் மேற் கொண்டார். இவைகளால் இவருக்குப் பெரும் பொருள் குவிந்தது. குறுகிய காலத்தில் மாகாணத்தின் துவிபாஷிகளில் தலை சிறந்தவராக விளங்கலானர்.

இவர் தம்முடைய இருபத்தெட்டாம் அகவையில் கம்பெனி ஆட்சியில் முதன்மையான பொறுப்புக்களை மேற் கொண்டிருந்த ராபர்ட் சோசப் சலிவன் என்பவரின் தலைமைத் துவிபாஷியானர். புகழும் பெருஞ் செல்வமும் பச்சையப்பருக்கு நாள்தோறுங் குவிந்து கொண்டே இருந்தன. சலிவனுடைய அரசியல் அலுவல்களில் இவர் பேருதவி புரிந்தார். தஞ்சாவூர் மன்னருக்குத் துவிபாஷியாகவும் பாங்கராகவும் இருந்து சென்னை அரசாங்கத்துக்கு மன்னர் செலுத்த வேண்டிய கப்பங்கள் ஒழுங்காகச் செலுத்தப்படுவதற்கு உதவி புரிந்தார். 1784 ஆம் ஆண்டில் தஞ்சாவூரில் குடியேறினர். தஞ்சை மன்னருக்குச் சென்னை அரசினரால் தொல்லை நேராமல் பாதுகாத்தார். மன்னர் இவரைப் பெரிதும் பாராட்டிப் போற்றிக் காத்து வந்தார்.

இவருடைய முதல் மனைவிக்குப் பிள்ளையில்லாதபடியால் திருமறைக் காட்டைச் சேர்ந்த பழநியாயி என்பவளை இரண்டாவது மனைவியாகத் திருமணஞ் செய்து கொண்டார். இவளிடம் ஒரு பெண் குழந்தை பிறந்தது. 1791 இல் இவருக்குப் பக்கவாத நோய்கண்டது. 1794 இல் உடல் நிலை கவலைக் கிடமாயிற்று. அதே ஆண்டில் காலமானார். இவர் தேடிய பொருள் பல இலட்சக்கணக்கில் இருந்தது. இவர் தம்முடைய காலத்திலேயே அறங்கள் பலவற்றைச் செய்தார். கடவுளிடத்தில் மிகுந்த பற்றுடைய இவர் கோயில் திருப்பணி முதலியவைகளையுஞ் செய்தார். இவர் காலஞ் சென்ற பிறகு இவருடைய பொருள்களைப் பொருட் பாதுகாப்புக் குழுவினர் பாதுகாத்து இவருடைய அறங்களை யெல்லாம் ஒழுங்காக நடத்தி வருகின்றனர்.

**பஞ்சகம்** - இச் சொல் வட சொல். இதனுடைய பொருள் ஐந்து கொண்டது என்பது. முதலில் ஐந்து சுலோகங்களைக் கொண்ட வடமொழிச் சிறு நூலுக்குப் பெயராக அமைந்த இது நாளடைவில் தமிழ் மொழியில் ஐந்து செய்யுட்களைக் கொண்ட நூலுக்கும் பெயராகி வழங்குகிறது.

**பஞ்சரத்தினம்** - ஐந்து நிறங்களையுடைய மணிகளாகிய இரத்தினம், வைடூரியம், மரகதம், நீலம், வைரம் என்னும் ஐந்தும் பஞ்சரத்தினங்களாகும். இந்த மணிகளைப் போன்ற ஐந்து அழகிய பாடல்கள் கொண்ட சிறு நூலும் பஞ்சரத்தினம் என்று வழங்கப் பெறுகிறது. அருணகிரிநாதர் இயற்றிய ஐந்து சிறந்த திருப்புகழ்ப் பாடல்கள் பஞ்சரத்தினத் திருப்புகழ் என்று வழங்குகிறது.

**பஞ்ச சேனாபதிகள்** - பஞ்ச சேனாபதிகள் என்றால் ஐந்து படைத் தலைவர்கள் என்று பொருள். இராவணனுடைய பெரும் படைக்குத் தலைவர்களாக விளங்கிய மனதரன், வச்சிரன், மாலி, சிங்கன், வதாந்தகன் என்னும் இவ்வைவரும் பஞ்ச சேனாபதிகள் என்று உரைக்கப்பட்டனர்.

**பஞ்சதந்திரம்** - இஃதொரு கதை நூல். பஞ்ச தந்திரம் என்பதன் பொருள் ஐவகைச் சூழ்ச்சிகள் என்பதாகும். இந்நூல் உலகப் புகழ் பெற்றது. பைபிளுக்கு அடுத்தபடியாக உலக மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டிருப்பது இந் நூல்தான் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். இந்திய மொழிகளைத் தவிர வேறு ஐம்பது மொழிகளில் இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இது கதை நூலாக இருப்பினும் மக்களுக்கு அறிவு போதிப்பதில் சிறந்து விளங்குகிறது.

**பஞ்ச பூதாசுரன்** - இவன் ஓர் அசுரன். இவன் ஆத்மாக்களினுடைய பஞ்ச பூதங்களினும் நெருங்கி வருத்தினான். சிவபிரான் இந்திரனைப்போல் வடிவங் கொண்டு வச்சிரத்தால் இவனைக் கொன்றார்.

**பஞ்சவடி** - வட நாட்டில் நாசிக் மாவட்டத்தில் நாசிக் நகரின் பக்கத்தில் கோதாவரி ஆற்றின் கரையில் பஞ்சவடி என்னும் இடம் இருக்கிறது. பஞ்சவடி என்பது ஐந்து ஆலமரங்களின் தொகுதி. அரசு, வில்வம், ஆல், நெல்லி, அசோகம் என்னும் ஐந்து மரங்கள் இருக்கும் இடம் என்றுங் கூறுவர். முன் காலத்தில் இதனைச் சூழ்ந்த இடம் தண்டகாரணியம் என வழங்கியதாம். இராமர் காட்டு வாழ்க்கையை மேற் கொண்டிருந்தபோது

இங்குத் தங்கியிருந்தார் என்று இராமாயணங் கூறும்.

**பஞ்சவடி அகத்தியர்** - இவ்வகத்தியர் பஞ்சவடியில் இருப்பிடம் அமைத்துக் கொண்டு அங்குத் தங்கியிருந்தார். இவர் சைவஉணவு உண்பவரல்லர். இவர் இராம இலக்குமணர் முதலியோருக்கு விருந்துசெய்த போது, மான் பன்றி முதலியவைகளின் இறைச்சிகளைப் படைத்ததாக வான்மீகம் கூறுகிறது. இராம இராவணப் போருக்கு இவ்வகத்தியரே காரணர் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

**பஞ்சவமாராயன்** - இவன் குடகு மன்னனுடைய தண்டத்தலைவன் போர் புரிவதில் மாவீரன். இவன் இராசராசனை எதிர்த்துப்பெரும் போர் புரிந்தான். இவனுடைய பேராண்மை இராசராசசோழனுக்கு மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கியது. இவனோடு போர்புரிவதை நிறுத்தி நட்புக் கொண்டான். இவனுக்குச் சத்திரிய சிகாமணிக் கொங்காள்வான் என்னும்பட்டத்தையும்அளித்தான்.

**பஞ்சாட்சரதீர்த்தம்** - இரத்தினகிரி என்னும் வாட்போக்கியில் ஊருக்கு நடுவேயுள்ள ஒரு புனித நீர் இப்பெயரால் குறிப்பிடப்படுகிறது.

**பஞ்சாயத்து** - பஞ்சாயத்துஎன்பது ஓவ்வோர் ஊர் மக்களும் தங்களுடைய பொது நலவாழ்க்கையைப் பரிபாலிப்பதற்காகத் தேர்ந்தெடுக்கும் ஐந்துபேரைக் கொண்ட ஒரு குழு ஆகும். முன்னாளில் பஞ்சாயத்து என்பது ஐம்பெருங்குழு என்னும் பெயரோடு வழங்கி வந்தது. தென்னிந்தியாவில் பழங்காலத்துப்பஞ்சாயத்துக்களின் தோற்றமும் பிறவரலாறுகளும் பல கல்வெட்டுக்களில் இருந்து தெரிகின்றன.

**பஞ்சுகொண்டான்** - முகமதியர்கள் திருவரங்கத்தைக் கொள்ளையிட்டபோது அம்முகமதியர்கட் கஞ்சாது எதிர்த்து நின்று கொள்ளையிடாதவாறு தடைசெய்தவர்.

**படிக்காசுப்புலவர்** - பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த இவர்தொண்டைமண்டலத்தில் உள்ள பொன்விளைந்த களத்தூரில் தோன்றினார். இவர் சைவசமயத்தினர். தென்னாட்டிற் பலசிவப்பதிகட்கும் பயணஞ்சென்றஇவர்தில்லையை அடைந்து கூத்தப்பிரானை வழிபட்டுத் தில்லையில் தங்கியிருந்தார். கூத்தப்பிரான் இவருடைய செலவுக்காக ஐந்து பொற்காசுகளைப் பஞ்சாக்கரப் படியில் நாள்தோறும் வைத்தருளினார். அவைகளை இவர் எடுத்துப் பயன் படுத்திப் பிறருடைய உதவிகளை எதிர்பாராமல் தங்கியிருந்தார். இவ்வாறு இவர் படிக்காசு பெற்றபடியால் படிக்காசுப்புலவர் என்று பெயர்உண்டாகியது இப்பெயர் உண்டாகிய பிறகு இவருடைய இயற்பெயர் மறைந்துவிட்டது. அப்பெயர்இன்னதெனஅறிந்து கொள்ள முடியவில்லை. இவருடைய வரலாறு வெளிவந்துள்ளது.

**படிக்காசுவைத்தபரமர்** - மூவர் தேவாரப் பாடலும் பெற்ற சிவப்பதியாகிய அரிசிற்கரைப் புத்தூரில் எழுந்தருளிய இறைவருடைய பெயர். புகழ்த்துணை நாயனாருக்குப் பொற்காசு வழங்கியபடியால் இவ்வாறு பெயருண்டாகியது. இவ்வூர் திருக்குடந்தைக்குத் தெற்கில் குடவாயில் செல்லும் வழியில் உள்ளது. நான்கு நாழிகை அளவில் அடையத்தக்கது.

**படிமரத்துமோசிகீரனுர்** - படிமரம் என்பது முன்னுளில்சோழவள நாட்டில்இருந்த ஓர்ஊர். இவ்வூரில் கீரனுரையன்றிக்கொற்றனுர் என்னும் புலவர் ஒருவரும் வாழ்ந்திருந்தார். இவர்களுடையபாடல்கள் குறுந்தொகை நூலிற்சேர்க்கப்பட்டுள்ளன.

**பட்சீசுவரமுனிவர்** - இவர் விநதையினுடைய மக்களில் ஒருவர். இவர் பாற்கடலின் பாலைக் குடித்து வாழ்ந்திருந்தார். அக்கடலில் உள்ள நீர்வாழ் உயிரினங்கள் மனைவிமக்களோடிருத்தலைக்கண்டு தாமும் அவ்வாறிருக்க எண்ணினுர். சுதன்மன் என்னும் அரசனிடம் போய்த் தம்முடைய எண்ணத்தைத் தெரியப்படுத்தினுர். அரசன் இவர் பறவையுருவத்தோடிருத்தலைப்பார்த்தான். முனிவரைப் பார்த்து, "என்னுடைய பதினைந்து பெண்களில் விரும்பியவர் உம்மை மணஞ் செய்து கொள்ளட்டும்" என்றி கூறினுன். முனிவர் காமனைப்போல் அழகிய வடிவங்கொண்டு அப்பெண்களிடஞ் சென்றுர். அவர்கள் அனைவரும் இவரை மணந்து இன்புற்றனர்.

**பட்டர்** - கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர். திருவரங்கநாதனுடைய திருவருளாற் பிறந்தவர். எம்பாருடைய மாணவர். பராசரபட்டர் என்பது இவருடைய முழுப்பெயர். செய்ந்நன்றியறிதலுக்குஅறிகுறியாக இராமாநுசர் இத்திருப்பெயரை இவருக்கு வைத்தார். இவருக்கு மனைவிமார் இருவர். தொல்காப்பியம் முதலான இலக்கணங்களையும் இலக்கியங்களையும் நன்கு கற்றுத் தேறியவர். திருநெடுந்தாண்டகத்தில், "மைவண்ண நறுங்குஞ்சி" என்னும் பாசுரத்திற்கு இவர்அரியவிரிவுரை செய்திருக்கிருர். இராமாநுசருடைய கட்டளைப்படி மேல் நாட்டில் இருந்த வேதாந்தி என்பவரோடு ஒன்பதுநாள் சொற்போர்செய்து அவரைவென்றவர். சீரங்கராசத்தவம்,குணரத்நகோசம், சகஸ்ரநாமபாடியம், கிரியாதீபம், அட்டசுலோகி முதலியன இவரியற்றிய நூல்கள்.

**பட்டபாதாசாரியர்** - இவர் முருகக்கடவுளுடைய கூறுகத் தோன்றியவர். இவருக்குப் பட்டகுமாரன் எனவும் பெயர் உண்டு. கௌமாரம் என்னும் வியாகரணம், பாட்டபிரதீபம் என்னும் மீமாம்சை முதலியன இவர் செய்த நூல்கள். இவர் சுதன்வாஎன்னும்அரசனுடைய அவையிலிருந்தபுத்தரை வாதில் வென்று மலைமீதிலிருந்து குதித்து மறை உண்மையென்று நிலைநாட்டினுர். அரசன் வைத்திருந்த பாம்பின் குடத்திற் கையிட்டு அதிலிருந்து திருமால் உருவத்தை எடுத்துக்காட்டிப் புத்தர்களைக் காணத்தில் இடச்செய்தார். மண்டனமிசிரர் என்பவர் இவருடையமாணவர்.

**பட்டி**-அவந்திநாட்டில்உச்சையினி நகரில் இருந்தவன். சந்திரசன்மா என்பவனுடைய மகன். பர்த்துருகரி, விக்கிரமார்க்கன் என்னும் இருவருக்கும் இவன் தம்பியாவன். இவன் அறிவு நலஞ் சிறந்து திகழ்ந்தான். விக்கிரமார்க்கன் அரசனுன போது இவன் அமைச்சனுகி அரசாட்சியை நன்முறையில் நடத்தினுன்.

**பட்டினத்துப்பிள்ளையார்** - பட்டினத்துப் பிள்ளையாரைப் பற்றி அனைவரும் நன்கு அறிவர். "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல் ஆருந்துறப்பதரிதரிது" என்று பிற பெரியோர்களும்

பட்டினத்தாரைப் பாராட்டியுள்ளனர். பட்டினம் என்பது கடற்கரையைஅடுத்தஊராகும். முன்னாளில் இப்பெயர் காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பாகச் சுட்டி நின்றது. பட்டினத்துப் பிள்ளையாருடைய இயற்பெயர் திருவெண்காடர் என்பர். இவர் தம்முடைய துறவுக்காலத்தில் பல நூல்களையும் தனிப்பாடல்களையும் இயற்றியுள்ளார். இவைபட்டினத்துப்பிள்ளையார் பாடல் என்னும் பெயரோடு வழங்குகின்றன.

**பட்டினப்பாலை** - இது பத்துப்பாட்டில் ஒன்பதாவது பாடல். இது பெரும்பாலும் வஞ்சியடிகளால் அமைந்து ஆசிரிய அடிகளால் முடிகிறது. இது முந்நூற்றோரடிகளையுடையது. வேற்றுநாட்டிற்குப் போய்வர எண்ணியதலைவன் தன்நெஞ்சை நோக்கித் தலைவியைப் பிரிந்து செல்லமுடியாதென்று செலவழுங்கிக்கூறுங் கூற்றாகச் சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடியது. இது பெரும்பாலும் வஞ்சியடிகளால் அமைந்தபடியினால் வஞ்சி நெடும் பாட்டெனவும் வழங்கும். இதனைப்பாடியதற்காக உருத்திரங்கண்ணனார் பதினாறுயிரம்பொன் கரிகாற்பெருவளத்தானிடம் பரிசுபெற்றார் என்று அந்நூலின் இறுதியில் கூறியிருப்பதோடு பிற்கால நூல்களிலும் கூறப்படுகிறது.

இப்பாட்டில் சோழநாட்டின் பெருமை, காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பு, கரிகாற்பெருவளத்தானுடைய வீரச்செயல்கள், உறையூரை அவன் ஆட்சி செய்தமை முதலியன கூறப்பெறுகின்றன.

**பட்டீச்சுரம்** - சோழவள நாட்டில் திருக்குடந்தைக்குத் தெற்கே நான்குமைல் தொலைவில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதி. காமதேனுவின் பெண்கள் நால்வரில்பட்டி என்பவள்வழிபட்ட படியினால் பட்டீச்சுரம் என்று பெயருண்டாகியது. சிவபிரான் திருஞானசம்பந்தருக்கு வெய்யில் கொடுமையைத் தணிப்பதற்காகஒருபூதத்தைக்கொண்டு முத்துப்பந்தரைக் கொடுத்த இடம்.

**பண்டிதராலயன்** - தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய பெயர்களில் ஒன்று.

**பண்டிப்பூர் வனவிலங்கு நிலையம்**- மைசூரில் இருந்து ஐம்பதுமைல் தொலைவில் உள்ளது. இந்தியாவில் உள்ள மற்ற வனவிலங்கு நிலையங்களைவிடப் பலவகைகளில் சிறந்தது. ஊர்திகளில் இருந்துகொண்டே குழந்தைகளும் பெண்களும் காட்டுப் பன்றி, காட்டுமாடு, யானை, புலி போன்ற விலங்குகளை அச்சமின்றிக் கண்டு மகிழலாம். யானைகளின்மேல் ஏறியுஞ் சுற்றிப்பார்க்கலாம். காட்டிலாகா விடுதிகளில் தங்கி வனவிலங்குகளைப்பார்க்கலாம். இவ்விடத்தில் தமிழ்நாட்டைச் சேர்ந்த முதுமலை வனவிலங்கு நிலையமும் இருக்கிறது.

**பண்ணி**-பாண்டியனுடைய படைவீரர்களில் ஒருவன். கோடைக்கானல் என்னும் மலைக்கு இவன் தலைவன். தன்னைப்பாடி வந்த புலவர்கள் முதலியோருக்கு இவன் நன்கொடையும் வழங்கியபடியால் சிறந்தவள்ளலாகவுந் திகழ்ந்திருந்தான்.

**பண்ணன்** - இவன் சோழவளநாட்டில் காவிரிக்கரையில் இருந்த சிறுகுடி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவன். அதனால் இவனுடைய பெயர் சிறுகுடிகிழான்பண்ணன் என வழங்கி நின்றது. இவன்

பேராண்மையும்கொடைப்பண்பும் உடையவன். இவனை மாற்றூர்கிழார் மகனார் கொற்றங்கொற்றனார்,கோவூர்கிழார் செயலூர் இளம்பொன்சாத்தன் கொற்றனார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் முதலிய சீரிய புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர்.

பதஞ்சலி-இவர் ஆதிசேடனுடைய கூறாக இவ்வுலகில் தோன்றினார். இவர் சிறுபாம்பாகி அத்திரி முனிவருடைய பத்தினியாகிய அநசூயையின் கையில் விழுந்தார். காலைவேளையில் கதிரவனை நோக்கிக் கைகுவித்து நின்ற அவ்வம்மை மெய்விதிர்த்தாள். கையில்இருந்து காலில்விழுந்து ஓர் அழகிய குழவியானார். பதத்தில் சலித்து விழுந்தமையால் பதஞ்சலி என்று சிறப்புப் பெயரடைந்தார். சிவபிரானுடைய திருக்கூத்தைத் தேவதாரு வனத்தில் சிவபெருமான் செய்தகாலை அதனைக்கண்ட திருமாலானவர் அக்கூத்தின் சிறப்பைத் தமக்குப் படுக்கையாகவுள்ள ஆதிசேடனிடங்கூறினார். ஆதிசேடன் அக்கூத்தைத் தாமுங்காண விரும்பித்திருமாலிடங்கூறினார். திருமால் அவ்வாறாயின் உன் மகனை நமக்குப்படுக்கை யாக்கிவிட்டு நிலவுலகத்தில் போய்த்தவஞ் செய்து அத்திருக்கூத்தைக் காண்க என்று கூறியிருந்தார். ஆகவே பதஞ்சலியான ஆதிசேடன் திருத்தில்லையை அடைந்து தவஞ்செய்து புலிக்கால் முனிவரோடு அத்திருக்கூத்தினைக்கண்டார். இவர் பதஞ்சலியோக சூத்திரம் முதலிய நூல்களைச் செய்திருக்கிறார்.

பதரிகாச்சிரமம் - இதனைப் பத்ரிநாத் என்பர். இது வடஇந்தியாவில் உத்தரப்பிரதேசத்தில் கார்வால் மாவட்டத்தில் இமயமலைமேல் இருக்கிறது. இது நாராயண மலைக்கும் அலகநந்தா ஆற்றுக்கும் இடையில் இருக்கும் சிறிய பீடபூமியில் அமைந்திருக்கிறது. இந்த இடம் கடல்மட்டத்தில் இருந்து பத்தாயிரத்து இருநூறு அடி உயரத்தில் இருக்கிறது. நாராயணமலைமேல் பனியாறுகள் இருக்கின்றன. பட்டணத்தின் வெளிப்புறத்தில் இருடிகங்கா ஆறும் அலகநந்தா ஆறும் ஒன்றுடன் ஒன்று கலக்கின்றன. நாராயணமலைக்குப் பின்னால் புகழ்பெற்ற நீலகண்டர்சிகரம் இருக்கிறது. பத்திரிநாதர் கோயில் இங்கு இருக்கிறது. இதுதிருமால் திருப்பதி. பதரி என்பது இலந்தைமரம். பதரிகாசிரமம் என்பதற்குப் பொருள் இலந்தைமரச்செறிவு பொருந்திய இடம் என்பது. திருமகள் தவம்புரியும் தன்கணவனாகிய திருமாலுக்கு இங்கு பணிபுரிகிறாள் என்று கூறுவர்.

இங்கு ஐந்து பத்ரிக்கோயில்கள் உள்ளன. அவை ஆதிபதரி, தியானபதரி, யோகபதரி, பவிஷ்யபதரி, விசாலபதரி எனப்பெறும். விசாலபதரியே பதரிநாதர் கோயில். பதரிநாதர் கோயிலில்சித்திரை மாதமுதல் ஆறு திங்கள் வரையில் தான் வழிபாடு நடைபெறும். மற்ற ஆறு திங்களும் பனிமூடிவிடுவதால் பூட்டியிருக்கும். இந்தியாவும் சீனாவும் சந்திக்குமிடத்தில் பதரிநாதர் கோயில் உள்ளது. பதரிக்கு இரண்டு மைல் தொலைவில் இந்தியாவின் எல்லை முடிவடைகிறது. இலந்தைமரத்தின் கீழ் திருமகளுடன் வீற்றிருக்கும் திருக்கோலத்தோடு திருமால் சேவை தருகிறார். இவ்வூரைப் பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பாடியுள்ளனர்.

**பதிற்றுப்பத்து** - சங்கநூல்களுள் எட்டுத்தொகை யெனப்படும் தொகுதியில் ஒருநூல். இதில் உள்ள நூறு பாட்டுக்கள் பத்துப்பத்துக்களாகத் தொகுக்கப்பட்டிருப்பதால் இது பதிற்றுப்பத்து என்றுபெயர் பெற்றது. இதன் நான்காம் பத்தில் உள்ள பாட்டுக்கள் மட்டும் அந்தாதி முறையில்தொகுக்கப் பட்டிருக்கின்றன. இந் நூல் முழுவதும் சேரமன்னர்களின் செயல்நலங்களை மட்டும் கூறுகிறது. இந்நூலில் முதற்பத்தும் பத்தாம்பத்தும் இதுவரையில் கிடைக்கவில்லை. இரண்டாம் பத்து முதல் ஒன்பதாம் பத்து ஈருகவுள்ள எட்டுப்பத்துக்களே இப்பொழுது கிடைத்துள்ளன. இந் நூலுக்குப் பழையவுரையும் உண்டு. இப்பொழுது கிடைத்துள்ள இப் பதிற்றுப்பத்தில் சேரமன்னர்களில் எட்டுப்பேரைப் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. இரண்டாம் பத்தால் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும் மூன்றும்பத்தால் அவன்தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவனும், நான்காம்பத்தால் இமயவரம்பன் மகன் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலும், ஐந்தாம்பத்தால் அவன்தம்பி கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனும், ஆறும்பத்தால் அக்குட்டுவனுக்குப் பின்னவனை ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் அறியப்படுகின்றனர். இவ்வைவரும் சேரர் குடியில் உதியஞ்சேரல் என்பவனுடைய வழிவந்தவர்கள்.

**பதினெட்டாம் படிக்கருப்பன்** - திருமாலிருஞ்சோலை மலையில் உள்ள ஒரு தெய்வம். இத்தெய்வத்தின் முன்பு யாரும் பொய்யுரைக்கத் துணிய மாட்டார்கள். ஆகவே இவ்வூரில் பல வழக்குகளுக்கு முடிவுகாணப் படுகிறது. அழகர் கோயில் இத்தெய்வத்தினுடைய பாதுகாப்புக்குள்தான் இருக்கிறதென்பர். நாள்தோறும் கோயிலில் உள்ள பொருளறையைப் பூட்டிவிட்டுத் திறவுகோலை இந்தப் பதினெட்டாம் படிக்கருப்பனிடம் கொண்டு வந்து வைத்து விடுவார்கள். இக்கருப்பனைப்பற்றிய வரலாறு முன்வந்துள்ளது.

**பதினொராந்திருமுறை** - பன்னிரு திருமுறைகளில் ஒன்று. இதனில் திருவாலவாயுடையார் சேரமான் பெருமாளுக்கு எழுதிக்கொடுத்த திருமுகப்பாசுரம், காரைக்காலம்மையார் பாடிய திருவாலங்காட்டுமூத்த திருப்பதிகம், திருஇரட்டைமணிமாலை, அற்புதத் திருவந்தாதி, ஐயடிகள் காடவர்கோன் பாடியக்ஷேத்திரத்திருவெண்பா, சேரமான் பெருமாள் பாடிய பொன் வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கைலாய ஞானவுலா, நக்கீரர்பாடியகைலைபாதிகாளத்திபாதியந்தாதி, திருவீங்கோய்மலைஎழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப் பிரசாதம், காரெட்டு, போற்றிக்கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, திருக்கண்ணப்பதேவர் திருமறம், கபிலதேவ நாயனார் இயற்றிய மூத்தநாயனார் இரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவபெருபெருமான் திருவந்தாதி, பரணதேவ நாயனார் இயற்றிய சிவபெருமான் திருவந்தாதி, இளம்பெருமானடிகள் அருளிய சிவபெருமான் திருமும்மணிக்கோவை, அதிராவடிகள் அருளிய மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவை, பட்டினத்தடிகள்

அருளிய கோயிஞன்மணிமாலை, திருக்கழுமலமும் மணிக்கோவை, திருவிடைமருதூர் திருமும் மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது, நம்பியாண்டார்நம்பி அருளிய திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை, கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம், திருதொண்டர் திருவந்தாதி, திருஞானசம்பந்தர் திருவந்தாதி, திருஞானசம்பந்தர் திருச்சண்பை விருத்தம், திருஞானசம்பந்தர் திருமும் மணிக்கோவை, திருஞானசம்பந்தர் திருவுலா, திருக்கலம்பகம், திருத்தொகை ஆகிய நூல்களின் தொகுப்பே பதிஞெராந்திருமுறை என்னும் பெயரொடு வழங்குகிறது.

**பதுமகாரிகை**-இவள் பிரச்சோதனனுடைய தேவிமார்களில் ஒருத்தி. எல்லோருக்கும் முதன்மையானவள். வாசவதத்தைக்கு நற்ருய். இவளுடைய பெயர் சீமதி எனவும் வழங்கியது.

**பதுமகோமளை** - இவள் சூரபதுமனுடைய மனைவி. பட்டத்தரசி; சிறந்த கற்புடையவள். வானவர் தச்சனை விசுவகருமனுடைய மகள். இவளுக்குப் பானுகோபன் மகனுகப் பிறந்தான்.

**பதுமசம்பவர்** - இவர் எட்டாம் நூற்ருண்டில் இருந்தவர். லாமா சமயத்தைத் திபேத்தில் நிறுவியவர். இவரைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. ஆனல் உண்மை வரலாறு தெளிவாகத் தெரியவில்லை. இவர் வடமேற்கு இந்தியாவில் இருந்த உதயஞ என்ற பகுதியைச்சேர்ந்தவர். நாளந்தா பல்கலைக்கழகத்தில் கல்விபயின்ற இவர் தந்திர நூல்களில் மிகுந்த பற்றுடையவராக இருந்தார்.

**பதுமநாபவேதியர்** - இவர் ஒரு பாகவதர். காசியில் வாழ்ந்து கொண்டிருந்தார். செல்வச் சிறப்புடைய வணிகன் ஒருவன் காசியில் இருந்தான். அவனுக்கு மனைவியும்ஐந்துகுழந்தைகளும் இருந்தனர். இவன் தானதருமங்கள் செய்வதிற் சிறந்து விளங்கிஞெயினும் பழவினைப் பயனுல் குறைநோய் உண்டாகியது. அதனுல் மிகுந்ததுன்பமடைந்தான். பலவகையான மருத்துவங்களைச் செய்தும் நோய்குறையவில்லை. நோயின் துன்பத்தைப்பொறுக்க முடியாமல், "என்னைக் கங்கையிலே விட்டுவிடுங்கள்" என்று சொன்ஞன். உறவினர்கள் கங்கைக் கரைக்கு எடுத்துச் சென்றனர். இவன் கங்கையில் விழுவதைப்பார்ப்பதற்கு அவ்விடத்தில் பெருங்கூட்டங்கூடியது. அப்பொழுது அங்குவந்த பதுமநாபவேதியர் கூட்டங்கூடியிருப்பதற்குக்காரணத்தை உசாவிஞர். சிலர் வணிகனுடைய செய்தியைக் கூறிஞர்கள். கேட்ட வேதியர் வணிகனிடஞ்சென்ருர். உடலின் அருமைபெருமைகளை எடுத்துக் கூறிஞர். மீண்டும் இத்தகைய மனிதவுடலைப் பெறுவது அருமை. இவ்வுடலை வீணுக அழித்துவிடாமல் நல்வினையை அடைதற்கு முயலவேண்டும் என்றுகூறிஞர். தாரகமறையை அவனுக்கு உரைத்தார். அவன் அவருடைய அடிகளில்விழுந்து வணங்கிஞன். பிறகு நல்வினையைப்பெறுதற்கான வழியிலே நடந்து நற்கதியைப் பெற்ருன்.

**பதுமநிதி**—தாமரைவடிவினதாகிய ஒரு நிதி. இது பாற்கடலில் தோன்றியது. எடுக்கஎடுக்கக் குறையாது வளரும் தன்மையுடையது.

**பதுமபுராணம்** - பதினெண் புராணங்களில் ஒன்று. ஐம் பத்தையாயிரம் கிரந்தமுடை யது. பிரமத்தோற்றம், பாதா ளம், பூமி, சுவர்க்கம் முதலிய வற்றின் சிறப்புக்களையும், கங்கை போன்ற உயர்ந்தபுனித நீர்களில் நீராடுவதன் சிறப்பை யும், திருமாலை வழிபடும் நாரா யணமந்திரத்தின் பெருமையை யும் விளக்கமாகக்கூறும். இது பதுமம் எனவும் கூறப்பெறும்.

**பதுமப்பிரபர்**-சைனதீர்த்தங்கரரில் ஆறும் தீர்த்தங்கரர் இட்சு வாகு வழிமுறையில் தோன்றி யவர். இவர் தோன்றிய நகரம் கௌசாம்பிஎன்பர். இவருடைய தந்தையின் பெயர் தரணன். தாயின் பெயர் அசிமை.

**பதுமயோனி** - இவன் இவறன்மை மிகுந்த ஓர் அந்தணன். இவ னிடம் தேவதத்தன் என்னும் மறையவன் வந்து, "நான் மிகுந்த வறுமையாற் பீடிக்கப் பட்டிருக்கிறேன். எனக்கு உணவும் வேட்டியுந்தருக" என்று கேட்டான். பதும யோனி, "நீ என்னிடம் ஏவல் செய்வையானல் அவ்வாறே தருகிறேன்" என்றுசொன்னன். தேவதத்தன் உடன்பட்டு ஏவல் செய்துகொண்டிருந்தான். ஒரு நாள் வேட்டி கேட்டான். பதுமயோனி,"கடையிலேயிருக் கிறது போய் வாங்கிக்கொள்" என்று சொன்னன். இதனைக் கேட்கவே தேவதத்தனுக்குச் சினம் உண்டாகியது. "நீ செல்வம் இழந்துபலபிறவிகளை யடைந்து வேதாளம் ஆகுக" என்று வசவுரை வழங்கிச்சென் ருன். தேவதத்தனுடைய வாக்குப் பலிதமுடைய வாக்கா கையால் அன்றே பலிக்கத் தொடங்கி விட்டது. அன் றிரவேகள்ளர்கள் பதுமயோனி யின் பொருளைக் கவர்ந்து சென் றனர். பதுமயோனி இறந் தான். பலபிறவிகளை அடைந் தான். பிறகு வேதாளமாகி ஒருமரத்திலிருந்தான். காசிக் குப்போய்க் கங்கையாடித் திரும்பிய பிரகஸ்யோமன் என்பவனுடைய மனைவியைப் பிடித்துக்கொண்டான். பிரகஸ் யோமன் பெண்ணையாற்றில் நீராடி மூன்றுநாள் நல்வினை யைத்தர அதனல் நற்கதி யடைந்தான்.

**பதுமர்**- இருபத்தேழு புத்தர்களில் ஒருவர். இவர்கள் கௌதம புத்தருக்கு முன்தோன்றிய புத்தர்களாவர். இவர்களில் பதுமர் பதினென்ரும் புத்த ராவர். கௌதம புத்தருக்கு முன்பும் அறக்குறை நேர்ந்த பொழுது பல புத்தர்கள் தோன்றி மக்களுக்கு அறவுரை வழங்கி நல்வழிப்படுத்தினர். இவர்களனைவரும் சர்வஞ்ஞ புத்தர் என்று கூறப்பெறுவர்.

**பதுமனர்**-சங்ககாலப்புலவர்களில் ஒருவர். இவர் சமணசமயத் தினர் என்பர். பெரும்பதுமனர் என்னும் புலவர் ஒருவரும் இருந்தார். நாலடியாரைத் தொகுத்த பதுமனர் என்னும் புலவர்பிற்காலத்தினர்என்பர்.

**பதுமாபதி**-தருசகன் தாயினுடைய உடன்பிறந்தாள் மகள். இவ ளுடைய தந்தை காசிராசன். தாயினுடைய பெயர் உதயை யோடை. வளர்ப்புமகளாகத் தருசகனுடைய தாய் மிகுந்த அன்பு பாராட்டி வளர்த்தமை யின் இவள் தருசகனுடைய தங்கையென்றுகூறப்பெற்ருள். இராசகிரியத்தில் ஏழுநாள் நடந்த காமனுடைய விழாவில் வழிபாடு செய்வதற்குக் காமன் கோட்டத்திற்குச் சென்ற பொழுது அக்கோயிலின் வாசலில் வேறு வடிவங் கொண்டு மாணகன் என்னும்

பெயரோடு நின்ற உதயணனுக்கும் இவளுக்கும் நட்புண்டாகியது. இருவரும் முதலில் காந்தருவ மணஞ் செய்து கொண்டனர். பிறகு உதயணனைத் தன்னுடைய கன்னிமாடத்திற்கு அழைத்துக் கொண்டு போய்ப் பலநாள் எவருமுணராதபடி வைத்திருந்தனள். பகைவர் தருசகனோடு போர் செய்தற்கு வந்தபொழுது உதயணன் புறத்தேயிருந்து வந்தவனைப்போல் வந்து தன்னைப் பலரும் உணர்ந்துகொள்ளுமாறுசெய்து அப்பகைவர்களை வென்றான். அதனால் இவள் உதயணனுக்குமணஞ் செய்விக்கப்பட்டு இரண்டாவது பட்டத்தரசியானாள். உதயணன் வெற்றியடைந்தபிறகு பட்டத்தரசிகட்குரிய சிறப்பையும் இவள் பெற்றாள். கற்பிற்சிறந்தவள். பலகாலம் பிரிந்துவந்த வாசவதத்தையோடிருக்குமாறு தன்னுடைய கணவனைவேண்டிக்கொண்டவள். வாசவதத்தையைப்போல் அழகுடையவள். பிறருடைய குற்றத்தைச் சிறிதும் உணராதவள். கல்வி கேள்விகளிற் சிறந்தவள்.

**பதுமுகன்** - இவன் ஏமாங்கத நாட்டுமன்னனாகிய சீவகனுடைய அருமை நண்பன். அவனுக்கு அமைச்சனாகவும் அமைந்திருந்தான். இவன் வணிகர்மரபினன். இவனுடைய தந்தையின் பெயர் தனபாலன். மரகதம், நீலம், தரளம் முதலிய மணிகளின் தரங்களைத் தெரிவதில் இவன் மிகவும் வல்லவன். அரசன் குறித்ததை அவன் கூறுதற்கு முன்னரே இவன் உணர்ந்து அதற்குத் தக்கவாறு இவன் ஒழுகினான். கட்டியங்காரன் செய்த கொடுமைகள் யாதும் தன்னுடைய மன்னனிடங் குறுகாவண்ணம் இவன் பாதுகாத்துவந்தான். காந்தருவதத்தையைச் சீவகன் இசையில் வென்று தனக்கு உரிமையாக்கியபொழுது கட்டியங்காரன் பொறாமை கொண்டு தீயசூழ்ச்சிகள் செய்தபொழுது இவன் அவைகளையெல்லாம் அகற்றினான். இவனுடைய நண்புடைமைமதிநலமுடைமை ஆகியவைகளைப் பாராட்டிய சீவகன் பல ஊர்கள் இவனுக்கு நன்கொடையாக வழங்கினான். இவன் கோவிந்தையென்னும் கோதையை மணந்து இனிது வாழ்ந்திருந்தான்.

**பதுமை** - இவள் ஒரு தூதி. பேசுவதில் நாவன்மையுடையவள். உதயணன் வெற்றி பெற்றுக் கௌசாம்பி நகரத்தில் வாசவதத்தையோடு அரசாட்சி செய்து கொண்டிருக்கும்போது அவனுடைய நட்பைப்பெற வேண்டி, பிரச்சோதனன் நன்கொடைப் பொருள்களோடு தூதுவர்களை அனுப்பினான். அவ்வாறு தூது சென்றவர்களுள் இவளும் ஒருத்தி. உதயணனோடு தக்கவாறு பேசி அவனுக்கிருந்த மனவருத்தத்தைப் போக்கினாள்.

**பத்திரகிரியார்** - இவர் ஓர் அரசர். இவர் அரசாட்சி செய்து கொண்டிருக்கையில் பட்டினத்தடிகள் அவ்வூர்க்காட்டுப் பிள்ளையார் கோயிலில் நிட்டை கூடியிருந்தார். பத்திரகிரிமன்னனுடைய அரண்மனையில் களவு செய்யச் சென்ற கள்ளர்கள் 'எமக்கு நல்ல பொருள் அகப்படின் உனக்கு அணிகலன் சாத்துகின்றோம்' என்றுகாட்டுப் பிள்ளையாரை வேண்டிக் கொண்டு சென்றனர். கள்ளர்களுடைய வேண்டுகோள் நிறைவேறியபடியால் கள்ளர் திரும்பிச் செல்லும் பொழுது காட்டுப்பிள்ளையாரை மறக்காமல் ஓர் அணிகலனை

யெடுத்துப் பிள்ளையாருக்குச் சாத்தப்போனவர்கள் இருளில் இருந்த பட்டினத்துப் பிள்ளையாரைப் பிள்ளையார் என நினைத்து அவர் கழுத்தில் அணிகலனைச் சாத்திவிட்டுச் சென்றனர். மறுநாட்காலையில் பட்டினத்தடிகள் அவ்வணிகலனோடு கோவிலைவிட்டு வெளியே வந்தனர். கள்ளர்களின் காலடிச்சுவடு பிடித்துத் தேடிக் கொண்டுவந்த காவலர்கள் பட்டினத்துப்பிள்ளையார் கழுத்தில் அணிகலன் இருப்பதைப் பார்த்துப் பிடித்துக்கொண்டு போய்ப் பத்திரகிரி மன்னர் முன்பு நிறுத்தினர். அரசர் "இக் கள்வனைக் கழுவேற்றுக" என்றனர். அவ்வளவில் அடிகள் கழுமரத்தினிடங் கொண்டு போய் நிறுத்தப்பட்டனர். பட்டினத்தடிகள், "என்செயலாவ தியாதொன்று மில்லையினித் தெய்வமே, உன்செயலே என்றுணரப் பெற்றேனிந்த வூனெடுத்த, பின்செய்த தீவினை யாதொன்றுமில்லை பிறப்பதற்கு, முன்செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே" என்னுஞ் செய்யுளைப் பாடினர். அவ்வளவில் கழுமரம் தீப்பற்றி எரிந்தது. பத்திரகிரி மன்னர்செய்தியை உணர்ந்தார்; விரைந்தோடி வந்து அடிகளுடைய அடிகளிலே முடிபடப் பணிந்தார். அவருக்கு மெய்யறிவுண்டாகியது. உடனே துறவைமேற்கொண்டுசென்றார்.

பத்திராசலம் - ஆந்திரநாட்டில் உள்ள புகழ்பெற்ற திருமால் திருப்பதி. நலகொண்டா மாவட்டத்தில் கோதாவரிக் கரையில் இருக்கிறது. இங்குள்ள குன்றின்மேல் இராமபத்திரர் கோயில் இருக்கிறது. இக் கோயிலால் பட்டணத்திற்குப் பத்திராசலம் என்று பெயர் உண்டாகியது. புகழ்பெற்ற பக்தரும் இசைப்பாட்டாசிரியருமாகிய இராமதாசரால் கோயில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. இராமநவமியன்று ஆயிரக் கணக்கான பக்தர்கள் இக் கோயிலுக்குச் செல்லுகின்றனர்.

பத்திராபதி - இஃதொரு பெண் யானை. பிரச்சோதனனுக்குரியது. மிகவிரைந்த செலவையுடையது. ஊர்ந்து செல்லுமாறு உதயணனுக்குக் கொடுக்கப்பட்டது. நீர்விழவின்போது உதயணன் வாசவதத்தையை இதன் மீது தான் ஏற்றிக் கொண்டு தன்னுடைய நகர் நோக்கிச் சென்றான். செல்லுகையில் காலகூடம் என்னும் நோயினால் இடையே இது வீழ்ந்து இறந்துவிட்டது. கோசம்பி நகரத்தையடைந்து வாழ்ந்து கொண்டிருக்கையில் உதயணன் இதனுடைய நினைவுக்குறியாக இது வீழ்ந்த இடத்திலும் கோசம்பியிலும் கோயில் அமைத்து அவைகளில் இதனுடைய வடிவத்தை நிலைபெறுத்தி நாள்வழிபாடு முதலியன நிகழுமாறு செய்தான். இதன் பெயரால் அறச்சாலை, தண்ணீர்ப்பந்தல் முதலியவைகளும் அமைப்பித்தான். இப் பெயர் பத்திராவதி எனவும் வழங்கும். பத்திராபதி என்னுந் தெய்வப்பெண் குபேரனுடைய தீமொழியால் இந்த யானையாகப் பிறந்து இறந்த பிறகு பழைய உருவத்தையடைந்தாள் என்று கூறுவர்.

பத்துப்பாட்டு - நீண்ட அகவற் பாடல்களாக உள்ள பத்துப் பாடல்களை ஒன்றாகத் தொகுக்கப் பட்டபடியினால் அவை பத்துப்பாட்டு என்று பெயர் பெற்றன. பத்துப்பாட்டில் முதலாவதாக உள்ளது திருமுருகாற்றுப்படை. இரண்டாவ

தாக உள்ளது பொருநராற்றுப் படை; மூன்ருவதாக உள்ளது சிறுபாணுற்றுப்படை; நான்காவதாகவுள்ளது பெரும்பாணுற்றுப்படை; ஐந்தாவதாகவுள்ளது முல்லைப்பாட்டு; ஆருவதாகவுள்ளது மதுரைக் காஞ்சி; ஏழாவதாகவுள்ளது நெடுநல்வாடை; எட்டாவதாகவுள்ளது குறிஞ்சிப்பாட்டு; ஒன்பதாவதாகவுள்ளது பட்டினப்பாலை; பத்தாவதாகவுள்ளது மலைபடுகடாம்.

**பத்மதீர்த்தர்** - மத்வாசாரியர் காலத்தில் வாழ்ந்திருந்த ஓர் அத்வைதி. இவர் சிருங்ககிரி மடத்தில் இருந்தவர். மத்துவருடைய மத்வமதத்தை எப்படியாவது தடுக்க வேண்டுமென்று இவர் முயன்ருர். பலசொற்பொழிவாளர்களை ஏற்படுத்தி மத்வமதத்தின் குறைபாடுகளைப் பலரும் உணருமாறு பலவிடங்களினுஞ் சொற்பொழிவுகள் செய்யச் செய்தார்.

**பந்தன்** - இவன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த ஒரு வணிகன். இவன் வாணிகஞ் செய்யும் பொருட்டுக் கப்பலிற் சரக்குகளை யேற்றிக்கொண்டு கடலிற் சென்று கொண்டிருந்தான். கப்பல் நடுக்கடலிற் சென்று கொண்டிருந்தது. ஆதிசேடன் இவனிடத்தில் மிகுந்த அன்பு கொண்டிருந்தான். ஆகவே அவன் கடலின் உள்ளிடத்தில் இருந்துகொண்டு தன்னுடைய ஒரு கையைக்கப்பலுக்கு எதிரே நீட்டினுன். அக்கையைக் கண்ட பந்தன் நம்மிடம் யாரோ பொருள் கேட்கிருர்கள் என்று எண்ணினுன். தன்னுடைய கப்பலில் இருந்த சரக்குகளில் சிலவற்றை யெடுத்து அக்கைகளிற் கொடுத்தான். பிறகு வேறு சில கைகள் நீண்டன. அக்கைகளிலும் பொருள்களை அளிக்க அளிக்க மேலும் பல கைகள் நீண்டன. இவ்வாறு இவன் தன்னுடைய கப்பலில் உள்ள சரக்குகள் பொருள்கள் முதலிய எல்லாவற்றையுங் கொடுத்து விட்டான். இறுதியில் நீண்ட கைகளுக்குக் கொடுப்பதற்குக் கப்பலில் ஒன்றுமில்லை. ஆகவே பந்தன் அக்கைகளில் தானே புகுந்தான். ஆதிசேடன் மகிழ்ந்து இவனைத் தன்னுடைய நகரத்திற்குச் சுமந்து சென்ருன். தன்னுடைய மகளை இவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் நாகலோகத்திலேயே வைத்திருந்தான்.

நிலவுலகில் இருந்த பந்தனுடைய சுற்றத்தார்கள் பந்தன் கடலிலே மாண்டு போய்விட்டான் என்று எண்ணிஞர்கள். இவனுக்கு இறுதிச்சடங்குகள் இயற்றுவதற்கு முடிவு செய்தார்கள். இதனை ஆதிசேடன் அறிந்தான். பந்தனுக்குச் செய்ய வேண்டிய சிறப்புக்களைச் செய்தான். பல நாக ரத்தினங்களைக் கொடுத்தான். போர்த்திக்கொண்டால் இளமை மாருத பொன்னுடையும் உண்டால் நீண்டகாலத்திற்கு வாழச்செய்வதாகிய கருநெல்லிக்கனி யொன்றையுங் கொடுத்து அனுப்பினுன். பந்தன் தன்னுடைய பட்டணத்திற்கு வந்து சேர்ந்தான். அரசனைக்கண்டு தான் நாகலோகத்திற்கு போய்வந்த செய்தியைச் சொன்னுன். தான் கொண்டு வந்த நெல்லிக்கனியின் ஒரு பாதியைச் அரசனுக்குக் கொடுத்தான். இவனுடைய செய்தியை உணர்ந்த ஔவையார் இவன் மீது அந்தாதி பாடிக்கொண்டு வந்தார். அரசனுக்குக் கொடுத்தது போக எஞ்சியிருந்த நெல்லிக்கனியைப்

பந்தன் ஔவையாருக்கு வழங்கினான். பொன்னுடையையும் ஔவையாருக்குத் தந்தான். இதனால் இவனுடைய புகழ் என்றுங் குன்றாது நிலைபெறுவதாயிற்று.

**பப்புருவாகனன்** - இவன் அருச்சுனனுடைய மகன். சித்திரவாகனன் என்னும் பாண்டிய மன்னன் மகளாகிய சித்திராங்கதையிடம் பிறந்தவன். அருச்சுனன் தீர்த்தயாத்திரை செய்த பொழுது மதுரையில் சித்திராங்கதையைக் காந்தர்வ மணம் புரிந்தான். பிறகு முறைப்படியான மணமும் நடைபெற்றது. சித்திரவாகனன் வேண்டுகோளின்படி இம்மகனை அவனிடமே அருச்சுனன் விட்டுச் சென்றான். பிறகு அசுவமேத யாகஞ் செய்த பொழுது குதிரையின் பிறகு அருச்சுனன் வந்தான். பப்புருவாகனனாகிய மகனும் தந்தையும்ஒருவரைஒருவர் இனந்தெரிந்து கொள்ளாதபடியால் கொடும்போர் நிகழ்ந்தது. அப்போரில் அருச்சுனன் தோற்று வருந்தினான். பிறகு தான் தோல்வியடைந்தது தன்னுடைய மைந்தனிடமே என்பதை உணர்ந்து பெரிதும் மகிழ்ந்தான்.

**பயாபதி** - இவன் சுரமை நாட்டு அரசன். போதனம் என்னும் நகரத்தில் இருந்து அரசு புரிந்தவன். வாகுவலியின் வழிமுறையினன். இவன் மிகச்சிறப்புடையவனாகத் திகழ்ந்தபடியால் பிரசாபதி என்னும் பெயரும் இவனுக்கு விளங்கியது. இவன் எல்லாக் கலைகளையும் இனிது கற்றுத் தேறியிருந்தான். மிருகாபதி, சசி என்பவர்கள் இவனுடைய மனைவியராவர்.

**பரசக்கரகோலாகலன்** - வரகுண மன்னன் காலமான பிறகு அவனுடைய மகனாகிய இவன் ஆட்சிபுரியத் தொடங்கினான். இவனுக்கு, 'ஏகவீரன்' 'சீவல்லபன், என்னும் வேறு பெயர்களும் உண்டு. இவன் சேரர், பல்லவர், சிங்களவர் முதலானவர்களோடு போர் புரிந்தான். இவன் ஈழ நாட்டின் மீது படையெடுத்துச் சென்று பல நகரங்களைக் கொள்ளையடித்துப் புத்த விகாரங்களிலிருந்து பொற் சிலைகளையும் விலை உயர்ந்த பிற பொருள்களையும் கவர்ந்து கொண்டு வந்தான். அதனால் சிங்களநாடு தன்னுடைய செல்வத்தையிழந்து வறுமையடைந்தது.

**பரசுராமர்** - பிருகு வமிசத்திற் பிறந்த சமதக்கினி முனிவருக்கு இரேணுகையிடம் பிறந்தவர். இவர் திருமாலின் கூறாகத் தோன்றியவர். இவர் க்ஷத்திரியர்களை அழித்தொழிக்க வேண்டுமென்று சிவபிரானை நோக்கித் தவஞ் செய்தார். சிவபிரான் புலையர் வடிவங்கொண்டு இவர் இருக்குமிடத்திற்கு வந்தார். இராமர் சினங்கொண்டு அவரோடு போர் செய்தார். போரிற் சிவபிரான் இராமரை நன்கு வருத்தினார். இராமர் மனக்கவலையடைந்து சிவபிரானை எண்ணித் தொழுதார். சிவபிரான் காட்சி தந்து பரசு என்னும் படைக்கலத்தை வழங்கியருளினார். "இன்று முதல் உன்னுடைய பெயர் பரசுராமன் என்று வழங்குவதாக" என்று அருள் புரிந்தார். அன்றுமுதல் பரசுராமர் என்னும் பெயர் நிலைபெற்றது.

இராமர் மிதிலையிற் சீதையை மணந்து திரும்பியபோது அவரை எதிர்த்து அதனால் தம்முடைய தவத்தையிழந்தார். கன்னன் இவரிடம் தன்னை அந்தணன் என்று கூறி வில்வித்தை கற்றான். பிறகு உண்மை

யை உணர்ந்தபொழுது, "அவ் வித்தை சமயத்தில் பயன் படா தொழிக" என்று சாபங் கொடுத்தார். அம்பையின் பொருட்டுப் பீஷ்மரோடு போர் செய்து தோல்வியடைந்தார். கார்த்தவீரியனைக் கொன்ற தீவினை தீருமாறு ஓராண்டு புனிதநீர்ப்பயணஞ் செய்தார்.

தந்தை சொற்படி தாயைக் கொன்றார். பிறகு தாய் உயிர் பெறுமாறு வரம் பெற்றார். கார்த்தவீரியனைக் கொன்றதால் அவனுடைய பிள்ளைகள் இவர் இல்லாத சமயத்தில் இவருடைய தந்தையைக் கொன்றனர். இரேணுகை இருபத்தொரு முறை வயிற்றில் அடித்துக் கொண்டு அழுதாள். குமரன் வந்ததும் நடந்ததைக் கூறி இறந்தாள்.

பரசுராமர் இறந்த தாய் தந்தையர்க்குக் கருமஞ் செய்கையில் ஐந்தா நாள் இரவில் தம்மீது ஒரு புலி பாய்ந்தது போற் கனாக் கண்டார். அதனால் அஞ்சி, "அம்மா! அம்மா!!" என்று அழைத்தார். இரேணுகை தன்னை மகன் அழைக்கிறான் என்று அதுவரையில் மகன் தனக்குச் செய்த கருமத்தால் ஏற்பட்டிருந்த தலையுடன் வெளிப்பட்டுப் பார்த்தாள். பரசுராமர் இதனைக் கண்டு தத்தாத்திரேயருக்கு அறிவித்தார். தத்தாத்திரேயர், "கருமம் முடியுமுன் அழைத்தபடியால் இவ்வாறாயிற்று" என்று கூறிக் கருமத்தை முடிக்கச் செய்தார். தாய் உயிர்பெற்றுத் தலைமட்டுமுள்ள தெய்வமானாள். தந்தை சத்திய உலகம் அடைந்தார். தாய் இருபத்தொருமுறை வயிற்றில் அடித்துக்கொண்டு அழுதபடியால் க்ஷத்திரியர்களின் வழிமுறையை இருபத்தொரு முறை அழித்தார். அரசர்களைக் கொன்ற பிறகு பூமியைக் காசிபருக்குத் தானஞ் செய்தார். இதனால் பூமி காசினி என்று பெயர் பெற்றது.

**பரஞ்சோதியார்** - சோழவள நாட்டில் திருச்செங்காட்டங் குடியில் மாமாத்திரர் குடியில் தோன்றியவர். ஆயுள் வேதக் கலையும், வட நூற் கலையும், படைக்கலத் தொழிற்கலையும் பிறகலைகளையும் நன்குணர்ந்தவர். அரசன்பால் போர்த் தொழிலில் அமர்ந்து பல போர் முனைகட்குச் சென்று அரசனுக்கு வெற்றி தேடித்தந்தவர். அரசனுக்காகப் படையெடுத்துச்சென்று வாதாவி என்னும் வலிய கோட்டையையும் வென்று அரசனாற் பாராட்டப் பெற்றவர். இவரே பின்னாளில் சிறுத்தொண்ட நாயனாரானவர்.

**பரணர்** - இவர் சங்கப் புலவர்களில் ஒருவர். பல நூல்களையும் நன்கு ஓதி யுணர்ந்த படியால் பேரறிவாளராகத் திகழ்ந்தார். கபிலர்பால் இவர் பெரு நண்புடையவர். அதனால் பலரும் இவர்களிவரையும் ஒருங்கிணைத்துக் 'கபிலபரணர்' என்று கூறுவர். இவர் செங்குட்டுவன் என்னுஞ் சேர மன்னன் மீது பத்துப் பாடல்களைப் பாடினார். இப்பாடல்களின் பொருட்டுச் சேர மன்னன் பல ஊர்களையுடைய ஒரு நாட்டையும், குட்டுவன் சேரல் என்னும் தன் அருமைத் திருமகனையும் நன்கொடையாக வழங்கினான். அக்காலத்தில் இருந்த முடியுடை மன்னர்கள் இவர்பால் பாடல் பெறுவதைத் தமக்கோர் பெருமையாகக் கருதினார்கள். இவர் எவர் பாலும் இனிய பண்பினொடு பழகினார். அரசராயினும் குடிகளாயினும் ஒருவரோடொருவர் மாறுபடுவ

ராயின் இவர் அவர்களிடையே புகுந்து அறவுரைகள் பல புகன்று அவர்களை நண்பர்களாக்கி விடுவார். "பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ" என்று இவரால் அதிகமான் பாடப் பெற்றிருப்பதை ஒரு பெரும் புகழாக ஔவையார் வியந்து கூறியுள்ளார். தாங் கருதியவைகளை முடித்தற்கு மன்னர்கள் இவருடைய உதவியையே நாடினர். பேகன் தன் மனைவி கண்ணகியைத் துறந்து பரத்தை வசப்பட்டிருந்தபோது இவர் "மடத்தகை மாமயில்" என்னுஞ் செய்யுளைப் பாடி நல்லறிவுச் சுடர் கொளுத்திப் பேகன் தன் மனைவியோடு வாழுமாறு செய்தார்.

**பரணி** - பரணி என்பது இருபத்தேழு விண் மீன்களில் ஒன்றன் பெயராகும். பரணி நாளில் கொண்டாடப் பெறும் போர் வெற்றி விழாவைச் சிறப்பித்துப் பாடுதலின் பரணி யென்னும் பெயரைப் பெற்ற பிரபந்தம் ஒன்றும் உண்டு. போரில் வெற்றி பெற்ற வீரனைப் பாடுதலைப் பொருளாகக் கொண்ட நூல் பரணி எனப்படும். இலக்கண முறைப்படி இது புறத்திணையின் பாற்படும். ஆனை ஆயிரம் அமரிடை வென்ற மானவனுக்கு வகுப்பது பரணி. பரணி நூல்களில் இந்நாளில் சிறந்து விளங்குவது கலிங்கத்துப் பரணி. இதனைப் பாடியவர் செயங்கொண்டார் என்னும் புலவர்.

**பரதன்** - (க) பிரச்சோதனனுடைய அமைச்சர்களில் ஒருவன். சாலங்காயனுக்கு அடுத்தபடியாக மதிக்கப் பெற்றவன். நூல்கள் பலவற்றையும் நுணுகியாராய்ந்து சிறந்த புலமையுடையவனாகவும் விளங்கினான்.

**பரதன்** - (உ) சிங்கபுரத்தரசனாகிய வசுவென்பவனுடைய வேலைக்காரருள் ஒருவன். இவன் காரணமின்றிச் சங்கமனென்னும் வணிகனைக் கொல்லுவித்தமைபற்றி அவனுடைய மனைவியாகிய நீலி யென்பவளால் தீமொழி வழங்கப் பெற்றோன்; கோவலனாகப் பிறந்தவன் இவனே.

**பரதன்** - (ங) இவன் திங்கட்குல மன்னனாகிய துஷ்யந்தனுக்குச் சகுந்தலையிடம் பிறந்தவன். பல கலைகளினும் இவன் சிறந்து விளங்கினும் இசை நூலிலும் கூத்து நூலிலும் வல்லவன். கூத்துக்கலையாகிய பரதத்தை இவன் நன்கு வளர்த்தமையாலே இவனுக்குப் பரதன் என்று பெயருண்டாகி இந்த நாடும் பரதகண்டம் என்று பெயர் பெற்றது. மேலும் இவன் இரக்கமும் ஈகையும் மிகுதியும் உடையவனாய் உலகம் புரந்தான். இவனுடைய ஆட்சியைத்தேவர்களும்வியந்து பாராட்டினார்கள். இவனுடைய வழி முறையினர் பாரதர் எனப் பெற்றனர். பாண்டவர்களும் இவனுடைய வழிமுறையினரே.

**பரதன்** - (ச) தசரதமன்னனுடைய புதல்வர்கள் நால்வரில் ஒருவன். இராமன்பால் பேரன்புடையவன். தன்னுடைய தாயாகிய கைகேயி தனக்காகப் பெற்ற நாட்டை அரசாட்சி செய்யாமல் பாதுகையை வைத்து அரசாட்சி செய்தவன். திருமாலின் கூறு நாலில் இராமன் அரைத் திருமாலாக இலக்குமணனும் சத்துருக்கனும் அரைக்கால் அரைக்கால் திருமாலாக இவன் கால் திருமாலாக அமைந்தவன். இராமன் குறித்த காலத்தில் வராமையால் தீப்பாய முயன்று அதற்கானவைகளைச் செய்து

விரைந்து வந்த அனுமானால் தடுக்கப் பெற்றவன்.

**பரதாசாரியார்** - எழுபத்துநான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவரான நடுவிலாழ்வான் வழி முறையில் பிறந்தவர். இவருடைய தந்தையின் பெயர் பரவத்து நாயனார். இவர் பிறந்தவூர் காஞ்சிபுரம். பிள்ளை லோகாசாரியாருடைய கூறுதலின் இவர் பிள்ளை லோகாசாரியார் என்றும் கூறப் பெறுவார். பிள்ளை லோகம் சீயர் என்று மற்றொரு பெயரும் உண்டு. தம்முடைய மாணவனும் வட நாட்டரசனுமான பராங்குசனைக் கொண்டு திருக்கடல் மல்லையிலுள்ள பெருமாள் கோவிலுக்குப் பல திருப்பணிகள் செய்தார். இவருடைய மகன் வெள்ளைச்சீயர் எனப் படுவார். இவர் செய்த நூல்கள் உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப் பிரபந்தம், இராமாநுச நூற்றந்தாதி முதலியன. இவருடைய நூல்கள் திருவரங்கத்தில் அரங்கேற்றஞ் செய்யப்பட்டன.

**பரதுர்க்கமர்த்தனன்** - கி.பி. ஏழாம் நூற்றாண்டில்வாதாபிகொண்ட நரசிம்மவர்மன் காலத்தில் இருந்தவன். வாதாபிப் போரிற் கலந்து கொண்டவன். இவனுக்கு வாதாபி சித் எனவுஞ் சிறப்புப் பெயர் உண்டு.

**பரத்துவாசர்** - இவர் ஓர் இருடி. இவருடைய தந்தையின் பெயர் உதத்தியர். தாய் பெயர் மமதை. இவருடைய இருப்பிடம் சிருங்கிபேரம். இந்த இடம் இப்பொழுது பிரயாகை என்று வழங்கப் படுகிறது. இவருக்கு வித்தன் எனவும் ஒரு பெயர் உண்டு. இவர் கலசத்திற் பிறந்தவர் என்று கூறுவர். இவருடைய மகன் பெயர் துல்ய வக்திரன். இவருடைய இருப்பிடத்தில் இராமபிரான் வனவாசஞ் செய்த பொழுது சிலநாள் தங்கியிருந்தார்.

**பரமசிவேந்திரர்** - இவர் வேதாந்தத்திலும் தருக்கத்திலும் வல்லவர். சதாசிவப் பிரமேந்திரர் இவருடைய மாணவர். சதாசிவப்பிரமேந்திரர் தம்முடைய ஆசிரியராகிய பரமசிவேந்திரரிடம் வருபவர்களிடமெல்லாம் சொற் போரிட்டுத் தம்முடைய அறிவாற்றலைக்காட்டிக் கொண்டிருந்தார். இதனால் பலபேர் இவரிடந் தோல்வி யடைந்து வருந்தினர். ஒருநாள் தம்முடைய மாணவரைப் பார்த்து, "சதாசிவா! உன்னுடைய வாய் அடைக்காதா?" என்று கேட்டார். அன்றுமுதல்சதாசிவப்பிரமேந்திரர் மௌன விரதத்தை மேற் கொண்டார். இறுதி வரையில் பேசவே யில்லை.

**பரமசுந்தரி** - பிரமசுந்தர யோகியினுடைய மனைவி. யூகிக்குத் தாய்; கற்பிற் சிறந்தவள். கணவனுடைய தவத்திற்கு உறுதுணையாக அமைந்து நின்று மிகுந்த புகழ் பெற்றவள்.

**பரமதத்தன்** – காரைக்கால் அம்மையாருடைய கணவன். அம்மையாருடையபெருமையை அறிந்து பாராட்டியவன்.

**பரமேச்சுரன்** - II நரசிம்மனுக்குப் பிறகு பட்டத்திற்கு வந்தவன் இரண்டாம் மகேந்திரன். இவன் நீண்ட காலம் அரசாளவில்லை. அவனுக்குப் பிறகு இந்த இரண்டாம் பரமேச்சுரன் பட்டத்திற்கு வந்தான். இவன் கி. பி. 670 முதல் 685 வரை பதினைந்தாண்டுகள் வரை அரசாண்டான். இவன் காலத்திலும் சாளுக்கியரோடு போர்கள் நடைபெற்றன. இவனுடைய காலத்தில் சாளுக்கிய வேந்தனாக விக்கிரமாதித்தன் என்பவன் இருந்தான். விக்கிர

மாதித்தனும் அவனுடைய மகனாகிய விநயாதித்தனும் பரமேச்சுரனுடன் போரிட்டனர். நூறாயிரம் போர் வீரர்களோடு போருக்கு வந்த விக்கிரமாதித்தன் துணையாக யாருமின்றித் தனித்தவனாக ஓடினான் என்று கூறுவர். கருங்கற்களை அடுக்கிக் கோயில் கட்டும் முறையை முதன் முதலாகத் தொடங்கியவன் இந்தப் பரமேச்சுரனேயாவன் என்று வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர்.

**பரம்புமலை** - பாரி என்னும் வள்ளலுக்கு உரிய மலை. இது கொங்கு நாட்டில் உள்ளது என்கின்றனர். பறம்பு மலை என்றும் வழக்குண்டு.

**பரவையுண்மண்டளி** - சோழவள நாட்டில் திருவாரூரில் கீழைத் தேர்த் தெருவில் இப் பெயரையுடைய தேவாரம் பெற்ற திருக்கோயில் இருக்கிறது. இங்கெழுந்தருளிய இறைவன் ஒரு காலத்தில் வருணன் இந் நகரத்தின் மீது ஏவிய கடலை உண்டு வற்றச் செய்தமை பற்றி இக் கோயில் இவ்வாறு பெயர் பெற்றது என்பர். இக் கோவிலுக்குள் உள்ள குளத்தில் மூழ்கித்தான் சுந்தரர் மற்றொரு கண்ணையும் பெற்றனர் என்பர்.

**பராக்கிரம பாண்டியன்** - பாஞ்சாலன் குறிச்சி கட்டபொம்மு வழிமுறையில் முப்பதாவதாகப் பட்டத்தை யடைந்தவன். இவனுடைய தந்தையின் பெயர் வீர சென்னவன். இவன் பன்னிரண்டு ஆண்டுகள் அரசாட்சி புரிந்தான். அதன் பின் மகனாகிய விசய ரகுபதியென்பவன் பட்டத்தை யடைந்தான்.

**பராங்குச நம்பி** - இவர் எம்பாருடைய தம்பியரான சிறிய கோவிந்தப் பெருமாளுடைய புதல்வர். பராங்குச நம்பி என்னும் நம்மாழ்வாருடைய இத்திருப் பெயரை அவர் நினைவின் பொருட்டு இராமாநுசர் இவருக்கு வைத்தார். எழுபத்து நான்கு சிம்மாசநாதிபதிகளில் ஒருவர்.

**பராசர முனிவர்** - இவர் வசிட்டருடைய பேரர். சத்தி முனிவர் என்பவருக்குப் புதல்வர். இவருடைய தாய் பெயர் திரசந்தி. இவர் தாய் வயிற்றில் இருக்கும் போது தந்தை பிறந்தார். இவர் பிறந்து தாயினுடைய மடியில் இருக்கையில் தாய் விதவையாக இருத்தலைக் கண்டார். உதிரன் என்னும் அரக்கனால் தந்தை இறந்ததை அறிந்தார். அரக்கர்களைக் கொல்லுவதற்காக ஒரு வேள்வியைச் செய்தார். அதில் அரக்கர்கள் வந்து விழுந்து மாண்டனர். நிருதியின் ஊர்தியாகிய பூதம் சிவபிரானை யெண்ணி ஓலமிட்டது. சிவபிரான் வேள்வியை நிறுத்துமாறு முனிவர்கட்குக் கட்டளையிட்டார். முனிவர்களும் வேள்வியை நிறுத்திச் சிவபிரானுடைய அருளைப் பெற்றனர். தத்தன், அனந்தன், நந்தி, சதுமுகன், பருதி, முதலிய அறுவரும் இவருடைய மக்கள். இவர்கள் சரவணப் பொய்கையில் குதித்து அந் நீர் நிலையை அலைத்து விளையாடிய போது அதில் வாழ்ந்த பல மீன்கள் இறந்து மேலே மிதந்தன. சிறுவர்கள் அம் மீன்களைப் பொறுக்கிக் கோரையிற் கோத்து விளையாடினர். அப்பொழுது அங்கு வந்த தந்தையாகிய பராசரர் மக்களின் செய்கையைக் கண்டு சினங் கொண்டார். "நீங்கள் மீன்களாகுக" என்று வசவுரை வழங்கினார். சிறுவர்கள் வசவுரைக்கு நீக்கந் தேடி

டனர். அதற்குப் பராசரர், "முருகக் கடவுள் இப் பொய் கையில் தோன்றுவார். அவர் பொருட்டு உமாதேவி இங் கெழுந்தருளுவார். அவருடைய திருமுலைப் பால் இப் பொய்கை யில் கலக்கும். அதனால் நீங்கள் வசவுரை நீங்குவீர்கள்" என்று கூறினார். மச்சகந்தியைச் சேர்ந்து வியாசரைப் பெற்றார். இவர் தாயினுடைய கருப்பத் தில் பன்னிரண்டு ஆண்டுகள் இருந்தவர் என்ப. இவருக்குச் சித்திகள் யாவும் கைவந்திருந் தன.

**பராசரன்** - சோழ வள நாட்டில் இருந்த ஒரு மறையவன். இவன் மாந்தரஞ் சேரல் இரும்பொறை யிடம் பரிசு பெற்றுத் திரும்பிய போது திருத்தங்காலில் தட்சணா மூர்த்தி என்பவன் குற்றமில்லா மல் மறையோதியதைக் கேட்டு மகிழ்ந்து அவனுக்கு நன் கொடைகள் வழங்கினான்.

**பராந்தகச் சோழன்** - சூரவாதித்த சோழனுடைய வழி முறையில் தோன்றி உறையூரை அரசாட்சி செய்து கொண்டிருந்தவன். சாரமா முனிவர் என்பவர் சிவபிரான் பொருட்டு நாக லோகத்திலிருந்து கொண்டு வந்து பயிரிட்ட செவ்வந்தியின் மலரை மலர் வாணிகன் பறித்து வந்து கொடுப்ப அதனை யணிந்த தீவினையால் சாரமா முனிவருடைய சினத்திற்கு இலக்கானான். அவர் உறை யூரின் மீது மண்மாரி பெய்யு மாறு வசவுரை வழங் கினார். அவ்வாறே மண் மாரி பெய்து உறையூர் அழிந்தது. மண்மாரிக்கு அஞ்சி ஓடிய இவனும் அழிந்தொழிந்தான். இவனுடைய மனைவி ஒருத்தி மட்டும் உயிர் பிழைத்துக் கரிகாற் சோழனைப் பெற்றாள்.

**பராந்தக பாண்டியன்** - இவன் பரசக்கர கோலாகலனுடைய இரண்டாவது மகன். முதலா வது மகன் வரகுணவர்மன். தமையனாகிய வரகுணவர்மன் காலமான பின் பராந்தக பாண்டியன் அரசாட்சி செய்யத் தொடங்கினான். இவன் தன் னுடைய தமையனைப் போல் சடையவர்மன் என்னும் பட்ட முடையவனாக விருந்தான். இவன் கொங்கர்களைப் போரில் வென்றும் பெண்ணாகட நகரை யழித்தும் பல போர்களைச் செய்தான். இவனுக்கு வீர நாராயணன் எனவும் பெயர் வழங்கியது. இவனுடைய பட்டத்தரசியின் பெயர் வான வன் மாதேவி.

**பாரந்தகன்** - இவன் ஆதித்தனுக் கும் திரிபுவனமாதேவிக்கும் புதல்வனாகத் தோன்றியவன் கி. பி. 907 இல் பட்டத்திற்கு வந்து 953 வரைஅரசாண்டான். இவன் தமிழ்நாடு முழுவதை யும் தன்னுடைய ஆட்சிக்குக் கொண்டு வந்தான். வடபகுதி யில் இருந்த வாணர் வைதும்பர் முதலியோரையும் வென்றான். இவன் சிறந்த சிவனடியானாக விளங்கினான். திருவாவடு துறை, செந்துறை முதலிய இடங்களில் திருக் கோயில் அமைத்தான். இவனுக்கு நான்கு ஆண்மக்களும் இரண்டு பெண் மக்களும் இருந்தனர்.

**பரிச்சித்து** - அருச்சுனனுடைய மகனாகிய அபிமன்னுவிற்கு உத்தரையிடம் பிறந்தவன். இவன் தாய் வயிற்றிலிருக்கை யில் பாரதப் போர் நடந்தது. அசுவத்தாமன் பாண்டவர் களுடைய வழிமுறையை அழிக்க வேண்டுமென்று கணை செலுத்தினான். அஃது உத் தரையின் வயிற்றிலிருந்த கருவை யழிக்கச் சென்றது.

கண்ணபிரான் அத்திரத்தை அதட்டி விலக்கினர். திருமாலுடைய திருவடிப் பரிசம் பெற்ற படியால் இவனுக்குப் பரிச்சித்து என்று பெயருண்டாகியது. தருமர் இவனுக்கு முடி சூட்டிவிட்டு உடன் பிறந்தார்களோடு சுவர்க்கஞ் சென்றார். அறநெறிப்படியே இவன் அரசு செய்தான். ஒருநாள் காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். அங்குத் தவத்திலிருந்த முனிவரைக் கண்டு உரையாடினன். அவர் யாதும் மறுமொழி பேசாதிருக்கவே செத்த பாம்பு ஒன்றை யெடுத்து அவருடைய கழுத்தில் மாலையாகப் போட்டு விட்டுச் சென்றான். இச்செய்கையை முனிவருடைய மகன் உணர்ந்தான். இவ்வாறு தீமை புரிந்த மன்னன் இன்றிலிருந்து ஏழாவது நாள் தட்சகன் என்னும் பாம்பினால் கடிக்கப்பட்டு மாளக்கடவன் என்று வசவுரை வழங்கினான். அவ்வாறே இவன் பாம்பினால் கடியுண்டு மாண்டான். இவனுடைய மகன் பெயர் சனமேசயன். பரிச்சித்தின் வரலாறு சிறிது மாறுபாடாகவும் வழங்கும்.

**பரிதிமாற்கலைஞர்** - தம்பெயரைத் தமிழாகச் செய்ய விரும்பிய சூரியநாராயண சாத்திரியார் - சூரியன் - பரிதி; நாராயணன் - மால்; சாத்திரியார் - கலைஞர்; என்று தமிழ்ப்படுத்தி வழங்கினார். சென்னை கிறித்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கியவர்.

**பரிமளா சாரியார்** - இவருடைய தந்தையார் பெயர் திம்மண்ண பட். தாயார் பெயர் கோபிகாம்பா. இவர் மத்வவைணவ சம்பிரதாயத்தை மேற்கொண்டவர். கும்பகோணத்தில் வேத நூல்களைக் கற்றார். சரசுவதி பாய் என்னும் மாதை மணந்தார். இவருடைய இலக்கண இலக்கிய மீமாம்ச அறிவையும் வைணவ நூல்களில் இருந்த ஆழ்ந்த பயிற்சியையும் கண்ட சுவாமி சுதீந்திரர் என்பவர் இவரைத் தம்முடைய மடத்தின் தலைவராக இருக்கும்படி வேண்டினார். அவருடைய விருப்பப்படியே தஞ்சை இரகுநாத பூபாலர் என்பவர் முன்பு துறவறத்தை மேற்கொண்டார். இராகவேந்திரர் என்று துறவுப் பெயர் கொண்டார். இவருக்கு இடப்பட்ட பிள்ளைப் பெயர் வெங்கண்ணபட்டர் என்பது. இவர் பலவூர்களுக்கும் பயணம் போய் ஆதோணியை அடைந்தார். அப்பொழுது அங்கே நவாபு சித்திமசூத்தான் என்பவன் அதிகாரத்தில் இருந்தான். அவன் இவருடைய பெருமையைப்பற்றிக்கேள்விப்பட்டான். இவரைத் தன்னிடம் வரவழைத்தான். மூடப்பட்ட ஒரு வெள்ளித் தட்டில் இவருக்குப்புலால் உணவைப் படைத்தான். இவர் அதனை உணர்ந்து கொண்டு தட்டின் மேல் தண்ணீரைத் தெளித்தார். பிறகு தட்டைத் திறந்து பார்த்தார். தட்டு நிறையப்பழங்களும் மலர்களும் காணப்பட்டன. நவாபு இதனைக் கண்டு அஞ்சினன். தன்னுடைய குற்றத்தைப் பொறுக்குமாறு வேண்டினன். துங்கபத்திரை யாற்றுக் கரையில் உள்ள மந்திரலாயம் என்னும் சிற்றூரை இவருக்குத் தானமாகக் கொடுத்தான். அங்கு இவர் ஒரு பிருந்தாவனத்தை ஏற்படுத்திக் கொண்டு பல ஆண்டுகள் சமயப்பணிசெய்து கொண்டிருந்தார். பல அரிய நூல்கள் எழுதினார். பகவத் கீதைக்குத் தெளிவுரை எழுதினார். பரிமளம் என்னும் பெயருடைய

ஙியாய சுத்தத்துக்கு அழகிய விளக்கவுரை ஒன்று எழுதினார். அதனால் இவருக்குப் பரிமளாசாரியார் என்னும் சிறப்புப் பெயர் வழங்கப்பட்டது. இவர் 1671 ஆம் ஆண்டில் காலமானார்.

**பரிதாபந்தீர்த்தபிள்ளையார்** - இப் பிள்ளையார் திருப்பத்தூர் என்னுமிடத்தில் தனிக் கோயில் ஒன்றில் எழுந்தருளி யுள்ளார். ஒரு மாதுக்கு அடுத்தடுத்துப் பெண் குழந்தைகளே பிறந்தன. இதனால் சினங்கொண்ட அவளுடைய கணவன், "அடிக்கடி பெண்ணுகவே பெறும் நீ வீட்டைவிட்டுஓடிப்போ"என்று கூறி அடித்து விரட்டினன். திக்கற்றவளாக இருந்த அப்பெண் தன் கைக்குழந்தையோடு அப் பிள்ளையார் கோவிலுக்கு வந்து, "அப்பனே! என்னுடைய தொல்லைகளை நீதான் தீர்த்தருள வேண்டுமென்று" கூறி அழுது கொண்டு படுத்திருந்தனள். மறுநாள் காலையில் எழுந்து பார்க்கும்பொழுது தன்னுடைய குழந்தை ஆண் குழந்தையாக இருக்கக் கண்டாள். அன்றுமுதல்அக்கோவில் பிள்ளையாருக்குப் பரிதாபந் தீர்த்த பிள்ளையார் என்று பெயருண்டாகியது.

**பரிமேலழகர்** - இவர் தொண்டை நாட்டில் காஞ்சிபுரத்தில் இருந்தவர். இவருக்கு இடப்பட்ட பிள்ளைப்பெயர் அழகர் என்பது. இளமைப் பருவத்திலேயே தென் மொழியையும் வடமொழியையும் நன்கு கற்றுணர்ந்தார். திருவள்ளுவருடைய திருக்குறளுக்குத் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, திருமலையர், மல்லர், கவிப்பெருமான், காளிங்கர் என்பவர்கள் இவருக்கு முன்னரே உரையியற்றியிருந்தனர். இவர் தாமும் ஓர் உரையை இயற்றினார். தம்முடைய உரையை அரசன் முன்பு அரங்கேற்றஞ் செய்ய எண்ணித் தம்முடைய விருப்பத்தை அரசனிடந் தெரியப் படுத்தினர். அரசன் "உருக்குப் பரிமேல் இருந்து உம்முடைய உரையைக் கூறுவீராயின் நான் அதனை ஒப்புவேன்" என்றனன். அவ்வாறே இவர் பழுக்கக் காய்ச்சிய பரிமேல் அமர்ந்து தம்முடைய உரையை அரங்கேற்றஞ்செய்தார். அது முதல் பரிமேலழகர் என்று பெயர் உண்டாகியது. இவருடைய உரையை அரங்கேற்ற அவையில் இருந்து கேட்ட அறிஞர்களிற் சிலர், "திருத்தகு சீர்த் தெய்வத்திருவள்ளுவர்தங், கருத்தமைதி தானே கருதி - விரித்துரைத்தான், பன்னு தமிழ்தேர் பரிமேல் அழகனெனு, மன்னும் உயர் நாமன் வந்து" எனவும், "பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள நூலெல்லாம் வள்ளுவர் செய் நூலாமோ - நூலிற், பரித்த உரையெல்லாம் பரிமேல் அழகன், தெரித்தஉரையாமோ தெளி"எனவும் பாராட்டினர். இவர் காலத்தில் நச்சினார்க்கினியர் முதியவராகஇருந்தார். பரிமேலழகர் தம்முடைய உரையை நச்சினார்க்கினியரிடம் காட்ட எண்ணினார். நச்சினார்க்கினியருடையஇல்லத்திற்குச் சென்று உரையைக் காட்டினார். "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே" என்னுங் குறளுக்கு இவர், "முன் தனியாத முட்டை தனித்துக்கிடப்ப அதனுட் கிடந்தபுள் பருவம் வந்த காலத்துப்பறந்து போனதன்மைத்து" என்று உரையெழுதியிருத்தலைப் பாராட்டினார். தாம் குடம்பை என்பதற்குக் கூடு

என்று எழுதியிருப்பது பொருத்தமன்று" என்று புகன்றார். பரிமேலழகர் தம்முடைய உரையில் ஆங்காங்கு திருக்கோவையார், நாலடியார், சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியவைகளை மேற்கோள் எடுத்துக்காட்டி இருப்பதாலும், கம்பராமாயணம் முதலியவைகளை அவ்வாறு எடுத்துக் காட்டாமையாலும் இவருடைய காலம் கம்பருடைய காலத்திற்கு முற்பட்டதாகஇருக்கலாம் என்றுஎண்ணுகின்றனர். நக்கீரனார் இயற்றிய திருமுருகாற்றுப்படை, பரிபாடல் ஆகியவைகட்கும் இவர் உரை செய்ததாகக் கூறுவர்.

**பருணுதன்** - (க) இவன் ஒரு மறையவன். சருகு முதலியவைகளையுண்டு சிவபூசை செய்துகொண்டிருந்தான். ஒருநாள் தருப்பை கொய்யும் பொழுது அஃது இவனுடைய கையிலறுக்க அதனால் உதிரம் ஒழுகியது. அதனைக்கண்ட பருணுதன் இன்பக் கூத்தாடினான். அப்பொழுது சிவபெருமான் ஒரு மறையவராக அவ்விடஞ் சென்று, "எதற்காகக் கூத்தாடுகின்றாய்?" என்று உசாவினார். பருதணுதன் அதற்கு யாதும் மறுமொழி கூறாமல் மேலுங் கூத்தாடிக்கொண்டிருந்தான். சிவபிரான் விரலின் அறுபட்ட பாகத்தை அகற்றினார். அவ்விடத்திலிருந்து அமுதமொழுகியது. மேலுஞ் சிறிது நேரங்கழித்துத் திருநீறு ஒழுகியது. இதனைக் கண்ட பருணுதன் மறையவர் வடிவங் கொண்டு வந்த மாதேவனைப் பணிந்து போற்றினான். சிவபிரான் இவனுக்குக் கணத்தலைமையை அளித்தார்.

**பருணுதன்** - (உ) விதர்ப்ப நாட்டில் குண்டின புரத்திலிருந்த விசாரசருமன் என்னும் அந்தணனுடையமகன். கல்வியறிவினுஞ் சூழ்ச்சித்திறத்தினும் ஒற்றாய்தலிலும் வல்லவன். தமயந்தியின் தந்தையாகிய வீமன் தன்னுடைய மகளைக்கண்டுபிடித்த பிறகு மருமகனாகிய நளனைக் கண்டு பிடிப்பதற்கு இவனைப் பலவிடங்கட்கும் அனுப்பினான். நளன் உருமாறி வடிவம் வேறுபட்டவனாக இருதுபன்னனிடம் இருந்தும் இவன் தன்னுடைய சூழ்ச்சியினால் அவன் நளனே என்று பலவகையினுந் தேர்ந்துணர்ந்து வீமனுக்குச் செய்தி தெரியப்படுத்தினான்.

**பர்த்துருகரி** - ஏழாம் நூற்றாண்டில் இருந்தவர். பர்த்துருகரி நீதிசதகம், சிருங்காரசதகம், வைராக்கியசதகம் முதலிய நூல்களை வடமொழியில் இயற்றியவர். இவர் அரசராக இருந்து மனைவியின் தீய ஒழுக்கத்தைக் கண்டுஅதனால்வெறுப்படைந்து துறவறத்தை மேற்கொண்டவர் என்பர்.

**பலராமர்** - இவர் வசுதேவருடைய புதல்வர். உரோகணியிடம் பிறந்தவர். கண்ணனுக்கு அண்ணன். வெண்மை நிறமுடையவர். இவருடைய மனைவியின் பெயர் இரேவதி. இவர் கலப்பையைப் படைக்கலமாகக் கொண்டுள்ளபடியினால் அலாயுதன் எனவும்ஒரு பெயர் உண்டு. காமபாலன் என மற்றொரு பெயருங் கூறுவர். தாம் எண்ணியபடியே யமுனை உறுதி செய்யாதபடியால் தம் கலப்பைப் படையால் அதனை ஒருமுறை இவர் காய்ந்து பிளந்தார். அவ்வாறு கலங்கிவந்து இவருக்கு ஒரு நீல ஆடையை வழங்கியது. அதனைஇவர் அணிந்துகொண்டபடியினால் நீலாம்பரன் எனவும் ஒரு பெயர் நீண்டு நின்றது.

இவர் மிகுந்த முன்சினம் உடையவர். இவர் தருமகுணம் உடைய பாண்டவர்களை விரும்பாமல் கொடியவர்களாகிய துரியோதனன் முதலியவர்களையே விரும்பி இருந்தார். இவருடைய மனப்போக்கை நன்குணர்ந்திருந்த கண்ண பிரான் இவரைத் துரியோதனனுக்குப் படைத் துணையாகச் செல்லுமாறு கூறினார். துரியோதனனும் இவருடைய துணையைப் பெரிதாக மதித்திருந்தான். ஆனால் இவரோ அச்சமயத்தில் உதவி செய்யாமல் தீர்த்த யாத்திரை போய் விட்டார். இவருடைய இச் செய்கையை எண்ணி அற நூலாளர்களும் "பாப்புக் கொடியாற்குப் பால்மேனியான் போலத், தாக்கி அமருட் டலைப் பெய்யார் - போக்கி, வழியராய் நட்டார்க்குமாதவஞ்செய்வாரே கழிவிழாத் தோளேற்றுவார்" என்று எள்ளி நகையாடியுள்ளனர்.

**பலாயனன்** - வீமன் விராட நகரத்தில் கரந்துறைந்து மடைத் தொழிலை மேற்கொண்டிருந்த போது வைத்துக் கொண்ட பெயர்.

**பலி** - விரோசனன் என்னும் அரசனுக்குத் தேவி என்பவளிடம் பிறந்த ஓர் அசுரன். பிரகலாதனுடைய பேரன்; இவன் மாபெரும் வீரன். இவன் ஒரு வேள்வி செய்தான். அவ் வேள்வியில் குதிரை, தேர், சிங்கக்கொடி, வில், இரண்டு அம்பறாத்தூணி ஒரு கவசம் ஆகியன உண்டாயின. இவனுக்குப் பிரகலாதன் கவசம் ஒன்று கொடுத்தான். சுக்கிரன் உருளைப் படை கொடுத்தான். இவன் இவைகளைக் கொண்டு விண்ணுலகம் முதலியவைகளை வென்று அரசாண்டிருந்தான். இவன் குதிரை வேள்வி செய்கையில் திருமால் காசிபரிடத்திலே வாமனராய்ப் பிறந்து பலியின் வேள்விச் சாலைக்குப் போய் மூன்றடிமண் இரந்தனர். இது திருமாலின் மாயை என்று வேள்வியாசானாகிய சுக்கிரன் உணர்ந்து "கொடாதே" என்று கூறித் தடுத்தனன். அதனைப் பலி கேளாமல் வாமனர் கேட்டபடி மூன்றடி மண் கொடுத்தனன். வாமனராகவந்த மால் இரண்டு அடிகளால் மூன்றுலகங்களையும் அளந்து மற்றும் ஓரடிக்கு இடங்கேட்டனர். பலி தன்னுடைய தலையைக் காட்டினான். வாமனர் தம்முடைய காலை அவன்தலைமீதுவைத்துப்பாதலம் வரை அழுத்தினார். பாதல உலகத்திலேயே எல்லா இன்பங்களையும் நுகர்ந்திருக்கச் செய்தார். இவ் வுலகில் பாட்டனாகிய பிரகலாதனும் உடன் இருக்கின்றனன். இவனுடைய மனைவியின் பெயர் விந்தியாவலி இவனுக்கு நூறு மைந்தர்கள். சிரஞ்சீவிகளில் இவனும் ஒருவன். இவனுடைய மைந்தர்களில் மூத்தவன் வாணாசுரன். இவன் எலியாக இருந்து திருமறைக் காடென்னும் சிவாலயத்தில் திருவிளக்கைத் தூண்டிய படியால் சக்கரவர்த்தியாயினன் என்பர்.

**பலிதன்** - இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்பு பாண்டிவளநாட்டில் பிரான்மலைஎன்னும் ஊரில்இருந்தவன். கருவி நூல்களோடு அரிய நூல்கள் பலவற்றையும் நன்கு ஓதியுணர்ந்து சிறந்திருந்தான். இவனிடம் அவையச்சம் என்னும் தீக்குணம் மிகுந்திருந்த படியால் இவனுடைய கல்வி நலம் எதற்கும் பயன்படா தொழிந்தது. பாணசூரிஎன்னும் அறிஞனோடு சொற்போர் செய்ய முயன்று அவைக்களத்

தில்யாதும் பேசமுடியாதவனாய் இழிவடைந்தான்.

**பல்காயனர்** - பழங்காலப்புலவர்களில் ஒருவர். இவருடையயாப்பிலக்கண நூற்பாக்கள் சிலயாப்பருங்கலக் காரிகைமுதலிய நூல்களில்மேற்கோள் காட்டப்பட்டிருக்கின்றன.

**பல்குன்றக்கோட்டம்** - தொண்டை நாட்டின் பெரும்பிரிவாகிய இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்று. பலகுன்றுகளைத் தன்னகத்தே கொண்டிருந்தபடியால் பல்குன்றக் கோட்டம் என வழங்கலாயிற்று.

**பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி** - இவன் வடிம்பலம்ப நின்ற பாண்டியனுடைய வழிமுறையில் தோன்றியவன். இவனுடையஇயற்பெயர் குடுமி யென்பது. இவன் அரசர்கள் செய்தற்குரிய வேள்விகள் பலவற்றைச் செய்து சிறப்புற்றுமையால் இவனுடைய இயற்பெயருக்கு முன்னே பல்யாகசாலை என்னும் அடைமொழி சேர்ந்து வழங்கலாகியது.இவன் செய்த வேள்விகள் ஆயிரமென்பர். இவனுடைய பெயர் கல்வெட்டுக்களிலும் இடம் பெற்றிருப்பதாக அறிஞர்கள் கூறுகின்றனர். இவனுடைய சிறப்பை விளக்கக் கூடிய பாடல்கள் புறநானூற்றில் உள்ளன.

**பல்யானைச் செல்கெழு குட்டுவன்** - சேரமன்னர்களில் ஒருவன். பெருஞ்சோற்றுதியன் சேரலாதனுடைய மகன். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குத் தம்பியும், சேரன்செங்குட்டுவனுக்குச் சிற்றப்பனுமாவன். இவன் பேராற்றல் உடையவன். உம்பற்காடு என்னுஞ் சேரநாட்டுப்பகுதியில் தன்னுட்சியை நடத்தி இருந்தவன். அகப்பா என்னும் அரணை வென்று கைக் கொண்டான். பூழியர், மழவர், கொங்கர் ஆகிய வீரர்களைப் படையிற் சேர்த்திருந்தான். தன்குடியில் உள்ள முதியவர்களை ஆதரித்துப் பாராட்டினன். அவர்கட்கு வேண்டிய நிலப்பகுதிகளைக் கொடுத்து வாழச் செய்தான். ஒருமுறை மேலைக்கடலினும் கீழைக்கடலினும் யானைகளைக் கொண்டு ஒரே பகலில் நீரை வருவித்து நீராடினன். அயிரை என்னும் மலையில் இருந்த கொற்றவையைத் தன் முன்னோர் செய்தவாறே தானும் வழிபட்டான். பாலைக்கௌதமனார் என்னும் புலவர் இவனைப் புகழ்ந்து பாடியிருக்கிறார். அப்புலவர் அந்தணர். அப்புலவர் விரும்பியவாறு பத்து வேள்விகளைச்செய்து அவரையும் அவர்மனைவியையும் சுவர்க்கம் புகச்செய்தான். இவ்வரசன் இறுதிக்காலத்தில் துறவு பூண்டதாகக் கூறுவர்.

**பல்லவராயன்** - காஞ்சிமாநகரில் அரசாட்சி செய்திருந்த அரசர்களில் ஒருவன். கணிகண்ணரைத் தன்மீது பாடலியற்றக் கேட்டு அவர் பாடமுடியாதென்றபடியால் ஊரைவிட்டு நீங்கக்கூறிப் பின் பெருமாளும் நீங்கினமை கண்டு பிழை பொறுக்க வேண்டியவன்.

**பல்லவராயன் சிறுவன்** - மும்முடிப் பல்லவராயன் என்று பட்டம் பெற்ற ஒருவர் சிறந்த வள்ளலாக விளங்கினர். அவருக்குச் சிறுவன் ஒருவன் இருந்தான். அச்சிறுவனுக்குச் சங்கிராமசோழன் என்பவன் விளையாட்டு வண்டி ஒன்றைத் தங்கத்தால் செய்து கொடுத்தான். சிறுவன் வண்டியைத் தெருவில் இழுத்து ஒருநாள் விளையாடிக் கொண்டிருந்தான்.

அப்பொழுது ஒரு புலவர் அச் சிறுவனுடைய தந்தையைக் கண்டு பரிசில் பெற்றுச் செல்வதற்கு வந்தார். தந்தை ஊரில் இல்லை. விளையாடிக் கொண்டிருக்குஞ் சிறுவனைப் பார்த்து, "தம்பி! உன்னுடைய தந்தை இப்பொழுது ஊரில் இருப்பாராஞல் நல்ல பரிசு கொடுப்பார். புலவர்கள் பரிசுபெற வந்து பெருமற் போவது நல்லதன்று" என்று கூறினர். இதனைக் கேட்ட சிறுவன் தான் விளையாடிக் கொண்டிருந்த வண்டியை இரண்டு கைகளாலும் எடுத்துப் புலவரிடங் கொடுத்து "இதனைவைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறினன். புலவர் அதனைப் பெற்றுக் கொள்வதற்குத் தயங்கினர். பிறகு தந்தையார் வந்து தம் சிறுவனின் செய்கையைக் கேட்டு வியப்புற்றார். அவ் வண்டியோடு வேறு பல வகையான பரிசுகளும் வழங்கி யனுப்பினர். இதனல் அச்சிறுவனுடைய இசை திசைதொறுஞ் சென்று என்றும் நின்று புகழ் பெற்றது.

**பல்லவ கோளரி** - தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**பல்லவனீச்சுரம்** - காவிரிப்பூம் பட்டினத்தில் உள்ள திருக் கோயில். பல்லவமன்னனல் கட்டப்பட்ட காரணத்தால் பல்லவனீச்சுரம் என்று பெயர் பெற்றது.

**பவணந்தி முனிவர்** - இவர் சைன முனிவர். கோயமுத்தூர் மாவட்டம் ஈரோடு கூற்றத்தில் பெருந்துறை புகைவண்டி நிலையத்திற்கு அண்மையிலுள்ள (சீனபுரம்) சனகை என்பது இவர் பிறந்து வளர்ந்த ஊராகும். இவ்வூரில் ஆதிநாத தீர்த்தங்கரர் கோயில் இருக்கிறது. சைன அந்தணர்கள் இன்றும் வழிபாடு செய்து வருகிருர்கள். பவணந்தி முனிவர் இலக்கிய இலக்கணப் பயிற்சியிற் சிறந்து விளங்கியவர். இவர் காலத்தில் வாழ்ந்திருந்த சீயகங்கன் என்பவன் எல்லோரும் எளிதில் உணர்ந்து கொள்ளுமாறு இலக்கண நூல் ஒன்று செய்ய வேண்டுமென்று இவரை வேண்டிக்கொள்ள இவர் நன்னூல் என்னும் இலக்கண நூலைச் செய்தார். எழுத்துச் சொல் என்னும் இரண்டை மட்டும் சுருக்கமாகவும் விளக்கமாகவுஞ்செய்யப்பட்டஇவருடைய நன்னூல் இன்றும் சிறப்புடன் விளங்குகிறது.

**பவணமா தேவன்** - தாதகி நாட்டு மன்னன்மகனுகியஇவன் பூமிமா திலகம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தான். உயிர்களிடத்தில் பேரருள் உடையவன். இவனுடைய மகனுகிய அசோதன் என்பான் அன்னப்பறவையின் இளங்குஞ்சைக் கவர்ந்ததைக் குறித்து உள்ளம் வருந்தி அக்குஞ்சை மீண்டுங் கொண்டு போய்ப் பொய்கையில் விட்டு விடச் செய்தவன்.

**பவணம்** - இது நாகலோகம். செல்வ நலத்திலும்போக நலத்திலுஞ் சிறந்து விளங்கியது. பிறர் அணுகுதற்கரியது.

**பவானி சங்கரன்** - இவன் சேது நாட்டை மூப்பதாண்டுகள் ஆண்ட கிழவன் சேதுபதியின் மகன். இவன் தான் பட்டத்தையடையாத படியால் கிழவன் சேதுபதிக்கடுத்தபடியாகச் சேது நாட்டையாண்ட விசயரகுநாதன் என்பவனுக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டேயிருந்தான். இவன் தஞ்சையரசனையும்புதுக் கோட்டையரசனையுந் துணை

சேர்த்துக்கொண்டு சேதுபதி வசமிருந்த அறந்தாங்கிக் கோட்டையைத் தாக்கினான். அதைத் தன் வசப்படுத்திக் கொண்டான். இருபக்கத்தின ருக்கும் மாறிமாறிக் கடும்போர் நடைபெற்றது. வெற்றியுந் தோல்வியும் ஒருவர் பங்கன்று என்பதற்கேற்ப மாறிமாறி வெற்றி தோல்விகள் ஏற் பட்டுக்கொண்டிருந்தன. இவ னும் தஞ்சைத் தளபதியும் இராமநாதபுரத்தை முற்றுகை யிட்டனர். சுரங்கவழி யுண் டாக்கி வெகு எளிதாகக் கோட்டையைப் பிடித்துக் கொண்டனர். சேதுபதியும் சேதுபதியைச் சேர்ந்தவர்களுங் கொல்லப்பட்டனர். பவானி சங்கரன் சேதுபதியானான். இவனுடைய ஆட்சியில் அமைதி உண்டாக வில்லை. இவன் சில ஊர்களைத் தருவதாக முன்னரே கூறித் தஞ்சை மன்னனை ஏமாற்றி இருந்தான். ஆகவே சினங்கொண்டிருந்த தஞ்சை மன்னன் சங்கரனுடைய பகை வர்கட்குத் துணையாகத் தன் படையை அனுப்பினான். போரில் தோல்வியடைந்த இவனைத் தஞ்சைக்கு இழுத்துக் கொண்டு போய்ச் சிறையி லடைத்தனர். அங்கு இவன் மாண்டான்.

**பவித்திரை** - எச்சதத்தன் என் னும் அந்தணனுடைய மனைவி. சண்டேசுரருக்குத் தாய். இவள் நற்குடிப்பிறப்பு, சுற்றந்தழு வுஞ் சிறப்பு முதலிய பண் புகளமையப் பெற்றவள்.

**பவுண்டரன்**-இவன் குருநாட்டை அரசாட்சி செய்த மன்னன். இவனுக்கு வாசுதேவன் என வும் பெயர் வழங்கியது. இவன் இயற்கையாகவே கண்ணபிரான் மீது நெடுஞ் சினங் கொண்டிருந்தான். கண்ணனும் நம்முடைய பெய ராகிய வாசுதேவன் என்பதை மேற்கொண்டிருப்பதா என்று உள்ளம் புழுங்கினான். துணை வர் சிலரைச் சேர்த்துக் கொண்டு கண்ணனோடு போர் செய்யச் சென்றான். கண்ண னைப் பார்த்து, "வாசுதேவன் என்னும் பெயர் எனக்கே உரி யது; அதனை நீ வைத்துக் கொள்ளக் கூடாது. அவ்வாறே சக்கரமும் எனக்குத்தான் உரி யது. அதனை நீ வைத்துக் கொள் ளுதல் கூடாது. அதனை நீ உட னே விட்டுவிடுவாயாக" என்று சொன்னான். கண்ணன், "நான் சக்கரத்தை விட்டுவிடுகிறேன்" என்று கூறித் தன் கைச்சக்க ரத்தைச் சுழற்றி விட்டுவிட் டான். அச்சக்கரம் சுழன்று வந்து இவனுடைய தலையை அறுத்துக் கொண்டு போய் விட்டது. அதனால் இவன் இறந் தொழிந்தான்.

**பழநி** - பழனி - முருகக்கடவுள் துறவிக் கோலத்தோடு எழுந் தருளியுள்ள பழநிமலையின் பெயர். பழம்-நீ-என்று சிவ பிரானும் உமாதேவியும் முருகக் கடவுளைப் பார்த்துக் கூறிய தாகப் பொருள் கொள்ளின் நி-யும், பழனங்களாகிய வயல் கள் சூழ்ந்த இடம் எனப் பொருள் கொள்ளின் னி-யும், எழுதப் பெறும்.

**பழநியப்பன் சேர்வைக்காரர்** - இவர் ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகட்கு முன்பு சோழவள நாட்டில் நொச்சியூரில் வாழ்ந் திருந்தார். இவர் திருவுசாத் தானப் புராணம் பாடியிருக் கிறார்.

**பழுவூர்** - திருச்சிராப்பள்ளிமா வட்டம் உடையார் பாளையம் தாலுகாவில்அமைந்துள்ளபழை மையான ஊர்; இது சிறுபழு வூர் பெரும் பழுவூர் என்னும்

இருபிரிவுகளையுடையது. இவற்றுள் சிறுபழுவூர் இந்நாளில் கீழப்பழுவூர் என்று வழங்கப் பெறுகிறது. பழு என்னுஞ் சொல்லுக்கு ஆலமரம் என்பது பொருள். ஆலமரத்தை இறைவன் எழுந்தருளுமிடமாக அந்நாளில் கொண்டிருந்ததால் ஊர் பழுவூர் என்று வழங்கப் பெற்றது. இப்பழுவூரின் கீழ்ப் பகுதியின் பண்டைக்காலப் பெயர் அவனிகந்தர்வபுரம். அவனிகந்தர்வ ஈச்சமரம் எனவுங் கூறுவதுண்டு. இங்குள்ள சிவபிரானுடைய கோயில் இந்நாளில் அகத்தீசுவரர் கோயில் என்று வழங்கப் பெறுகிறது.

**பழையகோட்டை** - இவ்வூர் கோவை மாவட்டத்தில் ஈரோட்டிற்குத் தெற்கே பதினெட்டாவது கல்லில் இருக்கிறது. இதனுடைய பழைய பெயர் பழையனூர் என்பர். ஔவையாரால் புகழ்ந்து பாராட்டப் பெற்ற காரி என்னும் வள்ளல் வாழ்ந்த ஊர் இஃதென்பர்.

**பழையனூர் நீலி** - இவள் முன் பிறப்பில் நவஞ்ஞானி என்னும் பெயருடைய அந்தண மாதாகப் பிறந்திருந்தாள். இவளுடைய கணவன் தீயொழுக்கத்தில் ஈடுபட்டு அதற்குத் தடையாக இருந்த மனைவியாகிய இவளையும் புதல்வனையுங் கொன்றான். இவள் இறக்கும்போது தன் கணவனைக் கொன்று பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்னும் எண்ணத்தோடு இறந்தாள். ஆகவே திருவாலங்காட்டில் புரிசை கிழார் என்பவருக்கு மகளாகப் பிறந்தாள். பேய்க் குணங்கள் முற்றும் இவளிடம் அமைந்திருந்தபடியால் புரிசை கிழார் இவள் பேயென்றுணர்ந்து நீக்கி விட்டார். பிறகு திருவாலங்காட்டையடுத்த பழையனூர்க் காட்டில் இவள் பேயாகச் சுற்றிக் கொண்டிருந்தாள். இவளுடைய தமயன் ஒரு வேலமரத்தில் பேயாகவிருந்தான். அம்மரத்தை வேளாளர்கள் எழுபது பேருஞ் சேர்ந்து வெட்டிவிட்டார்கள். ஆகவே வேளாளர்களையுந் தன்னுடைய கணவனையுங் கொன்றொழிப்பதற்கு இவள் சமயம் பார்த்துக்கொண்டிருந்தாள். முன்பிறப்புக் கணவன் தரிசன செட்டி என்னும் பெயரோடு பிறந்திருந்தான். அவன் ஒருநாள் பழையனூர்க் காட்டுவழியே வந்தான். சமயங்கிடைத்ததென்று மகிழ்ந்த இவள் ஒரு கள்ளிக் கட்டையைக் குழந்தையாக்கிக் கொண்டுகணவனைவழிமறித்துச் சொற்போரிடத்தொடங்கினாள். கணவன் இது பேயின் வேலை யென்று அஞ்சிக் கலங்கினான். அவளை விட்டு ஓட்டம் பிடித்தான். அவளோ தொடர்ந்து ஓடினாள். பழையனூரில் தலைவர்களாக இருந்த வேளாளர்களிடம் முறையிட்டான். அவர்களையுங் கொன்றொழிக்கத் திட்டம் போட்டிருந்த இவள் பல மாயாசாலங்களைச் செய்து தரிசன செட்டி இவளுடைய கணவனென்றே வேளாளர்களை நம்பச் செய்தாள். வேளாளர் தரிசன செட்டியையும் நீலியையும் அன்றிரவு ஒரு வீட்டில் தங்கி இருக்கச் சொன்னார்கள். தரிசன செட்டி தன்னுடைய உயிருக்கு அழிவு நேரிடும் என்று வற்புறுத்திக் கூறியும் வேளாளர்கள் கேட்கவில்லை. "உன்னை இவள் கொன்று விட்டால் நாங்கள் எழுபதுபேருந் தீப்பாய்ந்து உயிர் துறக்கிறோம்" என்று உறுதிமொழி கூறினார்கள். வேறு வழியில்லாத தரிசன செட்டி அன்றிரவு அவளோடு ஓர் இல்லத்தில் தங்கினான். நீலி

நள்ளிரவில் அவனைக் கொன்று உயிரைப்போக்கிப் பழி தீர்த்துச் சென்றாள். மறுநாட் காலையில் வேளாளர்கள் 69 பேருந் தரிசனசெட்டி இறந்துகிடத்தலைக் கண்டு தீவளர்த்துத் தாங்களும் அத்தீக்குழியில் விழுந்து மாண்டார்கள். வயலுழுதற்கு ஒருவன் வயலுக்குச் சென்றிருந்தான். நீலி அவனுடைய மகளைப் போல் வடிவெடுத்துச் சென்று வேளாளர்கள் தீப்பாய்ந்த செய்தியைக் கூறினாள். அவன் கலப்பைக்கொழுவால் தன்னைக் குத்திக் கொண்டு செத்தான். நீலி இவ்வாறு பழி வாங்கித் தன்னுடையஎண்ணத்தைமுடித்தாள்.

**பழையாறை** - சோழவளநாட்டில் கும்பகோணத்திற்கு அண்மையில் தெற்குப்பக்கத்தில் உள்ள ஊர். பல்லவமன்னன் நந்திவர்மன் இவ்வூரைத் திருத்தித் தன்னுடைய பெயரை அதற்கிட்டு நந்திபுரம் என்று மாற்றினான். இங்கு திருமால்கோயில் ஒன்றைக்கட்டி அதற்கு நந்திபுரவிண்ணகரம் என்றுபெயர் சூட்டினான். சோழமன்னனாகிய இராசராசன் காலம் வரையிலும் நந்திபுரம் என்னும்பெயர் பழையாறைக்கு வழங்கி வந்தது. இவ்வூரிற் சோழனுடைய மாளிகை சிறந்து விளங்கிற்று. ஆயிரம் மாடங்களையுடையதாய் விளங்கிய அம்மாளிகைஆயிரத்தளி என்று பெயர் பெற்றது. இராசராசனுடைய உடன்பிறந்தாளாகிய குந்தவையின் தனிமாளிகையொன்றும் அந்நகரில் அமைந்திருந்தது. சோழனுடைய மாளிகை இருந்த இடம் இந்நாளில் சோழமாளிகை என்னுஞ் சிற்றூராக விளங்குகின்றது. அவ்வூரின் வடபால் இருந்த பழைமையான சிவன் கோயில் வடதளி என்று அழைக்கப் பட்டது. புறச்சமயத்தார் பழையாறையில் தலைத்திருந்த காலத்தில் அக்கோவிலை அடைந்திருந்தனர். நாவுக்கரசர் உண்ணாவிரதமிருந்து அக்கோயிலைத் திறக்கச் செய்தார்.

**பளிக்கறைமண்டபம்** - இம்மண்டபம் முன்னாளில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தது. இவ்வறையின் சுவர் பளிங்குக்கற்களினால் கட்டப்பட்டிருந்தமையின் இப்பெயர் பெற்றது. இவ்வறையினுள் இருப்பவர்களுடைய உருவம் வெளியே தெரியும். இம்மண்டபத்தில் புத்தரடிச் சுவடமைந்தஇருக்கையொன்று இருந்தது. மணிமேகலை தன்னை உதயகுமரன் கவரவந்த பொழுது இந்தமண்டபத்திலே தான் மறைந்து கொண்டாள்.

**பள்ளிகொண்டான் - (க)** வடார்க்காடுமாவட்டத்தில்குடியாத்தம் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே மூன்றுமைல் தொலையில் பாலாற்றின் கரையில் உள்ள ஓர் ஊர் இங்குள்ள திருமால் பள்ளி கொண்ட கோலத்தோடு விளங்குவார். பிறவிடங்களிலும் பள்ளி கொண்டகோலமாக இருந்தாலும் இங்குமட்டும் பள்ளி கொண்டான் என்றுபெயர் ஏற்பட்டிருக்கிறது. கோயிலிலுள்ள கல்வெட்டுக்களில் இருந்துஇக் கோயில் கி. பி. பத்தாம் நூற்றாண்டில் இருந்த விக்கிரம சோழன் காலத்துக்கு முன்னதாகவே கட்டப்பட்டிருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகிறார்கள்.

**பள்ளிகொண்டான் - (உ)** இவன் வலையர் குலத்திலே தோன்றிய ஒரு செல்வன். இவன் அறிவு நலமும் பெற்றிருந்த படியால் தன்னைப் புகழ்ந்து பாடிவந்த புலவர்கட்குப் பொருள் வழங்கி

வள்ளல் எனப் புகழ்பெற்று விளங்கினன். நையாண்டிப் புலவர் என்பவர், "வள்ளி கொண்டான்மயிலேறிக்கொண் டான் மதிபோலுமலை, வெள்ளி கொண்டான் விடையேறிக் கொண்டான் விண்ணவர்க்கமு தம், துள்ளிகொண்டான் புள்ளி லேறிக்கொண்டான் சுபசோ பனஞ்சேர், பள்ளிகொண்டான் புகழ்ஏறிக்கொண்டான் என்று பார்க்கவென்றே" என்று பாடி யுள்ளார்.

**பள்ளிச்சந்தம்** - பண்டைத் தமிழ ரசர்களும் செல்வர்களும் பௌத்தக்கோயில் பள்ளி வாசல்முதலியவைகட்கு இறை யிலியாக விட்ட நிலமும் ஊரும் பள்ளிச்சந்தம் என்று பெயர் பெற்றன. தென்னுட்டிலே திருக்கோயிலூர் வட்டத்திலும் தஞ்சைமாவட்டத்திலும்சிவகங் கைவட்டத்திலும்பள்ளிச்சந்தம் என்னும் பெயருடைய ஊர்கள் இருக்கின்றன. ஆனல் அவ் வூரும் நிலங்களும் இந்நாளில் பௌத்தக்கோயில்களின் ஆட்சி யில் இல்லை.

**பறந்தலை** - மறவர் கூட்டமாக வாழும் இடங்கள் பறந்தலை எனப்படும். இவர்களுடைய குடியிருப்பு ஊகம்புல்லால் வேய்ந்த மதிலாற் சூழப்பட் டிருக்கும். தலைவாயிலில் அம் புக்கட்டும் பறையுந்தொங்கும். வாயிலிலே சங்கிலியிற்கட்டிய நாய் நிற்கும். இந்நிலத்திற்குத் தெய்வம் காளி.

**பனமலை** - தென்னர்க்காடு மா வட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர். பல்லவர்காலத்துக் கற்கோயில் ஒன்றினல் இவ்வூர் சிறப்புற்று விளங்குகிறது. இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவன் இங்கு தாளகிரீசுவரர்ஆலயம்என்னுங் கோயிலை எழுப்பியுள்ளான். பல்லவர்காலத்துக் கலைஞர்கள் அடைந்திருந்த சிற்பவேலையின் சிறப்பை இங்குள்ள சிற்பங்கள் நன்கு புலப்படுத்திக் கொண் டிருக்கின்றன.

**பனிக்கட்டிலிங்கம்** - (அமர்நாத்) பனிக்கட்டியே சிவலிங்கமாக அமைந்து அன்பர்களைப் பேரின் பத்தில் அழுத்தும்புதுமை அமர் நாத்தில் நிகழ்கிறது. அமர் நாத் என்பது காச்மீரத்தின் தென்பகுதியில்.சீநகரில்இருந்து 90 மைல் தொலைவில் இருக்கி றது. இதன்உயரம் 17500 அடி. இதன் சிகரத்தில் 150 அடி அக லமும் 90 அடி உயரமுமுள்ள ஒரு குகை இருக்கிறது. இக் குகையில்பனிக்கட்டியேசிவலிங் கமாக அமைந்துவிளங்குகிறது. ஆவணித்திங்கள் முழுத்திங்கள் நாள் அன்று அந்தப்பனிக்கட்டி லிங்கம் மிகப்பெரிதாக விளங் கும். குளிர் மிகுந்த இந்த இடத்தை அடைந்து வழிபாடு செய்வது மிகுந்த நல்வினை உள்ளவர்கட்கு மட்டுமே கிட்டக்கூடியதாகும்.

**பன்னகாபரணன்**-தாருகாவனத்து முனிவர்கள் சிவபிரானிடம் பகைமை கொண்டு ஒரு தீய வேள்வியைச் செய்தனர். அதி லிருந்து தோன்றிய பாம்புகளை இறைவனைக் கொல்லுமாறு அனுப்பினர். இறைவன் அப் பாம்புகளை அணிகலன்களாக அணிந்துகொண்டார். அதனல் சிவபெருமானுக்கு இவ்வாறு ஒருபெயர் உண்டாகியது.

**பன்னிரண்டாஞ்செட்டியார்கள்** - இவர்கள் இரத்தினகிரியென் னும் வாட்போக்கியை யடுத் துள்ள ஊர்களில் வாழ்பவர் கள். இரத்தினகிரீசுவரர் சில செட்டிக்குடிகளிடம் அவர்க ளுடைய உடைமையில் பன்னி ரண்டில் ஒரு பங்கைப்பெற்றுக் கொண்டு அவர்களுக்குள் நேர்ந்த வழக்கைத் தீர்த்து

வைத்தபடியால் பன்னிரண்டாஞ் செட்டியார்கள் என்று பெயர்பெற்றனர்.

**பன்னிரண்டு சோதிலிங்கங்கள்** - வழிபடுபவர்கட்கு வீடுபேற்றை அளிக்கக்கூடிய பன்னிரண்டுசோதிலிங்கங்கள்நமது பரதகண்டத்திலே உள்ளன. சௌராட்டிரத்தில்சோமநாதர்; திருச்சைலத்தில் மல்லிகார்ச்சுனர்; உச்சயினியில் மகாகாளேசுவரர்; நர்மதா நதிக்கரையில் ஓங்காரேசுவரர்; திருக்கேதாரத்தில் கேதாரநாதர்; இடாகினி என்னுமிடத்தில் பீமசங்கரர்; வாரணுசியில் (காசி) விசுவேசுவரர்; கோதாவரிக்கரையில் திரியம்பகேசுவரர்; சிதாபூமியில் வைத்தியநாதர்; தாருகாவனத்தில் நாகேசுவரர்; இராமேசுரத்தில் இராமேசுவரர்; சிவாலயத்தில் குச்மேசுவரர் இவைகள் ஒளிவடிவாய் அமைந்து விளங்குகிறபடியால் சோதிலிங்கங்கள் என்று பெயர் பெற்றன.

**பன்னிருதிருமுறைகள்** - சைவசமயத்தவர்போற்றிப்பாராட்டவேண்டிய நூல்கள் இன்னவை இன்னவை என்பதைப் பிற்காலத்தினர் தெளிவாக உணர்ந்து கொள்ளுமாறு சேக்கிழார் சிறந்த நூல்களைப் பன்னிருதிருமுறைகள் என்று பெயர் கொடுத்துத் தொகுத்தார். அந்நூல்கள் திருஞானசம்பந்தருடைய தேவாரங்கள் 1,2,3 திருமுறைகள்; திருநாவுக்கரசருடைய தேவாரப்பதிகங்கள் 4,5,6 ஆந் திருமுறைகள்; சுந்தரருடைய தேவாரம் ஏழாவது திருமுறை. திருவாதவூரடிகள் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகம் திருக்கோவையார் என்பன 8 ஆம் திருமுறைகள்; திருவிசைப்பா திருப்பல்லாண்டு முதலியன ஒன்பதாந் திருமுறை; திருமூலர் திருவாய் மலர்ந்தருளிய திருமந்திரம் பத்தாவது திருமுறை; திருவாலவாயுடையார் திருமுகப் பாசுரம் முதலியநாற்பதுபிரபந்தங்களும் பதினொன்ருந்திருமுறை; சேக்கிழார் பாடியருளிய திருத்தொண்டர்புராணமாகிய பெரியபுராணம் பன்னிரண்டாவது திருமுறை. இவ்வாறு பன்னிருதிருமுறைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

**பழையன்** - இவன் பாண்டி நாட்டில் மோகூரில் இருந்த குறுநில மன்னன். பெரிய போர்வீரன். அரியகுணங்கள் பல அமையப் பெற்றவன். கோசர் என்னும் ஒருவகை வீரமரபினரைத் துணையாகஅமைத்துக்கொண்டு முடிமன்னரும் வியக்குமாறு அரசாட்சி செய்திருந்தான். அந்நாளில் மதுரையில் இருந்து அரசு புரிந்திருந்த வீரகேசரன் என்னும் பாண்டியமன்னன் பால் அன்புடையவனுக விளங்கினுன். இருவரும் ஒருவருக்கொருவர் உதவிகள் புரிந்து கொண்டிருந்தனர். பாண்டிய மன்னனுக்கு உரிய வேம்பினைத் தனக்குங் காவல் மரமாகப் பாவித்துத் தன் நகரில்வைத்துப் பாதுகாத்து வந்தான். இவனுடைய இசை திசைபோய் விளங்கியது. அறுகை என்னும் வேறொரு குறுநில மன்னன் இவன் மீது உட்பகை கொண்டிருந்தான். அவ்வுட்பகையை முளையிலேயே கிள்ளி யெறியாது வளரவிட்டு விட்டான். அவ்வறுகை மாபெரும் வீரனுகிய சேரன் செங்குட்டுவனை இவனோடு போர் மூட்டிவிட்டான். இவனுல் அவனைவெல்ல முடியவில்லை. அச்செங்குட்டுவன் இப்பழையனைத் தோற்கடித்து இவனுடைய காவல் மரத்தை அடியோடு வெட்டி இவனுடைய பட்டத்து யானை

களை வண்டியீர்க்கும் பகடுகளாக்கி மரத்தை யேற்றிச் சென்று தன்வெற்றிக்கு அறிகுறியாக முரசங்கள்செய்தான். இப்பழையனைப் பலபுலவர்கள் பாடியுள்ளனர்.

**பறைநிலை** - ஒருவகைச் சிறுநூல். அரசர்கட்கு முடிபுனை விழாவிலும், கடவுளர் விழாவிலும் நாடும் நகரமும் நலம் பெற வேண்டுமென இயம்பி வரும் நெறியை வஞ்சிப்பாவில் அமைத்துப்பாடுவது. இந்நூல் இலக்கணம் பன்னிரு பாட்டியலில் கூறப்பட்டிருக்கிறது.

**பனந்தன்** - இவன் கதிரவகுல மன்னனாகிய நபாகனுடைய மகன். தாய்பெயர் சுப்பிரபை. வில் வேல் வாள் முதலிய படைக்கலப் பயிற்சியை நன்கு பெற்றிருந்தான். இவனுடைய மனைவியின் பெயர் பிரியவதி. இவன் பேராற்றலும் பேரறிவும் அமைந்தவனாக விளங்கியபடியால் மன்னர்களனைவரும் இவனைப் பாராட்டினர். இவன் ஊக்கம் மிகுந்தவனாக இருந்தபடியால் ஆக்கம் மிகுதியாகப் பெற்று விளங்கினான். இவனுக்கு நந்தன், வத்சந்திரன், நரேந்திரன் என்னும் பெயருடைய மக்கள் மூவர் இருந்தனர்.

**பனம்பாரனார்** - அகத்தியருடைய மாணாக்கர்கள் பன்னிருவரில் ஒருவர். இவர் பனம்பாரம் என்னும் ஊரிற்பிறந்தபடியால் இவ்வாறு பெயர் உண்டாகியது. இவருடைய இடுகுறிப் பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவர்தம் பெயரால் ஒரு நூல் செய்ததாகக் கூறுவர். ஆனால் அந்நூல் இந்நாளில் இல்லை. இவர் தொல்காப்பியத்திற்குப் பாயிரம் பாடியுள்ளார்.

**பாகவதம்** - பகவானுடைய வரலாறு பெருமை ஆகியவைகளைக் கூறும் நூலாகையால் இதற்குப் பாகவதம் என்று பெயர் உண்டாகியது. பகவான் தொடர்புள்ளது பாகவதம். பகவான் என்பது திருமாலுக்குரிய சிறப்புப் பெயர்களுள் ஒன்று. பாகவதம் முதலில் வியாச முனிவரால் அவருடைய புதல்வராகிய சுகமுனிவர்க்குக் கூறப்பட்டது. பிறகு சுக முனிவரால் பரீட்சித்து மன்னனுக்குக் கூறப்பட்டது. பின் சூதமுனிவரால் நைமிசவனத்து முனிவர்களுக்குக் கூறப்பட்டது. வடமொழியின் மொழி பெயர்ப்பாக ஆரியப்ப புலவர், செவ்வைச் சூடுவார் ஆகியோர் தமிழ்ச் செய்யுளாகப் பாடியுள்ளனர்.

**பாகீரதி**- (க) தேவராட்டியாகக் கோலம் பூண்ட ஒரு பெண். பிரச்சோதனனுடைய நகரில் இருந்தவள். தலைமக்கள் உதயணனால் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்குதலைக் கண்ட பிரச்சோதனன் மறுநாள் உதயணனை அழைத்துப்பாராட்டிப் படைகளோடு அவனைக் கௌசாம்பி நகரத்திற்கு அனுப்புவதற்கு எண்ணியிருந்தான். இதனையுணர்ந்த யூகி தன்னுடைய சூழுறவு தவறிவிடுமே யென்று எண்ணினான். இவளையழைத்துத் தெய்வ ஆவேசங் கொண்டவள் போல் நடித்து நீர்விழாக் கொண்டாடச்சொல்லுமாறு இவளை ஏற்படுத்தினான். இவளும் அவனுடைய கருத்தின்படி தெய்வ ஆவேசங் கொண்டாற்போல் நடித்து நீர்விழாக் கொண்டாட ஏற்பாடு செய்தாள். அச்சமயத்தில்தான் உதயணன் வாசவதத்தையைக் கைப்பற்றிச் சென்றான்.

**பாகீரதி - (உ)** கங்கைக்கு ஒரு பெயர். கதிரவன் வழிமுறையில் தோன்றிய பகீரதனுடைய தவத்தால்நிலவுலகத்திற்கு வந்த படியால் இப்பெயர் அடைந்தனள்.

**பாக்கியவதி** - இவள் ஒரு வைசியப் பெண். இவளுடைய தமக்கையின் பெயர் புண்ணியவதி. இவர்களிருவருங் கேதார நாதர் விரதம் அநுட்டித்து அரசரை மணந்து செல்வ வாழ்க்கையில் இருந்தனர். செல்வச்செருக்கினால் பாக்கியவதி விரதத்தை மறந்தாள். அவளைத் தீவினை சேர்ந்தது. அரசனால் நீக்கப்பட்டு மகனோடு காட்டையடைந்தாள். செல்வம் பெற்று வருமாறு தமக்கையிடம் தன்னுடைய மகனையனுப்பினாள். தமக்கை தந்த செல்வத்தை இருமுறை கள்ளர்கள் பறித்துச் சென்றனர். அசரீரி இது கேதார விரதத்தை மறந்த படியினால் உண்டாகிய கேடுஎன்று கூறியது. மீண்டுங் கேதார விரதத்தைக் கடைப்பிடித்து இழந்த நன்னிலையை மீண்டும் அடைந்தாள்.

**பாக்சலசந்தி** - தென்கிழக்கு இந்தியாவுக்கும் வட இலங்கைக்கும் இடையில் இருக்கும் குறுகிய சலசந்தி. அகலம் நாற்பது மைல். சென்னையில் 1755 முதல் 1763 வரை கவர்னராக இருந்த இராபர்ட்பாக் என்பவரின் பெயர் இதற்கு இடப்பெற்றிருக்கிறது. இஃது ஆதாமான் பாலத்துக்கு வடக்கே யுள்ளது. மன்னார் வளைகுடா இதற்குத் தெற்கே இருக்கிறது.

**பாசண்டச் சாத்தன்** - இவன் பாசண்ட நூல்களை உணர்ந்தவன். முன்னாளில் இவனுக்குக் காவிரிப்பூம் பட்டினத்தில் கோவில் இருந்தது. மாற்றாள் குழந்தையைச் சாகக் கொடுத்த மாலதி இவன் கோயிலுக்கு வந்து வரம் வேண்டினாள். அவளுடைய வேண்டுகோளுக்கிரங்கிய சாத்தன் சிறுகுழந்தையாகி மாலதியின் மனத்துயரைப் போக்கினான்.

**பாசதரன்** - இவன் ஆயிரத்து இருநூறு ஆண்டுகட்கு முன்பு கோதாவரியாற்றுக்கு வடகரையிலிருந்த தருமசாலை என்னும் ஊரில் மறையவர் குலத்தில் தோன்றினான். இவனுடைய தந்தையின் பெயர் கன்மடன். தாய்பெயர் சுசீலை. இவன்அழகு நலம் செல்வநலம் முதலியன உடையவனாக இருந்தும் அறிவு நலம் சிறிதும் இல்லாதவனாக இருந்தான். கழிபெருங் காமியாய் விலைமாதர் மயக்கிற் பட்டு அலைந்தான். ஊர்கள் தோறுந் திரிந்தான். புதுவை என்னும் ஊரில் ஒரு விலைமகளுக்குத் தொண்டு பூண்டு ஒழுகினான். இவனுடையவரலாற்றைப் புதுவைப் புராணம் விரிவாகக் கூறுகிறது.

**பாசுபதர்** - இவர்கள் 'மயேச்சுரர்' எனவுங் கூறப்பெற்றனர். இவர்களுடைய பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் புதுமையானவை. இவர்கள்திருநீற்றை அணிவர்; சிவனே முழுமுதற் கடவுள்என்பர். இலிங்கத்தைஅல்லதுசிவ மூர்த்தத்தை வணங்குவார்கள். சிலர் தலைமுடியைக் கத்தரித்து விடுவர்; சிலர் மொட்டையடித்து விடுவர்; சிலர் குடுமி வைத்திருப்பர். இவர்கள் உலகப் பற்றை விட்டு மேனிலை யடைதற்குத் தவ முயற்சியை மேற் கொண்டிருந்தனர். இவர்களிற் சிலர் சிவகணங்களிடம் நம்பிக்கையுடையவர்களாய் அவைகளை உளங் குளிரச் செய்யும் பொருட்டு மக்களைப் பலியிடல், இறந்தவர்களுடைய இறைச்

சியைப் படைத்தல் முதலிய காரியங்களில் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

**பாச்சில் வேள் நம்பன்** - இவருடைய இயற் பெயர் நம்பன். இவர் ஒரு புலவர். எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவர். கல்வெட்டின் உதவியால் அறியப் பெறுபவர்களில் இவரும் ஒருவர். சோழமண்டலத்தைச் சார்ந்த மழநாட்டின்கண் விளங்கும் திருப்பாச்சிலாச் சிராமமே இவரது ஊர். சுவரன் மாறன் என்னும் இரண்டாம் பெரும் பிடுகு முத்தரையனை இவர் பாடியிருக்கின்றார். இந்த முத்தரையன் திருக்காட்டுப் பள்ளியின் பக்கத்திலுள்ள நியமம் என்ற ஊரில் பிடாரியார் கோயிலொன்றேற்படுத்தி, அக்கோயிலில் உள்ள தூண்களில், தன்மீது பாடிய பாடல்களைக் குறித்திருப்பதோடு பாடிய புலவர்களின் பெயர்களையும் குறிப்பிட்டிருக்கின்றான். அக்கோவில் சிதைந்து போன படியால் அதிலுள்ள தூண்களையும் கற்களையும் திருக்காட்டுப் பள்ளிக் கருகிலுள்ள செந்தலை என்னும் ஊரில் கொண்டு சென்று ஒரு சிவன் கோவில் கட்டினார்கள். அத் தூண்களுள் ஒன்றில் நம்பன் பாடிய பாடல்கள் உள்ளன. பாடல்கள்யாவும் கட்டளைக் கலித்துறைகளாகவும் வெண்பாக்களாகவும் காணப்படுகின்றன.

**பாஞ்சாலங் குறிச்சி** - தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் கோவில்பட்டி தாலுகாவின் தென்கிழக்கில் இருக்கும் ஊர். வரலாற்றுச் சிறப்பு மிகுந்த இடம். கட்டபொம்ம நாயக்கக் குறுநில மன்னர்கள் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையில் இருந்து அரசாண்டு வந்தனர். இந்திய விடுதலைக்குப் போராடிய முதலாவது வீரன் வீரபாண்டியக் கட்டபொம்மனே. இம்மன்னனுக்கு அஞ்சிய ஆங்கிலேயர்கள் தமது நவீன போர்க் கருவிகளினால் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையை இடித்தழித்துத் தொலைத்ததோடு மன்னனையுங் கொன்றொழித்தனர்.

**பாடலிபுரம்** - இவ்வூர் தென்னார்க் காடுமாவட்டத்திலிருக்கிறது. இங்கிருந்த சமணப்பள்ளி அக்காலத்தில் புகழ் பெற்ற மடமாக இருந்தது. நாவுக்கரசர் தருமசேனர்என்னும்பெயரோடு சமணராக இருந்த காலத்தில் இந்த மடத்தில் இருந்துதான் சமண சமயத் தொண்டு செய்து கொண்டிருந்தார்.

**பாணதரன்** - இவன் தொண்டைவள நாட்டிலே குமிழம்பட்டு என்னும் ஊரிலே முன்னாளில் வாழ்ந்திருந்தான். வேளாண் குலத்தினன். இவனுடைய தந்தையின் பெயர் வேலூர் கிழார். பாணதரன் பயிர்த் தொழில் செய்வதில் சிறந்த அறிவுடையவனாகத் திகழ்ந் திருந்தான். நிலத்தின் மண்ணைக் கதிரவன் நன்கு காயச்செய்யின் விளைநிலம் நன்கு விளைவைக் கொடுக்கும் என்னும் வள்ளுவர் வாக்கைக் கடைப்பிடித்த இவன் நிலங்களை நன்கு உழுது காயச் செய்து மிகுந்த விளைவைப் பெற்றான். அந்நாளில் நாட்டில் பெரும் பஞ்சம் உண்டாகியது. வருத்தமுற்றுத் தன் பாலடைந்த அனைவரையும் இவன் ஆதரித்தான். அவர்களுட் புலவர்களாகச் சிறந்து திகழ்ந்தவர்களைப் பஞ்சகாலம் போய் நல்லகாலம் வரும்வரை தன்னுடைய இல்லத்திலேயே வைத்துப் போற்றினான். இவனுடைய பெருமையைத் தொண்டை மண்டல சதக

முடையாரும் "கோலூ ருழவுக் குடியானவன்றன் குமிழும் பட்டு, வேலூர்க் கிழானொரு வேளாளன் பஞ்சம் விடியள வும், நாலூரிலுள்ள புலவோர்க் குந் தேசத்து நாவலர்க்கும், மாலூரிலன்னங் கொடுத்தளித் தான் தொண்டை மண்டலமே" என்று பாராட்டியுள்ளார்.

**பாணன்** - இவன் சங்க காலத் தைச் சேர்ந்த ஒரு குறுநில மன்னன். அகநானூறு முந் நூற்றிருபத்தைந்தாவதுபாட்டு இவனை வடநாட்டவன் என்று கூறுகின்றது. நூற்றுப்பதின் மூன்றாவது பாட்டு இவன் நாடு வளம் பொருந்தியது என்று குறிக்கின்றது. ஒரு சமயம் இவன் கட்டி என்பவனுடன் கூடி, உறையூர் மன்னன் தித் தன் என்னும் சோழன்பாற் போர் புரியச் சென்று, நகர்க்கு வெளியே தங்கியிருந்த போது, தித்தன் அவையிலெழுந்த, தித் தனைப் பாராட்டும் பேரொலி கேட்டு, மக்களால் இவ்வாறு பாராட்டுப் பெறும் அரச னுடன் பொருது வென்றி பெற லாதென்று எண்ணி ஓடி விட்டதாக அகநானூறு இரு நூற்றிருபத்தாறாவது பாடல் இயம்புகின்றது. முந்நூற் றெண்பத்தாறாவது பாட்டால், ஆரியப் பொருநன் என்பவ னோடு மற்போர் புரிந்து வெற்றி பெற்றவன் என்று அறிகின் றோம்.

**பாணாசுரன்** - ஓர் அசுரன் பலிச் சக்கரவர்த்தியின்மகன். சோணிதபுரத்து மன்னன். சிவ பிரானிடத்து அன்பு கொண்ட வன். இவன் சிவபிரானுடைய திருவருளால் இரண்டாயிரங் கைகளையும் பேராற்றலையும் பெற்றிருந்தான். இவனுடைய மகளின் பெயர் உஷை. இவள் கிருட்டிணனுடைய பேரனான அநிருத்தனைத் தன்னுடைய அந் தப்புரத்துக்கு வரவழைத்துக் களவாகக் கூடியிருந்தாள். இதனை உணர்ந்த பாணாசுரன் அநிருத்தனைச் சிறையிலடைத் தான். கிருட்டிணன் படை யெடுத்துக் கொண்டு வந்து இவனோடு போரிட்டார். இவ னுடைய கைகளில் இரண்டை மட்டும் விட்டுவிட்டு மற்றவை களை வெட்டி விட்டார். பிறகு பாணாசுரன் அநிருத்தனையும் உஷையையுங் கிருட்டிணனிடம் ஒப்படைத்தான். இறுதியில் இவன் சிவகணத் தலைவனானான். சிவபிரான் திருக் கூத்தியற் றும் பொழுது இவன் தன் னுடைய இரண்டாயிரங் கை களாலும் குடமுழாவை முழக் கும் பணியை முன்னர்ப் புரிந் திருந்தானகையால் இவனுக்கு நற்கதி எளிதாயிற்று. இவன் அமைத்து வழிபட்ட இலிங்கங் கள் பாணலிங்கம் என்று பெயர் பெற்றன.

**பாணினி** - இவர் ஓர் அந்தணர். தகுந்த பருவத்தை யடையுமுன் தாய் தந்தையர்களை யிழந்தார். இளைஞராக இருக்கும் போதே வறுமையால் வாடிய படியால் கல்வியை நன்கு கற்க முடிய வில்லை. கல்வியைக் கற்க விரும் பிய இவர் வர்சர் என்னும் பெயருடையபெரும்புலவரிடஞ் சென்று தம்முடைய எண்ணத் தைக் கூறினார். அவர் இவருக் குக் கல்வி கற்பிக்க அருளுடன் இசைந்தார். ஆயினும் இவ ருடைய அறிவு கூரியதாக வின் மையின் படிப்பு நன்றாக வர வில்லை. உடன் கல்வி பயின்ற மாணவர்கள் இவரை எள்ளி நகையாடினர். தம்முடைய மந்த மதிக்கு நாணிய இவர் தனியே யிருந்து கடவுளை எண்ணினார். தமக்கு நன்றாகப் படிப்பு வரவேண்டுமென்று வேண்டினார். பரமன் இவ

ருடைய முறையிட்டுக்குச் செவிசாய்த்தார். கலையறிவுகள் யாவும் இவருக்கு அமையுமாறு அருள்புரிந்தார். ஆகவே இவர் சில நாள் தனியே அமர்ந்து ஓர் இலக்கண நூல் இயற்றினார். அதனைக் கொண்டு வந்து தம்முடைய ஆசிரியரிடங் காட்டினார். ஆசிரியர் அதனைப் பார்த்துப் பெரிதும் மகிழ்ந்தார். மற்றவர்களும் வியந்து பாராட்டினார்கள். அதுமுதல் இவருடைய புகழ் எங்கும் உயர்ந்து விளங்குவதாயிற்று. இவர் செய்த நூல் பாணினியம் என்னும் பெயரை யுடையது.

**பாண்டரங்கக்கூத்து** - பாண்டு - வெள்ளை; அரங்கம் - அவை, அஃதாவது அம்பலம். வெள்ளிய அம்பலத்தினிடத்திலே நின்று இறைவன் ஆடிய கூத்துப் பாண்டரங்கக் கூத்து என்று பெயர் பெற்றது.

**பாண்டரங்கம்** - வானவராடிய பதினொருவகை ஆடலுள் இஃது ஒன்று. இது சிவபெருமான் ஆடியது. நான்மறைகளைக் குதிரைகளாகவும் வானவர்களைத் தேராகவும் கொண்டு சிவபெருமான் திரிபுரத்தை எரித்த காலத்தில் நெடும் புறம் மறைத்து, வார்துகில் முடித்து, கூர்முள் பிடித்துத் தேர்முன் நின்ற நான்முகன் காணும்படி, சுடுகாட்டிலாடும் பாரதி வடிவாகிய இறைவன் வெண்ணீறணிந்தாடியது என்பர் அடியார்க்கு நல்லார்; (சிலப். 6: 44-5 உரை). அரும்பத உரையாசிரியர் பைரவி ஆடியதுஎன்பர்.

**பாண்டவர்கள்** - பாண்டு மன்னனுடைய மக்கள். பாண்டு மன்னனுக்குக் குந்தி மாத்திரி என்று இரு மனைவியர். இவர்களில் குந்திக்குத் தருமன் வீமன் அருச்சுனன் மூவருந் தோன்றினார். மாத்திரிக்கு நகுலனும் சகாதேவனுந் தோன்றினர். இவர்களுடைய வரலாற்றைப் பாரதம் விரிவாகக் கூறும்.

**பாண்டிநாயகம்** - திருத்தில்லையில் சுப்பிரமணியப் பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயில். மாறவர்மன் சுந்தர பாண்டியன் கட்டிய கோவிலாகையால் இவ்வாறு பெயர் பெற்றது.

**பாண்டியன் அறிவுடை நம்பி** - இவன் பாண்டியர் குடியில் தோன்றிய ஓர் அரசன். இவன் கல்வி நலத்தையும் செல்வநலத்தையும் ஒருங்கே பெற்றதன்றிச் சிறந்த கொடைவள்ளலாகவும் விளங்கினான். கோப்பெருஞ்சோழனுக்கு உயிர்த் தோழரும் பேரறிஞருமாகிய பிசிராந்தையார். இவ்வரசன் மீது பொருண்மொழிக்காஞ்சிபாடியிருக்கிறார்.

**பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்** - பாண்டிய மன்னர்களில் நெடுஞ்செழியன் என்று பெயருள்ளவர்கள் பலர் இருந்தார்கள். அவர்களில் இருந்து இவனை வேறு படுத்துவதற்கு ஆரியப் படை கடந்த என்னும் சொல்லையுஞ் சேர்த்தனர். ஆரியப்படை யென்பது வடவாரிய நாட்டுப் படை வீரர்களையாகும். தென்குமரிக்குத் தெற்கிலிருந்த தமிழ் நாடு கடல் கோளுட்படவே அந்நாட்டிலிருந்த பாண்டியர்கள் வடக்கு நோக்கி வந்தனர். அந்நாளில் வடவாரியரும் தென்னாடு நோக்கி வந்தனர். அவ்வாறு வந்த படைகளில் ஒன்றை இந் நெடுஞ்செழியன் வென்று புறங்காட்டியோடச் செய்தான். இவன் கல்வியறிவிற் சிறந்து செய்யுளியற்றுந் திறமும் பெற்று விளங்கினான். இவன் கல்வி கற்றலின் சிறப்பைப் பற்றி ஒரு செய்யுள் இயற்றியுள்ளான்.

**பாண்டியன்கீரஞ்சாத்தன்** - இவன் முடிவேந்தன் அல்லன். பாண்டி மன்னர்களின் கீழிருந்த குறு நிலத் தலைவன். கீரன் என்பவ னுடைய மகனுதலின் கீரஞ் சாத் தன் எனப்பட்டான். இவன் கொடை நலத்தில் சிறந்து விளங்கினன். ஆவூர் மூலங் கிழார் இவனைப் புகழ்ந்து பாடி யுள்ளார்.

**பாண்டியன்கூடகாரத்துத்துஞ்சிய மாறன்வழுதி** - கூடகாரமென் பது பாண்டி நாட்டிலிருந்த ஓர் ஊர். இப்பாண்டியன் தன் னுட்டிற்குவடக்கிலிருந்தஅரசர் களோடு பெரும்போர் செய்து வெற்றி யடைந்தான். இவ னுடைய போராற்றலை வியந்து ஐயூர் முடவனுர், மதுரை மருத னிள நாகனுர் என்னும் இருபுல வர்களும் பாடியிருக்கின்றனர். இவன் காலத்தில் சோழ நாட் டைக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் ஆட்சி புரிந்து கொண்டிருந்தான்.

**பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சியநன்மாறன்** - இவன் சித்திரமாடம் என்னுமிடத்தில் இறந்தான். கள்ளங் கபடமற்ற உள்ளமுடையவன்; சான்றோ ரைப் போற்றுஞ் சால்புடை யவன்; பெருவண்மையையும் இவன் மேற்கொண்டிருந்தான். இவனை மதுரைக்கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர் பாடியுள் ளார்.

**பாண்டியன்மதிவாணன்** - இவன் கடைச்சங்கத்தைப்புரந்த பாண் டியமன்னர்களுள்ஒருவன்.சிலப் பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் இவன் கடைச்சங்கத்தைப் புரந்தபாண் டியருள் கவியரங்கேறியவன் என்று தம்முடைய உரைப்பாயி ரத்திற் கூறியுள்ளார். எனவே இவன் செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கிய வேந்தனு



வான். இவன் நாடகத்தமிழ் நூல் ஒன்றை இயற்றினன்அது மதிவாணர் நாடகத்தமிழ்நூல் என்னும் பெயருடையது. நூற் பாவாலும் வெண்பாவாலும் இயற்றப்பெற்றது.அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதுவதற்கு மேற் கோளாகக் கொண்ட இசை நாடக நூல்களுள் இதுவும் ஒன்ருகும். இந்நூல் இக்காலத் தில் இல்லை. மறைந்தொழிந்த நூல்களுள் ஒன்ருகி விட்டது.

**பாண்டியன் முடத்திருமாறன்** - குமரிநாடு கடற்பெருக்கால் அழிந்தபிறகுகுமரியாற்றிற்கும் தாம்பிரபருணி யாற்றிற்கும் இடையிலுள்ள நிலப்பரப்பில் தங்கியிருந்த தமிழ்மக்களுக்குத் தலைநகராய்இருந்த கபாடபுரத் தில்தங்கிஅரசாட்சிசெய்தபாண் டியமன்னர்கள் ஐம்பத்தொன் பதுபெயருக்குள்இவ்வேந்தனே இறுதியிலரசாட்சி செய்தவன். இவன்காலத்தில் நிகழ்ந்த ஒரு கடல்கோளால் பாண்டியநாட் டின் பெரும்பகுதியும் அதன் தலைநகராகிய கபாடபுரமும் அழிந்தொழிந்தன. இச்சமயத் தில்தான் தமிழ்நூல்கள் பல அழிந்தொழிந்தன. கடல் கோளுக்குத் தப்பிப்பிழைத்த இம்மன்னனும் மக்கள் பலரும் தற்கால மதுரையை யடைந்து அந்நகரைவளநகராக்கினுர்கள். இங்குஇம்மன்னன் கடைச்சங் கத்தை அமைத்தான். இச்சங் கத்தின்மூலம் இவன் தமிழுக்கு நல்ல தொண்டு செய்தான். தமிழ்மொழிப் பயிற்சியிலும் இம்மன்னன் சிறந்தவன்.இவன் பாலைத்திணையையும் குறிஞ்சித் திணையையுஞ் சுவையாகப் பாடுவதில்வல்லவன். நற்றிணை யில் இவன் பாடியபாடல்கள் இரண்டு உள்ளன.

**பாண்டு** - திங்கட்குல அரசன் விசித்திரவீரியன் தாயான பரிமளகந்தி வியாசரை வேண்ட அவர் விசித்திரவீரியன் மனைவியாகிய அம்பாலிகையுடன் கூடினார். அப்பொழுது பாண்டு மன்னன் பிறந்தான். இவனுடைய உடல்முழுவதும் வெண்ணிறமாகிய பாண்டு என்னும் நோய் பரவியிருந்தபடியால் பாண்டு என்னும் பெயர்பெற்றான். இவனுடைய பெரிய தாயான அம்பிகையிடம் வியாசருக்குப்பிறந்ததிருதராட்டிரன் குருடனானபடியால் அவனை அரசனாக வைத்துக் கொண்டு இவனே அரசாட்சி புரிந்தான்.

**பாண்டுகம்பளம்** - இஃது இந்திரனிடமிருந்த ஆசனம் என்றோ அவன் போர்த்தியிருந்த போர்வையென்றோ எண்ணுகின்றனர். உலகில் நல்லவர்கட்கு ஏதேனுந்தீமைநேரிடின் இந்தப் பாண்டுகம்பளம் நடுநடுங்கும். இதனால் இந்திரன் செய்தியறிந்துகொண்டு அந்த நல்லவர்கட்கு உதவிசெய்ய முற்படுவன்.

**பாதபங்கயமலை** - மகத நாட்டின் தலைநகராக விருந்த இராசக்கிருக நகரத்தின் அண்மையில் இருந்தது. புத்ததேவன் எல்லா உயிர்களுக்கும் தருமசிந்தையை உண்டாக்க எண்ணி அவைகளெல்லாங் கண்டு கேட்குமாறு இதன் மேலே நின்று அறவுரை கூறியபொழுது அவனுடைய அடிச்சுவடு தங்கப் பெற்றமையின் இப்பெயர் பெற்றது. இதனைக் கிருத்திர கூடம் என இக்காலத்தில் வழங்குகின்றனர்.

**பாதபீடிகை** - புத்தனுடைய அடிச்சுவடுள்ள பீடம். இஃது இலங்கைத்தீவு, காவிரிப்பூம் பட்டினம், மணிபல்லவத் தீவம் முதலிய இடங்களில் இருந்ததென்றும் பண்டைக் காலத்துப் பவுத்தரால் வழிபாடுசெய்யப் பட்டுவந்ததென்றுந்தெரிகிறது.

**பாதாளவிக்கிநேசுரர்** - திருக்காளத்திக்கோயிலில் உள்ள ஒரு பிள்ளையார். நிலமட்டத்திற்குக் கீழே முப்பதடி ஆழத்தில் உள்ளபடியால் இவ்வாறு பெயருண்டாயிற்று. (ஆழத்துப் பிள்ளையார்என்பதைப்போல).

**பாதாளலிங்கேசுவரர்** - திருவண்ணாமலைத் திருக்கோயிலில் நிலமட்டத்திற்குக் கீழே அமைந்துள்ள திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயர்.

**பாதாளவைரவன்** - இப்பெயருடைய சிறுதெய்வமொன்று நிலத்துக்குள் ளிருப்பதாகவும் கிணறு தோண்டும்போது தண்ணீர்கண்டவுடன் இவ்வைரவனுக்குப் பொங்கலிட்டால் தண்ணீர் தாராளமாகக் கிடைக்குமென்றுஞ் சிலர் நம்புகிறார்கள்.

**பாதாளீச்சுரம்** - சோழவள நாட்டில் இராசமன்னார் குடிக்கு வடக்கில் ஒருமைல் தொலைவில் உள்ள ஒரு தேவாரம் பெற்ற சிவப்பதி. இவ்வூர் இந்நாளில் பாமணி, பாம்பணி என வழங்கப்பெறுகிறது. பாதாள உலகத்தில் நின்றும் ஆதிசேடனது தம்பியாகிய தனஞ்செயன் என்னும் பாம்பு பிலத்தின் வழியே வந்து வழிபாடு செய்து பேறு பெற்ற தலமாதலின் இவ்வாறு பெயர்பெற்றது.

**பாநுகம்பன்** - இவன் சிவகணங்களில் ஒருவன். ஆயிரம் வாய்கள் உடையவன். சிவபிரானுடைய திருமுன்பு ஆயிரம் வாய்களாலும் சங்கு ஊதுவது இவனுடைய தொழில்.

**பாபநாச முதலியார்** : (முத்தமிழ்க் கவி ராஜசேகரர்) - இவர் பதினொராம் நூற்றாண்டின் மூற்

பகுதியைச்சார்ந்தவர். கும்பகோணத்தில்வசித்துவந்தார். தஞ்சாவூரில் ஆண்ட ஏக்கோஜி என்ற மகாராட்டிர அரசரை இவர் தமது கும்பேசர் குறவஞ்சியில் குறிப்பிடுவதால்(பாட்டு-6,43) அவர் காலத்தில் வாழ்ந்தவர் என்றுதெரிகிறது. துக்கோஜியின் மகனான இந்த ஏக்கோஜி 1736-37 இல் ஆட்சி புரிந்தவர். சிவபெருமானிடம் பத்திசான்றவர். சிவனைப் போற்றிப் பல அரிய பாக்கள் இயற்றியிருக்கின்றார். 'நடமாடித் திரிந்த உமக்கு' என்னும் காம்போதி ராகக் கீர்த்தனை பெரும்புகழ் வாய்ந்தது. கும்பகோணத்தில் கோயில் கொண்டுள்ள கும்பேசர் பேரில் இவர் குறவஞ்சி பாடியுள்ளார்.

**பாம்பணக்கவுண்டர்**-கொங்குவள நாட்டில் ஈரோடு தாலுகாவில் உள்ள கிழான்பாடி என்னும் ஊரில் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். சிறந்த வள்ளல். பாம்பணன் என்பது பாம்பு மாலையை அணிந்த சிவபிரானுடைய பெயர்களில் ஒன்றாகும். பாம்பணக்கவுண்டர் நூல்களையும்கற்று நல்ல அறிஞராகவும் திகழ்ந்தார். அந்நாளில் இருந்த பாலபாரதி முத்துச்சாமி ஐயர் என்பவர் இக்கவுண்டர் மீது குறவஞ்சி யொன்று பாடியுள்ளார். அக்குறவஞ்சி பாம்பணக் கவுண்டர் குறவஞ்சி என்னும் பெயருடையது.

**பாம்பன்**- (க) இவன் ஒரு வீட்டில் நெல்லைக் களவு செய்ததோடு பலதீமைகளைச் செய்து இறந்தான். மறுபிறப்பில் பாண்டி நாட்டில் பிறந்து பலதிருப்பணிகள் செய்தான். அதன்பின் எலியாகப் பிறந்தான். ஒருநாள் கோயிலில் சுற்றிக் கொண்டு வரும்போது கார்த்திகைத் திரு விளக்காகப் போடப்பட்ட விளக்குகளில் ஒளி குறைய அதனை முகத்தால் தீண்டி ஒளியை மிகுதிப்படுத்தினான். இதற்கு அடுத்த பிறப்பில் விரோசனன் என்னும் அரசனுக்கு மாபலி என்னும் பெயருடைய மகனாகப் பிறந்து வாமனாவதாரத்திருமாலுக்குத்தானம் வழங்கி எல்லா நன்மைகளையும் அடைந்தான். (உ) இராமநாதபுரத்திற்கும் இராமேசுரத்திற்கும் இடையில் உள்ள கடல் பாம்பன் என்னும் பெயரால் குறிக்கப்படுகிறது.

**பாம்பாட்டிச்சித்தர்** - பதினெண் சித்தர்களில் ஒருவர். பாண்டி நாட்டில் இருந்ததாகக்கூறுவர். இவர் காட்டிற்சென்று கொண்டிருந்த போது ஒரு பாம்பு இறந்து கிடத்தலைக் கண்டார். அப் பாம்பை உயிர்ப்பிக்க வேண்டுமென்று எண்ணினர். தத்துவச்செய்திகளை அமைத்து அப்பாம்பைநோக்கிப்பாடினர். அப்பாம்பு உயிர்பெற்றெழுந்து ஆடிக்கொண்டு இவரோடு சென்றது. அதுமுதல் இவருடைய பெயர் பாம்பாட்டிச் சித்தர் என்று வழங்கலாயிற்று. பாம்பாட்டிச் சித்தர் பாடல், சித்தாரூடம்,மருத்துவ நூல்கள் முதலியன இவர்செய்துள்ளார். இவர் சித்தராகலின் பலவிடங்களினுஞ் சுற்றித் திரிந்தார்.

**பாரதம் பாடிய பெருந்தேவனார்** - சங்ககாலத்தில் இருந்த புலவர்களில் ஒருவர். பாரதக்கதையைத்தமிழில்உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுளாக இவர் இயற்றியபடியால் இவருடைய பெயர் பாரதம்பாடிய என்னும் அடைமொழியையும்பெற்றது. இவருடைய பாரதப்பாடல்களை தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் நச்சினார்க்கினியராலும் யாப்பருங்கல விருத்தி

முதலிய நூல்களில் அவை களின் உரையாசிரியர்களாலும் மேற்கோள்களாக எடுத்தாளப் பட்டுள்ளன. இவர் கடவுளன்பு மிகுதியும் உடையவராகையால் கடவுள் வணக்கப் பாடல்கள் இல்லாத நூல்களில் கடவுள் வணக்கப்பாடல்கள் செய்து சேர்த்திருக்கிறார். இவர்பாடிய பாரதம் முழுதுங் கிடைக்க வில்லை. உத்தியோக பருவம், வீடுமபருவம், துரோணபருவம் ஆகிய மூன்று பருவங்களிலும் 818 வெண்பாக்களும் 6 ஆசிரி யப்பாக்களும் 6 விருத்தப்பாக் களும் மட்டுமே கிடைத்திருக் கின்றன.

**பாரவி** - இவர் வடநாட்டு அசல புரம் என்னும் ஊரைச் சேர்ந்த வர். இளம் வயதிலேயே நன்றாகக் கல்விகற்றுச்செய்யுள் பாடுந்திறமையும் பெற்றிருந் தார். இதனையுணர்ந்தமேலைச் சளுக்கிய இளவரசனான விட் டுணுவர்த்தனன்என்பவன் இவ ருடைய நட்பைப் பெற்றிருந் தான்.

**பாரி** - இவன் வேள் பாரி எனப் பெறுவான். பாண்டிநாட்டுப் பறம்புமலையைச் சூழ்ந்த நாட் டையுடையவன். பறம்புநாடு முந்நூறு ஊர்களையுடையது. பறம்புமலை இந்நாளில் பிரான் மலை எனவழங்குகிறது. இவன் வேளிர் குலத்தவன். பறம்பு நாட்டைச்சேரவிருந்த பாண்டி நாட்டுத் திருவாதவூரில் பிறந்த வரும் கல்வியறிவுகளிற் சிறந்த வருமாகிய கபிலர் என்னும் புலவர் வேள்பாரிக்கு இனிய நண்பர். இவன் வள்ளல்களில் முதன்மைபெற்றவன். தாவிப் படரக் கொழுகொம்பற்ற முல்லைக் கொடிக்குத் தன் னுடையதேரைக்கொடுத்தவன். கொடைச் சிறப்பினால் இவ னுடைய புகழ் தமிழ்நாடெங் கும் பரவியது. இவனுடைய பெயரே யாண்டும் ஓங்கி நின்றது. சேரசோழபாண்டி யர்களாகிய மூவேந்தர்களின் புகழ் ஒருசிறிதும் தலையெடுக்க வில்லை. இதனால் அழுக்காறு கொண்ட மூவேந்தர்களும் வஞ் சித்து இவ்வள்ளலைக் கொன்ற னர். இவனுக்கு அங்கவை சங்கவை என்னும் பெண்கள் இருவர் இருந்தனர். இவர்கள் கல்விகற்றுச் செய்யுள் பாடுந் திறமுடையவர்களாக விருந்த னர். பாரியின்பெயரை அருண கிரிநாதர் தம்முடைய திருப் புகழில் "பாரியானகொடைக் கொண்டலே" என்று குறிப் பிட்டுள்ளார். பாரி இறந்தபின் அவனுடைய பெண்கள் திக் கற்றவர்களாயினர். கபிலர் குறுநிலமன்னர்கள் பலரை யடுத்து அப்பெண்களைத் திரு மணஞ்செய்து கொள்ளக்கூறி யும் மூவேந்தருக்கஞ்சி அப் பெண்களைக் குறுநிலமன்னர் கள் மணஞ்செய்து கொள்ள மறுத்தனர். பிறகு ஔவையார் மூவேந்தர்களின் முன்னிலையில் அப்பெண்கட்குத் திருமணம் முடித்தனர்.

**பாரிசாதம்** - தெய்வமரமாகிய இது பாற்கடலில் தோன்றியது. தேவேந்திரனுடைய தோட்டத் தில் இருந்தது. வேண்டுவார் வேண்டுபவைகளை யெல்லாம் இம்மரம் அளிக்கவல்லது. இந்திராணி சத்தியபாமைக்கு இம்மரத்தின் மலரைக் கொடுக் கக்கூடாது என்று எண்ணிய படியால் சத்தியபாமை இம் மரத்தைத் தேவலோகத்தில் இருந்து தன்னுடைய அந்தப் புரத்திற்குக்கொண்டு வருமாறு கண்ணனிடங் கூறினாள். கண்ணபிரானும் அவ்வாறே செய்தார்.

**பாரிசாதவனம்** - இத்தலம் இந்நாளில் திருக்களர் என்னும் பெயரோடு விளங்குகிறது. சோழவளநாட்டில் திருத்தருப்பூண்டிப் புகைவண்டி நிலையத்திற்கு தென்மேற்கே ஏழுகல் தொலைவில் உள்ளது. திருஞானசம்பந்தருடையதேவாரப்பாடல் பெற்றது. முன்னாளில் துருவாசமுனிவர் தேவருலகத்தில் இருந்து பாரிசாதமரத்தைக் கொண்டுவந்து வைத்து வளர்த்து அதன்கீழ்பால் ஒரு தடாகம் உண்டாக்கிச் சிவலிங்கம் அமைத்து வழிபாடு செய்தார். நாளடைவில் அவ்விடத்திற்பல பாரிசாத மரங்கள் தோன்ற அவ்விடம் பாரிசாத வனம் என்று பெயர்பெற்றது. இங்குஎழுந்தருளியசுவாமியின் பெயர் பாரிசாதவனேசுவரர்.

**பாரிமகளிர்** - இவர்கள் இருவர். அங்கவை சங்கவை என்னும் பெயரினர். பாரிமன்னனுடைய அருமைப்புதல்வியராகிய இவர்கள் இருவரும் கபிலரிடம் கல்வி கற்றுச் செய்யுள் பாடுந் திறமும் உடையவர்களாய்த் திகழ்ந்தனர். பாரி இறந்த பின் பாரியின் நண்பராகிய கபிலர் தாமும் இறந்துபட எண்ணினாராயினும் இம்மகளிர் இருவரும் திக்கற்றவர்களாக இருத்தலைக் கண்டு இவர்களைக் காக்க எண்ணினார். இவர்களை அழைத்துக்கொண்டு புறப்பட்டார். ஒரு நாள் மூவரும் ஓர் ஊரில் தங்கியிருந்த போது முழுத்திங்கள் நிலவு தோன்றிற்று. அதற்கு முந்திய முழுத்திங்கள் நாளில் அரசத் திருவோடு மகிழ்ந்திருந்த இம்மங்கையர் அம் முழுத்திங்கள் நாளை எண்ணி, "அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில், எந்தையும் உடையேம் எங் குன்றும் பிறர் கொளார், இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவில், வென்றெறி முரசின் வேந்தரெங்குன்றுங் கொண்டார். யாம் எந்தையுமிலமே" என்று உள்ளம் வருந்திப் பாடினர்.

பிறகு கபிலர் இப்பெண்களை அழைத்துக் கொண்டு இளவிச்சிக்கோ என்பவனிடஞ் சென்று இவர்தம் வரலாற்றை உரைத்து இவரை மணந்து கொள்ளுமாறு வேண்டினர். மூவேந்தர்கட்கும் அஞ்சிய அவன் மணஞ் செய்து கொள்ள மறுத்தனன். பிறகு இருங்கோ வேள் என்பவனிடஞ் சென்று வேண்டினர். அவனும் அவ்வாறே அஞ்சி மறுத்தான். கபிலர் இப்பெண்களைப் பார்ப்பார்களுடைய பாதுகாப்பில் வைத்து இறந்தார். ஔவையார் இப்பெண்கள் இருக்குமிடத்தை ஒரு நாள் தற்செயலாக அடைந்தபோது இப்பெண்களின் நிலையை உணர்ந்து வருந்தினார். இப்பெண்கள் இருவருக்குந் திருமணஞ் செய்து வைக்க எண்ணினார். தெய்வீகன் என்பவனிடம் சென்று மணந்து கொள்ளுமாறு வேண்டினார். அவனும் மூவேந்தர் சினத்துக்கு ஆளாக நேரிடும் என்று எண்ணி மறுத்தான். ஆயினும் ஔவையார் விடவில்லை. மூவேந்தர்களையும் மணத்திற்கு வரச் செய்கிறேன் என்று கூறி அவ்வாறே வரச்செய்து அம்மன்னர் வேண்டுகோட்படி பனந்துண்டந் தளிர்க்குமாறு செய்யுள் பாடி மணத்தையும் இனிது முடித்து வைத்தார்.

**பாரியூர்** - கோவை மாவட்டத்தில் கோபிச்செட்டிப் பாளையத்திற்குப் பக்கத்தில் உள்ளது. பாரி என்னும் வள்ளல் வாழ்ந்திருந்த ஊர் இதுவே என்கின்றனர்.

**பாரியூர் செட்டி பிள்ளையப்பன்** - கொங்குவள நாட்டில் பாரியூரில் செட்டி பிள்ளையப்பன் என்பவன் வாழ்ந்திருந்தான்.

இவன் தன்னிடம் வரும் புலவர்கட்கு இல்லையென்னாது வழங்குவதில் பெரும் புகழ் பெற்றிருந்தான். காலக் கோளாற்றினால் இவ்வள்ளலுக்கு வறுமை யுண்டாகியது. ஒரு நாள் சிறந்த புலவன் ஒருவன் அரியசெய்யுட்கள் பலவற்றை இவன் மீது பாடிக்கொண்டு வந்தான். அப்புலவனுக்குக் கொடுப்பதற்கு இவனிடம் பொருளில்லை. புலவனுக்கு இல்லை யென்று சொல்வதைக்காட்டிலும் உயிர் விடுவது நல்லது என்று முடிவு செய்த பிள்ளையப்பன் பக்கத்துக் காட்டுக்குப் போய் அங்குள்ள புலிக்குகைக்குள் நுழைந்து புலிக்கு உணவாகி விடுவதென்று முடிவு செய்தான். புறப்பட்டுக்காட்டிற்குச் சென்றான். புலிக்குகையைக் கண்டு அதனுள் நுழைந்தான். குகையில் புலியில்லை. கள்ளர்கள் மறைத்து வைத்திருந்த பொருட்குவியல் இருந்தது. அதனைக் கண்டு வாரிவந்து புலவனுக்கு வழங்கினான். இத்தகைய செயற்கருங் காரியஞ் செய்த இவனுடைய புகழ் என்றும் நின்று நிலைபெறுவதாயிற்று.

**பார்ச்சவ தீர்த்தங்கரர்** - சைநர்களில் இருபத்துமூன்றாவது தீர்த்தங்கரர். இவர் வாரணாசியில் உக்கிரவமிசத்தில் விசுவசேநருக்கு அவருடைய மனைவியாகிய பிராமியிடத்தில் தைத் திங்கள் கிருட்டிணபட்சம் ஏகாதசி விசாக நாள் அன்று பிறந்தவர்.

**பார்த்தசாரதி**-சென்னை திருவல்லிக்கேணியில் எழுந்தருளிய பெருமாளுடைய பெயர். பார்த்தன்-அருச்சுனன். சாரதி-தேரோட்டி. கண்ணபிரான் அருச்சுனனுக்குத் தேரோட்டிய படியால் இவ்வாறு பெயருண்டாயிற்று. அல்லிக்கேணி என்பது அல்லிமலர் மலர்ந்த கிணற்றைச் சுட்டும். இக்கேணி முன்னாளில் சிறுகிணறு வடிவாக இருந்தது. இந்நாளில் வளர்ந்து பெருகிக் கோயிலுக்கு முன்னால் புட்கரணி யென்னும் பெயரோடு விளங்குகிறது. இக்குளத்தில் மீன்களே இல்லை யென்று கூறப்படுகிறது.

**பார்த்தன்** - அருச்சுனன். பிருதை என்னும் பெயருடைய குந்தி தேவியினிடத்தில் தோன்றியவனாகையால் பிருதையின் மகன் பார்த்தன் எனப் பெற்றான். காரணவிடுகுறிப் பெயர்.

**பாலகணபதி** - நான்கு திருக்கைகளும் யானைமுகமும் உடையவர்; சிவந்த நிறம் உடையவர்; குழந்தை வடிவத்தையுடையவர்; வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம், கரும்பு இவைகளை நான்கு திருக்கைகளிலும் வைத்திருப்பார். கையில் மோதகம் விளங்கும்.

**பாலகவி** - கல்வியறிவினாலோ அல்லது கடவுளின் அருளினாலோ மிகு இளம் பருவத்திலேயே ஒருவர் செய்யுள் பாடுவார்களானால் அவர்கள் பாலகவி என்று பெயர் பெறுதற்கு உரியராவர்.

**பாலகிருட்டிண முதலியார்** - இவர் தொண்டைவள நாட்டில் குன்றவர்த்தனம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த செல்வர். வேளாளக் குலத்தினர். காஞ்சிபுரம் திருவிழாவுக்கு வந்த ஒரு பெண் உற்றார் உறவினரைப் பிரிந்து இவரையடைந்து தன் நிலையைக் கூற அப்பெண்ணைத் தம்உடன் பிறந்தாளைப்போலப் பாதுகாத்துக் கணவன் வந்தபோது அவனிடம் ஒப்புவித்தார்.

**பாலகுமரன்-(க)** இவன் ஆரிய மன்னர்களில் ஒருவன். செங்குட்டுவனால் வெல்லப்பட்ட கனக விசயர்களுடையதந்தை.

**பாலகுமரன் - (உ)** பிரச்சோதனனுடைய மக்களில் ஒருவன்; உஞ்சை நகரில் உதயணன் நளகிரியை அடக்கிய பிறகு தந்தையின் கட்டளைப்படி அவனுக்கு வேண்டியவைகளைச் செய்து கொண்டிருந்தவன். உதயணன் அரசாட்சி செய்யத்தொடங்கிய பிறகு நன்கொடை பெற்றவர்களில் இவனும் ஒருவன்.

**பாலசந்திரவிநாயகர்** - ஆனைமுகக் கடவுளுக்கு ஒரு பெயர். இவர் சிறுபிள்ளையாகச் சென்று அனலாசுரன் என்பவனை விழுங்கி அவனுடைய வெப்பத்தைத் தாங்கித் திங்களைப் போலக் குளிர்ந்திருந்த படியாலும், மாதவ மன்னனும் அவன் மனைவி சுமுதையும் காட்டில் தனித்திருந்து துன்பப்படுகையில் அவர்களுக்குக் குழந்தைவடிவாகக் காட்சி தந்து துன்பம் நீக்கியதாலும் இப்பெயர் உண்டாகியது.

**பாலறுவாயர்- (க)** இப்பெயர் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைக் குறிக்கும். உமாதேவியார் ஊட்டியருளிய ஞானப்பாலின் மணம் இடையறாது கமழ்ந்து ஞான வாக்குகளைப் பொழிந்து கொண்டிருந்தபடியால் இவ்வாறு ஒரு பெயர் உண்டாகியது.

**பாலறுவாயர்-(உ)** இவர்தொண்டைவளநாட்டில் குன்றத்தூரில் சேக்கிழாருக்குத் தம்பியாராகப் பிறந்தவர். இவர் தாம் பிறந்த ஊரில் திருப்பணிகள் பல செய்து கொண்டிருந்தார். தமையனாராகிய சேக்கிழார் பெரியபுராணம் பாடி அமைச்சர் தொழிலில் இருந்து விலகிய பிறகு சோழமன்னன் இவரையழைத்து அமைச்சராக்கித் தொண்டைமான் என்னுஞ் சிறப்புப் பெயருங் கொடுத்தான். ஆனால் இவர் சோழநாடு சென்று அமைச்சுத் தொழிலைப் புரியாமல் குன்றத்தூரில் இருந்தபடியேஅமைச்சுத்தொழிலைச் செய்தார். அக்காலத்திலே தொண்டைவள நாட்டில் பெரும் பஞ்சம் உண்டாகியது. அப்பஞ்சத்தில் மக்கள் வருந்தி மடியாமல் பாதுகாத்தார். அதனால் இவருக்குத் தொண்டை மண்டலம் நின்று காத்த பெருமான் எனவும் ஒரு பெயர் உண்டாகியது.

**பாலாறு** - வசிட்டருடைய காமதேனு நந்திதேவரைக் கண்டு காமங் கொண்டது. அதனால் அதனுடைய பால் சுவறி விட்டது. இதையறிந்த வசிட்ட முனிவர் தருப்பையினால் ஒரு கன்றையுண்டாக்கினார். அதனால் காமந் தணிந்து பால் சுரந்து ஒழுகியது. அது பாலாறாயிற்று. இது புனிதத்தன்மையுடைய ஆறு.

**பாலாசுரன்** - இவன் ஓர் அசுரன். இவன் சிந்தாசுரன் என்பவனுடைய ஏவலால் ஆனைமுகக் கடவுளைக் கொல்ல வந்தான். பார்ப்பனச் சிறுவன் வடிவங் கொண்டு பிள்ளையாரோடு விளையாடினான். இவனுடைய வஞ்சக நோக்கத்தையறிந்திருந்த பிள்ளையார் இவனைக் கொன்றார்.

**பாலைக்கௌதமனார்** - சங்ககாலப் புலவர் பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்தைப்பாடியவர். மூன்றாம் பத்தின் பாட்டுடைத்தலைவனாகிய பல்யானைச் செல்கெழு குட்டுவனை வேண்டிப் பத்து வேள்விகளை அவனுதவியால் செய்து முடித்துப் பத்தாம் வேள்வியின் இறுதியில் மனைவியோடு விண்ணகம் புகுந்தவர்.

இச்செய்தி இன்றும் மலை நாட்டில் வழங்குகிறது. இவர் அந்தணகுலத்தினர்.

**பால்பாண்டியன்** - பாஞ்சாலன் குறிச்சிக் கட்டபொம்மு வழி முறையில் நாற்பத்தைந்தாவது பட்டத்தையடைந்தவன். அறிவு, அமைதி, அடக்கம் முதலிய சீரிய பண்புகளெல்லாம் இவனிடஞ் சிறந்திருந்தன. கடவுள் வழிபாட்டிலும் இவன் மேலோங்கி நின்ருன். இவனுக்குச் செகவீரக்கட்டபொம்மு, சின்ன பொம்மையா என்று இரண்டு மக்கள் தோன்றினர்.

**பால்ராசபொம்மு** - பாஞ்சாலன் குறிச்சிக் கட்டபொம்முவின் வழிமுறையில் ௪அ ஆவது பட்டத்தையடைந்தவன். இவனுடைய தந்தையின் பெயர் இரகுவீரராமன். இவன் எல்லோரையும் எளிதில் நம்பும் இயற்கையுடையவனாக விருந்தான். நல்ல கல்வியறிவில்லாதபடியால் தற்புகழ்ச்சியிலும் விருப்பமுடையவனாக விருந்தான். சிற்றின்பத்திலீடுபட்டு நாட்டை நன்கு காவாமலிருந்தான். இவனுடைய ஆட்சி ஆறு ஆண்டுகளே நடைபெற்றன.

**பாவருசி** - இவன் ஓர் அந்தணன். இவன் அதிதி வழிபாடு செய்யாமல் உண்பதில்லை யென்று உறுதி கொண்டு அதனைக் கடைப்பிடித்திருந்தான். ஒரு நாள் மழை மிகுதியாகப் பெய்தது. அதிதிகள் எவரும் இவனுடைய இல்லத்திற்கு வரவில்லை. தீக்கடவுள் இவனுடைய திட்பத்தை ஆராய்ந்து பார்க்க எண்ணினன். நோய் கொண்ட புலையனுய் வடிவங் கொண்டு புண்களில் புழு நெளிய ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்தான். அந்தணன் இந்தப்போலி நோயாளியைக் கண்டு தன்னிடம் வந்து உணவு கொள்ளுமாறு வேண்டிக் கொண்டான். தீக்கடவுள் தான் நீசன் என்று கூறி மறுத்தான். அதற்கு இவன் தான் உடலைக் குறித்து வழிபாடு செய்யவில்லை யெனவும் எல்லோரிடத்திலும் நிறைந்திருக்கிற இறைவனை எண்ணியே வழிபாடு செய்வதாகவுங் கூறினன். வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போய் வழிபாடுகள் செய்து உணவிட்டான். தீக்கடவுள் இவனுக்குத் தன் வடிவத்தைக் காட்டி அருள் புரிந்தான்.

**பாவாடைராயன்** - சிறு தெய்வங்களில் ஒன்று. அங்காளி அம்மன் முன்பு தன்னுடைய இதய கோசம், குடல், ஈரல் முதலிய வைகளைப் பாவாடை நிவேதனமாக்கிய படியினுல் இவ்வாறு பெயர் பெற்றவன் என்பர்; மற்றும் அங்காளம்மையின் காவற் சேவகன் எனவும் அங்காளம்மை அளித்த பாவாடையை உடுத்தவன் எனவுங் கூறுவர். இப்பாவாடைராயனைக் கீழ்மக்களே பெரும்பாலும் வழிபாடு செய்கிருர்கள். "சென்று நாஞ்சிறு தெய்வம் சேர்வோ மல்லேம்" என்பதற் கேற்ப மேலோர்கள் இப் பாவாடை ராயனைப் போற்றுவதில்லை.

**பாவை மன்றம்** - இப்பெயருடைய மன்றம் ஒன்று முன்னுளில் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்ததென்றும், இங்கு பாவை ஒன்று நடப்பட்டிருந்த தென்றும் அரசனுடைய செங்கோல் கோடினும் நீதிமன்றத்தினர் அறநெறிபிறழ்ந்தாலும் அப் பாவை கண்ணீர் வடித்ததென்றுஞ் சிலப்பதிகாரங் கூறும்.

**பாற்கர தீட்சிதர்** - கோனேரிராசபுரம் என்னும் ஊரில் பிறந்தவர். வடமொழிப் புலவ

ராகத் திகழ்ந்த இவர் ஆத்ம பரீட்சை, தப்தமுத்திராவித்ரா வணம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவருடைய தந்தையின் பெயர் உமா மகேசுவராச்சாரியார்.

**பாற்கர ராமாயணம்** - இது பாஸ் கரர் என்பவரால் செய்யப் பட்டது. இவ்வாறு வழங்கி னும் இது இவருடைய குமார ராகிய மல்லிகார்ச்சுனபட்டு, மாணவராகிய குமாரருத்ர தேவர்; நண்பராகிய ஐயலார் யர் என்னும் நால்வரானுஞ் செய்யப்பட்டது. பாஸ்கரர் முதற்காரணராக இருந்தமை யின் அவருடைய பெயராலே யே வழங்கலாயிற்று. நால்வ ரால் இயற்றப்பட்டதற்குக் காரணம் யாதெனின்; அக்காலத் தில் இவரை ஆதரித்திருந்த அரசனிடத்தில் இவருடைய உறவினனாகிய அரங்கநாதன் என்பவன் தான் ஓர் இராமாய ணம் இயற்றித் தருவதாகக் கூறி அரசனுடைய உடன் பாட்டைப் பெற்று இராமாய ணஞ் செய்தான். அவனிடத் தில் இவருக்கு இயற்கையாக வே பொறாமையிருந்தது. ஆக வே இவரும் அரசனிடம் "உன் னுடைய பெருமைக்குத் தக்க வாறு நான் இராமாயணஞ் செய்து தருகிறேன் அதனைப் பெற்றுக்கொள்." என்று கூறி னார். ஆனால் அரசனோ அரங்க நாதனுடைய இராமாயணத் தையே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்னும் நோக்க முடையவனாக இருந்தபடி யால் "யார் முதலில் முடித்துக் கொண்டு வருகிறீர்களோ அதனைத்தான் நான் ஏற்றுக் கொள்வேன்" என்று சொன் னான். இவர் தம்முடைய இராமாயணத்தை விரைவாக முடிக்க வேண்டுமென்று எண் ணினார். அரங்கநாதனுடைய இராமாயணமோ முக்காற் பகுதி முடிந்திருந்தது. ஆகவே இவர் தம்முடைய மகன் மாண வர், நண்பர் ஆகியவர்களையும் ஒவ்வொரு பகுதி இயற்றச் செய்து தாமும் ஒரு பகுதி இயற்றி இராமாயணத்தை முடித்தார். இவர் அரசனிடம் இராமாயணத்தைக் கொண்டு சென்ற அதே நாளில் அரங்க நாதனும் இராமாயணத்தை முடித்துக் கொண்டுவந்து அரச னிடங் கொடுக்கத் தொடங்கி னான். இருவரும் ஒரே சமயத்தில் இராமாயணத்தைக் கொடுத் தனர். அரசன் இவரிடம் இடக் கையையும் அரங்கநாதனிடத் தில் வலக்கையையும் நீட்டி னான். இதனால் பாஸ்கரருக்கு மிகுந்த சினமுண்டாகியது. அரசனைப்பார்த்து, "பட்சபாத முள்ள உன்னைப்போன்ற அரசனிடம் என்னுடைய நூலைக் கொடுப்பதைப் பார்க் கினும் ஒரு குதிரைக்காரனுக்குக் கொடுப்பது நன்மையாகும்" என்று கூறிக்கொண்டு அரச னுடைய அவையை விட்டு வெளியேறினார். அப்பொழுது அரசனுடைய குதிரைக்காரன் வந்து, "பண்டிதனே! நீ சொன்ன சொல் தவறாதே" என்று கூறிச்செல்லும் வழி யைத் தடுத்துக் கும்பிட்டான். அவ்வளவில் இவர் தம்முடைய நூலை அவனிடங் கொடுத்தார். அவனையும் முதலிற் பாராட்டிப் பாடினார். அவன் குதிரைக் காரனாக விருந்தும் தன்னா லியன்ற பொருளுதவியைப் பாஸ்கரருக்குச் செய்தான்.

**பாற்கராசாரியார்** - இவர் மிகுபுகழ் பெற்ற காலக்கணித நூலாசிரி யர். பீசகணிதம் செய்தவர் இவரே. இந்தப் பீசகணிதத்தில் சங்கரணவிதி என்னும் அருமை யான விதியொன்று சொல்லப் பட்டிருக்கிறது. ஏறக்குறைய

எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு இவர் வாழ்ந்திருந்தார்.

**பானுகோபன்** - சூரபதுமனுக்கும் பதுமகோமளைக்கும் மகனுகத் தோன்றியவன். இவன் குழந்தையாகத் தொட்டிலிற் கிடந்த பொழுது கதிரவனுடைய கதிர் இவன் மேற்பட்டு வெப்பமுண்டாக்கியது அதனுற் சினந்து கதிரவனைப்பற்றித் தொட்டிற்காலிற் கட்டி வைத்தான். பிறகு நான்முகனுடைய வேண்டுகோளுக் கிணங்கி அவிழ்த்து விட்டான். இவ்வாறு கதிரவனிடத்தில் இவன் சினங்கொண்ட படியினுல் இவனுக்குப் பானுகோபன் என்று பெயர் உண்டாகியது. (பானு-கதிரவன்.) இவன் அதிக ஆற்றல் அமையப் பெற்றவன். மாயங்கள் புரிவதினும் வல்லவன். இராவணனுக்கு இந்திரசித்து அமைந்ததைப்போல் இவன் சூரபதுமனுக்கு அமைந்தான்.

**பிங்கலகடகர்** - இவர்கள் கடகபிங்கலர் எனவும் வழங்கப்பெறுவர். இவர்கள் உதயணனுக்குத் தம்பிகள். பிங்கலன், கடகன், என்று தனித்தனிப் பெயருடையவர்கள்; ஆயினும் ஒன்று சேர்த்தே கூறப்பெறுவார்கள். உதயணன் மாய யானையாற் பிடித்துக்கொண்டு போகப்பட்ட பொழுது யூகியின் வேண்டுகோட்படி தாய் மிருகாவதியையும் கோசம்பி நகரத்தையும் இவர்கள் பாதுகாத்துக் கொண்டிருந்தார்கள். ஆருணியரசன் அந்நகரைக் கைப்பற்றிய பொழுது அவனை வெல்லமுடியாமல் தம்முருவத்தை மறைத்துக் கொண்டு வேறிடஞ்சென்று மறைந்திருந்தார்கள். உதயணன் ஆருணியோடு போர்செய்யச் சென்ற போது அவனைக்கண்டு உடனிருந்து உதவி செய்தார்கள். ஆருணியரசனுடைய பெரும் படைத்தலைவர்களுள் ஒருவனுகிய காந்தாரகனை இவர்கள் அம்பால் எய்துவென்றுர்கள்.

**பிங்கலன்** - (க) இவன் வத்தவ நாட்டிலே கௌசாம்பிநகரிலேயிருந்து அரசுபுரிந்த சதானீகன் என்னும் அரசனுடைய மகன். இவன் உதயண மன்னனுக்குப் பின் பிறந்தவன். இவனுக்கு ஓர் தம்பியுண்டு. அவனுடைய பெயர் கடகன். இவர்களிருவரும் ஓரே நீர்மையராய் ஒன்றுபட்டு நின்றுராகலின் பிங்கல கடகர் என ஒரு தொகையாகவும் பெயரமைந்து நின்றனர். பிங்கலன் இன்னிசைபாடுவதில் வல்லவன். உதயணன் பகைவர் சூழ்ச்சியுள் அகப்பட்டு மறைந்திருந்த பொழுது அந்நாடும் நகரமும் நலமிழந்து நிலை குலைந்திருந்தன. அப்பொழுது இவன் அந்நாட்டைக் காத்துநின்றுன். அப்பொழுது ஆருணியரசன் என்பவன் போரிட வந்தான். அவனை வெல்வது இயலாதென்பதை உணர்ந்தஇவன் ஓராண்டுவரை மறைந்திருந்தான். பிறகுகாலமறிந்து நலமடைந்தான்.

**பிங்கலன்** -(உ) இவன் ஒருவேடன். இவன் காட்டில் வேட்டையாடித்திரிகையில் இவனைப்புலியொன்று துரத்தியது. புலிக்கு அஞ்சிய வேடன் வில்வமரம் ஒன்றில் ஏறிக்கொண்டான். புலி மரத்தின் கீழே படுத்துக் கொண்டது. வேடன் தூக்கம் வராமலிருக்கும் பொருட்டு வில்வமரத்தின் இலைகளைப் பறித்துக் கீழே போட்டுக் கொண்டிருந்தான். அவ்வில்வ இலைகள் மரத்தின்கீழ் இருந்த ஒரு சிவலிங்கத்தின் மீது விழுந்

தது. அதனால் அவ்வேடன் சிவகதியடைந்தான்.

**பிங்கலை** - இவள் ஒரு விலைமகள். இந்நாளில் பவானி என வழங்கும் திருநணுவில் முன்னாளில் வாழ்ந்திருந்தாள். இவள் தன்னை விரும்புவோரிடம் இருந்து நாள் ஒன்றுக்கு நூறு பொன் பரிசம் வாங்கும் வழக்க முடையவள். அநந்தசயனன் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் பிங்கலையை விரும்பினான். ஆனால் அவனிடம் நூறு பொன் இல்லை. மற்றொரு பிறவியிலேனும் அவளைத்தழுவ வேண்டும் என்று எண்ணிய அவன் நினைத்தவைகளை முடிக்கும் காயத்திரி மடுவிலேவீழ்ந்து உயிர் துறந்தான். பிங்கலை அவனுடைய கருத்தை அடியோடு வெறுத்தாள். தான் மறுபிறப்பில் அவனுடைய தங்கையாகப் பிறக்க வேண்டுமென்று விரும்பி நினைத்தவைகளை முடிக்கும் அதே காயத்திரி மடுவில் நாள்தோறும் மூழ்கி வந்து இறுதியில் இறந்தாள். மறுபிறப்பில் இருவரும் ஒரு மாடப்புறுவின் குஞ்சுகளாய் அண்ணன் தங்கையாய்ப் பிறந்தனர். அதனால் இருவருடைய எண்ணங்களும் நிறைவேறின.

**பிசாசமோசனவாவி** - காசியில் உள்ள தீர்த்த நீர்களில் ஒன்று. இதனில் ஒரு பிசாசு மூழ்கி நற்கதியடைந்தது.

**பிசாசன்** - இராவணனுடைய படைத்தலைவர்களில் ஒருவன். இயக்கர்களைக்கையால் நசுக்கித் தின்னக்கூடிய ஆற்றல்பொருந்தியவன். இவன் குதிரை மீதிருந்து போரிட்டுப் பல வானரர்களைக் கொன்றான். இலக்குமணர் காற்றுக்கணையைச்செலுத்தி இவனைக்கொன்றார்.

**பிசிராந்தையார்** இவருடையஇயற்பெயர் ஆந்தையார் என்பது. ஆதன் என்பவனுக்குத் தந்தையான இவர் அக்காரணம்பற்றி ஆதன் தந்தையார் என்று அழைக்கப்பட்டார். அப்பெயர் நாளடைவிற் சிதைந்து ஆந்தையார் என்று முடிந்தது. பிசிர் என்பது இவருடைய ஊர்ப் பெயர். ஆகவே இவர்பிசிராந்தையார் என்றுபெயர்பெற்றார். இவரும் கோப்பெருஞ்சோழனும் ஒருவரையொருவர் பாராமலே நட்பு கொண்டிருந்தனர். கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்விடத் தொடங்கினான். செய்தியை உணர்ந்த இவர் பாண்டிநாட்டில் உள்ள பிசிரில் இருந்து புறப்பட்டு வந்து கோப்பெருஞ்சோழனோடு ஒருங்கிருந்து உயிர்விட்டார். அரிய நண்பர்கள் இருவரைச்சுட்ட நேரும்போது உலகினர் இவர்களையே குறிப்பிட்டுக், ''கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும்போல்'' என்பர்.

**பிச்சையப்பன்** - தொண்டைவள நாட்டில் வளவந்தை என்னும் ஊரில், வேளாளர்குலத்தில் தோன்றியவன். இவனுடைய தந்தையின் பெயர் சிவசங்கர முதலி. இவன் இறைவனிடத்தில் பேரன்புடையவன். இவனுக்கு நீண்டநாள் மக்கட்பேறில்லை. இறைவனை நோக்கித்தனக்கொரு பிள்ளை பிச்சையளிக்கவேண்டுமென்று வேண்டினான். அவ்வாறே பிள்ளைப் பேறுண்டாயிற்று. அதனால்சிவசங்கரமுதலி தன் மகனுக்குப் பிச்சையப்பன் என்று பெயரிட்டான். பிச்சையப்பன் கல்வி கற்று நல்ல அறிவடைந்தான். செல்வநலமுஞ் சிறந்திருந்தது. ஆகவே பிச்சையப்பன் சிறந்த வள்ளலாகத் திகழ்ந்தான். பிச்

சையப்பனுடைய வள்ளற்றன்மையை அவ்வூருக்கு வந்த ஒரு புலவன் கண்டு மகிழ்ந்தான். இவன் மீது நூறு பாடல்களைப் பாடினுன். அஃது இவன் பெயரால் சதகம்என்று வழங்கலாகியது.

**பிட்டங்கொற்றன்** - இவன் சேர நாட்டில் இருந்த ஒரு சிற்றரசன். பெருந்திருவுடையனுக விளங்கியதோடு சிறந்த வள்ளலாகவுந் திகழ்ந்தான். படைக்கலப்பயிற்சி முதலியவைகளினும் வல்லவன். மிகமுயன்று பொருளைத்தேடிய இவன் அப்பொருளை அறவழியிலேயே பெரிதுஞ் செலவிட்டான். புலவர்களுடைய புலமை நலத்தை நன்குணர்ந்து போற்றத்தக்க ஏற்றம் இவனிடம் இருந்தமையால் இவன் புலவர்களுடைய புகழுரையையும் பெற்றுன். காரிக்கண்ணனுர் என்னும் புலவர் இவனுடைய கொடையை வியந்து பாடியபாடல் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது.

**பிண்டாரகம்** - துவாரகைக்கு அண்மையில் உள்ள ஓரிடம். இதில் தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர்களிடந்தான் யாதவர்கள் கருப்பிணிக்கோலம் பூண்டு குறும்பு விளையாடல் செய்து வசவுரை பெற்றனர்.

**பிண்டாரிகள்** - 17, 18 ஆம் நூற்றுண்டுகளில் நடு இந்தியாவில் இருந்த கொள்ளைக் கூட்டத்தினர். இக்கூட்டத்தில் இந்துக்கள் முகமதியர்கள் முதலியபல இனத்தவர்களும் அடங்கியிருந்தனர். வேலையில்லாதவர்கள் குற்றவாளிகள் கடனாளிகள் போன்றவர்கட்கு இக்கூட்டம் புகலிடமாக விளங்கியது. இவர்கள் நடு இந்தியாவைத் தலைமை இருப்பிடமாகக் கொண்டுசுற்றுப்புறங்களிலும் தொலைவில் உள்ள இடங்களிலும் கொள்ளையடித்தனர். 18 ஆம் நூற்றுண்டில் இருந்த அரசியல் குழப்பம் இவர்களுடைய கொள்ளைநிலைமைக்கு உதவியாக இருந்தது. இவர்கள் பெண்களையும் குழந்தைகளையுங்கொல்லுதல், வீடுகட்குத் தீயிடல் முதலியன சொல்ல முடியாத கொடுமையைச் செய்தனர். கவர்னர்செனரல் ஹேஸ்டிங்ஸ் என்பவர் 1818 இல் அவர்களை அடியோடு ஒழித்துக் கட்டினுர்.

**பிந்துசாரன்** - இவன் சந்திரகுப்தனுடைய மகன். இவன் அமித்திரகாதன் எனவும் அழைக்கப் பெற்றுன். இவன் இருபத்தெட்டாண்டுகள் அரசாட்சி புரிந்தான். சாணக்கியன் இம்மன்னனுக்கு அமைச்சனுக அமைந்திருந்தான். சாணக்கியனுடைய சூழ்ச்சியினுல் பிந்துசாரனுடைய அதிகாரம் வலுப்பெற்று விளங்கியது.

**பிப்பபாச்சையார்** - இவர் ஒரு வீரசைவ அடியார். இவர் சிவனடியார்கள் உண்ட மீதியை ஒரு வண்டியிற் போட்டுக் காளைக் கொடியை நாட்டி அந்தணர் தெருவழியே ஓட்டிக்கொண்டு சென்றுர். தெருவில் இருந்த அந்தணர்கள் சினங்கொண்டு பலவாறு இகழ்ந்தனர். இவர் வண்டியிலிருந்தமிச்சிலுணவிற் சிறிதையெடுத்து அந்தணருடைய வீடுகளின் மேலெறிந்தார். அதனுல் வீடுகள் தீப்பற்றியெரிந்தன. பிறகு அந்தணர்கள் கூடி இவரை வேண்டிக்கொள்ளத் தீயைத்தம்மிடம் வருவித்துக் கொண்டார்.

**பிப்பிலாரணியம்** - அரசங்காடு; இந்நாளில் பேரூர் என வழங்கப்பெறும் மூதூர். அந்நாளில் அரசமரங்கள் நெருங்கிய பெருங்காடாக விளங்கியிருந்த

மையின் வடமொழியாளரால் இப்பெயரால் கூறப்பெற்றது.

**பிம்பிசாரர்** - புத்தர்காலத்தில் மகத நாட்டை ஆண்ட அரசர். இவர் காலத்தில் மகதநாடு உழவுத் தொழிலிலும் வாணிகத்திலும் சிறந்துவிளங்கியது. நாட்டுக்கு நான்கு பக்கங்களினும் மலைகளும் ஆறுகளும் இயற்கை யரண்களாகத் திகழ்ந்தன. தலைநகராகிய கிரிவிரசத்தை ஐந்து குன்றுகள் சூழ்ந்திருந்தன. நகரத்தைச் சுற்றிலும் கற்சுவர்கட்டப்பெற்றிருந்தது. பிம்பிசாரரிடம் வலிமை பொருந்திய யானைப்படை இருந்தது. பக்கத்தில் இருந்த அங்க நாட்டை இம்மன்னர் வென்றார். வைசாலி நாடுகளோடு திருமணத் தொடர்பு கொண்டார். கோசலத்தேவியினால் காசி என்னும் ஊர் கிடைத்தது. வைசாலித் திருமணத்தால் மகதநாடுநேப்பாள எல்லைவரையில் பரவியது. இவருடைய ஆட்சிக் காலத்தில் வர்த்தமான மகாவீரரும் கௌதமபுத்தரும் முறையே சமண பௌத்தக் கொள்கைகளைப் போதித்துவந்தனர். இவர் ஐம்பத்திரண்டு ஆண்டுகள் ஆண்ட பிறகு தம்முடையமகன் அசாதசத்துருவினாற்கொலையுண்டார்.

**பிரகத்தன்** - இவன் ஆரிய நாட்டு வேந்தன். சிந்துலம் என்னும் நகரில் இருந்து அரசுபுரிந்திருந்தவன். கலைகள் பலவற்றையும் இவன் நன்கு கற்றிருந்தான். அமரகன் என்னும் அறிவாளன் இவனுக்குஅமைச்சனாக அமைந்திருந்தான். பிரகத்தனிடம் நல்லியல்புகள் பல அமைந்திருந்ததோடு எவரையும் மதியாமையாகிய புல்லியதன்மையும் பொருந்தியிருந்தது. தன் நாட்டினும் தன்மொழியினும் தன்னரசினும் சிறந்தன வேறு இல்லையென்று எண்ணி இவன் இறுமாந்திருந்தான். இவன் காலத்தில் மதுரையில் இருந்து அரசுபுரிந்திருந்த திண்டோட் செழியன் என்னும் பாண்டிய மன்னன் இவனுடைய நிலையை அறிந்து கடுத்திருந்தான். இந்நிலையில்பிரகத்தன் திண்டோட் செழியனைத் தன் அவையில் பலர்முன் இகழ்ந்து பேசினான். இச்செய்தியை அறிந்த பாண்டியன் பெரும்படையோடு வந்து போர் செய்து இவனுடைய செருக்கையடக்கினான். கைப்பிடியாக மதுரைக்குப்பிடித்துக் கொண்டு சென்றான். இவனுடைய புலமைத் திறத்தை யுணர்ந்து பாராட்டினான். பிரகத்தன் பாண்டியனுடைய பண்பு நலங்களையும் தான் இகழ்ந்து நின்றமையால் நேரிட்ட இழிவுகளையும் எண்ணி உளம் வருந்தினான். ஆரியத்தை விடச்சிறந்தமொழி வேறில்லையென்று செருக்கியிருந்த இவனுக்குத் தமிழின் பெருமையை அறிவுறுத்தும்படி கபிலரைத் தூண்டினான். அவரும் அவ்வாறே தமிழின் சிறப்புக்களை இவனுக்குப்புலப்படுத்தினார். குறிஞ்சிப்பாட்டு என்னுஞ் செய்யுள் இவன் பொருட்டே கபிலரால் இயற்றப்பெற்றது. பிறகு இவன் பாண்டியனிடமிருந்து விடுபட்டுத்தன்னாடடைந்து அமைதியுடன் வாழ்ந்தான்.

**பிரகஸ்பதி** - இவன் நான்முகனுடைய மானச புத்திரருள் அங்கிரசன் என்பவனுடைய மகனாகிய வியாழனாவான். தேவர்கட்குக்குருவாகிய இவன் மிகுந்த பேரறிவாளன். இவனுடைய பெயர் வாசஸ்பதி எனவும்வழங்கும். இவனுடைய மனைவியின் பெயர் தாரை.

இவன் உடன்பிறந்தாள் யோக சித்தி. இவன் மனைவியாகிய தாரையைச் சந்திரன் கவர்ந்தான். அதனால்பிரகஸ்பதிக்கும் சந்திரனுக்கும் பெரும் போர் மூண்டது. நான்முகன் சந்திரனிடஞ் சென்று தாரையை விட்டு விடுமாறு செய்தான். தாரை மீண்டும் பிரகஸ்பதிக்கு மனைவியானாள். தாரை சந்திரனிடமிருந்த பொழுது பிறந்த மகன் தான் புதன். அவனே சந்திரவமிசத்திற்கு முதல்வனாவான்.

**பிரகலாதன்** - இவன் இரணியகசிபுவினுடைய மகன். தயனுடைய ஆசிரியன் கற்பித்தவாறுதந்தையினுடையபெயரை ஓதாமல் திருமாலின் பெயரைச் சொன்னான். ஆசிரியன் தந்தையாகிய இரணியகசிபுவிடம் இச் செய்தியைக் கூறினான். இதனைக் கேட்டதும் சினங்கொண்டு பிரகலாதனைக் கொன்று விடுமாறு கட்டளையிட்டான். பலவாறு கொல்ல முயன்றும் பிரகலாதனைக் கொல்ல முடியவில்லை. பிரகலாதன் திருமாலுடைய திருப்பெயரைக் கூறியவாறே அத் தொல்லைகட்கெல்லாம் பிழைத்தான். அசுரன் சினங்கொண்டு, "நீ கூறும் திருமால் யாண்டுளான்?" என்று உசாவினான். பிரகலாதன், "அத் திருமால் யாண்டுமுளான். அவன் தூணிலும் உள்ளான் துரும்பிலும் உள்ளான் அவன் இல்லாத இடமே இல்லை" என்று மறுமொழி கூறினான். இதனைக் கேட்டஅசுரன் சினங்கொண்டு தன்னெதிரே உள்ள தூணைச் சுட்டிக்காட்டி, "இத்தூணிலும் உள்ளான்?" என்று கேட்டான். பிரகலாதன் 'உள்ளான்' என்று மறுமொழி கூறினான். இதனைக்கேட்ட அசுரன் சினங்கொண்டு தன்பலம் கொண்ட மட்டும் காலையோங்கி அத் தூணை உதைத்தான். அவ்வளவில் திருமால் வெளிவந்து நரசிங்க (மனிதமடங்கல்) வடிவங்கொண்டு இரணியகசிபைக் கொன்றார். பிரகலாதன் தாய் வயிற்றில் இருக்கும் போதே நாரதமுனிவரால் அருளுரை வழங்கப்பட்டான்.

**பிரசாபதி** - இவர்ஒரு ரிஷி. இவர் கௌதமரைப்பார்த்து, "நீ ஒரு காம வேட்கையன்" என்று சொல்லி இகழ்ந்தார். இதனாற் சினங்கொண்ட கௌதமர் இவரைப்பார்த்து, "நீ புருவாகி மனிதவூன் உண்ணக்கடவாய்" என்று வசவுரை வழங்கினார். அவ்வசவுரையின் படி இவர் புருவாகி மனிதவூன் புசித்துத் திரிந்து கொண்டிருந்தார். ஒரு நாள் சோழவரசன் ஒருவனைக் கண்டு மனிதவூன் கேட்க அவன் உடல் முழுவதையும் அரிந்து கொடுத்து உயிர்விட்டான். இதனைக்கண்ட புருவாகிய இருடி சீகாழியிற் சிவபூசைசெய்து அரசன் உயிரையீந்து தம்முடைய வசவுரையைப்போக்கிக் கொண்டார். இதனால் சீகாழிக்குப் புறவம் என்று ஒரு பெயர் உண்டாகியது.

**பிரச்சிரவணமலை** - இராமர் இலங்கைக்குச் சென்ற காலத்தில் மழைக்காலம் முடியும் வரையில் தங்கியிருந்த மலை.

**பிரச்சோதனன்** - இவன் அரசர்க்கரசர்களில் ஒருவன். வாசவதத்தைக்குத் தந்தை. இவனுடைய நாடு அவந்தி. நாட்டின்தலைநகர்உச்சைனி. வேற்று நாட்டரசர்கள் பலர் ஆண்டுதோறும் திறை கொடுக்கப் பெற்றவன். உதயணன் அவ்வாறு திறை கொடாமையினாலே அவனைப் பிடித்துச் சிறையிலடைக்கச் செய்தவன்.

இவன் தன்னுடைய வழிபடு தெய்வத்தை யன்றிப் பிறரை வணங்கான். இவனுக்குப் பாலகன், பாலகுமரன், கோபாலகன் என்னும் பெயர்களுடைய மக்கள் பலர் இருந்தனர். இவனுக்கு மனைவியர் பதினாயிரம். அமைச்சர்கள் பதினாயிரம் என்பர். இவன் மிகுந்த சிறப்புடையவன்.

**பிரதத்தன்** - ஏறக்குறைய நாலாயிரம் ஆண்டுகட்கு முன்னர்க் காசியில் இருந்து அரசாட்சி செய்திருந்த ஓர் அரசன். அறிவிலும் ஆண்மையிலும்அரசதிருவிலும் சிறந்து விளங்கியவன். இவன் சிவப்பதிப் பயணமாகத் தென்னாட்டுக்கு வந்த போது திருவருணையில் சில நாட்கள் தங்கியிருந்தான். ஒரு நாள் அண்ணாமலையார் திருக்கோயிலுக்குச் சென்ற பொழுது அங்குப்பணிபுரிந்திருந்த கனகம் என்னுந் தேவ தாசியைக் கண்டு விரும்பினான். அவளைத் தன்னோடு தன் நாட்டிற்குக் கொண்டு செல்ல வேண்டுமென்று எண்ணினான். அவ்வளவில் இவனுக்குக் குரங்கு முகம் உண்டாகியது. அதனால் திகைப் படைந்த இவன் தன்னுடைய பிழை பொறுத்தருளுமாறு பரமனை வேண்டிப் பல பொருட்களைச் செலுத்தினான். பிறகு இவனுக்கு அக்குரங்கு முகம் மாறிப் பழையமுகம் உண்டாகியது.

**பிரதாபருத்திரீயம்** - வடமொழியிலுள்ள ஓர் அணிநூல். இதில் காவிய லட்சணங்களும் நாடக லட்சணங்களும் குறைவில்லாமற் கூறப்பட்டுள்ளன. இதனை இயற்றியவர் வித்தியாநாதகவி. இவர் அணி இலக்கணங்களைச் செய்ததன்றித் தெலுங்கு நாட்டரசனும் வீரருத்திரனென்று பெயர் பெற்றவனுமாகிய பிரதாபருத்திரன் என்பவனுடைய புகழையே பொருளாகக் கொண்ட உதாரண சுலோகங்களையும் தாமேஇயற்றி இதனிற் சேர்த்திருக்கின்றார். இந்நூலுக்கு மல்லிநாத சூரியின் பிள்ளையாகிய குமாரசாமி சூரி என்பவர் உரை யெழுதியிருக்கிறார்.

**பிரதீபன்** - திங்களின் வழிமுறையில் தோன்றிய பீமனுடைய மகன். இவனுடைய தேவியின் பெயர் சுநந்தை. தேவாபீ, சந்தனு, பாக்லீகன் என்போர் இவனுடைய மக்கள். இவனுடைய தொடையிற் கங்கை வந்து உட்கார்ந்து, "உன்னை மணக்க வந்தேன்" என்று கூறினாள். அதற்கு இவன், "தொடையில் உட்காரத்தக்கவர்கள் மகன், மகள், மருமகள் முதலியோராவர். நான் ஒரே மனைவியோடு வாழவேண்டுமென்னுங் கொள்கையுடையவன்; ஆகையால் நீஎன்னுடைய மகனை மணந்து கொள்வாயாக" என்று கூறி மறுத்துவிட்டான்.

**பிரதை** - இவள் சூரன் என்பவனுக்கு மகள். குந்திபோசன் என்னும் உறவினன் பிரதையைப் பெற்றுத் தன்னுடைய வளர்ப்புப் பெண்ணாக வளர்த்தான். குந்திபோசனால் வளர்க்கப்பட்ட படியினால் இவளுக்குக் குந்தி என்று காரணப் பெயர் உண்டாகிக் காரணப் பெயரே நிலை பெற்று நின்றது.

**பிரபாசன்** - இவன் தெய்வ கணத்துள் ஒருவகைப் பிரிவைச் சேர்ந்த அட்டவசுக்களில் ஒருவன். இவனுடைய மனைவியின் பெயர் வசுமதி. இவள் அழகுடையவளாயினும் அறிவில்லாதவள். பிரபாசன் அவளுடைய அழகிலே மயங்கி அவள் கூறியபடி செய்து நின்றான். காமதேனுவின் பெரு

மையை உணர்ந்த அவள் அதனைக் கொண்டுவருமாறு இவனிடங் கூறினாள். இவன் தன்னுடைய நண்பர்கள் எழுவரையுந் துணைசேர்த்துக் கொண்டு வசிட்டருடைய இருப்பிடத்திற்குச் சென்றான். அங்கிருந்த காமதேனுவைக் களவு செய்து கொண்டுசென்றான். செய்தியை உணர்ந்த வசிட்டர் அனைவரையும் மானிடப் பிறப்படையும் படியும் துணைபுரிந்தவர்கள் விரைவில் விண்ணுலகடையுமாறும் காமதேனுக் களவுக்கு முதல் காரணமாகவிருந்த பிரபாசனாகிய இவன் நிலவுலகில் நீண்டகாலம் இருக்குமாறுங் கூறினார். பிரபாசனாகிய இவன் பீஷ்மராகப் பிறந்து மாணியாக உலகிலிருந்து பின் தேவருலகை அடைந்தான்.

**பிரபுடதேவன்** - இவன் விசய நகரத்தரசன். திருக்காளத்தியில் நூறுகால் மண்டபம் முதலிய திருப்பணிகள் செய்வித்தான். கனவின்படி திருவண்ணாமலைக்குச் சென்று அருணகிரிநாதரைக் கண்டு பணிந்தான். அருணகிரிநாதருடைய அருளால் முருகக் கடவுளை வெளிப்படையாகக் கண்டான். அதனால் கண்ணொளி மழுங்கியது. பிறகு அருணகிரி நாதரைப் போற்றிக் கண்ணொளி வழக்கம்போல் உண்டாகப் பெற்றான்.

**பிரபை** - பிரியவிரதன் என்னும் அரசனுடைய இளைய மனைவி. கணவன் தன்மீதுகொண்டிருந்த மோகத்தின் வலியால் மூத்தாளை யுதைத்தவள். பிறகு நோய் கொண்டு அழகெலாம் இழந்து அல்லற் பட்டவள்.

**பிரமசீலன்** - இவன் நல்லொழுக்கமும் இறைவழிபாடும் உள்ள ஓர் அந்தணன். சித்திரகுப்தன் ஒரு சமயம் யமதூதர்களைப் பார்த்துப், பிரமசீலன் என்னும் பெயருடையவனை இங்கு அழைத்து வாருங்கள்' என்று கட்டளையிட்டான். சித்திரகுப்தன் கட்டளையிட்டது தீவினையாளனாகிய வேறொரு பிரமசீலனையாகும். எமதூதர்கள் தவறுதலாக நல்வினையாளனாகிய இவன் சிவ பூசை செய்து கொண்டிருந்த சமயத்தில் வந்து அழைத்துக் கொண்டு போய் நமனிடம் விட்டனர். நமன் நல்வினையாளனாகிய இவனைப் பார்த்து அஞ்சினான். தன்பக்கத்தில் உட்கார வைத்து வாழ்த்துரைகள் கூறினான். எமதூதர்கள் செய்த தவற்றினைக் கூறியதுடன் எமதூதர்களைப் பார்த்துச் சினந்தான். இந்தப் பிரமசீலன் எமனைப் பார்த்து, "நானும் இந்த எமபுரத்தைப் பார்க்க வேண்டும் என்னும் அவா வுடையேன். எனக்கு நிரயங்களைக் காட்டுமாறு கட்டளையிட வேண்டும்" என்று கூறினான். நமனும் அவ்வாறே அழைத்துக் கொண்டு போய்க் காட்டுமாறு கட்டளையிட்டான். நிரயத்தில் துன்புறுவோரைப் பார்த்துப் பிரமசீலன் வருந்தினான். சிவசிவ என்று பெருமுழக்கஞ் செய்தான். நிரயத்தில் வருந்தியவர்களில் ஐந்து பேர்களைத்தவிர மற்றவர்களனைவரும் நற்கதியடைந்தனர். பிரமசீலன் நமனைப் பார்த்து அந்த ஐவரும் செய்த தீவினை யாது?என்றுஉசாவினான்.நமன், "நானும் அறியேன்நாளை நீவிர் சிவபூசை முடித்தவுடன் உடலோடுஇவ்விடம்வரின் தெரிவிக்கிறேன்" என்று கூறினான். பிரமசீலன் அவ்வாறே சென்றான். நமன் பிரமசீலனையழைத்துக் கொண்டு நான்முகனிடம் போய்க் கேட்டான். அவன் தானும் அறியேன் என்றான். பிறகு மூவருங் கைலையடைந்து

நந்திதேவரிடம் உசாவினர். நந்திதேவர் அவர்கள் ஐவரும் சிவநிந்தை, அடியவர் நிந்தை, சிவப்பொருள் கவர்தல் முதலிய தீமைகளைச் செய்தவர்கள் என்று தெரிவித்தார். அதற்குக் கழுவாயுங் கூறினர். உடனே பிரமசிலன்புனிதநீர்கொணர்ந்து அவர்கள் மீது தெளித்து அவர்களையும் நிரயத்தில் இருந்து கரை யேற்றினான்.

**பிரமசுந்தரமுனிவர்** - இவர் பல பெரிய முனிவர்கட்குத் தலைவர். அறத்தைக் காப்பதே இவருடைய கொள்கை. இவருடைய மனைவியின் பெயர் பரமசுந்தரி. யூகி இவருடைய மகனே. உதயணனுககு யானையினுடைய சினத்தை யடக்கும் வித்தையையும் இந்திரனால் தாம் பெற்ற கோடவதி யென்னும் யாழையும் இசை நூலையும் மற்றும் பல வித்தைகளையும் கொடுத்தவர். யூகியை உதயணன் பால் அடைக்கலமாக ஒப்புவித்தவர். மகனாகிய யூகியினுடைய சிறப்புக்களுக்கெல்லாம் இவருடைய முயற்சியே காரணம்.

**பிரமசேனன்** - இவன் ஆருணியரசனுடைய பெரும்படைத் தலைவர்களில் ஒருவன். இவனுடைய பெயர் பரமசேனன் எனவும் வழங்கியது.

**பிரமதத்தன்** - இவன் பாஞ்சால நாட்டு மன்னனாகிய விப்பிரன் என்பவனுடைய மகன். ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னிருந்தவன். பல கலைகளையுங் கற்று நுண்ணறிவுடையவனாகத் திகழ்ந்தான். பிறஉயிர்த் தொகைகள் பேசிக்கொள்வதையும் உணர்ந்து கொள்ளும் ஆற்றல் இவனிடம் இருந்தது. இவனுடைய மனைவியின் பெயர் சந்நிதி.

**பிரமதருமன்** - ஒரு பௌத்த முனிவன். அத்திபதியின் மைத்துனன். காயங்கரை என்னும் ஆற்றுக் கரையிலிருந்து தவஞ் செய்தான். முக்கால உணர்ச்சியும்உள்ளவன். பின்னால் நிகழக் கூடியதீமைகளை முன்னாலறிந்து சொல்லக் கூடியவன். இலக்குமிக்கு மறு பிறப்பில் நிகழும் செய்திகளைத் தெரிவித்தவன். புத்த பீடிகையினால் தன்னுடைய பழம் பிறப்பை யுணர்ந்த மணிமேகலை இம் முனிவன் இயம்பியதையும் அப்பீடிகையால் அறிந்து இவனை மிகவும் போற்றிப் பாராட்டினாள்.

**பிரமதேசம்** - பிரம வித்துவான்களுக்கு மன்னர்களால் தானமாகக் கொடுக்கப்பட்ட ஊர்கள் பிரமதேசம் என்று அழைக்கப் பெற்றன. இத்தகைய பிரமதேசங்கள் தமிழ்நாட்டிலே பலவிடங்களில் உள்ளன.

**பிரமபுத்திரா** - ஆசியாவில் உள்ள வற்றாத ஆறுகளில் ஒன்று. திபெத்து, இந்தியா, பாகிஸ்தான் ஆகிய மூன்று நாடுகளில் ஓடுகிறது. இதனுடைய நீளம் 1,800 மைல். கங்கையுடன் கலக்கும் ஆறுகளில் இதுவும் ஒன்று.

**பிரமபுரம்** - நான்முகன் தன்னுடைய மனக் குற்றம் நீங்கிச் சிறப்படையவெண்ணித் திருமால் ஆமையாகி வழிபட்ட கச்சபாலயத்தில் எழுந்தருளிய பரமனைக் கருதித் தவஞ்செய்து பேறு பெற்றதால் உண்டாகிய காரணப் பெயர்.

**பிரமன்** - இத்தேவை நான்முகன் என்பர். உலகம் முழுவதையும் படைப்பதற்குக் காரணமாக அமைந்திருப்பவன் நான்முகனே. சிவன், திருமால் இருவரிடமுங் கற்பங்கள் தோறுந் தோன்றி அவர்க

ளோடு கூடி மூவராக நிற்பன். அமரர் அனைவர்க்கும் இவன் முதல்வன். இவனுடைய சக்தி கலைமகளாகும். விரிஞ்சன், பிதாமகன், பிதாவரன், அயன், மலரோன், வேதா, போதன் முதலிய வேறு பெயர்களும் நான்முகனுக்கு உண்டு. நான்முகனுடைய உடல் பொன்னிறமானது. இவன் எழுந்தருளியிருக்கும் உலகம் சத்தியஉலகம் என்று பெயர் பெறும். சத்திய உலகம் பதின்மூன்று கோடி யோசனை அளவில் அமைந்துள்ளது என்பர். மறை முதலிய கலைகளெல்லாம் நான்முகனைச் சூழ்ந்து நிற்கும். நான்முகனுக்கு முன்னர் ஐந்து முகங்கள் இருந்தன. சிவனுக்கு ஐந்து முகம் நமக்கும் ஐந்து முகம் ஆதலால் நாமும் சிவனுக்கு நிகரே என்று ஒரு காலத்தில் ஆணவங்கொண்ட படியால் சிவபிரான் நான்முகனுடைய ஒரு தலையைக் கிள்ளி யெறிந்தார் என்பர். பிரமனுக்கு உலகில் தனியாகக் கோவில் இல்லை. சைவ வைணவக் கோவில்களின் வடக்குச் சுவரின் வெளிப்புறப் புரையில் உருவம் வைக்கப் பட்டிருக்கும்.

**பிரமாண்டதானம்** - பொன்னினால் உலகம் ஒன்று செய்வித்து எட்டுத் திக்குயானைகள் செய்து அவ்வுலகத்தைத்தாங்கச்செய்து நான்முகனைப்போல் உருவம் ஒன்று செய்து நடுவில்அமைத்து, அந்தணரைமுறைப்படி பூசித்து அவர்களுக்கு வழங்குவது பிரமாண்டதானமாகும்.

**பிரமிட்கோபுரங்கள்** - கி.மு.4000 ஆண்டுகட்கு முன்னும் பின்னுமிருந்த எகிப்திய அரசர்கள் தங்கட்கெனக்கட்டிய கல்லறைகளே பிரமிட் கோபுரங்கள். அவை ஏறக்குறைய எண்பது ஆகும். அவற்றுள்மிகப் பெரியது 794 சதுரஅடிப்பரப்பும் 480 அடிஉயரமும் உடையது. அதில் உள்ள கற்கள் எழுபது லட்சம்டன் நிறையுள்ளவை. நான்கு அல்லது ஐந்து அடுக்குகளையுடைய 22 ஆயிரம் வீடுகளைக்கொண்டநகரம்ஒன்றைக் கட்டிமுடிக்கப்போதுமானவை என்று அறிஞர்கள் எண்ணுகின்றனர். வியக்கத்தக்கஇந்தப் பிரமிட்கோபுரங்களைக் கட்டிய பேரரசருடைய நாகரிகம் பாராட்டத் தக்கதன்றோ? அங்குக் கிடைத்த மட்பாண்டங்கள் மீது ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. பலநிறங்கள்பூசப்பட்டிருந்தன. பானைகளும் பிறவும் பெரும்பாலும் தட்டையான அடியுடையனவாகவே காணப்பட்டன. பிரமிட்கோபுரங்களிலும் பிறஇடங்களிலும் அக்காலத்தார்பயன்படுத்தியஓவிய எழுத்துக்களும் விலங்குகள் பறவைகள் முதலியவற்றின் உருவங்களும் பொறிக்கப் பட்டிருந்தன. ஆராய்ச்சி யாளர்கள் அவற்றைப் பல ஆண்டுகள் முயன்று படித்துச் செய்தியை உணர்ந்தனர். அதன் பின்னரே எகிப்தின் வரலாறு ஒழுங்காக எழுதப்பட்டது.

**பிரயாகம்நல்லகாமேசுவரம்** - ஏறக்குறையஇருநூறுயாண்டுகட்கு முன்னிருந்த தெலுங்குப்புலவர் இவர். கல்பனு கல்பமஞ்சரி, கோபிகாவஸ்த்ராபரணம், சுதந்தா கலியாணம் முதலிய தெலுங்கு நூல்களை இயற்றியுள்ளார்.

**பிரலம்பன்** - இவன்ஓர்அரக்கன். கண்ணனையும் பலராமனையும் கவர்ந்துகொண்டு போய்க் கொலை செய்யவேண்டுமென்று எண்ணினன். இருவரும் மற்றைக்கோபாலர்களோடு விளையாடிக்கொண்டிருந்த இடத்திற்கு வந்தான். சிறுவர்களாய்

போற்கோலம் பூண்டுவிளையா டினுன் பலராமனைத் தூக்கிக் கொண்டு சென்ருன். அரக்க னுடைய வஞ்சகத்தையுணர்ந்த பலராமன் அவன் தலைமீது ஓங்கிக் குத்தி அவனைக் கொன் ருன்.

**பிரளயசித்து** - காஞ்சி நகர்க்குரிய பதின்மூன்று பெயர்களில் ஒன்று. நான்முகனுடைய உறக்கமாகியநாட்கற்பத்தினும் தினக்கற்பத்தினும், இறந்த லாகிய மகாகற்பத்தினும் பெருகிய பெரும்புறக்கடல் முதலான வெள்ளம் நகரத்தில் எல்லையில் வருவதற்கு அஞ்சிப் புறத்தில் நிற்குமாறுசத்தி காத் திருத்தலால்உண்டாகியபெயர்.

**பிரளயங்காத்தபிள்ளையார்** -சோழ நாட்டில் காவிரிக்கு வடகரை யில் உள்ள திருப்புறம்பயம் கோயிலில்எழுந்தருளியபிள்ளை யாருடைய பெயர். ஊழிக் காலத்துப் பிரளயம் ஒன்றைக் காத்துஊர்ப்புறத்தே நிறுத்திய மையின் பிள்ளையார் இப்பெயர் பெற்ருர்.

**பிராணுயாமம்** - பிராணனை அடக்கியாள்வதே பிராணு யாமம். பிராணன் என்பது சக்தி. அண்டங்களை ஆள்வதும் அதுவே. அஃது உடலிற் காணும் பொழுது பிராணன் எனப்படும். அஃது இருப்பதை அது தூண்டும் சுவாசத்தினுல் அறிகிருேம். பிராணனை நேராக அடக்கியாள முடியாது. அதன் செயலான சுவாசத்தை அடக்கு வதன் மூலமாகவே அதை அடக்கி வசப்படுத்த முடியும். பிராணன் வசப்பட்டால் உயிர் உறுதி, சுகம், உலகம் யாவும் வசமாய் விடும். பிராணுயாமம் மனத்தை அடக்கும்; ஆன்மார்த் தத்துக்கும் பயன்படும். இம் முறை இராசயோகத்தைச் சேர்ந்தது. பிராணன் மனத்தில் இருந்து பிறப்பதால் சுவா சத்தை உண்டாக்கும். பிராண னைப் பிராணுயாம முறையில் அடக்கினுல் அதன்மூலம் மனத் தை அடக்கலாம். அப்படிச் செய்தால் காமக் குரோதம் முதலிய மனமாசுகள் எல்லாம் நீங்கிவிடும். உள்ளத்தூய்மை ஏற்படவே ஆன்மதரிசனம் கை கூடும்.

**பிரான்மலை** - இதனைக் கொடுங் குன்றம் எனவும் வழங்குவர். இவ்வூர் பாண்டி நாட்டில் திருப் பத்தூரில் இருந்து பதினைந்து கல் தொலைவில் உள்ளது. வள் ளல்களிற் சிறந்தவனுன பாரி வாழ்ந்திருந்த ஊர்இதுவே என் பர். தேவாரம் பெற்ற திருவூர் களில் இதுவும் ஒன்று.

**பிரியதர்சன்** - இவன் காமருப நாட்டு மன்னன். பார்த்திவ பூசை செய்பவன். இவனுடன் வீமன் போருக்கு வந்து போரிட்டுச் சிறையிலடைத்து விட்டான். அப்பொழுதும் இவன் சிறையில் பூசையை விடாது செய்தான். சிவபெரு மான் சிவலிங்கத்திடங் காட்சி கொடுத்து வீமனை வெல்லச் செய்தார்.

**பிரியவிரதன்** - சுவாயம்பு மநு வுக்குச் சதருபையிடம் பிறந்த வன். இவனுடைய தமையன் உத்தானபாதன். இவனைப் பற்றிய வரலாறுகள் பலவாறு வழங்கும்.

**பிருகத்ரதன்** - இவன் சராசந்த னுடைய தந்தை. இவனுக்கு நீண்ட நாள் மக்கட் பேறில்லை. மக்கட் பேற்றின் பொருட்டுச் சண்டகௌசிகர் என்னும் முனி வரிடமிருந்துஒருமாங்கனியைப் பெற்ருன். அக்கனியை மனைவி யர் இருவருக்கும் பகிர்ந்து கொடுத்தான். இருவரும் ஆளுக் குப்பாதிகுழந்தையாகப்பெற்ற னர். அரசன் இது நிமைக்கு

அறிகுறி என்று அப்பிண்டங்களை நகர்ப்புறத்தே எறியச் செய்தான். சரை என்னும் இயக்கி யெடுத்துப் பொருத்திச் சராசந்தனுக்கி அரசனிடங் கொடுத்துச் சென்றாள்.

**பிருகந்நளை** - அருச்சுனன் விராட நகரத்தில் கரந்துறைந்த போது மேற்கொண்டிருந்த பெயர்; இந்திரனுலகுக்குச் சென்றிருந்தபோது ஏற்பட்ட சாபத்தினால் நினைக்கும்போது பேடியுருவங் கொள்ளுந் தன்மையைப் பெற்றிருந்தானாகலின் இப்பொழுது பேடி வடிவங் கொண்டு இப்பெயரையும் மேற் கொண்டிருந்தான்.

**பிருகுமுனிவர்** - இவர் நான்முகனுடைய மானத புத்திரரில் ஒருவர். இவருக்கு மனைவியர் இருவர். ஒருத்தி புலோமசை; மற்றவள் கியாதி. இவருடைய மகன் கவி; பெயரன் சுக்கிரன். இவருடைய மனைவி அசுரர்கட்கு அடைக்கலங் கொடுத்த படியினால் திருமால் அவளைக் கொன்றார். இதனால் பிருகு முனிவர் திருமால் மீது சினங் கொண்டு பத்துப்பிறவி யெடுக்குமாறும் மனைவியைப் பிரிந்து அலையுமாறுஞ் சாபங் கொடுத்தார். மேலும் இவரைக் குறித்துப் புராணங்களில் பல கதைகள் வழங்கும்.

**பிருங்கிமுனிவர்** - சிவவழிபாட்டிற் சிறந்த இவர் கோயிலுக்குச் சென்று, சத்தியை விட்டுச் சிவத்தை மட்டும் வழிபடுவது வழக்கம். சத்தியாகிய உமையம்மையார் இவர் தம்மையும் வழிபடச் செய்ய வேண்டுமென்று கருதி மக்களுடம்பில் தம் கூறாக இருக்கும் ஊனையும் குருதி முதலியவற்றையும் பிருங்கிமுனிவரின் உடம்பிலிருந்து நீக்கிவிட்டார். அதனால் நடக்க வலிமை குறைந்த இவர் ஊன்றுகோலும் நடக்கும் ஆற்றலும் சிவனருளாற் பெற்றுச் சிவத்தை மட்டும் வணங்கி வழிபட்டார். இவருறுதியைக் கண்ட உமாதேவி தவம்புரிந்து, சிவபிரானுடம்பின் ஒரு பாதி உருவமாக இருக்கும் வரம் பெற்றார்.

இவர் ஊனிலா உடம்பினர். தலைமுடி வெண்மையாக இருக்கும். தண்டம், சபமாலை, முக்கண்கள் உடையவர். நடனம் செய்பவர். சிவகணத் தலைவர்களுளொருவர்.

**பிருதிவிராசன்** - சௌகாண வமிசத்தைச் சேர்ந்த இவன் அஜ்மீருக்கு அருகிலுள்ள சாகம்பரி முதலிய நாடுகளை 12ஆம் நூற்றாண்டின் முதற்பகுதியில் ஆண்டான். பர்மால் என்ற சந்தேல வமிசத்து அரசனுடன் போர் புரிந்து வெற்றியடைந்தான். சந்தேலரின் தலைநகரமான மசோபாவையும் கவர்ந்தான்; கூர்ச்சரசாளுக்கிய மன்னர்களையும் போரில் வென்றான். இவனுடைய பகைவனான டெல்லி அரசன் ஜயச்சந்திரனுடைய மகள் சம்யுக்தையை அவள் சுயம்வரத்தன்று தூக்கிச் சென்ற வரலாறு இந்திமொழியில் சுவையான இதிகாசமாக யாக்கப் பட்டிருக்கின்றது. 1191 இல் தலவாரியில் நடந்த கொடிய போரில் வெற்றிபெற்றான். ஆனால் மறு ஆண்டில் அதே இடத்தில் முகம்மதுடன் பொருது தோல்வி எய்தி, வீர சுவர்க்கம் எய்தினான்.

**பிருது** - இவன் கதிரவன் குலத்தில் தோன்றிய வேனன் என்னும் அரசனுடைய மகன். இவன் பலகலைகளையும் நன்கு பயின்று கூரிய மதியினனாகச் சிறந்து விளங்கினான். நேரிய ஆட்சிபுரிந்த இவனுடைய நாட்டில் எல்லா வளங்களும் சிறந்தோங்கியிருந்தன.

**பிருந்தை** - இவள் சலந்தராசுரனுடைய மனைவி. திருமால் இவள் மீது மோகங் கொண்டார். சலந்தராசுரன் சிவபிரானுடைய ஆழிப் படையால் அழிந்தொழிந்த சமயத்தில் திருமால் சலந்தராசுரனுடைய வடிவங் கொண்டு இவளிடம் வந்து மகிழ்ந்திருந்தனர். உண்மையை உணர்ந்த பிருந்தை தீப்பாய்ந்து இறந்தாள். மால் மால்தணியப் பெருதவராய்ப் பிருந்தையின்சாம்பரில்விழுந்து புரண்டார். துளசிச் செடி பிருந்தையின் சாம்பரில்இருந்து முளைத்ததென்பர்.

**பிரேமாபாய்** - இவள் காசியில் வசித்திருந்தாள். திருமால்பக்தியிற் சிறந்து விளங்கினாள். பாகவதர்களிடத்திலும் பாகவதத்தினிடத்திலும் மிகுந்த அன்பு கொண்டிருந்தாள். பாகவதத்தை நாள்தோறுங் கேட்கும் வழக்கமுடையஇவள் ஒருநாள் பாகவதர்கட்கு உணவளிக்க விரும்பினாள். அன்று பாகவதங் கேட்பதற்குத் தான் போகாமல்தன்னுடையமகனைப் போய்க் கேட்டு வருமாறும் கேட்டதைத் தனக்குக் கூறுமாறும் சொன்னாள். மகனும் அவ்வாறே போய்ப் பாகவதங் கேட்டுவந்தான். தான்கேட்டு வந்தபாகவதக் கதையைத் தன்னுடையதாய்க்குக்கூறலானான். கண்ணன் வெண்ணெயைத் தின்றுவிட்டுத் தாழியையும் உடைத்தான். பிறகு தெருவில் ஓடினான். தாய் அவனைப் பிடித்துக்கொண்டு வந்து உரலோடு கட்டிவைத்தாள். கண்ணன் "இனிமேல் இவ்வாறெல்லாம் செய்யமாட்டேன். கட்டவிழ்த்துவிடு" என்று கெஞ்சினான். "கோபிகைகள் கண்ணன் கட்டுண்டு நிற்பதைக் கண்டு நகைத்துக்கொண்டு சென்றார்கள்" என்று சொல்லிவரும் போது சிறுவனுடைய தாய், "அந்தோ! என்னுடைய கண்ணனின் கட்டையாரவிழ்ப்பார்கள். இதோ நான் வந்து கட்டவிழ்க்கிறேன்" என்று கதறினாள். அப்படியே கீழேவிழுந்தாள். அவளுடைய உயிர் உடலைவிட்டு நீங்கிப் பரமபதத்தை யடைந்தது.

**பில்கணகவி** - இவர் இன் கவிதைகளைக் காதல் துறையில் பாடியவர். அரசகுமாரிக்கு இவர்கல்வி கற்பிக்க ஏற்பாடாகி இருந்தது. அழகிய அரசகுமாரிக்கும் குருவுக்கும் காதல் ஏற்பட்டு விடக்கூடாதென்று கருதி, ஒருவரையொருவர் பார்க்க முடியாத வகையில் நடுவே திரையிட்டும், ஒருவரைப் பற்றி ஒருவரிடம் விகாரமாயிருப்பவர் என்றும் சொல்லி வைத்திருந்தும், ஒருவரை யொருவர் அறிந்து காதல் கொண்டனர். அரசன் கவியைக் கழு வேற்றக் கட்டளை யிட்டான். கவிஞர் தம் கடைசி நேரத்தில் தம் மனக்கண்முன் நிற்கும் காதலியைப் பற்றியும், தமக்கும் அவளுக்குமுள்ள உறவையும், நடந்திருந்த சில நிகழ்ச்சிகளையும் ஐம்பது பாக்களில் பாடினார். சௌர பஞ்சாசிகை கள்ளக் காதல் ஐம்பது என்ற இப்பாக்களைக் கேட்டு மனமுருகிய அரசன் கவிஞரை விடுவித்தான். பில்ஹணஸ்தவம் என்று இவர் செய்ததாய் அழகிய சிவத்தோத்திர நூல் ஒன்று உளது. நாடகத் துறையில் கர்ண சுந்தரி என்ற நூலை எழுதி இருக்கின்றார். யாமினி பூர்ணதிலகை என்னும் அவ்விளவரசிக்கும் இக்கவிக்கும் பிறகு திருமணம் நடந்தது.

**பிள்ளை, எஸ். எம்** - இவருடைய முழுப் பெயர் சங்கர முனிசாமி பிள்ளை. இலங்கையிற் பிறந்த

இவர், தென் ஆப்பிரிக்காவில் தமிழ்ப் பத்திரிகையாளராகவும், நூலாசிரியராகவும் விளங்கினார். தமிழ்மணி என்ற பத்திரிகைக்கு இவர் ஆசிரியராக இருந்தார். செந்தமிழ்ச் செல்வி, பிரசமலர் ஆகிய பத்திரிகைகளின் கல்விப்பகுதிக்கும் இவர் ஆசிரியராவார். இந்துத் தமிழ் நிலையத்திற்கு இவர் முதல்வராக இருந்து பணியாற்றினார். சரஸ்வதி, பாலர் பாடல் முதலிய நூல்களும், வில்விதுரன் சொல், நண்பரும் பகைவரும், திருநாவுக்கரசர் முதலான நாடகங்களும் எழுதி யுள்ளார். ஷேக்ஸ்பியர் இயற்றிய லியர் மன்னன், மாக்பெத், ஜூலியஸ் சீசர் முதலிய நாடகங்களை மேடைக்கேற்றபடி தமிழாக்கி யுள்ளார். தென்னாப்பிரிக்காவில் 10 - 11 - 1956 இல் காலமானார்.

**பிள்ளைப் பிள்ளையாழ்வான்** - கூரத்தாழ்வானுடைய மாணவர் எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். இவருடைய பெயர் பிள்ளைப் பிள்ளை யெனவும் வழங்கும். கூரத்தாழ்வார் திருநாட்டிற் கெழுந்தருளிய போது இவருடைய மடியிலே திருமுடியை வைத்துக்கொண்டு திருநாட்டிற்கு எழுந்தருளினார் என்பர்.

**பிள்ளையார்பட்டி** - பாண்டி வளநாட்டில் குன்றக்குடிக்கு அண்மையில் உள்ள ஊர். பல்லவ மன்னன் இங்கிருந்த குன்றில் பெரிய பிள்ளையார் வடிவம் ஒன்றை அமைக்கச் செய்தான். அவ்வாறு பிள்ளையார் உருவம் அமைக்கப்பட்ட பிறகு ஈக்காட்டூர், மருதங்குடி, திருவீங்கைக்குடி எனப் பலவாறு வழங்கிய பெயர் போய்ப் பிள்ளையார் பட்டி என்னும் பெயர் உண்டாகியது. இவ்வூர் தனவணிகர்களுடைய நகரக் கோயில்களில் ஒன்று.

**பிள்ளையார் பாளையம்** - இதனைப் பிள்ளைப்பாளையம் எனவுங் கூறுவர். இது காஞ்சிபுரத்தின் ஒரு பகுதி. இங்கு வந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் இங்கு தங்கியிருந்தாரென்பர். அதனால் இவ்வாறு பெயருண்டாயிற்றாம்.

**பிள்ளையுறங்காவில்லிதாசர்** - இராமாநுசருடைய மாணவர். சோழமன்னனுடைய அவைக்களத்தில் அமர்ந்திருந்த வில்லிகள் மூவரில் ஒருவர். அரசனிடத்திலிருந்து தமக்குக் கிடைக்கும் பொருள் எல்லாவற்றையும் இராமாநுசருடைய திருவடிகளிலே ஒப்படைத்தவர். முதலில் உலகமயலில் புரண்டிருந்த இவர் பிறகு துறவுநெறியை மேற் கொண்டார்.

**பிறவாப்புளி** - திருப்பேரூரில் தலமரமாக உள்ளது. இது காலங்கடந்ததாகவும் புதுமை மிகுந்ததாகவும் விளங்குகின்றது. இம்மரம் பிற மரங்களைப் போல் பூத்துக்காய்க்குந் தன்மையுடையதாயினும் இதனுடைய விதை முளைப்பதில்லை. இதனை ஆராய்ந்து பார்த்து உண்மையறிந்துள்ளனர். மலட்டுத் தன்மையுடைய பெண்கள் இம் மரத்தடியிற் சென்று தங்கினால் மலட்டுத் தன்மை நீங்கிக் கருப்பம் உண்டாகின்றதாம். பிறக்கும் பிள்ளை நீடியவாணாளுடையதாகத் திகழ்கிறதாம்.

**பிநாகபாணி** - பிநாகம் என்னும் வில்லையேந்தியபடியால் சிவபெருமானுக்கு உண்டாகிய காரணப் பெயர்.

**பிநாகினி** - இது சிவபிரானுடைய பிநாகத்தின் வழிவந்தபடியால் பிநாகினி யென்று பெயர் பெற்

றது. பாலாறு செய்யாறு இரண்டிற்கும் நடுவேயிருத்தலால் இதனை வெண்ணெய் நதியென்பர். இவ்வாறு தெய்வீகராசன் திருமண காலத்தில் ஔவையாருடைய பாடலால் வெண்ணெயாக ஓடியதென்பர்.

**பின்சென்றவல்லி** - கரம்பனூர் அம்மையெனக் கூறப்பெறும் இவள் திருவரங்கப் பெருமானை முகமதியர்கள்கொண்டுபோகையில் பெருமாளுடன் சென்று பெருமாளின் நிலைமையை அறிந்து வைணவர்களுக்குச் செய்தி கூறினாள்.

**பீமசங்கரர்** - இது சோதிலிங்கங்களில் ஒன்று. பம்பாய்க்குக் கிழக்கே எண்பதுமைல் தொலைவில்பீமா நதிக்கரையில் இருக்கிறது. பீமாநதி என்னும் ஆறு இந்த இலிங்கத்திலேயே பிறக்கிறது. இலிங்கத்தின் அடியில் இருந்து சிறிதுசிறிதாகத் தண்ணீர் மேலே பொங்கி வருகிறது. முப்புரங்களை எரித்தொழித்த பிறகு சிவபிரான் இங்கே ஓய்வாக அமர்ந்திருந்தார். அந்தநாட்டு மன்னனாகிய பீமன் என்பவன் சங்கரரைக் குறித்துத் தவஞ் செய்துகொண்டிருந்தான். சிவபெருமான் இந்த இலிங்கமாகக் காட்சி கொடுத்தருளினார். அதுமுதல் இந்த லிங்கத்துக்குப் பீமசங்கரர் என்று பெயர் உண்டாகியது.

**பீமன்-(1)** கும்பகர்ணனுக்குக் கற்கடி என்னும் தைத்தியப் பெண்ணிடம் பிறந்தவன். தன்னுடைய தாயினால் தந்தை யிறந்தமையை அறிந்து தந்தையைக் கொன்ற இராமனோடு போரிட எண்ணினான். நான்முகனை நோக்கித் தவம் புரிந்து பல வரங்களைப் பெற்றான். பிரிய தர்மன் என்னும் பெயருடைய அரசனைப் பிடித்துச் சிறையிலிட்டான். அரசன் சிறையில் சிவபூசை செய்தான். வேவுகாரர்கள் பீமனிடம் போய் அரசன் உன்னைக் கொல்வதற்கு ஏதோ செய்கின்றான் என்று கூறினார்கள். உடனே இவன் அரசனிடம் ஆயுதபாணியாகச் சென்று "நீ என்ன செய்கிறாய்?" என்று கேட்டான். அரசன், "நான் சிவபூசை செய்கிறேன்" என்று மறுமொழி கூறினான். அப்பொழுது கோர வடிவங் கொண்டு வந்த சிவபிரான் இவனைக் கொன்றார்.

**பீமன்** - (2) பாண்டவர்களில் ஒருவனாகிய வீமனும் பீமன் என்று வழங்கப் பெறுவான்.

**பீலிவளை**-நாகநாட்டு மன்னனாகிய வளைவணன் என்பவனுக்கும் வாசமயிலை என்பவளுக்கும் மகளாகத் தோன்றியவள். இவள் சோழமன்னன் கிள்ளிவளவனைக் காந்தருவமணஞ் செய்து ஒரு மைந்தனைப் பெற்றாள். தொண்டைமான் என்பவனே அப்புதல்வன்.

**புகழனார்** - திருநாவுக்கரசருடைய தந்தையார் பெயர். புகழனாருடைய மனைவியாரின் பெயர் மாதினியார்.

**புகார்** - காவிரிப்பூம்பட்டினம் முன்னாளில் பெரிய வாணிகத் துறைமுகமாக விளங்கியது. அந்நகரில் எல்லாவகையான பொருள்களும் கிடைத்தன. அந்நகரில் இல்லாத எப்பொருளும் இல்லை. அந்நகரத்தில் உள்ளவர்கள் ஒரு பொருளை வாங்குவதற்கு வேறோரிடத்திற்குப் புகார். ஆகவே அந்நகரத்திற்குப் புகார் என்றொரு பெயருண்டாயிற்று. புகார் - புகுதலைச் செய்யார்.

**புக்கொளியூர்** - கொங்கு நாட்டில் தேவாரம் பெற்ற திருப்பதியாகிய அவிநாசிக்கு இஃதொரு பெயர். இவ்வூரில்தான் முதலை

யுண்ட பிள்ளையழைக்கப் பெற்றது.

**புசபலவீரன் ஆகோமல்லராசன்** - இவன் கங்க நாட்டிலிருந்த ஒரு சிற்றரசன். சோழமாராசன் என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றவன். மகாமண்டலாதிபதி என்று அக்காலத்தில் புகழடைந்து விளங்கியவன். இவன் காஞ்சிமா நகரில் ஒரு நந்தவனத்திற்கு நிலம் வாங்கும் பொருட்டுப் பொருள் வழங்கியுள்ளான் என்பது காஞ்சிக் கல்வெட்டு ஒன்றினால் அறியப்படுகிறது.

**புசபலன்**-இவன் வங்க நாட்டுக்கு அரசனாக இருந்தான். அப்பொழுது பலருக்குத் தானமளித்தான். இவனிடம் தானம் வாங்கவந்த ஓர் அந்தணன் இவன் திருநீறணியாத வனாகவிருத்தலைக் கண்டு திருநீறணிந்து கொண்டு தானந்தரச் சொன்னான். புசபலன் அவ்வாறு செய்ய முடியாதென்று மறுத்து விட்டான். அதனால் சுசீலன் தானம் வாங்காமலே போய் விட்டான். இதனால் அரசனுக்குத் தீவினையுண்டாகி நாடு நகரங்களை யெல்லாம் இழந்து காடு சேர்ந்தான். மனைவியை வேடர்களிடமிழந்தான். கள்ளனெனக் கையறுப்புண்டு விதர்ப்ப நாட்டின் தெருக்களிற் சென்றான். முன் திருநீறு பூசுமாறு கூறிய சுசீலன் இவனைக் கண்டான். திருநீறு பூச மறுத்த அரசன் என்று அறிந்து கொண்டான். பிறகு திருநீறு பூசச்செய்து இழந்த செல்வங்களையும் அடையச் செய்தான்.

**புட்கரன்** - நிடத நாட்டின் வடமேற்கெல்லையில் இருந்த ஒரு குறுநில மன்னன். இவன் பேராசை, வஞ்சகம் முதலிய தீக்குணங்களெல்லாம் அமையப் பெற்றவனாக இருந்தான். கலியினுடைய உதவியால் நளனுடன் சூதாடி நாடுநகரங்கள் முழுவதையுங் கவர்ந்து கொண்டான். சூதாடியே தன்னுடைய வாணாளைப் போக்கினான். கலிநீங்குஞ் சமயத்தில் மீளவும் நளனோடு சூதாடித் தான் வென்று பெற்றிருந்த நாடு நகரங்களையெல்லாம் இழந்து முன் வந்தவாறு நாட்டை விட்டுச் சென்றான்.

**புட்பகம்** - (1) இஃது உதயணனுக்குரிய பெரிய நகரங்களில் ஒன்று. படைகளுடனிருந்து இதனைப் பாதுகாத்தவன் இடவகன். வேடர்கள் உதயணனைச் சூழ்ந்து கொண்ட செய்தியை வயந்தகனால் அறிந்த இடவகன் இந்நகரிலிருந்து சென்று தான் உதயணனைப் பாதுகாத்தான்.

**புட்பகம்**-(2) குபேரனிடத்திருந்து இராவணனால் கவரப்பட்டுப் பின் இராமபிரானிடம் சென்றொட்டங்கி விண்ணிற் சென்று தன் வரலாறு கூறிச்சென்ற விமானம். இஃது இராமன் இராவணனை வென்று அயோத்தி மீளுங்கால் 70 வெள்ளம் வானரப் படையும் அரக்கர் படைத் திரளும் இராம லக்குமணரும் சீதையும் வானர மங்கையர்களும் ஏறியமர்ந்தும் வெற்றிடம் மிகுதியாயிருந்ததென்று இராமாயண வரலாறு கூறும்.

**புட்பதந்தர்** - சிவகணங்களில் ஒருவர். இவர் தெய்வமில்லையென்று இகழ்ந்த தீவினையினால் தம்மால் வழிபடப்பட்ட ஆன்மார்த்த மூர்த்தி மறைந்து போக அதனால் மிகுந்த துன்பமடைந்தார் நாத்திகம் பேசிய வாயின் பற்களை (தந்தங்கள்) ஒவ்வொன்றாகப் பிடுங்கி மலராகப் (புட்பங்களாக) இட்டுப் புகழ்ப் பாடல்கள் பாடினார். இதனாற் சிவபிரான் களிப்புற்றுப் புட்

பதந்தர் என்று பெயர் வழங்கியதோடு வேண்டிய வரங்களையுங் கொடுத்தார். இவர் எமபுரத்திற்குச் சென்றார். அங்கு ஒருவன் தீப்பட்டு எரிதலைக் கண்டு உள்ளம் இரங்கினார். அவன் சிவப்பொருளைக் கவர்ந்தான் என்று உணர்ந்தார். திருக்கயிலையை அடைந்து சிவபெருமானைப் போற்றி வழிபட்டார். எமபுரத்தில் வருந்துவோனிடம் அருள் செய்ய வேண்டுமென்று வேண்டினார். சிவபிரான் முனிவரைப் பார்த்து, "அவனுடைய வழிமுறையினர் யாரேனும் புனித நீர்ப்பயணஞ் சென்று புனித நீராடினால் அவனுடைய தீவினை நீங்கும்" என்றார். அதனால் இம்முனிவர் அவனுடைய வழிமுறையிற் பிறந்து புனித நீராடி அவனை நிரயத்திலிருந்து விடுவித்தார்.

**புட்பவாகனன்(1)** வேடனாக இருந்த இவன் ஒரு தடாகத்தில் தாமரை மலர்களைக் கண்டான். மனைவியோடு கூடி அத்தாமரைப் பூக்களைப் பறித்துக் காசியிற் கொண்டு போய் விலை கூறினான். எவரும் அம்மலர்களை வாங்கவில்லை. ஆகவே அங்கிருந்த ஓங்கார லிங்கத்தின் மேல் அவைகளைச் சாத்தினான். அதன் பலனாக மறுபிறப்பில் அரசனாகப் பிறந்து சிவபெருமானை நோக்கித் தவம் செய்தான். சிவபெருமான் ஒரு தாமரை மலரைக் கொடுத்தார். அதிலேறிப் பல விடங்களினுஞ் சுற்றினான். இவனுடைய முன் பிறப்பு மனைவி அரசகுமாரியாகப் பிறந்து இவனுடைய மனைவியானாள்.

**புட்பவாகனன்-(2)** இவன் ஓர் அரசன். இவன் காசியில் தவஞ் செய்து சிவபிரானுடைய திருவருளால் நினைத்த விடஞ் செல்லத்தக்க தாமரை யொன்று பெற்றான். அதனை ஊர்தியாகக் கொண்டு பல விடங்கட்குஞ் சென்றான். நான்முகனைப் புட்கரத்தீவிற் கண்டு அதற்கு அரசனாக வேண்டுமென்றான். நான்முகன் அவ்வாறே வழங்க அரசாண்டான். அப்பொழுது பதினாயிரம் மக்களைப் பெற்றான். பிரதேசஸ் என்னும் முனிவரால் முன் பிறப்பறிந்து மீண்டும் காசிக்குப் போய்த் தவஞ் செய்து வீடுபேற்றை யடைந்தான்.

**புட்பாருணன்**-துருவன் மகனாகிய வச்சரனுக்குச் சர்வர்த்தியிடம் பிறந்த மகன். பிரபை, தோஷை என்பவர்கள் இவனுடைய மனைவியர்.

**புஷ்யமித்திரன்** - மகத நாட்டரசனாகிய பகுத்ரதன் என்பவனுடைய படைத் தலைவன். இவன் அரசனைக் கொன்று தானே அரசனானான். அக்கினிமித்திரன் என்பவன் இவனுடைய மகன்.

**புண்டர நகரம்** - வாசவதத்தையும் சாங்கியத்தாயும் யூகியும் மாறு கோலங் கொண்டு தங்கிய நகரங்களுள் இதுவுமொன்று.

**புண்டரீகமகாமுனி-(1)** இவர் வீடு பேற்றைக்குறித்து நாகபட்டினத்தில் தவஞ் செய்தார். இறைவர் இவரைக் காயத்தோடு தம்மில் ஐக்கியப் படுத்திக் கொண்டார். இதனால் சுவாமிக்குக் காயாரோகணேசுவரர் என்று பெயர் உண்டாயிது.

**புண்டரீகமுனி-(2)** இவர் பௌண்டரம் என்னும் வேள்வியைச் செய்தார். அப்பொழுது அசுரர்கள் வேள்வி அவிவேண்டி முனியை வருத்தினார்கள். முனி மண்டபம் முதலியவைகளை யுண்டாக்கி ஒலிக்கருவிகள் முழங்கச் செய்தும் ஒரு மானினியையும் விதவையையுங் கலந்து பேசும்

படியும் செய்வித்து இருக்கையில் அசுரர்கள் அவ்வொலி முழக்கத்திலும் மாணிவிதவை உரையாடலிலும் மயங்கியிருக்கையில் முனி தேவர்களுக்கு அவிகொடுத்து வேள்வியை முடித்தார்.

**புண்ணியகோடி முதலியார்** - தொண்டை நாட்டிலே மாகறல் என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய பெயர் கோட்டி முதலியார் எனவும் வழங்கியது. பெருஞ்செல்வராக விளங்கிய இவர் சிறந்த வள்ளலாகவுந் திகழ்ந்தார். தம்மிடம் பொருளை விரும்பி வருகிறவர்கள் வாய் திறந்து கேட்பதற்கு நாணிப் பேசாமல் போய்விடுதலுங் கூடுமென்று அஞ்சிய இவர் தம்முடைய வீட்டு முற்றத்தில் மணலைப் பரப்பித் தம்மிடம் வருபவர்கள் தங்கட்கு வேண்டியவற்றை அம்மண்ணில் எழுதுமாறு செய்து அதனைப் பார்த்து வந்தவர்களுடைய எண்ணத்தை யுணர்ந்து நிறைவேற்றிக் கொண்டிருந்தார். இதனால் இவருடைய இசை திசைதொறும் பரவி நின்றது.

**புண்ணியராசன்** - நாகபுரத்து அரசன். ஆவின் வயிற்றிற் பொன் முட்டையில் தங்கிப் பிறந்தவன். இவன் பிறந்த காலத்தில் புத்தன் பிறந்த பொழுது நிகழ்ந்த நற்குறிகளெல்லாம் நிகழ்ந்தமையின் அவன் பெயராகிய தருமராசன் என்பது இவனுக்கு இடப்பட்டதாகக் கூறுவர். தருமசாவகன் என்னும் முனிவனிடத்திலே அறங் கேட்டவன். மணிமேகலையோடு மணிபல்லவம் அடைந்து புத்த பீடிகைக் காட்சியால் தன்னுடைய பழம் பிறப்பையறிந்தவன். இவன் ஆபுத்திரனாக முன் பிறப்பில் இருந்தவன்.

**புதன்** - இவன் வியாழன் மனைவியாகிய தாரையிடம் திங்களுக்குப் பிறந்தவன். பிரகஸ்பதியும் திங்களும் தத்தமக்குப் பிறந்தவன் என்று சொற்போரிடுகையில் தாயை நோக்கி உண்மையைக் கூறச் சொன்னான். தவஞ் செய்து கிரகநிலையை அடைந்தான். நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேரையுடையவன். இவன் சுக்கிரனுக்கு மேல் இரண்டு லட்சம் யோசனை தொலைவில் இருக்கிறான் என்பர். இவன் தவஞ் செய்து கொண்டிருந்த பொழுது தவச்சாலையண்மையில் வந்த இளையென்பவளைத் தழுவிப் புரூரவனைப் பெற்றான்.

**புத்தகயை** - இக்காலத்தில் கயை என வழங்குமிடத்தின் தெற்கே ஐந்து நாழிகைவழி தொலைவில் உள்ள ஓரிடம். இங்குதான் கௌதமபுத்தர் ஞானம் பெற்றார் என்பர். அவர் ஞானம் பெற்ற அரசமரம் இன்னும் உளதென்பர்.

**புத்தகோசர்** - பௌத்த சமயத்தில் ஹீனயானை மகாயானை என்று இருபிரிவுகள் உள்ளன. இவர் ஹீனயானப் பிரிவைச் சேர்ந்தவர். இந்தப் பிரிவு வழங்கும் இடங்களில் இவர் புத்தரைப் போலவே மிகப் பெரியவராகக் கொண்டாடப்படுகிறார். இவருடைய வரலாறு விளக்கமாகத் தெரியவில்லை. இந்து சமயத்தில் அந்தணர் குலத்தில் பிறந்த இவர் ஒரு பௌத்தத் துறவியால் பௌத்தராக்கப் பெற்றதாகக் கூறப்படுகிறது.

**புத்ததத்தர்** - இவர் பௌத்த சமயத்தை மேற்கொண்டொழுகிய ஒரு பெரியவர். அபிதர்மாவதாரம் என்னும் நூலை இவர் எழுதியிருக்கிறார்.

**புத்தநந்தி** - இவன் ஒரு புத்தன். திருஞானசம்பந்தரோடு சொற்போர் செய்ய வந்தான். திருஞானசம்பந்தருடைய பாடல்களை யெழுதுபவராகிய சம்பந்த சரணாலயர் கூறியபடி இவனுடைய தலையில் இடி விழுந்தது. அதனால் மாண்டான்.

**புத்தமித்திரனார்** - வீர சோழியம் என்னும் தமிழ் இலக்கண நூலை இயற்றியவராகிய இவர் தமிழ் நாட்டில் பாண்டி மண்டலத்தில் மிழலைக் கூற்றத்தில் உள்ள பொன்பற்றி என்னும் நகரிற் சிற்றரசராக இருந்தார். அரசராக இருந்த இவர் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த தமிழ்ப் புலமை வாய்ந்தவராகவும் விளங்கினார். வீரராசேந்திரன் என்னும் பேரரசனுடைய விருப்பப்படி வீர சோழியத்தை இயற்றினார். வீர சோழியம் முன்னாளிற் சிறந்து விளங்கியதாயினும் காலப் போக்கில் வழக்கொழிந்து இந்நாளில் கற்பாரில்லாத நிலையில் விளங்கிக் கொண்டிருக்கிறது.

**புத்தர்** - சாக்கிய குல மன்னனாகிய சுத்தோதனனுக்கும் மாயாதேவி என்பவளுக்கும் இவர் மகனாகத் தோன்றினார். இவர் தோன்றிய இடம் நேபாளத்தில் உள்ள கபிலவஸ்து. இவர் பிறந்த ஏழு நாட்களில் இவருடைய தாய் காலமானாள். மாயாதேவியோடு கூடப் பிறந்தவளாகிய மகாபிரசாபதி என்பவள் புத்தரை வளர்த்தாள். யசோதரை என்பவள் புத்தருடைய மனைவியானாள். இராகுலன் என்பவன் புத்தருக்கு மகனாகப் பிறந்தான். கிழவன், பிணம், நோயாளி ஆகியோரை இவர் கண்ட பின் துறவியாகிப் புத்தரானார். இவருக்கு இடப்பட்ட பிள்ளைப் பெயர் சித்தார்த்தர்.

**புத்திசேனன்** - ஏமாங்கத நாட்டில் இராசமாபுரத்தில் வாழ்ந்திருந்தவன். சச்சந்தனுக்கு அமைச்சனாகவும் படைத்தலைவனாகவும் அமைந்து நின்ற பெரு வீரனாகிய அசலன் என்பவனுடைய மகன். இவன் அந்தணர் குலத்தினனாயினும் போர் செய்தலில் வல்லவனாக விளங்கினான். சீவகனுடைய துணைவர்களில் இவன் ஒருவன்.

**புரஞ்சயன்** - இவன் கதிரவன் குலத்தில் தோன்றிய சசாந்தன் என்னும் அரசனுடைய மகன். போராண்மையில் பேராண்மை பெற்றுச் சிறந்து விளங்கினான். அயோத்தியில் இருந்து அரசு செய்து கொண்டிருந்தான். அந்நாளில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர்மூண்டது. அப்போரில் தேவர்கள் தோல்வியடைந்து கலங்கியோடினார்கள். தேவேந்திரன் திருமால் மூலமாக இவனுடைய பெருமையை உணர்ந்தான். தேவர்கள் சிலரோடு இவனிடம்வந்து தன்னுடைய குறையைக் கூறி முறையிட்டுக் கொண்டான். புரஞ்சயன் போர்க்கோலங் கொண்டு இந்திரனோடு புறப்பட்டுச் சென்றான். அசுரர்கள் ஒரு மனிதன் நம்மோடு போர் செய்ய வந்தானே என்று பொங்கி யெழுந்தார்கள். கடலெனத் திரண்டு அடலுடன் அமர் புரிந்தார்கள். இவன் ஏறி யமர் செய்த தேர் இடையே முறிந்தொழிந்தது. அப்பொழுது இவன் இந்திரனைப் பார்த்தான். இந்திரன் காளையாகி இவனிடம் வந்தான். இவன் அக்காளையின்மீதிவர்ந்து கடும் போர் புரிந்தான். அசுரர்கள் தோல்வியடைந்து ஓடினார்கள். பிறகு இந்திரன் இம்

மன்னனை அழைத்துக் கொண்டு போய்த் தன்னுடைய அவையில் வைத்துப் பாராட்டினன். தேவர்கள் இவனைப் புகழ்ந்தார்கள். ககுத்தம் என்பது எருதின் பிடர். இவன் இந்திரனாகிய எருதின் பிடரியில் அமர்ந்து போர் செய்த படியால் இவனுக்கு அக்கால முதல் ககுத்தன் என்று காரணப் பெயர் ஒன்று உண்டாகியது. அப்பெயர் இவனுடைய வழிமுறையினருக்கும் உரிமையுடையதாக அமைந்துவிின்றது. இவனுடைய வழிமுறையில் தோன்றிய இராமபிரானும் காகுத்தன் என்னும் பெயரையடைந்தார். தேவர்கள் ஊரில் இவன் வெற்றியடைந்த படியால் புரஞ்செயன் என்று பெயர் வந்தது. அதற்கு முன்னர் வழங்கியது வேறு பெயர் என்பர்.

**புரஞ்சனன்** - இவன் ஓர் அரசன். இவன் தவஞ் செய்வதற்குச் சென்று ஒரு பெண்ணிடத்தில் மோகங் கொண்டு அவளோடு நூறு ஆண்டுகள் கூடியிருந்தான். புரஞ்சனி, வைதர்ப்பி என்பவர்கள் இவனுடைய மனைவியர்கள். இவனுடைய பட்டணத்தைப் பயன் காலகன்னிகை என்பவர்கள் கைப்பற்றினர். இவனுடைய பட்டணத்தை ஒரு பாம்பு காத்தது. இவன் உயிர்களைத் துன்புறுத்துதற்குச் சிறிதும் அஞ்சான். இவன் தன்னுடைய மனையாளையே மனத்திலெண்ணிக் கொண்டு உயிர் விட்ட படியினால் மறு பிறப்பில் பெண்ணாகப் பிறந்து மலையத்துவச பாண்டியனை மணந்தான்.

**புரந்தரதாசர்** - இவர் பல்லாரி மாவட்டத்தில் ஹம்பி நகரத்திற்கு அண்மையில் உள்ள புரந்தரகட என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் 1484 ஆம் ஆண்டிற் பிறந்தார். இவருடைய தந்தையாருடைய பெயர் வரதப்பநாயக் என்பது. அவர் பெரிய செல்வர். கோடீசுவரர் என்பர். தாயார் பெயர் கமலாம்பாள். புரந்தரர் கன்னடத்திலும் வடமொழியிலும் இசையிலும் சிறந்தபுலவரானார். தம்முடைய பதினாருவதாண்டில் சரசுவதிபாய் என்னும் மங்கையைத் திருமணஞ் செய்து கொண்டார். இவருடைய இருபதாவது அகவையில் ஈன்றோர்கள் இவ்வுலக வாழ்வைத் துறந்தனர். புரந்தரர் தம்முடைய தந்தையார் நடத்தி வந்த இரத்தின வாணிகத்தைத் தாமே நடத்தி வந்தார். இவர் தம்முடைய திறமையால் செல்வத்தைப் பன்மடங்கு பெருக்கிக் கொண்டு நவகோடி நாராயணன் என்கிற பெயருடன் விளங்கி வந்தார்.

செல்வம் அதிகரிக்குந்தோறும் இவருக்கு உலோபமும் அதிகரித்துக் கொண்டு வந்தது. இதைக்கண்டு இவருடைய மனைவியே மிகுந்த கவலை கொண்டாள். ஒரு சமயம் ஓர் அந்தணன் தன்னுடைய மகனின் உபநயனத்திற்காக புரந்தரரிடம் வந்து பொருள் வேண்டினன். இவர் "நாளைக்காகட்டும் நாளைக்காகட்டும்" என்று பல நாட்களைக் கடத்தினார். அந்தணனுக்கு இவரிடம் அலைவதில் வெறுப்புண்டாகியது. புரந்தரருடைய மனைவியிடம் போய்ச் செய்தியைக் கூறிக் கேட்டான். அவள் ஒரு சிறிதும் எண்ணாமல் விலை உயர்ந்த தன்னுடைய மூக்குத்தியைக் கழற்றிக் கொடுத்து "இதை விற்று உபநயனத்தை நடத்திக் கொள்ளுங்கள்" என்று கூறி அனுப்பி விட்டாள்.

அந்தணன் புரந்தரரிடமே சென்று அம் மூக்குத்தியை விற்றுப் பொருள் பெற்றுக் கொண்டு சென்ருன். புரந்தரர் அம் மூக்குத்தியைப் பார்த்து ஐயங்கொண்டார். தம்முடைய மனைவியின் மூக்குத்தியைப் போல் இருக்கிறதே என்று எண்ணிஞர். தம்முடைய மனைவியின் மூக்குத்தியை வாங்கி வரும்படி ஓர் ஆளை அனுப்பிஞர். அந்த ஆள்வந்து செய்தியைத் தெரிவித்தான். சரசுவதிபாய்க்குத் திகைப்பும் அச்சமும் உண்டாயின. அவள் தன்னுடைய வழிபடு கடவுளாகிய பண்டரிநாதனை மனத்தில் எண்ணிஞள். அப் பெருமான் திருவருள் செய்து அம்மூக்குத்தியைப் போலவே ஒன்றைக் கையில் வரச்செய்தார். அம்மைக்கு அவ்வளவில் அளவற்ற வியப்புந் திகைப்பும் உண்டாயின. அவள் அம்மூக்குத்தியை வந்த ஆளிடங்கொடுத் தனுப்பிஞள்.

புரந்தரர் தம்முடைய மனைவியனுப்பிய மூக்குத்தியையும் அந்தணனிடமிருந்து வாங்கிய மூக்குத்தியையும் ஒப்பிட்டுப் பார்த்தார். இரண்டும் ஒரே மாதிரியாக இருந்தன. அவர் மிகுந்த வியப்படைந்து மனைவியிடம் ஓடிவந்தார். நடந்ததை மறைக்காமல் கூறுமாறு கேட்டார். அவள் அச்சமடைந்து நடந்தவைகளை உள்ளவாறே கூறிஞள். அவ்வளவில் புரந்தரருக்கு மெய்யறிவு உண்டாகியது. அவர் தம்முடைய பொருள் முழுவதையுந் தானஞ் செய்தார். உடனே தலயாத்திரைக்குப் புறப்பட்டார். இறுதியில் பண்டரிபுரத்திற்கு வந்து சேர்ந்தார். வியாசராயசுவாமி என்னும் பெரியவரிடம் அருளுரை பெற்ருர். பிறகு இவருக்குப் புரந்தரதாசர் என்னும் பெயர் உண்டாகியது. இவர் இசைப்பாடல்கள் பலவற்றைப் பாடிஞர். இறுதிக் காலத்தில் துறவறத்தை மேற்கொண்டார். 1564 ஆம் ஆண்டில் வீடு பேற்றை யடைந்தார்.

**புராணங்கள்** - ஊரின் பெருமை வரலாறு முதலியவைகளைக் கூறும் நூல்கள் புராணங்கள் எனப்படுகின்றன. வெகுகாலத்திற்கு முன்னர் நிகழ்ந்தனவாகக் கூறப்படும் செய்திகள் வடமொழியில்உள்ள புராணங்களில் உள்ளன. வடமொழியும்தென்மொழியும் நன்குணர்ந்தவர்கள் மிகச் சுருக்கமாகக் கூறப்படும் வடமொழிப் புராணச் செய்திகளின் அடிப்படையில் தமிழ்ப் புராணத்தைச் செய்கின்றனர். புராணத்தைப் பாடும் புலவர்களின அறிவு நலத்தின் மாட்சிக்கேற்பப் புராணமும் அமைகின்றது. சூதமுனிவரே மற்றைய முனிவர்களுக்குப் புராணங்களைக் கூறிஞர் என்று ஒவ்வொரு புராண முகப்பிலும் கூறப்பட்டுள்ளன. புராணங்களில் உண்மைச் செய்திகளைவிடக் கற்பனைச் செய்திகளே அதிகம் என்பது பலர் கருத்து.

**புரிசைக்கிழார்** - குன்றத்தூரில் இருந்த வேளாண் குலத்தினர். சோழனுல் குடியேறப் பட்ட நாற்பத்தெண்ணுயிரவரில் இவரும் ஒருவர்.

**புருகுச்சன்** - இவன் கதிரவகுலவேந்தனுகிய மாந்தாதாஎன்பவனுடைய மகன். இவன் அறிவிலும் ஆற்றலிலுஞ் சிறந்து விளங்கிஞன். இவனுடைய சீர்த்தியை உணர்ந்த நாகர் வேந்தன் தன்னுடைய மகளாகிய நருமதை என்பவளை இவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். ஒரு காலத்தில் கந்தருவர் கட்டும் நாகர்கட்டும்

போர் மூண்டது. இவன் அப் போரில் நாகர் பக்கஞ் சேர்ந்து கந்தருவர்களை விரட்டியடித் தான். அதனால் இவனுடைய புகழ் நாகர் உலகினும் பரவி யிருந்தது. இவனுடைய மகன் பெயர் வசுதன் என்பர்.

**புருசுண்டி** - இவர் முதலில் விப்பி ராதன் என்னும் பெயருடைய வேடனாக இருந்தார். அப் பொழுது தண்டகவனத்தி லிருந்து வழிப்பறி செய்து திரிந் தார். ஒருநாள் அவ்வழியே வந்த முறகல முனிவரைக் கண்டு அவரைக் கொலை புரியச் சென்றார். அவர் தம்முடைய அருட்பார்வையை இவர் மீது செலுத்தினர். அதனால் இவ ருக்கு மெய்யறிவு உண்டாகி யது. ஒரு மறை மொழியை உரைத்தருளினா. ஒரு மரத் தைக் காட்டி, "இதற்கு நீர் விட்டு முக்காலமும் வழுபடுக" என்று கூறிச் சென்றார். விப் பிராத வேடர் பலநாள் அவ் வாறே செய்து கொண்டிருந் தார். பிறகு முற்கலர் அங்கு வந்து இவருடைய மெய்யன் பைக் கணடு வியந்தார். இவ ரிடத்தில் அருள் கொண்டு ஆனைமுகக் கடவுளுடைய மறையை உரைத்தருளினர். அதனால் இவர் பெருந் தவஞ் செய்து ஆனைமுகக் கடவு ளுடைய வடிவத்தை (சாரு பத்தை)ப் பெற்றார். அதுமுதல் புருசுண்டி என்னும் பெயரும் உணடாகியது. மகோற்கட விநாயகர் காசியரசன் வீட்டில் எழுந்தருளியிருந்த போது மகோற்கட விநாயகர்காசியரச னுக்கு இவருடைய பெருமை யைக் கூறினர்.

**புருடோத்தமநம்பி** - பன்னிரு சைவத்திருமுறைஆசிரியர்களில் ஒருவர். சிவநேயத்தில் சிறந்த வர். இவர் தில்லையைப் பற்றி இரண்டு திருவிசைப்பாப் பதி கங்கள் பாடியுள்ளார். இவர் குலத்தில் அந்தணராக இருக்க லாம் என்று எண்ணுகின்றனர்.

**புருவன்மன்** - இவன் ஓர் அரசன். இவன் அடிக்கடி வேட்டைக்குச் சென்று விலங்குகளை வருத்திக் கொண்டு திரிந்தான். இவ னுடைய செய்கையைக் கண்டு மரீசி முனிவர் சினமடைந்தார். "நீ சிங்கமாகுக" என்று வச வுரை வழங்கினர். இவன் அவ் வாறே சிங்கமாகிக் காட்டில் திரிந்து கொண்டிருந்தான். ஒரு நாள் ஒருபாகவதனைக் கொல்லு வதற்குச் சென்றான். அவன அஞ்சித் திருமாலைப் போற்றி னன். அதைக் கேட்டு இவன் முன்னைய வடிவத்தை யடைந் தான். இவனுக்குச் சிங்கோதர பவன் எனவும் பெயர் வழங்கி யது.

**புரூரவன்** - திங்கட்குல முதல்வனு கிய புதனுடைய புதல்வன். தாய் பெயர் இளை. இவன் எல் லாக் கலைகளிலும் வல்லவன். இவன் இளவரசனாக இருக்கும் போது பிரதிட்டானபுரம் என் னும் நகரையடுத்திருந்த மலர்ப் பொழிலில் தேவ மகளிர் சிலருடன் ஊர்வசி உலாவிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அசுரர் சிலர் அவளைக் கவர்ந்து சென்றனர். அவள் அஞ்சிஅலறி னள். இவன் அக்குரலைக்கேட்டு விரைந்து சென்று அசுரரோடு போர்புரிந்து ஊர்வசியை மீட் டான். இந்திரன் இவனுடைய ஆண்மையைப் பாராட்டிஅந்த ஊர்வசியை இவனுககே கொடுத்தான்.

**புரோகிதஅகத்தியர்** - இவர்வட மொழியிலும் தென்மொழியி லும் வல்லவர். உலகநடையை நன்குஉணர்ந்தவர். இவர்எல் லோருக்கும் நல்லவராக நடந்து கொண்டதுமன்றிக், "கூத்து

நூல்'' ஒன்றை இயற்றி அதனை முதுகுடுமியினுடைய தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றி அக்கா லத்துப் புலவர்கள் பலருடைய நன்மதிப்பையும் பெற்றார்.அர சனுடைய வேள்வியாசானுகை விளங்கினார். அதனால்புரோகித அகத்தியர் என்றுபெயர் உண் டாகியது.

**புரோசனன்** - இவன் துரியோத னனுடைய நண்பன். வஞ்சம் நிறைந்தநெஞ்சினன். கொடிய சூழ்ச்சிகள் செய்வதில் வல்ல வன். இவன் பாண்டவர்கட்கு அரக்கு மாளிகை கட்டி அவர் களைக் கொல்வதற்கு வழிவகுத் தான். ஆயினும் இவனுடைய காரியங்கள்நிறைவேறாதொழிந் தன.

**புலத்தியர்** - இவர்நான்முக னுடைய காதில்தோன்றியவர். இவர் திரணபிந்துவின் தவச் சாலையில் தவஞ்செய்துகொண் டிருக்கும்போது அரம்பையர் நீர்விளையாடுதற்கு அங்கு வந்த னர். இவர்அவர்களைப்பார்த்து இனியென்னுடைய எதிரில் யாராவதுவந்தால்கருப்பமடைக வென வசவுரை வழங்கினார். அதுமுதற் பெண்களஞ்சி வரா திருந்தனர். இவ்வசவுரையை அறியாததிரணபிந்துவின்மகள் இவருடைய ஆச்சிரமத்திற்குப் பக்கத்தில்சென்றாள். உடனே அவள்கருப்பமடைந்து தன்னு டைய தந்தையிடம்போய் செய் தியைக் கூறினாள். பிறகு புலத் தியரை மணந்தாள். கார்த்த வீரியனால் சிறையிடப் பட்ட இராவணனை இவர் மீட்டார். இவர் கலைமகளிடஞ் செல்ல அவள் இவர் புதல்வர் என்னும் விருப்பமில்லாது இருந்தாள். அதனால் அவள் ஆறாகும் படி இவர் வசவுரை வழங்கினார். அவளோ இவர்அரக்கரில்வீபீட ணனாகும்படி இவருக்கு வச வுரை வழங்கினாள். இவருடைய மனைவியின் பெயர் ஆவிர்ப்பு. இவருக்கு விசிரவசு அகத்தியர் என்னும் இரண்டு மக்கள் பிறந்தார்கள்.

**புலிகடிமால்** - தபங்கர் என்னும் பெயருடைய முனிவர் ஒருவர் காட்டில் தவஞ்செய்துகொண் டிருந்தார். அப்பொழுதுஒரு புலிஅவர்மேல்பாய்தற்குநெருங் கியது. அப்பொழுது யாதவமன் னன் ஒருவன் வேட்டையாடிக் கொண்டு அவ்வழியேவந்தான் முனிவர்அப்புலியைக் கொல்லு மாறு அரசனிடங் கூறினார். அரசனும் அவ்வாறே கொன் றான். அதுமுதல் அம்மன்னனும் அவனுடையவழிமுறையினரும் புலிகடிமால் என்று சிறப்புப் பெயர் பெற்றனர்.

**புலிப்பாணி**-இவர் போகருஷியின் மாணவர்களில் ஒருவராகிய சித்தர். இவர் ஒரு புலியை நட் பாக்கி வைத்துக் கொண்டு தொலைவான இடத்திற்குப் போய்த் தண்ணீரையெடுத்துக் கொண்டு தம்முடைய இருப் பிடத்திற்குப் புலியின் மீது வந்து கொண்டிருந்தார். அத னால் இவருக்குப் புலிப்பாணி என்று பெயர் உண்டாகியது. சாலவித்தைசெய்வதினும் மருத் துவஞ் செய்வதினும் இவர் வல்லவர்.

**புலியுயர்த்தோர்** - சோழ மன்னர் கள் புலிக்கொடியுடையவர்க ளானமையின் புலியுயர்த்தோர் என்று சிறப்புப் பெயர் பெற்ற னர்.

**புலியூர்** - திருத்தில்லையாகிய சிதம் பரம் வியாக்கிரபாத முனிவர் வசித்திருந்த படியால் புலியூர் எனவும் பெரும் பற்றப் புலியூர் எனவும் வழங்கப் படுகிறது.

**புலோமன்** - இந்திரன் மனைவி யாகிய இந்திராணியினுடைய தந்தை. புலோமனுடைய மக

ளாகியபடியால் இந்திராணி புலோமசை என்னும்பெயரைப் பெற்றாள்.

**புல்லி** - இவன் கள்வர்கட்குத் தலைவன். இவன் மழவர்நாட்டினைக் கைப்பற்றியிருந்ததோடுசிறந்த கொடையாளியாகவும் விளங்கினான். இவன் வேங்கடமலையில் வாழ்ந்திருந்தான் என்பர்.

**புவனேகவீரன்பட்டினம்** - திருத்தில்லைக்கு வடபால் இந்நாளில் புவனகிரி என்று வழங்கும் ஊரே மேற்கூறிய ஊராகும் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். புவனேகவீரன் என்னும் பெயருடையான் இவ்வூரை அமைத்த படியால் அவன் பெயரால் அந்நாளில் இவ்வாறு நீண்டு வழங்கிய பெயர் நாளடைவில் சுருங்கிப் புவனகிரி என்றாயது.

**புவனேகவாகு** - விசய கூழங்கைச் சக்கரவர்த்தியென்பவன் யாழ்ப்பாணத்தில் அரசு செய்திருந்த காலத்தில் இவர் அவனுக்கு அமைச்சராக இருந்தார். இவர் தமிழ்ப் புலமையில் வல்லவர். இவரால் கட்டப்பட்ட சுப்பிரமணியர் கோயில் இன்றும் நல்லூரிற் சிறந்து விளங்குகின்றது. இவர் 1850 ஆண்டுகட்கு முன்பிருந்தவர். இவர் ஊர்தோறும் தருமபாடசாலைகள் அமைத்துத்தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உழைத்தார். இவர் செய்யுள்கள் பல இயற்றியுள்ளார்.

**புவனேசுவரம்** - இந்தியாவில் ஓரிசாநாட்டின் புதிய தலைநகர். இது பழைய தலைநகரான கட்டாக்கில்இருந்து18மைல்தொலைவிலும்பூரியில்இருந்து வடக்கே முப்பது மைல் தொலைவிலும் இருக்கிறது. புகைவண்டிநிலையம் உள்ளது. இந்நகரைத் தலைநகராகக் கொண்டு ஓரிசாவை முன்னர் ஆண்ட கேசரி அரசர்கள் இங்கு நூற்றுக்கணக்கான கோயில்களைக்கட்டினர். அவைகளில் இப்பொழுது ஏறக்குறைய 100 கோயில்கள் எஞ்சிநிற்கின்றன. இவைகளில்இலிங்கராசர்கோயில், முக்தேசுவரர் கோயில்,இராசாராணிகோயில், பிரமன் கோயில், பாற்கரேசுவரர்கோயில், பரசுராமேசுவரர் கோயில் ஆகியவை சிறப்பானவை. புவனேசுவரத்திற்குச் சில மைல் தொலைவில் உள்ள உதயகிரி, கண்டகிரி மலைகளில் பாறைக் குடைவுக் குகைகள் இருக்கின்றன.

**புள்வேளூர்ப்பூதன்** - தொண்டைமண்டலத்தில் புள்வேளூர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவன். செல்வச்சிறப்புடையவனாக இருந்தபடியால் வறியவர்கட்கும் புலவர்கட்கும் பொருளுதவி செய்து மிகுந்த புகழையடைந்தான். இவன் ஒருநாள் ஔவையாருக்கு வரகரிசிச் சோறிட்டுப் பாடல் பெற்றான். ஔவையாருடைய தெய்வத் திருவருளால் கிணற்றுநீர் மேலெழுந்து இவனுடைய வயல்களிற் பாய்ந்தது என்பர்.

**புள்ளிருக்குவேளூர்**-சடாயுவாகிய பறவையும் மறையும் காமனும் வழிபட்ட படியால் புள், இருக்கு, வேள் ஊர் என நின்றது. சோழவள நாட்டிலுள்ள வைத்திசுவரன் கோவிலுக்கு வழங்கும் பெயர்களில் ஒன்று.

**புறத்தாயநாடு**-கன்னியாகுமரியும் அதனைச் சூழ்ந்துள்ள நாடுகளும் முன்னாளில் புறத்தாய நாடுகள் என்று வழங்கப்பட்டனஎன்று கல்வெட்டுக்களால் தெரிகிறது.

**புறத்திணை நன்னாகனார்** - சங்ககாலப்புலவர்களில் ஒருவர். புறத்திணையைப் பாடுவதில்

வல்லவராகையால் இவ்வாறு அடைமொழி பெற்ருர். நன்ருதனர் எனவும் வழங்கும். இவராற் பாடப் பெற்ருேர் ஓய்மான் நல்லியக்கோடன், ஓய்மான் நல்லியாதன், ஓய்மான் வில்லியாதன், கரும்பனூர் கிழான் என்போராவர்.

புறநானூறு - கடைச் சங்கப்புலவர்கள் பாடிய எட்டுத்தொகையுள் எட்டாவது. நானூறு அகவற்பாக்களைக் கொண்டது. இந்நூலால் பண்டைக்காலத்தில் இத்தமிழ் நாட்டில் இருந்த சேரசோழபாண்டியர்களாகிய முடியுடைவேந்தர், சிற்றரசர், அமைச்சர், படைத்தலைவர், வீரர் முதலிய பலருடைய வரலாறுகளும், கடைச்சங்கப்புலவர் பலருடைய வரலாறுகளும் அக்காலத்து மனிதர்களுடைய பழக்கவழக்கங்களும் வேறு பலவும் நன்கு புலப்படும். இந்நூற்செய்யுட்களால்பாடப் பெற்றவர்கள் ஒரு காலத்தார் அல்லர்; ஒரு குலத்தார் அல்லர்; ஓர் இடத்தாருமல்லர்; பாடியவர்களும் இத்தன்மையினரே; இவர்களில் அந்தணர்கள் சிலர்; அரசர்பலர்; வணிகர் பலர்; வேளாளர்பலர்; பாடியவர்களுள் பெண்பாலாருமுளர். இதனைத் தொகுத்தோர் தொகுப்பித்தோர் முதலியவர்களைப்பற்றிய செய்தியொன்றும் விளங்கவில்லை. புறத்தே நிகழும் ஒழுக்கமாகிய அறத்தையும் பொருளையுமே பொருளாக வுடைமையின் இஃது இப்பெயர் பெற்றது. இது புறமெனவும் புறப்பாட்டெனவும் புகலப்படும். இதற்கு இந்நாளில் தெளிவான உரைகள் வெளிவந்துள்ளன. இந்நூலின் இடையில் இரண்டு பாடல்கள் மறைந்துபோன படியால் இப்பொழுது முந்நூற்றுத்தொண்ணூற்றெட்டுப் பாடல்களே இருக்கின்றன. உள்ள பாடல்களிற் சிதைந்த பாடல்களும் உள்ளன.

புறவார்பனங்காட்டூர் - நடு நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இவ்வூர் இப்பொழுது பனையபுரம் என வழங்குகின்றது. புருவின் பொருட்டு அதன் எடையளவு தன் சதையை அரிந்துகொடுத்த சிபிச்சக்கரவர்த்திக்கு அருள் செய்த ஊர். சிபிச்சக்கரவர்த்தி கண்ணைப் பறித்திட்டதும் புருவின் எடை சரியாகி இறைவர் வெளிப்பட்டருளினர். இதனல் இறைவருக்கு நேத்திரோத்தாரகேசுவரர் என்று பெயர் உண்டாகியது. இவ்வூர் முண்டியம்பாக்கம் புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கில் இரண்டு கல் தொலைவில் உள்ளது. இறைவர் பனங்காட்டில் எழுந்தருளிய படியாலும் புருவுக்குத் தசையரிந்து கொடுக்கப்பட்ட படியாலும் புறவார் பனங்காட்டூர் எனறு பெயருண்டாகியது. பனங்காட்டீசுவரர் என்பதும் இறைவர்க்குப் பெயர்.

பூகோளம் - பூமியின் மேற்பரப்பைப்பற்றிக் கூறும் நூல் பூகோளமென்றுபெயர்பெறும். இது பூமியின் இயற்கையமைப்பு, தட்பவெப்பம், விளைபொருள்கள், மக்களின் வாழ்க்கை முதலியவைகளைப் பற்றிக் கூறுகிறது. மக்கள் வாழ்க்கைக்கும் நிலம், கடல், ஆறுகள் மலைகள், சமவெளிகள், பள்ளத்தாக்குகள், தட்பவெப்பம், மழை, காற்று முதலிய இயற்கையமைப்பு நிகழ்ச்சி ஆகியவைகட்கும்உள்ளதொடர்பைப் பற்றித் தெரிந்து கொள்ளப் பூகோளநூல் பெரிதும் பயன் படும்.

பூங்கண் உத்திரையார் - சங்க காலப்பெண்பாற் புலவர்களில்

ஒருவர். இவருடைய இயற் பெயர் உத்திரையார். 'அயலார் தன்னை மணக்க முயல்வது மீன்வலையிலே விலங்கைப் பிடிக்கும் முயற்சி' என்று தலைவி கூறுவதாக இவர் பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் குறுந்தொகையிலும் புறநானூற்றிலும் உள்ளன.

**பூங்குன்றனார்** - இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டியநாட்டில் இவர் சிறந்த புலவராகத் திகழ்ந்திருந்தார். இவருடைய தந்தையார் பெயர் கணியனார். இவர் சிறந்த அறிவு நலம் உடையவராகத் திகழ்ந்தார். இவர் சுமதிஎன்னும் மங்கையை மணந்து இல்லறத்தை இனிது நடத்தினார். சிறந்த புலவராக விளங்கியிருந்த இவர் மனிதர்களைப் பாடாத மாண்புடையவராக விளங்கினார். தமக்கு அமைந்திருந்த சிறு நிலவருவாய்கொண்டே வாழ்க்கையை இனிது நடத்தியிருந்தார். இவருடைய பண்புடைமையை அனைவரும் பாராட்டிப்போற்றினர். "யாதும் ஊரே யாவருங் கேளிர்" என்னும் புறநானூற்றுப்பாடல்இவர் பாடியதாகும்.

**பூங்கோதை** - மதுரையில் வாழ்ந்திருந்த ஒரு விலைமகள். இவள் அழகுடையவளாகவும் கல்வி கேள்விகளில் வல்லவளாகவும் இருந்தாள். இவளிடம் இருந்த செல்வத்தை ஒருநாள் இரவு கள்ளர்கள் களவாடிச் சென்றனர். எல்லாச்செல்வத்தையும் இழந்த இவள் அந்நாளில் கொடையிற் சிறந்து விளங்கிய காயற்பட்டினம் சீதக்காதி வள்ளலிடஞ்சென்று, "தினங் கொடுக்குங் கொடையானே" என்னுஞ் செய்யுளைப் பாடிப் பொருள் பெற்றாள்.

**பூங்கோயில்** - திருவாரூரில் புற்றிடங் கொண்டாரும் தியாகராசரும் எழுந்தருளியுள்ள திருக்கோயில்.

**பூதகி**-இவள் ஓர்அரக்கி.கண்ணன் குழந்தையாகவிருந்த போது கஞ்சனுடைய ஏவலால் தன்னுடைய முலைகளிலே நஞ்சூட்டிக்கொண்டு வந்து கண்ணனுக்குப் பாலூட்டத் தொடங்கியபோது, அந்தப் பாலின் வழியாகவே அவளுடைய உயிரையும் கண்ணன் வாங்கி விட்டான். அதனால் இந்த அரக்கி இறந்தொழிந்தாள்.

**பூதசதுக்கம்** - இப்பெயரினையுடைய இடம் ஒன்று முன்னாளில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தது. இச்சதுக்கத்தில் பூதம் ஒன்று இருந்தது. இப் பூதம் தீமை செய்தவர்களைத் தன்னுடைய மாயாசக்தியினால் இழுத்து அறைந்து கொன்றுவிடும். இப்பூதம் சோழமன்னர்களுடைய வரபலத்தால் அங்கு நிலைபெற்றிருந்தது. இப் பூதம் தீமை செய்யாதவர்களை யாதுஞ் செய்ய மாட்டாது. ஆகவே அந்நாளில் அங்கு வாழ்ந்திருந்த மக்கள் இப்பூதத்திற்கு அஞ்சி நன்னெறியுடையவர்களாய் ஒழுகியிருந்தனர்.

**பூதஞ் சேந்தனார்** - இனியவை நாற்பது என்னும் நூலின் ஆசிரியர். இவரை மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ் சேந்தனார் என்பர். பூதஞ்சேந்தனார் என்பது பூதனுக்கு மகனாகிய சேந்தனார் என்று பொருள்படும்.

**பூதத்தாழ்வார்** - இவர் திருமாலின் கதையின் கூறுவர்; மகாபலிபுரத்தில் குருக்கத்தி மலரில் பிறந்தார். திருமாலிடம் பேரன்பு பூண்ட இவர் இரண்டாவது திருவந்தாதியைப் பாடினார்.

**பூதப்பாண்டியன்** - இவனுடைய முழுப்பெயர் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்பது. இவன் பாண்டிய மன்னர்கட்குரிய ஒல்லையூரைப் பகைவரிடமிருந்து வென்று கொண்டபடியினால் ஒல்லையூர் தந்த என்று சிறப்பிக்கப் பட்டான். இவனுடைய மனைவியின் பெயர் பெருங்கோப்பெண்டு. கணவன் மனைவி இருவருமே புலமை நலத்திற் சிறந்து விளங்கினார்கள். இப்பாண்டியனுக்குத் திதியன் என்பவன் சிறந்த நண்பனாக இருந்தான். அவன் பொதியின் மலையைச் சேர்ந்த நாட்டுக்குரியவன். அவன் இன்னிசை வல்லுநனாக இருந்ததோடு விற் போரிலுஞ் சிறந்து விளங்கினான். பூதப்பாண்டியனுக்கும் சேர சோழ மன்னர்களுக்கும் போர் உண்டாயிற்று. அப் போரில் இவன்மாண்டான். இவனுடைய மனைவியும் தீப் பாய்ந்து உயிர் விட்டாள்.

**பூதன்** - இவன் தொண்டை வளநாட்டிலே புள்வேளூர் என்னும் நகரிலே வேளாளர் குலத்திலே பிறந்தவன். இவனுடைய காலம் ஆயிரத்து நானூறு ஆண்டுகட்கு முன்னராகும். உழவுத் தொழிலையே இவன் சிறப்பாகக் கொண்டிருந்தான். தனக்கிருந்த சிறு நிலத்தைத் தக்காங்கு பயிர் செய்தே பலர்க்கும் உதவி புரிந்து வந்தான். உள்ளதைப் பிறருக்கு உவந்து மகிழ்ந்து வழங்கியபடியால் உயர்ந்த வள்ளலாய்த் திகழ்ந்து நின்றான். ஒரு நாள் ஒளவையார் இவனிடம் வந்தார். அப்பொழுது வரகரிசிச் சோறு வழுதுணங்காய்ப் பொரியல் ஆகியவைகள் தாம் இவனிடம் இருந்தன. இவன் இவைகளை ஒளவையாருக்குப் படைத்தான். உண்டு மகிழ்ந்த ஒளவையார் "வரகரிசிச்சோறும் வழுதுணங்காய் வாட்டும், முரமுரென வேபுளித்த மோரும், திரமுடனே, புள்வேளூர்ப் பூதன் புகழ்ந்துபரிந்திட்டசோறு, எல்லா உலகும் பெறும்" என்னுஞ் செய்யுள் ஒன்றை இவன் மீது பாடியருளினார். அது முதல் இவன் பெருஞ் செல்வஞ் சிறந்தோங்கப் பெற்று விளங்கினான்.

**பூதி** - இவன் ஓர் அந்தணன். மறை முதலிய கலைகளை ஓதியுணர்ந்த இவன் சிறந்த அறிவாளனாகத் திகழ்ந்தான். இவனுடைய அறிவாற்றல்களை நன்குணர்ந்த சீயமா சேனன் என்னும் அந்நாட்டு மன்னன் இவனைத் தன்னுடைய அமைச்சனாக வைத்திருந்தான். வெளிக்குச் சத்திய கோடனாக விளங்கிய இவன் பொய்யுங் களவும் மிகுந்தவனாயிருந்தபடியால் நாளடைவில் இழிந்து தொலைந்தான்.

**பூந்துருத்தி நம்பிகாடநம்பி**-இவர் திருபூந்துருத்தியில் வாழ்ந்திருந்த ஆதிசைவர். திருவாரூர்க்கும் திருத்தில்லைக்கும் திருவிசைப்பாப் பாடியுள்ளார். இவரைப்பற்றிய பிற செய்திகள் விளக்கமாக வில்லை.

**பூந்துறைவாரணவாசி** - கொங்கு வளநாட்டில் மேல்கரைப் பூந்துறை நாட்டுக்குத் தலைவனாக இருந்தவன். மாட்டையாக்குப் பிச்சியின் வழிமுறையில் வந்தவன்.

**பூம்பாவை**-சென்னை திருமயிலையில் இருந்த சிவநேசர் என்னும் வணிகருடைய அருந்தவத்தால் தோன்றிய பெண். மலர் கொய்கையில் பாம்பினால் கடியுண்டு இறந்துபோன இவளுடைய எலும்பைத் திருஞானசம்பந்தர் திருப்பதிகம் பாடிப் பெண்ணாக்கினார்.

**பூரணகுண்டலன்** - ஆருணியரசனுடைய அமைச்சன். உதயணனோடு போர் செய்வதற்கு ஆருணியரசன் புறப்பட்ட போது, நிமித்தம் சரியாக இல்லாததைக் கண்ட இவன், "நாம் திரும்பி விடுதல் நலம்" என்று அறிவுரை கூறினான்.

**பூரணவருணன்** - இவன் மகத நாட்டரசன். பௌத்த சமயத்தவன். இவன் கயாவிலிருந்த போதி மரத்தைச் சசாங்கன் என்பவன் வெட்டினான் எனக் கேள்வியுற்றுத் துன்பமடைந்தான். கற்றுக்கள் ஆயிரத்தைக் கொண்டுவந்து அவற்றின் பாலைக் கறந்து மரத்திற்குச் சொரிந்தான். அதனால் அம்மரம் ஓர் இரவில் ஏழுமுழம் வளர்ந்தது. அதைக்கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். மரத்திற்குப் பாதுகாப்பாக மதில் ஒன்றை இவன் அமைத்தான் என்பர்.

**பூரிசகநாதம்** - பூரி என்பது இந்தியாவில் ஒரிசா நாட்டில் பூரி மாவட்டத்தில் கடலோரத்தில் இருக்கும் பட்டினம். மாவட்டத்தின் தலைநகர், புகழ் பெற்ற வைணவத்தலம். இங்குள்ள சகநாதர் கோயில் இருபத்திரண்டடி உயரமுள்ள பெரிய மதிற் சுவருக்குள்ளே அடங்கியிருக்கிறது. கோபுரம் 192அடி உயரம் உடையது. இது கலிங்கராசன் அநங்கபீம தேவனால் 1189க்கும் 1223க்கும் இடையில் கட்டப்பட்டது. காசிப்பதி சைவர்களுக்கு எப்படியோ அப்படியே பூரி வைணவர்களால் கொண்டாடப் பெறுகிறது. வங்காளக் குடாக் கடற்கரையில் அமைந்துள்ள இக்கோயிலின் தெரிசனமும் அத்துறையில் கடல் நீராடலும் மிகவுஞ் சிறந்தவைகளாகக் கருதப்படுகின்றன. ஆண்டு முழுவதும் பக்தகோடிகள் பூரிசக நாதத்திற்கு வந்து கொண்டேயிருக்கிறார்கள். இக்கோயிலில் சகநாதர் பலராமருடனும் சுபத்திரையுடனும் கோயில் கொண்டிருக்கிறார். இத்தலத்தைக் குறித்துத் தல புராணம் பின்வருமாறு கூறுகிறது.

"முன்காலத்தில் திருமாலின் திருவுருவத்தை நீலக்கல்லிற் செதுக்கித் தன் கோயிலில் அமைக்க அவந்தி அரசனான இந்திரத்துய்மனன் என்பவன் விருப்பங் கொண்டான். பல அந்தணர்களை அனுப்பி நீலமாதவனைத் தேடித் தெரிந்து வரும்படி பணித்தான். வித்தியாபதி என்ற அந்தணன் காட்டு மக்கள் கூட்டத்தைச் சேர்ந்த சவரர்கள் கூட்டத்தில் நீல மாதவன் இருப்பதைப் பார்த்து அரசனிடஞ் சொன்னான். அரசன் நால்வகைப் படையுடனும் தச்சர்களுடனும் நீலமாதவனைக் கொண்டுபோக அத்தலத்திற்கு வந்தான். செல்வச் செருக்கால் தன்னைக் கொண்டு போக வந்திருப்பதை அறிந்த நீலமாதவன் மறைந்து விட்டான். ஆணவம் அகன்ற அரசன் ஆயிரங் குதிரை வேள்விகள் செய்து நீலமாதவனுடைய சேவையைப் பெற்றான். ஆயினும் கட்டையிற் செதுக்கப்பட்ட உருவங் கொண்டுதான் நீலமாதவன் அரசனுக்குக் காட்சியளித்தான். இந்தக் கட்டை கடலிலே மிதந்து வந்தது. இதையேதான் அரசன் பூரிகோயிலில் நிலைப் படுத்தினான். இவ்வாறு மிதந்து வந்த கட்டையை உருவமாகச் செதுக்க முயன்றபோது உளி உடைந்தது. அச்சமயத்தில் அனந்தமகாராணா என்ற ஒரு கிழத்தச்சன் இக்கட்டையைச் செதுக்கி உருவஞ் செய்வதாக ஒப்புக் கொண்டான். இருபத்

தொரு நாட்களுக்குள் இதனை முடித்துக் கொடுப்பதாக வாக்களித்தான். இடையில் திறந்து பார்க்கக் கூடாது என்று நிபந்தனை பேசிக் கொண்டு ஓரறைக்குட் புகுந்து கதவை அடைத்துக் கொண்டான். ஆனால் பொறுமையற்ற அரசன் மூடியிருந்த அறையைத் திறந்து பார்த்தான். தச்சனைக் காணவில்லை. மூன்று கட்டைகள் அரைகுறையாகச் செதுக்கப்பட்டுக் கிடந்தன. பிறகு இந்திரத்துய்மனன் பல யுகங்கள் தவமிருந்த பிறகு இறைவன் நான்முகக் கடவுளாகப் பூரி வந்தடைந்தான். இன்று காட்சியளிக்கும் மூன்று மூர்த்திகளையும் ஆகம முறைப்படி தேரில் வைத்துப் பூரிக்கு இழுத்து வந்தான். இதனால் இத்தலத்தில் தேர்த்திருநாள் பெருந்திருநாளாகும். இஃது ஆனித் திங்கள் பௌர்ணமியன்று கொண்டாடப்படுகிறது. சகநாதப்பெருமாள் முழுத்திங்கள் நாள் அன்று கடலில் நீராடிப் பதினைந்து நாட்கள் கருப்பவாசஞ் செய்த பிறகு பதினாறு சக்கரங்கள் கொண்ட தேரில் அமர்ந்து ஊர்வலமாக இந்திரத்துய்மனது பெயர் கொண்ட இடத்திற்கு இழுத்துச் செல்லப் படுவார். இவ்விடத்தில் பூம்பொழிலில் பெருமாள் எட்டு நாட்கள் விடாயாற்றிக் கொண்ட பிறகு கோயிலுக்குள் திரும்பச் சென்று எழுந்தருள்வார். கோடிக்கணக்கான மக்கள் உலகப் புகழ் பெற்ற இத்தேரை இழுப்பதற்குப் பூரிக்குச் செல்வார்கள்.

**பூரு** - யயாதி மன்னனுக்கும் சன்மிட்டை யென்பவளுக்கும் புதல்வனாகத் தோன்றியவன். தந்தையினுடைய மூப்பைத் தான் ஏற்றுக் கொண்டு தன்னுடைய இளமையைத் தன்னுடைய தந்தைக்குக் கொடுத்தவன். இதனால் தந்தையின் அரசுரிமை முதலியவைகளை இவன் அடைந்தான்.

**பூலோககைலாசம்** - இஃது இமய மலையின் பின் பாகத்தில் உள்ளது; வெள்ளிமயமானது. இது முன் காலத்தில் மனிதர்களால் நெருங்க முடியாமல் இருந்தது. ஆனால் இந்நாளில் மனிதர்களும் அம்மலையின் அடிவாரத்திற்குச் சென்று அதனை வலஞ் செய்து வணங்கி வருகின்றனர். மனிதர்கள் கண்ணுக்கு அது வெள்ளியாகத் தெரிவதில்லை.எப்பொழுதும் பனியால் மூடப்பட்டு வெண்மையாகத்தான் புலப்படும். மலையின் சுற்றளவு முப்பது மைல் என்பர். மலையைச் சுற்றி வரலாமே தவிரச் சிவபெருமான் எழுந்தருளியுள்ள உள்ளிடத்திற்குச் செல்ல இயலாது. இக்கைலாசத்தைத் தவிர மகாகைலாசம் ஒன்றும் உண்மையால் இது பூலோக கைலாசம் என்று பெயர் பெற்றது. இக்கைலாச யாத்திரையைக் குறித்து நூல்களும் எழுதப்பட்டுள்ளன.

**பூவனூர்** - சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று தஞ்சைமாவட்டத்தில் நீடாமங்கலத்திற்குத்தென்மேற்கேஇரண்டுமைல் தொலைவில்உள்ளது சுகமுனிவர் முதலானோர் பூவனம் (பூம்பொழில்) வைத்து இறைவனை வழிபட்ட ஊர். சுவாமி பெயர் புட்பவனநாதர். இறைவி பெயர் கற்பகவல்லி.

**பூழிநாடு** - செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த பன்னிரண்டு நாட்டில் ஒன்று. இதனைக் கொடுந்தமிழ் நாடென்று இலக்கண உரையாசிரியர்கள் கூறுவர். பூழி - புழுதி. இது சேர நாட்டின் ஒரு

பகுதி. இந்நாட்டினர் பூழியர் எனப்பெறுவர்.

**பூஷாவிதாதா** - உடன் பிறந்தவர்களாகிய பூஷா விதாதா என்னும் இருவர் இல்வாழ்க்கையில் வெறுப்படைந்து இல்லத்தை விட்டு வெளியேறினர். தவஞ் செய்து வீடுபேற்றையடைய வேண்டுமென்று முடிவு செய்து காட்டிற்குச் சென்று தவஞ் செய்தார்கள். இறைவன் அவர்கட்குக் காட்சியளித்து வேண்டியது யாதென உசாவினார். இருவரும் தங்கட்கு வீடு பேற்றை யளிக்க வேண்டினார்கள். வீடுபேற்றையடைவதற்கு அவர்கள் இன்னுந் தகுதியை அடையவில்லையென்றும் மேலுமொரு பிறப்பெடுக்க வேண்டுமென்றுங் கூறினார், இறைவன். அவர்கள் இறைவனுடைய சொல்லைக் கேட்கவில்லை. இப்பொழுதே கட்டாயம் வீடு பேற்றைக் கொடுத்தருள வேண்டுமென்று இறைவனைக் கட்டாயப் படுத்தினார்கள். இறைவன் அவர்களிருவருங் கழுகுகளாகிச் சிவப்பதி தோறுஞ் செல்லும்படி கட்டளையிட்டுச் சென்று விட்டார். திருக்கழுக்குன்றத்திற்கு நாடோறும் வரும் கழுகுகள் அவர்களே யென்பர்.

**பெசன்ட் அம்மையார்** - இந்திய சுதந்திரத்துக்கு அரும்பாடு பட்ட இவர், உலகப் புகழ் பெற்ற பிரமஞானக் கொள்கையினர். இந்திய தேசியக் காங்கிரஸ் மகாசபையில் தலைவர்களாயிருந்தவர்களில் முதல் பெண் தலைவியார் இவர். இங்கிலாந்து நாட்டில் இலண்டனில் 1847 அக்டோபர் முதல் நாள் இவர் பிறந்தார். 1889இல் பிரமஞானக் கொள்கையை வகுத்த ரஷ்ய அறிஞர் பிளவட்ஸ்கி அம்மையாரின் சீடரானார். 1893இல் இந்தியா போந்து, அதுமுதல் தம்மை இந்தியராகவே ஆக்கிக் கொண்டார். 1898இல் காசி நகரத்தில் இந்துக் கல்லூரியையும், 1904 இல் மத்திய இந்து உயர்நிலைப் பள்ளியையும் நிறுவினார். 1907 இல் சென்னை அடையாற்றில் அமைந்துள்ள பிரமஞான சங்கத்துக்குத் தலைவியானார். உலகில் எல்லா நாடுகளுக்கும் சென்று பிரமஞானக் கொள்கையைப் பரவச் செய்தார். ஆங்கில நாவலர்களுள் சிறந்தவராக மதிக்கப்பட்டார்; 1916 இல் 'இந்திய ஹோம்ரூல் லீக்' என்னும் சங்கம் நிறுவி அதன் தலைவியாயினர். தீவிர அரசியல் பிரசாரம் காரணமாக 1917இல் அரசாங்கத்தாரால் கைது செய்யப்பட்டனர். காங்கிரஸின் முதல் தேசியக் கொடியை ஏற்றியவர் இவர் தாம். 1933இல் இறந்தார்.

**பெச்சமா தேவியார்** - இவள் சிவபிரானிடத்தில் மிகுந்த அன்பு கொண்டவள். சிவபெருமான் தாயிலி. தாயிருக்கின் பாம்பணிதல் நஞ்சுண்டல் முதலியவைகளைப் பொறுக்க மாட்டாள் என்று எண்ணி வருந்தினாள். சிவபெருமான் இவளுக்கெதிரே வந்து சிறு குழந்தையாக விளையாடினார். இவள் அச் சிவக்குழந்தையை எடுத்து வளர்த்தாள். ஒரு நாள் குழந்தை மிகுதியாக அழுதது. இவள் இக்குழந்தை இனிமேற் பிழைக்காது என்று முடிவு செய்து குழந்தைக்கு முன்பு உயிர்விட எண்ணினாள். வாளைக் கொண்டு தன் கழுத்தையரியத் தொடங்கினாள். அப்பொழுது சிவபிரான் காட்சி தந்து "உனக்கு வேண்டியதைக் கேள்" என்றார். இவள் "உம்முடைய உடம்பு எப்பொழுதும் நலத்தோடிருப்பதற்கு வரந்

கொடும்" என்று கேட்டாள். சிவபிரான் அவ்வாறேயருளி இவளுக்கு அம்மவ்வை என்று பெயரிட்டு மறைந்தார்.

**பெண்ணாகடம்** - நடுநாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. விருத்தாசலத்திற்குத் தென்மேற்கில் உள்ள புகை வண்டி நிலையம். தேவப் பெண்களும் காமதேனுவும் வெள்ளை யானையும் (பெண் - ஆ - கடம்) வழிபாடு செய்தபடியினால் ஊர் பெண்ணாகடம் என்னும் பெயரையடைந்தது. இங்குள்ள திருக்கோயிலுக்குத் தூங்கானை மாடம் என்று பெயர். கலிக்கம்ப நாயனாருடைய ஊர். அப்பர் தம்முடைய தோளில் சூலக்குறியும் இடபக் குறியும் பொறித்தருளப் பெற்ற ஊர். மெய்கண்ட தேவரின் தந்தை அச்சுதகளப்பாளர் இருந்த ஊர்.

**பெத்தான் சாம்பான்** - இவன் திருத்தில்லைப்பதியில் வாழ்ந்திருந்தவன். திருவடிப் பேறு பெற வேண்டும் என்னும் எண்ணத்தோடு திருமடைப்பள்ளிக்கு விறகு கொண்டு வந்து போட்டுத் திருப்பணி செய்து கொண்டிருந்தான். ஒரு நாள் அம்பலவாணர் வெளிப்பட்டுப் பெத்தான் சாம்பானுக்கு அருள் புரியத் தொடங்கினார். "அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங், குடியார்க் கெழுதிய கைச்சீட்டுப் - படியின்மிசைப், பெத்தான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கை செய்து, முத்தி கொடுக்க முறை" என்னுஞ் செய்யுள் ஒன்றை எழுதி, "இதனைக் கொண்டுபோய்க் கொற்றவன் குடியில் உள்ள உமாபதி சிவாசாரியாரிடம் கொடுப்பாயாக" என்றார். பெத்தான் சாம்பான் மறு நாள் முதல் உமாபதி சிவாச்சாரியாருடைய மடத்திற்கு விறகு போட்டுப் பணிபுரிந்து கொண்டிருந்தனன். ஒரு நாள் மழை மிகுதியாகப் பெய்து கொண்டிருந்தது. அன்று விறகு கொண்டுவர முடியவில்லை. அதனால் மடத்துச் சமையல் வேலை தாமதமாயிற்று. காரணத்தை உசாவியறிந்த உமாபதியார் மறுநாள் பெத்தான் சாம்பான் விறகு கொண்டு வரும் பொழுது தம்மிடம் அழைத்துக்கொண்டு வருமாறு கட்டளையிட்டார். மறு நாள் அடியவர்கள் பெத்தான் சாம்பானை உமாபதியாரிடம் அழைத்துக் கொண்டுபோய் விட்டனர். அவ்வளவில் பெத்தான் சாம்பான் அம்பலவாணர் தன்னிடங் கொடுத்திருந்தசீட்டை உமாபதியாரிடங் கொடுத்து வணங்கினன். உமாபதியார் சீட்டைப் படித்துப்பார்த்து மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார்; பெத்தான் சாம்பானுக்குச் சிவதீக்கை செய்து உடனே திருவடிப் பேறெய்தச் செய்தார். இதனைப் பெத்தான் சாம்பானுடைய மனைவியறிந்தாள். உண்மையை உணர்ந்து கொள்ளுந் திறமை அவளுக்கில்லை. தன் கணவனை மந்திர வலிமையால் கொன்று விட்டதாக அம்மடமாது எண்ணினாள். அரசன்பாற் சென்று முறையிட்டாள். அரசன் உமாபதியாரிடஞ் சிறிதும்ஐயங் கொள்ள வில்லை. முறையிட்டவளைத் தெளிவிக்கும்பொருட்டு அவளையும் அழைத்துக் கொண்டு உமாபதியாரிடம் வந்தான்; உமாபதியாரை வணங்கினான். பெத்தான் சாம்பானுடைய மனைவியைத் தெளிவிக்கும் பொருட்டு இன்னொரு புதுமை இயற்றியருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். உமாபதியார் அங்குள்ள

வர்கள் எல்லாரையும் பார்த்தார். வீடுபேற்றிற்குப் பக்குவம் வாய்ந்தவர்கள் எவரும் அங்கில்லை.

அங்கு முள்ளிச்செடி ஒன்று இருந்தது. அஃது திருமுழுக்கு நீரால் வளர்ந்து மடத்துக்குக் காய்களைக் கொடுத்துப் பயன் நல்கி வீடுபேற்றிற்குத் தகுதியுடையதாக இருந்தது. உமாபதியார் அம்முள்ளிச் செடிக்கு அப்பொழுதே சிவ தீக்கை செய்தார் அச்செடி பலருங் காண விண்ணிலிருந்து வந்த விமானத்திலேறி மேலே சென்றது. அனைவருந் தொழுதனர். அரசனும் மகிழ்ச்சியடைந்தான். பெத்தான் சாம்பான் மனைவியும் உண்மை தெளிந்து உமாபதியாரின் அடி தொழுது சென்றாள்.

**பெரிய அணை** - காவிரியாற்றின் குறுக்கே திருச்சிராப்பள்ளிக்கு 10கல்தொலைவில்இஃது அமைந்துள்ளது. கல்லணை யெனவும், கிராண்டு அணைக்கட்டு எனவும் வழங்கப்படுகிறது. மிகவும் தொன்மையானது. இரண்டாவது நூற்றுண்டில் சங்ககாலச் சோழர்கள் இதைக் கட்டியதாகக் கூறுப. காவிரியின் குறுக்கேயுள்ள மேட்டூர் அணை, கண்ணம்பாடி அணை முதலிய எல்லாவற்றையும் விடப் பெரிய அணையே பழைமை வாய்ந்தது. முதலில் கட்டிய போது இதன் நீளம் 1080அடி, அகலம் 40-60அடி, உயரம் 15-18அடி. 1806இல் இந்த அணையை உயர்த்தினர். 1830 இல் மணல் நீக்க மதகுகள் (Sand - Scouring Sluices.) அமைத்தனர். 1839இல் இந்த அணையைப் பாலமாகப் பயன்படுத்தி இதன் மீது சாலை அமைத்தனர். பாலமாக்குவதற்குக் கட்டைகள் (Piers) கட்டிய பின் அணையின் அகலம் 735அடியாயது. 1886இல் 2அடி 10அங்குல உயரமுள்ள தானியங்கி வீழ் மூடு கதவுகளை (Shutters) அமைத்தனர். 1899 இல் இவற்றை நீக்கி விட்டு 32' 5' அளவுள்ள உயர்த்து மூடு கதவுகள் அமைத்தனர்.

**பெரிய குளம்** - இவ்வூர் மதுரை மாவட்டத்தில் பன்றிமலைச் சாரலின் கீழ்த்தென்பால் ஓடும் வராக நதியின் தென் கரையில் இருக்கிறது. இவ்வூருக்குத் திருக்குளந்தை எனவும் பெயர் உண்டு பன்றிக் குட்டிகளை அமைச்சர்களாக்கிய பரமன் திருவிளையாடலைத் திருவிளையாடற் புராணம் ஓதினுர் அனைவரும் உணர்வர். பன்றியின் முகம் பெற்ற அப்பன்னிருவரும் முருகக் கடவுளின் திருவருளைப் பெற்று அக்கடவுளுக்குத் திருமுழுக்குச் செய்வதற்கு உண்டாக்கிய குளமே பெரிய குளமாகும்.

**பெரிய மனத்துளார்** - இவர் தில்லைவாழ் அந்தணர்களில் ஒருவர். ஈழவள நாட்டில் திருப்பணி செய்திருந்த மகளுடைய வேண்டுகோட்படி திசையுக்கிர சோழன் ஈழவள நாட்டிற்குத் தில்லைவாழந்தணர்களில் ஒருவரை அனுப்ப எண்ணினுன். ஒருவரை அனுப்புமாறு தில்லைத் திருக்கோயில் தலைவனுக்குக் கட்டளையனுப்பினுன். இதனைக் கண்ட திருக்கோயில் தலைவன் அந்தணர்கள் கப்பலேறுவதும் அரக்கர் நாடாக விருந்த இலங்கையிற் போய்த் தங்கியிருப்பதுங் கூடாதே இதற்கு யாது செய்யலாம் என்று எண்ணமிட்டான். திருக்கோயிலிலேயே மூன்று நாட்கள் பட்டினியாக இருந்தான். அப்பொழுது கனவிலே, "கிரிமலைச்சாரல் புனித நீரினுலும் திருக்கோயிலாலும்

மிகச் சிறந்த சிவப்பதியாக விளங்குகின்றது. காசியந்தணர்களும் அங்கே இருக்கிறார்கள். அந்தணர்கள் தங்களுடைய நாட் கடன்களைத் தவறாமல் செய்வதற்கு எத்தகைய இடையூறும் உண்டாகமாட்டாது. நகுல முனிவர் என்பவர் அவ்வூரின் பெருமையை எண்ணி அங்குத் தவஞ் செய்து கொண்டிருக்கும்போது அவ்விடத்திற்கு அந்தணர்களை அனுப்புவதைக் குறித்துக் கவலைப்பட வேண்டியதில்லை" என்று திருவருளின் அறிவிப்பு உண்டாயிற்று. ஆகவே கோயில் தலைவன் பெரிய மனத்துளார் என்னும் பெயரையுடைய இவரைச் சோழ மன்னனிடம் அனுப்பி வைத்தான். இவர் முருகக் கடவுள் திருவுருவம் முதலியவைகளோடு புறப்பட்டுத் தோணியேறி ஈழவள நாட்டில் கசாத்துறை என்னுமிடத்திற் போய் இறங்கினார். முருகக் கடவுளுடைய திருவுருவம் வந்திறங்கிய காரணத்தால் அத்துறைக்குக் காங்கேயன் துறையென்று பெயருண்டாகியது.

**பெரிய புராணம்**-திருத்தொண்டர் புராணமாகிய அறுபத்துமூன்று நாயன்மார்கள் வரலாறு பெரிய புராணம் எனவுஞ் சிறப்புப் பெயரால் வழங்கப் பெறும். மற்றைப் புராணங்களைப் போலல்லாமல் இதனுள் அறுபத்துமூன்று புராணங்கள் அடங்கியிருத்தலின் பெரிய புராணம் என்று பெயர் பெற்றது. "தொண்டர் தம்பெருமை சொல்லவும் பெரிதே" என்பவாகலின் இறைவனுடைய பெருமைகளைப் புகலும் புராணங்களை விட அவனுடைய அடியார்களின் உண்மை வரலாறுகளை உரைக்கும் இஃது ஏற்றம் மிக்குடையதாகலின் ஆன்றோர்களால் இவ்வாறு உரைக்க நின்றது எனினுமாம்.

**பெரிய திருமலை நம்பி** - ஆளவந்தாருடையமாணவர். இராமாநுசருக்கும் எம்பாருக்கும் மாதுலர். இராமாநுசருக்கு ஆசாரியருமாவார். இராமாநுசர் இராமாயணத்தின் பொருளை இவரிடத்தில்தான் கேட்டனர். திருவேங்கடமுடையானுக்குத் தொண்டு செய்து கொண்டு திருமலையிலேயே வாழ்ந்திருந்தவர். இராமாநுசர் திருமலைக்கு எழுந்தருளியகாலத்தில் எதிர்கொண்டு வரவேற்றுப் போற்றியவர். "தேவரீர் எழுந்தருள வேண்டுமோ? வேறு சிறியவர்கள் இலரோ?" என்ற போது, "நான்கு திருவீதிகளிலும் ஆராய்ந்து பார்த்த விடத்திலும் என்னைப் பார்க்கினும் சிறியவர்களைக் கண்டிலேன்" என்றுமறுமொழி கூறியவர்.

**பெரியன்** - இவன் சோழவள நாட்டில் உள்ள புறந்தை என்னும் ஊரில் வாழ்ந்தவன். புறந்தை என்பது இந்நாளில் பொறையாறு என வழங்குகின்றது. இவனைப் புலவர்கள் பாடிப் பரிசில் பெற்றனர். "பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான், பரியுடை நற்றேர்ப் பெரியன்" என்று இவன் பாராட்டப் பெற்றிருக்கிறான்.

**பெரியாவுடையார் கோயில்** - பழனிக்கு வடக்கே மூன்று கல் தொலைவில் உள்ள ஒரு சிவன் கோயில். இதனைப் பழகியில் உள்ளவர் பிரியாவுடையார் கோயில் என்பார்கள். இதனில் புகழ் பெற்ற சில சிற்பங்கள் உள்ளன.

**பெரியவாச்சான்பிள்ளை**-நம்பிள்ளையினுடைய மாணவர். அவருடைய திருவருளுக்கு உரிமையானவர். திருவாய்மொழிக்கு

இருபத்து நாலாயிரப்படி என்னும் விரிவுரையை இயற்றியவர். திவ்யப்பிரபந்தத்தில் மற்றை மூவாயிரங்கட்கும் விரிவுரை இயற்றியவரும் இவரே. இவர் பிறந்த ஊர் கும்பகோணத்திற்கு அண்மையில் உள்ள சேங்கநல்லூர். திருவரங்கத்திலேயே வசித்திருந்தவர். கிருட்டிணபாதர், அபயப்பிரதானர் என்னும் வேறு பெயர்களும் இவருக்குண்டு. தனிசுலோகி, பரந்தரகசியம், மாணிக்கமாலை, நவரத்நமாலை, சகலபிரமாண தாற்பரியம், அபயப் பிரதான வியாக்கியானம்,சரமரகசியம்,அநுசந்தான ரகசியம், நிகமனப்படி என்பன இவர் இயற்றிய நூல்கள்.

**பெரியாழ்வார்** - தென்பாண்டி நாட்டிலுள்ள திருவில்லிபுத்தூரிலே அந்தணர்குலத்தில் பிறந்து விட்டுணு சித்தர் என்னும் திருப்பெயர்பெற்றுவிளங்கியவர். ஆழ்வார்களுள் ஒருவர். ஆண்டாளுக்குத் தந்தை. திருநந்தவனம் உண்டாக்கித் திருமாலை கட்டுதல் முதலிய தொண்டுகளைச் செய்து கொண்டு திருமாலை இடையருது வழிபட்டிருந்தவர். மதுரையில் சீவல்லபன் என்ற பாண்டியன் சமய விசாரஞ் செய்வதில் மிகுந்த விருப்பமுடையவனைப் பரமார்த்ததத்துவம் இன்னதென்பதை விளக்கும் பெரியார்க்குரியது என்று தன் அரண்மனையிற் கட்டிய பொற்கிழியைத் திருமால் திருவருளால் சமயவாதிகள் பலரோடு சொற்போர் செய்து பெற்றவர். அதனால் பட்டர்பிரான்என்றசிறப்புப்பெயரும் இவருக்குண்டாகியது. இவர் வாழ்ந்திருந்த காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டு. திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி என்பன இவர் இயற்றிய நூல்கள்.

**பெருங்கதை** - இஃது உதயணனுடைய கதையைக் கூறுவது. உதயணன் என்பவன் குருமரபில் பிறந்தவன். வத்தநாட்டில் உள்ள கௌசாம்பி என்னும் நகரத்தரசனாகிய சதானிகனுக்கு மிருகாபதி என்பவளிடம் பிறந்தவன். சதானிகன் என்பவன் பாண்டவர் காலத்திற்குப் பிறகு அரசாட்சி செய்தான். அவனுடைய பேரனின் மகனாகிய நிசக்குனு என்பவன் காலத்தில்அத்தினபுரம்அழிந்து போயிற்று. எனவே அவன் கௌசாம்பி நகரத்தைத் தலைநகராகக்கொண்டு அரசாட்சி செய்தான்.அவனுக்குப்பதினொருவது தலைமுறையில் தோன்றிய சதானிகனே உதயணனுடைய தந்தையாவன். இக்கதையை விட்டுணுபுராணம் கூறுகிறது. கதிரவன் உதிக்குங் காலத்தில் பிறந்தவனாகையால் உதயணன் எனப்பட்டான்.

கௌசாம்பி நகரில் சதானிகனுடைய மனைவியாகிய மிருகாபதி கருவுற்றிருந்தாள். கருவுற்றிருந்த பத்தாவது திங்களில் ஒருநாள்சிவந்தஆடைஅணிந்து நிலாமுற்றத்தில் படுத்திருந்தாள். சிம்புட்பறவையொன்று மிருகாபதியைப் பெரிய தசைத்துண்டம் என்று எண்ணியது. அப்பறவை பேராற்றலுடையதாகலின் மிருகாபதியைக்கட்டிலோடு தூக்கிக் கொண்டு விபுலம் என்னும் மலைக்குச் சென்றது. பிறகு அப்பறவை உண்ணத்தொடங்கியபொழுது உண்மையை உணர்ந்து பறந்து போய்விட்டது. அங்குக் கதிரவன் உதிக்குங் காலத்தில் உதயணன் பிறந்தான். அம்மலையில்தவஞ்செய்துகொண்டிருந்த மிருகாபதியினுடைய தந்தை

யாகிய சேடகர் தாயையும் பிள்ளையையும் பாதுகாத்து வந்தார். அங்கிருந்த பிரமசுந்தர முனிவருடைய மகனாகிய யூகி என்பவனுடன் உதயணன் வளர்ந்து வந்தான்.

உதயணன் கல்விகேள்விகளில் வல்லவனானான். தன்னுடைய யாழின் இசையால் தெய்வயானையொன்றைவசப்படுத்தினான். அந்தயானை, "நான் உண்ணுமுன் நீ உண்டால் நான் உன்னை விட்டுப் பிரிந்து போய்விடுவேன்" என்னும் நிபந்தனையோடுஉதயணனிடம் இருந்துவந்தது. முதலில் உதயணன் தன் மாமனாகிய விக்கிரமனுடைய அரசுரிமையையும் பிறகு தன் தந்தையின் அரசுரிமையையும் பெற்று அரசாட்சி செய்திருந்தான். உதயணன் ஒருநாள் தெய்வயானை உண்ணுமுன் தான் உண்டு விட்டான் ஆகையால்அஃது அவனைவிட்டு நீங்கியது. அதனால் உதயணன் வருந்தினான். யாழுங்கையுமாக அதனைத்தேடிக்கொண்டு திரிந்தான். அப்பொழுது உச்சயினி நகரத்தரசனாகிய பிரச்சோதனன் என்பவனால் சிறைப் படுத்தப்பட்டான். இதனை உணர்ந்த யூகி அந்நகரத்தில் உள்ள நளகிரி என்னும் பட்டத்து யானைக்கு மதம் பிடிக்குமாறுசெய்துவிட்டான். மதம் பிடித்த நளகிரியை அடக்கும் பொருட்டு உதயணன் சிறையில் இருந்து விடுதலை செய்யப்பட்டான். உதயணன் மதம் பிடித்தயானையை அடக்கி விட்டான். பிரச்சோதனன் மகிழ்ந்து அவனைத் தன் மகளாகிய வாசவதத்தைக்கு யாழ் கற்பிக்குமாறு ஏற்படுத்தினான். அதனால் உதயணனுக்கும் வாசவதத்தைக்குங் காதல் உண்டாயிற்று. உதயணன் வாசவதத்தையோடு அவ்விடத்தைவிட்டு நீங்கிச் சயந்தி என்னும்நகரத்திற்குச் சென்று அவளை மணந்து கொண்டான். அவளுடையஇன்பத்தில்மயங்கி எல்லாவற்றையும் மறந்திருந்தான்.

உதயணன் சில நாட்கள் வாசவதத்தையைப் பிரிந்திருந்தால்தான் அரசியலில் அவனுடைய உள்ளஞ் செல்லுமென்று எண்ணினான் யூகி. தான் இறந்துவிட்டதாக ஒரு பொய்ச் செய்தியைப் பரப்பினான். மேலும் ஒருநாள் உதயணன் வேட்டையாடச் சென்றிருந்தபொழுதுசாங்கியத்தாய் என்பவளுடைய உதவியால் வாசவதத்தையை அழைத்துக் கொண்டு உதயணன் தங்கியிருந்த வீட்டிற்கும் நெருப்பை வைத்து விட்டுப் போய் விட்டான். வேட்டையில் இருந்து திரும்பிவந்த உதயணன் தன் வீடு எரிந்திருப்பதைப் பார்த்தான்.வாசவதத்தையும்இறந்து போனாள் என்று எண்ணி வருந்தினான். பிறகு இறந்துபோன யூகி வாசவதத்தை ஆகியோரைப் பிழைக்கச்செய்யும்நோக்கத்துடன் இராசகிரிமலையில் இருந்த பெரியவர் ஒருவரிடஞ் சென்றான்.

இராசகிரிக்கு ஏகிய உதயணன் அந்நகரத்து அரசனுடைய தங்கையாகிய பதுமாபதியை மணந்து கொண்டான். பிறகு கௌசாம்பிக்கு வந்து அந்நகரை யாண்டான். அங்கு யூகி வாசவதத்தையோடு வந்து சேர்ந்தான். அவர்களைக்கண்ட உதயணன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். பிறகு உதயணன் மானனீகை, விரிசிகை என்பவர்களை மணந்தான். சில ஆண்டுகட்குப் பிறகு வாசவதத்தையின் வயிற்றில் நரவாண

தத்தன் என்பவன் பிறந்தான். அவன் வளர்ந்து மதனமஞ்சிகை என்பவளை மணந்தான். மதன மஞ்சிகையை வித்தியாதரன் ஒருவன் கவர்ந்து சென்றான். நரவாணதத்தன் அவனுலகை யடைந்து அங்கிருந்த அரசர் களை வென்றான். வித்தியாதரச் சக்கரவர்த்தியாக வாழ்ந்தான். உதயணன் தனக்குப் பதுமாபதி யிடம் பிறந்த கோமுகனுக்கு அரசபதவியை அளித்துவிட்டுத் துறவு பூண்டு தவஞ் செய்யச் சென்றான். இந்நூல் பெருங் காப்பியவகையைச் சேர்ந்தது. ஆசிரியப்பாவால் அமைந்தது. உதயணன் உச்சயினி நகரத்துப் பட்டத்துயானையைஅடக்கியது முதல் வித்தியாதரன் மதன மஞ்சிகையைத் தூக்கிச்சென் றது வரையில்உள்ள வரலாறே இப்பொழுது கிடைத்திருக்கி றது. அவை உஞ்சைக்காண்டம் இலாவாணகாண்டம், மகத காண்டம், வத்தவகாண்டம், நரவாணகாண்டம் என்னும் ஐந்து காண்டங்கள். அவற்றுள் உஞ்சைக்காண்டத்தின் முற் பகுதியும் நரவாணகாண்டத் தின் பிற்பகுதியும் அழிந்து போய்விட்டன. கிடைத்துள்ள பகுதிகள் அச்சாகி வெளிவந் துள்ளன.

பிருகத்கதா என்னும் நூலை ஆதாரமாகக் கொண்டு இந் நூல் தோன்றியதாகத் தெரி கிறது. அது குணாட்டியர் என் பவரால் பைசாச மொழியில் இயற்றப்பட்டதென்றும் அதில் பல்வேறு கதைகள் உள்ளன வென்றும் பைசாச மொழியில் இருந்த நூலைத் துர்விநீதன்என் னும் அரசன் வடமொழியிற் செய்தான் என்றும் ஆராய்ச்சி யாளர்கள் கூறுகின்றனர்.

**பெருங்குன்றூர்கிழார்**-சங்ககாலப் புலவர். இவர் குடக்கோ இளஞ் சேரலிரும்பொறை என்னும் சேரமன்னனைப் பாடிய பத்துச் செய்யுட்கள் பதிற்றுப்பத்தில் ஒன்பதாம் பத்தாக அமைந்துள் ளன. அப்பத்தின் இறுதியில் உள்ள பதிகத்தின்படி இம் மன்னன் விச்சிக்கோன் என்ப வனையும் ஒரு சோழனையும் பழையன் மாறன் என்பவனை யும் வென்றவனென்றும் இவர் இவனிடம் பெற்ற பரிசில் முப் பத்திரண்டாயிரம்பொற்காசும் வேறு சில பொருள்களும் என்று தெரிகின்றன. கடைச்சங் கத்தில் இருந்துதமிழ்ஆராய்ந்த புலவர்களில் இவர் ஒருவர் என்று இறையனார் களவியலு ரையால் தெரிகின்றது.

**பெருங்கோப்பெண்டு**-இவள் பூதப் பாண்டியனுடைய மனைவி. பாண்டிநாட்டின் வடவெல்லைப் பகுதியாகிய ஒல்லையூர் நாட் டைச் சோழவேந்தர் கைப் பற்றிக் கொண்ட படியினால் பாண்டியர் குடிக்குச் சிறுமை உண்டாகியது. சோழரோடு போர் செய்து இழந்தநாட்டை மீட்டுச்சிறுமையைப் போக்கிய பெருமையுடையவன் இந்தப் பூதபாண்டியன். இதனால் இவன் ஒல்லையூர் தந்த என்னும் அடைமொழியோடு சான்றோர் களாற்சிறப்பித்துப்பாராட்டப் பெற்றவன். இந்தப்பூதபாண்டி யன் இறந்தான். அவனுடைய மனைவியாகிய இவள் தீப் பாய்ந்து உயிர் விடுவதற்கு முடிவு செய்தாள். இவள் அர சியல் நீதிகளையெல்லாம் நன் குணர்ந்தவள். மறத்திலும் மாண்புடையவள். அரசனுக்குப் பின் நாட்டை ஆள்வதற்கு வேறுயாருமில்லையாதலின் இவளே அரசாட்சியை மேற் கொள்ளவேண்டுமென்றுந் தீப் பாய்ந்து உயிர் விடலாகாது என்றும் பெரியோர்கள் பலரும் வற்புறுத்தினர். இப்பெரியோர்

கள் நாட்டின் நன்மையை நாடி இவ்வாறு கூறினர். ஆனால் இவள் அவர்களது வேண்டு தலைக் கேளாமல் செய்யுள் ஒன்றினால் அவர்களுக்கு மறு மொழி கூறிவிட்டுத் தீப் பாய்ந்து உயிர் துறந்தாள். இவள் தீப்பாய்ந்த காலத்தில் மதுரைப் பேராலவாயார் என் பவர் உளம் வருந்திப் பாவொன்று பாடியுள்ளார்.

**பெருஞ்சாத்தன்-(க)** இவனுடைய முழுப்பெயர் சோழநாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ் சாத்தன் என்பது. இவன் ஆயிரத்து எண்ணூறு ஆண்டு கட்கு முன்பு சோழவள நாட் டிலே பிடவூர்என்னும் ஊரிலே வாழ்ந்திருந்தான். வேளாண் மரபினன். முடிமன்னர்கட்கு மகட்கொடைசெய்துவந்த வழி முறையினன். ஏர்கள் பல வைத்துப் பயிர்த்தொழில் செய்து செல்வ நலத்தைப் பெருக்கினான். செல்வத்துப் பயன்ஈதலே என்று பலருக்கும் உதவி செய்து பெருங்கொடை யாளனாகத் திகழ்ந்திருந்தான். நக்கீரர் இவனுடைய சிறப்பை யுணர்ந்து ஒருமுறை இவ னுடைய இல்லத்துக்குவந்தார். அவரைக்கண்டவுடன் இவன் விரைந்தெதிர் கொண்டு போற் றிப் பாராட்டினான். தன்மனைவி யிடம் ''இப்புலவர் பெருமானை என்போல் மதித்துப்போற்றுக'' என்று கூறிப் போற்றச் செய் தான். பலநாள் உடன் வைத் திருந்து விருந்து செய்தான். பிறகு மிகுந்த பொருள்வழங்கி அனுப்பிவைத்தான். இவனு டைய பிடவூர் உறையூருக்குக் கிழக்கே யிருந்தது என்பது, ''செல்லா நல்லிசை உறந்தைக் குணாது,நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர், அறப் பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும்'' என்பதனால் பெறப் படுகிறது.

**பெருஞ்சாத்தன்-(உ)** இவனுடைய முழுப்பெயர் ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்பது. ஒல்லையூர் என்பது புதுக் கோட்டை நாட்டிலுள்ள ஊர் களில் ஒன்று. இப்பொழுது இவ்வூர் ஒலிய மங்கலம் என்று உரைக்கப்படுகிறது. சோழ நாட்டிற்கும் பாண்டி நாட்டிற் கும் எல்லையாக ஓடும் தென் வெள்ளாற்றின் தென்கரை தென்கோனாடு என்றும் வட கரை வடகோனாடு என்றும் வழங்கின. தென்கோனாட்டின் மேலைப்பகுதி ஒல்லையூர் நாடு. இந்த ஒல்லையூரில் வாழ்ந்த கிழானுக்குப் பெருஞ்சாத்தன் மகனவன். சோழர்க்கும் பாண்டியர்க்கும்ஏற்படும்போர் களில் இவன் பாண்டியர்பக்கம் நின்று போர் புரிந்து வெற்றி தேடித்தந்து பெருஞ்செல்வமும் பெற்று அதனை இரவலர்க்கு வழங்கிப் பெரும்புகழும் பெற் றான். இவனைக் குடவாயில் கீரத்தனார் பாடியுள்ளார்.

**பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதன்**- இவன் சேரமன்னருள் ஒருவன். இவனை உதியன் என்றும், உதி யஞ்சேரலென்றும், உதியஞ் சேரலன் என்றும் கூறுவர். இவனைக் கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமானும் மாமூல னாரும் பாடியுள்ளனர். பாண்ட வர்கட்கும் துரியோதனனுக்கும் போர் நடந்தகாலத்தில் இவன் இருதிறத்துப் படைகட்கும் நல்ல உணவிட்டான். இதனால் இவனைஅக்காலத்தினர் பெருஞ் சோற்றுதியஞ் சேரலாதன் என்று கூறலாயினர். இவனை முரஞ்சியூர் முடிநாகனார் என் னும் புலவர் பாடியிருக்கிறார்.

**பெருநற்கிள்ளி** - இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்

னும்இவன் சோழமன்னர்களில் ஒருவன். பலபோர்கள் செய்து வெற்றிபெற்றவன். இராசசூய வேள்வி என்னும் வேள்வியை இவன் செய்து முடித்தானாகையால் இராசசூயம் வேட்ட என்னும் அடைமொழி இவன் பெயருக்கு முன்னர் எய்தியது. இவனை உலோச்சனார் என்னும் புலவர் பாடியுள்ளார்.

**பெருந்தலைச் சாத்தனார்** - சங்ககாலப் புலவர்களில் ஒருவர். சாத்தனார் என்பது ஐயனாருடைய பெயர். பெருந்தலை என்பது ஏதேனும்ஒருகாரணம் பற்றிச் சேர்ந்திருக்காலம். குமணனிடம் பரிசில் வேண்டி இவர் சென்றார். அவனோ காட்டில் இருந்தான். இவர் அங்குச் சென்று கண்டார். குமணனோ தன்னுடையதலையைக்கொண்டு போய்த்தம்பியிடம்கொடுத்துப் பரிசில் பெற்றுக்கொள்ளுமாறு கூறினான். புலவர் வேறொரு சூழ்ச்சியால் உடன்பிறந்தார்களை ஒன்று சேர்த்தார். இவருடைய பாடல்கள் புறநானூற்றிற் சேர்க்கப்பட்டுள்ளன.

இவர் ஒருமுறை கடிய நெடுவேட்டுவன் என்னுங் குறுநில மன்னனிடம் பரிசில் பெறச் சென்றார். அவன் சிறந்த கொடையாளியாக இருந்தும் இவரை உவந்து பாராட்டிப் போற்றாமல் இரவலர் என்ற மனப்பான்மையோடு பொருள் வழங்கினான். இவர் அதனை ஒருபொருட்படுத்தாது உதறிச் சென்றார்.

**பெருமுத்தரையர்** – கொடையிற் சிறந்த ஒருவரையோ, சேர சோழ பாண்டியர் ஆகிய மூந்நில மன்னர்களையோ இச் சொல் குறிக்கு மென்பர். நாலடியார் என்ற நூலில் 200, 296 ஆம் செய்யுட்களில் பெருமுத்தரையர் என்னும் சொல் வருகிறது. முத்தரையர் என்னும் சிற்றரசர்கள் இருந்ததாகவும் கூறுகின்றனர். எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுக்களில் இவர்களைப் பற்றியறியப் பெறுகின்றன.

**பெருமாக்கோதையார்** - சேரமான் பெருமாளுடைய இயற்பெயர். சேரமானுடைய வாழ்நாளின் முற்பகுதியில் இப்பெயரே பெருவழக்காகவிருந்து நாளடைவில் மறைந்தது.

**பெரும்பதுமனார்** - சங்ககாலப்புலவர்களில் ஒருவர். பதுமனார் என்னும் பெயருடைய புலவர்கள் இருவர் இருந்தமையால் இருவரையும் வேறுபிரித்தறிதற்கு ஒருவர் பெரும்பதுமனார் என்று கூறப்பெற்றார். இவருடையபாடல்கள் புறநானூறு குறுந்தொகை ஆகியவைகளிற் சேர்க்கப்பட்டுள்ளன.

**பெரும்பற்றப்புலியூர்** - திருத்தில்லையின் பெயர்களில் ஒன்று. புலியூர் என்பது வியாக்கிரபாதர் வழிபாடுசெய்தபடியால் உண்டாகியது. முனிவர் தேவர் மனிதர் முதலிய யாவருக்கும் பெரும் பற்றுக்கோடாக அமைந்தபடியால் புலியூர் பெரும்பற்று என்னும் அடைமொழி புணர்ந்து பெரும்பற்றப் புலியூர் என நீண்டு நின்றது.

**பெரும்பாக்கனார்** - இவருடைய இடுகுறிப்பெயர்இன்னதென்று தெரியவில்லை. சங்ககாலப்புலவர்களில் ஒருவராகிய இவர் பெரும்பாக்கம் என்னும் ஊரினராதலின் பெரும்பாக்கனார் என்றே கூறப்பெற்றார். இவ்வாறு கூறப்பெறவேஇடுகுறிப் பெயர் மறைந்தொழிந்தது. இவருடைய பாடல் ஒன்று குறுந்தொகையில் வருகிறது.

**பெரும்பிடுகு முத்தரையன்சுவரன் மாறன்** - இவன் முத்தரையர் மரபிலே தோன்றியவன். திருச்சிராப்பள்ளியை அடுத்த செந்தலை என வழங்கும் சந்திரலேகைச் சதுர்வேதமங்கலம் என்ற ஊரில் உள்ள சிவன் கோயிற் சாசனத்தில் இவனுடைய திறத்தைப் பாடிய நான்கு புலவர்களுடன் இவன் சிறப்பு, பாக்களில் அமைந்துள்ளன. அப்புலவர்களில் பாச்சில் வேள்நம்பன் பாடியுள்ள பாக்களால் அழுந்தியூர், மணலூர், கொடும்பாளூர், காரை என்ற போர்க்களங்களில் மாறன் என்ற மறுபெயர் பெற்ற இம்முத்தரையன் வெற்றிபெற்றவன் என்றும், வல்லம், தஞ்சை என்பன இவனுக்குரிய ஆட்சியிடங்களாக அமைந்திருந்தன என்றும் அறியலாம். மற்றும் ஆசாரியர் அநிருத்தர், கோட்டாற்று இளம்பெருமானார், குவாவங்காஞ்சன் என்னும் புலவர்பாடிய பாடல்களும் சிதைந்தும் முழு உருவிலுங் காணப்பெறுகின்றன. குவாவங்காஞ்சன் பாடல்களில் இருந்து கண்ணனூர்,அண்ணல்வாயில் என்னும் இடங்களிலும் இவன் பகைவரை வென்றவன் என்று அறியலாம். பெருமுத்தரையர் என நாலடியாரில் குறிப்பிடப் பெறும் பெயர் இவனையே குறிப்பதாக இருக்கலாம்.

**பெரும்பெயர்வழுதி** - பாண்டிய மன்னர்களில்ஒருவனாகியஇவனுடைய முழுப்பெயர் 'பாண்டியன் கருங்கையொள் வாட்பெரும் பெயர்வழுதி' என்பது. இவன் கவுரியர் வழித்தோன்றலென்றும் தன்பால் வரும் இரவலர்களுடைய குறிப்பறிந்து அவர் வேண்டுவன கொடுக்கும் சிறந்த வள்ளல் என்றும் கூறுவர். இவனை இரும்பிடர்த் தலையார் என்னும் புலவர் பாடியுள்ளார்.

**பெருவழுதி** - பாண்டிய மன்னர்களில் ஒருவனாகிய இவனுடைய முழுப்பெயர் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பது. இப்பாண்டியன் பலவேள்விச்சாலைகள் அமைத்துப் பல வேள்விகளைச் செய்தவன். இவன் குமரிநாடும் பஃறுளியாறும் கடலால் விழுங்கப்படுவதற்கு முன்பே தமிழகத்தில் வாழ்ந்திருந்தவன் என்று தெரிகிறது. இவனைக் காரிகிழார் என்னும் புலவர் பாடியுள்ளார். மற்றும் நெட்டிமையார் நெடும்பல்லியத்தனார் முதலியவர்களும் பாடியுள்ளனர்.

**பெருவழுதி** - இவனுக்குப் பின்னாளில் வழங்கியபெயர் கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என்பது. இவன் பழைய பாண்டியமன்னர்களில் ஒருவன். சேரமான் மாரிவெண்கோவும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும் இவனுக்கு நண்பர்கள். இவன் முன்புதான் திருக்குறள் அரங்கேற்றப்பட்டதெனவும் அகநானூற்றைத் தொகுப்பித்தோன் இவனே எனவும் கூறுவர். கானப்பேர் என்பதுஇந்நாளில் காளையார் கோவில் என்று வழங்குகின்றது. இங்கிருந்த வேங்கைமார்பன் என்பவனுடைய கோட்டை முதலியவைகளை அழித்து வெற்றிகொண்டமையால் இவனுக்குக் கானப்பேர் எயில் கடந்த என்னும் அடைமொழி உண்டாகியது. இவனை ஐயூர்மூலங்கிழார் என்னும் புலவர் பாடியுள்ளார்.

**பெருவாயில்முள்ளியார்** - இவர் ஆசாரக்கோவை என்னும் நூலின் ஆசிரியர். இவருடைய [illegible] கயத்தூர் என்

னும் ஊரினராகையால் இவரைக் கயத்தூர்ப் பெருவாயில்முள்ளியார் என்பர். இவர் வாழ்ந்த பெருவாயில் என்னும் ஊர் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் புதுக்கோட்டையைச்சார்ந்த குளத்தூர்த் தாலுக்காவில் உள்ளது.

**பேகன்** - இவனுடைய முழுப் பெயர் வையாவிக்கோப்பெரும் பேகன் என்பது. இவன் ஆவியர் குடியிற் பிறந்தவன். ஆவியர் முதல்வனை வேள்ஆவி என்பவன் பண்டைப்பொதினி நகரத்தின்கண் இருந்து அரசு புரிந்தவன். அப்பொதினி பின்னளில்பழநி எனவும் வையாவி என்பது வையாபுரி எனவும் மருவி வழங்கலாயின. இது திருவாவிநன்குடி யெனவும் வழங்கும். வையாவிக்கோப் பெரும்பேகன் சிறந்த வள்ளலாவான். ஒருநாள் மயில் ஒன்று கார்முகிலைக் கண்டு தோகைவிரித்தாடியது. அதனைக்கண்ட பேகன் அதன் ஆடலை வியந்தும் அது குளிரால் நடுங்குகின்றதென்று எண்ணியும் தன்னுடைய உயர்ந்த உடையாகிய போர்வையை அதனுக்களித்து மகிழ்ந்தான். அதனால் இவனுடைய புகழ் என்றுஞ் சிறந்தோங்குவதாயிற்று. இவனுடைய மனைவியின் பெயர் கண்ணகி. கண்ணகியோடு களிப்புற்று வாழ்ந்த பேகன் நாளடைவில் ஒரு பரத்தையின் தொடர்பு கொண்டு கண்ணகியை அறவே மறந்தொழுகினன். அப்பொழுது அறிஞர்கள் சிலர் பேகனுக்கு அறிவுரைகள் கூறித் தெளியச் செய்தனர். இவனைப் புகழ்ந்து பரணர், கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார்முதலிய புலவர்கள் பாடியுள்ளனர்.

**பேயனார்**-சங்ககாலப் புலவர்களில் ஒருவர். இவர் முல்லைத்திணை பாடுவதில் வல்லவர். ஐங்குறுநூற்றின் ஐந்தாம் நூறாகிய முல்லைத்திணையைப் பாடியவர் இவரே. மற்றும் இவருடைய பாடல்கள் அகநானூறு, குறுந்தொகை ஆகியவைகளிலும் உள்ளன.

**பேயாழ்வார்** - இவர் திருமயிலையில் மாதவப் பெருமாள் கோவிலுக்கு அண்மையில் ஒரு கிணற்றின் இடையே மலர்ந்திருந்த செவ்வல்லி மலரில் தோன்றினார். திருமாலின் சிறந்த அடியவராகிய இவர் மூன்றாவது திருவந்தாதியைப் பாடினார். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் மூவரும் முதலாழ்வார் என்று கூறப்பெறுவர்.

**பேய்மகள் இளவெயினி** - சங்ககாலப் பெண்பாற் புலவர்களில் ஒருவர். இளவெயினி என்பது இயற்பெயர். பேய் பிடித்தாற் போன்ற ஆவேசத் தோற்றத் தோடிருந்தபடியால் பேய் மகள் என்னும் அடைமொழி உண்டாகியிருக்கக் கூடும் என்று தெரிகிறது. இவராற் பாடப் பெற்றோன் சேரமான் பாலை பாடியபெருங்கடுங்கோ. பாடல் புறநானூற்றிற் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**பேரளம்**-சோழவளநாட்டில்உள்ள சைவத்தலங்களில் ஒன்று. மாயூரத்திலிருந்து திருவாரூர் செல்லும் வழியில் புகைவண்டி நிலையமாக இருக்கிறது. தஞ்சை மாவட்டத்தில் நன்னிலம் தாலுகாவில் இருக்கிறது. இத் தலம் மிகவும் பழமையானது. கோயில் முழுவதும் செங்கற் கட்டிடமாக அமைந்திருக்கிறது. இத்தலத்தின் தேவாரப் பதிகம் மறைந்து போன பதிகங்களோடு சேர்

திருக்கலாம். பேரளம் என்பதற்குப் பொருள் பெரிய உப்பளம் என்பது. ஆனால் இங்கு உப்பளம் ஒன்றும் இல்லை.

**பேராலவாயார்** - சங்ககாலப் புலவர்களில் ஒருவர். மதுரையில் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலுக்கு ஆலவாய் என்னும் பெயருண்டு. சோமசுந்தரப் பெருமானுக்கும் பேராலவாயர் என்னும் பெயருண்டு. அப்பெயரைக் கொண்ட புலவர் இவர். மதுரைப் பேராலவாயர் என்றும் கூறப் பெறுவர். இவர் மதுரையையும் பாண்டியமன்னனையுந் தம்பாடலில் குறிப்பிட்டிருக்கிறார். ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் இறந்த பொழுது அவர் மனைவி தீப்பாய்தல் கண்டு வருந்திப் பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் அகநானூறு, புறநானூறு, நற்றிணை முதலியவைகளிற் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

**பேராவூரான்** - இவன் தொண்டை நாட்டில் பேராவூர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவன். வேளாள குலத்தினனாகிய இவன்பெருஞ் செல்வமுடையவனாகவும் தாராள மனப்பான்மை யுடையவனாகவும் இருந்தான். புலவர்கட்குப் பொன்மாரிபொழிந்தான்·பசித்தவர்கட்குச் சாதி பேதம் பாராட்டாமல் உணவிட்டான். புலையர்களையும் உடன்வைத்து உண்டதாகவும் உரைப்பர். இவன் செயலை நோக்கின், ''கற்றவர்க்கும்.....வண்மைகை உற்றவர்க்கும் ஒன்று சாதி நன்மை தீமையில்லையால்" என்பதன் பொருள் நன்கு விளங்கும்.

**பேரிசாத்தனார்** -(க) சங்ககாலப்புலவர்களில்ஒருவர். வடமவண்ணக்கன்பேரிசாத்தனார்என்றும்கூறப் பெறுவர். வண்ணக்கன் என்பது நாணயப் பரிசோதனையாளனுக்குரிய பெயர். இவர் அத்தொழிலை மேற் கொண்டிருந்தவர் போலும். இவருடைய பாடல்கள் நற்றிணை, புறநானூறு ஆகியவைகளில் சேர்க்கப்பட்டுள்ளன.

**பேரிசாத்தனார்** - (உ) இவர் இற்றைக்கு ஆயிரத்து எழுநூறு ஆண்டுகட்கு முன்பு இருந்தவர். கலைகளை நன்கு ஓதியுணர்ந்த பெரிய புலவர். இவருடைய மனைவியின் பெயர் மானகை. புலவர்களைப் பற்றும் வறுமை இவரையும் பற்றியிருந்தது. அந்நாளில் மதுரையில் நன்மாறன் என்னும்பாண்டியமன்னன்அரசு புரிந்திருந்தான். புலவர் அம்மன்னனிடம் பரிசு பெறற் பொருட்டுச் சென்றார். அவன் புலவரைப் பாராட்டிப் போற்றிச் செய்ய வேண்டிய சிறப்புக்களைச் செய்தானாயினும் விரைவாகப் பரிசு கொடுத்தனுப்பாமல் எக்காரணத்தாலோ பரிசு கொடுக்கக் காலந் தாழ்த்தான். விரைவாகச் செல்ல விரும்பிய இவர் அவன் மீது பாடல் ஒன்றைப் பாடிவிட்டுப் பரிசிலைப் பெறுமலே சென்று விட்டார்.

**பேரியாறு** - இவ் வாறு ஆனைமலையில் உண்டாகி மேற்கு நோக்கிச் சென்று கடலை யடைவது. செங்குட்டுவன் மலை வளங் காணச் சென்ற போது இந்த ஆற்றின் கரையில் தங்கினான்.

**பேரெயின்முறுவலார்** - சங்ககாலப் புலவர்களில் ஒருவர். சோழநாட்டிலே காவிரியின் தென் கரையிலே பேரெயில் என்னும் தேவாரப் பாடல் பெற்ற சிவப்பதி ஒன்றுள்ளது. அஃது இவருடைய ஊராக இருக்கலாம். இவருடைய பாடல்கள் புறநானூறு, குறுந் தொகை முத

வியவைகளிற் சேர்க்கப் பட்டுள்ளன.

**பேரையூரார்** - இவர் ஒரு வேளாளர். சிறந்த கொடையாளி. கால மாறுபாட்டால் வறிய நிலையை அடைந்தார். தம்மிடம் வந்த ஒரு புலவருக்கு அரிசிச் சோற்றை முன்னர்ப் படைத்து விட்டுப் பிறகு தாம் கூழுண்டு வெளியே வந்தார். புலவர் இவரைப் பார்த்து "நீர் சிறந்த உணவுகளை உண்டீரோ" என்று கேட்க இவர் தம்முடைய வயிற்றைக கீறித் தாம் உண்ட கூழைக் காட்டினார்.

**பைரவகொண்டா** - ஆந்திர நாட்டில் நெல்லூர் மாவட்டத்தில் உதயகிரியில் இருந்து வடமேற்கில் 28 மைல் தொலைவில் உள்ள ஒரு குன்று. இதில் உள்ள ஒரு குறுகிய பள்ளத்தாக்குச் சரிவிலே பாறையைக் குடைந்து கோயில் செய்துள்ளனர். பள்ளத்தாக்கின் கிழக் கோடியிலே அங்குப் பாயும் ஓர் ஓடையின் ஒரு பக்கத்திலே பைரவருக்கு ஒரு கட்டுக் கோயில் இருக்கிறது. இக்கோயிலுக்கு எதர்ப்புறத்திலே ஓடையின மறு பககத்தில் பாறைச் சரிவில் எட்டுக் குடைவுக் கோயில்கள் உள்ளன. மகேந்திரன் மாமல்லன் காலத்துப்பல்லவக்கலை வடிவங்களாகவே அவை விளங்குகின்றன. ஒவ்வொரு கோவிலிலும் சிவபிரானுடைய இலிங்கவடிவம் உள்ளது.

**பைரவர்** - சிவமூர்த்தங்களில் ஒருவர். இவரை வழிபடுவோரும் பைரவர் எனப் பெறுவர். இவர் வீற்றிருப்பது பைரவபுவனம். இவர் தோற்றம் நீலநிறம். திருவடிகளில் சிலம்பு, மார்பில் தலைமாலை; கைகளிற் சூலம், மழு, பாசம், உடுக்கை; முக்கண்கள்; கோரப்பற்கள்; செஞ்சடை; சிற்றநகை கொண்ட முகம்; படைத்தற் கடவுளான பிரமன் முன்பு ஐந்து முகங்களோடு இருந்தான. ஒரு முறை சிவபிரானை இகழ்ந்த காரணத்தினால் மேல்நோக்கியிருந்த அத் தலையைக் கிள்ளி அவனுடைய செருக்கையழிக்கப் பைரவரைச் சிவபிரான் படைத்தார். பைரவர் நான்முகனுடைய மேல் நோக்கிய அத் தலையை கிள்ளி, அதன் ஓட்டில் செருக்கு மிகுந்த சில முனிவர்கள், தேவர்கள் முதலியவர்களின் இரத்தத்தைப் பிச்சையாக ஏற்று, அவர்களைச் செருக்கடக்கி நல்லறிவு பெறச் செய்தார். இக்கடவுள் ஊழியிறுதியில் சிவபிரானுடைய ஆணையால் யாவற்றையும் அழிப்பார். இவருக்கு நான்மறையே நாய் வடிவுடன் ஊர்தியாக இருக்கிறது. பைரவ சமயம் சைவசமயம் ஆறனுள் ஒன்று.

**பொருட்டெழினி** - இவன் அதியமான் நெடுமான் அஞ்சியினுடைய மகன். இவன் தன்னுடைய இளமைப் பருவத்தில் இன்ப நலத்திலேயே பொழுது போக்கினான். அதியமான் நெடுமானஞ்சியிடம் பேரன்புடையவராக இருந்த ஔவையார் அவன் மகனாகிய இவனுக்கு அறிவுரைகள் பல கூறினார்.

**பொங்கல்** - பொங்கல் எனின் உலையிலிட்ட அரிசி மேலே பொங்கி வருதலை உணர்த்தும். தைத் திங்கள் முதனாளில் மிகு சிறப்பாக இப் பண்டிகை கொண்டாடப்படுகிறது. விளைபொருள்கள் புதிதாக விளைந்து வீட்டுக்கு வருதல் இத்திங்களிலே யாகும். மற்றும் பல காரணங்களைக் கொண்டும் இப் பொங்கல் மிகுந்த சிறப்பினையுடையது. உலையிலிடட அரிசி பொங்கும் பொழுது, "மாடுங்

கன்றும் பெருகப் பெருக நோயும் பிணியும் தீரத் தீரச் சங்கராதேவிக்குப் பொங்கலோ பொங்கல்" என்று கூவும் பழக்கம் இன்றும் நாட்டுப்புறங்களில் இருந்து வருகிறது. பொங்கலை யடுத்த மறு நாளில் மாடுகளின் பொருட்டுப் பொங்கல் வைத்து அவைகளைப் பூசித்தல் மாட்டுப் பொங்கல் எனப் பெறும். இதற்கு அடுத்தநாள் கன்னிப் பொங்கல் எனக் கூறப் பெறினும் அன்று எவ்விதமான பொங்கலும் வைக்கப் பெறுவதாகத் தெரியவில்லை. இந்த நாளில் கன்னிப் பெண்கள் முன்னாளில் பொங்கல் வைத்தனரென்று தெரிகிறது.

**பொதியமலை** - தமிழகத்தில் பாண்டிய நாட்டில் உள்ள ஒரு மலை. தேவரெல்லோருங் கூடியிருத்தற் கிடமாதலின் இதனைப் பொதுவில் எனவழங்கினரெனவும் அது நாளடைவில் பொதியில் எனமருவிற்றென்றும் கூறுவர். இம்மலை அகத்தியருக்கு இருப்பிடமென்றும், அகத்தியர் தமிழ் இலக்கண ஆசிரியராகையால்தமிழ் பிறந்தமலையென்றும் பாராட்டித் தமிழ் நூல்கள் கூறும். இமயமலையினும் பொதியமலை அகவை முதிர்ந்ததென்பர். இம்மலையை அகத்தியமலை என்றுங் கூறுவர். 6125 அடி உயரம் உள்ளது. இம்மலையில் மனிதர் இயங்குதற் கரியவிடத்தில் அகத்தியர் இன்றும் வாழ்ந்திருப்பதாகவும் அவரைச் சித்தர்கள் பார்க்கக் கூடும் என்றுங் கூறுவர். இம்மலையின் வளத்தைக் காண்பதற்கு வந்த காயசண்டிகை விருச்சிகன் என்னும் முனிவன் உண்ணுதற்கு வைத்திருந்த கனியைக் காலாற் சிதைத்து யானைத்தீ என்னும் பெரும் பசியை அடையுமாறு சாபம் பெற்றாள்.

**பொதியமலை அகத்தியர்** - இவர் பொதிய மலையில் தங்கியிருந்த படியினால் பொதியமலை அகத்தியர் என்று பெயர் பெற்றார். சிவபெருமானுக்கும் உமாதேவிக்கும் திருமணம நிகழ்ந்த காலத்தில் கைலையில் இருந்து சிவபெருமானால் உலகத்தைச் சமப்படுத்துதற் பொருட்டு அனுப்பப்பட்ட அகத்தியர் இவரே என்பர்.

**பொதியவெற்பன்** - பொதியமலைக்குத் தலைவனாக விளங்கிய படியால் பாண்டியனுக் குண்டாகிய சிறப்புப் பெயர்.

**பொதினி** - முருகப் பெருமான் திருக்கோயில் கொண்டிருக்கும் ஆறுபடை வீடுகளில் ஒன்றாகத் திகழும் பழனிமலை முன்னாளில் பொதினி என்னும் பெயரோடு விளங்கியது.

**பொதும்பில்** - பாண்டிய நாட்டில் மதுரைத் தாலுகாவில் உள்ளதோர் ஊர். இப்போது பொதும்புஎனவழங்குகிறதாம். இவ்வூரில் சங்ககாலத்தில் பல புலவர்கள் இருந்தனர் என்று சங்க நூல்கள் கூறுகின்றன.

**பொத்தப்பிக் காமதேவ சோடமகாராசன்** - இவன் பொத்தப்பி நாட்டிலிருந்த ஒரு சிற்றரசன். பொத்தப்பி என்பது கடப்பை மாவட்டத்திலுள்ள ஓர் ஊர். அதனைச் சூழ்ந்த நாடு பொத்தப்பி நாடாகும். அந்நாட்டை யாண்டவர்கள் பொத்தப்பிச் சோடர் எனப்படுவர். அவர்களில் ஒருவனே இவன். இவன் குலோத்துங்க சோழனுக்குக் கப்பஞ் செலுத்திக் கொண்டு அரசாட்சி புரிந்த ஒரு சிற்றரசன் என்பதுகர்நூல்மாவட்டம் திரிபுராந்தகத்திலுள்ள கல்வெட்டுக்களால் அறியப் படுகிறது.

**பொத்தப்பி நாடு** - இதன் தலைநகராயிருந்த 'பொத்தப்பி' என்னும் ஊரினால் இப்பெயர் வந்தது என்பர். கல்வெட்டுக்களால் அத்திராலா, குண்டலூரு, கொத்தமல்லி, நந்தலூரு தங்கடூருஎன்னும்ஊர்கள்பொத்தப்பி நாட்டைச் சேர்ந்தவை என்று கருதலாம். பொத்தப்பி என்னும் ஊர் இப்போது ஆந்திர நாட்டில் கடப்பை மாவட்டத்தில் புல்லம் பேட்டைத் தாலுகாவில் உளது. இவ் வூர்ப் பக்கத்தில் தெற்கில் பெண்ணையாற்றின் துணையாருகிய செய்யாறு ஓடுகின்றது. இந் நாடு ஒரு செழிப்பான பள்ளத் தாக்கில் அமைந்துள்ளது. இந் நாட்டின் வழியேஅரக்கோணம் கடப்பை இருப்புப்பாதை செல்கின்றது. இதன் மேற்கில் 'சேஷாசலம்' என்னும் மலைத் தொடரும், கிழக்கில் சிறுமலைத் தொடர்களும் உள்ளன. இந் நாட்டில் உடுப்பூர் என்னும் ஊரில் கண்ணப்ப நாயனர் பிறந்ததாகப் பெரிய புராணம் பகர்கின்றது.

**பொத்தியார்** - இவர் சோழ நாட்டிலே உறையூரிலே இருந்தவர். கல்வியறிவிற் சிறந்துவிளங்கிய பெரும்புலவர். உண்மையும் நேர்மையும் உடைய நுண்ணறிவாளர். இவருடைய மனைவியின் பெயர் விநயசீலை. இவர் காலத்தில் உறையூரில் கோப் பெருஞ்சோழன் அரசு புரிந்திருந்தான். அவன் இவருடைய புலமை நலத்தையுணர்ந்து இவரோடு நட்புக் கொண்டிருந்தான். தான் நெறிவழுவாத நீர்மையனாயினும் இவருடைய நீதிமுறைகளைக் கேட்டு அதன் வழி ஒழுகி நின்றான். இவனுடையமக்கள் இவனைவென்று அரசினைத் தாம் கைப்பற்ற எண்ணினர். அரசனும் தன் மக்களாகிய அவர்களைப் பொருதுவென்று தோற்கடிக்க எண்ணி ஆவனபுரிந்தான். இவர் இடையே புகுந்து அறவுரைகள் பல கூறினர். இவ் வாட்சி உனக்குப் பின் அவர்களையே சேரும். தந்தையும் மக்களும் போரிட்டு ஒருவரையொருவர்வெல்லல்வசையாகும். நீ ஆட்சியை விட்டு மறுமைக் காவன புரிதல் நல்லது என்று உரைத்தார். இவர் உரைகளைக் கேட்ட மன்னன் வடக்கிருந்து உயிர் விட முடிவு செய்தான். இவரும் அவனோடுவடக்கிருந்து உயிர் விட எண்ணினர். ஆயினும் அந்நாளில் இவர் இளைஞராகவும் மக்கட் பேற்றைஅடையாதவராகவும் இருந்தபடியால் இவரும் தன்னோடிருந்து உயிர் விடுதலை மன்னன் தடுத்து விட்டான். இவர் அம்மன்னன் மீது பலபாடல்களைப்பாடியுள்ளார்.

**பொப்பணகாங்கேயன்** - இவன் கொங்குவளநாட்டில் மோரூரில் காங்கேயர் குடும்பத்தில்தோன்றியவன்.தமிழறிவும்கொடைப் பண்பும் ஒருங்கே அமையப் பெற்றவன். அடியார்க்கு நல்லாரைக் கொண்டு சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதுவித்தவன் இவனே. அடியார்க்கு நல்லார் உரையெழுதிய காலத்தில் அவருடைய குடும்பத்தையும் தன்வீட்டில் வைத்துப் பாதுகாத்து அடியார்க்கு நல்லார்க்கு அடியாராகவும்அமைந்துநின்று புகழ் கொண்டவன். இவன் கி. பி. கஉ ஆம் நூற்றுண்டினன் என்பர்.

**பொம்மலாட்டம்** - பொம்மைகளை ஆட்டும்ஆட்டம்பொம்மலாட்டமாகும். பொம்மைகளின் உறுப்புக்களில் கயிறுகளைக் கட்டி வேறோர் இடத்தில் இருந்து கயிறுகளை இழுப்பதால் பொம்மைகள் ஆடும். நாடகங்களைப் போல் இப்பொம்மலாட்டம்

நடைபெறும். இவ்வாட்டவிளை யாட்டுத் திருவள்ளுவர் காலத் திற்கு முன்பிருந்தே நடை பெற்று வருகிறதென்பது,

" நாணகத் தில்லா ரியக்கம் மரப்பாவை,
நாணால் உயிர்மருட்டி யற்று"

என்னும் திருக்குறளால் பெறப் படுகிறது.

**பொம்முதுரை** - இவன் கட்ட பொம்முவின்வழிமுறையினன். இராசபாண்டியன் என்பவ னுடைய மகன். துரைமல்லு என்பவனுக்குத் தம்பி. அவ னுக்குப் பிறகு ஆட்சி தொடங் கிப் பாஞ்சாலன் குறிச்சியை ஆண்டான். நேரிய முறையில் ஆளவில்லை. சேவல் போர் விடு வதிலும் இன்பக்களியாடல்களி னும் பொழுது போக்கினான். பாளையம் பலவகையிலும் அல் லலையடைந்துநொந்தது. இவன் ஆறு ஆண்டுகள் ஆண்டபின் காலமானான்.

**பொம்மையர்** - (க) கோலூரில் இருந்த வீரசைவர். இவர் சம ணரிடஞ் சொற் போரிட்டார். அவர்கள் தெய்வத் தன்மையை வெளிப்படையாகக் காட்ட வேண்டுமென்று கேட்டார்கள். இவர் என்ன செய்யவேண்டு மென்று கேட்டார். சமணர் கள்,"இதோ எதிரில் இருக்கும் ஆலமரத்தைச் சுட்டெரிக்கி றோம்.நீர்அதனை மீளவுந்தளிர்க் கச் செய்யும் பார்க்கலாம்" என் றார்கள்.இவர்அவ்வாறேசெய்து சிவபெருமானுடைய முழு முதற்றன்மையைக் காட்டிச் சமணர்களை அழித்தொழித்தார்.

**பொம்மையர்** - (உ) இவர் ஒரு வீர சைவர். பாலூரில் இருந்த வர். இவர் கல்லைக்காளையாக்கி மேயவிட்டார்சோளத்தைச்சிவ லிங்க உருவமாக்கினார். தம்மை யெதிர்த்து வந்த அரசனுடைய யானையைச் சினத்தாற் கொன் றார். பிறகு அரசனுடைய வேண்டுகோட்படி அதனைப் பிழைத்தெழச் செய்தார்.

**பொய்கை ஆழ்வார்** - இவர் திரு மாலின் பாஞ்ச சன்யத்தின் கூறாகக் காஞ்சிபுரத்தில் ஒரு தாமரைத் தடாகத்தில் பிறந் தார். திருமாலிடம் பேரன்பு கொண்டார். இவர் பாடிய பாடல்கள் நூறு. அதற்கு முதல்திருவந்தாதிஎன்றுபெயர். பொய்கையிற் பிறந்த படியி னால் பொய்கையாழ்வார்என்று பெயர் பெற்றார்.

**பொய்கையார்** - சங்ககாலப்புலவர் களில் ஒருவர். இவருடைய ஊர் மலைநாட்டில் உள்ள தொண்டி எனத் தெரிகிறது. இவர் சேரமான் கணைக்கால் இரும்பொறையினுடைய நண் பரும் அவைக்களப் புலவரும் ஆவர். தம் அரசனைச் சோழன் செங்கணான்வென்று சிறைப் படுத்திய போது அவனைச்சிறை மீட்க இவர் பாடியது களவழி நாற்பது என்னும்சிறந்த நூலா கும், இவர் சேரமான் கோக் கோதைமார்பன் என்பவனையும் பாடியிருக்கிறார். இவருடைய பாடல்கள் புறநானூறு நற் றிணை முதலியவைகளிற் சேர்க் கப் பட்டிருக்கின்றன.

**பொருநராற்றுப்படை** - பத்துப் பாட்டினுள் இரண்டாவதாக அமைந்துள்ளது. 248 அடி களையுடையது. பரிசில் பெறக் கருதிய ஒரு பொருநனைப் பரி சில் பெற்றானொருவன் இளஞ் சேட் சென்னியின் மகனாகிய சோழன் கரிகாற் பெருவளத் தானிடத்தே ஆற்றுப் படுத்தி யதாக அக்கரிகாற் பெருவள வனை முடத் தாமக்கண்ணியார் பாடியது. இது கரிகாற்பெரு வளவனுடைய கொடையையும் அவனுடையவீரத்தையும்அவன்

ஆண்ட சோழ நாட்டின் வளத்தையும் காவிரியாறு பயன்படுதலையும் நன்ருகக் கூறும்.

**பொருந்தில் இளங்கீரனூர்** - சங்க காலப் புலவர்களில் ஒருவர். பொருந்தில் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய பாடல்கள் அகநானூற்றிலும் புறநானூற்றிலுஞ் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

**பொல்லாப்பிள்ளையார்** - திருநாரையூரில் எழுந்தருளிய ஆனைமுகக் கடவுள். அபயகுல சேகர சோழராசன் படைத்த பழம் முதலியவைகளை உண்டு நம்பியாண்டார்நம்பிக்குத்திருமுறையிருந்த இடத்தைக் கூறியவர்.

**பொறையாற்றுக் கிழான்பெரியன்** - தஞ்சை மாவட்டத்திலுள்ளது பொறையாறு என்னும் ஊர். நெய்தல் வளம் நிறைந்த இந்த ஊரில் வாழ்ந்திருந்தவன் பெரியன். இவன் சிறந்த கொடை வள்ளலாய் வாழ்ந்தான். பரிசிலர்கள் எப்பொழுதும் இவனிடம் வந்து கொண்டே யிருப்பார்கள். இவனைப் புலவர்கள் பலர் புகழ்ந்து பாடியுள்ளனர்.

**பொற்கைப்பாண்டியன்** - இவன் தன்னுடையகையைக்கீரந்தையென்னும் அந்தணன் பொருட்டு நிகழ்ந்த ஒரு தவறுதலுக்காகத் துணித்து விட்டுப் பிறகு பொன்னுற்கைசெய்துஅதனைப் பூட்டிக்கொண்டமையின்பொற்கைப் பாண்டியன் என்று சிறப்புப்பெயர் பெற்ருன்.

**பொன்பற்றி** - இவ்வூரின்பெயர் பொன்பெயர்த்திஎன்றுஅறிஞர் கூறுவர். பழையகாலத்துஅரசன் ஒருவனுடைய கருவூலம் இங்கிருந்ததாகவும், அதிலிருந்த கணக்கற்றபொருளைப்பகைவர்கள்பெயர்த்துக்கொண்டு சென்றதாகவும் அதனுல்பொன் பெயர்த்தி என்று பெயர் ஏற்பட்டதாகவும்கூறுவர். மக்கள் வழக்கில் பொன்பேத்தியாக மாறிவிட்டது. இவ்வூரில்பதினென்ரும் நூற்ருண்டில்வாழ்ந்திருந்த புத்தமித்திரர் என்பவர் வீரசோழியம் என்னும்இலக்கண நூலைஇயற்றினுர். பொன்பற்றிக்காவலன் என்னும் அரசன் இவ்வூரையாண்டான். இவ்வூர்தஞ்சை மாவட்டத்திலுள்ள ஆவுடையார்கோவிலிலிருந்து திருப்புன வாயிலுக்குச்செல்லும் வழியில்இருக்கிறது.

**பொன்முடியார்** - சங்ககாலப்புலவர்களில் ஒருவர். சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையென்னும் மன்னன் காலத்தவர். தகடூர்யாத்திரை என்னும் நூலில்இவர் பாடியசிலசெய்யுட்கள்உள்ளன. இவருடையபாடல் புறநானூற்றிற் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**பொன்விளைந்தகளத்தூர்** - இவ்வூர் ஒத்திவாக்கம் புகைவண்டிநிலையத்திற்குஅண்மையில்உள்ளது. ஊர்மிகச் செழிப்பானதாகையால் நெல்மிகுதியாகவிளைந்து அதனுல் பொன்னைமிகுதியாகக் கொடுத்தமையின் இவ்வாறு பெயர்பெற்றது. இவ்வூர்புலவர்கள் பலரைப்பெற்றெடுத்த புகழுடையது. படிக்காசுப் புலவர், அந்தகக்கவி வீரராகவமுதலியார், நளவெண்பாப் பாடிய புகழேந்திப்புலவர் ஆகியோர் இவ்வூரில்தான் தோன்றினர்.

**பொன்னம்பலம்** - திருத்தில்லையில் கூத்தப்பிரான் திருக்கூத்தியற்றும் திருக்கோயிலாகிய அம்பலம் பொன்தகடுவேயப்பெற்றிருத்தலால் பொன்னம்பலம் என்றுபெயர்பெற்றது.

**பொன்னனையாள்** - திருப்பூவணத்தில் உருத்திரகணிகையர் குலத்திற்பிறந்தவள். இவள் தான் தேடிய பொருளைக்கொண்டு சிவனடியார்கட் குணவிடுதல்

முதலிய சிவத்தொண்டுகள் செய்து கொண்டிருந்தாள். இவள் இறைவனுடைய திருவுருவை அழகாகச்செய்துகண்குளிரப்பார்க்கவேண்டுமென்றுஎண்ணினுள். ஆயினும் அதற்குப் போதியபொருள்அவளிடத்தில் இல்லை. அதனுல்மிகுந்தகவலை கொண்டிருந்தாள். இறைவன் பொன்னனையாளுடைய மனக் கவலையைப் போக்கவெண்ணினுர். ஒருசித்தரைப்போல் வடிவங்கொண்டு இவளுடைய வீட்டிற்குவந்தார். பொன்னனையாள் சித்தரைப் போற்றிப்புகழ்ந்து வழிபட்டுமகிழ்ந்தாள். சித்தர் பொன்னனையாளுடைய மனக் கவலையைப் பற்றிஉசாவினுர். அவளுடைய எண்ணத்தைத் தாம் நிறைவேற்றுவதாகத்திருவாய்மலர்ந்தருளினுர். அவளிடமிருந்த உலோகங்களையெல்லாம் கொண்டுவரச்செய்தார். அவைகளின்மீது திருநீற்றைப் பூசினுர். "இவைகளை உலையிலிட்டு உருக்குவாயானுல் செம்பொன்னுகமாறும். அதனைக் கொண்டு உன்னுடையவிருப்பத்தைநிறைவேற்றிக்கொள்வாயாக" என்றுகூறிமறைந்தருளினுர். பொன்னனையாள்சித்தரைக்காணுது மயங்கித்தயங்கினுள். பிறகுஒருவாறு தெளிந்தாள். பிறகு தகுந்த ஆட்களைக்கொண்டு இறைவனுடைய திருவுருவத்தைவார்க்கச் செய்தாள். வார்க்கப்பட்ட உருவம்மிகுந்தஅழகோடுவிளங்கியது. அழகைக்கண்டுவியந்த அவள் அவ்வுருவத்தின் கன்னத்தைக்கிள்ளி, "ஆ ஆ என்ன பேரழகு"என்று,கைநெரித்துக் கொண்டாள். அவ்வாறுஅவளால்கிள்ளப்பட்டவடுஇன்றும் அப்பெருமானுடைய திருவுருவில் அமைந்துள்ளதென்பர். இவளுடையசெய்தி பலராலும் போற்றப்பெறும்.

**பொன்னிடும்பாறை** - இரத்தினகிரி என்னும் வாட்போக்கியில்குன்றின் மீதுள்ளஒருபாறை. இப்பாறையில் சிவபெருமான்சுந்தரர்க்குப் பொன்னளித்த படியினுல் இவ்வாறு பெயர்உண்டாகியது என்பர்.

**பொன்னித்துறைவர்** - சோழமன்னர்கள் காவிரியாற்றுத் துறைகட்குத்தலைவர்களாகிவிளங்கிய படியால் பொன்னித்துறைவர் என்றுபெயர்பெற்றனர்.

**பொன்னியாறு** - கொங்குநாட்டில் உள்ள கஞ்சமலையில் தோன்றிக் காவிரியிற் கலக்கும் ஒருசிற்ருறு.

**போகர்** - முனிவர்களிற் சிறந்து விளங்கியவர். சிறந்த அழகோடுதிகழ்ந்திருந்தார். துறந்தவராக இருந்தும் இந்திரன் போல் உயர்ந்த போகங்களையெல்லாம் இவர் நுகர்ந்திருந்தாராதலால் போகர் என்று பெயரடைந்து விளங்கினுர். சட்டமுனி, மச்சமுனி, கமலமுனி, நந்திசர், கொங்கணர், கருவூர்த் தேவர் முதலிய பலர் இவரிடம் அருளுரை பெற்று மாணவர்களாக விளங்கி இருந்தனர். போகர் பேரழகும் உடல் வன்மையும் நீண்டஆயுளும் படைத்திருந்தார். தவச்சிறப்பால் காயசித்தி பெற்ற இவர் பல நுட்பமான முறைகளை யெல்லாம் கண்டறிந்து அவைகளைச் செய்யுள் வடிவில் பாடிவைத்துள்ளார். அப்பாடல்கள் போகர் ஏழாயிரம் என்னும் பெயரோடு சிறந்து விளங்குகின்றன.

**போகையர்** - இவர் கெம்பாவில் வாழ்ந்திருந்த ஓர் அந்தணச் சிவனடியார். சிவபிரான் நீசக் கோலம் பூண்டு இறந்த கன்றினைத் தோளில் தூக்கிக்கொண்டு இவரிடம் வந்தார். இவர் சிவனடியார் என்று எதிர்கொண்டு

போற்றினர். நீசக்கோலச் சிவபிரான் போகையரைப்பார்த்து, "இக் கன்றினிடம் நமக்கு மிகுந்த விருப்பம் உண்டு. இதனை நீரே சமைப்பீராக" என்று சொன்னார். போகையர் அவ்வாறே செய்தார். அந்தணர்கள் சினங்கொண்டு மடத்தைத் திறந்து உள்ளே புகுந்தார்கள். நீசக்கோலச் சிவபிரான் மறைந்தார். அந்தணர்கள் திகைத்துநின்றார்கள். போகையர் அந்தணர்களைப்பார்த்து, "உங்களுடைய அந்தணத் தெருவுக்கு நாம் வரவில்லை. தனித்திருக்கும் எம்முடையஇருப்பிடத்தில் நீங்கள் வந்து தொல்லை கொடுத்த படியால் உங்களூரில் நானும் சிவலிங்க மூர்த்தியும் இரோம்" என்று கூறி அவ்வூரை விட்டுப் புறப்பட்டார். சிவலிங்கத்திருவுருவங்களும் மறைந்தன. சிவலிங்கங்கள் மறையவே ஊர் வளங் குன்றியது. அந்தணர்கள் போகையரை வேண்டிக் குறையிரந்து பழைமை போல் நலம் பெற்றார்கள்.

**போசன்** - இவன் ஏறக் குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் விதர்ப்ப நாட்டில் சிந்துலன் என்னும் மன்னனுக்கு மைந்தனாகத் தோன்றினான். சிறிய தந்தையாகிய முஞ்சன் என்பவன் இவனை வஞ்சமாகக் கொன்றொழிக்க முயன்றானயினும் இவன் மாண்டொழியாமல் உயிர் பிழைத்தான். பிறகு அரசனாகி அரசாட்சியை மேற்கொண்டான். வடமொழியிற் சிறந்த புலமையுடையவனாகத் திகழ்ந்த இவன் கவியரசனாகவும் புவியரசனாகவுந்திகழ்ந்தான். இவனுடைய புகழ் உலகம் முழுவதும் பரவியது. இவன் ஐம்பத்தாறு ஆண்டுகள் வரை அரசாட்சி செய்தான். புகழ் பெற்ற காளிதாசன் இப் போசனுடைய அவைக்களப் புலவனே.

**போதலகிரி அகத்தியர்** - இவ்வகத்தியர் பௌத்தமதத்தைச்சேர்ந்தவர். அவலோகிதன்பால் தமிழ் கற்று உலகத்தாருக்கு வேண்டிய இலக்கண நூல்களைச் செய்தார். போதலகிரி என்பது மேற்கு மலைத்தொடரில் மைசூர் நாட்டில் உள்ள மலைப் பகுதியாகும். அங்கு இவர் தங்கியிருந்த படியால் போதலகிரி அகத்தியர் என்று கூறப் பெற்றார்.

**போதாயனர்** - இவர் கௌதமர் காலத்திற்குப் பின்னிருந்தவர். கிருட்டிணயசுர் வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டவர். இவர் தமது நூலில் கௌதமரைக் குறிப்பிடுகிறார். அறநூல்கள் செய்த நால்வருள் இவர் ஒருவர். அறநூலையன்றி மீமாம்ச சூத்திர விருத்தி என்னும் நூலையும் எழுதியுள்ளாரென்றும் அது கிருதகோடி என்னும் பெயரை உடையது என்றுங் கூறுவர்.

**போதி** - ஓர் அரசமரம். இது பல்குனி நதிக்கரையில் உள்ளது. புத்தர் இதன் நிழலில் தவஞ் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது நான்கு வகைச்சத்திய ஞானமுண்டான படியால் இதற்கு மகாபோதி என்று பெயருண்டாகியது.

**போதிதருமர்** - சீனாவில் ஷான் பௌத்தம் என்றும் சப்பானில் சென் பௌத்தம் என்றும் வழங்கும் பௌத்த சமயத்தை உண்டாக்கியவர். இவர் காஞ்சிபுரத்தில்இருந்தஓர்அரசனுடைய மூன்றாவது மகனார். இவர் பிரஞ்ஞாதர என்னும் பௌத்த மத ஆசிரியரிடம் நாற்பதாண்டு கற்றார். முதலில் தென்னிந்தியாவில் பௌத்த மதத்தைப் போதித்து விட்டுப் பிறகு

சீனாவுக்குச் செல்லுமாறு ஆசிரியர் கூறினார். போதிதருமர் அவ்வாறே நடந்துகொண்டார். இவர் ஒரு வாணிகக் கப்பலில் ஏறி மூன்றாண்டுகள் பயணஞ் செய்து சீனாவை யடைந்தார். அந்நாளில்சீனாவை ஆண்டிருந்த அரசர் பௌத்த மதத்தில் மிகுந்த பற்றுடையவர். அவர் இவரை யழைத்துப் பாராட்டினார். சீனாவில் ஒன்பதாண்டுகள் வரை தங்கியிருந்தார். பல நாடுகட்குஞ் சென்று சமயச் சொற் பொழிவுகள் செய்து நீண்ட காலம் வாழ்ந்திருந்தார். 150 ஆம் ஆண்டில் (வயதில்) காலமானார்.

**போத்தரசர்** - பல்லவர்கள் தங்களைப் போத்தரசர் என்று பல சமயங்களில் கூறிக் கொண்டதாக ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

**போந்தின் தாரோர்** - பனம்பூ மாலையைச் சூடிய படியால் சேரமன்னர்கட்குண்டான காரணப் பெயர்.

**போப்பாண்டவர்** - இவர் உலகத்தில் உள்ள கத்தோலிக்கர் அனைவருக்கும் மத குரு ஆவர். போப் என்னும்ஆங்கிலச்சொல் தந்தை என்று பொருள்படும். பப்பா என்ற இலத்தீன் சொல்லில் இருந்து பிறந்ததாகும். போப் என்னும்பட்டம் ஆதியில் பிஷப்புகள் அனைவருக்கும் உரியதாக இருந்தது. நான்காம் நூற்றாண்டு முதல் ரோமன் கத்தோலிக்கக் கிறித்தவ சபையின் தலைவருக்கு மட்டுமே வழங்கலாயிற்று.

இவர் கிறித்தவ மதத்தவர் நம்பவேண்டியவைஇவைஎன்று வகுப்பார். இவைகளை நம்பாதவர்கள் கிறித்தவ சபைக்குப் புறம்பானவர்கள் என்று நீக்கப் படுவர். இவர் வகுக்கும்முறைகளிலேயே வழிபாடுகள் நடைபெற வேண்டும். இவருடைய முறைகளை மாற்றுவதற்கும் பொருள் கூறுவதற்கும் இவரே அதிகாரி. மதக் காரியங்கட்காக வரிவிதிக்கும் அதிகாரமும் இவருக்கு உண்டு. இவர் முன்னாளில் இத்தாலி நாட்டின்நடுப் பகுதியில் மத அரசராகவும் இலௌகிக அரசராகவும் இருந்தார். 1870 ஆம் ஆண்டில் இத்தாலி நாடு தனியே நிறுவப் பட்ட பொழுது போப்பாண்டவரிடமிருந்து இந்தப் பகுதி எடுத்துக் கொள்ளப் பட்டது. போப்பாண்டவர் இதனை ஒப்புக்கொள்ளாமல் வாடிகன் என்னுந்தமது அரண்மனையைவிட்டு வெளிவராமலே இருந்தார். 1929 இல் முசோலினி போப்பாண்டவரோடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படிபோப்பாண்டவர்வாடிகன் பகுதி தவிர மற்றவைகளை அரசாங்கத்துக்குக் கொடுத்து விட்டு நட்ட ஈடும் வாடிகன் மன்னர் என்னும் பதவியும் பெற்றார். இப்பொழுது போப்பாண்டவர் வாடிகன் நகரத்தின் அரசர். அது 100ஏக்கர் பரப்பும் ஐநூறு மக்களையும் உடையது. இவர் பிற நாடுகட்குத் தூதுவர்களை அனுப்பும் உரிமையுடையவர். ரோமன் கத்தோலிக்கர்கள் கொடுக்கும் பணந்தான் இவருடைய வருவாய்.

**பௌண்டரவாசுதேவன்** - இவன் காசிக்கு மன்னனாக இருந்தவன். மாயங்கள் செய்வதில் வல்லவன். திருமாலைப் போல் ஐந்து ஆயுதங்களும் கருடனும் மாயையாற் பெற்று இன்பங்களை நுகர்ந்தான். கண்ணனோடு போரிடச் சென்று பலவாறு இழித்துரைத்துப் போர் செய்து மாண்டான்.

**பௌத்தசமயம்** - மனிதன் இன்ப வாழ்வு பெறுவது எப்படி என்

பது.பற்றிச்சிந்தித்துத் தெளிந்த முடிவுதான் பௌத்த சமயம். புத்தர் பிரார்த்தனையும் நோற்றலும் பயனற்றவை எனக் காட்டினார். 'உலகில் அனைத்தும் துன்ப மயம்; எதுவும் நிலைப்பதில்லை; அதனால் அழியாத ஆன்மா என்று ஒன்று இல்லை' என்றுபுத்தர்கூறுகின்றார் அநித்தியம், துக்கம், அனாத்மா என்ற மூன்றும்பௌத்தமதத்தின் அடிநிலை உண்மைகள் என்று கூறுகின்றனர். காரணம் இன்றிக் காரியம் எதுவும் நிகழ்வதில்லை என்ற பேருண்மை புத்தர் பெருமான் உலகுக் களித்த பெருங்கொடையாகும். பௌத்த மதத்தில் ஹீனயான பௌத்தம், மகாயான பௌத்தம் என்ற இரு பிரிவுகள் உள. உலகத்திலுள்ள எல்லா உயிர்களிடத்தும் அன்பும் அருளும் கொள்ளுமாறு மேற்கொள்ளும் தியான நிலையைப் புத்தர் வற்புறுத்திக் கூறுகின்றார். அந்த நிலைகைகூடும்போது அனாதச் சமாதி என்று கூறுவர். தியான நிலைகளில் தேர்ச்சி பெறுபவர்கள் வானத்தில் சஞ்சரிப்பது போன்ற சித்திகளைக் கூடப் பெறுவர். இம் மதத்தின் சில புராதன வகைகள் இன்றும் சீன, சப்பான் நாடுகளில் இருந்து வருகின்றன.

மகதநாடு - வடநாட்டிலே கங்கை யாற்றை யடுத்துள்ள நாடு.

மகதைப் பெருமாள் - சேலம் மாவட்டமும் ஆர்க்காடு மாவட்டமும் ஒன்று சேருகிற இடத்தில் ஒன்றனுள் ஒன்றாக ஆறு அகழிகளால் சூழப்பட்டதான ஆறகழூர் என்பது மகத மண்டலம். அவ்விடத்தில் மாவலிவாணன் வழிமுறையினனை வாண அரசன்பேராற்றலோடு அரசாட்சி செய்து கொண்டிருந்தான். மகதம் என்னும் நடுநாட்டதிபதியாகையால் இவனுடைய பெயர் மகதைப் பெருமாள் எனவும் வழங்கியது. இவன் சேர சோழ பாண்டியர்களான மூவேந்தர்களையும் மதிப்பதில்லை. பல புலவர்கட்கு நன்கொடை வழங்கி அவர்களுடைய பாராட்டுகளைப் பெற்றிருந்தான். இவனை யாரேனும் பிடித்துத் தன்முன் அடக்கி நிறுத்தினால் வேண்டுவன கொடுப்பதாகப் பாண்டியன் பறை சாற்றினான். மோரூரில் அந்நாளில் வாழ்ந்திருந்த சூரிய காங்கேயன் என்பவன் சூழ்ச்சி செய்து இம்மகதைப் பெருமாளைப் பிடித்துக் கொண்டு போய்ப் பாண்டியன் முன் நிறுத்திவிட்டான்.

மகாகர்ணர் - இவர்கள் சதகர்ணிகள் எனவுங் கூறப் பெறுவர். சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்ட மகதப் பேரரசர் நூற்றுவர் கன்னர் இவர்களேயாவர். இவர்கள் வடபெண்ணையாற்றின் கரையிலிருந்து மகாநதி வரையிலுள்ள ஆந்திரப்பேரரசின் எல்லையும் இமயம் வரை பரவிய கங்கைவெளி யெல்லையும் பர்மாவுஞ் சேர்ந்த மூன்று பேரரசெல்லைகளாகிய முக்கலிங்கத்தையும் ஒரு குடைக்கீழ் ஆண்டவர்களாவர்.

மகாகாளேசுவரர் - பன்னிரண்டு சோதிலிங்கங்களில் ஒன்று. இந்த லிங்கம் அவந்தியில் இருக்கிறது. மாகாளேசுவரர் என்றுங் கூறுவார்கள். வீடுபேற்றை யளிக்கும் பதிகளில் இதுவும் ஒன்று. இத்தலம் சிப்ரா நதிக் கரையில் இருக்கிறது. சிப்ரா நதியில் மூழ்கி இப்பெருமானை வழிபட்டால் எல்லாத் தீவினைகளும் ஒழிந்து போகும். ஓர் இடைச் சிறுவனுடைய தவப் பெருமையினால்

இத்தலம் உண்டாகியது. ஈசுவரன் இங்கே அஞ்சத்தக்க தோற்றத்துடன் விளங்குகிறபடியால் மகாகாளேசுவரர் என்று பெயர் உண்டாகியது. குரு சிம்மராசியிற் செல்லும் போது இங்கே கும்பமேளா என்னும் சிறப்பு விழா நடைபெறுகிறது. அப்பொழுது இலட்சக்கணக்கான மக்கள் கூடுவார்கள்.

**மகாகூடேசுவரர்** - வாதாபியை ஒட்டியுள்ள ஒரு சிற்றூர். இத்தகைய பெயருள்ள இறைவன் கோயில் இங்கிருந்தபடியால் ஊர் இவ்வாறு பெயர் பெற்றது போலும். இக்கோயிலுக்குத் துர்லபாதேவி என்பவள் சில சிற்றூர்களைத் தானமாக வழங்கினாள். இக்கோயில் குடைதளி என்பர். குடைதளி - குடையப்பட்ட கோயில்.

**மகாசத்தர்** - பசுவின் வயிற்றில் பிறந்த ஒரு முனிவர். இவர் காட்டில் தவஞ்செய்து கொண்டிருந்த போது அங்கு சென்ற பரிச்சித்து மன்னன் இவரோடு உரையாட இவர் யாதும் பேசாமலிருந்தார். அரசன் செத்த பாம்பொன்றை இவருடைய கழுத்தில் மாலையாகப் போட்டுச் சென்றான். பிறகு அங்கு வந்த முனிவருடைய மகன் அரசனைப் பாம்பு கடிக்குமாறு வசவுரை வழங்கினான்.

**மகாபலிபுரம்** - இவ்வூர் மாமல்லபுரம் என்றுஞ் சொல்லப் பெறும். வரலாற்றிலும் வாணிபத்திலும் கலையிலும் புகழ் பெற்றது சென்னையிலிருந்து 59 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இவ்வூர் இக்காலத்தில் உலகப்புகழ் பெற்றதாக விளங்குகிறது. பழங்காலத்துக் கருங்கல் வேலைப்பாடுகள் சிறந்த காட்சியாக விளங்குகின்றன. இவ்வூரில் கடற்கரைக் கோயில், ஒற்றைக்கல் கோயில்கள், கலங்கரை விளக்கம், மலை மீதுள்ள பல மண்டபங்கள் முதலியன பார்க்கத் தக்கன. இங்குள்ள காட்சிப் பொருள்களைக் குறித்துப் பலரும் எழுதியுள்ளனர். பூதத்தாழ்வார் பிறந்த ஊரும் இது தான். திருமங்கை மன்னனால் பாடப்பெற்ற, "கடன் மல்லைத் தலசயனப் பெருமாள் கோயில்' என்னும் திருமால் திருக்கோயிலும் இவ்வூரில் இருக்கிறது. பழங்காலத்துச் சிற்பக் கலையின் சிறப்பையுணர்த்தும் ஊர் இதுவேயாகும்.

**மகாபலேசுவரம்** - இந்தியாவில் பம்பாய் மாகாணத்தில் சாத்தாரா மாவட்டத்தில் இருக்கும் ஊர். பம்பாய்க்குத் தென்கிழக்கில் 144 கிலோ மீட்டர் தொலைவில் இருக்கிறது மேற்கு மலைத்தொடரைச் சேர்ந்த உச்சின்றில் 4,500 அடி உயரத்தில் இருக்கிறது. மழை மிகுதி ஆண்டுக்கு 300 முதல் 400 அங்குலம் வரையில் மழை பெய்யும். இவ்வூர் கிருட்டிண ஆறு தோன்றுமிடத்துக்கு அண்மையில் இருப்பதால் இஃது இந்துக்களுக்குப் புண்ணியத் தலமாகும்.

**மகாபாரதம்**-பரதன்வழிமுறையினரான பாண்டவர் முதலியோரின்வரலாறு கூறும் நூல். வியாச முனிவர் எழுதிய மகாபாரதம் என்னும் இதிகாசத்தை இந்துக்கள் அனைவரும் ஐந்தாம் வேதமாகக் கருதுகிறார்கள். அறம் பொருள் இன்பம் என்னும் நான்கு உறுதிப் பொருள்களைப் பற்றியும் இந்நூல் கூறும். மனுநூல்நெறி முறையில் பத்தில் ஒரு பாகம் பாரதத்தில் காணப் பெறும்.

**மகாமண்டலேசுவரன் சூரப்பராசன்**-இவன் தெலுங்கு நாட்டில்

வீரகொட்டாவிலிருந்த ஒரு சிற்றரசன். இவன் தன்னைப் பாரத்துவாச கோத்திரத்தினன் எனவும் கட்டுவாங்க கேதனன் எனவும் இடபலாஞ்சனன் என வும் காஞ்சிபுரேசுவரன் என வும் கூறிக்கொண்ட படியினால் பல்லவர் மரபினனாக இருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சி யறிஞர்கள் எண்ணுகின்றனர். கோதாவரி மாவட்டத்தில் திராட்சாராமத்திலுள்ள கல் வெட்டு ஒன்றினால் இவன் குலோத்துங்கனுக்கு உட்பட்ட சிற்றரசனாக இருந்தானென்று பெறலாயிற்று.

**மகாமுனிவர்** - முன்னாளில் வாழ்ந் திருந்த சிறந்த முனிவர்களுள் ஆநந்தமகா முனிவர் என்பவரும் ஒருவர். இவர் ஆண்டுதோறும் மார்கழித் திருவாதிரை நாள் அன்று தில்லை ஆநந்தக்கூத்த னைப் போற்றி வழிபடும் உறுதி யுடையவர். ஒரு சமயம் தில்லையை நோக்கிப் புறப்பட் டார். வழியிலுள்ள சிவப் பதிகளி லெல்லாம் இறைவழி பாடு செய்து கொண்டு மாயூரத்தையடைந்தார். அங் கிருந்து தில்லையை நோக்கிப் புறப்பட்டார். நான்கு கல் தொலை சென்றதும் பெருமழை உண்டாகியது. அண்மையில் இருந்த சிற்றூர் ஒன்றிற் சென்று தங்கினார். இரண்டு நாட்கள் பெருமழை பொழிந் தது. மழை நிற்கவே இல்லை. ஆருத்ரா தரிசன நாளாகிய திருவாதிரை நாளும் வந்து விட்டது. தம்முடைய விரதத் திற்குப் பழுது நேரிட்டு விட்ட தைக் கண்ட முனிவர் தம் முயிரைப் போக்கிக் கொள்ள முயன்றார். முனிவருடைய மெய்யன்பைக் கண்ட கூத்தப் பிரான் தில்லையிலாடும் ஆநந்தக் கூத்தை அவ்வூரிலேயே ஆநந்த மாக ஆடி ஆநந்த முனிவருக்குக் காட்சி நல்கினார். ஆநந்த முனிவருக்கு ஆநந்தக்கூத் தாடிய அவ்வூர் அந்நாள் முதல் ஆநந்த தாண்டவபுரம் என்று பெயர் பெற்றது. திருத் தில்லையைவிட இவ்வூரில் ஆருத் திரா தரிசனம் மிகுந்த சிறப் புடையதென்றுகூறப்படுகிறது. ஆநந்த தாண்டவபுரம் புகை வண்டி நிலையம் உள்ள ஊரே இவ்வூராகும்.

**மகாயானம்** - புத்தரால் உண்டாக் கப் பட்டு அசோகனால் பரப்பப் பெற்ற பௌத்த சமயத்தில் இருந்து மாறுபட்ட புதிய வகையான ஒரு புத்த சமயம் இது கனிஷ்கன் என்பவனுடைய காலத்தில் தோன்றி வளர லாயிற்று.

**மகாரதன்** - முன்னாளில் பாண்டி நாட்டில் அரசு புரிந்திருந்த ஒரு பாண்டிய மன்னன். இவன் சோழவள நாட்டிலுள்ள திருக் களர் என்னும் பாரிசாத வனத் தில் எழுந்தருளிய சிவபிரானைப் போற்றி வழிபட்டு நன்மக்கட் பேற்றை யடைந்தான். அக் கடவுளின் வழிபாடு முதலிய வைகளுக்கு நிலபுலங்கள் வழங்கினான்.

**மகாவீரர்**-இவர் வைசாலி என்னும் நகருக்கு அண்மையில் இருந்த குண்ட கிராமம் என்னும் ஊரில் சித்தார்த்தர் என்பவருக் கும் திரிசிலை என்பவளுக்கும் மகனாகப் பிறந்தார். யசோதை என்னும் பெயருடைய ஒரு பெண்ணை இவர் மணந்தார். ஒரு பெண் மகவைப் பெற்ற பிறகு இல்லறத்தை வெறுத் தார். பெற்றோர் இறந்த பிறகு தம் முப்பதாம் ஆண்டில் துறவு பூண்டார். பன்னிரண்டு ஆண்டுகள் கடுமையான தவஞ் செய்தார். நாற்பத்திரண் டாவது அகவையில் மெய் யுணர்வு பெற்றார். இதன் பிறகு

தான் மகாவீரர் என்னும் பெயர் உண்டாகியது. தாம் கண்ட நெறியை மக்களுக்குக் கற்பித்தார். மகதம், அங்கம் ஆகிய நாடுகளில் தொண்டு செய்தார். பிம்பசாரன் அசாதசத்துரு முதலிய மன்னர்களோடு நெருங்கிய உறவு பூண்டிருந்தார். புத்தரோடு போராட்டம் (சொற்போர்) நிகழ்த்தினர். புத்தருக்குப் பிறகும் இருபதாண்டுகள் வரை வாழ்ந்திருந்து இராச கிருகத்துக்கு அண்மையில் உள்ள பாவா என்னும் ஊரில் உயிர் நீத்தார்.

**மகிடாசுரன்** - இரம்பன் என்னும் அசுரன் தீக்கடவுளிடம் வரம் பெற்றவனுய்ச் சிறந்து விளங்கினன். அவன் ஒரு நாள் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தான். அப்பொழுது ஓர் எருமையைக் கண்டு அதனைச் சேர்ந்தான். அந்த எருமையிடம் கருவுண்டாகியது. இரம்பன் அந்த எருமையைக் காத்திருந்தான். அப்பொழுது ஓர் எருமைக்கடா கருவுற்ற எருமையிடம்வந்தது. இரம்பன் அதனைத் துரத்தினன். அது திரும்பி முட்டியது. அதனுல் குத்துண்டிறந்தான். இரம்பனைத் தீயில் இடுகையில் அந்த எருமையுந் தீயில் விழுந்தது. அதன் கருப்பத்திலிருந்து மகிடாசுரன் தோன்றினன். இவன் இரம்பனுடைய பட்டணத்தையடைந்து அரசாட்சி செய்யத் தொடங்கினன். தன்னுடைய படைத்தலைவர்களைத் தனித்தனியாகத் தேவியோடு போர் செய்ய அனுப்பினன். அவர்கள் அனைவருந் தேவியோடு போரிட்டு இறந்தார்கள். பிறகு தானே அழகிய வடிவத்தோடு வந்து போர் செய்தான். பிறகு அரிமா உருவத்தோடு போர்செய்தான். பிறகு யானையுருக் கொண்டு போர் செய்தான். இறுதியில் தன்னுடைய இயற்கை வடிவத்தோடு போர் செய்தான். இறுதியில் தேவி இவனைக் கொன்று தொலைத்தாள். அதனுல் தேவிக்கு மகிடாசுரமர்த்தனி என்னும் பெயர் உண்டாகியது.

**மகிந்தன்** - இலங்கையில் இருந்த சிலாமேகன், சேனன் என்னும் பெயர்களையுடைய அரசனுக்குத் தம்பி. அரசுரிமையில் ஏற்பட்ட குழப்பத்தினுல் தமிழ் நாட்டையடைந்து அடைக்கலம் புகுந்திருந்தான். சேனன் தன்னுடைய ஆட்களை அனுப்பி இவனைக் கொன்று விட்டான்.

**மகேந்திர பாலர்** - மிகிர போஜரின் புதல்வர். மகத நாட்டையும் வட வங்காளத்தையும் வென்றவர். இவருடைய குரு இராஜசேகரர் என்ற புகழ் பெற்ற புலவர். மைய இந்தியாவில் ஆட்சி நடத்திய பிரதிகார வமிசத்தைச் சேர்ந்த ராஜபுத்திர அரசர் என்று கூறுப.

**மகேந்திரத் தடாகம்** - மகேந்திரவாடியில் மகேந்திரவர்மன் தன்னுடைய பெயரால் உண்டாக்கிய ஒரு தடாகம்.

**மகேந்திரப்பள்ளி**-இது பின்னுளில் மயேந்திரப் பள்ளி யென மருவி இந்நாளில் கோயிலடிப் பாளையம் என்னும் பெயரோடு வழங்குகிறது. மகேந்திரன் தன் பெயரால் ஊரமைத்துத் தன் பெயரால் இக்கோவிலையுங் கட்டினன். இச்சிவப்பதி திருஞானசம்பந்தருடைய தேவாரம் பெற்றது.

**மகேந்திரர்** - கி. மு. 243இல் உலகனைத்தும் பௌத்த மதம் பரவ விருப்புற்று அசோகச் சக்கரவர்த்தியால் பல நாடுகளுக்கு அனுப்பப்பட்ட பௌத்தப் பிரசாரக் குழுக்களில் இலங்கைக்குச் சென்ற குழுவின் தலைவராக விளங்கியவர் மகேந்

திரர். உலகில் முதல் மதப் பிரசாரகர் எனக் கூறும் பெற்றி வாய்ந்தவர். இவர் திரிபிடகம் என்னும் நூலைப் பாராமல் ஒப்பிக்கும் அளவு பயிற்சி பெற்றிருந்தார். இலங்கையில் மிச்சகா மலையில் மன்னரைச் சந்தித்து, அவரைப் பௌத்த ராக்கி, அனுராதாபுரம் என்னும் தலைநகர் சென்று அங்கு முதல்நாள் சொற்பொழி விலேயே 40 ஆயிரம் மக்களைப் பௌத்தராக்கினர். மகேந்திரரின் தங்கை இலங்கையில் நட்ட போதி மரம் இன்றும் உள்ளது. அம்மரமே இலங்கையில் அகவை முதிர்ந்த மரம். மகேந்திரர் துறவு பூண்டு அறுபதாம் அகவையில் இறந்தார். இவர் தங்கை சங்கமித்திரை இரண்டாண்டுகள் கழித்து இறந்தார்.

**மகேந்திரவர்மன்** - பேரரசர்களில் ஒருவன். பெருவீரன்; மேலும் இவன் கலையார்வம்மிக்க கலைஞனாகவுஞ் சிறந்து விளங்கினன். இவன் பல கோயில்களைக் கட்டியபடியினால் சேதகாரி எனவும், ஓவியங்கள் பலவற்றை அவைகளிலே தீட்டியபடியால் சித்திரகாரப்புலி எனவுங்கூறப் பெற்றான். செங்கற்பட்டிற்கு அணமையில் உள்ள வல்லத்திலும், திண்டிவனத்திற்கு அண்மையிலுள்ள தளவனூரிலும், அரக்கோணத்தை யடுத்த மகேந்திரவாடியிலும் சமணர் கட்குரிய குகைக்கோயில்களை இவன் கட்டினன். இம்மன்னன் தொடக்கத்தில்சமணனாகவிருந்தான். திருநாவுக்கரசு நாயனரால் சைவசமயத்திற்குமாற்றப் பட்டான். சைவனான பிறகு சமணப்பள்ளிகள் சிலவற்றை யிடித்துக் 'குணபரேசுரம், என்னுஞ் சிவன் கோயிலைக் கட்டுவித்தான். இச்செய்தியை இவனுடைய திருச்சிராப்பள்ளி மலைக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது. மரம், செங்கல், சுண்ணும்பு இல்லாமல் கல்லைக் குடைந்து முதன் முதலாகக் கோயிலைக்கட்டியவன் இவனே.

இவன் காஞ்சிபுரத்தில் இருந்து அரசாண்டான். இவனுக்கு மகேந்திரன், மகேந்திர வர்மன், மகேந்திரவிக்கிரமவர்மன், மகேந்திரப்போத்தரசன். பகாப்பிடுகு, லளிதாங்குரன், குணபரன், மத்தவிலாசன், அவனிபாசனன், சத்யசந்தன், புருடோத்தமன், சத்துருமல்லன், சங்கீர்ணசாதி, சித்திரகாரப்புலி, சேத்தகாரி, விசித்திரசித்தன், அலுப்தகாமன், கலகப்பிரியன், அபிமுகன், மகாமேகன், நரேந்திரன் முதலிய பல சிறப்புப்பெயர்கள் வழங்கின

**மகேந்திரவாடி** - அரக்கோணம் தாலுகாவைச்சேர்ந்த சிற்றூர் சோழசிங்கபுரம் புகைவண்டி நிலையத்திற்குக்கிழக்கில் நான்கு கல் தொலைவில் உள்ளது. மகேந்திரவர்மன் இவ்வூரை அமைத்து, இங்கு ஒரு பெரிய ஏரி கட்டி, ஒரு குடவரைக் கோயிலையும் அமைத்தான். ஆகையால் இவ்வூர் அவன் பெயரால் "மகேந்திர வாடி" எனவும், ஏரி "மகேந்திர தடாகம்" எனவும், குகைக்கோயில் மகேந்திர விஷ்ணுக் கிருகம் (விண்ணகரம்)எனவும்வழங்குகின்றது. குடைதளி, மகேந்திரன் பாணிக்குகைக் கோயில்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றது.

**மகேந்திரன்** - இவனே மகேந்திர வர்மன் என்பர். இவன் சிறிது காலமே அரசாட்சி செய்தான் எனினும் பலசிறந்த காரியங்களைச்செய்து என்றும்அழியாப் புகழ்பெற்றான். இவன் காலத்தில் இரண்டாம்புலிகேசிகாஞ்சி

யைநோக்கிப்படையெடுத்துவந் தான். புலிகேசியைக் காஞ் சிக்கு அண்மையில் வரும்வரை யிலும்எதிர்க்காமலிருந்து பிறகு வளைத்து வெற்றிப்பெற்றான். இவனுடைய காலம் போரிடு வதில் மிகுதியாகச் செலவான போதினும் கலைவளர்ப்பதினும் விருப்பம் உடையவனாக இருந் தான். இவன் முதலில் சமண னாக இருந்து பிறகு அப்பர் என்னும் திருநாவுக்கரசரால் சைவசமயத்தை மேற்கொண் டான். இவன் வடமொழி யினும் வல்லவனாகையால், 'மத்தவிலாசப்பிரகசனம்' என் னும் நூலை வடமொழியிற் செய்துள்ளான்.

சிற்பக்கலையில் அதிக விருப் பங்கொண்டிருந்த இவன் மலைகளில் குகைக்கோயில்கள் பலவற்றை அமைத்ததோடு மலைகளில் பலஉருவங்களைககை தேர்ந்த சிற்பிகளைக் கொண்டு செதுக்கச்செய்தான். இவனால் செய்விக்கப்பட்ட குகைக் கோயில்கள், பல்லவபுரம், வல்லம், மாமண்டூர், மகேந்திர வாடி, தளவானூர், மண்டப் பட்டு, சீயமங்கலம், திருச்சி, நாமக்கல் முதலிய இடங்களில் உள்ளனவென்பர். மாமல்ல புரத்திலும் இவனாற் செய்யப் பட்டன உளவென்பர். மகேந் திரன் பலகல்வெட்டுக்களையும் வெட்டுவித்தான். அவைகளின் மூலமாக இவனுடைய பட்டப் பெயர்களும் இவன் செய்த வேலைகளுந் தெரிகின்றன. இவன் இசை, நடனம், சிற்பம், ஓவியம், நாடகம் ஆகிய கலை களையும் வளர்த்தான்.

இவனுடைய மகன் நரசிம் மன். இவனுங் கலை வளர்ப்பதில் தந்தையைப் பின் பற்றினான். இவனுடைய காலத்திலும் சளுக்கிய வேந்தனாகிய புலி கேசி மீண்டுங் காஞ்சியை நோக்கிப் படையெடுத்தான். நரசிம்மனுடைய படைத்தலை வராக இருந்த பரஞ்சோதியார் (பின்னாளில் சிறுத்தொண்டர் என்று புகழ்பெற்றவர்) புலி கேசியை அவனுடைய தலைநக ராகிய வாதாபிவரை துரத்திச் சென்று வாதாபியையுங் கைக் கொண்டு வெற்றிபெற்றார். நர சிம்மன் கி. பி. 630 முதல் 668 வரை அரசாண்டான் என்பர்.

மகோதரன் - இவன் இராவண னுககு அமைச்சனாகவுந் தோழ னாகவும் இசைந்திருந்தான். வஞ்சகத்தில் எவரையும் விஞ்சி நின்றவன். இவன் மாயைகள் பலவற்றையும நன்கு கற்றிருந் தானாகையால் தன்னுடைய பகைவர்களை ஏய்ப்பதில் புகழ் பெற்றுவிளங்கினான். உணவு களைக் கண்டபடி உண்டு தன் னுடைய வயிற்றை மிகப் பெருக்க வைத்திருந்தானாகை யால் இவனுக்கு மகோதரன் (பெருவயிறன்) என்னுங் காரணப்பெயர் அமைந்து நின் றது. இராவணனை நல்வழியிற் செல்லவிடாமல் இவன் எப் பொழுதுந்தடுத்து நின்றுஇறுதி யில் அவனுக்கு அழிவைத் தேடிக் கொடுத்தான்.

மகோதை - மேற்குக் கடற்கரைப் பகுதியில் உள்ள துறைமுக நகரமாகிய கொடுங்கோளூ ரைக் குறிக்கும். இது முன்னர்ச் சேரமன்னர்களுடைய தலைநகர மாக இருந்தது. இதற்கு இரண் டரைமைல் தொலைவில் திரு வஞ்சைக்களம் இருக்கிறது. திருவஞ்சைக்களமும் மகோதை யும் சேர்ந்த பகுதியே வஞ்சிமா நகர் என்பர். மகோதை என் னும் பெயர் கொடுங்கோளூ ருக்கு உண்டென்பதனையும் இங்கே சேரமான் பெருமாள் இருந்து அரசாண்டார் என்பு

தனையும், சேரமன்னரின் தலை நகரம் இஃது என்பதனையும் பெரிய புராணத்தால் அறியலாம். மகோதைக்கு இரண்டு மைல் தொலைவில் இப்போது அழிக்கோடு என்று கூறப்பெறும்இடத்தில் முன்பு முசிறி என்னும் துறைமுக நகரம் இருந்ததென்பர். கொடுங்கோளூரில் உள்ள பகவதியம்மன் கோயில் மிகுந்த சிறப்புடையது.

மகோற்கடர் - ஆனைமுகக் கடவுளுடைய திருப்பெயர்களில் ஒன்று. காசிபர் மனைவியாகிய அதிதிதவஞ் செய்கையில் ஆனைமுகக்கடவுள் தோன்றினர். காசிபர் இவருக்கு மகோற்கடர் என்று பெயரிட்டு வளர்த்தார். இவ்வாறு வளர்த்து வரும் பொழுது, தேவாந்தகர் நராந்தகர், என்பவர்கள்கேட்டு இவரோடு போர் செய்யுமாறு பல அரக்கர்களை அனுப்பினர்கள். மகோற்கடர் அவர்கள் அனைவரையுங் கொன்றருளினர். மூன்றாவது ஆண்டில் சித்திரன் என்னுங்காந்தருவன் முதலைவடிவங்கொண்டு தடாகத்தில் கிடந்தான். மகோற்கடர் அங்கு விளையாடச் சென்றபோது இவரை விழுங்கத் தொடங்கினன். இவர் அம்முதலையை வெளியில் இழுத்து அம்முதலையின் சாபத்தைப் போக்கினர். ஆகா, ஊகூ என்னுங் காந்தருவர்கள் வழிபட்ட ஐவகை வடிவை மறைத்து அவர்கட்குத் தம் வாயிடம் அவ்வடிவங்களைக் காண்பித்தருளினர். பிங்களன் முதலிய அசுரர்களை வென்றார். இந்திரன்ஏவிய வாயு, அக்கினிஆகியவர்களின் செருக்கையடக்கினர் தந்தையினுடைய சொற்படி காசிராசனுக்கு ஆசிரியராகச் சென்று வழியில் படைக்கலம் பெறுமாறு கதிரவனையெண்ணித்தவஞ் செய்து கொண்டிருந்த தூமாக்கன் என்பவனைக் கொன்றார். அவனுடைய மக்களாகிய யசனன்மனு என்பவர்கள் எதிர்க்க அவர்களைப் பெருமூச்சாற் கொன்று நராந்தகனுடைய அரசாட்சி மண்டபத்தில் விழச் செய்தார். சிந்துரன் விகண்டன் என்பவர்களைத்தழுக்கொன்றார். மேலும் நராந்தகன் ஏவிய அரக்கர்கள் பலரைக்கொன்றார். இறுதியில் நராந்தகன் தானே போருக்கு வர அவனைத் தம்முடைய திருக்கையில் இருந்த கொம்பினால் தலையில் அடித்துக்கொன்றார். இப்படிப் பல திருவிளையாடல்களைச்செய்து இறுதியில் தம்முடைய உலகத்தையடைந்தார்.

மக்கா - முகமதியரின் மிகச் சிறந்த புண்ணியத் தலங்களுள் ஒன்று. மெக்கா எனவுங் கூறுவர். சவுதி அரேபியாவின் மேற்கில் இருக்கிறது. முகமது நபி பிறந்தஇடம். மற்றொரு சிறந்த புண்ணியத்தலமான மதீனாவுக்குத்தெற்கே 220 மைல் தொலைவில் இருக்கிறது. அரேபியாவின் மிகப்பழைய நகரங்களில் ஒன்று. ஹெசாஸ் மாவட்டத்தின் தலைநகர். சுற்றிலும் குன்றுகள் சூழ்ந்த குறுகிய பள்ளத்தாக்கில் அமையப்பெற்றுள்ளது. ஆண்டுதோறும் இலட்சக்கணக்கான யாத்திரீகர்கள் போய் வருகின்றனர். மக்கா மசூதி மிகப்பெரியது: இதில் 35 ஆயிரம் பேர் ஏககாலத்தில் இருக்கலாம்.

மங்கணசித்தர் - இவர் ஒரு சித்தர். இவர் புட்கரம் என்னும் ஊரில் மறையவர் குலத்திலே பிறந்து யோகம் பயின்றார். ஆயிரம் ஆண்டுகள் தவஞ் செய்தார். ஒருநாள் இவர் தம்முடைய யோகம் நீங்கி மலர் எடுக்கச் சென்றார். அப்போது வழியில்

காலிலும் கையிலும் முட்கள் இழித்து உதிரம் பெருகியது. அவ்வுதிரம் புலால் நாற்றம் வீசாமல் நறுமணம் வீசியது. இதனைக் கண்ட சித்தர் தம்முடைய குருதி நறுமணம் வீசுதற்குக் காரணம் தம்முடைய தவத்தின் பெருமையே என்று இன்பக் கூத்தாடினார். அப்பொழுது இவருடைய கால் தூமப்பர் என்னும் முனிவர் மீது பட்டது. அம் முனிவர் சினந்து இவரை மானுகுமாறு சாபம் இட்டார். சித்தர் சாபத்தை நீக்குமாறு முனிவரைக் கேட்டார். முனிவர், ''இவ்வாறு நீ நூறு ஆண்டுகள் இருந்த பிறகு சிவவழிபாட்டினால் இச்சாபம்நீங்குக'' என்று கூறியருளினார். சித்தரும் அவ்வாறே சாபம் நீங்கப்பெற்றார்.

**மங்கம்மாள்** - இவள் திருமலை நாயக்கரின் பேரனாகிய சொக்கநாதநாயக்கனின் மனைவி. கணவனாகிய சொக்கநாதநாயக்கன் காலமான பிறகு மகனாகிய அரங்ககிருட்டிணமுத்துவீரப்ப நாயக்கன் என்பவன் ஏழாண்டுகள் அரசாட்சி செய்தபின் இறந்தான். அப்பொழுது அவனுடைய மனைவியாகிய முத்தம்மாள் என்பவள் கருப்பவதியாக இருந்தாள். சிறிது காலஞ் சென்ற பிறகு முத்தம்மாள் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். முத்தம்மாளுக்குப் பிறந்த குழந்தைக்கு விசயரங்கசொக்கநாதன் என்று பெயரிடப்பட்டது. மூன்றாந் திங்களிலேயே முடிசூட்டு விழாவும் நடைபெற்றது. குழந்தைக்குத் தகுந்த பருவம் வரும் வரையிலும் ஏறத்தாழப் பதினாறு ஆண்டுகள் மங்கம்மாளே அரசாட்சியை நடத்தினாள். இவளுடையஅரசாட்சிக் காலத்தில் நாட்டிற்குப் பலவகையான நன்மைகள் உண்டாயின. இவளால் செய்யப்பட்ட அறங்களிற் பல இன்றும் நாட்டுமக்களுக்குப்பயனுடையனவாயுள்ளன.

**மங்கலேசன்** - இவன் ஒரு பேரரசன். இரண்டாம் புலிகேசி மன்னனுடைய சிற்றப்பன். மங்கலேசனின் மாற்றாந் தாயினுடைய பெயர் துர்லபாதேவி.

**மங்கலையென்னுங் கொங்கமருத்துவச்சி** - காந்தபுரத்திலிருந்து கொங்குநாட்டை அரசாண்டு வந்த அரசனுடைய மகள் கருப்பமுற்றாள். மகப்பேறு காலம் நெருங்கியது. வயிற்றுவலி மிகுதியாகியது. வல்லமையுள்ள பல மருத்துவச்சிகள் மருத்துவம் பார்க்கவந்தார்கள். மகப்பேறு இனிது நிகழாமல் தொல்லை மிகுதியாகியது. சிலர் குழந்தையின் தலை திரும்பிவிட்டது என்றார்கள். பெண்ணோ வயிற்றுவலியுந் துன்பமும் பொறுக்கமுடியாமல் துடித்தாள். சிலர் 'குழந்தைக்குத் தலை பெரிதாக இருக்கிறது,எளிதாக வெளியே வரமாட்டாது' என்றார்கள். 'தாயுஞ்சேயும் இத் தொல்லையில் இருந்து மீள்வது அரிது'என்றார்கள் சிலர். சிலர் 'குழந்தையைமாய்த்துவெளியே இழுத்து விட்டுப் பெண்ணினுடைய உயிரை மட்டும் காப்பாற்றலாம்' என்றார்கள். பெண்ணினுடைய தந்தையோ செய்வதறியாது திகைத்துவருந்தினான். 'தாயையுஞ் சேயையும் இருவரையுமே காப்பாற்றிவிட வேண்டும். அவ்வாறு காப்பாற்றியவர்கட்குத் தக்கவாறு நன்கொடை வழங்குவேன்' என்று சொன்னான். எவரும் முன்வரவில்லை. இறுதியில் நறையூர் நாட்டினளாகிய மங்கலையென்னும் ஒரு நாவிதச்சி, ''இருவரையும் நான்

காப்பாற்றி விடுகிறேன்'' என்று கூறிக்கொண்டு முன் வந்தாள். அவள் ஆயுள் வேதத்தில் வல்லவள். பிள்ளைப்பேறுகளைப்பார்ப்பதிலும் வல்லவள். பெண்ணை நன்முறையில்படுக்க வைத்துச் சிறிது நேரத்தில் வயிற்றைக் கீறிக் குழந்தையை வெளியே எடுத்து விட்டாள். ஒரு நல்ல மருந்தைத் தடவிக் கீறிய புண்ணையும் விரைவில் ஆற்றிவிட்டாள். கருப்பமுள்ள பெண் இறந்தால் வயிற்றை யறுத்துக் குழந்தையை எடுத்துத்தனியே புதைப்பது வழக்கம். அவ்வாறு எடுப்பதில் இவள் தேர்ச்சிபெற்றிருந்தபடியினாலேயே அரசனுடைய மகளையும் அவளுடைய வயிற்றிலிருந்த குழந்தையையுங் காப்பாற்றிவிட்டாள். அரசன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்து பட்டி என்னும் ஊரை அம்மருத்துவச்சிக்கு நன்கொடையாக வழங்கினான். அவ்வூர் அவளுடைய பெயரால் மங்கலைப்பட்டி என்று வழங்கலாயிற்று.

**மங்களூர்** - தென்னிந்தியாவில் மைசூர் நாட்டில் தென்கன்னட மாவட்டத்தில் இருக்கும் துறைமுகப் பட்டினம். மாவட்டத்தின் தலைநகர். கேரளநாட்டின் எல்லைக்கு அண்மையில் இவ்வூர் இருக்கிறது. அழகிய நகரம். இயற்கைக் காட்சிகள் நிறைந்தது. சென்னையில் இருந்து கோயம்புத்தூர் வழியாகச்செல்லும் இருப்புப்பாதை இங்கு முடிவடைகிறது. காப்பி, மிளகு சந்தனமரம், மீன், மீன்உரம் முதலியன ஏற்றுமதியாகின்றன. ஓடு செய்யும் தொழில் சிறப்பாக நடைபெறுகிறது. மங்களூர் ஓடுகள் புகழ்பெற்றவை.

**மங்கையர்க்கரசியார்** - சோழமன்னனுடைய மகள். நின்றசீர் நெடுமாறநாயனார்க்கு மனைவி. தம் கணவனைச் சைநசமயத்திலிருந்து மீட்டுச் சைவனாக்கிய பெருமையுடையவர் இவ்வம்மையார். இவ்வம்மையாரைத் திருஞானசம்பந்தரும் தம்முடைய திருவாக்கால் புகழ்ந்துள்ளார். ''மங்கையர்க்குத் தனியரசி எங்கள்தெய்வம் வளவர்திருக்குலக்கொழுந்து வளைக்கைமானி, செங்கமலத்திருமடந்தைகன்னி நாடாள் தென்னர் குலப்பழி தீர்த்ததெய்வப்பாவை, எங்கள் பிரான் சண்பையர்கோன் அருளினாலே இருந் தமிழ்நாடுற்ற இடர் நீக்கித்தங்கள், பொங் கொளிவெண் திருநீறு பரப்பினாரைப் போற்றுவார் கழலெம் மாற்போற்றலாமே'' என்பது சேக்கிழார்பெருமான் திருவாக்கு.

**மங்கோலியர்** - இவர்கள் பர்மா, அஸ்ஸாம், பூட்டான், நேப்பாளம் முதலிய நாடுகளில் வாழுகின்றனர். இவர்கள் சிறிது மஞ்சளும் கறுப்பும் கலந்த நிறமுடையவர்கள். இவர்களுடைய தலை அகலமாகவிருக்கும். மூக்கு கூர்மையாக இருக்கும். முகம் தட்டையாகக் காணப்படும்.

**மசக்காளிமன்றாடியார்** - கொங்கு வளநாட்டில் உள்ள கவசை என்னும் ஊரில் பதினேழாம் நூற்றாண்டில்வாழ்ந்திருந்தவர் வேளாளர் குலத்தில் தோன்றியவர். கல்வி கேள்விகளில் வல்லவர். சங்ககால வள்ளல்களைப்போன்ற கொடையாளி. இவர் ''கொங்குத்தமிழ்ச்சங்கம்'' என்னும் பெயரோடு சங்கம்ஒன்றை அமைத்துஅதில் பல புலவர்களை இருத்தித்தமிழ் ஆராய்ச்சி செய்யச் செய்தவர். இத்தமிழ்ச் சங்கப் புலவர்க

ளோடு படிக்காசுப்புலவர் வண்ணப் போரிட்டுத் தம்முடைய விருதுகள் பல்லக்கு முதலியவைகளை இழந்தார்.

**மச்சகந்தி** - அத்திரிகை என்னும் பெயருடைய அப்சரப்பெண் ஒருத்தி ஒரு காலத்தில் கங்கையில் நீராடி விளையாடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது கங்கையில் நீராடிக்கடன்களைப் புரிந்து கொண்டிருந்த ஒரு முனிவருடைய காலைப்பற்றி யிழுத்து விளையாடினாள். அம்முனிவர் மெய்யறிவுப் பார்வையால் அவள் கந்தருவமாது என்று உணர்ந்தார். மிகுந்த சினத்தோடு அவளைப்பார்த்து, "நீ தண்ணீரில் மீனைப்போல என்னுடைய காலைப்பற்றி இழுத்து என்னுடைய நாட்டடனைக் கெடுத்தபடியால் இந் நீரிலே வாழுகிற மீனாகக் கடவாய்" என்று வசவுரை வழங்கினார். இதனைக்கேட்ட கந்தருவமாது அஞ்சிக் கலங்கினாள். முனிவருடைய அடிகளைப் பணிந்தாள்; "பெரியீர்! அடியேன் அறியாமையால் செய்த இக் குற்றத்தைப் பொறுத்துச் சாபநீக்கஞ் செய்தருள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். முனிவர் உள்ளம் இரங்கினார்: "நீ மீனாக இந்நீரில் வாழ்ந்து இரண்டு குழந்தைகளைப் பெறுவாய்; அவ்வாறு பெற்றவுடன் விண்ணுலகத்தை யடைவாய்" என்றுகூறித்தம்முடைய இருப்பிடத்தை அடைந்தார்.

கந்தருவமாது கயல் வடிவுடன் யமுனை நீரில் வசித்திருந்தாள். சேதி நாட்டரசனாகிய உபரிசரவசு என்பவன் இந்திரனை நோக்கித் தவஞ்செய்து விசும்பாறுகச் செல்லும் விமானம் ஒன்று பெற்றுப் பல விடங்கட்குஞ் சென்று அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் ஒருநாள் விமானத்திற் சென்று கொண்டிருக்கும் போது தன் மனைவியை எண்ணினான். அவனது வீரியம் வெளிப்பட்டுக் கீழே விழுந்தது. அப்பொழுது விமானம் யமுனையாற்றுக்கு மேலே சென்று கொண்டிருந்தபடியால் கீழே விழுந்த வீரியம் யமுனை யாற்றில் விழுந்தது. அதனைக் கயலுருவோடு கிடந்த கந்தருவமாது விழுங்கினாள். வீரியம் இருகூறாக விழுந்தபடியால் அம்மீன் வயிற்றில் இரு குழந்தைகள் தோன்றி வளர்ந்தன. ஒருநாள் அம்மீன் ஒருவலைஞனுடைய வலையில் அகப்பட்டது. அவன் அம்மீனைக் கொண்டு போய் அறுத்தான். ஆண் குழந்தையொன்றும் பெண் குழந்தையொன்றும் மீன் வயிற்றில் இருந்தன. மீன் வடிவாக இருந்த கந்தருவமாது தன் வரலாறு கூறி விண்ணுலகடைந்தாள். வலைஞர் தலைவன் பிள்ளைகள் உபரிசரவசுவின் பிள்ளைகள் என்றறிந்து அம்மன்னனிடம் கொண்டு போய்க் கொடுத்து நிகழ்ந்தவைகளைக் கூறினான். அரசன் ஆண் குழந்தையைத் தான் எடுத்துக் கொண்டு பெண் குழந்தையை அவ்வலைஞனுக்கே கொடுத்தான். வலைஞன் அப்பெண் மச்ச நாற்றம் உடையவளாக இருந்தபடியால் மச்சகந்தி என்று பெயரிட்டு வளர்த்தான். இவளுக்குக் காளி, சத்தியவதி, யோசனைகந்தி, பரிமளகந்தி எனப்பல பெயர்கள் பின்னளில் உண்டாயின. இவள் சிறுபெண்ணாக இருந்த போது பராசரர் என்னும் முனிவரைச் சேர்ந்து வியாசரைப் பெற்றதோடு பரிமளகந்தி என்னும் பெயரையும் அடைந்தாள்.

பிறகு இவள் சந்தனு மன்னனுக்கு மனைவியானாள்.

**மச்சபுராணம்** - இது பதினான்காயிரம் கிரந்தம் உள்ளது. மச்சாவதாரத் தோற்றம் திருமால் நீர்ப் பெருக்கில் மனுவைக் காத்தமை, நான்முகன் படைப்பு, திரிபுரஎரிப்பு, தாரகாசுரப் போர், உமாதேவி திருமணம், முருகன் தோற்றம் முதலியவை இதனில் கூறப்பெற்றுள்ளன.

**மச்சயந்திரம்** - ஓர் உயரமான கால்நாட்டி அதன்மீது பொன் மீன் ஒன்று அமைத்து அதன் அடியில் ஒரு சக்கரத்தை அப்பொன் மீனுக்கு இடுக்கண் நேரிடாதபடி சுழலச் செய்து ஒரு வில்லையும் அம்பையும் வைத்து எவன் அச்சக்கரத்தைச் சுழலுகையில் நிறுத்தி வில்லில் அம்பைப் பூட்டி ஒரே கணையினால் அதில் மச்சத்தை அறுக்கின்றானோ அவனுக்கு நன்கொடைப் பொருள் வழங்குவது. இவ்வாறு செய்வது ஒருவரின் தகுதியை அறிதற்கேயாம். அருச்சுனன் இத்தகைய மச்சத்தையறுத்துத் திரௌபதியைமணந்தான். ஆனால் மற்றவர்களால் அம்மச்சத்தை அறுத்து வீழ்த்த முடியவில்லை.

**மச்சேந்திரர்** - சிவபிரான் கடற்கரையில் உமாதேவியாருக்குத் தாரக மந்திரத்தை உரைத்துக் கொண்டிருந்தார். அப்பொழுது உமாதேவிக்கு உறக்கம் உண்டாகியது. சிவபிரான் உரைத்துக் கொண்டிருந்த தாரக மறையை ஒருமீன் வயிற்றில் இருந்த மீன்குஞ்சுகேட்டுமனித வடிவாகி வெளிவந்தது. இக்குழந்தையைக் கண்ட சிவபிரான் அதற்கு மச்சேந்திரன் என்று பெயர் கொடுத்தார். மச்சேந்திரர் தவஞ்செய்து சிறந்த சித்தரானார். ஒருநாள் இவர் ஓர் ஊரிற் சென்று கொண்டிருந்த போது இவரை ஒருபெண்கண்டு ஐயமிட்டாள். பிறகு தனக்கு மகப்பேறு உண்டாகுமாறு அருள்புரியவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். மச்சேந்திரர் அவள் மீது அருள் கொண்டு சிறிது திருநீற்றையளித்தார். "இதனை உட்கொள்வாயானால் மக்கட்பேற்றையடைவாய்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

திருநீறு பெற்றவள் அத்திருநீற்றினை உடனே உட்கொள்ளவில்லை. தான் திருநீறு பெற்ற செய்தியைப் பக்கத்து வீட்டுக்காரியிடம் கூறினாள். அவள், உனக்குத் திருநீறு கொடுத்தவர் போலித் துறவியாக இருந்தாலும் இருக்கலாம். உன்னை மயக்கும் பொருட்டுத் திருநீறு கொடுத்தும் இருக்கலாம். ஆகவே நீ அத்திருநீற்றை உட்கொள்ளாதே" என்று சொன்னாள். இதனால் அச்சமடைந்த அப்பெண் தான் பெற்ற திருநீற்றை அடுப்பிற் போட்டு விட்டாள்.

சில ஆண்டுகள் சென்றன. திருநீறு அளித்த மச்சேந்திரநாதர் அவ்வூருக்கு வந்தார். தம்மிடம் திருநீறு பெற்றவளைக் கண்டு "உன்னுடைய மகனை நான் பார்க்க வேண்டும் அவனை அழைப்பாயாக" என்று கூறினார். திருநீறு பெற்றவள் தான் திருநீறுபெற்றதை உண்ணாமல் அடுப்பிற் போட்டு விட்டதாக உண்மையைக் கூறினாள். இதனைக் கேட்ட மச்சேந்திரநாதர், "அவ்வாறாயின் அச்சாம்பரை எங்குக் கொட்டினாய்?" என்று உசாவினார். "வழக்கமாகக் கொட்டும் குப்பைப் பட்டரையில் கொட்டினேன்" என்று கூறி அச்சாம்பர் கொட்டப்பட்டிருந்த குப்பைப் பட்டரையையுங் காட்டினாள். மச்சேந்திர

நாதர் குப்பைப் பட்டரையிடம் போய்க், "கோரக்கா!" என்று கூப்பிட்டனர். குப்பைப் பட்டரையில் இருந்து, "ஏன்" என்னும் ஒலியுண்டாயிற்று. சித்தர் அங்கிருந்தவர்களிடங் குப்பையை அகற்றுமாறு கூறி அகற்றச் செய்தார். அதிலிருந்து குழந்தையொன்று சித்தர் திருநீறு கொடுத்த காலமுதல் இருக்க வேண்டிய வளர்ச்சியோடு வெளிப்பட்டது. சித்தர் அக்குழந்தையைப் பெண்ணிடங் கொடுத்தார். ஆனால் அச்சிறுவனோ தாயிடம் இராமல் சித்தரைப் பின்தொடர்ந்து சென்று தானும் பெரிய சித்தனாகிக் குருவை மிஞ்சிய சீடனாக விளங்கினான்.

ஒருநாள் கோரக்கர் ஒரு வீட்டிற்குச்சென்றுஐயங்கேட்டார். வீட்டுப் பெண் ஒரு வடையைக் கொடுத்தாள்; கோரக்கர் அவ்வடையைக் கொண்டு போய்த் தம்முடைய ஆசிரியரிடங் கொடுத்தார். ஆசிரியராகிய மச்சேந்திரநாதர் அவ்வடையைத் தின்றார். அது மிக இனிமையாக இருந்ததைக் கண்டு மறுநாளும் அதேபோல் வடை வேண்டும் என்று சொன்னார். மாணவராகிய கோரக்கர் மறுநாள் முதனாள் வடை தந்த வீட்டிற்குச் சென்று பிச்சை கேட்டார். முதனாள் வடை கொடுத்த பெண் அன்றுசோற்றைப் போட்டாள். கோரக்கர் தமக்குச் சோறு வேண்டியதில்லை யென்றும் முதல்நாள் கொடுத்ததைப் போல் வடை வேண்டும் என்றுங் கேட்டார். இதனைக் கேட்ட அப்பெண், "நேற்று வடைசுட்டேன். அதனால் கொடுத்தேன். இன்று வடை சுடவில்லையே! உள்ளதைத் தானே கொடுக்கலாம்? இல்லாததைக் கேட்டால் என்ன செய்வது? உம்முடைய ஆசிரியர் உம்மைப் பார்த்து உன்னுடைய கண்வேண்டுமென்று கேட்டால் கொடுப்பீரா?" என்றுசொன்னாள்.

இதனைக் கேட்ட கோரக்கர், "என்னுடைய ஆசிரியர் என்னுடைய கண்ணைக் கேட்டாலும் உடனேகொடுக்கக் காத்திருக்கிறேன். அந்தக் கண்ணை நீயே பெற்றுக்கொண்டு வடை கொடு" என்று கூறித் தம்முடைய கண் ஒன்றைப் பெயர்த்து அப்பெண்ணிடங் கொடுத்தார். இதனைக் கண்ட அப்பெண் மிகுந்த அச்சங் கொண்டாள். உடனே இனிமையான வடைகளை நெய்யிற் சுட்டுக் கோரக்கரிடங் கொடுத்தாள். அதனைக்கோரக்கர் தம்முடையஆசிரியரிடங்கொண்டு போய்க் கொடுத்தார். இவரைப் பார்த்த மச்சேந்திரர், "உன்னுடைய கண் ஒன்று எங்கே?" என்று உசாவினார். கோரக்கர் நிகழ்ந்ததைக் கூறினார். இதனைக் கேட்ட மச்சேந்திரர் தம்முடைய மாணவரின் ஆசிரிய அன்பைக் கண்டு அவரிடத்தில் மிகுந்த பற்று வைத்தார். அவர் இழந்த கண்ணைப் பெறுமாறு செய்தார்.

மச்சேந்திரர் மலையாள நாட்டிற்குச் சென்றார். அங்குப் பிரேமளா என்னும் பெயருடைய பெண் ஒருத்தி மச்சேந்திரரை மயக்கித் தன் வழிப்படுத்திஅவரோடு இன்பம் நுகர்ந்து கொண்டிருந்தாள். அப்பொழுது அவர்கட்கு ஒரு குழந்தை பிறந்தது. அதற்கு மீனநாதன் என்று பெயரிட்டு வளர்த்தனர். ஒருநாள் மச்சேந்திரர் பிரேமளாவைப் பார்த்து "என்னுடைய மாணவன் கோரக்கன் என்னை அழைத்துக் கொண்டு போவ

தற்கு வருவான்'' என்று சொன்னார். பிரேமளா அந்நாட்டு அரசியாதலின் அவள் தன்னுடைய அமைச்சர்களைப் பார்த்து, "இந்நாட்டில் துறவிகளைக் கண்டால் உடனே அவர்களைக் கொலை செய்யுமாறு நாடெங்குந்தெரியப்படுத்துக" என்று கூறினாள். அமைச்சர்களும் அவ்வாறே அறிவித்தனர்.

கோரக்கர் தம்முடைய ஆசிரியருடைய நிலையை அறிவுப் பார்வையால் அறிந்தார். ஆசிரியரை அழைத்துக் கொண்டு வரவேண்டுமென்று மலையாள நாட்டை அடைந்தார். ஒரு வீட்டிற்குப் போய்ப் பிச்சை கேட்டார். அவ்வீட்டுக்காரி இவர் மீது இரக்கங் கொண்டாள். அந்நாட்டில் துறவிகளைக் கொல்லுமாறு கட்டளை பிறப்பிக்கப் பட்டிருத்தலைக் கூறினாள். இதனைக் கேட்ட கோரக்கர் அச்சங்கொண்டார். இதற்குயாதுசெய்யலாம்என்று எண்ணமிட்டுக் கொண்டு துறவிக் கோலத்தை மாற்றி ஓரிடத்தில் இருந்து எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். அவ்விடத்திற்குக் கூத்தாடிகள் சிலர் வந்து மனவருத்தத்தோடிருந்தார்கள். கோரக்கர் அவர்களைப் பார்த்து, "உங்களுடைய மன வருத்தத்திற்குக் காரணம் யாது?" என்று உசாவினார். அவர்கள் இவரைப் பார்த்து, "நாங்கள் இந்நகரத்தரசியிடம் பரிசு பெறலாம் என்றுவந்தோம். எங்களுடைய மத்தளம் முழக்குவோன் நோய்வாய்ப் பட்டுள்ளான். ஆகவே மத்தளம் முழக்குவதற்குத் தக்க ஆளில்லை. இதற்கு என்ன செய்யலாம் என்று எண்ணமிட்டு வருத்தப் பட்டுக் கொண்டிருக்கிறோம்" என்று கூறினார்கள்.

கோரக்கர் அவர்களைப் பார்த்து, "எனக்கு மத்தளம் முழக்குவதிற் பயிற்சியுண்டு. நான் முழக்குகிறேன். நீங்கள் புறப்படுங்கள்" என்று கூறி அவர்களோடு போய் அரசி முன்பு அவர்கள் கூத்தாடும் போது மத்தளம் முழக்கினார். அம்முழக்கத்தில் சில அறிகுறிகளைச் செய்தார். இதனைக் கேட்ட மச்சேந்திரர் தம்முடைய மாணவன் தம்மை அழைத்துச் செல்ல வந்துள்ளான் என்பதை உணர்ந்து கொண்டார். தம்முடைய மாணவர் வந்திருக்குஞ் செய்தியைத் தம்முடைய காதற் கிழத்தியிடங் கூறினார். அவள் இதனைக் கேட்டு வருந்தியிருந்தாள். கோரக்கர் தம்முடைய ஆசிரியரை அழைத்தார். மச்சேந்திரர் காதற் கிழத்தியையும் மகனையும் நீங்குவதற்கு மனமில்லாதவராக இருந்தார். கோரக்கர் சிலநாள் தம்முடைய ஆசிரியரோடு தங்கியிருந்தார்.

மச்சேந்திரர் ஒருநாள் தம் காதற் கிழத்தியோடும் மகனோடும் பஞ்சணையில் படுத்திருந்தார். அப்பொழுது குழந்தை படுக்கையில் மலங் கழித்தது. மச்சேந்திரர் கோரக்கரைக் கூப்பிட்டுக் குழந்தையைக் கழுவி வருமாறு கூறினார். கோரக்கர் அக்குழந்தையைக் குளத்திற்குக் கொண்டு போய்த் தண்ணீரில் கழுவிக் கல்லில் துவைத்து வெய்யிலிலே காயப் போட்டார். மச்சேந்திரர் கோரக்கரைக் கூப்பிட்டு, "மீனநாதன் எங்கே?" என்று உசாவினார். "கல்லில் துவைத்துக் காயப் போட்டிருக்கிறேன்" என்று கோரக்கர் மறுமொழி கூறினார். இதனைக் கேட்ட மச்சேந்திரரும் அவருடைய காதற் கிழத்தியும்

வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அழுதனர். பிறகு, "மீனநாதனை இங்கே கொண்டு வா" என்றனர்.

கோரக்கர் கல்லின் மேல் துவைத்தபடியினால் சிதறிய துண்டுகள் நூற்றெட்டாகையால் நூற்றெட்டு மீனநாத வடிவங்கள் இருவர் முன்பும் வந்து நின்றன. இவர்களைக் கண்ட பிரேமளா, "என் வயிற்றில் பிறந்த மீன நாதன்யார்?" என்று கேட்டாள். கோரக்கர் நூற்றெட்டுப் பிள்ளைகளையும் ஒன்றாக்கி அவர்களிடங் கொடுத்தார். பிறகு ஆசிரியரைப் பார்த்து, "நீர் புறப்படும்; நாம் நம்முடைய இருப்பிடத்திற்குப் போவோம்" என்றுசொன்னார். மச்சேந்திரர் இவனோடு போகாமலிருந்தால் இன்னும் ஏதேனுந் தொல்லைகளை உண்டாக்குவான் என்று எண்ணியவராய் மாணவனோடு செல்லத் தொடங்கினார்.

இவர்களுடைய வழிச் செலவுக்கு வேண்டுமே என்று எண்ணியவளாய்ப் பிரேமளா தங்கக்கட்டி ஒன்றை ஒரு பையிலிட்டுக் கோரக்கர் அறியாமல் மச்சேந்திரரிடம்கொடுத்தனள். இருவரும் வழிச் செல்கையில் மச்சேந்திரர் ஆங்காங்கே எதிர்ப்பட்டவர்களிடம், "இங்கே கள்ளர் அச்சம் உண்டோ?" என்றுக் கேட்டுக் கொண்டே சென்றார். இவரிடத்தில் ஐயங் கொண்ட கோரக்கர் ஆசிரியர்பிரிந்திருந்த சமயம் பார்த்துப் பையைத் திறந்து பார்த்தார். அதனுள் தங்கக் கட்டியிருத்தலைப் பார்த்து அதனை யெடுத்துத்தூர எறிந்து விட்டு அதே அளவு கனமுள்ள கல் ஒன்றை யெடுத்துப் பைக்குள் வைத்து விட்டார். மேலும் வழி நடந்த போது மச்சேந்திரர் எதிர்ப்பட்டவர்களைப் பார்த்து "ஈண்டுக் கள்ளர் அச்சம் உண்டோ?" என்று உசாவினார். இதனைக் கேட்ட கோரக்கர், "அவ்வச்சம் தங்கட்கேன்? இனிமேல் வேண்டியதில்லை" யென்றார். இதனைக் கேட்ட மச்சேந்திரர் பையை அவிழ்த்துப் பார்த்தார். அதனுள் கல்லிருத்தலைக் கண்டு திடுக்கிட்டார். கோரக்கரைப் பார்த்து, "நீ என்னுடைய மகனைக் கொன்றாய்; இப்பொழுது என்னுடைய பொருளைக் கைப்பற்றிக்கொண்டாய். நீ எனக்கு நல்ல மாணவன் அல்லன்; ஆகவே என்னை விட்டு நீங்குவாயாக!" என்று சொன்னார்.

கோரக்கர் வழியில் இருந்த ஒரு மலை மீது ஏறிச் சிறுநீர் கழித்தார். அம்மலை தங்கமயமாகியது. கோரக்கர் தம்முடையஆசிரியரைப் பார்த்துத் "தங்களுடைய பொருளை யெடுத்துக் கொள்ளலாம்" என்று கூறினார். அவ்வளவில் மச்சேந்திர நாதரைப் பிடித்திருந்த மாயை விலகியது. நல்லறிவு பெற்றுத் தம்முடைய மாணவனைப் புகழ்ந்து பாராட்டினார்.

**மஞ்சையர்** - இவர் ஒரு வீரசைவர். சிவபிரான் அல்லாத வேறு தேவர்களைத் தொழுபவர்களைக் கண்டால் இவர்அவர்களுடைய மூக்கை யரிந்துவிடுகிற தென்னும் உறுதியுடையவராக இருந்தார். வைணவர்கள் இவரோடு சொற் போரிட்டுத் தோற்றுப் போனார்கள். காட்சிப்பிரமாணம் வேண்டுமென்றார்கள். இவர் திருமாலை யழைத்துக்காசி விசுவநாதரைத் தொழச் செய்தார்.

**மடிவாலமாச்சையர்** - இவர் ஒரு வீர சைவ அடியார். இவர் சிவனடியார்களுடைய ஆடைகளை வெளுத்துக் காயவைத்து அவைகளை யாருந் தீண்டாதபடி பாதுகாத்துக் காய்ந்த பிறகு அடியவர்களிடங் கொடுப்பார். இவர் ஒரு நாள் ஆடையைக் காயவைத்து விட்டுக் காவலிருந்தார். அப்பொழுது அசுத்த முடையவன் ஒருவன் அவ்வழி வந்தான். "வராதே" என இவர் தடுக்கவுங் கேளாது மீறி வந்தவனைக் கொலை செய்தார். இதனையறிந்த அரசன் யானைப் பாகரையேவி இவரை அழைத்துக் கொண்டுவரச் செய்தான். இவர் யானையையும் யானைப் பாகரையுங் கொன்றார். இவருடைய தன்மையை யறிந்த அரசன் இவரைப் பணிந்து போற்றினன். இவர் ஒருநாள் வசவரோடுஇருக்கும்போது வசவர் சிவனடியார்கள் தம்மிடம் எதுவும் வாங்கிக்கொள்வதில்லை யென்று வருத்தமாக விருந்தார். வருத்தத்தின் காரணத்தை யுணர்ந்த இவர் தாம் வெளுப்பதற்கு வாங்கி வைத்திருந்த சிவனடியவர்களுடைய ஆடையில் ஒன்றை யெடுத்து நீரில் நனைத்து உதறினர். அதிலிருந்து தெறித்து வீழ்ந்த நீர்த் துளிகளெல்லாம் விலை யுயர்ந்த ஒன்பான் வகை மணிகளாயின. இதனைக் கண்ட வசவர் அடியவருடைய பெருமை அளவிடுதற் கரியது என்று வியந்து மகிழ்ந்தார்.

**மட்லி குமார அனந்தராசாக்கள்** - இவர்களுடைய காலம் கி. பி. 1550 - க்கும் 1628 க்கும் உட்பட்டது. இவர்கள் விசய நகர அரசர்கட்கு உட்பட்டவர்களாகவும் அவர்களுடைய படைத் தலைவர்களாகவும் இருந்தனர். இவர்கள் அரசர்கள் அளித்த பொருளினாலும் தம்முடைய சொந்தப் பொருளினாலும் பல சிவன் கோயில்களிலும் பெருமாள் கோயில்களிலும் பல வகையான திருப்பணிகளைச் செய்தார்கள். சைன பௌத்த சமயங்களைக் கண்டித்துச் சைவ வைணவ சமயங்களை நிலை நாட்டினார்கள். இவர்கள் மட்லி என்னு மிடத்திலிருந்து வந்ததால் மட்லி என்னும் அடைமொழியைப் பெற்றார்கள். மட்லி என்பது கடப்பை மாவட்டத்தில் ராயகோட்டிக்கு வடகிழக்கில் ஐந்துகல் தொலைவில் மாண்டவ்வான் ஆற்றின் கரையில் உள்ளது.

**மணக்கால்நம்பி** - மணக்கால் என்னும் ஊரிற் பிறந்தவராதலின் மணக்கால் நம்பி என்று பெயர் பெற்றார். இவருடைய இடுகுறிப் பெயர் இராமர் என்பது. நாதமுனிகளின் மாணாக்கராகிய உய்யக் கொண்டாருடைய திருவருளுக்கு உரிமையானவர்.

**மணப்பாக்கத்துநம்பி** - பிள்ளை லோகாச்சாரியாருடைய திருவடிச் சம்பந்தி. தேவப் பெருமானுடைய கட்டளைப்படி கோயிலுக்குச் சென்று பிள்ளைலோகாசாரியார் தம்முடைய மாணவர்கட்கு அருளுரை வழங்குகையில் மறைவிலிருந்து கேட்டு அவருக்கு மாணவரானார்.

**மணமேற்குடி** - தஞ்சாவூர்மாவட்டத்தில்அறந்தாங்கிதாலுகாவில் உள்ளது. கூன் பாண்டியனுக்கு அமைச்சராக இருந்தவரும் பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியார்க்குச் சைவ சமய வளர்ச்சியில் உறுதுணையாக நின்றவரும் ஆகிய குலச்சிறை நாயனர் பிறந்தவூர். இஃது ஆவுடையார் கோயிலுக்குத் தென் கிழக்கில் பதினறு நாழிகை வழித் தொலைவில் உள்ளது. முன்னளிற் பாண்டி

நாட்டைச் சேர்ந்ததாக இருந்த இவ்வூர் இந்நாளில் சோழநாட்டைச் சேர்ந்ததாக விளங்குகிறது.

**மணவாள மாமுனிகள்** - இவர் பாண்டிய நாட்டிலே திருநெல்வேலி மாவட்டத்தில் சிக்கில் கிடாரம் என்னும் பதியில் ஐப்பசித் திங்கள் சுக்கில பக்கம் சதுர்த்தசி வியாழக்கிழமை மூல நாளில் திகழக் கிடந்தான், திருநாவீறுடைய அண்ணர் என்பவருக்குப்புதல்வராகத் தோன்றினார். இவரை ஆதிசேடனுடையகூறு என்றும், இராமாநுசருடைய மறு பிறப்பு என்றுங் கூறுவார்கள். திருவாய்மொழிப் பிள்ளை என்னும் பெரியாரிடம் திருவாய்மொழி முதலான திவ்ய பிரபந்தங்களையும் மற்றைய சிறந்த நூல்களையும் அறிந்தவர். இராமாநுசரிடத்திற் பேரன்பு வாய்ந்தவர். "பெரிய ஜீயர்" என்ற திருப்பெயர் பெரிய பெருமாளால் கொடுக்கப் பட்டது. சொந்த ஊராகிய ஆழ்வார் திருநகரியை விட்டு நீங்கித் திருவரங்கத்திலேயே வாழ்ந்திருந்தவர். தம்முடைய ஆசாரியர் கட்டளைப்படி அருளிச் செயல்களின் ஆழ்பொருள்களை அனைவருங் கேட்டுய்யுமாறு எங்கும் பரப்பியவர். தத்துவத் திரயம், ரகசியத்திரயம், சீவசனபூடணம், ஆசார்ய இருதயம், ஞானசாரம்,பிரமேய சாரம், பெரியாழ்வார் திருமொழி, இராமாநுச நூற்றந்தாதி ஆகிய நூல்கட்கு விரிவுரை முதலியன. இயற்றியுள்ளார்.

**மணவிற் கூத்தனை காலிங்கராயன்** - இவனுடையபெயர்க்கு முன்னால் அரும்பாக்கிழான் என்பதுஞ் சேர்ந்து வழங்கியது. இவன் தொண்டை மண்டலத்திலுள்ள இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்றாகிய மணவிற் கோட்டத்து மணவில் என்னும் ஊரினன். அருளாகரன், அரும்பாக்கிழான், பொன்னம் பலக்கூத்தன், நரலோக வீரன் முதலிய பெயர்களும் இவனுக்கு வழங்கின. குலோத்துங்க சோழ மன்னனிடத்தில் படைத்தலைவனாக அமர்ந்து புகழ் பெற்றவர்களில் இவனும் ஒருவன். குலோத்துங்கன் வேணாடு, மலைநாடு, பாண்டி நாடு, வடநாடு முதலியவைகளில் நிகழ்த்திய போரில் இவன் படைத் தலைவனாகச் சென்று போரிட்டு வெற்றியுண்டாக்கித் தன்னுடைய அரசனுக்குப் புகழை யுண்டாக்கினான். இவனுடைய திறமைக்கு மகிழ்ச்சி யடைந்த குலோத்துங்கன்இவனுக்குக் காலிங்கராயன் என்னுஞ் சிறப்புப் பெயரை வழங்கிப்பாராட்டினான். இவன் தில்லைக் கூத்தப்பிரானிடத்தில் பேரன்புடையவன். தில்லையில் திருப்பணிகள் செய்யத்தொடங்கிப் பேரம்பலத்திற்குச் செம்புத் தகடுகள் வேய்ந்தான். நூற்றுக் கால் மண்டபமும் பெரிய திருச்சுற்று மாளிகையும், தேவாரம் பாடுதற்குரிய மண்டபமும் கட்டினான். திருஞானசம்பந்தருடைய கோயிலுக்குப் பொன் வேய்ந்தான். பூம்பொழில் அமைத்தான். மேலும் திருவதிகை வீரட்டானேசுரர் திருக்கோயிலுக்குப் பொன் வேய்ந்தும் சில மண்டபங்கள் கட்டியுந் திருப்பணி செய்தான். சமயகுரவர்கள் மூவரும் பாடிய தேவாரத் திருப்பதிகங்களைச் செப்பேடுகளில் எழுதுவித்துத் தில்லைத் திருக் கோயிலில் பாதுகாப்புச் செய்ததும்இவனுடைய திருத் தொண்டே என்பர். இவன்மீது பாடப்பட்ட வெண்பாக்கள் பல கல்வெட்டுக்களில் உள்ளன.

**மணிகர்ணிகை** - காசியில் உள்ள கங்கை யாற்றின் புனித நீர்த் துறைகளில் ஒன்றன் பெயர். சிவபிரான் தமது வாமபாகத்தில் திருமாலைப் படைத்து மறைந்தார். திருமால் தம்முடைய கையில் இருந்த உருளைப் படையால் தடாகமொன்றை உண்டாக்கி அங்குத் தவஞ் செய்து கொண்டிருந்தார். இவருடையதவத்திற்கு மகிழ்ந்த சிவபிரான் காட்சிதந்து தலையை அசைத்தார். அப்போது காதில் இருந்த மணி யொன்று இந்தத் தடாகத்தில் விழுந்தது. அதனால் அவ்விடத்திற்கு இப்பெயர் உண்டாகியது.

**மணிபத்திரன்** - இவனொரு காந்தருவன். சிந்து முனிவருடைய வசவுரையினால் கடலில் மீனாகக் கிடந்தான். பட்டினத்தார்க்கு மகவாக வந்த மருதப்பிரானால் உதையுண்டு வசவுரை நீங்கப் பெற்றான்.

**மணிபல்லவம்** - இத்தீவு இந்தியாவுக்கும்இலங்கைக்கும்இடையே இருந்தது. புத்த பீடிகை என்பது இத்தீவில் இருந்தது. இத்தீவைப் புத்தர்கள் அடைந்து புத்த பீடிகையை வழிபட்டனர். இத்தீவு புகாரில் இருந்து முப்பது யோசனை தொலைவில் இருந்த தென்பர். சாவகத்திற்கு அந்நாளிற் சென்ற கப்பல்கள் இத்தீவின் வழியே சென்றது.

**மணிமலை** - இம்மலை மேரு மலைத் தொடரின் நாற்பத் தொன்பது கொடு முடிகளில் ஒன்று. ஏழ் குன்ற நாட்டு மகேந்திர மலைக்குத் தெற்கே பெருவள நாட்டில் இருந்தது. இம் மலையில் மணிமலைத் தமிழ்ச் சங்கம் என்னும் பெயரோடு தமிழ்ச்சங்கம் ஒன்று இருந்ததாகத் தெரிகிறது.

**மணிமாந்தன்** - இவன் குபேரனுடைய காவலன். இவன் ஒரு முறை குபேரனோடு விண் வழியாகச் செல்லும் போது எச்சில் துப்பினான். அஃது அகத்தியர் மீது விழுந்தது. அதனால் அகத்தியர் சினங் கொண்டு, "இவ்வாறு எச்சில் துப்பியவன் மனிதனால் இறக்கக் கடவன்" என்று வசவுரை வழங்கினார். வீமன் மலர் கொண்டு வருதற்கு அளகைக்குச் சென்ற போது வீமனோடு போரிட்டு மாண்டான்.

**மணிமிடைபவளம்** - சிறப்பமைந்த மணியும் பவளங்களும் விரவியுள்ள மாலையைப் போல் ஒலிநயமும் பொருளமைதியும் ஒருங்கே யமையப் பெற்ற 180 பாடல்களைக் கொண்ட அகநானூற்றின் இரண்டாவது பகுதி இப்பெயரால் வழங்கப் படுகிறது.

**மணிமேகலா தெய்வம்** - அரக்கர் துன்புறுத்தாதபடி இந்திரனேவலாலே சில தீவைப் பாதுகாத்துக் கொண்டிருத்தலையுடைய ஒரு தெய்வம். தன் குலத்தான் ஒருவனை இத்தெய்வம் கடலிற் பாதுகாத்த நன்றி பாராட்டியே கோவலன் தன்னுடைய மகளுக்கு மணிமேகலை என்று பெயரிட்டான். மணிமேகலையை நல்வழிப் படுத்தும் பொருட்டு அவளை உவ வனத்திலிருந்து மணி பல்லவத்திற்குக் கொண்டு போய்ப் புத்த பீடிகைக்காட்சியால் பழம்பிறப்பை உணர்வித்துப் பழம் பிறப்புக் கணவன் யார் என்பதைத் தெரிவித்ததன்றிச் சிறந்த மூன்று அருமறைகளை மணிமேகலைக்குக் கூறியது.

**மணிமேகலை** - இவள் காவிரிப்பூம் பட்டினத்தில் மாதவிக்கும் கோவலனுக்கும் பிறந்தவள். கோவலன் மாதவியைப் பிரிந்து

மதுரை சென்று கொலையுண்டிறந்த செய்தியைக் கேட்டதும் மாதவி தன் மகளாகிய இவளுடைய கூந்தலைக் களைந்து இவளைத் துறவு நிலைபெறச் செய்தாள். பேரழகியாக இருந்த இவளிடம் மன்னன் மகன் உதயகுமரன் காதல் கொண்டான். மணிமேகலையின் பாட்டியும் மாதவியின் தாயுமானசித்திராபதி யென்பவளும் உதயகுமரனுடைய காதல் நிறைவேறுவதற்கு உறுதுணையாக அமைந்து நின்று பெருமுயற்சி செய்தாளாயினும் உதயகுமரனுடைய எண்ணம் நிறைவேற வில்லை. அவன் வீணே கொலையுண்டிறந்தான். தன் மகன் மாண்டொழிதற்குக் காரணமாக இருந்த இவளைக் கொன்றொழிக்கவும்துன்புறுத்தவும் அரசி மிக முயன்றாளாயினும் அவளுடைய எண்ணம் நிறைவேற வில்லை. பௌத்த சமயத் துறவு நிலையை மேற்கொண்டிருந்த இவள் அச்சமய நூல்களை நன்குணர்ந்து அறநெறிகளை முறைப்படி கடைப்பிடித் தொழுகினமையின் வீடுபேற்றை யடைந்தாள். மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார் மணிமேகலையின் முழு வரலாற்றையும் 'மணிமேகலை' என்னும் பெருடைய சிறந்த காப்பியமாகச்செய்தார். இதனுடையதொடர்பாக அமையப் பெற்றதுதான் சிலப்பதிகாரம்.

**மண்டனமிசிரர்** - இவர் வேதத்தில் கரும காண்டமே முதன்மையானது என்று வாதிக்கும் மீமாம்சகர்களின் தலைவர். இவர் மாகிஷ்மதி என்னும் பட்டணத்தில் இல்வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தார். சங்கராச்சாரியார் இவரோடு சொற்போர் செய்தார். சொற்போருக்கு மண்டன மிசிரரின் மனைவியாரே நடுவுநிலைமையாளராக அமைக்கப் பட்டார். அந்த அம்மையார் சொற்போர் நிகழ்த்தும் இருவரையும் கழுத்தில் மாலையணிந்து கொள்ளுமாறு செய்தார். எவருடைய மாலை முதலில்வாடத்தொடங்குகின்றதோ அவர் தோற்றவர் என்று கூறினார். பலநாட்கள் சொற் போர் நடைபெற்றது. மண்டனர் கருமமே பெரியது என்று சொற்போரிட்டார். சங்கரர், "ஞானமே பெரியது" என்று சொற்போரிட்டார். இறுதியில் மண்டனமிசிரர் அணிந்திருந்த மாலை வாடத் தொடங்கியபடியால் தோல்வியடைந்துசங்கரருடையமாணவரானார்.

**மண்டோதரி** - இவள் மயனுடைய மகள். இராவணனுடைய மனைவி. இந்திரசித்துக்குத்தாய். இராவணன் இறந்த துன்பத்தினால் அவனுடைய உடலின் மீது விழுந்து இவளும் உயிர் விட்டாள். இவள் சிவபிரானிடத்தில் மிகுந்த அன்புடையவள். இவளுடைய பெயர் மந்தோதரி எனவும் கூறுவர்.

**மண்முகன்** - தவள மலையில் இருந்து தவஞ்செய்த ஒரு முனிவன். இவனிடத்திலிருந்த பசுவயிற்றிலேதான் புண்ணியராசன் பிறந்தான்.

**மதங்க சூளாமணியார்** - இவர் திரு நீலகண்ட யாழ்ப்பாணருடைய மனைவியார். திருநீலநக்கநாயனார் இவர்களிருவருக்கும் நடுமனைவேதிகைப் பக்கத்தில் இரவு தங்குதற்கு இடங்கொடுத்தனர். தீண்டத்தகாத வகுப்பினராகிய இவர்களிடத்தில் திருநீலநக்கர் பேதம் பாராட்டாது போற்றினர். யாழ்ப்பாணர் இசை பாடுதலில்

வல்லுநர் என்பர். திருநீலநக்கர் மறையவர் குலத்தினர்.

**மதங்கருஷி** - இவர் தவத்திற் சிறந்தவர். வாலி துந்துபியின் உடலைத் தூக்கி ஒரு சமயம் இவ ரிருந்த மதங்க மலைமீது எறிந்தான். அதனாற் சினமடைந்த இவர் தம்முடைய மலையை வாலி மிதித்தால் அவனுடைய தலை வெடிக்குமென்று வசவுரை வழங்கினார். பிரியம்பதன் என்கிற காந்தருவனை யானையாகச் சபித்தார்.

**மதங்கியார்** - மதங்கராவார் இசைக்கும் கூத்துக்கும் உரிய ஒரு சாதியார். தம்முடைய இரண்டு கைகளிலும் வாட் படையை ஏந்திச் சுழன்று ஆடும் மகளிர் மதங்கியார் எனப் படுவார்.

**மதனமஞ்சிகை** - இவள் கலிங்க சேனை என்பவளுடைய மகள். நரவாணதத்தனுடைய மனைவி. மிகுந்த அழகு வாய்ந்தவள். மானசவேகன்என்னும் வித்தியா தரனால் விரும்பி யெடுத்துச் செல்லப் பட்டுத் தன்னுடைய கணவனால் மீட்கப் பெற்றவள்.

**மதனன்** - ஏமாங்கத நாட்டை வஞ்சனையாகக் கைப்பற்றிய கட்டியங் காரனுடைய மைத்துனன். மிகக் கொடியவன்; இரக்கமென்பது சிறிதுமில்லாத அரக்கனாகிய இவன் நன்கு தின்று கொழுத்து உடல்வளர்த் திருந்தான். கட்டியங்கார னுடைய ஏவலால் இவன் சீவகனைப் பிடித்து வஞ்சனையாகக் கொன்றுவிட ஏற்பாடு செய்தான். சீவகன் தெய்வத் திருவருளால் இவனுடைய கையி லிருந்து தப்பித்துக் கொண்டு போய்விட்டான். கட்டியங் காரன் தன்னை இகழ்வானே என்று அஞ்சிய இவன் தன்னுடைய நண்பன் ஒருவனைக் கொன்று விட்டுக் கட்டியங்கார னிடஞ் சென்று, "சீவகனைக் கொன்று விட்டேன்" என்று பொய்யுரை புகன்றான். அப் பேதையும் இவன் கூறியதை உண்மை யென்று நம்பி இவ னுக்குப் பல சிறப்புக்கள் செய்தான்.

**மதன்** - இவன் கலிங்க நாட்டில் மதங்கபுரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவன். இவன் பொன் செய்யும் வித்தையைக் கற்றுணர முயன்றும் முடிய வில்லை. ஆகவே பொன் செய் யும் சூழ்ச்சி தனக்குத் தெரியும் என்று பலரிடமும் கூறி ஏமாந்தவர்களுடைய பொருள் களைக் கவர்ந்து திரிந்தான். அரிபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த தருமதத்தன் என்னும் பெருஞ் செல்வனும் இம்மதனுடைய பேச்சில் மயங்கி மிகுதியான பொருளை யடைய வேண்டு மென்று பேரவாக் கொண்டான். தன் னுடைய பொருளை யெல்லாம் இவனிடங் கொடுத்து ஏமாந் தான்.

**மதிதயன்** - ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு காஞ்சிமா நகரில் அரசு புரிந்திருந்த துணை யிளங்கிள்ளி என்னும் அரச னுடைய அமைச்சர்களில் இவன் ஒருவன். அறிவும் அடக்கமும் பெருந்தன்மையும் அமையப் பெற்றவன். இவன் எப்பொழு தும் அரசனுக்கு அண்மையில் இருந்து காரியங்களைச் செய்யி னும் எக்காரியத்துக்கும் காரணத்தைக் கேட்க மாட் டான். உரிய காலத்தில் எல் லாம் தானே விளங்கு மென்று உணர்ந்து அடக்கமாகக் காரியங்களைச் செய்வான். ஒரு காலத்தில் காஞ்சியில் மழை பெய்யாது அல்லல் மிகுதியா யிற்று. அனைவரும் வருந்தினர்.

தூவதிகன் என்னுந் தேவதை ஒன்று அரசனிடம் வான் வழியாக வந்து, "அரசனே வருத்தப் படாதே சில காலத்தில் மணிமேகலை என்பவள் இங்கு வருவாள். அவள் வரவால் மழை பொழியும். அவள் வந்து தங்குவதற்கு இந்நகரின் நடுவே ஒரு பொய்கையும் சோலையுஞ் செய்து வைப்பாயாக" என்று கூறியது. அரசன் அவ்வாறே செய்யுமாறு அமைச்சனாகிய இவனிடம் கட்டளையிட்டான். அமைச்சனாகிய இவன் அரசன் கட்டளைப்படி அவ்வாறே செய்து முடித்தானேயன்றி அவைகள் எதற்காக என்று அரசனிடங் கேட்கவில்லை. அரசனுங் கூறவில்லை. மணிமேகலை வந்து தங்கிய பிறகு தான் இவன் உண்மையை உணர்ந்தான். இவனுடைய அமைதியையும் அடக்கத்தையும் அரசனும் பெரிதும் பாராட்டினான்.

**மதிவாணனார்** - பாண்டிய மன்னர்களில் ஒருவர். கடைச்சங்க காலத்தவர். நாடகத் தமிழ் நூல் இயற்றியவர். இந்நூல் முன்னாளில் புகழ் பெற்று விளங்கிற்றெனினும் பின்னாளில் இறந்தொழிந்தது. அடியார்க்கு நல்லார் இவரையும் இவருடைய நூலையும் சிலப்பதிகார உரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

**மதிவாணன்** - பாண்டி நாட்டில் தஞ்சாக்கூரில் இருந்தவன். இவனிடம் அறிவு நலம், செல்வ நலம், கொடை நலம் முதலிய யாவும் ஒருங்கமைந்திருந்தன. சேர சோழ அரசர்களிருவரும் ஒருவரோடொருவர் மாறுபட்டுப் பெருங் கலகம் விளைத்த போது இவன் அவர்களிடையே புகுந்து பகைமையை விலக்கி ஒற்றுமைப் படுத்தினான். ஒருபுறமுங் கோணாமல் நீதி கூறுவதில் இவன் மிகவல்லவன். இவனுடைய சீரிய பண்புடைமை எல்லா மக்களாலும் இனிது பாராட்டப் பெற்றது. அந்நாளில் மதுரையில் இருந்து அரசு புரிந்த சந்திரகுலதீபன் என்னும் பாண்டியன் இவனுடைய அறிவு நலத்திற்கு மகிழ்ந்து இவனைத் தனக்கு அமைச்சனாக்கிக் கொண்டான். பொய்யாமொழிப் புலவரால் பாடப்பட்ட தஞ்சை வாணன் கோவை என்னும் அரிய நூல் இம்மதிவாணன் மீது இயற்றப் பட்டதே.

**மது** - இவனோர் அசுரவீரன் அருந் தவம் பல புரிந்து பெருந்திருவடைந்து நின்றான். சிவபிரானருளிய முத்தலைச் சூலம் ஒன்று எப்பொழுதும் இவனிடம் இருந்தது. ஆண்மை மிகுந்த இவன் தன்னுடைய பெயரால் மதுபுரம் என்னும் ஊர் ஒன்றை அமைத்து அதில் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். பேராண்மையுடையவர்களாய்த் தம்மையெண்ணியவர்களிடமெல்லாம் இவன் தன்னுடையபோராண்மையைக் காட்டினான். இராவணனுடைய சிறிய தாயாகிய கும்பீநசி என்பவள் சிறந்த அழகுடையவளாகத் திகழ்ந்தாள். இவன் அவள் மீது நாட்டங் கொண்டிருந்தான். ஒரு நாள் இலங்கையிற் புகுந்து அவளைத் தன்னுடைய மதுபுரத்திற்குக் கொண்டு வந்து மணந்து கொண்டான். இவனோடு போர் செய்ய வந்த இராவணன் உறவாகிச் சென்றான்.

**மதுகைடவர்**-இவர்கள் அசுரர்கள். பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தவர்கள். மதுகைடவன் என்னும் இருவரும் உடன்

பிறந்தவர்கள். உருவிலும் ஆற்றலிலும் ஒத்து விளங்கியவர்கள். மதுகைடவர்கள் என்று ஒரு சேரப் பெயரெய்தி நின்றனர். இவர்களை எவராலும் வெல்ல முடியவில்லை. இவர்கள் தந்நிகரற்ற தனிப்பெருந் தலைவர்களாக விளங்கியிருந்தனர். நாரதர் ஒரு நாள் இவர்களிடம் வந்து "நீங்கள் திருமாலை வென்றாலன்றி உங்களுடைய புகழ் ஒரு புகழாகமாட்டாது" என்று கலக மூட்டிச் சென்றார். அதுமுதல் இவர்கள் திருமாலை வெல்வதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தனர். ஒரு நாள் திருமாலின் இருப்பிடத்திற்குச் சென்று அவரைப் போருக்குக் கூப்பிட்டனர். திருமால் இவர்களை வெல்ல முடியாதென்பதை நன்குணர்வார். ஆகவே அவர் அழகிய ஒரு வடிவத்தோடு இவர்கள் முன்னே வந்து நின்றார். அவ்வடிவம் இவர்கட்கு மகிழ்ச்சியை அளித்தது. இவர்கள் அவ்வடிவத்தைப் பார்த்து, "உனக்கு வேண்டியதைக்கேள் தருவோம்" என்றனர். உடனே அவ்வடிவம், "நீங்கள் என்னுடைய கையால இறந்தொழிய வேண்டும்" என்றது. "இவர்கள் அவ்வாறே தந்தோம். எம்மை நிலத்தில் நிறுத்தாமல் உன்னுடைய தொடையில் நிறுத்தி அடித்தால்யாம் இறந்தொழிவோம்" என்றனர். திருமாலும் இவர்களை அவ்வாறே கொன்றொழித்தார்.

**மதுரகவி** - மதுரகவி என்பது ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைப் பாக்களில் ஒன்றாகும். ஒருவருடைய பாடல் பலரும் போற்றத்தக்கவாறு இனிமையாக அமையுமானால் அப்பாடல்களை இயற்றியவர்கள் மதுரகவி என்னும் பெயருக்குரியவர்களாவர். இரண்டொரு கவிகள் மட்டும் இனியதாக விருப்பின் பயனில்லை. அவர்கள் பாடும் எல்லாப் பாடல்களுமே இனிமையுடையனவாக இருத்தல் வேண்டும்.

**மதுராந்தகனை குலோத்துங்க சோழ கேரள ராசன்** - இவனுடைய பெயருக்கு முன்னால் அரையன் என்பதுஞ் சேர்ந்து வழங்கும். இவன் சோழவள நாட்டில் முழையூரிலிருந்தவன். குலோத்துங்க சோழனுடைய படைத் தலைவர்களில் ஒருவன். குலோத்துங்க சோழ கேரள ராசன் என்பது குலோத்துங்க சோழ மன்னனால் கொடுக்கப் பட்ட சிறப்புப் பெயர். சேரர்களோடு நடந்த போரில் படைத்தலைமை தாங்கிச் சென்ற வீரர்களில் இவன் ஒப்பற்றவனாக விளங்கினான். குலோத்துங்கன் கோட்டாற்றில் நிலை நிறுத்திய நிலைப்படைக்குத் தலைவனாயிருந்தான். கோட்டாற்றில் தங்கியிருந்த காலத்தில் அங்கு இராசேந்திர சோழேச்சுரம் என்னும் பெயருடைய திருக்கோயிலைக் கட்டினான். ஆந்தாயக்குடி என்னும் ஊர் இராசேந்திர சோழ நல்லூர் என்று பெயர் மாற்றப் பெற்று அக்கோயிலுக்கு இறையிலி நிலமாக வழங்கப் பட்டது. இப்படைத் தலைவன் கடவுளிடத்தில் மிகுந்த அன்புடையவன்.

**மதுராந்தகன்** - பாண்டியனை வென்று மதுரையைச் சுட்டுப் பாழாக்கியமையின் மதுரையும் ஈழமுங் கொண்ட பரகேசரி வர்மன் என்னும் சோழனுக்குண்டாகிய காரணப் பெயர்.

**மதுராபதி** - தென் மதுரையின் அதிதேவதை. இத்தெய்வத்தாலேதான் கண்ணகி கோவலனுடைய முற்பிறப்பின் வரலாறு முதலியவைகளைத்

தெரிந்து கொண்டாள். இவள் மதுரைமா தெய்வம் என்றுங் கூறப் பெறுவாள்.

**மதுரை** - மதுரை யென்னும் பெயருடைய ஊர்கள் இரண்டு. ஒன்று தமிழ் நாட்டில் உள்ளது. மற்றது வடநாட்டில் உள்ளது. தென்னாட்டில் உள்ளது தென் மதுரை யெனவும் வடநாட்டில் உள்ளது வடமதுரை யெனவும் வழங்கும். தென்மதுரையாகிய தமிழ் மதுரையில் சிவபிரான் மீனாட்சியம்மையை மணந்தார். அறுபத்து நான்கு திருவிளை யாடல்களைச் செய்தார். இம் மதுரையினுடைய சிறப்பை ஆலாஸ்ய மான்மியம், திருவிளை யாடற் புராணம், கடம்பவன புராணம் முதலியன விளக்க மாகக் கூறும். வைகையாறு இம்மதுரையை யொட்டி அமைந்திருக்கிறது. வடமதுரை யமுனை யாற்றின் கரையில் அமைந்திருக்கிறது. மது என்ப வனால் ஆளப்பட்ட படியால் மதுரை யென்று பெயர் பெற் றது. கண்ணபிரான் இம்மது ரையில் இருந்தார்.

**மதுரைக்காஞ்சி**-சங்கப் புலவர்கள் இயற்றிய பத்துப் பாட்டில் ஆறுவதாக அமைந்தது. எஅஉ அடிகளையுடைய அகவற்பா. தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ் செழியனுக்கு வீடுபேற்றின் பொருட்டு நிலையாமையைச் செவியறிவுறுத்தி மாங்குடி மருதனார் பாடியது. அப் பாண்டியனுடைய முன்னோர் பெருமையையும் பாண்டி நாட்டின் ஐந்திணை வளங்களை யும் மதுரையின் அழகையும் வேறு பலவற்றையும் இது கூறும். இதில் கீதையின் பெருமை கூறப்பட்டிருக்கிறது.

**மதுரைக் குமரனார்** - இவர் ஏறக் குறைய இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன்னர்ச் சோழவள நாட்டின் உட்பகுதியாகிய கோனாட்டில் எறிச்சில் என்னும் ஊரிலே வாழ்ந்திருந்தார். இவருடைய தந்தையாரின் பெயர் மாடலன். குமரனார் அரிய நூல்கள் பலவற்றையுங் கற்றுப் பெரிய புலவரானார். அந்நாளில் மதுரையில் சிறந்து விளங்கியிருந்த சங்கத்தாருடன் சேர்ந்துஅங்குத்தங்கியிருந்தார். அதனால் இவருடைய பெயர் கோனாட்டு எறிச்சிலூர் மாட லன் மதுரைக் குமரனார் என்று நீண்டு வழங்கியது. பெரும் புலவராகச் சிறந்து விளங்கி யிருந்த இவரிடம் இழிந்த வறுமையுங் குடிகொண்டிருந் தது. அதனால் இவர் மிகவும் வருந்தினார். அந்நாளில் சோழ வளநாட்டில் பெருந்திருமா வளவன் என்னுஞ் சோழ மன்னன் சிறந்த கொடையாளி யாகத் திகழ்ந்திருந்தான். கொடையாளியாக இருந்தும் பெருமிதம் என்னும் புல்லிய குணமும் அவனைப் பொருந்தி நின்றது. எவ்வளவு பெரியவர் களாக இருந்தாலும் தன்முன் மேலாடையோடு வருவதை அவன் பொறுக்க மாட்டான். பரிசிலின் பொருட்டு அவனிடஞ் சென்ற இவர் தம் கல்விச் சிறப் பின் வீறு தோன்ற மேலாடை யுடனேயே சென்றார். அதனைப் பொறுக்காத மன்னன் மேலா டையை எடுத்து விடுமாறு இவருக்குக் குறிப்பால் உணர்த் தினான். இவரோ தம்முடைய பெருமைக்குப் பங்கம் ஏற்படு வதைச் சிறிதும் பொறாராய்த் தம்முடைய சிறப்புத் தோன்றச் செய்யுளொன்று பாடிச் சென் றார்.

**மதுரைச் சுவாமிகள்** - பரஞ்சோதி யடிகள் என்னும் இயற் பெய ரினையுடைய இப் பெரியார் கொங்குவள நாட்டில் மேலைச்

சிதம்பரம் என்னுந் திருப்பேரூரில் வேளாண் குலத்திற் பிறந்தார். இளம் பருவத்தில் கல்வியை முறையே கற்றுத் தேறினார். அகவை முப்பத்திரண்டு முடியும் மட்டும் ஊரிலே இருந்தார்.

இதன் பிறகு ஊரைவிட்டுப் புறப்பட்டுப் பழநி மலையை அடைந்து அங்கே சில ஆண்டுகள் பழநியாண்டவனைப் போற்றி வழிபட்டுக் கொண்டிருந்தார். பிறகு பழநியை அடுத்த குமரலிங்கம் என்னும் ஊரில் சில ஆண்டுகள் தங்கித் தம்மையடுத்த அன்பர்கட்குக் கல்வி கற்பித்துக் கொண்டிருந்தார்.

அன்பர்கள் சிலர் இவரைத் திருமணஞ் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தினர். இவருக்குத் திருமணஞ் செய்து கொள்வதில் அடியோடு விருப்பம் இல்லை. ஆயினும் அன்பர்களுடைய வேண்டுகோளை மறுக்காமல் மணஞ் செய்து கொண்டு இல்லறத்திலே சில காலம் இருந்தார்.

இவர் குமரலிங்கத்தில் தங்கியிருக்கும் பொழுது அடிக்கடி பழநிக்குச் சென்று பழநியாண்டவனை வழிபட்டு மீள்வது வழக்கம். பழநியில் பழநியாண்டவனுக்குத் திருநீற்றினை நிறைய முழுக்காட்டுவர். அதனால் பழநியாண்டவனுடைய வடிவம் வெண்மையாக விளங்கும். அதனைக்கண்ட இவர் பழநியாண்டவனுக்கு 'வெள்ளையப்பன்' என்று பெயர் கொடுத்தார். அடிக்கடி 'வெள்ளையப்பன் வெள்ளையப்பன்' என்று சொல்லிக் கொண்டிருப்பார். ஒரு நாள் நீண்ட நேரம் பழநியாண்டவனைப் போற்றி வழிபட்டுக் கொண்டிருந்தார். பழநியாண்டவனுடைய திருவருள் இவருக்குண்டாகியது. முன்னமே அறுமுகப்பரமனைப் போற்றி வழிபட்டுக் கொண்டிருந்த இவருக்கு முருகன் மெய்யறிவை வழங்கினான். அதனால் இவருடைய பொய்யறிவெல்லாம் போன இடந் தெரியாமற் போய் விட்டது. மெய்ஞ்ஞானிகட்குண்டாக வேண்டிய மத்தர், பாலர், பேயர் தன்மை இவருக்கும் உண்டாகி விட்டது. அதனால் இவர் எதையும் அறியாதவரானார். இல்லத்திற்குச் செல்லவில்லை. மனம்போன போக்கில் கால்போன போக்கில் செல்லலானார்.

பித்தரைப் போற் பலவிடங்களிற் சுற்றிக் கொண்டு திரிந்த இவர் மதுரையை அடைந்தார். மதுரையில் மீனாட்சி கோயிலுக்கு வெளியில் மீனாட்சியின் திருமுன்புக்குச் சிறிது தென்புறமாய் ஓர் ஒற்றைக் கல்லில் நிட்டையில் அமர்ந்தார். சில ஆண்டுகள் வரை அப்படியே இருந்து விட்டார். காற்று, வெயில், கடும்பனி, மழை முதலியன எவற்றையும் ஒரு பொருட்படுத்தவில்லை. இதனால் இவருடைய மெய்யறிவுச் சுடர் மிகுதியாகியது. அதன் பிறகு அந்நிலையை விட்டெழுந்தார். பித்தரைப் போல் நகரிற் சுற்றிக் கொண்டிருந்தார்.

இப்பெரியாருடைய பெருமையைச் சிலர் உணர்ந்து கொண்டு பாராட்டலானார்கள். சிலர் இவரைக் கீழப்பூங்குடி என்னும் ஊருக்கு அழைத்துக் கொண்டு சென்றார்கள். இந்தக் கீழப்பூங்குடியில்தான் மிளகாய்ச் சுவாமிகள் என்னும் பெரியார் சில ஆண்டுகள் தங்கி அவ்விடமே திருக்கோயில் கொண்டருளினார்.

முற்கூறிய மிளகாய்ச் சுவாமிகளும் மெய்ஞ்ஞானச் செல்வர். அவர் அடிக்கடி, "பெரியராமன் போனால் சின்ன ராமன் வருவான்" என்று சொல்லிக் கொண்டிருப்பது வழக்கம். மேற்படி மிளகாய்ச் சுவாமிகள் மறைந்த சில ஆண்டுகளில் இப் பெரியார் அங்குப் போய்ச் சேர்ந்தார். இதன் பிறகுதான் மிளகாய்ச் சுவாமிகள் மேற் கூறியவாறு கூறியதன் பொருள் அன்பர்கட்கு விளங்கியது.

மெய்ஞ்ஞானச் செல்வர்களிற் பலர் உலக மக்கள் வியப்படையும் படியான புதுமைகளைச் செய்து கொண்டிருந்தார்கள். இவர்களுடைய நோக்கம் இதனால்தான்சிறப்படைய வேண்டுமென்பதன்று. உலக மக்கட்குக் கடவுளின் ஆற்றல் எத்தகையதென்பதைக் காட்ட வேண்டுமென்பதே யாம். சிலரோ எத்தகைய புதுமைகளையுஞ் செய்யாமல் தம்மையும் உலகத்தையும் அடியோடு மறந்து போனார்கள். இவ்வாறு மறந்து போனமையால் அற்புதங்களைச் செய்ய வேண்டும் என்னும் நோக்கமே இவர்கட்கு இல்லாது போயிற்று. இவர்களைப் புதுமைகள் இயற்றி மக்களின் மனத்தைக் கவர்ந்தவர்களை விடப் பெரியவர்கள் என்று சொல்ல வேண்டும். இவர்கள் இவ்வுடலுக்குப் பிறகு வேறு உடலை எடுப்பது நிகழாது. அற்புதங்கள் புரியாதவர்களை அற்புதங்கள் புரிந்தவர்களை விட மேன்மையாகத்தான் பாராட்ட வேண்டுமேயன்றி, இவர்கள் புதுமை செய்யும் ஆற்றலில்லாதவர்கள் என்று எண்ணிக் கீழாக நினைத்துவிடக் கூடாது. இவர்களைக் கடவுளுக்கு அடுத்த படியில் வைத்துப் பாராட்டுதல் வேண்டும்.

என்றும் கண்டு போற்றப் பெற்ற மெய்ஞ்ஞானச் செல்வர்களில் இவர் ஒருவர். இவரை நான் 1929 ஆம் ஆண்டில் இளையப்பூங்குடியில் போற்றி வழிபட்டேன். ஆடை முதலியன இல்லை. சிறிய திருமடம் ஒன்றில் எழுந்தருளியிருந்தார். பிறர் வழிபடுவது செய்யுஞ் செயல் முதலிய எவற்றையும் அறியார். நீராட்டி வைத்தால் நீராடுவார். உண்பித்தால் உண்பார். இல்லா விட்டால் பச்சைக் குழந்தையைப் போல் விட்ட இடத்தில் இருப்பார். எதைக் கொடுத்தாலுஞ் சாப்பிட்டு விடுவார். இவரைப் பாதுகாத்திருந்தவர் புகை குடிக்கும் பழக்க முடையவர்களாக இருந்தனர். அவர்கள் தாம் பிடிக்கும் புகையை இப்பெரியாரின் வாயிலும் வைத்துப் பிடிக்கச் செய்ததைப் பார்த்தேன். மெய்ஞ்ஞானச் செல்வர்களைச் சூழ்ந்து பணியாற்றுபவர்கள் தூய ஒழுக்கமுடையவர்களாக இருந்தால்தான் அப்பெரியார்களும் தூய்மையுடையவர்களாகக் காணப் பெறுவர். அப்பெரியார்கள், "ஆக்கைக்குஞ் சாட்சி நாமே அனைத்திற்கும் சாட்சி நாமே, போக்கொடு வரவு மில்லை புண்ணிய பாவ மில்லை, வாக்கொடு மனமும் இல்லை மந்திரத்தியான மில்லை சாட்சி மாத்திரமே நாம்" என்று இருப்பவர்களாதலின் அவர்கள் மீது யாரும் எத்தகைய குற்றமுஞ் சொல்ல முடியாது.

ஒரு நாள் பெருநிலக்கிழார் (சிற்றரசர்) ஒருவர் இவரைக் கண்டு வழிபட வந்தார். இப் பெரியார் அவர் மீது எச்சிலைக் காறியுமிழ்ந்தார். அதனை அப் பெருநிலக்கிழார் சந்தனத்தைப் பூசிக் கொள்வது போல் உடல் முழுவதும் பூசிக் கொண்

டார். இதற்குப் பின் அப்பெருநிலக்கிழாருக்குச் செல்வநலம் முதலியன மிகுதியாகியது. தாம் நினைத்து வந்த குறை விரைவில் நீங்கப் பெற்றவராய் மிகுந்த களிப்புடன் வாழ்ந்திருந்தார்.

இப்பெரியார் அவ்வூரிலேயே உடலை ஒழித்தார். உடல் சமாதி செய்யப் பெற்று நாள் வழிபாடு சிறப்பு வழிபாடு முதலியன நன்கு செய்யப்படுகின்றன. இப்பெரியார் மீது பலர் பாமாலைகளும் பாடியுள்ளனர்.

**மதுரைத்தமிழ்ச்சங்கம்** - இச்சங்கம் பாண்டித்துரைத் தேவரால் 1901 ஆம்ஆண்டில் மதுரையில் ஏற்படுத்தப்பட்டது. பாண்டித்துரைத் தேவருக்குத் துணையாக இருந்தவர் இராமநாதபுரம் பெருநிலக்கிழார்பாஸ்கர சேதுபதி. இச்சங்கத்தின்உறுப்புக்களாகச் செந்தமிழ்க்கல்லூரி, பாண்டியன் புத்தகசாலை, நூல் ஆராய்ச்சித்துறை, அச்சகம் முதலியனஅமைந்துள்ளன.செந்தமிழ் என்னும் திங்கள் இதழ் ஒன்றும் நடைபெறுகிறது. சங்கத்தின் தொடக்ககாலத்தில் இருந்து செந்தமிழ்க்கல்லூரியல் பிரவேசபண்டிதம், பாலபண்டிதம், பண்டிதம் என்னும் தேர்வுகளுக்குப் பாடங்கள் போதிக்கப் பட்டுத் தேர்வுகள் நடத்திப்பட்டமளித்துவந்தனர். முதலில் மதிப்புடன் விளங்கிய பட்டம்நாளடைவில்மதிப்பற்றதாகியது. ஆகவே இந்நாளில் சென்னைப் பல்கலைக் கழகத் திட்டப்படி தமிழ்வித்துவான் தேர்வுக்குரிய பாடங்கள் நடைபெறுகின்றன.

**மதுரைவீரன்** - இவன் காசிராசனுடைய மகன். இவன்பிறந்த போது மாலையோடுபிறந்தான். காலக்கணிதர்கள்இவனால்நாட்டுக்கு அழிவு வரும் என்றனர். அரசன் அஞ்சி இவனைக் காட்டிலே கொண்டுபோய் விடச் செய்தான். இவனை ஒரு சக்கிலி யெடுத்துவளர்த்தான். நாகராசனால் பல சித்திகள் பெற்றான். பொம்மண நாயக்கனுடைய மகள் பொம்மி என்பவளை மணந்தான். தென்னாட்டையடைந்து விசயரங்கச் சொக்கநாதனிடம் வேலையில் அமர்ந்தான். திருமலை நாயக்கனுடைய பட்டணத்தில் கள்ளரை வேரறுத்தான். வெள்ளச்சி யென்பவளையும் மணந்தான். அரசனால் கை கால் வாங்கப்பட்டான். மனைவியர் தீக்குளித்து இறந்தபடியால் இவன் மீனாட்சி திருமுன்பு உயிரைப் போக்கிக் கொண்டான். இவன் வீரனாகையால் இவனுக்கு வீரக்கல் நாட்டப்பட்டது.பேதைமக்கள் இவனைத் தெய்வமாக எண்ணி வணங்குகின்றனர்.

**மத்தவிலாசப்பிரகசனம்**- இஃதொரு வடமொழி நூல். இதனைஇயற்றியவன் மகேந்திரவர்மன் என்பர். இந்நூல் கி.பி ஏழாம்நூற்றாண்டின்முற்பகுதியில் பலசமயத்தாரும் தனிப்பட்டநிலையில் வாழ்க்கைநடத்தியதை ஓரளவுஎடுத்துக்காட்டுகிறது. காபாலிக சமயத்தவன் ஒருவன் ஒழுக்கங் கெட்ட காபாலினி ஒருத்தியோடு குடித்துமயங்கிக் கிடத்தல்;அப்பொழுது அவன் கையிலிருந்த பிச்சையேனத்தை ஒரு நாய் கவர்ந்துசெல்லல்; இதனை உணராத காபாலிகன் அவ்வழியே சென்ற பௌத்தத் துறவியை மறித்துப் போரிடல்; போரைத் தீர்ப்பதற்கு ஒழுக்கங் கெட்ட பாசுபத சமயத்தான் ஒருத்தனைக் காபாலிகன் அழைத்தல்; இறுதியில் வெறியன்ஒருவனிடமிருந்துகாபாலத்தைப்பெறுதல் ஆகிய செய்திகளை இந்நூல் கூறுகிறது.மகேந்திரன் சிறப்பு

முதலியவைகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

**மத்தி** - இவன் கழாஅர் என்னும் ஊரில் இருந்த ஒரு வீரன். தன்னோடு எதிர்த்துப் போரிட்ட எழினி என்பவனுடைய பல்லைப் பிடுங்கி அதனைத் தன்னுடைய நிலைவாயிற் கதவில் பதித்தான் என்பர்.

**மத்துவாசாரியர்** - உடுப்பி என்னும் ஊருக்கு அண்மையில் உள்ள பசக என்னுஞ்சிற்றூரில் ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் மத்தியகேகர்; தாயார் பெயர் வேதவதி. இவர் இளம்பருவத்திலேயே புதுமைகள் பல செய்தார். இவருடைய தந்தையாரைக் கடன்காரன் ஒருவன் வந்து மறித்துக் கொண்டான். அதனால் மத்தியகேகர் மிகுந்த தொல்லைப் பட்டார். இதனைக் கண்ட மத்துவர் அக்கடன்காரனைப் புளியங்கொட்டை இருந்தஇடத்திற்கு அழைத்துக் கொண்டு போய்ப் புளியங்கொட்டைகளையள்ளி அவனுடைய கையிற் போட்டார். அக்கொட்டைகள் அவனுக்குக் கொடுக்க வேண்டிய அளவு பெறும்படியான பொன்னாக மாறிவிட்டன. கடன்காரன் இச்செய்தியை ஊரெங்குந்தெரியப் படுத்தினான். எல்லோரும் மிகுந்த வியப்படைந்து மத்துவரைப் பாராட்டினர்.

மத்துவர் தம்முடைய தகப்பனாரிடத்தும் ஓர் ஆசிரியரிடத்துங் கல்வி கற்றார். தம்முடைய நண்பன் ஒருவனுடைய தீராத் தலைவலியைக் காதில் ஊதித் தீர்த்தார். கல்வி முடிந்தகாலத்தில் ஐதரேய உபநிடதத்தின் உட்பொருளைத் தம்முடைய குருவுக்கு உரைத்தார். தாம் துறவறத்தை மேற்கொண்டு பூரணப் பிரக்ஞர் என்னும் பெயரை யடைந்தார். பல இடங்களுக்குஞ் சுற்றுப்பயணஞ் சென்றார். திருவனந்தபுரத்தில் சிருங்ககிரி சங்கராச்சாரியரோடு சொற்போர் செய்தார். வடநாட்டுக்குப் போய் இமயமலையில் வேதவியாசரிடம் அருளுரை பெற்றார். இவருக்கு மாணவர்கள் பலர் ஏற்பட்டனர். தாம் கப்பலில் இருந்து பெற்ற கண்ணன் திருவுருவத்தை உடுப்பியில் அமைத்து வழிபாடு செய்தார். தம்முடைய 79 ஆம் அகவையில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

**மந்தபாலமுனிவர்**-இவர்காண்டவ வனத்தில் இருந்தவர். இவர் பிதுர்க் கடன்களைச் செய்யாமையால்தேவர்களின்சாபத்தை யடைந்தார். சாரங்கன் என்னும் பறவையுருக் கொண்டு சரை யென்னும் பறவையைப் புணர்ந்தார். சிலபறவைகளையும் மனிதர்களையும் பெற்றார்.

**மந்தரவரசன்** - வெள்ளிமலையில் இருந்தவித்தியாதரஅரசர்களில் ஒருவன். இவன் தன்னுடைய மனைவியோடும் மகள் விரிசிகையோடும் காட்டிற்கு வந்து வீடுபேற்றை விரும்பித் தவஞ்செய்தான். உதயணனுக்குத் தன் மகளைத் திருமணஞ் செய்து கொடுத்துவிட்டுப்பிறகுமனைவியையுந் துறந்து தவஞ்செய்து நற்கதி பெற்றான்.

**மந்தரை** - கைகேசியின் தோழி. கூன் ஒன்று இருந்தமையால் கூனியென்னுங்காரணப் பெயர் பெற்றவள். இராமபிரான் இளம்பருவத்தில் தன்னிடம் குறும்புத் தனமாக நடந்து கொண்டது பற்றிப் பழிதீர்க்க வேண்டு மென்னும் எண்ணமுடையவளாக இருந்து கைகேசியின் மனத்தைக் கலைத்து

இராமாயணநிகழ்ச்சிகட் கெல்லாம் மூல காரணமாக இருந்தவள்.

**மந்தாரன்** - தௌமிய முனிவருடைய மகன். சவுனக முனிவருடைய மாணவன். இவன் அவுரவ முனிவருடைய மகளாகிய சமியை மணந்துஅவளோடு காட்டிற் சென்று கொண்டிருந்தான். அப்பொழுது புருசுண்டி என்னும் முனிவர் எதிர்ப்பட்டார். இவன் தன்னுடைய மனைவியோடு அம்முனிவரை வணங்காமல் அவருடைய உருவத்தைப் பார்த்து நகைத்தான். புருசுண்டிமுனிவர் இவனும் இவனுடைய மனைவியுந் தம்மைப் பார்த்து வணங்காமல் ஏளனமாக நகைத்ததற்காகப் பெருஞ்சினங் கொண்டு இருவரும் மரமாகுமாறு இவனுக்கு வசவுரை வழங்கி விட்டார். பிறகு இவனால் அவ்வசவுரையை மாற்ற முடியவில்லை. மனைவி வன்னிமரமாகவும் தான் மந்தார மரமாகவும் முடிந்து என்றும் அம்மரமாகவே இருக்கின்றனர்.

**மந்தேகர்** - இவர்கள் அசுரர்கள்; பலர் ஒன்றுசேர்ந்திருந்தமையின் பன்மையில் சுட்டப்பட்டனர். இவர்கள் தென்கீழ்த் திக்கில் மந்தேகம் என்னும் நகரில் வாழ்ந்திருந்தனர். இவர்களுடைய செயல் பிறருக்குக் கேடு செய்வதாகவே இருக்கும். தம்முடைய கொடுஞ் செயலுக்குக் கதிரவன் தடையாக இருக்கிறான் என்று எண்ணிய இவர்கள் காலைநேரத்தில் கதிரவனோடு போர் செய்தற்குப் புறப்பட்டனர். அப்பொழுது அந்தணர்கள் காயத்திரி மந்திரத்தைக் கூறிக் கதிரவனை நோக்கித் தண்ணீரை அள்ளித் தூவினர். பலவிடங்களிலிருந்தும் பல்லாயிரவர் தூவிய படியால் நீரின் நிறைவலிக்கு அஞ்சிக் கதிரவனை யாதுஞ் செய்யமுடியாமல் அகன்றனர்.

**மமகாரன்** - இவன் இளவலதேயத்தில் வனவசை என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தவன். இவனுடைய மனைவியின் பெயர் மோகினி.

**மயன்** - (க) இவன் அசுரத்தச்சன். மிகுந்த தெய்வத்தன்மை வாய்ந்தவன். விசுவகர்மன் தேவத்தச்சன். இவர்கள் இருவரும் இருமரபினருக்கும் ஆகவேண்டிய பணிகளைப் புரிவார்கள். அசுரத்தச்சனாகிய இவன் விசுவகர்மனினும் வியக்கத்தக்க வினைத்திறமுடையவனாக விளங்கினான். எவ்வளவு நகரங்களை உண்டாக்க வேண்டுமானாலும் நினைத்த அளவில் உண்டாக்க வல்லவன். அசுர வேந்தர்கள் அனைவரும் தங்களுக்கு ஆகவேண்டிய காரியங்களை இவனைக்கொண்டுதான் முடித்துக் கொள்வார்கள். இவன் செய்த மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் எண்ணிறந்தன. முப்புர அசுரர்களுக்கு முப்புரங்களையும் படைத்துத் தந்தவனும் இவனே. இவனுடைய மனைவியின் பெயர் தருச்சனை. இவனுடைய பட்டணத்தின் பெயர் ஏமபுரி. மாயாவியும் துந்துபியும் இவனுடைய மக்கள். இராவணனுடைய மனைவி இவனுடைய மகளே.

**மயன்** - (உ) காவிரிப்பூம்பட்டினத்தில் பளிக்கறையிலுள்ள புத்த பீடிகையையும் சக்கரவாளக் கோட்டத்தையும் செய்து முடித்த தெய்வத் தச்சன். இவனை அசுரத்தச்சன் என்றுங் கூறுவார்கள்.

**மயானேசுவரர்** - காஞ்சியில் உள்ள இறைவனுக்கு இவ்வாறு ஒரு பெயர் இருக்கிறது.

**மயிந்தன்** - இவன் சோழவள நாட்டில் ஆலஞ்சேரியில் வாழ்ந்திருந்தான். பெருஞ்செல்வனாக விளங்கியிருந்த இவன்பாண்டிய நாட்டில் வற்கடத்தினால் தொல்லை நேரிட்ட போது பாண்டியநாட்டிலிருந்து வந்த புலவர்கட்குணவிட்டுப் போற்றிப் பாதுகாத்துப் பெரும்புகழ் பெற்றான். வற்கடந்தீர்ந்தபின் பாண்டியநாட்டை யடைந்த புலவர்கள் பாண்டிய மன்னனிடத்தில் இவனைப் பற்றிக் கூறத் தொடங்கிய போது, "தாயில்லவர்க்குத் தாயே யாகியும், தந்தையில் லவர்க்குத் தந்தையே யாகவும், இந்த ஞாலத் திடுக்கண் தீர, வந்து தோன்றினன் மாநிதிக் கிழவன், நீலஞ் சேரும் நெடுமால் போல்வன், ஆலஞ் சேரிமயிந்தன் என்பான், ஊருண் கேணி நீரொப்பானே, தன்குறை சொல்லான் பிறர்பழி உரையான், மறந்தும் பொய்யான் வாய்மையுங் குன்றான், இறந்து போகா தெம்மையுங் காத்தான்" என்று புகழ்ந்து பாராட்டினர்.

**மயிலம்** - இது தென்னார்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் தாலுகாவில் இருக்கிறது. இங்கு ஒரு சிறிய குன்றின் மீது முருகக்கடவுளின் கோவில் இருக்கிறது. மயில் வழிபட்டதால் மயிலம் என்று பெயர் உண்டாகியது. இத்தலத்திற்கு அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியுள்ளார். முருகதாச சுவாமிகள் என்னும் தண்டபாணிசுவாமிகள் மயிலாசலக் கலம்பகம் பாடியுள்ளார். இங்குச் சிவஞான பாலைய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி என்னும் செந்தமிழ்க் கல்லூரி ஒன்று இருக்கிறது. கோவில் கல்லூரி முதலியன சிவஞானபாலைய சுவாமிகளின் மடத்து ஆதரவிலுள்ளன.

**மயிலன்**-இவன் வெகுகாலத்திற்கு முன்னர் பாண்டிவள நாட்டில் வாழ்ந்திருந்தான். வணிகர் குலத்தினன். பொருளில் பேரவாக்கொண்டவன். யாருக்கும் எத்தகைய உதவியுஞ் செய்யாமல் நாளும் நாளும் பொருள் சேர்ப்பது ஒன்றிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தான். கடும்பற்றுள்ளமுங் கொடுமையும் இவனிடம் மிகுந்திருந்தது. பொருளால் அடையத்தக்க பயனை அடைவதற்கு இவன் சிறிதும் எண்ணவில்லை. ஒருநாள் காளமயிடன் என்னும்மந்திரவாதியொருவன் பட்டினியோடு வந்து நண்பகற் போதில் இவனுடைய இல்லத்துத் திண்ணையில் படுத்திருந்தான். உண்டு வெளியே வந்த மயிலன் காளமயிடனைக் கண்டான். அவனுடைய பசியைப் போக்க இவன் சிறிதும் எண்ணவில்லை. 'நீ யார்? இங்கேன் வந்து படுத்தாய்? உடனே புறப்பட்டு வெளியே போ" என்று கடிந்து இரைந்து பேசினான். காளமயிடனும் உடனே புறப்பட்டு அப்பாற் போய் விட்டான். அன்றிரவு கள்வர்கள் பலர் இவனுடைய இல்லத்திற் புகுந்து இவனை அடித்து உதைத்துப் புரட்டி விட்டு இவனுடைய செல்வத்தைக்கவர்ந்து போய் விட்டனர்.

**மயிலிராவணன்**-இவன் இலங்கையில் இருந்த இராவணனுக்குத் தாயாதியென்றும் பாதாள இலங்கையில் இருந்து அரசு புரிந்தான் என்றும் கூறப்பெறுகிறது. மயிலிராவணன் கதை யாவது: "இராவணன் இராமரோடு போர் செய்யமுடியாமல் எப்படியாவது இராமலக்குமணர்களை வஞ்சனையாற் கொல்ல விரும்பினான். பிரகத்தன் என்னும் அமைச்சன் மயிலிராவணனைப் பற்றிக் கூறினான்.

இராவணன் மயிலிராவணனை அழைத்து இராமலக்குமணர்களை எப்படியாவது ஒழிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். மயிலிராவணன் இராமலக்குமணர்களைக் காளி தேவிக்குப் பலிகொடுத்து விடுவதாகக் கூறிச் சென்றான். இதனை விபீடணன் உணர்ந்து இராமருக்குத் தெரியப்படுத்தினான். அனுமான் தன்னுடைய வாலாற் கட்டிய கோட்டைக்குள் இராமலக்குமணர்களை ஒரு பெட்டியில் அமைத்துத் தன் வாயே வாயிலாக அமைத்துக் காத்துக் கொண்டிருந்தான். மயிலிராவணன் இதனை அறிந்தான். விபீடணன்போல் வடிவம் எடுத்துக்கொண்டு அநுமான் வாய் வழியே சென்று பெட்டியோடு இராமலக்குமணர்களை எடுத்துக்கொண்டு சென்றான். பிறகு அநுமான் இதனை உணர்ந்தான். பாதாள இலங்கைக்குப் போய் மயிலிராவணனோடு போர் செய்து இராமலக்குமணர்களைக் கொண்டு வந்தான்,'' என்பதாம். இக்கதை இராமாயணத்தில் இல்லை.

**மயிலேறும்பெருமாள்** - முருகக் கடவுள் மயிலூர்தியின் மீது ஏறுகிற படியினால் உண்டான காரணச் சிறப்புப் பெயர்.

**மயேச்சுரர்**-முன்னாளில்இருந்த ஓர் இலக்கணப்புலவர். எழுத்து, சொல், பொருள், யாப்பு,அணி என்னும் ஐந்திலக்கணங்களினும் வல்லவர். தம்முடைய பெயரால் 'மயேச்சுரர் யாப்பு' என்னும் பெயருடைய ஓர் இலக்கண நூலை இவர் இயற்றினார். இந்நூல் வெகுகாலத்திற்கு முன்னரே மறைந்து விட்டது.

**மயேச்சுரன்** - இவன் ஓர் அரசன். இவன் பிரகஸ்பதியை வணங்கினான். "அவர் உன்தலை தேவர் முதலியவர்களால் வணங்கத் தக்க சிறப்புடையதாகுக" என்று நற்பேறு வழங்கினார். இவன் ஒருநாள் காட்டின் வழியாகச் சென்றுகொண்டிருந்தான். அப்போது நாரதர் எதிரே வந்தார். இவன் அவர் நாரதர் என்று அறியாத படியால் வணங்காமற் சென்றான். நாரதர் சினங்கொண்டு, "நீ யானையாகுக'' என்று வசவுரை வழங்கினார். இவன் மறுபிறப்பில் யானை வடிவமுடைய கயமுகாசுரனைப் பிறந்தான். உமாதேவியார் எழுந்தருளியிருந்த மண்டபத்தைக் கோட்டால் குத்தித் தள்ளினான். சிவபிரான் இவனுடைய கழுத்தை யறுத்தார். இவன் வீடு பேற்றையடைந்தான். இவனுடைய அறுந்த தலைதான் விநாயகருக்குத் தலையாயிற்று. இவ்வாறு பிரகஸ்பதியின் சிறப்புரை பலித்தது.

**மரக்காற்கூத்து** - அவுணர்கள் வஞ்சத்தால் வெல்லக் கருதித் தேள் பாம்பு முதலிய வடிவெடுத்து வருதலைக் கண்ட காளி அவைகளை வருத்திக் கொல்லுதற்கு மரத்தாலாகிய கால்கொண்டு ஆடிய கூத்து.

**மரபாலன்** - இவன் கங்கைகுலத்திற்பிறந்த ஒரு வேளாளன். கீழ் உலகஞ்சென்று மீளுகையில் விசுவகன்மன் பொறாமை கொண்டு போரிட்டுத் தோற்றான். இவனை வேளாளன் பிடித்து நிலத்தில் விட்டான். தேவர்கள் இவனுடைய செய்கையைக் கண்டு வாழ்த்திச்சில நன்கொடைகள் வழங்கினர். நான்முகன் அரியணை கொடுத்தான். எண்வகைத்திருமகளிரும் எண்வகைச் செல்வங்களையுங் கொடுத்தனர். குமரக்கடவுள் குவளைமாலையைக் கொடுத்தார்.

மற்றைத் தேவர்கள் மயில் குயில் மீனம் சிங்கம் முதலிய கொடிகளை யளித்தனர். இந்திரனுங் குபேரனுந் தம் பெண்களையளித்தனர். அது முதல் இவனுக்கு மரபாலன் என்று பெயருண்டாகியது.

**மருகல் நாட்டுத் தஞ்சாலூர்** - இது கீழைத்தஞ்சாவூர் என வழங்கும் திருமருகலில் நின்றும் தென்கிழக்கில் நான்குநாழிகை யளவிலும் திருச்செங்காட்டங் குடியிலிருந்துதெற்கே இரண்டு நாழிகை அளவிலும் செல்லத் தக்கது. மேலும் விற்குடிப் புகைவண்டி நிலையத்தினின்று திருவிற்குடியை அடைந்து அங்கிருந்து திருப்பயற்றூர்சென்று அதன்மேல் இரண்டு நாழிகை அளவில் அடையத்தக்க ஊர். இவ்வூர் செருத்துணை நாயனுருடைய ஊராகும்.

**மருசி** - இவன் இரதநூபுரம் என்னும் நகரில் இருந்தவன். விஞ்சையர் மரபினன். இவனுடைய தந்தையின் பெயர் அஞ்சுமான். தாய்பெயர் அருசிமாலை. இவன் நீதியும் நேர்மையும் அறிவும் ஆண்மையும் உடையவன். இவன் உலகியலறிவோடு சொல்லாற்றலையும் நன்குபெற்றிருந்தான். விஞ்சையர் வேந்தனுகிய சடி என்பவனுக்கு அரிய துணைவனுக அமைந்திருந்தான். சடியரசன் தன்னுடைய மகளாகிய சுயம்பிரபையின் திருமணநிகழ்ச்சி இனிதுமுடிதற்கு இவனைத்தான் போதனபுரத்து அரசனிடந் தூதனுப்பினுன். இவனுந் தூது சென்ற காரியத்தை இனிது முடித்துக் கொண்டு திரும்பினுன்.

**மருச்சுதன்** - வீமன். வீமன் வாயுவினுடைய மகனுகையால் இவ்வாறு பெயருண்டாகியது. மரு-காற்று,வாயு. சுதன்-மகன்.

**மருணீக்கியார்** - திருநாவுக்கரசருக்குத் தாய் தந்தையர் இட்ட பிள்ளைப்பெயர்.

**மருதப்பிரான்** - சிவசருமருடைய வறுமையைநீக்கும்பொருட்டும் பட்டினத்துப்பிள்ளையாருடைய பிள்ளைக் கலியைப் போக்கும் பொருட்டும் சிவபிரான் தம்முடைய கூருகத் தோன்றிய வடிவம் 16 ஆண்டுவரை பட்டினத்தார்க்குப் பிள்ளையாக விருந்து பிறகு, "காதற்றவூசியும் வாராது காணுங்கடை வழிக்கே" என்னுஞ் சீட்டைப் பட்டினத்தார்க்குக்கொடுத்துத் துறவை மேற்கொள்ளச் செய்தவர்.

**மருதமலை** - கோயம்புத்தூருக்கு வடமேற்கே ஏழுகல் தொலைவில் மேற்குத்தொடர்ச்சி மலையில் இம்மலை உள்ளது. கோயில் இருக்குமிடம் கடல்மட்டத்தில் இருந்து இரண்டாயிரத்து ஐந்நூறு அடி உயரத்தில் உள்ளது. மலைமீது முருகக்கடவுள் திருக்கோயில் கொண்டிருக்கிறுர். இத்தலத்திற்கு அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் இருக்கிறது.

**மருதம் பாடிய இளங்கடுங்கோ** - பெருங்கடுங்கோ என்பவன் பாலைநிலத்தைப் பாடியபடியால் பெருங்கடுங்கோ என்று பெயர் பெற்றுன். இளங்கடுங்கோஎன்னும் இவன் மருதநிலத்தைப்பாடிய படியால் மருதம் பாடிய இளங்கடுங்கோ என்று சிறப்பிக்கப் பெற்றுன். இவன் சிறந்த புலமைத்திறம் உடையவனுவான்.

**மருதி** - இவள் முன்னுளில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த ஓர் அந்தணன் மனைவி. இவள் சிறந்த அழகுடையவளாய் விளங்கினுள். அந்நாளில் ககந்தன் என்பவன் அக்காவிரிப்பூம்பட்டினத்தை அர

சாட்சி செய்து கொண்டிருந்தான். அவனுக்குக் காமந்தன் என்னும் பெயருடைய மகன் ஒருவன் இருந்தான். அவன் தன்னுடைய பெயருக்கேற்பக் காமமுடையவனாக விருந்தான். ஒருநாள் மருதி காவிரியில் நீராடிவிட்டுத் தெரு வழியே வந்தாள். அப்பொழுது இக் காமந்தன் அவளைக்கண்டு மையல் கொண்டான். தீய எண்ணத்தோடு 'இங்கே வா' என்றுகூப்பிட்டான். இவன் செயலைக்கண்ட மருதி உள்ளம் வருந்தினாள். பூதசதுக்கத்திற் பொருந்திய பூதத்திடம்போய்த் தன்னைக் கொன்று விடுமாறு கூறினாள். அப்பூதம் இவள் மீதிருந்த சிறுகுற்றங்களைக் கூறிக்கொல்லமறுத்துவிட்டது.

**மருதூருடையான் அருணிதி கலியன்** - இவன் முதலாம்பராந்தக மன்னனுடைய அரசியல் அதிகாரிகளில் ஒருவன். மருதூர் என்னும் ஊரைத் தனக்கு உரிமையாகப் பெற்றவன். இம் மருதூர் சோழநாட்டைச் சேர்ந்ததென்பர்.

**மருத்தன்** - இவன் திருக்குடந்தையில் ஔவையார் காலத்தில் வாழ்ந்திருந்தவன். சிறந்த வள்ளல். விருந்தினர்க்கு உணவிடுதலைப்பெரும் பேறாகக்கொண்டவன். இவனை ஔவையார், "மருத்தன் திருக்குடந்தை வாழை-குருத்தும், இலையுமிலை பூவுமிலைகாயுமிலைஎன்றும், உலகில் வருவிருந்தோடுண்டு" என்றும்புகழ்ந்துபாடியுள்ளார்.

**மருத்துமலை** - தென்னார்க்காடு மாவட்டத்தில் திருவகிந்திரபுரத்தில் உள்ளது. வேதாந்த தேசிகர் இவ்வூரில் தங்கியிருந்தபோது இக்குன்றிலிருந்துதவஞ் செய்தார். இக்குன்றுக்கு ஔடாத்திரிமலை என்றும் பெயருண்டு. மலையில் பலவகையான சிறந்தமூலிகைகள் இருப்பதால் மருத்துமலை என்று பெயர் பெற்றது. வேதாந்த தேசிகர் தவஞ் செய்து கொண்டிருந்தபோது கருடன் அவருக்குக்காட்சி கொடுத்தான்.

**மருத்துவமலை** - இம்மலை குமரி மாவட்டத்தில் நாகர் கோயிலில் இருந்து எட்டாவது மைலில் இருக்கிறது. இதனுடைய உயரம் 400 அடி. இம்மலையில் பலவகையான மூலிகைகள் உள்ளன. அவைகள் யாவும் உடல் நலத்துக்கு ஏற்றவை. நாராயணகுரு என்னும் பெரியவர் இம்மலையிற் பல ஆண்டுகள் தங்கியிருந்தார். மலையின்முடியிலிருந்து பார்த்தால் குமரி மாவட்டத்தின் பெரும்பகுதிகளை நன்கு காணலாம். இராமாயணப்போர் நிகழ்ந்த காலத்தில் அநுமான் கொண்டு வந்த சஞ்சீவி மலையின் ஒரு பகுதியே இம்மலை யென்கின்றனர். இம் மலையில் அமல்பொரி, ஆடாதோடை, இருவேலி, கொடுவேலி, துளசி, தும்பை, தூதுவேளை, வில்வம், விளாத்தி, வெட்டிவேர், இராமிச்சம், அரிதாரம், தேவதாரம், எட்டிமட்டி, கோவைப்பாவை, நாகவல்லி, அதிவிடயம், குன்றி, நங்கை, நாகப்பூசத்தி, அகில், கருடக்கொடி, கருவேல், வெள்வேல், பொன்னாங்கண்ணி, நீர் மேல்நெருப்பு முதலிய பல வகையான மூலிகைகள் உள்ளன.

**மருத்துவன்** - இவன் ஓர் அரசன். இவன் வேள்வித்தீட்சை செய்து கொண்டு வேள்விச் சாலையில் இருந்தான். திக்கு விசயஞ்செய்து கொண்டு திரிந்த இராவணன் அப்பொழுது இவனிடம் போர் செய்ய வந்தான். இவன் சினங்கொண்டு போர் செய்வதற்கு ஏற்பாடு செய்தான். வேள்வி

செய்துகொண்டிருந்த முனிவர்கள், "நீவேள்வித்தீட்சை பெற்றிருக்கிறாய். இப்பொழுதுபோர் செய்யத் தொடங்கினால் தோற்று விடுவாய்; ஆகவே நான் தோற்றேன் என்று கூறிவிடுக" என்றனர். அவ்வாறே கூறினான். வேள்விக்கு வந்திருந்த தேவர்கள் இராவணனைக் கண்டதும் பலவாறு வேற்று வடிவங் கொண்டு மறைந்தனர்.

**மருந்தீசர்** - சென்னை திருவான்மியூரில் திருக்கோயில் கொண்டுள்ள இறைவனுடையபெயர். அடியவர்களுடைய உடற்பிணியையும் பிறவிப் பிணியையும் போக்குகிற மருந்தாக இருப்பதால் இவ்வாறுபெயர்பெற்றார். மேலும் இவ்விறைவன் அமுதத்தால் ஆனவரென்றும்அமுதீசர் என்னும் பெயருடையவர் என்றுங் கூறுவர்.

**மருந்தீசுவரர்** - வில்வாரணியம் என்னும் பழம் பெயருடையதும் இந்நாளில் திருத்தருப்பூண்டி என வழங்கப்பெறுவதுமாகிய சிவப்பதியில் எழுந்தருளியுள்ள இறைவனுடைய பெயர். தம்மைப் போற்றிவழிபடுபவர்களுடைய பிறவிப் பிணியைப்போக்குகிறபடியால் இவ்வாறுபெயர் உண்டாகியது. இதனை வடமொழியில் பவஒளடதேசுவரர் என்பர்.

**மருமக்கட்டாயம்** - ஒருவனுடைய செல்வம் அவனுக்குப் பிறகு அவனுடைய மகனுக்கு உரிமையாகாது உடன் பிறந்தாளின் மகனாகிய மருமகனுக்கு உரிமையாகும் மலையாள வழக்கு முறை.

**மலாடு** - இது மலையமான் நாடு என்பதன் மரூஉ. இது செந்தமிழ் சேர் பன்னிரண்டு நாடுகளில் ஒன்று. இந்நாடு புனல் நாட்டிற்கு வடமேற்காகவும் அருவா நாட்டிற்கு மேற்காகவும் இருந்தது. இங்கு மலையமான் என்னுங் குறுநில மன்னன் அரசாட்சி செய்தான். இவன் சோழ மன்னனுக்கடங்கியவன். இந்நாட்டின் தலைநகர் தென்பெண்ணையாற்றின் கரையிலுள்ள திருக்கோவலூர். இப்போது தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ளது.

**மலைகண்ட வேளாளர்கள்** - இரத்தினகிரி என்னும் வாட்போக்கியை ஒட்டியுள்ள ஊர்களில் வாழும் வேளாளர்கள். இவர்கள் காலையில் எழுந்தவுடன் முதல் முதல் இரத்தினகிரி மலையைக்கண்டுதொழும்வழக்கமுடையவர்களாகையால் இவ்வாறு பெயர் பெற்றனர்.

**மலைபடுகடாம்** - பத்துப் பாட்டினுள் பத்தாவதாக அமைந்துள்ள பாட்டு. 583 அடிகளை உடையது. மலையை யானையாக உருவகித்து அதன்கட் பிறந்த ஒலியைக் கடாமெனச் சிறப்பித்தமையின் இப்பாட்டு இவ்வாறு பெயர் பெற்றது. பரிசில் பெறுதற்கு நின்ற கூத்தன் ஒருவனைப் பரிசில் பெற்றான் ஒருவன் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்து வேள் நன்னன் சேய் நன்னனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அந்நன்னனை இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார் பாடியது. இதனால் இதனுடைய பெயர் கூத்தராற்றுப் படை எனவும் வழங்கும். இதில் அந்நன்னனுடைய பலவகைச் சிறப்பும், நவிரமென்னும் மலையில் காரியுண்டிக் கடவுளென்னுந் திருப்பெயரோடு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய பெருமையுங் கூறப் பெறும். இதற்கு

நச்சினார்க்கினியர் முதன் முதலில் உரை எழுதினார்.

**மலையத்துவச பாண்டியன்** - இவன் மணவூரையாண்டு கொண்டிருந்த குலசேகர பாண்டியனுடைய மகன். இவன் காஞ்சனமாலை என்பவளை மணந்தான். இவன் தொண்ணூற்றொன்பது குதிரை வேள்விகளைச் செய்து முடித்து நூறாவது வேள்வியைச் செய்யத் தொடங்கினான். அப்பொழுது இந்திரன் இவன் நூறாவது வேள்வியை முடித்தால் தன்னுடைய பதம் மாறும் என்றுஎண்ணினான். இவனிடம் வந்து, 'மக்கட் பேற்று வேள்வி செய்க' என்று கூறினான். இவனும் அவ்வாறே செய்தான். அப்பொழுது உமாதேவி மூன்று தனங்களோடு இவனுக்குப் பெண்ணாகத் தோன்றினாள். இதனைக் கண்டு மன்னன் வருந்தினான். அப்பொழுது உருவிலிவாக்குக் கணவனைக் காணும் போது மூன்றாவது தனம் மறையும் என்று உண்டாகியது. இப்பெண்ணே தடாதகைப் பிராட்டி.

**மலையமலை அகத்தியர்** - இவர் ஒளி நாட்டு வேளாளர் வகுப்பைச் சேர்ந்தவர். இவர் இராமாயண காலத்தில் பொதிய மலையில் இருந்த தமிழ்ச் சங்கத்தில் தலைமை தாங்கியவர். முப்புர அரக்கர்கள் காலத்தில் பொதிய மலையில் ஏற்படுத்தப் பட்ட தமிழ் சங்கத்தில் தலைமை தாங்கிய அகத்தியருடைய மாணவரின் வழிமுறையில் வந்தவர். இவர் இசையிலும் யாழ் வீணை முதலிய ஒலிக் கருவிகளை வாசிப்பதிலும் தேர்ச்சி பெற்றவர் என்று தெரிகிறது.

**மலையமான்சோழிய ஏனாதி திருக்கண்ணன்** - இவன் சங்ககாலத்துக் குறுநில மன்னர்களில் ஒருவன். இவன் சிறந்த வள்ளல். சோழ மன்னனுக்குப் படைத் தலைவனாக இருந்தபடியால் சோழிய ஏனாதி என்னும் பட்டம் பெற்றனன். சோழனுடைய மகன் ஒருவன் பகைவருக் கஞ்சி இவனிடம் அடைக்கலம் புகுந்தான். இவன் அவனைக் காப்பாற்றி முள்ளூர் மலையில் தங்கியிருக்கச் செய்தான். இவன் கோவலூர்க்கு அரசன். இவனை மலையமான் சோழிய ஏனாதி திருக்கிள்ளி எனவுங் கூறுவர்.

**மலையமான் திருமுடிக்காரி** - திருக்கோவலூருக்கு மேற்கே பெண்ணையாற்றின் தென் கரைப் பகுதியும் தென் பகுதியும் முன்னாளில் மலாடு என்னும் பெயரால் வழங்கியது. அதற்குக் கோவலூரே தலைநகர். கபிலர் காலத்தில் அக்கோவலூரிலிருந்து ஆட்சி புரிந்தவன் திருமுடிக்காரி என்னும் பெயருடையவன். இவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன். இவன் தன்னுடைய குதிரைக்கும் தன்னுடைய பெயரையே வைத்திருந்தான். செங்கை மாவின் தெற்கே பெண்ணையாற்றின் தென் மேற்கில் உள்ள முள்ளூர் இக்காரிக்குரியதாக இருந்தது. ஒருகால் அதனைக் கைப்பற்ற எண்ணி வடநாட்டு ஆரிய மன்னர் பெரிய வேற் படையோடு வந்து முற்றுகையிட்டனர். காரி தன் வேற்படையோடு சென்று தாக்கினான். வடநாட்டுப் படை அஞ்சியோடி விட்டது. இவன் இரவலர்க்குப் பெருங் கொடை வழங்கிச் சிறப்புச் செய்தான். இவனைக் கபிலர், மாறோக்கத்து நப்பசலையார், வடம வண்ணக்கன் பெருஞ் சாத்தனார் ஆகியோர் பாடியுள்ளனர்.

**மலையர்**-இவர்கள் தென்னார்க்காடு மாவட்டத்தில் பெண்ணையாற்றின்கரையில்உள்ளதிருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு சிலசிறு நாடுகளை அந்நாளில் ஆட்சி புரிந்தனர்.

**மலையாண்டியப்பையன்** - பாண்டிவளநாட்டில் கன்னிவாடியில் இருந்த பெருநிலக்கிழான். இவனுடைய காலம் நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னராகும். இவனுடைய தந்தையின் பெயர் நரசிங்கையன். இவன் சிறந்த கொடையாளியாக விளங்கினான். இவன் காலத்தில் இருந்த சங்கரமூர்த்திக் கவிராயர் என்பவர் பலரிடமுஞ் சென்று எத்தகைய பயனும் பெருமல் முடிவில் இவனிடம் வந்தார். இக்குறுநில மன்னன்அப்புலவரைப் பெரிதும் பாராட்டிச் சிறப்புச் செய்து மிகுந்த பொருள் வழங்கித் தன்னோடு பல நாள் இருக்கச் செய்தான். இவனுடைய செயல்களால் மகிழ்ச்சியடைந்த கவிராயர் "கல்லொக்குஞ் சிந்தைமுட்டாள் துரைகாள் கொடைகற்க வென்ருல், வல்லக்கவார்குல நாரசிங்கையன் வரத்துதித்த, செல்லக் குமரன் மலையாண்டியப்பைய சிங்கத்துக்குப், பல்லக்குக் கொம்பு சுமந்தீரென்ருல் புத்தி பாலிக்குமே" என்னுஞ் செய்யுள் ஒன்றைப் பாடினார்.

**மலையாளம்** - திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளுள் இதுவும் ஒன்று. இது சேரனாடு என்னும் கேரள நாட்டு மக்களாற் பேசப்படுவது. சேரநாடு தமிழகத்திலிருந்த மூன்று நாடுகளில் ஒன்ருக இருந்தது. அப்பொழுது சேர நாட்டிலுள்ள மக்களின் இலக்கிய மொழி தமிழாக இருந்தது. சிறந்த செந்தமிழ் இலக்கியங்களாக உள்ளவைகளில் பல சேர நாட்டுப் புலவர்களாற்செய்யப் பெற்றவை. சோழ நாட்டினரையும் பாண்டி நாட்டினரையும் போலவே சேர நாட்டினரும் செந்தமிழ்க்கு நல்ல தொண்டு செய்திருக்கின்றனர். முன்னாளில் மலையாளம் தமிழ் மொழியாக இருந்தது. பேச்சில் மாறுபட்டு மலையாளம் என்னும் பெயருடைய வேறு மொழியாக மாறியது. தமிழின் தன்மையை இன்றும் மலையாளத்தில் நன்கு காணலாம்.

**மலைவழி விநாயகர்** - சென்னி மலையடிவாரத்தில் மலைப்படி தொடங்கும் இடத்தில் எழுந்தருளியுள்ள பிள்ளையார் பெயர். மலைவழியில் அமைந்துள்ள படியால் இவ்வாறு பெயர் பெற்றனர்.

**மல்லதேவன்** - பாண வம்சத்திற்ருேன்றிய ஓர் அரசன். இவனுக்குச் சகதேகமல்லன் என்றும் ஒரு பெயர் உண்டு.

**மல்லர்** - இவர்கள் குசிநகர், பாவா நகர் என்னுமிடங்களில் வாழ்ந்திருந்தனர். இவர்கள் புத்த சமயத்தைப் பின்பற்றியொழுகியவர்கள்.

**மல்லாரி**-இவன் சுங்கபுரி என்னும் நகரில் இருந்து அரசு புரிந்த சீயகங்கன் என்னும் அரசனுடைய அமைச்சன். கல்வியறிவினும் சூழ்ச்சித் திறத்தினுஞ் சிறந்து விளங்கிய இவன் உள்ளம் கள்ளத்தினுஞ் சென்றபடியால் தாழ்ச்சியடைந்தான்.

**மல்லிகார்ச்சுனர்**-தென் கயிலாயம் என்று புகழ் பெற்றதும் திருச்சைலம் எனப்படுவதும் தெலுங்கு நாட்டில் உள்ளதுமாகிய தலத்தில் எழுந்தருளிய இறைவன் இப்பெயரால்

அழைக்கப்படுகிறார். இது சோதிலிங்கங்கள் பன்னிரண்டில் ஒன்று. மல்லிகார்ச்சுனரைத் தொழுதால் குதிரை வேள்வி (அசுவமேதயாகம்) செய்த பலன் கிடைக்கு மென்பர். திருச்சைல முடிக்காட்சி பிறவியைப் போக்கும் பெருமையுடையது.

**மல்லிகிழான் காரியாதி**-காரியாதி யென்பவன் மல்லி யென்னும் ஊருக்குத் தலைவன். மல்லி யென்பது சீவில்லிபுத்தூர்ப் பக்கத்திலுள்ள ஓர் ஊர். இவன் வேளாண் குடியினன். பரிசிலர் விரும்புவன நல்கிப் புலவர் பாடும் புகழுடையவனாக விளங்கினான். சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனையும் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் விண்ணந்தாயனையும் பாடிப் பரிசில் பெற்றுச் சிறப்படைந்த ஆவூர் மூலங்கிழார் இவனையும் பாடியுள்ளார். சீவில்லிபுத்தூர் வைத்தியநாத சாமி கோவில் கல்வெட்டுகளிலும் ஆண்டாள் கோயில் கல்வெட்டுகளிலும் மல்லி நாடு குறிக்கப்பட்டுள்ளது.

**மல்லிநாத தீர்த்தங்கரர்** - பத்தொன்பதாவது சைந தீர்த்தங்கரர். இவர் அங்க நாட்டில் மிதிலாபுரியில் கும்பமகராசாவுக்குப் பிரசாவதியிடம் பிறந்தவர்.

**மழநாடு** - சோழ நாட்டின் ஒரு பகுதி. திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே காவிரியாற்றுக்கு வடபுறத்திலுள்ள பகுதி.

**மழபாடி** - மழவர்கள் பாடியமைத்துத் தங்கியவிடம் மழபாடி என்று பெயர் பெற்றது. மழுவாடி வந்து நின்ற விடம் மழுவாடி என்று பெயர் பெற்றுப் பின்னர் மாறிய தென்பாரும் உளர்.

**மழவரங்கன்** - ஏறக்குறைய இருநூறு ஆண்டுகட்கு முன்பு தொண்டைவள நாட்டில் வங்கபுரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தான். இவன் பள்ளியர் குலத்தைச் சேர்ந்தவன். விளைநிலங்களாலும் வேறு பல வழிகளாலும் இவன் பொருள் திரட்டினான். அறிவிலாரிடம் குவியும் பொருள் இவனிடமும் மிகுதியாகக் குவிந்தது. பொருள் மிகுதியாகக் குவியவே இவனுக்கு அகந்தையுஞ் செருக்கும் அளவு கடந்து பெருகின. அறிவிலிகள் பலர் இவனைச் சேர்ந்து புகழ்பாடி நின்றனர். நாளடைவில் இவன் ஒரு குறுநில மன்னன் போல் பெருமிதத்தோடு வாழ்க்கை நடத்தினான். தன்னுடைய பெயரையும் அதிவீர மழவரங்கபூபன் என்று நீட்டிக் கொண்டான். இவன் பணக்காரனாக இருக்கிறானே ஏதேனும் பொருளுதவி செய்வான் என்று எண்ணி இராமச்சந்திர கவிராயர் என்பவர் இவனிடஞ் சென்று சில செய்யுட்கள் பாடினார். இவன் புலவரைச் சிறிதும் மதிக்க வில்லை. "போம் போம் உமக்கு இதுதானா வேலை?" என்று கூறி விரட்டினான். சினங்கொண்ட கவிராயர் இவன் மீது வசைப் பாட்டு ஒன்று பாடிச் சென்றார். அதனால் இவனுடைய சிறப்பெல்லாம் மிகுவிரைவில் அழிந்தொழிந்தன.

**மறந்தை** - ஈரோட்டின் பெயர்களில் ஒன்று. நான்முகன் தன்னை மறந்து தவஞ் செய்தபடியால் மறந்தை யென்னும் பெயர் உண்டாயிற் றென்பர்.

**மறைஞான சம்பந்தர்** - இவர் வெள்ளாற்றின் கரையில் பெண்ணாகடம் என்னும் திருக்கடந்தையில் வைதிக சைவ

மறையோர் குலத்தில் பிறந்தார். கல்வியில் வல்லவராய் அருணந்தி சிவாச்சாரியாரிடம் சிவதீக்கை பெற்றுச் சிவதருமம் என்னும் ஆகமத்தின் உத்தர பாகத்தைத் தமது மாணுக்கர் கேட்கத் தமிழில் மொழி பெயர்த்தார். திருக்களாஞ் சேரியில் பிரமபுரேசர் சந்நிதியில் இருந்து கொண்டு பிச்சை வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார். ஒரு நாள் ஓர் அந்தணன் வீட்டுப் பக்கத்தில் பிச்சைக்கு நிற்கையில் உமாபதி சிவம் பல்லக்கிலேறி மங்கல வாத்தியங்களுடன் அவ்வழியே சென்ருர். அவரைக் கண்டவுடன் இவர், "பகல் குருடன் செல்லுகின்ருன்" என்று கூறிஞர். இதனைக் கேட்ட உமாபதி சிவம் பல்லக்கினின்றும் இறங்கித் திருவடி பணிந்து நின்ருர். அவருண்ட மிச்சிலை நுகர்ந்து நிழல் போலிருந்தார். மறை ஞானசம்பந்தர் உமாபதி சிவத்தின் பக்குவமறிந்து ஞான தீட்சை செய்தருளிஞர். பிறகு இவர் திருக்களாஞ்சேரியில் வீடுபேற்றையடைந்தார்.

**மறையோன் கண்ணன்** - இவன் விக்கிரமசோழனுடைய அமைச்சர்களில் ஒருவன். மறையவர் குலத்தினன். கண்ணன் என்னும் இயற்பெயரினன். இவன் தஞ்சை மாவட்டத்திலுள்ள கஞ்சனூர் என்னுங் கஞ்சாற்றில் வாழ்ந்திருந்தவன் என்று தெரிகிறது.

**மனதுக்கினியான்** - இவனுடைய முழுப் பெயர் தேவூருடையான் மனதுக்கினியான் ஆகிய விராடராசன் என்பது. இவன் சோழ வளநாட்டில் நாகப்பட்டினம் பிரிவிலுள்ள தேவூரில் வாழ்ந்திருந்தவன். இவன் தன்னுடைய பெயருக்கேற்ப மக்கட்கினிமை செய்யும் நன்மனமுடையவனுக இருந்தான். இவன் திருப்புகலூரில் முடிகொண்ட சோழப் பேராற்றின் வடகரையில் கி.பி. 1128ஆம் ஆண்டில் ஒரு மருத்துவ சாலையும் மடமும் அமைத்து அவைகளைப் புரத்தற் பொருட்டு நிலம் வழங்கியிருந்தானென்று அவ்வூர்க் கல்வெட்டொன்ருல் அறியப் படுகிறது.

**மனவாசகங்கடந்தார்** - இவர் திருவதிகையில் இருந்தவர். மெய் கண்ட சந்தானத்தைச் சேர்ந்தவர். இவர் உண்மைவிளக்கம் என்னும் சைவசித்தாந்த நூலை இயற்றியிருக்கிருர்.

**மனோசவன்** - இவன் உச்சயினி புரத்து அரசன். இவனுடைய மனைவியின் பெயர் சுமுத்திரா தேவி. மகன் சந்திரகாந்தன். இவன்கொடுங்கோல்அரசுசெய்தான், தன்மசயன் என்பவனுல் வெல்லப்பட்டான். காட்டையடைந்த இவன்பராசரமுனிவர் கூறியபடி நாககிரியில் நீராடி இராமமந்திரம் உருவேற்றி இராமபிரானுடைய அருளைப் பெற்று இழந்தநலங்களையெல்லாம் திரும்பப் பெற்ருன்.

**மனோஞ்ஞை** - இவள் சுச்சிரவன் என்னும் காந்தருவன் மகள். இவள் மித்திரன் என்னும் மறையவனிடம் மயல்கொண்டு அவனை வலுக்கட்டாயமாகத் தழுவிஞள். அவன் இவள் பேயாகுமாறுவசவுரை வழங்கிஞன்.இவள்பேயாகத்திரிந்தாள். அசிதமுனிவர் கட்டளைப்படி காவிரியில் நீராடிப் பேயுரு நீங்கிப் புனிதமடைந்தாள்.

**மனோன்மணி** – இவள் ஆன்மாக்களின் மலங்களை நீக்கிச் சிவாநந்தத்தைத் தரும் சிவசக்தி. இவள் பரசிவத்தை நீங்காதிருப்பாள்.

**மனோரா** - தஞ்சை மாவட்டத்தில் பேராவூரணி என்னுமிடத்திலிருந்து ஏறக்குறைய எட்டுக் கல் தொலைவில் உள்ள சேதுபாவா சத்திரத்திற்கு அண்மையில் இஃது இருக்கிறது. இது தஞ்சையை ஆண்ட சரபோசி மன்னன் கட்டிய ஓர் அழகிய கோட்டையைச் சேர்ந்தது. 1814 இல் நெப்போலியனை ஆங்கிலேயர் தோற்கடித்ததற்கு அறிகுறியாக இங்கு அமைக்கப்பட்ட வெற்றிக் கோபுரம் என்பர். இதனுடைய உயரம் 113 அடி.

**மனுச்சோழன்** - இவனை மனுநீதி கண்ட சோழன் எனவுங் கூறுவர். மனு என்பவர் வகுத்த அரசியல் முறைப்படி இவன் அரசாட்சியைச் செய்தபடியால் இவ்வாறு பெயருண்டாகியது. தேவர்கள் இவனுடைய நீதி முறையை ஆராய்வான் புகுந்த காலையில் தன் மகனைத் தேர்க்காலில் அரைத்தான். இதனால் அமரர்கள் வியந்து இவனுக்கு நல்லருள் செய்து சென்றனர். இவன் ஆட்சிசெய்திருந்தஇடம் பிறக்க வீடுபேறளிக்கும்பெரும் பதியாகிய திருவாரூர் ஆகும்.

**மன்சூர்** - இவர் பஞ்சாப் நாட்டிலே மூல்தான் என்னும் ஊரிலே ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தார். இவர் சூபி என்னும் வகுப்பைச் சேர்ந்தவர். அந்த நாட்டில் சூபி என்பது ஒரு சமயம். மன்சூர் புகழ் பெற்ற மெய்ஞ்ஞானச் செல்வராக விளங்கியிருந்தார். இவர் இடைவிடாமல், "அனல்காக் அனல்காக்" என்று சொல்லிக் கொண்டிருப்பார். அனல்காக் எனபது அந்நாட்டு மொழிகள் ஒன்றின் ஒரு சொல். இதற்குப் பொருள் "நானே கடவுளாக இருக்கிறேன்" என்பது. இச்சொல் வேதாந்திகள் கூறும் "அகம்பிரமாஸ்மி" "நான் பிரமமாகஇருக்கின்றேன்"என்பதைப் போன்றது. மக்கள் மன்சூருடைய மெய்மைத் தன்மையை அறிந்து கொள்ள வில்லை! "நானே கடவுள் நானே கடவுள்" என்று கூறும் இவர் ஒரு நாத்திகர் என்று முடிவு கட்டினார்கள். முகமதிய மன்னனாகிய பாட்சாவிடம் போய், "மன்சூர் ஒரு நாத்திகர். அவர் எப்பொழுது பார்த்தாலும், 'அனல்காக் அனல்காக்' என்று கத்திக் கொண்டிருக்கிறார்" என்று கோள் சொன்னார்கள். பாட்சாவும் மன்சூருடைய நிலைமையை உணர்ந்து கொள்ள வில்லை. அவன், "அப்படியா செய்தி! அந்நாத்திகனைக் கண்ட துண்டமாக வெட்டிக் கொலை செய்து விடுங்கள்" என்று தன்னுடைய வீரர்கட்குக் கட்டளை யிட்டான். பாட்சாவின் வீரர்கள் தத்துவ ஞானியாகிய மன்சூரைப் பிடித்துக் கொண்டு போய்ப் பல துண்டங்களாக வெட்டிக் கொலை செய்து விட்டார்கள். மன்சூர் உடல் உணர்ச்சியை எல்லாம் ஒழித்து விட்டவராகையால் அவர் எத்தகைய துன்பத்தையும் அடையவில்லை. வெட்டுப் பட்ட அவருடைய உடல் துண்டங்கள் ஒவ்வொன்றும் "அனல்காக் அனல்காக்" என்று ஓலமிட்டன. இதனைக் கேட்டுப் பாட்சாவின் வீரர்கள் மேலுஞ் சினங் கொண்டார்கள். அவர்கள் அறிவற்றவர்களாகையால் இத் தத்துவ ஞானியின் இயல்பை உணர்ந்து கொள்ள முடியவில்லை. உடலின் துண்டங்கள் எல்லாவற்றையும் நெருப்பிலே போட்டுக் கொளுத்திச் சாம்பராக்கினார்கள். அப்பொழுதும் "அனல்காக் அனல்காக்" என்

னும் ஓலம் ஓயவில்லை. அச் சாம்பரில் இருந்து ஒலி பேரொலியாக முழங்கியது. இதன் பிறகே பாட்சாவும் மற்றவர்களும் மன்சூரின் பெருமையை உணர்ந்து பாராட்டினார்கள்.

**மன்மதன்** - இவன் காமன் எனவும பெறுவான். அழகுக்கு அதி தேவதை. இவனுடைய தொழில் உலகத் துயிர்களுக்குக் காம விருப்பத்தை உண்டாக்கி உலகை விருத்தி செய்வதாகும். இவனுடைய மனைவியின் பெயர் இரதி. (காமனைக் காண்க)

**மன்னியூர்** - இதனைத் திரு அன்னியூர் என்றும் இந்நாளில் அண்ணூர் எனவும் வழங்குகிறார்கள். இவ்வூர் கோயமுத்தூரில் இருந்து சத்திய மங்கலம் போகும் வழியில் இருபது கல் தொலைவில் உள்ளது. இவ்வூரில் உள்ள கோயிலில் பல கல் வெட்டுக்கள் இருக்கின்றன. இதனைத் தேவார வைப்புத் தலம் என்று எண்ணுகிறார்கள்.

**மாகதர்** - வசிட்டமுனிவரின் வழி முறையில் தோன்றியவர். இவர் சிறந்த தூய்மையுடையவராய் மேருமலையில் தவஞ் செய்து கொண்டிருந்தார். அசுரர் குலத்தைப் பெருக்கிக் கொள்ள விரும்பிய அசுரேந்திரன் விபூதி யென்னும் அசுரமங்கையை இவரிடம் அனுப்பினான். இவர் அவ்வசுரமாதோடு யானைவடிவங் கொண்டு சேரக் கசமுகாசுரன் முதலிய அசுரர்கள் பிறந்தனர்.

**மாகந்தன்** - ஓரந்தணன். இவன் தன்னுடைய தந்தை தேடிய பொருள்களைத் தீய வழியிற் செலவிட்டான். தன்னுடைய நண்பன் மனைவியைத் தழுவினான். அதனாற் செல்வங் கெட்டு வறுமையுண்டாயிற்று. ஆகவே இழிந்தவர்களிடத்தில் தானம் வாங்கினான். ஆகவே அந்தணர்கள் இவனை ஊரை விட்டுத் துரத்தினர். மனைவி மக்களோடு இவன் ஒரு காட்டின் வழியே செல்லும்போது கள்ளர்கள் இவனிடமிருந்த பொருளைப் பறித்துக்கொண்டு இவனையும்இவனுடைய மனைவி மக்களையுங்கொன்றுவிட்டனர். இவன் இறக்குஞ் சமயத்தில் காசியை எண்ணினான். அதனால் மறுபிறப்பில் இவன் சேவலாகவும் இவன் மனைவி பெட்டையாகவும் பிள்ளைகள் குஞ்சுகளாகவும் பிறந்து காசிக்குச் செல்வாருடன் சென்று காசியில் முத்திமண்டபத்தில் இருந்து வீடுபெற்றனர். இவர்கள் இருந்த மண்டபம் குக்குட மண்டபம் எனப்படும்.

**மாகலூர்க்கிழான்** - புறப்பொருள் வெண்பாமாலைக்கு உரையியற்றிய உரையாசிரியர். இவருக்குச் சாமுண்டி தேவநாயனார் எனவும் பெயர் உண்டு.

**மாங்கலியதீர்த்தம்** - திருத்தருப்பூண்டி என வழங்கும் வில்வாரணியச் சிவப்பதியில் உள்ள ஒரு புனித நீர். இப்புனிதநீரில் அமங்கலைகள் மூழ்குவார்களேயானால் இனி வரும் பிறப்புக்களில் சுமங்கலிகளாக வாழ்வார்கள். மற்றைப் பெண்கள் மூழ்குவார்களானால் தீர்க்க சுமங்கலிகளாகவே வாழ்வார்கள். இப்புனித நீரில் மூழ்குபவர்கட்கு எல்லா வகையான செல்வங்களும் உண்டாகும்.

**மாங்குடிமருதனார்** - இவர் பாண்டிவள நாட்டில் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தார். அந்நாளில் நிலைபெற்றிருந்த கலைகள் யாவையும் இவர் மலைவற உணர்ந்திருந்தார். இவருடைய இயற்பெயர் மருதனார். இவர் வாழ்ந்திருந்த ஊர் மாங்குடி. ஊர்ப்பெயரையும் உடற்பெய

ரோடிணைத்து இவரைமாங்குடி மருதனார் என்று அனைவரும் கூறினர். அந்நாளில் மதுரை மாநகரில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் அரசனாகவீற்றிருந்தான். அவன் மருதனாருடைய புலமைச் சிறப்பையுணர்ந்து தன் அவைக்களப் புலவராக அமைத்தான். இப்புலவர் பெருமானுடைய அறிவுரைப்படியே ஆட்சியை மாட்சிபெற நடத்தினான். ஒருகால் வஞ்சினங் கூறத்தொடங்கியபொழுது, "ஓங்கிய சிறப்பின் உயர்ந்தகேள்வி, மாங்குடி மருதன்தலைவனாக, உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பில், புலவர் பாடாது வரைக என் நிலவரை" என்று பலருமறியுமாறு வஞ்சினங்கூறினான். இதனால் இவரிடத்தில் அம்மன்னர் பெருமான் கொண்டிருந்த மதிப்பை நாம் ஒருவாறு உணர்ந்துகொள்ளலாம். திருக்குறளைப் புகழ்ந்துபாடிய நாற்பத்தொன்பதின்மரில் இவரும் ஒருவர்.

**மாசாத்தனார்**- அரிகரபுத்திரராகிய ஐயனார் இவரே. இவர் திருக்கைலையில் இருந்தபோது சேரமான் பெருமானுடைய திருக்கைலாய ஞானவுலா அரங்கேற்றம் நடைபெற்றது. இவர் அதனைக் கேட்டுத் திருப்பிடவூரில் வெளியாக்கித் தமிழுலகில் பரவச் செய்தார்.

**மாசாத்துவான்** - இவன் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்ச் சோழவள நாட்டில் காவிரிப் பூம்பட்டினத்தில் வாழ்ந்திருந்தான். வணிகர்களுக்குத் தலைவன். கோவலனுடைய தந்தை. இவனுடைய மனைவியின் பெயர் பெருநிலக்கிழத்தி. இவன் பல மரக்கலங்களை வைத்துக் கடல் கடந்து வாணிகஞ் செய்து பெரும் பொருள் திரட்டினான். தான் திரட்டிய பொருளை அறவழியில் தக்கவாறு செலவுசெய்து செல்வத்துப் பயனை நன்கு பெற்றான். இவனை இளங்கோவடிகள், "பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த, ஒருதனிக் குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான், வருநிதி பிறர்க் கார்த்தும் மாசாத்துவான் என்பான் இருநிதிக்கிழவன்" என்று பாராட்டியுள்ளார். தன்மகனாகிய கோவலனுக்குத் திருமணம் முடிந்தவுடன் தனியாக இருந்துவாழ்க்கைநடத்துமாறு செய்தான். கோவலன் மதுரையில் கொலையுண்டிறந்ததைக் கேள்வியுற்ற இவன் தன்னுடைய பொருள்களையெல்லாம் அறஞ்செய்து விட்டுப் பௌத்தமதச் சார்பினனாய்த் துறவுபூண்டு வஞ்சி நகரஞ் சென்று தவஞ்செய்தான். அறவணவடிகளைக் காணுதற்குக் காஞ்சி நகரஞ் செல்லுமாறு இவன் மணிமேகலைக்கு அறிவுரை கூறினான்.

**மாசேனன்** - இவன் வாமதேவனுடைய மாணாக்கன். இவன் ஆசிரியனுடைய சொல்லைக் கேளாமல் பல தீமைகளைப் புரிந்துகொண்டு திரிந்தான். நல்லொழுக்கமும் தெய்வபக்தியும் உள்ள காசியரசன் மீது மூன்றுமுறை படையெடுத்துக் கொண்டு போய்த் தோல்வியடைந்தான். ஆசிரியனைப் பார்த்து,"என்னுடைய பெரும் படை அவனுடைய சிறு படைக்குமுன் தோற்றுவிடுவதற்குக் காரணம் யாதுஎன்று உசாவினான். அதற்கு ஆசிரியன், "அவன் தெய்வ பக்தியுள்ளவன். அஃது உனக்கு இல்லை" யென்று கூறினான். ஆசிரியன் கூறியதை மதியாது மீண்டும் பெரும்படையுடன்

போய்ப் போரிட்டு மீண்டான். ஆசிரியன் கூறியது உண்மை யென்றுமதித்துக்காசியடைந்து புனித நீராடி வீடுபேறடைந் தான்.

மாடலன் - சோழவள நாட்டில் தலைச்செங்கானம் என்னும் ஊரில் இருந்தவன். அந்தணர் குலத்தினன். இவன் ஓரிடத் தில் தங்காமல் பல விடங்களி னுஞ் சுற்றித்திரிவான். கோவ லன் கொலையுண்டு மதுரையில் மாண்ட செய்தியைக்காவிரிப் பூம்பட்டினத்தில் கூறியவன் இவனே. இவனுடைய சொற் களால் தீமைகள் பல விளைந்த மையின் இவன் கங்கையாடித் தன்னுடையகுற்றங்களை நீக்கிக் கொண்டான்.

மாட்டூர் - இவ்வூரைச் சுந்தர மூர்த்தியடிகள் தம்முடைய தேவாரப் பதிகத்தில் சுட்டி யிருக்கிறார். இப்பொழுது இவ்வூர் சேவூர் என்னும் பெய ரால் வழங்கப்படுகிறது. இவ் வூர் கொங்குவள நாட்டில் அவி நாசிக்கு வடக்கே ஐந்து மைல் தொலைவில்இருக்கின்றது. இவ் வூரிற் பழைய கோயில்கள் இரண்டு இருக்கின்றன. சுவாமியினுடைய பெயர் வாலீ சுவரர். வாலியால் வழிபடப் பெற்ற சிவப்பதி என்பர். கோயிலில் கல்வெட்டுக்கள்பல உள்ளன. இவ்வூரில் பெருமாள் கோயில் ஒன்றும் உண்டு.

மாட்டையாக்குப்பிச்சி - கொங்கு வள நாட்டில் மேல்கரைப்பூந் துறையில் கொங்குவேளாளர் குலத்தில் மாட்டையாக்குப் பிச்சி தோன்றினன். இவன் நல்ல பலம் பொருந்தியவன். இவன் தன்னுடைய ஆண் மையை அரசர்களிடங்காட்டிச் சிறப்படைய எண்ணினன். ஊரைவிட்டுப்புறப்பட்டு விசய நகரத்திற்குச் சென்றான், விசய நகரத்திலே மல்லன் ஒருவன் இருந்தான். அம்மல்லனும் நல்ல பலம் பொருந்தியவன். அவன் தன்னுடைய இடது காலில் சங்கிலி ஒன்றின் தலைப் பைக்கட்டி மற்றொரு தலைப்பை வாசற்படியின் எதிர்ப்பக்கமாக மேலே மாட்டித் தோரணம் போலத் தொங்கவிட்டிருந் தான். ஆண்மையுடையவர் களானால் தன்னை வென்று உள்ளே செல்லவேண்டியது. இல்லையேல்தன்னுடையகாலில் தொங்கவிட்டிருக்கும் சங்கிலிக் குக்கீழே நுழைந்து செல்ல வேண்டுமென்பதற்காகவே மல்லன் இவ்வாறு செய்துள் ளான் என்பதை மாட்டையாக் குப்பிச்சி உணர்ந்து கொண் டான். அம்மல்லனோடு போர் செய்து குப்புற வீழ்த்தினன். அரசிருக்கை மண்டபத்திற்குள் நுழைந்து அரசனைக்கண்டான். அரசன் இவனைப் பார்த்து, "என்னிடம் ஒரு குதிரையிருக் கிறது. அதன்மேலேறிச் சவாரி செய்து வருவாயானால் நீ கெட் டிக்காரன்தான். உனக்குத்தக்க படி நன்கொடை வழங்கு கிறேன்" என்று சொன்னன். குப்பிச்சிஅதற்குஇணங்கினன். அரசனிடம் உள்ள அக்குதிரை யைப்பற்றி உசாவினன். அது மிகவும் பொல்லாதது. தன் மீது ஆள் ஏறியவுடனே அந் நகரத்திற்கு அண்மையில் உள்ள நீர்நிலைக்குச்சென்று தன் மீதிருக்கும் ஆளைக்கீழே தள்ளி மிதித்துத்துன்புறுத்துந்தன்மை யுடையது என்று தெரிந்து கொண்டான். அதனுடைய கொட்டத்தை யடக்குவதற்குச் சூழ்ச்சி செய்தான். சுண்ணம் புக் கல்லைத் துணியிற் கட்டிக் குதிரையின் அடிவயிற்றிற் பல மாகக்கட்டினன். பிறகு குதி ரையின்மீது ஏறினன். குதிரை மிகு விரைவாகத் தெருவழியே

சென்று வழக்கம் போல் இறங்கும் நீர்நிலையை அடைந்து அதனுட்பாய்ந்தது.வயிற்றளவு நீருக்குட் சென்றவுடன் சுண்ணும்புகரைந்து எரிச்சலைக் கொடுக்கத் தொடங்கியது. எரிச்சலைத் தாங்காத குதிரை ஏறியது கரையிலே. குப்பிச்சி அதனை நகரத்துத் தெருவெல்லாஞ் சுற்றித்திரியுமாறு விரட்டி விரட்டிச் சவாரி செய்தான். பிறகு அரசனுக்குமுன் கொண்டுபோய் நிறுத்தினுன். அரசன் குப்பிச்சியின் சூழ்ச்சித் திறமையை வியந்து பாராட்டினுன். பூந்துறை நாட்டு அதிகாரங் கொடுத்ததோடு வேறு பல சிறப்புக்களுஞ் செய்து அனுப்பினுன்.

**மாணவர்மன்** - இவன் ஈழவள நாட்டில்அரசாட்சி செய்திருந்த இரண்டாங் காசியபன் என்பவனுடைய மகன். இவன் சிங்களவரசர்கட்கஞ்சிச் சிலகாலம் யாழ்ப்பாணத்தில் மறைந்திருந்தான். பிறகு இந்தியாவையடைந்து, பல்லவ அரசனுகிய முதலாம் நரசிங்கவர்மனுக்குக் கீழ் அலுவலில் அமர்ந்து அதிகாரியாக இருந்தான். இவன் நரசிங்கவர்மனுடைய படைத்தலைவராக இருந்த சிறுத்தொண்டருடன் வடநாட்டிற்குப் படையெடுத்துச் சென்று போர் செய்து தன்னுடைய வீரத்தைக் காட்டினுன். இதனுல் மகிழ்ச்சியடைந்த பல்லவ அரசன் இவனுக்கு இருமுறை படைகளுதவிஇலங்கையரசனை வெல்லுமாறு அனுப்பினுன். இரண்டாந்தடவை யாழ்ப்பாணத் துறைமுகமொன்றில் இறங்கி அந்நாட்டை வெற்றி கொண்டான். அநுராதபுரத்திற்குப்போய் இரண்டாம் ஆத்தடாத்தனையும் அவனேடு உதவிக்கு வந்த பொட்டக்குட்டனையும் வென்று கி. பி. 668 இல்இலங்கைக்கு அரசனுனுன்.

**மாணிபத்திரன்** - இவன் குபேரனுடைய படைத்தலைவனுகிய ஓர் இயக்கன். இவன் இராவணனை எதிர்த்துப் போரிட்டபொழுது இராவணன் தன்னுடைய கதையினுல் இவனுடைய தலையில் மோதினுன். தலை ஒரு பக்கமாகச் சாய்ந்தது. அதனுல் இவனுக்குப் பார்சுவமௌலி என்னும் பெயர் உண்டாகியது.

**மாண்டி சோரி அம்மையார்** - இவ்வம்மையார் 31-8-1870 இல் இத்தாலியைச் சேர்ந்த சியாராவல்லி (Chiaravalle) என்ற சிறு நகரத்தில் பிறந்தவர். "மாண்டிசோரிமுறை" என்ற புதுக்கல்வி முறையைத் தோற்றுவித்தவர். "டால்ட்டன் முறை" என்ற சிறந்த கல்விமுறை இவ்வம்மையாரின் மாணவியருள் ஒருவராகிய ஹெலன் பார்க்ஹர்ஸ்ட் என்ற அம்மையாரால்தோற்றுவிக்கப்பட்டது. பெண்கல்வி மிகுதியாகப் பரவாத காலத்தில் ரோம்பல்கலைக்கழகத்தில்கல்வி பயின்று, 1894 இல்முதல்முதல் மருத்துவப் பட்டம் பெற்ருர். சான் பிரான் ஸிஸ்கோவில் நடைபெற்றஉலகக்கண்காட்சியில் சிசுக்கள் பள்ளிக்கூடம் ஒன்று நடத்திக்காட்டி, தங்கப் பதக்கம் பரிசாகப் பெற்ருர். தம் இறுதிக்காலம் வரையிலும் குழந்தைகளின் நலனுக்காகவே பாடுபட்ட இவ்வம்மையார் 6-5-1952 இல் மாரடைப்பினுல் ஹாலந்தில் நோர்ட் விக் ஆன்ஸே (NoordwijkaanZee) என்னும் இடத்தில்காலமானுர்.

**மாதங்காரி** - மதயானையைக் கொன்ற முருகக்கடவுளின் பெயர். ததீசிமுனிவர் குபன்

என்னும் அரசனோடு நட்புக் கொண்டிருந்தார். அரசர் ஆற்றல் உயர்ந்ததோ அந்தணர் ஆற்றல் உயர்ந்ததோ என்பதைக்குறித்து ஒருநாள் இருவருக்குஞ்சொற்போர் மூண்டது. குபன் வச்சிரப்படையினால் அடித்தான். அதனால் ததீசி முனிவர் இறந்தார். சுக்கிரன் சஞ்சீவினி மந்திரத்தால் ததீசி முனிவரை எழுப்பிக் குபனைப் பார்த்து, "அரசனே! அந்தணர் பிழை செய்தால் அவர்களைக் கொல்லுதல் கூடாது. நீ அரசநெறிதவறிக் கொன்றபடியினால் மதயானையாகுக" என்று வசவுரை வழங்கினார். குபன் உவா என்னுங்காட்டிலே மதயானையாகத் திரிந்தான். தேவர் முதல் அனைவரும் அஞ்சினர். சற்புத்திரன் என்னும் பெயருடைய ஒரு வணிகன் முறைப்படி விரதங்களை முடித்து முருகனுடைய ஆணையின் வண்ணம் கதிர்காம வழிபாட்டிற்காகப் புறப்பட்டுச் சென்றான். நடுக்காட்டில் குப்யானையாகிய மதயானையைக் கண்டு அஞ்சினான். முருகக்கடவுள் அப்பொழுது வேடக்கோலத்தோடு தோன்றி அந்தயானையைக் கொன்று வணிகனைக் காப்பாற்றினார்.

**மாதரத்தூடையார்** - இவர் ஒரு வீரசைவர். இவர் காலத்தில் சிவநிர்மாலியமாகிய அபிடேக நீராலாகிய சேற்றில் ஒரு பசு செல்ல அதனை ஓட்டிச்சென்ற ஒருமறையவனும் அழுந்தித் தாண்ட அவனுடைய உடலில் இருந்தநோய்நீங்கியது. இதனை அறிந்த வேறுநோயாளர்களும் அச்சேற்றில் மூழ்கி நோய் நீங்கப் பெற்றனர்.

**மாதவாசாரியர்** - இவர் மாயணன் என்பவருடைய புதல்வர். இவர் செல்வத்தில் மிகுந்த விருப்பங்கொண்டுகாட்டிற்குச் சென்று தவஞ்செய்தார். அரசனுடைய பசுமேய்ப்பவனாகிய புக்கணன் என்பவன் இவருக்கு நாள்தோறும் பால் வழங்கிக் கொண்டிருந்தான். ஒருநாள் திருமகள் புக்கணனிடஞ் சென்று "இவனுக்கு இப்பிறப்பிற் செல்வங் கிடையாது" என்று சொன்னாள். மாதவாசாரியர் தம்முடைய பூணூலையறுத்தெறிந்துவிட்டுத்துறவை மேற்கொண்டார். மேலுந் தவஞ்செய்தார். பிறகு திருமகளுங் கலைமகளுங் காட்சி தந்து, "யாது வேண்டும்?" என்று கேட்டனர். இவர் இனிமேல் எனக்குச் செல்வம் வேண்டியதில்லை. எனக்குக் கல்வியும், எனக்குப் பாலளித்த புக்கணனுக்கு அரசசெல்வமும் வேண்டுமென்று கேட்டார். இருவரும்அவ்வாறேகொடுத்து மறைந்தனர். பிறகு அரசனிறக்க அரசயானை புக்கணனை அரசனாக்கியது. புக்கண அரசன் அரசாளும் போது இவரைப் பாராட்டிப் போற்றினான். பல நூல்கள் செய்யுமாறு செய்தான். இவருக்கு வித்தியாரண்யர் எனவும் பெயர் வழங்கியது.

**மாதரி** - சிலப்பதிகாரக் காவியத்தில் கூறப்படும் ஓர் ஆயர் முதுமகள். மதுரையில் ஆயர்சேரியில் வாழ்ந்தவள். திருமாலை வழிபட்டவள். சமணத்துறவியாகிய கவுந்தியடிகளிடம் மிகுந்த அன்பு கொண்டவள். இவளிடந்தான் கவுந்தியடிகள் கண்ணகியை அடைக்கலமாக ஒப்புவித்தார். அவர் விருப்பத்தின்படியே இவள் கண்ணகியையுங்கோவலனையும்போற்றினாள். உணவுசமைத்துஉண்டு தன் வீட்டில் தங்கியிருக்கச் செய்தாள். சமையலுக்குத் துணைபுரியுமாறு தன்னுடைய மகள் ஐயையையும் உடனிருக்

கச்செய்தாள். கோவலனும் கண்ணகியும் இறந்த பின்னர்த் தன்னிடம் ஒருதுறவியால் ஒப்படைக்கப்பட்டவர்களைக் காப்பாற்றமுடியாமற் போனதற்கு உளம் வருந்திஇறந்தாள். மறுபிறப்பில் சேரநாட்டில் திருமாலுக்குப் பணிபுரியும் சேடக்குடும்பிக்கு மகளாகப் பிறந்தாள். கண்ணகிக்குச் சேரன் செங்குட்டுவன் வஞ்சிமாநகரில் கோயில்கட்டிக் கண்ணகியின் சிலையை அமைத்து விழாச் செய்தபோது இவள் சேடக்குடும்பியின் மகளாக வந்து மாடலன் தெளித்தநீரால் முற்பிறப்பில் தான் மாதரியாக இருந்ததைக் கூறி அடைக்கலப் பொருளை இழந்தேன் என்று புலம்பினாள்.

**மாதவக்கோன்**-இவன் ஓர் இடையன். இவன் காட்டில் பசுநிரை மேய்த்துக் கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு முனிவன் இவனைக்கண்டு அன்று தளிர்த்தான் மூலிகையைக் காட்டுக என்று கேட்டான். மாதவக்கோனும் அவ்வாறே காட்டினான். முனிவன் அதனடியில் வேள்விசெய்து மாதவக்கோனை அதனில் தள்ள முயன்றான். மாதவக்கோன் உயிர்தப்பி முனிவனைப் பிடித்துத் தள்ளினான். முனிவன் சுடர்விடும் பசும்பொன்னாகி மாறிநின்றான். மாதவக்கோன் அதனையெடுத்து அதன் உறுப்புக்களில்ஒன்றைத் துணித்தான். அது பழையபடி வளர்ந்தது. மாதவக்கோனன் அதனைக்கொண்டு தன்னுடைய வாழ்க்கையை நடத்தினான். இதனை அரசன் உணர்ந்து இவனைக் கேட்டான். இவன் பொற்பாவையை அரசனுக்குக் கொடுத்துப் புகழ்பெற்றான்.

**மாதவதாசர்** - இவர் மிகு இளம் பருவத்தில் தாய்தந்தையரை யிழந்தார். சம்சாரபந்தம் விட்டதற்கு மகிழ்ச்சியடைந்து பல தலங்களையடைந்து திருமால் வழிபாடு செய்தார். சகநாதஞ் சென்று பெருமாளின் சகுணரூபத்தைச் சந்நிதி முன்னிருந்து தோத்திரஞ் செய்து கொண்டிருந்தார். அர்ச்சகர்கள் இவரால் தங்களுக்கு ஒரு காசும் பயனில்லாதபடியினால் சினமடைந்து இவரை வெளியிலே தள்ளிவிட்டார்கள். இவர் வெளியே ஒருபுறத்தில் உணவு முதலியன இல்லாமல் மூன்று நாள் வரையிலும் இருந்தார். இவருக்கு அமுதூட்டிவருமாறு பெருமாள் உருக்குமணி தேவியை அனுப்பினார். பிராட்டியார் பொன் தாம்பாளத்தில் உணவு கொண்டு வந்து கொடுத்து விட்டுச் சென்றார். தாசர் உணவு செய்து விட்டு அத்தட்டைக் கழுவித்தலையணையாகவைத்துக் கொண்டு உறங்கினார். அர்ச்சகர்கள் தட்டினைத் தாசரிடங் கண்டு தாசரைச் சிறையிலடைத்தார்கள். பெருமாள் அருச்சகர்களுடைய கனவிற் சென்று நடந்ததைக் கூறி அருச்சகர்கள் தாசருடையனார். பெருமையை உணர்ந்துஅவரை அவருடைய விருப்பம் போல் இருக்கச் செய்தனர். ஒருநாள் தாசர்திருக்கோயிலில் தியானத்தில் இருந்தார். அருச்சகர்கள் கோயிலைப் பூட்டிக் கொண்டு சென்றனர். பாதி இரவில் தாசருக்குக் குளிர் உண்டாகியது. பெருமாள் தம்முடைய சால்வையைத் தாசருக்குப் போர்த்திச்சென்றார். காலையில் அருச்சகர்கள்தாசரைப்பார்த்து மிகுந்த வியப்படைந்தனர். இவர் பெருமாளுக்கு மிகவும் வேண்டியவர் என்று மகிழ்ந்தனர். ஊர் அரசன் இச்செய்தியைத்தெரிந்து தாசரைப் பாராட்டிப் போற்றிப்பல

உதவிகள் செய்யத் தொடங்கினன். தாசர் அவ்வுதவிகளை ஏற்றுக்கொள்ளாமல் மறுத்துவிட்டார். இவர் வடமதுரை பிருந்தாவனம் முதலிய இடங்களுக்குஞ் சென்று வழிபாடு செய்தார். நீண்டநாள் பெருமாளைப் போற்றிக் கொண்டிருந்து இறுதியில் பரமபதம் அடைந்தார்.

**மாதவஆூறன்** - இவன் விசுவகன்மனுடைய கண்ணில் தோன்றிப் படைப்புத்தொழிலை நடத்தத் தொடங்கினன். நான்முகன் சினந்து "நீ நூலிழைக்குஞ் சிலந்தியாகுக" என்று வசவுரை வழங்கினன். மீண்டும் இவன் வேண்டத், "திருக்காளத்தியில் சிவவழிபாடு செய்து சாபம் நீங்குக" என்று சாபத் தீர்வு கூறினன். இவனும் அவ்வாறே சிவ வழிபாடு செய்து வீடுபேற்றை யடைந்தான்.

**மாதவி** - காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த சித்திராபதிஎன்பவளுடைய மகள். கோவலனுக்குக் காதற் பரத்தையாக இருந்தாள். மணிமேகலையினுடைய தாய். ஒரு முறை நடந்த இந்திர விழாவின் கடைசி நாளில் நடந்த கடலாடு விழாவின் போது இவள் பாடிய கானல் வரியினல் கோவலன் இவளை வெறுத்துப் பிரிந்தான். கோவலன் தன் மனைவியோடு மதுரை சென்று இறந்ததைக் கேள்வியுற்ற இவள் தன் மகள் மணிமேகலையைப் பௌத்த சமயத்துறவியாக்கியதோடுதானும் பௌத்தசமயச் சார்பினளாகித் துறவுபூண்டு அறவண அடிகளிடம் தருமங் கேட்டாள்.

**மாதிரத்தர்** - சங்க காலப் புலவர்களில் ஒருவர். இப்பெயர் மாதீர்த்தர், மாதீரத்தர் என வேறுபாடாகவும் வழங்கும். இவருடைய பாடல் குறுந்தொகையில் சேர்க்கப் பட்டிருக்கிறது.

**மாதிராசர்** - மாதாம்பையின் கணவர். வசவ தேவருக்குத் தந்தை. இவர் ஒரு சமயங் கூழுண்டார். அக்கூழ் மிகவும் இனிமையாக விருந்தது. ஆகவே, "இக்கூழ் சிவபிரானுக்குப் படைப்பு" என்றார்.சிவபிரான் இவருடைய வாயையே பாத்திரமாகக் கொண்டு உண்டதாக உருவிலி வாக்காக உரைத்தருளினர்.

**மாதிருசேடன்** - பௌத்தக் கவிஞர் கனிஷ்கனுடைய காலத்தில் இருந்தவர். காட்டில் திரியும் விலங்குகளை வேட்டையின் பெயரால் வதை செய்ய வேண்டாமென்று அரசனுக்குக் கடிதம் ஒன்று எழுதினர். இக்கடிதம் திபெத்துமொழிபெயர்ப்பில் இருந்து வருகின்றது. புத்தரைக் குறித்து 150 அனுஷ்டுப் செய்யுட்களில் துதி ஒன்றும், 400 செய்யுட்கள் கொண்ட துதி ஒன்றும் செய்துள்ளார். இவ்விரண்டும் பல நூற்றாண்டுகள் பௌத்த விகாரைகளில் ஓதப்பட்டு வந்ததாகத் தெரிகின்றது.

**மாதுபாதியன்** - பாதிவடிவம் பெண்ணாக உள்ள இறைவன் வடிவம் அர்த்த நாரீசுவரர் என்று கூறப் பெறும். இறைவன் இவ்வாறு பாதி மாதுடனனது. சத்தியுஞ் சிவமும் ஒன்றே என்பதைப் புலப்படுத்துதற்காம்.

**மாதேசன்** - இவன் ஒரு வணிகன். இவன் வணிகத்தொழில் செய்து பெரும் பொருள் தேடினன். ஆனல் தருமஞ் செய்யாமற் பொருளைச் சேர்த்து வைத்திருந்தான். இவனுடைய மனைவி யிறந்தாள். இவனுக்கு மக்கட் பேறுமில்லை. ஒரு வேசியோடு வாழ்க்கை நடத்தினன். அவள்

இவனுடைய உலோப குணத்தைக் கண்டு வெறுப்படைந்தாள். "உன்னிடந்தருமகுணங் கிடையாது. நீ தருமஞ் செய்தால்தான் உன்னைச் சேர்வேன்" என்று சொன்னாள். இவன் அவளை விட்டுக் காசிக்குச் சென்றான். அங்குப் புராணங் கேட்டல் முதலிய நற்காரியங்களைச் செய்து கொண்டிருந்ததோடு தருமங்களுஞ் செய்தான். அதனால் மிகுந்த நல்வினையுண்டாக வீடு பேற்றை யடைந்தான்.

**மாதேசுவரமலை** - தென்னிந்தியாவில் மைசூர் நாட்டில் மைசூர் மாவட்டத்தில் கொள்ளேகால் தாலுகாவில் இருக்கிறது. மகாதேசுவரகிரி எனவும் வழங்கும். இங்குச் சிவன் கோயில் இருக்கிறது. சிவராத்திரி சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது.

**மாத்திரி** - மத்திரதேசாதிபதியான ருதாயனன் என்பவனுடைய மகள். பாண்டுவின் இரண்டாவது மனைவி. நகுல சகாதேவர்களைப் பெற்றவள்.

**மாந்தாதா** - கதிரவ குலத்தரசன். யுவநாசுவன் என்பவனுக்கு மகன். இருக்கு வேதத்தின்ஒரு பகுதியை இயற்றியவன். இவனுடைய பெண்கள் ஐம்பது பேரைச் சௌபரி என்னும் முனிவர் மணந்தார். இவன் இராச சூயவேள்வி செய்தான். இவனுடைய நாட்டில் ஒரு காலத்தில் மழை பெய்யாதிருந்தது. அப்போது இந்திரனோடு போரிட்டு மழை பெய்யச் செய்தான். இவன் தாயினுடைய வயிற்றில் பிறவாமல் தந்தையின் உடம்பில்கருவாகவளர்ந்து இடப்பாகத்தைப் பிளந்து கொண்டு வெளியே வந்தான் என்பர்.

**மாந்தை 1** - ஈழவள நாட்டிலே இந்நாளில் மாதோட்டம் என்று அழைக்கப் பெறும் ஊரே முன்னாளில் மாந்தை யென்று வழங்கியதாகத் தெரிகிறது. முன்னாளில் இம் மாந்தை நகரில் நாகர் குலத்தைச் சேர்ந்த ஓவிய குலத்தவரும் தேவசிற்பியாகிய விசுவகர்மாவின் வழிமுறையினருமாகியகம்மியர் அரசாட்சி செய்து கொண்டிருந்தார்கள். இலங்கையை அரசாண்ட அரக்கவரசனாகிய இராவணன் மனைவி மண்டோதரியும் குபேரன் தேவி சித்திரரேகையும் இம்மாந்தை நகரில் அரசுசெய்த தேவகம்மியரின் பெண்களாவர். சூர பதுமனுடைய மனைவியாகிய பதும கோமளையும் இம் மாந்தை நகரத்தவளே. மாந்தை நகரில் அரசாட்சி செய்த கம்மிய அரசர்கள் பெருஞ் செல்வமும் புகழும் பொருந்தினவர்களா யிருந்தார்கள்; இக் காரணம் பற்றியே இராவணன் முதலியோர் இவர்களோடு திருமணத் தொடர்பு கொண்டார்கள்.

**மாந்தை 2** - இது சேரநாட்டின் தலைநகர்களில் ஒன்று. சேரன் செங்குட்டுவனுக்குத் தாயத்தாரான சேரமன்னர்கட்கு இது தலைநகர் எனத் தெரிகிறது.

**மாபுராணம்** - இது தமிழ் இலக்கண நூல்களில்ஒன்று. இடைச்சங்க காலத்தில் வழங்கியதாக இறையனார் களவியலுரையால் தெரிகிறது. இப்போது இந்நூல் இல்லை.

**மாப்பிள்ளைக் கலகம்** - மாப்பிள்ளை என்போர் மலையாளத்து முகமதியர்கள். மலையாளத்து மாப்பிள்ளைக் கலகம் என்றொரு சொல் நீண்ட காலமாக வழங்கி வருதலை அனைவரும் அறிவர். மலையாளத்து மாப்பிள்ளைகள் 1836 க்கும் 1855 க்கும் இடையில் இருபத்திரண்டு முறை கலகஞ் செய்தனர். 1852 இல் மக்களைக் கொன்று கொடுமை

செய்தனர். ஆங்கில அரசாங்கம் சட்டங்கள் இயற்றி அவர்களை அடக்க முயற்சித்தது; ஆனால் அடக்க முடியவில்லை. 1855 ஆம் ஆண்டில் மலையாளத்துக் கலெக்டரைக் கொலை செய்தனர். 1896 இல் பெருங் கலகம் நடைபெற்றது. பிறகு 1921 ஆம் ஆண்டில் பெருங் கலகஞ் செய்தனர். கலகத்தின் போது அடக்க முயன்ற போலீஸ்காரர்களையுந் தாக்கினர். கலகக்காரர்கள் மூன்று தாலுகாக்களில் தங்களுடைய அதிகாரத்தை நிலைநாட்டினார்கள். ஐரோப்பியர்களையுங் கொன்றனர். இந்துக்களைக் கொள்ளையடித்தும் கொலைசெய்தும் பெண்களைக் கெடுத்தும் சொல்லொணாக் கொடுமைகளைச் செய்தனர். இராணுவச் சட்டம் பிறப்பிக்கப் பட்டது. இராணுவத்தினர் பலமுறை கலகக்காரர்களோடு கைகலந்தனர். கலகக்காரர்கள் பலரைக் கைது செய்து இரயில்வே மூட்டை வண்டிகளில் அவர்களை அடைத்துக் கோயமுத்தூருக்குக் கொண்டு வந்தனர். காற்றோட்டமில்லாத படியால் பலர் மாண்டனர். இதன் பிறகு கலகம் ஒருவாறு அடங்கியது.

**மாமல்லபுரம்** - சென்னைக்குத் தெற்கில் கடற்கரை யோரமாக முப்பத்தைந்து மைல் தொலைவில் சீரும் சிறப்பும் பெற்றுப் பட்டினமாக விளங்கி, இப்பொழுது சிற்றூராக இருக்கின்றது. பல்லவ வமிசத்தில் மூன்றாவது பேரரசனாகத்தோன்றிய மாமல்லன் (முதலாம் நரசிம்மவர்மன்) காலத்தில் இப்பட்டினம் சிறப்பெய்தி, அவன் சிறப்புப் பெயரை யடுத்து, "மாமல்லபுரம்" என வழங்கப் பட்டது. 'மல்லை" எனவும், "மகாபலிபுரம்" எனவும் வழங்கப் படுகின்றது. இங்கு உள்ள சிற்பச் செல்வங்கள் எல்லோரும் கண்டுகளிக்க இன்றியமையாதன. திருமங்கையாழ்வார் பாடல் பெற்றது.

**மாமல்லன்** - விராட நகரத்தில் பாண்டவர்கள் மறைந்துறைதலை மேற்கொண்டுதங்கியிருந்தபோது இம்மல்லன் விராடனுடைய அவைக்குவந்துவிராடனுடைய அவைக்கள மல்லர்களை யெல்லாம் தோற்கடித்து அரசனால் சிறப்புப் பெற்றான். மடைத் தொழிலாளனாகவிருந்த வீமனாகிய பலாயனன் விராடனுடைய விருப்பப்படி இம் மல்லனை எதிர்த்துப் போரிட்டுக் கொன்று அரசனால் சிறப்புச் செய்யப் பெற்றான்.

**மாமாங்கக்குழி** - திருமுருகன் பூண்டியில் கோவிலுக்கு எதிரில் உள்ள பிள்ளையார் கோவிலுக்கு முன்புறம் அமைந்த பாறையில் உள்ள சிறு குழியில் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை ஊற்றுப் பெருகும். அக்குழி மாமாங்கக்குழி என்று வழங்கப் பெறுகிறது.

**மாமூலனார்** - சங்ககாலப் புலவர்களில் ஒருவர். காஞ்சீபுரத்தில் மாமரத்தடியில் எழுந்தருளிய சிவபிரானுக்கும் இப் பெயர் வழங்கும்.

**மாயாபுரம்** - நம்முடைய உடலே மாயாபுரம் எனப்படும். இவ்வுடலானது மாயையின் காரியத்தினால் அமைந்துள்ளது. இந்திரசாலத்தைப் போன்றது. அஞ்ஞானத்திற்குக் காரணமாகிப் பேத புத்தியை விளைவிப்பது. கடவுளுக்கு உபாதிரூபமாக விளங்குவது. வீடுபேற்றையடைவதற்கு இவ்வுடல் காரணமாக இருந்த போதிலும் இப்பயனைச் சில நாள் சென்ற பிறகு சாதித்துக் கொள்ளலாம் என்று எண்ணி

வானுளை வீணுளாகக் கழிப் போர்க்கு உடலின் நிலையற்ற தன்மையை உணர்த்தும் பொருட்டு இவ்வுடலை அறிஞர் கள் மாயாபுரம் என்கின்றனர். மாயாபுரமாகிய இவ்வுடல் பொய்யானது, துன்பத்திற்கு இடமானது, அறிவற்றது, இழிந்தது, நீர்க்குமிழியைப் போன்றது; மின்னலை யொத் தது நிலையற்றது. இம்மாயா புரம் நன்னிலையில் இருக்கும் போதே கடவுளடியை அடை வதற்கு வழி தேடிக் கொள்ள வேண்டும்.

**மாயாபுரி** - இதனைக் கங்காத் துவாரம் எனவும் அரித்துவாரம் எனவுங் கூறுவர். இந்தியாவில் உள்ள ஏழு சிறந்த பதிகளில் இதுவும் ஒன்று. கங்கை தோன்றும் இடம் என்று காளி தாசன் சொல்லும் கனகலம் என்பதும் இவ்விடமே. இங் குள்ள புனித நீருக்குப் பிரம குண்டம் என்று பெயர். தக்கன் வேள்வி நடத்தியபோது சதி தன் உடலை நீத்த இடமும் இதுவே என்பர்.

**மாயாவி**-இவன் அசுரத்தச்சனுகிய மயனுடைய மகன். துந்துபீ என்பவனும் மண்டோதரியும் இவனுடன் பிறந்தவர்கள். செல்வச் செருக்கினுல் மிகுந்த களிப்படைந்திருந்த இவன் நல்லவர்களுக்கெல்லாம் நாளும் அல்லல் பல செய்து திரிந்தான். மாயத் தொழில் புரிவதில் இவன் மிக வல்லவன். இதனுல் தான் இவனுடைய பெயர் மாயாவி என்று இசைந்து நின்றது.

பொல்லாதவனுகிய இவன் ஒரு முறை நாரதரைக் கண் டான். நாரதர் இவனிடம் நெருங்கி இவன் மனம் மகிழு மாறு உரையாடி நின்ருர். அப்பொழுது இவன் நாரதரைப் பார்த்து, "உலகத்தார்கள் என் னுடைய ஆற்றலைக் குறித்து யாது கூறுகிருர்கள்?" என்று உசாவினுன். வம்பு மூட்டுதலில் வல்லவராகிய நாரதர் இப் பொல்லாதவனைக் கொன் ருெழிக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு, "எல்லோரும், நல்லவன் பேராண்மையுடைய வன்" என்று புகழ்ந்துதான் பேசுகிருர்கள். வாலி ஒருவன் மட்டுந்தான், "அவன் கிடக் கிருன் கையால் ஆகாதவன் என்று இகழ்ந்து பேசுகிருன்" என்று வம்பு மூட்டிவிட்டுத் தம் வழியே நடையைக் கட்டி ஞர். வாலியோடு போர் செய்து அவனைத் தொலைக்க வேண்டும் என்று இவன் எண்ணினுன். வாலியினுடைய பேராற்றலை இவன் சிறிதும் எண்ணிப் பார்க்க வில்லை. வாலியின் இருப்பிடத்தை யடைந்து அவனை வம்புக்கு இழுத்தான். வாலி நம்மிடம் வலியவந்து வாலாட்டுகிருனே என்று உளங் கொதித்தான். இவனேடு போர் புரியத் தொடங்கினுன். வாலி இவனுக்குச் செம்மையாக அடிகள் கொடுக்கவே இவன் திணறினுன். ஒரு பிலத்தைக் கண்டு அதனுட் புகுந்தான். வாலியும் பின்தொடர்ந்து புகுந் தான். பிலத்துக்குள் இருவரும் நெடுங்காலம் போரிட்டனர். இறுதியில் வாலி மாயாவியைக் கொன்ருெழித்தான். இச்சமயத் தில்தான் சுக்கிரீவன் முதலி யோர் வாலி சென்ற பிலத்து வார வாசலை யடைத்து வாலி யின் பகையைத் தேடிக் கொண் டனர்.

**மாயூரம்** - தஞ்சை மாவட்டத்தில் மாயூரந்தாலுகாவின்தலைநகரம். தேவாரப்பாடல் பெற்ற சைவா திருப்பதிகளில் ஒன்று. உமத் தேவியார் மயிலாக இருந்து

இறைவனை வழிபட்டதால் இவ்வாறு பெயர் உண்டாகியது. இறைவன் பெயர் மாயூரநாதர். இறைவி பெயர் அவயாம்பிகை. இத்தலத்தில் காவிரித் துறைக்கு இடப தீர்த்தத்துறை என்று பெயர். ஐப்பசித் திங்களில் அமாவாசையன்று இங்கு துலா முழுக்காடுவது சிறப்பு. இக்கோவிலின் பெரிய பிரகாரத்தில் வடபக்கத்தில் பழைய கோயில் எனப் பெறும் பிரமபுரீசர் கோயில் இருக்கிறது. இத்தலத்திற்குத் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை புராணம் பாடியிருக்கிறார்.

**மாராபிராமன்** - புகழேந்திப் புலவர் காலத்திலே தொண்டை நாட்டிலே செஞ்சி நகரில் இருந்து அரசாட்சி செய்த ஒரு சிற்றரசன். இவன் சிறந்த கல்வியறிவுடையவனாய்த் தமிழாராய்ச்சி செய்ததோடு தமிழறிஞர்கட்கு நன்கொடை வழங்கி அவர்களைப் பாதுகாப்பவனாகவு மிருந்தான்.

**மாரியம்மன்** - மாரி என்றால் மழை யென்று பொருள். வெப்பத்தைத் தணிவித்து வெப்ப நோய்களாகிய அம்மை முதலியவைகளைப் போக்கி நாடு தழைக்கச் செய்து மக்களை மழை போலக் காப்பவள் இத்தெய்வம் எனக் கொண்டு மக்கள் மாரியம்மன் என்று பெயரிட்டனர். தமிழ் நாட்டிலே ஊர் தோறும் பிடாரி, காளி, அங்காளி, திரௌபதி போன்ற பல தெய்வங்களை இந்து சமய மக்கள் வழிபட்டு வருகின்றனர். மாரியம்மன் வழிபாடு தமிழ் நாட்டில் மட்டுமன்றி இந்தியா முழுவதிலும் பழங்குடி மக்கள் முதல் இக்காலத்தினர் வரை பலரிடையேயும் வழங்கி வருகிறது. மாரியம்மன் பெயரை மக்களுக்கு மாரி, மாரிமுத்து, மாரியாயி, முத்துமாரி, அங்கமுத்து, முத்தம்மா, கண்ணாயிரம் என இட்டு அழைப்பதுண்டு.

**மாரிவெண்கோ**-பாண்டி நாட்டில் கானப் பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதியும், சோழ நாட்டில் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும் அரசு செய்து கொண்டிருந்த காலத்தில் இந்த மாரிவெண்கோ சேர நாட்டில் அரசு செய்து கொண்டிருந்தான். இவனுடைய பெயர் மாவெண்கோ எனவும் வழங்கியது. இவன் சிறந்த குண நலன்களும் பெருவீரமும் உடையவன். இவனை ஔவையார் புகழ்ந்து பாடியுள்ளார்.

**மாரீசன்** - இவன் ஓர் அரக்கன். தாடகை என்பவளுக்கு மகன். இவனுடன் பிறந்தவன் சுபாகு. விசுவாமித்திரர் வேள்வி செய்யும் பொழுது அதற்கு இடையூறு செய்த தாடகையை அவருடைய விருப்பப்படி இராமன் கொன்ற பொழுது கடலில் விழுந்து உயிர் தப்பிய இவன் தென் கடற்கரையில் தவஞ் செய்து கொண்டிருந்தான். இராம லக்குமணர்களுஞ் சீதையும் பஞ்சவடியில் இருக்கும் பொழுது சீதையைக் கவர்ந்து செல்ல வந்த இராவணன் வேண்டுகோளின் படி இவன் மாயமானாக வந்தான். சீதை அம்மானைப் பிடித்துத் தரும்படி இராமனை வேண்டினாள். இராமன் அம்மானைப் பிடிக்க முயன்றான். மாயமானாகிய மாரீசன் நெடுந்தொலை இராமனைப் போக்குக்காட்டி இழுத்துக் கொண்டு சென்றான். இறுதியில் இராமனுடைய அம்பு பட்டதும் இவன், "இலக்குமணா" என்று கூவிக் கொண்டு

வீழ்ந்து இறந்தான். இச்சமயத்தில் இராவணன் சீதையைக் கவர்ந்து கொண்டு சென்றான்.

**மாருதப்பிரவல்லி** – இவள் சோழ நாட்டரசனாகிய திசையுக்கிர சோழன் என்பவனுடைய மகள். இவள் குன்ம நோயினால் மெலிந்து வருந்தினாள். அந் நோயை மருத்துவர் எவராலும் போக்க முடியவில்லை. புனித நீர்ப்பயணஞ் சென்றால் இந் நோய் நீங்கக் கூடும் என்று எண்ணினாள். காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து புறப் பட்டுப் பல விடங்களினும் நீராடிக் கொண்டு சுற்றினாள். சாந்தலிங்கர் என்னும் பெயருடைய துறவி ஒருவர் மாருதப் பிரவல்லியைப் பார்த்து, "உன்னுடைய நோய் மருத்துவர் எவராலுங் குணமாக்கத் தக்க தன்று. நீ இப்பொழுது மேற் கொண்டுள்ள முயற்சியே நன்மையளிக்கக் கூடியது. இலங்கையின் வடபகுதியிலே கீரிமலை என்னும் பெயருடைய மலை ஒன்று இருக்கிறது. அது கடற்கரையில் உள்ளது. அங்கே உப்புத் தண்ணீர் நடுவில் நல்ல நீரும் மலையருவித் தீர்த்தமுங் கலந்த புனிதநீர் ஒன்று உண்டு. அஃது உலகங்களிலுள்ள புனித நீர்கள் எல்லாவற்றினுஞ் சிறந்ததாக விளங்குகின்றது.அங்குப்போய் நீராடிச் சில காலந் தங்கியிருந்தால் நலம் பெறுவாய்'' என்று கூறினார்.

மாருதப்பிரவல்லி தோழிமார்களும் படைவீரர்களும் புடைசூழ்ந்து வரக் கீரிமலைச் சாரலையடைந்தாள். குமரத்தி பள்ளம் என்னுமிடத்தில் தங்குமிடம் அமைத்துக் கொண்டு தங்கினாள். நகுல முனிவரைக் கண்டு வணங்கினாள். நகுலமுனிவர் அந்த இடத்தின் பெருமையையும் புனித நீரின் சிறப்பையும் அங்கு நீராடிய படியால் தமக்குக் கீரிமுகம் மாறிய செய்தியையுங் கூறினார். அவர் கூறியவைகளைக் கேட்டு மாருதப்பிரவல்லி மகிழ்ச்சி யடைந்தாள். நாடோறும் புனித நீராடித் திருக்கோயில் வழிபாடு செய்து கொண்டிருந்தாள். சிலகாலத்தில் அவளுடைய குன்மநோய் ஒழிந்தது. அவளுக்கிருந்த குதிரை முகமும் மாறிற்று. அவளுடைய பேரழகைக் கண்டவர்கள் மிகுந்த வியப்படைந்தார்கள்.

அந்நாளில் உக்கிரசிங்க மன்னன் என்பவன் நகுலேசரைப் போற்றி வழிபடுவதற்கு மூன்றாவது முறையாகக் கீரிமலைக்கு வந்தான். அவன் நகுலேசர் கோயிலிலே மாருதப் பிரவல்லியைக் கண்டு அவளுடைய பேரழகால் மயங்கினான். தான் அவளைத் திருமணஞ் செய்து கொள்ள வேண்டுமென்று முடிவு செய்தான்.

மாருதப்பிரவல்லி தனக்குக் குதிரை முகம்நீங்கியகாரணத்தினால் கோவிற்கடவை என்னும் ஊருக்கு மாவிட்டபுரம் என்று பெயர் கொடுத்து அவ்விடத்திலே கந்தசாமி கோயிலைக் கட்டத் தொடங்கினாள். அதற்கு வேண்டிய பொருளையும் தெய்வ உருவையும் அந்தணரையும் அனுப்ப வேண்டுமென்று தந்தையாகிய திசையுக்கிரசோழனுக்குச் செய்தியனுப்பினாள். அவனும் அவ்வாறே எல்லாவற்றையும் அனுப்பி வைக்கத் திருக்கோயில் திருப்பணியை நிறைவேற்றித் தன்னைக் காதலித்த உக்கிரசேன மன்னனைத் திருமணஞ் செய்து இனிது வாழ்ந்திருந்தாள்.

**மாருதவேகன்** - இந்திர விழாப் பார்த்தற் பொருட்டுக் காவிரிப் பூம்பட்டினத்திற்கு வருகையில் சண்பை நகரத்தில் சுதமதியைக் கவர்ந்து கொண்டு சென்ற ஒரு வித்தியாதரன்.

**மாயாதேவி** - சுத்தோதனனுடைய மனைவி; கௌதம புத்தருடைய தாய்.

**மார்க்கண்டேயர்** - ஒரு முனிவர். மிருகண்டு முனிவருக்கு மருத்துவதியிடம் பிறந்தவர். மிருகண்டு மகனுராகையால் மார்க்கண்டேயர் என்று பெயர் பெற்ருர். இவருக்குச் சிவபிரான் வயது பதினுறெனக் கூறியிருந்தார். பதினுறு வயது முடியும் போது காலன் வந்து இவரைப் பாசக்கயிற்ருல் இழுத்தான். இவர் சிவபிரானை நோக்கி முறையிட்டார். சிவபிரான் வெளிப்பட்டுக் காலனைக் காலால் உதைத்து வீழ்த்தி இவரைக் காப்பாற்றியருளினுர். இதனுல் சிவபெருமானுக்குக் காலகாலன் என்றும் ஒரு பெயர் உண்டாகியது. இதன் பிறகு மார்க்கண்டேயர் என்றும் பதினுறு வயதுடையவராய் விளங்கலானுர்.

**மார்க்கண்டேயனுர்** - சங்க காலப் புலவர்களில் ஒருவர் மார்க்கண்டேயனுர் காஞ்சி என்று ஒரு நூல் பெயரும் ஒரு செய்யுளும் யாப்பருங்கல விருத்தி யாப்பருங்கலக்காரிகைகளில் காணப்பெறுகிறது. தமிழ்ச் செய்யுட்களில் மார்க்கண்டேயனுரியற்றியவை தலையாய ஒத்தென்று நச்சினுர்க்கினியர் கூறுவர். இவருடைய பாடல் புறநானூற்றிலுஞ் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**மார்க்கோபோலோ** - இத்தாலிய யாத்திரிகர். இத்தாலி நாட்டில் உள்ள வெனிஸ் நகரில் பிறந்தார். இவருடைய காலத்தில் தான் சைபீரியாவில் பைக்கால் ஏரிக்கு மேற்கே கூப்ளேக்கான் மங்கோலிய மன்னர் ஆட்சி புரிந்து கொண்டிருந்தார். வாணிகத்தின் பொருட்டு மார்க்கோபோலோ ரஷ்ய நாட்டின் தென்பகுதிக்குச் சென்ருர். அப்பொழுது அங்குத் தங்கியிருந்த கூப்ளேக்கான் மன்னரின் தூதர்கள் இவரைக் கண்டு தங்கள் மன்னரிடஞ் செல்லுமாறு தூண்டினர். அவ்வாறே இவர் அத்தூதர்களுடன் மன்னரைக்காணப் புறப்பட்டார். பாரசீகத்தைக் கடந்து மேற்கு ஆசியா, துருக்கிஸ்தானம் முதலிய நாடுகளின் வழியாகச் சென்று கோபி பாலைவனத்தைக் கடந்து பீக்கிங் நகரையடைந்தார். அங்கு மன்னரைப் பேட்டி கண்டார். முதன் முதலாக ஐரோப்பாவில் இருந்து ஆசியாவுக்குத் தரைவழியாகப் பயணஞ் செய்தவர் இவரேயாவார்.

கூப்ளே மன்னரின் அவையில் இவருக்குச் சிறந்த முறையில் வரவேற்பு அளிக்கப்பட்டது. இவரிடம் இருந்து மன்னர் மேனுடுகளைப் பற்றிய பல செய்திகளைத்தெரிந்துகொண்டார். மார்கோபோலோ பிறகு தம் தாய் நாடு திரும்பினுர். இரண்டு ஆண்டுகட்குப்பிறகு மறுமுறையுஞ்சீனத்திற்குச் சென்ருர். அங்கு விரைவில் சீனமொழியைக் கற்று ஓர் அரசியல் அலுவலை ஏற்ருர். தாம் அலுவல் பார்த்தகாலத்தில் சீனம், சப்பான், பர்மா முதலிய நாடுகளைச் சுற்றிப் பார்த்தார். ஒரு சீன நகரில் மூன்று ஆண்டுகள் கவர்னராகப் பணி செய்தார். பிறகு மன்னர் அவையில் உறுப்பினரானுர். இருபதாண்டுகட்குப் பிறகு மன்னரின் உடன்பாடு பெற்றுக் கடல்வழியாகத்

தம்முடைய தாய்நாடு திரும்பி ஞர். திரும்பும் போது சுமத்திரா, இலங்கை, தென்இந்தியா, பாரசீகம் முதலிய நாடுகளின் கடற்கரையோரமாகப் பயணஞ் செய்தார். இவர் மூலம் சீன நாட்டைப் பற்றிய பல செய்திகளை வெனிஸ் நகர வாசிகள் தெரிந்து கொண்டனர். இவர் தாம் சுற்றிப்பார்த்த நாடுகளின் தன்மையைப் பற்றிப் பல செய்திகளை எழுதியிருக்கிருர்.

**மாலதி** - இவள் ஒரு பார்ப்பனி. முன்னாளில் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்திருந்தாள். இவள் ஒரு நாள் தன்னுடைய மாற்ருளின் குழந்தைக்குப் பால் கொடுத்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது பால் விக்கியபடியால் குழந்தை இறந்து விட்டது. தன்மாற்ருள் தன்மீது அடாப்பழி சுமத்துவாள் என அஞ்சிக் கலங்கிய இவள் குழந்தையைத் தூக்கிக் கொண்டு பல கோயில்கட்கும் போய்க் குறையிரந்து வருந்திஞள். இறுதியில் பாசண்டச் சாத்தன் கோவிலை யடைந்து முறையிட்டாள். அப்பொழுது சுடுகாட்டுக் கோயிலில் இருந்த இடாகினிப்பேய் இவள் கையிலிருந்த குழந்தையைப் பிடுங்கித் தின்று விட்டது. பிறகு பாசண்டச் சாத்தனே குழந்தையாகி இவளுடைய மனத் துயரைப் போக்கினுன்.

**மாலியவான்** - இவன் அரக்கர் குலத்தில் முதன்மை பெற்றவஞக விளங்கிய சுகேசன் என்பவனுடைய மகன். இவனுடைய தாய் பெயர் தெய்வவதி. சுமாலி, மாலி என்பவர்கள் இவனுடைய தம்பிகள். இவன் தவஞ் செய்து சிறந்த மேன்மைகளை யெல்லாம் பெற்ருன். தெய்வத் தச்சனை யழைத்து அரிய நகரம் ஒன்றை உண்டாக்கினுன். அந்நகரம் திரிகூடம் என்னும் மலைச் சாரலில் உண்டாகியது. சவுந்தரி என்னும் மங்கையை மணந்து வாழ்க்கையை நடத்திஞன். வச்சிரமுட்டி, பெரும்பாக்கன், துன்முகன், சுதகத்தன், நியாயகோபன், மத்தன், உன்மத்தன் என்னும் ஏழு மக்களைப் பெற்ருன். அனலை என்னும் மகளுந் தோன்றிஞள். தன்னுடைய தம்பியர் இருவருக்கும் இரு பெண்களைத் திருமணஞ் செய்து வைத்துத் தன்னுடனேயே வைத்துக் கொண்டான். இவ்வாறு சிறந்து விளங்கிய இவன் இராவணனுக்குப் பாட்டன் ஆவான்.

**மால்ட்டா** - மால்ட்டா என்பது மத்தியதரைக்கடலில் இட்டாலிக்கும் வட ஆப்பிரிக்கக் கரைக்கும் இடையில் உள்ள பழந்தீவு. இதன் தலைநகரம் வாலெட்டா என்பது. இஃது அரண்மனைகளைக் கொண்டுள்ள நகரம் எனப்படும். இதிலுள்ள பல மாடமாளிகைகள் செருசலேத்தின் மகாஞன சான் என்பவருடைய வீரர்களால் கட்டப்பட்டவை. இது மிகப் பழைய காலமுதலே சிறப்புற்ற தீவாகும். இதன் ஒருபக்கத்தில் ஆராய்ச்சி வேலை நடைபெற்றது. அதன் பலஞக ஆராய்ச்சியாளர்களுடைய கருத்தைக் கவர்ந்த மட்கலங்களும் பலவகை மணிகளும் வெளிப்பட்டன. ஆராய்ச்சி முற்றுப் பெறவில்லை. மட்பாண்டங்கள் மீது பலவகை ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. பல பாண்டங்கள் உடைந்த நிலையில் காணப்பட்டன. சுண்ணும்புக் கல்லாலாகிய லிங்கம் ஒன்றுங் கிடைத்தது. மால்ட்டா நாகரிகம் வெண்கலக் காலத்தது

என்று ஆராய்ச்சி அறிஞர்கள் எண்ணுகின்றனர்.

**மாவடிவைகுஞ் செவ்வேள்** - காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் திருக்கோவிலில் உள்ள மாமரத்திற்கு வடபால் எழுந்தருளிய முருகக் கடவுள்.

**மாவண்டூர்க் கருமாரச் சிங்கன்** - சிங்கன் என்னும் பெயருடைய வனுகிய இக்கருமான் கம்பர் காலத்தினன். இவன் வாழ்ந்திருந்த ஊர் மாவண்டூர் என்பது. கம்பர் இவனிடம் ஓர் எழுத்தாணி செய்து தருமாறு சொல்லியிருந்தார். இவனும் அவர் கேட்டவாறே நல்ல எழுத்தாணி ஒன்றைச் செய்து கொடுத்தான். கம்பர் அதனை எழுதிப்பார்த்தார். மிக அருமையாக எழுதியது. சிங்கனைப் புகழ்ந்து ஒரு செய்யுள் இயற்ற வேண்டும் என்று எண்ணினர். "ஆழியான் ஆழி ஆயனெழுத் தாணியென்பான், கோழியான் குன்றெறிய வேலென்பான் - பூழியான், அங்கைமழு வென்பான் அருள் பெரிய மாவண்டூர்ச் சிங்கன்உலைக்களத் திற் சென்று" என்னுஞ் செய்யுளைப் பாடினர்.

**மாவலி** - இவன் விரோசனன் என்னும் அரசனுக்கும் தேவி என்பவளுக்கும் மகனுகப் பிறந்தவன். பிரகலாதனுக்குப் பெயரன். இவன் ஒருவேள்விசெய்து அதில் குதிரை, தேர், அரிமாக் கொடி, வில் இரண்டு அம்பறுத் தூணிகள் முதலியவைகளைப் பெற்று மண்ணுலகம் விண்ணுலகம் எல்லாவற்றையும் வென்று அரசாண்டான். இவன் வேள்வி செய்தபோது திருமால் சென்று மூன்றடிமண் தானங் கேட்டுப் பெற்றுப் பாதாள வுலகத்திற் கழுத்தி அவனுக்கு மேன்மைகள் கொடுத்து அவன் இந்திரனுக்கும் வரையிலும் பாதாளஉலகத்திலேயே எல்லா இன்பங்களையும் நுகர்ந்து கொண்டிருக்கச் செய்தார்.

**மாவளத்தான்** - இவன் காவிரிப் பூம்பட்டினத்தில் இருந்து அரசு புரிந்த சோழன் நலங்கிள்ளியி னுடைய தம்பி. இவன் சிறந்த கொடையாளியாக விளங்கி இருந்தான். நற்பண்புகளும்இவனிடம் நன்கு அமைந்திருந்தன. இவன் ஒருநாள் தாமப்பல் கண்ணனர் என்னும் புலவரோடுபொழுதுபோக்கின் பொருட்டு வட்டாடிக் கொண்டிருந்தான். புலவர் வட்டாடுவதில் தேர்ச்சியில்லாதவர்;முன் சினம் உடையவர். ஆட்டத்தில் இவனே பன்முறையும் வெற்றியடைந்து கொண்டிருந்தான். இதனுல் புலவருடைய உள்ளத்தில் வெகுளி உண்டாகியது. இச்சமயத்தில் மாவளத்தான் புலவரைப் பார்த்துத் "தங்களுடைய பாட்டுப்பாடும் ஆற்றல் இவ்வட்டாடுவதில் பயன் படவில்லையே" என்று கேலியாக மொழிந்தான். புலவர் வெகுண்டார். உன்தாய் உன்னை யாருக்குப் பெற்ருள்? என்று கேட்டார். மாவளத்தான் புலவர் சினம் அளவுக்கு மேலே போய்விட்டது என்று நகைத்தெழுந்தான். புலவரைப் பார்த்துத் தன்னுடையபிழையைப் பொறுக்குமாறு வேண்டிக் கொண்டான்.

புலவருடையசினந்தணிந்தது தாம் அளவுக்கு மேலே போய்ப் பேசிவிட்டதை நினைந்து உள்ளம் வருந்திஞர். மாவளத் தானுடைய பெருந்தன்மையை வியந்து பாடல் ஒன்றும் பாடினர்.

**மாவளவன்** - ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன்பு தமிழ் நாட்டிலே உறையூரிலே அரசு புரிந்திருந்த ஒரு

சோழ மன்னன். இவன் திண்மையுஞ் சூழ்ச்சித் திறமும் உடையவன். இவனுடைய தந்தையின் பெயர் பொலங் தேர்க்கிள்ளி. தந்தையாகிய அவன் மாவளவன் இளைஞனாகவிருக்கும் போதே காலமாயினன். தந்தை மீது சினங் கொண்டிருந்த பகையரசர்கள் அச்சினத்தை மைந்தன் மீது திருப்பி இவனை வருத்தத் தொடங்கினர். ஆயினும் இவன் எதற்கும் அஞ்சாத திண்ணியனாகவும் பகைவர்களை யெல்லாம் வாட்டி வதைக்கத் தக்க வகைமை தெரிந்தவனாகவும் இருந்தபடியால் வந்த பகைவர்களை யெல்லாம் வாட்டி விரட்டினான். பருவமெய்திய பிறகு அரசாட்சியைச் சீர்மையுஞ் சிறப்பும் சிறந்து விளங்க நடத்தினான். இவனுடைய பகைவர்கள் இவனிடந் தம்முடைய காரியம் பலிக்காதென்று அடங்கி விட்டனர். இவனுக்குச் செல்வச் சிறப்பும் வெற்றிச் சிறப்பும் நாள் தோறும் வளர்ந்தோங்கின. அதனால் பெருந் திருமாவளவன் என்று கூறப் பெரும் புகழுடைந்து விளங்கினான். இவனுடைய சிறப்பைக் குறித்து மருத்துவன் தாமோதரனார் விளக்கமாகப் பாடியுள்ளார்.

**மாவிலங்கை** - தமிழ் நாட்டில் தொண்டை மண்டலத்தில் தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ளது. ஓய்மானாட்டுநல்லியக் கோடன் தொன் மாவிலங்கைத் தலைவன் எனவும், பெருமாவிலங்கைத் தலைவன் எனவும், தமிழ் நூல்களிற் கூறப்படுகின்றான். செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தில் அருவா நாடும் அருவாவட தலைநாடும் சேருமிடத்தில் மாவிலங்கை உள்ளதென்பர்.

**மாளவியா** - இவருடைய முழுப் பெயர் பண்டித மதன் மோகன மாளவியா என்பது. மிகச் சிறந்த தேச பக்தர். அலகாபாத்தில் 1861 டிசம்பர் 25 ஆம் நாள் பிறந்தார். முதலில் இரண்டு சமக்கிருதக் கலாசாலைகளில் பயின்று, பின்பு அலகாபாத் மாவட்டப் பள்ளியில் மெட்ரிக்குலேஷன் தேறி, மூயர் மத்தியக் கல்லூரியில் சேர்ந்தார். அக்காலம் அலகாபாத்தில் பல்கலைக் கழகம் கிடையாது. ஆகையால் கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் 1884 இல் பி.ஏ. பட்டம் பெற்றார். 1886 இல் கல்கத்தாவில் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில், "பிரதிநிதித்துவ மின்றி வரி விதிப்பில்லை" என்பது பற்றி இவர் முழங்கியதை எல்லோரும் பாராட்டினர். அன்று முதல் இவர் காங்கிரஸ் பிரமுகர்களுள் ஒருவரானார். 1891.இல் எல்எல்.பி(LL B.) பட்டம் பெற்று 1893 இல் உயர் அறமன்ற வழக்கறிஞரானார். இவர் முயற்சியால் காசி இந்துப் பல்கலைக் கழகம் 1915 இல் நிறுவப்பட்டது.மாளவியா பல்லாண்டுகள் அதன் துணை வேந்தராக இருந்தார். கிறித்தவர்களை இந்துக்களாக்கினார். இந்து மகாசபை நிறுவினார். மூன்று முறை தேசீயக் காங்கிரசின் தலைமைப்பதவி வகித்தார். 1946 இல் காலமானார்.

**மாறவர்மன் அரிகேசரி** - இவன் செழியன்சேந்தனுடைய மகன். அவன் இறந்த பிறகு மாறவர்மன் என்னும் பட்டம் புனைந்து அரசாளத் தொடங்கினான். இவனைச் சுந்தர பாண்டியன் எனவுங் கூன் பாண்டியன் எனவுங் கூறுவர். திருஞானசம்பந்தர் காலத்தில் இருந்தவன். இவனுடைய முன்னிலை

யில் தான் திருஞானசம்பந்தருக்கும் சமணர்களுக்கும் அனல் வாதம் புனல்வாதம் முதலியன நிகழ்ந்தன. சமணர்கள் போதனையால் சமண மதஞ் சார்ந்து திருஞான சம்பந்தரால் சைவமதத்தைச் சார்ந்தவன்.

**மாறவர்மன் அவனி சூளாமணி** - இவன் பாண்டியன் கடுங்கோனுடைய மகன். இவன் ஏறக்குறைய இருபத்தைந்தாண்டுகள் அரசாட்சி செய்தான்

**மாறன் எயினன்** - இவன் மாறன் காரிக்குத் தம்பி. காரி இறந்த பிறகு இவன் பராந்தகனுக்கு முதல் அமைச்சனாக இருந்தான். இவனுக்கு அரசன், "பாண்டி மங்கல விசையரையன்" என்னும் பட்டங் கொடுத்தான். இவன் தமையன் ஆனைமலையிற் கட்டிய நரசிங்கப் பெருமாள் கோயிலுக்கு இவன் முன் மண்டபங் கட்டினான்.

**மாறன்காரி** - திருநெல்வேலி மாவட்டத்தில் உக்கிரன் கோட்டை யென வழங்கும் களக்குடியில் மாறன் என்பவனுக்கு மகனாகத் தோன்றினான். மருத்துவ குலத்தினனாகிய இவனுக்கு மதுரகவி என்னுஞ் சிறப்புப் பெயரும் வழங்கியது. நெடுஞ்சடையன் பராந்தகன் என்னும் மன்னனுக்குச் சில காலம் அமைச்சனாகவும் இருந்தான். மதுரைக்கு வடக்கே ஆறு மைல் தொலைவில் உள்ள ஆனை மலையில் திருமாலுக்கு ஒரு கற்கோயில் கட்டி அதனில் நரசிங்கப் பெருமானை எழுந்தருளுவித்தான். இவனுக்குப் பாண்டிய மன்னன் "மூவேந்த மங்கலப் பேரரையன்" என்னுஞ் சிறப்புப் பெயரை வழங்கினான்.

**மாறன் சடையன்** - வரகுண மன்னனுடைய பெயர்.

**மாறன் பரமேசுவரன்** - இவன் சீட்புலி என்பவனை வென்று நெல்லூரை அழித்தான். திரும்பி வரும் பொழுது தான் வெற்றி பெற்றதற்காகத் திருவொற்றியூர்ச் சிவபெருமானுக்கு நிலதானஞ் செய்தான்.

**மாறன் பொறையனார்** - பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய ஐந்திணை ஐம்பது என்னும் நூலின் ஆசிரியர். இவர் சிறந்த புலமை யுடையவர் என்பது இவருடைய நூலாற் பெறப்படும்.

**மாறோகம்** - இது தமிழ் நாட்டில் உள்ள ஒரு சிறு நாடு. மாறோக்கம் எனவும் வழங்கும். இது திருநெல்வேலி மாவட்டத்தில் கொற்கையைச் சூழ்ந்த நாடு. இங்கு பல சிறந்த புலவர்கள் வாழ்ந்திருந்தனர். அவர்களில் நப்பசலையார், காமக்கணி நப்பாலத்தனார் என்போர் குறிப்பிடத் தக்கவர்கள்.

**மாற்பித்தியார்** - சங்க காலத்துப் பெண்பாற் புலவர்களில் ஒருவர். இவருடைய செய்யுட்கள் புறநானூற்றில் சேர்க்கப் பட்டிருக்கின்றது.

**மாற்றுரைத்த பிள்ளையார்** - இப் பிள்ளையார் திருவாரூரில் கமலாலயத்தின் வடகிழக்கு மூலையில் எழுந்தருளியுள்ளார். சுந்தர மூர்த்தியார் திருமுதுகுன்றத்தில் மணிமுத்தா நதியில் இட்ட பொன்னைக் கமலாலய தீர்த்தத்தில் எடுத்த போது மாற்று ஒப்பாகுமாறு உரைத்துக் காட்டிய படியால் இப் பிள்ளையார் இவ்வாறு பெயர் பெற்றார்.

**மானகர்** - இவர் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு பாண்டி வளநாட்டில் புனல் வாய் என்னும் ஊரில் இருந்தவர். சிறந்த கல்வியறிவும்

உயர்ந்த ஒழுக்கமும் உடையவர். வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லவர். இவர் காலத்தில் மறை முதலிய கலைகளை நன்கு ஓதி யுணர்ந்து சிறந்த ஞான சீலர்களாய் விளங்கியிருந்த சவுனகர், விருசிகர், சதானிகர், சாண்டிலியர் என்னும் நால்வரும் இவருக்கு நண்பர்களாக விளங்கி இருந்தனர். அறநூலிலேனும் பொருணூலிலேனும், அரச நீதியிலேனும் ஏதாவது மாறுபாடு தோன்றுமாயின் அக்காலத்தில் இருந்தவர்கள் இவரிடந்தான் கேட்டு ஐயந் தீர்ந்தனர்.

**மானசவேகன்** - வெள்ளிமலை வித்தியாதரர்களில் ஒருவன். இவன் மதன மஞ்சிகையை விரும்பி எடுத்துக் கொண்டு சென்ற படியினால், மதன மஞ்சிகையினுடைய கணவனாகிய நரவாணதத்தனால் வெல்லப்பட்டான்.

**மானனீகை** - இவள் கோசல நாட்டு அரசனுடைய மகள். இவளுக்கு வாசவதத்தை என்னும் பெயர் வழங்கியது. இவளுடைய தாய் பெயர் வசுந்தரி. பாஞ்சால ராசன் கோசல நாட்டு மன்னனை வென்று அவனுடைய அந்தப் புரத்தில் இருந்து கவர்ந்துசென்ற மங்கையர்களுள் இவளும் ஒருத்தி. பிறகு அவனுடைய பட்டத்தரசியின் பணிப் பெண்ணாக இருந்தாள். உதயணன் பாஞ்சால ராசனைக் கொன்று கொண்டு வந்த மகளிரோடு இவளுங் கொண்டு வரப்பட்டாள். வாசவதத்தையினுடைய பணிப் பெண்ணாக இருந்தாள். மானனீகையினுடைய பந்தாட்டத்தைக் கண்டு காதல் கொண்ட உதயணன் பிறகு இவளைத் திருமணஞ் செய்து கொண்டான். இவள்யவனமொழியிலும் சிற்பவேலையிலும் பந்தாடுதலிலும் மிக வல்லவள்.

**மானோதயன்** - தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**மிஞிலி**- இவன் இரண்டாம் நன்னனுடைய படைத் தலைவன். பாரம்என்னும் ஊருக்குத்தலைவனாகவிருந்தான். இவன்பாண்டியனுடைய படைத் தலைவனாகிய அதிகமான் நெடுமிடல் அஞ்சியையும், சேரன் படைத்தலைவனை வெளியன் வேண்மான் ஆய் எயினனையும் போரில் வென்றான்.

**மித்திர காமன்** - இவன் ஒரு வணிகன். பெருஞ் செல்வனாக இருந்ததன்றி நற்குண நற்செய்கைகள் உடையவனாகவும் இருந்தான். மாறு கோலங் கொண்ட வாசவதத்தைமுதலிய நால்வரும் இவன் வீட்டிற் சில காலம் மறைந்திருந்தனர்.

**மித்திரசித்து** - இவன் வடகோசல நாட்டில் இருந்த ஓர் அரசன். இவன் காசியில் இருந்து அரசாட்சி செய்து கொண்டிருந்தான். இவனுடைய அரசாட்சி சீருஞ் சிறப்பு முடையதாக விளங்கிற்று. இவன் திருமாலிடத்தில் சிறந்த அன்பு செலுத்தி னின்றான். அந்நாளில் வாழ்ந்திருந்த கங்காளகேது என்னும் ஓர் அரக்க வேந்தன் மங்கையொருத்தியைச் சிறைப்படுத்தி வைத்திருந்தான். இம்மன்னன் அவ்வரக்கனோடு போராடி அவனைக் கொன்றொழித்தான். அம்மங்கையின் சிறையை மீட்டுத் திருமணஞ் செய்து கொண்டான். அம்மங்கையின் பெயர் மலையகந்தினி. கந்தருவ வகுப்பினள். இவ்வாறுஅம்மங்கையை அரக்கனிட மிருந்து சிறை மீட்ட

படியால் இவனுடைய புகழ் யாண்டும் பரவி மிகுந்த பெருமையை உண்டாக்கியது.

**மித்திரமகரிஷி** - இவர் ஒரு முனிவர். இவர் பன்னிரண்டு ஆண்டுக் கொருமுறை யோகத்திலிருந்து எழுந்திருப்பார். இவருக்கு அப்பொழுது ஒரு நெல்லிக் கனி பழுக்கும். அதனை இவர் தம்முடைய நாட்கடன்களை முடித்துக் கொண்டு உண்பது வழக்கம். பாண்டவர்கள் வனவாசஞ்செய்கையில் திரௌபதி அக்கனியைக் கண்டு அதனைத் தனக்குப் பறித்துத் தருமாறு வேண்டினாள். அருச்சுனன் பறித்துக் கொடுத்தபிறகு அதன் வரலாற்றை யுணர்ந்தான். பிறகு கண்ணனருளால் அக்கனி மறுபடியும் மரத்தில் பொருந்தியது.

**மிருக கண்டூயர்** - இவர் குச்சகருடைய மகன். இவர் தவஞ் செய்து கொண்டிருக்கையில் விலங்குகள் தம்முடைய உடல் தினவைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு இவருடைய உடலைத் தறி யென்று நினைத்துத் தேய்த்துக் கொண்டமையின் இவருக்கு இப் பெயர் உண்டாகியது. இவர் தவத்தை முடித்த பிறகு உசத்தியர் என்பவருடைய பெண்ணாகிய விருத்தை என்பவளை மணந்து மிருகண்டைப் பெற்றார். இவருக்குக் கௌசிகர் எனவும் பெயர் வழங்கியது.

**மிருகன்** - இவன் விராட நகரத்திலிருந்த ஓர் அந்தணன். ஒழுக்கங் குன்றிவேசையுடன் அலைந்தான். வேற்றூர்க்குச் சென்றபோது அங்குப் பழம் ஒன்றைக் களவு செய்தான். அதற்கு உரியவர்கள் இவனைப் பிடிப்பதற்கு வந்தார்கள். இவன் தான் களவுசெய்த பழத்தைச் சிவார்ப்பணம்என்று சொல்லி யெறிந்து அதனால் நற்கதியடைந்தான்.

**மிருகாசுரன்** - இவன் ஓர் அசுரன். திருமாலோடு மூன்று நாள் போர் செய்தான். ஆயினுஞ் சாகாமல் தேவர்களை வருத்தினான். பிறகு சிவபிரானுடைய வேற்படையால் இறந்தான்.

**மிருகாபதி** - உதயணனுடைய நற்றாய். இவளுடைய உடன் பிறந்தான் விக்கிரன். இவளுடைய தந்தை ஏயர் குலத்திற்குத் தலைவனாக விளங்கினான்.

**மிருத்யுஞ்சயபக்தர்** - இவர் பிதரி என்னும் பட்டணத்திலிருந்த ஓர் அரசர். இவருடைய பழைய பெயர் சாந்த பிரம்மணி என்பர். இவர் தம்முடைய அரண்மனையின் மேன் மாளிகையில் மனைவியோடு அமர்ந்திருந்த போது வாழைப் பழத்தை யுண்டார். அதன் தோலைச் சாளர வழியாகக் கீழே யெறிந்தார். அத்தோல்களை அரண்மனைக்கு வெளியே கீழேயிருந்த ஒருவர் எடுத்துத் தின்று, "இனிமையாக இருக்கிறது" என்று சொல்லி மகிழ்ந்தார். அரசி அம்மனிதரைத் தன்னுடைய கணவனுக்குக் காட்டினாள். அரசன் அரண்மனைக்கு அவ்வளவு அண்மையில் பிற மனிதர்கள் வந்ததைக் குறித்துத் தம்முடைய சேவகர்களைக் கடிந்தார். சேவகர்கள் வாழைத் தோல் தின்ற அம்மனிதரைப் பிடித்து, "இங்கு ஏன் வந்தனை?" என்று சொல்லிப் புடைத்தனர். அம் மனிதரோ அடியைப் பட்டுக் கொண்டு நகைத்தார். இதனைப் பார்த்த அரசர் அம்மனிதரைத்தம்மிடம் அழைத்துக் கொண்டுவரச் சொல்லி அம் மனிதரைப் பார்த்து, "சேவகர் உன்னை யடிக்கும் போது வருந்தாமல் ஏன் நகைத்தாய்?" என்றுடசா

வினார். அதற்கு அம் மனிதர், "உலகத்தில் யாவருக்கும் பொதுவாகிய பொருளின் தோலை யுண்டதற்கும் அரண்மனையின் வெளியே நின்றதற்குமே இவ்வாறு தண்டனையாயின் பழத்தையே உண்டு அரண்மனைக் குள்ளிருக்கும் உனக்கு எவ்வாறு தண்டனை கிடைக்குமோ என்று எண்ணி நகைத்தேன்" என்று சொன்னார். இதனால் அரசருக்கு மெய்யறிவு தோன்றியது. வாழ்வில் வெறுப்படைந்து ஞானசிரியரிடம் அறிவுரை பெற்று மிருத்யுஞ்சயன் என்னும் பெயரை யடைந்தார். மெய்யறிவு பெற்றபின் பல புதுமைகளைச் செய்தார்.

**மிலேச்சர்** - இவர்கள் ஒரு வகை வீரர்கள். அரசர்களிடத்தில் மெய் காப்பு, வாயில் காவல் முதலிய வேலைகளைச் செய்து கொண்டு நம்பிக்கைக்கு உரியவர்களாக விளங்கினார்கள். போர் செய்வதினும் வல்லவர்கள். போருக்குச் சென்றால் எப்பொழுதும் படையின் முன்னணியிலேதான் இருப்பார்கள்.

**மிழலைக்கூற்றம்** - சோழ நாட்டின் ஒரு பகுதி. இதன் தலைவன் எவ்வி. இவனை வென்று இக் கூற்றத்தைத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் கைப்பற்றினான்.

**மிலேச்சன்** - இவன் மகத நாட்டையொட்டி இருந்த போதனபுரம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தவன். நல்ல அறநெறியாளன். படை வலிமையும் அறிவு வலிமையும் ஒருங்கே அமையப்பெற்றிருந்த இவனைப் போர் செய்து வெல்ல வேண்டுமென்று பகையரசர் சிலர் படையெடுத்து வந்தனர். இவன் அவர்களை யெல்லாம் வென்று புறங்காணச் செய்தான். "மாற்றோர்த் தொலைத்த கூற்றுறழ் கொடுந் தொழில், மிக்குயர் வென்றியொடு வேந்தரை அகப்படுத்து, அக்களம் வேட்ட அடலருஞ் சீற்றத்துப், புனைமதில் ஓங்கிய போதன புரத்திறை, தடவரை மார்பில் தளராச் செங்கோல், மிலேச்சன் என்னும் நலத்தகை ஒருவன்" என்று இவனைக் கொங்கு வேளிர் பாராட்டி யுள்ளார்.

**மிளகாழ்வார்** - இவர் உடையவரால் ஏற்படுத்தப்பட்ட எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். இவர் சிறந்த அன்பர். இவர் உடையவர்க்குப் பாலமுது கொடுக்க எண்ணிநாடோறுந் திருவானைக்காவுக்குச் சென்று அங்கு நள்ளிரவு வழிபாட்டிற்குப் பிறகு அந்தணர்க்களிக்கும் சிவ நிவேதனப் பாலை வாங்கிக் கொண்டுவந்து உடையவர்க்குக் கொடுத்துக் கொண்டிருந்தார். இவ்வாறு சிவவிட்டுணு மாறுபாடு பார்க்காமல் செய்வதை வைணவர்கள் சிலர் பொறாமல் சிவ வழிபாட்டுப் பாலை வாங்கி வந்து கொடுக்கிறார் என்று உடையவரிடம் உரைத்தார்கள். உடையவர் இவரை அழைத்து, "அவ்வாறு செய்யலாமோ?" என்று கேட்டார். மறுநாள் இவர் தாம் உடையவருக்குச் செய்யும் மடைப்பள்ளித் திருப்பணியில் மிளகுரசம் வைக்கத் தொடங்கி மிளகை அம்மியிலிட்டு நசுக்காமல் முழு மிளகைப் போட்டு ரசம் வைத்தார். உடையவர், "ஏன் இவ்வாறு செய்திருக்கிறீர்?" என்று உசாவினார். அதற்கு இவர், "தேவரீர் சிவ நிவேதனம் ஆகாது என்று கூறியபடியால் இவ்வாறு செய்தேன்" என்றார். உடையவர், "இஃதெவ்வாறு சிவநிவேதனம்

ஆகும்?" என்று கேட்டார். அதற்கு இவர், "மிளகை நசுக்கும் அம்மியுங் குழவியும் அவ்வுருவந்தான். ஆதலால் குற்றமாகுமென்று இவ்வாறு செய்தேன்" என்று கூறினர். உடையவர் இவருடைய அன்புக்கு வியந்து இச் செய்தியை மற்றவர்கட்கும் கூறினர்.

**மீமாம்சகசபரர்** - சைமினியின் பூர்வ மீமாம்ச சூத்திரங்களுக்கு மிகப் பழைமையாகவுள்ள விரிவுரையை இயற்றியவர்.

**மீராபாய்** - இவள் சிவனடியார்களுடைய வீட்டிற் பிறந்தாள். கண்ணனைத் தன் கணவனாகச் சிறு வயதிலேயே மதித்தாள். இவளுடைய கணவன் இவளைச் சிவ பக்தியில் ஈடுபடுத்த முயன்றான். ஆனால் மீராபாய் கிருட்டிண பக்தியில் உறுதியான நம்பிக்கையுடையவளாக இருந்தாள். ஆகவே இல்வாழ்க்கையைத் துறந்து சாதுக்கள் கூட்டத்தைச் சேர்ந்தாள். பிறகு துவாரகை சென்று வசித்தாள். பிறகு கிருட்டிணனோடு ஒன்றானாள். மீரா முதலில் இராசஸ்தானி மொழியிலும் துவாரகை சென்ற பிறகு குசராத்தி மொழியிலும் பசனைப் பாடல்களைப் பாடியிருக்கிறாள்.

**முகமதுநபி** - மக்காவில் குறைஷி என்னும் வகுப்பில் இவர் பிறந்தார். இவர் பிறந்த நாள் 20 - 4 - 571 என்பர். இவர் தம்முடைய தாயின் கருவில் இருக்கையில் தந்தையாகிய அப்துல்லா காலமாகிவிட்டார். அன்னை ஆமீனா கருவுயிர்த்து ஆறு ஆண்டுகளில் உயிர் நீத்தார். ஆகவே முகமது தம்முடைய பாட்டனாராகிய அப்துல் முத்தலியால் வளர்க்கப்பட்டார். இப் பாட்டனாரும் இரண்டு ஆண்டுகளில் காலமானார். அப்துல்லாவின் தமையனாராகிய அபூத்காலிப் என்னும் பெரிய தந்தையே முகமதை வளர்த்தார். முகமது எழுதப் படிக்கக் கற்றுக் கொள்வதற்கு வழியில்லாமற் போயிற்று. ஆயினும் சிறுவயதுமுதல் நல்லொழுக்கத்தையே மேற்கொண்டிருந்தார். இவர் சிறு வயதில் ஆடு மாடு ஒட்டகங்களை மேய்த்து வந்தார். எனினும் தம்முடைய பெரிய தந்தையான அபூத்காலிப்பிடம் வணிகத் தொழில்முறை பயின்று 25 வயது நிரம்பும்வரை சிரியா முதலிய இடங்கட்கு அவருடன் சென்று வாணிகஞ் செய்து வந்தார்.

இவருடைய வணிகத்திறமையையும் உண்மைப் பொறுப்பையும் களங்கமற்ற தன்மையையுங் கண்டு கதீசா என்னும் பெரிய பணக்காரச் சீமாட்டியான விதவை தன்னுடைய வெளிநாட்டு வாணிகத்தைக் கவனித்துக் கொள்வதற்கு இவரை அமர்த்தினாள். அப்பொழுது அச்சீமாட்டிக்கு வயது நாற்பது. முகமது நபிக்கு இருபத்தைந்து. ஆயினும் முகமதின் நேர்மையையும் நல்லொழுக்கத்தையுங் கண்டு வியந்து இவரை மணஞ் செய்து கொண்டாள். மணமான பிறகு இவர் மக்காவிலேயே தங்கித் தம்முடைய மனைவியின் செல்வத்தைப் போற்றிப் பாதுகாத்து வந்தார். அதன் வருமானத்தை அறநெறியிலும், சமூக சேவையிலும் செலவிட்டார். இவர் தம்முடைய நாற்பதாவது வயதில் கடவுளுடைய திருவருள் கிடைக்கப் பெற்றார். தாமே ஒரு சமயத்தை உண்டாக்கினார். அச்சமயத்திற்கு இஸ்லாம் என்பது பெயர். இஸ்லாம் சமயத்திற்குக் குர்ஆன் என்பது மறையாகியது. இம்மறை அரபி மொழியில் எழுதப் பட்டது. முகமதுநபி

தாம் கண்ட புதிய இஸ்லாம் சமயத்தை மெக்கா நகரத்து மக்களுக்குப் போதித்தார். சிலர் இவருடைய சமயத்தை ஏற்றுக் கொண்டார்கள். சிலர் இவருடைய சமயத்தை ஏற்றுக் கொள்ளாமல் பகைமை பாராட்டினார்கள். இவரைக் கொலை செய்யவுஞ் சூழ்ச்சி செய்தார்கள். முகமது மெக்காவை விட்டு மதினா என்னும் நகரத்திற்குப் போய் விட்டார். இவருடைய சமயம் அரபுநாடு முழுவதினும் இவருடைய காலத்திலேயே பரவி விட்டது. இவர் கி. பி. 632 ஆம் ஆண்டிற் காலமானார்.

**முகுராநநன்** - முகுரம் - கண்ணாடி; ஆநநன்-முகத்தையுடையவன். கண்ணாடி போன்ற முகத்தையுடையவன். திருதராட்டிரன் தான் பிறராற் காணப்பட்டுத் தான் பிறரைக் காணுந் தன்மையில்லாதவனாக இருந்த படியால் இப்பெயர் திருதராட்டிரனுக்கு உண்டாயிற்று.

**மூக்களாலிங்கர்** - பாபநாசத்திலுள்ள சிவபெருமான் பெயர். மூன்று கிளைகளுள்ள களாமரத்தின் கீழ் எழுந்தருளியபடியால் இப்பெயர் உண்டாகியது.

**முக்குளத்தீர்த்தம்** - திருவெண்காட்டில் உள்ள மூன்று திருத்தடாகங்கள். சிவபெருமான் இன்பக்கூத்தாடிய பொழுது அப் பெருமானுடைய மூன்று கண்களிலும் இருந்து வீழ்ந்த நீர்த்துளிகள் மூன்று திருத்த நீர்களாயின. இவை சோம சூரியாக்கினி தீர்த்தம் எனப் பெறும். இம்மூன்று தீர்த்தங்களிலும் மூழ்கினோர் எல்லா நலன்களையும் அடைகின்றனர் என்ப.

**மூக்குறுணிவிநாயகர்** - இப் பெயருடையபிள்ளையார் திருத்தில்லை, திருவாலவாய் முதலிய இடங்களில் இருக்கிறார். உருவம் மிகப் பெரியதாக அமைந்துள்ளது. முக்குறுணி அரிசியை ஒரே கொழுக்கட்டையாகச் செய்து இப் பிள்ளையாருக்குப் படைக்கும வழக்கம் உண்டு.

**முக்கூடல்** - தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரபருணியாற்றின் வடகரையில் உள்ள சிற்றூர். சித்திரா நதி யென்னும் சிற்றாறும், கோதண்டராமநதி யெனனும் கயத்தாறும் தாமிரபருணியில் கூடுமிடத்தில் இருந்ததால் முக்கூடல் என்று பெயர் உண்டாகியது. கோதண்டராமநதி இப்பொழுது உப்போடை யென வழங்குகிறது. இக்காலத்தில் இம் மூன்றும் கலக்குமிடம் வேறு. முக்கூடலுக்கு இப்பொழுது வழங்கும் பெயர் சீவலப்பேரி. 12 ஆம் நூற்றாண்டில் அரசு புரிந்த பாண்டியன் மாறவர்மன் சீவல்லபனால் சீவலப்பேரி என ஓர் ஏரி வெட்டப்பட்டது. அதை யொட்டி இவ்வூரும் சீவலப்பேரி யாயிற்று. இங்குக் கோயில் கொண்ட திருமாலுக்கு அழகர் என்றும் செண்டலங்காரர் என்றும் பெயர்கள் உண்டு. இவ் வழகர்மீது முக்கூடற்பள்ளு என்னும் நூல் பாடப் பட்டுளது.

**முக்தேசுவரர்** - இவர் மகாராட்டிர நாட்டில் 1608 ஆம் ஆண்டில் பிறந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சிந்தாமணி; தாயார் பெயர் கோதாவரி. இவருடைய இடுகுறிப் பெயர் முற்கலர். இவர் பாரதம் இயற்றிய பொழுது தம் வழிபடு கடவுளின் கட்டளையின்படி முக்தேசுவரர் என்று பெயர் வைத்துக் கொண்டார். இவருடைய சமாதி கோலாப்பூர் மாவட்டத்

தில் தேர்வாட் என்னும் ஊரில் இருக்கிறது. புராணக்கதைகளை அடிப்படையாகக்கொண்டு காவியங்கள் இயற்றிய கவிகளுக்குள் இவர் முதன்மையானவர். மகாராட்டிரர்கள் இவரைப் பெரிதும் பாராட்டுகின்றனர்.

**முசுகுந்தன்** - கதிரவ குலத்து மன்னன். இவன் திலீபன் மகனென்றும் மாந்தாதாவின் மகனென்றும் நூல்கள் கூறும். விதூமன் என்னுங் கந்தருவன் மறுபிறப்பில் முசுவாகப் பிறந்து சிவபிரானை வில்வத்தால் அருச்சித்து வழிபட்டான். மறு பிறப்பில் கதிரவ மரபிலே முசுமுகத்துடன் பிறந்தான். வசிட்டரிடம் கந்தவிரத முறைகளைக் கேட்டு நோன்பு நோற்ருன். முருகன் துணைவர்களாகிய நவ வீரர்களைப் படைத் தலைவர்களாகப் பெற்றுத் தமிழ்நாட்டில் கரூரில் அரசு புரிந்தான். இந்திரன் வலன் என்பவனைக் கொல்வதற்குப் படைத் தலைவனுகத் துணை செய்தான். திருமால் வழிபட்ட சோமாஸ்கந்த மூர்த்தியை இந்திரனிடமிருந்து பெற்றுக் கொண்டுவந்து திருவாரூரில் நிலை பெறுத்தினுன். அப்பொழுது மேலும் பெற்றுவந்த ஆறுமூர்த்திகளைத் திருநாகை முதலிய இடங்களில் அமைத்தான். தன்னை இடையில் எழுப்புவோர் சாம்பராகும் வரத்தைத் தேவர்களிடம் பெற்று ஒரு குகையில் நீண்ட காலம் உறங்கிக் கொண்டிருந்தான். அப்பொழுது கண்ணனைப் போரில் துரத்திக்கொண்டு வந்த காலயவனன் என்பவன் குகையில் தூங்கும் முசுகுந்தனைக் கண்ணன் என்று எண்ணி எழுப்பிய படியால் முசுகுந்தன் விழித்துக் கொண்டு காலயவனனைச் சினத்துடன் பார்த்தான். இதனுல் காலயவனன் சாம்பராஞன். பிறகு பதரிகாசிரமஞ் சென்று தவஞ் செய்தான்.

**முஞ்சன்** - தாரா நகரத்திலிருந்து அரசு புரிந்த சிந்துலன் என்னும் மன்னனுடைய தம்பி. போசராசனுக்குச் சிறிய தந்தை. இவன் போசனைக் கொலை செய்ய எண்ணினுன். ஆனுல் பிறகு நல்லறிவு வரப் பெற்ருன்.

**முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்** - பெருஞ் சோற்றுதியன் சேரலாதனுடைய வழி முறையில் வந்த சேர மன்னர்களுள் இவனும் ஒருவன். இவன் ஓரிடத்திலேயே அமைதியாக இருந்து நூலாராய்ச்சிகள் செய்து நன்கு செய்யுள் இயற்றும் திறமும் உடையவனுக இருந்தான். போர்த் தொழில்கள் முதலியவைகளில் ஈடுபடாமல் அடங்கி இருந்த படியால் இவனுக்கு முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன் என்று பெயர் உண்டாகியது. இவன் நெய்தல் திணை தழுவிய பாட்டொன்றைப் பாடியுள்ளான்.

**முடத்தாமக் கண்ணியார்** - பத்துப் பாட்டுள் ஒன்ருகிய பொருநராற்றுப் படையை இயற்றியவர். இப் பெயர் முடவர் என்னுங் காரணத்தால் வந்ததென்றும், கண்ணி யென்பதால் இவர் பெண்பாற் புலவர் என்றுங் கூறுவர்.

**முடத்திருமாறன்** - பாண்டிய மரபினரான இவர் புலவருமாவார். இறையனுர் களவியலுரையில் இடைச் சங்கத்திற் சங்கம்நடத்திய பாண்டியர்களில் முடத்திருமாறன் என்பவர் ஒருவர் காணப் பெறுகிருர். இவ்விருவரும் வெவ்வேருவர். இவர் தம்முடைய செய்யுளில் குட்டுவன்

என்னும் ஒரு சேர மன்னனைக் குறிப்பிடுகிறார்.

முடமோசியார் - இவர் சோழவள நாட்டிலே ஏணிச்சேரி என்னும் ஊரிலே அந்தணர் குலத்தில் தோன்றினர். இவருடைய முழு நீளப்பெயர் ஏணிச்சேரி முடமோசியார் என்பது. இவருடைய காலம் ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்டதாகும். இவர் திருந்திய அறிவும் பொருந்திய குண நலன்களும் அமையப் பெற்றவர். முடியுடைமூவேந்தருக்கும் அறிவுரைகள் கூறி அவர்களை நல்வழிப்படுத்தியவர். இவருடைய பாட்டுப் புறநானூற்றிலே சேர்க்கப்பட்டுள்ளது.

முடிகொண்டசோழபுரம் - சோழ நாட்டிற் கும்பகோணத்திற்குத் தென்மேற்கே மூன்று மைல் தொலைவில்உள்ள பழையாறை என்னும் ஊராகும். இஃது இப்பொழுது சிற்றூராக விளங்குகிறது. இப்பகுதியில் சோழமன்னர்களுடைய மாளிகைகள் இருந்த இடம் இப்பொழுது சோழன் மாளிகை என்னும் ஊராக உள்ளது. முடிகொண்டசோழன் என்பது முதல் இராசேந்திர சோழனுடைய சிறப்புப்பெயர்களில் ஒன்று.

முடித்தழும்பர் - இரத்தினகிரி என்னும் வாட் போக்கியில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயர். அரசன் ஒருவன் வெட்டிய தழும்பை முடியில் ஏற்றபடியால் இவ்வாறுபெயர் உண்டாகியது. இப்பெயரைத் தவிர இரத்தினகிரீசுவரர், இராசலிங்கேசுவரர், மாணிக்க மலையுடைய மகேசுவரர், சொக்கநாதர், வாட்போக்கி நாதர் என்னும் பெயர்களும் உண்டு.

முடிநாகராயர் - முடிநாக அரையர் என்பது முடிநாகராயர் என மாறிற்று. இவர்கள் ஈழநாட்டையும் அதன் பக்கமுள்ள தீவுகளையும் ஆண்ட அரச குடும்பத்தினர். நாகர் என்பார் பதினெண் பழந்தமிழ்க் குடிகளில் ஒரு பிரிவினராவார். நாக அரசபரம்பரையினர் தங்கள் முடியில் ஐந்தலை நாகப்படத்தைப் பொன்னால் செய்து அணிந்து கொள்ளும் வழக்கம் உடையவரான படியினால் முடிநாக அரையர் என்று சிறப்புப் பெயர் பெற்றனர். முடிநாக அரசர்களால்புதுப்பிக்கப்பட்ட தமிழ்நாட்டுக் கோவில்களில் ஐந்துதலைநாகபடத்தையுடைய முடிகளை அணிந்த பல உருவங்களை இன்றும் பார்க்கலாம். தலைச்சங்கத்தில் ஒரு முடிநாகராயர் உறுப்பினராக இருந்தார்.

முண்டமர்த்தனி - சும்பநிசும்பப் போரில் முண்டன் என்னும் அசுரனைக் கொன்ற படியினால் தேவிக்கு இவ்வாறு ஒரு சிறப்புப்பெயர் வழங்குகிறது.

முதலாம்கயவாகு - கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் வாழ்ந்திருந்தவன். சேரன் செங்குட்டுவன் காலத்தவன். கரிகால சோழன் காலத்தில் சோழர் ஈழநாட்டுக்கு இடையூறு செய்ததால் அவர்களிடமிருந்து கயவாகு இழப்பீடு பெற்றான்.

முதலாம் பராக்கிரமபாகு - இவன் ஈழநாட்டில் அரசாட்சி செய்தவன். விசயவாகு இறந்தபிறகு ஏற்பட்ட உள்நாட்டுக்கலகங்களைஅடக்கி ஈழம்முழுமைக்கும் அரசனானான். ஈழநாட்டு இளவரசி ஒருத்தியைப் பெகுவில் வலுக்கட்டாயமாகத் தங்கச் செய்த அதன் மன்னனைத் தண்டிக்கும் பொருட்டு 1165 இல் ஒரு கப்பற்படையை

அனுப்பியவன். 1169 இல் ஏற்பட்ட பாண்டியரின் உள் நாட்டுப்போரிலும் இவன் தலையிட்டான்.

**முதலாழ்வார்கள்** - பொய்கையார், பூதத்தார், பேயார், என்ற மூவரும் முதலாழ்வார்கள் என்றழைக்கப்பெறுவர். மற்றைய ஆழ்வார்கட்கெல்லாம் முன்னே தோன்றின படியால் முதலாழ்வார்கள் ஆயினர். 'பொய்கையார் காஞ்சியிலும், பூதத்தார் திருக்கடன்மல்லையிலும், பேயார் மயிலாப்பூரிலும் ஒரே திங்களில் தோன்றியவர்கள். இவர்களுடைய காலம் கி. பி. 5, 6 ஆம் நூற்றுண்டுகளின் பின்முன் பகுதிகளாகும். தனித்தனியே சுற்றித் திரிந்து வந்த இவர்கள் திருக்கோவலூரில் நெருக்கமான இடைகழி ஒன்றில் மழைபெய்த ஒருநாள் இரவு ஒதுங்குவதற்காக ஒன்று கூடிய போது திருமால் இவர்கட்கு அருள்புரிந்தனர்.

**முதலிக்காமிண்டன்** - கொங்குவள நாட்டில் பருத்திப்பள்ளி என்னும் ஊரில் முன்னுளில் ஓர் இளைஞன் இருந்தான். அந்நாளில் தாராபுரம் நாட்டில் பகைவர்கள் உண்டாகித் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தார்கள். மேற்கூறிய இளைஞன் படைவீரனுகிப் பல கொங்குப் படைகளைச் சேர்த்துக்கொண்டு அரசனுடைய கட்டளைப்படிசென்று பகைவர்களை அடித்து விரட்டினுன். இவனுடைய ஆற்றலை விசய நகரம் கிருட்டிணராயர் நன்கு மதித்து இவனுக்கு முதலிக்காமிண்டன் என்னுஞ் சிறப்புப் பெயரை வழங்கினுர்.

**முதலியாண்டான்** - காஞ்சீபுரத்தில் ஒரு பகுதியான பச்சை வண்ணப் பெருமாள் கோயில் என்கிற புருட மங்கலத்தில் பிறந்தவர். இராமாநுசரின் உடன் பிறந்தாள் மகனுர். இராமாநுசருடைய திருவடிகளைப் பற்றியிருந்தவர். எழுபத்து நான்கு சிம்மாசனுதிபதிகளில் ஒருவர். இவருடைய மற்றைப் பெயர்கள் தாசரதி, வாதூலதேசிகன், ஸ்ரீவைணவதாசன், இராமாநுசபாதுகை என்பன.

**முதலூழித்தனியூர்ச்சேந்தன்** - மறைந்துபோன செங்கோன் தரைச்செலவு என்னும் நூலை இயற்றிய ஒரு புலவர். இவருடைய நூல் பெருவள நாட்டரசனுகிய செங்கோன் என்பான் வேற்றரசனுடைய நாட்டை விரும்பிப் படையெடுத்துச் சென்ற சிறப்பைப் பற்றிக் கூறுவது.

**முதுகண்ணன்சாத்தனுர்** - இவர் சோழவளநாட்டில் உறையூரில் இருந்து அரசு புரிந்திருந்த சோழன் நலங்கிள்ளி என்பவனுக்கு உசாத்துணைவராகவும் உயிர்த்தோழராகவும் அமைந்திருந்தார். விரிந்த அறிவும் பரந்த நோக்கமும் உடையவர். ஆலத்தூர்கிழார், கோவூர்கிழார் முதலிய முதுபெரும் புலவர்களும் மகிழ்ந்துபோற்றும்படி சிறந்த குணமுடையவராக இவர் உயர்ந்திருந்தார். நினைத்ததை நினைத்தபடி முடிக்கும் ஆற்றல் இவரிடம் நன்கு அமைந்திருந்தது. இவர் அரசனுக்கு நெருங்கிய உறுதிச் சுற்றத்தினராக அமர்ந்து அறம் பல உரைத்து ஆட்சியைத் திறம்பெற நடத்தச் செய்தார். இப்புலவருக்கும் மன்னனுக்கும் இருந்த நட்பைச் சிலர் கெடுக்க முயன்றனர். ஆயினும் அரசன் தீயோர்களுடைய புன்சொல்லைப் பொருட்படுத்தாமல் இவரைப் பெரிதும் பாராட்டியிருந்தான். இவருடைய பாடல்

புறநானூற்றில் சேர்க்கப்பட்டுள்ளது.

முதுகூத்தனார் - இவர் சோழவளநாட்டில் உறையூரில் இருந்தவர். அந்நாளில் கூத்தர் என்னும் பெயருடையவர்கள்வேறு சிலரும் இருந்தபடியால் அகவையிலும் அறிவிலும்முதிர்ந்து விளங்கிய இவர் முதுகூத்தர் என்று கூறப்பெற்றார். சங்க காலப்புலவர்களில்ஒருவராகிய இவருடைய பாட்டுப் புறநானூற்றிற் சேர்க்கப்பட்டிருக்கிறது. தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாருடைய திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியவர்களில் இவரும் ஒருவர்.

முதுமக்கட்டாழி-முதுமக்களாவார் அகவை நூற்றுக்கு மேற்பட்டவர்கள். முன்னாளில் நமது நாட்டில் இருந்த மக்களிற் பலர் அகவை நூற்றைம்பது இருநூறு வரை வாழ்ந்திருந்தனர். அவர்கள் அகவை நூற்றைத் தாண்டியபிறகு பெரும்பான்மையும் நடமாட்டம் உணவு உறக்கம் முதலியன இல்லாதவர்களாகவும் ஆனால் உடலில் உயிர்மட்டும்சஞ்சரிக்கும் இயல்புடையவர்களாகவும், உணவு கொள்ளாமையின் மிகச்சிறுத்தும் இருந்தனர். இத்தகையவர்களைப் பெரிய பானையொன்றில் வைத்து உள்ளே சிறிது நீர் உணவு முதலியவைகளையும் வைத்து உயிருடனேயே சமாதி வைத்து விடுவர். அத்தகையோர் அடக்கஞ் செய்யப்பட்ட பானைகள் முதுமக்கட்டாழி எனவும் முதுமக்கட்சாடி எனவும் வழங்கப்பெற்றன. இத்தகைய பானைகள்இக்காலத்தில் சிலவிடங்களில் நிலத்திற்கு அடியில் இருந்து எடுக்கப்படுகின்றன.

முதுமலை வன்விலங்கு நிலையம் - முதுமலை என்பது தமிழ் நாட்டில் நீலகிரி மாவட்டத்தில் கூடலூர் வட்டத்தில் உதகமண்டலத்திற்கு நாற்பது கல் தொலைவில் இருக்கிறது. இந்த இடம் கடல் மட்டத்திற்குமேல் மூவாயிரம் அடி உயரத்தில் உள்ளது. இங்கு வனவிலங்குகள் வாழிடம்ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த இடம் கேரளம், மைசூர் மாநிலங்களின் எல்லையில் இருக்கிறது. இங்குப் பலவகையானவிலங்குகளும் இருக்கின்றன.

முதுமொழிக்காஞ்சி - இஃதோர் அறநூல். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று. இந்நூல் குறள்தாழிசைகளால் இயற்றப்பெற்றது. சிறந்த பத்து, அறிவுப்பத்து, பழியாப் பத்து, துவ்வாப்பத்து, அல்ல பத்து, இல்லைப்பத்து, பொய்ப் பத்து, எளியபத்து, நல்கூர்ந்த பத்து, தண்டாப்பத்து எனப் பத்துப் பிரிவுகளையுடையது. இதனை இயற்றியவர் கூடலூர் கிழார்.

முத்தரையர் - இவர் ஓர்சிற்றரசர். பல்லவ நாட்டிற்கும் பாண்டி நாட்டிற்கும் இடையில் அரசாண்டார். இவருடைய பெயர் முத்தரசர் எனவும் வழங்கும். இவர் ஆண்ட நாடுகள் இப்பொழுதுள்ள தஞ்சை திருச்சி மாவட்டப்பகுதிகளில் அடங்கியிருந்தன. இப்பெயருடையவர் பல்லவ அரசர்கட்குக்கீழடங்கியிருந்தனர்.

முத்தாலை-இவள் ஒரு தொட்டியப் பெண். சிறந்த கற்புடையவள். இவளுடைய உடன் பிறந்தார்கள் இவள் கற்பிழந்தனள் என்று தவறாகஎண்ணிஇவளைக் கொன்றுவிடமுடிவுசெய்தனர். இச்செய்தியை உணர்ந்த இவள் குயவன் ஒருவனை வேண்டி மட்

கலஞ்சுடுஞ் சூளையிற் புகுந்து வெந்து நீருகி முத்தாலம்மன் என்னும்பெயருடையவளானுள்.

**முத்துப்பேட்டை** - தஞ்சை மாவட்டத்தில் கடற்கரையை அடுத்துள்ள ஓர் ஊர். இங்கு முன்னுளில் முத்துக்குளிட்பவர்கள் மிகுதியாகக் குடியிருந்தபடியால் முத்துப்பேட்டை யென்னும் பெயரையடைந்தது.

**முத்துவிசயராமு** - கட்டபொம்மு நாய்க்கனுடைய பத்தாவதுவழி முறையில் தோன்றியவன். பல கலைகளினுஞ் சிறந்துவிளங்கிய இவன் பாஞ்சாலன் குறிச்சியை இருபத்தோராண்டுகள் அரசாட்சி செய்தான்.

**முத்தூர் அகத்தியர்** - இவர் சூரபன்மன் காலத்திற்கு முன்பு இருந்த செங்கோவின் காலத்தில் வாழ்ந்திருந்தவர். பெருவளநாட்டில் இருந்த பஃறுளியாற்றின் முதல் அணைக்கட்டின் வாய்க்காற் பாய்ச்சலையுடைய முத்தூர் என்னும்ஊரில் வாழ்ந்திருந்தார். சிறந்தபுலவர்களில் ஒருவர். மணிமலைத் தமிழ்ச் சங்கத்தில் சக்கரன் தலைமையில் தமிழாராய்ச்சி செய்தவர்.

**முத்தொள்ளாயிரம்** - மூன்று தொள்ளாயிரம் 2700 பாடல்களாகும். இவை சேர சோழ பாண்டியர்கள் ஒவ்வொருவருக்கும் தொள்ளாயிரம் பாடல்களாகும். ஆயினும் இப்பொழுதுள்ளவை 109 பாடல்களே. புறத்திரட்டு என்னும் நூலில் இவை தொகுக்கப் பெற்றுள்ளன. கிடைத்துள்ள வரையில் உரை எழுதப் பெற்று வெளிவந்துள்ளன.

**மும்முடிமன்னர்கள்** - சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தர்களும் மும்முடி மன்னர்கள் என்று கூறப்பெறுவார்கள்.

**முயலகன்** - தாருகவனத்து முனிவர்கள் சிவபிரானைக் கொல்ல வேண்டுமென்று எண்ணிக் கொடிய வேள்வியொன்று செய்தனர். அவ் வேள்வித் தீயில் பூதனுகிய இவன் தோன்றிச் சிவபிரானைக் கொல்லும் பொருட்டுக் கடுஞ் சினத்தோடு வந்தான். சிவபிரான் இவனுடைய முதுகில் அடிவைத் தூன்றி மிதித்து இவனுடையஇடுப்பையொடித் தார்.

**முரன்** - இவன் நரகாசுரனுடைய அமைச்சர்களில்ஒருவன்.இவன் ஆற்றல் மிகுந்தவனுகஇருந்தும் அறிவில் குறைந்தவனுக இருந்தான். பலருக்கும் அல்லல்களை நரகாசுரனைப்போலவேசெய்து கொண்டிருந்தான். கண்ணன் நரகாசுரனைக் கொன்றபொழுது இவனையுங் கொன்றுர். முரன் என்னும் இவனைக் கொன்றெழித்தபடியால் கண்ணனுகிய திருமாலுக்கு முராரி என்று ஒருபெயர் உண்டாகியது.

**முருகக்கடவுள்** - முருகு எனின் இளமை மணம் முதலியவைகளைக் குறிக்கும். சிவபிரானுடைய திருக்குமாரராகத் தோன்றிய முருகக் கடவுள் இளமைஅழகு நன்மணம்முதலியவைகளைப் பெற்றுள்ள படியால் இப்பெயர் அவருக்குக் காரணப்பெயராயிற்று.

**முருகநாதேசுவரர்** - திருமுருகன் பூண்டியில் எழுந்தருளியஇறைவனுடைய பெயர்.

இப்பதி தேவாரம் பெற்ற கொங்கு நாட்டுச் சிவப்பதிகளில் ஒன்று. சூரசம்மாரத் தின்பிறகு முருகக்கடவுள்வழிபட்ட பதிகளுள் ஒன்ருதலின் முருகன் பூண்டி என்னும்பெயர் உண்டாகியது. இப்பதியில் இறைவழிபாடு செய்பவர்

களுக்குப் பைத்தியம் தீவினை முதலியன விரைவில் நீங்கும் என்பர்.

**முருகம்மையார்** - இவ்வம்மையார் ஆறுபடை வீடுகளுள்முதன்மை பெற்றதாகிய திருப்பரங் குன்றத்திலேவெகுகாலத்துக்கு முன்னிருந்தவராவர். முரு கம்மையாரின் பெற்றோர்கள் வைசிய குலத்தினர். அறுமா முகப் பரமனிடத்திலே அள வற்றஅன்புடையவர்கள். அவர் கட்கு நெடுங்காலமாக மக்கட் பேறு உண்டாகவில்லை. தங் கட்கு மக்கட்பேறு உண்டாக வேண்டுமென்று அல்லும் பகலும் ஆறுமாமுகத்தண்ணலை அன்புடன் போற்றி வந்தனர். தங்கட்குப் பிறக்குங் குழந்தை ஆணாக இருந்தாலும் அல்லது பெண்ணாக இருந்தாலும் முரு கக் கடவுளுடைய திருப்பெய ரையே வைப்பதென்று உறுதி செய்து கொண்டிருந்தனர். ஒரு நாள் முருகன்முருகம்மையாரின் பெற்றோர்களது கனவில் தோன்றி,"உங்கட்கு இப்பிறப் பில் ஆண்பிள்ளைப் பேற்றுக் கான நல்வினையில்லை. உங்கட் கொரு பெண்மகவினை அளிப் போம்" என்றுகூறி மறைந் தருளினர். காலப்போக்கில் கனவின்படி பெண் குழந்தை யொன்று பிறந்தது. தாய் தந்தையர்கள்ஆணோபெண்ணோ நாம் ஒரு பிள்ளையைப் பெற்று விட்டோம் என்று உள்ளங் களித்தனர். அப்பெண் மக விற்கு முருகம்மை யென்று பெயரிட்டு நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்தனர்.

முருகப் பெருமானுடைய திருவருளாற்பிறந்தமுருகம்மை யார் முருகனிடத்திலே முறுகிய அன்புடையவராகத் திகழ்ந் தனர். எந்நேரமும் 'முருகா!, முருகா!!" என்று மொழியும் தன்மை அம்மையாரிடத்தில் அமைந்திருந்தது. "முருகா எனவோர் தரமோதடியார்முடி மேல் இருதாள் புனைவோனே" என்பது அருணகிரிநாதருடைய திருவாக்கு. அம்மையாருடைய தெய்வபக்தி நாளும் வளர்ந்து வந்தது. இந்த நிலையில் அம்மை யார் மணஞ் செய்தற்குரிய பருவத்தை யடைந்தார்

அம்மையாரின் தந்தையுந் தாயும் தம்மகளுக்குத் திரு மணஞ் செய்ய எண்ணினர். தகுதி வாய்ந்த மருமகனைத் தேடினர். அம்மையார் முருகனி டத்தில் முறுகிய அன்புடையவ ராக விளங்குதலைக்கண்டு அனை வரும் அஞ்சினர். தெய்வப் பித்தம் பிடித்துள்ள இப்பெண் குடும்ப வாழ்க்கைக்குத் தகுதி வாய்ந்ததாக இருக்குமா என்று எண்ணமிட்டனர். பலர் இப் பெண்ணை நம்முடைய பிள்ளைக்குக் கட்டக்கூடாது. கட்டினால் நம்முடைய பிள்ளைக் குந் தெய்வப் பித்தேறினாலும் ஏறும் என்று எண்ணியவர் களாய் மணஞ்செய்ய விருப்ப மில்லாதவர்களானார்கள்.

தனஞ்செயன் என்னும் இளைஞன் ஒருவன் தாய்தந்தை யர்களை இழந்தவனாக இருந் தான். அவன் முருகம்மையைத் திருமணஞ் செய்து கொள்ள முன் வந்தான். மற்றவர்கள் தனஞ்செயனைப் பார்த்து, "முருகம்மை முருகப்பித்துப் பிடித்தவள்.எப்பொழுதுபார்த் தாலும் 'முருகா முருகா' என்று முணுமுணுத்துக் கொண்டிருக் கிறாள். இந்தப்பித்து இன்னும் அதிகரிக்கவுங் கூடும். அவ்வாறு அதிகரித்து விட்டாற் பிறகு அவளோடு வாழ்க்கை நடத்து வது சரிப்படாமற் போகும். ஆகவே எல்லாவற்றையும் இப்

பொழுதே நன்றாக எண்ணிப் பார்த்து முடிவு செய்'' என்று முன்னறிவிப்புக் கொடுத்தனர். தனஞ்செயன் எதனையும் கேளாமல் முருகம்மையைத் திருமணஞ் செய்து கொள்ள உறுதி செய்தான். நன்னாள் ஒன்றில் திருமணம் இனிது நடைபெற்றது.

முருகம்மையும் தனஞ்செயனும் இல்வாழ்க்கையை இனிது நடத்திக் கொண்டிருந்தனர். முருகம்மையிடம், ''முருகா முருகா'' என்று கூறும் அந்த ஓர் உயரிய செய்கைதான் தனஞ்செயனுக்கு ஒரு குறையாகத் தெரிந்தது. ஆயினும் அவன் அதனை ஒரு பொருட்படுத்தவில்லை. அதனால் நமக்கென்னகுறை? அவள் முருகப் பெருமானுடைய திருவடியை எண்ணியவளாய், ''முருகா முருகா'' என்கிறாள். நல்லது தானே என்று முடிவு செய்திருந்தான்.

எக்காரணத்தாலோ தனஞ்செயனுடைய செல்வ நலங் குன்றியது. அவன் வெளி நாடுகட்குப்போய்ப் பொருள் தேட வேண்டும் என்று எண்ணினான். தன்னுடையஎண்ணத்தைத் தன்னுடைய மனைவிக்குத் தெரிவிக்காமலே கப்பலேறித் தொலை நாடுகட்குப் போய் விட்டான். முருகம்மை கணவனைக் காணாமல் வருந்திக்கொண்டிருந்தாள். ''முருகா! முருகா!!'' என்றுஓலமிடுவது மிகுதியாகி விட்டது. முருகம்மை இவ்வாறு கூறுவது தனஞ்செயனின் உறவினர்கட்குப் பிடிக்கவில்லை.அவர்கள் முருகம்மையின் மீது குற்றஞ் சுமத்துவதற்கு வழி தேடிக் கொண்டிருந்தார்கள்.

முருகம்மையின் செய்தி இவ்வாறாகத் தனஞ்சயன் வீட்டிற்குப்பக்கத்து வீட்டில் முருகன் என்னும் பெயருடைய முழுமகன் ஒருவன் இருந்தான். அவன் அறிவுடையவன் அல்லன். முருகம்மை அடிக்கடி ''முருகா முருகா'' என்று ஓலமிடுவதை அவன் தவறாக எண்ணிக் கொண்டான். தனஞ்செயன் செட்டியாருடைய மனைவி நம்மிடத்தில் காதல் கொண்டிருப்பாள் போல் தெரிகிறது. நம்முடைய பெயரைச் சொல்லிக் கூப்பிடுகிறாள்என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். தனஞ்செயனுடைய உறவினர்களோ முருகம்மை பக்கத்து வீட்டு முருகனிடம் காதல் கொண்டிருக்கிறாள். அடிக்கடி அவனையே எண்ணி உள்ளம் உருகுகிறாள் என்று கதைகட்டி விட்டுக் கொண்டிருந்தனர்.

இங்கிலையில் முருகம்மையினுடைய கணவனாகிய தனஞ்செயன் பொருள் தேடிக் கொண்டு விரைவாக ஊருக்குத் திரும்பி விட்டான். தனஞ்செயனுடைய உறவினர்கள் தனஞ்செயனிடம் இல்லாததும் பொல்லாததுமான பல பழிச் சொற்களைக்கூறித் தனஞ்செயனுடைய மனத்தை மாற்றித் திருப்பி விட வேண்டும் என்று முடிவு செய்து கொண்டிருந்தனர்.அவர்கள்தனஞ்செயனைப் பார்த்து, ''நீ சென்றது முதல் உன்னுடைய மனைவி உள்ளம் வேறுபட்டவளாகஇருக்கிறாள். பக்கத்து வீட்டு முருகனிடங் காதல்கொண்டிருப்பாள்போல் தெரிகிறது. எப்பொழுது பார்த்தாலும் அவனுடைய பெயரையே கூறிக் கொண்டிருக்கிறாள்.'' என்று கோளுரை புகன்றனர். தனஞ்செயன் தன்னுடையமனைவியின் தன்மையையும் ஒழுக்கங்களையும் அறியாதவனல்லன். ஆகவே அவன் அவர்களுடைய கோளுரையை

முதலில் ஒரு பொருளாக எண்ணவில்லை. கோளுரைப் பவர்களோ தங்களுடைய வேலையை நிறுத்திக் கொள்ள வில்லை. மேன்மேலும் உரைத்துக் கொண்டே இருந்தார்கள். கரைப்பார் கரைத்தால் கல்லுங் கரையும் அன்றோ?

தனஞ்செயனுடைய மனம் மாறுபட்டது. அவன் தன் னுடைய மனைவியைக் கண்டிக்க லானான். "இனி மேல் நீ முருகா முருகா என்று கூறக்கூடாது. அவ்வாறு கூறுவாயானால் எனக்கு மிகுந்த சினம் உண்டா கும். ஆகவே அவ்வாறு இயம்பு வதை இன்று முதல் நிறுத்திக் கொள்" என்று சொல்லிக் கண்டித்தான். முருகம்மையார் "அவ்வாறே செய்கிறேன் முருகா அவ்வாறே செய்கிறேன் முருகா" என்று கூறினர். அம்மையார் தம்மையும் மறந்து உரைத்தலைத் தனஞ்செயன் அறிந்து கொள்ளவில்லை.

மேன்மேலும் முருகா முருகா என்று கூறுதலைக் கண்ட அவன் விரைந்து உள்ளே சென்றான். கையில் அகப்பட்ட கத்தி யொன்றைத் தூக்கிக் கொண்டு ஓடிவந்தான். முருகம்மை யினுடைய கை ஒன்றை ஓங்கி வெட்டினான். வெட்டப் பட்ட கைகீழே விழுந்தது. முருகம்மை யார், "முருகா முருகா" என்று கதறினர். தனஞ்செயன் முரு கம்மையைப் பார்த்து, "உன் னுடைய முருகன் வந்து அருள் செய்யட்டும் பார்க்கலாம்" என்று சொன்னான்.

முருகன் மறு கணத்தில் மயிலின் மீது காட்சி கொடுத் தான். கதறிக்கொண்டு நிற்கும் அம்மையார்க்கு அருள் செய் தான். அம்மையாருடைய கை முன்னிருந்தவாறு வளர்ந்து விட்டது. அம்மையாரை மனைவி யாகப் பெற்ற பெருமையினால் தனஞ்செயனும் முருகக் கட வுளைக் கண்ணாற் கண்டான். நிலத்தின் மீது பன்முறை விழுந்து விழுந்துவணங்கினான். இப்புதுமையைக் கேள்வியுற்ற உறவினர்கள் விரைந்து தனஞ் செயன் வீட்டிற்கு வந்து கூடி னர். ஆனால் கோளர்களாகிய அவர்கட்கு முருகப் பெரு மானுடைய திருக்காட்சி கிடைக்கவில்லை. ஆனால் தனஞ் செயனுடைய வசவுரை கிடைத் தது. "தீவினையாளர்களே! ஒரு விதமான குற்றமுமற்ற என் மனைவி மீது கோளுரை சொன்னீர்களே. இப்பொழுது பாருங்கள். வெட்டி வீழ்த்தப் பட்ட அவளுடைய கை ஒட்டிக் கொண்டது. முருகப்பெருமான் அவளுக்குக் காட்சி கொடுத்த தோடுஎனக்குங்காட்சி கொடுத் தருளினார். பொல்லாதவர் களாகிய நீங்கள் யாரும் எனக்கு முன் நில்லாதீர்கள். இனிமேல் என்னிடம் நெருங்காதீர்கள். என்னிடம் வந்து இனிமேல் கோளுரை சொல்வீர்களாயின் உங்கட்குத் தக்கபடி அறிவு புகட்டுவேன்" என்று சொல்லி அச்சுறுத்தினான். உறவினர்கள் திகைத்து இஃதேது தொல்லை யாக முடிந்தது என்று எண்ணிக் கொண்டு அகன்றனர்.

அன்றுமுதல் தனஞ்செயனும் முருகக் கடவுளிடத்திலே பேரன்புடையவனானான். அவ னும் தன்னுடைய மனைவியைப் போல்முருகக்கடவுளிடத்திலே பேரன்பு கொண்டவனாய் எப் பொழுதும் "முருகா முருகா" என்று கூறத் தொடங்கினான். கணவன் மனைவி இருவருமே முருகனுடைய அடியவர்களா னார்கள். அதுமுதல் "முருகா முருகா" என்னும் ஒலி தனஞ் செயன்வீட்டில்அதிகமாயிற்று.

தனஞ்செயன் உலக விவகாரங்களில் அதிகமாக மனத்தைச் செலுத்தாமல் முருகக் கடவுளிடத்திலேயே உள்ளத்தைச் செலுத்தினான். இருவரும் முருகனிடத்தில் அன்பு செலுத்திக் கொண்டிருந்து இறுதியில் முருகனுடைய திருவடியை அடைந்தார்கள். முருகம்மையைப்பெற்றவர்களும் முருகம்மையை மகளாகப் பெற்ற நல்வினையினாலும் முருகக்கடவுளிடத்திலே மகள் அன்பு கொண்டிருந்து முருகக் கடவுளுடைய அருளைப் பெற்ற தனமையைக் கண்ணாரக் கண்டபடியினாலும் முருக பக்தியடைந்து உலகில் வாழ்ந்து பிறகு முருகக கடவுளுடைய திருவடியைப் பெற்றார்கள்.

**முல்லான்** - இவன் சோழவள நாட்டில் ஆமூர் என்னும் ஊரில் ஔவையார் காலத்தில் வாழ்ந்திருந்தான். இவன் பயிர்த் தொழிலை நன்கு பேணிப் பொருள் திரட்டி எல்லாருக்கும் உதவி புரிந்து சிறப்படைந்து விளங்கினான். ஔவையார் ஒரு நாள் இவனுடைய இல்லத்தை யடைந்தார். ஔவையாரை நன்குணர்ந்திருந்த இவன் பல நாள் தன்னுடைய இல்லில் தங்கச் செய்து மிகுந்த அன்போடு போற்றினான். மற்றவர்கள் ஒருநாள் இருநாள் ஆனவுடன் மாறுபட்டு விடுவதைப் போல் மாறுபட்டு விடவில்லை. இதனால் மனமகிழ்ச்சி யடைந்த ஔவையார். இம்முல்லானைப் புகழ்ந்து செய்யுள் ஒன்று பாடிச் சென்றார். அச்செய்யுள், "காலையிலொன்றாவர் கடும் பகலில் ஒன்றாவர், மாலையிலொன்றாவர் மனிதரெலாம் - சாலவே முல்லானைப் போல முகமுமகமும்மலர்ந்த, நல்லானைக் கண்டறியோம் நாம்" என்பது.

**முளசை வேலப்பன்**-கொங்குவள நாட்டில் முளசை என்னும் ஊரில் வேலப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் பெருஞ் செல்வனாக விளங்கியதோடு சிறந்த வள்ளலாகவுந் திகழ்ந்தான். ஒரு காலத்தில் பாண்டி நாட்டில் கொடிய பஞ்சம் பரவியது. அப்பொழுது பாண்டிய மன்னன் தன்னுடைய படையின் ஒரு பகுதியை முளசை வேலப்பனிடம் அனுப்பிப் பஞ்சம் நீங்கும் வரை உணவிட்டுக் காப்பாற்றுமாறு கேட்டுக் கொண்டான். வேலப்பனும் அவ்வாறே செய்தான். இதனால் மனமகிழ்ந்த பாண்டிய மன்னன் முளசை வேலப்பனுக்கு அன்னத்தியாகி என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கினான். இம்முளசை வேலப்பனாகிய அன்னத்தியாகியின் வழிமுறையினர் கொங்குவள நாட்டில் இன்றும் உள்ளார்கள்.

**முள்ளியாறு** - தஞ்சை மாவட்டத்தில் திருத்தருப்பூண்டி வட்டத்தில் ஓடும் ஒரு சிற்றாறு. இவ்வாறு காவிரியின் கிளை. இதற்கு முன்னாளில் அகத்திய நதி யென்றும் பெயர் வழங்கியது. முல்லைச் செடிகள் இவ்வாற்றின கரையில் முனனாளில் மிகுதியாக இருந்தபடியால் முல்லையாறு எனவும் பெயர் வழங்கியது. மன்னார்குடி என்னும் மன்னார்குடிக்கு அண்மையில் கோரையாற்றில் இருந்து பிரியும் இவ்வாறு திருமறைக்காட்டிற்கு அண்மையில் கடலிற் கலக்கிறது.

**முனிவர்கள்**-உலக வாழ்க்கையை முனிந்தவர்கள். (முனிதல்- சினத்தல், வெறுத்தல்) முனிவர்கள் என்று பெயர் பெற்றனர். ரிஷிகள் என்பவர்களும் இவர்களே, இவர்கள் "கனியேனும்

உதிர்சருகு செங்காயேனும் கந்த மூலங்களேனும் கனல் வாதைவந்தெய்தின் அள்ளிப் புசித்து நான் கண்மூடி மௌனியாகித் தனியேயிருப் பதற் கெண்ணினேன்' என்னும் தாயுமானவரின் திருவாக்கிற் கேற்ப அமைந்து நீர்நிலை வசதிகள் உள்ளதும் காய் கனிகள் கிழங்குகள் முதலியன உணவுக்குக் கிடைக்கக் கூடியது மான இடங்களில் இலைக்குடில் கள் அமைத்துக் கொண்டு தவம் புரிந்தனர். இவர்கள் தனித்துஞ் சிலர் சேர்ந்தும் அடுத்தடுத்தும் தங்கியிருந் தனர். இவர்கள் தீயவிலங்கு களையும் தம்முடைய தவச்சிறப் பால் கட்டுப்படுத்தினர். முதலில் தனிமையாகவே இருந் தவர்கள் பிறகு மனைவி பணி புரியத் தவஞ் செய்து கொண் டிருந்தனரென்றும் பெரும் பாலான முனிவர்கள் மக்கட் பேற்றையும் அடைந்திருந்தன ரென்றும் புராணச் செய்தி களால் விளங்குகிறது. இவர் களுடைய சேர்க்கை மக்கட் பேறு ஒன்றை மட்டும் நாடிய தாக இருந்ததேயன்றிக் காம வின்பத்தை நாடியதாக இருக்க வில்லை. இம்முனிவர்களுடைய மனைவியரும் இன்ப நாட்டம் இல்லாதவர்களாய் முனிவர் களின் பணிகளிலேயே கண் ணுங் கருத்துமாக இருந்தனர். அகலிகை, அருந்ததி, உலோ பாமுத்திரை, நளாயனி முதலி யோர் முனிவர்களுடைய மனைவியரே. சில அரசர்களும் தமது அரசாட்சியை மக்களிடம் தந்து தவஞ் செய்தனர். விசுவா மித்திரமுனிவர் முதலில் அரச ராக இருந்தவரே. நைமிசாரணி யம் என்னுங் காட்டில் முன்னா ளில்பல முனிவர்கள் தவஞ்செய் திருந்தனர். மனைவி மக்களோடு கூடியிருப்பினும் தவ வாழ்க் கையை மேற்கொண்டிருந்தவர் கள் முனிவர்களாகவே மதிக்கப் பட்டனர் என்பது இருபத் தேழு மக்களைப் பெற்ற குசேல ரையும் குசேல முனிவர் என வழங்குதலில் இருந்து உணர்ந்து கொள்ளலாம்.

**முனைப்பாடித் தலைவர்** - சுந்தர மூர்த்தியார் திருமுனைப்பாடி நாட்டில் தோன்றியவரும் அந் நாட்டார் அனைவரினும் தலை சிறந்து விளங்கியவருமாதலின் முனைப்பாடித் தலைவர் என்னும் காரணச் சிறப்புப் பெயரைப் பெற்றார்.

**முனையரையர்** - தமிழகத்தில் உள்ள திருமுனைப்பாடி என்னும் நாட்டின் அரசர். நரசிங்க முனையரையர் எனவும் வழங் கும். சுந்தரமூர்த்திநாயனாரை வளர்ப்புப் பிள்ளையாகப் பெற்று வளர்த்தவர்.

**மூகாசுரன்** - துரியோதனனிடம் நட்புக் கொண்டிருந்த ஓர் அசுரன். அருச்சுனன் தவஞ் செய்து கொண்டிருக்கையில் துரியோதனன் இவனை யழைத்து அருச்சுனனை வதைக்குமாறு அனுப்பினான். இவன் பன்றியுருக் கொண்டு அருச்சுனனிடஞ் சென்று தவத் திற்கு இடையூறு செய்தான். அப்பொழுதுசிவபிரான்அங்குப் போந்து அருச்சுனனோடு போரிட்டார். அப்பொழுது இவன் கொல்லப்பட்டான்.

**மூகாம்பிகை** - மைசூர் நாட்டில் தென் கன்னட மாவட்டத்தில் உள்ள கோல்லூரு என்னும் சிற்றூரில் எழுந்தருளியுள்ள அம்பிகையின் பெயர். இந்த அம்மனைப் போற்றினால் ஊமை களும் பேசும் ஆற்றலை அடைவ தாகக் கூறப்படுகிறது. இக் கோயிலில் ஐந்து உலோகங் களினால் செய்த மூகாம்பிகை யின் திருவுருவத்தை ஆதி

சங்கரரே அமைத்து வழி பட்டாராம். கோயிலுக்கு அண் மையில் குடசமலை என்னுஞ் சிறிய மலை இருக்கிறது. இதி லிருந்து சௌபர்ணிகா என்னும் திருத்தநீர் புறப்படுகிறது. இந்தத் திருத்த நீரில் 64 திருத்த நீர்கள் கலந்திருப்பதாகக் கூறப் படுகிறது. இதனில் நீராடுபவர் களுடைய பிணிகள் தீர்ந்து விடுகின்றனவாம்.

**மூக்கறுத்தான் போர்** - மதுரையை ஆண்ட திருமலை நாய்க்கர் முகமதியர்களோடு சேர்ந்து கொண்டு விசயநகரத்திற்குத் தீமைசெய்தார் என்று மைசூர் அரசரான நரசராசர் திருமலை நாய்க்கர் மீது போர் தொடுத் தார். அப்போரில் பிடிபட்ட எல்லாருடைய மூக்கையும் அறுத்து விடும்படி கட்டளை யிட்டார். இப்போர் "மூக்கறுத் தான் போர்" என்று பெயர் பெற்றது.

**மூதேவி** - தேவர்களும் அசுரர் களும் பாற்கடல் கடையும் போது பாற்கடலில் திரு மகளுக்கு முன் தோன்றியவள். ஆகவே இவளுக்கு மூதேவி என்று பெயர் உண்டாகியது. இவள் தேவர்களைப் பார்த்து, "நான் உங்களுக்கு எவ்வாறு உதவி செய்ய வேண்டும்?" என்று உசாவினாள். அதற்குத் தேவர்கள்; "எவ்வீட்டில் சண்டையும் அழுகையும் இருக்கின்றனவோ எங்கே பொய்யும் கடுஞ் சொல்லும் மலிந்திருக்குமோ இத்தகைய இடங்களில் நீ சென்று வாழ்ந் திருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர். மூதே வியும் தேவர்களின் வேண்டு கோளுக்கிணங்கி அவ்வாறே சென்று வாசஞ் செய்யலானாள்.

**மூவாதியார்** - பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்றாகிய ஐந்திணை எழுபதை இயற்றிய வர். இவரைப் பற்றிய வேறு செய்திகள் விளங்கவில்லை.

**மூலபலம்**-இஃது இராவணனுக்கு உரிமையாகஇருந்தபெரியபடை. மூந்நூறு வெள்ளம் என்னும் பெரிய அளவினையுடையது. நூறுகோடிப் படைத் தலைவர் களைத் தனக்குத் தலைமையாகக் கொண்டது இப்படை. இரா வணனுடைய முன்னோர்க ளாகிய மாலி சுமாலி முதலாயி னோர் காலந்தொடங்கி நீடித்து வந்தது. இப்படையினர் எப் பொழுதும் மன்னனிடம் ஒன்றாகத் திரண்டிருப்பவரல் லர். தத்தமக்குரிய இடங்களில் இயற்கையானவாழ்வை நடத்தி இருப்பவர். அரசனுடைய அறிக்கைகிடைத்ததும்விரைவில் ஒன்றாகத் திரள்வர். பழந்தமிழ் நாட்டு மன்னர்களும் இத்த கைய மூலபலப் படையை வைத் திருந்தனர்.

**மூலன் (1)**- இவனோர் அந்தணன். அகவை முதிர்ந்த பிறகு இளமையடைய வேண்டு மென்னும் அவா இவனுக் குண்டாயிற்று. தன்னுடைய மாணவன் ஒருவனை உட னழைத்துக் கொண்டு கஞ்ச மலைக்குச் சென்றான். இளமை தரும் மூலிகையை இருவருந் தேடினார்கள். ஒரு நாள் மூலன் மூலிகை தேடப் போய் விட்டான். மாணவன் சமையல் செய்து கொண்டிருந்தான். வெந்து கொண்டிருந்த உண வைப் பக்கத்தில் கிடந்த ஒரு கோலை யெடுத்துக் கிளறினான். உணவு கறுத்து விட்டது. இதனைக்கண்ட மாணவன் ஆசிரியன் வந்தாற் சினங் கொள்வானே என்று அஞ்சி னான். அவ்வுணவைத் தான் உண்டுவிட்டு வேறு உணவைச் சமைத்து வைத்தான். அவ்

வுணவை உண்டவுடன் மாணவனுக்கு இளமையுண்டாகி விட்டது. அகவை நாற்பதுக்கு மேல் ஆகியிருந்த அவன் இளைஞனாகி அடையாளந் தெரியாமல் மாறிப் போனான். ஆசிரியன் வந்து, "எவ்வாறு இளமை பெற்றாய்?" என்று கேட்டால் யாது மறுமொழி கூறுவது என்று அஞ்சினான். ஓரிடத்தில் மறைந்திருந்தான். ஆசிரியன் வந்து பார்த்து மாணவனைக் காணாமல் கூப்பிட்டான். மாணவன் மறைவிடத்திலிருந்து வெளியே வந்தான். ஆசிரியன் தன்னை யடையாளங் கண்டு கொள்ள முடியாமல் திகைப்பதைக் கண்டு நிகழ்ந்ததைக் கூறினான். உடனே ஆசிரியன் மாணவன் உண்ட உணவைக் கக்கச் சொல்லி அதனைத் தானெடுத்து உண்டான். இதனால் ஆசிரியனுக்கும் இளமையுண்டாகி விட்டது.

**மூலன் (2)**- இவன் ஓர் இடையன். திருவாவடு துறையினை யொட்டிய சாத்தனூர் என்னும் ஊரில் ஆநிரை மேய்த்துக் கொண்டிருந்தவன். மாடு மேய்க்கச் சென்ற விடத்தில் ஊழ்வினையினால் இவன் இறந்தான். திருக்கைலையிலிருந்து பொதியமலைக்குச் சென்ற சுந்தரநாதர் மூலன் மேய்த்த ஆக்களின் வருத்தத்தைப் போக்க அவனுடலிற் புகுந்து திருமூலராக எழுந்தார். சுந்தரநாதர் பரகாயப் பிரவேசஞ் செய்தல் முதலிய செயற்கருஞ் செயல்களினும் வல்லவராக இருந்தபடியால் அச்சித்தருக்கு இச்செயல் எளிய செயலாயிற்று.

**மூவன்** - முற்காலத்தில் கொங்கு வளநாட்டில் இருந்த ஒரு குறுநில மன்னன். இவனிடம் பெருஞ் செல்வம் இருந்த தாயினும் வள்ளல் தன்மை சிறிதும் இல்லாதபடியினால் இரந்தோர்க்கும் புலவர்கட்கும் யாதும் உதவி செய்யாமல் புலவர்களுடைய வசைக்கு ஆளானான். பலரும்இவனுடைய தன்மையை இகழ்ந்து பாடவே இவன் மிகுவிரைவில் தன்னுடைய செல்வத்தை யிழந்து வறியவனானான்.

**மூன்று திருமேனிகள்** - இராமாநுசர் உயிர் வாழ்ந்திருந்த காலத்திலேயே அவருடைய வடிவத்தை அழகிய சிற்ப வடிவங்களாகச் செய்வித்து அவ்வடிவங்களை அவரை ஆலிங்கனம் பண்ணச் செய்து கோவிலில் அமைத்திருக்கிறார்கள். அவ்வாறு அமைக்கப் பட்டவைகளில் மூன்று புகழ் பெற்றவை. இவ்வாறு சீரங்கத்தில் அமைக்கப்பட்டது தானான திருமேனி என்றும் மேல் கோட்டையில் அமைக்கப் பட்டது தான் உகந்த திருமேனி என்றும் திருப்பெரும் பூதூரில்அமைக்கப்பட்டதுதமர் உகந்த திருமேனி என்றுஞ் சொல்லப் பெறுகின்றன.

**மெய்கண்டார்** - தென்னார்க்காடு மாவட்டத்தில் திருப்பெண்ணாகடம் என்னும் ஊரில் வாழ்ந்த வேளாண் மரபைச் சேர்ந்த அச்சுதகளப்பாளர். தமக்கு மகப்பேறு இல்லாத குறையைத் தம் குலகுருவாகிய சகலாகம பண்டிதர் என்பவரிடம் விண்ணப்பஞ் செய்து கொண்டார். அவர் தேவாரத்தில் கயிறு சார்த்திப் பார்த்த பொழுது திருவெண்காடு என்னும் சுவேதவனத்திலுள்ள மூக்குளத்தில் முழுகுவோர் பிள்ளை வரம் பெறுவர் என்னும் பொருள்படும் சம்பந்தர் தேவாரப் பாடல் கிடைத்தது. அதன் மேல் அச்சுதகளப்பாளர் தம்

மனைவியாருடன் அங்குச் சென்று மூழ்கிச் சுவேதவனப் பெருமானை வழிபட்டு வந்தார். அதன் பயனாகப் பிறந்த ஆண் மகவுக்கு அவ்விறைவன் பெயரையே இட்டார். பிறகு குழந்தையின் தாய்மாமன் அதைத் தம்முடன் தமது திருவெண்ணெய் நல்லூருக்குக் கொண்டு போய் வளர்த்து வந்தார். மெய்யுணர்வு பெறுதற்கேற்ற தகுதி வாய்ந்திருந்த அக்குழந்தையைக் கண்ட பரஞ்சோதி முனிவர் என்பவர் அதற்குச் சைவசித்தாந்த உண்மைகளை உரைத்து மெய்கண்டான் என்னும் சிறப்புப் பெயர் தந்து நீங்கினார். அதன் பிறகு மெய்கண்டார் மெய்யறிவு கைவரப் பெற்றுச் சிவஞான போதம் என்னும் நூலை இயற்றினார்.

தம்மிடம் கல்வி கற்பதற்கு மெய்கண்டார் வராததைக் கண்ட சகலாகம பண்டிதர் மெய்கண்டாரிடஞ் சென்றபொழுது மெய்கண்டார் ஆணவத்தைப் பற்றி அறிவுரை நிகழ்த்திக் கொண்டிருந்தார், சகலாகம பண்டிதர் மெய்கண்டாரைப் பார்த்து, "ஆணவத்தின் உருவம் யாது?" என்று செருக்கோடு கேட்டார். மெய்கண்டார் சகலாகம பண்டிதரையே சுட்டிக் காட்டினார். உடனே பண்டிதர் மெய்யறிவு பெற்று மெய்கண்டாருடைய மாணவராயினார். மெய்கண்டார் அவருக்கு அருணந்தி என்று பெயர் கொடுத்தார். தம்முடைய சிவஞான போதம் என்னும் நூலுக்கு விரிவுரை எழுதுமாறு கட்டளையிட்டார். மெய்கண்டாருடைய மாணவர்கள் அருணந்தி உட்பட நாற்பத்தொன்பதின்மராவர். மெய்கண்டாருடைய காலம் பதின்மூன்றாம் நூற்றாண்டு என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. சிவஞானபோதம் சைவசித்தாந்த நூல்களில் முதன்மை வாய்ந்த நூலாகக் கருதப்படுகிறது.

**மேகவர்ணன்** - இவன் சமுத்திர குப்தனுடன் நட்புறவை மேற்கொண்டவன். புத்தரின் நினைவுக் குறியான பல் கலிங்க நாட்டிலிருந்து இவனால் பெறப்பட்டது.

**மேட்டுக்குப்பம்** - வடலூரையடுத்துள்ள ஒரு சிற்றூர். இதனைச் சித்திவளாகம் என்றுங் கூறுவர். இங்குள்ள ஒரு குடிசையில் இராமலிங்க அடிகளார் 1874ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 30ஆம் நாள் (தைப்பூச நாள்) திருக்காப்பிட்டுத் திருவுருவை மறைத்தார்.

**மேட்டுப்பாளையம்** - தமிழ் நாட்டில் கோயம்புத்தூர் மாவட்டத்தில் கோயம்புத்தூருக்கு வடக்கே பத்தொன்பது மைல் தொலைவில் இருக்கும் பட்டணம். நீலகிரிமலையின் அடிவாரத்தில் இருக்கிறது. கோயம்புத்தூருக்கும் உதகமண்டலத்திற்கும் இடையிலிருக்கும் ஒரு புகைவண்டி நிலையம். பட்டணத்தின் ஓரமாகப் பவானி ஆறு ஓடுகிறது. தொழில்வளஞ் சிறந்த ஊர்.

**மேட்டூர் அணை** - சேலத்திற்கு வடக்கே முப்பத்தைந்து கல் தொலைவில் உள்ள மேட்டூர் என்னுமிடத்தில் காவிரியின் குறுக்கே கட்டப்பட்டுள்ள அணைக்கு மேட்டூர் அணை என்று பெயர். இதனுடைய நீளம் ஐயாயிரத்து முந்நூறடி. உயரம் நடைவழிக்கு மேல் நூற்றெழுபத்தாறடி. இஃது உலகத்திலேயுள்ள மிகப்பெரிய அணைகளில் மூன்றாவதாகும். இதன் மதகிலுள்ள அடைப்புக் கதவுகளைத் திறக்கவும் மூடவும்

மின்சார ஆற்றலைப் பயன் படுத்துகிறார்கள். இந்த அணை 1928ஆம் ஆண்டில் தொடங்கி 1934ஆம் ஆண்டில் முடிவு பெற்றது. இதனைக் கட்டி முடிப்பதற்கு ஐந்து கோடி ரூபாய் செலவாகியது. இவ் வணையினால் காவிரியின் நீர் ஒரு பெரிய ஏரியில் தேக்கப்பட் டிருக்கிறது. இவ்வேரியின் பரப்பு அறுபது சதுர மைல். இதில் 93,500 மில்லியன் கன அடி தண்ணீர் தேங்கி நிற்கும். இதிலுள்ள நீர் திருச்சி மாவட் டம் தஞ்சை மாவட்டம் முதலிய விடங்கட்குப் பாய்கிறது. இவ்வணையினால் மூன்று லட்சம் ஏக்கர் அதிகப்படியான நிலங் கள் விளைச்சலுக் குரியவாயின.

**மேதாவி முனிவர்** - திருநறையூர்த் தலத்தில் இருந்து தவஞ்செய்த வர். திருமகளை அருமை மகளாகப் பெற்று வஞ்சுள வல்லி என்று பெயரிட்டு வளர்த்துத் திருமாலுக்குத் திரு மணஞ் செய்து கொடுத்தவர். திருநறையூர்என்பதுஇந்நாளில் நாச்சியார் கோவில் என்று வழங்குகின்றது.

**மேருமலை** - இது தங்கத்தினால் ஆனது ஆகவே பொன்மலை என வும் பெயர்பெறும்.இஃது இரத் தின முடிகளைக் கொண்டது. இது தட்டுப்போல் தட்டையும் வட்டமுமான நிலத்தின் மேற் பரப்பின் நடுவில் இருக்கிறது. இதைச் சுற்றிச் சம்புத்துவீப மும், அதைச் சுற்றி உப்புக் கடலும், அதைச் சுற்றி பிலட் சத்துவீபமும் அதைச் சுற்றிக் கருப்பஞ் சாற்றுக்கடலும் அதைச் சுற்றிக் குசம் முதலிய மற்றைத் துவீபங்களும் கட் கடலும் பிறகடல்களும் மாறி மாறி அமைந்திருக்கின்றன. மேருமலையைக் குறித்துப் புராணங்கள் பலவாறு கூறு கின்றன. சூரிய சந்திரர்கள் இம்மலையைச் சுற்றி வருவதா லேயே இராப்பகல்கள் உண் டாகின்றன என்றும் கூறப் பெறுகிறது.

**மேலைச்சிதம்பரம்** - இந்நாளில் பேரூர் திருப்பேரூர் எனவழங் கப்படும்ஊராகும். முன்னாளில் பெரிய ஊராக விளங்கியபடி யால் பேரூர் என்று பேர்பெற் றது என்பர். சுந்தரமூர்த்தி கட்குத் தில்லைக் கூத்தப்பிரான் தம்முடைய திருக்கூத்தை ஈண்டுக் காட்டிய படியால் இவ் வாறு பெயர் பெற்றதென்பர். மேலும் இவ்வூருக்கு ஆதிபுரி, பிறவாநெறி முதலிய வேறு பெயர்களும் உள வென்பர்.

**மேலைச்சேரி** - தென்னார்க்காடு மாவட்டத்தில் செஞ்சிக் கோட்டையை அடுத்து வடக் கில் உள்ள சிங்கவரத்தின்பகுதி யாக விளங்கியது இவ்வூர். இப் பெயர் சிம்மவிட்டுணு என்ற நரசிம்ம பல்லவனின் பெயரை யொட்டியே எழுந்தது.இதற்கு அறிகுறியாக இவ்வூர்மலையுச்சி யில் ஒரு பல்லவர் குடை கோயில் உள்ளது. பள்ளி கொண்டபெருமாளின் உருவம் உண்ணாழி கையில் கல்லில் செதுக்கப் பட்டுள்ளது. இக் குகைக் கோயிலைச் சுற்றியும் பிற்காலக் கட்டிடங்கள் எழுந் துள்ளன. கருவறையில் உள்ள கல்லிற் செதுக்கிய மூலவரும், இதையடுத்துத் தாயார் சந்நிதி யின் பின்னர் உள்ள பாறையிற் செதுக்கப்பட்ட அழகிய துர்க்கை சிற்பமும் மாமல்லன் காலத்திற்குப் பிறகு பரமேசுர வர்மன் காலத்தியவை என விளங்கும். இதை அரங்கநாதர் கோயில் என்று இக்காலத்தில் வழங்குகின்றனர்.

**மேருமந்தரபுராணம்** - தமிழிலே யுள்ள ஒருசைன நூல். வாமனு

சாரியர் என்பவர் இந்நூலை இயற்றினார். வைசயந்தன் முத்திச்சருக்கம்முதல் சிவிகாரச் சருக்கம் இறுதியாகப் பன்னிரண்டு சருக்கங்களையும் கசO௬ செய்யுட்களையும் உடையது. தீர்த்தங்கரரிற் பதின்மூன்றுமவரான விமலதீர்த்தங்கரருடைய கண. தரர்களாகிய மேருமந்தரர் என்னும் இருவருடைய வரலாற்றை விரித்துக் கூறுதல் பற்றி மேருமந்தரர் புராணம் என்னும் பெயரைப் பெற்றது.

**மைசூர்** - தென்னிந்தியாவில் தட்சண பீடபூமியில் மேற்குக்கரையோரத்தில் இருக்கும் நாடு. இந்நாடு முன்னாளில் எருமை நாடு என்று வழங்கப்பெற்றுவந்தது. அப்பெயர் பின்னாளில் மகிஷாசூர்எனவடமொழிப் பெயராக மாறியது. மகிஷம் என்னுஞ் சொல்லுக்கு எருமை என்பது பொருள். நாளடைவில் மகிஷாசூர் மைசூர் என்று மாறிவிட்டது. மைசூர் நாட்டுக்கு மேற்கில் அரபிக்கடலும் வடமேற்கில் மகராட்டிரமும் கிழக்கில் ஆந்திர நாடும் தென்கிழக்கில் தமிழ்நாடும், தென்மேற்கில் கேரளமும் நாட்டு எல்லைகளாக இருக்கின்றன. மேற்கில் மேற்குத் தொடர்ச்சி மலை இருக்கிறது. கிழக்குப் பகுதியில் பரந்த பள்ளத்தாக்குகளும் சமவெளிகளும் இருக்கின்றன. தெற்கெல்லையோரத்தில் நீலகிரி மலையின் சிறுபகுதிகள் உள்ளன. மலைகளின் சரிவுகளில் அடர்ந்த காடுகள் இருக்கின்றன. காடுகளில் யானைகள் முதலிய விலங்குகள் உள்ளன. வடபகுதியில் கிருட்டிணாஆறும் துங்கபத்திரையாறும் உள்ளன. தென்பகுதியில் காவிரியாறும் உள்ளது. கிழக்கில் வட பெண்ணையாறும் பாலாறும் உள்ளன. மைசூரையடுத்துள்ள கண்ணம்பாடி அணையும் அதையடுத்துள்ள பிருந்தாவனம் பூங்காவும்குறிப்பிடத்தக்கவை. மேலும் இந்நாட்டில் சீரங்கபட்டினம், சாமுண்டிமலை, நந்திதுர்க்கம், சோமநாதபுரம், பேலூர் முதலியனவும் இருக்கின்றன.

**மொகஞ்சதாரோ** - இந்த இடம் பாகிஸ்தானில் லார்க்கானா மாவட்டத்தில் லாகூர் கராச்சிப் புகைவண்டிப்பாதையில் உள்ள டோக்கிரி இரயில் நிலையத்தில் இருந்து ஏறக்குறையஏழுமைல் தொலைவில் உள்ளது. இந்த மொகஞ்சதாரோவை யொட்டி ஹரப்பா என்னும் நகரமும் உண்டு. இந்த இரண்டு நகரங்களும் மிகப்பரந்த ஒரு பெரிய சாம்ராச்சியத்தின் தலைநகரங்களாக இருந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர். இந்த இரண்டு நகரங்களிலும் பழங்காலச் சின்னங்கள் பல கண்டெடுக்கப் பட்டிருக்கின்றன.

**மொகலாயர்** - இவர்கள் இந்தியாவில் பேரரசை நிறுவி 16ஆம் நூற்றாண்டு முதல் 18ஆம் நூற்றாண்டு வரையில் அரசாண்ட இஸ்லாமியராவர். இவர்கள் புகழ்பெற்ற மங்கோலியத் தலைவரான செங்கிஸ்கானின் இரண்டாம் புதல்வரான சக்தாயி என்பவரின் பெயரால் வழங்கப்பட்ட துருக்கியப் பிரிவினரைச் சேர்ந்தவர்கள்.

**மொக்கணீசுரர்** - கொங்கு வள நாட்டில் மொக்கணீசுரம் என்னுமிடத்தில் முன்னாளில் மொக்கணியினால் தோன்றிய இறைவனுடைய பெயர். மொக்கணியினால் தோன்றிய விவரமாவது; கொங்கு வள நாட்டில் அந்நாளில் வாழ்ந்திருந்த உறவின் முறையினர்

இருவர் ஒரு காலத்தில் வழிப் பயணஞ் சென்றனர். ஒருவர் இறைவனிடத்தில் அன்பு கொண்டவர். மற்றவர் பொது வானவர். இவர்கள் இருவரும் வழிப் பயணத்தின் போது உண்ணும் பொருட்டு அந்நாள் வழக்கப்படி கட்டமுது கொண்டு சென்றனர். குடக் கோட்டூர் என்னும் இடத்தை அடைந்தபோது இருவருக்கும் பசி யுண்டாகியது. நீராடி உண்ணவிரும்பினர். இறைவழி பாடு செய்தே உண்ணும் வழக் கத்தை உடையவர் இறைவழி பாட்டிற் கென்செய்வதென்று உள்ளங் கவன்ருர். மற்றவர் ஒரு சூழ்ச்சியை உள்ளத்தே எண்ணியவராய் ஈண்டொரு சிவலிங்கம் உளது.அதனை நுமக் குக் காட்டுவேன். நீவிர் நீராடிக் கடன்களை முடித்து வருக என்ருர். அவர் நீராடி நாட்கடன்களைச்செய்து கொண் டிருக்கும் போது மற்றவர் தம் முடைய குதிரையின்கொள்ளுப் பையையெடுத்துஅதனில் மணலை நிறைத்து ஓரிடத்தில் நிலத்திற் பதித்து அதனைச் சிவலிங்கம் போற் செய்து பக்கத்திலிருந்த காட்டுப் பூக்களைப் பறித்து மாலையாகத் தொடுத்துச் சிவ லிங்கத்திற்குச் சார்த்தித் திரு நீற்றைக் குழைத்துப் பட்டை யாகப் பூசிச் சிவலிங்கம் போலவே செய்து முடித்தார். சிவ வழிபாடு செய்யும் அன் பரை அழைத்து வந்து தம் முடைய போலி லிங்கத்தை அவருக்குக் காட்டினுர். அவரும் மனங் குழைந்து தேவாரத் திரு வாசகப் பாக்களை யோதிப் போற்றி வழிபாட்டை முடித் தார். பிறகு இருவரும் உண் ணத் தொடங்கினுர்கள். போலிச் சிவலிங்கத்தை யுண் டாக்கிய அன்பர் மற்றவரைப் பார்த்து நகைத்தார். நீவிர் தொழுது வழிபட்ட சிவலிங்கம் மிகவும் உயர்ந்தது என்ருர். மற்றவர் என்னகாரணம் என்று உசாவ இவர் தாம் செய்த விளையாட்டு வேலையைக் கூறி ஞர். பிறகு அவரை அழைத் துக் கொண்டு போய்ப் பக்கத் தில் நிறுத்திக் கொண்டு கொள் ளுப் பையைத் தூக்கினுர். அது கொள்ளுப் பையாக இல்லை. மெய்யன்பர் வழிபட்டுப் போற் றியவாறு அஃது உண்மையான சிவலிங்கமாகவே விளங்கியது. அன்பர் அளவிலா உவகை கொண்டு இன்பக்கூத்தாடினுர். மற்றவரோ அச்சமும் அன்புங் கொண்டு தாமும் விழுந்து போற்றி வழிபட்டார். பிறகு அந்த இடத்தில் ஊரார்கள் அனைவரும் ஒன்று கூடித் திருக் கோயில் ஒன்றை அமைத்தனர். அந்த இடம் மொக்கணீசுவரம் என்று வழங்கப் பட்டதோடு இறைவன் பெயர் மொக்கணீசு வரர் என்றும் வழங்கியது. வெகுகாலம் வரையில் சிறப் போடு விளங்கிக் கொண்டிருந்த அச் சிவப்பதி பின்னுளில் அழி வடைந்தது. இந்நாளில் கோட் டூர்ப் பள்ளம் என்று ஒருபெயர் மட்டும் உள்ளது. இக் கோயி லில்இருந்தமூர்த்திகள்வேருெரு கோயிலிற் கொண்டு போய்ச் சேர்க்கப்பட்டனவாம். "மொக் கணி யருளிய முழுத்தழன் மேனி, சொக்கதாக் காட்டிய தொன்மையும்" என்பது திரு வாசகம்.

**மோகூர்** - இவ்வூர் குமரி முனைக்கு அண்மையில் இருந்தது. இவ் வூரில் அரசாட்சி செய்திருந்த வன் பழையன் மாறன்.

**மோசிகீரனுர்** - இவர் பாண்டி நாட்டில் இருந்தவர். பல கலை களையும் நன்கு கற்றுணர்ந்த வர். இவர் ஒரு சமயம் கொண் கானங் கிழான் என்னுங் குறு

நில மன்னனை நாடிச் சென்றார். அவன் கல்வி யருமை அறிந்தவனாக இருந்துஞ் செல்வச் செருக்குடையவனாக விளங்கினான். புலவர் தன்மீது பாடிய பாடல்களை மகிழ்ந்து கேட்டானாயினும் எத்தகைய உதவியுஞ் செய்யவில்லை. புலவர் அவன் மீது பாடிய பாடல் புறநானூற் றிற் சேர்க்கப் பட்டிருக்கிறது.

**மோதிலால் நேரு** - இவர் நம் மதிப்பிற் குரியவராகத் திகழ்ந்த இந்தியாவின் முதல் பிரதமர் பண்டிதநேருஅவர்களின் தந்தையார். ஆக்ராவில் 1861 இல்பிறந்தார். பத்து அகவை வரைபாரசீக மொழியும் அரபு மொழியும் பயின்று கான்பூரிலும் அலகாபாத்திலும் ஆங்கிலம் பயின்று, உயர்நீதிமன்ற வக்கீல் தேர்வில் முதலாவதாகத் தேறித் தங்கப் பதக்கம் பெற்றுக் கான்பூர்மாவட்டத்தில் வழக்கறிஞராகத் திகழ்ந்து; 1909 ஆம் ஆண்டு அகிலஇந்தியக்காங்கிரஸ்கமிட்டி உறுப்பினராகி 1919 டிசம்பரில் அமிருதசரஸ் காங்கிரஸ் பேரவைத்தலைமை வகித்து, 1921இல் சிறைத் தண்டனையேற்று, 1923 இல் சட்டசபைஉறுப்பினராகி, சுயராஜ்யக் கட்சியை நிறுவி, 1927 இல் மகன் நேருவுடனும், மகள்விஜயலட்சுமியுடனும், மருமகள் கமலாவுடனும் சோவியத் ஆண்டுவிழாவுக்கு மாஸ்கோவுக்குச் சென்று, 1928 இல் கல்கத்தாக் காங்கிரஸின் தலைமை யேற்று, 1930 இல் அலகாபாத்திலுள்ள "ஆனந்த பவனம்" என்ற தமது பெரிய மாளிகைக்குச் "சுயராச்சிய பவனம்" என்ற பெயர் சூட்டி நாட்டிற்கு அளித்து, 1930 இல் காந்தியடிகளின் உப்புச் சத்தியாக்கிரகம் காரணமாகஜவஹர் சிறைசென்றதனால், காங்கிரஸ் பேரவையின் தலைவராகிச் சிறை புகுந்தார். பின்பு உடல் நலக் குறைவு ஏற்பட்டதால் அரசாங்கம் இவரை விடுதலை செய்தும்,பல மருத்துவங்களும்பயன் படாமல் போகவே,6-2-1921 இல் காலமானார்.

**மோரூர்** - சேலம் மாவட்டத்தில் திருச்செங்கோட்டிற்கு எட்டுக் கல் தொலைவில் உள்ள ஓர் ஊர். காங்கேயர் குடும்பம் என்னும் வழிவழிக் குடும்பம் இவ்வூரிலுண்டு.

**மோஸிகைமாரையர்** - இவர் விறகு விற்று அதனால் கிடைக்கும் பொருளைக் கொண்டு சிவனடியார்கட்கு உணவிடுந் திருத்தொண்டு செய்து கொண்டிருந்தார். இவருடைய நிலையை அறிந்த வசவ தேவர் இவருக்குத் தெரியாமல் பொன்னைப் பெட்டியில் மறைத்து மாரையர் வீட்டில் வைத்த விட்டு வந்தார். நடந்ததை மாரையர் அறிந்து கொண்டார். தாம் காட்டி விருந்து கொண்டுவந்த விறகின் மீது நீரைத் தெளித்தார். அவ் விறகு முழுவதும் பொன்னாயின. அவைகளைச் சிவனடியார்கட்கு வழங்கினார். பொன் பெற்ற அடியவர்கள் வசவரிடம் இச் செய்தியைக் கூறினர். வசவர் இவருடைய பெருமையை உணர்ந்தார். இவரிடம் வந்து தாம் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுமாறு வேண்டிக் கொண்டார்.

**மௌனகுரு** - இவர் திருமூலருடைய மரபில் வந்தவர். மௌனமாக இருந்தபடியால் மௌன குரு என்று காரணப் பெயர் உண்டாகியது. இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. திரிசிரபுரத்தில் இருந்த இவரை அங்கிருந்த தாயுமானவர் போற்றி வழிபட்டார். தமக்கு அருளுரை வழங்க வேண்டுமென்று அடிக்

கடி வேண்டிக் கொண்டார். மௌனகுருவோ "சும்மா இரு" என்றார். இதையே அருளுரையாகக் கொண்ட தாயுமானவர் தாமுஞ் சிலகாலம் மௌனமாக விருந்து மெய்யறிவு கைவரப் பெற்றார்.

**மௌன சுவாமிகள்** - பல மெய்ஞ் ஞானச் செல்வர்கள் தோன்றிய இடம் காலம் முதலியன அறியப் படாமற் போனது போல் இப் பெரியாரைப் பற்றிய செய்திகளும் அறியப் படாமற் போயின. இவர் தென்னாட்டி லிருந்து வந்தவரா வடநாட்டில் இருந்து வந்தவரா எந்நாட்டில் இருந்து வந்தவர் என்று எவராலும் உணர்ந்து கொள்ள முடியவில்லை. திருபுவனம் என்னும் ஊரில் முதன்முதலாகக் காணப் பட்டார்.

மெய்ஞ்ஞானச் செல்வராகிய இவருடைய தன்மையை முதலில் மக்கள் உணர்ந்து கொள்ளவில்லை. இவரை மட்டுமன்று. எந்த மெய்ஞ்ஞானச் செல்வரையுமே மக்கள்முதலில் உணர்ந்து கொள்வதில்லை; முதலில் பைத்தியக் காரர்களாகவே எண்ணுகின்றனர். காலப் போக்கில் தான் அவர்களுடைய பெருமையை உணர்ந்து பாராட்டத் தொடங்குகின்றனர். இப் பெரியார் ஊண் உறக்கம் முதலியவைகளைத் துறந்தவராகவும் ஆடையற்றவராகவும் விளங்கினார். குளிர் வெப்பம் முதலியவைகளை இவருடைய உடல் தாங்கிக் கொள்ளும்படியான ஆற்றலைப் பெற்றிருந்தது. இவர் பலநாள் மண்ணை உணவாகக் கொண்டிருந்தார். பார்த்தவர்கள் இவர் எவ்வாறு உயிர் வாழ்கிறார் என்று மிகுந்த வியப்படைந்தார்கள். சிலர் இவருக்கு உணவினைக் கொடுத்து உண்ணச் செய்தார்கள். சிலநாள் ஊரில் இராமல் காடு கரை முதலிய விடங்களிற் சுற்றித் திரிந்தார். மேற்படி அடிகளார் வாய்திறந்து தம்முடைய ஊரையோ பெயரையோ கூறியவரல்லர். இவர் வாய் பேசாதிருத்தலைக் கண்ட அன்பர்கள் இவருக்கு மௌன சுவாமிகள் என்று பெயர் சூட்டினர். கும்பகோணத்து அன்பர்கள் சிலர் இவரைக் கும்பகோணத்திற்கு அழைத்துக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டுமென்று எண்ணினர். திருபுவனத்து அன்பர்களோ தம் மூர்க்கு வந்து தங்கிய பெரியாரை வெளியூருக்கு அனுப்பிவிட விரும்பவில்லை. ஆனல் அன்றிரவில் திருபுவனத்தார்களுடைய கனவிற் சிவபெருமான் தோன்றி "இந்த மௌன சுவாமிகளை இங்கு வைத்துக் கொண்டிருக்க வேண்டாம். கும்பகோணத்துக்கு அனுப்பி விடுங்கள்" என்று கட்டளையிட்டருளினர். மறுநாள் திருபுவனத்தார் கும்பகோணத்தார்களிடம் இறைவன் கட்டளையைத் தெரிவித்துச்சுவாமிகளைக் கும்பகோணத்திற்கு அழைத்துக் கொண்டு போகலாம் என்று கூறினர். கும்பகோணத்தார்கள் மௌனசுவாமிகளைப் பல்லக்கிலே அமரச் செய்து ஒலிக் கருவிகள் முழங்கக் கும்பகோணத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றனர்.

கும்பகோணம் பெரிய நகரமாகையால் பல அன்பர்கள் சுவாமிகளிடம் வந்து வணங்கிப் போற்றினர். மெய்ஞ்ஞானியின் திருமுன்பு ஆகக் கூடாத செயல் யாதுமில்லை. நோய் பிடித்தவர்களும் பேய் பிடித்தவர்களும் அடிகளை வணங்கி நலம் பெற்றனர். பிள்ளைப் பேறில்லாதவர்கள்

அடிகளைப் போற்றிய பலனால் நல்ல மக்கட் பேற்றை யடைந்தார்கள். சுவாமிகளுடைய மிச்சில் உணவை உண்டவர்கள் எண்ணியவைகளை யெல்லாம் எண்ணியாங் கடைந்தனர். சுவாமிகட்கு முன் சாதி வேறுபாடு, சமய வேறுபாடு முதலியன இல்லாமல் எல்லோரும் நெருங்கித் தொழுது பலன் பெற்றார்கள்.

அந்நாளில் அருணசலசுவாமி என்னும் பெயருடைய மெய்ஞ்ஞானி ஒருவர் திருவண்ணமலையில் இருந்தார். அவர் மௌன சுவாமிகளைப் போலவே ஆடையற்றவராக இருந்தார். அவர் மௌன சுவாமிகளின் பெருமையைக் கேள்விப் பட்டார். ''தன்னினம் தன்னைச் சேரும்'' என்பது முதுமொழியன்றோ? அவர் அருணையைவிட்டுப் புறப்பட்டுக் குடந்தைக்கு வந்து மௌன சுவாமிகளின் அணுக்கத் தொண்டராக இருந்தார். அவர் ஒரு நாள் தெருவிலே சென்றார். அவரைக் கண்ட ஊர் காவலர்கள் (போலீஸ் காரர்கள்) இப்பித்தன் இவ்வாறு ஆடையற்றவனகத் தெருவில் வருகின்றனனே! இவனைக் காணும் பெண்கள் நாண மடைந்து ஒதுங்குவரே. இவனை உள்ளே தள்ளி அடைத்து வைக்க வேண்டும் என்று எண்ணினர். பிடித்துக் கொண்டு போய் அடைத்து வைந்திருந்து பிறகு தஞ்சையில் உள்ள நடுவர் முன்பு கொண்டு போய் நிறுத்தி, ''இப்பித்தன் ஆடையில்லாது தெருவில் திரிகின்றனன். இவனைக் காணும் பெண்கள் மிகுந்த வெட்கத்தையும் அச்சத்தையும் அடைகின்றார்கள். இவனை வெளியே விட்டு வைத்திருத்தல் கூடாது'' என்று கூறினர். அந் நடுவர் நல்லறிவு படைத்தவர். மெய்ஞ்ஞானிகளின் இயல்பை உணர்ந்து கொள்ளக் கூடியவர். அவர் அருணசல சுவாமிகளைக் கண்டதும் இவர் ஒரு மெய்ஞ்ஞானச் செல்வர் என்று எளிதாக உணர்ந்துகொண்டார். ஆகவே அவர் நடுநடுங்கி ஊர் காவலரைப் பார்த்து, ''இத்துறவிக்கு ஏன் இவ்வாறு தீமை செய்தீர்கள்? இஃது ஒழுங்கான காரியமன்று. நீங்கள் ஞானிகளையும் அஞ்ஞானிகளையும் உணர்ந்து கொள்ளக்கூடிய ஆற்றலமையப் பெற்றவர்களல்லர். இவர் உங்கள் மீது சினங் கொள்வாராயின் நீங்கள் அடியோடு அழிந் தொழியும் படியாக நேரிடலாம். நீங்களிவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு விட்டு விடுங்கள்'' என்று அறிவுரை கூறினர். இதனைக் கேட்டதும் அவர்கள் அஞ்சிச் சுவாமிகளைப் பணிந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அனுப்பி விட்டனர். அப்பெரியார் திருவை யாற்றுக்குப் போய்க் காவிரியில் முழுகி மிதந்து கும்பகோணத்தை யடைந்து கரை யேறினர்.

மௌன சுவாமிகளின் புகழ் ஈழ நாட்டிலும் பரவி இருந்தது. யாழ்ப்பாணத்தில் இருந்த ஒருவர் குடந்தையை அடைந்து மௌன சுவாமிகளைப் பணிந்து பலவகையான தொண்டுகளைச் செய்துகொண்டிருந்தார். அவருக்குக் கல்வியறிவு முதலியன சிறந்தோங்கியது. அவர் புலமைத் திறம் அடைந்து புகழ் பெற்றார்.

கோட்டாறு என்னும் ஊரில் தோன்றிய அண்ணமலை, சல்லாக் குளம் என்னும் ஊரில் தோன்றிய சொக்கையர் முதலியோருஞ் சுவாமிகட்குப் பணி

புரிந்து பெரும் பயன் பெற்றனர்.

வேங்கடாசலப் படையாச்சி என்பவர் மருத்துவ நூலிலே தேர்ச்சி பெற்றவர். இவர் மௌன சுவாமிகளுடைய பெருமையை உணர்ந்து மடத்திற்கு வந்து அடிகளுக்குப் பணி புரிந்து கொண்டிருந்தார். மருந்து செய்தல் முதலியவைகளையும் மடத்திலேயே செய்தார். ஒருநாள் மருந்து செய்யும்பொருட்டு நேர்வாளத்தை யெடுத்தவர் ஒரு மாடத்திலே எல்லோருங் காணும் படியான இடத்திலே வைத்து விட்டுத் தம்முடைய வீட்டிற்குப் போய் விட்டார். எதையுந் தாமாகவே எடுத்து வாயிற் போட்டுக் கொள்ளாத இயல்பினை யுடைய மௌன சுவாமிகள் எதனை எண்ணியோ மாடத்திலிருந்த நேர்வாளத்தை எடுத்து உண்டு விட்டார். நேர்வாளம் என்பது ஒரு கொடிய நஞ்சு. மருந்துகளிற் சிறிது சிறிது சேர்க்கப் பயன்படுவது. இதனை யாரேனும் அதிகமாக உண்டு விட்டால் அவர்கள் பேதியும் வாந்தியுங் கண்டு உடனே மாண்டொழிவது திண்ணம். சுவாமிகள் நேர்வாளத்தை யெடுத்து உண்டு விட்டதைக் கண்டு மடத்திலிருந்தோர் திடுக்கிட்டனர். உடனே வேங்கடாசலப் படையாச்சிக்குச் செய்தியைத் தெரியப் படுத்தினர். அவர் விரைந்து மடத்திற்கு வந்தார். "அந்தோ இந்தச் சுவாமிகள் விரைவாகச் சிவலோகம் போய் விடுவாரே. உலகினர் அனைவரும் என்னை வைவார்களே. மூடனாகியநான் நேர்வாளத்தை வெளியிலே வைத்து விட்டுச் சென்றேனே! இதற்கு யான்என் செய்வேன்?" என்றுபுலம்பினார்.

செய்தியை உணர்ந்த எல்லோரும் மடத்திற்கு ஓடி வந்தார்கள். மருத்துவரைப் பார்த்து, "அடா கொடியோனே! நல்லவனைப் போல் வெளிக்குக் காணப் பட்டாயே! நஞ்சைக் கொடுத்துச் சுவாமிகளைக் கொன்று விட்டாயே," என்றுகூறிப் பலவாறு வைதார்கள். ஆனால் சுவாமிகளிடத்திலே எத்தகைய மாறுபாடுங் காணப்படவில்லை. எப்பொழுதும் போலவே இருந்தார். நஞ்சு சிவபெருமானுக்கு எத்தகைய தீங்கையுஞ் செய்யாததைப்போல் நேர்வாளம் சுவாமிகட்கு எத்தகைய கொடுமையையுஞ்செய்யவில்லை. இதனைப்பார்த்தோர், நம்முடைய சுவாமிகள் சிவபெருமானைப் போல் பெருமையிற் சிறந்தவ ராயினரே. இவரை நேர்வாளங் கொல்லுமா? மெய்ஞ் ஞானிக்கு நஞ்சும் அமுதாகும் என்பதை அறியாமற் போனோமே என்று கலக்கந் தீர்ந்தார்கள்.

மெய்ஞ் ஞானச்செல்வராகிய சுவாமிகளுடைய பெருமையை அறியாத முகமதியர்கள் சிலர் இவர் ஆடையணிந்து கொள்ளாமல் இருக்கிறாரே. இவர் உண்மையான ஞானியாக இருந்தால் இவருக்கு வலி முதலிய யாதுந் தெரியாதிருத்தல் வேண்டும் என்று பேசிக் கொண்டு சமயம் பார்த்துச் சுவாமிகளுடைய குறியிலே ஊசியைச் செருகி விட்டார்கள். சுவாமிகளோ எப்போதும் போல் இருந்தாரேயல்லாமல் அலறித் துடித்துக் கீழே விழுந்து புலம்பவில்லை. ஞானிகள் இன்ப துன்பங்களை ஒரே நோக்காக நோக்குபவர்கள். அவ்வாறாக இதனை எவ்வாறு பொருட்படுத்துவர்? ஆனால் மெய்ஞ் ஞானியிடம் இந்த ஆராய்ச்சியைச் செய்தவர்கள் மிகு விரைவில் மாண்டொழிந்தார்கள்.

வேறுசிலர் சுவாமிகள் பெண்ணாசையை அடியோடு ஒழித்து விட்டாரா என்று அறிந்து கொள்ள விரும்பினார்கள். சில தாசிகளை யழைத்து, "நீங்கள் மௌன சுவாமிகளிடம்போய்ச் சுவாமிகளை மயக்குங்கள் அவர் உண்மையான பெரியவரா என்பதைத் தெரிந்து கொண்டு வாருங்கள்" என்று சொல்லி யனுப்பினர். அவர்களும் அதனைக் கேட்டுச் சுவாமிகளிடம் வந்து பலவிதமான குறும்புகளைச் செய்து பார்த்தார்கள். சுவாமிகள் எப்பொழுதும் போலவே இருந்தார். ஆனால் தாசியை அனுப்பி ஆராய்ந்து பார்க்கச் சொன்னவர்களுக்கும் ஆராய்ந்து பார்த்த தாசிகட்கும் கைம்மேற் பலன்கிடைத்து விட்டது. அவர்கள் நோயடைந்து சில காலத்தில் மாண்டொழிந்தார்கள். "எரியாற் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார், பெரியார்ப் பிழைத் தொழுகுவார்" என்னுந் தேவர் குறளின் மெய்ம்மொழி பொய்ம்மொழி யாகுமோ?

மௌன சுவாமிகளுடைய புகழ் இந்நாட்டில் மட்டுமன்றி வெளி நாட்டிலும் பரவி இருந்தது. அமெரிக்கா, ஐரோப்பா. ஆஸ்திரேலியா முதலிய நாட்டு அறிஞர்கள் பலர் சுவாமிகளுடைய புகழைக் கேட்டு இங்கு வந்து சுவாமிகளை வணங்கிச்சென்றார்கள். சுவாமி விவேகாநந்தரும் தென்னிந்தியாவுக்கு வந்த போது கும்பகோணத்தை யடைந்து சுவாமிகளைப் போற்றினார். ஆறுகாட்டில் இருந்த பிரம சமாசத்தவரான அருண்டேலும் பிறரும் கும்பகோணம் வந்து மௌன சுவாமிகளைப் பார்த்தார்கள்.

இவ்வாறு புகழ் பெற்று விளங்கிய சுவாமிகள் 1899 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 22 ஆந் தேதிக்குச் சரியான விகாரி யாண்டு சித்திரைத் திங்கள் பதினொன்றும் நாள் சனிக்கிழமை உத்திர நட்சத்திரத்திலே வீடு பேற்றை யடைந்தார்.

**யசோதரகாவியம்** - சங்ககாலத்துச் சிறுநூல்களில் ஒன்று. இஃது ஐந்து சருக்கங்களையும் முந்நூற்றிருபது செய்யுட்களையும் உடையது; சைனமுனிவர்களில் ஒருவரால் இயற்றப்பெற்றது.

**யசோதரன்** - ஔதய நாட்டில் இராசமாபுரம் என்றபட்டணத்தில் மாரிதத்தன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் வசந்த காலத்திலே சோலைக்குச் சென்றான், அப்பொழுது நகரமக்கள். "இக்காலத்தில் தேவியைப் பூசை செய்ய வேண்டும். இல்லாவிட்டால்நமக்குத்தீங்கு வரும்" என்றனர். இதனைக் கேட்டஅரசன் தேவியினுடைய திருமுன்பு சென்று எம்முடைய துன்பத்தை நீக்குக என்று வேண்டிக்கொண்டான். தேவிக்குப் பலியிடும்பொருட்டு மயில், கோழி, பன்றி, ஆடு, எருமை முதலியவைகளைக் கொண்டு வரச் செய்தான். சண்டகருமன் என்னும் தன்னுடைய காரியக்காரனைப் பார்த்து மக்களில் ஆண்பெண் இரண்டைக் கொண்டு வருக என்று சொன்னான்.

சண்டகருமன் மக்களிரட்டையைக்கொண்டு வருவதற்கு நகரத்திற்குச்சென்றான். ஓரிடத்தில் சுதத்தாசாரி என்பவர் மாதவத்தோர் சூழவிருந்தார். அவரிடத்தில் அபயருசி அபயமதி என்னும் பெயருடையவர் இருவர் அறங்கேட்டிருந்தனர். அவர்கள் பசிக் கொடுமையை நீக்கும் பொருட்டு நகரத்துக்

குள் வந்து கொண்டிருந்தனர். இவ்வாறு வருகின்றவர்களைச் சண்டகருமன் கண்டான். அரசனுடைய விருப்பப்படி பலியிடுவதற்கு இவர்கள் தகுதியானவர்கள் என்று முடிவு செய்து இவர்களைப் பலியிடுவதற்குப் பிடித்துக்கொண்டு சென்றான். அபயருசியின் தங்கையாகிய அபயமதி கலங்கினாள். அபயருசி யாக்கைநிலையாமை, ஊழ்வலி முதலியவைகளைத் தன்னுடையதங்கைக்குக் கூறினான். தங்கையும் மனந் தேறினாள். சண்டகருமன் இவர்களைக் கொண்டுபோய் அரசன்முன்பு விட்டான். மாரிதத்தமன்னன் இவர்களைக் காளிதேவிக்குப்பலியிடும்பொருட்டு வாளைக்கையிலெடுத்தான். பலிக்குவந்துள்ள இருவரும் மகிழ்ச்சியோடு நின்றனர். அரசன் நன்குவாழ வேண்டும் என்று வாழ்த்துக் கூறினர்.

அரசன் இருவரையும் பார்த்துப் பலியாகப் போகும் இச்சமயத்தில் நீங்கள் மகிழ்ச்சியோடிருப்பதற்குக் காரணம் யாது? என்று உசாவினான். இருவரும் அரசனைப் பார்த்து, 'வரவேண்டியதுவரும்பொழுது அஞ்சுவதால் பயன் ஒன்றும் இல்லை. நாங்கள் முன்பிறப்பில் செய்த தீவினையால் இவ்வாறு பலபிறப்புக்களையடைந்தோம். இனிமேல் யாது நிகழுமோ என்று மகிழ்ச்சியோடிருக்கிறோம்'' என்றனர்.

அரசன் அவர்கள் இருவரையும் பார்த்து ''உங்களுடைய முற்பிறவியைக்கூறுக'' என்று சொல்லி வாளைத் தரையிலே போட்டான். அவர்கள் இருவரும் அரசனைப் பார்த்து, ''அவந்திநாட்டிலேயுள்ள உஞ்சயனிபுரத்தில் அசோகன் என்னும் அரசன் சந்திரமதி என்னும் மனைவியோடு வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தான். அவனுக்கு யசோதரன் என்னும் ஒரு மகன் பிறந்தான். அந்த யசோதரன் பருவமடைந்த பிறகு அமுதமதி என்பவளை மணந்து யசோமதி என்னும் ஒரு மகனைப் பெற்றான். அசோகன் தனக்கு நரைதிரை வந்ததைக்கண்டு நாட்டைத் தன் மகனிடம் அளித்து விட்டுத் தான் தவஞ் செய்யப் போய் விட்டான்.

அரசனாகிய யசோதரன் சிற்றின்பத்தில் மூழ்கியிருந்தான். ஒருநாள் அவன் தன்னுடைய மனைவியோடு உறங்கிக்கொண்டிருந்தான். அப்பொழுது யானைக் கூடத்தில் இருந்து வீணையொலிகேட்டது. அரசனுடைய மனைவி அவ்வீணையை வாசித்தவன் மீது கடுங்காதல் கொண்டாள். மறுநாட் காலையில் தோழியை வீணை வாசித்தவனிடம் தூதனுப்பினாள். தோழியாகிய குணவதி வீணை வாசித்தவனைப் பார்த்தாள். அவனுடையநிலையைத்தெரிந்து கொண்டு அரசியிடம், வந்து ''நீ ஆசைகொண்டவன் உடல் எட்டுக் கோணலாகவும் மிகு விகாரமாகவும் உறுப்புக்குறைவோடும் இருக்கிறது. இதனால் அவனுடைய பெயர் அட்டபங்கன் என்று வழங்குகிறது. நீ அவன் மீது கொண்ட காதலை ஒழிப்பாயாக''என்றுகூறினாள்.

குணவதியாகிய தோழி கூறியதைக் கேட்ட அரசி அவன் எவ்வாறிருப்பினும் இருக்கட்டும். என்னுடைய மனம் அவனிடஞ் சென்று விட்டது. அதனை முடிக்க வேண்டியது உன்னுடைய கடமை என்று கூறி அவனோடு தொடர்பு கொண்டு தீய ஒழுக்கத்தை மேற்கொண்டிருந்தாள். அரசி

முன்போல்தன்னிடம் அன்பாக இராமையை அரசன் பலகுறிப்புக்களால் உணர்ந்து கொண்டான். ஒருநாள் பொய்யுறக்கங் கொண்டிருந்தான். அரசி அட்டபங்கனிடம் செல்லுகையில் அவளறியாது பின் தொடர்ந்தான். அட்டபங்கன் அமுதமதியாகிய அரசியைக் கண்டதும் அவள் காலந் தாழ்த்து வந்ததாகச் சினங் கொண்டான். அவளுடைய கூந்தலைப் பற்றியிழுத்து அலைத்து அடித்து வருத்தினன். பிறகு அரசியினுடையவேண்டுகோளுக்கிரங்கி அவளோடு களித்திருந்தான். அரசன் இவைகளையெல்லாம் தன்னுடைய கண்களால்கண்டான். இருவரையுங் கொலை செய்வதற்கு வாளை யெடுத்தான். பிறகு இவர்களைக் கொல்வது தக்கதன்று என்று வாளை உறையிலிட்டான். அவளுக்கு முன் படுக்கைக்குச்சென்று படுத்துக் கொண்டான். அரசன் தான் கண்டவைகளைக் கனவிலையாகத் தன்னுடைய தாயிடங் கூறினன்.

அரசனுடைய தாய் காளிக்குப் பலியிட்டு வழிபாடு செய்யின் தீமையொன்றும் உண்டாகாது என்று தன்மகனுகிய அரசனிடங் கூறினள். உயிர்க் கொலை செய்வதற்கு உடன் படாத அரசன் மாவால் கோழியொன்று செய்து அதனைக் காளிக்குப்பலியிட்டான். அஃது அரசன் முன் கூவிக் கொண்டு விழுந்தது. அரசன் அதனால் மிகுந்த வருத்தமடைந்தான். தான் துறவடைவதாகத் தாய்க்குத் தெரியப் படுத்தினன். இதனை அறிந்த அரசன் மனைவி தானுந் துறவடைவதாக மாயஞ் செய்தாள். அரசனுக்கும் அரசனுடைய தாய்க்கும் விருந்து நடத்துவதாகக் கூறி நஞ்சிட்டு இருவரையுங் கொன்ருள். தன்னுடைய மகனுக்கு முடி சூட்டினள். இவ்வினைவுகட்கெல்லாம் காரணம் பழைய தீவினையென்று அபயருசி மாரிதத்தனுக்கு அறிவித்து அந்த யசோதரனும் அவன் தாய் சந்திரமதியும் பலபிறவியடைந்த விதத்தைக் கூறத் தொடங்கினுள்.

முதலில் யசோதரன் விந்த மலையில் ஒருமயிலின் வயிற்றில் முட்டையாயிருக்கையில் ஒரு வேடனல் மயில் கொல்லப்பட்டது முதலிய பல செய்திகளைக் கூறினன். இவைகளைக்கேட்ட மாரிதத்தன் பலியிடுதலை நிறுத்தித்துறவியாகித்தவஞ் செய்யச் சென்ருன்.

**யசோதை** - கண்ணனை வளர்த்த தாய். இவள் ஒருநாள் கண்ணனை மடியில் வைத்துக் கொண்டு பாலூட்டுகையில் கண்ணன் கொட்டாவி விட்டான். அப்பொழுது கண்ணனுடைய வாயில் சகல உலகங்களையும் தன்னையுங் கண்டு மயங்கினள். மற்ருெரு நாள் கண்ணன் மண்ணுண்டதாக எண்ணி வாய்திறக்கச்சொன்ன பொழுது அவ்வாறே எல்லா உலகங்களையுந் தன்னையுங் கண்ணனுடைய வாயிற்கண்டாள்.

**யசோமதி அகத்தியர்** - ஆரியநாட்டில் அகத்தியன் என்னும் பெயரையுடைய அந்தணன் ஒருவன் இருந்தான். இவன் வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவன். இவ்வகத்தியன் கடல்கடந்து கம்போடியா நாட்டிற்குச்சென்ருன். அங்கே அப்பொழுது அந்நாட்டு அரசனக இருந்தயசோவர்மன்என்பவனுக்கு இவ்வந்தண அகத்தியன் நண்பனுனன். இவ்வகத்தியன் கல்வியிலும் ஒழுக்

கத்திலும் உருவிலும் அரசியல் அறிவிலுஞ் சிறந்து விளங்கினன். இதனால் யசோவர்மன் தன் மகளாகிய யசோமதியை இவ்வகத்தியனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். யசோமதிக்கும் அந்தண அகத்தியனுக்கும் நரேந்திரவர்மன் என்னும் ஆணும் நரேந்திர இலக்குமி என்னும் பெண்ணும் பிறந்தார்கள். யசோவர்மன் இறந்ததும் நரேந்திரவர்மன், "நரேந்திர ஆரியா" என்னும் சிறப்புப் பெயர் தாங்கி முடி சூடினன். இவ்வகத்தியன் மலாயா தீபகற்பத்திலுள்ள மலைய மலையில் இருப்பிடம் அமைத்துக் கொண்டு அங்குத் தங்கியிருந்ததாகவுந் தெரிகிறது.

**யஞ்ஞதத்தன்** - தசரத மன்னன் வேட்டைக்குச் சென்றிருந்த போது இவன் தன்னுடைய தாய்தந்தையரோடு காட்டில் பயணஞ் செய்து கொண்டிருந்தான். இவன் நீர் எடுக்கச் சென்றபோதுதான் தசரதன் புதர் மறைவில் இருந்து இவன் மீது அம்பெய்து சாபத்திற்கு இடந்தேடிக்கொண்டான்.

**யஞ்ஞவற்கலமுனிவர்**-தருமருக்குக் குதிரை வேள்வியை நடத்தியவர். இவருடைய மனைவியின் பெயர் மயித்திரி.

**யமகம்** - யமகமாவது பாடலுக்குரிய ஒவ்வோர் அடியின் முதலெழுத்துத்தொடங்கிப்பத்தெழுத்து ஈருக ஓர் அடிபோல் நான்கடியும் பாடப்பெறுவது. ஓர் அடிபோல் நான்கடியும் இருப்பினும் ஓரடியில் வந்த பொருள் மற்றோரடியில்வருதல் கூடாது. ஒவ்வோரடியிலும் பொருள் வேறுபட்டிருக்க வேண்டும்.

**யமன்** - கதிரவனுக்குச் சாயா தேவியிடம் பிறந்தவன். இவன் இறைவனுடைய ஆணையால் உயிர்களை அவர்கள் செய்த நல்வினை தீவினைகளுக் கேற்பக் காலமுடிவில் சுவர்க்க நிரயங்கட்குச் செலுத்துபவன். இவனுடைய பட்டணம் சையமனி. ஊர்தி எருமைக்கடா. படைக்கலங்கள் தண்டம், பாசம், குடாரம், சுரிகை என்பன. இவனுடைய தேவி சாமளை. தூதர்கள்ஔதும்பரன், சண்டாமிருகன், சம்பரன், சார்த்தூலன் முதலியோர். மார்க்கண்டேயர்க்காக இவன் சிவபிரானால் தண்டிக்கப்பட்டான்.

**யமுனை** - கதிரவனுக்குச் சுவாகா தேவியிடம் பிறந்தமகள். யமியெனவும் பெயர். யமனுடைய தங்கை. இஃதொரு புனிதநீர். இவளுக்கு மற்றொரு பெயர் காளிந்தி. இவளுக்கு ஆமை ஊர்தி. ஒருகையில்கருநெய்தல்; மற்றொருகையில் நிறைகுடம்.

**யயாதி** - (1) நகுடன் மக்களில் ஒருவன். தாயினுடையபெயர் பிரியம்வதை. தெய்வயானையைக் கிணற்றிலிருந்து தூக்கிச் சுக்கிரனுடைய சொற்படி அவளை மணந்தவன். இவன் விடபன்மன் மகளாகிய சன்மிட்டையைச் சேர்ந்து மூன்று மக்களைப் பெற்றான். தேவயானையினிடத்து அன்பில்லாமையை அறிந்தசுக்கிரனால் மூப்படையச் சாபம் பெற்றான். தேவயானையின் மக்கள் இருவரையுந்தன்மூப்பைப்பெற்றுக் கொண்டு அவர்களுடைய இளமையைத் தருமாறு கேட்டான். அவர்கள் மறுத்து விட்டனர். அவர்களை வேடர்களாகுமாறு சபித்தான். சன்மிட்டையின் மூத்த மகனாகிய பூரு இவனுடைய மூப்பைப் பெற்றுக் கொண்டு இளமை கொடுத்தான். எந்த உலகத்தையும் பார்ப்பதற்கு இவன் நான்முகனிடமிருந்து விமானம் பெற்

றிருந்தான். இவனுடைய அரசாட்சித் தலைநகர் காண்டவப் பிரத்தம்.

**யயாதி - (உ)** இவன் ஓர் அரசன். இவனுக்குச் சையாதி எனவும் பெயர் உண்டு. இவனுடைய மகள் சுகன்னி. இவள் புற்று மூடியிருந்த சௌநகரின் கண்ணைக்குத்திய படியால் அரசனுடைய படைகளுக்குக் கண் தெரியாமல் போயிற்று. பிறகு முனிவர்க்கு மகளைத்திருமணஞ் செய்து கொடுத்து உண்டாகிய குற்றத்தைப் போக்கிக்கொண்டான்.

**யவனம் -** தச்சுவேலையிற் சிறந்து விளங்கிய ஒருநாடு. இந்நாட்டினர் வேலையின் பொருட்டுப் பலவிடங்களினுஞ் சென்று தங்கி இடவாகு பெயராய் யவனர் எனப் பெயர் பெற்றனர். இவர்கட்குத் தனியாக ஒருமொழியும்அமைந்திருந்தது. அம்மொழி யவன மெனப்பட்டது.

**யாகசேனன் -** இவனுக்குத் துருபதன் என்றும் பெயருண்டு. இவனுடைய தந்தையின் பெயர் பிருஷதன். இவன் பாஞ்சால நாட்டுமன்னன். பிருஷத மன்னனும் பரத்துவாசமுனிவரும் நண்பர்கள். இதனால் துருபதனுக்கும் பரத்துவாசர் மகனாகிய துரோணருக்கும் இளம்பருவத்தில் நண்புண்டாகியது. பின்னாளில் துரோணர் அருச்சுனனைக் கொண்டு துருபதனைத் தோற்கடித்தார். அதனால் சினங்கொண்ட துருபதன் வேள்விசெய்து அருச்சுனனுக்காகத் துரோபதையைப் பெற்றான்.

**யாகசேனை -** இவள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த தேவசன்மா என்னும் அந்தணனுடைய மனைவி. இவர்கட்கு நெடுங்காலம் வரையினும் மக்கட்பேறின்மையால் கீரிப்பிள்ளையொன்றை வளர்க்கலாயினர். கீரிப்பிள்ளையை வளர்க்கத் தொடங்கியகாலபலனால் இவர்கட்குக் குழந்தையொன்று பிறந்தது. யாகசேனை குழந்தைக்குக் காவலாகக் கீரியை வைத்து விட்டுத் தான் தண்ணீர் எடுக்கச் சென்றாள். அப்பொழுது பாம்பு ஒன்று தொட்டிலிடம்வந்தது. அதனைக் கீரிகடித்துத் துண்டாக்கிற்று. பிறகு இரத்தந்தோய்ந்த வாயோடு பார்ப்பனியைக் காணவோடிற்று. அவள் இக்கீரி குழந்தையைக் கடித்து விட்டு இவ்வாறு வந்திருக்கிறதென்று மாறுபட எண்ணித் தண்ணீர்க்குடத்தை அக்கீரியின் தலைமீது போட்டு உடைத்துக் கொன்றுவிட்டு வீட்டிற்கோடினாள்; அங்கு நிகழ்ந்துள்ள நிகழ்ச்சியைப் பார்த்து ஆறாத் துயரங் கொண்டு உள்ளம் வருந்தினாள். இவளுடைய இக்கொடிய செயலையுணர்ந்த அந்தணன் இவளைத் துறந்து சென்றனன்.

**யாசோபயாசர் -** துருபதனாகிய பாஞ்சால மன்னன் திரௌபதியையும் திஷ்டத்தூய்மனையும் பெறுவதற்கு வேள்விநடத்திய முனிவர்.

**யாதவமன்னன் -** இவன் தொண்டைநாட்டில் நாராயணபுரத்தில் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். இவன் அரசாட்சிசெய்து கொண்டிருக்குங் காலத்தில் ஒருநாள் சிவபிரான் விடசங்கமத் திருவுருவங் கொண்டு தெருவில் வந்தார். இவ்வரசனுக்கு உண்கலன் அமைக்கும்பெண் இவருடைய வடிவத்தைப் பார்த்துத் தன்னுடைய இல்லத்திற்கு அழைத்துக்கொண்டுசென்றாள். உணவு முதலியனவளித்து அங்குவைத்

திருந்தாள். இதனால் அரசனுக்குச் செய்ய வேண்டிய வேலையை மறந்து விட்டாள். அரசன் சாப்பிடுமிடத்திற்குச் சென்றுபார்த்தான். உண்கலம் வைக்காதிருத்தலைக்கண்டு சினங்கொண்டான். ஏவலாளரையேவிப் பிடித்துக் கொண்டு வரச் செய்தான். அவள்கொண்டு வரப்பட்டதும் அவளுடைய கூந்தலைக் களைந்து விடுமாறுசெய்தான். அப்பெண் கூந்தலையிழந்து இல்லத்திற்குச் சென்றாள். விடசங்கமரிடம் நிகழ்ந்ததைக் கூறினாள். விடசங்கமர் தம்முடைய கையால் அவளுடைய கூந்தலைத் தடவினார். அவளுடைய கூந்தல் முன்போல் வளர்ந்து விட்டது. இவ்வாறுவளர்ந்த கூந்தலோடு அரசனுக்கு முன் சென்றாள். நிகழ்ந்ததைக்கூறினாள். அரசன் விடசங்கமரிடத்திற்குப் போய் அவரைப் பணிந்தான். அவருடைய கட்டளைப்படி திருக்காளத்திநாதருக்குப் பல திருப்பணிகள் செய்தான்.

**யாதவர்கள்** - இவர்கள் கண்ணனுடைய வழிமுறையில் தோன்றியவர்கள் என்று செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. நாசிக் முதல் தேவகிரி வரை அகன்று கிடந்த செவுணநாட்டைக் கைப்பற்றித் தமது அரசியலை அங்கு அமைத்துக் கொண்டனர். இவர்களில் சிறந்தவராக விளங்கியவர் சிங்கணர் என்பர்.

**யாதவன்** - கண்ணன். யதுமரபிற் பிறந்தபடியினால் கண்ணனுக்கு இப்பெயர் உண்டாகியது. துவாரகைக்கு அரசனாகவிருந்த படியால் துவரைக் கிறை எனவும் கூறுவர். கண்ணபிரானுக்கு உபமன்னிய மாமுனிவர் சிவதீக்கை செய்ததாகக் கூறுவர்.

**யாப்பியை** - இவள் சாலங்காயனுடைய தங்கை. யூகியால் மணஞ்செய்து கொள்ளப்பட்டவள்.

**யாழ்ப்பாணம்** - உக்கிரசிங்கன் என்னும் அரசனுடைய மகனாகிய நரசிங்கன் என்பவன் சிங்கை நகரில் இருந்து அரசாட்சி செய்து கொண்டிருந்த போது யாழ்பாடி என்னும் பாணகுலத்தான்ஒருவன்பரிசில் பெறும் பொருட்டு அரசனுடையஅவைக்களத்தையடைந்து யாழ்வாசித்து யாழ்பாடுதலில் தனக்குள்ள பேராற்றலைக்காட்டினான். அரசன் யாழிசையின் இன்பத்தில் ஈடுபட்டுத் தன் நாட்டிற்குத் தென்கோடியில் இருந்ததும் மணல் மேடாக விளங்கியதுமான ஒருசிற்றூரைப் பரிசிலாக வழங்கினான். யாழ்பாடினோன் அதனைமகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டான். தன்னூருக்குச் சென்று தன் குலத்தவர்களாகிய பாணர்கள் சிலரைக் கொண்டு வந்து மேட்டை ஒழுங்குசெய்து குடியேற்றினான். அவனும் அவன் குலத்தாருங் குடியேறிய இடம் யாழ்ப்பாணம் என்று பெயர் பெற்றது. இவ்வூர் கடற்கரையை ஒட்டியிருந்தபடியால் யாழ்ப்பாணப்பட்டினம் என்றும் பெயர் பெறலாயிற்று: பிறகு இப்பெயர் ஒரு பகுதி நாடுமுழுவதற்குமே உரியதாய் வழங்கலாயிற்று.

**யானைப்பாதை** - பழநி மலையின் உச்சிக்கு யானை செல்லுமாறு படிகளில்லாமல்சரிவாகஅமைக்கப்பட்ட பாதை. இப்பாதை சிறிது சுற்றுவழியாக இருப்பினும் இப்பாதையில் மலையேறிச் சென்றால் கால்வலி அதிகம் இராது.

**யானைமடு** - காளையார் கோவில் என வழங்கும் திருக்கானப்

பேர்ச் சிவப்பதியில் அமைந்துள்ள ஒரு பெரிய நீர்நிலை இப்பெயரோடு வழங்கப்பெறுகிறது. துர்வாசமுனிவருடைய வசவுரையினால் காட்டானையான இந்திரனுடைய ஐராவதம் இங்குப்பூசித்துவழிபாடாற்றிய போது ஏற்படுத்திய தடாகமாகையால் இவ்வாறு யானைமடு என்று பெயர் பெற்றது.

**யூகாதித்தன்** - கதிரவன் சிவபிரானை எண்ணித் தவஞ்செய்தான். சிவபிரானுடைய அருளால் பல கதிர்களைப் பெற்று மிகுதியாக ஒளிவிட்டான். தேவர்கள் கதிரவனுடைய வெப்பத்தைத் தாங்கமுடியாமல் சிவபிரானிடம் முறையிட்டனர். சிவபிரான் கதிரவனுடைய முதுகைத் தடவினார். அதனால் வெப்பங் குறைந்தது. கதிரவனுக்கு யூகாதித்தன் என்று ஒரு பெயர் உண்டாகியது.

**யூகி** - இவன் உதயணனுடைய அமைச்சர்களுள் முதன்மை வாய்ந்தவன். இவனுடைய குணங்கள்வியக்கத்தக்கனவாக அமைந்திருந்தன. வில்வித்தை முதலிய எல்லாக் கலைகளையும் உதயணனோடு பயின்று உடன் வளர்ந்தவன். உதயணனுக்கு உயிர்த்தோழன். இவன்உதயணனுக்குத்துன்பம் நேர்ந்தபொழுதெல்லாம் அதனை விரைந்து நீக்கினான். சிறையிலடைக்கப் பெற்ற உதயணன் அதிலிருந்து மீள்வதற்கும் அரசாட்சி பெறுவதற்குங் காரணமாக இருந்தான். உதயணனை வஞ்சகமாகப்பிரச்சோதனன்பிடித்தது பற்றி அவனுடைய மகளைக் களவாகக் கொண்டு போமாறு உதயணனுக்குக்கூறி அவ்வாறே செய்யச் செய்தவன். இவனுடைய பெயர் யூகந்தராயணன் எனவும் வழங்கியது.

**யூகிமுனி** - இவர் தேரையருடைய மாணவர்களில் ஒருவர். தம்முடைய மருத்துவத்திறமையை அகத்தியரிடங் காட்டிச் செல்வாக்குப் பெற எண்ணினார் அகத்தியருடைய இருப்பிடத்திற்குச்சென்று அவ்விடமிருந்த காக்கையொன்றுக்குத் தாம் செய்துவைத்திருந்தமருந்தாகிய வீரசுன்னத்தைக் கொடுத்தார். மருந்தையுண்ட கருங்காக்கை வெள்ளைக்காக்கையாகிவிட்டது. இதனைக் கண்ட அகத்தியர் மகிழ்ச்சியடைந்தார். இவருக்கு மதியூகியென்று பெயரிட்டழைத்தார். அதுமுதல் இவருக்கு யூகிமுனியென்னும் பெயருண்டாகியது. இவர் வைத்திய சிந்தாமணி முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார்.

**யோகதட்சணாமூர்த்தி** - முனிவர்கள் யோகலட்சணம் அறிய விரும்பிச்சிவபிரானைவேண்டிய காலத்தில் சிவபிரான் குருமூர்த்தமாக எழுந்தருளி யோக நிலையை இருந்து காட்டிய நிலை.

**யோகம்** - இஃது இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்று எட்டு வகைப்படும். இயமம் கொலை களவு செய்யாமை,மெய்கூறல், கள்ளுண்ணாமை, பிறர்பொருள் விரும்பாமை, புலனடக்கல் ஆகியன. நியமம் தத்துவ நூலாராய்தல்,தவம், தூய்மை, தெய்வவழிபாடு, மனமகிழ்ச்சி ஆகியன. ஆதனம் பலவகை நிலையில் அமர்ந்திருத்தல். பிராணாயாமம் மூச்சடக்குதல். பிரத்தியாகாரம் உபாதியை நீக்கி உண்ணுக்குதல்.தாரணை ஆருதாரங்களில்தேவதைகளைக் குருமுகமாக அறிந்து இன்புறுதல். தியானம் ஐம்புலனடக்கிக் கடவுளை யெண்ணுதல். சமாதி தன் மெய்ந்நிலை கண்டு

இன்புறுதல். இதன் விரிவு களைப்பரந்த நூல்களில்காண்க.

**யோகவதி** - இவள் ஞானசுதரிசனன் என்பவனுடைய மனைவி. சிறந்த கற்புடையவள். "கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை" என்பதைக் கடைப்பிடித்துக் கணவன் உரைப்படி நடந்தவள். இவளுடைய கணவன் அதிதி பூசை செய்யுமாறு கூற விருந்தாக வந்த யமனுடன் சேர்வதற்கு இசைந்தாள். இதனால் இவளுக்கும் இவள் கணவனுக்கும் யமன்சில நன்மைகளை யளித்தான்.

**யோகினி** - இவள் ஒரு பெண் தேவதை. ஆடையற்றவள். விரித்த கேசம் உடையவள். உடல் முழுவதும் வெண்ணீற்றுப் பூச்சுடையவள். மங்கல அணிகலம் அற்றவள். கையில் மண்டையோட்டைத் தாங்கியவள். சிவந்த நிறமுடையவள். இவளுக்கு முன்புறமும் இடப்புறமும் ஆகாது. பின்புறமும் வலப்புறமும் நன்றாகும்.

**வக்கிராசுரன்** - அசுரர்களில் ஒருவன். இவன் வாழ்ந்திருந்து இறைவனைப் பூசித்த இடம் திருவக்கரை என வழங்கப்படுகிறது. இவ்வூர் இந்நாளில் தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்றாகத் திகழ்கிறது. தொண்டை நாட்டில் புதுச்சேரிக்கு வடமேற்கில் பன்னிரண்டு கல் தொலைவில் உள்ளது.

**வங்கன்**-பலியின் மனைவியிடத்தில் தீர்க்க தபசு முனிவரால் தோன்றியவன். இவனுடைய பெயரால் வங்கநாடு உண்டாயிற்று.

**வங்கிய சூடாமணிப் பாண்டியன்** - இவன் வங்கிய சேகர பாண்டியனுடைய மகன். இவன் பல விடங்களிலுமிருந்து செண்பக மலர்ச் செடிகளைக் கொண்டு சிவபிரான் பொருட்டுப் பயிர் செய்தான். இதனால் இவனுடைய பெயர் செண்பக மாறன் என்று மாறியது. இவன் ஒரு நாள் தன்னுடைய பூம்பொழிலுக்குச் சென்று உலாவினான். இவனுக்கு முன்னால் இவனுடைய மனைவி அங்குவந்து ஓரிடத்தில் அமர்ந்திருந்தாள். அவளுடைய கூந்தலில் இருந்து இயற்கை மணம் வீசியது. இந்தப் பூம்பொழிலின் மணத்தை நாம் அறிவோம். இப்பொழுது வருகிற மணம் எவ்வாறுண்டாகியது என்று எண்ணினான். மணம் தன்னுடைய மனைவியின் கூந்தலில் இருந்து உண்டாயிற்றென்று உணர்ந்தான். இந்த மணம் கூந்தலுக்கு இயற்கையா அல்லது செயற்கையா என்று எண்ணமிட்டான். உயர் குலப் பெண்களின் கூந்தல் இயற்கை மணம் உடையதாக இருக்கும் என்னும் முடிவுக்கு வந்தான். தன்னுடைய உளத்தெழுந்த ஐயத்தைப் போக்குபவர்கட்குப் பொற்கிழி ஒன்று அளிப்பதாகப் பொற்கிழி ஒன்றைச் சங்கப் புலவர்கள் தங்கியிருக்கும் மண்டபத்தில் கட்டச் செய்தான்.

மதுரையில் இருந்த எளிய அந்தணன் ஒருவன் அப்பொற்கிழி தனக்குக் கிடைக்குமாறு செய்யுள்ஒன்றுசெய்து தரவேண்டும் என்று சொக்கநாதப் பெருமானை வேண்டிக் கொண்டான். அவ்வந்தணன் மெய்யன்பனாகையால் ஆலவாய்க் கடவுள் அவனுடைய எண்ணத்தை நிறைவேற்றக் கருதினார். "கொங்குதேர்வாழ்க்கை" என்றுதொடங்கும் செய்யுள் ஒன்றைச் செய்து கொடுத்தார். அந்தணன் அச்செய்யுளைக் கொண்டு போய் அரசனிடங் கொடுத்தான். அச்

செய்யுள் தன்னுடைய முடிவுக்குத் தக்கபடி பொருத்தமாக இருத்தலை அறிந்து பொற்கிழியை எடுத்துக் கொள்ளுமாறு அரசன் கூறினான். ஆனால் நக்கீரர் அச் செய்யுளுக்குக் குற்றங் கூறிப் பல தொல்லைகளையடைந்தார். ஆயினும் அந்தணனுக்குப் பொற்கிழி கொடுக்கப்பட்டது.

**வங்கியசேகரபாண்டியன்** - மதுரையில் அரசாண்ட பாண்டிய மன்னர்களில் ஒருவன். மதுரையைக்கடல்கொண்ட பிறகுஇவன் அரசாளத் தொடங்கினான். குடிகள் வாழ்வதற்கு மதுரையில் இடம் போதாதாக இருந்தது. மதுரைக்கு எல்லையமைத்து விரிவு படுத்த எண்ணினான். தன்னுடைய எண்ணத்தைச் சொக்கநாதப் பெருமான் திருமுன்பு தெரியப் படுத்தினான். சொக்கநாதப் பெருமான் சித்தராக எழுந்தருளினார். தம்முடைய கையிலிருந்த பாம்பையெடுத்து விட்டு மதுரைக்கு எல்லை காட்டுமாறு கட்டளையிட்டார். அது பட்டணத்தைச் சுற்றி வளைந்து கிடந்து எல்லையைக் காட்டியது. இதனால் மதுரைக்கு ஆலவாய் என்னும் பெயர் உண்டாகியது.

**வங்கிய சோழன்** - சோழ மன்னர்களில் ஒருவன். இவன் திருநெடுங் களத்தில் நாடோறுஞ் சிவ தெரிசனஞ் செய்து கொண்டிருந்தான். ஒருநாள் சிவபிரான் மிகுந்த அழகுடன் காட்சி தந்தார். அதனைக் கண்ட இவன் அக் கடவுளுக்கு நித்திய சுந்தரர் என்று பெயரிட்டான்.

**வங்கையர்** - இவர் ஒரு வீரசைவர். இவரிடம் ஒரு சங்கமர் நள்ளிரவில் வந்து தாம் திருமஞ்சனத்திற்குப் பாலும் வில்வமும் இல்லாது வருந்துஞ் செயலைத் தெரிவித்தார். இவர் தம் வீட்டிலிருந்த மலட்டுப் பசுவைக் கறக்குமாறு கூறினார். வந்தவர் அவ்வாறே கறக்க அது நல்ல பாலைப் பொழிந்தது. அப் பசு கட்டப் பட்டிருந்த வில்வத் தறியை நோக்க அது தளிர்த்தது. இரண்டையும் சங்கமரிடங் கொடுத்தனுப்பினார். இவர் தம்முடைய தலையை அறுத்துச் சிவ சந்நிதியில் இட்டுச் சிவபிரானுடைய அருள் பெற்றவர்.

**வசவதேவர்** - இவருடைய பெயர் பசவண்ணர் எனவும் வழங்கியது. பசவண்ணர் என்னுந் தலைப்பிலும் இவரைப் பற்றிய செய்திகள் சில வந்துள்ளன. வேந்தனுக்கு விண்ணில்இருந்து வந்த திருமுகச் சுருளை அங்குள்ளவர்கள் படிக்க முடியாமல் திகைத்தபொழுது அதனை இவர் படித்துணர்ந்து அரசனுடைய அரியணைக்கு அடியில் இருந்த பொருளை எடுத்து அரசனுக்குக் கொடுத்தார். அல்லமதேவருக்கு இவர் உணவிட்டார். ஓர் இலட்சத்து எண்பதினாயிரம் சங்கமர்க்குச் சமைத்து வைத்திருந்த உணவுகளை யெல்லாம் அல்லமதேவர் ஒருவரே உண்டு விட்டு மேலும் பசியென்று கூற வசவதேவர் அல்லம தேவரிடம் தம்முடைய குற்றத்தைப் பொறுக்குமாறு வேண்டிக் கொண்டார்.

வசவதேவருடைய திருமடத்தில் உண்பதற்கு இலிங்க மணியாத சிலர் கத்திரிக்காய்களை இலிங்கம் போல் அணிந்து கொண்டு பந்தியிற் புகுந்திருந்தனர். இப்போலியடியார்களைக் கண்டு அங்கிருந்த அடியார்கள் சினங் கொண்டனர். வசவர் சிவபிரானை உள்ளத்தில்எண்ணினார். கத்திரிக்காய்கள் எல்லாம் சிவலிங்க மாயின. வசவ

ருடைய கடவுளன்பு விச்சல ராசனுக்கு வியப்பை யளித்தது. அவன் இவருடைய அன்பை மேலும் ஆராய்ந்து பார்க்க எண்ணினன். மரத்தாலும் மண்ணாலும் சிவனடியார்களைப் போல உருவங்களைச் செய் வித்து இவருக்குக் காட்டினன். இவ் வுருவங்களைக் கண்டதும் வசவர் வணங்கி அமுது செய் யக் கூப்பிட்டார். அவ்வுருவங்க ளெல்லாம் உயிர் பெற்று நடந்து சென்றன. இப் புது மையைக் கண்ட அரசன் அஞ்சி னன்.

ஒருநாள் அரசன் தன்னுடைய படைகளுக்கு ஊதியங் கொடுக் கப் பணப் பெட்டியை இவ ரிடங் கொடுத் தனுப்பினன். அப்பொழுது ஒரு விடசங்கமர் வசவரைக் கண்டு "இப் பணப் பெட்டியில் உள்ள பொருள் முழுவதையும் எனக்குத் தர வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். வசவர் அவ் வாறே அப்பொருளை அவருக் குக் கொடுத்தார். அரச சேவ கர்கள் அரசனிடஞ்சென்று இச் செய்தியைக் கூறினர். அரசன் வசவரைக் கேட்டான். வசவர், "நான் கொடுத்தது உம்முடைய பொருள் அன்று; நீர் கொடுத்த பொருள் உம்முடைய பெட்டி யில் அப்படியே இருக்கிறது" என்று கூறி அரசனுக்கு அவ னுடைய பணப் பெட்டியைக் காட்டினர். இதனைக் கண்டு அரசன் அஞ்சிப் பேசாமல் இருந்தான்.

சங்கம உருக் கொண்ட சிவ பிரான் வசவரிடம் வந்து நெற் றிக்கண் வேண்டும் என்று கேட்டார். எழுந்தருளியவர் சிவபிரான் என்பதை உணர்ந்த வசவர் அவரைப் போற்றினர். "உம்முடைய நெற்றிக் கண் உம்மிடமே இருக்கிறது" என்று கூறி அவருக்குக் கண்ணாடி காட்டினர்.

கூடலசங்கமத்திலிருந்த சிவா லயத்தைக் காத்துக் கொண் டிருந்த வேடர்களுக்குச் சிவ சேடத்தைக் கொடோம் என்று மறுத்தார். அரசனுடைய வேண்டு கோட்படி நஞ்சை யுண்டு காட்டினர்.

தம்முடைய தேவியார் உடுத்தியிருந்த ஆடையை விட சங்கமர் ஒருவர் கேட்க, வசவர் தம்முடைய தேவியாரையழைத் துப் புடைவையை அவிழ்த்துத் தருமாறு கேட்டார். தேவியார் நாணமடைந்து நின்றார். தேவி யாரின் புடைவையைத் தாமே அவிழ்த்தார். அப் புடைவை அவிழ்க்க அவிழ்க்க வளர்ந்தது. விடசங்கமருக்கு வேண்டிய அளவு ஆடையை அறுத்துக் கொடுத்தார்.

இவர் மேலும் பல புதுமை களைச் செய்து கொண்டிருந்து வீடு பேற்றை யடைந்தார்.

**வசவபுராணம்** - வீர சைவ நூல். பசவபுராணம் எனவும் வழங் கும். இது வசவண்ணருடைய வரலாற்றைக் கூறுகிறது. இந்நூலில் வீரசைவக் கொள் கைகள் விரிவாகக் கூறப்படு கின்றன. வசவண்ணருடைய சொற்பொழிவுகளும் வீரசைவ சமயக் கண்டன மறுப்புரை களும் உள்ளன. இந்நூல் முதலில் ஆந்திர மொழியில் சோமநாத பண்டிதரால் இயற்றப் பெற்றது. பிறகு பீமகவி என்பவரால் கன்னட மொழியில் இயற்றப் பெற்றது. இதனைத் தமிழில் செய்தவர் யாரென்பது விளங்கவில்லை. தமிழ் வசவபுராணம் 1747 செய்யுட்களைக் கொண்டது.

**வசிட்டர்** - நான்முகனுடைய மானச புத்திரர்களில் ஒருவர்.

இவருடைய மனைவி அருந்ததி. வைவச்சுத மன்வந்தரத்தில் ஏழு இருடிகளில் ஒருவராக இருந்தவர். கதிரவ குலத்து அரசர்களுக்குக் குருவான இவர் தட்சப் பிரசாபதியின் பெண்களில் ஒருத்தியை மணந்து இரசன் கோத்திரன் முதலிய ஏழு மக்களைப் பெற்றார். மிகுந்த தவஞ் செய்து சிறந்த முனிவராக விளங்கினார். விசவாமித்திரருக்கும் இவருக்கும் எப்பொழுதும் பூசல் ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. மெய்யறிவு கைவரப் பெற்று விளங்கிய இவர் தசரத இராமனுக்கு ஞான வாசிட்டத்தை உரைத்தருளினார்.

**வசு**-(1) இவன் கலிங்க நாட்டிலே சிங்கபுரம் என்னும் ஊரில் இருந்து அரசு புரிந்தவன். இவனிடம் ஆண்மை அமைந்திருந்த தாயினும் அறிவு போதிய அளவு அமையவில்லை. பொல்லாதவர்களுடைய கூட்டுறவையே மிகுதியாகக் கொண்டிருந்தான். பரதன் என்னும் தீயவன் ஒருவன் இவனுக்கு இனிய நண்பனாகி அமைந்திருந்தான். இத்தீயவன் சொற்படியே இவன் காரியங்களைச் செய்தான். குடிகளைத் தொல்லைக்குள்ளாக்கி அச்சுறுத்தினான். இவனுடைய கொடுமையை நினைந்து அனைவரும் வருந்தினர். அந்நாளில் கபிலபுரம் என்னும் நகரில் இருந்து குமரன் என்பவன் ஒருவன் அரசு புரிந்து கொண்டிருந்தான். அக்குமரன் இவ்வசுவுக்கு ஒருவகையில் உறவினன். அவ்வாருக, அக் கபிலபுரத்திலிருந்த சங்கமன் என்னும் பெயருடையவன் ஒருவன் தன் மனைவியோடு இவனுடைய நகரத்திற்கு வந்து ஓரிடத்தில் தங்கி வாணிகஞ் செய்து கொண்டிருந்தான். பொல்லாதவனுகிய பரதன் இச்சங்கமனிடத்திற் பகை கொண்டான். வசுவினிடம் சங்கமன் குமரனுடைய ஒற்றன் என்றும் வாணிகஞ் செய்வதைப் போல் நடித்து உளவறிகிறுன் என்றும் கோள் உரைத்தான். வசு பரதன் கூறியதை நம்பினுன். அச்சங்கமனைக் கொன்று விடுமாறு ஏற்பாடு செய்தான். சங்கமன் மனைவி தமக்குத் தீமை செய்தோர் மறுபிறப்பில் இத்தீமையை அடைக வென்று வசவுரை கூறி மாண்டாள். இத்தீவினையினுல் மறுபிறப்பில் பரதன் கோவலனுகப் பிறந்தான். சங்கமன் தட்டானுகப் பிறந்து பழிக்குப்பழி வாங்கினுன்.

**வசு** - (2) முன்னுளிற் சேதி நாட்டை யாண்டிருந்த ஓர் அரசன். இவனுடைய மனைவியின் பெயர் கிரிசை. தேவேந்திரனுல் கொடுக்கப்பட்ட விமானம் ஒன்று இவனிடம் இருந்தது. இவன் ஒரு நாள் விமானத்திற் செல்லும் போது தன்னுடைய மனைவியை மிகுந்த காதலோடு எண்ணினுன். அப்பொழுது இவனுடைய வீரியம் வெளிப்பட்டுக் கீழே யமுனையாற்றில் விழுந்தது. அவ்வாற்றில் அத்திரிகை யென்னும் பெயருடைய அரமகளொருத்தி தரும தீபர் என்னும் முனிவர் ஒருவருடைய வசவுரையினுல் கயலாகிக் கிடந்தாள். விழுந்த வீரியத்தை அவள் விழுங்கிக் கருப்பமடைந்தாள். ஒரு வலைஞன் வலையிலகப்பட, அவன் மீனை யரிந்தான். வயிற்றில் ஒரு பெண்ணும் பிள்ளையும் இருந்தனர். அவர்கள் மச்சகந்தி மச்சன் என்னும் பெயரையடைந்தனர். மச்சகந்தியே பிறகு பரிமளகந்தியானுள்.

**வசுதேவர்** - இவர் சூரசேனன் என்பவனுடைய புதல்வர். யமுனையாற்றை யடுத்திருந்த ஒரு சிறிய நிலப்பகுதிக்கு உரியவர். நற்குணங்களெல்லாம் நன்கமையப் பெற்ற இவர் தேவகன் மகளாகிய தேவகியை மணந்து இல்வாழ்க்கையை இனிது நடத்திக் கொண்டிருந்தார். இவர் ஒரு நாள் மனைவியும் தாமும் மைத்துனனாகிய கம்சனும் உடன்வர ஒரு தேரிலேறி உலாவச் சென்றார். அப்பொழுது இவருடைய மனைவியாகிய தேவகி கருப்பவதியாக இருந்தாள். அப்பொழுது. வானொலி ஒன்று, "ஓ கம்சனே தேவகியின் வயிற்றில் தோன்றும் பிள்ளையால் உனக்கு அழிவு ஏற்படும்" என்று கூறியது. இதனைக் கேட்டுக் கம்சன் நடுங்கினான். உடனே தேவகியைக் கொல்லத் துணிந்தான். வசுதேவர் தடுத்தார். பிறகு கம்சன் இருவரையும் சிறையிலடைத்துக் காவல் செய்தான். திருமாலின் ஒரு கூறாகிய கண்ணன் இவருக்குத் திருமகனாகத் தோன்றித் திருவிளையாடல்கள் பலவற்றைச் செய்தார். கம்சனையும் அழித்தொழித்தார்.

**வசுமன்** - கதிரவகுல வேந்தனாகிய அரியச்சுவன் என்பவனுடைய புதல்வன். வைவசுவதமனுவின் இருபத்தேழாவது வழிமுறையில் வந்தவன். போர் செய்வதில் பேர் பெற்றவன். தன் புகழ் எங்குஞ் செல்ல இவன் அயோத்தியில் இருந்து அரசு செய்தான். இவனுடைய மனைவியின் பெயர் வசுமதை. இவனுக்குத் திரிதனுவா என்னும் பெயருடைய மகன் ஒருவன் இருந்தான். இவன் வேள்விகள் பலவற்றைச் செய்து முடித்தான். இவனுடைய மதிநலத்தையும் மன நலத்தையும் அனைவரும் வியந்து போற்றினார்கள்.

**வசைகவி** - வசைகவி என்பது ஒருவரை இகழ்ந்து பாடுவது. இஃது இசைகவிக்கு நேர் மாறானது. வசைகவியைப் பாடுவார் மிகுந்த அறிவு நலம் அல்லது தெய்வத் திருவருள் அமையப் பெற்றவர்களாக விருப்பின் அவர்கள் வாக்குப் பலித முடையதாகிப் பாடலைப் பெற்றவர்கட்குத் தீமையை விளைவிக்கும். இதனைக் கருதியே திருவள்ளுவரும், "வில்லே ருழவர் பகை கொளினுங் கொள்ளற்க, சொல்லே ருழவர் பகை" என்று திருக்குறளில் கூறியிருக்கிறார். ஔவையார் கம்பர் முதலியவர்களும் வசை கவி பாடியிருக்கிறார்கள். "எட்டேகால் லட்சணமே எமனே றும்பரியே மட்டில் பெரியம்மை வாகனமே முட்டமேற் கூரையில்லா வீடே குலராமன் தூதுவனே, ஆரையடா சொன்னாயது" என்று ஔவையார் கம்பர் மீது பாடிய வசை மிகப்புகழ் பெற்று விளங்குகிறது.

**வச்சணந்தி** - இவன் களந்தை என்னும் ஊரிலிருந்த சைனன். இவன் குணவீரபண்டிதரைக் கொண்டு தன்னுடைய பெயரால் வச்சணந்தி மாலை என்னும் நூலை இயற்றச் செய்தனன்.

**வச்சிரகேசி** - இவன் ஓர் அசுரன் தேவர்களையும் இந்திரனையுஞ் சிறையிலடைத்து விட்டுத் திருமாலோடு நெடுங்காலம் போர் புரிந்தான். பிறகு சிவபிரானுடைய நெற்றிக் கண்ணால் இறந்தொழிந்தான்.

**வச்சிரக்கோட்டம்** - இக்கோட்டம் முன்னாளில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த தென்றும் இங்கு விழாமுரசு வைக்கப்

பட்டிருந்த தென்றுஞ் சிலப்பதிகாரங் கூறும்.

**வச்சிர நாடு** - இது வடநாட்டிலே சோணை நதியால் சூழப்பெற்ற நாடாகும்.

**வச்சிராங்கபாண்டியன்** - இவன் இந்திரனுக இருந்தான். அக்காலத்தில் சிவபிரானை வச்சிரத்தால் தாக்கப் போனுன். அத்தீவினையினுல் நிலவுலகில் வச்சிராங்கபாண்டியன் என்னும் மன்னனுகப் பிறந்தான். ஒரு குதிரையின் மீது ஏறிக்கொண்டு வேட்டையாடச் சென்றுன். ஒரு புனுகுபூனையைத் துரத்தினுன். அஃது அருணுசலமாகிய திருவண்ணுமலையைச் சுற்றிக் கொண்டு ஓடியது. அரசனும் குதிரைமீதிருந்தவாறே ஓடினுன். அரசன் ஏறிய குதிரையும் பூனையும் இறந்து கந்தருவர்களாகி அரசன் முன் நின்றன. அண்ணுமலையை வலஞ் செய்த நல்வினையினுல் அவைகள் நற்கதியை அடைந்தன.

**வச்சிராசுரன்**-இவன் ஓர் அரக்கன். இவன் ஒரு பட்டணத்துக் குடிகளை ஒவ்வொருவராகக் கொன்று தின்று கொண்டிருந்தான். மண்ணுடையான் என்னுங் குயவன் ஒருவன் அகத்தியரை நோக்கித் தவஞ் செய்து மந்திர சித்தி பெற்று இவ்வரக்கனையழித்தான்.

**வஞ்சன்** - சேர மன்னர்களில் இவனும் ஒருவன். இவனுடைய பெயர் அஞ்சன் எனவும் வழங்கியது. இவன் பாயல் நாடு என்னும் நாட்டை அரசாண்டான். முன்பு பாயல் நாடு என்று பெயர் வழங்கிய நாடு பின்னர் வயநாடாகி இப்பொழுது வைநாடு என வழங்குகின்றது. இவன் கொடையும் வீரமும் ஒருங்கே அமையப் பெற்றவன், பரிசில் நாடி வருவாரை இவன் அன்புடன் வரவேற்றுப் பாராட்டிப் போற்றிப் பரிசுகள் வழங்கினுன். இவனைத் திருத்தாமனுர் என்னும் புலவர் புகழ்ந்து பாடியுள்ளார்.

**வஞ்சுளை** - இவள் ஒரு பார்ப்பனி. இவளுடைய கணவன் பெயர் விதுரன். இவன் தன் மனைவியை விட்டுவிட்டு விலைமாதர்களோடு திரிந்தான். இவளும் விபசாரத் தொழிலில் இறங்கினுள். இவளுடைய கணவன் இதையறிந்து இவளை வருத்தத் தொடங்கினுன். இவள் தன்னுடைய கணவனைப் பார்த்துக், "காமம் என்பது ஆடவர் பெண்கள் இருவருக்கும் பொதுவானதாகும். நீ என்னுடைய விருப்பத்தைத் தணிக்காத படியால் நான் இவ்வாறு செய்யத் தொடங்கினேன்" என்று கூறினுள். கணவன் இரக்கங் கொண்டு, "ஆயின் உன்னுடைய விருப்பம் போல் நட. பொருளை என்னிடங் கொடு" என்று சொல்லி அவள் கொடுத்த பொருளை விபசாரத்தில் செலவிட்டு இறந்தான். வஞ்சுளை விதவையான பிறகு கோகர்ணஞ் சென்று சிவவழிபாடு செய்தாள். விபசாரஞ் செய்பவர் அடையுங் கதியைப் புராணிகர் சொல்லக் கேட்டு அஞ்சினுள். புராணிகரைக் கொண்டு சிவ கதைகளைக் கேட்டாள். இதன் பலனுக நல்ல கதியை அடைந்தாள்.

**வடக்கிருத்தல்** - வானக வாழ்வை விரும்பினோர் இவ்வுலக நுகர்ச்சியைத் துறந்து பட்டினியால் உடல் மெலியச் செய்து யோக முயற்சியால் உயிரை நீத்தற் பொருட்டுத் தாம் வாழ்ந்த இடத்தை விட்டு வட திசையிற் சென்று வடக்குத் திக்கை நோக்கி இறைவனை யெண்ணித்

தவநிலையில் அமர்ந்திருத்தல். தமிழ் நாட்டில் கோப்பெருஞ் சோழன் முதலிய சிலர் வடக்கிருந்ததாகத் தமிழ் நூல்கள் கூறுகின்றன.

**வடக்குத் திருவீதிப் பிள்ளை** - திருவரங்கத்தில் பிறந்து அங்கேயே வாழ்ந்தவர். திராவிட வேதாந்த தேசிகர், கிருட்டிண பாதர் என்னும் வேறு பெயர்களும் இவர்க்குண்டு. ஈடு முப்பத்தாறாயிரப் படி என்னும் விரிவுரையை எழுதியவர். பிள்ளை லோகாரியரும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் இவருடைய புதல்வர்கள்.

**வடசர்க்கார்**-கிழக்குத் தொடர்ச்சி மலைகளுக்கும் வங்காள விரிகுடாவிற்கும் நடுவில் உள்ளது. பெரும்பாலுஞ் சமவெளி. இதில் சிகாகுளம், விசாகபட்டினம், கிழக்கோதாவரி, மேலக்கோதாவரி, கிருட்டிணா குண்டூர் மாவட்டங்களும் அடங்கியுள்ளன. இதில் தென்மேற்கு, வடகிழக்கு ஆகிய இருபருவக் காற்றுகளாலும் மழை உண்டு. மலைப்பகுதிகளில் காடுகள் நெருங்கியுள்ளன. இக்காடுகளில் ஆதிகுடிகளான கோண்டுகளும் சவரர்களும் வசிக்கின்றனர்.

**வடபத்திர சயனர்** - திருவில்லிபுத்தூரில் திருக்கோயில் கொண்டுள்ள திருமாலின் பெயர்.

**வடபழனி** - சென்னை மாநகரில் கோடம்பாக்கத்திற்கு மேற்குப் பக்கத்தில் உள்ள பழனியாண்டவர் கோயில். அண்ணாச்சாமி நாயக்கர் என்பவர் திருத்தணிகை முருகனிடத்தும் பழநியாண்டவனிடத்தும்பேரன்புடையவர். இவர் பழநிக்குச்சென்றபொழுதுபழநியாண்டவர் படம் ஒன்றை வாங்கிவந்து அதனைப் பூசை செய்யத் தொடங்கினார். பூசையின் முடிவில் இவருக்கு ஆவேசம் வருவதும்உண்டு. அப்பொழுது இவர் கூறுவன வெல்லாம் பலிக்கும். இவருடைய முருக பத்தியைக் கண்டு இரத்தின வேல் செட்டியார் என்பவர் இவருக்கு மாணவரானார். இருவரும் பழனியாண்டவர் வழிபாட்டை நடத்தினார்கள். நாளடைவில் பழநியாண்டவர் சிலை ஒன்றையும் செய்து வைத்து வழிபடலானார்கள். பாக்கியலிங்கத் தம்பிரான் என்பவர் ஒருவர் முற்கூறிய இருவரோடுஞ் சேர்ந்து கொண்டு கோயிலுங் கட்டலானார். இவ்வாறு மூவரால் உருவானதுதான் சென்னை வடபழனி யாண்டவர் கோயில். இக்கோயில் இருபத்தைந் தாண்டுகட்குள்ளே தோன்றியதுதான். எனினும் வளர்ந்து வருஞ் சென்னையிலே வடபழநியாண்டவர்கோயிலும் வளர்ந்து வருகிறது. இங்குச் சென்று வழிபடும் அன்பர்கள் நாள்தோறும் அதிகரித்து வருகிறார்கள்.

**வடமவண்ணக்கன்பேரிசாத்தனார்**- தேர்வண் மலையனைப் பாடிய சங்க காலப் புலவர். இவருடைய பாடல்கள் புறநானூறு அகநானூறு முதலிய வகைகளில் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

**வடலூர்** - தென்னார்க்காடு மாவட்டத்தில் கூடலூர்த் தாலுகாவில் உள்ள ஒரு சிற்றூர். இதற்குப் பார்வதிபுரம் எனவும் பெயர் உண்டு. இராமலிங்க அடிகளார் உத்தரஞான சிதம்பரம் என்னும் பெயரை வழங்கினார். இராமலிங்க அடிகளார் தம்முடைய இறுதிக் காலத்தில் இங்குதான் எழுந்தருளி இருந்தார். இங்கு தைப்

பூசத்தன்று ஒளி வழிபாடு நடைபெறுகிறது. இராமலிங்க அடிகளார் தொடங்கிய உணவிடும் தருமப் பணி இன்றுஞ் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இங்கு அருட்பெருஞ் சோதி தரிசனம் வெள்ளிக் கிழமைதோறும் ஞான சபையில் மூன்று திரைகளை நீக்கிக் காட்டப்படுகின்றது. திங்கள் தோறும் பூச நாளில் ஆறு திரைகள் விலக்கப் படுகின்றன. தைப் பூசத்தன்று மட்டும் ஏழு திரைகளும் நீக்கி ஒளிக் காட்சி காட்டப் படுகிறது.

**வடிம்பலம்பநின்ற பாண்டியன்** - இவன் நிலந்தருதிருவிற்பாண்டியன் எனவும், பாண்டியன் மாகீர்த்தியெனவும் வழங்கப் பெறுவான். தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் இவன் இருபத்து நாலாயிரம் ஆண்டுகள் அரசு செய்தான் எனவும் இவனுடைய அவையிலேதான் தொல்காப்பியம் அரங்கேற்றப் பெற்றதென்றும் கூறியுள்ளார். இவன் நெடுங்காலம் அஃதாவது தொண்ணூறாண்டுகள் வரை வாழ்ந்து அரசியற்றினனாதலின் இவ்வாறு புனைந்துரைத்துப் போற்றப் பட்டான். இவன் இவ்வாறு நெடுங்காலம் வாழ்ந்திருந்தமையின் நெடியோன் எனவுங் கூறப் பட்டான். இவன் கடற் பெருக்கினால் குமரிமுனைக்குத் தெற்கிலிருந்த குமரிநாடு முதலியன அழிவதற்கு முன்னர் அக்குமரி நாட்டில் பஃறுளியென்னும் ஆற்றை வெட்டிக் கடற்றெய்வத்திற்குத் திருவிழா நடத்தினான்.

**வடுகப்ப முதலியார்** - இவர் தொண்டைவள நாட்டிலே வாயற்பதி என்னும் ஊரிலே வாழ்ந்திருந்தார். விளைநிலங்கள் மிகுதியும் உடையவராக இருந்த படியால் பெரும் பொருள் திரட்டி அவைகளைத் தக்கார்க்குதவிப் பயன் படுத்தினார். இவருடைய இசை திசை தொறுஞ் சென்று விளங்கியது. அனைவரும் இவரை வள்ளல் எனப் பாராட்டினர். விருந்தினர்களைப் போற்றுவதிலும் இவர் திருந்திய பண்புடையவராகப் பொருந்தி இருந்தார். இவருடைய இல்லத்திற்குச் செல்பவர்கள் உணவு கொள்ளாமல் வெளிப்பட விடமாட்டார். இல்லறத்தான் விருந்தினரைப் போற்ற வேண்டுமென்பதை இவர் உறுதியாகக் கடைப் பிடித்திருந்தார். இந்த வடுகப்ப முதலியாருக்கு நாகையன் என்னும் பெயருடைய தம்பி யொருவன் இருந்தான். அவன் திடீரென்று இறந்து போனான். இச்சமயத்தில் ஒரு புலவன் வடுகப்ப முதலியாரை நாடி அவருடைய இல்லத்துக்குச் சென்றான். அப்புலவனை வெளியிலேயே எதிர் கொண்டு வரவழைத்துப் பாராட்டினார். உடன்பிறந்தான் இறந்தசெய்தி தெரிந்தால் இப்புலவர் உண்ணமற் சென்று விடுவார் என்று அஞ்சினார். வீட்டில் நிகழ்ந்துள்ள சாக்காட்டுச் செய்தியை அப்புலவனுக்குக் கூறாமலே பக்கத்து வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போய் அங்குத்தங்கச் செய்தார். விரைவாகச் சமையலை முடிக்கச் செய்து புலவனுக்கு உணவு படைத்து உண்ணச் செய்தார். உண்ட பிறகு வடுகப்ப முதலியாரின் உடன் பிறந்தான் மாண்டு கிடக்குஞ் செய்தியைப் புலவன் உணர்ந்தான். இத்தகைய புதுமையான மனிதனும் உலகத்தில் இருக்கிறானா என்று வியந்து, ''தன்னுடன் கூடப் பிறந்த அருந்துணைத் தம்பியுயிர், அங்கிலை மாண்டது தோன்றாமல் மூடி

வைத்தன்னமிட்டான், மன்னவர் போற்றிட வாழ் செங்கலங்கை வடுகனுக்குக், கன்னனும் சோமனுமோ இணையாகக் கழறுவதே'' என்று புகழ்ந்து பாடிவிட்டுச் சென்றான். வடுகப்ப முதலியாருடைய இச் செய்தி தொண்டை மண்டல சதகத்திலும், "நேயத்துடன் பிறந்தோன் பிணமூடி நெருப்ப வித்துத், தாயொப்பன வெதிர் கொண்டழைத்தே தன்னுடன் எனவே, ஆயத்தமிழ் கொண்டருங் கவிராயனுக்கன்பு செய்த வாயற்பதியில் வடுகப்பனும் தொண்டை மண்டலமே'' என்று கூறப்பட்டுள்ளது.

**வணங்காமுடிக்கட்டி** - சேலம் மாவட்டத்தில் தாரமங்கலத்திற்குப் பக்கத்தில் உள்ள அமரகுந்தி என்னும் ஊரில் பதினேழாம் நூற்றாண்டுவரை வாழ்ந்திருந்த புகழ்பெற்ற ஒரு மரபினர். இம்மரபில் வந்த மும்முடிக் கட்டி என்பவன் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த தாரமங்கலம் கோவிலைக் கட்டத் தொடங்கினான். அவனுடைய காலத்தில் அவ்வேலை முடிவு பெறவில்லை. அவனுடைய வழி முறையினரால் நாற்பதாண்டு கட்குப் பிறகு கட்டிமுடிக்கப் பட்டது. வணங்கா முடிக்கட்டி பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தான். சிறந்தவீரன். வெற்றிப் புகழுடையவன். பெருங்கொடையாளன். தமிழ் மொழியிடத்தில்அளவு கடந்த பற்றுடையவன். தமிழ் மொழியை வளர்ப்பதில் கருத்துச்செலுத்தியவன். பூங்கோதையார் என்னும் பெண்பாற்புலவர் இவனைப் புகழ்ந்து பாடியிருக்கிறார். தன்னைப் புகழ்ந்த அப்புலவருக்கு இவன் தன்னுடையமணி முடியைச் சூட்டியதோடு வாளை யும் வழங்கினான். அப்புலவர் அவைகளை அவனுக்கே திரும்பக் கொடுத்தார்.

**வணிகமல்லையர்** - வைசியர் குலத்தில்தோன்றியவர். சிவவழிபாடு இல்லாமல் உணவு கொள்வதில்லை யென்னும் உறுதியை மேற்கொண்டிருந்தவர். சிவ வழிபாட்டிற்கு இடையூறு நேர்ந்தால் உண்ணாமல் விரதம் இருப்பவர். இவரும்இவருடைய மைத்துனரும் வாணிகத்தின் பொருட்டு வேறோர் ஊர்க்குச் சென்றனர். அவ்விடத்தில் சிவன் கோவில் இல்லாததனால் இவர் வருந்தினார். இவருடைய மைத்துனர் தாம் கையிற் கொண்டு சென்றிருந்த மரக் காலைப் புதராகஇருந்த ஓரிடத்தில் கவிழ்த்து விட்டு மல்லையரைப் பார்த்து, "இங்குஓரிடத் தில் சிவலிங்கத்தைக் கண்டேன் வருக'' என்று அழைத்துக் கொண்டு விளக்கோடு சென்று மரக்கால் சிவலிங்கத்தைக் காட்டினார். மல்லையர் உண்மை யென்று நம்பினார். அந்த மரக் காலைப் பணிந்து போற்றினார். பிறகு சாப்பாட்டையும் முடித் துக் கொண்டார். பிறகு இரு வரும் உரையாடிக் கொண்டிருக் கையில் மைத்துனர் தாம்செய்த சூழ்ச்சியைக் கூறினார். இதனைக் கேட்ட வணிகமல்லையர் மிகுந்த சினங்கொண்டார். மைத்துன ரோடு போய் அம்மரக்காலைப் பார்த்தார். மரக்கால் உண்மை யான சிவலிங்கமாகவே விளங்கியது. அதனைக்கண்டு பெரு மகிழ்ச்சி கொண்டார். பிறகு அவ்விடத்தில் திருக்கோயில் முதலியன உண்டாயின.

**வண்டிக்குப்பம்** - இவ்வூர் அச்சிறு பாக்கத்தில் உள்ளது. அச்சிறு பாக்கம் தொண்டை நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. திரிபுரசங் காரத்திற்குச் சென்ற சிவபெரு

மான் விக்கிரேசுவர வழிபாடு செய்யாமல் சென்ற படியினால் தேரின் அச்சு முறிந்த இடம் அச்சிறுபாக்கமாயிற்று என்னுஞ் செய்தி வழங்குவதோடு, பாண்டிய நாட்டு மன்னன் ஒருவன் தன்னுடைய நாட்டிலே அமைக்கும்பொருட்டு கங்கையிலிருந்துமணல் கங்கைநீர் இலிங்கம்முதலியவைகளைக் கொண்டு வந்தனன் எனவும் இவ்வூருக்கு மேலே செல்லாமல் வண்டி தடைப்பட்டு நிற்க அதனைமேற் கொண்டு செலுத்த முயன்ற போதுவண்டியின்அச்சு ஒடிந்து விட்டதென்றும், பாண்டியன் அசரீரியினால் உண்மையுணர்ந்து அவ்விடத்திலேயே கோயிலமைத்து இலிங்கத்தை நிலைபெறுத்தி வழிபட்டான் எனவும் செய்தி கேட்கப்படுகிறது. வண்டியின் அச்சு முறிந்த இடம் வண்டிக்குப்பம் என வழங்குகின்றது.

**வண்டோதரி** - இராவணனுடைய மனைவி. இவள் சிவபெருமானிடத்தில் மிகுந்த அன்பு கொண்டு வழிபாடாற்றினாள். சிவபெருமான் தனக்குக் காட்சி கொடுத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டாள். திருவுத்தரகோசமங்கையில் சிவபிரான் ஆயிரம் முனிவர்கட்கு ஆகமப் பொருளைஅருள் செய்துகொண்டிருந்தார். அச்சமயத்தில் இராவணனுக்கும் வண்டோதரிக்கும் அருள்செய்யஎண்ணியசிவபெருமான் குழந்தையுருவில் அருள் செய்தார். இதனைத் திருவாதவூரடிகள் தமது திருவாசகத்தினுங் குறிப்பிட்டுள்ளார்.

**வதரியாச்சிரமம்** - இதனைப் பத்ரி நாராயணம் என்பர். சுவாமி பெயர் பத்ரி நாராயணன். தாயார் அரவிந்தவல்லி. தத்வ காஞ்சன விமானம். தத்வண்ட தீர்த்தம். இலந்தைமரம் ஆறு திங்கள் தேவர்களாலும் ஆறு திங்கள் மனிதர்களாலும் பூசிக்கப்பெறுவது. இந்நகரில் வெந்நீரூற்றுண்டு. நரனுக்கு ஞானமுரைத்ததலம்வீற்றிருந்த திருக்கோலம். இத்தலம் இமயமலையின் மேல் உள்ளது.

**வத்சந்திரன்** - இவன் பனந்தன் என்பவனுடைய மகன். இவன் இந்திரனுக்குப் பகைவனை குசம்பனைக் கொன்று சௌநந்தை என்பவளை மணந்தனன். இவன் அரசாட்சி செய்து கொண்டிருக்கையில், இவனுடைய தந்தையின் நண்பனாகிய வ்டூரதன் என்னும் வேரோர் அரசனும் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவ்விடூரதனுக்குச் சுநீதி, சுமதி என்னும் புதல்வர்களும் முதாவதி என்னும் மகளும் இருந்தனர். இவ்வத்சந்திரன் ஒருநாள் வேட்டைக்குச் சென்றான். சுவிரதன் என்னும் முனிவருடைய இருப்பிடத்திற்குப் பக்கத்தில் ஓர் ஆழமான பிலம் இருப்பதைக் கண்டான். முனிவரைப் பார்த்து அப்பிலத்தினுடைய வரலாறு யாது என்று கேட்டான்.

முனிவர் அரசனைப் பார்த்து "ஓ அரசனே! உனக்கு உன்னுடைய நாட்டில் நடக்குஞ் செய்திகளே தெரியவில்லை. அதன் வரலாற்றைக் கூறுகிறேன் கேள். பாதாளத்தில் குசம்பன் என்னும் பெயருடைய அரக்கன் ஒருவன் இருக்கிறான். அவன் துவட்டாவிடம் இருப்புலக்கை பெற்றுத் தேவர் முதலியவர்களை வருத்தி வேள்வி முதலியவைகளை யழிக்கிறான். தானுந் தன்னுடைய படைகளும் வருவதற்குப் பல வழிகளையுண்டாக்கினான். அவற்றுள் நீ கண்ட பிலம் அவனுடைய இருப்பிடத்திற்குப் போகும்

வழியாகும். அவனிடத்தில் ஓர் இருப்புலக்கை இருக்கிறது. அது மிகுந்த ஆற்றலுடையதாகும். ஆனால் அதனை ஒரு பெண் தொடுவாளானால் அவ்வுலக்கையின் ஆற்றல் அழிந்து போகும். விடூரதன் பெண்ணாகிய முதாவதியை அவ்வரக்கன் பாதாளத்திற்கு எடுத்துக் கொண்டு சென்றான். அவளுடைய உடன் பிறந்தார்கள் அவளை மீட்கப் போய் அரக்கனோடு போரிட்டுச் சிறைப்பட்டார்கள்.

"விடூரதன் இவர்களை யார் விடுவிக்கிறார்களோ அவர்கட்குத் தன்னுடைய மகளைத் தருவதோடு தன்னுடைய நாட்டிலும் பாதியைக் கொடுப்பதாகப் பறையறைந்திருக்கிறான்" என்று கூறினார். வத்சந்திரன் விடூரதனைக் கண்டு செய்தி கூறிவிட்டுப் பாதாளத்தில் அரக்கனோடு போர் செய்யச் சென்றான். வத்சந்திரன் விடுவிக்க வருதலைக் கேட்ட முதாவதி இருப்புலக்கையைப் பெண்கள் தொட்டால் அதன் ஆற்றல் கெடுமென்பதை யறிந்தவளாகலின் அவனோடு களித்திருப்பவள் போல் நடித்து உலக்கையைத் தொட்டு விட்டாள். அதனால் உலக்கையினுடைய ஆற்றல் அழிந்தது. வத்சந்திரன் அரக்கனோடு போரிட்டு அரக்கனைக் கொன்றான். முதாவதியையும் அவளுடைய உடன் பிறந்தவர்களையும் விடுவித்து விடூரதனிடஞ் சேர்த்தான். விடூரதன் தான் அறிவித்திருந்தபடி முதாவதியை மணஞ் செய்து கொடுத்ததோடு நாட்டிலும் பாதியைக் கொடுத்தான். வத்சந்திரன் பல மக்களைப் பெற்றான்.

**வம்பப்பரத்தையும் வறுமொழியாளனும்** - இவர்கள் இருவருந் தீயொழுக்கமுடையவர்களாய்ப் பல இடங்களினும் அலைந்து திரிந்து கொண்டிருந்தனர். கோவலனுங் கண்ணகியும் கௌந்தியடிகளோடு மதுரைக்குச் செல்லும் போது இடைவழியில் தங்கியிருந்த அவர்களைக் கண்டு வீணுரையாடி இழித்துப் பேசினர். அதனால் சினங் கொண்ட கௌந்தியடிகள் இவர்களிருவரையும் நரிகளாகுமாறு சபித்தனர். கண்ணகியுங் கோவலனும் வேண்டிக்கொண்டதற்கிணங்கி ஓராண்டிற்குப் பிறகு நரிவடிவம் ஒழியுமாறு சாப நீக்கம் பெற்றனர்.

**வயந்தகன்** - உதயணனுடைய அமைச்சர்களுள் ஒருவன். அவனுக்கு உயிர்த் தோழன். குலத்தால் பார்ப்பனன். வில்வித்தை முதலிய பல கலைகளினும் வல்லவன். அவனுடைய குறிப்பறிந்து நடந்து சிறப்புப் பெற்றவன். பகைவன் விடுத்த மாய யானையைத் தன்னுடைய யானையாக நினைத்து அதனைப் பிடித்தற்குப் புறப்பட்ட உதயணனைப் பார்த்து, "நிமித்தம் நன்றாக இல்லாமையாற் புறப்பட வேண்டாம்" என்று தடுத்தவன். அந்தயானையின் உள்ளேயிருந்தும் வெளியே யிருந்தும் போர் செய்யத் தொடங்கிய வீரர்களோடு போர்செய்தவன். யூகியிடம் செய்தியைக் கூறி மேலே செய்ய வேண்டிய காரியங்களை விரைவாகச் செய்ய வேண்டுமென்று ஊக்கியவன். யூகி கூறியவைகளை யெல்லாம் உடனுக்குடன் செய்து முடித்தவன். இவனுக்கு உதயணன் நல்ல நகரங்கள் பதினொன்றை நன்கொடையாக வழங்கியதோடு நாடோறும் ஆயிரம் பொன் கொடுத்துத் தன்னுடனேயே வைத்துக் கொண்டிருந்தான்.

**வயிரப்பமுதலியார்** - இவர் ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகட்கு முன்பு தொண்டைவள நாட்டில் குன்றக் கோட்டத்திலே மெய்யூர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். கல்வியறிவிலும் நல்லொழுக்கத்திலுஞ் சிறந்தவர். இவர் எல்லாரிடத்திலும் அன்புடையவராகவும் கொடையாளராகவும் விளங்கி இருந்தார். இவருடைய பொறுமை மிகு வியக்கத்தக்கதாக இருந்தது. இவருடைய பண்ணையாட்களுள் கண்ணன் என்பவன் ஒருவன் இருந்தான். அவனுக்குச் சில பன்றிகள் இருந்தன. அவைகளுள் ஒரு பன்றி ஒரு நாள் மலையன் என்னும் ஒரு புலவனுடைய விளைநிலத்துட் புகுந்து மேய்ந்து விட்டது. அப்புலவன் சிறந்த புலவனல்லனாயினும் பெரும் புலவன் போல் நடித்து வீண் ஆர்ப்பாட்டஞ் செய்பவன். அப்புலவன் தன் நிலத்தில் மேய்ந்த பன்றியை அடித்துக் கொன்று விட்டான். உடனே பன்றிக்குரிய கண்ணன் அங்கு ஓடினான். புலவன் அவனையுந் தன்னுடைய கையிலிருந்த மண்வெட்டியால் வெட்டிக் கொன்று விட்டான். இச்செயல்களைக் கண்ட வயிரப்ப முதலியார் விரைவாக அங்குச் சென்றார். அப்புலவன் முதலியாருடைய கன்னத்திலும் ஓங்கியறைந்தான். முதலியார் சினமடைய வில்லை. அப்போலிப் புலவனைப் பார்த்துப் "பெரியீர்! பிழையைப் பொறுத்துக்கொள்ளுங்கள். என்னுடைய விளைநிலங்களில் நன்கு விளைந்துள்ள ஒரு நிலத்தில் அறுவடை செய்து கொள்ளுங்கள்" என்று கூறினார். இவருடைய பெருந்தன்மையை நினைத்து அப்புலவன் மிகுந்த நாணமடைந்தான். இத்தகைய நல்ல மனிதனுக்குத் தொல்லை கொடுத்துவிட்டோமே என்று உள்ளம் இரங்கினான். வயிரப்பமுதலியாரிடந் தான் செய்த குற்றத்தைப் பொறுக்க வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டான். வயிரப்ப முதலியாருடைய பெருந்தன்மையைத் தொண்டை மண்டல சதகமுடையார் "பயிரைப் பெரும் பன்றி தின்றதற்காகப் பரிசனத்தோர், உயிரைப் பருகி உடலவர்க்கீய ஒரு புலவன் செயிரைப் புடைத்துந் தானே பொறுத்தந்தச் செய்யுதவும், வயிரப்பன் வாழ்வானதுந் தொண்டை மண்டலமே" என்று பாடியுள்ளார்.

**வயிரவர்** - தாருகாசுரனைக் கொன்ற சக்தியின் சினத்தீ எழுந்து குழந்தை உருக்கொண்டிருந்தது. அதற்குக் காளி பாலூட்டி வளர்த்தனள். இவ்வயிரவரின் வகைகள் கால வயிரவர், அசிதாங்க வயிரவர், குரோத வயிரவர், சண்ட வயிரவர், உன்மத்த வயிரவர், கபால வயிரவர், விபூடண வயிரவர், மார்த்தாண்ட வயிரவர், சுதந்திர வயிரவர், சுவேச்சா வயிரவர், உலோக வயிரவர், காலவயிரவர், உக்கிர வயிரவர், பிரச்சைய வயிரவர், நின்மாண வயிரவர், பூடண வயிரவர்எனப் பலவகைப்படும். ஒவ்வொரு பெயரும் ஒவ்வொரு காரணத்தைக் கொண்டு உண்டாயின. காலவயிரவன் சிவபிரானுடைய கட்டளைப்படி உலகத்துப் பொருள்கள் யாவும் அழியுங்காலத்தில் மறையாகிய நாயின் மீது ஏறிக் கொண்டு உலகங்களைத் தம்முடைய நெற்றி விழியால் தீயாக்கிக் கொண்டு உலவுவார். இவரைப் பற்றி விரிவாகப் புராணங்கள் கூறும்.

**வரகவி** - வரமாவது எனக்குஅருள் புரிய வேண்டுமென்று தெய்

வத்தை வேண்டிப் பெறுகிற சிறப்பு. அதிகக் கல்வியறிவில்லாதவர்கள் தெய்வபக்தியுடையவர்களாகவிருந்து அவர்கள் செய்யுள் பாடுந் திறனுண்டாக வேண்டுமென்று வேண்டி அவ்வேண்டுகோட் பயனால் கவி பாடத்தொடங்குவார்களானால் அவர்களுடைய கவி வரகவி என்னும் சொல்லைப் பெறுதற்குரியதாகும்.

**வரகுணதேவன்** - இவன் வரகுண பாண்டியன் எனவுங் கூறப்பெறுவான். இவன் சுந்தரேச பாத சேகர பாண்டியனுடைய மகன். இவன் ஒரு முறை வேட்டைக்குச் சென்ற போது வேட்டையாடிவிட்டு மிகு விரைவாக நகரத்தை நோக்கித் திரும்பிவந்துகொண்டிருந்தான். அப்பொழுது வழியில் படுத்து உறங்கிக் கொண்டிருந்த ஓர் அந்தணன் மீது குதிரை ஏறி மிதித்துக் கொண்டு ஓடியது. அந்தணன் இதனால் இறந்தான். இதனை அரசன் உணர்ந்து கொள்ளவில்லை. அரசனைப் பிரமகத்திதொடர்ந்து வருத்தத் தொடங்கியது. அரசன் இதனைப் போக்கிக் கொள்வதற்குப் பல தருமங்களைச்செய்தும் போக்கிக் கொள்ள முடியவில்லை. சொக்கநாதப் பெருமான் திருமுன்பு முறையிட்டுக் கொண்டனன். சொக்கநாதர், "அரசனே! இன்னுஞ் சிலநாள் பொறுத்துச் சோழ மன்னன் உன்னோடு போரிட வருவான். அப்பொழுது நீ அவனைத் தொடர்ந்துசெல்வாய். அக்காலை நீங்கிவிடும்" என்று உருவிலி வாக்கு மூலம் உரைத்தருளினார்.

சிறிது நாட் சென்றது. சோழ மன்னன் போர் செய்ய வந்தான். போரில் சோழ மன்னன் தோற்றோடினான். வரகுணன் சோழ மன்னனைப் பின் தொடர்ந்து சென்றான். சோழவள நாட்டில் திருவிடைமருதூர் என்னுஞ் சிவப்பதியை அடைந்தான். காவிரியில் நீராடி மருதவாணர் திருக்கோயிலுக்குச் சென்றுவழிபாடு முதலியன முடித்துக் கொண்டு திரும்புகையில் சிவபிரான் அசரீரி வாக்காகப் பாண்டியனைப் பார்த்துக், "கிழக்குக் கோபுர வாயிலில் பிரமகத்தி நிற்கிறபடியால் மேற்குக் கோபுரவாயிலின் வழியாகச் செல்வாயாக" என்று திருவாய் மலர்ந்தருளினார். வரகுணதேவன் அவ்வாறே சென்றான். பிரமகத்தி தொடராமல் நீங்கியது. வரகுணன் பலதிருப்பணிகள்செய்துமதுரையடைந்தான்.

இவன் திருக்கைலாய தெரிசனங்காண விரும்பினான். சிவபிரான் அக்காட்சியை மதுரை மாநகரில் காட்டியருளினார். அரசனுடைய சேவகர்கள் கள்ளன் ஒருவனைப் பிடித்துக் கட்டிக்கொண்டு வந்து அரசன் முன்பு நிறுத்தினர். அரசன் அக்கள்ளனுடைய உடலில் திருநீற்றைக் கண்டு அவனை வணங்கிக் கட்டவிழ்த்து விட்டான். நரிகள் ஊளையிட அவைகள் குளிரால் ஊளையிடுவதாக எண்ணி ஆடைகள் அளித்தான். தவளைகள் கூவுதலைக் கேட்டுப் பொன்னளிக்கச் செய்தான்.

சிவப்பணிக்குக் காயவைத் திருந்த எள்ளை ஒரு கள்ளன் களவு செய்து உண்டான். இவன் ஏன் இவ்வாறு செய்தனையென்று அக்கள்ளனைக் கேட்கக் கள்ளன் மறுபிறப்பில் சிவத் திருப்பணி செய்யும் பிறப்பையடைய இவ்வாறு செய்தேன் என்றான். அரசன் இதனைக் கேட்டு மகிழ்ந்து அவனுண்ட எச்சில் எள்ளில் சிறிதளவு தானும் வாங்கியுண்டான்.

வழியில் மண்டையோடு ஒன்று கிடக்கக்கண்டு "உன்னுடைய நிலை எனக்கு எப்பொழுது வரும்?" என்று கேட்டு அவ்வோட்டைவணங்கினன். திருக்கோயிற் சுற்றில் கிடந்த நாய் மலத்தைத் தானே அப்புறப் படுத்தினன். வேப்ப மரங்களின் பழங்கள் மரத்தடியில் பரவிக்கிடத்தலைக் கண்டு அவைகள் சிவலிங்கம்போல் இருக்கின்றன வென்று சிறப்புச் செய்தான். மணம்செய்த தன்னுடையமனைவியின்பேரழகைக் கண்டு வியந்து இவள் மருதவாணனுக்கே உரியவள் என்று அப்பரமனிடம் ஒப்படைத்தான். பரமன் அவளைத் தன்னோடு ஒன்று படுத்திக்கொண்டு கை மட்டும் வெளியே நீட்டியிருக்கச் செய்ததை வேண்டிக் கையையும் மறைத்துக் கொள்ளச் செய்தான். இவனுடைய பெருமையை முற்றத் துறந்த பட்டினத்தடிகளும் வியந்து திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் புகழ்ந்துபாராட்டியுள்ளார்.

**வரகுணமங்கை** - பாண்டிவள நாட்டிலுள்ள திருமால் திருப்பதிகளில்ஒன்று. திருநெல்வேலி புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கில் 18 மைல் தொலைவில் உள்ளது. திருமால் பெயர் விசயாசனர். தாயார் திருப்பெயர் வரகுணவல்லி. விசயகோடி விமானம் என்பது விமானத்தின் பெயர். திருமால் வீற்றிருந்த 'திருக்கோலம்'. நம்மாழ்வார் இத்திருப்பதியைப் பாடி இருக்கிறார்.

**வரதகுரு** - இவர் காஞ்சிமா நகரில் தேவராசப் பெருமாளுக்கு மகனாகத் தோன்றினர். எங்களாழ்வான் என்பவரிடத்தில் பாடியத்தைக் கேட்குமாறு தந்தை இவருக்குக் கட்டளையிட்டார். மகனாகிய வரதகுரு எங்களாழ்வான் வீட்டிற்குப்போய் வீட்டு வாசற் கதவைத் திறந்தார். இவருடைய வருகையை உணராத எங்களாழ்வான், "யார்?" என்று உசாவினர். இவர் நான் தான் என்றுகூறினர். இம்மறுமொழியைக் கேட்ட எங்களாழ்வான் 'நான்செத்தபிறகு வருக' என்று சொல்லி யனுப்பினர். வரதகுரு இச்செய்தியைத் தந்தையாரிடங் கூறினர். தந்தையார் குருவிடம் நான் என்னும் ஆணவத்தை ஒழித்து அடியேன் என்று கூறவேண்டும். நான் என்ற கூறியபடியால் இவ்வாறு இயம்பியுள்ளார் என்று சொல்லி மீளவும் அனுப்பினர். வரதகுரு மீண்டும் ஆசாரியாரிடஞ் சென்று, அடியேன் இராமநுசதாசன் என்று கூறி வணங்கினர். ஆசாரியார் மகிழ்ந்தார். மகனைப்போல் அன்போடு கொள்ளி வைத்து இறுதிச்சடங்குகள் செய்வதாய் உறுதிமொழிதருவீராகில் பாடியத்தை அருளுகிறேன் என்று கூறினர். வரதகுரு இச்செய்தியைத் தந்தைக்கு இயம்பினர். தந்தையினுடைய உடன்பாடு பெற்று ஆசாரியாருக்கு உறுதிமொழி கூறினர். பாடியம் முதலியவைகளை ஐயந்திரிபறக் கற்றார். ஆசாரியார் திருநாட்டுக்கு எழுந்தருளிய காலத்தில் அவருக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களைச் செய்தார். பலருக்குப்பாடியம்முதலியவைகளைக் கூறிக் கொண்டிருந்தார். கிடாம்பிஅப்புள்ளார், வடக்குத் தெருவீதிப் பிள்ளை முதலியவர்கள் இவரையடைந்து அருளுரை கேட்டுக் கொண்டிருந்தார்கள். இவர் பாடியச் சொற்பொழிவு செய்துகொண்டிருக்கையில், ஒருநாள் அப்புள்ளார் வேங்கடநாதாசாரியரென்னும் பிள்ளைப்பெயர்

பெற்ற வேதாந்த தேசிகரோடு அருளுரை கேட்டுக் கொண்டிருக்கையில், வேதாந்த தேசிகருடைய பேரொளியைக் கண்டு மயங்கினுர். அருளுரை கூறி வந்ததில் விட்ட இடம் தெரியாமல் திகைத்தார். அகவை மூன்றேயுள்ள வேங்கட நாதாசாரியார் விட்ட இடத்தைச் சுட்டிக் காட்டினுர். இதனுல் வரதகுரு மிகுந்த களிப்படைந்தார். தூப்பில் பிள்ளைக்கு வாழ்த்துரை வழங்கி அப்புள்ளாரிடம் ஒப்புவித்தார். பாடியாதிகளைக்கூறியருளுமாறு கட்டளையிட்டார். பராசபட்டர் என்பவர் இவருடைய அருளுரையைக் கேட்டுக் கொண்டு வந்தார். அவர் ஒரு நாள் வராதிருக்கக்கண்டு அருளுரையை நிறுத்தினுர். மற்றவர்கள் சொற்பொழிவை நிறுத்தாமல் நடத்துமாறு கூறினுர்கள். வரதகுருஅவர் வந்தவுடன் தாம் கூறியபொருளைக் கூறச் செய்து அதற்குச் சுருதப் பிரகாசிகை என்று பெயரிட்டார்.

இவ்வாறிருக்குங் காலத்தில் சிலர் இவரிடஞ் சொற்போர் புரிதற்கு வந்தனர். அவர்களோடு சொற்போரிடுதற்குஅப் புள்ளார் இவரிடம் உடன்பாடு கேட்டார். இவர் உடன்பாடு தரவே சொற்போரிட்டு வென்ருர்.ஆகவேஅவருக்கு வாதிஹம்சாம் புதர்என்று பெயரிட்டார். பெருமாளுக்கு நாடோறும் பாலமுது செய்வித்து வந்தார். ஒருநாள் பாலமுது படைக்கைகையில்பால்சூடாக இருத்தலைக் கண்டு தம்முடைய விரலைப் பாலில் தோய்த்துப் பார்த்தார். இதனைக்கண்ட பெருமாள், தாய்அன்ருே இவ்வாறு பார்த்துக் குழந்தைக்குப் பாலூட்டுவாள்; இவர் என்னுடைய அம்மாளோ என்று கூறினுர், அதுமுதல் அம்மாள் எனவும் இவருக்குப்பெயருண்டாகியது.

இவர் ஒருநாள் காட்டின் வழியாகத் திருவேங்கடத்திற்கு சென்ருர். அப்பொழுது பெருமாள் இவருக்கு உணவளித்துக் காத்தார்.இவ்வாறு சிறப்புடன் வாழ்ந்திருந்த இவர் இறுதியில் திருநாட்டுக்கு எழுந்தருளினுர்.

**வரந்தருவார்** - பாரதம் பாடிய வில்லிபுத்தூராருடைய மகன். இவர் தம்முடைய தந்தை பாடிய பாரதத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடியதோடு தந்தையார் பாடாது விட்ட பகுதிகளையும் பாடி முடித்தார். இவர் தம்முடைய தந்தையாரிடம் கல்வி பயிலும் போது, தந்தையார் கூறியதற்கு மாருகத் தாமொன்றைக் கற்பித்துக் கூறினுர். இதனுற் சினங்கொண்ட தந்தையார் தம்மை விட்டு அகலுமாறு கூறினுர். இவரும் அவ்வாறே அகன்று சென்று வேருேர் ஆசிரியரிடம் கல்வியை நன்கு பயின்று தேறினுர். தந்தையார் பாரதம் பாடி அரங்கேற்றுகையில் தாம் உருமாறிச் சென்றிருந்தார். தந்தையார், "ஆக்குமா றயனும்" என்னுஞ் செய்யுளைக் கூறி அரங்கேற்றத்தைத் தொடங்குகையில் அரங்கினர், "ஆனைமுகக் கடவுள் வணக்கம் இல்லையே" என்று தடுக்கத் தொடங்கினர். அப்பொழுது இவர் எழுந்து, "இது பலவகைச் சமயத்தவருங் கூடியிருக்கும் அவையாகலின் இவ்வாறு பொது வணக்கங் கூறப்பட்டது. நூலாசிரியர் ஆனைமுகக் கடவுள் வணக்கமும் முன்னே கூறியுள்ளார். அதனை நாம் அறிவோம்" என்று கூறியதுடன் "நீடாழியுலகத்து" என்னும் பாடலைக் கூறி அரங்கேற்றத்தைமேலுந் தொடரச் செய்தார்.

**வரதராயன்** - வீரபாண்டிய கட்டபொம்மனுடைய அவைக்களப் புலவர்களில் ஒருவன். யாதவ குலத்தினன். பாணர் குலத்தினராகிய வீரபாண்டியப் புலவரைக் குறிப்பாக இகழத் தொடங்கித் "தையல் நல்ல தையல்" என்று சொல்லி, அப்புலவர் திலகரால், "ஆட்டுக்கு நல்ல தையல்" என்று சிலேடையாக இகழப் பெற்றவன்.

**வரபதியாட் கொண்டான்** - திருமுனைப்பாடி நாட்டில் வக்கபாகை என்னும் ஊரில் செங்கோல் செலுத்திய அரசன். வில்லிபுத்தூராரைக் கொண்டு பாரதம் பாடச் செய்தவன் இவனே.

**வராக புராணம்** - இரணியாக்கன், இரணிய கசிபு முதலியவர்களுடைய பூர்வத் தோற்றம் அழிவு அவர்கள் திருமாலோடு போர் செய்தமை முதலியவைகளைக் கூறும் நூல். இஃது இருபத்து நாலாயிரம் கிரந்தம் உள்ளது.

**வராகப் பெருமாள்** - திருமாலின் பத்துப் பிறப்புக்களில் பன்றி வடிவப் பிறப்பும் ஒன்று. வராகப் பெருமாளைத் திருப்பன்றியாழ்வார் என்றுங் கூறுவர். திருமால் காட்டுப் பன்றி வடிவாகத் தோன்றி நீரிலே மூழ்கிக் கிடந்த நிலமகளை வெளியிலே கொண்டு வந்தார்.

**வராகமிகிரன்** - இவர் ஆறும் நூற்றுண்டில் வாழ்ந்திருந்தவர். ஐந்து வான நூல் முறைகளை விளக்கும் பஞ்ச சித்தாந்திகை என்னும் நூலை இவர் எழுதினர். வடமொழி இலக்கியத்தில் சிறந்த நூலான பிருகத்சம்கிதை என்னும் நூலும் இவரால் இயற்றப் பெற்றது. இந்நூல் 106 அதிகாரங்களை உடையது. இது வான நூல், குறி நூல், நில நூல் வெப்பதட்பம், விலங்குகள், மங்கையர், மணவினை, உவளகம், அறிகுறிகள் முதலிய செய்திகளைப் பற்றிக் கூறும் அறிவுக் களஞ்சியமாகும். பெண் குலத்தினரை வெறுப்போரை எதிர்த்துப் பெண்டிரின் சிறப்பை இக்கால முறையில் இந்நூல் விளக்கும்.

**வராகமுனிவன்** - காசிபர் குலத்தில் தோன்றிய ஒரு முனிவன். இவன் யோககிரியில் தவஞ் செய்தான். சிவபிரான் காட்சி தந்து எல்லாவகையான சித்திகளையுங் கொடுத்து இவன் தவஞ் செய்த மலைக்கும் வராக மலையென்று பெயர் கொடுத்தார். இம்மலை பாண்டிநாட்டில் இருக்கிறது.

**வராகன்** - பிரச்சோதனனுடைய அந்தப்புரக் காவலர்களில் ஒருவன். உதயணன் வாசவதத்தையைப் பிடிமீதேற்றிக் கொண்டு சென்றபொழுது அவனை மீட்டற்குச் சிறிது தொலை பின் தொடர்ந்து சென்றவன். வாசவதத்தையை உதயணன் கொண்டு சென்ற செய்தியைப் பிரச்சோதனனுக்கு முதன் முதலில் தெரியப் படுத்தியவன் இவனே.

**வரிஞ்சையூர்** - சோழவள நாட்டில் திருக்கீழ்வேளூர் என்னும் ஊருக்குத் தெற்கில் இரண்டு நாழிகை வழித் தொலைவில் இவ்வூர் உள்ளது. இவ்வூரில் முன்னாளில் சிவனடியார்களை இகழ்ந்து பேசியவர்களுடைய நாவினையரிந்த சத்திநாயனார் என்பவர் வாழ்ந்திருந்தார்.

**வருடகாரன்** - இவன் தருசகனுடைய முதல் அமைச்சன். மிகுந்த வஞ்சகச் சூழ்ச்சியுடையவன். அஞ்சாமையும் ஆண்மையும் உடையவன். பாஞ்சால அரசனை வெல்வதற்கு இவன் செய்த சூழ்ச்சிகள் பல. பாஞ்சாலனைக் கொன்ற பிறகு உதய

ணன் மனமுவந்து இவனைத் தழுவிக் கொண்டான். தான் அணிந்திருந்த அணிகலன்களை யும் ஏறியிருந்த யானையையும் உதயணன் இவனுக்குக் கொடுத் தான்.

**வருடை** - மரீசியின் மனைவி. இவ ளுடைய மக்கள் அறுவரும் நான்முகனுடைய சாபத்தினால் தேவகி வயிற்றிற் பிறந்து கம்ச னால் கொல்லப்பட்டனர். சில நாட்களுக்குப் பிறகு தேவகி வேண்டுகோளால் அவர்கள் தரு விக்கப்பட்டுச் சாப நீக்கம் பெற்றனர்.

**வருணன்** - இவன் திக்குப்பால கரில் ஒருவன். மேற்குத் திக் கிற்குத் தலைவன். சிவந்த உட லும் பாசம் ஏந்திய கையும் உடையவனாய் மகராசனத்தில் அமர்ந்திருந்து தன்னுடைய காவலைச் செய்வான். இவ னுடைய நகரத்திற்குச் சித்திரா வதி யென்று பெயர். இவ னுடைய மனைவியின் பெயர் சேட்டை. இவனுக்குத் தருமன் என்னும் பெயருடைய ஒரு மக னும், சுநந்தை எனவும் வாருணி யெனவும்பெயருடைய இரண்டு புதல்விகளும் உள்ளனர்.

**வருமுலையாரித்தி** - சங்ககாலப் பெண்பாற் புலவரில் ஒருவர். இவ்வம்மையாருக்கு இவ்வாறு பெயர் ஏற்படக் காரணம் தெரியவில்லை. இவருடைய பாடல் குறுந்தொகையில் 176 ஆவது செய்யுளாகச் சேர்க்கப் பட்டிருக்கிறது.

**வரையறுத்தபாட்டியல்** - இதற்குச் சம்பந்தப்பாட்டியல் எனவும் பெயர் உண்டு. இது சீர் முத லிய மங்கலங்களை வரையறுத் துக் கூறுகிற படியால் இவ்வாறு பெயர் பெற்றது. இந்நூலை இயற்றியவரைப் பற்றிய செய்தி யொன்றுந் தெரிய வில்லை. சம்பந்த முனிவர் என் னும் பெயருடைய ஒருவரின் மாணவர் இயற்றினார் என்று மட்டுந் தெரிகிறது.

**வர்த்தமானர்** - இவருக்குப் பின் னாளில் மகாவீரர் என்று பெயர் உண்டாகியது. இவர் உலகப் பற்றை யொழித்துத் துறவி களுடன் காலத்தைக் கழித் தார். கடுமையான தவஞ்செய் தார். பன்னிரண்டு ஆண்டுகட் குப் பிறகு சிறந்த மெய்யறிவு பெற்றார். வீடு பெறுவதற்குப் புதிய வழியை இவர் கண்டறிந் தார். தம்முடைய கொள் கையை மற்றவர்களுக்குக் கற் பித்தார். இவருடைய கொள் கையைப் பின்பற்றியவர்கள் சைனர்கள் எனப் பட்டனர். இவர் ஏற்படுத்திய மதம் சைனம். இவர் முப்பதாண்டுகள் வரை தம்முடைய சமயத்தை நாடெங்கும் பரப்பிப் பணி செய்து தம் எழுபத்திரண்டா வது அகவையில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். உண்மை யான நம்பிக்கை, உண்மையான அறிவு, நல்ல செய்கை ஆகி யனவே பிறப்பை யொழித்து வீடு பேற்றைக் கொடுக்கு மென்பது சைனர்களுடைய நம்பிக்கை. உயிர்களிடத்தில் அருளுடைமையை இவர்கள் முதன்மையான கொள்கையா கக் கொண்டனர். கி.மு. 300 இல் சைனசமயம் வடநாட்டிற் சிறந்து விளங்கியது.

**வலம்புரிவிநாயகர்** - காஞ்சியி லுள்ள ஒரு விநாயகருடைய பெயர். ஆனைமுகக் கடவுள் திருப்பாற்கடலில் நீர்விளையாட் டிற்காகச் சென்றார். அங்குத் துயின்று கொண்டிருந்த திரு மாலைத் துதிக்கையால் உறிஞ்சி உமிழ்ந்தார். சங்கு ஒரு புறமாகப் போய் விழுந்தது. பூதங்களில் ஒன்று அச்சங்கினை யெடுத்து முழங்கியது. திருமால்

அதனை வாங்கித் தருமாறு ஆனைமுகக் கடவுளை வேண்டினார். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே வாங்கிக் கொடுத்தார். இதனால் இப்பெயர் உண்டாகியது.

**வலாசுரன்** - இவனோர் அசுரன். இவன் சிவபிரானை யெண்ணித் தவஞ் செய்தான். சிவபிரான் தோன்றிக் காட்சி கொடுத்தார். தான் நெடுநாள் வாழவேண்டுமென்றும், இறந்தபின் தன்னுடைய உடல் ஒன்பான்வகை மணிகளாக வேண்டுமென்றும் வரம் பெற்றான். பிறகு தேவர்களுக்குத் துன்பஞ் செய்து கொண்டு திரிந்தான். இந்திரன் ஒரு சூழ்ச்சியினால் இவனை வெல்ல எண்ணினான். இவனைக் கண்டு, "ஓ அசுரனே! நீ மிகவுங் கெட்டிக்காரன். நான் உன்னோடு நட்புக்கொள்ள விரும்புகிறேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள், கொடுக்கிறேன்" என்று சொன்னான். வலன் இதனைக் கேட்டு நகைத்து, "நீயா எனக்கு வரங் கொடுப்பவன்! நீ விரும்புகிற வரத்தைக் கேள், நான் கொடுக்கிறேன்" என்று சொன்னான். இந்திரன் இவனைப் பார்த்து, "நீ மறுமையில் புகழுடைய வேண்டி எனக்கு வேள்விப் பசுவாக வேண்டும்" என்று கேட்டான். வலன் அவ்வாறே வேள்விப் பசுவானான். இவனுடைய உடலின் உதிரம் முதலிய பொருள்கள் ஒன்பான் வகை மணிகளாயின.

**வலிவலம்** - திருவாரூர்க்குத் தெற்கில் ஏறக்குறைய ஆறு கல் தொலைவில் உள்ள தேவாரம் பெற்ற ஒரு சிவப்பதி. வலியன் (கரிக்குருவி) வலம் வந்து வழிபாடு செய்தபடியால் வலிவலம் என்று பெயர் உண்டாகியது. இறைவர்பெயர் மனத்துணை நாதர்; இறைவி பெயர் மாழையங் கண்ணியம்மை.

**வல்லதரர்** - வல்லன்தரன் என்னும் இருவர் எப்பொழுதும் இணை பிரியாமல் ஒன்று சேர்ந்தே இருந்தபடியால் வல்லதரர் என்று கூறப்பெற்றனர். இவர்கள் மறவர் மரபினர். ஏறக்குறைய ஆயிரத்து எழுநூறு ஆண்டுகட்கு முன்பு மதுரையில் வாழ்ந்திருந்தார்கள். இவர்கள் கல்வியறிவற்றவர்கள். இவர்கள் வெளிக்கு இனிமையாகப் பேசுவார்கள். ஆனால் உள்ளத்திலே கபடம் நிறைந்திருக்கும். ஏமாந்தவர்களுடைய பொருளைக் கவர்ந்தே தங்களுடைய வாழ்க்கையை இனிது நடத்திக் கொண்டிருந்தார்கள்.

இவர்கள் வாழ்ந்திருந்த அதே மதுரையில் மங்கையர் இருவர் வாழ்ந்திருந்தனர். அவர்களுடைய பெயர் மரகதம் கமலம் என வழங்கின. அவர்கள் இருவரும் மாணிக்கவல்லி என்னும் ஒரு கணிகையின் புதல்விகள். அவர்கள் தம்முடைய குலத்தொழிலை அறவே ஒழித்துச் சீரிய அறிவுடையவர்களாய்ச் சிவபிரானுடைய திருவடியிடத்திலே பேரன்பு கொண்டு ஒழுகினர். அவர்களுடைய தாய் தேடிய பொருள் மிகுதியாக இருந்தது. அப்பொருளைக் கொண்டே வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தனர். கற்றவர்களையுஞ் சிவனடியார்களையும் மிகுந்த வணக்கத்தோடு போற்றிப் பாராட்டி உபசரித்தனர். அவர்களுடைய ஒழுக்கம் சிறந்த தவ ஒழுக்கமாக அமைந்திருந்தது.

வல்லதரர் இருவரும் வஞ்சகர்களாகையால் இப்பெண்கள் இருவரையும் ஏமாற்றிப் பொருள் கவர வேண்டுமென்று திட்டமிட்டு அதற்கு ஏற்ற

படியாக நடித்துக் கொண்டிருந்தனர். நங்கையர் இருவரும் திருக்காளத்திப் பெருமையைப் பலரானும் உணர்ந்து திருக்காளத்தி சென்று இறைவழிபாடு செய்ய வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தனர். மங்கையர்களுடைய எண்ணத்தையறிந்த வஞ்சகர்கள் அப்பெண்களிடம் சென்று "நாங்கள் திருக்காளத்திக்குப் போய் இறைவழிபாடு செய்ய முடிவு செய்திருக்கிறோம்" என்றனர். பெண்கள் இருவரும் தங்களுக்கும் அந்நோக்கம் இருப்பதாகவும் தாங்களும் உடன் வருவதாகக் கூறி வழிச்செலவுக்கென்று மிகுதியான பொருளையெடுத்து மூட்டை கட்டிக் கொண்டு அவ்வஞ்சகர்களோடு புறப்பட்டனர். நால்வரும் பல சிவப்பதிகளையும் போற்றி வழிபாடு செய்து கொண்டு காளத்தியை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். வஞ்சகர்கள் அப்பெண்களின் பொருள்களைக் கவர்ந்து கொண்டு ஓடச் சமயம் பார்த்தும் ஒவ்வொரு நாளும் ஒவ்வோர் இடையூறு ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. இறுதியில் நால்வரும் திருக்காளத்தியை நெருங்கி விட்டனர். இச்சமயம் விட்டால் இனி மேற் சமயம் வாய்க்காது என்று வஞ்சகர்கள் திருக்காளத்தியை அடுத்த காடொன்றில் அம்மங்கையர்களைக் கொலை செய்து பொருளைக் கவர முயன்றனர். அச்சமயத்தில் திருக்காளத்தியப்பர் அங்கு மாறுகோலத்தோடு தோன்றி இவ்வஞ்சகர்களை விரட்டியடித்து மங்கையர்களைக் காத்தருளினார்.

**வல்லநாதர்** - தொண்டைவள நாட்டில் திருவல்லம் என்னும் ஊரில் திருக்கோயில் கொண்டுள்ள இறைவனுடைய பெயர்; இறைவியினுடைய பெயர் வல்லாம்பிகை என்பர். இவ்வூரில் நந்திதேவர் இறைவனை நோக்கியிராமல் தம் பின் பக்கத்தைக் காட்டிக்கொண்டிருப்பர். இவ்வூர் தொண்டை நாட்டுத் தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. இவ்வூரின் பெயர் திருவலம் என வழங்கும். இங்குள்ள பிள்ளையார் இறைவனிடமிருந்து மாங்கனி பெறுவதற்கு இறைவனை வலம் வந்தவராகையால் வலம் வந்த பிள்ளையார் என்று கூறுவர்.

**வல்லபபாய்படேல்** - இந்திய விடுதலை வீரர்களில் ஒருவர். 1875 ஆம் ஆண்டிற் பிறந்தார். காந்தியடிகளின் வழி நின்றவர்களில் தலை சிறந்தவர். இவருக்குச் சர்தார் (தளபதி) என்று காந்தியடிகள் சிறப்புப் பெயர் வழங்கினர். இந்தியா உரிமை பெற்ற பிறகு நாட்டிற் சிதறிக் கிடந்த சிறுசிறு முடியாட்சி நாடுகளை இணைத்து 'அரசியல் ஐக்கியத்தந்தை' என்று பெயர் பெற்றார். இவருடைய ஆற்றலைப் பாராட்டி இரும்பு மனிதர் எனவுங் கூறுவர்.

இவர் குசரத்து நாட்டில் கெய்ரா மாவட்டத்தில் நடியாத் வட்டத்திலுள்ள கரம்சாத் என்னுஞ் சிற்றூரிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சாவேரிபாய்பட்டேல். வல்லபபாய் கரம்சாத் என்னும் ஊரில் தம்முடைய தாய்மாமன் வீட்டில் வளர்ந்தார். கல்வி கற்கும்போதே அஞ்சாமையும் ஆண்மையும் உடையவராகத் திகழ்ந்தார். நடியாத் ஆங்கில உயர்நிலைப்பள்ளியில் படித்து 1897இல் மெட்ரிகுலேஷன் தேர்வில் தேர்ச்சி பெற்றார். வழக்கறிஞராவதற்காக வழக்கறிஞர்களிடம் இருந்து சட்ட

நூல்களை வாங்கிப் படித்து பிளீடர் தேர்வில் தேறினார். 1910 ஆம் ஆண்டில் வழக்கறிஞராகத் தொழில் செய்யத் தொடங்கினார். சவார்பா என்னும் மாதைத் திருமணஞ் செய்து கொண்டார். 1904இல் மணிபெண் என்ற மகளும் 1905இல் தயாபாய் என்னும் மகனும் பிறந்தனர். 1908இல் மனைவியார் இறந்தார். வல்லபபாய் மறுமணஞ் செய்து கொள்ளவில்லை.

இலண்டன் சென்று 1910இல் பாரிஸ்டர் பட்டம் பெற்றார். ஆமதபாத் நகரத்தில் தொழில் நடத்தினார். பொருளும் புகழும் உண்டாயின.

1917ஆம் ஆண்டில் நண்பர்களின் விருப்பத்திற் கிணங்கி ஆமதபாத் முனிசிபல் சபையில் உறுப்பினராகிப் பணி செய்யலானார். 1918ஆம் ஆண்டு வரை அரசியலில் மிகுதியாக ஈடுபடாமலிருந்த இவர் பிறகு அரசியலில் ஈடுபட்டுக் காந்தியடிகளின் அடிச்சுவட்டில் பணி புரியலானார். 1922ஆம் ஆண்டில் காங்கிரசின் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பிறகு தலைவரானார்.

1936இல் அரசாங்கம் மாகாண சுயாட்சி அளித்த போது காங்கிரஸ் சட்டசபைகளையும் தலத்தாபனங்களையும் கைப்பற்றமுடிவு செய்து தேர்தலை நடத்தியது. இராசேந்திர பிரசாத், ஆசாத், சர்தார்படேல் ஆகியவர்களடங்கிய தேர்தல் குழு அமைக்கப்பட்டது. காங்கிரஸ் ஏழுமாகாணங்களில் அமைச்சரவை அமைக்கும் அளவுக்கு வெற்றி பெற்றது.

1947 ஆம் ஆண்டில் மௌண்ட்பாட்டன்பிரபு கவர்னர் செனரலாக வந்து அவ்வாண்டிலேயே பாகிஸ்தானைத் தனியாகப் பிரித்து விட்டு இந்திய யூனியனை அமைத்து ஆட்சியை இந்தியரிடம் ஒப்படைத்தார். அப்பொழுது பண்டித சவகர்லால்நேரு முதலமைச்சராகவும் படேல் துணையமைச்சராகவும் பதவி யேற்றனர். நாட்டில் அமைந்திருந்த 565 சிறு நாடுகளையும் இந்திய யூனியனோடு ஒன்று படுத்தினார் படேல். 1950இல் நோயுற்ற இவர் அவ்வாண்டிலேயே உலக வாழ்வைத் துறந்தார்.

**வல்லபர்** - இவரை வல்லபாசாரியார் என வழங்குவர். சுத்தாத்வைத வேதாந்தத்தைப் பின்பற்றியவர். ஆந்திர நாட்டில் வாழ்ந்து வந்த தைத்திரீய மதவகுப்பைச் சேர்ந்த தைலிங்க பிராமண குடும்பத்தைச் சேர்ந்தவர். மத்தியப் பிரதேசத்தில் ரெய்ப்பூர்க்கு அண்மையில் கம்பாரணியம் என்னும் ஊரிற் பிறந்தார். காசியில் கல்வி கற்றார். பாரத நாடு முழுவதையும் மூன்று முறை சுற்றி வந்தார். விசயநகரசமஸ்தானத்தில் விருது பெற்றார். பலர் இவருக்கு மாணவர்களானார்கள். இவர் அலகபாத்திற்கு இரண்டு மைல் தொலைவில் உள்ள ஆடெல் என்னுஞ் சிற்றூரிலேயே பெரும்பாலும் வாழ்ந்திருந்தார். இவர் தத்துவதீப நிபந்தம் முதலிய பதினாறு வேதாந்த நூல்களை இயற்றியுள்ளார். இராமாநுசர், மாத்துவர், நிம்பார்க்கர் ஆகியோரைப் போலவே இவரும் கடவுட் கொள்கையைக் கூறிய போதிலும் இவர் அத்துவைதமே உரைக்கிறார். வல்லபருடைய கொள்கை வைணவத்தின் வரலாற்றில் ஒரு முதன்மையான கட்டமாக அமைந்துள்ளது.

**வல்லபை** - விநாயகருடைய சக்தி. மரீசி முனிவர் நீராடச் சென்ற பொழுது அத்தடாகத்தில் இருந்த தாமரை மலர் ஒன்றில் சக்தி குழந்தையாக உருக் கொண்டிருந்தனள். முனிவர் அக்குழந்தையை எடுத்துக் கொண்டு வந்து தம்முடைய மனைவியாகிய தேவவல்லியிடம் கொடுத்து வளர்த்தார். வல்லபை என்று பெயரிட்டார். இவள் வளர்ந்து தவஞ் செய்து கொண்டிருந்தாள். ஆனைமுகக் கடவுள் அந்தணர் வடிவங் கொண்டு இவளிடம் வந்து தவத்தைக் கலைக்கப் பார்த்தார். இவள் கலங்காதிருந்தாள். ஆனைமுகக்கடவுள் தம்முடைய உண்மை வடிவத்தைக்காட்டித் திருமணஞ் செய்து கொண்டார். இவளைத் திருமணஞ் செய்துகொண்ட படியினால் ஆனைமுகக் கடவுளுக்கு வல்லபை கணேசர் என்று பெயர் உண்டாகியது.

**வல்லார்கிழான்பண்ணன்** - இவன் வல்லார் என்னும் ஊருக்குத் தலைவன். இவ்வூர் காட்டுநாட்டு வன் புலத்தூராகும். இவ் ஊரைச் சுற்றி வலிமையான அரண் இருந்தது. அதனைச் சார்ந்து காவற்காடும் இருந்தது. சோணாட்டுமுகைய லூர்ச் சிறுகருந்தும்பியார் என்னும் புலவர் இவனைப் பாடியுள்ளார்.

**வல்லாளராசன் கோபுரம்** - திருவண்ணாமலை அண்ணாமலையார் திருக்கோயிலில் உள்ள கிழக்குக் கோபுரம். இது வல்லாளமகாராசன் என்னும் மன்னனால் கட்டப்பட்டபடியால் இவ்வாறு பெயர் பெற்றது. தம்முயிரைப் போக்கிக் கொள்ள எண்ணிய அருணகிரி நாதர் இக்கோபுரத்தின் மீது ஏறித்தான் கீழே குதித்தார். அவ்வாறு குதித்த அருணகிரி நாதரை முருகப்பெருமான் தம்முடைய கைகளால் தாங்கிக் கீழே விட்டார். இக்கோபுரம் பதினொரு நிலைகளும் இருநூற்றுப்பதினேழு அடி உயரமும் உள்ளது.

**வல்லாளன்** - (க) விசயநகரத்து மன்னர்களில் ஒருவன். இவன் திருவண்ணாமலையில் இருந்து அரசாட்சி செய்து கொண்டிருந்தான். மக்கட் பேற்றை விரும்பிப் பலவகையான தான தருமங்களைச் செய்து கொண்டிருந்தான். இவனுடைய மனப் பண்பாட்டை அறிய விரும்பிய சிவபிரான் சங்கமக் கோலம் பூண்டு பெண்போகம் வேட்டார் போல் இவனிடஞ் சென்று நடித்தார். அரசன் இவருக்களிக்க ஊரில் உள்ள விலைமகளிர் இல்லந்தோறும் பெண் தேடச் செய்தான். எல்லா இடங்களிலுஞ் சிவ பிரான் ஒவ்வொருவரை இருக்கச் செய்திருந்தபடியால் விலை மகளிர் அகப்பட வில்லை. மன்னன் தன்னுடைய மனைவிகளில் ஒருத்தியைச் சங்கமரிடம் அனுப்பி வைத்தான். அச்சமயத்தில் சிவபிரான் குழந்தையாகிக் காட்சியளித்தார். வல்லாள மன்னனுக்கு மகன்மைத் தன்மையும் பூண்டிருந்தார்.

**வல்லாளன்** - (உ) இவன் தொண்டைவள நாட்டிலே மாவளம் என்னும் ஊரிலே முன்னாளில் வாழ்ந்திருந்தான். வேளாண் மரபினன். உழவுத் தொழிலால் பெரும் பொருள் திரட்டிச் சிற்றரசனைப் போற் சிறந்து விளங்கினான். கொடைத் தன்மையும் இவனிடஞ் சிறந்து விளங்கியது. நன்கொடை பெற வந்த அனைவருக்கும் தக்கவாறு பொருள் வழங்கி வள்ளலாக விளங்கினான். காலகதியால் வறு

னுடைய வருவாய் குறைந்தது. ஆயினும் தன்னால் இயன்ற அளவு பிறருக்கு உதவி செய்து கொண்டிருந்தான். இவனுடைய வள்ளல் தன்மையை வியந்து அனைவரும்பாராட்டியிருந்தனர். ஒருநாள் இவன் ஒரு குளக்கரையில் நின்று சிலரோடு உரையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது அங்கு ஒரு புலவர் வந்தார். அவர் வள்ளலை வியந்துபுகழ்ந்தார். 'உங்களைத் தான் தேடிக் கொண்டு வருகிறேன். கட்டிக் கொள்வதற்கு நல்ல உடையில்லை' என்று சொன்னார். உடனே வள்ளல் தன்னுடைய இடையில் இருந்த உடையை அப்புலவரிடம் அவிழ்த்துக் கொடுத்துவிட்டுத் தான் குளத்து நீரில் இறங்கி நின்று கொண்டான். சிலரை வீட்டுக்கனுப்பிஉடைகொண்டு வருமாறு செய்து அவைகளை அணிந்து கரை யேறினான். இவனுடைய செய்கை அனைவருக்கும் மிகுந்த வியப்பை உண்டாக்கிற்று. இவனுடைய வள்ளன்மையை வியந்து தொண்டைமண்டலசதகம்உடையாரும். "உளத்துத் தயையுற்ற ஓர்புலவோனுக் குடையுதவிக், குளத்துப்புனலையுடுத்துநின்றே பின்பு கூவியவைக், களத்துப் புகுதக்கலை யுடுத்தே கரையேறி வந்த' வளத்துப் புகழ்பெற்ற வல்லாளனுந் தொண்டை மண்டலமே" என்று பாடியுள்ளார்.

**வல்லாளன்** - (௩) இவன் பல்லி என்னும் நகரத்தில் வைசியனாகிய கல்யாணனுக்கும் இந்துமதி என்பவளுக்கும் மைந்தனாகப் பிறந்தான். இவனுக்குக் கடவுள் அன்பு இளமையிலேயே அமைந்திருந்தது. கற்களை விநாயகராக வைத்து வழிபாடு செய்தான். பிற சிறுவர்களையுந் தன்னோடு சேர்த்து வழிபாடு செய்யச் செய்தான். பிற சிறுவர்களின் தந்தையர் வல்லாளன் தங்கள் சிறுவர்களையுங் கெடுப்பதாகத் தந்தையாகிய கல்யாணனிடங் குறை கூறினர். கல்யாணன் தன் மகனிடத்திற் சினங் கொண்டான். அவன் கணபதியாக வழிபட்ட கற்களை யெடுத்து அப்பால் எறிந்தான். மகனை மரத்தோடு கட்டிவைத்து அடித்தான். "நீ வழிபடும் பிள்ளையார் வல்லவரானால் உன்னுடைய கட்டை அவிழ்த்து விடட்டும்" என்று கூறிவிட்டுப் போய்விட்டான். ஆனைமுகக்கடவுள் சிறுவனுக்கு மாணியாகக் காட்சிதந்து கட்டவிழ்த்து விட்டார். கல்யாணனுக்குத் தொழுநோயை உண்டாக்கினார். கடவுளன்பற்ற கல்யாணன் பல தொல்லைகளுக் குள்ளானான்.

**வல்லான்** - (௧) இவன் ஒருவீரன். நீதிநெறிச் சோழன் என்னும் ஆதித்த சோழன் காலத்தில் அரசர் பலரை வதைத்துக் கொன்றான். செங்குந்தரில் பழுவூர் வீரன், பழுவைநாராயணன், கச்சித்தனியன், ஒற்றியூரான், களத்தூரான் புற்றிடங் கொண்டான், கோளாந்தகன், புலியூர்ப் பள்ளிகொண்டான், பிணவன், கண்டியூரான். முதுகுன்றமணியன், தஞ்சை வேம்பன் என்னும் பன்னிருவருக்குத் தலைவனாக இருந்தான்.

**வல்லான்** - (௨) மதுரையில் குலோத்துங்க பாண்டியன் அரசியற்றிக் கொண்டிருக்குங் காலத்தில் இவன் வாழ்ந்திருந்தான். வாள்வித்தையில் வல்லவன். மாணவர் பலருக்கு வாள் வித்தை கற்பித்து அதனால் காலங்கழித்துக் கொண்டிருந்தான். இவனிடம் வாள்வித்தை பயின்றவர்களில் சித்தன் என்பவனும் ஒருவன். இவன் வாள்

வித்தையை நன்கு கற்றுக் கொண்ட பிறகு ஆசிரியனுக்குப் பகைவனாக மாறினான். போட்டியாகத் தானும் வாளாசிரியனாகிப் பலருக்கு வாள் வித்தை பயிற்றத் தொடங்கினான். ஆசிரியனாகிய வல்லானுடைய மனைவியையும் விழைந்தான். மதுரைக் கடவுள் வல்லானைப் போல் கோலங் கொண்டு சித்தனைக் கொன்றார்.

**வல்விலோரி** - வள்ளல்களின் வரிசையில் கூறப்படும் ஓரி இவனே. இவன் கொல்லி மலையை ஆட்சி செய்தவன். கொல்லிமலை பலா வாழை கொய்யா முதலிய கனி மரங்களால் நிறையப் பெற்றது. இம்மலையில் தெய்வங்கள் கூடி அழகு மிகுந்த பாவை யொன்றைச் செய்து வைத்திருந்தன. அப்பாவையைக் கொல்லிப் பாவை யென்பர். இவனுக்குரிய இம்மலையைச் சேர மன்னர் சூழ்ச்சி செய்து கைப்பற்றிக் கொண்டனர். இவ்வல்வில்லோரி பெரிய கொடையாளி. இசைத் துறையிலும் மிகுந்த ஈடுபாடுடையவர். இவனைக் கபிலர், கல்லாடர், வன்பரணர் முதலியோர் சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

**வழித்துணைநாதர்** - விரிஞ்சி புரத்தில் கோயில் கொண்டிருக்கும் இறைவனுடைய பெயர். இப்பெயரை வடமொழியாக்கி மார்க்க சகாயர் எனக் கூறுவர். இறைவியினுடைய பெயர் மரகதவல்லி. குடகு நாட்டிலே இருந்து தொண்டை நாட்டுக்கு மிளகு விற்க வந்த சிவநேசன் என்னும் வணிகனுக்கு வழித்துணையாக வந்து வழிப்பறி செய்ய வந்த கள்ளர்களை யெல்லாம் விரட்டியடித்த படியால் வழித்துணைநாதர் என்று பெயர் பெற்றார். மறைச்சிறுவன் ஒருவன் வழிபடற் பொருட்டுத் திருமுடியை வளைத்தவர் இப்பெருமானே; "வளைத்தவரை ஒரு சிறுவன் கிளையோடு கிளரச் சென்னி வளைத்தவரை வணிகனுக்கு வழித் துணையாய் நடந்தவரை வழுத்துவோமே" என்பது பாட்டு.

**வழுதி** - வழுத்தத்தக்க புகழுடையவனாக விளங்கிய படியால் பாண்டியனுக்கு ஏற்பட்ட சிறப்புப் பெயர்.

**வளர்கடாவைக் காதறுத்த தொண்டைமான்** - கொங்குவள நாட்டில் மூலனூரில் தொண்டைமான் என்னுஞ் சிறப்புப் பெயர் கொண்டவர்களின் வழிமுறையில் இத்தொண்டைமான் தோன்றினான். சங்ககிரி துர்க்கத்திலிருந்த நவாபுவை இத்தொண்டைமான் காண விரும்பினான். அங்குப் போய்ப் பலநாள் காத்திருந்தான். நவாபின் பேட்டி கிடைக்கவில்லை. இத்தொண்டைமான் அஞ்சாமையும் வீரமும் உடையவன். அரசனுடைய மகன் அருமையாக வளர்த்துவரும் ஒரு செம்மறிக் கடாவைப் பிடித்து இரண்டு காதுகளையும் அறுத்து விட்டான். வீரர்கள் இவனைப் பிடித்துக் கொண்டுபோய் அரசன் முன் விட்டார்கள். இவன் அரசனைப் பார்த்துப் "பல நாட்களாகத் தங்களைக் காணக் காத்திருந்தும் முடியவில்லை. இவ்வாறு செய்தாவது தங்களைக் கண்டு என்னுடைய செய்தியைக் கூறலாம் என்று இவ்வாறு செய்தேன்" என்றான். அரசன் இவனுடைய சூழ்ச்சிக்கு வியந்து, "வளர்கடாவைக் காதறுத்த பஹதூர் தொண்டைமான்" என்ற சிறப்புப் பெயர் வழங்கினான். இத்தொண்டைமானுடைய இடுகுறிப் பெயர் தெரியவில்லை.

**வளவர்** - சோழர்கட் குண்டாகிய சிறப்புப் பெயர்களுள் ஒன்று. வளநாட்டின் தலைவர்கள் என்பது பொருள். இச்சொல் பெயரின் இறுதியிற் சேர்க்கப்பட்டு, திருமாவளவன், கரிகால்வளவன், கிள்ளிவளவன் என்று பெயர்களோடு சேர்த்து வழங்கப் பட்டன.

**வளவன்மாதேவி** - இவள் பராந்தகச் சோழனுடைய மனைவி. இவளுடைய பெயரால் அமைந்த ஊர் வளையமாதேவி என இந்நாளில் வழங்குகின்றது. இவ்வூர் தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ளது.

**வளைவணன்** - இவன் நாக நாட்டு மன்னன். இவனுடைய மனைவியின் பெயர் வாசமயிலை. இவர்களுடைய மகள் பீலிவளை.

**வள்ளத்தோல்** - வள்ளத்தோல் என்று பெயர் வழங்கும் இவருடைய இயற்பெயர் நாராயண மேனன் என்பது. வள்ளத்தோல் என்ற குடும்பத்தில் பிறந்தவராதலால் வள்ளத்தோல் என்று அழைக்கப் பட்டார். இவர் மலபார் மாவட்டத்தில் பொன்னானி வட்டத்தில் உள்ள மங்கலம் என்னுஞ் சிற்றூரிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் தாமோதரமேனன்; தாயார் பெயர்பார்வதிஅம்மாள். வள்ளத்தோல் முதலில் வடமொழிக் கல்வி பயின்றார். இவர் மலையாளத்தில் செய்யுள் இயற்றியதைப் போலவே வடமொழியிலும் இயற்றக் கூடிய ஆற்றலமைந்தவராக விளங்கினார். தம்முடைய பன்னிரண்டாவது வயதிலேயே செய்யுட்கள்இயற்றத் தொடங்கி விட்டார். இவர் கேரள நாட்டின் தேசியக்கவிஞராகப் போற்றப் படுகிறார். இவருடைய நாட்டுப் பாடல்கள் நாட்டின் விடுதலைக்குப் பெரிதுந் துணைபுரிந்தன. கதகளி என்னுங் கலையை உலகிலுள்ள முதன்மையான நாடுகள் எல்லாவற்றிலும் விளங்கச் செய்தவர் இவரே. மலையாள மொழிக் கவிஞர்களில் உயிருடன் இருந்தபோதே பேரும் புகழும் பெற்று விளங்கியவர் இவரைப் போல வேறு எவருமிலர்.

இவர் 1928 ஆம் ஆண்டில் கதகளிக் கலையைப் பரப்புவதற்காகக் கேரள கலாமண்டலம் என்ற கழகத்தை நிறுவினார். 1948 ஆம் ஆண்டில் சென்னை அரசினர் இவரைச் சென்னை மாகாணத்தின் மலையாள ஆத்தானக் கவிஞராக ஆக்கினர். 1950 ஆம் ஆண்டில் போலந்து நாட்டின் தலைநகரான வார்சாவில் நடந்த சமாதான மாநாட்டிற்குச் சென்றார். பிறகு ரஷியா முதலிய ஐரோப்பிய நாடுகளுக்குப் போய்வந்தார். 1953 இல் சீனாவுக்குப் போய் வந்தார்.

1954 இல் ரிக் வேதத்தை மலையாளத்தில் மொழி பெயர்க்கத் தொடங்கினார். வால்மீகி இராமாயணத்தை மலையாளத்தில் மொழி பெயர்த்தார். இவர் இயற்றிய நூல்கள் ஏறக்குறைய 40 ஆகும். இவர் 1958 ஆம் ஆண்டில் தம்முடைய 80 ஆம் வயதில் காலமானார்.

**வள்ளிக்கூத்து** - ஒரு குறமகள் வள்ளி வேடம் புனைந்து ஆடுகிற கூத்து வள்ளிக் கூத்து எனப் பெறும்.

**வற்சநாபன்** - இவன் ஒரு தவசி. இவன் தவஞ் செய்து கொண்டிருக்கையில் இவனைப் புற்று மூடியது. இந்திரன் இவனுடைய தவநிலையை அறிய எண்ணினான். பெருமழை பொழியச் செய்து புற்றை யிடிப்பித்தான். மழைநீர் புற்

றில் நுழையச்செய்தான். அறக்கடவுள் இதனை உணர்ந்தது. ஓர் எருமை வடிவங் கொண்டு புற்றை வயிற்றால் மூடி நின்றது. ஏழுநாள்வரை காத்தது. ஏழாம் நாள் தவசி விழித்துப் பார்த்தான். தன்னுடைய தவத்திற்கு இடையூறு வராமற் பாதுகாத்தது தருமதேவதை என்று உணர்ந்தான். வேறு இடஞ் சென்று தவஞ் செய்ய முயன்றான். தவநிலை கூடவில்லை. அறக்கடவுளை வணங்காத படியால் நேர்ந்த தீமை யென்று உணர்ந்தான். ஒருமலை மீது ஏறி விழுந்து உயிர் விட நினைத்தான். தரும தேவதை தோன்றித்தடுத்துத்தேற்றியது.

**வற்சாசுரன்** - இவன் கம்சனுடைய ஏவலால் கண்ணனைக் கொல்லும் பொருட்டுப் பசுங்கன்றின் உருவத்தோடு பசுக்களோடு கலந்து மேய்ந்து காலத்தை யெதிர் பார்த்துக் கொண்டிருந்தான். இதனை அறிந்த கண்ணன் இவனுடைய அண்மையிற் சென்று காலைப் பிடித்து அருகிலிருந்த விளா மரத்தில் எறிந்து கொன்றான்.

**வனப்பகையார்** - கோட்புலி நாயனுருடைய மகள். சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பதிகத்தில் வைத்துப் பாடப்பெறும் பெருமை பெற்றவள். தந்தையார் இவளைச் சுந்தரமூர்த்தியார்க்குத் தர அவர் மகண்முறை பாராட்டி யேற்றுக் கொண்டார்.

**வன்தொண்டர்** - சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானோடு வலிமையாகச் சொற்போர் செய்து அப்பெருமானுடைய திருவடித் தொண்டராகியபடியால் அவருக்கு வன்தொண்டர் என்று காரணப் பெயர் உண்டாகியது.

**வன்பரணர்** - இவர் கொங்குவள நாட்டில் செங்குந்தம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். பல நூல்களையும் நன்கு ஓதியுணர்ந்த பேரறிவாளர். சங்க காலத்துப் புலவர். இவருடைய இல்லாளின் பெயர் மந்தாகினி. இவர்கள் இருவருடைய இல்வாழ்க்கையின் பயனாக மக்கள் எழுவர் தோன்றினர். கல்வியறிவுடையோர்களைப் பிடித்துக் கனமாக வருத்தும் வறுமைப்பேய் இவரையும் பிடித்து ஆட்டி அலைக்கழித்தது. அப்பேயினுடைய தொல்லை பொறுக்காமல் பெரிதும் வருந்தினார். இவருடைய ஊரில் இருந்தவர்களோ இவருக்கு உதவிசெய்ய ஒருப்படவில்லை. வறுமையால் வாடி வதங்கி ஊரில் மாண்டொழிவதை விட வேறு எங்கேனும் சென்று ஏதாவது வழிபிறக்கிறதா பார்ப்போம் என்று எண்ணிய புலவர் குடும்பத்துடன் ஊரை விட்டுப் புறப்பட்டார். வழிநடந்து ஒரு காட்டையடைந்தார். பசித்துன்பம் பொறுக்காமல் அனைவரும் வாடி ஓரிடத்தில் சோர்ந்து கிடந்தனர். அப்பொழுதுஅங்கு நள்ளி என்னும் குறுநில மன்னன் வேட்டைக்கு வந்திருந்தான். அவன் சிறந்த கொடையாளி. நல்ல போர்வீரன். பாடறிந்துதவும் பண்பாளன். அத்தகையோன் வன்பரணரையும் அவருடைய குடும்பத்தினரையுங் கண்டான். அவர் புலவர் என்று அவன் அறிந்தானே இல்லையோ அனைவருடையபசிப் பிணியும் அவனுடைய உள்ளத்தை வருத்தியது. வேட்டையில் கிடைத்த மான் ஒன்றைப் பக்குவமாகச் சமைத்து அனைவருடைய பசித்துன்பத்தையும் போக்கினான். ஏதேனும் பொருளுதவி செய்ய வேண்டுமென்று எண்ணிய அவன் தன் கழுத்திலிருந்த முத்து மாலையையும் கையிலிருந்த கடகத்தையுங்

கழற்றிப் புலவருக்கு வழங்கினான். இவைகள் விலைவரம்பற்றவைகள். இவைகளைக் கண்ட புலவர் திகைத்துப் போனார். இம்மா பெரும் வள்ளல் யாரோ என்று எண்ணினார். "தங்களை அறிந்து கொள்ள விரும்புகிறேன்" என்று கூறினார். நள்ளியோ எத்தகைய மறு மொழியுங் கூறாமல் அவ்விடம் விட்டுச் சென்றான். பிறகு அங்கே வந்த சிலரால் அவ்வள்ளல் நள்ளி என்பதை உணர்ந்தார். பிறகு அங்கு நிகழ்ந்தவைகளை யெல்லாம் செய்யுள் ஒன்றில் அமைத்துப் பாடினார். அச்செய்யுள் புறநானூற்றில் சேர்க்கப் பட்டிருக்கிறது.

**ன்பார்த்தான் பனங்காட்டூர்** - இது திருப்பனங்காட்டூர் என வழங்குகின்றது. கண்ணுவமகருஷி இத்தலத் திறைவனைப் பூசித்துக் கொண்டிருந்தார். ஒருநாள் படைக்கும் பொருள் யாதுங் கிடைக்காமற்போகவே கிடைத்த பனம்பழத்தைக் கொண்டுவந்து படைத்தார். இதனால் சிவபெருமான் களிப்புற்றுத் திருவருள் புரிந்தார். அதனால் இக்காலத்திலும் பனம்பழம் நிவேதிக்கப் படுகிறது. சுவாமி பெயர் பனங்காட்டீசுரர், அம்மன் பெயர் அமிர்தவல்லியம்மை. வன்பார்த்தான் என்பது இதற்கு அணிமையில் உளளது. சுந்தரமூர்த்திகள் இந்த வழியாக எழுந்தருளிய போது இறைவன் அந்தணக் கோலத்தோடு தோன்றிக் கட்டமுது தந்தருளினார். சுந்தரர் அந்தணக்கோல இறைவனைப் பார்த்து எவ்வூர் என்று உசாவினார். இறைவன், "வன்பார்த்தான் பனங்காட்டூருக்கும் இவ்வூருக்குமாக இருப்போம்" என்று கூறி மறைந்தருளினார். சுந்தரர் உண்மையுணர்ந்து பதிகம் பாடினார். இவ்வூர் காஞ்சிபுரத்திலிருந்து எட்டுக்கல் தொலைவில் உள்ளது.

**வாகபட்டர்** - இவருடைய முழுப்பெயர் விருத்தவாகபட்டர் என்பது. இவர் மருத்துவத்தில் வல்லவர். இவர் புத்த சமயத்தைச் சேர்ந்தவராக மதிக்கப் படுகிறார். இவர் அட்டாங்க சங்கிரகம் அஃதாவது மருத்துவத்தின் எட்டுப் பிரிவுகளின் சுருக்கம் என்னும் நூலை எழுதியுள்ளார்.

**வாகைப்பெருந்துறை** - இது துளுநாட்டில் தெற்கில் உள்ள ஊர். இது வாகைப் பறந்தலை எனவும் வழங்கியது. இவ்வூரில் பசும்பூட் பாண்டியனுடைய தலைவனை அதிகமான் என்பவன் போர் செய்து இறந்தான்.

**வாக்குண்டாம்** - தமிழில் உள்ள நீதி நூல்களில் ஒன்று. இந்நூலின் காப்புச் செய்யுள், வாக்குண்டாம் என்று தொடங்குவதால் இதற்கு இவ்வாறு பெயர் வந்தது. ஆத்திசூடியும் இவ்வாறுதான் பெயர் அடைந்துள்ளது. நூல்கட்கு இவ்வாறு முதற்சொல்லைக் கொண்டு பெயரிடுவது ஒருமுறை. இந்நூலைஇயற்றியவர்ஔவையார். இந்நூல் முப்பது செய்யுட்களைக் கொண்டது.

**வாக்பாடர்** - இவரை இளைய வாக்பாடர் என்பர். இவர், அட்டாங்க இருதய சம்மிதை என்னும் மருத்துவ நூல் ஒன்றை வடமொழியில் இயற்றினார்.

**வாசமயிலை** - இவள் நாகநாட்டு மன்னனாகிய வளைவணன் என்பவனுடைய மனைவி. பீலிவளை இவளுடைய மகளே.

**வாசவதத்தை** - இவள் உதயணனுடைய தேவியர் நால்வரில் முதல்வி. பிரச்சோதனனுடைய பட்டத்தரசியாகிய பதுமகாரிகையின் மகள். இவளுக்குச்

செவிலித் தாயாக இருந்தவள் சாங்கியத்தாய். அழகிலுங் குணத்திலுஞ் சிறந்தவள். பெண்பாலர்க்குரிய கலைகளி லெல்லாம் பயிற்சி பெற்றவள். அவைகளுள் இசையையும் யாழையும் உதயணன் பால் கற்றுத்தேறினள். மாலைதொடுத் தல்முதலிய கைத்தொழிலினுஞ் சிறந்தவள். தன்பாலுள்ள காதலால் உதயணன் அரசகாரி யங்களை மறந்துவிட்டானென்று பிறர்சொல்லக் கேட்டமையால் இவள் தான் இறந்துபோய்விட் டதாகப் பெயர்செய்து சில காலம் செவிலித்தாய் முதலிய வர்களோடு மறைந்திருந்தாள். உதயணனுடைய ஆக்கங்கருதிப் பல துன்பங்களை நுகர்ந்தாள். இவளுக்குத் தோழியர் பலர் இருந்தனர். அவர்களுள் காஞ் சனமாலை என்பவளிடத்தே தான் இவள் பற்று மிகுதியாகக் கொண்டிருந்தாள். இவள் மிகத் தூயவளாக இருந்தமையின் சோதவன் என்னும் முனிவரன் இவளுடைய கருப்பத்தில் தங்கி நரவாண தத்தனைப் பிறந்து வித்தியாதர சக்கரவர்த்தியாயி னன்.

**வாசுகியம்மையார்** - இவ்வம்மை யார் மார்க்க சகாயன் என்பவ னுடைய மகள். திருவள்ளுவ ருடைய மனைவியார். திருவள்ளு வர் இவ்வம்மையாரை மணந்து கொள்ளுமுன் மணலைக்கொடுத் துச் சமைக்கச் சொன்னார். அம் மையார் அவ்வாறே சமைத்துக் கொடுத்தார். அம்மையார் கிணற்றில் தண்ணீர் தூக்கும் போது திருவள்ளுவர் அழைக்க அம்மையார்குடத்தைத் தூக்கிய அளவில் விட்டுவர மீண்டுசெல் லும்வரையில்அஃது அப்படியே நின்றது. பகலில் நூல் நூற் கும்போது நூல்நாழி கீழேவிழ அதனை எடுத்தற்கு விளக்கேற்றி வருக என்று கூற அப்படியே விளக்கேற்றி வந்தவர். பழைய உணவு சுடுகின்றது என்று சொன்னபோதுவிசிறிகொண்டு விசிறியவர். உணவு படைக்கு முன் ஏனத்தில் ஊசியும் நீரும் வைக்கச் சொன்னதற்குக் கார ணத்தை இறுதிக் காலத்தில் உசாவியறிந்தவர். இவ்வம்மை யார்காலஞ் சென்றபோது திரு வள்ளுவர் இரங்கற்பாப் பாடி உள்ளம்வருந்தினார். அப்பாடல், "அடிசிற்கினியாளே" என்னும் முதலையுடையது.

**வாச்சையர்** - வசவர் மடத்தில் இருந்த ஒரு சிவனடியார். இவர் அரசனுடைய ஆணைக்கு அஞ்சிச் சோமநாதனைச் சிவராத்திரியில் தெரிசனஞ் செய்ய முடியாமல் வருந்தினார். சிவபிரான் ஒரு சிவகணத்தவராக வந்து, "இன் றிரவு சிவபிரான் வருவார்" என்று கூறிச் சென்றார். அவ் வாறேசிவபிரான் இரவில்வரத் தெரிசனஞ் செய்து, அன்று அளந்த நெற்கொட்டாரத் தையே கொட்டாரச்சோமேசம் என்னும் சிவத்தலமாகச் செய் செய்தார்.

**வாட்போக்கி** - திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் குளித்தலைக்குத் தென்மேற்கே ஐந்து மைல் தொலைவில் உள்ள ஒரு குன்று. இதனை இரத்தினகிரி எனவுங் கூறுவர். குன்றின் முடியில் இரத்தின கிரீசுவரர் கோவில் கொண்டிருக்கிறார். அரசன் ஒருவன் தானிழந்த இரத்தின முடியைத் தேடி இங்கு வந்து கடவுளைவழிபட்டான். கடவுள் ஒரு மனிதனைப்போல் வெளிப் பட்டு ஐந்துமைல் தொலைவில் உள்ள காவிரியிலிருந்து நீர் கொண்டுவந்துஒருதொட்டியில் நிரம்பும்படி கூறினார். எவ்வ ளவு நீர்ஊற்றினாலும் தொட்டி நிரம்ப வில்லை. இதனால் அர

சன் சினங்கொண்டு அம்மனி தனுடைய தலையின்மேல் வாளை வீசினான். அப்பொழுது மனி தனாகவந்திருந்த கடவுள்மறைந் தார். அவ்விடத்தில் தலையில் வெட்டுக் குறியோடு ஓர் இலிங் கம் தோன்றிற்று. இம்மலைக்கு மாணிக்கமலை எனவும் பெய ருண்டு. இம்மலை கைலைமலையின் ஒருமுடியென்று புராணங் கூறும். சித்திரைத் திங்களில் முழுத்திங்கள் நாளன்று மாலை யில் கதிரவனுடைய ஒளிஇலிங் கத்தில் படுவதாகச் சொல்லப் படுகிறது.

**வாணகோவரையன் சுத்தமல்லன் உத்தமசோழனாகியஇலங்கேசுவ ரன்**-இவன்குலோத்துங்கசோழ னுடைய அரசியல் அதிகாரி களில்ஒருவன்.வாணர் குடியிற் பிறந்தவன். அரசனால் வழங் கப்பெற்ற வாணகோவரையன் என்னுஞ் சிறப்புப் பெயரைப் பெற்றவன். கருணாகரத் தொண்டைமானோடு கலிங்கப் போர்க்குச் சென்ற படைத்தலை வர்களில் ஒருவன். அதனால் கலிங்கத்துப் பரணியில் சயங்கொண்டாரால் புகழப் பெற்ற பெருமை யுடையவன். இவன் திருச்சிராப்பள்ளி சில் லாவிலுள்ள மேலப்பழுவூரி லிருந்த செங்கற் கோயிலைக் கருங்கற் கோயிலாக அமைத்த தோடுஅக்கோயிலுக்குக் குலோத் துங்க சோழேச்சுரம் என்று பெயரிட்டான். நாள் வழிபாட் டிற்கும் பிறவற்றிற்கும் இறை யிலிநிலங்கள் வழங்கினான்.

**வாணமுதலியார்** - ஏகம்பவாண ருடைய தந்தை. தம்முடைய உறவினர்களிடம் பொருளையும் புதல்வனையும் ஒப்படைத்தற்கு உள்ளந் துணியாமல் ஏகன் என் னும் பெயருடைய தம்முடைய பண்ணையாளிடம் பொருளையும் புதல்வனையும் ஒப்படைத்துக் காக்குமாறு கூறியவர்.

**வாணாசுரன்**-இவன் பலியினுடைய மூத்த மகன். கண்ணனுடைய மாமனாகிய கம்சனுக்கு நண்ப னாகிச் சோணிதபுரத்தில் இருந்து அரசாண்டான். சிவ பூசை செய்து சிவபிரானுடைய திருவருளால் அளவற்ற செல் வத்தையும் ஆயிரங் கைகளையும் பெற்றான். சிவபிரான் உமா தேவி முருகக்கடவுள் ஆனை முகக்கடவுள் ஆகியோர் வாயில் காக்கத் தான் மிகுந்த இறுமாப் போடு ஆட்சி நடத்திக் கொண் டிருந்தான். ஒரு நாள் இவன் தனக்கு எல்லா மேன்மைகளை யுங் கொடுத்த சிவபிரானிடம் போய்ப், "போர் செய்வார் எவரும் இன்மையால் என் னுடைய தோள்கள் நெடுங் காலமாகத் தினவெடுத்திருக் கின்றன. ஆகவே நீர் என்னோடு போர் புரிய வேண்டும்" என்று இயம்பினான். சிவபிரான் வாணா சுரனைப் பார்த்து, "நீ போரில்லை என்று கவலைப் படாதே. அண்மையில் போர் உண்டாகும். துவாரகையில் இருந்து கண்ணன் வந்து உன் னோடு போர் செய்து உன் கைகளையறுப்பார் உன்னுடைய செருக்கு அழியும்" என்று கூறினார். வாணன் மகள் உஷை கண்ணன் பெயரனாகிய அநிருத் தனை விரும்பி அவனைத் தன் னுடைய அந்தப்புரத்திற்குக் கொண்டுவரச் செய்து அவ னோடு கலந்து கருவுற்றாள். வாணாசுரன் செய்தியை உணர்ந்து அநிருத்தனைச் சிறை யில் அடைத்தான். இச்செய் தியை நாரதர் கண்ணனுக்குக் கூறினார். கண்ணன் வாணாசுர னுடைய நகரத்தையடைந்து காத்தல் தொழிலைமேற்கொண் டிருந்த கடவுளர்களின் உடன்

பாடு பெற்று வாணசுரனிடம் போய் அவனோடு போர் தொடங்கினார். வாணனுடைய தோள்களை யெல்லாம் அறுத்துத் தள்ளினார். சிவபிரான் கண்ணனைப் பார்த்து "என்னை வழிபட்ட கைகள் இரண்டும் இருக்கட்டும்" என்று கூறினார். சிவபிரான் கட்டளைப்படி வழிபட்ட இரண்டு கைகளைத் தவிர மற்றைக் கைகளை யெல்லாம் அறுத்தொழித்தார். அப்பொழுது வாணன் மிகுந்த துன்பத்தையடைந்தான். அப்போது சிவபெருமான் வாணனிடம் போய், "உன்னுடைய போர்த்தினவு நீங்கியதா?" என்று உசாவியருளினார். வாணசுரன், தன்னுடைய குற்றங்களை யெல்லாம் பொறுத்தருள வேண்டும் என்று சிவபெருமானை வேண்டிக் கொண்டான். அதனால் சிவபிரான் அவன் மீது இரக்கங் கொண்டு அருள் புரிந்தார். அவன் மீண்டுந் தன்னுடைய ஆயிரங்கைகளையும் பெற்றான். சிவபிரானுடைய கட்டளைப்படியே தன்னுடைய மகளை அநிருத்தனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்துத் துவாரகைக்கு அனுப்பினான். தான் திருக்கைலையை அடைந்து குடமுழாவெடுக்குந் திருப்பணியைச் செய்து கொண்டிருந்தான்.

**வாதக்கோன்** - ஔவையார் காலத்தில் வாழ்ந்திருந்த ஒரு செல்வன். இவறன்மை மிக்கவன். ஔவையார் இவனிடம் உதவி நாடிச் சென்றார். "நாளை வருக" என்றான். மறுநாள் சென்ற பொழுதும் இவ்வாறே கூறினான். இதனைக் கண்ட ஔவையார் இவனை இகழ்ந்து, "வாதக்கோன் நாளை யென்றான்" என்னும் பாடலைப் பாடிச் சென்றார்,

**வாதராயணர்** - பராசர முனிவருக்கும் யோசனை கந்தியாக மாறிய மச்சகந்திக்கும் புதல்வராகத் தோன்றி வதரிகாச்சிரமத்தில் தங்கியிருந்தவர். திருமாலினுடைய கூறு. இவர் பின்னாளில் மறையை நான்காக வகுத்து முறைப்படுத்தியபடியால் வேதவியாசர் என்று காரணப் பெயர் பெற்றார்.

**வாதாபி (வாதாவி)**-சாளுக்கியரது தலைநகர். மைசூர் நாட்டில் பீசப்பூர் மாவட்டத்தில் உள்ள இஃது இக்காலத்தில் பாதாமி என்று அழைக்கப்படுகிறது. ஏழாம் நூற்றாண்டில் பல்லவ மன்னர் முதலாம் நரசிம்மவர்மரின் தளபதியான பரஞ்சோதி என்னும் சிறுத்தொண்ட நாயனார் சாளுக்கிய மன்னரான இரண்டாம் புலிகேசியைப் பல போர்களில் வென்று அவன் தலைநகரைச் சூறையாடினார் என்பர்.

**வாதாவி** - அசமுகியின் மக்களில் ஒருவன். மற்றவன் வில்வலன். அசமுகி சூரபதுமனுடைய தங்கை. இவள் துர்வாச முனிவரைக் கூடி இவர்களைப் பெற்றாள். இவர்களிருவரும் முனிவர் போல் உருக்கொண்டு காட்டில் குடிசையமைத்துக் கொண்டு முனிவர்களை விருந்துக் கழைப்பர். வில்வலனாகிய மூத்தவன் இளையவனாகிய வாதாபியை ஆடாக்கி அறுத்துக் கறிசமைத்து முனிவர்கட்குப் போடுவான். உண்டவர்கள் ஓய்வு பெறும் சமயத்தில் வாதாவியைப் பேர் சொல்லி மூத்தவன் அழைப்பான். வயிற்றில் இருக்கும் வாதாவி உருப்பெற்று வயிற்றைக்கிழித்துக் கொண்டு வெளியே வருவான். பிறகு இருவரும் விருந்துண்டவர்களைக் கொன்று தின்றுவிடுவர். அகத்தியரை இவ்வாறு இவர்

கள் கொல்ல முயன்ற சமயத்தில் அவர் "வாதாவி சீர்ணவி" என்று கூறி வயிற்றைத் தடவ இதனால் வாதாவி மாண்டொழிந்தான். வில்வலன் அகத்தியரோடு போரிடத் தொடங்க அவர் வில்வலனையும் தருப்பையைப்படையாக ஏவிக் கொன்றொழித்தார்.

**வாதாபி அகத்தியர்**-இவ்வகத்தியர் பொதியமலையில் இருந்த அகத்தியரினும் வேறானவர். வாதாபி என்னுமிடத்தில் குமரவேள் சார்பில் இருந்து கொண்டு அரக்கர் தலைவர்களாகிய வாதாவிவில்வலன் என்பவர்களைக் கொன்றவர். குமரவேளிடத்தில் அருளுரை பெற்றவர். இவர் முதற் சங்கத்திற்குத் தலைவராக இருந்தார்.

**வாதாபி கணபதி** - திருச்செங்காட்டங்குடியில் எழுந்தருளிய ஆனைமுகக்கடவுளின் பெயர். பின்னாளில் சிறுத்தொண்டர் என்று பெயர் பெற்ற பரஞ்சோதியார் பல்லவ மன்னன் மகேந்திரவர்மனிடம் படைத் தலைவராக இருந்தார். சளுக்கிய மன்னன் புலிகேசி மேல் நரசிம்ம வர்மன் படையெடுத்துச் சென்ற காலத்தில் படையை இப்பரஞ்சோதியார் நடத்திச் சென்றார். சளுக்கிய மன்னனுடைய வாதாவி நகரம் அப்போரில் வீழ்ச்சியடைந்தது. படைவீரர்கள் நகரத்தில் அகப்பட்ட பொருள்களைக் கொள்ளையடித்தார்கள். அப்பொழுது பரஞ்சோதியார் தம்முடைய அரசனின் உடன்பாடு பெற்று அங்கிருந்த ஆனைமுகப் பிள்ளையாரைத் தம்முடைய ஊராகிய திருச்செங்காட்டங்குடிக்குக் கொண்டுவந்து அங்கு நிலை பெறுத்தினர். அப்பிள்ளையார் வாதாவி நகரத்தில் இருந்து கொண்டு வரப்பட்டமையால் வாதாவி கணபதி என்று பெயர் பெற்றார்.

**வாதிகேசரி அழகிய மணவாள சீயர்** - இவர் முதற்கண் கல்வியறிவில்லாதவராக இருந்தார். ஒரு நாள் கல்வி கற்கும் மாணவர்கள் சிலரைப் பார்த்து, "நீங்கள் என்ன படிக்கிறீர்கள்?" என்று உசாவினர். அம்மாணவர்கள் கல்வியறிவில்லாத இவரை எள்ளி நகையாடும் பொருட்டு, "முசலகிசலயம் படிக்கிறோம்" என்று மறுமொழியுரைத்தனர். இப்படியும் ஒரு நூல் உண்டா என்று திகைப்படைந்த இவர் இச்செய்தியைத் தமது ஆசாரியரான பெரியவாச்சான் பிள்ளை என்பவரிடங் கூறினர். பெரியவாச்சான் பிள்ளை இவரைப் பார்த்து, "உனக்குக் கல்வியறிவில்லையென்று அவர்கள் நையாண்டி செய்திருக்கிறார்கள். உலக்கைக் கொழுந்து படிக்கிறோம் என்பது அவர்கள் கூறியதனுடைய கருத்தாகும்" என்று சொன்னர். இதனைக் கேட்ட இவர் மிகுந்த நாணமடைந்தார். தமக்குக் கல்வியறிவு பெருகுமாறு அருள் செய்ய வேண்டுமென்று ஆசாரியரை வேண்டிக் கொண்டார். ஆசாரியரான ஆச்சான்பிள்ளை இவருக்கு அகவை மிகுதியாகி விட்டதையும் பாராமல்காவியம்,நாடகம், அலங்காரம், வியாகரணம், பூர்வஉத்தரமீமாம்சை முதலிய எல்லா நூல்களையும் கற்பித்து அவைகளில் வல்லவராக்கினர். இவரும் சிறந்த புலவரானர். 'முசலகிசலயம்' என்னும் நூல் ஒன்றையும் இயற்றி முன்பு தம்மை எள்ளி நகையாடியவர்கட்குக் காட்டினர். அவர்கள் இந்நூலைப் பார்த்துத் தலை குனிந்தார்கள். பிறகு இவர் துறவறத்தை மேற்கொண்டு மற்றைச் சமயங்களை யெல்லாம்

வென்று வாதிகேசரி என்னுஞ் சிறப்புப் பெயரையடைந்தார். பன்னீராயிரப்படியை இவர் இயற்றியுள்ளார். மேலும் இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், தீபப்பிரகாசிகை, தீபசங்கிரகம், தத்துவநிரூபணம், தத்துவதீபம், தத்துவபூடணம், தத்துவதீபசங்கிரகம், கீதாசாரம், தமிழ்க்கவிபிரபந்தம், இரகசிய விவரணமாலை, இருபத்து நாலாயிரப்படி பிரமாணத் திரட்டு முதலியன வாகும்.

**வாத்சியாயனன்** - இவர் காமசூத்திரம் என்னும் வடமொழி நூலை இயற்றியிருக்கிறார். இவர் வாழ்ந்திருந்த காலம் கி. பி. மூன்றும் நூற்றாண்டாக இருக்கக்கூடும் என்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர். இந்நாட்டின் பல பழக்கவழக்கங்களைக் குறிப்பிட்டுள்ளார். மாளவம், மகாராட்டிரம், ஆந்திரம், தமிழ் முதலிய நாடுகளின் பகுதிகளில் உள்ள மங்கையர் பண்புகள் இவரால் சிறப்பாக உரைக்கப் பட்டிருக்கின்றன.

**வாமசாரன்**-ஒரு பாடுவான் மகன். இவன் காமுகனாகத் திரிந்தான். தனக்கு இருந்த செல்வங்களை யெல்லாம் விலைமகளுக்குக் கொடுத்தான். மேலுங் கொடுப்பதற்குப் பொருளில்லாதபடியால் ஒரு செட்டியின் வீட்டிலே களவு செய்து அதனை விலைமகளுக்குக் கொடுத்தான். விலைமகள் வாமசாரன் தந்த அணிகளில் ஒன்றை அதற்குரியவன் செட்டி யென்பதை யுணர்ந்து கொள்ளாமலே செட்டியிடங் கொடுத்து விலைமதிக்குமாறு கூறினள். செட்டி அந்நகை தன்னுடைய தென்றுணர்ந்து அரசனுக்குத் தெரியப்படுத்தினன். அரசன் நன்கு உசாவி விலைமகளிடமிருந்த செட்டியின் அணிகலன்களை யெல்லாம் வாங்கிச் செட்டியிடங் கொடுத்தான். செட்டிக்குப் பேரவா உண்டாகியது. ஒரு காப்புக் குறைவதாகவும் அதனையும் வாங்கித் தரவேண்டுமென்றும் அரசனிடம் முறையிட்டான். அரசன் வாமசாரனைப் பிடித்துச் சிறையிலடைத்துத் துன்புறுத்தினன். வாமசாரனுடைய தந்தை தன்னுடைய மகனின் துன்பம் பொருது சிவபிரானிடம் முறையிட்டு மைந்தனுடைய துன்பத்தைப் போக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். சிவபிரான் பாடுவானுக்குக் காப்பு ஒன்றைக் கொடுத்தார். பாடுவான் அதனை அரசனிடங் கொடுத்தான். அரசன் செட்டியிடம் கொடுத்தான். செட்டி காப்பின் அழகைக் கண்டு மிகுந்த களிப்படைந்தான். அதனைப் பெட்டியில் வைத்துப் பூட்டினன். மறுநாள் பெட்டியைத் திறந்து பார்த்தான். அக்காப்பும் அதனோடிருந்த அணிகலன்களும் பாம்புகளாக இருப்பதைப் பார்த்து அரசனிடங் கூறினன். அரசன் பாடுவானையழைத்து அக்காப்பு எவ்வாறு கிடைத்தது என்று உசாவினன். பாடுவான் நிகழ்ந்ததைக் கூறினன். அரசன் இறைவன் திருவருளையெண்ணி மகிழ்ந்தான். பேரவாக் கொண்ட செட்டி தனக்கு உரிமையாக இருந்த நகைகளையும் இழந்தான்.

**வாமநாதபுரம்** - சென்னைமாநகரில் இப்பொழுது மயிலாப்பூர் என வழங்கும் பகுதியில் முன்னளில் நேமிநாததீர்த்தங்கரர் வசித்திருந்தார். அந்நாளில் இப்பெயர் மயிலாப்பூருக்கு வழங்கியது.

**வாமன முனிவர்** - இவர் ஒரு சமணப்புலவர். வடமொழியினும் தென்மொழியினும் வல்லவர். இவருக்கு மல்லிசேனர் என்றும் பெயருண்டு. இவர் தொண்டைவள நாட்டில் காஞ்சிபுரத்துக்கடுத்த திருப்பருத்திக்குன்றத்தில் இருந்ததாகத் தெரிகிறது. வாமனுச்சாரியார் என்று வழங்கப்பட்டவரும் இவரே. இவர் வடமொழியில் உள்ள பஞ்சாஸ்திகாயம், பிரவசனசாரம், சமயசாரம் என்னும் வடமொழித் தத்துவ நூல்களுக்கும் தமிழில் உள்ள நீலகேசித்திரட்டு என்னும் நூலுக்கும் உரை யெழுதியிருக்கிறார். அவ்வுரைக்குப் பெயர் சமயதிவாகரம். இவர் இயற்றிய நூல் மேருமந்தரபுராணம் என்னுந் தமிழ்ச்செய்யுள் நூல். மேரு என்றும் மந்தரன் என்றும் பெயர்களையுடைய கணதரர்களின் வரலாறு கூறுவதால் மேருமந்தரபுராணம் என்று பெயர் பெற்றது. இது சைன புராணம். சமணர் செய்த புராணங்களில் இதுவே சிறப்புற்று விளங்குகிறது.

**வாமனகணேசர்** - திருமால் வாமனுவதாரம் எடுத்து மாவலியை அழித்தற் பொருட்டு அருள் பெறுவான் வழிபட்ட ஆனைமுகப்பிள்ளையாருக்கு உண்டாகிய காரணப் பெயர்.

**வாமனர்** - காசிபருக்கு அதிதியிடம் புரட்டாசித் திங்கள் சுக்கிலபட்சத்தில் தோன்றியவர். திருமாலுடைய ஐந்தாவது அவதாரம். இவர் தோன்றிய காலத்தில் கதிரவன் சாவித்திரி மறையை உரைத்தருளினன். பிரகஸ்பதி பிரமசூத்திரத்தை உரைத்தார். காசியபர் முஞ்சியைக் கொடுத்தார். நிலம் கிருட்டிணசனங் கொடுத்தது. திங்கள் தடி கொடுத்தான். அதிதி கௌபீனங் கொடுத்தாள். நான்முகன் கமண்டலங் கொடுத்தான். குபேரன் பாத்திரங் கொடுத்தான். பார்வதி பிச்சை கொடுத்தாள். இவர் பாரத்துவாசரிடம் மறையை உணர்ந்தவர். இவர் மாவலியின் செருக்கையடக்க எண்ணினர். குறுகிய உருவாகச் சென்று மூவடி மண் கேட்டார். அசுர குருவாகிய வெள்ளி கொடுக்கக் கூடாது என்று தடுத்தான். மாவலி கேளாது தானஞ் செய்தான். பிறகு இவர் பெருவடிவங் கொண்டு மூவுலகத்தையும் ஈரடியால் அளந்தார். ஓர் அடிக்கு இடமில்லாதபடியால் மாவலியின் தலையில் வைத்துப் பாதாள லோகம் வரையில் அழுத்தி அங்கு எல்லாவகையான இன்பங்களையும் நுகரச் செய்தார்.

**வாரணசி** - காசி எனப் பெரும்புகழ் பெற்ற சிவப்பதிக்கு இரண்டு ஆறுகள் ஒன்றுபடுவதால் வாரணசி என்றும் பெயருண்டு. கங்கையைச் சார்ந்த சிவப்பதிகளில் காசியே முதன்மை பெற்றது. பரத கண்டத்தில் உள்ள எல்லாச் சிவப்பதிகளினுஞ் சிறப்புடையது. இதற்கு அவிமுத்தம், ஆநந்தவனம், பெருமயானம் எனவும் பெயர்கள் உள்ளன. இங்குத் தங்கி வசித்தாலே நற்கதியை அடையலாம். இங்கு உடலை நீத்தல் வீடுபேற்றிற்கு வழியாகும். சிவபிரான் இங்கே தெருத்தெருவாக அலைந்து கொண்டு மடியும் மக்கள் காதில் தாரக மந்திரத்தை உரைத்துக் கொண்டிருக்கிறார். இவ்வூரின் பெருமையைக் காசி கண்டம் முதலிய நூல்கள் விளக்கமாகக் கூறும்.

**வாலாசா** - கருநாடகநவாபுகளில் ஒருவனுகிய மூகமதுஅலி என்

பவனுக்கு வாலாசா எனவும் ஒரு பெயர் வழங்கியது. இவனுடைய நினைவுக் குறியாகத் தமிழ்நாட்டில் சில ஊர்கள் எழுந்தன. அவை ஆர்க்காட்டிலுள்ள வாலாசா பேட்டை, பாலாற்றங்கரையில் உள்ள வாலாசாபாத், உடையார் பாளையத்திலுள்ள வாலாசா நகரம் முதலியன.

**வாலி** - இவன் கிட்கிந்தையில் இருந்து அரசுபுரிந்து கொண்டிருந்தான். சுக்கிரீவன் என்பவன் இவனுடைய தம்பி. ஒரு சமயத்தில் மாயாவி என்னும் பெரிய அசுர வீரன் ஒருவன் வாலியிடம் வந்து போர்புரியத் தொடங்கினன். இருவருக்கும் நீண்டநாள் போர் நிகழ்ந்தது. மாயாவி போர் செய்ய முடியாமல் திணறினன். ஒரு பிலத்துவாரத்திலே புகுந்து பாதலத்தை நோக்கி யோடினன். வாலியும் அவனைப் பின் தொடர்ந்தான். பின்தொடரும் போது சுக்கிரீவனைப் பிலத்துவாரத்தில் காவல் வைத்துவிட்டுச் சென்றான். சென்றவன் திங்கள் இருபத்தெட்டாகியுந் திரும்பவில்லை. மாயாவியோடு போர்செய்து கொண்டே யிருந்தான். தன் முன்னவன் திரும்பாமையைக் கண்ட சுக்கிரீவன் அவன் இறந்து போயிருக்கக் கூடும் என்று எண்ணினன். மாயாவி மீளவும் வந்து எல்லோரையுங் கொன்றுவிட்டால் என்ன செய்வது என்று அஞ்சினன். மற்றவர்களைக் கலந்து எண்ணினன். சுக்கிரீவனுடைய துணைவர்கள் "வாலி மாண்டு போயிருப்பான்அவன்இனிமேல் மீளப் போவதில்லை; பிலத்துவாரத்தை நன்கு அடைத்து விட்டு நீ அரசாட்சியை மேற்கொள்வாயாக" என்று கூறினர்கள். சுக்கிரீவன் அதற்கு இசைந்தான். மற்றவர்களையுஞ் சேர்த்துக்கொண்டுபிலத்துவாரத்தின் வழியை நன்கு அடைத்தான். பிறகுஅரசாட்சியைத்தான்மேற்கொண்டான். பாதலத்தில்பகைவனோடு போரிட்டுக் கொண்டிருந்த வாலி அவனைக் கொன்றொழித்து விட்டுப்பிலத்துவார வாசலுக்கு வந்தான். சுக்கிரீவனைக் கூப்பிட்டான். கூப்பிட்டது சுக்கிரீவனுக்குக் கேட்கவில்லை. வாலி பிலத்துவாரத்து வாசற் கற்களை யெல்லாம் ஒரு தையால் அப்புறப் படுத்தி விட்டு மேலே வந்தான். தன்னுடைய தம்பி தன்னை வஞ்சித்து அரசைக் கவர்ந்து கொண்டதாக எண்ணினன். சுக்கிரீவன் உள்ளதைக் கூறியும் வாலி அதனை ஒப்புக் கொள்ளவில்லை. சுக்கிரீவனை நன்கு புடைத்து விரட்டினன். அவனுடைய பொருள்களை யெல்லாங் கைப்பற்றிக் கொண்டான். இதன் பிறகு மலைகளில் அநுமான் முதலியவர்களோடு சுக்கிரீவன் சுற்றித் திரிந்தான். இராம பிரான் அங்கு வந்த போது அவருடைய துணையைக் கொண்டு தன் முன்னவனை வென்று தன்னுடைய பொருள்களை மீண்டும் பெற்றான்.

**வானமாமலை** - சிறந்த வைணவத் திருப்பதி. தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலியில் இருந்து நாகர் கோவிலுக்குப் போகும் வழியில் 18 ஆவது மைலில் இருக்கிறது. இது நான்குநேரித் தாலுகாவின் தலைநகர். நான்குநேரி என்னும் பெயர்தான் இந்நாளில் வழங்கி வருகிறது. நம்மாழ்வார் பாடலில் இவ்வூர் சிரீவரமங்கலநகர் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. நம்பூதிரிகளின் கைவசமிருந்த இத்திருப்பதி பிறகு வைணவத்

துறவிகளின் கைக்கு வந்தது. இப்பொழுதும் வைணவத் துறவிகளின் ஆட்சிக்குள் தான் இருந்து வருகிறது. வானமாமலைமடம்தென்கலை வைணவர்களுடையது. இதன் ஜீயர் தென்கலையரின் ஆச்சாரியார். இது தோதாத்திரிமடம் என்று பெயர் பெற்றது. நான்குநேரி ஏரிக் கரைக்குப் பின்னுல் திருமால் கோவில் இருக்கிறது. கோயில் மிகப் பெரியது. வானமாமலை மடம் கோவில் மதிலுக்குள் இருக்கிறது. இது வடமொழிப் பாடசாலை ஒன்றை நடத்தி வருகிறது. திருமாலுக்குத் தெய்வ நாயகன், தோதாத்திரிப் பெருமாள், வானமாமலைப் பெருமாள் என்று டெயர்கள் வழங்குகின்றன. பெருமாள் கிழக்கு முகமாக வீற்றிருந்த கோலத்தில் எழுந்தருளியிருக்கிருர். தாயார் பெயர் சிரீவரமங்கை நாச்சியார். பெருமாளுக்கு நாள் தோறும் எண்ணெய் முழுக் காட்டப் படுகிறது. இந்த எண்ணெய் திறந்த வெளியில் ஒரு காரைத் தொட்டியிற் சேர்க்கப் படுகிறது. இதற்கு மருந்தின் குணம் இருப்பதால் பல நோய்களைத் தீர்ப்பதாக நம்பப் படுகிறது.

**வான்மீகி** – இவர் பிறப்பால் அந்தணர். ஒழுக்கங் குன்றி வேடருடன் கூடி வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார். ஒருநாள் ஒரு முனிவரை வழிப்பறி செய்யத் தொடங்கினுர். அம்முனிவர் இவரைப் பார்த்து, "நீ செய்யும் தீவினைக்கு நீ மட்டும் உரியவனு அல்லது உன்னுடைய மனைவிமக்களும் உரியவர்களா?" என்று கேட்டார். அதற்கு இவர், "என்னுடைய மனைவி மக்களும் உரியவர்கள்தாம்" என்று கூறினுர். வழிப்போக்கு முனிவரோ "உன்னுடையமனைவி மக்கள் நீ செய்யும் தீவினையில் பங்கு பெற மாட்டார்கள்; இதனை நீ உன்னுடைய மனைவி மக்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்" என்ருர். வழிப் பறிக்காரர் உடனே தன்னுடைய வீட்டிற்குச் சென்று, "நான் செய்யும் தீவினையில் நீங்களும் பங்கு பெறுவீர்களன்றோ?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "நாங்கள் பங்கு பெற மாட்டோம். எங்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு உம்மைச் சேர்ந்தது" என்று கூறினர். வழிப்பறிக் காரர் இச்செய்தியை முனிவரிடம் வந்து கூறினர். முனிவர், "இவ்வாறு ஏன் தீவினையைச் செய்து நிரயத்திற்கு வழி தேடிக் கொள்ளுகிறுய்? இத் தொழிலை விட்டுவிட்டு நல் வழிப்படுக" என்று கூறி இராம நாமத்தை இவருக்குக் கூறினுர். இவருடைய உள்ளத்தில் அம் மந்திரம் பிடிபட வில்லை. மரா மரம் ஒன்றைக் காட்டி அம் மரத்தின் பெயர் யாது என்று கேட்டார். இவர் "மரா"என்று கூறினுர். "இம்மரத்தின் பெயரைக்கூறிக்கொண்டுஇவ்விடமே இருப்பாயாக" என்று கூறி விட்டு முனிவர் தம் வழியே சென்ருர். இவர் அவ்விடத்திலேயே அமர்ந்து, "மரா மரா மரா மரா மரா மரா" என்று கூறிக் கொண்டிருந்தார். இது, "ராம ராம ராம" என்று மாறி விட்ட படியால் இராம நாமமாயிற்று. புற்று (வான்மீகம்) வளர்ந்து இவரை மூடியது. இதனுல் இவருடைய பெயர் வான்மீகர் என்று மாறியது. தவச் சிறப்பால் எல்லாக் கலைகளும் நன்கு விளங்கின. இவரும் பெரிய முனிவராகி இராம காதையை வடமொழியில் இயற்றினுர். அஃது இவருடைய பெயரால் வான்மீகி

இராமாயணம் என்று வழங்குகிறது.

**வான்மீகியார்** - சங்ககாலப் புலவர்களில் ஒருவர். வான்மீகி முனிவருடைய பெயர் இவருக்கு இடுகுறிப் பெயராக இடப்பட்டது போலும். இத்தகைய பெயருடைய புலவர்கள் வேறு சிலர் இருந்ததாகவுந் தெரிகிறது. இவருடைய பாடல் புறநானூற்றில் 358 ஆவது பாடலாகச் சேர்க்கப் பட்டிருக்கிறது.

**விகசன்** - அந்தகாசுரனுடைய அமைச்சர்களில் ஒருவன். இவன் அந்தகாசுரப்போரில் நந்திதேவரோடு போர் செய்து திருமால் முதலிய தேவர்களை விழுங்கியவன். இவன் உலகங்களை விழுங்கப் புறப்படுஞ் சமயத்தில் வசிட்டர் முதலிய முனிவர்களால் நரநாராயணரால் இறக்குமாறு வசவுரை பெற்றான்.

**விகடகவி** - கேட்பவர்களுக்கு நகைப்புண்டாகுமாறு கவி பாடுகிறவர்கள் விகடகவி எனப் பெறுவர். காளமேகப் புலவர் முதலிய பலர் விகடகவி பாடியுள்ளனர். ஒருவர் பாடும் செய்யுள் பெரும்பாலும் விகடகவியாக இருத்தல் வேண்டும். அத்தகையோர்தாம் விகடகவி யென்னும் பெயருக் குரியவர். ஒருகவி இரண்டுகவி மட்டும் விகடமாகப் பாடினால் அவர்கள் விகடகவிகளாகிவிட முடியாது. "கத்துகடல் சூழ் நாகைக் காத்தான் தன்சத்திரத்தில், அத்தமிக்கும் போதில் அரிசிவரும் - குத்தி உலையிலிட ஊருறங்கும் ஓரகப்பையன்னம், இலையிலிட வெள்ளி யெழும்." இப்பாட்டு விகடமாக அமைந்திருப்பதோடு சிலேடையாகவும் அமைந்திருக்கிறது. "முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்கப், பின்னே யிருந்திரண்டு பேர் தள்ள - எந்நேரம், வேதம் போம் வாயான்விகடராமன்குதிரை மாதம்போங் காத வழி" இவைகள் காளமேகப் புலவருடைய விகடப் பாடல்கள்.

**விகடசக்கர விநாயகர்** - காஞ்சியிலுள்ள ஓர் ஆனைமுகக் கடவுளுடைய பெயர். வீரபத்திரர் தக்கனுடைய தலையை அறுத்த காலத்தில், திருமால் எறிந்த ஆழிப்படையை அவர் அணிந்திருந்த தலைமாலையில் இருந்த ஒரு தலை கௌவியது. அதனைப் பெறுமாறு விஷ்வக் சேனர் கொங்கணி என்னுங் கூத்தை யாடினார். இதனைக் கண்டு நகைத்த தலையின் வாயிலிருந்து சக்கரம் விழுந்தது. ஆனைமுகக் கடவுள் அதனைத் தாம் எடுத்துக் கொண்டு அக்கூத்தைத் தம் முன்னும் ஆடச் செய்து களிப்படைந்து சக்கரத்தைக் கொடுத்தார். இவ்வாறு விகடக் கூத்துப் பெற்ற படியால் இவ் விநாயகருக்கு இப்பெயர் உண்டாகியது.

**விகர்ணன்** - இவன் துரியோதனனுடைய தம்பியர்களிலொருவன். நீதிகளை நன்கு உணர்ந்து நியாய வழியையே பேசுகின்ற நற்குணம் உடையவன். சூதாடுகிற பொழுது துரியோதனன் சொற்படி திரௌபதியை அவைக்குக் கொண்டுவந்த காலத்திலும் இவன் பல நீதிகளை யெடுத்துக் கூறினான். நல்லவனாகிய இவனைக் கொல்ல நேர்ந்த பொழுது வீமன் உள்ளம் மிகவும் வருந்தினான்.

**விக்கியண்ணன்** - விசயாலயன் மகனாகிய இராச கேசரிவர்மன் ஆதித்தன் (க) என்பவன் தொண்டை நாட்டின் தலைநகராகிய காஞ்சியில் அரசாட்சி செய்திருந்த பல்லவர்கள் மீது சேரமான் தாணுரவி என்னும்

சேர மன்னனோடு படையெடுத்துச் சென்றபோது வீரத்தோடு இப்படைத்தலைவன் போர் புரிந்தான். இவனுடைய வீரத்தை வியந்த ஆதித்தனும் சேரமானும், அரியணை, ஈச்சோப்பி, பல்லக்கு, முரசு களிற்றுப் படை முதலியவைகளை இவனுக்கு வழங்கியதோடு "செம்பியன் தமிழ்வேள்" என்னுஞ் சிறப்புப் பெயரையும் வழங்கினார்.

**விக்கிரமசோழ சம்புவராயன்** - இவனுடைய முழுப் பெயர் அம்மையப்பன் கண்ணுடைப் பெருமாளான விக்கிரம சோழ சம்புவராயன் என்பது. இவன் பல்லவர் மரபினன். செங்கேணி என்னுங் குடிப் பெயருடையவன். தொண்டை மண்டலத்தில் வட ஆர்க்காடு தென்னார்க்காடு மாவட்டப் பகுதியில் அரசாண்டு கொண்டிருந்த ஒரு சிற்றரசன். இவன் விக்கிரமசோழன் ஆட்சிக் காலத்திலிருந்த செங்கேணி அம்மையப்பன் நாலாயிரவன் என்பவனுடைய புதல்வன். இவன் குலோத்துங்கனுடைய ஆட்சிக் காலத்தில் வடார்க்காடு மாவட்டத்தில் திருவல்லம் சோழபுரம் என்னும் ஊர்களிலுள்ள சிவன் கோயில்களுக்குச்சிலவரிகளால் வரும் பொருளைத் தானமாக வழங்கினான்.

**விக்கிரமசோழ சேதிராயன்** - இவன் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள மலையமானாட்டில் திருக்கோவலூரைச் சூழ்ந்த நிலப் பகுதியை அரசாண்ட ஒரு சிற்றரசன். இவனுடைய மகன் விக்கிரமசோழ கோவலராயன் என்பவனாவன். கி. பி. 1137 இல் விக்கிரமசோழ சேதிராயனுடைய மனைவி திருக்கோவலூரில் உள்ள வீரட்டான முடையார் கோயிலில் ஒரு மடைப்பள்ளி கட்டினாள் என்று அவ்வூர்க் கல்வெட்டொன்று கூறுகிறது.

**விக்கிரமசோழன்** - இச்சோழ மன்னன் முதற்குலோத்துங்க சோழனுடைய நான்காம் புதல்வன். இவன் தன்னுடைய இளமைப் பருவத்தில் வேங்கி நாட்டில் தன்னுடைய தந்தையின் ஆணையாளனாக அமர்ந்து ஆட்சி புரிந்தான். கி. பி. 1120 ஆம் ஆண்டில் முதற்குலோத்துங்க சோழன் காலமாகவே இளவரசனாக இருந்த இவன் பேரரசனாக அரியணை யேறினான்.

இவன் ஆனித் திங்களில் உத்திரட்டாதி நாளில் பிறந்தான். தான் பிறந்தநாளன்று திருக்கோயிலில் சிறப்பு வழிபாடு முதலியன செய்து பிறந்த நாளைச் சிறந்த விழாநாளாகக் கொண்டாடினான். இவன் வேங்கி நாட்டிலிருந்து சோழநாட்டிற்குத் திரும்பி இளவரசுப் பட்டம் பெற்றவுடன் அந்நாடு வெலநாண்டுத் தலைவனாகிய முதலாங்கொங்கனுடைய மகன் சோடன் என்பவனுக்குக் குலோத்துங்கசோழனால் அளிக்கப் பட்டது.

விக்கிரமசோழனது ஆட்சியின் ஆறும் ஆண்டாகிய கி. பி. 1125 இல் தொண்டை நாட்டிலும் நடு நாட்டிலும் பெரு வெள்ள மேற்பட்டு அதனாற் கொடிய பஞ்சமுண்டாயிற்று என்பது கல்வெட்டுக்களால் அறியப்படுகிறது.

இவன் தன்னுடைய ஆட்சியின் பத்தாம் ஆண்டில் பிற அரசர்கள் கொடுத்த திறைப் பொருள்களைக் கொண்டு திருத்தில்லையில் அம்பலவாணரது திருக்கோயிலில் பல திருப்பணிகள் செய்தான். தில்லைச் சிற்றம்பலத்தைச் சூழ்ந்த திருச்சுற்று மாளிகை, கோபுரவாயில், கூட

சாலை, பலிபீடம் என்பவற்றிற்குப் பொன் வேய்ந்தான். இறைவன் திருவமுது கொள்வதற்குப் பொற்கலன்கள் செய்தமைத்ததோடு கோயிலில் பொன்னாலாகிய கற்பக தருக்களும் உண்டாக்கினான். தில்லைத் திருச்சிற்றம்பலத்தைச் சூழ்ந்துள்ள முதல் திருச் சுற்று மாளிகை, "விக்கிரமசோழன் திருமாளிகை" என்று அந்நாளில் வழங்கியது. தில்லைச் சிற்றம்பலத்தில் இம்மன்னன் மேலும் பல திருப்பணிகள் செய்தான். இம்மன்னனுக்குத் தலைநகராக இருந்தது கங்கை கொண்ட சோழபுரமாகும்.

இவன் தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட நாடுகளையெல்லாம் நேரில் பார்த்துத் தக்க முறையில் ஆட்சி புரிந்தான். மக்களுக்கு எத்தகைய குறையும் நேராதவாறு ஆட்சியைச் சீருஞ் சிறப்புமாக நடத்தினான். கவிச் சக்கரவர்த்தியாகிய ஒட்டக் கூத்தர் இவனுடைய அவைக்களப் புலவராக விளங்கினார். அவர் இம்மன்னன்மீது உலா ஒன்று பாடினார். அவ்வுலா விக்கிரம சோழனுலா என்னும் பெயரோடு விளங்குகிறது.

மற்றைய மன்னர்களைப் போலவே இவனுஞ் சிறப்புப் பெயர்கள் பலவற்றையுடையவனாக இருந்தான். அப்பெயர்களுள் குறிப்பிடத்தக்கன இரண்டு. அவை; தியாகசமுத்திரம், அகளங்கன் என்பனவாம். இவன் தன்னுடைய ஆட்சியின் ஏழாம் ஆண்டில் திருவிடைமருதூர்க்குச் சென்றிருந்த போது அவ்வூரைச் சார்ந்த வண்ணக்குடி என்னும் ஊரைத் தியாக சமுத்திர சதுர்வேதி மங்கலம் என்று பெயர் மாற்றித் திருவிடை மருதூர்க் கோயிலுக்குத் தானமாக வழங்கினான் என்று அவ்வூர்க் கல்வெட்டொன்று கூறுகிறது. இவன் பதினேழு ஆண்டுகள் வரை ஆட்சி செய்து கி. பி. 1135 ஆம் ஆண்டில் இறைவனுடைய திருவடியை அடைந்திருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

**விக்கிரம பாண்டியன்** - அபிடேக பாண்டியனுடைய மகன். இவனோடு பகைகொண்டசோழன் இவனோடு போர் செய்து வெல்ல முடியாமல் தீயவேள்வியொன்றைச் செய்வித்து அதிலொரு யானையை உண்டாக்கி மதுரைமீது ஏவினான். யானையைக்கண்டு அஞ்சிய பாண்டியன் சிவபிரானை வேண்டினான். சிவபிரான் ஒரு வீரராகத் தோன்றி நரசிங்கக் கணையைத் தொடுத்து அந்த யானையைக் கொன்றருளினார். அதுவே பாண்டிநாட்டில்யானைமலையாக இருக்கிறது. இவ்வரசனுடைய காலத்தில்தான் விருத்தகுமார பாலரான திருவிளையாடல் நடைபெற்றது.

**விக்கிரமாதித்தியன்** - வாண அல்லது பாண அரசர் வழிமுறையைச் சேர்ந்தவன். "பாணவாணாதிராயனான விக்கிரமாதித்தியன்" என்று சாசனங்களில் கூறப் பட்டவன். தொண்டை மண்டலத்தின் வடபகுதியில் உள்ள குடிமல்லம், திருவல்லம் முதலிய பகுதிகளை இவன் அரசாண்டான்.

**விக்கிரமாதித்தன் கதை** - விக்கிரமாதித்தன் என்னும் பெயருடன் சாளுக்கியமரபில் பலஅரசர்கள் இருந்தனர். குப்தமரபில் இரண்டாஞ் சந்திரகுப்தனுக்கும் விக்கிரமாதித்தன் என்னுஞ் சிறப்புப்பெயர் உண்டு. இவர்களில் ஒருவனைப்பற்றி எழுந்ததுதான் விக்கிரமாதித்தன்

கதை. விக்கிரமாதித்தன் சாலிவாகனன் என்பவனால் கொல்லப்பட்டான் என்று வருகிறது.

விக்கிரமாதித்தன் கதை 12 ஆம் நூற்றாண்டில் சோமதேவ பட்டர் என்பவர்வடமொழியில் இயற்றிய கதாசரிதசாகரம் என்னும் நூலில் இருந்து எடுத்து எழுதப்பட்டது என்றும்,பைசாசமொழியில்குணாட்டியர் எழுதிய பிருகத்கதையே கதாசரித்சாகரத்திற்கு முதல் நூல் என்றுங் கூறுவர்.

விக்கிரமாதித்தன் கதை வடமொழியிலும், தமிழிலும், தெலுங்கிலும், இந்துஸ்தானியிலும், வங்காளத்திலும், மகாராட்டிரத்திலும் வழங்குகின்றது. இவைகளில் சில மாறுபாடுகளும் இருப்பதாகத்தெரிகிறது.

தமிழில் பெரியவிக்கிரமாதித்தன்கதை வெளிவருவதற்குமுன் முப்பத்திரண்டுபதுமைக் கதைகள் என்றும் வேதாளக்கதைகள் என்றும் இருவகைக் கதைகள் வெளிவந்திருந்தன.ஆகவே தமிழில் மூன்று கதைகள் விக்கிரமாதித்தன் கதைகளாக வழங்குகின்றன. விக்கிரமாதித்தன்கதை பொதுமக்களிடையே புகழைப் பெற்றிருக்கிறது.

**விக்கிரன்** - இவன்உதயணனுடைய அம்மான்; மிருகாபதியின் தமையன். ஏயர் குலத்தில் தோன்றியவன். உதயணன் தன்னுடைய அரசாட்சியை இவனிடம் ஒப்புவித்துவிட்டுத் தான் தவஞ் செய்யச் சென்றான்.

**விக்கினராசர்** - விநாயகமூர்த்திக்கு ஒரு பெயர். இவர் வரேணிய ராசன் தேவி புட்பகை யென்பவள் கருவுயிர்த்த பொழுது அப்புத்திரனை மறைத்து யானை முகத்துடன் தாம் குழந்தையுருக்கொண்டிருந்தார். அரசன் கண்டு காட்டிலே கொண்டு போய்ப் போட்டுவரக்கட்டளையிட்டான். ஏவலாளர்கள் அரசன் கட்டளைப்படி குழந்தையைக் காட்டுக்குக் கொண்டு போய் ஒரு முனிவருடைய இருப்பிடத்திற்குப் பக்கத்தில் வைத்துவிட்டு வந்தனர். முனிவர் கண்டு குழந்தையை எடுத்து வளர்த்து வந்தார். கிரௌஞ்சன் என்னும் அசுரன் பெருச்சாளி உருக்கொண்டு விக்கினராசர் எழுந்தருளியிருக்கும் முனிவர் இருப்பிடத்திற்கு வந்து முனிவர்கட்குத்தொல்லை கொடுத்தான். விக்கினராசர் அவனை ஊர்தியாகக்கொண்டு அவனுடைய வலியை அடக்கினார். மற்றும் காலரூபி என்று பெயர்பெற்ற விக்கினனுடைய வலியையும் அடக்கி விக்கினராசர் என்று பெயர் கொண்டார்.

**விக்டோரியா** - இவர் இங்கிலாந்து மன்னரான மூன்றாம் சார்சின் நான்காம் மகனை கெண்ட் கோமகனின்மகளாக 1819 ஆம் ஆண்டில் இலண்டனிற் பிறந்தார். அடுத்த ஆண்டிலேயே தந்தையை இழந்தார். 1820 இல் சார்ச் இறக்கவே அவருடைய மூத்தமகன் நான்காம் சார்ச் பட்டத்திற்கு வந்தார். இவருடையஒரேமகள்1817இல் இறக்கவே இவருக்குப் பின் இவருடைய தம்பியார் நான்காம் வில்லியம் பட்டத்திற்கு வந்தார். இவருக்கும் யார்க் கோ மகனுருக்கும் மக்களின்மையால் விக்டோரியாவே அரசுரிமைக்கு உரியவரானார்.இவர் தம்முடைய தாய்மாமனிடம் அரசியாவதற்கு வேண்டிய பயிற்சிகள் பெற்றார்.

1837 இல் வில்லியம் இறக்கவே விக்டோரியா தம்முடைய 18 ஆவது ஆண்டில் அரசியானார். 1840 இல் இவர்

தம்முடைய உறவினரான ஆல்பர்ட் இளவரசரை மணந்தார். இருவரும் மனம் ஒத்து வாழ்க்கை நடத்தினர். இவர்கட்கு நான்கு ஆண்களும் ஐந்து பெண்களும் பிறந்தனர். 1861 இல் ஆல்பர்ட் இறந்தார்.

1857 இல் இந்தியாவில் நடந்த கிளர்ச்சிக்குப் பிறகு விக்டோரியா இந்தியாவைக் கிழக்கிந்தியக் கம்பெனியிடமிருந்து நீக்கிவிட்டுத் தம்முடைய ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தார். 1876 இல் விக்டோரியா இந்தியாவின் பேரரசியானார். 63 ஆண்டுகள் சிறப்பாக ஆட்சி நடத்திய இவர் தம்முடைய 81 ஆம் ஆண்டிற் காலமானார்.

**விசய கூழங்கைச்சக்கரவர்த்தி** - இவன் கலிங்க விசயவாகு அல்லது கலிங்க மாகன் என்னும் பெயருடைய இந்திய அரசன். இவன் இலங்கைமேற் படையெடுத்துப் போய்ப் பொலன்னறுவை என்னுமிடத்தைப் பாழாக்கி அங்கிருந்து அரசாட்சி செய்தபாண்டியகுல மன்னனைக் கொன்று, புத்தப் பள்ளிகளையிடித்துப் புத்தத் துறவிகளை அங்கிருந்து துரத்தி இருபத்தைந்தாண்டுகள் வரை அரசாட்சி செய்திருந்தான். இவனே சிங்கைநகர் ஆரிய அரசர்களுக்குள் முதலாவதாகச் சக்கரவர்த்திப்பட்டம்பெற்றவனைபடியால் இவன் விசய காலிங்கச்சக்கரவர்த்திஎன்னும் பெயரை யடைந்தான். விசய கூழங்கைச்சக்கரவர்த்தி யெனவும் இவனுடைய பெயர் வழங்கியது.

**விசயபத்திரன்** - இவன் மூவாயிரத்து மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு பவகிரி என்னும் நகரில் இருந்துஅரசுபுரிந்த சயசேனன் என்னும் அரசனுடைய மகன். தாய்பெயர் பிரிதிமதி. அழகு அறிவு ஆண்மை அமைதி முதலிய மேன்மைகள் யாவும் இவனிடம் அமைந்திருந்தன.

**விசயமங்கலம்** - ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்ருன பெருங்கதையை இயற்றிய கொங்கு வேளிர் என்பவருடைய ஊர் இஃது என்பர். இவ்வூர் கொங்குநாட்டில்ஈரோட்டிற்கு மேற்கே பதினைருவது கல்லில் உள்ளது.

**விசயரகுநாதன்** - கட்டபொம்மு வழிமுறையில் நசு ஆவது பட்டமாகப் பாஞ்சாலன்குறிச்சிக்கு அரசனைக இருந்தவன். இவனுடைய தந்தையின்பெயர் வீரதளவாய். இவன் சிறந்த போர்வீரன். நன்முறையில் நாட்டை ஏழு ஆண்டுகள் அரசாட்சி புரிந்தான்.

**விசயரகுபதி** - பாஞ்சாலன் குறிச்சியில் கட்டபொம்மு வழிமுறையில் முப்பத்தொன்ருவதாகப் பட்டத்தையடைந்து ஏழு ஆண்டுகள் ஆட்சி புரிந்தவன்.

**விசயரகுராமன்** - கட்டபொம்மு வழிமுறையில் பாஞ்சாலன் குறிச்சியை உள ஆவது மன்னனைக அரசாண்டவன். தந்தையினுடைய பெயர் கெட்டிதளவாய். இவன் விற்போர், மற்போர், வாட்போர் ஆகியவைகளில் வல்லவன். இவனுடைய ஆட்சி ஏழாண்டுகளே நடைபெற்றது.

**விசயராகவலு நாயுடுகாரு** - தஞ்சையை ஆண்ட மன்னர்களில் ஒருவன். இரகுநாத நாயுடுகாரு என்பவனுடைய மகன். இவன் கி. பி. 1630 முதல்1670வரை நாற்பதாண்டுகள் அரசாட்சிசெய்தான். இவனுக்கு அச்சுத விசய ராகவலு

நாயுடுகாரு என்னும் பெயரும் வழங்கி வந்தது. இந்த விசயராகவலுநாயுடுசிறந்தவைணவ அன்பன். திருமாலிடத்திற் பெருமால் கொண்டவன். தன்னுடைய குடிகளின் நன்மையைக் கருதி இவன் பலவகையானகாரியங்களைச் செய்தான். நாள்தோறும் பன்னிரண்டாயிரம் அந்தணர்கட்கு உணவிட்ட பிறகுதான்தானுந் தன்னுடைய அரண்மனையாரும் உண்ணுவது என்னும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தான்.

ஒருசமயத்தில் ஓய்வில்லாமல் அடைமழை பொழிந்தது. தெருக்களெல்லாம் ஆறுகளாகவோடின. சமையல் செய்வதற்கு விறகு அகப்படவில்லை. சமையல்காரர்கள் விறகு அகப்படாத செய்தியை மன்னனிடம் தெரிவித்தார்கள். அவன் தன்னுடைய அரண்மனையின் ஒரு பாகத்தில் இருந்த மாடிமேடைகளை யிடிக்கச்செய்து அதிவிருந்த, தூலம், விட்டம், சட்டம், துலாக்கட்டை, கம்பம், நிலை, கதவு, பலகணி முதலியவைகளைக் கொண்டுபோய் எரிக்கச் செய்தான். சமையற்காரர்கள் மூன்று நாட்கள் அவ்வாறே செய்தார்கள். அதன் பிறகு மேலும் விறகில்லாமற் போய்விட்ட செய்தியைச் சமையல்காரர்கள் அரசனிடங் கூறினார்கள். அரண்மனையில் இருந்த பட்டு, பீதாம்பரம், காசிதுப்பட்டா, சால்வை முதலிய விலை உயர்ந்த துணிகளையெல்லாம் எண்ணெயில் நனைத்து எரிக்கச் செய்தான்.

இவ்வாறு தன்னுடைய உணவிடும் அறத்திற்குப் பழுது வராமற் செய்துகொண்டு இவன் ஆட்சிசெய்து வரும்போது திருவரங்கத்தில் சீரங்கநாய்ச்சியாருடைய மூக்கிலிருந்த விலையுயர்ந்த அழகிய மூக்குத்தியொன்று காணுமற் போய்விட்டது. கோவிற்காரர்கள் வழிபாடுசெய்யும் அருச்சகன் ஒருவன் மீது ஐயங்கொண்டார்கள். அவனைப் பிடித்து அடித்து வருத்தினார்கள். அவன் துன்பம் பொறுக்க முடியாமல் இம்மன்னனிடம் வந்துமுறையிட்டான். மன்னன் இதனைக் கேட்டுத் திகைத்து எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். அப்பொழுது அரண்மனையில் இருந்த ஓர் அந்தணப் பெண்மீது சீரங்கநாய்ச்சியாருடைய ஆவேசம் வந்து ஆடத் தொடங்கியது. அவ்வாவேசம் அங்கிருந்தவர்களைப் பார்த்து, "விசயராகவலுநாயுடுகாரு மிகுந்த பேரன்புடையவனுகையால் தன்னுடைய உணவிடும் விரதம் தவறக்கூடாது என்று அரண்மனையின் ஆடைகளையெரித்தபோது உண்டான புகையைப் பொறுக்கமுடியாமல் பலசமையல்காரர்கள் ஓடிப் போய்விட்டார்கள். தகுந்த காலத்தில் அந்தணர்கட்கு உணவளிக்கப்படா விட்டால் அரசனுடைய வீரவிரதங் கெட்டுப்போய் விடுமென்று சீரங்கநாய்ச்சியாரே எளிய பார்ப்பன மாதைப் போல் கோலம்பூண்டு வந்து சமையல் தொழிலைச் செய்து கொண்டிருந்தாள். அப்பொழுது புகை மிகுதியாக எழும்பியது. நாய்ச்சியாருடைய மூக்கிலும் புகை மிகுதியாகப் புகுந்து வருத்தியது. அதனுல் வருத்தமடைந்த நாய்ச்சியார்அங்கிருந்தகழனித் தொட்டியிடஞ் சென்று மூக்கைச் சீந்தினுள். அப்பொழுது மூக்குத்தி கழன்றுதொட்டியில் விழுந்து விட்டது. ஆகவே கோயில் அருச்சகனை வருத்தியது தீவினையாகும்" என்று கூறினுள்.

அரசன் கழனித்தொட்டியில் தேடிப்பார்க்கச்செய்தான். மூக்குத்தி அகப்பட்டது. மன்னனுக்கு அளவுகடந்த மகிழ்ச்சியுண்டாயிற்று. நாய்ச்சியார் தன்னுடைய அரண்மனைக்கு எழுந்தருளியதைப்பற்றிமிகவுங் கொண்டாடினன். அம்மூக்குத்தியைக் கண்களில் ஒற்றிக் கொண்டான். அதனைப்போல் எட்டு மூக்குத்திகளைச் செய்தான். நாய்ச்சியாருடைய உருவத்தைப் பொன்னுற் செய்து மூக்குத்தியை அணிவித்தான். பெருஞ்சிறப்போடு திருவரங்கத்திற்கு அனுப்பினன். தான் நாடோறுங் காவிரியில்நீராடிச் சீரங்கநாதரையும் சீரங்கநாயகியையும் போற்றிவழிபடாமல் உண்ணுவதில்லையென்னும் விரதத்தை மேற்கொண்டான். தன்னுடைய வாணுள் வரையிலும் அவ்வாறே செய்துகொண்டிருந்தான்.

இம்மன்னனுடைய அவையில் சோமசுந்தரசுவாமிகள் என்றஒரு துறவியும்,அரங்கப்ப நாயுடு என்ற படைத்தலைவனும்,அக்கிராசா என்ற குதிரை வீரனும், வீரபானு என்ற அறிவாளியும்பெரியஅதிகாரிகளாக அமர்ந்து அரசனுக்கு அறிவுரைகள் கூறி அரசியல் நன்முறையில் நடைபெறுமாறு செய்து கொண்டிருந்தார்கள்.

**விசயராகவன்** - கட்டபொம்மு வழிமுறையில் செகவீரபொம்முவின் மகனுகத் தோன்றிப் பத்தொன்பதாவது பட்டத்தையடைந்தவன். இவன் பத்தாண்டுகள் பாஞ்சாலன் குறிச்சியை ஆட்சி செய்தான்.

**விசயராகவாச்சாரியார்** - இவர்செங்கற்பட்டுமாவட்டத்தில் பொன்விளைந்த களத்தூரில் ஓர் எளிய குடும்பத்தைச் சேர்ந்தவர். 18-6-1852 இல் மதுராந்தகத்தில் பிறந்தார். சென்னையில் பச்சையப்பன்உயர்நிலைப்பள்ளியிலும், அரசாங்கக் கல்லூரியிலும் கல்விபயின்று 1875 ஆம் ஆண்டில் பி.ஏ. தேர்வில் தேறினர். சிறிதுகாலம் மங்களூர் அரசினர்கல்லூரியிலும் சேலம் கல்லூரியிலும் விரிவுரையாளராகப் பணியாற்றினர். பிறகு அவ்வேலைகளில்இருந்துவிலகிச் சேலத்தில் வழக்கறிஞராகத் தொழில் நடத்தினர்.

இவர் சேலத்திற்கு வந்து தம்முடைய தொழிலில் ஈடுபட்ட சிறிது காலத்திற்குள்ளாகவே 1882 இல் அங்கு நடந்த இந்து முஸ்லீம் கலகத்தில் ஏகாதிபத்திய அரசாங்கத்தினர் இவரையும் ஒரு குற்றவாளியாகச் சேர்த்துவிட்டனர். நீதிமன்றம் இவருக்குப் பத்து ஆண்டு தண்டனை விதித்தது. ஆனல் இவர் சென்னை உயர்நீதிமன்றத்தில் முறையிட்டுத் தாம் குற்றமற்றவர் என்பதை உறுதிப்படுத்தினர். ஆகவே விடுதலை செய்யப் பட்டார். தம்மோடு தண்டிக்கப் பட்ட அனைவரையும் விடுதலை பெறச் செய்தார். இதனுல் இவர் மக்களுடைய பாராட்டுக்கு உரியவராஞர். காங்கிரசில்ஈடுபட்டுத்தேசவிடுதலைக்குஉழைத்தார். இவர் திலகரைப்போல்ஒரு தீவிர தேசியவாதி. 1920ஆம் ஆண்டில் காங்கிரசுக்குத் தலைமை தாங்கினர். இவர் 62 ஆண்டுகள் சிறந்த பொது நலச் சேவை செய்து 1944 ஆம்ஆண்டில் தம்முடைய 92 ஆவது அகவையிற் காலமானர்.

**விசயலட்சுமி** - மூன்று கைகளில் தாமரைமலர்களிருக்கும். ஒரு கை இலம்பிதமாக விளங்கும். இவளைப் போற்றுவோர் மகிழ்ச்சிமிக்கவாழ்வு பெறுவர்.

**விசயன்** - இவன் வங்கநாட்டு மன்னனாகிய சிங்கவாகு என்பவனுடைய மகன். இவன் மிகப் பொல்லாதவனாக இருந்த படியால் இவனைத் தந்தையாகிய சிங்கவாகு துரத்திவிட்டான். இவன்காசிக்குச்சென்றுஅங்கே தங்கியிருந்தான். அப்போது இவனுக்கு, ''நீ இலங்கை நாட்டின் நடுவில் உள்ள கதிரைமலையிற் போயிரு. அந்நாடு உனக்குரியது'' என்று கனவில் கட்டளைபிறந்தது. ஆகவே நீலகண்டாசாரியார் என்னுங் குருவையழைத்தான். அவர் தம்முடையமனைவி அகிலாண்டவல்லியம்மாளையும் மக்களையும் அழைத்துக்கொண்டுஅவனோடு புறப்பட்டார். புறப்பட்டவர்கள் கதிரைமலையை அடைந்தனர். அப்பொழுது அங்குக் குடிகள் எவருமிலர். ஆகவே இந்தியாவையடைந்து பலரை இலங்கைக் கழைத்தான். இலங்கை இராட்சதர்களிருந்த நாடாகையால் வரமுடியாது என்று பலரும் மறுத்து விட்டனர். அந்நாளில் மகதநாட்டிலிருந்த மக்களிற் பலர் புத்த சமயத்தை மேற்கொண்டபடியினால் மகதமன்னன் அவர்களை நாட்டைவிட்டுத் துரத்திவிட்டான். அவர்கள் இமயமலை முதலிய இடங்களிற் சுற்றித் திரிந்தார்கள். இச்செய்தியை உணர்ந்த விசயன் அங்குச் சென்று அவர்களை அழைத்துக் கொண்டுபோய் இலங்கையிற் குடியேற்றினான் அந்தப் புத்தர்கள் சிங்களமென்றுபெயருள்ள இலங்கையிற் குடியேறிய படியால் சிங்களரென்று பெயர் பெற்றார்கள்.

**விசயாலயச்சோழன்**-இவன் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில் இருந்தவன். குமாராங்குசன் என்பவனுடைய மகன். இவன் பலபோர்களைச் செய்தான். இவனுடைய மார்பில் தொண்ணூற்றாறு போர் வடுக்கள் இருந்தன என்பர். தஞ்சையைச்சோழநாட்டிற்குத் தலைநகராக்கியவன் இவனே. இவன் புதுக்கோட்டையை அடுத்த நாரதர் மலைக்குத் தெற்கே உள்ள மலையில் ஒரு கோயிலைக் கட்டினான். அக் கோயில் விசயாலயச்சோழீச்சரம் என்று பெயர் பெற்றது.

**விசாகப்பட்டினம்** - ஆந்திரநாட்டிலுள்ள ஒரு கடலோர மாவட்டம். பெரும்பகுதி மலைப் பாங்கானது. கிழக்குத் தொடர்ச்சிமலை இம்மாவட்டத்தின் இடையே அமைந்திருக்கிறது. மலைச்சரிவு மிகவுஞ் செழிப்பாக அமைந்துள்ளது. பசுமையான காடுகள்பல இருக்கின்றன. பெரிய மாவட்டமாக இருந்த இதை 1950 இல் இரண்டு பகுதிகளாக்கி வட பகுதிக்குக் காகுளம் என்று பெயரிட்டுள்ளனர்.

**விசாரசருமர்** - திருச்சேய்ஞலூரில் எச்சதத்தன் என்னும் அந்தணனுக்கு மகனாகத் தோன்றியவர். பின்னாளில் சண்டேசுரர் ஆனவர். விசாரசருமர் என்பது பிள்ளைப்பெயர்.

**விசாலாட்சி** - காசியில் எழுந்தருளிய இறைவியின் திருப் பெயர். இச்சொல்லின்பொருள் அகலமான கண்களையுடையவள் என்பது.

**விசாலக்கண்ணி**-இவள் சாண்டில்லியன் என்பவனுடைய மகள். இவள் அவந்தியில் சுமந்தன் என்பவனுக்கு வாழ்க்கைப்பட்டாள். மிகுந்த காமம் உடையவளாய்ப் பலரோடு சேர்ந்து பொருள் தேடினாள். மேலும் பொருள்தேட எண்ணிக் காசியில் பஞ்சக்குரோசப் பிரதக்கிணஞ்செய்யும் விடருடன்

பஞ்சக்குரோசப் பிரதக்கிணஞ் செய்து தீவினை நீங்கி வீடு பெற்ருள்.

**விசிட்டாத்வைதம்** - விசிட்ட-அத்வைதம்; அத்வைதம்-இரண்டற்றது; ஒன்ருகவுள்ளது. விசிட்டம் - சிறப்பு. சித்து அசித்து இவைகளை உடம்பாகக்கொண்டிருக்கிற சிறப்பையுடையது. ஆகவே, சித்து அசித்துச்சேர்க்கையால் விளங்கும் இரண்டற்ற ஒன்ருன பிரமம் உண்டென்று கூறும் மதம் விசிட்டாத்வைதமாகும்.

**விசித்திரசுவன்** - இவன் பிருதுவினுடைய மகன். தந்தை செய்த குதிரைவேள்வியில் குதிரையைக் கவர்ந்து சென்ற இந்திரனுடன் இருமுறை போர்புரிந்து குதிரையை மீட்டபடியினுல் இவனுக்கு அந்தர்த்தானன் என்று பெயர் உண்டாயிற்று. விகிதாசுவன் எனவும் பெயர். இவனுக்கு இரண்டு மனைவியர். முதல் மனைவி வசிட்டர் சாபத்தால் பூமியிற்பிறந்து பாகவன், பவமானன், சுசி என்று மூவரை மகனுகப் பெற்ருள். இவர்கள் இளமையிலேயே இறந்தனர். இரண்டாவது மனைவியாகிய நபஸ்வதிக்கு அவிர்த்தானன் என்னுங் குமாரன் பிறந்தான்.

**விசித்திரவீரியன்** - இவன் சந்தனுவுக்கு மச்சகந்தியிடந் தோன்றியவன். இவன் பொருட்டுவீஷ்மர்காசியரசனிடமிருந்து அம்பிகை அம்பாலிகை என்னும் இரண்டு பெண்களைக் கொண்டுவந்தார். இவன் அவர்களை மணந்து மக்கட்பேறில்லாமலே இறந்தான். பிறகு வியாசரால் இவன் மனைவியரிடத்தில் பாண்டுவுந் திருதராட்டிரனும் பிறந்தனர்.

**விசுவசேநர்** - இவர் சேனைமுதலியார் எனவும் வழங்கப்பெறுவார். துருவாசர் செய்துகொண்டிருந்த தவத்தைக் கெடுக்கும் பொருட்டுக் குந்தளை என்பவளை இந்திரன் அனுப்பினுன். அவள் உடன்பட்டு வந்து துருவாசருக்கு முன்னுல் நின்ருள். துருவாசர் சினங்கொண்டு, "நீ வேடச்சியாகுக" என்று வசவுரை வழங்கினுர். குந்தளை நடுங்கித் தீர்வு வேண்டினுள். துருவாசர், "உன்னுடைய வயிற்றில்நற்குணமுள்ள மகன் ஒருவன் பிறப்பான்; அக்காலத்தில் இவ்வசவுரைப் பலன் நீங்கும்" என்ருர். அவ்வாறே இவள் வீரவாகு என்னும் வேடனுக்குச் சுவர்க்கலை என்னும் பெயருடன் பிறந்து, பத்திரன்என்பவனைமணந்துவாழ்ந்தாள். ஒருநாள் நருமதையாற்றில் நீராடி ஒரு மரத்தடியில் இருந்தாள். அப்பொழுது இவளை வருணன் கண்டு கூடினுன். இவளிடத்தில் அக்காலத்தில் இவர் பிறந்தார். காசிபரிடங் கல்விகற்றுத் தவத்தால் சேனைமுதலியார் ஆனுர்.

**விசுவநாத நாயக்கன்** - இவன் நாகம நாயக்கனுடைய மகன். நாகம நாயக்கன் நீண்ட காலமாக மக்கட் பேறில்லாமலிருந்து பிறகு காசிக்குச் சென்று விசுவநாதப் பெருமானுடைய அருளால் இவனைப் பெற்ருன். இவன் தன்னுடைய தந்தையினிடமே போர்த்துறை முறைகளை யெல்லாம் நன்கு கற்றுத் தேறினுன். நாகம நாயக்கன் மதுரை சென்று அங்கிருந்த காலத்தில் இவன் விசயநகரத்தில் இருந்தான். வழக்கம்போல் அரசனுடைய அவைக்குப் போய்வந்துகொண்டிருந்தான். நாகம நாயக்கனுடைய செய்தியை உணர்ந்த விசயநகர மன்னன் நாகமன்மீது கடுஞ் சினங் கொண்டான். தன்னிடமிருந்த மற்றைய

படைத்தலைவர்களைப் பார்த்து "வஞ்சகனாகிய நாகமனைப் பிடித்துக் கொண்டுவர இயலுமா?" என்று உசாவினான். யாரும் மறுமொழி கூறவில்லை. அரசன் மீண்டும் மீண்டுங் கேட்டான். மாபெரும் வீரனாகிய நாகமனை எதிர்த்துச் செல்ல எவருந் துணியவில்லை. விசுவநாத நாயக்கன் எழுந்து, "நான் சென்று என்னுடைய தந்தையாகிய நாகமனைத் தோற்கடித்துப் பிடித்து வருவேன்" என்று கூறினான். முதலில் மன்னன் இதனை நம்பவில்லை. ஆயினும் விசுவநாதனிடம் நம்பிக்கை வைத்துப் பெரும் படையோடு மதுரைக்கனுப்பினான். இவன் பெரும் படையோடு மதுரைக்குச் சென்று தன்னுடைய தந்தையை எதிர்த்துப் பெரும் போர் புரிந்தான். தந்தையை வென்று சிறைப்பிடித்தான். விசயநகரத்திற்குக் கொண்டு போய் அரசன் முன்பு நிறுத்தினான். விசுவநாதனுடைய ஆண்மையையும் அரசநேசத்தையுங் கண்ட அரசன் அளவற்ற மகிழ்ச்சிகொண்டான் "உனக்கு வேண்டியதைக் கேள் கொடுக்கிறேன்" என்று சொன்னான். விசுவநாத நாயக்கன் அரசனைப் பார்த்து "என்னுடைய தந்தைக்கு உயிர்ப்பிச்சை கொடுக்க வேண்டு" மென்று வேண்டிக் கொண்டான். மன்னன் அவ்வாறே செய்ததோடு, விசுவநாதனையே பாண்டிய நாட்டு ஆட்சியையும் பார்த்துக் கொள்ளுமாறு சொன்னான். இவன் மதுரையை அடைந்து பாண்டியனைஅரசாக்கித் தானே அமைச்சனாக இருந்து எல்லாக் காரியங்களையும் நடத்தினான். இதுமுதல் நாயக்கர்களே அரசாட்சிக் காரியங்களை யெல்லாம் பார்க்க அரசர்கள் பெயரளவுக்கு அரசர்களாக விளங்கினார்கள்.

**விசுவநாதர்** - காசியில் எழுந்தருளியுள்ள இறைவனுடைய பெயர். விசுவம் என்பது உலகம். இறைவன் உலகங்களுக்கெல்லாந் தலைவராக இருத்தலின் இவ்வாறு விசுவநாதர் என்று பெயர் பெற்றார். உலகநாதர் என்பது தமிழ்ச் சொல்.

**விசுவபதன்** - துவட்டாவின் மகன். இந்திரன் ஒரு சமயம் இவனைக் குருவாகக் கொண்டு ஒரு வேள்வியைத் தொடங்கினான். இவன் வாக்கினால், "தேவர்கட்கு நன்மை யுண்டாகுக" என்று கூறி மனத்தினால் "அசுரர்கட்கு நன்மைகளுண்டாகுக" என்று வேள்வியைச் செய்தான். இவனுடைய வஞ்சக நெஞ்சத்தை யறிந்த இந்திரன் இவனுடைய தலையை அறுத்து வீழ்த்தினான்.

**விசுவாமித்திரர்** - இவர் காதி என்ற அரசனுடைய புதல்வர். இவர் குசிகவமிசத்தில் தோன்றியவராகையால் கௌசிகர் என்றுங் கூறப்படுகிறார். நான்முகனுடைய புதல்வர் குசர். குசருடைய பிள்ளை குசநாபர். குசநாபருடைய புதல்வர் காதி; காதியினுடைய புதல்வர் விசுவாமித்திரர். இவர் கன்யாகுப்சம் என்னும் நாட்டுக்கு அரசராக இருந்தார். இவர் ஒரு நாள் வேட்டைக்குச் சென்றார். மிகுந்த களைப் படைந்து தம்முடைய பரிவாரங்களோடு வசிட்டருடைய இருப்பிடத்திற்குச் சென்றார். இவர் களைப்போடு வந்திருத்தலை வசிட்டர் கண்டார். தம்முடைய தெய்வப் பசுவாகிய காமதேனுவைக் கொண்டு இவருக்கும் இவருடைய பரிவாரங்களுக்கும் நல்விருந்து

செய்து களைப்பைப் போக்கினார்.

காமதேனுவின் செயற்கருஞ் செயலைக் கண்ட அரசர் அதனிடம் விருப்பங் கொண்டார். வசிட்டரைப் பார்த்து, "இத்தகைய பசு தங்களைப் போன்ற முனிவர்களிடம் இருப்பதால் என்ன பயன்? என்போன்ற அரசர்களிடம் இருந்தால் மிகுந்த உதவியாக இருக்கும். ஆதலால் இதனை எனக்குக் கொடுத்து விடுங்கள்" என்று கேட்டார். வசிட்டர், "அரசே! நான் இப்பசுவைக் கொடுப்பதற்கு உரிமையுடையவனல்லேன். இங்கிருப்பதும் இல்லாமற் போவதும் அதனுடைய விருப்பம்" என்று சொன்னார்.

அரசர் காமதேனுவைக் கவர்ந்து கொண்டுபோக எண்ணினார். அதனுடைய சிறப்பியல்புகள் எதனையும் எண்ணிப்பாராமல் கயிறு போட்டுக் கட்டிப்பிடித்துக் கொண்டுவரும்படி தம்முடைய ஆட்களுக்குக் கட்டளையிட்டார். காமதேனு தன்னைப் பிடித்துக் கட்டிய கட்டுக்களை அறுத்துக் கொண்டு, தன்னுடைய உடலில் இருந்து பல படைகளைப் பிறப்பித்து அரசருடைய படைகளைக்கொன்றது. விசுவாமித்திரருடைய புதல்வர்களிற் சிலர் வசிட்டரையெதிர்த்தார்கள். அவர்களை வசிட்டர் தம்முடைய சினத்தீயினால் எரித்தார். இதனால் அரசரும் படைகளும் வசிட்டரையெதிர்த்துப் போர் செய்யத் தொடங்கினர். வசிட்டர் தமக்கு முன்னால் தம்முடைய யோகதண்டத்தை நிறுத்திவிட்டுத் தாம் யோகத்தில் இருந்தார். யோகதண்டம் வசிட்டரிடம் வந்த படைகளையெல்லாம் விழுங்கியது.

வசிட்டருடைய செய்கையைக் கண்ட அரசர் தவத்தைக் காட்டினுஞ் சிறந்தது ஒன்றுமில்லையென்று முடிவு செய்து தாம் ஒரு திக்கில் சென்று அமர்ந்து தவஞ் செய்யத் தொடங்கினார். தவத்திற்கு இடையூறு செய்ய எண்ணிய தேவேந்திரன் மேனகையை இவரிடம் அனுப்பினான். இவர் அவளைக்கூடிச் சகுந்தலையைப் பெற்றார். அச்சகுந்தலை துஷ்யந்தனை மணந்து பரதனைப் பெற்றாள். அரிச்சந்திரனைப் பொய்யனாக்குகிறேன் என்று தேவர்களுடைய அவையில் சூளுரை மொழிந்து அவனுக்குப் பல தொல்லைகளை உண்டாக்கியும் தம்முடைய வாக்கைக் காப்பாற்ற முடியாமல் தவத்தையிழந்தார்.

இராமரையும் இலட்சுமணரையும் தசரதரிடமிருந்து அழைத்துச் சென்று தாடகையைக் கொல்லச் செய்தார். பிறகு மிதிலைக்கழைத்துச் சென்று சீதா பிராட்டி திருமணத்தை நடத்தினார்.

இன்னும் இவ்விசுவாமித்திரரைப் பற்றிப் புராணங்களில் பல செய்திகள் கூறப்படுகின்றன.

**விசையை**-விதைய நாட்டரசனாகிய சீதத்தன் என்பவனுடைய மகள். ஏமாங்கத நாட்டரசனாகிய சச்சந்தனுடைய மனைவி; சீவகனுடைய தாய்.

**விசோபா**-இவர் பண்டரிபுரத்தில் இருந்த ஒரு மறையவர். கொடுக்கல் வாங்கல் வியாபாரஞ் செய்கையில் பஞ்ச காலம் உண்டாயிற்று. தம்மிடம் இருந்த பொருள் முழுவதையும் உணவிடும் அறத்தில் செலவிட்டார். மேலும் அன்னதானத்தின் பொருட்டு ஒரு பட்டாணியனிடம் எழுநூறு பொன் கடன்

வாங்கினார். இவர் வாங்கிய கடனைக் கொடுக்க வழியில்லாதவர் என்று சிலர் பட்டாணியனிடங் கூறினர். பட்டாணியன் இவரிடம் வந்து பணத்தைக் கொடுக்குமாறு வம்பு செய்தான். பெருமாள் மாறு வடிவங் கொண்டு பட்டாணியனிடம் போய்க்கடனைத் தீர்த்து விட்டுப் பற்றுச் சீட்டைக் கொண்டுவந்து இவரிடம் கொடுத்தார்.

**விச்சலராசன்** - கலியாண புரத்தை அரசாட்சி செய்த ஓர் அரசன். இவனுக்குச் சீபலன் எனவும் பெயர் உண்டு. இவன் மாதேவியை மணக்க எண்ணினான். அவள் தன்னை வலியத் தொடாதிருக்கக் கேட்டபடி சூள்தந்தான். மாதேவி வீரசைவ தீட்சை பெற்றுக் கொள்ளுமாறு கூற வெறுத்து அவள் மீது கொண்ட காதலை யொழித்தான்.

**விச்சிக்கோ** - இவனை இளவிச்சிக்கோ என்பர். இஃது இவனுக்குக் காரணப் பெயர். இவனுடைய இடுகுறிப் பெயர் இன்னதென்று விளங்க வில்லை. விச்சி யென்பது ஒரு மலை. அதனைச் சூழ்ந்த நாடு விச்சி நாடு என்றும் அதனை ஆள்பவனை விச்சிக்கோ எனவுங் கூறுப. இவன் விச்சியின் இளவரசனாக இருந்தமையின் இளவிச்சிக்கோ எனப்பட்டான். இளவிச்சிக் கோவும் இளங்கண்டீரக்கோவும் நெருங்கிய நண்பர்கள். இளவிச்சிக்கோவின் வழி முறையினர் கொடையிற் சிறந்து விளங்கியவர்கள் அல்லர். பெண் கொலை புரிந்த நன்னன் இவர்களுடைய வழிமுறையைச் சேர்ந்தவன். இளங்கண்டீரக் கோவின் வழிமுறையினர் கொடையில் புகழ் பெற்றவர்கள்.

**விச்சிக்கோன்** - இவன் ஒரு சிற்றரசன். மகாநாடு எனவும் வச்சிர நாடு எனவும் பெயர் பெற்றிருந்த ஒரு நாட்டை இவன் ஆட்சி செய்திருந்தான். பாரி மகளிரை மணக்க மறுத்தவன்.

**விச்சுவவுருவன்** - இவன் அசுர அரசனான துவட்டாவினுடைய மகன். பல கலைகளையும் மறைகளையுங் கற்றுணர்ந்தவன். தேவகுரு இந்திரனை அகன்று சென்ற பொழுது இந்திரன் இவனைத் தனக்குக் குருவாக ஏற்படுத்தினான். மந்திர முறைகளில் இவன் வல்லவனாகையால் இந்திரன் இவனைக் கொண்டு ஒரு வேள்வி செய்யத் தொடங்கினான். தேவர்கட்கு நன்மையுண்டாகுமாறு செய்யத் தொடங்கிய வேள்வியில் அசுர குருவாகிய இவன் அசுரர்கட்கே நன்மையுண்டாகுமாறு மறைமொழிகளைக் கரவாக மொழிந்தான். இதனை உணர்ந்த இந்திரன் இவனைத் தன்னுடைய வச்சிரப் படையால் கொன்று விட்டான்.

**விச்சுவலேகை** - இவள் வாசவதத்தையினுடைய தோழிமார்களுள் ஒருத்தி. குறுகிய வடிவம் உடையவள். பந்தாட்டத்தில் வல்லவள். இவள் வாசவதத்தைக்கு வலத் தோளைப் போல் விளங்கினாள்.

**விச்சுவாவதி** - விச்சுவாவசு என்னுங் காந்தருவனுடைய மகள். இவள் பார்வதி தேவியை நோக்கித் தவம் புரிந்தாள். பார்வதி ஒரு பெண்குழந்தை வடிவாகக் காட்சி கொடுத்து, "என்ன வரம் வேண்டு"மென்று கேட்டாள். இவள், "தேவரீர் அடியாளுக்கு மகளாக வரும் வரத்தைத் தந்தருள வேண்டும்" என்று வேண்டினாள். அதற்குப் பார்வதி தேவியார், "நீ மற்

றொரு பிறப்பில் மலயத்துவச னுடைய மனைவி காஞ்சன மாலையாகப் பிறப்பாய்; அப்பொழுது உன் மடிமீது இவ் வடிவுடன் இருப்பேன்'' என்று வரங் கொடுத்து மறைந்தாள்.

**விடபருவன்** - இவன் அசுரகுல வேந்தன். அமரரும் புகழுவாழ்ந் தான். இவனிடம் எல்லா நலங் களும் இனிதமைந்திருந்தன. அனைவரையும் வென்று இவன் சிறந்து விளங்கினான். இவ னிடம் செல்வம் மிகுதியாக இருந்தது. அப்பொருளை இவன் விந்து என்னும் பெயருடைய ஒரு தெய்வப் பொய்கையிற் போட்டான். நல்ல தவமுடைய ஒருவன் இவ்வுலகில் தோன்று வானாயின் அவனுக்கு இச்செல் வம் பயன் படுவதாக என்று ஓர் ஏற்பாடுஞ் செய்து விட்டு இறந்தான். பின்னாளில் இச் செல்வம் தரும புத்திரருக்குக் கிடைத்தது. அவர் அப்பொரு ளைக் கொண்டு இந்திரப் பிரத் தம் என்னும் புதிய நகரை யமைத்து அந்நகரில் துணைவர் களோடு வாழ்ந்திருந்தார்.

**விடப்பன்மன்** - இவன் வெகு காலத்திற்கு முன் வடநாட்டில் இருந்து அரசு புரிந்த ஓர் அசுர குல மன்னன். இவனுடைய மனைவியின் பெயர் கனகமாலை. இவனுக்குச் சன்மிட்டை யென் னும் பெயருடைய மகள் ஒருத்தி இருந்தாள். சுக்கிரன் என்பவன் இந்த விடப்பன்மனுக்குக் குல குரு. அவனுக்குத் தேவயானை என்னும் பெயருடைய மகள் ஒருத்தி இருந்தாள். ஒருசமயத் தில் சன்மிட்டைக்குந் தேவ யானைக்கும் பகை யுண்டாகி யது. அதனால் சுக்கிரன் இம்மன் னனை அகன்றுசென்றான். இதனை யுணர்ந்த விடப்பன்மன் தன் மகள் சன்மிட்டையைத் தேவ யானைக்குப் பணிப் பெண்ணாகச் செய்தான்.

**விடுவசேனர்** - திருமாலின் படைத் தலைவர். திருமால் தாம் விட்டுச் சென்ற உருளைப் படையை இவரை வாங்கி வர அனுப்பி னார். அவ்வுருளைப்படையை வீர பத்திரர் அணிந்திருந்த தலை யொன்று விழுங்கி விட்டது. அதனிடமிருந்து விகடக் கூத் தாடி இவர் அத்தலையை வெளிப் படச் செய்தார். ஆனால் அதனை ஆனைமுகக் கடவுள் தாம் விழுங்கி விகடக்கூத்துப்பெற்று விகடசக்கர விநாயகரானார். பிறகு இவரிடம் உருளைப் படை யைக் கொடுத்து விட்டார்.

**விடேல்விடுகு** - நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று; இஃது அவன் முடி சூடியபோது ஏற்றது. இப்பெயர் அவ னுடைய ஆணையைக் குறிக் கிறது. இவனுடைய பாட்ட னான இரண்டாம் நந்திவர்ம னும் இப்பெயரைக் கொண் டிருந்தான்.

**விட்டலதேவராயர்** - இவர் அச்சுத தேவராயர் என்பவருடைய ஆணை பெற்றவராய்த் தென் னாட்டில் பல இடங்களை வென் றவர். இவர் ''வீரப்ரதாப மகா மண்டலேசுர ராமராச திம்ம ராச விட்டல தேவமகாராசா'' என்று சிறப்பித்துப் புகழப் பெற்றார்.

**விட்டல்பாய்படேல்** - இந்திய நாட் டின் விடுதலைக்காக உழைத்த புகழ்பெற்ற தேசபக்தர்களுட் புகழ் வாய்ந்தவர். சர்தார் வல் லபபாய் படேலுக்குத் தமைய னார். குசராத்தில் உள்ள நடி யாட் என்ற ஊரில் 27 - 9 - 1873 இல் பிறந்தார். தொடக்கப் பள்ளி உயர்நிலைப் பள்ளி முத லியவைகளில் கல்வி கற்று 1891 ஆம் ஆண்டில் பல்கலைக் கழகப் பள்ளி இறுதித் தேர்வில்

தேறினார். பிறகு வழக்கறிஞர் வேலைக்குக் கல்வி கற்றுத் தேறி வழக்கறிஞரானார்.

இவருக்கு ஒன்பதாவது வயதி லேயே திருமணம் நடைபெற் றது. 37 ஆவது வயதில் மனைவி இறந்தாள். மறு மணஞ் செய்து கொள்ள மறுத்து இறுதிவரை யில் துறவியாகவே வாழ்ந்தார். இவருக்கு மக்களும் இல்லை. ஆகவே மக்களுக்காக உழைக்க வேண்டுமென்று முடிவு செய் தார். 1913 ஆம் ஆண்டில் பம் பாய் சட்டசபை உறுப்பின ரானார். 1915 இல் காங்கிரசு மகாசபையில் உறுப்பினரானார். காந்தியடிகளின் அடிச் சுவட் டில் சென்று அரும்பெரும் பணி கள் செய்து நாட்டின் விடுதலைக் குழைத்த இவர் நாட்டின் விடு தலையைக் காணுமலே 1933 ஆம் ஆண்டு அக்டோபரில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். ஆங்கில அரசினரைக் கலங்கச் செய்த உரிமை வீரர்களில் இவர் தலை சிறந்தவராவார்.

**விட்டுணுராதன்**-பரீட்சித்துமன்ன னுடைய மறு பெயர். விட்டுணு வின் கூருகிய கண்ணனால் உத் தரையின் கர்ப்பத்தில் காப்பாற் றப் பட்ட படியால் இப்பெயர் உண்டாகியது.

**விண்டுபுரம்** - காஞ்சிபுரத்திற் குரிய பதின்மூன்று பெயர் களில் ஒன்று. அயிராவதம் தவஞ் செய்து புண்ணிய கோடி கிரியாய்த் தம்மைத் தாங்கவும் அதன் அண்மையிற் பெருகும் வேகவதி யாற்றுக் கரையில் நான்முகன் தவஞ் செய்து வழி படத் திருமால் எழுந்தருளி அருள் செய்த காரணத்தினால் உண்டாகிய பெயர்.

**விண்டுமித்திரன்** - அவந்தியில் கௌசிகன் என்பவனுக்கு மக னாகப் பிறந்தவன். தாய் தந்தை யரைக் கொன்றவன். தன்னை அசுரர்கள் கடலில் தள்ள மீனால் விழுங்கப் பட்டு மீண்டும் வலை ஞர் வலையில் அகப்பட்ட மீனின் வயிற்றினின்று எடுத்த விசுவ குத்தனால் வளர்க்கப்பட்டுத் தன்னிலை யுணர்ந்து காவிரியில் நீராடித் தாய் தந்தையரை வர வழைத்தவன்.

**விண்ணந்தாயன்** - இவன் சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண் ணந் தாயன் என்று கூறப் பெறுகிறான். பூஞ்சாற்றூர் என் பது தஞ்சை மாவட்டத்தில் உள்ளது. கௌண்டின்னிய கோத்திரத்துப் பார்ப்பனர் கௌணியர் எனப்படுகின்ற னர். திருஞானசம்பந்தரும் கௌணியர் கோத்திரத்தார் ஆவர். இந்த விண்ணந்தாயன் ஒரு சமயம் சிறந்த வேள்வியும் விருந்துஞ் செய்தான். அதற்கு ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவருஞ் சென்றிருந்தார். வேள்வியின் சிறப்புக்களைக் கண்ட புலவர் இவனை வியந்து புகழ்ந்து பாடினார்.

**விதர்க்கணன்** - பாஞ்சால நாட் டில் விதையம் என்னும் பட்ட ணத்தில் இருந்த செட்டியின் மூட்டை சுமந்து பழமலையை அடைந்து மணிமுத்தா நதியில் நீராடிச் சிவகணத் தலைவனான வன். விபசித்திற்கு மணிமுத்தா நதியின் பெருமை கூறியவன்.

**விதர்ப்பநாடு** - விதர்ப்பன் என் னும் அரசனால் ஆளப்பட்ட நாடு இப்பெயரையடைந்தது. இஃது அத்தின புரத்திற்குத் தெற்கே யுள்ளது.

**விதுரன்** - பாரத காலத்து வீரர் களில் ஒருவன். திருதராட்டிர னுக்குத்தம்பிமுறையினன். வியா சருக்கும்அம்பாலிகையினுடைய தாதிக்கும் பிறந்தவன். விதுரன் என்பதற்கு அறிவுடையவன்

என்பது பொருள். இவன் தன்னுடைய பெயருக் கேற்ப அறிவுடையவனுகவே விளங்கினுன். போராண்மையில் பேராண்மை படைத்தவன். இவன் வில்லெடுப்பானுனுல் எதிர்த்து ஒருவரும் போரிட முடியாது. திருதராட்டிரன் தன் மகனுகிய துரியோதனனைக் கண்டித்து அறிவுரை கூருததைக் குறித்துத் திருதராட்டிரனைக் கண்டித்து வந்தான். பாரதப் போர் நிகழ இருந்த சமயத்தில் துரியோதனன் இவனைஇகழ்ந்து பேசிய படியால் தன்னுடைய வில்லை முறித் தெறிந்து விட்டுப் புனித நீராடச் சென்று விட்டான். மாண்டவிய முனிவரின் சாபத்தால் யமனே விதுரனுகப் பிறந்தான் என்பர்.

**விதூமன்** – நான்முகன் உலகில் இருந்த ஓர் அரசன். ஒருகால் அலம்புசை என்பவள் நான்முகனுடைய அவைக்குச் சென்ருள். அப்பொழுது காற்றினுல் ஆடை விலகியது. அப்பொழுது இவன் காதற் குறிப்போடு அவளைப் பார்த்தான். இதனுல் சினங் கொண்ட நான்முகன் இருவரும் மண்ணுலகிற் பிறக்குமாறு சாபமிட்டான்.

**விதேகன்** - நிமியினுடைய மகன். மிதிலை நாட்டிற்கு அரசன். இவன் ஆண்ட நாட்டிற்கு விதேகம் என்று பெயர். இவன் இறந்த பிறகு எமதூதர்கள் இவனைநிரயத்திற்குக் கொண்டு போய் அங்கு நடக்குங் கொடுமைகளைப் பார்க்கச் செய்தனர். அரசன் எமதூதர்களைப் பார்த்து "நான் எத்தகைய தீவினையுஞ்செய்யாதிருக்கஎன்னை இவ்வாறு நிரயத்திற்குக் கொண்டுவரக் காரணம் யாது?" என்று உசாவினுன். எமதூதர்கள் அரசனைப் பார்த்து, "உன்னுடைய மனைவி ருதுவாகி நீராடி இருந்த காலத்தில் அவளைச் சேராமல் வேறொரு மாதிடம் விருப்பத்தோடிருந்தாய். அதனுல் இவ்வாறு நிரயத்தைப் பார்க்க நேரிட்டது" என்றனர். நிமியின் உடலை அரணிக் கட்டையால் கடைந்தமையால் இவனுக்கு மிதிலன் என்று ஒரு பெயர். உயிர் நீங்கிய உடலில் இருந்து பிறந்த படியால் விதேகன் என்று பெயர். சநக நிமித்தமாய்ப் பிறந்த படியால் சநகன் எனவும் பெயர்.

**வித்தாரகவி** -வித்தாரகவிஎன்பது நாற்கவிகளில் ஒன்று. ஒரு பொருளைக் குறித்துப் பாடத் தொடங்கியவர்கள் அப்பொருளைக்குறித்து மிகவிரிவாக அணிகளமையுமாறு பாடுவார்களானுல் அவர்கள்வித்தாரகவி என்னுஞ் சிறப்புப்பெயரைப் பெறுதற்குரியவர்களாவர்.

**வித்தியாசங்கரர்** - இவர் சிருங்ககிரி மடத்தினர். இவர் திருவனந்தபுரஞ் சென்றிருந்தபோது அங்கு மத்வாசாரியாரைக் கண்டார். இருவருக்கும் சமயக் கொள்கை குறித்துச் சொற்போர் உண்டாயிற்று. திருவநந்தபுரத்து அரசன்முன்பு பலநாட்கள் தொடர்ந்து சொற்போர் செய்தனர். இதனுல் பகைதான் வளர்ந்து கொண்டு சென்றதேயன்றி யாருக்கும் வெற்றி தோல்வி ஏற்படவில்லை.

**வித்தியாதரர்** -வித்தையைத் தரித்திருப்பவர் என்பது இச்சொல்லுக்குப் பொருள். விரும்பிய வடிவத்தை மேற்கொள்வது, மறைவது, விண்ணிற் சஞ்சரிப்பது முதலிய ஆற்றல்களைத் தரவல்ல மந்திர ரூபமான வித்தையை இவர்கள் உணர்ந்திருப்பதால் இவ்வாறு வித்தியாதரர் எனக் கூறகின்றனர். இவர்கள் மனிதர்க்கும் தேவர்க்கும்

இடைப்பட்ட நிலையுடையவர்கள். இவர்களுடைய நாடு இமயமலையின் ஒருபகுதியில் இருப்பதாகக் கூறுகின்றனர். இவர்கள் சிவபிரானிடத்தில் அன்புடையவர்கள்; தேவர்களுடைய ஏவல்களைச் செய்பவர்களும் இவர்களே என்பர்.

**வித்தியாநகரம்** - அரிகரர் புக்கர் என்னும் பெயருடைய உடன்பிறந்தாரிருவர் வித்தியாரணியர் என்னும் பெரியாரிடத்திற் கல்வி பயின்றனர். இவர்கள் இருவரும் தம்முடைய ஆசிரியரான வித்தியாரணியருடைய வாழ்த்துரையைப் பெற்றுத் துங்கபத்திரைஎன்னும்ஆற்றுக் கரையில் கி. பி. 1336 ஆம் ஆண்டில் ஒருநகரத்தை அமைத்தனர். அந்நகருக்கு வித்தியாநகரம் என்று தம்முடையஆசிரியரின் பெயரை யிட்டார்கள். அதுவே நாளடைவில் விசயநகரம் ஆகியது.

**வித்தியாநாதர்** - பதின் மூன்றும் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்திருந்த வடமொழிப் புலவர்களில் ஒருவர். இவர் இரண்டாம் பிரதாபருத்திரனுடையஆதரவைப்பெற்றவர். பிரதாபருத்திரியம் என்னும் வடமொழி யாப்பிலக்கண நூலை இவர் இயற்றினார்.

**வித்தியாரணியர்** - இவர் மைசூர் நாட்டில் உள்ளவிசயநகரத்தில் பிறந்தார். அந்தண வகுப்பினர். தந்தையாருடைய பெயர் மாயனர். தாயாருடையபெயர் சீமதி. இவருடைய இயற்பெயர் மாதவர் என்பர். கல்வியை மிகுதியாகக் கற்றுச் சிறந்த படியால் வித்தியாரணியர் என்று காரணப் பெயர் உண்டாகியது. இவர் மெய்யறிவு நூல்களைக்கற்று உலகின் பொய்ம்மைத் தோற்றத்தை உள்ளவாறுணர்ந்து கொண்டார். இவர் காயத்திரிதேவியை வழிபட்டுக்கண்ணால்கண்டவர். இவருடைய விருப்பப்படி கன்னட நாடெங்கும்பொன்மழை பொழியுமாறு காயத்திரிதேவி அருள் செய்தாளாம். வேறுபல வகையான தெய்வத் தன்மைகளும் இவரிடம் சிறந்து விளங்கினவாம். இவர் சிருங்கேரி மடத்தில் பன்னிரண்டாவது சங்கராச்சாரியாராக அமர்ந்திருந்தார். இவர் இயற்றிய நூல்கள் சதுர்வேதபாடியம், அநுபூதிப்பிரகாசம்,பிரமகீதை, பஞ்சதசி,சீவன்முக்திவிவேகம், திருக்குத் திருசிய விவேகம் முதலிய முப்பது என்பர். இவைகளெல்லாம் வேதாந்த நூல்களே. வேதாந்த சமய வளர்ச்சிக்குத் தக்கவாறு தொண்டுசெய்தவர் இவர்.

**வித்துக்கேசன்** - இவன் ஏதி என்னும் அரக்கனுடைய மகன். இவனுடைய தாய் பெயர் காலபாகினி, இவன் அறிவிலும் ஆண்மையிலுஞ் சிறந்தவன். இவன் சாலகடங்கடை என்னும் மாதை மணந்து வாழ்க்கை நடத்தினான்.

**வித்யாலட்சுமி**-இரண்டு கைகளில் தாமரை மலர்கள். ஒரு கை அபயமாக விளங்கும். ஒருகையில் புத்தகம் ஏந்தியிருப்பாள். இவளைப்போற்றுவோர் மிகுதியான கல்விச் செல்வத்தைப் பெறுவர்.

**வித்யாவதி** - இவள் ஒரு விபசாரி. சந்திரகாந்தை என்பவளைக் கெடுத்துத் தானுங்கெட்டு விபசாரியாகத் திரிந்த படியினால் நாயாகவும் பன்றியாகவும் பிறப்பெடுத்துக் கடைசியில் பரசுராமருக்கும் பீஷ்மருக்குங் கலகம் விளைக்க அம்பையென்னும் பெண்ணாய்க் காசிராசனுக்குப் பிறந்தாள்.

**வித்துவக்கோடு**- குலசேகரர் தம்முடைய இறுதிக் காலத்தில் தங்கியிருந்த ஊர்.

**வித்யுச்சவன்**-காலகேயர் என்னும் அசுரரில் ஒருவன். சூர்ப்பநகையின் கணவன். இராவணன் திக்குகடோறுஞ் சுற்றிக்கொண்டு வருகையில், காலகேயநிவாத கவசரையெதிர்த்த போது இவனும் எதிர்த்துப் போர் செய்து இறந்தான். சூர்ப்பநகை இராவணனிடம் புலம்பினாள். நான் அறியாது கொன்றுவிட்டேன் என்று தங்கையைத் தேற்றினான். கரதூடணர்களை அவளுக்குத் துணையாகவைத்து அவளுடைய விருப்பம்போல் இருக்குமாறு கூறினான். கணவன் இறக்கும்போது சூர்ப்பநகை கர்ப்பிணியாக இருந்தாள். ஆகவே கணவனிறந்தபிறகுஒருபுதல்வனைப் பெற்றாள். அவனுக்குச் சம்புகுமாரன் என்று பெயரிட்டு வளர்த்தாள். சம்புகுமாரன் தன்னுடைய தாயினால் தந்தையிறந்தவரலாற்றை யறிந்தான். பழி தீர்க்க முடிவு செய்தான். பஞ்சவடி தீரத்தில் மந்திரவாள் வேண்டி ஒரு தருப்பைப்புதரில் தவஞ்செய்துகொண்டிருந்தான். இவன் தவஞ் செய்துகொண்டிருத்தலை யறியாத இலக்குமணர் காட்டில் தங்கியிருக்கும் போது தருப்பை கொய்கையில் தருப்பையோடு இவனுடைய தலையையுங் கொய்து விட்டார். பிறகு யாரோ தவசியைக் கொன்றுவிட்டோமேயென்று உள்ளம் வருந்தினார். அங்கிருந்தவர்கள் இவன் அரக்கன்என்று கூறி இலட்சுமணரைத் தேற்றினார்கள். இச்செய்தி சிறிது மாறுபாட்டோடு வழங்குதலைச் செம்புக்குமாரன் என்பதிற் காண்க.

**விநாயகபுராணம்** - உபபுராணங்களில் ஒன்று. இதனைப் பார்க்கவபுராணம் எனவுங் கூறுவர். இதனைத் தமிழில் திருவாவடுதுறைக் கச்சியப்ப சுவாமிகள் மொழி பெயர்த்திருக்கிறார். இஃதுஆனைமுகக்கடவுளுடைய பிறப்பு வளர்ப்பு முதலியவைகளைக் கூறும்.

**விந்தியாவலி** - மாவலியினுடைய மனைவி. இவளுக்குப் பிள்ளைகள் நூறுபேர். இப்பிள்ளைகளுள் வாணாசுரன் என்பவன் மூத்தவன்.

**விபசித்து** - கோசல நாட்டு மணிபிங்கல நகரத்து மறையவன். மணிமுத்தாநதியில் நீராடிய பலத்தால் விதர்க்கணனைச் சந்தித்து மணிமுத்தாநதியின் பெருமைகேட்டுச் சுனையினிடத்தில் தேவமாதரைப் பார்த்து அவர்களில் குபேரன் தங்கை மூக்கணியை இழந்து வருந்த அவளுக்கு மூக்கணி கொடுத்து அவளால் அணிகலன்கள் பெற்றுச்சிவத்திருப்பணிசெய்தவன்.

**விபண்டன்** - இவன்ஒரு வேடன். திருக்கருவூரில் திருவிழா நடைபெற்றது. அத்திருவிழாவில் களவு செய்ய எண்ணிச் சிவனடியார் கோலந்தாங்கிச் சென்றான். சனநெருக்கடியில் அகப்பட்டு நசுங்கி இறந்து வீடு பேற்றையடைந்தான்.

**விபாண்டகர்** - காசிபருஷியின் புதல்வர்; கலைக்கோட்டு முனிவருக்குத் தந்தை. இவர் நீராடச் சென்றபோது அங்கு வந்த ஊர்வசியைக் கண்டு காமுற்றார். அதனால் வீரியம் நீரில் விழுந்தது. அதனை அவர் வளர்த்த மான் குடித்தது. அம்மான் வயிற்றிற் கலைக்கோட்டு முனிவர் பிறந்தார்.

**விபினசந்திரபால்** - இவர் 7-11-1858 இல் வங்காளத்தில்

சில்ஹெட் மாவட்டத்திலுள்ள ஒருசிற்றூரிற்பிறந்தார். பள்ளி யாசிரியராகவும் இதழாசிரிய ராகவும் பலவிடங்களில் பணி யாற்றினுர். 1886 இல் இந்திய தேசியகாங்கிரஸ் மகாசபையின் உறுப்பினராஞர். இங்கிலாந் தில் பலஊர்களுக்குச் சென்று இந்துமதம், மதுபான விலக்கு, இந்தியஅரசியல் நிலைமை ஆகி யவைகளைப் பற்றிப் பல சொற் பொழிவுகள் நிகழ்த்தினர். 1900 இல் அமெரிக்காவுக்குச் சென்று 4 திங்கள் சுற்றுப்பிர யாணம் செய்தார். 1907 ஆம் ஆண்டில் காங்கிரஸ் மகாசபை யில் பிளவுண்டாயிற்று. அப் பொழுது திலகர்முதலிய தீவிர வாதிகளுடன் காங்கிரசை விட்டுப் பிரிந்தார். அவ்வாண் டில் சென்னைக் கடற்கரையில் ஒரு சொற்பொழிவு செய்தார். அச்சொற்பொழிவைப் பலரும் பாராட்டினர். 1907ஆம்ஆண் டில் அரவிந்தகோஷ் மீது நடை பெற்ற அலிப்பூர் வெடிக்குண்டு வழக்கில் சாட்சி சொல்வதற்கு மறுத்தார். அதற்காக 6 திங்கள்கள் சிறைத்தண்டனை பெற்ருர். இந்திய விடுதலைப் பணி, பத்திரிகைப்பணி, ஆசிரி யப்பணி முதலிய பலவகைப் பணிகளிலும் மாறி மாறி யீடு பட்ட இவர் 1932 ஆம்ஆண்டில் இவ்வுலகவாழ்வைத் துறந்தார்.

**விபீடணன்** - இவன் விச்சிரவசு முனிவர்க்குக் கேகசியிடம் பிறந்தவன். நான்முகனை எண்ணித் தவம்புரிந்து தரும சிந்தை நீங்காதிருக்குமாறு வரம்பெற்றவன். இராவணன் சீதாபிராட்டியைக் கவர்ந்து வந்தது ஒழுங்கான செயல் அன்றுஎன்று உறுதியாகக்கூறி மறுத்தவன். தூது சென்ற அநுமானை இராவணன் கொல்ல முயன்ற பொழுது தூதர்களைக் கொலைபுரியலா காதுஎன்று கூறித் தடுத்தவன். இராவணன் செயல்கள் தக்க தன்று என்று இராமபிரானி டம் அடைக்கலம்புகுந்து பாது காப்புப் பெற்றவன். கும்ப கருணனையும் இராமனிடஞ் சேர்க்க முயன்றவன். நான் முகக்கணையால் மூர்ச்சை யடைந்த இராமலட்சுமணர் களைக்கண்டு வருத்தமடைந்து அநுமானல் மருத்துமலையைக் கொண்டு வருவதற்குச் சாம்பு வந்தனேடுகலந்தெண்ணியவன். மாயாசீதையைக்கண்டு வருத்த மடைந்த இராமபிரானைத் தேற் றியவன். இந்திரசித்தின் தேரைக்கதையால் நொறுக்கிய வன். இராவணனுக்கு இறுதிக் கடன் செய்தவன். இராமர்கட் டளைப்படி இலக்குமணரால் பட்டமடைந்தவன்; இராம பிரானேடு அயோத்திக்குச் சென்று முடிசூட்டு விழாவுக்கு உடனிருந்தவன். திரும்பும் போது திருமால் விக்கிரகத் தைப் பெற்றுவந்து திருவரங் கத்தில் நிலைநாட்டியவன்.

**விபுதை** - இவள் ஓர் அசுரகன்னி கை. இவள் மாகத ருஷியை மயக்கி ஒரு மகனைப்பெற எண் ணினுள் ; பலநாள் காத்திருந் தாள். ஒருநாள் ருஷி யோகம் நீங்கிக் கண்விழித்தார். தமக்கு எதிரில் இரண்டு யானைகள் சேருதலைக்கண்டார். தாமும் அவ்வாறு செய்ய எண்ணங் கொண்டார். இதனைக்குறிப்பி ஞல் உணர்ந்து கொண்ட விபுதை தான் தேவகன்னிகை யென்று கூறி அவரைத் தழுவி ஞள். இச்சமயத்தில் கயமுகா சுரன் பிறந்தான்.

**விபுலன்** - (க) இவன் ஓர் அந்த ணன். இவன் நல்லமணமுள்ள மலர் ஒன்றைப் பெற்ருன். அதனைச் சிவபிரானுக்கு

அணிய வெண்ணி விண்ணக வழியாகத் திருக்கைலைக்குச் சென்றான். அப்பொழுது வாணாள் முடியுஞ் சமயமா யிற்று. யமனுடைய அமைச்சனாகிய காலன் இவனுடைய உயிரைக் கொண்டுபோக வந்தான். இதனையறிந்த சிவபிரான் காலனைச் சூலத்தாற் குத்திச் சுழற்றினார். காலன் பல நாள் வருந்தினான். பிறகு சிவபிரானை வழிபட்டு உயிர்தப்பினான்.

**விபுலன் (உ)** - இவன் ஏமாங்கத நாட்டு மன்னனாகிய சீவகனுடைய தம்பி. அவனோடு ஒரு தாய் வயிற்றிற் பிறந்தவனல்லன். அவனுடைய தந்தையாகிய சச்சந்தனுக்கு வேறொரு காதலியிடத்திலே பிறந்தவன். சிறந்த போர்வீரன். வேல் வாள் வில் முதலியபடைக்கலப்பயிற்சியை நன்கு கற்றவன். எத்தகைய மதங் கொண்ட யானையையும் அடக்குவதில் இவன் வல்லவன். இவன் தன்னுடைய அண்ணனாகிய சீவகனைக் கண்ணை யிமை காப்பது போலக் காத்து வந்தான். கட்டியங் காரனுக்கும் சீவகனுக்கும் போர் மூண்டது. அப்பொழுது இவன் பகைவர்களை எதிர்த்துப் போர் செய்து தன்னுடைய முன்னவனுக்கு வெற்றியை உண்டாக்கினான்.

**விபூதி** - இவளோர் அசுர மங்கை. அசுரேந்திரனுடைய விருப்பப்படி மேருமலைக்குச் சென்று அங்குத் தவஞ் செய்து கொண்டிருந்த மாகத முனிவரை மயக்கிச் சேர்ந்து கசமுகாசுரன் முதலிய மக்களைப் பெற்றவள்.

**விமரிசன்** - இவன் ஒரு வேடராசன். குமுதவதி என்பவளை மணந்து இல்லறம் நடத்தினான். மற்றைய விரதங்களை யெல்லாம் ஒழித்துச் சிவராத்திரி விரதம் ஒன்றை மட்டுங் கடைப் பிடித்து வந்தான். இவனுடைய மனைவி இவனைப் பார்த்துச், "சிவராத்திரி விரதம் ஒன்றை மட்டுங்கடைப் பிடித்து வருவதற்குக் காரணம் யாது?" என்று உசாவினாள். வேடராசன்தன்னுடைய மனைவியைப் பார்த்து, "நான் முக்காலமும் உணர்வேன். உன்பொருட்டுக் கூறுகிறேன். நான் முன் பிறப்பில் நாயாய்ப் பிறந்து திரிந்து கொண்டிருந்தேன். பம்பை நகரத்துச் சிவன் கோயிலில் உள்ள பலி பீடத்தில் இருந்த உணவைக் கவர்தற்குச் சென்றேன். அப்பொழுது அங்கிருந்தவர்கள் என்னைத் துரத்தினார்கள். நான் அஞ்சியோடிக் கோயிலை வலமாக வரும்போது ஒருவன் அம்பெய்தான். சிவன் கோயிலில் செய்த ஒளி வழிபாட்டையும் சிவ வடிவத்தையும் பார்த்துக் கொண்டு உயிர் நீங்கினேன். அந்நாள் சிவராத்திரி யாகையாலும் சிவலிங்கத்தைக் கண்டபடியினாலும் வேடர்கட்கு அரசனாகப் பிறந்தேன்" என்று சொன்னான். இதனைக் கேட்ட அவள் அவ்வாறாயின், "நான் யார்?" என்று கேட்டாள். வேடன் அவளைப் பார்த்து, "நீ முன் பிறப்பில் ஒரு புறுவாக இருந்தாய். இரை கொண்டு திரும்புகையில் ஒரு பருந்து உன்னைத் துரத்தியது. நீ மல்லிகார்ச்சுன முடியை வலமாகச் சுற்றி யோடினாய். அப்பருந்து உன்னைக் கொடி மரத்தின் அருகில் கொன்று வீழ்த்தியது. நீ எதிரில் விழுந்தாய், அன்று சிவராத்திரி. இறந்து போன புறுவாகிய நீ சிவராத்திரி நாளில் கோயிலை வலம் வந்த நல்வினையினால் இவ்வாறு மனிதப் பெண்ணாகப் பிறந்து என்னுடைய மனைவியானாய். இவ்வாறு நாம்இருவரும் ஆறுபிறவியெடுத்து ஏழாம் பிறவியில்

மதுரை அரசனும் அரசியுமாகி வீடு பேற்றை யடைவோம்'' என்று கூறினான்.

**விமலசுவாமி** - பதின்மூன்றாவது சைந தீர்த்தங்கரர். இவர் காம்பிலி நாட்டில் இட்சுவாகு வழி முறையில் கிருதவர்மாவிற்கு செயசியாமையிடம் மாசித் திங்கள் சுக்கில பட்சம் சதுர்த்தி உத்திரட்டாதியில் பிறந்தவர். இவர் காலத்தில் தான் வைணவ மதம் உண்டாயிற்று என்பர்.

**விமலாதித்தன்** - இவன் இராசராசன் காலத்தில் வேங்கை நாட்டை அரசாண்டவன். இவனுடைய தலைநகர் கலியாண புரம் என்பது.

**வியலூர்** - இவ்வூர் துளு நாட்டில் இருந்தது. கடற்கரைப் பக்கமாக இருந்த இவ்வூரைச் சேரன் செங்குட்டுவன் வென்றான்.

**வியத்திரி** - இவன் ஓர் அந்தணன். காமுகனாய்ப் பல நாடுகளினுந் திரிந்தான். மிகக் கொடிய தீவினைகள் புரிந்து நோயினால் பற்றப்பட்டான். பாண்டிய நாட்டின் பல விடங்களினுஞ் சுற்றித் திரிந்து ஐயமேற்றுழன்றான். பொதியமலை திரிகூடாசலத்தினின்றும் எழுந்த இளந் தென்றற் காற்று உடலிற்பட்ட அளவில் நோய்கள் நீங்கி நற்கதி யடைந்தான்.

**வியாக்கிரபாதர்** - இவர் மத்தியந்தனர் என்னும் முனிவருடைய மகன். தந்தையினுடைய உரைப்படி இவர் தில்லை வனத்தை யடைந்தார். சிவகங்கையில் நீராடித் திருமூல நாதரைப் போற்றி வழிபட்டார். மேலும் திருமூலநாதரைப் போற்றி வழிபட்டுச் சிவபெருமானுடைய திருக் கூத்தைக் காண வெண்ணினார். பூசை புரிவதற்காகப் பல காடுகளிலும் போய் மலர்களையும் இலைகளையுந் தொகுக்கத் தொடங்கினார். பூச்சிகள் அரிக்கத் தொடங்குவதற்கு முன் இருளாக இருக்கும் போதே மலர்களை யெடுத்துவர எண்ணினார். மரங்களில் ஏறும் பொழுது பனியினால் வழுக்காதிருக்கும் பொருட்டுக் கால்கள் புலியைப் போல் வலிமையான நகப் பற்றுள்ளவைகளாக இருக்க வேண்டும் என்றும் விடியற்கால இருளில் மலர்களைக் குற்றங்களற்றன வாகப் பார்த்து எடுக்கும் பொருட்டுத் தம்முடைய கண்கள் மிகுந்த விளக்கத்துடன் கூடியவைகளாக இருக்க வேண்டும் என்றும் இறைவனிடம் வேண்டிக் கொண்டார். திருமூலநாதரும் அவ்வாறே யாகுமாறு அருள் புரிந்தார். அது முதல் இவருடைய பெயர் வியாக்கிரபாதர் (புலிக்கால் முனிவர்) என்று ஆகியது. இவ்வாறு இவர் இறைவனை வழிபட்டு அப்பெருமானுடைய திருக் கூத்தைக் காணும் பேறு பெற்றார்.

**வியாழன்** - இவர் பிரம புத்திரராகிய அங்கிரா முனிவருடைய புதல்வர். தாய் பெயர் சிரத்தா தேவி. மனைவி பெயர் தாரை. இவர் பொன்னிறம் உடையவராகையால் அனைவரும் இவரைப் பொன்னன் என்பர். தெய்வ மந்திரி, சிகண்டிசன், சீவன், அமைச்சன், ஆண்டளப்பான், ஆசான், தேவன், வேந்தன் எனவும் இவர்க்குப் பெயர்கள் உண்டு. இவர் புலமையிற் சிறந்தவர். தம்முடைய தவச் சிறப்பால் கிரகபதம் பெற்றார். இவருடைய பதவி செவ்வாய் மண்டலத்துக்கு மேல் இரண்டிலக்கம் யோசனையில் உள்ளது. இவருடைய அறிவு நலத்தை வியந்து இந்திரன் இவரைத் தனக்கு அமைச்சனாக அமைத்துக் கொண்டான். இந்திரனுடைய

ஆயிரம் அமைச்சர்களினும் இவர் தலைசிறந்தவராக அமர்ந்திருந்தார்.

**வியோமாசுரன்** - இவன் மாயைகளில் வல்லவன்; மிகக்கொடியவன். இவன் மிகப் பெரிய மாமர வடிவத்தை யெடுத்துக் கொண்டு கதிரவன், திங்கள் விண்மீன்கள் முதலியவைகளின் இயக்கத்திற்குத் தடையுண்டாக்கித் துன்புறுத்திக் கொண்டு நின்றான். நான்கு பக்கங்களினும் அசைந்து அசைந்து கீழே விழுந்து விடுவதைப் போன்ற நிலையைக் காட்டிப் பலருக்கும் அச்சத்தை யுண்டாக்கினான். முனிவர்களுஞ் சித்தர்களும் இம்மரம் எப்பக்கத்தில் விழுந்து எவரைக் கொல்லுமோ வென்று அஞ்சினார்கள். ஆனைமுகக் கடவுள் அம்மரத்தினுடைய வஞ்சகத் தன்மையைத் தெரிந்துகொண்டு அதனைப் பிடித்து ஓராட்டு ஆட்டி ஊர் உதை கொடுத்தார். அவ்வளவில் அம்மாய மரத்தின் கிளைகளெல்லாம் ஒடிந்து விழுந்தன. அசுரன் உண்மை வடிவத்தோடு விழுந்து இறந்தான்.

**விரசை** - இவள் ஓர் அரக்கி. ஆனைமுகக் கடவுள் இளங்குழந்தையாகிக் காசிபருடைய இருப்பிடத்திலே வளர்ந்து கொண்டிருக்கும்பொழுது இவ்வரக்கி ஆனைமுகக் கடவுளை விழுங்கி அரக்கர்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்று எண்ணினாள். காசிபருடைய இருப்பிடத்திற்கு வந்தாள். காசிபரும் அவருடைய மனைவியும் நீராடச் சென்றிருந்த சமயம் பார்த்து ஆனைமுகக் கடவுளை யெடுத்து வாழைப் பழம் விழுங்குவதைப் போல விழுங்கி விட்டு மிகுந்த மகிழ்ச்சியோடு வெளியேறிச் சென்றாள். ஆனைமுகக்கடவுளுடைய உடல் வெப்பமானது இவளுக்கு மிகுந்த வெப்பத்தை யுண்டாக்கியது. நாவறண்டு கண் புகைந்து முகங்கருகி வருந்தினாள். அடங்காத நீர் வேட்கை யுண்டாகியது. ஆறு குளம் குட்டை முதலியவைகளிலிருந்த நீர் முழுவதையும் உறிஞ்சிக் குடித்தாள். ஆயினுஞ் சிறிதேனும் நீர் வேட்கை தணியவில்லை. விண்ணாற்றிலுள்ள நீரையுங் குடித்து நீர் வேட்கையைத் தணிப்போம் என்று எண்ணியவளாய் மேலெழுந்து பறந்தாள். சிறிது தொலை செல்வதற்குள் வயிற்றுக்குள்ளிருந்த ஆனைமுகக் கடவுள் காலால் ஓர் உதை கொடுத்தார். அரக்கி மிகுந்த துன்புற்று நிலத்திலே விழுந்து மாண்டாள். நீராடச் சென்றிருந்த காசிபரும் அவர் மனைவியுங் குழந்தையைத் தேடிவந்துஎடுத்துச் சென்றனர்.

**விரதசாரிணி** - பாண்டவர்கள் காட்டு வாழ்க்கைக்குப் பிறகு விராட நகரத்தில் சென்று தம்முடைய உருவத்தையும் பெயரையும் மாற்றிக் கொண்டு வேறு பெயர் வைத்துக் கொண்டு தங்கியிருந்த போது திரௌபதி இப்பெயரை மேற்கொண்டு விராடன் மனைவியிடம் வண்ண மகளாக அமர்ந்திருந்தாள்.

**விராடன்** - மருத்துவர் அமிசம். பாரதப் போர் வீரர்களில் ஒருவன். மச்ச நாட்டு மன்னன். அபிமன்யுவிற்கு மாமன். உத்தரையின் தந்தை. பாண்டவர்கள் வனவாச காலத்தில் மறைந்து வசித்திருந்த போது இவனுடைய நாட்டில்தான் தங்கி இருந்தனர்.

**விராதன்** - ஓர் இராட்சசன்; இராமபிரானால் கொல்லப்பட்டவன். இவன் முன் பிறப்பில் அந்தணனாக இருந்தான். சண்பக மல

ரால் சிவபூசை செய்த சிறப்பால் மிகுந்த பெருமை யடைந்தான். அரசனுடைய அன்பையும் பெற்றான். அரசனுடைய உடன்பாடு பெற்று அந்தணர்கள் அரசனிடம்பெறும் தானதிகளில் பாதி பெற்று வந்தான். ஒருநாள் ஓர் அந்தணன் அரசனிடம் ஓர் ஆவைத் தானம் பெற்றான். இவ்வந்தணன் அவ்வாவிலும் பாதிகேட்டான். கொடாவிடில் விடேனென வல்வழக்கிட்டான். தானம் பெற்ற அந்தணனுடைய மனைவி சிவபிரான் திருமுன்பு முறையிட்டனள். அங்கு இறைவழி பாட்டிற்கு வந்திருந்த நாரதர் இதனைக் கேட்டு மிகுந்த சினமடைந்தார். அவ்வந்தணன் செண்பக மலர் வழிபாட்டால் இவ்வாறு செருக்கடைந்தான் என்றுணர்ந்து வெளி வந்தார். சண்பக மரத்தினிடஞ் சென்று "மரமே" உன் மலர்களை நாள் தோறும் எடுப்பவன் யாவன்" என்று உசாவினார். மரம் பேசாதிருந்தது. நாரதர் மிகுந்த சினங் கொண்டார். "நீ சிவபூசைக்குத் தகுதியில்லா தொழிக" என்று வசவுரை புகன்றார். பிறகு அவ்விடம் விட்டுச் சென்றார். செல்லும் போது வழியில் அவ்வந்தணன் வரக் கண்டார். அவனைப் பார்த்து, "நீ அந்தணர்கள் பெறும் தானத்தில் பங்கு பெறுகிற படியால் இராட்சத உருவத்தை அடைக" என்று வசவுரை வழங்கினார். இதனைக் கேட்ட அந்தணன் நடுநடுங்கித் தீர்வு வேண்டினான். நாரதர், "இராமபிரானால் கொலையுண்டு பிறகு நல்ல உருவைப் பெறுக" என்று தீர்வு கூறினார். அந்தணன் விராதன் என்னும் பெயருடன் இருந்து இராமபிரானால் கொலை செய்யப் பட்டு வசவுரைப் பலன் நீங்கப் பெற்றான்.

**விரிசிகை** - இவள் ஓர் அரச முனியின் மகள். தவஞ் செய்ய வந்த தந்தையோடு இவளும் வந்து காட்டில் தங்கியிருந்தாள். இளமைப் பருவத்தில் உதயணனால் மாலை சூட்டப்பெற்றுப் பிறகு அவனால் மணஞ் செய்து கொள்ளப் பட்டவள். சிறந்த கற்புடையவள்.

**விருச்சிக முனிவர்** - இவர் தென்னாட்டில் இருந்த ஒரு மலையில் தவம் புரிந்து கொண்டிருந்தார். பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை ஒரு நெல்லிக் கனியை உண்பது இவருடைய வழக்கம். அந்நெல்லிக்கனியும் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை தான் பழுக்கும். அதனையுண்டால் பன்னிரண்டு ஆண்டுகட்குப் பசியேற்படமாட்டாது. இவர் ஒரு முறை அக்கனியைப் பறித்து ஓர் இலையில் வைத்து விட்டு நீராடச் சென்றார். அச்சமயத்தில் காயசண்டிகை என்னும் பெயருடைய வித்தியாதர மங்கை யொருத்தி அக்கனி இருந்த விடத்திற்கு வந்தாள். அக்கனியின் பெருமையை உணராமல் அதனைக் காலாற்சிதைத்தாள். நீராடச் சென்ற முனிவர் வந்தார். தாம் மறுபடியும் அக்கனியை உண்ணுங்காலம் வரையிலும் அவளும் யானைத்தீ யென்னுங் கொடும் பசியால் வருந்துமாறு வசவுரை வழங்கினார். அவளும் அவ்வாறே வருந்த நேரிட்டது.

**விருடத்துருவன்** - இவன் வைவச்சுதன் என்பவனுடைய மகன். இவன் ஒருநாள் வேட்டைக்குச் சென்றான். அக்கினிசூலி என்னும் இருடியினுடைய ஓமப் பசுவைக் காட்டுப் பசு என்று கணையினால் கொன்றான். பசுவைக் காத்திருந்த மாணி அரச

னைச் சினந்தான். அரசன் அம் மாணியிடஞ் சென்று "நீ சூத் திரன் என் மீது ஏன் சினமடை கிருய்?" என்று கேட்டான். இதனால் மேலுஞ் சினமடைந்த மாணி அரசனைச் சூத்திரனாகச் சபித்தான்.

**விருதராச பயங்கரவளநாடு** — இந் நாட்டின் பழைய பெயர் கான நாடு. விருதராசன் என்பது முதலாம் குலோத்துங்க சோழ னுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று. இந்நாடு புதுக் கோட் டையைச் சேர்ந்த திருமெய்யம் தாலுகாவே என்பர்.

**விருதராச பயங்கர வாணகோ வரையன்** - இவனுடைய இயற் பெயர் வாணன் என்பது. மற் றவை சிறப்புப் பெயர். இவன் விக்கிரமசோழனுடைய ஆட்சி யின் முதற் பகுதியில் படைத் தலைவனாக விளங்கினன். முடி கொண்டான் என்னும் பெயரும் இவனுக்குண்டு. இவன் வாணர் வழி முறையில் தோன்றியவன். வாணகப் பாடி என்னும் நாட் டினன். இவன் கி. பி. 1124 ஆம் ஆண்டில் கண்டராதித்த சதுர்வேதி மங்கலத்திற்கு அண்மையிலுள்ள வாண விச்சா தர நல்லூர் முடிகொண்ட சோழேச்சுரமுடைய மகா தேவர்க்கு மூன்றேகால் வேலி நிலம் தானமாக வழங்கினன் என்று கல்வெட்டு ஒன்று கூறு கிறது.

**விருத்தக்ஷத்ரன்** - இவன் சிந்து நாட்டு மன்னன். சயத்திரத னுடைய தந்தை. இவன் அசரீரி வாக்கால் பாரதப்போரில் தன்னுடைய மகன் இறக்கப் போவதை யறிந்தான். "எவன் என்னுடைய மகன் தலையை நிலத்தில் விழச் செய்கிறானே அவன் தலை ஆயிரம் சுக்கல் களாக வெடிக்குக" என்று கை விரித்துக் கொண்டு தவத்தில் இருந்தான். அருச்சுனன் பதி னன்காம் நாட்போரில் பாசு பதக்கணையினால் இவனுடைய மகன் தலையை அறுத்துக் கண் ணன் கட்டளைப் படி அது கீழே விழாமல் தடுத்து சியமந்தபஞ்ச கத்தில் தவஞ் செய்து கொண் டிருந்த இவனுடைய கையில் வந்து விழச் செய்தான். இவன் கண்ணைத் திறந்து பார்க்கா மலே யாதோ தன்னுடைய கையில் விழுந்ததென்று அதனை உதறிக் கீழே போட்டான். இப் பொழுது மகனுடைய தலையைக் கீழே விழுத்தியவன் இவனே யாகி விட்டபடியினால் இவ னுடைய தலையே வெடிக்க அத னால் மாண்டொழிந்தான்.

**விருத்திராசுரன்** - ஓர் அசுரன். இவன் இந்திரனைக் கொல் வதற்குத் துவட்டாவால் ஏவப் பெற்று இந்திரனை விழுங்கி னன். இந்திரன் இவனுடைய வயிற்றைப் பிளந்து கொண்டு வெளிவந்து இவனை வச்சிரத் தால் கொன்ருன். இவன் முன் பிறப்பில் உமாதேவியினால் சபிக்கப்பட்ட சித்திரரதன். இந்திரனுடன் போர் செய்து கடலில் ஒளித்துப்பிறகு இந்திர னால் கொல்லப்பட்டான்.

**விருத்தை** - இவள் உசத்திய னுடைய மகள். இவள் தோழி களோடு கங்கையாடச் சென்று காட்டானைக்கு அஞ்சிப் புல்வின் புதரில் மறைந்து அண்மையிலி ருந்த மடுவில் விழுந்து இறந் தாள். பிறகு குச்சகர் என்பவ ரால் உயிர் பிழைத்துக் கௌசி கரை மணந்து மிருகண்டைப் பெற்ருள்.

**விருந்தை** - இவள் காலநேமி என்னும் அவுணனுடைய மகள். சலந்தராசுரனுடைய மனைவி. இவளுடைய கணவன் சிவ பிரானால் இறந்தான். இச் சமயத்தை எதிர் பார்த்திருந்த

திருமால் கபடத் துறவியாக வடிவங் கொண்டு ஓரிடத்தில் தவஞ் செய்பவரைப் போல் நடித்தார். தம்முடைய கணங்களில் இருவரைப் புலியாக அவளுக்கு முன்னே செல்லச் செய்தார். புலிகள் விரட்ட இவள் கபடத் துறவியிடம் அடைக்கலம் புகுந்தாள். தன்னுடைய கணவனைத் தர வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். கபடத் துறவி தம்முடைய இரண்டு தூதர் கட்கும் குரங்குருக் கொடுத்துச் சலந்தரனுடைய உடலை எடுத்துவரச் செய்தார். அவைகள் சலந்தரனுடைய உடலைக் கொண்டு வந்து அவளுக்கு முன்னே போட்டன. விருந்தை துறவியைப் பார்த்து உடலுக்கு உயிர் தர வேண்டினுள். திருமால் அவனுடைய உடலில் தாம் புகுந்து உயிர் பெற்று அவளோடு கலந்து சில நாள் இருந்தார். ஒரு நாள் உறங்குகையில் சங்கு சக்கரம் முதலியன தோன்றக் கண்டு திடுக்கிட்டாள். தன்னைத் திருமால் வஞ்சித்ததை யுணர்ந்தாள். திருமாலைப் பார்த்து, "நீ திருமாலாக இருந்தும் என்னை வஞ்சித்தாய். உன் மனைவியை அரக்கன் வஞ்சித்துக் கவருக. தூதராய் வந்த இருவரும் உனக்குப் பகைவர்களாகுக. குரங்கு உருவாகத் தூதரையடைந்த படியால் நீ குரங்குகளைத் தூதராகவும் படைகளாகவும் பெற்றுக் காட்டில் அலைக" என்று வசவுரை வழங்கினாள். தான் தீப்புகுந்து மாய்ந்தாள். விருந்தையின் மீது அடங்காக் காமங் கொண்டிருந்த திருமால் அவளுடைய சாம்பலில் விழுந்து புரண்டார். தேவர்கள் இச் செய்தியைச் சிவபிரானிடங் கூறினர். சிவபிரான் உமாதேவியார்க்குக் கட்டளையிட உமாதேவியார் சில விதைகளைக் கொடுத்தனர். அதைச் சாம்பலில் தூவ அதிலிருந்து துளசி தோன்றியது. அத்துளசியைத் திருமால் அணிந்து மயக்கந் தீர்ந்தார்.

**விருபாட்சி**-இஃதோரூர்; பல்லாரி மாவட்டத்திலிருக்கும் ஆஸ்பெட் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே எட்டுக்கல் தொலைவில் துங்கபத்திரை யாற்றின் கரையில் இவ்வூர் இருக்கிறது. இஃது இராமாயணத்திற் கண்ட வாலி சுக்கிரிவர்களுடைய நாடு என்று கூறப்படுகிறது. இந்நாளிலும் இவ்விடத்தில் குரங்குக் கூட்டங்கள் மிகுதியாகவுள்ளன. இதனை யொட்டிய இடங்களில் மாலவதம், ஏமகூடம், பசுவசிரங்கம், மதங்க பருவதம், கிட்கிந்தம் என்னும் ஐந்து மலைகளிருக்கின்றன. இராமர் சீதையைத் தேடும் பொருட்டு இங்கு வந்து சுக்கிரீவனோடு நட்புக் கொண்டு தங்கினார். இங்கு இராமர் திருக்கோயில் முதலியன உள்ளன.

**விரோசனன்** - மாவலியின் தந்தை. கதிரவனால் பொன் முடியளிக்கப் பெற்றவன். திருமால் மோகினியாக வடிவெடுத்து வந்து மயக்கி இவனுடைய தலைமீது கையை வைத்து மாண்டொழியச் செய்தார்.

**விரோசனை** - மிதிலை நகரத்தில் இருந்த திரிசிரன் என்னும் அந்தணன் மனைவி. ஐயமேற்க வந்த ஆனைமுகக் கடவுளுக்கு அறுகம் புல்லை வழங்கிப் பெறற்கரும் பேறு பெற்றவள்.

**வில்லக விரலினார்** - சங்ககாலப் புலவர்களில் ஒருவர். கைநெகிழாமல் தழுவிய நிலைக்கு வில்லைப் பிடித்த விரல்களை உவமையாக இவர் கூறியிருக்கும் சிறப்பினால் வில்லக

விரலினர் என்னும் பெயர் பெற்றார். இவருடைய பாடல் குறுந்தொகையில் சேர்க்கப் பட்டிருக்கிறது.

**வில்லவராயன்** - (க) இவன் முதலாங் குலோத்துங்க சோழன் காலத்தில் இருந்தவன். இவன் சம்புகேசுவரம் என்னுந் திருவானைக்காக் கோவிலில் காளையூர்தியில் எழுந்தருளிய சிவபெருமான் வடிவத்தையும் அம்மனையும் அமைத்ததன்றி அம்மூர்த்திகட்குச் சரியாக வழி பாடு நடக்கும் பொருட்டு நிலமும் வாங்கி வைத்தான்.

(உ) மறைசையந்தாதியைப் பாடிய யாழ்ப்பாணம் சின்னத் தம்பிப் புலவருடைய தந்தை யார்.

**வில்லவன் கோதை** - இவன் வஞ்சி நகரில் இருந்து அரசு புரிந்த செங்குட்டுவன் என்னும் சேர மன்னனுடைய முதல் அமைச் சன். ஆராய்ந்து வினை செய் வதில் வல்லவன். இவன் அரசனுக்குத் தக்கவாறு அறிவுரைகள் கூறி எல்லாக் காரியங்களும் நன்கு வெற்றி யடையுமாறு செய்தான். இவ னுடைய அறிவு நலத்தை அனை வரும் பாராட்டினர்.

**வில்லி** - இவன் ஒரு வேடன். புத்தூரிலிருந்த மல்லி யென் னும் வேட்டுவச்சியின் மகனாகப் பிறந்தான்.. (முன் பிறப்பில் முனிவனாகவிருந்தவன் கடவு ளுடைய வசவுரையால் வேட னாகப் பிறந்தான் என்பர்) கண்டன் என்பவன் இவ னுடைய உடன் பிறந்தான். கண்டனும் வில்லியும் வேடச் சேரிக்குத் தலைவர்கள். இவர் கள் ஒரு நாள் வேட்டைக்குச் சென்றார்கள். கண்டனைப் புலி கொன்று விட்டது. தம்பியைப் புலி கொன்று விட்டதையறிந்த வில்லி மிகவும் வருந்தினான். பெருமாள் வில்லியினுடைய கனவில் தோன்றி, "நாம் இங்கு எழுந்தருளியிருக்கிறோம். உன் தம்பியும் உயிர் பெற்று வரு வான். அப்புலியும் இறந்து போகும். அப்புலியிருக்குங் குகையில் அளவற்ற பொருளி ருக்கிறது. அதனை யெடுத்துத் திருக்கோயிலும் ஊரும் உண் டாக்குக" என்றருளினார். அவ் வாறே தம்பி உயிர் பெற்று வந்தான். இருவரும் புலிக் குகைக்குப் போய்ப் பொருளைக் கண்டார்கள். புதரில் எழுந் தருளியிருந்த பெருமாளையுந் தேடிக் கண்டு பிடித்தார்கள். காட்டைக் கெடுத்து நாடாக்கி னார்கள். அவ்வூருக்கு வில்லி புத்தூர் என்று பெயர் வழங்க லாகியது. பக்கத்தூரிலிருந்து அந்தணர்களை யமைழத்துப் பூசை முதலியவைகட்கும் ஏற்பாடு செய்தார்கள்.

**வில்வலன்** - அசமுகி துருவாசரைச் சேர்ந்தபடியால் இவன் பிறந் தான். வாதாபி என்பவன் இவ னோடு கூடப் பிறந்தவன். ஒரு சமயம் இவனும் வாதாபியும் தேவரிடம் போர் செய்யச் சென்றனர். அந்தப் போரில் வாதாபி இறந்தான். அதனால் வில்வலன் சுக்கிர னிடம் அடைக்கலம் புகுந்து நடந்தவைகளைக் கூறினான். சுக்கிரன் வாதாபியின் எலும் பைக் கொண்டுவரச் சொன் னான். வில்வலன் எலும்பைத் தேடிப் பார்த்தான் அகப்பட வில்லை; சுக்கிரனிடஞ் சென்று கூறினான். சுக்கிரன் இவனுக்கு மிர்தசஞ்சீவி மந்திரம் உரைத்து வாதாபி இறந்த விடத்தில் கூறச் சொன்னான். வில்வலன் அவ்வாறே போர்க்களத்தை யடைந்து கூறினான். வாதாபி தன்னையுண்ட பேய் விலங்கு ஆகியவைகளின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே

வந்தான். இந்த மந்திரத்தின் பலத்தை யறிந்த இருவரும் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டு தங்களில் ஒருவர் ஆடாகி முனிவர்கட்கு விருந்தளித்துப் பிறகு அவர்களைக் கொன்று தின்னும் வழக்கத்தை மேற் கொண்டிருந்தனர்.

**வில்வன்**-இவன் ஒரு காந்தருவன். இவன் தன்னுடைய அழகாற் செருக்கடைந்து திரிந்தான். ஒருநாள் நாரதரைக் கண்டபோது எருமை போற் கனைத்து வழி மறித்தான். அவர் இவனை எருமையாகுமாறு வசவுரை வழங்கினர். காந்தருவன் இரங்கிக் கேட்டுக் கொள்ள முனிவர், "நீ இராமபிரான் தோன்றும் வரையிலும் இருந்து அவரைக் கண்டு வழிபட்ட பின் இவ்வுரு நீங்குக" என்றனர்.

**விவேகாநந்தர்** - இராமகிருட்டிண பரமஹம்ஸரின் மாணவர்களில் முதன்மை வாய்ந்தவராகிய இவர் கல்கத்தா நகரில் 1863 ஆம் ஆண்டிற் பிறந்தார். இவருக்கு இடப் பெற்ற பிள்ளைப் பெயர் நரேந்திரநாத தத்தர் என்பது. இவர் ஆங்கிலக் கல்வி பயின்று பி. ஏ. பட்டம் பெற்றார். ஆங்கிலத்திலும் வடமொழியிலும் உள்ள பலவகை நூல்களையுந் துருவியாராய்ந்து மெய்ப்பொருளைக் கண்டுபிடிப்பதற்கு முயன்றார். இராமகிருட்டிண பரமஹம்ஸரைக் கண்டார். அவரைப் பலவகையாகஆராய்ந்துபார்த்தார். அவர் ஓர் உண்மையான துறவியென உணர்ந்து அவருக்கு மாணவர் ஆனார். இதன் பிறகு இவருக்கு விவேகாநந்தர் என்று பெயர் உண்டாகியது. நண்பர்களாகிய உடனுறை துறவிகளின் துணை கொண்டு இராமகிருட்டிண மடத்தையும் சங்கத்தையும் அமைத்தார்.

அமெரிக்காவில் சர்வசமய மகாநாடு கூடிய பொழுது இந்தியாவின் ஆணையாளராகச் சென்றார். அங்குப் பலவிடங்களினுஞ் சொற்பொழிவுகள் செய்து இந்திய வேதாந்தத்தை அந்நாட்டிற் பரப்பினார். இந்தியாவுக்கு மீண்டு இலங்கை முதல் இமயம் வரையிலும் இந்து மதத்தின் பெருமையை விளக்கி வேதாந்த கேசரியாக விளங்கினார். பக்தியோகம் ஞானயோகம் முதலிய பல நூல்களை இயற்றினார். 1901 ஆம் ஆண்டில் வீடுபேற்றையடைந்தார்.

**விவேகாநந்தர் பாறை** - குமரி முனைக்குக் கிழக்கே கடலில் இரட்டைப்பாறைகள் இருக்கின்றன. சுவாமி விவேகாநந்தர் கன்னியாகுமரிக்கு வந்தபோது அப்பாறைகளில் அமர்ந்து கடவுளை எண்ணி வழிபட்டாராம். அதுமுதல் அப்பாறைகள் விவேகாநந்தர் பாறை என்று வழங்கப்படுகின்றன.

**விழிஞம்** - திருவனந்தபுரத்திற்குப் பத்துக்கல் தொலைவில் தெற்குத் திக்கில் மேல் கடற்கரையில் உள்ள ஓர் ஊர். துறைமுக நகரம். வரலாற்றுப்புகழ் பெற்ற விழிஞப்போர் இங்கு நிகழ்ந்தது.

**விளக்கொளிப் பெருமாள்** - திருக்காஞ்சியில் திருக்கோயில் கொண்டிருக்கும் ஒரு பெருமானுடைய பெயர். இவர் சரசுவதி நதி வடிவமாய் நான்முகன் செய்த வேள்வியை அழிக்க வந்த காலத்தில் விளக்கொளியாகச் சென்ற படியால் இவ்வாறு பெயர் உண்டாகியது.

**விற்கோலம்** - தொண்டைவள நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திரிபுரம் எரி செய்த காலத்தில்

இங்கு இறைவர் வில்லையேந்திய கோலத்துடன் வீற்றிருந்தருளிய படியால் விற்கோலம் என்று பெயர் உண்டாகியது. இஃது இந்நாளில் கூவம் என வழங்கப்படுகின்றது.

**விருபாட்சன்** - இவன் ஓர் அரக்கன். இவனுடைய மனைவியின் பெயர் சல்லிகை. இவன் ஓர் அந்தணனைக் கொன்ற தீவினையால் இறந்தொழிய இவனுடைய மனைவியாகிய சல்லிகை வில்வாரணியத்தில் எழுந்தருளிய இறைவனையும் இறைவியையும் போற்றி இவன் பிழைத்தெழச் செய்தாள்.

**வீடருளுஞ்சிவப்பதிகள்** - பிறக்க வீடு தருவது திருவாரூர்; இறக்க வீடு தருவது வாரணாசி, (காசி) கண்டு வழிபட வீடு தருவது சிதம்பரம்; நினைக்க வீடு தருவது திருவண்ணாமலை.

**வீடூர்முதலியார்** - இவர் தொண்டைவள நாட்டில் வீடூரில் வாழ்ந்திருந்த ஒரு வேளாளச் செல்வர். இவர் தமிழ்ப் புலவர்கட்கு வரையாது வழங்கிப் பெருஞ் செல்வராகத் திகழ்ந்தார். யார் எதனைக் கேட்டாலும் மறுது கொடுத்தலாகிய விரதத்தையும் இவர் மேற் கொண்டிருந்தார். ஒரு புலவர் வீடூர் முதலியாரின் வள்ளற்றன்மையை ஆராய்ந்து பார்க்க எண்ணினார். முதலியாரிடஞ் சென்று தமது புலமை நலத்தைக் காட்டினார். முதலியார் புலவரைப் புகழ்ந்து போற்றினார். "உமக்கு வேண்டியதைக் கேளும் தடையின்றித் தருகிறேன்" என்று கூறினார். உடனே புலவர், "உம்முடைய மனைவியை எனக்குத் தருதல் வேண்டும்" என்று கேட்டார்.

இதனைக் கேட்டு வீடூர் முதலியார் சிறிதும் வருந்தவில்லை. தம்முடைய மனைவியை அழைத்து, "நான் உன்னை இப் புலவர் பெருமானுக்குக் கொடுத்து விட்டேன். இன்று முதலாக நீ எனக்கு மனைவியல்லள். தாயாகிறாய்; ஆகவே இப்புலவரோடு செல்லுக" என்று சொன்னார். இதனைக் கேட்ட புலவர் நெஞ்சம் துணுக்குற்றார். வீடூர் முதலியாரைப் பார்த்து, "வள்ளலே என்னுடைய குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும். என்னுடைய மகளாகிய இவ்வுத்தமியைப் பழையபடியே மனைவியாக ஒப்புக்கொண்டு இன்று முதலாக என்னை உம்முடைய மாமனாக நினைக்க வேண்டும். என்மீது உம்முடைய அன்பு எப்பொழுதும் மாறாமலிருக்க வேண்டும். இதுவே நீர் எனக்குச் செய்ய வேண்டிய நன்கொடையாகும்" என்று கூறினார். முதலியாரும் புலவருடைய சொல்லை மறுக்காமல் ஏற்றார். முதலியாருடைய இச் செயலைப் புகழ்ந்து தொண்டைமண்டல சதகத்தில், "போதாருந்தண் பொழில் வீடூரதிபன் புலவர்க்கெல்லாந், தாதாவெனக்கொடி கட்டுதலாலவன் தன் மனையை, நீதா எனவொரு பாவாணன் கேட்பவந் நேரிழையை, மாதா வெனவழைத்தா னென்கொலாந் தொண்டைமண்டலமே," என்று கூறப்பட்டுள்ளது.

**வீதவவ்யன்** - இவன் ஓர் அரசன். இவனுக்கு நூறு புதல்வர்கள். இவர்கள் காசிராசனுடைய மகனைக் கொன்றபடியினால் காசிராசன் பாரத்து வாச முனிவரையடைந்து அவருடைய அருளால் யஞ்ஞகுமாரன் என்னும் மகனைப் பெற்றான். அம்மகன் நூற்றுவரையுங் கொன்று இவர்களுடைய தந்தையாகிய வீத

வவ்யனையுங் கொல்லுவதற்குச் சென்றான். வீதவவ்யன் பிருகு முனிவரிடம் அடைக்கலம் புகுந்தான். அவர் இவனை அந்தணனாக்கி வைத்துக் கொண்டார். இவன் அன்று முதல் அந்தணனாக விருந்து வேள்வியிற் பல பிள்ளைகளைப் பெற்றான்.

**வீதிவிடங்கப் பெருமான்** - திருவாரூரில் எழுந்தருளிய தியாகராயப் பெருமானை இவ்வாறு வீதிவிடங்கப் பெருமான் என்று கூறுவர். உளி படாமல் அமைந்த திருவுருவத்தையுடையவராயும் திருவீதியில் வருபவராகவும் உள்ளவர். திருமால் மார்பகத்தில் வைத்துத் தியானிக்கத் திருப்பாற் கடலில் பல காலம் வீற்றிருந்தவர். அங்கு நின்றும் இந்திரன் வேண்டிப் பெற்றுத் தேவலோகத்தில் வைத்துப் பல காலம் பூசிக்க இருந்தவர். பிறகு முசுகுந்தச் சக்கரவர்த்தியால் மீண்டும் திருவாரூரில் எழுந்தருளியவர்.

**வீமன்** - (க) பாண்டவர்களில் ஒருவன்.

**வீமன்** - (உ) குண்டினபுரத்து அரசன். தமன முனிவருடைய அருளால் தமயந்தியைப் பெற்றவன். நளனுடைய மாமன். இவனுடைய மனைவி பெயர் சாருகாசனி. இவன் மகப்பேறு இல்லாமல் விசுவாமித்திரருடைய இருப்பிடஞ் சென்று அவருடைய அருளுரையால் உருக்குமாங்கதனைப் பெற்றான்.

**வீமன்** - (ங) இவன் ஒரு வேடன். விதர்ப்ப நாட்டில் ஆதாம் என்னும் நகரத்தில் இருந்தவன். சிறிதும் இரக்கமில்லாமல் எல்லா உயிர்களையுங் கொன்று வருத்தியவன். தன்னைத் துரத்திய வேடனுக்கஞ்சி வன்னி மரத்தில் ஏறியபொழுது வன்னியிலை யொன்று ஆனைமுகக் கடவுளின் மேல் வீழ்ந்த நல்வினையினால் ஆனைமுகக்கடவுளின் உலகத்தை அடைந்தவன்.

**வீமாசுரன்** - இவன் சுலாசுரன், சிலாசுரன் என்பவர்களோடு கூடி அவ்விருவரையும் இரண்டு சிலம்புகளாக்கி ஆனைமுகக் கடவுளுக்கு முன் வைத்துப் பணிந்தான். அசுரனுடைய வஞ்சகச் செயலை ஆனைமுகக் கடவுள் அறிந்து கொண்டார். அச்சிலம்புகள் இரண்டையும் திருவடியில் அணிந்து வீமாசுரன் மீது எறிந்தார். அவ்விரண்டு அசுரர்களோடு இவனும் மாண்டான்.

**வீரகணபதி** - இவர் சினந் தங்கிய திருமுகத்தோடு பதினாறு கைகளையுடையவராய்ப்பதினாறு கைகளினும், வேதாளம், வேல், அம்பு, வில், சக்கரம், கத்தி, கேடகம், சம்மட்டி, கதை, அங்குசம், நாகம், பாசம், சூலம், குந்தாலி, மழு, கொடி ஆகிய பதினாறையுந் தாங்கியிருப்பார்.

**வீரகன்** - உமாதேவியாருடைய துவாரபாலகன். அடிதானவன் என்பவனைக் கட்டளையின்றித் திருமுன் விட்டபடியால் கல்லாகச் சாபமடைந்தான்.

**வீரகேரளன்** - சேரரின் முன்னோருள் ஒருவன். இவனுடைய பெயரைப் பிற்காலத்தினரும் மேற் கொண்டிருந்தனர்.

**வீரகோளரி** - நவவீரர்களில் ஒருவன். இவன் முதனாட் போரில் பானுகோபனோடு எதிர்த்துப் போரிட்டு நாராயணக் கணையால் மூர்ச்சித்தான்.

**வீரசங்கரர்**-இவர் ஒரு வீரசைவர். சிவபெருமானுடைய திருவுருவல்லாததைத் தொடுவதில்லையென்னும் மனவுறுதியை இவர் மேற் கொண்டிருந்தார். ஒரு

நாள் கனவில் புத்தன் ஒருவனைத் தொட்டதாகக் கனுக்கண்டு விழித்துத் தீமூட்டி அதில் விழுந்து சிவபதமடைந்தார்.

**வீரசம்பு** - விசயநகரத்து மன்னர்களில் ஒருவன். இவன் தென்னுட்டிற்குப் பயணம் வந்து திருவண்ணுமலையில் இரண்டாவது மதிலின் திருப்பணியைச் செய்து முடித்தான்.

**வீரசிகாமணி மூவேந்த வேளான்**- இவன் குலோத்துங்க சோழனுடைய அரசியல் அதிகாரிகளில் ஒருவன். தொண்டை நாட்டிலுள்ள பாண்டியம் பாக்கம் என்னும் ஊரைச் சேர்ந்தவன். குலோத்துங்கனுல் அளிக்கப் பெற்ற மூவேந்த வேளான் என்னுஞ் சிறப்புப் பெயரைப் பெற்றவன். இவன் மைசூர் நாட்டிலுள்ள கோலார் என்று வழங்கும் குவளாலபுரத்திலுள்ள துர்க்கையின் கோயிலில் நாள் வழிபாடு நன்கு நடைபெறுவதற்குக் குழுவொன்று அமைத்துக் கட்டளைகளை ஒழுங்கு படுத்துமாறு செய்தான் என்பது அவ்வூரிலுள்ள கல்வெட்டு ஒன்றினுல் அறியப்படுகிறது.

**வீரசிங்கயாதவராசன்**-தேவகிரியை ஆண்டிருந்த வேங்கடநாதயாதவராசனுக்குப் பிறகு அரியணையேறியவன். இவன் தனக்கும் தன்னுடைய முன்னேர்கட்கும் தலைநகராக இருந்த தேவகிரியைக் காலி செய்துவிட்டுக் கலியாணபுரம், சீரங்கபட்டணம் முதலான சிறந்த நகரங்களைத் தலைநகராகக் கொண்டு அரசாட்சி செய்தான். இவனும் இவனுடைய முன்னேர்களுந் திருப்பதியில் திருப்பணிகள் பலவற்றைச் செய்தார்கள்.

**வீரசிங்காதனம்** - மேன்மை பொருந்திய அரியணை. திருவாரூர்ப் பூங்கோயிலில் வீதிவிடங்கப் பெருமாளுகிய தியாகராசப் பெருமான் எழுந்தருளிய பீடத்தை வீரசிங்காதனம் என்பர்.

**வீரசூடாமணி**-கட்டபொம்முவின் வழிமுறையில் முத்து விசயராமுவினுடைய மகனுகத் தோன்றிய இவன் முப்பதாண்டுகள் பாஞ்சாலன் குறிச்சியில் அரசாட்சி செய்திருந்தான்.

**வீரசென்னவன்** - கட்டபொம்மு வழிமுறையில் பாஞ்சாலன் குறிச்சியை உகூ ஆவதாக அரசாட்சி புரிந்தவன். இவன் ஓவியங்கள் எழுதுவதிற் சிறந்து விளங்கினுன். இவன் ஏழாண்டுகளே அரசாட்சி செய்தான்.

**வீரசேகர சோழன்** - கி. பி. பதினும் நூற்ருண்டின் நடுவில் தஞ்சையில் அரசு புரிந்திருந்தவன். சந்திரசேகர பாண்டியன் என்பவனேடுபோரிட்டுவென்றவன். பிறகு விசயநகரம் நாகம நாயக்கனுல் தோல்வியடைந்தவன்.

**வீரசேகரன்**-(க) கட்டபொம்முவினுடைய வழிமுறையில் பதினுருவதாகப் பட்டத்திற்கு வந்து பாஞ்சாலன் குறிச்சியை எட்டாண்டுகள் ஆண்டவன். இவனுடைய தந்தையின் பெயர் இரணவீரசின்னு.

(உ) சாக்கோட்டை என்னும் ஊரில் எழுந்தருளிய சிவபெருமானுடைய பெயர்.

**வீரசோழன்** - இவன் மனுநீதி கண்டசிவலிங்கசோழனுடைய மகன். பசுவின் கன்று தேர்க்காலில் அரைபட்டு மாண்டது இவனுடைய தேரில்தான். இவன் நூற்றெட்டுச் சிவாலயங்களைப் புதுக்கித் திருப்பணி செய்தவன் என்பர்.

**வீரசோளவ்வை** - இவள் வீரசைவப் பெண்மணி. இவள்

பிட்டுச் செய்து உண்டாள். அது மிகவும் இனிமையாக இருந்தது. ஆகவே அதனைத் தன்னுடைய மகளிடங் கொடுத்துச் சிவபிரானுக்குப் படைக்கச் செய்தனள். அதனைச் சிவபிரான் வாங்கி யுண்டார்.

**வீரட்டானம்** - சிவபெருமான் நான்முகனுடைய தலையைக் கிள்ளியது; அந்தகாசுரனைச் சங்கரித்தது; திரிபுர மெரித்தது; தக்கன் வேள்வியை அழித்தது; சலந்தரனைக் கொன்றது; யானையை உரித்தது; காமனை எரித்தது; இயமனை உதைத்தது என்ற எட்டு வீரத்தனமான காரியங்களைச் செய்த இடம் வீரட்டானம் என்பர். இவை முறையே திருக்கண்டியூர், திருக்கோவலூர், திருவதிகை, திருப்பறியலூர், திருவிற்குடி, திருவழுவூர், திருக்குறுக்கை, திருக்கடவூர் என்பன.

**வீரட்டானேசுரம்** - திருத்தணிகையில் ஊருக்குக் கீழ்புறமுள்ள ஒரு சிவன் கோவில் இப்பெயரால் கூறப்படுகிறது. ஒன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் பல்லவ மன்னன் அபராசிதன் என்பவன் காலத்தில் நம்பிஅப்பி என்பவர் திருப்பணி செய்ததாகக் கல்வெட்டு மூலம் அறியப்படுகிறது.

**வீரதளவாய்** - துரைராசபொம்மு என்பவனுடைய மகன். கட்டபொம்மு வழிமுறையில் பாஞ்சாலன் குறிச்சிக்கு முப்பத்து மூன்றுவது பட்டயாக அரசானவன். தந்தையின் காலத்தில் சீர் கெட்டிருந்த நாட்டை இவன் ஒழுங்கு படுத்தினுன். மக்களை அன்பொடு பாதுகாத்தான்.

**வீரநாராயண ஏரி**-பராந்தகனுக்கு வீரநாராயணன் எனவும் பெயர் வழங்கியது. இவன் சிதம்பரத்தை யடுத்துப் பெரிய ஏரி ஒன்றை வெட்டினுன். அவ்வேரி இவனுடைய பெயரால் வீர நாராயண ஏரி என வழங்கலாயிற்று.

**வீரநாராயணச்சோழன்** - இவன் பராந்தகச் சோழன் எனவுங் கூறப் பெறுவான். இவன் பாண வம்சத்தை வேரறுத்து அவர்களுடைய நாட்டைக் கங்க வம்சத்தைச் சேர்ந்த அத்திமல்லனுக்குக் கொடுத்தான். திருத்தில்லையில் உள்ள கனக சபைக்குப் பொன் வேய்ந்தவன் இவனே என்பர்.

**வீரபத்திரர்** - தக்கன் சிவபிரான் தன்னை மதியாமல் இருந்ததைக் குறித்துச் செருக்கடைந்து சிவபிரானை அவமதித்து ஒரு வேள்வியைச் செய்யத் தொடங்கினுன். உமாதேவி சிவபிரானிடம் விடை பெற்றுக் கொண்டு வேள்விச் சாலைக்குச் சென்ருள். தக்கன் உமாதேவியை அன்போடு வரவேற்கவில்லை. இகழ்ந்து பேசினுன். இதனுல் சினமடைந்த உமாதேவி வேள்விச்சாலை சுடலையாகுமாறு சாபங் கொடுத்துவிட்டுச் சிவபிரானிடஞ் சென்ருள். உமாதேவியின் மாறுபாட்டைச் சிவபிரான் கண்டார். தம்முடைய சடையில் ஒன்றை நிலத்தில் மோதினுர். அதிலிருந்து வீரபத்திரர் தோன்றினுர். இவரோடு பல பூதக் கூட்டங்களுந்தோன்றின. உமாதேவி காளியை உண்டாக்கினுள். வீரபத்திரர் சிவபிரானுடைய உடன்பாடு பெற்றுக் காளியோடும் பூதப் படைகளோடுந் தக்கனுடைய வேள்விச் சாலைக்குச் சென்ருர். வேள்விக்கு வந்திருந்த இந்திரன் குயிலாகப் பறந்து ஓடினுன். தீக்கடவுள் நாக்கறு பட்டான். கதிரவன் பல்லுடை பட்டான்.

திங்கள் வீரபத்திரருடைய காலால் தேய்ப்புண்டான். தக்கன் தலையறுப்புண்டான். காளி ஒருபக்கத்தில் இந்திராணி முதலிய தேவமாதர்களை நன்கு புடைத்தாள். வேள்வித் தலைவன் மானுருக் கொண்டு அஞ்சியோடினான். ஒரு பூதம் மானின் தலையைத் திருகியது. இவ்வாறு வீரபத்திரர் வேள்வியை அழித்தொழித்தார். இவ்வரலாறு புராணத்திற்குப் புராணம் மாறுபாடாகவும் வழங்கும்.

**வீரபத்திரன்** - தொண்டை மண்டலத்தில் கண்ணனூர் என்னும் ஊரிலிருந்த வேளாண் குலத்தினன். இவன் பல வகையினும் முயன்று பொருள் தேடி அப்பொருளினைப் பிறருக்கு உதவிக் கொண்டிருந்தான். தன்னுயிரைப் போல் மன்னுயிரைப் பாராட்டி நின்ற இவனுடைய புகழ் யாண்டும் பரவியது. இவனுடைய விளை நிலத்தில் ஒரு சமயம் கரும்பு நன்றாக வளர்ந்திருந்தது. பசியினால் வாடிய சிலர் அக்கரும்பினை முறித்துத் தின்றனர். வயலைக் காத்திருந்தோர் கரும்பினைத் தின்றவர்களை யிழுத்துப் போய் இவனிடம் விட்டு, "இவர்கள் நந்தோட்டத்துக் கரும்பினைக்களவு செய்துண்டனர்" என்று உரைத்தனர். இவன், "ஏன்அவ்வாறு செய்தீர்?" என்று அவர்களை உசாவினான். அவர்கள், "பசிக் கொடுமையால் இவ்வாறு செய்தோம்" என்றனர். இதனைக் கேட்டஇவன் உடனே கரும்பின் வேலிகளை யெல்லாம் அழித்து விட்டுப் பலரையுங் கூப்பிட்டுக் கரும்பைத் தின்னுமாறு கட்டாயப் படுத்தினான். சிலர், "வேண்டாம்" என்று மறுத்தனர். இவன் அவர்களுக்குக் கரும்பு தின்னக் கைக் கூலியுங் கொடுத்தான். இதனால் இவன் புகழ் மேலும் பரவலாகியது. இவன் தொண்டை மண்டல சதகத்திலும் இடம் பெற்றான்.

**வீரபாண்டிய கட்டபொம்மன்** - கட்டபொம்மு வழிமுறையில் பாஞ்சாலங் குறிச்சியில் ௬௯ ஆவதுபட்டத்தையடைந்தவன். இவன் தோன்றிய காலம் *3-1-1860*. தந்தையின் பெயர் செகவீரக்கட்டபொம்மு. இவனுடன் பிறந்தவர் தளவாய்க் குமாரசாமியும் துரைசிங்கமும் என இருவர். வீரபாண்டியக் கட்டபொம்மனுடைய மனைவியின் பெயர் வீரசக்கம்மாள். கணவன்,மனைவி ஆகிய இருவரும் திருச்செந்தூர் முருகப் பெருமானிடத்தில் பேரன்பு கொண்டு அப்பெருமானுடைய திருவடித் தொண்டர்களாக விளங்கினர். வேளாள மரபினராகிய சிவசுப்பிரமணிய பிள்ளை என்பவன் வீரபாண்டியக் கட்டபொம்மனுக்கு அமைச்சனாக அமைந்து நின்றான். இவ்வமைச்சன் அறிவுடையவனாக இருந்தும் சில சமயங்களில் செய்த அறிவற்ற காரியங்களினால் அரசனுக்கே கேடுண்டாகியது. இவன் ஆண்மையில் சிறந்தவனாக விளங்கிய படியால் இவனுடைய நட்பைக் கொள்வது தக்கதென்றெண்ணிய கும்பினியார் இவனை யழைத்து அன்பு பாராட்டி நண்பனாக்கி வைத்திருந்தனர். அமைச்சனாகிய சிவசுப்பிரமணியபிள்ளை வெள்ளையர்களுடைய நெல்லைக் கொள்ளை யடித்த படியால் மீண்டும் வெள்ளையருக்கும் இவனுக்கும் போர் மூண்டது. ஆயினும் இவனை வெற்றிகொள்ள முடியவில்லை. அமைச்சனாகிய சிவசுப்பிரமணியபிள்ளை "நாம்மீண்டும் கும்பினியாரிடஞ் சென்று

அவர்களுடைய நட்பைப் பெற்று வரலாம்" என்று இவனைப் பாஞ்சாலன் குறிச்சியை விட்டு வெளிப் படுத்திக் கடத்திச் சென்ற போது புதுக்கோட்டையில் கும்பினியார் இவனைப் பிடித்துக் குற்றவாளி யாக்கிக் கயத்தாற்றில் தூக்கில் போட்டு விட்டனர்.

**வீரபொம்மு** - இவன் கட்டபொம்முவினுடைய மூன்றாவது வழி முறையினன். பாஞ்சாலன் குறிச்சியில் முப்பதாண்டுகள் அரசாட்சி புரிந்தவன்.

**வீரமகேந்திரம்** - இப்பெயருடைய நகரம் தெற்குக் கடலில் ஒரு பெரிய தீவின் கண் அமைந்திருந்தது. ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆளுதற்கு வரம் பெற்ற சூரபன்மன் இருந்து அரசாளுதற் கேற்றவாறு விசுவகன்மாவினால் உண்டாக்கப் பட்டது. சூரபன்மன் முதலியோர் அழிந்தொழிந்த பிறகு இதுகடலுள் மூழ்கியது.

**வீரமல்லு** - கட்டபொம்முவினுடைய வழி முறையில் பதின்மூன்றாவதாகத் தளவாய்க் குமாரசாமி என்பவனுடைய மகனாகத் தோன்றிய இவன் ஒழுங்கான முறையில் ஆட்சி புரியாமல் தில்லுமல்லுகள் செய்திருந்து விரைவாகவே காலனூர் சென்றான். இவனுடைய ஆட்சி மாட்சியற்றிருந்த படியால் எல்லோராலும் இகழப் பட்டது.

**வீரமார்த்தாண்ட சோழன்** - இவனுடைய மனைவி சேரமன்னனுடைய மகளாகிய மாணிக்கவல்லி. இவன் தன்னுடைய புரோகிதரால் கொங்கணேசுவரருடைய வரலாறு கேட்டு 66 ஆண்டுகள் அரசாட்சி செய்து தன் மகன் கீர்த்தி வர்த்தன சோழனுக்கு முடி சூட்டி விண்ணுலக மடைந்தான்.



**வீரராகவாசாரியார்** - நடுநாடாகிய திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில் இருந்த வைணவ அந்தணர். வில்லிபுத்தூராருடைய தந்தையார்.

**வீரராமநாதன்** - இவன் சோழமண்டலத்தில் ஒரு பகுதியை அரசாட்சி செய்தான். எம்மண்டலமுங் கொண்டருளிய சுந்தர பாண்டியனுக்குத் திறை செலுத்திக் கொண்டிருந்தான்.

**வீரலட்சுமி** - இரண்டு கைகளில் தாமரை மலர்களிருக்கும். மற்றிரண்டு கைகளில் வாள் பலகை ஆகியன இருக்கும். இவளைப் போற்றுவோர்க்கு அச்சமற்ற ஆண்மைத் தன்மை மிகுதியாக உண்டாகும்.

**வீரராமு** - கட்டபொம்முவினுடைய ஏழாவது வழிமுறையினன். பாஞ்சாலன் குறிச்சியில் இருபது ஆண்டுகள்வரை அரசாட்சி செய்திருந்தான்.

**வீரவாகுதேவர்** - உமாதேவியின் திருவடிச் சிலம்பில் இருந்து ஒன்பது மணிகள் சிதறின. உமாதேவியார் அவ்வொன்பது மணிகளையும் நோக்க அவைகள் பெண்களாயின. அவ்வொன்பதின்மரையுஞ் சிவபிரான் நோக்க ஒன்பதின்மருங் கருத்தாங்கினர். அதனால் உமையம்மை சினமடைந்தனள். ஒன்பது பேரும் நெடு நாள் கருவுயிர்க்காது பின் உமையை வழிபட்டு ஒன்பது வீரர்களைப் பெற்றனர். அவர்களில் முதலிற் பிறந்தவர் வீரவாகுதேவர். இவர் நந்தி தேவருடைய கூறு. ஒன்பது பேர்களுஞ் சிவபெருமானுடைய கட்டளையால் முருகக் கடவுளுக்குத் துணைவர்களாயினர்.

**வீரன்** - இவன் ஒரு தமிழ்ப் புலவன். கல்வியறிவு நிரம்பப் பெறாதவனாயினும் பெருமித

மாக நடந்து கொண்டு திரிந் தான். தன்னைக் கண்டு வணங் காதவர்களை அடித்து விடுவான். இவன் ஒருநாள் வழி நடையா கச் சென்று கொண்டிருந்த போது வல்லத்துக் கச்சியப்ப முதலியார் என்பவர் பல்லக்குச் சவாரி செய்து கொண்டு வந் தார். கண்டவுடன் விரைவாகப் பல்லக்கை விட்டு இறங்கித் தன்னை வணங்கவில்லை யென்று சினங் கொண்ட இவன் செருப் புக் காலால் முதலியாரை உதைத்தான். இவ்வாறு உதைத்தது பற்றி முதலியார் சினங் கொள்ளவில்லை. இப்புல வனுக்குப் பல்லக்கு முதலிய வரிசைகள் தந்து சிறப்புச் செய் தார்.

**வீரசலாமேகன்** - இவனுடைய முழுப் பெயர், விளங்கு முடி கவித்தவீரசலாமேகன்என்பது. இவன் கன்யாகுப்சத்தில் இருந்து இலங்கைக்குச் சென்று அதைப் பிடித்து ஆண்டான். இலங்கையரசனாகிய விக்கிரம பாண்டு என்பவன் இவனோடு போர் செய்து இவனால் தலை துணிக்கப் பட்டான். முதலாம் இராசாதி ராசனோடு நிகழ்ந்த போரில் இவன் அஞ்சித் தன்னுடைய யானையிலிருந்து இழிந்து புறங்காட்டி யோடி னான். சோழர்கள் இவனுடைய மனைவியையும் தமக்கையையுஞ் சிறைப் படுத்தியன்றித் தாயின் மூக்கையும் அரிந்து இழிவு படுத்தினார்கள். அவ்விழிவு தாங்க முடியாத இவன் மீண் டும் வந்து வாட்போர் செய்து போர்க் களத்தே மாண்டான்.

**வீராணம்ஏரி** - இப்பெயருடைய ஏரி தென்னார்க்காடு மாவட்டத் தில் உள்ளது. இவ்வேரி தமிழ் நாட்டிலேயே மிகப் பெரியது. சிதம்பரம் வட்டத்திலுள்ள இவ் வேரியை வெட்டியவன் வீர நாராயணனான முதற் பராந்த கச் சோழன். அச்சோழனுடைய பெயரால் வீரநாராயணன் ஏரி என்னும் பெயர் பெற்றது. இது நாளடைவில் வீராணம் ஏரி எனக் குறுகி விட்டதென் பர். இவ்வேரியின் நீளம் பதி னாறு கிலோ மீட்டர்; அகலம் ஐந்து கிலோ மீட்டர். கொள் ளிட நீர் அணைக்கரையிலிருந்து கால்வாய்வழியாக இவ்வேரிக்கு வருகிறது. ஏரியின் நீர் கான் சாகிப் கால்வாய் வழியாகச் சிதம்பரம் வட்டத்தில் ஆயி ரக் கணக்கான ஏக்கர் நிலங் களுக்குப் பாய்கிறது.

**வீராந்தப்பல்லவரையர்** - மூன்றாங் குலோத்துங்க சோழன் காலத் தில் விளங்கியிருந்த ஒருபுலவர். இவருடைய வேண்டுகோளின் படி அரசன், காலவிநோத நிருத்தப் பேரரையனான பார சவன் பொன்னன் என்பவனுக் குத் திருக்கடவூர்க் கோயிலில் நட்டுவ நிலை என்னும் விருத்தி யளித்தனன் என்று அவ்வூர்க் கல்வெட்டொன்று கூறுகிறது.

**வீரை** - துச்சயனுடைய மனைவி. மதுமயக்கத்தால் யானையின் முன் சென்று உயிர் விட்டவள். தாரை இலக்குமி என்பவர்க ளோடு கூடப் பிறந்தவள். இவள் மறு பிறப்பில் சுதமதி யாகப் பிறந்தாள்.

**வீரைப்பரசமயகோளரிமாமுனிவர்** - இவர் கி. பி. 1111 - 1119 ஆம் ஆண்டுகளில் விளங்கியவர். வீரையென்னும் ஊரினர். இவ் வீரை யென்பது சேது நாட்டி லுள்ளது போலும். பரசமய கோளரி என்ற சிறப்புப் பெயர் பெற்று விளங்கிய இவர் சைவ மடம் ஒன்றின் தலைவராக இருந்தார். இவர் இயற்றிய நூல்கள் கன்னிவன புராணம் பூம்புலியூர் நாடகம் என்பன.

இந்நூல்கள் இக்காலத்தில் இல்லை.

**வீரைவெளியனார்** - சங்ககாலப் புலவர்களில் ஒருவர். வீரை யென்பது இவருடைய ஊர். இவருடைய பாடல் புறநா னூற்றில் 320 ஆவது பாடலா கச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**வெகுலாசுவன்** - சுவேதன் கண்ண பிரானை விருந்துக்கு அழைத்த பொழுது இவனும் அவரை யழைத்தான். கண்ணன் இருவ ருடைய மனதும் வருந்தாமல் ஒரே காலத்தில் இவனுடைய இல்லத்திலும் சுவேதன் இல்லத் திலும் விருந்துண்டு இருவருக் குங் களிப்பை யுண்டு செய் தார்.

**வெங்குருவேந்தர்** - வெங்குரு என்பது சீகாழியின் பெயர் களில் ஒன்று. அசுரர்கள் வழி பட்டமையால் இப்பெயர் உண் டாகியது. திருஞானசம்பந்தர் இவ்வூரில் தோன்றிச் சிறந்து விளங்கியமையின் திருஞானசம் பந்தர் வெங்குரு வேந்தர் என்று சிறப்புப் பெயரை அடைந்தார்.

**வெஞ்சமாக்கூடல்** - திருவெஞ்ச மாக் கூடல் என்னுந் தேவாரம் பெற்ற இச்சிவப்பதி கொங்கு நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்றாகும். இது கருவூருக்குத் தென்மேற்கில் பன்னிரண்டு நாழிகை வழித் தொலைவில் உள்ளது. வெஞ்சன் என்னும் அசுர அரசனுடைய தலைநகரமாக விளங்கியபடி யால் இவ்வாறு வெஞ்சமாக் கூடல் என்று பெயர் பெற்ற தென்பர். அசுரனுடைய கோட் டையின் அடையாளங்கள் இன் னும் உளதென்பர்.

**வெட்டுத்தாங்கியீசுவரர்** - வடதிரு முல்லை வாயிலில்உள்ள இறைவ னுடைய பெயர். தொண்டை மான் சக்கரவர்த்தி வெட்டிய வெட்டைத் தாங்கிக் கொண்ட படியினால் இவ்வாறு பெயர் உண்டாகியது. மாசிலாமணி யீசுரர் என்பது பெரும்பான்மை யான வழக்கு.

**வெண்காட்டு நங்கை** - சிறுத் தொண்டருடைய மனைவி. சிறுத்தொண்டருடைய தொண்டுகட்கு உடந்தையா யிருந்து மகனாகிய சீராளனை அறுத்துக் கறி சமைத்தவள்.

**வெண்ணிக்கூற்றம்** - சோழ நாட் டில் உள்ள ஓர் ஊர். இது கரி கால் பெருவளத்தான் சேர மான் பெருஞ்சேரலாதனை வென்ற ஊர். இஃது இந்நா ளில் கோயில் வெண்ணி என்று வழங்குகின்றது.

**வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியார்** - இவர் சைவ வேளாளமரபில் தோன்றியவர். கம்பரை ஆதரித்துப் போற்றிய வர். கம்பர் தம்முடைய இராமாயணத்தில் இவரைப் பாராட்டி இருக்கிறார். இவ ருடைய வரலாறு பலவகை யாக வழங்குகிறது.

**வெண்ணெய்மலை** - இது கொங்கு நாட்டில் உள்ள சுப்பிரமணியத் தலங்களுள் ஒன்று; கருவூருக்கு அண்மையில் உள்ளது. இது முருகக் கடவுளுக்கு மிகவும் விருப்பமான தலம் என்பர்.

**வெண்மணிப்பூதியார்**- சங்ககாலப் புலவர்களில் ஒருவர். வெண் மணி என்பது இவருடைய ஊர். இவர் பெண்பாற் புலவர் என்று எண்ணுகின்றனர். இவ ருடைய பாடல் குறுந் தொகை யில் 299 ஆவது பாடலாக வந்திருக்கிறது.

**வெந்துவிதன்** - இவன் ஒரு வானர வீரன். பலராமர் ஆயர் பாடியில் இருக்கையில் அவ ருடன் போருக்குச் சென்று இறந் தொழிந்தான்.

**வெயிலுகந்த விநாயகர்** - பாண்டி வளநாட்டில் உப்பூரில் திருக் கோயில் கொண்டுள்ள ஆனை முகக்கடவுள் வெயிலை விரும்பிய படியால் வெயிலுகந்த விநாய கர் என்று பெயர் பெற்றார்.

**வெலநாண்டுத் தலைவனாகிய முத லாங் கொங்கன்** - இவன் குலோத்துங்கனுக்குத் திறை செலுத்திக் கொண்டு ஆந்திர நாட்டில் ஆட்சி புரிந்து கொண் டிருந்த தெலுங்கர் தலைவன். கீழைச் சளுக்கிய வேந்தனாகிய இராசராச நரேந்திரனுடைய படைத் தலைவன் நன்னன் என்பவனுடையபுதல்வன். இக் கொங்கனுடைய மகன் சோடன் என்பவனைக் குலோத்துங்கன் தன்னுடையபுதல்வர்களில்ஒருவ னாகக் கொண்டு பலவகைச் சிறப்புக்களும் அளித்துப் பாராட்டினான்.

**வெள்ளிடை மன்றம்** - காவிரிப் பூம்பட்டினத்தில் முன்னாளில் இருந்த ஒருமன்றம். இம்மன்றத் தில் வைக்கப்பட்டபொருளை எவ ருங் களவு செய்யத் துணியார்.

**வெள்ளிப் பாடல்கள்** - திருநெல் வேலியை ஒட்டியுள்ள சிந்து பூந்துறை மடத்தில் முன்னாளில் வெள்ளியம்பலவாணத் தம்பி ரான் என்பவர் ஒருவர் இருந் தார். இவர் கல்வி கேள்விகளில் வல்லவர். துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகட்கும் அவ ருடைய உடன் பிறந்தார் கட்கும் ஐந்திலக்கணங்களையும் பதினைந்து நாட்களில் போதித் தவர். இவர் இராமாயணம் பெரிய புராணம் கந்த புராணம் முதலிய நூல்களில் பொருட் டொடர்பு நோக்கிப் பாடல் களைப் பாடிச் சேர்த்து விட்டார். இப்பாடல்களே பின்னாளில் வெள்ளிப் பாடல்கள் என்று பெயர் பெற்றன.

**வெள்ளியம்பலம்** - மதுரையில் சொக்கநாதப் பெருமான் கோயிலுக் குள்ளிருக்கிறது. மதுரையில் சோமசுந்தர பாண்டியனுடைய திருமணத் தைக் காண வந்த முனிவர் கூட்டங்களில் பதஞ்சலி வியாக் கிரபாதர் ஆகிய இருவரும் திருமணம் முடிந்தவுடன் நாங் கள் சிதம்பர நடன தெரிசனங் கண்ட பிறகுதான் சாப்பிடு வோம்என்றுகூறிவிட்டுப் புறப் படத் தொடங்கினர். சிவ பிரான் இவர்கள் இருவருக்கும் மதுரையின் சிறப்பைக் கூறி னார். வந்திருந்தவர்கள் அனை வருங் காணுமாறு வெள்ளியம் பலத்தில் திருக் கூத்தாடினார்.

**வெள்ளியம்பல வாணர்** - மதுரை யென்னுந் திருவாலவாய்த் திருக்கோயிலில் வெள்ளியம் பலத்தில் கூத்தியற்றும் கூத்தப் பிரான் எழுந்தருளிய அம்பலம் வெள்ளித்தகடு வேயப்பெற்ற மையின் வெள்ளியம்பல மென்று பெயர் பெறும். அங்கு எழுந்தருளிய கூத்தப்பிரான் வெள்ளியம்பல வாணர்.

**வெறிக்கூத்து** - இது தெய்வம் ஏறியாடுகிற ஆவேசக் கூத் தாகும். வேலனாகிய பூசாரி கையில் வேலேந்திச் செம்பட் டாடையுடுத்திச் செவ்வணி யணிந்து, செஞ்சந்தனம் பூசித் தொண்டகப்பறை ஒலிக்க ஆடுவான். இவன் வேலையேந்தி யாடுகிற படியால் வேலன் எனப் படுவான்.

**வெற்றியூர்** - செட்டிமார் நாட்டில் உள்ள ஓர் ஊர். தேவர்க ளுடைய துன்பத்தைத் தீர்த்தற் பொருட்டுஇறைவிகாளியோடும் சண்டாசுரனோடும் போரிட்டு வெற்றி கொண்ட இடமாகை யால் வெற்றியூர் என்னும் பெயரையடைந்தது.

**வெற்றிவேற்கை** - தமிழில் உள்ள ஓர் அறநூல். ஆத்திசூடி என்பதைப்போல் இது வெற்றி வேற்கை என்று தொடங்கும் முதலையுடைமையால் இவ்வாறு பெயர் பெற்றது. இதற்கு நறுந்தொகை யெனவும் பெயர் உண்டு. இந்நூற் செய்யுட்கள் யாவும். நூற்பா வடிவில் அமைந்துள்ளன. இப்பாக்கள் பெரும்பாலும் ஒவ்வோரடியால் ஆகியவை. 84 பாடல்கள் இதனில் உள்ளன. இதனை இயற்றியவர் அதிவீரராமபாண்டியர் என்னும் அரசராவர். இதனுடைய சிறப்புக் கருதி இதனைப் பள்ளி மாணவர்க்குப் போதிக்கின்றனர்.

**வெற்றிவேற் செழியன்** - இவன் பாண்டி நாட்டில் கொற்கையில் இருந்து அரசு செய்தவன். பாண்டியன் நெடுஞ்செழியன் தான் அரசு முறை கோடியதன் பலனாய் மாண்டொழிந்த பிறகு மதுரை நகர் புரப்பாரின்றிக் கெட்டழிந்தது. நல்ல மழையில்லாமையாலும் வேறு பல செயல்களாலும் நாடு நாடோறுஞ் சீரழிந்து கொண்டிருந்தது. கொற்கையில் இருந்த இவன் மதுரையை நன்முறைக்குக் கொண்டுவர வெண்ணி மதுரையை அடைந்து அரசாட்சியை மேற் கொண்டான். நேர்ந்துள்ள தீமைகட்கெல்லாம் கழுவாய் செய்தான். அதன் பிறகு நாடு செழித்து நன்னிலைக்கு வந்தது. முற்றும் மதுரை அழிந்தொழியாமல் தகுந்த சமயத்தில் வந்து அந்நகரைப் பண்டுபோல் வளமுறச் செய்த இவனுடைய பண்புடைமையை அனைவரும் பாராட்டிப் போற்றலாயினர்.

**வேகவதி** - காஞ்சிபுரத்தில் முன்னாளில் ஓடிய ஓர் ஆறு. நான்முகன் செய்த வேள்வியை அழிப்பதற்கு வந்தது. நான்முகன் இவ்வாற்று வெள்ளத்தைத் திருமாலைக் கொண்டு அடக்கினான்.

**வேகாக்கொல்லை** - திருவதிகைக்குத் தெற்கே எட்டுக்கல் தொலைவில் இருக்கிறது. சிவபிரான் முப்புரம் எரித்த காலத்தில் இந்த இடம் மட்டும் வேகாமல் இருந்ததாம். அதனால் வேகாக்கொல்லை என்று பெயர் பெற்றது.

**வேங்கடபதி** - தஞ்சைமா நகரில் 1600 முதல் 1633 வரை இரகுநாதர் என்று பெயர் பெற்ற நாயக்க மன்னர் ஆட்சி செய்து கொண்டிருந்தார். அவர் புலவர்களை ஆதரித்து வந்த காரணத்தினால் அபிநவபோசர் என்று புகழ் பெற்றார். இவ்வேங்கடபதி அம்மன்னருடைய அவைக்களப் புலவராக இருந்தார்.

**வேங்கடேசுர ஐயர்** - இவரைச் சீதர ஐயர்வாள் என வழங்குவர். இவர் ஆந்திர அந்தண வழிமுறையினர். சோழவள நாட்டில் திருவிசைநல்லூரில் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சீதரலிங்காரியர். வேங்கடேசுர ஐயர் ஒரு சிரார்த்த நாள் அன்று பசியால் மிகுந்த துன்புற்ற இழிகுலத்தான் ஒருவனுக்குத் தம்முடைய இல்லத்தில் சமைத்திருந்த சிரார்த்த உணவைக் கொடுத்தார். உடனிருந்த உறவினர்கள் பெருஞ் சினங் கொண்டனர். வேங்கடேசுவர ஐயரை (சீதரஐயர்வாளை)க் குலத்திலிருந்து விலக்கி வைத்தனர். இழிகுலத்தானுக்கு உணவிட்டதற்குக் கழுவாயாகக் கங்கை நீராடி வருமாறு கட்டளையிட்டார்கள். இவருடைய நல்வினைச் சிறப்பால் கங்கை இவருடைய கொல்லைப் புறக் கிணற்றிலிருந்து பொங்கி

யெழுந்ததாம். இப்புதுமை இந்நாளிலும் கார்த்திகை அமாவாசையில் இவ்வூரில் ஒரு விழாவாக நடைபெறுகிறது. அன்பர்கள் அக்கிணற்று நீரில் மூழ்குவர். இவருடைய வாழ்க்கையில் புதுமைகள் பல நிகழ்ந்தன. இவர் திருவிடைமருதூர் மகாலிங்கசுவாமி வழிபாட்டிற்குச் செல்லும்போது காவிரி வெள்ளங் குறுக்கிட மகாலிங்கசுவாமியே இவர் முன் ஓர் அர்ச்சகரைப் போல் வந்து திருநீறு வழங்கிச் சென்றார். மற்றொரு சமயம் ஓடம் விட்டு உதவி செய்தார். மழையில்லாத காலத்தில் கடவுளைப் போற்றி மழை பெய்யச் செய்தார். இறந்துபோன குழந்தைக்கு உயிர் கொடுத்தார். தஞ்சையில் அந்நாளில் இருந்த மராட்டிய மன்னரான ஷாசி என்பவர் இவருடைய சிறப்பைஉணர்ந்து ஆதரித்தார். இவர் வடமொழி நூல்கள் பல செய்திருக்கிறார். இவர் வேதாந்தியாகலின் இவருடைய நூல்கள் சிவன் திருமாலாகியஇரு கடவுளரையும்பேதமின்றிப் போற்றும்.

**வேங்கடேசுவர மகிதீட்சிதர்** - கோவிந்த தீட்சிதர் என்பவருடைய புதல்வர். இவர் வார்த்திகாபரணம், இசையைப் பற்றிய சதுர்த்தண்டி பிரகாசிகை முதலிய நூல்களை இயற்றினார். நீலகண்ட விசயசம்பு காவியம் செய்த நீலகண்ட தீட்சிதர் என்பவருக்கு இவர் ஆசிரியராக இருந்ததாகவுந் தெரிகிறது.

**வேங்கைநாடு** - கோதாவரி கிருட்டிண ஆறுகளுக்கிடையே வேங்கியைத் தலைநகராகக் கொண்ட நாடு. இது வேங்கி எனவும், வேங்கி நாடு எனவும் சோழ இளவரசர் அரசப்பிரதிநிதியாக ஆண்டபோது வேங்கை மண்டலம் எனவும் வழங்கிற்று. முன்னாளில் இவ் வேங்கை மண்டலம் தெற்கே நெல்லூர் மாவட்டத்தில் உள்ள மன்னேறு முதல் வடக்கே கஞ்சம் மாவட்டத்திலுள்ள மகேந்திரகிரி வரை பரவி இருந்தது.

**வேடந்தாங்கல்** - தமிழ் நாட்டில் செங்கற்பட்டுமாவட்டத்தில்மதுராந்தகம் வட்டத்தில்உள்ளஊர். சென்னையில் இருந்து 54 மைல் தொலைவில் இருக்கிறது. இங்கு 74 ஏக்கர் பரப்புள்ள பெரிய ஏரி ஒன்று இருக்கிறது. அதற்குள் ஏராளமான கடப்ப மரங்கள் இருக்கின்றன. அம்மரங்களில் ஆயிரக்கணக்கான பறவைகள் பல நாடுகளிலும் இருந்து செப்டம்பர்த் திங்கள் முதல் மார்ச்சுத் திங்கள் வரையில் வந்து தங்கி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றன. ஏரியில் நீரில் மரங்கள் இருப்பதால் பறவைகளுக்குத் தீங்குண்டாவதில்லை. வேடந்தாங்கல் மக்கள் இப்பறவைகளுக்கு எவ்வகையான தீங்கும் நேராதவாறு 150 ஆண்டுகளாகப் பாதுகாத்து வருகின்றனர். இவைகளைப் பார்ப்பதற்குப் பல ஊர்களிலிருந்தும் மக்கள் வருகின்றனர்.

**வேட்டக்கண்ணனார்** - சங்ககாலப் புலவர். வேட்ட என்னும் அடைமொழி கொண்டு இவர் வேடராக இருக்கலாம் என்று எண்ணுகின்றனர். அது பொருத்தமாகத் தெரியவில்லை. இவருடைய பாடல் குறுந்தொகையில் 388 ஆவது பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**வேணாடர் வேந்து** - சேரமண்டலத்தின் உள் நாடுகளுள் ஒன்றாகிய வேணாட்டிலிருந்த ஒரு சிற்றரசன் இவன். சேரர்

வழிமுறையில் தோன்றியவன். ஒட்டக்கூத்தரால் விக்கிரம சோழனுலாவிற் கூறப்பட்ட பலருள் இவ்வேணாடர்வேந்தும் ஒருவனுவன். வேணுடு என்பது திருவாங்கூர் நாட்டின் தென் பகுதியாகும். வேணாட்டிற் புகழ் பெற்று விளங்கிய பெரியோர்கள் வேணாட்டடிகள் என்று கூறப்பட்டனர்.

**வேணுவுடையான்** - இவன் கொங்குவள நாட்டில் தாரா புரத்தையடுத்த கொற்றனூரில் அந்நாட்டுத் தலைவனுக இருந் தான். கொற்றனூரில் எழுந் தருளிய அப்பரமேயருக்குத் திருவிழா நடை பெற்றது. தேர் நிலைவிட்டுப் பெயரவில்லை. தேர்நிலைக்கு வந்த பிறகே உணவு கொள்வது என்னுங் கொள்கையுடைய பெரியோர்கள் செய்வதறியாமல் திகைத்தார்கள். அப்பொழுது அங்கு ஒருசிறுமிமீது ஆவேசம் வந்தது. அவள் அங்குள்ளவர்களைப் பார்த்து, ''ஏன் மயங்குகிறீர்கள்? இஃது ஒரு பூதத்தின் செய்கை. ஒரு மகனை தலைப்பிள்ளையை வெட்டிப் பலி கொடுத்தால் தேர்நிலை பெயரும்" என்று கூறினள். வேணுவுடையான் இதனைக் கேட்டுப், ''பல மெய் யன்பர்களுடைய வருத்தந் திர ஒரு பிள்ளையைப் பலி கொடுத்தல் பெரிய காரியமோ?'' எனத் திடங் கொண்டு தலைப்பிள்ளையான தன் குழந்தையைப் பிடித்து வெட்டித் தேர்க்காலிற் பலி கொடுத்தான். உடனே தேர் நடந்தது. எல்லோரும் மகிழ்ச்சியடைந்தார்கள். இதனை யறிந்த விசயநகர மன்னன் இவ் வீரச் செயலைப் புகழ்ந்து பல மேன்மைகளை வேணுவுடையானுக்கு வழங்கினன்.

**வேணிசம்மாரம்** - இந்நூல் பவபூதி என்பவரால் வடமொழியில் எட்டாம் நூற்றுண்டில் இயற்றப்பட்டது. இது திரௌபதியின் கூந்தலைப் பிடித்து இழுத்துச் சென்றதையும், திரௌபதி தன்னை அவ்வாறு இழுத்துத் துன்புறுத்தியவன் மீது பழி தீர்த்துக் கொள்ளும் வரையிலும் கூந்தலை முடிப்ப தில்லை என்று உறுதி பூண்டதையுங் கூறுவதாகும்.

**வேணு வனநாதர்** - திக்கெலாம் புகழும் திருநெல்வேலியிற் கோயில் கொண்டுள்ள இறைவனுடைய பழைய பெயர். வேணுவனம் நெல்வேலியாதற்கு முன்பு இறைவன் மூங்கிற் காட்டில் எழுந்தருளியிருந்தபடியால் இப்பெயர் உண்டாகியது.

**வேணுவனம்** - வேதசருமன் என்னும் அந்தணன் காயவைத்த நெல்லைக் காத்தற்கு வேலியிட்ட படியால் நெல்வேலி எனப் பெயர் பெற்று விளங்கும் திருநெல்வேலிப் பகுதியில் இறைவன் மூங்கில் அடியில் முளைத்து வெளிப்பட்ட காரணத்தால் வேணுவனம் எனவும் பெயர் பெறும். நெல்வேலித் தலத்தின் தலமரம் மூங்கிலேயாகும்.

**வேண்மாள்** - சேரன்செங்குட்டுவனுடைய மனைவி. கண்ணகிக்குக் கோயிலமைக்க வேண்டுமென்று தன் கணவனிடந் தெரிவித்து அவ்வாறே கோயில் அமைப்பித்தவள்.

**வேதசரர்** - இவர் மெய்யறிவு கைவரப் பெற்றவர். இளைஞராக இருக்கும்போதே துறவு நிலையை மேற் கொண்டு ஒரு காட்டிலே தவஞ் செய்து கொண்டிருந்தார். அவருக்கு இடங் கொடுப்பின் அனைத்திற்கும் இடங் கொடுத்ததாகு

மென்பதை உணர்ந்திருந்த இவர் தம்முடைய உள்ளத்தில் அவாவுக்கு இடங் கொடுக்காமல் உள்ளத் தூய்மையோடிருந்தார். ஒருநாள் உணவின் பொருட்டு நகரத்திற்குச் சென்ருர். அந்நகரத்திற்குரிய மன்னன் மகளுக்கு அன்று திருமணம் ஏற்பாடாகி யிருந்தது. அந்தமணம் தானேதன்னுடைய மணவாளனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்சுயம்வரமாகும். பல நாட்டு மன்னர்களும்அங்கு வந்து கூடியிருந்தனர். மன்னன் மகள் மணுளனைத் தேர்ந்தெடுக்குஞ் சமயத்தில் இவ்வேதசரர் மனத்தைக் கட்டுப் படுத்தாமல் சிறிது அவாவுக்கு இடங் கொடுத்தார். அந்த அவா வேறொன்றும் இல்லை. இந்த வேடிக்கையை நாமுஞ் சிறிது நேரம் நின்று பார்த்து விட்டுப் போவோமே என்னும் அற்பமான அவாதான். அந்நாட்டு அரசனுக்கு ஆண் மகனில்லை. ஆகவே அவ்வரச குமாரியை மணப்போருக்கே நாடும் உரிமையானது. மணமண்டபத்தை யடைந்த அரச குமாரி நாற்புறமும் பார்த்தாள். அரசர்கள் மணமாலை நம்முடைய கழுத்தில் விழாதா என்று ஏங்கிஞர்கள். அரசகுமாரி நான்கு புறமும் பார்த்த போது வேதசரர் அவளுடைய கண்ணுக்குப் புலஞ்ஞர். தவ வொளியினல் பேரழகராக விளங்கியிருந்த இவருக்கே மணமாலையைச் சூட்ட ஓடி வந்தாள். இவரோ அந்தோ வந்ததே மோசமென்று பின்னங்கால் பிடரியிலடிக்கு மாறு பிடித்தார் ஓட்டம். அரசகுமாரி இம்முனிவரைத் தவிர வேறு யாரையும் மணந்து கொள்வதில்லை யென்று உறுதி பூண்டாள். ஓட்டம் பிடித்த வேதசரரோ கண்ணுக்ககப் படாமல் மறைந்து விட்டார்.

**வேதகிரி** - இஃது இந்நாளில் திருக்கழுக்குன்றம் என்னும் பெயரோடு வழங்குகின்றது. வேதங்களே மலையாய் நிற்றலின் வேதகிரி என்று பெயரடைந்தது. இவ்வூருக்கு நாள் தோறும் நண்பகலில் இரண்டு கழுகுகள் வந்து தமக்குக் கொடுக்கப்படும் உணவை உண்டு மலையை வலமாகச் சுற்றிக் கொண்டு போகின்றன. பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை சங்கு பிறக்கும் சங்கு தீர்த்தம் இவ்வூரில் உள்ளது. மலையை வலஞ் செய்து வேதகிரீசுரரை வழிபடுகிறவர்கள் நோய் நீங்கி நலம் பெறுகிருர்கள்.

**வேதசன்மா** - இவர் வேணுவனம் என்னும் ஊரில் இருந்த ஓர் அந்தணர். வேணு வனத்தில் எழுந்தருளிய இறைவனுக்குப் பூசை முதலியவைகளைச் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் தமது இல்லத்தின் முன் சிவ பூசைக்காக நெல்லைக் காயப் போட்டு விட்டு நீராடும் பொருட்டு ஆற்றுக்குச் சென்ருர். நீராடிக் கொண்டிருக்கும் போது முகில்கள் திரண்டு பெருமழை பொழியத் தொடங்கின. அந்தணருக்குக் கவலை யுண்டாகியது. நெல் முழுவதும் மழையில் நனைந்து அடிபட்டுப் போயிருக்கக் கூடுமே என்று அஞ்சிஞர். விரைவாகத் தம்முடைய இல்லத்தை நோக்கி ஓடிவந்தார். நெல்லின் மீது ஒருசொட்டுநீரும் விழுந்து அதனை நனைக்க வில்லை. பக்கத்துத் தண்ணீரும் நெல்லின் மீது ஊற வில்லை. காயவைக்கப் பட்டிருந்த நெல்லைச் சுற்றி வேலி பிடிக்கப் பட்டாற் போல் தண்ணீர் அப்படியே நின்று கொண்டிருந்தது. இச்செய்தியை மக்களும் பிறரும் உணர்ந்து

இறைவனுடைய அருளைப் பெரிதுங் கொண்டாடினர். அது முதல் வேணுவனம் நெல்வேலி என்னும் பெயரை :யடைந்தது.

**வேத தருமர்** - இவர் பயிலவ முனிவருடைய மகன். இவருடைய மாணுக்கர் திபகர். இவர் தம்முடைய மாணுக்கரைப் பார்த்துத் தமக்கு இருபத்தோராண்டுகள் ஏவல் செய்ய வேண்டுமென்று கேட்டார். மாணுக்கராகிய தீபகர் தாம் இறக்கும் வரையிலும் ஏவல் செய்ய உடன் பட்டார். ஆசிரியர் குறைநோயடைந்து தம்முடைய மாணவரைப் பார்த்துத் தம்மைக் காசிக்குக் கொண்டு போகுமாறு கட்டளையிட்டார். மாணவர் ஆசிரியரைக் காசிக்குத் தூக்கிக் கொண்டு சென்ருர். காசியில் வசித்திருக்கையில் ஆசிரியர் பல கொடுமைகளைச் செய்தார். மாணவர் அக்கொடுமைகளையெல்லாம் ஒருபொருட்படுத்தாதிருந்தார். இவருடைய குருபணிவிடையைக் கண்டு சிவபிரான் மகிழ்ந்தார். காட்சி தந்து வேண்டியவைகளைக்கேள் என்ருர். மாணவரோ பணிவிடையை மேலும் உறுதியாகப் பெற்ருர். தங்குரு நலமடைய வேண்டுமென்ருர். தீபகருடைய செய்கைகளைக் கண்ட குரு மிக மகிழ்ந்து அணைத்துக் கொண்டார். மாணவருக்கு உண்மைப் பொருளையுரைத்தருளிஞர்.

**வேதநிதி** - இவன் காமக்காம்ப்பேறிய ஓர் அந்தணன். இவனுடைய தந்தைக்கு அரசன் கொடுத்த மோதிரத்தைத் தாயறியாமற் களவு செய்து கொண்டு போய் விலைமகளுக்குக் கொடுத்தான். அதனை அவள் தன்னுடைய விரலில் அணிந்து கொண்டு அரசனுக்கு முன் ஆடினுள். அரசன் மோதிரத்தை அவளிடமிருந்து வாங்கிப் பார்த்தான். தான் அந்தணனுக்குக் கொடுத்த மோதிரமென்று ஐயங் கொண்டான். அந்தணனையழைத்துத்தான்அவனுக்குக் கொடுத்த மோதிரத்தைக் கொண்டு வரும்படியாகவும் பார்த்து விட்டுக் கொடுத்து விடுவதாகவுஞ் சொன்னுன். அந்தணன் தன் வீட்டிற்குப்போய் மனைவியிடம் மோதிரத்தைக் கேட்டான். அவள் அதனைத் தேடிப் பார்த்து விட்டுக் காணுமற் போனதைக் கணவனிடங் கூறினுள். அந்தணன் அரசனிடங் கூறினுன். பிறகு அரசன் அந்தணனிடம் நடந்ததைக் கூறினுன். அந்தணன் தன்னுடைய மகனை ஊரை விட்டு வெளியேற்றினுன். அவன் விலைமகளாலுந் துரத்தப்பட்டுப்பசியால்வருந்தியலைந்தான். சிவராத்திரியன்று கோயிலுக்குச் செல்வோர் படைப்புப் பொருளோடு செல்வதைக் கண்டான். அங்கு களவு செய்து உண்ணவெண்ணினுன். தன்னுடைய வேட்டியிற் சிறிது கிழித்துத் திவட்டி செய்து எண்ணெயில் தோய்த்துக் கொளுத்திக் கோயிலில் இருளைப் போக்கினுன். அங்கிருந்த படைப்புப் பொருள்களில் சிறிதைக் களவு செய்து கொண்டு திரும்பினுன். அப்பொழுது உறங்கிக் கொண்டிருந்த காவற் காரர்களைத் தெரியாத்தனமாக மிதித்து விடவே அவர்கள் விழித்து எழுந்து கள்வனென்று பிடித்துக் கொண்டார்கள். பிறகு கொன்று விட்டார்கள். சிவராத்திரியில் விளக்கொளி செய்த நல்வினையினுல் அவன் கலிங்க நாட்டு மன்னனுகப் பிறந்து பல அறங்களைச் செய்தான்.

**வேதரத்தினம்** - இவர் வேதாரணியம் என வழங்கும் திருமறைக் காட்டில் 25 - 2 - 1897 இல் பிறந்தார். தந்தையார் பெயர் அப்பாக்குட்டிப் பிள்ளை. தாயார் பெயர் தங்கம்மாள். இவர் பள்ளியில் எட்டாம் வகுப்பு வரையில் தான் கல்வி பயின்றார். பிற்காலத்தில் தமிழை நன்கு கற்றதோடு ஆங்கிலம், இந்தி, வடமொழி, உருது, தெலுங்கு, மலையாளம், வங்காளம் முதலிய மொழிகளையுங்கற்றுணர்ந்தார். திருக்குறள் தாயுமானவர் பாடல், பகவத் கீதை முதலிய நூல்களை இவர் மிகுதியாக விரும்பிப் படிப்பார். 1920 ஆம் ஆண்டில் வட நாட்டில் காந்தியடிகளைக் கண்டார். அதன் பிறகு உரிமை வேட்கை மிகுதியாகப் பெற்று நாட்டுவிடுதலைக்கு உழைத்தார். வேதாரணியத்தில் உப்புச் சத்தியாக்கிரகம் நடைபெற்ற பொழுதுஇவர்அதற்குப் பேருதவியாக இருந்தார். இதன் பொருட்டு அரசாங்கம் இவருடைய சொத்தைப் பறிமுதல் செய்ததோடு இவரையுஞ்சிறையில் அடைத்தது.

1931 ஆம் ஆண்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் நடந்த விவசாயிகள் தொழிலாளிகள் மாநாட்டில் இவருக்குச் சர்தார் என்னுஞ் சிறப்புப் பெயர் சூட்டப் பெற்றது. சென்னை சட்டசபையில் காங்கிரஸ் உறுப்பினராக இருந்தார். தஞ்சை மாவட்ட மக்களுக்குப் பல வகையான நன்மைகள் செய்தார். இந்திப் பிரசார சபைக்குத் தலைவராகவும், ஆதாரக் கல்விக் கமிட்டி, அகிலஇந்தியக் கிராமக் கைத்தொழிற் சங்கம் ஆகியவைகளில் உறுப்பினராகவும் தலைவராகவும் இருந்தார்.

வேதாரணியத்தைச் சேர்ந்த மகாராச புரத்தில் 1946 ஆம் ஆண்டில் கத்தூரிபா காந்தி கன்யா குருகுலம் என்னும் ஆதாரப் பெண் பள்ளியை அமைத்து அதில் அரிசனப் பெண்களையும் அநாதைப்பெண்களையும் திக்கற்ற பெண்களையும் சேர்த்து அவர்கட்கு இலவச உணவு, உடை, உறையுள் கல்வி ஆகியவற்றை வழங்கி நடத்தினார். வேதாரணியத்தில் தாயுமானவர் வித்தியாலயம் என்ற ஆதாரப் பள்ளியை நிறுவினார்.

1946 ஆம் ஆண்டுமுதல் ஏறக்குறைய இருநூற்றைம்பது நிருமாண ஊழியர்களுக்குப் பல பயிற்சி முகாம்கள் நடத்திப் பயிற்சி கொடுத்தார்.

இவர் எளிய தூய வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தார். தமக்கு வேண்டிய கதர் உடைக்கு வேண்டிய கதர் நூலைத் தாமே நூற்றுக் கொள்வார். திங்கட் கிழமைதோறும் உண்ணாவிரதமும் மௌனமும் உடையவர். இவர் தம்முடைய 64 ஆவது அகவையில் 24 - 8 - 1961 இல் சென்னையில் திடீரென்று காலமானார். இவர் நடத்தி வந்த கத்தூரிபாகாந்தி கன்யா குருகுலம் முதலிய அறநிலையங்களை இவருடைய அருமைப்புதல்வர் திரு.வே.அப்பாக்குட்டி அவர்கள் சீரிய முறையில் நடத்தி வருகிறார்.

**வேதவனமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயன்** - இவன் தொண்டை மண்டலத்தில் பழையனூர் நாட்டிலுள்ள பழையனூர்த் திருவாலங் காட்டிற் பிறந்தவன். திருச்சிற்றம்பலமுடையான் பெருமானம்பிப் பல்லவராயன் இறந்த பிறகு இராசாதிராச சோழனிடத்தில் அமைச்சர்கட்குத்

தலைவனாக இருந்தவன். அரசனுடைய ஆணையின்படி பாண்டி நாட்டின்மேற் படையெடுத்துச் சென்று, நன்றி மறந்த குலசேகர பாண்டியனை அரியணையிலிருந்து நீக்கி அதனை வீரபாண்டியனுக்கு வழங்கிய வீரன். சிங்கள மன்னனாகிய பாராக்கிரமபாகுவின் எண்ணம் நிறைவேறாத படி சீவல்லபனுக்குத் துணைப்படை கொடுத்து அவ்வேந்தன் போரில் வெல்லுமாறு செய்த சூழ்ச்சித் திறமுடையவன். இவன் திருவாரூர் திருவாலங்காடு முதலிய இடங்களிலுள்ள திருக்கோயில்கட்குக் கட்டளைகள் சில ஏற்படுத்தினான்.

**வேதவதி** - வேதமோதிக் கொண்டிருந்த குசத்துவர் என்பவருடைய வாக்கிலே இவள் தோன்றினாள். இவள் திருமகளுடைய ஒரு கூறு. குசத்துவரைத் தம்பன் என்னும் பெயருடைய ஓர் அரக்கன் கொலை செய்து விட்டான். பிறகுஇவள் தவஞ் செய்து கொண்டிருந்தாள். திக்குகடோறுஞ் சுற்றிக் கொண்டு வந்த இராவணன் இவளைக் கண்டு மோகங் கொண்டு கூந்தலைப் பற்றியிழுத்தான். இவள் சினங் கொண்டாள். "நீ தொட்ட வுடலை நான் இனிமேல் வைத்திருப்பதில்லை." என்று கூறித் தீ மூட்டினாள். "இனி வரும் பிறப்பில் உன்னையும் உன் குலத்தவரையும் அழிப்பேன்" என்று வசவுரை கூறித் தீயிற் பாய்ந்தாள். பிறகுஇலங்கையில் ஒரு தாமரைப் பொய்கையில் பெண்ணுருவாகத் தோன்றினாள். கண்டோர் எடுத்துக் கொண்டு போய் இராவணனிடங் கொடுத்தனர். இராவணன் காலக் கணிதரை யழைத்து அப்பெண்ணைப் பற்றிய பலன்களைக் கூறுமாறு கட்டளையிட்டான். அவர்கள், "இப்பெண் இங்கு இருந்தால் இலங்கை அழிந்தொழியும்" என்றார்கள். இதனைக் கேட்ட இராவணன் குழந்தையை ஒரு பெட்டியில் வைத்துக் கடலில் விட்டுவிடச் செய்தான். அவ்வாறு விடப்பட்ட பெட்டி மிதந்து சென்று மிதிலா நகரத்துக் கடற் கரையில் ஒதுங்கி நாளடைவில் மண்ணிற் புதையுண்டது. பிறகு சனகன் வேள்வி செய்யும் பொருட்டுக் கடற் கரையில் நிலத்தைஉழுத பொழுது இப்பெட்டியகப்பட்டது. சனகன் எடுத்துச் சீதையென்று பெயரிட்டு வளர்த்தான். பிறகு இராமனுக்கு மணஞ் செய்து கொடுத்தான். பிறகு இராமாயணப் போர் ஏற்பட இவள் தன்னுடைய வசவுரைப்படி இலங்கையையும் இராவணனையும் அழித்தொழித்தாள்.

**வேதவல்லி** - இவள் நான்முகனுடைய பாதங்களில் தோன்றியவள். இவளைத் தக்கன் மணந்தான். தக்கன் வேள்வி செய்த காலத்தில் இவளுடைய தலை காளியால் அறுப்புண்டது

**வேதவியாசர்** - ஒரு காலத்தில் பராசரர் மக்கட்பேற்றை விரும்பி மச்சகந்தி யென்பவளைப் பரிமளகந்தி யாக்கி நல்வேளை யொன்றில் கூடினார். அப்பொழுது வேத வியாசர் தோன்றினார். இவர் தம்முடைய தந்தையாரோடு தவஞ் செய்திருந்தார். மறைகளை நன்கு ஓதித் தெளிந்தார். அவைகளை வகுத்து ஒழுங்காக்கினார். இதனால் இவருக்கு வேத வியாசர் என்று பெயர் உண்டாகியது. பாரதச் செய்திகளை மிகப் புகழ் வாய்ந்த நூலென்றும் ஐந்தாம் வேதம் என்றும்

எல்லோரும் புகழுமாறு சொல்லி ஆனைமுகக் கடவுளைக் கொண்டு எழுதச் செய்தார். தம்முடைய தாயாகிய பரிமள கந்தியின் விருப்பப்படி திருத ராட்டிரன், பாண்டு, விதுரன் ஆகியவர்களை உண்டாக்கினார். பாண்டவர்கள் காட்டில் வாழ்ந்து கொண்டிருக்குங் காலத்தில் பல விடங்களில் தோன்றி அவர்கட்கு அறநெறி கூறித் தேறுதல் செய்தார்.

இவர் மகப் பேற்றை விரும் பிச் சிவபிரானை நோக்கி வேள்வி செய்யத் தொடங்கி அரணியைப் பிடித்துக் கடைந் தார். கிருதாசி என்பவள் அப் பொழுது தோன்றி இவருக்கு மோகத்தை உண்டாக்கினாள். தான் கிளி வடிவங் கொண்டு அங்கிருந்தாள். அப்பொழுது வியாசருக்கு வெளிப்பட்ட வீரி யம் அரணியில் விழுந்தது. அதி லிருந்து சுகர் தோன்றினார். சுகரூபியாகிய அக்கிருதாசி என்பவளால் அவர் தோன்றின மையின், சுகர் என்னும் பெய ரைப் பெற்றார். சுகர் பிறக்கும் போதே பெரிய ஞானியாகப் பிறந்தார். மேலும் நாரதர் சுகருக்கு மெய்யறிவுரைகள் பல வற்றைக் கூறினார். அதனால் சுகர் தந்தையாகிய வியாசரை விட்டு நீங்கிச் சென்றார். வியா சர் மகன்மீது வைத்த விருப்பத் தால், "சுக! சுக!!" என்று கூப்பிட்டார். அங்கிருந்த மரங் கள் முதலியன "ஓம்" என்று விடை பகர்ந்தன. பிறகு வியா சர் சுகரைப் பின் தொடர்ந்து சென்றார். அப்பொழுது வழி யில் இருந்த ஒரு தடாகத்தில் நீராடிக் கொண்டிருந்த அரம் பையர் சுகர் உலக விவகாரந் தெரியாதவராகையால் அவ ரைக்கண்டு ஆடையை அணியா திருந்தனர். வியாசரைக் கண் டதும் ஆடையை அணிந்து கொண்டனர். வியாசர் தம் புதல்வருடைய மேல் நிலையைக் கண்டு மீண்டார்.

வியாசர் ஒரு சமயம் ஒரு புழு வுக்கு அருள் புரிந்தார். பாரதப் போரில் அபிமன்னன் இறந்த தைப் பற்றி வருத்தமுற்ற தரும ரைத் தேற்றினார். பாரதப் போரில் ஏற்பட்ட தீவினை தொலையுமாறு அசுவ மேத யாகஞ் செய்யுமாறு தருமருக்கு அறிவுரை கூறினார். போர் முடிந்த பிறகு மக்களிறந்த வருத்தத்தால் திருதராட்டிரன் பாண்டவர்களை நீங்கித் தவஞ் செய்து கொண்டிருக்குங் காலத் தில் அவனிடஞ் சென்று தேறு தல் கூறினார். இறந்து போன அவனுடைய மைந்தர்களை வர வழைத்துக் காட்டினார். திருத ராட்டிரனைக் காண வந்திருந்த பாண்டவர்கட்கும் கர்ணன், அபிமன்னன், அரவான் முதலிய வர்களை வரவழைத்துக் காட்டி னார். அவர்களுடைய மனைவி கள் கங்கையில் விழுந்து விண் ணுலகடையச் செய்தார்.

மேலும் இவர் ஒரு காலத்தில் நைமிசாரணிய முனிவர்களிடம் போய்க், "கேசவனே பரம்" என்று கூற, அம்முனிவர்கள் காசிப்பதியிற் கூறுமாறு சொல் லினர். இவர் அவ்வாறே காசிக் குச் சென்று கூற அதனால் கையும் நாவும் எழாமல் வருந்தி னார். பிறகு திருமாலால் "சிவ பெருமானே பரம்பொருள்" என அறிவுரை கூறக் கேட்டுச் சிவவணக்கஞ் செய்து கையும் நாவும் பெற்றார். ஒரு சமயம் இவர் காசியிலே பிச்சைக்குச் சென்றபோது பிச்சை கிடைக்க வில்லை. ஆகவே காசியைச் சபிக்க எண்ணினார். அப்போது அன்னபூரணி தோன்றி அன்ன மளித்தாள். இவர் வைவச்சுத

மனு வந்தரத்தில் இருபத்தெட்டாவது துவாபர யுகத்தில் இருந்தார். சைமினிக்கும் பைலருக்கும் வைசம்பாயனருக்கும் இவர் அறிவுரை கூறியருளினர். இவர் தீவிலே பிறந்த காரணத்தினுல் இவருக்கு, "த்வைபாயனர்" என்று மற்ருெரு பெயரும் உண்டு.

**வேதாந்த தேசிகர்** - இவர் காஞ்சிபுரத்தில் கலி சுஅஎக ஆம் ஆண்டில் நிகழ்ந்த சுக்கில வாண்டில் (கி - பி. 1600) உலகிற் பிறந்தார். வடகலை வைணவத்தை வளர்த்தார். பல திருமால்பதிகட்குஞ் சென்று மால் வழிபாடு செய்தார். வைணவ சமய வளர்ச்சிக்குப் பெரிதும் உழைத்தார். பெரும் புலமை பெற்று விளங்கிய இவர் வியாசரால் இயற்றப் பட்ட வேதாந்த நூல்களுக்கும் பகவத் கீதைக்கும் சிறந்த விரிவுரைகளியற்றினுர். சங்கல்பசூரியோதயம் என்னும் தத்துவ நாடகம், பரமபத தரிசனம், வைராக்கிய பஞ்சகம் முதலிய பல சிறந்த நூல்களை இயற்றினுர். தம்முடைய மனைவியைத் தாய் வீட்டிற்கனுப்பி விட்டுத் தாம் துறவறநிலையை மேற் கொண்டார். தம்முடைய நூருவது ஆண்டில் பரமபத மடைந்தார். இவர் முப்பத்திரண்டு தோத்திர நூல்களையும், மூன்று காவியங்களையும் இருபத்தெட்டு அநுட்டான நூல்களையும், முப்பத்திரண்டு இரகசிய நூல்களையும், இருபத்து நான்கு சம்பிரதாய நூல்களையும், ஒரு பகவத் நூலையும் இயற்றினுர். இவ்வாறு நூற்றிருபது நூல்களையெழுதிய இவருக்கு வரதர் என்னும் மாணவர் ஒருவர் இருந்தார். அவருஞ் சிறந்த புலவராகத் திகழ்ந்திருந்தார்.

**வேதாரணியம்** - தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த திருத்தருப் பூண்டி வட்டத்திலுள்ள ஒரு பழைமையான பட்டினம். முன்னுளில் மறைகள் வழிபாடு செய்து இங்குள்ள இறைவனைப் போற்றிய படியால் இவ் வூருக்கு மறைக்காடு என்று பெயர் அமைந்தது. இதனை வடமொழியாளர்கள் வேதாரணியம்என வடமொழிப் படுத்தினர். இங்குள்ள கோயிலின் திருக்கதவைத் திருநாவுக்கரசர் தேவாரம்பாடித் திறந்தார். திருஞான சம்பந்தர் தேவாரம் பாடி அடைத்தார். திருவிளையாடற் புராணத்தைப் பாடிய பரஞ்சோதி முனிவரும் தாயுமான வடிகளும் இவ்வூரிலே பிறந்தனர். இவ் வூருக்குத் தெற்கே ஏழுகல் தொலைவில் கோடிக்கரை என்னும் ஊர் உள்ளது.

வேதாரணியத்திற்கு வடக்கேயுள்ள மகாராசபுரம் என்னும் ஊரில் சர்தார் வேதரத்தினம் பிள்ளையால் நிறுவப் பெற்ற கத்தூரிபா கன்யா குருகுலம் உள்ளது. இங்கு பல பள்ளிகள் உள்ளன. பல குடிசைத் தொழில்கள் நடைபெறுகின்றன. ஐந்து மைல் அகலம் உள்ள ஓர் உப்பளம் உள்ளது. இங்கிருந்து சுமார் 30 மைல் நீளமுள்ள உப்பளம் வேதாரணியம் உப்பளம் என வழங்குகின்றது. இது தமிழ் நாட்டில் ஒரு பெரிய உப்பளமாகும். வேதாரணியத்தில் மட்டும் ஆண்டு தோறும் இருபது லட்சம் டன் உப்பெடுக்க முடியும். 1930 ஆம் ஆண்டில் உப்புச் சத்தியாக்கிரகம் நடை பெற்ற பிறகு இவ்வூர் அதிகப் புகழ் பெற்று விளங்குகிறது.

**வேத்திரகீயம்** - ஏகசக்கிரவனத்திலிருந்த ஓர் ஊர். துரியோதன

னுடைய தொல்லையால் பாண்டவர்கள் சில காலம் பார்ப்பனக் கோலத்தோடு தங்கி யிருந்த ஊர். இங்கிருந்த போது வீமன் பகாசுரன்என்பவனைக்கொன்று அவ்வூரார்களுடைய துன்பத்தைப் போக்கினன்.

**வேமலவாடா பீமன்ன** - கி. பி. பதின்மூன்ருவது நூற்ருண்டிலிருந்த புகழ் பெற்ற தெலுங்குப் புலவர். இவர் ஆந்திர சந்தம் என்னும் தெலுங்கு யாப்பிலக்கணத்தை இயற்றியுள்ளார்.

**வேமனயோகீசுவரர்** - இவர் ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்த் தெலுங்கு நாட்டில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் குமாரகிரிவேமா ரெட்டி; தாயார் பெயர் மல்லம்மாள். வேமனயோகிக்கு அண்ணன் ஒருவர் இருந்தார். அவருடைய பெயர் வெங்கா ரெட்டி; அண்ணன் மனைவியின் பெயர் நரசிம்மஅம்மாள். வேமாரெட்டி ஒரு சிற்றரசராக விளங்கினுர் என்று தெரிகிறது.

மல்லம்மாளுக்குக் கடைசிப் பிள்ளையாகத் தோன்றியவர் வேமனர். இவர் பிறந்த இரண்டு ஆண்டுகளில் தாயார் காலமானுர். மூத்தவரான வெங்கா ரெட்டிக்குத் திருமணமாகி இருந்தது. அவர் இளவரசராகவும் விளங்கினுர். தாயிறந்த பிறகு நரசிம்மராணியார் வேமனரைத் தம்முடைய பிள்ளையாக வளர்த்தார்.

வேமனர் இளமைப் பருவத்தில் கல்வியை நன்ருகக் கற்ருர். ஆயினும் ஊழ்வினையின் வலியால் தீவினைக்கு அஞ்சாமல் சிற்றின்பத்தில் அழுந்தலானுர். விலைமகளிர்களின் வீடே கதியெனக்கிடந்தார். இதனைத்தமையனுராகிய வெங்கா ரெட்டி அறிந்தார். தம் தம்பியின் கூடா ஒழுக்கத்தைத் தடுப்பதற்குத் தம்மாலான முயற்சியைச் செய்துபார்த்தார். எவ்வகையான பயனும் ஏற்பட வில்லை. குடும்பத்தின் பொருள்கள் கணக்கு வழக்கில்லாமல் அழிந்தொழிந்தன. இதனுல் அரச குடும்பம் நிலை கலங்கியது. வெங்கா ரெட்டி, செல்வம் தம்முடைய தம்பியின் கையிற் சிக்காதவாறு பாதுகாப்பாகப் பார்த்துக் கொண்டார். வேமனர் கைக்கு இதனுல் பொருள் அகப்படுவது அரிதாயிற்று. அரிதாகவே விலைமகளிரும் வேமனரைவெறுக்கத் தொடங்கினர்.

அண்ணியாராகிய நரசிம்மராணியின் மூக்கில் அழகிய மூக்குத்தி ஒன்று ஒளி வீசியது. அதனை ஒருவிலைமகள் கண்டாள். வேமனரைக் கொண்டு அம் மூக்குத்தியைக் கைப்பற்றிவிட வேண்டுமென்று எண்ணினுள். வேமனர் தன்னிடம் வந்த பொழுது, "நீர் உம்முடைய அண்ணியின் மூக்கில் உள்ள மூக்குத்தியை எனக்குக் கொண்டு வந்து கொடுத்தால் தான் என்னுடைய இல்லத்திற்கு வரலாம். இல்லாவிட்டால் இங்கே வரக்கூடாது" என்று கண்டிப்பாகக் கூறினுள். இதனைக் கேட்ட வேமனர் உள்ளம் வெதும்பினுர். நாம் நம்முடைய அண்ணியாரின் மூக்குத்தியை எவ்வாறு கேட்பது என்று எண்ணினுர். வீட்டிற்குச் சென்று உணவு கூடக் கொள்ளாமல் ஒரு மூலையிற் படுத்திருந்தார். வேமனர் உணவு கொள்ள வராததைக் கண்ட அண்ணியார் சாப்பிட அழைத்தார். வேமனர், "உணவு வேண்டாம்" என்று கூறிவிட்டு மேலும் உறங்கத் தொடங்கினுர். அண்ணியார்,

"ஏன் சாப்பிட மாட்டேன் என்கிறாய்? எழுந்து வந்து சாப்பிடு. உனக்கு வேண்டியதைக் கொடுக்கிறேன்" என்று சொன்னார். உடனே வேமனர், "அம்மா! தாங்கள் அணிந்திருக்கும் மூக்குத்தி வேண்டும்" என்று சொன்னார். "தருகிறேன் எழுந்து சாப்பிடு" என்றார். உடனே வேமனர் எழுந்து சாப்பிட்டார். பிறகு மூக்குத்தியைக் கேட்டார்.

அம்மையார் வேமனரைப் பார்த்து, "நீ இந்த மூக்குத்தியை விலைமகளுக்குக் கொடுப்பதற்காகத்தானே கேட்கிறாய்? நான் சொல்லுகிற வண்ணம் நின்று கொடுப்பதானால் தருகிறேன்" என்று சொன்னார். "தாங்கள் கூறுகிற வண்ணமே நின்று கொடுக்கிறேன்" என்று உறுதி மொழியுரைத்தார் வேமனர். அண்ணியார் வேமனரைப் பார்த்து, "அவ்வாறானால் இந்தா மூக்குத்தி; நீ இதனை அவளுக்கு முன்னே நின்று கொடாதே. அவளுக்குப் பின்னால் நின்று கொள். அவளைக் கீழே குனிந்து இரண்டு கால்களுக்கு மிடையே கையை நீட்டச் செய்து கொடு" என்று கூறி அனுப்பினார்.

வேமனர் விலைமகளுடைய இல்லத்திற்கு வந்தார். "இதோ மூக்குத்தி கொண்டு வந்தேன்" என்று கூறினார். விலைமகள் மகிழ்ச்சியோடு, "எங்கே மூக்குத்தி? இப்படிக் கொடு" என்றாள். அதற்கு வேமனர், "அப்படி நான் தரமாட்டேன். நீ குனிந்து உன் கையை கால்கள் இரண்டுக்கும் இடையில் நீட்டு நான் கொடுக்கிறேன்" என்று சொன்னார். இதனால் விலைமகளுக்கு என்ன குறைவு? வேமனர் கூறியவாறே குனிந்து நின்று கொண்டு கையைக் கால்களுக்கிடையே நீட்டினாள். அப்பொழுது அவளுடைய வெறுக்கத்தக்க மலக்குழி நாற்றம் முதலியவைகளைக் கண்டார். அதனால் அவருக்கு மிகுந்த வெறுப்புண்டாயிற்று. "சீ சீ என்ன நாற்றம் இந்த மலபாண்டத்திற்கா நான் அவாக் கொண்டு துன்புறுகிறேன் தூ தூ" என்று காறித் துப்பிக் கொண்டே அவளுடைய வீட்டை விட்டு வெளிப்பட்டார். ஒரு மரத்தடியில் போய் உட்கார்ந்து பலவாறு எண்ணமிட்டார்.

அண்ணியார் தம் அருமை வளர்ப்புப் பிள்ளையாகிய வேமனரைக் காணோமே என்று உள்ளம் வருந்தினார். ஆட்களை அனுப்பித் தேடியழைத்துக் கொண்டு வரச் சொன்னார். ஆட்கள் தேடிப்பார்த்து மரத்தடியில் வேமனரைக் கண்டார்கள். வீட்டிற்கு வருமாறு அழைத்தார்கள். வேமனர் யாதும் பேசாமலும் வீட்டிற்குச் செல்லாமலும் மௌனமாக இருந்து விட்டார். கூப்பிட்டவர்கள் அவருடைய செய்தியைத் தமயனாரிடமும் அண்ணியாரிடமும் தெரிவித்தார்கள். தமயனார் அவனுக்கு மனக் கோளாறு ஏற்பட்டிருக்கலாம் என்று பேசாமல் இருந்து விட்டார்.

நாட்கள் சில சென்றன. அவ்வூர்க் குன்றில் இலம்பிகா சிவயோகி என்னும் பெயருடைய பெரியார் ஒருவர் இருந்தார். வேமனர் அச்சிவயோகியாரிடஞ் சென்று தமக்கு அருள் புரிய வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். இலம்பிகாசிவயோகி வேமனருடைய பக்குவ நிலையைப் பார்த்தார். "அஞ்சேல்" என்று தலையில் கையை வைத்து அருள் புரிந்தார். அருளுரையுங் கூறியருளி

னர். வேமனர் தம்மை மறந்து யோக நிட்டையில் அமர்ந்தார். அமர்ந்தவர் பன்னிரண்டு நாள் பொறுத்துக் கண் விழித்தார். கண் விழித்தவர் குருநாதன் அங் கில்லாமையைக் கண்டார். ஞானக்கலை வேமனருக்கு நன் ருக விளங்கியது. உலகில் எங்குஞ் சுற்றித் திரியும் ஆற்றல் வாய்ந்தவரானர். முக்காலத் தையும் அறிந்து கொள்ளும் மெய்யறிவும் உண்டாகியது. எவர் கண்ணுக்கும் புலப் படாமல் சுற்றலானர்.

ஒரு நாள் வேமனர் தம் முடைய அண்ணியார் இருக்கு மிடத்திற்குத்திடீரென வந்தார். அவ்வம்மையாரின் மார்பில் இரத்த ஓட்டமுள்ள இடத்தில் நகத்தால் அழுத்திப் புண்ணுகச் செய்து விட்டு ஒன்றும் பேசா மல் போய் விட்டார். இதனைக் கண்ட அம்மையார், "சரிதான் இவரைப் பைத்தியக்காரர் என்று எல்லோரும் கூறுகின் றனரே அஃது உண்மைதான் போலும்" என்று எண்ணினர். அன்று இரவு அம்மையாரை ஒரு பாம்பு கடித்து விட்டது. சிறிது நேரத்தில் அவ்வம்மை யார் மயக்கமாகிக் கீழே விழுந்து விட்டார். வேமனர் காயப்படுத்திய புண்ணின் வழி யாகப் பாம்பின் நஞ்சு வடியத் தொடங்கியது. பிறகு அவர் குணம் பெற்று எழுந்தார். எல்லோரும் வேமனரைக் கொண்டாடினர்கள்.

வேமனருடைய தமையன் தம் தம்பிக்குமனமயக்கம் உண்டாகி இருக்கிற தென்றும் அதனை மருத்துவர்களால் தீர்க்க வேண்டும் என்றும் முடிவு கட்டினர். ஓர் மருத்துவனை அழைத்துத் தம்தம்பியின் உடல் நிலையை ஆராய்ந்து பார்க்கு மாறு கூறினர். அம்மருத்துவன் வேமனரைப் பார்த்து, "உடல் அழுக்காக இருக்கிறது குளித்து விட்டு வா" என்று சொன்னன். வேமனர் குளத்திற்குப் போய்த் தமது குடலை வெளியே எடுத் துக் கழுவினர். இதனை மருத்து வன் கண்டான். இவர் மிகப் பெரியவர். நாம் இவருக்கு மருத்துவம் பார்க்க வந்தது மடமை என்று எண்ணி அவ ருடைய அடிகளில் வணங்கிக் கொண்டு சென்ருன்.

வேமனருடைய உள்ளத்தில் ஆற்றுத் தும்மட்டியைப் பயிர் செய்ய வேண்டுமென்னும் அவா எழுந்தது. பல விடங்களில் விதைகளைப் போட்டார். அவை கள் முளைத்துக் காய்த்தன. அவைகளை அறுக்க எவரும் வரவில்லை. வேமனருக்கு அன்ப ரான சிலர் மட்டும் வந்து காய்களை அறுத்தனர். வேமனர் அக்காய்களைத் தம்முடைய தமையன் வீட்டிற்கு அனுப்பி வைத்தார். தமையனராகிய வெங்கா ரெட்டி அக்காய்களைக் கண்டு சீற்றங் கொண்டார். அக்காய்களைக் காலால் உதைத் துச் சிதறச் செய்தார். இதனைக் கண்ட அவர் மனைவி நரசிம்ம அம்மா, "இதனல் ஏதேனும் நன்மையுண்டாகலாம் பொறுத் திருந்து பார்ப்போம்" என்று கூறிச் சிதறின காய்களை ஒன்று கூட்டி ஓர் அறையில் பாது காத்து வைத்தார்.

வேமனர் தம்மிடம் வேலை பார்த்தவர்கட்குக் கூலியாகத் தும்மட்டிக் காய்களையே அன் போடு கொடுத்தார். அவர்கள் அக்காய்களை வீட்டிற்குக் கொண்டு போய் வைத்தார்கள். குழந்தைகள் இக்காய்களை உடைத்துத் தின்னலாம் என்று ஒரு காயை உடைத்தனர். அப் பொழுது அதிலிருந்து ஒளி மிகுந்த செம்புக் கற்கள் சிதறி

ஒளி வீசின. அதனைக்கண்டு காயை வாங்கிச் சென்றவர்கள் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார்கள்; வேமனரைப் போற்றிக் கொண்டாடினார்கள். இச் செய்தி எல்லா விடங்களினும் பரவியது. மக்களெல்லாரும் கூலிக்குக் காய்களை அறுக்க வந்தார்கள். அறுக்க வந்தவர்களிற் பலர் காய்களைக் களவாக மறைத்துக் கொண்டுஞ் சென்றார்கள். வேமனர் கையாற் கொடுக்கப் பெற்ற காய்களில் மட்டும் கெம்புக்கற்கள் இருந்தன. களவாகக்கொண்டுபோன காய்களில் பொதுவாக இருக்க வேண்டிய விதைகளும் புழுக்களும் இருந்தன. வேமனரின் உடன் பிறந்தார்க்கு இச்செய்தி எட்டியது. அவருங் காயை உடைத்து ஆராய்ந்து பார்த்தார். ஒளி மிக்க கெம்புக்கற்கள் காய்களில் இருந்தன.

வெங்கா ரெட்டியான அரசர் தம்மை மறந்து அப்பொழுதே மனைவியாரோடு வேமனர் இருந்த இடத்திற்கு வந்தார். எண்வகையுறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு விழுந்து பணிந்தார். "நாங்கள் அறியாமையினால் செய்த குற்றங்களை மன்னித்து எங்கட்கு அருள் புரிய வேண்டும்" என்று சொல்லி வேண்டிக் கொண்டார். வேமனர் புன்னகையோடு அவர்களைப் பார்த்து, "நீங்கள் எனக்கு என்ன தீமை புரிந்தீர்கள்? நான்தான் உங்களுக்குத் தீமை செய்தேன். எனக்குக் குருதேவராக வந்தவர் இந்த அன்னையே. இவர் தம்முடைய அறிவுரையினால் என்னைச் சிறந்தவனாகச் செய்துவிட்டார். நான் அதற்கு எத்தகைய கைம்மாறு செய்தாலும் ஈடாக மாட்டாது. நீங்கள் இன்ப வாழ்வில் இருந்து பிறகு பேரின்ப வாழ்வை எய்துவீர்களாக!" என்று கூறி வாழ்த்துரை வழங்கி அவ்விடத்தை விட்டு மறைந்து விட்டார். வெங்காரெட்டியும் அவருடைய மனைவியாரும் சில காலம் வாழ்ந்து வீட்டுநெறி ஆராய்ச்சி செய்து வீடுபேற்றையடைந்தார்கள்.

பல விடங்களினுஞ் சுற்றித் திரிந்த வேமனர் பல புதுமைகளை ஆங்காங்கு நிகழ்த்தினார். ஒரு சமயத்தில் வேமனர் திருச்சைலத்தையடைந்தார். கடைத்தெருவில் ஒரு கடையில் வாழைப்பழங்களைக் கண்டார். பழங் கொடுக்குமாறு கடைக்காரர்களைக் கேட்டார். கடைக்காரர்கள் கொடுக்க மறுத்தனர். ஓர் ஏழை முகமதியனுடைய கடைக்குச் சென்றார். அவன் கடையில் கட்டியிருந்த பழங்களைக் கேளாமலே எடுத்து உண்டார். முகமதியன் ஒன்றும் பேசாமல் மௌனமாக விருந்தான். வேமனர் அங்குக் கிடந்த இரும்புத்தண்டவாளத்தின் மீது தம்முடைய சிறுநீரைப் பெய்தார். உடனே அவ்விரும்பு தங்கமாகியது. முகமதியன் பெருங்களிப் படைந்தான். அவரை வணங்கிப் போற்றினான். பிறகு பலர் வேமனரைத் தேடிப்பார்த்தார்கள். வேமனர் மறைந்து விட்டார்.

பிறகு வேமனர் கோதாவரி யாற்றுக் கரையில் சில காலம் தங்கியிருந்தார். அச்சமயத்தில் வேமனருடைய ஊரைச்சேர்ந்த ஓர் அந்தணன் புனித நீர்ப் பயணம் போகத் தொடங்கிக் கோதாவரிக்கு வந்தான். அங்கு வேமனருடைய பெருமையைப் பலரும் பேசுவதைக் கேள்விப்பட்டு வேமனரைப் பார்க்க வந்தான். வேமனரைக் கண்டதும் பக்கத்தில் அமர்ந்தான்

வேமனர் அவனைப் பார்த்துப், "புனித நீராடப் புறப்பட்டீரோ?" என்று உசாவினார். "ஆம்" என்றான் அந்தணன். வேமனர் அவ்வந்தணனிடம் ஓர் ஓட்டுத் துண்டைக் கொடுத்து, "என்னைப் போல் எண்ணி இதையும் நீர் முழுகும் இடங்களில் முழுகச் செய்து மீண்டும் என்னிடங் கொண்டு வந்து கொடுப்பீராக" என்று சொன்னார். அவ்வந்தணன் "அவ்வாறே செய்கிறேன்" என்று கூறி ஓட்டைப் பெற்றுக் கொண்டு சென்றான். சிறந்த பல பதிகளுக்கும் போய் நீராடினான். ஓட்டையும் நீராட்டினான். பிறகு வேமனர் இருக்குமிடத்திற்கு வந்து அவர் கொடுத்த ஓட்டை அவரிடங் கொடுத்தான். அதனைக் கையில் வாங்கிய வேமனர், "என்ன ஐயா இது? இதனிடத்தில் முன்பு இருந்த ஒளிகூட இப்பொழுது இல்லையே. உமக்குப் இத்தன்மைதானே யிருக்கும்? புனித நீர்ப்பயணஞ் சென்றதால் என்ன பயனை அடைந்தீர்? தனக்குள் எல்லாம் இருப்பதை நீர் அறிய மாட்டீர் போலும். நான் செய்கிறதைப் பாரும்" என்று கூறித் தம் சிறுநீரை அவ்வோட்டின் மீது பெய்தார். உடனே அவ்வோடு தங்கமாகியது. புனித நீர்ப்பயணம் போய் வந்த அந்தணன் திடுக்கிட்டான். யாதுந் தோன்றாமல் வேமனருடைய அடிகளில் வணங்கினான். "நான் அறிவில்லாதவனானேன். இனிமேல் ஆன்ம வழியில் நிற்பேன். எனக்கு அருள் புரிவீர்களாக" என்று கூறி வேமனருடைய அடிகளில் வணங்கினான். வேமனருடைய மாணவனாகி அறிவுரை பெற்று மெய்ஞ்ஞானியானான்.

வேமனர் ஒரு காலத்தில் காசிக்குச் சென்றார். ஓரிடத்தில் திருக்கோயிலுக்குக் குடமுழுக்கு நடைபெறுவதற்கு ஆக வேண்டிய காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. வேள்வி மறை யோதுதல் முதலியன ஆரவாரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. அங்கு வேமனர் சென்றார். தெலுங்கில் செய்யுள் ஒன்றைக் கூறினார். மறையோதிக் கொண்டிருந்த அந்தணர்கள் வாயில் சுரமெழவில்லை. அவர்கள் அறிவு மயங்கினார்கள். வேமனர் பெருமையிற் சிறந்தவர் என்று உணர்ந்தார்கள். இவரை வணங்கி மாணவர்களானார்கள். இவரோடு சில காலம் இருந்து வீடுபேற்றை யடைந்தார்கள்.

வேமனர் தெலுங்கு மொழியில் வல்லவர். இவர் பலருடைய போக்கையும் கண்டித்துப் பதினாறாயிரம் பாக்கள் வரை இயற்றியுள்ளார். அவை வேமனர் பத்தியங்கள் என்னும் பெயரோடு வழங்குகின்றன. அவைகளில் மூவாயிரம் வரை தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுத் தமிழ் நாட்டில் வழங்குகின்றன. மற்றவை தெலுங்கு நாட்டில் உள்ளனவாம். இவருடைய பாடல்கள் யாவும் மெய்ஞ்ஞானச் செல்வர்க்கே பொருத்தமாக அமைவன.

பல விடங்களிலுஞ் சுற்றித் திரிந்த இவர் இறுதியில் அனந்தப்பூர் மாவட்டத்தில் கதிரி தாலுக்காவைச் சேர்ந்த கடாருபல்ல என்னுஞ் சிற்றூரில் சார்வரியாண்டு சித்திரைத் திங்களில் இராம நவமியன்று வீடு பேற்றையடைந்தார். அவ்விடத்தில் இலிங்கம் அமைக்கப் பெற்றுப் பூசை முதலியன நடைபெறுகின்றன.

**வேம்பத்தூர்ச்சங்கத்தார்** - வேம்பத்தூர் என்பது பாண்டி நாட்டில் மதுரைக்கு வடகிழக்கில் வைகையாற்றுக்குவடக்கேயுள்ளது. இதற்கு நிம்பையெனவும்,குலசேகரச்சதுர்வேதமங்கலம் எனவும் பெயர். குலசேகர பாண்டியன் என்பவன் சாகேத புரியிலிருந்து வருவித்த இரண்டாயிரத்தெட்டுஅந்தணர்கட்கு இவ்வூர் முதலிய பல அகரங்களைத் தானஞ்செய்து அவ்வூரிலிருந்த புலவர்களை அவ்விடமே நிலைக்கச்செய்தான். அவ்வாறே அவர்கள் சங்கமொன்றமைத்துத் தமிழாராய்ச்சியை மேற்கொண்டிருந்தார்கள். இவர்களே வேம்பத்தூர்ச்சங்கத்தார் என வழங்கப்பட்டனர். இங்கிருந்தோர்பாடுதுறையியற்றிய தத்துவராயர், ஈசானமுனிவர், வீரைக்கவிராசபண்டிதர், ஆளவந்தான் மாதவபட்டர், பகவத்கீதை யியற்றிய பட்டனார், அம்பிகாபதி, திருநெல்வேலிப் பெருமாளையர், செவ்வைச்சூடுவார், கவிகுஞ்சரமையர், முத்து வேங்கடசுப்பையர் முதலியோராவர். இவர்களனைவரும் அந்தணர்களாக இருக்கலாமென்று எண்ணுகின்றனர்.

**வேம்பின்தாரோன்** - பாண்டியன் வேப்ப மலர்மாலையை அணிந்த படியால் அவனுக்குண்டாகிய சிறப்புப்பெயர்.

**வேலாயுதம்**-முருகக்கடவுள் வேற்படையைத் தமக்கு ஆயுதமாகக் கொண்டுள்ள படியால் உண்டான காரணப்பெயர்.

**வேலி** - குலோத்துங்க சோழன் காலத்தில் சோழவள நாட்டிலிருந்த ஒருபெண். இவள் ஒரு வீடுகட்டத் தொடங்கினாள். நாள்தோறும் வைக்குஞ் சுவரை ஒரு வேதாளம் இடித்துக் கொண்டேயிருந்தது. அரசனோடு மாறுபட்டுப் புறப்பட்ட கம்பர் பசியால் வருந்தி வேலை தேடினார். வேலியின் வீட்டுச் சுவரை வைக்க வுடன்பட்டார். வேதாளம் சுவரையிடிக்குஞ் செய்தியை அறிந்து, தாம் கூலிபெறும் வரையில் சுவர் நிற்குமாறு பாடினார்.

**வேலுத்தம்பி தளவாய்** - வீரபாண்டியக்கட்டபொம்மன், பூலித்தேவர் முதலியவர்களைப் போல் அந்நாளில் கேரள விடுதலைக்கு வெள்ளைக்காரர்களை எதிர்த்தவர் இவர். இவர் பிறந்த ஊர் குமரிமாவட்டத்திலுள்ள தலைக்குளம் என்பதாகும். இவர் 1765 ஆம் ஆண்டிற் பிறந்து பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தொடக்கம் வரை வாழ்ந்திருந்தார். வேணாட்டு அமைச்சராக விருந்து நேர்மையான ஆட்சி புரிந்தவர். தன்மானங்காக்கும் பொருட்டுத் தலையைத் தம்பியிடங் கொடுத்தவர். இவருடைய புகழைப் பரப்பும் நாடகங்களை மக்கள் இன்றும் நடிக்கின்றனர். இவர் பயன்படுத்திய வாளை இவருடைய குடும்பத்தினர் இந்தியக் குடியரசுத் தலைவராக இருந்த இராசேந்திரபிரசாத்திடம் கொடுத்தனர். அவ்வாள் டில்லியிலுள்ள தேசீயப்பொருட்காட்சி மண்டபத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

**வேலூர்கிழான்** - தொண்டைநாட்டில் குமிழம்பட்டு என்னுஞ் சிற்றூரில் இருந்த ஒருவள்ளல். பஞ்சகாலம் ஒன்று நேரிட்ட பொழுது இவன் தன்னை யடைந்த பல புலவர்களையும் பிறரையும் உணவிட்டுக் காப்பாற்றினான்.

**வேளான் மாதவனாகிய இராச வல்லபப் பல்லவரையன்** - இவன் சோழமண்டலத்தில் விருதராச பயங்கர வளநாட்டு மண்ணி நாட்டிலுள்ள கடம்பங்குடி என்னும் ஊரிலிருந்தவன்—

குலோத்துங்க சோழனுடைய அமைச்சர்களில் ஒருவன். குலோத்துங்கனாற் கொடுக்கப்பட்ட வேள், இராசவல்லபப் பல்லவரையன் என்னுஞ் சிறப்புப்பெயர்களையுடையவன். இவன் குலோத்துங்கனுடைய ஆட்சிக்காலம் முழுவதும் உயர் நிலையில் இருந்து அரசியலைத் திறம்பெற நடத்தினன்.

**வேளிமலைக் குமாரர் கோயில்** - குமாரர் கோயில் எனவழங்கப் பெறும் இவ்வூர் கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோயிலில் இருந்து பதினாறுகிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது. ஒரு குன்றின்மீது இக்கோயில் அமைந்திருக்கிறது. வள்ளி திருமணம் இங்கேதான் நடைபெற்றதென்று கூறுகின்றனர். கோயிலுக்கு அண்மையில் கிழவன்சோலை, வேங்கைமரம், வள்ளிசோலை, திருமணமண்டபம் முதலியவைகளும்இங்குள்ளன. இக்குமாரர் கோவில்தான் திருவேரகம் என்று பலர் எண்ணுகின்றனர். ஏரகம் என்பதற்கு மலைநாட்டகத்துள்ள ஒரு திருப்பதி என்பதால் பலைநாடு மலையாளத்தைக் குறிக்கும். ஆகவே இதுதான் திருவேரகம் என்பது அவர்களுடைய முடிபு. இங்குள்ள முருகனுடைய பெயர் மணவிடகுமாரர். இதுதான் திருவேரகம் என்னுங் கூற்றுப் பொருந்தக் கூடியதே.

**வேள்ஆய்** - வேளிர் குலத்துப் பாரியைப் போல ஆயும்வேளிர் குலத்தினன். இவன் பொதிய மலையின் அடியில் உள்ள ஆய் குடியைத் தலைநகராகக் கொண்டு அரசுபுரிந்த குறுநில மன்னன். இவனுடைய கை வன்மையும் போராண்மையும் சான்றோர்களாற் பெரிதும் புகழ்ந்துகூறப்பட்டிருக்கின்றன. இவனுக்குங் கொங்கருக்கும் ஒருகாலத்தில் போர் உண்டாயிற்று. அப்பொழுது இவன் கொங்கரைவென்று அவர்களை விரட்டியடித்தான். தமிழகத்தின் தெற்கிலுள்ள பொதியமலையும் ஆய்குடியும் அம்மலைக் கூட்டத்திலுள்ள கவிரமலையும் புலவர்பாடும் புகழுடையவை. இவனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், துறையூர்ஓடை கிழார், குட்டுவன்கீரனார், உமட்டூர்கிழார்மகனார் பரங்கொற்றனார், பரணர், காரிக் கண்ணனார் முதலிய புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடியிருக்கிறார்கள். இவனுடைய பெயருக்குப்பின்னால்அண்டிரன் என்பதுஞ் சேர்ந்து வழங்கும்.

**வேள்எவ்வி**-வேளிர்குலத்தோன்றலாகிய இவன் பறம்புமலைத்தலைவனாகிய வேள்பாரி பிறந்த குடியிற் பிறந்தவன். இவனுடைய ஊர் நீடூர். இது மிழலைக் கூற்றத்தில் உள்ளது. இஃது அறந்தாங்கி வட்டத்துத் தென்பகுதியும் இராமநாதபுர மாவட்டத்தின் கீழ்ப்பகுதியும் தன்கண்கொண்டது. அதனால் இவன் நீடூர்கிழவன் எனவும் பெறுவான். இவன் பெருங்கொடை வழங்கிய வள்ளல். இவனை வெள்ளெருக்கிலையார் என்னும் புலவர் புகழ்ந்துபாடியுள்ளார்.

**வேள்மான்** - இவன் ஒரு குறுநில மன்னன். செங்கண்மா என்னும் நகரில்இருந்து அரசுசெய்தான். சிறந்த வள்ளல். புலவர்களைப் போற்றுவதில் மிகுந்த ஊக்கங் காட்டினன். இவனிடத்தில் அன்புகொண்ட பெருங்கௌசிகனார் என்னும் புலவர் இவன் மீது மலைபடுகடாம் என்னும் சிறந்த பாடலைப் பாடினார்.

**வைகுந்தக்கள்ளப்பிரான்**-நெல்லை மாவட்டத்திலுள்ள சீவைகுண்டத்தில் எழுந்தருளிய திருமால்.

காலதூடகன் என்னும்கள்ளன் பொருட்டுக் கள்ளவேடந் தாங்கி அரசனிடஞ் சென்று உண்மையுணர்த்திய படியால் இப்பெருமாளுடைய பெயர் கள்ளப்பிரான் என வழங்குகிறது.

**வைசம்பாயனர்** - இவர் விசும்ப ருஷியின் புதல்வர். வியாச ருஷியின் மாணுக்கர். சனமேசயனுக்கு வியாசருடைய அருளால்பாரதத்தைக்கூறியவர் யசுர்வேதி; யாஞ்ஞுவற்கர் முதலிய நால்வர் இவருடைய மாணவர்களாவர். ஒருமுறை இவரைப் பிரமகத்தி பற்றியது மாணவர்கள் அதனையேற்று இவரைக் காத்தனர்.

**வைசவ்வை** - இவள் மனத்திலே சிவபக்தியுள்ள ஒரு வீரசைவத் தவப்பெண். இவளுடைய கணவன் சைநன். இவள் தன்னுடைய கணவன் உரைப்படி பலவகையான பலகாரங்களையும் உணவுப் பொருள்களையும் சைநத்துறவிகட்கு விருந்திடச் சமைத்தாள். சமைக்கும்போது இவைகளைச் சிவனடியவர்க்குப் படைப்பின் மிகுந்த நல்வினையுண்டாகுமேயென்று எண்ணி வருந்தினுள். தெய்வச் செயலாக அவளுடையகணவன் சைநத் துறவிகளை யழைப்பதற்கு வெளியே சென்றுன். இவளுடைய எண்ணத்தை யுணர்ந்த சிவபெருமான்ஓரடியவராக அங்கு எழுந்தருளினுர். வைசவ்வை எதிர்கொண்டழைத்துத் தான் சமைத்த உணவு முதலியவைகளைப் படைத்தாள். அச்சமயத்தில் கணவன் சைநத்துறவிகளுடன் வந்தான்; சிவனடியவரைக் கண்டு மனம்பொருது மனைவியை அடித்தான். அப்பொழுது மாயச் சிவனடியார் மறைந்தார். அவளையடித்த அடி அவள்மீது ஒன்றும்படவில்லை. அடிகள் முழுவதுஞ் சைனத்துறவிகள் மீது விழுந்தன. அவர்கள் வருந்தி "இஃது இம்மாதை யடித்தபடியினுல் உண்டான தீமை"யென்றுர்கள் கணவன் இவள் எனக்குத் தகுதியானவள் அல்லள் என்று சொல்லி விலக்கினுன். வைசவ்வை சைனச்சிலை முன்சென்று அதனைச் சிவவடிவாக எண்ணி வணங்கினுள். அது சிவலிங்கமாயிற்று.

**வைச்வானரன்** - ஓர் அக்கினி. இவன் தன்னுடைய தந்தைக்கு நாரதர் பன்னிரண்டு வயதில் உன்பிள்ளை இடிவிழுந்து இறப்பான் எனக் கூறக்கேட்டுச் சிவபிரானை எண்ணித் தவஞ் செய்தான். சிவன் இந்திரனைப் போல் காட்சி தந்துஎன்ன வரம்வேண்டும் என்று கேட்டார். இவன், "உன்னிடம் ஒருவரமும்வேண்டேன்"என்றுன். இந்திரவடிவச் சிவபிரான் வாள் கொண்டுஅச்சுறுத்தினுர். இவன் அஞ்சினுன். சிவபிரான் காட்சி தந்தார். ஓர் உலகத்தைப் படைத்து அக்கினியாக ஏற்படுத்தினுர். காசியில் விச்வாநரன் என்னும் ரிஷிக்கு மகனுகப் பிறந்தமையால் இப்பெயர் பெற்றுன் அக்கினி. இவனை ஆங்கிரசவமிசத்து அக்கினியெனவும் கூறுவர்.

**வைணவி** - ஒருமாயாதேவி. நண்பகற்போதில் எண்ணப்படும் சந்தியாதேவதை. இவள் கருடவூர்தியில் எழுந்தருளியவளாய், சங்கு, சக்கரம், கதை, வரதம் உடையவளாக விருப்பாள். இளமையுடையவளாய், வெண்ணிறத்தவளாய், வெண்பட்டுடுத்து, வநமாலை, பூணூல், சங்கு, சக்கரம் இடக்கரங்களிலும், கதை அபயம் வலக்கரங்களிலும் உள்ளவளாய்க் கருடவூர்தியில்பதுமாசனத்தளாயிருப்பவளாய்த் திரு

மகள் உருவமாக எண்ணப் பெறுபவள். இவளை எண்ணு பவர்கட்குக் கல்வி, செல்வம் முதலிய எல்லா நலங்களும் மிகுதியாக வுண்டாகும்.

**வைதர்ப்பன்** - இவனோர் அரசன். இவனுடைய மனைவியின்பெயர் சந்திரிகை. இவர்களிருவருங் கிருதமாலையென்னுங் காட்டி லிருந்து அவிநாசிப்பதியை அடைந்து பல திருப்பணிகள் செய்து மக்கட்பேற்றையடைந் தனர்.

**வைத்தியநாதர்** - பன்னிரண்டு சோதிலிங்கங்களில் ஒன்று. இராவணன் சிவபிரானை எண்ணி இமயமலையில் தவம் புரிந்தான். இறைவன் காட்சி கொடுத்தருளினார். இராவணன் சிவபிரானைப் போற்றிவழிபட் டான். இலங்கையில் அமைத்து வழிபடுவதற்காக இலிங்கம் ஒன்றைத் தரவேண்டும் என்று வேண்டினான். இறைவன் ஈந் தார். இடையே எங்கும்இதனை நிலத்தில் வைக்காதே என்றும் இயம்பினார். இராவணன் வரும்போது பாட்னுபக்கத்தில் கடன் கழிக்க எண்ணினான். இலிங்கத்தை ஒரு சிறுவனிடங் கொடுத்தான். அச்சிறுவன் இலிங்கத்தைக் கீழே வைத்து விட்டான். பிறகு இராவண னால் அந்த இலிங்கத்தைஎடுக்க முடியவில்லை. அப்படியே விட்டுவிட்டுப்போய்விட்டான். திருமாலும் நான்முகனும் அவ் விலிங்கத்தை அவ்விடத்தி லேயே அமைத்து வழிபட்டார் கள். அதுவே வைத்தியநாதர் ஆயிற்று.

**வையாபுரி** - பழநியின் பழைய பெயர். கொங்கு இருபத்து நான்கு நாடுகளில் வையாபுரி நாடும் ஒன்று.

**வையாவிக் கோப்பெரும் பேகன்** - வையாபுரி நாட்டை அரசுபுரிந் தவன். மழையில் நனைந்த மயிலுக்குப் போர்வையளித்த வன்.

**வைரப்பெருமாள்** - இரத்தினகிரி என்னும் வாட்போக்கிக் கோயி லின் பிராகாரத்தில் உள்ள ஒரு மூர்த்தி. இவர் காஞ்சிபுரத்தில் வாழ்ந்திருந்த ஒரு நெசவாளி எனவும் ஒரு நோன்பில் தலைப் பட்டுத் தம்முயிரைத் துறந்தார் எனவும் இவருக்குமுன்செய்யும் வாக்குறுதிமுடிவானதென்றுங் கூறப்பெறுகிறது.

**வைரவம்** - ஒரு சமயம். இச்சமயத் தினருக்குச் சைவ சமயக்கொள் கைகள் பலவும் உடன்பாடு.இச் சமயத்திற்குச் சிவபிரான் தமரு கந்தரித்த மூர்த்தியாய் அருள் செய்வார்.

**வைவச்சுதமநு** - ஏழாவதுமநு. விவச்வானுடைய மகன். இவ னுடைய மகன் இக்குவாகு. இவன் காலத்தில் நான்கு வருணங்கள் உண்டாயின. இவனை மச்சாவதாரமூர்த்தி சாட்சுதச மன்வந்தரத்தில் காத் தார். இவன் பத்து மக்களைப் பெற்றான். அவர்களிற் புரந் தரன் இந்திரன் ஆனான். இர டாவதுமகன்ஆதித்தன் ஆனான். ஏழுபேர்சப்தருஷிகளானார்கள்.

# பிற்சேர்க்கை



**அகழி** - அகழப்பட்டது அகழி. அரசர்கள் தங்களைப் பகைவர்களிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற்காகக் கட்டுங் கோட்டையைச் சுற்றி ஆழமாகப் பள்ளங்களை அகழ்வார்கள். இதில் ஆழமாக நீர் நிறைந்திருக்கும். அரசர்கட்கு அரண்களாக அமைவன நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்னும் நான்குமாகும். அவைகளுள் அகழி நீரரண் ஆகும். அகழப்பட்டபடியினால் அகழி என்று பெயர் பெற்றது.

**அக்கினி நட்சத்திரம்** - (கத்தரி) ஒவ்வோர் ஆண்டும் சூரியன் பரணி மூன்றாம் பாதத்தில் தொடங்கிக் கிருத்திகை முழுவதிலுஞ் சஞ்சரிக்கும் போது அக்கினி நட்சத்திரம் என்று சொல்லப்பெறும். அப்பொழுது வெயில் கடுமையாக விருக்கும். கிருத்திகை நட்சத்திரத்திற்கு அக்கினியே அதிதேவதை ஆகையால் வெப்பத்தின் கொடுமை தாங்க முடிவதில்லை.

**அங்காரகன்** - அவந்தி நாட்டில் சையம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தவன். தெய்வத் திருவருள் கைவரப்பெற்றவன். இவனுடைய மனைவியின் பெயர் சித்திராவதி.

**அங்கீரர்**-இவர் நான்முகனுடைய மானசபுத்திரர்களில் ஒருவர். அருந்தவத்தை அளவில்லாமற் செய்த பெருந்தவத்தர். பகுரதன் என்னும் அரக்கர் வேந்தன் ஒருவன் இவரைப் பலவாறு இகழ்ந்து கொலை புரிய வந்தபொழுது நிலம் படீரென வெடித்து அவனை விழுங்கியது. இவர் அவன் தனக்குச் செய்த குற்றங்களைச் சிறிதும் மனங்கொள்ளாமல், நிலமகள் அக்கொடியோனை வெளியே விடவேண்டுமென்று வருந்தித் தொழுதார். நிலமகளும் இவருடைய பொறுமைக்கு வியந்து அத்தீயோனை வெளியிலே தள்ளினாள்.

**அசந்தா** - ஐதராபாத் நாட்டில் உள்ள ஔரங்கபாத்திலிருந்து வடக்கே ஒருமைல் தொலைவில் உள்ள ஒரு சிற்றூர். இங்கிருந்து மூன்றரை மைல்தொலைவில்உலகப் புகழ்பெற்ற பல பௌத்தக் குகைக் கோயில்கள் உள்ளன. இவற்றில் எல்லாம் அழகிய ஓவியங்கள் தீட்டப்பெற்றுள்ளன. ஓர் அருவியை அடுத்துள்ள செங்குத்தான பாறையில் இக்குகைகள் குடையப் பட்டுள்ளன. பாறையின்மீது ஏறிச் செல்லும் பொழுதே பல குகைகளின் வாயில்கள் காணப்படும். இருபத்தொன்பது கோயில்களும் குகைகளும் உள்ளன. இவற்றை ஒன்றுபடுத்துவதற்குப் பாதைகளும் படிகளும் இருக்கின்றன. இவை வெவ்வேறு காலங்களில் உண்டாக்கப் பட்டவை. மறைந்திருந்த இவைகளின் புகழ் இந்நாளில் உலகெங்கும் பரவி விட்டபடியால் மக்கள் பலர்சென்று கண்டு களிக்கின்றனர்.

**அசபா நடனம்** - திருவாரூரில் எழுந்தருளிய தியாகேசருடைய நடனத்தை அசபா நடனம் என்று கூறுவர். மூச்சையிழுத்தலும் விடுதலும் காரணமாக ஏற்படும் அசைவே இந்நடனமாகும்.

**அசுரேசன்** - காசிப முனிவர் பெற்ற அறுபத்தாறுகோடி அவுணர்கட்கும் அரசன். சுரசையென்னும் பெயரையுடைய மாயையின் தந்தை. இவன் காசிபரிடம் சுரசையை அனுப்பிச் சூரபன்மன் முதலியவர்களை உண்டாக்கித் தேவர்களை வருத்தச் செய்தான். பிறகு முருகப்பெருமான் தோன்றிச் சூரபன்மன் முதலியவர்களை அழித்தருளினர்.

**அசுரேந்திரன்** - இவன் தாரகாசுரனுடைய மகன், வீரவாகு தேவராற் கொல்லப்பட்டவன்.

**அசுவதீர்த்தம்** - கங்காநதியில் காளிந்தி நதி கூடுமிடத்தில் உள்ள ஒரு தீர்த்தம். காதி தன் மகளை மணக்கவந்த இரிசிகனை ஆயிரங் குதிரைகள் கேட்க அவனுக்குக் கொடுக்குமாறு குதிரைகளைப்பெற்ற விடமாதலின் இவ்வாறு பெயர் பெற்றது.

**அசுவமேதம்**-வேள்வி வகைகளில் ஒன்று. இவ்வேள்வியைச் செய்விக்க விரும்புவோன் நல்ல இலக்கணங்களமைந்த குதிரையொன்றை அழகாக்கி அதனுடைய நெற்றியில் வேள்வி வரலாறு எழுதிய ஒரு பட்டத்தைக்கட்டிப் படையைக் காவலாக அதனோடு சேர்த்துத் திக்குகள் தோறும் அனுப்ப வேண்டும்! பகைவர்கள் அக் குதிரையைப் பிடித்துக்கட்டினல் அவர்களை வென்று குதிரையை மீட்க வேண்டும். அவர்களிடம் திறைப்பொருளும் பெற்றுக் கொண்டு மேலும் உலக வலத்தைத் தொடர வேண்டும். இறுதியில் வேள்வி நடைபெறும். இவ்வாறு நூறு வேள்விகள் செய்பவன் இந்திரனுவான்.

**அசோதரன்** - தாதகி நாட்டில் பூமிமாதிலகம் என்னும் நகரில் இருந்த பவணமா தேவன் என்பவனுடைய மகன். மனைவியர் விருப்பப்படி அன்னப்பார்ப்பைப் பிடித்துக் கொடுத்த இவன் பிறகு தந்தையினுடைய அறிவுரையைக் கேட்டு அஞ்சி நடுங்கினன். தந்தை தடுத்துங் கேளாமல் துறவை மேற்கொண்டு சென்றான்.

**அச்சுத ரகுராமகவி** - வடமொழியிற் சிறந்து விளங்கியபுலவர். இவர் வடமொழியில் இராமாயண சாரசங்கிரகம் என்னும் நூல் செய்திருக்கிறார்.

**அச்சுவக்கிரீவன்** - இவன் இரத்தின பல்லவம் என்னும் நகரில் இருந்து அரசுபுரிந்த ஒரு விஞ்சையர் குல மன்னன். மயூர கண்டன் என்னும் மன்னனுடைய மகன். நிலவுலகத்தையும் வித்தியாதர உலகங்களையும் அரசாட்சி செய்தான். போதனபுரத்து அரசனேடு பகை கொண்டு திவிட்டனல் அழிந்தொழிந்தான்.

**அடவியன்** - இவன் முன்னளில் வாரணவாசி என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தான். படைவலியும் பேராற்றலும் உடைய இவன் காரணமில்லாமலே பிற அரசர்கள் மீது பகைமை பாராட்டினன். மகத நாட்டு மன்னனுகிய தருசகன் மீது பகைமை பாராட்டிப் போருக்குச் சென்று அவனிடம் தோற்றுச் சிறுமையடைந்தான்.

**அட்டக்கிராமம் (அஷ்டக்கிராமம்)** - மைசூரை அரசாட்சி செய்த சைன சமயத்தினனை பிச்சனன் என்னும் ஒய்சள அரசனை இராமாநுசர் வைணவனுக்கினர். அவன் அப்பொழுது விட்டுணு வர்த்தனன் என்னும் பெயர் பூண்டான். அவன் சீரங்கபட்டணத்திற்கு அருகே காவிரியின் இருகரை

யிலும் உள்ள எட்டுக் கிராமங்களை இராமாநுசருக்கு நன்கொடையாக வழங்கினன். இவை அட்டக் கிராமம் என வழங்கலாயின. 1863 இல் இவை மைசூரோடு இணைக்கப்பட்டன. இங்குச் சர்க்கரை உண்டாக்குந் தொழில் புகழ் வாய்ந்தது. இங்கிருந்து வரும் சர்க்கரையும் அட்டக் கிராமம் என்றே கூறப்பெறுகிறது.

**அட்டபுயகரம்** - காஞ்சியில் உள்ள ஒரு பெருமாள் திருக்கோயிலின் பெயர். பெருமாளுக்கு எட்டுத் திருக்கைகள் உள்ளபடியினல் இவ்வாறு பெயர் உண்டாயது. பெருமாளின் பெயர் ஆதிகேசவப்பெருமாள், தாயாரின் பெயர் அலர்மேலு மங்கைத் தாயார். திருமங்கையாழ்வாரும் பேயாழ்வாரும் பாடியுள்ளனர். அடியார்கட் கருள் செய்ய நான்கு திருக்கைகள் போதாவென்று எட்டுத்திருக்கைகளோ டெழுந்தருளியதாக ஐதீகம்.

**அட்டாவதானிகள்** - ஒரே சமயத்தில் தம்முடைய நினைவாற்றலால் எட்டுப்பொருள்களை உள்ளத்தில் பற்றி அவதானஞ் செய்தவர்கள் அட்டாவதானிகள் எனப்பெயர் பெறுவர். அட்ட - எட்டு.

**அண்ணமலை** - திருவண்ணமலை; இம்மலை ஒருகாலத்தில் தீப்பிழம்பாக நின்று யாரும் நெருங்கமுடியாத தன்மையோடு விளங்கியபடியால் இவ்வாறு பெயரையடைந்தது. அண்ணுதல் - நெருங்குதல்; அண்ண - நெருங்கமுடியாத.

**அதமன்** - பிறரைத் துன்புறுத்தியாயினும் தன்னுடைய வயிற்றை வளர்க்க வேண்டும் என்று எண்ணுபவன். அதமன் மூவகை மனிதர்களுள் இவன் கடைப்பட்டவனுவான்.

**அதர்மன்** - முன்னுளில் நருமதையாற்றுக் கண்மையில் இருந்த வேதபுரி என்னும் நகரில் இருந்த ஓர் அந்தணனுடைய மகன். இவனுக்கு இடப்பட்ட பிள்ளைப்பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவனுடைய தீச் செயல்களைக் கண்ட ஊரார்கள் அதர்மன் என்று பெயர் கொடுத்தனர்.

**அதர்வணவேதம்** - இஃது ஐம்பது சாகைகளையுடைய நான்காவது வேதமாகும். இதற்குள்ள உபநிடதங்கள்; பிரச்சினம், முண்டகம், மாண்டூக்கியம், அதர்வசிரசு, அதர்வசிகை, பிருகத் சாபாலம், நிருசிம்மதாபனி, நாரத பரிவிராசகம், அன்னபூரணை, சூரியன், ஆத்மம், பாசுபதம், பரப்பிரமம், திரிபுராதபனி, தேவி, பாவனை, பஸ்மசாபாலம், கணபதி, மகாவாக்யம், கோபாலதபனம், கிருட்டிணம், அயக்ரீவம், தத்தாத்திரேயம், காருடம் என முப்பத்தொன்று. இவற்றுள் அதர்வசிகோப நிடதம், கைவல்யோபநிடதம், சுவேதாச்வதரம், காலாக்னிருத்ரம் என்னும் ஐந்தும் பஞ்சருத்ரம் எனப்படும்.

**அத்திரிகை** - இவள் ஒரு தேவமாது. நான்முகனுடைய சாபத்தினல் மீனுகி யமுனை நதியில் கிடந்தாள். வசுமன்னனுடைய வீரியம் யமுனையில் விழ அதனையுண்டு மீனவனையும் பரிமளகந்தியையும் கருப்பத்தில் வைத்திருந்தாள். வலைஞர் தலைவன் மீனைப்பிடித்து அரிந்த போது மக்கள் இருவரும் வெளிப்பட்டனர்.

**அநுராதபுரம்** - இலங்கையில் கொழும்புக்கு வடகிழக்கே 128 மைலில் அமைந்துள்ளபழமையான நகரம். பழங்காலம் முதல் பதினென்ரும் நூற்

ருண்டு வரையில் சிங்கள மன்னர்களுக்குத் தலைநகரமாக விளங்கியது. அநுராதன் என்பவனால் நிறுவப்பட்டபடியினால் இவ்வாறு பெயர் பெற்றது என்பர். இதனைச் சந்திர குப்த மௌரியன் காலத்தில் இருந்த பாண்டுகாபயன் என்னும் அரசன் முதன்முதலாகத் தலைநகராக்கிக் கொண்டான். இவனுடைய ஆட்சிக் காலத்தில் ஒருபெரிய நீர்த் தேக்கம் அமைக்கப்பட்டது. அதற்கு அபயவாவி என்று பெயர். அஃது இந்நாளில் பசவக் குளம் என வழங்குகின்றது. கௌதம புத்தர் ஞானோதயம் பெற்றபோது அவருக்கு நிழலளித்த போதி மரத்தின் கிளையொன்று இங்குக் கொண்டு வந்து நடப்பட்டது. இம்மரத்தை வணங்கப் பல நாடுகளிலிருந்தும் பௌத்தர்கள் வருவதுண்டு. பௌத்த பிட்சுக்கள் தங்குவதற்காக ஒன்பது மாடிகள் கொண்ட பெரிய கட்டிடம் ஒன்றும் இங்குக் கட்டப்பட்டது. இக் கட்டிடம் மரத்தாற் கட்டப்பட்டுத் தங்கமுலாம் பூசிய செப்பேடு வேயப்பட்டிருந்தது. ஆயிரத்து நூறு கல்தூண்கள் கொண்ட ஒருமண்டபம் மட்டுந்தான் இப்பொழுது காணப்படுகிறது. இராசராச சோழன் இலங்கை மீது படையெடுத்த காலத்தில் இந்நகரம் பெருமை யிழந்தது. சோழ மன்னர்களுடைய பிரதிநிதிகள் தலைநகரைவேறிடத்தில் மாற்றி விட்டார்கள். பிறகு வந்த சிங்கள அரசர்களும் மாற்றப்பட்ட இடத்தையே தங்களுடைய தலைநகராகக் கொண்டனர். பதின்மூன்றும் நூற்றுண்டுக்குப் பிறகு அநுராதபுரம் இருந்தஇடம் காடாகிவிட்டது. 19 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் காடு அழிக்கப்பட்டுப் பழைய அநுராதபுரத்தின் நிலைமை ஆராயப்பட்டன.

**அந்தகன்** - (க) நமன் (உ) இரணியாக்கனுடைய மகன். இவன் அரிய தவங்களைச் செய்து பெரிய வரங்களைப் பெற்றுன். அதனுல் ஆணவங்கொண்டு தேவர்களைத் துன்புறுத்தினுன். இவனுடைய தொல்லையைப் பொறுக்கலாற்றுத தேவர்கள் சிவபிரானிடம் முறையிட்டார்கள். சிவபிரான் இவனைச் சூலமுனையிற் குத்தித் தூக்கினுர். பல காலங்கழித்துக் கீழே இறக்கிச் சிவகணமாக்கினுர். இவனைக் கொன்று சிவகணமாக்கிய இடம் திருக்கோவலூர். இதனுல் திருக்கோவலூர் அட்டவீரத் தலங்களுள் ஒன்றுகியது.

**அந்தகாசுரன்** - இவன் இரணியாக்கனுடைய மகன். அசுரர்கட்கெல்லாந் தலைவனுக அமைந்து நின்றுன். தேவர்களனைவருங் கண்டு அஞ்சத்தக்க பேருருவம் உடையவன். இவன் தேவர்கட்கும் பிறர்க்குந் தீமைகள் பல செய்து கொண்டு திரிந்தான். முனிவர்கள் சிலர் இவனுக்கு அறநெறி உரைத்தனர். இவன் எவர் சொல்லையுங் கோளாமல் மனம் போனவாறே காரியங்கள் செய்து கொண்டு திரிந்தான். சிவபெருமானையும் வென்று விட்டால் தானே எல்லா உலகங்கட்கும் கடவுளாகி விடலாம் என்று எண்ணினுன். சிவபெருமானோடு போர்புரியச் சென்றுன். அப்பெருமான் இவனைக் கொன்றொழித்தார்.

**அந்தாதி** - அந்தாதி என்பது தொண்ணூற்றுறு வகைச் சிறு நூல்களுள் ஒன்று. நூலின் ஒவ்வொரு பாடலிலும் உள்ள இறுதி எழுத்து அசை, சொல்,

சீர், அடி, இவற்றுள் ஒன்று அதற்கு அடுத்த செய்யுளின் முதலாக வரும்படி அமைத்துப் பாடி இறுதிப்பாடலின் இறுதியும் முதற்பாடலின் முதலும் ஒன்றுகப் பொருந்தும்படி மண்டலித்துமாலைபோலத்தொடுத்து முடிப்பதுஅந்தாதி எனப்படும்.

**அமரநாத்** - அமரநாத் என்றால் தேவர்களின் தலைவன் எனறு பொருள்படும். இது சிவபெருமானைக் குறிக்கும். பம்பாய் மாநிலத்தில் தானுமாவட்டத்தில் பம்பாயில் இருந்து முப்பத்தெட்டாவது மைலில் இப்பெயருடைய ஊர் ஒன்று இருக்கிறது. இங்குள்ள சிவன் கோயில் மிகுந்த சிறப்புடையது. இங்கு அழகிய சிற்பங்கள் பலவுள்ளன.

**அமிர்தசரசு** - பஞ்சாபில் இரண்டாவது பெரிய நகரம். கிழக்குப் பஞ்சாபிலுள்ளது. சீக்கியர்களுடைய பொற்கோயில் இங்குதான் இருக்கிறது இக்கோயிலில் ஆறுயிரம் புரோகிதர்களிருப்பதாகக் கூறுவர். 1919 ஆம் ஆண்டில் சத்தியாக்கிரகம் தோன்றிய பொழுது செனரல் டயர் என்பவன் குற்றமற்றவர்களைச் சுட்ட சாலியன் வாலாபாக் தோட்டம் இங்கிருக்கிறது. கைத்தொழிலும் வாணிகமும் மிகுதியாக உடையது.

**அமிர்தலிங்கேசுவரர்** - திருமாலால் கொடுக்கப்பட்ட அமுதத்தைப் பராசரர் குடத்திலிட்டு அமிர்தலிங்கேசுவரரை அமைத்த படியிஞல் பவானியில் எழுந்தருளியுள்ள இறைவனுடைய பெயர் அமிர்தலிங்கேசுவரர் என வழங்கும்.

**அயிந்தன்** - இவன் முன் காலத்தில் ஆலஞ்சேரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தான். பெருஞ் செல்வன். சிறந்த கொடையாளி. பாண்டி நாட்டில் வற்கடம் ஏற்பட்ட பொழுது பாண்டிய மன்னனுஞ் சங்கப் புலவர்களைப் பாதுகாக்க முடியாமல் வருந்திஞன். வளம் பொருந்திய இடங்கட்குப் போயிருந்துநாடுசெழித்தபிறகு வருமாறு புலவர்களை அனுப்பி வைத்தான். அவ்வாறு வந்த புலவர்களை இவ் வயிந்தன் போற்றிப் பாராட்டிப் பாதுகாத்தான். பிறகு சங்கப் புலவர்கள் பாண்டிய மன்னனிடஞ் சென்ற போது பாண்டிய மன்னன் "இதுவரை எங்கு தங்கியிருந்தீர்கள்?" என்று உசாவிஞன். அப்போது புலவர்கள் "நீலஞ் சேரும் நெடுமால் போல்வன், ஆலஞ் சேரி அயிந்தன் என்பான், தன்குறை சொல்லான் பிறர் பழி உரையான், மறந்தும் பொய்யான் வாய்மையுங் குன்ருன், இறந்து போகா தெம்மைக் காத்தான், வருந்தல் வேண்டாம் வழுதி," என்று புகழ்ந்து கூறினர்.

**அயோத தெளமியர்** - தெளமியர் என்னும் பெயருடைய முனிவர். இவர் இரும்பு போன்ற பற்களையுடையவராக விளங்கிய படியால் அயோத என்னும் அடைமொழி பெற்ருர். இவருக்கு ஆருணி, உபமன்யு, பைதன்என்று மூன்று மாணவர்கள் இருந்தார்கள்.

**அரக்கர்கள்** - இவர்கள் இராட்சதர்களென்றுங் கூறப் பெறுவர். மனிதர்களைப் பார்க்கினும் பன்மடங்கு உடற் பலமும் அதற்குத் தக்கவாறு தீய செயல்களைச் செய்யும் இயல்பும் அமையப் பெற்றவர்கள். இவர்கள் பதினெண்கணங்களில் ஒரு வகையினர். இவர்கள் அசுரரினும் வேறு பட்டவர்கள் என்பது சிலர் கருத்து. ஆயினும்

அரக்கரில் ஒரு பிரிவினரே யாவர். இவர்கள் புலத்தியர் மரபினரென்று ஒருசாராரும் காசிபர் மகன் இரட்சசு என்பவனுடைய மரபின ரென்று சிலரும் நான்முகன் கடல்களை யுண்டாக்கி அவைகளைப் பாது காக்க இவர்களைப் படைத்தா னென்று வான்மீகியும் கூறுவர். இவர்கள் தேவர்கட்கும் முனிவர் கட்கும் தொல்லை விளைத்தலையே தமது தொழிலாகக் கொண் டிருந்தனர்.

**அரவங்காடு** - நீலகிரி மலையில் உதகமண்டலத்துக்குப் போகும் பாதையில் கூனூரில் இருந்து மூன்றாவது மைலில் உள்ள ஊர். அறுகம்புல் மிகுதியாகக் காணப்படுவதால் அறுகங்காடு என்றுபெயர்பெற்று அப்பெயர் நாளடைவில் திரிந்து அரவங் காடாயிற் றென்பர்.

**அரவிந்தர்** - இவர் 15-8-1872இல் கல்கத்தாவிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் கிருட்டிணதனகோஷ். இவர் இங்கிலாந்திலே பதினன்கு ஆண்டுகள் கல்வி கற்று கேம்பிரிட்ச் பட்டம் பெற்றார். பரோடாக் கல்லூரியில் துணைத் தலைவரானார். வங்கமும் ஆரியமும் நன்கு கற்றார். 1905 ஆம் ஆண்டு முதல் யோகம் பயிலத் தொடங்கினார். 1907 இல் கல்கத்தாவை யடைந்துதேசீயக் கல்லூரித் தலைவரானார். பிறகு வந்தேமாதரம் என்னும்இதழின் ஆசிரியராக இருந்தார். இவருடைய எழுத்து சுதேசி இயக் கத்திற்குப் புதிய உணர்ச்சியையும் பலத்தையும் அளித்தது. அந்நாளில் காங்கிரசில் இரண்டு பிரிவுகள் இருந்தன. ஒன்று கோகலேயின் மிதவாதக் கட்சி; மற்றொன்று திலகரின் தீவிரக் கட்சி. அரவிந்தர் திலகரின் கட்சியைப் பாராட்டி ஆக்க மளித்தார். அரசினர் அரவிந்தர் மீது குற்றஞ் சாட்டி அலிபூர் சிறையில் அடைத்தனர். பிறகு இவர் ஆபத்துக்கிடமான பேர் வழியல்லர் என உணர்ந்து சிறையில் இருந்து விடுதலை செய்தனர். அரவிந்தர் ஆன்மீக வழிகளில் அதிகமாக ஈடுபட்டு அரசியலில் இருந்து விலகிக் கொண்டார். 4-4-1910 இல் புதுச்சேரிக்குவந்தார். 1914 ஆம் ஆண்டில் ஆரியா என்ற ஆங்கில அறிவுக்களஞ்சியத்தைத் தொடங்கி ஆறு ஆண்டுகள் நடத்தினார். அதில் அரிய பல கட்டுரைகளை எழுதினார். அக் கட்டுரைகள் பின்னாளில் நூல் களாயின. புதுச்சேரியில் இவருக்குஆசிரமம் அமைந்தது; சீடர் களும் பலர் உண்டாயினர். இறுதி வரையில் அரிய தவ வாழ்க்கையை மேற் கொண்ட இவர் 1950 ஆம் ஆண்டில் பூத வுடலை நீத்துப் புகழுடலை யடைந்தார்.

**அரிசிற்கரைப் புத்தூர்** - தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத் திற்குத் தென்கிழக்கில் அரிசி லாற்றங்கரையில் உள்ள ஊர். இப்பொழுது அழகார்புத்தூர் என்று மருவி வழங்குகின்றது. பெரியபுராணத்தில் செருவிலி புத்தூர் என்று கூறப்படு கிறது. உண்மையாநந்த முனிவர் வழிபட்ட தலம். இங்கு புகழ்த்துணை நாயனார் வழி பட்டு வீடுபேறடைந்தார்.

**அரியநாத முதலியார்**-(தளவாய்) காஞ்சிபுரத்தை யடுத்த மெய்ப் பேடு என்னுஞ் சிற்றூரில் ஓர் எளிய வேளாள குடும்பத்தில் பிறந்தார். இளமைப் பருவத் தில் கல்விப் பயிற்சி உடற் பயிற்சி முதலியவைகளைத் தக்க வாறு பெற்றார். வயது வந்த தும் விசய நகரத்திற்குச் சென்று கணக்குப்பிள்ளை வேலை

யில் அமர்ந்தார். பிறகு விசுவ நாத நாயக்கரோடு மதுரைக் குச் சென்றார். அங்கு அமைச்ச ராக அமர்ந்தார். பல அரிய காரியங்களைச் செய்தார். மதுரை நகரைச் சுற்றிக் கோட்டை கட்டினர். மதுரை திருநெல் வேலி திருச்சிராப்பள்ளி முதலிய இடங்களில் நீர்ப்பாசன வசதி களை உண்டாக்கினர். கோவில் திருப்பணிகள் பல செய்தார். மதுரை மீனாட்சி கோவிலின் பல பகுதிகளைப் புதுப்பித்தார்.

**அருகமதம்** - பாட்னு நகரத்தில் உதிட்டிரசகம் 1445 ஆம் ஆண்டிற் பிறந்த ஆருகதன் என்பவனால் உண்டாக்கப்பட்ட ஒரு சமயம். இவன் சயின மதத்தைக் கண்டித்தான். இவன் அருகன் எல்லா ஆற்றலும் உடையவனென்றும் மூவுலகத் தாராலுங் கொண்டாடத்தக்கவ னென்றும் எக்காலத்துஞ் சத்தி யத்தைப் போதிப்பவன் என் றுங் கூறுவான். இவனுடைய சமயத்தில் பதார்த்தங்கள் ஏழு.

**அருக்கசந்திரன்** – குண்டலகேசிக் குப் பௌத்தமதோப தேசஞ் செய்த ஆசிரியன். இவன் உஞ்சை மாநகரத்தில் வாழ்ந் திருந்தவன்.

**அருந்ததி** - வசிட்டருடைய மனைவி. மிகுந்த கற்புடைய வள். ஐந்து கன்னிகைகளில் ஒருத்தி. துருவ மண்டலத் தருகில் ஏழு விண்மீன்களுக்கு இடையில் வசிட்டர் என்னும் மீனும் அருகில் அருந்ததி மீனும் இருப்பதாகப் புராணங் கள் கூறும். இந்துக்கள் மணம் நடத்தும் போது மணமகன் அருந்ததியைப் போல் கற்புடை யவளாக இருக்க வேண்டும் என்று மணமகளுக்கு இவளைக் காட்டுவது வழக்கம்.

**அருமன்** - முன்னாளில் பாண்டி நாட்டில் சிறுகுடி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவன். விருந்தோம்புதலிற் சிறந்து விளங்கியிருந்த இவனுடைய பண்புடைமையை நக்கீரரும் வியந்து பாராட்டிப் பாடியுள் ளார். அப்பாட்டு நற்றிணையில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**அருவந்தை** - சோழவள நாட்டில் அம்பர் என்னும் ஊரில் இருந் தவன். இவன் சிறந்த அறி வாளியாகவுங் கொடையாளி யாகவுந் திகழ்ந்தான். இவன் கல்லாடனரைப் போற்றிப் பாராட்டி அவரால் புகழ்ந்து பாடப் பெற்றான். ''நெல்விளை கழனி அம்பர் கிழவோன் நல்லருவந்தை வாழியர்'' என்பது கல்லாடனர் வாக்கு.

**அரேபியா** - தென்மேற்கு ஆசியா வில் உள்ள பெரிய தீபகற்பம். மேற்கே செங்கடலும் தெற்கே இந்து சமுத்திரமும், கிழக்கே பாரசீகவளைகுடாவும் இருக் கின்றன. இஃது இஸ்லாம் சமயம் பிறந்த நாடு. முஸ்லிம் களுடைய புண்ணியத்தலமாகிய மெக்கா இந்நாட்டில்தான் இருக் கிறது. இந்நாட்டின் பெரும் பகுதி பாலை நிலமாக இருக் கிறது. ஆறு இல்லை. வெப்ப நிலை மிகுதி. இங்குள்ளவர்க ளுடைய முதன்மையான உணவு பேரீச்சம்பழம். காபி கோதுமை முதலியன சில இடங்களில் பயிராகின்றன.

**அரையர்** - நாதமுனிகள் திவ்விய பிரபந்தத்தை வகுத்துப் பாடல் களைக் கோவில்களில் பாடு வதற்கு ஏற்பாடு செய்திருந் தார். இசையோடு அவை களைப் பாடவும் அவைகளின் கருத்தைக் குறிப்பாக விளக்கும் உறுப்புச் செயல்களைக் காட்டி நடிக்கவும் தம்முடைய உடன் பிறந்தாள் மக்கள் மேலையகத் தாழ்வான் கீழையகத்தாழ் வான் என்னும் இருவரையும்

பழக்கினர். அவர்களுக்கு அரையர் என்னும் பெயர் உண்டாகியது. அக்காலத்தில் திருமால் கோயில்களில் அரையர்கள் இருந்தனர். ஆனல் இந்நாளில் சீரங்கம், திருவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி என்னும் சில இடங்களில்தான் அரையர்கள் இருப்பதாகத் தெரிகிறது. அரையர்களுக்குத் தம்பிரான்கள் என்றும் பெயர். உடையவர் காலத்தில் நாள் தோறும் அருளிச் செயலைப் பெருமாளிடம் நடித்துப் பொருள் விளக்குவதே அரையர்களின் பொழுது போக்காகவும் கோயில் காரியமாகவும் இருந்தது.

அலகபாத் - இஃது இந்தியாவின் புண்ணியத் தலங்களில் ஒன்று. அலகபாத் என்பதன் பொருள் கடவுளின் நகரம் என்பதாம். இப்பெயர் அக்பரால் இடப்பட்ட தென்பர். இவ்வூரின் பழைய பெயர் பிரயாகை என்பது. இவ்வூர் கங்கையும் யமுனையும் கூடுமிடத்தில் இருக்கிறது. இங்கு அக்பர் கட்டிய கோட்டை, மசூதி முதலியன புகழ் வாய்ந்தவை. இங்கு அசோகர் தூண் ஒன்று முப்பத்தைந்தடி உயரத்தில் உள்ளது. இங்கு ஆண்டு தோறும் நடைபெறும் கும்பமேள விழாவுக்கு நாட்டின் பல பகுதிகளினுமிருந்து இலட்சக்கணக்கான மக்கள் வந்து கூடி நீராடுவர். இந்நகரம் உத்தரப்பிரதேச இராச்சியத்தில் உள்ளது. பல்கலைக்கழகம் நீதிமன்றம் முதலியன உள்ளன. ஜவஹர்லால்நேருவின் பிறப்பிடமும் இருப்பிடமும் இவ்வூரே.

அல்லியரசி - சித்திரவாகன் என்னும் பாண்டிய மன்னனுடைய மகள். இவளுடைய பெயர் சித்திராங்கதை எனவும் வழங்கும். கல்வி, வில் வித்தை முதலியவைகளில் தேர்ச்சியடைந்து தந்தையினுடைய கட்டளைப்படி பாண்டி நாட்டின் தென் பகுதியை அரசு புரிந்தவள். இலங்கைத்தீவிலும் ஒரு பகுதியை வசப்படுத்திப் பெருமிதத்தோடு அரசு புரிந்திருந்தவள். தீர்த்தயாத்திரை வந்த அருச்சுனன் இவளை மணம் புரிந்தான்.

அவதானம் - அவதானம் எனின் நினைவாற்றலால் ஒரே சமயத்தில் பல பொருள்களை உள்ளத்திற் பற்றுதல் என்பது பொருள். ஒரே சமயத்தில் ஆறு பொருள்களைப் பற்றியவர்கள் சடாவதானிகள் எனவும், எட்டுப் பொருள்களைப் பற்றியவர்கள் அட்டாவதானிகள் எனவும், பத்துப் பொருள்களைப் பற்றியவர்கள் தசாவதானிகள் எனவும், பதினறு பொருள்களைப்பற்றியவர்கள்சோடசாவதானிகள் எனவும் நூறு பொருள்களைப் பற்றியவர்கள் சதாவதானிகள் எனவும் பெயர் பெற்று விளங்கினர். பெயரமைந்தது எண்ணிக்கையைப் பொறுத்தே அமைந்தது.

அவந்தன் - மாளவ நாட்டில் அவந்திபுரி என்னும் ஊரில் இருந்த ஓர் அந்தணன். இவன் மிகுதியாகப் பொருளைச் சேர்த்தும் அதனை நுகராமல் பாதுகாத்து இறுதியில் கள்ளர்களிடம் பறி கொடுத்து வருந்தினன்.

அவளிவணல்லூர் - சோழவள நாட்டிலேயுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. வராகாவதாரத்தில் கொம்பு முறியப் பெற்ற திருமால் பூசித்தபதி. பூசை புரியும் குருக்களின் மூத்த பெண்ணைத் திருமணஞ் செய்தவர் தீர்த்த யாத்திரை செய்து திரும்பினர்.

அக்காலத்தில் அவருடைய மனைவிக்கு அம்மை நோய் வந்தபடியால் கண் குருடாகிக் குரூபியாகவும் மாறிவிட்டாள். திரும்பிவந்தவர் தம் மனைவி அவளல்லவென்றும் அவளுடைய தங்கையே தம்முடைய மனைவியென்றுஞ் சொற் போரிட்டார். அச்சமயத்தில் இறைவன் தோன்றி நீ திருமணஞ் செய்த அவள் இவளேதான் என்று கூறி உண்மையை நிலை நாட்டினர். அதனால் ஊருக்கு 'அவளிவணல்லூர்' என்று பெயருண்டாகியது. சுவாமியின் பெயர் தம்பரிசறிவார் என்பர்.

**அழற்கணகம்** - இதன் பெயர் திட்டிவிடம் எனவும் வழங்கும். கொடிய பாம்பு வகைகளில் இஃதொன்று. இதனுடைய பார்வையிலேயே நஞ்சு அமைந்திருத்தலால் இதனுடைய பார்வைக்கு அகப்பட்டவர்கள் இறந்தொழிந்திடுவர். இத்தகைய நாகம் முன்னாளில் இருந்ததாக மணிமேகலை கூறுகிறது. இந்நாளில் இருப்பதாகத் தெரியவில்லை.

**அழிசி**-சோழ நாட்டில் ஆர்க்காடு என்னும் ஊரில் இருந்து அரசு புரிந்த ஒரு குறுநில மன்னன். இவனுக்குச் சேந்தன் என்னும் பெயருடைய மைந்தன் ஒருவன் இருந்தான்.

**அறையணி நல்லூர்** - தென்னார்க்காடு மாவட்டத்தில்திருக்கோவலூர் புகைவண்டி நிலையத்துக்கு அண்மையில் பெண்ணையாற்றின் வடகரையில் உள்ள சிவப்பதி. இப்பொழுது அரகண்டநல்லூர் என்று மருவி வழங்குகின்றது. கோவில் ஒரு சிறிய குன்றின் மேல் இருக்கிறது. இங்கே பஞ்சபாண்டவர் குகை என்னும் ஐந்து அறைகளும் திரௌபதி இருந்ததென்னும் சிறிய அறையொன்றும் இருக்கின்றன. பிரசண்டமுனிவர் வழிபட்ட இடம். சுவாமி பெயர் அறையணி நாதேசுரர். அம்மனுடைய பெயர் அருள் நாயகி. திருத்த நீர் பெண்ணையாறு. கோயில் மிக அழகாக விளங்குகின்றது. திருஞானசம்பந்தருடைய தேவாரம் பெற்றது.

**அனங்கமோகினி** - முன்னாளில் பாண்டிவள நாட்டில் திருமருதம் என்னும் நகரில் இருந்த ஒரு பொதுமகள். அழகிலும் ஆடல் பாடல்களிலும் சிறந்து விளங்கிய இவளிடம் பலர் மையல்கொண்டுபொருளிழந்து பழிக்குள்ளாயினர்.

**அனந்த தீர்த்தம்** - காஞ்சி வரதராசர் கோயிலில் உள்ள ஒரு தீர்த்தம். இத்தீர்த்தத்தின் கீழ் நீரின் அடியில் அத்திவரதர் சயனித்துக் கொண்டிருக்கிறார். சேவை செய்ய முடியாது. நாற்பது ஆண்டுகட்கு ஒருமுறை இவரை மக்கள் போற்றி வழிபடுவதற்காக வெளியே எடுப்பார்கள்.

**அனந்தப்பூர்** - சென்னை இராச்சியத்தில் அனந்தப்பூர் மாவட்டத்தின் தலைநகரம்; விசய நகர அரசருடைய திவானாக இருந்த சிக்கப்ப உடையார் இந் நகரை அமைத்துத் தம்முடைய மனைவியின் பெயரையிட்டார்.

**அனேக தங்காபதம்** - வட நாட்டில் உள்ள சிவப் பதிகளில் ஒன்று. இங்குக் கௌரி தவஞ் செய்ததாகக் கூறப்படுகிறது. இதற்குக் கௌரி குண்டம் என்றும் பெயருண்டு. இங்குக் கதிரவனும் திங்களும் சிவபெருமானை வழிபட்டனர். சுவாமி பெயர் அருண் மன்னேசுரர். அம்மை பெயர் மனோன்மணி. இது திருஞானசம்பந்தருடைய தேவாரப் பதிகம்பெற்ற ஊர். திருக்காளத்

தியில் இருந்தே இப்பதியைப் பாடினார்.

**அன்னம்பட்டர்**-இவர் ஒரு தெலுங்கர் வடமொழியிலும் வல்லவர். இவர் தருக்கநூல் ஒன்றையும் பிறகு அதற்குத் தம்முடைய பெயரால் உரை யொன்றையும் இயற்றியவர். இந்நூல் தமிழில் மொழி பெயர்க்கப் பட்டிருக்கிறது.

**அன்னவிநோதன்** - மதுரைமா நகரில் வைகைக் கரையில் திருவாப்பனூரில் எழுந்தருளிய இறைவனுடைய பெயர். அருச்சகராகிய சைவ வேதியருக்காக அவர் உலையிலிட்ட வைகை யாற்று மணலை அன்னமாக்குவித்தமையால் இவ்வாறு பெயருண்டாகியது.

**அஸ்கா** - கஞ்சம் மாவட்டத்தில் இதே பெயருள்ள தாலுகாவின் தலைநகர். நல்ல பாசனவசதியுள்ளது. கரும்பும் நெல்லும் சாகுபடியாகின்றன. இங்குள்ள சர்க்கரைத் தொழிற்சாலை மிகப் பழமையானது. இங்கிருந்து வரும் சர்க்கரையும் அஸ்கா என்றேபெயர் பெற்றுவிட்டது.

**ஆகாயவாணி** - உடலில்லாமல் விளங்கும் தரும தேவதை. எல்லாச் செய்கைகளுக்கும் சாட்சியாக இறைவனால் நியமிக்கப்பட்ட சத்தி. இவளுடைய வாக்குச் சமய சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு பிறருடைய பேச்சுமூலம் ஒலிக்கும். இதனை அசரிரி எனவுங் கூறுவர்.

**ஆகுகன்** - அற்புதமலையில் வாழ்ந்திருந்த ஒருவேடன். இவனுடைய மனைவியின் பெயர் ஆகுகி. இவர்களிருவரும் தங்களுடைய இருப்பிடத்திற்கு அன்மையில் உள்ள ஒரு சிவன் கோவிலுக்குப்போய் நாடோறுஞ் சிவபெருமானை வழிபட்டு வருவது வழக்கம். ஒரு நாள் வேடனுடையஇருப்பிடத்திற்கு ஒரு சிவயோகி வந்தார். வேடனும் அவனுடைய மனைவியும் சிவயோகியைப் பாராட்டிப் போற்றினர். பிறகு யாது வேண்டுமென்று கேட்டனர். சிவயோகி, "இரவில் தங்குவதற்குச் சிறிது இடம் வேண்டும்வேறொன்றும் வேண்டாம்" என்றார். வேடன் அவரைக் குடிசைக்குள் இருக்கச் செய்து தான் தன்னுடையமனைவியோடு குடிசைக்கு வெளியே யிருந்தான். யோகி "பெண்பாலை இரவில் வெளியே இருக்கச் செய்தல் கூடாது" என்றார். வேடன் தன் மனைவியையும் குடிசைக்குள் இருக்கச் செய்தான். சிவயோகி இரவு முழுவதும் அறிதுயில் நிலையில் இருந்தார். ஆகுகி உறங்கினாள். வெளியே இருந்த வேடன் இரவில் புலியாற் கொல்லப்பட்டான். விடிந்தபிறகு ஆகுகி நிகழ்ந்ததையறிந்து வருந்தினாள். யோகியினுடைய உடன்பாடு பெற்றுக்கொண்டு தானுந் தன்னுடைய கணவனோடு தீப் பாய்ந்தாள். அப்பொழுது சிவபிரான் அருளிய வரத்தால் ஆகுகன் நளராசனாகப் பிறந்தான். ஆகுகி தமயந்தியாகப் பிறந்தாள். சிவயோகி அன்னப் பறவையாகப் பிறந்தார்.

**ஆக்கிநீதரன்**-பிரிய விரதனுடைய மனைவி சுகன்னிகை யென்பவள் பெற்ற பதினொரு புதல்வர்களில் மூத்தவன். இவனுடைய மனைவி பூர்வசித்து. இவனுக்குத் தந்தையாற் கிடைத்த சம்புத்தீபத்தைத் தன்னுடைய புதல்வர். ஒன்பதின்மருக்கும் பிரித்துக் கொடுத்தவன். இமய மலையின் தெற்கிலுள்ள பரத கண்டத்தை நாபியென்பவனுக்கும் பரதகண்டத்தின் வடக்கிலும் ஏமகூடபர்வதத்தின் தெற்கிலுமுள்ள கண்டத்தைக் கிம்புருடனுக்கும் ஏமகூடத்தின்

வடக்கிலும் நிடதபர்வதத்திற்குத் தெற்கிலுமுள்ள நைடதத்தை அரியென்பவனுக்கும், நிடத பர்வதத்திற்கு வடக்கும் மேருவை நடுவே கொண்டதுமான கண்டத்தை இளாவிருதனுக்கும், இளாவிருத கண்டத்திற்கும் நீலாசலத்திற்கும் இடையிலுள்ள கண்டத்தை இரம்மியனுக்கும் இரம்மிய கண்டத்திற்கு வடக்கே சுவேத பர்வதத்திற்கப்பாலுள்ள கண்டத்தை இரணவந்தனனுக்கும், சுவேத பர்வதத்திற்கு வடக்கே சிருங்கவந்தத்தாற் சூழப்பட்ட கண்டத்தைக் குருவென்பவனுக்கும், மேருவின் கிழக்கேயுள்ள கண்டத்தைப் பத்திராசுவனுக்கும், மேருவின் மேற்கில் உள்ள கண்டத்தை கேதுமாலனுக்குமாகப் பங்கிட்டவன். இதனால் இவை ஒன்பது (நவ) கண்டங்களாயின. இம் முறையிற் சில மாறுபாடுகளுங் காணப்படும்.

**ஆக்நேயபுராணம்** - இது மகாபுராணங்களில் ஒன்று. எண்ணாயிரங் கிரந்த முடையது. சிவதீட்சாவிதி, விட்டுணு தீட்சாவிதி, அக்கினிகாரியம், விட்டுணுவின் அவதாரச் சிறப்பு, பிரபஞ்ச விவரணம், இராசநீதி, சத்தம், சோதிடம், ஔடதம் என்பவைகளைச் சுருக்கிக் கூறும்.

**ஆக்ரா** – வட நாட்டில் உள்ள மூன்றாவது பெரிய நகரம். இந்தியாவின் பழைய நகரங்களுள் ஒன்று. யமுனையாற்றின் கரையில் உள்ளது. சிக்கந்தர் லோடி 1500 இல் இந்நகரைத் தன்னுடைய தலைநகராக்கிக் கொண்டான். தாஜ்மஹால் என்னும் உலகப் புகழ் பெற்ற சலவைக்கல் கட்டிடம் இங்கே இருக்கிறது. இங்குள்ள முத்து மசூதியும் சம்மா மசூதியும் புகழ் பெற்றவை. கோட்டையின் சுற்றளவு ஒரு மைல். மதில் சுவர் உயரம் 70 அடி.



**ஆசவபாண்டேசர்** - ஒருவனுக்குக் கள் குடுவையிலிருந்து காட்சி தந்து வீடு பேற்றையுங் கொடுத்தவர். இச்சிவபிரான் காசிப்பதியில் எழுந்தருளியிருப்பதாகக் கூறுவர்.

**ஆசுகவி** - செய்யுள் பாடுந்திறமுடையவர்கள் செய்யுள் பாடத் தொடங்கித் தாள்களில் அடித்தடித்து எழுதிக் கொண்டிராமல் மனப்பாடஞ்செய்யப் பட்ட பழைய பாடல்களைப் போல் மிகு விரைவாகப் புதிய பாடல்களை இயற்றக் கூடியவர்களாக இருப்பார்களானால் ஆசுகவி என்னும் பெயரை அவர்கள் அடைதற்குரியவர்களாவர்.

**ஆச்சாள்புரம்** - இவ்வூர் திருநல்லூர்ப் பெருமணம் என்று பெயர் பெறும். திருஞானசம்பந்தரது மனைவியாராகிய தோத்திர பூரணியம்மையார் பிறந்த பதியாகலின் ஆச்சாள்புரம் என்று பெயர் பெற்றது என்பர். ஆச்சாமரம் உள்ள தலமெனக் கூறுவாரும் உளர். இவ்வூரில் தான் திருஞானசம்பந்தர் தம்முடைய திருமணங் காண வந்த அனைவரோடும் திருக் கோயிலையே பெருமணச் சாலை வேள்வித் தீயாக வகுத்துக் காட்டி நமச்சிவாயத் திருப்பதிகத்தினால் அனைவரையும் வீடுபேற்றிற்குரியவர்களாக்கித் தாமும் சிவ பெருமானுடைய திருவடி நீழலையடைந்தார்.

**ஆடகேசுவரர்** - பாதலத்தைக் காக்கின்ற கோடி உருத்திரர்கட்குத் தலைவர்.

**ஆடானை நாதர்** - பாண்டிநாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்றாகிய திருவாடானை என்னுஞ் சிவப்பதியில் எழுந்தருளிய இறைவரின்

பெயர். வருணனுடைய புதல்வராகிய வாருணி என்பவர் துருவாச முனிவரை மதிக்காமல் இருந்தபடியால் துருவாசர் சினங்கொண்டு ஆட்டுத் தலையும் ஆனை உடலும் அடையுமாறு வசவுரை கூறினார். அவ்வசவுரை இச்சிவப்பதியில் வழிபட நீங்கியது. அதனால் ஊருக்கு ஆடானை என்றும் இறைவருக்கு ஆடானை நாதர் எனவும் பெயர்கள் வழங்கலாயின.

**ஆடு கோட் பாட்டுச் சேரலாதன்** - இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுடைய இரண்டாவது மகன். தண்டகாரணியம் என்னும் ஓரிடத்தில் வட நாட்டவரால் கைப்பற்றப்பட்ட பசு நிரைகளை மீட்டுத் தொண்டியிற் சேர்ப்பித்தபடியால் இப்பெயர் பெற்றான். தன்னைப்புகழ்ந்து பாடிய காக்கை பாடினியார் நச்செள்ளையார்க்கு ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் பொற்காசும் கொடுத்தவன்.

**ஆண்டாள்** - பாண்டி நாட்டில் திருவில்லிபுத்தூரிலே பூம்பொழிலில் துளசிச் செடியிடையே பெரியாழ்வார் கண்டெடுத்துக் கோதையார் என்று பெயரிட்டு வளர்த்தார். பெரியாழ்வாரால் வளர்க்கப்பட்ட படியால் "ஆழ்வார் திருமகளார்" என்றும், தாஞ்சூடிய மாலையினைப் பெருமாளுக்கு அணிவித்து வந்தபடியால் "சூடிக் கொடுத்த நாச்சியார்" என்றும், நூல்கள் பாடியதின் மூலம் உலக மக்களை உய்வித்து ஆண்டபடியால் "ஆண்டாள்" என்றும் பெயர் பெற்றார். இவர் தாம் திருமாலுக்கே உரியவள் என்று உறுதி பூண்டு நின்றபடியால், ஆழ்வார் கோதையாரை மணக்கோலஞ் செய்து திருவரங்கத்துக்கு அழைத்துச் சென்று அழகிய மணவாளன் திருமுன்பு நிறுத்தினார். கோதையார் திருமாலோடு ஒன்றினார். இவர் இயற்றிய நூல்கள் திருப்பாவை, நாச்சியார் திருவாய்மொழி முதலியன. நாச்சியார் திருவாய்மொழி நூற்று நாற்பத்து மூன்று செய்யுட்களை உடையது. ஆண்டாளுடைய காலம் எட்டாம் நூற்றாண்டு என்று கூறுவர். ஆண்டாள் மீது பிள்ளைத் தமிழ் நூல் பாடப் பெற்றிருக்கிறது.

**ஆதன் எழினி** - பாண்டி வள நாட்டில் வாட்டாறு என்னும் ஊரில் இருந்த சிறந்த கொடையாளி. மாங்குடி கிழார் என்னும் புலவருக்குப் பல உதவிகள் செய்தான். அவர் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளார். அப்பாட்டுப் புறநானூற்றில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**ஆதிசைவர்** - சதாசிவ மூர்த்தியின் திருமுகத்தில் தோன்றிய கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியர் முதலிய ரிஷிகளின் வழி முறையில் தோன்றிய அந்தணர்கள். இவர்கள் முதலில் சதாசிவ மூர்த்தியால் தீட்சை செய்விக்கப் பெற்றவர்களாதலின் இவர்கள் ஆதிசைவர் என்று பெயர் பெற்றனர். இச்சைவர் அநாதிசைவர், ஆதிசைவர், மகா சைவர், அநுசைவர், அவாந்தர சைவர் முதலிய பல பிரிவுகளுக்குள் அடங்குவர். இவர்களுள் அநாதி சைவர் சதாசிவ மூர்த்தி ஆதி சைவர் அவர் முகத்தில் தோன்றிய ரிஷி வழி முறையினர். மகா சைவர் ஆதி சைவரிடம் சிவ தீட்சை பெற்ற வேதியர், அநு சைவர் சிவ தீட்சை பெற்ற க்ஷத்திரிய வைசியர், அவாந்தர சைவர் சிவ தீட்சை பெற்ற சற்சூத்திரர். இவரொழிந்த மற்ற சைவர் அந்யசைவர் எனப் பெறுவர்.

**ஆதி மந்தி** - இவள் திருமாவளவன்என்னும் கரிகாற்சோழனுடைய மகள். சேர நாட்டரசனாகிய ஆட்டனத்தி என்பவனை மணந்தவள். இவள் தன்னுடைய கணவனோடு காவிரி நீராடுகையில் காவிரிப் பெருக்கு ஆட்டனத்தியைஅடித்துக்கொண்டு சென்றது. இவள் தன்னுடைய தலைவன் பிரிவுக் காற்றாது அழுதரற்றிக் கூவி நின்றாள். இவளுடைய முறைப் பாட்டினைக் கேட்ட கடல் கணவனைத் தந்தது.

**ஆத்திகர்** - இவர் சரத்காரு என்னும் முனிவருடைய புதல்வர். முனிவருடைய மனைவியின் பெயரும் சரத்காரு என்பது தான். முனிவர் தம்முடைய மனைவியைப் பிரியத் தொடங்கிய பொழுது அவள் ஒருபுதல்வனை அளித்துச் செல்ல வேண்டும் என்று வேண்டிக் கொண்டாள். அவள் கருப்பமாக இருத்தலை உணர்ந்த முனிவர் ''உன் வயிற்றில் ஒரு மகன் இருக்கிறான்'' என்று கூறினார். இதனால் பிறந்த பிள்ளைக்கு ஆத்திகர் (அஸ்தி-இருக்கிறான்) என்றுபெயர் உண்டாகியது சனமேசயன் சர்ப்பயாகஞ் செய்த பொழுது இவர் சென்று அந்த யாகத்தை நிறுத்தினார்.

**ஆத்தூர்** - விருத்தாசலம் சேலம் இருப்புப்பாதையில் உள்ள ஓர் ஊர். இவ்வூரின் பெயர் முன்னாளில் ஆனந்தகிரிஎன்றுவழங்கி வந்தது. ஊரின் நடுவில் ஆறு ஓடுகிறபடியல் ஆற்றூர் எனவும் காரணப் பெயர் உண்டாகியது. பின்னாளில் ஆற்றூர் என்னும் காரணப் பெயரே நிலை பெற்றுப் பழைய பெயர் மறைந்தது. ஆத்தூர் என்பது றகரம் தகரமான போலி.

**ஆநந்த கானம்** - ஆன்மாக்கட்கு ஆனந்த மளித்தலால் காசியென்னும் வாரணாசிக்கு இவ்வாறு ஒரு பெயர் வழங்குகிறது.

**ஆயிரக்கவசன்** - இவன் ஓர் இராக்கதன் இவன் தேவர்களை வருத்தினான். நரநாராயணர் இவனோடு போர் செய்து இவன் அணிந்திருந்த ஆயிரத்துத் தொளாயிரத்துத்தொண்ணூற்றொன்பது கவசங்களையும் அறுத்து வீழ்த்தினர். ஒரு கவசம் இருக்கையில் இவன் கதிரவனிடம் அடைக்கலம் புகுந்து உயிர் பிழைத்தான். இவனே மறு பிறப்பில் கர்ணனாகப் பிறந்தவன்.

**ஆயிரத்தில் ஒருவர்** - சோழ வள நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதியாகிய ஆக்கூர்த்திருக்கோயிலில்உள்ள ஒரு சுவாமியின் பெயர் இவ்வாறு ஆயிரத்தில் ஒருவர் என வழங்குகிறது. ஓர் அரசன் இறைவனுடைய கட்டளைப்படி ஆயிரம் அந்தணர்களுக்கு அன்னம் அளித்தான். அவ்வாயிரவர்களில் இறைவரும் ஒருவராக வந்து உண்டு சென்றார். ஆகவே ஆயிரத்தில் ஒருவர் என்று பெயர் பெற்றார்.

**ஆருணி** - இவன் அயோத தௌமியருடைய மாணவர்களில் ஒருவன்; பாஞ்சால தேசத்து மன்னன். நல்லுரை பெறும் பொருட்டுத் தௌமியரிடம் பணி புரிந்திருந்தான். குருவானவர் ஒரு நாள் இவனைப் பார்த்து வயலுக்குப் போய்த் தண்ணீர் மடையை அடைத்து வா என்று கட்டளையிட்டார். இவன் வயலுக்குச் சென்று எவ்வளவோ முயன்றும் மடையை அடைக்க முடியவில்லை. இவன் அடைக்க அடைக்கத் தண்ணீர் மடையை உடைத்துக் கொண்டு சென்றது. இவன் மண்வெட்டியைப் போட்டு விட்டுத் தானே மடையில் குறுக்காகப் படுத்து

விட்டான். படையும் தடைபட்டுநின்றது. இவனுடைய குருபத்தியைக் கண்ட ஆசிரியர் இவனுக்கு எல்லாக் கலைகளும் நன்கு விளங்குமாறு அருள புரிந்தார். அதுமுதல் இவனுடைய பெயர் உத்தாலகன் என்று வழங்கலாகியது.

**ஆழ்வார்கள்** - இறைவனிடத்தில் பேரன்பு கொண்டு பக்திக் கடலில் ஆழ்ந்தவர்கள் ஆழ்வார்கள் எனப் பெயர் பெற்றனர். இச்சொல் சிறப்பாக வைணவ சமயத்தார்க்கே வழங்குகின்றது. பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், மதுரகவியாழ்வார் முதலியோர் ஆழ்வார் வரிசையிற் சேர்ந்தவர்களாவர்.

**ஆறுமுகன்** - முருகக்கடவுள் ஆறு திருமுகங்கள் அமையப் பெற்றபடியால் உண்டான சிறப்புப் பெயர்.

**ஆற்றுப்படை** - பாணர் கூத்தர் முதலியோர்களில் ஒருவர் தாம் ஒரு வள்ளலிடம் பெற்ற பெருஞ் செல்வத்தை எதிர் வந்த புலவர் கூத்தர் முதலியோர்க்கு அறிவுறுத்தி அவர்களும் அவ் வள்ளலிடஞ் சென்று தாம் பெற்றவற்றையெல்லாம் பெறுமாறு வழிப்படுத்துதல் ஆற்றுப்படையாகும். பொதுவாக ஒருவர் மற்றொருவரைப் பிறரிடத்தில் செல்லுமாறு வழிப்படுத்துதல் ஆற்றுப்படையாகும். தமிழ்மொழியில் திருமுருகாற்றுப் படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை, திருத்தணிகையாற்றுப்படை முதலிய நூல்கள் இருக்கின்றன.

**ஆனையுரித்தோன்** - யானைமுகாசுரன் தேவர்களை வருத்தினான். சிவபிரானுக்கு எதிரில் செருக்குடன் வந்தான். சிவபிரானையெடுத்து விழுங்கினான். சிவபிரான் அசுரனுடைய உடலில் இருந்து கோர வடிவத்தோடு புறப்பட்டு அசுரனுடைய மத்தகத்தில் விரலூன்றித் தோலையுரித்துப் போர்த்தியருளினார். அப்பொழுது சிவபெருமானுக்கு ஆனையுரித்தோன் என்று பெயர் உண்டாகியது.

**இடைச்சங்கம்** - இச் சங்கம் பாண்டிவள நாட்டில் கபாடபுரத்தில் வெண்டேர்ச் செழியன் காலமுதல் முடத்திருமாறன் காலம் வரையிலும் இருந்தது. இதிலிருந்து தமிழாராய்ச்சி செய்தவர்கள் அகத்தியர், தொல்காப்பியர், இருந்தையூர்க்கருங்கோழி, மோசி, வெள்ளூர்க்காப்பியன், சிறுபாண்டரங்கன், திரையன் மாறன், துவரைக் கோமான், கீரந்தை முதலிய ஐம்பத்தொன்பது பெயர்களாவர். இவரையுள்ளிட்டுப் பலர் பாடினர். கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலையகவல், இசை நுணுக்கம், அகத்தியம், தொல்காப்பியம், மாபுராணம், பூதபுரா முதலியன இவர்களாற் பாடப்பெற்றன. நாட்டைக் கடல் கொண்ட பிறகு சங்கம் மறைந்தொழிந்தது.

**இட்ட சித்தித் தீர்த்தம்** - கச்சியில் உள்ள புனித நீர்களில் ஒன்று. விரும்பினோர் விரும்பியவைகளையெல்லாம் வழங்குதலால் இப்புனிதநீர் இவ்வாறு பெயர் பெற்றது. இட்ட சித்தீசம் என்னுந்தலமும் இங்குள்ளது.

**இந்திரத்துய்ம்மன்** - பரதன் மகனாகிய சுமதியின் மகன். இவன் ஒருமுறை கொலுவில் இருந்த

பொழுது அகத்திய முனிவர் வந்தார். அரசன் எழுந்து போற்றாமல் இருந்தான். முனிவர் சினமடைந்து, ''நீ மதம் பிடித்த யானையைப் போல் மதியாதிருந்தபடியால் யானையாகக்கடவாய்'' என்று வசவுரை வழங்கினார். அரசன் கசேந்திரன் என்னும் யானையானான். இந்த யானை காட்டில் நெடுநாள் உலாவிக் கொண்டிருந்தது. ஒருநாள் நீருண்பதற்காகத் தடாகத்திற்குச் சென்றது. அங்குச் சாபத்தால் வேற்றுருக் கொண்டிருந்த முதலை யானையின் காலைப் பிடித்துக் கொண்டது. யானை தன்னுடைய ஆற்றல் முழுவதையும் பயன்படுத்தி வெளியில் இழுக்கவும் முதலை விடவில்லை. உடனே யானை ''ஆதிமூலமே!'' என்று ஓலமிட்டது. திருமால் தோன்றி ஆழிப்படையைச் செலுத்தி முதலையைக் கொன்றார். இந்திரத்துய்ம்மன் பழைய உருப் பெற்றுப் பரமபதம் அடைந்தான்.

**இந்திரப் பிரமிதி** - வியாசருடைய மாணவராகிய பைலவருக்கு மாணவர். இவர் இருக்கு மறையை நான்கு சங்கிதைகளாகப் பிரித்துப் பாஷ்கலர், போத்யர், யாஞ்ஞவல்கர், பராசர், மாண்டுகேயர், அக்கினிமதியென்பவர்கட்கு உரைத்தார்.

**இரகு மகாராசன்** - தீர்க்கபாகுவினுடைய மகன். இவனுடைய மகன் அசன். இவன் விசுவசித் என்னும் வேள்வி செய்து அதனால் வறியவனானான். கவசர் என்ற ஓர் அந்தணர் இவனிடங் குரு காணிக்கைக்காக வந்தார். அரசன் எதிர்கொண்டு போற்றினான். மண் கலயத்தில் கால் கழுவத் தண்ணீர் கொடுத்தான். இதனைக் கண்ட அந்தணர் இவன் வறிய நிலையில் இருக்கின்றான் என்றுணர்ந்து திரும்பினார். அரசன் அந்தணரைப்பார்த்து வந்த காரியம் வினவினான். அந்தணர், ''நான் குரு காணிக்கைக் காகப் பதினான்கு கோடிப் பொன் பெற வந்தேன். நீ மண் கலயத்தில் நீர் தந்த நிலையினால் வறிய நிலைமையில் இருக்கிறாய் என்பதை உணர்ந்து கொண்டேன். அதனால் திரும்பிச் செல்லலானேன்'' என்று கூறினார். அரசன் அந்தணரை இருக்கச் செய்தான். குபேரனோடு போர்செய்வதற்கு முடிவு செய்தான். இதையுணர்ந்த குபேரன் அரசனுடைய பொருளறையை நிறைவு செய்தான். இதனைக் கண்டு அரசன் அந்தணருக்கு வேண்டிய பொருளைக் கொடுத்து அனுப்பினான்.

**இரசிக முராரிதாசர்** - மதுரா நகரத்தில் வாழ்ந்தவர். கிருட்டிண பூசையில் மிகுந்த அன்புள்ளவர். பாகவதர்களுடைய திருவடி நீர்கொண்டு அவர்களுக்கு அமுது படைத்து ஆசாரிய பக்தியில் மிகுந்தவராக ஒழுகினார். இவருடைய நில முதலியவைகளை ஒரு மிலேச்ச அரசன் பறித்துக் கொண்டான். இவர் அவனிடஞ் சென்றபோது இவர் மீது யானையை ஏவினான். அந்த யானையைத் தாரகமந்திரத்தால் அடக்கிவிட்டார். மிலேச்ச அரசன் அஞ்சி இவரிடமிருந்து பறிமுதல் செய்தவைகளைத் திரும்பக் கொடுத்துவிட்டான்.

**இரணிய கன்னிகாதானம்** - ஒரு பார்ப்பனக் கன்னிகையை விலைக்கு வாங்கி அவளை ஆடையணிகளால் அழகு செய்து மணமாகாத அந்தணனுக்குத் தீமுன்னர்த் திருமணஞ் செய்து கொடுப்பது.

**இரணிய பூதானம்** - ஒரு துலாம் பொன்னினாலாவது அரைத்

துலாம் பொன்னிறுலாவது சதுரத்தகடு செய்வித்து அதில் ஏழுதீவுகள், ஏழுகடல்கள், ஏழு மலைகள், ஆறுகள், மரங்கள் முதலியன அமைப்பித்து வேள்வி முதலிய சடங்குகள் செய்து பஞ்சகவ்வியபூசை தகட்டிற்குச் செய்வித்து, அந்தணர்கட்கு அன்னதானஞ்செய்து தகட்டை உத்தமனுகிய அந்தணனுக்கு வழங்குவது இரணிய பூதானமாகும்.

**இரயிக்குவன்** - இவன் ஓர் அந்தணன். பிறக்கும்போது முடவனுகப் பிறந்தான். ஒரு வண்டியில் ஏறிக் காட்டின் வழியாகச் சென்றுன். காட்டில் இருந்த பாழ்ங்கிணற்றில் இருந்து 'கா' என்னும் ஒலி உண்டாகியது. அது தன்னுடைய பிதுரர்களின் ஒலியென உணர்ந்து அவர்களுடைய சொற்படிகயாபல் குனித்தீர்த்தம் ஆடிப் பிதுார்களை விண்ணுலகம் போக்கினுன்.

**இராகு** - இவனுடைய தந்தை விப்பிரசித்தி; தாய் சிம்மிகை. தம்பி கேது; இவர்களிருவரும் காசிபருக்குப் பேரர்கள். திருமால் சகன்மோகினி யுருக் கொண்டு தேவர்கட்கு அமுது பகுந்து கொடுத்த காலத்தில் இராகு தேவ உருக்கொண்டு சூரிய சந்திரர் இருவருக்கும் இடையில் இருந்து வாங்கியுண்டான். சூரிய சந்திரர் இருவரும் இராகுவைக் குறிப்பாகத் திருமாலுக்குக் காட்டினர். மோகினியுருக்கொண்ட திருமால் சட்டுவத்தால் இராகுவின் தலையில் அடித்தார். பிரிந்த சிரம் இராகுவென்றும் உடல் கேது என்றும் பெயடைந்து நின்றன. இவர்கள் சூரியசந்திரர் தள் மீது பகைகொண்டனர். தங்களுடைய தவச் சிறப்பால் இருவரையும் விழுங்கியுமிழலாயினர். தவச் சிறப்பால் கிரகபதத்தையும் அடைந்தனர்.

**இராசகட்க பரமேசுவரர்** - கோயிலூர் என வழங்கும் சிவப்பதியில் திருக்கோயில் கொண்டிருக்கிற இறைவருடைய பெயர். முன்னுளில் காளையார் கோவில் என்னும் ஊரில் இருந்த வீர பாண்டியன் என்னும் மன்னன் அங்கெழுந்தருளிய இறைவருடைய திருவருளால் ஒரு வாளைப்பெற்றுன். அவன் அவ்வாளால் அனைவரையும் வென்றபடியால் அவ்வாளுக்கு இராசகட்கம் என்று பெயர் உண்டாகியது. அவன் அவ்வாளை எப்பொழுதும் தன்னுடனேயே வைத்துக் கொண்டிருந்தான். ஒருநாள் அவன் வேட்டைக்குச் சென்ற போது ஒரு மானைத் துரத்திக் கொண்டு கோவிலூரையடைந்தான். களைப்படைந்து ஒரு மரநிழலில் படுத்து உறங்கி விட்டான். அப்பொழுது இறைவர் தாம் ஓர் அந்தணக் கோலத்தோடும் புலியால் பற்றப்பட்ட தோற்றத்தோடும் அரசன்முன் தோன்றித் தம்மைக் காப்பாற்ற வேண்டினுர். அரசன் வாளைப் பார்த்தான் அது காணப்படவில்லை. அந்தணனை விட்டுவிட்டுத் தன்னைத் தின்னுமாறு அரசன் புலியை வேண்டினுன். இறைவர் அரசனுடையமெய்யன்புக்கு அருள்சுரந்தார். அரசனுடைய வீரர்கள் சமிவனமாக இருந்த காட்டின் பலவிடங்களினும் ஆராய்ச்சி செய்தனர். ஓரிடத்தில் வன்னிமரத்தின் கீழ் சிவலிங்கம் ஒன்று இருந்ததோடு அரசனுடைய வாளும் அங்கிருந்தது அதனுல் அவ்விறைவருக்கு இராசகட்க பரமேசுரர் என்று பெயர் உண்டாகியது.

**இராமராசர்** - இவர் ஓர் அரசர். இராமபிரானிடத்தில் பக்தி

யிருந்தவர். தம்முடைய அவை யில் எப்பொழுதும் இராமா யணச் சொற்பொழிவு நிகழ்த் தச்செய்து அதனை மிகுந்த ஊக்கத்துடன் கேட்பார். இராம னுக்குத் துன்பம் நேர்வதாகச் சொற்பொழிவாளர் உரைக்கும் போது அரசர் மிகுந்த துன் பத்தையடைவார். அப்பொழுது சொற்பொழிவாளர் இராம செயம் என்று கூறி அரசனை மகிழ்விப்பார். வழக்கம்போல் அரசர் முன்பு சொற்பொழிவு செய்த புராணிகருக்கு உடல் நலம்இல்லாமல்போய்விட்டது. அவர் தம் முடைய மகனைச் சொற்பொழிவுக்குஅனுப்பினார். இராமபிரானுக்குத்துன்பம்நேர் வதாகவருஞ்சமயங்களில்இராம செயம் என்று கூறுக என்று சொல்லியனுப்பி யிருந்தார். சொற்பொழிவில் இராவணன் மாரீசனைக் கொண்டு சூழ்ச்சி செய்து சீதையைக் கவர்ந்து சென்றான் என்று வருகிற இடத் தில் மகன் இராமசெயம் கூற மறந்து போனார். அரசர் படை யுடன் எழுந்து சீதையைமீட்கப் புறப்பட்டார். அப்பொழுது இராமபிரான் சீதையோடும் இலட்சுமணரோடும் காட்சி தந்து சீதையை மீட்டுவந்தேன் என்று கூறினார் அரசர் சினந் தணிந்து நகரடைந்தார்.

**இராமாயணம்** - இராமபிரானது வரலாறு கூறும் நூல். வட மொழியில் வால்மீகி முனிவர் இராமாயணஞ் செய்தார். தமிழில் கம்பர் இயற்றினார். கம்பரால் இயற்றப்பட்ட இரா மாயணம் கம்பராமாயணம் என்னும் பெயரோடு வழங்கு கிறது. கம்பராமாயணத்தின் பிற்பகுதியாகிய உத்தரகாண் டம் ஒட்டக்கூத்தரால்இயற்றப் பட்டது.

**இராயலசீமை** - ஒரு பீடபூமி. ஓராண்டின் சராசரி மழை 25 அங்குலத்திற்கும் குறைவு. வடபகுதியில் துங்கபத்திரை ஆறும், தென்பகுதியில் வட பெண்ணையாறும் பாய்கின்றன. பெரும்பாலும் கரிசல் நிலமா கையால் பருத்தி பயிரிடப்படு கிறது. சில புன்செய்த் தானி யங்களும் விளைகின்றன. விவ சாயங்களும் கைத்தொழில் களும் குறைவு. இராயலசீமை யில் கடப்பை, கர்நூல் அநந்தப் பூர் மாவட்டங்களும், பல்லாரி மாவட்டத்தின் சில தாலுக்காக் களும் அடங்கும். பல்லாரியி லும் ஆடோனியிலும் பருத்தி ஆலைகள் உள்ளன.

**இராவணன்** - விசிரவசுவிற்குக் கேசியிடம் பிறந்தவன். தவஞ் செய்து சிறந்த வரபலங்களை யடைந்து இலங்கையை அர சாண்டான். இவன் சீதையைக் கவர்ந்து அசோகவனத்தில் சிறை வைத்தபடியால் விரை வில் அழிந்தொழிந்தான். இரா மாயண நூல் இவனுடைய வர லாற்றைக் கூறுவதற்கு எழுந்த நூலேயாகும்.

**இரிசிகர்** - இவர் பிருகு ரிஷியின் புதல்வர். இவர் தமக்குச் சத்தியவதியை மனைவியாக்கு மாறு காதியை வேண்டினார். அதற்கு அவர் "ஒரு காது பசு மையும் மற்றைய உறுப்புக்கள் வெண்மையுமான ஆயிரங் குதிரைகளைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு மணந்து கொள்க" என்று கூறினார். இவர் வருணனிடம் ஆயிரங் குதிரைகள் பெற்றுக்கொடுத்து விட்டுச் சத்தியவதியைமணந்து கொண்டார். இவருடைய புதல்வர் சமதக்கினி. இவரை மாமியாரும் மனைவியும் மகப் பேறு வேண்டுமென இரந் தனர். இவர் மந்திரமூலமான

அவிசைப் பாகஞ் செய்து வைத்துவிட்டு நீராடுதற்குச் சென்றார். சத்தியவதி தனக் கென்று வைத்திருந்ததைத் தன் தாய்க்குக் கொடுத்துவிட்டு மற்றதைத் தான் புசித்தனள். நீராடச்சென்றமுனிவர் திரும்பி வந்து நிகழ்ந்துள்ள மாறு பாட்டை உணர்ந்தார். மனை வியைப் பார்த்து, "உன்னிடம் தண்டநாயகனும், உன்தாயிடம் பிரமஞானியும் பிறப்பர்" என்று கூறிவிட்டுத் தம் மனைவியைப் பிரிந்து சுவர்க்கத்திற்குச் செல லத் தொடங்கினார். சத்தியவதி பிரிவாற்றாமல் பின் தொடர்ந் தாள். முனிவர் திரும்பிப்பார்த் தார். கட்டளையில்லாமல் வந்த தால் கௌசிகி நதியாகுக வெனச் சாபமிட்டுச்சென்றார். இவளும் அவ்வாறேயானாள்.

**இருங்கோவேள்** - இவன் பதி னெண்குடி வேளிர்களில் ஒரு வன். தமிழ்நாட்டின் வட பகுதியாகிய எருமைநாட்டைச் சேர்ந்த துவரையென்னும் ஊரி லிருந்து ஆட்சிபுரிந்த வேந்தர் வழிமுறையில் வந்தவன். இத் துவரை துவரசமுத்திரம் எனப் படுகிறது. இருங்கோவேள் அவ்வேளிருள் நாற்பத்தொன்ப தாவது தலை முறையில் வந்த வன். புலிகடிமால் என்பது இவனுடைய குடி முதல்வனுக் குப் பெயர். இவ்வேளிர்கள் வள்ளன்மையிற் சிறந்து விளங் கியதோடு போராண்மையிலும் பேராண்மை யுடையவர்களா கச்சிறந்து திகழ்ந்தனர். இருங் கோவேளைக் கபிலர் பாடி யுள்ளார்.

**இரேணுகை** - இவள் இரேணு என்னும் அரசனுடைய மகள் எனவும், வருமராசன் மகளென வும் உரைப்பர். இவள் சமதக் கினி முனிவருடைய மனைவி. ஒருநாள் தண்ணீர் கொண்டு வரச் சென்றாள். தண்ணீரில் ஒரு கந்தருவனுடைய நிழலைக் கண்டு மயங்கினாள். அதனால் சமதக்கினி முனிவர் இவள் மீது சினங்கொண்டார். இவளைக் கொலை செய்யுமாறு மகனாகிய பரசுராமருக்குக் கட்டளையிட் டார். அவரும் இவளைத் தலை வேறு உடல் வேறாகுமாறு வெட்டிக்கொன்றார். பிறகு பரசுராமர் தந்தையை வேண்டி இவளை எழுப்பினார். அப் பொழுது இவளுடைய தலை வேறோர் உடலில் பொருத்தப் பட்டபடியினால் இவள் நிலைதடு மாறினாள். முனிவர் இவளைப் பார்த்து "கிராமங்களிற் சென்று தெய்வமாகி மக்களுக் குண்டான நோயைப்போக்கி வழிபாடு பெறுக" என்று ஏவினார். பலவிடங்களில் தலை மட்டுமாக வைக்கப்பட்டுள்ள சிலை இவளுடைய தலையே என்பர்.

**இலக்கன்** - ஆனைமுகக்கடவு ளுடைய புதல்வர்கள் இருவரில் ஒருவன். இவன் புத்தியி னுடைய மகன்.

**இலாபன்** - ஆனைமுகக்கடவு ளுடைய புதல்வர்கள் இருவரில் ஒருவன். இவன் சித்தியி னுடைய மகன்.

**இலக்குமணன்** - தசரத மன்ன னுக்குச் சுமித்திரையிடம் பிறந்தஇரட்டைப்பிள்ளைகளில் ஒருவன். இவன் இராமனோடு நட்புக்கொண்டு இராமனுக்குத் தொண்டு செய்வதையே தன் னுடைய கடமையாகக் கொண் டிருந்தான். இராமனுஞ் சீதை யுங் காட்டிற்குச் சென்ற பொழுது இவனுங் கூடச் சென்று இராமபிரானுக்கு வேண்டிய உதவிகளைச் செய் தான். சனகன் மகள் ஊர் மிளையை மணந்தான். இரா வணன் இறந்தபிறகு இராம

பிரானுடைய கட்டளைப்படி விபீடணனுக்கு இலங்கையைப் பட்டங்கட்டினான். இறுதிக் காலத்திலே சரயுநதிக்கரையில் யோகு புரிந்து வைகுண்டம் அடைந்தான்.

**இலம்பாடிகள்** - இவர்கள் மைசூர் நாட்டில் உள்ள ஒரு வகை நாடோடிச் சாதியினர். இவர்கள் காடுகளில்தான் அதிகமாக வசிப்பர். இவர்களுடைய மொழி மார்வாரி, குசராத்தி, தமிழ், தெலுங்கு, கன்னடம் முதலியன கலந்த கலப்பு மொழியாகும். மொகலாயர்கள் தெற்கே படையெடுத்து வந்தகாலத்தில் அவர்களுக்கு உணவுமுதலியவைகளைத்தூக்கி வந்தவர்கள் இவர்கள் என்று ஆராய்ச்சியளர்கள் எண்ணுகின்றனர். இவர்கள் வீடு கட்டிக்கொண்டு நிலையாக வாழ்வதில்லை. மக்களுக்குத் தேவையான பொருள்களைத் தொகுத்து ஊர் ஊராகச் சென்று வாணிகஞ் செய்வர். இலம்பாடிப் பெண்கள் நல்ல உடற்கட்டு வாய்ந்தவர்கள். பெருஞ்சுமையோடு பலமைல் தொலைநடந்து செல்லக் கூடிய பலம் வாய்ந்தவர்கள். இவர்கள் ஊருக்கு வெளிப்புறத்தில் மைதானங்களில் தங்களுடைய குடில்களை அமைத்துக்கொள்ளுவார்கள். இவர்கள் வனசங்கரி என்னுந் தேவதையை வழிபடுகின்றனர். கண்ணன் அங்காளம்மன் முதலிய தெய்வங்களையும் வழிபடுவதுண்டு. தற்காலத்தில் இவர்கள் நாகரிகமடைந்து முன்னேறி வருகின்றனர்.

**இலவந்திகைப்பள்ளி** - நீரை வேண்டுமளவும் நிறைக்கவும் போக்கவும் வல்ல பொறிகள் அமைந்த வாவியை நடுவிடத்தே பெற்று நறுமணம் வீசும் மலர்கள் நிறைந்த பலவகையான மரங்கள் நிறைந்து சிறந்த அழகுடன் விளங்கும் பூம்பொழிலாகும். இத்தகைய இலவந்திகைப் பள்ளிகள் அரசனும் அவன் மனைவி முதலானவர்களும் அமர்ந்து இனிது பொழுது போக்குவதற்காக அரண்மனையைச் சுற்றிய இடங்களில் அமைக்கப் பெற்றிருந்தன.

**இலவன்** - இவன் இராமபிரானுடைய மகன். வான்மீகரால் காவல் காரணமாகத் தருப்பையின் அடிப்புறத்தால் தடவப் பெற்றபடியினால் இவ்வாறு பெயர் பெற்றான். குசன் என்பவன் இவனுடன் பிறந்தான். இலவன் சரசுவதி என்னும் நாட்டை ஆண்டான் என்பர்.

**இலிங்கபுராணம்** - இது பதினோராயிரங்கிரந்த முடையது. பதினெண்புராணங்களுள் ஒன்று.

**இலிங்க ரெட்டியார்** - துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் காலத்தில் வாழ்ந்திருந்தவர். திருவெங்கை உலாவிலே சிவப்பிரகாச சுவாமிகளால், "பண்டையறத்தின் படிவமிது வென்னவுருக் கொண்ட இலிங்கையன்" என்று பாராட்டிப் பாடப்பெற்றவர். திருவெங்கை என்னும் வெங்கனூரிலே சிவபிரானுக்குத் திருக்கோயில் கட்டியவர். தெலுங்கு ரெட்டி வழிமுறையைச் சேர்ந்தவர். சிவப்பிரகாச சுவாமிகட்கும் சுவாமிகளின் உடன்பிறந்தார்கட்கும் இவர் வேண்டிய உதவிகளைச் செய்து கொண்டிருந்தார்.

**இளந்தத்தன்** - இவன் ஒரு புலவன் இவன் சோழன் நலங்கிள்ளியிடம் பரிசு பெற்றுக் கொண்டு காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளியிடம் பரிசு பெறச்சென்றான். இவனை ஒற்ற

னென்று மாறுபாடாக எண்ணிய நெடுங்கிள்ளி கொலை செய்யக் கட்டளையிட்டான். கோவூர்கிழார் உண்மையை உணர்த்தி இளந்தத்தன் உயிரைக் காப்பாற்றினார்.

**இளந்திரையன்** - இவன் தொண்டைமான் இளந்திரையன் எனவும், திரையன் எனவும் வழங்கப்படுகிறான். இவன் இளந்திரையம் என்னும் நூலொன்று இயற்றியிருப்பதாகக் கூறப்படுகிறது. இவன் பெயரால் திரையனூர் என்னும் பெயருடன் ஊர் ஒன்று இருந்ததாகவுந் தெரிகிறது. இவன் ஆதொண்டைச் சக்கரவர்த்தி என்று திருமூல்லைவாயிற் புராணத்தில் கூறப்படுகிறான்.

**இளமையாக்கினார்** - திருத்தில்லையில திருப்புலீச்சுரம் என்னுமிடத்தில் எழுந்தருளிய இறைவனுடைய சிறப்புப் பெயர். புலிக்கால் முனிவரால் அமைத்து வழிபாடு செய்யப்பட்ட இவ்விறைவர் இவ்வாறு பெயரடைந்தது திருநீலகண்ட நாயனாருக்கும் அவருடைய மனைவியாருக்கும் இளமைத் தன்மையைக் கொடுத்தமையினாலே தான்.

**இளம்பஞ்ச பாண்டவர்** - இவர்கள் பாண்டவர்கள் ஐவருக்கும் துரோபதையிடம் பிறந்தவர்கள். தந்தையரைப் போன்றேயிருப்பர். இவர்களைப் பாண்டவர்கள் என்று எண்ணிய அசுவத்தாமன் பாசறைப் போரில் கொன்று விட்டான். இதனை உணர்ந்த துரியோதனனும் உள்ளம் வருந்தினான்.

**இளம்பூரணர்** - தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய அறுவருள் இவர் முதல்வர். இவர் மூதன்முதலாகத் தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய படியால் உரையாசிரியர் என்று பிற ஆசிரியர்களால் பாராட்டப்பெறுகிறார். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் இவரைக் குறிப்பிடும் பொழுதெல்லாம் உரையாசிரியர் என்றே குறிப்பிடுகின்றனர். அடியார்க்கு நல்லார் தம்முடைய சிலப்பதிகார உரையிலே, "உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள்" என்று எழுதியுள்ளமையால் உரையாசிரியர் என்ற பொதுப் பெயரால் வழங்கப்பெற்றவர் இளம்பூரணரே என்று நன்கு பெறப்படுகிறது. இவருடைய உரை இனிய எளிய நடையில் அமைந்தது. தொல்காப்பியச் சூத்திரங்களை நன்குவிளக்கிச் செல்வது. இப்பொழுதுள்ள தொல்காப்பிய உரையில் இவருடைய உரை ஒன்றுமட்டுந்தான் தொல்காப்பியம் முழுமைக்குங் கிடைக்கிறது. பிற உரையாசிரியர்கள் இவருடைய உரையைச் சிலவிடங்களில் மறுத்திருப்பினும் இவரிடம் நன்மதிப்புடையவர்களே.

**இளம்பெருமானடிகள்** - இவர் பொய்யடிமையில்லாத புலவர் கூட்டத்தைச் சேர்ந்தவர். இவர் சிவபெருமான் திருமும்மணிக் கோவை என்னும் நூலைப் பாடியிருக்கிறார். அந்நூல் பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**இளவெளிமான்** - இவன் பெருங்கொடையாளியாகிய வெளிமான் என்பவனுடைய இளவல். வெளிமான் தன்னை நாடி வரும் பரிசிலர்க்குப் பெருங்கொடை வழங்கும் பெற்றியுடையவன். பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் பரிசில் நாடி வெளிமானிடம் சென்றார். இறக்கும் நிலையிலிருந்த அவன் தன்னுடைய இளவலிடம்

பெருஞ்சித்திரனார்க்குப் பெரும் பரிசிலளிக்குமாறு கூறினன். ஆயினும் இளவெளிமான் தன்னுடைய முன்னவன் கூறியபடி கொடாமல் சிறிதே கொடுத்தான். புலவர் அதனை ஏற்றுக் கொள்ளாது குமணனிடஞ் சென்று பரிசில் பெற்று வந்து யானையோடு கூடிய பரிசிலை இவனிடங்கொடுத்து இரவலர்க்கு வழங்குமாறு கூறி இவனை இகழ்ந்து பாடிச் சென்றார்.

**இறவாத்தானம்** - காஞ்சிமா நகருக்கு வெளியில் கோனேரிக் குப்பத்திலுள்ளது. சதுரமான இதன் உச்சியின் மேடையில் நான்கு நந்தியுருவங்களும் அந்தராளமண்டபச் சுவர்களில் இராவணனுக்கு அருள் செய்யும் கைலாசநாதரும் ஊர்த்துவ தாண்டவமூர்த்தியும்உள்ளனர் இக்கோயில்இராசசிம்மன்காலத்தாகும். காஞ்சிப் புராணத்தில்இறவாத்தானத்துடன்கூறப் படும் பிறவாத்தானம் என்னும் கோயிலும் இதன் எதிரே உள்ளது.

**ஈசாப்** - இவர் கிரேக்க நாட்டில் சேமர்ஸ் என்ற தீவைச் சேர்ந்தவர். ஏறக்குறைய கி. மு. 620க்கும், 560க்கும் இடையே வாழ்ந்தவர். இவர் மும்முறை அடிமையாக விற்கப் பெற்றார். மூன்றாம் முறை இவரைவிலைக்கு வாங்கியவர் இவருடைய அறிவுத் திறமையைப் பாராட்டி விடுதலை செய்தார். இவர் தெளிந்த அறிவும் நகைச்சுவையும் இருபொருள்படப் பேசும் ஆற்றலும் கற்பனைத்திறனும் அமையப் பெற்றிருந்தார். இவர் காலத்தில் கிரேக்க மன்னர்கள் தம் விருப்பம் போல் அரசாட்சி செய்து கொண்டிருந்தனர். அவ்வரசர்களின் கொடுங்கோன்மையையும் அவர்களுடைய ஆட்சியின் கீழ் மக்கள் அடைந்த கொடுமைகளையும் மறைமுகமாகக் கண்டிக்கும் நோக்கத்தோடு ஆங்காங்கு சில கதைகளைச் சொன்னார். இவருடைய கதைகளில் வரும் பாத்திரங்கள் யாவும் விலங்குகளே. கதைகள் மிக எளியவை. மக்கள் தங்களுடைய வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டிய நன்னெறிகளையும் விலக்க வேண்டிய தீயஒழுக்கங்களையும் விலங்குகள் நடித்துக் காட்டுகின்றன. ஈசாப் கதைகள் இன்று நமது நாட்டில் நன்கு பரவி எல்லாராலும்பாராட்டப் பெறுகின்றன.

**ஈரோடு** - நான்முகனுடைய தலையைப் போரில் காளி உடைத்தாள். அப்பொழுது தலை நான்கு பகுதிகளாகச் சிதறி நான்கு இடங்களில் விழுந்தது. ஈர ஓடு விழுந்த இடம் ஈரோடு என்று பெயர் பெற்றது. வெள்ளையோடு விழுந்த இடம் வெள்ளோடு என்று பெயர் பெற்றது. சிறிய ஓடு விழுந்த இடம் சித்தோடு என்று பெயர் பெற்றது. பெரிய ஓடு விழுந்த இடம் பேரோடு என்று பெயர் பெற்றது ஈரோட்டிற்கு உறந்தை, மறந்தை, கபாலபுரி என்னும் வேறு பெயர்களும் உள்ளன.

இவ்வாறன்றித், "துருவாச முனிவர் பாற்கடலில் பள்ளி கொண்ட பெருமாளைக் காணச் சென்றபோது மது, கயிடவர் என்ற வாயில் காவலர்கள் துருவாசரைத் தடுத்து நிறுத்தினர். பெருமாள் வழிபாடடிற்கு இடையூறு செய்ததால் முனிவர் சினமடைந்து அவர்கள் தலை வெடிக்குமாறு சாபமிட்டனர். வெடித்த தலைகள் சிதறிவிழுந்து முன் கூறியவாறு பெயர் பெற்றன வெனவுங் கூறுவர்.

**உக்கிரசேனன்** - இவன் யதுகுல மன்னனாகிய ஆகுகனுடைய மகன். வடமதுரையில் இருந்து அரசு புரிந்தவன். இவனுடைய மனைவியின் பெயர் காஞ்சனை. கஞ்சனைப் பெற்றவன் இவனே.

**உஞ்சன்** - வத்தவ நாட்டில் கௌசாம்பி நகரில் இருந்தவன். பதுமினி என்னும் பார்ப்பன மாதின் தீயொழுக்கத்தை வெளிப்படுத்தி அவளைக் கொலை செய்யும் நிலைக்குக் கொண்டு வந்தவன்.

**உதிதன்**-கௌதமி யாற்றினருகே இருந்ததாது பூந்துறை என்னும் நகரில் இருந்தவன். அந்தணர் குலத்தினன். இவனுடைய தந்தையின் பெயர் மாதவசன் மன். உதிதன் குல ஆசாரங்களை விட்டுத் தீய ஒழுக்கங்களை மேற் கொண்டு திரிந்தபடியால் இவனுக்குத் துராசாரன் என்று பெயர் உண்டாகியது.

**உத்தமன்** - தான் அழிந்தொழிந் தாலும் பிறர் வாழ வேண்டும் என்று எண்ணுபவன் உத்தமன். மூவகை மனிதர்களில் தலை சிறந்தவன் இவனே.

**உத்தாகுரு**-போகபூமியில் ஒன்று. இஃது இமயம் ஏமகூடம், நிடதம், மேரு முதலியவை கட்கு அப்பாலிருப்பது. எப்பொழுதும் பகல் போலிருக்கும். அநுமான் சஞ்சீவியின் பொருட்டுச் சென்றபோது இதனைக் கண்டு பொழுது விடிந்த தென்று திடுக்கிட்டான். பிறகு வேறு கண்டம் என்று தெளிந்து தேறினான்.

**உத்தரப்பிரதேசம்** - இந்திய அரசியல் சட்டம் நடைமுறைக்கு வந்தபோது, ஆக்ரா, அயோத்தி சேர்ந்த ஐக்கிய மாகாணம் என்பது உத்தரப் பிரதேசம் என்று பெயரிடப் பட்டது.

**உத்தாலகர்** - தௌமியர் மாணாக்கர். இவருடைய மகன் சுவேத கேது. பெண்கள் பிற ஆடவர் களைத் தழுவக் கூடாது என்னும் முறையை உலகில் முதன்முதலாக உண்டாக்கியவர் இவரே என்பர்.

**உத்தானபாதன்** - சுவாயம்பு மனுவுக்கும் அரசி சதரூபிக்கும் பிறந்த இரண்டாம் மகன். இவனுடைய முதல் மனைவியின் பெயர் சுநீதி இரண்டாம் மனைவியின் பெயர் சுருசி. சுநீதிக்குத் துருவனும் சுருசிக்கு உத்தமனும் மக்களாகப் பிறந் தனர். இவன் சுருசியின் மேலும் உத்தமன் மேலும்கொண்டிருந்த ஆசையால் தன் முதல் மனைவியையும் துருவனையும் வெறுத் துப் புறக்கணித்தான். துருவன் மனம் புழுங்கிக் காட்டை யடைந்தான். நாரதமுனிவரிடம் அருளுரை பெற்றான். திருமாலை நோக்கித் தவம் புரிந் தான். என்றும் அழியாத துருவ நட்சத்திரமாக விளங்கும் பெருமை பெற்றான். உத்தமன் மிகவுந் தீயவனாக விருந்தான். இவன் வேட்டைக்குச் சென்ற பொழுது ஒருவனால் கொல்லப் பட்டான்.

**உபநிடதங்கள்** - இவை மறைகளின் முடிவுப் பகுதிகளாக அமைந்துள்ளன. ஆகவே இவைகள் வேதாந்த மெனவுங் கூறப்படுகின்றன. உபநிடத் என்னுஞ் சொல்லுக்கு முயற்சி யுடன் அண்மையில் உட்காருவது என்று பொருள். முன்னாளில் மறுமையில் நாட்டமுடைய பலர் முனிவர்களிடம் போய்த் தத்துவ விசாரஞ் செய் தனர். அவர்கள் போதித்த உண்மைகளை உபநிடதங்கள் என்று பெயர் பெற்றன. உப நிடதங்களில் நுண்ணிய கருத் துக்கள் உரைக்கப்பட்டிருக்கின்

னை. அக்கருத்துக்களைமட்டுமே உபநிடதங்கள் என்று கூறுவதும் உண்டு. உபநிடதம் என்னும் பெயருள்ள நூல்கள் இப்பொழுது இருநூறு வரையில் உள்ளன. உபநிடதங்களின் பொருளை உணரவேண்டுமானுல் பிரமம் ஆன்மா என்பவைகளின் பொருளை நன்கு உணரவேண்டும். எங்கும் நிறைந்திருப்பது பிரமம்; ஒவ்வொருவருக்கும் உள்ளே நின்று இயங்கும் பொருள் ஆன்மா. இவை இரண்டும் ஒன்றே என்று உபநிடதங்கள் கூறுகின்றன. இவைகளை விளக்க வேண்டிய முறையில் தக்கவாறு விளக்கி மெய்யறிவை யுண்டாக்குதலே உபநிடதங்களின் முடிவாகும்.

**உய்யவந்த தேவநாயனுர்** - இவர் வடநாட்டில் இருந்து தென்னுட்டிற்கு யாத்திரை வந்தார். காவிரிக் கரையில் சில காலந் தங்கியிருந்தார். அப்பொழுது திருவியலூர் ஆளுடைய தேவநாயனுர் இவரைக் கண்டு பணிந்து அருளுரை பெற்றுர்.

**உருக்குமன்** - போச கூடம் என்னும் நகரில் இருந்தவன். விதர்ப்ப நாட்டை உரிமையாகப் பெற்றிருந்தவன். உருக்குமணியோடு உடன் பிறந்தவன். சூதாடுதலை மேற்கொண்டிருந்த இவன் ஒருமுறை பலராமரோடு சூதாடினுன். பலமுறையும் இவனே வென்றுன். ஒருமுறை பலராமர் வென்றதையும் மறுத்துரைத்து இகழ்ந்தான். அவர் சினங் கொண்டு அடித்தார் அதனுல் இவன் மாண்டொழிந்தான்.

**உருத்திரகோடீச்சுரம்** - திருக்கழுக்குன்றத்தில் கோடி உருத்திரர்கள் பூசித்து வழிபட்டமையின் திருக்கழுக்குன்றம் உருத்திரகோடீச்சுரம் என்னும் ஒரு பெயரையும் பெற்று விளங்குகிறது.

**உருத்திரகோட்டம்** - காஞ்சியில் உள்ள கோட்டங்கள் நான்கில் இஃதொன்று. இஃது ஏகாம்பரநாதர் எழுந்தருளிய சிவாலயமாகும்.

**உரோமபாதன்** - உரோமபாதன் எனின் மயிர் பொருந்திய பாதங்களை உடையவன் என்பது பொருள். தசரத மன்னன் கோசல நாட்டை ஆளுகின்ற காலத்தில் இவன் அங்க நாட்டின் அரசனுக இருந்தான். கொடுங்கோன்மையை மேற்கொண்டிருந்தபடியால் நாட்டிலே பல ஆண்டுகள் மழை பெய்யாமற் போய் விட்டது. மக்கள் மிகுந்த துன்பமடைந்தனர். அரசன் மனம் வருந்திப் பெரியோர்களை அழைத்து மழை பெய்விக்கும் சூழ்ச்சியைப்பற்றி வினவினுன். அவர்கள் காட்டில் தவஞ் செய்துகொண்டிருந்த விபாண்டகரின் புதல்வராகிய ரிசிய சிருங்கர் என்னும் கலைக் கோட்டு முனிவரை அழைத்து வந்து அரசனுடைய மகளாகிய சாந்தையை அவருக்குத் திருமணஞ் செய்து கொடுத்தால் மழைபொழியும் என்றனர். மன்னன் சில பெண்களை யனுப்பிச் சூழ்ச்சியாக முனிவரைத் தன்னுடைய நாட்டுக்கு வரவழைத்தான். மழைபொழிந்தது மன்னன் தன்னுடையமகளை முனிவருக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். இச்செய்திகளைச் சுமந்திரன் தசரத மன்னனுக்குச் சொன்னுன். தசரத மன்னன் அங்கநாட்டுக்கு நேரிற்சென்று உரோமபாதனுடைய உடன்பாட்டோடு முனிவரையும் மனைவியாகிய சாந்தையையும் தன்னுடைய நாட்டுக்கு அழைத்து வந்தான். முனி

வரைக் கொண்டு மகப்பேற்று வேள்வி செய்தான். அதனால் இராமர் முதலிய மக்கள் தோன்றினர்.

**உரோம முனி** - இவர் புசுண்ட முனிவருடைய புதல்வர். உடல் முழுவதும் மயிர்முளைத்திருந்த படியால் உரோபமுனி என்று காரணப்பெயர் பெற்றார். ஒரு நான்முகன் இறந்தால் இவருடைய மயிர் ஒன்று உதிரும். இவ்வாறு மூன்றரைக் கோடி நான்முகர்கள் இறந்தால் இவருக்குவாழ்நாள் முடிவு. இவரிறந்தால் அட்டகோண முனிவருக்கு ஒருகோணல் நிமிரும்.

**உலுண்டாக்கன்** - கௌமார பாண்டியன் காலத்தில் பாண்டி நாட்டின் மேல்மலையில் பரிமங் கலம் என்னும் ஊரில் இருந்த குறுநில மன்னன். இவன் வஞ்சகக்குணமும் பேராசையும் உடையவன். அந்நாளில் அந்தணர்கட் குரியதாக விருந்த திருப்பெருந்துறை யென்னும் ஊரை இவன் கைப்பற்றிக் கொண்டு அந்தணர்கட்கு அல்லல் செய்தான். அவ்வூர்க் குரிய முந்நூறு அந்தணர்களும் கௌமார பாண்டியனிடம் முறையிட்டுக் கொண்டனர். இளைஞராக இருந்த அப் பாண்டியன் இருதிறத்தாரை யும் நன்கு உசாவினான். அவ் ஊர் அந்தணர்கட்குரியதே என்பதைத் தெய்வத் திருவரு ளால் உணர்ந்த பாண்டியன் ஊரை அந்தணர்கட்கு உரிமை யாக்கியதோடு இந்த உலுண் டாக்கனையும் நன்கு ஒறுத்தான்.

**உலோபா முத்திரை** - விதர்ப்ப தேசத்து அரசன் மகள். அகத்தியர் மனைவி. அகத்தியர் என்னும் பெயருடையவர்கள் பலர். இவளை மணந்த அகத் தியர் உலோபாமுத்திரை அகத் தியர் என்று பெயர் பெற்றார்.

**உவசம்பனி** - இவன் சனுரு முனி வனுடைய மகன். இவன் பாம்பு கடித்து இறந்தான். ஓர் எறும்பு இறந்துபோன மற்றோர் எறும்பின் உடலைச் சுமந்துகொண்டுபோய்ச் சுவர்க் கத் துவாரத்தில் வைத்தது. உடனே இறந்த எறும்பு உயிர் பெற்றது. அவ்வெறும்பைப் பார்த்து விட்டுச் சனுருமுனி வனும் தன்மகன் உடலினையும் சுவர்க்கத் துவாரத்தில் கொண்டு போய் வைத்தனன். அவ்வளவில் மகனும் பிழைத் தான். உயிர் பெற்றமகன் தான் உயிர் பெற்ற இடத்தில் ஒருபிடிமண் எடுத்தான். அந்த சிவலிங்கம் ஒன்று உண்டா யிற்று. அதனை அவிமுக்தம் என்பர்.

**உறையூர்** - பழைய உறையூர்; திருச்சிராப்பள்ளி சில்லாவில் பாண்ட மங்கலத்தில் இருப தடிக்குக் கீழ் இருக்கிறது. சாபக் கேட்டினால் மண்மாரி பெய்து முழுகியது.

**ஊசிமுறி** - இஃதொரு நூல். ஊசி முறி சங்கப்பாட்டு என்னும் இந்நூல் ஐம்பத்து நான்கு பாடல்களைக் கொண்டது. இடைக் காடர் இப்பாடல்களை இயற்றிச் சங்கப்புலவர் களுடைய சூழ்ச்சியை வீழ்ச்சி யடையச் செய்தார். அண்மைக் காலம் வரையில் உயிர்பெற் றிருந்த இந்நூல் இப்பொழுது இருப்பதாகத் தெரியவில்லை. மற்றைப் புலவர் இயற்றிய பாடல்களை எழுதிய சங்கப் புலவர்களால்இந்நூலின்பாடல் களை எழுதமுடியவில்லை. அத னால் இந்நூல் இப்பெயர் பெற்றது.

**எக்யசருமன்** - இவன் அங்க நாட்டு மறையவன். இவ

னுடைய மகன் பெயர் தரும சருமன். இவன் ஒருநாள் தருப்பை முதலியன கொண்டு வருவதற்குக் காட்டிற்குச் சென்றான் அங்கு மாலுதான முனிவர் என்பவர் தவஞ்செய்து கொண்டிருந்தார். அவர் மீது கல் மண் முதலியவைகளை விட்டெறிந்தான். அவர் தரும சருமனைப் பாறையாகுமாறு சபித்தார் இதனையறிந்த எக்ய சருமன் தன்மகனுகிய பாறையைத் தலைமீது சுமந்துகொண்டு போய்ப் பவானி கூடல் தீர்த்தத்தில் போட்டுச் சாபம் நீக்கினுன்.

**எச்சன்** - தக்கன் சிவபிரானை இகழ்ந்து வேள்விசெய்து அழிவடைந்தபோது அவ்வேள்வியை நடத்திய குரு.

**எட்டி குமரன்** - காவிரிப்பூம் பட்டினத்து வணிகன், அரசனுல் கொடுக்கப்பட்ட எட்டிப் பட்டம் பெற்றேன். மணிமேகலை உவவனஞ் சென்றதை உதயகுமாரனுக்குத் தெரியப் படுத்தியவன்.

**எயிற்பட்டினம்** - ஒய்மாநாட்டுத் துறைமுக நகரமாகும். இஃது உப்பங்கழி சூழ்ந்த ஊர்களையுடையது. இந்த எயிற்பட்டினம் இன்றுள்ள மரககாணம் என்னும் ஊரையடுத்துக் கடற்கரையில் சிறப்புற்றிருந்த துறைமுக நகரமாகும் இது கடலால் கொள்ளப்பட்டிருக்க வேண்டும், அல்லது மணல் களுக்கடியில் புதையுண்டிருக்க வேண்டும் என்று எண்ணுகின்றனர்.

**எல்லோரா** - இந்தியாவில் பாறையில் குடையப்பட்ட கோவில்களுள் மிகப்பெரியவை பீரார் பகுதியில் உள்ள எல்லோரா என்னும் இடத்தில் காணப்படுகின்றன. எல்லோராவில் ஒரு செங்குத்தான பாறையின் முகத்தில் குகைகள் ஒருமைல் நீளத்திற்கும் அதிகமாக இருக்கின்றன. இக்குகைக் கோயில்கள் நான்காம் நூற்றுண்டு முதல் பத்தாம் நூற்றுண்டு வரையுள்ள காலத்தில் மூன்று சமயத்தவர்களால் உண்டாக்கப்பட்டன. பௌத்தக் கோயில்கள் மிகவும் பழைமையானவை. இந்துக் கோயில்கள் நடுக்காலத்தவை. சைனக் கோயில்கள் எல்லாக் கோவில்களுக்கும் இறுதியில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இந்துக் கோயில்களுள் கைலாசம் என்னுங் கோவில் மிகச் சிறந்த வேலைப்பாடுடையது. இஃதுஒரேபாறையிற்குடையப் பட்டதாகும். இந்தியாவிற் காணப்பெறும் மிகச்சிறந்த சிற்பங்களில் சிலவற்றைக் கைலாசக் கோயிலில் காணலாம். சிவனைத் திரிபுராந்தகனுகவும் கங்காதரனுகவும், திருமாலைக் கருடவாகனனுகவும், இராவணன் தன்னுடைய தலைகளைச் சிவனுக்குப் பலியிடுவதாகவும் அமைக்கப்பட்டுள்ள சிற்பங்கள் மிகச் சிறந்தவைகளாக விளங்குகின்றன.

**எழினி** - சோழவள நாட்டில் மதுகை என்னும் ஊரில் இருந்த ஒரு குறுநில மன்னன். இவன் சிறந்த வள்ளலாக விளங்கியிருந்தான். அரிசில் கிழார் என்னும் புலவர் இவனைப் புகழ்ந்து பாடிய பாடல் புறநானூற்றில் உள்ளது.

**ஏமகூடம்** - எட்டுக் குலமலைகளில் ஒன்று. மேருவின் தெற்கு இமயத்திற்கப்பால் ஆயிரம் யோசனையில் உள்ள ஒருமலை.

**ஏறைக்கோன்** - சேர நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இருந்த ஒருகுறுநில மன்னன். இவன் குறவர்கள் பலருக்குத் தலைவனுக விளங்கி

னன். இவன் சிறந்த கொடையாளியாகத் திகழ்ந்தபடியால் புலவர்களுடைய பாராட்டுதலுக்கும் உரியவனாக விளங்கினான்.

**ஐதர் இலிங்கம்** - ஐதர் என்னும் மகமதிய மன்னனை ஏமாற்றும் பொருட்டுக் காஞ்சியில் அமைக்கப்பட்ட ஓர் இலிங்கம். ஐதர் படையெடுப்பின் போது கோவிலுக்கு வந்து ஏகாம்பர நாதர்க்கு ஏதேனும் பழுது ஏற்படுத்தக்கூடும் என்று எண்ணி அவன் பொருட்டுப் போலியாக அமைக்கப்பட்டது.

**ஐம்பெருங்குழு** - அரசர்க்குரிய இன்றியமையாத குழுவினராய் அரசியலை நடத்துபவர்கள் இவர்கள். அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதர், சாரணர் என்னும் இவர்களையே மேற்படி சொல் குறிக்கிறது.

**ஐயாதிச் சிறுவெண்டேரையார்** - இவர் பாண்டிவள நாட்டில் ஐயாதி என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய உடல் நிறம் சிறிது வெண்மையாக இருந்தபடியால் சிறுவெண் என்னும் அடைமொழியும் பெற்றார். இவருடைய பாடல் புறநானூற்றிற் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**ஐயனாரிதனார்** - புறப்பொருள் வெண்பா மாலையை இயற்றிய ஆசிரியர். இவர் தமிழ் நூல்களில் நல்லபுலமையுடையவர். தாம் சேர அரச மரபினராயினும் சோழ பாண்டியர்களையும் பாராட்டியிருக்கிறார். புறப்பொருள் வெண்பாமாலையை, இளம்பூரணர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார், நச்சினார்க்கினியர் முதலியோர் தமது உரைகளில் எடுத்து ஆண்டிருக்கின்றனர். ஆகவே இவர் மேற்படி உரையாசிரியர்கட்கெல்லாம் முற்பட்டவரென்பர்.

**ஐயூர்முடவனார்** - பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சியமாறன், வழுதி, சோழன், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், தாமான் தோன்றிக்கோன் முதலியவர்களைப் பாடிய தமிழ்ப் புலவர். உறையூர் முடவனாரெனவும் ஐயூர்கிழாரெனவும் இவருக்கு வேறு பெயர்களும் உண்டு.

**ஐயை** - மதுரை இடைச்சேரியில் இருந்த மாதரி என்பவளுடைய மகள். கோவலன் கண்ணகியோடு மதுரையை அடைந்தபொழுது இவளுடைய வீட்டில் தங்கினான். அப்பொழுது இவள் கண்ணகிக்கு உதவியாக அட்டில் தொழிலில் ஆக வேண்டியவைகளைச் செய்தாள். கண்ணகி சேர நாட்டில் தெய்வமான பிறகு அங்கு போய்க் கண்ணகியை வழிபட்டாள்.

**ஐராவதம்** - இந்திரனுடைய பட்டத்து யானை. இதுபாற்கடலிலே அமுதத்தோடு பிறந்தது. வெள்ளை நிறமுடையது. நான்கு கொம்புகளையுடையது. இது நிலவுலகில் சில இடங்களில் தெய்வவழிபாடு செய்ததாகப் புராணங்கள் கூறும்.

**ஓச்சன்** - இவனுக்கு உவச்சன் எனவும் பெயர் உண்டு. பார்ப்பனன் நாலாங் குலத்துக் கன்னிகையைச் சேரப் பிறந்தவன். காளிக்குப் பூசை செய்வதும் சிவன் கோவிலில் மத்தளம் முழக்குவதும் இவனுடைய வேலை.

**ஓலமிட்ட விநாயகர்** - திருவையாறு திருக்கோயிலில் எழுந்தருளிய பிள்ளையாருடைய பெயர். சுந்தரர் திருவையாற்றையடைய விரும்பி ஆற்றின் தென்கரையில் நின்று, "ஐயாறுடைய அடிகளோ?" என்றுஓலமிட்டுப் பாடினாராம்.

பிள்ளையார் சுந்தரர் ஓலமிடு தலைக் கேட்டுச் சிவபிரானுக் கறிவிக்கு முகமாகத் தாமும் ஓலமிட்டாராம்;அதனால்பிள்ளை யாருக்கு இவ்வாறு பெய ருண்டாயிற்றும்.

**கங்கம்மாள்** - இவள் ஒரு தீர்த்த தேவதை. இவள் வடநாட்டில் மட்டும் இருப்பதாகத் தெரி கிறது. மக்களுக்கும் மாக்களுக் கும் நோய் முதலிய துன்பங்கள் நேராதவாறு ஆடவர்கள் இவளை ஆராதிப்பர். இவளை ஆராதிக்கும் ஆடவர்கள் பெண் கோலம் பூண்டு கிராமத்தில் ஐயமேற்று அவ்வையத்தால் வந்த தானியத்தை உணவாக்கித் தேவதைக்குப் படைப்பர்.

**கங்கன்** - அவந்தி நாட்டில் உச்சைனி என்னும் நகரில் இருந்தவன். கள்ளுண்டு களித் தலையே தொழிலாகக் கொண்ட வன். இவனுடைய குடிவெறிச் செயல்கள் பெருங் கதையில் கூறப்பட்டுள்ளன.

**கங்காத்துவாரம்** - இதனை அரித் துவாரம் என்பர். இமயமலையி லிருந்து கங்கையாறு இங்கு தான் நிலத்தில் பாய்கிறது. இதனால் இவ்விடத்திற்கு இவ் வாறு பெயர் உண்டாகியது. இங்கு கங்கையின் விரைவு மிகக் கடுமையாக உள்ளது.

**கங்கை நீர்** - கங்கையாறு நில வுலக நடுவிற் செல்வதால் நிலத் தைத் தூய்மைப் படுத்துகிறது. கங்கை நீரைப் பருகுவதால் ஆயிரம் சாந்திராயண விரதஞ் செய்த பலன் உண்டாகும். ஒருவன் ஒரு திங்கள் கங்கைக் கரையில் வசிப்பனேல் அவன் எல்லாவகையான வேள்வி களுஞ் செய்த பலனை அடை வான். ஒருவனுடைய எலும்பு கங்கையில் விழுந்து எவ்வளவு காலம் கிடக்கிறதோ அவ்வளவு காலம் அவன் விண்ணுலகத்தில் இருப்பான். கங்கையில் உள்ள மண் சோகம் முதலியவைகளை நீக்கும். கங்கையைக் காண்ப தாலும் தொடுவதாலும் பருகுவ தாலும் எல்லாத் தீவினைகளும் நீங்கும்.

**கசன்** - தேவ குருவாகிய வியாழ னுடைய மகன். தேவர்கள் அசுரர்களைப் பலமுறைகொல்ல வும் அசுரர்கள் மீண்டும் மீண் டும் உயிர் பெற்றுத்தேவர்களை வருத்தினர். தேவர்கள் சுக்கிர னுடைய மிருத சஞ்சீவினி மந்திர பலத்தால் அசுரர்கள் உயிர் பெறுகின்றனர் என்று உணர்ந்து சுக்கிரனிடமிருந்து மேற்படி மந்திரத்தைக் கற்று வர இவனை அனுப்பினர்.இவன் சுக்கிரனிடம் வந்து பணிவிடை செய்து அம்மந்திரத்தைக் கற் றுச் செல்ல எண்ணியிருந்தான். சுக்கிரனுடைய பெண்ணாகிய தேவயானை கசனிடம் காதல் கொண்டு அவனைப் போற்றிக் காத்துவந்தனள். இவன் மந்தி ரம் கற்க வந்திருத்தலை அசுரர் கள் அறிந்தனர். கசன் ஒரு நாள் வேள்விப்பசுவை மேய்த் திருக்கும் பொழுது இவனைக் கொன்றனர். கசன் மீண்டு வராமையைக்கண்டதேவயானை நிகழ்ந்ததை யறிந்து தன் னுடைய தந்தையிடங் கூறிப் பிழைப்பித்தனள். மற்றொரு நாள் அசுரர்கள் இவனைக் கொன்று சுட்டெரித்துச் சாம் பரைக் கள்ளிற் கலந்து சுக்கிர னுக்குக் குடிக்கக் கொடுத்து விட்டனர். சுக்கிரன் நிகழ்ந் ததை உணர்ந்து கசனுக்குப் பிழைப்பு மூட்டி அவன் வெளி வந்ததால் தான் இறந்து பின் கசனால் உயிர் பெற்றான். கசன் தேவயானையின் காதலைப் பொருட்படுத்தாமையால் தேவ யானை கசனுக்கு மந்திரம் பலிக்காதிருக்குமாறு சாபங் கொடுத்து விட்டாள்.

**கஞ்சன்** - யதுகுல மன்னனாகிய உக்கிரசேனனுடைய மகன். தாய் பெயர் காஞ்சனை. இவன் தேனுகன், சாதுரன், கேசி, முரன், மூசன் முதலிய பொல்லாதவர்களைச் சேர்த்துக் கொண்டு கொடுந் தொழில்கள் பல புரிந்து கொடியவனாக விளங்கினான். இறுதியில் கண்ணபிரானால் இறந்தொழிந்தான்.

**கடபர்** - இவர்கள் ஆந்திர மாநிலத்தில் கஞ்சம் விசாகப்பட்டினம் முதலிய மாவட்டங்களில் வாழ்கின்றனர். இவர்கள் முண்டாரி குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மொழியைப் பேசுகின்றனர். இவர்கள்வேளாண்மைத் தொழிலைச் செய்யும் ஒருவகைப் பழங்குடிகளாவர். முன் காலத்தில் இவர்கள்பல்லக்குத்தூக்குபவர்களாகவும் தோட்டங்களில் கூலி வேலை செய்பவர்களாகவும் இருந்தார்கள். இவர்கள் சிற்றூர்களில் சிறு குடிசைகளை அமைத்துக் கொண்டு வாழ்கின்றனர்.

**கடுவெளிச்சித்தர்** - இவர் ஒரு சித்தர். முப்பத்திரண்டு கண்ணிகள் கொண்ட ஓர் ஆனந்தக் களிப்பை இவர் பாடினார். "பாபம் செய்யாதிரு மனமே-நாளை, கோபஞ் செய்தே எமன் கொண்டோடிப் போவான்" என்று இவருடைய பாடல் தொடங்குகிறது. "நந்தவனத்திலோர் ஆண்டி-அவன் நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி-கொண்டு வந்தான் ஒரு தோண்டி-அதைக் கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி" என்னும் இவருடைய பாடல் பகுதியைத் தமிழ்நாடு நன்கறியும். வைதோரைக் கூட வையக்கூடாது. குருவின் உரைப்படி நடந்து உலகப் பற்றைத் துறந்து யாரிடத்திலும் அன்புகாட்டிப் புலன்களை அடக்கி வாழ்ந்தால் பரமானந்தம் பெறலாம் என்பது இவருடைய கருத்து. சித்தர்களுக்கெல்லாம் இவர் பிற்பட்டவர் என்று தெரிகிறது.

**கட்டாஞ்சிமலை** - இம்மலையைச் சஞ்சீவிமலை எனவுங் கூறுவர். இம்மலை கொங்குவள நாட்டில் குருந்தமலைக்குத் தெற்கே ஆறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இம்மலையில் பல அருமையான மூலிகைகள் உள்ளன.

**கணேச நாதர்** - இவர் சாரசேஉச்சயனி என்னும் சிற்றூரில் தோன்றியவர். இவர் மெய்யறிவு பொருந்தியவராய்க் காட்டிற் சுற்றித் திரிந்து கொண்டிருந்தார். சிவாசி என்னும் அரசன் இவரைக் கண்டான். மெய்யறிவு கைவரப் பெற்றவர் என்று உணர்ந்தான். தன்னுடைய இல்லத்திற் கழைத்து வந்து மஞ்சத்தின் மீது படுக்கச் செய்தான். இவரோ படுக்கையின் மீது கற்களைப் பரப்பி விட்டு அதன்மீது படுத்தார். இவர் பல புதுமையானகாரியங்களைச் செய்தார்.

**கண்டக சேதகன்** - இவன் ஒரு வணிகன். இவனிடம் பொருளிருந்தது. ஆயினும் மிகப் பிசினன் ஆகையால் எத்தகைய அறமுஞ் செய்யான். இவன் திருக்குற்றாலஞ் சென்று அங்கு நடந்த திருவிழாவிற் கடை வைத்து இரண்டொரு நாள் வசித்தான். பிசினனாகவிருந்த போதினும் குற்றாலத்தில் வசித்த நல்வினையினால் வீடு பேற்றையடைந்தான்.

**கண்டகி** - மகத நாட்டிலுள்ள ஓர் ஆறு. இவ்வாற்றில் பாணலிங்கங்களும் சாளக்கிராமங்களும் அகப்படுகின்றன. ஆற்றில் நீராடச் செல்வோர் அவைகளைத் தேடியெடுப்பர். நல்

வினையாளர்கட்கு மட்டும் இவைகள் அகப்படுகின்றன.

**கண்ணுக் கினியான்** - தொண்டை வள நாட்டில் நேரி என்னும் ஊரில் இருந்தவன். இவனுடைய தம்பியின் பெயர் திருவேங்கடன். தம்பியாகிய திருவேங்கடன் சிறந்த வள்ளலாக இருக்கவும் இவன் மிகுந்த பிசினனாக இருந்தான். திருவேங்கடன் இரட்டைப் புலவர்களுக்குப் பொருள் கொடுத்ததை இவன் தடுத்தபடியால் அவர்கள் இவன்மீது வசை பாடிச் சென்றனர்.

**கண்ணுவர்** - இவர் அப்பிரதிரதன் என்பவருடைய மகன். இவருடைய மகன் மேதாதி. விசுவாமித்திரருக்கு மேனகையிடம் பிறந்த மகளாகிய சகுந்தலையை வளர்த்தவர். இவர் தவத்தில் இருந்தபொழுது இவரைப்புற்றுமூடி இவர்மீது ஒரு மூங்கில் முளைத்தது. இம் மூங்கிலை நான்முகன் வெட்டி மூன்று விற்கள் செய்தான் அவ்விற்களின் பெயர் காண்டீபம், பினகம், சார்ங்கம் என்பன. காண்டீபத்தைத் தான் வைத்துக் கொண்டான். பினகத்தைச் சிவபிரானுக்குக் கொடுத்தான். சார்ங்கத்தைத் திருமாலுக்குத் தந்தான். தம்மை மதியாத திருமாலையும் திருமகளையும் சிவமுனிவராகவும் மானகவும் பிறக்கச் சாபமிட்டார் இம்முனிவர்.

**கதலிவனம்** - திருக்கழுக்குன்றத்தின் தலமரம் வாழையாகலின் கதலிவனம் என்னும் ஒருபெயரும் திருக்கழுக்குன்றத்திற்குண்டு.

**கந்தன்** - கந்தம் எனின் நன் மணத்தையும் திரட்சியையுங் குறிப்பதாகும். முருகக்கடவுள் சரவணப் பொய்கையில் ஆறு குழந்தைகளாகப் பிறந்து உமா தேவியால் ஒன்று சேர்க்கப் பட்டமையின் இவ்வாறு பெயர் உண்டாகியது "அவ்வுருவம் ஆறினையும், கையால் எடுத்தணைத்துக் கந்தனெனப் பேர் புனைந்து" என்பது கந்தர்கலி வெண்பா.

**காந்தடையார்** - வாதூலகோத்திரம் முற்பட்டதாகையால் அதை முன்னிட்ட அரித கோத்திர முதலிய அறுவகைக் கோத்திரத்தார்க்கும் கந்தாடையார் என்று பெயர். இந்த அறுவகைக் கோத்திரத்தில் சேர்ந்தார் முதலியாண்டான், முடும்பை நம்பி, முடும்பையம்மாள், நடாதூரார், ஆசூரிப்பெருமாள், கிடாம்பிப்பெருமாள், குமாண்டூர் இளையவல்லி ஆச்சான், வங்கிபுரத்து நம்பி முதலியவரும் இவர்களுடைய வழிமுறையார்களும் ஆவர். இவர்கள் ஒருவருக்கொருவர் தொடர்பு கொள்ள வேண்டுமென்பது மணவாள மாமுனிகளுடைய கட்டுப்பாடு.

**கந்தாடை யாண்டான்**-எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். பிரம தந்திர சுதந்திர ீயர் திருவடி சம்பந்தி; முதலியாண்டான் குமாரர்.

**கந்து கேச்சுரம்** - காசியில் ஒரு சிவாலயம். இரண்டு இயக்கர்கள் போரிடுதலைக்கண்ட சிவபிரான், அவர்கள்மீது பந்தையெறிந்தார். அப்பந்துஅவர்களை வென்று சிவலிங்கமாக மாறியது. பந்தே இலிங்கமாக மாறியபடியில் கந்து கேச்சுரம் என்னும் பெயரையடைந்தது.

**கபந்தன்** - இவன் தநு என்னும் பெயருடைய காந்தருவன். இவன் ஒரு முனிவரிடம் சென்று அவரை எள்ளி நகையாடினன். அவர் சினமடைந்து "நீ இவ்வுருவத்தோடு அரக்கனாகுக" என்று சாபமிட்டார். பின்

ஒருகாலத்தில் இந்திரன் இவனைத் தன்னுடைய வச்சிரப் படையால் அடித்தான். அப்பொழுது தலை வயிற்றிற் புகுந்தது. ஆகவே இவன் வயிற்றில் தலையுடையவனுன். கபந்தன் என்பதன் பொருள் தலையற்ற முண்டமாக உள்ளவன் என்பது. இவனுடைய கைகள் ஒருயோசனை நீளமிருந்தன. இவன் அக்கைகளை நான்கு புறமும் நீட்டிக் கைக்கு அகப்பட்ட உயிர்த் தொகைகளையெல்லாம் இழுத்து வயிற்றிற் போட்டுக்கொண்டு திரிந்தான். இராமலட்சுமணர்கள் இவனுடைய கையிலகப்பட்டுக் கைகளைத் துணித்தபோது இவன் நற்கதி யடைந்தான்.

**கபால மோசனம்** - இஃதொரு சிவப்பதி; மகோதரனது கபாலம் ஒருமுனிவருடைய காலைப்பற்றிக் கொண்டு துன்புறுத்தியது. விடாமற்காலைப் பற்றிக் கொண்டேயிருந்த கபாலம் இப்பதியில் காலை விட்டு நீங்கியது. இவ்வாறு இப்பதி கபாலமோசனம் என்னும் பெயரை யடைந்தது.

**கபிலாச்சிரமம்** - கபில முனிவர் தவஞ்செய்து கொண்டிருந்த இடம்; இது பாதாலத்தில் உள்ளது என்பர். இவ்வுலகிலும் கபிலாச்சிரமம் உண்டு. இதற்குக் கபிலை எனவும் பெயர் உண்டு.

**கமலமுனி** - இவர் போகருடைய மாணவர்களில் ஒருவர். இவர் கம்மாள குலத்தினர் என்பர். பதினெண் சித்தர்களுள் ஒருவராக மதிக்கப்பெறுகிருர். ''கமலமுனி முந்நூறு'' என்னும் மருத்துவ நூல் இரேகை சாஸ்திரம் முதலிய நூல்களை இவர் செய்துள்ளார்.

**கமலவதி** - கோச்செங்கட் சோழனுடைய தாய். இவள்பிள்ளைப் பேற்றுத் துன்பப்படும் பொழுது காலக்கணிதர்கள், ''இப்பொழுது பிறக்கப் போகும் பிள்ளை இன்னும் ஒரு நாழிகை பொறுத்துப் பிறந்தால் உலகம் ஒருங்கையும் ஒருகுடைக் கீழ்ச் செங்கோல் செலுத்துவான்'' என்று கூறக் கேட்டு அந்நாழிகை வருமளவும் தன் கால்களைத் தூக்கி மேலே கட்டி வைக்கச் செய்து அந்நாழிகை வந்த பிறகு பிள்ளையைப் பெற்றவள்.

**கமலாசுரன்** - இவன் தேவரை வருத்திக் கொண்டிருந்தான். ஆனைமுகக் கடவுள் மயிலூர்தியில் எழுந்தருளி இவனைச் சங்கரித்தருளினர்.

**கரன்** - (1) விசிரவசு முனிவருக்கு இராகையென்பவளிடம் பிறந்தவன். சூர்ப்பநகையின் ஏவலால் காட்டில் இராமலட்சுமணர்களை எதிர்த்து இறந்தான். தூடணன், திரிசிரன் ஆகியோர் இவனுடன் பிறந்தவர்கள்.

**கரன்** - (2) இவன் கழுதை முகம் உள்ள ஓர் அசுரன். பாலியாற்றில் நீராடித் திருவிரிஞ்சையில் சிவபூசை செய்து வீடுபெற்ருன்.

**கரிவலம்வந்த நல்லூர்** - திருநெல்வேலி மாவட்டத்தில் சங்கரன் கோவிலுக்கு அண்மையில் உள்ள ஊர். குலசேகர பாண்டியன் வேட்டையாடிய பொழுது ஒருயானை அச்சமடைந்து ஒருபுதரைச் சுற்றி வந்தது. அவ்வளவில் அது சிவகணமாக உருமாறிநின்றது. அரசன் அப்புதரில் சிவலிங்கம் இருக்கக் கண்டு அதனை வழிபட்டனன். அதனுல் இவ்வூர் கரிவலம் வந்த நல்லூர் என்று பெயரடைந்தது. இத்

தலத்தைக் குறித்துப் பதிற்றுப் பத்தந்தாதி முதலிய நூல்கள் பாடப்பெற்றுள்ளன.

**கருடபஞ்சமி** - இது சுமங்கலிகள் கடைப் பிடிக்கும் விரதம். கருடனை நோக்கி ஆவணித் திங்கள் சுக்கிலபக்கப் பஞ்சமி யில் செய்வது. ஓர் அரச னுடைய மக்கள் எழுவரும் பாம்பினாற் கடியுண்டிறந்தனர். அப்பிள்ளைகளின் தங்கை இவ் விரதத்தை மேற்கொண்டு பாம் பின் புற்றையும் வழிபட்டு அப் புற்றின் மண்ணை நீரிற் கரைத்து இறந்த பிள்ளைகளின் மேல் தெளிக்க அவர்கள் உயிர் பெற்றெழுந்தனர்.

**கருமசன்மன்** - இவன் ஒரு மறை யவன். நல்லொழுக்கமில்லாத வனாய்த் தீத்தொழில்களைச் செய்து கொண்டு திரிந்தான். இறந்து மறு பிறப்பில் வேடனாகப் பிறந்தான். அரச னுடைய பசுக்களைக் கவர்ந்து கொண்டு சென்றான். ஒரு பசு நன்றாக நடக்கவில்லை. தாம தித்தால் அரசனுடைய சேவகர் கள் வந்து பற்றிக் கொள்வரே என்று அஞ்சினான். நடக்க முடியாத பசுவை ஒரு சிவன் கோவிலுக்குள் விரட்டி விட்டுத் தான் மற்றைய பசுக்களோடு சென்றான். கோவிலுக்குள் விரட்டப்பட்ட பசு கோவில் வேலைக்காரர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டபடியால் கன் றீன்றது. அப்பாலைச் சிவ பிரானுக்கு முழுக் காட்டினர். இந் நல்வினையினால் வேடன் நல்லறிவு பெற்று வீடு பேறடைந்தான்.

**கலங்கரை விளக்கு** - இது கடலில் வந்து கொண்டிருக்கும் கப்பல்களுக்குக் கடற்கரை அல்லது துறைமுகம் உள்ள இடத்தைக் காட்டப் பயன் படும். கப்பல்கள் மோதினால் தூளாக நொறுங்கி விடக் கூடிய கடற்பாறைகளின் இருப் பிடத்தை மாலுமிகளுக்குத் தெரியப்படுத்துவதற்காகவும்; புயலால் வழிதப்பிய மாலுமி களுக்குக் கடற்கரையைக் காட் டும் வழிகாட்டியாகவும் இது பன்னெடுங் காலமாகப் பயன்பட்டு வருகிறது. கப்பல் ஓடத் தொடங்கிய காலம்முதற் கொண்டே கலங்கரைவிளக்கு களுந் தோன்றிவிட்டன.

**கலிகணநாதர்** - இவர் தம்முடைய நாட்டை வீரசைவ நாடாக்க முயன்றார். எல்லாரையும் வீரசைவராக்கி வந்தார். ஒரு நாள் சிவபிரான் மனித வடிவத் துடன் இவர் முன்பு தோன்றி னார். அமைச்சர் முதலியோர் செய்யுந் தீமைகளைப் புகன்றார். அரசன் வந்தவரைப் பார்த்து நீர் வீரசைவராக வேண்டும் என்றான். வந்தவர் மறுத்தார். அரசன் வாளெடுத்து அச்சுறுத் தினான். சிவபிரான் தமது திரு வுருவைக் காட்டினார். அவ் வாறு காட்டியும் அரசன் அவரை விடாமல் சிவலிங்கத் தைக் கட்டி விட்டான்.

**கலிங்கன்** - ஐயாயிரம் ஆண்டு கட்கு முன்னர்க் கலிங்க நாட்டை ஆட்சி செய்திருந் தவன். போசகட மன்னனாகிய உருக்குமனுக்கு நண்பன். சூதாடு தலில் சகுனிக்கு அடுத்தபடி யாக இவன் புகழ் பெற்றிருந் தான். உருக்குமனும் பலராம ரும் சூதாடியபொழுது இவன் அடிக்கடி பலராமரை இகழ்ந்து நகைத்துக் கொண் டிருந்தான். சினங்கொண்ட பலராமர் நன்கு புடைத்தபடி யினால் பல்லுடைபட்டு ஓடி னான். இவன் துரியோதனன் முதலியவர்கட்கு நண்பனாக இருந்து துரியோதனனுக்குப் போரிலும் உதவி செய்தான்.

இக்கலிங்கன் சூதாடுதலைக் கற்றுக் கொண்டது சகுனியிடமாகையால் சகுனிக்கு அடுத்தபடியாக இவன் சூதாடுதலில் புகழ் பெற்றிருந்தான்.

**கலியாணபுரம்** - திருமகளான கோமளவல்லிக்கும் எம்பெருமானுன சாரங்க பாணிக்கும் திருக்குடந்தையில் திருமணம் நடந்தபடியால் திருகுடந்தைக்குக் கலியாணபுரம் எனவும் ஒரு பெயர் வழங்குகிறது.

**கலைக்களஞ்சியம்** - இதன் பொருள் கலைகளையெல்லாம் ஒன்ருகச் சேர்த்து வைக்கப்பட்ட இடம் என்பதாம். கலைகள் பலவகைப்படும். கலைகள் அறுபத்து நான்கு என்று வரையறை செய்யப்பட்டிருப்பினும் இவற்றின் கிளைகளாகவும் விளக்கங்களாகவும் பல கலைகள் உள்ளன. இதனைப் பொருள் விளக்கம் என்று கூறலாம். ஆங்கிலத்தில் இத்தகைய கலைக்களஞ்சியங்கள் உண்டு. தமிழ்மொழியில் அகராதி தோன்றியதே வீரமாமுனிவர் காலத்தில் தான். தமிழ்மொழியில் கலைக்களஞ்சியத்தை முதன் முதலில் எழுதியவர் ஆ. சிங்காரவேலு முதலியார். இவர் எழுதிய நூல் அபிதான சிந்தாமணி என்னும் பெயரோடு விளங்கியது இதையடுத்து வேறு பெயர்களோடு சில தோன்றின. இறுதியில் தமிழ் வளர்ச்சிக் கழகத்தில் இருந்து கலைக் களஞ்சியம் பல தொகுதிகளாக வெளியாயிற்று. இத் தொகுதிகளில் எல்லா வகையான பொருட்களின் விளக்கங்களும் நன்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பொருளைக் குறித்தும் ஒவ்வோரறிஞர்கள் விளக்கம் எழுதியுள்ளார்கள்,

**கல்லாடம்** - ஓர் அகப்பொருள் இலக்கியநூல். நூறு அகவற் பாக்களைக் கொண்டது. இந் நூலில் மதுரையில் நடந்த பல திருவிளையாடல்கள் கூறப்படுகின்றன. மூர்த்திநாயனருக்குக் கருநடவேந்தரால் வந்த இடையூறும் பாணபத்திரர் வரலாறும் குறிக்கப்படுகின்றன. இந்நூல் கடினமான போக்குடையது. நூலைக் கற்றறிவது அருமை. இதனுல் தான் "கல்லாடங் கற்றவனோடு மல்லாடாதே" என்னும் பழமொழியும் எழுந்தது.

**கல்லாடர்** - கல்லாடம் என்னும் ஊரிற் பிறந்தபடியால் கல்லாடர் என்று பெயர் பெற்ருர். இவருக்கு இடுகுறிப் பெயர் வேறு இருந்திருக்கலாம். அல்லது கல்லாடத்துக் கடவுள் பெயரைச் சுட்ட இங்ஙனம் பெயர் பெற்ருர் எனினுமாம். இவர் கல்லாடம் என்னும் நூலை இயற்றியிருக்கிருர். அந்நூற் பாடல்களைக் கேட்டுக் கடவுளும் நூறு தரம் முடியசைத்தார் என்பர்.

**கல்லுளிச் சித்தர்** - இவர் ஒரு சித்தர். இவர் வலிமையான உடலுடையவர். இவர் எந்த இடத்தில் அடிவைத்தாலும் அந்த இடம் தவிடுபொடியாகி விடும். மலை முதலியனவும் இவருக்காற்ருமல் தூளாகி விடும். இதனைக் குறித்தே, "கல்லுளிச் சித்தன் போனவழி காடுமேடெல்லாம் தூவிடு பொடி" என்னும் பழமொழியும் வழங்குகிறது.

**கல்லையர்** - இவர் ஒரு வீரசைவர். இவர் ஓர் ஊரில் தங்கியிருந்தார். அவ்வூர்க் கோயிலில் இருந்த பாம்பு அனைவரையுங் கடித்தது; அதனுல் எல்லோரும் இறந்தனர். இவர் இறந்தவர்களையெல்லாம் எழுப்பினுர்.

இவருடைய மடத்தில் சமையல் செய்பவள் தண்ணீர் கொண்டு வரச் சென்றாள். அங்கு வந்திருந்த ஓர் அந்தணன் அவளுடைய தண்ணீர்க் குடத்தைத் தொட்டான். அவள் தீட்டாகி விட்டதென்று நீராடி விட்டுத் தண்ணீர் எடுத்துக் கொண்டு சென்றாள். இதனைக் கண்ட அந்தணன் சினங்கொண்டு கல்லையரிடங் கூறினான். கல்லையர் அந்தணர்கள் வேதமறிந்தவர்களெனின் சிவனடியார்களினுஞ் சிறந்தவர்களாவார்களோ என்று கூறினார். தம்மிடம் இருந்த நாய்க்கு வேதம் ஓதுவிக்க அஃது ஓதியது. இதனைக் கேட்டு வேதியர்கள் அஞ்சி அடங்கினர்.

**கவசநூல்கள்** - தமிழில் உள்ள நூல்களில் கவச நூல்கள் என்பன ஒருவகை. போர் வீரர் கவசங்கள் அவர்களுக்குப் பாதுகாப்பளிப்பதைப் போல இக்கவச நூல்கள் தம்மை ஓதுவார்க்குப் பாதுகாப்பளிப்பவைகளாக உள்ளன. ஆகையால் இவைகள் கவசம் என்று காரணப் பெயர் பெற்றன. தமிழில் கந்தர் சட்டி கவசம் விநாயக கவசம், சிவகவசம், சத்திகவசம் எனப்பல கவச நூல்கள் உள்ளன.

**கவிகாளருத்திரர்** - இவர் வேம்பத்தூர்ப் புலவர்களில் ஒருவர். திருமாலிருஞ்சோலை மலையில் உள்ள அழகர்மீது இவர் அழகர்பிள்ளைத் தமிழ் என்னும் நூலைப் பாடியிருக்கிறார்.

**'கவி குமுத சந்திர பண்டிதன் திருநாராயண பட்டன்** - இவர் கல்வெட்டால் அறியப்பெறும் புலவர். புதுச்சேரிக்கு அண்மையில் உள்ள திரிபுவனி என்னும் ஊரிலுள்ள கல்வெட்டில், "திரிபுவனி மாதேவிச் சதுர் வேதமங்கலம் என வழங்கப் பெற்ற திரிபுவனியூரினரும்; 'கவி குமுதசந்திரன்' என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமான திருநாராயண பட்டன் என்பவர் குலோத்துங்க சோழ சரிதை என்ற காவியம் ஒன்று பாடினார் என்றும் அது அரசன் விரும்பியபடி அவ்வூர்ப் பேரவையில் அரங்கேற்றப் பெற்று நன் மதிப்படைந்ததோடு காவியம் இயற்றியவருக்கு அவ்வூரில் இறையிலி நிலம் பரிசளிக்கப் பட்டது என்றும் குறிக்கப் பெற்றிருக்கிறது.

**கழுவுள்** - சேரநாட்டில் காமூர் என்னும் ஊரில் இருந்த குறுநில மன்னன். செல்வ நலத்தில் சிறந்தோங்கிய இவன் புகழ் பெற்ற வள்ளலாகவும் விளங்கியிருந்தான். பெருங்குன்றூர்க்கிழார் முதலிய புலவர்கள் இவனைப்புகழ்ந்து பாடியுள்ளனர்.

**களப்பாளன்** - இவர் ஆமூரில் வாழ்ந்திருந்தவர். ஆமூர் முதலியார் என்றே இவருடைய பெயர் வழங்கியது. காளமேகப் புலவர் காலத்தினர். இவரைக் காளமேகப் புலவர் "உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்றவொரு கோடி, வெள்ளங்காலந்திரிந்து விட்டோமே-உள்ளபடி, ஆமூர் முதலி அமரர்கோன்இங்கிருப்பப்,போமூர் அறியாமற் போய்" என்னும் பாடலால் புகழ்ந்திருக்கிறார். இப்பாடலில் பாதியைப் பாடுவதற்கு முன்னரே முதலியார் இவருக்குப் பரிசளித்தார் என்பர்.

**கள்ளழகர்** - திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியுள்ள திருமாலின் திருப்பெயர்களில் ஒன்று. கள்ளர்கள் நிறைந்த ஊரின் நடுவில் இருப்பதால் இவ்வாறு பெயர் வந்ததென்பர்.

**கள்ளவாரணப்பிள்ளையார்** - திருக்கடவூரில் திருக்கோயில் கொண்டுள்ள பிள்ளையாருடைய பெயர். தேவர்கள் கொண்டு வந்த அமுதகலசத்தைக் களவாடி ஒளித்து வைத்தபடியால் இப்பிள்ளையாருக்கு இவ்வாறு பெயர் உண்டாகியது. களவாடி ஒளித்து வைத்ததற்குக் காரணம் பிள்ளையாரை வழிபட்டு அமுத கலசத்தைத் தூக்காமல் சும்மா தூக்கிக் கொண்டு வந்ததுதான்.

**கற்பாசுரன்** - இவன் ஆனைமுகக் கடவுள் குழந்தையாக இருக்கும் பொழுது அவரை வஞ்சகமாகக் கொல்வதற்குக் குதிரை வடிவங் கொண்டு வந்தான். ஆனைமுகக் கடவுள் இக்குதிரையை ஊர்தியாகக் கொண்டு ஏறி மூவுலகினுஞ் சுற்றித் திரிந்து இறுதியில் கொன்றார்.

**கனகதாசர்** - தார்வார் மாவட்டத்தில் பாடா என்ற சிற்றூரில் இடையர் குலத்தில் தோன்றியவர். இவர் இளமை முதற் கொண்டே திருமாலிடத்தில் பெருமால் கொண்டவராய்ப் பேரன்பு செய்திருந்தார். இவர் இடையர் குலத்தினர் என்று எண்ணி உடுப்பிக் கண்ணன் கோயில் வழிபாட்டாளர்கள் இவரைக் கோவிலுக்குள் விடாது தடுத்தனர். கண்ணன் கனகதாசர் நின்றிருந்தபக்கமாகத் தாம் திரும்பிக் கொண்டது மல்லாமல் இவர் கண்டு வழிபடுமாறு சுவரில் வெடிப்பையும் உண்டு செய்தார். அவ்வெடிப்புக் கனகரின் சன்னல் என்று இன்றும் வழங்கப்படுகிறது. இவர் பல நூல்களைச் செய்திருக்கிறார்.

**கன்னமாபுரம்** - இதனைச் சந்திரதயன் என்பவன் அரசாட்சி செய்து வந்தான். இவன் சந்திரமதியினுடைய தந்தை.

**கன்னன்** - பாரதக்கதைகளில் வரும் வீரர்களில் ஒருவன். கன்னம் என்பது காது. பிறக்கும் பொழுது காதுகளிலே குண்டலத்துடன் பிறந்தான் ஆகையால் கன்னன் என்று பெயர் பெற்றான். இவனுடைய தாயாகிய குந்திதேவி கன்னியாக இருக்கும் பொழுது துருவாசருக்குப் பணி செய்து பெற்ற மந்திரங்களின் பலனைப் பார்ப்பதற்காகக் கதிரவன் மந்திரத்தைக் கூறினாள். அவ்வளவில் கதிரவன் முன்வந்து அவளைத் தழுவத் தொடங்கினான். தன்னுடைய தவற்றினை உணர்ந்து கொண்ட குந்தி கதிரவனைத் தடுத்தாள். தான் பெரிய பெண்ணாகாதவள் என்றுங் கூறினாள். கதிரவன் அவளுக்குத் தகுந்த அறிவுரைகள் கூறி அவளை மங்கைப் பருவத்தினளாக்கித் தழுவினான். அச்சமயத்தில் இவன் பிறந்தான். பழியுண்டாகுமென்று அஞ்சிய குந்தி குழந்தையை ஒருபெட்டியில் வைத்து ஆற்றிலே விட்டு விட்டாள். திருதராட்டிரனுடைய தேர்ப்பாகன் ஆற்றில் பெட்டியொன்று மிதந்து வருதலைக் கண்டு அதனை யெடுத்துத் திறந்து பார்த்தான். குழந்தையைக் கண்டு மகிழ்ந்து வளர்த்தான். கன்னன் பெரியவனான பிறகு பரசுராமரிடஞ் சென்று வஞ்சனையாக வில் வித்தையைக் கற்றான். இவனுடைய ஆற்றலையறிந்த துரியோதனன் இவனோடு நட்புக் கொண்டான். ஊழ்வினை உடன் பிறந்தவர்களாகிய பாண்டவர்களோடு கூடாமற் செய்து விட்டது. இவனும் தாங்களும் ஒரு தாய் வயிற்றிற் பிறந்த செய்தியைப் பாண்டவர்கள் இவன் இறந்த பிறகுதான் உணர்ந்தார்கள்

பாரதப் போரில் இவனும் துரியோதனன் கூட்டத்தோடு மாண்டொழிந்தான்.

**காகன்** - முன்னுளில் விதர்ப்ப நாட்டில் இருந்த ஒரு வேடர் தலைவன். இவன் அஞ்சா நெஞ்சினனுயினும் அறிவு சிறிதும் இல்லாதவனுக இருந்தான். வேட்டைக்குச் சென்ற போது நளனுடைய மனைவியாகிய தமயந்தி காட்டிலே மலைப்பாம்பின் வாயில் அகப்பட்டு வருந்தித் தவித்தாள். இவன் பாம்பைக் கொன்று தமயந்தியை விடுவித்தான். தமயந்தியின் அழகைக் கண்டு மயங்கி அவளைத் தழுவ விழைந்தான். அவள் எவ்வளவோ கெஞ்சியும் கேளாமல் வலுக்கட்டாயஞ் செய்ய முயன்முன். அப்பொழுது கற்பரசியாகிய தமயந்தி சினந்து நோக்கியவளவில் இவன் எரிந்தொழிந்தான்.

**காங்கேயன்** - (1) கங்கையில் தோன்றிய படியால் முருகக் கடவுளுக்கு இவ்வாறு ஒரு பெயர் வழங்குகிறது.

**காங்கேயன்** - (2) பன்னிரண்டாம் நூற்ருண்டில் புதுச்சேரியில் இருந்த ஒரு வள்ளல். இவர் மீது நாலாயிரக்கோவை என்னும் ஒரு நூலை ஒட்டக்கூத்தர் இயற்றிக் கௌடப்புலவன் கவிராட்சசன் என்னுஞ் சிறப்புப் பெயர்களைப் பெற்ருர்.

**காங்கேயன்** - (3) உரிச்சொல் நிகண்டு என்னும் நிகண்டியற்றிய ஒரு புலவருடைய பெயரும் காங்கேயன் என்று வழங்கியது. இவர் கொங்கு நாட்டவர் எனச் சிலரும் தொண்டை நாட்டவர் எனச் சிலருங் கூறுவர்.

**காசிகண்டம்** - ஒரு புராணம். வடமொழியில் இருந்து அதிவீரராம பாண்டியரால் தமிழில் மொழி பெயர்க்கப் பெற்றது. வடமொழிக் காந்தபுராணத்தில் சங்கர சங்கிதையில் காசி கண்டம் கூறப்படுகிறது. பூர்வகாண்டம் உத்தரகாண்டம் என்னும் இருகாண்டங்களையும் நூறு அத்தியாயங்களையும் உடையது. 2525 செய்யுட்களைக் கொண்டது. இந் நூலிற் காசி நகரச் சிறப்பும் பிற செய்திகளும் கூறப்பெறுகின்றன.

**காட்டு மன்னுர் கோயில்** - தென்னுற்காடு மாவட்டத்தில் கொள்ளிடத்திற்கு வடகரையில் இருக்கிறது. பதினெருரும் நூற்ருண்டில் சோழர்களின் தலைநகராக விளங்கிய கங்கை கொண்ட சோழபுரம் இவ் வூருக்கு எட்டு மைல் தொலைவில் இருக்கிறது. நியாய தத்துவம், புருஷநிருணயம், யோகரகசியம் முதலிய நூல்களை இயற்றியவரும் ஆசாரிய பரம்பரையில் முதல் வருமான நாதமுனிகள் இவ்வூரிலேதான் பிறந்தார். தமிழ் நாட்டின் பல ஊர்களில் சிதறுண்டும் தனிப் பாடல்களாகப் பாராயணஞ் செய்யப் பட்டும் இருந்த நாலாயிர திவ்ய பிரபந்தப் பாடல்களை ஒன்று திரட்டிய பெருமை நாதமுனிகளையே சாரும். அவ்வாறு திரட்டப் பெற்ற பாடல்கள் இவ்வூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் வீரநாராயணப் பெருமாள் திருமுன்பு முதன்முதலாக முற்றிலும் ஓதப் பட்டதாகக் கூறப்படுகிறது. நாதமுனிகளின் பேரரும் இவ் வூரிலே பிறந்தவருமான ஆளவந்தார் என்னும் யமுனுசாரியார் இதார்த்த சங்கிரகம், ஆகமப் பிராமாண்யம், ஸ்தோத்ரரத்னம், புருஷநிருணயம் முதலிய வைணவ நூல்களை இயற்றியிருக்கிருர்.

**காரணைச்சுனை** - இப்பெயருடைய சுனை கொங்குவள நாட்டில் குருந்தமலைக் கோயில் தீர்த்தங் களில் ஒன்றாக இருக்கிறது. இத் தீர்த்தம் ஒரு சிறு பொந்தாகத் தெரியும். குறுகிய ஏனத்தால் தண்ணீர் எடுக்கலாமே தவிரத் தீர்த்தம் எவ்வளவு பரப்பில் இருக்கிறது எவ்வளவு தண்ணீர் இருக்கிறது என்பவைகளை அறிய முடிவதில்லை. அதனால் இப்புனித நீரைக் காரணைச்சுனை என்று காரணப் பெயரால் அழைக்கின்றனர். பல மூலிகை கள் ஊறிய நீரோடு இத்தீர்த்தம் தொடர்புடையபடியால் பல வகை நோய்களைப் போக்கக் கூடிய தென்கின்றனர்.

**காணிக்காரர்** - இந்தியாவின் ஆதி குடிகளுள் ஒரு வகுப்பினர். இவர்கள் ஒரு மலைச்சாதியினர். காணிக்காரர் எனின் நிலத்துக்கு உரிமையுடையவர்கள் என்று பொருள். இவர்கள் தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட் டத்திலும், கன்னியாகுமரி மாவட்டத்திலும் உள்ள மலை களிலும் மலையைச் சார்ந்த இடங்களிலும் வாழ்கின்றனர். தமிழ் நாட்டில் மட்டும் இவர் களுடைய தொகை ஏறக் குறைய இரண்டாயிரமென்பர். இவர்கள் கருநிறம் உடையவர் கள். குட்டை உருவத்தினர். இவர்களுடைய முகம் உருண்டை வடிவமாக இருக் கும் இவர்கள் தமிழும் மலை யாளமுங் கலந்த ஒருவித மொழியைப் பேசுவர். இவர் களுடைய பழக்கவழக்கங்களும் மொழியை ஒட்டியதாகவே இருக்கும்.

**காதன்** - கீழ்கடலிடையே இருந்த ஒரு தீவில் இருந்தவன். அங்கு வாழ்ந்திருந்த நாகர் என்னுஞ் சாதியாருக்கு இவன் தலைவன். கள்ளுண்டலையுந் தாரிஜையுர் முயக்கையுமே பெரிதெனக் கொண்டிருந்தவன். சாதுவன் இத்தீவுக்கு வந்த பொழுது இவனையும் இத்தீவில் இருந்த மக்களையும் தன் வசப்படுத்தி அறிவுரைகள் கூறினான்.

**காந்திக் கிராமம்** - காந்தியடிகளின் சர்வோதய லட்சியத்தை நோக்கமாகக் கொண்டு கிராம மக்களிடையே நிருமாண வேலையை நடத்துவதுடன் ஆதாரக்கல்வித் திட்டத்தின் பல கூறுகளையும் நிறைவேற்று வதற்காக மதுரை மாவட்டத்தி லுள்ள அம்பாத்துரை புகை வண்டி நிலையத்துக்கு அண்மை யில் சிறுமலையடிவாரத்தில் 1917ஆம் ஆண்டில் தொடங்கப் பட்டது. காந்தி கிராமத்தில் பெண்களின் முன்னேற்றத்திற் கும் கல்விக்கும் முக்கிய இடம் அளிக்கப்பட்டுள்ளது. இங்குக் கத்தூரிபாநிதியின் ஆதரவில் நடைபெறும் கிராம சேவிகா வித்தியாலயத்தில், பெண்கள் கிராமங்களுக்குச் சென்று மருத்துவம், பூர்வாதாரக்கல்வி ஆகியவைகளில் ஈடுபடுகின் றனர். கிராம சுகாதாரம். ஆரோக்கியம், கதர்அபிவிருத்தி, கிராமக் கைத்தொழில்வளர்ச்சி முதியோர் கல்வி போன்ற வேலைகளிலும் கலந்து கொள் ளுகின்றனர். நூல் நூற்றல் மூலமாகவும், தோட்ட வேலை மூலமாகவும் குழந்தைகளுக்குப் பாடத் திட்டம் அமைக்கப் பட்டிருக்கிறது. இதைச்சுற்றி யுள்ள முப்பது கிராமங்களில் ஆதாரக் கல்வியைப் பரப்பும் நோக்கத்துடன் இங்குக் காந்திக்கிராம ஆதாரப் பயிற்சி சாலை மூலம் ஆண் பெண் இரு பாலாருக்கும் இரண்டு ஆண்டு ஆசிரியப் பயிற்சி அளிக்கப் பட்டு வருகிறது.

**காமதேனு** - பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றிய பசு. இதை முனிவர்கள் அடைந்தனர். இது வேண்டுவார் வேண்டுவதை ஈயவல்ல பெருமையுடையது.

**காம்போசம்** - கி.மு. ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவின் வடமேற்கில் இப்போதுள்ள பீஷாவருக்கு வடமேற்கில் இருக்கும் நிலப்பகுதியின் பழைய பெயர். அந்நாளில் வடஇந்தியாவில் இருந்ததாகப் பௌத்த நூல்களில் இருந்து அறியவரும் பதினாறு மகாசன பதங்கள் என்னும் நாடுகளுள் இஃது ஒன்று. அந்நாடுகளாவன; அங்கம், மகதம், காசி, கோசலம், வச்சி, மல்லம், சேட்டி, வமிசம், குரு, பாஞ்சாலம், மச்சம், சூரசேனம், அஸ்ஸாம், அவந்தி, காந்தாரம், காம்போசம். இந்நாடுகளில் குடியாட்சி நிலவியிருந்தது. காம்போசத்தைப் பற்றியும் அங்கு விளங்கிய நாகரிகத்தைப் பற்றியும் மனுதரும சாத்திரம், மகாபாரதம், இராசதரங்கிணி முதலிய பழைய நூல்களில் இருந்து அறியப்படுகிறது. காம்போசம் என்னுஞ் சொல் அந்நாட்டில் புகழ் பெற்ற குதிரையையுங் குறிக்கும்

**காரடையான் நோன்பு** - பங்குனி மாதப் பிறப்பன்று சுமங்கலிகள் தங்களுடைய மாங்கலியத்தின் உறுதிக்காக நோற்கும் விரதம். சிறுமிகள் முதலாக எல்லாப் பெண்களும் நீராடிவிட்டு நல்ல ஆடையணிந்து கொண்டு காரடை தட்டிக் கடவுளுக்குப் படைத்துக் கழுத்தில் மாங்கலிய அடையாளமாகப் புது மஞ்சள் நூலை அணிந்து கொண்டு கணவரை வணங்கிக் காரடையை உண்பார்கள். இந்நோன்பிற்குச் சிறப்புப் பெயராக அமைந்திருக்கும் காரடை என்பது காராமணி, அரிசி, வெல்லம் இவற்றைக் கொண்டு செய்த அடை. இதனை வெண்ணெயுடன் உண்பர். விரதங்களைக் கூறும் நூல்களில் பங்குனிப் பிறப்புக்குநெருங்கிய நாள் ஒன்றில் சௌபாக்கிய விரதம் என்று ஒரு நோன்பு காணப்படுகிறது. அதற்கும் இதற்கும் தொடர்பு இருக்கலாம்.

**காரி (1)**-தொண்டைவள நாட்டில் பழையனூரில் இருந்தவன். இவனுடைய காலம் ஔவையார் வாழ்ந்திருந்த காலமாகும். ஔவையார் இவனிடம் சென்றபொழுது இவன் மிகுந்த வறிய நிலையில் இருந்தான். ஔவையார்க்குக் கொடுப்பதற்குக் கையில் யாதும் இல்லாதிருந்தபடியால் களையெடுப்பதற்கு வைத்திருந்த களைக்கோலை ஔவையார்க்குக் கொடுத்தான். ஔவையார் இவனைப் புகழ்ந்து பாடினார். அதன் பிறகு இவன் சிறந்த நிலையில் உயர்ந்திருந்தான்.

**காரி (2)** - திருக்குருகூரில் இருந்த வேளாளர். இவர்க்குக் காரி முதலியார் என்று பெயர். இவர் நம்மாழ்வாருக்குத் தந்தையார். இவருடைய மனைவியார் பெயர் உடைய நங்கை. இவருடைய தந்தை போர்க்காரியார்.

**காரி நாயனார்** - திருக்கடவூரில் மறையவர் குலத்திற் பிறந்தவர். தமிழில் நூல்கள் செய்து அதனைத் தமிழ் நாட்டரசர்கட்கு விளக்கினார். அவர்களிடமிருந்து பொருள்கள் பெற்றுத் திருப்பணிகள் செய்தார்.

**காரியார்** - பாண்டி நாட்டில் கொற்கையென்னும் ஊரில் புத்தன் என்பவக்குப் புதல்

வராகத் தோன்றினார். புராரி நாயனார் என்பவருடைய வேண்டுகோட்படி கணக்கதிகாரம் என்னும் நூலை இயற்றினார்.

**காருபதம்**-இஃதொரு பட்டணம். இதை யொரு கொடுங்கோலரசன் அரசாட்சி செய்தான். இலட்சுமணர் இப்பட்டணத்தை அவனிட மிருந்து நீக்கித் தம்முடைய புதல்வர்கட் களித்தனர்.

**கார்காத்த வேளாளர்** - உக்கிர குமாரபாண்டியன் முகில்களை விலங்கிட்டபோது இந்திரன் "மழை பெய் விக்கிறேன் முகில்களை விட்டுவிட வேண்டும்" என்று வேண்டினான். பாண்டியன் இந்திரனுடைய சொல்லில் நம்பிக்கை கொள்ளாமல் இருந்தபடியால் முகில்களை விடுவிக்கா திருந்தனன். வேளாளர்கள் இந்திரனுக்குப் பிணையாக இருந்து கொண்டு முகில்களை விடுவித்தனர். இவ்வாறு முகில்களைக் (கார்) காத்தபடியால் அவ்வேளாளர்கள் கார்காத்த வேளாளர்கள் என்னும் பெயரை அடைந்தனர். வேறு பிறவேளாளர்களும் உள்ளபடியால் அவர்களினின்றும் பிரித்தறிதற்கு இவர்கள் கார்காத்த என்னுஞ் சொல்லை அடையாகப் பெற்றனர்.

**கார்க்கேயர்** - இவர் ஒரு முனிவர். அகத்தியர் வியாசர் முதலிய முனிவர்கள் இருந்த காலத்தில் இருந்தவர். கண்ணன் வேள்வி செய்தபோது வேள்வி யாசிரியராக இருந்தார்.

**கார்க்கோடகன்** - கத்துருவின் மகன். எண்வகைப் பாம்புகளில் ஒருவன். வாசுகியோடு கூடப் பிறந்தவன். இவன் சிவபிரானுடைய கை விரலில் மோதிரமாயிருப்பவன். அறியாது நஞ்சை விரலிற் கக்கிய படியால் திருக்கயிலை நீங்கி ஆலங்காடடைந்து கூத்துக் காட்சி கண்டு வீடு பெற்றான்.

**கார்மண்டலம்** - பழங்காலத்திலிருந்தே தமிழ் நாடு சில பெரும் பிரிவுகளாகப் பகுத்துப் பேசப்பட்டு வந்துள்ளது. தொல்காப்பியர் தமிழ் நாட்டை நாற்பெயரெல்லையகம் என்று குறிக்கின்றார். இந்த நான்கு பெயர்களையும் மலைமண்டலம், சோழ மண்டலம், பாண்டிய மண்டலம்,தொண்டைமண்டலம் என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றார். அவர் கூறும் மலைமண்டலத் துள்ளே கார் மண்டலம் அடங்கும். இதுவே கரு நாடு, கருநாடகம் என்று வழங்கப்பெறுவதுமாகும். இந் நாட்டில் மலை நாடு என்றும் வெளி நாடு என்றும் இரு பகுதிகள் மேற்கிலும் கிழக்கிலுமாக அமைந்துள்ளன. இந் நாட்டில் உள்ள குடகு நந்தி முதலிய மலைகளில் பிறக்கும் காவிரி, தென்பெண்ணை, பாலாறு, வடபெண்ணை, துங்கபத்திரை என்னும் ஆறுகள் மற்ற நாடுகட்குச் சென்று பாய்ந்து அவற்றை வளமாக்குகின்றன.

இம்மண்டலத்தில் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட மக்கள் வாழ்க்கை யடையாளங்கள் சந்திரவல்லி பிரமகிரி முதலிய இடங்களில்காணப்படுகின்றன. வரலாற்றுக் காலத்தில் இந்நாடு பல அரசர்களின் ஆட்சிக்குட்பட்டு வந்திருக்கிறது. இதிகாச புராணங்களில் இந்நாட்டுத் துவராபதிக்கு வடநாட்டிலிருந்து கண்ணபிரான் வழி வந்த அரசரையும் பதினெண் குடிவேளிரையும் அகத்தியர் அழைத்து வந்து அவர்களைப் பல இடங்களில்

குடியேற்றினர் என்று ஒரு செய்தி காணப்படுகிறது.

**காமாரி** - காமன் சிவபெருமான் யோகத்திருந்த வேளையில் அவர் மீது தன்னுடைய மலர்க் கணைகளைச் செலுத்தினான். சிவபெருமான் விழித்துநோக்கக் காமன் அழிந்தொழிந்தான். சிவ பெருமான் இவ்வாறு காமனைக் கொன்றபடியால் காமாரி என் னும் பெயரை யடைந்தார்.

**காலடி**-மலையாள நாட்டில் எர்ணா குளத்துக்கும் திருச்சூருக்கும் இடையில் உள்ளது. அங்க மாலி என்னும் புகைவண்டி நிலையத்தில் இருந்து ஆறு மைல் தொலைவில் உள்ளது. ஆதி சங்கராச் சாரியார் இவ்வூரி லேதான் பிறந்தார்.

**காவட்டனார்** - பாண்டிவள நாட் டில் மாறன்குடி என்னும் ஊரில் இருந்தவர். சங்கப் புலவர் களில் ஒருவர். கருவி நூல் களோடு அறிவு நூல்களையும் நன்கு பயின்றவர். இவர் காலத்தில் வாழ்ந்திருந்த அந்து வன் கீரன் என்னும் குறுநில மன்னன் ஒருவன் இவர் மீது பகைமை பாராட்டினான். இவரோ அவனுடைய பகைமை யைச் சிறிதும் பொருட்படுத் தாது சீரிய செய்யுளொன்றால் அவனுக்கு நல்லறிவு புகட்டி னார். அப்பாடல் புறநானூற் றிலே சேர்க்கப்பட்டுள்ளது.

**காவிரிப்பூம்பட்டினம்** - தமிழ் நாட்டில் காவிரியாறு கடலில் கலக்குமிடத்தில் இரண்டா யிரம் ஆண்டுகட்கு முன்னே சோழ மன்னர்களின் தலைநக ராகச் சிறந்து விளங்கிய பட்டி னம். இவ்வூர்பூம்புகார் என்றும் பூம்பட்டினம் என்றும் புலவர்க ளால் புகழ்ந்துரைக்கப்பட்டது. அகநானூறு, பட்டினப்பாலை சிலப்பதிகாரம் முதலிய தமிழ் நூல்கள் காவிரிப்பூம்பட்டினத் தின் சிறப்பைக் கூறுகின்றன. அந்நாளில் இவ்வூரில் வாணிகம் மிகச் சிறந்து விளங்கியது. இவ் வூரின் அகநகர் பட்டினப் பாக்கம் என்றும் புறநகர் மருவூர்ப் பாக்கம் என்றும் இரு பிரிவாக இருந்தன. நகரைச் சுற்றிப் பெரிய மதில்கள் இருந் தன. இவ்வூரில் கொண்டாடப் பெற்ற விழாக்களும் தெய்வ வழிபாடுகளும் பல நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இங்கு நடந்த விழாக்களில் பெரியது இந்திர விழா. இந் நாளில் காவிரிப்பூம்பட்டினம் ஒரு சிறிய ஊராக இருக்கிறது. பல விடங்களில் ஆராய்ச்சி யாளர்கள் அகழ்ந்து முன் னைய நகரத்தின் அறிகுறி களைச் சில விடங்களில் கண்டு பிடிக்கின்றனர்.

**காளத்தியப்ப சிவாச்சாரியார்** - இவர் காஞ்சியில் குமரகோட் டத்தில் அருச்சகராக இருந்தார். முருகக்கடவுளிடத்தில் முறுகிய பத்தியுடையவர். கந்தபுரா ணத்தைப் பாடிய கச்சியப்ப சிவாச்சாரியார் இவருடைய புதல்வராவார்.

**காளன்** - (2) பாண்டவர்கள் காலத்தில் அத்தினபுரியில் இருந்தஒரு தச்சர் தலைவன்-மாட மாளிகைகளை அமைப்பதில் மிக வல்லவன். துரியோதனன் பாண்டவர்களைத் தொலைப் பதற்கு அரக்கு மாளிகையமைப் பதற்குப் புரோசனன் என்பவ னுடைய தலைமையில் இவனை அனுப்பினான். மாளிகை அமைப்பதன் உட்கருத்தை உள்ளவாறுணர்ந்து கொண்ட இவன் பாண்டவர்களிடத்தில் பேரன்புடையவனாதலின் அவர் களுடைய உயிரைக் காக்க மாளிகையின் நடுவில் தூணுக் குக் கீழே குகை வழி யமைத்து வீமனிடம் செய்தியைச்

சொல்லிப் பாண்டவர்களைக் காத்தான்.

**காளிபங்கான்**-இந்தியாவின் மிகப் பழமையானதும் மிகச் சிறந்தது மான நாகரிகத்தின் நிலைக் களனாக இருந்த சிந்து நதிப் பள்ளத்தாக்குப் பாகிஸ்தானுடன் சேர்ந்த பிறகு மொகஞ்சதாரோ, ஹரப்பா ஆகிய பழைய நகரங்களும் அந்நாட்டுக்கே உரிமையாயின. அண்மைக் காலத்தில் இராசஸ்தானில்பிக்கானிர்மாவட்டத்தில் காளிபங்கான் என்னுமிடத்தில் மேற் கொள்ளப்பட்டிருக்கிற அகழ்வாராய்ச்சியினால் ஹரப்பா, மொகஞ்சதாரோ நகரங்கட்குச் சமகாலத்திய தான நகரம் ஒன்று வெளிப் பட்டிருக்கிறது. இதனுடைய மேன்மை இங்குள்ள நெருங்கிய இரண்டு செறிந்த மண்மேடுகளுள் ஒன்றிலிருந்து ஹரப்பா நாகரிகத்தைச் சேர்ந்த புதை பொருள்களும் முறைப்படி எழுதப்பட்ட கட்டிடங்களும் கழிவு நீரோடைகளுங் கிடைத் தன. மற்றொன்றில் இருந்து காலத்தில் முற்பட்டவையும் ஹரப்பா நாகரிகத்தின் அடிப் படை அல்லது முற்பட்டவை எனக் கருதத்தக்கவையுமான குடியிருப்பிடங்கள் கிடைத் திருக்கின்றன. பானை வகைகளாலும் கட்டிடச் செங்கல்களின் அளவுகளாலும் அரண்களின் அமைப்பாலும் மற்றும் தங்கம், செம்பு, கோவை மணிகள் முதலியவைகளாலும் ஹரப்பா நாகரிகத்திற்கே உரித் தான தனி எழுத்தில் வரையப் பட்ட முத்திரைப் பிரதிகள் மூல அச்சுக்கள் இவைகளாலும் நாகரிகத்தின் தொடக்கத்தையும் முதிர்ச்சியையும் விளக்கக் கூடிய சான்றுகள் பல கிடைத் துள்ளன. இதனால் நமக்கு மேலும் ஓர் ஆராய்ச்சி நகரம் கிடைத்துள்ளது என்பது மகிழ் தற் குரியதாகும்.

**கிம்மீரன்** - இப்பெயரைக் கிம்மீரணன் எனவுங் கூறுவர். இவன் ஓர் அசுரன். வீமனால் கொல்லப் பட்ட பகாசுரனுடைய தம்பி. பாண்டவர்கள் வனவாசஞ் செய்து கொண்டிருக்கையில் இவன் திரௌபதியைக் கவரச் சென்று வீமனால் கொலை செய்யப்பட்டான்.

**கின்னரர்** - கந்தருவர் இயக்கரைப் போலவே கின்னரரும் தெய்வத் தன்மை பொருந்திய ஒரு கூட்டத்தினர். கிம்புருடர் என்றும் இவரைக் கூறுவர். இமயமலையைத் தாண்டி ஏம கூடத்திற்குப் போகும் வழியில் 'கிம்புருடவருடம்' என்று இவர் களுக்குத் தனித்ததோர் இருப் பிடம் இருப்பதாகப் புராணங் களின் வாயிலாக அறியப்படு கிறது. இயக்கர்களுக்கு அரச னான குபேரனே இவர்களுக்கும் அரசன். இவர்களுக்குக் குதிரை முகம் அமைந்திருப்பதாகக் கூறுவர். கின்னரர்களுக்கும் கிம்புருடர்களுக்குஞ் சிறிது முக வேற்றுமை உண்டென்று கூறுவர். கின்னரகிம்புருடர்கள் இசைபாடுவதில் சிறந்தவர் கள்.

**கீரன்சாத்தன்** - பாண்டி நாட்டில் கீரனூரில் இருந்தவன். சிறந்த போர் வீரனாக விளங்கிய இவனை ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவர் திலகர் புகழ்ந்து பாடியிருக்கிறார். அப்பாடல் புறநானூற்றில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**கீழ்வேளூர்** - சோழவள நாட்டி லுள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. முருக வேள் வழிபட்ட பதி யாகை யால் வேளூர் என்னும் பெயரை யடைந்தது. புள்ளிருக்கு வேளூரினின்றும் வேறு பிரித்

தற்குக் கீழ் வேளூர் எனப் பட்டது. கோயில் கட்டுமலை மேல் இருக்கிறது. முருகக் கடவுள் சிறப்பாகக் கொண் டாடப் படுகிறார். முருகக்கடவு ளுடைய தவத்துக்கும் வழிபாட் டுக்கும் இடையூறு நேரிடாத வாறு அஞ்சுவட்ட அம்மை என்னும் அம்மை காவல் பூண் டிருந்தாள் என்பர். இவ்வம் மைக்கும் இங்கு பூசையுண்டு. இறைவன் பெயர் கேடிலியப் பர்; இறைவி பெயர் வனமுலை நாயகியம்மை.

**குகன்**–(1) முருகக் கடவுள் உயிர் களுடைய உள்ளமாகிய குகைக்கண் எழுந்தருளியிருத் தல் கொண்டு குகன் என்னும் பெயரால் குறிக்கப்படுகிறார்.

**குகன்** - (2) இராமாயணத்தில் இராமனுடைய நண்பனாக வரும் வேடன். இவன் சிருங்கி பேரம் என்னும் நகருக்குத் தலைவன். இராமபிரான் காட்டுக்குச் சென்ற போது இவன் இராமபிரான் கங்கை யைக் கடப்பதற்கு ஓடம் விட்டு நண்பனானான். இராமபிரான் இவனைத் தம்முடைய உடன் பிறப்பாகவே மதித்துப் பாராட்டி அன்பு செலுத்தினார்.

**குகன்** - (3) குகலோதியார் என் னும் மரபினன் ஒருவனும் குகன் என்னும்பெயருடன் இருந்தான். இவனுடைய தாய் இவனைக் குகையில் பெற்றபடியால் இவ் வாறு குகன் என்னும் பெயர் உண்டாகியது. இவன் கதிர வன் மரபினன் என்பர். பில்லர் என்னும் மலையாளிகளை ஆண்டு மலை நாட்டரசனாக விளங்கி னான்.

**குசலன்** - இவன் பாண்டிவள நாட்டில் கொற்கை யென்னும் ஊரில் முன் காலத்தில் வாழ்ந் திருந்தான். அந்தணர் மரபில் தோன்றிய இவன் அருமறை களைப் பயின்றும் அறிவில்லாத வனாகக் காரியங்களைச் செய் தான். இவனுடைய உரைகளைக் கேட்டவர்களிற் சிலர் மயங்கி அறிவு திரிந்தனர் சிலரோ இவனைப் பழித்தனர். இவன் உலகத்தோடு ஒட்ட ஒழுகலை அறியாதவனாக இருந்தபடியால் இறுதியில் கெட்டொழிந்தான்.

**குசலாசுரன்** - இவன் சிந்தாசுரன் என்பவனுடைய ஏவலால் கேமாசுரனுடன் கூடிப் பெருச் சாளியுருக்கொண்டு தங்களுக் குள் போரிட்டுக் கொண்டு குழந்தையாக விருந்த ஆனை முகக் கடவுள் மீது விழுந்தான். ஆனைமுகக் கடவுள் பூனையுருக் கொண்டு இவர்களைக் கொன் றார்.

**குசாவர்த்தம்** - கௌதமரைப் பகைத்த அந்தணர் அத்தீவினை தீரும் பொருட்டுத் தருப்பை யால் பவித்திரமணிந்து கொண்டு நீராடிய கோதாவரிக் கரை.

**குசிநகரம்** - உத்தரப்பிரதேசத்தில் தேவரியா மாவட்டத்தில் உள் ளது. இப்பொழுது இதனைக் கஸியா என்று அழைக்கிறார்கள். இங்கு தேக்கு மரத்தோப்பு ஒன்றில் புத்தர் தம்முடைய எண்பதாம் ஆண்டில் நிருவா ணம் எய்தியதாகக் கருதுகிறார் கள். இங்கு இந்நிகழ்ச்சியின் நினைவாகச் செங்கற்களால் கட்டப்பட்ட நிர்வாண தூபி என்று பெயருள்ள பௌத்தத் தூபி ஒன்று அகழ்வாராய்ச்சி மூலம் 1876 இல் வெளிப்படுத் தப்பட்டது. இங்கு 1904, 1912 ஆண்டுகளில் தொடர்ந்து நிகழ்ந்த அகழ்வாராய்ச்சியின் மூலம் தூபியின் உள்ளிருந்து தாமிரத்தகட்டில் செதுக்கப் பட்டும் மையினால் எழுதப் பட்டும் இருந்த 'நிதான சூத்தி ரம்' என்னும் ஒரு பௌத்த

சமய நூலின் ஒரு பகுதியைக் கண்டுபிடித்தார்கள். இதன் எழுத்துகுப்தர்காலத்ததுஎன்று கூறலாம். இங்குப் பல பௌத்த மடாலயங்களும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் மிகவும் பிற்காலத்தியது பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த காலசூரிவமிச மன்னனுடையதாகும். குமாரகுப்தனுடைய வெள்ளி நாணயம் ஒன்றும், ஆயிரத்திற்கும் மேற்பட்ட முத்திரைகளும், அவற்றின் சுட்ட மண்ணாலான படிகளும் கிடைத்துள்ளன. இவை குப்தர் காலத்தையும் அதற்குப் பிற்பட்ட காலத்தையுஞ் சார்ந்தவை. குசிநகரம் புத்தர் காலத்தில் மிகவும் புகழ் பெற்று விளங்கியதாஞலும் விரைவில் பாழடைந்து போய் விட்டது.

குசுமை - இவள் சுதன்மன் என்னும் அந்தணனுக்கு இளைய மனைவி. இவளைச் சுதன்மனுக்கு மூத்த மனைவியாகிய சுதேகை என்பவள் தனக்கு மக்கட்பேறில்லாமையால் மணஞ் செய்வித்தாள். இவளிடத்தில் சுப்பிரியன் என்னும் மகன் பிறந்தான். இதனால் அந்தணன் களிப்படைந்து சிவபூசையைக் கைவிடாதிருந்தான்.மூத்த மனைவியாகிய சுதேகை மனத்திலே பொறாமை கொண்டாள். தாய் தந்தையரிருவரும் சுப்பிரியனுக்கு மணமுடித்து மகனையும் மருமகளையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு களித்தனர். சுதேகை சுப்பிரியனை எவ்வாறேனுங் கொன்று பகை முடிக்க வேண்டுமென்று முடிவு செய்தாள். சுப்பிரியனும் அவன் மனைவியும் உறங்கும் பொழுது சுப்பிரியனைக் கொன்று குசுமையும் அவள் கணவனும் பூசை செய்து சிவலிங்கங்களை விடும் குளத்தில் எறிந்து விட்டு ஒன்றுந் தெரியாதவளைப் போலிருந்தாள். இதனைக் குசுமை உணர்ந்தாள். சிறிதும் மனந்தளராதிருந்தாள். வழக்கம் போல் சிவபூசை செய்து சிவலிங்கத்தை விடுங் குளத்தருகிற் சென்று மீண்டாள். இறந்து குளத்தில் அழுந்திய மகன் தாயைப் பார்த்து, ''நானும் வருகிறேன்'' என்று சொன்னன். இதனைக் கண்ட குசுமை சிவபிரானைத் தொழுதாள். சிவபிரான் காட்சிதந்து ''யாது வேண்டு'' மென்று கேட்டார். குசுமை, ''இக் குளத்தையே கோயிலாகக் கொண்டருள்க'' என்று வேண்டினள். சிவபிரான் அவ்வாறே அமர்ந்தனர். அது குசுமேச்வர மாயிற்று.

குசேலோபாக்கியானம் - குசேலோபாக்கியானம் என்பதனுடைய பொருள் குசேலரைப் பற்றிய கிளைக்கதை என்பது. (குசேலர்-கு - பொலிவில்லாத, சேலர்-ஆடையை உடையவர்.) பலவாறு கிழிந்த சிறு துணிகளை இணைத்துத் தைத்த ஆடையை அணிந்திருந்தபடியினல் இவ்வாறு பெயர் உண்டாகியது. குசேலராகிய இவருடைய இடுகுறிப்பெயர் சுதாமா என்பர். பதினெண்புராணங்களில் ஒன்றாகிய பாகவதத்தின் பத்தாம் கந்தத்தில் குசேலருடைய வரலாறு ஒரு கிளைக் கதையாகக் கூறப்படுகிறது. நூல்களில் கூறப்படும் குசேலருடைய வரலாற்றை விரித்துத் தேவராசப் பிள்ளை என்பவர் இந் நூலை இயற்றினர்.

குடவோலை - அந்தக் காலத்தில் மக்கள்வாக்குரிமைச்சீட்டுக்களை ஓலையில் எழுதி அதற்கென வைக்கப்பட்டுள்ள ஒரு குடத்தில் போடுவார்கள். இப்படிப் போடும் முறையையே குடவோலை என்பார்கள்

ஆட்சிமன்ற உறுப்பினர்கள் இம்முறையால் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். தேர்தலுக்கு நிற்பவர்கள் எழுபது வயதுக்கு மேற் போகாதவர்களாகவும் முப்பத்தைந்து வயதுக்குக் குறையாதவர்களாகவும் நூல்களைக் கற்றுணர்ந்தவர்களாகவும் குணங்களில் குறைபாடுகள் இல்லாதவர்களாகவும் இருத்தல் வேண்டும்.

**குடாசுரன்** - ஓர் அசுரன். இவன் தேவர்களை வருத்தினன். தேவர்கள் வெள்ளி மலையில் அடைக்கலம் புகுந்தனர். சிவபிரான் பிராட்டியின் குறிப்புணர்ந்து போருக்கனுப்பினர். பிராட்டி போர்புரிகையில் சிவபிரான் தோன்றினர். பிராட்டி வழிபாடு செய்தாள். சிவபிரான் அசுரனைச் சூலத்தாற் கொன்றனர்.

**குடிதாங்கி முதலியார்**-தொண்டைவள நாட்டில் களந்தை என்னும் ஊரில் முன்னளில் வாழ்ந்திருந்தவர். இவருடைய குடி இவருடைய முன்னோர் காலத்தில் சிறந்தும் பிறகு குறைந்தும் இருந்தது. இவர் பெருமுயற்சி செய்து தம்முடைய குடி அடியோடு தொலைந்து போகாமல் பாதுகாத்துத் தாங்கினர். அதனல் இவருக்கு இப் பெயர் காரணப் பெயராக அமைந்தது. இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர் சம்புநாதன் என்பர். இவருடைய விளைநிலத்தில் ஏராளமாக நெல் விளைந்து பொன்னை மிகுதியாக அளித்தபடியால் பின்னளில் இவருடைய ஊர்ப் பெயர் பொன் விளைந்த களத்தூர் என்று புகழ் பெற்று விளங்கியது. இவருடைய பெருமை தொண்டை மண்டல சதகத்திலும் பேசப்பட்டிருக்கிறது.

**குடுமித் தேவர்**-திருக்காளத்தியில் காளத்தியப்பர் கோவிலின் பின்புறத்திலுள்ள ஒரு குன்றின் மேல் உள்ள இறைவனுடைய பெயர். கண்ணப்ப நாயனர் வழிபட்டது இக்குடுமித் தேவரைத்தான். இவருக்குக் கண்ணப்ப ஈசுவரர் என்றும் பெயர் உண்டு.

**குட்டவை** - இவள் உடம்பில் வெண் குட்டத்துடன் வீரசைவ வேடத்தளாய் ஓர் அந்தணத் தெருவழியே சென்றள். அங்கிருந்த அந்தணர்கள், "தூய்மையில்லாதவளாகிய நீ எங்கள் தெரு வழியே வரலாமோ?" என்று கூறி வெகுண்டனர். குட்டவை வெகுண்டு, "நீங்கள் பாண்டுரோகிகள் ஆகுக" என்று வசவுரை வழங்கினள். சௌராட சோமையரிடஞ் சென்று திருவருளால் குட்ட நோய் நீங்கப்பெற்றள். தன்னுருவை அந்தணர்களுக்குக்காட்டி அவர்கள் நாணமடையச் செய்தாள்.

**குணசேகரம்** - தமிழ் நாட்டில் திருச்சி மாவட்டத்தில் உள்ள ஒரு வைணவத் திருப்பதி. திருச்சிக்கு மேற்கில் கஉ-மைல் தொலைவில் திருச்சி சேலம் நெடுஞ்சாலையில் காவிரிக்கரையில் இருக்கிறது. காவிரியின் வடகரையில் சீனிவாசப் பெருமாள் திருக்கோயில் இருக்கிறது. சுவாமியின் பெயர் குணசேகரப் பெருமாள்; சீநிவாசப் பெருமாள் என்றுங் கூறுவர். மூலநோயுடையவர்களும் வலிப்புக் கண்டவர்களும் இங்கு வந்து வழிபட்டு நோய் நீங்கப் பெறுவதாகச் சொல்லுகின்றனர். திருவேங்கடவனுக்கு இவ்வூர்ச் சீநிவாசப் பெருமாள் அண்ணன் என்றும் திருப்பதியில் செலுத்த வேண்டிய காணிக்கையைஇங்குச்செலுத்த

லாம் என்றும் ஆனால் இங்குச் செலுத்த வேண்டிய காணிக் கையைத் திருப்பதியில்செலுத்த லாகாது என்றுங் கூறுகின் றனர். ஆற்றின் தென் கரையில் திருப்பராய்த்துறைச் சிவன் கோயில் இருக்கிறது. இவ்வூருக் குக் கிழக்கில் முக்கொம்பு என்னும் இடம் இருக்கிறது. இவ்விடத்தில்தான் காவிரி இரு கிளைகளாகப் பிரிகிறது.

**குணநிதி - (2)** காம்பிலி நாட்டில் கமலபுரி என்னும் நகரில் இருந்த வன்; அந்தணர் குலத்தினன். குணநிதி என்று பெயரமைந்தும் நல்ல குணமற்றவனாய்ச் சூதாடு தலை மேற்கொண்டிருந்தான். இவன் சூதாடுதலையறிந்த தந்தை யும் இவனைத்துறந்துசென்றான். ஆயினும் இவன் சூதாடுதலை விடாமல் அத்தீதான செயலி லேயே அழிந்தொழிந்தான்.

**குணபரன் -** பல்லவர்களில் ஒரு வன். சோழநாட்டையாண்ட வன். திருச்சிராப்பள்ளி மலை மேல் திருக்கோயிலைப் புதுப்பித் தவன். இவனுக்குப் புருடோத்த மன் எனவும் சத்துருமல்லன் எனவும் சத்தியசந்தன் எனவும் பெயர்கள் உண்டு.

**குணவீரபண்டிதர் -** பன்னிரண் டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சமணப்புலவர். இவர் தொண்டை நாட்டிலே களத் தூரிலே பிறந்தவர். சமண சமயத்தினரால் போற்றிவணங் கப்பெறும் தீர்த்தங்கரர்களில் இருபத்திரண்டாந் தீர்த்தங்கர ரான நேமிநாதர் பெயரால் எழுத்தும் சொல்லும் அடங்கிய நேமிநாதம் என்னும் இலக்கண நூலையும், வச்சணந்தி தேவர் என்னும் முனிவர் பெயரால் வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியலையும் இயற்றியிருக்கிறார்.

**குண்டுகட்பாலியாதன் -** சேரவள நாட்டிலே பாலி யென்னும் ஊரிலே வாழ்ந்திருந்த முற் காலப்புலவர். குழிந்து ஆழ்ந்த கண்ணையுடையவராக விளங் கிய படியால் குண்டுகட்பாலி யாதன் என்னுங் காரணப் பெயர் பெற்றார். வறுமையால் வாடிய இவர் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்னுஞ் சேர மன்னனைப் பாடிச்சென்றார். அம்மன்னன் பேரறிவும் பெருந் திருவும் அமையப் பெற்றிருந்தா னாகையால் இப்புலவருக்குப் பெரும் பரிசில் வழங்கினான். அம்மன்னன்மீது இவர் பாடிய பாடல் புறநானூற்றில் சேர்க் கப் பட்டிருக்கிறது.

**குண்டோதரன் -** இவன் பூத கணத்தவருள் ஒருவன். குறுகிய வடிவமும் பெரிய வயிறும் உடையவனாக இருந்தபடியால் குண்டோதரன் என்று பெயர் பெற்றான். சிவபெருமானுக்குக் குடைபிடிப்பது இவனுடைய தொழில். மதுரையில் தடாத கைப் பிராட்டியாருக்குத் திரு மணம் நடந்தபோது சிவகணங் கள் உண்டு மிஞ்சிய உணவை உண்டு தீர்த்ததோடு மேலும் உணவுவகைகளை அழைக்கச் செய்தவன்.

**குதம்பைச் சித்தர் -** இவர் பதி னெண் சித்தர்களில் ஒருவர். குதம்பை என்பது காதணி வகைகளில் ஒன்று. காதில் குதம்பையணிந்த ஒரு பெண்ணை முன்னிலைப்படுத்தி இவர் பாடி யிருப்பதால் குதம்பைச்சித்தர் என்று பெயர் பெற்றார். பெரும்பாலான சித்தர்களின் பெயர் காரணப் பெயர்களே.

**குபேரன் -** எண்திசைக் காவலர் களில் ஒருவன். வடதிசையைக் காப்பவன். இவனுடைய தலை நகர் அளகாபுரி. இவன் விச்சிர வசு என்னும் முனிவருடைய

மகன்; இதனால் வைச்சிரவணன் என்னும் பெயரும் இவனுக்கு உண்டு. இவன் தன்னுடைய தவச் சிறப்பால் சிவபெருமானுக்கு நண்பனும் அமைச்சனும் ஆனான். மேலும் செல்வங்கட்கும் இவனே தலைவன். பதினெண் கணங்களில் இயக்கர்களுக்கும் கின்னரர்களுக்குந் தலைவன். இவனுடைய உடன் பிறந்தான் இராவணன். அவன் இவனோடு போர்செய்து பகைவனாகவே இருந்தான்.

**குமாரசாமி** - முருகக்கடவுள் சிவபெருமானுக்குக் குமாரராகத் தோன்றியபடியால் உண்டான காரணப்பெயர்.

**கும்பகருணன்** - இராவணனுடைய தம்பி. மிகுந்த பேராண்மையுடையவன். நான்முகனை நோக்கிப் பெருந்தவஞ்செய்து சிறந்த வரங்களைப் பெற்றான். தேவர்கள் செய்த சூழ்ச்சியால் அந்த வரங்களெல்லாம் இவனுக்குப்பயன்படாமற்போயின. என்றும் உறங்குவதையே மேற்கொண்டிருந்து இறுதியில் மாண்டொழிந்தான். இராமனோடு சேர்ந்துகொண்ட விபீடணன் இவனையும்இராமனோடு சேர்த்துவிட முயன்றும் இவன் அதற்கு இணங்கவில்லை.

**கும்பன்** - மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னர் மகதநாட்டில் கஞ்சபுரி என்னும் ஊரில் இருந்தவன். வணிகர் மரபினன். இவன் பெரும் பொருள் தொகுத்து வைத்திருந்தும் அறச் செயல் எதுவுஞ் செய்யாமல் பொருளால் அடையத்தக்க பலனை அடியோடிழந்தான்.

**குருட்சேத்திரம்** - வடஇந்தியாவில் டெல்லிக்குப் பக்கத்தில் பஞ்சாப் இராச்சியத்தில் கார்குல் மாவட்டத்தில் உள்ள ஊர். நீளம் ஏறக்குறைய எழுபது மைல்; அகலம் முப்பது மைல். கௌரவர்கட்கும் பாண்டவர்கட்கும் பாரதப்போர் நடந்த இடம் ஆகையால் இப்பெயர் வந்தது.

**குலசேகரபாண்டியன்** - (க) மதுரையை அரசாண்ட பாண்டியர்களில் ஒருவன். நல்ல தமிழ்ப் புலமையுடையவன். இவன் மதுராபுரியம்பிகைமாலை என்னும் நூலொன்றைச் செய்திருக்கிறான்.

**குலசேகரபாண்டியன்** - (உ)இவன் கரிவலம்வந்தநல்லூரைக்கண்டுபிடித்துத் திருப்பணிசெய்தவன். இங்கு எழுந்தருளியுள்ள சுவாமியின் பெயர் பால்வண்ணநாதர்.

**குலசேகரபாண்டியன்** - (ங) மணலூரை யாண்ட பாண்டியன். இவன் அரசாட்சி செய்கையில் தனஞ்சயன் என்னும் வணிகன் ஒருவன் வாணிகஞ் செய்து திரும்புகையில் கடம்ப வனத்தில் பொழுது போயிற்று. அங்கோரிடத்தில் தங்கியிருந்தான். அப்பொழுது அவ்வனத்தில் எழுந்தருளியிருந்த சிவலிங்கத்தைத் தேவர்கள் வழிபாடு செய்தனர். இரவு முழுவதும் வழிபாடுநடந்தது.இதனைத் தனஞ்சயன் மறைவில் இருந்தபடியே பார்த்தான். காலையில் தேவர்களைக் காணவில்லை. சிவலிங்கத்தை மட்டும் கண்டான். இச்செய்தியை அரசனிடங் கூறினான். அரசன் சிவலிங்கத்தைக் கண்டு வழிபட்டான். காட்டையழித்து ஊராக்க எண்ணினான். அப்பொழுது சிவபிரான் சித்தராக எழுந்தருளித் திருப்பணி செய்ய வேண்டிய முறைகளை விளக்கி மறைந்தருளினார்.

**குலிதன்** - சோழ வள நாட்டில் வாழவந்தான் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவன். சிறந்த செல்வ நலம் பெற்றிருந்தும் யாருக்கும் எதுவும் வழங்காமல்

தானே உண்டு களித்து மகிழ்ந்திருந்தான். இவனுடைய புன்மையை நோக்கித் தத்துவப்பிரகாசர் என்னும் பெரியார் இகழ்ந்து பாடியுள்ளார்.

**குழந்தைவேலாயுதசாமி** - ஆறு படை வீடுகளில் ஒன்றாகிய திருவாவினன்குடியில் திருக்கோயில் கொண்டுள்ள முருகக் கடவுளின் திருப்பெயர். திரு ஆவினன்குடி என்பது புகழ் பெற்ற பழனிமலை அடிவாரத்தில் உள்ளது. பழனி யாண்டவனின் பெருமை இப்பதியில் சிறந்து விளங்குவதால் குழந்தை வேலாயுதரின் பெருமை குறைந்ததாகவே காணப்பெறும்.

**குறட்டிவரதையன்** - கல்வெட்டினால் அறியப்பெறும் புலவன். வட ஆர்க்காடு மாவட்டம் திருவல்லத்துச் சிவன்கோயில் கருவறை மதில் ஒன்றில் கண்ட கல்வெட்டில், 'திருத்தீக்காலி வல்லத்துக் கோயில் உண்ணாழிகை யதிகாரிகள் குறட்டி வரதையன் என்ற புலவனுக்கு அவன் அக்கோயில் சிவபிரான் மீது திருவல்லையந்தாதி பாடியதற்காக அத்தலத்தில் நூறுகுழி நிலம் இறையிலியாக அளித்த' செய்தி கூறப்படுகிறது. இப்புலவனுடைய சரியான காலம் விளங்கவில்லை. குறட்டி என்னும் ஊர் தென்னார்க்காடு மாவட்டத்தில் இருப்பதாகக் கூறப்படுகிறது.

**குறவஞ்சிமேடு** - திருக்குற்றாலக் குறவஞ்சி பாடிய மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயருக்கு முத்து விசயரங்கச் சொக்கநாத நாயக்கர் முற்றூட்டாக வழங்கிய நிலம் இப்பொழுதும் இப்பெயரால் வழங்குகிறது.

**குறுந்தொகை** - எட்டுத்தொகையுள் ஒன்று. நான்கடி முதல் எட்டடி வரையில் அமைந்த நானூறு அகப்பொருட் பாடல்களைக் கொண்டது. இதில் உள்ள நானூறு பாடல்களும் அகநானூறு போல் ஒருமுறை பற்றித் தொகுக்கப்படவில்லை. உரையாசிரியர்களால் மிகுதியாக மேற்கோள் காட்டி எடுத்தாளப் பெற்ற சங்ககால நூல் இதுவேயாகும். பண்டைய மக்களின் பழக்கவழக்கங்கள் மேம்பாடுகள் முதலியவைகளை இந்நூலால் அறியலாம். குறுந்தொகையென்று இத்தொகுப்பு நூலுக்குப் பெயர் கொடுத்தோரின் அறிவுநலம் பாராட்டத் தக்கதாகும்.

**கூடன்** - இவன் ஓர் அசுரன். நராந்தகனுடைய ஏவலால் காசிப்பட்டணத்துக்குப் போய் அங்கு பாறையுருக் கொண்டிருந்து ஆனைமுகக்கடவுளால் மாண்டொழிந்தான்.

**கூர்க்கா** - கூர்க்கா என்பது நேபாளத்தின் தலைநகரான காட்மாண்டுவின் வடமேற்கே அமைந்துள்ள ஒருநகரம். இதிலிருந்து அம்மலை நாட்டவர்களுக்குப் பெயர் உண்டாகி விட்டது. இவர்கள் சிறந்த போர் வீரர்கள். தமிழ் நாட்டின் பலவிடங்களினும் கூர்க்கர்கள் காவல் வீரர்களாக அமைந்துள்ளனர்.

**கூர்மபுராணம்** - பதினெண் புராணங்களில் ஒன்று. ஆமை வடிவங்கொண்ட திருமால் இந்திரத்துய்ம்மனுக்கும் பிற முனிவர்களுக்கும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருள்களைப் பற்றியும் கூறியது. இதுவடமொழியில் அறுபதினாயிரங் கிரந்தங்களையுடையது. அதிவீர ராம பாண்டியர் தமிழில் செய்யுள் வடிவாக மொழி பெயர்த்துள்ளார்.

**கூறைநாடு** - கூறையென்பது ஆடையைக் குறிக்கும். நீளமாக நெய்யப் பெற்றுப் பிறகு கூறுபோடப் படுகிறபடியால் கூறையென்று பெயருண்டாகியது. தஞ்சைமாவட்டத்தில்மாயூரத்தில் இருக்கும் ஓரிடம் கூறைகள் மிகுதியாக நெய்யப்படுகிறபடியால் கூறைநாடு என்னும் பெயரையடைந்தது. ஆனால் இப்பெயர் சிதைந்து இந்நாளில் கொறநாடு என வழங்கும்.

**கூனூர்** - குன்றூர் என்பது நாளடைவில் கூனூர் என்று திரிந்து விட்டதாகத் தெரிகிறது. நீலகிரிமலையின் மேல் உள்ள ஊர். கடல்மட்டத்திற்கு மேல் ஐயாயிரத்து அறுநூறடி உயரத்தில் இருக்கிறது. இவ்வூர் சிறந்த வாசத்தலமாகும். சிம்ஸ்பூங்கா அதிலுள்ள பழத்தோட்டம்; காட்டேரி நீர் வீழ்ச்சி புலிப்பாறை முதலிய இடங்கள் பார்க்கத் தக்கன. உதகமண்டலத்திற்குச் செல்லும் புகை வண்டிப்பாதை இவ்வூர் வழியாகச் செல்லுகிறது.

**கேசவன்** - கொங்கு நாட்டில் வனமங்கலம் என்னும் ஊரில் மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தவன். வைணவ சமயத்தினன்; வணிகர் மரபினன். இவன் ஊரார் எள்ளி நகையாடத்தக்கவாறு இழிதொழில்கள்பலசெய்துநாணமற்றவனாக வாழ்ந்து நோயடைந்து மாண்டான்.

**கேசி** - முன்னாளில் வடமதுரையில் இருந்தவன். அசுரர் மரபினன். மாயத்தொழில்கள் செய்வதில் இவன் மிக வல்லுநனாக இருந்தான். தன்மரபில் இருந்த பிந்து சேனன் என்னும் ஒரு முனிவனிடம் இருந்து அரிய மறைகள் பலவற்றை இவன் அறிந்திருந்தான். நினைத்தபடி வடிவங்களையெடுத்துக் கொண்டு கொடுந்தொழில்கள் பலவற்றைச் செய்து கொண்டு திரிந்தான். இப்பொல்லாதவனுடைய வல்லமைகளையறிந்த கஞ்சன் இவனைத் தனக்கு நண்பனாக்கிக் கொண்டான். கண்ணனைக் கொன்று வருமாறு இவனை அனுப்பினான். இவன் குதிரை வடிவமெடுத்துக் கொண்டு கண்ணனைக் கொல்லச் சென்றான். அம்மாயவன் இம்மாயவனுடைய மாயத்தைத் தெரிந்து கொண்டு கொன்றொழித்தான்.

**கேதார கௌரிவிரதம்** - இந்து சமயப் பெண்கட்குரிய ஒரு விரதம். ஐப்பசித் திங்களில் தேய்பிறையில் வரும் சதுர்த்தசித் திதியில் உமையவளை நோக்கி இந்நோன்பு நோற்கப் பெறுகிறது.

**கேமசருமன்** - முன்னாளில் வடநாட்டில் கடகபுரி என்னும் ஊரில் இருந்தவன். சண்டதருமன் என்னும் மறையவனுடைய மகன். இவன் மறை முதலிய கலைகளையெல்லாம் வழுவறப்பயின்று சிறந்த அறிஞனாகத் திகழ்ந்தும் கூடாவொழுக்கத்தை மேற்கொண்டு மனம் போனபடி நடந்தபடியால் முடிவில் இழிந்தொழிந்தான்.

**கைகாட்டி விநாயகர்** - திருநாட்டியத்தான் குடியிலுள்ள பிள்ளையார் பெயர். சுந்தரமூர்த்திகள் இந்தத் தலத்துக்கு வந்தபோது சுவாமியைக் காணாமல் விநாயகரைக் கேட்க அவர் கையால் சுட்டிக் காட்டினாராம். அதனால் விநாயகருக்கு இவ்வாறு பெயர் உண்டாயிற்று.

**கையறுநிலை** - கையறுநிலை என்பதற்குப் பொருள் செயலற்றிருக்கும் நிலைமை என்பது;

தமக்கு வேண்டிய ஒருவர் இறந்து போகும்போது மனங் கலங்கிச் செயலற்றிருக்கும் நிலையை இது குறிப்பிடும். மனம் வருந்தப் பெற்றோர் இச் சமயத்தில் கூறுஞ்சொற்களை யும் இது குறிக்கும். மனம் வருந்துவோர் புலவர்களாயின் அவர்களுடைய இரங்கல் செய் யுள் வடிவாகவும் இருக்கும்.

**கைலாயம்** - திபேத்து நாட்டில் உள்ள மலை. இமயமலையைச் சேர்ந்தது. உயரம் 22,028 அடி. சுற்றளவு 32 மைல். இந்துக்களாலும் பௌத்தர் களாலும் வழிபடப்படுகிறது. இம்மலை சிவபிரான் உமா தேவியோடு எழுந்தருளியிருக்கு மிடம் என்று புராணங்கள் புகலுகின்றன.

**கொங்கணம்**- இஃது ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று. இது மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கும் அரபிக்கடலுக்குக் கிழக்கும் கூர்ச்சரத்திற்குத் தெற்கும், கோவாவுக்கு வடக்கு மாக உள்ள நிலப்பகுதி. இந் நாட்டவர் பேசும் மொழி கொங்கண மொழியெனப் படும்.

**கொண்கானங் கிழான்** - கொண் கான நாடு என்பது பிற்காலத் தில் கொங்கண நாடு என மருவி வழங்கலாயிற்று. இது சேலம் கோயமுத்தூர் நாடு களின் கீழ்ப்பகுதி நாடாகும். இந்நாட்டுக் கொங்கு வேளா ளர் குடியிற் சிறந்த வள்ள லாக விளங்கியவன் இக்கொண் கானங்கிழான். இந்நாடு பொன் வளத்தில் சிறந்தது. கொண் கானங்கிழான் பெருஞ்செல்வ முடையவனல்லனாயினும் தன் னிடம் வரும் பரிசிலர்க்கு முடிந் தவைகளைக் கொடுத்துப் போற்றுந் தன்மையுடையவன். ஆகவே இவனைப் பலரும் பாராட்டலாயினர். இவனைப் புகழ்ந்து மோசிகீரனார் பாடி யுள்ளார்.

**கொண்டைகட்டிகள்** - வேளாளர் களுள் ஒரு வகை வகுப்பினர். இவர்கள் குடுமிக்குப் பதிலாகச் சிகையைக் கொண்டையாகக் கட்டிக் கொண்டிருந்தமையால் இவ்வாறு பெயர் பெற்றனர்.

**கொப்பரகேசரி பன்மன்** - ஒரு சோழ மன்னன். இவன் மதுரை ஈழம் முதலிய நாடு களை வென்றான். இவன் ஆதித்த சோழனுடைய மகன். இவனுக்குப் பராந்தகன் வீர நாராயணன் என வேறு பெயர் களும் உண்டு. இவனுடைய மனைவியின் பெயர் கோக் கிழாள். இவள் கேரளநாட்டு மன்னனுடைய மகள். இவர் கட்கு இராசாதித்தன். கண்ட ராதித்தன், அரிஞ்சயன் என மூன்று புதல்வர்கள் இருந் தனர்.

**கொல்லாபுரம்** - கொல்லாபுரம் என்பதன் பொருள் ஓருயிரை யும் கொலை செய்யாத ஊர் என்பதாம். இவ்வூர் பம்பாய் இராச்சியத்தில் கோவாவின் எல்லையோரத்தில் இருக்கிறது. இங்கு மகாலட்சுமி கோயில் இருக்கிறது. இக்கோயிலில் உள்ள திருமகளை அகத்தியர் பாடிப் போற்றியிருக்கிறார். இப் பெயருடைய ஊர் தமிழ்நாட்டி லுஞ் சில இடங்களில் இருப்ப தாகத்தெரிகிறது.

**கோடகன்** - திருவயோத்தியில் இராமபிரான் அரசு செலுத்திக் கொண்டிருந்த காலத்தில் உத் தரகோசலத்தில் சத்திபுரி என் னும் நகரில் இருந்த ஓர் அந் தணன். இராமபிரான் செய்த வேள்விக்குப் பரிசு பெறப் போய் மனைவியின் சொற்படி "கஞ்சிக்குக் கலப்பயறு வேண் டும்" என்று கேட்டவன்.

இவன் மனைவிக்கு அஞ்சியவன் என்பதை அங்குள்ளவர்கள் அனைவரும் அறிந்து கொண்டு இவனை எள்ளி நகையாடினர்.

**கோடைக்கானல்** - தமிழ்நாட்டில் மதுரை மாவட்டத்தில் பழநி மலையின் தெற்குப் பகுதிகளில் உள்ள ஊர். கடல்மட்டத்திற்கு மேல் ஏழாயிரம் அடி உயரத்தில் இருக்கிறது. தென்னிந்தியாவில் உள்ள மலைவாசத் தலங்களில் சிறந்தது. கோடைக்கானல் ரோடு புகை வண்டிநிலையத்தில் இருந்து ஐம்பது மைல் தொலைவில் இருக்கிறது. கோடைகாலத்தில் வெயிலின் கொடுமை மிகுதியாக இருக்கும் போது இங்கு மிகக் குளிர்ச்சியாக இருக்கும். ஆகவே கோடை வெப்பந் தாங்க முடியாத செல்வர்கள் இங்கு வந்து தங்குவது வழக்கம். இங்குள்ள மலைக்காட்சிகள் மிகுந்த மகிழ்ச்சியளிப்பவை.

**கோட்டாற்றிளம் பெருமானார்** - கல்வெட்டால் அறியப்பெறும் புலவர். திருச்சிராப்பள்ளியை அடுத்த செந்தலை என வழங்கும் சந்திரலேகைச் சதுர்வேத மங்கலத்தில் உள்ள சிவபிரான் திருக்கோயில் கல்வெட்டால் இவரைப் பற்றியறியப் படுகிறது. பல்லவர்களிடம் சாமந்தர்களாய் ஆண்டுவந்த முத்தரையர்களின் பெரும்பிடுகு முத்தரையன் சவரன் மாறன் என்ற அரசனது வெற்றியை இவர்பாடியிருக்கிறார். கோட்டாறு என்பது திருவாங்கூர்ப் பகுதியில் உள்ள நாகர்கோயிலின் பழம் பெயராகும்.

**கோதாவிரி** - இவள் ஒரு மறையவனுடைய மகள். இவள் பூஞ்சோலையில் உலாவித் திரிகையில் அசுவினி தேவகுமாரன் இவளை வலுக்கட்டாயமாகப் புணர்ந்தான். அப்பொழுது இவளிடம் ஒரு மகன் பிறந்தான். இவள் அம்மகனை யெடுத்துக் கொண்டு வீட்டிற்குச் சென்றாள். இவளை வளர்த்தவர்கள் இவளைக் காட்டுக்கு விரட்டினர். இவள் காட்டிற்குச் சென்று தவம் புரிந்து கோதாவிரியாற்றின் உருவமடைந்தாள். இவளுடைய மகன் மருத்துவன் ஆனான்.

**கோத்தகிரி** - தமிழ்நாட்டில் நீலகிரி மலையில் உள்ள ஓர் ஊர். கடல் மட்டத்திற்கு மேல் ஆறாயிரத்துஐந்நூறுஅடி உயரத்தில் இருக்கிறது. குன்னூருக்கு மேலே பன்னிரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. கோடை வாசத்தலங்களில் இதுவும் ஒன்று.

**கோயமான்** - இவன் ஈந்தூர் கிழான் கோயமான் என்று கூறப்பெற்றான். ஈந்தூர் என்பது இந்நாளில் ஈஞ்சூர் என வழங்குகின்றது. கோயமான் என்பவன் இவ்வூரில் வாழ்ந்திருந்தான். இவன் சோழ வேந்தர்கள் வேண்டும் பொழுது துணைசெய்பவனாக விருந்தான். அதனால் கிடைக்கும் பொருளை இரவலர்க்கு வழங்கிப் புகழ் பெற்றான். இயற்கையிற் பெருஞ் செல்வம் படைத்தவன் அல்லன். கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் இவனைப் பாடியுள்ளார்.

**கோவிந்தன்** - விதைய நாட்டு மன்னன். கமலவதி என்னும் நகரில் இருந்து அரசுபுரிந்தவன். சீவகனுடைய தாயாகிய விசையையோடு உடன் பிறந்தவன். இவனுடைய மனைவியின் பெயர் பிருதிவி சுந்தரி.

**கௌடர்கோன்** - இவன் ஒரு வட நாட்டரசன்; பௌத்தன். இவன் திருநெல்வேலிக்கு வந்து கோயிலுக்குச் சென்றான். மண்டபத்தில் இருந்த நந்தி யுருவத்தைக் கண்டு "இது புல் தின்னுமோ?" என்று கேட்டான். புல்லும் நீரும் வைக்குமாறு அங்கிருந்தவர்களிடம் கூறினான். அங்கிருந்தவர்கள் அவ்வாறே வைத்தார்கள். அரசன் அவர்களைப் பார்த்து, "இப்புல்லைத் தின்று நீரை யுண்ணின் உங்கள் தெய்வம் மெய்த்தவம்" என்று சொன்னான். நந்தி புல்லைத் தின்று நீரை அருந்தியது. பிறகு அங்கிருந்த மூங்கிலைப் பார்த்து, "இது வேறு மலர் மலருமோ?" என்று கேட்டான். அது தாமரை முதலிய மலர்களைத் தந்தது. பிறகு கொன்றை மரம் வில்வமரம் ஆகவேண்டுமென்றான். அவ்வாறே ஆகியது. இதனைக் கண்டு அப்பௌத்த மன்னன் சைவனானான்.

**கௌமாரம்** - பாரத நாட்டில் பண்டைக் காலந்தொட்டு வழங்கிவரும் வைதிகசமயங்கள் சைவம், வைணவம், சாக்தேயம், காணபத்யம், கௌமாரம், சௌரம் என்னும் ஆறுமாகும். இவைகளுள் கௌமாரம் என்பது குமாரக் கடவுளாகிய முருகனை முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபடுஞ் சமயமாகும்.

**கௌமாரன்** - மதுரையில் இருந்து அரசுபுரிந்த வரதுங்க பாண்டியனுடைய மகன். இளைஞனாக விருக்கும்போதே அரசாட்சியை மேற்கொண்ட இவன் அறநெறிப்படி ஆட்சி புரிந்தான்.

**சங்கடசதுர்த்தசி** - இது சங்கடங்களைப் போக்குவதால் இப்பெயர் பெற்றது. இதனைமாசித் திங்கள் அமர பட்சசெவ்வாய்க் கிழமையில் மேற் கொள்வர். இஃது ஆனைமுகக் கடவுளுக்குரிய விரதம். அங்காரகன் என்பவன் இதனைக் கடைப் பிடித்துப் பலன் பெற்றான்.

**சங்கமித்திரை** - அசோக மன்னனுடைய மகள். அசோகன் இவளையும் தன்மகனாகிய மகேந்திரனையும் இலங்கைக்கு அனுப்பிப் பௌத்த சமயக் கொள்கையைப் பரவச் செய்தான்.

**சங்கவண்ணன்** - இவன் பயாபதி மன்னனுடைய மகன். இவனுடையதாய்பெயர்மிருகாவதி. இவன் வெண்ணிற முடையவனாக விளங்கிய படியால் சங்க வண்ணன் என்று பெயர் பெற்றான். இவனுடைய தம்பியின் பெயர் திவிட்டன்.

**சங்கவருணர்** - கடைச்சங்கப் புலவர்களில் ஒருவர். வெண்ணிற மேனியராகையால் இவ்வாறு பெயர் பெற்றார். நந்து மாறன் என்னுங் குறுநில மன்னன் இவரைப்போற்றிப் பாராட்டினான். இவர் அவன்மீது பாடியபாடல் புறநானூற்றிற் சேர்க்கப் பட்டிருக்கிறது.

**சசித்துவசன்** - பல்லாடநாட்டில் இருந்த மன்னன். இவனுடைய மகன் சூரியகேது. உடன்பிறந்தான் பிரகத்கேது. இவன் மிகுந்த திருமால் பக்தியுடையவன். கல்கியோடு போர் செய்ய வந்துகல்கியால் கொண்டாடப்பட்டவன். இவனுடைய மனைவி சுசாந்தை;மகள் இரமா. இவள் கல்கியை மணம் புரிந்தாள். முன்பிறப்பில் இவனும் இவன்மனைவியும்கழுகாகஇருந்தார்கள். ஒருநாள் ஒருவேடன் வலை கொண்டு இவர்களைப் பிடித்து அறுத்துக் கண்டகி யாற்றின்கரையிற் சமைத்தான்.

அவ்வாற்றின் கரையை அடைந்தநல்வினையினுலே திருமால் பதத்தை யடைந்து நூறு யுகங்கள் வசித்தான். பிறகு நான்முகன் உலகில் ஐநூறு யுகங்கள் வசித்தான். பிறகு நிலஉலகில் வசிக்க வேண்டும் என்னும் அவாவினுல் உலகில் அரசனுனன். கல்கியாகிய நாராயண மூர்த்தி யையுங் கண்டான். இவன் பழம் பிறப்பில் சத்திராசித். இவன் மகள் முன்பிறப்பில் சத்திய பாமை.

**சடையநாதன்** - தொண்டை வளநாட்டில் புழற்கோட்டத்தில் அயன்றை என்னும் ஊரில் இருந்தவன். சிறந்த வள்ளல். இவன் பலரையும் போற்றிப் பாதுகாத்தான். இவனுல் பாதுகாக்கப்பட்ட கழைக் கூத்தி ஒருத்தி தன் இறுதிக்காலத்தில் ''இரவலாளரே பெருந்திருவுறுக'' என்னுஞ் செய்யுளை இவன் மீது பாடியுள்ளாள்.

**சண்பக வடிவி** - கரிகால் சோழனுடைய ஆலத்திப் பெண்ணுகிய மரகத வடிவியின் மகள். இவளுக்குத் தமிழறியும் பெருமாள் எனவும் பெயர் உண்டு.

**சண்பை** - சீகாழிக்கு ஒருபெயர். துருவாச முனிவருடைய சாபத்தால் கருக்கொண்ட ஆண் மகன் வயிற்றிற் பிறந்த இருப்புலக்கை அராவப்பட்டுக் கடலில் இட அது கடற்கரையில் ஒதுங்கிச் சண்பைப் புல் ஆயிற்று. கடற்கரையில் வந்த கோபாலர்கள் அப்புல்லைப் பறித்து மோதிக்கொண்டு இறந்தார்கள். அத்தீவினை முனிவரையடைந்ததால் அவர் அத்தீவினையைச் சீகாழியில் சிவவழிபாடு செய்து போக்கிக் கொண்டார். அதனுல் சீகாழிக்கு இவ்வாறு ஒருபெயர் உண்டாகியது.

**சதசித்து** - இவன் திங்கட் குல மன்னனுகிய சகத்திரசித்து என்பவனுடைய மகன். நூறு போர்முனைகளில் போர்செய்து வெற்றிபெற்றவனுகையால் சதசித்து என்று பெயர் பெற்றுன்.

**சத்தியப்படிகள்** - திருச்செங்கோட்டு மலையில் அறுபதாம் படி மண்டபத்தின் அண்மையில் உள்ளபடிகளைச் சத்தியப்படிகள் என்று மக்கள் கூறுகின்றனர். பொருள் கொடுக்கல் வாங்கலில் வழக்கு ஏற்பட்டால் இரு கட்சியினரும் இப்படிகளில் இருந்து சத்தியஞ் செய்து முடிவு செய்து கொள்ளுகின்றனர்.

**சத்தியவன்மன்** - ஆதிசங்கரர் காலத்தில் கேரள நாட்டில் இவன் அரசனுக இருந்தான். ஆதிசங்கரரைத் தன்னிடம் அழைத்து வருமாறு சிலரை அவரிடம் அனுப்பினுன். சங்கரர் அரசனை ஒருபொருள்படுத்தி அவனிடம் செல்லவில்லை. அரசன் தானே சங்கரரிடஞ் சென்றுன். தான் செய்த மூன்று நாடகங்களையும் பத்தாயிரம் பொன்னையும் சங்கரரிடம் வைத்து வணங்கினுன். சங்கரர் ''இந்நாடகங்கள் இந்நாடு ஒன்றிலே மட்டும் வழங்குக. இப்பொன்னை வேள்வி செய்யும் அந்தணர்கட்கு வழங்குக'' என்று கூறினுர். மகப்பேறளிக்கும் வேள்வியொன்றைக் கூறி அதனைச் செய்து மக்கட்பேற்றையடையுமாறு கூறினுர். அரசனும் அவ்வாறே செய்து நலம் பெற்றுன்.

**சநார்த்தனன்** - இராமபிரானுடைய முடிசூட்டு விழாவிற்குத் தேவர்கள் அனைவரும் போய்விட்டார்கள். நான்முகன் தன்னுடைய வேள்வியில் சமைத்த உணவு வகை

களைப் புசிப்பதற்கு எவரும் இல்லையே யென்று ஏங்கினன். திருமால் ஒரு பால உருக் கொண்டு வந்து அவைகள் அனைத்தையும் உண்டு நான் முகனுக்குக் காட்சி தந்தார். அவ்வுருவம் இப்பெயரோடு வழங்கலாயிற்று.

**சந்தனநங்கை** - இவள் சிறுத் தொண்டநாயனரதுஇல்லத்தில் திருவெண்காட்டு நங்கைக்குத் தாதியாக அமைந்து இல்லத்துப் பணிகளையெல்லாஞ் செய்த வள். நுண்ணறிவு மிக்கவள். மைந்தனுடைய தலையைப் புதைத்து விடுமாறு சிறுத் தொண்டரும் மனைவியாரும் இவளிடங் கொடுத்தபோது இவள் தலைக்கறியைப் பைரவர் கேட்டாலும் கேட்கக் கூடும் என்று மதிநலத்தாலறிந்து கறி சமைத்து வைத்தவள்.

**சந்தானசாரியர்கள்** - மெய்கண் டார், அருணந்தி சிவாசாரி யார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவம் என்னும் நால் வரும் சந்தானசாரியர்கள் எனக் கூறப்படுவர். (சந் தானம் என்பதன் பொருள் வழிமுறை) சந்தானம் அகச் சந்தானம், புறச் சந்தானம் என இருவகைப்படும். திருக் கைலை மலையில் வாழ்வோர் அகச் சந்தானத்தார். அவ்வழி முறையில் நிலவுலகத்தில் தோன்றிய மெய்கண்ட தேவர் முதலியோர் புறச் சந்தானத் தார்.

**சந்திரகுப்தர்** - இவர் அரசவழி முறையைச் சேர்ந்தவர். இவர் மன்னனுடைய சினத்திற்கு ஆளாகி நாடு கடத்தப்பட் டார். இவர் அரச தந்திரி யான சாணக்கியர் என்னும் ஓர் அந்தணனுடைய உதவி யால் சிறிய படை ஒன்றைத் திரட்டிக் கொண்டு மகதநாட் டின் மீது படையெடுத்து நந்த அரசனை தனநந்தனை வென்று மகதநாட்டிற்கு அரச ரானர். இவர் மகதநாட்டின் மன்னரான பிறகு வடஇந்தி யாவின் பல பகுதிகளாகிய பஞ் சாப், சிந்து, மாளவம், குசராத் ஆகிய நாடுகளைவென்று தம் முடைய அரசைப் பேரரசாக்கி னர். இவருடைய பெரிய நாடுதான் இந்தியாவில் முதன் முதலில் ஏற்பட்ட பெரிய நாடாகும். சந்திரகுப்தருக்குச் சாணக்கியன் அமைச்சனாக விருந்தான். இவனுக்குக் கௌடில்யன் என்றும் பெய ருண்டு. இவன் அர்த்தசாஸ்த் திரம் என்னும் சிறந்த அரசி யல் நூலை இயற்றியிருக்கிருன்

**சந்திரசேகரர்** - சந்திரன் தக்க னல் உடல் தேயச் சாடம் அடைந்து சிவபிரானிடம் அடைக்கலம் புகுந்தான். சிவ பிரான் சந்திரனுக்கு அடைக் கலம் தந்து திருமுடியில் அணிந்து கொண்டார். இவ் வாறு சந்திரனை அணிந்து கொண்டபடியால் சந்திரசேக ரர் என்று பெயர் உண்டா யிற்று.

**சந்திரசேகரவாணன்** - இவன் தொண்டை நாட்டில் சேறை என்னும் ஊரில் வாழ்ந்திருந்த வேளாளன்; பெருஞ் செல்வன். இவன் தன்னுடைய செல்வச் சிறப்பினல் சோழமன்னனை எதிர் கொள்ளாமலிருந்தான் இதனல் சோழன் சினமடைந் தான். வேளாளர்கள் மிகுந்த செருக்குடையவர்க ளென்று சிறையிலிட்டான். இவனே சோழனைச்சிறையில் அடைத்து விட்டுப் பாண்டியனை மன்ன னக்கி விட்டான்.

**சந்திரசேநன்** - இவன் உச்சயினி புரத்தில் அரசனுக இருந்தான். சிவபிரான் மீது சிறந்த அன்

புள்ளவன். இவனோடு நட்புக் கொள்ளவிரும்பிய கணநாதன் ஒருவன் பெரிய மாணிக்கம் ஒன்றை இவனுக்குக் கொடுத்தான். அதனைப் பகையரசர்கள் கவர்ந்து கொள்ள எண்ணிப் படையெடுத்தனர். இவ்வரசன் உச்சயினி மாகாளரைப் பூசை செய்து கொண்டிருந்தான். ஓர் இடைப் பெண்ணும் அவளுடைய மகனும் இறைவழிபாட்டிற்காகச் சென்றார்கள். இடைச் சிறுவன் தானுஞ் சிவபூசை செய்ய எண்ணினன். அரசனைப் போலத் தனக்குச் சிவலிங்கம் மணி முதலியன அகப்படாமையால் கல்லைச் சிவலிங்கமாகப் பாவித்துச் சிவபூசை செய்தான். சிறுவனுடைய தாய் தன்னுடைய மகன் பசி வேளைக்கு வீட்டிற்கு வந்து உணவு கொள்ளாமையைக் கண்டு உள்ளம் வருந்தினள். பையன் விளையாட்டில் இருக்கிறான் என்று எண்ணினள். சிறுவன் சிவனைப் பாவனை செய்து வைத்திருந்த கல்லை எடுத்து எறிந்தாள். இதனைக் கண்டு சிறுவன் மூர்ச்சையடைந்தான். தாய் அஞ்சிச் சிறுவனுடைய மூர்ச்சையைப் போக்கினள். சிறுவன் எழுந்து பார்க்கையில் வீடுமுழுவதும் மணிமயமாக விளங்கியது. இதனை அந்நாட்டின் மீது படையெடுத்துக் கொண்டுவந்த அரசர்கள் கண்டு இந்நாட்டில் சிவபக்திமிகுதியாக இருக்கிறது. நாம் அரசனை வெல்ல முடியாது என்று முடிவு செய்து திரும்பி விட்டனர்.

**சமிவனம்** - பாண்டி வளநாட்டில் இந்நாளில் கோவிலூர் என வழங்கும் சிவப்பதியில் முன்னாளில் சிவபெருமான் வன்னி மரக்காட்டில் வன்னிமரத்தின் கீழ் எழுந்தருளியிருந்தபடியால் கோவிலூர் முன்னாளில் சமிவனம் என்னும் பெயருடையதாக விளங்கியது.

**சமுத்திரகுப்தன்** - இவன் கி. பி 330 முதல் 380 வரை அரசாண்டான். பல அரசர்களைத் தோற்கடித்து அசுவமேத வேள்வி செய்து புகழ் பெற்றான். கங்கைச் சமவெளியில் யில் பல அரசர்களையும் வென்று தென்னிந்தியாவின் மீதும் படையெடுத்தான். இவன் கிழக்குக் கடற்கரை வழியாகக் காஞ்சியை அடைந்து பிறகு கோயமுத்தூர் பாலக்காடு வழியாக மேற்குக் கடற்கரையை அடைந்து, மகாராட்டிரம், கந்தேஷ் முதலிய நாடுகளை வென்றான். இவன் சிறந்த போர் வீரனாக விளங்கிய தன்றிச் சிறந்தகவியரசனாகவும் விளங்கினன். வீணைவாசிக்குந் திறமையும் இவனிடஞ் சிறந்து விளங்கியது.

**சயந்தன்** - இந்திரனுடைய மகன். தந்தையைப் போல் இவனுங் காமக் காழ்ப்பு மிகுதியாக அமையப் பெற்றவன். சீதாபிராட்டியிடந் தீமை செய்து அல்லல் அடைந்தான்.

**சரத்காரு முனிவர்** - இவர் யாயாவரர் என்று பெயருள்ள முனிவருடைய குலத்திற் பிறந்தார். யாயாவரர் என்றால் இன்றிருந்த ஊரில் நாளையிராதவர் என்று பொருள். அழிவதைச் சரை யென்று கூறுவார்கள். துன்பம் உண்டாக்குவதற்குக் காரு என்று பெயர். அம் முனிவருக்கு மன உறுதியினால் சரீரம் காருவாக இருந்தது. நல்லஞானியாக விளங்கிய இவர் தம்முடைய தவத்தால் சரீரத்தைக் குறைத்தார். இதனால் சரத்காரு என்று பெயர் உண்டாகியது. வாசுகி

யினுடைய தங்கையான நாக கன்னியும் தவத்தினால் சரத்காரு என்று பெயர் பெற்றிருந்தாள். முனிவர் இவளை மணந்து ஆத்திகர் என்னும் புதல்வரைப் பெற்றார்.

**சலதரங்கம்** - இதற்குப் பொருள் நீர் அலை என்பது. பலகிண்ணங்களில் பல அளவில் நீர் வார்த்துச் சுருதி அமைத்துக் கொண்டு சிறுகழியால் தட்டி வாசிக்கும். ஒரு வகை வாத்தியும் சலதரங்கம் என்று கூறப் படுகிறது.

**சலபோசன்** - கோசல நாட்டில் சிந்தூபம் என்னும் நகரில் இருந்தவன். இவனுடைய மனைவியின் பெயர் சதசிகை; மகனுடைய பெயர் சுரோசனன். இச் சுரோசனன் காட்டில் உள்ள தடாகத்தில் வாய் சுருங்கிய ஏனத்தில் நீர் எடுக்கும் போதுதான் தசரதன் யானையென்று எண்ணி அம்பெய்து கொன்றான். பிள்ளைப் பிரிவால் தசரதன் மாளுமாறு சாபமிட்டவன் இச்சலபோசனே.

**சலன்** - இவன் கதிரவகுலத்து மன்னர்களில் ஒருவன். பெருஞ் செல்வமுடையவனாக இருந்தும் சிறிதும் அறிவில்லாதவனாக இருந்தான். இவன் ஒருநாள் வேட்டைக்குச் சென்ற பொழுது வாமதேவர் என்னும் முனிவரிடம் சிறிது நேரத்திற்குக் குதிரையை இரவல் பெற்றுப் பிறகு கொடாமல் அவரைக் கொலை செய்யத் தொடங்கி அவரால் அழிந்தொழிந்தான்.

**சவரர்** - இவர்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் உஞ்சை நகரின் வடபாகத்தில் இருந்த குறிஞ்சி நிலப்பகுதிகளில் வாழ்ந்திருந்தனர். இவர்கள் மிகக்கொடியவர்கள். வழிச் செல்வோரை மறித்துப் பொருளைக் கவர்தலோடு அவர்களுடைய உயிரையுங் கவர்வர். இவர்கள் இரக்கம் என்பதைச் சிறிதும் உணராத அரக்கர்களாக இருந்தனர். இப் பொல்லாதவர்கள் நாளடைவில் கொன்றொழிக்கப்பட்டனர்.

**சாகர்பல்கலைக்கழகம்** - நடு இந்தியாவில் சாகர் என்னும் நகரில் 1946 ஆம் ஆண்டில் நிறுவப் பெற்றது. டாக்டர் சர் ஹரி சிங்கௌர் என்ற பேரறிஞர் இருபது லட்சம் ரூபாய் நன்கொடை வழங்கி இதை நிறுவினார். அரசாங்கத்தார் இதற்கென 2050 ஏக்கர் பரப்புள்ள நிலத்தை வழங்கினர். இஃது இயற்கைவனப்பு மிகுந்த இடத்தில் அமைந்துள்ளது. இப்பல்கலைக்கழகத்தை நிறுவியவர் இங்குத் தொழில்நுட்பவியலுக்கு முதலிடம் அளிக்கவிரும்பினார். எனவே மிகுந்த செலவில் தக்க சாதனங்களுடன் விஞ்ஞானத்தொழில் நுட்பத் துறை நிறுவப்பட்டுள்ளது. இது தேர்வு நடத்தும் பல்கலைக் கழகமாக இருப்பதோடு இங்கேயே தங்கிக் கல்விகற்கும் வசதியையும் கொண்டுள்ளது. இதனோடு இருபத்தொரு கல்லூரிகள் இணைக்கப்பட்டுள்ளன.

**சாக்ரட்டீஸ்** - அறநெறிக்காகத் தமது உயிரைத் துறந்த பல பெரியோர்களில் இவர் ஒருவர். இவர் கிரேக்க நாட்டில் ஆதன்ஸ் நகரத்தில் பிறந்தார். (காலம் கி. மு. 470 - 399) இவருடைய தந்தை சிற்பி. தாய் மருத்துவச்சி. இவர் அழகற்றவர். இவருஞ் சில காலம் சிற்பியாக வேலைபார்த்தார். பிறகு அத்தொழிலை விட்டுவிட்டு ஆனக்சகோரஸ்,

பிதாகரஸ் ஆகியவர்களின் நூலைக் கற்ருர். பிறகு எளிய உடையோடு தெருத்தெருவாகச் சென்று மக்களுடன் பேசி அவர்கட்கு அறிவுரை கூறுவதிலேயே தம்முடைய வாணுளைக் கழித்து வந்தார். போர்புரிவதினும் பெரிய வீரராகத் திகழ்ந்தார். மூன்று போர்களில் கலந்து புகழ் பெற்ருர். போரிற் செயற்கருஞ் செயல்களைச் செய்தார். கி. மு. 406 இல் மக்கள் சபை உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். தம்முடைய கொள்கைக்குச் சிறிதும் குறைவுண்டாகாமல் நடந்தார். இதனுல் மக்கள் பலருடைய சினத்திற்கு ஆளாஞர். கி. மு. 399 இல் ஆதன்ஸ் அரசாட்சியினர் இவர் நாத்திகம் போதித்து இளைஞர்களுடைய அறிவைக் கெடுத்து விடுகிருர் என்று குற்றஞ்சாட்டி வழக்குத் தொடர்ந்து இவர்க்கு மரண தண்டனை விதித்தனர். மரண தண்டனை நிறைவேற்றப்பட்டு இறக்கும் வரை ஆன்ம விசாரணை செய்து கொண்டிருந்தார். இவருக்கு மாணவர்கள் பலர் இருந்தனர்.

**சாபாலி** - இவர் ஒரு முனிவர். மறை முதலிய கலைகளை நன்கு ஓதியுணர்ந்தவர். பொறுமையும் நல்லியல்பும் பொருந்தப் பெற்றவர். இவர் தீயவர் பலரை நன்னெறிக்குக் கொண்டு வந்தார். தீவினைப் பயனுல் துன்புற்றவர்களுடைய துன்பத்தைப் போக்கினுர். சிந்தூபன் என்னும் மந்திரவாதி தம்மை யிகழ்ந்த பொழுதும் பொறுமை காட்டி நின்ருர்.

**சாமுண்டீசுவரி** - மைசூர் நகரத்துக்குப் பக்கத்தில் இரண்டு மைல் தொலைவில் உள்ள ஒரு சிறு குன்றில் எழுந்தருளியுள்ள அம்மனின் பெயர் சாமுண்டீசுவரி. இவ்வம்மன் மைசூர் அரசர்களுடைய குலதெய்வம். இவ்வம்மனுக்கு ஒரு காலத்தில் நரபலி கொடுக்கப்பட்டு வந்ததாகக் கூறுவர். இக்குன்றில் உள்ள பழைய கோயிலை மகாபலேசுவரர் கோயில் என்று கூறுவர்.

**சாயணு சாரியார்** - விசயநகர இராச்சியத்தை நிறுவிய ஆதி மன்னர்களின் அமைச்சரும் குருவும் ஆவர். வித்தியாரணியர் என்ற மாதவாசாரியாரின் தம்பி. இவர் நான்குமறைகளுக்கும் உரை எழுதியுள்ளார். வியாகரணம், பூர்வ மீமாம்சை, உத்தரமீமாம்சை, தரும சாஸ்திரம் முதலிய நூல்களுக்கு விளக்க நூல்களை இருவரும் எழுதியுள்ளார்கள்.

**சாயிபாபா** - இவர் நைசாம் நாட்டில் பத்திரி என்னும் சிற்றூரில் அந்தணர் குலத்திற் பிறந்தார். இவர் பிறந்த ஆண்டு இன்னதென்று விளக்கமாகத் தெரியவில்லை. குழந்தைப் பருவத்தில் ஒரு முகமதியப் பக்கிரியிடம் ஒப்படைக்கப்பட்டார். பிறகு ஓர் அந்தணர் இவரைப் பல ஆண்டுகள் வைத்திருந்து மெய்யறிவுரைகள் கூறிஞர். மிகு இளம்பருவத்திலேயே மன வுறுதி, மெய்யறிவு, கடவுளன்பு முதலியவைகள் கைவரப்பெற்ருர். வியக்கத்தக்க பலசித்திகளை இவர் பெற்றிருந்தார். பல விடங்களிலுஞ் சுற்றித்திரிந்த இவர் தம்முடைய பதிஞரும் அகவை முதல் சீரடி என்னும் ஊரில் தங்கியிருந்தார். தெய்வ நெறி வாழ்க்கையில் அளவற்ற ஈடுபாடு கொண்டிருந்தார். தமக்கென ஒரு பொருளையும் இவர் வைத்துக்கொள்ளவில்லை. உணவையும் இரந்துண்டே காலந்தள்ளிஞர். மருந்துகள்

மூலிகைகள் முதலியவைகளில் இவர் நல்ல பட்டறிவு பெற்றிருந்தார். அவ்வறிவைக் கொண்டு மக்களுடைய நோய்கட்கு மருத்துவஞ்செய்து மக்களின் துன்பங்களைப் போக்கினார்.

இவர் மசூதியொன்றில் தங்கியிருந்தார். ஒரு சமயம் எண்ணெய் கிடைக்காமற் போகத் தண்ணீரைக் கொண்டு விளக்கெரித்தார் எனவுங் கூறுவர். 1910 ஆம் ஆண்டிலிருந்து இவருடைய புகழ் யாண்டும் பரவத்தொடங்கியது. மக்கள் சீரடிக்குச் சென்று இவரைக் கண்டு போற்றி வழிபடலாயினர். செல்வர்கள் எளியவர்கள் அனைவரும் சென்று வழிபட்டனர். சமய பேதம் பார்க்காமல் இந்துக்கள் முகமதியர்கள் பார்சிகள் அனைவரும் போற்றி வழிபட்டனர். சாயிபாபா சமய பேதங் கடந்த மெய்யறிவைப் பெற்றிருந்தபடியால்எல்லாரையும் ஒரே நோக்கில் பார்த்தார். இவரைக் கண்டு போற்றியவர்கள் தங்களுடைய மனக்குறைகள் தீர்ந்து எண்ணியவைகளை எய்தினர்கள். 1918 ஆம் ஆண்டில் இவர் சீரடியில் வீடு பேற்றையடைந்தார்.

சாரதை - இவள் வேதவிரதன் என்பவனுடைய மகள். இவளைப் பதுமநாபன் என்னும் முதிய மறையவன் அரசனுடைய வலிமை கொண்டு மணந்தான். சுகம் பெருமலே இருந்தான். இவளும் இறந்து மறுபிறப்பில் ஒரு மறையவனை மணந்தாள். இப்பிறவியிலும் சுகம் பெருது விதவையானுள். விதவையாக இருக்கும்பொழுது ஒரு மறையவன் பிச்சையின் பொருட்டு இவளுடைய இல்லத்துக்கு வந்தான். பிச்சைக்கு வந்தவனுக்குச் செய்ய வேண்டிய வழிபாடுகளைச் செய்தாள். அம்மறையவன் மகிழ்ந்து, ''நீ சுமங்கலியாய் மக்கட் பேற்றுடன் வாழ்க'' என்று வாழ்த்துரை வழங்கினுன். இதனைக் கேட்ட சாரதை தான் கைம்மை என்பதை அவனிடந் தெரியப்படுத்தினுள். மறையவன், ''என் வாக்கில் இவ்வாறு வந்தபடியால் பொய்யாக முடியாது. நீ உமாமகேசுவர விரதத்தைக் கடைப்பிடிக்க'' என்று கூறினுன். சாரதையும் அவ்விரதத்தை மேற்கொண்டாள். உமாதேவி காட்சி தந்தாள். அந்தணன் சாரதையின் செய்தியை உமாதேவியிடங் கூறினுன். உமாதேவி, ''இவள் முன் பிறப்பில் பாண்டி நாட்டில் ஒரு மறையவனுடைய இரண்டாவதுமனைவியாகஇருந்தாள். அப்பொழுது இவளுக்குப் பதுமினி என்று பெயர் வழங்கியது. இவள் தன்னுடையசக்களத்தியாகிய மூத்தவளுக்குச் சிறிதும் இன்பங் கிடைப்பதற்கு வழி விடாமல் எப்பொழுதுந் தானே சுகமடைந்தாள். மூத்தவள் இன்பசுகம் அடையாமலே இறந்துபோனுள். அத்தீவினையினுல் இவள்பின்பிறப்புக்களில் விதவையானுள். இனிப் பாண்டி நாட்டில் கணவனைக் கனவிற்புணர்ந்து ஒரு மகனைப் பெற்று ஒன்று சேர்வள்'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினுள். அவ்வாறே இவளும் மகப்பேறு பெற்றுள்.

சாரிபுத்தன் - திருஞானசம்பந்தரோடு சொற்போர் செய்ய வந்து சம்பந்தசரணுலயரோடு சொற்போரிட்டுத் தோல்வியடைந்து சைவனுன புத்தன்.

சாருகன் - மதுராநகரத்து அரசன். இவன் சிவதீட்சை பெற்ற ஒரு கன்னிகையைத்

திருமணஞ் செய்தான். ஆனால் அரசன் தீட்சை பெற்றவனல்லன். இவன் தன்னுடைய மனைவியைத் தழுவச் சென்றான். அக்கன்னிகை, "நீர் தீட்சை பெறாதவராக இருக்கிறீர். தீட்சைபெற்ற பின் என்னைத் தழுவுக" என்று கூறினாள். அரசன் அவள் கூறியதை ஒருபொருட்படுத்தாமல் அவளை நெருங்கினான். அவளைத் தொட்ட அளவில் நெருப்பைத் தொட்டதுபோல் இருந்தது. அரசன் பிறகு கார்க்க முனிவரிடம் தீட்சை பெற்றான்.

**சாருவாகன்** - இவன் ஓர் அரக்கன். துரியோதனனுக்கு நண்பன். துரியோதனன் விருப்பப்படி இவன் பாண்டவர்கட்குத் தீமை செய்யப் பன்முறை முயன்றும் பயனில்லை. பாரதப் போருக்குப் பிறகு தருமருக்கு முடிசூட்டுவிழா நடந்த காலத்தில் கெடுதி செய்யும் பொருட்டு முனிவர் வேடம் பூண்டு அங்கு போயிருந்தான். அங்கிருந்த முனிவர்கள் உண்மையை உணர்ந்து கொண்டு சாபமிட்டனர்; அதனால் இறந்தான்.

**சார்வபௌம டிண்டிமகவி**-டிண்டிமம் என்பது ஒருவாத்தியம். இதனை முழக்கியவாறு ஆசுகவிபாடுவோர் டிண்டிமகவி என்று பெயர் பெறுவர். பதினைந்தாம் நூற்றாண்டில் சாளுவாப்யுதயம் என்னும் வடமொழிக் காவியத்தை எழுதிய இராசநாத கவி என்பவர் தம் தந்தையாரான அருணகிரிநாதரைச் சார்வபௌம டிண்டிமகவி யென்றும் சித்திரகவிப் பிரபந்தம் இயற்றுவதில் சிறந்தவரென்றும் சேர சோழ பாண்டியர்களால் போற்றப் பெற்றவரென்றுங் கூறுகிறார்.

**சாலங்காயனர்கள்** - வேங்கியைச் சேர்ந்த இவர்கள் 4, 5 ஆம் நூற்றாண்டினர். "சாலங்காயன" என்பது ஒரு கோத்திரத்தின் பெயர். இவர்களில் முதல் அரசனான தேவவர்மன் குதிரை வேள்வி செய்த சிறப்புடையவன். இச் சாலங்காயனர்கள் சைவர்கள். காளை (எருது) இவர்களுடைய சமயச் சின்னமாகப் போற்றப்பட்டது. இதனைத் தங்கள் முத்திரைச் சின்னமாக இவர்கள் கொண்டனர். சாலங்காயன மன்னனான இரண்டாம் நந்திவர்மன் ஒரு வைணவன். இறுதியில் அரசு புரிந்தகந்தவர்மன் ஒரு சைவன். இவர்கள்இந்நாளில் கோத்திரப் பெயருக்குக்கூட இருப்பதாகத் தெரியவில்லை.

**சாலன்** - ஔவையார் காலத்தில் கொங்குநாட்டில் கொல்லன் குடி என்னும் ஊரில் வாழ்ந்திருந்த ஒரு பெருஞ் செல்வன். இவன் பெருஞ்செல்வனாக இருந்தும் மனைவிக்கு அஞ்சி நடந்தபடியால் எத்தகைய சிறப்பையும் பெறாமல் இழிந்தொழிந்தான். "இருந்து முகந்திருத்தி, ஈரோடு பேன் வாங்கி" என்னும் பாடலை அனைவரும் அறிவர்; அப்பாடலும் "சண்டாளி சூர்ப்பநகை தாடகையைப் போல் வடிவு கொண்டாளை" என்னும் பாடலும் இவன் பொருட்டே பாடப்பட்டனவென்பர்.

**சாலிவாடீசுவரி** - இந்நாளில் கோவிலூர் என்று வழங்கப் பெறுவதும் முன்னாளில் சாலிவாடி என்று வழங்கப்பட்டதுமாகிய ஊரில் சிவகுப்தன் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் வாழ்ந்திருந்தான். இவனுடைய மனைவியின் பெயர் சுதர்மை. இவர்கள் இருவருக்கும் இரத்தினவல்லி என்னும்

பெயருடைய மகள் ஒருத்தி இருந்தாள். அவள் வழக்கம் போல் சாலிநெல் காக்க வயலுக்குச் சென்றாள். அவள் நண்பகற்பொழுதில் தான் காவல் காக்கும் இடத்தைவிட்டு வேறிடத்திற்குத் தன் தோழிகளோடு விளையாடச் சென்றாள். அப்பொழுது அவளுடைய தாயாகிய சுதர்மை தன் மகளுக்கு ஊட்டுவதற்குத் தயிர்ச்சோறு கொண்டுவந்தாள். தன் மகளுக்குத் தயிர்ச்சோறு கொண்டுவந்தவள் மகளைக் காணாமல் வருந்துவாளே என்று எண்ணிய இறைவி இரத்தினவல்லியினுடைய உருவத்தைத் தாங்கி வயலைக் காத்துக்கொண்டிருந்தாள். சுதர்மை அவளுக்கு உணவூட்டிச் சென்றாள். அவள் சென்றதும் இறைவி மறைந்தாள். சிறிது நேரஞ் சென்ற பிறகு வயலுக்குத் திரும்பிய இரத்தினவல்லி வீட்டிற்குச் சென்று தன்னுடைய தாயிடம் உணவிட வேண்டினாள். தாய் ''சிறிது நேரத்திற்குமுன் உண்டாயே'' என்றாள். மகளோ உண்ணவில்லை என்று கூறி மறுத்தாள். தாய் தந்தையர் இருவரும் கோவிலுக்குச் சென்று இறைவியை வணங்கினர். அங்கே தயிர்மணம் வீசியது கண்டு இறைவியின் திருவிளையாடலை உணர்ந்தனர். இறைவி சாலிவாடியைக் காத்தபடியால் சாலிவாடீசுவரி என்று பெயர் உண்டாகியது.

**சிக்கந்தர்மலை** - திருப்பரங்குன்றத்தை முகமதியர்கள் இவ்வாறு கூறுகிறார்கள். கந்தர்மலை என்பது இவ்வாறு மருவியது போலும்.

**சிக்கல்** - சோழவளநாட்டில் உள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தஞ்சை மாவட்டத்தில் நாகப்பட்டினத்திற்கு மேற்கே மூன்றுகல் தொலைவில் உள்ளது. முந்நாளில் வசிட்டமுனிவர் காமதேனுவின் வெண்ணெயைக் கொண்டு சிவலிங்கம் அமைத்து வழிபாடு செய்துகொண்டிருந்தாராம். ஒருநாள் வெண்ணெய் லிங்கத்தை வேறிடத்தில் எடுத்துவைக்க எண்ணிஅதனைத் தூக்கினாராம். அஃது இவருடைய கைக்கு வராமல் எதனிலோ சிக்கிக்கொண்டதாம். அதனால்வசிட்டர் ''இஃதென்ன சிக்கலாக இருக்கிறது?'' என்றாராம். அதுமுதல் ஊரின் பெயர் சிக்கல் என வழங்குகிறது. அதற்குமுன் வழங்கிய பெயர் வேறு. சுவாமியினுடைய பெயர் வெண்ணெய்லிங்கப் பெருமான். அம்பாளுடைய பெயர் வேற்கண்ணம்மை. இப்பதியில் எழுந்தருளிய சிங்கார வேலவர் கந்தர்சட்டியின் முதநாள் தேரில் இருந்து இறங்கி விரைவாகவந்துஅம்பிகையிடம் வேலைப் பெற்றுக் கொண்டு மேலே சென்று அமருகிறார். அப்பொழுது அப்பெருமானுடைய திருமுகத்தில்வியர்வை வழிகிறது. இப்புதுமையைக் காணப் பல அன்பர்கள் கூடுகின்றனர். அருணகிரிநாதர் இப்பதி முருகன்மீது திருப்புகழ் பாடியுள்ளார்.

**சிங்கன்** - இவன் ஔவையார் காலத்தில் புலியூரில் இருந்தான். இவன் ஔவையாரைத் தன்னுடைய இல்லத்துக்கழைத்துப் போற்றினான். ஆயினும் அன்றே மனம் மாறுபட்டான். இவனுடைய புல்லிய மனப்போக்கை ஔவையார் இகழ்ந்து பாடிச் சென்றார்.

**சித்திரகவி** - நால்வகைக் கவிகளில் சித்திரகவியும் ஒன்று; ஓவியங்கள் அமைத்து அல்லது தாங்கள் இயற்றும் பாடல்கள்

இரட்டைநாகம் அட்டநாகம் தேர் முதலியவைகளில் முறைப்படி அடங்குமாறு செய்யுள் பாடக்கூடியவர்கள் சித்திரகவி என்னுஞ் சிறப்புப்பெயரைப் பெறுதற்குரியவர்களாவர்.

**சிம்மாசலம்** - என்பது சிங்கமலை. திருமால் நரசிங்காவதார மூர்த்தியாக இம்மலையில் எழுந்தருளியிருத்தலால் மலை இவ்வாறு பெயர் பெற்றது. இம்மலை விசயநகரத்திற்கு அண்மையில் இருக்கிறது. கடல்மட்டத்திற்கு எண்ணூறுஅடி உயரத்தில் உள்ளது. இக் கோவிலில் அழகான சிலைகள் உள்ளன. நல்ல நீரோடை ஒன்று கோவிலுக்குப் போகும் வழியில் உள்ளது. கோவிலுக்குப் போய்ச்சேர ஆயிரம் படிகளுக்கு மேல் ஏறவேண்டும். படிகளில் ஏறிச் செல்லும்பொழுது அனுமான் வாசல் என்னுமிடத்தில் உள்ள சிறு குளத்தில் நீராடிவிட்டு மேலே போக வேண்டும். இலாங்கலகசபதி என்னும் மன்னனால் இக்கோயில் முதன் முதலில் கட்டப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இக்கோயிலில் கஉகூ - கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று முதல் குலோத்துங்க சோழனுடைய கல்வெட்டாகும். கல்வெட்டுகளில் பல அரசர்களுடைய பெயர்களும் அரசவழிமுறையின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. நரசிம்மருடைய கோயில் மிக அழகானது. கட்டிடக்கலைஞர்களால் போற்றப்படுகிறது. கோயிலில் எழுந்தருளியுள்ள நரசிம்மர் மெய்யன்போடு வழிபடுவார்க்கு வேண்டியதையளிக்குந் தெய்வமாக விளங்குகிறார். இங்கு நிறுத்தப்பட்டுள்ள கப்பல் தம்பம் என்னும் தூண்புகழ் பெற்றது. கால்நடைகளின் நோய்களைத் தீர்க்கவல்லது; மக்களுக்கு மக்கட்பேற்றை யளிக்கவல்லது.

**சியமந்தகம்** - இஃது ஒருவித மணி. இது நாள்தோறும் எட்டுப் பாரம் பொன் கொடுக்கக் கூடியது. நோய்களைத் தீர்க்கக் கூடியது. கதிரவனால் சத்திராசித்துவுக்குக் கொடுக்கப்பட்டது. இதனை ஒருமுறை சத்திராசித்தின் தம்பியாகிய பிரசேநன் என்பவன் அணிந்துகொண்டு வேட்டைக்குச் சென்றான். அங்கே சிங்கத்தால் கொல்லப்பட்டான். இதற்குமுன் கண்ணன் இம்மணியை உக்கிரசேநனுக்குக் கேட்டிருந்தான். காட்டிற்குச்சென்ற தம்பி வராததை உணர்ந்து முன் கண்ணன் உக்கிரசேநனுக்குக்கேட்டிருந்தபடியால் பிரசேநனைக் கொன்று கண்ணனே மணியைக் கவர்ந்தான் என்று கண்ணனுக்கு ஓர் அபவாதம் உண்டாயிற்று. இதனை நீக்கிக்கொள்ளும் பொருட்டுக் கண்ணன் சாம்பவந்தனிடஞ் சென்று போர்செய்து அவனிடம் இருந்ததை வாங்கிச் சத்திராசித்திற்கு மணியைக்கொடுத்தான். இதனால் சாம்பவந்தன் தன் மகளாகிய சாம்பவதியைக் கண்ணனுக்குக் கொடுத்தான். இம்மணியை மீண்டும் சததன்வா சத்ராசித்தைக்கொன்றுகவர்ந்ததால் கண்ணன் சததன்வாவைக் கொன்று மணியை மீட்டார்.

**சியவனமுனிவர்** - இவர் பிருகு முனிவருடைய புதல்வர். தாயின் பெயர் புலோமை. புலோமை கருப்பமாக இருக்கும்போது அரக்கன் ஒருவன் பன்றி வடிவங்கொண்டு புலோமையைத் தூக்கிக் கொண்டுஓடினான். அவளுடைய கருவிலிருந்த குழந்தை சீற்ற முற்று நழுவி வெளிவந்தது. அதனால் சியவனர் என்று பெய

ருண்டாகியது. (சியவனம்-நழுவுதல்) இவ்வாறு நழுவிய குழந்தையாகியசியவனர் சினத்துடன் அரக்கனைப் பார்த்தார். அதனால் அவன் சாம்பலானான்.

**சியாமா சாத்திரிகள்** - கருநாடக இசையில் புகழ் மிகுந்த மூவரில் ஒருவர். திருவாரூரில் 1762 இல் பிறந்தார். இவருக்கு இடப்பட்ட பிள்ளைப் பெயர் வேங்கட சுப்பிரமணியன். சியாமகிருஷ்ணன் என்று செல்வப் பெயரால் அழைக்கப்பட்டார். இப்பெயரே இறுதிவரை நிலைத்து விட்டது. இளம் பருவத்திலேயே வடமொழி, தெலுங்கு ஆகிய மொழிகளில் தேர்ச்சி பெற்றார். இவர் முதலில் தம்முடைய மாமா விடத்திலும் பிறகு தஞ்சைக்கு வந்த சங்கீத சுவாமிகள் என்னும் துறவியிடத்திலும் இசைப் பயிற்சி பெற்றார். பிறகு ஆதியப்ப ஐயர் என்ற இசைப்புலவரிடம் இசை கற்றார். அவர் சிறந்த இசைப் புலவர். அவரிடம் பயின்ற படியால் இவரும் சிறந்த புகழ் பெற்றார்.

**சிரிக்கும்சிலை** - பவானி என்னும் திருநணா திருக்கோயிலில் ஒரு தூணில் அழகிய பெண் ஒருத்தியின் உருவம் செதுக்கப்பட்டிருக்கின்றது. அதன் தலையில் தண்ணீரைக் கொட்டினால் அது சிரிப்பது போற் காட்சியளிக்கின்றது. அதனால் இச்சிலைக்குச் சிரிக்குஞ் சிலை என்று பெயர் வழங்குகின்றது.

**சிலம்பி** - இவள் சோழ நாட்டில் கம்பர் ஔவையார் ஆகியோர் காலத்தில் வாழ்ந்திருந்தவள். ஓரளவு கல்வியறிவு முடையவள். கம்பரிடமிருந்து பாடல் பெறஎண்ணிய இவள் முயன்று ஆயிரம் பொன் தேடிக்கம்பரிடம் கொண்டு போய்க் கொடுத்துத் தன் மீது ஒரு கவிபாட வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். கம்பரோ "தண்ணீருங் காவிரியே தார் வேந்தன் சோழனே, மண்ணாவ துஞ்சோழ மண்டலமே - என்று அரைப்பாட்டுப்பாடிக் கொடுத்து, "இன்னும் ஆயிரம் பொன் கொண்டு வந்து கொடுத்தால்தான் பாட்டை முடிக்க முடியும்" என்று கூறி விட்டார். சிலம்பி அந்த அரைப் பாட்டையும் தன் வீட்டுச் சுவரில் எழுதி விட்டு வருந்தியிருந்தாள். இன்னும் ஆயிரம் பொன்னுக்கு எங்கே போவது என்று ஏங்கினாள். ஔவையார் இவள் வீட்டுக்குச் சென்ற பொழுது, சிலம்பி யிட்ட உணவைச் சாப்பிட்டுப் பாட்டின் செய்தியைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டு,- "பெண்ணாவாள், அம்பொற் சிலம்பி அரவிந்தத் தாளணியும், செம்பொற் சிலம்பே சிலம்பு" என்று பாட்டை முடித்து விட்டார். இதனால் சிலம்பிக்குச் சிறந்த செல்வமும் வாழ்க்கையும் உண்டாகி இன்றளவும் இவளுடைய பெயரும் புகழும் நிலைபெற்று நிற்கலாயின.

**சிவகுப்தன்**-பாண்டிவள நாட்டில் சமிவனம் என்னும் ஊரில் வெகு காலத்திற்கு முன் வாழ்ந்திருந்த ஒரு வணிகன். இவனுடைய மனைவியினிடம் தான் சாலிவாடீசுவரி தயிர்ச் சோறு உண்டு சென்றனள்.

**சிவகுரு** - இவர் ஆதிசங்கராச்சாரியாருடைய தந்தை. கேரள நாட்டில் காலடி என்னும் ஊரில் வித்தியாதிராயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினார். இவருடைய மனைவியின் பெயர் ஆரியாம்பாள். இவர்கள் இருவரும் செய்த தவத்தின் பயனாகச் சிவபிரானே ஆதிசங்கரராகத் தோன்றி உல

கத்தில் அத்வைத சமயத்தைப் பரப்பினார்.

**சிவசன்மா** - ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வடமதுரையில் இருந்த தருமசன்மன் என்னும் அந்தணனுடைய மகன். இவன் சிறந்த முயற்சிகள் செய்து தான் பிறந்த குடியை உயர்த்தினான்.

**சிவாசாரியர்கள்**-சதாசிவ மூர்த்தியினுடைய ஐந்து முகங்களில் இருந்தும் கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், அத்திரி, கௌதமர் என்று ஐந்து முனிவர்கள் தோன்றினார்கள். இவர்களுடைய வழி வந்தவர்களே சிவாசாரியர் களாவர். இவர்கள் சிவாலய பூசை, சிவாலயப் பிரதிட்டை விழா முதலியவைகளைச் சிவாகம முறைப்படி செய்வார்கள். ஆன்மார்த்தம் பரார்த்தம் என்னும் இருவகைப் பூசைகளையுஞ் செய்யும் உரிமையுடையவர்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் நம்பியாண்டார் நம்பியும் அருணந்தியும் சிவாச்சாரிய மரபினரே. இவர்களை ஆதிசைவர்கள் எனவுங் கூறுவர். சிவாலய பூசை செய்வதற்கு உரிமையுடையவர்கள் இவரே.

**சிவசூடாமணி** - இரண்டாம் நரசிம்மவர்மன் பெற்றிருந்த பலவிருதுப் பெயர்களில் ஒன்று. மற்றைய விருதுப் பெயர்கள் இராசசிம்மன், இரணவிசயன், சீபரன், சித்ர கார்முகன், ஏகவீரன் என்பன.

**சிவாசி** - மகாராட்டிர நாட்டில் ஷாசி என்பவருக்கும் சீசாபாய் என்னும் அவருடைய மனைவிக்கும் புதல்வராகச் சிவாசி 1627 ஆம் ஆண்டில் சிவனேரி மலைக் கோட்டையில் பிறந்தார். சிறு பருவத்தில் நல்ல முறையில் வளர்க்கப் பெற்றார். இளம் பருவத்திலேயே சிறந்த வீரராகத் திகழ்ந்தார். தம்மைப் போன்ற வீரர்களைச் சேர்த்து ஒரு படையை அமைத்தார். இவர் காலத்தில் முகமதியர்களின் ஆட்சி நாடெங்கும் பரவியிருந்தது. சிவாசி முகமதியர் ஆட்சிக்கு அடிமையாக இருப்பதை வெறுத்தார். இந்து தர்மத்தைக் கொண்ட சுதந்திர மகாராட்டிரத்தை ஏற்படுத்தத் துணிந்தார்.

முதலில் மகாராட்டிரர்களை ஒன்று படுத்திப் பீசப்பூர் சுல்தானுக்கு உரிமையான கோட்டைகளைத் தம் வசப்படுத்திக் கொண்டார். தமது படையெடுப்பாலும் வெற்றியாலும் மைசூர் வரையிலும் தமது நாட்டை விரிவு படுத்தினார். கி. பி. 1674 ஆம் ஆண்டில் ரெய்கார் என்னுங் கோட்டையில் சத்ரபதி என்னும் பட்டத்துடன் முடிசூட்டிக் கொண்டார். இவர் சிறந்த கடற்படையையும் அமைத்திருந்தார். இவருடைய நிர்வாகம் மிகுந்த திறமையுடையதாக விருந்தது. இவருடைய ஆட்சியில் மக்கள் அமைதியான வாழ்க்கை நடத்தினர்.

**சின்னப்பூ** - அரசருக்குரிய பத்து உறுப்புக்களையும் உறுப்புக்கு ஒரு பாடல் வீதம் பத்துப் பாடலில் கூறுவது தசாங்கம்; ஓர் உறுப்புக்குப் பத்துப் பாடலாக மொத்தம் நூறு பாடல் கூறுவது சின்னப்பூ; இவைகள் இரண்டும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் அடங்கும்.

**சீட்டுக்கவி**-முன்னாளில் புலவர்கள் நன்கொடையை விரும்பி அரசர்கட்கும் செல்வர்கட்கும் செய்யுள் எழுதிக் கொண்டு சென்றனர். சிலர் செய்யுட்களை எழுதிப் பிறரிடங் கொடுத்து அனுப்பியதாகவுந் தெரிகிறது.

இவ்வாறு எழுதப்பட்ட செய்யுட்கள் அவ்வக்காலத்திற் கேற்றபடி பனையோலையிலோ தாளிலோ எழுதப்பட்டன. இவ்வாறு எழுதப்பட்ட செய்யுட்களே சீட்டுக்கவி யென்று பெயர் பெற்றன.

**சுநீதன்** - விடதநாட்டில் மாவிந்த புரியில் இருந்தவன். சுநீதன் என்பதற்கு நல்ல நீதிகளையுடையவன் என்பது பொருள். இவன் நளனுடைய அமைச்சர்களில் ஒருவன். நளன் புட்கரனோடு சூதாடத் தொடங்கிய பொழுது இவன் அறவுரைகள் பல கூறி அறிவுரை புகன்றான். ஆயினும் நளன் இவனுடைய சொற்களைக் கேட்க வில்லை.

**சுமதி** - இவன் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் மராட நாட்டில் இருந்தவன். எச்சதேவன் என்னும் வேதியனுடைய மகன். இவன் நல்லொழுக்கங் கெட்டுக் குறத்தியை மணந்து திரிந்தான். இவன் செய்தி சேது புராணத்திற் காணப்படும்.

**சுரர்** - பாற்கடல் கடைந்த காலத்தில் அதிலிருந்து தோன்றிய வாருணி என்னுஞ் சிறந்த சுரையைப் பானஞ் செய்தவர்களாதலின் தேவர்கட்குச் சுரர் என்னுங் காரணப் பெயரும் வழங்குவதாயிற்று. சுரையைப் பானஞ் செய்யாதவர்கள் அசுரர்கள்.

**சுவேதன்** - வெகு காலத்திற்கு முன் பாண்டி நாட்டில் வாழ்ந்திருந்த ஓர் அரசன். இவன் கோயிலூர் என்னுஞ் சமிவனத்தில் குடியேறிக் காடு வெட்டிக் கழனியாக்கினான். சாலி என்னும் நெல் விளையுமாறு வாடி என்னும் வயல்களை உண்டாக்கினான். அதனால் அவ்வூருக்குச் சாலிவாடி என்று பெயர் உண்டாகியது.

**சுனச்சேபன்** - பிருகு துங்கம் என்னும் மலையில் தவஞ் செய்து கொண்டிருந்த இரிசிகன் என்னும் முனிவனுடைய மகன். தாய் பெயர் கௌசிகை. சுனச்சேபனைத் தாயுந் தந்தையும் அம்பரீடனுடைய நரமேதத்தில் பலியிடப் பெரும் பொருள் பெற்றுக் கொண்டு கொடுத்து விட்டனர். அரசனோடு சென்ற இவன் வழியில் தன்னுடைய மாமனாகிய விசுவாமித்திர முனிவரைக் கண்டு அவரிடஞ் செய்தி கூறினான். அவர் உள்ளம் வருந்தி இவனுக்கு அரிய மறை ஒன்றை உரைத்தருளினார். சுனச்சேபன் அவ்வரு மறையை உருவேற்றி அரசனுடைய வேள்வியை நன்முறையில் முற்றுவித்ததோடு தானும் உயிர் பிழைத்தான்.

**சூரதன்மா** - இவன் ஒரு காலத்தில் மதுரையில் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். இவனுடைய மனைவியின் பெயர் சுகுணை. அரசன் சைவ சமயத்தனாக இருந்தும் சமணர்களின் போதனையால் மயங்கிச் சமண சமயத்தைத் தழுவி இறந்தான். மறுபிறப்பில் சாகலாபுரம் என்னும் ஊரில் இளவரசனாகப் பிறந்தான். ட்ான் பிறப்பில் சமண சமயத்தைத் தழுவிய தீவினையினால் பெருநோயினால் வருந்தினான். இவனுடைய முன் பிறப்பு மனைவியாகிய சுகுணை அகளங்கபுரம் என்னும் ஊரில் இளவரசியாகப் பிறந்தாள். அவளுக்குச் சுயம்வரம் நடைபெற்றது. நோயாளியாகவிருந்த இளவரசன் சுயம்வர வேடிக்கையைப் பார்க்கச் சென்று ஒரு புறத்தில் மறைந்து நின்றான். அவன் முற்பிறப்புக் கணவன் என்பதைப் பழவினைப் பயனால் உணர்ந்து கொண்ட இளவரசி அவனுக்கு மணமாலை சூட்டினாள். அனைவரும் இளவர

சியின் செயலைப் பார்த்து எள்ளி நகையாடினர். இருவரும் சிவப்பதிப் பயணஞ் சென்றனர். கோவிலூர் என்னுஞ் சிவப்பதியை அடைந்து அங்குள்ள மதுபுட்கரணி என்னுந் திருத்த நீரில் நீராடினர். இளவரசனுடைய பெருநோய் அப்புனித நீரின் பெருமையால் முற்றிலும் நீங்கியது.

சேடன்-இவன் சோழவளநாட்டில் கோரை யென்னும் ஊரில் வாழ்ந்திருந்தான். இவனிடஞ் செல்வச் சிறப்பு மிகுதியாக இருந்தது. ஆனால் கொடை நலஞ் சிறிதும் இல்லை. எவருக்கும் ஒன்றுங் கொடான். ஒரு நாள் ஔவையார் இவனுடைய இல்லத்திற்குச் சென்றார். அவர் பொருளை விரும்பிச் செல்லவில்லை. உணவைத்தான் விரும்பிச் சென்றார். ஆனால் இந்த அறிவிலி அவரைச் சிறிதுங் கவனிக்கவில்லை. ஔவையாருக்குச் சினமுண்டாகியது. "பாடல் பெறுனே பலர் மெச்ச வாழானே, நாடறிய நன்மணங்கள் நாடானே-சேடன், இவன் வாழும் வாழ்க்கை இருங்கடல் சூழ் பாரில், கவிழ்ந்தென்ன மலர்ந்தென்ன காண்" என்று வசைப் பாட்டு ஒன்று பாடி விட்டுச் சென்றார். இவனுடைய செல்வஞ் சின்னாளில் அழிந்தொழிந்தது.

சேனர் - முன்னாளில் அவந்தி நாட்டில் சங்கதாரை என்னும் ஊரில் இருந்தவர். சார்வாக சமயத்தைச் சேர்ந்தவர். இவர் மிகுந்த அறிவாளியாக இருந்த படியால் இவருடைய பெயர் புத்தி சேனர் எனவும் வழங்கியது. இவருடைய சமயம் உண்மைக்கு மாறு பட்டிருந்த படியால் இறுதியில் இவர் கண்ணொளி யிழந்தார் என்பர்.

சோமசருமன் - வடநாட்டில் நருமதை யாற்றின் அண்மையில் இருந்த மறைவாய் என்னும் நகரில் இருந்த அந்தணன். இவன் பேருண்டி தின்றலில் பெருவிருப்புடையனாய் இருந்த படியால் இளம்பருவத்திலேயே நோயடைந்து மாண்டான்.

சோமநாதர் - இவர் வடநாட்டில் எழுந்தருளியிருக்கிறார். தட்சப் பிரசாபதியினுடைய இருபத்தேழு பெண்களையுந் திங்கள் திருமணஞ் செய்து கொண்டான். ஆனால் திங்கள் எல்லாப் பெண்களையும்ஒரேமாதிரியாகப் பாவிக்கவில்லை. உரோகிணி ஒருத்தியிடத்தில் மட்டும் மிகுதியாக அன்பு செலுத்தினான். செய்தியை உணர்ந்த தட்சன் திங்கள் நோயால் வருந்துமாறு வசவுரை வழங்கினான். திங்களை நோய் பற்றியபடியால் அவனிடமிருந்து அமுதஞ் சுரப்பது நின்று விட்டது. தேவர்கள் இச்செய்தியை நான்முகனிடஞ் சொல்லி முறை யிட்டார்கள். நான்முகன் பிரபாசத்தலத்தில் மிருத்யுஞ்சயரை அமைத்துத் தேவர்களையும் திங்களையும் வழிபடுமாறு கட்டளை யிட்டான். திங்கள் அவ்வாறே வழிபட்டான். சிவபெருமான் காட்சி தந்து திங்களுக்கு அருள் புரிந்தார். அமுதம் வழக்கம் போல் உண்டாகுமாறு செய்தார். திங்களுக்கு அருள் செய்த படியால் அப்பெருமானுக்குச் சோமநாதர் என்று பெயருண்டாயிற்று. இந்த இலிங்கம் பன்னிரண்டு சோதி லிங்கங்களில்ஒன்று.

சோமாசிப் புலவர் - இப்புலவர் கம்பர் காலத்திலே அம்பலம் என்னும் ஊரிலே வாழ்ந்திருந்தார். இவர் ஒருநாள் கம்பரைப் பார்ப்பதற்காகக் கம்பருடைய வீட்டிற்குச் சென்றார். அப்

பொழுது கம்பர் வீட்டிலே இல்லை. கம்பர் வீட்டு வேலைக் காரி வரட்டி தட்டிக் கொண் டிருந்தாள். சோமாசிப்புலவர் வேலைக்காரியிடம் போய், "கம்பர் எங்கே? எப்பொழுது வருவார்?" என்று உசாவினார். அவ்வேலைக்காரி நல்ல வாயாடி. அதோடு அறிவாளி; கவி பாடும் வழக்கத்தைக் கூட அவள் மேற் கொண்டிருந்தாள். இத னால்தான், "கம்பர் வீட்டுக் கட்டுத்தறியுங் கவி பாடும்" என்கிற பழமொழி கூட உண் டாயிற்று. அவள் சோமாசிப் புலவரைப் பார்த்துக்,"கம்பரை இப்பொழுது எதற்காகப் பார்க்க வேண்டும் வேலை என்ன அவரிடம்?" என்று பல கேள்வி களைக் கேட்டாள். புலவர், "ஒன்றுமில்லை சும்மா பார்த்து விட்டுப்போகத்தான் வந்தேன்" என்று சொன்னார். வேலைக் காரி அதோடு விடவில்லை. நான் ஒரு விடுகதை சொல்லுகிறேன் அதனை விடுவியும் உம்முடைய அறிவுத் திறமையைப் பார்க்க லாம், என்று கூறிவிட்டு "வட்டமதி போலிருக்கும் வன்னிக் கொடிதாவும் கொட்டு வார் கையினின்று கூத்தாடும் - சுட்டால், அரகரா என்னும் அம்பலசோமாசி, ஒருநாள் விட் டேனீ துரை" என்று ஒரு வெண்பாவைப் பாடினாள். புலவர் நீண்ட நேரம் எண்ண மிட்டுப் பார்த்தார். ஒன்றும் விளங்கவில்லை. அப்பொழுது வேலைக்காரி, "இஃதென்ன வேடிக்கை! இப்பொழுது நான் செய்து கொண்டிருக்கும் வேலை யைக் குறித்துத்தான் இவ்வாறு சொன்னேன். இதுகூடவா உமக்கு விளங்காமற் போயிற்று?" என்று கூறி எள்ளி நகையாடினாள். சோமா சிப்புலவருக்கு மிகுந்த நாணம் உண்டாய் விட்டது. "நான் இன்னொரு நாளைக்கு வந்து கம்பரைப் பார்த்துக் கொள்ளு கிறேன்" என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு நழுவி விட்டார். அதன் பிறகு இவர் கம்பர் வீட்டுப் பக்கத் தைக் கூடக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை.

சோமி - இவள் ஒரு விலைமகள்; ஆற்றூரிலே வாழ்ந்திருந்தாள். சிறந்த அழகுடையவள். காள மேகப் புலவர் இவளைக் கண் டார். இவளுடைய அழகு அவரைத் திகைக்க வைத்தது. இவளுடைய அழகைப் பார்த் துத்தான் திருமால் நெடுமால் ஆனார் எனவும், நான்முகன் மடலேறினான் எனவும், காமன் உருவழிந்தான் எனவும், இந் திரன் ஆயிரங் கண்களைப் பெற்றான் எனவும் செய்யுள் ஒன்று பாடினார்.

தக்கர் - பத்தொன்பதாம் நூற் றாண்டுக்கு முன் இந்தியாவில் நாடெங்கும் பரவியிருந்த ஒரு கொள்ளைக் கூட்டத்தினர். இவர்களில் இந்துக்களும் முஸ் லீம்களும் இருந்தனர். காளியை வழிபட்டனர். இவர்களுக்குப் பெருஞ் செல்வர்களின் ஆதர வும் இருந்ததாகத் தெரிகிறது. இவர்கள் வணிகர்களைப் போல வும் பயணஞ் செல்பவர்களைப் போலவும் கோலம் பூண்டு நெடு வழிகளிற் சென்று வழி யில் அகப்பட்டவர்களின் கழுத்தை யிறுக்கிக் கொன்று அவர்களிடம் இருந்த பொருள் களைக் கொள்ளை யிட்டனர். இவர்களுடைய கொடுமை பொறுக்க முடியாததாக இருந் தது. மக்கள் வெளியூர்கட்குப் பயணஞ் செய்வதற்கு மிகவும் அஞ்சினர். 1828 ஆம் ஆண்டில் பெண்டிங்பிரபு என்னும் கவர் னர் செனரல் இந்தத் தக்கர் களின் நிலையை ஒற்றர்களைக்

கொண்டு தெரிந்து ஒழித்துக் கட்டினூர்.

**தஞ்சாவூர்** - சோழவள நாட்டில் மாவட்டத் தலைநகராக வுள்ள ஊர். முன்னாளில் தஞ்சகாசுரன் என்னும் பெயருடைய ஓர் அசுரன் தங்கியிருந்த படியால் அவன் தங்கியிருந்த இடம் தஞ்சாவூர் என்னும் பெயரை யடைந்தது. "தஞ்ச னெனும் அசுரனவன் தழைத்திருந்த தன் மையினால் தஞ்சாவூர் எனும் நாமம் தாரணியில்தான் விளங் கும்" என்பது பாட்டு. இவ் வூரில் புகழ் பெற்ற பிரகதீசு வரர் கோயில் விளங்குகிறது. ஆங்கிலேயர்கள் வந்து கைப் பற்றும் வரை தஞ்சாவூர் மூடி மன்னர்களின் ஆட்சிக்குக் கீழ் இருந்தது இவ்வூர்க் கோவிலில் உள்ள சிவலிங்கமும் நந்தியும் மிகப் பெரியவை. மூலத்தானத் திற்கு மேல் அமைந்துள்ள கோபுர நிழல் நிலத்தில் படி யாத தன்மையுடைய தென்பர்.

**தடாதகைப் பிராட்டியார்** - மதுரை யில் அரசாட்சி செய்த மலையத்து வசபாண்டியன் மக்கட்பேற்றை விருப்பித் தவஞ் செய்தான் அவனிடம் இந்திரன் தோன்றி மகப்பேற்று வேள்வி செய்யு மாறு கூறினான். அவ்வாறே பாண்டியன் வேள்வி செய்தான். வேள்வியில் உமாதேவி மூன்று தனங்களையுடைய குழந்தை யாகப் பிறந்தாள். அரசன் தன்னுடைய மகளுக்கு உறுப்பு மிகுதியாக இருத்தலைக் கண்டு கவலைப்பட்டான். அப்பொழுது உருவிலிவாக்கு, "இக்குழந்தை தன்னுடைய கணவனைக் காணும் போது மூன்றாவது தனம் மறையும்" என்று கூறி யது. இதனை அரசன் கேட்டுக் களிப்படைந்திருந்தான். தடா தகைப் பிராட்டியார் எல்லாக் கலைகளையும் கற்றுணர்ந்தாள். தந்தை முடிபுனைந்து வைக்க அரசாட்சியை மேற் கொண் டாள். பல விடங்கட்கும் படை யெடுத்துச் சென்று அரசர்களை யெல்லாம் வென் றாள். அவர்களிடமிருந்து திறை பெற்றாள். இறுதியிற் கைலா யத்திற்குப்போரிடச் சென்றாள். சிவகணங்களோடு போரிட்டுத் தோற் கடித்தாள். சிவபிரான் போரிடுதற்கு வந்தார். அப் பொழுது ஒரு தனம் மறைந் தது. இதனைக் கண்டு பிராட்டி நாணங் கொண்டாள். சிவ பிரானை மணந்து உக்கிரகுமார பாண்டியனைப் பெற்றாள். மலையத்துவச பாண்டியனுடைய மனைவியின் பெயர் காஞ்சன மாலை.

**தத்துவப்பிரகாசர்** - சோழ நாட்டி லிருந்த ஒரு மெய்யறிவாளர். மெய்யறிவு நூல்களை நன்கு கற்றுத் தத்துவங்களை விளக்க மாக உணர்ந்து விளங்கியபடி யால் தத்துவப்பிரகாசர் என்று காரணப் பெயர் உண்டாகியது. இவருடைய இடுகுறிப் பெயர் இன்னதென்று விளங்கவில்லை செய்யுள்கள் பாடுவதினும் இவர் மிக வல்லவராக விளங் கினார்.

**தத்தை** - இவள் உடுப்பூரில் வேடர் குடியில் தோன்றியவள். நாகன் என்னும் வேடர் தலைவ னுக்கு மனைவி. கண்ணப்ப நாயனாரைப் பெற்று வளர்த்துச் சீராட்டிய பெருமையுடைய வள். தத்தை என்பது கிளியின் பெயர். அப்பெயர் இவளுக்கு மரபு வழக்கப்படி இடப் பட்டது.

**தந்தவக்கிரன்** - ஐயாயிரம் ஆண்டு கட்கு முன்னர் வடமதுரையில் இருந்தவன். குரோத கீர்த்தி என்பவனுடைய மகன். வசு தேவருக்கு ஒரு முறையில் மைத்துனன் மகன். இவன்

மிகுந்த பேராற்றல் உடைய வன். எப்பொழுதுந் தீமை களையே செய்து கொண்டு திரிந்தான். கஞ்சனைப் போலவே கண்ணன் மீது வஞ்சங் கொண்டு அவனைக் கொல்ல எண்ணினன். போருக்குச் சென்று போரிட்டுக் கண்ண னல் மாண்டொழிந்தான்.

**தம்பிபுகான்**-இவன் ஒரு நாவிதன். கம்பர் காலத்தில் திருத்தில்லை யில் வாழ்ந்திருந்தான். தொழி லில் இவன் நல்ல தேர்ச்சி யுடையவன். கம்பர் திருத் தில்லைக்கு வந்திருந்த சமயத்தில் மயிர்கழிப்பித்துக் கொள்ள வேண்டியவராக இருந்தார். மயிர்வினைஞனை அழைத்துவரச் சென்றோர். இவனை அழைத்துப் போய்க் கம்பரிடம் விட்டனர். மிக நல்ல முறையில் மயிர் கழித்தான். கத்தியைக்கொண்டு மயிர் கழித்ததாகவே கம்பருக் குத் தெரிய வில்லை. கைவிர லால் வழித் தெடுத்ததைப் போல் இருந்தது. இதனால் மிகுந்த மகிழ்ச்சி யடைந்த கம்பர், "ஆரார் தலை வணங் கார் ஆரார் தாங் கை யெடார்- ஆரார்தாஞ் சத்திரத்தால் ஆரு தார் - சீராரும், தென்புலியூர் மேவும் சிவனருள் சேர் அம் பட்டத், தம்பிபுகான் வாசலிலே தான்" என்னும் அழகிய செய் யுள் ஒன்றைப் பாடினர். அப் பாட்டு மறைந்தொழியாமல் இன்று வரையில் நிலைபெற்றுத் தனிப்பாடல் திரட்டிலும் இடம் பெற்றுள்ளது.

**தயானந்த சரசுவதி**-இவர் குசராத் தைச்சேர்ந்த காடியாவாடில் அந்தணர் குலத்தில் பிறந்தார். இவருடைய தந்தையின் பெயர் அம்பாசங்கர். தயாநந்தருடைய பிள்ளைப் பெயர் மூலசங்கர். தயாநந்தர் தம்முடைய இரு பத்துநான்காவது ஆண்டி லேயே துறவியாகிவிட்டார். மதுராவில் இருந்த விரஞ்சனு னந்த சரசுவதி என்னும் பெரி யாரிடம் அறிவு நூல்களைப் பயின்றுணர்ந்தார். 1875ஆம் ஆண்டில் ஆரிய சமாசத்தை ஏற்படுத்தினர். இவர் சத்தி யார்த்தப்பிரகாசம் என்னும் நூலை எழுதியதோடு யசுர் வேதத்திற்கு உரையும் எழு தினர்.

**தருமகோபன்** - சூரபதுமனுடைய அமைச்சர்களில் ஒருவன். இவன் கல்வி யறிவுடையவனுக இருந் தும் இயற்கையில் மிகக் கொடியவனுக இருந்தான். அறங்கள் பலவற்றையும் சினந்து அழித்துக்கொண்டு திரிந்தமையால் இவனுக்குத் தருமகோபன் என்று காரணப் பெயர் உண்டாகியது.

**தலசயனம்** - திருமால் திருப்பதி களில் பள்ளி கொண்டருளிய கோலமுள்ள தலங்களுக்குத் தலசயனம் என்று பெயர். இதனைக் கிடந்த திருக்கோலம் என்பர்.

**தனஞ்சயன்** - பாண்டிவள நாட் டில் சேதுக்கரையில் மாதுலம் என்னும் ஊரில் இருந்தவன். வணிகர் மரபினன். சிதைந்து போன தன்குடியை இவன் தன்னுடைய முயற்சியினுல் முன்னுக்குக் கொண்டு வந் தான்.

**தனிமகனுர்** - சங்ககாலப்புலவர். இவர் இயற்றிய செய்யுட்களில் பெரிய பாழடைந்த ஊரைக் காத்திருந்த தனிமகன் போன்று என்னுடம்பு உணவினுலே காக்கப் பெறுவதாக இருந்தது, என்று தலைவனைப் பிரிந்த தலைவி கூறுவதாகக் கூறியிருக்கும் உவமைநயம்பற்றி, இவர் தனிமக னுர் என்று பெயர் பெற்ருர் இவருடைய இடுகுறிப் பெய ரின்னதென்று தெரிய வில்லை.

**தனுஷ்கோடி** - இராமபிரான் வில்லின் நுனியாகிய கோடியை ஊன்றியதால் தனுஷ்கோடி என்று பெயர் உண்டாகியது. வில்லின் கோடி போன்ற இடத்தில் இருப்பதால் இங்குள்ள தீர்த்தம் தனுஷ்கோடி என்று பெயர் பெற்றது. இது மகோததி இரத்திஞகரம் என்னும் இரண்டு கடல்களும் சேருமிடத்தில் இருக்கிறது.

**தாண்டகவேந்தர்** - சைவசமயாசிரியர்கள் நால்வர்களில் ஒருவராகிய திருநாவுக்கரசர் தாண்டகம் என்னும் ஒருவகைப் பாக்களைப் பாடியதனால் உண்டான சிறப்புப் பெயர்.

**தாராசுரம்**- தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு அண்மையில் மூன்று மைல் தொலைவில் உள்ள ஊர். இவ்வூரின் புகைவண்டி நிலையப் பெயரும் இதுவே. சோழ மன்னர்களின் கொடி நகரும் பெருநகருமாகக் கி. பி. ஏழாம் நூற்ருண்டு முதற்கொண்டே சிறப்பு வாய்ந்த பழையாறையின் ஒரு பகுதியாகும். ஆயிரத்தளி என்பது பழையாறையின் மறு பெயர்களில் ஒன்ருகும். இவ்வூர் திருநாவுக்கரசு நாயனுருடைய தேவாரப் பாடல் பெற்றது. அமர்நீதி நாயனுர் வாழ்ந்திருந்த இடமும் இதுவே. விசயாலயனுக்குப் பின் தஞ்சையைத் தலைநகராக்கிய முதலாம் இராசராசன் காலத்திலும், கங்கை கொண்ட சோழபுரத்தைத் தலைநகராக்கிய அவன் மகன் முதலாம் இராசேந்திரன் காலத்திலுங்கூட ஆயிரத்தளி ஒரு சிறந்த நகரமாகவே விளங்கிற்று. வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த சோழர் பெருமகள் இராசராசன் அக்கை குந்தவை தேவி வாழ்ந்தது பழையாறையில் உள்ள சோழ மாளிகையே. இவ்வூரில் உள்ள அழகிய சிற்பங்கள் கண்கவர் வனப்பு மிக்கன.

**தாராஷுகோ** - முகமதிய மன்னர்களுள் ஒருவரான ஷாசகான் என்னும் மன்னனின் மூத்த புதல்வரும் ஔரங்கசீப் மன்னனின் அண்ணனுமான தாராஷுகோ என்பவர் இந்து சமயங்களின் உபநிடதங்களை ஆராய்ச்சி செய்தார். இவ்வுபநிடதங்களின் பொருள் இவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. கி. பி. 1657 ஆம் ஆண்டில் தக்க புலவர்களின் உதவியைக் கொண்டு முதன்மையான உபநிடதங்கள் ஐம்பதைப் பாரசீகத்தில் மொழி பெயர்த்தார். இம்மொழி பெயர்ப்பினை வைத்துக் கொண்டே ஐரோப்பிய அறிஞர்கள் கி. பி. 1801 ஆம் ஆண்டில் இலத்தீன் மொழியில் உபநிடதங்களை மொழிபெயர்த்தார்கள். இதற்குப் பிறகுதான் மேலை நாடுகளில் இந்திய நாட்டு உபநிடதங்களின் பெருமை பரவலாயிற்று.

**தாழக்கோயில்** - திருக்கழுக்குன்றத்தில் ஊரின் நடுவில் மலையடிவாரத்தில் சிறந்த கோயில் ஒன்று அமைந்து விளங்குகிறது. இது தாழ்வரைக் கோயில் எனப்படும். பொது மக்கள் இதனைத் தாழக்கோயில் என்று கூறுவர்.

**தாளசமுத்திரம்** - இது தாள வகையைக் கூறும் நூல். இந்நூல் இயற்றப்பெற்ற காலந் தெரியவில்லை. பாயிரத்திஞல் பரதசூடாமணி என்னும் அரசன் இந்நூலை இயற்றிஞன் என்று தெரிகிறது. இந்நூல் தஞ்சை சரசுவதிமகால் வெளியீடாக வெளியாகியுள்ளது.

**தான்சேன்** - இவர் அக்பர் சக்கரவர்த்தியின் அவையில் இருந்த

முப்பத்தாறு இசைப்புலவர்களில் முதன்மை பெற்றவர். கௌடப்பிராமணர் மரபிற் பிறந்து பிறகு முஸ்லீம் சமயத்தைத் தழுவினர். அந்நாளில் பிருந்தாவனத்தில் புகழ் பெற்ற இசைப் புலவராக விளங்கிய அரிதாஸ் சுவாமியின் முதன்மையான மாணவர். இவர் ரேவா நாட்டுக்கு அருகில் பிறந்தார். இரண்டு இராகங்களை ஒன்றுகப் பிணைத்து புதிய இராகங்களை உண்டாக்கிய புகழ் இவருக்குரியது. இவரைப் பற்றிப் பல கதைகள் உண்டு. குவாலியர் நகரத்தில் இவருடைய கோரி இருக்கிறது.

திருக்கச்சி அநேகதங்காபதம் - தொண்டை நாட்டில் காஞ்சிபுரத்தில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. காஞ்சிபுரத்திற்கு வடமேற்கில் கழனி வெளியில் இருக்கிறது. இங்குள்ள இறைவரைக் கணபதியும் குபேரனும் வழிபட்டனர். இறைவர் பெயர் அநேகதங்காபதேசுவரர். இப்பதியைச் சுந்தரர் பாடியிருக்கிருர்.

திருக்கச்சிநெறிக் காரைக்காடு - தொண்டைவள நாட்டில் காஞ்சிபுரத்தில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. ஊருக்கு வடகிழக்கில் இருக்கிறது. காரை மிகுந்த காடாக விளங்கியபடியால் காரைக்காடு என்று பெயர் பெற்றது. இதனைத் திருக்காலீசுவரன் கோயில் என வழங்குவர். இந்திரன் இங்கு வழிபாடு செய்தான். இறைவர் பெயர் காரைத்திருநாதேசுவரர். இவ்விறைவனைச் சம்பந்தர் பாடியுள்ளார்.

திருக்கள்வனூர் - காஞ்சியில் உள்ள பெருமாள் திருக்கோயில் ஒன்றின்பெயர். பெருமாள் ஆதிவராகப் பெருமாள். தாயார் அஞ்சிலை நாச்சியார். இக்கோயில் காமாட்சியம்மன் கோவிலுக்குள் இருக்கிறது. திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

திருக்குருகூர் - பாண்டிவள நாட்டில் உள்ள திருமால் திருப்பதிகள் பதினெட்டினுள் ஒன்று. இது திருநெல்வேலிக்குக் கிழக்கே பத்தொன்பது மைல் தொலைவில் தாமிரபருணியாற்றின் தென்கரையில் இருக்கிறது. நம்மாழ்வார் பிறந்த ஊராகையால் இந்நாளில் ஆழ்வார் திருநகரிஎன்னும் பெயரே பெருவழக்காயிருக்கிறது. நம்மாழ்வாருடைய முன்னோர்களில் ஒருவரான குருகன் என்பவர் இவ்வூரைத் தலைநகராகக் கொண்டு திருவழுதி நாட்டினை ஆண்டுவந்தபடியினுல் இதற்குக் குருகாபுரி என்று பெயர் வந்ததென்று சிலரும்; நான்முகன் தவஞ் செய்தற்குரிய பதி யாது என்று எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்போது, ''நான்முகனே! இங்கு தவஞ் செய்'' என்று இத் தலத்தைச் சுட்டி ஆகாயவாணி கூறியபடியினுல் குருகாபுரி என்று பெயர்வந்தது என்று சிலரும் கூறுப. இங்கு திருமால் நின்ற திருக்கோலமாகக் கிழக்குநோக்கிக் காட்சியளிக்கின்றுர். இங்கு வரலாற்றுப் புகழ்பெற்ற புளியமரம் ஒன்று இருக்கிறது.

திருத்தண்கா - காஞ்சியில் உள்ள பெருமாள் திருக்கோயில் ஒன்றின் பெயர். விளக்கொளிப் பெருமாள்கோயில் எனவும் விளம்புவர். வேதாந்ததேசிகர் பிறந்த ஊர். பெருமாள்பெயர் தீபப்பிரகாசர் திவ்யப்பிரகாசர் என வழங்கும். தாயார்பெயர் மரகதவல்லித் தாயார். திரு

மங்கையாழ்வார் இத்தலத்தைப் பாடியுள்ளார்.

**திருத்தொண்டத்தொகையீச்சரம்**- திருத்தில்லையாகிய சிதம்பரத்தில் உள்ள நவலிங்கங் கோயில் இப் பெயரால் கூறப்பெறுகிறது. இங்குள்ள நவலிங்கங்கள் தொகையடியார் ஒன்பதின்மருக்கும் அமைக்கப்பட்டதென்கின்றனர்.

**திருப்பவளவண்ணம்** - காஞ்சியில் உள்ள பெருமாள் கோவில்களில் ஒன்று. பெருமாள் பவளவண்ணப் பெருமாள். தாயார் பவளவல்லி நாச்சியார். திருமங்கை மன்னருடைய பாடல் பெற்றது. பச்சை வண்ணப் பெருமாள் கோயில் இதன் பக்கத்தில் இருக்கிறது.

**திருப்பனங்காடு** - தொண்டை நாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவபதிகளில் ஒன்று. வன்பார்த்தான் பனங்காட்டூர் என்பது பழைய பெயர். பனைமரத்தைத் தலமரமாகக் கொண்டது. இங்குள்ள சுவாமியை அகத்தியர் புலத்தியர் இருவரும் பூசித்து வழிபட்டனர்.

**திருப்பாடகம்** - காஞ்சியில் உள்ள பெருமாள் திருப்பதிகளில் ஒன்று. பெருமாள் பெயர் தூதஹரி என்று கூறப்படுகிறது. திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார்,பேயாழ்வார், பூதத்தாழ்வார் ஆகியோர் பாடியுள்ளனர்.

**திருமழிசையாழ்வார்** - திருமழிசையென்பது தொண்டைவள நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்தில் சிபெரும்பூதூர் சிறு வட்டத்தில் உள்ளது. இங்கு திருமால் திருக்கோயில் உள்ளது. இவ்வூரிற் பத்திசாரர் என்னும் பெயருடைய வைணவர் ஒருவர் தோன்றினர். திருமாலிடத்தில் அவர் பெருமால் கொண்டு ஆழ்ந்து நின்றமையால் திருமழிசையாழ்வார் என்று பெயர் பெற்றார். இவர் இளமையிலேயே அறிவு நூல்களைக் கற்று மெய்யறிவு பெற்றார். திருவல்லிக்கேணி முதலிய வைணவப் பதிகளில் பலகாலம் தங்கியிருந்தார். இறுதியில் திருக்குடந்தைக்குச் சென்று அங்கு யோகத்தில் எழுந்தருளியிருந்தார். அக்காலத்தில் நான்முகன் திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம் என்னும் இரண்டு நூல்களை இயற்றினார். இவர் திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்தபோது முதலாழ்வார்கள் மூவரும் இவருடைய பெருமையை உணர்ந்து வந்து கண்டு அளவளாவி மகிழ்ந்து சென்றனர். திருமழிசையில் இவருக்குக் கோயில் இருக்கிறது.

**திருமாணிகுழி** - நடு நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப் பதிகளில் ஒன்று. தென்னார்க்காடு மாவட்டத்தில் திருப்பாதிரிப்புலியூர்ப் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கே மூன்றரை மைல் தொலைவில் கெடிலநதியின் தென்கரையில் இருக்கிறது. திருமால் வாமனராகத் தோன்றியபோது வழிபட்ட தலம் என்று புராணம் கூறும். மாணி என்பது பிரமசாரியைக் குறிக்கும். வாமனர் பிரமசாரியாகவே மாவலியிடம் மண் இரந்தார். இறைவர் திருமுன்பு எப்பொழுதும் திரையிடப்பெற்றிருக்கும்; அத்திரையில் உருத்திரவடிவங்கள் இருக்கும். அவ்வடிவங்கட்கே முதலில் வழிபாடு நடக்கும். இறைவர் பெயர் மாணிக்கவரதர்; இறைவிபெயர் மாணிக்கவல்லி. இவ்வூரைத் திருஞானசம்பந்தர் பாடியிருக்கிறார்.

**திருவக்கரை** - தொண்டை வள நாட்டில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரம் தாலுகாவில் உள்ளது. புதுச்சேரி புகை வண்டி நிலையத்தில் இருந்து பதின் மூன்று கல் தொலைவில் உள்ளது. வக்கரன் என்னும் அசுரன் வழிபட்ட படியினால் வக்கரை என்று பெயர் உண்டாயிற்று. திங்களுக்கு ஒரு முகமும் திருமாலுக்கு ஒரு முகமும் தமக்கொரு முகமுமாக இறைவர் மூன்று திருமுகங்களோடு விளங்குகிறார். வக்கிரனைத் திருமால் கொன்ற பொழுது அவனுடைய குருதி நிலத்தில் விழாதவாறு நாவை நீட்டி உறுஞ்சிய காளியின் உருவம் கோவிலுக்கு தெற்கே இருக்கிறது. இக்கோவிலுக்குள்ளேயே திருமாலின் திருக்கோவிலும்இருக்கிறது.அதனைக் குண்டலி வனம் என்பர். குண்டலமுனிவர் உருவமும் கோயிலில் இருக்கிறது. இறைவன் பெயர் சந்திரசேகரர். இறைவி பெயர்வடிவாம்பிகை. இத்தலத்தைத் திருஞானசம்பந்தர் பாடியிருக்கிறார்.

**திருவருணைக் கரடி விநாயகர்** - இவ்விநாயகருக்கு மாமரத்தடி விநாயகர் எனவும் பெயர் உண்டு. சில அன்பர்கள் இவ் விநாயகரை ஒரு மா மரத்தடியில் அமைத்து வழிபட்டு வந்தனர். அந்நாளில் திருவருணையில் கந்தப்ப ஞான தேசிகர் என்னும் பெரியார் ஒருவர் திருவருணைக் காடுகளில் தங்கி நிட்டை சாதித்துக் கொண்டிருந்தார். அவர் திருவருள் கைவரப் பெற்றவராதலின் புலிகளும் அவருக்குப்பக்கத்தில் வந்துகாவலாகப்படுத்திருக்கும். ஒருநாள் கரடி யொன்று மிகுந்த பசியோடு அப்பக்கத்திற்கு வந்தது. அஃது அறிதுயிலில் அமர்ந்திருக்கும் பெரியார் மீது விழுந்து கிழித்துக் கொன்று தின்ன வேண்டும் என்னும் எண்ணத்தோடு அவர்மீது பாயச்சென்றது. இதனை மாமரத்தடியில் எழுந்தருளிய பிள்ளையார் கண்டார். விண்ணென்றெழுந்து அக்கரடியின் மீதுவிழுந்து மோதினார். கரடி அடிதாள மாட்டாமல் நிலத்தில் வீழ்ந்து இறந்தது. இதனை அப்பக்கத்துக்குவந்தஅன்பர்கள் கண்டு வியந்து அப்பிள்ளையாருக்குக் கரடி விநாயகர் என்று பெயரிட்டனர். இன்றும் அவ்விநாயகர் கரடிவிநாயகர் என்றே அழைக்கப் பெறுகிறார்.

**திருவல்லிக்கேணி** - தொண்டைவள நாட்டில் உள்ள வைணவத் திருப்பதி. சென்னை மாநகரில் இருக்கிறது. இங்குக் கேணியொன்றில் அல்லி மலர்ந்த படியால் அல்லிக்கேணி என்று பெயர் வந்தது என்பர். இப்பொழுதுகேணிபெருங்குளமாக விளங்குகிறது.இங்குள்ளகோவிலைப் பார்த்த சாரதி கோவில் என்பர். இங்கு எழுந்தருளிய திருமால் வியாசரால் நிலைநிறுத்தப் பெற்றவர். இத்தலத்தைத் திருமங்கையாழ்வாரும்பேயாழ்வாரும் திருமழிசை யாழ்வாரும் பாடியிருக்கிறார்கள். முன்னாள் வழக்குப்படி கண்ணபிரான் குடும்பத்தோடு எழுந்தருளிய பதிகள் இரண்டனுள்முதன்மையானது. மற்றொன்று திருத்தங்கல். இத்தலத்தில் வேறுபல திருவுருவங்களும் உள்ளன. பிருகு,அத்திரி,மரீசி, மார்க்கண்டேயர் சுமதி,சப்தரோமா,சாலி என்னும் ஏழுமுனிவர்கள்இங்கு தவஞ் செய்ததாகக் கூறுவர்.

**திருவாவினன்குடி** - இத்தலம் பழநியில் உள்ளது. பழநி

யென்பதே பெரு வழக்காக வழங்குகின்றமையின் திருவாவினன்குடி என்னும் பெயரைப் பலர் அறியார். முருகக் கடவுளின் ஆறுபடைவீடுகளில் இதுவும் ஒன்று. திரு-ஆ-இனன் குடி என்று பிரித்துத்திருமகள், பசு(காமதேனு)கதிரவன், புலி, தீ ஆகியோர் வழிபட்ட வகையில் இவ்வாறு பெயர் வந்ததென்பர். ஆராய்ச்சியாளர்கள் ஆவி என்ற வேளிருடைய நல்ல குடியிருப்பு என்று பொருள் கொள்வர். இங்கு மலை மீது எழுந்தருளிய தண்டபாணிப் பெருமானைவழிபடுதலேபெரும்பான்மை யாகலின் இத்திருவாவினன் குடி நன்கு புகழடையாமல் உள்ளது. திருமுருகாற்றுப் படையின் ஒருபகுதி இவ்வூரைச் சுட்டிப் பாடப் பெற்றது. தலபுராணம், தோத்திர நூல்கள், அருணகிரிநாதர் பாடியதிருப்புகழ் முதலிய நூல்கள் இவ்வூருக்கு உண்டு. இப்பதியைத் தமிழ் மக்களும் மலையாள மக்களும் நாட்டின் பல பகுதிகளிலும்இருந்துவருகின்றவர்களும் போற்றி வழிபடுகின்றனர்.

**திருவாழ்மார்பன்கோயில்**-இதனைத் திருப்பதிசாரம் என்பர். திருவன் பரிசாரம் எனவும் வழக்குண்டு. இது நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. நாகர் கோவிலுக்கு வடகிழக்கே சுமார் 3 மைல் தொலைவில் உள்ளது. நம்மாழ்வாருடைய தாயார் உடையநங்கையார் பிறந்தவூர். இங்குள்ள மூர்த்தியின் திருக்கோலம் வீற்றிருக்குந் திருக்கோலம்.

**திருவாளன்** - ஒரு வேடன். திருமழிசையாழ்வாரை யெடுத்து வளர்த்தவன்; இவன் தேவி பங்கயச் செல்வி.

**திருவிந்தளூர்** - சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்திற்கு வடகிழக்கே நான்கு கல் தொலைவில் உள்ள வைணவப்பதி.சந்திரன்(இந்து) தன்னுடைய சாபம் நீங்கப் பெற்ற இடமாகையால் இவ்வாறு பெயர் வந்ததென்பர். இதற்குச் சுகந்தவனம் என்றும் பெயர் உண்டு. சுவாமி சுகந்தவன நாதர்; தாயார் சந்திரசாப விமோசனவல்லி. திருமங்கையாழ்வார் இத் தலத்தைப் பாடியிருக்கிறார்.

**திருவூரகம்** - இதனை உலகளந்த பெருமாள் கோயில் என்பர். பெருமாள் திருக்கோலம் உலகளந்ததற்கேற்ப உயரமாக அமைந்துள்ளது.தாயார் பெயர் அமுதவல்லி நாச்சியார். இக்கோவிலுக்குள் திருக்காரகம், திருக்கார்வானம், திருநீரகம் என்னும் திவ்ய தேசங்களும் உள்ளன. திருமங்கையாழ்வாரும் திருமழிசையாழ்வாரும் பாடியுள்ளனர். காஞ்சியில் உள்ள பெருமாள் திருப்பதி.

**திருவெறும்பூர்** - சோழவளநாட்டில் உள்ள தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. திருச்சிராப்பள்ளிக்குக் கிழக்கே ஆறு கல் தொலைவில் இருக்கிறது. தேவர்கள் எறும்புருவம்எடுத்து வந்து இறைவரை வழிபட்டபடியினால் இவ்வாறு பெயர் உண்டாகியது. கோயில் ஒரு சிறிய மலைமீதில் அமைந்துள்ளது. சுவாமியினுடைய பெயர் எறும்பீசுரர். இறைவி பெயர் நறுங்குழல்நாயகி. திருநாவுக்கரசர் இச் சிவப்பதியைப் பாடியிருக்கிறார்.

**தில்லைவாழந்தணர்கள்** - திருத்தில்லையில்எழுந்தருளிய கூத்தப்பிரானைப் போற்றி வழிபடும் பொருட்டுத் திருக்கைலையில் இருந்து எழுந்தருளிய சிவ

கணத்தவர்கள். இவர்களைக் குறிப்பிட்டுக் கூத்தப்பிரானே "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்குமடியேன்" என்று சுந்தர மூர்த்தி சுவாமிகட்கு அடியெடுத்துக் கொடுத்துள்ளார்.

**தீர்த்தங்கரர்** - சமண சமய நூல்களில் ஆதிபுராணம் மகா புராணம் ஆகிய இரண்டும் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களுடையவரலாற்றைக் கூறுகின்றன. தீர்த்தங்கரர் என்றால் பிறவிக்கடலில்இருந்துஆன்மாக்களைக்கரையேற்றுபவர்என்பது பொருள்.

**துங்கபத்திரை** - தென்னிந்தியாவில் ஓடும் ஆறுகளில் ஒன்று. கிருட்டிணாநதியின் முதன்மையான துணையாறு. துங்க, பத்திரை என்னும் இரண்டு ஆறுகள் ஒன்றுசேர்ந்து அமையப் பெற்றது. இந்த இரண்டு ஆறுகளும் மைசூர் நாட்டில் மேற்குமலைத் தொடரில் கங்கை மூலம் என்னுமிடத்தில் ஒன்றாகத் தோன்றி வேறு திக்குகளில் ஓடிப் பிறகு ஷிமோகா மாவட்டத்தில் கூடலி என்னுமிடத்தில் ஒன்றாகச் சேர்ந்து துங்கபத்திரை என்னும் பெயரையடைகின்றன.

மைசூர் நாட்டில் பெல்லாரி மாவட்டத்தைக் கடந்ததும் ஆந்திரநாட்டில் கர்நூல் மாவட்டத்தில் பாய்ந்து கிருட்டிணா நதியில் கலக்கிறது. விசயநகரம் இதன் வலக்கரையில் நிறுவப்பெற்ற வரலாற்றுச் சிறப்பு மிகுந்தது. இந்த ஆற்றில் ஆண்டுமுழுவதும் தண்ணீர் இருக்கும். நீர் பருகுவதற்கும் குளிப்பதற்கும் இனிமையானது. புண்ணிய நதிகளில் இதுவும் ஒன்று. இவ்வாற்றின் நீரைத் தேக்கிப் பயன்படுத்துவதற்குத் துங்கபத்திரைத் திட்டம் ஏற்பட்டுள்ளது.

**துச்சலை** - திருதராட்டிரனுக்குக் காந்தாரியிடம் பிறந்த பெண். இவள் சயிந்தவனை மணந்தாள்

**துச்சாதனன்** - திருதராட்டிரனுடைய மக்கள் நூற்றுவரில் ஒருவன்.இவன்மிகப்பொல்லாதவன். துரியோதனனைப் பார்க்கினும் கொடியவனாகிய இவன் தானுந்தன் உடன் பிறந்தார்களும் மாண்டொழிவதற்குரிய காரியங்களையெல்லாம் மனம் போனபடி செய்து பாரதப் போருக்கு வழிவகுத்தான்.

**துச்சீலன்** - காம்பிலிதேசத்தில் இருந்த ஒரு மறையவன். சிவநிந்தனை செய்தபடியால் ஊரை விட்டு விரட்டப் பெற்றான். வயிற்றுவலி கொண்டு வருந்தினான். ஓர் அந்தணன், "திருநீற்றுக் குண்டத்து நீற்றைப் பூசுக" என்று கூற அதனைக் கேளாமல் இகழ்ந்தபடியால் அவ்வந்தணனால் புலியாகுமாறு சாபமிடப்பெற்றான்.

**துண்டுமுகன்** - இவன்ஒரு மறையவன். இவனுடைய மனைவி பெயர் விசாலை. இவன் அமாவாசையில் ஒரு மகனைப்பெற்றான். அவனுக்குத் திருமணஞ் செய்துவைத்தான். அவன் தீயொழுக்கத்தை மேற்கொண்டிருந்தபடியால் அரசன் அவனை நாட்டைவிட்டுத் துரத்தினான். இவன் காசியை அடைந்து கங்கையில் மூழ்கினான். சிவபிரான் இவனுக்குத் திருவைந்தெழுத்தை உரைத்தருள அதனால் வீடுபெற்றான்.

**துந்து** - இவன் ஓர் அசுரன்.மதுவினுடைய மகன். இவன் நிலவுலகையழிப்பதற்குப் பாதாளத்தில் தவஞ்செய்தான். அப்பொழுது ஆண்டுக்கொரு முறை மூச்சு விடுவான். அப்பொழுது உலகம் ஏழு நாட்களுக்கு நடுங்கும். இவன் குவ

லயாசுவனால் கொல்லப்பட்டான்.

**துந்துமி** - இவன் ஓர் அசுரன். பிரகலாதனுக்கு மாமன். காசியில் தவஞ் செய்துகொண்டிருந்த முனிவர்களை இவன் வருத்தியபடியால், சிவபிரான் இவனை வதைத்தருளினார்.

**தும்புரு** - இவன் விபுலன் என்னும் காந்தருவனுடைய மகன். இவன் இந்திரனைப் புகழ்ந்து பாடினான். இதனைக்கேட்டு நாரதர் சினங்கொண்டார். நிலவுலகில் திருவேங்கடத்தில் ஒரு பொய்கையில் விழுமாறு சாபமிட்டார். இவன் அப்பொய்கைக் கரையில் தவஞ்செய்து சித்திபெற்றான். இவன் தும்புரியம் என்னும் நூலைச் செய்துள்ளான்.

**துர்த்தமன்** - முன்காலத்தில்விந்த மலைச்சாரலில் கதம்பசிகரம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்த ஓர் அரசன். மதனன் என்பவனுடைய மகன்

**துளசிதாசர்** - இவர் வடஇந்தியாவில் இராசாப்பூர் என்னுஞ் சிற்றூரிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் ஆத்மராம் துபே, தாயார் பெயர் குலசீ பெற்றோர் வறிய நிலையில் இருந்தனர். துளசிதாசர் இரத்தினுவளி என்னும் ஓர் அழகிய மாதைத் திருமணஞ் செய்துகொண்டார். மனைவியிடம் பேரன்பு கொண்டிருந்தார். ஒருநாள் மனைவியாகிய இரத்தினுவளி கணவனிடம் சொல்லாமலே தாய் வீட்டிற்குப் போய்விட்டாள். மனைவியிடம் பெருங்காதல் கொண்டிருந்த துளசிதாசர் இரவிலேயே யமுனையாற்றைக் கடந்து தம்முடைய மனைவியிடஞ் சென்றார். இரத்தினுவளி ஆற்றை இரவில் கடந்து தன்னிடம் வந்த கணவனைக் கடிந்துகொண்டாள். கணவனைப் பார்த்து, "என்னுடைய இந்த ஊனுடலின்மீது இவ்வளவு பற்றுவைப்பதற்குப் பதிலாகக் கடவுளின் பேரில் பற்றுவைப்பீரானால் இந்த மாயாப் பிரபஞ்சத்தைக் கடக்கலாமே" என்று கூறினாள். மனைவியின் சொற்கள் துளசிதாசரின் உள்ளத்தில் நல்லறிவை உண்டாக்கியது. அப்பொழுதே வீட்டை விட்டுத் துறந்து வெளியேறினார். துறவை மேற்கொண்டார்.

துளசிதாசர் சிறந்த அறிவாளியாகவும் நூல்களைக் கற்றுணர்ந்தவராகவும் கடவுளிடம் அன்புடையவராகவும் விளங்கினார். இவருடைய குருவின் பெயர் பாபாநரகரிதாசர். துளசிதாசர் அயோத்தியில் பலகாலம் வசித்திருந்தார். அங்கு இவர் இராமர் இலக்குமணர் முதலியவர்களை நேரிற்கண்டு மகிழ்ந்தாராம். அயோத்தியில் இருந்து காசியை அடைந்து தம் வாழ்நாள் முழுவதும் காசியிலேயே கழித்தார். இவர் பாரதநாட்டிலுள்ள எல்லாப் புண்ணிய நதிகளினும் நீராடி எல்லாத் திருப்பதிகளையுங் கண்டு வழிபட்டுள்ளார். துளசிதாசர் இராமாயணம் ஒன்று இயற்றினார். அது துளசிதாசர் இராமாயணம் என்று வழங்குகின்றது. இவர் பன்னிரண்டு நூல்களை இயற்றியிருக்கிறார். இவைகளில் ஐந்து பெரியவை; ஐந்து சிறியவை. இவர் 126 வயதுவரை வாழ்ந்து அசிகாட் என்னும் கங்கைத் துறையில் காலமானார்.

**தூங்கானைமாடம்** - தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள பெண்ணாகடம் சிவன்கோயில் விமானம் தூங்கும் யானை வடிவத்தில் அமைந்தது. அதனால்

அது தூங்கானைமாடம் என்று பெயர் பெற்றது.

**தெய்வீகஉலா** - இரட்டைப் புலவர்களால் காஞ்சியில் எழுந்தருளிய ஏகாம்பரநாதர்மீது பாடப்பட்டஉலா. இரட்டைப் புலவர்கள் இவ்வுலாவை அரங்கேற்றும் பொழுது காப்புச் செய்யுளிற் கூறப்பட்ட ஆயிரக் கால் மண்டபமும் விகடசக்கர விநாயகரும் ஏகாம்பரநாதர் கோவிலில் அப்பொழுது இல்லாதபடியினால் அவையோர் அதனை மறுத்தனர். நூல் அரங்கேறுமல் நின்றுபோய்விட்டது. பலநாட்கள் சென்ற பிறகு சிலர் நிலத்தைத் தோண்டினர். அப்பொழுது ஆயிரக்கால் மண்டபமும் ஆனைமுகக் கடவுள் சிலையொன்றுங் காணப் பட்டன. பிறகு உலா அரங்கேற்றப் பெற்றது. இந் நிகழ்ச்சியால் இது தெய்வீக உலா என்று பெயர் பெற்றது.

**தேய்புரிப்பழங்கயிற்றினர்** - சங்க காலப் புலவர்களில் ஒருவர். இவர்பாடியசெய்யுளில், நெஞ்சமும் அறிவும் மாறுபட்டு இருபுறமும் இழுத்தலால் என்னுடம்பு, இரண்டுயானைகளால் இருபுறமும் இழுக்கப்பட்டுத் தேய்புரிப் பழங்கயிறு இற்றொழிவது போல அழிய வேண்டுவதுதானே?'' என்று தலைவன் கூறுவதாக அரிய தொடரை அமைத்திருக்கிற படியினால் இவர் இவ்வாறு காரணப்பெயர் பெற்றார். இவருடையஇடுகுறிப்பெயர் இன்னதென்று தெரியவில்லை.

**தேரையர்** - இவர் தருமசௌமியர் என்னும் பெரியவரிடத்தில் மருத்துவமுறைகளை யெல்லாம் நன்கு கற்றுத்தேறினர். உடற்கூற்றினை உணர்ந்து மருத்துவஞ் செய்தலில் வல்லவராக விளங்கினார். ஓர் அரசன் தலைநோயினால் மிகவும் வருந்தினான். பல மருத்துவர்கள் முயன்றும் தலைநோயைத்தீர்க்க முடியவில்லை. இவர் அந்நோயின் தன்மையை ஆராய்ந்தார். தலையோட்டுக்குள் ஏதேனும் கோளாறு இருக்கவேண்டும் என்று எண்ணினார். அரசனுக்கு மயக்கத்தை உண்டு செய்து மண்டையை மெதுவாகப் பிளந்து பார்த்தார். தேரை ஒன்று மூளையைப் பற்றிக்கொண்டிருந்தது. ஓர் ஏனத்தில் தண்ணீரை ஊற்றித் தேரையின் முன் நீட்டினார். தேரை அந்நீரில் குதித்தது. அரசன் மண்டையை ஒட்டிக் குணமாக்கி விட்டார். அது முதல் இவருக்குத் தேரையர் என்னும் பெயர் உண்டாகியது. இவருடைய இயற்பெயர் இராமதேவர் என்பர்.

**தேவகன்** - இவன் யதுகுல மன்னனாகிய உக்கிர சேனனுடைய அண்ணன். கண்ணனைப் பெற்ற தேவகிக்கு இவன் தந்தை.

**தேவசேனபதீச்சரம்** - காஞ்சியில் உள்ள திருக்கோயில்களில் ஒன்று. முருகக்கடவுள் நான்முகனைக் குட்டிச் சிறையில் அடைத்தார். நான்முகனைச் சிறையிலிருந்து விட்டுவிடுமாறு சிவபிரான் முருகக்கடவுளுக்குக் கட்டளையிட்டார். சிவபிரானுடைய கட்டளையை முருகக்கடவுள் மறுத்தார். அக்குற்றந் தீருமாறு தேவசேனபதியாகிய முருகக்கடவுள் ஒரு சிவலிங்கத்தை அமைத்து வழிபட்டார். அதுவே இப்பெயரோடு வழங்குகிறது.

**தேவாந்தகன்** - (க) இராவணனுடைய மக்களில் ஒருவன். இவன் அநுமானால் கொல்லப் பட்டான்.

**தேவாந்தகன் - (உ)** இரௌத்திர கேதுவின் மகன். நாரதருடைய அருளுரையினால் தவஞ்செய்து பல சித்திகளைப் பெற்றான். இவன் மூன்று உலகங்களையும் தன்வழிப்படுத்தித் தேவர்களையும் முனிவர்களையும் வருத்தினான். ஆனைமுகக் கடவுளோடு போர்செய்யப் பல அசுரர்களை ஏவினான். இறுதியில் தானே வந்து போர்செய்தான். ஆனைமுகக்கடவுள் இவனை வெட்டுந்தோறும் கையுந் தலையும் வளருதலைக் கண்டார். பேருருக் கொண்டு திருவடியால் வயிற்றைக் கிழித்துக் கொன்றார். நராந்தகன் என்பவன் இவனுடைய தம்பியாவான்.

**நகிலன்** - பாண்டிவள நாட்டில் திருவில்லிபுத்தூரில் இருந்த ஒரு வணிகன். மிகுந்த பொருளுடையவனாக இருந்தும் இவறன்மை மிக்கவனாக இருந்தான். இவன் நோயடைந்த காலத்தில் பரம்பொருளுக்கு என்று எடுத்துவைத்த அரும்பொருளை அக்கடவுளுக்குக் கொடுக்காமல் பெரும் பொருளையிழந்து வருந்தினான்.

**நட்டாற்றீசர்** - பவானியென்னும் திருநணாவில் இறைவன் இரண்டாறுகட்கிடையே கோயில் கொண்டிருப்பதால் நட்டாற்றீசர் என்று கூறப்படுகிறார்.

**நந்தட்டன்** - இவன் ஏமாங்கத நாட்டில் இராசமாபுரியில் இருந்த கந்துக்கடன் என்னும் வணிகனுடைய மகன். சீவகன் இவனைப் பெரிதும் ஆதரித்துப் பாதுகாத்தான். சீவகன் தவமேற்கொண்டுசெல்ல விரும்பிய போது நாட்டின் ஆட்சியை இவனிடம் நல்குவதாக உரைத்தும் இவன் அதனை மறுத்துவிட்டான்.

**நருமதை** - இந்தியாவில் உள்ள ஆறுகளில் ஒன்று. நடுஇந்தியாவில் அமரகண்டக்குன்றில் தோன்றுகிறது. சில மலைத் தொடர்களைச் சுற்றிவிட்டு விந்திய மலைக்கும் சாத்புரா மலைக்கும் இடையிலிருக்கும் பள்ளத்தாக்கில்பாய்ந்துசென்று மேற்குநோக்கி ஓடிக் காம்பே வளைகுடாவில் கடலில் கலக்கிறது. இதன் நீளம் ஏறக்குறைய எண்ணூறு மைல். நடு இந்தியாவைக் கடந்ததும் பம்பாய் நாட்டில்புரோச் மாவட்டத்தில் அகண்ட நருமதையாக விரிகிறது. இது புண்ணியநதிகளில் ஒன்று.

**நவநகர்** - பம்பாய் நாட்டில் வடகத்தியவாரில் கட்சுவளைகுடாக் கரையில் இருக்கும் நகரம். பம்பாயில் இருந்து வடமேற்கில் 310 மைல் தொலைவில் இருக்கிறது. இந்நகரத்தை அமைத்தவர் ஜாம்ராவல் என்பவராவார். இந்நகரில் பழமையையும் புதுமையையும் ஒருங்கே காணலாம். அரண்மனையில் விக்டோரியாக் காலத்து ஓவியங்கள் சேர்த்துவைக்கப் பெற்றிருக்கின்றன. பட்டணத்தின் நடுவில் உள்ள ஏரியின் இடையே பழைய கட்டிடங்கள் இரண்டு இருக்கின்றன. ஒரு கட்டிடத்தில் பழங்காலக்கிணறு ஒன்று இருக்கிறது. கட்டிடத்தின் தரையில் இருக்கும் ஒருசிறிய துவாரத்தில் ஊதினால் கிணற்றில் இருந்து நீர் கிடைக்கும். மற்றொருகட்டிடத்தில் பொருட்காட்சிச்சாலை வைக்கப் பெற்றிருக்கிறது. இந்நகர் துணிகட்கும் பட்டுச்சரிகை வேலைகட்கும் உலோகச் சாமான்கட்கும் பெயர் பெற்றது. துறைமுகத்துக்கு அண்மையில் முத்துக் குளிக்கப்படுகிறது.

**நவவீரர்கள்** - உமாதேவியி னுடைய காற்சிலம்பில் இருந்து சிந்தியமணிகளிற் பிறந்தபெண்கள். சிவபிரானை விருப்பத்தோடு நோக்கிக் கருவடைந்து நவவீரர்களைப் பெற்றனர். நவவீரர்கள் எனின் ஒன்பது வீரர்கள் என்று பொருள். அவர்களாவார் வீரவாகுதேவர், வீரமகேந்திரன், வீரபகேசன், வீரபுரந்தகன், வீரராட்சசன், வீரமார்த்தாண்டன், வீரராந்தகன், வீரதீரன் என்போர்களாவர். இவர்கள் முருகக் கடவுளுக்குத் துணைவர்களாக அமைந்தனர்.

**நளாயினி** - இவள் நளன் என்னும் மன்னனுடைய மகள் என்பர். கற்பிற் சிறந்தவள். இவளை மௌத்கல்யர் என்னும் முனிவர் திருமணஞ் செய்துகொண்டார். இவளுடைய கற்புடைமையை ஆராய்ந்து பார்க்க எண்ணிப் பெருநோயாற் பீடிக்கப்பட்டவரைப்போல நடித்தார். இவள் சிறிதும் வெறுப்படையாமல் முனிவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். முனிவர் விரும்பியவாறு ஒரு தாசி வீட்டிற்கு அவரைக் கூடையில் வைத்துத் தூக்கிக்கொண்டு சென்றபொழுது வழியில் கழுவில் இடப்பட்டிருந்த மாண்டவியர் என்னும் முனிவருடைய காலிற் கூடை பட்டது. கழுவில் வருந்திக்கொண்டிருந்த முனிவர் இதனல் துடிதுடித்தார். நளாயினியைப் பார்த்து, "நீ பொழுது விடிந்தவுடன் கணவனை இழப்பாயாக" என்று சாபமிட்டார். இதனைக்கேட்டு இவள் அஞ்சி நடுங்கினள். "ஆயின்பொழுது விடியாமற் போகுக" என்று ஆணையிட்டாள். இதனல் அஞ்சிய தேவர்கள் மாண்டவியர் மூலம் சாப விடுதலை செய்தனர். இவளை வேண்டிப் பொழுது விடியுமாறுஞ் செய்தனர். மௌத்கலியர் நளாயினியின் அன்பிற்கிரங்கி அழகிய உருவமெடுத்து இவளுக்கு இன்பநலங்களையெல்லாம் இனிது வழங்கினர். இவளே மறுபிறப்பில் திரௌபதியாகப் பிறந்தாள்.

**நன்னசோடதேவர்** - சோழவளநாட்டில் உறையூரில் இருந்து ஆட்சிபுரிந்த அரசர். தெலுங்கு மொழியை நன்கு கற்றுணர்ந்தவர். அம்மொழியில் செய்யுளியற்றும் ஆற்றல் இவருக்கு நன்கு அமைந்திருந்தது. இவர் தம்மைக் கரிகாற்சோழனுடைய வழிவந்தவர் என்று கூறிக் கொண்டார். இவருடைய காலம் இன்னதென்று உறுதி செய்ய முடியவில்லை. பன்னிரண்டு படலங்களைக் கொண்டதாகக் குமாரசம்பவம் என்னும் நூலை இவர் தெலுங்கு மொழியில் இயற்றியிருக்கிறர். தெலுங்கில் முதன்முதல் தோன்றிய பிரபந்தம் இதுவே என்பர். இது மிகச்சிறந்த நூல். இது காளிதாசன் இயற்றிய குமாரசம்பவத்தின் மொழிபெயர்ப்பன்று. சிவபுராணம், பிரமாண்ட புராணத்திலுள்ள லலிதோபாக்கியானம் ஆகியவற்றை ஆதாரமாகக்கொண்டு இஃதியற்றப்பெற்றது. இன்பச்சுவையைக் கையாள்வதில் இவர்இணையற்றவர். சைவசமயத்தின் பெருமையை நிலைநாட்டுவதில் இவர் மிகுந்த ஆர்வங் கொண்டிருந்தார். இவருடைய குமாரசம்பவ நூலில் தமிழ்ச் சொற்களுஞ் சில உள்ளன என்பர்.

**நாகரர்** - இவர் ஒருமுனிவர். இவர் தம்முடைய பெயரால் ஒரு வகையான எழுத்துக்களை உண்டாக்கினர். அவ்வெழுத்துக்கள் இவருடைய பெயரால் நாகர லிபி என வழங்குகிறது.

**நாகராசர் கோயில்** - இக்கோயில் நாகர்கோயிலில் இருக்கிறது. ஏறக்குறைய 500 ஆண்டுகட்கு முன்பு இப்பகுதியில் அரசாட்சி செய்த களக்காட்டு மன்னன் என்பவன் சர்ப்பசாபம் ஏற்பட்டுக் குறைநோயால் பீடிக்கப் பட்டான். பாம்புக்காடு நம் பூதிரிகளின் அறிவுரைப்படி பாம்புகளின் அரசனான வாசுகிக்காக இக் கோயிலைக் கட்டினான். கர்ப்பக்கிரகத்தில் எப்பொழுதும் நீர் ஊறிக்கொண்டிருக்கிறது. இங்குள்ளபுற்றுமண்வழிபாட்டுப் பொருளாக (பிரசாதமாக) வழங்கப்படுகிறது.

**நாகர்** - இவர்கள் ஒரு மனித சாதியார். இவர்கள் நாகநாடு, நாகர்மலை முதலிய இடங்களில் வாழ்கின்றனர். வாசுகி முதலிய நாககுல மரபில் தோன்றியபடியால் இவர்கள் இவ்வாறு பெயர் பெற்றனர்.

**நாகர்கோயில்** - தமிழ்நாட்டில் கன்னியாகுமரி மாவட்டத்தின் தலைநகர். கோட்டாறு என்பது இதனுடைய பழைய பெயர். கன்னியாகுமரியில் இருந்து வடக்கே 13 மைல் தொலைவிலும் திருநெல்வேலியில் இருந்து தெற்கே நாற்பது மைல் தொலைவிலும் இருக்கிறது. பழையாறு என்னும் பெயருடைய ஆறு ஊருக்கு வடக்கே ஓடுகிறது. இங்குள்ள நாகத்தின் கோயிலே ஊருக்குப் பெயராக அமைந்தது. கோயிலில் நாகத்தினுடைய சிலை மட்டுமே உண்டு. வேறு கடவுளர்களின் சிலை இல்லை. இங்குக் கிருட்டிணன் கோயிலும் இருக்கிறது. ஊரில் பல குளங்கள் உள்ளன.

**நாகாம்பை** - வசவதேவருக்குத் தங்கை. வசவர் கட்டளைப்படி குண்டலத்தைச் சங்கமருக்குக் கொடுத்தவள். இவளுடைய புதல்வர் சென்னவசவர்.

**நாசிகேது** - உத்தாலகர் என்னும் முனிவருக்கு ஒருநாள் வீரியம் வெளியாகியது. அவர் அதனைத் தாமரை மலரில் ஏந்தி விதிசை யாற்றில் விட்டார். அவ்வாற்றில் நீராடுவதற்குப்பிரதூதரன் மகளாகிய சுகேசினி என்பவள் வந்தாள். அவள் அம்மலரையெடுத்து முகர்ந்து பார்த்தாள். மூக்கின் வழியே முனிவருடைய வீரியஞ்சென்று கருக்குழியிற் பதிந்தது. கன்னிகை கருக் கொண்டாள். மகளுடைய கருக்குறியைக் கண்ட தாய் தன்னுடைய கணவனுக்கு அறிவித்தாள்.

அரசன் தன்னுடைய மகளைத் துற்கடமுனிவருடைய ஆசிரமத்திற்கு அண்மையான காட்டில் விடச்செய்தான். சுகேசினி துற்கட முனிவருடைய ஆசிரமத்திற்குச் சென்று தான் யார் என்பதை அறிவித்து அம் முனிவருக்குப் பணிவிடை செய்திருந்தாள். நாளடைவில் நாசியின் வழியாக ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். அக் குழந்தை நாசியின் வழியாகப் பிறந்தபடியால் நாசிகேது என்று முனிவர் பெயரிட்டார். பிறகு நாசிகேதுவை உத்தாலகரிடம் அனுப்பி அவருக்கு வேண்டிய பணிகளைச் செய்யுமாறு கட்டளையிட்டார். அவ்வாறே நாசிகேது அவருக்கும் அங்கிருந்த பிற முனிவர்கட்கும் பணிவிடைசெய்துகொண்டிருந்தான். நாசிகேதுவின் பணிவிடையால் மகிழ்வடைந்த உத்தாலகர் ஒருநாள் நாசிகேதுவைப் பார்த்து, "நீ யார்?" என்று உசாவினார். நாசிகேது, "நான் உம்முடைய மகன்" என்று கூறினான். உத்தாலகர் அறிவுப் பார்வையால் நிகழ்ந்தவைகளையெல்லாம்உணர்ந்தார். பின் சுகேசினியை அழைத்து மணந்தார்.

**நாசிக்** - நாசிக் மாவட்டத்தின் தலைநகர். பம்பாய்க்கு வடகிழக்கில் ஏறக்குறைய நூறு மைல் தொலைவில் இருக்கிறது. இடையில் ஓடும் கோதாவரி யாறு நாசிக்கையும் பஞ்சவடியையும் பிரிக்கிறது. நாசிக் ரோடு என்னும் புகைவண்டி நிலையத்திலிருந்து வடக்கே ஆறுமைல் தொலை வண்டிகளிற் செல்லவேண்டும். இவ்வூர் புண்ணியத் தலங்களில் ஒன்று. இலட்சுமணர் சூர்ப்பநகையின் மூக்கை (நாசியை) அறுத்த இடமாகையால் நாசிக் என்று பெயர் உண்டாயிற்று. இராமபிரான் காட்டு வாழ்க்கையை மேற்கொண்டிருந்த பொழுது இங்கு சிலகாலம் வசித்திருந்தபடியால் இவ்வூர் புனிதமான தலமாக எண்ணப் பெறுகிறது. இங்குப்பல கோயில்கள் இருக்கின்றன. சுந்தர் நாராயணன் கோயில், கபாலீசுவரர் கோயில், நாரு சங்கர் கோயில், காலராமர் கோயில் முதலியவை குறிப்பிடத்தக்கவை. யாத்திரிகர்கள் இங்கு மிகுதியாக வந்து செல்லுகின்றனர். பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை நிகழும் சிம்மாட்டமி இங்குச் சிறந்த நாளாகக் கொண்டாடப்படுகிறது. அப்பொழுது பல இலட்சக்கணக்கான மக்கள் கூடுவர். அந்நாளில் கோதாவரியில் மூழ்கினால் தீவினைகளெல்லாம் தொலைந்து போகும் என்பது மக்களுடைய நம்பிக்கை.

இங்கிருந்து ஐந்து மைலில் பாண்டுலேனுக்குகைகள் இருக்கின்றன. அவைகளில் பௌத்த சமயச் சின்னங்கள் இருக்கின்றன. ஊருக்கு வடக்கே பதினைந்து மைல் தொலைவில் திரியம்புகம் இருக்கிறது. இங்கு தான் கோதவரி தோன்றுகிறது.

**நாரதர்** - இவர் நான்முகனுடைய புதல்வர். இவர் தம்முடைய கையில் மகதியாழ் என்னும் யாழை வைத்து எப்பொழுதும் இசைபாடிக் கொண்டிருப்பார். ஓரிடத்திலும் நிலையில்லாது எங்குஞ் சுற்றிக் கொண்டிருக்குமாறு இவருக்குத் தட்சன் என்பவன் சாபமிட்டான். இவர் எங்கு சென்றாலும் ஏதேனும் ஒரு கோளை உரைத்துக் கலக மூட்டி விடுவார். இவர் செய்த கலகங்கள் பல. கம்சனுக்குக் கிருட்டிணன் முதலியோர் வரலாறு கூறினார். துரியோதனனுக்கு அருச்சுனன் தவநிலையைப் பற்றிக் கூறினார். தமயந்தியின் சுயம் வரத்தைத் தேவேந்திரனுக்குத் தெரிவித்தார். மும்மூர்த்திகளும் எழுந்தருளியிருக்கையில் பொதுவாக வணக்கஞ்செய்து கலகமூட்டினார். பெண்ணுருவடைந்து கண்ணனைச் சேர்ந்து பிரபவ முதலிய ஆண்டுகளைப் பெற்றார். தருமரிடம் சிசுபாலனுடைய முன்நிலைமையைக் கூறினார். கண்ணனிடத்தில் பாரிசாத மலரைக் கொடுத்து அதைக் கண்ணன் உருக்குமணிக்குக் கொடுத்ததைக் கண்டுசத்தியபாமைக்குக்கூறிச் சத்தியபாமைக்கும் கண்ணனுக்கும் கலக மூட்டினார். கண்ணன் முதலியோர்க்கு அநிருத்தன் நிலையைக் கூறினார். திரிபுர அசுரர்களை அழிப்பதற்குப் புத்தர் உருக்கொண்ட திருமாலுக்குச் சீடராகச் சென்றார். தக்கன் வேள்வி செய்தலை உமைக்குக் கூறினார். அகத்திய முனிவருடைய கமண்டலத்தில் இருந்த காவிரியை இந்திரனிடத்தில் கூறி ஆனைமுகக்கடவுளைக் கொண்டு கவிழ்க்கச்

செய்தார். சம்புவன் தவஞ் செய்ததை இராமனிடங் கூறினார். சுகருக்கு மெய்யறிவு உண்டாகச் செய்து தந்தையிடமிருந்து நீங்கச் செய்தார். இவர் பிறந்தவுடன் மழை (நாரம் - நீர்) பெய்தபடியால் நாரதர் என்று பெயருண்டாயிற்று என்பர்.

**நாராயண கோபாலர்** - கண்ணனுக்கு ஒப்பான ஆற்றலுடையவர். பாரதப்போரில் அருச்சுனனால் கொலையுண்டவர்.

**நாலுகவிப் பெருமான்** - திருமங்கையாழ்வார் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைப் பாக்களையும் நன்கு பாடக்கூடியவராக இருந்தபடியால் இவ்வாறு ஒருபெயர் வழங்கியது.

**நாழிக் கிணறு** - இக் கிணறு திருச்செந்தூர் முருகன் திருக்கோயிலுக்குத் தெற்கே இருநூறு கசத் தொலைவில் கடற்கரையில் அமைந்திருக்கிறது. ஒரு பெரிய கிணற்றுக்குள் சிறிய கிணறாக ஒருபடி அகலமே உள்ளதாக அமைந்திருக்கிறது. நாழியளவு அகலமே அமைந்துள்ளபடியால் நாழிக் கிணறு என்று பெயர் பெற்றது. ஏழு அடி ஆழமே உள்ளது. நல்ல தண்ணீர் வரம்பு வரையில் நிறைந்திருக்கும். எடுத்தால் மீண்டும் அதே அளவுக்கு அப்பொழுதே நிறைந்துவிடும். எடுக்காமலிருந்தாலும் நீர் ஊறி வழிவதில்லை.

**நிகும்பன்** - இராவணனுக்கு அம்மான். மிகுந்த உணவை உண்பவன். இவனுக்கு ஒன்பது கோடிப் படைகள் இருந்தன. இவன் தீக்கடவுளோடு போர் செய்து வென்றான். இராமனை வெல்ல முடியாதென்றும் சீதையை விட்டுவிடுமாறும் இராவணனுக்கு அறிவுரை கூறினான். இவனுடைய அறிவுரையை இராவணன் கேட்கவில்லை. போரில் அநுமானால் கொல்லப்பட்டான்.

**நிம்பார்க்கர்** - இவர் ஆந்திரநாட்டில் தைலங் பிராமணர் குலத்திற் பிறந்தவர். இராமாநுசருக்குப் பிறகு பதினொன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்பெறுகிறார். பிற வைணவ வேதாந்திகளைப் போன்று இவரும் பிரமமே உலகத்திற்கு உபாதான காரணமாகவும் நிமித்தகாரணமாகவும் விளங்குகின்றதென்னும் கொள்கையுடையவர். தச சுலோகி மந்திர ரகசிய சோடசி, பிரபந்ந கல்பவல்லி, கிருஷ்ணாஷ்டகம், இராதாஷ்டகம், இராதாஸ் மரண தோத்திரம் முதலியன இவர் இயற்றிய நூல்கள். சீநிவாசர் என்பவர் இவருடைய மாணவர்களுள் முதன்மையானவர். பிரமசூத்திரத்திற்கு அவர் வேதாந்த கௌஸ்துபம் என்னும் உரை நூலை இயற்றியிருக்கிறார்.

**நிர்க்கிரந்தர்கள்**-சமண சமயத்தை நிறுவிய வர்த்தமான மகாவீரரின் மாணவர்கள் இப் பெயரால் அழைக்கப்பட்டனர்.

**நீக்ரோக்கள்** - இவர்கள் கறுத்த மேனியினர். சுருண்டமயிரினர். நீண்டகையினர். இவர்கள் ஆப்பிரிக்காக் கண்டத்தில் சகாரா பாலைவனத்தையடுத்துத் தெற்கேயுள்ள பெரும் பகுதியில் உள்ளனர். இவர்கள் பல வேறுபாடுகளை யுடையவர்கள். சிலவகுப்பினர் நான்கடி உயரமேயிருப்பர். சில வகுப்பினர் ஆறரையடி உயரமும் இருப்பர். நிறமும் கறுப்பு, பழுப்பு, சிவப்பு எனப் பல வகையாகக் காணப்பெறும். எல்லாரும் அகன்ற தட்டையான மூக்கும்

கரும்பழுப்புக் கண்களும் உடையவர்களாக இருப்பர்.

பதினைந்தாம் நூற்றாண்டுக்கும் பதினெட்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஐரோப்பியர்கள் ஆப்பிரிக்காவிற் புகுந்து நீக்ரோக்களைப் பிடித்துக் கொண்டு போய் அடிமைகளாக விற்று வந்தனர். அடிமைகளாகப் பிடிக்கப்பட்ட நீக்ரோக்கள் கோடிக் கணக்கினர். நாளடைவில் இக் கொடிய பழக்கம் அறிஞர்களால் தடைசெய்யப் பெற்று நீக்ரோக்களும் நல்ல வாழ்க்கை நடத்துமாறு ஏற்பாடு செய்தனர். ஆயினும் மேனாடுகளில் நீக்ரோக்களைத் தாழ்ந்தவர்களாக இன்றும் எண்ணுபவர் பலர் இருக்கின்றனர்.

**நீமன்** - திருமுனைப்பாடி நாட்டிலே மாரமங்கலம் என்னும் ஊரில் இருந்தவன். வஞ்சம் பொய் சூது வாது முதலிய தீக்குணங்களெல்லாம் ஒருங்கமையப் பெற்றவன். இவன் பொய்மையாகச் சிவநேசக் கோலம் பூண்டு நரசிங்க முனையரையரிடம் தானம் வாங்கச் சென்றபொழுது சிலர் இவன் பொய்க் கோலம் பூண்டவன் என்று நரசிங்க முனையரையரிடம் தெரிவித்தனர். அவரோ இவனுடைய பொய்க் கோலத்தைப் பாராட்டி மற்றையர்க்களித்ததை விட ஒரு மடங்கு சேர்த்து இவனுக்குக் கொடுத்து நல்லறிவு புகட்டியனுப்பினார்.

**நெடுவேளாதன்** - பாண்டிவளநாட்டில் போந்தை என்னும் ஊரில் இருந்தவன். இவனைக் குன்றூர் கிழார் மகனார் பாடியுள்ளார். அப்பாட்டு புறநானூற்றிற் சேர்க்கப்பட்டுள்ளது.

**நெஞ்சுவிடுதூது** - நூல்வகைகளில் இஃது ஒன்று. ஒருவர் தம்முடைய நெஞ்சத்தைத் தம் மால் விரும்பப்பட்டவரிடஞ் சென்று தமக்கு விருப்பமான செய்திகளைக் கூறுமாறு நெஞ்சினை முன்னிலைப் படுத்திப் பாடப்படுவது. கடவுளர் மாட்டும் மற்றும் உயர்ந்தோர் மாட்டும் தூது அனுப்பிப் பாடப்பட்ட நூல்கள் தமிழில் பல உள்ளன.

**நெடுங்கழுத்துப் பரணர்** - சங்க காலப்புலவர்களில்ஒருவர். இவருடைய கழுத்துச் சிறிது நீளமாக இருந்தபடியால் இவ்வாறு காரணப்பெயர் உண்டாயிற்று. இவருடைய இடுகுறிப் பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவருடைய பாடல் ஒன்று புறநானூற்றில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**நோய்ப் பாடியார்** - சங்க காலப் புலவர்களில் ஒருவர். காதலர்களின் பிரிவுத் துன்ப நோயை நல்லமுறையில் பாடியபடியால் இவர் இவ்வாறு நோய்ப்பாடியார் என்று பெயர் பெற்றார். இவருடைய இடுகுறிப் பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவருடைய பாடல் ஒன்று அகநானூற்றிற் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**பகன்** - (2) பிருகு முனிவருக்கு இரண்டாவது பேரன். தாய் வயிற்றில் நூறு ஆண்டுகள் இருந்தவன். தந்தையர் கிருதவீரியனால் மாண்டமையறிந்து அவனுடைய வழிமுறையினரைக் கொல்லத் தவஞ் செய்தான். இவனுடைய பிதுர்க்கள் அவ்வாறு கொல்ல வேண்டாமென்று தவத்தைத் தடைசெய்தனர். பகன் அத் தவாக்கினியை பிதுர்களுடைய கட்டளைப்படி கடலில் விட்டான். அதுவே வடவையாயிற்று.

**பங்காசுவன்** - இவன் இந்திரனைப் பகைத்து வேள்விசெய்து நூறு பிள்ளைகளைப் பெற்றான். வேட்டைக்குச் சென்றபோது இந்திரனால் விரட்டப்பட்ட குதிரையோடு ஆற்றிற் படிந்து பெண்ணுருக் கொண்டு ஓர் இருடியை மணந்து மீண்டும் நூறு பிள்ளைகளைப் பெற்றான். தன்னுடைய பட்டணத்திற்கு வந்து தான் அரசனாக விருந்த காலத்திற் பெற்ற பிள்ளைகளோடு சேர்த்து இவர்களையும் வாழச் செய்தான். இந்திரன் கலகம் விளைத்து இருநூறு பிள்ளைகளையுஞ் சாகச் செய்தான். அரசனுடைய மனைவியர் அழுதனர். இந்திரன் அந்தண உருக்கொண்டு வந்து பகையின் வரலாறு கூறினான். அரசனை "உனக்கு எந்தப் பிள்ளைகள் வேண்டும்?" என்று கேட்டான். அரசன், "நான் பெண்ணாயிருந்த காலத்தில் பெற்றபிள்ளைகளும் என்னுடைய பெண்ணுருவமுமே வேண்டுமென்றான்.

**பஞ்சசன்** - சங்கு வடிவம் உடைய ஓர் அசுரன். பிரபாச தீர்த்தத்தில் சாந்தீபனியின் மகனைக் கொன்றான். கண்ணன் கடலில் மூழ்கி இவனைக் கொன்று சாந்தீபனியின் மகனை மீட்டதோடு இவ்வசுரனைத் தம்முடைய சங்காகக் கொண்டார்.

**பஞ்சப்பிரேதபரசிவம்** - சர்வ சம்மார காலத்தில் நான்முகன், திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய ஐவரின் உடல்களையே தெப்பமாகக் கொண்டு அவற்றின்மீது எழுந்தருளி மீண்டும் படைப்பு முதலானவைகளைச்செய்விக்கத் திருமால் முதலியவர்களைப் படைக்கும் சிவபிரானின் திருவுருவம். இவருடைய சத்தி பஞ்சப் பிரேதபராசத்தி.

**பஞ்சமுக வாத்தியம்** - இது தென்னாட்டு இசைக் கருவிகளில் ஒன்று. பெரிய கங்காளத்தைப் போன்ற உடலையுடைய இக்கருவியின் மேற்பாகத்தில் ஐந்து குழாய்கள் இருக்கும். அக்குழாய்கள் தோலால் மூடப்பட்டிருக்கும். நடுக்குழாய் சிறிது பெரிதாகவும் சுற்றுப் புறத்திலுள்ள நான்கு குழாய்கள் சற்றுச் சிறியனவாகவும் இருக்கும். வாத்தியத்தின் உடல் வெண்கலத்தினால் செய்யப்பட்டிருக்கிற படியால் வாத்தியம் மிகக் கனமானதாக இருக்கும். இதனை ஒருசிறிய நான்கு சக்கர வண்டியின் மேல் வைத்து வேண்டிய இடங்களுக்கு இழுத்துக் கொண்டு போய் வாசிப்பார்கள். சிவபெருமானுடைய ஐந்து திருமுகங்களின் பெயர்களாகிய சத்தியோ சாதம், ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம் என்னும் பெயர்களே இக்கருவிகளின் ஐந்து முகங்கட்கும் உள்ளன. இவ்வாத்தியத்தைத் தனியாகவும் சுத்த மத்தளத்துடன்சேர்த்தும்வாசிப்பார்கள். இரண்டு கைகளாலும் வாசிப்பார்கள்; கழிகளை (குச்சிகளை)ப் பயன்படுத்துவதில்லை. திருவாரூர்க் கோயில், திருத்துறைப்பூண்டிக் கோயில் முதலிய இடங்களில் இவ் வாத்தியம் வாசிக்கப்படுகிறது.

**பஞ்சாட்சரப் பாறை** - திருப்பரங்குன்றத்தில் நக்கீரர் இருந்து பூசை செய்த பாறையைப் பஞ்சாட்சரப் பாறை என்று கூறுகின்றனர்.

**பஞ்சாசார்ய பதாச் சாரிதர்** - இராமாநுசருடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று. இதனுடைய பொருள் ஐந்து ஆசிரியர்களின் திருவடிகளில் ஈடுபட்டு ஒழுகியவர் என்பது.

**பஞ்சாப்** - இந்தியாவில் ஆங்கில ஆட்சியின் போது பஞ்சாப் வட மேற்கு மாகாணமாக இருந்தது. சிந்து நதியின் துணையாறுகளாகிய சீலம், சீனுப், ராவி, பீயாஸ், சட்லெச் என்னும் ஐந்து ஆறுகள் பாயும் இடம் என்பதால் இப்பெயர் ஏற்பட்டது. ஐந்து ஆறுகளும் நீர்ப் பாசனத்திற்குப் பயன்படுகின்றன. நீர்வளமும் நில வளமும் ஒருங்கே அமையப் பெற்ற பஞ்சாப் இந்தியாவின் கோதுமைக் களஞ்சியமாக விளங்குகின்றது.

**பஞ்சுகன்** - பாண்டி நாட்டில் தோகை மலை என்னும் ஊரில் வாழ்ந்திருந்த ஒரு பொல்லாதவன். இவன் மக்கட்கு அல்லல் பல செய்து திரிந்தான். மதங்கி என்னும் ஒரு மாதை இவன் கெடுக்க முயன்ற பொழுது தெய்வத் திருவருளால் மதங்கியின் கணவன் கையில் வாள் ஒன்றுவர இத்தீயவன் அவ் வாளால் மாண்டொழிந்தான்.

**பட்டர்பிரான்** - இவருடைய இயற்பெயர் விட்டுணு சித்தர் என்பது. இவர் பாண்டிவள நாட்டில் திருவில்லிபுத்தூரில் வேயர் என்னும் அந்தணக்குடியில் முகுந்தபட்டர் என்பவருக்கும் பதுமவல்லி என்னும் அவருடைய மனைவியாருக்கும் புதல்வராகத் தோன்றினர். பூம்பொழில் ஒன்று அமைத்துப் பூமாலைத் திருத்தொண்டு செய்து கொண்டிருந்தார். இவர் வடபெருங்கோயிலுடையானுடைய திருவுளப்படி மதுரைக்குச் சென்று பாண்டிய மன்னன் அவையில் காரணமில்லாத காரியமே இடையாதென்றும், உலகத்திற்குக் காரணப் பொருள் கடவுள் என்றும் அக்கடவுள் திருமால் என்றும் அக்கடவுளை யடைவதற்குப் பத்திமார்க்கமே சிறந்ததென்றும் பத்தியின் முடிவு சரணாகதி என்றுங் கூறிச் சித்தாந்தம் செய்தார். அவ்வளவில் அரசன் கட்டியிருந்த பொற்கிழி இவர் முன் வளைய இவர் அதனை யறுத்துக் கொண்டார். அரசனும் புலவர்களும் இவருடைய அடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள். அரசன் பட்டர்பிரான் என்னுஞ் சிறப்புப் பெயரை வழங்கினன். யானை மேல் ஏற்றி நகர்வலஞ் செய்வித்தான். பல சிறப்புக்களும் செய்தான். இவருடைய பெயர் பெரியாழ்வார் எனவும் வழங்கியது. பெரியாழ்வார் திருவாய்மொழி என்னும் நூல் இவரால் பாடப்பெற்றது.

**பதுமினி** - வத்தவ நாட்டில் கௌசாம்பி நகரில் இருந்தவள். சங்க தருமன் என்னும் வணிகனுடைய சூழ்ச்சியில் அகப்பட்டு நிறையிழந்து குறை பெற்றுக் கொலைத் தண்டனைக் குட் பட்டுப் பிறகு உதயணனுடைய உதவியால் மீட்கப் பட்டவள். இவளுடைய பெயர் பின்னுளில் சாங்கியத்தாய் என வழங்கியது.

**பத்திராவதி** - தென்னிந்தியாவில் மைசூர் நாட்டில் ஷிமோகா மாவட்டத்தில் இருக்கும் ஊர். இங்கு மைசூர் இரும்பு எஃகுத் தொழிற்சாலை இருக்கின்றது. இஃது இந்தியாவின் பெரிய இரும்புத் தொழிற்சாலைகளில் ஒன்று. சிமெண்டு, காகிதம் முதலியன செய்யுந் தொழிற்சாலைகளும் இங்கு இருக்கின்றன.

**பரசுராம க்ஷேத்திரம்**-பரசுராமர் இருபத்தொரு தலைமுறை வரையினும் பல அரசர்களையும் கொன்றபடியினால் பழியும் பாவமுஞ் சூழ்ந்தன. அவைகளைப் போக்கிக் கொள்ள

எண்ணினார். அந்தணர்களுக்குத் தகுந்த தானங்கள் செய்தால் அவைகள் நீங்கும் என்று அறிந்தார். ஒரு வளம் மிகுந்த நாட்டை உண்டாக்கி அந்தணர்களுக்குத் தானஞ் செய்ய முடிவு செய்தார். தமது கையிலிருந்த பரசு என்னும் படையைத் தென்றிசைக் கடலில் வீசினார். அங்கிருந்த வருணன் சிறிது விலகினான். அப்பொழுது அங்கே வளம் மிகுந்த நாடு ஒன்று உண்டாயிற்று. அதுவே இந்நாளில் கேரளம் என வழங்கும் மலையாளநாடு என்பது புராண வரலாறு. ஆகவே கேரள நாட்டிற்குப் பரசுராம க்ஷேத்திரம் என்னும் ஒருபெயர் வழங்குகின்றது.

**பரதேசிப்புதை** - திருக்குற்றாலமலையில் உள்ள ஒரு குகையின் பெயர். இக்குகையில் பதினைந்து எழுத்துக்களால் ஆன ஒரு கல்வெட்டு இருக்கிறது. இவ்வெழுத்துக்கள் எம்மொழியைச் சேர்ந்தவை என இதுவரையிலும் யாராலுங் கண்டு பிடிக்கப்படவில்லை.

**பரமேச்சுரவிண்ணகரம்** - திருமால் திருப்பதிகளில் ஒன்று. தொண்டைவளநாட்டில் செங்கற்பட்டுமாவட்டத்தில் காஞ்சிபுரத்திற்குத் தெற்கேஒருமைல் தொலைவில் இருக்கிறது. திருமால் பரமபதநாதன்; தாயார் வைகுந்தவல்லி. முகுந்த விமானம் ஆயிரம் தீர்த்தம்; மேற்கு நோக்கிய சந்நிதி. வீற்றிருந்த திருக்கோலம். இத்தலத்தைத் திருமங்கையாழ்வார் பாடியிருக்கிறார்.

**பரிதி** - இவர் திருக்குறளுக்கு உரையெழுதிய பதின்மருள் ஒருவர். இப்பெயரைப் பருதி எனவும் வழங்குவர். இவர் பதின்மூன்றும் நூற்றாண்டில் வாழ்ந்த பரிமேலழகருக்கு முற்பட்டவராவர். இவருடைய உரைபதவுரையாகவோ பொழிப்புரையாகவோ இல்லை. கருத்துரையாகவே அமைந்துள்ளது. இவருடைய உரையால் திருக்குறளின் கருத்தைத் தெளிவாக உணர்ந்து கொள்ள முடியாது.

**பரிப்பெருமாள்** - திருக்குறளுக்கு உரையெழுதிய பதின்மருள் ஒருவர். இவர் சேதுநாட்டில் உள்ள செழுவை என்னும் ஊரிற் பிறந்தவர் என்பர். இவர் பரிமேலழகர்க்கு முற்பட்டவர். இவர் வடநூற் புலமையும் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. இவருடைய உரை காளிங்கர்உரையைவிடச் சுருக்கமானது. பொழிப்புரையாக அமைந்தது. ஒவ்வோரதிகாரத்திலும் முன்னுரை கூறுதலும் அதிகாரவைப்பு முறை கூறுதலும் கூற்றுவிளக்கம் கூறுதலும் இவருக்கு இயல்பு. இவருடைய உரை திருக்குறள் முழுவதற்கும் உள்ளது.

**பரிமான்** - உறையூரில் இருந்து அரசுபுரிந்த ஒருசோழமன்னன். இவன் சிவபெருமானிடத்துப் பேரன்புடையவன். இவன் திருப்பனந்தாளில் தாடகை யென்னும் மாதொருத்தியின் பொருட்டு வளைந்த சிவலிங்கத்தை நிமிர்த்துதற்குப் பெருமுயற்சி செய்தான். எவ்வளவோ முயன்றும் நிமிர்த்த முடியவில்லை. பிறகு குங்கிலியக்கலய நாயனார் தம் கழுத்தில் கயிறுகட்டியிழுத்து அவ்விலிங்கத்தை நிமித்தினார். இவ்வரசன் அந்நாயனாரைப் பெரிதும் போற்றிப் பாராட்டினான்.

**பல்வலன்** - இல்வலன் என்னும் அரக்கனுடைய மகன். இவன் முனிவர்களை வருத்திக் கொண்டிருந்தான். பலராமர் தம்முடைய கலப்பைப் படையால்

இவனை இழுத்துக் கதாயுதத்தால் கொன்றார்.

**பழையன்** - பாண்டி நாட்டில் மோகூர்என்னும் ஊரில்இருந்த ஒரு குறுநில மன்னன். மதுரையில் இருந்து அரசு புரிந்திருந்த வீரசேகரன் என்னும் பாண்டிய மன்னனுக்குத் துணைவனாக அமைந்து நின்றவன்.

**பள்ளிக்கூடம்** - இச்சொல் சமண சமயத்தாரின் மடங்களையும் பௌத்தரின் விகாரைகளையும் குறிக்கின்றது. சமணப்பள்ளிகளிலும் பௌத்தப்பள்ளிகளிலும் அப்பள்ளிகளைச் சேர்ந்த துறவிகள் பிள்ளைகளுக்குக் கல்வி கற்பித்தபடியால் அந்த இடங்கட்குப் பள்ளிக்கூடம் என்று பெயர் உண்டாகியது. அப்பெயர் நாளடைவில் எல்லாப் பாடசாலைகளுக்கும் அமைந்து விட்டது.

**பாகசாதனன்** - பாகன் என்னும் அசுரனைக் கொன்றபடியால் இந்திரனுக்கு இவ்வாறு ஒரு பெயர் உண்டாகியது.

**பாகுகன்** - இவன் விருகனுடைய மகன். இவனுடைய நாட்டைப் பகைவர்கள் பறித்துக் கொண்டனர். அரசன் தன்னுடைய மனைவியரோடு காட்டையடைந்து இறந்தான். அரசன் மனைவியரும் உடனிறக்கத் துணிந்தனர். அவ்வாறு இறக்கவேண்டாம் என்று அவுரவருஷி என்பவர் தடுத்தார். மனைவியருள் முதல்வியாகிய சுமதி கருப்பிணியென்றுணர்ந்த சக்களத்தியர் அவளுக்கு நஞ்சூட்டினர். அவள் அவுரவருடைய அருளால் உயிர்பெற்றுச் சகரனைப் பெற்றாள்.

**பாஸ்கரக்ஷேத்திரம்** - கதிரவன் வழிபட்டதால் கும்பகோணம் என இந்நாளில் வழங்கும் திருக்குடந்தைக்குப் பாஸ்கர க்ஷேத்திரம் எனவும் ஒருபெயர் உள்ளது.

**பாஞ்சராத்திரர்** – பாஞ்சராத்திர ஆகமத்தின் வழி நடப்பவர் பாஞ்சராத்திரர் எனப்படுவர். இந்த ஆகமம் திருமாலால் நான்முகனுக்கு உரைக்கப்பட்டது. நான்முகனால் நாரதருக்கு உரைக்கப்பட்டது. பிறகு நாரதர் மற்ற முனிவர்கட்கு உரைத்தார். இது நூற்றெட்டுச் சம்மிதைகளை உடையது. அவைபாத்மம் முதல் பிராசேத சாக்யம் வரை உள்ளனவாம். இதனில் விட்டுணு ஆலயப் பிரதிட்டைவிதி, துவசாரோகணவிதி, தீட்சை ஆராதனம், வழிபாடு, திருவிழா, சீரணோத்தாரணம், கழுவாய், மந்திரவிதி முதலிய பலசெய்திகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

**பாண்டியர்** - பண்டைத் தமிழ் நாட்டின் தென்கிழக்குப்பகுதியான பாண்டி நாட்டை ஆண்டவர்கள் பாண்டியர் என்று பெயர்பெற்றனர். இவர்கள் எக்காலத்தில் பாண்டி நாட்டை ஆட்சிபுரியத் தொடங்கினர் எம்மரபைச்சேர்ந்தவர் என்பது விளக்கமாகத் தெரியவில்லை. இவர்கள் தமிழ் நாட்டிற்கே உரியவர்களா அல்லது வேறு நாட்டில் இருந்தும் வந்து குடியேறியவர்களா என்பதுங் கண்டுபிடிக்கப்படவில்லை. பாண்டியர் என்னுஞ் சொல் பண்டு என்ற சொல்லில் இருந்து பிறந்தது. பண்டையர் பழங்காலத்தவர் என்று பொருள்படும் என்று சிலர் கூறுகின்றனர். இதற்குத்தக்க ஆதாரமில்லை. மேலும் பாண்டிய நாட்டை ஆண்டவர் பாண்டியர் என்று பெயர்பெறுவது இயற்கை. பாண்டியர்

கள் திங்களின் வழிமுறையைச் சேர்ந்தவர்கள் என்றும், வேப்பம் பூமாலையைத் தமக்குரிய அடையாள மாலையாகவும், கயல் உருவத்தைக் கொடியாகவும் இலச்சினையாகவும் கொண்டவர்கள் என்றும் நூல்கள் நுவலும். புறநானூறு பத்துப் பாட்டு முதலிய சங்கநூல்களில் பாண்டியர்கள் பலருடைய புகழ் கூறப்பட்டுள்ளது. ஆயினும் அவைகளைக் கொண்டு அவர்களுடைய வரலாற்றை அறியமுடியவில்லை. சங்கநூல்கள் கூறும் பாண்டியர்களுள் ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியனும் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியும் நெடுஞ்செழியனும் குறிப்பிடத்தக்கவர்கள்.

**பாபர்நாமா** - இது பாபர் சக்கரவர்த்தியின் வரலாறு. இவ்வரலாறு பாபராலேயே எழுதப்பட்டதாகலின் சொந்த வரலாறாகும். பாபர் ஒரு கவி. பாரசீகமொழியில் பல பாடல்கள் இயற்றியுள்ளார். தமது தாய்மொழியான துருக்கியிலும் அவர் வல்லவர். பாபர்நாமா துருக்கி மொழியிலேயே எழுதப்பட்டுள்ளது. இந்நூல் அக்காலவரலாற்றை உணர்ந்து கொள்ளத் துணைபுரிவதோடு சிறந்த இலக்கியமாகவும் விளங்குகிறது. பாபரின் பண்பாடு முதலியவைகளையெல்லாம் இந்நூலால் நன்கு உணர்ந்துகொள்ளலாம். இந்நூல் ஆங்கிலம் முதலிய பல மொழிகளினும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

**பார்க்கவமுனிவர்** - இவர் ஒரு முனிவர். சாதனிகனுடைய மக்கள் தானதருமங்களை மிகுதியாகச் செய்த தம்முடைய தந்தை எவ்வாறுளன் என்று இம் முனிவரைக் கேட்டனர். இதற்கு விடையளிக்க எண்ணிய முனிவர் கதிரவனை வேண்டினார். அவன் இவருக்கு முன்னே அந்தண வடிவங் கொண்டு வழி காட்டிக் கொண்டு சென்றான். எமபுரந் தாண்டிச் செல்கையில் ஓர் அந்தணன் கையில் தடி தாங்கி இவரை வழி மறித்தான். ''நான் உனக்குப் புராணங் கூறுகையில் ஏதேனுங் கொடுப்பதாகக் கூறிப் பிறகு கொடாதொழிந்தாய்; இப்பொழுது நீ செய்த தவத்தில் பாதிதருக'' என்றான். இவர் அதற்கு இசையவில்லை. ஆறில் ஒன்று கொடுக்குமாறு கதிரவன் நடக் கூறினான். ஆறில் ஒன்று கொடுத்து அவ்விடம் விட்டு நீங்கினார். பிறகு இடையன் பசுமேய்த்ததற்கு ஆறிலொரு பங்கு கொடுத்து நீங்கினார். பிறகு சாலியன் ஒருவன் தன்னிடம் வாங்கிய துணிக்குப் பாக்கி கொடுக்க வேண்டுமென்று இவரை வழிமறித்தான். எஞ்சியதை அவனுக்குக் கொடுத்தார். நல்வினை முழுவதும் நீங்கிய படியால் மேலே செல்லமுடியவில்லை. கதிரவனுடைய கையைப் பற்றிக் கொண்டு சதானிகன் இருந்த இடத்திற்குச் சென்றார். அப்பொழுது அவ்வரசனை எமகிங்கரர்கள் அடுப்பில் ஏற்றிச் சமைத்துக் கொண்டிருந்தனர். முனிவர் அரசனைப் பார்த்து, ''இதற்கு என்ன காரணம்?'' என்று கேட்டார். அரசன், ''நான் பல தானதருமங்களைச் செய்தும் மக்களை வருத்திப் பொருள் தேடிய படியால் இவ்வாறு துன்பப்பட நேரிட்டது'' என்று சொன்னான். மேலும் முனிவரைப் பார்த்து, ''என்னுடைய மக்களிடம் இதனைக் கூறித் தானதருமங்கள் செய்யக் கட்டளையிட்டால் என்துன்பங்

கள் நீங்கும்'' என்று கூறினன். முனிவர் அவ்வாறே சதானிக னுடைய மக்களிடங் கூறிச் சதுர்த்தசி விரதம் அநுட்டிக்கச் செய்ததோடு தானதருமங்களை யும் செய்யுமாறு கூறினர். மக்கள் அவ்வாறே செய்தமை யின் அரசனுடைய துன்பம் நீங்கியது.

**பார்க்கவர்** - பரசுராமர் பிருகு வமி சத்தில் தோன்றியவராகையால் பார்க்கவர் என்னுஞ் சிறப்புப் பெயர் பெறுவார். அந்த வமி சத்தில் சிறந்தவர் இவரே. இவர் தகப்பனருடைய பெயர் சமதக்கினி முனிவர். தாயார் பெயர் இரேணுகை.

**பார்க்கவன்** - இவன் பாஞ்சால நாட்டில் இருந்த ஒரு குயவன். திரௌபதியின் மணங்காணச் சென்ற பாண்டவர்கட்கு இவன் இடங்கொடுத்து உதவி செய்தான்.

**பாலக்காடு** - கேரள நாட்டைச் சேர்ந்தமலையாளமாவட்டத்தில் உள்ள ஒரு தாலுக்கா. இது மேற்கு மலைத்தொடரின் பிள வான பாலக்காட்டுக் கணவா யில் உள்ளது. இதன் வடக்கில் நீலகிரிமலையும் தெற்கில் ஆனை மலைக்குன்றுகளும் இருக்கின் றன. மலைகளின் அடிவாரங் களில்உள்ள காடுகள் அடர்த்தி யானவை. இவ்வூர் தாலுகா வின் தலைநகர். இப்பாலக்காடு மலையாள மாவட்டத்திலேயே இரண்டாவது பெரிய நகர மாகும். இது மலையாளத்தில் இருந்து கோயமுத்தூர் செல் லும் வழியில் உள்ளது. புகை வண்டி இவ்வூர்வழியே செல்லு கிறது. கணவாயில் இருப்ப தால் மேற்குக் கரைக்கு இதன் வழியாகத்தான் செல்லவேண் டும். வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இடம்,

**பாலசித்தன்** - சட்டமுனியி னுடைய மாணவர்களில் ஒரு வன். இவனும் தன்னுடைய குருவைப் போல் மருத்துவத் துறையில் வல்லவனாகச்சிறந்து விளங்கினன்.

**பிசாசமோசனவாவி** - காசியில் உள்ள புனித நீர்த்துறைகளில் ஒன்று. இதில் பேயொன்று மூழ்கித் தன்னுருப்பெற்றபடி யால் இப்பெயரை யடைந்தது.

**பிசாசு** - தூலதேகத்திற்கு விதிக் கப்பட்ட வாணாள் முடியுமுன் உடல் நீங்கிய உயிர் காற்றின் உருவையடைந்து காலத்தை எதிர்பார்த்திருக்கும்; அவ்வுயிர் களே பிசாசு எனப்படும். இவைகள் தம்மோடு தொடர் புடையராய்த் துன்புறுத்தி னோரை மீண்டுந் துன்புறுத்துந் தொழில் உடையன.

**பிரதம மந்திரி** - மத்திய அரசாங் கத்தின் தலைமை மந்திரி பிரதம மந்திரி என்று கூறப்பெறுவார். இராச்சிய அரசாங்கத்தின் தலைமை மந்திரி முதன் மந்திரி என்று மொழியப் பெறுவார். பிரதம மந்திரிக்கு உள்ள அதி காரங்கள் முதன் மந்திரிக்கும் பொருந்தும். மந்திரிசபைக்குப் பிரதம மந்திரியே ஆதாரம். மந்திரிசபையை உண்டாக்கு பவர் அவரே. அதைக்கலைத்து விடவும் அவரால் இயலும். சட்டசபையில் உள்ள பெரும் பான்மைக்கட்சியின் தலைவராக இருப்பதாலோ அல்லது சட்ட சபையில் உள்ள கட்சிகளில் ஒன்றோடொன்று சேர்ந்தகட்சி களின் கூட்டுப் பலத்தினலோ யாருக்குச்சபை அங்கத்தினரில் பெரும்பான்மையினருடைய ஆதரவு இருக்கிறதோ அவரே பிரதமமந்திரியாக ஏற்படுத்தப் பெறுவார்.

பிரதமமந்திரியின் அதிகாரம் ஏறக்குறைய எதேச்சாதிகாரி

யின் அதிகாரத்திற்கு ஒப்பான தென்றே கூறலாம். அமைச்சரவையை அமைக்குமாறு இராட்டிரபதியால் அழைக்கப்பட்டவுடன் அவர் மற்றைய அமைச்சர்களைத் தெரிந்தமைத்து அவர்கட்கு அரசாங்கத் துறைகளைப் பிரித்துக் கொடுப்பார். அமைச்சர் அவையில் அவர் மற்றைய அமைச்சர்களோடு ஓர் அமைச்சராக இருந்த போதிலும் மற்றைய அமைச்சர்கள் இவரால் நியமிக்கப்பட்டவர்களும் இவருக்கு உட்பட்டவர்களுமே யாவர். மற்றைய அமைச்சர்களில் எவரையும்இராசிநாமாச் செய்யுமாறு இவர் கட்டாயப் படுத்தலாம். அமைச்சர்களில் எவரேனும் இராசிநாமாச் செய்தால் அவருடைய இடம் மட்டும் காலியாகும். பிரதம மந்திரி இராசிநாமாச் செய்தாலோ அமைச்சரவை முழுவதுங் கலைந்து போகும்.

**பிரதாப சிங்** - ஓர் இராசபுத்திர வீரர். பாபரை எதிர்த்து வீரத்தோடு போர்புரிந்த இராணு சங்கிராம சிங்கின் பெயரர். இவருடைய தந்தையின் பெயர் உதயசிங். இந்த உதய சிங்கே உதயபுரி என்னும் நகரத்தை உண்டாக்கியவர். 1567இல் அக்பர் இராசபுதனத்தின்மீதுபடையெடுத்து மேவாரைத் தாக்கினார். உதய சிங்கின் தந்தை கோழையாகையால் மொகலாயப் படை வருவதையறிந்ததும் ஓடி விட்டார். சித்தூர் மொகலாயர் கைவசமாயிற்று. அதன்பிறகு நான்கு ஆண்டில் உதயசிங் இறந்தார். உதயசிங்கின் வீரமகனை பிரதாபசிங் மொகலாயரை எதிர்த்துப் போரிட்டுக் கொண்டேயிருந்தார். இவரால் மொகலாயப் படைகளுக்குத் தொல்லை நேரிட்டபடியால் இராசமான் சிங் என்பவர் இவரோடு எதிர்த்துப் போரிட்டுத் தோற்கடித்தார். ஆனாலும் பிரதாப சிங் நாளடைவில் தாம் இழந்தவைகளை யெல்லாம் திரும்பவுங் கைப்பற்றி விட்டார். இவர் 1597 ஆம் ஆண்டில் காலமானார். புகழோடு விளங்கிய சித்தூர் இவருக்குப் பின் தனது பெருமை இழந்து விட்டது.

**பிரமசாத்தன்** - இது முருகப் பெருமானுடைய திருவுருவங்களில் ஒன்று. பிரணவப் பொருள் சொல்லத் தெரியாமல் விழித்த பிரமனைத் தலையிற் குட்டிச் சிறையில் அடைப்பித்து முருகன் தன்னுடைய கைகளில் கமண்டலமும் செப மாலையுந் தாங்கி உலகைப் படைக்குந் தொழிலை மேற்கொண்டருளினான். அந்நிலையில் அமைந்த முருகனுடைய திருவுருவ அமைப்பே பிரமசாத்தன் என்னும் பெயரையடைந்தது.காஞ்சி குமரகோட்டத்தில் எழுந்தருளிய முருகனின் வடிவ அமைப்பும் இத்தகையதே என்பர்.

**பிரமத்வரை**-விசுவாவசு என்னும் காந்தருவனுக்கு மேனகையிடம் பிறந்த பெண். இவள் தூலகேச முனிவரிடம் வளர்ந்து வருகையில் ஒருநாள் பூம்பொழிலிற் சென்று உலாவினாள். அப்பொழுது பாம்பு ஒன்று கடித்தபடியால் இறந்தாள். இவள் இறந்ததைக் கண்டு இருடிகள் துக்கமுற்றனர். அவ்விருடிகளில் ஒருவராகிய ருரு என்பவர் மட்டும் வருத்தத்துடன் அவர்களைப் பிரிந்து காட்டிற்குச் சென்று அழுதார். தேவர்கள் எதிரே தோன்றிக் காரணம் வினவினர். ருருவின் ஆயுளில் ஒருபாதி தருவதாகக் கூறியபடி தர உயிர்த்தெழச்

செய்தனர். உயிர்த்தெழுந் தவனை ருரு மணந்து கொண்டார். அதுமுதல் ருரு பாம்புகளைக் கொலை செய்யும் தொழிலை மேற்கொண்டார். ஒருநாள் தண்ணீர்ப் பாம்பின் உருக்கொண்டிருந்த சகத்திர பாத முனிவரைக் கண்டு அவருடைய சாப வரலாற்றைக் கேட்டார். அப்பாம்பு, "நான் முன் பிறப்பில் ககம முனியை விளையாட்டாக அச்சுறுத்திய படியால் அவர் என்னைப் பாம்பாகுமாறு சபித்தார். நான் வேண்ட இச்சாபம் ருருவால் நீங்கும் என்றார்" என்று கூறியது. அது முதல் ருரு பாம்புகளைக் கொலை செய்வதை விட்டார்.

**பிரமபுராணம்** - இது பதினாயிரம் கிரந்தம் உள்ளது. இதில் சூரிய சந்திர வம்ச விவரம் சிவவிட்டுணுதலமான்மியம் சகநாதத்தலத்தின் வரலாறு முதலிய பல செய்திகள் விளக்கமாகக் கூறப்படுகின்றன.

**பிரமரை** - இவள் ஓர் அரக்கி. பதங்காசுரனுடைய மனைவி. அந்தகன், அம்பன், துங்கன் ஆகியோர் இவளுடைய பிள்ளைகள். இவள் தன்னுடைய பிள்ளைகளையும் கணவனையுங் கொன்றாள். காசியில் குழந்தையுருக்கொண்டிருந்த ஆனைமுகக் கடவுளைக் கொல்லப் போய் நஞ்சுகலந்த உணவைக் கொடுத்தாள். அவரால் கொல்லப் பட்டு மாண்டாள்.

**பிரம்பானன்** - சாவாவில் சோக்ய கார்ட்டாவுக்கு அண்மையில் உள்ள நகரம். இங்குள்ள திரிமூர்த்தி கோயில்கள் புகழ் பெற்றவை. அவை மிகப் பெரியவை; தஞ்சாவூர் கோயிலையும் கங்கைகொண்ட சோழபுரக் கோயிலையும் போன்றவை. இராமாயண நிகழ்ச்சிகளும் கிருட்டிணனுடைய பாலலீலைகளும் இக்கோயில்களில் அழகாகத் தீட்டப்பெற்றிருக்கின்றன. தமிழ்நாட்டுக் கோயில்களில் அமைந்துள்ள சித்திரவேலைகள் இக்கோயில்களிலும் அமைந்துள்ளன.

**பிருகத்கதை** - பைசாச மொழியில் குணாட்டிய பண்டிதர் என்பவரால் இயற்றப்பெற்றது. மிகவும் பழமையான நூல். பாரதநாட்டில் வழங்குங் கதைகள் யாவும் பிருகத்கதையினின்றுந் தோன்றியவைகளே. இடைக்காலத்தில் இருந்த பாணன், பவபூதி என்னும் வடமொழிக் கவிஞர்கள் இயற்றிய காதம்பரி, நாகாநந்தம், முத்திராராட்சசம், மிருச்சகடிகை, மாளவிகாக்கினிமித்திரம், வாசவதத்தம், இரத்தினவளி, இதோபதேசம், வேதாள பஞ்சவிம்சதி முதலிய நூல்களிலுள்ள கதைகளெல்லாம் பிருகத்கதையில் உள்ளவைகளே.

**பிருந்தாவனம்** - இவ்வூர் வட இந்தியாவில் உத்தரப்பிரதேச நாட்டில் மதுரா நகருக்கு ஆறு மைல் தொலைவில் இருக்கிறது. டில்லிக்குத் தெற்கே எண்பது மைல் தொலைவு. இவ்வூர் யமுனையாற்றின் கரையில் அமைந்திருக்கிறது. கிருட்டிணன் இங்குப் பல லீலைகளை நடத்தினர். கோவில்கள் பல இங்கே இருக்கின்றன. அவைகளுள் மிகவும் புகழ்பெற்றது கோவிந்த தேவமந்திர் என்பது. இக்கோவிலைப் பதினாறும் நூற்றாண்டில் இராசா மான்சிங் என்பவர் கட்டினார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் சென்னை வணிகர்களால் அரங்கநாத மந்திர் என்னும் கோயில் கட்டப்பெற்றிருக்கிறது. இது திராவிடக் கட்டிடச் சிற்ப

முறையைத் தழுவியது. யமுனை யாற்றில் குளிக்குந்துறைகள் பல உள்ளன. சேவாகுஞ்சம் என்னும் பெருந்தோட்டம் ஒன்று இங்கே இருக்கின்றது. இது கண்ணன் இராதையோடு கலந்து லீலைகள் புரிந்த இடம் என்பர். கோகுலம் கோவர்த்தனம் முதலிய இடங்கள் இவ்வூருக்கு அண்மையில் உள்ளன. முன்னாளில் துளசிகளே எங்கும் நிறைந்து பெருந்துளசிக் காடாக விளங்கியமையின் பிருந்தாவனம் என்று பெயர் பெற்றதென்பர்.

**பிரேமாநந்தர்** - இவர் குசராத் இலக்கியத்தில் கவிச்சக்கரவர்த்தி. இவர் அந்தண வகுப்பைச் சேர்ந்தவர். பரோடாவில் வசித்தவர். இவர் சிறு பிள்ளையாக இருக்கும் பொழுதே பெற்றோர்கள் காலஞ் சென்று விட்டார்கள். பரோடாவில் ஒரு சிவன் கோவிலில் இருந்த சாதுவுக்குப் பணிபுரிந்து கல்விகற்றார். அவரோடு நாடெங்குஞ் சுற்றினார். இந்தியையும் சமஸ்கிருதத்தையும் நன்கு கற்றுக் கொண்டார். முதலில் இந்தியில் காவியம் இயற்றித் தம்முடைய குருவுக்குக் காட்டினார். குருவின் கட்டளைப்படி தாய்மொழிக்கு நல்ல தொண்டு செய்தார்.

**புண்டரீகபுரம்** - சிதம்பரமாகிய திருத்தில்லை விராட் புருடனுக்கு இருதய கமலமாக விளங்குகிறபடியால் புண்டரீகபுரம் என்று கூறப்படுகிறது.

**புண்டரிகன்** - கோமேதகத் தீவில் பூச்சக்கரம் என்னும் நகரில் இருந்த ஓர் அந்தணன். இவன் மனைவியின் தீயொழுக்கங் கண்டும் அவளைத் துறந்துசெல்லாது மிக இழிந்த நிலையிலிருந்தான்.

**புண்ணியகோட்டம்** - காஞ்சியில் உள்ள நான்கு கோட்டங்களில் இஃதொன்று. இது வரதராசர் எழுந்தருளிய பெருமாள் கோயிலாகும்.

**புலகர்** - இவர் ஓர் அந்தணர். அருமறைகளையெல்லாம்அமைவுறக் கற்றவர். திருந்திய பேரறிவாளராகப் பொருந்திய இவரிடம் முனிவரும் பிறரும் நல்லுரைகள் பெற்று நலம் பெற்றனர். தக்கன் சிவபெருமானை இகழ்ந்து வேள்வி செய்யத் தொடங்குதலை இவர் உணர்ந்தார். தக்கனிடஞ்சென்று அறிவுரைகள் பல கூறினார். ஆணவத்தில் மிகுந்து விளங்கிய அவன் இவருடைய உரையைச் சிறிதும் கேளாது வேள்வி செய்து பிறருக்குங் கேடுவிளைவித்துத் தானுங் கெட்டொழிந்தான்.

**பூண்டி** - தமிழ்நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர் தாலுகாவில், திருவள்ளூர் புகைவண்டி நிலையத்திற்கு வடமேற்கே ஏழுமைல் தொலைவில் இருக்கிறது. இங்கே கொற்றலையாற்றின் குறுக்கே அணை ஒன்று கட்டி நீர்த்தேக்கம் ஒன்றை அமைத்திருக்கின்றனர். இதன் முழுஅளவு உயரம் 137 அடி. நீர்ப்பரப்பின் அளவு பன்னிரண்டு சதுரமைல். இத்தேக்கம் 1940 இல் கட்டப்பெற்றது. இத்தேக்கத்தில் இருந்து நீர் கொற்றலை ஆறு வழியாகப் புழலேரிக்குக் கொண்டுசெல்லப்பட்டுச் சென்னை நகருக்குக் குடிதண்ணீராகிறது. இந்நீர்த்தேக்கத்திட்டத்தைத் தொடங்கியவர் காலஞ்சென்ற சத்தியமூர்த்தி ஐயராகையால் அவருடைய பெயரை இந்நீர்த்தேக்கத்திற்கு வைத்துச் சத்தியமூர்த்திசாகர் என்று பெயரிடப்பட்டது. இந்நீர்த்தேக்கம் அமைந்துள்ள இடத்தில் திருவெண்பாக்கம் என்னும் தேவா

ரப் பாடல்பெற்ற சிவப்பதி இருந்தது. கோயில் நீர்த்தேக்கத்தில் மூழ்கிவிட்டபடியால் சுவாமியை வேறிடத்தில் கோவில்கட்டி வைத்திருக்கின்றனர். பூண்டி என்னும் பெயருடைய ஊர்கள் தமிழ்நாட்டில் வேறு சிலவும் உள்ளன.

**பூவிருந்தவல்லி** - இவ்வூர்சென்னைக்கு அண்மையில் மேற்கில் இருக்கிறது. பூனமல்லி என்று திரித்தும் கூறுவர். இவ்வூரில் உள்ள பெருமாள் கோயில் வரதராசப் பெருமாள் கோயில் எனப் பெயர்பெறும். இக்கோயிலில் சீநிவாசன் சந்நிதி அரங்கநாதன் சந்நிதி என்னும் இரண்டு சந்நிதிகள் உள்ளன. இக்கோவில் திருக்கச்சிநம்பி என்னும் வைணவப் பெரியார் பூசித்த கோயிலாதலின் அப்பெரியாருக்கும் கோயிலில் ஒரு சந்நிதி அமைந்துள்ளது. தாயார் பெயர் புட்பவல்லித்தாயார். அத்தாயார் மல்லிகைப்பூவில் தோன்றிய காரணம் பற்றிப் பூவிருந்தவல்லி என்று பெயர் உண்டாகியது. அப்பெயரே நாளடைவில் ஊருக்கும் பெயராகியது. பூந்தண்மலி என்றொரு பெயரும் இருப்பதாகத் தெரிகிறது.

**பெண்ணையாறு** - தென்னாட்டில் இரண்டு பெண்ணையாறுகள் இருக்கின்றன. ஒன்று தென் பெண்ணை, மற்றொன்று வட பெண்ணை. வடபெண்ணை வடகிழக்கு மைசூரில் கோலார் மாவட்டத்தில் நந்திதுர்க்க மலைக்கு வடமேற்கிலுள்ள சன்னராயன் பெட்டாவில் தோன்றுகிறது. அனந்தப்பூர், கடப்பை, நெல்லூர் மாவட்டங்களிற் பாய்ந்து நெல்லூருக்குத் தெற்கே வங்காளவிரிகுடாவில் கலக்கிறது. இதன் நீளம் முந்நூற்றைம்பது மைல்.

தென்பெண்ணையாறு மைசூரில் கோலார் மாவட்டத்தில் நந்திதுர்க்கத்திற்குவடகிழக்கில் சன்னராயன் பெட்டாவில் தோன்றுகிறது. பெங்களூர் மாவட்டம் வழியாக ஓடித் தமிழ்நாட்டில் நுழைகிறது. சேலம் தென்னார்க்காடு மாவட்டங்களின் வழியாகப் பாய்ந்து கூடலூருக்கு வடக்கே கடலில் கலக்கிறது. இதனுடைய நீளம் இருநூற்றைம்பதுமைல். பாம்பாறு சேலம் மாவட்டத்தில் இதனோடு கலக்கிறது. மழைகாலத்தில் திடீரென்று வெள்ளம் வரும். இவ்வாறு தமிழர்களால் புனித ஆறாக எண்ணப்படுகிறது. தை முதல் வாரத்தில் இதன் கரையில் உள்ள ஊர்களில் விழாக்கள் கொண்டாடப் பெறுகின்றன.

**பெரியாறு** -(பேரியாறு) இவ்வாறு தென்னிந்தியாவில் மேற்கு மலைத் தொடரின் மேற்குப் பகுதியில் தோன்றிக் கேரள நாட்டில் கொச்சிக்கு வடக்கே மேலைக் கடலிற் கலக்கிறது. இதனுடைய நீளம் நூற்றுநாற்பது மைல். சிலப்பதிகாரத்தில் இவ்வாற்றின் பெயர் வருகிறது. இவ்வாற்றின் கரையில் அடிக்கடி சேரன் செங்குட்டுவன் வந்து தங்குவது வழக்கம் என்று சிலப்பதிகாரத்தால் அறியப்படுகிறது. "பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை இடுமணல் எக்கர் இயைந்தொருங் கிருப்ப" என்பது சிலப்பதிகாரம். திருவிதாங்கூர் மலைகளிலே இவ்வாறிற்கு ஓர் அணைகட்டி மலையைக் குடைந்து நீரைக் கிழக்கு முகமாகத் திருப்பி மதுரை மாவட்டத்தில் முல்லையாறு முதலிய கால்வாய்கள் வழியாகப் பாய்ச்சி அந்தப் பகுதியைநீர்வளம் மிகுந்ததாகச் செய்திருக்கிறார்கள். இவ்வாறு செய்தது 1895 இல். இதற்குமுன்

பெரியாற்றின் நீர் பெரும் பாலும் கடலில் விழுந்து வீணு கிக் கொண்டிருந்தது.

**பேராசிரியர்** - தொல்காப்பியத் திற்கு உரையெழுதியவர்களில் ஒருவர். ஆசிரியர் பலருள்ளும் சிறந்து விளங்கியமையின் இவ் வாறு பேராசிரியர் என்று கூறப் பெற்ருர். இவ்வாறு சிறப்புப் பெயர் தோன்றிய பிறகு இவ ருடைய இடுகுறிப் பெயர் மறைந்துவிட்டது.

**பொங்குமாகடல்** - குற்ருல அருவி இருநூறு அடி உயரத்திலுள்ள காட்டிலிருந்து கீழே விழு கிறது. அப்பொழுது நடுவழி யில் உள்ள ஒருபாறை அருவி யைத் தடுக்கிறது. அப்பாறை யில் நீர் விழுந்து விழுந்து மிக ஆழமான பள்ளம் ஏற்பட்டி ருக்கிறது. அதில் அருவிபாய்ந்து பொங்கிஎழுவது கடல்பொங்கி எழுவதுபோன்று காணப்படும். ஆகவே இதற்குப் பொங்குமா கடல் என்று காரணப்பெயர் உண்டாகியிருக்கிறது.

**பொருள்வைத்தசேரி** - திருமங்கை யாழ்வார் திருவரங்கம் பெரிய கோயில் விமானம் மண்டபம் கோபுரம் முதலியவைகளைத் திருப்பணி செய்யத் திருவுளங் கொண்டார். நாகப்பட்டினத் தில் இருந்த பொன்னுலான புத்தவிக்கிரகத்தைச் சூழ்ன்று கொண்டிருந்த சக்கரங்கட் கிடையே வாழைக்கட்டை களைக் கொடுத்து நிறுத்திக் கோயிலுக்குள்ளே சென்று எடுத்துவந்து திருவரங்கம்திருப் பணிக்குப் பயன்படுத்திஞர். அவர் எடுத்துக்கொண்டு வருவ தற்குள் பொழுது விடிந்தபடி யால் ஓர்ஊரில்வயலிற்புதைத்து மறைத்து வைத்தார். மறு இர வில் மறுபடியும் எடுத்துக் கொண்டு சென்ருர். அவர் பொன் விக்கிரகப் பொருளைப் புதைத்து வைத்திருந்த இடம் பொருள்வைத்தசேரி என்று பெயர் பெற்றது. அப்பெயர் இந்நாளில் பொரவச்சேரிஎன்று வழங்குகின்றது. இவ்வூர் சிக் கலையொட்டிய இடமாகும்.

**பொன்னுய்ச்சியார்** - பிள்ளை யுறங்காவில்லிதாசரின் மனைவி யார். பட்டர் சர்வஞ்ஞபட்ட னுடன் செய்த சாகச விஞவிற் குக் கண்ணேறு படுமென்று பார்வைக்குற்றம் (திருட்டி தோடம்) போக்கியவள்.

**பொன்னி** - கம்பர் காலத்தில் இருந்த ஒரு தாசி. இவள் கம் பரைத் தனக்கு அடிமையாக்குவ தாக அரசனிடம் சூண்மொழி சொன்ஞள். கம்பரிடம் "தாசி பொன்னிக்குக் கம்பன்அடிமை" என்று எழுதிவாங்கிஞள். பிறகு அரசன் கம்பரைக்கேட்டபோது பொன்னி என்ருல் திருமகள் என்று பொருள்கூற இவள் ஏமாந்தாள்.

**போகவதி** - சுதரிசனன் என்னும் முனிவனுடைய மனைவி. இவள் தனிமையாகஇருக்கையில் எமன் அதிதிபோல் வந்து தன்னைத் தழுவ வேண்டிஞன். இவள் நூல் நியாயங்களைக் காட்டி மறுத்துரைக்கவும் கேளாது மேன்மேலும் வற்புறுத்திஞன். இவளுடையகணவன் அதிதிகள் கேட்பவைகளை மறுக்காதே என்று கூறியிருந்தபடியால் உடன்பட்டிருந்தாள். கணவன் வந்து கூப்பிட்டபோது இவள் மறுமொழி கூறத்தொடங்கி ஞள். நமன் இவள் மறுமொழி கூருது தடுத்துவிட்டுத் தானே மறுமொழி கூறத் தொடங்கி ஞன். "உன் மனைவி அதிதி பூசை செய்கிருள்" என்று சொன்ஞன். இருடி இதனைக் கேட்டுக் களிப்படைந்தார். நமன் இருடிக்கு உண்மையுரு வுடன் தோன்றி வேண்டியவரத்

தைக் கொடுத்தான். போகவதி உலகத்தாருடைய தீவினைகளைப் போக்கும் ஆறு ஆனாள்.

**பௌண்டரநாடு** - தெலுங்கு நாட்டுக்கு வடக்கே உள்ளநாடு. புண்டரன் என்பவன் ஆண்டபடியால் இவ்வாறு பெயர் பெற்றது.

**மகரக்கண்ணன்** - கரனுடைய மகன். வாயுவிடமும் வருணனிடமும் வரங்கள் பெற்றவன். இராமபிரானோடு போர் செய்து மாயமாக மறைந்து விண்ணில் உருமாறிப் போர் செய்தான். முடிவில் இராம பாணத்தால் முடிந்தான். இவனுக்கு மகராட்சன் எனவும் பெயர் உண்டு.

**காகாவியம்** - வடமொழியில் செய்யுள் நடையில் உள்ள காவியங்களுள் மகாகாவியம் என்பது ஒரு வகையைச் சேர்ந்தது. மகாகாவியம் என்பது புராணங்களிலோ இதிகாசங்களிலோ மிகு புகழ்பெற்ற கதையாக இருக்கவேண்டும். தலைவன் தீரோதாத்தன் என்னும் வகுப்பைச் சேர்ந்தவனாக இருத்தல் வேண்டும். நகரம், கடல், மலை, இருது, ஞாயிறு திங்களின் தோற்றம் மறைவு, பொழில் விளையாட்டு, புனல் விளையாட்டு, மதுபானம், காதல், பிரிவு, திருமணம், மக்கட்பேறு, அவைகூட்டலும் ஆலோசனையும், போர், வெற்றி ஆகியன அழகாகக் கூறப்பட்டிருத்தல் வேண்டும். சுவைகளும் மெய்ப்பாடுகளும் மிகுதியாக இருத்தல் வேண்டும். நாடகத்தில் உள்ள ஐந்துபிரிவுகள் இதிலும் அமைந்திருந்தல் வேண்டும். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் நூற்பயனாக அமைதல் வேண்டும். இவ்விலக்கணங்களெல்லாம் அமையப்பெறாத செய்யுள் நூல்கள் கண்ட காவியம் எனப்பெறும். மகா காவியங்களுள் புகழ்பெற்றவை இரகு வமிசம், குமார சம்பவம், கிராதார்ச்சுனீயம், சிசுபாலவதம், நைஷதீய சரிதம் என்னும் இவ்வைந்துமாகும். இவைகட்குப் பஞ்ச மகா காவியம் எனப்பெயர் வழங்கும்.

**மகாகைலாசம்** - நிலவுலகத்திலே இமயமலையில் உள்ள கைலாசம் பூலோககைலாசமாகும். மகாகைலாசம் என்பது இப்பூவுலகத்தின் மேல் இருக்கிறது. பூலோகத்தில் இருந்து புவலோகம் பதினைந்து நூறாயிரம் யோசனை; அதில் பத்து வாயுக்கள் சஞ்சரிக்கும் வாயு மண்டலம். அப்பால் மேகமண்டலம்; அதன்மீது கதிரவன் மண்டலம்; அதன்மீது திங்கள் மண்டலம்; அதன்மீது விண்மீன் மண்டலம்; அதன் மேல் புதன் உலகு, அதன்மீது சுக்கிரன் உலகு, அதன்மீது செவ்வாயுலகு, அதன்மீது வியாழனுலகு, அதன்மீது சனியுலகு, அதன்மீது இருடிபதம், அதன்மீது துருவபதம்; அதன்மேல் சுவர்க்க லோகம், அதன்மேல் மகலோகம், அதன்மேல் சாலோகம், அதன்மேல் தவலோகம், அதன்மேல் சத்திய லோகம், அதன்மீது வைகுண்டம் அதன்மீது சிவலோகம். இந்தச் சிவலோகமே மகா கைலாசமாகும். இங்கே சிவபெருமான் உமாதேவியோடும் எல்லா வகையான சிறப்புக்களோடும் எழுந்தருளியிருப்பர்.

**மகாமகம்** - மாசித்திங்கள் மக நாளில் குரு சிங்கராசியிலும் சந்திரன் கும்பராசியிலும் வரும் பௌர்ணமி நாள் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை வரும். இந்நாள் மிகச் சிறந்த

நாளாகலின் மகாமகம் எனப் பெறும். இதனை மாமாங்கம் எனவுங் கூறுவர். இந்நாளில் கும்பகோணத்தில் உள்ள மகாமகக் குளத்தில் கங்கை, யமுனை, சரயு, நருமதை, சரசுவதி, கோதாவரி, பயோடினி, காவேரி, குமரி ஆகிய ஒன்பது புனித நீர்களும் வந்து கூடுவதாகக் கூறப்படுகிறது. இக்குளத்தில் மாசிமகத்தில் நீராடியவர்கள் சகல தீவினைகளும் நீங்கிப் பலபேறுகள் பெற்று இம்மையிலும் மறுமையிலும் இன்பம் எய்துவர். மகாமகத்தில் நீராடியவர்கள் அடையும் பேறு அளவிடற்கரியது.

**மகாமாயை** - ஹ்ரீம் என்கிற எழுத்தையும் பிரணவத்தையும் உருவமாகவுடையவள் சிவபிரானிடத்தினின்றுந் தோன்றியவள். நான்முகன் முதலிய தேவர்களால் போற்றப்படுபவள். சராசரங்கட்கு முதற்காரணமாக இருப்பவள். இவள் தன்னுடைய ஒளியால் உலகத்தை விளக்குவாள்.

**மகேச்வரி** - எழுவகை மாதர்களில் ஒருத்தி. சடாமகுடத்துடன் கூடியவளாய்த் திங்களைச் சடையில் அணிந்தவளாய்க், கபாலம், சூலம், கட்கம், வரதம் முதலிய வைகளை உடையவளாய்க், காளையூர்தியில் அமர்ந்திருப்பாள்.

**மகேந்திரம்** - எண்வகைக் குலமலைகளில் ஒன்று. இஃது உத்கல முதல் ஒரிசா வரையில் பரவியுள்ளது. இதன்மீது அநுமான் ஏறி இலங்கைக்குப் பாய்ந்தான் என்பர்.

**மங்கன்** - நல்லாற்றூர் - துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் காலத்தில் வாழ்ந்திருந்த ஒரு புல்லன். நல்லறிவு சிறிதும் இல்லாதவன். மாங்கனியொன்றை மேற்படி சுவாமிகள் எடுத்தமைக்காக மடிபிடித்திழுத்துத் தொல்லை செய்து அப் பெரியாரால் வசைபாடப் பெற்று இறந்தொழிந்தான்.

**மச்சமுனி** - எண்வகைச் சித்திகளையும் பெற்றவர். பதினெண் சித்தர்களில் ஒருவர். யோகப் பயிற்சியுடையவர். இவர் மருத்துவ நூல்கள் பலவற்றை இயற்றியிருக்கிறார். அவை: மச்சமுனி கடைக்காண்டம் எண்ணூறு, மச்சமுனி கலை ஞானம் எண்ணூறு; மச்சமுனி நிகண்டு நூற்றுறு, மச்சமுனி முப்பு தீட்சை என்பது என்பன. மச்சமுனி மாயாசால காண்டம் என்னும் நூல் ஒன்றையும் இவர் எழுதியிருக்கிறார். இது மாயாசாலங்களைப் பற்றிக் கூறுவது.

**மணிமான்** - மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னர்ச் சாளுவ நாட்டில் இருந்த ஓர் அரசன். அந்நாளில் பலருக்குந் துன்பஞ் செய்து கொண்டு திரிந்த வக்கிரன் என்னும் அசுரனோடு இவன் போரிட்டு வென்றான்.

**மதிதயன்**-(2) இவன் கன்னோசி நாட்டு மன்னன். கன்னமாபுரி என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தவன். சந்திர மதியினுடைய தந்தை இவனே.

**மதுப்பிரியர்** - இவர் முன்னாளில் பாண்டிவள நாட்டில் கோவிலூர் என்னும் சிவப்பதியில் தங்கித் தவஞ் செய்துகொண்டிருந்தார். தேனையே மிகுதியாக விரும்பிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தபடியால் இவ்வாறு பெயர் பெற்றார்.

**மதுரகவியாழ்வார்** - இவர் திருக்குருகூர்க்கு அண்மையில் உள்ள திருக்கோளூரில் அந்தணர் வகுப்பில் பிறந்தார். நம்மாழ்வார் பிறப்பதற்குச் சில ஆண்டுகள் முன்னரே

இவர் பிறந்தார். இளமைப் பருவத்திலேயே மறை முதலிய நூல்களைப் பயின்றார். செய்யுள் செய்யும் திறமும் இவருக்கு நன்கு அமைந்தது. இவருடைய பாடல்கள் கேட்பதற்கு மிக இனிமையாக இருந்தன. அதனால் அறிஞர் இவருக்கு 'மதுரகவி' என்று சிறப்புப்பெயர் வழங்கினர். திவ்ய தேசங்களைக் கண்டு வழிபடும் விருப்புடன் ஊரை விட்டுப் புறப்பட்டார். வடநாட்டுத் திருப்பதிகளையெல்லாம் கண்டுவழிபட்டார். இறுதியில் திரு அயோத்தியில் தங்கியிருந்தார். ஒருநாள் இரவு வெளியே வந்தபொழுது தென் திசையில் ஒரு பேரொளி தோன்றுதலைக் கண்டு மிகுந்த வியப்படைந்தார். மறுநாள் இரவிலும் அவ்வாறே அவ்வொளி தோன்றியது. தெற்குத் திக்கில் யாதோ ஒரு புதுமை நிகழ்ந்திருக்கிறது. அதனைப் பார்க்க வேண்டும் என்று புறப்பட்டார். அவ்வொளி தோன்றிய இடமாகிய திருக்குருகூரை யடைந்தார். திருப்புளியின் கீழ் எழுந்தருளியிருந்த ஒளிவடிவாகிய நம்மாழ்வாரைக் கண்டார். அவருடைய நிலையை அறிய விரும்பினார். "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று உசாவினார். "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று ஆழ்வார் மறுமொழி கூறினார். இதனைக் கேட்ட மதுரகவியார் அவரையே குருவாகக் கொண்டார். ஆழ்வாரும் இவரை அடிமை கொண்டுகூற வேண்டிய மெய்யறிவுரைகளைக் கூறினார். மதுரகவியார் ஆழ்வார்மீது "கண்ணி நுண்சிறுத்தாம்பு" என்னும் பாடலைச் செய்தார்.

**மதுராந்தகம்** - சென்னைக்குத் தெற்கே ஐம்பதுகல் தொலைவில் உள்ள ஊர். மதுராந்தக சோழனுடைய பெயரால் அமைந்ததாகலின் இவ்வாறு பெயர் பெற்றது. வகுளாரணியம் என்பது பழையபெயர். இங்குள்ள ஏரிகாத்த பெருமாளாகிய கோதண்டராம சாமிகோயில் மிகுந்த புகழ்பெற்றதாகும். வெண்காட்டீசுரர் கோயில் என்னும் சிவன் கோயிலும் இங்கிருக்கிறது. இராமபிரான் இலங்கையில் இராவணனை அழித்துப் புஷ்பகவிமானத்தில் அயோத்திக்குத்திரும்பியபோது இங்கிருந்த வீபாண்டக முனிவரின் ஆசிரமத்தில் தங்கியிருந்ததாகக் கூறுவர்.

**மத்திமன்**-பிறரும் வாழவேண்டும் தானும் வாழ வேண்டும் என்று எண்ணுபவன் மத்திமனுவான். மூவகை மனிதர்களில் இவன் இடைப்பட்டவன்.

**மந்திரபீடேசுவரி** - திருக்குடந்தையில் எழுந்தருளியுள்ள மங்களாம்பிகையின் பீடம். சக்தி பீடங்களுள் ஒன்றான மந்திர பீடத்தில் விளங்குவதால் மங்களாம்பிகைக்கு இவ்வாறும் ஒரு பெயர் விளங்குகிறது.

**மந்திரம்** - மந்திரம் என்பதன் பொருள் நினைப்பவனைக் காப்பது என்பது. இம்மந்திரம் மறைமுகமாகவே கூறப்பட வேண்டிய தாகையால் மறையெனவும் பெயர் பெறும். மந்திரங்களை முறைப்படி தீட்சை பெற்று முறையுடன் ஓதினால் எல்லா வகையான சித்திகளும் உண்டாகும். உருவேற்றம் அதிகரிக்குமாயின் அம்மந்திரத்திற்குரிய தேவதைகள் வெளிப்பட்டு எல்லா வகையான சித்திகளையும் அளிப்பர். சித்தி பெற்றவர்கள் பிறரை வாழவைக்கவும்

தாழவைக்கவும் வல்லவர். இம் மந்திரம் ஏழுகோடியாக விரியும் என்பர்.

**மயிலைமான்** - முன்னாளில் தொண்டைவள நாட்டில் இருந்த ஒரு சைன மன்னன். நேமிநாத தீர்த்தங்கரர் சொற்படி வாமநாதபுரம் கடலில் மூழ்கியபோது அதற்கு மேற்கில் இம்மன்னன் தன் பெயரால் ஓர் ஊரை ஏற்படுத்தினன். இப்பொழுதுள்ள சென்னை மயிலாப்பூர் அவ்வூரே.

**மயூரேசர்** - ஆனைமுகக் கடவுளுக்கு ஒரு பெயர். இவர் சிந்து என்பவனைக் கொல்லும் பொருட்டு ஒரு வேள்வியில் மயிலை உண்டாக்கி அதன் மீது ஏறிச் சென்றபடியால் இவ்வாறு ஒரு பெயர் உண்டாயிற்று.

**மனுக்கள்** - இவர்கள் உலக நிகழ்ச்சிக்காகக் கடவுளால் நியமிக்கப்பெறும்பதினாறுபெயர்களாவர். ஒவ்வொரு மனுவும் மனுவந்தரம் எனப்படும் காலமாகிய எழுபத்தொரு சதுர்யுகங்கள் ஆட்சி நடத்துவர். இப்பதினன்கு மனுக்கள் நான்முகனின் ஒருபகல் நேரமாகிய ஆயிரம்சதுர்யுகங்கள்கொண்ட கற்பம் என்னும் காலத்தில் ஆட்சி செலுத்தி, முடிவில் மேல் நான்காவது உலகமாகிய மகாலோகத்தையடைந்து வீடு பெறுவர். தத்தம் மனுவந்தரத்தில் குடிகளைப் படைப்பதும் அரசகுலங்களை உண்டுபண்ணுவதன் மூலம் அக்குடிகளைப் பாதுகாப்பதும், அவர்கள் நற்கதியடையும் பொருட்டு அறங்களை விதிப்பதும் இவர்களுக்குக் கடவுள் இட்ட வேலையாகும். வெவ்வேறு மனுவின் காலத்தில் வெவ்வேறு இந்திரனும் தேவர் குழுவினரும் ஏழு முனிவர்களும் மனுவுக்கு உதவியாக இருப்பார்கள். நினைப்பது என்று பொருள்படும் 'மன்' என்ற தாதுவில் இருந்து, மானவன், மனுஷ்யன் என்னுஞ் சொற்கள் பிறந்தனவென்றும், அதில் இருந்து ஆதிபிதாவின் பெயரை 'மனு' என்று கற்பித்திருக்கலாம் என்றும் ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

**மாமயானம்** - சர்வசங்கார காலத்தில் பூதங்கள் ஒடுங்குமிடம் ஆகையால் காசி என்னும் வாரணசிக்கு இவ்வாறு ஒருபெயர் வழங்குகிறது.

**மிதிலை** - கிழக்கிந்தியாவில் வடபீகாரில் இருந்த பழைய நாடு. இக்கால தர்பங்கா, சம்ப்பாரன், வட முசபர்ப்பூர் ஆகிய மாவட்டங்கள் இதிலடங்கும். நேப்பாளத்தைச் சேர்ந்த சனகபுரி இதற்குத் தலைநகராக இருந்தது. சனகருடைய அரசவையில் தத்துவ ஞானிகளும் சமயக் குருமார்களும் இருந்தனர். சனக மன்னன் ஒரு சிறந்த தத்துவ ஞானி என்று நூல்களால் அறியப்பெறுகிறது. இராமாயணத்தில் மிதிலை விதேக நாட்டின் தலைநகரென்று குறிக்கப் பெறுகிறது.

**மித்திராவருணர்** - இவர்கள் மித்திரன் வருணன் என்னும் பெயருடைய இருவராவர். இவர்கள் வசிட்ட முனிவருக்கு உடலளித்தவர்கள் என்று நூல்கள் கூறும். நான்முகனுடைய நினைவினால் தோன்றியவர் வசிட்டர். இவர் நிமி என்பவர். இட்ட சாபத்தினால் உடம்பை இழந்தார். நான்முகனிடஞ் சென்று மறுபடியும் உடம்பு வேண்டினார். மித்திராவருணர் கலப்பால் உடம்பு கிடைக்கும் என்று நான்முகன் கூறினன், ஊர்வசியை

ரும்பிய மித்திரனும் வருண னும் தங்கள் விந்துவை ஒரு குடத்தில் அடக்கினர். அக் குடத்தில் இருந்து வசிட்டர் மீளவும் உடம்பு பெற்றார்.

**முசுண்டிச் சவண்டையர்** - இவர் முசுண்டி என்னுஞ் சிற்றூரில் இருந்த ஒரு வீரசைவர். இவர் வசவதேவரின் புகழைக் கேட்டு அவரைக் காணச் சென்றார். எட்டிக்கனி பழுத்திருத்தலைக் கண்டு அதனைப் பறித்துச் சிவ பூசைசெய்து அடியவர்கட்குத் தந்து உண்ணச் செய்தார். இவர் வசவருடன் இருக்கையில் ஒருசிவனடியார் தமது இல்லத் தில் நடக்கும் திருமணத்திற்கு எழுந்தருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டார். இவரும் உடன்பட்டுச் சென்றார். செல் லும் வழியில் ஆறுவெள்ளம் பெருகி வழியை அடைத்தது. அதைத் தம்முடைய கைகளால் இரு பிளவாக்கி மறுகரை யடைந்து ஊரையடைந்தார். அப்பொழுது ஒரு கன்னிகை எதிரேவந்து வணங்கினாள். அவள் நீண்ட ஆயுளோடு வாழுமாறு வாழ்த்தியருளினார். சிலநாள் சென்றபிறகு வாழ்த் தப் பெற்ற அப்பெண் இறந்து போனாள். அவளுடைய தாய் தந்தையர் இருவரும் அப் பெண்ணைச் சவுண்டையரிடம் தூக்கிக் கொண்டு வந்தனர். ஐயர் அவளுடைய பேரிட் டழைத்தார். அவள் உயிரோடு எழுந்தாள். ஒருநாள் தவராசர் என்பவர் இறந்து போனார். அவரைச் சிலர் தூக்கிக் கொண்டு சென்றனர். இவர் வாளையெடுத்துக் கொண்டு பிணந் தூக்கிச் செல்வாரை அச்சுறுத்தி விரட்டினார். இறந்து பிணமாக இருந்தவரை இறங்கிவரச் செய்தார். இப் புதுமையைக் கண்ட சமணர் கள் பொறாமை கொண்டனர். கோணியாற் பொய்யுருச் செய்து ஐயர் இருந்த மடத்தின் வழியாகத் தூக்கிக் கொண்டு வந்தனர். சவுண்டையர் சமண ருடைய எண்ணத்தையறிந்து அப் பொய்யுருவுக்கு உயிர் கொடுத்தார். அரசனுடைய சொற்படி பலகாலத்திற்கு முன்பு இறந்து போன எருது களையும் எழுப்பினார்.

**முதுகூத்தனார்** - இவர் சோழவள நாட்டில்உறையூரில் வசித்திருந் தாராகையால் இவருடைய பெயர் உறையூர் முதுகூத்தனார் என்று நீண்டு நின்றது. சங்கப் புலவருள் ஒருவராகிய இவர் திருக்குறளைத் திருவள்ளுவர் அரங்கேற்றஞ் செய்யச் சென்ற பொழுது, "தேவிற் சிறந்த" என்னும் பாட்டால் திருக் குறளைப் பாராட்டியுள்ளார்.

**முத்தி** - முத்தியென்பது வீடு பேறாகும். இது சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என நான்கு வகைப்படும். முற் கூறிய மூன்றும் பதமுத்தி. மற்றது உண்மை முத்தி. இவற்றுள் சாலோகம் என்பது சிவலோகம் அடைந்து நித்திய சுகம் அனுபவித்தல்; சாமீபம் என்பது கடவுளுக்கு அண்மை யில் அமர்ந்து போற்றிக் கொண்டிருத்தல்; சாரூபம் இறைவனுடைய உருவத்தை யடைந்து இன்புறுதல்; சாயுச் சியம் இறைவனோடு இரண் டறக் கலந்தும் கலவாமலும் பேரின்பம் நுகர்தல்; இவை களை முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவை களால் அடைவர்.

**முப்போதுந் திருமேனி தீண்டு வார்** - பெரிய புராணம் என்னுந் திருத்தொண்டர் புராணத்தில் கூறப்பெறும் தொகையடியார்களில் ஒருபிரி வினர். இவர்கள் சிவபிரா

னுக்குப் பூசை செய்யும் ஆதி சைவக்குருக்களாவர். சுந்தர மூர்த்தியார் திருத்தொண்டத் தொகையில் இவர்களை, "முப் போதுந் திருமேனி தீண்டு வார்" என்று பாராட்டிப் பாடி யுள்ளார்.

**முழுநீறு பூசிய முனிவர்** - பெரிய புராணம்என்னுந் திருத்தொண் டர் புராணத்தில் கூறப்பெறும் தொகையடியார்களில் ஒரு பிரிவினர். இவர்கள் சிவபெரு மானைப் போற்றுவர்; திருநீற்று வகைகளில் அகப்பட்டவை களைக் குழைத்தோ தூளாக வோ நெற்றி மார்பு முதலிய இடங்களில் பூசிக்கொள்ளு வார்கள்; திருநீறிடுவார் சிவ னடி சேர்வராகலின் சுந்தர மூர்த்தியார் இவரைத் தாம் பாடிய திருத்தொண்டத் தொகையில் கூறியுள்ளார்.

**முன்னேற்ற நங்கை** - குமரி நாட்டில் சுசிந்திரத்தில் உள்ள ஓர் அம்மன் இப்பெயருடன் விளங்குகின்றாள்.

**மூவர் பேட்டை**-திருக்கழுக் குன் றத்தை யடைந்த சமயாசிரி யர்கள் மூவரும் திருக்கழுக் குன்ற மலை வேதமே வெற்பாக அமைந்து விளங்குதலின் மலை மீது ஏறுவதற்குத் துணியாமல் தொலைவிலிருந்தே இறைவனைப் பாடியருளினர். அந்த இடம் இப்பொழுதும் "மூவர் கோயில் பேட்டை" எனப்புகழ் பெற்று விளங்குகின்றது.

**மௌரியர்** - இவர்கள் முரா என் னும் வகுப்பைச் சேர்ந்தவர்கள். முராவின் வழி முறையினர் மௌரியர் என்று பெயர் பெற்றனர்.

**வங்காளம்** - வடகிழக்கு இந்தியா வில் இருந்த முன்னாள் மாகா ணம். இதில் திரிபுராவும் கூர்ச் பீகாரும் அடங்கியிருந்தன. வடக்கில் சிக்கிமும் பூட்டானும், கிழக்கில் அஸ்ஸாமும் பர்மாவும் தெற்கில் வங்காளவிரிகுடாவும், மேற்கில் பீகாரும் இதன் எல்லைகளாக இருந்தன. கங்கை பிரமபுத்திரா ஆறுகளின் கழி முகத் தீவுகளடங்கிய சுந்தர வனம் எனப்படும் தென்பகுதி நல்ல வளமுடையது. வடக்கில் இமயமலையின் தொடர்ச்சியும் தென்கிழக்கில் சிலகுன்றுகளும் இருக்கின்றன. தலைநகர் கல் கத்தா, டாக்கா, கரக்பூர், சிட்ட காங், டார்ஜிலிங் முதலியனபிற முக்கிய நகரங்கள்.

**வச்சிரன்** - இவன் விச்சிமலைக்குத் தலைவனாகிய விச்சிக்கோஎன்பவ னுக்குத் தம்பியாகையால் இள விச்சிக்கோ எனவும்கூறப்பெற் றான். இவன் இரவலர்க்கு யாதும் ஈயான்; மிகு பிசினன். பெருந்தலைச்சாத்தனார் முதலிய சங்ககாலப் புலவர்கள் இவனை இகழ்ந்து பாடியுள்ளனர்.

**வஞ்சிமாநகர்** - சேரநாட்டுத் தலை நகர். மலைநாட்டிலுள்ள திரு வஞ்சைக்களமே வஞ்சிமா நகர் என்பர் சிலர். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ளதும் கொங்கு நாட்டைச் சேர்ந்தது மான கருவூரே வஞ்சிமாநகர் என்பர் சிலர். மலைநாட்டு மேற் குத் தொடர்ச்சிமலை அடிவாரத் தில் பேரியாற்றங் கரையில் உள்ள திருக்கரூரே வஞ்சிமா நகர் என்பர் சிலர். இவ்வாறு பலரும் வஞ்சிமா நகரைப் பற் றிக் கூறுவர். உண்மையில் இதுதான் வஞ்சிமாநகர் என்று உறுதி செய்து கூறுவதற்குச் சரியான ஆதாரம் எதுவும் இல்லை.

**வடமதுரை** - வடநாட்டில் தென் மேற்குக்கோடியில் இராசபுதன எல்லையோரத்தில் இருக்கும் மாவட்டம். ஊரின் நடுவில் யமுனையாறு செல்லுகின்றது.

தென்மேற்கு மூலையில் சுண்ணும்புக்கல் குன்றுகள் இருக்கின்றன. கிழக்குப்பகுதி செழிப்பான நிலவெளி. நீர்ப்பாசன வசதி மிகுந்த இடம். டில்லியில் இருந்து ஆக்கிராவுக்குச் செல்லும் இருப்புப்பாதை இவ்வூர் வழியாகச் செல்லுகின்றது. இங்கிருந்து ஆக்கிரா முப்பது மைல் தொலைவில் இருக்கிறது. வானளாவிய கோயில்களும் கோபுரங்களும் கட்டிடங்களும் இவ்வூரை அழகு செய்கின்றன. கண்ணன் பிறந்து வளர்ந்து பல திருவிளையாடல்களைப் புரிந்த இடம் இதுவே. கண்ணன் கம்சனைக் கொன்றதும் இங்குதான். கண்ணன் வளர்ந்த கோகுலம் ஆற்றின் மறுகரையில் இருக்கிறது. கண்ணன் பிறந்த இடத்தில் ஒரு கோயில் கட்டப்பட்டிருக்கிறது. துவாரகநாதர் கோயில் பெரியது. மதுரையைச் சுற்றிலும் கோகுலம் பிருந்தாவனம் முதலிய பன்னிரண்டு இடங்கள் இருக்கின்றன. வடமதுரைக்கு யாத்திரைக்காரர்கள் மிகுதியாக வருகிறார்கள்.

**வயலூர்** - திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே ஏழுமைல் தொலைவில் இருக்கிறது, வயலூர் என்று சொல்லுவதற்கேற்றாற் போல் பரந்த வயல்களின் நடுவிலே வாழையும்தென்னையும்அடர்ந்த சோலை சூழ்ந்த இடத்திலே கோயில் இருக்கிறது. இங்கு எழுந்தருளிய முருகப்பெருமான் அருணகிரிநாதருக்குப் பல முறை காட்சி தந்தாராம். அதனால் அருணகிரிநாதர் தம்முடைய திருப்புகழிலே பல விடங்களில் இவ்வூர் முருகனைக் குறிப்பிட்டிருக்கிறார்.

**வர்த்தமான மகாவீரர்**-இவர் சமண மதத்தை ஏற்படுத்தியவர். இவர் புத்தரைப்போலவே புதிய சமத்தை ஏற்படுத்தும் அறிவும் துணிவும் உடையவராக இருந்தார். ஏறக்குறையப் புத்தருடையகாலத்தில் வாழ்ந்திருந்தவர். வைதேகிநாட்டில் வைசாலி என்னுமிடத்தில் சித்தார்த்தர் என்பவருக்கும் திரிசலை என்ற பெண்மணிக்கும் கி. மு. 540 இல் பிறந்தார். யசோதைஎன்ற மங்கையை மணந்து இல்லறம் நடத்தினார். பிறகு துறவறத்தை யடைந்தார். 42ஆம் அகவையில் தாம் ஆத்ம ஞானத்தில் வெற்றியடைந்ததாகக் கூறிக் கொண்டார். பலவிடங்கட்குஞ் சென்று தம்முடைய மதத்தைப் பரப்பினார்.

**வல்லபதேவன்** - இவன் மதுரையை அரசாண்ட பாண்டிய மன்னர்களில் ஒருவன். இவன் ஒருநாள் இரவு நகர்சோதனைக்குச் சென்றான். ஒரு வீட்டுத்திண்ணையில் படுத்திருந்த அந்தணன் ஒருவனிடம் தனக்குச் சில நல்லுரைகள் கூறவேண்டுமென்று கேட்டான். அவ்வந்தணன், "இரவுக்கு வேண்டியதைப் பகலில் தேடவேண்டும். முதுமைக்கு வேண்டியதை இளமையில்தேடவேண்டும். மறுமைக்கு வேண்டியதை இம்மையில் தேடவேண்டும்" என்னும் அறிவுரைகள் அடங்கிய ஒரு செய்யுளைக் கூறினான். அரசன் அதுமுதல் மறுமைக்கான காரியங்களில் ஈடுபட்டு நன்மை பெற்றான்.

**வள்ளிமலை** - வடார்க்காடு மாவட்டத்தில் உள்ள திருவலம் புகைவண்டி நிலயத்திற்கு வடக்கே ஆறுமைல் தொலைவில் வள்ளிமலை என்னும் ஊரும் வள்ளிமலையும் உள்ளன. இம் மலையின் கிழக்குப் பக்கத்தில் இயற்கையாக அமைந்துள்ள குகையின் இருபக்கங்களினும் சைன தீர்த்தங்கரர்களின் உருவச்சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. பக

வான் விருடபதேவர், பாரிசுவ நாதர், மகாவீரர், தருமதேவதை ஆகிய பல உருவங்கள் பல வேலைப்பாடுகளுடன் அழகாக அமைந்துள்ளன. இக்குன்றை மக்கள் வெள்ளிமலை என்று வழங்கியதாகத் தெரிகிறது.

**வாசுகி** - புராணங்களில் புகலப் பெறும் எட்டுப் பாம்புகளில் இவன் ஒருவன். ஆதிசேடன், கத்துருதநயன் என்னும் பாம்பு கட்கு உடன்பிறந்தான். தேவர் களும் அசுரர்களும் பாற்கடல் கடைவதற்கு வாசுகியைக் கயிறாகப் பயன்படுத்தினர். வாசுகிக்குப் பல புதல்வியர்கள் இருந்தனர். அவர்களுள் உலூபி என்பவளை அருச்சுனன் மணந் தான். அசுவமேதப்போரில் அருச்சுனன் மூர்ச்சையடைந்த பொழுது வாசுகி தன்னுடைய நாகரத்தினத்தைத் தன் மகள் உலூபிக்குக் கொடுத்தனுப்பி அருச்சுனனுடைய மூர்ச்சை யைத் தெளிவித்தான்.

**வாணன்** - இவன் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் மணப்பாறை என்னும் ஊரில் இருந்து அரசுபுரிந்த ஒரு குறு நில மன்னன். நல்லொழுக்க மில்லாதவனாய் மக்களுக்கு அல் லல் பல செய்து திரிந்தான். சிற் றின்ப போகத்தில் முற்றும் அழுந்திக்கிடந்தான். கல்லாக் கயவர் பலரைத் துணைக் கொண்டு தீமைகள் செய்து கொண்டுதிரிந்த இவனைப் பர மன் இறுதியில் ஒழித்தருளினார்.

**வானமாமலை எண்ணெய்க்கிணறு**- இக்கிணறு வானமாமலைப் பெரு மாள் கோயிலுக்குள் அமைந் திருக்கிறது. நாள்தோறும் பெருமாளுக்குக் குறைந்தது நான்குபடி எண்ணெய் திரு முழுக்குச் செய்யப்படும். அத் துடன் இளநீர், பால், பழச் சாறு, சந்தனாதித்தைலம் முத லியவைகளும் முழுக்காட்டப் படும். சிறப்புநாட்களில் 112 படிஎண்ணெயும்முழுக்காட்டுவ துண்டு. இவ்வாறு செய்யப் படுபவை யெல்லாம் கால் வழியே எண்ணெய்க் கிணற் றுக்குப் போய்ச்சேரும். அக் கிணறு வெயில் மழை காற்று எல்லாவற்றிற்கும் திறந்த படியே இருக்கிறது. இது முப்பதடி ஆழமும் முப்பதடி நீளமும் இருபதடி அகலமும் இருக்கிறது. எண்ணெய்சிவப்பு நிறமாக இருக்கும். இவ் வெண்ணெயைப் பயன்படுத்தி னால் குட்டநோய் முதலிய கொடிய நோய்களும் தீர்கின் றன. பல நூற்றாண்டுகளாக இக்கிணறு இக்கோயிலில் இருந்து வருகிறது. அகத்தியர் இயற்றியதாகக் கூறப்படும் பரி பூரணம் நானூறு என்ற சித்த வைத்திய நூலில் தீராத குட்ட நோய்க்கு வானமாமலைக் கோயி லில் உள்ள கிணற்றின் எண் ணெய் கைகண்ட நல்மருந்து என்று கூறப்பட்டிருக்கிறது.

**விசயபத்திரன்**- இவன் சயசேனன் என்பவனுடைய மகன். மூவா யிரம் ஆண்டுகட்கு முன் பிருந்த வன். அரசாட்சியில் சூழ்ச்சித் திறம் மிக்கவனாக இருந்தான். இவனுடைய ஆட்சியைப் பல ரும் பாராட்டினர்.

**விசாகை** - முன்னாளில் காவிரிப் பூம் பட்டினத்தில்இருந்த சோம தத்தன் என்பவனுடைய மகள். இவள் தருமதத்தன் என்பவனை மணம் புரிவதாக முடிவு செய் யப் பட்டிருந்தது. ஊரார் சிலர் மணமாவதற்கு முன்னரே இருவரும் காந்தருவ முறையில் கலந்தனர் எனப் பழிச்சொல் உரைத்தனர். இவள் அப்பழிச் சொல்லைக் கந்திற்பாவையால் நீக்கிக்கொண்டதோடு வாணாள்

முழுவதும் மணம் புரியாமலிருந்தாள்.

**விசுவகர்மா** - பிரபாசனுக்கு யோகசித்தியிடம் தோன்றிய மகன். இவன் தேவதச்சன். கதிரவன் ஒரு காலத்தில் தன் மனைவி இவனிடம் இருப்பதறிந்து தேடி வந்தான். இவன் கதிரவனுடையஒளியைச் சாணையிற் கடைந்து, பரசு, பாசம், அங்குசம் முதலியவைகளை உண்டாக்கி ஆறுமுகக் கடவுளுக்குக் கொடுத்து அவருடையஅருளைப் பெற்றான். இவன் கண்ணில் மாதவஹூறன் என்பவன் பிறந்தான். இவனுக்கு இரமை என்னும் மனைவியிடம் விருத்திராசுரன் பிறந்தான். இவன் ஒரு நாள் மதனிடஞ் சென்ற கிருதாசி என்னுந் தேவதாசியைக் கண்டு அழைத்தான். அவள், "நான் இன்றைக்கு மதனிடஞ் செல்லுகிறேன். இன்னொரு நாளைக்கு உன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றுகிறேன்" என்று கூறி மறுத்தாள். விசுவகர்மன் சினமடைந்து, "நீ நிலவுலகில் பிறப்பாயாக" என்று சாபமிட்டான். கிருதாசி பிரயாக நகரத்தில் கோபகன் என்பவனுடைய தேவியிடம்பிறந்து தவஞ்செய்தாள். கிருதாசி விசுவகர்மனும் மனிதனாக நிலவுலகிற் பிறக்குமாறு சாபமிட்டிருந்தாள். அவனும் நிலவுலகிற் பிறந்திருந்தான். ஒருநாள் கிருதாசியும் விசுவகர்மனும் சந்தித்தனர். இருவரும் பன்னிரண்டு ஆண்டுகள் ஒன்றாகஇருந்தனர். அப்பொழுது மாலைக்காரன், கருமான், கொல்லன் சங்கறுப்போன், குவிந்தன், குயவன், சூத்ரகாரன், தட்டான், சித்திரகாரன் முதலியவர்களைப் பெற்றனர்.

**விடாதரன்** - ஓர் அரசன். ஏழு முனிவர்கள் பிணத்தைப் பிடுங்கித் தின்னுதலை இவ்வரசன் கண்டான். மிகுந்த அச்சமடைந்தான். அவர்களைப் போற்றி அழைத்துத் தானங் கொடுத்தான். ஆனால் முனிவர்கள் தானத்தைப்பெற மறுத்தனர். இதனால் அரசன்சினங்கொண்டு அவர்களைக் கொல்ல மரண வேள்வி செய்து ஒரு பூதத்தை உண்டாக்கினான்; முனிவர்களைக் கொன்று வருமாறு அவர்களிடம் ஏவினான். அப்பூதம் முனிவர்களிடம் வந்து மருட்டிக் கொண்டிருந்தது. அப்பொழுது சுநகர் என்பவர் வந்தார். பூதம் அவரையும் மருட்டியது. சுநகர் அப்பூதத்தின்மீது தண்டத்தை ஏவினார். பூதம் அதனால் மாய்ந்தது.

**விடூரதன்** - இவன் கேகயநாட்டு அரசன். ஒருநாள் வேட்டைக்குச் சென்று ஒரு மானைப் பின் தொடர்ந்து சென்றான். வெகு தொலை சென்றபிறகு மான் மறைந்துவிட்டது. விரைவாக வந்தபடியினால் தனித்தவன் ஆனான். நீர் வேட்கை மிகுதியாயது. குதிரையைவிட்டுக் கீழே இறங்கினான். மூன்று பேய்கள் அரசனிடம் வந்தன. ஓர் அலகை அரசனைப்பார்த்து, "நான் ஊருரு அலகை; அது நன்றிகொன்ற அலகை, அது தெய்வம் இல்லையென்ற அலகை" என்று வரலாறு கூறித் தம்முடைய அலகையுருவைப் போக்குமாறு வேண்டிக் கொண்டன. அரசன் அலகைகளைப்பார்த்து, 'எவ்வாறு உங்களுடையபேயுரு நீங்கும்?" என்று கேட்டான். பேய்கள் அரசனைப்பார்த்து "நீ எம் பொருட்டுக் கங்கையாடிக் கயாசிரார்த்தஞ் செய்யின் நீங்கும்" என்றுகூறி அரசனுடைய தாகத்தைத் தணித்துச் சென்றன. அரசன் பேய்கள் கூறியவாறே செய்து தன்னுடைய

நாட்டிற்கு வந்து தங்கினன். பேய்களில் இரண்டு மட்டும் தேவ உருப்பெற்று அரசனிடங் கூறிவிட்டு விமானம் ஏறிச் சென்றன. செய்ந்நன்றி கொன்றபேய் அரசனைப் பார்த்து "இன்னும் என்னுடைய உரு நீங்கவில்லையே?" என்று கூறியது. அரசன் "இதற்கு யாது செய்யலாம்?" என்று கேட்டான். அதற்கு அப்பேய் திருவாரூரில் கயாதீர்த்தம்ஆடிச் சிரார்த்தம் முடிப்பின் நீங்கும்" என்று கூறியது. அவ்வாறே அரசன் செய்துவிட்டு இல்லம் அடைந்து உறங்கினன். அவ வலகையும் நல்லுருப்பெற்று விமானம் ஏறிச் சென்றுவிட்டது.

**விட்டுணுபுராணம்** - பதினெண் புராணங்களில் மூன்றாவதாக வைத்து எண்ணப்படுவது. திருமாலைப்பற்றிக் கூறுவது. "விட்டுணு புராணத்தினால் மெய்யறிவு பெறலாம்" என்று சங்கராச்சாரியாரே புகழ்ந்து கூறியுள்ளார். உலகினைப் படைத்த முதற்பொருள் யாது? அதன் இயல்புகள் என்ன? என்று பொதுவாகக் கேட்க அவற்றிற்கு விடையாகக் கூறப்பட்டது இந்நூல். இந்நூலைத் தமிழிற் பாடியவர் பாண்டிய நாட்டிற் செங்நெற்குடி என்னும் ஊரினராகிய சுப்பராய ஐயர் என்பவராவர். இவர் மாத்துவ சமயத்தினர்; வடமொழியிலும் தமிழிலும் சிறந்தபயிற்சி யுடையவர். செய்யுள்நடை நன்றாக அமைந்துள்ளது. இந்நூல் ஆறுபெரும் பிரிவுகளையும் நூற்றியிருபத்தாறு சிறு பிரிவுகளையும் உடையதாக இருக்கிறது. 4446 பாடல்கள் உள்ளன.

**விட்டுணுவர்த்தனர்** - கிழக்குச் சாளுக்கிய வழிமுறை இவரால் ஏற்படுத்தப்பட்டது. இவர் வாதாபியை ஆண்ட சாளுக்கிய சக்கரவர்த்தியான இரண்டாம் புலிகேசியின் இளவலாவர். இவர் குப்சவிட்டுணுவர்த்தனர் எனவுங் கூறப்பெறுவார். இவர் முதலில் மகாராட்டிரத்தை இளவரசராக ஆண்டுவந்தார். இரண்டாம் புலிகேசி இன்றைய ஆந்திர மாகாணங்களைக் கைப்பற்றிய பிறகு இவரை அம்மாகாணங்களின் இளவரசராக ஏற்படுத்தினர். வேங்கிடப்பட்டிணத்தைத் தலைநகராகக் கொண்டு இவர் இந்நாடுகளை ஆண்டுவந்தார். பிற்காலத்தில் இவர் வேங்கி மண்டலத்தின் அரசரானர்.

**விந்தமலை** - எட்டுக் குலமலைகளில் ஒன்று. பரதகண்டத்தின் நடுவில் உள்ளது. மேருமலையின் பெருமையை நாரதர் இதனிடங் கூறினர். அதனல் இம்மலை மிகுந்தசெருக்கடைந்துவிண்ணளாவ ஓங்கிவளர்ந்தது. கதிரவன் முதலியவர்களின் போக்கைத் தடுத்தது. அகத்தியர் சிவபிரான் கட்டளைப்படி பொதியமலைக்குச் சென்ற பொழுது விந்தமலையை அடக்கி அதன் ஆணவத்தைப் போக்கினர்.

**வியாசராயதீர்த்தர்** - பதினைந்து பதினாறும் நூற்றாண்டுகளில் விசயநகரத்துக் கிருட்டிணதேவ ராயர் காலத்தில் புகழ்பெற்று விளங்கியசிறந்த தத்துவஞானி. துவைத சமயக் கொள்கையை விசயநகரநாட்டிலும் பிறவிடங்களிலும் நிலைபெறச் செய்து வைணவ சித்தாந்தத்தை நிலைநிறுத்தினர். இளமையில் முனபாகல் மடத்தைச் சேர்ந்தவராய்ப் பிரமணியதீர்த்தரிடம் கல்வி பயின்றார். பிறகு சந்திரகிரியிலும் திருப்பதியிலும் வசித்தார். திருப்பதியில் பன்னிரண்டு

ஆண்டுகள் கோவில் அருச்சகராக இருந்ததாகக் கூறுவர். கிருட்டிண தேவராயருடைய அவையில் சமயத்தொடர்பான சொற்பொழிவுகளை நிகழ்த்திப் புகழ்பெற்றார். இவர் உண்டாக்கிய மடத்திற்குக் கிருட்டிண தேவராயர் பல தானதருமங்களைச் செய்திருக்கிறார். இவர் ஹம்பியில் காலமானார். இவருடைய சமாதி கோதாவரி யாற்றுக்கண்மையில் உள்ள நவ பிருந்தாவனம் என்னும் இடத்தில் இருக்கிறது. மாத்துவதாற் பரியசந்திரிகை, தருக்க தாண்டவம், நியாயாமிருதம் முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

**வியாழச் சோம நாதர்** - திருக்குடந்தையில் பொற்றாமரைக் குளத்திற்குக் கிழக்கேயுள்ள சோமேசர்கோயிலில் எழுந்தருளிய இறைவனுடைய பெயர். வியாழன் வழிபட்டதால் இவ்வாறு பெயர் உண்டாகியதாம். ஆனால் இப்பெயர் இந்நாளில் ஏழைச்சோமநாதர் என்று திரிந்துபோய்விட்டதாகத் தெரிகிறது.

**விராலிமலை** - திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருச்சி மதுரை பஸ் வழியில் பதினாறுவது மைலில் இவ்வூர் இருக்கிறது. சிறியமலைமீது கோவில் அமைந்துள்ளது. 177 படிகள் ஏற வேண்டும். மலையில் பல குகைகள் இருக்கின்றன. இவ்வூரில் மயில்களின் கூட்டம் மிகுதி. ஆறுமுகப்பெருமான் அழகிய வடிவத்தோடும் வள்ளி தெய்வானை யம்மையார்களோடும் காட்சியளிக்கிறார். சதாசிவப் பிரமம் திருவாரூர் தட்சிணாமூர்த்திசுவாமிகள் முதலியோர் இங்குச் சிலகாலம் தங்கியிருந்தனர். அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியிருக்கிறார். மலையில் உள்ள விராலிநாதர்குகை என்னும் பெரியகுகை திருச்செந்தூர் வரையில் செல்லுவதாகக் கூறுகிறார்கள். இத்தலத்தில் எழுந்தருளிய முருகன் ஒரு காலத்தில் புதுக்கோட்டை அரசன் இராமச்சந்திர தொண்டைமானுடைய கனவில் தோன்றித் தமக்குப் புகையிலைச்சுருட்டுப் படைக்குமாறு கட்டளையிட்டாராம். அதன்படி இக்காலத்திலும் புகையிலைச் சுருட்டுப் படைக்கப்படுவதாகக் கூறுகின்றனர்.

**விவேகசிந்தாமணி** - தமிழ்மொழியில் சீவகசிந்தாமணி, வேதாந்த மனன சிந்தாமணி, அபிதான சிந்தாமணி, தனிச்செய்யுட் சிந்தாமணி முதலிய பல சிந்தாமணி நூல்கள் இருக்கின்றன. விவேகசிந்தாமணி என்னும் இந்நூல் ஒருவரால் பாடப்பட்ட தனி நூலன்று. கற்பவர்கட்கு நல்லறிவை உண்டாக்கக்கூடிய பல பாடல்களைத் தெரிந்தெடுத்துத் தொகுக்கப்பட்டபடியால் விவேகசிந்தாமணி என்று பெயரிடப்பட்டது. உண்மையாகவே இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ள பாடல்கள் விவேகத்தை உண்டாக்கக் கூடியன. பாடல்கள் எளிமையானவை; நகைச்சுவை, அவலம், வீரம், காதல் முதலிய பல வகையான சுவைப்பாடல்களும் இதில் அடங்கி யிருக்கின்றன. யாருக்கு எத்தகைய பாடல்கள் வேண்டுமானாலும் இந்நூலில் கிடைக்கும். ஆகவே இந்நூலுக்குச்சிந்தாமணி என்றுபெயரிடப்பட்டது பொருத்தமாகும்.

**வினை தீர்த்தான்** - இவர் ஒரு சிறந்த வள்ளல். வைத்திய நாதச் செட்டியார் என்பவருடைய புதல்வர். செங்கற்பட்டு மாவட்டத்தில் பொன்மாறைப்பகுதியில்வணிகமரபில்

தோன்றியவர். 18 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தவர். இவர் புலவர்கட்கு உதவிசெய்வதில் மிகுந்த விருப்பங் கொண்டிருந்தார். சிவரகசியம் என்னும் நூல் வெளிவருதற்கு உதவிசெய்தார். களத்தூர் ஆதியப்பனூர் பாடிய மாயூரப்புராணம் அரங்கேற்றுதற்கு ஆவன செய்தார்.

**வீரசித்து** - இவன் வீரசேனன் என்னும் அரசனுடைய மகன். ஏமகூடம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தவன். மன வுறுதியும் குண நலன்களும் அமையப்பெற்ற இவனுடைய மனநிலையைச் சிலர் கெடுக்க முயன்றும் முடியவில்லை.

**வீரசேனன்** - (க) முன்னாளில் தமிழ்நாட்டில் அரசாட்சிசெய்த அரசர்களில் இவன் ஒருவன். இவன் கண்ணுவ முனிவரின் ஆசிரமத்தில் இருந்த மானைக் கொன்றுவிட்டான். சின மடைந்த முனிவர் இவன் வேடனாகுமாறு சாபங் கொடுத்தார். வெகு காலம்வரை வேடனாகத் திரிந்துகொண்டிருந்த இவன் பிறகு புனித நீர் முழுக்கால் மீண்டும் அரசனானன்.

**வீரசேனன்** - (உ) இவன் நிடத நாட்டு மன்னன். மகாசேனன் என்பவனுடைய மகன். நள னுக்குத் தந்தை. பேராண்மையும் பெரும் படைத்திறனுங் கொண்டவன். இவன் இந்திரனுக்கும் உதவிசெய்து மிகுந்த புகழ் கொண்டான்.

**வீரசைவ முத்துச்சரவண சுவாமிகள்** - இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்குமுன் திருப்பாப்புலியூரில் இருந்தார். வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவர். முப்பத்திரண்டாயிரஞ் சுலோகங்களுடைய வடமொழி வாசிட்டத்தை ஆநந்தபோதேந்திர சுவாமிகள் என்னும்பெரியாருடைய உரையோடு தமிழில் மொழிபெயர்த்தார்.

**வெண்பேடு** - (தளவானூர்) தென்னார்க்காடு மாவட்டம் செஞ்சி தாலுகாவில் செஞ்சிக்கு அண்மையில் உள்ள இச் சிற்றூர் பழங்காலப் பெருமை வாய்ந்தது. குன்றுகள் நிறைந்த இவ்வூரில் உள்ள நீண்ட பெரிய குன்று ஒன்றைப் பஞ்சபாண்டவர் மலை என இக்காலத்து மக்கள் கூறுகின்றனர். கிழக்கு மேற்காக நீண்டு உயர்ந்துள்ள இக்குன்றின் மேல் பல பெரிய தனிப் பாறைகள் இருக்கின்றன. அவற்றில் குன்றின் அடிப் பகுதி சரிந்திருப்பதால் அதற்கும் குன்றுக்கும் இடையே யுள்ள பிளவில் மனிதர் தங்கக் கூடிய பாழி ஒன்று இருக்கிறது. இதில் காணும் வழவழப்பான படுக்கைகளையும் இதையடையக் குன்றின் சரிவில் வெட்டப் பட்ட படிகளையும் கொண்டு இஃதொரு பழங்கால அமண் பாழி என்று அறிந்து கொள்ளலாம். இக்குன்றின் வடபுறத்தில் ஒரு பெரிய ஏரியும் இதன் நேர் செங்குத்தானதென் சிறையில் குன்றின் தாழ்ந்த பகுதியில் குடையப்பட்ட ஒரு குகைக்கோயிலும் இருக்கின்றன.

**வெள்ளைவிநாயகர்** - சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் சுவாமிமலைக்கு அண்மையில் உள்ள திருவலஞ்சுழியில் எழுந்தருளிய ஆனைமுகக் கடவுளுடைய பெயர். நிறம் வெண்மையாக இருத்தலால் வெள்ளை விநாயகர் என்று பெயர் உண்டாகியது. வடமொழியில் சுவேத விநாயகர் என்பர்.

**வேங்கடகவி, கணபவரவு** - மதுரையில் ஆட்சி செய்த முத்தலகிரி அரசரால் ஆதரிக்கப்பட்ட

தெலுங்குக்கவிகளில் இவரும் ஒருவர். இவர் தெலுங்கு நாட்டில் குண்டூரிலுள்ள கணபவரம் என்னும் ஊரைச் சேர்ந்தவர். தமிழ்நாட்டில் குடியேறினார். யாப்பிலக்கணத்தைப் பற்றி இவர் பல நூல்கள் இயற்றியிருக்கிறார். நால்வகைச் செய்யுட்களையும் பாடுவதில் புலமை மிக்கவர். முத்தலகிரி அரசருடைய வேண்டுகோளுக்கிணங்க இவர், 'வித்யாபதி தாண்டகம்' என்னும் நூல் ஒன்றைஇயற்றினார். இஃதொரு சிறிய நூலாயினும் மதுரை நாயக்கர்களுடைய வழிமுறைச் செய்தியைக்கூறுவதால்வரலாறுகளை அறிவதற்கு உதவுகிறது.

**வேத தீர்த்தம்** - சோழ வள நாட்டில் திருமறைக்காட்டில் மறைக்காட்டிறைவர் கோயிலுக்கு எதிரே உள்ள கடல் இப்பெயரோடு வழங்கப் பெறுகிறது. இங்கு நீராடுவதற்குக் காலம் முதலியன பார்க்க வேண்டியதில்லை. எப்பொழுது நீராடினும் மிகுந்த பலனுண்டாம் எனக் கூறுவர்.

**வேதாந்தமனன சிந்தாமணி** - முதன்மையான வேதாந்த நூல்களில் உள்ள சிறந்த பாடல்களையெல்லாம் மனப்பாடம்செய்யும் பொருட்டுத் திரட்டியமைக்கப்பட்ட இந்நூலில் ஆயிரக்கணக்கான பாடல்கள் நூற்றுக்கணக்கான நூல்களில் இருந்து ஒன்று படுத்தப் பட்டிருக்கின்றன. இவ்வரிய நூலைத் திரட்டியவர் சென்னை வியாசர்பாடியில் எழுந்தருளியிருந்த கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் என்னும் பெரியாராவார். இந்நூல் மிகப் பெரிது. சீவகசிந்தாமணியைப் போன்றது. அச்சிட்டுப் பல ஆண்டுகள் ஆயினமையின் இப்பொழுது விலைக்குக் கிடைப்பது அருமை.

**வேய்முத்தநாதர்** - திருநெல்வேலியில் இறைவன்மூங்கிலில் தோன்றியபடியால் இவ்வாறு வேய்முத்தநாதர் என்று பெயர்பெற்றார்.

**வேலாயுதன்** - வெல்லுதலைச் செய்வது வேல் என்பர். வெல் என்பது வினைப்பகுதி. தொழிலை உணர்த்தும் பெயராகிய தொழிற்பெயர் வகையில் முதனிலை நீண்டு வேல் என்றாயிற்று. இதனை முதனிலை நீண்ட தொழிற்பெயர் என்பர். வேலாகிய படைக்கலத்தைக் கையில் தாங்கியவன் வேலாயுதன். இது முருகக்கடவுளைச் சுட்டும். முருகக்கடவுள்வேற்படையைக் கையில் ஏந்தியுள்ளார். முருகக் கடவுளின் கையில் உள்ள வேற்படை பிறபடைகளைப் போல் புறப்பகையை மட்டும் அழிப்பதன்று. இவ் வேற்படை ஞான சக்தியாகிய இறைவியின் வடிவமாகும். இஃது அஞ்ஞானத்தை வென்று மெய்ஞ்ஞானத்தை அளிப்பது. இவ் வேற்படை கடவுளேயாகும்.

**வேளுக்கை** - திருக்காஞ்சியில் உள்ள ஒரு பெருமாள் கோயிலின் பெயர். முகுந்த நாயகர் கோயில் எனவுங் கூறுவர். எம்பெருமான் முகுந்த மூர்த்தி; தாயார் வேளுக்கை வல்லித் தாயார். இவ்வூரைத் திருமங்கையாழ்வாரும் பேயாழ்வாரும் பாடியுள்ளனர்.

**வைகுண்டப்பெருமாள்கோயில்** - காஞ்சியில் உள்ள ஒரு பெருமாள் கோயில். வரலாற்றுப் பெருமையுடையது. பரமேச்சுர விண்ணகரம் என்னும் பெயரும் இதற்கு உண்டு. நந்திவர்மப் பல்லவனால் இரண்டாம் பரமேசுரவர்மனின் பெயரால் கட்டப்பெற்றது. திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் செய்திருக்கிறார்.

# கழகவழி வெளிவந்துள்ள அகராதிகள்

கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி
— கா. அப்பாத்துரை எம்.ஏ., எல்.டி.,

பல்பொருள் ஆங்கிலத் தமிழ் அகரவரிசை

கழகப் பழமொழி அகரவரிசை
(10,450 பழமொழிகள்)

கழகச் சிற்றகராதி(ஆங்கிலம் - தமிழ்)
(அளவு : 2½ × 2 அங், சொற்கள் 6000)
,, பிளாஸ்டிக் உறையுடன்

கழகத் தமிழ் அகராதி (900 பக்கம்)
— சு. அ. இராமசாமிப் புலவர்

கழகத் தமிழ்க் கையகராதி
(கையடக்கப் பதிப்பு)

சிலேடை அகரவரிசை (3200 சிலேடைகள்)
— சு. அ. இராமசாமிப் புலவர்

தொகை அகராதி
— சு. அ. இராமசாமிப் புலவர்

நிகண்டுகள் :

சேந்தன் திவாகரம் (திவாகரர் எழுதிய நிகண்டு)
பிங்கல நிகண்டு பிங்கல முனிவர்

---

பதிப்பாளர்கள்:

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்.,
சென்னை - 1 மதுரை - 1 திருநெல்வேலி - 6